# மூன்றாம் பகுதி (முதற்பாகம்)



## திருநின்ற சருக்கம் (முதற் பாகம்)

## (திருநாவுக்கரசு நாயனார் புராணம்)

பொருளடக்கம்

முன் சேர்க்கை — பக்கங்கள்


| | | |
|---|---|---|
| ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானங்களின் ஆசியுரை | ... | v |
| சிறப்புப் பாயிரமும் மதிப்புரைகளும் | ... | vi |
| மூன்றாம் பகுதி – முதற் பாகத்தின் முன்னுரை | ... | xiii |
| சில திருத்தங்களும் குறிப்புக்களும் | ... | xvi |
| திருநாவுக்கரசு நாயனாரைப்பற்றிய சைவத் தெய்வத் திருமுறைத் திரட்டு | ... | xix |
| புராணப் பாடற்றிரட்டும் அற்புதத் தேவாரத் திரட்டும் | ... | 1 |
| திருநாவுக்கரசு நாயனார் தோத்திரத் திரட்டு | ... | 17 |
| பெயர் விளக்கம் | ... | 22 |
| மேற்கோள் நூலகராதி | ... | 33 |
| சில தலக் குறிப்புக்கள் | ... | 36 |


திருத்தொண்டர் புராணமும் — உரையும்

( முதற் காண்டம் )

ஐந்தாவது – திருநின்ற சருக்கம்


21. திருநாவுக்கரசு நாயனார் புராணம் – உரை தேவாரக் குறிப்புக்கள் – தல விசேடங்கள் முதலியவற்றுடன் ...


பின் சேர்க்கை


| | | |
|---|---|---|
| சரித்திர ஆராய்ச்சிக் குறிப்புக்கள் | ... | எகூஎ |
| அருஞ்சொற்றொடர் | ... | எஎரு |
| திருநாவுக்கரசு நாயனார் தேவாரப் பாட்டுக்களின் முதற்குறிப்பகராதி | ... | எஎஎ |
| பாட்டு முதற்குறிப்பகராதி | ... | எஅம |

# பட அட்டவணை*


| எண் | படத்தின் விளக்கம் | பாட்டு எண் | பாட்டுப் பக்க எண் | படம் வைக்கப் பட்டிருக் கும் பக்க எண் |
|---|---|---|---|---|
| 1 | ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம்—முகப்புப்படம் | | | |
| 2 | ராஜராஜ அபயகுலசேகர சோழன் | | | iv |
| 3 | திருப்புகலூர் அப்பர் சுவாமிகள் | | | ,, |
| 4 | அப்பர் புராண விரிவுரை அரங்கேற்றம்— அரங்கேற்ற மண்டபத்தின் முகப்புத் திருவாயில் - அரங்கேற்றச் செல்லுங் காட்சி | | | v |
| 5 | அரங்கேற்று மண்டபம்—புராண உரை அரங்கேற்றுரை நிகழ்த்துங் காட்சி | | | ,, |
| 6 | திருநாவுக்கரசு நாயனார் தலயாத்திரைப் படம் | | | 1 |
| 7 | திருவதிகையிலுள்ள திலகவதியார் மூல ஸ்தானம் | 1289 | 33 | 33 |
| 8 | ,, திருநாவுக்கரசு நாயனார் உற்சவ மூர்த்தி | ,, | ,, | ,, |
| 9 | பாடலிபுத்திரம் | 1303 | 47 | 32 |
| 10 | திருவதிகையிலுள்ள திலகவதியார் திருமடம் | 1327 | 72 | ,, |
| 11 | திருவதிகை வீரட்டம் - மூன்கோபுரம் | ,, | ,, | 72 |
| 12 | ,, உள்விமானம | 1333 | 82 | ,, |
| 13 | சித்தவடமடம் | | | 73 |
| 14 | கரையேறவிட்ட குப்பம் | 1396 | 170 | 170 |
| 15 | திருப்பாதிரிப்புலியூர்க் கோயில் முன்தோற்றம் | ,, | ,, | ,, |
| 16 | திருவதிகை திருக்கோயிலும், கெடிலநதியும் | 1407 | 185 | 171 |
| 17 | குணபரவீச்சரம் | 1411 | 199 | ,, |
| 18 | திருமுண்டீச்சரம் | 1413 | 200 | 573 |
| 19 | திருத்தூங்கானை மாடம் கோயில் கர்ப்பக் கிரகம் | 1414 | 206 | 206 |
| 20 | ,, (பின்புறமிருந்து பார்வை) | ,, | ,, | ,, |
| 21 | ,, (முன்பார்வை) | ,, | 206 | 207 |
| 22 | ,, (உட்பார்வை) | ,, | ,, | ,, |
| 23 | நாயனார் திருவுருவம்—தோளில் சூலமும் இடபமும் பொறித்த கோலம்—சூலம் சாத்தும் சிவபூதம் | 1417 | 207 | 224 |
| 24 | சிதம்பரம் மேலைக்கோபுரவாயில்—கற்பகப் பிள்ளையார் சந்நிதியுடன் | 1426 | 224 | ,, |
| 25 | திருவேட்களம் | 1437 | 238 | 225 |


* பாட்டு வரிசைப்படி தயாரிக்கப்பட்டிருக்கிறது.

| எண் | படத்தின் விளக்கம் | பாட்டு எண் | பாட்டுப் பக்கஎண் | படம் வைக்கப் பட்டிருக்கும் பக்க எண் |
|---|---|---|---|---|
| 26 | திருக்கழிப்பாலைக் கோயில் | 1437 | 238 | 225 |
| 27 | சீகாழி பிரமதீர்த்தத்துடன் கூடிய திருத்தோணி | 1450 | 265 | 264 |
| 28 | திருக்கோலக்கா கோயில் | 1454 | 270 | ,, |
| 29 | திருக்குறுக்கை கோயில் | ,, | ,, | 265 |
| 30 | திருநின்றியூர் | ,, | ,, | 572 |
| 31 | திருநனிபள்ளி சுவாமி கோயில் | ,, | ,, | ,, |
| 32 | மாயவரம் கோயில்—திருமயிலாடுதுறை முன்பார்வை | 1455 | 271 | 270 |
| 33 | திருத்துருத்திக் கோயில் உட்பார்வை | ,, | ,, | ,, |
| 34 | ,, கோயில் முன்பார்வை | ,, | ,, | 271 |
| 35 | திருத்துருத்தியில் காவிரி | ,, | ,, | ,, |
| 36 | திருவேள்விக்குடி கோயில் | ,, | ,, | 265 |
| 37 | திருஎதிர்கொள்பாடி | ,, | ,, | 290 |
| 38 | திருஆவடுதுறை (கோயில் முன்பார்வை) | 1456 | 291 | 290 |
| 39 | ,, (உட்பார்வை) | ,, | ,, | 291 |
| 40 | திருச்சத்திமுற்றம் கோயில் (முன்பார்வை) | 1457 | 292 | 291 |
| 41 | திருநாவுக்கரசு நாயனருடைய சோழ நாட்டு யாத்திரைப் படம் | 1455 to 1565 | ,, | 292 |
| 42 | திருவீழிமிழலை—முன்கோபுரம் | 1516 | 424 | 458 |
| 43 | ,, திருஞானசம்பந்தர் திருமடம் | 1526 | ,, | ,, |
| 44 | ,, அப்பர் சுவாமிகள் ,, | ,, | ,, | ,, |
| 45 | திருமறைக்காடு—முன்கோபுரம் கோயிலும் மணிகர்ணிகை தீர்த்தமும் | 1528 | 444 | ,, |
| 46 | ,, பாடித்திறப்பதற்குமுன் அன்பர்கள் சென்று தரிசித்து வந்தமருங்கோர்வாயில் | 1531 | 449 | 459 |
| 47 | ,, மறைகள் பூசித்து திறந்த திருவாயில் | 1534 | 451 | ,, |
| 48 | ,, அடைத்த திருவாயில் | 1537 | 458 | ,, |
| 49 | திருவாய்மூர்—பசுபதீஸ்வரர் கோயில் | 1547 | 465 | 573 |
| 50 | திருக்கச்சிமயானம் | 1590 | 543 | ,, |
| 51 | திருக்கழுக்குன்றம் மலயடிவாரத்திலிருந்து பார்வை | 1595 | 557 | ,, |
| 52 | ,, விமானங்கள் | ,, | ,, | ,, |
| 53 | பழையனூர்க் கோயில் (முன்பார்வை) | 1606 | 572 | 572 |
| 54 | திருவாலங்காடு | ,, | ,, | ,, |
| 55 | திருக்காரிகரை—முகப்பு (இராமகிரி) | 1608 | ,, | ,, |
| 56 | திருவையாறு — அப்பர் வந்தெழுந்த வாவி (உப்பன்குட்டைக்குளம்) | 1636 | 610 | ,, |
| 57 | திரு இராமேச்சரம் | 1674 | 688 | ,, |



அரங்கேற்று மண்டபத்தின் முகப்புத்திருவாயில்—
அரங்கேற்றத்துக்குச்செல்லும் கோலம்.



அரங்கேற்று மண்டபம்.
புராணஉரை அரங்கேற்றுதைநிகழ்த்தும் கோலம்.

குருபாதம்

திருநாவுக்கரசு நாயனூர் புராண உரை அரங்கேற்றத்தின்போது
திருக்கயிலாய பரம்பரை தருமபுர ஆதீனம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முகஞானதேசிக மகா சன்னிதானங்கள்**
அருளால் வாசித்தளித்த

# ஆசியுரை

திருவருணெறியாகிய தெய்வச் சிவநெறியே உண்மை நாயன்மார்கள் நின்ற செந்நெறியாம். அதனை உள்ளவாறு எடுத்துரைக்கும் வாயிலான், சைவ சமயப் பேருண்மைகளையும் சம்பிரதாயக் கிரமங்களையும் மக்கட்கு உணர்த்திப், பத்திச்சுவை நனி சொட்டச் சொட்ட, இலக்கியச் சுவை நிரம்ப, அலகில் கலைத்துறைகளின் இயல்பு விளக்கி, அருண்மொழித் தேவராகிய சேக்கிழார் நாயனாரால் அருளிச்செய்யப்பட்டது திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம். அத்தகைய சிவானுபவ விளக்கத் தெய்வ அருண் ஞான நூலுக்கு முன்னோர் சென்ற நெறிக்கு மாறுபடாவகை சிவக்கவிமணி-கோவை - திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் விரிவுரை இயற்றி வருவதில் திருநாவுக்கரசு நாயனூர் புராண விரிவுரை நமது ஆதீன வெளியீடாக நம்முன் இன்றரங்கேறியது.

அது சம்பந்தமாகத் தலைவரவர்களும், சேக்கிழார் மரபினராகிய உரையாசிரியர் சிவக்கவிமணியவர்களும், மற்றும் பல புலவர்களும் சிறப்பாக எடுத்துரைக்க யாவரும் கேட்டு மகிழ்ந்தோம்.

தலைவரும், விரிவுரையாசிரியரும், பின்பற்றிப் பேசினோரும், மற்றும் வந்திருந்து கேட்டு விழாவைச் சிறப்பித்த அன்பர்களும், இத்திருத்தொண்டில் ஈடுபட்ட பணியாளர்களும் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமாள் திருவருளால் நோயற்ற வாழ்வும், குறைவற்ற செல்வமும், சிவஞானமும் மேன்மேலும் வளர நீடூழி வாழ்வார்களாக !

ஆதீன மடாலயம், தருமபுரம்
6—9—43

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன முனிவர் குழாத்தில் ஒருவராகிய
ஸ்ரீமத் - மௌன - சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அருளிய

# சிறப்புப்பாயிரம்

தெய்வம் சிவனே சிவனருள் சமயம்
சைவம் சிவத்தொடு சம்பந்த மென்றான்
சைவம் வளர்க்கும் சம்பந்த மூர்த்தி. —சிற்றம்பலநாடிகள்

அங்கயற் கண்ணி பங்கில் வீற்றிருந்த
செக்கர் வார்சடைச் சொக்க நாயகனை
ஈரெண் டிறத்துப சாரமும் வாய்ப்பப்
பூசனை புரியுந் தேசிக ராகித்
தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்
திருநக ராக வரசு வீற்றிருந்து
மாநிலம் புரக்கு மாசி லாமணி
ஞான சம்பந்த ஞான தேசிக
அமண்மா சறுத்த கவுணியர் பெருந்தகை
பிள்ளைமை விடுத்தத் தள்ளரும் பருவத்
துள்ளதன் படிவ முணர்த்துவ கடுப்ப
மாநிலத் தமர்ந்த ஞான சம்பந்தன்
பொன்னடிக் கமலஞ் சென்னிவைத் திறைஞ்சுதும். —குமரகுருபரர்

ஆசையறாய் பாசம்விடா யானசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நினையாய்—சீ, சீ
சினமே தவிராய் திருமுறைக ளோதாய்
மனமே யுனக்கென்ன வாய். —சிவபோகசாரம்

என்னை யறிவென்று னென்னறிவி லானந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமு—மென்னையுன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்று னிம்மூன்று
மாராய்ந் தவர்முத்த ராம்.

ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்ல
லோய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுண் ஞானப் பிரகாசன்மெய்த் தொண்டர்களே.

எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையன; (அதுபோல) உலகம் ஆதிபகவனை (முதற்கடவுளை) முதலாகவுடையது என்பது தமிழ்மறைத் திருக்குறள்.

இனி முதற்கடவுளாவார் சர்வசங்கார காரணராகிய சிவபெருமானே. சிருட்டி முதலிய ஐந்தொழிலிலும் சர்வசம்காரத்தைச் செய்பவனே ஏனைய உபசாரக் கடவுள

ரின் மேலான முழுமுதல்; மூவர் கோனுய நின்ற முதல்வன். அந்தம் - ஆதி - என் மனுர் புலவர் என்பது தமிழ் ஆகமஞான பாதமாகிய சிவஞானபோதம்.

பாரிலுள்ள நூலெல்லாம் படித்து அறியும் பயனுகச் சிவஞானசித்தியிலே ஒருவிருத்தப்பாதியை நல்லாசிரியர்பால் முறையே கற்றுக் கேட்டுச் சிந்தித்து நிட்டை கூடிச் சிவபெருமானின் திருவருளாகிய திருவடிகளில் காறலே போலும், தாடலே போலும் அடங்கி, ஏகனுகி இறைபணி நின்று, மும்மலங்களின் தாக்கற்றுச் சிவமாம் தன்மையைப் பெறுதலே ஆன்மாக்களுக்கு உரிமை. சிவபெருமான் திருவடியாகிய மரக்கலத்தைச் சேர்ந்தவர் பிறவியாகிய பெரிய கடலேக் கடப்பார். அதனேச் சேராதவர் கடக்கமாட்டார். திருவடிப்பேருகிய அருள் முத்தி பெற்றுரே, சிவ மொன்றுமே கண்டுகொண்டு உலகத்தைப் பாராது, உலாவுகின்ற சீவராய்ச் சீவன் முத்திப் பெருவாழ்வினராவர். பிராரத்த உடல் உள்ள அளவும் நின்றியங்கி மேலேப் பிறவிக்கிடமாய மலங்கள் தேய்ந்துவிட்டமையால் காயமழிந்த பின், பரமுத்தராவர். அவர்களின் நிலேயைப்பற்றிய உண்மை விளக்கமாவது,

கற்று மனம்போல் கசிந்துகசிந் தேயுருகி
உற்றுசான், லிங்கம், உயர்வேடம்—பற்றுக
முத்தித் தலேவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திகளில் நின்றிடுவர் பார்.

இந்தனத்தி லங்கி யெரியுறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண்—சந்ததமும்
மத்துவித மாவதுபோ லான்மாவு மீசனுமாய்
முத்தியிலே நிற்கு முறை.

அத்தகைய சிவப்பேறு பெற்ற பெரியார்களே, பெரிய புராண வரலாற்று அடியார்கள். அவர்களுள் சைவசமய குரவர்களாவார் நால்வரில் ஒருவரே திரு நாவுக்கரசு நாயனுர். சிவபெருமானுல் "அம்மையே" என்று புனிதவதியாகிய காரைக்கால் அம்மையார் அழைக்கப்பட்டது போலச், சிவகுமாரராகிய திருஞான சம்பந்தரால் "அப்பரே" என்று போற்றப்பட்ட பெரியார்; திலகவதியாராகிய தமக்கையாரால் சிவதீக்ஷா அருள் விபூதிப் பிரசாதம் வழங்கப்பெற்றுப் புறச்சமயத் தீங்கும் சூலேநோயும் நீங்கப்பெற்ற பெருந்தவத்தோர்.

திருத்தொண்டர் புராணம் என்பது அருள் நிறைவாகிய மூலநிதியும், ஞான பொக்கிசமுமாம். அதன் ஆழ்ந்த நுட்பத் தெய்வ உண்மை அனுபவங்களே "சிவன் அவன்" சிந்தையுள்ளே நின்ற அதனுல் "அவன் அருளே கண்ணுகக் காட்டக்கண்டா லொழிய" ஏனேய பசுபாச தற்போத ஏகதேச மாயாகருவி ஞானங்கொண்டு அறிய லாகாது. அவ்வாறு அறிய இயலாத பேதைமாக்கள் மேலெழுந்தவாரியாகப் பெற் றவர் பெற்ற பயன் நுகர்ந்திடும் பித்தராய் மனம்போன போக்கெல்லாம் வரையறை யின்றிப் பலப்பட பிதற்றித் திரிவது என்ன பாவம்! ஆ! ஆ! கலியின் கொடுமையோ? தீவினேயாளரின் தவக்குறையோ? அப்பேதைமைக் கூற்றுவன: இந்நூல் பரவி விளக்கி வரும் தெய்விகப் பெருநிலேயை நோக்கிப் பயந்து இதனுல் மக்கள் பெரு நோய் பரவுதல்போலக் கேடுறுவர் என்று சுட்டெரிக்கவேண்டும் என்பனவும், விதவை மணம் என்னும் மறுமணம், சாதி ஒழித்தல் சாதிகலப்பு கதம்ப சமரசம் என்னும் பேரால் மக்கட் கூட்டச் சமூக சீர்திருத்தம் வேண்டும் என்பனவும், இன்னும் ஒருபடி மேலாகச் சமய சீர்திருத்தம் வேணடும் என்பனவும், இவ்வாறு தாந்தாங்கொண்ட இழி கொள்கைகளுக்கெல்லாம் இப்புராணத்தில் ஆதரவும் நிராதரவும் தேடிக் கூறும் பயனற்ற பேச்சுக்களாம்.

சைவ சமயத்தின் சமரசம், எல்லாம் ஒரே குவியலாகச் சேர்க்கும் கதம்ப சமரசமன்று ; படிமுறையாகப் பலப்பல வகைகளையும் ஒரே கோர்வையாக ஒற்றுமைப்படுத்தி வேற்றுமையில் ஒற்றுமையையும், ஒரே பெரிய நிலையிலிருந்து பலப்பல படிமுறையாக வகுத்தெடுத்து ஒன்றுபடத்தக்க நேர்மையாக ஒற்றுமையில் வேற்றுமையையும் ஆராய்ச்சி அனுபவ உணர்ச்சி வாயிலாக அறிவினிடத்தே கண்டறிவதோர் அரிய செயலாவதேயன்றி, வெறுவெளிபோலப் பேச்சினால் அன்று. பலவகைப்பட்ட ஒவ்வொரு அனுபவ உண்மைக்கு மாறாகப் பேசும் போலிச் சமரசம் ஒவ்வோர் சுயநலம்பற்றிச் சூழ்ந்த ஆராய்ச்சிகள் அறிவற்ற பேதைமையே. இம்மட்டிலமையாது இன்னும் இப்பெரிய புராண அடியார்களின் அரும்பெருஞ் செயல்களை நம்பத்தகாதென ஒதுக்கி நாத்திகம் பேசி, அந்தோ! நாத்தழும்பேற வீணே காலம் கழிக்கும் மக்கட் பதர்களும் உண்டு.

அரன் பணியும் அடியார் பணியும் என்ற இருபயன்களே மக்கட்பிறவியின் பயன் என்றதனை உள்ளுறையாகக் கொண்டு பேரறிவுக்கும் அருள் ஞானத்துக்கும் நிலைக்களமாய் விளங்கும் இந்நூலினின்றும் அதற்குரிய பயனைப் பெறாது. இந் நாளுலகம் குரங்கின் கையில்கொண்ட பூமாலையைப்போலப் பயன்படுத்தி அலங்கோலமுறுகிறது. இனித் தமிழ்ப்பேரிலக்கியமாயும் பெருங் காப்பியமாயும் உள்ள இதனை அந்தப் பயன் கருதிப் பயில்வாரும் சிலர் உண்டு. உயர்தரப்பள்ளிகளில் பரிட்சைப் பாடப் பகுதிகளாக நியமிக்கப்படும் அவ்வப் பகுதிகளை, ஆசிரியர்களும் மாணவர்களும், அந்நிலையினின்று பயின்று வருகின்றார்கள்.

இனி, இதனை ஞானப் பெருஞ்சாதனமாகக் கொண்டு மேலாகிய பெரும்பயன் பெறுவார் ஒரு சிலரும் உண்டு. ஸ்ரீமத் குமரகுருபரர் அருளியபடி அறிவன் நூல் என்னும் ஒரு பெரிய வேதவிருக்ஷத்தில் படுபயன் பலவாக, அவற்றுள் இலை, தளிர், அரும்பு, மலர், பிஞ்சு, காய் என்ற ஒவ்வொன்றையும் விரும்பியபடி கொண்டு பயன் பெற்றோர் பலப்பலராக, அதன் உச்சியிற் பழுத்த ஆரா இன்ப அருங்கனி பிழிந்து சாரங்கொண்ட சைவசித்தாந்தத் தேனமுதருந்தினர் சிலரே யாவர். அச்சித்தாந்த இலக்கணத்துக்கு இலக்கிய அனுபூதி வாழ்க்கை உண்மை வரலாற்று நாயன்மார்களை அறியக்கூடியவர்களும் ஒரு சிலரே யாதல் தகுதியே.

இந்நிலையில் இப்பெரு நூலுக்கு ஆசிரியர் கருத்துக்கு இயைந்தபடி ஒரு பேருரை மிகவும் இன்றியமையாதது ஒன்றாகும். அக்குறையை நீக்கி நிறைவு செய்ய முன் வந்துள்ள பெரியாரைப்பற்றி இனிப் பேசுவாம்.

முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ? தென்திசை செய்த மாதவத்தால் அவதரித்த சமய குரவர் நால்வருள் ஒருவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் "தில்லைவாழந்தணர்" என்று ஸ்ரீ தியாகராஜப் பெருமான் அடியெடுத்துக் கொடுக்கத் திருத்தொண்டத்தொகையை முதனூலாகப் பாடியருளினார். திருநாரையூர் ஸ்ரீ பொல்லாப்பிள்ளையார் அநுக்கிரகம் பெற்ற நம்பியாண்டார்நம்பிகள் "திருவந்தாதியை" வழிநூலாக அருளினார். சிதம்பரத்தில் பொன்னம்பலத்தில் ஸ்ரீ நடராசப் பெருமான் "உலகெலாம்" என்று அசரீரியாக அருளக் குன்றத்தூர் ஸ்ரீ சேக்கிழார் நாயனார் சார்பு நூலாகப் பெரிய புராணம் பாடியருளினார். அவ்வரிய செயல் ஸ்ரீ சேக்கிழார்க் கல்லால் மற்றை யாவர்க்கும் எளிதல்லவெனச் சந்தான குரவர் நால்வருள் ஒருவரான உமாபதி சிவாசாரியார் போற்றினார். அச்சேக்கிழாரின் திருவடியையே சிந்தித்து அருளைப் பெற்ற திருவாரூருக்கடுத்த காவால்குடித் திருவாளர் சுப்பா முதலியார் என்பார் தெள்ளிய நடையில் ஆயிரம் பாக்களில் அந்தாதித் தொடராகப் பெரிய புராணச்

சுருக்கம் பாடிமுடித்தார். அதுபோலவே அச்சேக்கிழாரின் திருவருட் பேற்ருல் இப்பெரிய புராணத்துக்கு அரிய பெரிய விரிவுரையைக் கண்டவர் அக்குலதிலகராய்க், குருலிங்கசங்கம சிவ பக்தியிற் சிறந்த, சிக்கவிமணியாகிய திருவாளர் கோயம்புத்தூர் வழக்கறிஞர் C. K. சுப்பிரமணிய முதன்மையார் ஆவர். அவரே இவ்வுரை செய்வதற்குத் தக்கவர் என்பது இச்சிவதவப் பெருஞ்செல்வரின் தந்தையாரின் வரலாற்ருல் விளங்கும். இச்சிவப்பணிக்கு உரியராம் ஆற்றல் உண்டாம்படி அத்தொண்டர்களோடு கூட்டி, அப்பாலும் அடிசார்ந்தாரில் ஒருவராய் அத்திருக்கூட்டத்தினரில் காலத்தால் பிந்தியானுலும், இடத்தால் இவ்வையகம் போற்ற விரிவுரை ஆசிரியராக முந்தியிருப்பச் செய்த மகற்காற்றும் உதவியைச் செய்து "இவன் தந்தை என்னேற்ருன் கொல்" என யாவரும் வியந்து நன்றிபாராட்டத்தக்க தந்தையாராகிய கோவை மகாவித்துவானும், வழக்கறிஞரும், அருட்புலவருமாகிய காலஞ்சென்ற தவச்செல்வர் திரு. கந்தசாமி முதலியார் என்பவரைப் பற்றியும், அவரருளிய பல பிரபந்த திரட்டுகளில் பேரூர் புராண முகவுரையில் அச்சான கிள்ளைவிடு தூது என்ற நூலிலிருந்து சில பகுதிகளை, இடமில்லை என்று விடாது, பேசி மகிழ்வாம். திருக்கைலாய பரம்பரையில் தென்றிசைத் தமிழ் முனிவர், அகத்தியர் அநுக்கிர பரம்பரையில் வழிவழி அடிமையாய்ச் சிவானுபூதிச் செல்வராய் அவர் விளங்கினமையைக் காட்டும் அகச்சான்றுக் கண்ணிகளாவன (441 - 449 - 515)

... ... ... —வாய்த்தவெளிப்
பட்டப் பகலிற்கண் பார்வையிலாக் கூகையைப்போல்
தட்டித் தடவித் தவியாதே - கிட்டி
அவசமயத் துள்ளாழ்ந் தலையாதே யுன்றன்
சுவசமயந் தேறென்று சொன்னுன் - சிவசமயத்
துண்மையெலா நெஞ்சத் துறுத்தினுன் வேற்றுமதத்
திண்மையெலா மில்லாமற் செய்திட்டான் - அண்மைசெறி
பத்தி நெறியும் பழவடியார் தாள்பணியும்
புத்திநெறி யும்மெனக்குப் போதித்தான் - சித்திநெறி
காட்டினு னென்கட் கலந்துநின்ற தீக்குழுவை
யோட்டினுன் வேறே ருருச்செய்தான் - வேட்டுவனோர்
மென்புழுவைத் தன்படிவ மெய்துவித்த வண்ணமெனைத்
தன்புதிய கோலஞ் சமைப்பித்தான் - முன்பு
பதைப்பற் றிறுமாந்து பாறையொத்த நெஞ்சைப்
பதைப்புற் றுருகப் பணித்தான் - புதைத்தவன்பால்
எங்கு மிருப்பா னிறையெனினு மூர்த்தியிடைத்
தங்கும் விசேடமெனச் சார்வித்தான் - அங்கெனக்குக்
கண்ணினீர் வார்க்கவுடல் கம்பிக்க மெய்ப்புளக
நண்ணவொரு சால நவிற்றினுன் ... ...
... ... ... மெய்யை
விரிந்த பொருளால் விளம்பியவென் னையன்
பிரிந்தருளி னுனென்னைப் பின்னர்......"

என்ற சுவானுபூதி வாக்கில் மெய்யை விரிந்த பொருளால் விளம்பிய நிலையை உணர்த்தும் பகுதி இங்கு மிகப் போற்றத்தக்கது. தந்தை அறிவு மகன் அறிவாதலால் நமது ஆசிரியரே (சிவக்கவிமணியே) விரிவுரையாசிரியராயிருத்தல் மிகத் தகுதியுடைத்தென்பதே திருவருட் டுணிபு. "பல்லூழி காலம் பயின்றரனை யார்ச்சிக்கில், நல்லறிவு சற்றே நகும்" - "ஆடுபல தேடலாம், ஆனமத யானையொன்று; தேடலரிதே"

என்ற பழமொழிகள் சிந்திக்கத் தக்கன. இங்கு இவ்விரிவுரையேயன்றித் திருப்பேரூர்ப் பட்டிப்பெருமான் பேரில் பல பிரபந்தங்களும் அதிநூல்களும் இயற்றியுள்ளார் (பேரூர்ப் புராணம் பதிப்பாளர் முகவுரையை ஆழ்ந்து பார்த்துச் சிந்தித்துணர்க) இவ்வாறாக இவ் வழிவழித் தொண்டர், ஆசிரியர் இதுவரை ஸ்ரீமத் திருநாவுக்கரசு நாயனார் புராணம் முற்றும் திருவருள் துணைகொண்டு உரையியற்றி யுள்ளார்கள்.

இதனுள் ஸ்ரீ திருநாவுக்கரசு நாயனார் புராணத்தைத் திருக்கைலாய பரம்பரை தருமபுர ஆதீனம் 24-வது குருமூர்த்தி ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த மகா சன்னிதானம், ஆதீனச் சார்பில் வெளியிடக் கருணைபுரிந்தார்கள். அப்படியே இனிதே பூர்த்தியாக ஆசியருளி அரங்கேற்றம் செய்யப்பெறக் கட்டளையிட்டார்கள் அது அம்மகாசன்னிதானத்தின் அருள் ஆட்சி 10 ஆண்டு நிறைவு விழா இரண்டாம் நாள் (6-9-43) சுபானு ஆவணி இருபத்தோராம் நாள் சோமவாரம் அனுஷ நக்ஷத்திரம் சப்தமி சித்தயோக நன்னாளில், சென்னை மதமான்யக் கழகம் (H. R. E. போர்டு) தலைவர் திருவாளர் - திவான்பகதூர் - T. M. நாராயணசாமி பிள்ளை, B. A., B. L. தலைமையில், ஸ்ரீலஸ்ரீ மகாசன்னிதானத்தின் திருமுன், அடியார் கூட்டம் சூழச் சிவபக்த சிரோன்மணி முதலியார் அவர்கள்—பூமாலை பட்டாடை சூட்டப்பெற்று அன்பர்கள் போற்ற, ஹர ஹர சப்தம் முழங்க, அவையினர் பூமாரி பொழிய, அரங்கேற்றம் செய்யப்பட்டது. தனிப் புத்தக உருவத்தில் வெளிவந்துள்ளது தமிழுலகுக்கும் சைவ உலகுக்கும் தக்க பயன் தருவதாகும். ஏன் ? சைவ உலகத்துக்கும் தமிழ் உலகத்துக்கும் மட்டுமன்று, மண்மிசைப் பிறந்து வாளா நாள் போக்கித் தாமும் கெட்டுப் பிறரையும் கெடுக்கும் வெறும் உலகத்துக்கும் இது ஈடேற்றும் புணையாக உதவும் என்று சொல்லலாம்.

இவ்வுரையின் நலங்கள் பல. நூல் முழுதும் படித்துப் பயன்பெறுவதற்குப் போதிய காலமும், மனமும், பிறவும் பெறுதவர்கள் அறியும் பொருட்டும், பிறர்க்கும் இதில் மனவெழுச்சியும் ஊக்கமும் சேர்தற்பொருட்டும், அவற்றுட் சிலவற்றை இங்கு உதாரண முகத்தால் எடுத்துக் காட்டுதல் தகுதியாமென்று எழுதலாயிற்று.

## உரையின் பொது நலங்கள்

1. இதனுட் காணப்படும் தலப்படங்கள், அவ்வத் தலங்களையும் அங்கங்கும் காணப்படும் சரிதம்பற்றிய அடையாளங்களையும் நேரே கண்டு பயன்பட்டாற்போன்ற நலத்தைத் தருவன. தலயாத்திரைப் படங்கள் இரண்டும் யாத்திரை செய்வோர்க்குத் தக்க வழிகாட்டியாக உதவுவன.

2. தலவிசேடக் குறிப்புக்கள் அவ்வத் தலங்களிற் சென்று தரிசிப்போர்க்கு உசாத்துணையாய் வழிபாட்டு நலம்புரிவன.

3. சரிதச் சுருக்கமும், கற்பனை என்ற பகுதியும் சரித முழுதையும் அதன்கட் பயின்று உட்கொள்ளத்தக்க உண்மைகளையும் சுருக்கியும் விளக்கியும் இக்கால நிலைக்கேற்றபடி அறியக் காட்டுகின்றன.

4. சரித ஆராய்ச்சிக் குறிப்புக்கள் ஆராய்ச்சியாளர்க்கு ஊன்றுகோல் போலவுதவுவனவன்றியும் நாயனாரது சரிதப் பகுதிகள் பலவற்றினும் உண்மை காணும் சான்றாகத் துணை செய்கின்றன.

5. தலத் தேவாரங்களை அங்கங்கும் தந்து பதிகக் குறிப்பும் பாட்டுக் குறிப்பும் தந்துள்ளது இவ்வுரையின் தனிச் சிறப்பாகும். தேவாரங்கள் புராணத்துக்கு அகச் சான்றாவன. தேவாரங்களால் புராணமும், புராணத்தினால் தேவாரங்களும் ஒன்றினை

லொன்று விளங்க உள்ள பொருட்பொருத்த நிலையானது கற்போர்க்குப் பெருஞ் சாதனமாகும்.

6. தேவாரக் குறிப்பு என்ற பகுதிகள் அவ்வப் பதிகங்களின் உட்குறிப்புக்களை யும் பொதுக் கருத்துக்களையும் தருவன. தேவாரப் பாட்டுக் குறிப்பு என்ற பகுதிகள் பதிகப் பாட்டுக்களை வரிசைப்பட எண் குறித்து அவ்வப் பாட்டுக்களில் அறியவேண் டிய பல பொருள்களையும் நூன்முறையும் மரபும் பிறழாது எடுத்துக் காட்டுகின்றன. நாயனாரது தேவாரத்தையும் இதிற்காணும் பதிகக் குறிப்புப் பாட்டுக் குறிப்புகளுடன் தனிப் புத்தகமாக அடக்க விலைக்கு வெளியிட்டால் அது ஒரு பேருபகாரமாகும்.

## உரையின் சிறப்பு நலங்கள்

இனி இவ்வுரையிற் சிறப்பாகக் காணும் சில நலன்களைப்பற்றி இங்கு எழுதப் படுகிறது.

1. 'குலம், குடி,' மரபு முதலிய பகுப்புக்கள் இல்லை; இவை மக்களைப் பிளவு படுத்துவன; இவை ஒழிய அல்லது ஒழிக்கத் தக்கன என்றிவ்வாறெல்லாம் கொண்டு பேசுவோன் "மேதக்க நிலைவேளாண் குலத்தின்கண் வரும்பெருமைக் குறுக்கையர் தங்குடி விளங்கும்" (1280) என்றும், "குணம்பேசிக் குலம்பேசி" என்றும் வரும் பாட்டுக்களின் கீழ் உரைத்தவற்றைக் கண்டு உண்மை தெரியக் கடவன்.

2. சமூகச் சீர்திருத்தங்கள் என்ற பேரால் மறுமணம் (விதவா விவாகம்) முத லியவற்றைப் பேசுவோன் "எந்தையு மெம்மனையு மவர்க் கெனைக்கொடுக்க விசைந் தார்கள், அந்தமுறை யாலவர்க்கே யுரியதுநா னாதலினால் இந்தவுயி ரவருயிரோ டிசை விப்பன்" (1297) என்றும், "அம்பொன்மணி நூல்தாங்கா தனைத்துயிர்க்கும் அருள் தாங்கி" (1299) என்றும் வரும் பாட்டுக்களி லுரைத்தவற்றைப் பார்க்கக் கடவன்.

3. புறச்சமயம் புகுந்தவன் மீளவும் சைவத்திற் சாரும் நிலை வருமாயின், அதற்குத் திருநீறு பூசுதலும் திருவைந்தெழுத்து ஓதுதலுமே போதியது - வேறு கழு வாய் வேண்டாமென்று 1331-ம் பாட்டின் கீழ் விசேட ஆராய்ச்சி செய்வோரு முண்டு. இதுபற்றி இவையே போதா என்றும், சிவாகமங்களுள் வகுத்தபடி உடல் வருத்தும் வேறு கழுவாய்களும் வேண்டப்படுவன என்றும், அவ்வாறு திருநாவுக்கரசு நாயனாருக்கும் இறைவர் சூலைநோய் தந்து அருளி அதன் பின்பே, சைவ சமயம் புகும் திறம் தந்தருளினர் என்றும், பின்னரும் அதுபற்றித் தோளில் சூலமும் இடபமும் பொறிக்கும் கழுவாயும் இறைவரை வேண்டி அவ்வாறே அருளப்பெற்றனர் என்றும் எடுத்துக் காட்டியுள்ள உரைப்பகுதிகளின் நுட்பங்கள் கண்டு ஆராய்ச்சியாளர்கள் உண்மைநிலை தெளியத்தக்கார். 81—207 பக்கங்கள் பார்க்க.

4. கடலினுள் கல் மிதக்குமா? நீற்றறையினுள் தீக்கொளுவவிட்டு ஏழுநாள் இருந்தும் சாம்பர் ஆகாது உயிருடன் ஒருவர் மீளுதல் இயலுமா? என்று கேட்டு, இவ் வாறு புராணங்களுள் வரும் பகுதிகளையும் எழுதியும் நம்பியும் வந்த அறியாமைக்கு நமது பெரியோர்களை அவ்வளவின் மன்னித்து விடுவோரும் அநேகர் உளர். இவை பற்றி 1101 பக்கங்களில் வரும் உரைப் பகுதிகளை இவ்வாராய்ச்சியாளர் படித்தாற் பயன் பெறுவார் என்பதுடன் பெரியோர்களிடம் அபசாரப்பட்டுப் பாவத்துக் காளாகாமலும் வாழ்வர்.

5. உண்ணாவிரதம் என்ற கொள்கை இப்போது பரவி வருதல் காண்கின்றோம். அது புதிதாய்க் கண்டதொன்று என்று பலர் கருதுகின்றனர். அப்பர் சுவாமிகள் இதை அனுட்டித்த செய்தியைப்பற்றிய உரை கவனிக்கத் தக்கது. (468) பக்கம்.

6. மந்திரங்களால் தீ, நோய், விலங்குகளின் தீமை முதலியவற்றை விலக்க முடியுமா? நஞ்சு உண்ட பின்பு அதன் தீமை எய்தாது தப்புதல் கூடுமா? ஆளுடைய பிள்ளையாருக்குத் திருவீழிமிழலையில் காசு கொடுத்த இறைவர் வாசியுடனும், அப்பர் சுவாமிகளுக்கு வாசி இல்லாமலும் கொடுத்த காரணம் என்ன? என்றிவ்வாறு விசாரிக்கும் கவலை கொண்ட அன்பர்கள் அவ்வப்பகுதிகளின் கீழ்வரும் உரைகளைப் படித்தாற் பயன் பெறுவர் (மந்திரம் - 142 ; நஞ்சு - 138 ; வாசி (வட்டம்) 433 ; (பக்கம்) முதலியவை காண்க.

7. ஆளுடைய பிள்ளையாரது பெருஞ்சரித முழுமையும், அப்பர் சுவாமிகளது சரித முழுமையும் மிகச் சுருக்கமாகப் பாகுபாடுசெய்து அறியவேண்டின் பிள்ளையார் சரிதம் 263-ம் பக்கத்திலும், அப்பர் சுவாமிகள் சரிதம் 48-ம் பக்கத்திலும் பார்க்கலாம்.

8. சொற்பொருள் விளக்க நுட்பங்கள் மிகச் சிறப்பாய் இவ்வுரையில் அமைந்துள்ளன. **கலந்து** (காவிரியின் இருகரையும் கலந்து) பக்கம் ௨௭௭ ; **குறிப்புணர்த்த** (பக்கம் ௬௯) ; **சிவானந்த ஞான வடிவு** (௭௩௯) முதலியவை பார்க்க.

9. **கலைஞான நுட்பங்கள் :**—வான சாத்திர நுட்பம் (Sun Spots) (பக்கம் - ௩௦௬); உடல் நூல் நுட்பம்-(பக்கம் ௩௭௪); பரதநூல் நுட்பம் (பக்கம் ௭௨௬) பார்க்க.

10. சைவ சித்தாந்த ஞானசாத்திர உண்மைகள் அங்கங்கும் விளக்கப்படுகின்றன :—திருவைந்தெழுத்து பக்கம் - ௧௬௬ முதலியவை காண்க.

11. தேவார முதலிய அருணூல்களில், உரையாசிரியரது அனுபவ முறையில் அறிந்த சில குறிப்புக்கள் அங்கங்கும் தரப்படுகின்றன. அவை உயிர்களுக்கு அருணூல்களின் உறுதிப்பாட்டினை விளக்க உதவுவன. பக்கம் (௬௪௧).

இவை முதலான பல சிறப்புக்களும் காணலாம். எனவே எம் பரமாசாரிய ஞானதேசிகரின் "சண்முக"ப் புனித நாமத்தையே தமக்கும் "சுப்பிரமணிய" என்ற திருப்பெயராகக் கொண்டு, சிவகுருநாதனின் திருவடிச் சிந்தனையையே என்றும் மறவா நினைப்பூட்டி, அடியார்களை "திருவடி சேர்முத்திக்கே" செல்லும் வழிகாட்டி.

"அறத்திலீடிய வகத்திடைச் சிவானந்தம் விளைய, உறத்த டாதுமுன் பாய்த்திய வொழுக்கநீர் முழுதும், புறத்தினேகுறக் கவிழ்த்ததே போன்மெனப் புனல்கண்ணிறத்தின் வாக்குமெய் யன்பின ரெவரையும் நினைப்பாம்" என நித்த நியமம் கொண்டுள்ளவரே நமது உரையாசிரியர் என்பது வெள்ளிடைமலைபோல் விளங்கும்

கரிமுகக் கணபதியையும் திருவேலிறை கந்தவேளையும் பெற்ற உமைபாகம் ஆலவாயண்ணல் திருவருளால் சிவக்கவிமணியும் சிவபக்த சிரோன்மணியுமான திரு. கந்தசாமி பெற்ற சுப்ரமணிய முதலியாரவர்கள் நோயற்ற திடகாத்திரமும் குறைவற்ற செல்வமுமுடையராய் "எடுத்த மாக்கதை"யின் விரிவுரை முற்றும் இனிதே விரைவில் பூர்த்தியாகி நிறைவேற்றப் பெற்று சிவத்தொண்டு புரிந்து நீடுவாழ்க.

கதிவாழ்க வேநல்ல வாகமம் வாழ்கநற் கண்மணியுன்
பதிவாழ்க சைவந் திருநீறுங் கண்டியும் வாழ்கவருட்
குருவாகும் நின்றன் றிருக்கூட்டம் வாழ்கநற் கோநிரைகள்
தெருவாழ் தருமைத் திருஞான சம்பந்த தேசிகனே

திருச்சிற்றம்பலம்

தருமபுரவாதீனம்
திருசிரபுரம்
மலைக்கோட்டை
மௌன மடம்
7—11—43

மௌன. சோமசுந்தரத் தம்பிரான்

---

உ

சிவமயம்

# மூன்றும் பகுதி—முதற்பாகத்தின் முன்னுரை

## (திருநாவுக்கரசு நாயனார் புராணம்)

இவ்வுரை வெளியீட்டில் முன்னுரை எழுதுவது ஒரு சிரமமான காரியம். இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை அது என்மேல் வந்து நிற்கின்றது. இவ்வுரை வெளியீடு 1935-ம் ஆண்டில் தொடங்கி முதற்பகுதி இரண்டரை ஆண்டுகளில் (15-9-1937-ல்) வெளியாயிற்று. அப்போது இவ்வெளியீட்டின் புராண உரை முழுமையும்பற்றி முகவுரை எழுதவேண்டிய பொறுப்பு என்மேலதாகவும், அதனைப் பின்னர்த் திருவருள் வழியே உரை முற்றுப்பெறும்போது செய்யும்படி வைத்து, "முகவுரைக்கு முன்னுரை" என்ற மட்டில் ஒன்று எழுதி வெளியிட்டேன். அதன்பின் மூன்று ஆண்டுகளின் பின் (25-12-1940) இரண்டாம்பகுதி வெளியாயிற்று. அப்போது அதன் மட்டில் ஒரு முன்னுரை எழுதி வெளியிட நேர்ந்தது. இப்போது அதன்பின், இரண்டரை ஆண்டுகளுக்குமேல் சென்றன. 6-9-1943-ல் மூன்றும் பகுதியின் முதற் பாகமாகத் திருநாவுக்கரசு நாயனார் புராணம் மட்டும் வெளியிட்டு அரங்கேற்ற விழாவும் நடந்தது. ஆதலின் இப்பகுதிக்கும் ஏற்றவாறு ஒரு முன்னுரை எழுதுவது என் பொறுப்பாயிற்று - என்ற இந்தமட்டில் அமைந்துவிடினும் சாலும். அதுவே இடைப்பட்ட வரலாற்று நிலை முழுதும் சுருக்கி விளக்கும். ஆயினும் கடமைபற்றிச் சில கூறுகின்றேன். ஆயின் அடுத்த முன்னுரை விரைவில் எழுத நேரும் என்றும், மூன்றும் பகுதியின் இரண்டாம் பாகம் வெளிவந்து அதனுடன் திருநின்ற சருக்கமும் பெரிய புராண முதற் காண்டமும் உரையுடன் வெளிவரக் காணும்பேறு பெறத் திருவருள் விரைவில் கூட்டுவிக்குமென்றும் நம்புகின்றேன்.

**2. நன்றியுரை**

புராண உரைத் தொடக்கத்தில் திருக்கயிலாய பரம்பரை திருத்தருமபுர ஆதீனம் 24-ம் பட்டமாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக பண்டாரசந்நிதிகளை, முதன்முறையாக, நான், நளனுக்குக் கலிநீங்கிய தலமாகிய திருநள்ளாற்றில் தரிசித்துப் புராண உரையினைப்பற்றி விண்ணப்பித்து அவர்களது அருளாசியை வேண்டிக்கொண்டேன். அவர்கள் பெருங் கருணைகூர்ந்து உரை நடை பெறுக! என்று ஆணை தந்ததுமன்றி, இதனுள் ஒரு நாயனாரது சரித உரையைத் தங்கள் ஆதீனம் தனி வெளியீடாக வரும்படி உதவுவதாகவும் அருள்புரிந்தார்கள். அதுகாலை அவ்வாதீனத்து முனிவர் குழாத்தில் ஒருவராகிய ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அடியேனையும் உரை முயற்சியினையும் மகா சந்நிதானங்களின் திருமுன்பு பேரன்பு கூர்ந்து அறிமுகப்படுத்தி அவர்களது அருளைப்பெற உதவிபுரிந்தார்கள்; பின்னர் ஒரு மதிப்புரையும் தந்தருளினார்கள். அது இரண்டாம் பகுதியில் வெளிவந்துள்ளது. இப்போது அவர்கள் சிவபதநீழலில் சமாதிகூடி யருளிவிட்டார்கள் என்பது குறித்து வருந்துகின்றேன். இப்பாகம் நிறைவேறி வெளிவரும் இந்நாளில் உடனிருந்தால் மிகவும் மகிழ்வார்கள். இனி, அவ்வாறு மகா சந்நிதானங்கள் ஆணைதந்து ஆண்டுகள் பல கழிந்துசென்றன. உரையும் ஆமை வேகத்தின் விரைவாய் நடைபெற்று வந்தது. பின்னர்த் திருநாவுக்கரசு நாயனார் புராணம் தொடங்கினேன். அவர் துறவுநிலையினர் ஆதலாலும், சைவ சமய ஞானாசிரிய மூர்த்திகளுள் ஒருவராதலா

லும் அவர் புராணம் தங்கள் ஆதீனத் தனி வெளியீடாக அமைதல் தகுதி என்று திருவுள்ளங்கொண்டு மகா சந்நிதானங்கள் அவ்வாறே ஆணைதந்து அதற்காவன எல்லாம் மனமுவந்து செய்தருளினார்கள்; பல்லாயிரங்களாக வெண்பொற்காசுகளைப் பரிந்து தடையின்றி அவ்வப்போது உதவியும், படங்கள் எடுப்பித்தும், மற்றும் பலவகையாலும் ஊக்கம்செய்தும் இதனை நிறைவாக்க அருள்புரிந்தார்கள். தமது அருளாட்சியின் பத்தாவது ஆண்டு நிறைவு விழாவில் இரண்டாம் நாட் கொண்டாட்டத்தில் 6-9-1943-ல் தமது ஆதீன மடாலய மண்டபத்தில் தம் திருமுன்பு தமிழ்ப் புலவர் மகாநாடு கூட்டிச், சென்னை அறநிலையச் சொத்துப் பாதுகாப்புச் சபைத் தலைவர் திவான்பகதூர் - திரு. T. M. நாராயணசாமி பிள்ளையவர்கள், B.A., B.L., F. M. U., தலைமையில் இதனை அரங்கேற்றச் செய்து ஆசி புரிந்தருளினார்கள். மேலும் அவர்களது கருணைக்கொடை வள்ளன்மை காலத்தினாற்செய்த பெருநன்றியாகும். அதனைப் பெற்றிராவிடின் இவ்வெளியீடு பெரிதும் முட்டுப்பாடுற்றிருக்கும் என்று துணிந்து கூறுவேன். இதுபோன்ற சிவதருமங்கள் பலவும் சிறக்க அவர்கள் அருளாட்சியில் ஆணையிட்டுப் புரிந்தருளி வருவது சைவவுலகம் நன்கறியும். அவர்களது திருமரபு நீடுவாழ்க. என் மனமார்ந்த நன்றியை அவர்களது திருவடிகளிற் செலுத்துகின்றேன்.

**3. பல அன்பர்களின் உதவிகள்**

எனது உழுவலன்பர்-இராவ்பகதூர் - திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள், B. A., B. L., F. R. G. S., F. M. U. (சென்னை அறநிலையச் சொத்துப் பாதுகாப்பு நிலயம் கனம் அங்கத்தினர்) தமது பல அலுவல்களிடையில் அப்பர் சுவாமிகளது சரித்திர ஆராய்ச்சிக் குறிப்புக்கள் எழுதி அன்புடன் உதவினார்கள். அதனோடு தமது தலயாத்திரைகளில் எடுப்பித்த தொண்டைநாட்டு, வடநாட்டுத் தலங்களின் படங்களையும் உதவினார்கள்.

எனது அரிய நண்பரும் பேரன்பருமாகிய தணிகைமணி, இராவ்பகதூர் - திரு. V. S. செங்கல்வராய பிள்ளை, M.A., அவர்கள் அன்புடன் பல திருத்தங்களையும்; எனது மற்றொரு அன்பர் திருவாளர் - கோயமுத்தூர் - பொள்ளாச்சி - காளியாபுரம்- ப. மலையப்ப கவுண்டர் அவர்கள் நாயனார் சென்றருளிய தலங்களைப்பற்றிய பல குறிப்புக்களையும் எழுதியனுப்பி யுள்ளார்கள். அவைத் தனியிதழில் தரப்பட்டுள்ளன. அன்பர்கள் அவற்றை ஏற்றபெற்றி அவ்வவ்விடங்களில் அமைத்துக் கொள்வார்களாக.

இப்புராண உரை வெளியீட்டில் தொடக்கத்திலிருந்து அரிய பல தொண்டுகளையும் செய்துவரும் திருத்துறையூர் அன்பர் திரு. K. ஆறுமுக நாயனார் அவர்கள் இப்பகுதியில் பெருந்தொண்டாற்றி யுள்ளார்கள். அவர்கள் திருநாவுக்கரசு நாயனாரிடத்துப் பேரன்பு பூண்டவர்கள் என்பதும், அது காரணமாகவே தமது வறுமையையும் பொருட்படுத்தாது அந்நாயனாரது தேவாரத் திருமுறைகளை தமது சொந்தச் செலவில் மூன்றாம் பதிப்பாக வெளியிட்டு அடக்க விலைக்கு உதவினர் என்பதும் யாவருமறிவர். அவர்கள் இப்புராண - உரையின் நிறைவைக் கண்டாலன்றி தமது ஊருக்குத் திரும்புவதில்லை என்ற உறுதியுடன் சென்னையில் வேறு அலுவல் ஒன்றுமின்றி இதற்காகவே பல மாதங்கள் தங்கி ஆவன எல்லாம் அரிது முயன்று உதவினர். காகிதப் பஞ்சம் மிக்க இந்நாளில் அச்சுக்குரிய காகிதங்களைப் பல இடங்களிலும் அலைந்தலைந்து பெற்றுதவியும், பாட்டு முதற்குறிப்பு முதலியவற்றையும் தோத்திரத் திரட்டையும் தொகுத்து எழுதியும், மற்றும் பலவிதங்களிலும் அவர்கள் பேருதவி புரிந்துள்ளார்கள். தலக் குறிப்புக்களும் மற்றும் விவரங்களும் அவ்வப்போது அறிவித்து உதவிய பல அன்பர்களுமுண்டு. எனது உறவினர்களுள் ஒருவராகிய செட்டிபாளையம் கிராம முன்சீப் - திரு. முத்துக்கிருட்டின முதலியார் இவ்வுரை முழுமையும் விடாமுயற்சி

யுடன் படித்து அவ்வப்போது வேண்டிய ஊக்கம் தந்ததுமன்றி மேற்கோள் நூலகராதியும் தேவார முதற்குறிப்பகராதியும் தொகுத்துதவினர். முன்பகுதிகளில் உதவிய எல்லாப் பெரியார்களுடைய உதவிகளையும் இதனிலும் பெற்றுள்ளேன். இவ்வெல்லா அன்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி செலுத்துகின்றேன். இவ்வெளியீட்டைக் காணும் நண்பர்கள் பலரும் இவ்வாறே தத்தமக்குத் தோன்றிய திருத்தங்களை அன்புடன் எழுதியனுப்புவார்களானால் பேருதவியாகும்.

**4. படங்கள்**

இப்பகுதியில் தேவாரம் பெற்ற தலங்களுள் ஒரு பெரும் பகுதிக்கேனும் படங்கள் எடுத்துப் பதிக்க வேண்டுமென்று அடியேன் எண்ணினேன்; ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானங்களும் அவ்வாறே ஆணையிட்டருளினார்கள். ஒரு நூறு தலங்களுக்கு மேலாகக் குறித்துக் கொண்டார்கள். ஆனால் ஐரோப்பியப் போரின் கடிய முடுகிய நிலையினால் காகிதத்துக்கு மிகுதியும் பஞ்சம் வந்ததுபோலவே, படம் எடுதது்ப் பதிவாக்கும் சாதனங்களும் அருகிவிட்டமையால் அம்முயற்சி கூடாமற்போய் ஒரு சில தலங்களையே படங்களாகக் காண இயல்வதாயிற்று. கிடைத்த சிலவற்றையும் காகிதப் பஞ்சத்தினால் தனிப் பக்கங்களில் இடம்பெற அழகாக அச்சிட வசதியில்லாமல் பலவற்றை ஒரோர் பக்கத்தில் அமைத்துப் பதிக்க வேண்டி வந்தது. அப்பர் சுவாமிகளது தலயாத்திரைப் படங்கள் இரண்டு இதனுள் வருகின்றன. அவை யாத்திரை செய்வோர்க்குப் பெரிதும் பயன்படுவன. இவை விரிவான முறையில் அமைக்கப்பட்டபடியால் அன்பர் திரு. மலையப்ப கவுண்டர் அவர்கள் ஆர்வத்துடன் எழுதியனுப்பிய படங்களைப் பதிக்க இயலாமையாயிற்று.

**அன்பர்களின் ஆதரவு**

முன் பகுதியில் அன்பர்கள் பலரும், நகராண்மை-நாட்டாண்மை முதலிய தலத்தாபன அதிகாரிகளும், பள்ளிக்கூட அதிகாரிகளும், இப்பதிப்பை வாங்கி வைக்க முற்படுவார்களாயின் அதுவே இவ்வெளியீட்டுக்குப் பேருதவியாகும் என்று விண்ணப்பித்திருந்தேன். சில அரசாங்கக் கல்லூரிகளிற் புத்தகசாலைகளுக்கு இப்பதிப்பைப் பெற்றுள்ளார்கள். **தஞ்சைச் சில்லா நாட்டாண்மைக் கழகத் தலைவர் - திரு. V. நாடிமுத்துப் பிள்ளை, M. L. A.** அவர்கள் இவ்வெளியீட்டுப் புத்தகங்களைத் தம்கீழ் உள்ள உயர்தரப் பள்ளிக்கூடங்களில் வாங்கிவைக்க உத்தரவு கொடுத்துள்ளார்கள். இவ்வாறே தமிழ்நாடு முழுதிலும் உள்ள ஏனைய தாபனங்களிலும் கல்லூரிகளிலும் வாங்கி வைக்க முற்படுவார்களாயின் பேருபகாரமாகும். தமிழ் நாட்டு ஏனை அன்பர்களும் ஊக்கமளிப்பார்களாக.

6. இவ்வெளியீட்டுக்குப் "பண்டு மின்றும் மென்றும்" எவ்வகையாலும் உதவி புரியும் எல்லா அன்பர்களுக்கும் எனது வணக்கமும் நன்றியும் உரியனவாகுக.

பேரூர்
'பாலருவாயர் நிலையம்'
26-11-1943

அடியேன்
C. K. **சுப்பிரமணிய முதலியார்**
பதிப்பாசிரியர்

# சில திருத்தங்களும் குறிப்புக்களும்

## I

அன்பர் - இராவ்பகதூர் -

திரு. V. S. செங்கல்வராய பிள்ளை, M. A. அவர்கள் எழுதியது

1315. "வச்சிரமும் பிறவுமாம்" - வச்சிரம்-உட்பாய்ந்தால் பெருந் தீப்போலச் சுட்டுக் கொடுமை செய்யும். வச்சிராயுதம் எனவும் கொள்ளலாம். "உறுதி நாளுள தாயின் வச்சிரம் உரவினர்களும் உய்வார்காண்" - (திருவெண்காட்டுப் புராணம்).

1328. கரை ஏறு நெறி - கடலிற் றள்ளினும் கரையேறக்கூடிய நெறி என்பது தொனி.

1339. "சுந்தரமூர்த்தி" - இதனினும் ஐந்தெழுத்து.

1352. சடையானுக் காளாய் - இங்குச் "சடையான்" என்னும் இழிவு புலப் படுத்தும் சொற் பிரயோகம் வியக்கற்பாலது. உலக வழக்கினும் "எவனோ சடை யான் சொன்னாலும். அவன் பேச்சைக் கேட்டாலும்" என்பது காண்க.

1389. போய் - அருகு - அந்த - வெவ்வினையாளர் - அவருடன் அருகுபோய் - பக்கத்திலே சென்று எனவும் பொருள் கொள்ளலாம். அந்த வெவ்வினையாளர் என் பது வெளிப்படை.

1291. அற்றமுன் காக்கும் - அற்றம் - சமயம் - சமயத்தில் (வேண்டிய சம யத்தில்) முன்னின்று காக்கும் என்றலுமாம்.

1396. சிவிகை என்பதற்கேற்ப - வாக்கின் மன்னர் என அரசினைச் சுட்டினர். மன்னரை ஏந்திய பேற்றால் "வாய்ந்தசீர் வருணன்" என வருணனுக்குச் சீர் வாய்ந்தது.

1432. கை - கண் கரணங்கள்......இவ்வாறு பேறு எய்தும்; மெய்யும் எழுத ரும் என்று பிரித்துரைத்தலுமாம்.

1434. பக் - 237. எத்தினால் பத்தி செய்கேன் - எத்து - வஞ்சகம் - தந்திரம். "எத்தால் மறவாதே"; "எத்தோ நின்னன்புடைமை".

பக்-244. வானவர்க்கும் தானே அவன். தானே நாயகன் என்றலுமாம். இது மகாமகோபாத்தியாயர் ஸ்ரீ உ. வே. சாமிநாதையர் அவர்கள் உடன்பாடு பெற்றது.

பக்-250-1. அரியானை அந்தணர்தஞ் சிந்தையானை - அந்தணர் என்பதற்குத் திருக்குறள் மேற்கோளாக நான் "அறவோர்" என்றுரைத்தபோது, எங்களாசிரியர் - சூரியநாராயண சாஸ்திரியார் - அந்தணர் - இங்குத் தில்லைவாழந்தணரைக் குறிக் கின்றது என அருமை புலப்பட உரைத்தனர்.

பக்-251. பொதுநீக்கித் தனைநினைய - "மூவரென்றே யெம்பிரானொடு மெண்ணி" என்ற திருவாசகம் நினைவுக்கு வருகின்றது.

பாடல் 1442. பக்கம் 254. "பிள்ளையார் திருவார்த்தை" - என்பது பிள்ளை யார் பாடிய தேவாரங்களைத் தில்லையிலிருந்த அடியார்கள் எடுத்துரைப்பக் கேட் டார்" - எனவும் கொள்ளலாம்போலத் தோன்றுகிறது. திருவார்த்தை - திருவாக்கு.

பக்-280. நீரேர் தேவாரம் - "நீக்காத பேரொளிசேர் நீரோனை" "நீக்காத பேரொளி" என்பது இறைவனைப் பிரியாத தேவி" - அதிகாந்தி அம்மையைக் குறிக்

கின்றது எனவுங் கொள்ளலாம். திருநீரேரில் தேவியார் பெயர் " அதிகாந்தி யம்மை " (நீரேர்ப் புராணம்)

பக்-283. முற்றுணை-முன் - காலமுன்-இடமுன்-ஆகக்கொண்டு எப்பொழுதும் எவ்விடத்தும் முன்னே துணையாய் நிற்பவன் - எனலுமாம்.

பக்-366. " ஓடிள வெண்பிறை யானும் " - ஓடு - தலையோடு எனவும் கொள்ள லாம். " ஓடு முடிக்கிலர்போலும் " - சம்பந்தர் தேவாரம்.

பக்-369. ஆடரவக் கிண்கிணிக்கால் - இது தியாகரைக் குறிக்கின்றது - " மணி ஆடரவக் கிண்கிணிப் பாதத்தர் ஆரூர்த் தியாகர் " - திருவாரூர்க் கோவை 193.

பக்-394. " முறையாலே " - எனவருதலால் ' முத்து விதானத்தை 'ப் பக்தர்கள் ஏந்தியும், " மணிப்பொற் கவரியை "ப் பர்வையர் ஏந்தியும் சூழ்ந்தனர் - எனலாம்.

பக்-430. உங்கள் கருத்தில் வாட்டமுறீர் - பசி நோய் தொடராமைக்குக் கார ணம் இவர் நெஞ்சினுள் சிவஅமுது ஊறுதல் - "

" குகனே குருபரனே யென நெஞ்சிற்புகழ
* * * சிவ அமுதூறுக வுந்திப்—பசியாறி —திருப்புகழ் - 593.

பக்-442. அம்பர் - திருவின்னம்பர் - என்றதற்குக் காரணம் புலப்படவில்லை ; அம்பர் என்றே தலம் இருக்கின்றதே (அம்பர்ப் பெருந் திருக்கோயில்).

பக்-564. பொருநாகத் திண்சிலை - பொருநாகம் (வாசுகியை நாணுகக்கொண்ட) திண்சிலை - எனலுமாம்.

பக்-567. வேதகீதன் - வேதகீதம் பாடுபவர் எனலுமாம். " பாடினாய் மறை யோடுபல் கீதமும் "—சம்பந்தர்.

பக்-611. பால் தடம்புனல்-பால் - பக்கம் (பக்கத்திலிருந்த தடம்) எனலுமாம்.

பக்-619, 1643 செய்யுள் (1) மால்விடை - பெரிய - பெருமை பொருந்திய விடை எனலுமாம்.

பக்-621, 1643 - செய்யுள் (2) விடையாடி எனவும் பிரிக்கலாம் - விடையின் மேல் ஆடி வருபவர் - " எருதுகந் தேறிப் பாடியும் ஆடியும்—சம்பந்தர்.

பக்-634. நீல வண்ணத்தர் - தேவி (நீலி) பாகத்தராதலின் - எனலுமாம்.

பக் - 640. வெங்கண் பிணி - " எங்கள் பிணி தவிர்த்து " - என்றும் பாடம்: ஒரு பதிப்பில்.

" எழுவா யிறுவா யிலாதன வெங்கள் பிணி தவிர்த்து " - என்றிருக்கின்றது.

(மிக அருமையான பற்பல விளக்கங்களை எடுத்துக் காட்டும் தங்கள் விரிவுரை எனக்குப் பெருவிருந்தாக வுளது. சுருக்கமாக " அன்னம்பாலிக்கும் " தங்கள் விரி வுரை " பொன்னம்பாலிக்கும்...இப்பிறவியே " என மாற்றி அத்திருக்குறுந்தொகைச் செய்யுளை முடிப்பேன்.—வ. சு. செ.)

## II

காளியாபுரம் அன்பர் திரு. மலையப்ப கவுண்டர் அவர்கள் எழுதியனுப்பியது.

" நான் தங்கள் திருத்தொண்டர் புராண வெளியீட்டில் திருநாவுக்கரசர் சென்ற தலங்களைத் தலப்படமாக வரைந்து கொடுக்கவேண்டுமெனும் அவா இருந்ததால் யாதொரு கஷ்டத்தையும் பாராது இரண்டு பாகமாக வரைந்து தங்களுக்கு அனுப்பி யிருக்கிறேன். இவைகளை நாவுக்கரசர் புராணத்தில் வெளியிடுவது நலமா யிருக்கு மென்று வேண்டுகிறேன். நாவுக்கரசர் புராணத்தில் சில இடங்களில் அவரது பாடல்

பெற்றவற்றுள் கீழ்க்கண்ட தலங்கள் விடப்பட்டு இருக்கின்றன. தேவாரப் பதிகங்களும் குறிப்பிடவில்லை. அடியிற்கண்ட தலங்கள் நாவுக்கரசரால் பாடல்பெற்று இருப்பதால் இவைகளின் தலக் குறிப்பு விசேடம், பதிகம் பாட்டுக் குறிப்புக்களோடு தக்க இடங்களில் வெளியிடுவது நலம் என்று எண்ணுகிறேன். அவையாவன கீழ்க் குறிக்கப்பட்டவற்றுள் தடித்த எழுத்தில் அச்சிடப்பட்டவை. *

கீழ்க்கண்டவற்றுள் மற்ற தலங்கள் திருநாவுக்கரசராலும் ஆளுடைய பிள்ளையாராலும் பாடல் பெற்றவைகள். ஆதலால் அத்தலங்களின் தலவிசேடத்தைக் குறிக்காமல் பதிகப் பாட்டுக் குறிப்போடு மாத்திரம் வெளியிடுவது நலம் என்று வேண்டுகிறேன்.

கீழ்க்கண்ட குறிப்புக்கள் நாவுக்கரசர் புராணப் பாட்டுகளிலுள்ள தலங்களோடு நாவுக்கரசர் வணங்கிச் சென்றிருக்கவேண்டும் என்று ஆராய்ந்ததில் தெரியவந்தது. தாங்களும் இவைகளை ஆராய்ந்து தெரிந்து வெளியிடுமாறு தங்களை எனது மனமார்ந்த நன்றியறிதலோடு தாழ்ந்த வணக்கத்துடன் கேட்டுக் கொள்கிறேன். குறிப்புக்கள் :—

| | | | |
|---|---|---|---|
| 1. | பாட்டு | 1413 | முண்டீச்சரம் |
| 2. | ,, | 1454 | 1 குரக்குக்கா ; 2 அன்னியூர் (பொன்னூர்)<br>3 புள்ளிருக்கு வேளூர் ; 4 வெண்காடு<br>5 சாய்க்காடு ; 6 வலம்புரம் |
| 3. | ,, | 1455 | 1 கோழம்பம் ; 2 மணஞ்சேரி<br>3 பந்தணை நல்லூர் ; 4 கஞ்சனூர்<br>5 கோடிகா ; 6 மங்கலக்குடி<br>7 ஆப்பாடி ; 8 ஆடுதுறை<br>9 நீலக்குடி ; 10 நல்லம் |
| 4. | ,, | 1481 | 1 கருவிலி ; 2 அரிசிற்கரைப்புத்தூர்<br>3 சிவபுரம் ; 4 கடுவாய்க்கரைபுத்தூர்<br>5 அவளிவணல்லூர் ; 6 வெண்ணியூர் |
| 5. | ,, | 1493 | 1 வலிவலம் ; 2 கீழ்வேளூர்<br>3 கன்றப்பூர் |
| 6. | ,, | 1495 | பயற்றூர் |
| 7. | ,, | 1514 | 1 மீயச்சூர் இளங்கோயில் ; 2 வன்னியூர் |
| 8. | ,, | 1528 | கோளிலி |
| 9. | ,, | 1555 | 1 கோண்டீச்சுரம் ; 2 பேரெயில் |

*இத்தலக் குறிப்புக்கள் மட்டும் இதனுடன் தரப்படுகின்றன. (பதிப்பாசிரியன்)

# திருநாவுக்கரசு நாயனாரைப்பற்றிய

# சைவத் தெய்வத் திருமுறைத் திரட்டு

தேவாரம்

1. *திருத்தொண்டத்தொகைப் பாசுரம் மேலே தனித்தாளில் பொறிக்கப்பட்டுள்ளது.*

2. நாவின்மிசை யரையன்னொடு *தமிழ்ஞானசம் பந்தன்*
*யாவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண்டன்*
*தேவன்றிருக் கேதாரத்தை யூரன்னுரை செய்த*
*பாவின்றமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே.*
—(நம்பி - திருக்கேதாரம் - 10)

3. *நற்றமிழ் வல்ல ஞானசம் பந்த னாவினுக் கரச னேளைப்போ வானுங்*
*கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்*
*குற்றஞ்செய்யினுங் குணமெனக்கருதுங் கொள்கைகண்டுநின் குரைகழலடைந்தேன்*
*பொற்றி ரண்மணிக் கமலங்கள் மலரும் பொய்கை சூழ்திருப் புன்கூரு ளானே.*
—(நம்பி - புன்கூர் - 4)

*அணிகொ ளாடையம் பூணணி மாலை யமுது செய்தமு தம்பெறு சண்டி*
இணைகொ ளேழெழு நூறிரும் பனுவ லீன்ற வன்றிரு நாவினுக் கரையன்
*கணைகொள் கண்ணப்ப னென்றிவர் பெற்ற கா த லின்னரு ளாதரித் தடைந்தேன்;*
*திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியுஞ் செல்வத் தென்றிரு நின்றியூ ரானே.*
—(நம்பி - நின்றியூர் - 3)

திருவிசைப்பா

*அல்லியம் பூம்பழனத் தாமூர்நா வுக்கரசைச்*
*செல்ல நெறிவகுத்த சேவகனே! தென்றில்லைக்*
*கொல்லை விடையேறி! கூத்தா டரங்காகச்*
*செல்வ நிறைந்தசிற் றம்பலமே சேர்ந்தனையே.*
—(பூந்துருத்தி - நம்பிகாடநம்பி - கோயில் - 3)

*பாடலங் காரப் பரிசில்கா சருளிப் பழுத்தசெந் தமிழ்மலர் சூடி*
*நீடலங் காரத் தெம்பெரு மக்க ளைஞ்சினு ளிறைஞ்சுநின் றானை*
*வேடலங் காரக் கோலத்தி னமுதைத் திருவீழி மிழலையூ ராளுங்*
*கேடிலங் கீர்த்திக் கனககற் பகத்தைக் கெழுமுதற் கெவ்விடத் தேனே.*
—சேந்தனார் - திருவீழிமிழலை - 12

பதினோராந் திருமுறை

1. *திருத்தொண்டர் திருவந்தாதிப் பாசுரங்கள் மேலே புராணத் தொடக்கத்திற் றரப்பட்டுள்ளன.*

2. *பாடிய செந்தமி ழாற்பழங் காசு பரிசில்பெற்ற*
*நீடிய சீர்த்திரு ஞானசம் பந்த னிறைபுகழா*

னேடிய பூந்திரு நாவுக் கரசோ டெழின்மிழலைக்
கூடிய கூட்டத்தி ஞலுள தாய்த்திக் குவலயமே.
—நம்பியாண்டார்நம்பி - ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி - 80

3. இலைமா டென்றிடர் பரியா ; ரிந்திர னேயொத் தறுகுறை வற்ருலும்
நிலையா திச்செல்வ மெனவே கருதுவர் ; நீள்சன் மக்கட லிடையிற்புக்
கலையார் ; சென்றர னெறியா குங்கரை யண்ணப் பெறுவர்கள் ; "வண்ணத்தின்
சிலைமா டந்திகழ் புகழா மூருறை திருநா வுக்கர !" சென்போரே. 4

4. பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி, பரசுநா வரசான பரமகா ரணவீசன், [ன்,
அதிகைமாநகர்மேவியருளிஞலமண்மூட ரவர்செய்வாதைகடருமனகன்,வார்கழல்சூடி
நிதியராதுவர்;சீர்மையுடையராதுவர்;வாய்மைநெறியராதுவர்;பாவம்வெறியராகுவர்;சால
மதியராதுவ;ரீசனடியராதுவர்;வான் முடையராதுவர்;பாரின் மனிதரானவர்தாமே.
—சேடி திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை - 7

திருத்தொண்டர் புராணம் (பெரியபுராணம்)

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன். 1

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொன்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே. 140

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவு மதுர வாக்கிற்
சேர்வாகுந் திருவாயிற் றீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற் றுளே
சார்வான திருமனமு முழவாரத் தனிப்படையுந் தாமு மாகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார். 225

வந்தொருவ ரறியாமே மறைந்தவடி வொடும்புகலி
யந்தணனு ரேறியெழுந் தருளிவரு மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடன்றாங்கிச்
சிந்தைகளிப் புறவருவார் தமையாருந் தெளிந்திலரால். 395

தொழுதுபல வகையாலுஞ் சொற்றொடைவண் டமிழ்பாடி
வழுவிறிருப் பணிசெய்து மனங்கசிவுற் றெப்பொழுதும்
ஒழுகியகண் பொழிபுனலு மோவாது சிவன்றாள்கள்
தழுவியசிந் தையினுணர்வுந் தங்கியசீர் மையிற்சரித்தார். 411

மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
"புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே" னெனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
யண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர செய்திஞர். 427
—திருநாவுக்கரசுநாயஞர் புராணம்.

முன் சேர்க்கை

உ

சிவமயம்

# புராணப் பாடற்றிரட்டும் அற்புதத் தேவாரத்திரட்டும்

## 1. முன்னை நிலை

—புராணம்

1313 மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழவிடையா
ருன்னுடைய மனக்கவலை யொழிநீயுன் னுடன்பிறந்தான்
முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்
அன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வ மெனவருளி. 48

—தேவாரம்

திருவாரூர் - திருத்தாண்டகம்

பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண்பெண் ணுருவோடா ணுருவமாயினான்காண்
மறப்படுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண் வானவரு மறியாத நெறிதந் தான்காண்
நறப்படுபூ மலர்தூபந் தீப நல்ல நறுஞ்சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்குந் திருவா ரூரிற் றிருமூலட் டானத்தெஞ் செல்வன் றானே. 5

திருச்செங்காட்டங்குடி - திருத்தாண்டகம்

கந்தமலர்க் கொன்றையணி சடையான் றன்னைக் கதிர்விடுமாமணிபிறங்குகனகச்சோதிச்
சந்தமலர்த் தெரிவையொரு பாகத் தானைச் சராசரநற் றாயானை நாயேன் முன்னைப்
பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண்டாங்கே பன்னியநூற் றமிழ்மாலைபாடுவித்தேன்
சிந்தைமயக் கறுத்ததிரு வருளி னானைச் செங்காட்டங் குடியதனிற் கண்டே னானே.

கல்லாதார் மனத்தணுகாக் கடவு டன்னைக் கற்றார்க ளுற்றோருங் காத லானைப் [டானை
பொல்லாத நெறியுகந்தார் புரங்கண் மூன்றும் பொன்றிவிழ வன்றுபொரு சரந்தொட்
நில்லாத நிணக்குரம்பைப் பிணக்கநீங்க நிறைதவத்தையடியேற்குநிறைவித்தென்றுஞ்
செல்லாத செந்நெறிக்கே செல்விப்பானைச் செங்காட்டங்குடியதனிற்கண்டேனானே,

## 2. சூலை நீங்கியது

—புராணம்

1334 திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக
வரைச்சிலையார் பெருங்கோயி றொழுதுவலங் கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரான் றிருவருளால்
உரைத்தமிழ்மா லைகள்சாத்து முணர்வுபெற வுணர்ந்துரைப்பார், 69

1335 நீற்ரு னிறைவா கியமே னியுட னிறையன் புறசிந் தையினே சமிக
மாற்ருர் புரமாற் றியவே தியரை மருளும் பிணிமா யையறுத் திடுவான்
" கூற்று யினவா றுவிலக் ககிலீ ரெனஈ டியகோ திறிருப் பதிகம்
போற்ரு லுலகே ழின்வருந் துயரும் போமா றெதிர்கின் றுபுகன் றனரால்.

—தேவாரம் திருவதிகைவீரட்டானம் - பண் - கோல்லி

கூற்ரு யினவா றுவிலக் ககிலீர் கொடுமை பலசெய் தனநா னறியேன்
ஏற்ரு யடிக்கே யிரவும் பகலும் பிரியா துவணங் குவனெப் பொழுதும்
தோற்ரு தென்வயிற் றினகம் படியே குடரோ டுதுடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில வீரட் டானத் துறையம் மானே. 1

## 3. அரசனழைக்க "நாம் யார்க்கும் குடியல்லோ"மென்று மறுத்தது

—புராணம்

1358 "நாமார்க்குங் குடியல்லோ" மென்றெடுத்து நான்மறையின்
கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைத்
தேமாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண் டகம்பாடி
யாமாறு நீரழைக்கு மடைவிலமென் றருள்செய்தார். 93

—தேவாரம் மறுமாற்றத் திருத்தாண்டகம்

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையேகுறுகினோமே.

## 4. (க) நீற்றறையி லிடப்பெற்றது

—புராணம்

1363 வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவந்
தைவருதண் டென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியினதா
யையர்திரு வடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே. 98

—தேவாரம் தனிக்குறுந்தோகை

மாசில் வீணையும் மாலை மதியமும் - வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே - ஈச னெந்தை யிணையடி நீழலே. 1

## (உ) விடங்கலந்த பாலடிசில் மிசைந்திருந்தது

—புராணம்

1369 நஞ்சமுத மாமெங்க ளுதனடி யார்க்கென்று
வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளக்குந் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமண ரிடுவித்த பாலடிசின் மிசைந்திருந்தார். 104

1370 பொடியார்க்குந் திருமேனிப் புனிதர்க்குப் புவனங்கண்
முடிவாக்குந் துயர்நீங்க முன்னைவிட மமுதானாற்
படியார்க்கு மறிவரிதாம் பசுபதியார் தம்முடைய
வடியார்க்கு நஞ்சமுத மாவதுதா னற்புதமோ? 105

—தேவாரம் திரு நனிபள்ளி - திருநேரிசை

துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதில் நாளு மரனடிக் கன்ப தாகும்
**வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா வமணர் தந்த**
**நஞ்சமு தாக்கு வித்தார்** நனிபள்ளி யடிக ளாரே. 5

## (ரு) மதயானையை ஏவப்பெற்றது

—புராணம்

1380 அண்ண லருந்தவ வேந்த ரானைதம் மேல்வரக் கண்டு
விண்ணவர் தம்பெரு மானை விடையுகந் தேறும் பிரானைச்
"**சுண்ணவெண் சந்தனச் சாந்து**" தொடுத்த திருப்பதி கத்தை
மண்ணுல குய்ய வெடுத்து மகிழ்வுட னேபாடு கின்றார். 115

1381 வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிற்றினை நோக்கிச்
செஞ்சடை நீண்முடிக் கூத்தர் தேவர்க்குந் தேவர் பிரானார்
வெஞ்சுடர் மூவிலைச் சூல வீரட்டர் தம்மடி யோநா
"**மஞ்சுவ தில்லை**" யென் றென்றே யருந்தமிழ் பாடி யறைந்தார். 116

1382 தண்டமிழ் மாலைகள் பாடித் தம்பெரு மான்சர ணாகக்
கொண்ட கருத்தி லிருந்து குலாவிய வன்புறு கொள்கைத்
தொண்டரை முன்வல மாகச் சூழ்ந்தெதிர் தாழ்ந்து நிலத்தி
லெண்டிசை யோர்களுங் காண விறைஞ்சி யெழுந்தது வேழம். 117

—தேவாரம் திருக்கெடில வீரட்டானம். பண் - காந்தாரம்

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமு
மண்ண லரண் முர ணேறு மகலம் வளாய வரவுந்
திண்ணென் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நா
மஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை. 1

## (சா) கல்லிற்பூட்டிக் கடலில் இடப்பெற்றது

—புராணம்

1388 ஆங்கது கேட்ட வரச னவ்வினை மாக்களை நோக்கித்
தீங்கு புரிந்தவன் றன்னைச் சேம முறக்கொண்டு போகிப்
பாங்கொரு கல்லி லணைத்துப் பாசம் பிணித்தோர் படவில்
வீங்கொலி வேலையி லேற்றி வீழ்த்துமி னென்று விடுத்தான். 123

1389 அவ்வினை செய்திடப் போக்கு மவருடன் போயரு கந்த
வெவ்வினை யாளருஞ் சென்று மேவிட நாவுக் கரசர்

செவ்விய தந்திரு வுள்ளஞ் சிறப்ப வவருடன் சென்றார்
பவ்வத்தின் மன்னவன் சொன்ன படிமுடித் தாரப் பதகர். 124

1390 அப்பரி சவ்வினை முற்றிய வரகன் றேகிய பின்ன
ரொப்பரு மாகடல் புக்க வுறைப்புடை மெய்த்தொண்டர் தாமு
மெப்பரி சாயினு மாக வேத்துவ னெந்தையை யென்று
செப்பிய வண்டமிழ் தன்னாற் சிவனஞ் செழுத்துந் துதிப்பார்;125

1391 "சொற்றுணை வேதிய" னென்னுந் தூமொழி
நற்றமிழ் மாலையா "நமச்சி வாய "வென்
றற்றமுன் காக்குமஞ் செழுத்தை யன்பொடு
பற்றிய உணர்வினாற் பதிகம் பாடினார். 126

1392 பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்முத லமரர் வாழ்த்துதற்
கரியவஞ் செழுத்தையு மரசு போற்றிடக்
கருநெடுங் கடலினுட் கன்மி தந்ததே 127

1393 அப்பெருங் கல்லு மங்கரசு மேல்கொளத்
தெப்பமாய் மிதத்தலிற் செறிந்த பாசமுந்
தப்பிய ததன்மிசை யிருந்த நாவில்சீர்
மெய்ப்பெருந் தொண்டனார் விளங்கித் தோன்றினார். 128

1394 இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
வருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கட
லொருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ. 129

—தேவாரம் நமசிவாயத் திருப்பதிகம் - பண் - காந்தார பஞ்சமம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்,பொற்றுணை திருந்தடி பொருந்தக்கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினு, நற்றுணை யாவது நமசி வாயவே. 1

திருநீலக்குடி - திருக்குறுந்தொகை

கல்லி னோடெனைப் பூட்டி யமண்கையர், ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன், நல்ல நாமம் நவிற்றியுய்ந் தேனன்றே. 7

## 5. சூலமு மிடபமும் தோள்களிற் பொறிக்கப் பெற்றது

—புராணம்

1415 புன்னெறியா மமண்சமயத் தொடக்குண்டு போந்தவுட
றன்னுடனே யுயிர்வாழத் தரியேனான் றரிப்பதனுக்
கென்னுடைய நாயகநின் னிலச்சினையிட் டருளென்று
பன்னுசெழுந் தமிழ்மாலை முன்னின்று பாடுவார், 150

1416 "பொன்னார்ந்த திருவடிக்கென் விண்ணப்ப" மென்றெடுத்து
முன்னாகி யெப்பொருட்கு முடிவாகி நின்றானைத்
தன்னாகத் துமைபாகங் கொண்டானைச் சங்கரனை
நன்னாமத் திருவிருத்த நலஞ்சிறக்கப் பாடுதலும், 151

1417 நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற
வாடகமே ருச்சிலையா னருளாலோர் சிவபூத
மாடொருவ ரறியாமே வாகீசர் திருத்தோளிற்
சேடுயர்மூ விலைச்சூலஞ் சினவிடையி னுடன்சாத்த. 152

—தேவாரம் திருத்தூங்கானைமாடம் - திருவிருத்தம்

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யு
மென்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்ட
துன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே. 1

கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி மால்வரைபோ
லிடவம் பொறித்தென்னை யேன்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்க
ளடவுங் கடந்தையுட் டூங்கானை மாடத்தெந் தத்துவனே. 10

## 6. திலகவதியாரைச் சிவனருளேயாகத் துதித்தல்

—புராணம்

1398 தொழுந்தகை நாவினுக் கரசுந் தொண்டர்முன்
செழுந்திருப் பாதிரிப் புலியூர்த் திங்கள்வெண்
கொழுந்தணி சடையரைக் கும்பிட் டன்புற
விழுந்தெழுந் தருணெறி விளங்கப் பாடுவார். 133

1399 " ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாகி " யெனவெடுத்துத்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்கட்கென்று
வான்றாழ் புனற்கங்கை வாழ்சடை யானைமற் றெவ்வுயிர்க்குஞ்
சான்றா மொருவனைத் தண்டமிழ் மாலைகள் சாத்தினரே. 144

—தேவாரம் திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
வேன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே. 1

தனித் திருத்தாண்டகம்

அப்பனீ யம்மைநீ யைய னுநீ யன்புடைய மாமனு மாமி யுநீ
யொப்புடைய மாதரு மொண்பொரு ளுநீ யொருகுலமுஞ் சுற்றமு மோரூ ருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்று வாய்நீ துணையா யென்னெஞ்சந் துறப்பிப் பாய்நீ
யிப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத் துநீ யிறைவனீ யேறூர்ந்த செல்வ னீயே.

## 7. திருத்தில்லைத் தரிசனம்

—புராணம்

1432 கையுந் தலைமிசை புனையஞ் சலியன கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுட னுருகும் பரிவின பேறெய்து

மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு மின்றாழ் சடையொடு நின்றாடு
மையன் றிருநட மெதிர்கும் பிடுமவ ரார்வம் பெருகுத லளவின்றால்.167

1433 இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ "வேண்றேய் தீனா?"யென மன்றாடு
மத்தன் றிருவருள் பொழியுங் கருணையி னருள்பெற் றிடவரு மானந்த
மெய்த்தன் மையினில் விருத்தத் திருமொழி பாடிப் பின்னையு மென்மேலுஞ்
சித்தம் பெருகிய பரிவா லின்புறு திருநே ரிசைமொழி பகர்கின்றார்.168

—தேவாரம்

கோயில் - திருவிருத்தம்

ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லை
கன்றிய காலனைக் காலாற் கடிந்தா னடியவர்க்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
"என்றுவந் தா"யென்னு மெம்பெரு மான்றன் திருக்குறிப்பே. 2

கோயிற்றிருநேரிசை - பண் கொல்லி

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகி
யெத்தினாற் பத்தி செய்கே னென்னைநீ யிகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் னாடல் காண்பா னடியனேன் வந்த வாறே. 1

## 8. திருச்சத்திமுற்றம் - திருவடிசூட்ட வேண்டுதல்

—புராணம்

1459 "கோவாய் முடுகி" யென்றெடுத்துக் "கூற்றம் வந்து குமைப்பதன்முன்
பூவா ரடிக ளென்றலைமேற் பொறித்து வைப்பா"யெனப்புகன்று
நாவார் பதிகம் பாடுதலு நாதன் றானு "நல்லூரில்
வாவா"வென்றே யருள்செய்ய வணங்கி மகிழ்ந்து வாகீசர். 194

—தேவாரம்

திருச்சத்திமுற்றம் - திருவிருத்தம்

கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை; போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 1

## 9. திருநல்லூர் - திருவடி தீக்கை

—புராணம்

1460 நன்மைபெரு கருணெறியே வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்போதி
லுன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோ மென்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான். 195

1461 "நனைந்தனைய திருவடியென் றலைமேல்வைத் தா"ரென்று
புனைந்ததிருத் தாண்டகத்தாற் போற்றிசைத்துப் புனிதரரு

ணினைந்துருகி விழுந்தெழுந்து நிறைந்துமலர்ந் தொழியாத
தனம்பெரிதும் பெற்றுவந்த வறியோன்போன் மனந்தழைத்தார்.197

—தேவாரம் திருநல்லூர்த் திருத்தாண்டகம்

நினைந்துருகு மடியாரை நைய வைத்தார் நில்லாமே தீவினைக ணீங்கவைத்தார் [வானோ
சினந்திருகுகளிற்றுரிவைப் போர்வைவைத்தார் செழுமதியின் றளிர்வைத்தார் சிறந்து
ரினந்துருவி மணிமகுடத் தேறத் தூற்ற வினமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே.

## 10. அப்பூதிமக னரவு மாற்றியது

—புராணம்

1472 தம்புதல்வன் சவமறைத்துத் தடுமாற்ற மிலராகி
யெம்பெருமா னமுதுசெய வேண்டுமென வந்திறைஞ்ச
வும்பர்பிரான் றிருத்தொண்ட ருள்ளத்திற் றடுமாற்ற
நம்பர்திரு வருளாலே யறிந்தருளி நவைதீர்ப்பார். 207

1473 அன்றவர்கண் மறைத்ததனுக் களவிறந்த கருணையராய்க்
கொன்றைநறுஞ் சடையார்தங் கோயிலின்முன் கொணர்வித்தே
"யொன்றுகொலா" மெனப்பதிக மெடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான்.208

—தேவாரம் பொது - (விடந்தீர்த்த திருப்பதிகம்) - பண் - இந்தளம்

ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை - ஒன்று கொலாமுய ரும்மதி சூடுவர்
ஒன்று கொலாமிடு வெண்டலை கையது - ஒன்றுகொ லாமவ ரூர்வது தானே. 1

திருப்பழனம் - பண் - பழந்தக்கராகம்

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தா
னஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் கோடியையே. 10

## 11. திருவாரூர்த் தரிசனம்

—புராணம்

1485 பற்றொன் றிலாவரும் பாதக ராகு மமணர்தம்பா
றுற்ற பிணியொழிந் துய்யப்போந் தேன்பெற லாவதுண்டே [மென்
புற்றிடங் கொண்டான்றன் "றொண்டர்க்குந் தொண்டராம் புண்ணிய"
றற்ற வுணர்வொடு மாரூர்த் திருவீதி யுள்ளணைந்தார். 220

1489 செய்யமா மணியொளிசூழ் திருமுன்றின் முன்றேவா சிரியன் சார்ந்து
கெய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூ ரரைக் [ன்
கையினுற் றொழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனே
றெய்தரிய கையறவாந் திருப்பதிக மருள்செய்தங் கிருந்தாரன்றே 224

—தேவாரம் திருவாரூர் - திருவிருத்தம்

குலம்பலம் பாவரு குண்டர்முன் னேநமக் குண்டுகொலோ
அம்பலம்.பாவரு தண்புன லாரூ ரவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி யான்றிரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.

## நமிநந்தியடிகள்

—புராணம்

1492 நான்மறைநூற் பெருவாய்மை நமிநந்தி யடிகடிருத் தொண்டி னன்மைப்
பான்மைநிலை யாலவரைப் பரமர்திரு விருத்தத்துள் வைத்துப் பாடித்
தேன்மருவுங் கொன்றையார் திருவாரூ ரரனெறியிற் றிகழுந் தன்மை
யானதிற மும்போற்றி யணிவீதிப் பணிசெய்தங் கமரு நாளில். 227

—தேவாரம் திருவாரூர் - திருவிருத்தம்

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாத னடித்தொண்டன் நம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே. 2

## திருவாதிரை நாள்

—புராணம்

1494 மேவுதிரு வாதிரைநாள் வீதிவிடங் கப்பெருமாள் பவனி தன்னிற்
றேவருடன் முனிவர்கண்முன் சேவிக்கு மடியார்க ளுடன்சே வித்து
மூவுலகுங் களிகூர வரும்பெருமை முறைமையெலாங் கண்டு போற்றி
நாவினுக்குத் தனியரசர் நயக்குநா ணம்பர்திரு வருளி னாலே. 229

—தேவாரம் திருவாரூர் - பண் - குறிஞ்சி

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிக
ளத்த னாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 1

## 12. திருவீழிமிழலை - படிக்காசு பெற்றது

—புராணம்

1523 விண்ணின் றிழிந்த விமானத்தின் கிழக்கு மேற்கும் பீடத்தி
லண்ணல் புகலி யாண்டகையார் தமக்கு மாண்ட வரசினுக்கு
நண்ணு நாள்க டொறுங்காசு படிவைத் தருள நானிலத்தி
லெண்ணி லடியா ருடனமுது செய்தங் கிருந்தா ரிருவர்களும். 258

1524 "அல்லார் கண்டத் தண்டர்பிரா னருளாற் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப் பரம னடியா ரானார்க
ளெல்லா மெய்தி யுண்க"வென விரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லாற் சாற்றிச் சோறிட்டார் துயர்கூர் வறுமை தொலைத்
திட்டார். 259

—தேவாரம் திருவீழிமிழலை - திருத்தாண்டகம்

போரானை யீருரிவைப் போர்வை யானைப் புலியதளே யுடையாடை போற்றி னானைப்
பாரானை மதியானைப் பகலா னானைப் பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற
நீரானைக் காற்றானைத் தீயா னானை நினையாதார் புரமெரிய நினைந்த தெய்வத்
தேரானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 1

## 13. திருமறைக்காடு - கதவந் திறப்பித்தது

—புராணம்

1533 உண்ணீர் மையினாற் பிள்ளையா ருரைசெய் தருள வதனாலே
"பண்ணி னேரு மொழியாள்"என் றெடுத்துப் பாடப் பயன்றுய்ப்பான்
றெண்ணீ ரணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்கத் திருக்கடைக்காப்
"பெண்ணி ரக்க மொன்றில்லீ" ரென்று பாடி யிறைஞ்சுதலும். 268

1534 வேத வனத்தின் மெய்ப்பொருளி னருளால் விளங்கு மணிக்கதவங்
காத லன்பர் முன்புதிருக் காப்பு நீங்கக் கலைமொழிக்கு
நாதர் ஞான முனிவருடன் றொழுது விழுந்தார் ஞாலத்து
ளோத வொலியின் மிக்கெழுந்த தும்ப ரார்ப்பு மறையொலியும். 269

—தேவாரம் திருமறைக்காடு - திருக்குறுந்தொகை

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ - மண்ணி னார்வலஞ் செய்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத் - திண்ண மாகத் திறந்தருள் செய்மினே. 1

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீ - ரிரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே!
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ - சரக்க விக்கத வந்திறப் பிம்மினே. 11

## 14. திருவாய்மூர் - காட்சி கண்டு பிள்ளையார் காட்டப் - பாடியது

—புராணம்

1545 அழைத்துக் கொடுபோந் தணியார்போற் காட்டி மறைந்தா ரெனவயர்ந்து
"பிழைத்துச் செவ்வி யறியாதே திறப்பித் தேனுக் கேயல்லா
லுழைத்தா மொளித்தாற், கதவந்தொண் டுரைக்கப் பாடி யடைப்பித்த
தழைத்த மொழியா ருப்பாலார் ; தாமிங் கெப்பான் மறைவ"?தென,280

1546 மாட நீடு திருப்புகலி மன்ன ரவர்க்கு மாலயனு
நேடி யின்னங் காணாதார் நேரே காட்சி கொடுத்தருள,
வாடல் கண்டு பணிந்தேத்தி யரசுங் காணக் காட்டுதலும்
"பாட வடியா" ரென்றெடுத்துப் பரமர் தம்மைப் பாடினார். 281

—தேவாரம் திருவாய்மூர் - திருத்தாண்டகம்

பாட வடியார் பரவக் கண்டேன் பத்தர் கணங்கண்டேன் மொய்த்த பூதம்
ஆடன் முழவம் அதிரக் கண்டேன் அங்கை யனல்கண்டேன் கங்கை யாளைக்
கோட லரவார் சடையிற் கண்டேன் கொக்கி னிதழ்கண்டேன் கொன்றை கண்டேன்
வாடற் றலையொன்று கையிற் கண்டேன் வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 1

## 15. பழையாறைவடதளி - ஆயிரம் அமணர் தூரறுத்தது

1561 வண்ணங் கண்டு நானும்மை வணங்கி யன்றிப் போகேனென்
றெண்ண முடிக்கும் வாகீச ரிருந்தா ரமுது செய்யாதே
யண்ண லாரு மதுவுணர்ந்தங் கரசு தம்மைப் பணிவதற்குத்
திண்ண மாக மன்னனுக்குக் கனவி லருளிச் செய்கின்றார். 295

1564 ஆனை யினத்திற் றுகைப்புண்ட வமணு யிரமு மாய்ந்ததற்பின்,
மேன்மை யரசன் ஈசர்க்கு விமான மாக்கி விளக்கியபின்,
ஆன வழிபாட் டர்ச்சனைக்கு நிபந்த மெல்லா மமைத்திறைஞ்ச
ஞான வரசும் புக்கிறைஞ்சி நாதர் முன்பு போற்றுவார்; 299

1565 "தலையின் மயிரைப் பறித்துண்ணுஞ் சாதி யமணர் மறைத்தாலுள்
நிலையி லாதார் நிலைமையினுன் மறைக்க வொண்ணு மோ"வென்னும்
விலையில் வாய்மைக் குறுந்தொகைகள் விளம்பிப் புறம்போந் தங்கமர்ந்தே
யிலைகொள் சூலப் படையார்சே ரிடங்கள் பிறவுந் தொழுதணைவார். 300

—தேவாரம் திருப்பழையாறை வடதளி - திருக்குறுந்தொகை

தலையெ லாம்பறிக் குஞ்சமண்கையரு-ணிலையி னுன்மறைத் தான்மறைக் கொண்ணுமே?
யலையி னுர்பொழி லாறை வடதளி - நிலையி னுனடி யேநினைந் துய்ம்மினே. 1

வாயி நுந்தமி ழேபடித் தாளுற - ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினுன்
பாயி ரும்புன லாறை வடதளி - மேய வன்னென வல்வினை வீடுமே. 9

## 16. திருப்பைஞ்ஞீலி - பொதிசோறு பெற்றது

—புராணம்

1569 வழிபோம் பொழுது மிகவிளைத்து வருத்த முறநீர் வேட்கையொடும்
அழிவாம் பசிவந் தணைந்திடவு மதற்குச் சித்த மலையாதே
மொழிவேந் தருமுன் னெழுந்தருள முருகார் சோலைப் பைஞ்ஞீலி
விழியேந் தியநெற் றியினுர்தந் தொண்டர் வருத்த மீட்பாராய், 304

1570 காவுங் குளமு முன்சமைத்துக் காட்டி வழிபோங் கருத்தினுன்
மேவுந் திருநீற் றந்தணராய் விரும்பும் பொதிசோ றுங்கொண்டு
நாவின் றனிமன் னவர்க்கெதிரே நண்ணி யிருந்தார் விண்ணின்மேற்
றாவும் புள்ளு மண்கிழிக்குந் தனியே னமுங்காண் பரியவர்தாம்; 305

1572 நண்ணுந் திருநா வுக்கரசர் நம்ப ருளென் றறிந்தார்போ [மே
"லுண்ணு" மென்று திருமறையோ ருரைத்துப், பொதிசோ றளித்தலு
யெண்ண நினையா ததிர்வாங்கி யினிதா வமுது செய்தினிய
தண்ணீ ரமுது செய்தருளித் தூய்மை செய்து தளர்வொழிந்தார். 307

1574 கூட வந்து மறையவனுர் திருப்பைஞ் ஞீலி குறுகியிட
வேட மவர்முன் மறைத்தலுமே மெய்மைத் தவத்து மேலவர்தா
"மாட லுகந்தா ரடியேனைப் பொருளா வளித்த கருணை"யெனப்
பாடல் புரிந்து விழுந்தெழுந்து கண்ணீர் மாரி பயில்வித்தார். 309

## 17. திருக்கச்சித் தரிசனம்

—புராணம்

1588 வார்ந்து சொரிந்த கண்ணருவி மயிர்க்கா றேறும் வரும்புளக
மார்ந்த மேனிப் புறம்பலைப்ப வன்பு கரைந்தென் புள்ளலைப்பச்
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத் திளைப்பத் திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தி லுறவைத்து நீடும் பதிகம் பாடுவார்; 323

—தேவாரம் திருவேகம்பம் - பண் - கௌந்தாரம்

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
யரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
யிரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. 1

## திருவேகம்பத் திருத்தாண்டகம்

உரித்தவன்கா ணுரக்களிற்றை யுமையா ளொல்க
வோங்காரத் தொருவன்கா ணுணர்மெய்ஞ் ஞானம்
விரித்தவன்காண் விரித்தநால் வேதத் தான்காண்
வியனுலகிற் பல்லுயிரை விதியி னாலே
தெரித்தவன்காண் சில்லுருவாய்த் தோன்றி யெங்குந்
திரண்டவன்காண் டிரிபுரத்தை வேவ வில்லா
லெரித்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. 2

## 18. திருக்காளத்தித் தரிசனம் - திருக்கயிலைக் குறிப்பு

—புராணம்

1610 காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி யெழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
" நாதனையென் கண்ணுள்ளா " னெனுந்திருந்தாண் டகநவின்றார்.

1611 மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதஞ் சேர்ந்திறைஞ்சி
யலைத்துவிழுங் கண்ணருவி யாகத்துப் பாய்ந்திழியத்
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம் போந்தணைந்தார். 346

1612 சேணுலவு திருமலையிற் றிருப்பணியா யினசெய்து
தாணுவினை யம்மலைமேற் றாள்பணிந்த குறிப்பினாற்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலங்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார் 347

—தேவாரம் திருக்காளத்தி - திருத்தாண்டகம்

விற்றூணொன் றில்லாத நல்கூர்ந்தான் காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை யல்லான்
மற்றூணொன் றில்லாத மாசது ரன்காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப்
பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண்
பொய்யாது பொழிலேழுந் தாங்கி நின்ற
கற்றூண்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காணவனென் கண்ணு ளானே. 1

## 19. கயிலைக் காட்சி

—புராணம்

1639 பொன்ம லைக்கொடி யுடனமர் வெள்ளியம் பொருப்பிற்
றன்மை யாம்படி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயின்முன் வந்தார். 373

1640 காணு மப்பெருங் கோயிலுங் கயிலைமால் வரையாய்ப்
பேணு மாலய னிந்திரன் முதற்பெருந் தேவர்
பூணு மன்பொடு போற்றிசைத் தெழுமொலி பொங்கத்
தாணு மாமறை யாவையுந் தனித்தனி முழங்க. 375

1641 தேவர் தானவர் சித்தர்விச் சாதர ரியக்கர்
மேவு மாதவர் முனிவர்கள் புடையெலா மிடையக்
காவி வாள்விழி யரம்பையர் கானமு முழவுந்
தாவி லேழ்கடன் முழக்கினும் பெருகொலி தழைப்ப. 376

1642 கங்கை யேமுதற் றீர்த்தமாங் கடவுண்மா நதிகண்
மங்க லம்பொலி புனற்பெருந் தடங்கொடு வணங்க
வெங்கு நீடிய பெருங்கண நாதர்க ளிறைஞ்சப்
பொங்கி யங்களாற் பூதவே தாளங்கள் போற்ற. 377

1643 அந்தண் வெள்ளிமால் வரையிரண் டாமென வணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால் விடையெதிர் நிற்ப
முந்தை மாதவப் பயன்பெறு முதன்மையான் மகிழ்ந்தே
நந்தி யெம்பிரா னடுவிடை யாடிமுன் னணுக. 378

1644 வெள்ளி வெற்பின்மேன் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனவிடப் பாகங்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார்.379

—தேவாரம் ஸ்ரீ கயிலாயம் - போற்றித் திருத்தாண்டகம்

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி மீளாமே யாளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே யொளித்தாய் போற்றி யோவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி யங்கே யமர்ந்தாய் போற்றி யாறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 1

திருவையாறு - திருத்தாண்டகம்

ஓசை யொலியெலா மானாய் நீயே யுலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலா மானாய் நீயே மலையான் மருகனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிது மினியாய் நீயே பிரானா யடியென்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலா மானாய் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ. 1

திருவையாறு - பண் - காந்தாரம்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாம லையாற டைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.

## 20. திருப்பூந்துருத்தி - திருமடம் செய்தது

—புராணம்

1653 திருப்பூந் துருத்தி யமர்ந்த செஞ்சடை யானையா னேற்றுப்
பொருப்பூர்ந் தருளும் பிரானைப் பொய்யிலி யைக்கண்டேனென்று
விருப்புறு தாண்டகத் தோடு மேவிய காதல் விளைப்ப
"விருப்போந் திருவடிக் கீழ்நா" மென்னுங் குறுந்தொகை பாடி. 388

1654 அங்குறை யுந்தன்மை வேண்டி "நாமடி போற்றுவ"தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னாருள் பெற்றுத்
திங்களு ஞாயிறுந் தோயுந் திருமட மாங்கொன்று செய்தார். 389

## 21. பிள்ளையாரது சிவிகை தாங்கியது

—புராணம்

1658 காழியர்கோன் வருமெல்லைக் கலந்தெய்திக் காதலித்தார்
சூழுமிடைந் திடுநெருக்கிற் காணாமே தொழுதருளி
வாழியவர் தமைத்தாங்கு மணிமுத்தின் சிவிகையினைத்
தாழுமுட லிதுகொண்டு தாங்குவன்யா னெனத்தரித்தார். 394

1660 வந்தொருவ ரறியாமே மறைந்தவடி வொடும்புகலி
யந்தணனா ரேறியெழுந் தருளிவரு மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடன்றாங்கிச்
சிந்தைகளிப் புறவருவார் தமையாருந் தெளிந்திலரால். 395

1661 திருஞான முனிவரர் சிருந்ததிருப் பூந்துருத்திக்
கருகாக வெழுந்தருளி "யெங்குற்றா ரப்பர்?" ரென
வருகாநின் "றும்மடியே னும்மடிக டாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற் றே"னென்றார். 396

1662 பிள்ளையா ரதுகேளாப் பெருகுவிரை வுடனிழிந்தே
யுள்ளமிகு பதைப்பெய்தி யுடையவர சினைவணங்க,

வள்ளலார் வாகீச ரவர்வணங்கா முன்வணங்கத்
அள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாந் தொழுதார்த்
[தார். 397

—தேவாரம்

திருவாவடுதுறை - திருநேரிசை

மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலுங்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலு மாவடு துறைய னாரே. 1

## 22. திருவாலவாய்த் தரிசனமும் பாண்டி நாட்டிற் சரித நிலையும்

—புராணம்

1669 எய்தியபே ரானந்த வின்பத்தி னிடைமூழ்கி
மொய்திகழுஞ் சடையானை "மூளைத்தானை" யென்றெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந் தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித் திருவுள்ளங் களிசிறந்தார். 404

1676 தொழுதுபல வகையாலுஞ் சொற்றொடைவண் டமிழ்பாடி
வழுவிதிருப் பணிசெய்து மனங்கசிவுற் றெப்பொழுது
மொழுகியகண் பொழிபுனலு மோவாது சிவன்றாள்க
டழுவியசிந் தையிலுணர்வுற் தங்கியசீர் மையிற்சரித்தார், 411

—தேவாரம்

திருவாலவாய் - திருத்தாண்டகம்

முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேல் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீறாத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. 11

## 23. திருப்புகலூர்

—புராணம்

1678 பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
மையுமனப் பரிவோடு நாடோறுந் திருமுன்றிற்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலுடன்
வைகுநா ளெண்ணிறந்த வண்டமிழ்மா லைகண்மொழிவார். 413

—தேவாரம்

நின்ற திருத்தாண்டகம்

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமான னாயெறியுங் காற்று மாகி
யருநிலைய திங்களாய் ஞாயி றாகி யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்

பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும் பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே. 1

குறைந்த திருநேரிசை

வென்றிலேன் புலன்க ளைந்தும் வென்றவர் வளாகந் தன்னுட்
சென்றிலே னாத லாலே செந்நெறி யதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றே னீசனே யீச னேயோ
இன்றுளேன் நாளை யில்லே னென்செய்வான் றோன்றி னேனே. 1

ஆருயிர்த் திருவிருத்தம்

எட்டாந் திசைக்கு மிருதிசைக் கும்மிறை வாமுறையென்
றிட்டா ரமரர்வெம் பூச லெனக்கேட் டெரிவிழியா
ஒட்டாக் கயவர் திரிபுர மூன்றையு மோரம்பினால்
அட்டா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 1

## 24. திருப்புகலூர் - பொன்னும் மணியும் புல்லும் வேறுபாடின்றிக்கண்டது

—புராணம்

1681 அங்கிலைமை தனிலாண்ட வரசுபணி செய்யவவர்
நன்னிலைமை காட்டுவார் நம்பர்திரு மணிமுன்றி
றன்னில்வரு முழவார நுழைந்தவிடந் தானெங்கும்
பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்க வருள்செய்தார். 416

1682 செம்பொன்னு நவமணியுஞ் சேண்விளங்க வாங்கவையு
மும்பர்பிரான் றிருமுன்றி லுருள்பருக்கை யுடனொக்க
வெம்பெருமான் வாகீச ருழவாரத் தினிலேந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினிற் புகவெறிந்தார். 417

## 25. திருப்புகலூர் - அரம்பையரை இருவினைகளின் வடிவாகக் கண்டது

—புராணம்

1685 கற்பகப்பூந் தளிரடிபோங் காமருசா ரிகைசெய்ய
வுற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடுங் கைபெயரப்
பொற்புறுமக் கையின்வழி பொருகயற்கண் புடைபெயர
அற்புதப்பொற் கொடிநுடங்கி யாடுவபோ லாடினார். 420

1687 இத்தன்மை யரம்பையர்க ளெவ்விதமுஞ் செயல்புரிய
வத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா வன்புருகு
மெய்த்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தஞ்
சித்தநிலை திரியாது செய்பணியின் றலைநின்றார். 422

1488 இம்மாயப் பவத்தொடக்கா மிருவினைக டமைநோக்கி
"யும்மாலிங் கென்னகுறை யுடையேன்யான் றிருவாரு
ரம்மானுக் காளானே னலையேன்மி னீ" ரென்று
பொய்ம்மாயப் பெருங்கடலு ளெனுந்திருத்தாண் டகம்புகன்றார். 423

—தேவாரம் திருவாரூர்த் திருத்தாண்டகம்

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்கா டீவினைகா டிருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர் கின்றே
னிடையிலேன் கெடுவீர்கா ளிடறேன் மின்னே.

## 26. திருவடிக்கீ ழெய்தியது

—புராணம்

1691 மன்னியவந் தக்கரண மருவுதலைப் பாட்டினாற்
றன்னுடைய சரணான தமியேனைப் புகலூர
னென்னையினிச் சேவடிக்கீ ழிருத்திடுமென் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினாற் றிருவிருத்தம் பலமொழிந்தார். 426

1692 மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
"புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றே" னெனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடிவே யாகி
யண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர செய்தினார். 427

—தேவாரம் திருப்புகலூர் - திருவிருத்தம்

தன்னைச் சரணென்று தாளடைந் தேன்றன் னடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தென்வினைக் கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான்சிவ லோகத் திருத்திடுமே. 1

திருப்புகலூர் - திருத்தாண்டகம்

எண்ணுகே னென்சொல்லி யெண்ணு கேனோ
வெம்பெருமான் றிருவடியே யெண்ணி னல்லாற்
கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன்
கழலடியே கைதொழுது காணி னல்லா
லொண்ணுளே யொன்பது வாசல் வைத்தா
யொக்க வடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா வுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 1

ஒருவனையு மல்லா துணரா துள்ள முணர்ச்சித் தடமாற்றத் துள்ளே நின்ற
இருவரையு மூவரையு மென்மே லேவி யில்லாத தரவறுத்தாய்க் கில்லே னேலக்
கருவரைசூழ் கான விலங்கை வேந்தன் கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையா யுன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசு நாயனார் தோத்திரத்திரட்டு

### கந்த புராணம்

பொய்யுரை நூல்சில புகலுந் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் றோணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தா டொழுது போற்றுவாம். 1

### உபதேச காண்டம்

முப்பனைத்திற மூவரிற் காட்டியோர் முதலாய்க்
கப்பனைத்துமா ருயிரெனக் கவைத்தரு வானேற்
கொப்பனைத்திரு நாவினுக் கரசெனு மொருபே
ரப்பனைத்தொழு தகற்றுது மும்மலத் தவலம். 2

### திருவிளையாடற் புராணம்

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா லஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறு வஞ்சக ரிட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனுங் கடலு நீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம். 3

### சேது புராணம்

தேவரையு முனிவரையுந் துளவ மார்பிற்
றிருவரையுங் குரவரையுஞ் செல்வ மிக்கோர்
யாவரையு மேவல்கொளு நெற்றி நாட்டத்
திறைவரைமுன் னிகழ்ந்திருந்த வெண்ணந் தோன்றச்
சேவரையு நெடுங்கொடியின் றகைமை யெல்லாத்
திசைவரையுஞ் செலத்தமிழின் செய்யுள் பாடு
நாவரையர் புகழ்மொழிகள் வரைந்து கூறி
நயந்தவர்செய் திருத்தொண்டு வியந்து வாழ்வாம். 4

### திருவாரூர்ப் புராணம்

ஆலநிழ லமர்ந்தபிரான் அருளி னாலே யன்றுருகற் புணையாக வாழ நீந்தி
ஞாலமுழு துய்ந்தருள நவை யிலாத நறுந்தமிழின் பலமினிது நாளு நல்கிச்
சாலமிகு பாவமுது வேனில் வெம்மைத் தழலாற வாகமநூற் றருமஞ் சான்ற
சீலநிறை சைவநெறி நிழல்ப ரப்புந் திருநாவுக் கரசினடி சிந்தை செய்வாம். 5

### வாயு சங்கிதை

வலஞ்சுழி யுந்தி வயிற்றெழு நோயு மயங்கிடு பிறவிவெந் நோயுங்
கலங்கியே யகலக் கரைபொரு திரங்கு கருங்கட லுண்முளைத் தெழுந்த
விலங்கொளிப் பவள வரைநிகர் முதலை யின்னிசைத் தமிழினாற் பாடிப்
புலன்களைந் தினையும் வென்றுமெய்ஞ் ஞானம் பூத்தவன் பொன்னடி தொழுவாம்.

# திருநாவுக்கரசுநாயனார்

## மச்ச புராணம்

பெருநாவ லிருமிழற்கீழ்க் குளிர்புனற்குண் மூளைத்தெழுந்த பெம்மான் செம்மை
தருநாவுக் கிசைத்தமிழா லலைகடலி னிடைபிணித்த தனிக்கற் றாணன்
றொருநாவா யெனமிதப்ப வீற்றிருந்தங் கைந்தெழுத்தி னுண்மை யோது
திருநாவுக் கரசரிரு பிரசமலர்ச் சேவடியைச் சிந்தை செய்வாம். 7

## திருக்கூவப் புராணம்

மருக்கு லாவு மறைவனத் தொன்றிய
திருக்க பாடந் திறந்தசொல் வேந்தனை
யருட்கு லாவு மறிவினை மூடிய
விருட்க பாடந் திறக்கவு மேத்துவாம். 8

## திருவையாற்றுப் புராணம்

செஞ்சடையார் புகழ்விதைத்துத் திருஞான நீர்தேக்கி
யஞ்சுகளை யறுத்துடனே யமணர்களை வேரறுத்துப்
பஞ்சநதிக் கயிலையினிற் பயன்விளைந்து புகலூரிற்
றஞ்சமுதற் கண்டபிரான் சரணகம லம்போற்றி. 9

## சீகாளத்திப் புராணம்

வேற்று ருக்கொள் விதியறி யாவரன்
கீற்று வெண்பிறைக் கேழ்கிளர் செஞ்சடை
*யாற்று ணச்சுமை யேற்று மருந்தமிழ்
மாற்ற ருந்தவத் தோனை வழுத்துவாம். 10

## திருக்கழுக்குன்றப் புராணம்

குறித்தகுலத் திலகவல்லிக் கிளைவளைப்ப வளைப்புண்டு கொடிய நாகம்
பறித்தகுருந் தினைமீட்டு நீற்றறையின் வன்னிவென்று படருங் கோட்டு
வெறித்தமத மாக்களையும் விலக்கிமுழங் கியவத்தி மீதே குண்டர்
செறித்தகல்லான் மிதந்துவருந் திருநாவுக் கரசுநிழற் சேர்ந்து வாழ்வாம். 11

## செவ்வந்திப் புராணம்

புத்தியற் றிருக்கும் பொய்யர் புறச்சம யத்தை நீக்கிச்
சத்தியப் பொருளை யோர்ந்து தலைவனை யறிந்து சைவ
பத்தியிற் கனிந்த ஞானப் பழத்தினை யொருகற் றூணை
லத்தியைக் கடந்த நாவுக் கரசினை வணங்கு வோமே. 12

## திருவெண்காட்டுப் புராணம்

சிற்றாணின் மரகதத்தி னொளிபகலு மிருள்காட்ட வெழுந்து காமன்
விற்றாணி மலரெடுத்து விளையாடுந் திருவாமூர் விளங்க வந்தோன்
கற்றூணைப் பிடித்துவளை கடல்கடந்தோ னிருபாத கமல மென்னும்
பொற்றூணைப் பிடித்துநம திடராழி கடந்துகதி புகுத லாமே. 13

## காஞ்சிப் புராணம்

இடையறுப் பேரன்பு, மழைவாரு மிணைவிழியு, முழவா ரத்தின்
படையறுத் திருக்கரமுஞ், சிவபெருமான் றிருவடிக்கே பதித்த நெஞ்சு,
நடையறுப் பெருந்துறவும், வாகீசப் பெருந்தகைதன் ஞானப் பாடற்
றொடையறுச் செவ்வாயுஞ், சிவவேடப் பொலிவழகுந் துதித்து வாழ்வாம். 14

*ஆற்றுணச் சுமை - பொதிசோறு.

### பேரூர்ப் புராணம்

விஞ்சை கற்பன வேறிலை விடையவன் பதங்க
ளஞ்சு மேயென வறியவெவ் வுலகுங்கற் புணையா
நெஞ்சு துட்கெனு நெடும்புனல் வேலையும் பிறவி
வஞ்ச வேலையு நீந்திய மன்னனைப் பணிவாம். 15

### திருவானைக்காப் புராணம்

கொண்ட லாடிய விழிகளுங் கோலவெண் ணீற்று
வண்ட லாடிய மேனியு மல்குமா னந்த
மூண்ட தாங்கெதி ரெடுத்தென வோதுசெம் பாட்டுங்
கண்டு கேட்டரு ணாவினுக் கரசினைக் கலப்பாம். 16

### திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்

திரையேற விட்டகற்றூண் புணர்ப்பறச்சொற் றுணைப்பதிகந் திருந்தப் பாடி
விரையேற விட்டநறை யிதழிமுடி யரனருளால் வென்றி மேவ
விரையேற விட்டசம ணறவுயிர்கள் பவக்கடனின் றென்று மேறக்
கரையேற விட்டபிரான் புகழ்விளைத்த நாவரசைக் கருதி வாழ்வாம். 17

### உத்தரகோசமங்கைப் புராணம்

தொலையாத பவக்கடல்யாங் கடத்துமெனப் பிறர்க்குணரச் சொல்வார் போல
நிலையாத புறச்சமயக் குறும்பரிறு குறப்பிணித்த நெடுங்கல் லோடு
மலையாடு பெரும்பரவை யழுந்தாதக் கன்மிதப்பா யாழி நீந்தித்
தலையாய பொருளுணர்ந்த வாகீசர் மலர்ச்சரணஞ் சரண மாதோ. 18

### கடம்பர் கோயிற் புராணம்

ஞானந்தங் கருணீருண் டமண்பாழி யிடித்துவினை கறுத்தெஞ் ஞான்று
மீனந்தங் குலகாசைக் கடுங்கோடை யிரிந்தோட வெம்மான் சைவத்
தானந்தங் கருட்செல்வந் தழைத்தோங்கத் தாண்டகச்சீர்ப் பதிக மென்னு
மானந்தம் பொழிமுகிலை யகமலரத் தொழுதுவினை யகன்று வாழ்வாம். 19

### சிவராத்திரி புராணம்

காவரசு மலரயன்மால் கடவுளர்க்காச் சென்றமர்செய் காம னைம்
பூவரசு படவிழித்துப் புனவேங்கை யத்தியதள் புனைந்து போர்த்த
தேவரசு மனமகிழத் திருப்பதிக மிசைத்தமிழிற் சிறக்கப் பாடு
நாவரசு பதம்பரசு நமக்குயர்பொன்னாடரசு நல்கு மன்றே. 20

### சாந்தகணேச புராணம்

அற்படு மிடற்றின னருளினா லொரு - கற்புணை யாகமாக் கடல் கடந்தவன்
நற்பெயர் தன்னையே நவிறி வுள்ளமே - பற்பல பிறவியாம் பரவை நீந்தவே. 21

### திருவாப்பனூர்ப் புராணம்

மண்ணாசை பெண்ணாசை மூன்றுநீத்து மனத்தாசை யறவெறிந்தா னந்த நீர்பாய்
கண்ணாசை சிவபெருமான் காட்சிக் காக்கிக் கருத்தாசை யவனருட்கே கைம்மா றாக்கி
யுண்ணாசை மருந்தனையார் புகலூர் மன்னு முழவாரப்படையாளியுருகிப்பாடும் [வாம்.
பண்ணாசைத் திருநாவுக் கரையன் பாதம் பத்திபழுத் தொழுகநெஞ்சிற் பதித்து வாழ்

### கருவூர்ப் புராணம்

சூழிமால் யானை தாழப் பிணித்தகற் றாணந் தாழா
தாழிவாய் மிதப்ப மேலா மைந்தெழுத் துணர்வி னோங்கிக்
காழிவாழ் ஞானம் பூத்த கவுணியர் கொழுந்தை நட்ட
வாழிவா கீசர் வாச மலர்ப்பதம் வணங்கல் செய்வாம். 23

### திருச்சுழியற் புராணம்

புல்லோடுந் தழையோடும் பூசிப்பார் தமக்கெதிரே
வல்லோடுந் தனத்துமலை மகளோடு வருவானைச்
சொல்லோடும் பொருளோடுந் துயரோடும்படி பாடிக்
கல்லோடு மிதந்தானைக் கருத்தோடும் பணிகுவமாம். 24

### திருக்குற்றாலப் புராணம்

திருநீற்றை மெய்யழுத்தி யஞ்செழுத்தை நெஞ்சழுத்திச் சிலைக்கை மார
னுருநீற்றும் பெருமானை யுறவழுத்திச் சமணரெனு மொன்னார் மூட்டும்
பொருநீற்றுக் குடவரையுங் கடகரியும் விடவரவும் புறங்கண் டாழிக்
கருநீத்தங் கடப்பவொரு கற்றோணி யுகைத்தானைக் கருத்துள் வைப்பாம். 25

### மருதவன புராணம்

வடமருவு தென்னிழலிற் கருணைவடி வாய்விளங்கு வரதன் போல
விடமமிர்த மெனப்பருகிச் சூலந்தோண் மிசையேற்று விடைமேற் கொண்டு
தடமருவு தரணியிடைத் திகழ்ந்திடுவா கீசர்பத சரோரு கத்தைத்
திடமுறுமன் பொடுதினமுஞ் சிந்திப்போந் துயர்களெல்லாஞ் சிந்திப் போமால். 26

### திருப்பெருந்துறைப் புராணம்

பாலிடை நஞ்சங் கண்டு பதைபதைத் தோடி யோர்பால்
நூலிடை யவருண் பாக்கு நுவன்றமா லயனுண் ணுணப்
பாலிடை நஞ்சங் கண்டு பதைப்பின்றித் தாமுண் டோர்பால்
நூலிடை யவரே யென்னப் பொலியுநோன் மையர்தாள் போற்றி. 27

### காசி ரகசியம்

அருப்பிள முலையாள் பாகத் தண்ணலா ரினிது மேய
திருப்புக லூருக் கப்பேர் யோகமே யென்று செப்பப்
பொருப்புமுள் ளுருகப் பாடிப் புகுந்துபே ரின்பந் துய்த்த
விருப்புறு புகழ்சா னுவின் வேந்தர்தாள் வணக்கஞ் செய்வாம். 28

### திருநாகைக்காரோணப் புராணம்

எழுபது வெள்ளஞ் சேனை யெடுத்திடு பலகற் கொண்டு
செழுமணிப் பரவை யொன்றே கடந்தவெஞ் சிலையோ னுண
வழுவம ணிடுகல் லொன்றுன் மறிகடல் பிறவி வேலை
முழுவதுங் கடந்த வெங்கண் முதல்வனுக் கன்புசெய்வாம். 29

### திருக்குடந்தைப் புராணம்

ஒருகவி மீட்பான் காலற் கோலையொன் றெழுதி யச்சம்
பெருகவுந் தோற்றி யுய்த்த பெருஞ்சிலை யிராம னுணத்
தருகவப் பூதி மைந்தன் றனையெனக் கால காலற்
கருகலில் பதிகம் பாடி யருளினோற் கன்பு செய்வாம். 30

### மாயூரப் புராணம்

பெறுமணி நிறத்த மைத்தும் பிறங்குபொன் னுடம்பிற் போர்த்து
முறுபெருங் காவல் பூண்டோர்ந் துறங்குமா யவன்போ லாது
பெறுமணி பொன்னெ லாங்கைப் பேருழ வாரத் தாற்சேர்
வுறுபுறம் விட்டா னந்த வுறக்கஞ்செய் பவர்தா ளுள்வாம். 31

### உறையூர்ப் புராணம்

கந்தைமிகை யாங்கருத்துங் கையுழவா ரப்படையுங் கவின்வெண் ணீறுஞ்
சிந்தையிடை யறவன்புஞ் சிவஞானம் பழுத்தொழுகு செய்யவாயுந்
தந்தையொடு தாயிலான் றிருவடிதை வருமனமுந் தாரைக் கண்ணு
நிந்தையறு முழுத்துறவு முடையபிரா னடிபணிந்து நீடு வாழ்வாம். 32

### திருக்குறுக்கைப் புராணம்

இருளென்று சொலத்திரிவார் மனம்வேவ நீற்றறையு ளிருந்து முற்றேம்
வெருளென்று துயர்க்கடலு ளவரழுந்தக் கருங்கடற்கண் மிசைமி தந்து
மருளென்று மாருத வெண்ணீறுங் கண்மணியு மைந்தெ ழுத்தும்
பொருளென்று தெரிவித்த புண்ணியவா கீசர்பதம் போற்றி வாழ்வாம். 33

### தனியூர்ப் புராணம்

முகத்தின்மண் முழுதி டந்து முன்னவன் பாதங் காணு
னகத்தினு ணடைய வங்கை யலர்செறி யுழவா ரத்தி
னிகத்தின்மண் மேலி டந்தவ் விறையடி தலைமேற் சூட்டச்
சுகத்தினல் லூரிற் பெற்ற தூயரைத் துதித்து வாழ்வாம். 34

### சூத சங்கிதை

பரசிவமென் றடியவரைப் பகருமறை களிதுங்கப் பலரும் போற்றப்
பிரசநறுங் கடுக்கைமுடி யப்பரன்போல் விடநுகர்ந்து பெயராச் சீற்றப்
புரிசைநெடுங் களிற்றினைவென் றெழுவிடைவென் முழுவிடைசூல் பொலியக் [கொண்ட
வரசுதிருப் பாதமலர் பரசுறுமெய்ப் போதமுறீஇ யமைந்து வாழ்வாம்.

### இதிகாசம் :—சிவரகசியம்

கதிரு லாவிய சபைதொறுங் காலொன்று தூக்கி
யதிர வீசிநின் றாடிய தாண்டவத் தவர்க்கே
மதுர மாத்திருத் தாண்டகச் செந்தமிழ் வகுத்த
சதுர னுவினுக் கரையன்றன் சரணமே சரணம். 36

### சாத்திரங்கள் :—சைவ சமயநெறி

பரித்தரிப்பாம் பாசம் பரமசிவன் பாதந் - தரித்துயர்ந்த வாகீசர் தாள். 37

### பரமத திமிர பானு

தரித்திடுவா வெம்முட் சிவனடிதன் னுச்சி - பரித்தசொல் வேந்தன் பதம். 38

### சங்கற்ப நிராகரணம்

வாக்கியலி னுலே மறைவனத்து வன்கதவை - நீக்கினன்று ணீங்காதென் னெஞ்சு. 39

---

இத்தோத்திரங்களைத் தொகுத்துதவியவர் அன்பர் திருத்துறையூர்-K. ஆறுமுக நாயனுர்.

முற்சேர்க்கை - 3

# பெயர் விளக்கம்

**அஞ்செழுத்து,** 1391, 1392, 1394, 1395, *ஸ்ரீ பஞ்சாக்கர மந்திரம்.*

**அப்பர்,** 1447, 1451, *திருநாவுக்கரசு நாயனாருக்கு ஆளுடைய பிள்ளையார் இட்டழைத்த பெயர்.*

**அப்பூதியடிகள்,** 1465, *அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவர்; திருநாவுக்கரசு நாயனாரிடத்து அன்பு பூண்டொழுகிய, திறத்தால் முத்திபெற்றவர். அவர் புராணம் பார்க்க*

**அரசு** 1341, 1392, 1394, 1450, 1529, 1546, 1562, 1661, *திருநாவுக்கரசர்.*

**அரம்பையர்** 1687, *தேவலோக நடன மாதர்.*

**அற்புதப் பொற்கோயில்** 1544 *திருவாய்மூருக்குத் தெற்கில், அணிமையில் உள்ள தலம். இறைவர் திருநாவுக்கரசருக்குத் திருவுருக்காட்டி மறைந்த இடம். ௬௭௧ பக்கம் பார்க்க.*

**ஆண்ட அரசு** 1359, 1362, 1383, 1410, 1446, 1454, 1466, 1468, 1482, 1497, 1523, 1535, 1538, 1548, 1667, 1681, 1692, 1694, *திருநாவுக்கரசர்; ஆண்ட - ஆட்கொள்ளப்பட்ட.*

**ஆலால சுந்தரர்** 1276, *ஆளுடைய நம்பிகளுடைய முன்னைநிலைப் பெயர்.*

**இராமன்** 1673, *தசரதன் மகன்; திருமாலின் பத்து அவதாரங்களுள் ஒன்றென்ப; இராவணனைக் கொன்ற பழி போகும்படி, இராமேச்சுரம் அமைத்துச் சிவனை வழிபட்டவர்.*

**இராவணன்** 1340, 1673, *இராமனாற் கொல்லப்பட்ட அசுரன் ; இராமாயண வரலாறு பார்க்க ; கயிலை மலையைப் பேர்க்க முயன்று, மலைக்கீழ்ச்சிக்கிப், பலகாலம் அழுது கொண்டிருந்த காரணத்தால் இராவணன் (அழுகின்றவன்) என்ற பெயர் பெற்றான் ; பின்னர்ச் சாமகீதம் பாடிச் சிவனருள்பெற்றான். தேவாரப்பதிகளுள் இவ்வரலாறுகள் பேசப்பட்டன, பக்கம், ௬௭௭.*

**இலங்கை** 1673, *பரதகண்டத்திற்குத் தெற்கில் உள்ள தீவு ; இராவணன் ஆண்ட நாடென்பதும், சூரபதுமன் நகருக்கு வடக்குவாயிலென்பதும் வரலாறு.*

**இலாடம்** 1617, *வடநாடுகளுள் ஒன்று.*

**உமையம்மையார்,** *மைவாச நறுங்குழல் மாமலையாள்* - 1338 - *வெற்பரையன் பாவை* - 1442 - *அம்மை* - 1443; *அம்பிகை* - 1448; *உலகமெல்லாமீன்றாள்* - 1450; *பெரிய பெருமாட்டி* - 1452; *குன்றமகள்* - 1458; *பாலூரு மின்மொழியாள்* 1481; *வாராரு முலை மங்கையுமை* - 1493; *பொருப்பரையன் மடப்பாவை* 1495 - 1509 - *வார்திகழ் மென்முலையாள்* - 1505; *பண்ணினேரு மொழியாள்* 1533; *இமயப்பாவை* - 1525; *மலையாள்* - 1536; *தையல்* - 1582; *பெண்* - 1593; *மங்கை* - 1622; *வண்டுலாங்குழல் மலைமகள்* - 1629: *பொன்மலைக்கொடி* - 1639; *சத்தி* - 1639; *மரகதக்கொடி* - *மாமலையாள்* - 1644; *நாதர்தம் துணை* - 1647; *மலையான்மகள்* - 1649.

**எழுத்தறியும் பெருமான்** 1600, *திருவொற்றியூர் இறைவரது பெயர்.*

கங்கை 1618, தெய்வப் பேராறு.

கச்சித்திருமயானம் 1593, தொண்டைநாட்டுத் தேவார வைப்புத் தலம் ; தல விசேடம் - பக்கம் - ருசக.

கச்சித்திருமேற்றளி 1591 தொண்டை நாட்டுத்தலம் ; பக்கம், ருரு०.

கண்ணப்ப நாயனுர் 1611 அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர் ; அவர் புராணம் பார்க்க.

கலிப்பகையார் 1288, 1290, 1295, 1296 ; திலகவதியம்மையாருக்கு மணம் பேசி இசைந்த மணமகனுர்.

கயிலை 1696, திருக்கயிலாயமலை ; தலவிசேடம் பக்கம் சுஉஅ.

கருநடம் 1615 வடநாடுகளுள் ஒன்று.

கனகப்பொது, 1430, பொன்னம்பலம்.

காஞ்சி 1582, காஞ்சிபுரம் என்றும், திரு எகம்பம் என்றும் தேற்றமாய் விளங்கும் தொண்டை நாட்டுத்தலம் ; தலவிசேடம் திருக்குறிப்புத்தொண்ட நாயனுர் புராணத்திறுதியிற் காண்க.

காடவன் 1411 பல்லவச் சோழமரபு அரசர்களின் குலப்பெயர்.

காழி 1443 - சீர்காழி.

குங்கலியக்கலய நாயனுர் 1512 அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர் ; அவர் புராணம் பார்க்க.

குணபர வீச்சரம் 1411 பாடலிபுத்திரத்தில் இருந்த சமண பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துக் கொண்டு வந்து மகேந்திரவர்மன் என்னும் பல்லவ அரசன், சைவச் சார்பு பெற்றபின், திருவதிகையிற் எடுப்பித்த கோயில்; பக்கம் உ००.

குலச்சிறையார் 1549, 1665, 1670, 1694; குலச்சிறை நாயனுர்; அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். அவர்தம் புராணமும், திருஞான சம்பந்த நாயனுர் புராணமும் பார்க்க.

குறுக்கையர் குடி 1280, திருநாவுக்கரசு நாயனுர் அவதரித்த குடி. (கோத்திரம் என்பது வடமொழி)

கூனிமிர்ந்த தென்னவனுர் 1670 ; நின்றசீர்நெடுமாற நாயனுர் ; அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். அவர்தம் புராணமும் திருஞானசம்பந்த நாயனுர் புராணமும் பார்க்க.

சதயம் 1693 திருநாவுக்கரசர் சிவனடி சேர்ந்த நாள்

சித்திரை 1693 மாதங்களுள் ஒன்று; திருநாவுக்கரசர் சிவனடி சேர்ந்த மாதம்.

சிவசின்னம் 1308, 1342, திருநீறும் உத்திராக்கமும்.

சிவபெருமான் :—மணிகண்டர் - 1276 ; சிவம் - 1277 ; மின்னுர் செஞ்சடையண்ணல் - 1287 ; நம்பர் - 1540 ; 1572 ; 1614 ; 1681 ; 1302 ; 1462 ; 1472 ; 1480 ; 1494 ; நாதன் - 1301 ; பிஞ்ஞகன் - 1307 ; செம்பவளக்குன்று - 1308 ; சுடரொளி - 1311 ; பவமொன்றும் வினை தீர்ப்பார் - 1312 ; மழவிடையார் 1313 ; கண்டரு நெற்றியர் - 1314 ; ஆளுடைய தம்பெருமான் - 1329 ; கற்றை வேணியர் - 1330 ; கழலடைந்தோர் பற்றறுப்பார் - 1330 ; நின்மலன் - 1311 ; திருக்கயிலைக் குன்றுடையார் - 1331 ; திருவாளன் - 1332 ; ஆறணிந்தார் - 1333 ; செங்கனக வரைச்சிலையார் ; தம்பிரான் - 1334 ; மாற்றூர் புரமாற்றிய வேதியர் - 1335 ; சேந்நின்ற பரம்பொருள் - 1336 ; முதல்வன் - 1362 ; மைவாச நறுங்குழலாள் மணவாளன் - 1338 - வீரட்டமமர்ந்தபிரான் - 1339 ; பரசுங் கருணைப் பெரியோன் - 1341 ; விண்ணோர் தனி நாயகன் - 1343 ; சடையான் - 1355 ; மின்

தயங்கு புரிவேணி வேதியனுர் - 1357 ; நான் மறையின் கோமான் - நதியினுடன் குளிர்மதிவாழ் சடையான் - 1358 ; விடையுகைத்தார் - எம்பிரான் 1359 ; அம்பலத் தாண்டவமுன் புரிந்தருளும் தாணிழல் ; ஈசன் - 1362 ; ஐயர் - 1363 மாசின்மதி நீடுபுனல் மன்னிவளர் சென்னியன் - பேசவினியான் - உலகாளுடைய பிஞ்ஞகன் - ஈசன் - எம்பெருமான் - எவ்வுயிருந் தருவான் - ஆசையிலாராவமுது 1364 ; அம்பலவர் - 1366 ; எங்களுதன் 1369 ; பொடியார்க்குந் திருமேனிப் புனிதன் - பசுபதியார் - 1370 ; காபாலி - 1374 - சேவிற்றிகழ்பவர் - 1379 ; விண்ணவர்தம் பெருமான் - விடையுகந்தேறும் பிரான் - 1380 ; செஞ்சடை நீண் முடிக்கூத்தர் - தேவர்க்குந்தேவர் பிரானுர் ; வெஞ்சுடர் மூவிலைச்சூல வீரட்டர் - 1381 - 1382 ; எந்தை 1390 ; சிவன் - 1390 ; சொற்றுணை வேதியன். 1391 ; திங்கள்வெண் கொழுந்தணி சடையர் - 1398 ; தோன்றாத் துணை - 1392 ; வெற்றி மழவிடை வீரட்டர் - ஒன்னார் புரங்கள் செற்றவர் - 1400 ; தேவர்பிரான் - 1401 ; நாயகன் - 1405 ; தொண்டாண்டு கொண்டபிரான் - 1406 ; அம்பலச் செவ்வண்ணர் - 1407 ; உம்பர்தங்கோன் - உடையபிரான் - 1408 ; அரியயனுக் கரியான் - அடியவருக் கெளியான் - அமுது - 1409; - 1440 ; மழவிடையோன் – 1410. கண்ணுதல் - 1411 ; மதிச்சடைமேற் பன்னக மணிந்தவர் - 1412 ; விடையார் - 1413 ; வார்சடையார் - 1414 ; முன்னாகி எப்பொருட்கு முடிவாகி நின்றான் - தன்னாகத் துமைபாகங் கொண்டான் - சங்கரன் - 1416 ; தம்பெருமான் - 1382-1413; சுடர்க்கொழுந்து-1419 ; தனிவிடையார் - 1420; வானாறு புடைபரக்கு மலர்ச்சடையார் - 1421 ; இருவர்க்கரியவர் - 1422; உடையவர் - 1427 ; களனிற் பொலிவிட முடையார் - 1430 ; ஆடுங் கழல்புரி அமுதத் திருநடம் - 1431; மின்றாழ் சடையொடு நின்றாடு மையன் - 1432 ; மன்றாடும் அத்தன் - 1433. சேவுயர் கொடியார் - காவியங் கண்டர் - 1437 ; சினவிடையே றுகைத்தருளு மணவாள நம்பி ; வானவர்க்குத் தானவன் - நினைவரியார் - 1438 ; நினைப்பவர்தம் மனக்கோயில் கொண்டருளு மம்பலத்து நிருத்தனுர் - 1439 ; பொன்னம்பலத்து மேவி யாடல் புரியா நின்றவர் - 1440 ; விடையுகைத்தார் - 1442 ; ஆழி விடமுண்டவர்-1443 ; அம்பலத்து ளாடுகின்ற கழல் - 1444 ; நீண்ட வரைவில்லியார் - விடையின்மேல் வருவார் - 1447 ; அரன் - 1448 ; திருத்தோணி வீற்றிருந்தார் - 1446 ; இருட்கடு வுண்டவர் - 1450 ; காழிப் பரமர் - 1451 ; செஞ்சடை வானவர் - 1450 ; பெரிய பெருமாட்டியுடன் றோணிமீது பேணி வீற்றிருந்தருளும் பிரான் - 1452 ; மைத் தழையு மணிமிடற்றார் - 1453; வேதநாயகர் - கண்ணுதலான் - 1454; விடையுயர்த் தார் - பரமர் - 1452 ; ஆவுறு மஞ்சாடுவார் - 1455 ; ஆவடுதண்டுறையார் - 1456 ; மறிவிரவு கரத்தார் - பொறியரவம் புனைந்தார் - 1457 ; சிவக்கொழுந்து - என்று மினிய பெருமான் - 1458 ; நாதன் - 1459 ; சிவபெருமான் - 1460 - 1495 ; புனிதர் - 1461 ; 1528 ; கண்ணுதலோன் - 1463 ; ஆளுடைய நாயகன் - காளவிட முண்டிருண்ட கண்டர் - பணிக்கலன் பூண்டு நீளிரவி லாடுவார் - 1464 ; அரனுர் - 1465 ; உம்பர் பிரான் - 1472 ; கொன்றை நறுஞ்சடையார் - உடையான் - 1473 ; பைங்கண்விடைத் தனிப்பாகர் ; தம்பெருமான் - 1475 - 1479 ; புடைமாலை மதிக் கண்ணிப் புரிசடையார் - 1476 ; எழும்பணியு மிளம்பிறையு மணிந்தவர் - பழனத் திறை - 1477 ; ஆலமார் மணிமிடற்றார் - 1478 ; விரிஞ்சனொடு செங்கண்மா லறிவரி யார் - 1479 ; பல்லூர் வெண்டலைக் கரத்தார் - அல்லூர் வெண்பிறை அணிந்தார் - 1480 ; பாலூரு மின்மொழியாள் பாகனுர் - மேலூர்தி விடைக்கொடியார் - 1481 ; மலர்க்கொன்றை முதல்வனுர் - மருவாரூ ரெரித்தவர் - 1482 ; நீண்ட சடைமுடி

யார் - 1483 ; புற்றிடங் கொண்டான் - 1485 ; நீள்சுடர் மாமணிப் புற்றுளார் - 1486 ; திருமூலட்டானர் - 1487 ; தூண்டா விளக்கன்ன சோதி - 1488 ; புற்றிடங்கொ ணிருந்தர் - 1491 ; தேன்மருவுங் கொன்றையார் - 1492 ; நீராருஞ் சடைமுடியார் - வாராரு முலைமங்கை யுமைபாங்கர் - காராருங் கறைக்கண்டர் - 1493 ; பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் - 1495 - 1509 ; பன்னகப் பூணணிவார் - 1496 ; மணிப்புற்றி லமர்ந்து வாழும் நீண்டசுடர் மாமணி - 1497 ; மைத்தழை கண்டர் - 1500 ; மைம்மலர் கண்டத் தண்டர் பிரானார் - 1501 ; ஆரூர் மன்னர் - 1502 ; பைத்தலைநாகப் பூணணிவார் - 1503 ; தேவர் பிரான் - புகலூர் மன்னிய தேன் - 1504 ; வார்திகழ் மென்முலையா ளொரு பாகன் - 1205 ; ஆரூர் நகராளுந் துப்புறழ்வேணிக் கண்ணுதலார் - 1506 ; மின்னார் செஞ்சடையண்ணல் - 1510 ; வருநீர் செஞ்சடைக் கரந்தார் - 1511 ; கூற்றடர்த்த பொன்னடிகள் - 1512 ; கார்மன்னுங் கறைக்கண்டர் - 1513 ; சார்ந்தார்தம் புகலிடம் - வார்ந்தாடுஞ் சடையார் - தம்பிரான் - 1514 ; செங்கனகக் குன்ற வில்லியார் - முக்கட் செக்கர்ச் சடைமவுலி வென்றி விடையார் - 1517 ; செய்ய சடையார் - 1518 ; பொன்னார் மேனி மணிவெற்பு - 1519 ; செய்ய சடையார்-1521; அல்லார்கண்டத் தண்டர்பிரான் - 1524 ; ஈசர் - 1525; ஆறுசடைமே லணிந்தருளு மண்ணல் - 1526 ; நீலகண்டர் - 1527 ; மிழலை மாமணி - 1528 ; குன்றவில்லியார் - 1529 ; அரவச்சடை யந்தணனார் - 1530 ; அல்லநீர்ப்பார் - 1531; ஓங்குவேத மருச்சனை செய்யும்பர் பிரான்-1532 ; தெண்ணீரணிந்தார்-1533 ; வேத வனத்தின் மெய்ப்பொருள் - 1534; கண்பொற்பமைந்த நுதற் காளகண்டர் - 1537 ; நம் பெருமான் - 1538 ; மறைக்காட்டு மணி - உமையோர்பாக முடையவர் - 1541 ; ஆதிமூர்த்தி 1542 ; நீரார் சடையார் - 1543 ; மாலயனு நேடியின்னங் காணாதார் - 1546 ; பரமர் - 1546-1575-1547; சூடும் பிறையார் 1547 ; வாய்மூரடிகள் : 1548; சிவனார் - 1550; 1559; புனிதர் - வீழிமிழலையமர் தாணு-1555 ; மறைக்காட்டமர்ந் தருளும் சோதி - வேலைவிடமுண்டவர் - தலைவர் - 1556 ; வேதமுதல்வர் - ஆழி... பொருள் - 1557 ; செய்ய சடையார் - 1559 ; கந்தமலருங் கடிக்கொன்றை முடியார் - 1560 ; அண்ணலார் - 1561 அண்டர்பெருமான் 1563 ; ஈசர் - நாதர் - 1564; 1576 ; செங்கண் விடையார் - 1566 ; சிலந்திக்கருளும் கழல் - சடையார் - 1567 ; ஒன்னார் புரமெரியச் செற்றசிலையார் - 1568 ; விழியேந்திய நெற்றியினார் - 1569 ; விண்ணின் மேற் றாவும் புள்ளு மண்கிழிக்குந் தனி யேனமுங் காண்பரிய வர் - 1570 ; வெங்கண் விடை வேதியர் 1571 ; செப்பவரியான் - 1573 ; மைஞ் ஞீலத்து மணிகண்டர் - 1575 ; மாதொர்பாகர் - ஆதிதேவர் - 1576 ; செங்கண் விடையார் - தொண்டர் தொழும்புக் கெதிர் நிற்கும் அங்கணரசு - 1577 ; அண்ணாமலைமேல் மணிமலை - ஆரா அன்பினடியவர்தங் கண்ணாரமுது - உண்ணாநஞ்சமுண்டான் - 1578 ; பணியார்வேணிச் சிவபெருமான். மணியார் கண்டத் தெம்பெருமான் 1579 ; செக்கர்ச்சடையார் - தேவர்பிரானார் - முக்கட்பிரான் - 1581 ; செய்ய ஐயர் - புவனமுய்ய நஞ்சுண்டருளுமவர் - தையல் தழுவக் குழைந்தபிரான். 1582 ; திருவதிகைநம்பர் 1583 ; இண்டைபுனைந்த சடைமுடியார் - 1585 ; வானநதி குதி கொண்டிழிந்த சடைக்கம்பர் - அதிர்கொண்டலை நேர்மணி மிடற்றார் - 1586 ; கச்சி யேகம்பர் - 1587 ; செம்பொன் மலைவல்லி தழுவக்குழைந்த மணிமேனிப் பெரு வாழ்வு - 1587 ; விரவார்தம் புரமெரித்த விடையவனார் - அரவாரம் புனைந்தவர் - 1589 ; மையார்ந்த மிடற்றர் - 1590 ; நீர்வளருஞ் சடையவர்-1591 ; சென்னிமிசை மதிபுனைவார் - 1592 ; திருவேகம்பர் - 1588 ; ஏகம்பன் - பாகம் பெண்ணுருவான் -

பைங்கண் விடையுயர்த்தான் - நாகம் பூணுவந்தான் - நலம்பெருகுந் திருநீற்றின் ஆகந்தோ யணியான் - 1593 ; திங்களார் நெருக்கச் செஞ்சடைக்கணிந்தார் - பருக் கைத்திண்களிற்றுரியார் - 1594 ; நிருத்தனுர் - சூடுமிளம் பிறைமுடியார் - 1595 ; திருவான்மியூர் மருந்து - பிறப்பறுத்துத் தருவார் - 1596. சங்கரனூர் - 1597 ; பொருநாகத் திண்சிலையார் - அடியார் கருநாமந் தவிர்ப்பார் - 1599 ; எழுதாத மறை யளித்த வெழுத்தறியும் பெருமான் - 1600 ; விண்டோய்ந்த புனற்கங்கை வேணி யார் - 1601 ; இறை - உமையாள் பங்குடையார் - 1603 ; வே யிடங்கொண் டுல குய்ய இருப்பார்-புரமூன்று மெரித்தருள வெடுத்ததனிப்பொருப்பார்-வெஞ்சிலையார் - 1604 ; முந்நிமூவெயிலெய்த முதல்வனுர் - எந்தையார் - 1605 ; மைம்மருவுங்களத் தார் - 1606 ; திருவாலங்காடுறையும் செல்வர் - 1607 ; செல்கதிமுன் அளிப்பவர் - 1608 ; செங்கண்விடைத் தனிப்பாகர் - 1609 ; காதணி வெண்குழையான் - காளத்தி மலைக் கொழுந்து-வேதமொழி மூலம்-1610 ; மலைச்சிகரச் சிகாமணி - 1611 ; தாணு-1612 ; மாமலைமேல் மருந்து - செங்கண்மால் விடையண்ணல் - 1613 ; ஆர்கொள் சூல வயிற்படைச் செம்மல்-1615 ; மின்னுவேணியர்-1618 ; மங்கைபங்கர் - 1622 ; ஈசன் 1624 ; பன்னகம்புனே பரமர் - 1626 ; அண்டர் நாயகர் 1629 ; ஆளுநாய கன் - 1631 ; அண்ணல் - வேதநாயகன் - அமுது - 1633 ; இறைவர் - 1634 ; ஏற்றினூர் - வேற்றுமாகி விண்ணுகி நின்றூர் - 1635 ; அண்ணலார் - 1535. ஆதி தேவர் - மாதொர் பாகனுர் - 1636 ; உம்பர் நாயகர் - எம்பிரான் - 1637 ; உடைய நாயகர் - 1638 ; சிவம் - தம்பிரான் - 1639 ; வள்ளலார் 1644 ; அண்டர் - 1645 ; பொன் பிறங்கிய சடையார் - 1646 ; கயிலை மேய நாதர் - 1647 ; ஐயர் - செய்ய வேணியர் - 1648;மாதர்ப் பிறைக்கண்ணியான்-வேதமுதல்வர்-1649 ; கண்ணுதலார் - அண்டர்பிரான் - 1650; 1675; மழபாடியார் - தேடியமாலுக் கரியார் - 1651; செஞ் சடையான் - ஆனேற்றுப் பொருப்பூர்ந்தருளும்பிரான் - பொய்யிலி - 1653 ; தம்பிரா னுர் - 1654 ; அல்லலறுப்பவர் - 1655 ; துள்ளுமான் மறிக்கரத்தார் - 1662 ; மழுவி னெடு மானேந்து திருக்கரத்தார் - 1663 ; அங்கணர் - 1667 ; திருந்தியநூற் சங்கத்து ளன்றிருந்து தமிழாராய்ந் தருளிய அங்கணர் - வன்றனி மால்விடையார் - 1668 ; மொய்திகழும் சடையான் - 1669 ; திருவாலவாயமர்ந்த செஞ்சுடர் - செழும்பொரு ணூல் தருவான் - மருவார் முப்புரமெரித்தார் - 1671 ; நெடியானுக் கறிவரியார் - பொடிநீடு திருமேனிப் புனிதர் - 1672 ; இராமனுக்கு வரும் பெரும்பாதகம் தீர்க்கும் பிஞ்ஞகர் - 1673 ; தேவர் தொழும் தனிமுதல் - திருவிராமேச்சரத்து மேவிய சங்க ரன் - 1674 ; செங்கண் விடையார் - 1675 ; சிவன் - 1676 ; பாம்பணிவார் - 1677 ; பூம்புகலூர்ப் புனிதர் - 1678 ; மன்றுறைவார் - கொன்றை மலர்ச் சடையார் - 1629 ; பேரருளின் கடலளிக்கும் பெருமான் - 1680 ; உம்பர்பிரான் - 1682 ; திருப்புகலூர் நாயகனுர் - 1683 ; அத்தனுர் - 1687 ; திருவாரூர் அம்மான் - 1688 ; மின்னிலவுஞ் சடையார் - 1690 ; புகலூரன் - 1691.

சிவமுன் பயின்மொழி 1425, அரனுமம்.

சிவம் 1427, 1442, 1448, இறைவரின் தன்மை.

சிவன் அஞ்செழுத்து 1390, 1395, 1635, ஸ்ரீ பஞ்சாக்கரமென்னும் மகா மந் திரம். "நமச்சிவாய" என்று அற்றமுன் காக்கு மஞ்செழுத்து 1391; அமரர் வாழ்த்து தற்கரிய வஞ்செழுத்து 1392 ; அருளுமஞ்செழுத்து 1399 ; வருநாமத்தஞ்செழுத்து 1499.

சிறுத்தொண்டர் 1507 அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். அவர் புரா ணம் பார்க்க,

சுவாமிமலை 1481 ; முருகப்பெருமானது படைவீடு ?; அவற்றுளொன்றாகிய திருவேரகம் என்று வழங்குவது ; பக்கம் ௩௪௨.

சூலை 1313, 1446, வயிற்றினிடம், கொடுவேதனை செய்து குடைந்து முடக்கும் ஒரு நோய்.

சைவநெறி 1277, 1553, தெய்வநெறிச் சிவம் 1277, தூய சிவ நன்னெறி 1306, சிவமொன்றுநெறி 1312, மெய்தருவா னெறி 1326, சிவநெறி 1334, திருநெறி 1395, அருணெறி 1398, சைவநெறி வைதிகம் 1551, ஆதிசைவநெறி 1551.

தண் பொருந்தம் 1664, தாம்பிரபன்னி ஆறு.

தண்பொருந்தப் புனனாடு 1664, பாண்டிநாடு.

தருமசேனர் 1304, 1315, 1319, 1345, திருநாவுக்கரசு நாயனார் முன் சமண் சார்பிலிருந்தபோது அவருக்குச் சமணர் இட்டபெயர் ; பக்கம் ௫௨.

தமிழ்நாடு 1665, 1675, 1677, பாண்டிநாடு.

தான்தோன்றி மாடம் 1514, திருஆக்கூரில் கோயிலின் பெயர்.

திங்களூர் 1465, 1466, 1475, அப்பூதியடிகளது தலம் ; தலவிசேடம் பக்கம் ௩௧௫.

திரு, 1282 இலக்குமி ; உமையம்மையாருமாம்.

திருஅண்ணமலை 1576 நடுநாட்டுத் தலம்; தேற்றமாயறியப்படுவது; பக்கம் ௫௩௪.

திருஅம்பர் 1511 சோழ நாட்டுத் தலம் ; தலவிசேடம் பக்கம் ௪௧௪.

திருஅன்பிலாலந்துறை 1556 சோழ நாட்டுத் தலம் ; பக்கம் ௫௦௬.

திருஆக்கூர் 1513 பக்கம் ௪௨௨.

திருஆமாத்தூர் 1413 நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று; தலவிசேடம் பக்கம் ௨௦௨.

திருஆலூர்ப்பசுபதீச்சரம் 1463 சோழ நாட்டுத் தலம்; தலவிசேடம் பக்கம் ௩௧௩.

திருஎதிர்கொள்பாடி 1455 சோழ நாட்டுத்தலம் ; தலவிசேடம் பக்கம் ௨௮௧.

திருஎல்லை 1422, 1444, தில்லையின் நாற்புறமும் ஒருகாத அளவிலுள்ள அமைப்பு.

திருஎறும்பியூர் 1567, சோழ நாட்டுத் தலம் ; பக்கம் ௫௧௫.

திருக்கடவூர் 1512, சோழநாட்டுத்தலம் ; திருக்கடவூர் வீரட்டம் எனப்படும் ; தலவிசேடம் பக்கம் ௪௧௭.

திருக்கடவூர்த் திருமயானம் 1513 பக்கம் ௪௧௯.

திருக்கண்டியூர் 1556 சோழ நாட்டுத் தலம் ; பக்கம் ௫௦௮.

திருக்கயிலைமலை 1612 சிவபெருமான் வீற்றிருக்கும் பெருமலை; திருமலை என்று தேற்றமாய் அறியப்படும்.

திருக்கருகாவூர் 1463 சோழ நாட்டுத் தலம் ; தலவிசேடம் பக்கம் ௩௧௩.

திருக்கறிப்பறியலூர் 1454, சோழ நாட்டுத் தலம் ; பக்கம் ௨௭௭.

திருக்கழிப்பாலை 1437, 1439, சோழ நாட்டுத் தலம்; தலவிசேடம் பக்கம் ௨௪௫.

திருக்கழுக்குன்று 1595 தொண்டை நாட்டுத் தலம் ; பக்கம் ௫௫௯.

திருக்கழுமலம் 1442 சீகாழியின் பன்னிரண்டு பெயர்களுள் இறுதிப் பெயர் ; ௨௫௪ பக்கம் பார்க்க.

திருக்கற்குடி 1567 சோழ நாட்டுத் தலம் ; பக்கம் ௫௧௭.

திருக்காரிகரை 1608 தொண்டை நாட்டுத் தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று ; பக்கம் ௫௮௦.

திருக்காளத்தி மலை 1608 தொண்டை நாட்டுத் தலம்; கண்ணப்ப நாயனார் புராணம் பார்க்க. தென்கயிலை எனப்படும்.

திருக்கானப்பேர் 1675, பாண்டி நாட்டுத் தலம்.

திருக்கானூர் 1556, சோழ நாட்டுத் தலம்; பக்கம் ருகசு.

திருக்குடந்தைக்காரோணம் 1481, பக்கம் ருசசு.

திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் 1481, பக்கம் ருசசு.

திருக்குடமூக்கு 1480, சோழ நாட்டுத் தலம்; கும்பகோணம் என்று தேற்றமாக அறியப்படுவது.

திருக்குடவாயில் 1481, சோழ நாட்டுத் தலம்; பக்கம் ருசஅ.

திருக்குறுக்கை 1454, சோழ நாட்டுத் தலங்களுள் ஒன்று. சிவபெருமானது வீரட்டானங்களுள் ஒன்று. காமனை எரித்த தலம்; தலவிசேடம் பக்கம் உஅஉ.

திருக்கெடிலம் 1401, நடுநாட்டுத் தலங்களின் வழிச் செல்லும் பெரிய ஆறு. "தென்றிசைக் கங்கை" என்று தேவாரத்துட் போற்றப்படுவது.

திருக்கோடிகா 1455, சோழ நாட்டுத் தலம்; தல விசேடம் பக்கம் உகூக.

திருக்கோலக்கா 1454, சோழ நாட்டுத் தலம்; சீகாழிக்குத் தென் மேற்கில் அரை நாழிகை யளவில் உள்ளது. I-பக்கம் ருகக. தலவிசேடம் - பார்க்க.

திருக்கோவலூர் 1413, நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று; தல விசேடம் பக்கம் உ0ச, சுOக.

திருச்சத்திமுற்றம் 1457, 1458, சோழ நாட்டுத் தலம்; தலவிசேடம் பக்கம் ரு0அ.

திருச்சாத்தமங்கை 1505, சாந்தை என்பது; இப்போது சீயாத்த மங்கை என வழங்கப்படுகிறது. அயவந்தி என்பது கோயிலின் பெயர். திருநீலநக்க நாயனாரது தலம். அவர் தம் புராணம் பார்க்க. "நீலநக்க னெடுமாநகர்" என்று ஆளுடைய பிள்ளையாராற் போற்றபட்ட சிறப்புடையது; நீலநக்கர் மனைவியார் திருவுருவங்கள் அம்மையார் கோயிலிற்முன் கட்டப்பட்டுள்ளன; சுவாமி அயவந்திநாதர், அம்மை மலர்கண்ணியம்மை, பதிகம் 1. அயவந்தி என்ற பெயர் பிரமனாற் பூசிக்கப்பட்டது என்ற பொருள் தருகின்றது. இது திருமருகலுக்கு வடகிழக்கே மட்சாலை வழி ஒரு நாழிகையளவில் அரிசொல்ஆற்றுக்கு வடகரையில் உள்ளது. ஆற்றுக்குப் பாலமுண்டு.

திருச்சிராப்பள்ளிமலை 1567 சோழநாட்டுத் தலம்; பக்கம் ருகசு.

திருச்செங்காட்டங்குடி 1505 சோழநாட்டுத் தலம்; தலவிசேடம் பக்கம் சOச.

திருச்செம்பொன்பள்ளி 1455 சோழநாட்டுத் தலங்களுள் ஒன்று.

திருச்சேறை 1481 சோழநாட்டுத் தலம்; பக்கம் ருசஅ.

திருச்சோற்றுத்துறை 1477 சோழநாட்டுத் தலம்; தலவிசேடம் பக்கம் ருரு.

திருஞானசம்பந்த நாயனர் - ஆளுடைய பிள்ளையார் - 1496; சிவக்கன்று - 1535; ஞானசம்பந்தப் பிள்ளையார் - 1499; புகலி ஆண்டகையார் - 1523; காழியர்கோன் - 1498; வண்டமிழா லெழுதுமறை மொழிந்த பிரான் - 1445; சண்பையர் நாதன் - 1502; உடைய மறைப்பிள்ளையார் - 1442; பிள்ளையார் - 1442; உடைய பிள்ளையார் - 1553; ஞானப் பிள்ளை - 1515; ஞான முனிவர் - 1534; தமிழ்விரகர் - 1537; ஞானக்கன்று - 1550; மைம்மலர் கண்டத் தண்டர் பிரானுர் மகனுர் - 1501; மெய்ப்பொருண் ஞானம் பெற்றவர் - 1506; ஆழித்தோணிபுரத் தரசர் - 1532; திருமாமகனுர் - 1525; இமயப்பாவை திருமுலைப்பால் தேசமுய்ய வுண்டவர் - 1525; தென்புகலிக் கோ - 1529; பிரமபுரத் திருமுனிவர் - 1666; புரமெரித்தார் திருமகனுர் - 1666; காழிவரும் பெருந்தகை - 1443; திருஞானமா முனிவர் - 1661; இருந்தவத்தோர் - 1664; ஞானத்தலைவர் - 1665; புகலி அந்தணனுர் - 1660; சண்பைநகர் மறையவனுர் - 1656; புகலி வேந்தர் - 1549; மலையா டிருமுலையிற் கறந்த ஞானங் குழைத் தமுதுசெய்த புகலிக் கவுணியர் - 1536; புகலி

வள்ளலார் - 1544 ; வேணுபுரி அந்தணாளர் - 1550 ; கதவந் தொண்டுறைக்கப் பாடி யடைப்பித்த தழைத்த மொழியார் - 1545; சண்பைத் திருமறையோர் - 1551; ஞான போனகர் - 1558.

திருத்தலையாலங்காடு 1528, சோழநாட்டுத் தலம் ; தலவிசேடம் பக்கம் ௬௬௬.

திருத்தினைநகர் 1400, நடுநாட்டுத்தலங்களுள் ஒன்று; தலவிசேடம் பக்கம் உ௭௭.

திருத்துருத்தி - திருவேள்விக்குடி 1455 துருத்தி, குத்தாலம் என வழங்கப்படும் தலம்; காவிரியி னிருகரைகளிலும் எதிர்எதிராயுள்ள இரண்டு தலங்கள். பகலில் திருத் துருத்தியிலும், இரவில் திருவேள்விக்குடியிலுமாக, இறைவர் விளக்கம்பெற வீற் றிருப்பர் என்பது வரலாறு. இரண்டும் ஒரு தலமாகக் கருதப்படும் ; தலவிசேடம் பக்கம் உ௮௮.

திருநல்லூர் 1461, 1478, சோழநாட்டுத் தலம் ; தலவிசேடம் பக்கம் ௩0௧.

திருநள்ளாறு 1505, சோழநாட்டுத் தலம் ; தலவிசேடம் பக்கம் ௬0௭.

திருநறையூர் 1481 சோழநாட்டுத் தலம் ; பக்கம் ௩௬௮.

திருநாகேச்சரம் 1457, சோழநாட்டுத் தலங்களுள் ஒன்று ; தலவிசேடம் பக்கம் ௩00.

திருநாகைக்காரோணம் 1556, சோழநாட்டுத் தலம் ; பக்கம் ௬௧௧.

திருநாலூர் 1481 சோழநாட்டுத் தலம்.

திருநாவுக்கரசு நாயனார் - திருநாவுக்கரசு - இறைவர் நாயனாருக்கு அருளிய பெயர் - 1266 - 1276 - 1339 - 1379 - 1389 - 1398 - 1403 - 1446 - 1448 - 1499 - 1503 - 1543 - 1552 - 1577 - 1586 - 1599 - 1633 - 1650 - 1663 - 1666 ; வாகீசர் . நாயனார் முன்னை நிலையில் முனிவராயிருந்த நிலையின் பெயர் என் பது வரலாறு - 1266 - 1449 - 1466 - 1515 - 1521 - 1532 - 1540 - 1555 - 1576 - 1658 - 1664 - 1665 - 1681 ; வாகீசத்திருமுனி - 1412 ; வாகீசத்திருவடி - 1374; வாகீசத் திருமுனிவர் 1474. மருணீக்கியார் - நாயனாருக்குப் பெற்றோர்களிட்ட பெயர் - 1282 - 1294 - 1297 - 1300 - 1330 ; அப்பர் - 1447 - 1451 - நாய னாருக்கு ஆளுடையபிள்ளையார் இட்ட பெயர் ; சொல்வினாதர் - 1502 - கலை மொழிக்கு நாதர் - 1538 ; ஞான அரசு - 1564 ; தமிழ் வேந்தர் - 1597 உழவாரப் படையாளி - 1597; தொல்கலையின் பெருவேந்தர் - 1608; கலைவாய்மைக் காவலனார் 1612 ; நாவின் மொழிக்கிறை - 1340 ; பொருண்மொழியின் காவலர் - 1401 ; தமி ழாளியார் - 1625 ; இன்றமிழீசர் - 1403 ; இன்றமிழ்க்கு மன் - 1415 ; தவமுன்... தமிழ்றை - 1425 ; வாக்கின் மன்னவனார் - 1644 ; மெய்ப்பொருடேர் நாவினுக்கு வேந்தர் - 1465 ; மொழிக்கொற்றவர் - 1467 ; பார்பரவும் திருமுனிவர் - 1414 ; பெரியோர் - 1423 ; அறிவிற் பெரியவர் - 1424 ; பெருந்தவத் தொண்டர் - 1467 ; வாக்கினுக்கு வேந்தர் - 1657; கலை மொழிக்கு நாதர் - 1534; உடைய அரசு - 1662; நீண்ட சடைமுடியார்பா னிறைந்தவருள் பெற்றுடையார்-1483; மறிகடலிற் கல்லே மிதப்பாகப் போந்தவர் - 1484; வருநாமத் தஞ்செழுத்தும் பயில்வாய்மையவர்-1499; மெய்ம்மைத்தவத்து மேலவர் - 1574 ; சூலைமடுத்து முன்னாண்ட தொண்டர் - 1583; சொல்லுக்கரசர் - 1585 ; தமிழ் வேந்தர் - 1596 ; திண்மை மெய்த்தவர் - 1621 ; செம்மையோர் - 1624. போதமாதவர் - 1636 ; மன்னு மாதவர் - 1639 ; எல்லை யில் தவத்தோர் - 1646 ; அடித்தொண்டர் - 1648 ; மண் பரவும் பெருங்கீர்த்தி வாகீசர் - 1658 ; எல்லையில் சீர் வாகீசர் - 1665 ; செய் தவத்தோர் - 1669 ; அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா வன்புருகு மெய்த்தன்மை யுணர்வுடைய

விழுத்தவத்து மேலோர்-1687; பேதமிலா வோருணர்விற் பெரியவர் - 1689; அன்புறுபத்தி வடிவான வாகீசர் - 1690.

**திருநாரையூர்** - 1444, சோழநாட்டுத் தலங்களுள் ஒன்று; நாரை பூசித்த காரணத்தால், இப்பெயர் பெற்றது. நம்பியாண்டார் நம்பி அவதரித்துப் பொல்லாப் பிள்ளையாரது திருவருள் பெற்றுச் சைவத் தெய்வத் திருமுறைகளாகிய தேவாரங்களை வெளிப்படுத்தி உலகுக்கு உதவிய தலம். பொல்லப் பிள்ளையார் கோயில் சிறப்பு. சுவாமி-சௌந்தரேசர்; அம்மை-திரிபுரசுந்தரி; பதிகம் 5; சிதம்பரத்திற்கு மேற்கில் பத்து நாழிகை அளவில் அடையத்தக்கது. நல்ல பாதை வசதியுள்ளது. வைத்தீசுவரன் கோயில் புகை வண்டி நிலையத்தினின்றும் திருவோமாம்புலியூர் திருக்கடம்பூர் வழியாகவும் அடையலாம்; பெயருக்கேற்றவாறு தலம் பள்ளத்தாக்கான நிலத்தில் அமைந்திருப்பதால், மழைக்காலத்தில், எவ்வழியா யடைவதும் கடினம்.

**திருநின்றியூர்** 1454 - சோழநாட்டுத் தலங்களுள் ஒன்று; பக்கம் உஅ௦.

**திருநீடூர்** 1454 சோழநாட்டுத் தலம்; பக்கம் உஅ௦.

**திருநீலநக்கர்** 1507, அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர்; புராணம் பார்க்க.

**திருநீறு** 1331, 1332, 1443, விபூதி, தெய்வ நீறு, 1551, எல்லையிலா நீறு, 1553, நலம்பெருகும் திருநீறு 1593, 1664.

**திருநெய்த்தானம்** 1651 சோழநாட்டுத் தலம்.

**திருநெல்வாயில் அரத்துறை** 1419, நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று; தலவிசேடம் உகசு பக்கம்.

**திருநெல்வேலி** 1675 பாண்டிநாட்டுத் தலம்.

**திருப்பராய்த்துறை** 1567 சோழநாட்டுத்தலம்; பக்கம் ௩கஅ.

**திருப்பருப்பதம்** 1613, வடநாட்டுத்தலம்; பக்கம் ௩அள, ௩அகூ.

**திருப்பழனம்** 1475, 1477, சோழநாட்டுத்தலம்; தலவிசேடம் பக்கம் ௯௯௧.

**திருப்பள்ளி எழுச்சி** 1333, இறைவரது வழிபாட்டுக்குரிய காலங்களுள் முதலாவது; இறைவர் பள்ளியினின்றும் எழும்பும் நிலைபற்றி உபசரித்துக் கூறப்படுவது; பக்கம் அ௯.

**திருப்பள்ளியின் முக்கூடல்** 1495 சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில், 86-வது தலம். இப்போது அரிக்கரியான்பள்ளி என்று வழங்கப்படும். சுவாமி முக்கோணநாதர்; அம்மை மைமேவுங் கண்ணி என்பது மைமேவுங் கண்ணியாளோர் பாதியனை என்று பதிகத்துட் போற்றப்பட்டது. வெட்டாறு என்ற புகைநிலையத்தினின்றும் தென்கிழக்கே, ஒரு நாழிகையளவில், உள்ளது. திருவாரூர்ப் பாதை சிரமம். கொடிக்கால் பாளையம் என்ற புகைவண்டி நிலையம் அணிமையில் அமைந்தது.

**திருப்பழையாறை** 1457, 1480 சோழநாட்டுத்தலம்; தலவிசேடம் ௯௦௯ பக்கம்.

**திருப்பாசூர்** 1603 தொண்டைநாட்டுத்தலம்; பக்கம் ௩ளசு.

**திருப்பாதிரிப்புலியூர்** 1396, 1398, திருநாவுக்கரசர், சமணர்கள் கல்லாற் கட்டிக் கடலிற் போகட்டபோது, கரையேறிய தலம்; தலவிசேடம்; பக்கம் களள.

**திருப்பாலைத்துறை** 1464, சோழநாட்டுத்தலம்; தலவிசேடம்; பக்கம் ௯க௩.

**திருப்புகலி** 1496, சீகாழியின் பன்னிரண்டு பெயர்களுள் பத்தாவது பெயர்.

**திருப்புகலூர்** 1496, 1497, சோழநாட்டுத்தலம்; பக்கம் ௯அசு.

**திருப்புத்தூர்** 1667, பாண்டி நாட்டுத்தலம்.

**திருப்புன்கூர்** 1454, சோழநாட்டுத்தலம்.

**திருப்பூந்துருத்தி** 1651, சோழநாட்டுத் தலம்.

திருப்பூவணம் 1672, பாண்டிநாட்டுத் தலம்.

திருப்பேருவேளூர் 1528, பக்கம் சசஎ.

திருப்பெண்ணுகடம் 1413 நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று; பெண்ணுகடம் தலப் பெயர்; தூங்கானை மாடம் கோயிலின் பெயர்; தலவிசேடம் பக்கம் உகக.

திருப்பைஞ்ஞீலி 1568 சோழநாட்டுத்தலம்; பக்கம் ருஉரு.

திருமயிலாடுதுறை 1455 சோழநாட்டுத் தலங்களில் ஒன்று; கௌரிமாயூரம் என்று வழங்கப்படுவது; தலவிசேடம்; பக்கம் உஅஅ.

திருமயிலாப்பூர் 1596 தொண்டைநாட்டுத்தலம்; ஆளுடையபிள்ளையார் எலும் பைப் பெண்ணுக்கியருளிய தலம் என்று சிறப்பா யறியப்படுவது; அவர் புராணம் பார்க்க. மயிலை என்று வழங்கப்படும்.

திருமருகல் 1505 சோழநாட்டுத்தலம்; தலவிசேடம்; பக்கம் சOஅ பார்க்க.

திருமறைக்காடு 1528 இது வேதாரணியம் என்று தேற்றமாய் அறியப்படுவது; தலவிசேடம்; சஅஎ பக்கம்.

திருமாணிகுழி 1400 நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று; பக்கம் உஎச; தலவிசே டம் பார்க்க.

திருமாற்பேறு 1592 தொண்டைநாட்டுத்தலம்; பக்கம் ருருஈ.

திருமுதுகுன்றம் 1419 நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று. விருத்தாசலம் என்று தேற்றமாய் வழங்கப்படுவது; தலவிசேடம் உகஎ பக்கம்.

திருமுனைப்பாடி நாடு 1267, நாயனர் அவதரித்த நாடு; ஆளுடையநம்பிகள் அவ தரித்த நாடுமாம். "தேவரு மறையு மின்னமுங் காணுச் செஞ்சடைக் கடவுளைப் பாடி, யாவரு மதித்தோர் மூவரி லிருவர் பிறந்தநா டிந்தநன் ஞடு" என்று வில்லிபுத் துத்தூரரும் பாடிப் போற்றினர்.

திருவதிகைவீரட்டானம் 1307, 1321, 1325, 1326, 1327, 1331, 1334, 1356, 1407, 1413, திருநாவுக்கரசு நாயனுரை இறைவர் ஆட்கொண்டருளிய தலம்; பக்கம் ருரு.

அதிகை தலம்; வீரட்டானம் கோயில்; சாத்தமங்கை அயவந்தி - பனந்தாள் தாடகை யீச்சரம் - பரம்பைக்குடி ஆலம்பொழில் - என்பன போல.

திருவலஞ்சுழி 1481 சோழநாட்டுத்தலம்; பக்கம் ஈசக.

திருவாமூர் 1277 திருநாவுக்கரசு நாயனர் அவதரித்த ஊர்.

திருவாய்மூர் 1541 சோழநாட்டுத்தலம்; தலவிசேடம் பக்கம் சஎக.

திருவாரூர் 1470, 1668, சோழநாட்டுத்தலம்; சிறப்பாயறியப்படுவது; திருத் தொண்டத்தொகைக்குப் பிறப்பிடம்.

திருவாலம்பொழில் 1556, சோழநாட்டுத் தலம்; தலவிசேடம் பக்கம் ருOரு.

திருவாவடுதுறை 1456, 1557 சோழ நாட்டுத் தலம்; தல விசேடம் பக்கம் உகஎ.

திருவாலவாய் 1667, மதுரைக் கோயில்; நகரத்துக்கும் பெயராய் வழங்கும்.

திருவானைக்கா 1566 சோழ நாட்டுத் தலம்; தேற்றமாய் அறியப்படுவது; தல விசேடம் பக்கம் ருகஈ.

திருவான்மியூர் 1597 தொண்டை நாட்டுத் தலம்; பக்கம் ருசுக.

திருவிடைமருதூர் சோழ நாட்டுத் தலம்; தல விசேடம் பக்கம் ஈOO.

திருவீழிமிழலை 1515, சோழ நாட்டுத் தலம்; சிறப்பாயறியப்படுவது.

திருவெண்ணெய்நல்லூர் 1413, நடுநாட்டுத் தலம்; பக்கம் உருஈ.

திருவேட்களம் 1437, சோழ நாட்டில் காவிரிக்கு வடகரையில் இரண்டாவது தலம். தல விசேடம் உசஉ பக்கம்.

திருவேதிகுடி 1554 சோழ நாட்டுத் தலம் ; பக்கம் ருOஎ.

திருவையாறு 1634, சோழ நாட்டுத் தலம். தலவிசேடம் பக்கம் கூசரு.

திருவொற்றியூர் 1597 தொண்டை நாட்டுத் தலம் ; பக்கம் ருஎச.

திருவோத்தூர் 1581 தொண்டை நாட்டுத் தலம் ; பக்கம் ருகஎ.

திலகவதியார் 1282, 1283, 1294, 1296, 1299, 1306, 1323, 1324, 1328, 1332, திருநாவுக்கரசு நாயனாரது தமக்கையாரும், அவரை வழிப்படுத்திய குருவும் ஆகிய அம்மையார்.

தில்லை - 1421, சிதம்பரம் பெரும்பற்றப்புலியூர் ; தடுத்தாட்கொண்ட புராணத் திறுதியில் உரைத்துள்ள தல விசேடமும், பிறவும் பார்க்க.

தில்லைத்திருவெல்லை - தில்லை நகரத்துக்கு நாற்புறமும் ஒவ்வொரு காத தூரத் தில் உள்ள அமைப்பு ; தில்லையை வழிபட வருவோர் திரு எல்லையை வணங்கி உட் புகுதல் மரபு.

தூங்கானை மாடம் 1419, பெண்ணாகடத்தில் உள்ள கோயிலின் பெயர்.

தெலுங்கு 1615 தமிழ் நாட்டுக்கு வடக்கில் உள்ள நாடுகளுள் ஒன்று.

தேவாசிரியன் 1486 திருவாரூரில் திருத்தொண்டர் திருக்கூட்டம் நிறைந் துறையும் காவணம் ; பக்கம் ௩சரு.

தொண்டைநாடு 1666, பரதகண்டத்துள்ள நாடுகளுள் ஒன்று. பக்கம் II-கசOO

நந்தி 1643; திருநந்தி தேவர்.

நமச்சிவாய 1391 சிவமகா மந்திரமாகிய திருவைந்தெழுத்து ; பக்கம் கசுஉ.

நமிநந்தியடிகள் 1473 ; அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர் ; அவர் தம் புராணம் பார்க்க.

நிவா 1420 தில்லைக்கு வடபால், புவனகிரிப் பக்கம் ஓடும் வெள்ளாறு ; நிவாநதி என்ற பெயரால் வழங்கப்படும். இதனைச் சுவேத நதி என்பது வடவர் வழக்கு.

பல்லவன் 1349, 1353, 1360, 1410, சோழ நாட்டை அரசு செலுத்திய அரச மரபுகளில் ஒரு மரபினன்.

பவனன் 1428, காற்றுக் கடவுள் - வாயு தேவன் ; எட்டு திசைக் காவலருள் ஒருவன்.

பழையாறைவடதளி 1559, சோழ நாட்டுத் தலம் ; பக்கம் சகஎ, ருOரு.

பழையனூர்த் திருவாலங்காடு 1606, தொண்டை நாட்டுத் தலம் ; பக்கம் ருஎசு.

பாடலிபுத்திரம் 1303, 1344, 1411, சமண்பள்ளிகள் மிக்கிருந்த பழைய நக ரம் ; அழிந்துபட்டது ; பக்கம் ருO பார்க்க.

பாண்டி மாதேவியார் 1549, 1665, 1670 மங்கையர்க்கரசியம்மையார் ; அறு பத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். அவர்தம் புராணமும் திருஞானசம்பந்தர் புராணமும் பார்க்க.

பாண்டி நாடு 1667 பரதகண்டத்து நாடுகளுள் ஒன்று.

புகழனூர் 1281, 1284, 1288, 1292, திருநாவுக்கரசு நாயனாரது, தந்தையார்.

பெண்ணை 1268 திருமுனைப்பாடி நாட்டிற் பாய்ந்து வளப்படுத்தும் ஆறு.

பொய்யிலி 1653 திருப்பூந்துருத்தி இறைவர் பெயர்.

பொருணூல் 1671 இறையனாரகப் பொருள் என்ற நூல்.

பொன்னி நாடு 1677, சோழநாடு.

பொன்முகலி - 1606, திருக்காளத்தி மலையடியில் ஓடும் ஆறு ; புனித தீர்த்தம். கண்ணப்ப நாயனார் புராணம் பார்க்க.

பொன்னி நதி - 1520, காவிரி,

மதுரை 1667, *பாண்டிநாட்டுத் தலம்; தேற்றமாய் அறியப்படுவது.*

மத்திம பைதிரம் 1617 *பரதகண்டத்தின் மத்தியப் பிரதேசம்.*

மந்தரகிரி 1384 *மாமேருமலை பக்கம் கடுடு.*

மருணீக்கியார் 1282, 1294, 1297, 1300, 1330, *திருநாவுக்கரசு நாயனாருக்குப் பெற்றோர்கள் இட்ட பெயர்.*

மாதினியார் 1282, 1293, *திருநாவுக்கரசு நாயனாரது தாயார்.*

மாரவேள் 1686 *மன்மதன்.*

மாளவம் 1616 *வடநாடுகளுள் ஒன்று.*

முருக நாயனார் 1496, 1508, *அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர்; அவர் தம் புராணம் பார்க்க.*

மேலைத் திருக்காட்டுப் பள்ளி 1556 *சோழநாட்டுத் தலம்; பக்கம் ரு0௬.*

வருணன் 1395, 1396, *கடலரசன்; நீரினுக்குரிய தேவன்; எட்டுத் திக்கு காவலருள் ஒருவன்.*

வாகீசர் 1266, 1449, 1466, 1515, 1521, 1532 *நாயனாரது முன்னைநிலைப் பெயர் என்பது வரலாறு; வாகீசத் திருமுனி* 1412, *வாகீசத்திருவடி* 1374; *வாகீசத் திருமுனிவர்* 1474.

வாரணசி 1618 *காசி; தேவார வைப்புத் தலங்களில் ஒன்று.*

விண்ணிழி விமானம் 1513, *திருவீழிமிழலைக் கோயிலின் விமானம்.*

விழுத்தவத்து மேலோர் 1687.

வீதிவிடங்கப் பெருமாள் 1494, *தியாகேசர் (திருவாரூர்)*

வையமகள், 1274, *பூமிதேவி; நிலத்தைப் பெண்ணாக உருவகிக்கும் மரபு.*

---

# மேற்கோள் நூலகராதி

(எண்கள் பாட்டு வரிசை எண் குறிப்பன)

1. *அகத்தியம்* 1375.
2. *அற்புதத் திருவந்தாதி* 1332, 1358, 1441, 1490, 1581, 1669.
3. *ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி* 1443, 1448, 1455, 1485, 1552.
4. *இறையனா ரகப்பொருள்* 1287, 1521.
5. *இருபா இருபஃது* 1656.
6. *உண்மை விளக்கம்* 1391.
7. *ஐயடிகள் காடவர்கோனாயனார் க்ஷேத்திர வெண்பா* 1335.
8. *ஔவையார்* 1281, 1287.
9. *கந்த புராணம்* 1276, 1614.
10. *கம்ப ராமாயணம்* 1288.
11. *கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி* 1335.
12. *காஞ்சிப்புராணம்* 1674, 1687.
13. *காரைக்காலம்மையார் மூத்த திருப்பதிகம்* 1642.

14. கோயிற் புராணம் 1487, 1577.
15. கோயி னுன்மணிமாலை 1266, 1276, 1436, 1441, 1455, 1490, 1562, 1572.
16. சிந்தாமணி 1312, 1369.
17. சிவஞான சித்தியார் 1266, 1291, 1309, 1310, 1311, 1324, 1335, 1362, 1363, 1388, 1423, 1455, 1464, 1465, 1477, 1490, 1494, 1628, 1639, 1682.
18. சிலப்பதிகாரம் 1685.
19. சிவஞானபோதம் 1632, 1638, 1691.
20. சிவப்பிரகாசம் 1266, 1324, 1450.
21. சுந்தரமூர்த்தி நாயனூர் தேவாரம் 1273, 1294, 1304, 1307, 1319, 1328, 1337, 1363, 1369, 1391, 1395, 1407, 1408, 1413, 1420, 1416, 1441, 1455, 1459, 1481, 1489, 1490, 1500, 1504, 1504, 1606, 1608.
22. தாயுமானவர் 1302, 1307, 1328, 1342, 1409, 1455, 1490, 1614, 1619, 1684.
23. திருக்கயிலாய ஞானவுலா 1479.
24. திருப்பல்லாண்டு 1343, 1455, 1570.
25. திருக்களிற்றுப்படியார் 1363.
26. திருக்கழுமல மும்மணிக்கோவை 1489.
27. திருக்குறள் 1267, 1269, 1270, 1281, 1284, 1285, 1292, 1293, 1295, 1300, 1307, 1317, 1319, 1320, 1329, 1358, 1360, 1363, 1379, 1402, 1405, 1413, 1420, 1432, 1439, 1450, 1452, 1455, 1464, 1477, 1481, 1490, 1526, 1573, 1581, 1670, 1689.
28. திருக்கோவையார் 1278, 1279, 1288, 1293, 1338, 1363, 1366, 1381, 1397, 1430, 1436, 1441, 1447, 1450, 1452, 1459, 1474, 1481, 1490, 1585, 1614, 1620.
29. திருஞானசம்பந்த நாயனூர் தேவாரம் 1271, 1272, 1275, 1301, 1302, 1303, 1304, 1307, 1327, 1330, 1338, 1340, 1342, 1358, 1363, 1364, 1370, 1381, 1382, 1391, 1392, 1404, 1409, 1411, 1413, 1416, 1419, 1420, 1424, 1425, 1437, 1444, 1446, 1451, 1452, 1455, 1464, 1473, 1475, 1476, 1481, 1482, 1490, 1498, 1511, 1522, 1606, 1614, 1620, 1661, 1665, 1669. 1670, 1681.
30. திருநாவுக்கரசு நாயனூர் தேவாரம் 1269, 1277, 1308, 1309, 1310, 1314, 1315, 1322, 1329, 1330, 1335, 1340, 1362, 1363, 1364, 1368, 1369, 1399, 1409, 1412, 1413, 1416, 1417, 1419, 1420, 1426, 1434, 1440, 1447, 1455, 1458, 1461, 1464, 1473, 1477, 1481, 1482, 1485, 1487, 1489, 1651, 1657, 1665, 1667, 1669, 1674, 1680.
31. திருப்புகழ் 1271.
32. திருமந்திரம் 1266, 1277, 1324, 1335, 1363, 1364, 1392, 1421, 1444, 1455, 1490, 1654.
33. திருமுருகாற்றுப்படை 1283, 1397, 1403, 1455, 1606,

34. திருவருட் பயன் 1266, 1324, 1387, 1390, 1390.
35. திருவாசகம் 1276, 1277, 1300, 1306, 1311, 1317, 1332, 1334, 1343, 1359, 1363, 1364, 1391. 1392, 1397, 1405, 1409, 1416, 1417, 1426, 1428, 1431, 1437, 1439, 1440. 1441, 1442, 1452, 1455, 1459, 1460, 1461, 1464, 1472, 1473, 1477, 1481, 1485, 1487, 1489, 1490, 1540, 1570, 1573, 1577, 1578, 1588, 1614, 1635, 1644, 1645, 1646, 1654, 1667.
36. திருவாதவூரர் புராணம் 1283, 1285, 1309, 1390, 1481-
37. திருவாரூர் மும்மணிக்கோவை 1378, 1550.
38. திருவிசைப்பா 1334, 1381, 1409, *1434, 1435, 1448, 1455, 1487, 1490, 1517.
39. திருவிளையாடற் புராணம் 1301, 1310, 1311, 1332, 1341, 1358, 1363, 1364, 1381, 1416, 1428, 1459, 1481, 1626, 1643, 1682.
40. திருவுந்தியார் 1455.
41. திருவேகம்பரந்தாதி 1273.
42. திருவேகாதசமாலை 1266, 1342.
43. திருவிடைமருதூர் மும்மணிக்கோவை 1279, 1297, 1301, 1332, 1413, 1455, 1490.
44. திருவொற்றியூர் ஒருபாவொருபஃது 1490.
45. தொல்காப்பியம் 1291, 1297, 1299, 1401, 1409, 1419, 1440, 1606, 1686.
46. நெஞ்சுவிடு தூது 1437.
47. பழமலையந்தாதி 1270.
48. புறநானூறு 1292, 1299, 1420.
49. புறப்பொருள் வெண்பாமாலை 1540, 1630.
50. பேரூர்ப் புராணம் 1431, 1614,
51. பொன்வண்ணத்தந்தாதி 1335, 1381, 1409, 1413, 1461, 1464, 1519, 1617.
52. போற்றிக் கலிவெண்பா 1481.
53. போற்றிப் பஃறொடை 1490.
54. விநாயகர் இரட்டைமணிமாலை 1266, 1271.



# சில தலக் குறிப்புக்கள்

1. திருமூண்டீச்சரம் - நடுநாட்டு 19-வது தலம். திருக்கிராமம் என்று வழங்கப்படுவது. நெல்லிக்குப்பத்துக்கு வடமேற்கில் உள்ள திருக்கண்டீச்சுரம் என் கோயிலுடன் மயங்கியறிதற்பாலதன்று. பிரமன் - இந்திரன் முதலியோர் பூசித்தது. சுவாமி மூண்டீச்சுரர் - அம்மை - கானூர்குழலி. பதிகம் 1. திருத்தாண்டகம். திருவெண்ணெய் நல்லூருக்குக் கிழக்கில் 3 நாழிகை.

2. தூக்குக்கா - சோழ நாட்டில் காவிரிக்கு வடகரை 28-வது தலம். அனுமன் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. சுவாமி - குந்தளேசுவரர் அம்மை - குந்தளநாயகி. மேலைக் காழி - தலைஞாயிறு - என வழங்கும் திருக்கருப்பறியலூருக்கு வடக்கே மட்சாலை வழி $\frac{3}{4}$ நாழிகை. ஆற்றைப் பரிசினாற் கடக்க வேண்டும். ஆற்றில் முதலை முதலியன உண்டு. பதிகம் 1. குறுந்தொகை.

3. திருநீலக்குடி - ஷை காவிரிக்குத் தென்கரை - 32-வது தலம். "தென்னங்குடி" யென வழங்குவது. தேவகன்னியர் வருணன் இவர்கள் பூசித்த தலம். சுத்தமாகிய நல்லெண்ணெய் சுவாமி திருமேனியில் அபிடேகித்து முழுக்காட்டினால் பாதியெண்ணெய் இலிங்கத்தினுள் சுவறி விடுவதாக ஐதிகம். இக்காரணத்தால் சுவாமி தைலம்மாட்டேசுவரர் என்றும் அம்மை சிஸ்ரூஷாம்பிகை என்றும் வழங்கப்பெறுவர். பதிகம் 1. குறுந். ஆடுதுறை நிலையத்திற்குத் தெற்கே மட்சாலை வழி 2 நாழிகை.

4. கருவிலி - இது கொட்டிட்டை என்ற கோயிலின் பெயருடன் சேர்த்து வழங்கப்பெறும். "கருவேலி" என்பர். கருப்பிணி தீர்க்கும் பெருமானது ஊர் என்பது பெயர்ப் பொருள். சுவாமி - சற்குணநாயகர்; அம்மை - சர்வாங்க நாயகி. பதிகம் 1. குறுந்தொகை. கும்பகோணத்திற்குத் தென்கிழக்கிலுள்ள நாச்சியார் கோயிலுக்கு வட கிழக்கில் 5 நாழிகையில் பூந்தோட்டம் மட்சாலையில் அரிசொல்லாற்றுக்கு வடகரை.

5. கடுவாய்க்கரைப்புத்தூர் - ஷை காவிரிக்குத் தென்கரை 67-வது தலம். "கடுவாய்" நதிக் கரையில் உள்ளது. ஆண்டார் கோயில் என வழங்கப்படும். காசிபர் பூசித்தது. சுவாமி - சுவர்ணபுரீசுவரர். நீடாமங்கலம் கற்சாலையில் கும்பகோணத்திலிருந்து 2 நாழிகையில் சாக்கோட்டையையும், பின் தெற்கே 1 நாழிகையில் திருக்கருக்குடியையும், பின், மேற்கே 2 நாழிகையில் வலங்கியமானையும் கடந்து கிழக்கே குடவாயில் மட்சாலையில் $1\frac{1}{2}$ நாழிகை அளவில் உள்ளது. குரவச்சேரி - குடவாயினின்றும் மேற்கே மட்சாலை $3\frac{1}{2}$ நாழிகை. பதிகம் 1. குறுந்தொகை.

6. கன்றப்பூர் - ஷை காவிரிக்குத் தென்கரை 120-வது தலம். வைணவர் வீட்டில் வாழ்க்கைப்பட்ட சைவப் பெண்ணுக்காகச் சிவபெருமான் பசுவின் கன்றுக்காக நட்டதறியினின்று வெளிப்பட்டருளிய தலம் இடும்பன் பூசித்த தலமென்பர். மாவூர் ரோட் நிலையத்தினின்று கிழக்கே கற்சாலையில் $2\frac{1}{2}$ நாழிகை திருவாரூர் - திருத்துறைப்பூண்டி பாதைச் சந்தியில் வடபுறம் உள்ள குன்னூரினின்று கிழக்கே $2\frac{1}{2}$ நாழிகையில் ஆதமங்கலத்தினின்றும் வடக்கே $\frac{1}{2}$ நாழிகை. திருத்தாண்டகம்.

7. பயற்றூர் - ஷை 78-வது தலம். பயற்றங்குடி என்று வழங்குவர். பைரவ மகா ரிஷி பூசித்த தலமென்பர். (வெட்டாறு) விற்குடி நிலையத்தினின்றும் வடகிழக்கே மட்சாலையில் $3\frac{1}{2}$ நாழிகையில் திருவிற்குடியினின்றும் கிழக்கே மட்சாலையில் 3 நாழிகை. பதிகம் 1. திருநேரிசை.

8. கொண்டீச்சரம் - ஷை 72-வது தலம். வில்வாரணியம் என வழங்குவர். அம்மை பசுவுருவிற் கொம்பினாற் கிளைத்தபோது இறைவர் வெளிப்பட்டனர் என்ப. திருமேனியில் வடு காண்க. கோயிலைச் சிற்றிப் பாற்றீர்த்தம் அகழிபோலச் சூழும். சுவாமி - பசுபதியார். அம்மை - சாந்தநாயகி. நன்னிலம் நிலையத்தினின்று மேற்கே கற்சாலையில் $1\frac{1}{2}$ நாழிகை. பதிகம் 2. நேரிசை - குறுந்தொகை.

9. பேரெயில் - ஷை 114-வது தலம். வங்காரம்பேரையூர் - ஓகைப்பேரையூர் என்று வழங்குவர். அக்கினி பூசித்த தலம். மாவூர் ரோட் நிலையத்தினின்று தென்மேற்கே மட்சாலை 3 நாழிகை. சுவாமி - ஜகதீசர். அம்மை - பெண்ணமிர்த நாயகி. பதிகம் 1. குறுந்தொகை.

---

உ

சிவமயம்

ஐந்தாவது

# திருநின்ற சருக்கம்

திருச்சிற்றம்பலம்

" திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன் ;
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன் ;
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன் ;
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன் ;
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன் ;
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன் ;
ஆரூர னாரூரி லம்மானுக் காளே "

—திருத்தொண்டத்தொகை (4)

திருச்சிற்றம்பலம்

௳

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# 21. திருநாவுக்கரசுநாயனூர் புராணம்

தொகை

"திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்"
—திருத்தொண்டத்தொகை

வகை

நற்றவ ; னல்லூர்ச் சிவன்றிருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் ; மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்கு
ளுற்றவ ; னுற்ற விடமடை யாரிட வொள்ளமுதாத்
துற்றவ ; னூரி னுவுக் கரசெனுந் தூமணியே. 24

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியாற்
றிணியன நீள்கத வந்திறப் பித்தன ; தெண்கடலிற்
பிணியன கன்மிதப் பித்தன ; சைவப் பெருநெறிக்கே
யணியன நாவுக் கரையர் பிரான்ற னருந்தமிழே. 25
—திருத்தொண்டர் திருவந்தாதி

விரி

1266. திருநாவுக் கரசு,வளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர், வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகி
லொருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன்.

திருநின்ற சருக்கம் :—இது, நிறுத்த முறையானே, ஐந்தாவதாகத், திருத்தொண்டத்தொகையினுள் "திருநின்ற" என்று தொடங்கும் நான்காவது திருப்பாசுரத்திலே துதிக்கப்பட்ட அடியார்களின் சரிதங்களைக் கூறும் பகுதி. அந்த அடியவர்களாவார், திருநாவுக்கரையர், குலச்சிறையார், பெருமிழலைக்குறும்பர், பேயார் (காரைக்காலம்மையார்), அப்பூதியார், நீலநக்கனுர், நமிநந்தியார் என்ற எழுவர்.

புராணம் :—இஃது அவ்வெழுவருள் திருநாவுக்கரையர் என்ற திருப்பெயருடைய நாயனுரது சரித வரலாறும் பண்புங் கூறும் பகுதி. மேல் வகுத்த முறையே, இனித், திருநின்ற சருக்கத்தில் முதலாவதாகிய திருநாவுக்கரசு நாயனுரது சரிதங் கூறத் தொடங்குகின்முர்.

தொகை :—நீங்காது நிலைத்த திருவாகிய செம்பொருளையே செவ்விய பற்றுக்கோடாகக் கொண்டருளிய திருநாவுக்கரசு நாயனுருடைய அடியார்களுக்கும் நான் அடியேனுவேன் என்பதாம். திரு - முத்திச்செல்வம். இறைவனது திரு. "போகமுந் திருவும்புணர்ப்பானை" (நம்பிகள் - ஆரூர் - தக்கேசி). நின்ற திரு என மாற்றுக.

செம்மை - செம்பொருள். "செம்பொருளால்" (348) என்ற விடத்துரைத்த வையும், பிறவும் பார்க்க. செம்மை - நித்தமாய்த் தூயதாய் விகாரமின்றி ஒரே பெற்றியாயுள்ள இறைவன் தன்மை. அஃதாகு பெயராய்த் தன் குணியாகிய சிவத்தை உணர்த்திற்று. செம்மையாக் கொண்ட என்பது சிறந்த பற்றுக்கோடாகப் பிடித்துக்கொண்ட என்ற பொருளில் வந்தது. செம்மை-உறுதியின் வழுவாத திண்மையை உணர்த்திக், கொள்ளுதலை விசேடித்து நின்றது. "நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னு ணிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற, கற்பகமே யானுன்னை விடுவே னல்லேன்" (திருத்தாண்டகம்) என்ற அவர்தந் திருவாக்கும், "உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் னெங்கெழுந் தருளுவ தினியே" என்ற திருவாசகக் கருத்தும் காண்க. திருநாவுக்கரையன் - இப்பெயர் நாயனார்க்கு அவரது "செந்தமிழின் சொல்வளம்" பற்றி இறைவனால் அளிக்கப்பட்ட காரணப்பெயர். "அருளாற் பாவுற் றலர்செந் தமிழின் சொல்வளப் பதிகத்தொடை பாடிய பான்மையினால்" (திருநா - புரா - 74) என்றும், "கோதின்மொழிக் கொற்றவனார்" (அப்பூதி-புரா-12) என்றும் இதனை விரி நூல் விரித்தது. இச்சிறப்பினையே "நாவுக்கரசெனும்", "நாவுக்கரையர் பிரான்ற னருந்தமிழே" என்று (திருத்தொண்டர் திருவந்தாதி) வகை நூலும் வகுத்துக் காட்டிற்று. இங்குச் செம்மை - செம்பொருள் - சிவனது தன்மை என்னும் பொருளதாதல் "சிவனெனு மோசையல்ல தறையோ வுலகிற் றிருநின்ற செம்மை யுளதே?" (பொது - பியந்தைக்காந்தாரம் - 1) என்ற நாயனார்தந் திருவாக்கி னாலும் அறிக. திருநின்ற செம்மை என்ற அவர்தந் திருவாக்கின் ஆட்சி முதனூலுள் இங்கு எடுத்துப் போற்றப்பட்டதும், அதுவே அவரது தொண்டின் உறைப்பாகிய உறுதியெனச் சரிதநிலை காட்டப்பெற்றதும் காண்க. "பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர், மறப்பன்கொ லோவென்றெ னுள்ளங் கிடந்து மறு கிடுமே", "திரு மாலொடு நான்முகனுந் தேடித் தேடொணாத் தேவனை யென் னுளே, தேடிக் கண்டு கொண்டேன்", "நாடி நான்முகன் நாரண னென்றிவர் தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ? மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத், தாடி பாத மென் னெஞ்சு ளிருக்கவே", "சேவடிக் கீழ்ச்சென் றங், கிறுமாந் திருப்பன் கொலோ" என்பன முதலாக நாயனாரது திருவாக்குக்கள் செம்மையையே செம்மை யாக்கொண்ட நிலையை விளக்குவன. அடியார்க்கு மடியேன் - அவர்க்கு அடிமை செய்யும் தகுதியில்லேனாதலின் அவரது அடியார்க்கு அடிமை செய்வேன்; அதுவே போதியதாய் எனக்குச் செம்மை பயப்பிக்கும் என்றபடியாம். "தொண்டர் தொண் டர்க்குத் தொழும்பாய்த் திரியத் தொடங்கினனே" (கோயினான் - 38) என் றும், "அடியா ரடியா ரடியார்க் கடிமைக், கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன், அடியா ரருளா லவனடி கூட, வடியா னிவனென் றடிமைகொண் டானே" (திருமந் - 8 - தந் - 503) என்றும், "கழற் கொண்ட சேவடி காணலுற் றூர்தமைப் பேண லுற்றார், நிழற்கண்ட போழ்தத்து நில்லாவினை" (இரட்டை - மாலை - 11 - அம்மை யார்) என்றும் வருவனவாதிய திருவாக்குக்கள் இங்கு நினைவு கூர்தற்பாலன. "தொண் டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என்ற திருவிருத்தமும் (ஆரூர்) காண்க. திரு நாவுக்கரசர்பாற் றெண்டு பூண்டு அத்திறத்தாலே செம்மை பெற்றுய்ந்த அப்பூதி நாயனாரைத் துதிக்குமிடத்தே "ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்" என்று இக்கருத்தையே பின்னர் வற்புறுத்தியதும் காண்க.

வகை :—(24) நல்ல தவமுடையவர்; திருநல்லூரில் சிவபெருமான் திரு வடிகளைத் தமது தலையின்மேற் சூட்டப்பெற்றவர்; மற்று இந்தப் பிறவியைப் போக்கும் பொருட்டுத் திருவதிகை வீரட்டானேசுவரருடைய வீரக்கழலை யணிந்த

பாதங்களை முன்னமே அடைந்தவர்; பகைவர்கள் விடத்தைக் கொடுக்க அதனையே ஒள்ளிய திருவமுதாக உண்டவர்; திருவாமூரில் அவதரித்த திருநாவுக்கரசர் என்ற பெயரினைச் சூட்டப்பெற்ற தூய மணிபோல்வார்.

ஆமூரின் நாவுக்கரசெனும் தூமணியே நற்றவன் என்று பூட்டுவிற் பொருள் கோளாகக் கூட்டி உரைத்துக்கொள்க. தூமணியே நற்றவன் - பெற்றவன் - உற்றவன் - துற்றவன் என்று முடிக்க. **நற்றவன்** என்பதனைத் "திருநாவுக் கரசுவளர் திருத் தொண்டி னெறிவாழ வருஞானத் தவமுனிவர் வாகீசர்" (1266) என்று விரிநூல் விரித்துரைத்தது. **நல்லூர்ச் சிவன்...பெற்றவன்** - இதனை 1459 - 1460 பாட்டுக் களிலும், **வீரட்டர்...உற்றவன்** - என்றதனை 1326 முதல் 1342 வரை உள்ள திருப் பாட்டுக்களிலும், **அடையார் விடமிட அமுதாத் துற்றவன்** என்றதனை 1367 முதல் 1370 வரை திருப்பாட்டுக்களிலும், விரிநூல் விரித்து உரைத்தது.

**நாவுக்கரசு எனும்** - இறைவனார் திருவாக்கால் "திருநாவுக்கரசு" என்று பெயர் சூட்டப்பெறும். 1339 திருப்பாட்டுப் பார்க்க. **துற்றவன்** - உண்டவர். **விடம் ஒள் அமுதா** - விடத்தினை விடமென்று அறிந்தும் அதுவே அடியார்க்கு அமுதாகும் என உண்டவர் என்க. **அடையார்** - பகைவர். இங்கு அமணர். "திருந்தா அமணர்" - "வல்லமண் குண்டர்" என்பனவாதிய நாயனார் திருவாக்குக்கள் காண்க. **ஆமூர்** - திருவாமூர். நாயனார் அவதரித்த வூர். 1277 பார்க்க.

(25) திருநாவுக்கரசர் பெருமானுடைய அருந்தமிழே, மணியாயும் பெரிய திரு மறைக்காட்டில் விளங்க வீற்றிருக்கும் மருந்தாயும் உள்ள சிவபெருமானைப், போற் றிய மறைபோன்ற வளப்பமுடைய தமிழினால் வலிமையுள்ள நீண்ட கதவத்தினைத் திறக்கச் செய்தன; தெள்ளிய கடலினகத்தே தம்மைப் பிணிக்கப்பட்டதாகிய கல்லை மிதக்கச் செய்தன; சைவமாகிய பெருநெறிக்கு அணிமையுடையன - அணி செய்வன.

முன்பாட்டில் தூமணியே நற்றவன் - பெற்றவன் - உற்றவன் - துற்றவன் எனக் கூட்டிமுடிக்க வைத்தருளியதுபோல, இப்பாட்டிலும் **அருந்தமிழே** - திறப்பித்தன - மிதப்பித்தன - அணியன என்று கூட்டி முடிக்கவைத்த நயம் காண்க. **மணியினை - மருந்தினை - கதவம் - திறப்பித்தன** - என வைத்த பிறவினை முடிபு நாயனாரது "கதவம் திறப்பிம்மினே" என்ற இத்தேவாரச் சொல்லாட்சியையும் பொருள் முடிபையும் சரித நிகழ்ச்சியையும் போற்றிக் காட்டுவதாம். **திணியன - நீள்** - என்ற அடைமொழிகள் மறைகளாற் பூசிக்கப்பட்டுத் திருக்காப்பிடப்பட்ட அன்று முதல் நாயனாரது தமிழாற் றிறப்பிக்கப்பட்ட நாள்வரை அடைக்கப்பட்டிருந்த வலிமை குறித்தன. "திண்ண மாக்கத வின்வலி நீக்குமே" என்ற தேவாரம் காண்க. திணியனவாகிய என்க. **பிணியன** - திருமேனியைச் சேர்த்துப் பிணைத்ததாகிய. ஒருமைப் பன்மை மயக்கம். "கற்றுணைப் பூட்டி" என்பது தேவாரம்.

**மிதப்பித்தன** - மிதக்கச் செய்தன. வினைமுற்று.

**அணியன** - அணிமையைச் செய்வன - தருவன. "தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே யேற்றுந் தகையன" (இன்னம்பர் - திருவிரு - 7), "ஏணிப் படிநெறி யிட்டுக் கொடுப்பன" (13), "விடாத தொண்டர்க் கணியன" (திருவையாறு - திரு விரு - 3), "பித்தரா மடியார்க்கு முத்தி காட்டும், ஏணியை யிடர்க்கடலுட் சுழிக்கப் பட்டிங் கிளைக்கின்றேற் கக்கரைக்கே யேற வாங்கும், தோணியை" (திருவாவடு துறை - தாண்ட - 4) என்பனவாதி தேவாரங்கள் இங்கு நினைவுகூர்தற்பாலன.

முன்பாட்டினால் நாயனாரது சிறப்பும், இப்பாட்டால் அவரது திருவாக்கின் சிறப்பும் போற்றப்பட்டன. திருநாவுக்கரையர் என்ற பெயரின் காரணப்பொருளே நம்பியாண்டார் நம்பிகளின் திருவுள்ளத்தின் முன்னிற்பதாயிற்று.

நாயனாரது சிறப்புப் பெயரும் அடிமைத்திறத்தின் உறைப்புடைமையாகிய செம்மை நெறியும் முதனூல் பேசிற்று. அப்பெயரினை விளக்குமுகத்தால் ஊரும் பெயரும் சரிதமும் திருத்தொண்டின் வகையும் அருட்கவித்திறமும் வகை நூல் பல படியாய் வகுத்தது. இவை விரிந்தபடி விரிநூலுட் கண்டுகொள்க. திருமறைக் காட்டிற் கதவந்திறப்பித்த வரலாறு 1530—1535 பாட்டுக்களிலும், கடலிற் கல் மிதப்பித்த வரலாறு 1390—1393 பாட்டுக்களிலும் காண்க.

1266. (இ - ள்) திருநாவுக்கரசு - திருநாவுக்கரசர் எனவும் ; வளர் திருத்தொண்டின்...வாகீசர் - சிவபெருமானது திருத்தொண்டினது வளர்தற்கேதுவாகிய நெறியில் நின்று உலகம் வாழ்வடையும் பொருட்டு வரும் ஞானத்தவமுனிவராகிய வாகீசர் எனவும் ; வாய்மை திகழ்...உறுகின்றேன் - வாய்மை விளங்குதற்கேதுவாகிய பெருமையுடைய திருப்பெயரின் சிறப்புக்களைத் (அவர்தம் சரிதம் கூறும் வகையால்) துதிக்கின்றேன் ; பேருலகில்...உணராதேன் - பெரிய உலகின்கண் அதனை உரைப்பதற்கு ஒரு நாவினுக்கும் இயலாமையை உணர்கிலேன்.

(வி - ரை) திருநாவுக்கரசு - வாகீசர் - என்னும் பெருநாமம் என்க. தொகை நூலும் வகை நூலும் இத்திருப்பெயரைப்பற்றியே சிறப்புக் கூறிப் போந்தமையால் அதனைப் பின்பற்றியே சரிதம் கூறப்புகுந்த ஆசிரியரும், அப்பெயரின் சிறப்பினையே யானும் துதிக்கப் புகுகின்றேன் என்று தொடங்குகின்றார். இப்புராணத்தினுட் கூறுவன அத்திருப்பெயரின் சிறப்புக்களே. பெருநாமச்சீர் என்ற கருத்துமது. திருநாவுக்கரசு என்பது இப்பிறப்பில் இறைவனாற் சூட்டப்பெற்ற திருப்பெயர். வாகீசர் - முன் பிறவியில் அவரது திருப்பெயராகும் என்பது வரலாறு. இவ்வரலாற்றினைப் பிற்காலத்தாராற் புனைந்துரைக்கப்பட்டதொரு பொய்க்கதை என்று கண்டு ஒதுக்கும் புதிய ஆராய்ச்சியாளருமுண்டு. ஆனால் திருநாவுக்கரசர்க்கு முன் பிறப்பு ஒன்றிருந்தது என்பதும், அதில் அவர் தவஞ்செய்யும் ஒரு முனிவராயிருந்தனர் என்பதும், அந்தத் தவம் சிவத்தை அடைய முயலும் சிவஞானத் தவமாமென்பதும் மறுக்கற்பாலனவல்ல. ஞானத்தவம் - ஞானத்தாற் சிவத்தை யடைதற்குரிய தவம். "சைவத் திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" (8 - 11) "முன்மார்க்க ஞானத்தாலெய்து முத்தி முடிவென்பர்"(8 - 18)"ஞானப்பெருமை யுடையோர் சிவனைப் பெறுவர் காணே" (8 - 22), "மேலான ஞானத்தால் அரனை யருச்சிப்பர் வீடெய்த வறிந்தோரெல்லாம்" (8 - 23) எனவரும் சிவஞான சித்தியார்த் திருவாக்குக்களும், "ஞானத்தாலுனை நானுந் தொழுவனே" என்ற அப்பர் தேவாரமும் காண்க. "உன்னுடன் பிறந்தான் முன்னமே முனியாகி யெமையடையத் தவமுயன்றான்" (1313), "பண்டு புரி நற்றவத்துப் பழுதினள விறைவழுவும், தொண்டர்" (1314) என்று வருவனவற்றால் நாயனார் முன்னைப் பிறப்பில் சிவனை அடைய நல்ல தவம் புரிந்த முனிவரர் என்பதும், அத்தவத்தில் சிறிது வழுவினர் என்பதும் ஐயமின்றிப் பெறப்படும். "நில்லாத நிணக்குரம்பைப் பிணக்க நீங்க நிறைதவத்தை யடியேற்கு நிறைவித்தென்றும், செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானை" (திருச்செங்காட்டங்குடி - 8) என்ற திருத்தாண்டகத்தின் அகச்சான்று கொண்டும் அவை ஐயமின்றித் துணியப்படும். வரும் ஞானத் தவமுனிவர் என்றதில் வரும் என்றதும் இக்கருத்துக்களை வலியுறுத்துகின்றது. வாகீசர் என்றது முற்பிறப்பிற் கொண்ட பெயராயும் திருநாவுக்கரசு என்றது அப்பொருளேபட இப்பிறப்பிற் கொண்ட பெயராயும் உள்ள வேற்றுமை கருதியே ஒரு பொருள்படும் இரண்டு பெயர்களை இங்கு ஆசிரியர் கூறினார் என்பதும் பொருந்தும். முன்பிறப்பில் நாயனார் சிவஞான நெறி நின்ற ஒரு முனிவராவார்

என்பது ஒருதலையாகவே, அவரது முன்னைப் பெயர் ஆசிரியர் சொல்லாதபோது, வரலாற்றிற்கண்ட வாகீசர் என்ற பெயர் பொருந்துவதாயின் கொள்வதற்குத் தடையில்லை என்க. அப்பெயர் பொருந்தாதென்பதற்குக் காரணம் எதுவும் காணப்படவில்லை. நாயன்மார்களின் முன்பிறப்பு வரலாறுகள் குறிக்க நேர்ந்தபோது ஆசிரியர் கையாளும் மரபுபற்றி 751-ல் உரைத்தவை பார்க்க. "முன்னம் மடியே னறியாமையினால்" என்ற நாயனார் திருவாக்கும் கருதத்தக்கது.

வளர் திருத்தொண்டின் நெறி வாழ வரும் - வளர் நெறியில் (உலகம் நின்று) வாழ என்க. ஆணவச்சேற்றினுள் அழுந்திய உலகம் மேலெடுக்கப்பட்டு வாழ்வடைதற்கு உரிமையுள்ளதாதலின் அது வருவித்துரைக்கப்பட்டது. நெறி - நெறியில் நின்று - நெறி கண்டு கடைப்பிடித்து என்க.

வளர் நெறி என்க. வளர்தலாவது சென்று சென்று வந்து பிறவாது பேராவியற்கை பெறுதல். "நில்லாத நிணக்குரம்பைப் பிணக்க நீங்க" என்ற நாயனாரது குறிக்கோள் காண்க. வளர்நெறி-வளர்தற் கேதுவாகிய. வினைத்தொகை ஏதுப்பெயர் கொண்டது. வளர் தொண்டு என்று கூட்டி ஏனைய பசு புண்ணியங்கள்போ லழிந்தொழியாது நிலை பெறும் தன்மைத்தாகிய தொண்டு என்றுரைப்பினுமமையும்.

திருத்தொண்டின் வளர்நெறி - சரியையாதியாக எண்ணப்படும் சிவநெறி. தொண்டுசெய்து சிவனையடையும் நெறி. "'சன்மார்க்கஞ்' 'சகமார்க்கஞ்' 'சற்புத்திரமார்க்கம்', 'தாதமார்க்கம்' மென்றுஞ், சங்கரனை யடையும், நன்மார்க்க நாலவைதாம் ஞான யோக நற்கிரியா சரியையென' நவிற்றுவதுஞ் செய்வர்" (சிவஞானசித்தி. 8 - 18) என்பது காண்க.

வாழவரும் - இந்நெறிகளில் நின்று உலகம் வாழச் செய்தலாவது அந்நெறிகளில் நடந்து காட்டி உலகை வழிப்படுத்துதல்; இந்நெறி நான்கினுள் ஆதாரமாக முதலினிற்பது தாதமார்க்கம் எனும் சரியையாகும். நாயனார் திருவுழவாரப் பணிசெய்வதனை மேற்கொண்டு அதனைத் தேற்றமாகக் காட்டியது காண்க. சைவசமய பரமாசாரியர்கள் நால்வர்களுள் சரியையினை விளக்கிக்காட்ட அவதரித்தவர் இந்நாயனார் என்று வழங்குவதும் மரபு. ஞானத்தவம் என்றதனால் சரியைமட்டுமேயன்றி அதுமுதலாக ஞானம் வரை நான்குநெறிகளையும் விளக்கினர் என்பதாம். "ஞானயோ கக்கிரியா சரியை நான்கும் நாதன்றன் பணிஞானி நாலினுக்கு முரியன்" (சித்தி - 12 - 5). ஞானத்தவமுனிவராகிய வாகீசர் வளர்கின்ற திருத்தொண்டின் நெறி வாழும்படி திருநாவுக்கரசராக வரும் (அவதரித்த) என்று கூட்டி உரைப்பர் இராமநாதச் செட்டியார்.

வாய்மைதிகழ் பெருநாமச்சீர் - வாய்மை திகழ்தற் கேதுவாகிய திருப்பெயர் என்பதாம். வாய்மையானது விளங்குகின்ற பெருமையுடைய என்றலுமாம். "வாய்மை திறம்பா வாகீசர்" (1540), "கோதின்மொழிக் கொற்றவனார்" (அப்பூதி - புரா - 12) முதலியவை பார்க்க. இந்தப் பெருநாமத்தினையே துதித்து அப்பூதி நாயனார் அரனை அடைந்த வரலாறும் கருதுக. வாய்மை என்பது சிவபோகமாகிய சிவானந்தநிலை; அது திகழ்தற் கேதுவாகிய பெருநாமமென்க. "உறக்குறு பவர்போல் வாய்மை யொழிந்தவை யொழிந்து போமே" (சிவப்பிரகாசம்-அணைந்தோர் தன்மை-2),"வறுந்தொழிற்கு வாய்மை பயன்" (திருவருட்பயன், அணைந்தோர்தன்மை-7) என வருவன காண்க. "இலைமா டென்றிடர் பரியார்......திருநாவுக்கரசென் போரே" (திருநாவுக்கரசர் - திருவேகாதசமாலை - 4) என்று நம்பியாண்டார் நம்பிகள் இப்பெருநாமச் சிறப்பைப் பரவுதலுங் காண்க.

உரைசெய்ய ஒருநாவுக்கு ஒண்ணுமை என்க. ஒரு நாவினால் ஒண்ணாது என்றும், ஒரு நாவுக்கும் ஒண்ணாது என்றும் உரைக்க நின்றது.

உணராதேன் - பரவலுறுகின்றேன் என்று கூட்டுக. உணராதேன் - எதிர் மறை வினையாலணையும் பெயர்; எழுவாய். இப்பாட்டினால் மேற்சொல்லப்புகும் சரி தத்துக்குத் தோற்றுவாய் செய்தபடியாம் என்க.

நெறிவாழ்க—வாய்மைதிகழ் வாகீசர்—என்பனவும் பாடங்கள்.

1267. தோன்மைமுறை வருமண்ணின் றுகளன்றித் துகளில்லா
நன்மைநிலை யொழுக்கத்து நலஞ்சிறந்த குடிமல்கிச்
சென்னிமதி புனையவளர் மணிமாடச் செழும்பதிகள்
மன்னிநிறைந் துளதுதிரு முனைப்பாடி வளநாடு.

(இ - ள்) வெளிப்படை. பழைய முறைமைப்படி வருகின்ற மண்ணின் துக ளாகிய புழுதியேயன்றி, வேறு துகள் என்னும் குற்றமில்லாத நல்லொழுக்கத்தின் நன்மையாற் சிறந்த குடிகள் பெருகி, உச்சியிற் சந்திரன் தவழும்படி உயர்ந்த அழகிய மாடங்களையுடைய செழும்பதிகள் நிலைத்து நிறைந்து உள்ளது திருமுனைப்பாடி என்னும் வளப்பம் பொருந்திய நாடு.

(வி - ரை) தோன்மை முறைவரும் மண்ணின் துகள் என்றது மண் புழுதி யுடையது என்ற பழையமுறை குறித்தது. "தொன்றுதொடு நிலையாமை மேய வினைப் பயத்தாலே" (1292) என்ற கருத்தை இங்கு வைத்துக்காண்க.

ஒழுக்கத்துத் தோன்மை முறை நலம் - என்று கூட்டியுரைப்பினு மமையும்.

துகள் - முன்னையது மண்புழுதி, பின்னையது குற்றம், என்ற பொருளில் வந்தது. சொற்பின் வருநிலை என்ற சொல்லணி.

நன்மைநிலை ஒழுக்கத்து நலஞ்சிறந்த குடி - இங்கு வேளாண் குடிகளைக் குறித் தது. "அனைத்துவித நலத்தின்கண் வழுவாத நடைமரபிற் குடி" (1280) என்று பின்னரும் இதனையே தொடர்ந்து கூறுதல் காண்க. இச்சரிதமுடைய நாயனார் வேளாளர் என்பதும், அவ்வச்சரிதமுடைய நாயன்மார்களின் குடிச்சிறப்பைப் பற்றியே நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்புக் கூறுதல் ஆசிரியர் மரபு என்பதும் உன்னுக.

சென்னிமதி புனையவளர் - தலையிற் சந்திரனைப் புனைந்து கொள்வதற்காக வளர் வன போன்ற என்னும் தற்குறிப்பேற்றக் குறிப்பும் காண்க.

சென்னிமதி புனைதல் - சிவசாரூப நிலைகளுள் ஒன்றாதலால் இந்நாட்டுப் பெரு மக்கள் சிவனது நிலையைப் பெறும் சிவசாதன வழி நிற்பவராதல்போல, மாடங்களும் அந்நெறியில் வளர்ந்தன என்றதொரு தொனிக்குறிப்பும் காணத்தக்கது. "சென்னி வளர் மதியணிந்த" (திருஞான - புரா - 2) என்றது பார்க்க.

மன்னுதல் - காலபேதத்தால் மாறுபடாது நிலைத்தல்.

நிறைதல் - நெருங்குதல். நாடு நிறைதற்கிடமாக உள்ளது என்க.

முனைப்பாடி நாடு - குடிமல்கிவளர் - மாடச் - செழும்பதிகள் நிறைந்துளது என்று முடிக்க.

நாட்டு வளம் பலவற்றுள்ளும் நல்லொழுக்கமுடைய குடிகள் வாழ்ந்திருப் பதுவே இன்றியமையாத சிறப்பாவது என்று காட்ட அதனை முதற்கண் விதந்தோதி னார். "தக்காருந் தாழ்விலாச் செல்வருஞ் சேர்வது நாடு" என்று இக்கருத்துப் பற்றியே திருக்குறளினுள்ளும் இதனை முதலில் வைத்தோதியதும் குறிக்கொள்க.

நன்னிலைமை—குடிபல்கி—என்பனவும் பாடங்கள்.

1268. புனப்பண்ணை மணியினொடும் புறவினறும் புதுமலரின்
கனப்பெண்ணி றிரைசுமந்து கரைமருங்கு பெரும்பகட்டோர்

இனப்பண்ணை யுழும்பண்ணை யெறிந்துலவி யெவ்வுலகும்
வனப்பெண்ண வரும்பெண்ணை மாநதிபாய் வளம்பெருகும். ௩

(இ - ள்) புனப்பண்ணை...சுமந்து - குறிஞ்சி நிலத்திலிருந்து மூங்கில்களில் உள வாகிய முத்துக்களோடு, முல்லைப்புறவங்களிலிருந்து மணமுடைய புதுமலர்களின் தொகுதியை அளவற்ற அலைகளாற் சுமந்துகொண்டு (அவற்றைக்); கரைமருங்கு - இரு புறமும் கரைகளில்; பெரும்பகட்டேர்...எறிந்து உலவி - பெரிய எருமைகள் பூட்டிய அளவொத்த கூட்டமாகிய ஏர்கள் உழுதொழில் செய்தற்கிடமாகிய வயல்களில் எறிந்து பரந்து உலாவி; எவ்வுலகும்...பெருகும் - எவ்வுலகங்களிலும் தன் அழகினை எடுத்து மேம்பாடாக எண்ணத்தக்கதாய் ஓடி வருகின்ற பெண்ணை என்னும் பெருநதி பாய்தலால் வரும் வளங்கள் (அந்நாட்டில்) பெருகுவன.

(வி - ரை) புனம் - குறிஞ்சி; பண்ணை - பணை என்பது சந்த நோக்கிப் பண்ணை என மெய் விரிந்து வந்தது. பணை - மூங்கில்; ஈண்டும், பண்ணை - தொகுதி என்றே கொண்டு, வகையால் மிகுதியாகிய முத்து முதலிய மணிகள் என்றலுமாம்.

புறவு - முல்லைப் புறவு. மலரின் கனப்பு - மலர்களின் தொகுதி.

திரை சுமந்து - மலர் - பண்ணை - எறிந்து - உலவி - வரும் - மாநதி என்று கூட்டிக் கொள்க.

பண்ணை இன ஏர் - என்க. பண்ணை - கூட்டம். தொகையால் மிகுதி குறித்தது. இனம் - ஏர்கள் தம்மில் ஏற்றத்தாழ்வின்றி ஒத்திருந்த நிலை குறித்தது.

உழும் பண்ணை - பண்ணை - வயல். சொற்பின் வருநிலை.

மணியினொடும் - மாநதியின் திரை சுமந்துவரும் மணி - மலர் என்ற இரண்டனுள் ஒடு உருபை மணியினுடன் சார்த்திக் கூறியது சிறப்புணர்த்தற்கு. வளம் பெருகும் - வளத்தின் பெருக்கினைக் குறிக்கப் பண்ணைமணி, மலரின் கனப்பு, எண்ணில் திரை, சுமந்து, இனப்பண்ணை ஏர், என்பன பலவும் மிக்க தொகுதிகளாகக் கூறப் பட்டமை காண்க. வளம் - "ஏரின் மல்கு வளத்தி னல்வரு மெல்லை யில்லதொர் செல்வமும்" (441), மணிகளால் வருவனவுமாம்.

திரைசுமந்து - எறிந்து - உலவி - உருவகம். "அஃறிணை மருங்கினும் அறைய படுமே" என்பது இலக்கணமாதலின்.

எறிந்து என்ற இலேசால் விலைபெற்ற மணி மலர்களையும் அவற்றின் மதிப்பை எண்ணாமலும் தன்னலங் கருதாமலும் பிறர் பயன் கருதியே இலகுவில் எறியும் வள்ளற்றன்மை குறிப்பாலுணர்த்தப்பட்டது; தற்குறிப்பேற்ற அணி. "முகந்துதர - கை ஏற்கும்" (1041) என்றது பார்க்க.

உலவி - வேகமாய் ஓடிச்சென்றால் உழுவதற்குதவாது பண்ணையும் சிதைவு படுமாதலால் மெல்லப் பரவிச் சென்று என்க.

உழும்பண்ணை - உலவி - என்றதனால் உழுகின்ற பருவத்திற் பரந்த நீர்ப் பெருக்கு வருதலும், அந்நீர் மெல்லப்பரந்து செல்லுதலும், நீரின் பொருட்டுத் தேடி முயன்று வருந்தாமல் தானகவேவரும் நீரின் உதவிகொண்டு உழவர் உழவுசெய்தலும் உணர்த்தப்பட்டன. "பெரும்புன னீத்தம், மலர்த்தடம்பணை வயல்புகுபொன்னி" (1031) என்றவிடத் துரைத்தவை பார்க்க.

எவ்வுலகும் வனப்பு எண்ண - பெண்ணையாற்றின் அழகின் மிகுதி குறித்தது. கண்ணுற் காணப்படுதலே யன்றிப் பிறவாற்றல் அனுபவிக்கப்படும் வளங்களுமுள என்பார் பாய் வளம் பெருகும் என்றார். மாநதி என்ற கருத்துமிது.

வளம் பெருகும் - முன்பாட்டில் வளநாடு என்று கூறியதனைத் தொடர்ந்து, அந்நாட்டின் இயல்பாயுள்ள வளம் இந்த மாநதி பாய்தலாற் பெருகுவன என்று கூறும் வகையால் நாட்டுவளம் மாநதியினால் பெருக்கமடைதலே யன்றிப் புதிதாக உளதாக்கப்பட்டதன்று என்று காட்டிய திறம் காண்க. இத்திருநாட்டில் கெடிலம் முதலிய பெருநதிகள் பிறவும் பாய்ந்து வளப்படுத்துதலும் கருதுக.

நாட்டில் என்பது முன்பாட்டிலிருந்து வருவிக்கப்பட்டது.

பெண்ணை மாநதியின் சிறப்பினைச், சொல்லும் பொருளும் ஒத்தியங்க, எடுத்துக் கூறும் வகையால், பண்ணை - எண்ணில் - பண்ணை - எண்ண என எதுகை ஓசைபட யாப்பமைத்த திறமும் காண்க.

இப்பாட்டால் ஆற்றுச்சிறப்பொடு புணர்த்தி நாட்டுவளம் கூறினர்.

புனற்பண்ணை—மலநும்—கனைப்பெண்ணில்—என்பனவும் பாடங்கள். 3

1269. காலெல்லாந் தகட்டுவரால்; கரும்பெல்லாங் கண்பொழிதேன்;
பாலெல்லாங் கதிர்ச்சாலி; பரப்பெல்லாங் குலைக்கமுகு;
சாலெல்லாந் தரளநிரை; தடமெல்லாஞ் செங்கழுநீர்;
மேலெல்லா மகிற்றூபம் விருந்தெல்லாந் திருந்துமனை.

(இ - ள்). வெளிப்படை. நீர்க்கால்களிலெங்கும் தகட்டு வடிவினவாகிய வரால் மீன்கள் உள்ளன; கரும்புகளில் எங்கும் கணுக்களாற் பொழியுந் தேன் உளது; பக்கங்களில் எங்கும் கதிர்களையுடைய நெற்பயிர்கள் உள்ளன; இடமகன்ற நிலங்களில் எங்கும் குலைகளையுடைய கமுகுமரங்கள் உள்ளன; படைச்சால் உழுத இடங்களெங்கும் முத்துக்களின் தொகுதி உள்ளன; குளங்களில் எங்கும் செங்கழுநீர் உள்ளன; விருந்து எப்போதும் திருந்த உள்ள மனைகளின் மேலிடங்களில் எங்கும் அகிற்றூபம் உள்ளன.

(வி - ரை) எல்லாம் - சொற்பொருட்பின் வருநிலை. விருந்து எல்லாம் - என்றவிடத்து எல்லாம் என்பது காலங்குறித்தது. பிற விடங்களில் வரும் எல்லாம் - என்பன இடமுணர்த்தி நின்றன. எல்லாவிடத்தும் முற்றும்மைகள் தொக்கன.

கால் - நீர் ஓடும் கால்கள். தகட்டுவரால் - வரால் மீன்கள் தகடு போன்ற வடிவுடையன; அகலமாய் நீண்டு துவளுதலாலும், துவளுந்தோறும் இருபுறமும் மின்னுதலாலும் தகடு போன்றன என்றார். சிறந்த தன்மையணி.

கண்பொழி தேன் - கண் - கணு என்பர். கணுக்களால் பொழியுந் தேன் உள்ளது. கண் - என்புழி மூன்றனுருபு தொக்கது. செழிப்பு மிகுதியால் உள்ளே சாறு நிறைதலால் கணுக்கள் வெடித்துச் சாறு வழியும் என்பது.

பால் - நீர் பாயும் இடங்களின் பக்கம். பரப்பு - சாலி விளையும் வயல்களின் பக்கத்துப் பரந்த இடங்கள். "கரும்பல்ல நெல்லென்ன" (65), "ஓங்கு செந்நெலின் புடையன உயர்கழைக் கரும்பு" (1104) என்றவிடங்களி லுரைத்தவை இங்கு நினைவு கூர்தற்பாலன.

சால் - உழுது பண்படுத்திய நிலத்தில் மேலும் உழவுசெய்ய ஏர் செல்லும் இடம். உழவு தொழிலில் வழங்கும் மரபுப்பெயர். "உழுத சால்வழி யேயுழு வான் பொருட்டு" (தனித் திருக்குறுந்தொகை) என்பது தேவாரம்.

தரளநிரை - தொகுதிகளின் பன்மை குறித்தது. புனப்பண்ணை மணிகளைப் பெண்ணைமாநதி திரைகளாற் சுமந்து பண்ணையில் எறிந்து உலவுகின்ற வளம்பெருகும் என முன்பாட்டிற் கூறியபடியால், அக்கருத்தைத் தொடர்ந்து, அவ்வாறு எறிந்து வீழ்த்திய முத்துக்களின் தொகுதிகள் ஏர் உழுத சால்களில் காணப்படுவன என்றார்.

தாளம் - முத்து. இது குறிஞ்சியிலும் படுபொருள்களுள் ஒன்று. முதலில் செய்யும் சேற்று உழவின்போது உதிர்க்கப்பட்ட மணிகள், பின்னர்ச் சால் உழவின்போது வெளித்தோன்றுவதும் இயல்பாமென்க.

விருந்து எல்லாம் திருந்து மனைகளின் மேல் இடம், எல்லாம் அகிற்றூபம் என்க. எக்காலத்தும் விருந்து ஓம்பத்தகுவதாம் என்பது இல்லற நீதி. "செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்" - குறள். மேல் எல்லாம் தூபம் - கீழே புகைத்த தூபம் மேனோக்கிச் சென்று மேலிடங்களிற் பரவுமாதலின் மேல் எல்லாம் என்றார். உள்ளன என்ற வினைமுற்றுக்கள் தொக்கன. 66-78 முதலியவை பார்க்க.

காலெலாம்—பாலெலாம்—சாலெலாம்—மேலெலாம்—என்பனவும் பாடம்.4

1270. கடைஞர்மிடை வயற்குறைத்த கரும்புகுறை பொழிகொழுஞ்சா
றிடைதொடுத்த தேன்கிழிய விழிந்தொழுகு நீத்தமுடன்
புடைபரந்து ஞிமிறொலிப்பப் புதுப்புனல்போன் மடையுடைப்ப
உடைமடையக் கரும்படுகட் டியினடைப்ப வூர்கடொறும். ௫

(இ - ள்) வெளிப்படை. ஊர்களிலெல்லாம் மள்ளர்கள் தம்மால் குறைக்கப் (வெட்டப்)படுதலால் வயல்களில் வெட்டப்பட்ட நெருங்கிய கரும்புகள் பொழிகின்ற சாறு, அக்கரும்புகளின் இடையிலே கட்டப்பட்டிருந்த தேன்கூடுகள் கிழிதலால் ஒழுகுகின்ற தேனின்பெருக்கினுடனே கூடிப், பக்கங்களிற் பரவி, வண்டுகள் மொய்த்து சத்திக்கப், புது வெள்ளநீர்போல மடையை உடைக்கவே, அவ்வாறு உடைபட்ட மடைகளை அந்தக் கரும்புச்சாற்றிற் காய்ச்சப்பட்ட வெல்லக்கட்டிகளால் அடைப்பார்கள்.

(வி - ரை) ஊர்கள் தொறும் - கொழுஞ்சாறு - நீத்தமுடன் - பரந்து - மடை உடைப்ப - உடை மடை - கட்டியின் அடைப்ப - என்று கூட்டி உரைத்துக்கொள்க.

வயற் குறைத்த மிடை கரும்பு என்க. மிடைதல் - உள்ளிடத்து மக்கள் நுழையக்கூடாதபடி நெருக்கமாகப் பயிராதல். இது கரும்புப் பயிரின் இயல்பு.

குறைபொழி - குறைக்கப்பட்டதனாற் பொழியும். குறைக்கப்பட்டதனால் என்பது திரிந்து நின்றது.

குறை - பெயர்ச்சொல் எனக்கொண்டு, குறைக்கப்பட்ட கரும்பு குறையினாற் பொழி தேன் என்று கூட்டித் - துண்டு - என்று உரை கூறுவாருமுண்டு.

கொழுஞ்சாறு - கொழுமை - நாட்டு நிலவளமும், ஆற்று வண்டலாற் பெறும் எருவளமும், ஆற்று நீர்வளமும் கூடியதால் உளதாவது. இவ்வாறு சாற்றின் பெருக்கு நிகழ்வதனைக் "கரும்பெல்லாங் கண்பொழி தேன்" என முன்பாட்டிற் றொடங்கிக் காட்டியது காண்க.

இடைதொடுத்த தேன் - நெருங்கி வளரும் பயிராதலாலும், இன்சாறு நிறைதலாலும் அதனுள்ளே பல இடத்தும் சிறு தேன்கூடுகள் கட்டப்படுவதியல்பு. "கோற்றேனு மிகமுறித்து" (793), "கோலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகுங், காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர்" (866) என்ற விடங்களிலுரைத்தவை இங்கு நினைவு கூர்தற்பாலன.

தேன் - சிறு தேன் கூடுகள். கிழிய - கிழிதலால். காரணப்பொருளில் வந்த வினையெச்சம்.

ஒழுகு நீத்தம் - வழிந்து மெல்லப்பெருகு மியல்புக்கேற்ற சொல்லாட்சி. இது போலவே கொழுஞ்சாறு என்றது பெரும் பெருக்குக் குறித்ததும் காண்க.

ஞிமிறு ஒலிப்ப - கருப்பஞ்சாறும் தேனும் கலந்த நீத்தமாதலின் வண்டுகள் மொய்த்தும் எழுந்தும் ஒலித்தன.

புதுப்புனல் போல் - புதுப்புனல் - வெள்ளநீர். இது புனலல்லாது புனலின் போலியாயிருத்தலின் போல் என்றார். புதுமை - எதிர்பாராத - கண்டிராத - என்ற குறிப்பும் தருவது. போய் என்பது பாடமாயின் அதற்குத் தக உரைத்துக் கொள்க.

உடை மடை - உடைந்த மடை. மடை - (காலின்) நீரைத் தன் வழியாய்ச் செலுத்திப் பயிர்களை உண்ணச் செய்வதனால் மடை எனப்பட்டது. மடுத்தல் - உண்ணுதல் - மடுக்கச் செய்தல் எனப் பிறவினைப் பொருளில் வந்தது.

அக்கரும்பு - குறைக்கப்பட்டதனாற் கொழுஞ்சாறு பாய்ந்து பெருக்கெடுக்கக் காரணமாகிய அந்த என முன்னறி சுட்டு. நோய்க்கு மூலமாவது எதுவோ அதுவே மருந்துமாகக் கொள்ளும் ஒப்புமுறை மருத்துவம் (Homeopathy) போன்று, இங்குப் பெருநீத்தமாய் மடை உடையக் காரணமாகிய கரும்பினாலாகிய பொருளையே அவ்வுடைப்பு அடைக்கப் பயன்படுத்தினர் என்ற குறிப்பினை அகரச்சுட்டு உணர்த்தி நிற்பதும் காண்க. "அந்நோய் மருந்து" என்ற குறளும் காண்க. விஷப் பிரதி விஷத்திரட்டு என்பதோர் மருத்துவ நூலுமுண்டு.

கடைஞர் - அடைப்ப - எனக் கூட்டிமுடிக்க.

கட்டியின் அடைப்ப - இன் - கருவிப் பொருளில் மூன்றாவதின் பொருளில் வந்தது. இதனால் இந்நாட்டுக் கரும்புப் பயிரின் செழுமை உணர்த்தப்பட்டது. "கரும்பெல்லாம் கண்பொழிதேன்" என முன்பாட்டில் தோற்றுவாய் செய்ததனைத் தொடர்ந்து, அவ்வாறு விளைந்து வளர்ந்த கரும்பு முற்றியபோது கொண்ட கொழுமையைக் கூறிய நயமும் கண்டு கொள்க.

இது புனைந்துரைத்தல் (அதிசம்) என்னும் கற்பனை அணி என்று சிலர் எண்ணக்கூடும். இஃது இந்நாட்டு உண்மையியல்பு காட்டும் தன்மையணியே என்று கூறின் அது மிகையாகாது. கரும்புப்பயிர் மிகச் சிறந்தோங்குவது இந்நாடு என்பதற்கு இந்நாட்டில் நெல்லிக்குப்பம் முதலிய பல ஊர்களிலும் செழித்துள்ள கருப்பாலைத் தொழிற் சிறப்பே சான்றுபகரும். இக்கருத்துப்பற்றியே பிற்காலத்து வாழ்ந்த பெருந் தமிழ் வாணராகிய சிவப்பிரகாசமுனிவரும் "செங்கரும்பா, லைதங் கோட்டு வயல்சூழ் முதுகுன்று" என்றுகூறித் தமது பழமலையந்தாதியைத் தொடங்கினர். இக்காட்சிகள் இன்றும் இந்நாட்டில் நேரிற்காண உள்ளன.*

ஊர்கள்தோறும் என்ற குறிப்பும் இச்சிறப்பு இந்நாட்டில் எங்கும் உள்ள தென்பது குறித்துநின்றது.

கரும்பு பொழி குறைக்கொழுஞ் சாறு—தேன் கிழியாறிழிந்து—புதுப்புனல் போம்—என்பனவும் பாடங்கள்.

1271. கருங்கதலிப் பெருங்குலைகள் களிற்றுக்கைம் முகங்காட்ட, 5
மருங்குவளர் கதிர்ச்செந்நெல் வயப்புரவி முகங்காட்டப்,
பெருஞ்சகடு தேர்காட்ட, வினைஞரார்ப் பொலிபிறங்க,
நெருங்கியசா துரங்கபல நிகர்ப்பனவா நிறைமருதம். கூ

(இ - ள்) வெளிப்படை. கருங்கதலியின் பெரிய நீண்ட குலைகள் யானைகளின் நீண்ட கையினையுடைய முகம்போல விளங்கவும், அதன் பக்கத்தில் வளரும் கதிர்களை

*வண்டியோட்டுபவன் கரும்பினால் வண்டி எருதுகளை ஓச்சிச் செலுத்தியதனை நான் நேரில் கண்டேன்.

யுடைய நெற்பயிர்கள் வெற்றியுடைய குதிரைகளின் முகம்போல விளங்கவும், பெருகிய வண்டிகள் தேர்களைப்போல விளங்கவும், உழவர்களின் ஆரவார ஒலி விளங்கவும் இவ்வாறுள்ள காட்சி நிறையும் மருதநிலத் தோற்றங்கள் நெருங்கிய நால்வகைச் சேனைகளைப் போன்றனவாகும்.

(வி - ரை) கைமுகம் - கையினையுடைய முகம். "முகத்தது கை" (11-ம் திருமுறை - விநா - இர - மணி - மா - 6) என்ற நம்பியாண்டார்நம்பிகள் திருவாக்குக் காண்க. காட்ட என்பன மூன்றும் உவம உருபுகள். கருங்கதலி-வாழையின் ஒருவகை. "வேழக், கைபோல் வாழைக் காய்குலை யீனும்" (பிரமபுரம் - குறிஞ்சி - 2) என்ற ஆளுடைய பிள்ளையார் திருவாக்கும் காண்க. "வாங்கையை யானையென, வீண்குலை வாழை வளர்" (ஆண்டார் குப்பம் - 5) என்ற திருப்புகழும் இக்கருத்துப் பற்றியது. இவ்வகைய வாழைக் குலைகள் மிக நீண்டு அடிபெருத்து நுனி சிறுத்தும் அடிமுதல் நுனிவரை சுற்றிலும் வெளியிடமின்றிச் செறிந்த காய்களையுடையன. இதனை ஆயிரம்சனி வகை என்பர்.

களிற்றுக் கைமுகம் - புரவி முகம் - தேர் - (காட்ட) என்பன மூன்றும் மெய்யும் உருவும்பற்றி வந்த உவமைகள்.

மருங்கு - வாழையின் புறத்தே பக்கத்தில் நெற்பயிர் செய்யப்படுதல்பற்றி முன் உரைத்தவை பார்க்க. "பாலெல்லாம்" (1269) என்ற கருத்துமிது.

வளர்கதிர்ச் செந்நெல் - வளர் என்றதனால் உயர்ந்த வளர்ச்சியையும், கதிர் - என்றதனால் வளர்ந்து விளைந்த நெற்கதிர் கொத்துக்களாகச் சாய்ந்திருத்தலையும், செந்நெல் என்றதனால் நிறத்தையும் குறிப்பிடவே, முற்றிநீண்டு வளைந்து தொங்கும் கதிர்களையுடைய நெற்பயிர், பிடரிமயிர்த் தொகுதியுடைய குதிரை முகம் போன்றதென்க. "வளை கதிர்ச்செந்நெல்" என்ற பாடமுமுண்டு. அது பாடமாயின் இவ்வுவமையை மிகப் புலப்படுத்துமென்க.

"இனைப்பண்ணை உழும்பண்ணை" (1268) என்றதனால் காணும்படி உழுது பயிரிடப்பட்ட நெல், "பாலெல்லாம் கதிர்ச்சாலி" (1269) என அடுத்த பாட்டில் ஓங்கிக் கதிர்முற்றி நின்று, வயப்புரவி முகம் காட்ட என இப்பாட்டில் முற்றித் தலை சாய்ந்து விளங்கும் எனக் காட்டிய திறத்தால், வைப்பு முறையும், நெல்வளர்ச்சி முறையும் ஒன்றுபடத் தேற்றிய வகை கண்டுகொள்க. இதுபற்றித் திருநாட்டுச் சிறப்பில் உரைத்தவையும் பார்க்க.

சகடு - நெல், புல் முதலியனவற்றை எடுத்துச் செல்லும் வண்டிகள். வினைஞர் - நெல்விளைந்தபின் அறுத்து அடித்து முதல் காணும் ஏவல் மக்கள். உவமையில் இரட்டுற மொழிதலால் காலாட்படை கொள்ளப்படும்.

சாதுரங்கபலம் - நால்வகைச்சேனை. பலம் - அரசனது பலத்துக்குக் காரணமாயிருப்பது எனச் சேனைக்கு ஆகுபெயர் போலும். பலம்-பலன், எனச் சொற்சிலேடை பெற மொழிதலால் நெற்பயன் குறித்துப், பலத்தினால் மருதத் தோற்றங்கள் சதுரங்கத்தை நிகர்ப்பன என்றுரைத்தலுமாம்.

களிறு - புரவி - தேர் - (காலாள்) வினைஞர் - என்பன நால்வகைச் சேனைகள். நெற் போர் - வைக்கோற் போர் என்று மருதநிலத்து வயல்களினும் போர் என்னும் வழக்குண்மையும் காணப்படும். "ஈடு பெருக்கிய போர்" (926).

சாதுரங்க பலம் - அரச னேவல்வழிச் சேனைகொண்டு பகைவர்மேற் செல்லுதலும் வேளாளர்களுக்குரிய தொழில்களுள் வைத்தெண்ணப்படும். இதுபற்றி "அரசர் சேனாதிபதியாஞ் செப்பவருங்குடி" (872) என்ற விடத்துரைத்தவை பார்க்க. இச் சரிதமுடைய நாயனாரது அந்த மரபுரிமைபற்றியும், அவர்தம் தமைக்கையார் திலக

வதியம்மையாருக்கு மணம் பேசிய கலிப்பகையார் அரசர் சேனைத்தலைவராய் "வேந்தற் குற்றுழி வினைமேற்" சென்று போர் புரிந்த செய்திபற்றியும் குறிப்புப் பெறும்படி இவ்வாறு வேளாண்மையும் போர்த்தொழிலும் பொருந்த உவமை கூறினார்.

நிறை மருதம் - நிறை - வளம் - பயன் - நிறைந்த; மருதம் - மருதநில வளங்களின் தோற்றங்கள். மருதம் அதன் தோற்றங்களுக்கு வந்தது ஆகுபெயர்.

கதிர்ச்சாலி—துரங்கம்போல்—என்பனவும் பாடங்கள். 6

1272. நறையாற்றுங் கமுகுநவ மணிக்கழுத்தி னுடன்கூந்தற்
பொறையாற்றா மகளிரெனப் புறம்பலைதண் டலைவேலித்
துறையாற்ற மணிவண்ணச் சுரும்பிரைக்கும் பெரும்பெண்ணை
நிறையாற்று நீர்க்கொழுந்து படர்ந்தேறு நிலைமையதால். எ

(இ - ள்) நவமணி... மகளிரென - நவமணி யணிகளணிந்த கழுத்தினோடு கூந்தலின் பாரத்தைப் பொறுக்கலாற்றாது அலையும் மகளிர் போல; நறையாற்றும் கமுகு-மணமிக உடைய கமுகுமரங்கள்; புறம்பு அலை தண்டலை வேலித்துறை-புறம்பே அசைகின்ற சோலைகள் சூழ்ந்துள்ள விடங்களில்; ஆற்ற ... நிலைமையதால் - மிக்க அழகு பொருந்திய மேனியையுடைய வண்டுகள் ரீத்திக்கும் பெண்ணையின் நிறைந்த ஆற்று அலை மேற்படர்ந்து ஏறும் நிலைமையதாகும்.

(வி - ரை) மகளிரெனக் கமுகுபுறம்பு அலை - என்க. கமுகின் கழுத்து என்னும் பகுதியானது பல மணிகளின் நிறங்காட்டும் பூவும் காயும் பழமும் கொண்ட குலைகளைச் சுற்றிலும் கொண்டிருத்தல், பெண்கள் நவமணியிழைத்த அணிகளைக் கழுத்தைச் சுற்றி அணிந்திருத்தல் போன்றதென்பது. "எண்ணார் முத்த மீன்று மரகதம் போற்காய்த்துக், கண்ணார் கமுகு பவளம் பழுக்கும் கலிக்காழி" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரம் காண்க. பெண்களின் கழுத்துக்குக் கமுகுக் கழுத்து உவமிக்கப்படுவதனையும் கருதுக.

கூந்தற்பொறை - நீண்டு செறிந்த கமுகிலைகளின் தோற்றம் மகளிர் கூந்தல் போன்றதெனப்பட்டது. பொறை - சுமை. மிகுதி குறித்தது.

பொறை ஆற்ற...தண்டலை - தோற்றம். கமுகஞ் சோலைகளில் புறம்பு ஓரங்களில் உள்ள முதிர்ந்து வளர்ந்த கமுகுகள் காற்றினால் தலை அசைந்து அலையும் நிலை, கூந்தலையுடைய பெண்கள் அப்பாரம் பொறுக்கலாற்றாது அசைத்தல் போன்றதென்பதாம்.

தண்டலை வேலி - பெண்ணையின் இருகரையினும் கமுகஞ் சோலைகள் வரிசையாய்த் தொடர்ந்துள்ள நிலை ஆற்றுக்கரையில் வேலியிட்டது போல உள்ளதென்றார். இவ்வாறன்றித் தண்டலையின் வேலிகளின் துறையில் என்று கொண்டுரைப்பினும் அமையும்.

வேலித்துறை - துறை - இடம். ஆற்ற - மிகுதியும்.

மணிவண்ணச் சுரும்பு - அழகிய மேனியையுடை வண்டுகள். மணி - நீலமணி என்றலும், மணிகள் போன்ற ஒளிதரும் பல நிறங்களையுடைய என்றலுமாம். பொன் வண்டு - பொறிவண்டு முதலிய பெயர் வழக்கும் காண்க. மணி - நீலமணி என்றற்குக் "கச்சி - மணிவண்ணா நீகிடக்க வேண்டா" முதலியவை காண்க.

பெண்ணையாற்று நிறை நீர்க்கொழுந்து என்க. நீர்க்கொழுந்து - ஆற்று நீர்ப் பெருக்கில் மேலே மெல்லச் சென்றேறிப்படரும் அலைகள் தாவரங்களின் கொழுந்து போல்வன. கொழுந்தென்றதனால் மென்மையும் தண்மையும் செம்மை நிறமும் குறிக்கப்பட்ட சுவையும் காண்க.

படர்ந்து ஏறும் நிலைமையது - மேலிருந்து கீழே ஓடுதலும், சமனாய் நிற்றலு மன்றி நீர் மேலேறிச்செல்லும் தன்மையதன்று. ஆயினும் இங்கு ஆற்றுநீர், பெருக்கி னாலும் காற்றுந்த அலைபட்டெழுதலாலும், அணிமையில் உள்ள சோலைத்துறையில் மெல்லச் சென்றேறும் தன்மையதாம் என்றார். படர்ந்து - கொழுந்து என்றதற்கேற் பப் படர்ந்து என்றார். கொடிகளின் கொழுந்து படர்ந்து மேலேறிச்செல்லும் தன்மை கருதுக. படர்ந்து என்றதனால் குறைந்த வேகத்துடன் பரவிச்செல்லுதல் குறிக்கப் பட்டது. கடற்கரை - குளக்கரை - ஆற்றின் கரை ஓரங்களில் அலைகள் பரவி மேல் ஏறும் காட்சி இங்கு நினைவுகூர்தற்பாலது. நீர்க்கொழுந்து - சாதியொருமை.

இப்பாட்டால் நிலவளமும் நீர்வளமும் பொருந்தப்பெற்ற சிறப்புக்கூறினார். முன் னர் "எவ்வுலகும் வனப்பு எண்ண" (1268) என்ற கருத்தை விரித்துக்காட்டியபடி.

துறையாற்ற மணிசோரிய—என்பதும் பாடம். 7

1273. மருமேவு மலர்மேய மாகடலி னுட்படியும்
உருமேக மெனமண்டி யுகைத்தகருங் கன்றுபோல்
வருமேனிச் செங்கண்வரால் மடிமுட்டப் பால்சொரியும்
கருமேதி தனைக்கொண்டு கரைபுரள்வ திரைவாவி. 8

(இ - ள்) வெளிப்படை. கரிய கடலினுள் படியும் உருவுடைய மேகங்கள் போல மணம்பொருந்திய மலர்களை மேய்வதற்காகக் கரிய எருமைகள் உள்ளே புக, நெருங்கிக், கரிய கன்றுகள்போல வரும் பெருவண்ணமும் செங்கண்ணுமுடைய வரால்மீன்கள் மடியில் முட்டியதனால், பாலினைச் சொரியும் கரிய எருமைகளால் வாவிகள் அலையுடன் கரையிற் புரள்வன.

(வி - ரை) "பரப்பார் விசும்பிற் படிந்த கருமுகில்" (திருவேகம்பரந்தாதி - 81) என்ற பட்டினத்து அடிகளது திருவாக்கின் விரிவுரை போன்றது இத்திருப்பாட்டு.

மேய - மண்டி - முட்ட - சொரியும் - மேதி என்று கூட்டுக. மேதி மலர் மேய்வ தற்கு மண்டுகின்றன; அப்போது வெருக்கொண்டு வரால்கள் உகைத்து அவற்றின் மடிகளில் முட்டுகின்றன; அதனால் கன்று முட்டியன என்று மடிசுரந்து மேதிபால் சொரிகின்றன; அத்தகைய கருமேதிகளினால் அலையுடன் வாவி கரைபுரள்வன என்பதாம்.

மேதிமரு மேவுமலர் மேய என்றதனால் சுவையறிந்துண்ணும் அவற்றினுடைய நாகரிக வாழ்வு குறிக்கப்பட்டது. "கருமேதி செந்தா மரைமேயுங் கழனிக் கானாட்டு முள்ளூர்" (கொல் - கௌ - 2) என்றது நம்பிகள் திருவாக்கு. "தேமா வின், காவி னறுங்குளிர் நீழ லுறங்குவ கார்மேதி" (927) என்றதும் ஆண்டுரைத்த வையும் பார்க்க.

கன்றுபோல் சோரியும் - இதனால் வரால்கள் எருமைக்கன்று போலக் கொழுத்து வளர்ந்துள்ள செழுமையும், அவை தாம் வாழும் நீரினுட் படிந்த பொருள் களைத் தாக்கி மேற்சென்று இடிக்கும் தொழிலும், தாயின் மடியில் முட்டிப் பாலுண் ணும் கன்றின் தன்மையும், கன்று மடிமுட்டும்போது பால் சுரக்கும் தாய்மேதியின் வாத்சல்யம் என்னும் அன்பின் திறமும், உண்மையில் இங்குக் கன்று முட்டாது கன்றுபோலப் பருத்த வரால்களே முட்டியனவாயினும், கன்று முட்டியனவாகத் தமது மந்தமதியினால் மேதி அறிந்துகொண்ட எண்ணமே அன்பின்திறத்தை விளக்க அது பால்சுரக்கக் காரணமாயிருந்த நிலையும் கருதிக் காண நிற்கும் தன்மையணிச் சுவை கண்டுகளிக்கத்தக்கது. "கன்றுமுட்டி யுண்ணச் சுரந்த காலி" (ஆரூர்) நம்பிகள்,

கருமேதி வாவியினுட் படிதல் மேகம் கடலினுட் படிதலுக்கு உருவும் மெய்யும் தொழிலும்பற்றி வந்த உவமம். கன்றுபோல் வரால் மடிமுட்ட என்பது மெய்யும் தொழிலும்பற்றி வந்த உவமம். இவை தன்மை நவிற்சியினை உள்ளுறுத்த நிலையும் காண்க. மேதி வாவிகளுள் மேயப் படிந்து உழக்குதலும் வரால் முட்டுதலும் கண் கூடாகக் காண உள்ள காட்சிகள்.

வாள் கொண்டு வெட்டினான் என்புழிப்போல மேதிதனைக் கொண்டு என்பதில் கொண்டு என்றதனைக் கருவிப்பொருளில் வந்த ஆல் உருபாகக் கொண்டு மேதிகளால் வாவி திரை கரை புரள்வ என்க.

வாவி - கடல்; மேதி - மேகம்; வரால் - மேதிக்கன்று; வரால் முட்டுதல்-கன்று முட்டுதல்; மேதிபால் சொரிதல் கன்றெனை நினைந்து சொரிதல்போன்றன என்றிவ்வாறு உவமம் தொடர்ந்து பொருத்திக் கொள்க.

திரை கரைபுரளுதல் மேதி படிந்துழக்குதலால் ஆவதனைப், பால்சொரிந்த பெருக்கினால் ஆவதாகக் காட்டும் குறிப்புடன் கூறிய நயமும் காண்க. மேதிபடிதல் - வரால் பாய்தல் - பால் பெருகுதல் மூன்றும் வாவித்திரை கரையிற்புரளக் காரணமாதலும் காண்க. மேதிகளையும் உடன்கொண்டு புரள்வன என்றலுமாம்.

மலர் மேய்வான்—பருமேனி—என்பனவும் பாடங்கள். 8

1274. மொய்யளிசூழ் நிரைநீல முழுவலயங் களினலையச்
செய்யதளிர் நறுவிரலிற் செழுமுகையி னகஞ்சிறப்ப
மெய்யொளியி னிழற்காணு மாடியென வெண்மதியை
வையமகள் கையணைத்தாற் போலுயர்வ மலர்ச்சோலை. கூ

(இ - ள்) வெளிப்படை. மொய்த்த வண்டுகள் சூழ்ந்த வரிசைகள் முழுநீல மணிகளழுத்திய வளையல்களைப் போல அலைய, சிவந்த தளிர்களாகிய விரல்களும் செழித்த அரும்புகளாகிய நகங்களும் கொண்ட கையினால், நிலமகள், தனது மெய் ஒளியின் நிழலைக்காணும் கண்ணாடி இது என்று, வெண்மதியை அணைத்தது போல மலர்ச் சோலைகள் வானத்தில் உயர்வன.

(வி - ரை) இப்பாட்டு மெய்யும் தொழிலும் பற்றி யெழுந்த பல உவமங்களை உள்ளுறுத்த உருவகமும் தற்குறிப்பேற்றமும் தொடர்ந்து விரவிய கலவையணி.

வையம்-மகள்; மலர்சோலையின் நீண்டமர நிரைகள்-அவளது கைகள்; அவற்றைச் சுற்றிச் சூழ்ந்த கருவண்டின் குலம் - கைகளைச் சூழ்ந்த நீலவளையல்கள்; மரங்களின் சிவந்த தளிர்கள் - கைவிரல்கள்; அரும்புகள் - விரல்களின் நகங்கள்; மரங்கள் வானளவோங்குதல் - மகள் கையினால் மதியைக் கண்ணாடி என அணைத்தல்; அவ்வாறணைப்பது-மெய்யொளியி னிழற்காணும்ஆடி என : என்று அணிகளைத் தொடர்ந்து விரித்துக் கொள்க.

வலயங்களின் - இன் - உவமப் பொருளது. அலைய - சூழ. தளிர் - விரல். உருவகம். விரலில் - நகம் சிறப்ப என்க. இல் - ஏழனுருபு.

முகையின் - முகை - அரும்பு. முகையாகிய. இன் - பண்பு குறித்த சாரியை.

மெய் ஒளியின் நிழல் காணும் ஆடி - கண்ணாடியிற் காணும் ஒரு பொருளின் வடிவம் அப்பொருளின்மேற் படிந்த ஒளியின் நிழலேயாகும் என்பது நிழற்காணும் ஆடி என்பதனாலுணர்த்தப்பட்டது. இது நவீன ஒளிநூலோர் முயன்று கண்டதோர் உண்மை. ஆடி - கண்ணாடி என வழங்கப்படும். மதியை ஆடி என - உருவுவமம். வெண்மையாலும், நிலத்தின் நிழல்போன்ற முயற்கறை எனப்படும் தோற்றத்தாலும் ஆடியின் பண்பு மதிக்கு ஏற்றப்பட்டது.

மதி - மெய் ஒளியின் நிழல்காணும் ஆடி - கண்ணாடியின்மேற்படும் ஒளிபோல, உண்மையில் ஞாயிற்றினுடைய ஒளி மதியின்மேற் படுவதே, இங்கு மதியின் ஒளியாகக் காணப்படுவதன்றி மதிக்குத் தனியாக ஒளியில்லை என்பதும், மதியின் முகத்தில் காணப்படும் கறைபோன்ற தோற்றங்கள் ஆங்குள்ள மிக உயர்ந்த மலைகள் முதலிய மேடுகளின் நிழல்களே என்பதும், இன்ன பிறவும் இந்நாளில் வானநூற் கலைஞர்கள் மிக முயன்று கண்ட வுண்மைகள். இவ்வுண்மைகள் யாவும் இங்கு மிக எளிதில் புலப் படுமாறு வைத்த உவமத்தின் திறம் கண்டு களிக்கத்தக்கது.

வையமகள் - கை - நீல வலயங்களின் அலைய, விரலின் நகஞ்சிறப்ப, ஆடியென - மதியை - அணைத்தாற்போலச் - சோலை - உயர்வ - என்று கூட்டிமுடித்துக்கொள்க.

ஆடியெனக் கை அணைத்தாற்போல என்றது தற்குறிப்பேற்றமும், சோலை - மகள் - கை அணைத்தாற்போல உயர்வ என்றது தொழிலும் மெய்யும்பற்றி வந்த உவமமும் ஆம். வையமகள் - உருவகம். நிலமகள் - பூமிதேவி முதலியனவாக நிலத்தைப் பெண்ணாகக் கூறும் மரபும் காண்க.

கையமைத்தால்—என்பதும் பாடம். 9

1275. எயிற்குலவும் வளம்பதிக ளெங்குமணந் தங்கும்வயற்
பயிர்க்கண்விய லிடங்கள்பல பரந்துயர்நெற் கூடுகளும்
வெயிற்கதிர்மென் குழைமகளிர் விரவியமா டமுமேவி
மயிற்குலமு முகிற்குலமு மாறாட மருங்காடும். ௰

(இ - ள்) வெளிப்படை. மதில்கள் சூழ்ந்து விளங்கும் நகரங்களில் எங்கும் மண முடைய வயல்களிற் பயிர் செய்யப்பட்ட அகன்ற இடங்கள் பலவற்றினும் பரந்து உயரும் நெற்கூடுகளிலும், ஒளி வீசும் குழையணிந்த மென்மகளிர் உள்ள மாடங்களி லும் பொருந்தி, மயில்களும் முகில்களும் எதிரெதிராகுவனபோலப் பக்கங்களில் ஆடுவன.

(வி - ரை) இதுவரை, பெண்ணை நதியின் வளனும், அதனால் நாடெங்கும் விளைவு தரும் நிலவளமும், வயல் - சோலை முதலியவற்றின் சிறப்பும், அவற்றினை அடுத்து, நகரினை அணுக உள்ள வாவிகள் - மலர்ச்சோலைகள் இவற்றின் சிறப்பும் கூறிவந்த ஆசிரியர், இப்பாட்டினால், இன்னும் நாட்டினுள்ளே நணுகச் சென்றால் காணப்படும் புறநகர்ச் சிறப்புக்களைக் கூறுகின்றார். நகரங்களின் சிறப்பு 1277-ல் கூறுவர்.

எயிற்குலவும் வளம்பதிகள் எங்கும் - பதிகளில் எங்கும்...ஆடும் என்று முடிக்க. பதிகள் - (நாடு) எங்கும் (உள்ளன); அவற்றுள் - என்றுரைத்துக் கொள்ளுதலுமாம். ஊர்தொறும் (1270) என்று கூறியவிடத்துக் கரும்புப்பயிர்கள் முதலியனவாய்ச் சேய்மைக்கண் உள்ள காட்சிகளைக் கூறினர். "கரும்படு கட்டியின்" என்றமையின் அவை நீண்ட கரும்புப் பயிர்களிடை மக்கட் கூட்டம் தொழில் செய்து வதியும் கருப் பாலை முதலிய சாலைவீடுகள் பொருந்திய புறநகர்களின் சிறப்பு என்பதறியப்படும். இப்பாட்டில் நகரங்களின் பக்கம் இன்னும் அணுகியனவாய் நுண்பயிராகிய நெல் விளை நிலங்களையும், அத்தொழிற்பாட் டிடங்களையும் கூறுகின்றார்.

வயற்பயிர்க்கண் வியலிடங்கள் பல என்றது காண்க.

எயிற்குலவும் வளம்பதிகள் - எயில் - நகரப் பாதுகாவலின் பொருட்டு இடும் மதிலரண்.

மணம் தங்கும் - வயல்களிலும், அருகில் உள்ள கால்களிலும் பூக்கும் தாமரை, செங்கழுநீர்முதலிய நீர்ப்பூக்களின் மணமும், அடுத்துள்ள கமுகஞ்சோலை, மலர்ச்

சோலைகளின் மணமும் பொருந்திய என்க. "நறையாற்றுங் கமுகு" (1272), "மரு மேவு மலர்" (1273), "மலர்ச்சோலை" (1274) என்றவை குறிக்க.

வயற்பயிர்க்கண் வியல் இடங்கள் - வியல் இடங்கள் - நன்செய் நிலங்களினிடையில் புன்செய்ப் பயிர் செய்யவும், காவலாட்கள், எருதுகள், முதலியன தங்கவும், விளைபொருள்களைச் சேமிக்கவும், உதவுவனவாய் நிறுவப்பெறும் பரந்த மேட்டிடங்கள். பல - இவ்வாறு அனேக முள்ளன என்பதாம். பலவற்றின் கண்ணும் என ஏழனுருபும் முற்றும்மையும் விரிக்க.

பரந்து - உயர் - நெற் கூடுகளும் - இடமகன்றனவாகவும் உயரமாகவும் அமைக்கப்படும் நெற்கூடுகளின்மேலும். அடைமொழிகள் நெற்கூடுகளை அமைக்கும் திறத்தைக் குறிப்பன.

நெற்கூடு - நெல்லைச் சேமித்துவைக்கும் வைப்பிடம். 1105-ம், கோட்புலி நாயனார் புராணம் (3 - 5) பாட்டுக்களும் பார்க்க. "மருங்குவளர் கதிர்ச்செந்நெல்" (1271) என முன்னர்ச் சேய்மை யிடங்களிலும் நெற்பயிர் கூறினாரேனும், அவ் விளை பொருள்களைக் காவல் வசதியின் பொருட்டு நகரண்மையிற்றானே கொணர்ந்து சேமித்தல் பெரும்பாலும் இயல்பாதலின் இங்கு மாடங்களினண்மையில் நெற்கூடுகளைக் கூறினார். "சேர்" என்ற வழக்கும் காண்க.

மயிற்குலமும் முகிற்குலமும் - கூடுகளும் மாடமும் - மேவி - மருங்கு ஆடும் என்க. ஏழனுருபுகள் தொக்கன. உயர் நெற்கூடுகளின்மேல் முகிற்குலமும், மாடங்களின்மேல் மயிற்குலமும் என எதிர் நிரனிறையாக்கி உரைத்துக்கொள்க. நெற்கூடுகள் உயர்வாகிய மேட்டிடங்களில் உயரமாக அமைக்கப்படுதலால் மேகந் தவழுமளவுயர்ந்தன என்பதாம். உயர்வு நவிற்சியணி. "ஈடுபெருக்கிய போர்களின் மேக மிளைத்தேற" (926) என்றதும் இங்கு நினைவு கூர்தற்பாலது. கூடுகளிற் சேமித்த நெற்கொண்டு செய்யப்படும் அறங்களின் பயனாக முகிற்குலம் சூழ்ந்து மழைபெய்ய வரும் என்பதோ ருட்குறிப்பும் கண்டுகொள்க.

மயிற்குலம் - மயில் குறிஞ்சிக் கருப்பொருளாயினும் இங்கு வந்தது திணைமயக்கம். "தண்டலை" (1272), "மலர்ச்சோலை" (1274) முதலியவற்றில் மயில்கள் வந்து இரைதேடிக் களித்து உலாவுதலும், அவ்வாறு வந்தவை அருகில் உள்ள மாடங்களின் மேல் வந்து ஆடுதலும் இயல்பாகும். அன்றியும் பதிகளில் மயில்களை மக்கள் வளர்த்தலுமுண்டு.

வெயிற் கதிர்மேன் குழைமகளிர் - கதிர் வெயில் என்க. வெயில் - ஒளி. கற்றையாக ஒளி வீசும் என்பதாம். மேன்குழை - அணி பூணும் மகளிரின் மென்மை அணியின் மேலேற்றப்பட்டது. மெல்லிய குழை என்பாருமுண்டு. குழை - மகர குண்டலம். குழைவையுடைய மகர வடிவினதாய் அமைக்கப்படுதலின் இப்பெயர் பெற்றது போலும்.

மயிற்குலமும் முகிற்குலமும் மாறட மருங்கு ஆடும் - மயிற்குலம் என்றதனால் மயில்களேயன்றி மயில்போன்றவையும் ஆடற்பெண்களும் என்பதும் குறிப்பு. நகர்ப் புறத்தில் மாடங்களின் ஆடரங்குகளில் ஆடற்பெண்கள் நடனமாடுதலும் அந்நாள் வழக்கு. "வலம்வந்த மடவார்க ணடமாட முழவதிர" (மேகரா - ஐயாறு - 1) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரமும் பிறவும் காண்க.

மாறு ஆட - எதிரெதிராக மாறுபட்டு ஒன்றையொன்று விஞ்சுவனபோல அசைய. ஞாயிற்றின் ஒளியில் மேகங்கள் கருமை மிக்க உருவுடன் பல நிறமும் காட்டுதலானும், கீழிருந்து வானத்தின்மேற் பரந்து செல்வதானும், பசுமை மிக்க உடலிற் பன்னிறங்காட்டிச் சிறைபரப்பி அசைந்தாடும் மயிற்குலத்துக்கு உவமை

யாயின. மாறுட என்பது போல்வனவாக என உவமச் சொல்லாற்றலும்பட வந்தது. உருவும் தொழிலும் பற்றிய உவமமும் தற்குறிப்பேற்றமும் உள்ளுறுத்த தன்மையணி. "முகில் முழவ மயில்கள்பல நடமாட" என்றபடி முகிலைக் கண்டபோது மயில்களாடுவது மியல்பாகும். மாறுட-கண்டோர் மயிலோ முகிலோ என்று தடுமாற்றம் அடைய ஆட என்று கொள்வதுமொன்று. "வரைவளர் மாமயி லென்ன மாடமிசை மஞ்சாடும்" (திருநா - புரா - 332).

எயிற்குலவு மனம் பதிகள்—வியலகலிடங்கள் பரந்து—பயிர்க்கணயல் வியலிடங்கள் பரந்து—என்பனவும் பாடங்கள். 10

1276. மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
யறந்தருநா வுக்கரசு மாலால சுந்தரரும்
பிறந்தருள வுளதானு னம்மளவோ ? பேருலகிற்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு. கக

(இ - ள்) வெளிப்படை. பாவத்தை விளைவிக்கின்ற தீநெறிகள் மாறும்படி, திருநீலகண்டராகிய சிவபெருமானுடைய மெய்ந்நெறியறத்தை உலகுக்குத் தரும் திருநாவுக்கரசுநாயனூரும் ஆலாலசுந்தரநாயனூரும் அவதரித்தருள உள்ளது இத்திருநாடு என்றறிவோமாயின், இந்தப் பெரிய உலகத்தில் சிறந்ததாகிய திருமுனைப்பாடி நாட்டின் திறத்தினைப் பாடுகின்ற சீர்ப்பாடு நம்மளவின் அடங்குவதாகுமோ ? (ஆகாது).

(வி - ரை) "திருமுனைப்பாடி வளநாடு" (1267) என்று, நாட்டுச் சிறப்பினைக் கூறத் தொடங்கிய ஆசிரியர் அச்சிறப்புக்களி லெல்லாம் தலைசிறந்ததாய், உடம்பினை ஓம்பும் பயனேடு ஒழியாது உயிரினை ஓம்பி நலந்தருவதாய் உள்ள பெருந் தனிச் சிறப்பினைக் கூறி முடித்துக்காட்டுகின்றுர்.

மறந்தரு தீநெறி மாற - "மீட்பது நின்னெறி யல்லாப் புன்னெறி" (கோயினுன்-24) என்ற பட்டினத்தார் திருவாக்குக் காண்க. தீநெறி என்றது பசுபாச வயப்பட்டனவாகிய எல்லா நெறிகளின் தொகுதி. சிவ அற நெறியல்லாத மற்றியாவையும் மறமாகிய பயனையே தருவன என்பதாம். "திருவீழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றுரே" என்பது நாயனூரின் திருவாக்கு.

தீநெறி மாற - நெறி - அறம் - தரும் என்று கூட்டுக. மாற்ற என்பது மாற என நின்றது. புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி-(கந்தபுராணம்) என்றதும் காண்க. குளிகை தீண்டியபோது செம்பு பொன்னுதல்போலச், சிவநெறி புகுந்தபோது தீநெறி தானே மாறும் என்றலுமாம். சிவநெறியில் உயிர் நிற்கவே, பசுபோதம் சிவபோதமாகவும், பசு கரணங்கள் சிவகரணங்களாகவும், உயிரைக் கட்டிய பாசம் சிவானுபவத்துக்குத் துணைசெய்யும் நிமித்தமாகவும் மாறுவன என்பது ஞானசாத்திர உண்மை.

மணிகண்டர் வாய்மை நெறி அறம் - மணிகண்டர் - திருவருளின் பெருக்கினை உலகுக்கு விளக்கமாக எடுத்துக் காட்டுவது திருநீலகண்டமாகும். தீமை மாற - வாய்மையும், மறம் மாற - அறமும், தரும் என்றுர்.

மறம் தரு தீ நெறி மாற என்றதனுற் பாசத்தினை நீக்கலும், மணிகண்டர் வாய்மை நெறி தரும் - என்றதனுல் சிவத்தினைப் பெறுதலும் ஆகிய இருபயனும் உயிர்களுக்குத் தருதல் எமது பரமாசாரிய மூர்த்திகளிருவருடைய திருவவதாரப் பயனும் என்று குறித்தபடி கண்டு கொள்க.

நாவுக்கரசும் ஆலாலசுந்தரரும் பிறந்தருள - நாவுக்கரசரை முன் வைத்தது இப்புராண முடையவரான சிறப்பினுலும், காலத்தால் முற்பட்டவராய்த் திருத்தொண்டத் தொகையினுள் சுந்தரமூர்த்திகளாற் றுதிக்கப்பட்டமையாலும் பிறவாற்றுலுமாம். ஆலாலசுந்தரர் - பெயர்க்காரணமும் பிறவும் 32-ல் உரைக்கப்பட்டன,

**பிறந்தருள** - எழுந்தருள என்றதுபோல அருள என்றது சிறப்புக் குறித்து நின்றது. பிறந்து உலகுக்கு அருள் செய்ய என்றுரைத்தலுமாம். **உளதாறல்** - நாடு - உள்ள தென்றுணர்வோமாகில். **திறம்பாடும்** - சிறப்பினைப்பாடுகின்ற - எடுத்துக் கூறுகின்ற. "ஆதிதிறம்பாடி", "பாதத்திறம்பாடி" (திருவெம் - 14) "திறம்பாடல்பாடி" (தெள் - 8) என்பனவாதி திருவாசகங்கள் காண்க. திறம் - சிறப்பு. **சீர்ப்பாடு** - சதுரப்பாடு. பாடு - தன்மை. பாடு - பெருமை என்றலுமாம். "பாடு பெற்றசீ ருருத்திர பசுபதி யாராங், கூடுநாமம்" (1039). சீர்ப்பாடு நம்மளவினதோ? என்க. ஓகாரம் எதிர்மறை குறித்தது. திறம் - வரலாறு. தன்மை - என்றலுமாம்.

உலகுக்கு ஞானந்தரும் பயனே நாட்டின் சிறந்த பயன் என்பதாம்.

இப்பாட்டிற்கு, இவ்வாறன்றி, மணிகண்டர் - வாய்மைநெறி தரும் ஆலாலசுந்தரரும், மணிகண்டர் அறம் தரும் திருநாவுக்கரசும் என்று தனித்தனிகூட்டி, எதிர்நிரனிறையாக்கி யுரைத்தலுமாம். ஆலாலசுந்தரர் வாய்மைநெறி தந்ததாவது திருத்தொண்டத்தொகையா லுலகு போற்றியுய்யத் தருதல். "திருவாரூர் திருத்தொண்டத் தொகை தர" (35) என்றது காண்க. மணிகண்டர் அறம் என்பது சிவதருமங்கள் எனப்படும். அவை சரியை முதலிய நான்குமாம். இந்நால்வகை நெறிகளிற் பொதுவகையானும், இவற்றுள் முதலாவதும் அடிப்படையானதுமாகிய ஞானச் சரியையிற் சிறப்பு வகையானும் தாம் நின்று சரித்துக் காட்டித் தந்ததும், தமது ஆணைமொழிகளால் உபதேசித்துத் தந்ததும் திருநாவுக்கரசர் வாய்மைநெறி தந்த வகையாம். அவ்வுபதேச ஆணைமொழிகள் திருவங்கமாலை, "நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே", "இடர்கெடுமா றெண்ணுதியேல்" என்பனவாதி திருத்தாண்டகங்கள் முதலியவற்றால் அறியத்தக்கன.

மூனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு - பாடு - என்பது சொற்பின் வருநிலையணி.

தீநெறிமாள—என்ற பாடமுமுண்டு. 11

**1277.** இவ்வகைய திருநாட்டி லெனைப்பலவூர் களுமென்றும்
மெய்வளங்க ளோங்கவரு மேன்மையன ; வாங்கவற்றுட்
சைவநெறி யேழுலகும் பாலிக்குந் தகைமையினாற்
தெய்வநெறிச் சிவம்பெருக்குந் திருவாரூர் திருவாரூர். ௧உ

(இ - ள்) வெளிப்படை. இவ்வகைப்பட்ட திருநாட்டில் பலவாகிய எல்லா ஊர்களும் எக்காலத்தும் உண்மையைத்தரும் வளங்கள் ஓங்கவரும் மேன்மையினை யுடையன ; ஆங்கு, அவற்றுள்ளே, சிவநெறியினை எழுலகங்களுக்கும் கொடுக்கும் தன்மையினால், தெய்வநெறியில் விளையும் சிவந்தைப் பெருக்கும் அருளாகிய திருவாகும் ஊர் திருவாரூர் என்பதாம்.

(வி - ரை) **இவ்வகைய திருநாட்டில்** - இத்திருநாட்டின் வகை நமதுள்ளத்தினுள் எஞ்ஞான்றும் அணுகவைக்கத் தக்கது என்பதுணர்த்த, அவ்வகைய என்னாது, அணிமைச் சுட்டினால் இவ்வகைய என்றார்.

**எனைப்பலவூர்களும் என்றும்** - உம்மைகளிரண்டும் முறையே இடமும் காலமும் குறித்த முற்றும்மைகள். எனைப்பல - பலதிறப்பட்ட - எல்லாம். "எனைப்பல கோடி யெனைப்பல பிறவும்" (திருவண்டப்பகுதி - 27) என்ற திருவாசகம் காண்க.

**மெய்வளங்கள்** - உண்மையைத்தரும் வளங்கள் என்றது உண்மை ஞானத்தை விளக்க வல்லன என்றதாம். சிவநெறிச் சாதனமாகும் வளங்கள் என்க. நீர்வளம் நிலவளம் முதலிய எவையும் சிவநெறிச் சாதனமாகும் அவ்வளவே மெய்வளமாவன என்பதும், அவ்வாறு சிவசாதன மல்லாத வளங்கள் எவையும் பொய்யா யொழிவன என்பதும் உணர்த்தப்பட்டன.

எனைப்பலவூர்கள் - திருக்கோவலூர், திருவெண்ணெய் நல்லூர், திருநாவலூர், திருத்துறையூர் முதலாயின பலவூர்களும் மெய் வளங்கள் ஓங்கவரும் மேன்மையுடையன என்பது அவ்வத் தலவிசேடங்களாலும், அவ்வூர்களில் அவதரித்து அருள்பரப்பி நிற்கும் திருநாவலூர் நம்பிகள், மெய்கண்டதேவர், அருணந்தியார் முதலிய பரமாசாரியர்களின் வரலாறுகளாலும் அறியப்படுதலும் இங்கு நினைவுகூர்தற்பாலது.

ஆங்கு அவற்றுள் - ஆங்கு - அத்திருநாட்டினுள். அவற்றுள் - அவ்வூர்களுள்.

சைவநெறி ஏழுலகும் பாலிக்கும் தன்மை - பாலித்தல் - கொடுத்தல். "இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே" (கோயில் - குறுந்). பாலித்தல் - காத்தல் என்றுரைப்பினுமமையும். ஏழுலகும் பாலித்தலாவது இங்கு அவதரித்த திலகவதியம்மையாரும், திருநாவுக்கரசுநாயனுரும் எல்லாவுயிர்க்கும் சைவநெறியை வழிகாட்டியருளிய திறம். சிவபெருமானை வேண்டிக்கொண்டு அவரருளினுல் தம்பியாரைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தருளிச் சைவத்தில் வழிப்படுத்திச் சமயாசாரியாராக ஆக்கியதுவும், "அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி" (1299) மனைத்தவம் புரிந்திருந்ததுவும், "திருப்பணிகள் செய்ததுவும்" (1309), பிறவும் அம்மையார் சைவநெறி பாலித்த திறம். இனி, நாயனுர், முன்னை நிலையில் முனிவராக இருந்து தவம் புரிந்தமையும், கயிலையில் இராவணனைச் சிவபெருமானிடத்து வழிப்படுத்தியதுவும் உண்டு என்பர். இத்திருவவதாரத்தில் நிலத்தின் கீழிருந்துவந்த செம்பொன்னும் நவமணியும் பொருளல்ல என்று வாவியினிற்புக வெறிந்த அதனுல் கீழுலகத்தவர்களேயும், தேவருலகத்திலிருந்து போந்த அரம்பையர்களை மாயப் பவத்தொடக்காமிருவினைகளென்று காட்டியவதனுல் விண்ணுலகத்தவரையும் தெருட்டிச் சைவநெறி பாலித்த வகையும் காணலாம். ஏழுலகு - எழுவகைப் பிறப்பு என்றலுமாம்.

தெய்வநெறிச் சிவம் பெருக்கும் திரு - தெய்வநெறியால் அடையப்படும் சிவத்தை மேன்மேல் எல்லாவுயிரும் பெறும்படி வளரச்செய்யும் அருளாகிய திரு என்க.

பாலித்தல் - சாதனமும், சிவம் பெருக்குதல் - பயனுமாம். திரு - இங்கு, சிவசம்பந்தமாகிய அருட்டிருவைக் குறித்தது.

தெய்வநெறி - தெய்வத்தன்மை வாய்ந்தநெறி, தெய்வத்தால் ஆக்கப்பட்டநெறி, தெய்வத்தைப் பயப்பிக்கும்நெறி எனப் பலவாறும் உரைக்க நின்றது. சிவம் - செம்மை, சிவமாந்தன்மை என்ற பொருளில்வந்தது. "சைவப் பெருமைத் தனிநா யகனந்தி, உய்ய வகுத்த குருநெறி யொன்றுண்டு, தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய, வையத் துளார்க்கு வகுத்துவைத் தானே" (560) என்ற திருமந்திரம் காண்க.

திரு ஆம் ஊர் திருஆமூர் - திரு ஆகும் ஊர் என்னும் பொருள்தர நின்றது என்று ஊரின் பெயர்ப்பொருளை விரிக்கின்ற நிலையில் உண்மையினை உணர்த்தினுர். ஆம் - பெருக்கும் - என்பன முக்காலத்துக்கும் ஒத்தியல்கின்ற நிகழ்காலப் பெயரெச்சம். என்றும் என்ற கருத்தும் காண்க. இவ்வாறு திருத்தலங்களின் பெயர்களை உண்மை யுணர்த்துமுகத்தால் சொற்பின்வருநிலை யணிச் சுவைபட வைத்து விளக்குவது ஆசிரியரது மரபு. "தலத்தின் மேம்படு நலத்தது பெருந்திருத் தலையூர்" (1031), "கமழ்சாறூர் கஞ்சாறூர்" (866) முதலியவை காண்க.

தலமேழும்—தன்மையினுல்—சிவம் பெருகும்—என்பனவும் பாடங்கள். 12

1278. ஆங்குவன முலைகள்சுமந் தணங்குவன மகளிரிடை;
ஏங்குவன நூபுரங்க ; ளிரங்குவன மணிக்காஞ்சி ;
ஓங்குவன மாடநிரை ; ஒழுகுவன வழுவிலறம் ;
நீங்குவன தீங்குநெறி ; நெருங்குவன பெருங்குடிகள். கந

(இ - ள்) வெளிப்படை. அவ்வூரின் மகளிரின் இடைகளே அழகிய முலைகளைச் சுமந்து வருந்துவன; (அவர்களணிந்த) நூபுரங்களே ஏங்குவன; (அவரணிந்த) மணிக ளிழைத்த காஞ்சியே இரங்குவன; மாடநிரைகளே ஓங்குவன; குற்றமில்லாத அறங் களே ஒழுகுவன; தீங்குநெறிகளே நீங்குவன; பெருங்குடிகளே நெருங்குவன.

(வி - ரை) அணங்குவன மகளிர் இடை - மகளிரிடையேயன்றி அணங்குவன பிற இல்லை. வருந்துவோர் இல்லை என்பது கருத்து. இவ்வாறே ஏங்குவன முதலாக மேல் வருவனவற்றையும் உரைத்துக் கொள்க. இடை என்பது முதலாக எல்லா இடத் தும், தொக்குநின்ற பிரிநிலை யேகாரங்களால் பிறவெல்லாம் விலக்கப்பட்டன. இதனை ஒழித்துக்காட்டணி எனவும், நியமவிலக்குச் சிலேடை எனவும் கூறுப. 1183. 1184 - 1185 பார்க்க.

அணங்குதல் - வருந்துதல். பிறரை வருந்தச் செய்வன எனப் பிறவினைப் பொருள் கொள்ளுதலுமாம்.

சுமந்து - சுமந்ததனால். வினையெச்சம் காரணப்பொருட்டாய் நின்றது. "மருங்கு னெருங்கப், பித்திர் பணைமுலை காளென்னுக் சின்னும் பெருக்கின்றதே" (121) "இடை நுடமியப், புகிறு மிகவிங்ஙனேயிறு மாக்கும் புணர்முலையே" (165) முதலிய திருக்கோவைத் திருவாக்குக்களும் பிறவும் காண்க.

ஏங்குவன - ஒலிப்பன - இயங்குவன என இருபொருள்பட நின்றது.

இரங்குதல் - அழுதல் எனவும், ஓங்குதல் - செருக்குடனிற்றல் எனவும், நீங்கு தல் - விலகுதல் எனவும், நெருங்குதல் - தகைமையின்றி அறுகுதல் எனவும் பொருள் படவு நின்றன.

நூபுரங்கள் - சிலம்புகள். மணிக்காஞ்சி - மணிகளிழைத்த மேகலை.

வழுவில்அறம் - வழுவில் - இயற்கை யடைமொழி. அறம் ஒழுகுவன என்றது மக்கள் அறத்தின் வழியே ஒழுகுகின்றனர் என்றதாம்.

நீங்குவன தீங்குநெறி-அறம்பெருகப் பாவந்தேய்ந் தொழியுமாதலால், அக்காரண காரிய முறைமை தோன்ற அடுத்துப் பின்வைத்தார். நெருங்குவன பெருங்குடிகள் - இவ்வாறே அறத்தின் ஒழுகித் தீமை நீங்கியதனால் குடிகள் ஓங்கி வளர்கின்றன என்ற கருத்துப்பெற வைத்த வைப்புமுறையும் காண்க.

பெருங் குடிகள் - "நன்மை நிலை யொழுக்கத்து நலஞ்சிறந்த குடிமல்கி" (1267) என்று நாட்டுச் சிறப்பிற் கூறியதனை, நகரச் சிறப்பிலும் அமைத்துக்காட்ட வேண்டுதலின், இங்கும் விதந்து எடுத்துக் கூறினர்.

அணங்குவன இடை என்பது முதலாக எழுவாய்களைப் பின்வைத்தது சிலேடை யாக மொழிந்த வினையையும் பொருளையும் வற்புறுத்தி அறிவுறுத்தற் பொருட்டு.

நீங்குவன தீங்குநெறி - தீ நெறிமாற, அறம் தரும் நாயன்மார் திருவவதாரங்கள் நிகழ்ந்தனவாதலின் அவற்றின் பயன் கூடிற்று என்ற குறிப்பும் காண்க. 13

1279. மலர்நீலம் வயல்காட்டு; மைஞ்ஞீல மதிகாட்டும்
அலர்நீடு மறுகாட்டு மணிப்பூசல் பலகாட்டும்;
புலர்நீல விருள்காட்டும் பொழுதுமழ ரொலிகாட்டும்;
கலநீடு மனைகாட்டுங் கரைகாட்டாப் பெருவளங்கள். ௧௪

(இ - ள்). மலர்நீலம் வயல்காட்டும் - வயல்கள் நீலமலர்களைக் காட்டுகின்றன; மைஞ்ஞீலம் மதிகாட்டும் அலர் நீடும் மறுகு - மையிட்ட நீலம்போன்ற கண்களையும் பிறைமதிபோன்ற நெற்றியினையும் கொண்ட தாமரை மலர்போன்ற முகமுடைய

பெண்கள் சூழும் வீதிகள் ; ஆட்டும்...பலகாட்டும் - அவர்கள் ஏறி உகைக்கும் மணிக ளிழைத்த பல ஊசல்களைக் காட்டாநிற்கும் ; புலர்...பொழுது - குமரி இருள் புலர்தற் குரிய நீலநிறம் காட்டும் வைகறைப்பொழுதானது ; உழவர் ஒலிகாட்டும் - உழவு தொழிலிற் செல்வோரது கம்பலையைக்காட்டும் ; கலநீடு...வளங்கள் - பல பண்டங்க ளும் நிறைந்த மனைகள் அளவுபடாத வளங்களைக் காட்டும்.

(வி - ரை) காட்டும் என்பன பலவும் சொற்பின் வருநிலை.

வயல் நீலமலர் காட்டும் - என்க. நீலமலர்கள் வயல்களிற் பூக்கின்றன என்பது.

மைஞ்ஞீலம் - மைதீட்டிய நீலமலர்போன்ற கண்கள். "பாலிற் கிடந்த நீலம் போன்று" (திருவிடை - மும் - கோ - 1). நீலம் என்பது ஞீலம் எனவந்தது. எழுத் துப் போலி.

நீலம் மதிகாட்டும் அலர் - நீலத்தையும் மதியையும் காட்டுகின்ற தாமரை மலர். அலர் - தாமரை மலர். தாமரை மலர்போன்ற முகத்தையுடைய பெண்கள். நீலம் - மதி - அலர் - ஆகுபெயர்கள். " தேமல ரளகஞ் சூழும் சிலமதி தெருவு சூழும்" (553) என்றது காண்க.

நீடும் மறுகு - நீண்டவீதிகள். தெருக்கள் வளைவின்றி நீண்டிருத்தல் நகரத்துக் குச் சிறப்பு.

ஆட்டும் மணி ஊசல் - பிறர் ஆட்டாமல் தாமே முன்னும்பின்னும் உகைத்தலால் ஆடுவது ஊசலாட்டின் இயல்பு.

இவ்வாறு தொடர்பு படுத்தாது, மை நீலம் மதிகாட்டும் - மையுடைய நீல மலர்களைப் (மலர் போன்ற கண்களை) பெண்களின் மதிபோன்ற முகம் காட்டும் எனவும், அலர் - அகலமாகிய என்று கொண்டு அகன்ற நீண்ட வீதிகள் பல ஊசலைக்காட்டும் எனவும் கூட்டி உரைத்தலுமாம். உருவகப் பொருளின்றி, மதி - சந்திரன், மைஞீலம் காட்டும் - நீலம்போன்ற கறையினைப் புலப்படுத்தும் என்று கூறுவாருமுண்டு.

இருள் புலர் நீலம் காட்டும் பொழுது என்க. செறிந்த கரிய இருள் மெலிந்து நீலநிறமாகக் காட்டுகின்ற நேரம். பொழுது - வைகறைப் பொழுது உழவர் ஒலி காட்டும் என்க. அதிகாலையில் எழுந்து உழவர் தமது தொழில் செய்கின்றனர் என்பதாம். உழவர்கள் மிக்க நாடும் ஊரும் உடைய சரிதமாகலானும் சரிதமுடைய நாயனூர் வேளாளராதலானும் இதனைத் தேற்றம்பெறக் கூறினூர். உழவரின் கடமைப் பாட்டினையும் உணர்த்தியபடி. " வினைச், செயல்புரிவை கறையாமக் குறியளக்க வழைக்குஞ்செங் குடுமிவாரணம் " (1049) என்ற கருத்தும் காண்க.

வளங்கள் - மனைகாட்டும் என்க. கலநீடுதல் - பல பண்டங்களும் மலிந் திருத்தல்.

நீலம் வயல் காட்டும் - என்பது பகற்போதினையும், மறுகாட்டு மணியூசல் - என்பது இரவின் முன் நேரத்தையும், இருள் - நள்ளிரவினையும், புலர் நீலம் - பின் இரவினையும், பொழுது - வைகறையினையும் குறிப்பால் உணர்த்தி நின்று, அந்நாட்டு நிகழ்ச்சிகளையும், மகளிர் விளையாட்டு - ஆடவர் தொழில் - போதுபோக்கு முதலிய பலவற்றையும் கூறிப்போந்த அமைதியினையும் கண்டு கொள்க. பெண்கள் இரவில் ஊசலாடிப் போதுபோக்குவது மரபு என்பது திருக்கோவையார் முதலிய அகப்பொரு ளூல்களுட் காணப்படும். " பைந்தோகை துயில்பயிலும், சினைவளர் வேங்கைகள் யாங்கணின் முடும் செழும்பொழிலே" (154) (திருக்கோவையார்). இவ்வாறன்றிப் பெண்கள் பகலில் உரிய வேறு தொழிலின்றி ஊசல் முதலியன ஆடுவதும், இரவில் பலவகைக் களியாட்டயர்தலும் இந்நாண் மரபுகளாயின.

1280. தலத்தின்கண் விளங்கியஅத் தனிப்பதியி லனைத்துவித
நலத்தின்கண் வழுவாத நடைமரபிற் குடிநாப்பண்
விலக்கின்மனை யொழுக்கத்தின் மேதக்க நிலைவேளாண்
குலத்தின்கண் வரும்பெருமைக் குறுக்கையர்தங் குடிவிளங்கும்.

(இ - ள்) வெளிப்படை. உலகத்தில் விளங்கிய அந்த ஒப்பற்ற பதியில், எவ்வித நன்மைகளிலும் வழுவாத ஒழுக்கத்தில் நிற்கும் குடிகளுள்ளே, குற்றமற்ற இல்லறத்தினுடைய மேம்பட்ட நிலையில் உள்ள, வேளாளர் குலத்தினுள் வரும் பெருமையுடைய குறுக்கையர் குடி விளங்குவதாகும்.

(வி - ரை) தலம் - உலகம் என்ற பொருளில் வந்தது. நாடு என்றலுமாம்.

அனைத்துவித நலம் - அமைய வேண்டுவனவாய் உலக வழக்காலும் நூல்வழக்காலும் கருதப்பட்ட எல்லாவகை நலங்களும். முற்றும்மை தொக்கது. வழுவாத - தவிர்தலில்லாத.

குலம் - பெரும் பிரிவையும், குடி - அதனுட்பட்ட சிறு பிரிவையும் குறிக்கும்.

நடைமரபிற் குடி நாப்பண் - அந்நாட்டில் எல்லாக் குலக்குடிகளும் நல்லொழுக்கத்திற் றவிர்தலில்லாது நடப்பன; அவற்றுள் - என்க. "அகலில்லா நன்மைநிலை யொழுக்கத்து நலஞ்சிறந்த குடிமல்கி" (1267), "ஒழுகுவன வழியெலாம்" (1278) என முன்னர்க் கூறியவை காண்க.

மனை ஒழுக்கத்தின் மேதக்கநிலையாவது இல்லறத்துக் குரியனவாய் விதிக்கப்பட்ட எல்லாவற்றினும் நின்று அவற்றுள் மேம்பட்ட சிவதருமங்களிலும் சிறந்து விளங்குதல். ஏனைக் குலத்தவர்களும் இல்லறத்தில் ஒழுகுவோர்களாயினும் வேளாண் குலத்தவர் ஒழுகும் இல்லறம் சிறப்புடைய தென்பது, அவர்களது குலத்துக்குரிய வேளாண்மையின் றிறத்தினாலே தம் முயற்சியின்றியே பல உயிர்களும் உண்டு வாழப் பெறும் தன்மையாலும், பிறவாற்றாலும் அறியப்படும்.

பெருமைக் குறுக்கையர்தம் குடி - குறுக்கையர்குடி வேளாளர் குலத்தில் உள்ள உட்குடிகள் பலவற்றுள் ஒன்று. குடியைக் கோத்திரம் எனவும், சூத்திர மெயப் பிரவரம் எனவும் வழங்குவது வடவர் வழக்கு. "மறைபோர் தம்முட் பெருமனைவாழ், தருமநிலவு காசிபகோத் திரத்து" (1215) என்றது காண்க. இங்கு வேளாளர் மரபு பற்றிக் கூற வந்த இடமாதலின் அவர் வழங்கும் குடி என்ற சொல்லாற் கூறிய இயைபுகாண்க.

விளங்கும் - எக்காலத்தும் விளங்குவது.

நடைமருங்கு குடி—என்பதும் பாடம். 15

1281. அக்குடியின் மேற்றோன்ற லாயபெருந் தன்மையினார்,
மிக்கமனை யறம்புரிந்து விருந்தளிக்கு மேன்மையினார்,
ஒக்கல்வளர் பெருஞ்சிறப்பி னுள்ளாரா முள்ளாரார்,
திக்குநில வும்பெருமை திகழவரும் புகழனார். கக

(இ - ள்) வெளிப்படை. எல்லாத் திசைகளிலும் நின்று நிலவும் பெருமை விளங்கவரும் புகழனார் என்ற பெரியவர், அந்தக் குடியின் பெருந்தலைவராகிய பெருந் தன்மையினையுடையவர், மேம்பட்ட இல்லறத்தைப் புரிந்து விருந்தளிக்கும் மேன்மையையுடையவர், சுற்றத்தார் வளரும் பெருஞ் சிறப்பில் உள்ளவராயினார்; ஆதலின் அவரே உள்ளவராயினார்.

(வி - ரை) மேல் தோன்றல் - தோன்றலாயினவர்களுள் மேலாயினவர். தோன்றல் - சிறப்புடையவர். மேல் - என்றும், தோன்றல் என்றும், பெருந் தன்மையினுர் - என்றும் பல வகையாற் கூறியது அவரது மிகச் சிறந்த பெற்றி காட்டுதற்கு.

மனைஅறம் புரிந்து விருந்து அளிக்கும் மேன்மை - புரிந்து - மனையறத்துக்குரிய கடப்பாடுகள் பல; "தென்புலத்தார்", "துறந்தார்க்கும்" என்பனவாதித் திருக்குறள் களால் அவை பேசப்படும்; அவை எல்லாஞ் செய்தொழுகுவார் என்பதாம். புரிந்து- என்றதனுல் வழுவற நினைந்து செய்து என்ற குறிப்பும் பெறப்படும். அறம் புரந்து- என்பது பாடமாயின் வழுவாமற் காத்து என்க. "ஒப்பின் மனையறம் புரப்பீர்" (சிறுத். புரா. 40) என்றது காண்க.

விருந்தளிக்கும் மேன்மை - மனைபறம் புரிந்து என்றதனுல் விருந்தளித்தலும் கொள்ளப்படுமாயினும், இல்லறத்தின் கடமைகளுள் விருந்தளித்தல் மிகச் சிறந்ததும் இன்றியமையாததுமாகும் என்று எடுத்துக் காட்டப், புகழனுர் இதிற் றலைசிறந்து விளங் கினமை கூறும் முகத்தால் இதனை வேறு பிரித்துக் கூறினுர்.

ஒக்கல் வளர் பெருஞ்சிறப்பு - ஒக்கல் - சுற்றத்தார். தம்மோடு ஒத்த குலமும் மரபும் பண்பும் உடைமையால் இப்பெயர் பெற்றனர் என்ப. தாமே வந்து சுற்றிச் சூழு மியல்பு வேண்டப்படுதல் பற்றி இவர் சுற்றம் எனப்படுவர் என்று குறிக்க வளர் என்ற அடைமொழி தந்து ஓதினுர். "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல்" என்றது திருக்குறள். "சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்"—(ஔவை).

விருந்தளிக்கும் மேன்மை - ஒக்கல்வளர் பெருஞ்சிறப்பு. விருந்து - தொடர்பு பற்றுது புதிதாய் வருவோர்; விருந்து வேறு; ஒக்கல் வேறு; இவ்விருதிறத்தினரும் உலக வழக்கில் மயங்கிப் பேசப்படுவதும், விருந்தினரினும் பெரியராய்ச் சுற்றம் போற்றப்படுதலும் தவறு. இவருட் சிறப்புடையாராகிய விருந்தினர் மேம்பாடாக முன்னர்ப் போற்றப்படத்தக்கார் என்பது குறிக்க அவரை முன்வைத் தோதியது மன்றி, அளிக்கும் மேன்மை எனவும் எடுத்துக் கூறினுர். திருக்குறளினுள்ளும் "விருந்து ஒக்கல்" என்று கூறிய வைப்பு முறையும் காண்க.

வளர்பெருஞ் சிறப்பு - வளர் - என்பது மேன்மேலும் சூழும் இயல்பும், செல்வ ரால் வளர்த்துப் போற்றப்படும் தன்மையும் குறித்தது. வளர் - செயப்பாட்டு வினைப் பொருளும் குறிப்பினுற் றந்துநின்றது.

திக்கு நிலவும் பெருமை திகழவரும் - விருந்தளித்ததனுலும் ஒக்கல் வளர்பெருஞ் சிறப்பினுலுமேயன்றி, உலகுக்கு வழிகாட்டியருளத் திலதவதியம்மையாரையும் மரு ணீக்கியாரையும் பெறநின்ற சிறப்பினுலும் என்று உணர்த்துவார் திகழவரும் என்றுர். அச்சிறப்பே எல்லாத் திக்கிலும் விளங்க வர நின்ற பெருமையாவதும் உணர்க.

உளராஞர் - உளராஞர் - சொற்பின் வருநிலையணி. தன்மையினுர் - மேன்மை யினுர் ஆகிய புகழனுர் உளராஞர்; அவரே உளர் ஆனுர் என்று கூட்டி முடித்துக் கொள்க. "என்னுடைய ரேனு மிலர்" என்றபடி இவ்வாறுகிய பெருமை கிடைக்கப் பெருத ஏனேயோர் இலரேயாவர் என்பது. புகழனுர்-இயற்பெயர். தோன்றிற் புகழொடு தோன்றுக என்றபடி, திக்கு நிலவும் பெருமை திகழவருதலின் இப்பெயர் இடுகுறி யளவா யொழியாது, உண்மையிற் காரணப்பெயராயும் நின்றது. இரட்டுறமொழித லால் புகழ் - அனுர் - புகழே உருவெடுத்தாற் போல்பவர் என்றுரைக்கவும் நின்றது. 16

1282. புகழனுர் தமக்குரிமைப் பொருவில்குலக் குடியின்கண்
மகிழவரு மணம்புணர்ந்த மாதினியார் மணிவயிற்றில்

நிகழுமலர்ச் செங்கமல நிரையிதழி னகவயினிற்
றிகழவருந் திருவனைய திலகவதி யார்பிறந்தார். கஎ

(இ - ள்) வெளிப்படை. புகழனருக்கு உரிமையாகிய ஒப்பற்ற குலமும் குடியும் கூடிய மரபிலே மகிழ்ச்சி தரத்தக்க திருமணம் புணர்ந்த மாதினியார் என்னும் அம்மையாரின் மணிவயிற்றினிடமாக, நிகழும் மலராகிய செந்தாமரையின் ஒழுங்குபட்ட இதழ்களினிடையே உள்ள பொகுட்டில் விளங்கவரும் திருமகளைப்போன்ற திலகவதியார் பிறந்தருளினர்.

(வி - ரை) உரிமைப் பொருவில் குலக்குடி - குடி - குலத்தின் உட்பிரிவு. உரிமை மணஞ் செய்தற்குரிய உறவின்முறை. மணஞ்செய்வதற்கண் உளங்கொள்ள வேண்டிய இன்றியமையாத பொருள்கள் குலம் - குடி - உரிமை என்ற இம்மூன்றுமாம் என்பது முந்தையோர் வழக்கு. 1289ல் உரைத்தனவும் பார்க்க.

மகிழவரும் மணம் புணர்ந்த - மணம் புணர்ந்த - மணம் செய்த - மணத்திறற் கூடிய. மரபு வழக்கு. மகிழ்ச்சியில்லாத பலன்களையும் விளக்கும் மணங்களும் உளவாகக் காண்கின்றேமாதலின் அவ்வாறன்றி, இது, எல்லா வகையாலும் மகிழ்ச்சியையே தருகின்றது என்பது.

மாதினியார் - புகழனர் என்றதனோடு ஒப்ப, இயற்பெயராகிய இதுவும் காரணக் குறியீடாயும் பொருள் தரும் வண்ணம் நிற்பது காண்க. மணி வயிறு - என்ற கருத்தும் இது. மணி - அழகிய. தாமரையினகம் போன்றது என்பது குறிப்பு. மங்கையர்க்கரசியார் என்பதுபோல மாதர்களுள் இனிமையாற் சிறந்தவர் என்ற பொருள்தருவது காண்க. மாது இனி யாவர் என்ற குறிப்புப்பட நிற்றலும் காண்க.

நிகழுமலர்ச் செங்கமல நிரை இதழின் அகவயினில் - நிகழும் மலர் - பலராலும் தேற்றமாக எடுத்துச் சொல்லப்படும் மலர்களுட் சிறந்த தாமரை. நிரை இதழ் - புறவிதழ் - உள்ளிதழ் - அகவிதழ் என்பனவாக வரிசையின் நிறைந்த இதழ்கள். நிரை - வரிசை. அகவயின் -அகவிதழ்களி னிடையேயுள்ள பொகுட்டில்.

திகழவரும் திரு - திகழ - அழகிற் சிறந்ததென்று பலராலும் போற்றப்படுவதாயினும் தான் அதனால் விளக்கம்பெறாது, தன்சார்பினால் அது விளங்கும்படி வருகின்ற திரு என்பதாம்.

திருஅனைய - உருவம்பற்றிய உவமம். "செம்மலர்மேற் றிருவனைய" (1290) என்று பின்னரும் இக்கருத்துப்பற்றியே உரைத்தல் காண்க.

செங்கமல நிரையிதழி னகம் - மணிவயிற்றுக்குத் தொழிலும் மெய்யும் பற்றி வந்த உவமத்தை உள்ளுறுத்த குறிப்புருவகம்.

திலகவதியார், - புகழனர் - மாதினியார் - என்றவற்றிற்போல ஈண்டும் இயற்பெயர் காரணக்குறிப்புடன் நின்றது.

மேல்வரும் பாட்டில் மருணீக்கியார் - என்ற பெயரும் இவ்வாறே வருவது காண்க. அதனை ஆண்டு ஆசிரியர் விரித்துக் கூறுவதும் குறிக்கொள்க. திலகம் - நெற்றிப்பொட்டு - நெற்றிக்குச் சிறப்புத்தருவது. குலத்துக்கும், சைவத்துக்கும் திலகம் என்றலுமாம்.

திருவயிற்றில்—திலகவதியார்—என்பனவும் பாடங்கள். 17

1283. திலகவதி யார்பிறந்து சிலமுறையாண் டகன்றதற்பின்,
அலகில்கலைத் துறைதழைப்ப, வருந்தவத்தோர் நெறிவாழ,
உலகில்வரு மிருணீக்கி யொளிவிளங்கு கதிர்போற்பின்
மலருமரு ணீக்கியார் வந்தவதா ரஞ்செய்தார். கஅ

(இ - ள்) வெளிப்படை. திலகவதியார் பிறந்தபின் முறையாகச் சில ஆண்டுகள் சென்ற பின்னர், அளவில்லாத கலைகளின் துறைகள் தழைக்கவும், அருந்தவத்தோருடைய நெறிவாழவும், உலகத்திற் புறவிருளைநீக்கி வருகின்ற ஒளிவிளங்கும் கதிர் போலப், பின்மலரும் அகவிருளை நீக்கும் அவர் வந்து அவதரித்தருளினூர்.

(வி - ரை) முறை சில ஆண்டு - என்க. சில - பல அன்றி என்ற குறிப்புப்பெறக் கூறப்பட்டது, "நல்லறம் பல; சில, இல்லறந் துறவற மெனச்சிறந் தனவே" என்றது போல. முறை - ஒன்றன்பின் ஒன்றாய் முறைமையில் வைத்து எண்ணத்தக்கதாக. "வரையா நாளின் மகப்பேறு குறித்துப், பெருநலந் துய்க்கும் பெற்றித் தன்றே" என்று இல்லறத்தின் நல்லியல்பினைக் குமரகுருபர சுவாமிகள், எடுத்துக் கூறியபடி, மகப்பெற்றூர், பெரும்பான்மை, பின்னும் ஒரு மகவு பெறுதற்குப் போதிய கால இடையீடு இரண்டு ஆண்டுகளுக்குக் குறையா தென்ப.

கலைத்துறை - தவத்தோர் நெறி - இவை கல்வியும் ஞானமும் எனவும், அபர ஞானம் - பரஞானம் எனவும், கூறப்படும். "உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம்" (திருஞா - புரா - 70) என்ற கருத்துமிது.

கலைத்துறை தழைத்தல் - நாயனூரின் திருவாக்குக்களாகிய தேவாரங்களைப் பெறுதலானும், தவத்தோர் நெறிவாழ்தல் - அவர் நின்று காட்டிய ஞானச் சரியைநிலை, துறவுநிலைகளைப் பெறுதலானும் ஆவன. சொல்லிக் காட்டியும், நடந்து காட்டியும் உலகை உய்விக்க வருவது ஆசாரியரியல்பாதலின், தழைப்ப - வாழ - வந்து-என்றூர். 1217-ம், ஆளுடைய பிள்ளையார் புராணம் 22 - 26 திருப்பாட்டுக்களும் பார்க்க.

உலகில் இருள் நீக்கி வரும் கதிர் என்க. இருள் - புறவிருளையும், கதிர் - அவ்விருளை நீக்கும் ஞாயிற்றையும் குறித்தன. "புறவிருள் போக்கு கின்ற செங்கதிரவன்" (10) என்றது காண்க. சந்திரனும் இருளை நீக்குமாயினும் அதன் ஒளி சூரிய னொளியே யாதலால் கதிர் என ஒன்றே கூறினூர்.

நீக்கி - விளங்கு - கதிர்-இருளை நீக்குதற்கென்று ஞாயிறுவருதல் இல்லை; ஆயினும் அவன் வருகையில் இருள் நீக்கப்படுகின்றது; ஆதலின் நீக்க - விளங்கும் என்னது நீக்கி விளங்கும் என்றூர். ஆனூல் மருணீக்கியார் அவ்வாறன்றித் - தழைப்பவும் - வாழவும் - வந்து - என்ற குறிப்பும் கண்டு கொள்க.

விளங்கு கதிர் - பிறர் முயற்சியானன்றித் தானே விளங்கும். "ஞாயிறு கடற் கண்டாங்கு" (திருமுருகு) என்றது காண்க.

மலரும் - மலரும் - மருள் எனவும், மலரும் நீக்கியார் எனவும் கூட்டி உரைக்க நின்றது. நீக்கியார் என்பதனுடன் கூட்டும் போது மலரும் மலர்விக்கும் எனப் பிறவினைப் பொருள் கொள்க. "இதய தாமரைகள் எல்லாம் செம்மையாய் மலரும் ஞானத் தினகரர் உதயஞ் செய்தார்" என்ற திருவாதவூரர் புராணம் காண்க. மருணீக்கியார் - மருளை நீக்குபவர் என்ற பொருளில் வந்தது. வந்து - முன்னை முனியாகிய பிறவியிலிருந்து வந்து. 1266-ல் உரை பார்க்க. மருள் - மயக்கம். - பொருளல்லவற்றைப் பொருளென் றுணர்தற் கேதுவாகிய விபரீதஞானம். அது பிறவிக்கு வித்தாதலின் அதனை நீக்குதல் திருவடி ஞானம் பெற்றுய்தற்கு ஏதுவாகும். "பொருளல் லவற்றை" என்ற குறள் காண்க.

அவதாரம் செய்தார் - அவதரித்தல் - இறங்குதல் என்னும் பொருளில் வருவதோர் மரபு வழக்கு. 148, 149 பாட்டுக்களில் உரைத்தவையும் "சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்" (திருஞான - புரா - 26) என்பதும் பார்க்க.

கதிர்போல - தொழில்பற்றி வந்த உவமம். மலத்தை இருள் என்பதற்கேற்பக் கதிர் என்றூர்.

பின் மலரும் - "கடும்பகலின், வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு" என்றபடி உதித்தபோதன்றி ஞாயிறு பின்மலரும். நாயனார் சரித விளக்கும் சமணத்தி னின்றும் மீண்டபின் மலர்தல் குறிப்பிற் காண்க. 18

1284. மாதினியார் திருவயிற்றின் மன்னியசீர்ப் புகழனார்
காதலனா ருதித்ததற்பின் கடன்முறைமை மங்கலங்கள்
மேதகுநல் வினைசிறப்ப விரும்பியபா ராட்டினுடன்
ஏதமில்பல் கிளைபோற்ற, விளங்குழவிப் பதங்கடந்தார். கசூ

(இ - ள்) வெளிப்படை. மாதினியாரது திருவயிற்றினிடமாக வந்து உதித்த பின், செய்கடன் முறைமையில் வரும் மங்கல வினைகள் எல்லாவற்றையும் மேம்பட்ட நல்லவினை சிறக்கும்படி விரும்பிய பாராட்டுக்களுடன் குற்றமில்லாத சுற்றத்தார்கள் செய்யப், புகழனாருக்குக் காதலனாராகிய மருணீக்கியார் இளங்குழவிப் பருவத்தைக் கடந்தனர்.

(வி - ரை) புகழனார் காதலனார் - காதலன் - மகன். ஆண்மகப் பேற்றைத் தந்தையரும், பெண்மகப் பேற்றைத் தாயரும் விரும்பும் இயல்பு குறித்தது. காதலனார் - என்ற குறிப்புமது. தடாதகைப் பிராட்டியார் திருவவதாரத்தின்போது மலயத்துவச பாண்டியர் பெண்மகவு பெற்றமைபற்றிக் கவன்றனர் என்பது வரலாறு. "மாதர் தோன்றிய மரபுடை மறையவர்" (1107), "பிறைக்குநெறி தமக்குதவப் பெண் கொடியைப் பெற்றெடுத்தார்" (876) என்றவிடங்களி லுரைத்தவையும் பிறவும் இங்குக் கருதற்பாலன.

உதித்ததற்பின் கடன்முறைமை மங்கலங்கள் - மருணீக்கியார் இரண்டாவது மகவாதலின் முதன் மகப்பேறு தரித்தபோது பத்துத் திங்களினும் செய்யும் சடங்கு கள் இவர் திறத்து இல்லை என்பது குறிக்க உதித்ததற்பின் என்றார். அவை குல வழக் குப்படி முதல் மகவாகிய திலகவதியார் திறத்துச் செய்யப்பட்டனவாதல் வேண்டு மென்பதும் குறிப்பாலுணர்த்தப்பட்டது. இப்புராணத்துட் சரிதமுடைய நாயன்மார் கள்பாலே இவை ஏற்ற பெற்றி கூறப்படுவன என்பதும் ஆதலின் திலகவதியார் திறத்து அவை கூறப்படாமையும், இங்கு உணர்தற்பாலன. கண்ணப்ப நாயனார், ஆளுடைய பிள்ளையார் முதலியோர் புராணங்கள் பார்க்க.

கடன் முறைமை மங்கலங்கள் - பாராட்டினுடன் - மகவு பிறந்தபின் பத்து நாளும் செய்வனவும், நாட்குறித்து எழுதுதல், பெயர் சூட்டல், சோறு ஊட்டுதல் முதலியனவாக ஆண்மகவுக்கு விதிக்கப்பட்டனவும் ஆகிய கடன்கள். இவை முன்னர்த் திலகவதியம்மையார் திறத்துக் கூறப்படாமை பெண்மகார்க்கு மணம் ஒன்றே யன்றி வேறு கடன்கள் விதிக்கப்படாமையானும், பிறவாற்றானுமாம்.

கடன் முறைமை - கடன் - செய்யப்பட வேண்டியனவாக விதிக்கப்பட்ட சடங்குகள். முறைமை - விதித்த முறையே.

வினை சிறப்ப - பாராட்டு - கிளை போற்ற என்றவற்றால் சடங்கு செயலின் தொழிற் சிறப்பும், அவற்றை இயற்றுதலின் ஊக்கத்துட னியன்ற மகிழ்வும், அவை செய்தலிற் கிளைஞர் பலரும் கூடிய களிப்பும் உணர்த்தப்பட்டன. பாராட்டு - விருந்தி னர் - ஊரவர் முதலியோரது செயலும், போற்றல் - கிளைஞரது (சுற்றம்) செயலும் குறித்தன என்றலுமாம். "விருந்தளித்தும் ஒக்கல்வளர் பெருஞ்சிறப்பின் உளரா னார்" (1281) புகழனாராதலின் பலர்களது பாராட்டுதலும், கிளைஞரது போற்றலும் உளவாயின என்பதும் குறிப்பு. "மங்கல மென்ப மனைமாட்சி மற்றத, னன்கல நன் மக்கட் பேறு" (குறள்)

இளங்குழவிப் பதம் - மூன்றாண்டு என்ப. காதலனார் - பாராட்டினுடன் போற்றக் - கடந்தார் என்க. 19

1285. மருணீக்கி யார்சென்னி மயிர்நீக்கு மணவினையுந்
தெருணீர்ப்பன் மாந்தரெலா மகிழ்சிறப்பச் செய்ததற்பின்
பொருணீத்தங் கொளவீசிப் புலன்கொளுவ மனமுகிழ்த்த
சுருணீக்கி மலர்விக்குங் கலைபயிலத் தொடங்குவித்தார். உ0

(இ - ள்) வெளிப்படை. மருணீக்கியார் என்று பெயர் சூட்டப்பெற்ற அவருக்குத் தலைமயிரை நீக்குதலாகிய சௌளம் என்ற மணச்செயலினையும் அறிவுடைய பல மக்கள் யாவரும் மகிழ்ச்சி கூரும்படி செய்ததன் பின்னர்; நற்பொருள்களை வெள்ளம் போலப் பெருக உதவி அறிவு விளங்கச் செய்தலால் மனம் சுருண்டிருந்த நிலையை நீக்கி மலரச்செய்யும் கலைகளைப் பயிலத் தொடங்குவித்தலாகிய சடங்கைச் செய்தனர்.

(வி - ரை) மருணீக்கியார் - கடன் முறைமை மங்கலங்கள் எனக் கூறியவதனால், பெயர் வைக்கும் "நாமகரணம்" (திருஞான. புரா - 41) என்ற சடங்கும் அவ்வாறு நிகழ்ந்தமை குறிக்கப்பட்டதாதலின் இங்குப் பெற்றோரால் இடப்பட்ட அப்பெயராற் கூறினார்.

மருணீக்கியார் - நாயனாரது பிள்ளைப்பெயர். 1283ல் கூறியது பெயராக அன்றிக் காரணப் பொருள்தந்த அளவில் நின்றது.

மருணீக்கியாருக்கு - மணவினையும் - செய்ததற்பின் - என்க. நான்கனுருபு தொக்கது. மணவினையும் - முன் சொன்னவற்றோடு இதனையும் என இறந்தது தழுவிய எச்சவும்மை. ஞானச்சடங்கினையே வேண்டிய அவர்க்கு ஏனை உலகர்போல இதனையும் என்று இழிவு சிறப்பும்மை என்றலுமாம். மயிர்நீக்கும் மணவினை - இதனைச் சௌளக் கல்யாணம் என வழங்குவராதலின் மணவினை என்றார். மகப் பிறந்தபோது நின்ற தலைமயிரை உரிய பருவத்திற் களைந்து குலமரபின்படி குடுமி வைத்தல் என்பது விதிக்கப்பட்ட ஒரு சடங்கு. இது சைவச் சடங்குகள் பதினாறனுள் ஒன்று. இப்பதினாறும் ஒவ்வொரு ஞானப்பொருளைக் குறிப்பன எனவும், அவற்றுள், இது, சிவப்பிரசாதத்தினுயர்வைக் குறிப்பதெனவும், அசிந்திய விசுவசாதாக்கியம் என்னும் ஆகமங் கூறும். "சிவப்பிரசா தோத்கர்ஷந்து யத்தச் சூடாகரம் பவேத்" என்பது அவ்வாகம வாக்கியம். இது மகவின் நல்ல உடல் வளர்ச்சிக்குந் துணை செய்வது. உடல்பற்றிய நிலையில் இதன் இன்றியமையாத சிறப்புப் பற்றியும் இதனை வேறு பிரித்துக் கூறினார். இது முடிவாங்குதல் என்ற பெயரால் தெய்வ சந்நிதியில் நிகழ்த்தும் பராவுக் கடனாக இந்நாளில் நிகழும் வழக்கும் காண்க. "சிறந்த சிகை வருவித்தார்" என்ற திருவாதவூரர் புராணம் காண்க. இது பொருளற்ற வெறும் சடங்கு என்றொழியாதபடி அறிவோர் மகிழும்படி என்ற கருத்தும் காண்க.

பொருள்......கலை - பொருள் - கலைகளாற் புகட்டப்படும் நற்பொருள். நீத்தம் கொள - வெள்ளம் போல. மெய்பற்றி வந்த உவமம். கொள - உவமவுருபின் பொருள் தந்து நின்றது. புலன் - அறிவு. மனம் முகிழ்த்த சுருள் - இதழ்கள் சுருண்டு குவிந்த முகை போலிருந்த மனத்தின் தன்மை. நீக்கி - மலர்வித்தல் - முகையின் சுருண்ட இதழ்கள் விரிந்து மலர்வது போல மனத்தை விரியச் செய்தல். முகை மலர்ந்து விரிதலுக்கு நீரும், நிலச்சத்தும், சூடும் வேண்டப்படுவதுபோல, மனமாகிய முகை மலர்வதற்குப் பொருளும் புலன் கொளுத்தலும் தரும் கலை பயிலுதல் உதவுவ

தென்றபடி. நீத்தம் கொளவீசி என்றது நீர் பாய்ச்சி என்றும், புலன் என்றது நிலம் என்றும், கொளுநவுதல் என்றது குடி உதவுதல் என்றும் குறிப்புப் பொருள் தர நிற்பதும் காண்க. "கொளுத்துவதன்முன்" (1220) என்றது காண்க. "முகைத்த மலரின் வாசம்போற் சிந்தை மலர உடன்மலரும் செவ்வி யுணர்வு" (1218) என்ற விடத் துரைத்தவை பார்க்க.

இவ்வாறன்றிப், பொருள் நீத்தங் கொளவீசி - என்பதற்கு மிகுதியான பொருள் களைத் தானம்செய்து எனவும், புலன் கொளுவ என்பதற்குப் புலன்களின் வழி அறிவு பெற எனவும் உரைப்பாருமுண்டு.

கலைபயிலத் தொடங்குவித்தார் - புகறுனர் என்ற எழுவாய் தொக்கி நின்றது. "சிலை பிடிப்பித்தார்கள்" (689) "ஓதுவிக்குஞ் செய்கை பயந்தார் செய்வித்தார்" (1219) முதலியவை பார்க்க. "தந்தை மகற்காற்று நன்றி யவையத்து, முந்தி யிருப் பச் செயல்" என்பது குறள். இதனை வடவர் அக்கராப்பியாசம் என்பர்.

சுருள் நீக்கி மலர்விக்கும் என்றதனுல் முந்தை யறிவின் தொடர்ச்சியாலாகிய உணர்வு முன்னரே மனத்தினுட் டங்கிக் கிடந்தமை குறிப்பா லுணர்த்தப்பட்டது. இக்குறிப்பினைச் "சிந்தைமலர்ந் தெழுமுணர்வின் செழுங்கலையின் றிறங்களெல்லா, முந்தைமுறை மையிற்பயின்று" என மேல்வரும் பாட்டில் விரித்தமை காண்க.

மயிர்நீக்கு மணவினை என்பது உடலுக்கும் நலந்தருவதும், கலைபயிற்றுதல் உயிருக்கு நலந்தந்து உடன்வருவதுமாவன என்ற குறிப்புப்பெற இப்பாட்டில் இவை யிரண்டும் ஒருங்குவைத்துக் கூறப்பட்டன.

1286. தந்தையார் களிமகிழ்ச்சி தலைசிறக்க முறைமையினாற்
சிந்தைமலர்ந் தெழுமுணர்விற் செழுங்கலையின் றிறங்களெல்லாம்
முந்தைமுறை மையிற்பயின்று, முதிரவறி வெதிரும்வகை,
மைந்தனார் மறுவொழித்த விளம்பிறைபோல் வளர்கின்றார். ௨௧

(இ - ள்) வெளிப்படை. தந்தையார் கொண்ட பெருமகிழ்ச்சி மேன்மேலும் வளர, முறைமையினால், சிந்தை மலர்ந்து எழுகின்ற உணர்வினாலே, செழுமையாகிய கலைகளின் வகைகள் எல்லாம் முன்னைய தொடர்பினால் வெளிநிற் பயின்று முதிர்ச்சி யடைய அறிவு வெளித்தோன்றுந் தன்மையால், மைந்தனார், மறுவை நீக்கிய இளம் பிறைபோல வளர்கின்றாராயினார்.

(வி - ரை) - தந்தையார்...தலைசிறக்க - தமது மகன் கலையறிவின் முதிர்வதனைத் தந்தையர் மிகவிரும்பி மகிழ்வர் என்பது உலகியல்பு.

முறைமையினால் என்பது இப்பிறப்பிற் பயின்று வளர்வதனையும், முறைமையில் என்பது முன்னைப்பயிற்சியினால் தங்கியிருந்ததனையும் உணர்த்தின. முறைமையினாற் - பயின்று எனவும், முறைமையில் - முதிர என்றும் கூட்டுக.

எதிர்தல் - வெளித்தோற்றுதல். அறிவு எதிரும் வகை-அறிவு, பிறர் அறியும்படி வெளிப்பட்ட அளவில் அக்கால எல்லையில் நின்றது என்பது குறிப்பு. ஐந்துவயதளவில் கலைபயிலத்தொடங்கிய மருணீக்கியாருக்குப் பத்து ஆண்டு அளவில் அந்தக்கலைப் பயிற்சியின் வளர்ச்சி கூறப்படுவதாம் என்பது குறிப்பு. திலகவதியாருக்குப் பன்னிரண்டு ஆண்டுகள் நிரம்பும் பருவம் மேல்வரும் பாட்டில் கூறப்படுதல் காண்க.

மறு ஒழித்த இளம்பிறைபோல் - பிறைபோல என்று வாளாகூறின் மதிக்கு உள்ள கறையும் குறையும் கூடி உடன் எண்ண வருமாதலின், இங்கு உவமிக்கப்படும் பிறை மறுஒழித்த பிறை என்றார். இல்பொருளுவமை. மறு என்று பொதுப்படக்

கூறியவதனால், வளர்ந்தபின் தேய்தலாகிய மறுவும் முயற்கறையினுடன் கொள்ளநின்றது. வளர்ந்தார் - என்றது வளர்கின்றார் - என்ற குறிப்புமது. "வானத்தின்மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தை" (திருஞான புரா - 728), "நீளிரு ணீங்க வந்த கலைச்செழுந் திங்கள் போலும்" (ஷை - 751) என்பனவும் இங்கு நினைவுகூர்தற்பாலன.

தந்தைதாய்—சிந்தைமகிழ்ந்து—தலைசிறக்கும் முந்துமுறை—என்பனவும் பாடங்கள். 21

1287. அந்நாளிற் றிலகவதி யாருக்காண் டாறிரண்டின்
முன்னாக வொத்தகுல முதல்வேளாண் குடித்தலைவர்,
மின்னார்செஞ் சடையண்ணல் மெய்யடிமை விருப்புடையார்,
பொன்னாரு மணிமௌலிப் புரவலன்பா லருளுடையார், ௨௨

1288. ஆண்டகைமைத் தொழிலின்க ணடலரியே றெனவுள்ளார்,
காண்டகைய பெருவனப்பிற் கலிப்பகையா ரெனும்பெயரார்,
பூண்டகொடைப் புகழனார் பாற்பொருவின் மகட்கோள்ள
வேண்டியெழுங் காதலினால் மேலோரைச் செலவிட்டார். ௨௩

1287. (இ - ள்) வெளிப்படை. அக்காலத்தில் திலகவதியம்மையாருக்குப் பன்னிரண்டு வயதளவு நிரம்ப, ஒப்புடைய முதல் வேளாண் குலத்திலும் குடியிலும் வந்த தலைவரும், மின்போல ஒளிவீசும் சிவந்தசடையினையுடைய அண்ணலாராகிய சிவபெருமானிடம் மெய்யடிமைத்திறம் புரிவதில் விருப்பமுடையவரும், பொன்னாலியன்ற மணிகளழுத்திய முடிதாங்கிய அரசனிடம் அருளுடையவரும், ௨௨

1288. (இ - ள்) வெளிப்படை. வீரத்தன்மையுடைய போர்த்தொழிலில் வலிய ஆண் சிங்கம் போலவுள்ளவரும், காண ஆசைப்படத் தக்க பேரழகுடையவரும் ஆகிய கலிப்பகையார் என்னும் பெயருடையவர், கொடையறம்பூண்ட புகழனாரிடம் ஒப்பரிய மகளாரை மணமகளாராகக் கொள்ளும் பொருட்டு, விரும்பி எழுகின்ற காதலினால் மேலோர்களை அனுப்பினார். ௨௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

1287. (வி - ரை) அந்நாளில்...முன்னாக - திலகவதியம்மையாருக்கு மணம்பேச உரியகாலம் நேர்ந்தமைகூறப்பட்டது. பன்னிரண்டாண்டளவில் பெண்களுக்கு மணப்பருவமாகக் கணிக்கப்படுதல் தமிழரது மரபு. "இவனும் பதினாறாட்டைப் பிராயத்தானாய் இவளும் பன்னீராட்டைப் பிராயத்தளாய் ஒத்த பண்பும் ஒத்த நலனும் ஒத்த அன்பும் ஒத்த செல்வமும் ஒத்த கல்வியும் உடையராய்" (இறையனாரகப்பொருள் உரை - 1-வது சூத்திரம்) என்றது காண்க.

ஒத்த - குடி - குணம் முதலிய பலவாற்றாலும் ஒப்புடைய. மேலே காட்டிய இறையனார் அகப்பொருளுரை காண்க.

ஒத்த முதல் வேளாண் குலக் குடித் தலைவர் - என்க. முதல் வேளாளர் என்றது வேளாளர்களுக்குள் உள்ள பல பகுப்பிலும் முதன்மை பெற்ற பிரிவு என்றபடி.

மரபு - குலம் - குடி 'முதலியவைபற்றி 1280 - 1282 பார்க்க. இவையே மணம் பேசும்போது முன் வைத்துப் பேசி மணந் துணிவது முந்தையோர் வழக்கு. 1289 பார்க்க.

மின்னார்............விருப்புடையார் - சிவன்பா லடிமைத்திறத்தின் விருப்பமுடைமை, ஏனைய தன்மைகளுள் முதலிற் கருதற்பாலது என்றதாம். அடிமை

விருப்புடையார் - ஆண்மகனுக்கு மணப்பருவம் பதினாறு வயதளவிற் கருதப்படுத லானும், அப்பருவம், அறிந்து அடிமை செய்தற்கேற்ற வயது நிரம்பப் பெறுதிருக்குமாதலானும், அப்பருவத்தில் சிவனடிமைத்திறத்தினின்றும் திரும்பியும் அதனை மறந்தும் திரிவதற்குரிய பல சூழல்களும் சூழ்வதியல்பாகலானும், அவற்றுட் சிக்கியுழலாது அடிமை விருப்பம் பெறுவானாயின் அஃது அடியராந் திறத்தினுட் புகுத்தியே விடுமாதலானும் இவையெல்லாம் குறிக்க, அடியார் என்றதுடன், அடிமை விருப்புடையார் என்றார். "அறஞ்செய விரும்பு" என்ற கருத்தினையும் உன்னுக.

பொன்னாரும்......அருளுடையார் - மேற்கூறிய பண்புகளின் அடுத்துக் கருதப்படுவது உலக நிலையின் உயர்ச்சியேயாகும். அரசரிடத்து அடுத்த தொழில் புரிதல் உலகநிலை உயர்வாகக் கருதப்படும். அருள் - இங்கு அரசர் பணியை அன்புகொண்டு மேற்கொள்ளுதல் குறித்து நின்றது. புரவலன் - காப்பவன். புரந்தல் - காத்தல். தீமை வாராது உலகங் காத்தலால் அரசனுக்கு இப்பெயர் வழங்குவதாயிற்று. "காவலன்" என்ற பெயரும் இப்பொருளது. "மலர்தலை யுலகங் காக்கும்" (110), "மாநிலங் காவல னுவான்...", "அறங்காப்பா னல்லனோ" (121) என்றவை காண்க. அரசன் உலகு புரத்தலால் அவனது வலிமையினையும் ஆணையையும் புரத்தல் பெருங் கடனும், அவனாற் புரக்கப்படும் உலகுயிர்களினிடத்துச் கொள்ளும் அருளுமாம் என்று கருதி, வேறு அதனால் தனக்கு வரும் ஊதியம் ஒன்றினையே பொருளாகக் கருதாது கலிப்பகையார் சேனைத்தொழில் பூண்டொழுகினமையால் அருளுடையார் என்றார்.

சேனைத் தொழில்பூண்டு அரசன் வினை செய்தல் வேளாளர்க்குரிய மரபுத் தொழில்களுள் ஒன்றென்பது முன்னுரைக்கப்பட்டது. 872 - 1271 - பார்க்க. 1290-ல் வருவனவும் காண்க. 22

1288. (வி - ரை) ஆண்தகைமைத் தொழில் - இங்குப் பொதுமையின் வீரங் குறித்து நின்றது. வீரி - நீலி - பத்திரை முதலிய பெயர்களா லறியப்படுகின்றபடி, போர்த்தொழில் ஆண் பெண் என்னும் பகுப்பின்றி இருபாலரும் புரியத் தகுவதாதலின் "ஆண் தகைமை" என்றார். ஆயினும், பெண்மையாவது தன்மை, அளி, மென்மை முதலிய பண்புகளோடு உடன்வைத் தெண்ணப்படுவ தொன்றாதலின் "ஆண் தகைமை" என்றார்.

அடல் அரி ஏறு என - குறிதவிராத மிக்க வலிமையும் வீரமும் குறித்தது. முன்னளில் இவை மணமகன்பால் வேண்டற்பாலனவாகிய பண்புகளுட் சிறந்தனவாக வைத்தெண்ணப்பட்டன. "யானை கடிந்தார்", "உழுவை கிழித்ததங் தோசிறிதேபிழைப்பித், தாவா மணிவேல் பணிகொண்ட வாறின்றோ ரான்டகையே" (72) முதலிய திருக்கோவைத் திருவாக்குக்களும், ஏறு தழுவுதல் முதலிய வழக்குக்களும் காண்க.

காண்தகைய...பெயரார் - உடற்பொலிவும், கண்டார் விரும்பும் கட்டழகும் மணமகனிடத்து வேண்டப்பட்ட தன்மைகள் என்ப. "கண்களெண் ணிலாத வேண்டுங் காளையைக் காண வென்பார்" (171) முதலியவற்றின் கருத்துக்கள் காண்க. "ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்" என்று கம்பர் பாடியதும் இக் கருத்துப் பற்றியது.

கலிப்பகையார் எனும் பெயரார் - கலிக்குப் பகையாவது குற்றங்கள் எவையும் அணுகாமைக் காப்பவர் என்னும் பொருள்தருவது. இப்பெயர் இவர்க்கு இடுகுறியளவில் நில்லாது காரணக்குறியீடுபெற அமைந்தது என்ற குறிப்பும் பேரவனப்பிற் - பெயரார் என்றதனால் பெறப்படும்.

வேளாளர்களுள் மகட்கொடை நேர்வதன் முன்னம் பெண்ணைப் பெற்றோரும் சுற்றத்தாரும் விரும்பித் தேரும் பொருள்கள் யாவையும், இங்குக் கலிப்பகையாரின்



பாடலிபுத்திரம்

—பாட்டு - 1303 - பக்கம் - சள



திருவதிகையிலுள்ள திலகவதியார் திருமடம்

—பாட்டு - 1327 - பக்கம் - எஉ



திலகவதியம்மையார் - மூலஸ்தானம்



திருநாவுக்கரசு நாயனார் - உற்சவமூர்த்தி

(திருவதிகை வீரட்டானத்துள்ள திருவுருவங்கள்)

—பாட்டு - 1289 - பக்கம் - ௫

—முகப்பு

பண்புகள் கூறுமுகத்தால் இந்த இரண்டு பாட்டுக்களானும் அறிவிக்கப்பட்டன. இவற்றுள், தந்தையார் முதற்கண் சிறப்பாய் விரும்புவது குணமும் குலமுமாம் என்பது மேல்வரும் பாட்டால் அறிவிக்கப்படுதலும் காண்க.

கோடைபூண்ட - என்ப. மகட்கோள்ளுதல் - மணஞ்செய்துகொள்ள மகளைப் பெற்றுக் கொள்ளுதல்.

மேலோர் - வயதானும், அறிவானும், உலகியல்பு கற்றுத் துறைபோகலானும் மேம்பட்டவர்.

சேலவிட்டார் - சென்று வரும்படி விடுத்தனர்.

தலைவர் - விருப்புடையார் - அருளுடையார் - உள்ளார் - பெயரார் - செலவிட்டார் என்று முடிக்க. 23

1289. அணங்கனைய திலகவதி யார்தம்மை யாங்கவர்க்கு
மணம்பேசி வந்தவரும் வந்தபடி யறிவிப்பக்,
குணம்பேசிக் குலம்பேசிக் கோதில்சீர்ப் புகழனார்
பணங்கொளர வகலல்குற் பைந்தொடியை மணநேர்ந்தார். உச

(இ - ள்) வெளிப்படை. வந்த மேலோர்கள், திருமகளை ஒத்த திலகவதியாரை அங்கு அந்தக் கலிப்பகையாருக்கு மணஞ்செய்யும் திறத்தினைப் பேசித், தாம் வந்த செய்தியை அறிவிக்கக், குணங்களைப் பேசியும் குலமுறையினைப் பேசியும் குற்றமற்ற சிறப்பினையுடைய புகழனார், பாம்பின் படம்போலும் அல்குலையுடைய பசிய தொடிகளை யணிந்த தமது திருமகளாரை மணஞ்செய்து கொடுக்க இசைந்தார்.

(வி - ரை) அணங்கு அனைய - திருமகளைப்போன்ற. "திருவனைய" (1282). அணங்கு - தெய்வப்பெண் என்றலுமாம்.

மணம்பேசி - அறிவிக்க - என்று கூட்டுக. குணம் பேசிக் குலம் பேசி - குணமின்றிக் குலமும், குலமின்றிக் குணமும் பயன்படாவாதலின் அந்நாளில் அவ்விரண்டு திறத்தானும் தேர்ந்தனர் என்பது. குணம் - முன்கூறிய அரனடிமை விருப்பம், அரசர்பாற் செய்கை, வீரம், அழகு என்பன. பேசி என்பதனைப் பேச எனத் திரித்து, மணம் பேச வந்தவர் என்று முடித்தலுமாம்.

பைந்தொடி - தொடி - வளையல். தொடியை அணிந்த பெண்ணுக்கு வந்தது. அன்மொழித்தொகை. மணம் நேர்ந்தார் - மகட்கொடுக்க இசைந்ததனைக் குறிக்கும் மரபு வழக்கு. பசியதொடி - மாற்றுயர்ந்த பொன்னாலியன்றது. 24

1290. கன்னிதிருத் தாதையார் மணமிசைவு கலிப்பகையார்
முன்னணைந்தா ரறிவிப்ப, வதுவைவினை முடிப்பதன்முன்
மன்னவற்கு வடபுலத்தோர் மாறேற்க, மற்றவர்மேல்
அன்னவர்க்கு விடைகொடுத்தா; னவ்வினைமே லவரகன்றார். உரு

(இ - ள்) வெளிப்படை. கன்னியாராகிய திலகவதியம்மையாரின் தந்தையார் இவ்வாறு மணம் இசைந்ததனை முன்னர் வந்தவர்கள் சென்று கலிப்பகையாரிடம் அறிவிக்க, அவ்வாறே கலியாணச்சடங்கு முடிப்பதன்முன்னே, அரசனுக்கு வடநாட்டவர்கள் பகை மேற்கொண்டு போர்புரிய வந்தார்களாக, அந்தப் பகைவர்மேல் போர்செய்யக் கலிப்பகையாருக்கு அரசன் விடைகொடுத்து அனுப்பினான்; அத்தொழிலின் மேல் அவர் போயினர்.

(வி - ரை) மணம் இசைவு - மணம் நேர்ந்ததனை. இரண்டனுருபு தொக்கது.

அணைந்தார் - கலிப்பகையார் முன் - தாதை யா(ருடைய) இசைவு - அறிவிப்ப என்க.

அணைந்தார் - மணம் பேசச் செலவிட்ட மேலோர். அணைந்தார் என்றமையால் அவர்கள் அச்செய்தி கொண்டு மீண்டு சென்றமை கூறப்பட்டது.

வதுவை வினை - இசைவினால் மணம் நிறைவாயிற்று; வினை என்ற சடங்கு மட்டும் நிகழ எஞ்சி நின்றது என்பார் வதுவை முடிப்பதன்முன் என்றார். வினை முடிப்பதன் முன் என்றார். திலகவதியார் இக்கருத்தைக் கொண்டமை 1297-ல் உரைக்கப்பட்டது காண்க.

முன் - அரசகாரியத்தைத் தமது வதுவை வினையின் முன் செய்யத்தக்க பெருங் கடமையாக ஏற்ற வீரம் குறிக்க. "புரவலன்பா லருளுடையார்" (1287) என்றது காண்க. இது தமிழ் மக்கள் மேற்கொண்ட கடமையும் வீர உணர்ச்சியும் குறிப்பதாம்.

மன்னவற்கு வடபுலத்தோர் மாறு ஏற்க - மன்னவற்கு - நான்கனுருபு பகைப் பொருளில் வந்தது. மாறு ஏற்றல் - பகையாகக் கிளம்பிப் போரினை ஏற்று வருதல்.

வடபுலத்தோர் - வடநாட்டரசர். புலம் - நாடு. அக்காலத்தில் வடநாட்டரசர்க்கும் நடுநாடு என்னும் திருமுனைப்பாடி நாட்டினை உள்ளிட்ட தமிழ்நாட்டை ஆண்ட பல்லவ அரசர்க்கும் அடிக்கடி போர்கள் நிகழ்ந்தன என்பது தேச சரித்திரத்தால் அறியப்படும் உண்மை. சிறுத்தொண்டர் எனப்படும் பரஞ்சோதியார் "வடபுலத்து வாதாவித் தொன்னகரம் துகளாக"ச் சேனை செலுத்திப் போர்வென்ற வரலாறும், மூர்த்தி நாயனார் புராணத்தில் வடுகக் கருநாட மன்னன் பாண்டிய நாட்டை வென்று அடிப்படுத்திய செய்தி கூறப்படுவதும் இங்கு நினைவு கூர்க. இங்குக் குறித்த மன்னவன் மகேந்திரவர்மன் - குணபரன் - (திருநாவுக்கரசு நாயனாரை அலைபுரிந்து பின்னர் உண்மை கண்டு சைவத்தை அடைந்தவன்) என்ற அரசனாதல், அல்லது அவனைச் சார்ந்த வேறு சிறு மன்னனாதல் கூடுமென்பது கருதப்படும்.

அன்னவர்க்கு விடைகொடுத்தான் - விடைகொடுத்தல் - சேனையுடன் சென்று போர்புரிந்து வருக என்று ஏவி விடுத்தல். மரபுவழக்கு. ஒருமொழித் தொடர் நின்றது.

அவ்வினை - அவ்வாறு விடுக்கப்பட்ட போர்வினை. அவ்வினைமேல் - அவர் என்றும், அவ்வினை(யின்) - மேலவர் என்றும் கூட்டி உரைக்க நின்றது.

அகன்றார் - இனி அவர் திரும்பி வராமைக் குறிப்பும் உணர்த்தி நின்றது.

மணவிசைவு—மற்றதன்மேல்—என்பனவும் பாடங்கள். 25

1291. வேந்தற்குற் றுழிவினைமேல் வெஞ்சமத்தில் விடைகொண்டு
போந்தவரும் பொருபடையு முடன்கொண்டு சிலநாளிற்
காய்ந்தசினப் பகைப்புலத்தைக் கலந்துநெடுஞ் சமர்க்கடலை
நீந்துவார் நெடுநாள்க ணிறைவெம்போர்த் துறைவிளைத்தார். ௨௧

(இ - ள்) வெளிப்படை. அரசனுக்கு இவ்வாறு பகைவரால் போர் நேர்ந்ததனால், அதனை நீக்கும் தொழிலாகிய போரின்மேல் செல்ல விடைபெற்றுக்கொண்டு சென்றவராகிய கலிப்பகையாரும், போர்செய்யும் படைகளையும் தம்முடன் கொண்டு சென்று, சில நாள்களில் சினத்தோடு அடர்த்துவந்த பகைவர்களை அடைந்து, அவர்களுடன் கொடிய போர்க்கடலை நீந்தி வெற்றிகொள்ளும் கருத்தினராய், நீண்டகாலம் நிறைந்த கொடிய போர்த்தொழிலைச் செய்தனர்.

(வி - ரை) வேந்தற்குற்றுழி - வினைமேல் - வேந்தற்குற்றுழிப் பிரிவு என்பது அகப்பொருளில் கற்பியலின்கண் நிகழும் ஒரு பகுதி. "மன்னோர் பாங்கிற் பின்னோராகும்" (30), "உயர்ந்தோர்க்குரிய வோத்தி னான" (31), வேந்துவினை யியற்கை வேந்தனி னொரீஇய, வேனோர் மருங்கினு மெய்திட னுடைத்தே" (32) என்ற தொல்காப்பியம் அகத்திணையியற் சூத்திரங்களையும், "பின்னோர்" ஆகுப - பின்னோ

ரெனப்பட்ட வேளாளர் வரையறையின்றி வேந்தன் ஏவிய திறமெல்லாவற்றினும் பிரிதற்கு ஆக்கமுடையார்" எனவும், "அரசரேவுந் திறம் பகைவர் மேலும்" எனவும், உயர்ந்தோர்க்கு உரிய - அந்தணர், அரசர், வணிகர்க்கும், உயர்ந்த வேளாளர்க்கும் உரிய" என்றும் வரும் நச்சினார்க்கினியர் உரையும் காண்க. "வேல்வேந்த னேவப் போய்" (1296) என்றதும் காண்க. "வேந்துவிடு தொழிலிற் படையும்" (மரபு - 81) என்று இதனைத் தொல்காப்பியம் கூறும். "வேந்துவிடு தொழில்" என்பதற்கு "வேந்தனாற் கொடுக்கப்படும் தண்டத்தலைமையாகிய சிறப்புக் காரணத் தான்" என்றுரைகூறினர்.

சமம் - போர். போந்தவரும் - சிறப்பும்மை.

படையும் - உம்மை தம்முடன் படைக்கலன் முதலிய அங்கங்களுடன் என் இறந்தது தழுவிய எச்சவும்மை. "வேந்துவிடு தொழிலிற் படையும்" என்ற தொல் காப்பியமும் கருதுக.

சிலநாளில் - கலந்து - என்று கூட்டுக. பகைப்புலம் - இங்குப் பகைவர் என்ற பொருளில் வந்தது. பகைவர் இருக்குமிடம் என்று உரை கூறுவாருமுண்டு.

கலந்து - கிடைத்து - கூடி - கைகலந்து.

சமர்க்கடலை நீந்துவார் - போரினைக் கடலாக உருவகஞ் செய்தார். நீந்திக் கடத்தற்கரிய தன்மை குறிக்கப்பட்டது. "கடலைக் கையா னீந்தினன் காரியங்காண்" (சித்தி - பாயிரம்) என்றபடி அது செய்தற்கரிய தொழில் என்பதும், கலிப்பகையார் இப்போரைக்கடந்து திரும்பாதவராய் முடிகுவர் என்பதும் இவ்வுருவக முகத்தாற் குறிப்பா லுணர்த்தப்பட்ட திறமும் காண்க. நீந்துவார் - நீந்துவாராகி - நீந்த எண்ணி - என்க. முற்றெச்சம். நீந்துவார் - விளைத்தார் - என்க.

சிலநாளில் - நெடுநாள்கள் - முரண் அணி. போரிற் சென்று பகைவரைக்கலந்த எளிமையும் துணிவும், பின்னர் அஃது அவர் கருத்துப்படி எளிமையாய் முடிவுபெறாது நீண்டதிறமும் குறிக்கப்பட்ட நயம் காண்க. இந்நாளில் சென்ற இரண்டு ஆண்டுகளாக நடக்கும் மேல்நாட்டுக் கோரப்பூசலின் திறமும் வரலாறும் நடைமுறையும் இங்கு வைத்துச் சிந்திக்கற்பாலன. சிலநாளில் என்றதனால் அமர்க்களமிருந்த போர்த்துறை நெடுந்தூரமாம் என்பது குறிப்பிடப்பட்டது. விளைத்தல் - போர் செய்தல். விளைத் தல் என்பதும் பல உபாயத்தானும் தமது அமர்த்தொழிலைப் பெருகச் செய்தல் குறித்தது. துறை - தும்பை - வாகை முதலிய புறத்திணைத்துறைகள். "படையும் கண்ணியும்" என்பது சூத்திரம். கலந்து - விளைத்தார் - என்று கூட்டுக.

கடந்து நெடுஞ்சமர்—என்பதும் பாடம். 26

1292. ஆயநா ளிடையிப்பா லணங்கனையா டனைப்பயந்த
தூயகுலப் புகழனார் தோன்றுதோடு நிலையாமை
மேயவினைப் பயத்தாலே யிவ்வுலகை விட்டகலத்
தீயவரும் பிணியுழந்து விண்ணுலகிற் சென்றடைந்தார். ௨௭

(இ - ள்) வெளிப்படை. அவ்வாறாகிய அந்நாள்களினிடையே, இங்குத், திரு வனைய திலகவதியாரைப் பெற்ற தூயகுலப் புகழனார், தொன்று தொட்டுவருகின்ற நிலை யாமையினைப் பொருந்திய வினையின்பயனாலே, இவ்வுலகைவிட்டு நீங்கும்படி தீய அரு நோயினாற் பீடிக்கப்பட்டு விண்ணுலகத்தினிற் போய் அடைந்தனர்.

(வி - ரை) ஆயநாள் இடை - கலிப்பகையார் நெடுநாள்கள் நிறைவெம்போர்த் துறை விளைத்தனவாகிய நாள்களினிடையே.

பட்ட தன்மையினால், என்றும் உடனின்று பிரியாத உலகில் அடையும்படியான கற்பு நெறியினின்றும் திறம்பாமல் கணவனாருடன் போயினர்.

(வி - ரை) சுற்றமுடன்.........நீத்து - சுற்றம் என்றும், மக்கள் என்றும் உள்ள தொடக்குகளைத் துகள்போல் எண்ணி அவற்றை விடுத்து - துறந்து. துகள் ஆகவே - துகள்போல நொய்தாய். மெய்பற்றி வந்த உவமம். மலைபோலப் பெரிதென்றும் துகள்போலச் சிறிது என்றும் ஒரு பொருளை நிலையிடுதல் அதனைப் பற்றிய மனத் துணிபினாலாவது என்றதாம். கூத்தாட் டவைக்களம் - சந்தையிற் கூட்டம் - என்பன போல உள்ளவையே சுற்றமாதலானும், மேலும் பற்றுக்கோட்படச் செய்து பிறவிக்கு ஏதுவாவனவாதலானும் சுற்றமுடன் நீத்தனர் என்க. துகள் - கழுவப்படுவது என்ற பொருளில் வைத்துரைத்தலுமாம். இப்பொருளிற் பண்புவமம்.

சுற்றமுடன் மக்களையும் - மனை வாழ்க்கையின் சிறந்த கடன் சுற்றந்தழுவுதலாகும். அச்சிறப்புப்பற்றி உடன் என்ற மூன்றனுருபைச் சுற்றம் என்றதனுடன் சார்த்தி முதற்கண் வைத்தார். மக்களைத் தமதாருயிராகக் கொண்டு அவர்களின் பொருட்டே உயிர் துறப்பாரும் உயிர்தாங்குவாரும் ஆகிய தாயர்களும் உளர். இங்குக் கணவரைப் பிரிந்து வாழாமை என்ற கற்புநெறி அதனினும் மேம்பட்டதாதலின், விடத்தகாத பற்றுரும் மக்களையும் துறந்து உயிர் நீக்கும்படி செய்தது என்றதாம். கற்புநெறியின் முன்னர் ஏனைய பற்றுக்கள் யாவும் துகளாகவே கொள்ளப் பட்டன என்க. மக்களையும் - உம்மை உயர்வு சிறப்பு.

கணவனுடன் சென்றார் - கற்பு நெறி - "இருவ ராகத்து ளோருயிர் கண்டனம்", "ஓராருயி ரீருருக் கொண்டு" என்ற திருக்கோவையார்த் திருவாக்குக்கள் அறிவிக்கின்றபடி உள்ளது கணவன் மனைவியர்களது உத்தம இயல்பு. "இப்பிறவியில் உன்னைப் பிரியேன்" என்று நாயகன் சொன்னபோது "ஆயின் வரும் பிறவியிற் பிரிவு கூடுமோ?" எனக்கொண்டு ஒரு நாயகி புலந்தனள் என்னும்படி உள்ளது இத் தன்மை என்பர். இவ்வாறு கணவனுடன் பிரியாது உயிர் நீப்பவரை மாசத்தி - தெய்வம் - என்று கொண்டு அவர் பொருட்டுக் கல்நாட்டியும் பிறவாறும் வணங்கி வழிபடும் மரபும் உண்டு. அவை மாசத்திக்கல் என வழங்கி வருவது கல்வெட்டுக்களிற் காணலாம். இப்படி உயிர் நீப்ப வரும் அன்புதானும் தலை இடை கடை என மூவகைத்தாகப் பகுக்கப் படுமாயின், கற்புநெறி பற்றி நமதுநாட்டிற் கொண்ட பெருங் கொள்கையின் மேன்மை கண்டுகொள்ளத் தக்கது. பெற்றிமை - இங்கு மேம்பட்ட தன்மை குறித்தது. என்றும் உடன் பிரியாத என்க. உடனிருத்தலினின்றும் என்றும் பிரியாத. பிரியாத உலகு - கற்புடை மகளிர் நித்தியமாய் வாழும் விண்ணுலகம். உடன் சென்றார் - இதனை உடன்கட்டை ஏறுதல் - சத்தி - என்று சிறந்த கற்புநெறியாக முன்னாளில் வழங்கினர். வடவர் இதனைச் சககமனம் என்பர். என்றும் உடன் பிரியாத பெற்றிமையால் நீத்து வழுவாமற் சென்றார் என்று உரை கொள்வதுமாம்.

நந் தமிழ்நாட்டில் நாயகன் நாயகியிடை உள்ள காதலொழுக்கம் தானும் "உடம்பொ டுயிரிடை யென்ன", "கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும், திருநுதற் கில்லை யிடம்", "வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை" (குறள் - காதற் சிறப்புரைத்தல்), "பொட்டணி யானுதல் போயிறும் பொய்போ லிடையெனப்பூ, ணீட்டணி யான்றவி சின்மல ரன்றி மிதிப்பக் கொடாள், மட்டணி வார்குழல் வையாள் மலர்வண் டுறுதலஞ்சி" (திருக்கோவை - 303) என்ற இலக்கணங்களுக்கு ஏற்ற இலக்கியமாக நின்றது. சூரபதுமன் இறந்து பட்டான் எனக் கேட்ட அளவானே அவன் மனைவி பதுமகோமளை உயிர்நீத்தனள் என்பது கந்தபுராணம். இதனைக்,

கணவன் மனைவி யிவர் கூட்டுறவினுள் இக்காலத்திற் காணப்படும் பலவிதமான அலங்கோல நிலையுடன் ஒப்புநோக்கி உயர்வு கண்டுகொள்க. இந்தக் கற்புநெறி ஒழுக்கம் இன்னும் சிறந்த நிலையில் காணப்படும் திலகவதியம்மையாரது சரித நிகழ்ச்சி பற்றி 1297-ல் உரைப்பவையும் பார்க்க. கணவனுடன் சென்றார் - இங்கு உயிர் நீத்து அங்கு அவருயிருடன் சேர்ந்தார். 28

1294. தாதையா ரும்பயந்த தாயாரு மிறந்ததற்பின்
மாதரார் திலகவதி யாருமவர் பின்வந்த
காதலனார் மருணீக்கி யாருமனக் கவலையினாற்
பேதுறுநற் சுற்றமொடும் பெருந்துயரி னழுந்தினார். ௨௯

(இ - ள்) வெளிப்படை. தந்தையாரும் பெற்ற தாயாரும் இறந்த பின்னர், பெண்மணியாராகிய திலகவதியம்மையாரும் அவர் பின்வந்து அவதரித்த மகனாராகிய மருணீக்கியாரும் மனத்திற்பொருந்திய கவலையினாலும் வருந்துகின்ற நல்ல சுற்றத்தாருடனே பெருந்துன்பத்தில் அழுந்தினார்கள்.

(வி -ரை) தாதையாரும் பயந்த தாயாரும் - தந்தை தாய் என்னும் இருமுதுகுரவருள் "அன்னையும் பிதாவும்" என முன்வைத்து ஓதத்தக்க தாயாரைப் பின் வைத்தோதியது, இங்கு அவர்கள் உயிர்நீத்த காலமுறைமை பற்றியாகும். மகவு, இரண்டு திங்கள் தந்தை கருப்பத்திலுள் தங்கிப், பின் தாயார் கருப்பையினுட் சேர்ந்து, பின்பு முறையே அங்கு நின்றும் வெளிப்படுகின்றது என்பது உடல்நூல் வல்லோர் கண்ட முடிபாதலின் அம்முறைபற்றி ஓதினார் என்றலுமாம். பயந்த என்றதும் அக்குறிப்புப்பட நிற்பது காண்க. "தந்தையார் போயினார் தாயரும் போயினார்" என்ற தேவாரமும் காண்க. "தந்தைதாய்ப்பேண்" என்ற வைப்பு முறையும் காண்க.

மாதரார் - பெண்மகவு என்ற பொருளிலும், காதலனார் - ஆண்மகவு என்ற பொருளிலும் வந்தன. மாதரார் - மாதர் ஆர் என்று பிரித்து, மாதர் - அழகு - அழகு நிறைந்த என்றுரைப்பாருமுண்டு.

மாதரார் திலகவதியார் - காதலனார் மருணீக்கியார் - இருபெயரொட்டுப் பண்புத் தொகைகள்.

மனக்கவலை-தமது இளம்பிராயம் பற்றியும் முன்னறி தெய்வங்களாகிய தந்தை தாயர் இருவரையும் ஒருசேர இழக்க நேர்ந்தமைபற்றியும் மனத்துள்ளுண்டான கவலை.

பேதுறுதல் - வருத்தப்படுதல். நற்சுற்றம் - மக்களின் நிலைபற்றியும், உலகின் நலம்பற்றியும் வருந்தினாரன்றித் தாம்பெறும் உபகாரமாகிய தந்நலங்கருதி வருந்தினாரல்லர் என்பார் நற்சுற்றம் என்றார். தம்மைப் பேணிய நன்றியின்பொருட்டு வருந்தினார் என்றலுமாம்.

அழுந்தினார் - பெருந்துயராகிய கடலினுள் மூழ்கினார். குறிப்புருவகம்.

மாய்ந்ததற்பின்—என்பதும் பாடம். 29

1295. ஒருவாறு பெருங்கிளைஞர் மனந்தேற்றத் துயரொழிந்து
பெருவான மடைந்தவர்க்குச் செய்கடன்கள் பெருக்கினார்,
மருவார்மேன் மன்னவற்கா மலையப்போங் கலிப்பகையார்
பொருவாரும் போர்க்களத்தி லுயிர்கொடுத்துப் புகழ்கொண்டார். ௩௦

(இ - ள்) வெளிப்படை. பெருங்கிளைஞர் மனந்தேற்ற, அவ்விரு மகாரும் ஒருவாறு வருத்தம் நீங்கிப், பெரிய விண்ணுலகடைந்த பெற்றோர்க்குச் செய்யக்கடவன

வாகிய கடன்களை யெல்லாம் செய்தனர். மன்னவனுக்காக அவனது பகைவர்களை எதிர்த்துப் போர்செய்யப் போந்த கலிப்பகையார் பகைமை நிறைந்த போர்க்களத்தில் உயிரைக் கொடுத்துப் புகழினைக் கைக்கொண்டனர்.

(வி - ரை) ஒருவாறு - துயரொழிந்து என்க. மேற்பாட்டிற் கூறியவாறு அவர்களடைந்தது ஆற்றமாட்டாத துன்பந் தருவதொன்ருதலின் ஒருவாறு ஒழிந்து என்ருர்.

பெருவானம் - இல்லொழுக்க நல்லொழுக்கத்திஞல் தந்தையார் சென்றதும் (1292), கற்பு நெறிவழுவாது உயிர்நீத்து அவருடன் பிரியாத உலகெய்தத் தாயார் சென்றதுமாகிய விண்ணுலகம். பெருமை உயர்வு குறித்தது.

செய் கடன்கள் - ஈமக்கடன், நீர்க்கடன் முதலியவைகள். "ஈம அருங்கடன்" (994) என்றது காண்க. அவை இறந்த அன்றும், அதன் பின்னர்த் தொடர்ந்து விதித்த சில நாட்களிலும் செய்யத்தக்கன. இவை செய்தே தீரவேண்டிய கருமமாதலின் கடன் எனப்படும். "தென்புல வாணர்க் கருங்கட னிறுக்கும்" என்றதும் காண்க. சூரபன்மனது மகன் இரணியன் தந்தைக்கு ஈமக்கடன் கழித்தற்கு ஒருவன் வேண்டுமென்பதற்கென்றே, மீனுருவெடுத்துக் கடலில் ஒளித்தனன் என்ற சரிதமும் காண்க. இறந்தபின் உயிருக்கு வேறு பிறப்பு அல்லது இருப்பு இல்லை என்று கொள்ளும் உலகாயதக் கொள்கையுட்பட்டு அலையும் இந்நாள் மாக்கள் இக்கடன்கள் செய்தலில் நம்பிக்கையில்லா தொழிந்து வருவாராயினர். ஆனுல், ஆவியுலகத்தாருடன் கலந்தறியும் திறம் வாய்ந்த கூட்டத்தார் ஈமக்கடன்களின் பயனைப் பற்றியும், அவைகள் செய்யப்படவேண்டிய இன்றியமையாமையைப்பற்றியும், பிரிந்த உயிர்கள்மூலம் பல செய்திகளைக் கண்டு கூறுகின்றமையும் இங்குக் கருதத்தக்கது.

பெருக்கினுர் - விதித்தபடி செய்தனர். அந்தியக்கடனுற்றுதலைப் பெருக்குதல் என்றல் மங்கல வழக்கு. "தாலி பெருகிற்று" என்ருற்போல. "காடு பெருக்கினுர்" முதலிய உலக வழக்குக்களும் காண்க.

மருவார் - பகைவர். மலைதல் - போர் செய்தல்.

உயிர் கொடுத்துப் புகழ்கொண்டார் - மங்கல வழக்கு. புரவலன்பாலும் அவனுற் புரக்கப்படும் மன்னுயிர்களின்பாலும் அருளுடைமையினுல் அக்காவலின் பொருட்டுத் தம்முயிரையும் கொடுத்தாராதலின் புகழ்கொண்டார் என்ருர். "ஈவார்மே னிற்கும் புகழ்" என்பது முதுமொழி. உயிர், உறுப்பு, பொருள் ஆகவே இவை ஒன்றேனும் பலவேனும் கொடுத்துப் புகழ் பெறுவதாகும். இதனைத் திருக்குறளுரையினுள் 'இணையின்ருக வோங்குதலாவது கொடுத்தற்குரிய உயிருறுப்புப் பொருள்களைக் கொடுத்தமை பற்றி வருதலால் தன்னேடொப்பதின்றித் தானே யுயர்தல்' என்றது காண்க. கொடுத்துக் - கொண்டார் - என்றதனுல் கொடுக்கும் பண்டம் உயிராகவும், கொள்ளும் பண்டம் புகழாகவும் பண்டமாற்றுவகையில் உருவகம் செய்யப்பட்டது. கொடுக்கும் பொருளினும் கொள்ளும் பொருளினைப் பெரிதாகக் கருதுவதே பண்டமாற்றில் கொடுப்போன் - கொள்வோன் என்ற இருதிறத்தாரும் உட்கொள்ளும் உள்ளுறை. இங்கு உயிரினும் புகழைப் பெரிதாகக் கருதினுர் என்பது கருத்து. "நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும், வித்தகர்க் கல்லா லரிது" என்ற திருக்குறளுக்கு "ஆக்கமாகுங் கேடாவது புகழுடம்பு செல்வ மெய்தப் பூதவுடம்பு நல்கூர்தல்; உளதாகும் சாக்காடாவது புகழுடம்பு நிற்கப் பூதவுடம்பு இறத்தல். நிலையாதனவற்ருல் நிலையினவெய்துவார் வித்தகராதலின் வித்தகர்க்கல்லா லரிது என்ருர்" என்று ஆசிரியர் பரிமேலழகர் உரைத்தவை காண்க.

கடன்கள் பெருக்கினுர்; உயிர் கொடுத்துப் புகழ்கொண்டார் - அச்சிறுமகார்க்குப் பெற்ருேரிருவரையும் ஒருங்கே யிழந்த ஆற்ருெணுத துயரத்தினை

அடுத்து, அது மாறுமுன், மற்றொரு பெருந்துயரும் நேர்ந்ததென்பதனையும், முன்னர் நிகழ்ந்த அதனை ஒருவாறு தேறிய அவர்கள் எவ்வாற்றானும் தேறமுடியாத தொன்றாகப் பின்னர் வந்த நிகழ்ச்சி யிருந்ததென்பதனையும், " பட்டகாலிலே படும்" என்னும் பழமொழிப்படி துன்பங்கள் ஒருவர்க்கு மேன்மேல் அடுத்துவரும் இயல்புடையன என்பதனையும், அறிவிக்க இவ்விரண்டினையும் ஒருசேர அடுத்து வைத்து இவ்வொரு பாட்டினாற் கூறினார். " ஆயநா ளிடையிப்பால் " (1294) என முன்னரும் இவற்றைத் தொடர்ந்து அடுத்துவைத்துத் தொடங்கிக் காட்டியமுறையும் காண்க.

பொரு - பொருதல் - பகைமை. முதனிலைத்தொழிற்பெயர். 30

1296. வெம்முனைமேற் கலிப்பகையார் வேல்வேந்த னேவப்போய்
அம்முனையிற் பகைமுருக்கி யமருலக மாள்வதற்குத்
தம்முடைய கடன்கழித்த பெருவார்த்தை தலஞ்சாற்றச்
செம்மலர்மேற் றிருவனைய திலகவதி யார்கேட்டார். ௩௧

(இ - ள்) வெளிப்படை. கொடிய பகைவர்மேல் அரசன் ஏவலின்படிச்சென்று, கலிப்பகையார், அந்தப் போர்முகத்திற் பகைவரை அழித்து விண்ணுலகத்தை ஆட்சி கொள்வதற்காகத் தமது கடனை நிறைவேற்றிய பெருவார்த்தையை ஊரவர் சொல்லச், செங்கமலமீதில் இருக்கும் திருமகளை ஒத்த திலகவதியார் கேட்டனர்.

(வி - ரை) வெம்முனை - பகைவர். வேந்தனேவ - " விடைகொடுத்தான் " (1290) என்றது பார்க்க.

அம்முனை - அந்தப் பகைவருடன் செய்த போர். முருக்குதல் - அழித்தல்.

அமருலகம்...கழித்த - போர்முனையில் இறந்துபட்டமை குறிக்க மங்கலவழக்காற் கூறினர். போரில் இறக்கும் வீரர்கள் வீரசுவர்க்கம் என்ற விண்ணுலகத்தை அடைகுவர் என்பது மரபு. " வானிடை யின்பம் பெற்றார் " (438) என்றதும் பிறவும் பார்க்க. 'போரில் வெற்றிகொண்டு உயிருடன் மீண்டிருப்பேமாயின் சின்னாள் வாழும் இவ்வுலகத்துப் புகழ் ஒன்றே கொள்வேம்; அவ்வாறன்றிப் பன்னாளும் பெரிய விண்ணுலகிற் சிறக்க வாழ்வேம்' என்று சென்றார்போல் என்றதுமோர் தற்குறிப்பேற்ற அணி நயம்.

கடன் கழித்தல் - கடமையைச் செலுத்துதல்.

பெருவார்த்தை - இறந்து பட்டமை கூறும் மங்கலவழக்கு. உலகர் பலரும் அறியக்கூறும் புகழ்மொழி என்றலுமாம்.

தலம் - தலத்துள்ளோர் - அவ்வூரவர். ஆகுபெயர். தம்பிடத்து என்றுரைப்பாரு முண்டு. போரில் இறந்துபட்டமையால் உற்றாராலன்றி ஊரவரால் அறிய வந்ததென்றது காண்க.

செம்மலர்மேல் திருவனைய - 1282 பார்க்க. " திருமகளென்ற நின்ற தேவியார் " என்றதும் இங்கு ஒப்புநோக்கற்பாலது. 31

1297. எந்தையுமெம் மனையுமவர்க் கெனைக்கொடுக்க விசைந்தார்கள்
அந்தமுறை யாலவர்க்கே யுரியதுநா னாதலினால்
இந்தவுயி ரவருயிரோ டிசைவிப்ப " னெனத்துணிய,
வந்தவர்த மடியிணைமேன் மருணீக்கி யார்விழுந்தார்; ௩௨

1298. அந்நிலையின் மிகப்புலம்பி "யன்னையுமத் தனுமகன்ற
பின்னையுநா னுமைவணங்கப் பெறுதலினா லுயிர்தரித்தேன்;
என்னையினித் தனிக்கைவிட் டேகுவீ ரெனில்யானும்
முன்னமுயிர் நீப்ப "னென மொழிந்திடரி னழுந்தினார்; ௩௩

1299. "தம்பியா ருளராக வேண்டு"மென வைத்ததயா
வும்பருல கணையவுறு நிலைவிலக்க, வுயிர்தாங்கி,
யம்பொன்மணி நூலுங்கா, தணைத்துயிர்க்கு மருடாங்கி,
யிம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யாரிருந்தார். ருச

1297. (இ - ள்) வெளிப்படை. "எனது தந்தையும் என் அன்னையும் என்னை அவருக்குக் கொடுக்க இசைந்தனர்; அந்த முறையினாலே நான் அவருக்கே உரியது; ஆதலினால் எனது இந்த வுயிரை அவருடைய உயிருடன் சேர்விப்பன்" என்று திலகவதியம்மையார் துணிவு கொண்டெழுந்தனராக, அவருடைய திருவடியிணையின் மேல் மருணீக்கியார் வந்து விழுந்தனராகி, ருஉ

1298. (இ - ள்) வெளிப்படை. அந்த நிலையில் மிகவும் புலம்பித் "தாயும் தந்தையும் போயின பின்னையும் நான் உம்மை வணங்கப்பெறுதலினால் உயிர் வாழ்ந்தேன்; இனி, என்னைத் தனியாகக் கைவிட்டு நீர் செல்வீரேயாகில் நானும் முன்னம் உயிர் விடுவேன்" என்று சொல்லித் துன்பத்துள் அழுந்தினாராகவே, ருரு

1299. (இ - ள்) வெளிப்படை. "தமது தம்பியார் உளராகவேண்டும்" என்று உட்கொண்டு வைத்த கருணையானது தேவருலகு செல்லும் துணிவுகொண்ட நிலையை விலக்க, உயிரைத் தாங்குவாராகி, அழகிய பொன்னும் மணியுமுடைய நாண் பூணுதலை ஒழித்து, எல்லா வுயிர்களுக்கும் கருணையைத் தாங்கிநின்று, இவ்வுலகத்தில் மனையில் இருந்து தவம்புரிந்துகொண்டு திலகவதியார் இருந்தார். ருச

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்த கருத்தும் நிகழ்ச்சியுங்கொண்டு ஒன்றாக முடிவுபெற்றன. கருத்தின் தொடர்ச்சிபற்றி ஒன்றாக முடிபுகொண்டு உரைக்கப் பட்டன. இவ்வாறன்றி விழுந்தார் (1297) - அழுந்தினார் (1298) என்பவற்றை உள்ளவாறே வினைமுற்றாகக்கொண்டு தனி முடிபுகளாக உரைப்பினுமிழுக்கில்லை.

1297. (வி - ரை) எந்தையும்.........இசைந்தார்கள் - மணம் இசைந்து மகட் கொடை நேர்வதில் குடும்பத் தலைவரான தந்தையாரே முற்பட வருவதும், தந்தையார் எண்ணத்தக்கவற்றை எண்ணியும் பேசத்தக்கவற்றைப் பேசியும் இசைவுபட்டால், தாயரின் இசைவு பின்னரே வேண்டப்படுவதும், வழக்கும் முறையுமாதலின் எந்தையும் என முதலில் வைத்துக் கூறப்பட்டது. "புகழனார்...மணநேர்ந்தார்" (1289) என்றது பார்க்க. எம் தந்தை என்றது எந்தை என மருவிநின்றது; மரூஉ வழக்கு.

எனைக் கொடுக்க - பெண்கள் மணத்தின் முன்னர்ப் பெற்றோர் சொல்வழியும், மணத்தின்பின் கணவன் சொல்வழியும், கணவனுக்குப் பின் இருக்கவேண்டிவரின் புதல்வன் சொல்வழியும் அமர்ந்து ஒழுகக்கடவர் என்ற மரபினை நமது நாட்டில் முந்தையோர் கையாண்டுவந்தனர். இந்நாளில் பெண்உரிமை என்ற பேரால் அம்மரபினைப் பலவாற்றானும் மாற்றும் முயற்சிகள் எழுகின்றன. அவை நிற்க; இங்குத் திலகவதியம்மையார் கைக்கொண்டு ஒழுகி நின்றது முந்தையோர்கண்ட முறை. அதன்படி பெற்றோர்களுடைய இசைவின் வழியே தாம் நிற்கும் கடமைபற்றி அமைந்து தம்மை அவர்களது கொடைப் பண்டமாகக் கருதி எனைக் கொடுக்க என்றார். தமக்கென ஒன்றும் வேண்டாது பெற்றோர் செலுத்தியவழி தமது அறிவு இச்சை செயல்களை அமைவு செய்துகொண்டனர் என்க. "என்னு யிர்க்கொரு நாதர்நீ ருரைத்த தொன்றை நான்செயு மத்தனை யல்லா லுரிமை வேறுள தோவெனக்கு?" (412) என்றது மனைவியின் நிலை ஒழுக்கம் பற்றியது. "தன்னைத் தேறி முன்னையோர்

கொடுத்த" (திருவிடை - மும் - கோவை - 7) என்றது பதினோராம் திருமுறைத் திருவாக்கு.

அந்த முறையால் - நான் - அவர்க்கே - உரியது - என்ற கருத்தும், கொடுக்க என்ற கருத்தைத் தழுவியது. அந்நமுறை - பெற்றோர் கொடுக்க இசைந்தமுறை. அந்த - முன்சொன்ன அந்த. உரியது - உரியவள் என்னாது உரியது என்று அஃறிணையிற் கூறியதும் தமக்கென உரிமை கொள்ளாது கணவன் வழி நின்ற நிலையினை வற்புறுத்தியது. பெற்றோர்கள் தம்மைக் கொடுக்க இசைந்த ஒன்றினாலே மணம் நிகழ்ந்து விட்டதாக முடித்தனர் திலகவதியம்மையார். அதன்மேல் உலகறிய நிகழ உள்ள "வதுவை வினை" (1290) என்பன எல்லாம் அதனைக் காட்டும் வெளிச் சடங்குகளே என்ற மட்டில் நின்றொழிவன என்பதும் அம்மையார் கொண்ட கொள்கை. உண்மையில் பெற்றோரின் மனஇசைவே மணமாகுவது என்றபடி. மணச் சடங்குகள் பிற்கால நிலைக்கேற்ப அவ்வப்போது மிகுதி நாவியற்றிய முனிவர்களால் கட்டப் பட்டவை என "ஐயர் யாத்தனர் கரணம் என்ப" என்று தொல்காப்பியம் கூறும். அவை காலந்தோறும் வேறுபடுவது அவற்றின் மரபேயாம். ஆனால் அதன் முன்னரே சிவாகமங்களுள் வகுத்தருளப்பட்ட மணச்சடங்கு முறைமைகள் உண்டு. அவை எவராலும் மாற்றப்படத் தக்கனவல்ல என்பதும் உணர்தற்பாலது.

ஆதலினால்......இசைவிப்பன் - முன்கூறிய கொள்கையினால், பெற்ற மணவாளன் இறந்துபடவே, மணவாட்டியாகிய தாம் மேலும் உயிர் வாழாது அவனோடு "உடனென்றும் பிரியாத வுலகெய்தும் கற்புநெறி" (1291) என்ற நிலையின்படி அம்மையார் இவ்வாறு துணிந்தனர் என்க. அத்துணிவு, அந்நாள் முந்தையோர் கண்ட முறையாலும், தமது அன்னையார் நடந்து காட்டிய நடையாலும் ஆயிற்றென்பதும் உணர்தற்பாலது. அவ்வாறு உடன் செல்லாது உயிர் தாங்க நேரின், மகிழ்தல் தாங்காது கைம்மை நோன்பும் அறமும் தாங்கி நாட்கழித்தலும் கற்புநெறி வழுவாதார் கடன் என்பதும் அம்மையார் பின்னர் மேற்கொண்டு நின்ற தவநிலையினால் உணரப்படும். இது பற்றித் தொல்காப்பிய முதலிய பழந்தமிழ் இலக்கணங்களிலும், புறநானூறு முதலிய இலக்கியங்களிலும் கண்டவை இங்கு நினைவு கூர்ந்து உண்மை உணர்ந்து கொள்ளற்பாலன. தபுதாரநிலை என்ற புறத்துறையும் காண்க.

மருணீக்கியார் வந்து அடியிணைமேல் விழுந்தார் என்க. வருதலாகிய செயல் முற்பட விரைந்து நிகழ்ந்ததனை உணர்த்துவார் வந்து என்ற சொல்லை முன்வைத்தோதினார். இதுபோலப் பின்னர்த் "தாளிணைமேல் விழுந்தயரும் தம்பியார்தமை" (1329) என்றவிடத்தின் வரும் நிகழ்ச்சியினையும் ஒப்பு நோக்கி ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டுகொள்க.

உரியதுதான்—இசைப்பன்—எனவே துணிய—என்பனவும் பாடங்கள். 32

1298. (வி - ரை) அன்னையும் அத்தனும் - அறியவந்த முறை. அன்னைபோல இங்குத் தமக்கையாரை நினைந்த குறிப்பினால் முன்வைத்துக் கூறியதுமாம்.

பின்னையும் - உம்மை இழிவு சிறப்பு.

உமை வணங்க......தரித்தேன் - அன்னையும் அத்தனும் பிரிந்த பின்னர் அப்பிரிவு தோன்றாவண்ணம் நீரே அன்னைபோலக் காத்தளித்தீர் என்றபடி.

கைவிட்டு - தனித்திருக்கும்படி விட்டு - நீத்து. கைவிடுதல் - நீத்தொழிதல். "கைகூடும்" என்பதுபோலக் கை என்பது ஏற்ற சொற்பொருளை வலியுறுத்தி நிற்பதோர் இடைச்சொல். இதனை உபசர்க்கமென்பர் வடவர்.

யானும் முன்னம் - முன்னம் - *நீர் உயிர்துறப்பதன் முன். எனக்கு உரிய காலம் வருமுன்பு என்றும், யான் உம் முன்னம் என்று பிரித்து, உமது திருமுன்பே என்றும் உரைக்க நின்றது.*

இடரின் அழுந்தினார் - *அழுந்தினாராகவே. முற்றெச்சம். மிக்க துன்பமடைந் தனராகவே. அழுந்தினார் குறிப்புருவகம். துன்பமாகிய கடலினுள் என்க.* 33

1299. (வி - ரை) தயா - விலக்க என்க. *கணவனுடன் செல்வதினின்றும் ஏனையோரை விலக்குவது உடற்பற்று முதலிய காரணங்கள்; ஆனால் இங்கு அம்மை யாரை "உம்பருலக ணையவுறு நிலை"யினின்றும் விலக்கியது "தம்பியார் உளராக வேண்டுமென வைத்த தயா"வேயாகும். தயா - கருணை. தம்பொருட்டு உயிர்தாங்க நினையாது தம்பியார் பொருட்டே உயிர்தாங்கத் துணிந்தனர் என்பதாம்.*

உளராக - உளராதல் - *உலகில் உள்ளவராகுதல். "உளரானார் - உளரானார்" (1281) என்றது பார்க்க. புகழனார் உளரானதுபோல அவர்தம் மகனாராகிய, தமது தம்பியாரும் வழிவழியாக உளராக வேண்டுமெனக்கொண்ட கருணை. அந்தக் குடும்பம் கால்வழி யற்றுப்போகாது சைவத் திறத்தில் நீடு செல்வது வேண்டுமென்பது கருதி என்க. திலகவதியார் வைத்த தயாவானது அன்று அவர் கருதியதன்மேல் பன்மடங்கு பெரும்பயனை உலகுக்கு அளிக்கும்படி விளைந்ததனை 1330—1331-ன் நிகழ்ச்சிகளாற் காண்க. சைவ மரபு இன்றும் இனியும் உளதாவது இதன் பயனாகுமென்க.*

உம்பருலகு - *கணவனுடன் என்றும் பிரியா விண்ணுலகம். 1293 பார்க்க. அதனை அணையவுறுதலாவது தீப்பாய்ந்து உயிர் துறந்து செல்லுதல்.*

உயிர் தாங்கி - தாங்கி *என்றதனால் உயிருடனிருத்தல் இன்பமெனப் பற்று வைக்காது அதனை ஒரு பாரமெனவே தாங்கினார் என்பது கருத்து.*

அம்பொன் மணிநூல் - *பொன்னும் மணிகளும் கோத்த அணிகள். மணிக்கோவை.*

மணிநூல் தாங்காது - *உலக நிலையில் வைதவ்யம் என்றும், அமங்கலித்துவம் என்றும் வழங்கும் நிலையில்நின்று. "இதனைக் காதல னிழந்த தாபத நிலையும், நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச் சொல்லிடை யிட்ட பாலைநிலையும்" என்று தொல்காப் பியம் (புறத்திணையியல் - 24) கூறும். இதற்குக் "காதலனை யிழந்த மனைவி தவம் புரிந்தொழுகிய நிலைமையானும்" என்றுரை கூறினர். "இம்பர்மனைத் தவம்புரிந்து" என்றதும், பின்னர் "தாபதியார்" (1343) என்பதும் காண்க. மாதினியார் செய்கையினா லும், திலகவதியார் துணிவுகொண்ட அதனாலும், கலிக்காமர் தேவியாரும் "பொருவருங் கணவரோடு போவது புரியுங்காலை" (ஏயர்கோன் - புரா - 398) என்றதனாலும் கணவ ருடன் செல்வதே கற்புடை மகளிருள் அந்நாளில் பெரும்பான்மை வழக்காயிருந்த தென்பதும், அவ்வாறு செல்லாது உயிர்தாங்கித் தாபத நிலையில் வாழ்வது சிறுபான்மை நிகழ்ந்ததென்பதும் அறியப்படும். இவ்விருவகை நிலைகளையும்பற்றியும் தொல்காப்பி யத்திலும், புறப்பாட்டு முதலிய பழந் தமிழிலக்கியங்களிலும் உரைத்தவை ஆண்டாண் டுக் கண்டுகொள்க. இதனைக் காஞ்சித்திணை என்பதனுளடக்கிக் கூறுவர். "காஞ்சி தானே பெருந்திணைப் புறனே", "பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்" (ஷை 22), "நில்லா வுலகம் புல்லிய நெறித்தே" (ஷை 23) என வரும் தொல்காப்பியமும், "முற் கூறிய காஞ்சித்திணை வீடேதுவாகவன்றி வாளா நிலையின்மை தோன்றக்கூறும் பகுதி" என்று சூத்திரக்கருத்துரைத்த நச்சினார்க்கினியர் உரையும், அவைபோன்ற பிறவும் இங்குக் கருதத்தக்கன. "பல்சான்றீரே" (புறம் - 246) என்ற புறப்பாட்டு இவ்விருவகை நிலைகளையும் நன்கு விளக்குவது. ஆனால் கணவனொடு செல்லும்நிலை முதலியவற்றைத் தற்கொலை என்ற வகையின்பாற்படுத்தி அரசாங்கத்தார் சட்டங்களின் வாயிலாக விலக்கிவிட்டமையால் இந்நாளில் அவை ஒழிந்துபோயின. ஏனைத் தாபதநிலை முதலிய*

வழக்குக்களும் பெண்ணுரிமைச் சீர்திருத்தம் என்ற பேரால் ஒழிக்கப்பட்டனவாய் நிற்றலின் இவையெல்லாம் பழங்கதைகளாய், முற்காலச் சரித ஆராய்ச்சிக்குத் துணை செய்யும் அளவில் நின்றொழிந்தன.

அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி - எல்லாவுயிர்களும் இன்புற்றிருக்கும் அதனை நினைதல் திலகவதியாரது அருள்பொருந்த தன்மையாகாதலின் அது எல்லாவுயிர்க்கும் இன்பம் செய்யும் பொருட் பரமாசாரியராகச் சமய குரவரை உருப்படுத்தி உலகுக்கு அளித்தது என்க. அருள் - தொடர்பு பற்றாது உயிர்கள்மேல் செல்லும் இரக்கம்.

மனைத்தவம் புரிந்து - மனையில் இருந்தபடியே செய்தற்குரிய நோன்புகளும் அறங்களும் பூசையும் செய்து. தவம் - பூசைகள் நியமங்களும் முதலியன.

இருந்தார் - உயிர்தாங்கி நின்றனர். இறந்தார் எனப்படாது இருந்தார்; சொல்லளவில் இருந்தார் எனப்பட்டார் என்பது கருத்து. அதின் அவர் இறந்தார் என்றதற்கும் அவ்வாறுக உள்ள ஏனையோர் (உயிருடன்) இருந்ததற்கும் உள்ள வேறுபாட்டினை "தயா...புரிந்து" என்றதனால் காட்டும் பொருட்டுமாம் என்க. திலகவதியார் உயிர் நீப்பதனை விலக்கும்பொருட்டே தாம் உயிர்தாங்கி யிருந்தார் என்பது. 34

1300. மாசின்மனத் துயரொழிய மருணீக்கி யார்நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்க்
காசினிமேற் புகழ்விளங்க நிதியளித்துக் கருணையினால்
ஆசிலறச் சாலைகளுந் தண்ணீர்ப்பந் தருமமைப்பார், ௩௫

1301. காவளர்த்துங் குளந்தொட்டுங் கடப்பாட்டின் வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியுநா னிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத வீகைவினைத் துறைநின்றார். ௩௬

1300. (இ - ள்) வெளிப்படை. குற்றமற்ற தமது மனத்தின் துயரம் நீங்க, அதன்பின் மருணீக்கியார் வயது நிரம்ப வளர்ந்து, உலக வாழ்க்கை நிலையாமையுடையது என்று கண்டு அறங்களைச் செய்வாராய், உலகத்தில் தமது புகழ் விளங்கும்படியாகச் செல்வத்தைக் கொடுத்துக் குற்றமற்ற அறச்சாலைகளையும் தண்ணீர்ப் பந்தரையும் கருணையினால் அமைப்பாராகி, (அவற்றுடனே) ௩௫

1301. (இ - ள்) வெளிப்படை. சோலைகளை வளர்த்தும், குளங்களைத் தோண்டியும், நேர்மையினின்றும் வழுவாமல் வந்து மேவினவர்களுக்கு வேண்டுவனவற்றை மகிழ்ச்சியுடன் கொடுத்தும், விருந்தினரைப் பாதுகாத்தும், நாவலர்களுக்கு வளம்பெருகும்படி செல்வம் முதலியவற்றைக் கொடுத்தும், இன்னும் இந்நானிலத்துள்ளார் யாவர்களுக்கும் பாகுபாடின்றித் தவிர்தலில்லாத ஈகைத் தொழிலில் ஒழுகி, மாறாது நின்றனர். ௩௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1300. (வி - ரை) மாசில் மனத்துயர் - துயர் - திலகவதியார் தம்மைத் தனிக் கைவிட்டேகாமல் இருத்தல்வேண்டுமே என்னும் கவலையினால் நேர்ந்ததுன்பம்.

ஒழிய - அவர் உயிர்தாங்கி நிற்க உடன்பட்டதனால் நீங்க.

நிரம்பி - தக்க வயது நிரம்பிய பின். 1287-ல் கருதப்பட்டவாறு அப்போது பத்து ஆண்டுகளே நிரம்பப்பெற்றிருந்த அவர் பின்னர் உரிய ஆண்டுகள் நிரம்பப் பெற்றபின் என்பது. அறங்கள் செய்தற்கும், நாவலர்க்கும் பிறருக்கும் நலனறிந்து

நல்குதற்கும் உரிய வயது நிரம்பி என்பது கருத்து. கல்வி அறிவு ஒழுக்க முதலியவற்றால் நிரம்பி என்பாருமுண்டு. இங்கு நிரம்பி என்ற ஒரு சொல் அவர் மனையில் வாழ்ந்த வாழ்க்கையின் காலமுழுமையும் குறித்து நின்றது. அந்நாளில் அவர் மணஞ் செய்து கொண்டு மனைவி மக்களுடனிருந்து இல் வாழ்க்கை நடாத்தினார் என்று புதிய ஆராய்ச்சி செய்வாரும் பலருளர். "மக்களே மணந்த தார மவ்வயிற் றவரை யோம்புஞ், சிக்குளே யழுந்தி யீசன் றிறம்படேன் றவம தோரேன்' (குறைந்த திருநேரிசை - 2) முதலிய திருவாக்குக்களை அவ்விசாரத் துக்குத் துணையாகவும் காட்டுவார். நாயனார் மணஞ்செய்து இல்வாழ்க்கை நிகழ்த்தா மலே துறவறத்தில் ஒழுகியவர் என்று கொள்வது மரபு. "மூர்த்தியா ரப்பர் நல்ல துறவறம்" என்பது புராண வரலாறு. ஆயின் அவர் மனையிலிருந்து அறங்கள் செய்த வாழ்க்கை நிலையின் திறம் எதுவாயினும் அது துறக்கப்பட் டொழிந்த தனை "நிலையா வாழ்க்கை யல்லேனென் றறத்துறந்து" (1302) எனக் கூறியவாற்றா னும், நிரம்பி என்று ஒரு சொல்லாற்றலால் அதன் விரிவெல்லாம் இலேசாக அடக் கிக் கூறிப்போந்த திறத்தாலும், மற்றும் சொல்லாமையானும் அவ்வாராய்ச்சி அவ மாகிய வீண்செயலா மென்பது ஆசிரியர் கருத்தென்பது துணியப்படும்.

தேசநெறி - உலகவாழ்க்கையிற் கொள்ளும் மனை செல்வம் இல்வாழ்க்கை முதலியவற்றைச் சார்ந்தொழுகும் உலகநெறி.

நிலையாமைகண்டு - யாக்கை, இளமை, செல்வம் முதலிய உலக உடைமைகள் யாவும் நிலையாக உள்ளனபோலத் தோன்றிப் பின் மறைந்துபடுவனவே என்ற உண்மையை உணர்ந்து. கண்டு - தெரிந்து உணர்ந்து. நூற்கல்வியாற் றெரிதலேயன்றி உள்ளத் தழுந்திய உணர்ச்சியாகிய அனுபவத்தில் தெரிந்து. "தந்தையா ரும்பயந்த தாயாரும்" ஒருங்கே தமது இளம்பருவத்தில் அகன்றதும், தமக்கையாருக்கு மணம் பேசியவரும் வதுவைவினை முடிப்பதன் முன் அகன்றதும், அதுபற்றி அம்மையார் உயிர்நீக்க நின்ற தும், தம் வேண்டுதலுக்காக உயிர்தாங்கித் தாபதநிலை மேற்கொண்டு தவம்புரிந்து நிற்ப தும் ஆகிய இவையே இளம்பருவத்தில் நாயனாரது மனத்தினுள் ஊன்றி உலக நிலை யாமையினை அவரது மனத்தில் வற்புறுத்தப் போதியனவாயின. அறிவுடைய ஒருவன் இவ்வாறு கண்ட உலக அனுபவங்களாலே பல அரிய ஞானங்களைக் கற்றுக்கொள்ள ஏதுவுண்டு. ஆயினும் பலரும் இவ்வாறு ஞானம் பெறுமலுழல்வது என்னை? எனின், முன்னையநிலையிலே முனியாக இறைவனை அடையத் தவஞ்செய்து விட்டகுறை இங்குத் தொடர்ந்து இந்த ஞானம் விரைவில்வரத் துணைசெய்தது என்பதும் நாம் நினைவிற் கொள்ளத்தக்கது.

நிலையாமை கண்டு அறங்கள் செய்வாராய் - "பிறத்தலும் பிறந்தாற் பிணிப்பட வாய்ந்தசைந் துடலம் புகுந்துநின், றிறக்குமா றுளதே யிழித்தேன் பிறப்பினைநான், அறத்தையே புரிந்த மனத்தனு யார்வச் செற்றக் குரோத நீக்கியுன், றிறத்தனு யொழிந்தேன் றிருவாரூ ரம்மானே" (சீகாமரம் - 8) என்ற நாயனாரது திருவாக்கு அவரது இச்சரிதப் பகுதியை நன்கு விளக்கும் அகச்சான்றாகும். இங்கு நாயனார் செய் தன பசுதருமம் என்னும் உலகநிலை அறங்களேயாம். "ஈதல் அறம்" என்றபடி தமது உடைமைகளை வந்த வந்தவாறு அளித்தல் இங்கு அறமெனப்பட்டது. இவை வேறு: "தம்மை மறந்து நின்னை நினைப்பவர்" என்ற நிலையில் சிவபிரானிடத்தும் அவனடியா ரிடத்தும் செய்யும் அறங்கள் வேறு. அவை பதிதருமம் எனப்படும். முன்கூறிய பசு தருமங்கள் இம்மையிற் புகழும், மறுமையிற் புண்ணியமும் தந்தொழிந்து மீளவும் பிறவியில் வீழ்த்தும். பதிதருமங்களோ மீளா நிலையாகிய வீடுபேற்றுக்குக் காரண

மாவன. "காசினி மேற் புகழ்விளங்க" என்றும், "ஞாலமெங்குமுள்ளோர் யாவருக்கும்" என்றுங் கூறுதல் இக்கருத்தை விளக்குவன. கண்டு - அன்னையும் அத்தனும் அகன்றமையும் தமக்கையார் உலகினைத் துறக்க தமது மேற்கொண்ட நோன்பினமையும் கண்டும், அநுபவத்தாற் கண்டும்.

அறங்கள் செய்வாராய் - இந்த அறங்கள், அறச்சாலை அமைத்தலாதியாக மேல் இப்பாட்டிலும், மேல்வரும் பாட்டிலும் கூறப்படுவன. இவை "அகல வினைத்துறை" என்று தொகுத்துக் கூறப்பட்டன. இவை முப்பத்திரண்டறங்கள் எனப்படும். 1148 பார்க்க.

கருணையினால் - அமைப்பார் என்க - ஆசில் அறச்சாலைகள் - இவை அன்னசாலை. மருத்துவச்சாலை - கல்விச்சாலை முதலியன என்ப.

நிதியளித்தல் - இவற்றுக்கு வேண்டிய செலவுக்கு முதற்பொருளும் மூலதனமும் கொடுத்தல். தம்மால் இன்னார் என்றறியப்படுதலின்றி இச்சாலைகளுக்கு வரும் யாவரும் பயன்பெற என்றதலால் கருணையினால் என்றும், அளித்து என்றுங் கூறினார்.

அறச்சாலைகளும் தண்ணீர்ப்பந்தரும் - தண்ணீர்ப்பந்தரும் அறச்சாலையே யாயினும் வெயில் வெப்பம் தாகம் இளைப்பு முதலிய தாபங்களை உடனே தீர்க்கும் அதன் தனிச் சிறப்புநோக்கி விதந்து தனியாக எடுத்தோதினார். இதன் இயல்பினை "அளவில் சனம்" (அப்பூதி-புரா-5) என்ற திருப்பாட்டினால் ஆசிரியர் தனி எடுத்தோதுதல் காண்க. தண்ணீர்ப்பந்தர் வைத்த அறத்தின் பயனாக, அப்பூதியடிகளார், தாம் குரு மூர்த்தியாகக் கொண்டொழுகிய திருநாவுக்கரசு நாயனாரின் அருளை அடைந்துய்ய நேர்ந்த குறிப்பும் காண்க. பசு தருமம் பதி தருமத்துக்கு ஏதுவாகும் சிறப்பும் நோக்குக. "தண்ணீர்ப்பந்தர் சயம்பெற வைத்து நன்னீர்ச் சேவகன் ஆகிய தன்மையும்" (திருவாசகம்) என்றபடி இறைவனார் தாமே தண்ணீர்ப்பந்தல் வைத்து இவ்வறத்தின் சிறப்பினைக் காட்டிய திருவிளையாடலையும் இங்கு நினைவுகூர்க.

ஆசில் அறச்சாலை - "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்" (குறள்) என்றபடி எல்லா வகையாலும் மாசற்ற மனத்தாற் செய்யப்பட்டவை என்றதாம். மாசின் மனம் என இப்பாட்டினைத் தொடங்கிக் காட்டிய திறமும் காண்க. 35

1301. (வி - ரை) கா வளர்த்தல் - தடாகம் தொடுத்தல் - இவை மக்களுக்கேயன்றி, ஏனைப் பறவை விலங்கு முதலிய உயிர்த்தொகைகளுக்கும் வேண்டியனவாதலால் கருணையை மேற்கொண்டன. அன்றியும், ஏனை அறச்சாலைகளில் அடைவோர் அங்குள்ள பிறருதவியை நாடியே பயன்பெற வேண்டியிருத்தலின், அவ்வாறு நாடாது பயன் பெற வேண்டு மக்களும் உளராதலின் அவர்களும் அடையுமாறு கொண்ட கருணைத் திறத்தினையும் இவை உட்கொண்டன. இவை பசு தருமம். நக்கனார் திருப்புன்கூரில் "ஒரு சூழல் அவலோடும் அடுத்ததுகளை யகழ்ந்து குளந்தொட்டார்" என்றறிகின்றோம்; அது வேறு. அது பதிதருமத்தின்பாற் பட்டது. நாயனார் பின்னர்த் திருவருளா லாட்கொள்ளப்பட்ட பின்பு செய்யும் சரியையாதி கருமங்கள் பதி தருமங்களாம்.

கடப்பாடு வழுவாமல் - கடப்பாடு - நேர்மை. கொடையில் நேர்மை தவறாமை யாவது, கொடுப்போன் - கொள்வோன் - கொடைப்பொருள் - கொடைப்பயன் என்பனவற்றை உலகநிலையில் வைத்து ஆராய்ந்து நீதிநூல்களுள் விதித்தவாறு செய்யும் நேர்மை. "தொடுத்த வறுமையும் பயனுந் தூக்கிவழங் குநர்போல" (திருவாதவூ - உப. பட - 2) என்ற திருவிளையாடற் புராணக் கருத்தை நோக்குக. இயற்பகையார் மனைவியாரை ஈந்ததும், சிறுத்தொண்டனார் பிள்ளையைக் கறி சமைத்ததும், வாதவூரடிகள் அரசனது பொருளை அடியார்க்கீந்ததும் முதலியவை இப்பகுப்பினின் வேறாய்

மேம்பட்ட நிலையி லுள்ளவை. இதற்கு இவ்வாறன்றி, ஈகைநிலையில் குறைவுபடாமல் என்றும், தாம் நிற்கும் நன்னெறியில் வழுவாமல் என்றும் உரைப்பாருமுண்டு.

**மகிழ்ந்து அளித்தும்** - கொடை புரிவதில் உள்ளநிறைந்த மகிழ்ச்சியும் அளியும் வேண்டப்படுவன. அந்தக் கொடையே பயன்தருவ தென்பது நீதி. "நச்சி வந்த நல்கூர் மாந்தர்தம், விச்சையிற் படைத்த வெவ்வேறு காட்சியின், அகமலர்ந் தீவார் போல முகமலர்ந், தினிது மொழிந்தாங் குதவுதல்" (திருவிடை-மும் - கோ - 6) என்று இதன் திறத்தினைப் பட்டினத்துச் சுவாமிகள் விரித்தது காண்க.

**விருந்தளித்தல்** - தொடர்பு பற்றுது புதியராய் வருவோர்க்கு உண்டி உறையுள் முதலியன உதவிக் காத்தல். தொடர்பு பற்றுது அளித்தலால் இஃது தேச நெறி நிலையாமை கண்டு செய்யப்படும் அறங்களுள் வைக்கப்பட்டது. சுற்றந் தழுவுதலை விருந்து அளித்தல் என்று மயங்கி உலகர் வழங்குகின்றனர். "விருந்தளிக்கு மேன்மை" (1281) என்றவிடத் துரைத்தவை பார்க்க.

**நாவலர்க்கு வளம் பெருக நல்கியும்** - நாவலர்களைப் போற்றிய சிறப்புப் பழந் தமிழரிடைப் பெரிதும் விளக்கம் பெற்றிருந்தமை புறநானூறு - பத்துப்பாட்டு முதலிய பழந்தமிழ்களா லறியப்படும். வளம்பெருக என்ற குறிப்பும் ஆசிரியர் அதனைப் பாராட்டிய திறமுணர்த்திற்று. நாயனாரிடத்துக் கொடைபெற்ற நாவலர்கள் உண்மையாகவே மிகச் சிறப்புடையரே யாவர்! என்க. நாவலர்களைப் பாராட்டி நல்கிய திறத்தால் நாயனாரும் அதுபோழ்தே நாவன்மையிற் சிறந்திருத்தல் கூடு மென்பது கருதப்படும்.

**நானிலத்துள்ளோர் யாவருக்கும் தவிராத** ஈகை - குலம் - குணம் - குறி - கொள்கை முதலியவற்றை நோக்காது எல்லார்க்கும் ஒப்பத் தகுதி கண்டவழிச் செய்யப்படும் அறம் இங்குக்குறிக்கப்பட்டது. இத்திறத்தில் இறைவனடியாரிடமாக நின்று ஒழுகுதல் பதி தருமமாம் என்பது "நலமில ராக நலமதுண் டாக நாடவர் நாடறி கின்ற, குலமில ராக குலமதுண் டாகத் தவம்புரி குலச்சிறை" (புறநீர்மை - ஆலவாய்) என்ற ஆளுடைய பிள்ளையார் திருவாக்காலறியப்படும். ஈகைவினை என்ற குறிப்பும் அது.

**ஈகைவினைத் துறைநின்றார்** - "பிறர்க்குக் கொடாத பண்டங்களை யெல்லாம் நான் இழந்தேன்" என்று ஆங்கில நாட்டுக் கலைஞனொருவன் இதன் உள்ளுறையை உருசிபடக் கூறினன். இந்த அறங்கள் எல்லாம் கொடுத்தல் என்றதொரு செயலையே உள்ளீடாக உடையனவாதலின் ஈகைவினை என்றார். இங்குக் காட்டப்பட்டவை நாயனார் செய்த அறங்களுட் சிலவே. இவைபோல்வன பலவும் அவர் செய்தனர் - அவை யாவும் ஈகை வினைகள் என்ற வழியுட்பட்டனவே என்பார் **துறை** என்றார். **நின்றார்** - நிலைத்து நின்றார் என்க. புகழ் என்றும் நிற்பதாம். 36

1302. நில்லாத வுலகியல்பு கண்டு," நிலை யாவாழ்க்கை
யல்லே "னென் றறத்துறந்து, சமயங்க ளானவற்றின்
நல்லாறு தெரிந்துணர நம்பரரு ளாமையினாற்
கொல்லாமை மறைந்துறையு மமண்சமயங் குறுகுவார், ௩௭

1303. பாடலிபுத் திரமென்னும் பதியணைந்து, சமண்பள்ளி
மாடணைந்தார்; வல்லமணர் மருங்கணைந்து மற்றவர்க்கு
"வீடறியு நெறியிதுவே" யெனமெய்போற் றங்களுடன்
கூடவரு முணர்வுகொளக் குறிபலவுங் கொளுவினார். ௩௮

1302. (இ - ள்) வெளிப்படை. நிலையில்லாத உலக இயல்பினை உணர்ந்து, "நிலையாத இந்த உலக வாழ்க்கையிற் சிக்கி உழல யானல்லேன்" என்று முற்றத் துறந்தும், சமயங்களின் நல்ல நெறியினைத் தெரிந்து உணர்தற்கு நம்பராகிய சிவபெருமான் அருள் செய்யாமையினாலே, கொல்லாமை என்றதனுள் மறைந்து இருப்புக்கொண்டு உறையும் சமண சமயத்தைச் சார்பவராகி, ௩௭

1303. (இ - ள்) வெளிப்படை. பாடலிபுத்திரம் என்று சொல்லப்படும் பதியினை அணைந்து அதனுள்ளே சமணர்களது பள்ளியினிடத்துச் சென்றிருந்தனர்; அவர் பக்கத்தில் வல்லமணர்கள் கூடி, அவருக்கு "வீட்டினை அறியும் வழி இதுவேயாகும்" என்று, வெளிப்பார்வையில் மெய்போலக் காட்டித் தம்முடன் அவர் கூடவரும் உணர்ச்சி உண்டாகத் தக்கதாகப் பல குறிப்புக்களையும் அவருக்குப் பாட்டினார்கள்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1302. (வி - ரை) நில்லாத உலகியல்பு கண்டு - மருணீக்கியாரின் வாழ்க்கைத் திறத்தினைப் பல பகுதிகளாகப் பாகுபடுத்தி அறிவிக்கின்றனர் ஆசிரியர்—(1) இருணீக்கி ஒளிவிளங்கு கதிர்போல் வந்தவதரித்தார் (1283) - இளம்பருவம் பதங்கடந்தார் (1294) - மறுவொழித்த இளம்பிறைபோல் வளர்கின்றார் (1286) - சுற்றமொடும் பெருந்துயரி லழுந்தினார் (1294) - துயரொழிந்து கடன்கள் செய்கின்றார் (1295) - (திலகவதியாரது) அடியிணை மேல்விழுந்து, மொழிந்து இடரின் அழுந்தினார் (1298) - மனத்துய ரொழிந்தார் (1300) என்றவரையிற் காணப்படும் அவரது வாழ்க்கையின் இளம்பிராயங் குறித்த முதற் பகுதி. — (2) நிரம்பி என்றது இரண்டாம் பகுதி. அது அவரது வயது நிரம்பி வாழ்ந்த உலகவாழ்க்கைப் பருவம் குறித்தது. —(3) தேசநெறி நிலையாமை கண்டு அறங்கள் செய்வாராய் (1300) - கலைகளைத் தெரிந்துணர்கின்றார் (1301) என்றது அவரது வாழ்க்கைத்திறத்தின் மூன்றாவது பகுதி. இப்பகுதியில் தன்னயத்தினை உட்கொண்டு ஏனைய உலகர்போல் வாழ்ந்த இரண்டாம் பகுதியின் நிலையினின்றும் அவரது மனம் ஒரு படி மேற்செல்ல, அவர் பிற உயிர்களிடத்துக் கருணை பூண்ட உலக நிலை அறச்செயல்களைச் செய்து வாழ்ந்தனர். இதில் தேசநெறி என்றதும் தன்னயமே உட்கொண்ட உலக மனைவாழ்க்கை நிலையுடையதன்று என்பதனைக் காட்டினர் என்பது. — (4) இனி, அதனின் மேம்பட்டதாய், நில்லாத உலகியல்பு கண்டு, நிலையா வாழ்க்கை அல்லேன் என்று அறத்துறந்து...அமண் சமயம் குறுகுவார் (1302) - பாடலிபுத்திரம் அணைந்தார் (1303) - அமண் சமயத்தலைமையினின் மேம்பட்டார் (1305) என்றுசமய ஆராய்ச்சி நிலையிற் புகுந்ததும், சமணத்திற் புக்குத் தருமசேனரானதும், திருவதிகை யணைவதனுக்கு...போவதற்குத் துணிந்தெழுந்ததும் (1326) ஆகியது, மூன்றாவது பகுதியின் மேம்பட்டுச் சென்ற, சமய விசாரணை - ஆன்ம விசாரம் என்ற வகைப்படும் நான்காவது பகுதி. — (5) அதன்மேல் இறைவர் அருளிய சூலைநோயினால் சமண் ஒழிந்து திருவதிகை அடைந்து, திலகவதியம்மையார் திருநீறும் ஐந்தெழுத்தும் தந்து இறைவர் பால் வழிப்படுத்தச் சென்று, திருவீரட்டர் திருவருளால் தமிழ்மாலைகள் சாத்தும் உணர்வுபெற்று ஒழுகிச், சிவநெறியிற் சரித்து, இறுதியில் திருப்புகலூரில் "புண்ணியா உன் அடிக்கே போதுகின்றேன்" எனப் புகன்று சிவானந்த ஞான வடிவேயாகித் திருவடிக்கீழ் எய்திய வரையில் எல்லாவற்றுக்கும் மேலாகியது ஐந்தாம்பகுதி. இவ்வாறு நாயனாரது வாழ்க்கை படிப்படியாய் மேல் வளர்ந்து சென்று மனம் மொழி - (செயல்) மெய் என்ற மூன்றினும் உயர்ந்த நிலைகளைக் கண்டுகொள்க.

நில்லாத......துறந்து - உலகியல்பு - மனை - செல்வம் முதலியவற்றைக் கொண்ட உலக வாழ்க்கையும், அதனைப் பற்றுக்கோடாகக் கொண்டு மனைக்கண் நின்று

செய்த உலக தருமங்களையும் குறித்தது. இங்கு அவ்வாறு செய்த அறமும் நிலையன்று எனக்கொண்டு, மனையையும் துறந்து, ஆன்ம விசாரணையிற் புகுந்து, முழுத்துறவு பூண்டனர் என்க. நிலையா வாழ்க்கை அல்லேன் - நிலையுதலில்லாத உலகவாழ்விற் பயனில்லை; அதில் நின்று நான் வாழ்வே னல்லேன் என்ற மனத் துணிவே துறவு பூண்டதற்குக் காரணமாகியது. அற - முற்றும். பொருட் சார்பாகிய மனை - செல்வம் முதலியவற்றையும், உலக உடற்சார்பாகிய தமக்கையார் முதலிய சுற்றத்தையும் என்க. ஆயின் இதன் பின்னர்ப் "பண்டையுற வுணர்ந்தார்க்குத் திலகவதி யாருளராக் கொண்டு" (1320) என்ற விடத்து இத்துறவு நிலை மாறியதன் கொள்கை என்னை? எனின், அஃது ஆண்டு விரிக்கப்படும்.

சமயங்கள்......அருளாமையினால்-ஆன்ம விசாரணையிற் புகுவது சமயவாழ்க்கையின் தொடக்கம். சமயங்கள் பலப்பலவாக விரிவன. அவ்வாறு உள்ளது இறைவன் றிருவுள்ளமுமாம். "சமயகோ டிகளெலாந் தந்தெய்வ மெந்தெய்வமென், றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவும்" என்றனர் தாயுமானார். இவற்றின் நல்லாறு என்றது, "இஃது ஒருபடியின் உண்மை; இஃது அதன் அடுத்தபடி; இஃது அதனினும் மேற்பட்ட மெய்; இஃது முழு உண்மை" என்று படிமுறையில் வைத்து உண்மையை நிறுத்து உணர்தல். தெரிந்து - உணர - என்றது காண்க. தெரிதல் - ஒப்புநாடி ஆராய்தல். உணர்தல் - ஆராய்ச்சியின் பயனாக உண்மை நிலைகண்டு பற்றுதல். இவை அறிவும் அனுபவமும் எனவும், ஞானமும் போதமும் எனவும் படும்.

நம்பர் அருளாமையினால் - உயிர்களுக்கு அவ்வவற்றின் பக்குவபேதம் நோக்கியே அறிவு விளக்கம் தரப்படுதலால் சமயங்களின் நன்மைப் படிமுறையை நாடியறியும் அறிவு, உரிய காலத்தில் வருவதன்றி எல்லார்க்கும் ஒரு படித்தாய் ஒரு காலத்து நிகழாது. ஒரு தாய் பல குழந்தைகட்கும், ஓர் ஆசிரியன் பல மாணாக்கர்க்கும் ஊட்டுவதும் உணர்த்துவதும் போல என்க.

இங்குச் சைவ சமயத்தின் நல்லாற்றினை நாயனாருக்கு, இனி, மேல் உரிய முறையாலே சூலையினுருவில் நம்பர் அருள நிற்கும் வரலாறு பின்னர்க் காண்க. இப்போது அருளாமை, முற்பிறவித் தவக்குறைவோ? பக்குவக்குறைவோ? கன்ம பலனோ? கீழ் நிலை தெரிந்துவந்து பரபக்க நிக்கிரகம்செய்ய ஏதுவாதல் காரணமோ? அறியப்படாதென்க. "ஆட்பா லவர்க் கருளும் வண்ணமும்...கேட்பான் புகி லளவில்லை கிளக்க வேண்டா" (ஆளுடைய பிள்ளையார்).

கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம் - கொல்லாமை என்ற அறத்தின் போர்வையின் கீழே தமது ஏனைக் குறைபாடுகளையும் கொலையினையும் ஒளித்து மறைவொழுக்கம் பூண்ட சமணம் என்னும் சமயம் என்க. இங்குக் கூறியது இடைக் காலச் சமண சமயநிலை என்றும் தலைக்காலச் சமணநிலை மிக உயர்வாகிய தொன்றென்றும் கூறியும், அது சைவ சமயப் பெருநிலையோ டொப்பிடத்தக்க தென்ற கருத்துப்பட உரைத்தும், இங்கு ஆராய்ச்சி செய்வாருமுளர். இடைக்காலச் சமணமோ அன்றித் தலைக்காலச் சமணமோ எதுவாயினும் ஆகுக. சமணம் என்ற சமயம் கொல்லாமை எனும் ஒன்றே அறமாவதென்று கூறி அதனை முற்படக் காட்டிக்கொண்டு நிற்பதென்பது மறுக்கொணாததாகும். அவ்வாறு கூறும் சமயம் அடுபாறை கிடத்தல், மயிர் பறித்தல் முதலிய மெய்வருத்தும் விரத நோன்புகளையும், உயிர் கழிப்பதனையும் பொருளெனக் கொண்டொழுகுதல் முன் கூறிய அதன் அடிக் கொள்கைக்கு மாறுபட்டது என்பது தேற்றம். அன்றியும், தம் சமயத்தில் மேம்பட்ட தரும சேனராகக் கொண்டொழுகிய நாயனாரை அவர்கள் செய்த வஞ்சனையும், கொடுமைகளும், ஆளுடைய பிள்ளையாரது திருமடத்தில் நாடித் தீயிட்டது முதலியனவும் அந்த

அறத்தின் கொள்கைக்கு முரண்பட்டன வென்பது வெள்ளிடைமலே. இன்னும், நமிநந்தியடிகள் புராணம், தண்டியடிகள் புராணம் முதலியவற்றாலும், தேவாரத் திருவாக்குக்களாலும், மூந்து நூல்களாலும், நாட்டு நடப்புச் சரித்திர வரலாறுகளாலும் அறியப்படுமாறு சைவ முதலாகிய ஏனைச்சமயங்களைப் பொறையின்றி அவர்கள் அலைத்து அழிக்க முயன்ற செய்திகள் அவர்கள் கொண்ட அகிம்சை - கொல்லாமை - என்ற அறக்கொள்கைக்கு முற்றும் மாறுபட்டவை என்பதும் மறுக்கமுடியாத உண்மை. மேலும், கொலையும் அறமாகும் இடங்களும் உண்டு என்பது நீதி நூல்களாலும், உலக நூல்களாலும், சைவ நூல்களாலும் வகுத்துக் காட்டப்படுவதுடன், அத்தகைய வரலாறுகள் பல இப்புராண சரிதங்களுள்ளும் காணப்படுகின்றன. அவ்வுண்மைகளையும் சமண சமயம் அறியாது. கொலையாகிய பெருந் தீச்செயலிலும் துணியும் அவர், கொல்லாமை என்ற அறத்தின்கீழ் மறைந்து அல்லவை செய்தனர் என்பது இங்குக் கருதப்பட்டதென்க.

துறவு பூண்டு சமய விசாரணை தொடர்ந்த நாயனாருக்குச் சமணத்திற் சிறப்பாய் எடுத்துக் கூறப்பட்ட கொல்லாமையே மனங்கவர் பொருளாய் அவரை ஈர்க்க, அவர் அதனைக் குறுகுவாராயினர் என்று குறிப்பாலுணர்த்துவார் இங்கு அச்சமய நிலையினை அவ்வியல்பினாற் கூறினார். குறுகுதற்குக் காரணங் குறித்தபடி.

குறுகுவார் - சமண்பள்ளி மாடு அணைந்தார் என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. குறுகுவார் - தமது முந்தையோரின் சைவச் சார்பாகிய விரிந்த நிலையினின்றும் குறுகிச் செல்வாராயினர் என்ற குறிப்புப்படக் குறுகுவார் என்றார். குறுகுதல் - விரிதலுக்கு எதிர்மறை.

தெரிந் துணர்ந்து—மறைத்துறையும்—மறந்துறையும்—குறுகினார்—என்பனவும் பாடங்கள். 37

1303. (வி - ரை) பாடலிபுத்திர மென்னும் பதி-இப்போது இது அழிந்துபட்டது. திருப்பாதிரிப்புலியூர் என்னும் சிவத்தலம் அதன் பக்கத்திருந்தது. பாடலம்-பாதிரி மரம். தல மரத்தினால் வந்த பெயர். முன்னாளில் அது சமண் சார்புடைய அரசரது தலைநகரமாயும் பெருநகரமாயும் இருந்தது. அதனுள் சமணர் பள்ளி - பாழி - முதலியன சிறந்திருந்தன. நாயனாரால் சைவ மேன்மை தெரிந்தபின் அரசன் குணபரன் அவற்றை முற்றும் இடித்துக் கொணர்ந்து குணபரவீச்சரக் கோயிலைக் கட்டினான் என்பது பின்னர்க் காண்க. பாடலிபுத்திரம் - ஆதி புத்தன் காலத்தின்பின் அணிமையில் வாழ்ந்த அசோக மன்னன் பாடலிபுத்திரம் என்னும் பெயர் கொண்ட தலைநகரில் ஆண்டனன். அப்பெயரால் இங்கும் சமணர் தலைநகரங் கண்டனர் என்பது சரிதம்.

சமண் பள்ளி மாடு அணைந்தார் - சமணர் கோயிலினைச் சேர்ந்தனர். வல்அபணர் - வலிமை - பொய்யை மெய்போற் காட்டிப் போதிக்கும் வல்லமை. "மொழி வல்லன சொல்லிய போதும்" - (தக்கராகம் - பனையூர் - 10) ஆளுடைய பிள்ளையார் மருங்கு - மருணீக்கியாரது பக்கத்தில்.

வீடு அறியும் நெறி இதுவே - இவை சமணர் மருணீக்கியாருக்குச் சொல்லிய மொழிகளின் முடிபும் துணிபுமாம். இது - சமண சமய நெறி.

மெய்போல்-போல் என்றதனால் அஃது மெய்யின் போலியேயன்றி மெய்யன்று என்பது. போலியாதல் கொல்லாமை என்ற அறத்தினை ஒருவாறு மேற்காட்டி நிற்றல். "அறவுரைகாட்டி" என்று நாயனார் பலவிடத்துங் கூறுதல் காண்க "அத்தி நாத்தி" என்ற அவர்களது மந்திரம் அவரது கொள்கை மெய்போன்றதன்றி மெய்யன்று எனக்காட்டும். "தெளியா தொருபொருளே பொய்யு மெய்யு ம

மென்னும் புரைநெறியார்" என்றதும், "பொய்பொரு ளாகக் கொண்டான்" (திருஞான - புரா - 681) என்று ஆசிரியர் கூறுதலும் காண்க.

தங்களுடன் கூடவரும் உணர்வு கொள - அவரது முன்னை நிலையைவிட்டுத் தம்முடன் சேர்ந்து கொள்வதற்குரிய உணர்ச்சி கொள்ளும்படி. உணர்வுகொள - இற்றை நாளில் கிறித்துவ முதலிய பரசமயம் புகுவார், சோறு - செல்வம் - பெண் முதலிய பல மயக்கங்களினுட்பட்டுச் செல்லக் காண்கிறோம். மருணீக்கியார் சமணம் புகுந்தது அவ்வாறொன்றுமின்றி, அச்சமயம் மெய் என்ற உணர்வு கொண்டதனாலே ஆயிற்று என்பது. "அமணொடு இசைவித்து," "கையர் பொய்யெல்லா மெய்யென்று கருதிப்புக்கு", "சமணரொடே பலபல கால மெல்லாம் சொல்லிய சொலவு செய்தேன்", "சமணே நின்றார் சொற்கேட்டு உடனாகி" என்பனவாதி நாயனார் தேவாரங்கள் இதற்கு அகச்சான்று பகர்கின்றன. இவ்வாறு மெய்யின் போலியை மெய்யென்று மருணீக்கியார் கொண்டு சமண்புகுந்ததற்கு நம்பர் அருளாமையே காரணம் என்பது முன்னுரைக்கப்பட்டது.

தறிபலவும் கோளுவினார் - போலியை மெய்யென்று கொள்வதற்கேற்ற குறிப்பு. "பாறு புத்தருந் தவமணி சமணரும் பலநாட், கூறிவைத்ததோர் குறியினைப் பிழையெனக் கொண்டு" (பிள்ளையார் - காந்தாரம் - தேவூர் - 10) என்றது காண்க. தறி என்பது இங்குச் சமணர் புத்தர்களது சமயக்கொள்கைப் பகுதிகளுள் ஒன்று என்று கொள்வாருமுண்டு. கோளுவுதல் - கொள்ளச் செய்தல். மனத்தினுட் செலுத்துதல்.

வீடடையும்—கூடிவரும்—என்பனவும் பாடங்கள்.　38

1304. அங்கவரு மமண்சமயத் தருங்கலைநூ லானவெலாம்
பொங்குமுணர் வுறப்பயின்றே, யந்நெறியிற் புலன்சிறப்பத்,
துங்கமுழு வுடற்சமணர் சூழ்ந்துமகிழ் வாரவர்க்குத்
தங்களின்மே லாந்தரும சேனரெனும் பெயர்கொடுத்தார்.　௩௯

(இ - ள்) வெளிப்படை. அங்கு மருணீக்கியாரும் சமண சமயத்தின் அருங்கலை நூல்களாயின எல்லாவற்றையும் பொங்கி எழும் உணர்ச்சியினுட்படப் பயின்றவராயும் அந்நெறியின் அறிவிற் சிறந்தவராயும் விளங்கவே, வெற்றரையுடைய பருத்த உடம்புடையராகிய அச்சமணர்கள் அவரைச் சூழ்ந்து மகிழ்வாராகி, அவருக்குத் தங்களில் மேம்பட்ட தருமசேனர் என்ற பெயரினைக் கொடுத்தனர்.

(வி - ரை) அமண் சமயத்து அருங்கலை நூல் - சமணர் கலைநூல் பலவற்றிலும் வல்லவர். அந்நாளில் அவர்கள் தமது சமய நூல்களையும், மற்றும் பல மந்திரம் முதலிய கலைஞான நூல்களையும் இயற்றி அவற்றால் உலகினைத் தம் வயப்படுத்தினர் என்பது ஆளுடையபிள்ளையார் சரித முதலியவற்றாலும், நாட்டு நடப்புச் சரிதங்களாலும் நன்கறியப்படும். இந்நாளில் கிறித்துவ மதத்தினர் செய்வதுபோலக், கலைஞான வித்தைத் திறத்தால் அவர் சமயம் பரப்பும் தந்திரமும் வல்லவராயினர் என்பதும் கருதலாம். "ஞமண ஞாஞண ஞாண ஞோணமென் றோதி" என்பன முதலாக வரும் வரும் நம்பிகள் திருவாக்குக்களால் நாயனார் காலத்துக்குப் பல நூறாண்டுகள் கழிந்த பிற்றை நாளிலும் அவர்களது வலிமைச்செயல் காணவுள்ளது. அதற்குப் பன்னூறு ஆண்டுகள் கழிந்த பிற்றைநாள் ஆசிரியர் காலத்திலும் அந்நூல்களாற் பல அரசரையும் பிறரையும் வயப்படுத்தித் தம்முள் அகப்படுத்து வீழ்த்தனர் என்பது திருத்தொண்டர் புராண வரலாற்றானறியப்படும். ஏன்? பல்லாயிரம் ஆண்டுகள் கழிந்துபோன இந்

நாளிலும் அவர்தம் நூல்கள் பலரிடையும் பெருமைபெற்று விளங்கும் ஆற்றலினையும் காண்போமாதல், அருங்கலை நூல் என்பதன் உண்மை நன்குணரப்படும். இவ்வாறு அரிய கலை நூல்களாலும், கலைஞானப் பயிற்சியாலுமே அவர்கள் தமது சமயத்தைப் பரவச்செய்து பலப்படுத்திக் கொண்டனர் என்பதற்கு நாட்டுச் சரித்திரம் பலவாற் றானும் சான்று பகரும். மந்திர விஞ்சைச் சக்தியில் அவர்கள் வல்லவராயினர் என் பதனை "வெந்த ழற்பட விஞ்சைமந் திரத்தொழில் விளைத்தால்" (திருஞான - புரா - 689) "சமண்சமயச் சாதகத்தால்" (1367), "மந்திரவ யத்தினில் விடத்தீர், தஞ்ச முடை மந்திரத்தால்" (1372), "மந்திர சாதக சாத்த னொழித்திட" (1373), "நங்கள் சமயத்தி னின்றே நாடிய முட்டுதலால்" (1386) முதலியவற்றால் காண்க.

பொங்கும் உணர்வு உற - மேன்மேல் எழுகின்ற சக்தியிற் பெருக்க. பொங்குதல் சமயவிசாரஞ் செய்தலில் மேன்மேல் ஆர்வம் கொள்ளுதல். ஞாலம் - பெரிது - ஞாலத் தாற் பெரியது. முழுவுடல் - ஒரு பாகமும் மறைக்கப்படாது முழுதும் வெளித்தோற் றப்படும் உடம்பு. உடையில்லாத வெற்றுடல்.

மகிழ்வார் - கொடுத்தார் - என்று கூட்டுக. மகிழ்வாராகி. எதிர்காலக் குறிப்பு முற்றெச்சம்.

மேலாம் தருமசேனர் எனும் பேர் - தருமசேனர் - என்பது சமணர்களிடை வழங்கிய பெருநிலை குறிக்கும் பெயர்களுள் ஒன்று. சந்திசேனர் முதலியவை அவர் கள் தாங்கிய மரபுப் பட்டப்பெயர்கள். "சந்து சேனனு மிந்து சேனனுந் தரும சேனனுங் கருமைசேர் கந்து சேனனுங் கனக சேனனு முதலதாய பெயர்கொளா" (கொல்லி - திருவாலவாய் - 4) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரம் அவர்களது வழக்குக்களை நேரிற் கண்டு காட்டுவதாம். மருணீக்கியார் சமண சமயம் புகுந்து அவர் குழுவில் தருமசேனர் என்ற பெயருடன் விளங்கினார் என்று அவர் சரிதம் பற்றிய தருமசேன புராணம் என்ற சமண நூலும் கூறும்.

தங்களின் மேல் ஆம் - இனித் தம்மைவிட மேம்பட்டவராக ஆகும் என்ற குறிப்பும் காண்க. பெயர் - நாயனார்க்கு மருணீக்கியார் என்பது பெற்றோரிட்ட பிள்ளைப் பெயர்; தருமசேனர் - சமணரிட்ட பெயர். திருநாவுக்கரசு - இறைவர் சூட்டிய பெயர்; அப்பர் - ஆளுடைய பிள்ளையார் இட்டழைத்த பெயர்; வாகீசர் - முன்னைப்பிறவியின் பெயர்; என்று இவ்வாறு பல பெயர்களும் கண்டுகொள்க.

பெயர் கொடுத்தார் - சமய நிலையில் புகும்போது அதற்கேற்றபடி முன்னைப் பெயரைமாற்றி வேறு பெயர் கொடுப்பது சமய மரபு. சைவத் திறத்தில் இம் மரபு தொன்றுதொட்டுத் தீட்சாநாமம் என்று வழங்கப்பெறும். பிறரும் அதனைக் கைக்கொண்டனர் போலும். இவ்வழக்குக் கிறித்தவர்களுள் வழங்குவதும் காண்க.

துங்கமுறும் — என்பதும் பாடம். 39

1305. அத்துறையின் மீக்கூரு மமைதியினா லவரிடத்திற்
சித்தநிலை யறியாத தேரரையும் வாதின்கண்
உய்த்தவுணர் வினில்வென்றே யுலகின்க ணொளியுடைய
வித்தகரா யமண்சமயத் தலைமையினின் மேம்பட்டார். ௪௦

(இ - ள்) வெளிப்படை. அந்தத்துறையில் மிக்குப் பெருகிய சிறப்பினாலே உலக உண்மையில் சித்தநிலை யறியாத புத்தர்களையும் வாதினில் ஆராய்ந்து செலுத்திய உணர்வினாலே வென்று, உலகத்தில் அறிவொளிபெற்ற பெரியோராய்ச் சமண சமயத் தலைமையில் மேம்பட்டனர்.

(வி - ரை) அத்துறை - *சமணசமயத் துறை.* மீக்கூரும் அமைதி - *மேற்படும் சிறப்பு.* மீக்கூர்தல் - *மேற்படுதல்.*

அகலிடத்தில் சித்தநிலை அறியாத தேரர் - அகலிடம் - *உலக உண்மைகாணும் நிலை - தத்துவக் கூட்டமாகிய அகன்ற படிக்கிரமத்தில்.* சித்தநிலை - *சித்தமும் சித்தப் பகுதியுமாகிய உட்கரணங்களின் கூட்டமே உயிர் என்பது புத்தர் மதம். உயிரின் உண்மைநிலையை அறியாத தேரர் என்க. அன்றியும் அவர்கள் சித்தத்துள் நிலையராகிய கடவுளின் கொள்கையுமிலாதவர். ஆதலின் இவ்வாறு கூறினார்.* சித்தநிலை - *உறுதிநிலை என்றுரைப்பாருமுண்டு. சித்தர்நிலை சமணர்களில் மிக உயர்ந்த நிலை எனப்படுதலால் இங்குச் சித்தர்நிலை என்ற பொருளில் வந்தது என்று கூறும் ஆராய்ச்சியாளருமுண்டு.*

வாதின்கண் உய்த்த உணர்வு - *வாதம் செய்வதனில் செலுத்திய உணர்ச்சி. தமது சமண சமயத்தின் உயர்வும், அதனை நோக்கப் புத்த சமயத்தின் தாழ்வும் உள்ளத்தில் வைத்து உணர்ந்த மன எழுச்சியினால்.* உய்த்துணர் *வென்பது* உய்த்த *வுணர் வென வந்ததெனக் கொண்டு, உய்த்துணர்வினால் என்று கூறலுமாம்.*

ஒளி உடைய வித்தகர் - ஒளி - *அறிவொளி.* வித்தகம் - *புகழின் மேன்மை.* வித்தகம் - *ஞானம் ; அந்நெறிக்குரிய ஞானங் குறித்தது என்றலுமாம். "அந்நெறியின் மிக்கார்"* (1306) *என்பது காண்க.* தேரரையும் - "*அந்நெறியிற்புலன் சிறந்ததனோடு*" (1304) *புத்தரையும் வென்று என இறந்தது தழுவிய எச்சவும்மை.*

சித்தநெறி—சித்தநிலை நெறியறியாத்—*என்பனவும் பாடங்கள்.* 40

வேறு - (*தரவு கொச்சகம்*)

1306. *அந்நெறியின் மிக்கா ரவரொழுக,* வான்றவச்
சேந்நெறியின் வைகுந் திலகவதியார் *தாமுந்*
தொன்னெறியின் சுற்றத் தொடர்பொழியத் *தூயசிவ*
நன்னெறியே சேர்வதற்கு *நாதன்று ணண்ணுவார்,* சக

1307. பேரா*த* பாசப் பிணிப்பொழியப் பிஞ்ஞகன்பால்
ஆராத வன்புபெற வாதரித்த வம்மடவார்
*நீரார் கெடிலவட நீள்கரையி னீடுபெருஞ்*
*சீரார்* திருவதிகை வீரட்டானஞ் சேர்ந்தார். சஉ

1306. (இ - ள்) *வெளிப்படை. அந்த நெறியில் மேம்பட்டவராய் அவர் ஒழுக, அமைந்த தவமாகிய செந்நெறியில் நிற்கும் திலகவதியம்மையாரும் பழமையாகிய சுற்றத்தின் தொடர்பும் நீங்கத், தூய்மைதரும் சிவ நன்னெறியினையே சேர்வதற்குச் சிவபெருமானது திருத்தாள்களை வழிபடுவாராகி,* சக

1307. (இ - ள்) *வெளிப்படை. பெயராத பாசக்கட்டு நீங்கும்படி சிவபெருமானிடத்தே ஆசைப்பட்ட அந்த அம்மையார், நீர்மையால் நிறைந்த திருக்கெடிலத்தின் நீண்ட வடகரையில் நீடுகின்ற பெருஞ்சிறப்பு மிகுந்த திருவதிகை வீரட்டானத்தினைச் சேர்ந்தனர்.* சஉ

*இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.*

1306. (வி - ரை) அந்நெறி - *முன்சொன்ன அமண் சமய நெறி.* திருவருட்*குச் சேயராய் அயலுமாய்ப் புன்னெறியின் நின்ற அவர் திறங் குறிப்பதற்கும், அங்கு நின்றும் நமது கருத்தை இங்கு அம்மையாரது சரிதநிகழ்ச்சியில் திருப்புவதற்கும் இவ்வாறு சேய்மைச்சுட்டினாற் கூறினார்.*

மிக்கார் - குறிப்பு முற்றெச்சம். அவர் - தருமசேனர். அவர் என்ற சேய்மைச் சுட்டும் முன்கூறிய கருத்துப் பற்றியது. "ஆயநாள் விளையாட்டியலால்" (1292) "ஈங்கிவன் குறித்த கொள்கை யிதுவினி யிவனுக்காக...டன்பால் ஆக்குகின் றுள்கள் போற்றும்" (காரைக்கால் - புரா 49), "மூன்று லகினிலும் கலியாணம் இத்த மனைமற் றந்தமனை யிழந்தா ரழுகை" (வெள் - சருக் - 6) முதலியவை காண்க.

ஆன்றதவச் செந்நெறி - ஆன்ற - பொருந்திய. அமைப்பட்ட சான்றோராசாரத்தாலும், தொன்றுதொட்டுவரும் மரபாலும், நூல்களாலும் விதிக்கப்பட்ட. இங்குக்குறித்த நெறி "அம்பொன் மணிநூல் தாங்காது அனைத்துயிர்க்கு மருள் தாங்கி இம்பர்மனைத் தவம் புரிந்து" (1299) என்று கூறிய தவநெறி. இது மனையின்கண் நின்று செய்யப்பட்டது. இது வேறு; இனி, அம்மையார் பாசம் விடுத்தொழியத் திருவதிகை சேர்ந்து செய்யும் சிவநெறித்தவம் வேறு. அது 1309ல் விரிக்கப்படுவது.

திலகவதியார் தாழும் - தாழும் - மருணீக்கியார் மனையையும் ஊரையும் துறந்து சென்றதுடன் இவரும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

தொன்னெறியின் சுற்றத்தொடர்பு ஒரீஇ - சுற்றத் தொடர்பு - பிறவிக் கேதுவாகிய பாசங்கள். ஈண்டுப் பண்டைக்காலமுதல் வரும் சுற்றங்களாகிய தொடர்பு என்றது "தம்பியா ருளராக வேண்டுமென வைத்ததனால்" என (1299)ல் குறிக்கப்பட்டது. தம்பியாரின் நலம்பற்றிய தொடர்பு. சுற்றம் - சுற்றத் தம்பியார் என்ற அளவில் அமைந்தது. தாம் கொண்ட கணவனுடன் செல்லும் நன்மை நெறியினையும் விலக்கி உயிர் தாங்கச்செய்த வலியுடைமைபற்றி இதனை இவ்வாறு விதந்து கூறினர். தொடர்பு - தொடர்பும். உயர்வு சிறப்பும்மை தொக்கது. யாவராலும் கடத்தற்கரிய இதன் வலிமைகாட்டப், பின்னரும் "பேராத பாசப்பிணிப்பு" என்று மேல்வரும் பாட்டில் இதனை மேலும் சிறப்பித்தார். ஆயின், "பின்பிறந்தார், சென்றுறுதி வினைமுந்தப் பரசமயங் குறித்ததற்கு மூனுமனக் கவலையினால் முற்றவருந் துயருழந்து" (1310) என்றும், "எடுத்தாள வேண்டுமெனப் பலமுறையும் விண்ணப்பம் செய்தனரால்" (1311) என்றும், வரும் நிகழ்ச்சிகள் இதற்கு மாறுபடுவனவோ? எனின், மாறுபடா. அது பின்னர் விளக்கப்படும். சுற்றத் தொடர்பு - தந்தை, தாய், கணவர், உலகம் எனவரும் தொடர்ச்சிக ளெல்லாம் இதனுள் அடங்கும்.

தூய சிவ நன்னெறி - நன்னெறி - ஞானம். இங்கு அம்மையார் நின்றது தவச் செந்நெறியே யாயினும் சுற்றத் தொடர்பாகிய பாசச்சார்பு முதலியவற்றின் தொடர்ச்சி அருமையின் அது தூய்மை செய்து பிறப்பறுப்பதன்று; பிறப்புக் கேதுவாவது. உலகத் தொடர்பு முற்றும் அறுவித்துப் பிறவி அறுக்க வல்லது சிவநெறியே என்றது குறிப்பு. தூய்மை - என்றதனால் பாசம்போக்கித் தூயதாக்கித் தரும் சாதனமும், நன்மை - என்றதனால் சிவத்தைப் பெறுவிக்கும் பயனும் குறிக்கப்பட்டன. சிவநன்னெறி - சிவனைப் பெறுதற்குரிய ஞானநெறி. "முக்கணான் நன்னெறியே சேர்ந்த திண்ணமே" (தேவா). நெறி - ஞானம் என்பர் சிவஞான முனிவர்.

நன்னெறியே சேர்வதற்கு நாதன் தாள் நண்ணுவார் - ஆயின், நெறி சேர்வதற்கும் அவன் அருள்வேண்டும். "அவனரு ளாலே அவன்றாள் வணங்கி" என்பது திருவாசகம். தாள் - அருள் நிறைவு. நன்னெறி - சன்மார்க்கம். நன்மைகளெல்லாவற்றினும் சிறந்தது வீடுபேறு; ஆதலின் அதனை அடைதற்குரிய நெறி நன்னெறி எனப்பட்டது. நண்ணுதல் - இங்கு வழிபடுதல் என்ற பொருளில் வந்தது.

நண்ணுவார் - நண்ணுவாராகி. எதிர்காலத் தெரிநிலைவினை முற்றெச்சம். நண்ணுவார் - சேர்ந்தார் - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. மருணீக்கியார் - குறுகு

வார் - (1302) பள்ளி மாடணைந்தார் (1303) என்றதனோடு, இங்கு நண்ணுவார் - வீரட்டானஞ் சேர்ந்தார் (1307) என்பதனை ஒப்பிட்டுக் கருத்து நயங்களை உய்த்துணர்க.

நாதனருள்—என்பதும் பாடம். 41

1307. (வி - ரை) பேராத பாசப் பிணிப்பு ஒழிய - பிறவிக்கேதுவாகிய கட்டுக்கள் நீங்க. பேராத - எளிதில் நீங்காத. சிவன்பா லன்பினாலன்றி வேறெவ்வாற்றானும் பெயர்க்கமுடியாத என்ற பொருளில் வந்தது.

பிஞ்ஞகன்பால் ஆராத அன்புபெற - பிறவிக் கட்டு நீங்குதற்குச் சாதனமாகிய அன்பு. இது சாதன வியலுள் வைத்து ஞான சாத்திரங்களில் விரிக்கப்படும்.

ஆராத...அம்மடவார் - அகரத்தைப் பற்றிவந்த முற்றுமோனை. அகரம்போன்ற சிவனுடைய சம்பந்தம் குறித்தது.

ஆராத - எப்போதும் நிறைவு பெறாத - போதும் என்ற நிலை வராத. ஆர்தல் - நிறைதல். "ஆரா வியற்கையவா" - குறள்.

நீரார் கெடிலம் - தூய்மை செய்யும் நீர்மை நிறையப்பெற்ற என்பதாம். நீர் - நீர்மை. "தென்றிசையிற் கங்கையெனுந் திருக்கெடிலம்" (235) பார்க்க. திண்ணன் கெடிலப்புனல், தத்தும் - தடமார் - நலமார் - நிரந்த - உலவு - ஓடும் - தாழும் - நிரம்பு - கெடிலப்புனல் என்று இதன் நீர்ச்சிறப்பை நாயனாரும், "கெண்டைப் பிறழ்தெண்ணீர்" (தக்கராகம்) என்று பிள்ளையாரும், "இரும்புனல்வந் தெறிகெடில" என்று நம்பிகளும் (திருவதிகை - காந்தாரம்) விதந்து கூறினமையால் அந்நீரினையுடைய என்றதும் குறிப்பு.

நீடு பெரும் சீரார் திருவதிகை - நீடுதல் நிலைத்திருத்தல்; பெருமை - வலிய திரிபுரங்களையும் எரித்த சரித நிகழ்ச்சிக்குரிய இடமாதல். சீர் - அடைந்தோரது மும்மலமும் சிதைக்கும் சிறப்புக்கிடனாதல். "திருவாம் அதிகை" (தக்கராகம்) என்பது பிள்ளையார் தேவாரம்.

திருவதிகை வீரட்டானம்-சிவபெருமான் வீரஞ்செய்த எட்டுத்தலங்களுள் ஒன்று. 234ல் உரைத்தவை பார்க்க. அத்தலங்களாவன : திருக்கண்டியூர் - திருக்கோவலூர் - திருவதிகை - திருப்பறியல் - திருவிற்குடி - திருவழுவூர் - திருக்குறுக்கை - திருக்கடவூர் என்பன. இத்தலங்களைப் "பூமன் சிரங்கண்டி" என்ற திருப்பாட்டு அவ்வவற்றிற் செய்யப்பட்ட வீரங்களுடன் முறைப்படுத்திக் கூறுதல் காண்க. வீரட்டானம் - வீ - ஞானம்; ரம் - சம்பந்தம்; ஞானசம்பந்தமுள்ள இடம் என்றலுமாம்.

பிணிப்பு ஒழிய - அன்புபெற - வீரட்டானம் சேர்ந்தார் - திருவாமூரில் இருந்தபடியே சாதனமாகிய அன்பினைப்பெற்றுப் பிணிப்பு ஒழியலாமே? எனின், அங்கு மனையும், முன்னை நினைவுகளாகிய பிணிப்புக்களும் ஒழியா; ஆதலின் ஒன்றியிருந்து சிவனையே நினைந்து பணிசெய்ய வேண்டி அம்மையார் திருவதிகை சேர்ந்தனர் என்க. அன்றியும், நீரார் - என்றதனால் தீர்த்தச்சிறப்பும், அதிகை - என்றதனால் தலச்சிறப்பும், வீரட்டானம் - என்றதனால் மூர்த்திச் சிறப்பும் விளங்குகின்ற திருத்தலம் சார்தல் ஏற்ற சாதனமாயிற்று என்பதும் குறித்தபடி. "மூர்த்திதலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர், வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" (தாயுமானார்) என்றதும் கருதுக. அமர்நீதி நாயனார் தமது தலமாகிய பழையாறையினை விட்டுத் திருநல்லூரில் சேர்ந்து திருமடம் அமைத்து வழிப்பட்டுப் பேறடைந்த செய்தியும், அவ்வாறு உள்ள பிறவும் இங்கு நினைவு கூர்தற்பாலன.

பிணியொழிய—நீராரும்—சீராரும்—என்பனவும் பாடங்கள். 42

1308. சென்றுதிரு வீரட்டா னத்திருந்த செம்பவளக்
குன்றை யடிபணிந்து கோதில் சிவசின்னம்
அன்று முதற்றாங்கி யார்வமுறத் தங்கையாற்
றுன்று திருப்பணிகள் செய்யத் தொடங்கினார். சஅ

(இ - ள்) வெளிப்படை. சென்று, திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளி யிருந்த செம்பவளக்குன்று போன்று விளங்கும் வீரட்டானேசுவரரை அடிபணிந்து, குற்றமில்லையாகச் செய்யும் சிவசின்னங்களை அன்றுமுதல் தாங்கிக்கொண்டு, அன்பு பொருந்தத் தமது கையினால் பொருந்திய திருப்பணிகளைச் செய்யத் தொடங்கினார்.

(வி - ரை) சென்று - திருவாமூரினின்றும் போந்து.

செம்பவளக்குன்று - வீரட்டானேசுவரர். உருவம்பற்றி எழுந்த உவமையை உள்ளுறுத்த உருவகம். "செம்பவள வெரிபோன் மேனிப்பிரான்" (திருவங்கமாலை), "பொடியணிபவள மேனிப் புரிசடைப் புராண!" (922), "தெள்ளு பேரொளிப் பவள வெற்பென" (திருநா. புரா - 379 = 1644) முதலியவை காண்க. சிவபெருமா "சுத்தமார் பளிங்கின் பெருமலை" போல வுள்ளவர் என்பவாயினும், மாரங்காரத்தி போது கொண்ட நிறம் பவளநிறமென்பர். அன்றியும் "நிறங்களோர் குங்குமத்தி மேனி யவனிறமே யென்கின் றுளால்" (காந்தாரம் - கழிப்பாலை - 3) என்ற அப்ப சுவாமிகள் தேவாரக்கருத்துட் கொண்ட காரணமுமாம். இரக்தத்துக்கு நிறம் சிவ பென்பர். வீரட்டனேசுவரர் திருமேனி மிக உன்னதமாய்ச் செவ்வொளியுடன் விள குவதும் உட்கொள்க.

கோது இல் சிவசின்னம் அன்றுமுதல் தாங்கி - கோது இல் - குற்றங்களை இல்லை யாகச் செய்யும். விதிப்படி அமைந்த என்றலுமாம். சிவசின்னம் - திருநீறும் கண் டிகையுமாம். அன்றுமுதல் தாங்கி - அம்பொன்மணி நூல்தாங்காது - அருள்தாங்கி மனைத்தவம் புரிந்து" (1299) என்ற நிலையிலும் அம்மையார் சிவசின்னங்களைத் தாங்கி யிருப்பரேனும் அங்குச் சிறப்பாகக் கொண்டவை காவலை நினைந்து செய்யும் கைமை நோன்பும், அக்காலங்கழிக்கும் பொருட்டு ஏனை உயிர்களை நோக்கிச் செய்யும் பசுதரும களுமேயாம். இங்கு அவை யாவும் ஒழியச் சிவன்பாலன்பு ஒன்றினையே உட்கொண் சிவதருமங்களே மேற்கொள்ளப்பட்டன; ஆதலின் அவை சிறப்பாகத் தாங்கப்பட்டன குறிக்க அன்றுமுதற்றாங்கி என்று சிறப்பித்தனர். முதல் - முதன்மையாக என்ற குறி பும் காண்க. உடலுக்கு நாயகனைக்கொண்ட கணவனுக்கும் உடற்சார்பாகிய உ களுக்கும் ஆளாதலை ஒழிந்து, "உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்", "எங்க யுனக்கல்லா தெப்பணியும் செய்யற்க" என்றபடி, "குழையோர் காதிற் கோமாற் மீளா வாளாய்" நிற்பதற்குரிய அடையாளம் இச்சிவசின்னங்களாவன என்ற உணர்ச்சி டன் தாங்கினார் என்க. கோதில் என்ற குறிப்புமது. முன்னரும் சிவநேசமுண்மை னினும் ஏனையபற்றுக்களும் உடனிருந்தன. இப்பொழுது சிவநேசமொன்றே நின்ற

ஆர்வமுற - ஆர்வம் - அடங்காது பொங்கி மேல் எழும் ஆசை. "ஆராத அன்பு (1307). ஆர்வமின்றிச் செய்யப்படும் பணிகள் உரிய பயன்தரா.

தம் கையால் - தமக்குரிய திருப்பணிகளை எவரும் தமது கையினாலே செய்த வேண்டும். பிறரைக்கொண்டு செய்வித்தல் அத்துணைச் சிறப்புடையதன்று என்பது.

துன்று திருப்பணிகள் - துன்றுதல் - நெருங்குதல். நெருங்கும்பணிகள் என்றது சிவபெருமானிடத்து உயிர்களை அணுகச்செய்வன என்றதாம். இவை மேல்வரும் பாட்டில் விரிக்கப்படுவன.

1306 - 1307 - 1308 இம்மூன்று திருப்பாட்டுக்களும் முன்னும் பின்னும் தொடர்ந்து செல்லும் கொச்சகக் கலிப்பாவாகிய யாப்பின் வகையுட்பட்டன வாயினும், வேறாய், வெண்டளையான் வந்த கொச்சகக்கலிப்பா என்ற யாப்பினால் அமைத்த அமைதி குறிக்கொள்ளத் தக்கது. சொல்லும் பொருளும் ஒத்தியலுதல் என்ற ஆசிரியரது சிறந்த கவிநலம் இவற்றுட் சிறக்கக் காணவுள்ளது. முன்பின் சரிதத் தொடர்பினுள் அம்மையாரது மன நிலை - செயல் நிலை - மாறுபாடுகளை வேறெடுத்து உரிய யாப்பினால் அறிவிக்கும் வகையில் அமைந்த யாப்பின் சிறப்புக் கண்டுகொள்க.43

வேறு

1309. புலர்வதன்முன் றிருவலகு பணிமாறிப் புனிறகன்ற
நலமலியான் சாணத்தா னன்குதிரு மெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளுந் தொடுத்தமைத்துப்
பலர்புகழும் பண்பினாற் றிருப்பணிகள் பலசெய்தார். சச

(இ - ள்) வெளிப்படை. பொழுது விடிவதற்குமுன் திருமுன்றிலிலே திருவலகிடுதலாகிய திருப்பணிசெய்தும், ஈன்றணியதல்லாத நன்மை மிக்க பசுவின் சாணத்தினால் நன்கு திருமெழுக்கிட்டும், பூக்களைக் கொய்து கொண்டுவந்து மாலைகள் தொடுத்து அமைத்துக் கொடுத்தும் அன்பர்கள் பலரும் பாராட்டும் பண்பினாலே இவ்வாறு பல திருப்பணிகளையும் செய்தனர்.

(வி - ரை) இங்குச் செய்யப்பட்டன சைவ நன்னெறிகள் நான்கனுட் சரியை என்ற பகுப்பில் வைத்துப் பேசப்படுவன.

**புலர்வதன் முன்** - ஞாயிறு கிளம்ப மூன்றேமுக்கால் நாழிகைகளுக்கு முன். திருப்பள்ளி எழுச்சி என்ற கால வழிபாட்டின் முன் செய்யப்பட வேண்டியிருத்தலின் முன் என்றார்.

**திருவலகு பணிமாறுதல்** - திருமுற்றத்தினைப் பெருக்கித் தூய்மை செய்தல். மரபு வழக்கு.

**புனிறு** - ஈன்றணிமை. ஈன்று பத்து நாட்கள்வரை அந்தப் பசுவின் பால் - சாணம் முதலியவற்றை இறைவனது பூசைக்குப் பயன்படுத்தலாகாது என்பது மரபு. "பெற்ற வன்றே" (1225) என்றவிடத் துரைத்தவை பார்க்க. **நலமலி ஆன் சாணம்** - நோய்ப்பசு - மலட்டுப்பசு - சினைப்பசு - மலந்தின்னும்பசு முதலியவற்றின் சாணமாகாது என்பர்.

**நன்கு திருமெழுக்கு இடுதலாவது** - இடை வெளி - புள்ளி முதலியன இல்லாமலும், எறும்பு முதலிய உயிர்களுக்குக் கேடு இல்லாமலும் ஒரு சீர்ப்படச் சாணத்தால் மெழுகுதல்.

**மலர் கொய்து...அமைத்து** - 558 - 560, 1022 - 1026 பாட்டுக்களில் உரைத்தவை யெல்லாம் இங்கு நினைவுகூர்தற் பொருட்டு, **மலர்கொய்தல் - கொடுவருதல் மாலை தொடுத்தல்** - என்ற செயல்களைத் தனித் தனிக் குறித்தார். முன் விரித்தபடியால் இங்குச் சுருக்கிச் சுட்டினார்.

**பலர்புகழும் பண்பு** - ஆன்று அவிந்து அடங்கிய அன்புடையடியவர் பலரும் எடுத்துப் புகழும் தன்மை. ஏனையோரது இகழ்ச்சியும் புகழ்ச்சியும் பொருளல்ல.

**திருப்பணிகள் பல** - திருவிளக்கிடுதல், புகழ்ந்து பாடுதல், வலம்வருதல் முதலாயின. கழறிற்றறிவார் புராணம் 9-ம், பிறவும் பார்க்க.

இங்குக்கூறிய சரியையின் இலக்கணத்தை "நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப், புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித், தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச் சங்கரா சயபோற்றி போற்றி யென்றும், அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்று மாரூரா வென்றென்றே யலறா நில்லே" (திருத்தாண்டகம்) எனவும், "தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயிற் றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப், போதுகளுங் கொய்துபூந் தாமமாலை கட்டிப் புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித், தீதிறிரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ் செய்து திரு வேடங்கண் டாலடியேன் செய்வ, தியாதெபணி யீதென்று பணிந்தவர்தம் பணியு மியற்றுவ;தீச் சரியைசெய்வோ ரீசனுல கிருப்பர்" (சித்தியார் - 8 - 19) எனவும் வரும் ஞானத்திருவாக்குக்கள் விரிப்பன. "புறத்தொழிலின் மாத்திரையானே உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு சரியை யெனப்படும்" என்பது சிவஞான முனிவரது பொழிப்புரை. திருவாதவூரர் புராணத்திறுவன் றும் "ஆலய லாலெமக் காமலர் மரங்க ளாக்க லம்மலர் பறித்தலம் மலரான், மாலைக டொடுத்த றார்பல சமைத்த றணைப்பி லெம்புகழ் சாற்றலன் புடனு, மேவு மாலய மலகிடன் மெழுகல் விளக்க னல்விளக் கிடுதலெம் மடியார்க், கேவ லானவை செய்தலிச் சரியை யியற்ற வல்லவர்க் கெம்முல களிப்போம்" (திருப்பெருந் - சருக்கம் - 69) என்று இதன் இயல்பை வாத ஆரடிகளுக்கு இறைவர் உபதேசித்த முறையும் காண்க. 44

1310. நாளுமிகும் பணிசெய்து குறைந்தடையு நன்னாளிற்
கேளுறுமன் புறவொழுகுங் கேண்மையினார் பின்பிறந்தார்
கோளுறுதீ வினைமுந்தப் பரசமயங் குறித்ததற்கு
மூளுமனக் கவலையினான் முற்றவருந் துயருழந்து, சரு

1311. தூண்டுதவ விளக்கனையார் சுடரொளியைத் தொழுது "தென்னை
யாண்டருளு நீராகி லடியேன்பின் வந்தவனை
யீண்டுவினைப் பரசமயக் குழிநின்று மெடுத்தாள
வேண்டு"மெனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனரால். சசு

1310. (இ - ள்) வெளிப்படை. கேளுறும் அன்பு பெருக ஒழுகும் கேண்மையுடைய திலகவதியார், நாளும் இவ்வாறு மிக்க திருப்பணிகளைச் செய்து குறைந்து அடைந்து ஒழுகி வருகின்ற நன்னாள்களில், தமது பின் பிறந்தவராகிய மருணீக்கியார், கோளின்கட் பட்ட தீவினை முந்துதலினால் பரசமயங் குறித்துப் புகுந்ததற்காக மூளும் மனக் கவலையினால் மிக்க அரிய துன்பத்தில் உழந்து, சரு

1311. (இ-ள்) வெளிப்படை. தூண்டும் தவவிளக்குப்போல்வாராகிய அவ்வம்மையார், சுடரொளியாகும் திருவீரட்டானேசுவரரைத் தொழுது, "என்னைத் தேவரீர் ஆட்கொண்டருளுவீராகில், அடியேன் பின் பிறந்தவனைச், சேர்கின்ற தீவினையையுடைய பரசமயமாகிய படுகுழியினின்றும் எடுத்தருள வேண்டும்" என்று பல முறையும் விண்ணப்பம் செய்தனர். சசு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1310. (வி - ரை) நாளும் - நாடோறும். ஒவ்வொரு நாளும். "நாடொறு மருச்சிப்பார் பிணிதீர்க்கு நலம்போற்றி" (திருஞான - புரா. 412).

குறைந்தடைதல் - பணிவுடன் தாழ்தல்; "தாழ்வெனுந் தன்மையோடு சைவ மாஞ் சமயம் சாரும் ஊழ்" என்பது காண்க. "எளியேனை வந்திரங்கி ஏன்று கொண்டாய்" - "பித்தனேன்......பிழைத்தனக ளெத்தனையும் பொறுத்தா யன்றே" என்று பலவாறும் தமது சிறுமையினையும், இறைவனுடைய பெருங் கருணையினையும் எண்ணி எண்ணி ஏசற்றிருத்தல். "என் செய்வான் றோன்றினேன் ஏழை யேனே" என்ற குறிப்புடைய குறைந்த திருநேரிசைப் பதிகக் கருத்தினையும், அதனை ஆசிரியர் "குறைந் தடைந்த நேரிசை" (திருஞா. புரா. 414) என்றதும் கருதுக. "பணி செய்து அங்கு உறைந்து அடையும்" என்று பாடங்கொண்டு அதற்குத்தக உரைப்பாருமுளர். நன்னாளில் - நன்மை - இயற்கை யடைமொழி. ஈசனிடம் குறைந்தடையும் நாட்களே நன்னாட்கள்; ஏனையவை அவமே கழிபவை என்பது ஆன்றோர் துணிபு. "பேசாத நாளெல்லாம் பிறவாநாளே," "சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே", "பயிலாதே பாழேநா னுழன்ற வாறே", "சாராதே சாலநாள் போக்கி னேனே", "போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே", "சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே", "கருதி யேத்தப், பெற்றவர் பிறந்தார் மற்றுப் பிறந்தவர் பிறந்தி லாரே" முதலியவை இவ்வாறு குறைந்தடையும் நாட்களே நன்னாட்கள் என்று கொள்வோரது உள்ளக் குறிப்பை விள்ளுவன.

கேள் உறும் அன்பு உற ஒழுகும் கேண்மையினார் - கேள் - இங்கு உடற் சுற்றம் குறிக்காது, உயிர்க்குத்துணையாகிய சிவனும் சிவனடியார்களும் அடிமைத் திறமும் ஆகிய உயிர்ச்சுற்றம் குறித்தது. "அப்பனீ அம்மைநீ யையனுநீ அன்புடைய மாமனு மாமியுநீ" (திருத்தாண்டகம்), "கேளுந் துணையும் முதற் கேடில் பதங்களெல்லாம், ஆளும் பெருமா னடித்தாமரை யல்ல தில்லார்" (976), "உறவாவா ருருத்திரபல் கணத்தி னோர்கள்" (மறு - தாண்), "சுற்றம் மாசிலா வீச னன்பர்" (திருவிளை - புரா) முதலியவை காண்க. அடியார்களிடத்து அன்பு பொருந்த ஒழுகுதல் சரியையின்பகுதி என்பது முன்காட்டிய இலக்கணங்களாலறிக. "கேளிரே யாகி" (ஏயர்கோன் - புரா - 414) பார்க்க.

ஒழுகும் கேண்மை - ஒழுகுவதாகிய நிலையில் நின்ற கேண்மை. பிறிதினியைபு நீக்கிய விசேடணம். இங்கு அம்மையார் "பேராத பாசப்பிணிப்பு ஒழிய" நின்ற அடிமைத்திறமாகிய ஒழுக்கம் குறித்து நின்றது.

அம்மையார் தம் பின் பிறந்தாரை இங்கு எண்ணியது உடற்சார்பு பற்றிய உலக நிலைக் கேண்மையினாலன்று; உயர்ந்த சிவச்சார்பு பற்றிய அடிமைத்திறத்தில் வைத்த கேண்மையினாலாகியது என்றபடியாம். முன்னர்த் "தம்பியா ருளராக வேண்டுமென வைத்ததயா" (1299) என்றது வேறு; இங்குத் "தம் பின்பிறந்தார் பரசமயங் குறித்த தற்கு மூளுமனக் கவலை" என்றது வேறு; இது தம்பியாரின் உயர்ந்த உயிரின் மேன்மை நிலையினை உட்கொண்டெழுந்தது என்பது. "அவமொன்று நெறிவீழ்வான் வீழாமே யருளும்", "ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்று மெடுத்தருள வேண்டும்" என்றவற்றாற் கண்டுகொள்க. முன்னர்க் கருதியது அவர் உயிருடன் வாழ்தல் மட்டுமாம்.

கேள் உறும் அன்பு - நூல்களுள் விதந்து கேட்கப்படும் அன்பு என்று உரைப்பாருமுண்டு.

கோள்உறுதீவினை மூந்த - கோள் உறுதலாவது-பற்றித் தன்வயப் படுத்திக் கொள்ளுதல். இத்தீவினை அவர் பரசமயங் குறித்ததனா லறியப்பட்டது. மூந்தல் - குறிக்கோளாக அடைதல்.

துயருழந்து - துன்பத்தினுள் மூழ்கியதனால் - உழந்ததனால். காரணப் பொருட்டாய் வந்த வினையெச்சம்.

உழந்து - விண்ணப்பம் செய்தனர் - என்று மேல்வரும் பாட்டுடன் முடிந்தது.

நாளுமவர்—மூளவரும்—தீவினையுந்த—தவ்வாழுகந்த—துயரழுந்தார்— என்பனவும் பாடங்கள். 45

1311. (வி - ரை) தூண்டுதவ விளக்கு அனையார் - திலகவதியார். தூண்டு தவம் - உலகச் சார்பினை விடுத்துச் சிவசம்பந்தமாகிய மெய்ந்நெறியினையே அடையும்படி தூண்டும் தவம். இங்குத் தம்மையே தூண்டுதல் கொண்டதன்றித் தம்பியாரையும் அவர் மூலம் உலகத்தாரையும் தூண்டும் தவம் என்ற குறிப்பும் காண்க. தவம் பொருந்திய விளக்குப்போன்றவர். விளக்கம் செய்யும் வினைபற்றி யெழுந்த உவமம். தூண்டிய விளக்கு ஒளிவிட்டு எரிதல்போலப் பெருந்தவமுடையார் என்பதுமாம்.

சுடரொளி - திருவதிகை வீரட்டானேசுவரர். அவரது விளக்கமாகிய ஒளியானது புறக்கண்ணாலும் காணவுள்ளது. "சோதியே சுடரே சூழொளி விளக்கே" என்பது திருவாசகம்.

ஆண்டு அருளும் நீர் ஆகில் - ஆளாக ஏற்றுக்கொண்டு அருளும் பிரானீர் நீராகில். அது உண்மை யெனில். அருளினீராகில் என்று பாடங்கொள்வாருமுளர்.

எடுத்து ஆள - "என்னை யிப்பவத்திற் சேரா வகை யெடுத்து" என்ற சித்தியார் காண்க.

பலமுறையும் - பல நாள்களிலும். ஆல் - உறுதிப் பொருள் குறிப்பிற்றந்து நிற்பதோர் அசைச்சொல்.

ஈண்டுவினைப் பரசமயக்குழி - ஒரு உயிர், இவ்வுலகில் மனிதப்பிறவி எடுத்தல் அரிது; அதுவும் அழியாது நின்று சைவத் திறத்தில் அடைதல் மிக அரிது; இவ்வாறு அரிய பேறு பெற்றும் சமணத்திற் சார்ந்து வீழ்ந்ததனால் ஈண்டுவினை என்றும், குழி என்றும் கூறினார். "நரர்பயில் தேயந் தன்னில்" என்றும், "கருவிலெரி, வழிவ தாயும்" என்றும் வரும் ஞானசாத்திரமும், "யானை முதலா எறும்பீறாய ஊனமில் யோனியி னுள்வினை பிழைத்தும்..." என்றதொடக்கத்துத் திருவாசகமும் கருதுக.

எடுத்தருள—என்பதும் பாடம். 47

1312. தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும்
அவமொன்று நெறிவீழ்வான் வீழாமே யெடுத்தருள" வெனச்
சிவமொன்று நெறிநின்ற திலகவதியார் பரவப்
பவமொன்றும் வினைதீர்ப்பார் திருவுள்ளம் பற்றுவார், சஎ

1313. மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழவிடையார்
"உன்னுடைய மனக்கவலை யொழிநீ ;யுன் னுடன்பிறந்தான்
முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்
அன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வ" மெனவருளி, சஅ

1314. பண்டுபுரி நற்றவத்துப் பழுதினள வுறைவழுவுந்
தொண்டரையா ளத்தொடங்குஞ் சூலைவே தனைதன்னைக்
கண்டருநெற் றியாருளக், கடுங்கனல்போ லடுங்கொடிய
மண்டுபெருஞ் சூலையவர் வயிற்றினிடைப் புக்கதால். சகூ

1312. (இ - ள்) வெளிப்படை. "தவமென்று கொண்டு பாயினை உடுத்தியும், தலைமயிரைப்பறித்தும், நின்றபடியே உணவு உண்டும் உழலும், அவம் பொருந்திய நெறியாகிய சமணத்தில் வீழ்வானை அவ்வாறு வீழாமே அருளும்" என்று, சிவத்தைப்

பொருந்தும் நெறியில் நின்ற திலகவதியம்மையார் பரவினாராகப், பிறவியிற் பொருந்தச் செய்யும் வினைகளைத் தீர்ப்பாராகிய இறைவர் திருவுள்ளம் பற்றுவாராகி, ௬௭

1313. (இ - ள்) வெளிப்படை. நிலைபெற்ற தபோதனியார்க்குக் கனவினிடத்தே எழுந்தருளி, இளமையாகிய இடபத்தையுடைய சிவபெருமான் "நீ உன்னுடைய மனக்கவலையினை ஒழிவாயாக! உனது உடன் பிறந்தானாகிய தம்பி முன்னமே, ஒரு முனிவனாக இருந்து எம்மை அடைவதற்குத் தவஞ் செய்தனன்; இனி அவனைச் சூலை நோய்தந்து ஆட்கொள்வோம்" என்று அருளிச்செய்து, ௬௮

1314. (இ - ள்) வெளிப்படை. முன்னைப் பிறவியிற் செய்த நல்ல தவத்தில் சிறிதளவு பிழைசெய்த தொண்டராகிய மருணீக்கியாரை ஆட்கொள்ளத் தொடங்கும் சூலை நோயினை நெற்றிக் கண்ணர் அருளினாராகக், கடியதீயைப்போலச் சுடுகின்ற அந்த மிகப்பெருஞ் சூலைநோய் அவருடைய வயிற்றினுட்புகுந்தது. ௬௯

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

1312. (வி - ரை) பாயிடுக்குதல் - தலை பறித்தல் - நின்றுண்ணுதல் - இவை முதலியவை சமணர்கள் தவமென்று மேற்கொண்ட ஒழுக்கங்கள். இடுக்குதல் - இடையை நெருங்க உடுத்தல். தலைபறித்தல் - சமண குருவாக ஒருவனை ஆக்கும்போது "இப் துக் - பிற் சுக் (இப்போது துக்கம் - பின்பு சுகம்) என்ற சொற்களை மந்திரமாகக் கூறிக்கொண்டு குருமார் பலரும் அவனைச்சூழ்ந்து அவனது தலையின் மயிர்களை ஒவ்வொன்றாகப் பறித்தல் அவர்களுள் ஒரு வழக்கென்ப. "மயிர்பறிப்பச் சுகமென்னும்" என்பது முதலாகப் பல இடங்களிலும் நமது ஆசாரியர்கள் திருவாக்கில் இதனைச் சுட்டிக் கூறியிருத்தல் காண்க. "மணித்துணை ரனைய தங் குஞ்சி வண்கையாற், பணித்தனர் பறித்தலில்" என்பது சீவக சிந்தாமணி - 2820. நின்று உண்ணுதல் - நின்றபடியே கையிற்கவளங் கொண்டு உண்ணுதலும் சமண குருமார்களுள் ஒரு வழக்கு. "நின்றுண்பா ரெம்மை நினையச் சொன்ன வாசக மெல் லாமறந்தோம்" (மறுமா - தாண் - 8) முதலியவை காண்க. இவை செய்யலாகாதவை என்று நமது அறநூல்களுள் விலக்கப்பட்டன. அவமொன்றுநெறி என்ற குறிப்புமது. தவமென்று அவர் கொண்டு ஒழுகினும் உண்மையில் அவை அவத்துக் கேதுவாவன.

அவை அவமாய்க் கழிகின்ற நிலையை ஞானசாத்திரங்கள் பரபக்க மறுப்பில் விரிவாய்க் கூறின; விரிவு ஆண்டுக் கண்டுகொள்க. இவையும் இவை போலப் பின் வருவனவும் பரசமயதூடணை எனப்படா; பின் என்னையோ? எனின், அப் புறச்சமயிகள் பொய்யை மெய்யென்று கருதி உழல்வதுகண்டு இரங்குதலும், அவர்கள் சைவத்துக்குச் செய்த கேடுகளால் உய்தியில் குற்றமாய்ச் சிவாபராதத்துக்குள்ளாதல் கண்டு பரிவுறுதலும், அவரது அவநிலை கண்டு ஏமாந்து பிறர் அத்னுட்புக்குக் கேடடையாது எச்சரித்தலுமாம் என்க.

அவம் ஒன்று நெறி - அவர் செய்வன யாவும் அவர்களைச் சிவத்தின்பால் ஒன்றச் செய்யாது அவத்தினையே ஒன்றச் செய்வன (ஒன்றுதல் - பொருந்துதல்) என்க, சிவமொன்று நெறி என்றதும் இக்கருத்தை வற்புறுத்தியது.

வீழ்வான் - மிக ஆழமாயினமையின் முடிவின்றி வீழ்ந்துகொண்டே யிருக்கிற படியைக் குறித்தது.

சிவமொன்று நெறி - இங்குச் சரியை குறித்தது. முன் 1309ல் உரைக்கப் பட்டன.

பவம் ஒன்றும் வினை - பவம் - பிறவி. பிறவியிற் பொருந்தச் செய்யும் முன்னைவினை. இங்கு மருணீக்கியார் இப்பிறவி பெறுதற்குக் காரணமாகிய முன்னைத் தவத்தின் குற்றத்தைத் குறித்தது.

தீர்ப்பார் - தீர்ப்பாராகி. முற்றெச்சம். தீர்ப்பார் - மழ விடையார் - கண்டரு நெற்றியர் - திருவுள்ளம் பற்றுவார் - என அருளி - (1313) - அருள (1314) என்று கூட்டி முடித்துக்கொள்க. திருவுள்ளம் பற்றுதல் - திருவுள்ளத்துக் கொள்ளுதல் - நினைத்தல். மரபு வழக்கு.

இத்திருப்பாட்டில் முதலடியிற் சமணநிலையும், இரண்டாவதடியில் அதிற்புக்க மருணீக்கியார் நிலையும், மூன்றுமடியில் அவரைக் கரையேற்ற முயன்ற அம்மையார் நிலையும், நான்காமடியில் அதற்கருளிய இறைவர் நிலையும் கூறப்பட்டன காண்க. 47

1313. (வி - ரை) மன்னு தபோதனியார் - மன்னுதல் - நிலைபெறுதல். தபோ தனியார் - இகரம் பெண்பால் விகுதி. பெண் தவசியார் - தவத்தையே தனமாக உடையவர். தபோதனர் - 96 - 449 பார்க்க.

நீ உன்னுடைய மனக்கவலை ஒழி - என்க. எழுவாயைப் பின் வைத்தது அருளிப்பாட்டினது செய்தியை விரைவில் அறிவிப்பதன் பொருட்டு.

முன்னமே......முயன்றான். நாயனார் முன்னைப் பிறவியில் ஒரு முனிவரா யிருந்து சிவனை அடையத் தவஞ் செய்திருந்தனர் என்பது. இதனால் அவரது முன் னைப் பிறப்பின் நிலையினைக் குறிப்பா லுணர்த்தியவாறு. 1266-ல் உரைத்தவை பார்க்க. இவ்வரலாறு உபமன்னிய பக்த விலாசம், அகத்தியர் பக்தவிலாசம் என்னும் வடமொழி நூல்களிரண்டினிலும் வெவ்வேறு திறம்பட உணர்த்தப்படுவதென்ப. அவை எவ்வாறாயினுமாகுக! நாயனார் முன் பிறவியில் ஒரு முனிவராகி, இறைவரை அடையத் தவம் முயன்றனர்; அதனில் ஒரு சிறிது பிழை நேர்ந்தது; அதனால் இப் பிறவியிற் போந்தனர்; அப்பிழையை அனுபவித்துக் கழிக்கும் வகையால் சமண சமயம் புக்குழன்றனர்; அதற்குத் தீர்வு தர இறைவன் அருளிய சூலையினால் வருந்தினர்; திருவருள் கூட்டுவிக்க அதன் மூலம் தமக்கையாரை அடைந்து உண்மை உணர்ந்து இறைவரை அடையப்பெற்றனர் என்ற அளவில் உள்ள சரிதப்பகுதி ஆசிரியரது அருள் வாக்கினால் உறுதிப்படுகின்றது. இவ்வுண்மையுடன் மாறுபடாத அளவிற்கு மேற்கூறிய அவ்வரலாறுகள் கொள்ளத் தக்கனவாயின் கொள்வதற்கிழுக்கில்லை. "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து" என வும், வினை அனுபவித்தன்றிக் கழியாது எனவும், செய்ததின் பயனளவே துய்ப்பர் எனவும் இவ்வாறு வருவன உண்மைநூன் முடிபுகளாதலின், நாயனார் முன் பிறவியில் முனிவராகத் தவஞ் செய்தனராதலின் இளமையிலே துறவுபூணும் நிலை கூடிற்று. எல்லார்க்கும் அவ்வாறு கூடாதன்றே!; அதுபற்றியே சமணம்புக்கும் அறப்பள்ளி புகுந்து, அங்கும், அவமாயினும், தவமே மேற்கொண்டனர்; அதுபற்றியே பின்னர்த் திருவருளாற் சைவத்தில் மீண்டும் புகுந்த பின்னரும் துறவு நிலை பூண்டே ஒழுகினர் என்பதாம். ஆளுடைய நம்பிகளது முன்னைச்சரித நிலையும், நிலவுலகம் வருதலும், மீளக் கயிலையடைதலும்பற்றித் திருமலைச் சிறப்பில் அறிவிக்கப்பட்டவற்றை யெல்லாம் இங்கு நினைவு கூர்க. அருச்சுனன் இறைவர்பாற் பாசுபதம் வேண்டித் தவம் செய்த போது, இறைவர் வெளிப்பட்டருளவே, தவத்திற் குறிக்கொண்ட படையை வேண் டாது முத்தியைவேண்டினனாக, "முன்குறித்த படையை முன்னரும், பின்னர் வேண் டிய முத்தியைப் பின்னரும் (பின் பிறவியிலும்) பெறுவாய்" என்று இறைவர் அரு ளினார் என்ற சரிதமும், அத்தனையும் குறிப்பினாலுணர்த்தும் "முன்புசெய் தவத்தி னீட்டம்" (751) என்ற திருப்பாட்டும் ஈண்டுக் கருதற்பாலன. "பண்டு திருவடி

மறவாப் பான்மையோர்" (திருஞான - புரா - 55) என்ற ஆளுடையபிள்ளையாரது முன்னை நிலைக் குறிப்பும் இங்கு வைத்து எண்ணுதல் பயனுடைத்து.

ஏனை அடையத் தவம் முயன்றன்-இறைவரை அடைவது கருதிச் செய்யும் சிவ பூசையாதி வழிபாடுகளே தவமாவன என்பதாம். தவம் முயன்றன் - தவம்செய்தான். முயற்சியளவில் நின்றது - காலம் வரும் வரையில் முயற்சி பயன்முராதாதலின் அக் காலம் இப்போது வந்ததாக, இனி - ஆள்வம் என்றருளினர். 48

1314. (வி - ரை) பண்டு புரி - நல் - தவம் - சிவனை அடைவதற்காகச் செய்யும் தவமாதலின் நற்றவம் எனப்பட்டது. ஏனையடையத் தவம் என முன்பாட்டிற் கூறினர்.

இறையளவு பழுதின் வழுவும் என்க. தவத்தின் வழுவுதல் - தவம் செய்யும் போது மனம் - மொழி - மெய் - முயற்சிகளைப் பிறிதொன்றிற் செலுத்துதலும், மந் திரம், பூசைப்பொருள், பூசைச் செயல் முதலியவற்றிற் குறைபாடு செய்தல் மனந்தாழ்தலின்றி மேற்கிளம்புதல் முதலியவாற்றல் மனமொழி மெய்களாற் குற்றம் செய்தலும் முதலாயின.

இறை வழுவும் - என்றதனல் வழுச் சிறிதேயாதலின் இவ்வளவில் அனுபவம் நிகழ்ந்து தீர்வுபெற நின்றதென்பதும், பெரும் வழுவாயின் சிவாபராதமாகிக் கொடுந் தண்டனைக்குரித்தாகும் என்பதும் குறிப்பு.

இறை வழுவும் - சுதபா முனியாயிருக்கும் காலையில் கயிலையைப் பேர்த்த இராவணனுக்கு விரகறிவித்தமையும், உண்மையறிய வேண்டிவந்த சாந்தரென்னு முனிவருக்கு சமணம் பெரிதென்று வாதித்தமையும் குறித்ததென்று கூறுவர். இவைபற்றி முன் உரைக்கப்பட்டன.

இறை வழுவும் - இறை - விடை என்ற பொருளும் தருதலால் வினு விடைக ளாகிய சொல்லின் தவறு என்ற குறிப்பும்பெற நிற்றலும், கூற்றயின - என்ற இடத் தும் கூற்று - சொல் என்ற குறிப்புப்பட நிற்றலும் கருதத்தக்கன.

ஆளத்தொடங்கும் சூலை வேதனை - நல்குரவு - நோய் - முதலியன வந்தபோது, இப்போது இறைவர் நம் மேல் அருள்வைத்து நமது முன்னைத் தீவினைகளை அனுபவிக் கச் செய்து கழிப்பித்து ஆட்கொள்ளத் தொடங்கியுள்ளார் என்று கொள்வது அறிவு முறை என்பது குறிப்பு. "விரைந்தாளு நல்குரவே" (திருவாரூர் - 8), "அல்லலி லருளே புரிவானை" முதலியவை காண்க. ஏயர்கோன் கலிக்காமரைச் சூலைநோய் தந்தாட்கொண்டமையும் கருதுக.

கண் தரு நெற்றியர் - அருள்நோக்கம் செய்பவர். இங்குச் சூலை அனல்போல் அடுந்தன்மையுடன் புகுந்தபடியால் அனலாகிய நெற்றிக் கண்ணைப்பற்றிக் கூறினர். கனல்வதே யாயினும் அது அருளிப்பாடேயாகும் என்பார் அருள என்றார். "நெற்றி யிற் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே" என்ற கோயிற்றிரு விருத்தமும் காண்க. ஒரு காலத்து அம்மையார், இறைவனது இருகண்களையும் மூடியபோது உயிர்களின் மேல்வைத்த அருளினல் நெற்றியில் ஒளியுடன் தோற்றிய கண்ணையுடையவர் என்ற வரலாறுங் கருதுக. அருள - அது - புக்கது என்க.

அடும் - கொடிய - மண்டு - பெரும் என்ற அடைமொழிகள் மிக்க வருத்தம் செய்யும் சூலையினது தன்மை குறித்தன.

பண்டுதவம் புரிதவத்து—என்பதும் பாடம். 49

1315. அடைவிலமண் புரிதரும சேனர்வயிற் றடையுமது
வடவனலுங் கொடுவிடமும் வச்சிரமும் பிறவுமாங்

கொடியவெலா மொன்றாகு மெனக்குடரி னகங்குடையப்
படருழந்து நடுங்கியமண் பாழியறை யிடைவிழுந்தார். ருo

(இ - ள்) வெளிப்படை. சேர்வு இல்லாத சமண சமயத்தை விரும்பி அந்நெறியில் ஒழுகிய தருமசேனருடைய வயிற்றிற் புகுந்த அந்தச் சூலைநோய் வடவைத்தீயும், கொடிய நஞ்சும், வயிரமும், இவைபோன்ற கொடுமை செய்யும் பிறவும் எல்லாம் ஒன்று கூடி வந்ததோ என்னும்படி குடரின் உள்ளே குடையவே, துன்பப்பட்டு நடுங்கி அமணர்களுடைய பாழியில் உள்ள அறையில் விழுந்தனர்.

(வி - ரை) அடைவு - அடைதலால் - சேர்தலால் - நலம்பெறும் இடத்தை உணர்த்தி நின்றது. உபசாரம். அடைவு திருத்தாண்டகம் என்றது காண்க.

அடைவு இல் - அவ்வாறு அடைந்தின்புறுதற்கு இடமாகாத. அடைவு-ஒழுக்கம் என்பாருமுண்டு. அடைவு இல் - பொருத்தமில்லாத சமணர் கூறும் பொருளியல்பும் குறித்தது.

அமண்புரி - சமண சமயத்தை விரும்பி அந்நெறி நின்ற.

வடவனல் - படவா என்ற பேருடன் குதிரை முகமுடைய ஒரு தீ கடலின் அகட்டில் அவியாது ஒடுங்கி உறைவதென்றும், அதுவே ஊழியில் மிக்குப்பெருகிக் கடலைச் சுவறச் செய்து உலகை அழிப்பதென்றும் கூறுவது மரபு. வடவாமுகாக்கினி என்பர் வடவர். கடலிடை நின்று பெருகுவதால் வயிற்றினிடை நின்று பெருகிக் குடையும் சூலைக்கு உவமானமாயிற்று.

வச்சிரம் - வயிரம். மணிகளுள் ஒன்று. தற்கொலை செய்துகொள்வோர் வயிரத்தைப் பொடியாக்கி உண்பர் என்ற வழக்கும் காண்க. வயிரம் வயிற்றினுள்ளே சென்று வயிற்றின் தசைகளையெல்லாம் அறுத்துக் கொன்றுவிடும் என்ப.

பிறவும்ஆம் கொடிய எலாம் ஒன்றாகும் என - முன் கூறியவற்றுள் ஒவ்வொன்றே சாவுதரப் போதியனவாகவே, இவை எல்லாம் ஒன்று கூடினுல் செய்யும் துன்பத்தைக் கருதவைத்த நயம் காண்க. தொழில் பற்றி எழுந்த உவமம்.

குடைதல் - வயிற்றை மிகவும் ஊடறுச்செய்தல். படர் - துன்பம். "தோற்றாதென் வயிற்றி னகம்படியே குடரோடு தொடக்கி முடக்கியிட ஆற்றேன்", "வயற்றோடு தொடக்கி முடக்கியிட", "சுடுகின்றது சூலை", "உடலுள்ளுறு சூலை", "என் வயிற்றி னகம்படியே பறித்துப் புரட்டியறுத் தீர்த்திடநான் அயர்ந்தேன்", "சலித்தேயென்வயிற்றி னகம்படியே கலக்கி மலக்கிட்டுக் கவர்ந்து தின்ன அலுத்தேன்", "வேர்த்தும் புரண்டும் விழுந்தும் மெழுந்தாலென் வேதனையான" என்ற நாயனார் திருவாக்குக்கள் அச்சூலையின் முடுகிய நிலையினை விளக்கும் அகச்சான்றுகளாவன.

அமண்பாழி - சமண குருமார் தங்குமிடம். அறை - குருமார் தங்கும் தனியிடம்.

விழுந்தார் - உடலைத்தாங்கி இருக்கலாற்றாது வசமிழந்து கீழ் விழுந்தனர்.

வயிற்றிடையும்—இடருழந்து— என்பனவும் பாடங்கள். 50

1316\. அச்சமயத் திடைத்தாமுன் னதிகரித்து வாய்த்துவரும்
விச்சைகளாற் றடுத்திடவு மேன்மேலு மிகமுடுகி
யுச்சமுற வேதனைநோ யோங்கியெழ வாங்கவர்தாம்
நச்சரவின் விடந்தலைக்கொண் டெனமயங்கி நவையுற்றார். ருக

(இ - ள்) வெளிப்படை. அந்தச் சமணசமயத்தினிடத்துத் தாம் முன்பு பழகிக் கைவந்துள்ள மந்திர முதலிய வித்தைகளாலே தடுக்கவும், மேன்மேலும் அதிகப்பட்டு மிகவளர்ந்து பெருகி வேதனை தரும்படி அந்த நோயானது மேலெழுந்ததனாலே,

ஆங்கு அத்தருமசேனரும் நஞ்சுடைய பாம்பினது விடவேகம் தலைக்கொண்டாற்போல மயங்கி மூர்ச்சையடைந்தார்.

(வி - ரை) அச்சமயத்திடை......விச்சைகளால் - சமணர்கள் பல விஞ்சைகளில் வல்லவர்களா யிருந்தார்கள் என்பதறியப்படும். "சமண்சமயச் சாதகத்தால் இது செய்து பிழைத்திருந்தான்" (1367), "நஞ்சமயத் தினில்விடந்தீர், தஞ்சமுடை மந்திரத்தாற் சாதியா வகைதடுத்தான்" (1372), "மந்திரசா தகநாங்க ளொழித்திட" (1373), "நங்கள் சமயத்தி னின்றே நாடிய முட்டி நிலையால்" (1386), "வெந்தழற் பட விஞ்சைமந் திரத்தொழில் வினைத்தால்" (திருஞான - புரா - 680), "தங்கள் மந்திரத்தாற் செந்தீ, சிவநெறி விளக்க வந்தார் திருமடம் சேரச் செய்தார்" (ஷ. 697), "வெப்பை யொருபுடை வாம பாக, முன்ன மந்திரித்துத் தெய்வ முயற்சியாற் றீர்த்து மென்றார்" (ஷ - 762) முதலியவை சமணர்கைவந்த மந்திரமுயற்சிகளையும் அவற்றை விடுக்கவும் தடுக்கவும் அவர்கள் வல்லவராயினமையும் விளக்குகின்றன.

அச்சமயத்தில் - அப்பொழுது என்றுரைப்பாரு முண்டு. அதிகரித்தல் - பயின்று பழகுதல். வாய்த்தல் - கை வருதல். விச்சைகள் - வித்தைகள். மணி, மந்திரம், மருந்து முதலியன.

தடுத்திடவும்......எழ - நோயை மேலெழாமற் றடுத்து ஒழிக்கச்செய்த விச்சைகள் அது செய்யாது அதிகரிக்கச் செய்தன. நோய்மூல நாடாது செய்யும் மாற்றுக்கள் நோயை அதிகப்படுத்துவன என்பது உண்மை. தாம் - தடுத்திடவும் என்று கூட்டுக. இது தருமசேனர் தமக்குத் தாமே செய்து முயன்று கொண்ட - முயன்ற - நோய்த் தீர்வுமுறை. 1318-ல் கூறுவது சமண குருமார் முயன்ற தீர்வு. தாம் - அசையென் றுரைக்குவாருமுளர்.

மிக முடுகி உச்சம் உற - மிக ஓங்கித் தனது முதிர்ந்தநிலை - மேனிலை - யடைய. இதற்குமேல் செல்லாது என்னும் நிலை. சோதிடத்தில் கிரக உச்சம் என்ற வழக்கும், உச்சி என்ற சொல்வழக்கும் இக்கருத்துப்பற்றியன.

வேதனை நோய் - வேதனை செய்கின்ற நோய். வேதனை - நிலையை வேதிக்க - திரிபு செய்ய - உள்ளகாரணம். ஆங்கு - இருந்த அந்த நிலையில்.

நச்சரவின் விடம் தலைக் கொண்டென - விடந் தலைக்கொண்டு என்பது ஒரு சொல் நீர்மைத்தாய் விடவேகம் மேற்போந்து மயக்கம் செய்யும் நிலை குறித்தது. "தலைக்கொண்ட ஏழாம் வேகம்"..."விரியுரை குழறி யாவி விடக்கொண்டு மயங்கி வீழ்வான்" (அப்பூதி - புரா - 27) என்பது காண்க. நச்சரவு - (கொல்லும்) நஞ்சினையுடைய அரவு. கொல்லும் அரவு. நஞ்சில்லாத நீர்ப்பாம்பு போல்வனவு முளவாதலின் நச்சு என்பது பிறிதினியைபு நீக்கிய விசேடணம். நச்சு-நஞ்சு; மென்றொடர் வன்றொடராயது. கொண்டால் என என்பது கொண்டென எனத் திரிந்து நின்றது. தொழில் பற்றிவந்த உவமம்.

நவை - இங்கு மூர்ச்சையாதலாகிய பெருந்துன்பம் குறித்தது.

வாய்த்தவரும்—அனல்முடுகி—என்பனவும் பாடங்கள்.    51

1317. அவர்நிலைமை கண்டதற்பி னமண்கையர் பலரீண்டிக்
"கவர்கின்ற விடம்போன்முன் கண்டறியாக் கொடுஞ்சூலை
யிவர்தமக்கு வந்த; தினி யாதுசெய?" லென்றழிந்தார்
தவமென்று வினைபெருக்கிச் சார்பல்லா நெறிசார்வார். ருஉ

(இ - ள்) தவமென்று......சார்வார் - தவமென்று சொல்லித் தீவினையையே பெருக்கி நற்சார்பில்லாத நெறியினைச் சார்வாராகிய; அமண் கையர் - சமண் கையர்

கள்; அவர் நிலைமை கண்டதன்பின் - அவரது நிலைமையினைக் கண்டதன்பின்; பலர் ஈண்டி......அழிந்தார் - பலரும் கூடி "உயிரைக் கவர்கின்ற விடத்தினைப் போல, முன் எங்கும் எவரும் கண்டறியாத இந்தக் கொடிய சூலை இவர் தமக்கு வந்ததே! இனி என்ன செய்வோம்?" என்று மனமழிந்தனர்.

(வி - ரை) கையர் - கீழ்மக்கள். கவர்கின்ற - உயிரைப் பற்றிக் கவர்ந்து கொண்டு போகின்ற. தன் வசமாக்குகின்ற - அதிகமாகப் பற்றும் என்றலுமாம்.

முன் கண்டறியா - முன் என்றும் யாராலும் என்க. காணு என்னாது கண்டறியா என்றது காண்டல் மட்டுமேயன்றிக் கேட்டும் அறியா என்ற குறிப்பினையும் உள் அடக்கி நின்றது. "நாட்டிற் கிலாத குடர்நோய்" என்றார் சிவப்பிரகாசர். இவர் தமக்கு - தமது சமயஞானம் வல்லவராய்த் தலைவராய் உள்ள இவர்க்கு என அவரது உயர்வு தோன்றும் குறிப்புப்பட அண்மைச் சுட்டினாலும், நம் என்ற சொல்லாலும் கூறினார்.

யாதுசெயல் - மேல் என்ன செய்வோம்? மேற்செயலாவது யாது? அழிதல் - மனமுடைதல்.

தவமென்று வினைபெருக்கி - தவம் என்ற பெயராற் செய்யும் செயல்களாலே அவமாகிய தீவினையையே பெருகச்செய்து. "பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்" என்ற திருவாசகக் கருத்துக் காண்க.

சார்பல்லா நெறிசார்வார் - சார்பு - நற்சார்பு. சாரத்தக்கது. உபசாரம் - "சார்புணர்ந்து" என்பது குறள். "தவஞ்செய்தார்..." என்றும், "தவஞ்செய்த நற்சார்பில் வந்துதித்து..." என்றும் (8. சூத்.) வரும் சிவஞானபோத உதாரண வெண்பாக் கருத்துக்கள் இங்குக் கருதத் தக்கன.

சார்பல்லா நெறி - தீநெறி. மங்கலவழக்கு. சார்வார் - சமண் கையர் - பலர் - ஈண்டி - என்று - அழிந்தார் - என்று கூட்டி முடித்துக் கொள்க.

சார்வலா—சார்வல்லார்—நெறிச்சார்வார்—என்பனவும் பாடங்கள். 52

1318. புண்டலைவன் முருட்டமணர் புலர்ந்துசெய லறியாது
குண்டிகைநீர் மந்திரித்துக் குடிப்பித்துந் தணியாமை
கண்டுமிகப் பீலிகொடு காலளவுந் தடவிடவும்
பண்டையினு நோவுமிகப் பரிபவத்தா லிடருழந்தார். ருந

(இ - ள்) வெளிப்படை. புண்ணுடைய தலையினையும் வலிய முருட்டுத் தன்மையினையும் உடைய அமணர் மனமழிந்து, செய்வதறியாது, தமது குண்டிகையிலிருந்த நீரை மந்திரித்துக் குடிக்கச்செய்தும், நோய் தணியாமை கண்டு, மேலும் மயிற்பீலி கொண்டு உடல் முழுதும் தடவியிடவும், முன்னையினும் நோவு அதிகப்படவே மனவேதனையால் வருந்தினார்கள்.

(வி - ரை) புண் தலை - மயிர் பறித்தலால் புண்ணுடைய தலை. வன் முருடு - வலிய முருட்டுத்தனம். "கலகமிடு மமண் முருட்டுக் கையர்".

குண்டிகை - பீலி - குண்டிகையையும், மயிற்பீலியையும் தாங்கித் திரிவது சமணக் குருமார்களது மரபு. 1325 பார்க்க. "தங்கள் கைத்தாங்கு குண்டிகை நீர் தெளித்து" (திருஞான - புரா - 716), "தழையும் பீலியும் தாழவந்து" (1346), "பீலிதடவிக் காணாது பெயர்வார்" (தண்டி - புரா - 23) முதலியவை காண்க. வழியிற் செல்லும்போது எறும்பு முதலிய சிறு பிராணிகள் சிக்குண்டு படாவண்ணம்

விலக்கவும், நோய் முதலியவை தாக்குங் காலத்துத் தடவி மந்திரிக்கவும் மயிற்பீலியைக் கற்றையாகக் கைக்கொள்வது அவர் வழக்கு. "குண்டிகைக் கையர்களோடு" (தேவா).

காலளவும் - தலைமுதல் என்பது எஞ்சி நின்றது.

நோவு மிக - தருமசேனருக்கு வருத்தம் அதிகரிக்க.

பரிபவம் - பிறர் துன்பங் கண்டக்கால் உளதாகும் வருத்தம். வியாகூலம். பரிவு. "பரிபவம் தீரு முனக்கு" (1386), "பன்முறை யிழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப் போனான்" (471). பரிபவம் - தோல்வி - அவமானம் என்றுரை கொள்ளின் இறந்தது தழுவிய எச்சவும்மை தொக்கது என்க.

இடருழத்தல் - துன்பப்படுதல். உழத்தல் - அனுபவத்தினுள் மிகவும் அழுந்துதல். மந்திரித்தும் குடிப்பித்தும்—என்பதும் பாடம். 53

1319. தாவாத புகழ்த்தரும சேனருக்கு வந்தபிணி
யோவாது நின்றிடலு, மொழியாமை யுணர்ந்தாராய்
"யாவா!நா மென்செய்கோ" மென்றழிந்த மனத்தினராய்ப்
போவார்க "ளிதுநம்மாற் போக்கரிதா" மெனப்புகன்று, ருச

1320. குண்டர்களுங் கைவிட்டார்; கொடுஞ்சூலை கைக்கொண்டு
மண்டிமிக மேன்மேலு முடுகுதலான் மதிமயங்கிப்
பண்டையுற வுணர்ந்தார்க்குத் திலகவதி யாருளராக்
கொண்டவர்பா லூட்டுவான் றனைவிட்டார் குறிப்புணர்த்த. ருரு

1319. (இ - ள்) வெளிப்படை. கெடுதலில்லாத புகழினையுடைய தருமசேனருக்கு வந்த நோய் ஒழியாது நின்றிடவே, அது நீங்காத தன்மையினை உணர்ந்து, "ஆ! ஆ! நாம் இனி என்ன செய்வோம்!" என்று அழிவடைந்த மனத்தினுடன் "இது நம்மாற் போக்குதல் அரிதாகும்" என்று கூறி அகன்று போவார்களாகி, ருச

1320. (இ - ள்) வெளிப்படை. அமண் குண்டர்களும் கைவிட்டனர்; கொடிய சூலை தம்மைப் பற்றிக்கொண்டு, மேன்மேலும் பெருகி வருத்துதலால் இன்னது செய்வதென்றறியாது மதிமயங்கிய நிலையில் முன்னைய உறவினரை எண்ணி உணரப் புக்க அவருக்குத் திலகவதியாராகிய தமக்கையார் உள்ளார், அவர் துணைசெய்ய வல்லார், என்று நினைவுகொள்ளவே, அவரிடத்துத் தமது குறிப்பினை உணர்த்தும் பொருட்டுத் தம்மை ஊட்டுவிக்கும் ஏவலாளனை அனுப்பினார். ருரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

1319. (வி - ரை) தாவாத புகழ் - "உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ்" (குறள்) என்றபடி, முன்னம் யாவருக்கும் தவிராத ஈகைவினைத் தலைநின்று ராதலாலும், இதுபோழ்து, "ஒளியுடைய வித்தகராய் - மேம்பட்டார்" (1305) ஆதலாலும், இனி, "நாவுக்கரசென்று நின்னாமம் நயப்புற மன்னுக" (1139) எனப் பேறு பெறுவாராதலாலும் அவரது புகழ் உண்மையில் தாவாத புகழாயிற்று. தாவாத - என்றும் கெடாத - முக்காலத்தும் குறைவில்லாத.

ஓவாது - நீங்காது - "ஓவு நாளுணர் வழியுநாள்" (நம்பிகள் - கொடுமுடி); "ஓவுத லோவு திருப்பணிசெய்து" (திருநா - புரா - 239) முதலியவை காண்க.

ஒழியாமை - போகாத தன்மையினை. இரண்டனுருபு விரிக்க.

ஆ! ஆ! - ஐயையோ! அடுக்கி வந்த அவலக்குறிப்புச் சொல். ஆச்சரியமும் இரக்கமும் குறிப்பன. அடுக்கு மிகுதி குறித்தது.

**போவார்கள்...புகன்று:-** புகன்று - போவார்கள் என்க. போவதாகிய செயல் முன்னரும், புகன்றதாகிய செயல் பின்னரும் நிகழ்ந்தமையால் அம்முறையே வினைமுற்றெச்சத்தினை முன் வைத்தார். இது நம்மாற் போக்கரிது என்றதனை நோயாளியின் எதிரிற் கூறுதல் மரபன்று; ஆதலின் அவ்விடம் விட்டுப் போயினபின் புகன்றனர் என்பதும் குறிப்பு. **போக்கு அரிதாம்** - மாற்றுதல் அரிதாகும்.

**போவார்கள்** - போவார்களாகி. மேல்வரும் பாட்டில் "குண்டர்கள்" என்ற எழுவாயுடன் கூட்டுக. குண்டர்களும் - உணர்ந்தாராய் - மனத்தினராய்ப் - புகன்று போவார்கள் - கைவிட்டார் என்று கூட்டி முடித்துக்கொள்க. 54

1320. (வி - ரை) **குண்டர்கள்** - கீழோர் - சமணர். உம்மை தாம் உயர்ந்த உறவென்று சார்ந்த அவர்களும் என உயர்வு சிறப்பு.

**கைவிட்டார்** - கை - தான் தனித்து வேறு பொருள்தராது சார்ந்த சொல்லுக்கு உறுதிப் பொருள் தந்து நிற்பதோர் முன்னொட்டுமொழி. கை கூடும் என்பதுபோல. இதனை உபசர்க்கம் என்பர் வடவர்.

**கைக்கொண்டு** - பற்றிக்கொண்டு. கைக் கொள்ளுதல் - வசமாக்குதல்.

**கைவிட்டார் - கைக்கொண்டு** - இரண்டிடத்தும் கை என்றது ஒரு பொருள் தந்து நின்றது. குண்டர்கள் விடவும், சூலை கொள்ளவும் நின்ற அந்த நிலையினை இவ்வாறு ஒரு தன்மைப்பட்ட சொற்களாற் கூறிய குறிப்பினை ஓர்க. **சூலை** - இறைவரருளிய அருட்சத்தி. இறைவரருள் கொள்ளவே முன்கொண்டிருந்த மயக்கம் விட்டது என்ற குறிப்புக் காண்க. சார்ந்ததன் வண்ணமாய் நிற்பது ஆன்மாவின் இயல் என்பதும், உலகத்தைப் பற்றி அதனோடு அத்துவிதமாய் நின்ற உயிர்ப்போதம் அதனை விட்டபோது இறைவனருளைப் பற்றிக்கொண்டு அதனோடு அத்துவிதமாய் நிற்குமென்பதும் உணர்த்தப்பட்ட குறிப்பும் கண்டு கொள்க. **மூடுதல்** - பெருகி அலைத்தல்.

**மதிமயங்கிப் பண்டை உறவு உணர்ந்தார்க்கு** - மதிமயக்கமாவது இனி இந்நிலையில் இங்குத் துணையாவார் யாவரோ? என்று தெரியாது மனங் கலங்குதல் என்ற பொருளில் நின்றது. **பண்டை உறவு உணர்ந்தார்** அவர்க்கு என்க. புதிதாய் உறவாகக் கொள்ளப்பட்டார் கைவிட்டகலவே, இதுகாறும் மறந்திருந்த பண்டை உறவு உணர்வில் வந்தது; அவ்வாறு வரப்பெற்ற அவர்க்கு.

**உணர்ந்தார்க்கு உள்ளராக்கொண்டு** - அவர்க்குத் திலகவதியார் உளர் என்ற உணர்ச்சி வரவே அதனை உட்கொண்டு. தீராநோய் மிக்க பொழுதிலே பழைய உறவினரின் நினைவு வருதல் உலக இயல்புமாமென்க. நடுக்காட்டில் நள்ளிரவில் உழல்வார்க்கு மின்போல இறைவரருளால் மயக்கத்தினிடை ஒரு நல்லுணர்வு உதிக்கும்.

**ஊட்டுவான்** - அடிசில் சமைத்தளிக்கும் ஏவலாள். "திருமடத்தி லமுதாக்குவார்" (திருஞான - புரா - 567), "அமுதமைப்போர்" (ஷெ 568), "கொணர்ந்தமுது செய்தளிக்கும் பரிசனம்" (ஏயர்கோன் - புரா - 175) முதலியவை காண்க.

அடிசிலமைத்து இடைவிடாது கவளக்கணக்காகக் கையில் இட்டு உண்பித்தலால் **ஊட்டுவான்** என்றார் என்பது ஆறுமுகத் தம்பிரானருரை. **ஊட்டுவான்** - இடநோக்கி உணவு என்ற செயப்படுபொருள் வருவிக்க. இங்குத் திலகவதியார்பாற் சேரும் நல்வாழ்ப் பயனை ஊட்டுவிப்பான் என்றதொரு தொனிப்பொருளும் கொள்ளவைத்த தெய்வக் கவிநலம் காண்க. "அதன் பயனும் கொடுப்பானும்" (சாக்கியர் - புரா - 5) என்பது சைவத்திற மன்றோ?

**விட்டார்** - செல்ல விடுத்தனர். **குறிப்பு உணர்த்த விட்டார்** என்று கூட்டுக. அந்தக் குறிப்பினை அவன் வாக்கில்வைத்து, 1322ல் கூறுதல் காண்க. தமது வாக்கில்

தாமே சொல்லிவிட இயலாதபடி நோயால் நொந்தாராதலின், குறிப்பால் உணர்த்த நின்றமை பற்றி, அப்பொருளை இங்கு விரித்துக்கூறுது, உணர்த்த உணர்ந்த அவன் வாக்காற் கூறிய நயமும் தகுதியும் உணர்க.

குறிப்பு உணர்த்த-சொல்லிவிட்ட அச்செய்தியின் குறிப்பாவது திலகவதியாரை இங்கு வந்து தமக்கு உதவும்படி வேண்டுதலாகும். அதனை அவனும் நேர்முகமாகக் கூறுது, "உய்யும்படி கேட்டு" என்று குறிப்பா லுணர்த்தியதும், அக்குறிப்பினை அறிந்துகொண்ட அம்மையாரும் "நானங்குன் னுடன்போந்து நன்றறியா ரமண் பள்ளி நண்ணுகிலேன்" என்று விடையளித்துத் தம்பியாரைச் சமணத்தை விட்டுத் திருவதிகை சேரும்படி குறிப்பா லுணர்த்தியதும், அதனை அக்குறிப்பினு லுணர்ந்த அவரும் "ஈசனருள் கூடுதலால் செவ்வாறு சேர்திலக வதியார்தாள் சேர்வனெனத்" துணிந்தெழுந்ததும் இங்கு வைத்து ஒருங்கு காணுமாறு குறிப்பு உணர்த்த என்று வைத்த சொற்றிறம் கண்டு களிக்கத்தக்கது. இவையே அறிவோர்களது சொற்களுக்கு இலக்கியமாவன என்பதும் கண்டுகொள்க. "கூறாமை நோக்கிக் குறிப்பறிவார்", "குறிப்பிற் குறிப்புணர்வார்" என்று பலவாறும் இவ்வறிவு நுட்பம் பிறிதோர் சார்பு பற்றித் திருக்குறளினுள் விதந்து கூறப்படுதல் காண்க. 55

1321. ஆங்கவன்போய்த் திருவதிகை தனையடைய வருந்தவத்தார்
பூங்கமழ்நந் தனவனத்தின் புறம்பணையக் கண்டிறைஞ்சி
"யீங்கியா னுமக்கிளையா ரேவலினால் வந்த"தெனத்,
"தீங்குளவோ" வெனவினவ, மற்றவனுஞ் செப்புவான், ருசு

1322. "கோல்லாது சூலைநோய் குடர்முடக்கித் தீராமை
யெல்லாருங் கைவிட்டா ரிதுசெயலென் முன்பிறந்த
நல்லாள்பாற் சென்றியம்பி நானுய்யும் படிகேட்டிங்
கல்லாகும் பொழுதணைவா யென்று"ரென் றறிவித்தான். ருஎ

1321. (இ - ள்) வெளிப்படை. அவ்வாறே அவன் போய்த் திருவதிகையினை அணைய, அந்நேரத்தில் அருந்தவத்தாராகிய திலகவதியம்மையார் பூக்கள் மணம் வீசுகின்ற திருநந்தவனத்தின் புறத்தே அணைந்தாராக, அவரைக்கண்டு வணங்கி, "யான் இங்கே உமக்கு இளையாரது ஏவலினால் வந்தது" என்று சொல்ல, அதுகேட்டு அவர் "தீங்கு உளவோ?" என்று கேட்க, மற்று அவனும் சொல்வானாகி, ருசு

1322. (இ - ள்) வெளிப்படை. "சூலையானது கொல்வதுமட்டில் செய்யாது, குடரினை முடக்கித் தீராநோயாக அவர்பால் நின்றது; எல்லாருங் கைவிட்டனர்; இந்தச் செய்தியை என்முன்பிறந்த நல்லாளிடத்துச்சென்று சொல்லி, நான் உய்யும் வகையினை அவர்பாற் கேட்டு, இங்கு இராப்போதில் அணைவாய் என்றனர்" என்று அறிவித்தான். ருஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

1321. (வி - ரை) ஆங்கு - அவர் விட்ட ஆங்கே - அவ்வாறே. அப்பொழுதே என்றலுமாம்.

அருந்தவத்தார் - "திருப்பணிகள் பலசெய்தார்" (1309), "தவ விளக்கனையார்" (1311) என்றவை காண்க. தவம் - ஈண்டுச் சரியையினைக் குறித்து நின்றது.

பூங்கமழ் நந்தனவனத்தின் புறம்பு அணைய - பூக்கமழ் என்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றது. மருணீக்கியாரின் வினையது வலிமை மெலியும் காலம் என்பது குறிப்பு. அதிகாலையில் மலர்கள் விரிந்து மணங் கமழ்வன. ஊட்டுவான் முன் இரவி

னிற் சென்று விடியற்காலையில் திருவதிகையினை அணைந்தனன் என்பதும் பூங்கமழ் என்றதனால் உணர்த்தப்பட்டது. வைகறையில் எழுந்து குளித்துச் சென்று விடியுமுன் மலர்களைப் பறித்துக்கொள்ளுதல் வேண்டுமென்பது விதி. "புலர்வதன்முன்" (1309) என்றதும், 551, 1023-ல் உரைத்தவையும், பிறவும் இங்கு நினைவுகூர்தற்பாலன.

**புறம்பு அணைய** - என்றதனால் திலகவதியம்மையார் மலர்களைப் பறித்தபின் நந்தனவனத்தினின்றும் வெளிப்போந்த நேரம் என்பது கருதப்படும்; அதற்கு முன்பாயின் அத்திருப்பணி செய்வார் சிவனைநினைந்து திருவைந்தெழுத்தினை எண்ணிக்கொண்டு செல்வாராதலின் பிறரொருவரிடமும் வாய்பேசார் என்பது மரபு.

**உமக்கு இளையார்** - உமக்குத் தம்பியார். "இப்போது பரசமயத்தினிடை வீழ்ந்தவராயினும், இனி "உய்யும்படி" நீர் அருள் செய்வீராயின், சிவனடிமைத் திறத்தில் உமக்கு அவர் இளைக்கமாட்டார்; ஆதலின் "உய்யும்படியை அருள்வீர்" என்ற குறிப்புப்பெற இளையார் என்ற நயமும் காண்க.

**ஏவலினால் வந்தது** - வந்தது - வந்த இச்செய்தி இளையார் ஏவலினால் நிகழ்வதாயிற்று. வந்தேன் என்னாது வந்தது என்று கூறுதல் பணிவு காட்டுவதோர் முன்னுள் மரபு வழக்கு. "முடிசூடி யருளுமரபால் வந்ததென" (கழறிற் - புரா - 12) என்பது காண்க.

**தீங்குளவோ? என வினவ** - நலமா என்று வினவுதல் மரபாயிருக்க இவ்வாறு கேட்டது என்னையோ? எனின், "இறைவர் சூலைமடுத் தாள்வம்" (1313) என்றருளியபடி சூலைநோயாகிய அத்தீங்கினையே இறைவரருள் பெறும் நலமாகக் கருதினாராதலின் என்பது. அத்தீமையினையே நன்மையாகக் கொண்டனர் என்க. "திருவுடையீருங்கள்பாற் றீங்குளதோ? எனவினவ" (திருஞான - புரா - 731) என்ற வரலாறும் இங்கு நினைவு கூர்தற்பாலது. **மற்று அவனும்** - மற்று - அசை.

**புறத்தணைய**—என்பதும் பாடம். 56

1322. (வி - ரை) **சூலைநோய் கோல்லாது குடர்முடக்கித் தீராமை** என்க. "தீங்குளவோ?" என்றார்க்கு, "ஆம்! தீங்கு உளது. அது கொடுஞ்சூலை; ஆயின் அதன் அளவு உயிர்போக்கும் அவ்வளவு நிகழவில்லை" என முன்னர் அறிவித்து, அவரது மனக்கவலையினைத் தணிவித்து மேலே சொல்லவேண்டும் எனக் கருதிக் **கோல்லாது சூலைநோய்** என்று தொடங்கினான். எமது திருநாவுக்கரசர் பெருமானை ஊட்டும் திருப்பணி செய்யும் பேறு வாய்க்கப் பெற்றவனது சொற்றிறமன்றோ? "குடரோடு தொடக்கி முடக்கியிட" (தேவா).

**தீராமை** - தீராமையால். எவ்வாற்றானும் தீராது நின்றபடியால்.

**எல்லாரும் கைவிட்டார்** - கைவிடாது காக்கவல்லவர் என்று சார்ந்திருந்த எல்லா மணி மந்திர மருந்து நூல் வல்லவரும்.

**எல்லார்** - தேவர் என்று கொண்டு சமணக்குருமார்களைத் தேவர் என்றழைக்கும் மரபு வழக்குப்படிக் கூறினானாக உரைத்தலுமாம். எல் - இரவு எனவும் பொருள்படுமாதலின் அவர்களது விளக்க மென்பது உண்மையில் இருளேயாவது என்னும் பொருள் தரும்படி, **எல்லார்** இரவுபோல்பவர் என்ற குறிப்பும் இரட்டுற மொழிதலாற் பெறவைத்த நயம் காண்க. "இருட்குழாம் செல்வதுபோல" (1349), "இழுது மெய்யிருட் கிருளென வீண்டினர்" (திருஞான - புரா - 678) முதலியவை காண்க.

**இது சேயல்** - இந்தச் செய்தியினை யியம்பி. இரண்டனுருபு தொக்கது. சேயல்- செய்கை - நிகழ்ச்சி.

**என் முன்பிறத்த நல்லாள்** - முன் பிறந்தாராதலின் அவர் தன்மையும் முன்னிற்கத் தக்கது; அவரும் என்போ லுழலாது நல்லார் என்பதும், யான்பின் பிறந்து

பரசமயம் புக்குழல்வேனுதலின் பின்னிற்கத் தக்க தீயவன் என்பதும் குறிப்பு.
**என்முன் பிறந்த** - நான் பிறப்பதற்கு முன் காலத்தில் பிறந்த.

**உய்யும்படி கேட்டு** - உய்யும்படியினை - வழியினைக் - கேட்டு.

**அல் ஆதும் பொழுது இங்கு அணைவாய்** என்க. அல்-இரவு. இராத்திரிப் போதில் இங்கு அணைவாய் என்றது சமணர் பிறர் அறியாதிருத்தற் பொருட்டு. சமயச் சோர்வு படுவதனின் உயிர் துறப்பித்தல் தகுதி யென்ற கோணற் கோட்பாடு பற்றிக், கொல்லாமை மேற்கொண்ட சமண் கையர் கொலையும் புரியத், துணிவோராதலின் இவ்வாறு கூறினர். **ஊட்டுவான்** சென்றதும் இரவேயாம் என்பது மேலுணர்த்தப் பட்டது. பின்னர் நாயனார் "காணுமே யிரவின்கண்" (1326) பாடலிபுத்திரத்தை விட்டுத் திருவதிகை சேர்ந்ததும் இக்கருத்தே பற்றியது. பின்னர் நாயனாரைப் பல வாறும் அலைத்துக் கொலைபுரியும்படி மன்னவனை அச்சமண் கையர் தூண்டியதும் கருதுக. ஆயின் இப்பொழுது "காணுமே யிரவின்கண்" அவ்வாறு கரந்து சென்ற அவர், பின்னர், அச்சமணர் செய்த தீயமிறைகளுக்கெல்லாம் "ஈண்டுவருந் துய ருளவோ வீசனடியார்க்கு என்று மூண்டமன நேர்நோக்கி முதல்வனையே தொழு திருந்த" (1362) திண்மை சிவனை அடைந்த அன்பின் உறைப்பினுலாகியது என்க. அது பற்றியே "வீரமென்னுல் விளம்புந் தகையதோ?" என்று அடியார்கள் புகழப்பட்டனர்.

"கொல்லாது......அணைவாய்" என்றது தருமசேனர் தமக்கையார்க்கு அறிவிக் கும்படி ஏவின குறிப்பு.

**இங்கு அல் ஆதும் பொழுது** என்றது "ஒளியுடைய வித்தகராய்" (1305)த் தருமசேனர் அமர்ந்த அதுவரை அங்கு ஒளி நின்றது; இனி, அல் - இருள் - ஆகி அமண்பாழிகள் இடிபட்டுப் பாழ்படப் போகின்றன என்ற குறிப்புப்பட நிற்கும் தொனிப்பொருளும் காண்க.

கொல்லாத—தீராமல்—தீரா்மே—அல்லாநம்—என்பனவும் பாடங்கள். 57

1323. என்றவன்முன் கூறுதலும், "யானங்குன் னுடன்போந்து
நன்றறியா ரமண்பள்ளி நண்ணுகிலே னெனுமாற்றஞ்
சென்றவனுக் குரையென்று திலகவதி யார்மொழிய
அன்றவனு மீண்டுபோய்ப் புகுந்தபடி யவர்க்குரைத்தான். ருஅ

(இ - ள்) வெளிப்படை. என்று முன் அவன் சொல்லுதலும், "நான் அங்கு உன்னுடன் சென்று, நன்மைநெறி யறியாத அமணர் பாழியினை நண்ணமாட்டேன் என்னும் மாற்றத்தினைப்போய் அவனிடம் உரைப்பாயாக!" என்று திலகவதியார் சொல்ல, அன்று அவனும் திரும்பிப்போய்ப் புகுந்தபடியினை அவ்வாறே அவருக்கு அறிவித்தான்.

(வி - ரை) **நன்று அறியார் அமண்பள்ளி நண்ணுகிலேன்** - நான் அங்குச்சேர் கிலேன் என்றமையால் அவனை இங்குச்சாரும்படி சொல்க என்பது குறிப்பு. அதனைச் சொல்லாமற் சொல்லிய திறமும், அக்குறிப்பினைத் திருவருளால் உணர்ந்த அவரும் அவ்வாறே வந்துசார்ந்ததும் காண்க. அருநோய் கொண்டவராய்ச் சொல்லப்பட்ட தம்பியாரைக் காண்பது பொருட்டேயாயினும் தீயோர்வாழும் இடம் செல்வது தகாது என்று திலகவதியார் கொண்ட துணிபு யாவரும் கண்டு பின்பற்றத்தக்க ஒழுக்கமாம்.

**நன்றறியார்** - நன்மையை அறியமாட்டார். எனவே தீமையினையே அறிந்து புரிபவர் என்பதாம், மங்கலவழக்கு.

மாற்றம் - அவர் எண்ணியதற்கு மாறுபட்ட விடையாதலின் மாற்றம் என்ற பெயராற் கூறினர்.

அன்று - அற்றைநாளிரவே - அல்லாகும் பொழுதே.

புகுந்தபடி - தான்போந்ததும் அவர் விடையளித்தும் ஆகிய செய்திகள் நிகழ்ந்த படியினை. புகுதல் - போதல் - நிகழ்தல். படி - பெயர். படியினை ; இரண்டனுருபு தொக்கது.

நன்கறியார்—அவர்க்குரைப்ப—என்பனவும் பாடங்கள். 58

1324. அவ்வார்த்தை கேட்டலுமே யயர்வெய்தி "யிதற்கினியான்
எவ்வாறு செய்வ?" னென வீசரருள் கூடுதலால்
"ஒவ்வாவிப் புன்சமயத் தொழியாவித் துயரொழியச்
செவ்வாறு சேர்திலக வதியார்தாள் சேர்வ" னென, ௫௯

1325. எடுத்தமனக் கருத்துய்ய வெழுதலா லெழுமுயற்சி
யடுத்தலுமே யயர்வோதுங்கத் திருவதிகை யணைவதனுக்
குடுத்துழலும் பாயொழிய, வுறியுறுகுண் டிகையொழியத்,
தொடுத்தபீ லியுமொழியப் போவதற்குத் துணிந்தெழுந்தார், ௬௦

1326. பொய்தருமா வுள்ளத்துப் புன்சமண ரிடங்கழிந்து
மெய்தருவா னெறியடைவார் வெண்புடைவை மெய்சூழ்ந்து
கைதருவார் தமையூன்றிக் காணுமே யிரவின்கட்
செய்தவமா தவர்வாழுந் திருவதிகை சென்றடைவார், ௬௧

1327. சுலவிவயிற் றகங்கனலுஞ் சூலைநோ யுடன்றொடரக்
குலவியெழும் பெருவிருப்புக் கோண்டணையக் குலவரைபோன்
றிலகுமணி மதிற்சோதி யெதிர்கோடிரு வதிகையினிற்
றிலகவதி யாரிருந்த திருமடத்தைச் சென்றணைந்தார். ௬௨

1324. (இ - ள்) வெளிப்படை. அந்த வார்த்தை கேட்டலும் சோர்வு அடைந்து "இனி, இந்நிலையினுக்கு யான் எவ்வாறு செய்வேன்" என்று மயங்கியபோது, சிவபெருமான் திருவருள் கூடியதாகையால், "பொருந்தாத இந்தப் புன்மைச் சமயத்தினில் ஒழியாத இத்துன்பம் ஒழியும்படி செந்நெறியிற் சேர்ந்த திலகவதியார் சேவடிகளைச் சேர்வேன்" என்று உட்கொண்டு, ௫௯

1325. (இ - ள்). வெளிப்படை. எடுத்த மனக்கருத்து உய்யும்படி எழுதலாலே, எழுகின்ற முயற்சி கூடியதாக, சோர்வு ஒதுங்கிப் போகத், திருவதிகையினைச் சேர்வதற்கு, உடுத்துழன்ற பாய் ஒழியவும் உறியிற்றூக்கிய குண்டிகை ஒழியவும் தொடுத்த மயிற்பீலியும் ஒழியவும் போவதற்குத் துணிந் தெழுந்தனராகி, ௬௦

1326. (இ - ள்) வெளிப்படை. பொய்யினைத் தரும் மயக்கமுடைய உள்ளத்துப் புன்சமணர்களது இடத்தினை நீங்கி மெய்யினைத் தருபவனது நன்னெறியினை அடைபவராய், அதற்கேற்றபடி வெண்புடைவையினைத் தமது மெய்யிற் சுற்றிக்கொண்டு, கை கொடுப்பவர்களைப் பற்றி ஊன்றிக்கொண்டு, சமணர்கள் காணுதபடி, இரவிலே, தவஞ்செய்யும் மாதவர் வாழ்கின்ற திருவதிகையினைச் சென்று அடைவாராகி, ௬௧

1327. (இ - ள்). வெளிப்படை. சுழற்றிச் சுழற்றி வயிற்றினுள்ளே பற்றி எரியும் சூலைநோய் தம்முடனே தொடர, குலவியெழுகின்ற பெருவிருப்பம் புணையாகத் தம்மைக்கொண்டு செலுத்தப், பெருமலைபோல விளங்கும் திருமதிலின் ஒளி எதிரே



திருவதிகை வீரட்டானம் - முன் கோபுரம்

—பாட்டு - 1327 - பக்கம் - எஉ



திருவதிகை வீரட்டானம் - உள் விமானம்



—பாட்டு - 1333 - பக்கம் - அஉ



சித்தவட மடம்

—பக்கம் - கநுஉ

தோன்றும் திருவதிகையினில் திலகவதியார் இருந்த திருமடத்தினைச் சென்று அணைந்தனர். சஉ

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1324. (வி - ரை) கேட்டலுமே அயர்வு எய்தி - துணைசெய்ய வருவாரென்று எண்ணப்பட்ட அவர் வர மறுத்தமையால் மனம் உடைந்தது; அதனால் அயர்வு வந்தது.

இதற்கு இனி யான் எவ்வாறு செய்வன் - இதற்கு - இந்நிலையினை நீக்குதற்கு. நான்கனுருபு பகைப்பொருளில் வந்தது. நோய்க்கு மருந்து என்பதுபோல. என் என்று எண்ணமிட. எவ்வாறு செய்வன் - மேல் என்ன செய்வேன் ?

ஈசர் அருள் கூடுதலால் - என - உய்ய - கருத்து - மனம் எழுதலால் - என்று மேல்வரும் பாட்டுடன் தொடர்ந்து முடிக்க.

அருள் கூடுதலால் - இங்கு, "உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங் கருமமு மருள்...... அருளுரு உயிருக் கென்றே ஆக்கினன்" (சித்தியார் - 1. 47) என்று கூறுகையால் உயிர்களுக்கு அருள் கூடாத காலமுமுண்டோ? எனின், அற்றன்று; முன்னர்ச் சமண்சமயம் புக்கதும் அருளே; ஆயின், அது முன்னைத் தவத்தினிடை நேர்ந்த வழுவைக் களையும் வகையால் தீயூழை அனுபவிப்பித்துக் களையும் வழியிலே திரோதானம் என்னும் மறைப்புச் சத்தி என்ற உருவத்திற் போந்த அருளாகும். இப்போது, அது அருட்சத்தியாக மாறிக் கூடியதனால் அருள் கூடுதலால் என்றார் என்க. "மாயை மாமாயை...... மருளெனி லிருளாய் நிற்கும்; ......அருளெனில் ஒளியாய் நிற்கும்......" (சிவப்பிரகாசம் - 70) என்றது காண்க. முன்னர் "நம்பர் அருளாமையினால்" (1302) என்றதும் இக்கருத்துப்பற்றியது.

ஒவ்வா இப் புன்சமயம் - "அத்துறையின் மீக்கூரு மமைதியினால் ......ஒளியுடைய வித்தகராய்" (1324) விளங்கிய அந்நிலையில் மிகவும் ஒவ்வுதல் உடையதாய்க் காணப்பட்டுப் போந்த சமயம், உண்மையில் ஒவ்வாத புன்சமய மாயினமை இப்போது புலப்பட, அதனைவிட்டுத் தாள் சேர்வன் என்னும் துணிவு பிறந்தது. அதற்குச் சூலை நோய் காரணம்போல வெளித் தோற்றப்படினும் அது காரணமன்று; அதனை ஏவிய திருவருள் காரணமாம். இத்துணிவு திருவருள் காட்டக் கண்ட வுண்மை. சூலை திருவருள் நிகழ்ச்சிக்குக் கருவியாய் நின்றமட்டில் அமைந்ததென்பதாம். அவ்வாறல்லாக்கால் "இலக்க முடம்பிடும்பைக்கு" என்றபடி உடலின் கன்ம அளவினால் வரும் நோய்கள் வந்தபோதெல்லாம் மாறும் சமய உணர்ச்சி அறிவுடைமைக் கேலாததாய் முடியும் என்க. அருள்கூடக் - கருத்து எழுந்தது; கருத்து எழவே - முயற்சி அடுத்தது; அஃது அடுக்கவே அயர்வு ஒதுங்கிற்று; ஒதுங்கவே, போவதற்குத் துணிவு பிறந்தது; மனத்தில் துணிவு பிறக்க உடல் எழுந்தது என்று தொடர்ந்து திருவருட்டுணையை நிகழ்ச்சியில் வைத்துக் கண்டுகொள்க.

புன்சமயத்து ஒழியா இத்துயர் - "அச்சமயத் திடைத்தாமுன் னதிகரித்து வாய்த்துவரும் விச்சை"களும் (1316), பிற குருமார் செய்த மந்திர முதலியனவும் (1318) பயன்படா தொழிந்ததனால் அவற்றுக்கு மேலானதொரு சத்தியால் இயக்கப் படுவ துலகம் என்று தெளிந்தனர் என்க.

செவ்வாறு - செந்நெறி. ஒவ்வா இப்புன்சமய நெறிபோலன்றி, அது செம்மை நெறியாயினமையும், அம்மையார் அதனிற் பிறழாது ஒழுகி வாழ்வடைந்து நிற்றலையும் திருவருள் கூடுதலால் உள்ளத்துக் கண்டனர். "திருவனைய" (1282 - 1296) என்றபடி, திருவுடையாராகிய திலகவதியார் (தம்போற் பிறழாது) நின்ற செம்மை நெறியினையே தாமும் அடைந்து பேறுபெறும் செந்நெறி - செவ்வாறு - எனக்

கொண்ட என்னும் "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட", (முதனூல்) குறிப்பைக் கொள்ளவைத்ததும் கண்டுகொள்க.

**செம்மை** - சிவத்தன்மை. **ஆறு** - நெறி - அதனைச் சேரும் வழி.

**திலகவதியார் தாள் சேர்வன்** - தாம் செய்த பிழையை நீக்கிச் சிவனை அடைவிக்க வல்ல குருவைச் சேர்தல் கருதினாராதலின், "சிவன்றாள் சேர்வன்" என்னாது, அம்மையாரைக் குருவாகக்கொண்டு அவர்தாள் சேர்வன் என்று துணிந்தார். "உய்யும்படி கேட்டு" (1328) என்றதும், "இனி மயங்கா துய்ந்து கரையேறு நெறி உரைத்தருளும்" (1328) என்றதும், அதுகேட்ட அம்மையார், "பற்றறுப்பார் தமைப் பணிந்து பணிசெய்வீர்" (1330) என்றுபணித்து, "திருநீற்றை யஞ்செழுத்தோதிக் கொடுத்து"க் (1331) கோயிலினுள் கொடுபுக்கு விடுத்ததும், வழிப்படுத்தியதும் (1332) ஆகிய நிகழ்ச்சிகளும் காண்க. "அவனை வழிபட்டங் காமாறு காட்டுங், குருவை வழி படிற் கூடலு மாமே" (7. தந் - 416) என்ற திருமந்திரமும் காண்க.

**என - எடுத்து** - என்று மேல் வரும்பாட்டுடன் தொடர்ந்து கொள்க. 59

1325. (வி - ரை) **எடுத்த** - பரசமயக் குழியினின்றும் தம்மை எடுத்த. "தாள் சேர்வன்" என்று அருள்வழிப் போந்த கருத்து அவரை மேலே எடுத்தது என்க. "எடுத்தருள வேண்டும் என" (1311) என்று வேண்டியபடி எடுத்த.

**உய்ய** - தாம் உய்யும்படி. உலகை முய்யும்படி என்ற குறிப்புமாம்.

**எழும் முயற்சி - எழும்** - விழுந்து (1315), மயங்கி நவையுற்றுக் (1316) கிடந்த அந்நிலையினின்றும் எழுகின்ற.

**முயற்சி அடுத்தல்** - முயற்சி கூடுதல். **அயர்வு ஒதுங்க** - முன்னைய இளைப்பு ஒரு புறம் ஒதுங்க. முற்றும் நீங்காது நின்றதாயினும் மிகவருத்தஞ் செய்யாத நிலையில் ஒதுங்க. அது நின்ற நிலையினைச் "சூலைநோ யுடன்றொடர" (1327) என்பதிற் காண்க. "சூலை மறப்பிணி தான் அந்நின்ற நிலைக்க ணகன்றிடலும்" (1336) எனப் பின்னர்க் கூறும் அவ்வளவில் நோய் முற்றும் தீரும்வரை நோயும் அயர்வும் ஓரளவு நிற்பதாயின நிலையையும் குறிக்க ஒதுங்க என்றார்.

திருவதிகை அணைவதனுக்குப் - **பாய் - ஒழியக் - குண்டிகை ஒழியப் - பீலியும் ஒழியப்** போக்குவதற்குத் துணிந்து என்று கூட்டுக.

திருவதிகை சென்று சேர்வதற்கு இந்தச் சமண வேடங்கள் தடையாவன; அவ்வேடந்தாங்கி அங்குச் செல்லுதல் தகாது; ஆதலின் ஒழிய என்றார். ஒழித்து என்னாது ஒழிய என்றமையால் முயற்சியின்றித் தாமாகவே கழன்றுவிட என்பது குறிக்கப்பட்டது. நாயனார் திருவதிகை சேர்ந்தமையால் அப் பொய்வேடங்கள் அவர்பால் மட்டுமேயன்றி ஏனையோர்பாலும் உலகில் ஒழிய நின்றன என்பதும் குறிப்பு.

**அணைவதனுக்கு** - திருவதிகை சேர்வதற்குத் தகுதியுடையராய்த் தம்மை ஆக்கிக் கொள்ளும்பொருட்டு முன் தாங்கிய அந்த அவ்வேடங்களை விட்டு, வெண்புடைவை மெய் சூழ்ந்து உரியபடி சென்றனர் என்க. இந்நாளில் தவம் செய்வதற்குரிய தவக் கோலந் தாங்காது பலப்பல அவவேடங்களுடன் திருத்தலங்களுக்குச் செல்வோர் இவ்வுண்மையை உணர்ந்து அதற்குத் தக்கவாறு ஒழுகுவாராயின் நலம் பெறுவர் என்பது துணிபு.

**மெய் சூழ்ந்து** - நோயின் கடுமையால் உரியபடி உடுக்க இயலாது மேனியிற் சூழக்கொண்டனர் என்பது குறிப்பு.

**துணிந்து எழுந்தார்** - கருத்தும் அதற்கேற்ற முயற்சியும் வர, அதனால் அயர்வும் நீங்கத், துணிவுபெற்றனர்; துணிவு பெறவே எழுந்தனர். மெய்வருத்தமும் பாராது எழுந்து சென்றது மனத்துணிவு பற்றியாம் என்க.

**எழுந்தார்** - *எழுந்தாராகி. முற்றெச்சம். எழுந்தார் - கழிந்து - சூழ்ந்து - ஊன்றிக் - காணுமே - சென்று - அடைவார் - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி வினை முடிபு செய்து கொள்க.*

**எழுந்தார்** - *என்றதனை வினைமுற்றாகவே கொண்டு இந்த இரண்டு பாட்டுக்களையும் ஒன்றாகக் கூட்டி முடிப்பாருமுண்டு. பொருளும் சொல்லும் தொடர்ந்து செல்லும் நிலைநோக்கி வினையெச்சமாகக் கொண்டு உரைக்கப்பட்டது.* 60

1326. (வி - ரை) **பொய்தரும் மால் உள்ளம்** - *பொய்யினையே பயனாகத்தரும் மயக்க உணர்ச்சி பொருந்திய உள்ளம்.*

**சமணர் இடம்** - *சமணர் பள்ளி.* **கழிந்து** - *நீங்கி.* **மெய் தருவான் நெறி** - *சிவனது நெறி.* **மெய்** - *சிவசத்தாகிய தனது நிலை.* **தருவான்** - *அதனை உயிர்கள் பெறும்படி கொடுப்பவன்.* **மெய்தருவான்** - *சிவபெருமான்.* **தருவான்** - *வினையாலணையும் பெயர்.* **தரு** - *என்பதனை வினைத்தொகையாக்கி* **வான்நெறி** - *என்று பிரித்து, மெய்யைத் தரும் வானத்தை அடையும் நெறி என்று உரைப்பாருமுண்டு. இப்பொருட்கு* **வான்**- *முத்திதரும் மேலுலகம் என்க. "வெருளின் மெய்ம்மொழி வானிழல்" (பாயிரம்).*

**வெண் புடைவை மெய்சூழ்ந்து** - **வெண்மை** - *தூய்மைக்கும் புகழுக்கும் உரிய நிறம்.* **வெண்புடைவை** - *சிவந்த கல்லாடை புனையும் துறவிகளன்றி, ஏனைய சைவர்க்குரிய உடை. ஏனைய நிறம் பற்றிய உடைகளை உடுத்தலாகாது என்பது விதி.*

**புடைவை** - *புடவை எனவும் வழங்கும். இது இந்நாளில் வழக்கில் பெரும்பான்மை பெண்களணியும் உடைக்கு வழங்குவதாயிற்று. உடம்பின் புடைசூழ்வதனால்* **புடைவை** *எனப்படும்.*

**கைதருவார் தமை ஊன்றி** - **கை தருவார்** - *கைகொடுத்துத் தாங்கி வழிச்செல்ல வுதவுவோர்.*

**ஊன்றுதல்** - *அவர்களது கைத்தாங்கிய பலத்தின் உதவிகொண்டு ஊன்றிச் செல்லுதல். சூலைநோயுட் பட்டதனால் தாமே நடந்து செல்ல இயலாத பலக் குறைவாகிய நிலை குறித்தது. அந்நிலையினும் மனத்துணிவும் முயற்சியும் எழுதலால் பிறருதவியினால் நடந்தனர் என்பது.* **தமையன்றி** - *என்பது பாடமாயின் வேறொருவரும் துணையின்றி என்றுரைக்க.*

**காணுமே** - *பிறர் காணாதவாறு. இதன் காரணம் "அல்லாகும் பொழுதணைவாய்" (1322) என்றவிடத் துரைக்கப்பட்டது.*

**இரவின்கண் - அடைவார் - சென்று - அணைந்தார்** *என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.*

**அடைவார்** - *அடைவாராகி. எதிர்காலத் தெரிநிலைவினை முற்றெச்சம்.* **அடைவார்** - **அணைந்தார்** *என்க.*

**செய்தவ மாதவர்** - **செய்தவம்** - *பெரியோர் செய்யும் தவம். செய்யத்தக்க தவம் என்றலுமாம்.* **மாதவர்** - *பெரிய தவத்தை உடையோர். "தவமும் தவமுடையார்க்காகும்" (குறள்) என்றபடி தவம்செய்யும் முன்னைத் தவமுடைய பெரியோர்.* **மாதவர்** *என்பது திருவதிகையில் வாழும் தவமுனிவர் எல்லாரையும் பொதுவாயும், திலகவதியம்மையாரைச் சிறப்பாயும் குறித்து நின்றது.* **மாது அவர்** *என்று பிரித்து அம்மையாருக்கே சிறப்பாக ஆக்கி உரைத்தலுமொன்று.*

*முன்னைத் தவமுடைய பெரியோர்களே திருவதிகையில் வாழப்பெறுவர் என்பதும் தொனிப்பொருள். சீவன்முத்தரே யாயினும் பிராரத்தவாதனை தாக்காமைப்*

பொருட்டும், நடந்துகாட்டிப் பிறரை வழிப்படுத்தற்பொருட்டும் தலங்களிலுறைந்து வழிபடுவர் என்பது உண்மைநூற் றுணிபு.

இடங்கழித்து—என்பதும் பாடம்.

61

1327. (வி - ரை) சூலவுதல் - சுழலுதல். சுருட்டிப் பிடிப்பதுபோல ஊனவித்தல். பிறவினைப் பொருளில் வந்தது.

சூலைநோய் உடன் தொடர - தாம் மேற்கொண்டிருந்த பசுபாசச் செயல்களான் வந்த பாய் - குண்டிகை - பீலி முதலிய கேடுகள் சமணப்பள்ளியில் ஒழியவும், தம் வசமல்லாது அருள் உருவாய் இறைவன் தந்த சூலைமட்டும் தம்முடனே தொடரவும் என்க. உடன் - "உடனுனைனிடம் வீழ்ம்மிழலையே" (ஆளுடையபிள்ளையார் தேவாரம்) என்றபடி உயிர்களினின்றும் நீங்காது உடன்நின்று தொடர்ந்து ஈடேற்றுவது அருளுருநிலை என்பது ஞானசாத்திர முடிபு. "அகத்துறுநோய்க் குள்ளினரன்றி யதனைச், சகத்தவருங் காண்பரோ தான்" என்ற (திருவருட்பயன் - 42) கருத்து ஈண்டு உணரத்தக்கது.

மேவி எழும் பெருவிருப்புக் கொண்டு அணைய - நோய், நடந்து செல்ல மாட்டாமையை விளைப்பினும், மனத்துள் எழுந்த பெருவிருப்பம் பற்றி வலித்து ஈர்த்துக் கொண்டு அணைவிக்க. கொண்டு - பற்றிக்கொண்டு - பிடித்துக் கொண்டு. துலவுதல் - விளங்குதல். "குலாவுபாதம்", "குலாத்தில்லை" காண்க.

எழும் பெருவிருப்பு - அடங்காது மேன்மேலெழும் பெரிய விருப்பம் - காதல். வீழ்ந்த நிலையினின்றும் எழும் என்ற குறிப்பும் காண்க.

நோய் உடன் தொடர - என்றதனால் சூலை அவர்க்குப் பின்னரும், விருப்புக் கொண்டு அணைய - என்றதனால் ஆசை அவர்க்கு முன்னரும், ஆக இருபுறமும் அவரை ஈர்த்தும் உந்தியும் சென்றன என்க. "நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேற" (752), "வன்றொண்டர் மனமுந் தொடர" (ஏயர்கோ - 335) முதலியவை காண்க.

துல்வரை...எதிர்கோள் - துலவரை - எண்திக்கின் மாமலை. வரைபோன்றிலகு மதில் என்றது மெய்பற்றிவந்த உவமம். மதில் மணிச்சோதி - என்க. மதிலில் அழுத்திய மணிகளின் சோதி.

மதிற்சோதி எதிர்கோள் - மதிலின் ஒளி அவர்க்குமுன் எதிர்கொள்வதுபோன்று தோன்ற, நகரத்தை அணுகுவோர் முதலிற் காண்பது உயர்ச்சியுள்ள அதன்மதிலேயாதலின் மதிற்சோதி என்றார். எதிர்கோள் - கண்ணிந்திரியம் தானின்ற இடத்தினின்றும் நெடுந்தூரம் சென்றும் பொருளையறியுமாதலின் பெருவிருப்புடன் வரும் அவர்க்கு உயர்ந்த மதிலின் சோதி முதலிற் கட்புலனாயிற்று. அவ்வாறு புலனாகியது மதிலின் ஒளியே யாதலின் சோதி எதிர்கோள் என்றார். எதிர்கோள் என்றது தற்குறிப்பேற்றவணி. இருளின் நீங்கிவருவாரை ஒளி எதிர்கொள என்றது பின் வரும் நன்னிகழ்ச்சியினைக் காட்டும் முற்குறிப்புமாம். இரவில் திசைநோக்கி வருவார்க்குச் சோதியும் அணைசெய்து ஈர்த்தது என்பதும் குறிப்பு. இதுவரை இருட்குழாத்துள் இருந்தவர், இனி, ஒளி நெறியினுள் வருகின்றார் என்ற பொருளும் காண்க. எதிர்கொள்கின்ற சோதியினையுடைய என்றுரைத்தலுமாம்.

திலகவதியார் இருந்த திருமடம் - சிவன் பணியாகிய தவம் செய்யும் தாபதியாராயும், நாயனாரை வழிப்படுத்திய ஆசாரியராயும் இருந்தவர் இருந்த இடமாதலின் திருமடம் எனப்பட்டது. இது திருக்கோயிலின் கீழ்புறம் இருந்ததென்ப. அதன் நினைவுக்குரிய அடையாளங்கள் இப்போதும் அங்கு உள்ளன.

அணைந்தார் - அணைந்தார் தன்மை சிவஞானபோதம் 12-ம் சூத்திரத்தினுட் பேசப்பட்டது காண்க.

வயிற்றிடும்—வயிற்றடும்—பெருவியப்பு—என்பனவும் பாடங்கள். 62

1328. வந்தணைந்து திலகவதி யாரடிமே லுறவணங்கி
"நந்தமது குலஞ்செய்த நற்றவத்தின் பயனனையீர் !
இந்தவுடற் கொடுஞ்சூலைக் கிடைந்தடைந்தே னினிமயங்கா
துய்ந்துகரை யேறுநெறி யுரைத்தருளு" மெனவுரைத்து, சுா

1329. தாளிணைமேல் விழுந்தயருந் தம்பியார் தமைநோக்கி
யாளுடைய தம்பெருமா னருணினைந்து, கைதொழுது,
"கோளில்பர சமயநெறிக் குழியில்விழுந் தறியாது
மூளுமருந் துயருழந்தீ ! ரெழுந்திரீர் !" எனமொழிந்தார். சுச

1328. (இ - ள்) வெளிப்படை. வந்து அணைந்து திலகவதியம்மையாருடைய திருவடிகளின்மேற் பொருந்த வீழ்ந்து வணங்கி, "நந்தமது குலம் செய்த நல்ல தவத்தின் பயன் போன்றவரே! இந்த உடலிற்பற்றிய கொடிய சூலைக்கு மிக வருந்தி உம்மை வந்து அடைந்தேன்; இனி மயங்காமல் உய்ந்து கரையேறும் வழியைத் தேவரீர் கட்டளையிட்டருளுதல் வேண்டும்" என்று சொல்லி, சுா

1329. (இ - ள்) வெளிப்படை. தமது தாள்களின்மேல் விழுந்து வருந்தும் தம்பியார் தம்மைப் பார்த்துத், தம்மையாளுடைய சிவபெருமானுடைய திருவருளை நினைந்து கைதொழுது, "நல்ல குறிக்கோள் இல்லாத பரசமயக் குழியில் விழுந்து, மூளும் கொடிய துன்பத்தில் உழன்றீர்! இனி எழுந்திருப்பீராக!" என்று மொழிந்தனர். சுச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1328. (வி - ரை) அடிமேல் உற வணங்கி - அவரது திருவடியின்மேல் தமது தலைபொருந்தும்படி கீழே வீழ்ந்து வணங்கி. தலை உற என்க. முன்னர்த் தலை நிமிர்ந்து நின்ற ஆணவத் தன்மை வணக்கத்தால் அடங்கித் தொக்கு நின்றதாதலின் தலை என்ற எழுவாயினையும் தொகையாக வைத்தார். அகங்காரத்தினால் தலை நிமிர்ந்து நின்றவன் நிலையில் தாழ்கின்றான் என்பதும், அவ்வாறன்றிப் பெரியோர் பாலும் இறைவர்பாலும் தலை தாழ்ந்து வணங்கியவன் உயர்கின்றான் என்பதும் பெரியோர் கண்ட உண்மை.

குலம்செய்த நல் தவத்தின் பயன் அனையீர் - குலம் - குலத்தின்வந்த முந்தையோர். நல்தவம் - சிவபெருமானை நோக்கிச் செய்யும் வழிபாடு. தவம் பலவற்றுள்ளும் அதுவே குறையாத நற்பயன் தருவதாகும். பயன் அனையீர் - பயனை ஒத்தவர் என்றது அதன் பயனாக எனக்குக் கிடைத்தபேறு. நந்தமது என்று தம்மையும் உளப்படுத்திக் கூறியது அக்குலத்தில் நானு மொருவனாதலின் அப்பயனை இன்று நான் அடைய நின்றேன் என்ற குறிப்பாகும். "முந்தை யெம்பெருந் தவத்தினாலென்கோ முனிவ ரிங்கெழுந் தருளியது" (408), "கும்பிட்ட பயன் காண்பார் போல்" (திருஞான - புரா - 1022) என்ற கருத்துக்கள் இங்குவைத்துச் சிந்திக்கத் தக்கன. பயன் அனையீர் பயன் பற்றி எழுந்த உவமம்.

சூலைக்கு இடைந்து அடைந்தேன் - சூலையினால் மிகவருந்தி அடைந்தேன்.

இடைதல் - மிக வருந்தி உடைதல். "அழுக்கு மெய்கொடுன் றிருவடி யடைந்தேன்" (திருவொற்றியூர் - தக்கேசி - 1), "இவன் மற்றென்னடி யானென விலக்குஞ்,

சிந்தையால் வந்துன் திருவடி யடைந்தேன்" (திருப்புன்கூர் ஷெ 1), "அயர்ப்பொன் றின்றிநின் திருவடி யதனை யர்ச்சித் தார்பெறு மாரருள் கண்டு, திகைப்பொன் றின்றி நின் திருவடி யடைந்தேன்" (ஷெ. 6) முதலிய ஆளுடைய நம்பிகள் தேவாரங்களும், அவற்றைப் பின்பற்றி "வஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும், அஞ்சி யுனையடைந்தே னையா பராபரமே" என்ற தாயுமானுர் பாடலும் உட்கொண்ட கருத்துக்கள் ஈண்டுச் சிந்திக்கத்தக்கன.

**இந்த உடல் - இனி மயங்காது உய்ந்து - கரையேறும் நெறி -** சூலை உடலைப் பற்றியதாயினும் அதன் காரணம் மதிமயங்கி அவநெறியிற் புக்குழன்றமையேயாகும் என்று உணர்கின்றேனுதலின் நோயின் மூலமாகிய மதிமயக்கத்தினைப் போக்கும் வகையால் நான் உய்திபெற்று ஈடேறும் வழி என்றதாம். **கரை ஏறுதல் -** குறிப்புருவகம்.

**உரைத்து அருளும் -** சொல்லி அருள்செய்தல் வேண்டும். **சூலைக்கு இடைந்து அடைந்தேன் - நெறி உரைத்தருளும் -** உம்முடைய கருணையின் பயனுகச் சூலை வந்தது; அதனாலன்றோ உம்மை வந்தடைந்தேன்; அச்சூலையினின்று மட்டுமேயன்றி அதற்குக் காரணமாகிய மதிமயக்கத்தினின்றும் வெளியேறும் நெறியினைச், சூலை பெறுதற்குக் காரணமாகிய, தேவரீரே உரைத்து அருள் புரியவேண்டும் என்ற குறிப்பும் காண்க.

**என உரைத்து - விழுந்து அயரும்** என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. **இடைந்துடைந்தேன்**—என்பதும் பாடம். 63

1329. (வி - ரை) **நோக்கி -** அருட்கண்ணுற் பார்க்கும் தீக்கையாகிய சாட்சுஷீ என்னும் பார்வைத் தீக்கையினைச் செய்து என்றபடி.

**ஆளுடைய......கைதொழுது - ஆளுடைய தம்பெருமான் -** தம்மையும் அவரையும் ஆட்கொண்டருளிய - ஆளாக உடைய - தமது பெருமானுகிய திருவீரட்டானேசுவரர். **தம் -** உளப்பாட்டுப் பன்மை. முன்பாட்டில் **நந்தமது** என்று நாயனுர் கூறியதற்கேற்ப இவ்வாறு எண்ணியதாகும்.

**அருள் நினைந்து -** அவர்க்குச் சூலை மடுத்தாண்டு தம்மிடம் அடைவித்த கருணைத் திறத்தினை எண்ணி. **நினைந்து -** மனத்தாலும், **கைதொழுது -** மெய்யாலும் செய்த வணக்கம் கூறப்பட்டது. உள்ளும் புறம்பும் ஒற்றித்துச் செய்த வணக்கம். "ஒன்றியிருந்து நினைமின்கள்...சென்று தொழுமின்கள்" (கோயிற் திருவிருத்தம்) என்பது நமது நாயனுர் திருவாக்கு.

**தம்பெருமான் அருள் நினைந்து -** தமக்கும் தம்பியார்க்கும் செய்த அருள். 1313-ல் உரைத்தபடி தமது வேண்டுதலுக்கிரங்கி "உன்னுடைய மனக்கவலை ஒழி நீ" என்று தொடங்கித் தமக்குச் செய்த அருளினையும், பண்டுபுரி நற்றவத்து வழுவினுரேனும் அவர்க்கிரங்கிச் சூலை தந்து தம்மிடம் ஈர்த்துத் தம்பியார்க்குச் செய்த அருளினையும் எண்ணியெண்ணி எனத் தம் என்ற உளப்பாட்டுப் பன்மையை விளக்கிக் கொள்க. "அத்தா வுன்னடியேனை யன்பா லார்த்தா யருட்கண்ணிற் றீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்,...பிழைத்தனக ளெத்தனையும் பொறுத்தா யன்றே, யித்தனையு மெம்பரமோ? வைய! வையோ! வெம்பெருமான் திருக்கருணை யிருந்த வாறே" (பொதுத் தாண்டகம்) என்ற நாயனுரது திருவாக்கு ஈண்டுப் பொருந்தக் கண்டுகொள்ளத் தக்கது. **கைதொழுதல் -** அருள்செய்தமைக்காக வந்தித்தல். 1331-ல் "பேரருணினைந்து" என்பது வேறு, ஆண்டுக் காண்க.

**கோள் இல் பரசமய நெறி - கோள் -** நல்ல குறிக்கோள். கொள்கை. கோள்-கொள்ளுதல் என்றது கோள் என நின்றது. முதனிலை நீண்டுவந்த தொழிற் பெயர். "கோளில் பொறியில்" (குறள்); உட்கோள், மாறுகோள் முதலிய வழக்குக்கள் காண்க. சிவனை எண்ணுத பரசமயங்கள் கொள்கையில்லாதன வென்க.

மூளும் அருந்துயர் உழந்தீர் - மூளுதல் - வந்துமுடுகிப் பெருகுதல். தமது விண்ணப்பத்திற் கிரங்கிப் பெருமானருளியபடி வந்துமூளும் என்பது குறிப்பு. உழந்தல் - மிக வருந்துதல். உழந்தீர் - வருந்தினீர் என இரக்கப் பொருளில் வந்த வினைமுற்றாகவும், வருந்தியவரே! என விளிவேற்றுமையில் வந்த வினைப்பெயராகவும் உரைக்க நின்றது.

எழுந்திரீர்! - எழுவீராக! - சூலையினின்றும் நீங்கி எனவும், மயக்கத்துட்பட்டு வீழ்ந்த நிலையினின்றும் நீங்கி எனவும் உரைக்கநின்றது. எழுந்து இரீர் என்று பிரித்து, மேல் எழுவதுடன் திருவடிச்சார்பில் என்றும் நிலைபெற்று இருப்பீராக என்று பொருள் செய்யத்தக்க குறிப்பும் காண்க. "திருவடிக்கீழ் நாமிருப்பதே" என்ற திருக்குறுந் தொகையின்படி வந்த ஆனந்த விளைவு இந்த ஆசியின் ஒரு பயனாகவிளைந்தது என்று வைத்தும் சிந்திக்கற்பாலது. 64

1330. மற்றவுரை கேட்டலுமே மருணீக்கி யார்தாமும்
உற்றபிணி யுடனடுங்கி யெழுந்துதொழ வுயர்தவத்தோர்
"கற்றைவே ணியரருளே காணுமிது; கழலடைந்தோர்
பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீ" ரெனப்பணித்தார். ௬௫

(இ - ள்) வெளிப்படை. மற்று அவ்வுரையினைக்கேட்டதும் மருணீக்கியார் தாமும் பொருந்திய நோயுடனே நிலத்தில் விழுந்த நிலையினின்றும் எழுந்து தொழவே, உயர் தவத்தோராகிய திலகவதியார், "இது கற்றையாகிய சடையினையுடையாரது திருவருளே காணும்; தமது திருவடிச் சார்பினை அடைந்தோரது பற்றுக்களை அறுப்பவராகிய அவரைப் பணிந்து பணிசெய்வீராக என்று பணித்தருளினர்.

(வி - ரை) அவ்வுரை - எழுந்திரீர் என்ற ஆசியுரை. மற்று என்பது சூலையினால் வருந்தும் நிலையை மாற்றும் குறிப்புடன் எழுந்த வினைமாற்றுப் பொருளில் வந்தது. மாற்று என்பது மற்று என வந்ததாகக் கொண்டுரைத்தலுமாம்.

கேட்டலுமே - எழுந்து - தொழ என்க. கேட்டலுமே - கேட்டவுடன் என்று ஏகாரம் விரைவுக் குறிப்புக்கொண்ட அசைநிலைப்பொருளில் வந்தது.

தாமும் - சிறப்பும்மை. எழுந்திரீர் என்றதனால் அக்கட்டளையின்படி பிணியுடன் நடுங்கி எழுந்தனர்.

தொழ - அம்மையார் ஆசியுரைத்ததற்கும், "உய்ந்து கரையேறு நெறி உரை"த்ததற்கும் நன்றி செய்யும் வகையால் தொழுதனர் என்க.

கற்றை வேணியர் அருளே காணும் இது என்றது "உடற்சூலைக் கிடைந்தடைந்தேன்" என்று தம்பியார் விண்ணப்பித்தமையால், "அது தீய நோயன்று - திருவருளின் செயலேயாம் எனக் காண்க" என்று உண்மையைத் தெருட்டியபடி.

கழலடைந்தோர்......பணி செய்வீர் என்றது "இனி மயங்காதுய்ந்து கரையேறும் நெறியுரைத் தருளும்" என்று அவர் விண்ணப்பித்ததற்கு விடுத்த விடையாகும். பணி செய்வீர் என்றது ஆற்றுப்படுத்திய வகை. பணித்தல் - கட்டளையிட்டருளுதல்.

எழுந்திரீர் என்றதும், பணி செய்வீர் என்றதும் ஆகிய இவை வாசகதீக்கையின் பாற்படும்.

கழல் - திருவருள் நிறைவு. திருக்குறளினுட் கடவுள் வாழ்த்தில் தாள் - அடி - என்று இதனையே குறித்து வாழ்த்திய கருத்துக்களையும், "முதல்வன் பாதமே பற்றா நின்றாரைப் பற்றா பாவமே" (பிள்ளையார்), "என்கடன் பணிசெய்து கிடப்பதே" (அப்பர்) என்ற திருவாக்குக்களையும் கருதுக. 65

1331. என்றபொழு தவரருளை யெதிரேற்றுக் கொண்டிறைஞ்ச,
நின்றதபோ தனியாரு நின்மலன்பே ரருணினைந்து
சென்றுதிரு வீரட்டம் புகுவதற்குத் திருக்கயிலைக்
குன்றுடையார் திருநீற்றை யஞ்செழுத்தோ திக்கொடுத்தார். கூகூ

(இ - ள்) வெளிப்படை. என்று பணித்தபொழுதில் அவருடைய அருளை எதிர் ஏற்றுக்கொண்டு அவர் வணங்க, நின்ற தபோதனியாரும், சிவபெருமானது பேரருளினை நினைந்து, அவர் போய்த் திருவீரட்டம் புகுவதற்குத் தகுதியுடையவராக ஆக்குவதற்குத் திருக்கயிலைக் குன்றுடையவராகிய சிவபெருமானது திருவைந்தெழுத்தை ஓதி அவரது திருநீற்றைக் கொடுத்தனர்.

(வி - ரை) என்றபொழுது - மேலே கூறியபடி பணித்தபொழுது.

எதிர் ஏற்றுக் கொள்ளுதலாவது பணித்த அப்பொருளை அவ்வாறே தாமும் ஏற்றுக்கொள்ளுதல். கைகூடும் என்றதில் கை என்பதுபோல எதிர் என்பது உறுதி காட்டும் முன்மொழி. இறைஞ்ச - ஏற்றுக் கொண்டதற் கறிகுறியாக வணங்கி.

நின்ற தபோதனியார் - நின்ற - தம்பியாரது உயர்வை நாடிநின்ற எனவும், செந்நெறியிற் பிறழாது நின்ற எனவும், தமது திருப்பணியிற் செல்ல நின்ற எனவும், பலவாறும் உரைக்க நின்றது. தபோதனியார் - 1313 பார்க்க.

நின்மலன் பேரருள் நினைந்து - கொடுத்தார் - என்க. முன்னர் 1329ல் "அருள் நினைந்து" என்றது சூலைதந்து ஆட்கொண்டமை கருதி நினைந்ததுவும், இங்கு நினைந்தமை தீக்கை செய்யும்முன் இறைவன் திருவருளைநாடி வேண்டிக்கொள்ளும் ஆகமவிதி பற்றியதுமாம். 1329 - உரை பார்க்க. சிவதீக்கை வகையுட் கிரியாவதி தீக்கை செய்யுங்காலத்து தீக்கை மண்டபத்தினுள் மாணாக்கனைப் புகவிடும்போது, சிவனை நினைந்து "பகவானே! இந்த மாணாக்கன் பக்குவமுடையவன்; இவன் என்னிடம் வந்து அருள் புரியும்படி வேண்டுதலினால் நானிவனை உம்முடைய திருவடியை நினைந்து பணிசெய்யத் தகுதியுடையவனாகச் செய்கின்றேன்; அதற்கு நீர் அருள் புரியவேண்டும்" என்று ஆசாரியர் வேண்டிக்கொண்டு தீக்கை செய்யப் புகும் ஆகமவிதிப் பகுதி இங்கு நினைவு கூர்ந்து கொள்ளத்தக்கது. ஆசாரியன் தானே தூய்மை செய்கின்றேன் என எண்ணாது இறைவன் அருளால் செய்கின்றேன் என எண்ணிப் புகுதல் மரபாகும். முன்னர் 1329-ல் அருள் நினைந்து என்ற ஆசியர், இங்குப் பேரருள் நினைந்து என்றதும், நின்மலன் என்றதும் கருதுக.

நின்மலன் - இயல்பாகவே பாசங்களி னீங்கியவரும், அடைந்தாரது மலங்களைப் போக்குபவரும் ஆகியவர் என்ற கருத்துப்படக் கூறியதும் காண்க.

அருள் நினைந்து கொடுத்தமையால் அவனருள் கைகொடுத்து ஈடேற்றும் என்பது உறுதிப்பாடு.

திருவீரட்டம் புகுவதற்குக் - கொடுத்தார் - புகுவதற்குத் தக்கவராக ஆக்கத் திருஐந்தெழுத்தும் திருநீறும் சாதனங்களாகும் என்பது. இவை சிவசாதனங்கள் எனப்படும். திருநீறும் திருவைந்தெழுத்தும் சார்பு கொள்ளாதோர் திருக்கோயில் புகுவதற்குத் தகுதியற்றவர் என்பது ஆன்றோர் துணிபும் உண்மை நூல் விதியுமாம்.

திருக்கயிலைக் குன்றுடையார் திருநீறு - அவர்க்கு உரிமையான - அவர் உகந்த - அவர் அணிந்த - அவர் அருளிய எனப் பலவாறும் கொள்ள நின்றது. குன்றுடையார் - என்றதனையும், திரு என்றதனையும் அஞ்செழுத்து என்றதுடனும் கூட்டுக.

அஞ்செழுத்தோதி என்றதனால் மந்திரங்கூறும் தீக்கை குறிக்கப்பட்டது.

**திருநீறு கொடுத்தார்** - திருநீறணிதல், நீக்குளித்தல் (பஸ்மஸ்நானம் - ஆக்கினேய ஸ்நானம் என்பது ஆகமம்) என்றதன்பாற்பட்டு, உடற்றூய்மையும் உயிர்த்தூய்மையும் செய்வதாதலின் அதனைக் கொடுத்தார். திருநீற்றுத் திருப்பதிகம் பார்க்க. சைவ சமயம் புகுவித்தலாகிய சமய தீக்கையிலும் மந்திரங்களுடன் கூடிய திருநீற்றை மாணவகனை அணிவித்துப் பின்னர் ஐந்தெழுத்தை உபதேசிக்கும்படி விதிக்கும் சிவாகம விதியும் காண்க.

**திருநீறும் ஐந்தெழுத்தும்** தருமசேனரைச் சமணசமயத் தொடக்கினின்றும் தூய்மைப்படுத்திச் சைவம் புகுவதற்குத் துணைசெய்யும் சாதனமாயின என்பதாம். பரசமயத்தினின்றும் சைவத்தின் உண்மை உணர்ந்து, உண்மையாகவும் உறுதியாகவும் சைவம்புக இவ்வாறு தூய ஆசாரியராற் றூய்மை செய்யப்படுதல் வேண்டுமென்பது. பரசமயத்திற் புகுந்து மீண்டும் சைவசமயம் புகுவார்க்குத் திருநீற்றை ஐந்தெழுத் தோதிக் கொடுத்தலே அமையும்; வேறு சடங்கொன்றும் வேண்டா என இவ்விடத்து நுட்பங்கண்டு கூறும் புதிய ஆராய்ச்சியாளருமுண்டு. "அன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வம்" என்று இறைவர் (1313) அருளிய சூலைநோயாற் செய்த சடங்கு துன்பியற்றுங் கழுவாயாகும் என்க. இதுபற்றிக் கிருச்சிர சாந்திராயண முதலிய சடங்குகளினும், சிவாகமங்களில் பிராயச்சித்த படலங்களில் சொல்லிய சடங்குகளினும் வருத்தவையும் காண்க. திருநீறு ஐந்தெழுத்தோதிக் கொடுத்தது முன்கூறிய சடங்கினை நிறைவேற்றும் வகையாற் செய்யப்பட்ட குருதீக்கை என்க. 66

1332. திருவாளன் றிருநீறு திலகவதி யாரளிப்பப்
"பெருவாழ்வு வந்த"தெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்
குருவார வணிந்துதமக் குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் றாம்வந்தார். கள

(இ - ள்) வெளிப்படை. திருவாளனுடைய திருநீற்றைத் திலகவதியார் கொடுக்க, "எனக்குப் பெருவாழ்வு வந்தது" என்று கொண்டு பெருந்தகையாராகிய நாயனுர் பணிந்து அதனை ஏற்றுக்கொண்டு, அங்குத் தமது திருமேனி பொருந்த நிறைய அணிந்துகொண்டு, தமக்குத் தீமை உற்ற இடத்தில் உய்யும்வழி தருவாராகித் தம் முன்வந்த அவர்பின்பு தாம் வந்தனர்.

(வி - ரை) **திருவாளன்** - முத்தித்திருவை ஆள்பவன். திரு - இறைவரது தன்மை. ஐசுவரியம் எனப்படும். 'சர்வைசுவரிய சம்பன்னன்' என்று வேதம் சிவனையே துதிக்கின்றது. ஈசுவரன் என்ற சொல் பிற தெய்வங்களையன்றிக் காரண இடுகுறியாகச் சிவனையே குறிக்க வழங்குவதும் காண்க.

**பெருவாழ்வு...அணிந்து** - பெரியோர் திருநீறு தரும்போது அதனை மனம் மொழி மெய்களால் வணங்கி ஏற்று அணிந்துகொள்ளும் முறை உணர்த்தப்பட்டது காண்க. நீறு வாங்குதல், போற்றுதல், அணிதல் பற்றிய விதிகள் இந்நாளில் கையாளப்படாமல் அவமதிக்கப்படுதல் வருந்தத்தக்கது. திருநீறு பெறும் அன்பர்கள் அவ்விதிகளை அறிந்து பின்பற்றி ஒழுகுதல் நலந்தரும்.

நீறு பெறும்போது இதனால் நமக்குப் பெருவாழ்வு வந்தது என்று மனமாரத் துதித்துப் பணிந்து இரண்டு கையாலும் ஏற்க வேண்டும். "ஈது நன்னெறிக் கேது வென் றிருகையேற் றணிந்து" (வாத - உப - பட - 25) என்ற திருவிளையாடற் புராணமும் காண்க. அவ்வாறு ஏற்ற அதனை உடம்பிற் பொருந்த விதிப்படி அணிந்துகொண்டு பணிதல்வேண்டும். திருநீற்றினைச் சிறிதும் கீழே சிந்தலாகாது. நெற்றியிலணியும்போது நீறு கீழ்ச்சிந்தாதபடி நிமிர்ந்துகொண்டு அணிதல் வேண்டும். சிவசந்நிதி -

நெருப்பு - குருசந்நிதி - இவற்றுக்கெதிரிலும், நடக்கும் வழியிலும், தூய்மையற்ற இடத்திலும் நீறு இடுதலும், நின்றுகொண்டு அணிதலும் முதலியவை குற்றமாம். இவை முதலிய விதிகளின் விரிவு சிவாகமங்களுள்ளும், உபநிடத முதலிய வேதங்களுள்ளும், வழி நூல்களுள்ளும் கண்டு கொள்க.

**திருவாளன் திருநீறு** - நீற்றின் பெருமை முன்னர்ப் பலவிடத்தும் உரைக்கப் பட்டது. பின்னர் ஆளுடைய பிள்ளையார் புராணத்தும், பிறுண்டும் வந்த வழிக் கண்டு கொள்க. திருநீற்றுப் பதிகத்தும் காண்க.

**உரு ஆர அணிந்து** - உரு - திருமேனி. நிறம் என்றலுமாம். உருவுவமம் என்பது காண்க. "ஆன நீற்றுக் கவசம் அடையப் புகுமின்கள்" (திருவாசகம்). "தூய வெண் ணீறு துதைந்தபொன் மேனியும்" (1405) என்பது காண்க. இதனை "நீற்று னிறைவாகிய மேனியுடன்" (1335) என்பதும் பார்க்க.

**அளிப்ப** - கருணையுடன் கொடுக்க என்பது குறிப்பு.

**பெருவாழ்வு** - சூலை தீர்க்கும் இவ்வுலக வாழ்வும், பிறவிநோய் தீர்க்கும் பேரின்ப வாழ்வும் தருதலாற் பெருவாழ்வு எனப்பட்டது.

**வந்தது என** - இது நீறுபெற்றபோது நாயனாரின் மனவாக்குக்களின் செய்கை. **வந்தது** - இறந்தகாலம் விரைவும் உறுதிப்பாடும் குறித்தது. **பணிந்து-ஏற்று** - **அணிந்து** என்பன அப்போது அவரது மெய்யின் செய்கை. **ஆர்தல்** - நிறைதல். பெருவிருப்பம் குறித்தது. "கண்ணாரக் கண்டுமென் கையாரக் கூப்பியும், எண்ணார வெண்ணத்தா லெண்ணியும்" என்ற அற்புதத் திருவந்தாதி காண்க.

**உற்றவிடம்** - துன்பம் உற்ற - நேர்ந்த - காலம். துன்பம் என்பது சொல்லெச்சம்.

**உய்யுநெறி தருவாராய்** - "உய்ந்துகரை யேறுநெறி யுரைத்தருளு"மெனத் (1328) தாம் வேண்டியவாறே தருபவராகி. "பத்தருக் கெய்ப்பினில் வைப்பென வுதவும்" (திருவிடை - மும் - கோ - 7) என்றது காண்க.

**தம்முன்பு வந்தார்** - முன்பிறந்தவர் - தமக்கையார். முன்பு சென்றனராக என்ற பொருளுந்தர நின்றது.

**பின்பு தாம் வந்தார்** - அவர் முன்னே செல்லத் தாம் அவரைப் பின்பற்றித் திருவீரட்டானத்துக்கு வந்தனர். தாம் உலகில் அவதரித்த அம்முறையே இறைவரிடம் போந்தனர் என்ற பொருள்படும் நயமும் கண்டுகொள்க. 67

1333. நீறணிந்தா ரகத்திருளு நிறைகங்குற் புறத்திருளும்
மாறவருந் திருப்பள்ளி யெழுச்சியினில் மாதவஞ்செய்
சீறடியார் திருவலகுந் திருமெழுக்குந் தோண்டியுங்கொண்
டாறணிந்தார் கோயிலினு ளடைந்தவரைக் கொடுபுக்கார். கூஅ

(இ - ள்). வெளிப்படை. அவ்வாறு திருநீற்றினை அணிந்தவருடைய அகத்தில் இருந்த இருளும், புறத்தின் நிறைந்த கங்குலிருளும் மாறும்படி வரும், திருப்பள்ளி யெழுச்சிக் காலத்தில் மாதவஞ் செய்யும் திலகவதியம்மையார் திருவலகும், திருமெழுக்கும், தோண்டியும் என்ற இவற்றைக் கையிற்கொண்டு, கங்கை யாற்றினைச் சூடிய திருவீரட்டானேசுவரரது திருக்கோயிலினுள்ளே, அடைந்தவராகிய நாயனாரையும் கொண்டு புகுந்தனர்.

(வி - ரை) **நீறணிந்தார்** - அம்மையார் அளித்த திருநீற்றினை மேற்சொல்லியுவாறு அணிந்தவருடைய. ஆறனுருபு விரித்துரைத்துக் கொள்க.

அகத்து இருள்-"சமயங்க ளானவற்றின் நல்லாறு தெரிந்துணர நம்பரு ளாமை யினால்" போந்த மயக்கவுணர்ச்சி. "இனி மயங்காது" (1328) என்றது காண்க. இது உயிரின் அறிவை மறைப்பது.

புறத்துஇருள்-வெளியே கண்ணொளியை மறைப்பது. இரவு இருளாகிய புறஇருள்.

மாறவரும் திருப்பள்ளி எழுச்சி - சிவனருள் வெளிப்பாட்டினால் அகவிருளும், ஞாயிறு வெளிப்படலால் புறவிருளும் மாறும்படி வருகின்ற திருப்பள்ளி எழுச்சி யாகிய வழிபாட்டுக்குரிய காலம். "தங்கிருளிரண்டின்" (10) என்றதும், ஆண் டுரைத்தவையும் பார்க்க. "திருப்பள்ளி யெழுச்சிக்கு மலர் தொடுக்கும் தூயபணிப் பொழுதாக" (ஏயர்கோன் - புரா - 252) என்றது காண்க.

இது ஞாயிறு உதிக்குமுன் உள்ள கடையாமத்தில் (மூன்றே முக்கால் நாழிகை யளவில்) நிகழத்தக்கது. "சேற்றிதழ்க் கமலங்கண் மலரும்" (1) எனவும், "அரு ணனிந் திரன்றிசை யணுகின னிருள்போ யகன்றது வுதயநின் மலர்த்திரு முகத்தின், கருணையின் சூரிய னெழவெழ நயனக் கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணாந் திரணிரை யறுபத முரல்வன" (2), எனவும், "கூவின பூங்குயில் கூவின கோழி குருகுக ளியம்பின வியம்பின சங்க, மோவின தாரகை யொளியொளி யுதயத் தொருப் படுகின்றது"(3) எனவும் இதன் தன்மைகளைத் திருவாதவூரடிகள் சுவைபெறத் திருவாச கம் - திருப்பள்ளி யெழுச்சிப் பகுதியில் அருளியவற்றை இங்கு நினைவு கூர்க.

திருப்பள்ளி எழுச்சியினில் என்றது அந்த வழிபாட்டு நேரத்தைக் குறித்து நின் றது. முன்னை நாள் நாயனார் விடுத்த ஊட்டுவோன், அவர் போலவே பாடலிபுத்திரச் சமண் பள்ளியினின்றும் இரவிற் போந்தனனாயினும், திருப்பள்ளியெழுச்சி நேரங் கடந்து அம்மையார் பூக்கொய்து நந்தனவனத்தின் புறம்பணையும்பொழுது திருவதிகை யிற் சேர்ந்தனன் (1321). ஆனால் அங்ஙனமன்றி, நாயனார் சூலை உடன் தொடரக் கைதருவார் தமையூன்றி நோய்ப்பட்ட நிலையினராகச் சென்றனராயினும் திருப்பள்ளி யெழுச்சிக்கு முன்பே திருமடத்தினை அடைந்தனர். இஃது பெருவிருப்புக் கொண் டணையும் ஆர்வத்தினாலும் திருவருட்டுணையாலும் ஆகியது என்க.

சிறடியார்-திருமுன்பு சிறியராயடைபவர். சிறுத்தொண்டநாயனார் புராணம் (15) மிகச் சிறியராயடைந்தார்" என்பது காண்க.

அடைந்தவர் - சூலைக்கிடைந்தடைந்தேன் ; கரையேறு நெறி உரைத்து அருளும் (1328) என்றுவந்து அடைந்தவர். அவ்வாறுவேண்டியபடி, நெறி உரைத்ததனை 1330ம் பாட்டானும், அருளும் என்ற பிரார்த்தனையை நிறைவேற்றியதனை 1331-ம் பாட்டா னும் இப்பாட்டானும் கூறினார்.

அடைந்து அவரைக் கொடுபுக்கார் - என்று பிரித்து உரைத்தலுமாம். அருள் தீக்கை செய்து மாணவகனைத் தூய்மைசெய்து சிவனருள் பெறத்தக்கவனாக ஆக்கிச் சிவனுடன் சேர்ப்பிக்கும் அளவே ஆசாரியர் செயலாதலின் அம்மையார் அவ்வளவும் செய்தபடி கண்டுகொள்க. இனி, நாயனார் திருவருள்பெற்று உய்ந்தமை கண்டு, தம் மிச்சை நிரம்ப வரம்பெற்று, இதுபோல் யாவர் பெற்றனர்? என்று திளைத்து, இறை வரை இறைஞ்சினர் (1343) என்றதோடு அவர் வரலாற்றை ஆசிரியர் முடித்துக்காட் டுவதும் கண்டுகொள்க. 68

1334. திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக
வரைச்சிலையார் பெருங்கோயில் தொழுதுவலங் கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரான் றிருவருளால்
உரைத்தமிழ்மா லைகள்சாத்து முணர்வுபெற வுணர்ந்துரைப்பார்,

வேறு

1335. நீற்றா னிறைவா கியமே னியுட
னிறையன் புறுசிந் தையினே சமிக
மாற்றார் புரமாற் றியவே தியரை,
மருளும் பிணிமா யையறுத் திடுவான்
"கூற்றா யினவா றுவிலக் ககிலீர்"
றெனநீ டியகோ திறிருப் பதிகம்
போற்றா லுலகே ழின்வருந் துயரும்
போமா றெதிர்நின் றுபுகன் றனரால். ௭௦

1334. (இ - ள்) வெளிப்படை. அலைகளையுடைய கெடிலத்திருநதியின் கரையில் உள்ள திருவதிகை வீரட்டானத்தில் இருந்த மேருமலையாகிய வில்லையுடையாரது பெருங்கோயிலினைத் தொழுது, வலமாகவந்து வணங்கி, நிலத்தின்மேல் விழுந்து அட்டாங்கமாக வணக்கம் செய்து, தமது பெருமானது திருவருளால் அவரது புகழைச் சொல்லும் தமிழ்மாலையினைச் சாத்தும் உணர்வு வர உள்ளுணர்ந்து உரைப்பாராகி,

1335. (இ - ள்) வெளிப்படை. திருநீற்றினால் நிறைவாகிய திருமேனியினுடனே, நிறைந்த அன்பு பொருந்திய மனத்தில் நேசம் அதிகரிக்கப், பகைவர்களுடைய புரங்களை எரித்தருளிய வேதியராகிய திரு வீரட்டானேசுவரரை, மருளும் சூலை நோயினையும் மாயையினையும் அறுத்து இடும் பொருட்டுக், "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்று தொடங்கும், நீடிய கோதில் திருப்பதிகத்தினைப் போற்றுதலினால் உலகில் எழுபிறப்புக்களிலும் வரும் துன்பமும் போகும்படி, சந்நிதிக்கு எதிரில் நின்று சொல்லியருளினார். ௭௦

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1334. (வி - ரை) கெடில வீரட்டானம் - கெடிலத்தின் வடகரையில் உள்ள தலம். யாற்றின் சார்புபற்றியே திருப்பதிகத்துக் கூறப்படுதல் காண்க.

செங்கனக வரை - பொன்மலை. மாமேரு வென்ப. "மேருவில் வீரா" திருவிசைப்பா. திரிபுர மெரித்தபோது இறைவர் மேருவை வில்லாகத் தாங்கினார் என்பது வரலாறு. புரமெரித்த வீரம் நிகழ்ந்த இடம் இதுவேயாதலின் இத்தன்மை பொருந்தக் கூறினார். இக்கருத்தினையே தொடர்ந்து மேல்வரும் பாட்டிலும் "மாற்றார் புரமாற்றியவே தியரை" என்பது காண்க.

கோயில் தொழுது வலங்கொண்டு இறைஞ்சி - கோயிலைத் தொழுதலும், அதன் பின்னர் அதனை வலங்கொள்ளுதலும், வலஞ்செய்து முடிந்த பின்னருந் தொழுது வணங்குதலும் முறை.

தரைத்தலத்தின் மிசை வீழ்ந்து என்றதனால் முன்சொல்லிய தொழுது, இறைஞ்சி என்பன, முன்னர் நின்றபடியே தலைவணங்கிச் செய்யும் வணக்கங்களாம்.

விழுந்து - எட்டு அங்கமும் ஐந்து அங்கமும் நிலம் பொருந்த வணங்கி. "மண்ணுற வைந்துறப் பால்வணங்கி" (270) எனவும், "அட்டாங்க பஞ்சாங்கமாக முன்பு முறைமையினால் வணங்கி" (272) எனவும் கூறியவை காண்க.

தம்பிரான் - தமக்கும், தம்மை வழிப்படுத்திய தமக்கையாருக்கும் பெருமானாகிய திருவீரட்டானேசுவரருடைய. ஆறனுருபு தொக்கது.

திருவருளால் - உணர்வுபெற - உணர்ந்து - திருவருள் உண்ணின்று உணர்வினில் உணர்த்த உணர்ந்து. "உரைக்குமா றுரையே" (திருமாளிகை - திருவிசைப்பா - 4)

"உனையுரைக்குமா றுணர்த்தே" (திருவா) என்றபடி உரைக்கும் உணர்வைத் தந்து உரைக்க வைத்தார் என்க. "காட்டு வித்தா லாரொருவர் காணுதாரே; காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" என்பது இக்கருத்துப்பற்றிய நாயனார் திருவாக்கு. எனவே நாயனார் திருவாக்குக்கள் இறைவனே உணர்த்த உணர்ந்து அருளப்பட்ட அருட்டிருவாக்குக்களேயாம் என்பது.

உரைப்பார். உரைப்பாராகி. முற்றெச்சம்.

உரைப்பார் - புகன்றனர் என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

தொழுது - வலங்கொண்டு - இறைஞ்சி - வீழ்ந்து என்பவை காயத்திலும், உணர்ந்து என்பது மனத்தினிலும், உரைப்பார் - என்பது வாக்கிலும் கூடும் நிகழ்ச்சிகள். இவை தேவார அருளிப்பாட்டுக்குமுன் நிகழ்ந்தவை. அதன்பின் நிகழ்பவை மேல் வரும் பாட்டினுள் மேனி - நேசம் - போற்றல் - புகன்றனர் என்பவற்றால் உரைக்கப் படுவன. 69

1335. (வி - ரை) நீற்றல் நிறைவாகிய மேனி - நீற்றல் - திலகவதியார் அஞ்செழுத்தோதி அளித்த திருநீற்றினால் நிறைவாகிய மேனி. அதனை உருவார அணிந்தாராதலின் (1332) அது மேனிமுழுதும் நிறைவாகியது. முன்னர் நீறின்றிக் குறைவாயிருந்த மேனி இப்போது நீறிட்டமையால் குறைதீர்ந்து நிறைவாகியது என்ற குறிப்பும் காண்க.

நிறை அன்பு - நேசம்மிக - குலவியெழும் பெருவிருப்பு (1327) என்றபடி அன்பு நிறைந்திருக்க அது மேன்மேலும் மிக்கது - அதிகரித்தது - என்க.

நிறை அன்பு - சாதனம்; நேசம் மிகுதல் - பயன். இதனை வேட்கை என்பர்.

மாற்றார்புரம் மாற்றிய வேதியர் - திரிபுரமெரித்த வீரட்டானேசுவரர். "முப்புரமாவது மும்மல காரியம்" (திருமூலர் - திருமந்திரம்) என்றபடி பிணியும் மாயையும் அறுக்கவல்லவர் புரமெரித்த அவரே என்பது குறிப்பு. வேதியர்-வேதத்தைச் சொன்னவர் - வேதத்தின் பொருளாவார் - வேதத்தில் விளங்குபவர் என்றபடி. வேதித்தல் - வேறு படுத்துதல் என்று கொண்டு உரைத்தலுமாம். அழித்தலாவது வேறுபடுத்துதலேயாம். "பொருட்டன்மை அழியாது; உருவம் அழியும்" என்பது உண்மை. மாற்றிய என்ற கருத்தும் காணத்தக்கது. மருளும் பிணி மாயை அறுத்திடுவான் - இங்குப்பிணி - இறைவர் அருளாகிய திரோதான உருவத்தில் நின்றதனை அருட் சத்தியாக மாற்றுதலும், மாயை - முன்னர் இருளாய் நின்றதனை ஒளியாக மாற்றுதலுமே அறுத்தல் எனப்பட்டது என்க. மாயை - பிறவிநோய் என்ற பொருளில் வந்தது. பிணி - இப்பிறவியும், மாயை இனிவரும் பிறவிகளின் மூலமும் என்க. மாயை அப்பொருளில் வந்ததென்பது உலகேழின் வருந்துயரும் போமாறு என்றதனாலும் விளங்கும். அறுத்து இடுவான் - அறுத்து அருள்நிறைவில் இடும்பொருட்டு. இடுதல் - வைத்தல். வானீற்று வினையெச்சம் புகன்றனர் என்ற வினைமுற்றுக் கொண்டது. மருளும் பிணி - மயங்குதற் கேதுவாகிய பிணி. மருளும் என்ற பெயரெச்சம் ஏதுப்பொருள் கொண்டது.

"கூற்றாயினவாறு விலக்ககிலீர்" - இது நாயனார் அருளிய முதற்றிருப்பதிகத்தின் தொடக்கம்.

நீடுதல் - அழியாது நிலைத்தல். கோதில் - கோதினை இல்லையாகச் செய்தல். திரு - முத்தித் திரு. நீடிய என்பதனைக்கோதுஎன்பதற்கு அடையாக்கிச் சிறப்பும்மை விரித்து அநாதிதொட்டுச் சகசமாய் உடனிருக்கும் மூலமலத்தின் வலிமையையும் இல்லையாக்கும் என உரைக்கவும் நின்றது. கோதில் என்றதனால் பாசநீக்கமும், திரு என்றதனால்

சிவப்பேறும் குறிக்கப்பட்டன. திருப்பதிகம் - திருவைத் தரும் பதிகம். "வீட்டுக்கு வாயிலெனுந் தொடை" என்றது காண்க. போற்றல்-போற்றுதலினால்-துதித்தலினால்.

உலகு ஏழின் வரும் துயரும் - உலகில் உயிர்கள் எழுவகைப்பட்ட பிறவிகளிலும் வரும் துன்பமும். ஏழு - பிறவிகளின் வகை. ஏழுலகங்களில் என்று உரைப்பதுமாம்.

துயரும் - உம்மை பிணி மாயையே யன்றித் துயரமும் என எச்சவும்மை. சிறப்பும்மை என்றலுமாம். ஏழின் - முற்றும்மை தொக்கது.

போமாறு - தமக்கே யன்றி அத்திருப்பதிகத்தினைப் போற்றும் யாவர்க்கும் என்க. போதல் - இல்லையாதல்.

எதிர் - சந்நிதியில் நேரே. நின்று - விண்ணப்பம் செய்யும் முறை. புகன்றனர்- விண்ணப்பித்தனர். திருப்பதிகம் விண்ணப்பித்தல் என்பது பழங் கல்வெட்டுக்களிற் காணும் வாசகம்.

புகன்றனர் - புகலாக - சரணாக - அடைந்து கூறினர் என்ற குறிப்பும்பட நின்றது. ஆல் - உறுதிப்பொருள் தந்து நின்றது. பிணி மாயை மாறும் நிலைக்கேற்ப யாப்பின் சந்தமும் மாறிய தெய்வக் கவிநயம் காண்க.

"இனிச் சூலை மடுத்தாள்வம்" எனத் திலகவதியார் பெற்ற அருளைக் கூறிய யாப்பினையே தொடர்ந்து அச்சூலையுடன் நாயனார் இறைவர் திருமுன்பு புக்கு உணர்வு பெறும்வரை கொச்சகக்கலிப்பாவாகிய ஒரே சந்தத்தில் யாக்கப்பட்டது; பின்னர் நாயனார் உணர்வுபெற்றுத் திருப்பதிகம் பாடி அந்தச் சூலையே அருட்சத்தியாக மாறப் பெற்ற நிலை அவர் அருளிய அந்தத் திருப்பதிகத்தின் சந்தத்தில் யாக்கப்பட்ட ஆசிரிய விருத்தமாகும் என்ற நுட்பமும் காண்க. பதிகத்துக்கேற்ற சந்தமாக வகுத்தல் ஆசிரியரது மரபுமாம். 221ல் உரைத்தவை பார்க்க. 70

பதிகம் பண் - கொல்லி திருவதிகை வீரட்டானம்

திருச்சிற்றம்பலம்

கூற்றா யினவா றுவிலக் ககிலீர்! கொடுமை பலசெய் தனநா னறியேன்;
ஏற்றா யடிக்கே யிரவும் பகலும் பிரியா துவணங் குவனெப் பொழுதும்;
தோற்றா தென்வயிற் றினகம் படியே குடரோ டுதொடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியேன்! அதிகைக் கெடில வீரட் டானத் துறையம் மானே! 1

போர்த்தா யங்கொரா னையினீ ருரிதோல்! புறங்கா டரங்கா நடமா டவல்லாய்!
ஆர்த்தா னரக்கன் றனைமால் வரைக்கீ ழடர்த்திட் டருள்செய் தவது கருதாய்!
வேர்த்தும் புரண்டும் விழுந்தும் மெழுந்தா லென்வே தனையா னவிலக் கியிடாய்!
ஆர்த்தார் புனல்சூ ழதிகைக் கெடில வீரட் டானத் துறையம் மானே! 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு - மருளும் பிணிமாயை அறுத்திடுதலும், உலகேழின் வருந்துயரும் போமாறு வேண்டுதலும் இப்பதிகக் கருத்தாகும் என்பது ஆசிரியர் காட்டிய குறிப்பு. இது "வயிற்றினகம்படியே குடரோடு தொடக்கி முடக்கியிட", "சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்" எனவரும் திருப்பதிகப் பகுதிகளாலறியப்படும். ஆற்றேன் - அலுத்தேன் - அயர்ந்தேன் - (ஆதலின்) சூலை தவிர்த்தருளாய்! வேதனையான விலக்கியிடாய்! துன்பே கவலை பிணியென்றிவற்றை நணுகாமற்றுரந்து கரந்துமிடீர்! துணிந்தே-வயந்தே - உமக்காட் செய்து வாழலுற்றால் அஞ்சேலு மென்னீர்; தம்மை அடைந்தார் வினைதீர்ப்பதன்றோ தலையாயவர்தங் கடன்! அடியார் படுவதிதுவேயாகில் என் போலிகள் உம்மை இனித்தெளியார்; கெடிலக் கரை அதிகை வீரட்டானத் துறை அம்மானே! அன்பே அமையும் என்று பதிகக் கருத்துக்களைத் தொடர்புபடுத்துக.

பதிகப்பாட்டுக் குறிப்பு - (1) கூற்று ஆயின ஆறு-கூற்று-இயமன். உடலுயிர்களைக் கூறு செய்து பிரித்தலிற் போந்த காரணப் பெயர். இயமனை ஒத்து வந்த சூலை. கயிலை மலையை அசைத்தமையால் சிவாபராதம் செய்து "இடார்க்கீழ் எலிபோல் வலி யெல்லாம் கெட்டு"க் (கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி - 83) கிடந்து பல காலம் அழுது அதனால் இராவணன் என்ற பேரும் பெற்ற அரக்கனுக்குச் "சங்கரன் சாம கானப் பிரியன்" என்று தப்பும் உபாயம் அறிவித்தனர் முன்னைப் பிறவியில் முனிவரா யிருந்த நாயனார் என்பதொரு வரலாறும், கோதாவிரிக் கரையில் சமய உண்மை வினவிய முனிவர்களிடம் சமணமே உயர்ந்ததென்று வாதித்துச் சொற்போர் புரிந்த னர் என்பது ஒரு வரலாறும் கேட்கப்பட்டு, இக்குற்றங்களால் அவர் சமணம் புக்குச் சூலையினால் வருந்த நேர்ந்ததென்பர். கூற்று - ஆயின - ஆறு - சொல்லால் விளைந்த - வழிவந்த - தாகிய இந்நோயினை விலக்கிடீர் என்ற குறிப்புக்கள்பட அவர் இங்குப் பொருள் கொள்வார். "பிழைத்தனக ளொத்தனையும் பொறுத்தா யன்றே" (தேவாரம்). கொடுமை...அறியேன் - இக்கொடிய சூலைக்குக் காரணமாகிய கொடுமை - முன்னை வினை. ஏற்றாய் - அடிக்கே - என்னை ஏற்றுக்கொண்ட உமது அடியிணைக்கே. ஏற்றாய் - இடபவாகனரே! என்றலுமாம். கெடிலக்கரை அதிகை வீரட்டானத்து உறை (வீரட்டானத் - துறை: அருட்டுறை என்பது போல என்றலுமாம்) அம்மானே! ஆற்றேன் என்க. விலக்ககிலீர் - நீக்கியருளுகின்றீரில்லை - கில் - ஆற்றலுணர்த்தும் இடைச் சொல். "கிற்றியே னெஞ்சே" (ஐயடிகள் க்ஷேத்திர வெண்பா 14)—(2) நெஞ்சம்...அறியேன்* - நாயனார் சமண சமயத்திற்புக்குப் பலகாலம் உழன்றவராயி னும், அந்நாளிற் சிவனை யிகழ்ந்துரைத் திருந்தனராயினும், சைவத் திறைத்தடைந்த பின்னர்த், திருவருளின் பேற்றினால், எல்லா நெறிகளும் சிவநெறியினுள் ஒவ்வோர் அங்கமாக அடங்கும் நிலையினைக் கண்டார்; "யாதொர் தேவ ரெனப்படு வார்க் கெலாம், மாதே வன்னலாற் றேவர்மற் றில்லையே" (அப்பர் தேவாரம்). "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே, மாதொரு பாக னார்தாம் வருவர்" (சித்தியார்) என்ற உண்மை கண்டார்; எவ்வெத் தெய்வத்தினிடத்தும் செய்யும் எவ்வெவ்வழிபாடும் சிவனையே சார அதனதனளவுக்கேற்ற பயனைச் சிவனே அளிப்பன் என்றும் கண்டார்; ஆதலின் இவ்வாறு கூறியதென்க. "சலம்பூ வொடுதூப மறந் தறியேன்" என்ற 6-ம் திருப்பாட்டின் கருத்துமிது. இவ்வாறின்றிக் "கொடுமை பல செய்தன நானறியேன்" என்ற கருத்தைத் தொடர்ந்து கொண்டு இவை நாயனாரது முன்னை நிலையின் சிவநெறித் தவத்தினைக் குறித்தன என்று கொள்ளுதலு மாம். தம்முள்ளே சிவனருள் வெளிப்படப்பெற்றுத் தம் கரணங்கள் சிவ கரணங் களாகப் பெற்றமையால் முன்னைநிலையின் விளைவையுணர்ந்து கூறவல்லவராயினர் என்பது துணிபு. "நிறை தவத்தை யடியேற்கு நிறைவித்து" முதலிய திருவாக்குக் களும் பிறவும் இதனை வலியுறுத்தும். இதுபோலவே ஆளுடைய பிள்ளையாரும் "மறக்கு மாறிலாத வென்னை மையல் செய்திம் மண்ணின்மேற், பிறக்குமாறு காட்டினாய்!" (திருத்துருத்தி) என்று கூறுவதும் பிறவும் இங்குச் சிந்திக்கத்தக்கன.

---

* "நினையாதொரு போதுமிருந்தறியேன்" "மறந்தறியேன்" என்ற திருவாக் குக்களால் சைவமும் சமணமும் ஒருதன்மைப்படுவன என்றும், சமயங்களெவையும் பெயர் மாத்திரையானன்றிக் கொள்கையால் மாறுபடுவனவல்ல என்றும் முடிவு கூறும் புதிய ஆராய்ச்சியாளருமுளர். எல்லாச் சமயங்களையும் படிமுறை காட்டி அதனத னளவில்வைத்து அமைதி கொள்வது சைவத்தின் உண்மைச்சமய சமரசமா கும், அவ்வாறன்றி ஒவ்வோர் சமயஉண்மை காணப்படுவது பற்றிச் சமயங்கள் யாவும்

(2) நஞ்சாகி - வடவனலுங் கொடுவிடமும் வச்சிரமும் பிறவுமாம் (1315) என்றது காண்க. "குடரோடு தொடக்கி முடக்கியிட," "சுடுகின்றது", "பறித்துப் புரட்டியறுத் தீர்த்திட", "கலக்கி மலக்கிட்டுக் கவர்ந்து தின்ன", "வேர்த்தும் புரண்டும் விழுந்தும் மெழுந்தால்", "வேதனையான", என்பன சூலை நோயின் கொடுமை குறித்தன. துரந்துமிடீர்; அஃதில்லையேல் கரந்துமிடீர் என்க. துரந்து - நீக்கி; கரந்து - மறைத்து. அஞ்சேலுமெனீர்! அவை யிரண்டிலொன்று செய்யீ ராயினும், அஞ்சற்க! என்றாகிலும் சொல்லீர்—(3) பணிந்தாரன - பணிந்தவர்க ளுடைய. பாற்றுதல் - போக்குதல். துணிந்தே - சரிதக் குறிப்பு. பிணிந்தார் - இறந்தவர்—(4) முன்னம் - முன்னைப் பிறவியிலும், இப்பிறவியில் இதற்கு முன்னும். அறியாமையினால் முனிந்து - நல்லாறு தெரியாது செய்த பிழையினால் என்னை முனிந்து சூலையை அளித்தீர் என்பது. தன்னை......கடனாவதுநான் என்ற உண்மையினைக் எடுத்துக்காட்டி, நீர் தலைவர்; நான் ஆளாக அடைந்தவன்; ஆதலின் என்னைக் காத்தல் உமக்குக் கடன் என்று வேண்டுதல் செய்தபடி. நான் - உறுதிப் பாடு குறித்தது—(5) கரைநின்றவர் (களாகிய) காத்து ஆள்பவர் என்று கூட்டுக. காவலிகழ்தல் - காவலை மீறிநடத்தல். கண்டுகோள்...நூக்கியிட - குளக்கரையில் காவலாக நின்றுரொருவர், அறியாது இறங்கும் ஒருவரை நோக்கி "இது ஆழ முடைத்து - வழியும் துறையும் இனியவையல்ல" என்று எச்சரித்து அறிவிக்கவும், அதைக் கேளாமல் அவர் இறங்கப் புக்காராகில் 'நீயே அனுபவித்து அறிக' என்று

---

ஒன்றே என்றுவது எல்லாவுண்மையும் காணும் சைவத்தின் முழுமையோடு அவை ஒப்பாவன என்றுவது கொள்ளுதல் தவறாகிய சமரசமாம். இறைவனைக் காணாத சமயம், உயிர்களைக் காணாதசமயம், உயிர்களைக் கட்டிய பந்தங்களைக் காணாத சமயம் உலகத்தைக் காணாத சமயம், இறைவன் உண்டெனினும் அவனை உயிர் களுள் ஒருவனாகக் காணும் சமயம், பிறந்திறக்கும் பசுக்களைக் கடவுளராகக் கொள்ளும் சமயம் என்றெல்லாம் உயிர்களின் பக்குவபேதம் நோக்கிப் பற்பல சமயங்களும் தம்முள் மாறுபடுவனவும் வேறுபடுவனவுமாம் என்ற உண்மை, உண்மைகண்ட ஞான நூல்களுள் பரபக்க சுபக்கங்களுள் விளங்க நிலைநாட்டப் பட்டது. "கொல்லாமை மறைந்துறையும்" எனப்படும் பழஞ்சமணமோ, அன்றித் துறவுமேற்படுவ தெனப்படும் இடைக்காலச் சமணமோ எதுவாயினும் சைவத்தின் முழுமைக்கண் வாராமை ஞான நூல்களுட் காண்க. சமணமோ அன்றி வேறெந்தச் சமயமோ சைவத்துளடங்கலாம்; ஆனால், சைவம் வேறெதனுள்ளும் அடங்காது; முழுப் பொற்காசும் செப்புக்காசும் போல என்பது. இதுபற்றித் தாயுமானார் முதலிய பல பெரியோர் செய்துள்ள விளக்கங்களும் கருதுக. "சோபான பட்சங்காட்டி","இராசாங்கத் தமர்ந்தது வைதிக சைவமழகிதந்தோ?", "நீதியினாலிவை யெல்லா மோரிடத்தே காண நிற்பது" முதலியவை ஆன்றோர் மொழிகள். "ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே" என்று சமணத்தின் பிணக்கநிலை காட்டும் திருவாக்கும், "நினையா தொருபோது மிருந்தறியேன்" "மறந்தறியேன்" என்று சைவத்தின் இணக்கநிலை காட்டும் திருவாக்கும் இதனை விளக்குவன. "முன்னம் மடியே னறியா மையினால்" (4) என்றதும், "சமயங்க ளானவற்றின் நல்லாறு தெரிந்துணர நம்பரு ளாமையினால்" (1302) என்றதும் இவ்வுண்மையினையே விரிப்பன. "எந்நிலையி னின்றாலும் எக்கோலங் கொண்டாலும், மன்னியசீர்ச் சங்கரன்றாள் மறவாமை பொருள் என்றே" என்று சாக்கிய வேடத்தைத் துறவாதே சிவநெறி நின்ற சாக்கிய நாயனாரது வரலாற்றின் நுட்பமும், தண்டியடிகள் வரலாறும் இங்கு வைத்துச் சிந்திக்கத்தக்கன.

சொல்லி அந்த ஆழ்ந்த கயத்தில் அமிழ்த்துவது போல நிகழ்த்த என்க. நூக்கியிட - நூக்கியிடுதல் போலச் செய்ய. நூக்குதல் - அமிழ்த்தல். நீந்தாய - நீந்தி மிதந்தாலன்றிக் கால்நிலங் கொள்ளாத ஆழமுடைய. நிலைக்கொள்ளும் - நின்று கொள்ளும். வழித்துறை - நீரிற் செல்லும் நல்ல வழியும் நல்ல துறையும். ஒன்று - ஒன்றும். தேவரீர் நன்னெறிகளை அறிவிக்கவும் அறியாது பிற துறையில் வீழ்ந்தேனாதலின் காப்பதனை விட்டு இவ்வாறு சூலையினால் வருத்துகின்றீர்; பிழை செய்யினும் காப்பது பெரியோர்களின் கடனாயிருக்க இவ்வாறு செய்தல் கேட்டறியாத சொல் என்றபடி. சமயங்கள் பலவும் உயிர்கள் தத்தம் பக்குவபேதப்படி செல்லும் ஒவ்வொரு துறை யாவன. அத்துறைகள் தாம், நிலையாதன - இடிந்து பாழ்பட்டன - வழுக்குவன - முதலை முதலிய கொடிய பிராணிகள் உள்ளன - கீழ்கள் பயில்வன - முதலாகப் பல திறப்பட்டு உயிர்களை வீழ்த்துவனவாம்; ஆதலின் இக்குற்ற மொன்றுமில்லாத வேதநெறியின் மிகுசைவத் துறையே வழித்துறையாவன என்ற படியாம்—(6) உலந்தார் தலை - வீந்தவர்தலை. இங்குப் பிரமன் றலையையும் குறித்தது. அலந்தேன் - வருந்தினேன். தமிழ் - தமிழ்ப் பாட்டு. உடல் - குடர் குறித்தது—(7) உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ஒண் பொருளும் - மனை வாழ்க்கையாலும் அதற்கு உரிய வளமாகிய பொருள்களாலும் பெரிதும் தருக்கினேன். ஒண்பொருள் - ஈண்டு ஒண்மை என்றது இல்லறத்துக்கும், ஈகையாதி பசு புண்ணியங்களுக்கும் உதவின தன்மை. தலைகாவல் - மேலிருந்து காக்கும் ஒருவர். இலாமையினால் உயர்ந்தேன் என்று கூட்டுக. வயந்தே - இப்போது அதனை நீங்கி உம்வயப்பட்டு. பறித்து - பற்றி இழுத்து. புரட்டி - புரளச் செய்து. அறுத்து - கிழிப்பதுபோலக் குடைந்து. ஈர்த்திட - இழுத்துக்கொள்ள—(8) மனம் வஞ்சம் ஒன்றும் இலாமையினால் அடியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்து வலித்தேன் என்க. வஞ்சம் என்பது சூழ்ச்சி. இங்கு நன்மை தீமை நாடித் தீமையை அறிந்து பிறரறியா வண்ணம் அனுபவிக்கும் நல்ல சூழ்ச்சி குறித்தது. வலித்தல் - உயர்வாக எண்ணித் தருக்குதல். (உம்மைத் தவிர வேறு) யாரொருவரும் துணையில்லை என்க. இது சமணர் எல்லாருங் கைவிட்டதனாலும், துணையென்று அடைந்த அம்மையார் காட்டுவித்ததனாலும் உணர்ந்தது. கலித்து - இரைத்து. மலக்கிட்டு - முறுக்கி உழக்கி. "மனத்துள்ளே கலமலக் கிட்டுத் திரியும் கணபதி யென்னும் களிறும்" (காந்தாரம் - அதிகை - 5). கவர்ந்து தின்ன - (என் உயிரைக்) கொள்ளைகொண்டு உண்ணுதலாலே. அலுத்தேன் - இளைத்தேன். உயர்ந்தேன் மனைவாழ்க்கை, வலித்தேன் மனைவாழ்க்கை - என்பன வற்றால் நாயனார் இவ்வுலக நிலையில் மனை - பொருள் முதலியவற்றால் மிகச் சிறந்திருந்தனர் என்பதறியப்படும்.*

---

*இவை போன்ற வாக்குக்கள் கொண்டு நாயனார்க்கு மனைவி மக்கள் உண்டு என்ற ஆராய்ச்சியிற் புகுவோருமுளர். 1300—1301—1302 பாட்டுக்களிற் கண்ட காலம் நாயனார் மனைக்கண் நின்று அறங்கள் செய்து பின் துறவு பூண்டிருந்த காலம். அப்போது மணஞ்செய்து இல்லற நடத்தியிருப்பினும் இருக்கலாம்; மணஞ்செய்யாமல் இருத்தலும் கூடும். அதனால் இச்சரிதத்துக்கு ஆவதொன்றில்லை. சடசம்பந்தமான அவ்விசாரணை ஈண்டுப் புராண சரிதத்துக்கு வேண்டப்படுவதன்று என்ற கருத்துப் பற்றி ஆசிரியர் அதனைக் கூறாராயினர். நாயனார் துறவறத்திருந்தனர் என்பதுவே நாம் ஈண்டுக் கைக்கொள்ளத் தகுவது. ஞானநிலையிற் சமயாசாரியரை அடையும் போது அவரது ஞானச் சரியை முதலியவற்றைத் தேடிக் கண்டு நலம் பெறுதலை விட்டு, நமது பாசவிகாரமாகிய அவிசாரங்களையே கொண்டு அங்கும் செல்லுதல் செய்

(9) பொன்னார் மேனியினீர் - "பொன்னார் மேனியனே" (நம்பிகள்). "பொன் வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி" (பொன். அந்). மெலியும் பிறை - குறைந்து ஒருகலையுடன் நின்ற பிறை. துன்பே கவலையே பிணியே என்க. ஏகாரங்களுக்கு எண்ணுப் பொருள் கொள்க. பிணியால் வரும் துன்பமும், அதனால் வரும் கவலையும் என்பது. அடியார்படுவது இதுவேயாகில், இனி, என்போலிக ளும்மைத் தெளியார் என்க. தெளிதல் - அறிந்து அடைதல். அமையும் - பொருந்தும் - சாலும். எஞ்ஞான்றும் அன்பே செய்யக்கடவதாய் நிற்கும். துன்பம் வரும்போது பெரியோர் இது எமது வினைப்பயன் என்று அனுபவித்து அடிமையிற் பிறழாது நிற்பர்; என்போன்ற அறிவிலிகள் அங்ஙனம் துணியார்.—(10) ஈர் உரிதோல் போர்த்தாய் என்க. வகிர்ந்து உரித்ததோலை. புறங்காடு - சருவசங்கார மயானம். ஆர்த்தானாகிய அரக்கன். "ஆர்த்தவா யலறு வித்தார் அதிகைவீ ரட்ட னாரே", "அடர்த்திட்டுப் பின்னை அருளும் செய்த அதனைக் கருதுவீராக. தன்வலியே கருதிக் கயிலை மலையைப் பெயர்க்க முயன்ற சிவாபராதத்துக்காக அடர்த்தும், பின்னர்ச் சரணடைந்து துதித்தமையால் அருளியும் உள்ள அதுபோல், சமணசமயப் படுகுழி வீழ்ந்து உம்மை இகழ்ந்து அபசாரம் செய்ததற்காகச் சூலைநோய் தரினும், வந்தடைந்தேனாதலின் என்னையும் ஆட்கொண்டு வேதனைவிலக்கி யருள்புரிவீர் என்பதாம். இராவணனுக்கு நாயனார் முன்னைய நிலையில் விரகறிவித்தனர் என்று கூறப்படும் வரலாற்றின் குறிப்புக் காண்பாருமுண்டு. இதனை 1340-ல் ஆசிரியர் கூறுவதும் காண்க. திருஞானசம்பந்த நாயனாரும் தமது திருப்பதிகங்களில் எட்டாவது திருப்பாட்டில் இராவணனைப்பற்றி அருளியுள்ளனர். ஆயினும் நாயனார் இதனைக் கூறுவதற்கும் அதற்கும் வேறுபாடு காணலாம். உலகவர் "பிழைத்தாலும் வந்தடையிற் கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட" அந்த ஆக்கப்பாட்டினை ஆளுடைய பிள்ளையார் அருளினர் என்று எடுத்துக் காட்டும் ஆசிரியர், ஈண்டு, "அத்தன்மைய னாய விராவணனுக்கு அருளும் கருணைத் திறமான அதன் மெய்த்தன்மை யறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு வணங்கினர்" என்று காட்டியதன் கருத்தைக் கருதுக. இராவணனது இந்நிகழ்ச்சியை நாயனார் கூறும் இடங்கள் பல. இந்நிகழ்ச்சியினை நேரிற் கண்டார் கூறுவன போன்று அமைந்துள்ளன அவை என்பதும் இங்குக் கருதத்தக்கது. "கடுகிய தேர்செ லாது கயிலாய மீது கருதேலுன் வீர மொழிநீ, முடுகுவ தன்று தன்ம மென நின்று பாகன் மொழிவானை நன்று முனியா, விடுவிடு வென்று சென்று விரைவுற்றரக்கன் வரையுற் றெடுக்க முடிதோள், நெடுநெடு விற்றுவீழ" (பொது - தசபுராணம்- பழம்பஞ்சுரம் - 10) முதலியவை பார்க்க.

தலவிசேடம் 234-ல் உரைத்தவை பார்க்க. பக்கம் - உ௭௧

1336. மன்னும் பதிகம் மதுபா டியபின்
வயிறுற் றடுசூ லைமறப் பிணிதான்
அந்நின் றநிலைக் கணகன் றிடலும்
அடியே னுயிரோ டருடந் த"தெனச்

யத் தகாத காரியம் என்பது அறிஞர் துணிபு. இதுபோலவே மணிவாசகப் பெருமானார்க்கும் மனைவி மக்களுண்டு என்று விசாரித்து அபசாரப்படும் மலமாக்களும் உளர். இத்தகைய தகாத ஆராய்ச்சியின் பிழை "ஓது மெல்லை யுலப்பில வாதலின் யாதுமாராய்ச்சி யில்லை", "ஆதியார் தாளடைந் தின்ன கேட்கவே" என்று ஆளுடைய பிள்ளையாரது திருவாக்கை ஆசிரியர் விரித்தருளிய தன்மையைக் கருதினால் விளங்கும்.

செந்நின் றபரம் பொருளா னவர்தந்
　　திருவா ரருள்பெற் றசிறப் புடையோர்
முன்னின் றதெருட் சிமருட் சியினால்
　　முதல்வன் கருணைக் கடன்மூழ் கினரே.　　எக

(இ - ள்) வயிறுற்றடு...பிணிதான் - வயிற்றினிடத்துத் தங்கி வருத்திய கடிய சூலைதானும்; மன்னும்...பின் - நிலைபெறும் அத்திருப்பதிகத்தைப் பாடியருளிய பின்பு, அந்நின்ற...அகன்றிடலும் - அந்த நிலையில் அக்கணமே நீங்கவும்; செந்நின்ற...சிறப் புடையோர் - செம்மைநின்ற பரம்பொருளாகிய சிவபெருமானுடைய திருநிறைந்த அருளினைக் கைகூடிய சிறப்பினையுடைய நாயனார்; முன் நின்ற...மூழ்கினரே - மூண்டு நின்ற ஞானமயக்கத்தால் முதல்வரது கருணையாகிய கடலினுள்ளே மூழ்கியே நின் றனர்.

(வி - ரை) மன்னும் - என்றும் நிலைபெற்றிருக்கும். "நீடிய கோதில்" (1335) என்றது காண்க.

மறப்பிணி - மறக்கருணையினால் விளைந்த பிணி. தான் - உயர்வு சிறப்பும்மை தொக்கது. அந்நின்ற நிலைக்கண் - அந்த நிலையின்கண்ணே - அவ்விடத்து - அப் பொழுதே. "இங்நின்ற நிலையே", "அந்நின்ற நிலை" (965) என்றவை காண்க. நிலைக்கண் - நிலைக்கணின்றும் என்று ஐந்தனுருபு விரித்து அவ்வாறு வேதனை செய்து நின்ற நிலையினின்றும் நீங்கவும் என்றுரைப்பர் ஆறுமுகத் தம்பிரானார்.

உயிரோடு அருள் தந்தது என - இது அவ்வாறு நீங்கிய சூலையினைப் பற்றி நாய னார் நினைந்தது. சூலை என்ற எழுவாய் வருவிக்க. சூலை நீங்காது நின்றிருப்பின் உயிர் நீங்கியிருக்குமாதலின் உயிர்தந்ததென்றும், மருளினீங்கி அருள்பெறுதற்கேது வாயினமையின் அருள்தந்ததென்றும், அருளுக்கேதுவாகாது வேறு வகையால் நீங்கி வெற்றுயிர் மட்டும் தந்திருக்குமாயின் பயனற்ற பாழ் வாழ்வாகு மாதலின் உயிரோடு அருள் தந்ததென்றும் கூறினார்.

செந்நின்ற பரம்பொருள் - செம்மையுள் நிற்கும் பொருள். பரம்பொருள் - உல குக்குப் பரமாகிய மேற்பட்ட பொருள். செம்மை - செம்பொருள் என்பன சிவத்தின் தன்மை என வருவனவும், செம்பொருள் என்பதற்கு முதற்பொருள் எனப் பரிமே லழகர் உரைத்ததுவும், 1052ல் உரைத்தனவும் காண்க.

செந்நின்ற - என்பதற்கு அன்புடையா ருள்ளத்தே செவ்வே நின்ற என்றும், செந்நின்ற பரம்பொருளானவர் தம் - என்பதற்குப் பரத்துவம் ஆராயுமிடத்துப் பிரம விட்டுணுக்களை போற் சாயாது நேரேநின்ற எனினும் பொருந்தும் என்றும் உரைப்பர் இராமநாதச் செட்டியார்.

திருஆர் அருள் - திரு - முத்தித்திரு. "திருநின்ற செம்மையே" என்ற திருத் தொண்டத் தொகைப் பொருளை இங்கு வைத்துக் காண்க.

திருவாரருள் பெற்ற சிறப்புடையோர் - "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரசர்" என்ற கருத்து.

முன் நின்ற தெருட்சி மருட்சி - முன்நின்ற-ஞானக்கண்முன் தோன்றிய. தெருட்சி - அறிந்தனுபவிக்கும் மிக்க ஆனந்தம். அதிசயம் என்பர். "அதிசயம் கண்டாமே" என்பது திருவாசகம். மருட்சி - இங்கு ஆனந்த மேலீட்டினால் அதன் வயப்பட்டு வேறொன்றும் தோன்றாதிருக்கும் அறிவின்நிலை குறித்தது. ஈண்டு மருட்சி - மயக்கம் - என்பது உயர்வின்கண் வந்தது. ஆணவத்தோ டத்துவிதமாகிய மயக்கம்போலன்றி, ஈண்டுத், தாணுவினோ டத்துவிதமாகிய நிலை என்க.

கருணைக் கடல் மூழ்குதல் - பேரருளிலே திளைத்தல். உருவகம்.

சூலை அந்நிலையில் அகன்றிடலும் நாயனார் திருவுள்ளத்தில் முதல்வன் கருணையும் சூலையும் என்ற எண்ணமே மிக்கு எழுந்தன. அவற்றுள், மூலமாய்ப் பெரிதாகிய கருணையை மேல்வரும் பாட்டாலும், கருவியாகிய சூலையை அதன்மேல் அடுத்து வரும் பாட்டாலும் துதிக்கின்றார். 71

1337. அங்கங் களடங் கவுரோ மமெலா
மடையப் புளகங் கண்முகிழ்த் தலரப்
பொங்கும் புனல்கண் கள்பொழிந் திழியப்
புவிமீ துவிழுந் துபுரண் டயர்வார்,
“ இங்கென் செயலுற் றபிழைப் பதனு
லேறு தபெருந் திடரே றிடநின்
தங்குங் கருணைப் பெருவெள் ளமிடத்
தகுமோ ? ” வெனவின் னனதா மொழிவார். ௭௨

1338. “ பொய்வாய் மைபெருக் கியபுன் சமயப்
பொறையில் சமணீ சர்புறத் துறையாம்
அவ்வாழ் குழியின் கண்விழுந் தெழுமா
றறியா துமயங் கியவம் புரிவேன்
மைவா சநறுங் குழன்மா மலையாண்
மணவா ளன்மலர்க் கழல்வந் தடையும்
இவ்வாழ் வுபெறத் தருசூ லையினுக்
கெதிர்செய் குறையென் கொ?லெனத் ” தொழுதார். ௭௩

1337. (இ - ள்) வெளிப்படை. திருமேனியில் எங்கும் உள்ள உரோமங்கள் எல்லாம் ஒருங்கே மகிழ்ச்சியால் சிலிர்த்து நேர்நிற்கக், கண்களிலிருந்து இடையறாது பொங்கும் ஆனந்தக் கண்ணீர் வழிந்து ஒழுகத், தரையின்மேல் விழுந்து புரண்டு ஆனந்த பரவசராகிய நாயனார், “இவ்விடத்து எனது செய்கையினால் வந்த பிழை காரணமாக, ஏறுதபெரிய இடரிலும் ஏறிடும்படி உமது நிலைபெற்ற கருணையாகிய பெருவெள்ளத்தைப் பெருக்குதலும் தகுதியாமோ ? ” என்று இவ்வகையான மொழிகளைத் தாமே எடுத்துக் கூறுவாராகி, ௭௨

1338. (இ - ள்). வெளிப்படை. “பொய்யை மெய்யென்று பெருக்கிய புன்சமயமாய்ப் பொறுமையற்ற சமணர் என்னும் நீசர்களது புறச்சமயமாகிய அந்த ஆழமான படுகுழியினிடத்தே விழுந்து, மேல் எழுகின்ற வழியையறியாமல், மயங்கி அவத்தொழில் செய்கின்ற நான், மயிர்ச்சாந்து மணம் வீசும் நறிய கூந்தலையுடைய பார்வதியம்மையாரது மணவாளராகிய சிவபெருமானுடைய மலர்போன்ற பாதங்களை வந்து அடையும் இப்பெருவாழ்வினைப் பெறத்தரும் இந்தச் சூலைநோயினுக்குக் கைம்மாறாகச் செய்யும் உபகாரம் என்ன வுள்ளது ? ” என்று அச்சூலையைச் சுட்டி வணங்கினார். ௭௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1337. (வி - ரை) அடங்க - எங்கும் உள்ள ; அடைய - முழுதும்.

**உரோமம் புளகங்கள் மூகிழ்த்தலர்தலாவது** - மயிர்களெல்லாம் நேராய் நிற்றல். புளகாங்கிதம் என்ப. பெரும் அச்சத்தாலும், அன்பு மிகுதியாலும் மயிர் முகிழ்க்கும். இங்கு அன்பு மிகுதியால் முகிழ்த்தலர்ந்தது.

**புனல் கண்களிற் பொழிந்து இழிய** என்க. இஃது ஆனந்தக் கண்ணீர். இறைவனது பெருங்கருணையினையும், தாம் அவர்பாற் செய்த பெரும்பிழையினையும் எண்

னும் தோறும் கண்ணீர் பொழிய நிற்பர் பெரியோர். "பிழைத்தனக ளெத்தனையும் பொறுத்தா யன்றே! இத்தனையு மெம்பரமோ?" என்பது திருத்தாண்டகம். இது பற்றியே தருமோ? என்றார்.

புவிமீது புரளுதலும் அயர்தலும் ஆனந்த மேலீட்டினால் நிகழும் மெய்ப்பாடுகள். அருளின் நிறைவு உள்ளே அடங்காமையால் வீழ்தலும் புரளுதம் அயர்தலும் நிகழ்ந்தன. முன்னர் நோய்மிகுதியால் இவை நிகழ்ந்தன. அதுபோலவே இங்கு அருணிறைவாலுமாயின என்க. "புரண்டு வீழ்ந்து" - (நம்பிகள்).

அயர்வார் - முற்றெச்சம். அயர்வார் - மொழிவார் - என்று கூட்டுக. இவற்றைத் தொழுதார் என்ற மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

இங்கென்...பிழைப்பதனால்...தருமோ? எனது பெரும்பிழையினால் தேவரீர் இது செய்தருளுதலும் தகுமோ?; இவ்வருள் எனக்கும் தகுமா?; நான் இது பெறத் தகுதியுடையவனா? அல்லேன் என்றபடி. பிழைப்பு - பிழை.

ஏறாத பெருந்திடர் ஏறிட...பெருவெள்ளமிட - நான் வீழ்ந்து கிடந்தது புறச் சமயமாகிய சமணம் என்னும் அந்த ஆழ்ந்தபடுகுழி. அதினின்றும் மேலே உள்ள ஏற முடியாத பெருந்திடராகிய சைவ உயர்நிலை ஏறுதற்குப் பெருவெள்ள மிட்டு, வெள்ள நீர் மேலேற ஏற அதனுடன் யானும் மேலே ஏறிவரும்படி அருளினீர் என்க. இதற்கு இவ்வாறன்றி நீர் ஏறிப்பாயாத பெருந்திடரினும் நீர்பாயும்படி என்று பொருள் உரைப்பாருமுண்டு. அது பொருந்தாமை யறிக. ஏறிட - நான் ஏறும்படியாக. ஏற்றிட - என்று பாடங் கொள்வாருமுண்டு.

ஆழ்குழி என முன்னர்க் கூறியது ஏறாதபெருந்திடர் என்ற கருத்துக்கிசையுமாறும் அறிக. திடரினும் ஏற - உயர்வு சிறப்பும்மை தொக்கது. தங்கும் - ஏனைய வெள்ளங்கள்போல வற்றாது நிலைபெற்ற. பந்த முத்தி யிரண்டினு நீங்காதிருத்தலாற் றங்கும் என்றார் என்பர் ஆறுமுகத் தம்பிரானார்.

இன்னன - இவைபோல்வன பலதுதிகளையும். மொழிவார் - முற்றெச்சம். 72

1338. (வி - ரை) பொய்வாய்மை பெருக்கிய - பொய்யினையே மெய்ம்மையாகக் கூறி அவஞ்செய்து பரப்பிய. "பொய்யினால் மெய்ம்மை யாக்கப் புகுந்தநீர் போமின்" (திருஞான - புரா - 792).

பொய் வாய்மை - அசத்தியம் என்பாருமுண்டு. சமணர்களது மந்திரம் அத்தி நாத்தி - உண்டு - இல்லை; பொய்யும் - மெய்யும் என்ற இரண்டு சொற்களையுடையது. அன்றியும், பொருள்களை வினவியவழி உண்டாம் - இல்லையாம் - உண்டுமில்லையாம் - என மூவகை என்றலும், இம்மூன்றனோடும் சொல்லவொண்ணாததாம் என்றதனைச் சேர்த்தும், அதனைத் தனியாக வைத்தும் ஆக ஏழுவகை என்றலும், சமணர் மரபு. "அத்தகு பொருளுண்டு மில்லையு மென்று நின்ற" என்ற தேவாரமும் காண்க. "தெளியா தொருபொருளே பொய்யு மெய்யு மாமென்னும் பொருள்மேற் கொள்ளும் புரை நெறியார்" (நமிநந்தி - புரா - 10) என்ற கருத்துங் காண்க.

புன் சமயம் - புன்மைச் செயலும் ஒழுக்கமும் எண்ணங்களுமுடைய சமயம்.

பொறி - இங்கு அறிவு குறித்தது. "புத்தரோடு பொறியில் சமணும்" (திருஞான-தேவா). பொறை என்பது பாடமாயின் பொறுமையில்லாத என்க. பொறுமையாவது பிற சமயங்களையும் பொறுத்திருத்தல். பிறசமயங்களை மாறுபட்டு அழித்தல் சமணர்களது சமயக் கொள்கைகளுள் ஒன்றென்பது நாயனார் சரித நிகழ்ச்சிகளாலும், ஆளுடைய பிள்ளையார், தண்டியடிகள் முதலியோர் புராணங்களாலும், நீலகேசி முதலிய சமயவாத நூல்களாலும் அறியப்படும் உண்மை.

சமண் நீசர் - நீசர் - கொல்லாமை மேற்கொண்ட சமயமென்று சொல்லிக் கொலைசெய்யத் தூண்டுபவர் என்ற பொருள்தந்து நின்றது. "கொலையும் பொய்ம்மையும் இலமென்று கொடுந்தொழில் புரிவோர்" (1346), "கையிற் றுற்றுணும் நீசர்" (பழந்தக்கராகம் - மாற்பேறு - 10 - பிள்ளையார் தேவாரம்) முதலியவை காண்க.

புறத்துறை - புறச்சமயம். அவ்வாழ்சுழி - உள்வீழ்ந்தார் மீண்டு மேலேறமாட்டாது செய்தலின் சுழி என்றார். அகரம் புறத்துறையாகும் அந்த என முன்னறிசுட்டு.

ஆழ்சுழி - உருவகம்.

அறியாது மயங்கி அவம் புரிவேன் - நன்மைதீமையறியும் அறிவிலாது மயக்கத்தினால் அவத்தினை - தீமையினைச் - செய்தேனாயினும். தாமே செய்யாது சேர்க்கைக் கேட்டினாலே தீச்செயல் செய்தாரும் தக்கன் யாகத்திற் றண்டிக்கப்பட்டதுபோல நானும் தண்டிக்கப்படுதற்குரியேன். புரிவேன் - புரிவேனையும். அத்தகைய என்னையும் என இழிவு சிறப்பும்மை தொக்கது.

புரிவேனையும் கழல்வந்தடையும் இவ்வாழ்வு பெறத் தந்த சூலை என்று சூலையின் பேருதவியைப் போற்றினபடி. அவ்வாழ்சுழி - இவ்வாழ்வுபெற - அகரம் - இகரம் ஆகிய சேய்மை அண்மைச் சுட்டுக்கள் மிக மிக விலகி நின்ற நெடுந்தூரத்தையும், மிக மிக அணுகத்தந்த அண்மையையும் சுட்டின. "இங்குநின் றங்குவந் தத்துணையும் பகர்ந்த" என்னும் திருக்கோவையாருங் காண்க.

மைவாச நறும் குழல் - இயற்கை மணமுடைய கூந்தல் என்றபடி. சாதியடை என்றலுமாம்; "புற்றரவக் கச்சார்த்த" என்பது போல. மாமலையாள் - பார்வதியம்மையார். "பெருமலை பயந்த கொடி" (திருஞான - புரா - 42).

மாமலையாள் மணவாளன் - அருள்மேனி கொண்டு எனக்கும் அருளைத்தந்தவன் என்பது குறிப்பு.

வந்துஅடையும் - வந்து - புறச்சமயப் படுகுழியினின்றும் ஏறிப்போந்து வந்து. எதிர்செய்குறை - எதிராக - கைம்மாறாகச் - செய்யும் உபகாரம். குறை - நன்றி.

தொழுதார் - இறைவ னருளாய் வந்ததாதலின் தொழுதற்குரியதாயிற்று.

தொழுவார்—என்பதும் பாடம். 73

1339. மேவுற் றவிவ்வே லையினீ டியசீர்
வீரட் டமமர்ந் தபிரா னருளாற்
"பாவுற் றலர்செந் தமிழின் சொல்வளப்
பதிகத் தொடைபா டியபான் மையினால்
நாவுக் கரசென் றுலகே ழினுநின்
னன்னா மநயப் புறநண் ணுக"வென்
றியாவர்க் கும்வியப் புறமஞ் சுறைவா
னிடையே யொருவாய் மையெழுந் ததுவே. எச

(இ - ள்) வெளிப்படை. பொருந்திய இந்தச் சமயத்தில் சிறப்பினால் நீடிய திருவீரட்டானேசுவரருடைய திருவருளால் "பாட்டுக்கு இசைந்து அலர்ந்த செந்தமிழுடைய இனிய சொல்வளம் பொருந்திய திருப்பதிகத் தொடையைப் பாடியருளிய முறைமையினால், திருநாவுக்கரசு என்று உனது நல்ல பெயர் விருப்பமுற ஏழுலகங்களிலும் பொருந்துவதாக" என்று யாவர்க்கும் வியப்பு உண்டாகும்படி, மேகந்தவழும் ஆகாயத்தினிடமாக ஒரு அசரீரி வாக்கு எழுந்தது.

(வி - ரை) மேவுற்ற இவ்வேலையில் - சூலை அங்கின்ற நிலைக்கண் அகன்றிடலும், முதல்வன் கருணையின் மூழ்கித் ததித்துத் தொழுத அமயத்தில். சீர்நீடிய என்க. சீரால் நீடுதல் - புரமெரித்த அன்று போல் திருவருள் என்றும் நீடியிருத்தல்.

அமர்ந்த - விரும்பி எழுந்தருளிய. அமர்தல் - விரும்புதல்.

அருளால் - ஒரு வாய்மை - எழுந்ததுவே என்க. பாவுற்று அலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத்தொடை - பா உறுதல் - அலர்தல் - செந்தமிழாதல் - இன்சொலுடைமை - வண்மையுடைமை - தொடையாதல் என்ற தன்மைகள் பொருந்தும் பதிகம்.

பா உறுதலாவது - தமிழ் இலக்கணத்துள் வரம்பு படுத்தும் பாவின் இலக்கணம் முற்றும் அமைதல். அலர்தல் - சொற்பொருளமைதியால் அதனுள் அடங்கிவிடாது மேலும் விரிதல்; செந்தமிழ் என்றதனால் தமிழியல் இலக்கணம் பொருந்தப்பெறுதலும், கொடுந்தமிழ் முதலிய பிறவழக்குக்கள் விரவப் பெறுமையும் பெறப்படும்; இன்சொல் - சொல்லினிமையுடன் பொருளினினிமையும் விரவியிருத்தல்; வண்மை - வளமுடைமையாவது எடுக்கவும் கொடுக்கவும் குறையாது சொற்பொருள் நிறைவுடையதாய் அற்றைநாட் போலவே இற்றைக்கும் தன்னை எண்ணலுறுவார்க்குப் பயனை வரையாது கொடுத்துவருதல்; தொடை - தொடுக்கப்படுவது - கோவை செய்யப்படுவது. பதிகம் - பத்துப்பாட்டுக்களின் தொகுதிக்கு இடும் மரபுப்பெயர். இது சிறுபான்மை 11, 12 பாட்டுக்களினும், அதற்கு மேலும் யாக்கப்படும். புறனடை இலக்கணத்தால் அவையும் பதிகம் எனப்படும். ஆளுடைய பிள்ளையாரது தேவாரப் பதிகங்கள் பெரும்பான்மை பதினொரு திருப்பாடல்களாலும், அவரருளிய பல்பெயர்ப்பத்து - ஏகபாதம் - வழிமொழித் திருவிராகம் முதலிய சீகாழிப் பெயர்கள் பற்றிய பதிகங்களும், ஆளுடைய அரசுகளருளிய திருவங்க மாலையும், ஆளுடைய நம்பிகளது (தக்கேசி) வாழ்கொளிபுத்தூர்ப் பதிகமும் முதலியன பன்னிரண்டு திருப்பாடல்களாலும் வந்தன. ஆளுடைய அரசுகளருளிய "சிந்திப்பரியன" என்ற திருவையாற்றுத் திருவிருத்தப்பதிகம் இருபது திருப்பாடல்களாலும், சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை முப்பது திருப்பாடல்களாலும் இயன்றன காண்க. பதிகம் - பல்வகைப் பொருளையும் தொகுத்துக் கூறுவது என்றும் கூறுவர். இற்றைக்கும் இப் பதிகத்தின் வண்மை அதனை பயில்வோர் பெறும் நோய் நீக்கம் முதலிய திருவருளால் அறியவுள்ளது. "வண்டமிழானோய்தீர்ந்து" என்ற புராணசாரமும் காண்க.

நாவுக்கரசு - இறைவரால் நாயனாருக்கு இடப்பட்ட பெயர். அதனைத் தேடித் தந்தது அத்திருப்பதிகத் தொடையாதலின் அதன் சிறப்பினை இவ்வாறு விதந்து எடுத்துக் கூறினார். வன்றொண்டன் என்று திருநாமஞ் சூட்டப்பெற்றுத் திருவருள் வழியே நம்பிகள் பாடியருளிய "பித்தாபிறை சூடீ" என்ற முதற்றிருப்பதிகத் தமிழ் இசைச் சிறப்பினை இவ்வாறே 221-ம் திருப்பாட்டில் ஆசிரியர் எடுத்துக் கூறியதும், இறைவனருள் வழியே திருமுலைப் பாலினையுண்டு உயர்ஞானத் திருமொழியினால் ஆளுடைய பிள்ளையார் பாடியருளிய "தோடுடைய செவியன்" என்ற முதற்றிரு பதிகத்தினை அவர்தம் புராணம் 75 முதல் 80 வரை உள்ள திருப்பாட்டுக்களாற் சிறப்பித்து எடுத்துக் கூறுவதும் இங்குச் சிந்திக்கத் தக்கன.

உலகு ஏழினும் - நாமம் - நண்ணுக - என்றது எவ்வுலகத்துள்ளாரும் அதனைப் போற்றி யுய்யக்கடவர் என்பதாம். நன் நாமம் - இத்திருநாமத்தைப் போற்றி யுய்ந்த அப்பூதிநாயனார் சரிதத்தை ஈண்டுக் கருதுக. நாயன்மார் திருநாமங்களே தம்மைப் போற்றியவர்களைக் காத்து உய்விக்க வல்லன என்பது திருத்தொண்டத்

தொகையாற் பெறப்படும் உண்மை. "ஞானசம் பந்த ரென்னு நாமமந் திரமுஞ் செல்ல, ஆனபோ தயர்வு தன்னை அகன்றிட" (திருஞான - புரா - 721) என்பதும், "திருநாமக் கோவைதனை மந்திரமாக் கொண்டு" என்றதும் சிந்திக்க. திருநாவுக் கரசு - ஞானசம்பந்தர் என்ற திருநாமங்களை ஒற்றுநீக்கி, யெண்ணுங்கால் திருவைந் தெழுத்துப்போல ஐந்தெழுத்தாதலும் குறிக்க; "திருநாவுக்கர செனுமோர், சொற்று ணெழுதியுங் கூறியுமே யென்றுந் தூன்பில் பதம்பெற்று ஞெருநம்பியப்பூதி" என்ற தும் காண்க; என்று திரு. ந. சிவப்பிரகாச தேசிகர் குறிக்கின்றார். நம்பியாரூரர் என்ற பெயரும் இவ்வாறே ஐந்தெழுத்தாதல் காண்க.

மஞ்சு உறைவான் - மேகங்கள் தங்குமிடமாதல் உலகுக்குதவும் தன்மை குறித் தது. அதுபற்றிக் கூறியதனால் உயிர்க்குதவி குறிக்கப்பட்டபடியாம்.

வானிடை ஒரு வாய்மை - ஆகாயத்தினிடை ஓர் உண்மைவாக்கு ஒலி. வாய்மை - இறைவரது அசரீரி யென்னும் திருமேனியினின்றும் தோன்றும் சத்தாகிய ஒலி. ஏகாரம் வியப்பின்கண் வந்த அசைநிலை. சத்துப்பொருளுடைய ஒலி என்றலுமாம்.

அருளப்பாவுற்றவர் — நாமங்கள் — என்பனவும் பாடங்கள். 74

1340. இத்தன் மைநிகழ்ந் துழிநா வின்மொழிக்
கிறையா கியவன் பரு"மிந் நெடுநாட்
சித்தந் திகழ்தீ வினையே னடையுந்
திருவோ விது?"வென் றுதெருண் டறியா
அத்தன் மையனு யவிரா வணனுக்
கருளுங் கருணைத் திறமா னவதன்
மெய்த்தன் மையறிந் துதுதிப் பதுவே
மேல்கொண் டுவணங் கினர்மெய் யுறவே. எரு

(இ - ள்) வெளிப்படை. இத்தன்மை நிகழ்ந்ததனாலே நாவின் மொழிக்கு அரச ராக ஆகிய அன்பரும், "இத்தனை நீண்டகாலமும் சித்தத்தினுள் விளங்கிய தீவினை யினையே உடையேனாகிய யான் அடையத்தக்க பெரும்பேறு இதுவோ?" என்று எண்ணியவராய்த், தெளிந்தறியாத அத்தன்மையனாகிய இராவணனுக்கும் அருளும் அருளின் பெருமையாகிய அதன் மெய்த்தன்மையை அறிந்து அத்திறத்தைத் துதிப் பதனையே மேற்கொண்டு மெய்யுற வீழ்ந்து வணங்கினர்.

(வி - ரை) இத்தன்மை நிகழ்ந்துழி - வாய்மை எழுந்த அதனால். உழி - என்ற ஏழனுருபு ஏதுப்பொருள் கொண்ட ஐந்தனுருபாக வந்தது. உருபு மயக்கம்.

நாவின் மொழிக்கு இறை ஆகிய - "நாவுக்கரசு" என்று வாய்மை எழுந்த தாகலின், அதனில் நா என்பது ஆகுபெயராய் நாவின்வழி உளதாகும் மொழியைக் குறித்ததென்று பெயர்விளக்கம் செய்தவாறு. இறை - அரசு. ஆகிய - ஆக்கப்பெற்ற.

இந் நெடுநாள் - நாள் - நாளும். இழிவுசிறப்புக் குறிப்புட்கொண்ட முற்றும்மை தொக்கது. இத்தனை நீண்டகாலமும் என்றது அதுபோழ்தின் நாயனாரது வயதினை யும் குறிப்பா லுணர்த்துவதுபோலும். இவ்வளவு காலமும் திருவருட்கயலுமாய்ப் புன்மையே புரிந்து காலங்கழித்ததுபற்றி இரங்கிக் கூறியபடி. "பயிலாதே பாழேநா னுழன்றவாறே", "போற்றுதே யாற்றநாள் போக்கி னேனே" முதலிய திருவாக் குக்கள் இக்கருத்தினைத் தருவன.

சித்தம் திகழ் தீவினையேன் - தீவினையே திகழ் சித்தத்தேன் என்று விகுதி பிரித்துக் கூட்டுக.

"இந்நெடுநாள்......இது?" - இந் நீண்ட நாளும் தீவினையே விளங்கிய சித்த முடைய யான், இப்பெரிய திருவினை யடைவதனுக்கு எவ்வாறு தகுதியுடையேன் என்பது. திரு இதனையும் தீவினையேன் அடைவதுவோ ? என்க. தீவினை - சமணம் புக்குச் சிவனை இகழ்ந்தமை குறித்தது.

என்று - திருவின் அளவற்ற பெருமையினையும் தமது அளவற்ற சிறுமையினையும் எண்ணினார்; அவ்வாறு எண்ணியபோது அதன் அமைவு திருவருளின் பெருமையே யாம் எனவும், அந்தப் பெருமை சிவாபராதம் செய்த இராவணனையும் ஆட்கொண்ட தன்மையால் விளங்குவதாம் எனவும் அறிந்தனர்; அதனைத் துதித்தனர் என்க.

அத்தன்மையனாய இராவணன் - தம்மைப்போலவே சிவபெருமானது பெருமை யினை அறியாது பிழைசெய்த அந்தத் தன்மையுடைய இராவணன்.

கருணைத்திறமான அதன் மெய்த்தன்மை - தம்மை இகழ்ந்து பெரும் பிழை செய்தவனாயினும், அடைந்து துதித்தபோது அவனது பிழையினைப் பொறுத்து அருளியதுடன், வாளும் நாளும் வரமும் கொடுத்த கருணையின் மெய்ம்மை. "மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற், கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள் ளும் எனக்காட்ட, அண்ணலவற் கருள்செய்த ஆக்கப்பாடு" (திருஞான - புரா - 77) என்று இதனை ஆசிரியர் பின்னர் மற்றொரு வகையால் விரித்துக்கூறுதல் காண்க.

மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே மேல் கொண்டு - அறிந்து - பிழை செய்த இராவணனுக்கு அருளியதுபோல, சமணம் சார்ந்து இகழ்ந்து பிழைசெய்த தமக்கும் அருளுவது அவரியல்பென்பதும், பிழைசெய்த இராவணனுக்கு அருள்புரிந் ததுபோல அவனுக்கு முன்னைநிலையில் அந்தப் பிழையினின்றும் தப்பும் உபாயமறி வித்துப் பிழைபுரிந்த தமக்கும் அருள்வது அருளியல்பின் மெய்த்தன்மையாமென்ப தும், அறிந்து என்ற குறிப்பினாற் பெறப்படும் என்பர்.

அறிந்து துதிப்பதுவே - "ஒறுக்கின வாறடி யேனைப் பிறப்பறுத் தாளவல்லான்" (திருவிருத்தம் - ஒற்றியூர் 10). ஆளுடைய பிள்ளையார் இராவணனது வரலாற்றைத் தமது திருப்பதிகங்களில் எட்டாவது பாட்டுக்கள்தோறும் வைத்துப் பாடியருளிய தன்மைக்கும், அப்பர் சுவாமிகள் அவ்வரலாறுகளைப் பத்தாவது பாட்டாகிய திருக் கடைக்காப்பில் பதிகந்தோறும் வைத்துப் பாராட்டிய தன்மைக்கும் வேறுபாடு காணப்படும். "ஆர்த்தா னரக்கன் றனைமால் வரைக்கீ ழடர்த்திட் டருள்செய் தவது கருதாய்" என்பது நாயனார் திருவாக்கு. பிழை செய்தமைக்காக மலைக்கீழடர்த்திட்ட தண்டனையும், தம்மை அடைந்தமைக்காக அருள்செய்ததும் நிகழ்ந்ததுபோல, "முன் னம்மடியே னறியாமையினால் முனிந்தென்னை நலிந்து" சூலையினால் வருத்திய தண் டனையும், பின்னை உமக்காட்பட்டு அடைந்தமையால் அருளும் செய்தீர் என்று இவ் வாறு மெய்த்தன்மை அறிந்து துதித்தனர்.

"கடுகிய தேர்செலாது; கயிலாய மீது கருதே! லுன்வீர மொழிநீ! முடுகுவ தன்று தன்ம"மென நின்று பாகன் மொழிவானை நன்று முனியா, "விடுவிடு"வென்று சென்று விரைவுற் றரக்கன் வரையுற் றெடுக்க" (பொது - தசபுரா - 10 - பழம் பஞ்சுரம்), "மலையைப் பற்றி, யார்த்திட்டான் முடிகள் பத்து மடர்த்துநல் லிசை யஞ்சத், தேத்தேத்தா வென்னக் கேட்டார்" (ஷை - பயற்றூர் 10), "மங்கை யஞ்ச வானவ ரிறைவ னக்கு, நெறித்தொரு விரலா லூன்ற நெடுவரை போல வீழ்ந்தான், மறித்திறை யூன்றி னேனேன் மறித்துநோக் கில்லை யன்றே" (ஷை - கயிலை - 3) (குறிப்பு- இப்பதிக முழுமையும் இவ்வாறே இவ்வரலா றொன்றனையே கண்டவர் கூறுவது போலக் கூறுவது), "கண்வழி குருதி சோரத் திருவருள் சிறிது வைத்தார்" (ஷை - திருப்புகலூர் - 10), "ஆர்த்தவா யலறு விப்பார்" (ஷை - ஆவடுதுறை - 17),

" பத்துவாய் கீதம்பாடப் பரிந்தவற் கருள் கொடுத்தார் " (ஷை - நனிபள்ளி-10), " பிறையெயி றிலங்க வங்காந், தருவரை யனைய தோளா னரக்கனன் றலறி வீழ்ந்தான் " (ஷை - தனி-10), "அட்டுத் தீர்த்துச் சுவைபடக் கீதம் கேட்ட " (ஷை - குறைந்த - 10), "அலற இரங்கி ஒள்வாள், குறித்தே கொடுத்தாய் கொடியேன் செய் குற்றக் கொடுவினைநோய், செறுத்தாய் " (ஷை - திருச்சத்திமுற்றம் 10), " கடவுந் திகிரி கடவா தொழிய " (ஷை - தூங்கானைமாடம் - 10) " நலங்கொள் பாகனை நன்று முனிந்திடா, விலங்கல் கோத் தெடுத்தான் " (ஷை - வன்னியூர் - 10), " செருத்தனுற்றன தேர் செலவுய்த்திடும், கருத்தனுய்க் கயிலை யெடுத்தான் " (ஷை - அரிசிற்கரைப் புத்தூர்-10) " அழுதயர்ந்தனன் " (ஷை - திருமங்கலக்குடி - 10), " நகழமால் வரைக்கீழிட் டரக்கர் கோனை நலனழித்து நன்கருளிச் செய்தான்" (திருத்தாண்டகம், திருபுன்கூர் - 10), " மலையைக் கையா, லுலங்கிளர வெடுத்தவன் ருேள் முடியு நோவ வொருவிரலா லுறவைத்தா "றிறைவா" வென்று, புலம்புதலு மருளொடுபோர் வாளும் வைத்தார் " (ஷை - நல்லூர்10), " எண்ணு விலங்கைக்கோன் றன்னைப் போற்றி யிறைவிரலால் வைத்துகந்த வீசா போற்றி, பண்ணு றிசையின் சொற் கேட்டாய் போற்றி பண்டே யென்சிந்தை புகுந்தாய் போற்றி " (ஷை - கயிலாயம் - 10), " சிலத்தான் றென்னி லங்கை மன்னன் போற்றிச் சிலையெடுக்க வாயலற வைத்தாய் போற்றி, கோலத்தாற் குறைவில்லான் றன்னை யன்று கொடி தாகக் காய்ந்த குழகா போற்றி " (ஷை - ஷை - 10), " முறிப்பான பேசிமலை யெடுத் தான் ருனு முதுகிறமுன் கைந்நரம்பை யெடுத்துப் பாடப், பறிப்பான்கைச் சிற்றறிவா ணீட்டி னுனைப் பாவியே னெஞ்சகத்தே பாதப்போது பொறித்தானை " (ஷை - கீழ்வேளூர் 10), "பத்திலங்கு வாயாலும் பாடல் கேட்டுப் பரிந்தவனுக் கிராவணனென் றீந்தநாம தத்துவனை " (ஷை - தலையாலங்காடு 10), " முரிந்து நெரிந் தழிந்துபா தாள முற்று முன்கைநரம் பினையெடுத்துக் கீதம் பாட இருந்தவன் " (ஷை - எறும்பியூர் 10) " அன்னத்தே ருூர்ந்த அரக்கன் றன்னை யலற வடர்த் திட்ட அடியுங் கண்டேன் " (ஷை - திருவிழு - 10) என்பனவாதி இவை யெல்லாம் இராவணன் கயிலை மலையினை எடுத்ததும், வருத்தமுற்றதும், பின்பு அவன் இறைவரைப் பாடியருள் பெற்றதுமாகிய ஒரே பொருளைக் கூறுவன.

நாயனுரது திருப்பதிகங்களுட் சில தவிர ஏனைய வெல்லாம் திருக்கடைக் காப்பில் இவ்வொரு பொருளையே வைத்துப் போற்றுவன. ஆளுடைய பிள்ளையார் திருப்பதிகங்களிலும் எட்டாவது திருப்பாட்டுக்கள் இராவணனைப் பற்றியன வெனி னும் அவற்றுட் சில தவிர ஏனைய வெல்லாம் இராவணன் கயிலையை எடுத்துப் பின் அருள் பெற்றுன் என்றமட்டில் அவ்வொன்றையே குறிப்பன. " இராவணன் மேலதுநீறு " (" காந்தாரம் - திருநீற்றுப் பதிகம் - 8) " ஏழ்கடல் சூழிலங்கை யரை யன்ற னேடு மிடரான வந்து நலியா " (பியந்தைக் காந்தாரம் - பொது - கோளறு பதிகம் - 8) "நீல மாமணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொடொல்க - வாலினுற் கட்டிய வாலியார் வழிபட மன்னு கோயில்" (சாதாரி - வடகுரங்காடுதுறை, 8) என்ற சிற்சிலவற்றில் இராவணனைப் பற்றி வேறு வகையாலுங் குறித்தருளினர் பிள்ளையார்.

கூற்ருயினவாறு என்ற இத்திருப்பதிகக் கருத்தை எடுத்து விளக்குமுகத்தால், " தெருண்டறியா அத்தன்மைய னுய விராவணனுக்கு அருளுங் கருணைத் திறமான அதன் மெய்த்தன்மை யறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு " என்ற ஆசிரியர், " தோடுடைய " என்ற பிள்ளையாரது திருப்பதிகக் குறிப்பினைக் காட்டும்போது " மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற், கண்ணுதலான் பெருங்

கருணைக் கைக்கொள்ளு மெனக் காட்ட..." (திருஞான - புரா - 77) என்று காட்டியதனை ஓர்ந்து உண்மை கண்டுகொள்க. அன்றியும் நாயனார் கூறுவது நேரிற் கண்டவர் கூறுவதுபோலக் கருத்தும் உள்ளுறையும் மெய்ப்பாடும் விளங்க உள்ள திறனும் உணர்க. இவை அவரது முன் சரிதம் கூறுவார்க்குத் துணையாய் நிற்கும் பகுதிகள் என்னலாம்.

இராவணனது இவ்வரலாறவது:—அருந்தவஞ் செய்து வரம்பலபெற்ற இராவணன் தனது தோள்வலி கருதித் தேரூர்ந்து பல திசையிலும் சென்றான். கயிலைமலையின்மீது, தேரின் மேலே வானவீதியிற் பறந்துசெல்ல முயன்றான். பாகன் விலக்கினான். அதனைக்கேளாமல் முடுக்குதலும் நந்தியின் ஆணையால் தேர் தடைப்பட்டது. இராவணன் சினந்து "இத்தே ரேக விம்மலை பேர்ப்பன்" என்று கயிலையைப் பெயர்க்க முயன்றான். சிவபெருமான் சிறிது ஒரு விரல் நுனியால் அமிழ்த்தவே, மலையின்கீழ்ச் சிக்கி நெரிந்து வலிகெட்டுப் பலகாலம் அழுதுகொண்டிருந்தான். அதனால் அவனுக்கு இராவணன் (அழுபவன்) என்று பெயர் வழங்கியது. அங்குத் தவம் செய்து கொண்டிருந்த வாகீச முனிவர் (அவரே பின்பு திருநாவுக்கரசு நாயனாராக அவதரித்தவர் என்பது முன்பிறப்பின் ஒரு வரலாறு) கண்டு இரங்கிச், "சங்கரன் சாம கானப் பிரியன்" என்று அவனுக்குத் தப்பும் உபாயமறிவித்தார். அவனும் அவ்வாறே தன் கை நரம்புகளை எடுத்து வீணைபண்ணிச் சாமவேதம் பாட இறைவர் இரங்கி வெளிப்பட்டு அவனுக்கு அருள்புரிந்து நாளும் வாளும் ஈந்தருளினர் என்பது.

துதிப்பவே - ஒவ்வோர் பதிகத்தும் திருக்கடைக்காப்பில் வைத்து முடித்துப் போற்றுவது என்ற குறிப்பும் காண்க.

மெய்யுறவே வணங்கினர் என்க. மெய்யுற - உடம்பு கீழே படிய எனவும், "மெய்த்தன்மை யறிந்து துதித்த"தனால் அந்த மெய்மையாகிய திருவருள் பொருந்தும்படி எனவும் உரைக்க நின்றது. 75

1341. "பரசுங் கருணைப் பெரியோ னருளப்,
பறிபுன் றலையோர் நெறிபாழ் படவந்
தரசிங் கருள்பெற் றுலகுய்ந் த"தெனு
வடியார் புடைசூ ழதிகைப் பதிதான்
முரசம் படகந் துடிதண் ணுமையாழ்
முழவங் கிளைதுந் துமிகண் டையுடன்
நிரைசங் கொலியெங் குமுழங் குதலா
னெடுமா கடலேன் னநிறைந் துளதே. ௭௬

(இ - ள்) வெளிப்படை. "துதிக்கத் தக்க பேரருளையுடைய பெரியோராகிய சிவபெருமான் இவ்வாறு அருள்புரிய, மயிர் பறித்த புன்மை பொருந்திய தலையினையுடைய சமணர்களது சமயநெறி பாழ்பட்டொழியத் திருநாவுக்கரசர் இங்கு வந்து அருள்பெற்ற அதனால் உலகம் உய்ந்தது" என்று, சிவனடியார்கள் எப்பக்கமும், சூழ்ந்த திருவதிகை மாநகரமானது, முரசமும், தம்பட்டமும், உடுக்கையும், மத்தளமும், யாழும், முழவமும், கிளையும், துந்துபியும், மணியும் என்றிவற்றின் முழக்குடனே, வரிசைப்பட ஒலிக்கும் சங்கங்களும் எங்கும் சத்தித்தலால் நீண்ட பெரிய கடல்போல நிறைந்துளதே.

(வி - ரை) பரசும் - மூவரும், தேவரும், மற்று யாவரும் துதிக்கும். பெரியோன் - சிவபெருமான். புறச்சமய நூலாகிய சிலப்பதிகாரமும் "பிறவா யாக்கைப்

ஈறின்றி எழும் - முடிவில்லாது எழுவதாவது ஒரு திருப்பதிகத்தினுள் ஒரு பாசுரம் முடிந்தவுடனே அடுத்த பாடல் தொடர்ந்தும், ஒரு பதிகம் முடிந்த உடனே மற்றொரு பதிகம் தொடர்ந்தும் முன் நினைவிலிருந்து சொல்வதுபோல வெளிவருதல்.* இவ்வாறு எப்போதும் பதிகங்கள் பாடியருளிக்கொண்டே யிருந்தனராதலின் நாயனார் 49000 திருப்பதிகங்கள் பாடினர் என்பது வரலாறு. "ஏழெழுநூ றிரும்பனுவ லீன் றவன் றிருநாவினுக் கரசன்" (நம்பிகள் - திருநின்றியூர்), "பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி" (நம்பியாண்டார் நம்பி - திருவேகாதசமாலை) என்பன காண்க. பனுவல் - பாட்டு என்று கொண்டு, இதற்கு 4900 பதிகங்கள் என்பாருமுண்டு.

கையில் திகழும் உழவாரமுடன் - நாயனாரது திருவடையாளப்படை உழவார மென்பர். "ஏரின் சிவபோக மிங்கிவர்க்கே யென்னவுழ, வாரங்கொள் செங்கையர் தாள் வாரம்வைப்ப தெந்நாளோ" என்று தாயுமானாரும், "உழவாரத்தின் படையருத் திருக்கரமும்" என்று எமது மாதவச் சிவஞான முனிவரரும் துதித்தனர்.

கைத்தொண்டு - என்றதனால் மெய்யினாற் செய்யும் திருத் தொண்டும், கலந்து - என்றதனால் வாக்கினாற் செய்யும் திருத் தொண்டும், கசிந்தனர் என்றதனால் மனத் தொண்டும் குறிக்கப்பட்டன. கலந்து என்பது வாக்கு முதலிய புறக்கரணங் களின் செயலையும், கசிந்து என்பது மனம் முதலிய உட்கரணங்களின் செயலையும் குறித்தன.

தியான உணர்வு - திருவாசக வாக்கு - உழவாரக்கை - என்பவற்றால் தொண்டு செய்யுங் கருவியும் கரணங்களும் குறிக்கப்பட்டன. தொண்டு - கலந்து - கசிந்தனர் - என்பன அவற்றாற் (எதிர் நிரனிரையாக) செய்த தொண்டினையும், அனுபவப்பயனை யும் குறித்தன. இந்நிலையினையே "அருந்தவம்" என்று 1134-ல் விரித்தனர்.

கைக்கொண்டு—என்பதும், கைகொண்டு கசிந்து கலந்தனரே—என்பதும் பாடங்கள். 77

1343. மெய்ம்மைப் பணிசெய் தவிருப் பதனால்
விண்ணோர் தனிநா யகனார் கழலிற்
றம்மிச் சைநிரம் பவரம் பெறுமத்
தன்மைப் பதிமே வியதா பதியார்
"பொய்ம்மைச் சமயப் பிணிவிட் டவர்முன்
போதும் பிணிவிட் டருளிப் பொருளா
வெம்மைப் பணிகொள் கருணைத் திறமிங்
கியார்பெற் றனர?"ரென் னவிறைஞ் சினரே. எஅ

(இ - ள்) விண்ணோர் தனி நாயகனார் கழலில் - தேவர்க்கெல்லாம் தனி முதல்வரா கிய வீரட்டானேசுவரருடைய திருப்பாதங்களில்; மெய்ம்மை...விருப்பதனால் - (மனம் வைத்து) விரும்பி மெய்யினாலும் வாக்காலும் திருப்பணி செய்து விண்ணப் பித்ததனாலே; தம் இச்சை...தாபதியார் - தமது இச்சை நிரம்பும்படி வரம்பெற்ற, அந்தத் தெய்வத்தன்மை வாய்ந்த திருவதிகைத் தலத்தின்மேவிய தாபதியாராகிய திலகவதியார்; பொய்ம்மை...விட்டருளி - பொய்ம்மையாகிய சமணசமயத் தொடக் கினை விட்டு, அவர், (தம்பியார்) இறைவன் திருமுன்பு வந்து புகுவதற்கு ஏதுவாகிய சூலைநோயினை ஏவி விடுத்தருளி; பொருளா......பெற்றனர் - மிகச் சிறிய எம்மையும்

* திருவாசகம் - மணிவாசகனார் பாடியருளிய திருவாசகத்தினை வாகீசர் பயின்றனர் என்று கூறுவாருமுண்டு.

ஒரு பொருளாக வைத்து ஆட்கொண்ட பெருங் கருணைத்திறத்தினைப்போல் இங்கு வேறு யாவர் பெற்றனர்?; என்ன இறைஞ்சினர் - என்று எண்ணித் துதித்து வணங்கினர்.

(வி - ரை) மெய்ம்மைப் பணி செய்த விருப்பு அதனால் - விருப்பு - மனம்; மெய்ம்மை - காயம்; பணிசெய்த - வாக்கு முதலிய புறக்கரணப் பணிகள் என முக்கரணங்களும் ஒன்றித்து நிகழும்படி திலகவதியார் செய்த தவம் குறித்தது. இவை 1308 - 1311 பாட்டுக்களில் உரைக்கப்பட்டன. விருப்பு மெய்ம்மைப் பணி செய்த அதனால் என்க. அதனால் - வரம் பெறும் - தாபதியார் என்று கூட்டுக.

கழலில் - இடைநிலைத்தீபகமாய் நின்று கழலின்கண்ணே பணி செய்த என்றும், கழலில் வரம்பெறும் என்றும் முன்னும் பின்னும் சென்றியைந்து பொருளுரைக்க நின்றது.

தம் இச்சை நிரம்ப வரம் பெறும் - தம் இச்சையாவது, தமக்காகக் கொண்டதும் உலகுக்காகக் கொண்டதும் என இரண்டாம். தமக்காகக் கொண்ட இச்சை "பேராத பாசப் பிணிப்பொழியப் பிஞ்ஞகன்பால், ஆராத அன்புபெற ஆதரித்த" (1308) என்றதனாலும், உலகுக்காக மேற்கொண்ட இச்சை, "அடியேன்பின் வந்த வனை - எடுத்தாள வேண்டும்" (1311) என்றதனாலும் உணர்த்தப்பட்டன. தம்பியாரைத் தமது உடற்சார்புபற்றியே எண்ணியவரன்று; சமயச்சார்புபற்றியும் எண்ணி இறைவரிடத்து வேண்டினார் என்பது முன் உரைக்கப்பட்டது. 1311 பார்க்க. அதனால் அது சமயநலம் விளங்கும் பயன் தந்ததாகலின் உலகின்பொருட்டுக் கொண்ட இச்சையாமென்க. இந்த இரண்டும் நிரம்பும் வகையில் அம்மையார் வரம் பெற்றனர்.

வரம் பெறும் - தாபதியார் - என்றதனால் தமது பாசப்பிணிப் பொழிய இறைவரை வழிபட்டுச் சிவநெறியில் நின்று தவம்செய்து சிவத்தை மேவினார் என்று அம்மையாரது சரிதத்தை நிறைவாக்கிக் காட்டிய குறிப்பும் காண்க. நாயனாரது சரிதவிரிவுக்கு வேண்டிய அளவே விரித்தும், பின்னர்க் குறிப்பாலுணர்த்தியும் செல்லும் முறையினையும் ஓர்க. அம்மையாரது சரிதத்தை முற்றும் நிறைவாக்கிக் கூறினாரிலர் ஆசிரியர் என்பாருமுளர். அவர்கள் இதனைக் கருதித் தெளிவாராக.

இச்சை நிரம்ப - தம்பியார் திறத்துத் தாம் கேட்டவரம் கேட்ட அளவுக்கு மேலாகப் பெருமான் அருள என்பது குறிப்பு. "யார் பெற்றனர்?" என்ற கருத்துமிது. வரம்பெற்ற வகையினை அம்மையார் தமது வாக்கினாலே "பொய்ம்மைச்சமய... யார் பெற்றனர்?" என்ன எடுத்துக் கூறி ஏத்துதல் காண்க.

பிணிவிட்டவர்.........பிணிவிட்டு - சொற்பின் வருநிலை. சமயப்பிணி விட்டவர் வாகீசர். பிணி - பிணிப்பு - தொடக்கு. "போராத பாசப் பிணிப்பு ஒழிய" (1307) பார்க்க. பிணிவிடுதல் - பிணிப்பினின்றும் விடுபடுதல். தப்புதல். போதும் பிணிவிட்டு அருளி - பிணி - நோய். சூலை. போதுகின்ற சூலையினை விடுத்தருளிச் செய்து. "சூலை மடுத்தாள்வம்" (1313) என்றது காண்க. போதுளா - ஒரு பொருளாக - பொருட்டாக. கடைக்குறை. போதும் - அவ்வளவில் நீங்குகின்ற.

எம்மைப் பணிகொள் - எம்மை - தம்மையும் தம்பியாரையும் உளப்படுத்திய தன்மைப் பன்மை. பிணி விட்டருளியவதனால் தாம் வேண்டியவாறு வரங்கொடுத்து, "என்னை ஆண்டருளு நீராகில்" என்றபடி தம்மையும் அடிமை கொண்டு, அச்செயலாற்றானே தம்பியாரையும் பணிகொண்டனர் என்பது கருத்து.

இங்கு யார் பெற்றனர் என்ன இறைஞ்சினர்-இவ்வாறு அருள் பெற்றவர், தாம் தாம் பெற்ற அருளின் பெருஞ் சிறப்பை எண்ணிப் பாராட்டி அருளிற்றினைத்தலும்

பெரியோர் மரபு. "இறுமாந் திருப்பன் கொலோ" என்ற நாயனாரது தேவாரமும், "யாவரும் பெற்றறியா வின்பத்துள் வைத்தாய்க்கு", "அம்மையெனக் கருளியவா ருர்பெறுவா ரச்சோவே" என்பனவாதி திருவாசகங்களும், "சேவடிக்கீழ், ஆரும் பெறாத அறிவு பெற்றேன் பெற்றதார் பெறுவாருலகில்" என்ற திருப்பல் லாண்டும், பிறவும் பார்க்க. ஏகாரம் அசை. 78

வேறு

1344. இன்ன தன்மையி லிவர்சிவ நெறியினை யெய்தி
மன்னு பேரருள் பெற்றிடர் நீங்கின வண்ணம்
பன்னு தொன்மையிற் பாடலி புத்திர நகரிற்
புன்மை யேபுரி யமணர்தாங் கேட்டது பொறாராய், எகூ

1345. "தரும சேனர்க்கு வந்தவத் தடுப்பருஞ் சூலை
யொருவ ராலுமிங் கொழிந்திடா மையினவ ருயப்போய்ப்
பெருகு சைவராய்ப் பெயர்ந்துதம் பிணியொழிந் துய்ந்தார்;
மருவு நம்பெருஞ் சமயம்வீழ்ந் தது"வென மருள்வார், அ0

1346. "மலையும் பல்சம யங்களும் வென்றுமற் றவரால்
நிலையும் பெற்றவிந் நெறியினி யழிந்த"தென் றழுங்கிக்
'கொலையும் பொய்ம்மையு மில'மென்று கொடுந்தொழில் புரிவோர்
தலையும் பீலியுந் தாழவந் தொருசிறை சார்ந்தார். அக

1344. (இ - ள்) வெளிப்படை. இத்தன்மையில் இவர் சிவநெறியினை அடைந்து, நிலைபெற்ற பேரருளைப் பெற்றுத், துன்பத்தினின்றும் நீங்கிய படியினை, எடுத்துப் பேசப்படும் பழைமையிற் பொருந்திய பாடலிபுத்திரம் என்னும் நகரத்தில் இருந்த, புன்மைகளையே புரிகின்ற சமணர்கள் கேட்டு அதனைப் பொறாதவர்களாகி, எகூ

1345. (இ - ள்) வெளிப்படை. "தருமசேனருக்கு வந்த அந்தத் தடுத்தற்கரிய சூலை இங்கு ஒருவராலும் நீங்காமையால், உய்யும்பொருட்டு அவர் சென்று பெருகு சைவராகிப் பெயர்ந்து தம்முடைய பிணிநீங்கி உய்தியடைந்தனர்; பொருந்திய நமது பெருஞ் சமயம் வீழ்ந்துபட்டது" என்று மருள்வாராகி, அ0

1346. (இ - ள்) வெளிப்படை. மாறுபடும் பல சமயங்களையும் வென்று, மற்று, அவரால் நிலைக்கவும் பெற்ற இந்தச் சமணநெறி இனி அழிவுபட்டதாகும்" என்று வருந்தி, 'நாம் கொலை புரிவதும் பொய் புரிவதும் இல்லோம்' என்று சொல்லிக்கொண்டு கொடுமையினையே புரிவோர்களாகித், தமது மயிர்பறித்த தலைகளும் கைக்கொண்ட மயிற்பீலியும் தாழ, வந்து ஒரு சிறை சார்ந்தனர். அக

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1344. (வி - ரை) அமணர் - வண்ணம் - கேட்டு - அது பொறாராய் - என மருள்வா(ராய்) - அழுங்கிக் - கொடுமையே புரிவோர் - வந்து - சார்ந்தார் என்று இந்த மூன்று பாட்டுக்களையும் கூட்டி முடித்துக்கொள்க.

**இன்ன தன்மையில்** - முன்னர் 1320 முதல் 1342 வரை விரித்தபடி என்க.

**சிவநெறியினை......வண்ணம்** - சிவநெறியினை எய்தி - அவநெறியாகிய புறச் சமயத்தினை விட்டுச் சிவநெறியினை அடைந்து. இங்கு, நெறி என்பது சாதனம் குறித்தது. **அருள்பெற்றதும் - இடர் நீங்கியதும்** அதனாற்பெற்ற பயன்.

சிவநேறி - இங்கு, உலகில் வழங்கும் எல்லாச் சமயநெறிகளும் அருள்நெறிகளே என்றும், பெயரால் மட்டும் வேற்றுமைப்படுவன என்றும், முடிபில் எல்லாம் ஒன்றே என்றும், நாயனார் முதலில் தமது பெற்றோர் ஒழுகிய உலக வழக்குச் சைவநெறியில் நின்று அதனில் அருள் விளங்காமையால் சமணம் புகுந்தனர் என்றும், அப்போது அவர்க்குச் சமயங்கள் பல என்ற உணர்வே மிக்கிருந்ததென்றும், பின்னர் அருள் கூட எல்லாச் சமயமும் ஒன்றே எனவும், இறைவன் ஒருவனே எனவும், முன்னர்த் தமது பெற்றோர் வழிநின்று சிவன் என்ற பெயரால் வழிபட்டதும் பின்னர்ச் சமணத்தில் நின்று அருகன் என்ற பெயரால் வழிபட்டதும் ஒரு பரம்பொருளையே சாரும் எனவும் உணர்ந்தனர் என்றும், சமயங்களுள் மெய்ச்சமயம் பொய்ச்சமயம் என்பதும் அது பற்றிச் சமயம் மாறுதலும் அறியாமை என்றுணர்ந்தனர் என்றும், அதுபற்றியே நாயனாரது, "சலம்பூ வொடுதூப மறந்தறியேன்", "ஆறொன் றியசம யங்களி னவ்வவர்க் கப்பொருள்கள் வேறொன் றிலாதன", "ஆறுசமயத் தவரவரைத் தேற்றுந் தகையன" என்பனவாதி தேவாரங்கள் எழுந்தன என்றும், மற்றும் பலவாறும் விசேட ஆராய்ச்சியுரை காண்பாருமுண்டு.

இது சைவ சமயத்தின் உண்மைச் சமரச நிலையினை மயங்கிக்கொண்ட பொய்த் தோற்றங்களாகும். நாயனாரின் பெற்றோர் கொண்டொழுகிய சமயம் அருள்விளக்க மில்லாது அறிவு விளக்க மட்டும் பெற்ற உலக வழக்குச் சைவம் என்றொதுக்கப்படுவ தன்று: அந்தச் சைவநெறிதான் திலகவதியம்மையார் கைக்கொண்டு ஒழுகி அருள் பெற்ற நெறி; அந்நெறியே பின்னர் நாயனார் அடைந்து அருள்பெற்ற நெறி. அதுவே நமது உண்மை ஞானநூல்களால் உரைக்கப்பட்டு இற்றைக்கும் நாம் கடைப்பிடித் தொழுகி அருள்பெற வழிகாட்டும் சைவ சித்தாந்தநெறி. சமயங்களின் ஏற்றத் தாழ்வும், சமண சமயத்தின் பொய்ம்மையும் கண்டதனாலன்றோ நாயனார் பின்னர் அச் சமயத்தினின்றும் மாறிச் சிவநெறியினை அடைந்து அதிலே நின்றொழுகினார்? அவ்வாறொழுகியது மட்டுமேயன்றித், "துன்னாகத் தேனாகித் துற்சனவர் சொற் கேட்டு" (காந்தாரம் - ஆரூர்-5), "கதியொன்று மறியாதே" (ஷை 7), அமணர்கட மறவுரைகேட் டலமந்தேன்" (பழந்தக்கராகம் - ஐயாறு 1), "குண்டனாய்ச் சமண ரோடே கூடிநான் கொண்டமாலைத், துண்டனே" (திருநேரிசை - ஐயாறு 1), "மறப்பித்த வாவல்லை நோய்வினை காட்டி மறப்பித்தநோய், துறப்பித்த வாதுக்க நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி" (திருவிருத்தம் - ஐயாறு - 8), "திருந்தா வமணர்தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி, தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன்" (ஷை பாதிரிப்புலியூர் - 10), "அமணர்சொற் றிடமென்று துரிசுபட்டேன்" (ஷை ஆரூர் - 2), "பண்ணிய சாத்திரப் பேய்கள் பறிதலைக் குண்டரைவிட்டு" (ஷை - ஷை - 7), "சமணரைவிட் டுய்யு நெறிகண்டிங் குய்யப் போந்தேன்" (ஷை - ஷை - 9), "அடி யிணையே யணைந்து வாழா, திருபிறப்பும் வெறுவியரா யிருந்தார் சொற்கேட், டேழையே னான்பண் டிகழ்ந்த வாறே" (ஏழைத்திருத்தாண்டகம் - திருவதிகை - 5) என்பனவாதி தேவாரங்களால் பொய்ச்சமய நிலையும், மெய்ச்சமய நிலையும், மெய்யினை அடைந்து தாம் பெற்ற பேற்றினையும் அறிவித்தருளி உண்மையினைப் புகட்டுகின்றார். சமயங்கள் பலவும் உயிர்களின் பக்குவ வேறுபாடு கருதி வெவ்வேறாக வகுக்கப் பட்டன. அவை ஒன்றாகா. உயிர்கள் யாவும் பக்குவபேதமின்றி ஒரு தன்மைப்பட்டன வாயின் அன்றோ அவர்க்காக வகுக்கப்பட்ட சமயங்களும் ஒன்றாகும்? "சைவ முத லாமளவில் சமயம் வகுத்து" என்றனர் தாயுமானார். "அவ்வவர்க்கு அப் பொருள்கள் வேறொன் றிலாதன", "அவரவரைத் தேற்றுந் தகையன" என்றற் றொடக்கத்த தேவாரங்கள் உயிர்களின் பக்குவபேதம் நோக்கி அவ்வவர்க்கும் தக்க

வாறு வெவ்வேறாக நின்று தாம் ஒருவரே அங்கங்கும் உணர்த்துவார் என்ற பொருள் தருவனவன்றி எல்லாச் சமயங்களின் தேற்றமும் ஒன்றே என்ற பொருள் தருவன வல்ல. இவைபற்றி முன்னர் "நம்பரரு ளாமையினால்" (1302) என்றவிடத்தும், 1335-ல் "கூற்றா யினவாறு" என்ற தேவாரக் குறிப்புக்களிலும், பிறாண்டும் உரைத்தவை பார்க்க. "எண்ணரிய சமணர்களு மிழிதொழில்சேர் சாக்கியரு மென்றுந் தன்னை, நண்ணரிய வகைமயக்கித் தன்னடியார்க் கருள்புரியு நாதன்" முதலிய திருவாக்குக்களும் காண்க.

பன்னு தொன்மையிற் பாடலிபுத்திர நகர் - கௌதமபுத்தன் காலத்தில் அமைக் கப்பட்டு அசோகன் முதலிய பௌத்த மன்னர்களின் தலைநகராகியது வடநாட்டுப் பாடலிபுத்திரமென்னும் பௌத்தரது பெருநகரம். அதன் நினைவின்படி இங்குத் தாபிக் கப்பட்டதனால் பன்னுதொன்மை என்றார். பன்னுதொன்மையாவது தொன்மை யுடைய அதுபோல இதுவுமாம் என்று பேசப்படுதல். தொன்மை பன்னு - நகர் என்க.

புன்மையே புரி - புன்மை - இழிசெயல். புரிதல் - செய்தல். இடைவிடாது சொல்லுதல் என்றலுமாம். புன்மை சொல்லுதல் பின்சரித நிகழ்ச்சிகளாலறிக. 1348, 1352, 1354, 1360, 1367, 1368, 1372, 1373, 1386, 1387 பார்க்க. ஏகாரம் தேற்றம். பிரிநிலையுமாம்.

பொறாராய் - அகிம்சை, பொறுமை முதலிய அறங்களை உரைத்தாரேனும், அப் பொறுமையைத் தாம் கைக்கொள்ளாராகி என்பதாம். தமது சமயத்தில் எவ்வகை யாலும் நீங்காத இடரினைத் தருமசேனர் சைவத்திற்சென்று தீரப்பெற்றனர் என அறிந்தபோது, பிற உயிர்களின் சேமநலங்கண்டு மகிழவேண்டிய சமயக் கோட்பாடு உடைய அவர், அதற்குமாறாகப் பொறாமை கொண்டனர் என்று குறிக்க அமணர் தாம் கேட்டு அது பொறாராகி என்றார். "முந்தைய வுரையிற் கொண்ட பொறை முத லவையும் விட்டுச், சிந்தையிற் செற்ற முன்னாந் தீக்குணந் தலைநின் றார்கள்" என்ற திருஞான - புரா - 634 - பார்க்க. "குணம் பிறிதாதல் கெடுவது காட்டுங் குறி" என அவர்கள் கேடுபட்டொழியும் காலமாதலால் அவ்வாறு மாறுபட்டுப் பொறாமை கொண்டனர் எனவும், "கொல்லாமை" எனும் போர்வையினுள் மறைந்து நின்று அவமே புரிவோர் எனவும் கொள்ள நின்றது. 1346 பார்க்க. 79

1345. (வி - ரை) தருமசேனர் - சமணர்கள் தங்களுடைய கூட்டத்தில் அவர்க்கு வழங்கிய பெயரால் நினைக்கின்ற இயல்பில் உரைத்தது காண்க.

அத் தடுப்பரும் சூலை - அகரம் - முன்னறிசுட்டு. தடுப்பரும் - 1319 பார்க்க. "போவார்க ளிதுநம்மாற் போக்கரிதா மெனப்புகன்று" என்று கைவிட்டாராதலால் இங்கு ஒருவராலும் ஒழிந்திடாமையின் என்றனர்.

உய அவர் போய் என்க. தாம் உய்வதன்றி அரசனும் உலகமும் உய்ய என்ற குறிப்பும் காண்க.

போய்ச் சைவராய்ப் பெயர்ந்து - போதல் - சமணத்தைவிட்ட நிலையினையும், பெயர்தல் - சைவராகமாறித் தொடர்ந்த நிலையினையும் உணர்த்தின.

பிணிஒழிந்து - பிணி - நோய். பிணிப்பு - தொடக்கு என்றலுமாம். "பேராத பாசப் பிணிப்பொழிய" (1307) என்றது காண்க.

பெருகுசைவர் - என்றும் தாழ்வுறாது ஓங்கும். மேல்வருஞ் சரிதக்குறிப்பு. பெயர்தல் - இங்கு மீண்டும் முன்போலவே சைவராயின தன்மை குறித்ததுடன் பெருகு என்றதனால் முன்போ லன்றி அதனிற் பெருகி மிக்க தன்மையுடன் சமய ஆசாரியத் தன்மை வாய்ந்தவராய் என்றது குறிப்பு.

மருவு...வீழ்ந்தது. மருவு - அவர் வந்து சேர்ந்த. மருவு - பெரும் என்றதனுல் அவரால் ஆக்கம் படைத்திருந்த என்பது குறிப்பு. 1346 பார்க்க. வீழ்ந்தது - தமது பிற்சரிதக் குறிப்புப்பெற அவர்களது வாக்கினின்றுவரும் அவச்சொல். விரைவு பற்றி இறந்தகாலத்தாற் கூறினூர்கள். "எங்களை வாதினில் வெல்ல" (திருஞான - புரா - 685) முதலியவை பார்க்க. 80

1346. (வி - ரை) மலையும் - மாறுபடும் - தம் சமயத்தோடு முரண்பட்டு வாதிக்கும். பல் சமயம் - புத்தசமயம் முதலியன. வென்று - 1305 பார்க்க.

வென்று - நிலையும் பெற்ற - வெற்றி பெற்றதுடன் அந்த வெற்றி மாருது நிலைக்கவும் பெற்ற.

இனி அழிந்தது - கால வழுவமைதி. உறுதிபற்றி எதிர்காலத்தை இறந்த காலத்தாற் கூறினூர், "வீழ்ந்தது" என முன்பாட்டிற் கூறியதுபோல. வெற்றி பெற்றதுடன் நிலையும் பெற்ற நம் சமயம் இனி வீழ்ச்சி பெறுவதுடன் அழிவும்பெறும்; இது உறுதி என்றனர். இதுவும் பிற்சரிதக் குறிப்புப்படவரும் அவச்சொல். அழிவுறுவதனை - 1411-1412-ல் உரைப்பார்.

அழுங்ுதல் - மனம் வருந்தி அழிதல்.

கொலையும்...புரிவோர் - இலம்-இது அமணர்கள் சொல்வது; அறவுரைகளாகிய, கொலை - பொய்ம்மை - முதலிய செய்தலில்லாமை. இலம் - நாம் அவற்றைச் செய்யோம், அவை எம்மிடத்தில் இல்லை, என்பது சொல்லின் அளவு. என்று - என்று வெளியில் சாற்றி. வாய்ப்பறையறைந்து.

கொடுமையே புரிவோர் - கொடுமைகளாகிய கொலைச் செயலையும் பொய்மைச் சொல்லையுமே புரிவோர். "கொல்லாமை மறைந்துறையும்...(1302), "புன்மையே புரி" (1344) என்ற விடங்களில் உரைத்தவை பார்க்க.

ஏகாரம் - தேற்றம். பிரிநிலையுமாம். "புன்மையே புரி" என்றது போல.

தலையும் பீலியும் தாழ வந்து - மயிர் பறித்த தலையும் மயிற்பீலியும் சமணர்க்குரிய சிறப்படையாளங்களாதலின் அவை தாழ என்ருர். தாழ - தொக்கு விளங்க என்ற பொருளில் வந்தது. தாழ்வடைய என்ற குறிப்பும் காண்க. தலைதாழ்தல் - அவமானமடைதற்குறி. பீலி தாழ்தல் - பீலியை அடையாளமாகவுடைய சமயம் அழிவுறுதல்.

ஒரு சிறை - சிறை - பக்கம். சிறைப்பட்டார் போல என்றும், சிறைப்படுவோர் போல என்றும் கொள்ளநின்ற குறிப்பும் காண்க.

இலவென்று—என்பதும் பாடம். 81

1347. இவ்வ கைப்பல வமணர்க ளுயருட னீண்டி
"மெய்வ கைத்திற மறிந்திடின் வேந்தனும் வெகுண்டு
சைவ னுகிநம் விருத்தியுந் தவிர்க்குமற் றினிநாஞ்
செய்வ தென் ?"னென வஞ்சனை தேரிந்துசித் திரிப்பார். அஉ

1348. "தவ்வை சைவத்து நிற்றலிற் றருமசே னருந்தாம்
பொய்வ குத்ததோர் சூலைதீர்ந் திலதெனப் போயிங்
கெவ்வ மாகவங் கெய்திநஞ் சமயலங் கனமுந்
தேய்வ நிந்தையுஞ் செய்தன" ரெனச்சொலத் தெளிந்தார். அங

1347. (இ - ள்) வெளிப்படை. இவ்வகையில் பல சமணர்களும் துன்பத்தோடு கூடி "உண்மைத் திறத்தினை வேந்தன் தெரிந்தால் வெகுண்டு, சைவனுகி, நமது

தொழிலையும் போக்குவன்; இனி, வேறு நாம் என்ன செய்வோம்?" என்று வஞ்சனை தேர்ந்து புனைவார்களாகி, ௮உ

1348. (இ - ள்) வெளிப்படை. "தமக்கையார் சைவத்தில் இருத்தலினாலே, தருமசேனரும் தாம் பொய்யாக உண்டாக்கிக் கொண்டதொரு சூலை நோய் இங்குத் தீர்ந்திலது என்று இங்குக் கெடுதி யுண்டாக அங்குச் சென்று அதனால் நமது சமயலங் கனமும் நம் தெய்வ நிந்தையும் செய்தார்" என்று சொல்வோ மென்று தெளிந்து கொண்டார்கள். ௮௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

1347. (வி - ரை) இவ்வகை - முன் இரண்டு பாட்டுக்களிலும் கூறியபடி.

அமணர்கள் பலரும் - என்க. அமணர்கள் - சமணகுருமார். "அடிகண்மார் எல்லாரும்" (1351) என்பது காண்க. முற்றும்மை தொக்கது.

துயருடன் ஈண்டி - இச்செய்தியினைக் கேட்டவுடன் சமணகுருமார் ஒவ்வொருவரும் தாம் தாம் துன்பமுற்றனர் என்பதும், அத்தகைய துன்பத்துடனே வந்துகூடினர் என்பதும் கொள்ளப்படும்.

மெய்வகைத் திறம் - நிகழ்ந்த செய்தியினையும், அதனால் உணரப்படும் உள்ளுறையினையும். திறம் - உள்ளுறை. உள்ளுறையாவது சமணம் பொய் யென்பதும் சைவம் மெய் என்பதுமாகிய இரண்டுமாம்.

வேதுண்டு - நமது சமயத்துக்கு இல்லாத திறத்தை உள்ளதென்று காட்டிப் பொய்ம்மைசெய்து இதுவரைஏமாற்றி மயக்கினதன்பொருட்டு வெகுள்வான் என்பது. மக்களைப் பொய்சொல்லி ஏமாற்றுதல் குற்றமென்பது அரசநீதி யாதலின் அரசன் அதுபற்றி வெகுள்வான் என்றஞ்சினர். "பொய்ம்மையான் மெய்ம்மையாக்கப் புகுந்தீர் போமின்" (திருஞான - புரா - 792) என்று கூன்பாண்டியர் வெகுண்டது காண்க.

சைவனாகி நம் விருத்தியும் தவிர்ப்பன் - மெய்வகை தெரிந்துகொள்வதனால் இதுவரை தான் மெய் என்று நம்பியிருந்த பொய்ச்சமயத்தை விட்டு, உண்மை என்று கண்ட சைவத்திற் சார்ந்து, சைவனாவது அரசன் செய்யக்கூடிய முதற்செயல் எனவும், அதனை அடுத்து, அவ்வாறு பொய் சொல்லி மயக்கிய தொழிலால் அவனது ஆதரவு பெற்று இதுவரை வாழ்ந்த நமது விருத்தியைத் தவிர்த்தல் அவன் செய்யும் இரண்டாவது செயல் எனவும் துணிந்தனர் என்பது. விருத்தி - சீவனோபாயம். கொடுத்து வந்த பொருள் என்றலுமாம். "உடல் விருத்தி தாரீரேல்" என்ற நம்பிகள் தேவாரம் காண்க.

மற்று இனி நாம் செய்வது என்? என மருள்வார் - அவ்வாறு இரண்டும் நிகழ்ந்தால் நமக்குப் பிழைப்புக்கு வேறுவழி யாது? ஒன்றுமில்லை என்பதுபற்றி மயக்கமடைந்தனர் என்க. அரசன் உண்மை அறிந்து தம்மினின்று மாறிவிட்டால் அந்நாடு முற்றிலும் தாம் இறக்கநேரிடும் என்றுணர்ந்து மருண்டனர். தண்டியடிகள் புராணவரலாறுங் காண்க.

வஞ்சனை தேர்ந்து சித்திரிப்பார் - தேர்தலாவது - வஞ்சிக்கும் வகை பலவற்றுள்ளும் எது தக்கதென்று தேர்தல்; ஆராய்தல். வஞ்சனை - உண்மையை அறிந்து கொள்ள முடியாதவாறு உபாயம் செய்தல். சித்திரித்தல் - இல்லதை உள்ளது போலவும், உள்ளதை இல்லதுபோலவும் காட்டவல்ல சாதனம் பலவற்றுள்ளும் சிறந்தது சித்திரம் என்ப. "ஓவியப்புலவன் சாயல்பெற வெழுதிய, சிற்பவிகற்ப மெல்லா மொன்றித், தவிராது தடவினர் தமக்குச், சுவராய்த் தோன்றும் துணிவு" என்ற பட்டினத்துச் சுவாமிகள் திருவாக்கும் காண்க.

சித்திரித்தல் என்பது இங்குப் பொய்யுரை புனைதல் என்ற பொருளில் வந்தது. குறிப்புருவகம். "சித்திரம் பேசேல்" என்பது காண்க.

சித்திரிப்பார் - சித்திரிப்பாராகி. எதிர்கால முற்றெச்சம். சித்திரிப்பார் - சொலத்தெளிந்தார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 82

1348. (வி - ரை) தவ்வை - தமக்கை - முன்பிறந்தவள். தருமசேனரும் - அமணர் தமது சமயத்து வழங்கிய பெயராற் கூறும் அமைதி காண்க. 1345-ம், 1352-ம் பார்க்க. உம்மை அவருடன் தாமும் என எண்ணும்மை. சிறப்பும்மை என்றலுமாம்.

தாம் பொய்வகுத்ததோர் சூலை - பொய்யாகத் தாமாக வகுத்துக்கொண்டதாகிய ஒரு சூலை; ஓர் - ஒரு காரணத்தின்பொருட்டுப் புனைந்ததொரு என்பது குறிப்பு. ஓர் - நினைத்த - எண்ணிய - என்ற குறிப்பும்பட நின்றது.

இங்குத் தீர்ந்திலது என - இங்கு - நமது சமயத்திற்கொண்ட மணி, மந்திரம், மருந்து என்பவற்றால். என - என்று பாவனை காட்டி. எவ்வம் - கபடம் என்பாருமுண்டு.

இங்கு - அங்கு - சமணர் தமது சமயத்தை இங்கு என அண்மைச் சுட்டினாலும், தமக்கு வேறாகிய சைவத்தை அங்கு எனச் சேய்மைச் சுட்டினாலும் கூறிய இயைபும் குறிப்பும் காண்க. இங்கு - பாடலிபுத்திரத்தையும், அங்கு - திருவதிகையினையும் என இடங்குறித்த சுட்டுக்களாக வைத்த இயைபும் காண்க.

இங்கு எவ்வமாக - இவ்விடம் நமது சமய நிலைகள் கேடுறும்படி என அவர்கள் வாக்கிலேயே வருவதாகிப் பிற்சரிதக் குறிப்பாகிய அவச்சொல்லாவதும் கருதுக. "சமயம் வீழ்ந்தது" (1345), "அழிந்தது" (1346) என்றவையும் காண்க.

சமயலங்கனம்—தெய்வநிந்தை - லங்கனம் - விடுத்தல். சமயலங்கனம் - சமயவரம்பைத் துறத்தல். நம் என்பதனைத் தெய்வநிந்தை என்பதுடனும் கூட்டுக. இவையிரண்டினையும் அரச தண்டனைக்கும் உரிய பெரும்பாதகமாகக் கொள்வதும், இவற்றுக்காகக் கொலைபுரிதல் முதலியனவும் அறச்செயலாகக் கொள்வதும் சமணர்களது சமயமரபு. இந்நாளில் அரசாங்க நீதிமுறையில், விலக்கிய குற்றஞ் செய்தோரை, அவர் செய்த செயலைக்கூறிச், சட்டப்படி அது இன்ன வகையிற் குற்றமாவது என்று எடுத்துக் கூறுவதுபோலத் தருமசேனர் சைவத்திற் போயின செயல் இந்த இரண்டு வகையிற் குற்றமாவன என்று வகுத்துச் சொல்லத் தெளிந்து கொண்டனர்.

தெளிந்தார் - வஞ்சனைகளுள் எது செய்யத்தகுவது என்று தெரிந்து தேர்ந்த அவர் இது செய்வோம் எனத் தெளிந்தனர். தேர்தல் - ஆராய்ச்சி. தெளிதல் - முடிபு. பொய்புரிவோர் தமது பொய்ம்மையைப் பிறர்மேற் சார்த்திப் புனைதல் உலகியல்பிற் பலமாக்களிடத்தும் காணலாம்.

வந்தேய்த்தி—என்பதும் பாடம். 83

1349. சொன்ன வண்ணமே செய்வது துணிந்ததுன் மதியோர்
"முன்ன நாஞ்சென்று முறைப்படு வோ"மென முயன்றே,
இன்ன தன்மையி லிருட்குழாஞ் செல்வது போல
மன்ன னாகிய பல்லவ னகரில்வந் தணைந்தார். ௮௪

(இ - ள்) வெளிப்படை. சொல்லியபடியே செய்வோம் என்று துணிந்த துன்மதியவர்களாகிய அந்தச் சமணர்கள், "நாம் முன்னர்ச்சென்று அரசனிடம் முறை கூறுவோம்" என்று முயற்சித்து, இத்தன்மையில் இருட்கூட்டம் செல்வதுபோலச் சென்று, அரசனாகிய பல்லவனது நகரத்தில் வந்து சேர்ந்தனர்.

(வி - ரை) சொன்ன வண்ணமே செய்வது துணிந்த - சொன்ன - கெடுமதி தமக்குப் புகட்டிய - தெளிவு படுத்திய. துன்மதியோர் என்ற குறிப்புமது. ஏகாரம் தேற்றம். செய்வது துணிந்த - என்றதனால் அவ்வாறு செய்யத் துணிதல் தகுதியற்ற பெருங்கொடுமை என்பதும், மிகக் கொடியவர்களேயன்றிப் பிறர் துணியார் என்பதும் குறிப்பு. துணிதற் கருமையுணர்த்திற்று. மனந்துணிபு பெற்றாலும் அதன்படி சொல்லுதற்கும் செய்வதற்கும் மிக்க முயற்சி வேண்டப்படுமென்பார் முயன்றே எனப் பின்னரும் ஏகாரம் தந்து கூறினார்.

துன்மதியோர் - கெடுமதியா லிதுசெயத் துணிந்தார் என்பது. "துற்சனவர் சொல்லே கேட்டு" என்ற நாயனார் திருவாக்குங் காண்க.

இன்ன...போல - உவமைநயம் கருதுக. உருவம்பற்றி எழுந்த உவமம். "காரிருண்ட குழாம்போலும் உருவுடைய காரமணர்" (1365) என்பது காண்க. "அமணென்னும் வல்லிருள்" (திருஞான - புரா - 652), "இழுது மெய்யிருட் கிருளென வீண்டினர்" (ஷை 678) என்பனவும் கருதுக. பொருள்களின் உண்மைநிலைகாண வொட்டாது மறைத்தலால் வினையும் உருவும்பற்றி விரவிவந்த உவமமென்றலுமாம். "ஒருபொருளுங் காட்டா திருள்" என்ற ஞானசாத்திரமும் காண்க. இருட்குழாம் செல்வது - தற்குறிப்பேற்ற அணி. வஞ்சனையினை உள்ளே கொண்டு வெளியே விளங்கத் திருநீறு முதலிய சிவசாதனம் பூண்ட முத்தநாதனுக்கு இருளும் விளக்கமும் கொண்ட "மைபொதி விளக்கினை" உவமித்ததனையும், இங்கு, வஞ்சனையொன்றே கொண்ட சமணர்க்கு இருள் ஒன்றனை உவமித்ததனையும் உன்னுக.

பல்லவன் நகர் - பாடலிபுத்திரத்தில் மன்னவன் தங்கும் இடம். அந்நகர் பெரிதாக அமைக்கப்பட்டிருந்தமையால், அரசனது அரண்மனை முதலிய அமைப்புக்கள் வகுத்த இடம் வேறு ; சமணர்களின் பாழி பள்ளிகள் உள்ள இடம் வேறு ; குடிகள் முதலியோர் தங்கும் இடம் வேறு - என இருந்தமையால், அந்நகர்ப் புறத்துப் பள்ளிகளில் இருந்த அமண குருமார் அந்நகரில் மன்னவனது உள்நகரில் வந்தணைந்தனர் என்றறிக. "பதியணைந்து சமண்பள்ளி" (1308), "பாடலிபுத் திரத்திலமண் பள்ளியொடு" (1412) என்றவை காண்க. நகர் - அரண்மனை என்பர் நச்சினார்க்கினியர். 84

1350. உடையொ ழிந்தொரு பேச்சிடை யின்றிநின் றுண்போர்
கடைய ணைந்தவன் வாயில்கா வலருக்கு "நாங்கள்
அடைய வந்தமை யரசனுக் கறிவியு" மென்ன,
இடைய றிந்துபுக் கவருந்தம் மிறைவனுக் கிசைப்பார், அரு

வேறு

1351. "அடிகண்மா ரெல்லாரு மாகுலமாய் மிகவழிந்து
கொடிநுடங்கு திருவாயிற் புறத்தணைந்தா" ரெனக்கூற,
வடிநெடுவேன் மன்னவனு மற்றவர்சார் பாதலினாற்
"கடிதணைவா னவர்க்குற்ற தென்கொ"லெனக் கவன்றுரைத்தான்.

1350. (இ - ள்) வெளிப்படை. உடையில்லாதவர்களாயும், உண்ணும்போது ஒன்றும் பேசாது நின்றுண்பவர்களாயும் உள்ள அச் சமணகுருமார், அரசனது அரண்மனைவாயிலை யடைந்து, அவனுடைய வாயில்காவலருக்கு, "நாங்கள் ஒன்று கூடி வந்த செய்தியை அரசனுக்கு அறிவியும்" என்று சொல்ல, அவ் வாயில்காவலர்களும் ஏற்ற சமயம் அறிந்து உட்புக்குத் தம் அரசனுக்குச் சொல்வார்களாகி, அடு

1351. (இ - ள்) வெளிப்படை. "அடிகண்மார்கள் எல்லாரும் ஒருங்கே துன்பப்பட்டு மிக அழிவுட்கொண்டவர்களாய்க் கொடி அசையும் திருவாயிலின் புறத்தே அணைந்துள்ளார்கள்" என்று சொல்ல, வடித்த நீண்ட வேலேந்திய அந்த மன்னவனும் மற்று அவர்களது சார்புடையவன் ஆனபடியால், "இவ்வாறு விரைந்து கூடிவருவதற்கு அவர்க்கு நேர்ந்ததென்கொல்?" என்று கவலையுடன் சொன்னான்.

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

1350. (வி - ரை) உடையொழிதல் - உண்ணும்போது உரையாடாமை - நின்றுண்ணுதல் - இவை முதலியவை சமண அடிகண்மார்களின் சமய ஒழுக்கம். சைவ மரபினுள் விலக்கப்பட்டவற்றை நலமென்று கொண்டொழுகுபவர் என்பது குறிப்பு.

கடை - இங்கு அரசனது அரண்மனைவாயில் குறித்தது. "கடைதூங்கு மணியை" (பொது - திருவிருத்தம்) என்றதும் பிறவும் காண்க. கடைத்தன்மை என்பதும் குறிப்பு.

வாயில்காவலருக்கு - என்ன - என்று கூட்டுக. வாயில்காவலருக்குச் சொல்ல.

அடைய - ஒருங்கே - ஒன்றுகூடி. அவனிடம் புகலடைய என்ற குறிப்புமாம்.

இடையறிந்து - இடை - அறிவிக்க ஏற்ற சமயம், தக்க காலம் பார்த்துச் செய்தி அறிவித்தலே காரியம் நிறைவேற்றுதற் குதவியாகுமாதலால் இடையறிந்து என்றார்.

புக்கு - இசைப்பார் - அரசன் முன்பு புகுதல், செய்தியறிவித்தல் என்ற இரண்டினுக்கும் ஏற்ற சமயம் பார்க்கவேண்டியிருத்தலின் இவை யிரண்டுடனும் கூட்டியுரைக்குமாறு இடையறிந்து என்பதனை முதற்கண் வைத்தார்.

இசைப்பார் - எதிர்கால வினைமுற்றெச்சம். இசைப்பாராகி - என்று கூற என மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

உண்போர் - வாயில் காவலருக்கு - என்ன - அவரும் - புக்கு - இசைப்பார் - எனக் கூற - மன்னவனும் - உரைத்தான் என்று இந்த இரண்டு பாட்டுக்களையும் கூட்டி முடிபு செய்துகொள்க.

இடையறிந்து புக்கு இசைப்பார் - அரசனிடம் அணுக்கராயுள்ள வாயிலாளர் மதியுடையவர்களும், சமணர் சார்புடையாரும் ஆதலின் அடிகண்மார் கருத்தை ஏற்குமாறு அரசனிடம் சொல்ல எண்ணி, ஏற்ற சமயம் பார்த்து அறிவித்தனர் என்க. அவ்வாறல்லாக்கால் பலவகையாலும் காரியக்கேடு வருதல் உலகியலில் கண்கூடு. 85

1351. (வி - ரை) அடிகண்மார்...அணைந்தார் - இது வாயில்காவலர் அரசனுக்கு அறிவிக்கும் வகை. எல்லாரும் - அடிகள், "நாங்கள் அடைய வந்தமை" என்றாராதலின் எல்லாரும் எனக் கூறினர். ஆகுலமாய் மிக அழிந்து - மருள்வார் (1345) எனவும், அழுங்கி (1346) எனவும் கூறியபடி மனக்கவலை கொண்டார்களாதலின் அதனை அவர்களது முகக்குறிப்பாற் கண்ட வாயில்காவலர் இவ்வாறு கூறினர் என்க. அன்றியும் சமணர் தமது வஞ்சனைக்கேற்ப மிக்க ஆகுலக் குறிப்பினைமேற் கொண்டனர் என்பதுமாம்.

கோடி நுடங்கு திருவாயில் - நுடங்குதல் - அசைதல். அரன் கோயிலிலும், அரசனது அரண்மனையிலும் வாயிலில் கொடியசைதல் மரபாம். நுடங்குதல் ஒடுங்குதல் எனக் கொண்டு சமணரது வெற்றியின் ஒடுக்கத்தைக் குறிப்பாலுணர்த்தியவாறுமாம்.

மற்றவர் சார்பாதலினால் - கவன்று எனக்கூட்டுக. மற்ற அவர் - சாரத்தகாத பிறர் என்பது குறிப்பு.

கடிதணைவான் அவர்க்குற்ற தென்கொல் - நீவிர் சொல்கிறபடி அழுங்கி ஒருங்கு அவர் அணைவதற்குற்ற காரணமென்னையோ? என்றான். ஆகுலமாய் மிக

அழுங்கி என்றதனால் அவ்வாறு அழுங்கி வருதற்குக் காரணம் என்னென்று கவலையுடன் கூறினான் என்க.

இவ்வாறு கவன்றுரைத்த அதனால் அரசன் அவர்களைப் புகுதவிடச் சொல்லும் செய்தியை வாயில்காவலர் அறிந்து அவ்வாறு புகுதவிட என்று மேற்பாட்டிற் கூறுவது காண்க.

கடிதுணைவுர்ன் - உற்றது என்கோல் - அணையும்படி நேரிட்ட காரணம் என்னை? வானீற்று வினைஎச்சம்.

கனன்றுரைத்தான்—என்பதும் பாடம். 86

1352. கடைகாவ லுடையார்கள் புகுதவிடக் காவலன்பா
னடையாடுந் தொழிலுடையார் நண்ணித்தா மெண்ணியவா
"றுடையாரா கியதரும சேனர்பிணி யுற்றாராய்ச்
சடையானுக் காளாய்நின் சமயமழித் தா"ரென்றார். அஎ

(இ - ள்) வெளிப்படை. வாயில்காவலர்கள் உள்ளே செல்லும்படி விட, உயிருடன் நடந்து திரியும் தொழிலொன்றனையேயுடைய அச்சமணர்கள் அரசனிடம் சேர்ந்து "நமது தலைவராகிய தருமசேனர் சூலைநோய் கொண்டதாகச் சொல்லிச் சென்று சிவனுக்கு ஆளாகி உனது சமயத்தை நீத்தனர்" என்று தாம் எண்ணிவந்தபடியே சொன்னார்கள்.

(வி - ரை) புகுதவிட - பெரியோர்களிடத்தும், அரச சமூகம் முதலிய இடத்தும் முன்னர் அறிவித்து உத்தரவு பெற்ற பின்பே உட்புகுதல் வேண்டும். அவ்வாறு அறிவித்தற்கும் உள்ளே செல்லவிடுத்தற்கும் உரிய அதிகாரமுடையோர் வாயிலில் காவலிருப்பர். அவர் செல்லவிடாது யாவரும் உட்புகுதல் கூடாது. இது பண்டைநாளிலிருந்து தமிழகத்திருந்த நமது முந்தையோர் வழக்கு. இவ்வழக்கு நவீனரிடம் நாம் அறிந்ததொன்றென்று கருதுவது தவறு. "குன்ற வில்லியார் பெரியதேவரைச் சென்று கொணர்கென வவரெய்தி, வென்றி வானவர்க் கருளிப்பாடென" (வெள்ளானைச் சருக்கம் - 44), "தாங்கள் வருமுறைத் தன்மை யெல்லாம் வாயில்கா வலர்க்குச் சொன்னார்" (திருஞான - புரா - 609), "நகைமுகச் செவ்வி நோக்கி நற்றவமாந்தர் கூவத், தகவுடை மாந்தர் புக்கு" (ஷை 611), "அமைச்சனார் வந்த பான்மை, சிரபுரப் பிள்ளை யார்க்கு விண்ணப்பஞ் செய்வீ ரென்னப், பரிசன மாந்தர் புக்குப் பதமறிந் துணர்த்து கின்றார்" (ஷை - 726), "ஆண்டகை யாரு மீண்ட வழையுமென் றருளிச் செய்ய, மீண்டுபோந் தழைக்கப் புக்கார்" (ஷை - 727) முதலியவை காண்க.

நடையாடுந் தொழிலுடையார் - நடந்து திரியும் தொழில் ஒன்றனையே உடையவர்கள். பிணங்குகளும் மனித உருவுடையவை; அவைகட்கும் அவர்க்கும் நடையாடுதல் ஒன்றுமே வேறுபாடு என்பது. நடைப்பிணங்கள் என்றபடி. "உறுதி பயக்கும் அறம் புரிந்து அதனாற் பயனடைவதே மக்களுயிர்க்கு ஆக்கப்பாடு; அவ்வாறன்றி அறம்போற் காட்டியொழுகி அதன் பயனடையாமையின்" என்பர் ஆறுமுகத் தம்பிரானார். "அறந்துறந்து தமக்குறுதி யறியாத புல்லறிவோர்" (1360) என்றது காண்க. காவலனிடம் நடக்கும் தொழில் என்று கூட்டியுரைப்பாருமுண்டு.

தாம் எண்ணியவாறு - முன்பு 1343-ல் எண்ணித் தெளிந்தபடியே. தேற்றேகாரம் தொக்கது. எண்ணியவாறே - என்றார் என்று கூட்டுக.

உடையார் - தலைவர் - ஆசிரியர். பொதுப்படக் கூறியவதனால் அச்சமணர்க்கேயன்றி, இனி, அரசனுக்கும் உலகில் யாவருக்கும் பரம ஆசாரியராந்தன்மையுடையார் என்னுமுண்மை அவர்கள் வாக்கினின்று அவர்களறியாமே புலப்படுதல் காண்க.

பிணியுற்றாராய் - பொய்ப்பிணி காட்டி யென்றது பிணி உற்றாராகி என்ற இது வும் அறியாமே வந்த உண்மைக்குறிப்பு. 1343-ல் தெளிந்த ஏனையவற்றையும் சொன் ஞர் என உடன்கூட்டிக் கொள்க. கூறியது கூறலாகாமைப் பொருட்டு ஆசிரியர் அவற்றை மீண்டும் ஈண்டுக் கூறிற்றிலர்.

சடையான் - சிவபெருமானுக்குச் சிறப்பாயுரிய பெயர். சடையானுக்காளாய் - என்பது சைவ சமயத்தைச் சார்ந்து என்ற பொருள் தந்தது. "வல்லமணர் தமை நீத்து மழவிடையோன் ருளடைந்தான்" (1411) என அரசன் சைவம் புக்கபோது உரைப்பதும் காண்க.

நின் சமயம் ஒழித்தார் - நின் சமயம் என்றது சமண சமய அடிகளாகிய தம் மினும் அரசனுக்கு உரிமைப்படுத்தி உளப்படுத்தியவாறு. அரசனது ஆணைகொண்டே பின்னர்த் தமது சூழ்ச்சி முடிக்க எண்ணினூர்களாதலின் இவ்வாறு தொடங்கிக் கொண்டனர். "எம்முயிரு நின்முறையும், அஞ்சுவது திடமென்ருர் சூழ்வினையின் றுறைநின்ருர்" (1372), "பரிபவந் தீருமுனக்கு" (1386) எனப் பின்னரும் அவர்கள் கூறுவது காண்க. "நின்னற நெறியை நீயே காத்தருள் செய்தி யாகில்" (திருஞான - புரா - 748) என்று மதுரைச் சமணரும் இவ்வாறே அரசனிடம் கூறுதல் காண்க.

ஒழித்தார் - நீத்தார் என்ற பொருளில் வந்தது. முன்னர், "வீழ்ந்தது" (1345), "இனி, அழிந்தது" (1346) என்றவைபோல இதுவும் சமயத்தை ஒழியச்செய்தார் என்ற பின்னிகழ்ச்சி காட்டும் உண்மைக் குறிப்புப்பட நிற்பது காண்க. 87

1353. விரையலங்கற் பல்லவனு மதுகேட்டு வெகுண்டெழுந்து
"புரையுடைய மனத்தினராய்ப் போவதற்குப் பொய்ப்பிணிகொண்
டுரைசிறந்த சமயத்தை யழித்தொழியப் பெறுவதே?
கரையிறவத் தீ!ரிதனுக் கென்செய்வ?" தெனக்கனன்றான். அஅ

(இ - ள்) வெளிப்படை. மணமுடைய மலர்மாலையையுடைய பல்லவ அரச னும் அதனைக் கேட்டுச் சினங்கொண்டெழுந்து, "குற்றமுடைய மனத்தையுடையவ ராகிப், போகும்பொருட்டுப் பொய்யாகப் பிணிவந்ததென்று மேற்கொண்டு, புகழாற் சிறந்த நமது சமண சமயத்தை அழித்து நீங்கப்பெறுவதுமாமோ?. அளவற்ற தவமுடையவர்களே! இதற்கு என்ன செய்தல் வேண்டும்?" என்று கொதித்துக் கூறினன்.

(வி - ரை) வெகுண்டெழுந்து - கனன்றான் எனக்கூட்டுக. மிக்க கோபம் குறித்தது. கனன்றான் - கோபமொழி கூறினன் என்ற பொருளில் வந்தது.

விரை அலங்கல் - சோழனுக்குரியது. ஆத்திமாலை.

புரை - வஞ்சனை. பிணி வந்ததென்று பொய்யாகக் கற்பித்தார் என்று கொண் டமையால் புரையுடைய மனத்தினராகி என்றார்.

உரை சிறந்த சமயம் - சமணம். அரசன்தான் கொண்ட சமயத்தை உயர்வாகக் கூறியபடி. உரைமாத்திரையானன்றி உண்மைச் சிறப்பில்லாத என்பதும் குறித்தது.

பெறுவதே - பெறுவது தகுமோ? ஏகாரம் வினா.

கரை இல் தவத்தீர் - அரசன் சமண அடிகள்மாரிடம் கொண்ட நன்மதிப்பும், அவர்கள் அதுகொண்டு அவனை ஏமாற்றும் வழியும் காண்க. கரையில் - உண்மை வரம்பில்லாத என்ற குறிப்புக் காண்க. 88

1354. "தலைநெறியா கியசமயந் தன்னையழித் துன்னுடைய
நிலைநின்ற தொல்வரம்பி னெறியழித்த பொறியிலியை

அலைபுரிவா " யெனப்பாவி வாயாலஞ் சாதுரைத்தார்
கொலைபுரியா நிலைகொண்டு பொய்யொழுகு மமண்குண்டர். அகூ

(இ - ள்) வெளிப்படை. மேலாம் நெறியாகிய சமண சமயத்தையும் அழித்து, அதனால், உன்னுடைய நிலைமையின் நின்ற பழைய ஒழுக்கத்தின் நெறியினையும் அழித்த அறிவில்லாத அவரை, வருத்தக் கடவாய்" என்று வாயினால் ஒரு சிறிதும் அச்சமின்றி உரைத்தனர், கொலைசெய்யா நிலையை மேற்கொண்டு அதனின்றும் பொய்த்து ஒழுகும் பாவிகளாம் அமணர்களாகிய கீழ்மக்கள்.

(வி - ரை) சமயந்தன்னை அழித்து - நெறி அழிந்த - சமயத்தையும் அழித்து நெறியினையும் அழித்த. எண்ணும்மைகள் தொக்கன. ஒரு செயலாலே சமயத்தின் பால் அபசாரமும் அரசன்பா லபசாரமும் என்ற இரண்டு குற்றமும் செய்யப்பட்டன என்றபடி. "சமயலங்கனமும் தெய்வநிந்தையும்" (1348) என்றது காண்க.

உன்னுடைய...நெறியழித்த - "நின் சமயம்" 1352 பார்க்க. அரசனுக்குக் கோபமூட்டும்படி அவ்வாறு கூறினார்கள்.

பொறியிலி - பொறி - அறிவு - அரசன் அறிந்தாற்றண்டிப்பன் என்ற அறிவு இல்லாதவர் என்பது குறிப்பு. "பொறியிலாய்" (திருநீலகக்கர் புராணம் 13).

அலை புரிதலாவது - அலைத்தல் - வருத்துதல். இங்குக் கொல்லுதல் என்ற பொருளில் வந்தது. அலை - பிறவினைப்பொருளில் வந்த முதனிலைத் தொழிற் பெயர். பின்னர் அவர்கள் சொல்லும் நான்கு தண்டனைகளும் கொலையினையே குறித்தல் காண்க. அதுபற்றியே கொலைபுரியா நிலைகொண்டு பொய் யொழுகும் என்றார். முன்னர்க் "கொல்லாமை மறைந்தொழுகும்" (302), "கொலையும் பொய்ம்மையு மிலமென்று கொடுந்தொழில் புரிவோர்" (1346) என்றதும் காண்க.

வாயால் அஞ்சாது உரைத்தார் - வாயினாற் சொல்லவுந் தகாது என்பது குறிப்பு. அஞ்சாது - தாம்கூறும் அறவுரைக்கு மாறுவதும் கருதாது என்பதாம்.

பொய் ஒழுகுதலாவது - தாம் சொல்வதற்கு மாறாகத் தாமே ஒழுகுதல். "பொய்துவாழ் வார்மனம் பாழ்படுக்கும்" (செவ்வழி - கடனுகை - 7) என்றது காண்க.

பாவி - அமண் குண்டர் என்க. குற்றமற்றவரைக் குற்றஞ் சொன்னதுடன் கொலைத் தண்டனையும் செய்யச் சொன்னமையால் பாவி என்றார். பாவி வாய் - பாவஞ்சொல்லும் வாய் என்றுரைப்பினுமமையும்.

குண்டர் உரைத்தார் - என்று கூட்டுக. முதலில் நிற்கவேண்டிய குண்டர் என்ற எழுவாய் கடையில் நின்றது. குண்டர் முன்னிற்கலாகார்; கடையே நிற்கத் தக்கார் என்பது போதரக் "கொலை"யிற் றொடங்கும் கடையடியிற் கடையில் வைக்கப் பட்டார். கொலைஞராதலிற் கடையரிற் கடையர் என்பது - இதுபோலவே "பொய் தவ வேடங்கொண்டு புகுந்தனன் முத்தநாதன்" (473), "மாபாவிக் கடையமணர்" (1374) என்றவை காண்க.

அலைபுரிவாய் - அரசனெறியினை அழிப்பவர்க்கு இந்நாட்சட்டத்தினும் கொலைத் தண்டனை விதித்தமையும், சமணர்களுள் சமய அழிவுக்குக் கொலையே பரிகாரமாகக் கொள்ளும் மரபும் ஈண்டுக் கருதுக. கொலை - பொய் - முன்னரும் "கொலையும் பொய்ம்மையும்" (1346) என இரண்டனையும் சேர்த்துரைத்தமை காண்க. இவை யிரண்டும் ஒன்றுபோன்ற மாபாதகங்களாம். இவை இரண்டினையும் விலக்குதலே தரும மென்பது வேதம்.

அலைபுரிவோம்—பரவி—என்பனவும் பாடங்கள்.

1355. அருள்கொண்ட வுணர்வின்றி நெறிகோடி யறிவென்று
மருள்கொண்ட மன்னவனு மந்திரிக ளுடைநோக்கித்
"தெருள்கொண்டோ ரிவர்சொன்ன தீயோனைச் செறுவதற்குப்
பொருள்கொண்டு விடாதென்பாற் கொடுவாரு" மெனப்புகன்றான்.

(இ - ள்) வெளிப்படை. அருளுடைய உணர்ச்சியில்லாமல், அறிவு என்று எண்ணி மயக்கத்தினை மேற்கொண்ட அரசனும் மந்திரிகளைப் பார்த்து "அறிவுடையோர்களாகிய இவர்கள் சொன்ன தீயவனைக் பொருள் பெற்றுக்கொண்டு விட்டு விடாதபடி பிடித்துத் தண்டிப்பதற்காக என்னிடத்துக்குக் கொண்டு வாருங்கள்" என்று சொன்னான்.

(வி - ரை) அருள்கொண்ட உணர்வு இன்றி - முறை செய்யும்போது அரசனுக்கு இன்றியமையாது வேண்டப்படுவது அருள் என்பதனை வற்புறுத்தி முதற்கண் வைத்தது காண்க. அருளினால் நீதி அமைவுபடுத்தப்படுகின்றது (Justice tempered with mercy) என்பர் அரக்கர்குண மிகுந்த நவீனரும்.

நெறி கோடி - தனது நாட்டில் உள்ள எல்லாச் சமயத்தையும் புரத்தல் அரசனது கடனாயிருப்பவும் சமய மாறுதல்பற்றித் தண்டிக்கத் துணிந்தமையால் அரசின் நன்னெறி கோடிற்று என்பதாம்.

அறிவென்று மருள்கொண்ட - மயக்கத்தினையே அறிவு என்று மேற்கொண்ட என்க. இதுவே உலகர் நிலை. இது ஆணவமலத்தின் செயல். மருள் - மயக்கம் - பிறழ உணர்தல் குறித்தது. அறிவும் சீலமும் இல்லாத அமணரை அவையுடையாராகக் கருதி அவர் சொன்ன சொன்ன அவ்வாறே அமைந்து ஒழுகியதே ஈண்டு மருள் எனப்பட்டது. நூல்களில் விதித்தபடி தனது நல்ல அறிவொளியை உயரத் தூண்டி அதன்வழி நில்லாது, தன்னை மயக்கிய பிறர் வசப்பட்டான் என்பார் அறிவென்று என்றார். இது தெருள் கொண்டோர் என்று சமணரை அரசன் கூறுகின்றதனாலும், "தமக்குறுதி யறியாத புல்லறிவோர்" என்று ஆசிரியர் பின் கூறுவதனாலும் இனிது விளங்கும்.

தெருள் கொண்டோர் இவர் - தெளிந்த அறிவுடையோர்களாதலின் இவர் சொன்னபடி செய்தல்வேண்டுமென்பது கருத்து. சொன்ன - சொன்னதனால் அந்த என்பது குறிப்பு. சொன்ன - கூறிய. குறிக்கப்பட்ட.

பொருள் கொண்டு விடாது - அரச காரியஞ் செய்வோர் கைக்கூலி (இலஞ்சம் என்பர்) பெற்றுக்கொண்டு தமது கடமையிற் சோர்வுபடுதல் அந்நாளிலும் அரசனறிந்த வழக்குப்போலும். அவனை அறவோனுக் கருதிப் பொருட்படுத்தி விட்டு விடாது என்றுரைத்தலுமாம் என்பர் ஆறுமுகத் தம்பிரானார். அபராதம் முதலியவற்றோடு விடாமல் என்றுரைப்பினுமாம். அரசாணையின்பாலும் நீதிமுறையின்பாலும் அஞ்சி ஒழுகுதல் மக்கட்கூட்ட நல்வாழ்வுக்கும் இறைவனது முறைக்கும் ஏற்றதென்பது நமது முந்தையோர் கொண்ட கொள்கை முறையிட்ட அந்தணர் பின் தாமே சென்று திருநீலகண்டர் தில்லைவாழந்தணர்கள்பால் முறைப்படுகின்றமையும், ஆளுடைய நம்பிகளும் சுற்றத்தாரும் மணவினையை விட்டுக் கிழவேதியன்பின் திருவெண்ணெய்நல்லூர்ச் சபையோரிடம்தாமாகச்சென்று முறைப்படுகின்ற அமைதியும், பழியஞ்சிய திருவிளையாடலில் காட்டில் நின்ற வேடுவன் அந்தணன் பின் சென்று அரசனிடம் முறைப்படுகின்ற ஒழுங்கும் இங்கு நினைவு கூர்தற்பாலன. அவ்வாறன்றி முறைப்பட்டாரைப் பொருள்கொண்டு விடுதலும், அவரும் வலிந்தும் பொருள் தந்தும் பிறவாறும் அரசாணைக்குத் தப்ப முயலுதலும், தமது குற்றத்தைப்

பொய்செய்து பிறர்பாற் சுமத்தித் தப்ப முயலுதலும் இறைவனது நீதிக்குத் தவறுன செய்திகள். இவையே இந்நாளில் வளர்ச்சிபெற்று வருதல் வருந்தத் தக்கது.

மந்திரிகள் தமை நோக்கி - பெரியோர்களைச் சிறை செய்யப் பொறுப்புவாய்ந்த பெரும் செயலாளரை ஏவுதல் இற்றைநாளிலும் வழங்கக் காண்கிறோம். இந்த மந்திரிகளும் "முரசதிருந் தானையொடு முன்சென்று" காரியஞ் செய்தலும் மேல்வரும் பாட்டிற் கூறப்படுதல் காண்க. 90

1356. அரசனது பணிதலைநின் றமைச்சர்களு மந்நிலையே
முரசதிருந் தானையொடு முன்சென்று முகில்சூழ்ந்து
விரைசெறியுஞ் சோலைசூழ் திருவதிகை தனைமேவிப்
பரசமயப் பற்றறுத்த பான்மையினூர் பாற்சென்றார். ௯௧

(இ - ள்) வெளிப்படை. அரசனுடைய ஏவலை மேற்கொண்டவர்களாய் மந்திரிகளும் அவ்வாறே முழவுகள் ஒலிக்கும் சேனைகளோடும் முற்பட்டுச் சென்று மேகங்களாற் சூழப்பட்டு மணங்கமழும் சோலைகள் சூழ்ந்த திருவதிகையினை யடைந்து புறச்சமயப் பற்றுக்களை அறுத்த பான்மையுடையவராகிய திருநாவுக்கரசரிடம் சென்றார்கள்.

(வி - ரை) தலை நிற்றல் - சிறக்க மேற்கொள்ளுதல். சிரமேற்றாங்குதல் என்பாருமுண்டு. அந்நிலையே - அவ்வாறே - அப்பொழுதே எனவும், அவ்விடத்திலிருந்தபடியே எனவும் காலமும் இடமும் குறித்தது.

முரசதிரும் தானையோடு - முரசதிர்தல் தானைக்கு இயற்கை யடைமொழி. பெரியோரைச் சிறை செய்யுங்கால் தானையொடு செல்லுதல் இயல்பும் அவசியமுமாம். "உம்மோடு மற்று முளராய் நின்ற படையுடையான்" என்ற மறுமாற்றத் திருத்தாண்டகம் (9) காண்க.

பரசமயப் பற்று அறுத்த பான்மையினூர் - பரசமயம் - இங்குச் சமணம் குறித்தது. அறுத்த - என்றதனால் நாயனூர் தாம் அறுத்ததேயன்றி ஏனைய மக்கள்பாலும் அந்தத் தொடக்கு அணுகாமல் அறுவித்த என்ற பொருளும் பெறப்பட்டது. பான்மை - இங்கு ஊழ் - தெய்வம் - என்ற பொருளில் வந்தது. "முன்னமே முனியாகி" (1313), "இறைவழுவும் தொண்டரையா ளத்தொடங்கும் சூலைவேதனை" (1314) என்றமையால் பற்றறுத்த செயல் ஊழின் துணையாலாகியது என்பதாம். பான்மை - தன்மை - தவம் - என்பாருமுண்டு.

இப்பாட்டின் ஈற்றடி முற்றுமோனை.

பரசமயப் பற்றறுத்தார் - என்றமையால் சென்ற அவர்களாற் பற்றப்படாதவர் என்பதும், பான்மையினூர் என்றமையானும் முற்றுமோனையால் முடித்தமையானும், பற்றப்படாராயினும், அவர்தம் பான்மையினுல், சென்ற மந்திரிகளின் செயல் முற்றுவதா மென்பதும் உணர்த்தப்பட்ட குறிப்பும் காண்க. 91

1357. சென்றணைந்த வமைச்சருடன் சேனைவீ ரருஞ்சூழ்ந்து
மின்றயங்கு புரிவேணி வேதியனு ரடியவரை
"யின்றுநமை யரசனழைத் தெமைவிடுத்தான்; போது"மென
நின்றவரை நேர்நோக்கி நிறைதவத்தோ ருரைசெய்வார், ௯௨

1358. 'நாமார்க்குங் குடியல்லோ' மென்றெடுத்து நான்மறையின்
கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைத்

தேமாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண் டகம்பாடி
"யாமாறு நீரழைக்கு மடைவிலமென் றருள்செய்தார். கூகூ

1357. (இ - ள்) வெளிப்படை. போய்ச்சேர்ந்த மந்திரிகளும், சேனைவீரர்களும் மின்போன்ற ஒளி விளங்கும் புரிசடையினையுடைய வேதியராகிய சிவபெருமானது அடியவரைச் சூழ்ந்துகொண்டு, "இன்று அரசன் நும்மைத் தன்பால் வரும்படி கூவி எம்மை ஏவி விடுத்தனன்; போதுமின்" என்று சொல்ல, நின்ற அவர்களை நேர் நோக்கி, நிறை தவத்தோராகிய திருநாவுக்கரசர் சொல்வாராகி, கூஉ

1358. (இ - ள்) வெளிப்படை. "நாமார்க்குங் குடியல்லோம்" என்று தொடங்கி, நான்மறையின் தலைவரும், கங்கை நதியினுடன் குளிர்மதிவாழும் சடையுடையவருமாகிய சிவபெருமானை இனிய செந்தமிழின் மாலையாகிய செழிய திருத்தாண்டகத் திருப்பதிகத்தைப் பாடிப், "பொருந்தும்படி நீவிர் அழைக்கும் தன்மையில் நாம் இல்லோம்" என்று அருளிச் செய்தனர். கூங

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

1357. (வி - ரை) அமைச்சருடன் சேனைவீரரும் - அமைச்சர்களும் தானையொடு சென்றார் என முன்பாட்டிற் கூறியபடி சென்ற சேனைவீரர். சேனைவீரர் சிறைப் படுத்திக் (arrest) கொண்டு வருதற்காக உடன்சென்றவர்.

அடியவரைச் சூழ்ந்து - என்க. சூழ்ந்து கொள்ளுதல் அவர் தப்பி ஓடிவிடக் கூடாதபடி செய்யும் உபாயம். ஒருவரது மனையைச் சூழ்ந்து கொள்ளுதல் முதலியனவாக நவீனர் செய்யும் உபாயங்களையும் காண்க.

மின்தயங்கு......அடியவரை - "சடையானுக்கு ஆளாய்" (1352) என்று முன்னர்க்கூறிய கருத்தைத் தொடர்ந்து இங்கு வேணி என்றார். மின்தயங்கு புரிவேணி - சிறையிடும் பொருட்டுக் காரமண் குழுவாற் சூழப்படினும் அதனை வெளியாக்கி, அதனடுவிலும் விளக்கமுறுவர் என்பது குறிப்பு. முன்பாட்டில் முகில் சூழ்ந்து - என்ற குறிப்பும் காண்க.

வேதியனார் - வேதங்களை அருளியவர். வேதங்களின் பொருளாவார் என்பதாம்.

வேதியனார் - பரிசவேதிபோலத் தம்மை அடைந்தாரது பசுத்தன்மையை வேதித்து வேறுபடுத்துபவர் என்ற குறிப்பும்பட நின்றது. சமணசமயப் பற்றினின் றும் வேதிக்கப்பட்டவர் என்னும் குறிப்பும் பட இங்கு இப்பெயராற் கூறினார். பற்றறுத்த என முன்பாட்டிற் கூறியதும் காண்க.

இன்று...போதும் - இன்று அழைத்து எனவும், இன்று விடுத்தான் எனவும் இருபாலுங்கூட்டி உரைக்க நின்றது. இன்று இப்பொழுதே எங்களுடன் வருதல் வேண்டும் என்றது அவசரமான அரச கட்டளை என்பதுபட உரைத்தனர். அரசன் நுமை அழைத்து எனற்பாலது நுமை அரசன் எனக்கூறியது சினமும் விரைவும் குறித்தது. அழைத்து எமை - கூவி, அதனை நிறைவேற்றும் பொருட்டு எங்களை. அழைக்கேமை - என்பது பாடமாயின் அழைக்க எங்களை என்க. அழைக்க - ஈற்றகரம் கெட்டது.

நின்றவரை - காரியம் நிறைவேற்றும் பொருட்டால் நின்றபடியே இருந்தவர்.

நேர்நோக்கி - ஒரு சிறிதும் கலக்கமின்றி அவர் முகநோக்கி. நேர்நோக்கிட விதியிலாரையும் நோக்கி என்ற குறிப்புமாம்.

நிறை தவத்தோர் - "பண்டுபுரி நற்றவத்துப் பழுதின் அளவு இறைவழு "வினராதலின் அக்குறையை நீக்கிச் சூலைதந்து இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு அடைந்துவிட்டமையின் முன்னைக் குறைவுடைய தவம் நிறைவாக்கப் பெற்றவர். குறை நீக்கி

நிறைவாக்கிய தவத்தினையுடையோர். "நிறைதவத்தை யடியேற்கு நிறைவித் தென்றும் செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானை" (திருச்செங்காட்டங்குடி - தாண்டகம்) என்ற திருவாக்கும் ஈண்டுக் கருதத்தக்கது. 92

1358. (வி - ரை) "நாமார்க்கும் குடியல்லோம்" - இது நாயனர் அப்போது மந்திரிகள் அழைத்ததற்கு விடையாக அருளிச்செய்த திருத்தாண்டகப் பதிகத்தின் தொடக்கச் சொற்றொடர்.

நாம் - என்ற பன்மை, சிவனிடத்தும் அடியாரிடத்துமன்றி, மற்றெல்லாவிடத்தும் சிவனடியோம் என்றுநிமிர்ந்து தலைவணங்காமையாகிய இறுமாப்பும் வீரமும் குறித்தது. "இறுமாந் திருப்பன் கொலோ", "வீரமென்னால் விளம்புந் தகையதோ" முதலிய திருவாக்குக்களும், இத்திருப்பதிக முழுமையும் வரும் கருத்துக்களும் காண்க.

யார்க்கும் - சிவபெருமானுகிய கோமானையும் அவனடியாரையு மொழிய ஏனை யாவரையும் உள்அடக்கிய முற்றும்மை. "யார்க்கும் குடியல்லோம்...ஆனல் கோமாற்கே நாமென்று மீளா வாளாய்" எனப் பின்னர்த் தொடர்ந்து கூறுதல்காண்க.

குடி அல்லோம் - "அரசன் நமை அழைத்து" என்றதனுல் தனக்குக் கீழ் உள்ள குடிகளையே அரசனுவான் தன்பால் அழைக்க உரிமையுடையவன். நாம் அவ்வாறு குடியல்லோமாதலின் அவன் எம்மை அழைக்கும் உரிமையிலன் என்பது குறிப்பு. "நீரழைக்கும் அடைவிலம்" என்பது இதனுற் போந்த கருத்தாதலும் காண்க.

நான்மறையின் கோமானை - வேதம் முதலிய எல்லா நூல்களாலும் காட்டப் படும் முழுமுதல்வன். கோமான் - "கோமாற்கே" என்ற பதிகக் குறிப்பு. அவனே அரசர்க்கரசனுவான் என்பதாம்.

நதியினுடன் குளிர்மதி வாழ் சடையானை - தம்மை யடைந்தார்க் கருள்செய்து வாழ்விக்குந் தன்மை குறிப்பிட்டபடி. "சடையானுக்கு ஆளாய்" (1352) என்று சமணர்கள் இலேசினுற் கூறிய தன்மையாவது நதியையும் மதியையும் வாழவைத்து அவரது பேரருளைப் புலப்படுத்தி நிற்பதாம் என்றுர். அதுபோலவே வந்து அடைந்த நாயனுருக்கும் அருளி அழியா வாழ்வினைத் தந்தவர் என்பதும் குறிப்பு. வாழ் என்ற கருத்தும் காண்க. அச்சமணர்கள் தம்முடன் கொண்டுபோய் அலைபுரிந்து தாழவைக்க முயன்றுலும் அவர் அடைவது பெருவாழ்வேயாகும் என்பது கருத்து.

தேமாலைச் செந்தமிழின் செழுந் திருத்தாண்டகம் - திருத்தாண்டகப் பதிகத்தைப் பற்றிக் கூறநேர்ந்த இடம் இதுவே முதலாதலின் அதன் தன்மையை இவ்வாறு விரித் தனர். தேம்-சொல்லினிமையும் ஓசையினிமையும், மாலை-ஒரு பாட்டினுள்ளே பல பெயரும் தொடர்ந்து வந்து ஓரிடத்து முடிபுறும் தன்மையும், செந்தமிழ் - நிரம்பிய தமிழினிமையும், இன் - பொருளினிமையும், செழுமை - பயனினிமையும், திரு இறைவனது தன்மை பற்றிய நிலையும், தாண்டகம் - யாப்பும் பண் வகையும் உணர்த்தின. இங்குக் கூறிய அடைமொழிகள் தாண்டகங்கட்குப் பொதுவாகவும், இப்பதிகத்துக்குச் சிறப்பாகவும் உரியன. தேவாரத்தினைத் தாண்டகச் செய்யுளால் திருநாவுக்கரசர் ஒருவரே யருளியிருத்தலால் அவர்க்குத் தாண்டகவேந்தர் என்று பெயராயிற்று.

ஆமாறு - உமது ஏவல் பொருந்தும்படி அமைத்து விடுத்தவனிடம் அரசனுந் தன்மையும், அழைக்கப்படும் எம்மிடம் குடியாந்தன்மையும் பொருந்தும்படி என்க.

அடைவு - தன்மை. அடைவு இலம் - சேரும் தன்மையாகிய அதனில் நாம் இல்லோம். அழைக்கும் ஆறு ஆம் அடைவு இலம் என்று கூட்டி அழைத்தற் கேற்றதான முறையிலம் என்றுரைத்தலுமாம்.

அருள் செய்தார் - முனிவில்லாது அளியோடும் கூறினர் என்பது. வரும் பாட்டிலும் "அருள் செய்ய" என்றது காண்க. 93

மறுமாற்றத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நாமார்க்குங் குடியல்லோம்; நமனை யஞ்சோம்;
　நரகத்தி லிடர்ப்படோம்; நடலை யில்லோம்;
ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோ மல்லோம்;
　இன்பமே; யெந்நாளுந் துன்ப மில்லை;
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
　சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா வாளாய்க்,
　கொய்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே. 1

நாவார நம்பனையே பாடப் பெற்றோம்;
　நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்;
ஆவாவென் றெமையாள்வா னமரர் நாத
　னயனொடுமாற் கறிவரிய வனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
　சேர்ந்திருந்தான் றென்றிசைக்கோன் றானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலுங்
　குணமாகக் கொள்ளோமெண் குணத்து ளோமே. 10

பதிகக் குறிப்பு:—சிவபெருமானுக்கே ஆட்பட்டோம்; வேறு யாவர்க்கும் குடியல்லோம்; ஆமாறுநீர் அழைக்கும் அடைவு இல்லோம் என்பது ஆசிரியரால் 1358-ல் காட்டப்பட்டது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) நமனை அஞ்சோம். அரசனாணையை மறுத்தமைக்குக் காரணங் கூறியபடி. நமனை உதைத்த இறைவனை அடைந்தமையால் அஞ்சோம் என்றார். நரகத்தில் இடர்ப்படுதல் அரசாணைக்குத் தப்பினோர்க்கு உண்டென்பர்; அது நமக்கில்லை. நடலையில்லாமை அதற்குக் காரணங் கூறியபடி. ஏமாப்போம் - சிவனது பெருங்காவல் பெற்றோம். பிணி - பிணிப்பு; கட்டு. எந்நாளும் - முற்றும்மை நிகழ் கால எதிர்காலங்கள் குறித்தது. "இனியேதுங் குறைவிலோம்" என்றது காண்க. தாமார்க்கும்...சங்கரன் - தம்பிரான் - இன்பஞ் செய்பவன். இன்பமே - துன்ப மில்லை என்றதற்குக் காரணங் கூறியபடி. கோமான் - அவனே அரசர்க்கெல்லா மரசன். நீவிர் கொண்டவர் யாவரும் அரசரல்லர். ஏகாரம் பிரிநிலை. தேற்றமுமாம். குறுகினோம் - வந்தடைந்தோம். சரிதக் குறிப்பு.—(2) அகலிடமே...புரட்டாள் - பரப்புடைய நிலம் முழுதும் எமது இடம். ஊர்கள் தோறும் சமைத்துண்பவர்கள் கூவிப் பிறருக்குக் உணவு இட்டு உண்பர். பிச்சை யேற்பவர்கு இல்லை யென்னாது இடுவர். பொது மன்றங்கள் யாவும் எமக்குத் தங்குமிடம். நிலத்திற் படுத்துறங்குவோம்; பூமிதேவி எம்மை மறுக்கமாட்டாள். "ஊரெலா மட்டசோறு நம்மதே யுவரிசூழ்ந்த பாரெலாம் பாயல்" என்ற திருவிளையாடற்புராணம் (வாத - உப - பட) இக்கருத்தைப்பற்றி எழுந்தது. இப்பாட்டு நாயனாரது முழுத்துறவாகிய மனநிலையை விளக்குவதாம். அம்பலம் - பொதியில் - ஊர்மன்றங்கள். இகலுடைய விடை - அடையலரைச் செறும் இடபம். "அரண்முரண் ஏறு". ஏன்று கொண்டான் -

எம்மை ஏற்று ஆட்கொண்டான். இனி...தீர்ந்தோம் - இதுவரை குறையிருந்தது. இனி இதுவும் இது போன்றவையும் ஆகிய எந்தக் குறையும் இல்லோம். இப்போது வந்த இடர்களாகிய சமணத் தொடக்கும் நோயும் முதலியன தீர்ந்தோம். துகிலு டுத்து...திரிவார் - இது பூ அரசர்களை நாவரசர் மதித்த மதிப்பு. "பாராண்டு பகடேறி வருவார்" என்றதும் காண்க. சொற்கேட்கக் கடவோமோ துரிசற்றோமே - சொற்கேளாமைக்குக் காரணம் துரிசற்றோமாயினமை என்றபடி. துரிசு - அரசாணைக் குட்படுத்தும் குற்றம். அரசனது குடியாதலினின்றும் நீங்கி இறைவனுக்கே யாளா யினமையால் அக்குறைபாடு நீங்கினோம் என்பதாம். ஓகாரம் எதிர்மறை.—(3) வாராண்ட...சேரோம் - இது நாயனாரது துறவுநிலை குறித்தது. புரோதாயம் - நீராடலின் ஒரு விசேடம். "முந்திவந்து புரோதாய மூழ்கி" (செவ்வழி - கேதாரம் - 3 - பிள்ளையார்). தீர்த்த விசேடம் என்பாருமுண்டு. நீறணியும்...பெற்றோம் - "மேனி கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாட", "உருவார அணிந்து" (1332), "வடிவிற் பொலி திருநீறும் அந்தமிலாத் திருவேடத் தரசு" (திருஞான - புரா - 270), "தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனி" (1405) என்பனவாதி புராணத் திருவாக்குக்கள் இந்த ஆதரவுபற்றி எழுந்தன. "காராண்ட...பெற்றோம்" கண்ணீர் மழைபோல வார் தலும் மனங்கரைதலும் அன்பினிலக்கணம். "மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவும்", "வந்திழி கண்ணீர் மழையும்", "நாயகன் சேவடி தைவரு சிந்தையும்" முதலியனவாகப் புராணங் கூறியவை இதுபற்றி எழுந்தன. கன்மனமே - கரைய - முன்னர்க் கல்போன்றிருந்த அதுவே என்று ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. இழிவு சிறப்பும்மைப் பொருளில் வந்ததெனினு மமையும். சோர்தல் - தம்மை யறியாது பெருகுதல். கரைதல் - வாழ்த்தல். சொல்லுதல் எனினுமாம். கடவோமோ பற்றற்றோமே - பற்றற்றோ மாதலின் கடவோமல்லோம்.—(4) உறவாவார் உருத்திர பல் கணத்தினோர் - இதனை "சுற்றம் மாசிலா வீச னன்பர்" என்றது திருவிளை யாடற் புராணம். உடுப்பன கீளோடு கோவணம் - "கந்தை மிகையாங் கருத்தும்" என்பது காண்க. மாட்டார் - வலியிலாராவர் என்பது குறித்தது. செறுவார் - செறு தல் கருதிய சமணர். "பேயர்" (7), "நின்றுண்பார்" (8), "நாணற்றார்" (10) என்பனகாண்க. தீமை தானு நன்மையாய்ச் சிறப்பதே - பிற்சரித விளைவின் குறிப்பு. சிறப்பது - சிறக்கவுள்ளது. பிறப்பிற் செல்லோம் - சிவனை அடையாத ஏனையோர் பிறந்திறந் துழல்வர் என்பது. நறவார்...தொடர்வுற்றோமே - பிறப்பிற் செல்லாமைக்குக் காரணம் கூறியபடி. சீரார் நமச்சிவாயஞ் சொல்ல வல்லோம் - நமச்சிவாயத் திருப்பதிகம் அருளிச்செய்து கடலினுட் கன்மிதப்பித்த பிற்சரிதங் காண்க. சுறவாரும்...சோதியையே - அழிக்க வந்த காமனை விழித்தெரித்த கடவுளை அடைந்தமையால் எம்மை அழிக்க வருவனவும் எரித்தழிக்கப்படும் என்பது குறிப்பு. ஏகாரம் - தேற்றம்; பிரிநிலையுமாம்— (5) என்றும் - யாவர்க்கும் - முற்றும்மைகள். இன்றுமட்டு மன்றிப் பின் என்றைக்கும் - உமக்கே யன்றிப் பின் எவர்க்கும். இடை தல் - பின்னடைதல். கீழ்ப்படுதல். எதிராவார் - பகைவர். சேர்வோமல்லோம்- சேரப் பெற்றோம் - புண்ணியத்துளோம் - காரணங் கூறியபடி. சிறுதெய்வம் - செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள். அருகன் முதலிய புறச்சமயத் தெய்வங்களையு முள்ளிட்டு நின்றது. சேரப் பெற்றோம் - இப்போது வந்தடையும் பேறு பெற்றோம். நண்ணிய - என்றது மது. ஒன்றினல் - முற்றும்மை தொக்கது. உறுபிணியார் - ஆர் - பன்மை திருவருளால் வந்த சூலையின் உயர்வு குறித்தது. இகழ்ச்சி குறித்த தெனினுமாம். ஓடிப்போதல் - செய்மையாக அகன்றுவிட்டமை குறித்தது.—(6) மூவுரு - பிரமன் - விட்டுணு - உருத்திரன். முதலுரு - காரணமாயின உரு. இருநான்கான

மூர்த்தி - எட்டு மூர்த்தம். "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்" என்பது திருவாசகம். மூப்பத்து மூவர் தேவர்கள் - முப்பத்து முக்கோடி தேவர். 33 என்பது வகை குறித்தது. கோடி என்பது தொக்கு நின்றது. மிக்கோர்-தேவரினும் சிறந்த முனிவர் முதலினோர். என்னும் நாவுடையார் - என்று துதிக்கும் அடியவர். ஆள உடையார் - ஆதலின் - கடவமலோம் என்க. காவலரே - ஏகாரம் தேற்றம். விடுத்தாரேனும் - இவ்வரசனே யன்றி அவனும் என இறந்தது தழுவிய எச்சவும்மை. கடுமையோடு களவற்றேம்-பிறர்பாற் கடுமையும் பிறர் உடைமையின்பாற் களவும் என்ற இரண்டும் தான் ஒருவனை அரசாணைக் குட்படுத்துவது என்பது நம்முன்னோர் கண்ட முறை. உடலைப் பொறுத்த குற்றம்-சொத்தைப் பொறுத்த குற்றம் என்று குற்றங்களை வகைப்படுத்துவதும் பார்க்க. நீதிமுறையானன்றிக் குடிகளை வருத்துதல் கொடுங்கோன்மை என்ப. இந்நாள் நாகரிக மாக்கள் என்பாரின் போர்முறை அநீதிகளை நோக்குக.—(7) நிற்பன-நடப்பன - சரம் - அசரம் என்ப. நிலன்...வான் - ஐம்பூதங்கள். ஒடு உருபு உருவத்தினின்று அருவத்தைப் பிரித்தது. நெடுவான் - நெடுமை - ஏனைய நான்கிற்கும் நிரந்தரமாய் இடங்கொடுத்து நிறைந்து நிமிர்ந்தமை குறித்தது. அற்பம் - பெருமை - சிறியதினும் சிறியதாயும் பெரியதனிற் பெரியதாயும் உள்ள தன்மை. "அணோ ரணீயாந் மகதோர் மகீயாந்" என்பது வேதம். "நிகரிலா மேருவரை யணுவாக நீண்டானை...நொய்யானை" (திருஞான - புரா - 402) முதலியவை காண்க. அருமை - எளிமை - பிறர் யாவர்க்குமருமையும் அடியார்க்கு எளிமையும் குறித்தன. தற்பரம் - தான் - உயிர். உயிர்களுக்கு முதல்வன். தானும்...தன்மை - உயிர்களுடன் இறைவன் காணமுடியாதபடியும் பிரிக்கமுடியாதபடியும் கலந்துநிற்கின்ற அத்துவிதக் கலப்பு. அறிவிக்கும் சித்தாதலின் தானும் என முன்வைத்தார். நன்மையோடும் பொற்புடைய - உடைய மொழிகள். நன்மை - பயன். பொற்பு - மொழியினிமை. பேயர் பேசுவன - அவ்வாறு பயனும் சுவையுமில்லாதன. பிழை அற்றேமே - பேசுதற்கும் பேசாமைக்கும் காரணம் கூறியபடி. முன்னர் இகழ்ந்துரைத்துப் பிழை செய்தமை குறிப்பு. "ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே" (ஏழைத் திருத்தாண்டகம்).—(8) இப்பாட்டில் இறைவனது தடத்த சொரூப இலக்கணங்களும் அருளியல்பும் போற்றப்பட்டன. நின்றுண்பார் - சமணர். நினையச் சொன்ன வாசகம் - அவர்கள் சொன்ன உபதேசமொழிகள். மன்னவன் - நீவிர் எம்மை அழைத்து எமை விடுத்தான் என்ற அம்மன்னவன்.—(9) உம்மோடு......படை - மந்திரிகள் சேனையுடன் வந்தனர் என்பது. "முரசதிருந் தானையொடு" (1356), "சேனை வீரரும் சூழ்ந்து" (1357) என்ற புராணம் இதுபற்றி எழுந்தது. பாசமற வீசும் படியோம் - பணியோ மல்லோம் என்ற துணிவுக்குக் காரணம் கூறியபடி. மேற்சரித விளைவு வீசும்படியினை விளக்குவது காண்க. படி - பண்பு.— (10) நாவாரப் பாடுதலாவது - நாவின் ஆர்வம் நிரம்பும்வரையில் துதித்தல். "தோளினொடு கைகுளிரவே தொழுமவர்" (சாதாரி - பிள்ளையார் - வைகா - 7), "கண்ணாரக் கண்டுமென் கையாரக் கூப்பியும், எண்ணார வெண்ணத்தா லெண்ணியும்" (அம்மையார் - அற் - அந் - 85). நாணற்றார்-சமணர். நள்ளாமே - இனி உறவாகாமல். இனி "உறவாவார் உருத்திர பல்கணத்தோர்" (4) என்றது காண்க. விள்ள - நீங்க. ஆ! ஆ! என்பது இறைவனருளின் விரைவும் பரிவும் குறித்தது. அடுக்கு மிகுதிப்பொருளது. அமரர்நாதன்......சிவன் - சிவனது பெருமையும் ஏனைத் தெய்வங்களது சிறுமையும் குறிக்கப்பட்டன. "சிறு தெய்வம்" (5) என்றது காண்க. தென்திசைக் கோன் - இயமன். தானே - இவ்வரசனேயன்றி அவனே என்று தேற்றம்படக் கூறியது. இயமன் தூதுவரன்றி

இயமனே என்ற குறிப்பும் காண்க. கோவாடி - அரசனுந் தன்மையினை மேற்கொண்டு. எண் குணத்துளோமே - குணமாகக் கொள்ளாமைக்குக் காரணம். எண்குணமாவன-சிவபெருமானது இறைமைக் குணங்களெட்டு. அவை தன்வயத்தனாதல் முதலாயின. "எண் குணத்தான்" (குறள்) பரிமேலழகர் உரை பார்க்க. எண்குணத்தானாகிய சிவனுக்கு ஆட்பட்டதனால் அவன்றன்மை யடைந்தோம். ஆதலின் அவனால் உதைத் தருட்டப்பட்ட இயமனுக்கு உட்படோம் என்பது. "நமனை யஞ்சோம்" (1) என்று தொடக்கத்துக் கூறியது காண்க.

1359. ஆண்டவர சருள்செய்யக் கேட்டவரு மடிவணங்கி,
வேண்டி,யவர்க் கோண்டேக, விடையுயர்த்தார் திருத்தொண்டர்
"ஈண்டுவரும் வினைகளுக்கெம் பிரானுள"னென் றிசைந்திருந்தார்;
மூண்டசினப் போர்மன்னன் முன்னணைந்தங் கறிவித்தார். கூசு

(இ - ள்) வெளிப்படை. ஆண்ட அரசுகள் இவ்வாறு அருளிச் செய்யக்கேட்டு, அந்த அமைச்சர்களும் அவரது அடிகளில் வணங்கி, வேண்டிக்கொண்டு, அவரை உடன்கொண்டு செல்ல, இடபக்கொடியை உயர்த்த சிவபெருமானது திருத்தொண்டராகிய அவர், "இங்கு வரும் வினைகளுக்கு எமது பெருமான் அணையுள்ளார்" என்று அதனுக்கு இசைவுடனிருந்தனர்; அவர்களும் கொண்டு சென்று மூண்ட சினத்தினையுடைய போர்வல்ல அரசன் முன்பு அங்குச் சென்று அறிவித்தனர்.

(வி - ரை) ஆண்ட - சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்ட. செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது.

அடிவணங்கி வேண்டி - அவர் மறுத்தமையால், வலிமை செய்து கொண்டு செல்ல அஞ்சியவர்களாய், அரசன் தம்மை ஒறுத்துத் தமது பிழைப்பினைப் போக்குவான்; தம்மைக் காக்கும் பொருட்டேனும் உடன் வந்தருளவேண்டும் என்பனவாதி சொற்களைச் சொல்லிப் பிரார்த்தித்து.

அவர்க்கோண்டேக - கருணையினால் அவர் அவர்களுடன் செல்ல ஒருப்பட்டமையால் அவரைத் தம் உடன்கொண்டு சென்றனர் எனக.

விடையுகைத்தார் - "சாலவும் ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி யேர்காட்டுங், கோதிலா வேறுங் கொடி" (தசாங்கம் - 10) என்பது திருவாசகம். இத்தன்மையாற் கூறியது இத்திருத்தொண்டரது செய்கையினாலே சமணர் அஞ்சி அகல நேர்ந்ததென்ற பின் சரிதங் குறிப்பதற்காம். அவரது கொற்றக் கொடியே வெல்வது.

கொடியுகைத்தல் - போர்த்தொடக்கக்குறி. வெற்றிக்குறியாதலும் காண்க.

ஈண்டுவரும் வினைகளுக்கு எம்பிரான் உளன் - ஈண்டு - இங்கு. இவ்விடத்து என்றது இவ்வாறு தாம் அவர்களுடன் செல்லும் இடத்து என்பதாம். ஈண்டுதல் - நெருங்குதல்-மிகுதல் என்றுகொண்டும், ஈண்டு வினை எனக் கூட்டியும், வினைத்தொகையாக்கிப் பின்னர் வெந்தபொடி, விடம், வேழம், வேலை என்று ஒன்றின்மேலொன்றாய் நெருங்கிவரும் எனப் பிற்சரித நிகழ்ச்சிக் குறிப்பாகக் கூறுதலுமாம்.

வினைகளுக்கு உளன் - வினைகள் - துன்பங்கள் - பிறைகள். வினைகளுக்கு - வினைகளைப்போக்க என, நோய்க்கு மருந்து என்புழிப்போல, நான்காம் வேற்றுமை பகைமைப் பொருளில் வந்தது.

இசைந்து - அவர்கள் தம்மை உடன்கொண்டு செல்வதற்கு ஒருப்பட்டு. இசையாது மறுத்திருப்பரேல் அவர்களால் கொண்டு ஏகுதற்குக் கூடாமலிருந்திருக்கும் என்ற துணிபு குறித்தது. அவர்க்கு மன்னவனால் தண்டம் நிகழாமற் காக்கவும், அர

சன் வழிநிற்கும் உலகநீதி காக்கவும், சைவப் பெருமை காட்டவும் இசைந்தனர் என்க. இருந்தார் - உடன் பட்டனர்.

மூண்டசினம் - மூளுதல் அடக்கவும் அவிக்கவும் இயலாதபடி நெருப்புப்போல மூண்டு எழுந்து நின்ற சினம். சினம் மூண்ட என்று மாற்றிக் கொள்ளுதலும் பொருந்தும்.

முன் அறிவித்தார் - அரசனது அரண்மனை வாயிலின் முன்பு. தாம் வந்த செய்தியையும் பிறவரலாறுகளையும் சொல்லி விடுத்தனர் என்க. 94

1360. பல்லவனு மதுகேட்டுப் பாங்கிருந்த பாயுடுக்கை
வல்லமணர் தமைநோக்கி, "மற்றவனைச் செய்வதினிச்
சொல்லு"மென, வறந்துறந்து தமக்குறுதி யறியாத
புல்லறிவோ ரஞ்சாது நீற்றறையி லிடப்புகன்றார். கூரு

(இ - ள்) வெளிப்படை. பல்லவ அரசனும் அதனைக் கேட்டுப் பக்கத்திலிருந்த பாயுடுக்கையுடைய வலிய அமணர்களைப் பார்த்து "மற்றவனை இனிச் செய்வது இன்னதெனச் சொல்லும்" என்று கூற, அறத்தையுநீத்துத் தமக்குறுதியு மறியாத புல்லிய அறிவுடைய அந்த அமணர்கள் சிறிதும் அஞ்சாமல் நீற்றறையில் இடும்படி சொன்னார்கள்.

(வி - ரை) பல்லவன் - சோழ அரசர்களுள் பல்லவமரபு ஒன்று. அந்நாளில் அரசியற்றியவன் மகேந்திரவர்மன் என்பவன். இவனுக்குக் குணபரன் என்ற பேரும் சிறப்பாக வழங்கியது. இவனது திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டு, நாயனாரது காலத்தை நிச்சயிக்கவும், ஆளுடைய பிள்ளையாரது காலம் சிறுத்தொண்டர் வாதாவிப் போர் பற்றி நிச்சயிக்கப்பட்ட முடிபை உறுதிப்படுத்தவும் உதவி புரிவதாம். 1349, 1411-1412 பாட்டுக்கள் பார்க்க. இவனது காலம் கி. பி. 640 ஆண்டின் பக்கமென்பது சரித ஆராய்ச்சியாளரின் இற்றைநாட் டுணிபு.

பாயுடுக்கை - பாயுடுத்தல் அமண்குருமார் மரபு. வல் அமணர் - திண்மை - வலிமை. நேர்மைக்கஞ்சாத துன்மதியின் திண்மைகுறித்து நின்றெழிந்தது.

மற்றவனை இனிச்செய்வது சொல்லும் - என்க. மற்று - குருமார் சொல்லையே நம்பி "இவர் சொன்ன தீயோன்" (1355) என்று முன்னரே அரசன் துணிந்து விட்டானாதலின் மற்று என வேறுபடுத்திக் கூறினான். அவனை என்ற ஒருமைச் சுட்டும் அக்கருத்துப்பற்றியது.

செய்வது - செய்ய வேண்டுவதனை. இரண்டனுருபு தொக்கது.

அறம் துறந்து...புல்லறிவோர் - அறம் - தமது சமயத்தில் முதன்மையாக எடுத்துக் கூறப்படும் கொல்லாமையாகிய அறம். "அறவினை யாதெனிற் கொல்லாமை" (குறள்). அந்த அறத்தையும் எனச் சிறப்பும்மை தொக்கது. நீற்றறையிலிடப்புகன்று கொலை செய்யும்படி கூறியதனால் அறந் துறந்தனர். தமக்குறுதி யறியாத - தமக்கு விருத்திதரும் இம்மைப் பயனும், நன்மைதரும் அம்மைப்பயனும் ஆகிய இரண்டு உறுதிகளையும் அறியாத. உறுதி - முடிந்த நன்மை. அறந் துறந்தமையால் உயிர்க் குறுதியாகிய நன்மையறியாராயினர். சூலைநோய்தீர்ந்த திருவருளின் துணையால் தமது சூழ்ச்சியையும் அவர் கடப்பர்; அவ்வாறு கடப்பரேல் அரசனாற் றுறக்கப்பட்டுத் தமது சமயம் அழியும்; தம் விருத்தியும் கெடும்; என்றறியாமையால் உறுதியறியா ராயினர். பிறர்க்குறுதி யறியாரரயினும் தமக்குறுதியும் அறியாராயினர் என்பதுமாம். புல்லறிவோர் - இவ்வாறு இரண்டுமறியாது பொய்மையை மேற்கொண்டமையால்

புல்லறிவோராயினர் என்றார். உறுதியும் என இறந்தது தழுவிய எச்சவும்மை தொக்கது. அஞ்சாது - பழிக்கும் பாவத்துக்கும் சிறிதும் அஞ்சாது.

நீற்றறையில் இட - சுண்ணாம்பு நீற்றப்படும் - சுடும் - அறையினுள் வைக்க. வைத்தது மேல்வரும் பாட்டில் கூறுவார். இட் - இடும்படி. நீற்றறை - சுண்ணாம்புக் காளவாய் என்பது வழக்கு.

பாங்கு இருந்த - பாங்கு - பக்கம். அவமே புரிவோராயினும் தவஞ்செய்வோர் என்ற பாங்கினில் - பண்பினில் என்றலுமாம். 95

1361. அருகணைந்தார் தமைநோக்கி "யவ்வண்ணஞ் செய்க"வெனப்
பெருகுசினக் கொடுங்கோலான் மொழிந்திடலும், பெருந்தகையை
உருகுபெருந் தழல்வெம்மை நீற்றறையி னுள்ளிருத்தித்
திருகுகருந் தாட்கொளுவிச் சேமங்கள் செய்தமைத்தார். கூசு

(இ - ள்) வெளிப்படை. பக்கத்தில் அணைந்தவர்களைப் பார்த்து "அவ்வண்ணமே செய்க!" என்று மிக்க சினமுடைய அக்கொடுங்கோலரசன் சொன்ன அளவில், உருகச் செய்யும் பெருந்தீயின் வெப்பத்தையுடைய நீற்றறையினுள்ளே பெருந்தகை யாரை இருக்கச்செய்து திருகு கருந்தாளைக்கோத்துக் காவல்செய்து அமைத்தனர்.

(வி - ரை) அருகணைந்தார் - பக்கத்திருந்த அமணர். மன்னவன் குறிப்பறிந்து ஏவல் செய்வதற்காக வந்து அணைந்தவர் எனினுமாம்.

பெருகுசினம் - கொடுங்கோன்மை - என்ற இரண்டினாலும் மீதூரப்பட்டானாதலின் அவ்வாறு கூற நேர்ந்ததென்பது. சினம் - உள்ளங்கவர்ந்தெழுந் தோங்குவதாகலின் நன்மை தீமைகளை நாடி யறியவொட்டாது. கொடுங்கோன்மை - ஒருப்பக்கஞ் சாய்ந்து கொடுமைபுரியச் செய்வது.

பெருந்தகை - கீழோர்செய்த அப்பெருங் கொடும் பாதகத்தையும், இவ்வாறே இனியும் செய்யநின்ற மூன்று கொடுஞ்செயல்களையும் பொறுத்துத் தாம் அவர்களுக் குத் தீமை ஒன்றும்செய்யாது ஈசனருளையே நாடி நின்றாராதலின் பெருந்தகை என் றார். சிவத்தன்மை வாய்ந்தவர் என்றலுமாம். "பெருந்தகையை" என்று சிவனைத் துதிக்கின்றது நாயனாரது தேவாரம்.

உருகு பெருந்தழல் - உருக்கும் என்றது உருகு என நின்றது. தன்னுளகப்பட்ட கல் முதலிய எவ்வகை வலிய பொருளையும் உருக்கும் தன்மை குறித்தது. பெருந் தழல் - அணுகுதற்குமரிய பெருநெருப்பு. தழலின் வெம்மை என்க.

திருகுகருந் தாள் கொளுவி - எளிதிற்றிறக்க இயலாதபடி பலமுறையும் திருகி இருப்புத்தாளினைக் கோக்கச்செய்து. கருந்தாள் - இரும்பினாற் செய்த தாள்.

சேமஞ் செய்தல் - தப்பி வெளிவர முடியாதபடி காவல் அமைத்தல். அவர்கள் எண்ணியது கொலையேயாயினும் உண்மையில் அவ்வாறல்லாது அது நாயனார்க்கு சேமமேயாகித் திருவடிக்கீழ் இன்பமார்ந்திருக்கச் செய்தல் என்பது குறிப்பு.

நீற்றறை - இஃது இலகுவில் தப்பக் கூடியதாயன்றி கதவும் தாளும் கொண்ட வலிய நிலையினதாம் என்க. 96

1362. ஆண்டவர சதனகத்து எணைந்தபொழு தம்பலத்துத்
தாண்டவமுன் புரிந்தருளுந் தாணிழலைத் தலைக்கொண்டே,
"ஈண்டுவருந் துயருளவோ வீசனடி யார்க்"கென்று
மூண்டமன நேர்நோக்கி முதல்வனையே தொழுதிருந்தார். கூஎ

(இ - ள்) வெளிப்படை. ஆண்ட அரசுகள் அந்த நீற்றறையினுள் அணைந்த பொழுது திருவம்பலத்தில் அருட்கூத்தியற்றுகின்ற திருவடியின் நிழலையே தமது தலைமேற்கொண்டு, "ஈசனடியவர்க்கு ஈண்டுவரும் துன்பங்களும் உளவாமோ?" என்று திருப்பதிகம்பாடித் துணிவுமூண்ட மனத்தால் நேர்நோக்கி, முதல்வனையே தொழுது எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) அம்பலத்து...தாள்நிழல் - "ஈசனெந்தை யிணையடி நீழலே" என்பது நாயனார் இதுபோழ்து அருளிய தேவாரம். தாளானது நிழல்செய்வது அருளாலாவ தாகலின் தாண்டவம் புரியுந் தாள் என்றார். தாண்டவம் - அருட்கூத்து. முன் - உயிர்கள் தம்மை உணர்வதன் முன்னே கருணையினால் எடுத்து ஆட்கொள்வது. அருளும் என்ற கருத்தும் இது. தாள் நிழல் - நிழல் - தண்ணளி. தூக்கிய திருவடியே நிழல் செய்ய வல்லதாதலின் சிவனொருவனே உயிர்களைப் பிறவிச் சூட்டினின்றும் எடுத்தாற்ற வல்லவன். "சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர்துன்னு, நிழலா வன" (ஐயாறு) என்றது திருவிருத்தம். சூடுகண்டார் நிழல்தேடுவது இயல்பாம்.

நிழலே தலைக்கொண்டு - என்று பிரிநிலை ஏகாரம் பிரித்துக்கூட்டுக. தலைக் கொள்ளுதல் - அடைக்கலமாகப் புகுந்து அந்நிழலுக்குள் அடங்கி நிற்றல். நீற்றறை யின் நெருப்புக்கு அரணாக நிழலினுள் ஒடுங்கினார் என்ற சுவையும் காண்க. "தருவா யெனக்குன் றிருவடிக் கீழோர் தலைமறைவே" என்ற (பொது) திருவிருத்தமும் காண்க.

ஈண்டு...அடியார்க்கு? - இந்நிகழ்ச்சி முன்வினை காரணமாக நிகழினும், அதனால் வரும் துன்பம் அடியாரைப் பற்றாது என்பார் வருவன உளவோ? என்னாது வரும் துயர் உளவோ? என்றார். ஒப்பாரும் மிக்காருமில்லாத தலைவராதலின் பிறராலும் பிறவற்றாலும் வரும் துன்பமில்லை என்பார் ஈசனடியார்க்கு என்றார். ஈசன் - தலைவன்.

அடியார்க்கு - அடியாராதலின் அவர்க்கு உளவோ? என்று துயர் உளவா காமைக்குக் காரணங் கூறியபடி. "உளமே புகுந்த வதனால்...நல்ல நல்ல" (கோளறு பதிகம்), "ஒருவர் தமர்நாம் அஞ்சுவதி யாதொன்று மில்லை" (அப்பர் தேவாரம்) முதலிய திருவாக்குக்கள் காண்க.

மூண்ட...நேர்நோக்கி - மூண்ட மனம் - துணிந்து நின்ற மனம். நேர் நோக்கி - என்றது மனத்தினுள் வேறொன்றும் புலப்படாது அத்தாளினையே நோக்கி அம்மயமாய் நிற்றல் குறித்தது. "ஒன்றி யிருந்து நினைமின்கள்", "உற்று நோக்கி உள்ளக் கிழியி னுருவெழுதி" முதலிய நாயனாரது திருவாக்குக்கள் காண்க. மனம் - ஈண்டு அறிவு என்ற குறித்தது. துணிந்த அறிவினால் - முதல்வனையே தொழுதிருந் தார் என்க. நோக்குதல் - கண்டுகொண்டிருத்தல். "மாறாத சிவானுபவ மருவிக் கொண்டே", "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்...சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்" (11-சூத் - 2) என்ற சிவஞானசித்தியார் காண்க.

முதல்வனையே தொழுது - ஏகாரம் பிரிநிலை - தேற்றமுமாம். முதல்வனைத் தொழுதே - என்று ஏகாரம் பிரித்துக்கூட்டி யுரைப்பினுமமையும். இருந்தார் - அந் நிலையிற் றிறம்பாது நின்றார்.

97

*1363. வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவங்
தைவருதண் டென்றலணை தண்கழுநீர்த் தடம்போன்று
மொய்யொளிவெண் ணிலவலர்ந்து முரன்றயா ழொலியின்தாய்
ஐயர்திரு வடிநீழ லருளாகிக் குளிர்ந்ததே. கூஅ

(இ - ள்) வெளிப்படை. மிகுந்த வெப்பமுடைய அந்த நீற்றறையே மிக்க இளவேனிற் பருவத்தில் தடவி வருகின்ற தண்ணிய தென்றல் அணைகின்ற குளிர்ந்த கழுநீர்கள் நிறைந்த தடம்போன்று ஒளி மொய்த்துக்கூடிய வெள்ளிய முழுமதியின் கதிர் விரிந்து முரல்கின்ற யாழின் ஒலியுடன் கூடியதாகி, ஐயருடைய திருவடியின் நீழலினது அருள்மயமேயாகிக் குளிர்ந்ததே.

(வி - ரை) நீற்றறையினுள் எழுந்தருளியிருந்தபோது நாயனார் இறைவனருளையே நோக்கித் துதித்த "மாசில் வீணையும்" என்று தொடங்கும் திருப்பதிகத்தின் முதற் பாட்டினுக்கு விரிவுரை செய்து காட்டும் வகையாற் சரிதத்தைக் கூறுகின்றது இத் திருப்பாட்டு.

வெய்ய நீற்றறை தான் - தடம்போன்று - குளிர்ந்ததே - என்று முடிக்க.

இளவேனில் - தென்றல் - தடம் - நிலவு - யாழ் - இவற்றின் இயல்புகள் பொருந்தக் குளிர்ந்தது என்றபடி.

வெய்ய நீற்றறை - அருள் ஆகிக் குளிர்ந்ததே - வெம்மை தட்பமாயிற்று. நீற்றறையினுள் ஐம்பொறிகட்கும் நுகர்வாகிய ஐந்தும் வெப்பமும் கேடும் பயப்பன. அதன் வெய்ய ஓசை காதினையும், வெள்ளிய ஒளி கண்ணினையும், நஞ்சுக்காற்று மூக்கினையும், சுண்ணம்புச்சுவை நாவினையும், வெப்பம் மெய்யினையும் ஊறுசெய்து உடலுக்குக் கேடுவிளைவித்து உயிர் போக்கும். ஆயின் இங்கு நாயனார் மனத்தால், இறைவனது இணையடி நீழலினையே நோக்கி நின்றாராதலின் அவையே இறைவனது குளிர்ந்த அருளாகி முறையே யாழின் ஒலியும், முழுமதி அலர்ந்த நிலவொளியும், வீசு தென்றலின் மணமும், இனிய தடத்தின் நீரின் சுவையும், இளவேனிலின் ஊற்றுமாகக் குளிர்ந்த நுகர்ச்சியினைத் தந்தன.

அறை அதுதான் - அதுவே. தேற்றேகாரம் தொக்கது.

வீங்கு இளவேனில் - வீங்குதல் - மிகுதல். மிக்க இளமையாகிய என்றது இளவேனிலின் தொடக்கம். வீங்கு - இனி மிக நிற்கும் என்றலுமாம்.

தைவருதல் - மெல்லத் தடவுதல். தென்றலின் மெல்லிய அசைவு குறித்தது. "நாயகன் சேவடி தைவரு சிந்தையும்" (1405) என்ற புராணமும், "தென்றலா ரடிவருடச் செழுங்கரும்பு கண்வளருந் திருவையாறே" என்ற பிள்ளையாரது (மேகரா - குறிஞ்சி) திருவாக்கும் காண்க.

தென்றல் - சந்தனப் பொதியினின்றும் தோன்றி வருதலானும், சோலைகளின் நுழைந்து பல மலர்களின் தாதும் மணமும் கவர்ந்து வருதலானும், தென்றல் இங்கு நறுநாற்றப் புலனுக்குப் பொருளாக உரைக்கப்பட்டது. "துன்றுதண் பொழினுழைந் தெழுவிய கேதகைப் போதளைந்து, தென்றல்வந் துலவிய திருநெல்வே லியுறை செல்வர் தாமே" (சாதாரி - 2) என்ற பிள்ளையார் தேவாரம் இங்குச் சிந்திக்கத்தக்கது. பொதியிலிற் பிறந்து வடக்குநோக்கித் தொண்டை நாட்டுக்குச் சென்று சேர்ந்த தென்றலைப் "பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின், கொங்கணைந்து குளிர்சார விடைவளர்ந்த கொழுந்தென்றல், அங்கணைய" (ஏயர்கோன் - புரா - 270) என்று ஆசிரியர் பாராட்டுதலும் காண்க.

காற்றுப் பரிச உணர்ச்சிக்குச் சிறப்பா யுரியதாயினும் இங்கு மேற் கூறியவாற்றால் நாற்ற உணர்ச்சிக் கெடுத்துரைக்கப் பட்டது. இதனைப் பரிசப்புலனுக்குப் பொருளாகவும், பல மலர்களும் பூத்து மணம் பரப்பும் இளவேனிலை நாற்றப் புலனுக்குப் பொருளாகவும் கொண்டுரைப்பினு மமையும்.

தடம் - அதன் நீரைக் குறித்து நின்றது. "கிழுநிகழ் - நீரி லின்சுவை நிகழ்ந்தோன்" (திருவண்டப்பகுதி - 25) என்பது திருவாசகம்.

**மோய்ஒளி வெண் நிலவு அலர்ந்து** - ஒளி மொய்த்த என்க. நிலவு - கதிர். அலர்தல் - விரிதல். எத்தனை நேரம் கூர்ந்து எதிர்நோக்கினும் கண்ணுக்கு ஊறு செய்யாது தன் அமிர்த கலையினால் நன்மை செய்வது நிலாக்கதிர்.

**மூரன்றயாழ் ஒலி** - யாழ் முரலும் என்பது மரபு. முரலுதல் மெலிந்தவோசை பரப்புதலைக் குறிக்கும். "மூக்கே நீமுரலாய்" என்பது காண்க. சுரங்களின் நல்லமைதியினால் இனிய சொற்போலப் பேசும் திறமுடையது யாழ் ஆதலின் இயங்களிற் சிறந்ததென்ப.

**திருவடி நீழல்** - திருவருள் நிறைவு.

**வெய்ய நீற்றறை - அருள் ஆகிக் குளிர்ந்ததே** - தூல உடம்பினால் அனுபவிக்கப் படும் இன்பத் துன்ப மோக மயமான இந்த உலக அனுபவங்கள் முதல்வனையே தொழு திருந்தலினால் இவ்வாறு ஒன்று வேறொன்றாக மாறுதலுங் கூடுமோ ? எனின், கூடும். என்னை ? பருவுடம்புக்கு நுண்ணுடம்பு முதலியன முதற்காரணங்களாம். உலகிற்கு முதற்காரணமாகியது மாயை. உயிர் ஆணவமலத்தோடு நிற்கும் காலத்து அதற்கு இருவினைக்கீடாகத் தநு - கரணம் - புவனம் - போகங்களை அந்த மாயை தன்னிடத்தி லிருந்து தோற்றுவித்து நல்கும். உயிர் அம்மலத்தினின்று நீங்கிச் சிவனருளொடு கலந்து நிற்கும் காலத்துக், கண்ணொளிக்குப் பொருள்களைக் காட்டிநின்ற விளக்கொளி, ஞாயிற்றினொளியிற் கண்ணொளி கலந்து நின்றபோது, தானும் அந்த ஞாயிற்றி னொளியினுள் அடங்கி அவ்வொளியேயாய் நிற்றல்போல, அம்மாயை மாயேயங்களும் சிவனருளில் அடங்கி அவ்வருண்மயமேயாகி நிற்கும். உயிர் திருவருள் மயமாக நிற்பின் அவ்வுயிர்க்கு இடமாகிய தநு கரணங்களும் அவைபற்றி வருவனவும் அருண் மயமாகுமென்பது "மாயை மாமாயை மாயா வருமிரு வினையின் வாய்மை, யாய வாருயி ரின்மேவு மருளினி லொளியாய் நிற்கும்" என்பதனாற் பெறப்படுதல் காண்க. ஆன்மா பசுவென்னும் பெயர் நீங்கி முத்தனாய் அருளொடுங் கூடிநின்ற வழி, அவ் வான்மாவின் வியாப்பியமான மாயை முதலியனவும், திரோதான சத்திபோலப், பாச மென்னும் பெயர் நீங்கி அருளேயாய் நிற்கும் என (சிவஞானபோதம் - 2-ம் சூத் - 2 அதி) மாபாடியத்துள் மாதவச் சிவஞான முனிவர் விரித்துரைத்ததூம் காண்க. 8-ம் சூத்திரம் 2-ம் அதிகரணத்துள் "முதல்வனுக்குத் திருமேனியாகிய சைதன்னியம் முதல்வனைச் சார்ந்து அவ்வண்ணமாய வழி அவ்வுடம்பும் அவ்வா றருண்மயமே யாகலின்" என்றதும் அறிக. "துரியத்தைச், சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளும், ஆக்கியிடு மன்பர்க் கவன்" (களிறு - 69), "கொல்கரியி னீற்றறையி னஞ்சிற் கொலைதவிர்த்தல், கல்லே மிதப்பாய்க் கடனீந்தல் — நல்ல, மருவார் மறைக் காட்டில் வாச றிறப்பித்தல், திருவாமூ ராளி செயல்" (71) என்று இதனைத் திருக் களிற்றுப்படியாருள் விளக்கியதும் இங்குவைத்துக் கருதுக.

"ஈண்டுவரும் துயருளவோ வீசனடியார்க்கென்று, **பூண்ட மன நேர்நோக்கி** முதல்வனையே தொழுதிருந்த நாயனாருக்கு, முன்னை வினை யாவும் முடிந்து தூயராக் கப்பட்டமையால், நீற்றறையாகிய மாயாகாரியம் இறைவனதருளேயாக நின்றதன்றி அதன் காரியமாகிய ஐம்புலன்கட்படும் ஐம்பூத விடயமாகிய இன்பத் துன்ப உணர்ச்சி புலப்பட்டிலது. ஆதலின் அவை யாவும் அருண் மயமாகிய குளிர்ச்சியினையே காட்டின. ஆதலின் **அருள் ஆகிக் குளிர்ந்ததே** என்றார்.

மனநோயும் உடல் நோயும் உடையார்க்குப் பொருள்களினியல்பு மாறுபட்டுக் காணும். "வெண்மதி போன்றிலை தண்மதி" (311), "சந்தின் றழலைப் பனிநீ ரளவித் தடவும் கொடியீர்" (321) என்றவை காண்க. அவ்விடத்து நம்பிகளும் இவ்வாறே "எந்தை யாரருள் இவ்வணமோ?" (310) என்றதனையும் உன்னுக. பித்தநோய் கொண்

டார்க்கு யாவுங் கைப்பாகும் தன்மையும் காண்க. நோய்பொருந் சாவதனை வேண்டி நஞ்சுண்டார் சாவாது அதனால் நோய் நீங்கிப் பிழைத்தலும், வாழ்வதற்காக அமுத முண்டார் அதுவே பயனாகச் சாதலும் உலகிற் காண்பேம். இவற்றால் புத்தியின்கண் நிகழும் அறிவு, பொருளியல்பு திரியாமலே, நுகர்வோரதியல்பு திரிந்தமையால் மாறு படும் என்பது விளங்கும். அங்கித்தம்பனை வல்லார்க்கு அங்கிசுடாதிருத்தலையும் காண் கின்றோம். மனவசீகர நூல்வல்ல ஆசிரியனால் தன்வயப்படுத்தப்பட்ட ஒருவனுக்கு ஆசிரியன் வருத்தவழித் தீச்சுடாமையும், தீயல்லாதவை தீப்போலச் சுடும் உணர் வுண்டாக்குதலையும் காண்கின்றோம். காளிகட்ட நகரில் (Calcutta) அங்கித்தம்பனம் வல்ல ஒருவன் தன்மேன் முழுதும் அனல் மூட்டப்பட்டு அரைநாழிகை அளவு அதன் கீழ்த் தங்கியிருந்து பின் ஊறின்றி எழுந்த செய்தியும் காண்பேம். "கனன் மேலிருக்க லாம், தன்னிகரில் சித்திபெறலாம்" என்று இதனைச் சித்தர்கணம் என்ற பகுதியில் வைத்துப் பேசினார் தாயுமானார். இவையெல்லாம் எண்வகைச் சித்தின்பாற்படும். "திண்டிறற் சித்தர்களே கடைக்கூழைச் சென்மின்கள்" என்று படையெழுச்சியிற் சித்தர்களுக்குக் கடையிடம் வகுத்தனர் வாதவூரடிகள். இங்கு நாயனார் பாற்பட்டது இந்தத் தாழ்ந்த தரமான சித்துவகையன்று. பின் என்னையோ? எனின், "கொற்றவ னெதிரிடை யெரியினி லிடவிவை கூறிய, சொல்" என்ற சொல்லினாற்றலால் ஆளுடைய பிள்ளையார் பாண்டியனது சபை முன்பு எரியினில் இட்ட ஏடு வேவாமல் நின்றது மட்டுமன்றிப் பசுமையும் புதுமையும் பயந்து நின்றது. அதன் காரணத்தை "இளமுலை யிணையவை குலவலின் - நாமமே - எரியிடிலிவை பழுதிலை" என்று பிள்ளையார் திருவாக்கு விளக்குகின்றது. அந்தப் பதிகம் 'போகமார்த்த பூண்முலையா' ளாகிய மலைமகள் பாகத் தட்டமூர்த்தியைப் பொருளெனவுடைமையாலும், அது இடப் பட்ட தீ, இறைவனது அட்ட மூர்த்தங்களுள் ஒன்றாகி நிலவுதலாலும் வேவா தாயிற்று என்று அக்கருத்தை விளக்கினர் ஆசிரியர். அவ்வாறே இங்குக் கூடிய தென்றுணர்க.

இக்கருத்துப்பற்றியே திருவள்ளுவரும் "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின், வகைதெரிவான் கட்டே யுலகு" என்று நீத்தார் பெருமையினை உலகம் அவர் கண்ணதாய் நடக்கும் என்று விரித்தனர். "இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட், டுன்ப முறுத லிலன்" என்ற உண்மை உலகத்துஏனை மக்களிடையினும் பொருந்துவதாயின், உலகத்தைவிட்டு இறைவன்பாற் பதிந்த நெஞ்சுடையார்பால் மிகப் பொருந்து மன்றோ?

**ஐயர் திருஅருள் ஆகி** - என்ற கருத்தும் இது. இங்கு நாயனார் நீற்றறையினையும் அதன் தன்மைகளையும் கண்டார்; ஆயின், அடிநிழலை நேர்நோக்கினார்; அது அவர்க்கு அத்தன்மைத்தே யாகியது என்க. "பிணையுங் கலையும்வன் பேய்த்தே ரினைப்பெரு நீர்நசையா, லணையு முரம்பு நிரம்பிய வத்தமு மையமெய்யே, யிணையு மளவுமில் லாவிறை, யோனுறை தில்லைத்தண்பூம், பணையுந் தடமுமன் றேநின்னொ டேகினென் பைந்தொடிக்கே" (202), "...எங்கோன், றண்கடம் பைத்தடம் போற்கடுங் கானகந் தண்ணெனவே" (220) என்ற திருக்கோவையார்க் கருத்துக்கள் இங்குச் சிந்திக்கத் தக்கன.

திருவருளின் வழிநின்றமைந்து இத்தகைய அருள் வெளிப்பாடுகளின் நுட்பங் களை இவ்வாறு கண்டுணரமாட்டாதார் தமது பருப்பொருளாராய்ச்சியின் துணையே கொண்டு இடர்ப்பட்டொழிவர்.

மேல்வரும் நஞ்சூட்டுதல், யானையினை இடறவிடுதல், கல்லிற்பூட்டிக் கடலில் விடுதல் என்றவற்றிலும்,அவற்றின் மேல்வரும் சரித அற்புத விளைவுகளிலும் இவ்வாறே

உண்மை கண்டுகொள்க. "பாலைநெய்தல் பாடியதும் பாம்பழியப் பாடியதுங், காலனையன் றேவிக் கராங்கொண்ட - பாலன், மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தங், கரணம்போ லல்லாமை காண்" (திருக்களிறு - 7) என்று ஞானசாத்திரம் இவற்றின் நுட்பத்தை விளக்கிற்று.

அடிநீழலே, வீணையும் - மதியமும் - தென்றலும் - இளவேனிலும் - பொய்கையும் போன்றது என்ற தேவாரத்துக்கு, நீற்றறையே திருவடி நீழலருளாகி, இளவேனிற் பருவத்துத் தென்றலணைந்து, நில வலர்ந்து, யாழ் ஒலியினதாய், உள்ள தடம்போன்று குளிர்ந்தது என்று தொடர்பாக்கி உரை செய்தனர் ஆசிரியர். அத்தேவாரத்தினுள் வரும் உம்மைகள் எண்ணும்மைகள்போலக் காணப்படினும், அவ்வாறன்றி, ஒரு பொருண்மேற் றொடர்புகொண்ட அடைகளாய் நிற்குமியல்பினைக் காட்டிய நயங் கண்டுகொள்க.

தென்றலை—மொய்யளி—என்பனவும் பாடங்கள். 98

திருச்சிற்றம்பலம்  தனித் திருக்குறுந்தொகை

மாசில் வீணையு மாலை மதியமும், வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே, ஈச னெந்தை யிணையடி நீழலே  1

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்;
உறவு கோனட் டுணர்வு கயிற்றினுன், முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே.  10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இத்திருப்பதிகம் நாயனார் பாடலிபுத்திர நகரில் நீற்றறையி னுள்ளிருந்து அருளிச் செய்தது. நீற்றறை குளிர்ந்த திருப்பதிகம். ஒரு தலத்தின் பேரால் அருளப்படாதது பொதுப்பதிகம் எனப்படும். இதுபோலவே, பின்னர், அமணர் களால் தூண்டப்பட்டுப் பல்லவ அரசன் யானையை ஏவியபோது அச்சபை முன்னர்ப் பாடிய "சுண்ணவெண் சந்தனச் சாந்து" என்ற திருப்பதிகமும், அவ்வாறே கல்லி னோடு பூட்டிக் கடலினுள் புகவிடப்பட்டபோது நடுக்கடலினுள் பாடிய "சொற்றுணை வேதியன்" என்ற திருப்பதிகமும் ஒரு தலத்தினைப் பற்றாது பொதுப்பதிகங்களாய் எங் குஞ் செறிந்து நிறைந்த இறைவனை நேர் நோக்கி அந்நிறைவினுள் நிறைந்த சிவஞான நிறைவினால் உணர்ந்து பாடியருளப்பட்டன. ஆயினும் அவை திருவதிகைப் பதிகங்க ளுள் தொகுக்கப்படத் தக்கவை. இவ்வாறே ஆளுடைய பிள்ளையார் பாண்டிய அரச னுடைய சபை முன்னர் சுரவாதத்தில் அருளிய "மந்திர மாவது நீறு" என்ற திருப் பதிகமும், புனல் வாதத்தில் வையையாற்றின் கரையினில் அருளிய "வாழ்க வந்தணர்" என்ற திருப்பாசுரத் திருப்பதிகமும் பொதுப் பதிகங்களாய்ச் சரித நிகழ்ச்சிகளை வலியுறுத்துமாறும் கண்டு கொள்க. இப்பதிக முழுதினும் சைவ சித்தாந்தத்தின் பல உண்மைகளும் பொதிந்து விளங்குகின்றன.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) இத்திருப்பாட்டினை 1363ல் விரிவுரை செய்த னர் ஆசிரியர். நீற்றறை அடிநீழலாகிக் குளிர்ந்ததே எனச் சரிதங் குறித்தது காண்க. மாசில் - சுர இலக்கணங்களிற் சிறிதும் வழுவாது முழுதும் நிரம்பிச் சொல்லை மிழற்றும் இயல்புடைய. இதனை "முரன்றயாழ் ஒலி" என்றனர் ஆசிரியர். மாலை மதி - முழுமதி. "மொய்யொளிவெண் ணிலவலர்ந்து", மாலை வருதற்கு முன்னும் பின்னுமாகத் தோற்றப்படாமல் மாலைவரு நேரமே முழுதும் தோற்றப்படும் மதி - முழுமதி. வீசு - மணங்கொண்டு வீசும். மூசுவண்டறை பொய்கை - வண்டுகள் நீர்ப்பூக்களிற் றேன் உண்டு பண் பாடுதலின் இதனை "தண்கழுநீர்த் தடம்" என்

ரூர் ஆசிரியர். மூசுதல் - மொய்த்தல். அறைதல் - பொருளுள்ள பண்பாடுதல். "சேறுடு செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு சிவந்த வண்டு, வேறுரிய வுருவாகிச் செவ்வழிநற் பண்பாடும் மிழலை" என்றது காண்க. ஈசன் எந்தை - உலகுக்கெல்லாம் இறைவன்; எமக்குச் சிறப்பா யருள்பவன். எந்தை - தம்மையும் தம்மை வழிப்படுத்திய தமக்கையாரையும், சிவன்வழி நிற்கும் அடியாரையும் உளப்படுத்தியது. நீழலே - ஏகாரம் தேற்றம். "சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர் துன்னு நிழலாவன......ஐயாற னடித்தலமே" என்ற கருத்தினை ஈண்டுச் சிந்திக்க. —(2) நமச்சிவாயவே-ஏகாரம் பிரிநிலை. தேற்றமுமாம். சிவன்றிருநாமமே. "ஆலைப் படு கரும்பின் சாறு போல வண்ணிக்கு மஞ்சேழுத்தி னுமத்தான் காண்" என்றபடி நாயனூர் அன்று திலகவதியார் தமக்கு ஓதியருளி வழிப்படுத்திய திருவைந்தெழுத்தினில் அழுந்தி நின்றனர் என்பது. நானறி விச்சையும் என்றது காண்க. அறி - அறிவிக்க, அறிந்த. விச்சை - விஞ்சை - வித்தை - மந்திரம். நா நவின்றேத்தும் - அறிவிக்க அறிந்து கொண்டமையால் அதனையே எனது நாவானது பயின்று கொண்டுள்ளது. "படைக்கல மாகவுன் னுமத் தெழுத்தஞ்செ னுவிற் கொண்டேன்" என்றதும் காண்க. ஏத்தும் - இடைவிடாது - எப்போதும். "நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே" (நம்பிகள்). நன்னெறி - ஞானம். 1306 பார்க்க. விச்சை அறிந்தேன்; நா பயின்றது; அது நன்னெறி காட்டும்; அதுவே கல்வியும் ஞானமுமாம் என்று தொடர்பு செய்க. காட்டும் - இன்றும் இனியும். கல்வியும் ஞானமும் - கல்வி வேறு; ஞானம் வேறு. கல்வி ஞானத்துக்கு ஏது. ஞானம் - சிவனை அறிந்து அடையச் சாதனமாவது. "சீரார் நமச்சிவாயஞ் சொல்ல வல்லோம்", "முன்ன மவனுடைய நாமங் கேட்டாள்...அவனுக்கே பிச்சியானாள்...தலைப்பட்டா ணங்கை தலைவன் றாளே" என்ற கருத்துக்கள் காண்க. தாளினில் தலைப்பட்டமையால் அடி நீழல் அருளாகிக் குளிர்ந்திருந்தது என்பது.— (3) ஆளாகார் - இது முதல் ஐந்து திருப்பாட்டுக்கள் உலகத் துயிர்களை நோக்கி இரங்கிக் கூறியருளிய அருளுபதேசம். ஆளாதல் - அடிமைப்படுதல். ஆள் - அடிமையாள். ஆளாகார்......உய்யார் - சிவனுக்காளாகாமலும் அவனடியார்க் காளாகாமலும் கழியும் உலகர். "அடியார்க்கு மடியேன்" (நம்பிகள்). "அடி, யுளங்கொள் வார்தமை யுளங்கொள் வார்வினை யொல்லை யாசறுமே" (மிழலை-ஈரடி - 2) என்ற கருத்து. அடைந்துய்யார் - சிவனுக்காளாயின வழியும் அதன் பயனுய் உய்திபெறுதல் அவனடியாரை யடைந்து அவர்க்கு ஆட்செய்தவழியே கூடுவதாம் என்பது. அடியாரை அடைந்துய்ந்த சரிதங்கள் பலவும் புராணத்தினுட்காண்க. மீளா......நிற்கிலார் - சிவனுக்கும் அடியார்க்கும் ஆட்செய்யும் வகை. மெய்ம்மை - சத்தாகிய இறைவனது தன்மை. நிற்றல் - பிறழாமை. தோளாத......செவி - சுரை-செவிப்பொறிக்கு மெய்பற்றி வந்த உவமம். தோளாத - சிவனது வேள்வியாற் றுளைக்கப்படாத - கேள்வி - புகாத செவி. "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற் றோட்கப் படாத செவி" (குறள்). தொழும்பர் - பெத்த நிலையினும் முத்தி நிலையினும் என்றும் பதிக்கு அடிமையேயாயிருக்கும் உயிர். வாளா......கழிவர் - இரக்கக்கூற்று. பெற்ற வாழ்நாளையும் உடம்பையும் வீணே போக்கி. மண்ணுகி - மண் முதலிய ஐம்பூதங்களுடன் சேர்ந்து.—(4) நடலை - வஞ்சனை. சுடலை - சுடுகாடு. சுடலை சேர்தல் - இறத்தல் குறித்தது. சொற்பிரமாணமே - ஏகாரம் எதிர்மறை. சத்தப்பிரமாணத்தாற் பெறற்பாலதன்று; காட்சிப் பிரமாணத்தால் அனுபவமாகக் காணற்பாலதே. கைவிட்டால் - கை - உபசர்க்கம் என்பர். கைவிடுதல் காத்தோம்புதலை நீங்குதல். "என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக், கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே" என்றபடி நிற்கும் உயிர்ப்பு நீங்குதல். உடலினர் - ஆர்விகுதி

இகழ்ச்சிக் குறிப்பு. முன்னர்ப் பலவாறும் அபிமானஞ் செய்து ஓம்புதற்கிடமாய் நின்ற உடல். ஊர் முனி பண்டம் - ஊரால் முனியப்படும் அசுத்தப்பொருள். மூன்ற னுருபு தொக்கது. முனி - செயப்பாட்டுவினை.— (5) பூக்கைக்கொண்டு - பூக்களைக் கையில்கொண்டு. கைக்கொண்டு - உரிய பூக்களைத் தெரிதல் - தேர்தல் - தேடுதல் - அமைத்தல் - சாத்துதல் முதலிய எல்லாம் கொள்க. அலமந்து - வருந்தியுழன்று. காக்கைக்கே யிரையாகி - இறந்து சுடலை சேர்க்கப்பட்ட பிணங்களைக் காக்கைகள் பிடுங்கித் தின்னும். "முதுகாட்டிற் காக்கை யுகக்கும் பிணம்", "சுடலை சேர்வது" என்ற கருத்தைத் தொடர்ந்து கூறியவாறு.— (6) குறிகள் - சிவன் வெளிப்பட்டருளும் குறியிடங்கள். இவை குருவின் திருவுருவமும், அடியார் வேடமும், சிவலிங்கமும் என்பன. அடையாளம் - சிவனுந்தன்மை காண உள்ள சுவடுகள். 'சடாமகுடத் திருத்துமே......அரையார்க் கும்மே - அவனுகி லதிகைவீ ரட்ட னுமே' என்பனவாதியாக அடையாளத் திருத்தாண்டகத்திற் பேசப்படுவன. "தோண்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்றன்" முதலியனவாகக் கூறிச், "சேர்வானைக் கண்டாள் கொல்லோ" என்ற கழிப்பாலை (காந்தாரம்) த்திருப்பதிகக் கருத்தும் காண்க. "அடையாளம் படவொருவ னடித்த" என்ற திருவிளையாடல் (மண்சு - பட - 79) காண்க. கோயில் - சிவன் விளங்க வீற்றிருக்குமிடம். இவை சிவாலயங்களும் அடியார் அகங்களுமாம். "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்" திருமந்திரம்; "காலையு மாலையுங் கைதொழு வார்மன, மாலய மாரு ரரனெறி யார்க்கே", "என்னுள்ளங் கோயி லாக்கி" (ஆரூர் - காந்தாரம் - 2) அரசுகள்; "நேய மலிந்தவர் வேடமு, மாலயந் தானு மரனெனத் தொழுமே" (சிவஞானபோதம்). நெறிகள் - சரியையாதி சிவநெறி கள் நான்கு. நின்றதோர் நேர்மை - இவற்றுள் அன்புடையார்க்கு விளங்கியும் ஏனை யோர்க்கு விளங்காமலும் நிறைந்துள்ள தன்மை. நின்ற - நின்ற திருத்தாண்டகம், திரு வுருத்திர முதலியவற்றுட் கூறுமாறு எங்கும் எவற்றினும் நிறைந்து நின்றும், இவ்விடங் களில் விளங்க நின்றும் உள்ள தனிப்பண்பு. ஓர் - நினைந்து காணத்தக்க என்ற குறிப்பும் காண்க. ஆரணம் - சிவன் மொழி; வேதசிவாகமங்கள். பொறி - அறிவை உட்புகக் கொள்ளும் வாயில். ஓதினும் உட்புகவிடாமையின் என்கோல் என்றார்.— (7) வாழ்த்த...தலைவன் - தலை - வாய் - நெஞ்சு என்றவற்றைத் தலைவன் மக்களுக் குக் கொடுத்த கருத்துக் கூறப்பட்டது. வாழ்த்த - வாழ்த்தலேயன்றி வேறென்றற்கு மன்று. பிரிநிலை ஏகாரம் தொக்கது. இவ்வாறே ஏனைய இரண்டுங் கொள்க. சூழ்த்த - சூழ எங்கும் உள்ள - இறைவனுல் சூழ வைக்கப்பட்ட. சூழ்ந்த என்பது சூழ்த்த என் றாயிற்று எனக்கொண்டு, நிறைந்த என்றலுமாம். "பூவுண்டு நீருண்டு" (திருமந் திரம்). நெடுங்காலம் வீழ்த்தவா - பலகாலம் வீண்போக்கிய மதிதான் என்னே! ஆ - ஆறு. ஏ - ஏகாரம் இரக்கங் குறித்தது.— (8) எழுதுபாவை நல்லார் - சித்திரத் தெழுதியது போன்ற பண்புகள் அமைந்த பெண்கள். உழுதசால் வழியே உழுவான் பொருட்டு-அனுபவித்த பொருள்களையே வெறுப்பின்றி மீள அனுபவித்தற் பொருட்டு. இழுதை - அறிவின்மையுடைய. இழுது - நெய்போன்று உலகபோகங்களில் உருகி என்றலுமாம்.— (9) நெக்கு நெக்கு - அடுக்கு உள்ளுடைந் துருகுதலின் மிகுதி குறித் தது. நினைக்குந்தோறும் மனம் நெகிழ்ந்து. நெக்கு - நெகு என்ற பகுதி ஒற்றிரட்டித்து இறந்தகாலங்குறித்தது; புகு - புக்கு என்பதுபோல. புக்கு நிற்கும் - வெளிப்பட விரும்பி வீற்றிருத்தலையும், நக்கு நிற்பர் - மறைந்து நிற்றலையும் குறிக்கும். நாணி என்பது விளக்கமின்றி என்ற பொருளில் வந்தது.—10) முன்பாட்டிற் சொன்னபடி இறைவன் நிற்கு நிலையுணர்த்திற்று இத்திருப்பாட்டு. விறகில் தீயும், பாலில் நெய்யும், மணியில் ஒளியம் மறைந்து நிற்பன: கோலும் கயிறும்கொண்டு கடைதலால் அவை வெளிப்படு

வன. மறைந்து நிற்கும் இறைவனை வெளிப்படக் காண்பது உறவு கோலினை நாட்டி, உணர்வு கயிற்றினால் முறுகக் கடைதலால் ஆகும். உறவு - சித்தென்னுஞ் சாதி பற்றிய உரிமையன்பு. உணர்வு - குரவனுணர்த்தியவாறு சிவஞானங் கண்ணுகக் கொண்டறிவதாகிய சாதன ஞானம். முன்நிற்கும் - வெளிப்பட்டருளும். "தன்னுணரு நேசத்தார் தம்பா னிகழுந் ததிநெய்போல்" (சிவஞான போதம் - 12. சூத்) "திருக் கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே, யுருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கு முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும், விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோல் மந்திரத்தின் வந்துதித்து மிருஞ்சுரபிக் கெங்கும், உருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி யொழுகுவதுபோல் வெளிப்பட் டருளுவனன் பர்க்கே" (சித்தியார் - 12. 4). அவர் நின்றதோர் நேர்மை என்பது விளக்கப்பட்டது.

இத்திருப்பதிகத்தினால் அரனடி நீழல் என்னும் சிவாநந்த சிவபோக விளைவும், அதனை அடையும் சாதனமுமாகிய மந்திரமும், ஆட்படும் நெறியும், அரனைக்கண்டு வழிபடுமிடங்களும், வழிபடும் வகையும், வழிபடுங்கால் விடப்படுபவையும், அன்பின் திறமும், அதற்கு அரன் வெளிப்படு நிலையும் ஆகிய சைவ சித்தாந்தத்தின் உண்மைகள் பலவும் உணர்த்தப்பட்டன.

1364. மாசின்மதி நீடுபுனன் மன்னிவளர் சென்னியனைப்,
பேசவினி யானை,யுல காளுடைய பிஞ்ஞகனை,
யீசனை,யெம் பெருமானை, யெவ்வுயிருந் தருவானை,
யாசையிலா ராவமுதை, யடிவணங்கி யினிதிருந்தார். கூகூ

(இ - ள்) வெளிப்படை. குற்றமில்லாத மதியும், நீடும் கங்கையும் நிலைபெறப் பொருந்தி வளர்தற்கிடமாகிய சென்னியையுடையவனைப், பேசுதற்கு இனியவனை, உலகங்களை யெல்லாம் ஆளாகவுடைய பிஞ்ஞகனை, ஈசனை, எமது பெருமானை, எல்லா வுயிர்களையும் தோற்றுவிப்பவனை, அன்பினில் விளையும் ஆரா அமுதத்தை, அடிவணங்கி இனிதாக இருந்தனர் (நாவுக்கரசர்).

(வி - ரை) சென்னியன் - இனியான் - பிஞ்ஞகன் - ஈசன் - எம்பெருமான் தருவான் - அமுது - என்று ஏழுவகையாற் கூறினார், நாயனார் அங்கீற்றறையினுள் ஏழுநாட்கள் வணங்கிப் போற்றியிருந்தமை காட்டுதற்கு. மாசில் என்று திருப்பதிக முதற்குறிப்புத் தந்து எடுத்தமையும் இக்கருத்துப் பற்றியது.

மாசின்மதி நீடுபுனல் மன்னிவளர் - மதியும் புனலும் பொருந்தியும் வளர்ந் தும் இருத்தற்கிடமாகிய. மதி - வளர் - என்றும், புனல் மன்னி என்றும் எதிர் நிரனிறையாகக் கூட்டுக. குறைந்து வந்த மதிவளர்தலும், ஆயிரமா முகத்தோடு ஆர்த்துப் பெருகி இழிந்து போந்த கங்கைப்புனல் பனிபோலாகச் சிறுத்து நிலைபெறுத லும் சிவபிரானது சென்னியில் நிகழ்ந்தன என்று புராணங்களுட் கேட்கப்படும். மதி அமிர்தகலையுடையது. கடலில் விடம் எழுந்தபோது மதியின் கலை பாய்ந்ததால் விட்டுணு உய்ந்தார். "நிலாத்திங்கட் டுண்டப் பெருமாள்" (கச்சி -). வெய்ய நீற்றறை யதுதான் ஐயர் திருவருளாகிக் குளிர்ந்ததாதலின், அதனகத்து இருந்த நாய னார்க்கு இறைவனது திருமுடியின் கண் நிறைந்து வளர்ந்த குளிர்ச்சி தரும்பொருள்க ளிரண்டும் புலப்பட, அத்தகைய சென்னியனைப் போற்றினர் என்பது.

பேச இனியான் - "நினைத்தொறும் - பேசுந்தொறும் எப்போதும், அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரிபவன்" ஆதல் குறிப்பு. "நமச்சி வாயவே நாநவின் றேத்துமே", "நாக்கைக் கொண்டர னாம நவிற்றிலார் - காக்கைக் கேயிரை யாகிக்

கழிவரே", "வாழ்த்த வாயும்...தந்த தலைவனைத்...துதியாதே, வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே", "தொழுது போற்றி நின்றேனை" என்று முன்னர்த் திருப்பதிகத்துட் பேசினாராதலின் அந்த இனியானைப்பெற்று வணங்கி யினிதிருந்தார் என்பது.

**உலகு ஆளுடைய பிஞ்ஞகனை** - உயிர்களை எல்லாம் ஆளாக உடைய என்க. ஆளாக உள்ளவர்களைக் காக்கும் கடமைப்பாடும் கருணையும் உள்ளவன் என்பது குறிப்பு.

**ஈசன்**-இறைமையுடையோன். காரண இடுகுறியாகிச் சிவபிரானையே குறிப்பது.

**எம்பெருமான்** - எல்லா வுயிர்களையும் ஆளுடையவனாய் எல்லாருக்கும் ஈசனேயாயினும் எமக்குச் சிறப்பாயுரியவனான தலைவன் என்றபடி.

**எவ்வுயிருந் தருவான்** - தருதல் - தோற்றுவித்தல். காத்தல் என்றலுமாம். எவ்வுயிர் எத்தன்மைத்தாய் எங்கிருப்பினும் அவ்வவற்றுக்குள்ளும் உயிராய் அங்கங்கும் நின்று அளிப்பவன். "யோனிபேதம், நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிராயங்கங்கே நின்றான்" என்பது பிள்ளையார் திருவாக்கு. "கருப்பைக்குண் முட்டைக்கும் கல்லினுட் டேரைக்கும், விருப்புற் றமுதளிக்கு மெய்யன்" என்றபடி இங்கு நீற்றறையினுள்ளிருக்கும் உயிரையும் அளிப்பவன் என்பதாம்.

**ஆசையில் ஆரா அமுது** - ஆசையில் வந்த உண்ணத் தெவிட்டாதஅமுது போன்றவர். ஆசை - இங்கு அன்பு குறித்தது. "அன்பினில் விளைந்த ஆரமுதே" என்பது திருவாசகம். அமுது போன்றவரை அமுதென்றார். உவம ஆகுபெயர். அமுது மரணம் வராமற் செய்வது என்ற குறிப்பு. ஆரா என்பதை ஆசைக்கு அடைமொழியாக்கி ஆராஆசை - என்றும் நிறைவாகாத ஆசையாய் உண்ணப்படும் என்றுரைப்பினுமமையும்.

**அடி வணங்கி.** "அடிநீழலே" என்ற திருப்பதிகக் குறிப்பு. "மாசின்மதி" முதற் குறிப்பாதல் போல இஃது ஈற்றுக் குறிப்பாதல் காண்க.

**இனிதிருந்தார்** - நீற்றறையி னுள்ளிருந்தார்க்கு அவ்வெப்பமில்லா திருந்தது யன்றி, மிக்க இன்பமும் கூடிற்று என்பதாம். அடியடைந்தார்க்குப் பாச நீக்கமும், சிவப்பேறும் என இரண்டும் வருதலைச் சாத்திரங்கள் கூறுவன காண்க. இங்கே நாயனார் அடிநீழலிற்போல அமர்ந்தாராதலின் இங்கும் அவ்வாறே கூடிற்று என்க.

**அடிவணங்கி இனிதிருந்தார்** - முன்னர் "முதல்வனையே தொழுதிருந்தார்" (1362) என்றார். அது ஞானத்தில் நிகழும் சரியையினையும் கிரியையினையும் குறித்தன; தத்துவசுத்தி ஆன்ம தரிசனம் விளைத்துச், சிவதரிசனம் வரை உள்ள எட்டுக் காரியங்களையும் செய்தது; இங்குக் கூறியது யோகம், ஞானம் என்ற நெறிகளைக் குறித்தன; இஃது சிவயோகம் சிவபோகம் என்ற காரியங்களைச் செய்தது. சிவயோகம் சுகப்பிரபை மாத்திரம் தருவது; சிவபோகம் பேரின்ப மாகடல். சிவயோகம் - துரியம் என்றும் சிவபோகம் துரியாதீதம் என்றும் கூறுவர். இனிதிருந்தார் என்ற கருத்துமிது. "ஈண்டு வரும் துயர் உளவோ ஈசனடியார்க்கு" என்ற முன்னையநிலை துயரும், அடியாரும், ஈசனும் என்ற மூவகை யுணர்வும் கொண்டு அறிந்து தொழுது வழிபட்டிருந்தநிலை; இங்கு இனிதிருந்தநிலை, அவ்வகை உணர்வுகள் ஒன்றுமின்றி உலகையும் தன்னையும் மறந்து அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி யிறைபணி நின்ற சிவயோகநிலை; இதனைச் சாக்கிரத்தில் துரியம்புரிதல் என்பர். "துரியத்தைச் சாக்கிரத்தே செய்தருளி" இவை சாதனமும் பயனுமாவன. இங்குக்கூறிய ஏழும் ஏழு கோடிமகாமந்திரங்களாய் ஏழுவகைப் பிறவிகளிலும் உயிர்களை ஈடேற்றுவன என்க.

இவ்வாறுள்ள ஏழுநாட்கள் சென்றதனை நாயனார் உணர்ந்தனரோ? எனின், அது பற்றிய அறிவில் அவரது உணர்வு சென்றதன்று என்க. திருகு கருந்தாட் கொளுவிச் சேமஞ் செய்யப்பட்ட நீற்றறையினுள்ளே நாயனார் இருந்தமையால் ஞாயிற்றினைச்

சுற்றும் உலகந் தன்னைச் சுற்றும் வேகத்தாற் பகுக்கப்படும் நாட்கூறுகளை உணர வாய்ப்பிலர் என்று கூறலாம். ஆனால் வெளியே சரிக்கின்ற காலத்திலும் ஞாயிற்றின் செலவு பற்றிய சிந்தனையில் ஞானிகள் சரிப்பாரல்லர். "வெம்ப வருகிற்பதன்று கூற்ற நம்மேல் வெய்ய வினைப்பகையும் பையை நையும், எம்பரிவு தீர்ந்தோ மிடுக்க ணில்லோ மெங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம்" என்பது (தனித் திருத்தாண்டகம் - 2) நாயனார் திருவாக்கு. "எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்" (19) என்ற திருவாசகமும் காண்க.

ஆனால் யோகிகள் ஞாயிற்றி னுதவியின்றியே நாட்கிழமைகளை யறியவல்லவர் என்பது "செவ்வாய் வியாழஞ் சனி ஞாயிறே யென்னு, மிவ்வா றறிகின்ற யோகி யிறைவனே" (3. 2. 44) என்ற திருமந்திரத்தால் விளங்கும். "கரவி லுள்ளமாம் விசும்பிடைக் காசற விளங்கும், பரசி வச்சுடர்க் குதயமீ றின்மையிற் பகலு, மிரவு நேர்படக் கண்டிலர்" (வாதவூ - உப - பட 39) என்ற திருவிளையாடலிற் கண்ட நிலையே, நாயனார் நீற்றறையினுள் அமர்ந்து அடிவணங்கி யினிதிருந்த நிலை என்க. "சிதாதித்யோ ஹ்ருதாகாசே ப்ரதிபாதி நிரந்தரம், நாஸ்தமேதி நசோதேதிகதம் சந்தியா முபாஸ்மஹே! என்ற சுலோகத்தின் கருத்து என்ப. இனிதிருந்தல் - சிவானந்தந் திளைத்திருத்தல்.

எவ்வுலகுந் தருவானை—என்பதும் பாடம். 99

1365. ஓரேழுநாள் கழிந்ததற்பி னுணர்விலம ணரையழைத்துப்
"பாருமினி நீற்றறையை" யெனவுரைத்தான் பல்லவனுங் ;
காரிருண்ட குழாம்போலு முருவுடைய காரமணர்
தேருநிலை யில்லாதார் நீற்றறையைத் திறந்தார்கள். க00

(இ - ள்). வெளிப்படை. ஓரேழு நாட்கள் கழிந்தபின் நல்ல உணர்வில்லாத அவ்வமணர்களைப் பல்லவ அரசனும் அழைத்து, இனி, நீற்றறையினைப் பாருங்கள் என்று சொன்னான்; கருமையானது செறிந்து இருண்டு கூடிய குழாம்போல உருவினையுடைய காரமணர், தேரும் நிலையில்லாதவர்களாகி, நீற்றறையைத் திறந்தார்கள்.

(வி - ரை) ஓரேழுநாள் - ஓர் - வெறும் பெயரளவில் நின்றது. ஒன்றாகிய ஏழு என்றும், நினைப்பிற்குரிய ஏழு என்றும் உரைத்தலுமாம். ஓர்தல் - நினைத்தல். முன் பாட்டிற் கூறியபடி நாயனார் சிவபெருமானை அடிவணங்கி நினைந்திருந்த நாள் என்பதும், அந்த ஏழு நாட்களின் பெருமையை மக்கள் எண்ணி உய்வதற்குரிய நாள் என்பதும் குறிப்பு.

உணர்வில் அமணரை அழைத்து - அவர்கள் உணர்வற்றவர்கள் என்பது அவர்களது செயலினால் அறியப்பட்டதென்க.

பாருமினி நீற்றறையை - இனி - நெருப்பினாலன்றி எழுநாட் பட்டினியிலேனும் இறந்துபடுதல் நிச்சயமென்றுகொண்டு இனி என்றான்.

கார் இருண்ட குழாம் - கார் - இங்குக் கருமைப்பண்பு குறித்து நின்றது. கார் இருண்ட என்பது கருமை செறிந்து இருளினை மேற்கொண்ட என்றதாம். குழாம் - அவ்வாறு செறிந்த காரிருட் பிண்டங்களின் கூட்டம். குழாம்போலும் என்பது உருவம் பற்றிவந்த உவமமென்பார் உருவுடைய என்று குறிப்பித்தார். "இழுது மையிருட் கிருளென" (திருஞான - புரா - 678) என்றதும், 1349-ல் உரைத்தவையும் பார்க்க.

**காரமணர்** - கார் - முன்னர்க் கார் இருண்ட என்பது புற உருவும், இங்குக் கார் என்றது அக இருள் உருவாகிய மனத்தீமை செயற்றீமைகளையும் குறித்து நின்றன.

**தேரு நிலையில்லாதார்** - ஒருவகையானும் தெளியும் அறிவில்லாத அமணர் - "தெளியா தொருபொருளே பொய்யுமெய்யு மாமென்னும் புரைநெறியார்" என்றது காண்க. அவர்களது மந்திரம் உண்டு இல்லை என்று துணிவின்மையைக் காட்டுவது. வெய்ய நீற்றறையுள் ஏழுநாள் நின்ற ஒருவர் இறந்துபடுவது துணிபு என்பதிலும் ஐயப்பட்ட நிலை நின்றமை குறித்தது. இல்லாதார் - தேரும் நிலை இல்லாதவர்களாகி என்ற முற்றெச்சம் இக்கருத்துப் பற்றியது. 100

1366. ஆனந்த வெள்ளத்தி னிடைமூழ்கி யம்பலவர்
தேனுந்து மலர்ப்பாதத் தமுதுண்டு தெளிவெய்தி
யூனந்தா னிலராகி யுவந்திருந்தார் தம்மைக்கண்
"டீனந்தங் கியதிலதா மென்னவதி சய"மென்றார். கoக

(இ - ள்) வெளிப்படை. சிவானந்தப் பெருக்கினுள்ளே முழுகி, அம்பலவாணருடைய தேன்பிலிற்றும் மலர்போன்ற பாதத்தின் அமுதத்தை உண்டு தெளிவடைந்து அவ்வகையான ஊனமும் இல்லாதவராகி மகிழ்ச்சியுடன் வீற்றிருந்த நாயனாரைக் கண்டு, "கெடுதி சிறிதும் அடைந்திலதாம்! இது என்ன அதிசயம்!" என்றனர்.

(வி - ரை) ஆனந்த வெள்ளத்தினிடை மூழ்குதலாவது சிவானந்த பரபோக நிலையினுள் அழுந்தி வேறொன்றும் தோற்றாது நிற்றல். "ஆனந்த வெள்ளத் தழுந்து மொ ராருயிர் - ஆனந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கும்" (307) என்ற திருக்கோவையார்க் கருத்துக்கள் இங்குச் சிந்திக்கத்தக்கன. மூழ்கி என்றது சிவபோகநிலை. ஏனைய ஆனந்தங்கள்போல மறுகுதலும் மாய்தலும் பின்னர் வருத்தஞ் செய்தலுமின்றி மேன்மேற் பெருக நிகழ்வதாம் என்பார் **ஆனந்த வெள்ளம்** என்றார். "பூமருகு சிவானந்தப் பெருக்காறு போத" (திருஞான - புரா - 95) என்றது காண்க.

**தேன் உந்து மலர்ப்பாதத்து அமுது** - தேனுந்துதல் - தேனைச் சொரிதல். இனிமை பயத்தல் என்பதும் குறித்தது. தேனுந்து மலர் - தேனுந்து பாதம் - தேனுந்து அமுது எனக்கூட்டி உரைக்க நின்றது. **பாதம்** - அருள்நிறைவு ; **அமுது** - அதனாற் பெறப்படும் பேரின்பம். இறப்பும் பிறப்பும் நீக்கி யின்பமளித்தலின் அமுது என்றார். **அமுது** - "ஆராவமுது" 1364 பார்க்க. இணையடி நீழலே வீணையும் மதியமும் தென்றலும் இளவேனிலும் பொய்கையும் போன்றதே என்ற உறைப்பினில் அழுந்தி நின்றாராதலின் **பாதத்தமுது உண்டு** என்றார். அமுது என்றதற்கேற்ப உண்டு என்றார். உண்டு என்பது உபசாரம். தடத்தே மூழ்கி அமுதினை நிறைய உண்டு வீற்றிருக்கும் உலக நிலைக்கு எதிர்நிலையான சிவநிலை. சிவப் பேற்றினை அமுது என்று கூறுதலுமுண்டு. உபநிடதங்களில் அமிர்தம் - முத்தியின்பத்துக்கு வழங்கும்.

**தெளிவு எய்தி** - நீற்றறையினுட்புகுந்த நிலைக்கும், அங்கு ஓர் ஏழுநாட்கள் கழிந்தபின் அமணர் கண்ட நிலைக்கும் உள்ள வேற்றுமையாவது முன்னையினும் தெளிவு அடைந்திருந்தமையே என்பது. தெளிவு திருப்பாதத்து அமுது உண்ட காரணத்தாலாகியது என்பார் **அமுதுண்டு தெளிவெய்தி** என்றார். உண்டு - காரணப் பொருட்டாய் வந்த வினையெச்சம். அரனடி யடைந்தோர்களே தெளிவெய்தியவர் என்பதும், ஏனையோர் தெளியாதார் என்பதும், முன்னர் அமணர்களைத் **தேரு நிலையில்லாதார்** (1365) என்றதனாலு முணர்த்தப்பட்டது.

ஊனம் - கேடு. கெடுதி. தான் - ஒரு சிறிது தானும் என்ற பொருளில் வந்தது. முற்றும்மை தொக்கது. உவந்திருந்தார் - அமணர்கள்தாம் எண்ணியிருந்தபடி இறந்தார் எனப்படாது இருந்தார் என்றதனோடமையாது, மேலும், உவந்தும் இருந்ததனைக் கண்டார்.

ஈனம் - கேடு. அதிசயம் - "அதிசயங் கண்டாமே" என்றபடி அமணர் அதிசயம் கண்டு, இஃது ஒரு பேரதிசயம் என வியப்படைந்தனர். என்ன அதிசயம்! - ஆச்சரியக் குறிப்பு. பயனிலை தொக்கது.

தம்மைக்கண்டு—தங்கியதிலதால்—என்பனவும் பாடங்கள். 101

1367. "அதிசயமன் றிது ;முன்னை யமண்சமயச் சாதகத்தால்
இதுசெய்து பிழைத்திருந்தா" னெனவேந்தற் குரைசெய்து,
"மதிசெய்வ தினிக்கொடிய வல்விடமூட் டுவ"தென்று
முதிரவரும் பாதகத்தோர் முடைவாயான் மொழிந்தார்கள். ௧௦௨

(இ - ள்) வெளிப்படை. "இஃது அதிசயமன்று; முன்பு சமண சமயச் சார்பினாற் பெற்ற சாதகத்தால் இதனைச் செய்து சாவாது பிழைத்திருந்தான்" என்று அரசனுக்குச் சொல்லி, "இனி, மதியாற் செய்யக் கடவது, கொடிய வலிய நஞ்சினை இவனுக்கு ஊட்டுவித்தலேயாகும்" என்று, மேன் மேலும் முதிர்ச்சியடையவுள்ள பாதகத்தவர்கள் நாற்றமுடைய தமது வாயால் எடுத்துச் சொன்னார்கள்.

(வி - ரை) இது அதிசயம் அன்று என்க. முன்னர் "என்ன அதிசயம்" என்று அமணர் கூறியது அரசன் ஏவல்வழி நீற்றறையைத் திறந்தபோது அவ்விடத்தில் அது கண்டவுடன் தமக்குத் தாமே கூறியது; இங்கு அதிசயம் அன்று என்று அதற்கு மாறுபடக்கூறியது அரசன் முன்பு அவர்கள் தமது உண்மைக் கருத்தை மறைத்து வஞ்சனையாற் கூறியது. உண்டு - இல்லை என்னும் தமது மந்திரத்துக்கேற்ப இவ்வாறு மாறுபடக் கூறுதலும் நிகழ்ந்தது காண்க.

சாதகம் - மந்திரசாதகம். இதுசெய்து - நீற்றறையினுள் வேவாதிருத்தலைச் செய்து. இரண்டனுருபு தொக்கது.

மதிசெய்வது - மதியால் நினைந்து செய்யப்படும் செயல். படு விகுதி தொக்கது.

கொடிய வல் விடம் - அடைமொழிகள் எவ்வாற்றானும் விலக்க முடியாத வலிமை குறித்தன. இயற்கையாலே கொல்லுந்தன்மையுடைய நஞ்சினுக்கு மேலும் செயற்கையானும் கொடுமையையேற்றி வலுப்படுத்தினர்.

செய்வது - ஊட்டுவது என்று முடிக்க. பெயர்ப்பயனிலை.

முதிரவரும் பாதகத்தோர் - சிவாபராதமாகிய பெரும்பாதகத்தை மேன்மேலும் செய்ய உள்ளவர். மேல்வரும் நிகழ்ச்சிகளையும் குறித்தது.

முடைவாயால் - வாயாற் சொல்லத்தகாததனைச் சொன்னதனால் முடைவாய் என்றார். பல் துலக்கினால் புழுக்கள் சாம் என்றுகொண்டு பல்லும் துலக்காமல் நாற்றமுடைய வாயினையுடையார் என்றதுமாம். புழுவையும் கொல்வோ மல்லேம் என்ற கொள்கை புறத்துக் காட்டுவோர், அந்த வாக்கினாலே பாதகமாகிய கொலையினைச் சொன்னார்கள் என்ற குறிப்பும் காண்க. வாயாற் சொல்லவுந்தகாதது என்றதாம்.

கடிய வல்விடம்—என்பதும் பாடம். 102

1368. ஆங்கதுகேட் டலுங்கொடிய வமண்சார்பாற் கெடுமன்னன்
ஓங்குபெரு மையலினு "னஞ்சூட்டு" மெனவுரைப்பத்
தேங்காதார் திருநாவுக் கரசரையத் தீயவிடப்
பாங்குடைய பாலடிசி லமுதுசெய்யப் பண்ணினார். ௧௦௩

(இ - ள்) வெளிப்படை. அங்கு அதனைக் கேட்டலும், கொடிய அமணர்களது சார்பினாற் கெடுகின்ற மன்னவனும், மிகும் பெரிய மயக்கத்தினாலே, 'நஞ்சினை ஊட்டுங்கள்' என்று சொல்லப், பகைமை பூண்டார்களாகிய அமணர்கள் திருநாவுக்கரசரை அந்தப்படியே தீய நஞ்சு கலந்தமைத்த பாற்சோற்றை உண்ணும்படி செய்தனர்.

(வி - ரை) கொடிய அமண் சார்பாற்கெடும் மன்னன் - இவ்வரசன் தன்னியல்பினாற் கெடுமதியுடையவனன்று; தீய சார்பினால் கேடுற்றனன் என்பதாம். பின்னர் இவன் தனது பழவினை ஒழியச், சமணர்மொழி பொய்யென்றுகண்டு, மெய்யுணர்ந்து சைவத்திறத்தை யடைந்து பணிசெய்தமை 1411—1412-ல் உரைக்கப்படுவது காண்க. அக்குறிப்புப்படச் சார்பாற்கெடும் என்றார். கெடும் என்றது மேலும் இரு முறையும் கேடு உறுபவன் என்று குறித்தற்கு.

ஓங்கு பெரும் மையல் - ஓங்குதல் - மேலும் பெருகுதல். இதன் பின்னரும் இரு முறை அந்த மயக்கம் கடத்தற்கரியதாய் மன்னவனைப் பிணித்துக் கேடுசெய்விக்க வல்லதாயினமை குறித்தது. பெரு மையலாயினமையால் வஞ்சனை - பொய் - கொள்கை முரண் - நீதித்தவறு முதலியவற்றை யுட்கொண்ட சூழ்ச்சிகளைக் காணமுடியாதபடி ஆக்கிற்று என்க. மையல் - உண்மை தோன்றாதபடி மயக்கம் செய்வது; பெரும்பித்தநோய் - வல்விடம் முதலியவை தலைக்கேறியபோது அறிவை மறைப்பது போல் இங்குச் சமணரிடம் வைத்த மிதமிஞ்சிய நம்பிக்கை அரசனது உண்மை உணரும் சத்தியைக் கவர்ந்து மயக்கிற்று.

"நஞ்சு ஊட்டும்" என உரைப்ப - இங்குச் சமணர் அரசனைத் தம்வயமாக்கி மயக்கி, அம்மயக்கம் காரணமாக அவன் வாக்கினின்றும் ஆணை பெறுவதும், தம்மிச்சையே செய்யினும் அரசாணையின்படி புரிவதாகக் காட்டுவதும் குறிக்கத் தக்கன. கொலை செய்தாரைத் தண்டிப்பது வேந்தனுடைய கடனாயிருப்பவும் இங்கு அவன் வாக்கினாலே ஒருவரை நஞ்சூட்டிக் கொலை செய்யும்படி சொல்லச் செய்தலினால் அது பெரு மையலின் செயல் என்க. இவ்வாறே கூன்பாண்டியனைத் தம்வயப் படுத்திய அமணர்கள் திருவாலவாயில் பிள்ளையாரிருந்த திருமடத்தில் தீயைக் கொளுவும் செயல்புரிய அரசனாணை பெறுவதும் கருதுக. (திருஞான - புரா - 689) பார்க்க.

தேங்காதார் - பகைவர். தேங்குதல் - கூடுதல் - அணைதல். "தேங்கார் திரிபுரம்" (திருநெய்த்தானம் - திருவிருத்தம்). தேங்குதல் - ஏங்குதல் எனக்கொண்டு அச்சமில்லாதார் - தீயனசெய்யத் தியங்காதார் என்றலுமாம்.

திருநாவுக்கரசரை - அமுத வாக்குடையவரை அத்திருவாயினுள் அமுத மூட்டுதல் தகுதியாக இருப்பவும், அதற்கு மாறாக விடமூட்டினர் என்பது குறிக்க இப்பெயராற் கூறினார்.

அத்தீய விடப்பாங்குடைய பால் அடிசில் - அகரச் சுட்டு, முன்பாட்டிற் "கொடிய வல்விடம்" என்றதனைக் குறித்த முன்னறி சுட்டு. பாங்குடைய என்றது கலந்து அமைத்த என்ற பொருளில் வந்தது. பால் அடிசில் - பால் கலந்து சமைத்த சோறு. இது பாயசம் என வழங்கப்படும். பாற்சோறு என்பது தமிழின் பழவழக்கு. "பாற்சோ றாக்கி" (தனிப்பள்ளி - நேரிசை) என்ற நாயனார் திருவாக்குக் காண்க.

திருநாவுக்கரசினை—என்பதும் பாடம்.　　103

1369. "நஞ்சுமமு தாமெங்க ணாதரடி யார்க்"கென்று
வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளக்குந் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமண ரிடுவித்த பாலடிசின் மிசைந்திருந்தார்.　　கஉச

(இ - ள்) "செஞ்சடையார்...திறலுடையார் - சிவந்த சடையினையுடைய சிவபெருமானது சீர்களை உலகில் விளங்கச்செய்யும் வன்மையுடைய நாயனார்; வஞ்சமிகு ...அறிந்தே - வஞ்சனையே மிகுந்த மனமுடைய அமணர்களது செயலால் வஞ்சனையாலமைக்கப்பட்ட தென்றறிந்தே; நஞ்சும்...என்று - "எமது நாதருடைய அடியார்களுக்கு நஞ்சும் அமுதமே யாகும்" என்ற உறுதிப்பாடுடையவராய்; வெஞ்சமணர் ......மிசைந்திருந்தார் - கொடிய சமணர்கள் இடச்செய்த பாற்சோற்றை உண்டு ஊனமின்றியிருந்தனர்.

(வி - ரை) நஞ்சும்......என்று - இது அப்போது நாயனார் மனத்துக்கொண்ட உறுதிப்பாடு. அப்போது அவர் பாடியருளிய தேவாரப் பதிகத்தின் உட்குறிப்பு என்றலுமாம். அத் திருப்பதிகம் சிதலரித்துப்போனவற்றுள் மறைந்தது தமிழுலகும் சைவ உலகும் செய்த தவக்குறை போலும்! "நஞ்சு மமுதா மங்கலம் புகினே" என்று பிறிதோர் பொருள்பற்றிப் பாட்டியனூலார் உரைத்ததுவும் கருதுக.

வஞ்சம் மிகு நெஞ்சுடையார் - அமணர். "வஞ்சனை தெரிந்து சித்திரிப்பார்" (1347) என்று தொடங்கிய அவர்களது வஞ்சனை பின்னரும் அதிகரித்து மேற்செல்ல நின்றமையால் மிகும் என்றார். இஃது புதிதாய் உண்டாயினதன்று; அவர்களது மனத்தினுட் டங்கிக்கிடப்பதாயும் அவர்களது சமய இயல்பாயும் உள்ளது என்பது. "நல்வினை யுடைய நீரார் நஞ்சுணி னமுத மாகும்-அல்லதே லமுது நஞ்சாம்" (சீவக) என்னும் அவர்தம் சமயக் கோட்பாட்டினையும் அவ்வமணர் உணராமற் செய்தது வஞ்சமிக்க மதவெறி என்க.

நெஞ்சுடையார் வஞ்சனை ஆம்படி அறிந்தே - நெஞ்சுடையார்களுடைய வஞ்சத்தினால் செய்யப்பட்ட படியினை அறிந்தேயும் என்று ஆறனுருபும் இரண்டனுருபும் விரித்துரைத்துக்கொள்க. அறிந்தே - அறிந்தேயும் என உயர்வு சிறப்பும்மை தொக்கது. அறிந்தும் - மிசைந்து என்று கூட்டிமுடிக்க. அறிந்தது திருவருளினாற் கூடிற்று. அதனால், "நாத னடியார்க்கு நஞ்சும் அமுதமாம்" என்று துணிந்தனர்.

செஞ்சடையார் - சிவபெருமான்.

சீர்விளக்கும் திறலுடையார் - (ஆதலின்) - மிசைந்து - இருந்தார் என்று காரணப் பொருளில் வந்த பெயர். சடையாரின் சீராவது - தீமைதானு நன்மையாப் பயப்பதுவும், அடியார்க்கெளியராங் கருணைப் பெருக்குமாம்.

சீர்விளக்குதல் - நஞ்சுண்டும் ஊனமின்றி இருத்தலால் உலகறியச் செய்தல். "நாணிலமண் பதகருடன், ஒன்றியமன் னவன்சூழ்ச்சி திருத்தொண்டி னுறைப்பாலே, வென்றவர்" (அப்பூதி - புரா - 13) என்று அப்பூதியடிகள் கொண்டு வணங்கி உய்ந்ததும், மற்றும் உலகர் அறியநின்றதும் காண்க.

திறல் - பிறர்க்கு அரிதாகிய வல்லமை.

விடத்தால் இடுவித்த - விடங்கலந்து அமைத்து உண்ணுமாறு இடும்படி செய்த. அமணரின் அறிவு மயக்கம்போல் உருபுமயங்கக் கூறினார்.

வெஞ்சமணர் - கொலைக்குற்றம் செய்யத்துணிந்த கொடியோர்.

மிசைந்து இருந்தார் - மிசைந்தும் இறவாது இருந்தனர். சிறப்பும்மை தொக்கது. மிசைதல் - விரும்பி உண்ணுதல். இருத்தல் - உயிர்வாழ்ந் திருத்தலேயன்றி மேன்மை பொருந்த இருத்தலும் குறித்தது.

கிரேக்க நாட்டில் சாக்கிரடீசு என்ற ஒரு பெரிய அறிவாளிக்கு அவரது பகைவர் நஞ்சு ஊட்ட, அவர் அமைதியாக உண்டார்; அதுபோல நமது அரசுகளும் மன அமைதியுடன் உண்டனர் என்று இங்கு ஒப்புமுறை ஆராய்ச்சி செய்வாருமுண்டு.

" பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டு பவர் " என்பது குறள். இங்கு நாயனார் நஞ்சுண்டது அதுபோன்றதன்று. நாதரடியார்க்கு நஞ்சு அமுதமே யாகும் என்ற அணியும் திருத்தொண்டின் உறைப்புமே இங்கு முன்னின்றதும், ஏனையோர்க்கு அஃதில்லாமையும் அறிக. கிரேக்க நாட்டு அறிஞன் அவ்வாறு நஞ்சுண்டு இறந்தொழிந்தமையும் காண்க. இறவாதொழியினும் அடிமைத் திறம்பற்றிய இத்திருவருட் செயலோடு ஒப்பிடுந்திறத்தன பிற இல்லை. தெய்வத் திருவருள் கைவரப்பெறுது செத்துப்போன வேற்று மக்களைச் சிவானந்தப் பெருவாழ்வுடைய சீவன் முத்தரோடு செயலால் ஒப்புக்கூறுதல் வேண்டாதசெயல் என்க.

நஞ்சமுதமாமெங்கள்—சீர்விளங்கும்—என்பதும் பாடம். 104

பதிகக் குறிப்பு:—செல்லரித்து மறைந்த பதிகங்களுட்பட்டு அஞ்ஞான்று நாயனார் பாடியருளிய பதிகம் மறைந்தது. அதன் உட்குறிப்பு ஆசிரியரால் " நாதனடியார்க்கு நஞ்சும் அமுதாம் " என்பதாம் என்று அறிவிக்கப்பட்டது. இவ்வாறே "ஈண்டுவருந் துயருளவோ வீசனடி யார்க்கென்று...ச...தாணிழலைத் தலைக்கொண்டே" (1362) என, " இணையடி நீழலே " என்ற பதிகக் குறிப்பினையும், " வீரட்டர்தம் மடி யோநாம் அஞ்சுவ தில்லையென் றென்றே " (1381) என " உடையார் ஒருவர் தமர்நா, மஞ்சுவதியா தொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை " என்ற பதிகக் குறிப்பினையும், " எப்பரிசாயினு மாக வேத்துவ னெந்தையை யென்று......அஞ்செழுத்துந் துதிப்பார் " என " நற்றுணை யாவது நமச்சி வாயவே " என்ற பதிகக் குறிப்பினையும் ஆசிரியர் எடுத்துக்காட்டி உணர்த்தியவை காண்க. இத்திருப்பதிகம் மறைந்துபட்டதாயினும் " துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே, யஞ்செழுத் தோதி ஞானு மரனடிக் கன்ப தாகும், வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா வமணர் தந்த, நஞ் சமு தாக்கு வித்தார் நனிபள்ளி யடிக ளாரே " (திருநேரிசை - 5) என்ற நாயனாரது திருவாக்கு, இப்பதிகத்துக்கு அகச்சான்றாகவும், பதிகக்குறிப்பினை எடுத்துக் காட்டுவதாகவும் விளங்குகின்றது. வஞ்சனைப் பாற்சோறு - என்ற இக்குறிப்பை ஆசிரியர் " வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே " என்றருளினர். வழக்கிலா அமணர் - கொல்லாமை என்ற அறமாகிய தமது சமய கொள்கையின் வழக்கிலும், அது வன்றி உலகியல் அறத்தின் கொள்கை வழக்கிலும் நில்லாதவமணர்.

துஞ்சிருள் - காலை - மாலை - மூன்று சந்திகள் - " தெரிகாலே மூன்று சந்தியானித்து வணங்க நின்று, திரிகாலங் கண்ட வெந்தை திருச்செம் பொன்பள்ளியாரே " (நேரிசை - 7), " சந்தி மூன்றிலும் தாபர நிறுத்திச் சகளிசெய் திறைஞ்சு " (நம்பிகள் - தக்கேசி - திருநின்றியூர் - 5), "முட்டாத முச்சந்தி" முதலியவை காண்க. தொடர்ச்சி - முன்னைத் தொடர்பு. அஞ்செழுத்தோதுதல் - திருநீற்றை யஞ்செழுத்தோதி அம்மையார் கொடுத்தாராதலின் அதனையே கடைப்பிடித்தமை குறிப்பு. கல்லிற்பிணித்துக் கடலிடையிட்டபோது அருளிய பதிகமும் காண்க.

1370. பொடியார்க்குந் திருமேனிப் புனிதற்குப் புவனங்கண்
முடிவாக்குந் துயர்நீங்க முன்னைவிட மமுதானாற்
படியார்க்கு மறிவரிய பசுபதியார் தம்முடைய
வடியார்க்கு நஞ்சமுத மாவதுதா னற்புதமோ ? கoடு

(இ - ள்) வெளிப்படை. திருநீறு விளங்கும் திருமேனியினையுடைய புனிதராகிய இறைவருக்கு, உலகங்களை யெல்லாம் அழிக்கவல்ல துன்ப நீங்கும்படி முன்னை விடமானது அமுதமாகுமாகில், யாவர்க்கும் அறிவரிய தன்மையராகிய பசுபதியாருடைய அடியார்க்கு, நஞ்சு அமுதமாவதும் ஒரு அற்புதமாகுமோ ? (ஆகாது).

(வி - ரை) போடி ஆர்க்கும் திருமேனி - போடி - திருநீறு. "காடுடைய சுடலைப் பொடிபூசி" (பிள்ளையார் - நட்டபாடை. பிரமபுரம் - 1), "பொடிநுகரும் சிறுத்தொண்டர்க் கருள்செய்யும் பொருட்டாக" (பிள்ளையார் - பழந்தக்கராகம். செங்காட்டங்குடி - 10). ஆர்த்தல் - விளங்குதல். ஊழிக்காலத்தில் உலகம் எல்லாம் அட்ட சாம்பல் அப்போது அழியாது எஞ்சிநின்ற இறைவன் திருமேனியில் விளங்குவதா மென்பர்.

புவனங்கள் முடிவாக்கும் துயர் - தேவர்களு மசுரர்களும் பாற்கடல் கடைந்த போது எழுந்த ஆலால நஞ்சம் உலகங்களை எல்லாம் அழிக்கவல்லதாய்ப் பரந்துவந்த துன்பம். முன்னைவிடம் - பெருநஞ்சு. முன்னை - முன்னாள் என்றலுமாம். ஆனால் - ஆயிற்று என்பது உண்மையேயாகில்.

யார்க்கும் படி அறிவரிய என்க. யார்க்கும் - அவனருள் காட்டக்காணாத பிறர் எவர்க்கும். படி - தன்மை. இன்னபடி என்ற இயல்பு. "இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே" என்ற நாயனாரது திருவாக்குக் கருதுக.

பசுபதியார் - பசுக்களாகிய உயிர்களுக் கெல்லாம் தலைவர். முன்பு புனிதர்என்ற அந்த என முன்னறிசுட்டுத் தொக்கது.

பசுபதியார் தம்முடைய அடியார் என்றதனால் முழுமுதலாகிய சிவனது காவலின்கீழ் அடிமைபூண்டு உள்ளவர்களாதலின் அத்தலைவனாற் காக்கப்படுவர் என்பது.

அற்புதமோ? ஓகாரவினா எதிர்மறை குறித்தது. அற்புதமன்று; இயல்பேயாம் என்றபடி. தலைவனது தன்மையே அடியவரும் பெறுவர் என்பது குறிப்பு. அற்புதமோ? என்றது ஈண்டு ஆச்சரியப்படத்தக்க அசாத்தியமான செயலோ? என்ற பொருளில் வந்தது.

அறிவரிதாம்—என்பதும் பாடம். 105

1371. அவ்விடத்தை யாண்டவர சமுதுசெய்து முன்னிருப்ப
"வெவ்விடமு மமுதாயிற்" றெனவமணர் வெருக்கொண்டே
யிவ்விடத்தி லிவன்பிழைக்கி லெமக்கெல்லா மிறுதி"யெனத்
தெவ்விடத்துச் செயல்புரியுங் காவலற்குச் செப்புவார், கOசு

1372. நஞ்சுகலந் தூட்டிடவு நஞ்சமயத் தினில்விடந்தீர்
தஞ்சமுடை மந்திரத்தாற் சாதியா வகைதடுத்தான்;
எஞ்சும்வகை யவற்கிலதே லெம்முயிரு நின்முறையுந்
துஞ்சுவது திட"மென்றார் சூழ்வினையின் றுறைநின்றார். கOஎ

1371. (இ - ள்) வெளிப்படை. ஆண்ட அரசுகள் அந்த விடத்தினை அமுது செய்தும் அவர்கள் முன்னே ஊறின்றியிருக்கவே, "கொடிய விடமும் அமுதமாயிற்றே" என்று அமணர்கள் வெருக்கொண்டவர்களாகி, "இங்கு இவன் சாதலின்றிப் பிழைப்பானேயாகில் எமக்கெல்லா மிறுதி நேர்ந்தேவிடும்" என்று துணிந்து, பகைவர்களிடத்துச் செய்தொழிலை இங்குச்செய்யும் காவலனுக்குச் சொல்லுவார்களாய், கOசு

1372. (இ - ள்) வெளிப்படை. நஞ்சினைக் கலந்த பாற்சோற்றை ஊட்டியிடவும், நமது சமயத்திற் கண்ட விடந்தீர்க்கும் பற்றுக்கோடுள்ள மந்திரத்தினால், அதன் பயன் விளையாதபடி தடுத்துவிட்டான்; அவனுக்கு எஞ்சும்வகை யில்லாவிடில், எங்களுயிரும் உனது அரசாட்சி முறையும் அழிவது திண்ணம்" என்று தீமையை யறியும் வஞ்சகத்தொழிலின் வழியில் நின்ற அமணர்கள் சொன்னார்கள். கOஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

1371. (வி - ரை) முன் இருப்ப - ஊறின்றி என்பது சொல்லெச்சம். முன் - இறந்துபடுவார் என்றெண்ணிய அவர்கள் முன்பு. இருப்ப - இறவாது உயிருடன் இருக்க.

அவ் விடம் - விடங்கலந்த அந்தப் பாற்சோறு என அகரம் முன்னறிசுட்டு.

வெருக்கொண்டே - திடுக்கிட்டு; அஞ்சி. "வெருக்கோ ளுற்று" (260) என்ற விடத் துரைத்தவை பார்க்க.

இவ்விடத்தில்......என - இந்த அடி முற்றுமோனை. இவ்விடம் - இவன் - என்ற அண்மைச்சுட்டுக்கள் சாதலைச் செய்யும் நச்சரவுபோலப் பெருந்தீமை யொன்று தம்மை மிக அணுகிநிற்பதென்று கொண்ட அவர்களது அச்சமிகுதியான உணர்ச்சி குறித்தன. இறுதி என்ற கருத்துக் காண்க.

இறுதி - இறுதி பயப்பதனை இறுதி என்றார். உபசாரம். (இறுதி) நேர்ந்தேவிடும் என்பது சொல்லெச்சம்.

தெவ்விடத்துச் செயல் புரியும் காவலன் - தெவ் - பகைமை. மாதவரையும் தன்கீழ் வாழ்வாரையும் காக்கவும், பகைவரைக் கடியவும் கடமை பூண்டவன் காவலன் எனப்படுவான். "மாநிலங் காவல னாவான்......அறங்காப்பா னல்லனோ?" (121) என்றது காண்க. இங்கு இம்மன்னவன் கடியும் தொழில் ஒன்றனையே மேற்கொண்டவன் என்பது. உற்றுரை மற்றாராகக் கொண்டு தெவ்விடத்துச் செய்யும் தொழிலை மேற்கொண்டனன் என்பதும் குறிப்பு. இங்கு இவ்வாறு நின்றனன்; பின்னர் அவனே "ஆண்ட அரசினைப் பணிந்து" (1411) செயல் புரிபவன் என்பதும் தொனி. தெவ்விடத்துச் செய்யவேண்டிய செயலை இவ்விடத்துப் புரியும் என்க.

செப்புவார் - செப்புவாராகி. முற்றெச்சம். செப்புவார் - என்றார் என மேல் வரும் பாட்டுடன் முடிக்க. 106

1372. (வி - ரை) ஊட்டிட - உண்ணச்செய்ய. "அமுதுசெயப் பண்ணினார்" (1368).

விடம்தீர் தஞ்சமுடை மந்திரத்தால் - தஞ்சமுடை - பற்றுக்கோடாகவுள்ள - விடம் தீர்வு வேண்டுபவர்கள் தஞ்சமாகக் கொள்ளும் - மந்திரம். மந்திரத்தால் - மந்திரத்தின் உதவியினால். மந்திரம் - மந்திரத்தினாற் பெறும் பயன் குறித்தது.

சாதியாவகை - சாதித்தல் - சார்ந்து பலன் தருதல். சாதியா - விடம் சார்ந்து தனது தொழிலைச் செய்யாத. எஞ்சும் வகை - எஞ்சுதல் - குறைதல் - மீதமாகுதல். இங்குத் தம்மிடத்து நின்றும் - இவ்வுலகினின்றும் - நீங்குதல் குறித்தது.

எம்முயிரும் - துஞ்சுவது திடம் - என்றது சமயச் சோர்வுபடவரும் காலத்து வலிதாய் உயிர் துறக்கும் அவர்களது சமய வழக்குக் குறித்தது.

நின்முறை - துஞ்சுவதுதிடம் - என்றது "உன்னுடைய நிலைநின்ற தொல்வரம்பின் நெறியழித்த" (1354) என்று தொடங்கியதனைப் பின்பற்றிக் கூறியதாம். அரசனாற் காக்கப்பட்ட சமய நெறியை அழித்தல் அரசநெறியை அழித்ததாகு மென்பது.

துஞ்சுவதுதிடம் - துஞ்சுதல் - இங்கு அழிதல் என்ற பொருளில் வந்தது. அமணர்களை யறியாமலே திருவருளால் அவர்களது வாக்கில் வைத்துப் பின்னிகழ வுள்ள உண்மை வெளிப்படுதல் காண்க. இது குறிப்பு என்னும் அணி. முன் உரைத்தவை பார்க்க. துஞ்சுதல் - இறத்தல் என் அமங்கலக் குறிப்புப்பட நிற்பதும் குறிக் கொள்க.

சூழ்வினை - தீமையினை எண்ணிச்சூழும் வஞ்சகத்தொழில். சூழ்ச்சியும் - வினையும் இங்கு வஞ்சகமாகிய தீய சூழ்ச்சியினையும் தீவினையையும் குறித்தன.

துறை நின்றார் - வஞ்சனை தெரிந்து சித்திரிப்பார்" (1347) என்று தொடங்கிய தனையே தொடர்ந்து செய்து அவ்வழியில் நின்றவர். நின்றார் - நின்றாராகிய அமணர். வினையாலணையும் பெயர் சுட்டுப்பெயராய் நின்றது. இவ்வாறன்றி, வினைமுற்றாகவே கொண்டுரைப்பினு மமையும்.

நிரைமறையும்—நும்மறையும்—துஞ்சுமது—என்பனவும் பாடங்கள். 107

1373. மற்றவர்தம் மொழிகேட்டு மதிகெட்ட மன்னவனுஞ்
"செற்றவனை யினிக்கடியுந் திறமெவ்வா" றெனச்செப்ப,
வுற்றவரு "மந்திரசா தகநாங்க ளொழித்திடநின்
கொற்றவயக் களிற்றெதிரே விடுவ"தெனக் கூறினார். கo அ

(இ - ள்) வெளிப்படை. மற்று அவர்களுடைய சொல்லைக்கேட்டு, மதிகெட்டவனான மன்னவனும், "நமது நெறியை அழித்த அவனை இனித் தண்டிக்கும் திறம் எவ்வாறு?" என்று கேட்க, உற்ற அவர்களும், "மந்திர சாதகங்களை நாங்கள் நீக்க, உனது வெற்றியுடைய வலிய யானையை அவன் முன்னே விட்டு இடறச்செய்வதுவே செய்யத்தக்க உபாயம்" என்று சொன்னார்கள்.

(வி - ரை) மதிகெட்ட மன்னவனும் - ஒருமுறைக்' கிருமுறையும் அவர்களது சொல் பயனற்றுப் போதலைக்கண்டும் அவர்களுடைய சூழ்ச்சியினுட்பட்டு உண்மையறிந்து கொள்ளமாட்டாது மயங்கி மதியிழந்து நின்றதனால் மதிகெட்ட என்றார். கேட்டுச் - செப்ப என்று கூட்டுக. கேட்டு - அஞ்சுவது திடம் என்ற சொல்லைக்கேட்டு.

கேட்டுக் - கெட்ட என்றுகூட்டி மதிகெடுதலுக்குக் காரணம் கூறியதாகக் கொண்டுரைத்தலுமாம்.

செற்றவனை - நமது நெறியை என்பது அவாய் நிலையான் வந்தது. "நின்முறையும்" என முன்பாட்டிற் கூறியதும், "தொல்வரம்பி னெறியழித்த" (1354) என்றதும் காண்க.

இனிக்கடியும் திறம் - இனி என்றது முன்னர்ச்செய்த இரண்டு திறமும் வலியில்லா தொழிந்தமையின் அவ்வாறு ஒழியாத வகையில் இனிச் செய்வது என்ற குறிப்புப்பட நின்றது. கடியும் என்றது தண்டிக்கும் என்ற பொருள்தரினும், இங்கு உயிர் போக்குதலாகிய கொடுந்தண்டம் குறித்தது.

உற்றவர் - உற்ற அவர் என்பது உற்றவர் என நின்றது. அரசன் தனக்கு உற்றவராகக் - நன்மை புரிபவர்களாகக் - கொண்ட அவர் என்பது குறிப்பு. உற்ற - கற்றுக் கொண்ட, அரு - அரிய - என்றது இராமநாத செட்டியா ருரைக்குறிப்பு.

மந்திர சாதக நாங்கள் ஒழித்திட - "மந்திரத்தாற் சாதியா வகைதடுத்தான்" (1372) எனத் தாமே கூறினர்களாதலின், அவ்வாறு உள்ள மந்திர பலத்தினை எவ்வாறு தடுப்பது என அரசன் ஐயப்படாதபடி, அதனை நாங்கள் அதற்கெதிர் மந்திரங்களால் தடுத்து விடுவோம் என்று பின்னர்க் கூறப்போகும் தமது தண்டச்சொல்லை முகவுரைப் படுத்திக்கொண்டனர். ஒரு மந்திரத்தின் பலத்தை அதனினும் பெரியதொரு மந்திரம் போக்கிவிட வல்லது என்பது நமது நாட்டில் பெரியோர் கைகண்ட முறை. கந்தபுராணத்தில் உயுத்த காண்டத்தில் வரும் பல போர்களிலும் இம்முறையைக் காணலாம். "வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம்" என்ற பட்டினத்தடிகள் திருவாக்கு இதனைக் கருதியது. "ஆதிமந்திர மஞ்செழுத் தோதுவார் நோக்கு, மாதி

ரத்தினு மற்றைமந் திரவிதி வருமே" (திருஞான - புரா - 698) என்பதூம் காண்க. சமணர்கள் மந்திரம் முதலிய கலைஞானங்களில் வல்லவர்களாயினமையால் அறிவில்லா மக்களை இவ்வாறு மயக்க வல்லவராயினர் என்க.

ஒழிந்திட - நீக்க. அவரது மந்திர சாதகத்தை வலியிலதாகச் செய்ய. ஒழிந்திட - என்பது பாடமாயின், நாங்களே மந்திரவலிமையாற் செய்யக்கூடியதாயினும் போதிய காலமின்மையால் அதனை நாங்கள் செய்யாதொழிய என்று உரை கொள்க.

களிற்றெதிரே விடுவது - மதமுடைய யானையை அவன் எதிரே விடுத்து இடறச் செய்தல். செய்யத் தக்க உபாயம் என்பது சொல்லெச்சம். மதச்செருக்குடைய யானை மந்திரத்தால் அடங்காதென்பது அவர் கருத்து என்பது இராமநாத செட்டியா ருரைக்குறிப்பு.

இடுவதேன—இடுகவேன—என்பனவும் பாடங்கள். 108

1374. மாபாவிக் கடையமணர் வாகீசத் திருவடியாங்
காபாலி யடியவர்பாற் "கடக்களிற்றை விடு"கென்னப்,
பூபாலர் செயன்மேற்கொள் புலைத்தொழிலோ னவர்தம்மேற்
கோபாதி சயமான கோலைக்களிற்றை விடச்சொன்னுன். கoகூ

(இ - ள்) வெளிப்படை. பெரும் பாவிகளுள்ளும் கடையராகிய சமணர்கள் வாகீசத் திருவடிகளாகிய, காபாலி யடியவர்மேல், "மதயானையை ஏவி விடுக!" என்று சொல்ல, உலக காவலரின் தொழில் பூண்டும் புலைத்தொழில் செய்வோனுகிய அந்த மன்னவன் கோப மிகுதியுமுடையதாகிய கொலை யானையை அவர்மேல் விடும் படி சொன்னுன்.

(வி - ரை) மாபாவிக் கடை - வஞ்சனையும், கொலையும், பாதகமும், பொறுமை யும், தமது சமயத்தினுமிழிபும் உடையாராதலின் அவர்களது கீழ்மையை இவ்வாறு எடுத்துக்கூறினுர்.

வாகீசத் திருவடி - திருநாவுக்கரசு என்ற பெயர் சூட்டப்பட்ட பேரடியவர். திரு வடி - அடிமைக்கட் சிறந்த பெரியோர்க்கு வழங்கும் சைவ மரபுப்பெயர். முனிவர். வாகீசர் - திருநாவுக்கரசர்.

காபாலி யடியவர்-காபாலி - பிரமன் தலையோட்டைக் - கபாலத்தைக் - கையில் ஏந்தியவர். சிவபெருமான். உலகம் படைக்கும் பிரமன் றலையை ஏந்தித் தாம் அழிவில்லாதிருக்கும் பெருமா னடியவராதலின் யானையினுல் அழிவின்றி இருப்பர் என்பது குறிப்பு. விடமுண்ட பெருமானடியவராதலின் நஞ்ச மமுதமாவதும் அற்புத மாமோ? என்று முன்னர்க் (1370) கூறியகருத்தையும் இங்குக் கருதுக. பூபாலர் - புவியிலுள்ள எல்லா உயிர்களையும் காக்கின்றவர். செயல் - உலகங் காவல்புரிதல். அதனை மேற்கோள் புலைத்தொழிலோன் என்றது காக்கக் கடவியனு யிருந்தும் அதனைவிட்டு நீதிமுறையில்லாத கொலைத் தொழிலைச் செய்வோன். புலைத்தொழில் - நீதியற்ற கொலை என்ற பொருளில் வந்தது. அரசர் ஒருபாற் கோடுதலில்லாது எஞ் ஞான்றும் நீதிதவறாது உலகங் காக்கக்கடவர் என்ற உண்மையினை வற்புறுத்திய ஆசிரியரது அமைச்சுரிமைக் கவித்திறம் காண்க.

கோபாதிசயமான - யாவரும் வெருட்சியடையத்தக்க மிக்க கோபம் மூண்ட தான. அதிசயம் - இங்குப் பெருமிதம் விளைக்கும் மிகுதி குறித்தது.

கோபாதிசயம் - பட்டத்து யானையின் பெயர் என்றுரைப்பாருமுண்டு, "பட்ட வர்த்தனமாம்" (561) என்றது போல. "கடலிற்புடு கடையின், முடிவிற் கனலென

முற்சின முடுகி" (1377) என்று பின்னர் விரிக்கின்றதனால் இங்கு அதன் சின மிகுதியே கூறப்பட்ட தென்பது.

**கோலைக்களிறு** - கொல்லும் செயல்புரியும் யானை. கொல்லுதலிற் பழகிய என்க. மனிதரைக் கொல்லுதல் யானையின் இயல்பன்றாதலின், கொலையிற் பழகிய யானையை விடச்சொன்னான் என்பதாம். முன்பாட்டிற் கூறியபடி அமணர்கள் " கடக்களிற்றை விடுக " என்றனரேனும் அவர்கள் சொல்லால் மயங்கி மதிகெட்ட மன்னவன் அதினின்றும் மேற்பட்ட கடுமைத்திறமுடன் கூடக் "கோபாதி சயமான கொலைக்களிற்றை விட" என, மதத்துடன் கோபமும் கொலைப்பழக்கமும் உடைய யானையை விடுக என்றனன்.

**தூலக்களிற்றை**—என்பதும் பாடம். 109

1375. கூடத்தைக் குத்தியொரு குன்றமெனப் புறப்பட்டு
மாடத்தைப் பறித்திட்டு மண்டபங்க ளெடுத்தெற்றித்
தாடத்திற் பரிக்காரர் தலையிடறிக் கடக்களிற்றின்
வேடத்தால் வருங்கூற்றின் மிக்கதொரு விறல்வேழம். ககo

(இ - ள்) ஒருவிறல் வேழம் - ஒப்பற்ற வலிமையுடைய அந்த யானையானது; கூடத்தை.........இடறி - யானைப்பந்திகளைப் பிடுங்கி, ஒரு மலைபோலப் புறப்பட்டு மாடங்களை இடித்து மண்டபங்களை எடுத்தழித்துக், குத்துக்கோற்காரர்களின் தலைகளைக் கால்வீச்சினாலிடறி; கடகளிற்றின்......மிக்கது - மதயானையின் உருவத்தோடு வருகின்றதொரு கூற்றினைவிட மிக்கிருந்தது.

(வி - ரை) வேழம் - குத்திப் - புறப்பட்டு - மறித்திட்டு - எற்றி - இடறிக் - கூற்றின் மிக்கது - என்று கூட்டிமுடிக்க.

**கூடம்** - யானைக்கூடம். கூடத்தைக் குத்துதல் யானைப்பந்தியைத் தகர்த்தல்.

**குன்றமெனப் புறப்பட்டு** - அசையா நிலையுள்ள மலை அசைந்து வருவதுபோலக் கிளம்பிவந்து. மெய்பற்றிவந்தவுவமம். **மாடம்** - வழியில் உள்ளவை; மக்கள் குடியிருப்பவை. **மண்டபங்கள்** - வழியிடைப்பட்ட பொது இடங்கள்.

**தாடத்தில்** - கால்வீசுதலினால். **பரிக்காரர்** - குத்துக்கோற்காரர்; கோல் ஏந்தி வழிவிலக்கிச் செல்வோர். எறிபத்த நாயனார் புராணம் பார்க்க.

**களிற்றின் வேடத்தால் வரும் கூற்றின்** - கூற்று - இயமன் - உடலினின்றும் உயிரைக் கூறுபடுத்திப் பிரிப்பவன். "கூறு படுத்தலிற் கூற்றெனப்படுமே" (அகத்தியம்).

**களிற்றின் வேடத்தால் வரும்** என்றது கூற்றுவன் இவ்வுலகில் மேற்கொண்டு வரும் பல உருவங்களுள் இங்கே களிற்றின் வேடத்தினால் வந்ததுபோல என்றதாம். மற்றும், உலகில் நோய் உருவிலும், பகைவர் புலி முதலிய விலங்குகள் முதலாகிய உருவிலும் வந்து உயிர்கொள்வன் கூற்றுவன். இவை உயிர் பிரிப்பதற்கு வெளிக் காணப்படும் காரணங்களேயன்றி உண்மையில் இவ்வுருவங்களுள் மறைந்து கூற்றுவனே உயிர் கவர்கின்றான் என்பது துணிபு. திருவிளையாடற் புராணத்துட் பழியஞ்சிய திருவிளையாட்டின் வரலாறு இங்குச் சிந்திக்கத் தக்கது.

**கூற்றின் மிக்கது** - அதனைவிட மிக்குக் கொடுமை காட்டிற்று என்பதாம். வினை பற்றி எழுந்த உவமம்.

ஒரு - ஒப்பற்ற. ஓர் என்று எண்ணுப் பொருளிலுரைப்பாரு முண்டு.

**மண்டபத்தை — மதித்திட்டு — மறுத்திட்டு — மிகைத்ததொரு** — என்பனவும் பாடங்கள். 110

வேறு

1376. பாசத்தொடை நிகளத்தொடர் பறியத்தறி முறியா
மீசுற்றிய பறவைக்குலம் வெருவத்துணி விலகா
ஊசற்கர மெதிர்சுற்றிட வுரறிப்பரி யுழறு
வாசக்கட மழைமுற்பட மதவெற்பெதிர் வருமால். ககக

(இ - ள்) பாசத்தொடை......முறியா - கயிற்றுப்புரியும் சங்கிலித் தொடரும் அறும்படி தறியை முறித்து; மீசுற்றிய...வெருவ - மேலே வட்டமிட்ட பறவைக் கூட்டங்களும் அஞ்சும்படி; துணிவிலகா - எதிர்க்கும் தடைகளுக்குச் சிறிதும் விலகாமல்; ஊசற்கரம்...சுற்றிட - ஊசல்போல அசையும் துதிக்கையானது முன்னேசுற்ற; உரறி - கோபத்துடன் ஒலித்து; பரிஉழறு-ஓடிக் கலக்கி; வாசக்கட மழை...வருமால் - வாசங் கமழும் மதநீராகிய மழை முன்னே பெருக மதமுடைய மலைபோன்ற யானையானது எதிரில் வருகின்றது.

(வி - ரை) பாசத்தொடை - கழுத்திற் கட்டிய முறுக்கிய கயிறு. நிகளத் தொடர் - காலிற் கட்டிய சங்கிலி. யானைகளை நடத்திச் செல்லும் வழியில் அவை துதிக்கை வீசிக் கேடுவிளைக்கா வண்ணம் கையில் ஒரு சங்கிலியைக் கொடுப்பதும் உண்டு.

மீசுற்றிய பறவைக் குலம் - அந்தயானை மதமிகுந்து செல்கின்றபடியால் பலரையும் கொல்ல நேரும்போது படும் பிணங்களைத் தின்னக் கருதிக் கழுகு முதலிய பறவைக் கூட்டங்கள் மேலே வட்டமிட்டுச் சூழ்கின்றன. குலமும் - என உயர்வு சிறப்பும்மை தொக்கது.

துணி - களிமண் ணுண்டை. துணி விலகா என்றது யானை செல்லும் வழியில் பக்கத்துள்ளோர் அது தம்மிடமாகத் திரும்பி வாராதபடி எறியும் களிமண் ணுண்டை முதலிய தடைகளுக்குச் சிறிதும் விலகாதபடி.

ஊசற்கரம் - ஊசல்போல் இங்குமங்கும் எப்போதும் ஆடிக்கொண்டிருக்கின்ற துதிக்கை. துதிக்கையை அசைத்துக் கொண்டு செல்வது யானைகளின் வழக்கம்.

பரிஉழறு - ஒரு சொல் நீர்மைத்தாய் ஓடிக்கலக்க என்ற பொருளில் வந்தது. துணிபால் விலகாத குதிரைகளை ஒன்றோடொன்று மோதும்படி தள்ளி என்றுரைப் பாருமுண்டு. பரிக்காரரை உழக்கி என்பது இராமநாதச் செட்டியார் குறிப்புரை.

வாசக்கட மழை - யானையின் மதநீர் வாசனை கமழ்வது. கடமழை - பெருகி வருவதால் மழை என உருவகம் செய்தார். முற்பட - முன்பு பெய்ய. கடம் - மதநீர்.

மதவெற்பு - மதத்துடன் கூடிவரும் ஒருமலை. வெற்புப்போல்வதனை வெற்பு என்றது உருவகம்.

யானைச்செலவு முடுகுந்திறத்தை முடுகிய சந்தவிருத்தத்தால் யாத்தது கவித்திறம்.

உதறிப்பறி—உலறிப்பறி—துனிவிலகா—துளிவிலகா—என்பனவும் பாடம்.

1377. இடியுற்றெழு மோலியிற்றிசை யிபமுட்கிட வடியிற்
படிபுக்குற நெளியப்படர் பவனக்கதி விசையிற்
கடிதுற்றடு செயலிற்கிளர் கடலிற்படு கடையின்
முடிவிற்கன லெனமுற்சின முடுகிக்கடு கியதே. ககஉ

(இ - ள்) இடியுற்று......உட்கிட - இடிபோல எழுகின்ற ஓசையினால் திசை யானைகள் அஞ்ச; அடியில்......நெளிய - காலின் மிதித்த சுவடு நிலத்தில் பொருந்தப் பூமி நெளியவும்; படர்......கடிதுற்று - ஓடுகின்ற காற்றுப் போன்ற வேகத்தில் மிக

விரைந்து சென்று; அடுசெயலில்...கனலென - அழிக்கும் தொழிலில் பொங்குகின்ற கடலினுள் ஊழிமுடிவில் எழுகின்ற வடவைத் தீயைப்போல; முற்சின முடுகி - பெருஞ்சின மிகுந்து; கடுகியதே - (அந்த யானை) வேகத்துடன் வந்தது.

(வி - ரை) இடி உற்று எழும் ஒலி - இடி - மின்னலின் தாக்கு. உற்று - உவம உருபு. எழும் ஒலி - அந்தத் தாக்குதலினால் கிளம்பும் ஓசை. இங்கு ஒலி என்றது ஐம்பூதங்களுள் வானினது சிறப்புக் குணத்தை.

திசை இபம் - திக்கசங்கள். எட்டுத் திக்குக்களிலும் உலகங்காக்க எட்டு யானைகள் நிறுவப்பட்டு உள்ளன என்பது மரபு. திசையிபம் - யானை நோக்கிவரும் அந்தத் திக்கிலுள்ள திக்குக் கசம் என்றலுமாம். உட்குதல் - அஞ்சுதல்.

அடியிற்புக்கு உறப் படிநெளிய - என்க. யானை வேகமாகச் செல்லும்போது காற்சுவடு நிலத்தில் அழுந்துதல் குறித்தது.

படர் பவனக்கதி - விசையாக அடிக்கும் காற்றின் வேகம். கதி - விசையிற் - கடிதுற்று என்ற மூன்றும் விரைவு குறித்தன. மிக்க வேகத்தில் என்றபடி.

அடுசெயலில் கிளர்கடல் எனவும், அடுசெயலிற் படுகனல் எனவும், அடுசெயலில் முடுகி எனவும் கூட்டியுரைக்க நின்றது. கிளர்கடல் - பொங்கி மேல்வரும் கடல். கடலிற் படுகனல் - குதிரை முகத்தையுடைய வடவை என்ற பேருடையதொரு தீயானது கடலின் வயிற்றினுள் அவியாது நிற்பதென்றும், அது ஊழிக் கடையில் பெருகிக் கடலையும் சுவறச்செய்து உலகை அழிப்பதென்றும் கூறுவர்.

கனலென முற்சினம் - வினைபற்றி வந்த உவமம்.

கடுகுதல் - விசையில் அணுக வருதல்.

எட்டுத்திக்கு யானைகளாவன :—கிழக்கில் ஐராவதம்; தென்கிழக்கில் புண்டரிகம்; தெற்கில் வாமனம்; தென்மேற்கில் குமுதம்; மேற்கில் அஞ்சனம்; வடமேற்கில் புட்பதந்தம்; வடக்கில் சாருவபூமம்; வடகிழக்கில் சுப்பிரதீபம் என்னும் பெயருடைய யானைகள் என்ப.

படிபுக்கற—கடிதுற்றிடு—சேலவிற்கிளர்—என்பனவும் பாடங்கள். 112

1378. மாடுற்றணை யிவுளிக்குல மறியச்செறி வயிரக்
கோடுற்றிரு பிளவிட்டறு குறைகைக்கொடு முறியச்
சாடுற்றிடு மதிறெற்றிகள் சரியப்புடை யணிசெற்
றாடுற்றகல் வெளியுற்றதவ் வடர்கைக்குல வரையே. கக௩

(இ - ள்) அவ் வடர்கைக் குலவரையே - கொலைசெய்யும் கையினையுடைய மலைபோன்ற அந்த யானையானது; மாடுற்று...மறிய - பக்கத்தில் வருகின்ற குதிரைக் கூட்டங்கள் அழியவும்; செறிவயிரக்கோடு...முறிய - திணிந்த வயிரமுடைய கொம்பினால் இரண்டு பிளவாகக் கூறுபடுத்தி அவ்வாறு இற்ற துண்டத்தைக் கையிற் கொண்டு முறியும்படியாக; சாடுற்றிடும் - அழிவு செய்யப்படும்; மதில்...... செற்று - மதிலும் திண்ணைகளும் சரியும்படிக்கு அழகு அங்கங்களை அழித்தும்; ஆடுற்று - இவ்வாறாகிய அழிவுச் செயல்களைச் செய்து; அகல்வெளியுற்றது - பரந்த வெளியிடத்திற் சேர்ந்தது.

(வி - ரை) மாடுற்று அணை இவுளிக்குலம் - மதயானை செல்வதால் இருபுறமும் வழி விலக்கிவரும் வீரர்கள் ஏறிவரும், அணிபால் விலகாத குதிரைகள். இவுளி-குதிரை.

செறி வயிரக்கோடு - முதிர்ந்து முற்றியதால் வயிரம் பாய்ந்த கொம்பு. வயிர மணிகளழுத்திய கிம்புரியினையுடைய கொம்பு என்றலுமாம்.

கோடுற்று......சாடுற்றிடும் - கொம்பினாற் குத்தி இருபிளவாக்கி அதில் ஒரு துண்டத்தைக் கையிற்கொண்டு ஏனைப்பகுதியை அழியும்படி சாடும் மதில் தெற்றி-

சாடுதல் - மோதி அழித்தல். இது, யானை மதிலையும் திண்ணையையும் அழித்த வகை. சாடும் - வினைமுற்றாகக் கொண்டு குதிரைகளை அழித்த வகையாகக் கொண்டுரைப் பாருமுண்டு. தெற்றி - திண்ணை. புடைஅணி - மதிலிலும் தெற்றிகளிலும் அழகு செய்வனவாகப் பக்கங்களில் அமைந்த அமைப்புக்கள்.

ஆடு உற்று - ஆடு - அடு என்பது முதனீண்டுவந்த தொழிற் பெயர். அடுதலைச் செய்து. அடு - அழித்தற்றொழில். ஆடல் செய்து என்பாருமுண்டு.

கைக்குலவரை - கையையுடைய மலைபோன்றது. உருவகம். கைமலை என்ப.

அணிசேன்—அளிசேற்—என்பனவும் பாடங்கள். 113

1379. பாவக்கொடு வினைமுற்றிய படிறுற்றடு கொடியோர்
நாவுக்கர செதிர்முற்கொடு நணுகிக்கரு வரைபோல்
ஏவிச்செறு பொருகைக்கரி யினையுய்த்திட வெருளார்
சேவிற்றிகழ் பவர்போற்கழ றெளிவுற்றனர் பெரியோர். கககச

(இ - ள்) பாவக் கொடுவினை...கொடியோர் - பாவம் பொருந்திய கொடிய செயல் முதிரும் பொருட்டு வஞ்சனையை மேற்கொண்டு கொலைசெய்ய எண்ணிய கொடியோர்களாகிய சமணர்கள்; நாவுக்கரசு எதிர்முற்கொடு நணுகி - திருநாவுக் கரசரெதிரே முற்படக்கொண்டு அணுகிவந்து; செறு பொரு கைக் கரியினை - பகை வரைப் போர்செய்து கொல்லுகின்ற துதிக்கையினையுடைய யானையை; கருவரை போல் ஏவி உய்த்திட - கரியமலை யொன்றினை ஏவுவதுபோல ஏவிச் செலுத்தவும்; பெரியோர் - பெரியவராகிய அரசுகள்; வெருளார் - சிறிதும் அஞ்சாதவராகி; சேவில்...தெளிவுற்றனர் - இடபத்தின்மேல் விளங்குகின்ற சிவபெருமானது பொன் னார்ந்த திருவடிகளையே தெளிந்து கொண்டிருந்தனர்.

(வி - ரை) பாவக் கொடுவினை முற்றிய - தாம் இதுவரை செய்துவந்த வஞ்சனை - பொய் - கொலை - துரோகம் முதலிய பாவமுடைய கொடுந் தீவினைகள் எல்லாம் ஒன்றொன்றாகக் கூடி முதிரும்படி. முற்றிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். முற்றிய - உய்த்திட என்று கூட்டிமுடிக்க. முதிர்ந்தமையால் என்றலுமாம்.

முற்றிய படிறு - என்று பெயரெச்சமாகக் கொண்டு கூட்டி உரைப்பினுமையும்.

படிறு - பொய். உண்மையை மறைத்துச் செய்யும் வஞ்சம். "படிற்று வாய் மொழி பலபா ராட்டி, யுள்ளத் துள்ளது தெள்ளிதிற் கரந்து, கள்ள நோக்கமொடு கை தொழு திறைஞ்சி" (திருவாரூர் - மும் - கோ. 19) என்ற திருவாக்கு இதன் தன்மையை நன்கு விளக்குகின்றது.

கருவரைபோல் ஏவி - கரியமலை ஒன்றினை ஏவுவதுபோலச் செலுத்தி. ஏவுதல்- இவரைக் கொல் என்று பயில்காட்டி விடுதல். பழக்கப்பட்ட யானைகள், ஏவுதல் மொழியறிந்து ஏவின காரியங்களைச் செய்யவல்லன. வரைபோல் - கரியினை என்று கூட்டி உரைத்தலுமாம்.

உய்த்திடுதல் - மேற்செல்லச் செலுத்துதல்.

வெருளார் - வெருளாராகி. எதிர்மறை வினைமுற்றெச்சம்.

வெருளார் - தெளிவுற்றனர் என்று கூட்டி முடிக்க. வெருளார் சே[illegible] - என்று கூட்டி வெருட்சிமிக்க இடபம் என்றுரைப்பதுமாம். வெருட்சியாவது [illegible] டயலர்பால் நிகழச் செய்வது. "அண்ண லரண்முர ணேறும்" என்ற தே[illegible]ரக் கருத்துக் குறிப்பு.

கழல் தெளிவுறுதல் - சிந்தித்து அதன் முதிர்ச்சியில் அழுந்தி நின்[illegible] தன் வயப்படுதல். "தாணிழலைத் தலைக்கொண்டே - மூண்டமன நேர்நோக்கி [illegible]ல்வ

னையே தொழுதிருந்தார்" (1362) என்றவிடத் துரைத்தவை பார்க்க. அத்தெளிவின் முதிர்ச்சியின் விளைவு 1382-ல் உரைக்கப்படுவது.

பெரியோர் - இங்குப் பிறர் எவராலும் செய்தற்கரிய செய்ல் செய்தமையின் பெரியோர் என்றார். "செயற்கரிய செய்வார் பெரியர்" (குறள்).

படிறுய்த்திடு — படிதுற்றடு—படிறுற்றிடு—கரைவரைமேல் — ஏவச்சேறு — என்பனவும் பாடங்கள். 114

வேறு

1380. அண்ண லருந்தவ வேந்த ராளைதம் மேல்வரக் கண்டு
விண்ணவர் தம்பெரு மானை விடையுகந் தேறும் பிரானைச்
"சுண்ணவெண் சந்தனச் சாந்து" தொடுத்த திருப்பதி கத்தை
மண்ணுல குய்ய வெடுத்து மகிழ்வுட னேபாடு கின்றார். ககரு

1381. வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிற்றினை நோக்கிச்
"செஞ்சடை நீண்முடிக் கூத்தர் தேவர்க்குந் தேவர் பிரானார்
வெஞ்சுடர் மூவிலைச் சூல வீரட்டர் தம்மடி யோநாம்!
அஞ்சுவ தில்லை"யென் றென்றே யருந்தமிழ் பாடி யறைந்தார்.

1380. (இ - ள்) வெளிப்படை. பெருமையுடையோராகிய அரிய தவவேந்தர், அந்த யானை தம்மேல் வருதலைக்கண்டு, தேவர்கள் தலைவராகி இடப வாகனத்தை விரும்பி ஊர்ந்து வருவோராகிய சிவபெருமானைத் துதித்துச் "சுண்ண வெண் சந்தனச் சாந்து" என்று தொடங்கும் திருப்பதிகத்தை இந்த மண்ணுலகத் தவர் யாவரும் உய்யும்படி எடுத்து மிக மகிழ்ச்சியுடனே பாடுகின்றாராகி, ககரு

1381. (இ - ள்) வெளிப்படை. வஞ்சனையுடையோராகிய அமணர்கள் ஏவி விடுத்த மதமும் கோபமுமுடைய யானையை நோக்கிச், "சிவந்த சடை பொருந்திய நீண்ட முடியினையுடைய கூத்தராகிய, தேவர்க்கெல்லாம் பெருந் தேவராகிய, வெஞ் சுடரினையும் மூவிலையினையுமுடைய சூலமேந்திய திருவீரட்டானேசுவரருடைய அடியோம் நாம்! அஞ்ச வருவதொன் றில்லை" என்றென்றே, அரிய தமிழ்ப் பதிகத் தைப் பாடியருளினார். ககசு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

1380. (வி - ரை) அண்ணல் - பெருமையுடையோர். பெருமையுடைய தவம் என்றலுமாம்.

தவ வேந்தர் - தவஞ் செய்வாருள் தலையாயவர்.

விண்ணவர் தம் பெருமான் - ஈண்டு விண்ணவர் என்றது உலகத்திற் காணப் படும் புள், விலங்கு முதலிய ஒவ்வொன்றிற்கும் அதனதன் செயலை விளைத்தற் கதிதெய்வமாகியுள்ள மந்திரத் தலைவர்களைக் குறித்தது. தம் பெருமான் என்றது அந்தந்த அதிதெய்வமாய மந்திரம் இடமாக நின்று பயன் கொடுப்பதாகிய சிவசத்தி யைக் குறித்தது. "கருடசானத் தீர்விடம் போற்றான்" (சிவஞானபோதம் - 9-ம் சூத்.) என்ற வெண்பாவின் கீழ், "ஆதி பௌதிகம், ஆதி தைவிகம், ஆத்தியான்மிகம் எனக் கருடன் மூவகைப்படும்" என்று தொடங்கி மாதவச் சிவஞானமுனிவர் உரைத்தவை இங்கு சிந்திக்கத்தக்கன. இங்கு மதயானை சினத்துடன் தம்மைக் கொல்லும்படி முன்னே வர, அதனை வென்று தணிப்பித்தற்குரிய அதிதெய்வ மந்திர உருவத்தைத் தெளிவுற்ற பெரியோர் அத்தெய்வங்களாகிய விண்ணவர்களின் பெருமானாகச் சிவனை நினைந்துகொள்வது இயல்பாகும். மேல்வரும் பாட்டிலும் "தேவர்க்குந் தேவர்பிரானார்" என்று இக்கருத்தையே தொடர்ந்து கூறுவதும் காண்க. "வண்ண வுரிவை யுடை

யும்" என்று யானை உரித்த செயல்பற்றிய குறிப்பு இத்தேவாரத்தினுட் காணப்படுவதும் கருதுக. இவ்வாறே எலும்பைப் பெண்ணாக எண்ணியபோது ஆளுடைய பிள்ளையார் "தேவதேவனை...அமுதைப் - பாவைபாகனை"ப் பரவிப் போற்றினார் (திருஞான - புரா - 1079) என்பதும் கருதுக.

விண்ணவர் தம்பெருமான் என்றது துன்ப நீக்குதலையும், விடை உகந்தேறும் பிரான் என்றது இன்பந் தருதலையும் குறித்து நின்றன. இவையே நிக்கிரகம் அனுக்கிரகம் என்றும், கோபம் பிரசாதமென்றும் கூறப்படுவன. இத்தேவாரத்தினுள்ளும் "உரிவையுடையும்" என்றதனை அடுத்து "அண்ண லரண்முர ணேறும்" என்றதும் கருதுக. "பதைத்தெழு வார்மனத் துள்ளே, கலமலக் கிட்டுத் திரியும் கணபதியென்னும் களிறும்" (5), "வேழமுரித்த நிலையும்" (9) என்பனவும் இக்குறிப்புக்கொண்டன. சுண்ணவெண்......பதிகத்தை - பதிகத்தின் தொடக்கம் குறிக்கப்பட்டது. தொடுத்த - என்ற தொடருடன் தொடங்கிவைத்த.

மண்ணுலகுய்ய எடுத்து - "இந்தப்பூமி சிவனுய்யக் கொள்கின்ற வாறு" (திருவாசகம்) என்றபடி வானிடத்தவரும் கீழிடத்தவரும் மண்ணிடத்தவராய் வந்து சிவபுண்ணியங்கள் செய்தே ஈடேற வேண்டியிருத்தலின், மூவுலகத்தவருமென்னாது "மண்ணுலகுய்ய" என்றார். மேல் கீ ழுலகரும் மண்ணுலகில் வந்த ஞான்றே இப்பயன் பெறுவாராதலின் மண்ணுலகொடு புணர்த்திக்கூறினார். அன்றியும் பொற்கழல் தெளிவுற்றமர்ந்திருத்தலே யானையைத் தடுக்கத் தமக்கு அமையும்; பதிகம் ஓதுதல் வேண்டா; ஆதலின் பதிகம் அருளியமை உலகத்தவர் அதனை ஓதிப் பயன்பெறுமாறு பிறர்நலங்கருதியதே யாகும் என்பதும் மண்ணுலகுய்ய எடுத்துப் - பாடுகின்றார் என்றதனாற் பெறப்படுதல் காண்க. மண்ணும், பிற உலகும் என்று உம்மைத் தொகையாக்கி உரைக்கவும் நின்றது.

மகிழ்வுடனே - "வெருளாார்" - (1379) என்றமையால் அவர்தம் மனத்தினுள் அச்சமின் றென்பதாயிற்று. மகிழ்வாகிய மனநிலை, யாவரும் பெறும் உறுதியாகிய நன்மை கருதி எழுந்தது.

பாடுகின்றார் - முற்றெச்சம். பாடுகின்றாராகிப் - பாடி அறைந்தார் - என வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. சுண்ணவெண் சந்தனச் சாந்து" தொடுத்த என்று பதிகம்பாடத் தொடங்கிவிட்டமைகூறி, மேல்வரும் பாட்டில் "அஞ்சுவதில்லை என்றென்றே" என அப்பதிகத்தின் முடிபு கூறுகின்றாராதலின் பாடுவார் என்னாது பாடுகின்றார் என நிகழ்காலத்தாற் கூறினார்.

இப்பாட்டு அத்திருப்பதிகத்தின் சந்தத்தில் அமைத்துப் பாடிய யாப்பமைதியுங் கண்டு கொள்க. 115

1381. (வி - ரை) விட்ட - கொல் என்று ஏவி உய்த்திட்ட (1379).

சினப் போர் மத வெங் களிறு - அடை மொழிகள் பலவும் புணர்த்தது யானை கொலைமூண்டு வந்த கொடுமையின் செறிவு குறித்தது.

களிற்றினை நோக்கி - என்றென்றே பாடி அறைந்தார் என்க. களிற்றினை நோக்கிப்பாடி என்றது, தெளிவுற்று அழுந்திய நினைவின் பலன் அதனிடத்துச் சென்று அதன் கொடுமையை மாற்ற வேண்டியிருத்தலின் என்பது. நோக்குதலாற் கண் பார்வை பயன் செய்யுமென்பது ஞான சாத்திரமும் உலக நூலும் கண்ட வுண்மை. பார்வைத் தீக்கையின் உள்ளுறையும் அது. அருளுடைய ஆசாரியனது நோக்கினால் ஆன்மாவை அநாதியே கட்டி நானென்றெழுந்த ஆணவ மதமும் அடங்குமென்றால் இந்தக்களிறு மதந்தணிவது பெரிதாமோ? ஆளுடைய பிள்ளையார் திருமயிலையில் என்பு நிறைந்த மட்குடத்தைக்கண்டு, அருநோக்கால், அங்கமங்குடைய பூம்பாவை

பேர் செப்பி, 'உலகர் முன் வருக!' என உரைப்பார் (திருஞான - புரா - 1086, 1087) என்பதும் இங்கு வைத்துச் சிந்திக்க. மனோவசீகரச் சாதகர் தம் வயப்படுத்தும் மாணவனை நோக்கிச் செய்யும் முறையும், பிறவும் கருதுக. நோக்குதல் அழுந்திப் பார்த்தல்.

**செஞ்சடை நீண்முடிக் கூத்தர்** - பிறையும், கங்கையும் சூடிநின்ற தன்மையால், அடைந்தவரைக் காக்கும் தன்மையை வெளிப்படப் புலப்படுத்தி நிற்பது இறைவனது சடைமுடி. **நீண்முடி** - அருட்பெருக்கில் ஒருகாலும் உலவாது நீளும் தன்மை குறித்தது. **கூத்து** - அருளின் வரும் நித்தமாகிய ஐந்தொழில். "அரங்கிடை நூலறி வாளரறியப் படாததோர் கூத்தும்" என்பது இப்பதிகம்.

**தேவர் பிரானார்** - தலைவராம் பெரியவர். **பெருந்தேவர்** - மகாதேவர்.

**வெஞ்சுடர்......இல்லையென்றேன்றே** - இது அத்திருப்பதிகத்தின் முடிபும், கருத்துமாம். **வெஞ்சுடர் மூவிலைச்சூலம்** - சூலம் இங்கு ஆயுதப் பொதுமையை உணர்த்தி யானையை அடக்கும் அங்குசத்தினையும் குறிப்பாற் பெற உட்படுத்துகின்றது. பாசமும் அங்குசமும் ஏந்திய சிவபெருமானது அருளவசரங்களையும் கருதுக. **வெஞ்சுடர்** என்றது அச்சூலம் எறிந்து பயன்படுத்தப்படாமலே, அதன் சுடரே குறித்த பயனை விளைவிக்கவல்லது என்றபடி. "சூலமுந் தண்டுஞ் சுமந்துண்டு" என்ற நாயனார் திருவாக்கும் காண்க. "மூளைத்தெழு மூவிலை வேலும்" என்ற பதிகக்குறிப்புப் பாராட்டப்பட்டது. **வீரட்டர்** - சமணர்களின் மிறைகளுட் பாடிய பதிகங்களுள் ஏனையவெல்லாம் பொதுப் பதிகங்களாயும் இஃது ஒன்று மட்டும் **வீரட்டர்** என்ற பெயர்பற்றி யருளப்பட்டதும் இக்கருத்துப் பற்றியது.

**தம் அடியோம் நாம்** - "தமர் நாம்" என்ற தேவாரக் கருத்தை விளக்கியபடி. **தம்** - அவர் விரும்பி ஆட்கொண்ட உரிமை குறித்தது. "ஆளுடைய பிள்ளையாராய்" (திருஞான - புரா - 69) என்பதும், ஆளுடைய அரசு முதலிய வழக்குக்களும் காண்க. **நாம்** - தம்முடன் உலகில் வரும் எல்லா அடியவர்களையும் உளப்படுத்திய பன்மை. "மண்ணுலகுய்ய எடுத்து" என்று முன்பாட்டிற் கூறிய கருத்துக் காண்க.

**அஞ்சுவதில்லை என்றேன்றே** - இல்லை என்ற குறிப்பு வினைமுற்று எதிர்காலத்துக்கு முரிய தாதலின் இப்போது நிகழ்காலத்து அஞ்சுவதியா தொன்றுமில்லை. இனி எதிர்காலத்தும் அஞ்சவருவதுமில்லை என்ற இத்தேவாரத்தின் பொருளோடொப்ப உரைக்க நின்றது. **என்றேன்றே** - அஞ்சுவதில்லை; அஞ்சவருவதுமில்லை; என்று அத்தேவாரத்தினுள் வேறு பிரித்துக் கூறியதனைக் குறிக்க, **என்று - என்று**- என அடுக்கிக் கூறினார். ஏகாரம் தேற்றம்.

எதிர்காலத்தில் அஞ்சவருவதுமில்லை என்றது தம்மை இனியும் அமணர் செய்ய நின்ற, கல்லினோடு பூட்டிக் கடலிற் பாய்ச்சுவதாகிய மிறைச் செயலினைக் குறித்துத் தம்பொருட்டும், இனி உலகில் ஏனைஅடியவர்கட்கு வரும் எல்லா ஏதங்களையும் குறித்துப் பிறர் பொருட்டும் எழுந்தது.

அருந்தமிழ் என்றது அஞ்ஞான்று தந்த பயனை எஞ்ஞான்றும் ஒருதலையாகப் பயந்தே விடும் இயல்பு குறித்தது. **தமிழ்** - ஈண்டுத் தமிழ்ப்பதிகம் குறித்து நின்றது.

**அறைந்தார்** - அறைதல் - சொல்லுதல் - களிற்றினை நோக்கி "அஞ்சுவதில்லை" என்ற தமது உறைப்பினை அருந்தமிழ்ப் பாட்டினுல் சொன்னார் என்க. **அறைதல்** - அடித்தல் என்ற குறிப்பும் படநின்றது, பறை அறைதல் என்றாற்போல. **உறைந்தார்** - என்று பாடங்கொண்டு அன்பினில் உறைந்து நின்றார் என்றுரைப்பாருமுண்டு.

"மலையே வந்து விழினு மனிதர்காள், நிலையி னின்று கலங்கப் பெறுதிரேற், றலைவனாகிய வீசன் றமர்களைக், கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே" என்ற தனிக் குறுந்தொகை இச்சரிதப்பகுதியிற் போந்தபடி நாயனாரது தொண்டினிலைத்த

மனஉறுதிப் பாட்டினை நன்கு விளக்கி இச்சரிதப்பகுதிக்கு அகச்சான்றாக விளங்குகின்றது. "வானந் துளங்கிலென் - ஆட்பட்ட உத்தமர்க்கே" என்ற திருவிருத்தக் கருத்தும் இங்குவைத்துக் காண்க.

வெந்சிலை மூவிலை—என்பதும் பாடம். 116

திருச்சிற்றம்பலம்　　திருவதிகை வீரட்டானம்　　பண் - காந்தாரம்

சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முர ணேறு மகலம் வளாய வரவுந்
திண்ணன் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை; யஞ்ச வருவது மில்லை. (1)

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
யுரங்களெல் லாங்கொண் டெடுத்தா னொன்பது மொன்று மலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை; யஞ்ச வருவது மில்லை. (10)

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :**—வெஞ்சுடர் மூவிலைச் சூலமேந்திய வீரட்டானேசுவரர் தம்முடைய அடியோம் நாம் ஆதலின் இப்போது அஞ்சுவதில்லை; இனியும் அஞ்ச வருவது ஒன்றுமில்லை; என்று ஆசிரியர் காட்டுவது காண்க. (1381). "உடையா ரொருவர் தமர்நாம்; அஞ்சுவ தியாதொன்று மில்லை; அஞ்ச வருவது மில்லை" என்று பதிகப் பாட்டுக்கள்தோறும் வரும் மகுடங்கள் இக்கருத்தை விளக்குவன.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1). சுண்ணவெண் சாந்தும், சந்தனச் சாந்தும் என்று சாந்து என்பதனை ஈரிடத்தும் கூட்டுக. " தன்மார்பிற் பால்வெண்ணீற் றஞ்சாந் தணிந்தானை " (சீகாமரம் - திருவாரூர். 10) என்றது நாயனார் திருவாக்கு. " சாந்தமுந் திருநீறு" திருவிசைப்பா (சாட்டியக்குடி-2); "சீரொலாஞ் சிறந்த சாந்தம் தெய்வநீறு" (திருவிளை - புரா -85); வெண்சாந்து என்றதனால், நீறு என்பதும், ஏனைச் சந்தனம் செம்மை நிறமுடைய தென்பதும் குறிப்பிடப்பட்டன. " சினபவளத் திரடோண்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்ற னென்கின் றாளால் " (திருக்கழிப்பாலை - காந்தாரம் - 7.) என்றபடி, "கழல் தெளிவுற்ற பெரியோர் " (1379) இங்குத் தம்முள்ளத்தில் யானைச் சினத்தை மாற்றுதற்கு அதிதெய்வமாய் அதுபோல் வைத்துத் தியானஞ்செய்து கணிக்கப்பட்ட மந்திரரூபமாகிய சிவபெருமானது திருவுருவத்தில் நாயனாரை மிகவும் வசீகரித்தது அவரது திருமேனியிற் பொலிந்த திருநீற்று வெண்சாந்தேயாம். அதனை அடுத்து அவரதுள்ளத்தைக் கவர்ந்து நின்றது அம்மையார் பாகத்தில் நின்ற செஞ்சந்தனச்சாந்து; "வலநீ றிடஞ்சாந்து" (பொன் - வண் - அந் - 65), " சந்தனமுங் குங்குமமும் சாந்தும் தோய்ந்த தோளானை " என்பவை காண்க. ஆதலின் இதனை முதற்கட் கூறித் தம் நெஞ்சமுழ்த்திய அத்திருவுருவத்தினைப் பாடத் தொடங்குகின்றார். " இளங்கொங்கையிற் செங்குங்குமம், போலும் பொடியணி மார்பிலங்கு மென்று புண்ணியர் போற்றிசைப்ப " என்ற திருவிசைப்பா இதனை விளக்கும். இத்திருப்பதிக முழுதும் வளரும் பவளநிறமும் (1) வரைய திண்டோளும் - (4) இருநிலனேற்ற சுவடும் வலமேந்திரண்டு சுடரும் (5) மலைமகள் கைக்கொண்ட மார்பும் மணியார்ந் திலங்கு மிடறும் (7) முதலியனவாய் அவரது திருமேனி யங்கங்களும் ; திங்கட் சூளாமணியும் (1)

அகலம் வளாய அரவும் (1) கேழலெயிறு, ஆமை வெண்ணூல் இவையும் (2) உருத்திர பட்டமிரண்டும் முத்து வடங்கண் டிகையும் (3) வேங்கையதளும் - பொற்றோடும் - இழையும் - கபாலக்கலனும் (7) மரவத்துகிலும் - கோவணக்கீளும் (9) முதலியன வாய் அவர் திருமேனியிற் பூண்பவையும் ; கட்டங்கக் கொடியும், (2) மூவிலை வேலும் (3) மறிபொற்கலையு மழுப்பாம் பொருகையில் வீணையும் (4) வர்ன்கயிலாய மலையும் (5) கொள்ளிவிளக்கும் - துடியின் முழக்கும் (6) முதலியனவாய் அவரது படை முதலியனவும் ; குனிசிலைக் கூத்தின் பயில்வும் - நூல் அறிவாள ரறியப்படாததோர் கூத்தும், (6) பல்லாயிரங்கொள் கருவி நாடற்கரியதோர் கூத்தும் (8) வேழமுரித்த நிலையும் முதலியவாய் அவரது அருட்டிறங்களும் ; அண்ண லரண்முர ணேறும், (1) கணபதி யென்னுங் களிறும் (5) பதினெண் கணமும் பயின்றறி யாதன பாட்டும் (6) பாடல்பயின்ற பல்பூதம் (8) முதலிய அவரைச்சூழ்ந்த கணங்களின்றிறமும்; என்று இறைவனது திருவடியைத் தாம் மனத்துத் தெளிவுற்றுப் பதியவைத்த திறங்களே கூறப்படுவன காண்க. உரிவையுடை - யானையை உரித்துப்போர்த்த உடை. "செற்றுக் களிற்றுரி கொள்கின்ற ஞான்று" (திருவிருத்தம்); அரண் முரண் ஏறு - அடைந்தார்க்கு அரணும் அடையலார்க்கு முரணும் ஆக அருள்வது இறைவனது இடபம். கெடிலப்புனல் - பதிக முழுமையும் கெடிலத் தீர்த்தத்தின் றொடர்பும், திருவதிகையாகிய தலத்தின் தொடர்பும், உடையார் என வீரட்டநாதராகிய மூர்த்தியின் தொடர்பும்பற்றிக் கூறுதல் காண்க. ஒருவர் - ஒப்பற்றவர். "ஒன்றேபதி" என்றபடி முழுமுதற் கடவுளாவார். தமர் "தம்மடியோம்" (1381); அஞ்சுவது......இல்லை - தமர் நாம் ; ஆதலின், அஞ்சுவதில்லை என்று அஞ்சாமைக்குக் காரணங் கூறியபடி. "என்னுளமே புகுந்த வதனால்......நல்ல நல்ல......அடியா ரவர்க்கு மிகவே" என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரமும் கருதுக.—(2) கேழல் எயிறு - வராக அவதாரத்தில் விட்டுணுவின் பல்லினையும், ஆமை - கூர்மாவதாரத்தில் அவரது முதுகோட்டினையும் அணிந்து அருளினர் சிவபெருமான் என்பது வரலாறு. புள்ளின் சிறகு - கொக்கிறகு - மலர்.—(3) ஒத்தவடத்து......இரண்டும் - தோளில் வடம்போல இட்டிருக்கும் இளநாகமும், உருத்திரபட்டமும் என்ற இரண்டும். உருத்திரபட்டம் - யோகபட்டம். "பைவன்பே ரரவொழியத் தோளிலிடும் பட்டிகையும்" (888) என்றது காண்க. முத்துவடமும் கண்டிகையும் கூடியதுவும். முத்துவடம் அம்மைபாகத்திலும் கண்டிகை இறைவன் பாகத்திலும் உள்ளன. முளைத்தெழு மூவிலைவேல் - எறியப்படாமல் எப்போதும் திருக்கரத்தைவிட்டு நீங்காம லிருப்பதனால் அது கையிலிருந்து முளைத்தெழுவதுபோ லிருந்ததென்பது. எழு - மேனோக்கி எழுதல். மேலே மூன்றிலையும் கீழே ஒரு தாளுமாயிருத்தலின் முளைத்து இலைவிட்டதுபோலும் என்றார். "ஒருதா ளீரயில் மூவிலைச் சூலம்" (திருவெழுக்கூற்றிருக்கை). சித்தவடம் - திருவதிகையின் புறத்துள்ள ஒரு திருமடம். ஆளுடைய நம்பிகளுக்கு இறைவன் திருவடி தீக்கைசெய்த இடமாயின பெருமையுடையது. (229) பார்க்க.—(4) குடமால்......கூத்தின் பயில்வு - சிவனது ஆடல் வகையு ளொன்று. —(5) பலபல காமத்தராகி - பல தீய எண்ணங்களையுடையவர்களாகி ; கலமலக்கிடுதல் - உழக்கிவிடுதல். கணபதி என்னும் களிறு - விநாயகப் பெருமான். தேவர்களை அலைக்க வந்த கயமுகாசுரனை அழிக்க வந்தருளியவர் கணபதிமூர்த்தி என்பது வரலாறு. இங்கு யானையினால் வரும் துன்ப நீக்குவர் என்பது குறிப்பு. "வடிகொடு தனதடி வழிபடு மவரிடர், கடிகண பதிவர அருளினன்" (திருவலிவலம் - 5) என்பது பிள்ளையார் தேவாரம். இரண்டு சுடர் - ஞாயிறும் மதியும். வலமேந்துதல் - கண்ணாகக்கொண்டு வைத்தல்;—(6) கரந்தன கொள்ளி விளக்கும் - சுடலையில் பிண

மெரித்த குறைக்கொள்ளிகள் விளக்காக. "பேயுயர் கொள்ளி கைவிளக்காகப் பெருமானார், தீயுகந் தாட திருக்குறிப் பாயிற் றாகாதே" (குறிஞ்சி-திருச்சிராப்பள்ளி - 7); அரங்கிடை......கூத்தும் - பசுஞான பாசஞானங்களா லறியப்படாதவன். "உலகெலா முணர்ந்தோ தற்கரியவன்" (புரா), "உணர்ந்தார்க் குணர்வரியோன்" (திருக்கோவை).—(7) விலைபெறு - விலையில் - முரண் அணி. இரண்டும் ஒரு பொருள் தந்து நின்றன. விலையில் - வேறு எவரும் கொள்ளாத என்பதும் குறிப்பு. கைக்கொண்ட - பங்குகொண்ட. ஒருபால் மலைமகளது கையினைக் கொண்ட என்றலுமாம். "விற்றூங் கியகரம் வேனெடுங் கண்ணி வியன்கரமே" (நாகை - திருவிருத் - 2); மணி - நீலமணிபோன்ற நிறம்.—(8) கருவி நாடற்கரியது - கருவி நூல்களால் அறியப்படாதது. கலைஞானத்தினுள் அடங்காதது.—(9) மரவத்துகில் - மரவுரி உடை. துகில் கீழ் - துகிலினின்றும் கிழித்தெடுத்த. "கீறுகோவணம்" (525). கீளும் கோவணமுமாகக் கிழித்தெடுத்த. வேழமுரித்த நிலை - வேழத்தின் சினந்தணிப்பிக்க வேண்டி நாயனார் இறைவரை இந்நிலையினராகத் தெளிவுற்று எண்ணுகின்றமை குறிப்பு.—(10) உரங்கள் - வலிமைகள். எடுத்தான் - எடுத்தவனுடைய; ஒன்பதுமொன்றும் - பத்து வாய்களாலும்; அலற - முன்னர் அழுகையோசையும், பின்னர்ச் சாமகான ஒலியுமாகச் சத்திக்க. வரங்கள் - இரங்கி நாளும் வாளும் கொடுத்தமை.

1382. தண்டமிழ் மாலைகள் பாடித் தம்பெரு மான்சர ணாகக்
கொண்ட கருத்தி னிருந்து குலாவிய வன்புறு கொள்கைத்
தொண்டரை முன்வல மாகச் சூழ்ந்தெதிர் தாழ்ந்து நிலத்தில்
எண்டிசை யோர்களுங் காண விறைஞ்சி யெழுந்தது வேழம். கஙள

(இ - ள்) வெளிப்படை. குளிர்ந்த தமிழ்மாலைகளைப் பாடித் தமது பெருமானையே சரணமாகக்கொண்ட கருத்துடன் இருந்து விளங்கிய, அன்பு பொருந்திய கொள்கையுடைய திருத்தொண்டரை அவர் முன்பு வலமாகச் சுற்றி வந்து எதிரிற் றாழ்ந்து எல்லாத் திக்கிலுள்ளவர்களும் காணும்படி அந்த யானை நிலத்தில் வீழ்ந்து வணங்கி எழுந்தது.

(வி - ரை) தண் தமிழ் மாலைகள் - தண் - தமிழ் எப்போதும் குளிர்ந்த நீர்மையுடையது என்றபடி. இயற்கை யடைமொழி. தட்பமாவது செவிக்கு இன்பந்தந்து அறிவும் தரும் தன்மையால், வேட்கையின் வெப்பந் தணிவித்தலும் உயிரின்பிறவி வெப்பத்தை மாற்றும் ஞானந்தரும் கருவியாதலுமாம். இது தமிழுக்குப் பொதுவாயினும் நாயன்மார்களது தமிழுக்குச் சிறப்பாயுரிய அடைமொழி. "ஞானத்தமிழ்" என்பது பிள்ளையார் திருவாக்கு. "தமிழ் மாருதம்" (313) என்றது காண்க. யானையின் சினமாகிய தீயைக் குளிரச்செய்த பயன் பற்றியும் இவ்வாறு கூறினார்.

மாலைகள் - திருப்பதிகத்தினுள் ஒவ்வொரு திருப்பாட்டும் தனித்தனி ஒவ்வோர் மாலையாம் என்பது. "செந்தமிழ்மாலை பத்திவை" (தக்கராகம் - கற்குடி - 11) "ஆராத சொன்மாலைகள் பத்தும்" (தக்கராகம் - பனையூர் - 11) முதலிய ஆளுடைய பிள்ளையாரது ஆட்சிகள் காண்க.

பாடி - இருந்து - குலவிய என்று கூட்டிக்கொள்க. தம்பெருமான் சரணாகக் கொண்ட கருத்தில் இருந்து - பெருமானையே புகலாக. இரண்டனுருபும் தேற்றேகாரமும் தொக்கன. பெருமான் சரண் ஆக - திருவடியின் தன்மை தமக்கு ஆக. சிவோகம் பாவனையினால் அவனே தானாக என்று உரைத்தலுமாம். கொண்ட கருத்தில் இருந்து என்பதும் இப்பொருளை வலியுறுத்தும். முன்னர்

"விடையுகந் தேறும் பிரானை" (1380), "தேவர்க்குந் தேவர் பிரானார்" (1381) என்ற விடத்துரைத்தவை பார்க்க. "திகழ்ந்தமெய்ப் பரம்பொருள் சேர்வார் தாமே தானாகச் செயுமவன்" (திருத்தாளச்சதி - வியாழக் குறிஞ்சி - கழுமலம் - 7) என்றது பிள்ளையாரது திருவாக்கு. "அவனே தானே ஆகிய அந்நெறி, யேக னாகி" (11-சூத்) என்ற ஞானசாத்திரமும் கருதுக. சாலை - திருவருள் நிறைவு. "கழல் தெளிவுற்றனர்" (1379) என்றதும் கருதுக.

**இருந்து** - பேரிடரையும் பொருட்படுத்தாது சிவன் கழலையே தெளிவுற்று அசையாதிருந்து. **குலாவுதல்** - விளக்க முறுதல். யாவரும் பரவுதல் என்றலுமாம். "குலாவு பாதம்" (443) முதலியவை காண்க.

**அன்பு உறு கொள்கை** - அன்பினுற் பொருந்திய கொள்கையாவது அன்பினுற் கொள்ளப்படுதல். வசமாதல். அன்பே உருவமாக அமைந்த என்றபடி. இத்துணையும் தீயமிறைகள் செய்து இனியும் செய்யநின்ற அமணரையும், அவர் சார்புகொண்ட கொடு மன்னனையும், வேழத்தையும் சிறிதும் வெகுளாது திருவடியினையே சிந்தித்திருந்தமையே அவர் அன்பினால் முழுவதும் கொள்ளப்பட்டனர் என்பதனைப் புலப்படுத்தும்.

**தொண்டர்** - சிவனைத் தலைவராகவும் தம்மை அடியவராகவும் சிந்தித்திருந்தவர்.

**வேழம் வலமாகச் சூழ்ந்து - தாழ்ந்து - இறைஞ்சி - எழுந்தது** என்று கூட்டுக. பழக்கப்பட்ட யானைகள் இவ்வாறு செய்தல் கண்கூடு. **தண்டமிழாற்** சினந்தீர்ந்து பெருமை யறிந்ததாதலின் இவ்வாறு வழிபட்டது என்க. உண்மையில் இவ்வேழம் பெருந்தவ முடையதேயாம். நாயனாரால் அருளோக்கம் செய்யப்பெற்று (1381), உண்மை உணர்ந்து, தனது முன்னைச் சார்புவிட்டு, ஆசானைப் பணிந்து எழுந்த தன்றோ? அறிவுடைமக்கள் வழிபடும் முறையால் அவ்வேழம் வழிபட்டமை காண்க. வலம் வருதல் - தாழ்தல் - நிலத்தில் வீழ்ந்து இறைஞ்சுதல் - எழுதல் இவையே திருவேடத்தையும் ஆலயத்தையும் வழிபடும் முறைகளாம்.

**எழுந்த தவ்வேழம்**—என்பதும் பாடம். 117

1383. ஆண்ட வரசை வணங்கி யஞ்சியவ் வேழம் பெயரத்
தூண்டிய மேன்மறப் பாகர் தொடக்கி யடர்த்துத் திரித்து
மீண்டு மதனை யவர்மேன் மிறைசெய்து காட்டிட வீசி
யீண்டவர் தங்களை யேகொன் றமணர்மே லோடிற் றெதிர்ந்தே.௧௧௮

(இ - ள்) வெளிப்படை. ஆண்ட அரசுகளை இவ்வாறு வணங்கி அந்த யானை அங்குநின்றும் பெயர்ந்து போகவே, அதனை அரசுகளின் மேல் ஏவித் தூண்டி மேற்கொண்டிருந்த கொடிய பாகர்கள் தொடக்கியும், அடர்த்தும், திரித்தும், மீண்டும் அதனை அவர்மேல் போகும்படி கொடுமைசெய்து, காட்டிட, அவ்வாறு செய்யாது நெருங்கிய அவர்களையே வீசிக் கொன்று அமணர்கள் மேலே சாட எதிர்ந்து ஓடிற்று.

(வி - ரை) **ஆண்ட** - சிவபெருமானால் ஆட்கொண்டருளப்பட்ட. **அரசு** - திருநாவுக்கரசுகள்.

**தூண்டிய** - கொல் என்று ஏவிய. "ஏவி - உய்த்திட" (1379).

**மறப்பாகர்** - மறஞ் செய்தவர். **மறம்** - கொலைவினை.

**தொடக்கி** - பெயராமல் பந்தித்து; **அடர்த்து** - அங்குசத்தால் குத்தி; **திரித்து** - திருப்பி. குத்திய - அங்குசத்தால் - திருகி என்றலுமாம்.

**மிறை** - கொடுவினை. **மிறைசெய்து காட்டுதல்** - முன்னிலும் கொடியதாக ஏவுதல், "செய்வித்த தீயு மிறைகள் எல்லாம்" (1402). **மிறை** - குறிப்பு என்றலுமாம்.

வீசி - துதிக்கையினாற்பற்றி எறிந்து. ஈண்டு அவர் தங்களையே அவ்வாறு அரசைக் கொல் என்று ஏவிநெருங்கிய அவர் தம்மையே. ஏகாரம் தேற்றம். "கெடுவான் கேடு நினைப்பான்" என்ற முதுமொழிப்படி அவர்களே பட்டனர் என்பது.

அமணர் மேல் எதிர்ந்து ஓடிற்று - என்க. ஏவச் செய்தவர் அவரென் றறிந்து அவரையும் அழிக்க அவர்மேல் எதிர்ந்து ஓடிற்று என்க.

அஞ்சிய வேழம்—எதிர்த்தே—என்பனவும் பாடங்கள். 118

*1384. ஓடி யருகர்க டம்மை யுழறி மிதித்துப் பிளந்து
நாடிப் பலரையுங் கொன்று நகரங் கலங்கி மறுக
நீடிய வேலை கலக்கு நெடுமந் தரகிரி போல
ஆடியல் யானையம் மன்னற் காகுல மாக்கிய தன்றே. கககசு

(இ - ள்). வெளிப்படை. ஓடி அமணர்களை உழறியும் மிதித்தும் பிளந்தும் தேடிச் சென்று பலரையும் கொன்றும், அந்த நகரம் கலக்கமுற்று வருந்த அழிக்கும் தன்மை பூண்ட அந்த யானை அந்த மன்னவனுக்குத் துன்பத்தை அப்பொழுதே விளைத்து விட்டது.

(வி - ரை) உழறி...கொன்று - இவை அந்த யானை அமணர்களை அழித்தவகை. நாடி - ஓடியவர்களையும் தேடிக்கண்டு. அங்கிருந்த கூட்டத்தினுள் வஞ்சித்துப் பொல் லாங்கு புரிந்த அவர்களையே நாடி என்றலுமாம்.

நகரங் கலங்கி மறுக - நகரத்திலுள்ள பிறரை அது ஒன்றும் கேடு செய்திலதெனினும் அமணர்க்குச் செய்த அழிவைக்கண்டு நகரத்திலுள்ள மக்கள் பிறரும் தாம் கலங்கினர் என்பது.

மறுகுதல் - பயமுறுதல் - வருந்துதல்.

வேலை கலக்கும் நெடுமந்தரகிரிபோல-வேலை-நகரமாந்தர்க்கும்,மந்தரகிரி யானைக் கும், யானை ஓடி உழற்றுதல்-மந்தரகிரி மத்தாகக் கடலைக் கடைதலுக்கும் உவமையாயின. மெய்யும் வினையும்பற்றி எழுந்தவுவமம். மந்தரகிரியை மத்தாகவைத்துப் பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களும் கூடிக் கடைந்தனர் என்றும், அதனுள் அவர்கள் வேண்டிய அமுதம் வராது விடம் எழுந்தபோது இருதிறத்தாரும் வருந்தினர் என்றும் வரும் வரலாறு குறித்தெழுந்தது இவ்வுவமம். அக்காலை நல்லாரும் பொல்லாரும் பட்டதுபோல இக்காலை நகரமும் அமணரும் வருந்தினர் என்றதும் குறிப்பு.

மந்தரகிரி - மாமேரு. மந்தரகிரிபோல - ஆகுலம் ஆக்கியது என்க. ஆடியல் ஆடு - அடுந்தன்மை. வெற்றிமிக்க - இலக்கணமமைந்த என்பாருமுண்டு. ஆகுலம் - துன்பம் - பெருங்கவலை.

கிரியென்ன—ஆடியவவ்வியானை—ஆடிய யானை—என்பனவும் பாடங்கள். 119

1385. யானையின் கையிற் பிழைத்த வினையமண் கையர்க ளெல்லாம்
மான மழிந்து மயங்கி வருந்திய சிந்தைய ராகித்
தானை நிலமன்னன் றாளிற் றனித்தனி வீழ்ந்து புலம்ப
மேன்மை நெறிவிட்ட வேந்தன் வெகுண்டினிச் "செய்வதென்" னென்றான்.

(இ - ள்) வெளிப்படை. யானையின் கையினின்றும் தப்பிய தீவினையாளராகிய அமணக்கீழ்களெல்லாரும், மானமழிந்து மயங்கி வருத்தமுற்ற மனமுடையவராகிச், சேனையின் வலிமையுடைய உலகங்காக்கும் மன்னவனது காலில் தனித்தனி விழுந்து புலம்பினாராக, அவர்களது சொற்கேட்டு மேலாகிய நெறியினைக் கைவிட்ட அரசன், சினந்து "இனிச் செய்யக் கடவதென்ன" என்று கேட்டான்.

(வி - ரை) பிழைத்த - தப்பிப் பிழைத்த. பிழை செய்த என்றலுமாம். வினை அமண்கையர்கள் - வினை - தீவினை. கையர் - கீழ்கள்.

மானம்......சிந்தையரர்கி - தாம் ஏவிய கேடு தமக்கே நேர்ந்ததனை உலகம் அறிந்து விட்டமையால் மானமழிந்த. துன்பத்தால் மேற்செய்வ தறியாது மயங்கிய.

தானை நிலமன்னன்-சேனையின் பலமேயன்றி நீதியின் பலமில்லாது நின்றவன் என்பது குறிப்பு.

மன்னன் தாளில் தனித்தனி வீழ்ந்து புலம்ப - தம் காலில் அரசன் வீழ்ந்து வணங்கவுள்ள அடிகண்மார்களாயிருந்தும், தாம் அவன் காலில் வீழ்ந்து புலம்ப நேர்ந்தது தவமல்லாத அவர்களது வஞ்சமாகிய அவத் தன்மையாலாகியது. இது உலக வியற்கையிற் கண்டவுண்மை. சத்தினிடத்து வீழ்ந்து பணிய வறியாத பலமாக்கள் அசத்தினிடம் வீழ்ந்து புலம்ப நேர்வதனைப் பலவாற்றாலும் கண்கூடாகக் காணவல்லது அறிவுடையுலகம். தனித்தனி - பலரும் கூடிக் கருதிச் செயல் செய்யும் வலிமையிழந்தமை குறிப்பு.

மேன்மை நெறிவிட்ட - மேன்மை நெறி - அரசியல் நெறியும் வைதிக சைவ நன்னெறியுமாம். விட்ட-நீத்துவிட்ட. வெகுண்டு - தனது ஆணை செல்லமாட்டாமையின் வெகுட்சி வந்தது.

இனி - முன் செய்தவை எவையும் பயன்படாமையின் அவ்வாறு ஒழியாது இனி என்றது குறிப்பு.

அவ்வமண்—இனைய அமண்—என்பனவும் பாடங்கள். 120

1386. "நங்கள் சமயத்தி னின்றே நாடிய முட்டி நிலையால்
எங்க ளெதிரே றழிய யானையா லிவ்வண்ண நின்சீர்
பங்கப் படுத்தவன் போகப் பரிபவந் தீரு முனக்குப்
பொங்கழல் போக வதன்பின் புகையகன் றாலென" வென்றார்.

(இ - ள்) வெளிப்படை. நமது சமயத்தினின்றே தெரிந்துகொண்ட முட்டி நிலையினால், எங்களுடைய ஏவுதல் கெடும்படி இவ்வண்ணம் யானையினால் உனது சீர்த்தியைச் சிதைத்தவன் சாகப், பொங்கும் நெருப்புப் போகவே அதன்பின் புகை அகன்றது போல, உனக்கு வந்த அவமானம் தீரும்" என்றார்கள்.

(வி - ரை) அழல்போக அதன்பின் புகைபோவதுபோல, அவன்போக உனக்குப் பரிபவம் தீரும் என்க. வினைபற்றி எழுந்த உவமம். அவன் - அழலுக்கும், பரிபவம் - புகைக்கும் உவமையாயின. சமணர்கள் தருக்கம் முதலிய கலைகளில் வல்லவர். தீயும் புகையும் ஒன்றினாலொன்று அறியப்படுமாறு பிரிக்க முடியாத சம்பந்தமுடைய பொருளுக்கு உவமை கூறுவது தருக்க நூல். அதுபற்றிய பழக்கத்தால் இவ்வுவமை கூறினாரென்க. உனது பரிபவமும் அவனது இருப்பும் புகையும் அழலும்போல இணை பிரியாத சம்பந்தமுடையவை என்பது. சமயத்தினின்றே - ஏகாரம் தேற்றம், பிரிநிலையுமாம்.

முட்டி நிலை - மந்திர சாதகம். விலங்கு - விடம் முதலியவற்றால் கேடுவராதபடி தடுக்கும் முறை. "தியான பாவகநிலை முட்டி" (திருஞான - புரா - 1061) முதலியவை காண்க.

எதிரேறு - எதிர் ஏவுதல். கண்ணேறு என்பது போல.

பங்கப் படுத்துதல்-சிதைத்தல்-குறைவுபடுத்துதல். போக-போனால் - இறந்தால். இவை, மூன்று முறையும் கேடடைந்த பின்னருஞ் சமணர் சொல்லிய வஞ்ச

மொழிகள். பொய்யினாற் பிறரை மயக்கும் அவர்களது வஞ்சனையின் திண்மை இதனால் நன்கு விளங்கும். 121

1387. அல்லிரு ளன்னவர் கூற வரும்பெரும் பாவத்த வன்பின்
"தொல்லைச் சமய மழித்துத் துயரம் விளைத்தவன் றன்னைச்
சொல்லு மினிச்செய்வ" தென்னச் சூழ்ச்சி முடிக்குந் தொழிலோர்
"கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுவ" தென்றார்.

(இ - ள்). வெளிப்படை. இரவிருள் போன்ற அமணர்கள் இவ்வாறு சொல்ல, அரும்பெரும் பாவச்செயலோனாகிய அரசன், அதன்பின்பு, பழைமையாகிய நமது சமயத்தை அழிவு செய்து துன்பம் விளைத்த தருமசேனனை இனிச் செய்வதென்ன என்று சொல்லுமின்" என்று கேட்கத், தாங்கருதிய வஞ்சனையையே முடிக்குந் தொழிலுடையோராகிய அவ்வமணர்கள் "கல்லினோடு சேர்த்துக் கயிற்றாற் கட்டிக் கடலினுள்ளே பாய்ச்சுவது (இனிச் செய்யக் கடவது)" என்று சொன்னார்.

(வி - ரை) அல்லிருள் அன்னவர் - பகலிலும் இருள் உளதாயினும் அது வலி கெட்டுத் தன் செயலின்றி நிற்றலின் அல்லிருள் என்றார். இதற்கு, யாமஇருள் - நள்ளிருள் - என்பாருமுண்டு. ஒரு பொருட்பயன் மொழி என்று கொண்டு, மிக்க இருள் என்றலுமாம். "ஒருபொருளுங் காட்டா திருள்" (திருவருட்பயன்) என்றபடி உலகப் பொருள்களைக் காண முடியாதவாறு கண்ணை மறைப்பதனால் உண்மை காணாதபடி மன்னனறிவை மறைத்த அமணர்க்கு இருள் உவமையாயிற்று. அவர்களது உடம்பும் கருகு முருட்டுடம்பு என்பர். எனவே பண்பும் வினையும் பற்றி எழுந்த உவமம் என்க. "இருட்குழாம்" (1349), "காரிருண்ட குழாம்போலு முருவுடைய" (1365) என்றவிடத் துரைத்தவையும் பார்க்க.

அரும் பெரும் பாவத்தவன் - அரசன். "அருள்கொண்ட நெறிகோடி - மருள் கொண்ட மன்னவன்" (1355), "பெருகுசினக் கொடுங்கோலான்" (1361), "அமண்சார்பாற் கெடும் மன்னன்" (1368), "புலைத்தொழிலோன்" (1374) என்று முன்னர்க்கூறிய ஆசிரியர் இங்கு அவன் சொன்னது முன்சொன்ன கொடுங்கோன்மைத் தீர்ப்புக்களினும் மிகப் பாவமுடையதும் கடையாவதுமாதலின் அதனைச் சொன்ன அவனை அரும்பெரும் பாவத்தவன் என்றார்.

பின் - என்னத் - தொழிலோர் - பாய்ச்சுவது என்றார் என முடிக்க.

தொல்லைச் சமயம் - புதிதாய் உண்டானதாயினும், அமணர்சொற்கேட்ட அரசன் சமண சமயத்தில் வைத்திருந்த மயக்கவுணர்வினால் அது மிகத்தொன்மையது என்றான். (இன்பம் விளைக்காது) தொல்லை - துன்பம் - விளைப்பது என்ற உண்மைக் குறிப்பும் அரசனை அறியாமல் அவன் வாக்கிற் போந்தது காண்க.

இனிச்செய்வது - சொல்லும் - என்க. செய்வது - யான் செய்வதனை - என்னாற் செய்யக்கடவதனை. இரண்டனுருபு விரிக்க. துன்பம் விளைத்தவன் - "நின்சீர் பங்கப் படுத்தவன்" என்று அமணர் சொன்னதை நம்பி அரசன் இவ்வாறு கொண்டனன்.

சூழ்ச்சி முடிக்கும் தொழிலோர் - வஞ்சனை தெரிந்து சித்திரிப்பார்" (1347) என்றபடி உண்மையுணர்ந்து அரசன் சைவனாகாமலும், தமது சீவனத் தொழில் சிதைவர்க்காமலும் இருத்தல் வேண்டிப் பொய்யினைக்கற்பித்த சூழ்ச்சியினையே முடிக்கும் தொழிலில் நின்ற அமணர். உண்மையில் நில்லாதவர் என்றபடி. சூழ்ச்சி - கேடு நினைந்து சூழும் செயலுக்கு வந்தது.

"கல்லுடன்...பாய்ச்சுவது" - இனிச்செய்யக்கடவது என்பது சொல்லெச்சம். "செய்வது சொல்லும்" என்று மன்னவன் கேட்க அதற்கு அவர்களது விடை.

பாசம் - பாசத்தால். பாசம் - கயிறு. வாளா கடலில் வீழ்த்தப்படினும் எவனும் தப்ப முடியாது ; கல்லினோடு பிணித்து இட்டால் இறத்தல் உறுதி ; என இவ்வாறு கூறினர்.

பாய்ச்சுதல் - வேகமாக எறிதல். தூக்குதல். "கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்", "ஒல்லை நீர்புக நூக்க" என்பன தேவாரம்.

பாய்ச்சுக — என்பதும் பாடம். 122

1388. ஆங்கது கேட்ட வரச னவ்வினை மாக்களை நோக்கித்,
"தீங்கு புரிந்தவன் றன்னைச் சேம முறக்கொடு போகிப்
பாங்கொரு கல்லி லணைத்துப் பாசம் பிணித்தோர் படகில்
வீங்கொலி வேலையி லெற்றி வீழ்த்துமி" னென்று விடுத்தான். ௧௨௩

(இ - ள்) வெளிப்படை. அது கேட்ட அரசன், அந்தத் தொழில்செய்யும் மாக்களைப் பார்த்துத் "தீமை செய்த தருமசேனனைத் தப்பவிடாமற் கொண்டுபோய்ப் பக்கத்தில் ஒரு கல்லினோடு சேர்த்துக் கயிற்றினாற் கட்டி ஒரு படகில் ஏற்றி மிக முழங்குகின்ற கடலினுள் வீசி எறிந்து விழுத்திவிடுங்கள்" என்று ஏவி விடுத்தான்.

(வி - ரை) ஆங்கது - அது. "ஆங்கவைபோல" (சிவஞானபோதம் 5. சூத்) என்புழிப்போல ஒருசொன் னீர்மைத்து. அரசன் அதுகேட்ட ஆங்கு என்று கேட்டபடியே, கேட்டபொழுதே, கேட்ட இடத்தே என்றுரைக்கவும் நின்றது.

அவ்வினை மாக்கள் - படகு செலுத்துவோரும், கல்லிற் கட்டி வீழ்த்தும் தண்டத் தொழில் செய்வோரும், கண்காணிப்போரும் என்க. வினை-இங்குத் தீவினை என்ற குறிப்பும், மாக்கள் - அறிவில்லாத விலங்கனையர் என்ற குறிப்பும்படநின்றன. "மாவு மாக்களும் ஐயறி வினவே" என்ப ஆகலின் தமக்கெனப் பகுத்து அறியும் அறிவும் செயலுமின்றித், தீயவாயினும் ஏவியவற்றை அவ்வாறே செய்வோர் என்பது. ஆயின் அரசனாணைவழி நிற்போர் பின்னென்செய்வர்? எனின், "மைந்தனைத் தேர்க்காலின்கண் ஊர்க" என ஏவி விடுக்கப்பெற்ற மந்திரி அது செய்யாதகன்று தன்னுருயிர் விடுத்தானு முளன். ஆதலின் மந்திரத் தலைவராகிய ஆசிரியர் இவ்வாறு குறிப்பித்தனரென்க. அரசனாணைவழி நிற்கும் அமைச்சராயினும் பொய்க்கதை படித்துப் போதுபோக்கிய அரசனை அது செய்யத் தகாதது ; படிப்பதும் கேட்பதும் நற்றவக் கதையேயாவன என்று தெருட்டி வழிப்படுத்திய ஆசிரியருடைய செயலும் இங்குக் கருதற்பாலது. இராமன் காட்டுச்குச் செல்ல உள்ள நாளினை அவனது முடிசூட்டுதற்கென்று வகுத்த நூலவரைக் "கணித மாக்கள்" என்று கூறிய கம்பன் பாட்டு இக்கருத்தைக்கொண் டெழுந்ததும் காண்க. வண்டியிற் பூட்டிய விலங்கினம்போலத் தொழில் செய்யும் மாக்களாகிய மக்களும் உலகில் உளர் என்பது. "வேந்தற் குற்றுழிப் பிரிவு" என்ற இறையனாகப் பொருள் (35) சூத்திரப் பகுதியின் கீழ் "கருமஞ் செய்வதென்பது இறப்பவும் இளிவந்ததோ ரொழுக்கம் ; பிறர் குறிப்பின்றித் தன்குறிப்பு இல்லை எனப் படும் ஆகலின்" என்று நக்கீரனார் கண்ட உரையும் இங்குக் கருதற்பாலது.

தீங்கு புரிந்தவன்றன்னை - சமணர் வயப்பட்டதனால் அரசன் அவ்வழியே நன்மையைத் தீமையாகக் காண்கின்றான்.

சேமமுறக் கொண்டுபோகி - மந்திரிகளையும் சேனையையும் அனுப்பித் தரும சேனரைத் தன் முன்புக்குக் கொண்டு வரச்செய்த பெருமுயற்சி கருதி, அவரைத் தனது நேர் காவல்பெற்ற அங்கு நின்றும் கொண்டு போகும்போது அவர் வழியிற் தப்பிவிடாதபடி பாதுகாவல் செய்து கொண்டுபோய் என்றபடி. இந்நாளினும்கொலை முதலிய தண்டத்தீர்ப்பு அடைந்தோரை நீதிவிதித்த மன்றத்தினின்றும் தண்டஞ்

செய்யும் களத்துக்கு தண்டச்சேவகர்பாற் சேர்த்து மிக்க பாதுகாவலுடன் அனுப்பும் முறை காண்க. அன்றியும் தருமசேனர் தரைமீது உயிருடன் பிழைத்திருந்தால் "எமக் கெல்லா மிறுதி" (1371) எனவும், அவர் ஒழியாவிட்டால் அரசனது அரச முறையும் ஒழிந்து போவது திடம் எனவும் உரைத்த அமணர் சொல்லினை நம்பி வசப்பட்டா னாதலின், அவரைத் தரையின்மேல் தப்பவிடாது கடல் நீரினகத்துள்ளே நூக்கிக் கொன்றுவிடுதலையே நோக்கி இவ்வாறு கூறினன் என்பதுமாம். இனி நாயனார் இத் தீயவர் கூட்டத்தை விட்டு நீங்கிச் சிவனது நெறியடைந்து அடியவர்பால் அணையச் செல்கின்றாராதலின், அவரும் உலகும் சேமம் அடையும்படி கொண்டுபோய் என்றதோ ருண்மைப் பொருளும் அரசன் வாக்கில் அவனை யறியாது வெளிப்படுதல் காண்க. அவரைச் சேமுறக் கொடுபோகி என்றதனால், அவரோடு பிணங்கிய இவ்வமணர் சேமந்தொலைய என்ற பொருளுந் தொனிப்பது காண்க. அரசன் உண்மை யுணர்ந்து கொண்டதனால் அமண் அழிவுபட்டு அவர்தம் பாழிகளும் பள்ளிகளும் தொலைவதும், அரசனும் சைவனாகிச் சேமமுறுதலும் காண்க. நான் சேமமுற என்ற குறிப்பும் காண்க.

பாங்கு ஒருகல்லில் அணைத்து - பாங்கு - அதற்கேற்ற பண்புடைய. ஒருவன் தாங்கி மேல்வரக் கூடாத ஏற்ற கனமுடையதாகிய. பாங்கு - நாயனாரது திருமேனி தன்மேற் பொருந்தவரும் புண்ணியப் பண்பும், பின்னர் அதுவே சிவிகையாக மிதந்து அவரைத் தாங்கிக் கரைசேர்க்கும் நற்பண்பும் பொருந்திய என்றதொரு குறிப்பும் காண்க. ஒரு - என்ற சொற்குறிப்பும் அது. அணைத்தல் - பிறழாதபடி சேர்த்தல்.

ஓர் படகில் வீங்கோலி வேலையில் ஏற்றி - கடலினகத்துப் பாரமேற்றிச் செல்லும் பெரும் படகுகளும் நாவாய்களும் அந்நாள் தமிழ் நாட்டில் வழங்கியன என்பது நாட்டுச் சரிதத்தா லறியப்படும். "திரைகட லோடியும் திரவியந் தேடு" என்ற முதுமொழியும், காரைக்காலம்மையார் சரித வரலாறும் கருதுக. வீங்கோலி வேலை - என்றதனால் கடலினகத்து ஆழத்தில் என்பது குறிப்பு. ஏற்றி என்பது பாட மாயின் படகில் ஏற்றி என்க.

விடுத்தான் - இதுவே அரசன் இவ்வாறு செய்யும் தீய ஆணைகளின் இறுதியாத லின் அக்குறிப்புப்பட விடுத்தனன் - விட்டான் என்றார். "அறிவிலாப் பிணங்களை நாமிணங்கிற் பிறப்பினொடு மிறப்பினொடும் பிணங்கிடுவர்; விடுநீ" (சித்தி - 11 - சூத்) என்ற ஞானநூலும் காண்க. "காவலரே யேவி விடுத்தா ரேனும் கடவமலோம்" என்ற நாயனாரது திருவாக்கும் காண்க.

கேட்டவ்வரசன்—செம்மை பெறக்கொண்டு—என்பனவும் பாடங்கள்.    123

1389. அவ்வினை செய்திடப் போகு மவருடன் போயரு கந்த
வெவ்வினை யாளருஞ் சென்று மேவிட நாவுக்கரசர்
செவ்விய தந்திரு வுள்ளஞ் சிறப்ப வவருடன் சென்றார்;
பௌவத்தின் மன்னவன் சொன்ன படிமுடித் தாரப் பதகர். ௧௨௪

(இ - ள்) வெளிப்படை. அத்தொழிலைச் செய்திடப் போகின்ற அவர்களோடும் போய் அமணர்களாகிய கொடுவினையாளர்களும் சென்று சேரத், திருநாவுக்கரசர் செம்மையாகிய தமது திருவுள்ளம் சிறப்படைய அவர்களுடனே போயினர்; அரசன் சொன்னபடி கடலினிடையே அந்தக் கடையோர் தஞ்செயலினை முடித்தனர்.

(வி - ரை) வினை - முன்பாட்டில் "அவ்வினை மாக்கள்" என்ற கருத்தைத் தொடர்ந்து கொண்டது,

அருகந்த வெவ்வினையாளரும் சென்று மேவிட - வினை மாக்களுடன் அமணர் போக வேண்டிய அவசியமில்லா திருந்தும் அவர்களும் அவர்களோடு சென்றது அவர்களுடைய உள்ளக் கொடுமையினையும் வன்மத்தினையும் விளக்குகின்றது. வினை மாக்களிடம் நம்பிக்கைக் குறைவினாலும் இச்செயலைத் தாமே நேரிற் கண்டு களிப்படையவும், எஞ்சியன இருப்பின் அவற்றைத் தாமே முடித்துவிடும் கருத்தாலும் கவலையாலும் அமணரும் உடன் சென்றனர். அரச காரியஞ் செய்வோர் சிலபோது ஆணையினின்று பிறழவும் கூடும் என்பதுபற்றிப் "பொருள் கொண்டு விடாது" (1355) என்றவிடத்துரைத்தவை காண்க.

செவ்விய திருவுள்ளம் சிறப்ப - திருவுள்ளத்தில் துன்பம் கவலை முதலியவை ஒன்றுமின்றிச் சிறந்த மகிழ்ச்சியும் உறுதியும் வர; செவ்விய - செம்மை நெறியில் நின்ற.

மன்னவன் சொன்னபடி முடித்தார் - அடியார்க்கு வரும் ஏதத்தைத் தமது வாக்கினாற் சொல்லுதலும் தகாது என்றது ஆசிரியர் மரபு. ஆதலின் இவ்வாறு கூறினார். "தன் கருத்தே முற்றுவித்தான்" (647), "தான்முன் னினைந்தவப் பரிசே செய்ய" (481) முதலியவை காண்க. இச் செயலினையே முன் 1387 - 1388 திருப்பாட்டுக்களில் கூறியவையோ எனின்? அவை அமணரது கூற்றும், அரசனது கூற்றுமாவன; ஆசிரியர் தம் கூற்றுகச் சரிதம் சொல்லிப் போகும் நிலையில் தமது வாக்காகச் சொல்லார் என்பது. பதகர் - சண்டாளர்கள் - தீயகருமம் செய்வோர். பாதகர் என்பது பதகர் என வந்ததெனினுமாம். பத் - வீழ்தல் (பகுதிப் பொருள்).

செவ்வியதூர்—என்பதும் பாடம். 124

1390. அப்பரி சவ்வினை முற்றி யவரகன் றேகிய பின்னர்,
ஒப்பரு மாழ்கடல் புக்க வுறைப்புடை மெய்த்தொண்டர் தாமும்
"எப்பரி சாயினு, மாக வேத்துவ னெந்தையை" யென்று
செப்பிய வண்டமிழ் தன்னாற் சிவனஞ் செழுத்துந் துதிப்பார். ௧௨௫

வேறு

1391. "சொற்றுணை வேதிய" னென்னுந் தூமொழி
நற்றமிழ் மாலையா "நமச்சி வாய" வென்
றற்றமுன் காக்குமஞ் செழுத்தை யன்பொடு
பற்றிய வுணர்வினாற் பதிகம் பாடினார். ௧௨௬

1390. (இ - ள்). வெளிப்படை. அவ்வாறு அச்செயலை முடித்து அவர்கள் நீங்கிப்போயின பின்பு, ஒப்பில்லாத ஆழமுடைய கடலினுள்ளே புக்க உண்மைத் தொண்டில் உறைப்புடையாராகிய திருநாவுக்கரசரும், "எவ்வாறாயின நிலைவரினும் நான் எந்தை பெருமானாகிய சிவனை ஆக ஏத்துவேன்" என்று துணிவுபூண்டு, சொல்லிய வளப்பமுடைய தமிழ்ப் பாட்டுக்களினால் சிவனுடைய திருவைந்தெழுத்தினைத் துதிப்பாராய், ௧௨௫

1391. (இ - ள்) வெளிப்படை. "சொற்றுணை வேதியன்" என்னும் தூய திருமொழிகளை முதலில் வைத்துத் தொடங்கிய நல்ல தமிழ்மாலையாக, "நமச்சிவாய" என்று, துன்ப காலத்தில் உடனிருந்து காக்கும் திருவைந்தெழுத்தை நிரம்பிய அன்பொடும் விடாதுபற்றிக் கொண்ட உணர்ச்சியிலே திருப்பதிகத்தைப் பாடியருளினர். ௧௨௬

இந்த இரண்டுபாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1390. (வி - ரை) அப்பரிசு......பின்னர் - முற்றி - அத்தன்மைத்தாகிய கொடு வினைகளை அவ்வமணர் செய்வது இதனோடு முற்றியது ; இனிச்செய்வ தொன்றுமிலர் என்பது குறிப்பு. அப்பரிசு - முற்றி - அவ்விதம் நாயனுரை அலைபுரியும் தன்மை முடிவுற்றது ; ஆனுல் அவர்களது சமயத்துத் தீத்தொழில்கள் நாட்டில் இன்னும் முடிவுறுதிருந்தன என்பது அப்பரிசு - அவ்வினை என்றதனுற் குறிக்கப்பட்டன. நாயனுரது சரிதத்திற் பின்னர்ப் பழையாறை வடதளியினைப் பற்றிய வரலாறும் (திருநா - புரா - 294 - 300), பிறவும் பார்க்க.

அகன்று ஏகிய - விட்டுப்போயின. இதுவரை நாயனுரைப்பற்றி ஈர்த்து மிறை செய்து தொல்லை விளைத்தனர் ; இனி இதனோடு விட்டு நீங்கினர் என்றதும் குறிப்பு.

ஒப்பரும் ஆழ்கடல் - இத்தனை ஆழமுடைத்து என்று அளக்கலாகாதது என்பதாம். நாயனுரைச் சிரத்திற்றுங்கிட வருணன் தவம்செய்து பேறுபெற்ற கடலாதலின் (1395) இக்கடல் தன்னை ஒப்பரியதாயிற்று என்பதும் குறிப்பு. புக்க - தூக்கப்பெற்ற- புகுத்தப்பட்ட எனச் செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது.

மெய்த்தொண்டு உறைப்புடையர் என்க. உண்மையாகிய தொண்டில் உறைத்து நின்றவர் என்பது. உறைப்புடைமையாவது எதுவரினும் பிறழாது நிற்றல். அமணர் செய்வித்த இந்த நான்கு தீய மிறைகளினும் அஞ்சாது நின்ற நிலைக்கு அவர் இறைவனது தொண்டர் யாம் எனக்கொண்ட மன உறுதியொன்றே காரணமாயிற்று. "ஒருவர் தமர் நாம், அஞ்சுவ தியாதொன்று மில்லை ; அஞ்ச வருவது மில்லை" என்பன வாதி திருவாக்குக்கள் உலகுக்கு எடுத்துக் காட்டாக நின்று இதனை விளக்குவன. இத்தன்மைபற்றியே "நாணிலமண் பதகருடன், ஒன்றியமன் னவன்சூழ்ச்சி திருத் தொண்டி னுறைப்பாலே, வென்றவர்தந் திருப்பெயர்" (அப்பூதி - புரா - 13) என்று அப்பூதியடிகள் துணிந்து கூறியதும் காண்க.

எப்பரிசாயினும்...என்று - எப்பரிசாயினும் என்றது எந்தநிலை நேரிடினும் என்ற பொருள் தந்து நின்றது. முன்னர்ச் சுடுநீற்றறையினுள் தீயின் இடையே இருத்தல் ஆயினது ; இப்பொழுது கடலிடையே நீரினுள் இருக்கல் ஆயினது ; எந்நிலையாயினும் என்க.

இதற்கு ஆழினு மாழ்க - மிதக்கினும் மிதக்க - முடிவு எதுவாயினும் என்றுரைப்பாருமுண்டு. அது பொருந்தாமையறிக. திருவருள் காப்பது உறுதி என்ற உறைப்பில்லாதாரே அங்ஙனம் நினைகுவர். உறைப்புடை மெய்த் தொண்டர் என்ற அதனுல் எந்நிலை வரினும் என்ற பொருளே நாயனுர் கருத்துள் எழுந்ததென்பது, "கடலிற் பாய்ச்சினும்", "அடுக்கற்கீழ்க் கிடக்கினும்" என்பனவாதி இத்தேவாரங்கள் நாயனுரது திருவுள்ளப்பான்மையை விளக்குவன.

ஆக - ஆகும்படி. ஆக்கமுண்டாகும்படி ஏத்துவன். அமணர்கள் போம்படி எண்ணிச் செய்யினும் நான் ஆம்படி ஏத்துவன் என்பது. "அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான்" (மேகராகக் குறிஞ்சி - ஐயாறு - 1), "பையவே சென்று பாண்டியற் காகவே" (கௌசிகம் - திருவாலவாய் - 1) என்ற ஆளுடையபிள்ளையாரது தேவார ஆட்சிகளின் ஆக்கப்பாடு கருதுக.

எந்தை - தொண்டாக அடைந்த எம்மைக் காக்கும் கடமைப்பாடுடையவன் என்பது. என்று - எனத் துணிந்து. சேப்பிய - அத்துணிபையும் அதற்கு உறுதி பெறத் துணையாகும் அருளையும் சொல்லிய.

என்று என்பது இத்திருப்பதிகத்தி னுட்குறிப்பைக் குறிப்பது.

வண்தமிழ் - வள்ளற்றன்மை எந்நாளும் வுரையாது பயன் தந்து நிலவுதல். "வளப் பதிகம்" (1339) என்றது பார்க்க.

**சிவன் அஞ்செழுத்தும் துதிப்பார்** - எப்பரிசு நேரிடினும் எந்தையை ஏத்துவன் என்ற துணிபை, அஞ்செழுத்தினைத் துதிக்கும் வகையால் நிறைவாக்கினர். **சிவன் அஞ்செழுத்து** - சிவனை உள்ளடக்கிய மகாமந்திரம். "ஆதி மந்திர மஞ்செழுத்து" (திருஞான - புரா - 698) முதலியவை காண்க. சிவனை அடைவிக்கவல்ல - சிவனருளைத் தேடித் தரவல்ல - அஞ்செழுத்து என்பதுமாம். "நற்றுணையாவது", "பாவத்தை நண்ணிநின் றறுப்பது", "நலமிகக் கொடுப்பது", "நல்லக விளக்கது", "நன்னெறியாவது" என்ற இத்தேவாரத் திருவாக்குக்கள் காண்க. சிவனைக் குறிக்கும் சிகாரமாகிய ஒன்றில் ஒடுங்கிப் பின் ஐந்தெழுத்தாய் விரியும் என்ற நூற்கருத்தும் காண்க. "தக்க வஞ்செழுத் தோரெழுத் துருவாந் தன்மை கண்டு" என்ற திருவாதவூரர் புராணம் காண்க. "இறைசத்தி பாச மெழின்மாயை யாவி, யுறநிற்கு மோங்காரத் துள்" என்பது திருவருட்பயன் (82).

**துதிப்பார்** - துதிக்கும் வகை "அஞ்செழுத்தை யன்பொடு பற்றிய வுணர்வினால்" என்று மேற்பாட்டினிற் கூறுவாராதலின் **துதிப்பார்** - பாடினர் என முற்றெச்சமாக மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிபுகொள்ள வைத்தார்.

**மாகடல்**—என்பதும் பாடம். 125

1391. (வி - ரை) **சொற்றுணை வேதியனென்னும்**-சொற்றுணை வேதியன் என்ற சொற்களை முதலில் வைத்துத் தொடங்கும்.

**தூமொழி நற்றமிழ் மாலையா** - **தூமொழி** - தூய்மையையுடைய - தூய்மையை விளைக்கின்ற - மொழிகளால் அமைந்த. **நற்றமிழ்** - நன்மையைத் தருகின்ற தமிழ். தூய்மை செய்தலால் முன்னிருந்த தீமைகளையும் தொடக்குகளையும் எல்லாம் அறநீக்குதலும், நன்மை தருதலால் இனிச் செம்மைத் தன்மை விளைத்தலும் குறிக்கப்பட்டன. முன்னர்த் திருவதிகையை அடைந்து திருவருளால் உணர்வுபெற உணர்ந்து (1334) "கூற்றாயினவாறு" என்ற உரைத்தமிழ் மாலை சாத்தித் துயர் நீங்கப் பெற்றபோதே துன்ப நீக்கமும் இன்பப்பேறும் பெற்றனராயினும், இப்போது அதன் பின்னர் ஈர்த்து வயப்படுத்தி அவ்வின்ப நிலையினை அழிக்க முயன்ற மாயைக்கூட்டங்களின் தொடக்குக்கள் முழுதும் அறவே, முற்றும் செம்மைநெறி சாரவருதலால் இவ்வாறு கூறினர்.

**மாலையா** - மாலைஆக. ஆக என்பது ஆ என நின்றது. **மாலையாக** - **அஞ்செழுத்தைப் பாடினர்** என்று முடிக்க.

**நமச்சிவாய என்று** - நமச்சிவாய என்பதனை ஒவ்வொரு பாசுரங்களின் ஈற்றிலும் வைத்து.

**அற்றமுன் காக்கும் அஞ்செழுத்து** - **அற்றம்** - துன்பம் - கெடுதி. எவ்வகைய துக்கம் வரினும் தன்னை எண்ணுவோரை முன்னின்று காவல் புரிவன சிவன் திருநாமமான ஐந்தெழுத் தருண்மந்திரம். **முன்** - முன்னின்று. **முன்** நினைப்பினாலே - நினைத்த - எண்ணியபோது என்றலுமாம். "பாவத்தை நண்ணிநின் றறுப்பது", "நாமுற்ற நடுக்கத்தைக் கெடுப்பது" என்ற தேவாரங்கள் தூய்மை செய்து துன்பம் போக்குதலையும், "நலமிகக் கொடுப்பது" என்பது முதலிய திருவாக்குக்கள் நன்மை ஆகச் செய்தலையும் குறித்தன.

"வந்தகூற் றஞ்ச வுதைப்பன", "ஏத்து வார்க்கிட ரான கெடுப்பன", "கொல்ல நமன்றமர் கொண்டு போமிடத், தல்லல் கெடுப்பன", "இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும், அம்மையினுந் துணை" "பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட், கார்வணமாவன", "வினைப்பகைக் கத்திர மாவன" (பஞ்சாக்கரப் பதிகம் - காந்தார பஞ்சமம்) என்றும், "நாம நவிற்றினல் - வார்மது வொப்பது", "இயமன் றூதரு மஞ்சுவர்", "எல்லாத் தீங்கையு நீங்குவர்", "சிந்தும் வல்வினை செல்வமு மாகு

நமச்சிவாயத் திருப்பதிகம் - பொது

திருச்சிற்றம்பலம் பண் - காந்தார பஞ்சமம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன், பொற்றுணை திருந்தடி பொருந்தக்கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும், நற்றுணை யாவது நமச்சி வாயவே. 1

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை ; யாவினுக் கருங்கல மரனஞ் சாடுதல் ;
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது ; நாவினுக் கருங்கல நமச்சி வாயவே. 2

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழ, லுண்ணிய புகிலவை யொன்று மில்லையாம் ;
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை, நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. 3

இடுக்கண்பட்டிருக்கினு மிரந்தியாரையும், விடுக்கிற்பிரானென்று வினவுவோமல்லோம்;
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னுமுற்ற, நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. 4

வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம் ; அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம் ;
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி ; நங்களுக் கருங்கல நமச்சி வாயவே. 5

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால், நலமில னொடொறு நல்கு வானலன் ;
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர், நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. 6

வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்கள், கூடினா ரந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும், நாடினே னாடிற்று நமச்சி வாயவே. 7

இல்லக விளக்கது விருள் கெடுப்பது ; சொல்லக விளக்கது சோதி யுள்ளது ;
பல்லக விளக்கது பலருங் காண்பது ; நல்லக விளக்கது நமச்சி வாயவே. 8

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன், றன்னெறி யேசர ணாத றிண்ணமே,
யந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம், நன்னெறி யாவது நமச்சி வாயவே. 9

மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன், பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத், தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

மால் ", (நமசிவாயப் பதிகம் - கௌசிகம்) என்றும் வரும் ஆளுடைய பிள்ளையாரது திருவாக்குக்களும் காண்க.

நமச்சிவாய என்று - அஞ்சேழுத்தை - பற்றிய உணர்வினில் - திருவைந் தெழுத்து ஓதுமுறைகளும் நிற்கும் முறைகளும் பலவுள. அவற்றுக்கேற்பப் பலன்களும் வெவ்வேறாகும். அவை யெல்லாம் அருளுடைய வழிவழித் தேசிகர்பாற் கேட்டுணரத் தக்கன.

இங்கு நாயனார் சொல்லித் துதித்தது நக ராதியாக வரும் இந்த முறையில் உள்ள திருமந்திரம் என்பார் என்று என்றார். "நகர முதலாகு நந்திதன் னாமமே", "நகராதி தான்மூல மந்திர நண்ணுமே" முதலிய திருமூலர் திருமந்திரங்களும் காண்க.

அன்போடு பற்றிய வுணர்வினில் - அன்பு வைத்தலும், உறைப்புடன் பற்று தலும், உணர்வினில் அதன் உருவேபட ஒன்றி நினைத்தலும் வேண்டும். பயன் பெறு தற்கு இவை இன்றியமையாதன. "காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி, ஓதுவார்", "நம்பு வாரவர்", "நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினைந்து" (பஞ்சாக்கரப் பதிகம் - கௌசிகம்) என்ற பிள்ளையாரது திருவாக்குக்கள் இக்கருத்தை விளக்குவன.

அஞ்சேழுத்தைப் பற்றிய உணர்வு என்றது, அதன் உள்ளீட்டை எண்ணிப் பிடித் தல். திருவருட்பயன் - ஐந்தெழுத் தருணிலை என்ற பகுதியுள்ளும், "எட்டும் இரண் டும் உருவான லிங்கத்தே, நட்டம் புதல்வா நவிலக்கேள் - சிட்டன், சிவாயநம வென் னுஞ் திருவெழுத்தஞ் சாலே, அவாயமற நின்றாடு வான்," "ஆடு படிகேணல் லம் பலத்தா னையனே, நாடுந் திருவடியி லேநகரம், கூடும், மகர முதரம் வளர்தோள் சிகரம், பகருமுகம் வாமுடியப் பார்," "சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா வீசுகரம், ஆர்க்கும் யகர மபயகரம் - பார்க்கிலிறைக், கங்கிநகர மடிக்கீழ் முயலகனார், தங்கு மகரமது தான்", "தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற், சாற்றியிடு மங்கியிலே சங்காரம் - ஊற்றமா, யூன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி, நான்ற மலர்ப்பதத்தே நாடு", "மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ், சாய வமுக்கியரு ளானெடுத்து - நேயத்தா, லானந்த வாரிதியி லான்மாவைத் தானழுத் தானெந்தை யார்பாதந் தான்" என்பனவாதி உண்மைவிளக்கத்திலும், சிவஞான போதம், சிவஞானசித்தியார் இவற்றுள் ஒன்பதாஞ் சூத்திரத்தினுள்ளும், திருமூலர் திருமந்திரம்-ஒன்பதாந் தந்திரம்-தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், அதிசூக்கும பஞ்சாக்கரம், திருக்கூத்துத் தரிசனம், சிவானந்தக்கூத்து முதலிய பகுதிகளிலும், மற்றும் ஞானநூல்களுள்ளும் பார்க்க. இவை அருளும், அனுபவமுமுள்ள ஞான தேசிகர்கள்பாற் கேட்டுணரத் தக்கவை.

அஞ்சேழுத்தைப் - பாடினார் - "எந்தையை ஏத்துவன்" (1390) என்று துணிந்த நாயனார் திருவைந்தெழுத்தைப் பாடிய தென்னையோ? எனில், அதுவே எந்தையின் திருநாமமாதலானும், அவனை ஏத்துதல் அஞ்செழுத்தை, உரு எண்ணுதலேயாம் ஆத லானும், "விதி எண்ணுமஞ் செழுத்தே" எனவும், "அஞ்செழுத்தா லான்மாவை" எனவும், ஞான நூல்களுள் அறிவிக்கப்பட்டபடி அஞ்செழுத்தை எண்ணலுறு வார்க்கு ஆன்மாவில் அரன் "மதியருக்க னணை யரவம்போற் றோன்றி"த் தண்ணிழலாம் என்பது துணிவாதலானும், பிறவாற்றானும் இங்கு அஞ்செழுத்தைப் பாடினார். "ஆலைப் படுகரும்பின் சாறு போல வண்ணிக்கு மஞ்செழுத்தி னாமத் தான் காண்" என்பது முதலியனவாய் இதன் விளைவை அறிந்து இன்பத்து ளழுந்திய நாயனாரது திருவாக்குக்களும் காண்க.

இது முதல் நாயனாரது இந்தத் திருப்பதிகத்தின் சந்தப்பாட்டாகச் சரித வர லாற்றை யாத்த சிறப்பும் அமைதியும் கண்டுகொள்க.

பதிகக் குறிப்பு :—எந்த நிலையினும் வரும் எந்தத் துன்பத்தினையும் காக்கவல்லது திருவைந் தெழுத்தாகும் என்பது. இதனை முன்னிரண்டு பாட்டுக்களாலும் ஆசிரியர் அறிவித் தருளினர். இத்திருப்பதிகப் பாட்டுக்கள் ஐந்தடியுடையனவாகி முதனான்கடி ஒரு பொருள் மேலனவாகவும், ஈற்றடி மேல்வைப்பாக வேறாகவும் எல்லாப் பாட்டுக்களுக்கும் பொதுவாகவும் பதிகக் கருத்துக் கூறுவதாகவும் அமைந்துள்ளனவாதலின், அச்சிறப்பியல்பு குறிக்க இரண்டாக வகுத்து இரண்டு பாட்டுக்களிற் கூறினர். இவ்வாறமைந்துள்ள "மாதர் பிறைக்கண்ணி யானை" என்ற நாயனாரது பதிகத்துக்கும், "இடறினும் தளரினும்" என்ற ஆளுடையபிள்ளையாரது பதிகத்துக்கும் இவ்விரண்டு பாட்டுக்களாற் சரித அமைதி சொல்லிப்போகும் குறிப்பினையும் கருதுக. ஈரடிமேல் வைப்பு, நாலடிமேல் வைப்பு என்ற பெயர்களும் கருதுக.

பதிகப் பாட்டுக் குறிப்பு.— (1) சொற்றுணை வேதியன் - எவ்வகையானும் துணையாய் நிற்கும் வேதத்தைச் சொன்னவன்-வேதத்தின் பொருளாய் விளங்குபவன்-என்க. வேத நடுவில் விளங்கும் சிவ என்ற சொல்லையே துணையாக அடைந்து நின்று அஞ்செழுத்தைப் பாடப் புகுகின்றாராதலின் இவ்வாறு தொடங்கினர். இருளிடத்து வழிகாட்டி யருள்வான் என்பார் சோதிவானவன் என்றார். "இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடிதேன்" திருவாசகம். பொருந்த - விடாது பிடித்துப் பற்றி. "ஒட்டிட்ட பண்பிற்" பொருந்தும்படி; கைதொழ - தொழுதால் - கைதொழவே - நற்றுணையாவது - என்று முடிக்க. கற்றுணை...பாய்ச்சினும் - சரிதக் குறிப்பு. "கல்லி னோடெனைப் பூட்டி யமண்கையர், ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால், நெல்லி வீள்வயல் நீலக் குடியரன், நல்ல நாம நவிற்றியுய்ந் தேனன்றே" என்றதும் காண்க.—(2) இப்பாட்டினுள் அருங்கலம் - பயன் பலவற்றுள்ளும் சிறந்தது என்ற பொருளில் வந்தது. பூவினுக்கு - பூக்களுள். பொங்கு - சிறப்புடைய. சிறப்பாவது கலைமகள் - அலைமகள் - மலைமகள் என்ற மூவரும் வீற்றிருத்தல். "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே" என்றது காண்க. ஆவிற் படுபயன்கள் பற்றி 1224 - 1227-ல் உரைத்தவை பார்க்க. கோவினுக்கு...இல்லது - அரசன் ஒருபாற் கோடாது யாவர்க்கும் ஒப்ப முறை செய்யக் கடவன். கோட்டம் - ஒருபாற் கோடுதல். நாயனாரை அலைத்த அரசன் இதினின்று நீங்கியமையால் "புலைத் தொழிலோன்" (1347) எனப்பட்டான். கலமாதலும், ஆடுதலும், கோட்டம் இல்லதும் போல "நமச்சிவாய" மந்திரமுரைத்தல் நாவினுக் கருங்கலமாம் என்க. உவம உருபு தொக்கது.—(3) விண்ணுற அடுக்கிய - பேரளவுள்ள என்பது பொருள். உண்ணிய புகில் - உண்ணும் பொருட்டுப் புகுந்தால். அவை ஒன்று மில்லையாம் - எல்லாம் எரிந்து தீர்ந்துவிடும்; அதுபோல, என உவம உருபுதொக்கது. பண்ணிய வுலகினிற் பயின்ற பாவம் - உலகில் வருதற்குக் காரணமாய் முன் செய்தனவும், அவை காரணமாய்ப் பிறந்த பின்னர் அவை கொண்டு பெருக்கியனவுமாகிய அளவற்ற பாவங்களின் பெருக்கை. நண்ணி - நின்று - அறுப்பது - புக்கு, போமளவும் உடனின்று தீர்ப்பது.—(4) எவ்வகைத் துன்பம் நேரினும் சிவனைத்தவிர வேறு எவரையும் "அதுதீர்க்கும் தலைவரே" என்று உய்தி கேட்கமாட்டோம். தலைமேல் மலையே வீழ்ந்து நின்று அமிழ்த்தினும், துன்பம் தவிர்ப்பது - ஆதலின் என்க. பின்னிரண்டடிகள் காரண முணர்த்தியன.—(5) அருங்கலம் என்றது வேண்டப்படுவது என்ற பொருளில் வந்தது. வெந்தநீறு - திருநீறு.—(6) சலமிலன்-வேண்டுதல் வேண்டாமை யிலன். சார்ந்தவர்க்கலால் நலமிலன்-சிவன் சலமிலனாயினும் சார்ந்தாரே நலம் பெறுவர். நாடோறும் நலன் நல்குவான் என்க. சலமிலனாகி அவன் நாடொறும் யாவர்க்கும் நலன் நல்குவானாகிலும் சார்ந்தவரே அதனாற் பயன்பெறுவர். குலம் - சாதி குலம் முதலியவையும், ஆச்சிரமமும்,

அடிமைக் குலமும் குறித்தது. குலமிலராயினும் - அவ்வாறு நல்ல குலமில்லாரேயாயினும்.— (7) தூய்மையுடைய தொண்டர்கள் உலகிறந்த நிலையினில் நின்றனர்; அவர்கள் சிவநெறியினைத் தலைப்பட்டுச் சிவயோகங் கைவரப்பெற்று நின்றமைகண்டு, அவர்களை விரைவில் அணைந்து அந்நன்னெறியினை நானுமடைய எண்ணி அவரது சிவ ஞெளியினின்ற உருவத்தைக்கண்டு அந்நெறியே திருவருளை நாடிநிற்க என்னை அஞ்செழுத்தும் நாடிற்று. "அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ" என்ற சிவஞானபோதம் 12-ம் சூத்திரக் கருத்து.—(8) மனைக்கு ஏற்றிடும் விளக்கு அந்த அளவில் வீட்டினுள் உள்ள இருளை வலியிலதாகச் செய்யும்; ஆனால் சொற்றுணையாய இந்த அஞ்செழுத்துச் சுயஞ்சோதியாய்க் கெடாத ஒளியுள்ளது; இனி, மனையினுள் ஏற்றும் பலதிறப்பட்ட ஒளிகளும் பலராலும் காணப்படுவது; ஆனால் அஞ்செழுத்து யாவராலும் காணொணாத வகையில் உள்ளத்தை விளக்கஞ் செய்வது.—(9) முன்னெறியாகிய சிவனது நன்னெறியே யாவருக்கும் புகலிடமாம். சரண்-புகல் இடம்.—(10) **மாப்பிணை தழுவிய மாது** - பிரிதலில்லாத பெருஞ்சத்தியாய் இறைவனுடன் இருக்கும் அம்மையினை. **பிணை** - பிணா - பெண். **பூப்பிணை திருந்தடி** - அடியார் இட்ட மலர்களால் அழகு படுத்தப்பட்ட திருவடி. **பூப்பிணை** - மலர்மாலை. **பொருந்த** - முதற்பாட்டிற் கூறிய கருத்து. **நாப்பிணை தழுவிய** - நாவினிடத்து இடையறாமல் நவிற்றுதலால் தழும்பேறி அத்தன்மை பதிந்த. **நமச்சிவாயப் பத்து** - அஞ்செழுத்தின் பதிகம். **ஏத்தவல்லார்** - ஏத்துதலின் அருமை குறித்தது. **இடுக்கண் இல்லை** - பதிகப் பயனும் குறிப்புமாம். **நாயனாது தேவாரப் பதிகங்களுள் பயன் சொல்லிய பதிகம் இஃதொன்றேயாம்.** சிவனை ஏத்திப் பயனடைதலே மக்கட்கு உறுதியாத லறிவிக்கப் பயன் கூறினார். ஏகாரம் தேற்றம். இல்லை - இல்லையாகும் என ஆக்கச்சொல் வருவித்துக் கொள்க. "ஏத்தவல் லாரெலாம், பந்த பாச மறுக்கவல் லார்களே" என்று பிள்ளையாரும், "சொல்லு வார்க்கில்லை துன்பமே" என்று நம்பிகளும் அவ்வப் பதிகங்களுக்குப் பயன் கூறியருளியவற்றையும் இங்கு நினைவுகூர்க.

1392. பெருகிய வன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்முத லமரர் வாழ்த்துதற்
கரியவஞ் செழுத்தையு மரசு போற்றிடக்
கருநெடுங் கடலினுட் கன்மி தந்ததே. கஉஎ

(இ - ள்) வெளிப்படை. பெருக்கெடுத்த அன்பின்றிறத்தினராகிப் பிடித்துக் கொண்ட தன்மையினாலே, அரிய பிரமதேவன் முதலாகிய அமரர்களாலும் போற்றற் கரிதாகிய திருவைந்தெழுத்தையும் திருநாவுக்கரசர் இவ்வாறு தோத்திரஞ் செய்யவே, கரிய கடலினுள்ளே கல்லானது மிதந்தது.

(வி - ரை) **பெருகிய அன்பினர் பிடித்த** - பெருகுதல் - எஞ்ஞான்றும் சோர்தலில்லாது மிகுதல். **அன்பினர்** - குறிப்பு வினையாலணையும் பெயர். **பிடித்த பெற்றியால்**-"அன்பொடுபற்றிய" என்ற முன்பாட்டிற் கூறியகருத்து. **பெற்றியால்-போற்றிட.**

**அமரர்** - உயர்வுசிறப்பும்மை தொக்கது. **அரு-மலரோன்** என்ற அடை கொடுத்துக் கூறியதன் கருத்தும் காண்க.

**அமரர் வாழ்த்துதற்கரிய அஞ்செழுத்து** - அமரர் சுவர்க்க போக முதலிய பயன்கருதிச் செய்யும் பசுபுண்ணியமே வல்லாராய்ப் புண்ணியபாவங்களினிடைப்பட்டு உழல்பவராயும், அன்பொடு முற்றும்பற்றித் தம்மைமறந்து சிவனையே நினைக்கமாட்டாதவராயும் உள்ளமையால் இங்ஙனங் கூறினார்.

அஞ்செழுத்தையும் - போற்றிட - அஞ்செழுத்தருணிலையை யெண்ணித் துதித்தமையால் அதன்வடிவேயாயின ராதலின். "விளங்கித்தோன்றினார்" (1393) என மேல் வரும் பாட்டிற் கூறுதல்காண்க.

கடலினுள் கல் மிதந்ததே - ஏகாரம் தேற்றம். நீரினுள் ஆழும் நியமமுடைய கல் மிதக்குமோ? எனின், ஒருகால் மிதக்கும் என்க. "நிலத்தில் வழாஅக் கல்லே போல" மேலே போகட்டதொரு பொருள் கீழே வீழ்தல் நியமமாயிருப்பினும், "அந்தரத் தகிலகோடி தாமாம ணிலைநிற்கக்" காண்கின்றோம். "வெளிப்பட, மண்ணிற் றிண்மை வைத்தோன்" (திருவா - அண்டப்பகுதி - 26.) என்றபடி மண்ணைக் கடினமாக்கினது இறைவன் செய்கை. சிருட்டிக் கிரமத்தில் நீரினின்றும் மண் கடினமாய்த் தரித்துக் கீழ் இறங்கி நிலைக்கும். சங்காரக் கிரமத்தில் நிலம் நீரில் கலந்து மேனோக்கும். இவையும் நியமம். (மண்ணின் திணிந்த நிலையே கல் என்ப). சிருட்டியும் சங்காரமும் நித்தியமாய்அங்கங்கும் நிகழ்வன என்பது திருமந்திரம் முதலிய ஞான நூல்களால் உணரப்படும். இங்கு ஆழ்த்திக் கொல்வதற்காக அமணரிட்ட கல்லே மிதந்து தெப்பமாக உதவியது, படைப்பாதி ஐந்தொழிற்கும் முதல்வராகிய இறைவரது நியதி என்க. நியதியாவது அவரவரா லீட்டப்படும் வினையின் பயனை அவரவரே நுகருமாறு அரசராணைபோல நியமித்து நிறுத்துவது என்பர். ஒருவன் ஒருவனைக் கொல்லும் நோக்கத்துடன், கொல்லுந் தன்மையுடைய ஒரு நச்சுப் பொருளைக் கொடுத்தபோது, அதற்கு மாறாக அது அவனுடலில் முன்னிருந்ததொரு கொடு நோய்க்கு மருந்தாகி அவனைச் சாவாமற்செய்வதோடு நோயினைப் போக்குவதும் உலகிற் காண்கின்றோம்.

அதுபோல இங்கு ஆழவும் ஆழ்த்தவும் வேண்டிய கல் மிதந்தது என்க. கொல்ல முயன்ற பாவப்பயன் அவர்க்கும், தமது தொடக்கு நீங்க உய்ந்த பயன் இவர்க்குமாக ஒரு செயலே விளைக்குமென்க. சிவனருளால் அட்டமாசித்திகள் கைவரப்பெற்ற வித்தகச் சித்தர்களே இலகுமா - மகிமா - கரிமா முதலிய சித்திகளால் இத்தகைய செயல்கள் செய்ய உள்ளவர் என்பதும் உலகிற் காண்கின்றோம். அத்தகைய சித்தர்களைப்பற்றி ஈசத்துவம் என்ற சித்தியினால் "தானே படைத்திட வல்லவ னாயிடும்; தானே யளித்திட வல்லவ னாயிடும்; தானே சங்காரத் தலைவனு மாயிடும்; தானே யிவனெனுந் தன்மைய னாகுமே" என்றருளினர் திருமூலர். இவையெல்லாம் அடியாரது நிலைக்குக் கீழ்ப்பட்டவை. நமது சைவ சமய பரமசாரியர்கள் இவ்வகைய தாழ்ந்த சித்தியினா லன்றித், தமது கரணங்கள் சிவகரணங்களாகப் பெற்றமையால் பிறரெவராலும் செய்யலாகாத பெருஞ் செயல்களும் செய்ய வல்லவராயினர். "பாலை நெய்தல் பாடியதும்...நந்தங் கரணம்போ லல்லாமை காண்" என்ற திருக்களிற்றுப் படியார் (12) காண்க. இங்கு "நடுக்கத்தைக் கெடுப்பது", "நலமிகக் கொடுப்பது" எனவும், "ஏத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே" எனவும் பற்றிய வுணர்வினிக் தியானித்தபோது அஞ்செழுத்தே புணையாகத் தாங்கியுய்த்தது என்க.

நீற்றறையினுள்ளே நின்று நெருப்பைக் குளிர்வித்தார்க்குக் கடலினுள்ளே கல் மிதப்பதும் அருமையாகுமோ? இதனை ஆசிரியர் 1394ல் விரிப்பதுவும் காண்க.

வருமலரோன் - என்பதும் பாடம். 127

1393. அப்பெருங் கல்லுமங் கரசு மேல்கொளத்
தெப்பமாய் மிதத்தலிற் செறிந்த பாசமுந்
தப்பிய ததன்மிசை யிருந்த தாவில்சீர்
மெய்ப்பெருந் தொண்டனார் விளங்கித் தோன்றினார். ௧௨௮

(இ - ள்) வெளிப்படை. அந்தப் பெரியகல்லும் அங்குத் திருநாவுக்கரசர் அதன் மேல் வீற்றிருந்து கொள்ளும்படி தெப்பமாக மிதத்தலின், அவரது திருமேனியை உடன்வலித்துப் பிணைத்திருந்த கயிறும் அறுந்தது; இவ்வாறு அந்தக் கல்லின்மேல் எழுந்தருளியிருந்த கெடுதலில்லாத சிறப்பினையுடைய மெய்ப்பெருந் தொண்டனாராகிய அரசுகள் விளங்கித் தோன்றினார்.

(வி - ரை) பெருங்கல் - "ஒரு கல்" (1388) என்ற விடத்துரைத்தவை பார்க்க. எவ்வாற்றானும் பாரந்தாங்கலாற்றாது அமிழ்த்தும் பொருட்டுப் பெருங்கல்லிற் பிணித்தனர்; அவ்வாறு பெரிய கல்லேயாயினும், என உம்மை உயர்வு சிறப்பு. பெருமை என்ற அடைமொழி, அரசு மேல்கொளத் தெப்பமாகத் தாங்கும் பெருமை பெற்ற என்ற குறிப்பும் தர நின்றது. தெப்பமாய் - கல்லே தெப்பமாக ஆக்கப்பட்டு. ஆய் - அவ்வாறு ஆதல் அதன் இயல்பா னன்றித் திருவருளால் ஆக்கப்பட்டதனால் ஆயிற்று என்பதாம். தெப்பம் - நீரின்மேல் உடலைத் தாங்கும் மிதவை.

மிதத்தலில் - பாசமும் தப்பியது - ஆழும் கல் ஆழாது மிதந்தது போலவே, பிணித்துக் கட்டிய பாசமும் கட்டுந்தன்மை அழிந்து கட்டுவிட்டு அழிந்தது. இல் - உவமப்பொருளில் வந்த ஐந்தனுருபு. கல்லை ஆழாது மிதக்கச் செய்த அஞ்செழுத்தருளே, பாசத்தையும் கட்டு விடுவித்தது என்பது. மிதந்ததாதலின் பாசமுந் தப்பியது என ஏதுப் பொருள் கொள்வாருமுண்டு.

அதன்மிசை - கல்லின்மேல். கனத்த பொருளும் இலகுப் பொருளும் பிணைத்து நீரிற் பாய்ச்சினால் கனத்த பொருள் கீழும் ஏனையது அதன் மேலுமாக நின்று ஆழும். இங்கும் அவ்வாறே கடலின் உட்புகும் கல் மிதக்கவே அதன் மேல் நாயனார் இருந்து விளங்கினார் என்க.

சேறிந்த பாசமும் தப்பியது - செறிந்த - நெருக்கி வலித்துக் கட்டிய. பிறவினை தன்வினையாக வந்தது. பாசம் - கயிறு. உம்மை கல் மிதந்ததுபோலக் கயிறும் என இறந்தது தழுவியது.

தாவில் சீர் மெய்ப் பெருந் தொண்டனார் - பொறுமை கொண்டு அமணர் பல வகையால் அழிக்க முயன்றும் அழிக்கலாகாமையானும், இனியும் எஞ்ஞான்றும் அழியாது நிலைநிற்பதாகலானும் தாவில் என்றும், தெய்வத்தன்மை வாய்ந்த பெருமையாதலின் சீர் என்றும், உண்மையிற் பிறழாது நிற்றலின் மெய் என்றும், தன்மை அளக்கலாகாமையின் பெரும் என்றும், "அடிபொருந்தக் கைதொழ" என்று அடிமைத் திறத்தினாலே அமணர் சூழ்ச்சியை வெற்றி கொண்டமையாலே தொண்டனார் என்றும் கூறினார்.

விளங்கித் தோன்றினார் - மேற்கூறிய அத்தன்மைகள் யாவும் உலகில் யாவரும் அறியும்படி விளங்கி வெளிப்பட்டனர். "தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார், தோன்றலிற் றோன்றாமை நன்று" (குறள்) என்றபடி நாயனார் அவதரித்ததுமுதல் முன்னரும் புகழொடு தோன்றினாலும், இதுபோழ்து அதன் மேலும் விளங்கித் தோன்றினார் என்பதாம்.

கல்லுமாங்கு—சேறித்த—தப்பினவதன்மிசை—இருந்து—என்பனவும் பாடங்கள். 128

1394. இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
வருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கடல்
ஒருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ. கஉசு

(இ - ள்) இருவினைப்பாசமும் - நல்வினை தீவினை என்னும் கயிறும்; மலக்கல் ஆர்த்தலின் - ஆணவம் என்னும் கல்லினோடு இறுகப் பிணித்தலின்; வரும் - கூட்டப் படும்; பவக்கடலில் வீழ் மாக்கள் - பிறவியாகிய கடலினுள் வீழ்மாக்கள்; ஏறிட அருளும் அஞ்செழுத்து - ஆழ்ந்துவிடாமல் மேல்ஏறும்படி துணைநிற்கும் திருவைந் தெழுத்து; அரசை - திருநாவுக்கரசரை; இக்கடல்......வேண்டுமோ? - இந்த ஒரு சிறு கடலினுள் ஆழாது ஒருசிறு கல்லின்மேல் ஏற்றிடுதலும் ஒருவியப்பாக உரைக்கப் படுமோ? (படாது.)

(வி - ரை) இருவினைப்பாசம் - மலக்கல் - பவக்கடல் - மூன்றும் உருவகம். பாசம் - ஆன்மாக்களைக்கட்டித் தம்வயப்படுத்திச் செயலற்றுக் கிடக்கச் செய்யும் இருவினை மலங்களைக் கயிறுகவும், ஆணவமலம் திணிந்த இருள்போன்றதாய் உயிர்களின் அறிவு சிறிதும் விளங்காது மூடுதலின் கல்லாகவும், பவம் எழுவகைத் தாய் மாக்களைப் பரம்பரையில் அலைத்து அளவில்லாது பெருகுதலின் கடலாகவும் உருவகம் செய்தார்.

பாசமும் - உம்மை திணிந்த - தப்பமுடியாத-வலிமையுடைய வினைப்பாசங்களும் என்று உயர்வு சிறப்பின் கண்வந்தது. இரு - என்றது பெரிய - வலிய என்ற குறிப்பும் பட நிற்பது காண்க.

மலக்கல் - மலம் - ஆணவமலம். மாயைகன்மங்களாகிய ஏனைய இரண்டும்வந்து பொருந்த மூலமாக இருத்தலானும், விடயங்களின் இழிவு தெரியவொட்டாமல் அவற் றின் அழுந்துதற் கேதுவா யிருத்தலானும், செம்பிற்களிம்புபோலச் சகசமாயிருத்த லானும், வியாபகமாகிய உயிரின் அறிவை மறைத்து அணுத்தன்மைப் படுத்தலானும் இஃதொன்றே மலம் என்ற பெயரால் ஞான சாத்திரங்களுட் சேப்படும்.

ஆர்த்தலின் வரு பவம் - பவம் - பிறவி. வினைக்கீடாக உயிர்கள் பிறவியிற் புகுத் தப்படுவன என்பது உண்மை. வரும் - வருவிக்கப்படும். செயப்பாட்டுவினைப் பொரு ளின் வந்தது பிறவிதானே வராது; ஒருவன் கூட்டுவிக்க வேண்டியிருத்தலின். ஆர்த்தல் - கட்டுதல். "வல்வினையேன் றன்னை, மறைந்திட மூடிய மாயவிருளை, யறம் பாவ மென்னு மருங்கயிற்றுற் கட்டி", "ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலிற் றுடளை யிடுமின்" "பாம்பொன் றூர்த்து" முதலிய திருவாக்குக்கள் காண்க.

மாக்கள் - அறிவில்லாது வினைசெய்து பிறவிக்கு வழிதேடிக் கொள்ளுதலின் பிறப்பால் மக்களேயாயினும் தன்மையால் மாக்கள் என்றார்.

ஏறிட அருளும் - ஏறத் துணைசெய்யும். அருளால் தாள் வணங்குதலும், வணங்கு தலால் மேல் ஏறிவருதலும் நிகழும். அஞ்செழுத்துத் துணையாயின மட்டில் சாதனமாய் அமையும். அதனை விதிப்படி எண்ணுதலும் பயன் பெறுதலும் ஆன்மாக் களின் செயலாதலின் ஏற்றிட என்னாது இங்கு ஏறிட என்றார். பின்னர் ஏற்றிடல் என் றது வேறு. "தன்கடன் அடியேனையும் தாங்குதல், என்கடன் பணிசெய்து கிடப் பதே" என்ற தன்மையில் நின்று நாயனார் இங்கு எந்தையை அஞ்செழுத்தாகத் துதித்திருந்தனராதலின் அதுவே அவரைக் கல்லின்மேல் ஏற்றியது என்பதாம்.

மெய் அஞ்செழுத்து - மெய் - சத்தாகிய; என்றும் மாறுபடாத - தப்பாத. "போதியோ வென்னும், மன்னமெய்த் திருவாக் கெனுமமுதம்" (திருஞான - புரா. 1089), "எங்கள் சண்பை யாண்டகையார் கும்பிடவந் தணைகின் றூர்தம் மெய்த் தன்மை விளங்குதிருச் செவி" (ஷை - 478) மெய்வேடர் பெருமானை (கண் - ஷை - 23) முதலியவை காண்க. அஞ்செழுத்தின் நிலைபற்றி (1390) முன் உரைக்கப் பட்டது.

அரசை இக்கடல் ஏநகல் - அரசை என்றதனுல் வினைப்பாசம் மலக்கல் ஆர்த்திடப் பவத்தில் வீழ்மாக்களை ஏறிட அருளவல்லது அவ்வாறின்றித் தூயரா கிய அரசரை என்பதும்; இக்கடல் என்றதனுல் எழு பவக்கடல்போல அளக்கலாகா அகலமும் ஆழமுமுடைத்தல்லாத இந்த ஒரு சிறுகடல் என்பதும்; ஒநகல் என்றதனுல் அநாதியே பந்தித்த திணிந்த ஆணவமலம் போலன்றி இறைவனுல் உயிர்களின் பொருட்டுத் தரப்பட்ட மாயையின் காரியமாகிய சிறிய இவ்வொருகல் என்பதும் குறித்தபடி கண்டுகொள்க. உரைக்க வேண்டுமோ? - அரிய தென்னவும் படுமோ!; அரிய செயல் செய்வார்க்கு எளிய செயல் ஒன்றினைச் செய்தல் அரிதாகுமோ?; மிக எளிதேயாம் என்றபடி.

இருவினைப் பாச முமலக்கல்-மேல் உரைத்தவாறன்றிப் - பாசம்—மு(ம்)மலக்கல் என்று பிரித்து ஆணவம் மாயை கன்மமென்னும் மூன்று மலங்களாகிய கல் என்றுரைப் பினுமமையும். அவ்வாறு உரை கொள்ளுங்கால் முன் உரைத்த இருவினை என்பதும் மலங்களுள் கன்ம மலத்துள் அடங்குதலால் அவ்வுரை பொருந்தாதென்று கேள்வி நிகழ்ந்தவழி, அற்றன்று; மும்மலம் எனப் பின்னர்க் கூறியதனுள் வந்தது மூலகன்ம மாகி மும்மலங்களுள் வைத்து எண்ணப்படுவது எனவும், இருவினை என்றது மூல கன்மத்தால் வரும் பவந்தோறும் ஈட்டப்படுவது எனவும் கொள்ளப்படுமென்க. சிவ ஞானமுனிவரும் இவ்வாறு பொருள் கொண்டுள்ளார். "முன்புதிருக் காளத்தி முதல் வனு ரருணோக்கால்,......யாக்கைத் தன்பரிசும் வினையிரண்டுஞ் சாருமல மூன்றுமற" (803) என்ற திருவாக்கினையும் காண்க. ஆண்டுரைத்தவையும் பார்க்க. "பட்டவே மூலவினை" என்ற ஆன்றோர் வாக்கும் காண்க. 129

1395. அருணயந் தஞ்செழுத் தேத்தப் பெற்றவக்
கருணைநா வரசினைத் திரைக்க ரங்களாற்
றெருணெறி நீர்மையிற் சிரத்திற் றாங்கிட
வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம். கங௦

(இ - ள்) வெளிப்படை. திருவருள் நயத்தலால், அஞ்செழுத்தினுல் தாங்கப் பட்ட அந்தக் கருணையேயுருவான திருநாவுக்கரசரைத் தனது அலைகளாகிய கைகளினுல் ஏந்தி, அவரது பெருமையினை அறிந்த முறையாலே, தனது தலைமீது தாங்கிக்கொள்ள முன்காலத்தில் வருணனும் பெரிய தவத்தைச் செய்திருந்தனன்.

(வி - ரை) அருள்......பெற்ற - அருள் நயந்து - இறைவனது திருவருள் கூடுத லால்; அஞ்செழுத்து ஏத்தப்பெற்ற - ஐந்தெழுத்தினுல், அதன் வலிமையால் - துணை யினுல் - மேல் ஏந்தப்பெற்ற. ஏந்த - என்பது ஏத்த என நின்றது. ஏத்த என்பது ஏற்ற என்ற பொருளில் வந்த தெனினுமமையும். அஞ்செழுத்து மேல் ஏற்றிடல் என முன்பாட்டிற் கூறியதனைத் தொடர்ந்து எடுத்து மேற்கூறியபடியாம். இதற்கு இவ்வாறன்றி, திருவருளை நாடி அஞ்செழுத்தைப் போற்றும் பேறுபெற்ற என்று உரைப்பினுமமையும்.

கருணை நாவரசு - நாவன்மை பெற்றவர்; எது கூறினும் அவ்வண்ணமே பயன் விளைத்துவிடும் நிறைமொழியுடையார். "நிறைமொழியாவது அருளிக்கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தேவிடும் மொழி" என்பர் பரிமேலழகர். இப்போது நாவுக்கரசர் எனக்கெது விளைவாயினும் எந்தையை ஏத்துவன் என்று திரு அஞ்செழுத்தையே ஏத்தினுரேயன்றி அமணர்களையேனும், அவர்களோடு ஒன்றி மதி யிழந்து கொடுஞ்செயல் செய்வித்த மன்னனையேனும் ஒரு சிறிதும் வெகுண்டு கூறினு ரல்லர். கூறியிருப்பின் அவர்கள் அச்சொல்லின் ஆற்றலால் அழிந்துபட்டிருப்பர்,

ஆதலின் இங்கு விதந்து கருணை என்ற அடைமொழிதந்து கூறினர். "இந்தக் கருணை கண்டால், மிண்டாய செய்கை யமண்கையர் தீங்கு விளைக்கச்செற்றம் உண்டா யின வண்ண மெவ்வண்ணம்" என்பதுங் காண்க. பின்னர்ப் பழையாறை வடதளிக் கோயிலை அமணர் மறைத்துப் பாழியாக்கிய கொடுஞ்செயல் கண்டபோது சிறிதும் வெருளா திருந்தமையும் அவரது கருணையினைக் காட்டுவதாம்.

திரைக்கரங்களால் - தாங்கிட - என்று கூட்டுக. கரங்களால் சிரத்திற்றாங்குத லாவது சிரத்தில் வைத்துக் கைகளாற் றாங்கி ஏந்துதல். திரைக்கரம் - உருவகம். சிரம் - குறிப்புருவகம். தேருநெறி நீர்மையில் - பெருமையை அறிந்துகொண்ட தன்மையில். தேருநெறியாவது அடியாரைச் சிரமேற்றாங்கி வழிப்படுதல் வேண்டு மென்பதும், அப்புண்ணியப் பேறு பெறுதற்குப் பெருந்தவம் செய்தல்வேண்டு மென்பதும் அறிந்து ஒழுகும் முறை.

வருணனும் செய்தனன் முன்பு மாதவம்-வருணன் தேவர்களுள் ஒருவன்; தேவர் கள் சிவனடியார்களை வழிபட்டு அவர்களது அருளைப்பெற்று உய்திபெறவேண்டிய பசுக் கூட்டத்தார்களே யாவர். அவர்கள் அடியார்களைத் தாங்கிவரும் பேறும் அடியார் கட்குப் பணிசெய்யும் பேறும் பெறுதல்வேண்டின் அது முன்பு செய்த மாதவத்தின் பயனாகக் கிடைக்கப் பெறுவதன்றி எளிதில் அவர்களுக்குக் கிட்டுவதன்று என்பதாம். வருணனும் - உம்மை இழிவுசிறப்பு. முன்பு - முன்காலத்தில் - முன்பிறவியில். மாதவம்- சாமானியமாகிய சிறுதவங்களால் ஆவதன்று என்பது. "இந்திரன் மால்பிரம னெழிலார் மிகு தேவரெலாம்,வந்தெதிர் கொள்ள வென்னை மத்த யானை யருள்புரிந்து" (பஞ்சமம்- நொடித்தான்மலை - 9) என்ற நம்பிகளது தேவாரத்தாலும், புராணத்தாலும் அறியப்படு கின்றபடி தேவர்கள் யானையுடன் போந்து நம்பிகளை எதிர்கொண்டு கயிலைக்கு அழைத் துச் சென்றார்கள். கயிலைக்குச் செல்லும் வழியில் "ஏழிசை யின்றமிழா லிசைந்தேத் திய பத்தினையும், ஆழி கடலரையா வஞ்சை யப்பர்க் கறிவிப்பதே" என்று நம்பிகள் ஆணையிட்டபடியே "வருணனு மருள்சூடி, யூழி யிற்றனி யொருவர்தந் திருவஞ்சைக் களத்தினுய்த் துணர்வித்தான்" என்பதுமறியப்படும். திருவாதவூரடிகள் சரிதத்தில் அவரோடு மாறுபட்டு வாதிட்ட புத்தர்களின் நாவிலிருந்து பேசுவித்த கலைவாணி, வாத வூரடிகளது அருளிப்பாட்டின்படியே அஞ்சிப்,புத்தர்களது நாவினின்றும் நீங்கினளாக, அவர்களனைவரும் உடனே மூங்கைகளாயினர் என்பதும் காண்கின்றோம். திருவாரூரில் தேவாசிரிய மண்டபத்தின் கடையில்நின்று அடியார்களின் அருள்பெறும் காலநோக்கிப் "பூவார் திசைமுக னிந்திரன் பூமிசை, மாவா முகலத்து மான்முதல் வானவர்" நீங் காது காத்திருக்கின்றனர் என்பதும் அறிகின்றோம். இவற்றா லெல்லாம் தேவர்கள் அடியார்களை வழிபட்டு அருள்பெறவுள்ளவர்கள் என்பது விளங்குவதனைக் கண்டு கொள்க.

நேர்மையின்—தாங்கிடல்—என்பனவும் பாடங்கள். 130

1396. வாய்ந்தசீர் வருணனே வாக்கின் மன்னரைச்
சேர்ந்தடை கருங்கலே சிவிகை யாயிட
வேந்தியே கொண்டெழுந் தருளு வித்தனன்
பூந்திருப் பாதிரிப் புலியூர்ப் பாங்கினில். கங்க

(இ - ள்) வெளிப்படை. சீர்வாய்ந்த வருணனே, திருநாவுக்கரசு நாயனாரைச் சேர்ந்து அடைந்த கருங்கல்லே சிவிகையென ஆகியிட, ஏந்தியபடியே கொண்டு வந்து மலர்கள் நிறைந்த திருப்பாதிரியினைத் தலமரமாக வுடைய புலியூர் என்ற தலத்தின் பக் கத்தில் எழுந்தருளச் செய்தனன்.



கரையேறவிட்ட குப்பம்

—பாட்டு - 1396 - பக்கம் - களO



திருப்பாதிரிப்புலியூர் கோயில் - முன் தோற்றம்

—பாட்டு - 1396 - பக்கம் - களO



திருவதிகை - திருக்கோயிலும் கெடில நதியும்

—பாட்டு - 1407 - பக்கம் - கஅரு



குணபர வீச்சரம்

—பாட்டு - 1411 - பக்கம் - ககூகூ

(வி - ரை) வருணனே - எழுந்தருளுவித்தனன் என்று வினைமுடிவு செய்க. வருணனே - கருங்கலே - ஏந்தியே என்ற ஏகாரங்கள் மூன்றும் தேற்றப்பொருளில் வந்தன. தன்னுட் போகட்ட பொருள்களை ஆழ்த்தி அகத்துக்கொள்ளு மியல்புடைய வருணன் அதற்கு மாறாக ஏந்தியே எழுந்தருளுவித்தனன் என்பதும், தன்னொடு கூடிய பொருளைத் தன்னுடனே அமிழ்த்தத் தக்க கல்லே அதற்கு மாறாகச் சிவிகையாய் மிதக்க என்பதும் ஏகாரங்களாற் குறிக்கப்பட்டன.

எழுந்தருளுவித்தல் - சைவமரபு வழக்கு ; கொண்டு சேர்த்தனன் என்பது.

பூந்திருப்பாதிரிப்புலியூர் - பாதிரிமரம் பூக்களாற் சிறப்புடையது. பூ-அழகிய என்றலுமாம். புலிக்கால் முனிவரர் பூசித்த காரணத்தால் இப்பெயரெய்தியது. தல வரலாறு பார்க்க.

பாங்கரில் - நாயனார் கரையேறிய இடம் கரையேறவிட்டகுப்பம் என வழங்கு கின்றது. தலத்துக்கு அணிமையில் தெற்கில் உள்ளது. இப்போது கடல் அங்குநின் றும் நெடுந்தூரம் கிழக்கு நோக்கிப் பின் சென்றுள்ளது. பாங்கரில் - எழுந்தருளுவித்த னன் - என்க. விரைவுபற்றி வினைமுற்று முன் வந்தது. 131

1397. அத்திருப் பதியினி லணைந்த வன்பரை
மெய்த்தவக் குழாமெலா மேவி யார்த்தெழ
வெத்திசை யினுமர வென்னு மோசைபோற்
றத்துநீர்ப் பெருங்கட றானு மார்த்ததே. கநஉ

(இ - ள்) வெளிப்படை. அந்தத் திருப்பதியில் அவ்வாறு வந்து அணைந்த அன்ப ராகிய திருநாவுக்கரசரை மெய்த்தவக் கூட்டமாகிய அடியார் குழாங்கள் எல்லாம்கூடி மகிழ்ச்சியினால் ஆரவாரித்து எழுதலால் எல்லாத் திசைகளிலும் "அர கர" என்று ஒலிக்கின்ற பேரோசையினைப்போல அலைநீரையுடைய பெருங்கடலும் சத்தித்தது.

(வி - ரை) புலியூரின் பாங்கரில் அலைக்கரத்தால் வருணன் ஏந்தி எழுந்தருளு வித்த நாயனார் அங்கு நின்றும், புலியூரை அணைந்தனர் ; மெய்த்தவர் கூட்டமாக மேவி ஆர்த்தெழுந்து "அர" வொலி முழக்கினர் ; அவ்வோசை கடலொலிபோல மிக்கது.

அரவென்னும் ஓசைபோல் கடல்தானும் ஆர்த்தது - கடல்போல அரவென்னு மோசை எழுந்தது என்பது கருத்து. (உவமேயம்) பொருளாய் வருவதனை உவமை யாக்கி உரைப்பது அணி வகையுள் ஒன்று. இதனை விபரீத உவமை எனவும், இயம்பு தல்வேட்கை யுவமை எனவும் வகைப்படுத்தி யுரைப்பர் தண்டியலங்காரமுடையார். வினைபற்றி எழுந்த உவமம். "கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்" என்ற திரு முருகாற்றுப்படையும், "பூங்கழற் கிணைதுணை மலர்கொண்டு", "நின்மலர்த் திரு முகத்தின், கருணையின் சூரியனெழ" எனவரும் திருவாசகமும், "ஈங்கிவ ளங்கனி வாய்கமழ மாம்பலம் போதுள வோவளி காணு மகன்பணையே" என்ற திருக் கோவையாரும் முதலியவை காண்க.

கடல் தானும் - உம்மை அறிவில்லாத கடலும் என இழிவு சிறப்பும்மை. ஏகாரம்- தேற்றம். தத்துநீர் என்றது ஆர்த்தலுக்குக் காரணங் குறித்தது.

தானும் என்றது அடியார்களோடு கடலும் என இறந்தது தழுவிய எச்சவும்மை என்றலுமாம். அன்பர் தம்பால் வந்து அணைந்தமை கண்டு அடியார் ஆர்க்க, அவ்வாறு அணைவிக்க அவரை ஏந்திவந்த தன் செயல் முற்றுப்பெறக் கண்ட மகிழ்ச்சியாற் கடலும் ஆர்த்தது என்று தற்குறிப்பேற்றக் குறிப்பும் காண்க.

அரவேனுமோசை - முழக்குதல்பற்றி, "எல்லா மர ுைமமே சூழ்க" என்று ஆளுடையபிள்ளையார் அருளியதற்கு, "தொல்லுயிர் யாவையும் வாழி யஞ்செழுத் தோதி வளர்கவே" என ஆசிரியர் விரிவுரை செய்தது காண்க. 132

1398. தொழுந்தகை நாவினுக் கரசுந் தொண்டர்முன்
செழுந்திருப் பாதிரிப் புலியூர்த் திங்கள்வெண்
கொழுந்தணி சடையனைக் கும்பிட் டன்புற
விழுந்தெழுந் தருணெறி விளங்கப் பாடுவார், கஙங

வேறு

1399 "ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாகி" யெனவெடுத்துத்
"தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்கட்"கென்று
வான்றாழ் புனற்கங்கை வாழ்சடை யானைமற் றெவ்வுயிர்க்குஞ்
சான்றா மொருவனைத் தண்டமிழ் மாலைகள் சாத்தினரே. கஙச

1398. (இ - ள்) வெளிப்படை. யாவராலும் தொழத்தகுந்த திருநாவுக்கரசரும், தொண்டர்களின் முன்னே, செழுந் திருப்பாதிரிப்புலியூரில் எழுந்தருளியிருக்கும் வெள்ளிய பிறைச்சந்திரனைச் சூடிய சடையினையுடைய சிவபெருமானைக் கும்பிட்டு, அன்பு பொருந்தும்படி கீழே விழுந்து வணங்கிப், பின் எழுந்து நின்று, திருவருணெறி உலகில் விளங்கும்படி பாடுவாராகி, கஙங

1399. (இ - ள்) வெளிப்படை. "ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாகி" என்று தொடங்கித், "தோன்றாத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கு" என்று முடிக்கும் அக்கருத்துக்கொண்ட பாட்டு முதலாக, வானிடத்திருந்து உலகில் தாழும் நீரையுடைய கங்கைவாழ்கின்ற சடையினையுடையாரை, மற்றும் எல்லாவுயிர்களுக்கும் சான்றாயிருக்கும் ஒருவரைத் தண்ணிய தமிழாலாகிய மாலைகள் சாத்தினர். கஙச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

1398. (வி - ரை) நாவினுக்கரசும் - கும்பிட்டு - விழுந்து - எழுந்து - சடையானை - ஒருவனைப் - பாடுவார் - எடுத்து - என்று - தமிழ் மாலைகள் சாத்தினர் என்று இந்த இரண்டு பாட்டுக்களையும் முடிக்க.

தொழுந் தகை - தொழும் - தொழப்படும். செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது. தேவர்களாலும் மற்றும் யாவராலும் தொழப்படும் தன்மையுடைய. தேவரால் தொழப்படும் தன்மை முன் 1395ல் உரைக்கப்பட்டது. இவ்வாறன்றித் தொழும் என்பதனைச் செய்வினையாகவே கொண்டு, தாம் வருதலைக்கண்டு மேவி அர என்னும் ஓசை முழக்கிய மெய்த்தொண்டரையும், அதுபோல அவ்வோசை முழக்கிய கடலையும் தொழுதுகொண்ட தன்மையுடைய என்றுரைப்பினுமமையும். தொண்டர்களைக் கண்டபோதே இறைஞ்சுவது அடியார்களது தன்மை. "தொண்ட ரெயிற்புறஞ் சென்றபோது, சொல்லி னரசர் வணங்கித் தொழுதுரை செய்தணைவார்" (1484), என்பதும், நாயனார் திருத்தில்லையைக் காண வழிக்கொண்டபோது "அவர்தந் திருவடிவு கண்டு அதிசயமென வந்து எதிர் "அரகர" என்றே" சிவமொழிகளைக் கிளிகளும் பூவைகளும் பகரக்கண்டு, அவரும் தொழுதனர் என, "அஞ்சொற் றிருமறை யவர்முன் பகர்தலு மவரும் தொழுது" (1426) என்றதும் காண்க.

நாவினுக்கரசும் - தொண்டர் அரவோசை ஆர்க்கவும் அதுபோலக் கடல் தானும் ஆர்க்க, அரசுகளும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

தொண்டர் முன் - சடையானைக் கும்பிட்டு - தொண்டர்களுடன் கூடி இறைவனைக் கும்பிடுதல் ஒரு பேரின்பம் தருவது. திருவாரூரை ஒவ்வொருவரும் தரிசித்த காலை ஆளுடைய பிள்ளையார் - அரசுகள் - நம்பிகள் என்ற மூவர் முதலிகளும், திருப்பாச்சிலாச்சிராமத்தில் நம்பிகளும், திருக்கண்டியூரில் ஆளுடைய பிள்ளையாரும், தொண்டர்களின் முன்பு நின்று அவர்களுடன் கூடிய நிலையில் இறைவனைக் கும்பிட்ட திருப்பதிகங்களின் இன்பம் ஈண்டு உணர்ந்து அனுபவிக்கத் தக்கது.

திங்கட் கொழுந்தணி சடையன் - அடிச்சார்ந்தாரை வாழ்விக்கும் தன்மை குறிப்பிடப்பட்டது. "இமையவர்க் கன்பன்" என்ற இப்பதிகக் கருத்துக் காண்க. "கங்கை வாழ் சடையான்" என மேல்வரும்பாட்டிற் பின்னும் கூறுவது காண்க.

அருள்நெறி விளங்க - இறைவன் அடியார்களுக்கு அருளும் நெறிகள் அளப்பில. நாயனார் போன்ற ஆசாரியர்கள் விளங்கவைத்தாலன்றி அவை அறிதற்கரியன. அருள் நெறி விளங்க வைத்தல் பதிகப்பாட்டுக் குறிப்பிற் காண்க. 133

1399. (வி-ரை) ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் - இது நாயனார் அப்போது திருமுன்பு பாடியருளிய பதிகத்தின் முதற்பாட்டின் முதற்குறிப்பு. என எடுத்து என்றதனால் இது தேவாரத் திருவாக்கு என்பது விளங்கும்.

"தோன்றத் துணையாய்...அடியோங்கட்கு" என்று - இது அப்பதிக முதற் பாசுரத்தின் முடிவாகிய தொடர். என்று - என்பதனால் நாயனார் திருவாக்கினை அப்படியே தலைப்பெய்துகொண்டதென்பது உணர்த்தப்பட்டதுடன், அதுவே அத் திருப்பதிகத்தின் உள்ளுறையாகிய கருத்தாதலும் உணர்த்தப்பட்டது.

வான்தாழ் புனல் - வானிடத்திலிருந்து நிலவுலகத்துக்கு இறங்கி வருதலின் தாழ் என்றார். "ஆயிரமாமுகத்தினொடு" "பரந்தெழுந்த புனற்கங்கை பனிபோலாகச் செறித்து"ச் சடையிற் றங்கியதனால் தாழ் என்றார். தாழ் - விரும்பும் எனக்கொண்டு வானவரும் வந்து விரும்பியாடுகின்ற நீர் என்றலுமாம்.

கங்கை வாழ்சடையானை - "சகரர்களை மறிந்திட்டாட் கொண்டநாளோ" (திருவாரூர்த் திருத்தாண்டகம் - 10). உலகம் எப்போதும் நினைந்து உய்யும் பொருட்டுக் கங்கை எஞ்ஞான்றும் வாழ்வடைந்து நிற்கும் சடை என்பது. பகீரதன் வேண்டத் தந்த கங்கையினால் சகரர்கள் மீண்டு புத்துயிர் பெற்றெழுந்தது போலத், தம்மையும் தமக்கையார் வேண்டச் சூலையினால் ஈர்த்துப் புத்துயிரளித்தனர் என்பது குறிப்பு.

மற்று எவ்வுயிர்க்கும் சான்றும் ஒருவன் "எண்பத்து நான்கு நூறுயிரமாம் யோனி பேதம், நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிராய் அங்கேங்கே நிற்"கின்றானாதலால் இவ்வாறு கூறினார். "அவையே தானேயாய்...ஆணையின் நீக்கமின்றி நிற்கும்" என்றது ஞானநூல்.

"ஆற்றங்கரையில் மரமொன்றின் ஒரு கொம்பில் இரண்டு அன்னப்பறவைகள் இருக்கின்றன; அவற்றுள் ஒன்று அதன் பழங்களைத் தின்கின்றது; மற்றொன்று அதனைப் பார்த்துக் கொண்டிருக்கின்றது" என்ற உபநிடதக் கருத்தும் காண்க. இங்குக் கடலினுள் நாயனாரை இட ஏவிய அமணர்களுள்ளும், அரசனுள்ளும், அதனை நிறைவேற்றிய ஏவலாளருள்ளும், போகடப்பட்ட நாயனாருள்ளும் இருந்து அவ்வவரையும் இயக்கிவைத்து இந்நிகழ்ச்சிகளையெல்லாம் காட்டியும் கண்டும் நின்ற இறைவனது அருணிறைவினை நாயனார் போற்றினர் என்பது. பதிகப்பாட்டுக் குறிப்புக்கள் பார்க்க.

தண்டமிழ் மாலைகள் சாத்தினர் - மாலைகள் - பதிகத்து ஒவ்வொரு பாசுரமும் ஒவ்வொரு தனிமாலையாம் என்பது. மாலைகள் என்றதற்கேற்பச் சாத்தினர் என்றார்.

இச்சரிதப் பகுதியை இத்திருப்பதிக பாட்டின் யாப்பினில் அமைத்த சிறப்பமைதி கண்டுகொள்க. இப்பதிகம் திருவிருத்தம் என்ற யாப்பமைதி யுடையது,

இப்போது கட்டளைக் கலித்துறை என்று வழங்கப்படும்; முன்னுள் இதனை விருத்த விகற்பங்களுள் வைத்து வகுத்தனர்.

வார்சடையான்—என்பதும் பாடம். 134

பதிகக் குறிப்பு :—அடியோங்கட்குத் தோன்றாத்துணையாய் இருந்தனன் இறைவன் என்பது பதிகக் கருத்தாம் என்று ஆசிரியர் காட்டியருளினர். இதுவே பதிகக் கருத்தாதல் பதிகப்பாட்டுக்கள் பலவற்றுள்ளும் காணப்படும். இறைவன் தண்ணருள் செய்து இடர்களை யெல்லாம் நீக்கி யாட்கொண்டு தன்பாலிற் சேர்த்தணைத்த கருணைத் திறத்தினை வியந்து பாராட்டியதாம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :— (1) ஈன்றாளுமாய் - "அன்னையும் பிதாவும்" என்றபடி ஈன்றாளை முதலில் வைத்துப் பின் எந்தையை வைத்தார். தாயைக் கொண்டே தந்தையை அறிகின்றமையும் காண்க. ஈன்றாள் - எந்தை - சத்தியுஞ் சிவமுமாகி - அருளுடன்கூடி. "தாயு மாயெனக் கேதலை கண்ணுமாய்ப், பேய னேனையு மாண்ட பெருந்தகை". உடன் தோன்றினர் - உடன்பிறந்தார். தமக்கு மாதினியாரும், புகழனாரும் திலகவதியாரும் துணையாகுபவரோ? அவர்களைத் துணையென்று உலக நியதிப்படி எண்ணுவம் ஆயின் அவர்கள் இங்கு உறுதுணையல்லர். அரனே துணையாயினன்; ஆதலின் அவரே தாயும் தந்தையும் தவ்வையுமாயினர் என்பது. தோன்றாத்துணையாக எண்ணிய அவர்களுள் துணைநின்றதுபோல, இங்கு அரன் தோன்றாத் துணையாயுமிருந்தனன் என்பது. நாயனார், தமக்கு உதவிய தமக்கையாரைத் தாம் பேறு பெற்ற பின்பு நினைக்கவில்லை என்றும், அதனால் அவர் நன்றி மறந்தாரென்றும் ஒரு மடவார் குறித்தனராம். அவர் "உடன்றோன்றினராய்" என்ற இதனை மறந்தனர் போலும். மூன்றாய் உலகம் படைத்து உகந்தான் - அரன் அவ்வாறு தாயும் தந்தையும் தவ்வையுமா யிருத்தலுக்குக் காரணங் கூறியபடி. மூன்றாய் - அவன் அவள் அது என்ற அவையாகிய உலகம். தோன்றாத்துணையாய் - மனத்துள்ளிருக்க என்றாதலின் துணையாயிருந்தமை தெரிந்தேன். ஏன்றான் ஏற்றுக்கொண்டான். மனத்துள் நீங்காதிருக்க - மறப்பில்லாது தன்னை என்னுள் வைக்க அரன் அருளியதே அவன் துணை செய்யும் பெருங்கருணையாம். அடியோங்களுக்கே - தம்மையும், தமக்கையாரையும், ஏனை அடியவர் யாவரையும் உளப்படுத்தியது. எல்லாவுயிர்கட்கும் துணையாவானாயினும் அடியோங்களிடம் வெளிப்பட்டும் பிற இடங்களில் மறைந்தும் துணை செய்குவன். கடலிற் கன் மிதவையாகக் கொண்டேறியவுடன் பாடிய பதிகமாதலின் இவ்வாறு கூறியதுடன் இப்பதிக முழுதும் இக்கருத்தே பற்றித் துதித்தமை காண்க.—(2) அலைகடல் மூடினும் நமக்குக் கழலே புகலாகும்; பற்றாய் நினைந்திடப்போது நெஞ்சே என்க. புகல் - புகலிடம். தஞ்சமென்று அடையும் இடம். சரிதக் குறிப்பு— (3) விரும்பி என்னுள்ளத் திருந்தான் - அலைகடனடுவுள் அஞ்செழுத் தாகிய அரனுருவத்தை உள்ளத்தில் ஊன்ற வைத்தமை குறிப்பு. இனி நமக்கு இங்கு அருவினை சாரா - அமணர்களது மிறைகள் இதனோடு ஒழியும்; பிறவியும் ஒழியும் என்றபடி. அடியா ரடியடி யோங்கள் - அடியார்க்கடியேன் என்ற திருத்தொண்டத் தொகை காண்க.— (4) மலர்ப்பாதமென் சிந்தையுள் நின்றன- "என்னுள்ளத் திருந்தான்" என்ற கருத்து.— (5) மனத்தடைத்துச் சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கின் னல்லால் அருள்பெற லாமோ என்றது பதிகக் கருத்தும் சரிதக் குறிப்புமாம். நாயனார் பதிகத்தில் நகா ராதியாக ஓதினும் மனத்தில் உருவெண்ணும் போது சிகாராதியாகவே எண்ணினர் என்பது.—

## திருப்பாதிரிப்புலியூர்

திருச்சிற்றம்பலம்

திருவிருத்தம்

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
வேன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே. 1

பற்றாய் நினைத்திடப் போதுநெஞ் சேயிந்தப் பாரைமுற்றுஞ்
சுற்றா யலைகடன் மூடினுங் கண்டேன் புகனமக்கு
உற்றா னுமையவட் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்
முற்றா முளைமதிக் கண்ணியி னான்றன மொய்கழலே. 2

விடையான் விரும்பியென் னுள்ளத் திருந்தா னினிநமக்கிங்
கடையா வவல மருவினை சாரா நமனையஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையா னடியா ரடியடி யோங்கட் கரியதுண்டே. 3

வைத்த பொருணமக் காகுமென் றெண்ணி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கி னல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ வறிவிலாப் பேதை நெஞ்சே. 5

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே னுனதருளாற்
றிருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே. 6

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே. 8

மண்பா தலம்புக்கு மால்கடன் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினு மஞ்சனெஞ்சே!
திண்பா னமக்கொன்று கண்டோந் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே. 9

திருந்தா வமணர்தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா வரக்க னுடனெரித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தா யடியே னினிப்பிற வாமைவந் தேன்றுகொள்ளே. 10

திருச்சிற்றம்பலம்

(6) உருவாய்த் தெரிந்துன்ற னுமம் பயின்றே னுனதருளாற், திருவாய் பொலி யச் சிவாயநம வென்று நீறணிந்தேன் - என்ற இதுவும் அக்கருத்தை வலியுறுத் தும். "நம்முதலா யோதிலரு ளுடாது" என்றும், "சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும், பவமிதுநீ யோதும் படி" என்றும் வரும் ஞானசாத்திர உண்மைகள் காண்க. இது திலகவதியார் உபதேசித்து நீறுதந்த முறை.—(7) கழல் நங் கருத்திலுடையனவே என்பது 4-வது பாசுரத்தின் கருத்தைத் தழுவியது.—(8) புழுவாய்ப் பிறக்கினும் - மக்களாய்ப் பிறந்தோர்க்கு இனிவரும் பிறவி இன்னதென அறியப்படாமையின் இவ் வாறு வரங்கேட்கின்றுர். "வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய் நீ" (திருவா). இறைவனிடம் வரங்கேட்க லாகாதென்பது ஒருவிதி. நாயனுர் முழுத் துறவுடையார். அவர் சிலவரங் கேட்பர். ஆனுல் அவை மிகச்சில. அவற்றுள் இஃது ஒன்று. அவற்றின் குறிக்கோள் எல்லாம் ஒன்றே. அஃதாவது = மக்களுக்குச் சாவு வருதல் நிச்சயம். இறக்கும்போது சிவனையே நினைக்கவும் சொல்லவும் வரம்வேண்டும்; பின் எப்பிறவி வரினும் அதிலும் சிவனை மறவாதிருக்கவேண்டும்; பின்வரும் பிறவி களிலும் சிவன் அருள்புரிதல் வேண்டும் - என்பது. "துஞ்சும் போதுநின் னுமத் திரு வெழுத், தஞ்சுந் தோன்ற வருளுமை யாறரே", "துஞ்சும்போ தாக வந்து துணை யெனக் காகி நின்று, அஞ்சலென் றருள வேண்டு மாவடு துறையு ளானே", "சாதனு ளுயே னுன்னை, யெங்குற்ற யென்ற போதா லிங்குற்றே னென்கண் டாயே", "சாமன் றுரைக்கத் தருதிகண் டாயெங்கள் சங்கரனே", "உன்னை நினைந்தே கழியு மென் னுவி கழிந்ததற்பின், என்னை மறக்கப் பெருயெம் பிரானுன்னை வேண்டுவதே", "இறப்ப னிறந்தா லிருவிசும் பேறுவ னேறிவந்து, பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார் சடைப் பிஞ்ஞகன்பேர், மறப்பன் கொலோவென்றென் னுள்ளங் கிடந்து மறுகிடுமே" என்பனவாதி தேவாரங்கள் நாயனுர் கொண்ட மனக்கருத்தை விளக்குவன. நாயனுர் இஃது தமக்காகக் கேட்கும் வரம். "பொன்னுர் திருவடிக் கொன்றுண்டு விண்ணப் பம்...மூவிலைச் சூலமென் மேற் பொறி", "இடபம் பொறித்தென்னை யேன்றுகொள்", "திருவடி நீறெனைப் பூசு", "பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை" என்பன வும் இக்கருத்தே பற்றித் தமக்காகக் கேட்டவை. "நின்றுள் சரணென் றேம்பலிப் பார் கட் கிரங்குகண்டாய்" (பசுபதித் திருவிருத்தம்) என்பது போன்றவை அடியவர்க் காகக் கேட்டவை. இவ்வாறு வரங்கேட்க நாமும் பயின்றிடல் நலந்தருவதாம். இந் தப் பாட்டுப் பல அடியார்களாலும் பயின்றோதப்படுவது. புழுவும், திருவடி மறவாத தன்மையுடையதோ? எனின், எல்லாவகைப் பிராணிகளும் இறைவனை அருச்சித்துப் பேறு பெறத்தக்கன என்பது சைவ சித்தாந்தக் கொள்கைகளுள் ஒன்று. "இயக்கர் கின்னரர்" என்ற நம்பிகள் தேவாரமும், "அருளாற் புழுவாகிப் பிறந்திடினும்,... பொன்னுல கோடொக்க வெண்ணுவன்" (43) என்ற பொன்வண்ணத்தந்தாதியும், முதலியவை பார்க்க. "தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்வாய்" ஆதலின் உன் னிடம் இவ்வரம் வேண்டுகின்றேன் என்றபடி.—(8) மண்பாதலம் புகுதல் - உலகம் ஆழ்தல், நிலம் அசைதல், பிளத்தல் முதலியன. கடல் மூடுதல் - நீர் பெருகுதல். நீர்ப் பிரளயம். மண்பாதலம் புகுந்தால் நீர் மூடுமென்க; ஊழி. விண்பால் திசை கெடுதல் - அண்டம் பிறழ்தல். இருசுடர் வீழ்தல் - தூமகேதுவும், விண்மீன் வீழ்ச்சியும் முதலா யின. இவையெல்லாம் உற்பாதங்கள் எனப்பட்டு உலகத்துக்குப் பெருங்கேடு விளைப்பன என்ப. நமக்குக் கழலிணையேயாகிய திண்பால் ஒன்று கண்டோம்; ஆதலின் அஞ்சல் நெஞ்சே என்க. திண்பால் - வலிய பற்றுக்கோடு; புகலிடம். கடலினடுவுள் கல்லி னுேடு பிணிப்புண்டு புகவிடப்பட்ட போது நாயனுர் கொண்ட மனவுறுதியினை

இஃது செவ்வனே ஐயமின்றி எடுத்துக்காட்டும் அகச்சான்றும். "வானந் துளங்கிலென்-ஒருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே" முதலிய திருவாக்குக்களும் காண்க. கண்டோம் - கல்லில் மிதந்து தாம் கடலிற்கரையேறிய அனுபவத்தாற் றெரிந்தமை கூறியபடி. கடவுட் சுடர்-தெய்வத்தன்மை வாய்ந்த தீக்கடவுள். நெற்றிச் - சுடர் - நெற்றிக்கண். கடவுட்டன்மையாவது அருளுதலும் அழித்தலும் என இரண்டும் செய்யும் வன்மை. "தேவராகி, வின்னோர்க் காய்ந்தன ரின்னோர்க் கருளின, ரென்றறிய வல்லின், முன்னே யுரைப்பதில்லை" என்ற கோப்பிரசாதம் காண்க.— (10) திருந்தா அமணர் - உண்மை கண்டும் திருத்தமடையாதவர். தமது நிறத்தில் அவர் செய்தமிறைகளும் வஞ்சனைகளும் குறிப்பு. "வாயி ருந்தமி ழேபடித் தாளுரு, வாயிரஞ்சமண்" என்றது காண்க. முத்திதரும் தாளிணைக்கே-ஏகாரம் தேற்றமும் பிரிநிலையும் உணர்த்தி நின்றது. முத்திதரும் தாளாதலின் பிறவாமல் வந்து என்றுகொள்ள வேண்டுகின்றேன் என்றபடி. சரணம் - புகல். இனிப் பிறவாமல் ஏன்றுகொள வேண்டுவேன்; எஞ்சிய கன்மமலத்தால் இனியும் பிறவிதர நேரிடிலும், அப்பிறவி தானும் புழுவாய்ப் பிறக்க நேரிடினும், மறவாமையை முன்னமே வேண்டுகின்றேன் என முன் கேட்டது காண்க. "பிறவாமை வேண்டு மீண்டும் பிறப்புண்டே லுன்னை யென்று, மறவாமை வேண்டும்" (காரைக் - புரா - 60) என அம்மையார் கேட்ட வரமும் காண்க.

நாயனார் பரசமயப் பாசத்தொடக்கினின்றும் சிவனைப் புணையாகக் கொண்டு முழுதும் வெற்றியுடன் கரையேறிய பின்பு இறைவனைப் பாடியருளிய முதற்பதிகமாதலின் சைவசித்தாந்த ஞானசாத்திர உண்மைகள் பலவும் உபதேசிக்கும் தனிப்பெருமையுடன் விளங்குகின்றது இத்திருப்பதிகம். ஆன்மாக்களைப் பிறவிக் கடலினின்றும் கரையேற்றுதற் கமைந்த பெருமையுடையது. "மூன்று புலகம் படைத்துகந்தான்" (1) என்பது, சிவஞானபோதம் "அவனவ ளதுவெனு மவைமூ வினைமையி, னொடுக்கிய திதியே" என்ற முதற் சூத்திரத்தின் கண்ட கருத்தினையும், "பொய்கெடுமே பற்றாய் நினைந்திடப் போதுநெஞ்சே" என்று பூட்டுவிற்பொருள் கோளின் அமைந்த (2) திருப்பாட்டுத் "தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட், டன்னிய மின்மையி லரன்கழல் செலுமே" என்ற எட்டாஞ் சூத்திரத்தின் உண்மையையும் விளக்குகின்றன. "வைத்த பொருணமக் காமென்று சொல்லி மனத்தடைத்தார், சித்த மொருக்கிச் சிவாய நமவேன் றிருக்கினல்லால்......அத்தனருள் பெறலாமோ?" (5) எனவும், "கழலே நினையுங் கருத்துடையேன்,......உன்றனாமம் பயின்றேன்......"சிவாயநம வேன்று நீறணிந்தேன்" (6) என்ற பாட்டுக்கள் "விதி யென்னு மஞ்செழுத்தே" என்ற ஒன்பதாஞ் சூத்திரப் பொருளைத் தருவன. அஞ்செழுத்தே யன்றி வேறு சார்வு உயிருக்கு இல்லை எனக் குருவருளால் அறிந்ததுவும், பின் அதற்குத் தகவே பயின்று நின்றதுவும் உணர்த்தப்பட்டன. இப்பாட்டுக்கள் இத்திருப்பதிகத்தின் நடுவில் விளங்குவதும் குறிக்க. "மாய மெல்லா முற்ற விட்டிருளிக்க - திருவடிக்கே நேய நிலாவ - மலர்ப் பாதமென் சிந்தையு ளின்றனவே" (4) என்ற திருப்பாட்டு "ஏகனுகி யிறைபணி நிற்க, மலமாயை தன்னொடு வல்வினை யின்றே" என்னும் பத்தாஞ் சூத்திர வநுபூதி நிலையினையும், "கழனங் கருத்தில் உடையனவே" (7), "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே மறவா திருக்க வரந்தர வேண்டும்" (8) "அடியே னினிப்பிற வாமைவந் தேன்றுகொள்ளே" (10) என்ற திருப்பாட்டுக்கள் "காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி, னயரா வன்பி னரன்கழல் செலுமே" என்னும் பதினோராஞ் சூத்திரத்திற் கண்ட அநுபவ நிலையின் இயல்பையும் விரிப்பன.

" உடையா னடியா ரடியடி யோங்கட் கரியதுண்டே" (3) என்ற திருப்பாட்டுச் சீவன் முத்தநிலையை விளக்கிப் பன்னிரண்டாஞ் சூத்திர உண்மையினைப் போதிக்கின்றவாறு கண்டுகொள்க. இவ்வுண்மைகள் கண்டுய்யும் பொருட்டே ஆசிரியர் ஈண்டு, அரு ணெறி விளங்கப் பாடுவார் - தண்டமிழ் மாலைகள் சாத்தினர் என்றருளினர். அருள் நெறி-சிவன் அருளிய ஆகமநெறி. அருளைக் கூட்டுவிக்கும் நெறி.

தலவிசேடம் :—திருப்பாதிரிப்புலியூர் - புலிக்கால் முனிவராகிய வியாக்கிர பாத மாமுனிவர் பூசித்த தலம். அவர் தவஞ்செய்திருந்து திருநடங்கண்டு பேறு பெறும் ' தில்லை 'ப் புலியூரினின்றும் பிரித்துணரும் பொருட்டு இதன் தலமரமாகிய பாதிரி என்றதுடன் சேர்த்து இது பாதிரிப்புலியூர் எனப் பெயர் வழங்கப்பெறும். முடங்கிய காலுடைய முயல் வடிவாகச் சாபமிடப்பெற்ற மங்கணர் என்ற முனிவர் பூசித்துச் சாபம் நீங்கப்பெற்ற தலம் என்பது ஆளுடைய பிள்ளையாரது " முன்ன நின்ற முடக்கான் முயற்கருள் செய்து" என்ற இத்தலத் தேவாரம் முதற்பாசுரத்தால் விளங்கும். இது நடுநாட்டில் தேவாரப் பாடல்பெற்ற தலங்கள் இருபத்திரண்டனுள் பதினெட்டாவது தலம். பாதிரி என்பதைப் "பாடலம்" என்பது வடமொழி வழக்கு. பாடலிபுரம் என்ற பெயரொற்றுமை கருதி இதன் பக்கத்தில் அப்பெயரால் தங்கள் நகரத்தை சமணர் அமைத்தனர் போலும். சுவாமிபெயர் - தோன்றத்துணைநாதர் ; அம்மையார் - தோகை நாயகி. தலமரம் - பாதிரி. தீர்த்தம் - ஆறு - கெடிலம். சுவாமிபெயர் நாயனாரது தேவாரத்துட் காண்க. நாயனார் சரிதத்தினுள் அப்பெயர் காரணப் பெயராய் விளங்குதலும் கருதத்தக்கது. நாயனார் கரையேறிய இடம் கரை யேறவிட்ட குப்பம் என்று வழங்கும். அத்திருநாள் விழாவும் கொண்டாடப்படுகின் றது. பதிகம் - 2.

இது திருப்பாதிரிப்புலியூர் என்ற இருப்புப்பாதை நிலயத்திலிருந்து கற்சாலை வழி அரைநாழிகை யளவில் அடையத் தக்கது. இருப்புப்பாதை நிலையிலிருந்தே திருக்கோபு ரம் தரிசிக்கவுள்ளது. திருக்கோவலூர் ஞானியார் ஆதீனம் சுவாமிகள் வீற்றிருக்கும் மடாலயம் இத்தலத்திற் றேற்றமாய்ச் சிவக் கலைஞானம் நாடெங்கும் பரவவுதவும் கரு வூலமாய் விளங்குகின்றது.

1400. மற்று மினையன வண்டமிழ் மாலைகள் பாடிவைகி
வெற்றி மழவிடை வீரட்டர் பாத மிகநினைவில்
உற்றதோர் காதலி னங்குநின் றேகியொன் னார்புரங்கள்
செற்றவர் வாழுந் திருவதி கைப்பதி சென்றடைவார். கசு௫

1401. தேவர் பிரான்றிரு மாணி குழியுந் தினைநகரு
மேவினர் சென்று விரும்பிய சொன்மலர் கொண்டிறைஞ்சிப்
பூவலர் சோலை மணமடி புல்லப் பொருண்மொழியின்
காவலர் செல்வத் திருக்கெடி லத்தைக் கடந்தணைந்தார். கசுசு

1400. (இ - ள்) வெளிப்படை. இன்னும் இவை போன்ற வளப்பமுடைய தமிழ் மாலைகளைப் பாடி அத்தலத்தில் தங்கிப், பின், வெற்றியையுடைய இளைய விடையினையுடைய திரு அதிகைவீரட்டானேசுவரருடைய திருப்பாதங்கள் மிகவும் தமது நினைவில் பொருந்தியதோர் காதல் மேல் எழுந்ததனால், அங்கு நின்றும் சென்று பகைவர்களது திரிபுரங்களையும் எரித்தவராகிய வீரட்டானேசுவரர் வாழும் திருவதிகைத் தலத்தைச் சென்றடைபவராய், கசு௫

1401. (இ - ள்) வெளிப்படை. தேவர் பெருமானுடைய திருமாணிகுழி என்னும் தலத்தினையும், திருத்தினைநகர் என்னும் தலத்தினையும் பொருந்தச் சென்று விரும்பிய சொன்மலர்களாகிய தேவாரங்களாற் போற்றி வணங்கிப் போய், வழியில் பூக்கள் மலர்கின்ற சோலைகளின் மணமானது தமது திருவடியிற் பொருந்தும்படி நடந்து சென்று, பொருள் மொழியின் வேந்தர் செல்வத் திருக்கெடிலத்தைக் கடந்து வந்தணைந்தனர். காடகர

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1400. (வி - ரை) நினைவால் - திருவதிகைப்பதி சென்று - அடைவார் - மாணி குழியும் - தினைநகரும் - சென்று - இறைஞ்சி - மொழியின் காவலர் - கெடிலத்தைக் கடந்து - அணைந்தார் என்று கூட்டி முடித்துக் கொள்க.

**மற்றும் இனையன வண்டமிழ் மாலைகள் பாடி** - இத்திருப்பதிகங்கள் இப்போது கிடைத்தில.

**வெற்றி மழவிடை வீரட்டர்** - வெற்றி - புரஞ்செற்ற வெற்றி. தம்மை ஆட் கொண்ட வெற்றி - அமணர்களினின்றும் கடப்பித்து ஏற்றுக்கொண்ட வெற்றி - குறிப்பு. விடை - அடைந்தார்க்கு அரணளிப்பது. புரமெரித்தலும் காலயமனைக் காய்ந்ததுவுமாகிய வெற்றிக் குறிப்புப்படக் கூறியதனைப் பின்னர் ஒன்றும் புரங்கள் செற்றவர் என விரிப்பதும், ஒன்றுரையும் புரங்களையும் என்று உம்மைத் தொகையாக உரைக்க வைத்ததும் காண்க.

**பாதம் மிக நினைவில் உற்றதோர் காதலின்** - தம்மைச் சூலை தீர்த்து ஆட்கொண்ட உபகாரத்தை எண்ணவே, காணும் காதல் பெருகிற்று. இறைவரிடம் வழிப்படுத்திய குருவாகத் திலகவதியாரை முன்னர் உரைப்பினும், அவர் வேண்டுதலுக் கிரங்கி அருளிச் சூலையாகிய அருட்சத்தியைப் பதிவித்து ஈர்த்து ஆளாகக்கொண்டு உரைத்தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வுபெற உணர்த்தியருளியவர் பரம முதற்குரு வாகிய வீரட்டத்தின் இறைவரே யாதலால், அவரைக் காணும் காதல் மிகுந்தது.

**புரங்கள் செற்றவர் வாழும்** - திரிபுரமெரித்த வீரம் விளங்கிய இடம் திருஅதிகை என்பது. **வாழும்** - ஒரு காலத்திருந்து, பின் நீங்காது, என்றும் நிலைத்து விரும்பி எழுந்தருளியிருக்கும். **வாழும் பதி** - அடைந்தாரை வாழ்விக்கும் இடமாகிய பதி எனப் பிறவினைப் பொருளில் உரைத்தலுமாம்.

அங்கு நின்றெய்தி—சென்றணைவார்—என்பனவும் பாடங்கள். 135

1401. (வி - ரை) திருமாணிகுழியும்......இறைஞ்சி - நாயனார் இந்த இரண்டு தலங்களையும் சென்று வணங்கிப் பாடிய திருப்பதிகங்கள் இப்போது கிடைத்தில. இவையும் திருப்பாதிரிப்புலியூரில் அருளிய "மற்றும் இனையன வண்டமிழ் மாலைகள்" (1400) என்ற பதிகங்களும் திருமுறைகண்ட புராணத்தால் அறிகின்றபடி சிதலரித் தொழிந்தன போலும் !

**திருமாணிகுழி** - தலவிசேடமும் குறிப்பும் 236-ம் பாட்டின்கீழ்ப் (பக்கம் - உஎச) பார்க்க. **திருத்தினைநகர்** - தலவிசேடமும் குறிப்பும் 237-ம் பாட்டின்கீழ்ப் (பக்கம் - உஎஎ) பார்க்க.

இவற்றுள் திருப்பாதிரிப்புலியூரிலிருந்து திருவதிகைக்குச் செல்லும் வழியில் திருமாணிகுழி உள்ளது. திருத் தினைநகர் சில நாழிகை வழி தெற்கேயுள்ளது. நாயனார் திருவதிகை சேரும் காதலுறச் சென்றாரேனும் வழியிடைக் காணப்பெறும் தலங்களையும் கண்டு வணங்கிச்செல்ல வேண்டுமென்னும் முறைபற்றி இந்தத் தலங் களையும் இறைஞ்சிச் சென்றனர். திருத்துறையூரினின்றும் திருத்தில்லை கான வழிக்

கொண்ட நம்பிகளும் இவ்வாறே இவற்றையும், வழியிடைப் பிற தலங்களையும் வணங்கிச் சென்றமை முன்னர்க் காண்க. 228 - 236 - 237 - பார்க்க.

மேவினர் சென்று - மேவினர் - மேவினராகி - முற்றெச்சம். "நம்பு மேவு நசையா கும்மே" (தொல் - சொல் - 329) என்றபடி, மேவு - விருப்பம் - ஆசை.

விரும்பிய சொன்மலர்-தாம் விரும்பிய என்றும், இறைவர் விரும்பிய, என்றும் உலகம் எல்லாம் விரும்பிய என்றும் உரைக்க நின்றது. இக்காலத்து அவை கிடைக்கப் பெருமையும் விரும்பிய என்ற இறந்த காலத்தாற் குறிக்கப்படுதல் காண்க.

பூ அலர் சோலை மணம் அடி புல்ல - வழியிடை மலர்ச் சோலைகள் பலவற்றையும் கடந்து சென்றனர் என்பதும், அவ்வாறு நடந்து சென்றபோது, சோலைஅலர் பூக்களைச் சொரிய அவற்றின் மணம் அவரது திருவடிகளிற் பொருந்தியது என்பதுமாம். பூக்களின் மணம் இவரது திருவடி தீண்டிப் பேறுபெற எண்ணியதுபோலப் புல்ல என்றதொரு தற்குறிப்பேற்ற அணிநயமும் காண்க.

பொருண்மொழியின் காவலர். பொருள் - மெய்ப்பொருள். பொருள் மொழி - மெய்ப்பொருளைத் தரும் சொல்" "கோதின்மொழிக் கொற்றவனார்" "வீட்டுக்கு வாயி லெனுந்தொடை" முதலியவை காண்க.

செல்வத் திருக்கெடிலம் - செல்வமாவது கங்கையே போலச் சைவ மெய்த் திருவை ஆக்கும் தன்மை. 235 பார்க்க. "செல்வப் புனற்கெடிலம்" (காப்புத் திருத்தாண்டகம்) என்றது காண்க.

திருநகரும்—மலரடிபுல்ல—என்பனவும் பாடங்கள். 136

1402. வெஞ்சமண் குண்டர்கள் செய்வித்த தீய மிறைகளெல்லாம்
எஞ்சவென் றேறிய வின்றமி ழீச ரெழுந்தருள
மஞ்சிவர் மாடத் திருவதி கைப்பதி வாணரெல்லாந்
தஞ்செயல் பொங்கத் தழங்கொலி மங்கலஞ் சாற்றலுற்றார். கங௭

(இ - ள்) வெளிப்படை. கொடிய சமண்கையர்கள் செய்வித்த தீயனவாகிய கொடுஞ் செயல்கள் எல்லாம் ஒழிய, வெற்றிகொண்டு மேலேறி வந்த இனிய தமிழரசர் இவ்வாறு எழுந்தருளவே, மேகந் தவழும்படி உயர்ந்த மாடங்களையுடைய திருவதிகை நகரில் வாழ்கின்றவர்கள் எல்லாரும் தாங்கள் எதிர்கொண்டு வரவேற்கும் உபசரிப்பாகிய செயல்கள் சிறக்கும்படி, முழங்குகின்ற முரசு முதலிய இயங்களை முழக்கி, இந்த மங்கலச் செய்தியை ஊரெல்லாம் அறியச் சாற்றினார்கள்.

(வி - ரை) செய்வித்த - அரசனுத்தரவினாற் செய்யும்படி செய்த. தாமே நேரிற் செய்யலாற்றாது அரசனை மயக்கிச் செய்வித்த எனப் பிறவினையாற் கூறினார். அரசன் உத்தரவினால் அவை நிகழ்ந்தனவாயினும் பழியும் கொடுமையும் சமணர்கள் பாலதே என்பார் அரசன் செய்த என்னாது, வெஞ்சமண்குண்டர்கள் செய்வித்த என்றார்.

தீய மிறை - கொடிய துன்பங்கள் - மிறை - தகாதவழியால் நேரும் துன்பம். "பெருமிறை தானே தனக்கு" (குறள்).

எஞ்ச - அற்றொழிய. "வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" (குறள்.) "எஞ்சும் வகை" (1372.)

வென்று - வெல்லுதல் இங்குப் பகைவரது செயல்களின் கொடுமை தம்மைச் சிறிதும் அணுகாமற் செய்தல் குறித்தது. ஏறிய-கடந்த-பகைக்கடல் கடந்து போந்த, கரையேறிய என்ற குறிப்புமாம்.

இன்றமிழ் - உயிருக்கு இனிமையைச் செய்யும் தமிழ். எஞ்ஞான்றும் உயிர்களுக்கு இன்பம் செய்து நிலவுதலுடன், அற்றைஞான்றும் பகைவர்க்கும் துன்பஞ் செய்யாது தமக்கு அரண்செய்து இன்பமாக்கினமை குறிப்பு. "அடிநீழல் அருளாகிக் குளிர்ந்ததே", (1363), "கடலினுட் கன்மிதந்ததே" (1392) என்றவை காண்க. யானையால் அமணர்களுக்கு நேர்ந்த துன்பம் அவர்கள் தாமே விளைத்துக் கொண்டது.

திருவதிகைப்பதி வாணர் - வாழுநர் - வாணர். எந்தக் காலத்திலும் அதிகையில் தங்குதல் வாழ்வு தருவதாம். அதிலும் அரசுகள் எழுந்தருளிய அப்பெருந்திரு நாளில் அங்கிருக்கும் பேறு பெற்றோர் உண்மையில் பெருவாழ்வுடையோர்களேயாம்!

தஞ்செயல் பொங்கத் தழங்கொலி மங்கலஞ் சாற்றல் - நகரமாந்தர் யாவரும் கூடி விளக்கமாய் மிக்க சிறப்பிற் செய்யும்படி வாயாற் சாற்றியும் முரசறைந்தும் மங்கலச் செய்தியை அறிவித்தல். பெருவிழாக்களில் இவ்வாறு செய்தல் மரபு. அத்திருநாளினைப் பெருவிழாவாக அந்நகரமாந்தர் இயற்றினர் என்பது. ஆளுடைய பிள்ளையாரது வருகையின்போது கொல்லிமழவன் இவ்வாறு ஏவிச் செய்தனவும் (திருஞான-புராணம் - 314), ஆளுடைய நம்பிகளது வருகையின்போது கழறிற்றறிவார் நாயனார் இவ்வாறு ஏவிச் செய்தனவும் (வெள்ளானைச் சருக்கம் - 17—18), பிறவும் இங்கு நினைவு கூர்தற்பாலன. பிற உரையாசிரியர்கள் இதற்கு வெவ்வேறாக உரைத்தனர்.

செய்தவித் தீய—என்பதும் பாடம்.        137

1403. மணிநெடுந் தோரணம் வண்குலைப் பூக மடற்கதலி
யிணையுற நாட்டி யெழுநிலைக் கோபுரந் தெற்றி யெங்குந்
தணிவில் பெருகொளித் தாமங்க ணாற்றிச்செஞ் சாந்துநீவி
யணிநகர் முன்னை யணிமே லணிசெய் தலங்கரித்தார். ௧௩௮

(இ - ள்) வெளிப்படை. அழகிய நீண்ட தோரணங்களையும், வளவிய கமுகுக் குலைகளையும், மடல்நீண்ட வாழைகளையும் பொருந்த இணைத்து நாட்டியும், எழுநிலைக் கோபுரத்திலும் தெற்றிகளிலும் எங்கும் கெடாமற் பெருகும் ஒளியுடைய மாலைகளைத் தொங்க விட்டும், செஞ்சாந்து பூசியும், அழகிய அந்நகரினை முன்னை அழகின் மேலும் அழகு செய்து அலங்கரித்தனர்.

(வி - ரை) நெடுந்தோரணம் - தோரணங்கள் நீளமாகக் கட்டப்படுவன.

பூகம் வண் குலை என்க. வண்மையாவது ஒரு குலையில் செறிவாய்க் காய்த்து எண்ணிறந்த கனிகளைத் தருதல். குலைப்பூகம் என்றே கொண்டு குலைக்கமுகு என்பாருமுண்டு; குலைகளுடன் கமுக மரங்களை வெட்டிக்கொண்டு வந்து நாட்டுதல் உலக வழக்கில் பெரும்பாலும் இல்லை.

மடற்கதலி - வாழையிலை மடல் நீண்டிருக்கு மியல்பு குறித்தது.

இணையுற நாட்டி என்றது வாழையுடன் கமுகுக்குலையும் தோரணமும் இணைப்பாய் மாறுபாடின்றிப் பொருந்த நாட்டுதல்.

எழுநிலைக் கோபுரம் - இறைவரது திருவீரட்டானத்தின் கோபுரம். நிலைக் கோபுரம்போல அங்கங்குச் செய்யும் அலங்காரக் கோபுரம் என்பாருமுண்டு. தெற்றி - திண்ணை.

தணிவில் பெருகு ஒளித்தாமங்கள்-ஒளி - தாமங்களிற் கோத்த மணிகளாலாவது. பெருகொளி என்றது மணிகளின் இயற்கை ஒளி சூரிய சந்திர வொளிகளாலும் காந்த விளக்கு முதலியவற்றின் ஒளிகளாலும் மிகுதல்.

தாமங்கள் நாற்றி - "பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை, துணையுற வறுத்துத் தூங்க நாற்றி" (திருமுருகு) என்றது காண்க. தோரணங்களி னிடையிடையேயும் தனியாகவும் மலர்மாலை மணிமாலைகளை அளவுபட அமைத்துத் தொங்க விடுதல் வழக்கு.

செஞ்சாந்து நீவுதல் - நிலத்தினிலும், திண்ணை முதலியவற்றிலும் செஞ்சாந்து பூசி அமைத்தல் அணி வகைகளுள் ஒன்று. நீவுதல் - பூசுதல்.

அணிநகர் - எப்போதும் இயல்பில் அழகுடன் விளங்கும் நகரம். அணிமேல் - இயல்பின் உள்ள அழகுக்குமேல். "அழகுக் கழகுசெய்வார்" என்றது முதுமொழி.

அலங்கரித்தார் - நகரம் அலங்கரித்தல் பெரியாரை வரவெதிர் கொள்ளும் பொருட்டு. "எதிர் கொண்டனர்" 1404 - என்றது காண்க. தஞ்செயல் பொங்க ஒலி மங்கலஞ் சாற்றியதன் பயனாக நகரமெங்கும் மக்கள் பலரும் கூடி இவ்வகையால் அலங்கரித்தனர்.

சாந்த நீவி—என்பதும் பாடம். 138

1404. மன்னிய வன்பின் வளநகர் மாந்தர் வயங்கிழையார்
இன்னிய நாதமு மேழிசை யோசையு மெங்கும்விம்மப்
பொன்னியல் சுண்ணமும் பூவும் பொரிகளுந் தூவியெங்குந்
தொன்னக ரின்புறஞ் சூழ்ந்தெதிர் கொண்டனர் தொண்டரையே.

(இ - ள்) வெளிப்படை. நிலைபெற்ற அன்பினையுடைய அந்த வளப்பமுடைய திருநகரத்திலுள்ள மாந்தர்களும், விளங்கும் அணிகளை அணிந்த பெண்களும், இனிய ஓசை முழக்கும் இயங்களின் ஓசையும், ஏழிசை பொருந்தும் மிடற்றுப் பாடலோசையும் எங்கும் பெருக்கெடுக்கச் செய்து, பொன்னிறமுடைய சுண்ணப் பொடியையும் மலர்களையும் பொரிகளையும் கலந்து எங்கும் தூவி, பழமையாகிய அந்நகரின் புறத்தே வந்து சூழ்ந்து, திருத்தொண்டராகிய நாயனாரை எதிர் கொண்டனர்.

(வி - ரை) வளநகர் மன்னிய அன்பின் மாந்தர் - என்க. அன்புடைய மாந்தர் - இங்கு அந்நகர மக்களுள் ஆண்மக்களைக் குறித்தது, பின்னர் வயங்கிழையார் என வேறு பிரித்துக் கூறுதலான். அன்பின் என்றதனை வயங்கிழையார் என்றதனுடனும் கூட்டுக.

அன்பின் மாந்தர் - வயங்கிழையார் என்று கூட்டி அன்புடைய என்றும், அன்பின் எதிர்கொண்டனர் என்று கூட்டி அன்புடைமையால் என்றும் உரைக்க நின்றது.

இன்னியநாதம் விம்ம என்றது பலவகையான இனிய குழல், முழவு முதலிய இயங்களிலிருந்து முழக்கப்படும் நாதத்தை.

ஏழிசை ஓசை என்றது பெண்களது மிடற்றின் பாடலோசையினை. மாந்தர் இன்னிய நாதம் விம்ம - என்றும், வயங்கிழையார் ஏழிசை ஓசை விம்ம என்றும் நிரனிரையாக்கி உரைக்க. "கெண்டை கொண்ட லர்ந்த கண்ணி னார்கள் கீத வோசைபோய், அண்ட ரண்ட மூட றுக்கு மந்த ணாரூ ரென்பதே" (நட்டராகம் - திருவிராகம் - 2) "காந்தார மிசைபரப்பிக் காரிகையார் பண்பாட" (மேகரா - ஐயாறு) என்ற ஆளுடைய பிள்ளையாரது திருவாக்குக்கள் காண்க.

விம்ம - முழங்கச் செய்து - பெருக்கி. பிறவினைப் பொருளில் வந்தது.

சுண்ணம் - மஞ்சள் கலந்த வாசனைத்தூள். பொரி - நெற்பொரி. சுண்ணமும் மலர்களும் பொரிகளும் கலந்து தூவுதல் மங்கலஞ் செய்யும் மரபுகளுள் ஒன்று.

நகரின் புறஞ்சூழ்ந்து எதிர்கொண்டனர் - பெரியோர்களை நகர வாயிலின் புறத்திருந்து எதிர்கொண்டழைத்து வருதல் மரபு. "திருவாரூர் நகர் வாழ்வார் நம்பியைமுன், பொங்கெயினீ டிருவாயிற் புறமுறவந் தெதிர்கொண்டார்" (268) என்றதும், பிறவும் காண்க.

தொண்டரையே - பெருந்தொண்டராதலின் அவரை என்பது குறிப்பு. ஏகாரம் தேற்றம்.

மன்னியவன்பர்—என்பதும் பாடம். 139

1405. தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந், தாழ்வடமு,
நாயகன் சேவடி தைவரு சிந்தையு, நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும், பதிகச் செஞ்சொன்
மேயசெவ் வாயு, முடையார் புகுந்தனர் வீதியுள்ளே. கச௦

(இ - ள்) வெளிப்படை. தூய்மை செய்யும் வெள்ளிய திருநீறு நிறைய அணியப் பெற்ற பொன்போன்ற திருமேனியினையும், உருத்திராக்க வடங்கள் அணிந்த கோலத்தினையும், ஆன்ம நாயகனாகிய சிவபெருமானுடைய சேவடிகளைத் தைவரும் சிந்தையினையும், மனம்நைந்து உருகுகின்றதனாலே மேல்வந்து பாய்வதுபோல அன்பு நீரை இடைவிடாது பொழிகின்ற கண்களையும், தேவாரத் திருப்பதிகமாகிய செவ்விய சொற்கள் இடையறாது பொருந்திய செவ்வாயினையும் உடையாராகிய நாயனார் திருவீதியினுள்ளே புகுந்தனர்.

(வி - ரை) இத்திருப்பாட்டுத் திருவதிகைத் திருவீதியினுள் புகுந்தபோது நாயனாரது திருவுருவத்தையும், அந்தக்கரண புறக்கரண நிலையினையும் ஓவியம்வல்ல ஒரு புலவன் தீட்டினும் தீட்டமாட்டாத பண்பில் நமது முன் கொணர்ந்து கொடுக்கின்றது. இஃது இவ்வாசிரியர்க்குச் சிறப்பாயுரிய இயல்புகளுள் ஒன்று.

தூய...மேனி - தூய்மை செய்யும் நீறு என்க. "சுத்தமாவது நீறு". தூயன வல்லாத இடங்களில் வைக்கப்படாமலும் தூய்மையற்ற பொருள்கள் கலவாமலும் உள்ள நீறு என்றலுமாம். வெண்ணீறு - சுத்த வெண்மையாகிய நீறே அணியத் தகுந்தது. துதைதல் - செறிந்து மிக்கிருத்தல். "நீற்றினை நிறையப் பூசி" என்றது காண்க. தூய வெண்ணீறும் அன்புக் கண்ணீரும் பெருகி விரவுதலால் நாயனார் தந்திருமேனியில் "கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாட" உள்ளது என்பதும் காண்க. பொன்மேனி என்பது நிறமும் அழகுமேயன்றி அருமைப்பாடும் குறித்தது. "மணியே பொன்னே மைந்தா மணாளா என்பார்கட், கணியான்", "பொன்னார் திருவடிக்கு" என்பன முதலிய திருவாக்குக்கள் இக்கருத்துப் பற்றியன.

தாழ்வடம் - உருத்திராக்கவடம். பொன்மேனி, கண், செவ்வாய் என்று குறித்த ஆசிரியர், மேனியில் வடம்பூணும் இடங்குறித்திலர்; தலை - கழுத்து - தோள் - மார்பு - கை முதலியனவாக உருத்திராக்கவடம் அணியும்படி விதித்த இடங்கள் எல்லாம் கொள்ளக் கிடத்தலின். "கண்டமாலை கரமாலை சிரமாலையுங் கவின் விளங்கவே" என்ற திருத்தொண்டர் புராண வரலாறு காண்க. தாழ்வடமும் - தாழ்வடம் பூண்ட கழுத்தும் பிறவும் என்க. "கண்டியிற் பட்ட கழுத்துடையீர்" என்ற தேவாரமும் காண்க. தாழ்தல் விரும்புதல் என்ற குறிப்பும் தருவது.

நாயகன்...சிந்தை - தைவருதல் - மெல்ல வருடுதல் - தடவுதல். "தைவருதண் டென்றல்" (1363). நாயகன் என்ற குறிப்பினால் நாயகி தனது நாயகனது அடிகளை மெல்ல வருடுதல்போன்ற மனநிலையினுடன் சிவபெருமானது திருவடிகளை எண்ணுதல்

வேண்டுமென்பது. "செருடக் கடிமலர்ச் செல்வி தன் செங்கம லக்கரத்தால், வருடச் சிவப்பன", "மன்னு மலைமகள் கையால் வருடின" என்ற நாயனாரது திருவாக்குக்கள் காண்க. எப்போதும் உபசரித்து நினைந்துகொண்டிருக்கும் என்க. "நெஞ்சே நீ நினையாய்" என்றபடி எப்போதும் சிந்தித்துக்கொண்டிருக்கும் சிந்தை என்பது. தத்துவ தாத்விகமாகிய உலகங் கடந்து சிவத்துவமடைந்த பெரியோர்களது அறிவில் சிவன் விளங்கும் நிலை வேறு. அவர்களது கரணங்கள் உப்பளத்தில் இட்ட புல்லுப்போல உயிரறிவு போய் சிவனறிவாகவே விளங்கும். அவ்வாறு மாறிய அவர்களது அறிவு "தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான் கொடுத்துத், தன்னுணரத் தன்னுளிருத்தலால்" என்னும் சிவஞானபோதம் 12-ம் சூத்திரத்தினுள் "அவ்வன்பர் தன்னைச் சிவோகம் பாவனையினால் அறியச் செய்தலானும்" என்று உரைக்கப்பட்டபடி, ஏகனாகி யிறைபணி நின்று முதல்வனது உபகாரத்தையே நோக்கி அழுந்தி நிற்கும் என்றது கருத்து. சிந்தை - அறிவு; "ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி" என்பது காண்க. "கரணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன், சரணங்க ளேசென்று சார்தலுமே", "காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்ப மெனப், பேணு மடியார்" என்ற திருவாசகங்களின் கருத்துங் காண்க.

**நைந்துருகி...கண்** - அன்பு மீதூர்தலினால் உள்ள முருகி அதுவே வெளியில் கண்களின்வழிப் பொழிவதுபோல. உள்ளிருந்து அன்புநீர் ஊற்றெடுத்துக் கண் வழி இடைவிடாது வெளிப்படுதல்போல நீர் வழியும் கண். "மார்பாரப் பொழி கண்ணீர் மழைவாரும் திருவடிவும்" என்பது காண்க. **அன்பு நீர்பொழி** - அன்பினால் நீரினைப் பொழியும். கண்களினின்று துன்பம் கவலை முதலிய பல காரணங்களாலும் நீர்பெருகுமாதலின் அவற்றினின்றும் பிரித்துணர, அன்பு நீர் பொழி என்றார். "விழிநீர் பெருக்கி நெஞ்சு நெக்குருகி" என்றார் பிற்கால ஆசிரியரும். "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தாழ்" (குறள்).

**பதிகச் செஞ்சொல் மேய செவ்வாய்** - "ஈறின்றி யெழுந் திருவாசகமும்" (1342) என்ற விடத்துரைத்தவை பார்க்க. வாக்கினின்றும் தேவாரப் பதிகத் தொடைகள் இடையீடின்றிப் புறப்பட்டுக்கொண்டே யிருந்தன என்பது. **செஞ்சொல்** - செம்மை பயக்கும் சொல். செஞ்சொல் பிறக்கும் இடமாதலாற் **செவ்வாய்** எனப்பட்டது. "வாயே வாழ்த்து கண்டாய்", "வாழ்த்த வாயும்...தந்த தலைவன்" முதலியவற்றிற் கூறியபடி நாயனார் தாமே வழிபட்டவராதலில் எப்போதும் வாழ்த்துரைக்கும் வாய் செவ்வாய் எனப்பட்டது. அவ்வாறு வாழ்த்தாதவாய் செவ்வாயெனப்படா. மேனியும் - தாழ்வடமும் - சிந்தையும் - கண்ணும் - செவ்வாயும் உடையவராய்த் திருவீதியில் புகுந்தனர்.

**உடையார்**-எம்மை ஆளுடைய தலைவர் என்பதும் குறிப்பு. "நேய மலிந்தவர் வேடமும்" என்ற சிவஞானபோதம் பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் மூன்றுமதிகரணத்துள், சிவஞானிகளோ டிணங்கினார்க்கு அதன் பின் செய்யக்கடவ துணர்த்து முகத்தால், "இனிப், பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக" என்றதற்கு உரை வகுத்தருளிய எமது மாதவச் சிவஞானயோகிகள் மாபாடியத்தினுள், **திருவேடம்** என்றதற்கு நாயனாரது வேடமே சிறந்த இலக்கியமாய் விளங்குவதென்று கூறினர்; திருவேடத்தி னியல்பாவதிது என்று, இத்திருப்பாட்டினையும், "சிந்தை யிடையறு வன்புந் திருமேனி தன்னி லசைவுங், கந்தை மிகையாங் கருத்துங் கையுழ வாரப் படையும், வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலி திருநீறும், அந்தமிலாத் திருவேடந் தரசு மெதிர்வந் தணைய" (திருஞான - புரா-270) என்ற திருப்பாட்டினையும் எடுத்துக் காட்டினர்; அக்கருத்துப் பற்றியே அரசு

கள் எழுந்தருளக் "கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற் பரவுமெய்க் காதல், தொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழு"தனர் என்றதும் காட்டினர். "இத் திருவேடங் காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின, காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறு போல, மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரையானே வசீகரித்து இன்பஞ் செய்தல் பற்றித் திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் என்று உபசரித்தார். அது "சேலுங்கயலுந் திளைக்குங் கண்ணாரிளங்கொங்கையிற் செங்குங்குமம், போலும் பொடியணி மார்பிலங்கு மென்று புண்ணியர் போற்றிசைப்ப" என்பதனுனுமறிக" என இதனியல்பை அவர் விரித்தருளினவும் இங்கு நினைவு கூர்தற்பாலன. மெய்ப்பொருள் நாயனார் - ஏனாதிநாத நாயனார் சரித நுட்பங்களும் இங்குக் கருதத்தக்கன. 140

சிந்தையில்—என்பதும் பாடம்.

1406. கண்டார்கள் கைதலை மேற்குவித் "திந்தக் கருணைகண்டா
மிண்டாய செய்கை யமண்கையர் தீங்கு விளைக்கச்செற்றம் [னுங்
உண்டா யினவண்ண மெவ்வண்ண?" மென்றுரைப் பார்கள்பின்
தொண்டாண்டு கொண்ட பிரானைத் தொழுது துதித்தனரே. கசக

(இ - ள்) வெளிப்படை. கண்டார்கள் கைகளைத் தலையின்மேல் கூப்பிக்கொண்டு "இந்தக் கருணையே உருவெடுத்தாற்போல விளங்கும் பெருமானைக் கண்டேயும், மிண்டர்களாகிய அமணக்கீழ் மக்களாயினும் இவர்க்குத் தீங்கு விளைக்கும்படி சினம்வந்த வண்ணம்தா னெப்படி? என்று சொல்லிக் கொள்வார்கள்; பின்னும், தொண்டரை ஆட்கொண்டு ஏன்றுகொண்ட பெருமானைத் தொழுது துதித்தனர்.

(வி - ரை) இந்த...எவ்வண்ணம்? - இது திருவீதியில் நாயனார் முன்பாட்டிற் கூறியபடி உள்ள திருவேடத்துடன் புகுந்தபோது கண்டவர்கள் தமக்குள் சொல்லியது. இந்தக் கருணை வடிவினைக் கண்டும் கோபம் மூளவும் அதனால் இவர்க்குத் தீமை விளைக்கவும் குண்டர்களுக்கும் மனம் எழாதன்றே! அமண்கையர்க்கு அவ்வாறு மனம் எழுந்ததுதான் என்ன ஆச்சரியம்! என்பது. கருணை - கருணை வேடம். நாயனாரைக் கருணையின் உருவமாகவே கண்டனர். "உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மையுரு வினையும்" (திருஞான - புரா - 1023) என்று கண்ணப்ப நாயனாரையும், "ஞானத்தின் றிருவுரு" (ஷை புரா. 728) என்று ஆளுடைய பிள்ளையாரையும் கூறுவது காண்க. அதன்மேலும், இங்குக் கருணையின் உரு என்னாது கருணை என்றது காண்க. கருணை என்கின்ற குணமே நடந்து வருவது போன்றது என்பதாம்.

கண்டால் - செற்றம் - உண்டாயின வண்ணம் எவ்வண்ணம்? - கருணையைக் காணும்போது மக்களுக்குச் சினமுண்டாகாது; அன்பே விளையும்; இது மக்களுள்ளே தீயவர்க்கு மியல்பு. கொடிய விலங்குகளுக்கு மியல்பு. "ஆய வாரிரு ளின்க ணேகுமவ் வன்பர் தம்மை யணைந்துமுன், தீய வாய விலங்கு வன்றெழில் செய்ய வஞ்சின; நஞ்சுகால், வாய நாக மணிப் பணங்கொள் விளக்கெ டுத்தன" (1620) என்ற நாயனாரது பிற்சரித நிகழ்ச்சியும், அவ்வாறுள்ள பிறவும் காண்க.

கையர் - கையரே யாயினும் அவரும் என இழிவு சிறப்பும்மை தொக்கது. மிண்டாய செய்கை - கொடுஞ் செருக்குடைய செய்கை. பின்னும் - துதித்தனர் - என்றது அமண்கையர் தீங்கு செய்யினும் பிரான் தொண்டரை ஆண்டு காத்து அளித்தனர் என்றும், தமக்கு இப்பெருமானை அளித்தனர் என்றும் அந்த எண்ணத்தைத் தொடர்ந்து துதிசெய்தமை குறித்தது.

தொண்டு ஆண்டு கொண்ட - தொண்டரை ஆளாகக் கொண்டு ஏதப்படாமைத் தாங்கிக் கொண்ட. 141

1407. இவ்வண்ணம் போல வெனைப்பல மாக்க ளியம்பியேத்த
மெய்வண்ண நீற்றொளி மேவுங் குழாங்கள் விரவிச்செல்ல
அவ்வண்ண நண்ணிய வன்பரும் வந்தெய்தி யம்பவளச்
செவ்வண்ணர் கோயிற் றிருவீரட் டானத்தைச் சேர்ந்தனரே. கசஉ

(இ - ள்) வெளிப்படை. இவ்விதமாக அளவற்ற சனங்கள் சொல்லித் துதிக்கவும், உண்மையாகிய அழகிய திருநீற்றின் ஒளி வடிவிற் பொலிந்துள்ள அடியார் கூட்டங்கள் உடன் பொருந்திச் செல்லவும், அவ்வண்ண நண்ணிய அன்பராகிய திருநாவுக்கரசு நாயனாரும் வந்து சேர்ந்து, அழகிய பவளம்போன்ற சிவந்த வண்ணராகிய சிவபெருமான் எழுந்தருளிய திருக்கோயிலாகிய திருவீரட்டானத்தைச் சேர்ந்தனர்.

(வி - ரை) எனைப்பல - மிகப்பல - அளவில்லாத. மாக்கள் - அந்நகரத்து மக்கள். இவர்கள்வேறு; பின்னர்க் குழாங்கள் என்ற கூட்டம் வேறு. அவர்கள் சிவன் அடியார்கள். அடியார்களையும் ஏனைமக்களையும் வேறுபிரித்துக் கூறுவது மரபு. "பதியோர் சிறப்பிற் பொங்கி...எதிர்கொள்ள வடியருடன் மகிழ்ந்துவந்தார்", "அடியவரும் பதியவரும்" என்ற திருஞானசம்பந்த நாயனார் புராணம் 576-579 பாட்டுக்களும், "நீடுகாஞ்சி வாணரு நிலவு மெய்ம்மை யன்பரும்" (ஷை 987), "மாதர் மைந்தர் மல்குவார் படிவிளங்கு மன்பரும் பரந்த பண்பி லீண்டுவார்" (ஷை 988) என்பவையும், இன்ன பிறவும் பார்க்க. இத்தன்மை பற்றியே ஏனைய மக்கட் கூட்டத்திற்குச் செய்யும் உதவிகள் பசுபுண்ணியம் என்ற வகையுட்பட்டுச் சுவர்க்கமாதி பலன்களைக் கொடுத்து மீளவும் பிறவியுட் புகுத்துவன எனவும், அடியாரிடத்துச் செய்யும் பணிகள் பதிபுண்ணியம் எனப்பட்டுப் பிறவி நீக்குதற் கேதுவாவன வெனவும் ஞானநூல்கள் பேசும்.

இவ்வண்ணம்......ஏத்த - பல இயம்பி என்றுகூட்டிப், பலவாகிய சொற்களை இயம்பி என்றலுமாம். மங்கையர்க்கரசி யம்மையாரும், குலச்சிறையாரும், கூன் பாண்டியனாரும் பின்செல்ல, அமணர்கள் கேட்டபடி புனல் வாதமியற்ற ஆளுடைய பிள்ளையார், வைகையாற்றின் கரைக்குச் சென்றபோது கண்ட மாதர் மைந்தர்கள் பற்பலவாறும் இயம்பி ஏத்தின வரலாறும் (திருஞான - புரா - 802—808), ஆளுடைய நம்பிகளைப் பிடியின் மீதேற்றிப் பின்பு கழறிற்றறிவார் தாமு மேறி இருந்து சாமரை வீசிக்கொண்டு திருவஞ்சைக்களத்தி லிருந்து கொடுங்கோளூரிற் றமது அரண்மனைக்கு அழைத்துத் திருவீதியிற் செல்வது கண்டு மக்கள் கூறிய வரலாறும் (கழறிற் - புரா - 148), பிறவும் பார்க்க.

மெய்வண்ணம் நீற்று ஒளிமேவும் - மெய் - உண்மை. சத்தாகி அழியாதிருக்கும் தன்மை. வண்ணம் - அழகு. அடியார்கள், திருவடிவிற் பொலிய அணிந்த திருநீற்றின் ஒளியில் விளங்குகின்றனர் என்க. "உண்மையி லுள்ளது நீறு", "கவினைத் தருவது நீறு" என்பன காண்க. இறைவனார் முத்துச் சிவிகை யருளியபோது அதன் ஒளி வெண்ணீற்றொளி போன்றிருத்தலின் அதனைப் போற்றினார் ஆளுடைய பிள்ளையார் என்பதறியப்படும். "வெண்ணீற்றொளி போற்றி நின்று" (திருஞான - புரா. 216) பார்க்க. வெண்ணீற் றொளிவிளங்கும் அடியார் கூட்டங்கள் இருபாலும் கூடிய போது "இரண்டுநில வின்கடல்க ளொன்றாகி யிசைந்தனபோ லியைந்தன" என்று அருளினர் ஆசிரியர்.

அவ்வண்ணம் நண்ணிய அன்பரும் - "தூய வெண்ணீறு துதைந்தபொன் மேனியும்" முதலியனவாக 1405-ல் சொல்லிய அந்த வண்ணமாக வந்த. அவ்வண்ணம் - "அக்கரங்க ளின்று மகர வுயிரின்றேல்" என்றபடி அகரம் சிவத்தன்மை காட்டுவது.

"அகரம் முதலி னெழுத்தாகி நின்றாய்" (இந்தளம் - நெல்வாயிலரத்துறை - 7) என்பது நம்பிகள் தேவாரம். அவ்வண்ணம் நண்ணிய - சிவத்தன்மை நிரம்பிய. சீவன்முத்த நிலைபெற்றுச் சிவமாகிய என்ற பொருளையுங் குறித்து நிற்பது காண்க.

அம்பவளச் செவ்வண்ணர் - "செம்பவள எரிபோன் மேனிப் பிரான்" என்ற தேவாரம் காண்க.

கோயில் திருவீரட்டானம்—வீரட்டானம் என்பது கோயிலின் பெயர். 142

*1408. உம்பர்தங் கோனை யுடைய பிரானையுள் புக்கிறைஞ்சி,
நம்புறு மன்பி னயப்புறு காதலி னூற்றிளைத்தே,
"யெம்பெரு மான்றனை யேழையே னான்பண் டிகழ்ந்த"தென்று
தம்பரி வாற்றிருத் தாண்டகச் செந்தமிழ் சாற்றிவாழ்ந்தார். கசங

(இ - ள்) வெளிப்படை. தேவதேவனைத், தம்மையாளுடைய பெருமானைத் திருக்கோயிலினுள்ளே புகுந்து வணங்கி, நம்புதற்குரிய அன்பின் விருப்பமிக்க காதலினால் எழுகின்ற சிவானந்தத்தினுள் இடையறாது மூழ்கிநின்று, "எம்பெருமானை ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே" என்ற கருத்துடன் தமது பரிவினால் திருத்தாண்டகச் செந்தமிழ்த் திருப்பதிகத்தைப் பாடி வாழ்வடைந்தனர்.

(வி - ரை) உம்பர் தங்கோன் - திரிபுரங்களை யெரித்துத் தேவரைக் காத்தவர். புரமெரி செய்தபோது தேவர்களே தேராகவும் அம்பு முதலிய படைகளாகவும் நிற்க, அவர்களது நாயகனாகநின்று, அவர்கள் எதுஞ்செய்யாமலே தாம், சிரித்துப் புரமெரித்தனராதலின் தாமே உம்பர்க்குத் தலைவராம் என்பதனை விளக்கினர்.

உடையபிரான் - சூலை நோய் தந்து ஈர்த்துத் தம்மை ஆளாகக் கொண்ட பெருமான். நம்புறும் அன்பின் நயப்புறு காதலினால் திளைந்து - அவர் தலைவராய்க் காத்தளிப்பர் என்று நம்பி அன்பு செய்தலின் நம்புறும் அன்பு எனப்பட்டது. அதனால் இறைவர் நம்பர் எனப்படுவர். நம்புறும் - விரும்பிப் பெறத்தக்க என்றலுமாம். "இறவாத வின்ப அன்பு" என்றது காண்க. நயப்பு - விருப்பு. அன்பு மேலிட அது விருப்பமாகி முதிர, அது மேன்மேல் கூர்ந்திடக் காதலாய் விளையும். அது முதிரவே, சிவானந்தத்தினுள் மூழ்கினர்.

எம்பெருமான்றனை...என்று - இது நாயனார் திருவதிகையை இரண்டாம் முறையாக இதுபோழ்து வந்தடைந்தபோது முதலிற் பாடியருளிய திருத்தாண்டகத் திருப்பதிகத்தின் கருத்து. இப்பதிகப் பாட்டுக்கள் "ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே" என்று முடியும் ஈற்றடிகளையுடையன. ஏழை - அறிவிலால் ஏழைத்தன்மை. பண்டு - சூலைநோய் தந் தாட்கொள்ளப்படு முன்புள்ள பல காலம். அக்காலமெல்லாம் சமணத்திற் சார்ந்து அமணர் சொற்கேட்டு இறைவனை இகழ்ந்தமைபற்றி இரங்கி இப்பதிகம் பாடியருளினர் என்பது நம்பரிவால் என்றதனால் அறியப்படும்.

"இருபிறப்பும் வெறுவியரா யிருந்தார் சொற்கேட்டு", "அமணை நின்றார் சொற்கேட்டு" என்ற பதிகப் பாட்டுக்கள் காண்க. முன்முறை இறைவர் திருமுன்பு எய்தியபோது சூலைநோயுடன் றொடர வந்ததனால் மருளும் பிணிமாயை யறுத்திடுவான், "கூற்றாயினவாறு விலக்ககலீர்" என்ற திருப்பதிகம் பாடிச் சூலைநோய் நீங்கப்பெற்றனர். இப்போது இரண்டாமுறை மீட்டும் அவர் திருமுன்பு வந்து நின்ற போது நாயனார் திருவுள்ளத்தே பல எண்ணங்கள் தோன்றின. தாம் மறந்து பிறதுறையில் நின்று இகழ்ந்தபோதும் அருள்பெருகு சூலையினைத் தந்து சமணை நீக்கித் தம் திருமுன்புக்கு ஈர்த்து ஆட்கொண்டருளியும், அதன் பின்பு, அவர்கள் நீற்றறையினுள் வைத்தும், நஞ்சுகலந்த பாற்சோறு ஊட்டியும், கொல்யானையை ஏவியும், கல்லொடு

பூட்டிக் கடலிற் பாய்ச்சியும் செய்வித்த மிறைகளுக்கெல்லாம் உடனாக நின்று காத்தருளி அவற்றினின்றும் தப்புவித்து ஈடேற்றி, மீளவும் தமது திருமுன்பு ஈர்த்துச் சேர்த்தருளியும், பெருங்கருணைவைத்த இந்தப் பெருந்தகையை முன்னெல்லாம் அமண் குண்டர் சொற்கேட்டு இகழ்ந்தேனே என்ற கருத்தே நாயனாரது திருவுள்ளத்து அழுந்தி, முன்றோன்றி, மிக்க பரிவினை விளைத்தது. ஆதலின் அப்பரிவு தோன்ற இத் திருப்பதிகம் பாடித் துதித்தனர் என்க. இத்துணையும் பெறத் தம்பரிவால்—சாற்றி என்று வைத்தருளிய தெய்வக் கவிநலம் காண்க. சமணர்கள் சிவனை இகழுந்தன்மை யுடையவர் என்பது "கரிய மனச்சமண் கரடி யாடு கழுக்களால், எரிய வசவுணுந் தன்மையோ" என்ற நம்பிகள் திருவாக்கானு மறிக.

வாழ்ந்தார் - வாழ்வு பெற்றனர். தாம் முன் செய்த தவறினை உணர்ந்து வருந்திப் பரிந்து போற்றியதனல் அதன் தாழ்வு முழுதும் நீங்கியும், அமணர் தொடக்கு இனி எவ்வாற்றானும் நிகழாது நீங்கியும், வாழ்ந்தனர் என்க.

சாற்றினரே—என்பதும் பாடம். 143

திருச்சிற்றம்பலம் ஏழைத் திருத்தாண்டகம்

வெறிவிரவு கூவிளநற் றொங்க லானை வீரட்டத் தானைவெள் ளேற்றி னானைப்
பொறியரவி னானைப்புள் ளூர்தி யானைப் பொன்னிறத்தி னானைப் புகழ்தக் கானை
யறிதற் கரியசீ ரம்மான் றன்னை யதியரைய மங்கை யமர்ந்தான் றன்னை
யெறிகெடிலத் தானை யிறைவன் றன்னை யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 1

மூலமறைக்கப் பட்டுநீ ராடாப் பெண்கள் முறைமுறையா னந்தெய்வ மென்றுதீண்டித்
தலைபறிக்குந் தன்மையர்க ளாகி நின்று தவமேயென் றவஞ்செய்து தக்க தோரார்
மலைமறிக்கச் சென்ற விலங்கைக் கோனை மதனழியச் செற்றசே வடியி னானை
யிலைமறித்த கொன்றையந் தாரான் றன்னை யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு - அறிவில்லாமையாலே பண்டு அமணர் சொல்லை கேட்டு ஏழையேன் எமது பெருமானை இகழ்ந்தவாறு என்ன பாவம்! என்று பரிவு கூர்ந்தது.

பதிகப் பாட்டுக் குறிப்பு - நாயனார் அருளிய திருத்தாண்டகப் பதிகங்களுள் இஃது இரண்டாவதாகும். ஏழையேன் நான் பண்டிகழ்ந்தவாறே! என்று பாட்டுக்கள்தோறும் முடிபெய்துதலால் இது ஏழைத் திருத்தாண்டகம் என்று பெயர் பெற்று வழங்குவதாகும். இகழ்ந்தவாறே - ஏகாரம் இகழ்ச்சிக் குறிப்பில் நின்றது. என்னே பாவம்! என்றபடி.

அமணரோடு உடனின்று அவர் சொற் கேட்டுப் பண்டு இகழ்ந்தமையும், அவ்வாறு இகழ்ந்தாலும் கைவிட்டுவிடாமல் இறைவன் விரைந்து இடர்தீர்த்து அருள் செய்தமையும், சமணர் நிலைகளினிழிபும் 5, 7, 8, 10, 11 திருப்பாட்டுக்களிற் கூறுகின்றார். ஏனைய திருப்பாட்டுக்களில் இறைவனது பெருமைகளைப் பேசி இத்தகைய பெருந்தகையை நான் அறியாது இகழ்ந்தேனே என்று இரங்குகின்றார்.

(1) புள் ஊர்தியான் - திருமால். பொன்னிறத்தினன் - பிரமன். இவர்களுக்குள்ளே நின்று இயக்குதலால் இவ்வாறு கூறினர். அதியரையமங்கை - ஒரு தலம்.—(2) வில்வலான் - மன்மதன். வில்வட்டம் - வில்லின் கொற்றம்.—(4) கந்திருவம் செய்திருவர் கழல் கைகூப்ப - கந்திருவம் - பாட்டு. இருவர் - பிரம விட்டுணுக்கள். அசுவதரன் - கம்பளன் என்னும் இரண்டு கந்தருவர்கள் தவஞ் செய்து சிவபெருமானுடைய காதிற் குழைவடிவாக இருந்து பாடிக்கொண்டிருக்கும் வரம்

பெற்ற வரலாறு குறிப்பதெனினுமாம்.—(5) இப்பாட்டுச் சமணர்கள் சிவனை யறியும் நெறியில் நில்லாது பாழாய்க் கழிந்து போகின்றமைக்கு இரங்கியும், அவர் சொற்கேட்டுத் தாம் முன்பு பெருமானை இகழ்ந்தமைக்குப் பரிவுகூர்ந்தும் அருளியது. இருபிறப்பும் - அரிதிற் கிடைத்த இந்த மானிடப் பிறவியும், இனிவரும் பிறவிகளும். சிவனை இகழ்வோர் பலகாலம் பிறந்து பிறந்து வருந்தி நரகத்திற் கிடப்பர் என்ற துணிபுபற்றி வெறுவியராய் என்றார். வெறுவியராதல் - வீணராதல் - வீணே கழிதல்.—(6) நின்மலன் - "மாயை கன்மங்களையுங் கடந்து நிற்றலால் அவற்றுள்ளும் ஓரியல்புபற்றி யறியப்படாதவன்". உயிர்களுக்கு மலத்தை நீக்குபவன் என்றலுமாம். நிமலன் - இயல்பாகவே பாசங்களி னீங்கியவன்; (7) குண்டாக்கன்- குண்டர்களுள் அரக்கன் போல்பவன். குண்டுத்தன்மையின் மிகுந்தவன். வீரராக்கதன்- கவிராக்கதன் என்பன போல. குண்டாக்கன் என்பதும் பாடம்; குண்டில் ஆக்கம் - மிகுதி - உடையவன் என்க. குண்டர் - குண்டு ஆழமாய் - ஆழம் பள்ளமாய் - பள்ளம் கீழாய் - குண்டர் என்பது கீழோரைக் குறித்தது என்பர் திவ்யப் பிரபந்த வியாக்கியானகாரர். அமணர்கள் வழங்கும் சில இழிந்த மரபுகள் குறித்து இரங்கி, அவர் சொற்கேட்டுத் தாம் பலநாள் உழன்றமைக்கு வருந்துகின்றார். உணர் வொன்றின்றி - உடனுகி உழிதந்தேன் எனவும், உணர்வின்றிப் பண்டிகழ்ந்தேன் எனவும் உரைக்க இடையில் வைத்தோதினார். 8 - 11 பாசுரங்களிலும் இவ்வாறே கொள்க.—(10) தோல்லை......ஆறறியேன் - பழவினைகள் சூழ்ந்ததனால் இப்பிற வியிற் போந்தேன்; அவ்வினையின் வலியால் இப்பிறவியிலும் தூறும் ஆறும் அறிந்து நன்னெறி செல்லமாட்டாதவனானேன். தூறு - முள்ளும் கல்லும் முதலியவற்றால் நிறைந்து நேர் செல்லமாட்டாமையை விளக்கும். ஆறு - நேர்வழி. "குழிவழி யாகி வழிகுழி யாகி" என்ற 11-ம் திருமுறை காண்க. சுடராய் நின்று - அவ்வழி வீழாது நல்வழி காட்டும் விளக்காக. இது நாயனார் தமது முற்பிறவியின் வினைவை நினைவு கூர்ந்தருளியது. இடர்தீர்த்து - பிறவிக் கேதுவாகிய அம்மைத் தொல்லை வினையை யும், அதன் பயனாக விளைந்த அமண் தொடக்காகிய இம்மை வல்வினையையும் அடக்கி இடர் என்றார். இந்த அடிமை கொண்ட - சரிதக்குறிப்பின் அகச்சான்று.—(11) இப் பாட்டானும் சமணர்களுள் வழங்கும் சில இழிமரபு குறிக்கப்பட்டது. தவமே என்று அவஞ்செய்து தக்கது ஓரார் - தவமல்லாதவற்றைத் தவம் என்று பிறழ உணர்ந்தும், அவத்தினைச் - தீமையினைச் - செய்தும், தவமாகிய தகுதியுள்ளவற்றை எண்ணாமலும் இம்மூன்றுவகையாற் குற்றப்பட்டார் என்க. மதன் - செருக்கின் வலிமை. அறி யாமையுமாம். இலைமறித்த கொன்றை - கொன்றை பூக்குங் காலத்து இலைகளே தோன்றாமல் முழுதும் பூவாய் நிறைந்து காணும் தன்மை குறித்தது.

தலவிசேடம் - முன்னர் உரைக்கப்பட்டது. பாட்டு 234, பக்கம் உஎக, பார்க்க.

வேறு

1409. அரியயனுக் கரியானை யடியவருக் கெளியானை
விரிபுனல்சூழ் திருவதிகை வீரட்டா னத்தமுதைத்
தெரிவரிய பெருந்தகைமைத் திருநாவுக் கரசுமனம்
பரிவுறுசெந் தமிழ்ப்பாட்டுப் பலபாடிப் பணிசெயுநாள், கசச

1410. புல்லறிவிற் சமணர்க்காப் பொல்லாங்கு புரிந்தொழுகும்
பல்லவனுந் தன்னுடைய பழவினைப்பா சம்பறிய,
வல்லலொழிந் தங்கெய்தி, யாண்டவர சினைப்பணிந்து,
வல்லமணர் தமைநீத்து, மழவிடையோன் றாளடைந்தான். கசரு

1409. (இ - ள்) வெளிப்படை. அறிதற்கரிய பெருந்தகைமை யாளராகிய திருநாவுக்கரசு நாயனார், அரிக்கும் அயனுக்கும் அரியவரை, (ஆயினும்) அடியவர்களுக்கு எளியவரை, விரிபுனலாற் சூழப்பட்ட திருவீரட்டானத்தினுள் எழுந்தருளி யிருக்கும் அமுதமானவரை, மனத்தினுள் மிக்கஅன்பு பொருந்தும் செந்தமிழ்ப் பாட்டுக்கள் பலவற்றையும் பாடித் திருப்பணி செய்கின்றநாளிலே, கசச

1410. (இ - ள்) வெளிப்படை.புல்லறிவுடைய சமணர்களுக்காகப் பொல்லாங்குகளையே இடைவிடாது செய்து ஒழுகும் பல்லவவரசனும், தனது பழவினைப்பாசம் நீங்கவே, அந்த அல்லலினின்றும் நீங்கி, திருவதிகையினை அடைந்து ஆண்ட அரசுகளைப் பணிந்து வலிய அமணர்களைவிட்டு, இளைய இடபத்தையுடைய சிவபெருமானது திருவடிகளைச் சார்ந்தான். கசரு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1409. (வி - ரை) அரியானை - எளியானை - முரண் அணி. பெருந்தேவர்க்கும் அரியவனாயினும் அடியவர்க்கு எளியவன். ஆணவத்தோ டெழுந்தவர்க்குக் காண்டற்கு அருமையும், அடிபணிந்தார்க்கு எளிமையும் குறித்தபடி. "வேண்டுவார்க்கே அண்ணியார் பெரிதுஞ் சேயார் அதிகை வீரட்ட னாரே" (நேரிசை), "காண்டற் கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற வெளியான் கண்டாய்" (திருமறைக்காடு - தாண்டகம் - 1), "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை - மற்றவ ரறியா மாணிக்க மலையை" (திருவிசைப்பா) முதலியவை காண்க. இத்தலத் திருநேரிசைக் கருத்தை எடுத்துக் காட்டியபடி.

விரிபுனல் - இங்குத் திருக்கெடில ஆறு குறித்தது. இத்தலத்தே அது விரிந்து பரவிச் சென்று அணிமையிற் கடலொடு கூடுவதால் இங்கு விரிபுனல் என்றார். கங்கையே போலச் சிவத்தன்மையை விரிவு செய்யும் புனல் என்றலுமாம்.

அமுது - அமுதம் போல்பவரை அமுது என்ற துபசாரம். அமுது - மரணத்தைப் போக்குவது.

தெரிவரிய பெருந்தகைமை - திருநாவுக்கரசு நாயனாரது பெருந்தகைமை, உண்மை ஞானிகளேயன்றிப் பிறர் தெரிதற்கரியதாகும். பொய்ம்மை செய்து அவர்பால் அளவற்ற தீமைகளையும் செய்த அமணரையும் வெகுளாமையானும், அப்பூதியடிகளது வரலாற்றானும், பிறவாற்றானும் அஃது ஒருவாறு அறியப்படும். திருவதிகைக்கும் மீண்டு வந்த பின்னர், முன்பு தமக்குப் பெருந் தீமைகள் செய்த அமணரையும் அவர்கள் வயப்பட்டு மதியிழந்து கொடுங்கோன்மை செய்த அரசனையும் சிறிதும் நாயனார் எண்ணினாரல்லர். ஆதலின் இங்கு இவ்வாறு அருமைப்பாடுபெறத் திருப்பெயர் முழுமையும் போற்றிக் கூறினார்.

மனம் பரிவுறு செந்தமிழ்ப் பாட்டுப் பல பாடி - மனத்துள் அன்பு மிகுந்து கூர்தலால் அந்தப்பாட்டுக்கள் பலவும் எழுந்தன. பரிவு - இங்கு அன்பு, ஆசை, இரக்கம் முதலிய பல பொருள்களையுங் குறித்து நின்றது. அவர் திருமனத்தினுள், அவை அற்றை ஞான்று பரிவுபொருந்திய தமிழாதலேயன்றி, இற்றைக்கும், இனி எஞ்ஞான்றும் அவற்றைக் கற்பாரது உள்ளங்களில் பரிவு உறுவிக்கும் தமிழாதலும் கருதுக. செந்தமிழ்ப் பாட்டு - செம்மை நலத்தை - சிவத்தை - விளைவிக்கும் தமிழே செந்தமிழ் என்றற்குரியது என்பது ஆசிரியர் கருத்தாம். அதுவே நாயனாரது கருத்துமாம். "வாயி ருந்தமி ழேபடித் தாளுறு, வாயிரஞ் சமண்" (பழையாறை வடதளி) என்றதும், பிறவும் காண்க.

பலபாடி - அரியானை - எளியானை - அமுதைப் - பாடி - என்க. இந்த நாட்களில் நாயனார் பாடியருளிய பலவற்றுள் இப்போது கிடைப்பன பதின்மூன்று பதிகங்களாம். இவை - கெடிலவாணர் என்ற - காந்தார பஞ்சமப்பண் - பதிகமொன்றும், "கோணன் மதி"-"எட்டு நாண்மலர்" என்ற திருக்குறுந்தொகைப் பதிகங்க ளிரண்டும், "இரும்பு கொப்பளித்த", "வெண்ணிலா மதியம்" "நம்பனே யெங்கள் கோவே," "மடக்கினார் புலியின் றோலை," "முன்பெலா மிளைய காலம்" என்ற திருநேரிசைப்பதிகங்கள் ஐந்தும், "மாசிலொள்வாள்போல்" என்ற திருவிருத்த மொன்றும், அடையாளம் - போற்றி - திருவடி - காப்பு - என்ற திருத்தாண்டகங்கள் நான்குமாம்.

தலமுறை வகுப்பில் திருவதிகை வீரட்டானம் என்ற தலத்திற்கு நாயனாரது பதி னாறு பதிகங்கள் மட்டும் தொகுக்கப்பட்டுள்ளன. "நாமார்க்கும் குடியல்லோம்" என்ற திருத்தாண்டகப் பதிகம் திருவதிகையில் அருளிச் செய்யப்பட்டது. "மாசில்வீணை" என்ற பதிகம் பாடலிபுத்திர நகரில் நீற்றறையினுள் ளிருந்தும், "சொற்றுணை" என்ற பதிகம் பாடலிபுத்திரக்கரைக்கெதிரில் கடலினுள் இருந்தும் பாடப்பட்டன. அவ்வாறு தலங்குறிக்காது பாடப்பட்டமையால் அவை பொதுப்பதிகங்கள் என்ற தலைப்பின்கீழ்த் தொகுக்கப்பட்டுள்ளன; ஆயினும் அக்காலத்தில் பாடப்பட்ட "சுண்ணவெண் சந் தனம்" என்றபதிகம் போலவே, அவை - திருவதிகை வீரட்டானேசுவராகிய தோன் றாத்துணை நாதரையே பாடியனவாதலின், திருவதிகைத் தலைப்பில் தொகுக்கத்தக்கன. அவைபற்றி ஆங்காங்கு முன்னரே குறிக்கப்பட்டது. எஞ்சிய, தலப்பதிகங்களுள், "கூற்றாயினவாறு", "சுண்ணவெண் சந்தனச்சாந்தும்", "ஏழை"த் திருத்தாண்டகம் என்ற மூன்றும் முன்னர்க் குறிக்கப்பட்டன. ஆதலின் இங்குப் "பரிவுறு செந்தமிழ்ப் பாட்டுப் பல" என்றவை முன் சொல்லியபடி இப்போது கிடைத்துள்ள பதின் மூன்று பதிகங்களேயாம்.

பணி செயுநாள் - பணி - உழவாரத்திருப்பணியாகிய கைத்தொண்டும் அழுந்தி நினைத்தலாகிய மனத்தொண்டும் ஆம். பாடுதலும் பணி செய்தலுமாகிய இவை நாயனார் செய்தனர் என்பது "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்னும் நாயனார் திருவாக்கினா லறியப்படும். பாடிப் பணிசெயும் - பாடுதலாகிய பணி செய் கின்ற என்பாருமுண்டு.

பணிசெயு நாள் - பல்லவனும் அல்லல் ஒழிந்து - எய்தி - பணிந்து - நீத்து - விடையோன் - தாள் அடைந்தான் என்றுகூட்டி இந்த இரண்டு பாட்டுக்களையும் முடித்துக்கொள்க.

இத்தலத்தே மேற்கூறியபடி இரண்டாவது முறை எழுந்தருளிப் பல பதிகங்களை யும் பாடிப் பணிசெய்து மற்றும் தலங்களைத் தரிசித்துத் தொண்டு செய்வதற்கு எழுந்தருளுவதனை 1412-ல் கூறுவார். அவ்வாறு சென்றபின் நாயனார் இத்தலத் திற்கு மீளவும் எழுந்தருளவில்லை. இது நாயனார் சரிதத்தின் சிறப்பியல்புகளுள் ஒன்று. ஆதலால் நாயனார் அருளிய இத்தலத்துக்குரிய மேற்கூறிய பதின் மூன்று திருப்பதிகங்களைப் பற்றியும் சிற்சில குறிப்புக்கள் இங்குத் தரப்படுகின்றன.

I திருச்சிற்றம்பலம் காந்தாரபஞ்சமம் - "கெடிலவாணர்"

முளைக்கதி ரிளம்பிறை மூழ்க வெள்ளநீர்
வளைத்தெழு சடையினர் மழலை வீணையர்;
திளைத்ததோர் மான்மறிக் கையர் செய்யபொன்
கிளைத்துழித் தோன்றிடுங் கெடில வாணரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்புக்கள் :—

கெடிலவாணர். என்றது காந்தாரபஞ்சமப் பண்ணில் அமைந்தது. இத்திருப் பதிகத்தின் ஒவ்வொருபாசுரமும் கெடிலவாணரே என்ற ஈறுகொண்டு முடியும்; ஆத லின் இப்பதிகம் திருக்கெடிலவாணர் என்று பெயர் வழங்குவது. (1) மூளைக்கதிர் - பெருமான் திருமுடியில் வைத்தபின்னர் முளைக்கத் தொடங்கிய கதிர்களுடைய. மழலை - வீணையின் ஓசையை மழலைக்கு உவமிப்பர். கிளைத்துழிப்பொன் தோன் றிடும் கெடிலவாணர் - மண் கிளைத்தவிடத்துப் பொன் தோன்றுமாறுபோலப் பாசத்தை நீக்கிய வழித் தோன்றும் கெடிலவாணர். (2) முதன் மூன்றடிகளில் சொற்பின் வருநிலையணி மிக அழகுபட மிக எளிதில் பொருள் புலப்பட அமைந் துள்ளது. ஏழை - அம்மையார். கீறின - கிழித்த. கீறின உடை - மான்தோல், புலித்தோல், யானைத்தோல். (3) விடந்திகழ்கெழுதரும் - கெழு - நிறம். விடத்தாற் கருநிற மிக்க என்க. "குருவுங் கெழுவு நிறனுகுமே" (தொல் - சொல் - உரி. 5). உடம்பு வெள்ளைநீறு அழகெழுதுவர் - திருமேனியில் அழகுபட வெண்ணீற்றினைப் பூசுவர். எழுதுதல் பூசுதல் என்ற பொருளில் வந்தது. "பூசுவதும் வெண்ணீறு" (திருவா). அழகு எழுதரு சடை - எழுதருதல் - எழுதல். படர்தல் - நீளுதல். பாய்புனல் கிடந்து அழகு எழுதுதல் யாற்றுநீர் ஒழுக்கினால் சித்திரம் எழுது வது போல நீர் ஒழுகுவதும் மணல் படுவதும்.—(4) விழுமணி கிடக்கும் கரிய விட் டுணு. அயில் - கூர். தீக்கடவுள். எயிறு - ஈர். காற்றுக் கடவுள். மூன்றுங் கொண்ட வெய்யது ஓர் அம்பு. "அரிவாளி கூரெரி காற்றின் மும்மதில் வென்ற வாறு" (சீகாழி - ஆமாத்தூர் - 1 - பிள்ளையார்). கோழவிய - அழகிய; நீண்ட மேரு மலை - கோத்து வளைத்தனர். கோட்டுதல் - வளைத்தல். வெய்யது - முன்னது, வெம்மை - விருப்பம்; பின்னது, கொடியது.—(5) குழுவினராகி. தழுவினவினை. கழுவு தல் - நீக்குதல்; கெழுவுதல் - பொருந்துதல். "மங்கையோ டிருந்தே யோகு செய் வானை" (திருவிசைப் - கருவூர்த் - கங்கை - 11).—(6) கையில் எரிசான்முக மணஞ் செய்வர் - நயப்பர் - என்றது நயம். தென்றிசைக் கங்கை - 235 பார்க்க.—(8) கிடந்து- சொற்பொருட் பின்வருநிலை. பேதுற - ஐயுற - ஏங்க - நகும் - என்பன நான்கும் தனித்தனி பெயராதபொருட் டற்குறிப்பேற்ற வணி; நான்கும் கூடி நாடகச் சுவைபெற அமைந்து உருவகத்தை உள்ளுறுத்ததோர் தற்குறிப்பேற்றவணி. "நாகத்தை நங்கையஞ்ச" (நேரிசை - திருவாரூர். 2) என்றதை ஒப்பு நோக்குக.

II  திருச்சிற்றம்பலம்  திருக்குறுந்தொகை

கோணன் மாமதி சூடியோர் கோவணம், நாணில் வாழ்க்கை நயந்தும் பயனிலை;
பாணில் வீணை பயின்றவன் வீரட்டங், காணி லல்லதென் கண்டுயில் கொள்ளுமே. 1

திருச்சிற்றம்பலம்

தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றமாட்டாது துயில்பெறாது வருந்தும் அகத்திணைத் துறைப் பொருளாக வைத்து அருளப்பட்டது இத்திருப்பதிகம். இறைவரது திரு வீரட்டத்தினைக் கண்டாலல்லது எனது கண் துயில் கொள்ளுமோ? கண்ட பின்பே துயில் கொள்ளும். அதாவது ஆறுதலை அடையும். காணிலல்லது - நண்ணிலல்லது - கற்கிலல்லது - கற்றலல்லது - கல்லேனாகில் - கரையேனாகில் - கூறிலல்லது - புலம்பே னாகில் - என் கண் துயில்கொள்ளுமே - என்ற முடிபுகள் காண்க.—(1) பாணில் பண் என்பது எதுகை நோக்கிப் பாண் எனநின்றது. பாணர் பயில் என்றலுமாம். வீணை பயின்றவன் - "கங்காளராய் வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே". உலகம் படைக்குங்காலத்தில் இறைவனிடத்திருந்து வரும் நாததத்துவம்

வீணை என்றுபசரிக்கப்படும். "பாடல் வீணையர்", "மிக நல்ல வீணை தடவி"—(7) கரைதல் - சொல்லுதல்.—(9) கந்துலாக - இருளினால் மறைக்கப்பட.—(10) புலம்புதல் - வருத்த மிகுதியால் பன்னிப் பன்னிப் பேசுதல்.

III திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி, மட்ட லரிடு வார்வினை மாயுமால்;
கட்டித் தேன்கலந் தன்ன கெடிலவீ, ரட்ட ரைடி சேரு மவருக்கே. 1

திருச்சிற்றம்பலம்

விதித்தபடி அட்டபுட்பம் (எண்வகை மலர்) சாத்தி அருச்சித்தலைக் குறிப்பது. இப்பதிகம் தொடக்கம் காண்க. எண்மலர் - மலர் ஓரிருநான்கு - பூங்கொத்தாயின மூன்றோடோரைந்து - போதுகள் மூன்றோ டோரைந்து - ஏழித்தொன்மலர் - ஒண்மலர் எட்டு - அட்டபுட்பம் - என்று அதனையே பாசுரந்தொறும் கூறுகின்றார். அட்டபுட்பவகையும் அவை மூன்றுகாலந்தோறும் வெவ்வேறும்படியும், அவற்றினால் அருச்சிக்குமாறும், "நலஞ் சிறந்தார் மனத்தகத்து மலர்க ளெட்டும்" (ஆரூர் - தாண்டகம்) என்றபடி கொல்லாமை முதலிய உட்சாதனங்களை உட்பூசையில் அட்டபுட்பமாக அருச்சிக்கும் பண்பும், பிறவும் ஆகமங்களிலும், வழிநூல்களுள்ளும் காண்க. விதித்தபடி எண்மலரா லருச்சிப்பார் பெறும்பயனை "வினைமாயும்", "கோள வல்வினையுங் குறைவிப்பர்", "வல்வினை ஓட்டுவார்", "வினை தீர்ப்பவர்" "வினை ஓட அகற்றுவார்", "வல்வினை தீர்ப்பர்", "வினையைக் கழிப்பர்", "வினை பாற்றுவார்" என்று பதிக முழுமையும் வற்புறுத்தியருளினர். அவ்வாறு அருச்சித்தல், உரை செய் நூல்வழி (7) நீளமாக நினைந்து (2) உள்கி (3) காலையேத்தி (8) ச் சேவடியில் இடுதல் வேண்டும். அதனால் வினைமாயும்; எவ்வாறெனின் வீரட்டர் வல்வினையையும் மாய்ப்பர். ஆதலின் அடிசேரும் மனமுடையவர்கள் அவன்பா லணைந்து அட்டுமாறு செய்கிற்ப. (10) என்று இப்பதிக முழுமையும் தொடர்ந்து பொருள்படுத்திக் கொள்ளத் தக்கது. இவ்வாறே நாயனாரது திருப்பதிகங்களுட் பெரும்பாலனவும் ஒவ்வோர் உண்மையை விளக்கி நிற்பன.

IV திருச்சிற்றம்பலம் "கோப்பளித்த" திருநேரிசை

இரும்புகோப் பளித்த யானை யீருரி போர்த்த வீசன்
கரும்புகோப் பளித்த வின்சொற் காரிகை பாக மாகச்
சுரும்புகோப் பளித்த கங்கைத் துவலைநீர் சடையி லேற்ற
வரும்புகோப் பளித்த சென்னி யதிகைவீ ரட்ட னாரே. 1

திருச்சிற்றம்பலம்

கோப்பளித்த என்ற சொல்லும் பொருளும் இப்பதிகம் முழுமையும் வருதலால் இப்பெயர் பெற்றது. (கோப்புளித்த என்பதும் பாடம்). கோப்பளித்தல் - தன்மை - பண்பு - மிகுந்து வெளித்தோன்றுதல் என்ற பொருளில் வந்தது. "நறை கொப்பளிக்குநறும் பொகுட்டு நளின வாழ்க்கை" (காஞ்சிப்புரா - மாசாத்தன்தளிப் படலம் - 1) பார்க்க. கரும்பு கொப்பளித்த வின்சொல் - வம்பு கொப்பளித்த கொன்றை - பரவு கொப்பளித்த பாடல் முதலியவை காண்க. சொற்பொருட் பின்வருகிலை.

V திருச்சிற்றம்பலம் திருநேரிசை

வெண்ணிலா மதியந் தன்னை விரிசடை மேவ வைத்து
வுண்ணிலாப் புகுந்து நின்றங் குணர்வினுக் குணரக்கூறி

விண்ணிலார் மீயச் சூரார் வேண்டுவார் வேண்டு வார்க்கே
யண்ணியார் பெரிதுஞ் சேயா ரதிகைவீ ரட்ட ஞரே. 1

திருச்சிற்றம்பலம்

(1) உண்ணிலா......கூறி-உள்ளத்தினுள் நின்று உணர்வுதந்து. வேண்டுவார்க்கே அண்ணியார் - அணிமையில் உள்ளவர். வேண்டாதார்க்குப் பெரிதுஞ் சேயார் - (2) என் உள்ளங் கூடினூர் கூடல் ஆலவாயிலார் - நாயனூர் திருவாலவாய்ப் பெருமானை ஆன்மார்த்த நாயகராகக் கொண்டு ஆன்மார்த்த சிவபூசை செய்து வந்தனர் என்று கருதப் பலசான்றுகள் உள்ளன. "ஆலவாயி லப்பனே யருள் செய்யாயே", "தென் கூடற் றிருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றே னனே", "என்மே லூனமது வெல்லா மொழித்தான்", "மற்றொரு பற்றில்லா வடியேற் கென்றுஞ் சிறந்தானை", "என்றலையி னுச்சி யென்றுந் தாவித் திருந்தானை", "எஞ்சலில் புகலி தென்றென் றேத்தினான்......மலரடி காணும் வண்ணம் அஞ்சலென்று", "வழுவிலா துன்னை வாழ்த்தி வழிபடும் தொண்ட னேனுன், செழுமலர்ப் பாதங் காண", "நறுமலர் நீருங் கொண்டு நாடோறு மேத்தி வாழ்த்திச், செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்", "புந்தியொன்றிப் பிடித்துநின் றாள்கள ளென்றும் பிதற்றிநா னிருக்க மாட்டேன்" முதலியவை பார்க்க. "தொண்டனேன் பட்ட தென்னே தூயகா விரியி னன்னீர், கொண்டிருக் கோதி யாட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி, யிண்டைகொண் டேற நோக்கி யீசனை யெம்பி ரானைக், கண்டனைக் கண்டி ராதே காலத்தைக் கழித்த வாறே" (பொது-நேரிசை), "பாங்கறியா,வென்போ லிகள்பறித் திட்ட விலையு முகையுமெல்லா, மம்போ தெனக்கொள்ளு மையனையாற னடித்தலமே" (திருவிருத்தம்) என்றஇவை முதலியவை நாயனூர், ஆன்மார்த்தமாகிய சிவபூசையினை வேதசிவாகமங்களின் விதித்தபடி செய்துவந்தனர் என்பதனை விளக்குவன. நாயனூர் தாமே செய்து பலகாலம் வாழ்ந்து தவஞ்செய் திருந்த திருப்பூந்துருத்தித் திருமடத்தினுள் அவர் பூசை செய்தருளிய சிவபூசை இடமும் சிவபூசை மேடை முதலியவற்றின் அடையாளங்களும் இன்றும் காணப்படுகின்றன. இவற்றைக் காப்பாற்றிப் போற்றுதல் சைவ நன்மக்களது உயர்ந்த கடமைகளுள் ஒன்றாகும். கூடினூர் கூடல்- தூடினூர் தூடல் - ஆடினூர் ஆடல் - சொற்பொருட்பின் வருநிலை.—(3) ஊனையே ஊன் - பிறவி. ஏகாரம் விடாமற்பற்றுகின்ற - விரும்புகின்ற எனத் தேற்றம். துன்பத்தழுத்துகின்ற என இழிவு சிறப்பு என்றலுமாம். உள்ளத்துள்ளே உணர்தல்-எப்போதும் சிந்தித்திருத்தல். "உடம்பெனு மனைய கத்தே......இருந்து நோக்கில்" (தனி நேரிசை), "காயமே கோயிலாக" (தனி - நேரிசை) முதலியவற்றுற் கூறப்பட்ட உட பூசை.—(4) துருத்தியாம் குரம்பை - கொல்லனுலையில் ஊதும் துருத்திபோன்ற உடம்பு. தொண்ணூற்றங் குறுவர் - தத்துவ தாத்துவிகக் கூட்டம். தத்துவம் 36; தாத்துவிகம் 60. விருத்திதான் தருக - வேலை தாருங்கள். விருத்தி - தொழில் முயற்சி. பொருள் என்றலுமாம். வருந்தி - வருத்தம். அருத்தி - ஆசை - அன்பு.— (5) துத்தி - பாம்பின் படப்பொறி. உத்தரமலையர் - இமயவேந்தன். அத்தி - யானை.—(6) வரிமுரி - இசைப்பாட்டு வகைகள். வரியும் முரியும். சுரிபுரி விரிகுழல் - சுரித்தும் புரித்தும் விரித்தும் புனையும் கூந்தல்.—(7) நீதியால் - வேத சிவாகமங்களுள் விதித்தபடி. சோதி - எங்கும் நிறைந்த பேரொளி. சுடர் விளக்கு - அவ்வொளியின் பகுதி ஓரிடத்துக் கூர்ந்து காண்பது.—(8) எல்லி - இரவு குறித்தது. இரவும் பகலும் எப்போதாயினும். துஞ்சும்போது - கண்டுயில் கொள்ளுமிடத்து. புல்லிய - சேரும் பொருட்டு. புல்லிய - சிறுமையுடைய என்றலுமாம். காமன்... நோக்கியிட்டார் - அவர்வந்து என் மனத்துட் புக்கபோது வேறு காமச்சேட்டைகள்

விளையா; அவர் காமனை வேவ நோக்கினராகலின். இப்பாட்டுக் கனவு நிலையுரைக்கும் அகப்பொருளை உட்கொண்டது.—(9) ஓங்காரம் என்னும் பிரணவப் பொருளாயுள்ள ஒருவன். வென்ற...உரியீர். பெரியோரால் வெல்லப்பட்ட ஐம்புல வின்பங்களையும் விலக்கும் உரிமையுடைய அன்பர்.

VI திருச்சிற்றம்பலம் திருநேரிசை

நம்பனே யெங்கள் கோவே நாதனே யாதி மூர்த்தி
பங்கனே பரம யோகி யென்றென்றே பரவி நாளுஞ்
செம்பொனே பவளக் குன்றே திகழ்மலர்ப் பாதங் காண்பா
னன்பனே யலந்து போனே னதிகைவீ ரட்ட னீரே. 1

திருச்சிற்றம்பலம்

வீரட்டனீரே! உமது திருவடி காண்பதற்கு மிக வருந்திப் போயினேன்; எனக்கு அருளும் வகையால் அருள்புரிய வேண்டும் என்பது இப்பதிகக் கருத்து.—(1) காண்பான் - காணும் பொருட்டு. அலந்து போனேன் - மிகவும் துன்பப்பட்டேன்.—(2) பொய் - மெய் என்பன தன்மை குறித்தன. போர்வை - இங்கு உடம்பு குறித்தது. மெய்யனுய் - பொய்யாகியும் மெய் என்ற பெயர் பெற்ற உடம்பன்றி, உண்மையில் மெய்யினை உடையனுக. ஐவர் - ஐம்பொறி. வேண்டிற்று - உயர் கதிக்காக நூல்கள் விதித்தபடி நான் வேண்டுவதனை.—(3) நீதி - வேதசிவாகமங்களுள் விதித்த நீதி. நியதி.—(4) தெருளுமா - அறியும் வழி. ஆறு கடைக்குறைந்து ஆ என நின்றது. தீவினையாலாகிய சுற்றப்படு பொருள்கள். அருளும் ஆறு - எனக்கேற்றவாறு அருளும் வழி.—(5) அஞ்சு - ஆக்கை ஐம்பூதங்களின் சேர்க்கையாலாகிய உடம்பு. அதனில் வாழும் அஞ்சு - ஐம்பொறிகள். அடர்க்கப்படுதல் - "புலனுடைர்ப் புண்ட வெறுந்தமியேன்" (திருவாசகம்). புலன் வழி ஈர்க்கப்பட்டு வீழ்தல். அஞ்சினுல் - பயந்தால். வினை. அஞ்சினுற் பொலிந்த - ஆணைத்திறல் ஆட்டப்பட்ட. ஐந்தாவது பாட்டு அஞ்சினுல் எனச் சொற்பின் வருநிலையின் வைத்தார்.—(6) உறுகயிறூசல் போல ஒன்றுவிட்டு ஒன்றுபற்றி என்றது நிலையில்லாது இங்குமங்கும் அலைதலினையும், மறுகயிறூசல்போல வந்து வந்து உலவும் என்றது முன்னும் பின்னும் போதலையும், பெறுகயிறூசல்போலப் பிறைபுல்குசடை என்றது கயிறு ஊசலைப்பெற்ற தோற்றம்போலச் சடை,பிறையினைப் பெற்றதென்ற மெய்யுவமத்தையும், பாதத்து அறுகயிறூசலானேன் என்றது ஊசல் கயிறற்றால் தரையிற் சேர்வதன்றி வேறு துணையில்லாமைபோல எனக்கு உன் பாதமன்றி வேறு தாங்கும் துணையில்லை என்ற உருவகத்தினையும் குறித்தன. "ஊசல் கயிறற்றுற் றுய்தரையே யாந்துணையான்" என்று "ஆன்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையு"மென்ற (8-ம் சூத்) நான்காமதிகரணத்து ஆசிரியர் எதுக் காட்டியவாறு. இங்கு ஊசல் கயிறுதலாவது - உயிரை வைத்து ஆட்டிக் கொண்டிருந்த பிரபஞ்சத்தொடக்கு விடுபடுதல். ஊசலானேன் - ஆனேன் - ஒத்தேன்; ஆக்கம் உவமை குறித்து நின்றது. "ஆள்வாரிலி மாடா வேனோ?" (திருவா) என்புழிப்போல.—(7) காம வெந்நோய் - பிரபஞ்ச வாழ்வில் இச்சை. இப்பாட்டு உலகர் பொருட்டு இரங்கிக் கூறிக் காட்டியது. உணர்வு எனும் இமை திறந்து - புறக்கண் இமை விண்டு விழிப்பதுபோல, அறிவு என்னும் அகக்கண் உணர்வு என்னும் இமை திறந்தால் விழிக்கும். வெளிறு - அறியாமை. குற்றம் என்பர் மணக்குடவர். சரக்குக் கொண்டேன் - அறிவில்லாத வாணிபம் செய்தேன். குறிப்புருவகம்.—(8) மன்றத்துப் புன்னைமரம் படுதுயரம் போல எய்தி என்க,

**மன்றத்துப்புன்னை** - பொது வெளியில் உள்ள பூமரம் கனிமரம் இவைகள் பலராலும் கல்லேறுண்டும் பறியுண்டும் அலைக்கப்படுதல் போலப் பலபல புலனிச்சைகளா லலைக் கப்பட்டு. **ஒன்றினல்** - மனம் ஒன்றுதலினால். **விழுப்பதற்கு** - வீழ்ப்பதற்கு - இறக்கச் செய்தற்கு "விழுப்பதன்முன்" (தேவா).—(9) **பிணிவிடா** - நோய் நீங்காத. **பணி விடா விடும்பை** - பணிசெய்ய விடாத துன்பம். தமக்குப் பணிசெய்யும் பிடிப்பி னின்றும் விடாத என்றலுமாம். **பாசனம்** - பாத்திரம். சுற்றம் என்றலுமாம்.

VII திருச்சிற்றம்பலம் திருநேரிசை

மடக்கினார் புலியின் றோலை மாமணி நாகங் கச்சா
முடக்கினார் முகிழ்வெண் டிங்கள் மொய்சடைக் கற்றை தன்மேற்
றொடக்கினார் தொண்டைச் செவ்வாய்த் துடியிடைப் பரவை யல்கு
லடக்கினார் கெடில வேலி யதிகைவீ ரட்ட னாரே. 1

திருச்சிற்றம்பலம்

முன் பதிகம் முன்னிலையில் "வீரட்டனீரே" என்று செய்யும் அருள் விண்ணப் பம். இஃது படர்க்கைமுகத்தால் "வீரட்டனாரே" என்று அவரது அருளை வியந்துரைத் தது.—(2) **பாடிய பாணி** - கூத்துப்பாட்டு. இப்பாட்டு அவரது கூத்தை ஒரு நாட கம்போல அலங்கரித்துக் கூறுவது. தற்குறிப்பேற்றம்.—(3) **கோம்பினார்** - பெண் கள். **வேனற்கோமகன்** - மன்மதன். **நம்பினார்** - அவனை நம்பினவரான தேவர் கள். **கோல நீர்மை** - காணலாகா வகையதோர் நடலை - உருவங்காண முடி யாதபடி எரித்த துன்பம். **வெம்பினார்** - பகைவர்.—(4) **மறி** - மான். **செறிபட** - நிறைந்து பொருந்த. **பொறி** - பாம்பின் படம்.—(5) **நரி......இழந்தது** - இஃது ஒரு பழமொழி. ஒரு நரி தசைத்துண்டத்தை வாயிற் கௌவிக்கொண்டு ஆற் றைக் கடந்தபோது, ஆற்றினுள் பிறழ்ந்த வரால்மீனைக் கண்டு, அதனைக் கௌவச் சென்றதனால் வாயிலிருந்த தசைத் துண்டத்தை யிழந்ததுபோல வேறொன்றிற் பற்றும் ஆசையினால் முன்கிடைத்த பற்றினை இழத்தல். **மால்கொள்...செய்வார்** - வேறொரு பற்றினைப் பற்றும் ஆசை கொடுத்து, (முன் மயக்கத்தாற் பற்றியதொரு பற்றினை) விடும்படி செய்பவர்.—(6) **புள்** - கழுகு முதலியன. **அலைத்து உண்ட ஓடு** - கொத்தி நிணம் தின்று கழித்த மண்டை ஓடு. **பலாசம்...சுடலை** - பலாசங் கொம்பின் எரிந்த துண்டங்கள் கிடைக்கும் மயானம். **துள்ளலை ஏற்றுப் பாகன்** - துள்ளும் இடப ஏற்றினை ஊர்பவன். **அள்ளல்** - சேறு; பிறவிச் சேறு. **வெண்ணீ றணிந்தவர்** - என்னை ஆளும் வீரட்டனாரே என்று முடிக்க.—(7) **கூறிட்ட** - கூறினர் சொற்பின்வருநிலை. **கூறு** - பாகம். **கூறுதல்** - சொல்லுதல். **ஆறு** - அங்கம். **நான்கு** - வேதம். **கீறு இட்ட** - கீற்றுப்போன்ற. **ஆறிட்டு முடிப்பர்** - கங்கையாற் றினை உள்வைத்துச் சடையினை முடித்துக் கட்டுவர்.—(9) **நாணிலாரைவர்** - ஐம்பொறிகள் தீமைசெய்யக் கூசாமையின் நாணிலார் என்றார். இப்பாட்டு இறைவன் உயிர்களுடன் பிரியாது உடனிருக்கும் தன்மை, (ஆயினும்) காணலாகாத் தன்மை, உயிர்களுக்குத் தனுவைக் கொடுத்து, வினைகளை நுகரச்செய்து கழிப்பிக்கும் அருட் டன்மை, முதலிய இறைவனது உபகாரமும் இலக்கணமும் கூறிற்று.—(10) **ஆர்த்த வாயினால்** அன்றே அலறும்படி செய்தனர். இப்பதிகத்தில் **கெடிலவேலி** - பழன **வேலி** - **வேலி** - சூழவுள்ளது என்ற பொருளில் வந்தது.

VIII திருச்சிற்றம்பலம் திருநேரிசை

முன்பெலா மிளைய கால மூர்த்தியை நினையா தோடிக்
கண்கண விருமி நாளுங் கருத்தழிந் தருத்த மின்றிப்

பின்பக லுணங்க லட்டும் பேதைமார் போன்றே னுள்ள
மன்பனாய் வாழ மாட்டே னதிகைவீ ரட்ட னாரே. 1

திருச்சிற்றம்பலம்

முன்பெலா மிளைய காலம்...கருத்தழிந்து - இது நாயனார் சமணத்தினின்றும் சைவம் புகுந்தபோது வயது முதிர்ந்திருந்த நிலையைக் குறிப்பாலுணர்த்திற்று. "பின்பக லுணங் கலட்டும் பேதைமார்" போன்றேன் - பழமொழி. பசித்துக் கழிந்த முன்பகலெல்லாம் வீண் பேச்சிற் போக்கி மாலையில் அடிசில் சமைக்கும் பேதையர். உணங்கல் - சோறு.—(2) பெருங்கடல் - வரையுச்சி - தாழ்வும் உயர்வும் குறித்தன. அனைத்தும் - தாழ்வும் உயர்வும் - (துன்ப இன்பங்கள்) ஆகிய உலக நுகர்ச்சிகள்.—(3) ஏதம் - குற்றம். ஆதன் - அறிவில்லாதவன். பரிசிலேன் - பரிசு - தன்மை.—(9) மந்திரம் - மலை. சிந்திரம் ஆக - நன்மையாக. சிந்துரம் - சிவப்பு என்று கொண்டு கொழுந்தோடு கூட்டி உரைப்பாருமுண்டு. கந்திரம் - இசை.—(10) மைஞ்ஞலம் - மெய்ஞ்ஞரம்பு - கைஞ்ஞரம்பு - நகரம் ஞகரமாக வந்தது எழுத்துப்போலி. எழவிக்கொண்டு - வீக்கி. கின்னரம் - கீதம். சாமகானம்.

IX திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

மாசிலொள் வாள்போன் மறியு மணிநீர்த் திரைத்தொகுதி
யூசலை யாடியங் கொண்சிறை யன்ன முறங்கலுற்முற்
பாசறை நீலம் பருகிய வண்டுபண் பாடல்கண்டு
வீசுங் கெடில வடகரைத் தேயெந்தை வீரட்டமே. 1

திருச்சிற்றம்பலம்

முதல் மூன்று பாசுரங்கள் எந்தையார் இருக்கும் திருவீரட்டம் என்ற கோயில் கெடில வடகரையில் உள்ளது என்று கெடிலத்தின் செழும்புனற் சிறப்புடன் கூறுவன. எந்தை - வீரட்டம் - கெடில வடகரைத்தே என்க. கரைந்து - கரையில் உள்ளது. ஏகாரங்கள் தேற்றம்—(4) யானுடைச் சில்குறை வேண்டுகின்றது ஒன்றுளது - அஃது திங்கட்குழவி(யை) எப்போதும் குறிக்கொண்மின் என்பது. குறை - விண்ணப்பம்; திங்கட்குழவியைப்போல வந்தடைந்தாரை எப்போதும் காத்தளிக்குதிர் என்பது குறிப்பு.—(5) பாவவேதனை-நிற்பித்திடுகின்றதால் என்று கூட்டுக. ஆர் அட்டதேனும்- இன்னார் என்று அறியப்படாத இழிந்தவரால் சமைக்கப்பட்ட சோறாயினும். வேரட்ட - நிலையாக. வேர் - வியர்வு எனக்கொண்டு வியர்வு சொரிய என்றலுமாம். நிற்பித்திடுகின்றது - நிற்கும்படி செய்கின்றது. இறைவனை எண்ணுதாரே பிச்சையேற் றுண்டுழல்வர் என்பது. "சிதவல்சுற்றிக் கானகந் தேயத் திரிந்திரப் போரும்... அல்லாப் படிறருமே" என்றது (பொன்வண் - அந் - 12)காண்க.—(6) அடைந்தார்... நாமங்களே - நடலை - துன்பம். அவர் நாமங்கள் துன்பம் போக்கும் துணையாவன. நாமம் - ஐந்தெழுத்து. நடலைக்கு நற்றுணை - நோய்க்கு மருந்து என்பது போல நான்காம் வேற்றுமை பகைப்பொருளில் வந்தது.—(10) காளங்கடந்தது - விடத்தை வென்றது. மாதிற்கு நன்கிசைந்த - வேடங்கள் என்று கூட்டுக.

X திருச்சிற்றம்பலம் அடையாளத் திருத்தாண்டகம்

சந்திரனை மாகங்கை திரையான் மோதச் சடாமகுடத் திருத்துமே; சாமவேதக்
கந்தருவம் விரும்புமே; கபால மேந்து கையனே; மெய்யனே; கனக மேனிப்
பந்தணவு மெல்விரலாள் பாக னாமே; பசுவேறு மே;பரம யோகி யாமே
யைந்தலைய மாசுணங்கொண் டரையார்க் கும்மே; யவனதி லதிகைவீ ரட்ட னாமே. 1

திருச்சிற்றம்பலம்

திருவடையாளங்களை ஒவ்வொன்ருக எடுத்துச் சொல்லி இவ்வடையாளங்களை உடையார் ஒருவராகில் அவர் திருவதிகை வீரட்டானேசுவரரேயாம் என்று கூறுவது இப்பதிகப் பாட்டுத்தோறும் காணும் கருத்து.—(1) கந்தருவம் - கானம்.—(3) முண்டம்-திரிபுண்டரம்-மூன்று கீற்ருக அணிந்த நீறு. பிண்டத்தின்......பேற்றியார் - பிண்டம் - உலகத்தின் சிருட்டி - உலகத்தோற்றம். அதன் அமைப்பாகிய விதியினுக்குக் காரணர்.—(4) கண்டம்...ஆடரவனே - கழுத்தைச் சுற்றிப் பாம்பை யணிந்தவர்.—(6) சடைமேல் இழித்திடுமே-சடைமிசை வைத்து அங்கு நின்றும் சிறு பனிபோலாக உலகில் வரும்படி இறங்கச் செய்யும்.—(7) குழல் - கொக்கரை - தாளம் - மொந்தை-இவை பூதகணங்கள் முழக்கும் இயங்கள். கரணம் - கூத்து வகைகளுள் ஒன்று. "கரணமிட்டுத் தன்மைபேசி" (தேவா). கனவின்கண் - தலைவி தலைவனைக் கனவிற் கண்ட கூற்று.—(8) கோலாலம் - மிக்க ஓசை - கூக்குரல். "கோலாலமாகிக் குரைகடல்வா யன்றெழுந்த, வாலாலம்" (திருவா).—(9) தெய்வநாறும் வம்பு - இயற்கையாகவே தெய்வமணம் வீசும்; அண்டகோசம் - அண்டங்கள் எல்லாம் சேர்ந்த கூட்டம்.—(10) காமக்கோட்டி - காமக்கோட்டத்தினுள் விளங்குகின்ற அம்மை. காமாட்சியம்மையார். கோட்டம் - கோயில்.

XI திருச்சிற்றம்பலம் போற்றித் திருத்தாண்டகம்

எல்லாஞ் சிவனென்ன நின்ருய் போற்றி; யெரிசுடராய் நின்ற விறைவா போற்றி;
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி; கொல்லுங்கூற் ருென்றை யுதைத்தாய் போ[ற்றி;
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி; கற்ற ரிடும்பை களைவாய் போற்றி;
வில்லால் வியனரண மெய்தாய் போற்றி; வீரட்டங் காதல் விமலா போற்றி. 1

திருச்சிற்றம்பலம்

போற்றி - இகர வியங்கோள் விகுதிபெற்றுக் "காப்பாற்றுக" என்ற பொருளில் வந்ததென்பர் நச்சினுர்க்கினியர். வணக்கம் என்றலுமாம். போற்றி, போற்றி என்று துதிகள் பலவும் சொல்லுதலால் இப்பெயர் பெற்றது.—(1) எல்லாஞ் சிவன் என்ன நின்றய் - சிவனது எங்கும் நிறைந்த தன்மை (சர்வ வியாபகத்துவம்) துதிக்கப்பட்டது. நின்ற திருத்தாண்டகத் திருப்பதிகமும், திருவுருத்திரமும் பார்க்க. கோல்லார் - கொல்லும் தன்மை பொருந்திய. கோல் - முதனிலைத் தொழிற்பெயர்.—(4) தவநெறிகள் சாதித்து நிற்றலாவது தவநெறியைக் காட்டுவித்தும், அந்நெறி நின்ருேர்க்குத் தம்மையடையு நிலைகொடுத்தும் விளங்குதல். கூம்பி - மனம் ஒடுங்கி. குறிக்கொண்டிருக்கும் - பார்த்து அருளும்.—(6) பழையாற்றுப் பட்டீச் சுரத்தாய் - பழையாறு - பட்டீச்சுரமென்பன ஒன்றற்கொன்று தொடர்ந்தாற்போல் அணிமையில் உள்ள தலங்கள். திருஆன்பட்டி என்னும் திருப்பேரூர்ப் பட்டீச்சுரத்தினின்றும் வேறு பிரித்துணரவைத்ததுமாம். வீடுவார் வீடருள - விடுவார் என்றது எதுகை நோக்கி வீடுவார் என நின்றது. பிற பற்றுக்களைவிடுவார்க்கு. நான்காம் வேற்றுமையுருபு விரிக்க.—(8) தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி - திருவாசகம் (போற்றி - 131) பார்க்க. தொழுதகையினையுடையாரது என்றும், தொழும் தகைமையினுலே என்றும் உரைக்க நின்றது.—(10) தக்கணு - தக்கணம் - தென்றிசை. தெற்கு நோக்கி ஆடுபவன். தெற்கு நோக்கி வீற்றிருப்பவன். "தென்முகத்தின்முக மாயி ருந்தகொலு" (தாயுமானுர்). எக்கண்ணும் கண்ணிலேன் - எவ்வகையானும் வேறு பற்றுக்கோடு இல்லேன். கண் - களைகண். இப்பதிகத்துள் 82 போற்றி என்ற துதிகள் உள்ளன. திருக்கயிலைப் போற்றித் திருத்தாண்டகப் பதிகங்கள் மூன்றும் பார்க்க.

XII திருச்சிற்றம்பலம் திருவடித் திருத்தாண்டகம்

அரவணையான் சிந்தித் தரற்றும் மடி ; யருமறையான் சென்னிக் கணியா மடி ;
சரவணத்தான் கைதொழுது சாரும் மடி ; சார்ந்தார்கட் செல்லாஞ் சரணு மடி ;
பரவுவார் பாவம்* பறைக்கும் மடி ; பதினெண் கணங்களும் பாடும் மடி ;
விரவுநீர்த் தென்கெடில நாடன் னடி ; திருவீரட் டானத்தெந் செல்வன் னடி.

திருச்சிற்றம்பலம்

பறிக்கும்—என்பதும் பாடம்.

திருவடியின் தன்மைகளைப்பற்றித் துதிக்கின்றமையால் இப்பெயரால் வழங்கப் படும். அடி என்பது திருவருணிறைவு ; உபசாரம்.—(1) அரவணையான் - திருமால். சிந்தித்தரற்றும் "நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தான்" அருமறையான் - பிரம தேவன். சரவணத்தான் - முருகக்கடவுள் ; கைதொழுது சாரும்-திருச்சேய்ஞலூரிலும் திருச்செந்திலிலும் முருகப்பெருமான் சிவபூசை செய்த வரலாற்றைக் கந்த புராணம் பேசும்.—(2) துறைந்தடைந்தார் - வணங்கி விண்ணப்பிப்பவர்.—(3) வைதெழுவார் காமம் போய் போகா - வைதெழுதல் - குற்றங்கள்போலக் கூறிப் போற்றும் வகை. "குணங்கள் சொல்லியுங் குற்றங்கள் பேசியும், வணங்கி வாழ்த்துவ ரன்புடை, யாரெலாம்" (கடம்பூர் - 6) என்ற குறுந்தொகையும், "மழைதரு கண்டன் குணமிலி மானிடன் றேய்மதியன், பழைதரு மாபர னென்றென் றறைவன் பழிப்பினையே", "பிச்சனென் றேசுவனே" (நீத் - விண் - 46 - 49) என்ற திருவாசகமும் முதலி யவை காண்க. காமம் - விரும்பியவை. போய் போகாமையாவது விரும்பியவாறே பெறுதல். இனி, இவ்வாறன்றி, வைதெழுவார் - என்றதற்கு, "அல்லார் புறங்கூற", "நிச்சம் மலர்தூற்ற", "வசவுணும்" என்றபடி சமணர் முதலாகப் பழிக்கின்ற பிறர் என்று பொருள்கொண்டு, காமம் போய்போகா என்றதற்கு, அவர்களது தீமை பொய்க்காது அவர்களையே சார என்று உரைப்பினுமமையும். கணக்கு வழக்கு-கணக் காலும் வழக்காலும் அளவுபடுதல். நாம் தொழுதேத்தி நெய் ஆட்டும் - என்க. ஊட்டறுத்து - அளவுகடந்து மேற்சென்று.—(4) பிழைத்தார் பிழைப்பறிய - பிழை செய்தவர்களுடைய பிழையை அறிய. (6) திருமகட்குச் செந்தாமரை-நிலையாகத் தங்கு மிடம். உருவிரண்டு மொன்றேடோன் றெவ்வா - பெண்ணுருவும் ஆணுருவும்.—(7) அரைமாத்திரையி லடங்குதல்-பிரணவத்தின் இறுதி மகரவொற்றாகிய அரைமாத்திரை ஒலியினுள் ஒடுங்குதல். அகல மளக்கிற்பா ரில்லா - (ஆயினும்) தன் அகலத்தை அளக்க வல்லவர்களில்லாத.

XIII திருச்சிற்றம்பலம் காப்புத்திருத்தாண்டகம்

செல்வப் புனற்கெடில வீரட் டமுஞ் சிற்றே மும்பெருந்தண் குற்று லமுந்
தில்லைச்சிற் றம்பலமுந் தென்கூ டலுந் தென்னானைக் காவுஞ் சிராப் பள்ளியு
நல்லூருந் தேவன் குடிமரு கலு நல்லவர்க டாமேத்து நாரை யூருங்
கல்லலகு நெடும்புருவக் கபால மேந்திக் கட்டங்கத் தோடுறைவார் காப்புக் களே. 1

திருச்சிற்றம்பலம்

இவை இவை இறைவனுடைய காப்புக்களே என்று பாசுரந்தோறும் முடி வடைவதால் இப்பெயர் பெற்றது. காப்பு - காவல் புரிவது - காவலுள் நிற்பது. ஆகுபெயராய்க் காக்கப்படும் தலம் குறித்தது. ஒவ்வொரு பாசுரமும் கெடிலவீரட்ட மும் இன்னும் சில தலங்களும் என்று தொடங்குதலால் இத்திருப்பதிகம் திருவதிகைத் தேவாரங்களுள் தொகுக்கப்பட்டது. செல்வப் புனல், சிறையார் புனல், தீர்த்தப் புனல், (தீர்த்தம் - தூய்மை) என்று பலவும் கெடிலத்தின் நீர்ச்சிறப்புப் பற்றிக் கூறுவ

துடன் அக்கெடிலத்தின் தொடர்பு பற்றியே வீரட்டத்தைக் கூறுவது காண்க.—(5) திரிபுராந்தகம் - ஒருதலம்.—(7) திருவேட்டி - திருவேட்டீசுரன்பேட்டை (சென்னை) என்பர்.—(10) அயோகந்தி - அயவந்தி ; திருச்சாத்தமங்கையின் திருக்கோயிலின் பெயர். ஆன்பட்டி - திருப்பேரூர் (கொங்கு நாடு); இப்பெயர் பழங் காலத்துக் கல்வெட்டுக்களிற் கண்டது. இப்பதிகம் பன்னிரண்டு திருப்பாட்டுக்கள் கொண்டது.

1410. (வி - ரை) புல்லறிவிற் சமணர். "புன்மையேபுரி" (1344), "புல்லறிவோர்" (1360). அறிவின் புன்மையாவது "நல்ல நினைப்பொழிய நாள்களி லாருயிரைக், கொல்ல நினைப்பதுவும் குற்ற"மற்றும் எண்ணுவதுமாம். புல்லறிவிற் பல்லவனும் என்று கூட்டியுரைப்பதுமொன்று. பல்லவனும் - உம்மை முன்னர்ப் பொல்லாங்கு புரிந்தோனாகிய அவனும் என இழிவு சிறப்புப் பற்றியது. சோழர்களுட் பல்லவர் மரபினர் அந்நாளில் சோழநாட்டை ஆண்டனர். "உரிமையாற் பல்லவர்க் குத் திறைகொடா மன்னவரை மறுக்கம் செய்யும்" (குறிஞ்சி - கோயில். 4) என்பது நம்பிகள் திருவாக்கு. இவர்கள் காடவர் எனவும் பெறுவர். மேல்வரும் பாட்டில் "காடவனும்" என்பதும் காண்க.

பழவினைப் பாசம் பறிய - சமணர் சொற்கேட்டு அரசன் அவஞ்செய்தமை அவனது பழவினைப் பாசத்தாலாகியது;இப்போது அது நீங்கும் காலம் வந்து நீங்கவே.

அல்லல் ஒழிந்து - அல்லல் - சமண் சார்பாலாகிய துன்பநிலை. பாசம் பறிந்து ஒழிந்ததாதலின் உண்மையுணர்ந்து துன்பத் தொடக்கினின்றும் நீங்கினான் என்க.

அங்கு - (பாடலிபுத்திர நகரிலிருந்து) திருவதிகையில்.

ஆண்ட அரசினைப் பணிந்து - அமணர் மொழிகேட்டு அறியாமையால் அவரிடத்து அபசாரம் செய்தமையாலே அக் குற்றத் தீர்வின் பொருட்டு அவரை வணங்கி மன்னிப்புக் கேட்டு.

வல் அமணர்தமை நீத்து - கடக்கக்கூடாத வலிய அமணரின் தொடக்கினையும் விட்டு - சமண சமயத்தையும் விட்டு.

மழவிடையோன் தாள் அடைதலாவது - சைவ சமயம் புகுந்து சிவனுக்காளாதல். சிவநெறி யடைவதற்குக் குரு வழி காட்டவேண்டியிருத்தலின் ஆண்ட வரசினைப் பணிந்து அவர் வழிப்படுத்துதலால் விடையோன் றாள் அடைந்தார் என்பதாம்.

*1411. வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனுந் திருவதிகை நகரின்கட் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்திலமண் பள்ளியொடு பாழிகளுங்
கூடவிடித் துக்கொணர்ந்து குணபரவீச் சரமெடுத்தான். ௧௪௬

(இ - ள்) வெளிப்படை. முத்திநெறியினை அறியாத சமணர்களுடைய மொழிகள் பொய் என்று கண்டு மெய்யினை உணர்ந்த காடவ அரசனும், பாடலிபுத்திரத்தில் இருந்த சமணர் பள்ளிகளையும் பாழிகளையும் ஒருங்கே இடித்துக்கொண்டு வந்து, திருவதிகை நகரில், நுதற்கண்ணுடைய சிவபெருமானுக்குக், குணபரவீச்சரம் என்ற திருக்கோயிலைக் கட்டினான்.

(வி - ரை) வீடறியா - முத்தி நெறியினை அறியாத. பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருளினையுடைய. வீடு - வீடு அடையும் நெறியைக்குறித்தது. வீடு அறியாமையின் பிறந்திறந்துழல்பவர் என்பதாம். வீடு - தமது சமயக் கொள்கைகள் வீடுகின்ற - அழிகின்ற - தன்மையை அறியாத என்ற குறிப்புமாம். வீடு - அழியும்

*தன்மை என்ற பொருள் தருவதனை "வீடுபே றின்மையின் வீடெளிதாமே" என்ற பிள்ளையார் திருவாக்காலும் அறிக.*

**பொய் என்று மெய்யுணர்ந்த** - *பொய் என்ற உண்மையை உணர்ந்த என்றுரைப்பினுமாம். சமணர் மொழிகள் மெய்யென்றே இதுவரை உணர்ந்து அவர்க்காகப் பொல்லாங்கு புரிந்தனன்; இப்போது அவை பொய் என்ற உண்மையை நாயனார்பால் நான்கு நிகழ்ச்சிகளாலும் அறிந்துகொண்டான் என்க.* **உணர்ந்த** *என்ற குறிப்பும் அது.*

**காடவன்** - *சோழர்களது பல்லவர் மரபு காடவர் எனவும்படும். ஐயடிகள் காடவர்கோன் என்றது காண்க.*

**கண்ணுதற்குக் - குணபர வீச்சரம் - எடுத்தான்** - *என்க.* **குணபரவீச்சரம்** - *கோயிலின் பெயர். கோயில் அதனை எடுப்பித்த அரசன் பெயராலும் வழங்கப்படும். இராசராசேச்சரம் - கங்கை கொண்ட சோளேச்சரம் முதலியவை காண்க. இந்தக் காடவ அரசன் குணபரன் என்பவன். மகேந்திரவர்மன் என்ற பெயரும் கல்வெட்டுக்களிற் காணப்படும். குகைக்கோயில்கள் (கல்விற் குடைந்தெடுக்கப்பட்டவை) பல இவன் எடுப்பித்தான் என்பது மறியப்படும். திருச்சிராப்பள்ளிக் குகையில் காணப்படும் இவன் காலத்து வடமொழிக் கல்வெட்டில் இவன் சமண சமயத்திலிருந்து சைவம் புகுந்த செயல் கூறப்பட்டுள்ளது. குணதரன் என்றும் வழங்குவர்.*

**அமண் பள்ளியோடு பாழிகளும் - பாழி** - *கோயில்;* **பள்ளி** - *அமணகுருமார் தங்குமிடம். "அரதைப் பெரும்பாழி" முதலிய வழக்கும் காண்க.* **கூட** - *ஒருசேர.* **பாழிகளும்கூட** *என்று அருகர் கோயிலையும்கூட என்று கூட்டி உரைத்தலுமாம்.*

**இடித்துக் கொணர்ந்து - எடுத்தான்.** *வேறாக ஒரு கோயில் எடுக்க வல்லவனாயினும், இவ்வாறு பாழி பள்ளிகளை இடித்துக் கோயில் எடுத்த தென்னையோவெனின்? பொய்யினால் உலகை மயக்கும் சாதனங்களை அழித்தல் கருதியும், அவற்றையே புனித சாதனங்களாக மாற்றக்கூடிய வகை கருதியும், இவ்வாறு செய்தான் என்க. அன்றியும் இச்செயல் அவன் சமணத் தொடர்பினின்றும் வீடுபெற்றுச் சைவனாகிய செயலையும், அதில், பின் அவன் உறைத்து நின்றதனையும் விளக்குதலும் காண்க. திருப்பேரூரில் (கொங்குநாடு) மாறன்சடையன் (எட்டாவது நூற்றாண்டு) திருமாலுக்குக் குன்றமன்னதோர் கோயில் ஆக்கினான்; அது பின்னாளில் பழுதுபட்டு வீழ்ந்தது; பதினைந்தாம் நூற்றாண்டில் அந்தக் கோயிலின் கற்களை எடுத்து "திருக்கணம்பி மாதையன்" என்பான் இப்போது திருஆன்பட்டியுடையார் கோயிலுக்கு முன்புறம் உள்ள திருக்குளத்துப்படிகளை அமைத்தான் என்ற வரலாறும், அவ்வாறுள்ள பிறவும் இங்குச் சிந்திக்கத்தக்கன.*

**எடுத்தான்** - *அமைத்தான் - கட்டுவித்தான். கோயில் எடுப்பித்தல் - எடுத்தல் என்பது முன்னாள் வழக்கு. இராசராசச்சோழரது கல்வெட்டுக்கள் காண்க.* 146

1412. *இந்நாளிற் றிருப்பணிகள் செய்கின்ற* வின்றமிழ்க்கு
மன்னனை வாகீசத் திருமுனியு *மதிச்சடைமேற்*
*பன்னாக மணிந்தவர்தம் பதிபலவுஞ் சென்றிறைஞ்சிச்*
*சொன்மாலைத் தமிழ்புனைந்து தொண்டுசெய்வான் றொடர்ந்தெழுவார்;*

1413. திருவதிகைப் பதிமருங்கு திருவெண்ணெய் நல்லூரும்
*அருளாதிரு* வாமாத்தூர் திருக்கோவ லூர்முதலா
*மருவுதிருப் பதிபிறவும் வணங்கிவளத் தமிழ்பாடிப்*
*பெருகுகவிருப் புப* ன்விடையார் மகிழ்பெண்ணை **கடமணைந்தார்.**

1412. (இ - ள்) வெளிப்படை. இவ்வாறுகிய நாளிலே, திருப்பணிகள் செய்கின்ற, இனிய தமிழினுக்கு அரசராகிய வாகீசத் திருமுனிவரும் பிறையைச் சூடிய சடையின்மேல் பாம்பினை அணிந்த சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலங்கள் பலவற்றையும் போய் வணங்கி, அவரது நாமஞ் சொல்லித் துதிக்கும் திருப்பதிகங்களைப் பாடித், தொண்டு செய்யும் பொருட்டுத் தொடர்ந்து எழுவாராகி, ௧௪௭

1413. (இ - ள்) வெளிப்படை. திருவதிகைப் பதியின் பக்கத்தில் உள்ள திருவெண்ணெய் நல்லூரும், அருள் தருகின்ற திருவாமாத்தூரும், திருக்கோவலூரும் முதலாகப் பொருந்திய திருத்தலங்கள் பிறவற்றையும் வணங்கி, வளப்பமுடைய தமிழ்ப் பதிகங்களைப் பாடி, இடபத்தையுடைய சிவபெருமான் மகிழும் திருப்பெண்ணுகடத்தைப் பெருகும் விருப்பத்துடன், அணைந்தனர். ௧௪௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1412. (வி - ரை) இந்நாளில் - இவ்வாறு குணபரன் வந்து சிவபெருமானை அடைந்து குணபரவீச்சர மெடுத்த செய்தி நிகழ்ந்த இக்காலத்தில்.

**திருப்பணிகள்...முனியும்**-திருப்பணிகள்-மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் செய்தனர். இவை குறிக்கப் பன்மையாற் கூறினூர். **இன் தமிழ்க்கு மன்**-இனிய தமிழுக்கு அரசு. இனிமையாவது ஒப்பற்ற - துன்பம் சிறிதும் கலவாத - வீட்டின்பம் பெற வழிகாட்டுவது. **வாகீசத் திருமுனி** - முனி என்றது அவரது முழுத்துறவுநிலை பற்றியது. வாகீசர் என்ற வடமொழி வழக்கினை இன் தமிழ்க்குமன் எனத் தமிழ் மொழியால் விளக்கினூராதலின் கூறியது கூறலன்மையுணர்க. "அது தான் ஞான திரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்" என்ற (சிவஞானபோதம் - 4 சூத். 2. அதி) விடத்து மலத்தின திலக்கணம் வடமொழி வழக்குப் பற்றிக் கூறுவார் ஞான திரோதகமா யெனவும், அதனைத் தமிழ் மொழியான் விளக்குவார் மறைத்துக்கொடு நிற்றலானெனவும் கூறினூராகலான் அது கூறியது கூறலன்மையுணர்க" என்று எமது மாதவச் சிவஞான முனிவர் உரைத்தது காண்க.

**மதிச்சடைமேல் பன்னூகம் அணிந்தவர்** - "பாம்போடு திங்கள் பகைதீர்த்தாண்டாய்" (திருப்புகலூர் - தாண்டகம்) முதலிய திருவாக்குக்கள் காண்க. **பன்னூகம்** - பன்னகம் என்பது பன்னூகம் என வந்தது. பாதங்களால் நடக்காத உயிர் என்பது பொருள். பல் - நாகம் என்று பிரித்துப் பல பாம்புகளை என்றலுமாம்.

**பதிபலவும் சென்று** - இவற்றை மேல்வரும் பாட்டிற் கூறுவார்.

**நாமம் சொல் தமிழ்** - என்க. சிவன் பெயர்களையே சிந்தித்துப் பலதிறத்தாலும் போற்றும் தமிழ்ப் பதிகங்கள். நாமம் - புகழ் - பெருமை என்றலுமாம்.

**தொண்டு** - இங்குக் கைத்தொண்டாகிய உழவாரப் பணியும் தியானமுமாம்.

**தொடர்ந்து** - தொண்டு செய்யாத தீய நாட்கள் இடையிட்டுக் கழியாமல் ஒன்றன்பின் ஒன்றாக நன்னூட்களே தொடரும்படி. "துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே" (நனிபள்ளி - நேரிசை) என்பது நாயனூரது கருத்து. "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" "சாராதே சாலநாட் போக்கி னேனே" என்ற கருத்துக்களையும் கருதுக.

**எழுவார்** - எழுவாராகி ; முற்றெச்சம். **எழுவார் - அணைந்தார்** என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

**பதிபலவும் சென்று இறைஞ்சித்......தொடர்ந்து எழுதல்** சிவஞானபோதம் பன்னிரண்டாஞ் சூத்திரத்துள் விளக்கப்பட்டது. நாயனூர் ஞானச்சரியையை விளக்கு

வந்த ஆசாரியராதலின் அணைந்தோர் தன்மையைத் தமது வாழ்க்கையில் நடந்து காட்டினர் என்க. "ஆலயந் தானும் அரனெனத் தொழுமே" என்பது சூத்திரம். நாயனார் பல தலங்களையும் சென்று வணங்கியதும் பதிகம் பாடியதும் பணி செய்ததும் பிறவும் இக்கருத்தே பற்றியன. 147

1413. (வி - ரை) திருவெண்ணெய்நல்லூர் - தலவிசேடம். 220-ம் பாட்டின் கீழ் (பக்கம் - உ௫௫) உரைக்கப்பட்டது பார்க்க. நாயனார் பாடியருளிய பதிகம் சிதலரிக்கப்பட்டு மறைந்தது போலும்!

அருளு திரு ஆமாத்தூர்-தலவிசேடம்:—பசுக்களுக்குத் தாயாக இறைவன் அருளும் தலம் என்பது.' பசுக்கள் - உயிர்வருக்கங்கள். கோமாதுருபுரம் என்பது வடமொழிப் பெயர். தசரத இராமன் பூசித்த செய்தி, நாயனாரருளிய திருக்குறுந்தொகையுள் "இராமனும் வழிபாடுசெ யீசன்" என்று பேசப்பட்டது. பிருங்கி முனிவர் பூசித்துச் சாபம் நீங்கின தலம் என்பது வரலாறு. பிருங்கி முனிவர் சத்தியைப் பூசிப்பதில்லை என்ற நியதி பூண்டார். "சத்தி யருடரிற் சத்த னருளுண்டாம்" (திருமூலர்) என்றபடி சத்தியும் சிவமும் வேறல்லர்; குணமும் குணியுமாகிப் பொருள் ஒன்றேயாதலின். அம்மையார் ஒரு பாகம் பெற்றபோதும் வண்டு உருவெடுத்துத் துளைத்துச் சிவனையே பிருங்கி வழிபட்டனர்; அதனால் சத்தியருளின்றிச் சத்தி கெட்டனராதலின் நடக்கும் வலிமையின்றி நின்றபோது சிவத்தினருளால் மூன்றாவது கால் பெற்றனர்; சத்தி சாபத்தால் இத்தலத்தில் வன்னிமர உருவெடுத்தனர்; பின்னர் அம்மையாரை வழிபட்டு அவரருளாற் சாப நீங்கப்பெற்றனர்; அதற்குச் சான்றாக இங்கு அம்மையாரது கோயிலில் நிருதி மூலையில் வன்னிமரம் தலமரமாக உள்ளது; என்பன தல வரலாறு. சுவாமி கோயில் கிழக்குப் பார்த்தும், எதிரில் அம்மையார் கோயில் மேற்குப் பார்த்தும், வெவ்வேறாக உள்ளதொரு தலச் சிறப்பாகும். சுவாமி - அழகியநாதர்; அம்மையார் - அழகியநாயகி. சுவாமி பெயரை "அழகன்" என்று திருக்குறுந்தொகையிலும், "அழகியரே" என்று திருத்தாண்டகத்திலும் நாயனார் அருமைபெறப் போற்றுதல் காண்க. தீர்த்தம் - பம்பையாறு. பதிகம் 5.

இத்தலம் விழுப்புரம் என்ற புகைவண்டி நிலையத்திலிருந்து வடமேற்கே மட்சாலைவழி மூன்று நாழிகையளவில் அடையத்தக்கது.

இத்தலத்திற்கு நாயனார் அருளியன இரண்டு பதிகங்கள் கிடைத்துள்ளன.

I திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

மாமாத் தாகிய மாலயன் மால்கொடு, தாமாத் தேடியுங் காண்கிலர் தாண்முடி;
'யாமாத் தூர ரனேயரு ளா'யென்றென், றேமாப் பெய்திக்கண் டாரிறை யானையே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—அஞ்ஞானத்தால் தாமாகத்தேடி யறியப்படாத சிவனை "அருளாய்" என்று வணங்கி யயன்மாலுங் கண்டனர். அவனைச் சிந்தியாதவர் தீவினையாளரேயாம்!. நான் உள்ளே நினைந்தேன். நினைதலும் வஞ்ச வாறுகள் வற்றின; பத்தி வெள்ளம் பரந்தது; அவன் எமையாளுடை யீசன்; கண்ணிற் பாவையன்னான்; ஆனஞ்சாடுபவன். அவனிருக்குமிடம் ஆமாத்தூர். அவனுக்கு என் உள்ளம் இடமாகக்கொண்டு இன்புற்றிருப்பேன். அரனே என்றழைத்தலும் தேமாங்கனி போலத் தித்திக்கும். நீவிரும் நாளும் நினைமின்கள் என்று உலகரை வழிப்படுத்தியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு.—(1) மாமாத்து; மா - பெரிய; மாத்து - அறியாமை. மாத்து - மகத் - பெரியது என்று கொண்டு பெருமை கொண்டவர்களாகிய என்ற

லும், மாத்து - அறியாமை என்றலுமாம். தாமா - நான் அறிவேன் என்ற தமது ஆணவத்தால். ஏமாப்பு - அரண். இன்பமென்றலுமாம்.—(2) சந்தி - மூன்று சந்தி காலம். சமாதி - அழுந்தியறிதல். அந்தியான் - அழகிய தீயின் உருவுடையான். அழகன் - தலத்துச் சுவாமிபெயர். சிந்தியாதவர் தீவினையாளர் - "சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே" (மிழலை - தாண்).—(3) காமர்த்தம் - காமம் - ஆத்தம். காமம் - தீய இச்சைகள். ஆத்தம் - ஆப்தம். உற்றது. நன்மை தருவது. போமாற்றை என்பது எனுகை நோக்கிப் போமாத்தை என நின்றது.—(4) வஞ்ச ஆறுகள் - வஞ்சித்து உயிரை ஈர்க்கும் புலன்களாகிய வழிகள். ஆறு - வெள்ளம் என்றதும் குறிப்பு.—(5) இராமனும் வழிபாடுசெய் ஈசன் - இராமன் வழிபட்டது தலவரலாறு.—(6) உண் முயறல் - மனத்துள் அழுந்த வைத்துக் கூடுதல்.—(7) குழற்கோலச் சடை-குழல் - அம்மை பாகத்து முடி. குழல் கோலமாகக் கலந்தசடை. குழலும் சடையும் என்றலுமாம். ஓர் ஆற்றினன் - சடையில் கங்கையாற்றை வைத்தவன். "சலந்தாழ் சடைவலந் தண்ணங் குழலிடஞ் சங்கரற்கே" (பொன். அந். 65).—(8) கண்ணிற் பாவையன்னான் - கண்ணின் மணியினுள் பாவை போன்றவன். "கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்" (தாண்). "கருமணியிற் பாவாய்நீ" (குறள்).—(9) மீண்டரோடு எனை வேறுபடுத்து - ஓடு - நீக்கப்பொருளில் ஐந்தனுருபின் பொருளில் வந்தது. நாயனாரது சரிதக் குறிப்பு. உயக்கொண்ட - உய்யும்படி ஆட்கொண்டருளிய. வீரட்டம் - திரு அதிகை.—(10) விடலை - மூர்க்கன். இடமதாகக்கோண்டு - கோண்டு - கொடுத்து - வைத்து.

II　*திருச்சிற்றம்பலம்*　　திருத்தாண்டகம்

*வண்ணங்க டாம்பாடி வந்து நின்று வலிசெய்து வளைகவர்ந்தார் வகையா னம்மைக்*
*கண்ணம்பா னின்றெய்து கனலைப் பேசிக் கடியதோர் விடையேறிக் காபா லியார் [ன்ற*
*சுண்ணங்க டாங்கொண்டு துதையப் பூசித் தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோ*
*வண்ணலார் போகின்றார் வந்து காணீர்! அழகியரே யாமாத்து ரைய னாரே!*　　1

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—அழகியராகிய இறைவனது காட்சியில் ஈடுபட்ட தலைவிகூற்றாக அகப்பொருட் டுறையில் அமைந்தது இத்திருப்பதிகம். கனவிடைத் தலைவனைக் கண்டு மனங்கொடுத்து மால்கொண்ட தலைவி, கனவிழந் துரைத்தல் இத்துறையின் கருத்து. "இடுமின் பிச்சை!" என்றாருக் கெதிரெழுந்தேன் எங்கும் காணேன்; பட்டிமையும் படிறுமே பேசுகின்றார்; பார்ப்பாரைப் பரிசழிப்பார் போல்கின்றார் தாம்; அல்லலே செய்தடிகள் போகின்றார்தா மழகியரே!; அண்ணலார் போகின்றார் வந்து காணீர்! - என்பன காண்க. சிவன்பால் ஈடுபட்டுப் பசுத் தன்மையிழந்த உயிரின் உயர் நிலை குறித்தது.

பதிகப் பாட்டுக் குறிப்பு.—(1) வண்ணம் - ஒரு பாவின்கண் நிகழும் ஓசை விகற்பம். (தொல் - பொரு. 313). சந்தப்பாட்டு—இசைப் பாட்டு என்றலுமாம். வலிசெய்து வளைகவர்தல் - மால் செய்தலால் உடல் இளைக்கும் - வளை கழலும் என்பது. "இன வெள்வளை சோரவெ னுள்ளங் கவர் கள்வன்" (பிள்ளையார் - பிரமபுரம்-நட்டபாடை 3). கனலப் பேசி-இச்சைநோய் மீதூரும்படி பேசுதல். "படிறே பேசி" (6) பட்டிமையும் படிறுமே பேசுகின்றார். (3). "உள்வெந் நோய் செய்தார்" (தேவா.) கடியது - கடிய நடையுடையது. "வேண்டு நடைநடக்கும் வெள்ளேறு" (திருவெண்காடு - தாண் - 1). சுண்ணங்கள்-திருவெண்ணீறும் சாந்தமும் குறித்தது

அழகியரே - பெயரால் மட்டுமன்றிப் பண்பாலும் அழகியர் என்பது குறிப்பு.—(2) வீணையேந்தி - "மிக நல்ல வீணை தடவி" (பிள்ளையார் - கோளறு பதிகம் 1). "கங்காளராய் வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" (பொது - விருத்) என்றபடி சங்காரத்தின்பின் புனருற்பவம் நிகழ்த்துதற்கு நாத தத்துவத்தை யுழக்குவது வீணை வாசித்தல் எனப்படுமென்ப. இடங்கை வீணையேந்தி (6) எனப் பின்னரும் இப்பதிகத்துக் கூறுதல் காண்க. கந்தாரம் தாம் முரல - வீணை ஒலித்தலை முரலுதல் என்பது மரபு. பேச்சுப்போன்ற தென்பது. காந்தார மென்பது எதுகை நோக்கிக் கந்தார மென நின்றது. காந்தாரம் ஒருபண் - "வேதத் தொலிகொண்டு வீணை கேட்பர்" (வெண்காடு - தாண் - ). வீணை ஒலி உள்ளங்கவர்ந்து இன்பஞ் செய்தல் குறிப்பு. நொந்தார் போல் - விளக்கமாக உள்ள வெம்மை ஊரறியாது கேட்கின்றாய் என்று வருந்தினார் போன்று. "என்னை ஒருவரு மறியீ ராகில்" (211) என்று திருவெண்ணெய்நல்லூர்ச் சபையில் அந்தணரைக் கிழவேதியராய் வந்த இறைவர் கேட்ட குறிப்பு. தாமரைமேல் வண்டியாழ் செய் - நாம் வீணை வாசிப்பதன்றி நம்மூரில் வண்டுகளும் யாழ்முரலும் என்பது குறிப்பு. —(3) கட்டங்கம் - மழு. இட்டங்கள் - விரும்பும் சொல். விருப்பமுண்டாக்கும் மொழிகள். ஆகுபெயர். பட்டிமை - வஞ்சனை. "இகழும் பரமு மில்லை யென்று, பயமின் றெழுகிப் பட்டிமை பயிற்றி" (திருவிடை - மும் - கோ - 7). பார்ப்பாரைப் பரிசு அழிந்தல். தம்மை அகத்து வைப்பாரது பசுத்தன்மை கெடுத்தல் என்பது குறிப்பு. பார்த்தால் பெண்மை யழியும் என்பது. "பற்றி நோக்கிப் பாலைப் பரிசழியப் பேசுகின்றார்" (வெண்காடு - தாண். 7). விள்ளார் - பலி கொள்ளாமைக்குக் காரணம் சொல்லார். வேறொன்றாயினும் சொல்லார்.—(4) பசைந்த - அன்புகொண்ட பிசைந்த - வடித்தெடுத்த. பிசைவிக்கும் எனப்பிறவினையாக்கி அன்பர் மனத்தை அழகிறுத் கொள்ளை கொண்டு கனிவிக்கும் என்றலுமாம். "கல்லைப் பிசைந்து கனியாக்கி". இப்பொருட்கு அன்பர் மனத்தை எனச் செயப்படுபொருள் வருவிக்க.—(5) உருள் - சக்கரம். உருளும் தன்மை என்றலுமாம். "சென்றுருளுங் கதிரிரண்டும்" (தாண்டகம்). குறைவில்லை ஆயினும் ஊர்தி வெள்ளேறு. பின்னர் 8-வது திருப்பாட்டும் காண்க. "கடகரியும் பரிமாவும்" என்ற திருவாசகக் கருத்துக் கருதுக. பொருளுடையரல்லர் இலருமல்லர் - பொருள் - உடைமை. பிச்சைக்கு வருதலால் பொருளிலரென்றும், உலகம் எல்லாமுடையராதலால் இலருமல்லர் என்றும் உரைக்கநின்றார். அவர் பலிக்கு வந்தது ஒரு பொருட்படுத்தியதுமன்று; பொருளற்றதுமன்று என்றலுமாம்.—(7) கபாலம் - பலிப்பாத்திரம்.—(8) கண்காட்டி - "நெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்ப தென்னே" (திருவிருத்தம்) என்றபடி அருட்பார்வை செய்து. நிறை - பெண்மை நலம். பசுத்துவம். என்றும்......இடர் செய்கின்றீர் - இவ்வாறு செய்தல் உமது நித்தமாகிய தொழில்.—(9) கல்லலகு - இயங்களுள் ஒருவகை. எதிரேழுந்தேன் எங்கும் காணேன் - கனவிழந்த நிலை.—(10) மழுங்கலா நீறு - என்றும் அழியாத திருநீறு. நீறு மழுங்கலா மார்பர் என்று கூட்டி நீறு நீங்காத மார்புடையவர் என்றலுமாம். அழுங்கினர் - துன்பப்பட்டுத் தம்மை யடைந்தவர்.

திருக்கோவலூர் - வீரட்டங்களுள் ஒன்று. 467-ன் கீழ் உரைத்தவையும், மெய்ப்பொருணாயனார் புராணத்திறுதியில் தலவிசேடம் (பக்கம் சுOக) உரைத்தவையும் பார்க்க. மலையமானாட்டிற் பெண்ணையாற்றின் கரையில் திருக்கோவலூரைத் தலைநகராகக்கொண்டு மலையமான் திருமுடிக்காரி என்ற அரசன் அரசாண்டனன் என்பதும், அவனே கபிலரால் பாடப்பட்டானும் கடையெழு வள்ளல்களி லொருவனும் [illegible] பழைய வரலாற்றிலையியப்படும்.

இங்கு நாயனர் பாடியருளிய "வளத்தமிழ்"களுள் ஒரு பதிகமே நமக்குக் கிடைத்துள்ளது.

திருச்சிற்றம்பலம்  திருநேரிசை

செத்தையேன் சிதம்ப நாயேன் செடியனே னழுக்குப் பாயும்
பொத்தையேன் போற்றி நாளும் புகலிட மறிய மாட்டேன்
னெத்தைநான் பற்றி நிற்கே? னிருளற நோக்க மாட்டாக்
கொத்தையேன் செய்வ தென்னே? கோவல் வீரட்ட னீரே.  1

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—இப்பிறவியின் தீமையை உணராது மயங்கியும், புலன்களுக் கேவல் செய்தும், உலக இன்பங்களுள் அழுந்தியும், மக்கள் மனைவி சுற்றம் என்னும் கூட்டத்திடை யாட்டப்பட்டும் துன்பமுறும் மனிதர்கள் அவற்றிற் செலுத்தும் சிந்தையை மாற்றி இரப்பவர்க்கீந்தும், இறைவனைப் பேணிப் போற்றி நினைந்துமிருந்தால் நன்மையும் இன்பமும் அடைகுவர். வினை தீர்க்கும் தலமாதலின் பதிகம் இக்குறிப்புக் கொண்டது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) செத்தை - பயனற்ற குப்பை. சிதம்பன் - குணமிலி. செடியன் - பாவமுடையவன். பொத்தை - பொந்து-துளையுடையது. அழுக்குப் பாயும் பொத்தை - உடம்பு. கொத்தை - குருட்டுத் தன்மை - அங்கம் குறைவுடைய தன்மை. "குற்றமொன்றும் செய்ததில்லை கொத்தையாக்கினீர்" (நம்பிகள் - திருவாரூர் - செந்துருத்தி 2).—(2) தரணிக்கே பொறையதாகி - பூமிக்கு ஓர் பாரமாகி - பயனற்று. ஐவர் வேண்டும் வினை கொடுத்து - ஐம்பொறிகள் விரும்பிய வழியே சென்று. வேண்டிற்றே வேண்டி - அவை வேண்டியவற்றையே நானும் விரும்பி. அனுபவித்த பொருளையே மீளவும் விரும்பி என்றலுமாம். எய்த்தல் - இளைப்படைதல்.—(3) வழி - நல்வழி. தலைப்படுதல் - நிற்றல் - செல்லுதல் - கூடுதல்.—(4) குடிமை - ஏவல் கொள்ளுந்தன்மை. காற்றுவர் - காற்றுப்போல நொய்தாக்குவர். எளியனாகச் செய்வர். கனலப்பேசுதல் - ஆர்வமிகச் செய்தல் குறித்தது. ஐவர்-ஐம்புலன். கூற்றுவர் - இயமன் தூதுவர்.—(5) தத்துவத் துயர்வு நீர்மைப் படுத்திலேன் - தத்துவப் படிமுறையின் உயர்வைக் குறிக்கொண்டிலேன். ஆர்வலித்து - ஆசைகொண்டு.—(6) மாச்செய்த குரம்பை - விலங்கின்றன்மை கொண்ட உடல். மா-மரணம் என்று கொண்டு மரணத்தை உடன்வைத்து ஆக்கப்பட்ட என்றலுமாம். மயக்கம் எய்தும் நாச்செய்து - மயங்கும் வழிசெய்து. நா - அனுபவிக்கும் வாய்தல் - கருவி - குறித்தது. நாலுமைந்து - உடம்பின் ஒன்பது வாசல். காச்செய்த - காவல்செய்த. காப்புடன் அமைத்த. கா - பூ முதலியவற்றை இடும்பெட்டிபோல என்றலுமாம். கோச்செய்து - அதிகாரம் செய்து - குமைத்தல் - வருத்துதல் அழித்தல் "கூற்றங் குமைத்த".—(7) இடை - காலம். கொடையிலேன் கோள்வதே - கொடையில்லாதவனாகிய நான் பிறர்பால் கொள்வது என்ன நியாயம்? ஏகாரம் வினா.—(8) பிச்சிலேன் - இழித்துச் சிதைத்திலேன். பிய்ச்சிலேன் என்பது பிச்சிலேன் எனநின்றது. பிணக்கமென்னும் துச்சு - நன்னெறியினின்றும் மாறுபடும் கீழ்மை. அச்சன் மேம்பட்டவன் - அதிபன். அச்சமுடையவன் என்றலு மொன்று. கோச்சை - கீழ்மைத்தன்மை.

திருக்கோவலூர் முதலா மருவு திருப்பதி பிறவும் - திருவிடையாறு, திருநெல்வெண்ணெய் முதலியன என்று கருதப்படும். இவற்றைப்பற்றிய நாயனரது பதிகங்கள் சிதலரித் தொழிந்தனபோலும். திருஆமாத்தூரிலிருந்து திருக்கோவலூருக்கு வரும்

வழியிடையே திருவறையணிநல்லூரும் வணங்கி வந்தனர் என்பதும் கருதப்படும். "அண்ணாமலை அறையணி நல்லூரும் அரனெறியும்" (2) என்றும், "நல்வெண்ணெய் நெல்வாயிலும்" (9) என்றும் காப்புத் திருத்தாண்டகத்தினுள் இத்தலங்களை நாயனார் குறித்தருளியது காண்க. ஆசிரியர் கூறியருளிய வைப்பு முறையால் நாயனார் சென்று வணங்கியதும், பின்னர்த் திருக்கோவலூரினின்றும் திருப்பெண்ணாகடத்துக் குச் சென்றதும் ஆகிய சாலைவழிகள் இப்போது வழக்கில் காணப்படாது மாறியன போலும்.

பெண்ணாகடம் - 1416-ன் கீழ்வரும் தலவிசேடம் பார்க்க. கடந்தை என்று பதிகத்துக் கூறப்பட்டது. தூங்கானை மாடம் - கோயிலின் பெயர்.

பெருகு விருப்புடன் - அணைந்தார் - விருப்பம் மேன்மேல் மிகும் மனத்துடன் சேர்ந்தனர். விருப்பம் மிகுதற்குக் காரணம் 1415 - 1416-ல் விளக்கப்படுவது. 148

1414. கார்வளரு மாடங்கள் கலந்தமறை யொலிவளர்க்குஞ்
சீருடையந் தணர்வாழுஞ் செழும்பதியி னகத்தெய்தி,
வார்சடையார் மன்னுதிருத் தூங்கானை மாடத்தைப்
பார்பரவும் திருமுனிவர் பணிந்தேத்திப் பரவினார். கசசகூ

(இ - ள்) வெளிப்படை. மேகங்கள் தங்குதற்கிடமாகிய மாடங்களில், பொருந் திய வேதவொலியை வளர்க்கின்ற சிறப்புடைய அந்தணர்கள் வாழ்கின்ற அந்தச் செழும் பதியினுள்ளே சென்று சேர்ந்து, வார்ந்த சடையினையுடைய சிவபெருமான் நிலைபெற்று விளங்கும் திருத்தூங்கானைமாடக் கோயிலினை உலகம் போற்றும் திரு முனிவராகிய வாகீசர் பணிந்து ஏத்தி வந்தித்தனர்.

(வி - ரை) மாடங்கள் - அந்தணர் வாழும் - பதி என்று கூட்டுக. கார் மாடங் களில் வளர, அந்த மாடங்களில் அந்தணர்கள் வாழ்கின்றனர் என்பது.

மறை ஒலி வளர்க்கும் என்றது முறைப்படி மறை பயில்வதனையும், வேத விதிப் படி வேள்விகள் செய்வதனையும் குறித்தது. அதன் பயனாக மேகங்கள் கூடி அந்நகர மும் நாடும் செழித்தன என்று குறிப்பார், கார்வளரும் - மறை ஒலிவளர்க்கும் - செழும்பதி என்று உடன்கூட்டி உரைத்தார்.

செழும்பதி - பெண்ணாகடம் - சிறந்த அந்தணர் வாழும் பதி என்பது. சேய்ஞ லூர்போல இதுவும் மறையவர் மிக்குவாழும் பதி என்க.

வார்சடையார் - வார்தல் - நீண்டு வளர்ந்திருத்தல்.

தூங்கானை மாடத்தைப் பணிந்து என்றது கோயில் முதலிற் கண்ணுக்குப் புலனாகியபோதே நாயனார் அக்கோயிலினை வணங்கினார். கண்டவுடன் முதலில் கோயிலினை வணங்குதல் மரபு.

பார்பரவும் திருமுனிவர் - உலகமெல்லாம் போற்றி யுய்தற்குரிய பெருமுனிவர் வாகீசர் என்பது.

பணிந்து ஏத்திப் பரவினார் - பணிதல் ஏத்துதல் பரவுதல் என்ற இவை வழி பாட்டு வகைகள். 149

1415. "புன்னெறியா மமண்சமயத் தொடக்குண்டு போந்தவுட
றன்னுடனே யுயிர்வாழத் தரியேனான்; றரிப்பதனுக்
கென்னுடைய நாயக!நின் னிலச்சினையிட் டருளு" மென்று
பன்னுசெழுந் தமிழ்மாலை முன்னின்று பாடுவார், கருo



திருத்தூங்கானைமாடம் - கோயில் - கர்ப்பக்கிரகம்



திருத்தூங்கானைமாடம் - கோயில்
(பின்புறமிருந்து பார்வை)

—பாட்டு - 1414 - பக்கம் - ௨௦௬



திருத்தூங்கானைமாடம் - கோயில் (முன் பார்வை)



திருத்தூங்கானைமாடம் - கோயில் (உட் பார்வை)

1416. "பொன்னார்ந்த திருவடிக்கென் விண்ணப்ப" மென்றெடுத்து,
முன்னாகி யெப்பொருட்கு முடிவாகி நின்றானைத்,
தன்னாகத் துமைபாகங் கொண்டானைச், சங்கரனை,
நன்னாமத் திருவிருத்த நலஞ்சிறக்கப் பாடுதலும், கருக

1417. நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற
வாடகமே ருச்சிலையா னருளாலோர் சிவபூத
மாடொருவ ரறியாமே, வாகீசர் திருத்தோளிற்
சேடுயர்மூ விலைச்சூலஞ் சினவிடையி னுடன்சாத்த, கருஉ

*1418. ஆங்கவர்தந் திருத்தோளி லார்ந்ததிரு விலச்சினையைத்
தாங்கண்டு, மனங்களித்துத், தம்பெருமா னருணினைந்து,
தூங்கருவி கண்பொழியத் தொழுதுவிழுந் தார்வத்தால்
ஓங்கியசிந் தையராகி, "யுய்ந்தொழிந்தே" னெனவெழுந்தார்.

1415. (இ - ள்) வெளிப்படை. "புன்னெறியாகிய சமண சமயத்தின் தொடக்கிற்பட்டுப் போன இவ்வுடலுடனே உயிர் வாழ்வதற்கு நான் தரிக்கமாட்டேன்; ஆதலின், எனது நாயகரே! நான் தரிப்பதற்கு உமது முத்திரையை இட்டருளவேண்டும்" என்ற கருத்தினை எடுத்துக் கூறும் செழும் தமிழ்மாலையைத் திருமுன்பு நின்று பாடுவாராய், கரு0

1416. (இ - ள்) வெளிப்படை. "பொன்னார்ந்த திருவடிக்கு எனது விண்ணப்பம்" என்று தொடங்கி, எல்லாப் பொருள்களுக்கும் முன்னாகியும் முடிவாகியும் நின்றவரைத், தமது திருமேனியில் உமையம்மையாரை ஒரு பாகத்தில் கொண்டவரைச், சங்கரரை, அவரது நல்ல நாமங்களைப் பாடும் திருவிருத்தப் பதிகத்தை நலம் சிறக்கப் பாடுதலும், கருக

1417. (இ - ள்) வெளிப்படை. திருநீடும் தூங்கானைமாடத்தில் நிலாவும், பொன் மேருமலையை வில்லாக உடைய பெருமானாரது திருவருளினால் ஒரு சிவபூதமானது, பக்கத்தில் ஒருவரும் அறியாதபடி (வந்து), திருநாவுக்கரசருடைய திருத்தோள்களில் ஒளியான் மிகுந்த மூவிலைச்சூலக் குறியினைச் சினவிடைக்குறியோடும் சாத்தியிட,

1418. (இ - ள்) வெளிப்படை. அவர் தமது திருத்தோள்களில் நிறைந்த திருமுத்திரைகளைக் கண்டு, மனமகிழ்ந்து, தமது பெருமானது திருவருளை நினைந்து, இடைவிடாது வரும் அருவிபோலக் கண்கள் நீரைப் பொழியத் தொழுது நிலத்தில் விழுந்து மிக்க ஆசையால் நிரம்பி, மேல் எழுந்த சிந்தையராகி "நான் உய்ந்தேன்" என்றுகூறி எழுந்தனர். கருந

இந்த நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

1415. (வி - ரை) தொடக்கு - பிணிப்பு; தொடக்குண்டு - பிணிப்புக்குட்பட்டு.

போந்தவுடல் - போந்த என்பது பாழ்போயின - அசுத்தப்பட்டுப்போன - என்ற குறிப்புப்பட நின்றது.

போந்த உடல் தன்னுடனே உயிர்வாழத் தரியேன்-குற்றப்பட்ட உடலாதலின் அதனைத் தாங்கி வாழ்ந்திருக்க மனம் இசையேன். அசுத்தச் செயலும் தொடர்பும் கொண்டால் உடலும் தூய்மையின்றி அசுத்தமாகிவிடும் என்பது துணிபு. அசுத்தமான கலத்தில் பால்விட்டால் பயன்படாதது போல, அவ்வாறு தூய்மையற்ற உடம்பு சன்மார்க்கநெறி நிற்றலுக்கு இடையூறாகத் - தடையாக - இருக்கும்; ஆதலின் நூல்களுள்

உடற்றூய்மை வற்புறுத்தி விதிக்கப்படுவதாம். சமண சமயத்தினைவிட்டு வந்தபின் அந்த முன்றொடக்கு என்னசெய்யும் ? எனின், அற்றன்று; ஒருகால் தீயசார்பினால் அசுத்தமாயின உடலும் அதனை உட்கொண்ட இரத்தம் முதலாகிய எழுவகைத்தாதுக் களும் ஒக்கஅசுத்தப்பட்டு விடத்தன்மை அடைந்துவிடும். நோய்க்குமருந்து கொடுப்பது போலவும், அசுத்தமாகிய சேற்றில் வீழ்ந்தபாண்டத்தை அனலிலிட்டுத் தூய்மை செய் வது போலவும் அந்த உடலையும் விதித்தவாறு தூய்மையாக்குதல் வேண்டும் என்க. இதனைத் தீர்வு - கழுவாய் - மாற்று - என்று கூறுவர். பிராயச்சித்த மென்பர் வடவர்.

முன்னர்த் திலகவதியம்மையார் திருவீரட்டம் புகுவதற்காக அஞ்செழுத்தோதிக் கொடுத்த திருநீற்றினை உருவார வணிந்து திருவீரட்டம் புகுந்ததுவும் (1332-1333), தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமு மாகி (1405) மீண்டும் திரு வதிகை புகுந்ததுவும், அவ்வாறே பிற பதிகளும் சென்று வணங்கியதும் அசுத்த மாகிய உடல் கொண்டேயோ ?; திருவெண்ணீற்றினால் உடல் முன்னரே புனிதமாக்கப்படவில்லை போலும் ?; எனில், அற்றன்று. உடல் முன்பே புனித மாக்கப்பட்டது உண்மையே. ஆயின் சமணத் தொடக்கி னுட்பட்டு உடல் வளர்ந்த வளர்ச்சியும், அது பற்றிய இழிபும் பலகாலம் நாயனார் கருதிக் கருதி வருந்தியே நின் றனர் என்பது ஏழைத் திருத்தாண்டகத்தாலும், மற்றும் பல திருவாக்குக்களாலும் அறியப்படும். திருநீற்றுப் பூச்சு அவ்வப்போதும் உடலை நெருப்பிற்குளித்தல் (ஆக்னேய ஸ்நானம்) என்ற சடங்கினால் தூய்மையாக்கி வருவதொன்று. இவ்வாறுள்ள பகுதிக ளாகிய சூக்கும தேகசுத்தி, தூல தேகசுத்தி, சரீரதகனம், அமிர்தாப்பிலாவனம் என்ற இவை நாடோறும் சிவபூசைக் கிரமத்தில் செய்யப்படுதல் அவ்வந்நாளும் அந் நாட் சரீரத்தைச் சுட்டுத், தூல சூக்கும சரீரங்களைத் தூய்மைப்படுத்தும் நிலை குறித் தன. அவற்றை நாயனார் நாடோறும் இயற்றிப் பூசையும் செய்து வந்தனர். அவை சிவனை வழிபடும் அனைவரும் தம்மைத் தூய்மைப் படுத்திக் கொள்ளச் செய்யத் தகு வன. அவை வேறு ; இங்கு நாயனார் விண்ணப்பித்த செயல் வேறு. அது தமது உடல் சமணத் தொடக்குண்டு வளர்ந்த வளர்ச்சி யிழிபினின்றும் கழுவப் பெற்றுத் தரிக்கத் தக்கதாக ஆக்கப்படவேண்டும் என்பது. இஃது சிவனை இகழ்ந்து புறச்சமயம் புக்கு நின்று திரும்பினார் செய்யத்தக்க சிறப்புக் கழுவாய். இஃது சூலம் இடபம் ஆகிய இறைவனிலச்சினை பொறிக்கப் பெறுதலானே ஆவதாம். "சைவ முத்ரா தீட்சை" என்பது சிவாகமங்களில் விதித்த தீட்சை வகைகளில் ஒன்று. பொறித்தலாவது அவ் வடிவக் குறிகள் எப்போதும் தோள்களிற் காணும்படி சுவடுண்டாமாறு அழுத்தி முத்திரீகரிக்கப்படுதல். இவ்வாறு வைணவர்களுள் முத்திராதாரணம் எனவழங்கும் சடங்கு போன்ற தொன்று முன்காலத்தில் சைவ சமய மரபிலும் வழங்கியது போலும். வைணவர் அதனை எடுத்துக் கையாண்டபின் சைவ சமயத்தவர் அதனைக் கைவிட நேர்ந்ததோ என்பதும் ஐயம். இவ்வாறுள்ளதொரு மரபு வழக்கிலிராவிடின் நாயனார் இவ்விண்ணப்பம் செய்யக் காரணமில்லை என்பதும் கருதப்படும். புறச்சம யம் புக்கு உழன்றவர்கள் மீளத் தம் சமயம் புகுந்தால் இவ்வாறுள்ள உடல் வருத்தும் கழுவா யொன்றும் வேண்டுவதென்பது இதனானும் துணியப் படுவதாம். முன் 1332-1333 கீழ் உரைத்தவையும் பார்க்க.

**தரிப்பதனுக்கு** - உடலிற்றரிக்க - என்றும், உயிர் வாழத் தரியாத உடலையும் தரித்திருத்தற்கு என்றும் உரைக்கநின்றது.

**நின் இலச்சினை** - இலச்சினை - குறி - முத்திரை. இவை சூலமும் இடபமுமாம். விடையிலச்சினை யிட்ட திருவிளையாடலும் காண்க. இவ் விலச்சினைகள் பொறிக் கப்படுதலால் உடலானது முன்னைச் சமணத் தொடக்கினால் நேர்ந்த இழிபு நீங்கிச்

*சிவனதுடைமை யாகத் தூய்மை யாக்கப்படுகின்றது என்பதாம். கலப்புள்ள பொன்னைத் தீயிற்புடமிட்டபோது அது தூயபொன்னாதல் போலவும், குற்றமுடையவன் தந்த காணிக்கை, சிவன் பொருளாயினவழிக் குற்ற நீங்கிவிடுதல் போலவும் காண்க.*

"**நின் இலச்சினை இட்டருள்**" - *இது அத்திருப்பதிகக் குறிப்பும் கருத்துமாம்.*

**முன் நின்று** - *தூங்கானைமாடத்தினுள் இறைவர் திருமுன்பு நின்று கொண்டு.*

**பாடுவார்** - *பாடுவாராகி - முற்றெச்சம்.* **பாடுவார் - பாடுதலும்** *என மேல் வரும் பாட்டின் வினையெச்சத்துடன் முடிந்தது.*

**செழுந்தமிழ் மாலை** - *செழிப்பாவது நினைத்த பயனை நினைத்தவாறே நிறையத் தருதல்.* 150

1416. (வி - ரை) "**பொன்னார்ந்த திருவடிக்கென் விண்ணப்பம்**" **என்று** - *இது நாயனார் அப்போது அருளிய பதிகத்தின் தொடக்கக் குறிப்பு.*

**பொன்னார்ந்த திருவடி** - *திருப்பதிகத்தில் "பொன்னார் திருவடி" என்ற மூன்று காலத்துக்குமுரிய வினைத்தொகைத் தொடரை ஆசிரியர் விரித்தருளினர்.* **பொன்** - *அழகு - காட்சியாலும் பயனாலும் நலந்தரும் தன்மை.* **ஆர்ந்த** *என்றதனால் இத்தன்மை அத்திருவடிக்கு இன்றுள்ளதன்று; இனி வருவதுமன்று; பண்டேயுள்ளது என்று நாயனார் கூறிய வினைத்தொகைப் பொருளை விரித்தவாறு.*

**திருவடிக்கு என் விண்ணப்பம்** - *"திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்" என்பது பதிகம். அதனுள் "ஒன்றுண்டு" என்பதனைத் தொகுத்தும், "என்" என்பதனை விரித்தும் கூறினார். இது "என்மேற்பொறி", "எனைப்பூசு" "என்னை ஏன்றுகொள்" என்ற பதிகப்பகுதிகளிற் கண்டது. இவ்விண்ணப்பம் வகையால் ஒன்றுயுள்ளதனை "நின் இலச்சினை யிட்டருள் என்று" என மேற்பாட்டில் தொகுத்துக் கூறினாராதலின் பதிகத்துட் கண்ட "*ஒன்றுண்டு*" என்பதனை இங்குக் கூறிற்றிலர். பதிகத்துள் இப்போது கிடைத்த மூன்றுபாட்டினுள்ளும் மூன்று வெவ்வேறான விண்ணப்பங்களாகக் காணப்படினும், அவையாவும் புறச்சமயத் தொடக்குண்டு அசுத்தமாயின உடலைத் தூய்மையாக்க இலச்சினையை வேண்டுகின்ற ஒன்றன்பாலே படுதல் காண்க.*

**எடுத்து** - *தொடங்கி முன்வைத்துக் காட்டி என்றலுமாம். விண்ணப்பங்கள் செய்யும் முறையும் காட்டியது காண்க.* Headed: To the...An application *என்ற நவீன வழக்கும் காணப்படும்.*

**எப்பொருட்கும் முன்னாகி முடிவாகி நின்றானை** *என்க. எல்லாப் பொருள்களுக்கு முன்னேயும் இருந்தவன் - பின்னேயும் இருப்பவன் - அவற்றினுள்ளே நிறைந்தும் நிற்கின்றவன் என்பது கருத்து.* **முன்னாகி** *என்றதனால் படைக்குந் தலைமையும்,* **நின்றவன்** *என்றதனாற் காக்குந் தலைமையும்,* **முடிவாகி** *என்றதனால் அழிக்குந் தலைமையும் ஆக முத்தொழிலும் பெறப்பட்டமை காண்க.*

*மூவிலையும் ஒரு தாளும் கொண்ட சூலம் கைக்கொள்ளுதல் முத்தொழிற்கும் முதல்வனாகிய சிவபெருமானைக் குறிக்கும். "அயில்கொண் முக்குடு மிப்படை யார்"* (1041), *"கூரிலைய முக்குடுமிப் படையண்ணல்"* (1053) *என்றவிடங்களில் உரைத்தவை பார்க்க. "மூன்று மூர்த்தியு நின்றியலுந் தொழில், மூன்று மாகிய மூவிலைச் சூலத்தன்"* (குறுந்தொகை). **சூலம் பொறித்தல்** - *மூவர்க்கு முதல்வனது உடைமையாகத் தூய்மை செய்யப்பட்டது இவ்வுடல் என்பது குறிப்பதற்கு.*

**தன் ஆகத்து உமைபாகம் கொண்டானை** - *அருளே திருமேனியாக உடையவன் என்பது. அருள் அம்மையாரின் வடிவம். திருநீறும் பரையின் படிவமாம். "நீற்றுப் பதிக நிகழ்ந்தும் காலே, மாற்றுப் பரையின் வரலா றுகும்" என்றதும்,*

" பராவண மாவது நீறு " என்ற தேவாரமும் காண்க. திருவடி நீற்றினைப் பூசும்படி வேண்டுதல் அருட் சத்தியைப் பெறவேண்டுதலைக் குறிப்பதாம்.

**சங்கரன்** - சுகத்தைச் செய்பவன். விடை யிலச்சினையைப் பொறிக்கும்படி வேண்டுதல் சுகங்கொடுக்க வேண்டும் குறிப்புடையது.

மூன்றாகி முடிவாகி நின்றான் என்றதனால் இறைவனது சத்தாந்தன்மையும், உமைபாகங் கொண்டான் என்றதனால் அவனது சித்தாம் தன்மையும், (சுகமுடைய வனே சுகங் கொடுப்பவனாதால்) சங்கரன் என்றது அவனது ஆனந்தமாந் தன்மையும் குறித்தன. சத்தாதலின் அருள்தரும் தகுதியும், சித்தாதலின் கொடுத்தற்கேற்ற அருளினை உடைமையும், ஆனந்தனாதலின் சுகம்தரும் தகுதியும் உடையவன் என்பதும் குறிக்கப்பட்டன. இக்கருத்துக்கள் பற்றியே சூலம் என்மேற் பொறி - திருவடி நீறெனைப்பூசு-இடபம் பொறித்தெனையேன்று கொள்-என்ற மூன்றாக விண்ணப்பங்கள் செய்துகொண்டனர் நாயனார் என்பார் ஆசிரியர் இந்த மூன்று தன்மைகளாற் பதிகக் குறிப்புக்கூறினர். நன்றுமம் என்ற கருத்தும் இது. நாமம் - புகழ் என்றுகொள்ளலு மொன்று. இதனைப் பதிகத்துக்கேற்றி உரைத்தலுமாம்.

**திருவிருத்தம்** - பதிகப் பாட்டுக்கள் கட்டளைக் கலித்துறை. அது முன்னாளில் திருவிருத்தம் என வழங்கப்பட்டது. முன் உரைத்தவை பார்க்க.

**நலம் சிறக்க**-நன்மை பெருக-விளங்க. முன்னரே திலகவதியார் அஞ்செழுத் தோதிக் கொடுத்த திருநீற்றை அணிந்தமையாலும், திருவதிகையின் இறைவர் அருளி உணர்வு பெறுவித்தமையானும் நலம் பெற்றனராதலின் முன்னே பெற்ற அந்நலங்கள் இங்கு மேலுஞ் சிறந்து விளங்க என்றார்.

**பாடுதலும்** - பாடிய உடனே. பாடுதலும் - சாத்த - என்று வரும் பாட்டுடன் முடிக்க. பாடியதும் சாத்துதல் நிகழ்ந்த விரைவு குறிக்க இவ்வாறு கூட்டி முடிக்க வைத்தார். 151

எனவேடுத்து—என்பதும் பாடம்.

திருச்சிற்றம்பலம் **திருவிருத்தம் - திருத்தூங்கானைமாடம்**

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் ! போற்றிசெய்யு
மென்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்ட
றுன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே ! 1

" ஆவா ! சிறுத்தொண்ட னென்னினைந் தா "?னென் றரும்பிணிநோய்
காவா தொழியிற் கலக்குமுன் மேற்பழி; காதல் செய்வார்
தேவா ! திருவடி நீறெனைப் பூசுசெந் தாமரையின்
பூவார் கடந்தையுட் டூங்கானை மாடத்தெம் புண்ணியனே ! 2-9

கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி மால்வரைபோ
லிடபம் பொறித்தென்னை யேன்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்க
டடவுங் கடந்தையுட் டூங்கானை மாடத்தெந் தத்துவனே ! 10

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** - சமண் சமயத் தொடக்குண்ட இவ்வுடலுடன் உயிர் வாழத் தரியேன்; ஆதலின் இவ்வுடலில் உனது இலச்சினைகளாகிய சூலம் - இடபம் இவைகளைப் பொறித்தருளுக ! திருவடி நீறெனைப்பூசுக ! என்பது. இஃது 1415ல் ஆசிரியர் உரைத்தவாறு.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—இப்பதிகத்தில் மூன்று பாட்டுக்களே இப்போது கிடைத்துள்ளன. எஞ்சியவை சிதலரித் தொழிந்தன போலும்!.—(1) ஆவி காப்ப தற்கு இச்சை யுண்டேல் இநுங் கூற்று அகல - இதனை "உடல் தன்னுடனே உயிர் வாழத் தரியேனுன்" (1415) என்று விளக்கினர். இவ்வுடலின்கண் இருந்து உயிர் வாழத் தரியேன் ; ஆதலின் அவ்வாறு வாழாவிடின் வரும் கூற்று அகலும்படி என்பது. உடல் தூயதாகிய வழியே அதனுள் நின்று உயிர் வாழ்தல் பயன்படும். இல்லையேல் அவ்வாழ்க்கை வீழ்ந்தொழிதற்பாலது என்பது ஆன்றோர் துணிபு. "வார்கடலுலகின் வாழ்கிலேன் கண்டாய்" (வாழாப்பத்து) என்ற திருவாசகக் கருத்தைக் கருதுக. கூற்று - சமண்தொடக் குண்டவன் என்ற சொல் என்பது சதாசிவ செட்டியார் குறிப்புரை. இச்சையுண்டேல் - எனது விண்ணப்பம் திருவுளத்துக் கிசையுமாகில். "வேண்டி நீயா தருள்செய்தா யானு மதுவே வேண்டி னல்லால்" என்ற திருவாசகக் கருத்து ஈண்டுச் சிந்திக்கற்பாலது. "If your Honour pleases" முதலியனவாகக் கூறும் நவீனர் வழக்கும் காண்க. பொறி - பொறித்து வைத்தருள்க. பொறித்தல் - அடையாளம் மாறாதபடி அழுத்தல். "வயனங்கண் மாயா வடுச்செய்தான்" (திருவாசகம்), "அடையாளம் படவொருவ னடித்தகொடுஞ் சிலைத்தழும்பு" (திருவிளை - புரா-மண்சு-பட-79) முதலியவை பார்க்க. கடந்தை - பெண்ணுகடம் என்ற தலப்பெயர் மருவி வந்தது ; குடந்தை என்பதுபோல. தூங்கானை மாடம் - கோயிலின் பெயர் ; சாந்தை யயவந்தி என்பதுபோல. சுடர்க்கொழுந்து-சுவாமிபெயர்.—(2) சிறுத்தொண்டன் - தொண்டர்களுட் சிறுவன் - கடையவன். என் நினைந்தான் என்று - இவனது தகுதிக்கு மேற்பட்ட எவ்வெவையோ நினைந்தனனே என்று கருதி. பிணிநோய்- பிணிப்பாகிய உடலும் அதனுள் தொழுநோய் போன்று கலந்த சமணத் தொடக்கும் குறித்தன. உன்மேற் பழி கலக்கும் - தகுதியற்றவனாயினும் வந்தடைந்த தொண்டனைக் காவல் புரிந்து வாழவைக்காமல் நீத்துவிட்டபழி உன்மேற்சாரும்; காதல் செய்வார் தேவனுதலின் என்க. திருவடி நீறு எனைப் பூசு - அருணிறைவின் அடையாளமாகிய திருநீற்றை என்னைப் பூசும்படிசெய்.—(10) படவும் - படும்படி. பனி மால்வரைபோல் இடபம் - "அங்கண் வெள்ளிமால் வரையிரண் டாமென வணைந்தோர், சிந்தை செய்திடச் செங்கண்மால் விடை" (திருநா - புரா - 378) என்பது இக்கருத்தை விளக்குவதாம். வெள்ளைநிறமாகிய உருவம்பற்றி யெழுந்த உவமம். இடபத்துக்குரிய அடைமொழி ; இலச்சினையைப் பற்றியதன்று. என்னை ஏன்று கொள்ளாய் - இடபம் பொறித்தலாற் றூய உடம்பினனாக ஆக்கி எனது பணிவிடையை இந்த உடம்பின்கண்ணே ஏற்றுக்கொள்க. ஏன்று கொள்ளுதல் - ஏற்றல். இத்திருப் பாட்டுக்கள் மூன்றினையும் யாவரும் பயின்று விண்ணப்பித்துப் பயனடையத்தக்கார்.

தலவிசேடம்:—இது திருப்பெண்ணுகடம் எனப்படும். பெண்-தேவகன்னியர்; ஆ - காமதேனு ; கடம் - வெள்ளையானை ; இவர்கள் பூசித்துப் பேறுபெற்ற தலமாதலின் இப்பெயர் பெற்றது ; புள்ளிருக்குவேளூர் என்பதுபோல.

தூங்கானைமாடம் என்ற கோயிலின்பெயர் - அதன் அமைப்பினால் போந்த பெயர். ஒரு யானை படுத்திருப்பது போலும் வடிவாக இத்திருக்கோயில் அமைக்கப் பட்டுள்ளது காணலாம். கோயிலின் முன்புறம் யானையின் முகம்போலுயர்ந்தும், பின் புறம் யானையின் பின்பாகம்போலப் பருத்து வட்ட வடிவமாயும் அமைந்துள்ளது. இதனைத் "கடந்தைத் தடங்கோயில்" என்பது பிள்ளையார் தேவாரம். கருப்பக் கிருகத்தினைச் சுற்றி மூன்று சாளரங்கள் உள்ளன. இஃது இக்கோயிலின் சிறப்பமைதி. அறுபான்மும்மை நாயன்மார்களுள் "கைதடிந்த வரிசிலையான்" என்று புகழப்பட்ட கலிக்கம்பநாயனார் தொண்டுசெய்து பேறுபெற்ற தலம். திருநாவுக்கரசு நாயனார் விண்

ணப்பித்தபடி அவர் தோள்களில் சூலமு மிடபமும் பொறிக்கப் பெற்ற வரலாறு புராணத்துட் கூறப்பட்டது. சைவ சித்தாந்த சந்தான பரமாசாரியராகிய மெய்கண்டதேவ நாயனரின் தந்தையார் அச்சுதகளப்பாளர் வாழ்ந்த திருத்தலம். சைவ சந்தானுசாரியருள் ஒருவரான மறைஞானசம்பந்தர் அவதரித்த தலமுமாம். சுவாமி - சுடர்க்கொழுந்து நாதர். அம்மை - கடந்தை நாயகி. பதிகம் 2.

இது - விழுப்புரம் திருச்சிராப்பள்ளி வழி இருப்புப் பாதையில் பெண்ணு(க)டம் என்னும் நிலயத்திலிருந்து மேற்கே மட்சாலைவழி ஒருநாழிகை யளவில் அடையத் தக்கது. திருவெருக்கத்தம்புலியூரிலிருந்து வடக்கே விருத்தாசலம் கற்சாலையில் 3 நாழிகை யளவில் உள்ள நேமத்திலிருந்து மேற்கே மட்சாலையில் மூன்று நாழிகை யளவில் சென்றடைவது முன்னுள் வழி. (விருத்தாசலத்துக்குத் தென்மேற்கில் 11 நாழிகைவழி. கற்சாலை).

1417. (வி - ரை) திருநீடு என்க. பின்னரும் மெய்கண்டதேவ நாயனரும், மறைஞானசம்பந்தரும் அவதரிக்கவும் சைவ மெய்த்திருவை வளர்க்கவும் காரணமாயிருந்ததும் கருதுக.

நிலவுகின்ற - முக்காலத்தும் நித்தியமாய் - விளக்கமாய் - வீற்றிருத்தலின் நிகழ் காலத்தாற் கூறினர்.

சிவபூதம் - சிவகணங்களுள் ஒன்றாகிய பூதம். இவை சிவபெருமான் ஏவல்வழி எல்லாம் செய்ய வல்லன. பூதங்கள் குண்டையூர்க் கிழார்க்கு இறைவன் தந்த நென்மலை முழுதும் திருவாரூரில் பரவையார் மாளிகை வீதியிற் சேர்த்ததும், ஆளுடைய பிள்ளையார்க்கு முத்துப்பந்தர் கொண்டு தந்ததும், அவருக்குப் பொன் உலவாக்கிழி கொண்டு தந்ததும் முதலிய வரலாறுகள் காண்க.

மாடு ஒருவர் அறியாமே - பூதங்களும், அவை சிவனேவலில் தொழில் செய்வதும் பிறர் கண்ணுக்குப் புலப்படா; தொழிலின் பயன்மட்டும் புலப்படும் என்க. ஆன்மாக்களின் பக்குவபேதம் நோக்கி அவ்வவர்க் கேற்றபடி அருளுவன் சிவன் என்பது அணிபு.

சேடு - ஒளி. உயர்ந்த ஒளிவீசும் சூலம். சினம் - விடைக்கு அடைமொழி.

சாத்த - ஆர்ந்த - இலச்சினையைக் - கண்டு - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. தோளில் - தோள்களில்; ஒன்றிற் சூலமும் ஒன்றில் இடபமும் என்க. 152

1418. (வி - ரை) ஆங்கு - அப்போது. ஆங்குந்தோளில் என்றும், ஆங்குக் கண்டு என்றும், ஆங்கு ஆர்ந்த என்றும் கூட்டி உரைக்க நின்றது.

ஆர்ந்த - பொருந்தி நிறைந்த. தம் விருப்பு நிரம்புமாறு நிறைந்த என்பது குறிப்பு.

தம் திருத்தோளில் - தாம் கண்டு - இலச்சினை பொறிக்கப்பட்ட இடம் தமது தோள்களாதலையும் பொறித்த இலச்சினைகளையுமே தாம் கண்டாரன்றி பொறித்த பூதத்தினையும் பொறிக்கும் செயலினையும் தாமும் கண்டிலர்.

தம்பெருமான் அருள் நினைந்து - தமக்குரிமையாகிய தலைவராதலின் விண்ணப்பம் கேட்டவுடன் அருளினை நல்கினர் என்று நினைந்தனர்.

தூங்கருவி - இடையறாது வரும் அருவிபோலக் கண்ணீரை. அருவிபோன்றதனை அருவி என்றார் உபசாரம்.

ஓங்கிய சிந்தையர் - அடிமைத்திறத்தில் உயர்ந்து நிலைத்த மனத்தினராயினர். "இறுமாந் திருப்பன் கொலோ வீசன் - பல்கணத் தெண்ணப்பட்டு" (திருவங்கமாலை), "நாமார்க்கும் குடியல்லோம்" என்ற நாயனர் திருவாக்கும், "அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே" என்ற திருவாசகமும் காண்க. இஃது ஏனைத் தாம்க இறுமாப்பினின் வேறு என்று குறிக்க ஆர்வத்தால் என்றார்.

உய்ந்தொழிந்தேன் - ஒழிந்தேன் என்பது முற்றிய உறுதிப்பாடு குறித்தது. உய்ந்தேன் என்பது பொருள். ஒழி - விடு - என்பன உறுதி குறிக்கும் விகுதிகள்.

எழுந்தார் - விழுந்து திளைத்த நிலையினின்றும் எழுந்தனர்.

தாணினைந்து—என்பதும் பாடம். 153

1419. தூங்கானை மாடத்துச் சுடர்க்கொழுந்தி னடிபரவிப்
பாங்காகத் திருத்தொண்டு செய்துபயின் றமருநாட்
பூங்கான மணங்கமழும் பொருவிறிரு வரத்துறையுந்
தேங்காவின் முகிலுறங்குந் திருமுதுகுன் றமும்பணிந்து, கடுச

1420. வண்டமிழ்மென் மலர்மாலை புனைந்தருளி, மருங்குள்ள
தண்டுறைநீர்ப் பதிகளிலுந் தனிவிடையார் மேவியிடங்
கொண்டருளுந் தானங்கள் கும்பிட்டுக், குணதிசைமேல்
புண்டரிகத் தடஞ்சூழ்ந்த நிவாக்கரையே போதுவார், கடுரு

1421. ஆறுத சீர்த்தில்லை யம்பலத்தே யாடுகின்ற
வாறுறு புடைபரக்கு மலர்ச்சடையா ரடிவணங்கி
யூனாலு முயிராலு முள்ளபயன் கொளநினைந்து
தேனாறு மலர்ச்சோலைத் திருப்புலியூர் மருங்கணைந்தார். கடுசு

1419. (இ - ள்). வெளிப்படை. திருத் தூங்கானைமாடத்தில் எழுந்தருளியிருக்கும் சுடர்க்கொழுந்து நாதருடைய திருவடிகளைப் பரவி, ஏற்கு முறையாகத் திருப்பணிகள் செய்து பயின்று அத்திருத் தலத்தில் விரும்பி எழுந்தருளியிருக்கும் நாட்களில், கானப் பூக்களின் மணங் கமழ்கின்ற ஒப்பற்ற திருவரத்துறையினையும், தேன் பொருந்திய சோலைகளில் முகில்கள் தங்கும் திருமுதுகுன்றத்தினையும் பணிந்து, கடுச

1420. (இ - ள்). வெளிப்படை. வளப்பமுடைய தமிழினாலாகிய மென்மலர் மாலைகளைப் புனைந்தருளிப், பக்கத்தேயுள்ள தண்ணிய துறைகளையுடைய நீர் பொருந்திய தலங்களிலும் ஒப்பற்ற விடையினையுடைய சிவபெருமானெனவே அவர் மேவியுறையும் தானங்களைக் கும்பிட்டுக் கிழக்குத் திசையின்மேல், தாமரைத் தடங்களாற் சூழப்பட்ட நிவாநதியின் கரைவழியாகப் போவாராகி, கடுரு

1421. (இ - ள்). வெளிப்படை. குறைதலில்லாத சிறப்பினையுடைய தில்லை யம்பலத்தில் அருட் கூத்தினை ஆடுகின்ற கங்கையாறு புடையில் பரவும் மலர் பொருந்திய சடையினையுடையவராகிய பெருமானது திருவடிகளை வணங்கி, ஊனாலும் உயிராலும் உள்ள பயனைப்பெறவெண்ணியவராய்த் தேன் பொருந்திய பூஞ்சோலைகள் சூழ்ந்த திருப்புலியூரின் பக்கத்தில் அணைந்தனர். கடுசு

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1419. (வி - ரை) பாங்காகச் செய்து என்று கூட்டுக. பாங்கு ஆகுதல் திருவடிக்கு ஏற்குமாறு ஆதல். பாங்கு - விதி - முறை - என்றலுமாம்.

திருத்தொண்டு - சொன்மாலை சாத்துதலும் கைத் திருத்தொண்டுமாம்.

பயின்று - இடைவிடாது பல காலமும் செய்தல் குறித்தது. பயின்று - செய்து.

அமர்தல் - விரும்பி யிருத்தல். இந்நாட்களில் நாயனார் அருளிய பதிகங்கள் கிடைத்தில !. நாள் - பணிந்து - புனைந்தருளிக் - கும்பிட்டுப் - போதுவார் (1420) - நினைந்து - அணைந்தார் (1421) என மேல்வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடிக்க,

கானப் பூமணம் கமழும் என்க. இவை நிவா ஆறு கானங்களினின்றும் அடித்துக் கொண்டுவரும் பூக்கள். பூக்கள் கானம்போல மணம் வீசும் என்றலுமாம். "கந்த மாமல நுந்திக் கடும்புன லிவாமல்கு கரைமேல், அந்தண் சோலைநெல் வாயில் அரத்துறை" என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரமுங், "கோடுயர் கோங்கலர் வேங்கையலர் மிகவுந் திவருந் நிவவின் கரைமேல்" என்ற நம்பிகள் தேவாரமும் காண்க. பூங்கானமணம் - பூமணமும் கான மணமும் கமழும் என்று கொண்டு பூக்களின் மணமும், கானின் மணமுடைய அகில், ஏலம், இலவங்கம், மிளகு முதலிய வற்றின் மணமும் கமழ்கின்ற என்றுரைத்தலுமாம். "கல்வாயகிலும்", "கறிமா மிளகும்", "ஏலம் மிலவங்கம்" முதலியனவாக வரும் நம்பிகளது இத்தலத் தேவாரங்கள் காண்க. இப்பொருளுக்குப் பூக்கானமென்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றதென்க. பூங்கானம் - பூச்சோலைகளின் கூட்டம் என்றும் பூங்கொத்துக்கள் என்றும் உரைப்பினும் பொருந்தும்.

பேர்நவில் திருவரத்துறை - போநவில் - ஒப்பற்ற என்றது ஒப்பற்றவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருத்தல் குறிப்பு. இத்தலத்தில் நாயனார் பாடியருளிய திருக்குறுந்தொகைப் பதிகம் "கடவுளை" என்று தொடங்கி "ஒப்பாரியிலாத வெம் மடலுளானை" என்ற தன்மையாற் பெருமானைப் பேசப் புகுந்தமையும், அவ்வாறு ஒப்புமை யாவையுங் கடந்தவராயினும் தன்னை ஒப்பாரில்லாதவராயினும், நாம் தொழுவதற்காக இன்னின்னவற்றை ஒத்தவர் என்று ஒப்புமையும் பதிகமுழுமையும் கூறப் பட்டுள்ள சிறப்பும் காண்க. இச்சிறப்புக் குறிப்புப்பட இங்குப் போநவில் என்றார். "மற்றுருந் தன்னொப்பா ரில்லா தானை".

தேங்காவின் - பூஞ்சோலைகள். பூக்களில் தேன் நிறைந்திருத்தலும் தேன்கூடுகள் நிறைந்திருத்தலும் குறிக்கத் தேங்கா என்றார்.

முகிலுறங்கும் - சோலைகளின் செறிவினாலும் மரங்களின் உயர்ச்சியினாலும் எப் போதும் முகில்கள் தங்குதற் கிடமாவன என்பது. தங்குதலை உறங்குதல் என்றது தற்குறிப்பேற்றம். சமாதியணியுமாம். "உரிய பொருளன்றி யொப்புடைப் பொருள் மேற், றரும்வினை புணர்ப்பது சமாதியாகும்", "அஃறிணை மருங்கினும் மறையப் படுமே" என்பதிலக்கணம்.

சுடர்க்கொழுந்தை—பூங்காவின்—என்பனவும் பாடங்கள். 154

1420. (வி - ரை) வண் தமிழ் மென் மலர் மாலை - இந்த அடைமொழிகள் நாயனார் திருவரத்துறையிலும் திருமுதுகுன்றத்திலும் அருளிய திருப்பதிகங்களின் சிறப்புக் குறிப்பன. வளப்பம் - வண்மை - தமிழ்ச்சிறப்பு - மென்மை - மாலையாந் தன்மை என்ற இவை பலவுங் கண்டுகொள்க. மென்மை - மலர்களினும் மென்மை யுடையனவாய் யாவரானும் அறிவால் நுகரப்படும் இன்பமுடைமை.

மருங்கு உள்ள...தானங்கள் தும்பிட்டு - பதிகள் - தலங்கள். தானங்கள் - அத் தலங்களின் கோயில்கள். பதிகளிலும் - முன் சொன்ன அரத்துறையும் திருமுது குன்றமு மென்றவற்றோடு இவையும் என இறந்தது தழுவிய எச்சவும்மை. தனி - ஒப் பற்ற. விடையார் - இடபக் கொடியினையும் இடப ஊர்தியினையும் உடையவர். "ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த, சீர்கெழு கொடியு மவ்வே றென்ப" (புறம்).

மேவி இடங் கொண்டருளும் தானங்கள் என்றது பொருந்தி வெளிப்பட்டு வீற் றிருக்கும் இடமாகிய திருக்கோயில்களை என்றபடி. "நேய மலிந்தவர் வேடமும், ஆலயந் தானு மரனெனத் தொழுமே" என்ற சிவஞானபோதம் பன்னிரண்டாஞ் சூத் திரத்தில் "அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து அப் பிரகாசமாய் நிற்றலான்" என்று அசிரியர் எதுக்கூறினமை காண்க.

*(29-வது வரியின்கீழ்ச் சேர்க்க)* **பக்கம்** ௨௧௫

## திருநெல்வாயில் அரத்துறை

*திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

*கடவு ளைக்கட லுள்ளெழு நஞ்சுண்ட, வுடலு ளானையோப் பாரியி லாதவெம்*
*அடலு ளானை யரத்துறை மேவிய, சுடரு ளானைக்கண் டீர்நாந் தொழுவதே.* 1

*கலையொப் பானைக்கற் றார்க்கொ ரமுதினை, மலையொப் பானை மணிமுடி யூன்றிய*
*அலையொப் பானை யரத்துறை மேவிய, நிலையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே.* 10

"மெய்யுணர் வுடையார்க்குப் பகுப்பின்றி எங்கணும் பரமேசுரனைக் காண்டலே பொருத்த முடைமையானும், நின்ற திருத்தாண்டக முதலியவற்றுள் அவ்வாறோதுதலானும், திருவுருத்திரத்துட் பகுப்பின்றி உயிர்ப்பொருள் உயிரில் பொருள் எல்லாவற்றையுந் தனித்தனி யெடுத்தோதி வழிபாடு கூறுதலானும், ஈண்டிவற்றை மாத்திரையே விதந்து கொண்டோதிய தென்னையோ?" எனின், "அம்முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரின் நெய்போல விளங்கி நிலைபெற்று, அல்லுழியெல்லாம் பாலினெய் போல வெளிப்படாது நிற்றலான் இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுர னெனக்கண்டு வழிபடுகவென மேற்கொண்டது" எனவும், "விறகிற்றீ, கடைந்துழி வேறாய் விளங்கும்; அல்லுழி விளங்குவதன்று. அது போல, உயிர்கட்குப் புத்தி முத்தி யளித்தற் பொருட்டுக் காணப்பட்ட தாவர வுருவின்கட் கலப்பினால் அதுவேதானாய் அதுவன்றி வேறு பொருளுமா மியல்புடைய முதல்வன், அதுவே தானாய்க் காணாதார்க்குத் தம்மால் அறியப்பட்டதொரு மந்திர சாந்நித்திய மில்வழி ஆண்டு விளங்காது நின்று அம் மந்திர சாந்நியத்தியத்தால் விளங்கித் தோன்றும் பொருளாம். அவ்வாறன்றி அதுவே தானாய்க் காணப்பெறும் உண்மைத் தவமுடையார்க்கு எப்போதும் அப்படியே விளங்கித் தோன்றுன் கொல்லோ? என்க" எனவும் அங்கு உரை விரித்தனர் எமது மாதவச் சிவஞான முனிவர். தானங்கள் தும்பிட்டு - ஈண்டுப் பதிகளிலும் தனிவிடையாரைக் கும்பிட்டு என்றது, தனிவிடையார் மேவியிடங்கொண்டநூளும் தானங்கள் தும்பிட்டு என்ற கருத்துப்பற்றி மேலுரைத்தவற்றைக் கருதுக. விடையாரென்றே அவர் மேவும் தானங்களைக் கண்டு கும்பிட்டு என்க. ஆளுடையபிள்ளையார் திருமுதுக்குன்றத் தலத்தை மலர்தூவி வணங்கிப் பதிகம்பாடியருளியதும், அவ்வாறு வருவன பிறவும் கருதுக. "திருவிருக்குக் குறட் டுணைமலர் மொழிந் தேத்தி" என்பது ஆளுடையபிள்ளையார் புராணம்.

தானங்கள் - இவை திருஎருக்கத்தம்புலியூர் திருக்கூடலையாற்றூர் முதலாயின.

குணதிசை மேல் - நிவாக்கரையே - கிழக்கு நோக்கி நிவாநதியின் கரைவழியாகவே. நிவா என்பது "குறியதன் கீழாக் குறுகலும்" என்ற விதிப்படி நிவ - நிவவு என்றும் வரும். தில்லைக்கு வடபால் புவனகிரி நகர்ப்பக்கம் ஓடும் வெள்ளாறு நிவா எனப்படும். சுவேத நதி என்பர் வடவர். 155

திருவரத்துறை - பதிகக்குறிப்பு:—சிவபெருமான் ஒப்பற்றவர். கருத்துஞ் சொல்லுங் கடந்தவர். ஆயின் அவரை நாம் கருதும் பொருள்களிலும் காணும் பொருள்களிலும் ஒன்றாகவைத்துக் கண்டு தொழற்பாலதேயன்றி வேறு வழியில்லை என்பதாம். "விண்ணோரு மறிகிலார்" என இப்பதிகமுழுதும் வருவதுகாண்க. ஒப்பாரியிலாதார்க்கு ஒப்பனைபலவும் சொல்லிய ஒப்பற்ற கருத்துடைய பதிகம்.

பதிகப்பாட்டுக்குறிப்பு - திருக்குறுந்தொகை:—(1) கடவுள்-உணர்வையும் சொல்லையும் கடத்தவர். "உலகெலா முணர்ந் தோதற் கரியவன்". நஞ்சுண்ட உடலுளான்; நஞ்சினை உண்டும் சாவாததோடு அதனை அடையாளமுற வைத்துக்கொண்ட உடலுடையவர். ஒப்பாரி - ஒப்பு - "அவரன்ன ஒப்பாரி" (குறள்), "ஓர் உவமனில்லி" (தாண்டகம்), "தனக்குவமை யில்லாதான்" (குறள்) என்றவை காண்க. அடல் - நினைத்தபோது வெளிப்பட்டு நினையாதபோது மறைந்திருக்கும் வல்லமை. சுடர் உளான் - ஞானச்சுடர். இங்குச் சுயஞ்சோதியாய் ஒளி வீசும் சிவலிங்கத் திருமேனியினுள்ளே நின்று ஒளி தருபவன். மூர்த்திமான் என்பது ஆகமம்.—(2) விரும்பு - விரும்பப்படும் பொருளுட்சிறந்தது. சுரும்பு - தேன் வண்டு. "வண்டாய்க் கிடந்து மணங் கொள்வ னீசனே" என்றபடி அன்புநுகர வருபவன்.—(3) ஊறு - அருள் ஊற்று.

(4) பகல் - ஞாயிறு. இருள் - இரவு. நிலா - மதி. பரப்பு - இவற்றின் பரப்பு. இரப்பு - இரவலன். சுரப்பு - சுரக்குமிடம்; ஊற்று.—(5) ஐ - தலைவன். கை - கையும் ஊன்றுகோலும்.—(6) மினல் - வாழ்வினை மின்போலக் கணத்தில் மறையும் படி செய்பவன். கனல் - கன்னல்; தீ என்றலுமாம்.—(7) அன் - அன்னை.

தலவிசேடம்:—நெல்வாயில் அரத்துறை என்ற தலம் நடுநாட்டுத் தேவாரப் பாடல்பெற்ற தலங்களுள் முதலில் வைத்தெண்ணப்படுவது. இது கொங்குநாட் டெல்லை தாண்டி மேற்கிருந்து நடுநாட்டுக்குள் வந்தபோது முதலில் காணவுள்ள தலம். திருஞானசம்பந்தருக்கு முத்துச் சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் முத லியவற்றை இறைவர் அருளிய தலம். அவர் புராணம் 185 முதல் 229 வரை பாட்டுக் கள் பார்க்க. மூவர் பாடலும்பெற்ற பெருமையுடையது. நிவாநதியின் வடகரையி லுள்ளது. நிவாவின் கரையில் உள்ள பெருமைபற்றி ஆளுடையபிள்ளையாரும் நம்பி களும் தமது தேவாரங்களிற் போற்றியமை காண்க. நம்பிகளது இத்தலத் தேவார மும் மேற்காட்டிய அரசுகளது திருப்பதிகத்திற்போல, யாக்கை நிலையாமை முதலிய உலகநீதிகளும், இறைவனது எங்கு நிறைந்துங் காணொணாத தன்மை முதலிய ஞான உண்மைகள் பலவும் நிறைந்துள்ளது. திருப்புகழும் பெற்றதலம். திருப்புகழில் ஆளுடைய பிள்ளையார் சிவிகை முதலியன பெற்ற செய்தி பாராட்டப்பட்டது காண்க. சுவாமி - அரத்துறை நாதர். அம்மை - ஆனந்த நாயகி. பதிகம் - 3.

இத்தலம் திருத்தூங்கானைமாடம் என்னும் பெண்ணாகடத்தினின்றும் (இருப்புப் பாதை நிலயம்—விழுப்புரம்—திருச்சி வழி) தென்மேற்கே மட்சாலைவழி நான்கு நாழிகையளவில் அடையத் தக்கது.

திருமுதுகுன்றம் - திருத்தாண்டகம் பதிகக்குறிப்பு:—திருமுதுகுன்றினை உடைய சிவபெருமானைத் தீவினையினால் முன்னம் அறியாமல் திகைத்துத் திரிந்தவாறுதான் என்னே! என்றிரங்கியது. பழம் பொருட்கெல்லாம் பழைமையாய் நின்ற அவரை யும் அறியாதிருந்தது எனது தீவினையும் அறியாமையும் ஆகியவற்றின் மிகுதி என்று எண்ணிய ஆற்றாமை.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கருமணி - கரு ஈன்ற மணி. உலகுயிர்கள் யாவும் தன்னுள் ஒடுங்க வைத்துப் பின் விரிப்பவன். "ஊன் கருவின் உண்ணின்ற சோதி" (4) என்ற கருத்தும் காண்க. ஆற்ற - மிகவும்.—(2) பேணி வாங்குதலாவது தமது கருணையினுள் வைத்து வினையறுத்தல். வாங்குதல் - நீக்குதல். தன்னைப் பேணும் ஆன்மாக்களின் வினைகளைத் தான் வாங்கிக்கொண்டு தனது சிவானந்த நிலையை அவர்களுக்குத் தருபவன் என்றலுமாம். "பசுபோதக் கவளமிடக் களித் துண்டு கருணை யென்னும் வெள்ளமதம் பொழி" என்றது காண்க.—(3) பத்தனாய்... பயில்வித்தானை - நாயனாரது சரிதக்குறிப்பு. பன்னுட் பாமாலை பாடப் பயில்வித் தான் என்பது நாயனாரது மிக மூத்த வயதினையும், அவர்தந் திருவாக்குக்கள் இறை வன் உண்ணின்று உணர்த்திப் பாடுவித்தவை என்பதனையும் உணர்த்துவதாம்.—(4) தான்தெரிந்து ஆளாக்கொண்டு திருவடியென் தலைமேல் வைத்த - குருமூர்த்தமாய்த் தம்மை ஆட்கொண்ட நிலை குறித்தது. திருநல்லூரில் திருவடி சூட்டப்பெற்ற வர லாறு பின்னர் நிகழ்வதாகும்.—(5) தொண்டர்க் கங்கங்கே அறுசமயமாகி - தொண் டர்களின் பக்குவபேதம் நோக்கி அறுவகையாகிய சமயங்களுள் நின்று ஆட்கொள்ப வன். "ஆறு சமயத் தவரவரைத் தேற்றுந் தகையன".—(6) விழவொலி-அறிவுடைய ஞான ஒலி. விண்ணொலி - பூதவொலி. கழல் ஒலி - இறைவனது திருவடிச் சிலம்பு. கைவளை - கூடநின்ற இறைவியாரது கைவளை.—(7) காத்தானை ஐம்புலனும் - ஐம்

(21-வது வரியின்கீழ்ச் சேர்க்க) **பக்கம் ௨௧௫**

## திருமுதுகுன்றம்

*திருச்சிற்றம்பலம்* திருத்தாண்டகம்

*கருமணியைக் கனகத்தின் குன்றொப் பானைக் கருதுவார்க் காற்ற வெளியான் றன்னைக்*
*குருமணியைக்கோளரவமாட்டுவானைக் கொல்வேங்கையதளானைக்கோவணவன் றன்னை*
*யருமணியை யடைந்தவர்கட் கமுதொப் பானை யானஞ்சு மாடியைநா ணபயம் புக்க*
*திருமணியைத்திருமுதுகுன் றுடையான் றன்னை தீவினையே னறியாதேதிகைத்தவாறே.*

*ஊன்கருவி னுண்ணின்ற சோதியானை யுத்தமனைப் பத்தர்மனங் குடிகொண் டானைக்*
*கான்றிரிந்து காண்டீப மேந்தி னானைக் கார்மேக மிடற்றானைக் கனலைக் காற்றைத்* [த்த
தான்றெரிந்தங்கடியேனை யாளாக்கொண்டு தன்னுடையதிருவடியென் றலைமேல்வை
தீங்கரும்பைத்திருமுதுகுன் றுடையான் றன்னைத்தீவினையேனறியாதேதிகைத்தவாறே.

*திருச்சிற்றம்பலம்*

புலச் சேட்டை அடியாரை அணுகாமற் காத்தவன். "பொறிவாயி லைந்தவித்தான்" (குறள்) என்ற கருத்துமாம். மாத்து - பெருமை. "மால்பிரமன் னறியாத மாத்தானை" (நம்பிகள் - தக்கேசி - வலிவலம்). செருக்கு என்று கொண்டு செருக்கை அவித்து என்றலுமாம்.—(8) துறவாதே யாக்கை துறந்தான் - இயல்பாகவே பாசங்களி னீங் கியவன். பிறவாதே யெவ்வுயிர்க்குந் தானேயாகி - "கருவினு லன்றியே கருவெலா மாயவன்" (பிள்ளையார் - கொல்லி - தென்குடித்திட்டை - 3). அனவரதம் - எப் போதும்.—(10) இகழ்ந்தானைப் புகழ்ந்தான் - முரண் அணி. புகழ்ந்தான் என்பது பாடல் கேட்டிரங்கி ஏற்று வரங்கொடுத்தான் என்ற பொருளில் வந்தது. மலைமகளை யும் - மாலினையும் ஒரு பாகம் வைத்தவன். அர்த்தநாரீசர் - சங்கர நாராயணர் என் னும் மூர்த்தங்கள் காண்க.

தலவிசேடம் :—திருமுதுகுன்றம். இது பழமலை, விருத்தாசலம், விருத்தகிரி முத லிய பல பெயர்களாலறியப்படும். "மூத்தா யுலகுக்குக்கெல்லாம் முதுகுன்றம்" (நம்பி கள் தேவாரம்) என்றபடி உலகத்தில் மலைகள் படைக்கப்படுவதன் முன் சிவன் படைப் பிலே உண்டாக்கப்பட்ட மலையாதலின் இப்பெயர் பெறும். மூவர் தேவாரமும் பெற்ற பெருமையுடையது. ஆளுடைய பிள்ளையார் இதன் வழியில் அடையும்போதும், இதனை வலஞ்செய்தபோதும், தலத்தைத் தரிசித்தபோதும், தனித்தனி பதிகங்கள் பாடியருளிய பெருமை பெற்றது. பிரமன், அகத்தியர், சுவேதன் என்ற அரசன் முதலாயினோர் பூசித் துப்பேறுபெற்ற தலம். தேவர் முனிவர் முதலியோர் சிவனைத் தியானித்துப் பொழிந்த ஆனந்தக் கண்ணீரே ஆறாகப் பெருகித் திருமணிமுத்தாறாக வந்தது என்பது தலபுராண வரலாறு. இத்தலத்தில் இறப்பவர்கட்கு இறைவன் மந்திர உபதேசம் செய்தும், இறை வியார் இளைப்பாற்றியும் பிறவி வெப்பம் தீர்க்க இவ்வாறு இங்கு இறந்தார்க்கு முத்தி தரும் தலமாதலின் இது விருத்தகாசி எனவும்படும். ஆளுடைய நம்பிகள் இங்குப் பெருமானைப் பாடிப் பன்னிரண்டாயிரம் பொன்பெற்று அவற்றைத் திருமணிமுத்தாற் றிலேயிட்டுத் திருவருளால் திருவாரூரிற்பாடிக் கமலாலயத் திருக்குளத்தில் வடகீழ்த் திசைப் படியில் வரக்கொண்டு எடுத்தனர். அவர் புராண வரலாறு ஏயர்கோன் புரா ணத்தில் 107, 109, 127—139 பாட்டுக்களிற் காண்க. சுவாமி - பழமலைநாதர். அம்மை - பெரிய நாயகி. ஆறு - திருமணி முத்தாறு. மரம் - வன்னி. பதிகம் - 11. இத்தலம்பற்றித் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பழமலையந்தாதி முதலிய நூல்கள் இயற்றியுள்ளார்கள்.

இது விருத்தாசலம் என்ற தென்னிந்திய இருப்புப்பாதைச் சந்தி நிலயத்தினின் றும் ½ நாழிகை யளவில் அடையத் தக்கது.

1421. (வி - ரை) ஆறாத சீர் - என்றும் குறையாத சிறப்பு. மாபுராணங்களாலும் மற்றை உபபுராணங்களாலும் பேசப்படும் ஏனைத்தலங்கள் போலன்றி, இத்தலம், இறைவனது வாக்காகிய புண்டரீகம், மாண்டூக்கியம் என்ற உபநிடதங்களாகிய வேதங் களாலும், "அவனே தானே யாகிய வந்நெறி, யேக னாகி யிறைபணி" நின்ற ஆசாரியர் களது திருவாக்காகிய தேவார திருவாசக முதலிய தமிழ்வேதங்களாலும் பேசப்பட்ட நித்தியமாகிய சிறப்பு. "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும், சிறப்பர் வாழ்" எனவும், "செல்வ முயர்கின்ற செல்வர் வாழ்" எனவும், "அன்னம் பாலிக் கும்" எனவும் முக்காலத்துக்கும் பொதுவாக நிகழ்காலத்தாற் கூறிய தமிழ் வேதத் தின் பயனாக என்றைக்கும் குறையாத சிறப்புடன் விளங்குவது இத்தலம் என்க. இப் புராணத்தைத் தோற்றுவித்துத் தந்தருளியது இத்தலத்தின் சிறப்பேயாதலும் காண்க. இங்கு ஆடுகின்ற அத்தனது அருட்கூத்தின் சீர் என்றும் குன்றாத இயல்புடையு தாதலும் கருத்து.

ஆறுத சீர் என்பதனை முதனிலைத் தீபமாகக் கொண்டு, தில்லை என்பதனோடும், அம்பலம் என்பதனோடும், சடையார் என்பதனோடும், அடி என்பதனோடும் தனித்தனி கூட்டி உரைக்க நின்றது. ஏனைச் சிறப்புக்கள் தலவிசேடத்துட் காண்க.

**தில்லை** - தலப்பெயர். தில்லை என்ற தலமரத்தினுற் போந்தது.

**அம்பலம்** - திருச்சிற்றம்பலம். இறைவன் அருட்கூத்தாடும் இடம். பொன் மன்றம்.

**வான் ஆறு** - கங்கை. **புடைபரத்தல்** என்றது வெளிப் போந்து பெருகி உலகை அழிக்காமல் சிறு வடிவினதாய் ஒடுங்கி அச்சடைக்கற்றையின் புடையே பரவி நிற்பது என்றதாம். **மலர்** - கொன்றை மலர். ஏனை ஆத்தி - தும்பை முதலியனவுமாம் எனினும் அடைமொழியின்றி வந்தவிடத்துச் சிறப்பாயுரிய கொன்றையினையே குறிக்கும் என்ப.

**அடிவணங்கி...பயன் கொள நினைந்து** - பொற்றுடொழ - "ஊனடைந்த உடம்பின் பிறவியே தானடைந்த உறுதியைச் சாரும்" என்று இக்கருத்தைப் புராண முகப்பில் ஆசிரியர் தீட்டி வைத்தமை காண்க. ஊனின்றி உயிரும், உயிரின்றி உடலும் பயன் பெருவாதலின் ஊனுலு முயிராலும் உள்ள பயன் என்முர். ஆல் உருபுகள் முறையே கருவி - கருத்தாப் பொருள்களில் வந்தன. "ஊனடைந்த உடம்பின் பிறவி" என்ற கருத்துமிது. ஆண்டுரைத்தவை பார்க்க. "உயிர் இயக்கியவாறே உடம்பு அதன்வழித்தாய் ஒற்றுமைப்பட நிற்பினும், யாத்திரை சேறல் கைத்தொண்டு செய்தல் முதலியன உடம்பையின்றி உயிருக்கு அமையாமை கருதியும், சிவபிரானைத் தரிசித்தலும் தரிசித்தமாத்திரத்துப் பேரானந்தமடைதலும் உயிரானேயன்றி உடம்பா லமையாமையின் ஊனுலு முயிராலும் என வேறுபிரித்துக் கூறினர்" என்பது ஆறுமுகத் தம்பிரானுர் உரை. "உடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே" என்பர் திருமூலதேவ நாயனர். "எடுத்த பொற் பாதமுங் காணப்பெற்முல், மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே" என்று இத்திருத்தலத்தை யடைவதுபற்றி நாயனர் அருளியதும், திருவங்கமாலைக் கருத்துக்களும் காண்க.

**புலியூர்** - புலிக்கால் முனிவர் பூசித்துப் பேறுபெற்றமையாற் போந்த பெயர். 156

வேறு

1422. நாவுக் கரசரு மிருவர்க் கரியவர் நடமா டியதிரு வெல்லைப்பான்
மேவித் தலமுற மெய்யிற் ரெழுதபின், மேன்மே லெழுதரு விழைவோ
காவிற் களிமயில் மகிழ்வுற் றெதிரெதி ராடக் கடிகமழ் கமலஞ்சூழ் [டுங்
வாவித் தடமலர் வதனம் பொலிவுறு மருதத் தண்பணை வழிவந்தார்.

(இ - ள்) நாவுக்கரசரும் - திருநாவுக்கரசு நாயனரும்; இருவர்க்கு......தொழுத பின் - பிரம விட்டுணுக்களுக்கு எட்டாத சிவபெருமான் அருட்கூத்தாடுகின்ற திரு வெல்லையினைச் சென்று சேர்ந்து நிலம் பொருந்த மெய்யிற் ரெழுதபின்னர்; மேன்மேல்......விழைவோடும் - மேலும் மேலும் பொங்கி எழுகின்ற ஆசையுடனே; காவில்......தண்பணை - சோலைகளில் களித்த மயில்கள் மகிழ்வுற்று எதிரெதிராக ஆட, மணங்கமழும் தாமரைகள் நிரம்பிய தடாகங்களின் மலர்களாகிய முகங்கள் விளங்குகின்ற மருதத்தைச் சார்ந்த குளிர்ச்சியுடைய வயல்களின் பக்கமுள்ள; வழிவந்தார் - வழியே வந்தனர்.

(வி - ரை) திரு எல்லைப்பால் மேவி - திருஎல்லை என்பது தில்லை நகரத்துக்கு ஒரு காத தூரத்தில் நாற்புறமும் உள்ள அமைப்பு. "தில்லை மல்லலம் பதியி

தலமுற மெய்யிற் றெழுது - திருவெல்லையை அடைந்தவுடனே திருமேனி நிலம் பொருந்த வீழ்ந்து வணங்கி. மெய்யில் - உண்மையான என்ற பொருளும்பட நின்றது.

மேன்மேல் எழுதரு விழைவு - தில்லையை அணுக அணுக அதனுட்புக்கு ஆனந்த நடங் காணும் ஆசை பெருகிற்று. "ஆசையும் பொங்கி மேன்மேன், மேவிய நெஞ்சம் வேறோர் விருப்புற விரையா நிற்கும்" (746) என்றது காண்க.

காவிற் களிமயில் எதிரேதிராட - வாவித் தடமலர் வதனம் போலிவுறும் - தன்மை நவிற்சியும் தற்குறிப்பேற்றமும் கலந்த அணிநயம் காண்க. பூஞ்சோலைகளும் அவற்றில் மயில்களும் தாமரைத் தடங்களும் வயல்களுமாக உள்ள மருதநிலப் பண்பு மிகுந்த நாட்டியல்பு குறித்தது. மயில் கார்கண்டு களிக்கு மியல்புடையதாதலின் "இருள்படப் பொதுளிய" சோலையிற் களித்து ஆடின என்க. மலர் முகம் - உருவகம். வதனம் போலிவுறும் - வினைவினை முதலொடு செறிந்தது. மயில்கள் ஆட, மருதமாகிய மகள் கண்டு தாமரையாகிய முகத்தால் பொலிவு காட்டிற்று என்க.

பண்ணை என்பது பணை என நின்றது. இந்த மருத நிலத்தின் இயற்கையழகினை மேல் வரும் பாட்டில் மேலும் விரிப்பதும் காண்க.

யாப்பு - இதுவரை கொச்சகக் கலிப்பாவாகிய நாற்சீர்ச் செய்யுளால் யாத்துச் சரிதம் சொல்லிப் போந்த ஆசிரியர், தில்லையிற் றிருமுன்பு அடையும் செலவு வரை கூறும் இப்பகுதியைச் சந்த விருத்தமாய் எழுசீர்க்கழிநெடில் விருத்தத்தில் யாத்த அமைதி காண்க. இதுபோலவே ஆளுடைய நம்பிகளதும், ஆளுடைய பிள்ளையாரதும் தில்லைவழிச் செலவினை, முன் சொல்லிவந்த கொச்சகக் கலிப்பாவினின்றும், மாற்றி முறையே எண்சீர், அறுசீர்க் கழிநெடில் விருத்தங்களால் யாத்த கருத்தும் காண்க. சைவத் திருமரபில், தில்லையிற் சென்று சேர்தல், தனிச் சிறப்புடையது என்று நாம் காணக் காட்டுதற்கு வேறு யாப்பினால் யாத்தனர். பொருள் வேறு காட்டச் சொல்லமைதியும் வேறு காட்டுதல் ஆசிரியரது மரபு. நாற்சீரினின்றும் எழுசீர் வருகின்றது; சரியையாதி நாற்சீரினின்றெழுகின்றோர் ஞானங்கடந்து மோனமுங் கடந்து நிற்கும் ஆனந்த நிலையில் வரும்போது மேல் எழுகின்றனரன்றோ? ஆளுடைய நம்பிகள் சரிதத்தில், "அரம்பையர்தங் கீதவொலி யருத்தில்லை மருங்கணைந்தார்" (237) என்றதற்குமேல், "தேம லங்கலணி மாமணி மார்பிற் செம்ம லங்கயல்கள் செங்கம லத்தண்" (238) எனவும், ஆளுடையபிள்ளையார் சரிதத்தினுள் "தேவர்கடம் பெருந்தேவர் திருத்தில்லை வழிச்செல்வார்" (144) என்றதனை மேல் தொடர்ந்து "நள்ளி ருட்கணின் றுடுவா ருறைபதி நடுவுகண் டனபோற்றி" (145) எனவும் யாத்த சொற்பொருளமைதிகள் இங்குக் கருதத்தக்கன.

விரைவோடும்—களியளி—என்பனவும் பாடங்கள்.  157

1423. முருகிற் செறியிதழ் முளரிப் படுகரின்
முதுமே திகள்புது மலர்மேயும்
அருகிற் செறிவன மெனமிக் குயர்கழை
யளவிற் பெருகிட வளரிக்குப்
பெருகிப் புடைமுதிர் தரளஞ் சொரிவன
பெரியோ ரவர்திரு வடிவைக்கண்
டுருகிப் பரிவுறு புனல்கண் பொழிவன
வெனமுன் புளவளை வயலெங்கும். ௧௫௮

(இ - ள்) முருகில்......அருகில் - மணமுடைய நெருங்கிய இதழ்களையுடைய தாமரை மலர்களுள்ள பள்ளங்களில் முதிய எருமைகள் புதிய மலர்களை மேய்கின்ற

இடங்களின் பக்கங்களில்; செறி வனமென மிக்கு உயர் கழை அளவில் - நெருங்கிக் காடுபோல மிக உயர்ந்த மூங்கிலின் அளவாக; பெருகிட வளர்......சொரிவன-பெருக வளரும் கரும்புகள் பெருத்து முதிர்ந்த கணுக்களில் முத்துக்களைச் சொரிகின்றவை; பெரியோர்......பொழிவன என - பெரியாராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரது திருவேடத்தினைக்கண்டு உள் உருகி அன்புமிகுதியினாலே கண்ணீர் பொழிவன போல; முன்புவள வயலெங்கும் உள - முன்பு வளமையுள்ள வயல்களிலெங்கும் உள்ளன.

(வி - ரை) படுகரில் தாமரைகள் பூத்துள்ளன; முதிய எருமைகள் அந்நீரினுள்ளே சென்று புதுமலர்களை மேய்கின்றன; அதன் பக்கத்தே கரும்புகள் மூங்கில் போலச் செறிந்தும் உயர்ந்தும் வளர்ந்து கிடக்க அவற்றின் பருத்த கணுக்கள் வெடித்து முத்துச் சொரிகின்றன; அந்தக் காட்சி நாயனாரது திருவேடங்கண்டு அன்பினாற் கண்ணீர் சொரிவது போன்றன என்க.

**முளரிப்படுகர்களும் அயலில் கழையென வளர் இக்கும்** நீர்ச் செழிப்பையும், நாட்டு நிலவளம் முதலியவற்றையும் குறிக்கின்றன. முளரிப்படுகர் என்றது நீர்வளங் காட்டிக் கரும்பு பெருகுதற்குக் காரணங் கூறியவாறு.

**முதுமேதிகள் புதுமலர் மேயும்** - "மருமேவு மலர்மேய" (1273) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. மந்த மதியினவாகிய மேதிகளும் மணமும் குணமும் அறிந்து புதுமலர்களை விரும்பி மேய்வன என்பதனால் அவற்றினும் மேம்பட்ட அறிவு நிலையுள்ள பிராணிகள் விசேடித்த அறிவுடன் விளங்குமென்ற சிறப்பும், மேதிகள் மேய்ந்து வயிறு நிறைத்துக் கொள்ளுமளவு புதுமலர்கள் நிரம்புவன என்று நாட்டுச் சிறப்பும் கூறியவாறு. **முதுமேதிகள்** - வயதின் அனுபவ முதிர்ச்சியினாற் கண்டு என்பது குறிப்பு.

**கழை அளவிற் பெருகிட வளர் இக்கு** - "காடெல்லாங் கழைக் கரும்பு" (67) என்றவிடத்துரைத்தவை பார்க்க.

**இக்குப் பெருகிப் புடைமுதிர் தரளம் சொரிவன** - புடை - இக்குப் பக்கங்களில் உள்ள கணுக்கள் குறித்தது. முத்துக்கள் பிறக்குமிடங்கள் இருபது என்ப. அவற்றுள் கரும்பும் ஒன்று. "வயன்மென் கரும்பிற் படுமுத்தும்" (492) என்ற விடத்துரைத்தவையும் பிறவும் பார்க்க. முதிர்புடை என்றும், சொரிவன - பொழிவன என - என்றும் கூட்டுக. முத்துக்களைச் சொரிபவை, கண்டு உருகிக் கண்ணீர் பொழிபவை போன்றன என்பது மெய்யும் தொழிலும் பற்றிவந்த உவமையொடு கூடிய தற்குறிப்பேற்றம்.

**பெரியோரவர் திருவடிவைக் கண்டு உருகிக் கண்புனல் பொழிவது** அன்பினிலக்கணம். "நேய மலிந்தவர் வேடமும்......அரனெனத் தொழுமே" என்ற சிவஞான போதம் பன்னிரண்டாஞ் சூத்திரத்திற் கண்டபடி அடியார் திருவேடத்தைக் கண்ட போது பரமேசுரனெனவேகண்டு அன்பு கூர்ந்து அகமுருகி வழிபடுதல் வேண்டுமென் பதுமுறை. "ஆசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட் டவர்கரும முன்கரும மாகச் செய்தே, கூசிமொழிந் தருண்ஞானக் குறியி னின்று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே" என்ற சிவஞான சித்தியாருங் காண்க. சிவனை வழிபடு முறையெல்லாம் அடியார் திருவேடத்துக்கு மொக்கும். நாயனாரது திருவேடம் கண்டார்க்கு அன்பையுண்டாக்கும் தன்மையுடையதென்று திருவேடத்தினது சிறப்புக் குறிக்கப் பட்டது.

**தரளஞ் சொரிவன - பரிவுறு புனல்கண் பொழிவன என** - என்பது ஆசிரியரது சிவக்கண்ணுக்குத் தாவரங்கள் முதலிய எல்லா விடத்தும் சிவமும் அடியார்நிலையுமாய்த் தோன்றும் அன்பியல்பு பற்றி எழுந்ததென்க. "மரங்களுமா குதிவேட்குந் தகையவென (திருஞான - புரா - 7), "பத்தியின் பால ராகிப் பரமனுக் காளா மன்பர்,

தத்தமிற் கூடி ஞர்க டலேயினுல் வணங்கு மாபோல்" (72), "அன்பர் ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்கள்" (71) முதலியவை பார்க்க. வளவயலேங்கும் பொழி வன எனத் தாளஞ்சோரிவன உள என்று கூட்டி அதற்கேற்ப உரைப்பதுமொன்று.

வளவயல் எங்கும் - வளம் பொருந்திய - நன்கு உழுது எருமுதலியன இட்டு வள மாக்கப்பட்ட - வயல்களில் கரும்பு விளேவன. கரும்புகளேக் கூறவே, நெற்பயிர் தாமே இன்றியமையாது பெறப்படுதலின், விரித்துக் கூருது, "அயனெற் பணேவய லவை பிற் படும்வகை" என்று மேல்வரும் பாட்டிற் குறிப்பினுல் அவற்றினதிருப்புக்கூறி மேற் சென்றமை காண்க. "நிலத்திற் கனியென்ப நெல்லுங் கரும்பும்" என்பதும் காண்க. 158

1424. அறிவிற் பெரியவ ரயனெற் பணேவய
லவைபிற் படும்வகை யணேகின்ருர்
"பிறவிப் பகைநெறி விடுவீ ! ரிருவினே
பெருகித் தொடர்பிணி யுறுபாசம்
பறிவுற் றிடவணே யுமி !"னென் றிருபுடை
பயில்சூழ் சினேமிசை குயில்கூவுஞ்
செறிவிற் பலதரு நிலேயிற் பொலிவுறு
திருநந் தனவன மெதிர்கண்டார். கடுகூ

(இ - ள்) அறிவிற் பெரியவர்......அணேகின்ருர் - அறிவினுற் பெரியோராகிய திருநாவுக்கரசு நாயனுர், அயலிலுள்ள நெல்வயல்கள் பின்னுகும்படி கடந்து முன் சென்று வந்து அணேகின்ருராய்; "பிறவி......அணேயுமின் !" என்று - பகையாகிய பிறவி சேரும் நெறிகளே விடுவீர்! இருவினேகள் பெருகித் தொடர்ந்து பிணிக் கும் பாசம் நீங்கும்படி இங்கு அணேயுங்கள் ! என்று ; சூழ் சினேமிசைப் பயில் குயில் கூவும் - சூழ்ந்த மரக்கிளேகளின் மேலே பயின்ற குயில்கள் கூவுதற் கிடமாகிய ; செறிவில்...திருநந்தனவனம் - பல மரங்கள் நெருங்கி நிலேத்து அழகாக விளங்கும் திருநந்தன வனங்களே ; எதிர்கண்டார் - எதிரில் கண்டனர்.

(வி - ரை) பெரியவர் - அணேகின்ருர் - எதிர் - குயில் கூவும் - நந்தனவனம் - கண்டார் - என்று கூட்டியுரைத்துக் கொள்க.

அறிவிற் பேரியவர் - முன்பாட்டில் கண்டார் கசிந்து உருகும் திருவடிவிற் பெரியவர் என்ருர் ; வடிவினுல் மட்டுமேயன்றி அவ்வடிவுக்குள் விளங்கும் அறிவி னுலும் பெரியவர் என்றபடி. அறிவு - இங்குச் சிவஞானம் குறித்தது.

அயல் நெற்பணே - முன் சொல்லிய கரும்புகளுக்குப் பக்கத்தில் உள்ள நெல் வயல்கள். வெளிப்புறத்தினின்றும் தில்லே காணவருவார் காணும் அமைப்புக்கள் அவ்வரிசையில் ஒவ்வொன்ருகக் கூறப்பட்டன. முதலில் திருவெல்லேயும், பின்னர்ச் சோலேகளும் புறத்தில் உள்ள வாவிகளும், (1422), அவற்றினே அடுத்துப் படுகர்களும், கரும்புப் பயிர் செய் நிலங்களும் (1423), பின்னர் நெல்வயல்களும், பின்னர் நகரினே அடுத்து நந்தனவனங்களும் (1424) (1425), அவற்றின் பின்னர் நகர எல்லே மதிலும் மதில்வாயிலும் (1426), பின்னர்த் திருவீதிகளும் (1427), பின்னர்க் கோபுரமும் கோபுர வாய்தலும் (1429) எனஇவ்வாறு கண்டுகொள்க.

அவை பிற்படும்வகை அணேதலாவது - கடந்து செல்லுதல். பிற்படும்வகை என்ற இலேசினுல் அவற்றின் மேன் மனம் வைக்காது என்ற குறிப்பும் காண்க. நந்தனவனம் கண்டார் என்ற குறிப்புமது.

"பிறவி......அணையுமின்!" என்று - இது அங்கு நந்தனவனங்களின் மரக்கிளைகளிலிருந்து குயில் கூவும் பொருள். விடுவீர்! - பிறவிப் பாவநெறிகளை விடும் எண்ண முடையீர்களே!. எண்ண முடையவர்களாயின் என்றும், விடுங்கள் என்றும் உரைத்தலுமாம். விடுவீர் - அணையுமின் என்க. இருவினை......பறிவுற்றிட - பிறவியில் இருவினையும் பெருகுகின்றன; அதனால் உம்மைக் கட்டிய பாசம் மேலும் பெருகி வலுக்கின்றது; அது பறியுண்டு போகும்படி. பிறவிப் பவநெறி என்பது பாடமாயின் பாவம் என்பது பவம் எனக் குறுக்கல் விகாரம் என்றுதல், பிறவிப்பவம் - பவம் - பிறப்பு என ஒரு பொருளின் மேல்வந்த இருமொழிச் சொற்கள் என்றுதல் கொள்க. பிறவி - "ஊனடைந்த உடம்பின் பிறவி" என்றபடி உடலைக் குறித்தலால் மாயா மலமும், இருவினை - கன்ம மலமும், பாசம் - ஆணவ மலமும் குறித்தன. இருவினை - நல்வினை தீவினை என்ற இரண்டும் பிறவிக்கேதுவாவன. ஆதலின் சிவநெறி யணைதலொன்றே பாசம் பறிவுறுதற்கு வழி எனப்பட்டது. பிறவியும் வினையும் ஆணவத்தைச் சார்ந்தே உயிரைப் பந்தித்தலால் பிறவிப் பவநெறி - இருவினை பெருகித் தொடர் பாசம் என்று பாசத்தொடு தொடர்புபடுத்தி வைத்தார். பிணி - பிணிப்பு. முதனிலைத் தொழிற்பெயர். நோய் என்றுகொண்டு பிறவிநோய் குறித்ததென்றலுமாம்.

பெரியவர் - அணைகின்றார்; இது நல்ல சமயமாதலின் நீவிரும் அணைவீராயின் அவரைத் தரிசித்து, அந்த நற்பயனால் அருட்கூத்தனையும் கண்டு, பிறவி யறுதற்கு வழி செய்து கொள்வீர் என்று தொடர்புபடுத்தி உரைக்கவும் நின்றது. இப்பொருளில் கண்டார் என்ற வினைக்கு அணைகின்ற அவர் என்ற எழுவாய் வருவிக்க.

சூழ் சினைமிசைப் பயில் குயில் என்க. பயிலுதல் - அவ்விடத்தில் சேர்ந்து பழகுதலும் இவ்வாறு கூவுதலும் பயின்ற என்க. மணிவாசகப்பெருமானார் அருளிய குயிற்பத்து என்ற உபதேசத்தைக் கேட்டு அந்தப் பரம்பரையில் வந்து அவ்வாறே கூவிப் பயின்ற என்றலுமாம். "எழில் பொழில் குயில் பயில்" என்ற ஆளுடைய பிள்ளையாரது திருத்தருமபுரத் தேவாரமுங் காண்க.

தருப் பல நிலையிற் பொலிவுறு திருநந்தனவனம் - தருப்பல - என்பன நந்தன வனங்களில் கோட்டுப்பூக்களுக்காக வைக்கப்படும் பூமரங்கள். இவை "வன்னி கொன்றை" (240) என்ற திருப்பாட்டில் முன்னர் வகுத்துக் கூறியுள்ளாராதலின் இங்குப் பலதரு எனத் தொகுத்துக் கூறினார். நந்தனவனங்களிற் கோட்டுப் பூக்கள் பெறும் மரங்களைவைத்தல் பெரும்பயனும் நீடித்தபயனும் தருமாதலின் அவற்றை ஆசிரியர் பெரிதும் விதந்து கூறியருளுவது காண்க. "பித்தர்க்குப் பத்தராகி யரும்புநன் மலர்கள் கொண்டு" "பூமாலை புனைந் தேத்தி" என்றபடி கைத்தொண்டும் விடாது செய்யும் நாயனார் அத்திருத்தொண்டுபெற்றிய திருநந்தனவனங்களை விரும்பிக்கண்டனர் என்பது. ஆளுடைய நம்பிகளும் இவற்றை விரும்பிக்கண்டு பணிந்து சென்றதும் அவர் முன்னை நிலையில் "வள்ளல் சாத்து மதுமலர் மாலை" தொடுத்து எடுத்து அணைந்தும், அதன் பொருட்டுப் பல நாளும் திருநந்தனவனத்திற் சென்று மலர் கொய்தும்வந்த முன் பழக்கம் பற்றியதாமென்க. கோட்டுப் பூக்களைக் கூறியதனால் இனம்பற்றி ஏனையவகையும் இருத்தல் உடன்கொள்ளப்படும். இவைகளை முன்னர் (240) விரித்தமை நினைவுகூர்க.

திருநந்தனவனம் எதிர்கண்டார் - நெற்பணையவை பிற்படும் வகை அணைகின்ற அவர்க்கு நந்தனவனங்கள் எதிரிற் காணப்பட்டன என்பதனால் செல்லும் வழியில் பலப்பல பொருள்களிருப்பினும் சிவமும் சிவச்சார்புபற்றிய பொருள்களுமே பெரியோர் கண்ணுக்குப் பலவைன என்ற உண்மையை விளக்குவதாம். ஞாயிற்றின்

முன் இருள்போலச் சத்தினிடத்து அசத்துப்பிரகாசியாதென்றும், "பரமேபார்த் திருப்பர் பதார்த்தங்கள் பாரார்" என்றும் வரும் ஞானசாத்திர உண்மைகளின் கருத்து இது.

எதிர்கோண்டார்—என்பதும் பாடம். 159

1425. அவர்முன் பணிவொடு தொழுதங் கணைவுற
வணிகொம் பரின்மிசை யருகெங்குந்
தவமுன் புரிதலின் வருதொண் டெனுநிலை
தலைநின் றுயர்தமி ழிறையோராம்
இவர்தந் திருவடி வதுகண் 'டதிசய'
மெனவந் தெதிரர கரவென்றே
சிவமுன் பயின்மொழி பகர்கின் றனவளர்
சிறைமென் கிளியொடு சிறுபூவை. கசO

(இ - ள்) அவர்முன்......அணைவுற - முன்னே பணிவுடனே தொழுது கொண்டு நாயனுர் அங்குச்சேர; அணி......எங்கும் - அழகிய மரக்கொம்புகளின் மேலே பக்கங்களில் எங்கும், தவம்முன்......கண்டு - முன்னுளில் தவம் செய்தலால் வருந் திருத்தொண்டு என்னும் நிலையில் தலைசிறந்து நின்று உயர்ந்த தமிழ் அரசராகிய இவரது திருவடிவினைக் கண்டு; வளர்மென்......சிறுபூவை - வளரும் சிறையுடைய கிளிகளும் சிறிய நாகணங்களும்; "அதிசயம்" என்று - "இஃது அதிசயம்" என்று சொல்லி; வந்து எதிர் "அரகர" என்றே......பகர்கின்றன - எதிரில்வந்து "அரகர" என்றே சிவனைத் துதிக்கின்ற முன்பயில் மொழிகளைச் சொல்கின்றன.

(வி - ரை) முன்பணிவோடு தொழுது அங்கு அவர் அணைவுற - திருநந்தனவனங்களைக் கண்டவுடன் அவர் பணிந்தும் தொழுது கொண்டும் அங்கு சேர்ந்தனராக. முன் - அங்குச் சேர்வதற்கு முன்பே. பணிதல் - உடல் வணங்கி இறைஞ்சுதல். தொழுதல் - மூன்றங்கம், ஐந்தங்கம், எட்டங்கம் இவைகளால் வணங்குதல். "பன்மலர்ப்புனித நந்தன வனங்கள் பணிந்து சென்றனன்" (240) என்றபடி இவ்வாறே ஆளுடைய நம்பிகளும் வணங்கிச் சென்றது காண்க. சிவனுக்காகும் தளிரும் இலையும் பூவும் காயும் கனியும் வேரும் கொண்ட தூய உயிர்களே நந்தனவனங்களில் மரம், செடி, கொடிகளாயிருத்தலின் வணங்கினர்.

எங்கும் அருகு - அணி கொம்பரின்மிசை - வளர்மென் கிளியொடு சிறு பூவை - திருவடிவு - கண்டு - 'அதிசயம்' என எதிர் வந்து "அரகர" என்றே சிவமுன் பயின் மொழி பகர்கின்றன எனக்கூட்டி உரைத்துக் கொள்க.

தவமுன்......உயர் - முன்னே நிலையிற் றவம்புரிந்ததனுல் தொண்டராகுநிலை பெற்றனர்; அந்நிலையிற் றலைநின்றனர்; தமிழ் வேந்தருமாயினர் என்பது. "முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்ருன்" என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. தமிழரசராயினமை இறைவனருளாலாகியது. 1339-பார்க்க. தொண்டெனுநிலை தலைநின்று - தொண்டாகிய நிலையிற் சிறந்து என்றும், தொண்டின் நிலைபெற்றதனுல் பிறயாவருடைய தலையிலும் நின்று எனவும் உரைக்க நின்றது.

திரு வடிவுகண்டு அதிசயம் என்று - "அத்த னுண்டுதென் னடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே" என்று மணிவாசகனுர் அருளியபடி இந்தத் திருவடிவுடைய அடியவரைக் காணும் பேறு தமக்குக் கிடைத்தமைபற்றிப் பெருமிதமும் ஆனந்தமுமுடைந்து இஃது ஓர் அதிசயம் என்றன.

**எதிர் வந்து அரகரவென்றே சிவமுன் பயின்மொழி பகர்கின்றன** - முன் பல காலும் அடியவரைக்கண்டு சொல்லிய பழக்கத்தால் அரகர என்று சிவமொழிகளைச் சொல்லின. அரகர என்று முன்னே தொடங்கிக்கொண்டு வேதங்களையும் திருப்பதிகங்களையும் சொல்வன என்றலுமாம். "பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோது மோசை கேட்டு, வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லு மிழலை யாமே" என்ற ஆளுடையபிள்ளையார் திருவாக்கும், "வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாந், தெள்ளு மோசைத் திருப்பதி கங்கள்பைங், கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்" (93) என்றதும், ஆண்டுரைத்தவையும் காண்க.

**சிவமுன் பயின்மொழி** - அரகர என்ற சிவநாமத்தை முன்சொல்லி முன்பயின்ற - பழகிய - மொழிகள் என்றலும் குறிப்பு. தில்லையைச் சாரும் எண்ணிறந்த அடியார்கள் சொல்லக்கேட்ட பழக்கத்தால் கிளிகளும் பூவைகளும் சிவ மொழி முழக்கின என்பது. "சிறையாரு மடக்கிளியே" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரக் கருத்தும் இங்கு நினைவு கூர்தற்பாலது. வளர்சிறை என்றதனால் சிறைப்படுத்திச் சிறகரிந்தனவன்றி இயல்பாய் வளரும் சிறகுடையவை என்பதும் குறிப்பு.

சிறுமென்—சிலபூவை—என்பனவும் பாடம். 160

1426. அஞ்சொற் றிருமறை யவர்முன் பகர்தலு
மவருந் தொழுதுமு னருள்கூரு
நெஞ்சிற் பெருகிய மகிழ்வுங் காதலு
நிறையன் பொடுமுறை தடுமாறச்
செஞ்சொற் றிருமறை மொழியந் தணர்பயி
றில்லைத் திருநக ரெல்லைப்பான்
மஞ்சிற் பொலிநெடு மதில்சூழ் குடதிசை
மணிவா யிற்புறம் வந்துற்றார். ௧௬௧

(இ - ள்) அஞ்சொல்......தொழுது - அழகிய சொற்களையுடைய திருமறைகளை அவர்முன்பு அவ்வாறு அவை சொல்லுதலும் அவரும்தொழுது; முன் அருள்கூரும்... தடுமாற - முன்னமே அருள் நிறைந்த தமது திருமனத்தில் மேலும் பெருகிய மகிழ்ச்சியும் காதலும் நிறைந்த அன்புமாகிய இவற்றினாலே சொற்கள்தடுமாற ; செஞ்சொல்... வந்துற்றார் - செவ்விய சொற்களையுடைய திருமறைகளை ஓதும் அந்தணர்கள் பயில்கின்ற திருநகரின் எல்லைப்புறத்தில் மேகங்களாற் பொலியும் நீண்ட மதிலாற் சூழப்பட்ட மேற்குத்திசை மணிவாயிலின் புறத்தே வந்து சேர்ந்தனர்.

(வி - ரை) அஞ்சொற்றிருமறை - முன்பாட்டில் "அரகர வென்றே சிவமுன் பயின்மொழி" என்ற அவை. வேதங்களும் திருப்பதிகங்களுமாம். அவருந் தொழுது - சொல்பவை கிளிகளும் சிறு பூவைகளுமேயாயினும், அவை சிவமொழிகளைச் சொல்லியபடியால் சிவனடியாராந் தன்மை பெற்றன என்று தொழுதனர். சிவபூசைக் காகும் பொருள்தரும் தூய உயிர்கள் என்று கொண்டு, தாவரங்களேயாயினும் நந்தன வனத்தைப் பணிவொடு தொழுத நாயனார், சிவமொழிகளையே பயின்று இயங்கும் இவ் வுயிர்வருக்கங்களைப் பணிதல் வியப்பாமோ? இக்கிளியும் பூவைகளும் முன்கன்ம விசேடத்தாலே இத்தலத்திற் பிறந்தும் வாழ்ந்தும் தரிசித்தும் கேட்டும் சொல்லியும் சரிக்கும் பேறுபெற்ற உயர்ந்த பிறவிகள் என்று தொழுது என்க. அன்றியும் சிவ [illegible] சிவம் வெளிப்பட த் தொழுதல் இயல்பின் நிகழுமென்க.





நாயனார் திருவுருவம் - தோளில் சூலமும் இடபமும் பொறித்த கோலம் - சூலம் சாத்தும் சிவபூதம்

—பாட்டு - 1417 - பக்கம் - ௨௦௭



சிதம்பரம் மேலைக்கோபுர வாயில் - கற்பகப் பிள்ளையார் சந்நிதியுடன்



—பாட்டு - 1426 - பக்கம் - ௨௨௪



திருவேட்களம் - கோயில்



திருக்கழிப்பாலைக் கோயில்



—பாட்டு - 1437 - பக்கம் - உடஅ

**முன்அருள் கூரும் நெஞ்சு** - என்றது தொழுதற்குக் காரணங் காட்டியபடி. முன்னமே அருளுடைய நெஞ்சமுடைய அன்பர்களே சிவமொழி கேட்டபோது உள் உருகிப்பணிகுவர். நாயகனது பெயர் கேட்டமாத்திரத்தால் மகிழ்தலும் மனமுருகுத லும் அன்புமீக்கூர்தலும் உத்தம நாயகியின் இலக்கணமாம். "இளம்பிறையாளன் றிரு நாம மெனக்கொருகாற் பேசாயே" என்று கிளியை உபசரித்து நாயகி கேட்கும் கூற் றாக வரும் ஆளுடைய பிள்ளையாரது திருத்தோணிபுரத் தேவாரக் கருத்துக் காண்க. "ஏரா ரிளங்கிளியே யெங்கள் பெருந்துறைக்கோன் - சீரார் திருநாமந் தேர்ந்துரை யாய்" (தசாங்கம்) என்ற திருவாசகமும் கருதுக. முன்னைத் தவத்தால் பக்குவமடைந்த நெஞ்சில்லாதார்பால் இந்நிகழ்ச்சிகள் உளவாகா. அவர் இதன் உண்மையை உணர வலியிலர் என்க. **அருள்** - வரையறையின்றி எல்லாவுயிர்களின் மேலும் பரந்து செல் லும் இரக்கம்.

**பெருகிய மகிழ்வும் காதலும் நிறை அன்போடும்** - நெஞ்சினுள் முன்னமே கூர்ந்திருந்த அருளானது சிவமொழிகளை அக்கிளிகளும் சிறு பூவையும் பகரக் கேட் டலும் அக்கேள்வியானது மகிழ்ச்சியினையும் காதலையும் மேலும் நிறைவாகிய பெரிய அன்பினையும் விளைத்தன. இவை வெவ்வேறாகிய இன்ப வுணர்ச்சியுடைய மன நிலைகள். **நிறை** - முன் நிறைந்திருந்த. நிறைவாக்கிய என்றலுமாம். **அன்போடும்** - அன்புமாகிய இவற்றோடும். உம்மைதொக்கது. **மகிழ்வும் காதலும் நிறைந்த** என்றுகூட்டி உரைத்தலு மாம். "களித்துக் கலந்ததோர் காதற் கசிவொடு" (திருவையாறு - திருவிருத்தம்) என்ற நாயனாரது தேவாரங் காண்க. **பெருகிய** - இம் மனநிலைகள் முன்னிருந்தவையே இக்கேள்வியாற் பெருகினவன்றிப் புதிதாய் உண்டாயினவல்ல என்பது. அதற்குக் கிளி - பூவைகளின் மொழியினிமையும் துணைசெய்தன என்க.

**உரை தடுமாற** - உரை குழறி. இது மிக்க அன்பினால் விளையும் மெய்ப்பாடுகளுள் ஒன்று. இதுபோலக் கண்ணீர் பெருகுதல்-விம்முதல்-மயிர்க்கூச்செறிதல் முதலாயின வும் அன்பின் மெய்ப்பாடுகள். உரை தடுமாறியதால் தாமும் எதிர் சிவமொழிகளைச் சொல்லலாற்றாதவராய் என்பதும் குறிப்பு. "ஈறின்றி எழுந் திருவாசகமும்" (1342), "பதிகச் செஞ்சொன் மேயசெவ் வாயும்" (1405) என்றபடி எப்பொழுதும் இறைவ னைத் தமிழாற் பாடிவரும் நாயனார் அதுதானும் செய்யவியலாது மேற்சென்றனர் என்பதாம்.

**செஞ்சொல் திருமறைமொழி அந்தணர்** - தில்லைவா ழந்தணர்கள். "கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே செற்றார்", "அந்தணர் பிரியாத", "சீலத்தார்" என்பன முதலாக ஆளுடைய பிள்ளையாரும், "தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்", "பெருமையார்" என்பன முதலாக ஆளுடைய நம்பிகளும் போற்றிய சிறப்புக்கள் காண்க. **செஞ்சொற் றிருமறை** - வேதங்கள். **மொழிதல்** - இடைவிடாது பயிலுதல்.

**தில்லைத் திருநக ரெல்லை** - இங்குக் கூறியது உள் நகரின் எல்லை. முன் 1422-ல் கூறிய திரு எல்லை என்பது வேறு. அது புறநகரின் எல்லை. உள்நக ரெல்லையில் மதிலும் மதில் வாயிலுமுள்ளன.

**குடதிசை மணி வாயிற்புறம்** - நாயனார் திருமுதுகுன்றத்தினின்றும் புறப்பட்டு இடையிற் கூடலையாற்றூர் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு நிவாநதியின் கரைவழியே திருப்புலியூரை நோக்கி மேற்கிலிருந்து வருகின்றாராதலின் மேலை வாயில் வழிச்சேர்ந்தனர் என்பது. இவ்வாறே நம்பிகள் "தில்லை யூர்விளங்கு திரு வாயில்க ளனைத்தின் உத்த ரத்திசை வாயின்முன் எய்தி"னார் (243) என்பதும், ஆண்டு ரைத்தவையும் பார்க்க. தெற்கினின்றும் சீகாழியினின்று போந்து சார்ந்த ஆளுடைய

பிள்ளையார் " தில்லைசூழ் நெடுமதிற் றென்றிரு வாயினே ரணித்தாக " வந்தனர் (திரு ஞான - புரா - 153) என்பதும் காண்க.

அணிகூறும்—மகிழ்வுறு—பொலிதரு—என்பனவும் பாடங்கள். 161

1427. அல்லற் பவமற வருளுந் தவமுத
லடியா ரெதிர்கொள வவரோடும்
மல்லற் புனல்கமழ் மாடே வாயிலின்
வழிபுக் கெதிர்தொழு தணைவுற்றார்,
கல்வித் துறைபல வருமா மறைமுதல்
கரைகண் டுடையவர் கழல்பேணுஞ்
செல்வக் குடிநிறை நல்லைப் பிடைவளர்
சிவமே நிலவிய திருவீதி. கசஉ

(இ - ள்) அல்லற் பவமற...எதிர்கொள - துன்பந் தருகின்ற பிறவியறும்படி உதவுகின்ற தவத்தையே தமக்கு முதலாகக் கொண்ட அடியவர்கள் தம்மை எதிர் கொள்ள; அவரோடும்...வழிபுக்கு-அவர்களுடன் கூடிச்சென்று (அவர்) செழுமை யாகிய நீர்மணம் வீசும் பக்கத்தில் உள்ள திருவாயிலின் வழியே புகுந்து; கல்வித் துறை...கரைகண்டு - பெரிய வேதங்கள் முதலாகிய பல கல்வித் துறைகளையும் கரை கண்டவர்களாய்; உடையவர்...திருவீதி - யாவரையும் அடிமையாக உடையவ ராகிய கூத்தப் பெருமானது திருவடிகளைப் பேணுகின்ற செல்வக் குடிகளாகிய தில்லைவா ழந்தணர்கள் நிறைந்த நல்ல மாளிகைகள் இடையே வளர்கின்ற சிவத் தன்மையே நிலவிய திருவீதியினை; எதிர்தொழுது அணைவுற்றார் - எதிரிற் கண்டு தொழுது சேர்ந்தனர்.

(வி - ரை) முன்பாட்டிற் கூறியபடி வந்துற்றாராகிய அவர் என்ற எழுவாய் வருவிக்க. (அவர்) அடியார் எதிர்கொள - வழிபுக்கு - திருவீதி - எதிர்தொழுது - அணைவுற்றார் என்று கூட்டி முடிக்க.

அல்லல் பவம் அற அருளும் தவம் - சிவபூசை. பவம் - பிறவி. அல்லற்பவம் - இன்பம் போலக் காட்டித் துன்பமே தருவது இப்பிறவி என்பது அறிஞர் துணிபு. ஆனால் அதனைப்போக்கி இன்பம் தருவதாகச் செய்வது சிவபூசை என்பதாம். " தவமே புரிந்திலன் றண்மல ரிட்டுமுட் டாதிறைஞ்சேன்,...திருவடிக்காம், பவமே யருளு கண்டாய் " - திருவாசகம்.

தவம் முதல் அடியார் - தவத்தையே தமக்கு முதலாகக் கொண்டவர்கள். முதல் - மூலதனம். தபோதனர் என்பது காண்க. " கழல் ஏத்தும் செல்வம்" முதல் - முதன்மை யாக என்று கொள்ளலுமாம். அருளும் முதல் என்று கூட்டித் தம்மை அடைந்தார்களது பிறவியறும்படி அருள்செய்யும் அடியாராகிய திருநாவுக்கரசு நாயனர் என்றுரைத்து, அணைவுற்றார் என்பதற்கு எழுவாயாக்கி உரைப்பாருமுண்டு. இப்பொருளில் முதல் என்றது முதன்மையானவர் என்ற பொருள் தரும் என்பர். தவமுதல் - தவத்தினால் முதன்மை பெற்றவர். " தவமுதல்வர் சம்பந்தர் " என்புழிப்போல என்பர்.

மாமறை முதல் பல கல்வித்துறை வரு கரை கண்டு என்க. பல கல்வித் துறை யும் - என முற்றும்மை தொக்கது. வரு - பெறப்படும். துறை - என்றதற் கேற்பக் கரைகண்டு என்றார். குறிப்புருவகம். கரை கண்டு என்பது " கல்வி யென்னும் பல் கடற் பிழைத்தும் " (திருவாசகம்) என்றபடி கலைஞானங்கள் முற்றும் கைவரப்பெற்று அவற்றின் முடிபும் தேறி, அவையே பொருள் என்று அவற்றுள்ளே உழன்று மயங்கி

நின்றுவிடாது, அவற்றுக் கப்பாற்பட்டதும் அவற்றாற் பெறப்படுவதுமான சிவ ஞானத்தை அவாவி என்ற பொருள்தந்து நின்றது. கரை கண்டு - (அதனால்) உடைய வர் கழல்பேணும் என அடுத்துக் கூறியதும் இக்கருத்தை உணர்த்தும். கரைகண்டு அதனால் எனக் காரணப் பொருளில் வந்த வினையெச்சம்.

உடையவர் கழல்பேணும் - மாமறைமுதல் கல்வித்துறை பலவும் கரை கண்டதனால் ஆன்மாக்களாகிய தம்மை உடைமைப் பொருளாகவும், இறைவரைத் தம்மை ஆளாக உடைய தலைவராகவும், அவருக்கு எஞ்ஞான்றும் அடிமை செய்து அவருடைய கழல் பேணுதலே உயிர்க்கு உய்வுதரும் சாதனமாகவும் கண்டார்; அதனால் கற்றுக்கண்ட அவ்வாறே பேணிக், குறைவுபடாத சிவச்செல்வ நிறைவு பெற்றார் என்று கூறிய அமைதி காண்க.

மாமறைமுதல் - பெரிய - அளவில்லாத - வேதங்களே எல்லாக் கலைஞானங்களுக்கும் பிறப்பிடமாவது என்பார் முதல் கல்வித்துறை பல என்றார்.

கழல்பேணும் செல்வக்குடி - தில்லைவாழந்தணர்களைக் குறித்தது. "கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே, செற்றார்வாழ்" என்னும் ஆளுடைய பிள்ளையாரது இத்தலத் தேவாரமும், "அருமறை நான்கி னோடா றங்கமும் பயின்று வல்லார்" (354) என்றதும் காண்க.

செல்வக் குடி நிறை நல் வைப்பு - "செல்வ நெடுமாடம்", "செல்வ மயர்கின்ற செல்வர்வாழ்" என்ற தேவாரக் கருத்துக்கள் காண்க. வைப்பு - மாடங்கள். வைப் பிடைவளர் - திருவீதி என்றது, மாடங்கள் நிற்க, இடையே வளர்ந்து நீண்டு செல்வது போன்ற வீதி. வளர் என்பது தங்கும் என்றும், வளர்த்தப்படும் என்றும், உள்ள பல குறிப்புக்களும் தருவது காண்க. வீதியினிருபுறமும் மாடங்கள் உள்ளன என்பதை மாடங்களிடையே வீதி வளர்கின்றதென்றது ஓர் அணிநயமுமாம். இடையே செல் வக்குடி நிறை நல்வைப்பையுடைய வீதி என்க.

சிவமே நிலவிய திருவீதி - தன்னைச் சார்ந்து பணிந்தோர்க்குச் சிவத்தினைப் பெறுவிக்கும் திருவீதி என்பது. "மாதவங்கள் நல்கும் திருவீதி நான்கும் தொழுது" (திருஞான - புரா) என்பது காண்க. இக்கருத்துப் பற்றியே நாயனார் "பொய்ப் பிறவிப் பிணியோட்டும் திருவீதி புரண்டு வலங்கொண்டு போந்தார்" (1444) எனப் பின்னர்க் கூறப்படுவதும் காண்க. அருட்கூத்தப் பெருமானாகிய பொன் னம்பலவாணர் தேரில் எழுந்தருளி உயிர்களை உய்யக் கொண்டருளும் தனிப்பெருஞ் சிறப்புடைமைபற்றி இவ்வாறு விதந்து கூறினார். ஆளுடைய பரிமாசாரியர்கள் எல் லாம் இவ்வாறு இத் திருவீதிகளைத் தொழுது சென்றிருத்தல் கேட்டும் நாம் அத்திரு வீதிகளை வணங்காமற் றலைநிமிர்ந்து செல்வதும், அவற்றுட் செய்யத்தகாத குற்றங் களைச் செய்வதும் அந்தோ? என்ன மதியீனம்! 162

1428. நவமின் சுடர்மணி நெடுமா லையுநறு
மலர்மா லையுநிறை திருவீதிப்
புவனங் களின்முத லிமையோர் தடமுடி
பொருதுந் தியமணி போகட்டிப்
பவனன் பணிசெய வருணன் புனல்கோடு
பணிமா றவுமவை பழுதாமென்
றெவருந் தொழுதெழ மடியார் திருவல
கிடுவார் குளிர்புனல் விடுவார்கள். ௧௬௩

(இ - ள்) புவனங்களின்...மணி - தத்தம் உலகங்களுக்கு முதல்வராகிய தேவர்களுடைய பெரிய கிரீடங்கள் ஒன்றோடொன்று மோதுவதனாற் சிந்திய மணிகளை; நவமின்...திருவீதி-ஒளி வீசும் நவமணிகளாலாகிய நீண்டமாலைகளும், நறியமணம் வீசும் மலர்மாலைகளும் நிறைந்த திருவீதியினின்றும்; போகட்டி...பணிமாறவும் - வாரி எறிந்து வாயுதேவன் திருவலகுப்பணி செய்யவும், அதன்பின் வருணதேவன் நீர் கொண்டு திருமெழுக்குத் திருப்பணி செய்யவும்; அவை பழுதாமென்று - அத் திருப்பணிகள் பழுதுள்ளவை யென்று கொண்டு; எவரும்...விடுவார்கள் - எல்லாரும் தொழுதெழும் தன்மை வாய்ந்த அடியார்கள் அதன்மேல் தாங்கள் திருவலகிடுவார்களும் குளிர்ந்த புனலை விடுவார்களும் ஆவர்.

(வி - ரை) மின் சுடர் நவமணி என்க. சுடர் - சுடரும். வினைத்தொகை.

மணிமாலை - மலர்மாலை - நிறை - இவ்விருவகை மாலைகளையும் வீதிகளிற் றூக்கி அணி செய்தனர் என்பதாம்.

நிறை - எக்காலத்தும் எவ்விடத்தும் நிறைவாயுள்ள. இறைவனுக்காகவும் அடியவர்க்காகவும் என்றும் நிறைவாக அணி செய்துள்ள என்க.

திருவீதி - முத்தித்திருவைத் தரும் வீதி. முன்பாட்டில் உரைத்தவை பார்க்க. வீதி - வீதிகளினின்றும். ஐந்தனுருபு தொக்கது. வீதி - போகட்டி என்று கூட்டுக.

போகட்டி - என்பது போகவிட்டு என்பதன் மரூஉ வழக்குப் போலும்.

புவனங்களின் முதல் இமையோர் - ஒவ்வோர் தேவரும் ஒவ்வோர் அண்டம் - உலகம் - முதன்மை பெற்றவர் என்பது வரலாறு. அவ்வத்தேவர்கள் தங்கள் தங்கள் உலகுகளில் ஆட்சி செலுத்துவர் என்ப. திசைக்கடவுளர் பதின்மரும் திருக்கூத்தின் காட்சிக்காகத் தில்லையில் வந்து வதிந்தனர்; அதுபோது தத்தம் திசைகளில் சிவக்குறி நிறுவிப் பூசித்தனர் என்பது இத்தல வரலாறு. புவனம் - இடம் என்று கொண்டு, திருவீதிப் புவனங்களின் - திருவீதியிற் பல இடங்களிலும் என்று உரைத்தலுமாம். இப்பொருட்கு முதல் இமையோர் - பெருந்தேவர் என்க.

இமையோர் தடமுடி பொருது உந்திய மணி - தேவர்கள் யாக முதலியவற்றின் பலனாகச் சிவபெருமானால் சுவர்க்கம் முதலிய போகங்களைத் தரப் பெற்றவர்கள். அவர்கள் அப்போகங்களுள் மூழ்கிப் பல காலங்களிற் சிவபெருமானை மறந்ததன் பலனாக அசுரர்களால் அலைக்கப்படுவர். சிவபுண்ணியஞ் செய்து துன்ப நீங்கவும் வீடு பெறவும் கருதி இப்பூவுலகில் வந்து சிவனை வழிபடுவர். அவ்வாறு வருங்காலத்து அத்தேவர் பலரும் நெருங்குதலால் அவர்களது மணி முடிகள் ஒன்றோடொன்று மோத அவற்றினின்றும் மணிகள் சிந்துவன என்க. " மாலயன் சதமகன் பெருந்தேவர் மற்று முள்ளவர்கண் முற்று நெருங்கிக், ......காலநேர் படுதல் பார்த்த்ய னிற்ப " (249); " தேவர்குழா மல்குந் திருவாயில் " (திருஞான - புரா - 165); " வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள் வாயில் " (ஷை 1022) முதலியவை காண்க. " வந்திறை யடியிற் றாழும் வானவர் மகுட கோடி, பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றூக்கி, யந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கும், நந்தியெம் பெருமான் " என்று திருவிளையாடற் புராணமுடையார் இப்பாட்டின் கருத்தையும், 249-ன் கருத்தையும் உடன்றழுவி அழகுபெற அமைத்தது காண்க.

திருவீதி மணி போகட்டி-சிந்திய அந்த மணிகள் திருவீதியில் இருக்கத் தகாத பொருள்கள் என்று வாரி எறிந்தனர் என்க. நாயனார் திருப்புகலூரிற் பணி செய்திருந்த போது உழவார நுழைந்தவிடந்தாளெங்கும் பொன்னும் நவமணிகளும் வர, அவற்றை உழவாரத்தினிலேந்தி வாவியினிற்புக வெறியும் வரலாற்றையும் இங்கு நினைவு கூர்க. இங்கு மணிகள் தேவர்கள் பயன்படுத்திச் சிந்தியதனால் அநுசிதமாயினவும், மாயா

காரியமாயினவும், வீதி நடக்கும் அடியார்க்குப் பலவாறும் இடையூறு விளைப்பனவு மாமாதலின் அவற்றை வாரி எறிய வேண்டியதாயிற்று என்க.

பவனன் பணிசெய - வாயுதேவன் காற்றினால் திருவலகுப்பணி செய்து அப் புறப்படுத்த. பவனன் - வாயுதேவன். வருணன் புனல்கொடு பணிமாற - வருண தேவன் நீரினால் கழுவித் தூய்மையாக்க. பணிமாற - பணிசெய்து முடிக்க. பணிமாறவும் - உம்மை பணிசெய் திருப்பவும் என உயர்வு சிறப்பு.

அவை பழுதாம் என்று - அத்தேவர்கள் அடியார்களை உபசரிக்கவும் பணிசெய்ய வும் போதிய தகுதியும் தவமும் சீலமு முடையரல்லர் என்று கொண்டு. பழுதாவது விதிப்படி செய்யப்படாமை.

எவருந் தொழுதெழும் அடியார் - தேவர்களும் அவ்வவர் திறத்துக்கேற்ப அவரி னுந் தாழ்ந்த சிற்சில சிறியோரால் தொழப்படுவாராவர்; அடியார்களோ அத் தேவர் முதலிய யாவராலும் தொழப்படும் தன்மையுடையார்கள். தேவர் செய்யும் பணி பழுதாமென்று எண்ணுதற்குக் காரணம் கூறியபடி. தம்மைத் தொழும் பண் புடைய சிறியோர்களை இச்செய்கை செய்யவிடாது மேம்பட்ட அடியார்கள் தாமே அவற்றைச் செய்தனர் என்பது. "தொழுதபின்னைத், தொழப்படுந் தேவர்தம் மாற் றொழு விக்குந்தன் றொண்டரையே" என்ற திருவாசகக் கருத்தைக் காண்க.

திருவலகு இடுவார் குளிர்புனல் விடுவார் - இது அடியார் செய்கையைக் கூறும் மரபு. தேவர் செய்தவற்றைக் கூறியதுடன் ஒப்பு நோக்குக.

இவை நாயனார் வரவு நோக்கி அடியார் திருவீதிப் பணிசெய்த சிறப்பு.

போகட்டுப்—என்பதும் பாடம்.　163

1429.　மேலம் பரதல நிறையுங் கொடிகளில்
　　விரிவெங் கதிர்நுழை வரிதாகும்
கோலம் பெருகிய திருவீ தியைமுறை
　　குலவும் பெருமையர் பணிவுற்றே
ஞாலந் திகழ்திரு மறையின் பெருகொலி
　　நலமார் முனிவர்க டுதியோடும்
ஓலம் பெருகிய நிலையேழ் கோபுர
　　முறமெய் கொடுதொழு துள்புக்கார்.　௧௬௪

(இ - ள்) குலவும் பெருமையர் - விளங்குகின்ற பெருமையையுடைய நாயனார்; மேல் அம்பரதலம்......திருவீதியை - மேலே ஆகாயத்தின் வெளியிடங்களெங்கும் நிறையும் கொடிகளினூடு, விரியும் வெவ்விய சூரியனது கதிர்கள் நுழைவதற்கரி தாகிய கோலம் பெருகிய திருவீதியினை; முறை - முறையாக; பணிவுற்றே - பணிந்தே; ஞாலம்......தொழுது உள்புக்கார் - உலகு திகழும் திருமறைகளின் பெரு கிய ஒலியானது நன்மை பொருந்திய முனிவர்கள் செய்யும் தோத்திர ஒலியுடனே ஓலம் பெருகிய எழுநிலை மேலைக் கோபுரத்தையும் உடல் நிலம்பொருந்தப் பணிந்து கொண்டு தொழுது உள்ளே புகுந்தனர்.

(வி - ரை) மேல் அம்பர தலம் - மேலே உள்ள வானவெளி.

வெங்கதிர் நுழைவு அரிதாகும் கோலம் - கொடிகள் செறிவாக உயர்த்து நாட் டப்பட்டிருத்தலின் அவற்றினூடே ஞாயிற்றின் கதிரும் நுழைவதரிதாகும் அமைப்பு. கொடிகளின் செறிவு குறித்தது.

அம்பரம் - ஆகாயம். வெங்கதிர் - ஞாயிற்றின் கதிர். "நிறைவெண் கொடி மாடம்" என்பது இத்தலத் தேவாரம். "வெண்கொடி" (243) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. கொடிகள் - மாடங்களின் உயர்ந்த ஆடரங்குகளில் ஆடும் பெண் கொடிகளையும் குறிப்பாலுணர்த்துவதாம். "மாடந்தோறுங் கோதைகூ முளக பாரக் குழைக்கொடி யாட மீதே சோதிவெண் கொடிக ளாடும்" (474) என்றது இங்கு நினைவு கூர்தற்பாலதாம். பெண்கள் ஆடுதல் ஆண்டவன் விழவின்பொருட்டும், அடியார் வருதலாகிய சிறப்பின் பொருட்டுமாம்.

துலவும் - விளங்கும்; விளங்கச் செய்யும் என்றலுமாம். "குலாத்தில்லை", "குலாப்பத்து", "குலாவு பாதம் விளக்கியே" (443) பார்க்க.

ஞாலம் திகழ் - உலகத்தை விளங்க வைக்கும். ஈடேற்றும் என்க.

முனிவர்கள் - தில்லை மூவாயிரவரும், பதஞ்சலி, வியாக்கிரபாதர், சைமினி, வியாசர், சுகர், சூதர் முதலியோரும்.

ஓலம் பெருகிய - ஓலம் - ஒலி. ஓலம் - அபயம் - என்று கொண்டு கூவியடையும் குரல் என்றலுமாம்.

நிலை ஏழ் கோபுரம் - ஏழ்நிலைக் கோபுரம். இது மேற்குவாயிற் கோபுரம்.

மெய் உற என்க. உறுதல் - நிலம் பொருந்துதல். கோடு - பணிந்துகொண்டு.

உள் - திருக் கோயிலுக்குள்ளே.

முறையே தொழுது—என்பதும் பாடம். 164

1430. வளர்பொற் கனமணி திருமா ளிகையினை
வலம்வந் தலமரும் வரைநில்லா
அளவிற் பெருகிய வார்வத் திடையெழு
மன்பின் கடனிறை யுடலெங்கும்
புளகச் செறிநிரை விரவத் திருமலி
பொற்கோ புரமது புகுவார்முன்
களனிற் பொலிவிட முடையார் நடநவில்
கனகப் போதுவெதிர் கண்ணுற்றார். கசூ௫

(இ - ள்) வளர்......வலம் வந்து - அழகு வளர்கின்ற மேகங்கள் சூழ்கின்ற திருமாளிகையை வலமாக வந்து; அலமரும்வரை நில்லா......விரவ - வருத்தம் தருகின்றதும் வரையறையின்படி நில்லாத அளவிற் பெருகியதுமாகிய ஆர்வத்தினிடை எழுகின்ற அன்பாகிய கடல்நிறைந்த திருமேனி முழுதும் மயிர்ப்புளகம் மிகுந்து ஒழுங்குபடக் கலக்க; திருமலி......புகுவார் - திருமிகுந்த பொன்பூண்ட கோபுரத்தினுள்புகும் நாயனார்; முன்......கண்ணுற்றார்; முன்பு, கழுத்தில் விளங்குகின்ற விடத்தினை யுடையவராகிய அருட்கூத்தப் பெருமான் நடமாடுகின்ற பொன்னம்பலத்தை எதிர் கண்ணுற்றனர்.

(வி - ரை) பொன்வளர் திருமாளிகை - என்று கூட்டுக. திருமாளிகை என்பது திருமாளிகைப்பத்தி எனத் தில்லையில் திருமதிலை அடுத்துக் கோயிலினுள் உள்ள அமைப்பு. பொன்வளர் - அநபாயச் சோழராசராலும், அவரது முந்தையோராலும் பொன் வேய்ந்து அணிசெய்யப்பட்ட என்ற குறிப்புமாம். "தில்லைத் திருவெல்லை, பொன்னின் மயமாக் கியவளவர் போரேறு" (சண்டீசர் - புரா - 8) பார்க்க.* திருமாளிகை - திருக்கோயில் என்றலுமாம்.

* எனது சேக்கிழார் (இரண்டாம் பதிப்பு) 21 பக்கம் பார்க்க.

அலமரும் ஆர்வம் - வரைநில்லா அளவிற் பெருகிய ஆர்வம் என்று கூட்டுக. அலமருதல் - சுழலுதல் - வருந்துதல். அலமரும் ஆர்வமாவது ஆர்வ மிகுதியினுல் அப்பொருள் கிடைக்கத் தாழ்க்குந்தோறும் உள்ள மனநிலை. "வருத்தமிகு காதலி னுல்" (1056) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

அன்பின் கடல் நிறை உடல் - அன்பு கடல்போல நாயனூரது திருமேனியி னுள் நிறைந்திருந்தது என்பது. "அருட்பெருகு தனிக்கடலு முலகுக் கெல்லா மன்புசெறி கடலுமாம்" (1450) என்பது காண்க.

திருமலி பொற்கோபுரம் - முன் பாட்டில் நிலையேழ் கோபுரமென்றது மேலைக் கோபுரம். இங்குக் கூறியது திருவணுக்கன் றிருவாயிற் கோபுரம். திரு - முத்தித் திரு. பொன் - பொன்னணி மிகுந்த.

முன் களனிற் பொலி விடம் உடையார் - விடம் பொலி களனுடையார் என்க. முன் பொலி-தோற்றமாக. விடம் கண்டோர்க்கும் தீமைசெய்து சாதல்பயக்கும் தனது இயல்புமாறி அமுதமாகக் கண்டோர்க்குச் சாவாமை விளைத்துப் பொலிதலாலும், அஃது அந்நிலையைக் களனிலிருத்தலாற் பெற்றமையாலும் இவ்வாறு கூறினூர். "ஆயத்தி னுலமிர் தாக்கிய கோன்" என்ற திருக்கோவையாருங் காண்க. "நெய்ஞ் ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றுன்", "கருநட்ட கண்டனை", "நஞ்சடை கண்ட னுரை" என்று நாயனூர் இதன் பொலிவினில் ஈடுபட்டு அருளிய திருவிருத்தங்களின் குறிப்புப் பெற இவ்வாறு கூறினூர். ஆளுடைய நம்பிகளைத் "தெண்ணிலா மலர்ந்த வேணி"யும், ஆளுடைய பிள்ளையாரைத் "தமக் களித்த மெய்ஞ் ஞானமே யானவம் பலமும்...தனிக் கூத்தும்" வசீகரித்ததுபோல, நாயனூரை நீலகண்டம் வசீகரிப்பதாம் என்பது குறிப்பு.

நடம் நவில் கனகப்பொது - இறைவர் நடமாடும் வெளியாகிய பொற்பொது. சிற்றம்பலமும் பொன்னம்பலமும் கூடிய இடம். "பொற்கோபுரமது புகுவார், முன் (பொது) கண்ணுற்றுர் என்றதனுல் மேற்குக் கோபுரத்தினுள் புகுந்து திருமா ளிகையை வலம்வந்த பின்பு, கீழ்த்திசைக் கண்ணுள்ள இரண்டாங் கோபுரத்திற் புகுந்தவர், திருவணுக்கன் றிருவாயில் புகுந்து கனகப்பொதுவை முன்னே தரிசித்தார் எனப் போந்தவாறறிக" என்பது ஆறுமுகத் தம்பிரானு ருரை.

அலமருவரை—விரவி—என்பனவும் பாடங்கள். 165

1431. நீடுந் திருவுட னிகழும் பெருகொளி நிறையம் பலநினை வுறநேரே
கூடும் படிவரு மன்பா லின்புறு குணமும் பெறவரு நிலைகூடத்
தேடும் பிரமனு மாலுந் தேவரு முதலாம் யோனிக டெளிவொன்று
வாடுங் கழல்புரி யமுதத் திருநட மாரா வகைதொழு தார்கின்றுர்.

(இ - ள்) நீடும்...அம்பலம் - நீடுகின்ற முத்தித் திருவுடன் நிகழ்வதாகிய, மேன் மேலும் பெருகும் ஞானவொளி நிறையும் திருவம்பலமானது; நினைவுற - முன்மனத்தி னுட் பொருந்திய அவ்வாறே; நேரே கூடும்படி வரும் - கண்ணினுக்கு எதிரிலும் கூடும்படியாகவரும்; அன்பால்...நிலைகூட - அன்பினுல் இன்பம் பொருந்தும் குணச் சிறப்பும் வருகின்ற நிலை கைகூடியதனுலே; தேடும்...திருநடம் - தேடுகின்ற பிரம தேவனும், விட்டுணு மூர்த்தியும், தேவர்களும் ஏனைப் பிறவியில் வரும் உயிர்களும் தெளியமுடியாத, ஆடும் திருவடியினுல் புரியும் அமுதத் திருநடத்தை; ஆராவகை தொழுது ஆர்கின்றுர் - அமைதிபெற்று நிரம்பாத வகையினுல் தொழுது உண்ணுகின் றுராயினூர்.

(வி - ரை) நீடும்திரு - என்றும் நீடியுள்ள அழிவில்லாத முத்தித்திரு.

பெருகுஒளி - "ஒளியுள்ள பொருட்கெல்லாம் ஒளிகொடுத்துச் சுயஞ்சோதியா யுள்ளது" என்பர் ஆறுமுகத்தம்பிரானார். "மெய்ச்சுடருக் கெல்லா, மொளிவந்த பூங்கழல்" (நீத் - 15) என்பது திருவாசகம். இங்குக் கூறிய ஒளி ஞானஒளி. சிற்றம் பலம் எனப்படுவது காண்க. "மணி யொளிரம் பலநட நவில் கின்றான்", "திகழும் பல நட நடவில்கின்றான்" என்று இக்கருத்தைக் கச்சியப்பமுனிவரர் பேரூர்ப்புராணத் தினுள் (திருத்தப்படலம் - 60 - 69) பல வகையாலும் விரித்துரைத்தது காண்க.

நினைவுற-என்றது நான்கு உட்கரணங்களுள் சிந்தையின் செயலிலும் நிலையும் பற்றி யது; நேரே கூடும்படி - என்றது ஐந்து புறக்கரணங்களுள் கண்ணின் செயலிற்பற் றியது; அன்பால் இன்புறு குணமும் - என்றது குணமூன்றனுள் சத்துவச் சத்துவ குணத்தின் நிலைகுறித்தது. பெறவருநிலைகூட - இந்தநிலை "ஐந்து பேரறிவும்" (252) என்ற திருப்பாட்டில் உரைக்கப்பட்டது. ஆண்டுரைத்தவை பார்க்க.

நினைவுற - நினைவு - நினைவினிற் பொருந்துதலாவது முன்சிந்தை முழுதும் திரு அம்பலமேயாகித் தியானத்தினால் எண்ணிறைந்து விளங்குதல். அவ்வாறே என்பது சொல்லெச்சம்.

நினைவுற நேரே கூடும்படி - என்றது சிந்தையுள் நிறைவாயினவாறே புறத்திலும் கண்ணுக்குப் புலனாக என்றதாம். "உணர்வி னேர்பெற வருஞ்சிவ போகத்தை யொழிவின்றி யுருவின்கண், அணையு மைம்பொறி யளவினு மெளிவர வருளினை" (திருஞான - புரா - 161) என்ற கருத்தைக் கருதுக.

அன்பால் இன்புறு குணம்-அன்பின் நிறைவினால் முழுதும் இன்பமேயாகி விளை யும் சத்துவகுணம். குணமும் - உம்மை நினைவிற் கண்டவாறு நேரே கூடுதலுடன் என்று இறந்தது தழுவிய எச்சவும்மை. குணமுன் என்பது பாடமாயின், முன்னர்க் குணமூன்றும் திருந்து சாத்துவிகமேயாக, அதனால் கலக்கப்பட்ட சிந்தையின் வழியே புறக்காட்சி நிகழ்ந்தது என்று உரைத்துக் கொள்க.

யோனிகள் - பலவகைப்பட்ட பிறவிகளில் வரும் உயிர்கள். அவைகள் தெளி வொன்றமையாவது தேவர் முதலிய யாவரேயாயினும் உயிர்ப்போதத்தால் அறிய வொண்ணமை. "உலகெலா முணர்ந் தோதற்கரியவன்" என்ற கருத்து.

தெளிவு ஒன்ற என்பதனைச் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாக ஒன்றி என்று கொண்டு, உணர்வினுக்கு வெளிப்பட்டு விடயமாகிப் புரியும் நடம் என்று உரைப்பாருமுளர். அது பொருந்தாமையறிக. "நாரண னன்முகனும், தேட வெடுத்தது தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம், ஆட வெடுத்திட்ட பாதம்" என்ற நாயனாரது இத்தலத் திருவிருத்தமுங் காண்க.

ஆடுங்கழல் - எடுத்த பொற்பாதம். தூக்கிய திருவடி; அதுவே ஆடுவதாகலான்.

கழல்புரி அமுதத் திருநடம் - கழலினால் புரியும் என்க. அமுதம் - மரணம் போக்கிப் பிறவியும் இறவியு மில்லையாக்கி முத்தியின்ப மளிப்பது. "முத்தி, நான்ற மலர்ப்பதத்தே நாடு" என்பது சாத்திரம்.

ஆராவகை தொழுதார்கின்ற வகையை மேல்வரும் பாட்டில் விரிக்கின்றார்.

ஆராவகை ஆர்தல் - என்பது முரண் அணி. ஆர்தல் - நிறைய உண்ணுதல். துய்த்தல். அமுது என்றதற்கேற்ப ஆர்கின்றார் என்றார். அவ்வாறு துய்த்த அனுபவம் நீடிக்கொண்டே நின்றது என்பார் நிகழ்காலத்தாற் கூறினார்.

நீடுந்திருவடி—என்பதும் பாடம்.

1432. கையுந் தலைமிசை புனையஞ் சலியன;
கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந் தகையன; கரணங் களுமுட
னுருகும் பரிவின; பேறெய்து
மெய்யுந் தலமிசை விழுமுன் பெழுதரு;
மின்றாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் றிருநட மெதிர்கும் பிடுமவ
ரார்வம் பெருகுத லளவின்றால். ௧௬௭

(இ - ள்) வெளிப்படை. கைகளும் தலையின்மேல் புனைந்த அஞ்சலியாகக் குவிந்தனவாயின; கண்களும் இடைவிடாது பொழிகின்ற மழைபோல நீரைப் பெய்யும் தன்மையுடையனவாயின; உட்கரணங்களும் உடன் உருகுகின்ற அன்பினை உடையனவாயின; பேறு பெறும் திருமேனியும் நிலத்தின்மேல் விழுமுன்னரே எழுகின்றதாகும்; மின்போலத் தாழ்ந்து விளங்கும் சடையுடன் நின்று ஆடுகின்ற ஐயரது திருநடனத்தைக் கும்பிடும் அவரது ஆர்வம் (இவ்வாறு) பெருகும் நிலை அளவிடக்கூடாததாயிற்று.

(வி - ரை) கை - கண் - சாதியொருமை - கைகள் அஞ்சலியன; கண்கள் பெய்யுந் தகையன; கரணங்கள் உருகும் பரிவின; மெய்யும் எழுதரும்; (இவ்வாறு) அவர் ஆர்வம் பெருகுதல் அளவின்று என்பது.

ஆர்வம் பெருகிய நிலையினை மெய்ப்பாடுகளால் அறிவித்தபடி.

அஞ்சலியன; தகையன; பரிவின; எழுதரும் என அவ்வத் தொழில்களை அந்தந்தக் கருவிகளின் மேல் ஏற்றிக் கூறினார்; வேறொன்றின் பிரேரணையும் முயற்சியுமின்றி அவையே அவ்வச் செயல்களை நிகழ்த்தியன போலக் காணப்பட்டன என்பது. spontaneous என்பர் நவீனர். அஞ்சலி - இருகையும் கூப்பிக் கும்பிடுதல். மழை - மழை போன்றதனை மழை என்றதுபசாரம். உடன் உருகும் பரிவு - மேற்கூறிய படி கைகளும் கண்களும் நிகழ்த்து மவற்றுக்குக் காரணமாய் முன்னே உட்கரணங்கள் உருகுதல் நிகழவுள்ளதாயினும், விரைவுபற்றி இரண்டும் உடன் - ஒருசேர - நிகழ்வனவாகக் காணப்பட்டன என்பதாம்.

பேறெய்தும் மெய் - பேறு - கீழ்வீழ்ந்து வணங்குதலால் உளதாம் பேறு. "பூக்கை யாலட்டிப் போற்றியென் னாதவிவ், வாக்கை யாற்பய னென்?" என்ற திருவங்கமாலையினும், "வணங்காத் தலையும் பொறையாம், அல்லா வவயவந் தானு மனிதர்க் கசேதனமே" என்ற பொன்வண்ணத் தந்தாதியினும் (42) அருளப்பட்டபடி இவ்வாறு வீழ்ந்து வணங்கிப் பேறுபெறு தொழியும் மனிதர் உடம்புகளும் பல உள்ளன! "கோளில் பொறியிற் குணமிலவே...வணங்காத் தலை"—(குறள்).

விழும் முன்பு எழுதரும் - வணங்கிக் கீழே விழும்; அவ்வணக்கம் முற்று முன்பு மீண்டும் விழுவதற்காக எழும். "வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போல் மெய் வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்" (திருஞான - புரா - 1022) என்ற கருத்துக் காண்க. மேல்வரும் பாட்டில் "இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ" என்ற கருத்தும் காண்க.

ஆர்வம் பெருகுதல் அளவின்றால் - அளவு கடந்து ஆர்வம் பெருகியதால் மேற் கூறியவாறுள்ள மெய்ப்பாடுகள் நிகழ்ந்தன. அளவு - எல்லை. நூல்களிற் குறித்த அளவு.

ஒழியாமே—தரைமிசை—என்பனவும் பாடங்கள்.

1433. இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ
"வென்றெய் தினை"யென மன்றுடும்
அத்தன் றிருவருள் பொழியுங் கருணையி
னருள்பெற் றிடவரு மானந்த
மெய்த்தன் மையினில் விருத்தத் திருமொழி
பாடிப் பின்னையு மேன்மேலுஞ்
சித்தம் பெருகிய பரிவா லின்புறு
திருநே ரிசைமொழி பகர்கின்றார். ௧௩௮

வேறு

*1434. "பத்தனாய்ப் பாட மாட்டேன்" என்றுமுன் னெடுத்துப் பண்ணால்
"அத்தா!வுன் னாடல் காண்பா னடியனேன் வந்த வா"றென்
றித்திறம் போற்றி நின்றே யின்றமிழ் மாலை பாடிக்
கைத்திருத் தொண்டு செய்யுங் காதலிற் பணிந்து போந்தார். ௧௩௯

1433. (இ - ள்) வெளிப்படை. இந்தத் தன்மையராகிப் பல முறையும் தொழு தெழுதலும், "என்றைக்கு வந்தனை ?" என்ற குறிப்புடனே திரு அம்பலத்திலே நடமாடும் அத்தனாரது திருவருள் பொழிகின்ற கருணையினால் அருளைப் பெறும்படி வரும், ஆனந்தமாகிய உண்மைப் பாட்டினாலே, திருவிருத்தத் திருமொழியினைப் பாடிப் பின்னரும், மேன்மேலும் சித்தத்தினுள்ளே பெருகி வளரும் அன்பின் மிகுதியினால் இன்பமுறும் திருநேரிசைத் திருப்பதிகத்தை அருளிச் செய்வாராகி, ௧௩௮

1434. (இ - ள்) வெளிப்படை. "பத்தனாய்ப் பாட மாட்டேன்" என்று முன் தொடங்கிப் பண்ணினால், "அத்தா உன் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வாறு" என்று முடியும் ஈற்றினை யுடையதாகிய பாட்டு முதலாக இத்திறத்திற் போற்றி நின்றே இனிய தமிழ் மாலையைப் பாடிக் கைத் திருத்தொண்டு செய்யும் ஆசையினால் பணிந்து வெளிப்போந்தனர். ௧௩௯

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1433. (வி - ரை) "என்றெய்தினை என - இது நாயனார் கண்ட அளவில் இறைவரது திருமுகக்குறிப்பு. தம்மிடம் வந்து அடைந்தவரை "என்று வந்தாய்! வருக" என்று இன்முகத்துடன் ஏற்றுக்கொண்டது உட்குறிப்பு. இஃது "நட்டம், என்றுவந் தாயென்னு மெம்பெரு மான்றன் றிருக்குறிப்பே" என்ற தேவாரத்தாற் பெறப்பட்டது. இத்தகைய குறிப்பினை நாயனார் நடராசரது திருமுகத்தினுட்காணப் பெற்றனர். உலகிற்போந்து பலநாட் பிரிந்து பின் வெள்ளை யானையின் மீது வந்து திருக்கயிலையை அடைந்த நம்பிகளை இறைவர் ஏற்றுக்கொண்டது பற்றி "தனிப் பெருந் தொண்டரை நேரிழை வலப்பாகத், தொன்று மேனியர் ஊரனே! வந்தனை ? யென்றன ருலகுய்ய" (வெள் - சருக்-42) என்று ஆசிரியர் எடுத்துக் கூறுதல் காண்க. இவ்வாறு மூர்த்திகளின் திருவுருவத்திற், காண்பவர் தகுதிக்கேற்ப இறைவர், குறிப்புக்களைத் தோன்றச் செய்குவர். அவற்றைக் காணும் தகுதியுடையவர்களாக நம்மை ஆக்கிக் கொண்டால் அவை விளங்கும்.

**திருவருள் பொழியும் கருணையின் அருள்பெற்றிடவரும் ஆனந்த மெய்த்தன்மை-** திருவருள் என்றது எல்லா உயிர்த்தொகைகளும் உய்ய வேண்டுமென்று, வரையறையின்றிப் பெருகும் சிவபெருமானது இரக்கம். கருணை என்றது அஃது உயிர்களின்

முகமாகத் திரும்பும் நிலை. கருணையின் அருள்பேற்றிட என்றது அந்நிலையினில் தாம் பெறும் பேற்றின் பகுதி. ஆனந்த மெய்த்தன்மை என்றது அந்தப் பேற்றினால் உளதாகும் உண்மைநிறைந்த உள்ளநிகழ்ச்சி. "அருள் வித்திட்டுக் கருணைநீர் பாய்ச்சி" என்றது காண்க.

இங்கு இவ்வாறன்றி, ஏகனாகி யிறைபணி நின்று தொழுதலால் இறைவரது தன்மையாகிய சச்சிதானந்தத் தன்மை விளங்கிற்று; அங்ஙனம் விளங்கப்பெற்று நின்ற நிலையில் திருவிருத்தம் பாடினார்; "எனதுரை தனதுரையாக" என்ற ஆளுடைய பிள்ளையார் திருவாக்குக் காண்க: என்பது திரு. சா. பெரியசாமி பிள்ளை யவர்களுடைய குறிப்பு.

விருத்தத் திருமொழி - திருவிருத்தம் என்ற யாப்பில் அமைந்த திருப்பதிகம்.

மேன்மேலும் சித்தம் பெருகிய பரிவு - அப்பதிகம் பாடியும் அமைவுபடாது திருவுள்ளத்தில் எழுந்த அன்புப் பெருக்கினால்.

திருநேரிசை மொழி - திருநேரிசை என்ற யாப்பில் அமைந்த திருப்பதிகம்.

பகர்கின்றார் - என்று - எடுத்து - என்று - போற்றி நின்றே - பாடி - பணிந்து போந்தார் - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடித்துக்கொள்க. 168

1434. (வி - ரை) பத்தனாய்ப் பாட மாட்டேன் - இது அத்திருப்பதிகத்தின் தொடக்கம்.

பண்ணால் - திருநேரிசைக்குரிய பண் பொருந்த. அது கொல்விப் பண் என்ப. "நேரிசையாங் கொல்லிக்கு". "அத்தாவுன் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வாறு" என்ற இது அத்திருப்பதிக முதற்பாட்டின் முடிபும் பதிகக் கருத்துமாம்.

இத்திறம் - இந்தப் பொருட் கருத்துப்பட. கைத்திருத் தொண்டு செய்யும் காத லில் - அன்புப் பெருக்கிற் றிருப்பதிகம் பாடிய தன்மையினால் மனம் அமைவுபடாது கைத்தொண்டு செய்யும் காதல் எழுந்தது. முன்னர் மனமும் வாக்கும் பணி செய் தன; ஏனைய உடலும் பணிசெய்து பயனடைய வேண்டும் என்று கொள்வது சைவ மரபு. சிவபூசை விதிகளில் உட்பூசையினை முடித்தபின் புறப்பூசையிற் புகும்போது "இறைவரே! இதுவரை உட்பூசை செய்தேன். அவற்றால் உட்கரணங்கள் சுத்த மாயின. அதனால் மனம் அமைதிப்படவில்லை. எனது புறக்கருவிகள் தூய்மையாகிப் பயன்படும்படி புறப்பூசை செய்யப் புகுகின்றேன்" என்று பிரார்த்தித்து பூசை செய் யப்புகும் விதிகளை இங்கு ஒப்பு நோக்குக.

காதல் என்பது மிக்க ஆர்வம். கைத்திருத்தொண்டு - உழவாரத் திருப்பணி. இதனை மேல்வரும் பாட்டில் விரிக்கின்றார்.

போந்தார் - வெளியிற் புகுந்தனர். 169

I திருச்சிற்றம்பலம் திருவிருத்தம் - கோயில்

ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற் கடிந்தா னடியவற்காச்
சென்று தொழுமின்க டில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாயென்னு மெம்பெரு மான்றன் றிருக்குறிப்பே. 2

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—இறைவரது ஆனந்த அருட்கூத்தில் திளைத்து மகிழ்தலும், மீக்கூர்ந்து ஆனந்தித்து அந்த அருட்கூத்தினைப் பலபடப் பாராட்டுதலுமாம்.

"கருணையின்" எனவும், "வரும் ஆனந்த மெய்த்தன்மையினில்" எனவும், இத்திருவிருத்தம் பாடிய இக்குறிப்பை ஆசிரியர் விளக்குதல் காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கருநட்ட - கரியவிடம் நிலைநிற்கின்ற; செருநட்ட-பகைபூண்ட; தீமுழங்கத் திருநட்டமாடி என்பது ஊழிமுடிவில் ஆடும் அக்கினி தாண்டவம்; சிற்றம்பலத்துப் பெருநட்டமாடி - என்பது நித்தியமாகிய ஐந்தொழி னடனம். சிறு - பெரு - முரண் அணி. ஆடி-பெயர்.—(2) ஒன்றியிருந்து நினைமின் - ஒன்றுதல் - உட்கரண புறக்கரணங்கள் முதலிய யாவும் ஒருமுகப்படுதல்; இருந்தல் - அதனின்றும் பிறழாதிருத்தல்; நினைதல் - அழுந்தி அறிதல். தியானித்தல்; ஏகனாகியிருந்து நினைத்தல் என்றலுமாம். காலனைக் கடிந்தான் (ஆதலால்) ஊனமில்லை என்று காரணங் காட்டியபடி; என்று வந்தாய்...........திருக்குறிப்பு - இறைவரது திருமுகக் குறிப்பு; இதனைப் பின்னரும் "கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்" (4) என்றது காண்க.—(3) பொன்மலை-பொன்னம்பலத்துக்கும், வெள்ளிக்குன்று - இறைவரது நீறுபூசி நிமிர்ந்த திருமேனிக்கும் பண்புவமம். ஒன்றிப் புக்கனன்...போந்த சுவடில்லை - மனத்தினுள் வந்து புகுந்தனன்; எவ்வாறு புகுந்தனன் என்ற சுவடு ஒன்றும் காண முடியவில்லை. எனை அறியாமே புக்கனன்.—(4) இறைவனுடைய திருவுருவிற் காண உள்ளவற்றைக் காட்டுகின்றது. அவை - புருவம் - சிரிப்பு - சடை - மேனி - நீறு - பாதம் என்பன. குனித்தல் - வளைதல் - குமிண் சிரிப்பு - இதழ்கள் குவிந்து கூடிய புன்சிரிப்பு. "சிரித்த முகங்கண்ட கண் கொண்டு மற்றினிக் காண்பதென்னே" என்று இதனையே கூறியதும் காண்க. பனித்த - ஈரமுள்ள - நனைந்த. "ஈர வார்சடை தன்மேல்" (பிள்ளையார் தேவாரம்). பவளம்போல் மேனி - நிறம் பற்றி வந்த பண்புவமம். பால் வெண்ணீறு - பால் போன்ற வெண்மை என்க. இனித்தம் - என்றும் இனிதாந்தன்மை. காணப் பெற்றல் - காண்பதன் அருமை குறித்தது. மனித்தப் பிறவியும் - பெரியோரால் வேண்டப்படாத பிறவியும் என்று உம்மை இழிவு சிறப்பு. எதுகை நோக்கி மனித்த என வந்தது. "கும்பிடப் பெற்று மண்ணிலே வந்த பிறவி" (253), "ஊனடைந்த உடம்பின் பிறவி" (2) முதலியவை காண்க.—(5) வாய்த்தது......ஓர் பிறவி - முன்பாட்டின் கருத்தையே தொடர்ந்து கூறியது. கூழைமை - கடமை.—(6) கோல்வளைக்கே - தாய் மகிழ்ந்து கூறிய மொழியாகிய அகப்பொருட்டுறை.—(7) குரைகழலே - மத்தமும் - நோக்கும் - முறுவலிப்பும் - கையும் - நீறும் - பாகமும் - தோலும் என்றிந்த வண்ணமாக என் நெஞ்சிற் குடிகொண்ட ஆறு!. நெஞ்சிலும் - என இழிவு சிறப்பும்மை தொக்கது.—(8) படைக்கலம் - பிறவிப் பகையை எறியும் படை. இடைக்கலம் - அல்லேன்-புறம் அடிமை யல்லேன். எழுபிறப்பு-எழுவகைப் பிறப்பிலும்.—(9) ஆட்டல் கண்டு (அதனால்) இருநிலம் இன்புற்றது - கண்ட வழியே இன்பம்; அல்லாதவழித் துன்பம் என்பது.—(10) எடுத்தது - எடுத்ததாகி, முற்றெச்சம். எடுத்திட்ட என்றதனோடு கூட்டி முடிக்க.

இப்பதிக முழுமையும் இறைவனது அருட்கூத்தில் அழுந்தித் திளைத்து எழுந்த கருத்துக்களாதல் காண்க. கூத்தனை வானவர் கோனென்று வாழ்த்துவன்; கண்டாரை "என்று வந்தா" யென்ற குறிப்பினுடன் ஆடுகின்றார்; என் மனத்துள் என்னையறியாமே புகுந்து கொண்டனர்; அவரைக் காண்பதே மனிதப் பிறவியின் உறுதி; அவருக்காட்படுவது கடமை; அவர்போல எனது உயிரை ஆளும் நாயகரும் உளரோ? அவர் திருவடிவம் என் பாவிநெஞ்சிலும் குடிகொண்டதே!; நான் அவர்க்கு அடைக்கலம்; என்போலவே உலகெல்லாம் கண்டின்புறுகின்றது; அவர்

நம்மை ஆட்கொண்டார் - என்று தொடர்ந்து போந்த இவையே ஆனந்த மெய்த் தன்மையிற் பாட்டாக எழுந்தன.

II திருச்சிற்றம்பலம்     திருநேரிசை - கோயில்

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே! பரம யோகீ !
எத்தினாற் பத்தி செய்கேன் ; என்னைநீ யிகழ வேண்டா ;
முத்தனே ! முதல்வா ! தில்லை யம்பலத் தாடு கின்ற
அத்தா !வுன் னாடல் காண்பா னடியனேன் வந்த வாறே ! 1

திருச்சிற்றம்பலம்

**பதிகக்குறிப்பு** :—பத்தனாய்ப் பாடமாட்டேன்; ஆயினும் என் அத்தனே! உனது திருநடனத்தைக் காண்பதற்கு அடியேன் வந்த ஆறு தான் என்னே ? எனது சிந்தையைத் திகைப்பியாது தூய்மைசெய்து நினைக்குமாறு நினைப்பித்தருளாய் ! அடிமை செய்ய அருளிச் செய்வாய் ! என்பது. இக்கருத்தை "என்று இத்திறம் போற்றி நின்றே" (1434) என்றருளினர் ஆசிரியர்.

**பதிகப்பாட்டுக் குறிப்பு** :—(1) **பத்தனாய்** - பத்தியுடையவனாய்; அன்பு நிறைவினால்; **பாடமாட்டேன்** - பாடேனாயினும் ; **எத்தினால்** - எதனால்; எத்துணை கொண்டு. **வந்தவாறே** - வந்தபடிதானென்னே ! அறிவினம் ? என்ன தகுதி ? 2, 6, 7, 8 பாட்டுக்களிலும் இவ்வாறே கொள்க. **முத்தன்** - இயல்பாகவே பாசங்களினீங்கியவன்.—(2) **திருத்தம் ஆம்** - உலகுயிர்களுக்குத் திருத்தத்தை ஆக்கும்.—(3) ஆடுமாற்றை அறிந்தார்பாற் கேட்டிலேன் ; **கிளை** - தீவினைச் சுற்றம். **நடுப்பட** - மனத்தினடுவுள் நீங்காது - பிறழாது.—(4) **சேறிவு** - மிக்க நெருக்கம். **சேந்தீ** என்பது எதுகை நோக்கிச் **சேந்தி** என நின்றது. **அலசுதல்** - வருந்துதல். **அலசுங்கொல்லோ ?** - வருந்துமோ - வருந்தாதோ என்றபடி. இடையறாது அறாது தொடங்கி மாறாது நித்தியமாய் நடைபெறுங் கூத்தாதலின் திரு அடியிணை வருந்துமோ ? வருந்தாதோ என்று தாம் வருந்துகின்ற கருத்து. கான்மாறியாடிய திருவிளையாடலுள் பாண்டியனது கருத்தை இங்கு வைத்துக் காண்க.—(5) **குறிப்பினாலே** - உனது அருட்குறிப்பு மறைவாகக் கருணைசெய்து கூட்டி வைத்ததனாலே ; அருட்குறிப்பிற் குறிவைத்ததனாலே. "கொண்டவன் குறிப்பி னாலே கூப்பினான் றூப ரத்தை" (ஆப்பாடி - திருநேரிசை - 4). **குறிப்பினாலே - வண்டு பண்பாடும்** என்று கூட்டியுரைப்பினுமமையும். வண்டு திருவருட்குறியைக் குறிப்பாலுணர்த்திப் பண்பாடுதல் "குனிப்புடையானுக்கே சென்றூதாய்" என்பது முதலிய திருவாசகப் (திருக்கோத்தும்பி) பகுதிகளாலும், "தூய நீறுபுனை தொண்டர்க ளென்னச் சென்று சென்றுமுரல் கின்றன கண்டு" (96) என்றதனாலும் கருதுக.—(7) **புறமலா அடிமை** - அகம்படித் தொண்டு. புறம்பல்லாத. **வையகந்தன்னின் மிக்க**-"உலகுக் கெல்லாந் திருவுடை."—(8) **மனத்தினார்** - ஆர் விகுதி இகழ்ச்சிக் குறிப்பு. **கனைப்பர்** - வேட்கை மிக்குச் செல்வர். **இலயம்** - "கூடிய விலயஞ் சதிபிழை யாமை"; கூத்தின் ஒன்றிக்கை.—(9) **நினைக்குமா நினைப்பியாதே** - நீ நினைத்தாலன்றி நான் நினைக்குமாற்றால் நினைக்க வொண்ணாது. "நகருமா நகரே" "விளம்புமா விளம்பே" முதலிய திருவிசைப் பாக்கள் கருதுக.—(10) **விண்ணுண்ட** - விண்ணினையும் கடந்து செல்லும்.

1435. நீடிய மணியின் சோதி நிறைதிரு முன்றின் மாடும்,
ஆடுயர் கொடிசூழ் பொற்றே ரணிதிரு வீதி யுள்ளும்,

கூடிய பணிகள் செய்து கும்பிடுந் தொழில ராகிப்
பாடிய புனித வாக்கின் பணிகளும் பயிலச் செய்வார். கஎ௦

1436. அருட்பெரு மகிழ்ச்சி பொங்க "வன்னம்பா லிக்கு" மென்னுந்
திருக்குறுந் தொகைகள் பாடித், திருவுழ வாரங் கொண்டு
பெருத்தெழு காத லோடும் பெருந்திருத் தொண்டு செய்து
விருப்புறு மேனி கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாட, கஎக

1437. மேவிய பணிகள் செய்து விளங்குநாள், வேட்க ளத்துச்
சேவுயர் கொடியார் தம்மைச் சென்றுமுன் வணங்கிப் பாடிக்,
காவியங் கண்டர் மன்னுந் திருக்கழிப் பாலை தன்னில்
நாவினுக் கரசர் சென்று நண்ணினார் மண்ணோர் வாழ. கஎஉ

1435. (இ - ள்) மணியின் நீடிய சோதிநிறை திருமுன்றில் மாடும் - மணிகளது நீடிய ஒளிநிறைந்த திருமுன்றிலின் பக்கத்தும்; ஆடு உயர் கொடிசூழ் பொன் தேர் அணி திருவீதி உள்ளும் - ஆடுகின்ற உயர்ந்த கொடிகள் சூழ்ந்த அழகிய தேர் செல்லும் அணி வீதிகளினுள்ளும்; கூடிய பணிகள் செய்து - நேர்ந்த திருப்பணிகள் செய்து; கும்பிடும் தொழிலர் ஆகி - கும்பிடுகின்ற தொழிலை உடையவர் ஆகி; பாடிய...... செய்வார் - பாடுகின்ற தூய திருவாக்கினது பணிகளையும் பயிலச் செய்வாராய், கஎ௦

1436. (இ - ள்) அருள் பெரு மகிழ்ச்சி பொங்க - அருளைப் பெற்றதனால் உளதாகிய பெருமகிழ்ச்சி மேன்மேலும் பொங்க; "அன்னம் பாலிக்கும்" என்னும் திருக்குறுந்தொகைகள் பாடி - "அன்னம் பாலிக்கும்" என்று தொடங்குகின்ற திருக்குறுந் தொகைகளை அருளிச்செய்து; பெருத்துஎழு...தொண்டு செய்து - மிகப் பெரிதாகி மேலெழுகின்ற காதலுடனே பெரிய திருத்தொண்டினைச் செய்து; விருப்பு உறும் மேனி கண் நீர் வெண் நீற்று வண்டல் ஆட - விருப்பம் பொருந்தும் திருமேனியில் வடியும் கண்ணீரினால் கரைந்த திருவெண்ணீற்றினோடு ஆகிய வண்டல் பொருந்த, கஎக

1437. (இ - ள்) மேவிய...நாள் - இவ்வாறு பொருந்திய திருப்பணிகளைச் செய்து விளங்கும் நாட்களில்; வேட்களத்து...பாடி - திருவேட்களத்தில் எழுந்தருளிய இடபத்தை உயர்த்திய கொடியினையுடைய சிவபெருமானைத் திருமுன்பு சென்று வணங்கிப் பாடி; காவியங்கண்டர்...தன்னில் - நீலமலர் போலும் நிறமுடைய அழகிய கண்டமுடைய பெருமான் நிலைபெற்று எழுந்தருளிய திருக்கழிப்பாலையில்; சென்று நாவினுக்கரசர் மண்ணோர் வாழ நண்ணினார் - போய்த் திருநாவுக்கரசு நாயனார் மண்ணுலகத்தவர் வாழும் பொருட்டு நண்ணினார். கஎஉ

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1435. (வி - ரை) மணியின் நீடிய சோதி - என்க. இயற்கை யொளியாதலின் நீடிய என்றார்.

திருமுன்றில் - அம்பலவரது கோயில் திருமுற்றங்கள். மணிகள் - திருமுற்றத்தில் கிடக்கின்றவை. மாயாகாரியங்களாகிய பொன் மணி முதலியவற்றில் விருப்பமில்லாத பெரியோர்களே அம்பலவர் திருமுற்றத்தில் அணைவார்களாதலின் அவை அங்குக் கேட்பாரற்றுக் கிடப்பன; வணங்கவரும் தேவர்களின் முடிகள் மோதுதலினாற் சிந்திய மணிகளும் அங்குக் கிடப்பன என்பது முன்னர்க் (1428) கண்டோம். பின்

நவமணிகளையும் நாயனுர் உழவாரத்தினில் ஏந்தி வாவியிற்புக எறியும் நிகழ்ச்சியையும் இங்கு நினைவுகூர்க. இந்த மணிகள் கோயிலின் திருமதிலிலும் கோபுரம் நாசிமுதலிய வற்றிலும் விளங்குபவை என்றும், தரிசிக்கவரும் தேவர் முதலியோர் அணிகலன் களில் விளங்குவன என்றும் உரைத்தலுமாம்.

ஆடுயர் கோடிசூழ் வீதி - தேர்வீதி - அணிவீதி - திருவீதி - என்று தனித்தனி கூட்டுக. வெண்கொடிகள் சூழ்தல் வீதிகளுக்கு அழகு தருதலுடன் சிறப்பும் தருவது. "விதானமும் வெண்கொடியு மில்லாவூரும்" "மாடந்தோறும்...சோதி வெண்கொடி களாடும் சுடர்நெடுமறுகு" (474) முதலியவை காண்க. தேர்வீதி - அம்பலவாண ரின் தேர் செல்லும் நான்கு திருவீதிகள். "தேரு லாவிய தில்லையுள்" (தேவா), "தேரார் வீதியிற் றேவர் குழாங்கள்" (திருவிசைப்பா) முதலியவை காண்க. திருவீதி - முத்தித் திருவைக் கூட்டுவிக்கும் வீதி; "மாதவங்க ணல்கும்", "பொய்ப்பிறவிப் பிணியோட்டும்" என்பன காண்க. அணி - நேர்மை - பெருமை - அழகு - அலங்காரம்.

மாடும் - உள்ளும் - என்ற பொருள் கருதுக. முன்றிலின் பக்கங்களே கைத் தொண்டால் விளக்கவும், திருவீதி முழுதும் பணிசெய்யவும் உள்ளன என்பதாம். வீதி களை அலகிடுதல் பற்றி 1428-ல் உரைத்தவை பார்க்க.

கூடிய பணிகள் - தம்மாலியன்றன எல்லாம் என்றும், வேண்டிய பணிகள் எல் லாம் என்றும் கொள்க. பணிகள் - உழவாரப்பணிகளாகிய கைத்திருத் தொண்டு.

கும்பிடுதல்-மனத்தினுலும் வாக்கினுலும் பணிசெய்தலும் கும்பிடுதலின் பாற்படும்.

பாடிய - முன்னரே பாடிப் பயின்ற. இறைவனையே பாடிய என்றலுமாம்.

பயில - நிரம்ப. பிறரும் பயின்று பேறடைய என்ற குறிப்புமாம்.

செய்வார் - குறுந்தொகைகள் பாடித் - திருத்தொண்டு செய்து - வண்டலாடப் (1436) - பணிசெய்து விளங்கு நாள் - சென்று - பாடிச் - சென்று - நண்ணினுர் (1437) என மேல்வரும் இரண்டு பாட்டுக்களுடன் கூட்டி முடித்துக் கொள்க.

கூடிய பணிகளும் வாக்கின் பணிகளும் செய்த வகையினை மேல் வரும் பாட் டில் விரிக்கின்றதனுல் செய்வார் என்றுர். செய்து-செய்வார்-என்ற வினையெச்சங்கள், பாடி - செய்து என்று எதிர் நிரனிறையாக மேல்வரும் பாட்டின் வினையெச்சங்களுடன் முடிந்தன.

பணிகளும் - என்ற உம்மை திருவீதிப் பணிசெய்து கும்பிடும் தொழிலுடன் என்று இறந்தது தழுவிய எச்சவும்மை.

நிறைதருமன்றில்—மாடுயர்—மாமணி வீதி—என்பனவும் பாடங்கள். 170

1436. (வி - ரை) அருட்பெரு மகிழ்ச்சி - அருளைப் பெற்றேன் என்ற ஆர்வத் தால் மிக்கெழுகின்ற மகிழ்ச்சி. இஃது "இன்னம் பாலிக்குமோ? இப்பிறவியே" என்ற திருக்குறுந்தொகைக் குறிப்பினுற் பெறப்பட்டது. பதிகக் குறிப்புப் பார்க்க. பொங்கப் - பாடி என்று கூட்டுக.

"அன்னம் பாலிக்கும்" என்னும் - இஃது அத்திருப் பதிகத்தின் தொடக்கம். முதற் குறிப்பு என்பர். பொங்கப் - பாலிக்கும் என்று தொடர்ந்து கூட்டி அருளால் வரும் மகிழ்ச்சி பொங்கும்படி அன்னத்தை வழங்கும் என்று உரைத்து, ("உண்டன மலமாம்" [11 - திருமுறை - கோயினுன் - 28] என்றபடி மலமாய்க் கழியும் ஏனை அன்னம் போலல்லாது) தில்லையில் இறைவர் வழங்கும் அன்னம், அருளைப் பெறுவித்து மலத்தை நீக்கிச் சிவனது ஆனந்தத்தை விளைக்கும் என்று பொருள் கொள்ளுதலும் பொருந்தும்.

திருக்குறுந்தொகைகள் - குறுந்தொகை என்பது யாப்பின் வகை; தாண்டகம் - திருவிருத்தம் என்பனபோல. பதிகத்தினுள் ஒவ்வொரு திருப்பாட்டும் குறுந்தொகைப்

பாட்டானதால் பன்மையாற் கூறினார். தில்லைக்கு நாயனார் பாடியனவாகிய குறுந் தொகைப் பதிகங்களுள் நமக்குக் கிடைத்துள்ளன இரண்டேயாம். அவற்றுள், இப் பதிகம் முதலிற் பாடி யருளப்பட்டது. பின்னர்ப் பாடியதனை 1439ல் குறித்தல் காண்க. ஆதலின் இங்குப் பன்மை பாட்டுக்களைக் குறித்தது என்க.

**திருவுழவாரம்** - இங்குத் திரு என்றது "கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்" என்ற அழகு. இது இப்பொருளில் வருதல் "திருவளர் தாமரை" என்ற திருக்கோவையாருக்குப் பேராசிரியர் உரைத்த உரையா லறிக. "அஃதென் சொல்லிய வாறோ? வெனின், யாவனொருவன் யாதொரு பொருளைக் கண்டானோ அக்கண்ட வற்கு அப்பொருண்மேற் சென்ற விருப்பத்தோடே கூடிய அழகு. அதன்மே லவற்கு விருப்பஞ் சேறல் அதனிற் சிறந்த வுருவும் நலனும் ஒளியுமெவ்வகையானும் பிறி தொன்றற்கில்லாமையால் திருவென்றது அழகுக்கே பெயராயிற்று...கோயிலைத் திருக்கோயிலென்றும், கோயில் வாயிலைத் திருவாயிலென்றும், அலகைத் திருவல கென்றும் பாதுகையைத் திருவடி நிலையென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன வெல் லாம்...கண்டவனுடைய விருப்பத்தானே யெழுந்தது..." என்று அவர் கண்டவுரை இங்கு மிகப்பொருந்துவது காண்க. நாயனாரது திருக்கையில் ஏந்தியதும் அவர் திருப் பணிசெய்ய உதவியதுமாகிய உழவாரம் அடியார்களது விருப்பங்களையெல்லாம் கவரும் தன்மையுடன் விளங்கும் அழகுடையது என்பதனை ஆசிரியர் காட்டியவாறு. அஃது ஆசிரியரது திருவுள்ளத்தை முதலிற் கொள்ளை கொண்டது என்க.

**பெருந்தெழு காதலோடும் பெருந் திருத் தொண்டு - செய்து** - திருப்பதிகம்பாடித் திளைத்தலினும் இத்திருத் தொண்டினில் நாயனார்க்கு மிக்க காதல் எழுந்த தென்றும், இதனையே அதனினும் பெரிய தொண்டாக நாயனார் கருதினர் என்றும் அறிவிக்க இவ்வாறு கூறினார். **பாடி** என்றதன்பின் இதனை வைத்து முன்பாட்டில் பணிகள் செய்து வாக்கின்பணிகளும் என்று கூறிய முறையை மாற்றிய வைப்புமுறையும் இக் கருத்துப் பற்றியது. முன்னர்ப் **பணிகளும்** என்ற உம்மையின் தொனிக் குறிப்பும் இது.

**விருப்பு உறும் மேனி - விருப்பு** - திருப்பணி செய்து தலைமுதல் கால்வரை உள்ள அங்கங்களை யெல்லாம் இறைவனது பணிக்குப் பயன்படுத்தும் விருப்பு. திருவங்கமாலைப் பதிகக் கருத்துக் காண்க.

**கண்ணீர் வெண்ணீற்று வண்டல் ஆட** என்றது திருமேனியில் "தூய வெண் ணீறு துதைந்த பொன்மேனியும்" (1405) என்றபடி நாயனார் திருவெண்ணீற்றை நிறைய அணிந்திருந்தனர்; "மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும்" (1490) என் னும்படி அருட்கண்ணீர் இடையறாது பெருக்கெடுத்து மார்பிலே வழிகின்றது; அதனால் திருநீறு நனைந்து வண்டல்போல ஆக என்க. **வண்டல் - சேற்றுநீர். வண்டல் - மகளிர் விளையாட்டு** என்று கூறினர் முன் உரைகாரர். அது பொருந் தாமையறிக.

171

திருச்சிற்றம்பலம்

திருக்குறுந்தோகை - கோயில்

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம், பொன்னம் பாலிக்கு, மேலுமிப் பூமிசை,
யென்னம் பாலிக்கு மாறுகண் டின்புற, வின்னம் பாலிக்கு மோவிப் பிறவியே 1

மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன், சதுரன் சிற்றம் பலவன் திருமலை,
யதிர வார்த்தெடுத் தான்முடி பத்திற,மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே 10

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—அருள் பெற்ற மகிழ்ச்சியிற் றிளைத்தது. தில்லைச்சிற்றம்பலம் அன்னமும், பொன்னும், இன்னும் எதுவும் பாலிக்கும்; இப்பிறவியில் வேறெது வேண்

டும்? இதனைச் சென்றடைந்துய்மின்! இதனை அடைந்து அடிமை பூண்ட என்னை அல்லலும் அருவினையும் தொல்வல்வினை தானும் என் செய்யும்? சிறுகாலன் தில்லையை அணுகிய சிட்டர்பால் அணுகான்; சிற்றம்பலவனார் அடியாரை யறிவர்; என் நெஞ்சினுள் அம்பலவன் பாதம் இருக்க, அதனை அயனு மரியும் தேடியும் திரிந்தும் காண வல்லரோ?

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) பாலிக்கும் - கொடுக்கும்.—(2) அரும்பு அற்றப் பட - அரும்பு மலரும் பருவத்தில்.—(3) அரிச்சுற்றவினை - அரிக்கின்ற - வருத்துகின்ற - சுற்றமாகச் சூழ்ந்தவினை. எரி(யாற்) சுற்றப்பட - வேவ. சிரிச்சுற்று - சிரிக்க லுற்று.—(4) தொல்லை வல்வினை - பழய சஞ்சித வினை.—(5) ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுது - உடலில் உயிருள்ளளவும்.—(6) சிட்டர் - நலமிக்கவர்.—(9) வில்லை வட்டப்பட வாங்கி - வில்லினை வளைத்து; வாங்குதல் - வளைத்தல். எல்லை வட்டம் - தூர எல்லை.—(10) பாதம் என் நெஞ்சுள் இருக்க - "சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் தருளுவ தினியே" என்றபடி இறுகப் பிணித்து வைத்து. அடியார்க்குள்ள இறுமாப்பு.—(10) மிதி கோள் சேவடி - மிதித்தமையால் தண்டனையும், கோள்ளுத லால் அருளும் செய்த திருவடி. கோள்ளுதல் - ஏற்றுக்கொள்ளுதல். பாடல் கேட்டு இரங்கி நாளும் வாளும் கொடுத்தல். மிதிசேவடி - கொள்சேவடி என்க.

"அன்னம் பாலிக்கும்" என்ற நாயனாரது மெய்த்திருவாக்கின் பயனாக இன்றளவும் தில்லைக்கூத்தன் திருமுன்பு அடைந்தார்க்கெலாம் அன்னம்பாலிக்கப்பட்டு சோற்றுச் சிறப்பு வளர்ந்தோங்கி வருதல் கண்கூடு. அன்றியும், திருவம்பலமுடையாருக்கு நாளும் நிகழும் ஆறுகாலப் பூசையிலும் அன்னபிடேக வழிபாடும், நாளும் பல திருப் பாவாடை நிவேதனங்களும் இத்தலத்துக்கேயுரிய சிறப்புக்களாம். கோயில் உறுப் புக்களுள் அன்னமய கோசமும் ஒன்றுரும் தத்துவமும் குறிக்கொள்க.

இச்சிறப்புப் பற்றியே இத்திருப்பதிகத்தை மாகேசுவர பூசையில் தேவார மோதும்போது நியதியாய் ஓதும் மரபு கையாளப்பட்டு வருகின்றது. இப்பதிக முழுதும் மனப்பாடம்செய்து பாராயணம் செய்தற்குரிய அருமைப்பாடுடையது.

1437. (வி - ரை) மேவிய - தமது திருவுள்ளத்துப் பொருந்திய.

சே உயர் கொடியார் - "சேவுயருந்திண் கொடியான்"—ஆளுடைய பிள்ளையார். சே - இடபம். உயர் சேக் கொடியார் - என்க. இடபக்கொடியை உயர்த்தியவர். உயர்ந்த சேக் கொடியை உடையவர் என்றலுமாம். சே - பசுவகை எனக்கொண்டு பசுக்களைப் பாசப்பகை நீக்கி உயர்த்தும் கொடி என்றலுமொன்று. "சாலவும், எதிலார் துண்ணென்ன மேல்விளங்கி யேர்காட்டுங், கோதிலா ஏறுங்கொடி" (தசாங்கம் - 10) என்ற திருவாசகமும், "சுமைதுன்ப நீக்குந் துவசன்" (நெஞ்சுவிடுதூது - 74) என்ற ஞானசாத்திரமும் காண்க.

முன் சென்று வணங்கி - என்க. வேட்களத்துச் சென்று - கொடியார் - முன் வணங்கி என்றுகூட்டி உரைத்தலுமாம்.

பாடி - குறுந்தொகைத் திருப்பதிகம் அருளிச்செய்து.

காவியங் கண்டர் - காவி - நீலமலர். அதன் நிறத்துக்கு வந்தது. பண்புவமம்.

திருக்கழிப்பாலை தன்னில் சென்று நாவினுக்கரசர் மண்ணோர் வாழ நண்ணினர் என்க. மண்ணோர் வாழ்வடைதலாவது அவரைப் பின்பற்றி அடைந்து துதித்துய்தல்.

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை - திருவேட்களம்

நன்று நாடொறு நம்வினை போயறும்; என்று மின்பந் தழைக்க விருக்கலாம்;
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை, துன்று பொற்சடை யானைத் தொழுமினே.

திருச்சிற்றம்பலம்

**பதிகக்குறிப்பு** :—நாடொறும் நம்வினை போயறும்; இடரில்லை; அல்லலில்லை; அருவினையில்லை; துன்பமில்லை; இனித் துயரில்லை; வினையாயின பாறும்; ஆதலின் வேட்களங் கைதொழுது இட்டமாகி யிரு நெஞ்சே; அடிபோற்றினல் கறைமிடற்றர் நம்மைக் காப்பர்; சூழ்ந்தவர் குட்ட வல்வினையுந் தீர்த்துக் குளிர்விக்கும் சிட்டர்; நினைமின்; சேர்மின்; என்றும் இன்பம் தழைக்க விருக்கலாம். "சேவுயர் கோடியார்" என்று ஆசிரியர் காட்டிய குறிப்பும் இது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(3) **ஆக்கஏேறுவர்** - பசுபதி; **ஏறுதல்** - பசுக்களுக்குள் இருந்து நல்வழி காட்டி ஏற்றுதல்.—(6) **போட்ட** - விரைவாக.—(7) **எட்டு ஒன்று மிரண்டு மூன்று ஆயினர்**. **எட்டு** - அட்ட மூர்த்தம். **ஒன்று** - பதிப்பொருளாகிய ஒன்று. "ஒன்றென்ற தொன்றே காண் ஒன்றே பதி" (சாத்திரம்). **இரண்டு** - சிவம் சத்தி; "இருமையினொருமையும்" (திருஎழுகூற்றிருக்கை). **மூன்று** - படைப்பாதி முத்தொழிற் றலைவர்.—(9) **சுட்ட கோள்கையராயினும் - குளிர்விக்கும்** - முரண் அணி.—(10) **ஊன்றிட வாங்கிய** - ஊன்றுதலும் பின்னர் வாங்குதலும் செய்தவர். **வாங்குதல்** - எடுத்தல்.

**தலவிசேடம்**:—**திருவேட்களம்** என்பது தில்லைக்குக் கிழக்கே (புகைவண்டி நிலயத்திலிருந்து) ஒரு நாழிகை யளவில் அடையத்தக்கது. அருச்சுனருக்குப் பாசுபதம் கொடுத்த தலமென்று கருதப்படுகின்றது. சுவாமி பெயர் **பாசுபதேசுவரர்** என்பதனாலும், இத்தலத்தில் அருச்சுனன் றிருவுருவமும், பாசுபதமேந்திய சுவாமி திருவுருவமும் வைத்து வணங்கப்படுவதனாலும், நாயனரது திருக்குறுந்தொகையுள் **வேடனர்** என்ற குறிப்பினாலும் இக்கருத்து வலியுறுகின்றது. இத்தலத்தில் ஆண்டுதோறும் வைகாசித் திங்கள் முழு மதி விசாக நாளில் இறைவனர் வேடனாகி அருச்சுனனுடன் பொருது பாசுபதப்படை நல்கும் விழாவும் நடைபெறுகின்றது. இத்தலப் பெயரை **திருப்போர்க்களம்** எனவும் வழங்குவர். இது **மூங்கில் வனம்** எனவும் பெயர் பெறும். **அம்பிகை** - நல்ல நாயகி. பதிகம் 2. **களம்** - குளம் - கா - தளி - குடி - துறை என்பனபோல இருப்பிடம் என்ற பொருள் தருவது. சிவதருமங்கள் பலவும் செய்துவரும் "செட்டிநாட்"டரசர் - திரு - இராசா - சர் - அண்ணாமலை செட்டியாரவர்களால் தாபிக்கப்பட்ட அண்ணாமலைப் பல்கலைக்கழகம் என்ற கலைக் கூடம் இத்தலத்தைச் சுற்றி இற்றை ஞான்று செழித்து வளர்ந்து நாடெங்கும் கலை ஞானங்களை வளர்க்கும் நிலையமாக விளங்குகின்றது. இது அண்ணாமலை நகரம் என்ற பெயரால் இப்போது பெரு மாடமாளிகைகளுடன் பெருநகரமாகத் திகழ்கின்றது. கோயில் திருப்பணிகள் செய்யப்பெற்று அணிபெற விளங்குவது. இவ்வாறு கலைஞானங்களுக்கு நிலைக்களனாக இஃது இடம்பெறுவதன் காரணம் எமது ஞானப் பெருமக்களாகிய ஆளுடைய பிள்ளையாரும் திருநாவுக்கரசரும் ஈண்டு வதிந்தருளிய மாண்பேயாகும் என்க.

வேறு

1438. சினவிடையே றுகைத்தேறு மணவாள நம்பிகழல்
சென்று தாழ்ந்து,
"வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே!
யேன்கின் றூ"ளென்
றனையதிருப் பதிகமுட னன்புறுவண் டமிழ்பாடி,
யங்கு வைகி,
நினைவரியார் தமைப்போற்றி நீடுதிருப் புலியூரை
நினைந்து மீள்வார், கஎங

1439. மனைப்படப்பிற் கடற்கொழுந்து வளைசொரியுங் கழிப்பாலை
மருங்கு நீங்கி,
நனைச்சினைமென் குளிர்ஞாழற் பொழிலூடு வழிக்கொண்டு
நண்ணும் போதில்,
"நினைப்பவர்தம் மனங்கோயில் கொண்டருளு மம்பலத்து
நிருத்த னுரைத்
தினைத்தனையாம் பொழுதுமறந் துய்வனே?" வெனப்பாடித்,
தில்லை சார்ந்தார். ௧எச

1438. (இ - ள்) சினம் விடை ஏறு உகைத்து ஏறும் மணவாள நம்பி கழல் சென்று தாழ்ந்து - கோபமுடைய இடப ஏற்றினை ஊர்ந்து ஏறும் மணவாள நம்பியாகிய இறைவருடைய பாதங்களைச் சென்று வணங்கி; 'வனபவள வாய் திறந்து வானவர்க்கும் தானவனே! என்கின்றாள்' என்று - அழகிய பவளம்போன்ற வாயினைத் திறந்து வானவர்களுக்கும் தானவனுகியவரே! என்று சொல்கின்றாள் என்று; அனைய திருப்பதிகமுடன் - அத்தகையதாகிய திருப்பதிகத்துடனே; அன்பு உறு வண் தமிழ் பாடி - அன்பு பொருந்தும் வண்மையுடைய தமிழ் மாலைகளைப் பாடி; அங்கு வைகி - அத்தலத்திற் றங்கி; நினைவு அரியார் தமைப்போற்றி - நினைப்பதற்கும் அரியவராகிய சிவபெருமானைத் துதித்து; திரு நீடு புலியூரை நினைந்து மீள்வார் - திருநீடுகின்ற புலியூரை நினைந்துகொண்டு மீள்வாராகி, ௧எரு

1439. (இ - ள்) மனைப்படப்பில் கடல் கொழுந்து வளை சொரியும் கழிப்பாலை மருங்கு நீங்கி - மனைகளின் முற்றங்களில் கடலலைகள் சங்குகளைச் சொரிகின்ற திருக்கழிப்பாலையினை நீங்கி; நனை சினை மென் குளிர் ஞாழல் பொழில் ஊடு வழிக்கொண்டு நண்ணும் போதில் - அரும்புகளையுடைய கொம்புகளோடுகூடிய குளிர்ந்த புன்னைகளடர்ந்த சோலைகளின் வழியாகச் சென்று அணைகின்ற பொழுதில்; "நினைப்பவர் தம் மனம் கோயில் கொண்டு அருளும் அம்பலத்து நிருத்தனுரைத் தினைத்தனையாம் பொழுதும் மறந்து உய்வனே?" எனப்பாடி - நினைப்பவர்களுடைய மனத்தையே கோயிலாகக் கொண்டு வீற்றிருந்து அருள் புரியும் திருவம்பலக்கூத்தரைச் சிறிது போதும் மறந்தால் நான் உய்வேனே? என்ற கருத்துடைய திருப்பதிகத்தைப் பாடிக் கொண்டே; தில்லைசார்ந்தார் - திருத்தில்லையைச் சேர்ந்தனர். ௧எச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1438. (வி - ரை) சினவிடை ஏறு உகைத்து ஏறும் மணவாள நம்பி கழல் - "நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சங் கொண்டார் - வேண்டு நடைநடக்கும் வெள்ளேறு ஏறி" (தாண் - வெண்காடு-1) என்றபடி விடையினை ஊர்ந்து தெருவே வந்து நாயகனுகி உள்ளத்தைக்கவர்ந்து சென்ற அகப்பொருட்டுறையில் பதிகம் பாடியருள் கின்றாராதலின் ஆசிரியர் இவ்வாறு விடையினை வைத்துக் தொடங்கியதுடன், மணவாள நம்பி என்ற தன்மையாற் குறித்தருளினர். "பழியிலான் புகழுடையன் பானீற்றன் ஆனேற்றன் என்கின்றாளால்" என்று இப்பதிகத்துட் கூறுதலும் காண்க.

வன பவள வாய்......என்று - இது திருப்பதிகத்தின் தொடக்கமும் பதிகக் குறிப்புமாம்.

அனைய திருப்பதிகம் - அன்னவாகிய பல கருத்துக்களைப் பதிகமுழுதும் கூறிய பதிகம்.

திருப்பதிகமுடன் அன்புறு வண் தமிழ்பாடி - நாயனுர் திருக்கழிப்பாலையில் வைகிய நாட்களில் இவ்வாறுக அருளிய பதிகங்கள் பலவாம். அவற்றுள், திருத்தாண்ட

கம், திருநேரிசை, திருக்குறுந்தொகை, திருவிருத்தம் என்றவற்றில் ஒவ்வொன்றே இப்போது நமக்குக் கிடைத்துள்ளன. இவையெல்லாம் அன்பு மேலீட்டினால் உண்ணிறைந்து மேல்வழிவன போன்றன என்பார் அன்புறு என்றும், வண்மையால் பற்பல வளங்களையும் தருதலால் வண்தமிழ் என்றும், தமிழுக்குச் சிறப்பாயுரிய அகப்பொருட்சுவை மிக்கிருத்தலின் தமிழ்பாடி என்றும் கூறினார்.

அந்த வைகி - திருக்கழிப்பாலையில் நாயனார் சிலகாலம் தங்கினர் என்பது திருப்பதிகங்களாற் கருத உள்ளது.

நினைவு அரியார் - நினைத்தற்கும் அரியவர். உயர்வு சிறப்பும்மை தொக்கது. "உலகெலா முணர்ந் தோதற் கரியவன்" என்றது காண்க. உயிர்ப்போத உணர்வினுக்கு அரியவர் - எட்ட முடியாதவர் என்பது. இது நடுநிலைத் தீபமாய் கழிப்பாலையிறைவரையும், தில்லையிறைவரையும் குறித்தது காண்க.

திரு நீடு புலியூர் என்க. "செல்வ நெடுமாடம்" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரமும் காண்க.

நினைந்து மீள்வார் - நினைந்து - "நினைப்பவர்" என்ற திருக்குறுந்தொகையின் குறிப்பு. மீளுதல் - மீண்டுந் தில்லையை அடைதல். மீள்வார் - மீள்வாராக; எதிர் கால வினையெச்சம். மீள்வார் - நண்ணும் போதில் - என மேல்வரும் பாட்டின் வினையெச்சத்துடன் முடிந்தது. 173

திருச்சிற்றம்பலம் காந்தாரம் - திருக்கழிப்பாலை

வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே யென்கின் றாளாற் ;
சினபவளத் திரடோண்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்ற னென்கின் றாளால் ;
அனபவள மேகலையோ டப்பாலைக் கப்பாலா னென்கின் றாளாற்
கனபவளஞ் சிந்துங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ ? 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தலைவனைப் பிரிந்த தலைவியினது மெலிவு கண்டு, செவிலி அல்லது தாய் கூறிய துறையாக அகப்பொருட் சுவையில் அமைந்தது இத்திருப்பதிகம். "மனைப்படப்பிற் கடற்கொழுந்து வளைசொரியும் கழிப்பாலை" (1439) என மேல்வரும் பாட்டிற் குறிப்பிடுகின்றபடி இத்தலம் நெய்தனிலஞ் சார்ந்தது; "இரங்கல் நறு நெய்தல்" என்று திணை இலக்கணம் வகுத்தபடி, பிரிவின் இரங்குதல் இத்திணைக் குரிய பொருளாயிற்று. தலைவனைக்கண்டு திளைத்த தலைவி, அவனது பிரிவு நினைந்து அதுவே நினைவாய் இருப்பாள்; அவனது உருவெளிப்பாடு கண்டோ அன்றிக் காணாதோ அவனது அழகினையும் நலங்களையும் பிதற்றி இரங்கி மெலிவடைவாள்; அது கண்டும், தன்னை மறந்து பிதற்றி அவள் கூறும் சொற்களைக் கேட்டும், செவிலியும் தாயரும் இவள் இத்தலைவனைக்கண்டு திளைத்தனளோ என்று ஐயுற்றுத் தெளிந்து மேல் ஆவன அணிகுவர். இக்கருத்துப்பட இப்பதிக முழுமையும் வருவன காண்க. "அழகனேகழிப் பாலையெம் மண்ணலே, யிகழ்வ தோவெனை யேன்றுகொ ளென்னுமே" என்ற குறிப்புட் கொண்ட கருத்துடைய இத்தலக் குறுந்தொகைத் திருப்பதிகத்தினையும் நாயனார் இவ்வாறே அகப்பொருள் துறையின் வைத்தோதியருளினர். "கழிப்பாலைச் சேர்ப்பனாரே" என்ற திருநேரிசைக் குறிப்பும், "கழிப்பாலை மேய கபாலப்பனார், மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க் கவ்வழியே போது நாமே" என்ற இத்தலத் திருத்தாண்டகக் குறிப்பும் இக்கருத்துப்போலும்! சேர்ப்பர் - நெய்தனில மக்களின்பெயர்.

குறிப்பு:—இத்திருப்பதிகம் ஆசிரியரது திருமனத்தில் பதிந்து அதனைக் கவர்ந்ததாதலின் முன் கூறிவந்த யாப்பினைமாற்றி இங்கு இந்த யாப்பினிற் சரிதஞ் சொல்லத்

புகுகின்ருர். பின்னர்ச் "செய்யமா மணியொளிசூழ்" (1489),என்றும்,"சித்த நிலாவுந் தென்திரு வாரூர்" (1500) என்றும் சரிதங் கூறப்புகும் யாப்பு வகைகளும், இவ்வாறு முன் வந்தனவும், பின் வருவனவும் காண்க.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) வன பவள வாய் - அழகிய பவளம்போன்ற வாய். வாய் திறந்து - மனத்தினுள் வைக்கலாற்ருமையின் வாய் திறந்தும் கூறுகின்ருள். "இலவவிதழ்ச் செந்துவர்வாய் நெகிழ்ந்தாற்ரு மையின்வறிதே யின்ன சொன்ஞள்" (320) என்ற தன்மை காண்க. உந்து ஆனவன் - மேலானவன். இடுக்கண் செய்யும் பகைவன் என்ற குறிப்புமாம்.—(3) பிறந்திளைய திங்கள் - மூன்ரும் பிறை.—(4) பெரும்பாலன் - மிக்க இளமை காட்டுபவன்.—(5) பெரும் தடம் கண் இரண்டல்ல மூன்றுளவே - கண்களைக் கூறியது அக்கண்ணி ஞேக்கத்துட்பட்டு அலைந்த குறிப்பு. விழிஉலாம் என்ற குறிப்புமது. கண் மூன்று என்றது விரகத்துட்படுவோர், நெற்றிக்கண்ணுற் காமனை முனியும் கருத்தன் என்றுட்கொள்ளும் குறிப்பு.—(7) மின்னிடுதல் - ஒளிவிட்டு விளங்குதல்.—(8) ஓரோதம் - வேதம். பிரணவம்.

தலவிசேடம் :—திருக்கழிப்பாலை. இத்தலம் முன்னர்க் கொள்ளிடத்தின் வடகரையில் காரைமேடு என்னும் இடத்தில் இருந்தது ; அக்கோயிலை ஆறு கொண்டு போய்ப் பழுதுபட்டுவிட்டபடியால், இப்போது திருநெல்வாயில் என்னும் சிவபுரியில் தனிக் கோயிலாக அமைத்துத் தாபிக்கப்பட்டுள்ளது. வன்மீக மாமுனிவர் பூசித்த தலமென்ப. சுவாமி - பால்வண்ணநாதர். வெண்மையான அழகிய திருமேனி. அம்மையார் - வேதநாயகி. பதிகங்கள் 8.

இது சிதம்பரம் புகைவண்டி நிலயத்தினின்றும் தென்கிழக்கில் ஒன்றரை நாழிகையளவில் உள்ள சிவபுரித் தலத்திற்குத் தெற்கே கால்நாழிகையில் அடையத் தக்கது. இத்தலத்தைத் திருப்பணிகள் செய்து நிரந்தரமாகப் பூசை நிபந்தங்களும் அமைத்தவர் பெருநிலக்கிழவரும் பெருஞ் சிவபுண்ணிய சீலருமாகிய திருக்கழிப்பாலை பழனியப்ப முதலியார் ஆவர். இப்பெருந்தகையாரால் சிதம்பரத்தில் முதன்மையாகத் தாபிக்கப்பட்டு நடைபெற்று வரும் தேவாரப் பாடசாலை ஏனைத் தேவாரப் பாடசாலைகளுக்கெல்லாம் வழிகாட்டிய உயர்ந்த தாபனமாகும். இப்புண்ணியர் சேக்கிழார் பெருமானிடம் மிக்க அன்பு வாய்ந்தவர். அவரது பூதவுடல் இப்போதைக்குப் பல ஆண்டுகளின் முன் மறைந்ததாயினும் புகழுடம்பாகிய சிவபுண்ணியச் சீலவுடல் அழிவில்லாது என்றும் நிலைபெற்றுள்ளது.

அன்புறு வண் தமிழ் - பிறபதிகங்கள். இவற்றுள் நமக்குக் கிடைத்துள்ளவை நான்கு. அவை :—I "வண்ணமும் வடிவும்" என்ற திருக்குறுந்தொகையும், II "கங்கையைப் பாகம் வைத்தார்" என்ற திருநேரிசையும், III "நெய்தற் குருகு" என்ற திருவிருத்தமும், IV "ஊனுடுத்தி" என்ற திருத்தாண்டகமுமாம்.

இப்பதிகக் குறிப்புக்கள் எல்லாம் முன்னர் உரைக்கப்பட்டன.

I　*திருச்சிற்றம்பலம்*　　திருக்குறுந்தொகை

*வண்ண மும்வடி வுஞ்சென்று கண்டிலள் ; எண்ணி நாமங்க ளேத்தி நிறைந்திலள் ;*
*கண்ணு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம், மண்ண லேயறி வானிவ டன்மையே.* 1

*திருச்சிற்றம்பலம்*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(2) பரிந்து உரைக்கிலும் என்சோல் பழிக்துமே - செவிலி கூற்று ; தாய் கூற்றெனினுமாம். "மாதி யன்று மனைக்கிரு வென்றக்கால், நீதி தான்சொல நீயெனக் காரெனும்;சோதி யார்தரு தோணி புரவர்க்குத்,தாதி யாவனு

னென்னுமென் றையலே" (குறுந்தொகை) என்று இவ்வாறே கொண்ட அகப்பொருட் டுறையுள் வைத்த திருவாக்கினையும் இங்கு ஒப்பிடுக.—(3) மொழி - மொழியுடைய வள். கூறிய - கூறியவற்றை.—(4) மதிக்கிலள் ஆரையும் - உத்தம நாயகிகள் தம் நாயகரையன்றிப் பிறரை மதியார்; சிவனுக்காட்பட்ட அன்பர் தன்மையுமிதுவே.—(5) அருந்தி - ஆசை; மிக்க அன்பு; ஊசலதாடுமே - மனம் அங்குத் தலைவனைக் காணச் செல்ல இழுக்க, பிறர்காணில் நகைப்பர் என்ற உலகச்சொல் இங்கு இழுக்க ஊசலாடுதல்.—(6) கங்கை - நங்கை - இருவரையும் உடனே வைத்தவராதலின் என்னையும் உடன் வைப்பர் என்றது கருத்து.—(10) அஞ்சும் நான்கும் ஒன்றும் - பத் துத் தலைகளையும். துஞ்சும் போதும் - பிரிவினால் உயிர்போந் தறுவாயுள் நிற்குநிலைக் குறிப்பு.

II திருச்சிற்றம்பலம் திருநேரிசை

நங்கையைப் பாகம் வைத்தார்; ஞானத்தை நவில வைத்தார்
அங்கையி லனலும் வைத்தா; ரானையி னுரிவை வைத்தார்
தங்கையின் யாழும் வைத்தார்; தாமரை மலரும் வைத்தார்
கங்கையைச் சடையுள் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) ஞானத்தை நவில - இறைவனை நவில்வதே ஞானத்தின் குறிக்கோள். தாமரை - இறைவனது திருவடிவங்களில் தாமரையைக் கையிற்கொண்டவையும் உள. தாமரை போன்ற திருவடிகளை என் உள்ளத்தினுள் என்றலுமாம். நங்கை - கங்கை - குறுந்தொகை 6-ம் பாட்டுப் பார்க்க.—(2) பத் தர்கள் பயில - "சிவபத்தர்களோ டிணங்குக" என்பது சிவஞானபோதம், 12-ம் சூத்திரம், இரண்டாம் அதிகரணம். பயிலுதல் - கூடியிருத்தல். இணங்குதல். கண்ணினை நேற்றி வைத்தார் - "விழியுலாம் பெருந்தடங்கண்" (காந்தாரப்பதிகம்) என்ற குறிப்பு.—(3) வாமன் - வாமனனாய் வந்த விட்டுணு திருமாணிகுழியிற் பூசித் தனர். சோதியுட் சோதி - "அருக்கனிற் சோதி யமைத்தோன்", "மாவேறு சோதி" திருவாசகம். சிவபூசையில் சூரிய மண்டலத்துள் விளங்கும் சதாசிவ மூர்த்தியைச் சூரிய பூசையில் வணங்குதல் காண்க. ஆமனை - ஆ - மன் - ஐ = ஆனைந்து. பாசம் - கட்டும் தன்மை குறித்து நின்றது.—(5) ஆர்நுள் அண்டம் - "அண்ட மாரிரு ளூடு கடந்தும்பர், உண்டு போலுமோ ரொண்சுடர்".—(6) நட்டங்கு நடம் - நட்டு - உயிர்களுக்கு இரங்கி. நானம் - ஞானம்.—(7) ஊனப்பேர் - பசு. பாசத்தாற் கட் டுண்டது என்ற பெயர். நடு - குறிக்கோள். நிலைத்த இன்பம் வானப் பேராறு - கங்கை. ஆறு - வழி என்று கொண்டு, உயிர்கள் செல்லும் உயர்கதி என்றலுமாம்.—(8) அரும்பினும் கோங்கு என்று மாற்றுக. கோங்கு - வாசனை. "முகைத்த மலரின் வாசம்போல்" (1218). சங்கினும் முந்நம் - கட்டினுக்குள் வீடுபேறு என்பது குறிப்பு. கந்தல் - பகல் - அன்ப வின்பம்.—(9) கதிர் முகம் - பிறைக் கீறு.

III திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

நெய்தற் குருகுதன் பிள்ளையென் றெண்ணி நெருங்கிச்சென்று
கைதை மடற்புல்கு தென்கழிப் பாலை யதனுறைவாய்!
பைதற் பிறையொடு பாம்புடன் வைத்த பரிசறியோம்
எய்தப் பெறினிரங் காதுகண் டாய்நம் மிறையவனே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகப் பாட்டுக் குறிப்பு :—இத் திருப்பதிகத்தில் மூன்று பாட்டுக்களே கிடைத்துள்ளன. ஏனையவை சிதலரித்தொழிந்தன போலும்!

(1) நெய்தற் குருகு - நெய்தற் பறவை. கைதை மடல் - தாழைப்பூ மடல். பிறை பாம்புடன் வைத்த - பகைப்பொருள்களை ஒருங்கு வைத்ததும் பிறையின் வளர்ச்சிக்கு இடையூறுகியதை அதனுடன் வைத்ததும் குறிப்பு.—(2) மணி-பவளம் - முத்து - கடல்படு மணிகள். திரை - கடல் அலை.—(3) நாட்பட் டிருந்து - நீண்டநாள் உலகில் வாழ்ந்து. இன்பமேய்தலுற்று - உலகபோகந் துய்த்து. கோட்பட்டு - கொள்ளப்பட்டு. தாட்பட்ட - நீண்ட தாளினையுடைய. இறைவனது தாள்களிற் சூட்டப்படும் தன்மையுடைய என்றலுமாம். வல்லம் - வலிமையுடையோம். வலிமையாவது நமன்றமர்களின் துன்பத்தினின்று நீங்குதல்.

IV திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

ஊனுடுத்தி யொன்பது வாசல் வைத்து வொள்ளெலும்பு தோலா வுரோம மேய்ந்து
தாமெடுத்த கூரை தவிரப் போவார் தயக்கம் பலபடைத்தார் தாமரை யினார்
கானெடுத்து மாமயில்க ளாலுஞ் சோலைக் கழிப்பாலை மேய கபாலப் பனார்
வானிடத்தை யூடறுத்து வல்லைச் செல்லும் வழிவைத்தார்க் கவ்வழியே போது நாமே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) தாமெடுத்த கூரை - உடம்பு. "மாயக் குரம்பை"(3). வல்லைச் செல்லும் வழி - இம்மையும் மறுமையும் தாண்டி வீடடையும் சிவநெறி. கபாலப்பனார் - பிரமன் கபாலத்தைக் கையில் ஏந்தியவர். ஊழி முதல்வர் என்ற குறிப்பு. "புன்சடைக் கீறு திங்கள் வைத்த வன்கை வைத்தவன் கபால்மிசை, ஊறுசெங் குருதியா னிறைத்த காரணம்" என்ற நாலாயிரப் பிரபந்தமும் (சந்தவிருத்தம்) இக்கருத்தை விளக்குகின்றது காண்க.—(2) முன்னுமாய்ப் பின்னுமாய் - எல்லாப் பொருளுக்கு முன்னுள்ளவன்; பின்னேயுமிருப்பவன். "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" (திருவாசகம்). பிணக்கம் - பகைமை. மறையார்ந்த வாய்மொழி - வேதாகமங்கள்.—(3) வளி - மூச்சுக்காற்று.—(4) பொடி - திருநீறு. மடிநாறு - மடி - மடிதல் ; சாதல். முதனிலைத் தொழிற்பெயர். மடிநாறுதல் - அழியுந்தன்மை விளங்குதல்.—(5) இப்பாட்டு ஐயப்பாடு.—(6) விண்ணப்ப - வானுலகவாசிகளாகிய. நாயனார் கண்ணப்பரைத் துதிக்கும் இடங்களுள் இது ஒன்று.—(7) பிணம் - பிணத் தன்மை. சாகும் - அழியும் தன்மை. கணம்புல்லன் - அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவர்.—(8) இயல்பாய ஈசன் - "ஈசனவ னெவ்வுயிர்க்கு மியல்பானான் சாழலோ" (திருவாசகம்). இயல்பு என்றது ஈசனுந்தன்மை - தலைவனுந்தன்மை - எவராலும் தரப்படாது தன்னியல்பானே அமைந்தது என்றதாம். எந்தை தந்தை என் சிந்தை மேவி - வழிவழி சிவனடிமைத் திறத்துள் நின்ற குடிமை. முயல்வான் - உயிர்கள் ஈடேறும்படி ஐந்தொழிலை எஞ்ஞான்றும் இயற்றுபவன். தியம்பகன் - திரியம்பகன் - முக்கண்ணன்.—(9) இவ்வுலகமெல்லாங் காட்டுவான் - உலகங்கள் - புவனங்கள் - போகங்கள் முதலாகிய தத்துவங்களின் உண்மைநிலை எல்லாம் காட்டுபவர். ஓதாதேல்லாம் கற்றதோர் நூலினன் - முற்றறிவுடையவன். ஆறஞ்சு - கரதலங்கள் இருபதும் முடிகள் பத்துமாக முப்பது.

1439. (வி - ரை) மனைப்படப்பு - வீடுகளின் முற்றங்கள். கடற்கோழுந்து - கடலினின்று மேலெழுந்து முன்வரும் அலைகள்.

மருங்கு - மருங்கினின்றும். ஐந்தனுருபு தொக்கது.

ஞாழல் - புன்னை. நெய்தனிலக் கருப்பொருள்.

நினைப்பவர்தம்......உய்வனோ ? என - தேவாரப் பதிகத்தின் கருத்தும் குறிப்புமாம். தேவார முதற்பாசுரச் சொல்லும் பொருளும் தழுவி விரிவுரை செய்தவாறு. பதிகக்குறிப்பும் பாட்டுக்குறிப்பும் பார்க்க.

நினைப்பவர்தம் மனம் கோயில்கொண்டு அருளும் - எல்லா இடத்திலும் இருப்பவராயினும் இறைவர் அன்பால் நினைவாரது உள்ளத்தில் விரும்பி வெளிப்பட வீற்றிருந்து அருள் செய்பவர் ; மற்றிடங்களில் அப்பிரகாசமாய் விளங்காது நிற்பர்.

மனம் கோயில்கொண்டு அருளும் அம்பலத்து நிருத்தனுர் - அம்பலத்தினும் பார்க்க மனத்தையே கோயிலாக் கொள்பவர் என்பது குறிப்பு. கோயில் - இத்தலமுங் குறித்தல் காண்க.

தினைத்தனை - ஆம் பொழுது - சிறிது நேரமும். தினை - சிறிய அளவு குறித்து நின்றது. " தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றேன் உண்ணாதே " திருவாசகம். " தினைத்துணை நன்றிசெயினும் " என்ற குறளுக்குத் " தினை - பனை - என்பன சிறுமை பெருமைகட்குக் காட்டுவன சிலவளவை " என்றுரைகூறினர் பரிமேலழகர்.

பொழுதும் - உம்மை இழிவு சிறப்பு. பிரியாமையினது சிறப்பையுணர்த்தலின் உயர்வு சிறப்பென்றலுமாம். உய்வனோ ? - ஓகார வினு எதிர்மறை.

பர்டித் தில்லை சார்ந்தார் - இப்பதிகம் திருக்கழிப்பாலை மருங்கு நீங்கித் தில்லை வரும் வழியில் அருளிச்செய்யப்பட்டது. இது " கூத்தனை மறந்து உய்வனோ " என்றதனாற் பெறப்படுதல் காண்க. " எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே ", " முதுகுன்றடை வோமே ", " அவனதா ரூர்தொழுது ", " ஆரூரானை மறக்கலுமாமே " என்ற பதிகங்கள் அவ்வத் தலங்களின் புறத்திருந்து பாடப்பட்ட வரலாறு பதிகப் பகுதிகளானே விளக்கமுறுதல் இங்குக் கருதத்தக்கது.

மனக்கோயில்—என்பதும் பாடம். 174

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை - கோயில்

பனைக்கை மும்மத வேழ முரித்தவன் ;
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன் ;
அனைத்தும் வேடமா மம்பலக் கூத்தனைத்,
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ ? 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—முன்னர் ஆசிரியர் காட்டிவாறு காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பனைக்கை - பனைபோன்று அடி பெருத்து நுனி சிறுத்து வருதல். மெய்யுவமம். அனைத்தும் வேடமாம் - உலகமெல்லாம் தனது திருமேனியாகக் கொண்டவன்.—(2) தீர்த்தன் - தூய்மையுடையவன் - தூய்மை செய்பவன். " ஆர்த்த பிறவித் துயர்கெடநா மார்த்தாடுந் தீர்த்தன் " (திருவாசகம்).—(3) எள்தனைப் பொழுது - எள் அளவுள்ள சிறுபொழுது. " தினைத்தனை " என்பது போல.—(4) மாணி - பிரமசாரி - சண்டீசர். நீணுலகெலாம் - நீள் உலகெலாம் - நள்ளனல் என்றது நண்ணனல் என மரீஇயினுற்போல நீளுலகு என்பது நீணுலகென மரீஇயிற்று. (சிவஞானபோதம் - 10 சூத். 2 அதி. உதா.) ஆணி - பொன் உரையாணி.—(6) ஓதி - பெயர்.—(7) பைகோள் - நச்சுப்பையையுடைய. செய்ய மாது - இலக்குமி.—(8) தேவர்கள் முதலில் அம்பலம் பொன்வேய்ந்தனர் என்பது வரலாறு.—(9) காருலாம் - கார்காலத்தில் பூக்கும். தேருலாவிய - கூத்தப்பெருமான் தேர்மீது திருவீதியில் எழுந்தருளும். ஆர்கிலா - உண்ணத் தெவிட்டாத.

1440. "அரியானை" யென்றெடுத்தே யடியவருக் கெளியானை யவர்தஞ் சிந்தை
பிரியாத பெரியதிருத் தாண்டகச்செந் தமிழ்பாடிப் பிறங்கு சோதி
விரியாநின் றெவ்வுலகும் விளங்கியபோன் னம்பலத்து மேவி யாடல்
புரியாநின் றவர்தம்மைப் பணிந்துதமி ழாற்பின்னும் பாடல்செய்வார்,

1441. "செஞ்சடைக்கற் றைமுற்றத் திளநிலா வெறிக்கு"மெனுஞ் சிறந்த வாய்
யஞ்சோல்வளத் தமிழ்மாலை யதிசயமாம் படிபாடி யன்பு சூழ்ந்த [மை
நெஞ்சுருகப் பொழிபுனல்வார் கண்ணிணையும் பரவியசொன் னிறைந்த
தஞ்செயலி னொழியாத திருப்பணியு மாறுது சாரு நாளில், [வாயுந்

*1442. கடையுகத்தி லாழியின்மேன் மிதந்ததிருக் கழுமலத்தி
னிருந்த செங்கண்
விடையுகைத்தார் திருவருளால் வெற்பரையன் பாவைதிரு
முலைப்பா லோடும்
அடையநிறை சிவம்பெருக வளர்ஞானங் குழைத்தூட்ட
வமுது செய்த
வுடையமறைப் பிள்ளையார் திருவார்த்தை யடியார்க
ளுரைப்பக் கேட்டார். களஎ

1440. (இ - ள்) "அரியானை" என்று...தமிழ்பாடி - அரியானை என்று தொடங்கி, அடியவர்களுக்கு எளியவராகிய சிவபெருமானை, அந்த அடியவர் மனத்தினின்றும் பிரியாத பெரிய திருத்தாண்டகமாகிய செந்தமிழ்ப் பதிகத்தைப்பாடி; பிறங்குசோதி விரியாநின்று எவ்வுலகும் விளங்கிய பொன் அம்பலத்து மேவி ஆடல் புரியா நின்றவர் தம்மை - விளங்கும் ஒளி விரிகின்றமையாலே எல்லாவுலகங்களிலும் நிறைந்து விளங்கிய பொன்னம்பலத்திலே பொருந்தி அருட்கூத்தாடுகின்ற பெருமானை; பணிந்து...செய்வார் - வணங்கித் தமிழ்ப் பதிகத்தால் மேலும் போற்றுவாராய், களரு

1441. (இ - ள்) செஞ்சடை...பாடி - "செஞ்சடைக்கற்றை முற்றத் திளநிலா எறிக்கும்" என்று தொடங்கும் சிறப்புடைய வாய்மையாகிய அழகிய சொற்களாலான வளமுடைய தமிழ்ப் பதிகத்தினை அதிசயமாம்படி பாடி; அன்பு சூழ்ந்த நெஞ்சுருக - அன்பினுற் சூழ்ந்துகொள்ளப்பட்ட மனம் கரைந்துருக (அதனாலே); வார் புனல் பொழி கண்ணிணையும் - வார்ந்த மழைபோன்ற நீர் பொழிகின்ற இரண்டு திருக்கண்களும்; பரவியசொல் நிறைந்த வாயும்-சிவபெருமானைத் துதிக்கின்ற பதிகச்சொல் நிறைந்த திருவாயும்; தம் செயலின் ஒழியாத திருப்பணியும் - தமது செய்கையில் நீங்காத திருவுழவாரத் திருப்பணியும்; மாறுது சாரும் நாளில் - மாறுமல் இவ்வாறு சிவச் சார்பினிற்கும் நாட்களில்; களசு

1442. (இ - ள்) கடையுகத்தில்...திருவருளால் - உகக் கடைநாளில் பொங்கி எழும் கடல் வெள்ளத்தில் மேலே மிதந்த திருக்கழுமலத்தில் எழுந்தருளியிருந்த செங்கண் விடையினை ஊர்தியாக உடைய தோணியப்பருடைய திருவருளினுலே; வெற்பு அரையன் பாவை - திருமலையரசன் மகளாராகிய பெரிய நாயகியார்; திருமுலைப்பாலோடும் அடைய நிறை சிவம்பெருக வளர் ஞானம் குழைத்து ஊட்ட - அடைய நிறைகின்ற சிவம் பெருகும்படி வளரும் ஞானத்தைத் தமது திருமுலைப்பாலுடனே குழைத்து ஊட்ட; அமுது செய்த உடைய மறைப்பிள்ளையார்திருவார்த்தை - உண்

---

டருளிய ஆளுடைய மறைப்பிள்ளையாரது திருவரலாற்றினை; அடியார்கள் உரைப்பக் கேட்டார் - அடியார்கள் சொல்லக் கேட்டருளினர். ளஎஎ

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1440. (வி - ரை) "அரியானை" - இது திருத்தாண்டகப் பதிகத்தின் தொடக்கம்.

அரியானை என்று எடுத்தே - எடுத்தல் - தொடங்குதல். அரியான் - உணர்தற்கும் காண்டற்கும் ஓதுதற்கும் அரியவன். "அரிய காட்சியராய்......ஆரறிவாரவர் பெற்றியே" (திருப்பாசுரம் - கௌசிகம்), "உலகெலா முணர்ந்தோதற் கரியவன்" முதலியவை காண்க. எடுத்தே என்ற ஏகாரம் அவ்வாறு அரியவர் என்று தொடங்கியும் தம்முடைய பாட்டுக்கு எளியவராக்கிக் கொண்டனர் என்ற கருத்துப்பட நின்றது. இக்கருத்துப்பற்றியே அடியவருக் கெளியானை என்று அடுத்து வைத்துக் கூறியருளினதும் காண்க.

அவர்தம் சிந்தை - அவர் - அவ்வடியவர். இறைவரைத் தமக்கு எளிவரப்பெற்ற அவர் என முன்னறிசுட்டு.

சிந்தை பிரியாத பெரிய திருத்தாண்டகம் - அடியவர்கள் எப்போதும் மனத்துள் வைத்துப் போற்றும் தன்மையுடையதாதலின் பெரிய திருத்தாண்டகம் எனப்படும் பதிகம். அடையாளத் திருத்தாண்டகம், திருவடித் திருத்தாண்டகம், போற்றித் திருத்தாண்டகம் என்று ஒவ்வோர் காரணத்தால் பெயர் போந்த திருப்பதிகங்கள் போல இத்திருப்பதிகம் பெரிய திருத்தாண்டகம் எனப் பெயர் பெறும் என்பது. அவ்வாறு பெயர் வழங்குதற்குக் காரணம் அடியார்களது சிந்தையிற் பிரியாதிருக்கும் பெருமை என்று கூறியபடி. பெரிய திருமொழி என்ற வைணவர் வழக்கும் காண்க.

பிறங்கு சோதி......பொன்னம்பலத்து - பொன்னம்பலம் விளங்கும் ஒளியுடையது; அவ்வொளி விரிந்து எல்லாவுலகங்களிலும் விளங்குகின்றது; அஃது ஞானவொளி என்பதாம். "எப்புவனங் களுநிறைந்த திருப்பதி" (1444) என்று இக்கருத்தை மேலும் விளக்குவது காண்க. பூத ஆகாயம்போலக் கண்டிதமாக நில்லாமல் இஃது ஞான ஆகாயமாதலால் அந்தச் சிவஞானவொளிப் பரப்பினுலே அளவுபடாமல் எல்லாவிடத்தும் விரிந்து விளங்குதலால் இது சிற்றம்பலம் எனப்படும்.

சோதி விரியாநின்று-ஆடல் புரியாநின்றவர் - ஆநின்று - நிகழ்கால இடைநிலை. ஞானச் சோதி விரிதலும், ஐந்தொழிற் கூத்து நிகழ்தலும் எக்காலத்துமுள்ளனவாதலின் நிகழ்காலத்தாற் கூறினர். "முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை, யெம்முறைச் சொல்லு நிகழுங் காலத்து, மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்" (தொல்-சொல் - வினை. 43) என்பதிலக்கணம்.

தமிழாற் பின்னும் போற்றல் செய்வார் - தமிழ் - செந்தமிழ்ப் பதிகம். அது மேல்வரும் பாட்டில் உரைக்கப்படுவது. போற்றல் செய்வார் - எதிர்கால வினைமுற்றெச்சம். போற்றுவாராகி. போற்றல் செய்வார் - பாடி - என மேல்வரும் பாட்டில் வரும் வினையெச்சத்துடன் முடிந்தது.

அடியவர்கட்—றேழுலகும்—விளக்கிய—என்பனவும் பாடங்கள். 175

திருச்சிற்றம்பலம் பெரிய திருத்தாண்டகம் - கோயில்

அரியானை யந்தணர்தஞ் சிந்தை யானை யருமறையி னகத்தானை யணுவை யார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 1

காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
கடிக்கமலத் திருந்தவனுங் காணா வண்ணஞ்
சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்த்த
வேரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணு
மேழுலகுங் கடந்தண்டத் தப்பா னின்ற
பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 10

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—உணரவும் ஓதவும் அரியவனாயினும் இன்னின்ன வகையால் அன்பால் நினையும் அடியவர்கட்கெளியவன் என்று அவனது அரியனாந் தன்மையும் எளியனாந் தன்மையும் கூறுவதும், அவனைப் பேசாத நாட்கள் பிறவாத நாட்கள் அதாவது இறந்த நாட்களோ டெண்ணப்படுவன என்பதும் இப்பதிகக் குறிப்பு. முன்னர் ஆசிரியர் குறித்த "அரியானை - எளியானை" என்றதனால் இவ்வகை காட்டப்பட்டது. மனிதரது வாழ்நாளின் பயனிதுவே எனக் குறித்தலால் இத்திருப்பதிகம் யாவரும் மனத்துள் வைத்துப் பயிலத் தகுந்தது என்பதனை "அவர்தஞ் சிந்தை பிரியாத" என்று உணர்த்தியருளினர் ஆசிரியர்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) அரியானை - (ஆயினும்) அந்தணர்தம் சிந்தையானை என்க. **அந்தணர்** - அறவோர் - மாமுனிவர். **யார்க்கும்** - பசுபோதமுடைய எவர்க்கும். **கரியான்** - உயிர்களின் செயலெல்லாமுள்ளிருந்து சாட்சியாக உணர்கின்றவன். கரி - சாட்சி. **கரியான்** - திருமால் என்றலுமாம். **பிறவா நாளே** - இறந்துபட்ட நாட்கள் என்பதனை மங்கல வழக்காகக் கூறியருளியபடி. "உணர் வழியு நாள் - உயிர்போகு நாள் - உயர்பாடைமேற் காவுநாள் இவை ஓவு நாள்" என்று இக்கருத்தையே ஆளுடைய நம்பிகள் விளக்கஞ் செய்தருளியது காண்க. (ஓவுதல் - நீங்குதல்)—(2) **அற்றார்க்கும் அலந்தார்க்கும்** - **அற்றார்** - வேறு துணையற்றவர். தம்மையே சார்ந்து உலகச் சார்பை அறுத்தவர். **அலந்தார்** - துன்பப்பட்டவர். இறைவரது கருணையின் எளிமை கூறப்பட்டது. அருந்தவர்கள் தொழுதேத்தும் அப்பன் (4), அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை... பெருந்துணையை (5), யாரேனு மடியார்கட் கெளியான் றன்னை (8) என்பனவும் இக்கருத்தை விளக்குவன.—(5) **போது நீக்கி...வல்லோர்** - பிறரோடு இவரும் ஒருவர் என்று பொது நோக்கால் எண்ணாது இவரையே தனிமுதற் பெருங்கடவுள் - பசுபதி - என்று நினைவோர். "எம்பிரான் றம்பிரானாந் திருவுரு வன்றி மற்றோர் தேவரெத் தேவ ரென்ன, அருவரா தவரைக் கண்ட லம்மநா மஞ்சு மாறே" (அச்சப் பத்து - 2) என்ற திருவாசகம் இக்கருத்தை வற்புறுத்தி விளக்குவது.—(7) **வாளி... எரியக் கோத்த** - வாளி, கோத்த அளவில் நின்றதாக, எரியச்செய்தது பிறிதொன்றாலாயிற்றென்றது குறிப்பு.—(8) **துளங்காத சிந்தையராய்த் துறந்தோர்** - இதற்கு நாயனாரே சிறந்த இலக்கியம். முன்னர் "**போக மாற்றிப் போது நீக்கித் தனை நினைய வல்லோர்**" என்றதற்கு மிவ்வாறேயாம்.—(9) **மரகதம் - தேன் - பால்** முதலியவை அருமையானவை யென்று மக்கள் கொள்ளும் பொருள்கள். அவற்றினும் அருமையானவன் என்றபடி.—(10) **அண்டத்தப்பால் நின்ற பேரொளி** - "அண்டமாரிரு ளூடு கடந்தும்ப, ருண்டு போலுமொ ரொண்சுடர்" (தனிக்குறுந்தொகை).

1441. (வி - ரை) "செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா வெறிக்கும்" - இது இத் திருப்பதிகத்தின் தொடக்கம்.

சிறந்த - வாய்மை - அஞ்சொல் - வளம் - தமிழ் - மாலை - அடைமொழிகள் இத்திருப்பதிகத்தின் பண்புகளைக் குறித்தன. சிறப்பாவது - இறைவரைக் காணலாகும் வகையினையும் இடத்தையும் காட்டுதல்; வாய்மை - அவரது இறைமையை அறிவித்தல்; அஞ்சொல் - நேரிசையின் இனிய இசை; வளம் - பொருள்வளம்; தமிழ் - அப்பொருளைத்தரும் சொல்வளம்; மாலை - நிலா எறித்தலும் எரியாடுமாறும் ஒன்று போல பாசுரந்தோறும் வருமாறு யாத்து முடித்துக் காட்டுதல்.

அதிசயமாம்படி பாடி - அதிசயமாகும் படியினைப்பாடி-படி-தன்மையினை. இரண்டனுருபு தொக்கது. "அதிசயம் போல நின்று அனலெரி யாடு மாறே" என்ற இத் திருப்பதிகத்தின் ஈற்றுக் குறிப்பும் பதிகக் கருத்துமாம். அதிசயமாவது அறிந்தனுபவிக்கும்படி மனத்துள் எழுகின்ற பெருமித உணர்ச்சி. "தெருளுமும்மதி னொடிவரை யிடிதரச் சினப்பதத் தொடுசெந்தீ, யருளு மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய அதிசயம் கண்டாமே" என்ற திருவாசகம் காண்க.

அன்பு சூழ்ந்த நெஞ்சு உருக-அன்பு சூழ்ந்ததனால் நெஞ்சு உருகிற்று எனக் காரணங் காட்டுவார் உடம்பொடு புணர்த்தி ஓதினார். சூழ்ந்த - முழுதும் நிறைந்த என்றபொருளில் வந்தது. அகப்படுத்திக்கொண்ட-வயப்படுத்திய என்க. மனத்தின்வழி வாக்கும், அதன்வழி மெய்யும் தொழில்செய்யு மாதலின் அம்முறையே வைத்துக் கூறினார்.

வார்புனல் பொழி என்க. வார்தல் - இடைவிடாது மழைபோலப் பெருகுதல்.

பரவியசொல் - பரவிய - சிவபெருமானையே துதித்த. "குழையோர் காதிற் கோமாற்கே", "பொதுநீக்கித் தனைநினைய" முதலியவை காண்க. சொல் - திருப்பதிகம். நிறைந்த - இடைவிடாது வெளிவருதல். கண்ணிணையும் - வாயும்-என்பவற்றுக் கேற்பத் தம் திருப்பணியின் ஒழியாத செயலும் என்க. திருப்பணி - உழவாரப்பணி. தம் செயலின்-என்றது நாயனார் அதனைத் தமது சிறந்தபணியாகக் கொண்ட கருத்தைக் குறித்தது.

மாறுது சாரும் - முக்கரணங்களாலும் நீங்காமற் செய்தலால் சிவத்தையே சார்ந்து நிற்கும். சாரும் - சார்புணர்ந்து சார்கின்ற.

நாளில் - கேட்டார் என்று மேல் வரும்பாட்டுடன் கூட்டிமுடிக்க. "கும்பிட்ட பயன் காண்பார்போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்" (திருஞான-புரா-1023) என்றபடி திருப்பணியும் மாறாது சார்ந்ததன் பயனாகப் பிள்ளையாரது திருவார்த்தை கேட்கப் பெற்றனர் என்ற குறிப்பும் காண்க. 176

திருச்சிற்றம்பலம் திருநேரிசை - கோயில்

செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா வெறிக்குஞ் சென்னி
நஞ்சடை கண்ட னாரைக் காணலா நறவ நாறும்
மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற் றம்ப லத்தே
அஞ்சடை யிருள்கி ழியத் தனங்கெரி யாடு மாறே. 1

பாலனாய் விருத்த னாகிப் பனிநிலா வெறிக்குஞ் சென்னி
காலனைக் காலாற் காய்ந்த கடவுளார் விடையொன் றேறி
ஞாலமாந் தில்லை தன்னுள் நவின்றசிற் றம்ப லத்தே
நீலஞ்சேர் கண்ட னார்தா நீண்டெரி யாடு மாறே. 10

*மதியிலா வரக்க னோடி மாமலை யெடுக்க நோக்கி*
*நெதியன்றோ ணெரிய வூன்றி நீடிரும் பொழில்கள் சூழ்ந்த*
மதியந்தோய் தில்லை தன்னுண் மல்குசிற் றம்ப லத்தே
யதிசயம் போல நின்று அனலெரி யாடு மாறே. 11

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*திருநீலகண்டனாராகிய முதல்வனாரைக் காணுமிடமுளது ; அவர் தலையில் நிலவைச் சூடிக்கொண்டு இறுதி ஊழியாகிய தீயினுருவுள் நின்று சிற்றம்பலத்தே ஆடுகின்றனர். இப்பதிகப் பாட்டுக்கள்தோறும் நிலா எறிக்கும் சென்னியும், எரியாடுதலும், சிற்றம்பலமும் குறிக்கப்பட்டன.* எரியாடுதல்-*சங்கார காரணனாயுள்ள முதன்மையையும்,* நிலா எறித்தல் - *தோற்றத்தையும், சிற்றம்பலம் மூலமாகிய ஞானத்தையும் குறிக்கும். "ஒடுங்கி மலத்துளதாம்" என்ற சிவஞானபோத முதற் சூத்திரக் கருத்தும், "வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" என்பது முதலிய தேவாரங்களின் கருத்தும் காண்க. அம்பலக்கூத்தனது ஆடல் ஐந்தொழில் செய்யும் அருட்கூத்து ; சிவஞானத்தாற் பெறப்படும் ஆனந்தந் தருவது. காண்டற்கரிய கடவுளாகிய நஞ்சடை கண்டனாரைக் காணலாம். எங்கு ? எவ்வாறு? என்னில் அவர் நிலா எறிக்கும் சென்னியுடன் தில்லைச் சிற்றம்பலத்துள் எரியாடுமாறு; அஃது ஓர் அதிசயம்போலவுள்ளது.* "காண்பதற்கரிய நின்கழலும்......கண்டிலாத நின் கதிர்நெடு முடியும், ஈங்கிவை கொண்டு நீங்காது விரும்பிச், சிறிய போதுவின் மறுவின்றி விளங்கி, யேவருங் காண வாடுதி ; யதுவெனக், கதிசயம் விளைக்கு மன்றே ! யதிசயம், விளையாது மொழிந்தது" (11-ம் *திருமுறை* - கோயினான் - 12) *என்ற திருவெண்காட்டடிகள் திருவாக்கும், அதனுள்-இஃது ஓர் அதிசயம்போல உள்ளது; ஆனால் கல்லினும் வலிய என்னெஞ்சத்தும் நுழைந்தனை; பெரியதிற் பெரியை ; சிறியதிற் சிறியை ; ஆதலின் அதிசயமன்று என விளக்கியவாறும் காண்க. "அதிசயம் போல நின்று அனலெரி யாடு மாறே" என்று பதிக இறுதியில் முடித்துக்காட்டியருளினர் நாயனார். இதனை ஆசிரியர் அதிசயமாம்படி பாடி என்று எடுத்துக்காட்டினர்.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) *விரிந்த செஞ்சடைக் கற்றையானது இளநிலா எறிக்கும் முற்றம்போல உள்ளது. "மாலையின், றுங்குருவே போலுஞ் சடைக்கற்றை" (அற்புத - அந் - 65).* நறவநாறும் சோலை - மஞ்சு அடைசோலை *என்க. சோலையில் தோய்தலால் மஞ்சும் சோலையின் தேன் மணங்கமழும் என்றலுமாம். "சாலைமருங் கிறை யொதுங்கு மஞ்சு, மங்கவை பொழிந்த நீரு மாகுதிப் புகைப்பா னுறும்"* (834). துஞ்சு அடை இருள் - துஞ்சுதல் - *இறத்தல் - மரணம். மரணத்துக்குக் காரண மாகிய ஆணவ இருள். பிறத்தலே இறத்தலுக்குக் காரணமாதலின் பிறப்பிற்குக் காரணமாகிய என்பது. "தோற்ற முண்டேல் மரண முண்டு" (நம்பிகள்).* இருள் கிழிய எரியாடுமாறு - *உயிர்கள் ஞானவொளி பெற்று ஆணவ இருளின் நீங்கி முத்தியடையும் பொருட்டு எரியாடுதல் நிகழ்வதாம்.*—(2) ஏறு அனார் - *ஏற்றினைப் போன்றவர். ஏறு தம்பால் ஏறனார் என்று கூட்டி ஏற்றினை ஊர்பவர் என்றலுமாம்.* ஆறனார் - *வழிகாட்டுபவர். வழியினை உடையவர்.*—(4) கண்ணியாள் - *உமையம்மை.* ஓர் - *ஒவ்வோர்.* கைஎரி வீசிநின்று - கனல்எரியாடும் - *கையில் ஏந்தும் எரி வேறு ; நின்றாடும் எரி வேறு.*—(6) இருவர் - *சிவம், சத்தி.* பாரிடம் - பூதகணம். பாணி செய்ய - *கைகளால் தாளங்கொட்ட.*—(8) சிறைகொள் நீர்த்தில்லை - "*சிறைவான் புனற்றில்லை" (திருக்கோவையார்).*—(9) விருத்தனாய்ப் பாலனாகி - *எப்பொருட்கும் முன்னவனும் பின்னவனும் உள்ளவன்.* இக்கருத்துப்பற்றியே "பாலனாய்

விருத்த ஞகி" என்று மேல் 10-வது பாட்டில் அருளுவதும் காண்க. இது விருத்த குமார பாலரான திருவிளையாடலைக் குறிக்குமென்று கூறுவாருமுண்டு.—(10) ஞாலமாம் தில்லை - "எப்புவனங் களுநிறைந்த திருப்பதி" (1444). நீலஞ் சேர் கண்டனுர் - முதற்பாட்டில் "நஞ்சடை கண்டஞரை" என்ற கருத்தையே முடித்துக்காட்டியபடி. இக்குறிப்பெல்லாம் பெற ஆசிரியர் "களனிற் பொலிவிட முடையார் நடநவில் கனகப்பொது" (1430) என்று, கண்டபோதே நாயனுர் காணும் காட்சியாகக் காட்டுதல் காண்க.—(11) நேதியன் - நேதி - தீமை - "அருநெதி நல்ல நல்ல" (கோளறுபதிகம்). அதிசயம் போல - அதிசயமாக - நிலாவெறிக்க எரியாடு தலும், காணலாகாப் பெரியான் காணுமாறு சிற்றம்பலத்தாடுதலும் அதிசயம் என்ற படி. அதிசயம் போலிய - என்று பாடங்கொள்வாருமுண்டு.

1442. (வி - ரை) உகக்கடையில் - என்க. மிதந்த - ஒவ்வோருகமுடிவிலும் வரும் பெரு நீர் வெள்ளத்தினுள் மூழ்கிவிடாது மேல் மிதந்ததாதலின் இந்நகர் தோணிபுரம் எனப்படும்.

கழுமலம் - சீகாழியின் பன்னிரண்டு பெயர்களுள் இறுதியாய்ப் போந்த பெய ராகும். ஒவ்வோருகங்களிலும் ஒவ்வொரு காரணம்பற்றி இத்திருநகருக்கு ஒவ்வொரு பெயர் போதரும். "கழுமலமாந் திருப்பதியை" (257) என்றவிடத்துரைத்தவை பார்க்க. கடையுகத்தில் - மிதந்த - திருக்கழுமலம் என்றதஞல் இப்பெயர் இந்நகருக் குக் கடைசியாய்ப் போந்த பெயர் என்பதும் குறிப்பிட்டனர். கழுமலம் - இந்தப்பெய ராலே நாயஞர் இங்குத் திருவிருத்தப் பதிகங்கள் கட்டளையிடுவதும், "பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட ஞான்றுநின் பாதமெல்லாம், நாலஞ்சு புள்ளின மேந்தின" என்ற பதிகத் தொடக்கம் கடையுகத்தில் மிதந்த செய்தியினை வெளிப்படுப்பதும் குறித்தபடியாம்.

விடையுகைத்தார் திருவருளால் - "விடையேறி" வெளிவந்து அருளியதனைப் பிள்ளையார் தமது முதற்றிருப்பதிகத்தின் முதற்பாட்டில் தேற்றமாக முதலிற் குறிப் பிடுகின்றதனைக் குறிப்பிட்டபடி.

திருவருளால் - ஊட்ட என்று கூட்டுக. "இறையவர் தாம் - மலைக்கொடியைப் பார்த்தருளித் துணைமுலைகள், பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன ?" என்பது (திருஞான - புரா - 66) காண்க. தோணியப்பனுர் அருளியபடி அம்மையார் ஊட்டினர்.

திருமுலைப்பாலோடும் - சிவம் பெருக வளர் ஞானங் குழைத்து - "திருமுலை பொன் வள்ளத்துக் கறந்தருளி" (67), "எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி" (68) என்பன ஆளுடையபிள்ளையார் புராண வரலாறுகள்.

அடைய நிறை சிவம் பெருக வளர் ஞானம் - சிவஞானம். அடைய - முழுவ தும். உயிர்கள் வந்து அடைந்துய்யும்படி என்றலுமாம். "தாவில்சரா சரங்களெல் லாம், சிவம் பெருக்கும் பிள்ளையார்" (திருஞான-புரா - 26). எல்லா வுலகங்களும் சிவ நெறி பெருக்கிய தன்மை பிள்ளையாரது சரிதத்தின் பல பகுதிகளிலும் கண்டுகொள்க. சைவ வுலகம் திருநீற்றுச் செல்வம் பெற்று வாழ்வடைவதும், பனைகளும் சிவமே மேவியதும், திருமணங் காணப் பெற்றாரெல்லாம் சிவம் பெற்றதும், பிறவும் கருதுக.

உடையபிள்ளையார் என்க. உடைய - ஆளுடைய. திருவார்த்தை - அவதரித்து ஞானம் பெற்றதும், ஓசையுடைய பொன் தாளம் பெற்றதும், சிவிகை பெற்றதும் என்ற இப்பெருமைகள். "மாசின்மணியின் மணிவார்த்தை" என்ற திருவாசகமும், "திருவார்த்தை" என்ற திருவாசகப்பகுதியும் காண்க. திரு-ஆண்டவனது வார்த்தைக் குள்ள அருமைப்பாடு, பிள்ளையாரைப்பற்றிய வார்த்தைக்கு முரியது என்றபடி.

**அடியார்கள் உரைப்ப** - அடியவர்கள் வீண் பேச்சுப் பேசாது இத்தகைய திரு வார்த்தைகளையே பேசுவர் என்பது குறிப்பு. நாயனுர் தில்லையை அடைந்து தரிசிக்கும் முன்பு பிள்ளையாரும் வந்து தரிசித்துச் சார்ந்தனர்; ஆதலின் அடியவர்கள் அதனை உரைத்தனர்போலும்.

**விடையுயர்த்தார்—சிவம் பெருக்கி**—என்பனவும் பாடங்கள். 177

1443. ஆழிவிட முண்டவரை யம்மைதிருப் பாலமுத
முண்ட போதே
யேழிசைவண் டமிழ்மாலை "யிவனெம்மா" னெனக்காட்டி
யியம்ப வல்ல
காழிவரும் பெருந்தகைசீர் கேட்டலுமே யதிசயமாங்
காதல் கூர
வாழியவர் மலர்க்கழல்கள் வணங்குதற்கு மனத்தெழுந்த
விருப்பு வாய்ப்ப, கஎஅ

1444. அப்பொழுதே யம்பலத்து ளாடுகின்ற கழல்வணங்கி
யருள்முன் பெற்றுப்
பொய்ப்பிறவிப் பிணியோட்டுந் திருவீதி புரண்டுவலங்
கொண்டு போந்தே
யெப்புவனங் களுநிறைந்த திருப்பதியி னெல்லையினை
யிறைஞ்சி யேத்திச்
செப்பரிய பெருமையினுர் திருநாரை யூர்பணிந்து
பாடிச் செல்வார், கஎக

1445. தொண்டர்குழாம் புடைசூழத் தொழுதகரத் தொடுநீறு
துதைந்த கோலங்
கண்டவர்தம் மனங்கசிந்து கரைந்துருகுங் கருணைபுறம்
பொழிந்து காட்டத்
தெண்டிரைவாய்க் கன்மிதப்பி லுகைத்தேறுந் திருநாவுக்
கரசர் தாமும்
வண்டமிழா லெழுதுமறை மொழிந்தபிரான் திருப்புகலி
மருங்கு சார்ந்தார். க௮௦

1443. (இ - ள்) அம்மை திருப்பால் அமுதம் உண்டபோதே-அம்மையாருடைய திருமுலைப்பாலமுதத்தினை ஞானத்தோடும் உண்டருளிய அப்பொழுதே; ஏழ்இசை வண்தமிழ் மாலை - ஏழிசைகளும் பொருந்தும் வளப்பமுடைய தமிழ்மாலையினை; ஆழிவிடம் உண்டவரை "இவன் எம்மான்" எனக் காட்டி இயம்பவல்ல - கடல் விடத்தையுண்ட சிவபெருமானை "எமது பெம்மான் இவன்" என்று சுட்டிக்காட்டிப் பாடியருளவல்ல; காழிவரும் பெருந்தகைசீர் கேட்டலுமே - சீகாழியில் அவதரித்த பெருந்தகையாளராகிய திருஞானசம்பந்த பிள்ளையாருடைய சிறப்புக்களைக் கேட்டவுடனே; அதிசயமாம் காதல்கூர - அதிசயமாகிய உணர்ச்சியுடன் எழுந்த காதல் கூர்ந்ததனுலே; வாழி அவர்...விருப்பு வாய்ப்ப - வாழ்வு தரும் அவரது மலர்போன்ற திருப்பாதங்களை வணங்குதற்குத் தமது திருமனத்தில் எழுந்த விருப்பம் வாய்ப்ப,

1444. (இ - ள்) அப்பொழுதே...அருள்முன் பெற்று - அப்பொழுதே திருவம்பலத்திலே அருட்கூத்தியற்றுகின்ற திருவடியை வணங்கிக் கூத்தனாரது திருவருள் விடையை முன் பெற்றுக்கொண்டவராய் ; பொய்ப்பிறவிப்பிணி...போந்தே - பொய்யாகிய இப் பிறவிநோயை ஓட்டுந் தன்மை வாய்ந்த திருவீதியினைத் திருமேனி நிலத்திற் புரளப் புரண்டு வலமாக வந்து சென்றே, பின் ; எப்புவனங்களும்...இறைஞ்சி ஏத்தி - எல்லா உலகங்களிலும் நிறைவுடையதாகிய அத்திருப்பதியினது திருவெல்லையினைப் பணிந்து துதித்து; செப்பரிய பெருமையினார்...பாடிச் செல்வார் - சொல்லுதற்கரிய பெருமையையுடைய சிவபெருமானது திருநாரையூரினைச் சேர்ந்து பணிந்து பாடி மேற்செல்வாராய், கஎக

1445. (இ - ள்) தோண்டர் குழாம் புடைசூழ - திருத்தொண்டர்களது கூட்டம் தம்மைச் சுற்றிலும் சூழ்ந்துவர ; தொழுத கரத்தொடு......பொழிந்து காட்ட - அஞ்சலியாகக் கூப்பிய கைகளுடனே, திருநீற்றினால் நிறைந்த திருக்கோலமானது கண்டவர்களது மனங்களெல்லாம் கரைந்து உருகும் கருணையானது வெளியே மேற்பொழிந்து காட்ட ; தெண் திரைவாய் கல்மிதப்பில் உகைத்து ஏறும் திருநாவுக்கரசர் தாமும் - தெள்ளிய அலைகளையுடைய கடலில் கல்லே மிதப்பாக ஊர்ந்து கரையேறிய திருநாவுக்கரசர் பெருமானும் ; வண்தமிழால் எழுதும்மறை மொழிந்தபிரான் திருப்புகலி மருங்கு சார்ந்தார்-வளப்பமுடைய தமிழினாலே, எழுதும் வேதத்தைச் சொல்லியருளிய திருஞானசம்பந்த நாயனாருடைய சீகாழித் தலத்தின் பக்கத்தில் வந்து சார்ந்தார். கஅ0

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1443. (வி - ரை) "இவன் எம்மான்" என - விடம் உண்டவரைக்காட்டி யியம்ப - என்க.

காட்டி இயம்பிய வரலாறு - ஆளுடையபிள்ளையார் புராணத்துள் 73—76-ம் திருப்பாட்டுக்களிற் கூறப்படுவது.

அமுதம் உண்டபோதே - விடம் உண்டவரைக் காட்டி - என்றது முரண் அணி உண்டபோதே - அப்பொழுதே - என்று காலத்தையும், உண்டதனால் என்று காரணத்தையும் குறித்தது.

கேட்டலுமே - காதல்கூர - கேட்டவுடன். காதல் எழுவது தலையன்பின் இலக்கணமாகும். சிவபெருமானிடத்தினும் அவன் அடியாரிடத்தினும் நாயனார் வைத்திருந்த ஆழ்ந்த அன்பின் திறம் வெளிப்பட்டவாறு.

அதிசயமாம் காதல் - முன் அதிசயமாம்படி (1441) என்றது ஆண்டவனது அருட்காட்சியாலாகியது ; அது கண்டபோது விளைந்தது. இங்குக் கூர்ந்தது அதுபோலவே அடியார் திறங்கேட்டதனாலாகியது ; அதனின்மிக்க உள்ளநிகழ்ச்சி. முன் அதிசயமாம்படி என்ற ஆசிரியர் இங்கு அதிசயமாங் காதல்கூர என்று விதந்துகூறிய நயமும் இக்கருத்துப்பற்றியது.

ஏழ் இசை - வண் தமிழ்மாலை - காட்டி யியம்ப வல்ல - தமிழியலின் சிறப்பும், இசைச்சிறப்பும், (நாடகத்தமிழ் இயல்பின்) காட்டுதலாகிய பொருளின் சிறப்பும் குறிப்பித்தபடி காண்க.

காட்டி இயம்ப வல்ல - பிறரால் காணுதற்கெட்டாதவரைக் காட்டுதலும், பிறரால் இயம்புதற்கரியவரை யியம்புதலும் வல்ல என்க. வல்ல என்றது அவற்றினருமை குறித்ததனோடு, பிள்ளையார்க்கு அதன் எளிமையும் குறித்து நின்றது.

பெருந்தகை என்ற கருத்துமது. பெருந்தகை - தமக்கென வேண்டப்படுவது ஒன்றுமின்றி உலகஞ் சைவத்திற் செழிக்கும் பொருட்டே அவதாரமாயின பெருமை குறித்தது. வல்ல - பெருந்தகை என்று கூட்டுக.

கழல்கள் வணங்குதற்கு - எழுந்த - விருப்பு-கேட்டலும் அவரைக் காணவேண்டு மென்பதன்றி வணங்கவேண்டுமென்னும் விருப்பம் வாய்த்தது நாயனாரின் பக்குவநிலை குறித்தது. "தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சார்நும் ஊழ்பெற லரிது" என்ற ஞானநூற் கருத்துக்காண்க. பின்னர் சார்ந்தார் (1445) என்றதனால் அவரது மலர்க்கழல்கள் தமக்குச் சார்பாதலை உட்கொண்டனர் என்ற குறிப்புத் தருதலும் காண்க. அவர்க்கருளிய தோணிபுரேசரதுகழல் வணங்குதலினும் அவரதுகழல் வணங்கும் விருப்பமே மிக்கு நின்றது என்பது பின்சரித நிகழ்ச்சியானு மறிக. 1447 - 1449 - பார்க்க.

வாழி அவர் மலர்க்கழல்கள் - அடியார்மனத்துள் என்றும் நின்று வாழத்தக்க. சீர் கேட்டலும் அவரது கழல்கள் இவ்வாறு வாழத்தக்கவை என்பதனைத் தவத்தால் உணர்ந்ததனால் வணங்கும் விருப்பு வாய்க்கப் பெற்றனர் என்பதாம். "ஒப்பரிய தவஞ் செய்தே னதனினு லும்மடிகள் இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யானென் றூர்" (திருஞான - புரா - 935) என்று இக்கருத்தைப் பின்னர் விளக்குதல் காண்க. ஆளுடையபிள்ளையாரது கழல்கள் மனத்துட் பொருந்த வருதற்கு முன்னைத்தவம் வேண்டுமென்பதும், அவ்வாறு தவங்கிடந்தவரே அக்கழல்களை நேர்படப் பெறுவர் என்பதும், "அரும்பின வன்பில்லை; யர்ச்சனை யில்லை; யரனடிக்கே, விரும்பின மாந்தர்க்கு மெய்ப்பணி செய்கிலன்; பொய்க்கமைந்த, விரும்பின வுள்ளத்தி னேற் கெங்ங னேவந்து நேர்பட்டதாற், கரும்பன நீள்வயல் சூழ்காழி நாடன் கழலடியே" என்ற (ஆளுடைபிள்ளையார் திருவந்தாதி - 24) நம்பியாண்டார் நம்பிகளது திரு வாக்காலறிக.

மனத்து எழுந்த விருப்பு - மனத்துள் அடங்காது மேல் எழுந்த ஆசை. வாய்ப்ப - வாய்க்கப்பெறுதலால். வாய்ப்பச் - செல்வார் (1444) - சார்ந்தார் (1455) என்று மேல்வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடிக்க. 178

திருமலையமுதம்—என்பதும் பாடம்.

1444. (வி - ரை) அப்பொழுதே - விருப்பம் எழுந்த அக்கணமே. விருப்பமிகு திப்பட்டு மேல் எழுதலால் உடல்முயற்சியாகிய செயல் உடன் எழுந்தது.

கழல்வணங்கி அருள் முன்பெற்று - மேற்காட்டியபடி பிள்ளையார் கழல்கள் வணங்கும் பேறு திருவருள் கூட்டியவழியே கைகூடுவதாதலால் அதனைக் கூட்டுவிக் கும்படிக்கும், தில்லையினின்றும் நீங்கி வழிக்கொள்வார் விடைபெற்றுக் கொள்ளும் படிக்கும் வணங்கினார் என்க. அருள்முன் பெறுதலாவது தாம் வேண்டியவாறே திருவருள் பெற்றோம் என்ற உணர்ச்சி கைகூடப்பெறுதல். திருவருட்குறிப்பின் வழியே நிற்கும் பெரியோர்க்கே இந்நிலை அறிதல் கூடுமென்க.

ஆளுடைய பிள்ளையார் திருவாலவாயிற் சமணர்களைக் காணவும் வாதில் வெல்ல வும் அழிக்கவும் பெருமானை வினவி விடைகொண்ட வரலாறு இங்கு நினைவு கூர்ந்து ஒப்பிடற்பாலது. "கூட லாலவாய்க் கோனை விடைகொண்டு...மாடக் காழிச்சம் பந் தன் மதித்தவிப், பாடல்" முதலிய தேவாரங்களும், "சேவுயர் கொடியி னார்தந் திரு வுள்ள மறிவே னென்று" என்ற புராணமும் காண்க.

பொய்ப்பிறவிப் பிணி ஓட்டும் திருவீதி புரண்டு வலங்கொண்டு - இது அம்பல வாணருடைய அருள் விடைபெற்ற பின்னர், நாயனார் திருவீதிவலம்வந்து தில்லையை நீங்கிப் போந்தவகை. முன்னர்த் "திருவீதியைப் பணிவுற்றே"(1429)என்றவிடத்துரைத்

தவையும், பிறவும் பார்க்க. ஆளுடைய நம்பிகளும் இவ்வாறே "தொழுந்தொறும் புறவிடை கொண்டு" (255), "நெடுந் திருவீதியை வணங்கி" (256)த் தில்லையி னின்றும் போந்தமையும் காண்க. இத்திருவீதிகளின் சிறப்புப்பற்றி முன் 245 - 248-ல் உரைத்தவை இங்கு நினைவு கூர்தற்பாலன. இவ்வாறு அருள்பெற்றுப்போந்த நாயனார் இனி மீண்டும் திருத்தில்லைக்கெழுந்தருளுவதில்லை என்ற சரித நிகழ்ச்சியும் இவ்வாறு வீதிபுரண்டு விடைபெற்றுப் போதலின் கருத்துக்காட்டி நிற்பதும் குறிக்க.

போந்தே - புறப்பட்டு. ஏகாரம் பின்னர் மீளவும்வந்து புகுதப் பெருமைக் குறிப்பு. ஆளுடைய பிள்ளையார் இறுதியாக மூன்றும்முறை திருத்தில்லையினைத்தரிசித்து விடைபெற்றுச் சீகாழிக்கு எழுந்தருளும் நிகழ்ச்சியினையும் இவ்வாறே "கூத்தாநுள் பெற்றுப் போந்தருளி" (திருஞான - புரா - 1145) என்பதும், ஆளுடைய நம்பிகளும் இவ்வாறே இரண்டாம்முறை தரிசித்துப் போந்தமையைப் "பொற்பதியை வணங்கிப் போய்" (ஏயர்கோன் - புரா 116) என்பதும் ஒப்பு நோக்கற்பாலன.

எப்புவனங்களும் நிறைந்த திருப்பதி - ஞானகாய நிறைவினால் எல்லா விடங் களிலும் நிறைவுகொண்ட பதி என்பது. "எங்குந் திருமேனி யெங்குஞ் சிவசத்தி, யெங்குஞ் சிதம்பர மெங்குந் திருநட்ட, மெங்குஞ் சிவமா யிருத்தலா லெங்கெங்குந், தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே" (9 - 74), "அண்டங்க ளோரேழு மம் பொற் பதியாகப், பண்டை யாகாசங்க ளைந்தும் பதியாகத், தெண்டினிற் சத்தி திருவம் பலமாகக், கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே" (9 - 101) என்பன முதலாகத் திருமூலதேவ நாயனார் தில்லைக்கூத்தினைப் பற்றித் திருமந்திரம் ஒன்பதாந் தந்திரத்தி னுள் அருளியவை காண்க. நிறைந்த என்ற கருத்தும் காண்க. ஏனை நான்கு பூதங்க ளுள்ளும் நிறைந்து அவற்றுக்கு இடங்கொடுத்து நிற்பது சடமாகிய பூத ஆகா யம்; ஞான ஆகாயம் எல்லாப் புவனங்களும் நிறைந்து ஓங்குவது.

எல்லையினை இறைஞ்சி ஏத்தி - எல்லையைப் பணிந்து அங்கிருந்தபடி தலத்தைப் போற்றி. "புவனவா ரூரினிற் புறம்புபோந் ததனையே நோக்கி நின்றே" (திருஞான-புரா - 518) என்று ஆளுடைய பிள்ளையார் திருவாரூரைப் போற்றிப் போந்த வர லாறும், பிறவும் கருதுக.

செப்பரிய பெருமையினார் திருநாரையூர் - பெருமையினாருடைய என்று ஆறும் வேற்றுமை உருபு விரித்துரைத்துக் கொள்க. எப்பரிசும்-நாரையூர் நம்பனுக்கு "அம்ம அழகிதே" என்று திருக்குறுந்தொகையிலும், "நம்பன்றன்னை நாரையூர் நன்னகரிற் கண்டே னானே" என்று திருத்தாண்டகத்திலும் பெருமானது சொலற்கரிய பல பெருமைகளையும் நாயனார் பாராட்டியருளிய திறத்தினைக் குறிக்கச் செப்பரிய பெருமையினார் என்று கூறினார். பெருமையினார் என்றது நாயனாரைக் குறிப்பதாகவே கொண்டு பணிந்து எழுதற்கு எழுவாயாக்கி உரைத்தலுமொன்று. இப்பொருளில் மேல்வரும் பாட்டில் திருநாவுக்கரசர் தாமும் என்ற எழுவாய்க்குப் பெருமையினா ராகிய என்று பண்பாக்கி உரைத்துக் கொள்க. 179

1445. (வி - ரை) தொண்டர்குழாம் புடைசூழச் - சார்ந்தார் - என்று கூட்டுக. நாயனாரது பெருமையறிந்த பல அடியார்கள் அவரைச் சுற்றிச் சூழ்ந்து வந்தனர். அவர்கள் திருத்தில்லையினின்று போந்து தொடர்ந்து வந்தாரும் சீகாழிப்பதியினின்று எதிர்கொண்டு வணங்கச் சென்றாருமாம்.

தொழுத கரத்தோடு நீறு துதைந்த கோலம்-இஃது அடியார் கண்டவாறு நாயன ரது திருக்கோலம். தொழுத கரம் - காழிவரும் பெருந்தகையார் மலர்க்கழல்கள் வணங்க எழும் விருப்பம் வாய்த்து வருகின்றாராதலின் அந்தத் திசையையும் பதியையும் நோக்கிக் கைகூப்பிய வண்ணமாகத் தொழுதுகொண்டே வருகின்றார். "கோயில்

வாயிற் றிசைநோக்கிக் கைதொழுதாள்" (திருஞான - புரா - 475) என்றவாறு காண்க. நீறுதுதைந்த கோலம் - துதைதல் - மிகுதியாய் நிறைய அணிந்திருத்தல். "தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியும்" (1405); "விருப்புறு மேனி கண் ணீர் வெண்ணீற்று வண்ட லாட" (1436) முதலியவை காண்க.

கோலம் கண்டவர்தம் மனம் கசிந்து கரைந்துருகும் கருணை புறம் பொழிந்து காட்ட - கோலம் உள் நிறைந்த கருணையைப் புறம்பு பொழிந்து காட்டிற்று; ஆதலின் அதனைக் கண்டவர்களது மனம் கசிந்தன; பின் கரைந்தன; பின் உருகின என்க. "இந்தக் கருணை கண்டால்" (1406) என்று திருவதிகைத் திருவீதியில் நாயனாரைக் கண்டவர்கள் உரைத்த செய்திபோல நாயனாரது திருக்கோலங்கண்டவர் யாவர்க்கும் உண்ணிறைந்து வழிவதுபோன்ற அவரது கருணையே தேற்றமாகப் புலப்பட்டது. அதனால் கண்டவர்கள் யாவரும் மனங்கசிந்து உருகினர். கருணை - வரையறையின்றி எல்லாவுயிர்களின் மேலும் செல்லும் இரக்கம். புறம் பொழிதலாவது - கருணை என்ற மன நிகழ்ச்சி புறத்திற்காணும்படி மெய்ப்பாடுகளை உண்டாக்குதல். "திருமேனி தன்னி லசைவும்" முதலாயின உள்ளிருக்கும் அன்பினை வெளிப்படுப்பன.

தேண்திரையில்......தாமும் - வண்தமிழால்......மொழிந்த பிரான்-இருவரும் திருவருள் பெற்ற பெரியவர்கள் என்பது குறிக்க இவ்வாறு கூறினார். தாமும் - உம்மை இக்குறிப்புப்பற்றியது. "பொங்குகடற் கன்மிதப்பிற் போந்தேறு மவர் பெருமை, யங்கணர்தம் புவனத்தி லறியாதார் யாருளரே?" (அப்பூதி - புரா - 15) என்று அப்பூதிநாயனார் அறிந்தவாறு தேற்றப்பட உலகமறிந்தபடி நாயனாரது பெருமை இஃது. ஆளுடையபிள்ளையாரது சிறப்புக்களில் முதலில் தேற்றப்படத் தந்தையாரும், அதுகொண்டு பின்னர் உலகரும் அறிந்தது அவரது தெய்வத் திருமறைத் திருவாக்கே யாகும். "வேறு விளைந்த வெருட்சி வியப்பு விருப்பொடுங், கூறு மருந்தமி ழின்பொரு ளான குறிப்போர்வார்" (திருஞான - புரா - 85). ஆதலின் இவ்விரண்டினையும் உடன் கூட்டிக் கூறினார் என்க.

வண்தமிழ் - அந்நாட்பயந்த பயன்களை, இந்நாளும் வேட்டவர்க்கு வரையாது கொடுக்கும் வள்ளன்மையுடைய தமிழ்.

தமிழால் எழுதுமறை மொழிந்த பிரான் - இறைவனது திருவாக்காகிய வேதங் கள் என்னும் எழுதா மறைகளின் பொருள்களை எழுதும் மறையாகத்தமிழால் அருளி யவர். "விருப்புடன் பாட லிசைத்தார் வேதந் தமிழால் விரித்தார்" (திருஞான - புரா - 289) முதலியவை பார்க்க. நான்மறை எனப்படுவன தமிழிலே முன் இருந்தன என் பது புதியகொள்கை. அஃது ஆசிரியர் முதலிய முன்னோர்களது கருத்தன்று என்பது.

சார்ந்தார் - நாயனார் தாம் சாரத்தக்க சார்பாகக்கொண்டனர் என்பது குறிப்பு.

தெய்வமறை—என்பதும் பாடம். 180

1446. நீண்டவரை வில்லியார் வெஞ்சூலை மடுத்தருளி நேரே முன்னாள்
ஆண்டவர செழுந்தருளக் கேட்டருளி யாளுடைய பிள்ளை யாருங்
காண்டகைய பெருவிருப்புக் கைமிக்க திருவுள்ளக் கருத்தி னோடு
மூண்டவருள் மனத்தன்பர் புடைசூழ வெழுந்தருளிமுன்னேவந்தார்.

(இ - ள்) நீண்டவரை வில்லியார் - பெரிய மேருமலையை வில்லாகவுடைய இறைவர்; வெஞ்சூலை...கேட்டருளி - வெவ்விய சூலைநோயினைக் கொடுத்தருள்செய்து முன்னாளில் நேரே ஆட்கொண்டருளிய அரசுகள் எழுந்தருளுகின்றார் என்ற செய்தி யினைக் கேட்டருளி; ஆளுடைய பிள்ளையாரும்...கருத்தினோடும் - ஆளுடைய பிள்ளை யாரும் அவரைக் காணும் தகைமையதாகிய பெருவிருப்பம் மிகமேலோங்கிய திருவுள்

ளக் கருத்தினையுடையவராய்; மூண்ட...எழுந்தருளி - அருள் மூண்ட மனத்தினை யுடைய அன்பர்கள் பலரும் தம்மைப் புடைசூழ்ந்து வர எழுந்தருளிவந்து; முன்னே வந்தார் - முன்னர் வந்தருளினார்.

(வி - ரை) நீண்டவரை - மேரு. நீண்ட - பெருமையால் நீளமுடைய. வெஞ் சூலை...ஆண்ட அரசு - சூலை அருளுருவமானதால் அதனை மடுத்து ஆட்கொண்ட தனைப் பெரிய பேறாகக் கருதியருளினார் ஆளுடைய பிள்ளையார். "அருள் பெருகு சூலையினா லாட்கொள்ள வடைந்துய்ந்த" (அப்பூதி - புரா - 16) என்று நாயனார் தமது கருத்தாக இதனையே தமக்குக் கிடைத்த பேறாகக் கூறுவதும் காண்க. மடுத்தல்-பெருகக் கொடுத்தல். இறைவன்பால் நேசம் செலச் செய்யும் எவ்வித இடுக்கணும் துன்ப முதலியவையும் அவனது அருளுருவமாகவே காணத்தக்கன என்பது பெரி யோர் துணிபு.

காண்தகைய பெருவிருப்பு - எதிர்சென்று கண்டு வணங்கிக் களிக்கும் பேறு கிடைத்ததனால் நேர்ந்த விருப்பம். "ஆக்கிய நல்வினைப் பேறென்று எதிர்கொள" (திருஞான - புரா - 269) பார்க்க.

கைமிக்க - கைகூடும் என்பது போலக், கை என்பது உறுதிப்பாடு குறிக்கும் முன்மொழி, உபசர்க்கம் என்பர் வடவர். கை - ஒழுங்கு - ஒழுக்கம் என்பாரு முண்டு. அருள் மூண்டமனத்து அன்பர் - என்க. தம்மைப்போலவே விருப்பமுள்ள மனத்தன்மையைத் திருவருளால் அவ்வாறே பெற்ற அடியார்கள். இவர்கள் பிள்ளை யாருடன் சேவித்து இருந்தவர்கள்.

முன்னே வந்தார் - எதிர் கொண்டு சென்றனர். "விண்டொழிந்தன நம்வினை... மெய்த் தொண்டரோ டினிதிருந் தமையாலே" (திருவலஞ்சுழி - 2) என்பது பிள்ளை யாரது அருட்குறிப்பினைக் காட்டும் திருவாக்கு. "மெய்க்காதற் றொண்டர் திரு வேடம்" (திருஞான - புரா - 270) பார்க்க. 181

1447. தொழுதணைவுற் றாண்டவர சன்புருகத் தொண்டர்குழாத் திடையே சென்று
பழுதில்பெருங் காதலுட னடிபணியப் பணிந்தவர்தங் கரங்கள் பற்றி
எழுதரிய மலர்க்கையா லெடுத்திறைஞ்சி விடையின்மேல் வருவார் தம்மை
யழுதழைத்துக் கொண்டவர்தா "மப்பரே" யெனவவரு "மடியேன்" னென்றார். ௧௮௨

(இ - ள்) விடையின் மேல் வருவார் தம்மை அழுது அழைத்துக் கொண்டவர் தாம் - இடபத்தினை ஊர்தியாகக் கொண்டு எழுந்தருளும் சிவபெருமானை, அழுது அழைத்துத் தம்முன் வெளிப்பட்டுவரக் கொண்ட ஆளுடையபிள்ளையாரும்; தொழுது அணைவுற்று - (எதிர் கொள்ள வந்தவர்) தொண்டர் திருவேடத்தினைத் தொழுது எதிரில் அணைதலுற்று; ஆண்ட அரசு அன்பு உருகத் தொண்டர்குழாத்து இடையே சென்று பழுதுஇல் பெரும் காதலுடன் அடிபணிய - ஆளுடைய அரசுகள் தம்மைச் சூழ்ந்த தொண்டர் கூட்டத்தினிடையேபோய், அன்பின் பெருக்கினாலே உள்ளுருகப், பழுதில்லாத பெரிய அளவிடற்கரிய காதலுடன் தம் திருவடிகளில் வீழ்ந்து வணங்க; பணிந்தவர் தம் கரங்கள் பற்றி எழுதரிய மலர்க்கையால் எடுத்து - அவ்வாறு அடி வீழ்ந்து பணிந்த அவருடைய திருக்கரங்களைப் பற்றிக்கொண்டு படி எழுதுதற்கரியன

வாகிய மலர் போன்ற தமது திருக்கைகளால் எடுத்து ; இறைஞ்சி - அவரைத் தாமும் எதிர் இறைஞ்சி ; "அப்பரே" என - "எமது அப்பரே!" என்று சொல்ல ; அவரும் "அடியேன்!" என்றார் - அவரும் "அடியேன்!" என்றனர். கசுஅ

(வி - ரை) அழுதழைத்துக் கொண்டவர்தாம் - தொழுது - அணைவுற்று - பற்றி எடுத்து - இறைஞ்சி - என, - அவரும் - என்றார் - என்று கூட்டி முடிக்க.

தொழுது அணைவுற்று - முன்பாட்டில் கண்டபடி. காண்டகைய - திருவுள்ளக் கருத்தினோடு - எழுந்தருளி முன்னே வந்தாராகிய - பிள்ளையார் தொழுது அணைந்தனர் என்க. நாயனார் "தொழுத கரத்தொடு" (1445) சார்ந்தாராதலின் அவரைக் காணும் விருப்போடு சென்ற பிள்ளையாரும் எதிர் தொழுது அணைந்தனர். "தொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழுதே" (திருஞான புரா - 271) எனப் பின்னர் இதனை விரித்தது காண்க.

பிள்ளையார் தொழுது அணைவுற்றனர் ; அவரைச் சூழ்ந்த தொண்டர் குழாத்தினிடையே ஆண்ட அரசுகள் அன்புருகச் சென்று பெருங் காதலுடன் பிள்ளையாரை அடிபணிந்தனர் ; அவ்வாறு பணிந்தவரது கரங்களைப்பற்றிப் பிள்ளையார் தமது மலர்க்கையால் எடுத்து இறைஞ்சி "அப்பரே!" என்றனர் ; அவரும் (அரசுகளும்) "அடியேன்!" என்றார் என்று இத்திருப்பாட்டின் பொருளை வகுத்துக் கொள்க.

தொழுது - அணைவுற்று - பற்றி - எடுத்து என்று அடுக்கிவந்த செய்து என்னும் வினையெச்சங்கள், முன்னின்ற எச்சமாகிய இறைஞ்சி என்ற எச்சம் என என்பதனோடு கூடி முடிந்தவழித், தாமும் பொருண் முடிந்தன. "ஆண்ட வரசு...அடிபணிய" என்றது இடைப்பிறவரலாய் நின்றது. "பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி, சொன்முறை முடியா தடுக்குன வரினு, முன்னது முடிய முடியுமன் பொருளே" (தொல் - சொல்- வினை - 36) என்பதிலக்கணம். அணைவுற்று என்பதனை அணைவுற என்று செய என்னும் வாய்பாட்டெச்சமாக்கி உரைப்பினுமமையும். இவ்வாறன்றி, ஆண்ட அரசு, தொழுதணைவுற்று என்று கூட்டி உரைப்பாருமுண்டு. அவ்வாறு கொள்ளுங்கால் முன்னர்த் "தொழுத கரத்தொடு" (1445) என்றதனைப் பொதுவகையானும்,இங்குத் "தொழுது" என்றதனைப் பிள்ளையாரைத் தொழுது எனச் சிறப்பு வகையானும் கொள்ளப்படும்.

அன்புருக - உருகச் சென்று அடிபணிய என்க. உருக்க என்பது உருக என வந்தது. அன்பினால் உருக்கப்பட்டாராதலின் என்க. தாம் காதல் கூர வணங்க வந்த பொருள் நேரே காணக் கிடைத்தபோது அன்பு உருக்கியது.

தொண்டர் குழாம் - பிள்ளையாருடன் புடைசூழ (1446) வந்த அன்பர் கூட்டம், நாயனாருடன் புடைசூழ்ந்து வந்த தொண்டர் கூட்டம் (1445) என்றலுமாம். இருதிறத்தும் கூடிய அடியார் கூட்டத்தினிடை என்றலும் பொருந்தும். "திரண்டுவருந் திருநீற்றுத் தொண்டர்குழா மிருதிறமுஞ் சேர்ந்தபோதில்" (1498) எனப் பின்னர் வருதலும் காண்க.

பழுது இல் பெருங்காதல் - பழுதில்லாமையாவது அன்றைக்கு ஓங்கிய காதல் பின்னர் என்றும் குறையாமல் வளர்ந்திருத்தல். "மருவியநண் புறுகேண்மை யற்றைநாள்போல் வளர்ந்தோங்க" (1452) என்றதும், பின்னர் இவ்விரு பெருமக்களும் இருமுறை சந்தித்த வரலாற்று நிகழ்ச்சிகளும் கருதுக.

அடிபணிய - நிலத்தின்மேல் விழுந்து திருவடிகளில் அட்டாங்கமாக வணங்குதல். "வாழியவர் மலர்க்கழல்கள் வணங்குதற்கு மனத்தெழுந்த விருப் "பி (1443) னால் வந்தாராதலின் அவ்வாறே அடிபணிந்தனர்.

கரங்கள்பற்றி எழுதரிய மலர்க்கையால் எடுத்து - அடிபணிந்த அரசுகளது கைகளைத் தமது கைகளாற்பற்றி எடுத்தனர் பிள்ளையார். இவ்வாறெடுத்தல் அன்பின்

அளவளாவும் அருமைப்பாட்டினைக் குறிக்கும் மெய்ப்பாடுகளுள் ஒன்று. இவ்வாறே, அடிபணிந்த குலச்சிறை நாயனாரையும், மங்கையர்க்கரசியம்மையாரையும் பிள்ளையார் கைகளாற்பற்றி எடுத்தருளும் வரலாறுகளும், பிறவும் இங்கு வைத்துக் கருதுக. "கரகம லங்கள் பற்றியே யெடுப்ப" (திருஞான - புரா - 657); "இன்ன ருட் பெருஞ் சிறப்பொடுந் திருக்கையா லெடுத்தார்" (ஷை - 671) என்பவை காண்க.

எழுதரிய மலர்க்கை - அழகின் வண்ண மின்னபடி என்று எழுதவொண்ணாத வடிவமுடைய தாமரை மலர்போன்ற திருக்கைகள். ஆளுடைய பிள்ளையாரது திருக் கைகள். "பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்கும், செங்கை" (ஷை - 172) என்பது முதலாக வருபவைகாண்க. எழுதுதல் - படி எழுதுதல். ஓவியந்தீட்டுதல். "படிஎழுத லாகாத மங்கை", "இவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே" (தேவாரம்),"யாழு மெழுதி யெழின்முத் தெழுதி" (திருக்கோவை) முதலியவைகாண்க.

இறைஞ்சி - அரசுகள் அடிபணிந்தமையின் தாமும் எதிர்பணிந்து. "உள்ளமிகு பதைப்பெய்தி யுடையவர சினைவணங்க, வள்ளலார் வாகீச ரவர்வணங்கா முன் வணங்க" (திருநா - புரா - 397) எனவும், "திருநாவுக் கரசரெதிர் சென்றிறைஞ்சச் சிரபுரத்துத் தெய்வ வாய்மைப், பெருஞான சம்பந்தப் பிள்ளையா ரெதிர்வணங்கி" (1499) எனவும் பின்னர்வரும் நிகழ்ச்சிகளும் காண்க. இவ்வாறு ஒருவரை ஒருவர் வணங்குதல் அன்பின் பெருக்கினானிகழ்வதாம். இதனுள் ஏற்றத்தாழ்வு காண்போர் அன்பினது உண்மைநிலை யறியாதா ரென்றொழிக.

விடையின் மேல்வருவார்தம்மை அழுது அழைத்துக் கொண்டவர் - அழைத்துக் கொண்டவர் - "அம்மே! அப்பா! என் றழுதருளி யழைத்தருள" (திருஞான - புரா - 63) என்பது காண்க. வருவார் - தம் இயல்பாகவே என்றும் எங்கும் வருவாரா யினும் அழைத்ததனால் விரைந்து அவ்வாறே வெளிப்பட்டனர் என்பது.

"அப்பரே!" என - அப்பர் என்பது நாயனாரைப் பிள்ளையார் இப்போது அருமை யுற அழைத்துக் கொண்டமையாற் போந்த பெயர். இப்பெயரே பயின்று வழங்கப்படு தல் இதன் அருமைப்பாட்டினையும், பிள்ளையார் அதுபோழ்து கொண்ட அன்பின் ஆழத்தினையும் புலப்படுக்கும். அப்பரே! - ஏகாரம். நீவிர் அப்பரேயன்றோ? ஆதலின் அடிபணிதல் தகாது என்ற கருத்துக்காட்டி நின்றது. அப்பர் - ஐயர் - தலைவர் - தந்தை போன்றவர்.

அவரும் "அடியேன்" என்றார் - அவர் - திருநாவுக்கரசு நாயனார். உம்மை பிள்ளையாரால் அப்பர் என்று போற்றப்பட்ட அவரும் என உயர்வு சிறப்பு. இவர் என்ன, அவரும் என்று எச்சவும்மை என்றலுமாம். அடியேன் - அப்பராந் தன்மை யில் வைத்து நீர் அருளினாலும் நான் என்றும் உமது அடியவனேயாம். ஆதலின் அடி பணிதலே எனக்குத் தகுதி என்பது குறிப்பு. சைவத் திறத்திற் கூறும் பணிவுக்கு நாய னாரே சிறந்த எடுத்துக் காட்டாதல் காண்க.

அப்பரோ!—என்பதும் பாடம். 182

1448. அம்பிகைசெம் பொற்கிண்ணத் தமுதஞா னங்கொடுப்ப
வழுகை தீர்ந்த
செம்பவள வாய்ப்பிள்ளை திருநாவுக் கரசரெனச்
சிறந்த சீர்த்தி
யெம்பெருமக் களுமியைந்த கூட்டத்தி லரனடியா
ரின்ப மெய்தி
யும்பர்களும் போற்றிசைப்பச் சிவம்பெருகு மொலிநிறைத்தா
ருலக மெல்லாம். ௧௮௩

(இ - ள்) அம்பிகை...கொடுக்க - உமையம்மையார் செம்பொற் கிண்ணத்தினில் அமுத ஞானத்தை ஊட்ட (அதனால்); அழுகை தீர்ந்த...பிள்ளை-அழுகை தீர்ந்த செம் பவளம் போலும் திருவாயினையுடைய ஆளுடைய பிள்ளையாரும்; திருநாவுக்கரசர் - திருநாவுக்கரசு நாயனாரும்; எனச் சிறந்த...கூட்டத்தில் - என்னும் பெருஞ் சிறப் புடைய எமது இரண்டு பெருமக்களும் இயைந்த இத்திருக்கூட்டத்தினைக் காணும் பேறு பெற்றதனால்; அரனடியார் இன்பம் எய்தி - சிவனடியார்கள் இன்பம் பெற்று; உம்பர்களும் போற்றிசைப்ப உலகம் எல்லாம் சிவம் பெருகும் ஒலி நிறைந்தார் - தேவர்களும் போற்றித் துதிக்கும்படி உலகமெல்லாம் சிவத்தைப் பெருகுவிக்கும் அரகர என்ற முழக்கத்தை நிறைத்தனர்.

(வி - ரை) அம்பிகை...வாய்ப்பிள்ளை - இக்கருத்துப் பற்றியே முன்னர் "வெற் பரையன் பாவைதிரு முலைப்பா லோடும், அடையநிறை சிவம்பெருக வளர்ஞானங் குழைத்தூட்ட அமுது செய்த" (1442) என்றும், "அம்மைதிருப் பாலமுத முண்ட போதே" (1443), என்றும் குறித்தனர். நாயனார் பிள்ளையாரைத் தரிசித்த காலமா வது ஆளுடைய பிள்ளையார் திருத்தில்லையைத் தரிசித்துத், திருஎருக்கத்தம்புலியூர் திரு முதுகுன்றம் முதலிய தலங்களை வணங்கித், திருநெல்வாயி லரத்துறையில் முத்துச் சிவிகைபெற்றுச், சீகாழிக்குத் திரும்பி வந்து, முந்நூலணியப் பெற்றுத் தங்கியிருந்த காலம். அவரது சரிதத்தில் அப்போது முதன்மையாய் எங்கும் பரவித், தேற்றப்பட உலகம் கண்டு, போற்ற நின்ற செய்தி அவர் அம்மையார் அளித்த ஞானப்பாலை அமுது செய்து மூன்று வயதில் முழுஞானம்பெற்று விளங்கியமையேயாம். அவரது பெருஞ் சரிதத்தில் ஏனைய பெரும் பகுதிகள் பின்னிகழ உள்ளன. முத்துச் சிவிகை பெற்ற செய்தி அப்போது அணிமையில் நிகழ்ந்ததாதலின் உலகர் அறிந்து போற்றப் போதிய காலமின்றாம்; ஆதலின் இப்பெரும் புகழ் ஒன்றுபற்றியே குறித்துப் போற்றினர்.*

---

*நாயனாரும் பிள்ளையாரும் ஒரு காலத்தில் வாழ்ந்தவர்கள். நாயனாரது சரித நிகழ்ச்சிகள் ஆளுடையபிள்ளையாரது சரித நிகழ்ச்சிகளோடு பன்முறையும் அங்கங்கும் இயைந்து வருவன. ஆதலின் நாயனார் சரிதத்தைப் பொருள் செய்வதற்கு அங்கங்கும் போந்த பிள்ளையார் சரித நிகழ்ச்சிகளில் மனம் வைத்துக்கொண்டே செல்லுதல் வேண் டும். இவ்வுண்மை அங்கங்கும் ஆசிரியர் காட்டக் காண்போம். இப்போது பிள்ளையார் சீகாழியில் இருந்த காலம் அவர் தமது நான்காவது தலயாத்திரையை முடித்துத் தங் கிய காலமாம். பிள்ளையாரது சரிதம் ஏழுமுறை செய்த தலயாத்திரைகளாகப்பிரித்துணர நிற்பது. அவற்றுள் முதல் யாத்திரை திருக்கோலக்கா சென்று தாளம்பெற்றுத் திரும் பியது. இரண்டாவது யாத்திரை அவரது தாயார் பிறப்பிடமாகிய திருநனிபள்ளி மறையவர் அழைப்பிற்கிணங்கிச் சென்று பாலை நெய்தல் ஆக்கிய பதிகம்பாடித் திரு வலம்புரம் திருச்சாய்க்காடு திருவெண்காடு இவைகளைத் தரிசித்துச் சீகாழிக்குத் திரும் பியருளியது. மூன்றாவது யாத்திரை தென்திருமுல்லைவாயில் திருமயேந்திரப்பள்ளி திருக்குருகாவூர் தரிசித்து மீண்டருளியது. நான்காவது யாத்திரைதான் முன்னர்க் குறிக்கப்பட்டது. இதன் பின்னரும், ஐந்தாவது, அவரது அவதார உண்மையாகிய பரசமய நிராகரித்து நீறு ஆக்கும் பெரு நிகழ்ச்சிகள் நிகழும் யாத்திரை தொடங்கு முன்னரும், உள்ள இடைப்பட்ட காலமே நாயனார் பிள்ளையாரைக்கண்ட இச்செய்தி நிகழ்ந்த காலமாகும். ஆறாவது யாத்திரை அவர் தொண்டைநாடு தரிசித்துப் போந்த மையும், ஏழாவது நல்லூர்ப் பெருமணம் சென்று திருவடி நீழலிற் புக்கொன்றி யுடனுவதும் ஆகும்.

அழுகை தீர்ந்த - "அழுது அழைத்துக் கொண்டவர்" (1447) என முன் பாட்டிற் கூறிய படியால் அதனையே தொடர்ந்து அவ்வாறு அழைத்துக் கொண்டபின் அம்பிகை பொற்கிண்ணத்தில் அமுதஞானங் கொடுத்ததனால் அவ்வழுகை தீர்ந்தனர் என்று கூறிச் செல்லும் நயமும் காண்க. அழுகை தீர்ந்த - அழுகை பிறப்பினையும், தீர்ந்தமை - அதன்கழிவாகிய முத்தியினையும் குறிக்கும். பிள்ளையார் அழுது ஞான முண்டமையால் அவர் அழுகை தீர்ந்ததுமன்றி, வேதநெறி தழைத்தோங்கிற்று; மிகுசைவத்துறை விளங்கிற்று; பூதபரம்பரை பொலிவுற்றது; எனக் காண்போம். ஆதலின் உயிர்கள் யாவும் தத்தம் அழுகை தீர்ந்து நிலவுதற்குக் காரணமுண்டாயிற்று என்பதும் குறிப்பு.

செம்பவள வாய்ப்பிள்ளை - மூன்று வயதாகிய இளவயதாதலின் அழகிய அவரது திருவாய் பவளம் போன்று விளங்கிற்று. "வண்ணமலர்ச் செங்கனிவாய் மணியதரம்" (திருஞான - புரா - 62) என்பது இதனை விளக்குவது காண்க.

அழுதபோது வாய் உருவாற் பவளம் போன்றதும்; அழுகை தீர்ந்தபோது ஞானத்தமிழ் பிறத்தற்கிடமாய்ச் செம்பொருள்தந்து உலகை உய்யக் கொண்டமை யாற் றிருவாய் செம்பவளம் போன்றது என்பதும் குறிப்பு. செம்மை, நிறத்தால்மட்டும் அன்றிப் செம்பொருள்தரும் என்று குறிப்பதும் காண்க.

செம்பவள வாய்ப்பிள்ளை - திருநாவுக்கரசர் - அவரும் செம்பொருள் தரும் வாயினையுடையார்; இவரும் திருநாவினுக்கு - வாக்குக்கு - அரசராந் தன்மையுடையார் - என இருவரும் எமக்கு ஒரு தன்மையுடைய சிறப்புப் பெற்றவர் என்பதும் குறிப்பு. எம்பெருமக்களும் என்றதும் சிறந்த, சீர்த்தி - என்றதும் இக்குறிப்பினை விளக்குவன. சிறப்பும் சீர்த்தியும் ஒரு பொருளனவாதலும் காண்க.

பிள்ளை - "அம்பிகைசெம் பொற்கிண்ணத் தமுதஞா னங்கொடுப்ப வழுகை தீர்ந்த, செம்பவளவாய்" என்ற இத்துணையும் பிள்ளை என்பதற்கு அடைமொழி. இவை பிள்ளையாரின் சிறப்புணர்த்தி நின்றன.

திருநாவுக்கரசர் - நாயனாரது சரித்தத்துள் ஒருசிறந்த பகுதிகூறும் இவ்விடத்து அவர் பெயரை அடைமொழியில்லாது கூறினர்; அடைமொழியில்லாது கூறலே தனிச் சிறப்புணர்த்து மாகலான். பேராசிரியர் திருக்கோவையார் முதற்பாட்டினுள் கோங்கு என்றதற்கு அடைகொடாமையே அதன் ஏற்றத்தை விளக்கி நின்றது என்றுரைத்த தனை இங்கு நினைவுகூர்க. அடைமொழிச் சிறப்பினைப் பிள்ளையராது கருத்தாகவைத்து "நீண்ட வரைவில்லியார்...ஆண்டவரசு" எனமுன்பாட்டிற் கூறியதும் கருதுக.

எம்பெருமக்கள் - இருவரும் எம்மால் ஒன்று போல வணங்கப்பெறும் பெருமக்கள் என்பதாம். இவ்விருவரையும் பற்றியே "பாடலங் காரப் பரிசில்கா சருளிப் பழுத்த செந் தமிழ்மலர் சூடி, நீடலங் காரத் தெம்பெரு மக்க ணெஞ்சினு ணிறைந்து நின்றானை" (திருவிசைப்பா - வீழி - 12) என்ற சேந்தனார் திருவாக்கினை இது விளக்கம் செய்தல் காண்க. "என், பாட்டிற்கு நீயு மவனுமொப் பீரெப் படியினுமே" என்று பிற்கால ஆசிரியரும் இக்கருத்தையே தீட்டிவைத்ததும் காண்க. இவ்வாறு இருவரும் ஒப்பாந் தன்மையினையும், ஆயினும் வேறாந் தன்மையினையும், மேல்வரும் "அருட்பெருகு தனிக் கடலும்" (1480) என்ற திருப்பாட்டில் ஆசிரியர் அழகும் அருமையும் பெற ஓதுவதும் கருதுக.

எம்பெருமக்களும் இயைந்த கூட்டம் - நாயனார் பிள்ளையாரொடு கூடிய கூட்டம் என்றுதல், பிள்ளையார் நாயனாரொடு கூடிய கூட்டம் என்றுதல் கூறாது, இவ்வாறு இருவரும் இயைந்த கூட்டம் என்ற பெருங் கவிநயம் கருதிக் களிக்கத்தக்கது. ஒடுவுருபு சார்ந்த பெயரின்பாற் சிறப்புக் குறிக்குமாதலாலும் முன் கூறியதுபோல



சீகாழியில் பிரம தீர்த்தத்துடன் கூடிய திருத்தோணி

—பாட்டு - 1450 - பக்கம் - உசாரு



திருக்கோலக்கா - கோயில்

—பாட்டு - 1454 - பக்கம் - உளO



திருக்குறுக்கை - கோயில்

—பாட்டு - 1454 - பக்கம் - உஎ೦



திருவேள்விக்குடி - கோயில்



—பாட்டு - 1455 - பக்கம் - உஎக

இருவரும் ஒன்றுபோலச் சிறப்புடையராதலாலும், நாயனூர் பிள்ளையார் கழல் வணங்க வந்தாராக, அவ்வாறே பிள்ளையாரும் நாயனூரைக்கண்டு தொழ எழுந்தருளி முன் வந்தாராக, இத்தன்மையால் இவரொடு இவர் கூடினூர் எனக்கூற லமையாதாத லானும் இவ்வாறு கூறினூர். இக்கருத்தையே தொடர்ந்து மேல்வரும் பாட்டில் விரித்து "ஒருவரொரு வரிற்கலந்த உண்மை" என்று பாராட்டிய திறமும் காண்க.

கூட்டம் - கூடிய நிகழ்ச்சி. இயைதல் - உணர்ச்சியில் ஒன்ருய் நயந்து கலத்தல் குறித்தது. "ஆரூரர் தாமுந் தொழுது கலந்தனரால்" (வெள் - சருக் - 19), "இவர் கள் தந்த மணிமே னிகள்வேரு மெனினு மொன்ருந் தன்மையராய்" (ஷெ 20), "ஒருவரொரு வரிற் கலந்து" (ஷெ 21) என்பனவும், "கலந்துநின் னடியாரோடு" என்ற திருவாசகமும், பிறவும் காண்க. "நீடிய சீர்த்திரு ஞானசம் பந்த னிறைபுகழா, னேடிய பூந்திரு நாவுக் கரசோ டெழின்மிழலைக், கூடிய கூட்டத்தி னூலுள தாய்த்திக் குவலயமே" (11-ம் திருமுறை - ஆளு - பிள் - அந் - 80) என்று இக்கருத்தையே நம்பியாண்டார் நம்பிகள் எடுத்துக் காட்டினதும் காண்க.

சிவம்பெருகும் ஒலி - அரகர முழக்கம். அடியார்கள் சிவானந்தம் மேலிட்ட போது அரவோசை முழக்குதல் சைவமரபு.

உலகமெல்லாம் - கூத்தப்பெருமான் இப்புராணம் தொடங்க எடுத்துக் கொடுத்த முதல். இந்நிகழ்ச்சியின் அருமை குறிக்க இங்கு அதனைப் பொறித்தனர் ஆசிரியர். "உருகுகின்றது போன்ற துலகெலாம்" (454), "ஓதி யேறினூ ருய்ய வுலகெலாம்" (திருஞான - புரா - 216) முதலியவை பார்க்க. 183

1449. "பிள்ளையார் கழல்வணங்கப் பெற்றேனென் றரசுவப்பப்
பெருகு ஞான
வள்ளலார் வாகீசர் தமைவணங்கப் பெற்றதற்கு
மகிழ்ச்சி பொங்க,
வுள்ளநிறை காதலினூ லொருவரொரு வரிற்கலந்த
வுண்மை யோடும்
வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந்தார் கழல்வணங்கும்
விருப்பின் மிக்கார். ௧௮௪

*1450. அருட்பெருகு தனிக்கடலு முலகுக் கெல்லா
மன்புசெறி கடலுமா மெனவு, மோங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவன முய்ய
விருட்கடுவுண் டவரருளு மகில மெல்லா
மீன்றுடன் றிருவருளு மெனவுங் கூடித்
தெருட்கலைஞா னக்கன்று மரசுஞ் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தா ரன்றே. ௧௮௫

1449. (இ - ள்) பிள்ளையார்........அரசு உவப்ப - ஆளுடைய பிள்ளையாரது கழல்களை வணங்கும் பேறு பெற்றேன் என்று ஆளுடைய அரசுகள் மகிழ்வடைய; வாகீசர் தமை வணங்கப் பெற்றதற்குப் பெருகு ஞான வள்ளலார் மகிழ்ச்சிபொங்க - திருநாவுக்கரசுகளை வணங்கப் பெற்றதன்பொருட்டுப் பெருகும் ஞானவள்ளலாராகிய பிள்ளையார் பெருமகிழ்வடைய; உள்ளநிறை......உண்மையோடும் - மனத்தினுள்

நிறைந்த மிக்க ஆசையினால் ஒருவர் மற்ற ஒருவருள்ளே கலந்த உண்மை நிலையி னோடும்; வெள்ளநீர்......விருப்பின் மிக்கார் - வெள்ளப் பெருக்கில் மிதந்த திருத் தோணியிலே எழுந்தருளியிருக்கும் இறைவரது திருப்பாதங்களை வணங்கும் விருப்பத்தி னால் மிக்கவர்களாகி, ௧௪௪௯

1450. (இ - ள்) அருட்பெருகு......கடலும் ஆம் எனவும் - அருளினால் பெரு கும் ஒப்பற்ற ஒரு கடலும், உலகங்களுக்கெல்லாம் அன்பினால் செறிகின்ற ஒரு கட லும் போல்வார் இவர்கள் என்று சொல்லவும்; ஓங்கும்......கண் இரண்டெனவும் - ஓங்குகின்ற பொருளுடைய சமயங்களின் முதன்மைபெற்ற சைவநெறியானதுபெற்ற புண்ணியக் கண்கள் இரண்டும் போல்வார் இவர்கள் என்று சொல்லவும்; புவனம் உய்ய இருள் கடு உண்டவர் அருளும் உலகம் எல்லாம் ஈன்றாள் தன் திருவருளும் எனவும் - உலகமெல்லாம் உய்யும்பொருட்டுக் கரிய விடத்தினை உண்டருளிய சிவ பெருமானது திருவருளும், உலகங்களையெல்லாம் ஈன்றெடுத்த அம்மையாரது திரு அருளும் போல்வார் இவர்கள் என்று சொல்லவும்; தெருள் கலைஞானக்கன்றும் அர சும் - தெருளுதற்கேதுவாகிய கலைஞானக் கன்றாகிய பிள்ளையாரும் திருநாவுக்கரசரும்; சென்று-பிள்ளையாரது திருமாளிகையினின்றும்போய்; செஞ்சடை வானவர் கோயில் சேர்ந்தார் - சிவந்த சடையினையுடைய தேவதேவராகிய இறைவரது திருக்கோயிலை அடைந்தார்கள்; அன்றே - அப்பொழுதே. ௧௪௫௰

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1449. (வி - ரை) பிள்ளையார்...அரசு உவப்ப-பிள்ளையாரது திருவார்த்தையை அடியார்கள் உரைப்பக் கேட்டபோதே அவரைக்கண்டு கழல் வணங்க வேண்டு மென்று விரும்பிய வண்ணமே காணவும் கழல் வணங்கவும் பேறுபெற்றேன் என்று மகிழ்வது நாயனாரது மனநிலை.

பெருகுஞான...மகிழ்ச்சி பொங்க - பிள்ளையார், தொண்டர் திருவேடத்தினைத் தாம் தேடிச்செல்லாமல் தானே நேரில் தோன்றக் காணவும் வணங்கவும் பெற்றேன் என்று மகிழ்ச்சி பொங்கப் பெற்றது பிள்ளையாரது மனநிலை. தேடிவந்து கண்டு வணங்கிய நாயனாரினும், தேடாமலே காணக்கிடைத்த பிள்ளையாரது மகிழ்ச்சியே பெரிதாயிற்று என்பார் அரசு உவப்ப என்றதற்கு மேலாக வள்ளலார் மகிழ்ச்சி பொங்க என்றார்.

உள்ள நிறை காதல் - உள்ளத்தைக் காதல் முழுதும்கொண்டு நிறைந்தது. அதில் பிறிதொன்றற்கும் இடமில்லை.

ஒருவர் ஒருவரிற் கலந்த உண்மை - அரசுகள் பிள்ளையாரிடத்தும், பிள்ளையார் அரசுகளிடத்தும் சிறிதும் மாறுபாடில்லாத அன்பு கலந்த ஒருமைப்பாடு.

திருத்தோணி வீற்றிருந்தார் கழல் வணங்கும் விருப்பின் மிக்கார் - சிவபாத இருதயர் திருவாலவாயிற் செய்ததுபோல, நாயனார் தோணிபுரம் சார்ந்தவுடன் தோணிபுரேசரை வணங்கிப் பின்னர்ப் பிள்ளையாரை வணங்கும் முறையன்றி, இவ் வாறு முன்னர்ப் பிள்ளையாரைக்கண்டு வணங்கிப், பின்னரே தோணி வீற்றிருந்தார் கழல் வணங்கும் விருப்பின் மிக்கார் என்றநிலை என்னையோ? எனில், "நாடிய பொருள் கைகூடும்" என்றதற்குச் சங்கோத்தர விருத்தியில் எமது மாதவச் சிவஞான யோகிகள் உரைத்தவாறு, பிள்ளையாரது மலர்க்கழல்கள் வணங்குதற்கு மனத்தெழுந்த விருப்பு வாய்ப்ப (1443) அருள்பெற்றுத் தோணிபுரம் சார்ந்தனராதலின் அதனையே முன்னர்ச் செய்தனர் என்க. அன்றியும் அடியார் கூட்டம் ஆண்டவனது சார்பினை வலியுறுத்தலால் மிக்க பயன்தருவதென்பதும் ஞானசாத்திரங்களிற் கண்டவுண்மை.

பிள்ளையாரைக் கண்டு வணங்கியபோதே நாயனார் தோணியப்பரையும் உடன்கண்டு வணங்கினார் என்பதும் துணிபு. தோணியப்பரும் பிள்ளையாரும் பிரிக்கப்படாத தொடர் புடையார். ஆளுடையபிள்ளையார் திருக்காளத்தியிற் கண்ணப்ப நாயனாரைக்கண்டு வணங்கியவிடத்து "அவ்வன்பி னுள்ளே மன்னும், வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண் விமலரையு முடன்கண்ட விருப்பம்" (திருஞா - புரா - 1024) என்றது இங்கு நினைவுகூர்தற்பாலது. அன்றியும் "அன்ப ரோடுமரீஇ, மாலற நேய மலிந்தவர் வேடமும் ஆலயந் தானும்" (சிவஞானபோதம் 12-ம் சூத்திரம்) என்ற விடத்து அன்பர் கூட்டத்தை முன்வைத்தோதியதனையும், பின்னரும், ஆலயம் தொழுவதன்முன் வேடந் தொழுவதனை வைத்த வைப்பு முறையினையும் கருதுக.

விருப்பின் மிக்கார் - அடியார் கூட்டம் நிகழ்ந்தபோது அவர்கள் செய்வது அரனை நினைவதுவும் பேசுவதுவும் வணங்குவதுமேயாதலின் இவ்விரு பெருமக்களும் கூடியபின் தோணிபுரேசரது கழல் வணங்கும் விருப்பில் மிக்கவராயினர்.

மிக்கார் - சேர்ந்தார் என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க. மிக்கார் - முற்றெச்சம். மிக்காராகி.

தமைக்காணப் பெற்றதற்கு—என்பதும் பாடம். 184

1450. (வி - ரை) பிள்ளையாரும் அரசுகளும் கூடிச் சென்று இறைவரது திருக்கோயில் சேர்வதனை ஆசிரியர் மூன்று உவமங்களால் இப்பாட்டில் விரிக்கின்றார்.

யாவரும் பாராட்டி வியக்கும் அருமைப்பாடுடையது இத்திருப்பாட்டு. இப்புராணமாகிய குன்றின்மேல் விளங்கும் பெரு விளக்குக்களில் இப்பாட்டும் ஒன்றாகும்.

அருட்பெருகு......கடலுமாம் எனவும் - அருளினாலே பெருக்கெடுக்கும் ஒப்பற்ற ஒருகடல், அன்பு செறியும் ஒரு கடல் என்றிரண்டும் உலகுக்கெல்லாம் உதவுவன. அருட்பெருக்கு ஒன்று; அன்புப் பெருக்கு ஒன்று. "அருளென்னு மன்பீன் குழவி" (குறள்) என்றபடி அன்பு வரையறை யின்றிப் பெருகுதலே அருளாம். உலகுக் கெல்லாம் என்றது நடுநிலைத் தீபமாய் முன்னும் பின்னும் ஈரிடத்தும் சென்றியைவது. நாயனாரைப் பிள்ளையார் "அப்பர்" என்றதற்கேற்ப, அவரை அன்பு என்றும், பிள்ளையாரை அன்பினாற் பெறப்படும் அருள் என்றும் கூறிய நயமும் காண்க.

ஓங்கும்-கண்ணிரண்டு எனவும் - உயிர்கள் ஓங்குதற்குச் சாதனமாகிய பொருள்களையுடைய சமயமாகிய முதற் சைவ நெறிதான்பெற்ற கண்கள் இரண்டு என்றது, சைவநெறி இவர்களால் விளங்கலாவ தெனவும், சைவ நெறியினை மக்கள் இவர்களது திருவாக்குக்களாகிய கண்களின் மூலமாகக் காண வேண்டுவ தெனவும் கூறியபடி. "காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கு" (திருக்கோவை) என்றபடி கண்களிரண்டாயினும் அவற்றினுட் சென்று கண்டு புலஞ் செய்து விளங்கும் உயிர் உணர்வு ஒன்றேயாம். இரண்டு கண்களின் பார்வையும் ஒன்றுகூடிக் கலந்த வழியே முழுப்பார்வை நிகழும். The one is complementary to the other என்பர் நவீனர். கண் - சாதி ஒருமை. கண்களில் வலம் ஒன்றும் இடம் ஒன்றுமாக இரண்டுண்டு. ஒன்று மற்றொன்றின் காட்சியினை நிறைவாக்குவதாகும். சைவத்தின் வலதுகண் இறைவனுடையதும், இடது கண் அம்மையாருடையதுமாம் என்ற முறையினையும், மேல்வரும் உவம உள்ளுறையினையும் காண்க. புண்ணியம் - சிவ புண்ணியம்.

இருட்கடுவுண்டவர் அருள் - உலகமெல்லாம் ஈன்றாள் தன் திருவருள் - இறைவனதருள் கடுவுண்டமையாலும், இறைவியினருள் உலகீன்றமையாலும் புலப்படுவ தென்பார் உடம்பொடு புணர்த்தி ஓதினார்.

**கலைஞானக்கன்று** - ஆளுடையபிள்ளையார் உவமையிலாக் கலைஞானத்தை உண்டருளியவர் என்ற குறிப்புப் பெற ஞானக் கன்று என்றார். (திருஞான - புரா - 70) பார்க்க. எனவும் - எனவும் - எனவும், கன்றும் - அரசும், சென்று - சேர்ந்தார் என்று முடித்துக்கொள்க.

**எனவும்** - போலவும். என - உவமவுருபு. இம்மூன்றும் இரு பெருமக்களும் கூடியதனுக்கு உவமமாயின. அருளும் அன்பும் கூடுவதுபோலவும், கண் இரண்டும் காட்சியிற் கூடுவதுபோலவும், சிவமும் சத்தியுமருளிற்கூடுவது போலவும் பிரிக்கமுடியாதவாறு இவர்களது கூட்டம் நிகழ்ந்தது என்பதாம். "எம்பெரு மக்களும் இயைந்த கூட்டம்" (1448) என்றும், "ஒருவரொருவரிற் கலந்த வுண்மை" (1449) என்றும் முன் கூறிய கருத்தினை விரித்து உவமை முகத்தால் அறிவித்தவாறு.

அருட்கடல் அன்புக்கடல் - சைவநெறி பெற்ற வலக்கண் இடக்கண் - இறைவரருள் சத்தியருள், இவற்றை கன்றுடனும் அரசுடனும் நிரனிறையே கூட்டிக்கொள்க.

அன்பு அருளாகப் பரவி, சிவநெறி கண்டு, இறைவனருள் கொண்டு பேறெய்த வுள்ளதென இம்மூன்றும் ஒரு பொருள் மேலனவாய் முடியும் தன்மையும் கருதுக. அன்பும் அருளும் இலக்கணமும் பிரமாணமுமாக, சைவநெறி சாதனமாக, அம்மையப்பர் அருள் பயனாக விளங்கும் குறிப்பும் காணத்தக்கது. அன்பிற் பெரிய இந்த இரண்டு பெருமக்களின் கூட்டத்துக்கு இணையாக இறைவனது அருணெறியும் அருளுமேயன்றி வேறொன்றும் இணையாகாதென்ற உண்மையும் காண்க. சிவன் தனக்குவமையில்லாதவன். அவனைத் தமக்குள்ளே நிறையக் கண்டு திளைத்து நின்று வேறொன்றும் காணாத பெருமக்கள் ஒருவரோடொருவர் கூடியபோது விளையும் சிவானந்த மேலீட்டுக்கும் வேறொன்றும் உவமையாகாது. இவ்வாறு காணும் உவமைகள் ஆசிரியரது தெய்வக்கண்ணுக்கே புலனாவன!

**புண்ணியக்கண்ணிரண்** டென்றதனால் அபுத்தி பூர்வம் புத்தி பூர்வம் - பொது சிறப்பு - உபாயம் உண்மை - என்னும் இருவகைப் புண்ணியங்களால், முறையே அன்பும் அருளும் நிகழப்பெற்று, அவ்விரண்டன் (அன்பு அருள்) பயனாக, இறைவியினருள் (சிவஞானம்) தோன்றப்பெற்று, அதனால் இறைவனருள் (திருவடிப் பேறு) கிடைக்கப்பெறும் என்னும் சைவ சித்தாந்தப் பொருள் விளங்கும் குறிப்பும் காணலாம். இது பண்டிதர் - திரு. S. பெரியசாமி பிள்ளையவர்களின் குறிப்பு.

இருபெருமக்கள் கூடிய இக்கூட்டத்துக்கு இவ்வாறு மூன்று உவமைகள் கூறியதென்னையோ? எனின் அது, இவர்கள் கூடும் கூட்டமும் மூன்று முறை நிகழ்வதாகும் சரிதவிளைவினைக் குறிப்பதாமென்க. அவற்றுள் இங்குத் தோணிபுரத்திற் கூடிய கூட்டம் முதலாவதாம். அதனை "அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம் அன்பு சேறிகடலுமாம் எனவும்" என்றார்.

திருப்புகலூரில் பின்னர்க் கூடிய கூட்டம் இரண்டாவதாம். அது பலகாலம் தொடர்ந்து நிகழ்ந்தது. திருவீழிமிழலையில் பஞ்சகாலம் வர, இருவரும் சிவபெருமானருளிய படிக்காசு பெற்று அடியாரை ஊட்டிச் சைவ நெறியை உலகினில் வளர்த்தருளினர். அக்கூட்டத்தினையே "நீடிய சீர்த்திரு ஞானசம் பந்த னிறைபுகழா, னேடிய பூந்திரு நாவுக் கரசோ டெழின்மிழலைக், கூடிய கூட்டத்தி னாலுள தாய்த்திக் குவலயமே" (ஆளு - பிள் - திருவந் - 80) என்று போற்றினர் நம்பியாண்டார் நம்பிகள். திருமறைக் காட்டில் வேதநெறி தழைத்தோங்கவும் மிகு சைவத்துறை விளங்கவும் திருக்கதவம் திறக்கவும் அடைக்கவும் நிகழச் செய்த பெருஞ் செயலும் அப்போது நிகழ்ந்தது. இக்குறிப்புக்கள் பெறப் போருட்சமய

முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கண் ணிரண்டெனவும்" என்று இரண்டாவது உவமை கூறினார்.

திருப்பூந்துருத்தியில் தம் அப்பரைக் காணப் பிள்ளையார் சென்றருளியபோது நிகழ்ந்த இவர்களது கூட்டம் மூன்றாவதாம். இங்குப் பிள்ளையைக் காண அப்பர் எழுந்தருளினார்; அங்கு அப்பரைக் காணப் பிள்ளை எழுந்தருளிற்று. பிள்ளை எழுந்தருளிய அருளிப்பாட்டுக்கேற்ப அரசுகள் அவர்தம் சிவிகையைத் தாங்கிச் சென்றருளினர். இச்செய்கைகளுக்குப் பிரித்துணரப்படாத இறைவனருளும் அம்மையார் அருளும் உவமையாயின என்று காட்ட மூன்றாவதாக "இருட்கடு வுண்டவ ரருளும் உலக மெல்லா மீன்றுடன் றிருவருளும் எனவும்" என்றார்.

அருட்பெருகு தனிக்கடல் - அருளினாற் பெருகும் என்றும், அருளைப் பெருக்கும் என்றும் உரைக்க நின்றது. அருள் பெருகு என்று எழுவாயாக வைத்தோதாது அருட்பெருகு என்றது இக்கடல் தனதருளை உலகுக்குப் பெருக உதவும் எழுவாயாம் என்றதாம். அருட் பெருகு என்றதில் கூறிய அருள் என்பது வேறு. பின்னர் கடுவுண்டவ ரருளும்...திருவருளும் - என்பனவற்றில் கூறிய அருள் வேறு. முன்னது உயிர்க்கண்ணின்று தோன்றி இறைவனருளால் ஏனைய வுயிர்களின் சுத்த நலத்திற்காக மேற்செல்வது. பின்னையவை எல்லா வுயிர்களுக்குள்ளும் உயிராய் அங்கங்கு நின்றியக்கும் இறைவனது அருள். ஆதலின் கூறியது கூறலன்மை யுணர்க.

இருட்கடு வுண்டவர் அருளும் உலகம் எல்லாம் ஈன்றாள் தன் திருவருளும் - கடுவுண்டவர் என்றது சாதலை - இறப்பை - நீக்குவது; உலகமீன்றாள் என்றது பிறப்பைக் கொடுத்துச் சாதலையும் பிறப்பையும் நீக்கத் துணைசெய்வது என்க. "அன்புக்கும் அருளுக்கும் வேறு பாடின்றேனும் இரண்டாகப் பிரித்துக் கூறும் கருத்தால் அருளையே அன்பாகக் கூறினர். பின் மூன்றும் அடியில் சிவபிரான் திருவருளும் உமாதேவியார் திருவருளும் ஒன்றாகவும் வேறு பிரித்துக் கூறினாற்போலு மென்க" என்றும் "சத்தியும் சிவமும் ஒன்றே. அவ்வொன்றை இரண்டாகக் கூறுவது உபசாரம். திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் வடிவால் வேறுபட்டிருப்பினும் திருவருளில் இருவரும் ஒருவர் என்னும் கருத்து ஈண்டு விளக்கப்பட்டிருக்கிறது" என்றும் இங்கு விசேடவுரை காண்பார்களும் உண்டு. இவற்றின் பொருத்தங்கள் ஆராயத்தக்கன. அருளும், சைவ வலக்கண்ணும், சிவனருளும் பலமுடையவை. அவற்றால் அன்பும், சைவ இடக்கண்ணும், சத்தியருளும் விளக்கமடைபவை என்ற குறிப்புக்களும் இவ்வுவமைகளாற் போதருதலும் காண்க.

கூடி - உவமைகள் மூன்றும் கூடியசெயலுக்கே யாயின. அருளும் அன்பும் கூடினாற்போல, வலக்கண்ணும் இடக்கண்ணும் கூடினாற்போல, சிவனருளும் சத்தியருளும் கூடினாற்போலக், கூடி என்க. வினைபற்றி எழுந்த உவமங்கள்.

கடல் - அளவுபடாத பெருமையும். கண் - காட்டக்காணும் தன்மையும், அருள் - காட்டிக்காணும் தன்மையும் குறித்து நின்றன.

தெருட்கலை ஞானம் - சிவஞானத்தை விளக்கும் கலைஞானம். சிவனைக்காட்டும் ஞானம். இது ஏனைக் கலைஞானங்களின் வேறாகிய "எண்ணரிய சிவஞானம் என்பார் தெருட்கலை - என்றார். "உயர்ஞானமிரண்டாம் மாறுமலமகல மன்னுபோதத் திருவருளொன்று; அதனைத் தெளிய வோதும் சிவாகமமென்றுலகறியச் செப்பும்" (சிவப்பிரகாசம்)

கன்றும் - அரசும் - என்றதனாற் பிள்ளை - அப்பர் - என்றும், அருள் - அன்பு என்றும் முன்போந்த கருத்துக்களைத் தொடர்ந்து கூறிய நயமும் காண்க.

கன்றும் அரசும் சேர்ந்தார் - உயர்திணைப் பன்மைவினை முற்றாற்கூறியது அருமைப்பாடு பற்றி. அன்றே - அப்போதே. இருபெருமக்களும் கூடியபோது தோணியப்பர் கழல்கண்டு தொழுவதனைத் தமது முதற்செயலாகக்கொண்டு அப்போதே செய்தனர் என்பது. அசை என்றெடுக்குவாருமுளர். குணிக்குக் குணத்தை உவமிக்கும் சிறப்புத் திருஞான - புரா - 728ல் காண்க. 185

1451. பண்பயில்வண் டறைசோலை சூழுங் காழிப்
பரமர்திருக் கோபுரத்தைப் பணிந்துள் புக்கு
விண்பணிய வோங்குபெரு விமானந் தன்னை
வலங்கொண்டு தொழுதுவிழுந் தெழுந்த வெல்லைச்
சண்பைவரு பிள்ளையா "ரப்ப ருங்க
டம்பிரா னுரைநீர் பாடீ" ரென்னக்,
கண்பயிலும் புனல்பொழிய வரசும் வாய்மைக்
கலைபயிலு மொழிபொழியக் கசிந்துபாடி, ௧௮௬

1452. பெரியபெரு மாட்டியுடன் றோணி மீது
பேணிவீற் றிருந்தருளும் பிரான்முன் னின்று
பரிவுறுசெந் தமிழ்மாலை பத்தி யோடும்
"பார்கொண்டு மூடி"யெனும் பதிகம் போற்றி
யரியவகை புறம்போந்து, பிள்ளை யார்தந்
திருமடத்தி லெழுந்தருளி, யமுது செய்து,
மருவியநண் புறுகேண்மை யற்றை நாள்போல்
வளர்ந்தோங்க வுடன்பலநாள் வைகு நாளில், ௧௮௭

1453. அத்தன்மை யினிலரசும் பிள்ளை யாரு
மளவளா வியமகிழ்ச்சி யளவி லாத
சித்தநெகிழ்ச் சியினோடு செல்லு நாளிற்
றிருநாவுக் கரசுதிரு வுள்ளந் தன்னில்
மைத்தழையு மணிமிடற்றார் பொன்னி நாட்டு
மன்னியதா னங்களெல்லாம் வணங்கிப் போற்ற
மெய்த்தெழுந்த பெருங்காதல் பிள்ளை யார்க்கு
விளம்புதலு மவருமது மேவி நேர்வார், ௧௮௮

1454. ஆண்டவர செழுந்தருளக் கோலக் காவை
யவரோடுஞ் சென்றிறைஞ்சி யன்பு கொண்டு
மீண்டருளி னா;ரவரும் விடைகொண் டிப்பால்
வேதநா யகர்விரும்பும் பதிக ளான
நீண்டகருப் பறியலூர் புன்கூர் நீடூர்
நீடுதிருக் குறுக்கைதிரு நின்றி யூருங்
காண்டகைய நனிபள்ளி முதலா நண்ணிக்
கண்ணுதலார் கழறொழுது கலந்து செல்வார், ௧௮௯



மாயவரம் கோயில் (முன் பார்வை)
திருமயிலாடுதுறை



திருத்துருத்திக்கோயில் (உட் பார்வை)



திருத்துருத்திக் கோயில் (முன் பார்வை)



திருத்துருத்தியில் காவிரி



—பாட்டு - 1455 - பக்கம் - உஎக

1455. மேவுபுனற் பொன்னியிரு கரையுஞ் சார்ந்து
விடையுயர்த்தார் திருச்செம்பொன் பள்ளி பாடிக்
காவுயரு மயிலாடு துறைநீள் பொன்னிக்
கரைத்துருத்தி வேள்விகுடி யெதிர்கொள் பாடி
பாவுறுசெந் தமிழ்மாலை பாடிப் போற்றிப்
பரமர்திருப் பதிபலவும் பணிந்து போந்தே
யாவுறுமஞ் சாடுவார் கோடி காவி
லணைந்துபணிந் தாவடுதண் டுறையைச் சார்ந்தார். கசுо

1451. (இ - ள்) வண்டு பயில் பண் அறை சோலை சூழ் காழி - வண்டுகள் முன் பயின்ற பண்களைப் பாடும் சோலைகளாற் சூழப்பெற்ற சீகாழியில் எழுந்தருளியிருக்கும்; பரமர்......எல்லை - இறைவனுர் திருவுருவாகிய திருக்கோபுரத்தைப் பணிந்து திருக்கோயிலுக்குள் புகுந்து, விண்பணியும் படி ஓங்கும் பெரிய விமானத்தை வலமாகச் சூழ்ந்துவந்து தொழுது கீழேவீழ்ந்து வணங்கி எழுந்தபோது; சண்பைவரு பிள்ளையார்-சீகாழியில் அவதரித்த ஆளுடையபிள்ளையார்; "அப்பர்! நீர் உங்கள் தம்பிரானுரைப் பாடீர்!" என்ன - அப்பரே! நீர் உங்களுடைய பெருமானைப் பாடுவீராக! என்று சொல்ல; அரசும் - அதுகேட்ட திருநாவுக்கரசு நாயனுரும்; பயிலும் புனல் கண் பொழிய-பெருகிய நீரைக் கண்கள் பொழியவும்; கலைபயிலும் வாய்மை மொழி (வாய்) பொழிய - வாய்மைக் கலைகளிற் பொருந்திய மெய்த் திருமொழிகளை வாய் பொழியவும்; கசிந்து - மனம் உருகி; பாடி - பாடி, கஅசு

1452. (இ - ள்) பெரிய பெருமாட்டியுடன்...நின்று - பெரியநாயகி யம்மையாருடன் திருத்தோணியில் விரும்பி வீற்றிருந்தருளும் தோணியப்பருடைய திருமுன்பு நின்று; பரிவுறு......போற்றி - அன்பு கூரும் செந்தமிழ் மாலையாகப் பத்தியோடும் "பார்கொண்டு மூடி" என்று தொடங்கும் திருப்பதிகத்தினுற் றுதித்து; அரியவகை......அமுது செய்து - அங்கிருந்து நீங்குதற்கரிய வகையாலே வெளியிற் போந்து ஆளுடைய பிள்ளையாருடைய திருமடத்தில் எழுந்தருளி அமுது செய்து; மருவிய நண்பு உறு கேண்மை யற்றை நாள் போல் வளர்ந்து ஓங்க - பொருந்திய நண்புடன் கூடிய கேண்மையானது அன்று போலவே பின் என்றைக்கும் வளர்ந்தோங்கும்படி; உடன் - உடனுக; பலநாள் வைகும் நாளில் - பலநாட்கள் இருந்த காலத்தில், கஅஎ

1453. (இ - ள்) அத்தன்மை...நாளில் - அந்தத் தன்மையிற் பயின்ற அரசுகளும் ஆளுடைய பிள்ளையாரும் ஒருவரோடொருவர் அளவளாவியதனுற் பெற்ற மகிழ்ச்சி அளவில்லாது பெருகிய மனநெகிழ்ச்சியுடனே செல்லும் நாட்களில்; மை தழையும் மணி மிடற்றுர் பொன்னி நாட்டு மன்னிய தானங்கள் எல்லாம் வணங்கிப் போற்ற - விடம் தழையும் அழகிய கண்டத்தையுடைய சிவபெருமான் காவிரி சூழ்ந்த சோழ நாட்டில் நிலைபெற எழுந்தருளிய தானங்களை யெல்லாம் வணங்கித் துதிக்கவேண்டும் என்று; திருநாவுக்கரசு தமது திருவுள்ளம் தன்னில் மெய்த்து எழுந்த பெரும் காதல்- திருநாவுக்கரசு நாயனுரது திருவுள்ளத்தில் உண்மைத் திறத்தினுல் நிறைந்து மேல் எழுந்த பெருங்காதலினை; பிள்ளையார்க்கு விளம்புதலும் - ஆளுடைய பிள்ளையாருக்கு எடுத்துச் சொல்லுதலும்; அவரும் அது மேவி நேர்வார் - அவரும் அதனையே திருவுள்ளம் பொருந்தி ஒப்புக் கொள்வாராய்; கஅஅ

1454. (இ - ள்) ஆண்ட அரசு...மீண்டருளினார் - ஆளுடைய அரசுகள் புறப்படவே அவருடனே சென்று திருக் கோலக்காவைப் பணிந்து அன்பு விடைபெற்றுத் திரும்பியருளினார்; அவரும் விடைகொண்டு - நாயனாரும் பிள்ளையாரிடம் விடை பெற்றுக்கொண்டு; இப்பால் - இதன்மேல்; வேதநாயகர்...கலந்து செல்வார் - வேத நாயகராகிய சிவபெருமான் விரும்பி எழுந்தருளிய பதிகளாகிய பெருமையால் நீண்ட திருக்கருப்பறியலூரும், திருப்புன்கூரும், திருநீடூரும், திருக்கீடும் குறுக்கைவீரட்டமும், திருநின்றியூரும், காணுந் தகைமையுடைய திருநனிபள்ளியும் முதலானவற்றைச் சேர்ந்து கண்ணுதலாருடைய திருவடிகளைத் தொழுது கலந்து மேற்செல்வாராய்,

1455. (இ - ள்) மேவு...சார்ந்து - நீர் இடையறாது பொருந்திய காவிரியின் இரண்டு கரைகளிலும் சார்ந்து; விடையுயர்த்தார்...போந்தே - இடபக் கொடியை உயர்த்தியபெருமானது திருச்சோம்பொன்பள்ளியினைப் பாடிச் சோலைகள் உயரமாகச் சூழ்ந்த திருமயிலாடுதுறையையும் நீளும் காவிரியின் இருகரையிலும் உள்ள திருத்துருத்தி-வேள்விக்குடியையும், திரு எதிர்கொள் பாடியையும், வணங்கிச் செந்தமிழ்ப் பாட்டுக்களாகிய மாலையினைப் பாடித் துதித்துப் பரமசிவனது திருத்தலங்கள் ஏனைப் பலவற்றையும் பணிந்து கொண்டுபோய்; ஆவுறும்...பணிந்து-ஆனைந்தையும் ஆடுகின்ற பெருமானது திருக்கோடிகாவில் அணைந்து பணிந்து போய்; ஆவடுதண்துறையைச் சார்ந்தார் - தண்ணிய திருவாவடுதுறையைச் சார்ந்தனர். கக0

இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1451. (வி - ரை) வண்டு பயில் பண் அறை சோலை என்க. பயிலுதல் முன்னர்ப் பலகாலும் பாடிப் பழகுதல். "சிவந்த வண்டு, வேறுய வுருவாகிச் செவ்வழி நற் பண்பாடு மிழலை யாமே" முதலிய திருவாக்குக்கள் காண்க.

பரமர் திருக்கோபுரத்தைப் பணிந்து - திருக்கோபுரம் திருக்கோயிலின்முன் உள்ளது. கோபுரம் தூலலிங்கம் எனப்படும். ஆதலின் அதனைப் பரமராகவே கண்டு பணிதல் வேண்டுமென்பது விதி.

விண்பணிய ஓங்கும் பெருவிமானம் - இவை உள்ளிருக்கும் கோயில்களின் விமானங்களும் திருத்தோணியின் சிகரமும்.

அப்பர்! உங்கள் தம்பிரானுரை நீர் பாடீர்! - அப்பர்! - அப்பரே. இயல்பின் வந்த அண்மை விளி. உங்கள் தம்பிரானுர்-பிரானுரைத் தம்மிலும் அவர்க்கு உரிமைப் படுத்தி உரைத்தது அருமைப்பாடாகியதொரு வழக்கு. "உங்களுயகனுர்" (478) என்ற விடத்துரைத்தவை பார்க்க.

பயிலும் புனல் கண் பொழிய என்றும், கலை பயிலும் வாய்மைமொழி (வாய்) பொழிய என்றும் மாற்றியும் கூட்டியும் உரைத்துக் கொள்க. பயிலும் புனல் - இடைவிடாது பெருகும் நீர். கண் பொழிய என்றதற்கேற்ப, வாய் பொழிய என்று வருவித்துரைக்க.

கலை பயிலும் வாய்மைமொழி - கலை - சிவகலை. சிவத்தை உணர உதவி செய்யும் கலை. வாய்மைமொழி - என்றும் பொய்யாது சத்தாய் விளங்கும் மொழி. "அன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதம்." கசிந்து - மனத்தின்ழெழுழில்.:

முன்னின்று - போற்றி - போந்து - அமுதுசெய்து - ஓங்க - வைகும் என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடித்துக் கொள்க.

புனல் பொழிந்த அரசும்—என்பதும் பாடம். 186

1452. (வி - ரை) பெரிய பெருமாட்டி - பெரியநாயகி யம்மையார், பிரான் - தோணியப்பர்,

ஆளுடையபிள்ளையாரை வெளிப்பட்டு ஆட்கொண்ட இறைவர் தோணியப்பர். ஆதலின் அவரும் அரசும் அங்குச் சென்று முன்னின்று பதிகம் பாடினர் என்க. சீகாழியில் உள்ள பிரமபுரீசர், தோணிப்பர், சட்டையப்பர் என்ற மூன்று சந்நிதிகளுள் இப்பதிகம் தோணியப்பர் சந்நிதியில் நின்றுகொண்டு பாடினர். (பதிகக் குறிப்பு)

பரிவு - உறு - பயில்வோரெல்லாம் அன்பினை பொருந்தப் பெறுவர் என்க.

அன்பு உறும் மாலை என்று கூட்டினும் அமையும்.

பத்தி - மாலை - ஒருவகை மாலையின் குறிப்பும்படப் பத்தி என்றார்.

பார் கொண்டுமூடி - பதிகத் தொடக்கம்.

அரிய வகை - பிரிதற்கரிய வகையால். "அண்ணலைப் பிரிய மாட்டா அளவிலா தரவு நீட" (759) என்றது காண்க. பிரியலாற்றாத வகையினால்.

பிள்ளையார் தம் திருமடம் - இது மேலைக்கோபுர வாய்தலினை அடுத்து வெளிப்புற வீதியில் இருந்ததென்பர். தம் - நாயனாரை வேறெங்கும் தங்கவிடாமல் பிள்ளையார் தமது திருமடத்திலே எழுந்தருளக் கொண்டனர் என்பது குறிப்பு. எழுந்தருளி - நாயனார் தமது திருமடத்தில் தங்கப் பெற்றதனைச் சிறந்த பேறாகக் கருதினர் பிள்ளையார் என்று குறிக்கச் சைவமரபு வழக்கில் அருமைப்பாடு குறிக்கும் இச்சொல்லாற் கூறினர்.

அமுது செய்து - இங்கு அமுது செய்தலை ஒருபெருந் தனிச்செயலாகக் குறிக்க வேண்டிய தென்னையோ? எனின், அடியாரை யமுதுசெய்வித்தல், மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் இரண்டினின் முதலாவதாகும் என்று உலகுக்கு உணர்த்தும் பிள்ளையார் அதனைச் செய்து காட்டினர் என்க. "ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத் தார்க், கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்" (திருமயிலை - 1 - பிள்ளையார் - சீகாமரம்). ஆதலின் பிள்ளையார் நாயனாரையும் அவருடன் வந்த அடியார்களையும் தமது திருமடத்தில் எழுந்தருளுவித்துச் சிறப்போடு திருவமுதாக்கி அமுது செய்வித்தருளினர். அந்த அருளமுதத்தை நாயனார் அன்போடு அமுது செய்தருளினர். அமுது செய்தது நாயனார் செயல்; செய்வித்தது பிள்ளையார் செயல். நாயனார் அமுது செய்த செயலை இப்புராணத்தும், அமுது செய்வித்த செயலைச், செய்வித்த அவர்தம் புராணத்தும் உரிமைப்பட விதந்து கூறும் ஆசிரியரது தெய்வக் கவிமணம் காண்க. "சோறுமணக்கு மடங்களெலாம் தெய்வமணக்கும் செய்யுளெலாம்" என்ற பிற்காலப் புலவர் பாட்டும் காண்க. "அணையுந் திருத்தொண்டர் தம்மோ டாண்ட வரசுக்கு மன்பா, லிணையி றிருவமு தூக்கி யியல்பா லமுதுசெய் வித்து" (திருஞான - புரா - 273) என்பது காண்க. பிள்ளையார் தாம் விரும்பி யமுதுசெய்விக்கத்தக்க பெருமை நாயனாரைவிட வேறு யாவருக்குளது?

மருவிய நண்பு உறுகேண்மை அற்றை நாள்போல் வளர்ந்து ஓங்க - கேண்மை- சுற்றம். இங்குச் சிவகணமாகிய பெருஞ் சுற்றம் குறித்தது. மருவிய - உள்ள நிறைந்து பொருந்திய. நண்பு உறு - என்றது நண்பில்லாக் கேண்மையு முளவாதலின் இது அவ்வாறன்று என உறு என்றார். ஏயர்கோன்கலிக்காம நாயனார் சரித வரலாற்றில் அவர்க்கு நம்பிகள் திறத்து முன்பகுதியில் நின்றதும், திருவருள் காட்டிய பின்பு நம்பிகளைக் கண்டவுடன் நின்றதும் ஆகிய இருநிலைகளையும் இங்குக் கருதுக. "கேளிரே யாகி" (ஏயர்கோன் - புரா - 405) என்பது காண்க. கேண்மை - பெருகிய அன்பினில் விளைவது. நண்பு - நட்பு என்னது நண்பு என்று கூறியது இவ்விளைவு திரிதல் முதலிய விகாரத்தாலன்றி அன்பாகிய இயல்பினால் உண்டாவது என்ற குறிப்பாகும். "பெருகன்பு நண்பும் பொங்கிய காதலிற் பொங்க" (திருஞான - புரா - 273) என இதனைப் பின்னரும் இவ்வாறே கூறுதல் காண்க. கேண்மை-அன்பு என்றலுமாம்,

அற்றைநாள்போல் - "தலையாயார், எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே, தொன்மை யுடையார் தொடர்பு" என்ற நாலடியாரின் கருத்தும் காண்க.

வளர்ந்து ஓங்க - பின் இருமுறையும் இப்பெரு மக்கள் கூடிய சரித நிகழ்ச்சிக் குறிப்பு. திருப்புகலூரிற் கூடித் திருவீழிமிழலை திருமறைக்காடு சென்றுகாணும் நிகழ்ச்சிகள் வரை உள்ள இரண்டாவது கூட்டத்தில் இக்கேண்மை வளர்வது; பின்னர்த் திருப்பூந்துருத்தி நிகழ்ச்சியில் இது ஓங்குவது என்ற குறிப்புப்பட வளர்ந்து - ஓங்கி என்றார். "நாடுங்காதல் வளர்ந்தோங்க" (திருநா - புரா - 282), "இன்புற்றுத் துதிசெய்தங் குடனிருந்தார்" (ஷை. 398) என்பன காண்க.

உடன் என்பது வேறெச்சமயக் கொள்கைக்கு மில்லாது சைவ சித்தாந்தத்தின் சிறப்பினைக் காட்டும் சொல். ஒன்றுமாகாது வேறு மாகாது இரண்டு பொருள்கள் ஒன்றுகூடிய கலப்பு. "அவையே தானேயாய்." என்ற சிவஞானபோதச் சூத்திரத்தின் கீழ் உரைத்தவை பார்க்க. "...எட்டுத்திசை தானும், வேறாய் உடனானிடம் வீழிம்மிழலையே" என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரம் காண்க. "காகத்திரு கண்ணியிற் கொன்றே மணிகலந் தாங்கிருவ, ராகத்து ளோருயிர் கண்டனம்" (திருக்கோவை - 71) என்ற கருத்து இங்குக் கருதத்தக்கது. 187

திருக்கழுமலம்

I திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

பார்கொண்டு மூடிக் கடல் கொண்ட ஞான்றுநின் பாதமெல்லாம்
நாலந்து புள்ளின மேந்தின வென்பர் நளிர்மதியங்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித் தாடுங் கழுமலவர்க்
காளன்றி மற்றுமுண் டோவந்த ணூழி யகலிடமே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—இப்பதிகம் திருத்தோணியப்பர் திருமுன்பு நின்று பாடியருளப் பட்டது. 6-வது பாட்டில் இத்தோணிபுரம் என்றது காண்க. இக்கருத்துப்பற்றியே ஆசிரியர் 1452-ல் "தோணிமீது பேணிவீற் றிருந்தருளும் பிரான்முன் னின்று" என்றருளினர். "பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட ஞான்று" என்று தொடங்கியதும், "முந்நீரின் மிதந்துடன் மொய்த்தமரர், சுற்றிக் கிடந்து" (7) என்றதும் கருதுக. ஊழியில் உலக மெல்லாம் நீரினுள் அழுந்திய காலத்தும் ஆழாது மிதந்த தோணிபுரேசருக்கே இவ்வுலகம் ஆளாவதன்றி வேறு கதியில்லை. இத்தலத்தை அடைவார் வினைகள் நீங்கும். கழுமலநாதன் கழல்கள் நாடொறும் நம்மை ஆள்வன. இதனைத் தேவர்கள் சுற்றிக்கிடந்து தொழுகின்றனர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு.—(1) பார்கொண்டு மூடிக் கடல் கொண்ட ஞான்று- ஊழியில் உலகத்தை மூடும் பெருவெள்ளம். நாலஞ்சுபுள்ளினம் ஏந்தின என்பர் - ஊழிப்பெருவெள்ளத்தில் இறைவன் இறைவியாரோடு சுத்தமாயையின் விருத்தியாகிய-பிரணவம்-என்னும் தோணியில் வீற்றிருத்தலினால் இத்தலம் அழியாதிருப்பதென்றும், அத்திருத்தோணியைச் சுற்றிக்கொண்டு பறவைகளின் உருக்கொண்டு தேவர்கள் அதனைத் தாங்குபவர்களாய் இருப்பர் என்றும் தலவரலாறு கேட்கப்படும். "முந்நீரின் மிதந்துடன் மொய்த்தமரர், சுற்றிக்கிடந்து தொழப்படுகின்றது...சடை முடியார்க் கிடமாய கழுமலமே" (7) என்றது காண்க. இத்தலத்தில் தோணியப்பர் எழுந்தருளியிருக்கும் பெருமாளிகை ஒரு தோணிவடிவாயமைந்து அதைச் சுற்றிலும் பறவைகள் தாங்கியிருக்கும் தன்மையாகிய அமைப்புக்களும் இன்றும் காண வுள்ளன. நாலஞ்சு

இருபது என்ற எண் குறிப்பதென்றும் கூறுவர். "வேலையின் மிதந்த" (259) "கழுமலம்" (257) என்றவிடங்களிலுரைத்தவை பார்க்க. நளிர் - குளிர்ச்சி. கால் கொண்ட - வளர்ந்த. தங்கிய என்றலுமாம். வண்கை - கை - செய்கை - வண்மைச் செயல். வள்ளற்றன்மை. கால் - கை - சொல்லணி. ஆளன்றி மற்றுமுண்டோ ? - ஓகாரம் எதிர்மறை. உறுதிப்பட்ட உண்மையை எதிர்மறையாலும் வினவினு லும் குறிப்பது இன்றியமையாமையை வலியுறுத்தற்பொருட்டு. "கற்றதனு லாய பயனென்கொல்" (குறள்) ; "ஆன்மா வொற்றித்துக் காணினல்லது அவையொன் றையும் விடயியா வாகலான்" (5-1 - சிவஞானபோதம்) என்ற விடத்திற்போல. அகலிடம் - உலகில் உள்ளோர். ஆகுபெயர்.—(2) கடை - முற்றம். வினைகள் அவை எள்க - வினைகள் இகழ்ச்சிப்பட்டு ஒதுங்க. ஆடுவரே - சிவானந்தத்திற்றிளைப்பர்.—(3) கடல் குவித்த முத்துக்களை நுளைச்சியர் வாரிக் கழுமலநாதன் கழலில் வரம்பிலாது பெய்கின்றனர் ; அக்கழல்கள் நம்மை நாடொறும் ஆள்வன. நுளைச்சியர் - நெய்த னிலப் பெண்கள். நந்தம்மை ஆள்வனவே - இப்பதிகத்துள் 3-4-5-6-8-9-10 பாட் டுக்கள் இந்த மகுடங்கொண்டு முடிவு பெறுகின்றன. இவை வேறு ஒரு தனிப் பதிகத்தைச் சேர்ந்தனவோ? என்பது ஐயப்பாடு.—(4)பதம் - வேதங்கள் பயிலும் ஒரு வகை. வேதங்களும் அவற்றை உட்கொண்ட விழுமிய நூல்களும். உரைக்கில் - எடுத் துச் சொல்வோமாகில். கேட்கில் - கேட்போமாகில். உலக முற்றும் இரிக்கும்-உலகங் களையெல்லாம் அழிக்கக்கூடிய. பறை - ஊழிமுடிவில் சிவன் செய்யும் நடத்தில் சிவபூதங்கள் முழக்கும் பறை ஒலி உலகங்களை அழிக்கவல்லன என்க. பழம்படி ஆடும்- அநாதியாகிய அருட்கூத்து ஆடும். நிருத்தன் என்பதும் பாடம்.—(5) நினையாமுன் வினைதீர்க்க வல்லான் - பெருமான் அருள் செய்யும் விரைவு குறித்தது. வெம்மை - விருப்பம். கோந்தளம் - முடிக்கும் வகை. "படர்துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமா கப்பரப்பி" (சிறுத் - புரா - 26) என்றது காண்க. கோன்றளம் - கோன்றளம் என்ற பாடங்களின் பொருத்தம் ஆராயத்தக்கது. கழுமலமே தொழப்படுகின்றது.—(8) உடலும்...உலகத்துள்ளே - சிவநெறிசென்று சிவபுண்ணியம் செய்து ஈடேறுதற் கமைந்த இந்நில உலகில். "புவனியிற் போய்ப்பிற வாமையி னுளும் போக்கு கின் றேம் அவமேயிந்தப் பூமி, சிவனுய்யக் கொள்கின்ற வாறு" (திருப்பள்ளியெழுச்சி-10) என்பது திருவாசகம்.—(9) பரவைக்கடல் - ஒரு பொருட் பன்மொழி. பரவு - பரப்பு - என்றுகொண்டு பரவுதலையுடைய கடல் என்றலுமாம்.—(10) தலையாய்க் கிடந்து - அடிதலை வைத்தவனுய்ப் பணிந்து. அலையா - உறுதியாகிய. தொலையா - தொலைத்து - வருத்தி. தொலைக்காமல் - கொல்லாமல் என்று கூறினும் பொருந்தும்.

II    திருச்சிற்றம்பலம்    திருவிருத்தம்

படையார் மழுவொன்று பற்றிய கையன் பதிவினவிற்
கடையார் கொடிநெடு மாடங்க ளோங்குங் கழுமலமாம்
மடைவாய்க் குருகினம் பாளை விரிதொறும் வண்டினங்கள்
பெடைவாய் மதுவுண்டு பேரா திருக்கும் பெரும்பதியே.    1

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—இறைவனது பதிவினவில் கழுமலமாகிய பெரும்பதியேயாம். இப்பதிகத்தில் இந்த ஒரு பாசுரமே கிடைத்துள்ளது !

பதிகப் பாட்டுக்குறிப்பு:—படையார் மழு - படையாகப் பொருந்திய மழு. பற்றிய - பற்றுவது இனி நிகழும் செயல். சீகாழியில் தோணிபுரேசர் மானும்

மழுவும் ஏந்துதல் இல்லாமலிருப்பவர். மானும் மழுவும் பற்றுதற்கு முன் நின்ற திருவுருவம். "எறிமழு வோடிள மான்கை யின்றி யிருந்த பிரான்" (புகலியும் - வீழியும் - நட்டபாடை - 9) என்ற பிள்ளையார் திருவாக்குக் காண்க. இங்குக் கூறியருளியது பொதுவிலக்கணம். பற்றிய - இனிப் பற்றும்பொருட்டு என்றுகொண்டு கையைநீட்டியிருந்தவன் என்று குறிப்புவினையாலணையும்பெயரின் வினையுடன் முடிந்தது என்றலுமாம். ஏகாரம் தேற்றம்.

1453. (வி - ரை) அத்தன்மை பயில் - முன்பாட்டிற் கூறியபடி நண்புறு கேண்மை வளர்ந்தோங்க வுடன்வைகுந் திறத்தினில். பயிலுதல் - பன்னாள் நிகழ்தல்.

அளவளாவிய மகிழ்ச்சி...செல்லுநாள் - அளவளாவுதல் - ஒருவர் ஒருவருடன் உணர்வுகலந்து உரையாடலும் பழகுதலும் ஆம். அளவிலாத சித்த நெகிழ்ச்சி - எல்லை காணாதபடி மனமுருகும் மகிழ்வு. நாள் செல்லுதல் - காலம் போதல். அனுபவ முதிர்வினால், காலம் போகின்ற தன்மை இவர்களால் அறியப்படாது தானாகவே கழிதல். "மிகுபுலவிப் புணர்ச்சிக்கண், ஊழியா மொருகணந்தா னவ்வூழி யொருகணமாம்" (ஏயர்கோன் - புரா - 268) என்று காதலி காதலர்க்கிடை உள்ள நிகழ்வு இவ்வாறு அன்பிற் கலந்தார்க்கு மொக்கும்.

திருவுள்ளந்தன்னில் - மெய்த்து எழுந்த பெருங்காதல் என்று கூட்டுக. அன்பர் கூட்டத்தில் கலந்து இருந்த நாயனார்க்கு அணைந்தோர் தன்மையிற் காணும் மற்றொரு இயல்பாகிய ஆலயந் தொழுதலில் காதல் எழுந்தது ; இவை யிரண்டுமே மக்களுக்கு உறுதியாவன என்று உலகுக்கு உணர்த்தும் பொருட்டு எழுந்ததென்க. மெய்த்து - உண்மைத் திறத்தினால் உள்ள நிரம்பி மேல் பொங்கி.

மைத்தழையும் மணிமிடற்றார் பொன்னி நாட்டு மன்னிய தானங்கள் - மைதழையும் என்றது எதுகை நோக்கி மைத்தழையும் என நின்றது. பொன்னி நாட்டு மன்னிய தானங்கள் - மிடற்றார் எங்கும் உள்ளவராயினும் காவிரி நாட்டில் வெளிப்படப் பொருந்திய இடங்கள்.

அவரும் அது மேவி நேர்வார் - மேவுதல் - பொருந்துதல். அப்பெருங் காதலை அவரும் பொருந்தியவராகி. நேர்தல் - உடன்படுதல். அவரும் - பிள்ளையாரும். நேர்வார் - நேர்வாராகி. முற்றெச்சம். நேர்வார் - சென்று - இறைஞ்சி - மீண்டருளினார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

தன்மையினில்—தன்மைதனின்—என்பனவும் பாடங்கள். 188

1454. (வி - ரை) எழுந்தருள - புறப்பட. மரபு வழக்கு.

அவரோடும் சென்று கோலக்காவை இறைஞ்சி - என்க. அவரோடும் செல்லுதல் - சிலதூரம் உடன் சென்று வழிவிடும் மரபு. கோலக்காவை யிறைஞ்சி மீளுதல் - இது, உடன்சென்று வழிவிடும் செயலுடன், மணிமிடற்றார் மன்னிய தானங்கள் வணங்கிப் போற்ற முன் கூறியபடி இருவருள்ளத்தும் எழுந்த பெருங் காதலினைச் செலுத்தியபடியு மாயிற்று. இத்தகைய பெருமை பெரியோர் செயல்களிற் காணவுள்ளதன்றி ஏனை மக்களிடைக் காண்பதரிது.

அன்புகொண்டு மீண்டருளினார் - அவர் பிரிந்து சென்றாலும் அவரது அன்பினைக் கைக்கொண்டு மீண்டனர் என்க. மீண்டருளுதல் - மரபு வழக்கு.

அவரும் - அரசுகளும். விடைகொண்டு - பிள்ளையார் நாயனாரது அன்பினையும், நாயனார் பிள்ளையாரது அன்பு விடையினையும் கொண்டனர். இருவரும் ஒருவர்பா லொருவர் விடை கொள்ளினும், பிள்ளையார் அங்குத் தங்குவாரும், நாயனார் அங்கு நின்று செல்வாருமாதலின் விடைகொள்ளுதல் இவர்பால் நிகழ்ந்ததென்றார்.

இப்பால் - அன்புகொண்டு பிள்ளையார் மீண்டருளியபின் அவர்பானிகழ்ந்தன அப்பால்; விடைகொண்டு நாயனார் செல்வது இப்பால். நாயனாரது சரித நிகழ்ச்சி கள் கூறப்படுவன ஆதலின் நாம் அவரைப் பின்றொடர்ந்து செல்லுமாறு அண்மைச் சுட்டினாற் கூறினார்.

விரும்பு பதிகள் - உயிர்கள் தம்மை எளிதிற் கண்டுவந்து அடையும் பொருட்டு விரும்பி வீற்றிருக்கும் தலங்கள். வேண்டுதல் வேண்டாமை யிலராதலின் வேதநாயக ருக்கு வேறு விருப்பு இல்லை என்க.

கருப்பறியலூர் - இது மேலைக்காழி என்றும் தலைஞாயிறு என்றும் வழங்கப்படும். சீகாழிக் கோயில்போன்ற அமைப்புக்கள் உடையது. புள்ளிருக்கு வேளூர் என்னும் வைத்தீசுவரன் கோயிலிலிருந்து மேற்கில் 5 நாழிகையளவில் அடையத்தக்கது. (பழங்)காவிரியாற்றின் வட கரையில் 27-வது தலம்.

புன்கூர் - திருப்புன்கூர் - 261-வது பாட்டின்கீழ்த் தலவிசேடம் பார்க்க.

நீடூர் - திருநீடூர் புன்கூரினின்றும் 2 நாழிகையளவில் அடையத்தக்கது. முனையடுவார் நாயனாரது தலம். சுவாமி "செம்மேனியெம்மான்" என்றதற்கேற்பச் சிவந்த திருமேனி. காவிரிக்கு வட கரையில் 21-வது தலம்.

திருக்குறுக்கை - வீரட்டங்களுள் ஒன்று. காமனை எரித்த வீரம்நிகழ்ந்ததலம்.

திருநின்றியூர் - காவிரிக்கு வடகரையில் 19-வது தலம்.

காண்தகைய நனிபள்ளி - ஆளுடைய பிள்ளையாரது திருத்தாயர் பிறப்பிடம். பாலை நெய்தலாகப் பாடியருளிய அற்புதம் நிகழ்ந்த தலம்.

கலந்து - காவிரியின் வடகரைத் தலங்களும் தென்கரைத் தலங்களுமாகக் கலந்து திருப்பணி செய்து. மனவொருப்பாடுடன் கலந்து என்பாருமுண்டு.

செல்வார் - செல்வாராகி. முற்றெச்சம். செல்வார் - சார்ந்து - பாடி - பாடிப் போற்றிப் - பணிந்து - போந்தே - அணைந்து - பணிந்து சார்ந்தார் என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டிமுடிக்க.

புகழ்ப்பறியலூர் - நீடூர் திருக்குறுக்கை - நீடுதிருநின்றியூரும் - வணங்கிச் செல் வார் - என்பனவும் பாடங்கள். 189

1455. (வி - ரை) புனல்மேவு பொன்னி என்க. "பூந்தண் பொன்னி யெந் நாளும் பொய்யா தளிக்கும் புனனாட்டு (1206) "வருநாளென்றும் பிழையாத் தெய் வப் பொன்னி" முதலியவை காண்க.

இருகரையுஞ்சார்ந்து - காவிரியின் வடகரை தென்கரை யிரண்டினிலும் சிவதலங் கள் உள. அவற்றுட் சில தலங்கள் நேர் எதிர் எதிராகவும் மற்றுஞ் சில மிகஅணிமை யிலும் காண உள்ளன. கண்ட கண்ட தலங்களைக் கண்ட கண்டபோதே கண்டு வணங்குதல் முறையாதலின் வடகரைபற்றியேனும் தென்கரைபற்றியேனும் ஒரே வரிசையாயச் செல்லாமல் இருகரையும் சார்ந்து வணங்கினர் என்க. சோழநாட்டில் இப்பகுதியில் யாத்திரை செய்தோருக்கு இதன் தகுதி நன்கு விளங்கும்.

திருச்செம்பொன்பள்ளி - சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரை 42-வது தலம். செம்பொனார் கோயில் என வழங்குவது.

காவுயரும் மயிலாடுதுறை - இது சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரை 39-வது தலம். கௌரி மாயூரம் என வழங்கப்படுவது. உயரும் கா - என்றது காவிரியின் செழிப்பினால் எங்கும் சோலைகள் சூழ்ந்திருக்கும் சிறப்புக் குறித்தது. தன்மையணி. நீள் பொன்னிக்கரைத் துருத்தி வேள்விக்குடி - துருத்தியும் வேள்விக்குடியும் காவிரி யிருகரையிலும் எதிர் எதிர் உள்ளன. இரண்டும் ஒரு தலமாகக் கருதப்படுதல் மரபு. துருத்தி - குத்தாலம் என வழங்கப்படுவது.

**எதிர்கோள் பாடி** - *காவிரிக்கு வடகரை. 24-வது தலம்.*

**பா உறு செந்தமிழ் மாலை பாடிப் போற்றி**-*மேற்கூறிய மயிலாடுதுறை - துருத்தியும் வேள்விக்குடியும் - எதிர்கொள்பாடி என்ற மூன்று தலங்களையும் பாடிப் போற்றி என்க. பாவுறுதலாவது பாக்களின் இலக்கணமும் இசையும் முற்றும் பொருந்துதல். இது நாயனாரது தமிழ் மாலைக்கு இயற்கை யடைமொழி.* **செந்தமிழ்மாலை**-*செந்தமிழ்ப் பதிகங்கள்.* **மாலை** - *சாதியொருமை.* **பாடிப் போற்றி** - *பாடுதலாற் போற்றி. பாடியும் போற்றியும் என்றலுமாம். இப்பொருளில் போற்றுதலாவது பாட்டானன்றித் துதித்தலும், மனத்தாற்றுதித்தலும் உடம்பாற் பணிசெய்து வழிபடலுமாம்.*

**பரமர்திருப்பதி பலவும் பணிந்து போந்தே** - *பதிபல - எதிர்கொள் பாடிக்கும் திருக்கோடிகாவுக்கும் இடையிலும் அணிமையிலும் உள்ளவை. இவை மணஞ்சேரி முதலியன.* **ஆவுறும் அஞ்சு** - *ஆனைந்து.*

**கோடிகா** - *காவிரிக்கு வடகரையில் 37-வது தலம். திருஆவடுதுறையுள்ள தென்கரைக்கு எதிரில் உள்ளது.*

**ஆவடு தண்துறை** - *திருஆவடுதுறை. காவிரிக்குத் தென்கரையில் 36-வது தலம். இப்போது நாயனார் பாடிய திருத்தாண்டகத்துட் போற்றியபடி ஆவடுதண்டுறை என்முர். வரும் பாட்டுப் பார்க்க. தண்மையாவது காவிரியின் செழிப்பாலாகிய நீரின் குளிர்ச்சி மட்டுமேயன்றி இங்குவந்து அடையும் ஆன்மாக்களின் பிறவி வெப்பத்தைத் தணிக்கும் திருவடி நீழலாகிய தண்மையும் குறித்து நின்றது.* **ஆ** - **அடு** - *பசுத் தன்மை போக்குகின்ற என்றது பெயர்க்குறிப்பு.*

**சார்ந்தார்** - **சார்தல்** - *" சார்புணர்ந்து " குறள். சைவமரபின் சிறப்பாகிய பெருமை காட்டும் சொல்.*

விடையுகைத்தார்—பதி பிறவும்—*என்பனவும் பாடங்கள்.* 190

தலக் குறிப்புக்கள் :—

**திருக்கோலக்கா** - *இதற்கு நாயனார் பாடியருளிய பதிகம் சிதலரித்தொழிந்தது போலும்! தலவிசேடம் 260-பாட்டின் கீழ்க் காண்க.*

**திருக்கருப்பறியலூர்** - *நாயனார் பாடியருளிய இத்தலப்பதிகம் கிடைத்திலது! இக்கோயில் " கொகுடிக் கோயில் " என்பது நம்பிகள் தேவாரத்துட் கூறப்பட்டது.* **கொகுடி** - *முல்லையின் ஒருவகை. சுவாமி* - **குற்றம்பொறுத்த நாதர்.** *அம்மை* - **கோல்வளைநாயகி.** *தீர்த்தம்* - **இந்திர தீர்த்தம்.** *பதிகம் 2.*

திருப்புன்கூரும் திருநீடூரும்

*திருச்சிற்றம்பலம்* திருத்தாண்டகம்

*பிறவாதே தோன்றிய பெம்மான் றன்னைப் பேணாதா ரவர்தம்மைப் பேணா தானைத்*
*துறவாதே கட்டறுத்த சோதி யானைத் தூநெறிக்குந் தூநெறியாய் நின்றான் றன்னைத்*
*திறமாய வெத்திசையுந் தானே யாகித் திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை*
*நிறமா மொளியானை நீடூ ரானை நீதனே னென்னேநா னினையா வாறே.* 1

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக்குறிப்பு** :—*இந்த இரண்டு தலங்களும் ஒன்றற்கொன்று அணிமையில் உள்ளன. முன்னாளில் இவையிரண்டுக்கும் செல்லும் நேர்பாதையிருந்தது போலும். இங்குப்* **புன்கூர் நீடூர்** *என்று வைப்புமுறைப் படுத்திக்கூறிய ஆசிரியர், பின்னர், ஏயர்கோன்கலிக்காமனார் புராணத்துள், ஆளுடையநம்பிகள் திருநின்றியூரினின்றும் போந்து*

திருநீடூர் பணியாது சென்று திருவருளால் நினைந்து அடைந்து "நீடூர்பணியா விடலாமே" என்று பதிகம்பாடிப் பணிந்து பின் திருப்புன்கூர் சென்றடைந்தனர் என்று சரிதங்காட்டுகின்றார். நாயனாரது பதிகத்துள் இந்த இரண்டு தலங்களையும் ஒன்று சேர்த்தி யருளப்பட்டுள்ளது. ஆளுடையபிள்ளையாரது திருப்புகலியும் திருவீழிமிழலையும், திருமருகலுந் திருச்செங்காட்டங்குடியும், திருநள்ளாறும் திருவாலவாயும், திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் என்ற திருப்பதிகங்கள் காண்க. ஆயின் இங்குச் சரிதசம்பந்தமாக இவையிரண்டினையும் சேர்த்துப் பாடுதற்குரிய குறிப்பு ஒன்றும் ஆசிரியர் காட்டவில்லை. இப்பதிகம் சில பிரதிகளில் இல்லை என்றதொரு குறிப்புச் சைவ சித்தாந்த மகா சமாசம் - நாயனார் தேவாரம் - மூன்றும்பதிப்பிற் காணப்படுகின்றது. சரிதக்குறிப்பில்லாதபடி இவ்வாறே உள்ள திருவலஞ்சுழியும் திருக்கொட்டையூர்க் கோடீச்சரமும் என்ற திருத்தாண்டகத்தின் அமைப்பும் ஈண்டுக்கருதத்தக்கது. நாயனார் திருவாக்குக்குரிய அருமையாகிய பல அழகிய அமைப்புக்கள் இப்பதிகத்து உள்ளன. இப்பதிகத்தில் "நீதனே னென்னேநா னினையா வாறே" என்ற மகுடம் நாயனார் திருவுள்ளத்து அதுபோது எழுந்ததற்கு ஏதேனும் திருக்குறிப்பு இருத்தலுங்கூடும். திருப்புன்கூரில் எழுந்தருளிய சிவலோக நாதரையும் திருநீடூர் இறைவனையும் நான் நினையாது காலங் கழித்தவாறுதான் என்னே? என்பது பதிகக் கருத்து.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) பிறவாதே தோன்றிய பெம்மான் - என்றுமுள்ளவன். எங்கும் நிறைந்த அவன் ஒவ்வோர் இடத்திலும் காலத்திலும் வெளிப்படுதல் மாயையிற்பட்ட பிறப்பு அன்று. துறவாதே கட்டறுத்த என்பதும் இக்கருத்து. பேணுதான் - வெளிப்படாதவன். அருளாதவன். சிவலோகன் - திருப்புன்கூர்ச் சுவாமி பெயர். நீதன் - நீசன். நினையாமையால் நீதன் என்றது. நான் என்னே நினையாவாறு - நினையாத அறிவீனம் தான் என்னே.—(2) பின் - முன் - எல்லாப் பொருட்கும் பின்னும் முன்னும் ஆயவன். பித்தர்க்குப் பித்தன் - தன்பாற் பித்துக்கொண்டு பிடித்தோரிடம் தான் பித்துக்கொண்டாற்போலப் பற்றி நிற்பவன். நல்வினையும் தீவினையுமானான் - எல்லாமாய் நின்றவன். "மெய்ம்மையும் பொய்மையுமாயினார்க்கு" (திருவாசகம் - பொற்சுண்ணம். 20).—(3) எவ்விடத்தும் இல்லானை - உள்ளானை - இல்லான் தோயாதிருத்தலையும், உள்ளான் கலந்திருத்தலையும் குறிக்கும். இனிய...இன்னாதான் - இனியவற்றை நினையாதவர்க்கு இன்னாதான் - கொடியவன். வல்அடைந்தார் - வலிதாக - பற்றாக - அடைந்தவர்க்கு. அருளும் வண்ணம் வல்லானை என்க. மாட்டாதார் - நினைய - சொல்ல - அடைய - மாட்டாதவர். மாட்டான் - வெளிப்பட்டருள மாட்டாதவன். செல்லாத - பிறர் எவரும் செல்ல இயலாத.—(4) (தான்) கல்லாமே (பிற எல்லா உயிர்க்கும்) கற்பித்தான். இயல்பாகவே முற்றறிவுடையவன். அங்கங்கே - "உயிர்க்குயிரா யங்கங்கே நின்றான்" (பிள்ளையார் - வீழி).—(5) நோக்காதே - நோக்கினான் - எங்கும் கண்ணாய் அறிபவன். "ஆயிரமுக்கண்," "எண்ணில் பலகோடி திருவுரு நாமம் ஏர்கொண் முக்கண் முகம்" (சேந்தனார் திருவிசைப்பா - வீழி - 8 - 9) "சகஸ்திராட்ச" (வேதம்) நுணுகாதே யாதொன்று நுணுகியான். "அணுவோரண்டமாஞ் சிறுமைகொண்டு" (கருவூர்த்தேவர் திருவிசைப்பா-கங்கைகொண் - 6). "நுகர்கின்ற தொண்டர்தமக் கமுதாகி நொய்யானை" (திருஞான - புரா - 402). "அணோரணீயான்" (வேதம்).—(6) பூணலாப் பூண் - பூணத்தகாத - வேறு எவரும் பூணவியலாத - பாம்பு. பூசாச் சாந்தம் - திருமேனிமேல் நின்ற நீறு. ஊணலா ஊணான் - பிச்சை. தான் உண்ணற்

பொருட்டன்று.—(7) உரையார் பொருளுக்கு உலப்பிலான் - "சொல்லும் பொருளு மிறந்தசுடர்" (திருவா). "உரையின் வரையும் பொருளி னளவு, மிருவகைப் பட்ட எல்லையும் கடந்து" (11-திருமுறை - கோயினுன்). எவ்வுயிரும் ஆனுன்- எவ்வுயிர்க்குள்ளும் நிறைவானுன். புரை - இலகு. கனம் - வலிது. புரையாயினும் ஆழ்ந்து, கனமாயினும் ஆழாது உள்ளது இறைவனது வரம்பிலாற்றலுடைமை குறித்தது. எதிர் நிரனிறையாய்க் கொண்டு புரையாய் ஆழாது - கனமாய் ஆழ்ந்து எனக் கூட்டி "எப்பொருட்கு மியல்பானுன்" என்றுரைத்தலுமாம். புதியன் - பழையன் - பின் முன் - (2) என்ற கருத்து. "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே - பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" (திருவாசகம்).—(8) அறிவோம் என்பார்க் கெல்லாம் அறியலாகா - நாம் காண்போம் என்று எழும் உயிர்ப்போதத்துக் கெட்டாதவன். "உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்" .—(9) கையெலாம்...நின்றுண்ணும்-சமணர் வழக்கு. புள்ளுவர் - கள்வர். நினையாவாறே- என்றது சமணத்திற்புக்குப் போதுபோக்கிய காலக்குறிப்பு.—(10) இகழாது நின்றனை இகழுமா றெங்ஙனே - என்க. இகழாது நிற்றல் - பாசத்துட்பட்ட உயிர்களுள் நின்று நன்மை தீமைகளுள் கலந்தும் தோயாது நிற்றல். நகழ - வருந்த - துன்பப்பட.

திருப்புன்கூர் :—தலவிசேடம் - முன் 261-ன் கீழ் உரைக்கப்பட்டது.

நீடூர் :—தலவிசேடம்-முன் உரைக்கப்பட்டது. "செல்வநீடூர் திருநீடூர்" (முனை யடுவார் - புரா - 1) என்று ஆசிரியர் பெயர் விளக்கம் செய்கின்றார். நிறமாமொளி யானை "நீடூரானை" (1), "நீக்காத பேரொளிசேர் நீடூரானை" (5), "ஒளிதிகழுமேனி யானை" (6) என்ற பதிகக் குறிப்புக்களின்படி சுவாமி ஒளிவீசும் சிவந்த திருமேனி யுடன் விளங்குகின்றார். இந்திரன் முதலியோர் பூசித்துப் பேறுபெற்ற தலம். மகிழவனம் எனப்படும். சுவாமி - அருட்சோமநாதர். அம்மை - அதிகாந்தியம்மை - வேதநாயகி. தீர்த்தங்கள் - இந்திர தீர்த்தம் - முதலிய ஒன்பது. மரம்-மகிழ். இத்தலம் நீடூர் என் னும் புகைவண்டி நிலயத்தினின்றும் வடக்கே மட்சாலைவழி அரைநாழிகை யளவில் அடையத்தக்கது.

## திருக்குறுக்கைவீரட்டம்

I திருச்சிற்றம்பலம் திருநேரிசை

நீற்றினை நிறையப் பூசி நித்தலு நியமஞ் செய்து
ஆற்றுநீர் பூரித் தாட்டு மந்தண னாரைக் கொல்வான்
சாற்றுநா ளற்ற தென்று தருமரா சற்காய் வந்த
கூற்றினைக் குமைப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே. 2

சிலந்தியு மானைக் காவிற் றிருநிழற் பந்தர் செய்து
உலந்தவ ணிறந்த போதே கோச்செங்க ணானு மாகக்
கலந்தநீர்க் காவி ரிசூழ் சோனாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்ட னாரே. 4

கல்லினா லெறிந்து கஞ்சி தாமுணுஞ் சாக்கியனார்
நெல்லினாற் சோறு ணாமே நீள்விசும் பாள வைத்தார்
எல்லியாங் கெரிகை யேந்தி யெழிறிகழ் நட்ட மாடிக்
கொல்லியாம் பண்ணு கந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 6

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—பதினெண் புராணங்களாலும்,இப்புராணத்தாலும் பேசப்படும் ஒவ்வோர் சரிதத்தை ஒவ்வோர் பாட்டில் கூறி அதன் மூலம் இறைவனது புகழைப் பரவுதல்.

பதிகப்பாட்டுக் குறிப்பு - (1) பிரமன் அர்ச்சனை செய்தது. வேதங்களை உணர்தற்காகப் பிரமதேவர் சிவபெருமானை அர்ச்சித்தனர். சோதியிற்சுடர் - எல்லா ஒளிகளுக்கும் உள்ளே நின்று அவ்வவற்றிற்கும் ஒளி கொடுப்பவர் சிவபெருமானே. "தேயமார் ஒளிக ளெல்லாம் சிவனுருத் தேச தென்னார்" (சித்தியார் - 1 சூத்). சொல்லினை இறந்தார் - சொல்லி லடங்காது மேற் செல்பவர்.—(2) மார்க்கண்டற்காகக் கூற்றினை உதைத்த சரிதம். நீற்றினை......ஆட்டும் அந்தணன் - இது மார்க்கண்டர் கைக்கொண்டொழுகிய தவத்தின் சிறப்பு. ஆட்டியதனல் என்று கூற்றத்தை உதைத்தற்குக் காரணங் கூறியவாறு. அவ்வாறு சிவனையே எண்ணிக் கிடப்பார்க்கு இயமவாதனை இல்லை என்பது. சிவனை அடைவோர்க்குப் பிறவியில்லை என்பது இதன் கருத்து. "வஞ்ச நமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும், அஞ்சி யுனையடைந்தே னையா பராபரமே" (தாயுமானார்). நிறைய - உருவார ; ஆர்வத்தோடு. நியமம் - சிவாகமங்களின் விதித்தவாறே மேற்கொள்ளும் ஒழுக்கம். இயமமாதி அட்டாங்க யோகமும் ஆம். பூரித்தல் - நிறைத்தல். ஆட்டுதல் - சிவனுக்கு அபிடேகித்தல். அந்தணனர் - மார்க்கண்டர். சாற்று நாள் - பதினாறு வயது என்று ஈந்த வரத்தின் எல்லை. தருமராசன் - இயமன். கூற்று - இயமதூதன். துமைத்தல் - வதைத்தல்.—(3) சண்டேசநாயனார் சரிதம். புராணம் பார்க்க. தாபரம் - சிவன்றிருமேனி. சிவன்பூசை கொள்ளும் உருவம் தாபரம் - சங்கமம் என்றிருவகைப்படும். அவற்றுள் தாவரமாவது அதனை மண் முதலிய பொருள்களாலாக்குதல். ஏனையது சிவனடியார் திருவுருவம் "சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்திச் சகளி செய்திறைஞ் சகத்தியன்" (நம்பிகள்). அமுதம் - சாவாமை - பிறவாமை - செய்யும் முத்தி. அமுதம் என்றதற்கேற்பக் குழைந்தது என்றார். "எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி" (திருஞான-புரா-68).—(4) கோச்செங்கட்சோழநாயனார் சரிதம். புராணம் பார்க்க. சோணாடு - சோழ நாடு.—(5) விட்டுணுவுக்குச் சக்கரம் கொடுத்த சரிதம் :— ஏறுடன் ஏழடர்த்தான் - விட்டுணு - கண்ணனாக வந்த அவதாரச் செய்கைகளுள் ஒன்று. ஆயிரம்பூ - தாமரை மலர்கள். இச்சரிதம் திருவீழிமிழலையில் நிகழ்ந்த தென்பர். திருவீழிமிழலை நேரிசைப் பதிகம் "நீற்றினை நிறையப் பூசி" என்ற பாட்டுப் பார்க்க. வேறுமோர் பூ - என்றது திருவருளால் ஒரு பூ குறைந்த குறிப்பு. மலர்க்கண் - தாமரையை யொத்தகண். மீண்டுதல் - தோண்டுதல் - அகழ்ந்தெடுத்தல் குறித்தது. கூறும் - எடுத்துச் சொல்லப்படும். (அசுரனைக்) கூறு செய்விக்கும் என்றலுமாம்.—(6) சாக்கிய நாயனார் சரிதம். புராணம் பார்க்க. கஞ்சி தாமுணும் - சாக்கியர்களின் வழக்குக் குறித்து நின்றது. "கண்டான் கழுவா முன்னே யோடிக் கலவைக் கஞ்சியை, உண்டார்" (பிள்ளையார் - தேவா). சோறுணுமே - இறைவனைக் கல்லினாலெறிந் தர்ச்சிக்க மறந்து சோறு உண்ணப்புக்குப், பின் நினைந்தோடி, எறிந்து, அப்போதே முத்தி பெற்றாராதலின் உணுமே என்றார். நீள்விசும்பு - சிவலோகம் குறித்தது. எல்லி - இரவு. இங்கு மாசங்கார ஊழி குறித்தது. கொல்லி - பண். நேரிசைக்குரியது.—(7) கண்ணப்ப நாயனார் சரிதம். புராணம் பார்க்க. காப்பது - இறைவனை இரவில் விலங்குகள் அணுகாது காப்பதும், வேட்டையாடி இறைச்சி கொண்டு ஊட்டிக்காப்பதுமாகத் துன்பம் வராமலும் இன்பம் வரவும் காத்தல். தீப்பெரும் கண்கள் - ஞாயிறு - திங்கள் என்ற இரண்டும் முறையே இறை

வனது வலக்கண்ணும் இடக்கண்ணுமாவன. தன்கண் கோப்பதும் - தமது கண்களை இடந்தும் இடத்தலுற்றும் முயன்றவுடனே; பற்றி-"ஏறுயர்த் தவர்தங் கையாற் பிடித்துக்கொண்டு" (829). கோண்டார் - தம் வலத்தில் நிற்கவைத்துக் கொண்டனர்.—(8) மாவலி சரிதம். மாவலி முன் பிறப்பில் எலியாயிருந்த காலம் கோயில் விளக்கில் நெய்யுண்ணப் புக்கபோது சுடர் மூக்கினைச் சுடவே, நுந்துதலினால் திரிமூண்டெரிய அப்புண்ணியத்தால் மாவலிச் சக்கரவர்த்தியாய்ப் பிறந்து உலகாண்டனன் என்பது வரலாறு. மண்ணும் - விண்ணும் - வானுலகம் - மூவுலகாட்சி. இதனால் விட்டுணு மாவலிபால் மூவடிமண் இரந்த சரிதமும் கேட்கப்படும்.—(9) கணம்புல்ல நாயனார் சரிதக் குறிப்பு. அருந்தவத்த - தவத்தினையுடைய. புராணம் பார்க்க.—(10) இராவணன் சரிதம். பதிகமுழுதும் அவ்வவர்க்கருளும் சிவனது சரிதங்கள் பற்றிய கருணைத்திறங்களே போற்றப்பட்டன.

II திருச்சிற்றம்பலம் திருநேரிசை

ஆத்தமா மயனு மாலு மன்றிமற் றொழிந்த தேவர்
சோத்தமெம் பெருமா னென்று தொழுதுதோத் திரங்கள் சொல்லத்
தீர்த்தமா மட்ட மீமுன் சீருடை யேழு நாளுங்
கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 2

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—சிவனருள் செய்யும் திறம்.

பதிகப்பாட்டுக் குறிப்பு - இத்திருப்பதிகத்துள் இரண்டு பாட்டுக்களே கிடைத்துள்ளன.—(1) பிலயம் - பிரளயம் என்பது பிலயம் என நின்றது; ஊழி. கோள்ள - கொள்ளுமளவும். அடி - முடி - நிரனிறை. தூய மந்திரங்கள் - சிவமந்திரம். பாசுபதப்படையினை ஏவுங் காலத்துச் சொல்லலாவது.—(2) சோத்தம் - இழிந்தோர் செய்யும் அஞ்சலி. தீர்த்தமாம் அட்டமி - தீர்த்த விழா அட்டமிநாளில் வரும்படி முன் ஏழுநாள் பிரதமைதிதி தொடங்கி விழாச்செய்தல். கூத்தராய் வீதி போந்தார் - திருவீதியில் எழுந்தருளினார். விழாச் சிறப்புக்கூறிய இடம் இப்பதிகம்.

தலவிசேடம் :—காவிரிக்கு வடகரையில் 26-வது தலம். சுவாமி - வீரட்டேசுவரர்; அம்மை - ஞானம்பிகை. இது நீடூர் புகைவண்டி நிலையத்தினின்றும் வடமேற்கே மட்சாலையில் மூன்று நாழிகையளவில் அடையத்தக்கது. அன்னியூரின் (22-வது தலம்) வடமேற்கே மட்சாலையில் மூன்று நாழிகையளவில் ஐயாவையன் வாய்க்காலுக்கு மேல் பக்கமாய் ½ நாழிகையளவில் உள்ளது.

நின்றியூர்

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

கொடுங்கண் வெண்டலை கொண்டு குறைவிலைப்
படுங்க ணொன்றில ராய்ப்பலி தேர்ந்துண்பர்
நெடுங்கண் மங்கைய ராட்டயர் நின்றியூர்க்
கடுங்கைக் கூற்றுதைத் திட்ட கருத்தரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—நின்றியூர் இறைவர் கூற்றுதைத்த கருத்தர்; அவர் கள்வர்; உரிபோர்த்த பரமர்; பெருஞ்செல்வர்; பிறைசூடிய கூத்தர்; அவரைப் பற்றினாரை வினையும் பாவமும் பற்றா; தொழுவார் வினை ஓடும்; அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும் அவரை நெஞ்சே நினை.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கோடுங்கண் - தோண்டப்பட்ட கண்ணை யுடைய. "கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை" (முருகு). படுங்கண் - படும் இடுக்கண்.—(3) சுண்ணப் போர்வை - போர்வை போர்த்ததுபோல் மேலெல்லாம் நீறுகொண்டு விளங்குதல்.—(5) இப்பாட்டு அகத்துறை. தாய் அல்லது செவிலி கூற்று.—(7) கருங்களிறின்றி-ஏறுடை-" கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேறுதே, இடபமுகந் தேறியவாறு" (திருவாசகம்).—(9) அஞ்சி யாகிலு மன்புபட்டாகிலும் நெஞ்சம்! நீநினை - அச்சம் அன்பு என்ற இரண்டினிலொன்றே அன்பு செய்தற்குக் காரணமாவன. "அஞ்சி லன்பதி லொன்றறி யாதவன்" என்றது கம்பர் பாட்டு.—(10) அளி - அன்பு. அல்தும் - குறையும்.

தலவிசேடம் :—மூவர் தேவாரங்களும் பெற்ற பெருமையுடையது. இலக்குமி பூசித்த தலமென்பது வரலாறு. நியமமாய்த் தரிசித்துவந்த ஒரு சோழ அரசன் கொணர்ந்த திரி (தீவர்த்தி) நின்றபோது (அவிந்துவிட்டபோது) இறைவரது இலிங் கத் திருமேனியினின்றும் சோதி தோன்றிய ஊர் என்பதும் ஒரு வரலாறு. திருநாவுக் கரசு நாயனார் நாற்பத் தொன்பதினாயிரம் பதிகங்கள் பாடியதனை ஆளுடையநம்பிகள் இத்தலத்துத் தேவாரத்துள் வைத்துப் போற்றியருளினர். தக்கேசிப்பண்ணில் அமைந்த அவரது அந்தத் திருப்பதிகம் பலசரித அருமைகளைப் போற்றுவது. சுவாமி- மகாலட்சுமிநாதர். அம்மை - உலகநாயகி. பதிகம் 4.

இது ஆனைதாண்டவபுரம் நிலயத்தினின்றும் வடகிழக்கே மட்சாலை வழி இரண்டு நாழிகையளவில் அடையத்தக்கது.

## திருநனிபள்ளி

திருச்சிற்றம்பலம் திருநேரிசை

முற்றுணை யாயி னானை மூவர்க்கு முதல்வன் றன்னைச்
சொற்றுணை யாயி னானைச் சோதியை யாத ரித்து
உற்றுணர்ந் துருகி யூறி யுள்கசி வுடைய வர்க்கு
நற்றுணை யாவர் போலு நனிபள்ளி யடிக ளாரே. 1

அரவத்தால் வரையைச் சுற்றி யமரரோ டசுரர் கூடி
யரவித்துக் கடையத் தோன்று மாலநஞ் சமுதா வுண்டார்
விரவித்தம் மடியரா கி வீடிலாத் தொண்டர் தம்மை
நரகத்தில் வீழ வொட்டார் நனிபள்ளி யடிக ளாரே. 7

பதிகக்குறிப்பு:—" நனிபள்ளி அடிகளாரே" என்ற மகுடம் முதல் ஏழுபாட்டுக் களில் உள்ளது. எட்டாவது பாட்டில் பின்னிரண்டடிகளும் ஒன்பதாவது பாட்டும் சிதலரித்தொழிந்தன! பத்தாவது பாட்டு நனிபள்ளிப்பரமனாரே என்ற மகுடமுமுள் ளது. நனிபள்ளி யிறைவர் கசிவுடைய அடியவர்க்கு நற்றுணையாவர்; நண்ணினார் வினைகள் தீர்ப்பர்; வினைப்பினை யருளி நாளும் நம்மல மறுப்பர்; தொண்டர் தம்மை நரகத்தில் வீழ வொட்டார்; சிலந்திக்கும் இராவணனுக்கும் அருள்கொடுத் தார்; அலக்கழிந்த எனக்குச் சமணர் தந்த நஞ்சமு தாக்குவித்தார். காலை மாலை தொடர்ச்சியை மறவாதே அஞ்செழுத் தோதினால் அரனடிக்கன்பு வளரும்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) முற்றுணை - முன் துணை - முதன்மையாகிய துணை. மூவர் - அயன், அரி, அரன்; சொற்றுணை - நமச்சிவாயப்பதிகத் தொடக்கக் குறிப்பு. உற்று - உணர்ந்து - உருகி - ஊறி - உள்கசிவுடைய - இவை தனித்தனி அன்பு உறுதலும் வளர்தலும் பெறும் மன நிலைகளைக் குறித்தன. உற்று - ஒட்டி என்ற

பொருளில் வந்தது. "ஒட்டிட்ட பண்பின்", "ஒட்டியாட் கொண்டு", "உயிரா வணமிருந்து உற்று நோக்கி" (தேவா). உணர்ந்து - உணர்ச்சியில் வேறொன்றும் நிகழாது அவனையே உட்கொண்டு. உருகுதல்-மனநெகிழ்தல்; ஊறுதல் - அந்நெகிழ்ச்சி மிகுந்து மேல் ஓங்குதல்; உள்கசிவு-ஊற்றம்பெருகிக் கண்ணீர் முதலியவாற்றால் வெளி யாதல். நற்றுணையாவர் - தலத்துச் சுவாமி பெயர்.—(2) மாட்டாச் சிலந்தி - செய்த சிலந்தி - என்று கூட்டுக. விடியலே மூழ்கிப் பூவுநீருங்கொண்டு வலம்வந்து போற்றிச் சிவாகம விதிப்படி வழிபட இயலாமையால், தன்னாலியன்றவாறு இறைவனது திரு முடிமேற் சருகுகள் உதிராதபடி வாய்நூலாற் பந்தர் செய்தது இச்சிலந்தி என்பது சரி தம். அரையன் - கோச்செங்கட்சோழர். சீர்மைகள் - இவ்வுலகிற் பின்னும் சிவனடி பேணும் உணர்வுடன் பிறந்து, ஆண்டு, சிவனுக்கு எழுபத்தெட்டு மாடக் கோயில்கள் ஆக்கிப், பணிசெய்து, பின்னர்ச் சிவலோகம் புகும் சிறப்புக்கள். அருளவல்லார் - வல் லார் - அருமைப்பாட்டின் மிகுதி குறித்தது.—(3) எண்பதும் பத்தும் ஆறும் - 96 என்னும் தத்துவ தாத்துவிகக் கூட்டம். கண்பழக்கு - கண்ணோட்டம் - இரக்கம். அலக்கழிதல் - அலைப்புண்டு வருந்துதல். நண்புசெய் - பொருந்தி வளர்ந்திருத்தலை நண்பு செய்தல் என உபசரித்தார்.—(4) பண்ணும் பாடலும் - பழமும் இரதமும் - கண்ணும் பார்வையும் - கருத்தும் கற்பமும் - எண்ணும் எண்ணமும் என்பன இறை வர் உயிர்களுடன் அத்துவிதமாகக் கலந்து நிற்கும் கலப்பினைக் குறிக்கும் உவமை கள். முதன் மூன்றும் புற இந்திரியக் கலப்புக்கும், பின் இரண்டும் உள் இந்திரியக் கலப்புக்கும் கொள்க. கருத்தும் கற்பமும் - கற்பிக்கப்படு பொருளும் கற்பிக்கும் பொருளும். கற்பம் - கற்பிப்பது என்ற பொருளில் வந்தது. எண்ணின்ஆர் (பொருந்திய) எண்ணம் எனவும், எண்ணினாரது எண்ணம் எனவும் ஆம். உலகனைத்து மாகி - மாயையினின்றும் தோன்றச் செய்து அதனுள்ளே ஆகி - கலந்து.— (5) நாயனருக்குச் சமணர் தந்த நஞ்சு கலந்த பாற்சோற்றை அழியாமையைத் தரும் அமுதமாக ஆக்கிய திருவருட் சரித நிகழ்ச்சி குறித்தது. 1369-ம் பாட் டும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.—(6) அகழ்தல் - நிலங்கீண்டு செல்லுதல். நின் மலன் என்று ஏத்தும் நினைப்பினை அருளி - இறைவர் தம் இயல்பானே மல மற்றவர் என்றதனால் பசுக்களாகிய நாம் மலத்தாற் கட்டுண்டவர் என்றும், மலம் அறுத்தால் இறைவனை யடையலாம் என்றும், அறுத்தல் நின்மலனாகிய அவனால் ஆவதென்றும், அதற்கு அவனை நினைந்து ஏத்தியடைவதே உபாயமென்றும் அறியும் எண்ணம் நின் மலன் என்ற ஒரு சொல்லாலே காண வைத்தார். அருளி - "அவனருளாலே அவன் றாள் வணங்கி" (திருவா). அவனை நினைத்தற்கும் அவனே அருள வேண்டும். "கரு துமாகருதே" (திருவிசைப்பா). நம் மலமறுப்பர் - மல நீங்கப் பெறுதல் பயன்.— (7) அரவித்து - ஒலிப்பித்து. அரைவித்து என்பது அரவித்து என நின்றதெனினு மாம். வீடிலா - பற்றுவிடுதலில்லாத.—(8) புண்ணுளே - ஆக்கை - மனித உடலின் தன்மை.—(10) பத்து - சொற்பின் வருநிலை.

தலவிசேடம்:—மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. இது புஞ்சை என வழங்கப் பெறும். காவிரிக்குத் தென்கரை 43-வது தலம். இது முன்னர்ப் பாலை யாய் இருந்ததனை ஆளுடைய பிள்ளையார் நெய்தனிலமாகப் பாடியும், அதனையே பின்னையும் கானகமும் வயலுமாக்கியும் அருளினர். "பாலை நெய்தல் பாடியதும்" (திருக்களிற்றுப்படியார்). "நாத னனிபள்ளி சூழ்நகர் கானக மாக்கியஃதே, போதின் மலிவய லாக்கிய கோன்" (11-ம் திருமுறை - ஆளு - அந்தாதி - 17).

திருச்செம்பொன்பள்ளி செம்பொனார்கோயில் - என்ற இருப்புப்பாதை நிலயத்தி னின்றும் வடகிழக்கே மட்சாலையில் ஒரு நாழிகையில் உள்ளது.

திருச்செம்பொன்பள்ளி

I *திருச்சிற்றம்பலம்* திருநேரிசை

*ஊனினுள் ளுயிரை வாட்டி யுணர்வினார்க் கெளிய ராகி*
*வானினுள் வான வர்க்கு மறியலா காத வஞ்சர்*
நானெனிற் றானே யென்னு ஞானத்தார் *பத்தர் நெஞ்சுட்*
*டேனுமின் னமுது மானார் திருச்செம்பொன் பள்ளி யாரே.*

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—" *திருச்செம்பொன் பள்ளியாரே* " என்பது மகுடம். *இறைவர் பத்தர்க்குள்ளே* தேனும் *அமுதமுமானார் ; நெஞ்சத்துள் விளக்கு ; தெள்ளியார் கள்ளந்தீர்ப்பர் ; சிந்தையுட் சிவமதானார் ; அன்பருக்கன்பர் ; சீலமு நோன்புமாவார் ; திரிகாலங்கண்ட எந்தை ; நீதியுள்ளார் ;* பூவான மூன்று முந்நூற் றறுபது மாதும் எந்தை ; *வேதங்களையும் அங்கங்களையும் அருளியவர் ; அவர் திருச்செம்பொன்பள்ளி யுள்ளார்.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—ஊனினுள் உயிரை வாட்டி - *தவம் முதலியவற்றால் அறிவை, வேறு புலன்களின் செல்லாது அடக்கி.* உணர்வினர் - *இறைவனிடம் உணர்வைச் செலுத்தியவர்.* எளியர் - வஞ்சர் - *அடங்கினார்க்கு எளியராயும், ஆணவத்தால் நிமிர்ந்தார்க்கு அரியராயும் உள்ளார்.* நானெனில்...ஞானத்தார் - *நான் என்பது அற இறைவன் உணர்வில் ஒடுங்கியவர்.*—(2) இடிஞ்சில்-*விளக்குத்தகழி.* நெய்அமர்... ஆகி - *நெய்யும் திரியும் கூட்டி எரியவைப்பின் விளங்கும் விளக்கு.* "*உடம்பெனு மனையகத்தே*" (*தனித்திரு நேரிசை*-4) *என்ற பாட்டுப் பார்க்க.* செய்யவர் - *செம்மை தருபவர்.*—(3) பள்ளியர் - *இருக்கை கொண்டவர் ;* பஞ்சமம் - *ஒருபண் ;* தெள்ளியார் - *அறிவு தெளிந்தோர் - தூயோர்.* கள்ளம் - *உயிரறிவை மறைக்கும் ஆணவம்.*—(4) இருக்கு - *வேதம்.* சிந்தையுட் சிவம் - *உயிரினுள் உயிராய் விளங்குபவர். விளங்க வெளிப்படும் நிலை குறித்தது.*—(5) கூறுடை - *அம்மையார் பங்குடைய.*—(6) ஞாலமும் அறிய - *உலகத்தின் உண்மைநிலை.* கள்ளம்-*பாசக்கட்டு ;* கோலம் - *ஆணவத்தால்-வஞ்சனையால்-மேற்கொள்ளும் உலகநிலையின் வெளிக்கோலங்கள்.* ஆர்வம்... நீக்கில் - *அகத்தூய்மை செய்தால் ;* சீலமும் நோன்பும் ஆவர் - *சீலத்திலும் நோன்பிலும் வெளிப்படுபவர்.*—(7) புண்டரீகம் - *இதய தாமரை.* புரிகாலே நேசஞ் செய்ய இருந்த - புரிதல் - *இடைவிடாது சொல்லுதல்.* நேசம் - *அன்பு.* இருந்த - *விரும்பி வீற்றிருக்கும் ;* மூன்று சந்தி - *காலை, நண்பகல், மாலை.* "*சந்தி மூன்றிலும் தாபர நிறுத்திச் சகளிசெய்து இறைஞ்சும்*" (*நம்பிகள்*). காலம் - *இறந்தகாலம் - நிகழ்காலம் - எதிர்காலம்.* கண்ட - *கடந்த.*—(8) காருடை - *கார்காலத்திற் பூக்கும்.* நீதியுள்ளார் - *நீதியுள் விளங்குபவர்.* பதினெட்டுக் கணங்கள் - *அசுரர்-அந்தரர்-அமரர்* - என்பார் *முதல் முனிவர் - விஞ்சையர்* - வித்தியாதரர் என்பார் *ஈறாக உள்ள கூட்டத்தார்.* பார் - விண் - மண் - *மூவுலகம் இவற்றில் உள்ள கணங்கள் என்றும், கணங்கள் இம்மூவுலகில் என்றும் உரைக்க நின்றது.* பார் - *கீழுலகம்.*—(9) மூவாத பிறப்பிலார் - *மூப்பு இல்லாத பிறப்பில் வந்தவர் - தேவர்.* காணு - *எந்தை என்று கூட்டுக. காணு மூவாதாரும் பிறப்பிலாரும் ஆகிய இறைவன் என்றலுமாம்.* பூவான மூன்று முந்நூற் றறுபது மான - பூவான மூன்று - *மண்டலம்* 3 ; முந்நூற்றறுபது - *தீச்சுடர்* . 108 ; *ஞாயிற்றின் கதிர்* 116 ; *மதியின் கலை* - 136 ஆக 360.—(10) சங்கம் - *சங்கு.*

II திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

கான ளுதத கடிபொழில் வண்டினந், தேன ளுதத திருச்செம்பொன் பள்ளியான்
ஊன ளுததோர் வெண்டலை யிற்பலி, தான ளுததோர் தன்மையன் காண்மினே. 1
கைகொள் சூலத்தர் கட்டுவாங் கத்தினர், மைகொள் கண்டத்த ராகி யிருசுடர்,
செய்ய மேனிவெண் ணீற்றர்செம் பொன்பள்ளி, யையர் கையதோரைந்தலை நாகமே. 7

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—"குறிகளும் அடையாளமும் கோயிலும் நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்" (அரசுகள்) என்றபடி இறைவர் வெளிப்படும் இடம், கோலம், தன்மை, கொள்கை, அடையும் சாதனம் முதலியவற்றைக் கூறுவது.

பதிகப்பாட்டுக் குறிப்பு.—(1) கான் - மணம். பலி அறுததோர் கொள்கை யன் - பலி ஏற்றல் ஒரு கொள்கைப்பாலது."...எற்றுக்கிரக்கும் ?, நிரந்தர மாக நினையு மடியார், இரந்துண்டு தன்னடி யெட்டச் செய்தானே" (திருமந்திரம்).—(2) ஆமை - கூர்மாவதாரமாகிய ஆமையின் முதுகு ஓடு. உழிதர்வர்க்கு அன்பும் ஆயிடும் ஆயிழை யீர் - பலிக்குஉழல்பவராயினும் அவர்க்கு அன்பு செய்யும் உயிர்களே. நம்பொன் பள்ளி உள்க - தவத்தால் அழகுபடுத்திய நமது மனப்பள்ளியுள் இருக்கும்படி நினைக்க. "கீழ்மையிற் றொடர்ந்து கிடந்தவென் சிந்தைப், பாழறை யுனக்குப் பள்ளியறை யாக்கிச், சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவி, செந்தை நீயிருக்க விட்டன னெந் தாய்" (கழுமலமும் - கோவை - 4).—(3) வேறு - ஆணும் பெண்ணு மலியும், மற்றும் மக்கள் காண்பன வல்லாத வேறு. கீறு-கிழித்த. தேறல்-பசுபோதத்தால் தெளிதல்.—(4) அருவருத்தல் - வெறுத்தல். இருவராய் - தாமும் சத்தியுமாய். அருளுடன். பலியிடுதல் - ஆணவத்தைப் பலிகொடுத்தல் - "பசுபோதக் கவளமிட". தெருவே லாம் - "நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சங் கொண்டார்" (தேவா), "இத்தெருவே யையாநீ யுலாப்போந்த" (திருவிசைப்பா).—(5) தேவர் சென்றிறைஞ்சும் - விருத்திரனைக் கொல்லும் பொருட்டும் தக்க யாகத்திற் போந்த பழி போக்குதற் பொருட்டும் இந்திரனும், சிருஷ்டியின் பொருட்டுப் பிரமனும், கணவனைப்பெற இரதி யும்,இன்னும் எட்டுத் திக்குப்பாலகர் முதலியோரும் வழிபட்டமை தலவரலாறு. பூவரா யும் அவர்க்கு முதல்வராயும்.—(6) சலவர் - சலம்-நீர் ; கங்கையை வைத்தவர். சலம் சினம் என்று கொண்டு சலவராய்-எய்த-என்று கூட்டியுரைப்பினுமாம்.—(7) கைய தோர் ஐந்தலை நாகம்-கையது-கையிற்பிடித்தது - கங்கணமாகக் கொண்டது. "ஐந்து கொலாமவ ராடர வின்படம்" "கைக்கொண்டது பாம்பு" (தேவா).—(8)ஆர்த்தவர்- அரையில் கோவணமாகக் கட்டியவர். அங்கணுய் - அடைக்கலமாக.—(9) நன்றிநார ணன் - முடிதேடிக்கண்டேன் என்று பொய் புகன்ற நான்முகன் போலன்றி, அடி தேடிக் காணமாட்டாத போது, தம்மால் அறியப்படாதவன் என்று கண்டு வந்தித்தவ ராதலின் நன்றி என்றார். நான்முகன் என அடைகொடாது கூறிய குறிப்புமது.— (10) திரியும் மும்(மதில்) - அந்தரத்திற் சென்று திரிகின்ற முப்புரம். "எழுந் துலகை நலிந்துழலு மவுணர்கடம் புரமூன்றும்" (பிள்ளையார்). வலியாரை அன லோட்டினும், நெரியவூன்றினும், அடைந்தார்க்கு அவர் அரிய வானம் (சிவலோகம்) எளிமையில் அருள் செய்வர். சுவாமி பெயர் பதிகத்துக் காணப்படும்.

தலவிசேடம் :—முன்னர்ப் பதிகம் 5-வது பாட்டுக் குறிப்பில் உரைக்கப்பட் டவை பார்க்க. தக்கயாக சங்காரத்தின் பொருட்டு வீரபத்திரர் அவதரித்த தல மென்ப. இறந்தாரெலும்புகள் இங்குக் காவிரியில் இட்டால் சிவபூசைக்குரிய பூமரங்

களாய் முளைக்கும் என்பது வரலாறு. சுவாமி - செம்பொன்பள்ளியார் ; தேவி - சுகந்தவனநாயகி; பதிகம் 3.

இத்தலம் செம்பொனர் கோயில் என்ற புகைவண்டி நிலயத்தினின்று $\frac{1}{4}$ நாழிகை யளவில் அடையத்தக்கது.

## திருமயிலாடுதுறை

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

கொள்ளுங் காதன்மை பெய்துறுங் கோல்வளை, யுள்ளமுள்கி யுரைக்குந் திருப்பெயர்,
வள்ளன் மாமயி லாடு துறையுறை, வெள்ளந் தாங்கு சடையனை வேண்டியே. 1

அண்டர் வாழ்வு மமர ரிருக்கையுங், கண்டு வீற்றிருக் குங்கருத் தொன்றிலோம்,
வண்டு சேர்மயி லாடு துறையரன், தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே. 3

நிலைமை சொல்லுநெஞ் சேதவ மென்செய்தாய், கலைக ளாயவல் லான்கயி லாயநன்
மலையன் மாமயி லாடு துறையனந், தலையின் மேலும் மனத்துளுந் தங்கவே. 6

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—1, 2 பாட்டுக்கள் மயிலாடுதுறையரன்பால் மகள் காதலின் விளைவுகண்டு வருந்தி அதற்குத் தீர்வு நினைந்த தாய்கூற்றாகிய அகப்பொருட்டுறையில் அமைந்தன. 4, 5, 7, 10, 11 பாட்டுக்கள் இறைவனைச் சார்வதன் பயன் குறித்தன. 8-வது பாட்டு அவனை உணர்ந்தார்க்குத் தவம் வேறு வேண்டுவதின்று என்ற கருத்துடையது. 6, 9 பாட்டுக்கள் அவனருளிற் றிளைத்தலும், 3-வது பாட்டுத் தொண்டர் கூட்டத்தின் பெருமையும் குறித்தன.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) காதன்மை - காதல்நோய். உரைக்கும் திருப் பெயர் - "மெள்ளவே யவன்பேர் விளம்பும்வாய்" (திருவிசைப்பா).—(2) கொன்றை கொடுக்கில் சித்தம் தேறும் - விற்பூட்டு பொருள்கோள். வளை சிக்கெனும் - காதலால் உடல் இளைக்கவும் வளைகழலவும் இருந்த தன்மை நீங்கி உடல் பூரிக்க, வளை கழலா. பச்சை - பசலை.—(3) துதைதல் - நெருங்குதல். அடியார் கூட்டம் பெறின் தேவ உலகப் பெரிய இன்பமும் பொருளன்று. சூடித்துதையில் - கருத்து ஒன்றிலோம். ஒன்று - முற்றும்மை தொக்கது.—(4) அருளில்...அறுக்கலாம். அஞ்சு இறப்பு - அஞ்சத்தக்கதாகிய இறப்பு.—(5) இருக்கில் - குறைவு இலோம் - குறைவு - ஒருகுறைவும், "ஒன்றினுற் குறையுடையோ மல்லோ மன்றே" (திருத்தாண்டகம்). மானுடக் கொடு வாழ்க்கை - கொடுமை - மீளமீளப் பிறவிக் காரணமாகிய வினை தேடுதல். நீள் - அழிவில்லாத - நித்தமாகிய.—(6) தங்கவே என் தவம் செய்தாய் - என்க. தவம் செய்தவரே இறைவனை வணங்கவும் நினைக்கவும் பெறுவர். "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே...வழிபடும தனலே" (பிள்ளையார் - தேவாரம்.) தலையின் மேலும் மனத்துளும் - "சிந்தையினுஞ் சென்னியினு மலர்வித்து" (புரா). "சிந்தையி னுள்ளுமென் சென்னியினும் சேர வந்தவர்" (உந்தி). மேல் - உள் - உள்ளும் புறம்பும்.—(7) புவி வாழ்க்கை - "கொடுமானிட வாழ்க்கை" பிறவி. உண்டோ - ஓகாரம் எதிர்மறை.—(8) கோல் - யோகதண்டு. கூர்ச்சம் - புல் - தருப்பையாலமைத்தது. தோல்-மான்றோல். இவை விரதியர் கோலம். என் பயன் ? - சிவனை உட்கொள்ளாத தவமும் விரதமும் பயனில. நூல் - பூணூல் எனவும், அறிவுநூல்கள் எனவும் உரைக்க நின்றது. உணர்ந்தோர் - ஞானத்தால் உணர்ந்தோர்.—(9) பகீரதி - கங்கை. அணங்கோர்பால் கொண்ட கோலம் - மாதிருக்கும்பாதியனாகிய கோலம்.—

(10) பேணிலாதவர் - பேணுதாரை. பேதுற ஓட்டினோம் - பேதுறும்படி அகற்றிவிட்டோம். "மீண்டு மனத்தவர் போமின்கள்" (திருப்பல்லாண்டு). கடுந்துயர் - இறப்பு.—(11) வினை - பாசம். கட்டறுதல் - வலி நீங்குதல்.

தலவிசேடம் :—262-ல் உரைத்தவை பார்க்க. மாயூரத் தலபுராணம் பார்க்க. ஐப்பசி மாதம் அமாவாசையன்று தட்சிணாமூர்த்தி எழுந்தருளி வந்து காவிரியிலே கங்கையை வருவிப்பர் என்ற வரலாறும் கேட்கப்படும். இந்தத்துறை இடபதீர்த்தம் எனப் பெயர்பெறும். துலா மாதம் நீர்மூழ்குதலின் சிறப்புப் பெற்றது. சுவாமி - மாயூரநாதர்; அம்மையார் - அபயாம்பாள்; தீர்த்தம் - காவிரி; பதிகம் 3.

திருத்துருத்தியும் வேள்விக்குடியும் :—இவையிரண்டும் ஒரு தலம். இறைவனார் பகலில் துருத்தியிலும் இரவில் வேள்விக்குடியிலும் எழுந்தருளியிருப்பர் என்பது வரலாறு. இவையிரண்டையும் சேர்த்துப்பாடிய ஆளுடையபிள்ளையார் - நம்பிகள் திருப்பதிகங்கள் பார்க்க. நாயனாரது பதிகம் துருத்திக்கு மட்டில் கிடைத்துள்ளது.

## திருத்துருத்தி

திருச்சிற்றம்பலம் திருநேரிசை

பொருத்திய குரம்பை தன்னைப் பொருளெனக் கருத வேண்டா
இருத்தியெப் பொழுது நெஞ்சு ளிறைவனை யேத்து மின்கள்;
ஒருத்தியைப் பாகம் வைத்தங் கொருத்தியைச் சடையுள் வைத்த
துருத்தியஞ் சுடரி னானைத் தொண்டனேன் கண்ட வாறே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—துருத்தியில் இறைவனை நான்கண்ட அற்புதந்தான் என்னே? உலக வாழ்வை மெய்யென நினைந்து அதனுள் அழுந்த வேண்டா! அவ்விறைவனை ஏத்துமின்கள் உலகீரே! என இரங்கிக் கூறியருளியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பொருத்திய - எலும்புதோல் முதலிய பலவும் இணைத்த. குரம்பை - உடம்பு. "குடம்பை தனித்தொழிய" (குறள்). பொருள்- மெய்ப்பொருள்.—(2) சவை - பயனற்றவை என்ற பொருளில் வந்தது. (மனைவி மக்களது) கூட்டம் என்றலுமாம்.—(3) பொன்னியினடுவு...துன்னிய துருத்தி - துருத்தி என்ற இத்தலப் பெயருக்குக் காரணங் கூறியபடி. துருத்தி - ஆற்றிடைக்குறை. இவ்வாறே பூந்துருத்தி என்றது காண்க.—(4) ஊன்றலை வலியன் - ஊனினால் - உடற்பலத்தால்.—(5) உடல்தனைக் கழிக்கலுற்ற - சாதலைப் பொருந்திய (6) அள்ளல்- சேறு. இங்குப் பிறவிச்சேறு. பொள்ளல் - ஓட்டை. உள்ளீடற்றது என்றலுமாம். புண்டரீகம் - இதயதாமரை. துள்ளல் - பிடிக்க ஒண்ணாது துள்ளித் தப்புபவன். "சுற்று மின் சூழ்மின் றொடர்மின் விடேன்மின், பற்றுமி னென்றவர் பற்றுமுற் றொளித்தும்" (திருவாசகம்).—(8) தூமணற் றுருத்தி-தூயமணல் கொண்ட ஆற்றிடைத் திடரான துருத்தி.—(9) கண்டதே கருதுவார்கள் - காட்சியளவை யொன்றினையே பிரமாணமாகக் கொண்டவர்கள். விண்டவர் - (நன்னெறியின்) நீங்கியவர்.—(10) பிதற்றுதல் - ஆசை மிகுதியாற் பலவாறும் போற்றுதல். துண்டம் - ஆறு சூழ்ந்த அளவுபட்ட நிலம்.

தலவிசேடம் :—(1) திருத்துருத்தி - காவிரிக்குத் தென்கரை 37-வது தலம். வேள்விக்குடி - வடகரையில் 23-வது தலம். இவையிரண்டுங் காவிரியின் இருகரையினும் எதிர் எதிர் உள்ளன. துருத்தி - குத்தாலம் என வழங்கப்படும். சிவபிரான் வேள்விக்குடியில் அம்மையாரை மணப்பதன் முன் இங்குப் பிரமசாரியாய் எழுந்தருளி

யிருந்து வேதமோதினராதலின் உத்தரவேதீசுவரர் எனப்படுவர். தாம் அருளிய வேதத்தை அவ்வாறு தாமே சொன்னமையால் சுவாமி பெயர் சொன்னவாறறிவார் எனப்படும். ஆளுடைய நம்பிகள் (காந்தாரப்பண்) தேவாரத்துள் சொன்னவா றறிவார் துருத்தியார் என்று இப்பெயராற் போற்றியதுகாண்க. ஆளுடையநம்பிகளது திருமேனியிற் போந்த புதிய பிணி, சிவபெருமானது ஆணையால், வடகுளத்துக் குளித்து நீங்கப்பெற்ற தலம். நம்பிகளது அருமையான திருவுருவம் இக்குளக்கரை யில் அருமையாக வைத்து வழிபடப் படுகின்றது. அவரது தேவாரங் காண்க. அம்மையார் - மிருதுமுகிழாம்பிகை ; தீர்த்தம் - வடகுளம் ; மரம் - துத்தாலம் ; பதிகம் - 2.

இது குற்றாலம் (குத்தாலம்) என்னும் இருப்புப்பாதை நிலையத்தினின்றும் வட கிழக்கில் மட்சாலைவழி ¾ நாழிகையளவில் அடையத்தக்கது.

2. வேள்விக்குடி - நாயனாரது பதிகம் கிடைத்திலது! தலவிசேடம் முன் உரைக்கப்பட்டது. துருத்தியினின்றும் வடக்கே ஒருநாழிகை யளவில் காவிரியைக் கடந்து மஞ்சி வாய்க்கால் வடகரை வழியாய்க் கிழக்கே மாயூரம் மட்சாலையில் ஒரு நாழிகை யளவில் அடையத்தக்கது.

திரு எதிர்கோள்பாடி :—நாயனார் அருளிய திருப்பதிகம் கிடைத்திலது !

தலவிசேடம்-காவிரிக்கு வடகரை 24-வது தலம். நம்பிகளது தேவாரமும் பெற் றது. மேலைத்திருமணஞ்சேரி என வழங்கப்பெறும். மணக்கோலத்தோடு வந்த அரச குமார னொருவனை இறைவர் மாமனார்போலக் காட்டி எதிர்கொண்டு அழைத்துச் சென்றதனால் இப்பெயர் கொண்டதென்பர். ஐராவதம் பூசித்த தலம். சுவாமி - ஐராவதேசுவரர் ; அம்மையார் - மலர்க்குழனாயகி - பதிகம் 1.

வேள்விக்குடியினின்றும் வடக்கே கரைவழியாய் ஒன்றரை நாழிகையளவில் அடையத்தக்கது.

## திருக்கோடிகா

I திருச்சிற்றம்பலம் திருநேரிசை

நெற்றிமேற் கண்ணி னானே நீறுமெய் பூசி னானே
கற்றைப்புன் சடையி னானே கடல்விடம் பருகி னானே
செற்றவர் புரங்கண் மூன்றுஞ் செவ்வழல் செலுத்தி னானே
குற்றமில் குணத்தி னானே கோடிகா வுடைய கோவே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கோடிகாவுடையகோவே, நெற்றி மேற் கண்ணினன் முத லிய பண்புகள் உடையவன். நான் ஐவரால் ஆட்டப்பட்டேன் ; மயங்குகின்றேன். ஏழையேன் என் செய்கேன் ; அடிமை செய்வேன் ; அடியவர்க்கருள் செய்வானே ! அமுதொப்பானே ! கோவடு குற்றம் தீராய் !

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(2) கொடியணி விழவு - கொடியேற்றி விழாத் தொடங்கும் மரபு குறித்தது.—(3) நிழல் - ஒளி. அறம். உறுதிப்பொருள் நான் கும், ஆகமங்களும்.—(4) ஞாலமாம் பெருமை - உலகமெல்லாம் தமது மாயா சத்தி யிற் றோற்றுவித்துத் தாம் அதைக் கடந்து நிற்றல்.—(6) ஏழையேன் - ஏழையேன் - அடுக்கு மிகுதி குறித்தது. மயங்குகின்றேன் - உலகர் பொருட்டுச் செய்த விண்ணப் பம்.—(7) தழல் உமிழ் - விடத்தைக் கக்குகின்ற.—(8) ஆவடு துறையுளானே - இத்தலத்திலிருந்தபடியே காவிரியின் எதிர்க்கரையில் தோன்றும் ஆவடுதுறையைக்

கருதித் அதித்த குறிப்பு. இக்குறிப்பின்படி நாயனூர் அங்குச் சென்று தரிசித்தமை காண்க. ஐவர் - புலன்கள். கோவடுகுற்றம் - புலன்களின் ஆணை வழி அடங்கி நின்ற குற்றம்.—(9) தாவுதல் - ஈர் அடியாலே தாண்டி அளத்தல்.

II *திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

*சங்கு லாமுன்கைத் தையலோர் பாகத்தன் ; வெங்கு லாமத வேழம் வெகுண்டவன் ;*
*கொங்கு லாம்பொழிற் கோடிகா வா!வென, வெங்கி லாததொ ரின்பம்வந் தெய்துமே.*
*நாடி நாரண னுன்முகன் வானவர், தேடி யேசற வுந்தெரி யாததோர்*
*கோடி காவனைக் கூருத நாளெலாம், பாடி காவலிற் பட்டுக் கழியுமே.* 9

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு:—“ *கோடிகாவா !*” *என்று போற்றிஞல்* இணையற்ற இன்பம் *வந்தெய்தும். போற்ருவிடில் பாடிகாவலிற்பட்டுக் கழிதிர் ! ஏத்திஞல் ஊனமில்லை. ஏதங்கள் தீரும்.—இப்பதிகத்துள் மூன்று பாட்டுக்கள் சிதலரித்தொழிந்தன ?*

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) சங்கு - *வளை.* “எங்கும் இலாதது ஓர் இன்பம்” (*திருவா*). எங்கும் - *முற்றும்மை தொக்கது.*—(2) உள்கி ஓடி வாடி வாழ்வது என் ஆவது ? என்க. *ஒன்றும் பயனின்று.* நாடோறும் - *இடைநிலைத்தீபம்.* நாடோறும் வாடி என்றும், நாடோறும் கூறீரேல் என்றும் கூட்டுக. கூறீரேல் - *கூருவிட்டால்-கூறீர் ஆயின்.* பாடி காவல் - *அரசநீதி பிழைத்தாரை வழக்கு நாடி அரசன் நிறுத்தும் தண்டத்தொழில்.* இதற்கு “ *நெறியின் வழிஇயினுரை, வழக்கு விஞய், ஒப்ப நாடிச் செய்யும் தண்டத்தொழி லுணர்த்துவதோர் சொல்*” *என்றுரைத்து, இத்திருப்பாட்டை உதாரணமுங் காட்டினர் எமது மாதவச்சிவஞான முனிவர்.* “*ஒருநகரியைக் காப்பான் பாடிகாவ விட்டாங்கு அவை அவனதாக்கினை யாகலான்*” (*சிவஞானபோதம்*- 2 சூத். 2 *அதி. ஏது*).——(3) ஒல்லை - *விரைவில்.*—(4) நாவளம் பெறுமாறு - *பழக்கத்தால் நாவளம் பெறும்படி.* “ *நான் மறக்கினுஞ் சொல்லு நா* ” (*தேவா*). ஆமளம் - *ஆம் அளவும் என்பது ஆமளம் என நின்றது.* ஏனை ஏசும் ஏழை ஏவள் - *இறைவரது காதலிற்பட்டுத் தன் சொற்பழித்த மகளை நோக்கித் தாய் கூற்ருகப் பாடியது.* “ *பரிந்து ரைக்கிலு மென்சொற் பழிக்குமே* ” (*குறுங் - கழிப்பாலை* - 3). கோமளம் - *அழகு.* கோடிகாவா என - *காதல் மிகுதியால் நாயகன் பெயர் சொல்லி.*—(5) நும்மால் ஏசப்படுவானே - *தோழியை நோக்கிக் காதல் மிகுந்த தலைவி கூற்று. கோடிகாவனை அடைந்து சிலர் வீறுபெறுவர் ; ஆகிலும், அவன் கொன்றை நல்காளுயினும், அவன் பெயர் சொல்லி மிக்க மால் கொள்வேன் ; அதுபற்றி நீர் ஏசினும் அதனுட்படேன்.* “ *உள்ள முள்கி யுரைக்குந் திருப்பெயர்* ” (*மயிலாடுதுறை - குறுங்*), “ *பூதல ராலுன் னடியானென்,* *தேசப் பட்டேன்* ” (*திருவாசகம்*), “ *அவனுக்கே பிச்சியாளுள்...அகன்ரு ளகலிடத்தா ராசா ரத்தை* ” (*திருத்தாண்டகம்*).—(10) இரங்குவேன் - *மன நையுதல் அடைவேன்.*

III *திருச்சிற்றம்பலம்* திருத்தாண்டகம்

*கண்டலஞ்சேர் நெற்றியிளங் காளை கண்டாய்*
*கன்மதில்சூழ் கந்தமா தனத்தான் கண்டாய்*
*மண்டலஞ்சேர் மயக்கறுக்கு மருந்து கண்டாய்*
*மதிற்கச்சி யேகம்ப மேயான் கண்டாய்*

விண்டலஞ்சேர் விளக்கொளியாய் நின்றான் கண்டாய்
மீயச்சூர் பிரியாத விமலன் கண்டாய்
கொண்டலஞ்சேர் கண்டத்தெங் கூத்தன் கண்டாய்
கோடிகா வமர்ந்துறையுங் குழகன் றானே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கோடிகா அமர்ந்துறையும் குழகன் தானே, கண்தலஞ்சேர் நெற்றி இளங்காளை முதலாகிய பண்புகளுடையவன்; பிறவியறுக்கும் மருந்து; பரலோக நெறிகாட்டும் பரமன்; கொண்டாடும் அடியவர்தம் மனத்தான்; நினைப்பார் தம் வினைப்பார மிழிப்பான்; அவன் என் நெஞ்சத்துள் நீங்காத வெம்மான்.— இத்திருப்பதிகத்துள் ஒரு பாட்டுச் சிதலரித் தொழிந்தது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—நெற்றித்தலம் சேர் கண் என்க. இளங்காளை - இளமை - புதுமைக்குப் புதுமையாயிருத்தல். காளை - வீரங் குறித்து நின்றது. மண்தலம் சேர் மயக்கு-மண்ணில்வந்து பிறத்தற்குக் காரணமாகிய ஆணவமறைப்பு. கொண்டலம் சேர் கண்டம் - கொண்டல் - மேகம். இங்கு அதன் பண்பாகிய கருமையும் உபகாரமும் குறித்தது. அமர்ந்து - விரும்பி.—(2) பண்டாடு பழவினைநோய் மூலமாகிய மும்மலம். செண்டாடுதல் - மிக இலகுவில் அழித்தல்.—(4) புற்றாடு - அரவுக்கு இயற்கை யடைமொழி. பொய்யிலி - பூந்துருத்தியின் சுவாமி பெயர். அற்றார்கட்கு அற்றான் - வேறொன்றும் பற்று வையாது அறுத்துத் தன்னை அடைந்தார்க்கு அற்ற அத்தன்மையினுள் வெளிப்பட்டு அருள்பவன். "அற்றவர்க் கற்ற சிவன்" (ஆளுடைய பிள்ளையார் - ஆலவாய்.) கூத்தன் - குற்றாலத்தின் சுவாமி பெயர். கூத்தர் குற்றாலம் என்ற வழக்கம் காண்க. இது வேறு; குறும்பலா வேறு. "குற்றாலத்துறை கூத்தனல்லால்" (திருஅங்கமாலை), "குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தாவுன் குரைகழற்கே" (திருவாசகம் - திருப்புலம்பல்.) கூத்தன் குற்றாலம், கூத்தப்பெருமானது ஐம்பெருமன்றங்களுள் சித்திரசபை என வழங்கப்படும்.— (5) காப்பு-காவல்புரியும் தலம். "காப்புக்களே" காப்புத் திருத்தாண்டகம் என்றது காண்க. இழிப்பான் - இறக்குபவன். பாரமில்லாமற் செய்பவன்.—(6) கண்ணப்ப - கணணப்பநாயனாரையும் உடன் துதித்தமை காண்க. விண்-சிவனுலகம். விண்ணப்பு- சிவத்தன்மை. "கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள், வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்" (தென்குடித்திட்டை - 7 ஆளுடைய பிள்ளையார்). படிமலிந்த - உலகில் பலகாலும் வரும்.—(7) உழை - மான். ஒற்றி - நிறைந்துறையும் இடம். கழை - மூங்கில். என்...எம்மான் - என் நெஞ்சினுள் உறைந்து எமக்கெல்லாம் தலைவனாந் தன்மையுடையான். குடமாடி - திருக்குடமூக்கு.

தலவிசேடம் :—கோடிகா - மூன்று கோடி (திரிகோடி) இருடியர் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. சுவாமி - கோடிகாவீசுவரர். அம்மையார் - வடிவம்மை. தீர்த்தம் - சிருங்க தீர்த்தம். பதிகம் 4. காவிரிக்கு வடகரையில் 37-வது தலம். இதற்கு எதிர்க்கரையில் 1 நாழிகையளவில் காவிரியைக் கடந்தால் உள்ளது தென்கரையில் 35-வது தலமாகிய திருவாவடுதுறை.

திருக்கஞ்சனூரினின்றும் மட்சாலை வழி கிழக்கே 2 நாழிகையளவில் கோடிகாவை அடையலாம்.

1456. "ஆவடுதண் டுறையாரை யடைந்துய்ந் தே"னென்
றளவிறிருத் தாண்டகமுன் னருளிச் செய்து
மேவுதிருக் குறுந்தொகைநே ரிசையுஞ் சந்த
விருத்தங்க ளானவையும் வேறு வேறு

பாவலர்செந் தமிழ்த்தொடையாற் பள்ளித் தாமம்
பலசாத்தி மிக்கெழுந்த பரிவி னோடும்
பூவலயத் தவர்பரவப் பலநாட் டங்கிப்
புரிவுறுகைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார். கசுக

1457. எறிபுனல்பொன் மணிசிதறுந் திரைநீர்ப் பொன்னி
யிடைமருதைச் சென்றெய்தி யன்பி னோடு
மறிவிரவு கரத்தாரை வணங்கி வைகி
வண்டமிழ்ப்பா மாலைபல மகிழச் சாத்திப்
பொறியரவம் புனைந்தாரைத் திருநாகேச் சுரத்துப்
போற்றியருந் தமிழ்மாலை புனைந்து போந்து
செறிவிரைநன் மலர்ச்சோலைப் பழையா றெய்தித்
திருச்சத்தி முற்றத்தைச் சென்று சேர்ந்தார். கசுஉ

1456. (இ-ள்) வெளிப்படை. குளிர்ச்சியையுடைய ஆவடுதுறையில் எழுந்தருளியுள்ள இறைவரை அடைந்து உய்ந்தேன் என்ற கருத்தையுடைய அளவுபடாத திருத்தாண்டகத்தை முன்னர் அருளிச்செய்து, பொருந்திய திருக்குறுந்தொகையும், திருநேரிசையும், சந்த விருத்தங்களும் ஆகிய வெவ்வேறு பாக்களின்றன்மை மிகுந்த செந்தமிழ் மாலைகளால் திருப்பள்ளித்தாமங்கள் பலவற்றையும் சாத்தி, மிகுதியாய் மேன்மேல் எழுந்த அன்பினோடும் உலகம் போற்றும்படி பல நாட்கள் அங்குத் தங்கி இடைவிடாது நினைந்து செய்யும் கைத்திருத்தொண்டாகிய உழவாரப் பணியைப் பாராட்டிச் செய்வராகி, கசுக

1457. (இ - ள்) வெளிப்படை. எறியும் நீரினால் பொன்னையும் மணிகளையும் சிதறும் அலைகளையுடைய காவிரிக்கரையில் உள்ள திருவிடைமருதூரைச் சென்று சேர்ந்து, மானைப் பொருந்திய கையினையுடைய சிவபெருமானை அன்பு கூர வணங்கி, அங்குத் தங்கி, வளப்பமுடைய தமிழ்ப்பாமாலை பலவற்றையும் மகிழச் சாத்திப், பொறிகளையுடைய பாம்புகளைப் புனைந்த பெருமானைத் திருநாகேச்சுரத்தில் போற்றி, அரிய தமிழ்மாலை புனைந்து சென்று, மணம் நிறைந்த நல்ல மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த பழையாறையை யடைந்து திருச்சத்திமுத்தத்திற் சென்று சேர்ந்தனர். கசுஉ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1456. (வி - ரை) "ஆவடுதண் டுறையாரை யடைந் துய்ந்தேன்" என்பது பதிக ஈற்றுக் குறிப்பும் கருத்துமாம். பதிகப் பாட்டுக்களின் ஈற்றடி பார்க்க.

**அளவில் திருத்தாண்டகம்** - பெருமையை அளக்க முடியாத பதிகம். பதிகக் குறிப்புப் பார்க்க.

**முன்** - இது முதன்முறை தரிசித்தபோது பாடியருளியது. அதுவன்றியும் ஆவடுதுறையில் அருளிய பல பதிகங்களுள் முதலிற் பாடியருளியது இத்திருத்தாண்டகமேயாகும். இக்கருத்து "அடைந்து உய்ந்தேன்" என்றதனாற் பெறப்படும் என்க.

**வேறு வேறு பா அலர் சேந்தமிழ்த் தொடை** - குறுந்தொகை - நேரிசை - சந்த விருத்தங்கள் எனுமிவை வெவ்வேறாகிய தமிழ்ப்பாவினங்களாலாவன.

**தமிழ்த்தொடையாற் பள்ளித்தாமம்** - தமிழ்மாலைகள்.

**பலநாள் தங்கி** என்றது பதிகங்களாற் பெறப்படும் குறிப்பு.

# திருநாவுக்கரசு நாயனருடைய சோழநாட்டு யாத்திரைப்படம்.

திரு ஆவடுதுறை முதல் வேதாரணியம் வரையில்.
190 பாட்டு முதல் 300 பாட்டு வரையில்.

1 அங்குலம் 8 மைல்.



உதாரண குறிப்புக்கள்.

| | |
|---|---|
| தலம். | ○ |
| தாலுக்கா எல்லை. | — · — · — |
| ஆறு. | ═══ |
| ரயில்வேஸ்டேஷன். | ┼┼┼┼ |
| வண்டிப்பாதை. | ═══ |
| சாதாரண பாதை. | - - - - |
| ஏரி. | ⬭ |

நாயனர் யாத்திரை செய்த வழி

புரிவுறு - புரிதல். இடைவிடாது செய்தல். சொல்லுதல் என்றலுமாம். இப் பொருட்குப் புரிவுறு தொண்டு, கைத்தொண்டு என்று கூட்டுக.

போற்றிச் செய்தல் - மிகவும் பாராட்டிச் சோர்வுபடாது செய்தல்.

செய்வார் - எய்தி - வணங்கி வைகி - சாத்தி - புனைந்து - போந்து - எய்திச் - சேர்ந்தார் என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

பரிவுறுநற் றிருத்தொண்டு—என்பதும் பாடம். 191

1457. (வி - ரை) எறிபுனல் பொன்மணி சிதறும் திரைநீர் - "திகழ்ந்தபுனற் கொள்ளிடம்பொன் செழுமணிக டிரைக்கரத்தான், முகந்துதர" (1401) என்ற விடத்துரைத்தவை பார்க்க.

கீழ்ப்போந்த கொள்ளிடத்தின் தன்மை, மேல் உள்ள காவிரியில் மிக்குக் காணப்படும் என்பது.

அன்பினொடு - வணங்கி - என்க. தேவாரக் குறிப்புக்கள் பார்க்க. அன்பினொடு - சென்றெய்தி எனவும், அன்பினொடு - வணங்கி எனவும் இருதலையும் கூட்டி உரைக்க நின்றது. இடைநிலைத் தீபம்.

வைகி - பலநாள் அத்தலத்திற் றங்கி.

மகிழ - தாம் மகிழ்வுறவும், இறைவர் மகிழவும். உலகம் போற்றி புய்ந்து மகிழ என்றலுமாம். மாலை என்றதற்கேற்பச் சாத்தி என்றார்.

அரவம் புனைந்தார் - திருநாகேச்சுரம் என்ற தலப்பெயர்க்கேற்ற பொருள் விரித்துக் கூறும் அடைமொழி.

அருந்தமிழ்மாலை - மாலை - சாதியொருமை. நாயனாரது திருநேரிசை, திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம், வகைக்கு ஒவ்வொன்றாக மூன்று திருப் பதிகங்கள் இப்போது கிடைத்துள்ளன.

பழையாறு - பழையாறை - எனவும், ஆறை எனவும் வழங்கப்படும். அமர்நீதி நாயனார் அவதரித்த தலம். அவர்தம் புராணத்திறுதியிற் றலவிசேடம் பார்க்க. (பக்கம் ௬௮).

செறிவிரை நன் மலர்ச்சோலை - காவிரி நாட்டின் நீர்ச் செழிப்பும் பிறவளங் களும் குறிக்கப்பட்டது. நேரிற் கண்டோர் இதன் உண்மைத் தன்மையினை அறிவர்.

திருச்சத்திமுற்றம் - தலவிசேடம் பார்க்க. காவிரிக்குத் தென் கரையில் 22-வது தலம்.

சத்தி முற்றத்தை—என்பதும் பாடம். 192

திருவாவடுதுறை - முதல்முறை தரிசித்தது.

I திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

நம்பனை நால்வேதங் கரைகண் டானை ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லா லிருந்தான் றன்னைக் கற்பகமா யடியார்கட் கருள்செய் வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திகழு முத்தைத் திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
யம்பொன்னை யாவடுதண் டுறையுண் மேய வரனடியே யடிநாயே னடைந்துய்ந்தேனே.

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—திருவாவடுதுறை யிறைவரை அடைந்து உய்ந்தேன். "ஆவடு தண் டுறையுண் மேய வரனடியே யடிநாயே னடைந்துய்ந் தேனே" என்ற பதிகப் பாட்டுக்களின் மகுடம் காண்க. இதனை ஆசிரியர், "ஆவடுதண் டுறையாரை அடைந்தே னென்று" எனக்காட்டினர். "அளவில் திருத்தாண்டக" மென்று இப் பதிகச் சிறப்பினைப் போற்றினர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) நன்மை - நன்மைக்கெல்லாம் இருப்பிடம். கற்பகம் - வேண்டுவார் வேண்டுவ வெல்லாம் கொடுப்பது.—(2) மின்னுன் - மின்னினுள் இருந்து ஒளிதருபவன். மின்னிடைச் சேர் உருமினுன் - மின்தாக்குதலின் உளதாகும் முழக்கம் - ஓசை. இடி-உரும் - எனப்படும். மின்னினது ஒளியும் ஓசையும் ஒரு காலத்தே ஓரிடத்தே உளவாயினும் ஒளியின் வேகமிகுதியால் மின்ஒளி முன்னர்க் காணப்படும். சிலநேரம் கழித்தபின் இடிகேட்கப்படும். ஆதலின் பின்னர் வைத்தார். மின்இடைச்சேர் - உடன்பாடு எதிர்மறை யென்னுமிருவகைப்பட்ட மின்சாரச் சத்திகள் ஒன்றேடொன்று தாக்குதலால் இடையில் விளையும்.வெண்முகிலாய் எழுந்து மழை பொழிவான் - "மின்னுக்கெல்லாம் பின்னுக்குமழை" (பழமொழி). வெண்மழை - "ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும், பெய்யு மாமழைப் பெருவெள்ளம்" (நம்பிகள் - தேவா). தாயாகி - தந்தையாகி - சத்தி - சிவம்.—(3) வித்தினை முளைக் கிளையை வேரை - வித்தினின்றும் முன்னர் முளைதோன்றிக் கிளைக்கும்; அதன்பின்பே வேர் தோன்றும்; அம்முறையே வைத்தருளினுர்.—(4) பேணிய - தம்மை அடைக்கலமாக வந்தடைந்த. பித்தராம் - இறைவனைப் பற்றுதலிற் பித்துக்கொண்டாற் போன்ற அன்புடையவர்களாகிய."பித்துப்,பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னுலுணரும், மெய்த்தவர்" (சிவஞானபோதம்). ஏணி - தான் இருந்தபடியிருந்தும் தன்வழி அடைந்து முயல்பவர் மேல் ஏற உதவுவது. இடர்க்கடல் - துன்பமே நிறைந்த பிறவி. உருவகம். அக்கரை - துன்பங்கலவாத அந்தக்கரை; முத்தி; சிவனுலகு. வாங்கும் - கொண்டு சேர்க்கும். தோணி-நீரினுள் நின்றும் தான் கரையேற வேண்டாது தன்னை அடைந்து முயல்வார் கரையேற உதவுவது. ஏணி - தோணி - குறிப்புருவகம். ஆணி - உரையாணி - "தொண்டராணிப் பொன்" (திருவிருத் - ஆரூர்), "தொண்டர்க்காணி யெனும் பேறு" (நமிநந்தி - புரா - 31), "ஆணிபோல...ஏணிபோலிழிந் தேறியும்... தோணியாகிய" (குறுந்தொகை - சோற்றுத்துறை - 7).—(5) உதயத்தினுச்சி - தோன்றும் ஒளிப்பொருள்களுக் கெல்லாம் முன் தோன்றுபவன். தித்திப்பு - இனிக்கும் சுவைப்பண்பு. தேன் - கரும்பு - அப்பண்பினையுடைய பொருள்கள்.—(6)எல்லி- இரா. எல்லாவுலகும் சங்கரிக்கப்பட்ட ஊழிகுறித்தது.—(7) கடல் - வரை - வான் - ஆகாசம் - விசுவரூபம். என்புருகும் - எலும்பு உருக அன்பினுல் நையும். "புன்புலால் யாக்கை புரைபுரை கனிய" (திருவாசகம்).—(8) மெய்யானை - மெய்யினுள் நிற்பானை. சத்து ஆயினுனை.—(9) வேண்டாமை வேண்டுவது மில்லான் - "வேண்டுதல் வேண்டாமை யிலான்" (குறள்). தூண்டாமைச் சுடர்விடுநற் சோதி - இயல்பாய் ஒளியுடைய சோதி. நற்சோதி - தீமை கலவாத சுடர். "மைபொதி விளக்கே யென்ன" (473), "நெய்நின் றெரியு நெடுஞ்சுடரே சென்று, மைநின் றெரியும் வகை" (திருமந்திரம் 1 - 106).—(10) கோந்து - கொத்து. செந்தமிழோ டாரியன் - ஆரியன். வடமொழியினுள்ளான். "வடமொழியுந் தென் றமிழு மறைக ணன்கு மானவன்காண்" (சிவபுரம் - தாண்டகம் - 1), "தமிழ்ச் சொலும் வடசொலுந் தாணிழற் சேர" (குறிஞ்சி - பிள்ளையார் - அச்சிறுபாக் - 4), "ஆரியமுந் தமிழும் முடனே சொல்லிக், காரிகை யார்க்குக் கருணைசெய் தானே" (திருமந்திரம் - பாயிரம் - 65).—(11) நீசனே னுடலுறுநோ யான தீர அரித்தான் - உடல் உறுநோய் - உடல் உறுவதற்கான நோய்; முன்வினை. சூலை என்ற சரிதக் குறிப்புமாம். அரித்தான்-போக்கியவன். இஃது அடைந்துய்ந்தேன் என்றதன் காரணம் கூறியவாறு. அடைந்துய்ந்தேன் - இறந்த காலம் உறுதி குறித்தது. அடைந்து - புகலாகச் சேர்ந்து. முன்னர்த் திருமூலதேவ நாயனுர் அடைந்து "ஊனுடம்பிற் பிறவிவிடந் தீர்ந்துலகத் தோருய்ய" மூவாயிரம் ஆண்டு சிவயோகத் தமர்ந்து திருமந்

திரத்தால் சிவாகமப்பொருளைப் பாடியருளிய கருத்து எழ, அதனைப் பின்பற்றி நானும் அடைந்து என்ற குறிப்பாம். "காலனைக் காலாற், கடந்த காரணங் கண்டுகண் டடியேன்......அன்பொடு மடைந்தேன்" என்று இவ்வாறே பின்னர் இவற்றைக்கண்டு ஆளுடையநம்பிகள் இங்கு அடைந்தமை அவர்தந் திருவாக்காலறிக. பிறவி தீர்ந்து பசுத்தன்மை நீங்க வேண்டுவோர் அடையுமிடம் ஆவடுதுறையேயாம் என்பது. இப்பெரியார்களைப் பின்பற்றி இக்கருத்தே கடைப்பிடித்துப் பிற்காலத்திற் பட்டினத்துப்பிள்ளை, திருமாளிகைத்தேவர், நமச்சிவாய தேசிகர் முதலிய ஞானமுனிவர்களும் இங்கு வந்தடைந்தமையும் காண்க. ஞானராசதானியாக நமச்சிவாய மூர்த்திகள் வழிவந்த திருமடம் குலவும் பெருமை இன்றும் காணத்தக்கது.

II திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

திருவேயென் செல்வமே தேனே வானோர் செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்
உருவேயென் னுறவேயென் னூனே யூனி னுள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற [க
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய் காவாய்!
அருவாய வல்வினைநோ யடையா வண்ண மாவடுதண் டுறையுறையு மமர ரேறே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—பிறவியிடைப்பட்டு அலுத்தேன்; ஆற்றேன்; அமரரேறே! காவாய்; அடியேனை அஞ்சல் என்னாய்! என்பது கருத்து. ஆளுடையநம்பிகள் இரண்டாவது முறை இத்தலத்தில் இறைவரைத் தரிசித்தபோது இவ்வாறே "எனையஞ்சலென் றருளாய்! யாரெனக் குற வமரர்க ளேறே!" என்று பாடியருளியதும் காண்க. "அமரரேறே" என்று நாயனர் இப்பதிகத்துத் துதித்தவாறே "அமரர்களேறே" என நம்பிகள் போற்றியது இத்தலத்து எழுந்தருளியுள்ள தியாகேசப் பெருமானைக் குறிப்பது போலும்! "சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூர்ச் செம்பொனே!" என்று அத்திருப்பதிகத்தில் நம்பிகள் துதிப்பதும் காண்க. "அஞ்சேலென்னாய்!" என்பது பற்றி முன் திருத்தாண்டகப் பதிகப் பாட்டுக் குறிப்புப் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) உரு - உறவு - ஊன் - உள்ளம் - கரு - கண் - மணி - பாவை என்பன அருமைப்பாடு குறிப்பன. அன்றியும் "ஊன்கருவி னுண்ணின்ற சோதி யானை", "உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்" என்றபடி உடம்புட் கலந்துநின்று இறைவன் உணர்த்தும் முறையினையும் குறிப்பன.—(2) மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவில் - என்பது, நாயனர், திருவைந்தெழுத்தை இடைவிடாது பயிலும் வழக்கினையும், மறவேன் திருவருள்கள் - என்றது அதற்குக் காரணத்தையும், வஞ்சநெஞ்சில் ஏற்றேன் பிறதெய்வம் - என்றது அதன் காரணமான சரிதக் குறிப்பினையும் குறித்தன. செய்யக் கண்டும் - சிறப்பும்மை தொக்கது.—(3) நின்றனுமம் உரையா உயிர்போகப் பெறுவேனகில் உறுநோய்வந் தெத்தனையு மூற்றலேன்னே - இறக்கும்பொழுது சிவபெருமானை நினையவும் சொல்லவும் பெறவேண்டு மென்பது நாயனர் கேட்கும் மிகச் சில வரங்களுள் ஒன்று. 1399-வது பாட்டின் "ஈன்றாளுமாய்" என்ற பதிகப்பாட்டுக் குறிப்பில் 8-வது பாட்டுக் குறிப்புப் பார்க்க. (பக்-களரு). எந்நோய்கள் வந்தாலும் சாம்போது திருநாமம் சொல்லும்உணர்வு பிறழாதிருப்பின், அவை தீமை விளைக்கலாற்ற என்பதும், அந்நோய்கள் சாதலைச் செய்து விடினும், திருநாமம் பிறழாமையால் மறு பிறவியிலும் மறவாமை கைவந்து நன்னெறிப் படுத்தும் என்பதும் கருத்து. "மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்றன்னைப், பொய்கலந் தாருட் புகுதாப் புனிதனை, யைகலந் தாவி யெழும்பொழு தண்ணலைக், கைகலந் தார்க்கே கருத்துற லாமே" (8 - 480) என்ற திருமந்திரமும்

காண்க. உறுநோய் - பிறவி உறும் நோய்கள்.—(4) நிலத்தார்...நீசன் - ஒன்றும் பயனில்லாது பூமிப்பொறையாய்க் கழியும் நீசன். அலுத்தேன் - ஆதலின், அஞ்சல் என்னுய்! என்று, கேட்பதற்குக் காரணங்காட்டியபடி.—(5) கழலே வாழ்த்தித் துறவாத துன்பம் துறந்தேன்-ஊழ்வினை வந்துற்றலேன்னே - "சலியாது முயன்ற தவப்பெருந் தொண்டர்" ஊழையும் புறங்காணவல்லர். "ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித், தாழா துஞற்று பவர்" (குறள்).—(6) நான் ஆர் உமக்கோர் வினைக் கேடனேன்-உமது அருளும் தொழிலும் பயனிலாது கழிவது என்மட்டில்—(7)கடன்-பிழைபொறுத்தி என்று நான் வேண்டாமலே பொறுத்தல் உனது கடமை. ஏன்? எனில், பேரருள் உன்பாலாவது அன்றே? என்க.—(8) அன்பு கலந்தார் மனம் கவரும் காதலான் - அன்பினுல் உன்னிடம் மனங் கலந்தவர்களது உள்ளங் கொள்ளை கொள்ளும் காதலை ஈபவன். மலம் - ஆணவமும், மாயக்காயம் - மாயாமலமும், நாளு மலந்தேன் - கன்மமலமும் குறித்தன.—(9) ஒன்றுக் கல்லாதார் ஒன்றுக்கும் பயனற்றவர். முற்றும்மை தொக்கது. திறந்து ஒழிந்தேன் - அவர் பக்கத்தணுகி வீணுனேன்.—(10) துறந்தார் தம் தூநெறி - ஞானநெறி. துணைமாலை சூட்ட - கிரியை நெறியில் அகத்திலும் புறத்திலும் மாலைசாத்திப் பூசிக்க. துணைமாலை - அகம்புற மிரண்டிலும் அலங்கரிக்கும் மாலை. துணை-இரண்டு. உயர்ந்த துணையாகிய என்றலுமாம். தூயேனல்லேன் - அகமும் புறமும் விதிப்படி தூய்மை செய்து பூசிக்கும் சிவாகம விதி குறித்தது. பிறவா நாள் "ஓவுநாள்" என்றபடி, இறந்தநாள் - ஒழிந்தநாள் - என்பது. கோயில் - பெரிய திருத்தாண்டகம் பார்க்க. அறிந்தேன் அஞ்சேலேன்னுய்-அறிந்தமையால் வந்து அடைந்தேன்; அஞ்சல் என்று காப்பாய். நம்பிகளது இத்தலத் தேவாரங் காண்க.

III திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

நிறைக்க வாலிய ளல்லளிந் நேரிழை; மறைக்க வாலிய ளல்ளிம் மாதராள்;
பிறைக்க வாலப் பெரும்புன லாவடு, துறைக்க வாலியோ டாடிய சுண்ணமே. 1

பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத், தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்
அஞ்சு வாளல்ல ளாவடு தண்டுறை, மஞ்ச ஞேடிவ ளாடிய மையலே. 7

பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான், மிக்க வாளரக் கன்வலி வீட்டினுன்
அக்க ணிந்தவ ஞவடு தண்டுறை, நக்க னென்னுமிந் நாணிலி காண்மினே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—நாயகனைக் கண்டு மையல்கொண்டு தன்வசமிழந்து பிதற்றும் மகளைக் கண்டு கூறும் தாய் கூற்ருகிய அகப்பொருள் துறையில் அமைந்தது இத்திருப் பதிகம். "பெயர்த்து மவனுக்கே பிச்சியானுள்......தன்னை மறந்தாள்" என்றபடி உள்ளதிலை. "கொழுந்திரள் வாயார் தாய்மொழியாக" என்ற (சேந்தனுர் - திரு விடைக்கழி - 11) திருவிசைப்பா இக்கருத்தை விளக்கும். பசுத்துவம் கெடுதல் இத் தலத்தின் தத்துவம் என்பது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) வாலியள் - வலியள். முதனீண்டது. பெரும் புனல் - காவிரித்துறைச் சிறப்பு.—(2) களவு - களவொழுக்கம்.—(3) ஓதி - பெயர். ஓதினவன். சோதியே சுடரே - இத்தொடருள்ள திருவாசகம் காண்க.—(4) கார் - கருமை. நிறப்பண்பு. தார்க்கு-தார் பெறுதற்கு. தாழும் - விரும்பும். நிலை தாழ்தல் என்ற தும் குறிப்பு.—(5) அநகு சென்றிலள்; ஆயினும், என்னும்.—(6) கழலும் கை வளை - காதலினுல் உடல் இளைத்தற் குறிப்பு.—(7) ஆடிய மையலே - மையலின் தன்மைதான் என்னே! "ஆடிய சுண்ணமே" (1) என்றதுமிது.—(9) 6-வது பாட்

டின் கருத்து.—(10) நக்கன் - உடைநீத்த உருவினன். நாணிலி - நாணில்லாமையின் நக்கன் என்பாள்.

IV திருச்சிற்றம்பலம் திருநேரிசை

மஞ்சனே ! மணியு மானாய் ! மரகதத் திரளு மானாய் !
நெஞ்சுளே புகுந்து நின்று நினைதரு நிகழ்வி னானே !
துஞ்சும்போ தாக வந்து துணையெனக் காகி நின்று
அஞ்சலேன் றருள வேண்டும் ஆவடு துறையு ளானே ! 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஆவடு துறையுளானே ! அஞ்சலென்றருள வேண்டும்; ஐவர் வந்து கலக்காமைக் காத்துக் கொள்ளாய் ! என்னை நைவியா வண்ணம் நல்காய் !

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நெஞ்சுளே புகுந்துநின்று நினைதரு நிகழ்வினான் - இறைவன் உயிர்க்குயிராய் உண்ணின்று காட்டுமுபகாரம் செய்பவன் என்பது. இதுவுன் தன்மையாதலின் துஞ்சும்போது ஆகவந்து துணைசெய்ய வேண்டும். ஏன்? வெளியில் உள்ள எவரும் அந்தத் துணை செய்யலாற்றார். உண்ணின்று காட்டும் நீயே, அப்போது உணர்த்தல் வேண்டும் என்பது.—(3) ஒட்டவே ஒட்டி - "ஒட்டிட்ட பண்பின்" (பிள்ளையார் - மயிலை - 1); சிவனோ டத்துவிதமாகக் கலந்து ; நீ ஒட்டும்படி நான் ஒட்டி".—(5) ஐவர் - ஐம்பொறிகள். 2-வது பாட்டும் இக்கருத்து. "மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்து" (திருவாசகம்); "புள்ளுவ ரைவர் கள்வர்" (தனி - நேரிசை).— (6) கார் அழல்-அழல்போல் வருத்தும் கரிய விடம். செவ்வழல் என்பதியல்பு; ஆனால் இஃது அதற்கு மாறாகக் காரழல் என்றலுமாம்.—(7) குறிக்கோள்.—(8) செய்வினை - நைவியா வண்ணம் என்க. நைவித்தல் - வருத்துதல்.

சந்தவிருத்தங்கள் - இவை இப்போது கிடைத்தில.

குறிப்பு :—"மாயிருஞாலம்" என்ற திருநேரிசை பின்னர்ப் பாடப்பட்டது.

தலவிசேடம்:—முன்னர் I திருத்தாண்டகப் பாட்டுக் குறிப்பினுள் "அடைந்துய்ந்தேன்" என்றவிடத் துரைத்தவை பார்க்க. மூவர் பதிகப்பாடலும், சேந்தனார் திருவிசைப்பாப் பதிகமும், திருமூலர் திருமந்திரம் 3000-மும் பாடப்பெற்ற தனிச் சிறப்புடையது. திருக்கயிலாயத்தில் இறைவனோடு சொக்கட்டாடிக் களித்தமையால் உமாதேவியார் பசுவடிவமெய்தினர் என்பதும், இங்குப் பூசித்து அவ்வடிவம் நீங்கப் பெற்றனரென்பதும், அதனால் இப்பெயர் போந்த தென்பதும் தலவரலாறு. இங்கு வந்து அடைந்த பசுக்கள் என்னும் எல்லாவுயிர்களுக்கும் பசுத்தன்மையாகிய மலப் பிணிப்பு நீக்கி முத்தியளிக்கும் தலம் என்பதும் குறிப்பு. அநாதிமுத்தித் தலம். கோமுத்திபுரம், பிப்பிலாரணியம், நவகோடிசித்த வாசபுரம் முதலிய பற்பலவாகிய காரணப் பெயர்களுடையது. முசுகுந்த மன்னர் இங்குப் பூசித்து மகப்பேறு பெற்றனர். வாதவூரடிகள் குருதரிசனங் கண்டு போற்றினர். தமது தந்தையார் செய்யும் சிவவேள்வியின் பொருட்டு, "இடரினுந் தளரினும்" என்ற திருப்பதிகம் பாடி ஆளுடைய பிள்ளையார் இங்கு இறைவரிடத்து ஆயிரம்பொன் கொண்ட உலவாக்கிழி பெற்றுத் தந்தைக்குக் கொடுத்தனர். இச்செய்தியை திருநாவுக்கரசு நாயனார் பின் முறை இங்கு வந்து தரிசித்தபோது "கழுமல ஆரர்க் கம்பொன், ஆயிரங் கொடுப்பர் போலும்" என்று போற்றியருளினர்.

சுவாமி - மாசிலாமணி ஈசுவரர்-செம்பொற் றியாகர். அம்மையார் - ஒப்பிலா முலையம்மை. சுவாமிபெயரும் அம்மைபெயரும் தியாகேசர்பெயரும் ஆளுடைய நம்பிகள் "கங்கைவார் சடையாய்" என்ற பதிகத்துள் முறையே9-3-6-திருப்பாட்டுக்களிற்

*பொறித்துப் போற்றியமை காண்க. தீர்த்தம்* - கோமுத்தித் தீர்த்தம். *மரம்* - அரசு. *பதிகம்* 8.

*நாரசிங்கன் பேட்டை என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும் தென்கிழக்கில் மட்சாலைவழி ஒரு நாழிகையளவில் அடையத்தக்கது.*

## திருவிடைமருதூர்

I *திருச்சிற்றம்பலம்* திருநேரிசை

*காடுடைச் சுடலை நீற்றர் கையில்வெண் டலையர் தையல்*
*பாடுடைப் பூதஞ் சூழப் பரமனூர் மருத வைப்பிற்*
*றேடுடைக் கைதை யோடு சூழ்கிடங் கதனைச் சூழ்ந்த*
*வேடுடைக் கமல வேலி யிடைமரு திடங்கொண் டாரே.* 1

பதிகக்குறிப்பு - *பரமனூர் - முதல்வர் - நீதியார் - எந்தை, இடைமருது இடங் கொண்டாரே.*

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) கமலவேலி - *தாமரைக்கிடங்கு சூழ்ந்த.* இடங் கொண்டார் - *விளங்க வீற்றிருந்தார்.*—(3) பொன்னித் தென்பால் - *இது காவிரிக் குத் தென்கரையில் 30-வது தலம்.*—(4) *சொற்பொருட் பின்வருநிலை.*—(5) மேலை ஏதங்கள் - *மூல மலங்கள். "மூலமாகிய மும்மல மறுக்கும்" (திருவாசகம்).*— (7) இடர் - *மலங்களும் அவற்றால் வரும் பிறவித் துன்பங்களும்.*—(9) இன்றுடனுலக மேத்தும் - *வினைகள் தீர இன்றும் வந்து வழிபட்டு நன்மையடையும்.* இடங்கொண் டாரே *என்று பாட்டுத்தோறும் மகுடம் வைத்து ஓதியருளியது இத்தலத்தில் இறை வர் தேற்றமாக* மகாலிங்கம் *என்ற பொதுப்பெயரே தமது சிறப்புப் பெயராகத் தாங்கி விரும்பி வீற்றிருந் தருள்செய்யும் சிறப்புக் குறித்தது. "இடைமருது மேவி யிடங் கொண்டாரே" என்ற இக்கருத்துக்கொண்ட மகுடத்துடன் திருத்தாண்டகப் பதிகமும் அருளியது காண்க.*

II *திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

*பாச மொன்றில ராய்ப்பல பத்தர்கள், வாச நாண்மலர் கொண்டடி வைகலும்*
*ஈச னெம்பெரு மானிடை மருதினிற், பூச நாம்புகு தும்புன லாடவே.* 1

*இம்மை வானவர் செல்வம் விளைத்திடும் ; அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும் ;*
*எம்மை யாளு மிடைமரு தன்கழல், செம்மை யேதொழு வார்வினை சிந்துமே.* 4

*கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும், பனிம லர்க்குழற் பாவைநல் லாரினுந்*
*தனிமு டிகவித் தாளு மரசினு, மினியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே.* 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக்குறிப்பு :—*இடைமருதினில் பூசப்புனலாடப் புகுவோம். இடைமருதர் மிக இனியவர் ; அவரை என் உள்ளம் உள்கி உருகும் ; அவரைத் தொழுவார் வினைகள் போகும்.*

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) பாசமொன்றிலராய் - *பாசம் ஒன்றும் இல ராயினும் - சீவன் முத்தராயினும். "பாச மற்றில ராயினும் பார்மிசை, ஆசை சங்க ரற் காயின தன்மையால்" (திருஞான - புரா - 189).* பூசம் நாம் புகுதும் புனல் ஆடவே - *தைப்பூசத் தீர்த்தவிழா. "பூசத் தீர்த்தம் புரக்கும் பொன்னி, யயிரா வணத் துறை யாடு மப்ப !" (திருவிடை - மும் - கோ - 28).*—(2) மறையின் - *விதிப்படியே வழிபாடு செய்ய என்க.*—(4) *இம்மை அம்மை வீடு என்ற மூன்று பயனும் தருவது.*—

(5) மேலை வினைகள் - பழவினைகள்.—(7) நண்ணாவினை - இனிவரக்கடவ வினைகள் வாரா. ஆகாமியம் ஏறாது. நாசம் - முன் உள்ளவையும் ஒழியும்.—(8) வேந்த - உலகங்கள் தீந்ததனால் உளதாகிய.—(10) மக்கள் இனியர் என்று நினைக்கும் அனைத்தினும் இறைவர் இனியர்.

III　திருச்சிற்றம்பலம்　திருக்குறுந்தொகை

பறையி னோசையும் பாடலி னோசையு, மறையி னோசையும் வைகு மயலெலாம்
இறைவ னெங்கள் பிரானிடை மருதினி, லுறையு மீசனை யுள்குமென் னுள்ளமே. 1

துணையி லாமையிற் றூங்கிருட் பேய்களோ, டணைய லாவ தெமக்கரி தேயென,
விணையி லாவிடை மாமரு தில்லெழு, பணையி லாகமஞ் சொல்லுந்தன் பாங்கிக்கே. 4

மங்கை காணக் கொடார்மண மாலையைக்; கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை;
நங்கை மீரிடை மருதரிந் நங்கைக்கே, யெங்கு வாங்கிக் கொடுத்தா ரிதழியே. 6

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—இடைமருதில் ஈசனை என் உள்ளம் உள்கும். அவரைச் சொல்லவே வினைகள்போயகலும். அவரைக்கண்டு என் மகள் மையலாயினள் என்று கூறும் தாய் கூற்று.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) பறை - பாடலுக்கிசைய முழக்கப்படும் இயங்கள்.—(2) மாயன் - மறைந்துள்ளவன்.—(4) ஆகமம் - நீதி.—(5) பயிலும் - பாடி உள்ளங் கலக்கும்.—(6) 4, 5, 6 பாட்டுக்கள் தலைவியின் காதன்மிக்க நிலை கண்ட தாய் கூற்றாகிய அகப்பொருட்டுறையில் அமைந்தன. 6-வது பாட்டின் சுவை கண்டுகளிக்கத்தக்கது. இதழி - இங்கு அடையாள மாலையினையும்,இதழிபோன்ற பொன்னிறமாகிய பசலையினையும் குறித்தது.

IV　திருச்சிற்றம்பலம்　திருத்தாண்டகம்

சூலப் படையுடையார் தாமே போலுஞ் சுடர்த்திங்கட் கண்ணி யுடையார் போலும்
மாலை மகிழ்ந்தொருபால் வைத்தார் போலு மந்திரமுந் தந்திரமு மானார் போலும்
வேலைக் கடனஞ்ச முண்டார் போலும் மேல்வினைக ளீர்க்கும் விகிர்தர் போலும்
ஏலக் கமழ்குழலாள் பாகர் போலு மிடைமருது மேவிய வீச னாரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இடைமருதூர் மேவிய ஈசனார் சூலப்படையுடைமை, திங்கட் கண்ணியுடைமை முதலிய தன்மையுடையார். அவர் அடியார்மேல் வினைகள் தீர்க்கும் விகிர்தர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மாலை - விட்டுணுவை. "மந்திரமுந் தந்திரமு மருந்து மாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்" (தாண் - புள்ளிருக்கு வேளூர்)—. (2) பத்து - மிகுதி குறித்தது.—(4) வியன் கோண்டல் மேற்சேல் - "புயல் வணற் கருளிப் பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த மேக நாயகனை (திருவிசைப்பா - சேந் - வீழி - 1)—(5) ஊகம் - குரங்கு. "வேயுயர் சாரற் கருவிர லூகம் விளையாடும்" (குறிஞ்சி - சிராப்பள்ளி - 7 - பிள்ளையார்). அண்ணா - நெருங்கமுடியாத இடம்; அணுகமுடியாத நெருப்புமலை யாதலின் திருவண்ணாமலையைக் குறிக்கும்.—(6) ஐயிரண்டும் ஆறேன்றும் - 16 கலைப் பிராசாத மந்திரம்; அறுமூன்று - 18 புராணங்கள்; நான்மூன்று - 12 - மூலமந்திரத்தோடு சங்கிதா மந்திரங்களும் குறிக்கும்.—(7) இப்பாட்டுப் பொருள் எளிதில் விளங்காதனவற்று ளொன்று. எரியாய தாமரை -

இதயம்?.—(9) வந்த வரவுஞ் செலவு மாகி மாறுதேன் னுள்ளத் திருந்தார் - "இரு வினையிற் போக்கு வரவு புரிய வாணையி, னீக்க மின்றி நிற்குமன்றே" (சிவஞான போதம் 2). வரவு - செலவு பிறப்பும் இறப்பும். சிருட்டியும் ஒடுக்கமும்.

V திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

ஆறு சடைக்கணிவ ரங்கைத் தீய ரழகர் படையுடைய ரம்பொற் றோண்மே
னீறு தடவந் திடப மேறி நித்தம் பலிகொள்வர் மொய்த்த பூதங்
கூறுங் குணமுடையர் கோவணத்தர் கோடால வேடத்தர் கொள்கை சொல்லி
னீறு நடுவு முதலு மாவா ரிடைமருது மேவி யிடங்கொண் டாரே. 1

பச்சை நிறமுடையர் பாலர் சாலப் பழையர் பிழையெலா நீக்கி யாள்வர்
கச்சைக் கதநாகம் பூண்ட தோளர் கலனொன்று கையேந்தி யில்லந் தோறும்
பிச்சை கொளநுகர்வர் பெரியர் சாலப் பிறங்கு சடைமுடியர் பேணுந் தொண்ட
ரிச்சை மிகவறிவ ரென்று முள்ளா ரிடைமருது மேவி யிடங்கொண் டாரே. 7

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—இடைமருதூரிற் பொருந்தி விரும்பி வீற்றிருக்கும் இறைவர் ஆறு சடைக்கணிவர்; என்னுள் நீங்கார்; எம்மையாள்வர்; பிழையெல்லாம் நீக்கி யாள்வார்; தொண்டர் இச்சைமிக அறிவர்; ஏத்துவார்பால் இருந்தார்; இவைமுதலிய பல பண்புகளுடையவர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு.—நீறுதடவந்து - நீறுதடவி - பூசி. கூறும் - ஏத்தும். கோடாலம் - எலும்புமாலை; கங்காளம். கொள்கை - தன்மை. ஈறுநடுவுமுதலுமாவர்- பொருட் கெல்லாம் எல்லைகடந்தவர். காலம்பல கழித்தார் - காலங்கடந்தவர்.—(4) நீட்டுரவர்-நேசமில்லார். கடுஞ்சித்தர்.—(5) கரப்பர்-வெளிப்படார் என்ற கருத்து.—(6) ஆகுதி - சிவவேள்வி. மந்திரத்தார் - மந்திரங்களால் வருபவர்.—(7) பச்சைநிறம் - சிவபெருமானது ஐம்முகங்களுள் ஒன்றன் நிறமென்ப. "வெளியாய் கரியாய், பச்சையனே செய்ய மேனியனே" (நீத் - விண் - 31 - திருவாசகம்). அம்மைபாகத் தின் நிறம் என்றலுமாம். பேணும் தொண்டர். "தம்மை மறந்து நின்னை நினைப்பவர்" (11 - திருமுறை - கோயினான் - 4). என்றுமுள்ளார் - அநாதி. "அவி நாசி".—(8) எங்குந்தாமே - "சர்வவியாபகர்".—(9) ஏழில் - ஏழுவகை யிசையில். ஏழு - எண்ணுகுபெயராய்த் அத்தம் முதலாய் வரும் ஏழிசையை உணர்த்திற்று.

தலவிசேடம்:—திருவிடைமருதூர் என வழங்கும். காவிரிக்குத் தென்கரையில் 30-வது தலம். மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. பதினொராந் திருமுறையினுள் பட்டினத்துஅடிகள் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை என்ற அருணூலால் இதன் பெருஞ் சிறப்புக்களையும், பூசித்தோர் பெருமைகளையும் போற்றியருளினர். உமாதேவியார் - மூத்தபிள்ளையார் - இளையபிள்ளையாரிவர்களும், விட்டுணு முதலிய தேவர்களும், வேதங்களும், மூன்று கோடி இருடியர்களும், வசிட்டர் முதலிய மாமுனிவர்களும், ஐராவணமும், சிவவாக்கியர் - சமயாசாரியர்கள் - பத்திரகிரியார் முதலிய பெரியோரும் பூசித்த பெருமையுடையது. பெரிய அன்பின் வரகுணதேவருக்குக் கொலைப்பழி நீக்கிய தலம். இப்பெருமையால் இன்றும் இத்திருக்கோயிலின் பெரிய சுற்றுப்பிரகாரத்தை நியதியாய் வழிபடுவோர் முயலகன்- பைத்தியம் முதலிய பெரு நோய்களினின்றும், பாவங்களினின்றும் நீங்கியுய்வது கண்கூடு. வரகுணதேவரைப் பிடித்து நீங்கிய பிரமகத்தி கிழக்குக் கோபுரவாயிலில் உள்ள ஐதிகம் காணத்தக்கது. தைப்பூசத்தில் காவிரியில் ஐராவணத்துறையில் நீராட்டுச் சிறப்புக் கொண்டாடப்படும். பட்டினத்துஅடிகள் கீழைக்கோபுர

வாய்தலினும், பத்திரகிரியார் மேலைக்கோபுர வாய்தலினும் உள்ளனர்; அவை, அவ்விரு பெருமக்களும் பலநாள் தங்கித் தவம் புரிந்து அருள் பெற்ற இடங்களாகும். வடநாட்டில் உள்ள மல்லிகார்ச்சுனம் என்ற சீபர்ப்பதத்துக்கும், தெற்கே பாண்டி நாட்டில் உள்ள திருப்புடைமருதூர் என்ற தலத்துக்கும் இடையில் உள்ளதாலும், இம்மூன்றற்கும் ஒன்றுபோல மருது தலமர மாதலாலும் இது இடைமருது எனப் பெயர் பெறும். மௌனமாய்த் தவஞ் செய்தலின் மூகாம்பிகை எனப்படும் அம்மையாரது கோயில், அம்மை கோயிலின் வெளியில் தென்புறத்தில் உள்ளது. சுவாமி - மகாலிங்கேசுவரர் - மருதவாணர். அம்மையார் - நன்முலை நாயகி. தீர்த்தம் - காவிரி - அயிராவணத்துறை. மரம் - மருது. பதிகம் - 12. சுவாமி - மகாலிங்கர் என்ற பொதுச் சிறப்புப் பெயரால் விளங்குதற்கேற்ப, இத்திருத்தலத்தினைச் சுற்றிலும் சிவாலய அமைப்பினை யொட்டி, நடேசர் சந்நிதி சிதம்பரமாகவும், தட்சிணாமூர்த்தி சந்நிதி ஆலங்குடியாகவும், நவக்கிரகக் கோயில் சூரியனார் கோயிலாகவும், விநாயகர் சந்நிதி திருவலஞ்சுழியாகவும், முருகர் சந்நிதி சுவாமிமலையாகவும், வைரவர் சந்நிதி சீகாழியாகவும், சண்டீசர் சந்நிதி திருச்சேய்ஞலூராகவும் இவ்வாறு பரிவார சந்நிதிகள் அவ்வத் தனிச்சிறப்புடன் தனித்தலங்களாகவே அவ்வவற்றுக்குரிய இடங்களில் விளங்குதல் இதன் பெருமையை விளக்கும்.

இது திருவிடைமருதூர் என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும் வடக்கே மட்சாலை வழி ½ நாழிகையளவில் அடையத்தக்கது.

### திருநாகேச்சரம்

I　திருச்சிற்றம்பலம்　　திருநேரிசை

கச்சைசே ரரவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்
பிச்சைகொண் டுண்பர் போலும் பேரரு ளாளர் போலும்
இச்சையான் மலர்க டூவி யிரவோடு பகலுந் தம்மை
நச்சுவார்க் கினியர் போலு நாகவீச் சரவ னாரே.　　1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—நாகவீச்சரவனாராகிய இறைவர் கறைமிடற்றர் - பிச்சையேற்றுண்பர் - பேரருளாளர் - முதலிய பண்புகளுடையார்; அவர் தம்மை நச்சுவார்க் கினியர்; தொழுதெழுவார்கட்கெல்லாம் நற்றுணையாவர்; இறைவனே என்று தம்மை நம்புவார்க் கன்பர்; வஞ்சகர்க்கரியர்; ஆயின், மருவினார்க்கெளியர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) பிச்சை கொண்டுண்பர் - பேரருளாளர் - பிச்சைகொண்டுண்பது அவரது பேரருளின்றிறம். "எற்றுக் கிரக்கும்? - நிரந்தரமாக நினையு மடியார், இரந்துண்டு தன்னடி யெட்டச் செய்தானே" (திருமந்திரம்). இச்சையால்.........இனியர் - மனம் வாக்குக் காயங்களால் எப்போதும் விரும்புபவர்க்கு இனிமையர். நச்சுதல் - விரும்புதல்.—(2) சேடு - வெள்ளநீர். நாடறிபுகழர் - உலகங்களெல்லாம் அறிந்தேத்தும் புகழ்.—(6) மறை உறு மொழியர் - வேதங்களைச் சொன்னவர்.—(8) மோடி - துர்க்கை.—(9) வக்கரை - திருவக்கரை. தொண்டைநாட்டில் தேவாரப் பாடல்பெற்ற தலங்களுள் ஒன்று. நக்கரை உருவர் - நிர்வாணமான இடையை உடைய உருவர்.—(10) தன்மை - பதித்தன்மை.

II　திருச்சிற்றம்பலம்　　திருக்குறுந்தொகை

நல்லர் நல்லதோர் நாகங்கொண் டாட்டுவர்; வல்லர் வல்வினை தீர்க்கு மருந்துகள்;
பல்லி லோடுகை யேந்திப் பலிதிரி, செல்வர் போற்றிரு நாகீச் சரவரே.　　1

சந்தி ரன்னொடு சூரியர் தாமுடன், வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்,
ஐந்த லையர வின்பணி கொண்டருள், மைந்தர் போன்மணி நாகேச் சரவரே. 4

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—திருநாகேச்சரவர் நல்லர் ; வல்வினை தீர்க்கும் மருந்துகள் வல்லர் ; பலிதிரி செல்வர் ; நாவலந்தீவினில் வாழ்பவர்க்குப் பாவம் பற்றறுத்திடும் தேவர் ; சந்திரனும் சூரியனும் நாகராசனும் பூசிக்கப்பட்டவர் ; அவர் நாம மாகிய ஐந்தெழுத்தினை ஓதுவார்க்கு அண்ணிக்கும் தேனர் ; உலகத்தவராடிடும் தீர்த்தர்.

**பதிகப்பாட்டுக் குறிப்பு** :—(1) **பலிதிரி செல்வர்** - உலகமெல்லாந் தம் முடைமையாக்கொண்ட செல்வர் ; ஆயினும், பலிதிரிந்துண்பர் ; அது அடியார் பொருட்டாம்.—(2) **நாவலம் பெருந்தீவு** - ஜம்புத்தீபம் என்பர் வடவர். பாரதநாடு. எந்நாட் டவர்க்கு மிறைவராயினும் நாவற்றீவைப் புண்ணிய நிலமாகக் கொண்டு விளங்க வீற்றிருப்பர். "பேசி லத்திசை யொவ்வா பிறதிசை" (புரா).—(4) **இத் தலத்தில்** சந்திரர் - சூரியர் - நாகராசன் பூசித்தது தல வரலாறு.—(5) **குமண்டை** - செருக்குச் செயல். "கூடுமுயிருங் குமண்டையிட" (திருவா - குலாப்) **விதாதா** - பிரமன். **செண்டர்** - பந்தினையுடையார். **செண்டு** - பந்து "எச்சனைத் தலையைக் கொண்டு செண்டடித்து" (திருவிசை) நிலைகுலைத்தவர்.—(7) **அண்ணிக்கும்** - இனிக்கும்.—(9) **சுட்ட செய்கையராயினும்** - **குளிர்விக்கும் சிட்டர்** - முரண் அணி. **சுட்ட வல்வினை** - தொகுதியாகிய - ஆழ்ந்த - கடுவினை.—(10) **ஆடிடுந் தீர்த்தர்** - **தீர்த்தம்** - தூய்மை செய்வது. நீருக்கு வழங்கும் காரணப்பெயர். அதற்கேற்ப **ஆடிடும்** என்றார். "செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே" (தேவாரம்). பதிக முழுதும், **போல்** - போல்வர் - ஈறு குறைந்தது. ஆவர் என்ற பொருளில் வந்தது. போல் அசை என்பாருமுண்டு.

III திருச்சிற்றம்பலம் **திருத்தாண்டகம்**

தாயவனை வானோர்க்கு மேனோ ருக்குந் தலையவனை மலையவனை யுலக மெல்லாம்
ஆயவனைச் சேயவனை யணியான் றன்னை யழலவனை நிழலவனை யறிய வொண்ணா
மாயவனை மறையவனை மறையோர் தங்கள் மந்திரனைத் தந்திரனை வளரா நின்ற
தீயவனைத் திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 1

**பதிகக் குறிப்பு** :—தாயவன் - உலகமெல்லாம் ஆயவன் - மந்திரன் - தந்திரன் - நின்னடைந்தார் தம்வினைநோய் பாவமெல்லாம் அரித்தான் - காதலித்து நினையாத கயவர் நெஞ்சில் வாரான் - மதிப்பவர்தம் மனத்துளான் - நேசர்க்கு நேசன் - நீள் வான முகடதனைத் தாங்கிநின்ற மலையான் - தன்பக்கல் விரும்புவார்க்கு மெய்யான் - விரும்பாத வரும்பாவியர்கட்கென்றும் பொய்யான் - தன்னினையா வஞ்சர் தம்மை மறந் தான் - அஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க்கென்றுஞ் சிறந்தான் - ஒருவருமீங் கறியா வண்ண மென்னுள்ளத் துள்ளே யொளித்துவைத்த சிறையான் - குறியிலாக் கொடியேனை யடியேனாகச் செய்தான் - வான்பயிர் - அப்பயிரின் வாட்டந் தீர்க்குந் துளியான் - அடைந்தோர் பாவந் தீர்த்தான் என்பன முதலிய பண்புகளுடைய திருநாகேச்சரத்துள்ள இறைவனைச் சேராதார் நன்னெறிக்கட் சேராதாரே.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **தாயவன்** - தாய்போன்றவன். எல்லாப் பொருளிலும் தாவியுடனிருந்தவன். "தாவியவனுட னிருந்துங் காணாத தற்பரன்" (தேவா. கோளிலி). **உலகமெல்லாம் ஆயவன்** - தனது மாயாசத்தியினின்றும் உலகங் களைத் தோற்றுவிப்பவன். **வளராநின்ற தீயவன்** - உலகத்தை வளர்க்கும் தீயின் உள்

நிற்பவன். **சேராதார் நன்னெறிகட் சேராதாரே** - சேரார் தீநெறிக்கே சேர்வார் என்பது குறிக்க மங்கல வழக்குப் பற்றிக் கூறினுர். "திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றூரே" என்று இதனை விளக்குதல் காண்க. மறையு மாகமங்களும் முறையிட்டுரைப்பினும் அறிந்துவந்து சேராதார் தீநெறியிலே நிலைத்து வருந்தி யுழல்வர். அதுவும் அவன்றிருவருள். "மரபின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கும் முறைமையினு லின்பதுன்பங் கொடுத்த லாலே" (சித்தியார் - 8. 17).—(2) **அரித்தல்** - அழித்தல். "பயின்ற பாவத்தை நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே". **தெரித்தான்** - அறிவித்தவன்.—(3) **கயவர்** - கீழோர். "நன்றறி வாரிற் கயவர் திருவுடையார்" (குறள்).—(4) **நீள்வான...சிலையான்** - வானமுகடாகிய அண்டகோளகைகளை ஊடுருவி நின்று அவற்றை நிலைகுலையாது ஈர்த்துச் செலுத்தும் பெருஞ்சத்தியே மலை எனப்பட்டது.—(5) **அரும்பாவியர்** - பெரும்பாவமுடையர். **பொய்யான்** - விளங்காதான். மறைந்துள்ளவன்.—(6) **துரிசர்** - துரிசு - குற்றம். **நிற்பன - நடப்பன** - அசரம் சரம் என்ப.—(7) **என்னுள்ளத்துள்ளே ஒளித்து வைத்த சிறையான்** - "நாடி நாரண னுன்முக னென்றிவர், தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ,...அம்பலத், தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே" (தேவாரம்). "சிக்கெனப் பிடித்தே னெங்கெழுந் தருளுவ தினியே" (திருவாசகம்).—(8) **குறி** - குறிக்கோள். **குறியிலா** - சிவனது குறிப்பில்லாத. **அடியேனுகச் செய்தான்** - சமண் சமயம் புக்கு மீண்ட சரிதக் குறிப்புமாம்.

**தலவிசேடம்:—திருநாகேச்சுரம்** :—காவிரிக்குத் தென்கரையில் 29-வது தலம். மூவர்பாடலும் பெற்ற பெருமையுடையது. சூரியன் - சந்திரன் - நாகராசனுகிய சேடன் முதலியோர் பூசித்தது. திருக்குறுந்தொகைப் பதிகம் (4) பார்க்க. சண்பக வனம் எனவும் வழங்கும்.

இதனை அடைந்தாரது வினைபோக்கும் தன்மை திருத்தாண்டகப் பதிகத்துக் காண்க. "நாளும் பரவுவார் பிணிதீர்க்கும் நலம்போற்றி" என்று புராணம் போற்றும். சேக்கிழார் நாயனுரது ஆன்மார்த்த தலம். இந்நினைவு பற்றியே தமது நகரமாகிய குன்றத்தூரிலும் கோயிலாக்கி அதற்குத்திருநாகேச்சரமென்று அவர்பேரிட்டனர். சுவாமி - **சண்பகாரணியர்** ; அம்மை - **குன்றமுலைநாயகி.** பதிகம் 6.

இது திருநாகேச்சரம் என்ற இருப்புப்பாதை நிலையத்தினின்றும் தெற்கே $\frac{3}{4}$ நாழிகையளவில் அடையத்தக்கது.

**திருப்பழையாறை** :—அமர்நீதி நாயனுர் புராணத்திறுதியில் தலவிசேடம் (பக்கம் - ௬அஅ) பார்க்க. நாயனுர் இத்தலத்திற் பாடியருளிய பதிகம் கிடைத்திலது!. **பழையாறை வடதளியிற்** பாடிய "தலையெலாம் பறிக்கும் சமணக்கையர்" என்ற திருக்குறுந்தொகைப் பதிகம் பின்முறையில் நாயனுர் போந்து வழிபட்டபோது அருளியது. இப்புராணம் 294 - 300வரை பார்க்க. பதிகக் குறிப்பு ஆண்டுக் காண்க. இத்தலம் **ஆறை** என்றும், **பழையாறு** என்று வழங்கப்பெறும்.

வேறு

1458. சென்று சேர்ந்து திருச்சத்தி முற்றத் திருந்த சிவக்கொழுந்தைக்,
குன்ற மகடன் மனக்காதல் குலவும் பூசை கொண்டருளும்
என்று மினிய பெருமானை, யிறைஞ்சி யியல்பிற் றிருப்பணிகள்
முன்றி லணைந்து செய்துதமிழ் மொழிமா லைகளுஞ் சாத்துவார்,

1459. "கோவாய் முடுகி"யென்றெடுத்துக்"கூற்றம் வந்து குமைப்பதன்முன்
பூவாரடிக ளென்றலைமேற் பொறித்து வைப்பா" யெனப்புகன்று

நாவார் பதிகம் பாடுதலு, நாதன் றானு "நல்லூரில்
வாவா!" வென்றே யருள்செய்ய வணங்கி மகிழ்ந்து வாகீசர், கசுச

வேறு

1460. நன்மைபெரு கருணெறியே வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதில்,
"உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோ!" மென்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான். கசுரு

1458. (இ - ள்) வெளிப்படை. சென்று சேர்ந்து, திருச்சத்திமுற்றத்தில் எழுந்தருளிய சிவக்கொழுந்தீசரை, மலைமகளாராகிய அம்மையாரது மனத்தெழுந்த காதலினால் விளங்கும் பூசையினை ஏற்றுக்கொண்டருளும் என்றைக்கு மினியவரான இறைவரை, வணங்கித் திருமுன்றிலில் அணைந்து தம்மியல்பினால் செய்யும் திருப்பணிகளாகிய உழவாரத் திருப்பணிகளைச் செய்து, மொழிமாலைகளையும் சாத்துவாராய்,

1459. (இ - ள்) வெளிப்படை. "கோவாய் முடுகி" என்று தொடங்கி, "கூற்றம் வந்து உயிரினைக் கொண்டு போவதன் முன்னே, பூவார்ந்த உமது திருவடி யடையாளம் படும்படி எனது தலையின்மேற் பொறித்துவைத்தருளுக" என்று சொல்லி, நாவின் நிறைந்த திருப்பதிகத்தைப் பாடுதலும், இறைவரும் "திருநல்லூரில் வாவா!" என்றே அருள்செய்ய, நாவுக்கரசர் வணங்கி மகிழ்ந்து, கசுச

1460. (இ - ள்) வெளிப்படை. நன்மை பெருகும் திருவருளின் வழியே வந்து அணைந்து, நிலைபெற்ற அத்திருத்தொண்டனார் வணங்கி மகிழ்ந்து எழுகின்ற பொழுதில் சிவபெருமான் "உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்!" என்று அருளி, அவருடைய சென்னியின்மேல் தமது பாதமலர்களைச் சூட்டினார். கசுரு

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1458. (வி - ரை) **சிவக்கோழுந்து** - திருச்சத்திமுற்றத்தில் சுவாமி பெயர்.

**குன்றமகடன்...பூசைகோண்டருளும்** - தலவரலாற்றையும் சத்திமுற்றம் என்று பெயர் போந்தகாரணத்தையும் விளக்கியபடி.

**மனக்காதல் துலவும் பூசை** - அம்மையார் ஆசையுடன் செய்த பூசையின் இயல்பு தலவிசேடத்துட் காண்க. "மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும், சிட்டா" (திருவிருத்தம்) என்றதனை நினைவூட்டியவாறு.

**என்றுமினிய பெருமானை** - "எப்போது மினியானை" (தேவா). உயிர்கள் தம்மை மறந்தபோதும் இகழ்ந்தபோதும் அவற்றுக்கு இன்னருளே புரியும் தலைவர். **பெருமான்** - அவ்வாறு இனியராயிருத்தற்குக் காரணங் காட்டியபடி.

**இயல்பில்** - தமக்குரிய இயல்பின்படி. திரு உழவாரத்திருப்பணி நாயனார்க்குச் சிறப்பாயுரியது. சாத்துவார் - எடுத்துப் - புகன்று - பாடுதலும் - என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

**என்றுமிளைய**—என்பதும் பாடம். 193

1459. (வி - ரை) **"கோவாய் முடுகி" என்று எடுத்து** - அத்திருப்பதிகத்தின் தொடக்கம். **எடுத்து** - தொடங்கி.

**துமைத்தல்** - அழித்தல். **துமைப்பதன் முன்** - உயிர் நீப்பதன் முன்பு "நமன்றமர் மிக்கு விரவி விழுப்பதன்முன், இம்மையுன் றாளென்றன் னெஞ்சத் தெழுதிவை யீங்கிகழில், அம்மை யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார்" (6) என்று இதன் கருத்தை மேலும் சுவைபட விரிப்பது காண்க.

**பூவார் அடிகள்** - பூப்போன்ற எனவும், அம்மையாரும், அடியார்களும் இட்ட பூக்கள் பொருந்திய எனவும் உரைக்க நின்றது.

**பொறித்து வை** - மாறுத அடையாளம்படப் பொறித்து வைப்பாய். "வயனங்கண் மாயா வடுச்செய்தான்" (திருவாசகம்), "அடையாளம் படவொருவன் அடித்தகொடுஞ் சிலைத்தழும்பும்" (திருவிளை - புரா). பொறித்து வைத்தல் - இப்பொருளுக்குடையவர் இவர் என்று ஏற்றுக்கொண்டு காட்டுதற்கு. பொறிப்பாய் என்னுது வை என்றது அடையாளக் குறிவைத்து, முன்போலப் புறம்போகவிடாது, அந்த அடியின் கீழே தங்க வைத்துக்கொள்க என்றபடியாம். தேவாரப் பாட்டுக்குறிப்புப் பார்க்க. "நமன்றமர் நலியி னிவன்மற் றென்னடி யானென விலக்கும்" (நம்பிகள்) என்ற கருத்துமிது. **கூற்றம்......வை** - தேவாரப் பதிகக் கருத்தும் குறிப்புமாம். இத்தேவாரத்தின் சொல்லும் பொருளும் மேற்கொண்டது.

**அடிகள் என் தலைமேல் - தாடலை - காறலை** - என்பன சைவ மரபுக்குரிய குறியீட்டு வழக்குக்கள். "காலுந் தலையும் அறியார் கலதிகள்", "சிந்தையு மெந்தை திருவடிக் கீழது" என்பனவாதியாகச் சுவைபடத் திருமூலதேவர் எட்டாந் தந்திரத்தினுள் பேசுவன காண்க.

**நாவார் பதிகம்** - நாவாரத் துதிக்கும் பதிகம். அறிஞர்களின் நாவில் எங்கும் பொருந்தும் - தோத்திரிக்கப்படும் பதிகம் என்றலுமாம்.

**நாதன் தானும் - அருள் செய்ய** - உம்மை சிறப்பு. **புகன்று பாடுதலும்**-"விண்ணப்பங் கேட்டு நல்கும்" (தேவர்) என்றபடி உடனே அருளினர் என்ற விரைவுக் குறிப்புமாம். **என்றே** - ஏகாரம் தேற்றம். **வா !வா !** - அடுக்கு, அருள் மிகுதியும், உறுதியும் குறித்தது. ஆளுடையநம்பிகளைத் தில்லையிலிருந்து "ஆரூரில் வருக" (254) என்றும், திருவாதவூரடிகளைத் "தில்லையில் வருக" என்றும் அருளியவற்றை இங்கு நினைவு கூர்க.

**வாகீசர் - திருத்தொண்டனர்** - மகிழ்ந்து - அணைந்து வணங்கி - மகிழ்ந்தெழும் பொழுதில் - சிவபெருமான் - பாதமலர் - சூட்டினன் என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடித்துக்கொள்க.

**பூவார் கழல்கள்**—என்பதும் பாடம். 194

1460. (வி - ரை) **நன்மை பெருகு அருள் நெறி - அருள் நெறி** - "அருணெறி விளங்க" (1398) என்றவிடத் துரைத்தவை பார்க்க. **நன்மை பெருகு** என்றது உலகுக்கெல்லாம் எல்லா நன்மைகளும் பெருகுதற்கேதுவாகிய.

**அருள் நெறியே வந்து அணைந்து** - திருச்சத்திமுற்றத்தில் இறைவர் அருளிய நெறியினையே கடைப்பிடித்துப் போந்து சேர்ந்து. "அருளையே நினைவார் கொள்ளிடத் திருநதி கடந்தார்" (256) என்றதும் காண்க.

**நல்லூரில் - வணங்கி** - "சிவக்கொழுந்தை" (1458) வணங்கி என்று செயப்படுபொருள் வருவிக்க. காலம் இடம் என்றவை கடந்து எங்கும் நிறைந்த ஒரு சிவபரஞ்சுடரே சத்திமுற்றத்திலும் திருநல்லூரிலும் விளங்குபவர். "நல்லூரில் வாவா" என்றருளிய அவரே இங்குப் பாதமலர் சூட்டினர் என்பது குறிப்பு. **சூட்டினன் சிவபெருமான்** என்ற குறிப்புமிது. **வணங்கி மகிழ்ந்து வந்து - வணங்கி மகிழ்ந்து எழும்** என்ற கருத்துமிது.

**மன்னு திருத்தொண்டனர்** - வாகீசர் (1459). **மன்னும் -திரு** என்ற அடைமொழிகள் சிவத்தொண்டினது சிறப்பையும் அழியாமையையும் வாகீசரது சிறப்பையும் குறித்தன. முன்னை நிலையில் "ஞானத் திருமுனிவ"ராகித் தவமியற்றியும், இங்குத் திருநாவுக்கரசராகிப் பன்னாளும் பாமாலை பாடிப் பணிசெய்திருந்தும், இறுதியில், நண்

ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி, அண்ணலார் சேவடிக்கீ ழமர்ந்திருந்தும் முக்காலத்தும் பேறுபெறுகின்றமையால் மன்னு என்றும், முத்தியைத் தலைக்கூடச் செய்யும் தொண்டாதலின் திரு என்றும் கூறினார்.

எழும் பொழுதில் - எழுகின்ற அப்பொழுதே. "உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்" - இது திருவடி மலர் சூட்டியபோது தொண்டனார் கேட்க இறைவர் அருளிய திருவாக்கு.

சென்னிமிசைப் பாதமலர் சூட்டுதல் - திருவடி தீக்கை. இது ஞானதீக்கையின் பின் செய்யப்படும். இது சாம்பவீ தீக்கை எனவும் பெயர் பெறும். "சேவடிக்கணஞ் சென்னி மன்னித் திகழுமே" என்ற திருவாசகமும், திருவாதவூரடிகளுக்கு இறைவர் குருவடிவாக வந்து அவ்வாறு அருள் செய்ததும் காண்க. ஆளுடைய நம்பிகளை வலிய ஆட்கொண்ட திறத்துக்கேற்ப வலியத் திருவடி தீக்கை செய்த வரலாறும் (231 - 232 - 233) கருதுக.

"உன்னுடைய...முடிக்கின்றோம்" என்று - என இறைவர் தம் அடியவரை ஒருமையிலும் தம்மைப் பன்மையிலும் வைத்துக் கூறினாராகவும், ஆசிரியர், நாயனாரை மன்னு திருத்தொண்டனார் - அவர்தம் எனப் பன்மையிலும், சூட்டினான் சிவபெருமான் என இறைவரை ஒருமையிலும் வைத்தோதிய வகையால் அடியார் பெருமையினையும், சைவ சித்தாந்தத்தின் உயர்ந்த மரபினையும் விளக்கியவாறு கண்டுகொள்க. "இறைவன் தொண்டரு ளடக்கம்-தொண்டர் தம் பெருமையைச் சொல்லவு மரிதே" என்ற மூதுரையும் காண்க. 195

1461. "நினைந்தவனை திருவடியென் றலைமேல்வைத் தா"ரென்று
புனைந்ததிருத் தாண்டகத்தாற் போற்றிசைத்துப் புனிதரருள்
நினைந்துருகி விழுந்தெழுந்து நிறைந்துமலர்ந் தொழியாத
தனம்பெரிதும் பெற்றுவந்த வறியோன்போல் மனந்தழைத்தார்.

(இ - ள்) வெளிப்படை. "நினைந்தவனை திருவடி என்தலைமேல் வைத்தார்" என்று தொடுத்த திருத்தாண்டகப் பதிகத்தால் துதிசெய்து, புனிதராகிய சிவபெருமான் தமக்குச் செய்த பேரருளை நினைந்து, உருகிக், கீழேவிழுந்து, பின் எழுந்து, மனநிறைவும் அகமலர்ச்சியும் பெற்றுக், குறையாத செல்வத்தைப் பெரிதும் பெற்றுக் களிக்கும் வறியவன்போல மனந்தழைத்தனர்.

(வி - ரை) நினைந்தவனை திருவடி என் தலைமேல் வைத்தார் - இது தேவாரக் குறிப்பும் சொல்லும் பொருளுமாம்.

புனைந்த - புனைதல் - தொடுத்தல். "தமிழ்மொழி மாலை" (1458) என்றதற்கேற்பப் புனைந்த என்றார்.

புனிதர் - இயல்பாகவே பாசங்களி னீங்கியவர். புனிதர் - புனிதஞ் செய்பவர் என்றலுமாம். இயல்பாகிய புனிதமுடையாரே புனிதஞ்செய்யு மாற்றலுமுடையார்.

அருள் - தாம் வேண்டியதனை வேண்டியவாறே வேண்டியபொழுதே ஈந்த பேரருள்.

நினைந்து உருகி விழுந்து எழுந்து நிறைந்து மலர்ந்து - அருளை நினைத்தலும் அதனால் உருகுதலும் - முன்னர் மனத்துள் நிகழ்ந்த செயல்கள்; விழுதலும் பின் எழுதலும் அவ்வாறு உருகியதன் காரணமாக நிகழ்ந்த உடற்செயலாகிய புறத்து மெய்ப்பாடுகள்; நிறைதலும் மலர்தலும் பின்னர் நிகழ்ந்த உள்ளத்தின் நிகழ்ச்சிகள்; மலர்தல் உள்ளும் புறம்பும் கலந்த செயலெனினுமொக்கும். இவ்வாறு ஒவ்வொரு வினையெச்சத்தால் ஒவ்வொன்றாகத் தனிப்பெரு நிகழ்ச்சிகளைக் கூறிப்போந்த கவிநயம் காண்க.

*இவ்வினையெச்சங்கள் ஆறும் மனந்தழைத்தார் என்ற முற்றுவினை கொண்டு முடிந்தன. மனந்தழைத்தலுக்கு இந்த ஆறு நிகழ்ச்சிகளும் முன்னங்கமாக அமைவன.*

ஒழியாததனம் பெரிதும் பெற்றுவந்த வறியோன்போல் - *இவ்வுவமை பழமொழியாக வழங்கப்படும்.* ஒழியாத தனம் - *உலவாத - எடுக்க எடுக்கக் குறையாத செல்வம். "இக்கிழி பொன்னுல வாக்கிழி" (திருஞான - புரா - 427).* பெரிதும் - *மிகவும். அத்தகைய உலவாக்கிழிகள் பல.*

அழியாத தனம்—*என்பதும் பாடம்.* 196

திருச்சத்திமுற்றம்

*திருச்சிற்றம்பலம்* திருவிருத்தம்

*கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்*
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை; போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
*தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.* 1

*வெம்மை நமன்றமர் மிக்கு விரவி விழுப்பதன்முன்*
இம்மையுன் றாளென்ற னெஞ்சத் தெழுதிவை; யீங்கிகழி
லம்மை யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார்?
*செம்மை தருசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே.* 6

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*"கூற்றம் வந்து குமைப்பதன்முன் உனது திருவடிகளை என்மேற் சுவடுபடப் பொறித்து வை; உன் தாள்களை என் நெஞ்சத்து அழியாதவாறு எழுதிவை" என்று இறைவரை வேண்டிக்கொண்டது.*

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) கோவாய் முடுகி - *தலைவன் என்ற அதிகாரத்துடன் விரைந்து. "கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலும்" (மறுமாற்றத் தாண்). தலைவராகிய சிவன் தந்த அதிகாரமாதலின்* கோவாய் *எனப்பட்டது.* அடுதிறல் - *சிவனடியார்களன்றி வேறு யாரும் தப்ப முடியாத ஆணை.* போகவிடில்......மூடுங் கண்டாய் - *அடிச்சுவடு பொறித்து உன் அடிக்கீழ் அமைத்து வைக்காது, கூற்றுவன் கொண்டு போகும்படி விட்டுவிட்டால். "பொறித்து வை" என்ற விண்ணப்பத்தின்படி அருள்செய்தல் அவர்தம் பொருட்டே கடனுமென்று காரணங்காட்டியபடி. "அரும்பிணிநோய் காவா தொழியிற் கலக்குமுன் மேற்பழி" (திருவிருத் - தூங்கானை மாடம் - 2.) "விடில், என்னைமிக்கார், ஆரடியா னென்னி லுத்தர கோசமங் கைக் கரசின், சீரடி யாரடி யானென்று நின்னைச் சிரிப்பிப்பனே" (திருவா-நீத்-விண் - 48) என்ற கருத்துக்கள்.* மூவா முழுப்பழி-*மூவாமை-இதற்குமேற் பெரிதில்லாமை.* முழுமை-*நிரம்பிய தன்மை.*—(2) பாதம் பணிவார் தம் பல்பிறவி ஆய்ந்தாய்ந்து அறுப்பாய் - *பிறவியை ஆய்ந்தறுத்தலாவது அடியாரானுர் அவ்வப்பிறவிகடோறும் ஈட்டிய வினைகளையெல்லாம் கண்டு கழிப்பித்துத் திருவடி கூடச்செய்தல்.*—(3) போத்து - *பொந்து - உள்ளீடற்றது.* தூம்பை - *உடல்.* ஐவர் - *ஐம்பொறி.* மத்தூர் தயிர் - *சுழலுதல் காட்டும் பழமொழி.* மறுக்கு - *மயக்கம்.* சித்தா - *சித்தத் திருப்பவரே.*—(4) ஒன்றல்லாக்குழி-*ஒன்றுக்கும் அல்லாத - பயனற்ற - வினைக்குழி. பிறவி. முற்றும்மை தொக்கது. அமண சமயப் படுகுழி என்றலும் குறிப்பு.* விடிற் கெடுவேன் - *"வெற்றடியேனை விடுதிகண்டாய்! விடிலோ கெடுவேன்" (திருவா - நீத் - வின் - 23).*—(5) கருவுற்றிருந்து - *உயிர்கள் கருவில் உறுப்புக்கள் நிரம்பிய*

போது முன்னுணர்வுற்று இறைவனை நினைந்திருக்கும் என்பது சிவதருமோத்தரம் முதலிய சிவாகமங்களுட் காண்க. கருப்புவியில் தெருவிற் புகுந்தேன் திகைத்து - பிறவிக்கேதுவாகிய இந்தக் கன்ம பூமியிற் பிறந்து நெறியறியாது மயங்கித் திரிகின்றேன்.—(6) விழுப்பதன்முன் - வீழ்ப்பதன்முன். எழுதிவை - நெஞ்சமாகிய கல்லில் சிலையில் எழுத்துப்போல அழியாதிருக்கும்படி எழுதி வை. எழுதுதல் - படி தீட்டுதல். ஈங்கு - இப்பிறவி. அம்மை - மேலைப் பிறவி.—(7) மட்டார்...சீட்டா - சத்தி பூசித்தமை; தல வரலாறு.—(8) இகழ்ந்தவன் - தக்கன். கந்தபுராணம் பார்க்க. பொறை இரப்ப-பிழை பொறுத்துக் காக்கவேண்டுமென்று வேண்ட.—(9) சமண்தவிர்த்து - சரிதக்குறிப்பு. எக்காதல் - எப்பயன் - வேறு எந்தக் காதலும் பயனும். உளதே! - ஏகாரம் எதிர்மறை.—(10) குறித்தே - பணிந்து வேண்டியமை பற்றியே.

தலவிசேடம்:—இறைவரைச் சத்தி பூசித்துத் தழுவி முத்தமிட்ட காரணத்தால் சத்திமுத்தம் எனப் பெயர் பெற்றதென்பது தலவரலாறு. "குன்ற மகடன் மனக் காதல் குலவும் பூசை கொண்டருளும்" என்ற புராணத் திருவாக்கு இதனைக் குறிப்பதாம். இத்திருக்கோலம் இன்றும் இக்கோயிலில் தரிசிக்கவுள்ளது. முத்தம் என்றது முற்றம் என வழங்குவது போலும். "மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்" என்ற நாயனார் பதிகமும் காண்க. சுவாமி-சிவக்கொழுந்தீசர்.அம்மை-பெரியநாயகி-பதிகம் 1.

இது தாராசுரம் என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்று தென்மேற்கே மட்சாலை வழி இரண்டு நாழிகை யளவில் அடையத்தக்கது. இதன் மேற்கே இரண்டு நாழிகை யளவில் திருநல்லூர் உள்ளது.

## திருநல்லூர்

திருச்சிற்றம்பலம் — திருத்தாண்டகம்

நினைந்துருகு மடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைக ணீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் றளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
வினமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 1

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு**:—தம்மை நினைந்து உருகும் அடியார்களை அன்பினால் மனமுருகி நையச்செய்து இன்பங்கொடுப்பார்; அவர் யானையினுரிவை போர்த்தல் முதலிய அருஞ்செயல்களையுடையார்; தேவர்களால் வணங்கப்படுவன அவரது திருவடிகள்; அவை நன்னலத்தன; நாடேறுவன; நண்ணரியன; நற்றவர் சேர்வன; நலங்கிளர்வன; மலர் நாறுவன; நன்றருள்வன; நாம் பரவுவன; நல்லருளால் நல்லூர் எம்பெருமான் அத்திருவடிகளை நான் நன்மையடையும்படி என் தலைமேல் வைத்தார் என்று பலவாற்றாலும் அவரருளை நினைந்துருகி மனந்தழைத்தது. இப்பதிகம் பதினொரு திருப்பாட்டுக்களையுடையது.

**பதிகப்பாட்டுக் குறிப்பு**:—(1) நைய-அன்பு மேன்மேற் பெருகுதலினால் மனம் நைய. பாசங்கள் தேய என்றலுமாம். இப்பொருளில் நீங்க என்றதற்கு முன்னர் வலி கெட்டுப் பின் முற்றும் அற என்க. தீவினைகள் - தீய பிறவிதரும் வினை. வானோர்

...நனைந்தனைய - திருவடியில் முடி பொருந்தச் சாய்த்து வணங்கும் தேவர்களது முடியில் அணிந்த தெய்வப் புது மலர்கள் முகை விரிந்து தேன் சொரிதலால் நனைத்துத் திருவடிகளை ஈரம் செய்வன. அவிழ்ந்து - மொட்டுரு நிலையினீங்கி. நனைந்தாலனைய என்பது நனைந்தனைய எனத் திரிந்து நின்றது. நனைத்து என்றது நனைந்தென மெலிந்து நின்ற தெனினுமாம். நல்லவாறே - நன்மை எனக்குள தாம்படி.—(2) பொன்னலத்த - பொன் போன்ற நலம்; நிறங்குறித்தது.—(3) வடம் - மாலை. பாடு - பெருமை. திரைகள் எறிய - "திரைகள் புரள வீசும் கங்கை". சேடு - ஒளி. சேடேறு - நாட்டம் என்க. நாட்டம் - கண். நெருப்புக்கண்.—(4) வில்லருளி வருபுருவம் - "திருப்புருவ மென்னச் சிலை குலவி...ஆளுடையாள் - அன்பர்க்கு - முன் சுரக்கு மின்னருளே என்னப் பொழியாய் மழை" (திருவெம் பாவை). கல் - மேருமலை.—(5) விண்ணிரியும் - விண்ணிற்றிரியும். இரிதல் - திரிதல் - ஓடுதல். தொழுவார்க்கு வினை அற-தீவினைகள் நீங்க (1) என்றாற்போல. துறவி-துறவு நிலை - சாதனம். கமல மலர் - இதய கமலம் (தனது இருக்கையாக). கயிலை - இறைவர் எழுந்தருளும் இடம். அடியவர்க்குத் தரும் இடம் என்றலுமாம். "திருத்தி வைத் தான்பெரு வானகமே" (பொன் - வண் - அந்) .—(6) பிணி உற்று உலவும் உலகம் - என மாறுக. உலகம் - புவனம் என்ப. பிணி - பிணிப்பு - வினை. எழுமை - எழுவகைப் பிறப்பு. உயிர் வைத்தார் - உடலைத் தந்து அதனுள் உயிரைப் புகுத்தினர். "மால்கொடுத் தாவி வைத்தார்" (மறைக்காடு). உயிர் செல்லும் கதிகள் - நெறிகள்.—(7) மாறு - மாறுக. குலங்கள் மிகும் மலை - இமய முதலிய பெரு மலைகள். (8) நிலம்...விசும்பின் மிசை-ஐம்பூதங்களும் அவற்றின்மேல் உள்ளதத்துவங்களும்.—(9) சென்று உருளும் கதிர் இரண்டும் - செல்லுதல் உருளுதல் என்று இரண்டு வகைக் கதியுடைய ஞாயிறும் திங்களும். இனம்பற்றிப் பிற கதிர்களும் கொள்க. ஞாயிற்றுக்கும் இந்த இரு கதியுள்ளன என்பது இந்நாள் மேற்றிசை வானநூ லாராய்ச்சியாளரும் ஞாயிற்றின் புள்ளிகளின் (Sun spots) அசைவினாலும், பிறவாற்றாலும் கண்டு ஒப்பியது. "சுவடு, பொடிகொள்வான் றழலிற் புள்ளிபோ லிரண்டு பொங்கொளி தங்குமார் பினனே" (திருவா).—(11) திரைகளேழும் - திரையுடைய ஏழ்கடல்கள்.

குறிப்பு - நாயனாரது மற்றொரு பதிகம்பற்றி 1479ன் கீழ்க்காண்க.

தலவிசேடம்:—திருநல்லூர் - இஃது ஆண்டான் கோயில் என வழங்கப்படும். அமர்நீதி நாயனார் வழிபட்டுப் பேறுபெற்ற சிறப்புத் திருவிருத்தத்தினுள் நாயனாராற் போற்றப்பட்டது. தலவிசேடம் அமர்நீதியார் புராணத்திறுதியில் உரைக்கப்பட்டது பார்க்க. பக்கம் ௬௮௧.

1462. நாவுக்கு மன்னர்திரு நல்லூரி னம்பர்பான்
மேவுற்ற திருப்பணிகண் மேவுறநா ளுஞ்செய்து
பாவுற்ற தமிழ்மாலை பலபாடிப் பணிந்தேத்தித்
தேவுற்ற திருத்தொண்டு செய்தொழுகிச் செல்லுநாள், ௧௬௭

1463. கருகாவூர் முதலாகக் கண்ணுதலோ னமர்ந்தருளுந்
திருவாவூர், திருப்பாலைத் துறை, பிறவுஞ் சென்றிறைஞ்சிப்,
பெருகார்வத் திருத்தொண்டு செய்துபெருந் திருநல்லூர்
ஒருகாலும் பிரியாதே யுள்ளுருகிப் பணிகின்றார், ௧௬௮

*1464. ஆளுடைய நாயகன்ற னருள்பெற்றங்ககன்றுபோய்
வாளைபாய் புனற்பழனத் திருப்பழன மருங்கணைந்து
காளவிட முண்டிருண்ட கண்டர்பணிக் கலன்பூண்டு
நீளிரவி லாடுவார் கழல்வணங்க நேர்பெற்றார். கசகூகூ

1462. (இ - ள்) வெளிப்படை. திருநாவுக்கரசு நாயனார், திருநல்லூரிலே சிவ பெருமானிடத்துப் பொருந்தத் திருப்பணிகளை மனமார நாளும் செய்தும், தமிழ்ப் பாமாலை பலவற்றையும் பாடிப் பணிந்தேத்தியும், தெய்வம் பொருந்தும் திருத்தொண்டு செய்து இவ்வாறு ஒழுகிச் செல்கின்ற நாளிலே, கசகூஎ

1463. (இ - ள்) வெளிப்படை. திருக்கருகாவூர் முதலாகக் கண்ணுதற்பெருமான் எழுந்தருளியுள்ள திருவாவூரும், திருப்பாலைத்துறையும் இன்னும் பிறவும் சென்று பணிந்து ஆர்வம் பெருகும் திருத்தொண்டு செய்து, திருநல்லூரை ஒரு காலமும் பிரியாதே உள்உருகிப் பணிகின்றவர், கசகூஅ

1464. (இ - ள்) வெளிப்படை. தம்மை ஆளுடைய இறைவரது திருவருளைப் பெற்றுக்கொண்டு அங்கு நின்றும் புறப்பட்டுப் போய், வாளைகள் பாயும் நீர்ச்சிறப்புடைய திருப்பழனத்திற் சென்று அணைந்து திருநீலகண்டரும் பாம்புகளை அணிந்து ஊழியில் ஆடுவாரும் ஆகிய இறைவரது திருவடிகளை நேரே வணங்கும் பேற்றினைப் பெற்றனர். கசகூகூ

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1462. (வி - ரை) மேவுற்ற திருப்பணிகள் - உழவாரக் கைத்திருத்தொண்டுகள். மாடக்கோயிலாதலானும் சுவாமி மாடமாகிய மலையின்மிசை எழுந்தருளியிருத்தலானும் அதற்கேற்ற என்பார் மேவுற்ற என்றார்.

மேவுற - மனமார - மனம் பொருந்த. பணிகளின் சிறப்புப் பொருந்த என்றலுமாம்.

நாளும் - ஒருநாட் செய்தோமென் றமையாது ஒவ்வொரு நாளும் வழிபாட்டின் அங்கமாக.

தமிழ்ப் பாவுற்ற மாலை என்க. பாவுற்ற - பாக்களின் தன்மை முற்றும் பொருந்திய. பாக்களுக்கு இவையே இலக்கியமாகப் பொருந்த என்றலுமாம்.

பலபாடி - இந்நாள்களில் நாயனார் பாடியருளிய பாமாலைகள் பலவற்றுள்ளும், 1479-ல் "போற்றிசைத்து" என்றறியப்படுபவற்றுள்ளும், ஒரு பதிகமே கிடைத்துள்ளது!. நமது தவக்குறை!

தேவுற்ற திருத்தொண்டு - தெய்வத்தன்மை பொருந்திய - தெய்வத்தைப் பெறுவிக்கவல்ல. உலகத்தையும் உயிர்களையும் நோக்காது தேவ தேவராகிய சிவபெருமானையே நோக்கிய.

செல்லுநாள் - சென்றிறைஞ்சிப் - பிரியாதே - பணிகின்றார் என்று வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

மொழிமாலை—என்பதும் பாடம். 

1463. (வி - ரை) கண்ணுதலோன் அமர்ந்தருளும் என்பதைக் கருகாவூருடனும் சேர்த்துரைக்க.

அமர்தல் - விரும்பி வீற்றிருத்தல். அமர்ந்தருளும் - ஒரு சொல்.

ஆர்வம் பெருகும் திருத்தொண்டு - என்க. மனத்தின்கண் விருப்பம் குறையாது மேன்மேலும் பெருகும், தியானமும், கைத்தொண்டும், பதிகம் பாடுதலாகிய வாக்குத்தொண்டும். பிறவும் - ஆவூர் பாலைத்துறையாகிய பிறவும் எனவும், முதலிய பிற

வும் எனவும் உரைக்க நின்றது. முதலிய என்ற பொருட்குச் சேலூர் - பட்டீச்சுரம் - முதலிய என்க.

திருநல்லூர் ஒருகாலும் பிரியாதே - முன் சொன்ன தலங்களைச் சென்று தொண்டு செய்கின்ற நாயனுர், அதனேடு திருநல்லூரையும் எந்நாளும் பிரியாது பணி கின்றாராயினர். முன் சொன்ன மூன்று தலங்களும், பிறவும், திருநல்லூரை அடுத்துச் சில நாழிகையளவில் உள்ளன. நாயனுர் அவற்றை முறையே வழிபடச் செல்பவர், திருநல்லூரிற்றங்கிப் பணிந்தபடியே அவற்றுக்குச் செல்வதும், நாளும் மீண்டும் திரு நல்லூரைப் பிரியாது திரும்பி விடுவதுமாக ஒழுகினர் என்பது ஈண்டுக் கருதப்படும். இவ்வாறன்றி வேறு தலத்துக்குச் சென்று வழிபடினும் திருநல்லூரிறைவர் தமக்குச் செய்த பேரருளை ஒருகாலும் மனத்துணின்றும் பிரியாது வைத்துப் பணிந்து ஒழுகினர் என்றலுமாம். திருவேட்களம் திருக்கழிப்பாலை தொழுது கொண்டு, "நினைப்பவர் மனங் கோயிலாக்கொண்ட அம்பலக் கூத்தனைத் தினைத்தனைப் பொழுதும் மறந் துய்வனே?" என்றுபாடி மீண்டு தில்லை சார்ந்து வழிபட்டிருந்த நாயனுரது ஒழுக்கம் இங்கு நினைவுகூர்தற்பாலது.

உள் உருகுதலாவது மன நைந்து கரைதல். "நினைந்துருகு மடியாரை நைய வைத் தார்" என்ற நிலை கைவருதல்.

பணிகின்றார் - இவ்வாறு பணிதல் பல நாளும் பல காலமும் எப்போதும் நிகழ்ந்தது என்பார் நிகழ்காலத்தாற் கூறினர். பணிகின்றாராகிய நாயனுர் என வினைப் பெயராக்கி, அருள்பெற்று - அகன்றுபோய் - அணைந்து - நேர்பெற்றார் என மேல் வரும் பாட்டுடன் கூட்டிமுடிக்க.

பலவும் சென்று—என்பதும் பாடம்.

198

1464. (வி - ரை) ஆளுடைய நாயகன் - திருவடி சூட்டியமையால் ஆளாகக் கொள்ளுதலையுடைய திருநல்லூரிறைவர். தலத்துச் சுவாமி பெயர்க் குறிப்புமாம்.

அந்த - அங்கு நின்றும். திருநல்லூரினின்றும். நீக்கப் பொருளில் வரும் ஐந் தனுருபு தொக்கது.

வாளைபாய் புனல் - நீர்ச்சிறப்புக் குறித்தது. "மடையில் வாளை பாய" (தேவாரம்).

புனற் பழனத் திருப்பழனம் - பழனம் என்ற தலப் பெயரின் பொருள் விளக் கும் வகையால் சொற்பின்வருநிலையில் வைத்தது ஆசிரியரது கவிநயம். "திருவாரூர் திருவாரூர்" (1277) என்றவிடத் துரைத்தவையும், பிறவும் பார்க்க. "செல்வநீடூர் திருநீடூர்" முதலியவையும் காண்க.

மருங்கு அணைந்து - மருங்கு சென்று அதனுள் அணைந்து. "அங்ககன்று" என்றவிடத்துப்போலக் காண்க.

காளவிடம் உண்டு இருண்ட கண்டர் - பணிக்கலன் பூண்டு ஆடுவார் - இதனை அடுத்து அப்பூதியார் மகனை அரவு தீண்டவும், பின்னர் அம்மகன் அருளால் உயிர்பெற்றெழவும் நிகழவிருக்கும் திருவருட்செயல் குறிப்பு.

காளவிடம் உண்டிருண்ட கண்டர் - திருநீலகண்டர். விடமுண்ட புராண வரலாறு பற்றி 363-ம் பாட்டின்கீழ்த் திருநீலகண்டம் என்ற தலைப்பின் உரைக்கப் பட்டவை காண்க. சிவபெருமானது பேரருளுடைமை வரம்பிலாற்றலுடைமை முத லிய குணங்களை இஃது எடுத்துக்காட்டி நிற்கின்றது. உயிர்களின் குற்றமே காள விடம் என்றும், உயிர்களுக்காக மாயையினின்றும் உலகங்களையும் - உடல்களையும் தோற்றுவிக்க இறைவன் நடனத்தாலியக்கப்படும் மாயையின் மண்டிலங்களே பாம்

பென்றும், ஆணவ இருளே நீளிரவு என்றும் உபசரிக்கப்படுவன என்று இங்குத் தத்துவநுட்பங்கள் காண்பாருமுண்டு. ஆணவமே உயிர்க் குற்றமெனப்படும். ஆணவ விருளில் இறைவன் நடம் செய்வன் என்பனவும் பிறவும் கேட்கப்படாதன. எனவே இவ்வாராய்ச்சியின் பொருத்தங்கள் ஆராயத்தக்கன. காளவிடம் - சார்ந்தாரைக் காக்கும் தன்மையும், பணிக்கலன் - தீமையும் நன்மையாய்ப் பயக்கின்றமையும், நீளிரவு - ஊழிக்காலத்து உலகமும் உயிர்களும் ஒடுங்கியமையும் உணர்த்துவன என்ப.

வணங்க நேர்பெற்றார் - வணங்குதலை வாய்க்கப் பெற்றனர். கழல் நேர் வணங் கப் பெற்றார் என்க. 199

குறிப்பு :—திருநல்லூரினின்றும் தெற்கில் வெட்டாறு என்னும் ஓடம்போக்கி யாற்றின் தென்கரையில் உள்ளது திருக்கருகாவூர். குறுக்குப்பாதை 3 நாழிகை யளவு இருக்கும். இப்போது காணும் வண்டிப்பாதை வழி சென்றால் தென் கிழக்கில் 2 நாழிகையளவில் திருஆவூரை அடைந்து, அங்கிருந்து மேற்கே நான்கு நாழிகையளவில் கருகாவூரை அடையலாம். பாலைத்துறை திருநல்லூரினின்றும் வண்டிப்பாதை வழி மேற்கில் இரண்டு நாழிகையளவில் அடையத்தக்கது.

## திருக்கருகாவூர்

*திருச்சிற்றம்பலம்*

திருத்தாண்டகம்

குருகாம் வயிரமாங் கூறு நாளாங் கொள்ளுங் கிழமையாங் கோளே தானும்
பருகா வமுதமாம் பாலி னெய்யாம் பழத்தி னிரதமாம் பாட்டிற் பண்ணும்
ஒருகா லுமையவளோர் பாக னுமா முண்ணின்ற நாவிற் குரையா டியாங்
கருவா யுலகுக்கு முன்னே தோன்றுங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 1

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—கருகாவூரெந்தை தானே குருகாம் - வயிரமாம்; பாலின் நெய்யும் பழத்தினிரதமும் பாட்டிற் பண்ணும்போல் எங்கும் பிரிப்பின்றிக் கலந்துள ளும்; உண்ணின்ற நாவிற்குரையாடியாம்; வித்தாம் முளையாகும் வேரேதானும்; கொண்ட சமயத்தார் தேவனுரும்; அல்லலறுப்பானுமாம்; சேர்ந்தாரிடர்கள் தீர்க் கும் செல்வனும்; சொல்லுவார் சொல்லெல்லாஞ் சோதிப்பானும்; இவை முத லிய தன்மைகளையுடையவன். சிவனது அநாதி முதன்மை குறித்தது.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) குருகாம் - குருகு - விலங்குகளின் இளமைப் பெயர். இளமைப்பண்பு குறித்து நின்றது. வயிரம் - தாவரங்களின் முதுமைபற் றிய பெயர்; முதுமைப்பண்பு குறித்து நின்றது. இவையிரண்டும் ஆகுபெயர். கூறுநாள் - பகலவனால் நாள் என்று கூறுபடுத்தப்பட்ட கால அளவு. கொள்ளும் கிழமை - ஞாயிறு முதலிய கோள்களின் பெயர்களையும் உரிய பண்புகளையும் கொள் ளும் கிழமை. கோளே - அவ்வப்பெயர்க்குரிய தெய்வம். ஏகாரம் - தேற்றம். கோளேதானும் - தானும் - அத்தெய்வங்களுக்குண்ணின்று இயக்கும் சிவசத்தி. பாலின் நெய் முதலிய மூன்றும் அத்துவிதக்கலப்பை உணர்த்தின. நாவிற்கு உள் நின்று உரையாடி என்க. வாக்கும், உரையும், அவ்வுரையை வெளிப்படுப்பவனும். கருவாய் உலகுக்கு முன்னே தோன்றும் - உலக முதற்காரணமாகிய மாயையை இயக்கும். கண் - காட்டிக்காணும் தன்மை.—(2) வித்து - முளை - வேர் - "வித் தினை முளைக்கிளையை வேரை" (ஆவடுதுறை - தாண் - 3 - பார்க்க). பத்தாம் - அடி யார் குணம் பத்தும் உடைய. "பத்துடையீர்" (திருவா). கத்தாம்-கருத்து என்பது கத்தென நின்றது? கத்தன் - தலைவன் என்றலுமாம்.—(3) பூ - நிறம் - மணம் - தேகோ - "முகைத்த மலரின் வாசம்போல்", "மலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப்

பில்கி". ஒன்றிஞென்று கிளம்பித் தோன்றுமுறை. கோ - நீர் - இரசம்; இங்குத் தேன் குறித்தது. கோ - தலைமை என்று கொண்டு உண்ணின்று வெளிப்படும் உயிர்ச்சத்து என்றலுமாம். சமயத்தார் தேவன் - "அறுவகைச் சமயத்தோர்க்கு மவ்வவர் பொருளாய்" (சித்தி). காலன் - மரணத்துன்பம்.—(4) இரவன் - இரவும் (பகலும்) ஆவன். எல்லி - இரவு - ஊழி. குயவர் - குய்யமுடையோர். குய்யம் - வஞ்சனை. எளியான் மெய்யர்க்கு என்க.—(5) பாரை - இடைநிலைத் தீபம். படைத்தான் - தோற்றுவித்தவன். இடந்தான் - அழித்தவன். கள்ளம் கடைத்தானும் என்க. கடைத்தல் - அழித்தல். அறிவார் - ஞானிகள். கண் - காட்டுபவன்.—(6) மூலன் மூர்த்தி - சிவன். மூர்த்தி - உருவுக்கேதுவாகிய சத்தி. "உலகெலா மாகி வேறாய்" (சித்தி - 2 - 1). காலன் - காலங்கண்டவன். முன்னோன் - பின்னோன். கால் - கடைக்கால்; மூலம் என்றலுமாம்.—(7) ஆலம் - விடம். ஆல் - மரம் என்றலுமாம். ஆதிரைநாள் ஆதரித்தவம்மான்.—(8) துடி - துடியின் முழக்கம் - மூலம். "இன்னிசை வீணையி லிசைந்தோன் - அன்னதொன் றவ்வயி னறிந்தோன்", (திருவா). சோதிப்பான் - அறிந்து தூய்மையாக்குபவன். "சொற்கழிவு பாதமலர்" கடியான் - கடியவன்.—(10) பொறுத்திருந்த புள் - தான் வென்றும் அடிமையாக இசைந்து மாலுக்கு ஊர்தியாக இருந்தவன். கருடன். ஊர்வான் - திருமால். ஊர்வானுள்ளான் - அவனுள்ளத்திற் றியானிக்கப்படு பொருள். "பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள்வா னுள்ளத்தான்"; "திருமா லகத்தான்". உள்ளிருந்து - எல்லா உயிர்க்கு முயிராய்ப் பிரிப்பின்றிக் கலந்திருந்து. மும்மதில்கள் மூன்றும் - மூவகை மதிலையுடைய மூன்று புரம். சிலைகுனிய - குனித்த அளவானே. அல்லியிருந்தான் - பிரமன். இருந்தானைத் தேரியநோக்கி ஒரு தலையை அறுத்திருந்த கையான் - என்க.—(11) உடனே வைத்து ஒள்ளழலை மாட்டி ஒன்னார் புரங்கள் மூன்றும் ஒறுத்தானும் என்க. எண்ணான் - சிவனது இறைமையை எண்ணாதவன் - இராவணன். இப்பதிகம் பதினொரு பாட்டுக்கள் கொண்டது.

தலவிசேடம்:—காவிரிக்குத் தென்கரையில் 18-வது தலம். திருக்களாவூர்- என்று வழங்கப்படும். தலமரம் முல்லையாதலின் முல்லைவனம் எனவும்படும். உதவியற்ற ஒரு பெண்ணின் கருப்பத்தைக்காத்த காரணத்தால் கரு கா வூர் எனப்படுமென்ப. இக்காரணம் பற்றியே இங்கு அம்மையார் கர்ப்ப ரட்சகி என வழங்கப்பெறுவர். சிவலிங்கத் திருமேனி நீண்ட மணல் திருமேனியாய் முல்லைக்கொடி சுற்றிய திருவடையாளத்துடன் விளங்குகின்றது. சந்திரன் பூசித்த தலம். சுவாமி - தில்லைவனநாதர். அம்மை - கரும்பனையாள். தீர்த்தம்-பால்தீர்த்தம். மரம் - தில்லை. பதிகம் 2.

இது பாபநாசம் என்ற இருப்புப்பாதை நிலயத்திலிருந்து தெற்கில் சாலியமங்கலம் கற்சாலைவழி நான்கு நாழிகை யளவில் அடையத்தக்கது. முன் உரைத்த குறிப்பும் பார்க்க.

திருஆவூர்ப் பசுபதீச்சரம் - நாயனார் தேவாரம் கிடைத்திலது! சிதலரித் தொழிந்தது போலும்!.

தலவிசேடம்:—ஆவூர் - தலப்பெயர். பசுபதீச்சரம் - கோயிலின் பெயர். கொட்டையூர்க் கோடீச்சரம் - கருவூ ரானிலை - சாந்தை யயவந்தி என்பன போலக் காண்க. பசு (ஆ - பசு) பூசித்தமையால் இப்பெயர் பெற்றது. சுவாமி - பசுபதீசர். அம்மை - மங்களநாயகி. பதிகம் 1.

இது பாபநாசம் என்னும் இருப்புப்பாதை நிலயத்தினின்றும் தெற்கே கற்சாலையில் திருக்கருகாவூரை அடைந்து, அங்குநின்றும் வடகிழக்கில் நான்கு நாழிகையளவில்

அடையத்தக்கது. தாராசுரம் நிலயத்தினின்றும் வரும்வழி ஆறுகள் குறுக்கிடலால் மழைக்காலத்தில் செல்வது கடினம்.

### திருப்பாலைத்துறை

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

*நீல மாமணி கண்டத்தர் நீள்சடைக், கோல மாமதி கங்கையுங் கூட்டினார்*
*சூல மான்மழு வேந்திச் சுடர்முடிப், பானெய் யாடுவர் பாலைத் துறையரே.* 1

*விண்ணி னார்பணிந் தேத்த வியப்புறு, மண்ணி னார்மற வாது சிவாயவென்*
*றெண்ணி னார்க்கிட மாவெழில் வானகம், பண்ணி னாரவர் பாலைத் துறையரே.* 6

*தொடரும் தொண்டரைத் துக்கந் தொடர்ந்துவந்,தடரும் போதர னாயருள்செய்பவர்,*
*கடலி னஞ்சணி கண்டர் கடிபுனல், படருஞ் செஞ்சடைப் பாலைத் துறையரே.* 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பாலைத்துறை யிறைவர், நீலகண்டத்தர் ; களிற்றுரி போர்த்தவர்; பூதங்குழுமி நின்றார்க்க நான்மறை பாடினர் ; இவை முதலிய பல சரிதைகளுடையார் ; பத்தர்கட்கன்பர் ; மறவாது சிவாயவென்றெண்ணினார்க்கு எழில் வானகம் இடமாப் பண்ணினார் ; தொண்டரைத் துக்கம் தொடரும்போது அரனாய் வந்து அதனைத் தொலைத்தருள் செய்பவர் ; அவரைக் கைதொழுவார் வினை ஓயும்.

பதிகப் பாட்டுக்குறிப்பு :—(1) கூட்டினார் - சேரவைத்தனர். தவளவெண்ணகை மங்கை - தல அம்மை பெயர்.—(2) தவளவெண்-தவளம்-வடசொல். சொற்பொருள் விரித்தலால் மொழிபெயர்த்துரைத்தார். திவளம் - ஒளியுடைமை ?—(3) பன்னினார் - சொன்னவர்.—(5) அன்பர் - இன்பஞ் செய்பவர்.—(6) சிவாய - சுத்த பஞ்சாக்கரம். திரயீ எனப்படும் வேதங்கள் சிவ நாமத்தை இதய நடுவுள் வைத்துப் போற்றுவது போல, மூவர் தேவாரங்களுள் நடுவணவாகிய நாயனார் தேவாரத்துள், நடுவணதாகிய இத் திருமுறையுள், நடுவதாகிய 51-வது இத்திருப்பதிகத்துள், நடுவணதாகிய இத்திருப்பாட்டில் சிவாயவென் றெண்ணினார் - என இரண்டாவது மூன்றாவதடிகளில் நடுநாயகமாகச் சிவ மூலமந்திரம் விளங்கும் தெய்வ அமைப்புக் குறிக்க. இது பற்றி உருத்திரபசுபதி நாயனார் புராணத்துள் உரைத்தவை பார்க்க. சிவாயவென் றெண்ணினார் - "விதியெண்ணு மஞ்செழுத்தே" (சிவஞான போதம் - 9). எண்ணினார்க்கு இடமாக எழில் வானகம் பண்ணினார் - "தஞ்சொன் மலரா லணியவல் லோர்கட்குத் தாழ்சடையோன், வஞ்சங் கடிந்து திருத்திவைத் தான்பெரு வானகமே" (பொன். வண். அந். 11). இடமா - இடமாக.—(7) கோடுகோட்டி - கொக்கரை - ஆடும்போது முழக்கப்படும் முழவு வகை. பண்கெழுமிய வீணை - இறைவர் கையில் இருப்பது. "மிக நல்ல வீணை தடவி". பண்கெழுமிய - மிக உயர்ந்த இசை நலம் தோற்றுவிப்பது வீணையாம். "குழலினிது யாழினிது" (குறள்). பண் - இங்கு உலகத் தோற்றத்திற்குக் காரணமாகிய நாதத்தைக் குறித்தது. "வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" (தேவா).—(8) தொடரும் தொண்டரைத் துக்கம் தொடர்ந்து வந்து - தொண்டர் தம்மைத் தொடரத், துக்கம் அவர்களைப் பின் தொடர்ந்து வந்து. முன் வரமாட்டாமையின் பின்தொடர என்க. "ஊழையும் உப்பக்கம் காண்பர்". தொண்டரைத் தொடரும் துக்கம் - முன் வினை ; ஊழினுறைவது. அடரும்போது அரனாய் - அரன் - பாவங்களை அரிப்பவன் - அழிப்பவன். மார்க்கண்டர் சரிதம் காண்க.—(9) போகந் தோய்ந்த புணர்முலை மங்கை - "போக மார்த்த பூண்முலை யாள்" (தேவா). "போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்" (சிவஞான

போதம் - 11).—(10) அங்கணர் - அழகிய அருட்கண் உடையார். வெருட்டியும் அஞ்சாது தங்கட்பொருந்தும் அடியார்க்கு என்றதும் குறிப்பு.

தலவிசேடம் :—திருப்பாலைத்துறை என்ற பெயர் இது முன்னர்ப் பாலைவனமாக இருந்த காரணத்தாற் போந்தது. ஆளுடையபிள்ளையார் பாலை நெய்தல் பாடி நனி பள்ளிசூழ் நகரைக் கானகமுமாக்கிய வரலாறு காண்க. சிவபெருமான் புலியைச் சங்கரித்து உரித்து அதன் தோலை உடுத்த தலமென்பது வரலாறு. சுவாமி - பாலை வனநாதர். அம்மை - தவளவெண்ணகையாள். அம்மை பெயர் பதிகத்துக் காண்க. 11 பாட்டுக்கள் கொண்டது இத்திருப்பதிகம்.

இது பாபநாசம் இருப்புப்பாதை நிலயத்திலிருந்து வடகிழக்கில் மட்சாலை வழி ஒரு நாழிகையளவில் அடையத்தக்கது.

பிறவும் :—திருப்பட்டீச்சரம் முதலியன. தலவிசேட முதலியன பின்னர் ஆளுடைய பிள்ளையார் புராணத்துக் காண்க.

1465. அப்பதியைச் சூழ்ந்ததிருப் பதியிலர னார்மகிழும்
ஒப்பரிய தானங்க ளுள்ளுருகிப் பணிந்தணைவார்
மெய்ப்பொருடேர் நாவினுக்கு வேந்தர்தா மேவினார்
செப்பருஞ்சீ ரப்பூதி யடிகளூர் திங்களூர். ௨௦௦

(இ - ள்) வெளிப்படை. அந்தத் திருப்பழனமாகிய பதியைச் சூழ்ந்த திருப்பதிகளில் சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருக்கும் ஒப்பற்ற திருக்கோயில்களை உள்ளுருகிப் பணிந்து அணைவாராகி, மெய்ப்பொருளைத் தேர்ந்து தெளிந்தாராகிய திருநாவுக்கரசு நாயனார், சொல்லுதற்கரிய சிறப்புடைய அப்பூதியடிகளாரது ஊராகிய திங்களூரை மேவினார்.

(வி - ரை) சூழ்ந்த திருப்பதி-திருப்புள்ளமங்கை-திருச்சக்கரப்பள்ளி முதலாயின. நாயனாரது பதிகங்கள் கிடைத்தில. தலவிசேடங்கள் பின்னர் வந்துழி உரைக்கப்படும்.

தானங்கள் - திருக்கோயில்கள். இறைவன் விளங்க இடங்கொண் டிருக்கும் தானங்கள் என்க.

மெய்ப்பொருள் தேர் - என்பது ஆணவமலங் கழுவிய சீவன்முத்தர்களும் வாதனைமல மறும்பொருட்டும் ஏனை உயிர்களுக்கு வழிகாட்டும் பொருட்டுமாக ஆலயங்களை அரனெனவே கண்டு தொழுதலும், சிவனது தியானமறு உணர்வினுடன் சரித்தலும் முதலாயின. "மெய்ப்பொருள்" (481) என்ற விடத்துரைத்தவையும் நினைவு கூர்க. "பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் - சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர்" (சித்தி - 11 - 2) என்றபடி மெய்ப்பொருளாகிய சிவனையே அறிந்துநிற்கும் என்பதாம்.

நாவினுக்கு வேந்தர் - அப்பூதியடிகளார் இத்திருப் பெயரையே மந்திரமாக் கொண்டு வழிபட்டு அந்த நாமத்தால் தருமங்கள் செய்தும், மக்கள் முதலிய எல்லாவற்றுக்கும் அப்பெயரிட்டும் வழங்கிய ஒழுக்கத்தினையே நாயனார் காணவும், அது கொண்டு மேற்சரிதம் விளையவும் காரணமாயின குறிப்பு.

செப்பருஞ்சீர் அப்பூதியடிகள் - "ஒருநம்பி யப்பூதி" என்று ஆளுடைய நம்பிகள் ஏத்திய அரிய சிறப்பும், நாயனார் தேவாரத்தில் வைத்து ஏத்தநின்ற சிறப்பும், அவரது புராணத்திற் காணப்படுகின்றபடி அவரது அன்பின் திறமாகிய சிறப்பும் செப்பற்கரியன.

திங்களூர் - தலவிசேடம் - தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று. திருப்பழனத்தினின்றும் தெற்கில் மட்சாலை வழி ஒரு நாழிகை யளவில் அடையத்தக்கது.

மெய்ப்பொருள் சேர்—அப்பூதியடிகளார்—என்பனவும் பாடங்கள். 200

1466. அந்தணரின் மேம்பட்ட வப்பூதி யடிகளார்
தந்தனய ருடன்சாலை கூவல்குளந் தருதண்ணீர்ப்
பந்தர்பல வாண்டவர சேனும்பெயராற் பண்ணினமை
வந்தணைந்த வாகீசர் கேட்டவர்தம் மனைநண்ண, உ0க

1467. மற்றவரு மனமகிழ்ந்து மனைவியார் மைந்தர்பெருஞ்
சுற்றமுடன் களிகூரத் தொழுதெழுந்து சூழ்ந்துமொழிக்
கொற்றவரை யமுதுசெயக் குறைகொள்வா ரிறைகொள்ளப்
பெற்றபெருந் தவத்தொண்டர் திருவுள்ளம் பெறப்பெற்றார். உ0உ

1466. (இ - ள்) வெளிப்படை. அந்தணர்களின் மேன்மைப்பாடு உடைய அப்பூதி அடிகளார், தமது தனயருடன், சாலைகள் - கூவல் - குளம் - தரு தண்ணீர்ப் பந்தர்கள் முதலிய பல தருமங்களையும் "ஆண்டவரசு" என்னும் திருப்பெயரினால் அமைத்தமை, அங்குவந்து அணைந்த வாகீசர் கண்டும் கேட்டும் தெரிந்தாராய், அவரது திருமனையை அடைய, உ0க

1467. (இ - ள்) வெளிப்படை. அவரும், மனமகிழ்ந்து தம் மனைவியார் மைந்தர்கள் பெருஞ்சுற்றமுடனே மகிழ்ச்சி மீக்கூரக் கண்டு, தெரிந்து, தொழுது, எழுந்து, சூழ வந்து, திருநாவுக்கரசு நாயனாரைத் தமது திருமனையில் அமுது செய்யும்படி வேண்டிக்கொள்வாராகி அவரது இசைந்த மறுமொழியை வேண்டி நிற்க, எதிர் பாராது தாமே வந்து கிடைக்கப்பெற்ற பெரிய தவத்தினையுடைய அவரது திருவுள்ளத்தின் இசைவினைப் பெறும்பேறு பெற்றார். உ0உ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1466. (வி - ரை) அந்தணர் - அந்தத்தை அணவுபவர். "சிவமென்னும் அந்ததர" (12-ம் சூத் - சிவஞானபோதம்) என்றவிடத்திற்போல. அந்தம் - வேதாந்தத் தெளிவாகிய சைவ சித்தாந்தத்தை யுணர்த்திநின்றது. அந்தத்தை அணவுதலாவது சைவ சித்தாந்தத்தின் முடிந்த நிலையாகிய ஞானநிறைவும் சத்திநிபாதமும் பெற்று நின்றும், பிராரத்தமுள்ளளவும் உடல் தாங்கி நிற்க வேண்டி யிருத்தலால் அதுவரை உலகத்தோடு ஒழுகி நிற்பினும், திருவேடமும் சிவாலயமுமே பொருளென்று கொண்டு வழிபட்டு அதில் உறைத்து நின்று ஒழுகுதல். அந்தணரின் மேம்பட்ட - அவ்வுறைப்பில் முதிர்ந்து நின்று. "முன்பொழியுங் கருணைபுரி வடிவுடையீர்" (அப்பூதி - புரா - 10), "மங்கலமாந் திருவேடத் துடனின்றிவ் வகைமொழிந்தீர்" (ஷை-15) என்ற திருப்பாட்டுக்கள் இதனை வலியுறுத்தும். அந்தணர் - இங்குக் காரண இடுகுறியளவாய் நின்று முதல் வருணத்தவர் என்ப துணர்த்திநின்றது.

தனயர் - மக்கள். மக்களுக்குத் திருநாவுக்கரசு என்று பெயர் சாற்றியதனோடு என்க. உடன் என்ற உருபு உயிர்ப்பொருள்களை உயிரில் பொருள்களாகிய சாலை முதலியவற்றினின்றும் பிரித்து நின்றது. சிறப்புப்பற்றி, உடன் உருபைத் தனயர் என்பதனுடன் சார்த்தி ஓதினார். அப்பூதியாரும் நாயனாரும் கூடும் சரித விளைவு தண்ணீர்ப் பந்தலிற்றொடங்கித் தனயரது செயல் பற்றிய செய்தியில் நிறைவேறுகின்றது என்று குறிக்கத் தனயருடன் என்பதை முதலிலும் தண்ணீர்ப் பந்தரை இறுதியிலும் வைத்தோதினார்.

சாலை - வழி போவார்க்கு உதவ நிழல் மரம் வைத்தும், சமன் செய்தும், மற்றும் வசதிகள் செய்தும் உள்ள நெறி. அறச்சாலைகள் என்றலுமாம்.

கூவல் - கிணறு. "கூவ லாமை குரைகட லாமையை" (திருக்குறுந்தொகை). நீர் இறைத்து மொண்டெடுக்கும் சிறிய நீர்நிலை.

குளம் - பெரிய நீர்நிலை. உள்ளிறங்கி நேரே நீர் மொண்டெடுத்தற்குரியது. மக்களேயன்றி ஏனைப் பிராணிகட்கும் உதவுவது. குளம் - வெல்லம் என்று கொண்டு, குளந்தரு தண்ணீர் என்று கூட்டிப் பானகம்போன்ற என்றுரைப்பினு மமையும். "குளநிறைந்த நீர்த்தடம்போல்" (அப்பூதி - புரா - 5) என்பது காண்க.

தருதண்ணீர்ப் பந்தல் - கூவலும் குளமும்போலன்றி, நீர் கொண்டு வந்து வைத்து, வேண்டுபவர்க்கு உதவும்வசதியுடையது. இயற்கையாயமையாது செயற்கையால் நீர்சேமிக்கப்படலாலும், நீர் தரப்படுதலாலும், நீர்மட்டுமேயன்றி நிழலும் அயர்வு நீங்கக் குளிர்ச்சி தருவனவும் ஏனையவுமாகிய வசதிகளும் தரப்படுதலாலும் தரு என்ற அடைமொழி தந்தோதினார். வடிவுதான் காணாராயினும் பலகாலம் குருவாகக் கொண்டு தியானித்து நின்ற நாயனாரை அப்பூதியடிகளாருக்குத் தேடிக் கிடைக்கத் தரும் என்ற குறிப்புமாம். சரித நிகழ்ச்சி விரிவு அப்பூதிநாயனார் புராணத்துட் காண்க.

தரு - என்பதற்கு இவ்வாறன்றி, அப்பூதியார் புராணம் 7-வது திருப்பாட்டில் "சோலைகுளங்கா" என்பதற்கேற்பச், சோலை என்றுரைப்பினுமமையும்.

அந்தணரின் மேம்பட்ட - அப்பூதியடிகள் சாதிச்செருக்கின்றி அன்பில் திளைத்துத் திருநாவுக்கரசரைக் குருவாகக் கொண்டவராதலின் இவ்வாறு கூறினார் என்று இங்கு விசேடவுரை காண்பாருமுண்டு. அந்தணர் என்ற பெயர் சாதிபற்றிய பெயர்மட்டில் அமைந்தொழிவது பிற்கால வழக்கு. இதுபற்றியும், பின்னர் இச் சரிதப் பகுதியினுள் நாயனாருடன் அப்பூதியடிகளாரும் மக்களும் ஒருங்கிருந்து உடன் அமுது செய்தமைபற்றியும், நாயனாரை அப்பூதியார் குருவாகக் கொண்டமைபற்றியும் சாதிகுலம் முதலிய தொடர்புகளை உட்கொண்ட பலவகை ஆராய்ச்சிகள் செய்வார் பலர். அவையெல்லாம் திருத்தொண்டி னெறியின் உட்கோளையும் ஒழுக்கத்தினையும் குறிக்கொள்ளாதெழுவன என்க. இதுபற்றிப் பின்னர் அப்பூதியார் புராணத்துப் பின்னும் விளக்கப்படும். *தனயர் மைந்தர் என்று இங்கு ஆண்மக்களைக் குறிக்கும் சொற்களாற் கூறுகின்ற ஆசிரியர், அப்பூதியார் புராணத்துள் "மக்கள்" என்று பொதுப்பெயராற் கூறுகின்றமையால் அப்பூதியடிகளார்க்குப் பெண் மக்கள் உண்டோ? இன்றோ? என்ற விசாரத்தில் இங்குப் புகுந்து ஆராய்வாரும் உண்டு. இவ்வாறு வேண்டா விசாரணைகள் பலவற்றுக்கும் அப்பூதியார் புராணம் இடமாய் நிற்பது இக்காலநிலையின் அலங்கோலம்! அன்புச் சரிதத்துள் சடம்பற்றிய பேச்சுக்களுக்கிடமில்லை என்றொழிக.

தனயருடன் - தனயர்க்குப் பெயர் சூட்டியதுடன். பண்ணினமை - பெயராற் செய்தமை என்க.

வந்து அணைந்த வாகீசர் கேட்டு - வந்த இடத்துக், கண்டவை சில; கேட்டவை பல. வந்து என்றதனாற் கண்டமை பெறப்படுமாதலின், கேட்டல்மட்டும் விரித்துக் கூறினார். "தண்ணீர்ப் பந்தருங்கண் டத்தகைமை, புரிகின்ற வறம்பிறவும் கேட்டு" (அப்பூதி - புரா - 11) என்பது காண்க.



1467. (வி - ரை) மற்றவரும் - சூழ்ந்து - இதன் பொருள் அப்பூதி நாயனார் புராணத்துள் 9 முதல் 18 வரை உள்ள பத்துப் பாட்டுக்களால் விரிக்கப்பட்டது. அங்கு விரித்தோதவேண்டியிருத்தலானும், அப்பூதியாரது திருமனையில் அரசுகள் நண்ணியது முதல் அரசுகளை அவர்தாமென்று அப்பூதியார் உணர்ந்து களிகூரும்வரை உள்ள

*எனது சேக்கிழார் - 88-91 பக்கங்கள் பார்க்க.

நிகழ்ச்சிகள் அப்பூதியார் சரிதத்தினுள் பேசப்படுதல் முறையாதலானும், இங்கு இவ்வாறு சுருக்கிக்கூறினர். இஃது ஆசிரியரது சிறப்பாகிய கவிநலம். அரசுகள் மனைக் கடை நண்ணினர்; அடியவர் ஒருவர் வந்தார் எனக்கேட்டு உள்ளிருந்த அவர் வந்து தொழுதனர்; அரசுகள் தண்ணீர்ப்பந்தர் முதலிய அறச்சாலைகளில் உம்பேர் எழுதாது வேறொரு பேர் முன் எழுதக் காரணமென்னை என்று வினவியபோது, "திருநாவுக்கரசு" என்ற ஆத்தமாகிய தூயபேரோ வேறொரு பேர்? என வெகுண்டு "அவரது பெருமை யறியாத நீர் யாவர்?" என்று அப்பூதியார் கேட்டனர்; அதற்கு இறைவரால் சூலைதந் தாட்கொள்ளப்பட்ட உணர்விலாச் சிறியேன் நான் என்று அரசுகள்கூற, அப்பூதியார் பெருங்களிகூர்ந்து,மனைவியார் மைந்தர் சுற்றத்தார் முதலிய அனைவரையும் உள்ளிருந்து அழைத்துவந்து கடைத்தலையில் நின்ற நாயனாரைத் தொழுது எழுந்தனர்; என்ற இத் துணையும் இங்கு விரித்துரைத்துக் கொள்ளவைத்தார். மற்றவர் என்றதனால் "வேறொரு பேர்" என்று சொல்லக் கேட்டபோது அரசுகளிடம் மனப்பிணக்கங் கொண்டநிலையும், மனமகிழ்ந்து என்றதனால் முன்னர் அந்தப் பிணக்கத்தால் மகிழாது வெகுண்ட நிலையும், களிகூரத்தொழுது என்றதனால் அது நீங்கிப் பின்னர்க் களிகூர்ந்த நிலையும் உய்த் துணர வைத்த திறமும் கண்டுகொள்க.

சூழ்தல் - சுற்றி வலம்வருதல். சூழ்ந்து - நினைந்து-எண்ணி-என்றலுமாம். "அமுது செய்விக்கு நேசமுற" (அப்பூதி - புரா - 21).

அமுதுசெயக் குறைகொள்வார் இறைகொள்ள - குறைகொள்வார் - குறை கொள்வாராகி. குறைகொள்ளுதல் - மிகப்பணிந்து வேண்டுதல். "குறைந்தடையு நன் னாளில்" (1310). இறைகொள்ள - விடைகேட்க. இறை-விடை. "விண்ணப்பஞ் செய" (அப்பூதி - புரா - 21)

பெற்ற பெருந்தவத் தொண்டர் - பெற்ற - கிடைக்கப்பெற்ற. இவ்வாறு தியான உறைப்பின் பயனாகத் தாமே வந்து கிடைக்கப்பெற்ற. பெருந்தவம் - முன்னைத் தவமும் இம்மைத் தவமும். 1405-ம் திருப்பாட்டும் ஆண்டுரைத்தவையும் இங்கு நினைவு கூர்க. இங்கு இவ்வாறன்றிப் பெருந்தவம் பெற்ற தொண்டர் என்று கூட்டியுரைப் பாரும், சிவபெருமானால் அடிமை கொள்ளப்பெற்று என்பாருமாயினர் முன் உரை யாசிரியர்கள். தொண்டர் - அப்பூதியார் என்று கொண்டு, நாயனாரது திருவுள்ளம் பெற என வருவித்துரைப்பாருமுண்டு.

திருவுள்ளம்பெற - இசைய; இசைவுதர; அதற்கு உடன்பட. 202

1468. காண்டகைமை யின்றியுமுன் கலந்தபெருங் கேண்மையினர்
பூண்டபெருங் காதலுடன் போனகமுங் கறியமுதும்
வேண்டுவன வெவ்வேறு விதங்கள்பெற விருப்பினால்
ஆண்டவர சமுதுசெயத் திருவமுதாம் படியமைத்து, ௨௦௩

1469. திருநாவுக் கரசமுது செய்தருள மற்றவர்தம்
பெருநாமஞ் சாத்தியவப் பிள்ளைதனை யழைத்தன்பு
தருஞானத் திருமறையோர் தண்டலையின் வண்கதலிக்
குருநாளக் குருத்தரிந்து கொண்டுவரத் தனிவிட்டார். ௨௦௪

1468. (இ - ள்) வெளிப்படை. காணும் தன்மை யில்லாதேயும், முன்கலந்த பெரும் கேண்மையைக் கொண்டவராகிய அப்பூதி நாயனார் மேற்கொண்ட பெருத்த காதலுடனே திருஅமுதும், கறியமுது வகைகளும் வேண்டுவனவற்றை வெவ்வேறு

விதங்களாக விருப்பத்தினால் ஆண்ட அரசுகள் அமுது செய்வதற்குரிய திருவமுதாகும்படி அமைத்து, ௨0௩

1469. (இ - ள்) வெளிப்படை. திருநாவுக்கரசு நாயனார் அமுதுசெய்தருள் வதற்காக, அவருடைய பெருநாமத்தைச் சூட்டப்பெற்ற அந்த மூத்தபிள்ளையை அழைத்து, அன்பு பொருந்தும் ஞானத்திருமறையோராகிய அப்பூதியார், தோட்டத்தில் வளப்பமுடைய கதலியின் பெரிய நாளத்தையுடைய குருத்தினை அரிந்து கொண்டு வரும்படி தனி ஏவி விடுத்தனர். ௨0௪

1468. (வி - ரை) காண்தகைமை......கேண்மையினார் - முன்காண்தகைமை என்றும், முன்கலந்த என்றும் இருவகையும் கூட்டியுரைக்க நின்றது. முன் - இடைநிலைத்தீபம். உம்மை - உயர்வு சிறப்பு. முன்கலந்த-கேண்மை நிலையை அவர் அறிந்து மேற்கொள்வதன் முன்பே கலந்த; "பாதம் அடைந்தவ ரறியா முன்னே, காண்டகு காதல் கூரக் கலந்த அன்பினர்" (அப் - புரா - 11) என்பது பார்க்க. கேண்மை - இங்கு உயிரினைப் பற்றிய அன்புச் சுற்றம் குறித்தது. "மருவியநண் புறுகேண்மை அற்றை நாள்போல் வளர்ந்தோங்க" (1452) பார்க்க. இதனை மேல்வரும் பாட்டில் "அன்புதரு ஞானம்" என்று விளக்கியது காண்க.

கேண்மையினார் - அன்புதரு ஞானத்திரு மறையோர் - அமைத்து - அழைத்து - குருத்தரிந்து கொண்டுவர - விட்டார் - என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

வேண்டுவன - வெவ்வேறு விதங்கள் பெற - கறியமுது வகைகள் சுவையாலும், உண்ணும் வகையாலும் பலதிறப்பட்டபோதே உணவுக்கு ஏற்பவையாகுமாதலின், வேண்டுவன - வெவ்வேறு - விதம் எனக் கூறினார். "உண்டி நாலு விதத்தி லாறு சுவைத்தி றத்தினில்" (443) என்றது பார்க்க. விருப்பினால்-அமுதுசெய என்றும், விருப்பினால் அமைத்து என்றும் கூட்டி உரைக்க நின்றது. முதனிலைத் தீபம்.

ஆண்ட அரசு அமுதுசெய - தம்மை ஆளுடைய குருவாகிய அரசுகள் அமுது செய்தற்குரியபடி - தக்கபடி. திருவமுது ஆம்படி - தூய்மை - அன்பு முதலியவற்றால் குருவுக்கு நிவேதனமாகும்படியில்.

ஆண்ட அரசு - திருநாவுக்கரசு என்ற திருநாமத்தையே எண்ணியும் சொல்லியும் சாத்தியும் அப்பூதியார் ஒழுகியமை குறிக்க இப்பெயராலே குறித்தனர். முன் பாட்டில் "மொழிக் கொற்றவர்" என்றதும், மேல்வரும் பாட்டில் "திருநாவுக்கரசு... அவர்தம் பெருநாமம்" என்பதும், "செம்மைபுரி திருநாவுக் கரசர்திருப் பெயரெழுத" (அப்பூதி - புரா - 14) முதலியனவும் காண்க. 203

1469. (வி - ரை) அமுது செய்தருளக் - கதலிக் குருத்து - என்று கூட்டுக. முன்பாட்டில் திருவமுதினைக் கூறியவிடத்து, வாளா அமுதுசெய என்ற ஆசிரியர், இங்கு அமுதுக்குப் பரிகலமாகிய மட்டில் அமையும் கதலிக் குருத்தினைப் பற்றி அமுது செய்தருள என்றார்; மேல்விளைவு அந்தக் குருத்தினைப் பற்றி நிகழ்வதானும், அரசுகளின் அருள்பெருகி நிகழ்வதற்கு அதுவே கருவியாய் நிற்பதானும் என்க.

பெருநாமம் சாத்திய அப்பிள்ளை - மைந்தர் பலருக்கும் அத்திருப்பெயரினையே சாத்தியழைத்து ஒழுகினாராயினும், அவருள் இப்பிள்ளைக்கே முதலாவதாக அது சாத்திப் பெருக அழைக்கப்பட்டதனாலும், அதனால் மூத்த திருநாவுக்கரசு என்று அழைக்கப் பட்டமையாலும், பெருநாமம் என்றதனோடு அகரச் சுட்டும் சார்த்தி ஓதினார்.

அன்புதரு ஞானத் திருமறையோர் - அன்பு - இறைவனிடத்தன்பு. "ஈசனுக் கன்பில்லார்" என்ற சிவஞான சித்தியார் (11. சூத்) பார்க்க. "தாண்டவம் புரிய வல்ல தம்பிரானாருக் கன்பர்" (அப்பூதி - புரா - 1) என்று இதனை விளக்குவது காண்க. சிவன்பாலன்பு அவனடியாரிடத்துப் பத்தியாய் விளைய, அதனால் சிவஞ்

குருவா யெழுந்தருள, அக்குருவருளால் ஞானம் உணரப்படுமென்பது சாத்திரம். ஞானம் - சிவஞானம். சன்மார்க்கத்திறற் பெறப்படும் பயன். "தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த" என்ற சிவஞான போதம் எட்டாஞ் சூத்திரத்துக்குக் கருத்துரை கூறுமிடத்து ஆசிரியர் மெய்கண்டதேவர், "ஞானத்தினை உணருமுறைமையினை உணர்த்துதல் நுதலிற்று" என்று வகுத்தமை காண்க.

ஞானந்திருமறையோர் - என்றதனுல் மறையாகிய பொதுநூல் வல்ல அவர், சிறப்பாகிய ஆகமத்தினும் வல்லராய், அதனுலறியப்படும் ஞானமாகிய நான்காம் படியினையும் அடைந்த பெரியவர் என்றவாறு.

தண்டலை - தோட்டம். வண்கதலி - வளப்பம் எல்லாக் கதலிக்கும் பொது விலக்கணமாயினும் இங்கு இக்கதலிக்குப் பின்வரும் அருள் நிகழ்ச்சிக்குக் காரணமாகிய சிறப்பியல்பாயிற்று என்பது குறிப்பு.

வண்மை - "மெல்லிய வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம்" என்றபடி தானிறந்தும் பயன்றருதலும், தன் உடல் அங்கம் முழுதும் பயன்படுதலும் வாழையின் பொதுவியல்பாம். இங்கு இக்கதலிக்குச் சிறப்பாயுரிய வண்மையாவது குருவருள்பெறத் துணையாய் நிற்பது. "நிகழ்ந்த அக் கதலி" (அப்பூதி - புரா - 39) என்பது காண்க. கதலி - வாழையின் வகையுள் ஒன்று - சிறந்தது - என்றலுமாம்.

குரு - பெரியதாகிய. நாளக்குருத்து - தண்டு முற்றும் வெளிப்போந்து விரிந்த பெருங்குருத்து. குருத்து - இலைமுற்றுத பருவங்குறித்தது.

தனிவிட்டார் - தனி - இங்கு விரைவாக என்ற பொருளில் வந்தது. "விரைந்து விட்டார்" (அப்பூதி - புரா - 23). தனியாக வேறு எவரும் துணையின்றி என்றுரைத்தலுமாம்.

அழைத் தந்தத்—என்பதும் பாடம். 204

1470. ஆங்கவனும் விரைந்தெய்தி யம்மருங்கு தாழாதே
பூங்கதலிக் குருத்தரியப் புகுமளவி லொருநாகந்
தீங்கிழைக்க வதுபேணுன், திருவமுது செய்தருள
வோங்குகத லிக்குருத்துக் கொண்டோல்லை வந்தணைந்தான். ௨௦௫

(இ - ள்) வெளிப்படை. அவனும் ஆங்கு விரைவாகச் சேர்ந்து, அச்செயலில் காலந் தாழ்க்காமல் அழகிய வாழைக்குருத்தை அரியப் புகும்போது, ஒரு பாம்பு தீண்ட, அதனைப் பொருட்படுத்தாது, அரசுகள் திருவமுது செய்தருளுதற்காகப் பெரிய வாழைக்குருத்தை அரிந்துகொண்டு விரைவில் வந்து அணைந்தனன்.

(வி - ரை) விரைந்து-எய்தி-தாழாதே - என்பன அந்த மகனுக்கு அத்திருப்பணியில் இருந்த ஊக்கங் குறித்தன. அது பேணுன் - ஒல்லை வந்தடைந்தான் என்பன அந்த ஊக்கத்தோடு அன்பின் பணிவிடையில் அவன் வைத்த உறைப்பினையும் உணர்த்தின.

அவனும் ஆங்கு விரைந்து எய்தி என்க. ஆங்கு - தோட்டத்தின்கண். அம்மருங்கு - தோட்டத்தில் செய்யும் செயலில் என்றபடி.

தீங்கிழைத்தல் - தீண்டுதலால் பற்கள் உள்ளே பொருந்தித் நஞ்சுகுத்துத் தீமை செய்தல். தீங்கு - உயிர் போக்கக் காரணமாதற்கு மங்கல வழக்கு.

பேணுன் - பொருட்படுத்தானுகி.

ஒல்லை வருதல் - விடத்தின் தீமை தலைக்கேறி வீழாமுன் வாழைக்குருத்தைக் கொண்டு சேர்க்க வேண்டுமென்ற ஆவலால் விரைந்து வந்தனன். இப்பாட்டின் பொருளையும் சரித நிகழ்ச்சியையும் பின்னர் அப்பூதியார் புராணம் 24, 25, 26 என்ற மூன்று பாட்டுக்களால் விரித்துரைப்பது காண்க. 205

1471. தீயவிடந் தலைக்கொள்ளத் தெருமந்து செழுங்குருத்தைத்
தாயர்கரத் தினினீட்டித் தளர்ந்துதனைத் தழனாக
மேயபடி யுரைசெய்யான் விழக்கண்டு "கெட்டொழிந்தேந்;
தூயவரிங் கமுதுசெயத் தொடங்கா"ரென் றதுவொளித்தார், ௨0௬

1472. தம்புதல்வன் சவமறைத்துத் தடுமாற்ற மிலராகி,
யெம்பெருமா! னமுதுசெய வேண்டுமென வந்திறைஞ்ச,
வும்பர்பிரான் றிருத்தொண்ட ருள்ளத்திற் றடுமாற்ற
நம்பர்திரு வருளாலே யறிந்தருளி நவைதீர்ப்பார், ௨0௭

1472. அன்றவர்கண் மறைத்ததனுக் களவிறந்த கருணையராய்க்
கொன்றைநறுஞ் சடையார்தங் கோயிலின்முன் கோணர்வித்தே,
"யொன்றுகொலா" மெனப்பதிக மெடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான்.

1471. (இ - ள்) வெளிப்படை. அவ்வாறு ஒல்லை வந்தணைந்த அம்மகன் தீய விடம் தனது தலைக்கேற, மயங்கிச், செழுங்குருத்தைத் தன் தாயாருடைய கையினில் நீட்டித், தளர்ச்சியடைந்து, தன்னைத் தீப்போன்ற நாகம் தீண்டிய செய்தியைச் சொல்லாதவனாய்க், கீழே விழ, அதனைத் தாயாரும் தந்தையும் கண்டு "கெட்டொழிந்தோம்! புனிதராகிய ஆண்ட அரசுகள் இதனால் இங்கு அமுதுசெய்யத் தொடங்காரன்றே!" என்று உட்கொண்டு விடந்தீண்டிய அச்செய்தியை மறைத்தனராய்; ௨0௬

1472. (இ - ள்) வெளிப்படை. தமது புதல்வனுடைய சவத்தை மறைத்து, அதனால், எவ்வித மனத் தடுமாற்றமும் இல்லாதவர்களாகி, முன்னே நாயனாரிடம் வந்து, "எமது பெருமானே! அமுது செய்தருள வேண்டும்" என்று வணங்கிச் சொல்லிநிற்கத், தேவதேவராகிய சிவபெருமானது திருத்தொண்டராம் நாயனாரும் தமது செவ்விதாகிய திருவுள்ளத்தில் நம்பரது திருவருளால் ஒரு தடுமாற்றம் உண்டாக, அதனை அறிந்தருளித் துன்பத்தை நீக்குவாராய்; ௨0௭

1473. (இ - ள்) வெளிப்படை. அன்று அவர்கள் இவ்வாறு புதல்வனது சவத்தை மறைத்த அன்பின்றிறத்துக்கு அளவற்ற கருணைகூர்ந்தவராய், அந்தச் சவத்தினைக் கொன்றைசூடிய வாசனையுடைய சடையாரது திருக்கோயிலின் முன்பு கொண்டுவரச் செய்து, "ஒன்று கொலாம்" என்று தொடங்கிய திருப்பதிகத்தினால் ஆளுடைய பெருமானது சீர்களைப்பாடப், பின்வந்து தங்கியவிடம் போய் நீங்கவே, பிள்ளை துயிலுணர்ந்தவன்போன்று எழுந்திருந்தான். ௨0௮

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1471. (வி - ரை) விடந் தலைக்கொள்ளுதல் - விடத்தின் ஏழாம் வேகம் தலையின் ஏறி மூளையுடன் பொருந்தி எழு தாதுக்களையும் ஊடுருவிக் கெடுத்தல்.

தெருமருதல் - நஞ்சினால் மயக்கமுற்றுச் சுழலுதல்.

தழல் நாகம்-நஞ்சினை உகுத்துத் தழல்போல எரித்து அழிக்கவல்ல நாகம். நாகம்-ஈண்டுப் பாம்பின் ஒரு சாதிக்குறிப்புமாம். முன்பாட்டிலும் நாகம் என்றது காண்க.

மேயபடி - மேவிய - தீண்டிய - படியினை. இரண்டனுருபு தொக்கது.

உரை செய்யான் (விழக்கண்டு) - உரை செய்யாமல். இஃது அம்மகனது அன்பின் உறைப்பினை உணர்த்துதல் காண்க. இவ்வாறு துணிந்தே செய்தனன் என்பது அப்பூதியார் புராணத்துட் காண்க. உரை செய்து என்ற பாடம் தவறு.

கெட்டு ஒழிந்தோம்! - மனம் அவலமடைந்தமை காட்டும் அவலச் சொல்,

தூயவர் - ஆதலின், என்று அமுது செயத் தொடங்காமைக்குக் காரணங்காட்டு வார் உடம்பொடு புணர்த்தி ஓதினர்.

அது - அச்செய்தி. ஒளித்தார் - முற்றெச்சம், ஒளித்தாராகி. மேற்பாட்டில் மறைத்து என்றதனுடன் கூட்டிமுடிக்க.

தழலரவம்—என்பதும் பாடம். 206

1472. (வி - ரை) தம்புதல்வன் சவம் - "தெருமந்து - விழக்கண்டு" என்ற மட்டில் மேற்பாட்டில் அறிவித்த ஆசிரியர், வேறுரையாராகி, இங்குச் சவம் என்றத னல் அவனது உயிர் நீங்கிற்று என்பதறிவித்தனர். "ஆவிதீர் சவத்தை நோக்கி" (அப்பூதி - புரா - 35) என்பது காண்க.

தடுமாற்றம் இலராகி - தடுமாற்றமாவது "தூயவரிங் கமுதுசெயத் தொடங் கார்" என்றதனல் வந்த மனக்கலக்கம். இலராதல் - நீங்குதல். அது, மகன் வீழ்ந்து உயிர் நீத்த செய்தியும், அதனைத் தெரிக்கக்கூடியதாகிய அவனது சவமும் மறைக்கப் பட்டமையால் உளதாயது. மகன் வீழ்ந்ததனுலாகும் தடுமாற்றம் என்றுரைப்பாரு முண்டு. அஃது அவர்பால் நிகழவில்லை என்பது துணிபு. "வீந்தா னென்று துளங்குத லின்றி" (அப்பூதி - புரா - 28) என்பது காண்க.

எம்பெருமான் - எமது என்றது இறந்த மகனை உள்ளிட்ட எங்கள் குடி முழுதும் என்ற குறிப்பையும் கொண்ட வாய்மையாவது பிற்சரித வினவிஞற் காண்க. "அமுதுசெய்தெங், குடிமுழு துய்யக் கொள்வீ ரென்றவர் கூற" (அப்பூதி - புரா - 30) என்பது காண்க.

திருத்தொண்டர் - அரசுகள். அப்பூதியார் என்றுரைப்பாருமுண்டு. அது பொருந்தாது. அவர் உள்ளத்திற் றடுமாற்றமிலரென்பது முன் உரைக்கப்பட்டது. "அன்பர் செவ்விய திருவுள்ளத்து ஓர் தடுமாற்றஞ் சேர" (அப்பூதி - புரா - 33) என்று இதனைப் பின்னர் விளக்குவது காண்க.

உள்ளத்தில் தடுமாற்றம் திரு அருளால் அறிந்து - "வானந் துளங்கிலென்" என்றுகூறி, "மலையேவந்து விழினும் - நிலையினின்று" கலங்காது, "அஞ்சுவது யாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை" என எஞ்ஞான்றும் துளங்காது நிலைநிற்கும் தன்மையுடைய நாயனரது செவ்விய திருவுள்ளத்தில் ஒரு தடுமாற்றம் சேர்ந்தது. அது என்ன என்று அறிதலுற்றனர். அறிந்து - "சேர நோக்கி" என்றது காண்க.

அருளி - அருள் புரிவாராகி. "அளவிறந்த கருணையராய்" என்று மேல் வருவது காண்க. அப்பூதியார் அழைத்தலும் நாயனர் அமுது செய்தருளும் பாங்கினிலிருந் தனர்; அப்பூதியாருக்கும் பிள்ளைகளுக்கும் திருநீறளிக்கும்போது மூத்த பிள்ளையை அழைக்கச்சொல்ல, "அவன் இப்போது இங்கு உதவான்" என்று அப்பூதியார் கூறக்கேட்டு, நாயனரது செவ்விய திருவுள்ளத்து ஒரு தடுமாற்றம் சேர்ந்தது; "மெய்விரித்துரையும்" என்று நாயனர் கேட்க, அப்பூதியார் நிகழ்ந்ததை உரைத் தனர்; அரசுகள் கேட்டு "நன்று நீர்புரிந்த வண்ணம்! வேறு யாவர் இத்தன்மை செய்தார்!" என்று பெருங்கருணை கூர்ந்து, அவனது சவத்தை இறைவரது கோயி லின் முன் கொணரச் சொன்னர் - என்ற இவ்வளவும் இங்கு அருளி என்ற இவ்வொரு சொல்லாற் பெறவைத்த குறிப்பும் சிறப்பும் காண்க. அப்பூதியார் புராணத்தின் 29 முதல் 35 வரை 5 பாட்டுக்களால் இதனை அங்கு விரித்துக் கூறியவாறெல்லாம் இங்கு வைத்துரைத்துக் கொள்க.

தடுமாற்றம் சேர்ந்ததும், அறிந்ததும் திருவருளால் ஆயின. இவை தவமுடைய பெரியோர்க்கு இறைவன் உண்ணின்று உணர்த்தும் முறை. திருப்பூந்துருத்தியில் எழுந்தருளி யிருந்த நாயனரைக் காணும் விருப்போடு எழுந்தருளிய திருஞானசம்பந்த

நாயனாரது சிவிகையைத் தாங்குவோருடன், வேறு எவரும் அறியாதே தமது திருத் தோளில் நாயனார் தாங்கிச் சென்றவுடனே, திருஞானசம்பந்த நாயனாரது திருவுள் ளத்தில் திருவருளால் வேறு ஒரு குறிப்புத் தோன்ற, அவர் " அப்பர் எங்குற்றார் இப் பொழுது ?" என்று கேட்கவும், நாயனார் " அடியேன் சிவிகை தாங்கும் பெருவாழ்வு பெற்று இங்குற்றேன் " என்று சொல்லவும், அதனால் நாயனாரது அடிமைத்திறம் உல கில் விளங்கவும் காரணமாய் நின்ற திருவருட்டுணையை இங்கு நினைவு கூர்க. அங்குத் திருஞானசம்பந்தரது " புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திட " என்பதும் காண்க.

நம்பர்-தம்மை உயிர்கள் நம்பி வந்து அடையும் தலைவர். நம்புதலாவது-"நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே " (திருவாசகம்) என்ற மனநிலை கைவருதல். நம்பராதலின் அருள்புரிந்து தடுமாற்றத்தை உளதாக்கினர் - என்று குறிக்க இப்பெயரால் கூறினார். நாயனார்க்கும், அப்பூதியார்க்கும் நம்பர் என்க. அப்பூதியார் நம்பி அமைந்து அடைந்திருந்தமை, " நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே, யிம்மையிலும் பிழைப்பதென வென்போல்வா ருந்தெளி யச், செம்மைபுரி திருநாவுக்கரசர் " (அப்பூதியார் புரா. 14) என்றதனாலும், பிற வாற்றாலும் காண்க.

நவை - துன்பம். அன்பர்க்கு அடாத தீங்கு. " நாகம் தீங்கிழைக்க " (1470) என்ற தீமை.　　207

1473. (வி - ரை) மறைத்ததனுக்கு - புதல்வன் விடத்தின்வீந்த செய்தியினை யும், அதனைக் காட்டக்கூடிய அவனது சவத்தினையும் மறைத்ததுவும் அன்றி, " பூதி சாத்தக் காதலால் இவர்க்கு மூத்த சேயையும் காட்டு " மென்று தாம் கேட்டபோது " இப்போ திங்கவ னுதவான் " என்று மறை பொருள்பட விடை கூறியதுவும் குறிப்பு. அவ்வாறு மறைத்ததனை அப்பூதியார் உற்றது பகரக்கேட்டுக் கருணை பூண்டனர். அப்பூதியார் புராணம் - 34, 35 பார்க்க.

அளவிறந்த கருணையராய் - மைந்தன் விடத்தால் வீந்தனன் என்பதினும், அதனை அவர்கள் மறைத்த செயலே நாயனாரது திருவுள்ளத்தில் அளவுபடாத கருணையைப் பூக்கச் செய்தது. கருணை அளவுகடந்து பெருகியது புதல்வன் மாட்டன்று ; அவனை இழந்த அப்பூதியார், மாட்டுமன்று ; ஏன் ? உலகில் இறத்தல் உயிர்கட்கியல்பு ; புதல் வனை யிழத்தலும் இயல்பு ; இவை யெல்லாம் இறைவனது நியதி. ஆதலின் செத் தாரை யெல்லாம் பிழைக்கச் செய்யவோ, இனியாரைச் சாகக் கொடுத்தாரது துன் பங்களை யெல்லாம் நீக்கச் செய்யவோ முயல்வேன் என்பதில் நல்லாசாரியராவார் முயலார். அவ்வாறு முயல்வது இறைவரது நியதி அறியாதார் செய்கை. ஆனால் இங்கு நாயனார்பாற் கருணையை மிகச் செய்தது அவர்கள் மறைத்த அந்தச் செயலே யாம். அஃது அடியவர்பாற் கொண்ட அன்பின் மிகுதியின் விளைவு. ஆதலின் அது கருணையை விளையச் செய்யவே, நாயனார் நவை தீர்ப்பாராயினர். இவ்வாறே, திருப்புக்கொளியூரில் முன்னாள் முதலை விழுங்கியதா லிறந்துபட்ட மகனை நினைந்து வருந்தியழுத மறையவனும், மனைவியும் ஆளுடையநம்பிகளது வரவு தெரிந்து, வந்து, மகவிழந்த சித்தசோகந் தெரியாமே அவரை முகமலர்ந்து " அன்பு பழுதாகாமலெழுந் தருளப் பெற்றோ " மென்று தொழுதது கண்டு, " மைந்தன் றன்னை யிழந்ததுயர் மறந்து அடியார் வந்தணைந்ததற்கு மகிழ்ந்த இவரது துயர்தீர இறைவரது அருளால் மைந்தனை யழைத்துக் கொடுப்பேன் " என்று அருள்செய்து, இடர் தீர்ப்பாராய், நம்பிகள் புகுந்தனர் எனவரும் சரித வரலாறு இங்கு நினைவு கூர்தற்பாலது. (வெள்ளானைச் சருக்கம் - 9)

கொன்றை நறும் சடையார் தம் கோயிலின் முன் கொணர்வித்து - *அப்பூதியாரது திருமனையினின்று பதிகம் பாடினும் இறைவர் அருள் புரிவா ராயினும் திருக்கோயிலின் முன் கொணர்வித்தமை யென்னை? எனின், அச்செயல் "அரன் தான் செய்யும் தன்மையை அன்பர்க்கு ஆக்கியிடும்" திருவருட்டுணையா லாவது என்பதனை உலகறியச் செய்வதற் கென்பதாம். ஆளுடைய பிள்ளையார் திரு மயிலாப்பூரில் சிவநேசரை நோக்கி "உலகவரறிய" அவரது மகளென்பு நிறைத்த குடத்தைப் பெருமயானத்து நடம்புரிவார் பெருங் கோயிற் றிருமதிட் புறவாய்தலிற் கொணர்கென்று செப்பிய வரலாற்றினையும், ஆண்டு உலகவரறிய என்று இதன் நுட் பத்தினை ஆசிரியர் அறிவித்தமையும் கருதுக. (திருஞான - புரா - 1081).*

கோயிலின் முன் - *திருமதில்வாயிற் புறத்து.* கோணர்வித்து - *கொண்டு வரும் படி செய்து. திருக்கோயிலின் முன் கொணரச்செய்து அங்குப்பதிகம் பாடிய செயலை இங்கு வரலாற்று முறையில் கூறிவிட்டனராதலின், பின்னர் விரிவுகூறும் அப்பூதியார் புராணத்தினுள் ஆசிரியர் விரித்துக் கூறுராகி, "முன் னெழுந்து சென்றே, யாவிதீர் சவத்தை நோக்கி யண்ணலா ரருளும் வண்ணம், பாவிசைப் பதிகம் பாடி" (அப்பூதி - புரா - 35) என்றும், "கூட வோங்கிய மனையிலெய்தி (ஷை 38) என்றும், குறிப்பா லுணர்த்தியமட்டில் அமைந்தனர். ஆயின் முன்னர் எல்லாம் விரித்தமைபோல இச் செயலினையும் அப்புராணத்துள் விரிவு செய்யாது குறிப்பாலுணர வைத்து ஈண்டு விரித்தோதியமை என்னையோ? எனின், இவ்வாறு கோணர்வித்தமை நாயனாரது அருளிச் செயலாதலின் இது அவர் புராணத்துள் விரித்தோதத் தக்கதென்பது.*

ஒன்றுகோலாம் - *இது திருப்பதிகத் தொடக்கச் சொற்றொடர். முதற்குறிப்பு.* எடுத்து - *தொடங்கி.*

உடையான்-*உலகங்களையும் உயிர்களையும் தமது உடைமையாக உடையவன்.* சீர்- *இவை இத்திருப்பதிகத்துள் ஒன்று கோலாம் என்பதாதியாகப் பத்துக் கோலாம் என்பதீருக நாற்பதுவகையாற் பேசப்படுவன.*

பின்றை - *பின்னை என்பது* பின்றை *எனத் திரிந்து வந்தது. பாட அதன்பின் என்க.* பின்றைவிடம் - *முன்னை ஊழினுன் வந்ததன்று; பின்றை அருளால் வந்ததென்றுரைத்தலுமாம். "தொண்டினை மண்மேற் காட்டச், செழுந்திரு மலரை யின்று சினக்கரி சிந்தத் திங்கட், கொழுந்தணி வேணிக் கூத்த ரருளினாற் கூடிற்று" (598) என்ற வரலாற்றினைக் கருதுக.*

உணர்ந்து எழுந்திருந்தான் - உணர்ந்து - *துயிலுணர்ந்து எழுவானைப் போன்று. உணர்ந்தான்போன்று. வினையெச்சம் உவமைப்பொருள் தந்துநின்றது. "மேவிய வுறக்க நீங்கி விரைந்தெழு வானைப் போன்று" (அப்பூதி - புரா - 36) என்று இப் பொருளை ஆசிரியர் பின்னர் விரித்துக் காட்டியமை காண்க. "உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" (குறள்) என்றதும் காண்க.*

எழுந்திருந்தான் - *ஒரு சொல்நீர்மைத்தாய் எழுந்தான் என்ற பொருள்தந்து நின் றது. விடம் நீங்கி எழுந்தவுடன், பிள்ளை நாயனாரது திருவடியிற் பொருந்த வணங்கி அவரளித்த புனிதநீற்றினைப் பெற்று அணிந்து நின்றனன் என்று (அப்பூதி - புரா 36) அறியப்படுதலின் இங்கு,* எழுந்து - இருந்தான் *என்றுபிரித்து, முன்னை விடத்தால் உணர்வு நீங்கி வீந்தபோது, அதனை, அருந்தவ ரமுதுசெய்யத் தாழ்க்க யார்க்கும் அறையேன் என்று திருந்திய கருத்தினோடு வீழ்ந்தானாதலின், இங்கு விடம் நீங்கி எழுந்தவுடன் அத்திருத்தொண்டின் நினைவின் தொடர்ச்சியிலே நின்று அங்கு முன்னே நின்ற தந்தையார் முதலியவரைச் சாராது, நாயனாரது திருவடிச் சார்*

பினையே, பற்றியிருந்தான் என உரைத்தலுமாம். இப்பொருளில் இருந்தான் - என்பதற்கு தொண்டின் ஒழுக்கத்தில் நின்றான் என்க. 208

திருச்சிற்றம்பலம்     விடந்தீர்த்த திருப்பதிகம்     பொது - பண் - இந்தளம்

ஒன்று கொலாமவர் சிந்தை யுயர்வரை, யொன்று கொலாமுய ரும்மதி சூடுவர்
ஒன்று கொலாமிடு வெண்டலை கையது, வொன்று கொலாமவ ரூர்வது தானே. 1

அஞ்சு கொலாமவ ராடர வின்படம், அஞ்சு கொலாமவர் வெல்புல னைவன,
அஞ்சு கொலாமவர் காயப்பட் டான்கணை, அஞ்சு கொலாமவ ராடின தாமே. 5

பத்துக் கொலாமவர் பாம்பின்கண் பாம்பின்பல், பத்துக்கொலாமெயி றுந்நெரிந் துக்கன,
பத்துக் கொலாமவர் காயப்பட் டான்றலை, பத்துக் கொலாமடி யார்செய்கை தானே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—“ ஆவிதீர் சவத்தை நோக்கி அண்ணலா ரருளும் வண்ணம், பாவிசைப் பதிகம்பாடி” என்று ஆசிரியர் அறிவிப்பது காண்க. அப்பூதியாரது மகனைத் தீண்டிய அரவின்விடத்தைத் தீர்த்து அவனை எழச்செய்தல் சிவபெருமானுடைய திருவருளின் சிறப்பு என்பது “ உடையான் சீர்பாட ” என்றதனாலறிவிக்கபட்டது.

இக்குறிப்புடன் இத்திருப்பதிகம் அருளிச் செய்யப்பட்டதென்பது “ ஒன்று கொலாமவர் சிந்தை யுயர்வரை ” என்று தொடங்கிப் (எடுத்து) “ பத்துக் கொலா மடியார் செய்கை தானே ” என்று முடிக்கும் வகையால், அடியார்களது அன்பின் உறைப்பும் தன்மையும் குறிக்கப்படுதலானும், “அஞ்சு கொலாமவ ராடர வின்படம்”. - (5) “ பத்துக் கொலாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்” - (10) என்று அரவின் விடம் போக்க அரவங்களுக்கு மூலமாய்ச் சிவபெருமான் அணியும் ஐந்தலையரவினைக் குறித்தலானும், உயரும்மதி சூடுவர் - என்றது அமிர்தகலையினை வளரவைத்த சிருட்டியினையும், வெண்டலைகையது என்றது சங்காரமாகிய ஒடுக்கத்தினையும், ஊர்வது ஊர்தியின் பாதங்கள் என்றவை ஒடுக்கமும் தோற்றமும் செய்தற்குக் காரணமாகிய அருளினையும் உணர்த்தி நிற்பனவாதலானும், சனனம் முதற்றோற்றமும் (4), ஊழி படைத்தன (7), வாசல் வகுத்தன (9), முதலியவை மரணத்தின்பின் புனருற்பவத் தொழில் உணர்த்துதலானும், பத்துக் கொலா மெயிறுந் நெரிந்துக்கன (10) என்றது விரைவில் விடந்தீரும் தன்மையை உறுதிபற்றி யிறந்தகாலத்தாற் குறிப்பித்தலானும், பிறவாற்றானும் அறியப்படும். அடியாரைப் பேணுதலும் ஆண்டானைப் பரவுதலுமே மக்களாயினார்க்கு உறுதிப் பொருளாவன என்பதுண்மை என அறுதியிட்டுரைத்தவாற்றால் எலும்பைப் பெண்ணுக வரச்செய்தும், மந்திரமாவதுநீறு என்றெடுத்துத் “திரு வாலவாயான் றிருநீறே” எனவும்,“ஆலவா யான்றிரு நீறே” எனவும் பதிகத்தின் இருபகுதியால் முறையே சுரத்தை வலப்பாகத்தினின்றும் இடப்பாகத்தினின்றும் நீக்கியும்,ஒன்றுகொலாம் என்பது முதலாக இங்கு விளக்குறிப்புப் படப் போற்றியது போன்றே “ உடையாய் தகுமோ இவளுண் மெலிவே ” என்று வினவி விடந்தீர்த்தும், ஆளுடைய பிள்ளையார் இயற்றி யருளியவற்றை இங்கு நினைவு கூர்தல் பயனுடைத்தாகும்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) ஒன்று கொலாம் அவர்சிந்தை உயர்வரை - அடியார் திறமொன்றினையே பற்றி நின்ற அப்பூதியடிகளது சிந்தையின் பெருமை குறித்தது போலும். உயரும்மதி ஒன்று என்று கூட்டுக. இடு - பலியிடும். ஊர்வது - விடை.—(2)இலங்குந்தோடுங் குழையும் ஆகிய இரண்டும்பெண்ணும்ஆணுமாகியதோர் தொன்மை உருவத்தை உணர்த்துவன. இனம்பற்றித் தோடு வருவிக்க. “குழையும் சுரு

டோடும்...உடைத் தொன்மைக் கோலம்" (திருவா - கோத்); "ஒருபாற் றோடு மொரு பாற் குழையு, மிருபாற் பட்ட மேனி யெந்தை" (11-ம் திருமுறை - கோயினுன்-36) இரண்டுகோலாம் உருவம் - இருவகையும் கூடிய உருவம்.—(3) கையதுவாகிய பொன்மலைவில்லினது பாம்பாகிய நாணிற் கோத்த கணை மூன்று கூறுடையது. "குன்ற வார்சிலை நாண ராவரி வாளி கூரெரி, காற்றின்மும்மதில், வென்றவா றெங்ஙனே" (சீகாமரம் - ஆமாத்தூர் - 1 - பிள்ளையார்); கணையின் மூன்று கூறுவன:—ஈர்க்கு - வாயு; உடல் - திருமால்; கூர் - தீக்கடவுள். "மாருதம் - மால் - எரி மூன்றும் வாய் - அம்பு - ஈர்க்காஞ் சரத்தானை" (தாண்டகம் - வீழி - 9) என்று நாயனார் எதிர் நிரனிறையாக வைத்தோதிக் காட்டுவது காண்க.—(4) முகம் - இங்கு அவர் காட்சிப் படும் நெறிகளை உணர்த்தி நின்றது போலும்.—(5) அவரது ஆடும் அரவு. இப்பதி கத்தின் 5-வது பாட்டாகிய முற்கூற்று இறுதியில் அரவின் படத்தையும், 10-வது பாட்டாகிய பிற்கூற்று இறுதியில் அரவுப் படத்தினுள்ள கண் - பல் - எயிறு என் றிவற்றையும் வைத்த முறையும், எயிறுநெரிந் துக்கன என முடித்த முறையும் கருதுக. அவராற் காயப்பட்டான் - மன்மதன்.—(7) ஊழி முடிவில் அவ ராற் படைக்கப்பட்டன எழுவகைப் பிறவி.—(8) "எண் குணத்தான்" குறள். சூடும் இனமலர் எட்டு - அட்டபுட்பம் எனப்படும்.—(9) நால் - பூணூல். ஒன்பது பாரிடம் - பாரிடம் - பேய்க்கணம் - பூதக்கூட்டம். இவை ஈரொன்பது - பதினெண் கணம் எனப்படும். ஈரொன்பதென்பது என வகை குறிக்க ஒன்பதெனப்பட்டது. அவராற் காயப்பட்டான் - இராவணன். அடியார் செய்கை பத்து - "பத்துடையீர் ஈசன் பழவடியீர்" (திருவாசகம் - திருவெம் - 3).—குறிப்பு - இத்திருப்பதிகத்தை மந்திரமாக் கொண்டு மெய்யன்போடு பாராயணஞ்செய்து கைவரப் பெற்றோர் அரவின் விட வேகத்தை நீக்கவல்லவராதலை இன்றும் கண்கூடாகக் காணலாம்.

1474. அருந்தனய னுயிர்பெற்ற வதுகண்டு மமுதுசெயா
திருந்ததற்குத் தளர்வெய்தி யிடருழந்தார் துயர்நீங்க
வருந்துமவர் மனைப்புகுந்து வாகீசத் திருமுனிவர்
விருந்தமுது செய்தருளி விருப்பினுடன் மேவுநாள், ௨௦௯

1475. திங்களூர் தனினின்றுந் திருமறையோர் பின்செல்லப்
பைங்கண்விடைத் தனிப்பாகர் திருப்பழனப் பதிபுகுந்து
தங்குபெருங் காதலொடுந் தம்பெருமான் கழல்சார்ந்து
பொங்கியவன் புறவணங்கி முன்னின்று போற்றிசைப்பார், ௨௧௦

1476. புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார் பொற்கழற்கீழ்
அடைமாலைச் சீலமுடை யப்பூதி யடிகடமை
நடைமாணச் சிறப்பித்து நன்மைபுரி தீந்தமிழின்
றொடைமாலைத் திருப்பதிகச் "சொன்மாலை" பாடினார். ௨௧௧

1474. (இ - ள்) அரும் தனயன் உயிர்பெற்ற அது கண்டும் - அருமையாகிய மகன், இழந்த உயிரை மீளவும்பெற்று எழுந்த அதனைக்கண்டும்; அமுது செயாது இருந்ததற்குத் தளர்வு எய்தி இடர் உழந்தார் துயர்நீங்க - தாம் அமுது செய்யாமல் தாழ்த்து இருக்க நேர்ந்தமைக்கு மனந்தளர்ந்து வருந்தும் அப்பூதியார் மனைவியார் முதலியோர்களது துன்பம் நீங்கும் பொருட்டு; வருந்தும் அவர் மனை புகுந்து - வருந்துகின்ற அவர்களுடைய திருமனையினுள் கோயில் முன்பினின்றும் போந்து

வந்து புகுந்து ; வாகீசத் திருமுனிவர்......மேவும்நாள் - திருநாவுக்கரசராகிய திரு முனிவர், அவர்கள் அன்புடன் அளித்த விருந்தமுதினை அமுது செய்தருளி, அவர்கள் பால் விருப்பத்துடனே அங்கு எழுந்தருளியிருக்கு நாட்களில், ௨0௯

1475. (இ - ள்) வெளிப்படை. திங்களூரினின்றும் திருமறையோராகிய அப்பூதியார் தம்மைப் பின்பற்றிவரப், பைங்கண் விடையினை யூர்தியாகவுடைய ஒப்பற்ற சிவபெருமானது திருப்பழனப்பதியிற் புகுந்து தங்கு பெருங்காதலுடனே தமது பெருமானது கழல்களைச் சார்ந்து பொங்கிய அன்பு பொருந்த வணங்கித் திருமுன்பு நின்று துதி செய்வாராய், ௨௧0

1476. (இ - ள்) புடை - பக்கத்தில்; மாலை மதி - மாலைக்காலத்திற் றோன்றும் பிறைச்சந்திரனுகிய ; கண்ணிப் புரிசடையார் பொற்கழற் கீழ் - கொண்டைமாலையை அணிந்த புரிசடையினையுடையாரது பொற்பாதங்களின் கீழே ; அடைமாலைச் சீலம் உடை அப்பூதியடிகள் தமை - அடைகின்ற இயல்பாகிய சீலத்தினையுடைய அப்பூதியடிகளை ; நடை மாணச் சிறப்பித்து - ஒழுக்கத்தை மிக உயர்வாகப்பாராட்டி ; நன்மை புரி...பாடினார் - நன்மையினையே சொல்லும் இனிய தமிழின் இனிய தொடைமாலையாகிய திருப்பதிகச் "சொன்மாலை"யினைப் பாடினார். ௨௧௧

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1474. (வி - ரை) அரும்...கண்டும் - உம்மை உயர்வுசிறப்பு. அருமையான மகனென்றும், அவன்இழந்த உயிரைப் பெற்றானென்றும், அதனை நேரிற்கண்டு வைத்தும் என்றும் என மூன்று வகையானும் உயர்வுதோன்றச், சிறப்பும்மையை இறுதியிலமைத்து மூன்று பொருள்களையும் தழுவவைத்தார்.

கண்டும் - தளர்வெய்தி இடருழந்தார் - உயிர் இழந்தமை கண்டபோது தளர்வெய்தி இடருழத்தல் மக்கள் இயல்பு ; இழந்தஉயிர் பெற்றது கண்டும் தளர்வெய்தி இடருழத்தல் மக்கள் இயல்புக்கு மாறுபட்டது. இத்துன்பத்தினை மெய்ப்பாடுகளால் உணர்ந்த நாயனார், மகனால் நேர்ந்த இடையூற்றினால் தாம் அமுதுசெயக் காலந்தாழ்த்தமையே அதற்குக் காரணமென்று கண்டார். ஆதலின் அது நீங்க விரைவில் அவர் மனையிற் புகுந்தனர் என்க. அப்பூதி - புரா - 37 - பார்க்க.

வருந்தும் - நாயனார் திருவமுது செய்தற்குரிய காலந்தாழ்க்க நேர்ந்து விட்டமை பற்றி வருந்தும். "சிந்தை நொந்தார்" என்பது காண்க. "யான்மிக வருந்து கின்றே னேயர்கோ னூர்தா முற்ற, வூனவெஞ் சூலை நீக்கி யுடனிருப் பதனுக் கென்றூர்" (ஏயர்கோன் - புரா - 401) என்றது காண்க.

மனைப்புகுந்து - பிள்ளையின் சவத்தை மறைத்து முன்பு வந்தபோது "எம்பெருமான்! அமுதுசெய வேண்டுமென"ச் சொல்லி இறைஞ்சினார். இப்போது இந்நிகழ்ச்சியின்பின் அவ்வாறு கூறாமல் வாட்டத்துடன் நின்றனர். அதனைக் குறிப்பினால் அறிந்த நாயனார் தாமே திருக்கோயிலினின்றும் புறப்பட்டு அவர்தந் திருமனையில் புகுந்து அமுது செய்யும் பாங்கினி லமர்ந்தனர் என்க. "ஆங்கவர் வாட்டந்தன்னை அறிந்துசொல் லரசர் கூட, வோங்கிய மனையி லெய்தி யமுதுசெய் தருள வுற்ற, பாங்கினி லிருப்ப" (அப்பூதி - புரா - 38) என்பது காண்க.

வாகீசத் திருமுனிவர் - நாயனார். "வருஞானத் தவமுனிவர் வாகீசர்" (1266)

விருந்து அமுது செய்தருளி - விருந்து - இங்கு விருந்துக்குச் செய்யும் உபசார வகையெல்லாம் குறித்தது. ஆகுபெயர். அவ்வுபசாரங்கள், பூமியைக் கோமயத்தால் நீவிப் பொலிவுசெய்தல், சுதை போக்குதல், விளக்கு ஏற்றுதல், ஆசனம் இடுதல், பரிகலம் திருத்தி உரியபடி இடுதல், கை நீவ நீரளித்தல், அருச்சித்தல், நான்குவிதத்தால் ஆறுசுவை உணவு வகைகளை உரியபடி அமைத்து வைத்தல், இன்சொற்களா லமு

நூட்டுதல் முதலாயின. இவை யெல்லாம் அப்பூதியார் புராணம், 39-40-41 பாட்டுக்களில் விரித்துரைப்பது காண்க. விருந்து - புதுமை. ஆகுபெயராய்ப் புதிதாய் வருவோரைக் குறிக்க வழங்கப்படும். இங்கு நாயனார்க்கு அப்பூதியார் புதியராயினரன்றி, நாயனார் உணர்ச்சியால் அப்பூதியாருக்குப் பழைமையாயினரா யிருப்பவும், விருந்தென்ற தென்னையோ ? எனின், "இக் கொடியிடைதோள், புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்" (திருக்கோவை - 9) என்ற அகப்பொருளிற் கூறியபடி, அவரது கூட்டம் என்றும் பழைமையாகாது புதிது புதிதாய் விளைந்து நிற்ப தொன்றுதலி னென்க. காணுந்தோறுங் காணுந்தோறும் புதிதுபுதிதா யிருத்தலின் திருவம்பலத்துக்கு அற்புதம் என்று பெயர் வழங்குமென்பது கோயிற்புராணத்துள் அறியப்படுதலும், "அற்புதக் கோல நீடி" (351) என்று இக்கருத்துப்பற்றி ஆசிரியர் துதித்தலும் இங்கு நினைவு கூர்தற்பாலன.

அமுது செய்தருளி - அப்பூதியாரும் மைந்தரும் தமது ஆணை வழியமைந்து, மருங்கு உடனிருந்து அமுது செய்யவும், சிந்தை மிக்கு இல்ல மாதர் திருவமுது எடுத்து நல்கவும் அமுது செய்தருளினார் என்று விரித்துக் கொள்க.

விருப்பினுடன் மேவுநாள் - அங்கு அப்பூதியாருடன் அமர்தலைத் தாம்விரும்ப, நாயனாருடனிருத்தலை அப்பூதியார் விரும்ப, இவ்வாறு இருபாலும் எழுந்த விருப்பினோடு பொருந்தித் தங்கும் நாட்களில். "காதனண் பளித்துப் பன்னாள் கலந்துடனிருந்த பின்றை" அப்பூதி - புரா - 42) என்று பின்னர் இதனை விளக்குதல் காண்க. அப்பூதியார் தம்மிடத்துக் கொண்ட காதலால் விளைந்த அன்பின்றிறத்தின் பயனை அவர் பெறும்படி கொடுத்து என்க. கலத்தல் உணர்வால் ஒருவர் ஒருவரிற் கூடுதல். 209

1475. (வி - ரை) திருமறையோர் - அப்பூதியார். அவரும் சுற்றத்தாரும் ஏனை மறையவர்களும் எனினும் பொருந்தும். "பெருஞ் சுற்றமுடன் களிகூரத்தொழுது" (1467) என்றது காண்க.

பின்செல்ல - பெரியவர்களுக்கு முன்செல்ல லாகாது என்பது முறை.

பைங்கண் - கண்ணுக்குப் பசுமையாவது கருணை நோக்கமுடைமை.

தங்குபெருங் காதல் - முன்னே உள்ளத்திற் றங்கிக்கிடந்த முற்றிய பேரன்பு. காதல் - தம்பா லின்ப அன்புடைய அப்பூதியாரால் வழிபட வீற்றிருந்தமையால் பெருகிய அன்பு. "பொடிநுகருஞ் சிறுத்தொண்டர்க் கருள்செய்யும் பொருட்டாகக், கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச் சரத்தானே" (பிள்ளையார்) என்ற கருத்துக்காண்க. "அப்பூதி, குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய்" என்ற தேவாரம் கருதுக.

தம் - தம்மையும் அப்பூதியாரையும் உளப்படுத்தியது.

போங்கிய அன்புஉற - பெருங் காதலுடன் கழல் சார்ந்தார்க்கு, அவர் திருமுன்பு நின்றபோது உணர்ச்சியில் அன்பு உள்ளூறிப் பொங்கிப் பெருகிற்று என்க. தாமிருவரும் எண்ணுமலே உண்ணின்று கூட்டி வைத்து அன்பு பெருக ஊட்டி வைத்த திருவருட்டிறத்தை எண்ணியது அன்பு பெருகக் காரணமாயிற்று.

போற்று இசைப்பார் - பாடினார் என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

அன்போடு—என்பதும் பாடம். 210

1476. (வி - ரை) புடை - (சடையின்) பக்கத்தில். புடை - திரண்ட என்பாருமுண்டு. மாலை - அந்தி மாலை. மாலை மதி - இங்குப் பிறையைக் குறித்தது. "மாலை நகுதிங்கள் முகிழ்விளங்கும் முடிச்சென்னி" என்ற தேவாரக் கருத்து. கண்ணி - கொண்டை மாலை. "அந்தியிளம் பிறைக்கண்ணி யண்ணலார்" (திருமூலர் - புரா - 1). "மாதர்ப் பிறைக்கண்ணி யானை" முதலிய தேவாரங்களும் காண்க.

அடை மாலைச் சீலம் - அடைவிக்கும் இயல்புடைய நல் ஒழுக்கம். மாலை - இயல்பு - தன்மை. "பொன்மாலை மார்பன்" என்ற விடத்திற்போல.

நடை - நடையை - ஒழுக்கத்தினை ; இரண்டனுருபு தொக்கது. நடை - பாட்டினது சொன்னடை பொருணடை என்றலும் பொருந்தும். நடையைச் சிறப்பித்தமை - "அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும்" என்ற திருவாக்கால் அறிக. மாண - மாட்சிமைபெற.

நன்மை புரி தீந்தமிழ் - இறைவன் உயிர்களுக்குச் செய்யும் நன்மையினையே இடைவிடாது எடுத்துச் சொல்லும் இனிய சுவைத் தமிழ். புரி - செய்யும் ; நன்மை செய்யும் என்றலுமாம்.

இன்றொடைமாலை - இனிய தமிழால் செய்த - இனிமை பெறத் தொடுத்ததாகிய மாலை. மாலைத் திருப்பதிகம் - பதிகப் பாட்டுக்கள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் இனிய கருத்துக் கொண்ட மாலையாம்படி.

சொன்மாலை - இரட்டுற மொழிதலால் பதிகமாகிய சொல்லாலாகிய மாலை எனவும், "சொன்மாலை" என்று தொடங்கும் முதற் குறிப்புடைய பதிகம் எனவும் உரைக்க நின்ற அழகு காண்க. 211

## திருப்பழனம்

திருச்சிற்றம்பலம் பண் - பழந்தக்கராகம்

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் ! சொல்லீரே,
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கண் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ ? 1

மண்பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானைப்
பண்பொருந்த விசைபாடும் பழனஞ்சே ரப்பனையென்
கண்பொருந்தும் போதத்துங் கைவிடநான் கடவேனோ? 5

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதிக்
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கூடிப் பிரிந்த தலைமகனை நினைந்து, புலந்துரைத்த தலைவி கூற்றாகிய அகப்பொருட்டுறையில் அமைந்தது இத்திருப்பதிகம். மருதத்திணைக்குரிய ஊடலாகிய உரிப்பொருளும், வைகுறு விடியல் என்ற சிறு பொழுதாகிய முதற்பொருளும், ஏற்றனவாய அன்னம், குயில், நாரை முதலியனவாகிய கருப்பொருளும் பெற, இத்திருப்பதிகம், இனிமையும் அழகும்பட அமைந்தமை காண்க. "நன்மைபுரி தீந்தமிழின் தொடைமாலைத் திருப்பதிகம்" என்றது இக்கருத்துப்பற்றியது. நன்மையாவது இரங்கு முயிர்களின்பால் இறைவனைக் கூட்டுவித்தல். குயில்காள் ! இளங்குருகே ! பூந்தென்றல் ! நாராய் ! எனது புதுநலமும் எழினலமுமுண்டும், என் தளிர்வண்ணம் கொண்டும், என் உயிர்மேல் விளையாடியும் முன்னைநாள் ஆண்ட என் தலைவனாகிய பழனத்தான் இப்போது என்னைப் பிரிந்து குறிக்கொள்ளாது இகழ்வானோ? என்னை விடுத்தானோ? என்னைத் தேற்றுதற்குக் கொன்றைத்தார்

அருளாதொழிவானோ? அவர் அவ்வாறுயினும் அவர்க்கு நான் கனவிலேயுங் கடவேனோ? என் கண்பொருந்தும் போதும் அவரை நான் கைவிடக் கடவேனோ? என்பது. குயில்—பூந்தென்றல்—நாரை—அன்னம் முதலிய இவை தலைவன் தலைவியர் கூடியிருந்த காலத்து இன்பம் விளையத் துணையாய் நின்ற பொருள்களாதலின், இவற்றை விளித்து, ஊடற் குறிப்பும் இரங்கற் குறிப்பும்படக் கூறியவாறு. இரங்கற் குறிப்பு நெய்தற்றிணைக் குரியது. திணை மயக்கத்தால் இங்குக் கூடிவந்தது. கைதைகாள்! நெய்தல்காள்! என்றது காண்க. முன்னர்த் திருப்பழன மருங்கணைந்து இறைவரது கழல் வணங்க நேர்பெற்றுப் போந்து, மீண்டு பின்னரும் வந்து புகுந்து பொங்கிய அன்புறப் பாடுகின்றாராதலின் அப்பொருள்படவும் அத்திணைக்குரிய பொருள்படவும் இவ்வாறருளிச் செய்தனர் போலும். ஆளுடைய பிள்ளையாரது "சிறையாரு மடக் கிளியே!" என்ற திருத்தோணிபுரம் பழந்தக்கராகப் பதிகக் குறிப்புக்கள் இங்குச் சிந்திக்கத்தக்கன. இப்பதிகப் பண்ணும் அதுவேயாதலும் கருதுக.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள்! - "கீதமினிய குயிலே" (திருவாசகம்). சொன்மாலையாகிய கீதம். பயிலுதல்-பலகாலும் சொல்லுதல். இனம் - கூட்டம். திருவாதவூரடிகள் குயிற்பத்துப் பகுதியில் கட்டளையிட்டபடி பலகாலும் சிவன் சீர்ச்சொற்களைக் கீதமாகச் சொல்லிப் பயின்ற குயில்களின் வழிவழி இனமாகிய குயில்களே என்ற குறிப்புமாம். சொல்லீரே! - மார்பன் என்னை இகழ்வானோ? என்பதைச் சொல்வீராக. பிறவும் இவ்வாறு. பன் மாலை வரி - மாலைபோலத் தொடரும் வரிகளையுடைய. பண் - "செவ்வழி நற்பண் பாடும்" (தேவாரம்) என்பதுபோலப் பல பண்களையும். வண்டுகள் மிழற்றுவது பண்கள்; குயில்கள் கூவுவது அப்பண்ணிலமைந்த சொன்மாலையாகிய கீதங்கள். முன் மாலை - அந்திமாலைப் பொழுது. நுதிதிங்கள் முகிழ் - புதிதாய் முளைத்துத் தோன்றும் பிறை. நுதல் - உருவகம். முகிழ் விளங்கும் - முகிழ் - முகை. பூப்போல விளங்கும் என்றலுமாம். இதனைப் புடைமாலை மதிக்கண்ணி - என்றது காண்க. பொன்மாலை மார்பன் - பொன்னின் தன்மையுடைய மார்பன். பொன்னார் மேனியன். மாலை-தன்மை-இயல்பு. "அடைமாலைச் சீலம்" என்று இப்பொருளை ஆசிரியர் ஆண்டமை காண்க. புதுநலம் உண்டு - பிறர் ஒருவர்க்கும் ஆட்படாது புதுவதாகிய எனது அன்பின் நலத்தினை உண்டும். சிறப்பும்மை தொக்கது.—(2) கண்டகம் - நீர் முள்ளி; முண்டகம் - தாமரை; கைதை - தாழை; நெய்தல் - வெள்ளாம்பல். கருங்குவளை என்றலுமாம். மருதமும் நெய்தலும் விரவி வந்தன; திணைமயக்கம். இதனானே, இப்பதிகத்துள் மருதத்து உரிப்பொருளாகிய ஊடலும், நெய்தலுரிப் பொருளாகிய இரங்கலும் மயங்கி வந்தமையும் காண்க. பண்டரங்கம் - சிவன்கூத்து. பாட்டு ஓவா - பாட்டுக்களைப் பாடுதல் எப்போதும் ஒழியாத. என் தளிர் வண்ணம் கொண்ட-என் நலனை அனுபவித்த. குறிக்கொள்ளாது - குறிக்காமல், நினையாமல்.—(3) காஞ்சி - மரம். சொற்றாதாய்ச் சோர்வாளோ? - தனது எண்ணத்தைச் சொல்லும் தூது பிறர் ஒருவருமின்றி அயர்வாளோ?—(4) தென்றல் - தென்றல் என்றது ஈற்றயல் நீண்டு விளியுணர்த்திற்று. புறங்காடு - உலகமழியும் சுடுகாடு. பதி - அக்காலத்துத் தானழியாது நிற்கும் இடம். மதியாதார் வேள்வி தன்னை மதித்திட்ட-முரண் அணி. அவர் மதியாவிட்டாலும் தாம் அவரை மதித்து மறக்கருணை செய்த என்று நகைச்சுவைபடக் கூறியவாறு. மதித்தல் - அழித்தல் என்ற குறிப்புமாம். மதிக் கங்கை விதியாளன் - மதிக்கும் கங்கைக்கும் ஏற்றபடி விரிவும் ஒடுக்கமும் விதித்தவன். உயிர்மேல் விளையாடல் - உயிருணின்று ஆளாகக் கொள்ளுதல்.—(5) மாதீர்த்தம் - மிகப் புனிதமுடைய-தூய. வீடு - விள்ளற்பாலதனைவிட்டுத் துன்பத்தினீங்குதல்;

பேறு - சிவப்பேறு. பண் பொருந்த இசை பாடுதல் - "வருங்கடன் மீளநின் றெம் மிறை நல்வீணை வாசிக்குமே" என்றபடி ஊழிமுடிவில் உலகங்களை ஒடுக்கிப் புனருற்பவத்தின் பொருட்டு நாததத்துவத்தை இயக்குதல். கண் பொருந்தும்போது - உறக்கத்துக் கனவு நிலை.—(6) கொன்றைத் தாரநுளுதல் - அருளிப்பாடு.—(7) கணை ஆர - அம்பு எய்யப்படாமல் வில்லில் தங்க - பொருந்த.—(8) கூ - பூமி. கூவைவாய்மணி - பூமியிற் படும் மணிகள். குவை என்பது கூவை என வந்ததென்றலுமாம். கா்விரிப் பூம்பாவை - காவிரியாகிய கன்னி.—(9) புள் உயர்த்தான் - அன்னப்பறவையினைக் கொடியில் உடைய பிரமன். நாகப் பள்ளியான் - விட்டுணு. புள்ளிமானுரியுடையினையும் அரவத்தையும் கொண்டு இருக்கின்ற என்று கூட்டுக. கள்ளியேன் - வஞ்சமுடையேன்.—(10) கலிமேலிய அழலோம்புதல் - "எரியோம்பிக் கலியை வாராமே செற்றார்" (பிள்ளையார் - கோயில் - 1. குறிஞ்சி.) குஞ்சிப்பூவாய் நின்ற சேவடி - தலையிற் பூப்போலச் சூட்டிக்கொள்ளும் திருவடி. கோடி - ஏற்றுக்கொள்.

தலவிசேடம்-திருப்பழனம்-காவிரிக்கு வடகரையில் 50-வது தலம். திருவையாற்றை உட்கொண்ட சத்தத்தானம் என்னும் ஏழுதலங்களுள் ஒன்று. திருநாவுக்கரசு நாயனாரது பொதுத்திருதாண்டகத்தினுள் இவற்றைப் பாடியருளினது காண்க. அப்பூதியடிகளுடைய திங்களூர் இதற்கு வடக்கில் ஒரு நாழிகையளவில் உள்ளது. வாகீசர் திங்களூருக்கு எழுந்தருளுதற்கு முன்னும் பின்னுமாக இருமுறை இத்தலத்தைத் தரிசித்து இரண்டாம் முறையில் பாடிய பதிகத்தினுள் அப்பூதியாரது அடிமைத்திறத்தைச் சிறப்பித்தருளினர். (திங்களூர் வைப்புத் தலங்களுள் ஒன்று.) சுவாமி - ஆபத்சகாயர். அம்மை - பெரியநாயகி. பதிகம் 6.

இதனைத் தஞ்சாவூர் என்னும் இருப்புப்பாதை நிலயத்தினின்றும் திருக்கண்டியூர்க் கற்சாலை வழியே 7½ நாழிகையிலுள்ள திருவையாற்றைஅடைந்து அங்கிருந்து கிழக்கே மட்சாலைவழி இரண்டரை நாழிகையில் அடையலாம். வடகுரங்காடுதுறைக்கு மேற்கே மட்சாலைவழி மூன்று நாழிகையளவிலும் இதனை யடையலாம்.

குறிப்பு - அப்பர் சுவாமிகள் கைத்திருத்தொண்டு செய்த இந்த ஆலயம் மிகச் சிலமாயுள்ளதனைச் சைவவுலகம் பார்த்துக்கொண்டுதானிருக்கின்றது !

1477. எழும்பணியு மிளம்பிறையு மணிந்தவரை யெம்மருங்குந்
தொழும்பணிமேற் கொண்டருளித், திருச்சோற்றுத் துறைமுதலாத்
தழும்புறுகேண் மையினண்ணித் தானங்கள் பலபாடிச்,
செழும்பழனத் திறைகோயிற் றிருத்தொண்டு செய்திருந்தார். உ௯௨

(இ - ள்) எழும் பணியும்...அணிந்தவரை - எழுகின்ற படத்தையுடைய பாம்புகளையும் இளம்பிறையினையும் அணிந்த சிவபெருமானை; எம்மருங்கும்...பணி மேற்கொண்டருளி - எங்குமுள்ள எல்லாத் தலங்களிலும் தொழுகின்ற திருப்பணியை மேற்கொண்டவராகித்; தழும்பு உறு கேண்மையில் - மாறுத அன்பினாலே; திருச்சோற்றுத் துறை முதலா நண்ணி - திருச்சோற்றுத்துறை முதலாகிய தலங்களைச் சேர்ந்து; தானங்கள் பலபாடி - கோயில்கள் பலவற்றையும் பாடிப் பணிந்து; செழும்...இருந்தார் - செழிப்புடைய திருப்பழனத்திறைவரது திருக்கோயிலில் திருத்தொண்டுகள் செய்து இருந்தனர்.

(வி - ரை) எழும் பணியும் - பணி - பாம்புகள். பணத்தையுடையது பணி. பணி - படம். எழும்பணி என்றது மேலே படம் எடுக்கும் தன்மை குறித்தது.

தழும்பு உறு கேண்மை - மாற்ற முடியாதபடி அழுந்திய அன்பின் உறைப்பு. உடலின் மேற்புறத்து உள்ள மாறுவடு தழும்பு எனப்படும். "வயனங்கண் மாயா வடுச்

செய்தான் காணேடீ" (திருவாசகம் - சாழல்). இங்கு அதுபோன்று மனத்தினுட் புகுந்து மாற்ற முடியாதபடி பதிந்துகொண்ட உணர்ச்சியினைத் தழும்பு என்றார்.

தானங்கள் - திருக்கோயில்கள். இறைவர் விளங்க வீற்றிருக்கும் இடங்கள்.

திருந்தொண்டு - மனம் வாக்குக் காயம் என்ற மூன்றாலும் செய்யும் திருத் தொண்டுகள். இருந்தார் - பல நாள் தங்கி யிருந்தனர்.

மேற்கொண்டருளும்—என்பதும் பாடம். 212

திருச்சோற்றுத்துறை

I *திருச்சிற்றம்பலம்* திருநேரிசை

*பொய்விரா மேனி தன்னைப் பொருளெனக் காலம் போக்கி*
*மெய்விரா மனத்த னல்லேன் ; வேதியா ! வேத நாவா*
*ஐவரா லலைக்கப் பட்ட வாக்கைகொண் டயர்த்துப் போனேன் ;*
*செய்வரா லுகளுஞ் செம்மைத் திருச்சோற்றுத் துறைய னாரே !* 1

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*பொய் பொருந்தும் உடலைப் பொருள் எனக் கருதியும், பூங் குழலினாரைக் கூறியும் காலம் போக்கினேன் ; அயர்த்துப் போனேன் ; சோற்றுத் துறையனார் என்னுள்ளச் சோர்வு கண்டருளினார். உலகீரே ! நீங்கள் கண்டராய் நின்று என்னைப்போலக் காலத்தைக் கழிக்க வேண்டா ; ஒருவனை நினையாது ஓதியே காலங் கழிக்கின்றீர் ! ; இனியும் பேர்த்துப் பிறவாமை வேண்டில், மறுமையைக் கழிக்க வேண்டில், எல்லியும் பகலும் ஏகாந்தமாக ஏத்துமின் ! ; அங்கதிரோனை அண்ணலாக் கருதாது வெங்கதிரோன் வழியே போவதற்கமைந்து கொண்மின் ; திருச்சோற்றுத்துறையனாராகிய பிரானையே பிதற்றுமின்கள்.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பொய்விரா மேனி - *பொய்யாய உடல்.* பொருள் என - *மெய்ப்பொருள் என்று ; விரா - விரவும். பொருந்தும்.*—(2) கட்ட ராய் - *அன்பத் தழுந்தியவர்களாய் ;* எல்லி - *இரவு - ஊழி - முடிவு.*—(3) ஏத்தும் - *ஏத்துமின் ;* பல் இலம் - *பல இல்லம். வீடுகள்.* சொல்லும் பொருளும் - *சொற் பிரபஞ்சம்-பொருட் பிரபஞ்சம்.*—(4) கண்டம் கறையராய் என்க. செய்த எல்லாம் பீடர் - *பீடு - பெருமை. அவர் செய்கைகள் யாவும் அருளே.* "*உருவருள்*" (*சூத் - 47*) *என்பது சித்தியார்.* உள்ளச் சோர்வு கண்டு அருளினார் - *உள்ளம் சோர்வது கண்டு அருள் புரிந்தார்.*—(5) பொருக்கென - *விரைவாக.* பந்தமாய் வீடுமாகிப் பரம்பர மாகிநின்று - "*பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லான்*" (*சித்தி - 1-44*) ; "*பந்தமு மாய் வீடு மாயினார்க்கு*" (*திருவா - பொற்*) ; "*பந்தம் வீடு தரும் பரமன் கழல்*" (300).—(6) ஏற்றுத் தீர்த்தமாப் போதவிட்டார் - *பரந்து அழிக்கவந்த கங்கையைச் சடையினுள் ஏற்றுச் சிறிதாக, உலகர் தோய்ந்து தூயராகும்படி, உலகில் செல்ல விடுத்தனர்.*—(8) அங்கதிரோன் - *சூரியன்.* அண்ணல் - தெய்வம். வெங்கதிரோன். *அந்த ஞாயிறு. அகரச் சுட்டுத் தொக்கி நின்றது.* வழியேபோதல் - "*வானிடத்தை யூடறுத்து வல்லைச் செல்லும் வழிவைத்தார்க் கவ் வழியே போது நாமே*"—(*கழிப்பாலை - தாண்*). உடன் வைத்தல் - *வலக் கண்ணாகக் கொள்ளுதல்.* வணங்கும் - *பூசிக்கும். தல வரலாறு. தலவிசேடம் காண்க.*—(9) ஓதியே-*சிவனை நினையாமலும் வணங்காமலும் சாத்திரம் ஓதி. "சாத்திரம் பல பேசுஞ் சழக்கர்காள், பாத்திரஞ் சிவனென்று பணிதிரேல், மாத்தி ரைக்குள் ளருளுமாற் பேறரே"* (*குறுந்தொகை*) *பூங்குழலினாரை ஓதி என்றலுமாம்.*—(10) மற்று -

வேறொன்றிலும். மறுமை - மறுபிறவி. "பேர்த்தினிப் பிறவா வண்ணம்" (6) பெற்றதோர் உபாயம் - இயன்ற அளவு மனம் வாக்குக் காயங்களாலாகிய சாதனம். பிதற்றுதல் - இடைவிடாது பலவாறும் சொல்லுதல்.

II திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

காலை யெழுந்து கடிமலர் தூயன தாங்கொணர்ந்து
மேலை யமரர் விரும்பு மிடம்விரை யான்மலிந்த
சோலை மணங்கமழ் சோற்றுத் துறையுறை வார்சடைமேன்
மாலை மதியமன் றேவெம் பிரானுக் கழகியதே. திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—அமரர் விரும்பு மிடமாம் சோலை மணங்கமழ் சோற்றுத் துறை உறையும், வினை தீர்த்திடும் விண்ணவர்கோன்-வெண்ணீற்றினன் - நஞ்சதனை உண்டு ஒடுக்க வல்லான் - மழுவினன் - என்னை யாளுடையான் ஆகிய இறைவனுக்கு மாலை மதியம், வெண்டலைமாலை, ஏந்து கைச்சூலம், பாயுந் திரைக்கங்கை, படமணி நாகம், வில்லாடிநின்ற நிலை என்ற இவை முதலியன வெல்லாம் அழகியன.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) தாம் - தாமே. தூயன - விதிப்படி தூய்மை பெற்றனவாக.—(2) தொண்டு-தொண்டர்.—(3) அளக்கும். "அளக்கும் தன்னடி யார் மனத் தன்பினை", "அன்ப ராயிருப் பாரை யறிவரே"—(5) உழுவை - புலி. ஆற்றில் - கங்கையில்.—(6) கோளர் - தீயர். தீமையாற் கொள்ளப்பட்டார்.—(8) உண்டும் அதனை ஒடுக்கவல்லான் - உண்டாரை யெல்லாம் ஒடுக்கும் அந்த நஞ்சினைத் தான் உண்டும் தான் ஒடுங்காது அதனை ஒடுக்க வல்லவன். உம்மை உயர்வு சிறப்பு. இண்டை மதியம் - இண்டை மாலை போன்ற பிறை. "புடைமாலை மதிக்கண்ணி" (1476).

III திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

கொல்லை யேற்றினர் கோளர வத்தினர்; தில்லைச் சிற்றம் பலத்துறை செல்வனார்;
தொல்லை யூழியர் சோற்றுத் துறையர்க்கே, வல்லை யாய்ப்பணி செய்மட நெஞ்சமே.1
திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—மடநெஞ்சே! நீ, வல்லையாய்ப், பத்தியாய்ப், பட்டியாய், வாதியாய்ப், பூணியாய், நீட்டி - தங்கிப் - பற்றிப் - புல்லி - உண்டு - தாழ்ந்து சோற்றுத் துறையர்க்கே பணி செய்வாயாக.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) கொல்லைஏறு - "கொல்லைச் சில்லைச் சே" (தேவா கோத்திட்டை). ஊழியர்-ஊழி ஊழி கண்டும் அழியாதிருப்பவர். வல்லையாய்-வலிமை யுடையையாகி.—(2) முத்திஆக - வீடுபெறும் பொருட்டு. ஒரு தவம் - தவமும். முற்றும்மை தொக்கது. அத்தவமாவன அடியார்க்களித்தலும் அரனை வணங்குதலுமாம். அவற்றுள் அடியார்க்கு ஒன்றும் அளித்தாயில்லை-ஆதலின் அரனுக்கேனும் பத்தியாய்ப் பணிசெய் என்றபடி. அத்தியால் - அருத்தியால் - விருப்பத்துடன். அதனால் என்றலுமாம். அடியார்க்களித்தல் அரன் பணியினும் சிறந்ததென்பது வைப்புமுறையாலும் குறிக்கப்பட்டது. "மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன்" என்றவிடத்தும் இவ்வாறே விளக்கப்படுவது காண்க.—(3) ஒட்டிநின்ற...நோய் - ஆணவம் என்னும் சகச மலம். ஒட்டிநிற்றல் அத்துவிதமாய்ப் பிரிப்பின்றி நிற்றல். பட்டியாய் - மீளா அடிமையாகி.—(4) வாதியாய் - பரமன் புகழ்களையே வாதிப்பவனாய் - சொல்பவனாய்.—(5) நீட்டி - புகழ்களை நீளச் சொல்லிக்கொண்டு.—(6) நஞ்சினைப் பங்கி யுண்டதோர் தெய்வமுண்டோ சொலாய் - ஏனையோர் யாவரும் நன்மை தீமை கலந்து பங்கிடுவர்; எமது பெருமானாகிய இத்தெய்வம் தீமையாகிய நஞ்சுமுழுதும்

தமக்கு வைத்தும், நல்லதாகிய அமிர்தம் முழுமையும் தேவர்க்கு வைத்தும், அந்த நஞ்சினை இவ்வாறு பங்கி உண்டது இதுபோல் வேறு ஒரு தெய்வமும் உண்டோ? ஆதலின் என்க. தங்கி - மனம் பொருந்தி.—(7) ஏணிபோலிழிந்தேறியும் - ஏங்கியும்- பிறர் ஏறவும் இறங்கவும் உதவுவதல்லது, ஏணி, தான் மேல் ஏறுதல் இல்லை; இருந்த பக்கத்தே இருப்பது. தோணி அவ்வாறன்றித் தன்னுட் சார்ந்தாரைச் சாரும் இடத்தில் ஏற்றுவது. ஏணிபோல் இழிந்தேறுதற்குரிய தோணி என்று தொடர்ந்துரைத்தலுமாம். பூணி - அன்புபூண்டு பற்றுவது. ஆணிபோல் ஆற்ற வலியை - வெவ்வேறாய ஒத்த இரண்டு பொருள்களைப் பிணைத்து நிற்பது ஆணி. அதனினும் வலியதாய் மடநெஞ்சம் ஒவ்வாத உயிரை உடலிற் பற்றுவைத்து விடாமற் செய்வது. "பேணியநற் பிறைதவழ்" என்பது (ஆவடுதுறை - தாண்ட) பார்க்க.—ஆணி-உரையாணி என்றலுமாம். (8) பேற்றம்-எருது-விடை. என் - என்ற வினு மூன்றும் அவை கொண்டு நீ அஞ்ச வேண்டா என்ற பொருள் தந்து நின்றன. நம்பிகளது திருக்கோத்திட்டைப் பதிகமும், திருவாசகம் திருச்சாழலும் பார்க்க. சுற்றி - வலம்வந்து. பிரிவிலாச் சுற்றமாகக்கொண்டு என்றலுமாம். பற்றி - பெரும்பற்றுகக் கொண்டு - விடாதுபற்றி. "பற்றுக பற்றற்றான் பற்றினை" - "பெரும்பற்றப் புலியூர்"— (9) அல்லியான் - பிரமன். அல்லி - பூப்பொதுமை குறித்துப் பூவிற்சிறந்த தாமரை குறித்தது. நாகணைப் பள்ளியான் - விட்டுணு. அறியாத பரிசு எலாம் - பெருந்தேவர்களாலும் அறியமாட்டாத தேவதேவனுகிய இறைமைத் தன்மைகள். சொல்லி- துதித்து. புல்லி - இடைவிடாது பிடித்து.—(10) மிண்டர் - குண்டர் - அமணர். நாயனாரது சரிதக்குறிப்பு. உண்டு - உள்ளதாகி.—(11) பாரிடம் சூழ்ந்த - என்க. பாரிடம் - பூதமாய நற்கணம். தாழ்ந்து-உனது எளிமையை எண்ணி. "தாழ்வெனுந் தன்மையோடு" (சித்தி).

IV திருச்சிற்றம்பலம்   திருத்தாண்டகம்

மூத்தவனா யுலகுக்கு முந்தி னானே
முறைமையா லெல்லாம் படைக்கின் றானே
யேத்தவனா யேழுலகு மாயி னானே
யின்பனாய்த் துன்பங் களைகின் றானே
காத்தவனா யெல்லாந்தான் காண்கின் றானே
கடுவினையேன் றீவினையைக் கண்டு போகத்
தீர்த்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபய நானே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—மூத்தவனாய் உலகுக்கு முந்தினான் - முறைமையால் எல்லாம் படைக்கின்றான் - சார்ந்தார்க்கு இன்னமுதானான் - உற்றாரென் றொருவரையுமில்லான் - ஞானக்கூத்தன் - என்னிதயம் மேவினான் - பிறரொருவ ரறியா வண்ணம் பெம்மானென்றெப்போதும் பேசு நெஞ்சிற் செறிந்தான் - அடியார்கள் வேண்டிற்றீயும் விண்ணவன் - விண்ணப்பங் கேட்டு நல்குஞ் செய்யவன் என்றிவை முதலிய அருட்செயல்களையுடைய திருச்சோற்றுத்துறையுளானே! - திகழொளியே! சிவனே! நான் உனக்கு அபயம் - அடைக்கலமாயினேன்.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) மூத்தவனாய் - "மூளைத்தானை எல்லார்க்கு முன்னே தோன்றி" (தாண் - ஆலவாய்). முறைமை - வினைக்குத் தக்கபடி. துன்பங் களைதல் - பாசம் போக்குதல். கண்டுபோகத் தீர்த்தல் - அத்துவாக்களின் வைத்

துணர்ந்து சுத்திசெய்தல். 3-வது பாட்டிலும் இவ்வாறே காண்க. அபயம் - அடைக்கலம். (திருவாசகம்-அடைக்கலப்பத்து). திகழ் ஒளி - ஒளிகளெல்லாம் திகழ்தற்குக் காரணமாய ஒளி.—(3) உற்றரொன்று ஒருவரையும் மில்லாதான்-"வேண்டுதல் வேண்டாமை யிலான்" (குறள்).—(4) ஊழி கண்டிருக்கின்றன் - காலங் கடந்தவன்.—(5) ஞானக் கூத்தா-"ஞான நடனம்" (திருமூலர்) திருமந்திரம் திருக்கூத்துத் தரிசனம் என்ற பகுதியும், உண்மை விளக்கமும், ஞானசாத்திரம் பிறவும் பார்க்க.—(6) ஆர்ந்தவன் - நிறைந்தவன். முழுநிறைவு - சர்வ வியாபகம் என்பர். உலகெலாம் நீயேயாகி - இடைநிலைத் தீபம். குற்றலம் மேய கூத்தா - "குற்ருலத் தமர்ந்துறையும் கூத்தா" (திருவாசகம்), "குற்ருலத்துறை கூத்தனல்லால்" (திருவங்கமாலை). குற்றலம் - ஐம்பெரு மன்றங்களுட் சித்திரசபை எனப்படும்.—(9) அறிந்தார்-புலவர் என்னும் தேவர்களுட் பெருந்தேவர்கள். இருவர் - அயன்-அரி.—(11) மெய்யவன்-திருமேனியுடையான்; உண்மை - சத்து - ஆனவன். அடியார்கள்...செய்யவன் - இறைவன் அடியார்களுக் கெளிமையா யருள்செய்யும் தன்மை குறிக்கப்பட்டது. செய்யவன் - செம்மைத் திரு வுடையவன்.

**தலவிசேடம்** :—திருச்சோற்றுத்துறை - காவிரிக்குத் தென்கரை 13-வது தலம். மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. கௌதம ஆச்சிரமம் எனப்படும். திருவையாற்றினை உள்ளிட்ட எழு பெருந்தலங்களுள் (சத்தத் தானம்) ஒன்று. பஞ்ச காலத்தில் வந்தடைந்த சிவனடியார்களை யெல்லாம் தன்னிடத்து வைத்துக் காப்பாற்றிய தலமென்பது வரலாறு. "சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன, துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே" என்பது ஆளுடைய நம்பிகள் தேவாரக் குறிப்பு. அருளாளர் என்னும் ஒரு வேதிய அடியாருக்கு அட்சய பாத்திரம் - உலவாத பிச்சைப் பாத்திரம்—அருளிய தலமென்பதும் வரலாறு. இந்திரன், சூரியன் முதலியோர் பூசித்த தலம். (திருநேரிசை பார்க்க). சுவாமி - தொலையாச் செல்வர்; அம்மை - ஒப்பிலாவம்மை. சோறளித்தது பற்றி, முறையே ஓதனவனேசுவரர் எனவும், அன்னபூரணி எனவும் வடமொழியில் வழங்கப்படுவர். பதிகம் 6.

இது திருக்கண்டியூரினின்றும் கிழக்கில் $1\frac{1}{2}$ நாழிகையளவில் உள்ள திருவேதிகுடியினின்றும் கரைவழி இரண்டு நாழிகையளவில் மட்சாலைவழி அடையத்தக்கது. குடமுருட்டி யாற்றைப் பரிசிலுற் கடத்தல் வேண்டும்.

தானங்கள் பல - இவை திருக்கண்டியூர், திருவேதிகுடி, பசுபதி கோயில், திருச்சக்கரப்பள்ளி, திருவாலந்துறை முதலியன. பதிகக் குறிப்புக்கள் வந்துழிக் காண்க.

1478. சாலநா ளங்கமர்ந்து, தந்தலைமேற் றுள்வைத்த
ஆலமார் மணிமிடற்று ரணிமலர்ச்சே வடிநினைந்து,
சேலுலாம் புனற்பொன்னித் தென்கரையே றிச்சென்று,
கோலநீள் மணிமாடத் திருநல்லூர் குறுகினார். உகா

(இ - ள்) வெளிப்படை. மிகப் பலநாள்கள் அங்குத் (திருப்பழனத்தில்) விரும்பி வீற்றிருந் தருளி, தமது திருமுடியின்மேல் திருவடி சூட்டியருளிய திருநீலகண்டரது அழகிய மலர்ச் சேவடிகளை நினைந்துகொண்டு, சேல்மீன்கள் உலவுகின்ற நீர்ச் செழிப்பையுடைய காவிரியின் தென்கரையேறிப் போய்க், கோலம் மிக்க அழகிய மாடக்கோயிலாகிய திருநல்லூரைச் சேர்ந்தனர்.

(வி - ரை) சாலநாள் அங்கமர்ந்து - மிகப் பல நாட்கள் திருப்பழனத்தில் அமர்ந்தது அப்பூதி நாயனுர் வழிபட இருந்தமை கருதி என்பது பதிகத் திருக்கடைக்காப்பினுற் கருதப்படும். அமர்தல் - விரும்பி வீற்றிருத்தல். திங்களூர்க்குச்

செல்லும் முன்பும், அங்கு நின்றும் அப்பூதியாருடன் திரும்பிய பின்பும், இங்கு வணங்கினர். அதன்பின் அருகில் உள்ள திருச்சோற்றுத்துறை முதலிய பல தலங்களையும் வணங்கிப் போந்த பின்பும் இங்குவந்து பலநாட்கள் தங்கியருளினர். இவை அப்பூதியாரது அன்பின் மேன்மையாலாகியன என்பது.

தம்...சேவடி நினைந்து - தாம் விண்ணப்பித்ததனை ஏற்றுத் தமக்குத் திருவடி தீக்கைசெய்து ஆட்கொண்ட பேரருள் கருதி மீண்டும் அங்கு வணங்கச் சென்றனர் "நல்லா ரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே" என்ற ஆன்றோர் திருவாக்கின்படி அப்பூதியடிகளது அன்பின் மேன்மை கருதி அடியார் கூட்டங் காரணமாகப் பலமுறை திருப்பழனம் சென்று வணங்கியும், அமர்ந்தும், இருந்த நாயனார், தம்மை அடிசூட்டி ஆண்டானது பூசை கருதி அவ்வாறே திருநல்லூரினையும் வணங்க நினைந்தனர் என்பது. சூலைதந்து ஆட்கொண்ட திருவதிகைத் தலத்திற்கும் மீளச் செல்லாத நிலையிலுள்ள நாயனார் இத்தலத்தினைப் பலமுறையும் நினைந்து தொழச் சென்றார் என்பது திருவடி தீக்கையின் உயர்ந்த பயனைக் காட்டுவதாம்.

இவையெல்லாம் குறிக்கத் தந்தலைமேற் றள்வைத்த என்றும், அடிநினைந்து என்றும் கூறினர்.

தென்கரை யேறிச்சென்று - திருப்பழனம் காவிரிக்கு வடகரையில் உள்ள தலமாதலால், தென்கரையில் உள்ள திருநல்லூருக்குச் செல்பவர், காவிரியைத் தாண்டி அதன் தென்கரையேறிச் செல்லுதல்வேண்டும். திருப்பழனத்திலிருந்து முன் போந்த வழியே மீண்டும் திரும்பிக் காவிரியையும் குடமுருட்டி யாற்றையும் கடந்து காவிரிக்குத் தென்கரையில் சாலைவழியாய்க் கிழக்கு நோக்கிச் சென்றால் திருநல்லூரை அடையலாம். ஏறிச்சென்று என்றவற்றால் இத்துணையும் அறிய வைத்தார். முன் பாட்டில் தானங்கள் பல பாடி என்றவிடத்துரைத்தவை பார்க்க.

மணிமாடம் - இங்கு அழகிய மாடக்கோயில் என்ற பொருளில் வந்தது. மாடங்களையுடைய என்றுரைப்பாருமுண்டு. திருநல்லூர் மாடக்கோயில்களுள் ஒன்று. அமர்நீதிநாயனார் புராணத்திறுதியில் தலவிசேடம் பார்க்க.

மாடத்திருநல்லூர் - இறைவன் எழுந்தருளியிருக்கும் மாடத்தினையுடைய ஊர்.

1479. அங்கணைந்து, தம்பெருமா னடிவணங்கி, யாராது
பொங்கியவன் பொடுதிளைத்துப், போற்றிசைத்துப், பணிசெயுநாட்,
டங்குபெருங் காதலினாற் றாமரைமேல் விரிஞ்சனொடு
செங்கண்மா லறிவரியார் திருவாரூர் தொழநினைந்தார். ௨௩௪

(இ - ள்) வெளிப்படை. அங்குச் சேர்ந்து தமது பெருமானது திருவடிகளை வணங்கி ஆராது பொங்கிய அன்பினோடு ஆனந்தித்துத் துதித்துத் திருப்பணி செய்திருக்கும் நாட்களில், தங்கிய பெருங் காதலினாலே, தாமரையில் இருக்கும் பிரமதேவனோடு செங்கண்ணையுடைய மாலும் அறிதற்கரிய சிவபெருமானது திருவாரூரைத் தொழுவதற்கு நினைவு கூர்ந்தனர்.

(வி - ரை) தம்பெருமான் அடி - தமக்கு அருள்புரிந்து தலைமேற்சூட்டிய திருவடி.

ஆராது பொங்கிய அன்பொடு திளைத்து - ஆராமை - நிறைவு பெறாமை. பொங்கிய அன்பு - உள் வற்றாது மேன்மேலும் வரும் அன்பு. திளைத்தல் - அந்த அனுபவத்தினுள் அழுந்துதல்.

போற்றிசைத்தல் - திருப்பதிகங்களைப் பாடுதல்.

தங்கு பெருங்காதல்-மனத்துள்ளே பல நாள் தங்கிக் கிடந்து இப்போது வெளிப்பாடுற்ற பெரிய காதல். காதலினால் - தொழநினைந்தார் என்று கூட்டுக. இடையில் பல தலங்களிருப்பவும் திருவாரூரைத்தொழ நினைந்து சென்றனர் என்பது "காண்டலேகருத் தாய்நினைந்திருந் தேன்மனம்புகுந் தாய்கழலடி, பூண்டுகொண் டொழிந்தேன் புறம்போயினு லறையோ" என்ற திருவாக்கா லறியப்படும். அவ்வாறு நினைத்தற்குக் காரணம் "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமும்" பெறுதல் வேண்டுமென்று எழுந்த ஆசை என்க. அந்த ஆசைதானும் சமண்போந்து அரிசுபட்டதனை மாற்றும் வகையால் அடியார்க்கடிமை செய்யும் ஆசையால் எழுந்ததென்பது "மற்றிடமின்றி", "மெய்யெலாம்" என்ற பதிகங்களாற் பெறப்படும். 214

## திருநல்லூர்

*திருச்சிற்றம்பலம்* திருவிருத்தம்

*அட்டுமி னில்பலி யென்றென் றகங்கடை தோறும்வந்து*
*மட்டவி ழுங்குழ லார்வளை கொள்ளும் வகையென்கொலோ*
*கொட்டிய பாணி யெடுத்திட்ட பாதமுங் கோளரவு*
*நட்டநின் றாடிய நாத !நல் லூரிடங் கொண்டவரே.* 1

*படவே ரரவல்குற் பாவைநல் லீர் !பக லேயொருவர்*
*இடுவா ரிடைப்பலி கொள்பவர் போலவந் தில்புகுந்து*
*நடவா ரடிக ணடம்பயின் றாடிய கூத்தர்கொலோ*
வடபாற் கயிலையுந் தென்பானல் லூருந்தம் வாழ்பதியே. 3

*நாட்கொண்ட தாமரைப் பூந்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே*
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவி யொடுமங்கோர் வாணிகனை
யாட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றேயிவ் வகலிடமே. 7

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக்குறிப்பு:**—நாயனார் தமக்கு இறைவர் திருவடி தீக்கைசெய்த தலமாதலிற் திருநல்லூரிற் பலநாள் தங்கிப் பாவுற்ற தமிழ்மாலை பலபாடித் திருத்தொண்டு செய்தொழுகினார் என்று ஆசிரியர் அறிவிக்கின்றார் (1462). அவ்வாறு பாடியருளிய பல பதிகங்களுள்ளும், "பொங்கிய அன்பொடு நினைத்துப் போற்றிசைத்து" என்றதனால் அறியப்படும் பதிகங்களுள்ளும், இவ்வொரு பதிகமே நமக்குக் கிடைத்துளது! நமது தவக்குறை. தலைவனைப் பலநாட்பிரிந்து கனவிடைக்கண்டு பின் கனவுமிழந்து வருந்தும் தலைவி தோழிக்குரைத்த கூற்றாகிய கனவிழந்துரைத்தல் என்ற அகத்துறையின் குறிப்புடையது இத்திருப்பதிகம். "தில்லை சேரலர்போல், ஆவா கனவு மிழந்தே னனவென் றமளியின்மேற், பூவா ரகலம்வந் தாரன் றரப்புலம் பாய்நலம்பாய், பாவாய் தழுவிற் றிலேன்விழித் தேனரும் பாவியனே" என்ற திருக்கோவையார் (355) காண்க. 4. 8. 9 திருப்பாட்டுக்கள் பார்க்க.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:**—(1) அட்டுமின் - இடுமின். கடை - முற்றம் - முன் வாயில். வளைகொள்ளுதலாவது பலியிடும்போது மால் கொண்டமையால் உடல் இளைக்க வளைகழன்று வீழ்தல். "சூழொளிய, வங்கை வளைதொழுது காத்தாள் கலைகாவாள், நங்கை யிவளு நலந்தோற்றாள்" (அரிவை) என்ற ஞானவுலா இதனைச் சுவைபடப் பேசுவது காண்க.—(3) "வடபாற் கயிலையுந் தென்பானல் லூருந்தம் வாழ்பதியே", "நம்மூர்தா னேதோ வென்றேனுக் கொன்றாகச் சொல்ல மாட்டார்"

(வெண்காடு - தாண்ட-3), "பயின்றிருக்கு மூரேதோ பணியீ ரென்ன" (திருவொற்றியூர் தாண்டகம் - 5), "புறம்பய நம்மூரென்று போயி னாரே" என்றவாறு கனவிற் கண்ட தலைவரது ஊர் கேட்டுத்தெரிந்தது போல உரைக்கும்முகத்தால் கயிலையே போல்வது திருநல்லூர் என்று தலச் சிறப்புரைக்கும் கருத்து.—(4) துஞ்சிடைக் கண்டு - கனவிடைத் தோழுதேற்ந்து - அகத்துறை. நெஞ்சிடை...நின்றனன் - "பொங்கிய அன்பொடு திளைத்து" என்று ஆசிரியர் இதனைக் குறித்தனர். மேல் 5-ம் திருப்பாட்டில் கண்ணுளும்......சேவடியே என்ற கருத்துமிது.—(6) தேற்றப்படத்...சிவனிருந்தான் - "வடபாற் கயிலையும் தென்பானல் லூருந் தம் வாழ்பதியே" என்ற கருத்தைப் பின்னும் விளக்கியது. சிவனை நல்லூரிற் கண்டு கொள்ளாதாரது நல்வினையின்மைக் கிரங்கிக் கூறியது. ஆற்றில்......ஆதர் - பழமொழி. ஆதர் - கீழ்கள். அறிவில்லார். "ஏதன்போர்க் காதனாய்" (ஆரூர்-பழமொழி-காந்தாரம்), "முன்பொருள் செய்யாதா ராதரே" (சிறுபஞ் - 20). குருடர் என்றலுமாம். காற்றிற் கடுத்து - காற்றினும் கடுக - வேகமாக.—(7) அமர்நீதியார் சரிதஞ் கூறித் துதிப்பது இத் திருப்பாட்டு. அவர் புராணம் பார்க்க. கோவணம் கா - பிரமசாரியராய் வந்த இறைவர் அமர்நீதியாரிடம் சொல்லியது. கிறிபட - பலதிறமாக வன்மை பேசி. (526-527). ஓர் வாணிகன் - அமர்நீதியார். அகலிடம் உரைக்கும் - உலகெலா மறிந்து சொல்லும். "நாட்டார றிய முன்னாளில்".—(8) அறை - அறைதலால் எழும் ஓசை. பரிசழித்தான் - பசுத்தன்மை போக்கினான் "பார்ப்பாரைப் பரிசழிப்பார் போல்கின்றார்தாம்" (ஆமாத்தூர் - தாண்டகம் . 3).—(9) அன்னியர் அற்றவர் - களைகணுவார் பிறரொருவரு மில்லாதவர்.—(10) "திருவளர் தாமரை" என்ற திருக்கோவையார்ப் பாட்டின் குறிப்புக் காண்க.—(11) சிவன் பெருங்கோயில் (ஆகிய) சிவபுரமும் புகவல்லேன் என்க. நல்லூரிருந்தபிரான் நம்மை ஆண்டவன் ஆதலின் சிவமாநகர் குறுகவல்லேன். 3-6-வது பாட்டுக்களின் கருத்தை மேலும் வற்புறுத்தியது. சிவன் - என்ற சிறப்புப் பெயராற் றேற்றம்படக் கூறியது காண்க. "சிவனெனு நாமந் தனக்கே யுடைய" (தேவா). இப்பதிகம் 11 திருப்பாட்டுக்கள் கொண்டது.

1480. நல்லூரி னம்பரருள் பெற்றுப்போய்ப், பழையாறை
பல்லூர்வெண் டலைக்கரத்தார் பயிலுமிடம் பலபணிந்து
சொல்லூர்வண் டமிழ்பாடி, வலஞ்சுழியைத் தொழுதேத்தி,
யல்லூர்வெண் பிறையணிந்தார் திருக்குடமூக் கணைந்திறைஞ்சி,௨௧௫

1481. நாலூர்தென் றிருச்சேறை குடவாயி னறையூர்சேர்
பாலூரு மின்மொழியாள் பாகனார் கழல்பரவி,
மேலூர்தி விடைக்கொடியார் மேவுமிடம் பலபாடிச்,
சேலூர்தண் பணைசூழ்ந்த தென்றிருவாஞ் சியமணைந்தார். ௨௧௬

1480. (இ - ள்) வெளிப்படை. திருநல்லூரில் இறைவரிடம் அருள் விடை பெற்றுக் கொண்டு சென்று, பழையாறையில், பற்கள் வெளித்தோன்றவுள்ள வெண்டலை யோட்டினைக் கையிலேந்திய சிவபெருமான் எழுந்தருளிய பல கோயில்களையும் பணிந்து, நல்ல சொற்களால் நிரம்பிய வளப்பமுடைய திருப்பதிகங்களைப்பாடி, அதன்பின், திருவலஞ்சுழியைச் சென்று தொழுது ஏத்திப் போய், மாலையில் வெளிப்படும் வெண்பிறை யணிந்த பெருமான் எழுந்தருளிய திருக்குடமூக்கினை அணைந்து பணிந்து,

1481. (இ - ள்) வெளிப்படை. திருநாலூரும், அழகிய திருச்சேறையும், திருக்குடவாயிலும், திருநறையூரும் என்ற இத்தலங்களில் எழுந்தருளிய பால்போன்ற இனிய மொழியினையுடைய உமையம்மை பாகனாருடைய திருவடிகளைப் பரவிச் சென்று, விடையினை மேற்கொள்ளும்ஊர்தியாகவும் கொடியாகவும் உடைய இறைவர் எழுந்தருளிய பல தானங்களையும் பாடிப்போய்ச், சேல்மீன்கள் உலாவும் தண்ணிய வயல்கள் சூழ்ந்த அழகிய திருவாஞ்சியத்தினை அணைந்தனர். உகசு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1480. (வி - ரை) பழையாறை...இடம்பல - பழையாறையில். ஆறை - ஆறை வடதளி - ஆறை மேற்றளி என்ற மூன்று சிவத்தலங்கள் உள்ளன. ஆதலின் **பயிலும் இடம் பல** என்றார். அமர்நீதியார்புராணத் திறுதியிற் றலவிசேடம் பார்க்க. **பல** என்றது இரண்டுக்கு மேற்பட்டதை யுணர்த்தும்.

**பல் ஊர் வெண் தலைக் கரத்தார்** - அயன் கபாலமாகிய பிச்சைப்பாத்திரத்தைச் சிவபெருமான் கையில் ஏந்தியுள்ளார். அந்த மண்டையோட்டிற் பற்கள் தோற்றம் படத் தெரிய உள்ளன என்க. **ஊர்** - வெளித் தோற்றம். **ஊர்** - உவமவுருபு என்பாருமுண்டு. **ஊர்தல்** - போதல் என்று கொண்டு, பல்லில்லாத என்று ஈண்டுக் கொள்வாருமுண்டு. "பல்லை யுக்க படுதலையில்" முதலிய தேவாரங்களும் காட்டுவர். **வெண்தலை** - கபாலம்.

**சொல் ஊர் வண்தமிழ்** - சொல் ஊர்தலாவது நற்சொற்களால் நிரம்புதல். நாயனாரது முயற்சியின்றியே திருவருளால் நற்சொற்கள் தாமே வந்து பெய்துகொள்கின்றன. **வண் தமிழ்** - வண்மையாவது வேண்டுதலின்றியே குறையெலாம் நீக்கித் தருதல். இஃது அப்பூதியார் சரிதத்துள் தேற்றம்பெற விளங்குவது காண்க.

**அல் ஊர் வெண் பிறை** - அல் - மாலை. இரவின் முற்பகுதி. **ஊர்தல்** - விளங்குதல். செல்லுதல் என்றலுமாம். மாலையில் முளைத்துப் பெருகத் தொடங்குதல். மூன்றாம் பிறை.

அருள்பெற்று - பணிந்து - ஏத்தி - அணைந்து - இறைஞ்சி - பரவிப் - பாடி - அணைந்தார் என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடித்துக்கொள்க. 215

1481. (வி - ரை) **தேன் திருச்சேறை - தேன் திருவாஞ்சியம்** - **தேன்** என்பன அழகு குறித்து நின்றன. **பாகனார்** - நாலூரிலும், சேறையிலும், நறையூரிலும் எழுந்தருளிய இறைவர் என்க.

**விடை** என்பதனை **மேல்ஊர்தி** என்பதனுடனும், **கோடி** என்பதனுடனும் கூட்டுக. இடைநிலைத்தீபம்.

**பால் ஊறும் இன் மொழியாள்** - அம்மையாரின் மொழிகள் பால்போன்ற தன்மையன. **ஊர்** - உவமவுருபு. "பண்ணி னேர்மொழி யாளுமை" என்றது காண்க. **பால்** - சுவைக்கும், மரணத்தை வராமற்காக்கும் தன்மைக்கும் எடுத்துக்காட்டு.

**சேல் ஊர்தல்** - நீர்வளம் குறித்தது. **பணை** - வயல்கள். ஆற்றுநீருடன் வந்த சேல்மீன்கள் வயல்களிற்புகுந்து உலாவும். பண்ணை என்பது **பணை** என நின்றது

**குறிப்பு** :—இந்த இரண்டு பாட்டுக்களிலும் சொல்லப்பட்ட தலங்களைப் பின்னரும் நாயனார் சென்று வணங்கிப் பாடியிருத்தலும் கூடும். "பொங்கு புனலார் பொன்னியினி லிரண்டு கரையும் பொருவிடையார், தங்கு மிடங்கள் புக்கிறைஞ்சித் தமிழ்மா லைகளும் சாத்திப்போய்" (திருநா - புரா - 301); "பதிபலவும் காதல்கூரச் சென்றிறைஞ்சி" (ஷை - 311); "நெய்த்தான மேமுதலாக, மாடுயர் தானம் பணிந்து" (ஷை-386); "பொன்னிநா டதுவணைந்து, வாம்புனல்சூழ் வளநகர்கள் பின்னும்போய்

வணங்கியே" (ஷை - 412) என்று பொதுவாகக் குறிப்பதன்றிச் சிறப்பாகத் தனித் தனி ஆசிரியர் கூறினாரலர். ஆதலின் அத்தலப் பதிகக்குறிப்பும், பிறவும் இங்குத் தரப்படுகின்றன.

தலவிசேடம் - பழையாறை - அமர்நீதியார் புராணம் பார்க்க. 216

திருவலஞ்சுழி

I திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

ஓத மார்கட லின்விட முண்டவன், பூத நாயகன் பொற்கயி லைக்கிறை,
மாதொர் பாகன் வலஞ்சுழி யீசனைப், பாத மேத்தப் பறையுநம் பாவமே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—வலஞ்சுழியீசனை ஏத்தப் பாவம் பறையும்; அவனது அடிமைத் திறத்தாவன்; அவனைச் சிலர் பாவித்தொழும்பர் பயில்கிலார்; வலஞ்சுழி வலங் கொள்வாரடி யென் தலைமேலவே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பறையும் - அழியும். நீங்கும்.—(2) தொழும் பர் - ஆளானவர். பயிலுதல் - பல காலமும் பல வகையாலும் போற்றுதல்.—(3) இளையகாலம் - கருவி கரணங்கள் ஓய்ந்து போகாமல் உள்ள காளைப்பருவம். துளையிலாச்செவி - சிவன்புகழ் கேட்கப்பெறாத செவிகள் கேள்விப்பொறியில்லாதவை என்பது. "தோளாத சுரையோ தொழும்பர் செவி" (பொது - குறுந்). உடல் வளை யுங் காலம் - மூப்புப் பருவம் வந்து மெலியும் பருவம். களைகண் - ஆதரவு; பற்றுக் கோடு.—(4) மாணி-பிரமசாரி. மார்க்கண்டர். குறைவிலா - வலிமையாலொன்றும் குறைவில்லாத. இனி என்று கோல் ? - அரிதிற்கிடைத்த இப்பிறவியிலன்றி வேறெப் போது ?.—(5) விண்டவர் - அறத்தினீங்கியவர். அடிமைத்திறத்து ஆவன் - அடிமை யாக அமைவேன். ஆக்கம் பெறுவேன். அண்டன் - அண்டங்களையெல்லாம் உடைய வன். தேவன், உயிர்களால் அண்டப்பட்டவன் என்றலுமாம். இப்பாட்டு அரனடி மைத்திறத்தையும், மேல்வரும் பாட்டும் 10-வது பாட்டும், அடியார்க்கடிமைத்திறத் தையும் போற்றுவன. அரனடிமைத்திறம் ஒரு பாட்டாலும், அடியாரடிமைத்திறம் இரண்டு பாட்டுக்களாலும் போற்றப்பட்டமை அடியாரடிமைத்திறத்தின் உயர்வு காட்டுதற்கு. ஆளுடையபிள்ளையாரது (பண் - நட்டராகம்) இத்தலத் தேவாரத்தி னுள் இவ்விரண்டுமே போற்றப்பட்டதும், "வலஞ்சுழி வாணனை வழிபடு மதனாலே என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே" என்று அரன்பணியைச் சாதனமாக வும், "வலஞ்சுழி நாதன்மெய்த் தொண்டரோ டினிதிருந் தமையாலே விண் டொழிந்தன நம்முடை வல்வினை" என்று அடியார் கூட்டத்தைப் பயனாகவும் வைத் துப் போற்றப்பட்டதும் காண்க.—(6) வலஞ்சுழியான் அடியடைந் தவர்க்கடிமைத் திறத்தாவனே - அடியார் பணி.—(7) ஏ கோள - ஏ - அம்பு. அம்பு தொட்ட அள வால்.—(8) தலைவனைக் கண்டு தன் வசமிழந்து பிதற்றும் தலைவியை நோக்கிக் கூறிய தோழி கூற்றாகிய அகப்பொருள்பற்றி யமைந்தது இப்பாட்டு. கண் பனித்தல் - கைகூப்புதல் - நண்பனுக்கு என்னை நான் கொடுப்பேனென்றல் - இவை காதல் மிக்கு அவசமாகும் மெய்ப்பாடுகள். போனை - பொன்னை. தலைவியை. அருமைப்பாடு பெறச் சொல்லியது.—(10) மலங்கு - மீன் வகை. (238).

II திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

அலையார் புனற்கங்கை நங்கை காண வம்பலத்தி லருநட்ட மாடி வேடந்
தொலையாத வென்றியார் நின்றி யூரு நெடுங்களமு மேவி விடைமேல் கொண்டு

இலையார் படைகையி லேந்தி யெங்கு மிமையவரு முமையவளு மிறைஞ்சி யேத்த
மலையார் திரளருவிப் பொன்னி சூழ்ந்த வலஞ்சுழியே புக்கிடமா மருவி னாரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—இத்திருப்பதிகத்தில் ஒரு திருப்பாடலே கிடைத்துள்ளது ! ஏனைப் பல தலங்களிலும் பொருந்திய இறைவர் திருவலஞ் சுழியிற்புக்கு அதனை இடமாகக் கொண்டு பொருந்தியிருந்தனர்.

பதிகப் பாட்டுக்குறிப்பு :—கங்கை நங்கை காண - கங்கையும் நங்கையாகிய உமையம்மையும் காணும்படி. உம்மைத்தொகை. பொன்னி சூழ்ந்த - காவிரிக் கரையில் உள்ள தலம். இங்குக் காவிரி ஆதிசேடனது பிலத்துவாரத்தி லிறங்கி விடச், சோழராசன் பிரார்த்தனைக்கிரங்கி ஏரண்ட முனிவர் அப்பிலத்தில் இறங்கக், காவிரி வலஞ்சுழித்து மேல் எழுந்த இடம் என்பது தல வரலாறு. இடமா - நிலைபெற்ற விளக்கமாகிய இடமாக.

## திருவலஞ் சுழியும் திருக்கோட்டையூர்க் கோடீச்சரமும்

III  திருச்சிற்றம்பலம்  திருத்தாண்டகம்

கருமணிபோற் கண்டத் தழகன் கண்டாய் கல்லா னிழற்கீ ழிருந்தான் கண்டாய்
பருமணிமா நாகம் பூண்டான் கண்டாய் பவளக்குன் றன்ன பரமன் கண்டாய் [டாய்
வருமணிநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய் மாதேவன் கண்டாய் வரதன்கண்
குருமணிபோ லழகமருங் கொட்டை யூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான் றானே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—கொட்டையூரிற் கோடீச்சரத் துறையும் கோமான், கருமணி போற் கண்டத்தழகன் ; மாதேவன் ; கலைபயில்வோர் ஞானக் கண்ணானன் ; அண்ட கபாலத் தப்பாலான்; சிவன் ; சதாசிவன்; சண்டனை நல் அண்டர்தொழச் செய்தான்; அணவரியான் ; அவிநாசி ; பண்டரங்கன் ; பகவான் ; வஞ்சமனத் தவர்க்கரிய மைந்தன் ; எட்டெட் டிருங்கலையு மானான் - முதலிய தன்மைகளா லறியப்படுபவன் ; அவனே வருநீர்ப் பொன்னி வலஞ்சுழியான்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வருமணிநீர்ப் பொன்னி வலஞ்சுழியான் - ஆதிசேடனது பிலத்தினுட் புக்க காவிரி மீண்டு மேலெழுந்து வலஞ்சுழித்து வந்த வரலாற்றுக் குறிப்பு. இவ்வாறே பாட்டுக்கள் தோறும் கூறுதலும் காண்க. மாதேவன் - தேவதேவன். இப்பதிகத்தினுட் சிவபெருமானது பல நாமங்களும் போற்றப்படுதல் காணலாம். பரமன் - சிவன் (3); சதாசிவன் (5-6); சங்கரன் (6); அவிநாசி - (நாசமில்லாதவன்) (7); பகவன் (7) முதலியவை பார்க்க. வரதன் - வரங்கொடுப்பவன். கொட்டையூர் - தலப்பேரும், கோடீச்சரம் - கோயிலின் பெயருமாம்.—(2) கலைபயில்வோர் ஞானக்கண் - கலைபயில்வோருக்கு ஞானமாகிய கண் கொடுப்பவர். அண்டகபாலம் - அண்டகோளகையின் உச்சி. மலைப்பண்டம் - காவிரி பிறந்து கீழ் ஓடிவரும் மலையிற்படு பொருள்கள் ; சந்து - அகில் - பொன் - மணி முதலியன.—(3) தாமரை - வேதியர்க்குரிய அடையாளமாலை. தேவர்களுக்குள் சிவன் ஒருவனே பிராமணன் என்ப. சிவன் - பேரின்பத்துக்குக் காரணன், முற்றுணர்வினன், தூயதன்மையன் என்பன முதலிய இறைமைக்குணங்களுணர நின்றது. சிவஞான போதம் 5-ம் சூத். "மன்னுசிவன்" என்ற விடத்துரைத்தவை பார்க்க.—(4) புட்பாகன் - விட்டுணு. புள் - கருடன் மைந்தன் - வன்மையை உடையவன். மைந்து - வல்லமை.—(5) சண்டன் - சண்டீசர். சங்கரன் -

சுகத்தைச் செய்பவன். மருந்து - வினை நோய் தீர்த்தலின் மருந்தென்றார். உருவகம். "தீராநோய் தீர்த்தருள வல்லான்" "மூலநோய் தீர்க்கும் முதல் வன்". இறைவன் எல்லார்க்கும் மருந்தாவானாயினும் இங்கு மாமுனிவர் தம்முடைய மருந்து என்றது, ஏனைய பிறர் அறியார்; மாமுனிவர்கள் அறிந்து பிறர்க்கும் அதனால் பயனுறச் செய்வர் என்றதாம்.—(7) அணவு அரியான் - அணவுதல் - அணிமை யாதல். அவிநாசி - நாசமில்லாதவன். அவிநாசியினது ஊராதலின் அவிநாசி எனப் பட்டதொரு தலம் உண்டு. அது கொங்கு நாட்டில் தேவாரப் பாடல்பெற்ற தலங்களுள் ஒன்று. பகவன் - ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்ற ஆறும் பகம் எனப்படும். இவ்வாறினையு முடையவன் பகவன். மாதவன் - இங்கு விட்டுணு வைக் குறித்து நின்றது. வரதன் - வரம் - வேண்டும் பொருள்; தன் - தருபவன்.—(9) தசரதன்தன் மகன் அசைவு தவிர்த்தான் - இராவணனைக் கொன்றதால் வந்த இராமனது பழியைப் போக்கியவர். "தென்னிலங்கை யிராவணன்றன் சிரமீரைந் துந்துணித்த, மன்னவனு மிராமனுக்கு வரும்பெரும்பா தகந்தீர்க்கும் பிஞ்ஞகர்" (திருஞா. புரா. 408). எட்டெட்டு இருங்கலைகள் - 64 கலைஞானங்கள். (குறிப்பு)-- தலவரலாற்றிற் காணுமாறு கொட்டையூரில் தவஞ்செய்திருந்த ஏரண்ட முனிவர் இங்கு வந்து பிலத்தில் இறங்கியதனால் காவிரி பிலத்தினின்று மீள வெளியே வலஞ் சுழித் தெழுந்தமையாலே இத்தல விசேடமும் கொட்டையூர்த் தல சம்பந்தமாய் நிகழ்ந்தமையும் குறிக்கும்பொருட்டு இவ்விரு தலங்களையும் சேர்த்து இத்திருப்பதிகம் அருளிச் செய்யப்பட்டது போலும்?. (ஏரண்டம் - ஆமணக்கு. கொட்டைச் செடி)

தலவிசேடம் :—திருவலஞ்சுழி - காவிரிக்குத் தென்கரை 25-வது தலம். முன் உரைத்தவாறு காவிரி வலம்சுழித்த இடமாதலின் இப்பெயரெய்தியது. இங்குக் காவிரி மேலைக்காவிரி என வழங்கப்பெறும். ஆதிசேடன் பாதாளத்தினின்றும் ஒரு சிவராத்திரியில் பிலத்தின் வழிவந்து நான்கு யாமங்களினும் நான்கு தலங்களிற் பூசித் தான் என்றும், அவற்றுள் இஃதொன்று என்றும், ஏனையவை திருநாகேசுவரம், திருப் பாம்புரம், திருநாகைக்காரோணம் என்ற மூன்றுமாம் என்றும் வரலாறு கூறப்படும். அவ்வாறு சேடன் வந்த பிலத்தின்வழிக் காவிரி உள்ளே இறங்கிவிட, அது கண்ட சோழ அரசர் வேண்டுதலுக்கிரங்கி, இறைவர் காவிரி இறங்கிய அந்த இடத்தில் ஒரு சடைத்தலையேனும் முடித்தலையேனும் பலியிட்டால் காவிரி வெளிப்படுமென்று அசரீரி வாக்கின்மூலம் அறிவிக்கவே, கொட்டையூரில் தவஞ் செய்துகொண்டிருந்த ஏரண்டமுனிவர் பிலத்தினுள் இறங்கக், காவிரி வெளிப்போந்து வலஞ்சுழித்துப் பெருகிற்று என்பது தலவரலாறு. கோயிலில் பிலத்துவாரத்தில் திரிணவர்த்தேசுவர ரும், அருகில் ஏரண்டமுனிவரும் வீற்றிருக்கின்றனர். இத்தலம் திரிணவர்த்தம் என்றும் தட்சிணவர்த்தம் என்றும் வழங்கப்படும். தேவர்கள் அமுதம் பெறப் பாற் கடலைக் கடைந்தகாலத்தில் அமுதம் திரளும்படி பூசித்த வெள்ளைப் பிள்ளையாரை இந்திரன் இங்குக் கொண்டுவந்து தாபித்துப் பூசித்தனன். அவ் வெள்ளைப்பிள்ளையார் விளக்கமாய்த் திருக்கோயிலின் முன்பு வீற்றிருந்தருள்கின்றார். இந்திரன் பூசித்த தலம். சுவாமி - கபர்த்தீசர். அம்மையார் - பெரியநாயகி. தீர்த்தம் - காவிரி. பதிகம் 5.

இத்தலம் சுவாமிமலை என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்று வடக்கே வயற் கால் வழி கால்நாழிகையளவில் அடையத்தக்கது.

குறிப்பு :—இத்தலத்துக்கு வடக்கில் காவிரியையும் அரிசொல் ஆற்றையும் பரிசி னாற் கடந்து சென்று ஒருநாழிகையளவில் திருவேரகம் என்னும் சுவாமிமலையை (முருகப்பெருமானது நான்காவது படைவீடு?) அடையலாம்.

திருக்குடமூக்கு

I திருச்சிற்றம்பலம்    திருக்குறுந்தொகை

பூவ ணத்தவன் புண்ணி னண்ணியங், காவ ணத்துடை யானடி யார்களைத்,
தீவ ணத்திரு நீறுமெய் பூசியோர், கோவ ணத்துடை யான்குட மூக்கிலே. 1

காமி யஞ்செய்து காலங் கழியாதே, ஓமி யஞ்செய்தங் குள்ளத் துணர்மினே!
சாமி யோடு சரச்சு வதியவள், கோமி யும்முறை யுங்குட மூக்கிலே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தொண்டர்காள்! பிறவி நீங்கவேண்டில், பண்டை வினை பற்றற வேண்டில், காமியஞ் செய்து காலங் கழியாதே, ஓமியம் செய்து உள்ளத்து உணர்மின்; பிதற்றுமின்; தொண்டராகித் தொழுது பணிமின்; பூத்தாடிக் கழியாதே, பூவணத்தவன் - அடியார்களை ஆவணத்துடையான் - காளி விசை தீர்கென்று கூத் தாடி - நக்கரையன் - ஆகிய - சிவனைக், கங்கை - யமுனை - கன்னி - சாமி - சரச்சுவதி - கோமி - கோதாவிரி - உறையும் குடமூக்கில் பணிமின்.

பதிகப் பாட்டுக்குறிப்பு :—(1) பூவணத்தவன் - "பூவண்ணம் பூவின்மணம் போல" என்றபடி அருளொடு எங்கு நிறைந்தவன். பூவணம் என்ற தலத்தில் விளங்குபவன் என்றலுமாம். புண்ணியன் - "புண்ணியப் பொருளாய் நின்றான்". அடியார்களை அங்கு நண்ணி ஆவணத்து உடையான் என்க. "என்றுயோ டென்னப்ப னேழேழ் பிறவியும், அன்றே சிவனுக் கெழுதிய ஆவணம்" (திருமந்திரம்). ஆவ ணம் - ஓலை. இங்கு அடிமை ஓலை குறித்தது. ஆளுடையநம்பிகளைத் தடுத்தாட் கொண்ட சரித வரலாறு காண்க. தீவணத் திருநீறு மெய்பூசி - நீறுபூத்த நெருப்பு. "உலர்ந்த கோமயத்தை வாங்கிச், செக்கரந் தழல்வாய்ப் பெய்து சிவந்திட வெதுப்பி வாங்கி", "இவ்வண்ண மிருக்கு மெங்க ளிறைவண்ண வடிவு மந்தச், செவ்வண்ண மேனி பூத்த திருவெண்ணீ றதுவும்" (திருவிளை - புரா - மண்சு - 107 - 108); "நீற்றினை யணிந்ததுவெ னின்னிறைவ னென்றே, சாற்றினை யுயிர்க்கிடர் தணிக்க வென வெண்ணுய்; தோற்றியுள தம்புதல்வர் துன்பமுறும் வெங்நோய், மாற்றும் வகை யன்னைய ரருந்திய மருந்தாம்" (திருவாத - புரா - புத் - சரு - 76). ஓர் கோவணத்து உடையான் - ஒற்றைக் கோவணத்தை உடையாக உடையவன்.—(2) பூத்தாடி - தோன்றி யழிதலாகிய வினையாட்டினைச் செய்து?—(3) கங்கை - கன்னி - ஏழு தீர்த்த மாதாக்களில் இருவர். கன்னி - காவிரி.—(4) ஓதா நாவன் - ஏனையர்போல ஓதாமல், இயல்பாகவே ஞானங்களை யுணர்ந்தவன். "கல்லாமே கலை ஞானங் கற்பித்தான்". தான் பிறரை ஓதாத - துதிக்காத - நாவுடையான் என்றலு மாம். "சேர்ந்தறியாக் கையான்" (திருவா) என்றாற்போல. ஏதானும் இனிதா தும் - ஏதானும் - இனிய வல்லவும்.—"தீமைதானு நன்மையாப் பயப்பதே" (மறு மாற் - தாண்.) இயமுனை - கோதாவரி - ஏழு பெருந்தீர்த்தங்களுள் மற்றும் இருவர்.—(8) காமியம் - உலகில் புலன்வழிச் சென்று வேண்டியவற்றையே. ஓமியம் - ஓமகாரியம். ஓமம் புறத்தும் அகத்தும் செய்தல். இது புறம்பே அக்கினி காரியம் செய்யுமுறைப்படி, அகத்தே, குண்டலித் தானமான உந்தியில் ஞானவனலை எழுப்பி அதனுள் விந்துத்தானத் தமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனைநாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களால் ஓமித்தல். உள்ளத்துணர்மினே - உள்ளத்து அர்ச்சித்துப் புருநடுவிற் றியானித்துப் பூசியுமின் என விரித்துரைத்துக் கொள்க. உள்ளத்து அர்ச்சித்தலாவது புறத்தே பூசை செய்தல்போல இதய பங்கயத்தில் முதல்வனை,

ஐம்பொறியடக்கல் கொல்லாமை பொறை அருள் அறிவு வாய்மை தவம் அன்பு என்னும் அட்டபுட்பங் கொண்டு அருச்சித்தலாம். தியானித்தலாவது விந்துத்தானமாகிய புருநடுவிலே ஒளிவடிவாகத் தியானஞ் செய்தல். ஓமித்தலும் தியானித்தலும் பூசைக்கங்கமாம். இவைபற்றிச் சிவஞானபோதம் 9-வது சூத்திரம் "அஞ்செழுத்தால்" என்ற உதாரண வெண்பாவின் கீழ் எமது மாதவச் சிவஞானமுனிவருரைத்தவை காண்க. சாமி - சரசுவதி - கோமி - ஏழுபெருந் தீர்த்தங்களுள் வைத்தெண்ணப்படுபவர்.—(9) சிரமம் - வருந்திச் செய்யும் இயம நியம முதலியன.

தலவிசேடம் :—குடமூக்கு - இதுகும்பகோணம் எனப் பெருவழக்கில் அறியப்படுவது. ஒரு பேரூழி நீர்ப்பெருக்கில் எல்லா உயிர்களையும் சேரக்கொண்டு வைத்த குடத்தின் மூக்கு இருந்த இடம் என்ற காரணத்தால் இப்பெயர் போந்தது. தம்முள் மூழ்கினோரது எல்லாப் பாவங்களையும் போக்கும் கங்கையே முதலிய ஏழுபெருந் தீர்த்தமாதாக்களும் தங்கள் பாவங்களைப் போக்கிக்கொள்ளும் பொருட்டு வந்து ஆடும் மகாமகத் தீர்த்தம் பொருந்திய பெருஞ் சிறப்புடையது இத்திருத் தலம். "பூமருவு கங்கை முதற் புனிதமாம் பெருந் தீர்த்தம், மாமகந்தா னாடுதற்கு வந்துவழி படுங் கோயில்" (திருஞான - புரா - 409) என்று குடந்தைக் காரோணத்தைப் பற்றிக் கூறுதல் காண்க. "நாற்றிசையோர் பரவுதிருக் குடமூக்கு" (ஷை - 405) என்றது காண்க. விட்டுணு பூசித்துச் சார்ங்கமும் சக்கரமும் பெற்றனர். ஏம இருடி முதலியோர் பூசித்தனர். சுவாமி அழகிய மிருத்துலிங்கத் திருமேனியோடு விளங்குகின்றார். சுவாமி - கும்பேசர். அம்மை - மங்களநாயகி. தீர்த்தம் - மகாமக தீர்த்தம். பதிகம் 2.

இது கும்பகோணம் என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்று மேற்கே கற்சாலை வழி ஒரு நாழிகை யளவில் அடையத்தக்கது.

## திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம்

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

சொன்மலிந்த மறைநான்கா றங்க மாகிச்
சொற்பொருளுங் கடந்தசுடர்ச் சோதி போலுங்
கன்மலிந்த கயிலைமலை வாணர் போலுங்
கடனஞ்ச முண்டிருண்ட கண்டர் போலு
மன்மலிந்த மணிவரைத்திண் டோளர் போலு
மலையரையன் மடப்பாவை மணாளர் போலுங்
கொன்மலிந்த மூவிலைவேற் குழகர் போலும்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 1

ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
யிப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவியம ருலகனைத்து முருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலுந்
தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதிபொற் றமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—குடந்தைக் கீழ்க்கோட்டத்து எழுந்தருளி விளங்கும் கூத்தனார் சொன்மலிந்த மறைநான் காறங்க மாகிச் சொற்பொருளுங் கடந்த சுடர்ச்

சோதி ; ஆணொடு பெண் அலி அல்லர்; நீலவுரு வயிரநிறை பச்சை செம்பொன் நெடும்பளிங்கென் றறிவரிய நிறத்தார்; பாரிலங்கு புனலனல்கால் பரமாகாசம் பரிதி மதி சுருதியுமாய்ப் பரந்தார்; கூரிலங்கு வேற்குமரன் றாதை; திருவானைக் காவிலோர் சிலந்திக் கன்னாட் கோச்சோழர் குலத்தரசு கொடுத்தார்; சண்டீசர்க்கருளியவர்; ஏழு பெருந் தீர்த்தமாதாக்களும் வந்தாடும் தீர்த்தமுடையவர்; இவை முதலிய அருட் டன்மைகளுடையவர்; அவர் என் மனத்தகத்தே புகுந்தார்; என்னை அறுகுணத்தாண்டு கொண்டார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கூத்தனர் - இத்தலத்துச் சுவாமியின் சிறப்புப் பெயர்.—(2) கருத்தளவு சேருந்தோறுதி - கருதியபடி மூண்டபோரின் மூட்சி.—(3) நீறலைத்த......அடியவர்க்குக் காட்டி - இவ்வாறாகிய தமது திருவுருவத்தை யடிய வர் காணத் தோற்றி.—(4) சந்திரனைக் கலை கவர்ந்து - சாபங் காரணமாகச் சந்திர னது கலைகள் தேய்ந்தமையும் இறைவனது நியதி என்பது. "திங்களைத், தேய்த் ததுவே செம்பொற் செழுஞ்சடைமேற் சேர்வித்து" (போற்றித்திருக் கலிவெண்பா-11-ம் திருமுறை) சேக்கர் - பவளம் - மின் - தீ - ஞாயிறு - இவற்றின் பெருகிய ஒளி இறைவனது பேரொளிதெரிக்க ஒரு புடை ஒப்புக் கூறப்படுவன. செய்யர் - சிவந்த மேனியுடையார். கோக்கு - மா.—(5) நீலவுரு......நிறத்தார். நீலம் - வயிரம் (வெண்மை - பால்நிறம்) - பச்சை - பொன் - பளிங்கு - இவை சதாசிவ மூர்த்தியின் ஐந்து முகங்களின் நிறமென்ப. "நடுவு கிழக்குத் தெற்குத் தரமேற்கு, நடுவு படிக நற்குங்கும வன்னம், அடையுள வஞ்சனஞ் செவ்வரத் தம்பால், அடியேற் கருளிய முகமிவை யஞ்சே" (7 - 32) என்பது திருமந்திரம். ஆகம பேதம்பற்றி இவை சில பேதங்களாகக் கூறவும்படும்.—(7) காரிலங்கு திருவுருவத்தவன் - விட்டுணு. கமலத்திற் காரணன் - பிரமன். காரணன் - உலகத்தினைப் படைக்கும் இயற்றுதற் கருத்தா. பார்......பரந்தார் - எட்டு மூர்த்தி—(8) திருவானைக்காவிலோர்...... கொடுத்தார் - கோச்செங்கட் சோழர் சரிதம்.—(9) புராணர் - பழமையானவர். சைவர் - சிவனும் சிவசம்பந்தமுடையவரும் ஆவர். அங்கரவத் திருவடிக்கு...கொடுத் தார் - சண்டீசநாயனர் சரிதம்.—(10) ஏற வாங்கி - பிறவிக்குழியினின்றும் மேலே ஏறும்படி எடுத்து. வாங்குதல் - மேலெடுத்தல். குறிப்புருவகம். ஆங்கே கூவி - வானோர்க்குயர்ந்த உலகமாகிய தனது உலகத்துக்கு வரும்படி அழைத்து. அமருல கனைத்து முருவிப்போக - மறுமை இன்பத்துன்ப அனுபவங்களை எல்லாம் கண்டு கழிப்பித்து. நிலைபெற்ற பெருந்தேவர் பதங்களை யெல்லாங் கடந்து சிவலோகத்திலே செல்லும்படி என்பதும் ஒன்று. குறியில் - இலட்சியத்தின்கண்ணே. இறைவன் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடலின் இலட்சியம் சிவத்துவம் விளங்கி உயிர் கள் ஆனந்த வெள்ளந் திளைத்தலேயாம். அறுகுணம் - இங்கே முற்றுணர்வு முதலா கிய ஆறுகுணங்களே .சித்தியார் - "அறுவகைச் சமயத்தோர்க்கும்" என்றதன் உரை பார்க்க. நிர்வாண தீக்கையில் சாட்குண்ணியாபாதனஞ் செய்து சிவத்துவம் விளங் கச் செய்தல்பற்றி யறியப்படும் எண்குணங்களும் ஆறாக அடக்கியும் வழங்கப்படும். ஆண்டுகொள்ளுதல் - தன் படிவமாக்குதல். "இருளைத் துரந்திட் டிங்கே வாவென் றங்கே கூவும், அருளைப் பெறுவா னசைப் பட்டேன்" (ஆசைப்-1) என்பது திருவாச கம். காவிரி...குமரி வரு தீர்த்தம் - ஏழு பெருந்தீர்த்தங்களும் வந்து ஆடும் மகாமக தீர்த்தம். மகாமக வரலாறு. தீர்த்தம் சூழ்ந்த - தீர்த்தக்கரையில் உள்ள. கீழ்க் கோட்டம் - கிழக்கில் உள்ள கோயில்.—(11) சேறிகொண்ட சிந்தை - தியான உறைப்புள்ள உள்ளம். சிவபவனத் தமுதம் - தியான உறைப்புடையோரை இப் புவனத்தினின்றும் ஏற்றிச் சிவபவனத்து வைத்துத் தன்னையே சுவைத்து இன்புற

றிருக்கும்படி தரும் தன்மை சிவபவனம் எனப்படும். அழுதம் - மரணத்தை நீக்குவது. இப்பதிகம் 11 பாட்டுக்களுடையது.

தலவிசேடம் :—குடந்தைக் கீழ்க்கோட்டம்-இது கும்பகோணத்தில் உள்ள நாகேசுவரசுவாமி கோயில் என்ப. இது மாமகக் குளக்கரையில் உள்ள மற்றொரு கோயிலாகும் என்றும் கூறுவர். சூரியன் பூசித்த தலம். சித்திரை மாதத்தில் 11-ம் நாள் முதல் மூன்று நாட்கள் சுவாமி திருமேனியில் சூரியனது கதிர்கள் படும் காட்சி இன்றுங் காணப்படுவது இவ்வரலாற்றை உறுதிப்படுத்தும். பிரளயகால மூர்த்தி இங்குவைத்து வழிபடப்பெறுகின்றார். ஆதிசேடன் பூசித்தமையால் சுவாமி நாகேசுவரர் எனப்படுவர். இத்தலம் ஐயடிகள் காடவர் கோனாயனாரால் க்ஷேத்திரக்கோவையிற் "கடுவடுத்த நீர்" என்ற பாட்டினாற் றுதிக்கப்பட்டுள்ளது. இங்கு நடராசர் சந்நிதி விசேடம். "கூத்தனூரே" என்றதற்கேற்ப இங்குச் சிவகாமியம்மையார் கையில் தாளமேந்தியுள்ளார். இறைவர் திருக்கூத்தாடும்போது இறைவி அதற்கேற்பத் தாளமிடுகின்றார் என்று தமிழ்வேதம் கூறுகின்றது. "கூடிய விலயஞ் சதி பிழை யாமைக் கொடியிடை யுமையவள் காண, ஆடிய அழகா" (தேவா). சுவாமி - மடந்தைபாகர். அம்மையார் - பெரியநாயகி. பதிகம் 1.

இது கும்பகோணம் நிலயத்தினின்றும் மேற்கே கற்சாலை வழி அரைநாழிகையளவில் மகாமகத் தீர்த்தக்கரையினின்று மேற்கே கால்நாழிகையில் உள்ளதென்ப. மேற்குறித்த மற்றொரு வரலாற்றுக் கோயில் மகாமகத் தீர்த்தத்தினை அடுத்துத் தென் கரையில் உள்ளது.

திருகுடந்தைக்காரோணம் - நாயனார் பதிகம் கிடைத்திலது. தலவிசேடம் ஆளுடையபிள்ளையார் புராணத்துக் காண்க.

திருநாலூர் - நாயனாரது பதிகம் கிடைத்திலது! தலவிசேடம் பின்னர்க் காண்க.

### திருச்சேறை

I திருச்சிற்றம்பலம் திருநேரிசை

பெருந்திரு விமவான் பெற்ற பெண்கொடி பிரிந்த பின்னை
வருந்துவான் றவங்கள் செய்ய மாமணம் புணர்ந்து மன்னும்
அருந்திரு மேனி தன்பா லங்கொரு பாக மாகத்
திருந்திட வைத்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 1

விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால பயிரவ னாகி வேழம்
உரித்துமை யஞ்சக் கண்டு வொண்டிரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 6

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சேறைச் செல்வனாரே, உமையை மாமணம் புணர்ந்து ஒரு பாகமாக வைத்தார் ; என்னை ஆளாக்கொண்டு பிறவி வான் பிணிகள் எல்லாம் தீர்த்தருள் செய்தார் ; விசயனுக்கும், பகீரதற்கும், சண்டீசர்க்கும் அருள்செய்தார் ; அவரே கால பயிரவ னானார்; முப்புரமெரித்தார் ; பிரம விட்டுணுக்கள் அறியாவண்ணம் நீண்டனர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :— இமவான் பெற்ற பெண்கொடி - பார்வதி - ஐமவதி - என்னும் உமையம்மை. பிரிந்ததும், தவம்செய்து மணந்து பாகம் பெற்றதும், பிறவுமாகிய வரலாறுகள் கந்தபுராணம்-உற்பத்தி காண்டம்-பார்ப்பதிப் படலம்-முதல்

திருக்கல்யாணப்படலம் வரை உள்ள பகுதியில் விரித்துரைக்கப்படுவன. திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணமும் பார்க்க. "குரும்பைமுலை மலர்க்குழலி" என்ற நம்பிகள் தேவாரமும் காண்க. வருந்தும் வான் தவங்கள் என்க. வான் - பெருமை குறித்தது.—(2) சமணர் சம்பந்தம்பற்றி நாயனாரது சரித வரலாற்றின் அகச்சான்று. தீர்த்து அருள்செய்தார் - பிறவியில் வரும் பிணிகளேயன்றிப் பிறவியும் தீர்த்தனர். "இனிப்பிறவாத தன்மைவந் தெய்தினேன்" - நம்பிகள்.—(3) வேடனாய் வந்து விசயற்கருள்செய்த வரலாறு.—(4) பகீரதனது தவத்துக்கு இரங்கிக் கங்கையை அழைத்துச் சடையில் ஏற்றுநின்ற வரலாறு.—(5) சண்டேசநாயனார் சரிதம். சிறந்த பேர் - "சண்டீ சனுமாம் பதந்தந்தோம்".—(6) காலபயிரவராய் வந்த வரலாறு.—(7) திரிபுரமெரித்த வரலாறு.—(8) அனலுருவாய் நீண்ட சரிதம்.

II　திருச்சிற்றம்பலம்　திருக்குறுந்தொகை

பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடும்; கூரி தாய வறிவுகை கூடிடும்;
சீரி யார்பயில் சேறையுட் செந்நெறி, நாரி பாகன்ற னாம நவிலவே.　1
தப்பி வானந் தரணிகம் பிக்கிலென்?; ஒப்பில் வேந்த ரொருங்குடன் சீறிலென்?
செப்ப மாஞ்சேறைச் செந்நெறி மேவிய, அப்ப னுருள ரஞ்சுவ தென்னுக்கே.　6

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சேறைச் செந்நெறியப்பர் உளர். நெஞ்சமே! நாம் அஞ்சுவதென்னுக்கு?; அவனது நாமம் நவிலப் புண்ணியம் பூரியாவரும்; பொய்கெடும்: பிறப்பு - மூப்பு - பசி - பிணி - இறப்பு நீக்கி யின்பம்வரும்; கூற்றுவனைத் துரக்கும் வழி அதுவே; வானமும் தரணியும் கம்பிக்கினும், அரசர் சீறிவரினும் நாம் அஞ்ச வேண்டுவதில்லை.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) பூரியா - நிறைந்து. பூரித்தல் - நிறைத்தல்; பொய் - புண்ணியத்துக்கு மாறுகிய கீழ்மை. பொய்யினால் வருவது. கொடுவினை. கூரிதாய அறிவு - கூர்ந்த அறிவு. நன்மையிற் செல்வது. எத்துணை நுண்ணியதேயாயினும் தீமையிற் சென்றால் அது கடைபோகக் கூர்ந்த அறிவாகாது ஒழியும்; சீரியார் - சிறந்தோர் - அடியார். செந்நெறி - சேறையின் திருக்கோயிலின் பெயர். செம்மை (முத்தி) தரும் நெறியருளும் இறைவர் வெளிப்பட வீற்றிருக்குமிடம். நவில - வரும் எனக்கூட்டுக. விற்பூட்டு பொருள்கோள். மேல்வரும் இரண்டு பாட்டுக்களும் இவ்வாறே. வைகவே - என்ன மாதவஞ் செய்தனை (2) எனவும், வைக்கவே - எய்திடும் (3) எனவும் கொள்க.—(2) "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே......வழிபடு மதனாலே" (திருவலஞ்சுழி - ஆளுடையபிள்ளையார்). வந்து வைகவே - வருதல் - வெளிப்படுதல். வைகுதல் - அவ்வாறு வெளிப்பட்ட நிலையில் நிலைத்திருத்தல்.—(3) மூப்பு - பசி - பிணி - இறப்பு - நரை திரை மூப்பு பிணி சாக்காடு என்னும் ஐந்து. இங்கு - இப்பிறப்பிலேயும். மறப்பதின்றி - வைக்க - இடையறாது பொருந்தச்செய்ய. மார்க்கண்டர் சரிதம் காண்க.—(4) மாடு - செல்வம். மயக்கு - "நில்லா தவற்றை நிலையின வென்றுணரும், புல்லறி வாண்மை" (குறள்) "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும் மருள்" (ஷெ). ஊமர் - சொல்லுங் கருவியிருந்தும் சொல்லாதவர். அடியடைதற்குரிய தலை - மனம் - வாய் - முதலிய எல்லாக் கருவிகளும் தரப்பட்டும் பயன் பெறாமையின் ஊமர் என்றார். உருவகம். சேடர் - அறிவிற் சிறந்தோர். சேடு - ஒளி. இங்கு அறிவொளி. ஆட்லான் - ஐந்தொழிற்கூத் தியற்றுவோன். உய்ம்மினோ - ஏகாரம் இரக்கங் குறித்தது. ஊமர்காள் - உய்ம்மினோ என்றது வீணாக வாணாள் கழிக்கும் மக்களுக்கிரங்கி உபதேசித்

தது. அடியடைவதுவே உய்யும் வழியாவது என்பதற்குரிய காரணம் மேல்வரும் 5 பாட்டுக்களா லுரைத்தருளினார்.—(5) தூரக்தும் - ஓட்டும்.—(6) தப்பி - நிலையிற் பிறழ்ந்து. தரணி - நிலம். எல்லாவற்றையும் தரிப்பதால் தரணி எனப்படும். கம்பித்தல் - அசைதல். "வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென்" (திருவிருத்தம்). ஒப்பில்...சீறிலேன் - தனித்தனி தம்மை ஒப்பாரில்லாத பெருவன்மையுடைய எல்லா வேந்தர்களும் ஒன்றுகூடி ஒரு காலத்தில் ஒன்றுபோலவே சீற்றத்தைக் கொண்டாலும் எமக்காவதென்னை?; செப்பம் ஆம் - காவல் ஆகும்.—(7) ஒத்தோவ்வாத வுற்றார்கள் - செல்வமும் உதவியும் உண்டாயினபோது உடன்கூடி நின்று, அல்லுழிப் பிணங்கும் உறவினர்.—(8) நலங்கள் - நலத்திற்கும், குற்றங்கள் - கேட்டிற்கும் காரணமாகக் கருதப்படும். இவைதாம் என்ன செய்ய வல்லன? - இவற்றால் நீ முறையே துலங்கி நின்றும் (தருக்கியும்), சோர்ந்தும், இவ்வனுபவங்களில் வீழாதே. அலங்கனார் - அலங்கல் - மாலை. அஃது அல் ஈறு குறைந்து அன் விகுதி பெற்று அலங்கன் என நின்று, உயர்வு பற்றிய பலர் பாலுணர்த்தும் ஆர் விகுதி பெற்று வந்தது. அலங்கல் - விளங்குதல் என்று கொண்டு, எல்லாப் பொருள்களும் விளங்குதற் கேதுவாயுள்ளவன் என்றுரைத்தலுமாம்.—(9) சுற்றமும் விழ விடாவிடில்-சுற்றமும் பற்றும் துணையும் விடாதிருப்பாராயின. "ஞாலத் தகட்டுட் டோன்றி வருந் துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு" (தேவா).

தலவிசேடம்:—இது உடையார் கோயில் என வழங்கப் பெறும். காவிரிக்குத் தென்கரை 65-வது தலம். தௌமியர் என்ற இருடி பூசித்த தலம். சுவாமி - செந்நெறியப்பர். அம்மையார் - ஞானவல்லி. பதிகம் 3.

இது கும்பகோணம் வழியில் உள்ள நறையூர்ச்சித்தீச்சரத்துக்குத் தென்கிழக்கே கற்சாலை வழி 3 நாழிகை யளவில் உள்ளது. திருக்குடவாயிலிலிருந்து வடக்கே கற்சாலைவழி 2 நாழிகை யளவில் திருநாலூரை யடைந்து, அதினின்றும் வடகிழக்கே கரைவழி ஒருநாழிகையளவில் திருநாலூர் மயானத்தை யடைந்து, அதன் மேல் வடமேற்கே கற்சாலையில் ஒரு நாழிகை யளவிலும் அடையலாம். குறிப்பு:—சேறை என்ற பெயரால் இரண்டு ஊர்கள் உள்ளன என்பர். சிவ தலமும் வைணவ தலமுமா யிருப்பதனை இரண்டாகவும் கணிப்பர். பாட்டில் தென்றிருச் சேறை என்றது குறிக்கத் தக்கது. அது நேர் கற்சாலை வழியில் உள்ளது.

இத் திருப்பாட்டில் நாலூர் - சேறை - குடவாயில் - நறையூர் என்ற வைப்பு முறை நாயனார் சென்றருளிய வழியைக் குறிப்பதாயின், நாயனார் நாலூரினின்றும் வடமேற்கு வழியில் போய் சேறையை அடைந்து, பின் மீண்டும் அவ்வழியே தென்கிழக்கில் குடவாயில் சேர்ந்து, பின்னரும் அவ்வழியே வடக்கு நோக்கிச் சென்று நறையூரை அடைந்திருத்தல் வேண்டும் என்றும், அவ்வாறாயின், திருக்குடவாயிலினின்றும் தெற்கில் சோழசூடாமணி யாற்றைக் கடந்து புதுக்குடி வழியாகச் செல்லும் சாலைவழி அக்காலத்தில் வழிபோகக்கூடாத நிலையில் இருந்திருக்கக் கூடுமென்றும் கருதக் கிடக்கின்றது. ஆளுடையபிள்ளையார் சென்ற வழிபற்றி உரைப்பதும் கருதுக. (திருஞான - புரா - 403).

திருக்குடவாயில் - நாயனாருளிய பதிகம் கிடைத்திலது! தலவிசேடம் வந்துழிக் காண்க. காவிரிக்குத் தென்கரை 94-வது தலம்.

திருநறையூர் - நாயனாருளிய பதிகம் கிடைத்திலது! சிதலரித் தொழிந்தது போலும்! காவிரிக்குத் தென்கரை 65-வது தலம். சித்தீச்சரம் என்பது இத்தலத்துக் கோயிலின் பெயர்.

இடம்பல - பேணுபெருந்துறை - நாலூர்மயானம் முதலியன போலும்?

திருவாஞ்சியம்

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

படையும் பூதமும் பாம்புமபுல் வாயத, னுடையுந் தாங்கிய வுத்தம னூர்க்கிடம்,
புடைநி லாவிய பூம்பொழில் வாஞ்சியம், அடைய வல்லவர்க் கல்லலொன் றில்லையே.

அருக்க னங்கி யமனொடு தேவர்கள், திருத்துஞ் சேவடி யான்றிக ழுந்நகர்
ஒருத்தி பாக முகந்தவன் வாஞ்சியம், அருத்தி யாலடை வார்க்கில்லை யல்லலே. 7

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—திருவாஞ்சியத்தை அடைய வல்லவர்க்கு அல்லல் இல்லை; பாவமில்லை; செல்வமாகும்; அங்குத் தங்குவார் அமரர்க் கமரர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) புல்வாய் - மான். தாங்கிய - தரித்த. அல்லலொன் றில்லை - துன்பஞ் சிறிதுமில்லை. பாவமில்லை (3), இல்லை யல்லலே(7) என்றவை இத்தலம் தென்றிசையில் காசிக்குச் சமமாகச் சொல்லப்படும் ஆறு தலங் களுள் ஒன்று என்பதும், இங்கு இறப்பவருக்கு மரணவேதனை இல்லை என்பதும் ஆகிய வரலாறுகள் குறிப்பன. ஆளுடைய நம்பிகளருளிய இத்தலத் தேவாரத் துள் (காந்தார பஞ்சமம்) "வாஞ்சியத் துறையும், ஒருவனு ரடியாரை யூழ்வினை நலிய வொட்டாரே", "மருந்தனு ரடியாரை வல்வினை நலிய வொட்டாரே", "நினைப்பவர் வினை நலிவிலரே" என்று அருளியிருப்பதும் கருதுக.—(2) பறப்பை - கருடன் முதலிய பறவையின் வடிவம் பொருந்த அமைக்கும் வேள்வித் திண்ணை. பசு - வேள்விப் பசு. கறை - மதியின் முயற்கறையும், சாபக்கறையும். சிறப்பு - தலச் சிறப்பு.—(6) அற்று - பிற பற்றுக்க ளெல்லாவற்றையும் அறுத்து. பற்றின்றி - வேறொரு பற்றுமின்றி. "மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாதமே மனம் பாவித்தேன்" (நம்பிகள் - தேவா). யாரையும் - துணையாவார் யாரையும். "அற்றவர்க் கற்றசிவன்" (ஆளுடைய பிள்ளையார் - தேவா).—(7) அருக்கன் - சூரி யன்; அங்கி - தீக்கடவுள். இயமன் - கூற்றுவன்; காலன் முதலிய தேவர்கள் இங்குப் பூசித்துப் பேறு பெற்றமை தலவரலாறு. அருத்தி - ஆசை - குறிப்பு :—இப் பதிகத்து ஏழு பாட்டுக்களே கிடைத்தன; ஏனையவை சிதலரித்தொழிந்தன போலும்!

தலவிசேடம் :—திருவாஞ்சியம் - ஸ்ரீ வாஞ்சியம் என வழங்கப்படும். விட்டுணு இலக்குமியை - (ஸ்ரீயை) - வாஞ்சித்து இறைவனைப் பூசித்த தலமாதலின் இப்பெயரால் வழங்கப்படுவது. இயமன் முதலியோர் பூசித்தமை பதிகத்துட் காண்க. இயமன் சந்நிதி திருக்கோயிலுக்கு வெளியே தென்கீழ்த் திசையில் உள்ளது. தல விசேடங்கள் முன்னர்ப் பதிகப்பாட்டுக் குறிப்பினுள் உரைக்கப்பட்டன. காவிரிக்குத் தென்கரையில் 70-வது தலம். மூவர் பதிகமும் பெற்ற பெருமையுடையது. சுவாமி - வாஞ்சியநாதர்; அம்மை - வாழவந்த நாயகி. தீர்த்தம் - குப்தகங்கை. மரம் - சந்த னம். பதிகம் 3.

இது நன்னிலம் என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும் மேற்கே கற்சாலைவழி 1½ நாழிகை யளவில் திருக்கொண்டீச்சரத்தையும், அங்கிருந்து மேற்கே 1½ நாழிகை யளவில் நன்னிலத்துப் பெருங்கோயிலையும், கடந்து தென்மேற்கே மாப்பிள்ளைக் குப்பம் மட்சாலைவழி 3 நாழிகையளவில் புத்தாற்றின் வடகரையில் உள்ளது. புத்தாறு குடமுருட்டி யாற்றின் ஒரு பிரிவு. நாயனார் சென்ற வழி நறையூர்ச் சித்தீச்சரத்தி னின்றும் தெற்கில் திருமலைராஜனாற்றின் தென்கரையில், கிழக்கில் நன்னிலம்

போகும் சாலை வழியில், நாலூர் மயானத்திலிருந்து கிழக்கில் 10 நாழிகையளவில் உள்ளதுபோலும்.

1482. பெருவாச மலர்ச்சோலைப் பெருவேளூர் பணிந்தேத்தி,
முருகாரு மலர்க்கொன்றை முதல்வனார் பதிபிறவுந்
திருவாரும் விளமருடன் சென்றிறைஞ்சி, வாகீசர்
மருவாரூ ரெரித்தவர்தந் திருவாரூர் வந்தடைந்தார். ௨௧௭

(இ - ள்) வெளிப்படை. மிகுந்த மணமுடைய சோலைகள் சூழ்ந்த திருப்பெருவேளூரை வணங்கித் துதித்து, மணம் நிறைந்த கொன்றைமலர்களைச் சூடிய முதல்வனாரது பிற பதிகளையும் திருவிளமரையும் போய்ப் பணிந்து, திருநாவுக்கரசர், பகைவர்களது ஊர்களாகிய முப்புரங்களை எரித்தவராகிய சிவபெருமானமர்ந்துறையும் திருவாரூரில் வந்து அடைந்தார்.

(வி - ரை) பெருவேளூர் பணிந்து ஏத்தி - திருப்பெருவேளூரையும் அத்தலத்தில் நீங்காது விளங்க வீற்றிருக்கும் சிவபெருமானையும் பணிந்தும் ஏத்தியும். "பெருவேளூர் பிரியாரே" என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரங் காண்க. "பெருவேளூர் பேணினான்" என்பது நாயனார் தேவாரம்.

பதிபிறவும் விளமருடன் சென்றிறைஞ்சி - பெருவேளூரினின்றும் போந்து, பிற பதிகளை வணங்கிக்கொண்டு, பின்னர்த் திருவிளமரை அடைந்தனர் என்பது.

பிறபதிகள் - இடையில் உள்ள திருக்கரவீரம் முதலியன.

திருவாரும் விளமர் - திருவிளமர். திரு - சைவத்திரு. மருவார் - பகைவர். இங்குத் திரிபுராதியரைக் குறித்தது.

தல விசேடம் :—விளமர். நாயனாரருளிய பதிகம் கிடைத்திலது. தலக் குறிப்புப் பின்னர் வந்துழிக் காண்க. 217

1483. ஆண்டவர செழுந்தருள வாரூரி லன்பர்கடாம்
நீண்டசடை முடியார்பா னிறைந்தவருள் பெற்றுடையார்
காண்டகுமா ளிகைமாடங் கவின்சிறந்தோங் கிடவெங்குஞ்
சேண்டிகழ்வீ திகள்பொலியத் திருமலிமங் கலஞ்செய்தார். ௨௧௮

(இ - ள்) வெளிப்படை. திருநாவுக்கரசர் எழுந்தருள, அதனை அறிந்த திருவாரூரிலுள்ள அடியவர்கள் நீண்ட சடைமுடியினையுடைய சிவபெருமானது நிறைந்த திருவருளைப் பெற்றுடையார்களாதலின், காண்டற்கினிய மாளிகைகளையும் மாடங்களையும் முன்னையிலும் அழகு சிறந்து விளங்கும்படியும், அதனால் எவ்விடத்திலும் சேணிற் றிகழும் வீதிகள் பொலியும்படியும், திருவுடைய மங்கல அணிகளைச் செய்தனர்.

(வி - ரை) ஆரூரில்......பெற்றுடையார் - திருவாரூரில் அடியவர்கள் இறைவனுடைய நிறைந்த திருவருளைப் பெற்றவர்கள் என்பது திருவாரூர்ப் பிறந்தவர்கள், அங்குப் பிறந்த அத்தன்மையாலே முத்திபெறும் தகுதிபெற்றவர்கள் என்ற கருத்தாம். நிறைந்த அருள் - முழு அருள்; அது முத்திபெறுதற் கேதுவானது. "திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்", "தண்டியடிகள் திருவாரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார்" முதலிய திருவாக்குக்கள் காண்க.

காண் தகு மாளிகை கவின்சிறந்து ஓங்கிட-முன்னமே அவை காட்சிக் கினியனவாய் விளங்குவன; அடியார்கள் மங்கலஞ் செய்து அணி செய்தலின் அவற்றின் வனப்பு மேலும் சிறந்து விளங்கிற்று என்பதாம். மாளிகைகளின் கவின் பற்றித்

திருவாரூர்ச் சிறப்பிற் காண்க. சேண்திகழ் வீதிகள் போலிய - என்றதும் இக் கருத்துப் பற்றியது.

சேண் திகழ் வீதிகள் - திருவாரூர் வீதிகளின் ஒளி சேணிலும்சென்று விளங்குவது. தேவர்கள் இங்கு வந்து வழிபடும் சிறப்புக் குறித்து. 218

வேறு

1484. வல்லமண் குண்டர்தம் மாயை கடந்து மறிகடலிற்
கல்லே மிதப்பாகப் போந்தவர் வந்தா ரெனுங்களிப்பால்
எல்லையி றொண்ட ரெயிற்புறஞ் சென்றெதிர் கொண்டபோது
சொல்லி னரசர் வணங்கித் தொழுதுரை செய்தணைவார், ௨௧௯

1485. "பற்றொன் றிலாவரும் பாதக ராகு மமணர்தம்பால்
உற்ற பிணியொழிந் துய்யப்போந்தேன்பெறலாவதொன்றே?"[மென்
புற்றிடங் கொண்டான்றன் றொண்டர்க்குத் தொண்டராம் புண்ணிய"
றற்ற வுணர்வொடு மாரூர்த் திருவீதி யுள்ளணைந்தார். ௨௨௦

1484. (இ - ள்) வெளிப்படை. கொடிய மனவன்மை யுடைய அமணர்களாகிய கீழ் மக்களது மாயையினைக் கடந்து, மறிகடலினின்று கல்லையே தெப்பமாகக் கொண்டு ஏறிப் போந்த பெரியவர் வந்தார் என்ற மகிழ்ச்சியினாலே, அளவில்லாத தொண்டர்கள் நகர்த் திருமதிலின் புறத்தில் வந்து எதிர்கொண்டபோது, திருநாவுக்கரசு நாயனுர் அத்திருத்தொண்டர்களைத் தொழுது தோத்திரித்து அணைவாராய், ௨௧௯

1485. (இ - ள்) புற்றிடங் கொண்டான்றன் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் - புற்றினையிடமாகக் கொண்டெழுந்தருளி யிருக்கும் வன்மீக நாதரது தொண்டர்களுக்குத் தொண்டராகும் புண்ணியமாவது; பற்று ஒன்று இலா அரும் பாதகர் ஆகும் அமணர் தம்பால் உற்றபிணி ஒழிந்து உய்யப் போந்தேன் - ஒன்றாலும் பற்றத் தகாதவர்களாய்ப் பெரும்பாதகர்களாகிய அமணர்களிடத்திற் பொருந்திய பிணி தீர்ந்து உய்யும் பொருட்டாக வந்து புகுந்தவனாகிய நானும்; பெறலாவதொன்றே - பெறத்தக்க தொன்றாகுமோ?; என்று - என்றுகூறி; அற்ற...அணைந்தார் - தம்முணர்ச்சி யென்ப தற்றவராய்த் திருவாரூர்த் திருவீதியினுள் அணைந்தனர். ௨௨௦

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1484. (வி - ரை) மாயை கடந்து...கல்லே மிதப்பாக - ஆழும் தன்மையுடைய கல்லினையே மறிகடலி னடுவுள் மிதவையாக ஆக்கி ஊர்ந்து வந்தது செயற்கரிய பெருஞ்செயல்; அதனினும் பெரிது வலிய அமண்குண்டர் தம் மாயை கடந்து போதல் என்பது குறிக்க முன் வைத்தார். இவற்றையே ஆரூர்த்திருத்தொண்டர் கருதித், திருவருட்பெருமை கண்டு, எதிர்கொண்டனர். இச்சிறப்பே உலகில் பலரும் வியந்து பாராட்டிப் போற்றுகின்றதென்பது, "பொங்குகடற் கன்மிதப்பிற் போந்தேறுமவர் பெருமை, யங்கணர்தம் புவனத்தி லறியாதார் யாருளரே?" (அப்பூதி - புரா - 15) என்று அப்பூதிநாயனுர் இதனையே தேற்றம்பெற எடுத்துக் கூறுதலாற் காணப்படும்.

எல்லையில் தொண்டர் - "அளவிலாத பெருமையராகிய அளவிலா அடியார்" (5).

எயிற்புறம் - திருமதிலின் புறத்தே. எயில் - நகரினைச் சுற்றிய மதில்.

தொண்டர் எதிர் கொண்டபோது - வணங்கித் தொழுது உரை செய்து - இவ்வாறே ஆளுடைய பிள்ளையாரையும் ஆளுடைய நம்பிகளையும் திருவாரூர்த் தொண்டர்

கள் எதிர்கொண்டனர். பெரியார் மூவரும் அத்திருத்தொண்டர்களை நோக்கிப் பாடிப் போற்றிப், பின்பே நகரினுட் புகுந்தனர். இதுபற்றி 269-ல் உரைத்தவை பார்க்க.

உரைசெய்து - திருப்பதிகத்தினுற் றொண்டர்களது பெருமையைப் போற்றி செய்து. பதிகக் குறிப்புப் பார்க்க.

சொல்லி னரசர் - பதிகப் பொருளினருமையும் சொல்லினருமையும் குறித்தது. அணைவார் - என்று - அற்ற உணர்வொடும் - வீதியுள் - அணைந்தார் - என மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

இது முதல் ஐந்து பாட்டுக்கள் இப்பதிகப்பாட்டின் யாப்பில் அமைந்தன. 219

1485. (வி - ரை) பற்றேன்றிலா...என்று - இது பதிகக் கருத்தும் குறிப்பும் ஆசிரியர் காட்டுகின்றபடி. பதிகக்குறிப்புப் பார்க்க.

பற்றேன்று இலா - ஒன்றும் பற்று இலா என்க. முற்றும்மை தொக்கது. வீட்டு நெறிக்கு ஒரு பற்றுக்கோடுமில்லாத என்றலுமாம். பற்று - பற்றத்தக்க நன்மை.

அரும் பாதகர் - அரும் - என்பது மிகுதி உணர்த்திற்று.

பிணி - பிணிப்பு. கேதம் - பாவம் என்ற பொருளில் வந்தது.

ஒழிந்து உய்யப் போந்தேன் - ஒழிதலால் உய்யும்படி ; அந்தப் பிணிமுற்றும் ஒழிந்தாலன்றி உய்தியில்லை என்பது. சூலை நோயால் அப்பிணி ஒழிந்து கரையேறித் திருவதிகை சேர்ந்தது இறைவரருளைப் பெற்றசெயல். தூங்கானை மாடத்திற் சூல விடபக்குறிகள் தோளிற் பொறிக்கப் பெற்றது தாம் வேண்டிப்பெற்ற செய்தி. அது அமண் சமயத்தொடக்குண்டு போந்த உடல் தன்னுடனே யுயிர்வாழத் தரியாமைக் காகப் பெற்ற உடற்சுத்தியாம். இங்குத் திருவாரூரில் நாயனுர்பெற நினைந்தது தாம் பெற்ற சிவாநந்தானுபவம் மேன்மேற் பெருகுதற்கும், வாதனை தாக்காதிருத்தற்கும் உரிய சீரடியாரிணக்கமாம். இவை சிவஞான போதம் 12 சூத்திரத்தினுட் பேசப் படுவன. "அமணரைவிட் டிய்யு நெறிகண்டிங் குய்யப் போந் தேனுக்கும்" (9), "அமணர் திறமது கையகன்றிட் டுற்ற கருமஞ்செய் துய்யப்போந் தேனுக்கும்" (10) என்ற இத்தேவாரப் பாட்டுக்கள் பத்துப் பதினோராஞ் சூத்திரங்களின் கருத்தை உட் கொண்டன. இதனையே ஆசிரியர் "உற்ற பிணியொழிந் துய்யப் போந்தேன்" என்று விளக்கினர்.

புண்ணியம் - உய்யப்போந்தேன் - பெறலாவ தொன்றே - என்று கூட்டுக. போந்தேனுகிய நானும். இழிவு சிறப்பும்மை தொக்கது. பெறலாவ தொன்றே ? ஏகார வினு ஐயங் குறித்தது.

தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் - "அடியார்க்கு மடியேன்" என்று திருத்தொண்டத் தொகையுட் போற்றிய கருத்துமிது.

என்று - என்ற கருத்துடைய பதிகத்தை அருளி. இது வாக்கின்றொண்டு.

அற்ற உணர்வோடும் - தம் உணர்வு - ஆன்மபோதம் - முற்றும் நீங்கிய உணர்ச்சி யுடனே. இது மனத்தினிலைபேருகிய தொண்டு.

ஆரூர்த் திருவீதியுள் அணைந்தார் - இது மெய்யின் தொண்டு.

பெறலாவ துண்டே—உற்ற உணர்வேலாம்—என்பனவும் பாடங்கள். 220

## திருவாரூர் - திருமூலட்டானம்

திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

குலம்பலம் பாவரு குண்டர்முன் னேநமக் குண்டுகொலோ
வலம்பலம் பாவரு தண்புன லாரு ரவிர்சடையான்

சிலம்பலம் பாவரு சேவடி யான்றிரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. 1

குற்ற முடைய வமணர் திறமது கையகன்றிட்
டுற்ற கருமஞ்செய் துய்யப்போந் தேனுக்கு முண்டுகொலோ
மற்பொலி தோளா னிராவணன் றன்வலி வாட்டுவித்த
பொற்கழ லானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. 10

திருச்சிற்றம்பலம்

**பதிகக்குறிப்பு** :—அமணரைச் சார்ந்து துரிசுபட்டேன்; அதனை ஒழித்துவிட்டு உய்யும்படி திருவருள் பெற்றுப் போந்தேன். அவ்வமணர்களுங் காணத் திருவாரூர்த் திருமூலட்டான நாதருடைய தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் எனக்கும் உண்டாகுமோ? அப்பெரும் புண்ணியம் இச்சிறியேனும் பெறலாவதொன்றோ? இப்பதிக முழுமையும் இக்கருத்தே பற்றியது காண்க. குறிப்பு :—ஆரூரிலும் அமணர்களிருந்தமை தண்டியடிகள், நமிநந்தியார் புராணங்களாலறிக.

**பதிகப்பாட்டுக் குறிப்பு** :—(1) அலம்பா - அலம்புதல் செய்து. அலம்புதல்- ஆர்த்தல். புலம்பு - பற்றிநின்று அரற்றுதல். "புலம்பே ளுகிலென் கண்டுயில் கொள்ளுமே" (குறுந் - அதிகை). நமக்கு உண்டுகொலோ? என்றது நாயனார் தம்முடன் வந்த தொண்டர்களையும் உலகரையும் உளப்படுத்தி உபதேசித்தது.—(2) அல் உண்ணு-இரவில் உண்ணாத. வல் அமணர் - கல்நெஞ்சுடையோர். சொல்திடமென்று- சொல்லிய பொய்யை மெய்யென்று நம்பி. துரிசு - கெடுதி. புற்று இடங்கொண்டான் - திருவாரூர்த் திருமூலட்டான நாதர். புற்றே இடமாக வீற்றிருப்பவர்.—(3) நின்று உண் - நின்ற நிலையில் உண்ணும். சென்றடையாத் திருவுடையான் - திரு - அருட்டிரு - இறைவனது அருள் நிறைவு உயிர்க்குயிராய் எங்குமாகி நிறைந்திருத்தலால் அதனை அடைய நின்ற ஆன்மாக்கள் புடைபெயர்ச்சியின்றி யடைய வல்லார். இடம்விட்டுப் பெயர்ந்து அடையவேண்டாத நிறைவுடைய திருவை - அருளை- உடையவன் சிவபெருமான். அத்திருவாவது பேரானந்தமாகிய பெருஞ்செல்வம். அது யாங்கணும் பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏகவுருவாய்க் கிடப்பதாம். ஆதலின் சென்றடைய வேண்டாதாயிற்று. "த்ருக்க்ரியாத்மக மைச்வரியம்" - ஞானக்கிரியா ரூபமான ஐசுவரியம் - என்பது பராக்கியை என்னும் சிவாகமம். "சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக், குன்றுடையானை" (குறிஞ்சி). "நண்ணரிய சிவானந்த ஞானவடிவு" என்புழிப்போலத் தவமில்லாதவராற் சென்றடையப்படாத என்றுரைப்பாருமுண்டு.—(4) மாசினை ஏறிய மேனியர் - குளிக்காததால் அழுக்கு மிகுந்த உடம்புடையவர்கள். "கழுவா வுடலம்" (11 - திருமுறை - ஆளுடைய பிள் - அந்). வன்கண்ணர் - இரங்காமனத்தோர். நாயனார்பாற்செய்த தீயமிறைகள் அவர்களது வன்கண்மையை விளக்கும். மோண்ணர் - கீழ்கள். ஈசன் - சிவன். ஏசறுவேன் - இடைவிடாது கவலைப்பட்டு ஏங்குவேன். பூசித்தலையுடைய பூசுரர் என்க. பூசனை - பூசித்தலையுடையவன்.—(5) அருந்தும்பொழுது உரையாடா - உண்ணும்பொழுது பேச்சின்றி யிருத்தல் அமணர் வழக்கு. மூங்கைகள் போலுண்ணும்.—(6) அரன் - பாசங்களை அரிப்பவன் - போக்குபவன். பொருந்தும் தவமுடை - முன்னைத் தவத்தால் முத்தி பெறத் தகுதியானர்களே திருவாரூரில் பிறந்து தொண்டு படுவார்கள்.—(6) வெற்றரையே - உடைநீத்து.—(7) பண்ணிய சாத்திரப் பேய்கள் - இறைவனுற் செய்யப்படாது தாமாகப் படைத்துக்கொண்ட சாத்திரங்களைப் பேய்போற் பற்றிக்கொண் டுழல்வார். பறிதலை - தலைமயிரைப்

பறித்தல் அமணர் வழக்கு. அருள் பெற்றேற்றும் - தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் உண்டு கொலோ? என்றது அன்பர்பணி அரனருள்வழி பெற்ற பின்னே அடையத்தக்கது என்பதை விளக்குவதாம். முதல்வனது சீபாதங்களை யணையு மாறுணர்த்தும் பதினோராஞ் சூத்திரத்தின் பின் அணைந்தோர் தன்மையில் வைத்து "அன்பரொடுமரீஇ" என்று பன்னிரண்டாஞ் சூத்திரத்தில் உணர்த்தியது காண்க. "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால், இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" என்பது ஆன்றோர் வாக்கு.—(8) கரப்பர்கள் மெய்யை - வெற்றரையாகிய உடலைப் பாயினால் மூடுவர். தலைபறிப்பச் "சுகம்" என்னும் - தலை பறிக்கும்போது "இப் - துக்; பிற் - சுக்" (இப்போது துக்கம் - பின்னால் சுகம்) என்ற மந்திரம் சொல்லிக்கொண்டு பறித்தல் அமணர் வழக்கு. விருப்பமர் - பொருப்பனுக்கு விருப்பமானதையே தாமும் விரும்பும் தொண்டர் என்க. அமர்தல் - விரும்புதல். "அகனமர்ந்து", "வேண்டும் பரிசொன்றுண்டென்னி லதுவு முன்றன் விருப்பன்றே" (திருவா) என்றவை காண்க.—(9) கையில் இடுசோறு நின்று உண்ணும்-சமண அடிகண்மார்க்குப் பலிப்பாத்திரத் தன்றிக் கையில் கவளமாக இட, அந்த உணவை நின்ற நிலையில் அவர் உண்ணுதல் வழக்கு.—(10) உற்ற கருமம் - பிறவி பெற்ற உறுதிபெறச் செய்யும் செயல்.

1486. சூழுந் திருத்தொண்டர் தம்முடன் றோரண வாயினண்ணி;
வாழி திருநெடுந் தேவா சிரியன்முன் வந்திறைஞ்சி
யாழி வரைத்திரு மாளிகை வாயி லவைபுகுந்து
நீள்சுடர் மாமணிப் புற்றுகந் தாரைநேர் கண்டுகொண்டார். உஉக

(இ - ள்) வெளிப்படை. தம்மைச் சூழ்ந்த அத்திருத்தொண்டர்களுடனே தோரணங்கள் தூக்கிய திருவாயிலை யடைந்து, வாழ்வையுடைய திருவினால் நீண்ட தேவாசிரிய மண்டபத்தின்முன் வந்து வணங்கிச், சக்கரவாள மலைபோன்ற திருமாளிகையினது திருவாயில்களுட் புகுந்து, ஒளிவீசும் பெரிய அழகிய புற்றினில் விரும்பி எழுந்தருளிய இறைவரை நேரே கண்டுகொண்டனர்.

(வி - ரை) சூழும் - தம்முடன் வந்தவர்களும் தம்மை எதிர் கொண்டவர்களுமாகிச் சூழும்.

தோரண வாயில் - திருப்பூங்கோயிலின் கோபுரத்தின் முன் வாயில்.

வாழி திருநெடுந் தேவாசிரியன் - வாழி - வாழ்வுடைய; வாழ்வைத்தரும் என்றலுமாம். வாழி - அசையென்றுரைக்குவாருமுளர். திரு - நெடும் - என்ற அடைமொழிகள் தேவாசிரியனுடைய சிறப்புணர்த்தின. திரு - இறைவனது அருட் டிரு. அதனால் நீளுதலாவது அத்திருவை நிறையப் பெற்ற பெரியோர் பலரும் என்றும் வீற்றிருத்தலும், அத்திருவைப்பெறும் பொருட்டுத் தேவர்களும் மற்றும் யாவர்களும் வந்து ஒழியாது வாயில் காத்துக் கொண்டிருத்தலுமாம். தேவாசிரியனைப் பற்றி 136 - 139- பார்க்க. தேவாசிரயம் என்பது தேவாசிரியன் என மருவி வழங்குவதாயிற்று. ஆழி வரைத் திருமாளிகை - சக்கரவாள மலை போன்று அமைந்த பெரிய திருக்கோயில். இது பூங்கோயில் எனப்படும்.

வாயில் அவை - வாயில் - பால்பகா அஃறிணைப் பெயர். அவை - பகுதிப் பொருள் விகுதி. இனி, வாயிலவை - வாயிற்றொகுதி என்றலுமாம். "அவனவளது வெனு மவை" என்புழிப்போலத் தொகுதிப் பொருளது என்றலுமாம். பூங்கோயிலின் முதற் கோபுர வாயிலினைக் கடந்து சென்றால் திருமுற்றத்தில் முதலிற் காணவுள்ளது

தேவாசிரிய மண்டபம். "மூதெயிற் றிருவாயின் முன்னுயது" (136) என்றது காண்க. அதனை வணங்கிச் சென்றால் திருமாளிகையின் முதல் வாயில் உள்ளது. அது இறைவர் ஆளுடைய நம்பிகளுக்குக் காட்சி கொடுத்துத் திருத்தொண்டத் தொகை பாடும்படி அருளிச் செய்து முதலெடுத்துக் கொடுத்தருளிய இடம். அவை - அத்திருவாயிலைத் தாண்டி உட்சென்றால் திருமூலட்டான நாதரை நேர் காணும்வரை உள்ள திருவாயில்கள்.

**புற்றுகந்தார்** - வன்மீகநாதர். "புற்றிடங்கொண்ட புராதனனை" (271) முதலியவை பார்க்க. அவர் திருமூலட்டானநாதர் எனப் பெறுவர். அவரது திருமுன்பு நின்றும் சென்றால் தரிசிக்க உள்ளது வீதிவிடங்கர் என்னும் தியாகேசர் சந்நிதி. 271-ம் 275-ம் பார்க்க.

**நேர் கண்டு கொண்டார்** - அறிவு முழுதினும் நிரம்ப வெளிப்படக் கண்டார். "உணர்வி னேர்பெற வருஞ்சிவ போகத்தை யொழிவின்றி யுருவின்கண் - அணையு மைம்பொறி யளவினு மெளிவர" (திருஞான - புரா 151) என்றபடி கண்டனர். கண்டார் என்னாது கண்டு கொண்டார் - என்றது கண்டு அதனால் விளைந்த ஆனந்தத்தினுள்ளே திளைத்துக் கொண்டனர் என்றதாம். கொள்ளுதல் - உட்கொள்ளுதல். 221

1487. கண்டு தொழுது விழுந்து கரசர ணாதியங்கங்
கொண்ட புளகங்க ளாக வெழுந்தன்பு கூரக்கண்க
ளண்டுளி மாரி பொழியத் திருமூலட் டானர்தம்மைப்
புண்டரி கக்கழல் போற்றித் திருத்தாண் டகம்புனைந்து, ௨௨௨

1488. "காண்ட லேகருத் தாய்நினைந்" தென்னுங் கலைப்பதிகந்
தூண்டா விளக்கன்ன சோதிமுன் னின்று துதித்துருகி
யீண்டு மணிக்கோயில் சூழ வலஞ்செய் திறைஞ்சியன்பு
பூண்ட மனத்தொடு நீடிரு வாயிற் புறத்தணைந்தார். ௨௨௩

1487. (இ - ள்) வெளிப்படை. கண்டு, தொழுது, கீழே நிலம் பொருந்த வீழ்ந்து வணங்கிக், கை கால் முதலிய அங்கங்கள் எல்லாம் மயிர்க்கூச்செறிய, எழுந்து, அன்பு பெருகுதலினாற் கண்களினின்றும் நீர்த்துளிகள் மழைபோலப் பொழியத், திருமூலட்டான நாதரை அவரது தாமரை போன்ற பாதங்களைத் துதித்துப் போற்றித் திருத்தாண்டகப் பதிகத்தை அருளிச்செய்து, ௨௨௨

1488. (இ - ள்) வெளிப்படை. அதன்பின், "காண்டலே கருத்தாய்நினைந்து" என்று தொடங்கும் கலைப்பதிகத்தைத் தூண்டாவிளக்குப் போன்ற சுயஞ் சுடர்ச் சோதியாகிய புற்றிடங் கொண்ட நாதர் திருமுன்பு நின்று துதிசெய்து, உள்ளுருகி, அன்பர்க்கணிய அழகிய அத்திருக்கோயிலினைச் சூழ்ந்து வலஞ்செய்து வணங்கி, அன்பு பொருந்திய மனத்துடனே, நீண்ட திருவாயிற் புறத்தில் அணைந்தனர். ௨௨௩

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1487. (வி - ரை) **கண்டு** - முன்பாட்டிற் கண்டபடி நேர் கண்டு.

**தொழுது** - மூன்றங்கம் பொருந்த அஞ்சலிசெய்து. **விழுந்து** - நிலத்திற் றிருமேனி முழுதும் பொருந்தக் கீழே விழுந்து.

**கரசரணாதி அங்கம்** - கரம் - கைகள். சரண் - கால்கள். ஆதியென்றதனால் உடலில் கொண்ட ஏனை மார்பு முதலிய எல்லாம் கொள்க.

**புளகம்** - எழுந்த மயிர்க்கூச்சு. மயிர்க் கூச்செறிதல் அன்பு மிகுதியின் மெய்ப்பாடுகளுள் ஒன்று.

**எழுந்து** - கீழே வீழ்ந்த நிலையினின்றும் மேல் எழுந்து.

**அன்பு கூர** - இடைநிலைத் தீபம்; கண்டு முதலிய எல்லாவற்றோடும் கூட்டுக.

**கண்கள்...பொழிய** - மழைபோலக் கண்ணீர் பெய்ய. "அன்பர் வார்ந்தகண் ணருவி மஞ்சன சாலை" (திருவிசைப்பா).

**தம்மை** - தமது. வேற்றுமை மயக்கம். **கழல் போற்றி** - என்பது "கழலடி பூண்டு கொண்டெழுந்தேன்" என்ற தேவாரத்தி னறியப்படும்.

**போற்றித் திருத்தாண்டகம் புனைந்து** - துதித்துத் திருத்தாண்டக யாப்பினால் இயன்ற பதிகம் கட்டளையிட்டு. போற்றி போற்றி என வருவதால் இது போற்றித் திருத்தாண்டகம் என வழங்கப்படும். **போற்றி** - போற்றப்படுவதாக. இகரவீற்று வியங்கோள் வினைமுற் றென்பர்.

**தொழுது கரசர ணாதி யங்கங்களெலாம்**—என்பதும் பாடம். 222

## II திருவாரூர் - திருமூலட்டானம்

*திருச்சிற்றம்பலம்* போற்றித்திருத்தாண்டகம்

*கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி; கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி;*
*அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி; யல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி;*
*மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி; வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி;*
*செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி; திருமூலட் டானனே போற்றி போற்றி.* 1

*பிரமன்றன் சிரமரிந்த பெரியோய் போற்றி;*
*பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி;*
*கரநான்கு முக்கண்ணு முடையாய் போற்றி;*
காதலிப்பார்க் காற்ற வெளியாய் போற்றி;
*யருமந்த தேவர்க் கரசே போற்றி;*
*யன்றரக்க னைந்நான்கு தோளுந் தாளுஞ்*
*சிரநெரித்த சேவடியாய் போற்றி போற்றி;*
*திருமூலட் டானனே போற்றி போற்றி.* 10

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு**:—இறைவரது புகழ்கள் பலவகையாலும் போற்றப் பெறுவன வாக. **குறிப்பு**:—போற்றி என்பதை நம - வணக்கம் என்னும் பொருளில் கொண்டு இப்பதிகத்தையும், இன்னும் திருவதிகைப் போற்றித் திருத்தாண்டகம் (1) திருக்கயி லாயப் போற்றித் திருத்தாண்டகம் (3) பதிகங்களையும் இறைவரை அருச்சிக்கும் பகுதிகளாகக் கொண்டு வழிபடும் அன்பர்களுமுண்டு. இப்பதிகத்தினுள் போற்றி என்பது 107 முறை வைக்கப்பட்டுள்ளது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு**—(1) **கற்றவர்கள் உண்ணுங் கனி** - கற்றவர்கள் என்றது ஈண்டு மனமிறக்கக் கற்றுத் தற்போதமிழந்த பெரியோர் என்ற பொருளில் நின்றது. **கனி** - உருவகம். பயன் என்ற பொருள்பட நின்றது. **உண்ணுதல்** - அனுபவித்தல். "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை" (திருவிசைப்பா). **கதி** - சேருமிடம். செல்சார்வு. **அற்றவர்** - தம்மையன்றி வேறு பற்றுக்கோடில்லாத வர். "மற்றுப் பற்றெனக் கின்றி" (தேவா).—(2) **வங்கம்** - மரக்கலம் - கப்பல். அலை என்றலுமாம்.—(3) **ஏழ் பொழில்** - ஏழுலகங்கள்.—(4) **உன்னும் அவர்க்கு உண்மையன்** - நினைக்கின்ற அடியார்பால் விளங்கி நிற்பவன்.—(5) **வெங்கதிரோன்** - ஞாயிறு. **துஞ்சு இருள்** - உலகங்களெல்லாம் அழிந்த ஊழி.—(6) **சங்கரன்** - சுகத்

தைச் செய்பவன். சதாசிவன் - இறைவரது அருவுருவமாகிய ஒளிமேனி. சிவலிங்கத் திருவடிவம்.—(7) வம்பு - மணம்.—(8) உள்ளமாய் உள்ளத்தே நின்றாய் - உயிர்க்குயிராய்க் கலந்து நிற்கும் நிலை குறித்தது. உள்ளம் - இங்கு உயிர் என்ற பொருள் தந்து நின்றது. "மனமணி யிலிங்கமாக" (தேவா). உள்ளம் - மனம் என்னும் உட்கரணமாகிய தத்துவம் என்று கொண்டு மாயைப் புணர்ப்பினால் அந்தத் தத்துவமாகி, அதீதக் கலப்பினால் அதனுள் நிற்பவன் என்றலுமாம். மணாளா - உயிர்களை ஆட்கொள்ளும் மணவாளன். வானவர்கோன் தோள் துணித்தது - இந்திரன்|முடிமேல் வளை எறிந்த திருவிளையாடல்.—(9) சாவாமே - பிறப்பும் இறப்பும் இல்லாமல் நித்தியமான வீட்டின்பம்பெற வைத்து.—(10) கரம் நான்கும் முக்கண்ணும் - உருவத் திருமேனிகளுள் ஒன்று. ஆற்ற - மிகவும். அருமந்த - அருமையுடைய.

1488. (வி - ரை) "காண்டலே.கருத்தாய் நினைந்து" இது பதிகத் தொடக்கக் குறிப்பு. பதிகக் கருத்துமாம். இக்கருத்துப் பற்றியே, திருநல்லூரிற் றங்கிய போது நாயனார் "திருவாரூரைத் தொழ நினைந்தார்" (1479) என்று முன்னர் ஆசிரியர் சரித வரலாறு கூறியதும் காண்க.

காண்டல் - கண்டு தொழுதல். கருத்தாய் நினைந்து - அதனையே மனத்துள் ஊன்றக்கொண்டு.

கலைப் பதிகம்-கலைஞானங்கள் பலவும் விளங்குதற்கிடமாகிய பதிகம். கலைஞானமாகிய பதிகம் என்றலுமாம். பதிகப் பாட்டுக் குறிப்புக்கள் பார்க்க.

தூண்டா விளக்கன்ன சோதி - பிறரொருவராற் கொளுத்தப்படாததும் தூண்டப்படாததுமாகியதொரு விளக்குப் போன்ற சுயஞ்சோதி. ஆயின் "தூண்டிய சுடர்போலொக்கும் சோதியான், காண்டலு மெளியா னடியார்கட்கு" (பாண்டிக் கொடுமுடி - குறுந்), "தூண்டு சுடரனைய சோதி கண்டாய்" (மறைக்காடு - தாண்). என்றற்றொடக்கத்த திருவாக்குக்களோடு இக்கருத்து மாறுபடுமன்றே? எனின், படாது. என்னை; இங்குத் தூண்டா விளக்குக்கு உவமித்தார். அத்திருவாக்குக்களில் தூண்டு சுடருக்கு உவமிக்கப்பட்டது. சுடர் வேறு; விளக்கு (இடம்) வேறு; "சோதியே சுடரே சூழ் ஒளி விளக்கே" (திருவாசகம்); அல்லதூஉம், அங்குத் தூண்டு சுடர் என்றது முன்னர் வெளிப்படாது மறைந்து, பின்னர்க் கடைதல் முதலிய செயல்களால் முன்னின்று வெளிப்படும் சுடர் குறிக்கப்பட்டது. "மறைய நின்றுளன்......முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே" (தேவா).

தூண்டுசுடர் - ஒளிவிட்டு விளங்குதலையும், தூண்டா விளக்கு - இடைவிடாது விளங்குதலையும், சூழ் ஒளி விளக்கு ஒளி மயமாய் நின்று பிறருக்கு ஒளி தருதலையும் குறிக்கும் என்றலுமொன்று.

துதித்து உருகி - முன்பாட்டில் உடம்பெல்லாம் புளகம் போர்ப்ப அன்புகூரக் கண்ணீர் பெருகத் தாண்டகம் புனைந்ததுவும் உருகித் துதித்த செய்கையேயாமாயினும், இங்குக் கூறியது அதன் மேலும் துதித்தது. இப்பதிகம் சந்நிதியில் நின்று பாடிய இரண்டாவது பதிகம்.

ஈண்டுதல் - அணிமையாதல். இங்கு அடியார் கூட்டம் நெருங்குதல் குறித்தது.

கோயில் சூழ வலஞ் செய்து......புறத்தணைந்தார் - கோயிலினுள் புகும் போதும், அங்கு நின்றும் புறம் போகும் போதும் வலஞ்செய்து போதல் முறை.

வாயிற் புறத்தணைந்தார் - "காண்டலே கருத்தாய்" என்ற பதிகம் பாடித் துதித்த பின்பே புறம் போந்தனர் என்பது "கழலடி பூண்டு கொண்டொழிந்தேன் புறம் போயினாலறையோ?" என்ற பதிகக் குறிப்பினாலறியப்படும்.

## III திருவாரூர்

*திருச்சிற்றம்பலம்* பண் - சீகாமரம்

காண்ட லேகருத் தாய்நி னைந்திருந் தேன்ம னம்புகுந் தாய்க ழலடி
பூண்டு கொண்டொழிந் தேன்புறம் போயினு லறையோ !
*ஈண்டு மாடங்க ணீண்ட மாளிகை மேலெழுங்கொடி வானி ளம்மதி*
*தீண்டிவந் துலவுந் திருவாரூ ரம்மானே.* 1

*நாடி ஞர்கம லம்ம லரய னேடி ரணிய னுகங் கீண்டவன்*
*நாடிக் காணமாட்டாத் தழலாய நம்பரனைப்*
*பாடு வார்பணி வார்பல் லாண்டிசை கூறு பத்தர்கள் சித்தத் துள்புக்குத்*
*தேடிக் கண்டு கொண்டேன் திருவாரூ ரம்மானே.* 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு:—*திருவாரூர் அம்மானே! பலநாள் உன்னைக் கண்டு தொழுவதே கருத்தில் வைத்திருந்தேன். அதுவும் நீ என் மனம் புகுந்தருளியதனுலாயிற்று. இன்று வந்து நேர்கண்டு கொண்டு கழலடி பூண்டு கொண்டொழிந்தேன்; எனக்கொரு களைகண்ணுவாய் நீ என்று ஒடுங்கி வந்தடைந்தேன்; பிழைப்பன எல்லாம் ஒழிப்பாய்; இனி என்ன குறையுடையேன்!; பிறத்தலும் பிறந்தா லிறத்தலுமுடைய இப்பிறப்பினை இழித்தேன்; ஆதலின் உன் திறத்தனுய் ஒழிந்தேன்; என் சிந்தையுள் நின்று நீபிரியுமா றெங்ஙனே? பிழைத்தேயும் போகலொட்டேன்; என் நெஞ்சினுள் உன்னை வளைத்துக் கொண்டிருந்தேன்; வலிசெய்து போகலொட்டேன்; உன்னை இங்குத் திருவாரூரில் வெளிப்பட நேர்கண்டு கொண்டதேபோல என் சித்தத் துள்புக்குத் தேடிக் கண்டுகொண்டேன்; இனிப் புறம்போயினு லறையோ? (புறம் போயினும் பிரியாது அடைக்கலமாவேன்).*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) காண்டலே - *நேர் கண்டு கொண்டு தொழுவதனையே. ஏகாரம் தேற்றம். பிரிநிலையுமாம்.* கருத்தாய் - *பிறிதொன்றிலு மின்றி, அதுவே குறியாய், உட்கோளாய்;* மனம் புகுந்தாய் - *மனம் புகுந்தாயாதலின் நினைந்திருந்தேன்; நினைந்திருந்தே னுதலின் மனம் புகுந்தாய் என இருவழியும் உரைக்க நின்றது. "அவனருளாலே அவன்றுள் வணங்கி", "காண உள்ளத்தைக் கண்டு காட்டலின், அயரா வன்பி னரன்கழல் செலுமே" என்ற திருவாக்குக்கள் காண்க.* கழலடி பூண்டு கொண்டு ஒழிந்தேன் - *நேர் கண்டுகொண்டு அதுவே பற்ருக அமைந்து கொண்டேன்.* ஒழிதல் - *தீர்தல்.* புறம் போயினல் அறையோ? - *உன் திருமுன்பு நின்றும் வெளிப் போயினும் பிரியுமா றுளதே? உன் அடைக்கலப் பொருளே யாவேன். அறையோ?-இரக்கக் குறிப்புப்பட வருவதோர் இடைச்சொல். அறை - சொல்லுதல் என்று கொண்டு, அறையோ? சொல்லுந்தரமோ என்றலுமாம்; புறம்போயினல் வருந்துன்பம் சொல்லும் தரமோ என்க. "சிவனெனு மோசையல்ல தறையோ வுலகிற் றிருநின்ற செம்மை யுளதே!" (பியந்தைக் காந்தாரம் - நாயனர்).* ஈண்டு - *நெருங்கிய.* கோடி - *வெண் கொடிகள். "விதானமும் வெண்கொடியு மில்லா ரூரும் அவை...ஊரல்ல".* கோடி - வானிள மதி தீண்டி - *என்றது கொடிகள் வானளாவ வுயர்த்துக் கட்டிய நிலை.* மதி தீண்டி வந்துலவு - *கொடிகள் மதிமண்டலம் வரை போயும் பின்னர் இங்கு வந்து அசைகின்றன. மதி மண்டல முதலியவற்றின் அழியுந் தன்மையைப்போக்கி அழியாத்தன்மை தருகின்ற திங்கரே என்று கண்டது போன்றும், உணர்த்துவது போன்றும் உளதென்பது*

அணிநயம். தட்டி எழுப்புவது போன்று கொடி நீண்டியதனல் நல்லுணர்வு பெற்று மதி இங்கு வந்தலவி வழிபட்டுய்ய நின்றதென்பதும் ஒரு குறிப்பு.—(2) கடம் - காடு ; பட நடம் ஆடினும் - பட - உண்டாக - தோன்ற ; அழிந்த உலகம் மீளவும் தோற்றுமாறு நடமாடினும். கழைகண் - உறுதுணை - சார்பு. அடி ஒடுங்கி - திருவடிச் சார்பினுளடங்கி. பிழைப்ப - பிழையாயினவற்றை. முடங்கு குதல் - வில்போல வளைந்திருத்தல் இருல் மீன்களின் இயல்பு. முதுநீர்மலங்கு - ஆழ்ந்த பெருநீர்களில் வாழ்தல் மலங்குமீன்களி னியல்பு. செங்கயல் - கயல்களி னியல்பு. களிறு - களிற்றுமீன். இருல் - மலங்கு - வாளை - கயல் - சேல் - வரால் - களிறு - மீன்களின் வகைகள். தண்கழனி - பலவகை மீனினமும் சேர்தல் நீர்ச் சிறப்பு.—(3) அரம்பையர் - தேவருலகத்து நாடக மங்கையர். தியாகேசர் இந்திரனல் தேவலோகத்து வைத்து வணங்கப்பட்டபோது உபசரித்தமை பற்றி இங்கும் அவனுடன்வந்து வணங்குவார்கள். அருளிப்பாடியர் - இறைவனது கட்டளைகளை நிறைவேற்றுவோர். அருளிப்பாடு - கட்டளை. "அருளிப்பாடியரோ டருமுனிவர்" (கோயிற் புரா - இரணி - 52). உரிமை - வழிபட்ட உரிமையும் ஏவல் செய்யும் உரிமையும். உருத்திர பல்கணத்தார்...கபாலிகள் - சைவத்துள் பலவகை அகப்புறச் சமயத்தார். விரிசடை விரதியர் - மாவிரதியர். அந்தணர் - முனிவர். சைவர் - சைவவாதி முதலியோர். மானக்கஞ்சாறனுருக்குக் காட்சி தந்த கோல முதலியவைகாண்க. கபாலிகள் - காபாலியர். ஓங்கு தெங்கு - தென்னை நீண்டு வளரும் இயல்பையும், இலையார் கமுகு - கமுகின் இலையடர்ந்து விளங்கும் தன்மையினையும் உணர்த்தின. இளவாழை-வாழை ஈன்ற பின் குலையுடன் வெட்டி விடப்படுதலால் நிலையில் உள்ள எஞ்சியவை என்றும் இளமையுடனுள்ளன. தெங்கு-கமுகு - வாழை - மா - மாதுளம் - மருதநிலக் கருப்பொருள். என்ன குறையுடையேன் - என்றும் ஒன்றுலும் குறைவில்லாமை அடியார் தன்மை. "கும்பிடலே யன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினர்", "யாதுங் குறைவிலார்" என்பன வாதியாகத் திருக்கூட்டச் சிறப்பிற் காண்க. "ஒன்றினுற் குறையுடையோ மல்லோ மன்றே" (மறு - தாண்).—(5) நீறுசேர் - நீறு வந்து கிடந்த. அடைந்தொழிந்தேன் - அடைந்தேன். ஒழிதல் - துணிவுப் பொருள் குறித்து நின்றது. "திறத்தனு யொழிந்தேன்."—(8) வண்டு - தும்பி - வண்டு வகை. சிறுது ஊன்ற விண்ட மலர் இதழ் - முகை மலரும் பருவத்துத் தேன் உண்ண வண்டுகள் மேல் மொய்த்து ஊதுவதனல் மலரினிதழ்கள் திறப்பன. உள்ளிருந்த தேன் வழியும்.—(6) அளித்து - அன்பு கொண்டு. அளி - அன்பு. தொழுமவர் மேல் - வினைகெடுமென்று - வையகம் கலந்தாட - "பிணிதான் தீருமென்று பிறங்கிக் கிடப்பாரும்" (குறிஞ்சி -ஆரூர் - 2)—(7) என்சிந்தையுள்......போக லொட்டேன் - தவறுதலாற்கூட உன்னைப் புறம் போகவிடாமல் என் மனத்துட் பிடித்து வைத்துக் கொண்டேன் ; நீ எங்ஙனம் பிரிவது? "சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் தருளுவ தினியே" (திருவா). பெரிய செந்நெல் - பிரம்புரி - கெந்தசாலி - திப்பியம் - நெல் வகைகள். 2-ல் நீர்ச்சிறப்பும், 4-ல் அச்சிறப்பினுல் ஓங்கிப் புறத்துச்சூழ்ந்த மருதநில மரவகையும், கூறி, இங்குமருதத்துக்குரிய சிறப்புடைய நெல்லைக் கூறினர். அரியும் - ஒருவகை நெல்லை அரிந்தெடுத்த தன்கீழ் மற்றொரு வகை விளையும் சிறப்புக் குறித்தது.—(8) பிறந்தலும்......உளதே- நான் பிறப்பினை இழித்தேன் என்பதற்குக் காரணம் கூறியபடி. அறத்தையே...... திறத்தனு யொழிந்தேன் - பிறவி தீதென்று கண்டார் செய்கை கூறியபடி. அறம் - சிவதர்மம். ஆர்வம் - செற்றம் - குரோதம். சிவதர்மங்களில் மனம் செல்லாது தடை புரிவதால் இவை நீக்கத் தக்கன.—(9) எப்போதும்...போகலொட்டேன் -

7-வது பாட்டின் கருத்தை மேலும் வலியுறுத்தியது. வளைந்து கோள்ளுதல் - தப்பவிடாமல் நாற்புறமும் சுற்றிக் கொள்ளுதல். இருந்தேன் - வளைத்து கொண்டது மன்றிக் காவலுமிருந்தேன். வலிசெய்து - வலிந்து - வன்மை செய்து. "மறைய வன் வலிசெய்யாமல்" (203). அளை - சேற்றினுள் நண்டுவளை. புகுதந்த - புகுந்த. அலவன் - நண்டு. திளைக்கும் - மகிழும்.—(10) இரணியன் ஆகம் கீண்டவன் - விட்டுணு. தழல் - நெருப்புத்தூண் என்ற பொருளில் வந்தது. பல்லாண்டிசை கூறுபத்தர்கள் பாடுவார் - பணிவார் என்று கூட்டுக. "ஏத்தொலி யெங்குங் குழாம் பெருகி, விழவொலி விண்ணளவுஞ் சென்று விம்மிமிகு திருவா ரூரில், மழவிடை யார்க்கு வழிவழி யாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த, பழவடி யாரொடுங் கூடியெம் மானுக்கே பல்லாண்டு கூறுதுமே" - என் சித்தத்துள்புக்கு என்க. "சிற்றம்பலத் தாடி பாதமென் னெஞ்சு ளிருக்க - நாரண னுன்முகன்-காணவல்லரோ ?" (கோயில் - குறுந்); "திரு மாலொடு நான்முகனுந் தேடித் தேடொணாத் தேவனை யென்னுள்ளே, தேடிக் கண்டு கொண்டேன்" (அங்கமாலை). பத்தர்களது சித்தத்துள் தேடி என் றுரைத்தலுமாம்.

வேறு

1489. செய்யமா மணியொளிசூழ் திருமுன்றின் முன்றேவா சிரியன் சார்ந்து
"கோய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூ ரரைக்
கையினாற்றொழாதொழிந்துகனியிருக்கக்காய்கவர்ந்தகள்வனேன்"னென்
றெய்தரிய கையறவாற் றிருப்பதிக மருள்செய்தங் கிருந்தா ரன்றே.

(இ - ள்) செய்ய...சார்ந்து - செம்மணிகளின் பேரொளி சூழும் திருமுற்றத்தில் முன்பு உள்ள தேவாசிரிய மண்டபத்தைச் சார்ந்து ; வாகீசர், கொய் உலாம் மலர்ச் சோலைக் குயில் கூவ மயில் ஆலும் ஆரூரரை - அரும்புகள் மிக்க பூச்சோலைகளில் குயில்கள் கூவவும் மயில்கள் அசையவும் உள்ள திருவாரூரில் எழுந்தருளியுள்ள பெருமானை ; கையினால்...என்று - கைகள் கூப்பித் தொழாதொழிந்ததனால் நான் கனி யிருக்கக் காய்கவர்ந்த கள்வன் போன்றேன் என்ற கருத்தினால்; எய்தரிய...இருந் தார் - அடைதற்கரிய மிகுந்த துன்பநிலையினால் திருப்பதிகத்தைக் கட்டளையிட்டு அங்கு எழுந்தருளி யிருந்தனர். அன்று - ஏ - அசை.

(வி - ரை) மணியின் செய்ய ஒளி என்று கூட்டுக. செய்யமணி - செம்மணி- இரத்தினம். இவைகள் அங்குத் திருமுன்றிலில் விளைந்து அங்குச் செல்லும் அடியார் களால் விரும்பப்படாமற் கிடப்பனவும், தேவாசிரியனின் அடியார்களின் அருளைக் கம்பெறக் காத்திருக்கும் மால் முதலிய வானவர்களின் அணிகளினின்றும் விழுந்தனவு மாகிய மணிகள். "மாவா ழகலத்து மான்முதல் வானவர், ஓவா தெங்கு நிறைந் துறைந் துள்ளது" (137) என்பதும், பிறவும் காண்க.

கோய்யுலாம்...கள்வனேன்-இது அத்திருப்பதிகத்தின் முதலும் கடையுமாகிய இரண்டடிகளை அவ்வாறே எடுத்துத் தலைப்பெய்து கொண்டு பதிகக் கருத்தினை எடுத் துக் காட்டியவாறு. இவ்வாறு பதிகத்தின் இரண்டடிகளை இருந்தவாறே எடுத்துத் தலைப்பெய்து காட்டிய இடம் இது ஒன்றேயாகும்.

கோய் - மலரரும்புகள். கொய்யப்படும் அரும்புகளைக் கோய் என்றார். உலாம் - நிறைந்த.

குயில்கூவ மயில் ஆலும் - குயில்கள் இனிமையாய்க் கூவ அதற்குத் தக்கவாறு மயில்கள் ஆடி அசைய. ஆலுதல் - அசைந்தாடுதல்.

கனியிருப்பக் காய் கவர்தல் - என்பது பழமொழி. பயனுள்ள பொருள் பெறக் கூடியதா யிருப்பவும் அது செய்யாது பயனற்றதும் கேடு தருவதும் ஆகிய பொருளை வலிதிற்றேடுதல் என்பது கருத்து. இங்கு இத்திருப்பதிகத்துள் ஒவ்வோர் பாட்டிலும் இவ்வாறு ஒவ்வோர் பழமொழியை வைத்துக்காட்டி யருளியிருத்தலால் இப்பதிகம் "பழமொழிப் பதிகம்" என்று வழங்கப்படும். பயனுள்ள பொருளாவது திருவாரூர்ப் பெருமானை அடைதல்; பயனற்ற கேடாவது அமண் சார்பினைப்பற்றி அழிந்தது.

கவர்ந்த கள்வனேன் - பயனற்ற கேடாகிய அந்தப் பொருளுக்காக வலிந்து சென்று அழிந்தமை குறிப்பு. கள்வன்-இறைவன், நாம் நன்மையடையத் தரப்பட்ட வாழ்வை அதற்குப் பயன்படுத்தாது கேட்டினிற் செல்லவைத்தமை கள்ளத்தன்மை - திருட்டு - ஒப்புவித்த பொருளை அபகரித்தல் - ஆகும் என்பது கருத்து.

எய்தரிய கையறவு - கையறவு - துன்பம். இஃது இப்பதிகம் அருளியபோது நாயனாரது மனமழிந்த நிலை. தாம் அவதரித்த சைவச்சார்பு இருக்கவும் தாமே வலிந்து சென்று சமண் சார்பிற் சாலநாள் போக்கித் தம் வாழ்நாளைக் கழித்தமை பற்றி நாயனார் மிக வருந்தி இதனைப் பாடியருளினர் என்பது அவ்வொரு செயலி னுக்கே பத்துப் பழமொழிகளால் உவமித்து வருந்தியதால் விளங்கும்.

அங்கு இருந்தார் - அத்தலத்தில் எழுந்தருளி யிருந்தனர். பலகாலம் அங்குத் தங்கிப் பணி செய்திருந்தனர் என்பது பல திருப்பதிகங்களின் குறிப்பினாலு மறியப்படும்.

கோய்யுமா—கையறவாம்—என்பனவும் பாடங்கள். 224

IV திருச்சிற்றம்பலம்  பழமொழி - பண் - காந்தாரம்

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் றாடொழாதே
யுய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி யுழிதந்தென் னுள்ளம் விட்டுக்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூ ரரைக்
கையினாற் றொழாதொழிந்து "கனியிருக்கக் காய்கவர்ந்த" கள்வ னேனே. 1

என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட் டென்னையோ ருருவ மாக்கி
யின்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட் டென்னுள்ளங் கோயி லாக்கி
யன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண் டருள்செய்த வாரூ ரர்தம்
முன்பிருக்கும் விதியின்றி "முயல்விட்டுக் காக்கைப்பின் போன" வாறே. 2

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—சைவச் சார்பு பெறும் நல்லூழ் வாய்க்கப்பெற்றும் திருவாரூர்ப் பெருமானைக் கருதாது சமண்சார்பில் வலிந்து சென்று பலகாலங் கழித்த எனது செயல் கனியிருக்கக் காய்கவர்ந்த கள்ளம் முதலிய பழமொழிகளா லறியப்படும் வீண் செயலேயாயிற்று என்றிரங்கிக் கூறியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) சண்ணித்தல் - பூசுதல். "வெண்ணீறு சண்ணித்த மேனியெம்மான்" - (நம்பிகள் - திருவதிகை - 6) உறிதூக்கி உழிதந்து - நீருடைய குண்டிகைகளைச் சிறு உறியில் வைத்துத் தூக்கித் திரிதல் சமண குருமாருள் ஒரு வழக்கு. உள்ளம் விட்டு - உள்ளத்தை அவர்கள் வசமாக விட்டு. உழிதந்த என் உள்ளத்தைவிட்டு - அவர் வசமாதலை நீக்கி என்றலுமாம். தொழாது விட்டு உள்ளம் உழிதந்து எனக்கூட்டி உரைத்தலுமாம்.—(2) என்பிருத்தி...உருவமாக்கி -

"கால்கொடுத் திருகை யேற்றி" (திருநேரிசை) முதலியவை பார்க்க. புகப்பெய்திட்டு - "ஆவிவைத்தார்" (நேரிசை). உடலுக்குள் உயிரைச் சேரச் செய்தல். இன்பிருத்தி - இன்பமென் றெண்ணவைத்து. "மால் கொடுத்து" (நேரிசை). வினை தீர்த்து - இட்டு - என் உள்ளம் கோயில் ஆக்கி - வினை தீர்த்த பின்பே இறைவனைச் சார்தல் இயலும். "என் சிந்தைப், பாழறை யுனக்குப் பள்ளியறையாக்கிச், சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவி, செந்தைநீ யிருக்க விட்டனன்"(11-திருமுறை - பட்டினத்தார் - கழுமல மும்மணிக்கோ - 4). கூழாட் கொண்டு - கூழையில் வைத்து ஆளாகக் கொண்டு. "கடைக் கூழை" (திருவா). கூழை - படையுறுப்பு. கடைமைப்பட்ட ஆள் என்றலுமாம். "ஆட்பட் டிருப்பதன்றோ நந்தங் கூழைமையே" (தேவா).—(3) என் பாவத்தைப் பெருகுவித்து - கேட்டு-விதியின்றி என்று கூட்டுக. உருகுவித்து - உருகச்செய்து. கள்ளம் - ஆணவக்கறை. அருகுவித்து - அணுகச் செய்து. பிணி......தீர்த்த - சூலை தந்து ஆளாக்கிய சரித அகச்சான்று.—(4) தலை பறித்தல் - சமண குருமார் வழக்கு. துவிழலையார் நகை நாணது உழிதருதல் - சமண குருமார் உடையின்றிச் செல்லும் வழக்கு. பண்டமாப்படுத்து - ஒரு பொருளாகக் கருதி. பொருட்படுத்தி. பால் தலையில் தெளித்தல் - தூய்மைப் படுத்தித் தன்னுடைமையாக்குதல். மரபு வழக்கு. பாவைசெய - என்பதும் பாடம்.—(5) துன் ஆகத்தேன் - பயனின்றிப் பருத்த உடம்பினன். துவர் வாய்க் கொள்ளுதலும், இருகையேற்றிட உண்ணுதலும், (துவர்க்காயோடு சுக்குத் தின்னுதலும்) சமண குருமார் வழக்கு. போன் ஆகத்துப் - புகப்பெய்தலாவது - தூய்மையின்றி யிருந்த உடலைத் தூய்மை செய்தல் என்பதாம். ஆகத்திருந்தாதே - உடலை இறைவனிருக்கு மிடமாகச் செய்யாமல்; "உடலிடங் கொண்டாய்" (திருவா).—(6) பப்பு - பரப்பு என்றது பப்பு என வந்தது. சாத்திரங்களின் பரப்புக் குறித்தது. "பப்பற வீட்டிருந் துணரும்" (திருவா - பள்ளியெ). பறித்ததொரு தலை - மயிர்களை ஒன்றொன்றாகப் பறித்துவிட்ட தலை. ஒப்போட - ஒருப்பாடுபெற?—(7) கதி - செல்சார்வு. கண்ணழலுதல் - தலைமயிர் பறித்தலால் உளதாகும் மெய்ப்பாடு. மதிதந்த - நல்லறிவு தந்த. தேன் - உவமையாகு பெயர்.தேன் என்றதற்கேற்ப வாய்மடுத்து என்றார்.—(8) ஆவியைப் போகாமே-ஆவி வீணாய்க் கழியாமல். பயிக்கம் - பிச்சை.—(9) கட்டான் - அழித்தான். களை கட்டல் என்றாற்போல. கண்ணினேடுகாலின் - ஒடு - இன் - உருபுகள் கருவிப்பொருளில் வந்தன; உருபு மயக்கம். காமனைக் கண்ணினல், காலனைக் காலினல் என நிரனிறையாக்குக. தட்டான் - தட்டுப்படாதவன். மூளரி......இருந்தான் - பிரமன். தலையில் ஒன்றை - முன் இருந்த ஐந்து தலைகளுள் ஒன்றினை.

கனியிருக்கக் காய் கவர்தல் (1), முயல் விட்டுக் காக்கைப் பின் போதல் (2), அறமிருக்க மறம் விலைக்குக் கொள்ளுதல் (3), பனிநீராற் பரவை செய்தல் (4), ஏதன்போர்க் காதனு யகப்படுதல் (5), இருட்டறையில் மலடு கறந்து எய்த்தல். (6), விளக்கிருக்க மின்மினித்தீக் காய்தல் (7), பாழூரிற் பயிக்கம்புக் கெய்த்தல் (8), தவமிருக்க அவஞ்செய்தல் (9), கரும்பிருக்க இரும்பு கடித்தல் (10) இவை இப்பதிகத்துட் கண்ட பழமொழிகள். நல்லன விருக்க அவற்றைப் பயன்படுத்தி யுய்யாது தீமையிற் செல்வதற்கு இவை உவமையாவன. "கலகமிடு மமண்" என்ற (20) பாட்டினுள் (திருத்தொண்டர் புராண வரலாற்றினுள்) இப்பழமொழிகள் சிலவற்றையும், இவை போன்ற வேறு சிலவற்றையும் உமாபதி சிவாசாரியார், உயர்ந்த சிவகதை யிருக்க அவகதையாகிய சிந்தாமணியை உலகர் பாராட்டிய செயலுக்கு எடுத்து உவமை கூறினர். "இனிய வுளவாக" என்ற குறளும் காண்க.

1490. மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவும் மதுர வாக்கிற்
சேர்வாகுந் திருவாயிற் றீந்தமிழின் மாலைகளுஞ், செம்பொற் றாளே
சார்வான திருமனமு, முழவாரத் தனிப்படையுந், தாமு மாகிப்,
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச்செல்வார்.

1491. நீடுபுகழ்த் திருவாரூர் நிலவுமணிப் புற்றிடங்கொ ணிருத்தர் தம்மைக்
கூடியவன் பொடுகாலங் களிலணைந்து கும்பிட்டுக் கோதில்வாய்மைப்
"பாடிளம்பூ தத்தினு" னெனும்பதிக முதலான பலவும் பாடி,
நாடியவார் வம்பெருக நைந்துமனங் கரைந்துருகி நயந்து செல்வார்,

1492. நான்மறைநூற்பெருவாய்மைநமிநந்தியடிகடிருத்தொண்டி னன்மைப்
பான்மைநிலை யாலவரைப் பரமர்திரு விருத்தத்துள் வைத்துப்பாடித்,
தேன்மருவுங் கொன்றையார் திருவாரூ ரரனெறியிற் றிகழுந் தன்மை
யானதிற மும்போற்றி யணிவீதிப் பணிசெய்தங் கமரு நாளில்,

*1493. நீராருஞ் சடைமுடியார் நிலவுதிரு வலிவலமு நினைந்து சென்று
வாராரு முலைமங்கை யுமைபங்கர் கழல்பணிந்து மகிழ்ந்து பாடிக்,
காராருங் கறைக்கண்டர் கீழ்வேளூர், கன்றாப்பூர் கலந்து பாடி,
யாராத காதலினாற் றிருவாரூர் தனின்மீண்டு மணைந்தா ரன்றே.

1490. (இ - ள்) மார்பு ஆரப் பொழி கண்ணீர் மழை வாரும் திருவடிவும் - மார்பில் நிறையும்படி பொழிகின்ற கண்ணீர் மழை வார்கின்ற திருவடிவமும்; மதுர வாக்கில் தீந்தமிழின் மாலைகள் சேர்வு ஆகும் திருவாயும் - மதுரவாக்கில் இனிய தமிழ்ப் பதிகங்கள் சேரும் திருவாயும்; செம்பொன் தாளே சார்வு ஆன திருமனமும் - இறைவருடைய செவ்விய பொன்னார்ந்த திருவடிகளையே சார்புகொண்ட திருமனமும்; உழவாரத் தனிப்படையும் - திரு உழவாரமாகிய ஒப்பற்ற படையும்; தாமும் ஆகி - (ஆகிய) இவற்றைக் கொண்டுள்ள தாமும் ஆகிய இவையுமே யாகி; பார் வாழ...செல்வார் - உலகமெல்லாம் வாழும் பொருட்டுத் திருவீதிப் பணிகளைச் செய்து பணிந்து துதித்துப் பரவிச் செல்வாராய், ௨௨௫

1491. (இ- ள்). நீடு...தம்மை - புகழ்நீடும் திருவாரூரில் மணிப்புற்றினை நிலவும் இடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் நிருத்தரை; கூடிய...கும்பிட்டு - பொருந்திய அன்பினோடு ஒவ்வோர் காலங்களிலும் அணைந்து கும்பிட்டு; கோதில்... பாடி - குற்றமில்லாத வாய்மையுடைய "பாடிளம் பூதத்தினன்" என்று தொடங்கும் பதிகத்தினையும், அது முதலாகிய பல பதிகங்களையும் அருளிச் செய்து; நாடிய...செல்வார் - உள்ளத்தால் நாடிய ஆசைபெருக மனம் நைந்து கரைந்து உருகி நயந்து செல்வாராகி, ௨௨௬

1492. (இ - ள்) நான்மறைநூல்...நிலையால் - நான்கு வேதங்களிலும் ஏனைய ஞானநூல்களிலும் பேசப்படும் பெருமையையுடைய வாய்மையாற் சிறந்த நமிநந்தியடிகளுடைய திருத்தொண்டினது நலத்தின் சிறப்பினாலே; அவரை...பாடி - பரமேசுவரரையே போற்றுகின்ற திருவிருத்தத் திருப்பதிகத்தினுள் அவரை வைத்துப்பாடி; தேன்மருவும்...போற்றி - தேன் பொருந்திய கொன்றையினையுடைய சிவபெருமான் திருவாரூர் அரனெறியில் விளங்க வீற்றிருக்கும் சிறப்பினையும் போற்றி; அணிவீதி... நாளில் - அழகிய திருவீதிப் பணியினையும் செய்து அங்கு விரும்பி எழுந்தருளியிருக்கும் நாளிலே, ௨௨௭

1493. (இ - ள்) நீராரும்...பாடி - கங்கைநீரைப் பொருந்திய சடைமுடியினை யுடைய பெருமானது திருவலிவலத்தினையும் நினைந்துபோய், வாரினை அணிந்த முலை மங்கையாகிய உமைபங்கர் கழல்களைப் பணிந்து மகிழ்ந்து பாடி; காராரும்...பாடி - திருநீலகண்டரது திருக் கீழ்வேளூர், திருக்கன்றாப்பூர் முதலியவற்றையும் சென்று மனங்கலந்த ஒருமைப் பாட்டினாற் பாடி; ஆராத...அணைந்தார் - நிறைவுறாத ஆசை மிகுதியினால் திருவாரூரில் மீளவும் வந்தணைந்தனர்; (அன்று - ஏ - அசை). உஉஅ

இந்த நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1490. (வி - ரை) இத்திருப்பாட்டு நாயனாரது திருவடிவத்தினையும், திருவாக்கு, திருவுள்ளம் இவற்றின் நிலைகளையும் ஒருங்கே எழுதிக் காட்டும் சிறந்த ஓவியம் போல விளங்கும் பெருமையுடையது. "தூயவெண்ணீறு" (1405) என்ற திருப்பாட்டின்கீழ் உரைத்தவை எல்லாம் இங்கு வைத்துக் கண்டுகொள்ளவும், மேலுங் காணவும் வைத்தார்.

மார்பு ஆரப் பொழி கண்ணீர் மழை வாரும் திருவடிவு - ஆர - பொழி - மழை - வாரும் என்பவை மிகுதிப் பொருள் தந்து, கண்ணீர் இடையறாது பெருகி வழிந்து மார்பை நனைத்து நின்ற நிலையை உணர்த்தின. வார்தல் - இடையறாது ஓடுதல். "வந்திழி கண்ணீர் மழையும்" (திருஞான - புரா - 270), "நைந்துருகிப், பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும்" (1405), "பொங்கும்புனல் கண்கள் பொழிந்திழிய" (1337) முதலியவை பார்க்க. தாம் பிழை செய்த ஒப்பற்ற சிறுமையினையும், பிழை தீர்த்து ஆட்கொண்டருளிய இறைவரது ஒப்பற்ற பெருமையினையும் எண்ணி யெண்ணி அன்பின் மேலீட்டினால் கண்ணீர் பெருக ஒழுகுதல் நாயனாரது சிறப்பாகிய தன்மை. கண்ணீர் பெருக்குதல் முன்சொன்னார்; அக்கண்ணீர் மார்பின் நிறைந்து நனைத்துக் கிடந்தது என்பதனை இங்குக் கூறினார். மழைவாரும் வடிவு - அன்பினால் உருகிய நிலையை வடிவம் முழுதும் காட்டிற்று என்பது.

மதுரவாக்கில் தீம் தமிழ் இன் மாலைகளின் சேர்வு ஆரும் திருவாயும் என்க. திருவடிவும் திருமனமும் என்பனவற்றுக் கேற்பத் திருவாயும் என்று முடிக்க. வாக்கில்-என்றதின் இல் உருபை மாலைகள் என்பதனோடும், மாலைகளும் என்றதின் உம்மையைத் திருவாய் என்பதனோடும் பிரித்துக் கூட்டுக. மதுரவாக்கு என்பது சொன்னயமும், தீந்தமிழின் மாலைகள் என்பது பொருளினிமையும் உணர்த்தின. மாலைகள் - திருப்பதிகங்கள். "ஈறின்றியெழுந் திருவாசகமும்" (1342), "பதிகச் செஞ்சொல் மேய செவ்வாயும்" (1405) முதலியவை காண்க.

செம்பொன் தாளே சார்வு ஆன திருமனமும் - "பொன்னார் திருவடிக்கு" முதலியவாற்றால் நாயனார் போற்றிய குறிப்பு. தாளே சார்வு ஆன - "சேவடி தைவரு சிந்தையும்" (1405). ஏகாரம் பிரிநிலை. தேற்றமுமாம். சார்வு - "சார்புணர்ந்து" (குறள்). சார்பினால் ஆன - நன்மை ஆயின - ஆக்கம் சேர்ந்த-எனக் காரணப் பொருள் தந்து நின்றது. "மற்றொரு பற்றிலா அடியேற்கு என்றும் சிறந்தானை" (தேவா).

உழவாரத் தனிப் படை - தனி - சிறப்புணர்த்தி நின்றது. படை - பாசத்தை அறுக்கும் கருவி என்பது குறிப்பு.

தாழும் ஆகி - மேற்சொல்லிய வடிவு முதலியவை தம்மையே சிறப்பாக அறிவிக்கும்படி வெளிப்பட என்ற பொருள்தந்து நின்றது.

பார்வாழ - மனம் வாக்குக் காயங்களால் திருவீதியில் நாயனார் செய்த தொண்டுகளின் பயன் உலகமறிந்து பயன் பெற்று வாழ்வதேயாம். தமது பயன் கருதி நாயனார் ஒன்றும் செய்யாதாராவர் என்பது. "தாமென்று மனந்தளராத் தகுதியரா

யுலகத்துக், காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணையினான்" (பிரமபுரம்) என்பது பிள்ளையார் திருவாக்கு. பார் வாழும் பொருட்டே வீதிப் பணி செய்து, பணிந்து, ஏத்தி, பரவி, செல்வார் என்றதை விளக்கும் பொருட்டு அதனை முதற்கண் வைத்தார். நெல் விளைய மழை பெய்தது என்புழிப்போலக் காரணப் பொருட்டு. திருவீதிப் பணிசெய்து - பணிந்தேத்தி - பரவி - என்றவைகளை எதிர் நிரனிறையாகக் கொண்டு உழவாரப்படை, திருவாயின் மாலைகள், மழைவாருந் திருவடிவு என்றவற்றின் செயல்களாக முறையே வைத்து உரைத்துக்கொள்க. ஏத்துதல் வாயினாலும், பரவுதல் மனத்தினாலும் நிகழ்வனவாதலின் கூறியது கூறலன்மை யுணர்க. பரவுதல் - தியானித்தல் என்னும் பொருட்டு.

பரவிச் செல்வாராய், நயந்து செல்வாராகி, (1492) அமருநாளில் என மேல் வரும் இரண்டு பாட்டுக்களையும் தொடர்ந்து கூட்டி முடிக்க.

"தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனி (1405) என்ற திருப்பாட்டு இறைவன் தம்மைச் சமண் சிறையினின்று மீட்டவுடன் அப்பேரருளை நினைந்து, நாயனார் திருவதிகைக்கு மீண்டு திருவீதியுட் புகுந்தபோது, அடியார் காட்சிக்குப் புலப்பட்ட கோலங் காட்டிற்று. "சிந்தையிடை யறுவன்பும்" (திருஞா - புரா - 270) என்ற திருப்பாட்டு, அந்த அன்பு மேலும் பெருகிய நிலையில் நாயனார் ஆளுடைய பிள்ளையாரைக் காணும் விருப்போடு சீகாழியில் திருவீதியுட் புகுந்தபோது ஆளுடையபிள்ளையாரது அருட்காட்சிக்குப் புலப்பட்டபடி தொண்டர் திருவேடப் பொலிவாகிய கோலங் காட்டிற்று. இத்திருப்பாட்டு அடியார்க்கடிமையாந் திறமும் கிடைக்கும்படி கருணை புரிந்த ஆரூர்ப் பெருமானது பேரருளை நினைந்து ஆரூர்த் திருவீதியுள்ளே அவ்வன்பு மேலும் மிகப் பெருகிய நிலையில் நாயனார் புகுந்தபோது உள்ள கோலங் காட்டிற்று.

இம்மூன்று திருப்பாட்டுக்களும் நாயனாரை நமது மனத்துள் நேரே கண்டு தியானித்து வணங்கி யுய்வதற்குப் பேருதவி புரிவன. நாயனாரது அன்பு வளர்ந்து முதிர்ந்து பெருகும் நிலையினை, முதற்பாட்டு ஐந்து சீருடைய கலித்துறையாலும், இரண்டாவது பாட்டு அதனினும் பெரிய அறுசீர்க்கழிநெடில் விருத்தத்தாலும், மூன்றாம் பாட்டு அதனினும் பெரிய அறுசீர்க்கழிநெடிலடி விருத்தத்தாலும் யாத்து அருளிய சிறப்பினால் ஆசிரியர் அறிவிக்கின்ற தெய்வக் கவிநலம் கண்டு களிக்க. இக்கருத்துக்களையே உட்கொண்டு நாயனாரது துதியாகக் காஞ்சிப் புராணத்தினுள் "இடையறாப் பேரன்பும்" என்ற பாட்டினுள் மாதவச் சிவஞான முனிவர் வைத்துப் போற்றிய திறமும் காண்க. இவ்வாறு அன்பு நிலை திருவாரூரில் மிகப் பெருக நிகழ்ந்தது ஆண்டானடிமையோடு அடியார்க்கடியராந் தன்மையும் பெறுவித்த பேருள் நினைந் தமையாலாகியது என்க. "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என்ற பதிகக் கருத்துக் காண்க. "தன் சீரடியார் குலம்பணி கொள்ள வெனைக்கொடுத்
தோன்" என்ற திருக்கோவையார்க் கருத்தும் சிந்திக்க. 225

1941. (வி - ரை) நீடுபுகழ் - என்றும், மணி - என்றும், நிலவும் - என்றும் வரும் அடைமொழிகள் முறையே திருவாரூரும், புற்றும், இடமும் என்ற இவற்றின் சிறப்பினை உணர்த்தின. நிலவும் - இடம் என்று கூட்டுக. நிலவுதல் என்றும் நிலைபெற வீற்றிருத்தல். நீடுபுகழ் என்ற கருத்து "ஒருவனாய் உலகேத்த" என்ற திருத்தாண்டகப் பதிகத்துள் "முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே" என்ற மகுடத்தால் விளக்கப்பட்டிருத்தல் காண்க. மணி - அழகு; செம்மணி என்றலுமாம். புற்றினுள் அரவும், அரவினுள் மணியும்போல, இங்குத் திருவாரூர்ப் புற்று - இருத்தர் என்பவை ஆசனம் - மூர்த்தி - மூர்த்திமான் என்ற விளக்கங்கள்

குறிப்பு. **நிருத்தர்** - ஐந்தொழில் அருட்கூத்து இயற்றுபவர். அத்திருக்கூத்தில் தோற்றம் என்னும் முதற்றொழில், பிருதிவி என்ற முதற்பூத தத்துவத்தில் வைத்து இங்குள்ளாராற் காணப்படலால், அத்தத்துவத்தின் சார்பாய புற்றிடமாகிய தலம் திருஆரூராதலினால், இங்கு நிருத்தர் என்ற பெயராற் கூறினர். "எல்லி, ஆடல னாதிரைய னாரூ ரமர்ந்தானே" (பண் - வியாழக் குறிஞ்சி) என்ற ஆளுடையபிள்ளை யார் திருவாக்கும் காண்க.

**கூடிய அன்பு** - மேலும் மேலும் அதிகரித்துக் கூடிப் பெருகும் அன்பு.

**காலங்கள்** - பூசைக்குரிய திருப்பள்ளி யெழுச்சி முதல் அர்த்தயாமம்வரை யுள்ள காலங்கள். காலங்களிற் சென்று கும்பிடுதல் சிறப்பு என்பது ஆகமங்களில் விதிக்கப் படும். "காலமெல்லாந் துதித்திறைஞ்சி" (திருஞான - புரா - 164) என்று ஆளுடையபிள்ளையார் திருத்தில்லையில் அவ்வக்காலங்களிற் கும்பிட்டமையும், நம்பி யாரூரர் "திருமூலட்டானத்து ளிடைதெரிந்து மாறிறிரு வர்த்தயாமத் திறைஞ்ச வந்தணைந்தார்" (ஏயர்கோன் - புரா - 304) என்றதுவும், பிறவும் சிந்திக்க.

**கோதுஇல் வாய்மை** - குற்றங்களை இல்லையாகச் செய்யும் வாய்மைத் தன்மை யுடைய. "குரும்பை யாண்பனையீனு மென்னும் வாய்மை குலவுதலால்" (திருஞான-புரா - 980), "போதியோ வென்னு, மன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதம்" (டிை-1088) முதலியவை காண்க.

**பாடிளம் பூதத்தினான்** - பதிகத் தொடக்கமாகிய முதற்குறிப்பு.

**முதலான பலவும்** - இவற்றுள், இப்போது கிடைத்துள்ளவற்றுள், "சூலப்படை யானை" என்ற சீகாமரப்பண் - பதிகமொன்றும், "எப்போதும் மிறையும்", "கொக் கரைகுழல்" என்ற குறுந்தொகைப் பதிகங்களிரண்டும், "படுகுழிப்பவ்வம்", "குழல் வலம் கொண்ட" என்ற திருநேரிசைப் பதிகங்களிரண்டும், "உயிராவணமிருந்து" "பாதித்தன் திருவுரு", "நீற்றினையு நெற்றிமேல்", "திருமணியை", "எம்பந்த வல் வினைநோய்", "இடர் கெடுமாறு", "ஒருவனுயுலகேத்த" என்ற திருத்தாண்டகப் பதிகங்கள் ஏழும் ஆகப் பன்னிரண்டு பதிகங்கள் இங்குப் **பலவும்** என்ற இடத்துக் கருதப்படும்.

**நாடிய ஆர்வம்** - இறைவரது பெருங்கருணையைச் சிந்திக்கச் சிந்திக்க அதன் பய னாக விளைந்த ஆர்வம். **நாடிய** - காரணப்பொருட்டில் வந்தது. நாடியதன் காரண மாக வந்த என்க.

**மன்னைநந்து கரைந்து உருகி** - என்க. நைதல் - கரைதல் - உருகுதல் - அன்பு மேலிட மனம் அடையும் மாறுபாடுகள். **நயந்து** - விரும்பி; **செல்வார்** - திருத்தொண் டில் ஒழுகுவார்.

**ஆர்வம் பொங்க**—என்பதும் பாடம். 226

V திருச்சிற்றம்பலம் பண் - காந்தாரம்

பாடிளம் பூதத்தி னானும் பவளச்செவ் வாய்வண்ணத் தானுங்
கூடிள மென்முலை யாளைக் கூடிய கோலத்தி னானும்
ஓடிள வெண்பிறை யானு மொளிதிகழ் சூலத்தி னானும்
ஆடிளம் பாம்பசைத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 1

ஆயிரந் தாமரை போலு மாயிரஞ் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலு மாயிரந் தோளுடை யானும்

ஆயிர ஞாயிறு போலு மாயிர நீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 8

பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தானுங்
கையஞ்சு நான்குடை யானைக் கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்புரிந் தார்க்கருள் செய்யும்
ஐயஞ்சி னப்புறத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—ஆரூரமர்ந்த அம்மானே,பாடிளம் பூதத்தினன்; நரியைக்குதிரை செய்வான்; நரகரைத் தேவுசெய்வான்; விச்சின்றி நாறு செய்வான்; நினைப்பவர் நெஞ்சத்துளான்; அம்பர ஈருரியான்; ஊழியளக்க வல்லான்; ஆழிவளைக்கையினன்; உலகிறந்த ஒண்பொருளான்; ஆதிரைநாள் உகந்தான்; ஆயிரம் சேவடி - ஆயிரம் தோள் - ஆயிரம் நீண்முடி - ஆயிரம் பேர்-உடையான்; நாகப்பள்ளிகொள்வா னுள்ளத்தான்; ஐயஞ்சி னப்புறத்தான் என்பன முதலிய தன்மைகளாலறிந்து போற்றப் படுபவன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) பூதகணம்பாட ஆடுகின்றவன் இறைவன். நித்தியத்துவம் பெற்ற சிவகணமாதலின் இளம்பூதம் என்றார். திருத்தர் (1491) என்று புராணத்துட் கூறிய குறிப்பு இது. செவ்வாயும் பவள வண்ணமுமுடை யான். ஒடு இளவெண் பிறை - இளமை ஓடிக் கழிந்த - ஒளி குறைந்த பிறையும், ஒளி திகழ் சூலமும் என முரண் அணிபடவைத்தார். இளமை ஒடு பிறை - இளமை வரும்பிறை என்றலுமாம்.—(2) நரியைக் குதிரை செய்வான் - மாணிக்கவாசக சுவாமிகளின்பொருட்டு இறைவர் செய்த திருவிளையாடல். இதற்கு இறைவரது எல்லாம்வல்ல சத்தியைக் குறிப்பதென்று வேறு பொருள் உரைப்பாருமுண்டு. நரகரைத் தேவு செய்தல் - உயிர்களை உயர்த்துதல். விச்சின்றி நாறு செய்வான், - "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" (திருவாசகம்) முதலியவை காண்க. இவை புனருற்பவம் வருமாறுணர்த்துவன என்றும், வித்தின்றி விளைவாய் எனப் பொருள் பட்டு இறைவன் திருமேனி கொள்ளும் முறைமை யுணர்த்தியதுமாம் என்றும், உரைப்பர் மாதவச்சிவஞானமுனிவரர் (மாபாடியம். 2. சூத், சூனிய முதற்காரண வாதமறுப்பு).—(3) எரிபுரை மேனியினன் - தீ வண்ணன்.—(4) வேனிலவன் - வேனிற் காலத்தைத் தனக்கு உரிய காலமாகக்கொண்டு ஆட்சி புரிபவன்; மன்மதன். வம்பு - மணம். அம்பர ஈர் உரியான் - அம்பரம் - உடை; ஈர்உரி - தோல். தோல் உடையினன்.—(5) ஊழி அளக்க வல்லான் - காலங் கடந்தவன். ஆழி வளைக் கையினன் - சக்கரமும் சங்கும் கையில் ஏந்தி அரிவடிவுபோன்ற திருவுருவோ டிருந்து உலகங் காப்பவன். "உலகுகள்நிலை பெறுவகைநினை வொடுமிகுமலை கடனடுவறி துயிலமரரி யுருவியல்பரன்" (சிவபுரம் - திருவிராகம் - நட்டபாடை - 2) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரம் காண்க.—(6) உலகிறந்த ஒண்பொருள் - உலகினைக் கடந்த செம்பொருள். ஆதிரை நாள் சிவனுக்குகந்தது.—(7) தொழுந்து அங்கைதுன்னி நின்றார் - என்றது சிவனைத் தொழுவதற்கும் பூசித்தலுக்குமே கைகள் கொடுக்கப்பட்டன என்று துணிந்து அவற்றையே இடையறாது செய்பவர். துன்னு தல் - கூடுதல் - சேர்தல். காதல் கனற்ற - ஆசைமிக; கனற்றுதல் - தீச் சூழ்தல் போல அகப்படுத்துதல்; என்பினை உருக்குதல்.—(8) ஆயிரம் - இங்கு எண்ணிறந்த என்ற பொருளில் வந்தது. "சகஸ்ரசீர்ஷஃ புருஷ:" என்ற வேதப் பொருளை விளக்கிக் காட்டுவது இத்திருப்பாட்டு. "ஆயிரங் கமல ஞாயி றாயிரமுக் கண்முக கர சர ணத்தோன்" (சேர். வீழி).—(9) வீடு [illegible]

அடியார் தங்குமிடமாக நிலைபெறச் செய்பவன். வேதி தோடர விசும்பினை ஒடு அரங்காக வைத்தான் - தமது அருட்கூத்தை யியற்றுதற்குச் சத்தியையிடமாகக் கொண்டவன். விசும்பு - ஈண்டுச் சத்தியை உணர்த்தி நின்றது. காரிகையார்கள் - கினைக்குமுயிர்கள். உருவகம். ஒடு அரங்கத்திடை - "என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு" என்ற கருத்து.—(10) பை - நச்சுப்படம் என்றலுமாம். சுடர் விடுதல் - அரவின் மணியாலாவது. கை அஞ்சு நான்கு உடையான் - இருபது கைகளையுடைய இராவணன். கையஞ்சு நான்குடையானைக் கால்விரலால் அடர்த்தான் என்றது இறைவனது அளவிலாற்றலினை இலேசுபடக்காட்டும் அணிநயம். புகழ்புரிதல் - புகழ்களை இடைவிடாது சொல்லுதல். "இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார்" (குறள்). ஐயஞ்சு - 25; ஆன்ம தத்துவங்களும் அவற்றின் காரண மான பிரகிருதி மாயையும். புருடனைச் சேர்த்தலுமாம்.

பலவும் - திருவாரூரின் மற்றும் பல பதிகங்களின் குறிப்புக்கள் ஈண்டுத் தரப் படுகின்றன.

VI திருச்சிற்றம்பலம் பண் - சீகாமரம்

சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழானை நான்கண்ட தாரூரே. 1

வஞ்சனையா ரார்பாடுஞ் சாராத மைந்தனைத்
துஞ்சிரு ளாட லுகந்தானைத் தன்றொண்டர்
நெஞ்சிருள் கூரும் பொழுது நிலாப்பாரித்
தஞ்சுடராய் நின்றானை நான்கண்ட தாரூரே. 8

மஞ்சாடு குன்றடர வூன்றி மணிவிரலாற்
றுஞ்சாப்போர் வாளரக்கன் றோணெரியக் கண்குருதிச்
செஞ்சாந் தணிவித்துத் தன்மார்பிற் பால்வெண்ணீற்
றஞ்சாந் தணிந்தானை நான்கண்ட தாரூரே. 11

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சூலப்படையான் - அக்கணிந்த அம்மான் - சேயவுலகமுஞ் செல்சார்வுமானான் - ஆழித்தேர்வித்தகன் - வஞ்சனையார் ஆர்பாடுஞ் சாராத மைந் தன் - பெருங்கடனஞ் சாரமுதாவுண்டான் - ஆடுந்தீக் கூத்தன் - என்பன முதலான தன்மைகளால் அறியப்படும் இறைவனை நான் கண்ட இடம் ஆருரேயாம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சூழாக வீழ் அருவி - கங்கையின் நீர் வீழ்ச்சி. தோட்குன்று - உருவகம். ஆலம் - கல்லாலமரம்.—(2) பொலிவுடைத்தாய்-அக்கு அணிந்த-என்று கூட்டுக. உடைத்தாய் - உடையதாகும்படி. அக்கு - உருத்திராக்கம். எலும்புமாலையுமாம். தாழ்வடம். கோடி எடுத்த கோவணம்-கொடிபோல்தண்டில் தூக்கி எடுத்த கோவணம். பிட்சாடனரது திருக்கோலம். அமர்நீதியார் புராணத்துள் எடுத்துவந்த பிரமசரியக்கோலம் காண்க.—(3) சேய - செம்மையாகிய. செல்சார்வு - சென்று சாரும் பொருள். "சார்புணர்ந்து" (குறள்). மாயப் போர் வல்லான் - மாயையை வென்றவன். ஆயம் - கூட்டம்.—(4) ஏறு - ஏற்றம் - மா - ஏறி - இடப ஏற்றினை உயர்ந்த ஊர்தியாக மேல்கொண்டு ஏறி. ஆறு ஏற்ற -

கங்கையை ஏற்றுக்கொண்ட.—(5) தேம் காவி - தேன் பொருந்திய நீலோற்பலம். கழுநீர். திருவாரூர்ச் சிறப்புக்களுள் ஐந்து வேலிப்பரப்புடைய கழுநீர் ஓடையும் ஒன்று என்ப. பூங்கோயில் - திருவாரூர்க் கோயிலின் பெயர். "அனையதனுக் ககமலரா மறவனார் பூங்கோயில்" (135). போகாதிருந்தார்-முன்னர்ப் பாற்கடலில் விட்டுணுவினிடமும் தேவலோகத்தில் இந்திரனிடமும் இருந்ததும் போனதும்போலன்றி, இங்குப் போகாது நிலைத்திருந்தார் என்பது குறிப்பு. பாங்கான ஊர்க்கெல்லாம் செல்லும் - அன்பானினைவார் வழிபடு மிடமெல்லாம் என்ற இதுவும் முன்சொன்ன குறிப்பினை விளக்கும். இத்திருப்பதிகத்தினுள் ஏனைய எல்லாப்பாட்டுக்களும் "நான் கண்டதாரூரே" என்ற மகுடத்தையுடையன. இப்பதிகம் 11 பாடல்களுள்ளது. இப் பாட்டு வேறொருபதிகத்தைச் சார்ந்ததோ என்பது ஐயப்பாடு.—(6) எம்பட்டம் பட்ட முடையான் - எம்மை என்றும் மீளா அடிமையாக உடையவன்; பட்டம் - நெற்றியிற் கட்டும் தகடு. மதியின் நும் பட்டம்சேர்ந்த நுதலான்-பட்டம் கட்டியது போலப் பிறையை மேல்வைத்த நெற்றியினை உடையவன்? "கண்ணிடை கரந்தகதிர் வெண்பட மெனச்சூழ், புண்ணிய நுதற்புனித நீறுபொலி வெய்த" (175). அந்தி வாய்ச்செம்பட்டு உடுத்து - என்றது செம்பட்டு உடுத்ததுபோன்ற அந்திச் செவ்வான ஒளியுடைய திருமேனியுடையவன்.—(7)போழ்ஒத்த - போழ்ந்தால் ஒத்த. பிளந்தது போன்ற. வெருவப்போர்த்தான் என்க. ஓங்கு ஒலி மா-நாத உருவமான வேதங்களாகிய குதிரைகள். ஆழித்தேர் - உலகமாகிய இரதம். முப்புர மெரித்தபோது இறைவன் கொண்டது.—(8) பாடு - இடம். ஏழுருபு. துஞ்சு இருள் - உலகம் ஒடுங்கிய ஊழி. ஆடல் உகத்தல் - "வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" என்றபடி உலகை மீளத் தோற்றுவித்தற்பொருட்டு நினைத்தல். இருள்கூரும்போழ்து - மலவாதனையாற் றுன்புறும்போது.—(9) கார்முது கொன்றை - கார்காலத்திற் பூக்கும் கொன்றை. கொன்றையாற் குறிக்கப்படும் பிரணவத்தின் தொன்மை காட்ட முது கொன்றை என்றார். பேரமுதம் - சாவாமை செய்யும் மருந்து. உய்ய - அமுத முண்டும் சாகும் துன்பமடைந்தார் அத்துன்ப நீங்க. நஞ்சுஅமுதா - அமுதா உண்டான் - சாதலைவிளைக்கும் நஞ்சினை, அதனைச் செய்யாத அமுதம்போல உண்டவன்.—(10) தாட உடுக்கையன் - அடிக்கும் உடுக்கை - துடி - உடையவன். கோடலா வேடம் - கொள்ளாதவேடம்; நக்க உருவம். கோடலா - கொண்ட - முரண்அணி. வீணை - "மிகநல்ல வீணை தடவி". ஆடுஅரவக் கிண்கிணி - ஆடுந்தோறும் அரவஞ் செய்யும் - சத்திக்கும் - கழல். ஆடும் அரவத்தையே - பாம்பினையே - கிண்கிணியாகப் பூண்டவன் என்றலுமாம். சேடன் - ஒளியுடையவன்-பெருமையன். தீஆடும்-என்க. குருதிச் செஞ்சாந்து அணிவித்து - உடல் முழுதும் குருதி - இரத்தம் - படியும் படி செய்து. நீற்று அஞ்சாந்து - திருநீற்றினை அழகிய சாந்தமாக. இராவணனைச் செஞ்சாந்தணிவித்துத் தான் வெண்சாந் தணிந்தான் - என்று நகைச் சுவைபடக் கூறியபடி.

VII திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

எப்போ தும்மிறை யும்மற வாதுநீர், முப்போ தும்பிர மன்முழு நின்றவன்,
செப்போ தும்பொனின் மேனிச் சிவனவன், அப்போ தைக்கஞ்ச லென்னுமா ரூரனே.

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—ஆரூரிறைவரே சிவன்; அப்போதைக் கஞ்சல் என்னும்; அண்டவாணர்க் கருள்வர்: கிளைமாம களக்கும் சிந்தையர்: கனலேந்தி என்வி...

ளாடுவர்; மட்டு வார்குழலாளொடு மால்விடை இட்டமாவுகந் தேறு மிறைவனார்; என்பன முதலிய தன்மைகளா லறியப்படுபவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) இறையும் - சிறிதும்; செப்போதும் பொன்- செம்பொன். உவமானமாக எடுத்துச் சொல்லும் பொன் என்றலுமாம். அப்போதைக்கு - வேண்டியபோது. இறக்கும்போது என்றலுமாம்.—(3) அண்டவாணர்க்கருளும்-தேவர்கள் வந்து வணங்கும் தன்மை. தியாகேசர் தேவலோகத்தினின்றும் இங்கு எழுந்தருளிய குறிப்பு. 9-வது பாட்டில் அண்டவாணரடையும் என்பதுமிது.—(5) திசைமுழுதளக்குஞ் சிந்தை - நினைப்பு மாத்திரத்தில் உலகந் தோற்றுவித்தும் அழித்தும் அருள்பவர் என்பது கருத்து.—(7) அட்டமாம் புயம் - எண்டோள்.

VIII திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

கொக்க ரைகுழல் வீணை கொடுகொட்டி, பக்க மேபகு வாயன பூதங்கள்,
ஒக்க வாட லுகந்துடன் கூத்தராய், அக்கி ணேடர வார்ப்பரா ரூரரே. 1
எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே, பந்தம் வீடவை யாய பராபரன்,
அந்த மில்புக ழாரு ரரனெறி, சிந்தை யுள்ளுஞ் சிரத்துளுந் தங்கவே. 2
எம்மை யாரிலை யானுமு ளேனலேன், எம்மை யாரு மிதுசெய வல்லரே?
அம்மை யாரெனக் கென்றென் றரற்றினேற், கம்மை யாரைத்தந் தாராரு ரையரே.
மையு லாவிய கண்டத்த னண்டத்தன், கையு லாவிய சூலத்தன் கண்ணுதல்,
ஐய னாரு ரடிதொழு வார்க்கெலா, முய்ய லாமல்ல லொன்றில்லை காண்மினே. 12

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆரூரர் அக்கினோடரவார்ப்பர்; தொடர்ந்து விடாதவர்க்கு அண்டமாளவும் வைப்பர்; அன்பர்க்கன்பர்; வாழ்நாளுள்ளபோதே அவரை அடைமின்; அவர் எனக்கு அம்மையைத் தந்தார்; ஆரூரைத் தூரத்தே தொழுவார் வினை தூளிபடும்; அவர் அடிதொழப் பண்டை வல்வினையும் பாவமும் பறையும்; அல்லலொன்றில்லை. அவரைக் கண்டு என் தையல் காமுற்றவாறு?

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கூத்தராய் - "நிருத்தர்" (149). அக்கு - உருத்திராக்கமணி.—(2) பந்தம் வீடவையாய - "பந்தம் வீடு தரும் பரமன்" (300) பார்க்க. பராபரன் - பரைக்குப்பரன். பழமைக்குப் பழையவன் - புதுமைக்குப் புதியவன் என்றலுமாம். சிந்தையுள்ளும் சிரத்துளுந் தங்க - "சிந்தையி னுள்ளுமென் சென்னியினுஞ் சேர வந்தவர்" (உந்தி - 44). அரனெறி - திருவாரூர் அரனெறி - தனிக்கோயில்.—(3) விடாதவர்க்கு - விடாதவரை. உருபு மயக்கம்.—(4) சுபத்தர் - சுபத்தை-இன்பத்தை-உடையவர்.—(5) முருட்டுமேத்தை - சுடுகாட்டு விறகு. உருவகம். அரட்டர் - துன்பஞ் செய்பவர். ஐவர் - ஐம்பொறி. முரட்டடிந்த-முரணைக் கொண்ட. அரட்டு - செருக்குத் தொழில். அடக்கி - அடக்கியவர். பெயர்.—(6) எம்மையார் - முன்னது, எமக்கு இன்பஞ் செய்பவர்; பின்னது, எவ்வகையார். உளேன் - இன்பஞ் செய்துகொள்ளும் வன்மையில்லேன். அம்மை - தாய்போல் தண்ணளி செய்பவர். அம்மையாரை - தாய்போன்ற தம்மையே. திலதவதியம்மையாரின் குறிப்புப்பட உரைத்தலுமாம்.—(7) தண்ட ஆளி - தண்டத்தினை உடையவன். செண்டு அது ஆடிய - அழித்த. செண்டாடுதல் - அழித்தல். அகண்டன் - வியாபகமானவன். இப்பாட்டுத் தலைவன்பால் மனமிழந்த மகளைக் கண்ட தாய் கூற்றாகிய அகத்துறை. வரும் பாட்டுமது.—(8) பவனி - உலா. தலைவன் உலாவரும்போது கண்ட மங்கையர் காதல் கொண்டு வசமிழத்தல் அகப்பொருள். தவனி - காதலால் உடற்கொதிப்புடையவள்.

7 - 8 இந்த இரண்டு பாட்டுக்களும் வேறு ஒரு பதிகத்தினைச் சேர்ந்தனவோ என்பது ஐயப்பாடு.—(9) தூளி - பொடிபட்டு அழிவது.—குறிப்பு : இப்பதிகத்தில் 12 பாட்டுக்கள் காணப்படுகின்றன. 2-வது பாட்டின் குறிப்பினால் இது திருவாரூர் அரனெறிக் கோயிலைப் பற்றியதோ என்பது ஐயம். "பவனிவீதி விடங்கனைக் கண்டு"(8) என்றதனால், "முத்து விதானம்" என்ற குறிஞ்சிப்பண் பதிகம்போல இப்பதிகமும் தியாகேசரைப் போற்றிய தாமோ என்பதும் ஐயப்பாடு. திருமூலட்டானனாரே எனவரும் ஏனைப் பதிகங்களை நோக்குக. ஏனைய தலங்கள் போலன்றி வீதிவிடங்கருக்கும் திருமூலட்டானருக்கும் தனிப் பதிகங்கள் உள்ளமை திருவாரூரின் தனிப்பெருஞ் சிறப்புக்களுள் ஒன்று.

IX　திருச்சிற்றம்பலம்　　திருநேரிசை

படுகுழிப் பவ்வத் தன்ன பண்டியைப் பெய்த வாற்றாற்
கெடுவதிம் மனிதர் வாழ்க்கை காண்டொறுங் கேது கின்றேன்
முடுகுவ ரிருந்து ளைவர் மூர்க்கரே யிவர்க ளோடும்
அடியனேன் வாழ மாட்டே னாரூர்மூ லட்ட னீரே.　　1

உயிர்நிலை யுடம்பே காலா வுள்ளமே தாழி யாகத்
துயரமே யேற்ற மாகத் துன்பக்கோ லதனைப் பற்றிப்
பயிர்தனைச் சுழிய விட்டுப் பாழ்க்குநீ ரிறைத்து மிக்க
அயர்வினா லவர்க் காற்றே னாரூர்மூ லட்ட னீரே.　　7

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஆரூர்த்திருமூலட்டனீரே! இவ்வுடம்பினுள் ஐம்பொறிகளும் என்னை மயக்கிச் சங்கடம் பலவும் செய்து இடர்க்குழியில் தூக்குகின்றன ; என் உள்ளம் அலந்து மத்துறுதயிர்போல் மறுகும் ; காத்துக்கொள்ளாய்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) படுகுழி-வீழ்த்தும் குழி. பெருங்குழி. பவ்வம்-கடல். பண்டி - வயிறு. பவ்வம்போன்ற படுகுழியில் வண்டியைத் தள்ளுதல்போல் ஐவர் முடுக்கிப் பாவப் படுகுழியில் வீழ்த்தலால் வருந்துவது இவ்வாழ்க்கை என்று கூட்டியுரைத்தலுமொன்று. கேதுதல் - அஞ்சுதல்.—(2) அழிப்பன் - அழிக்கப்பட்டவன்.—(4) கெழுமுதல் - கூடுதல். நூக்குதல் - வலியத் தள்ளுதல்.—(6) சிக்கனவுடையர் - விடாது பற்றிக்கொண்டவர். கோது - துன்பம்.—(7) இப்பாட்டு உருவகம். கிணற்றிலிருந்து பயிருக்கு நீர் இறைக்கும் ஏற்றக்கோலாக உடம்பை நன்மைக்குப் பயன்படுத்தும் வகைக்கே ஏற்பட்டதொன்றாக உருவகித்தார். ஏற்றத்திற்குக் கால் - தாழி - ஏற்றத்தின் மரம் - ஊற்றக்கோல் - நீர்பாயும் புலம்—உடலுக்கு = உயிர் நிலைக்கும் உடம்பு - கால் ; உள்ளம் - தாழி ; துயரம் - ஏற்றம் ; துன்பம் - கோல் ; சிவலோகம் - பயிர் விளைபுலம் என்று காண்க. சுழிய - வாட. பயிர் - இங்குச் சிவபோக விளைவாகிய பயன் குறித்தது.—(8) அற்று - பயனற்று ;—(9) மத்துறு தயிர் - பழமொழி. உவமை - "மத்துறு தண்டயி ரிற்புலன் றீக்கது வக்கலங்கி" (திருவா - நீத் - விண் - 30).—(10) இறையே - சிறிது. அடர்த்து அருள்செய்தது - முன் அடர்த்துப் பின் அருள் செய்தது. குறிப்பு - இது திருமூலட்டானரை முன்னிலைப்படுத்திக் கூறிய பதிகம். திருமூலட்டானனாரே என்று படர்க்கையிற் போற்றிய திருத்தாண்டகம் காண்க.

X　திருச்சிற்றம்பலம்　　திருநேரிசை

குழல்வலங் கொண்ட சொல்லாள் கோலவேற் கண்ணி தன்னைக்
கழல்வலங் கொண்டு நீங்காக் கணங்களக் கணங்க ளார

அழல்வலங் கொண்ட கையா னருட்கதி ரெறிக்கு மாரூர்
தொழல்வலங் கொண்டல் செய்வான் றோன்றினார் தோன்றினாரே. 1

நாகத்தை நங்கை யஞ்ச நங்கையை மஞ்ஞை யென்று
வேகத்தைத் தவிர நாகம் வேழத்தி னுரிவை போர்த்துப்
பாகத்தி னிமிர்தல் செய்யாத் திங்களை மின்னென் றஞ்சி
ஆகத்திற் கிடந்த நாக மடங்குமா ரூர னார்க்கே. 2

ஆயிரந் திங்கள் மொய்த்த வலைகட லமுதம் வாங்கி
யாயிர மசுரர் வாழ மணிமதின் மூன்றும் வேவ
வாயிரந் தோளு மட்டித் தாடிய வசைவு தீர
வாயிர மடியும் வைத்த வடிகளா ரூர னாரே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஆரூரைத் தொழுவதற்குத் தோன்றியவர்களே உலகிற் பிறந்தார் எனப்படுவர்; ஆரூரர் பெருமான் தோட்டிமையுடைய தொண்டரகம் புகுந்து நின்றார்; திங்களணிவர்; தளிர் ஆகம்போலும் வடிவர். அஞ்சணை வேலியாரூர் இடங்கொண்டார்; இவை முதலிய தன்மைகளாலறியப்படுபவர்.

பதிகப் பாட்டுக்குறிப்பு:—(1) வலங்கொண்ட - சொற்பின் வருநிலையணி. குழல் வலங்கொண்ட-குழலினிசையை வென்ற. வலம் - திறம். கொண்ட-திறைகொண்ட. கழல் வலங்கொண்டு - திருவடியைச் சுற்றி. அழல்வலங் கொண்ட - வலஞ் சுழித்தெழுந்த அழல். தொழல் வலங்கொண்டல் செய்வான் - தொழுவதற்காக வலஞ்செய்யும் பொருட்டு. தோன்றினார் தோன்றினார் - ஆரூர் வலஞ் செய்யும் ஊழ்பெற்றுப் பிறந்தவர்களே பிறந்தவர்களாவார். ஏனையோர் பிறந்தும் பிறவாதவர்; இறந்தவரோடொப்பர் என்பது குறிப்பெச்சம். "மற்றுப் பிறந்தவர் பிறந்திலாரே" (தேவாரம்).—(2) உவமையை உள்ளுறுத்த பெயர்பொருள் தற்குறிப்பேற்ற அணி. நாகத்தை... அஞ்ச - இறைவர் திருமேனியிலணிந்த நாகத்தைக் கண்டு அம்மையார் அஞ்ச; நங்கை ...நாகம் - அம்மையாரது சாயல்கண்டு அவரை ஒரு மயில் என்று அஞ்சி அந்நாகங்கள் ஒடுங்க; வேழம் - யானை; பாகத்தின்...அடங்கும் - வளைவு நிமிராத பிறையை ஒரு மின்னல் என்று எண்ணி நாகம் அடங்கும்; மின்னென்று நாகம் அடங்குதல் "மின்னானை மின்னிடைச்சே ருருமி னானை" என்றபடி மின்னும் இடியும் நாகங்களுக்குப் பகையாதலினாலாகியது.—(3) "கிடந்த பாம்பு" (அதிகை-காந்தாரபஞ்சமம் - கெடிலவாணர்-8) என்ற நாயனார் தேவாரம் பார்க்க.—(3) தோட்டிமை - ஒற்றுமை. "ஓட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்" என்ற கருத்து. அழுத அகம் - என்றது அழுதகம் என அகரவீறு கெட்டு நின்றது. திங்கட் புதுமுகிழ் - திங்களாகிய புதிதின் மலரும் அரும்பு. உருவகம்.—(4) நகை இருள் - விரியும் இருள். பேரிருள். ஈமகங்குல் - உலகமழிந்த ஊழி. நாராசம் - கம்பி.—(5) படர்கொடி - படரும் கொடிபோன்ற உமையம்மையார். சடைத் தொத்தினாலும் தம்மது ஓர் நீர்மையாலும் - சடைக்கொத்து "மாலையின் தாங்குருவே போலும் சடைக்கற்றை" (அற்பு - அந் - 65) என்றபடி செவ்வொளி யுடைய பூங்கொத்துப் போன்றது. தம் நீர்மையும் "செம்பவள எரிபோன் மேனி" (அங்கமாலை) என்றபடி சிவந்த வண்ணம். தளிர் ஆகம் - தளிரின் வடிவம்.—(7) அஞ்சணை கணையினான் - மன்மதன். ஐந்து பூக்களை அம்பாக உடையவன். அஞ்சு அணை குழலினாள் - ஐந்து வகையாக முடிக்கப்பட்ட கூந்தலையுடைய அம்மையார். அஞ்சணை அஞ்சு - ஆனைந்து. அஞ்சணை வேலி ஆரூர் - கமலாலயக் குளமும் பூங்கோயிலும் செங்கழுநீர் ஓடையும் ஒவ்வொன்றும் ஐந்துவேலிப்

பரப்புடையனவாகிய திருவாரூர்.—(8) பிணங்குடைச் சடை - பிணங்கியது போலப் பின்னிய சடை. ஓதி - ஓதியை உடையவள். ஓதி - கூந்தல்.—(9) நகலிடம் பிறர் கட்காக - பிறர் கண்டு நகைக்க; நான்மறையோர்கள்...இருவர் - மறையவர் தங்களுக்கு இவர் புகலிடமாவார் என்று அடையினும், தாம் அவ்வாறு புகல்தரும் ஆற்றலிலராகிய இருவர் - பிரம விட்டுணுக்கள். பிறர் நகலிட மாதல் - தாமே வேறு புகலிடம் தேடும் இவ்விருவரைத் தஞ்சமென்று அடைகின்றார்களே என்று நகுதல். இகல் இடமாக - இகல் - பூசல் - புரியும் இடத்தில்.—(10) ஆயிரம் - சொற்பொருட் பின்வருநிலை. ஆயிரம் - அனேகம் என்னும் பொருளில் வந்தது. மட்டித்து - அசைத்து.

XI திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

உயிரா வணமிருந் துற்று நோக்கி யுள்ளக் கிழியி னுருவெ ழுதி
யுயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தா லுணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
யயிரா வணமேறா தானே றேறி யமரர்நா டாளாதே யாரூ ராண்ட
வயிரா வணமேயென் னம்மா னேநின் னருட்கண்ணா னோக்காதா ரல்லா தாரே. 1

முன்ன மவனுடைய நாமங் கேட்டாள்; மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்;
பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள்; பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள்;
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தாள்; அகன்றா ளகலிடத்தா ராசா ரத்தைத்
தன்னை மறந்தாடன் னாமங் கெட்டாள்; தலைப்பட்டா ணங்கை தலைவன் றாளே. 7

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருவாரூரர் சிவயோக வழியால் தம்மை உணர்ந்துள்ளவர்களோடு இரண்டற ஒட்டி வாழ்பவர்; அவரது அருட் கண்ணால் நோக்கப்படாதவர்கள் அல்லாதவர்களே. அவர் எல்லாத் தேவர்களும்வந்து பூசைசெய்ய இங்கு எழுந்தருளியிருக்கின்றார்; ஆதலின் அடியேன்செய்யும் குற்றேவல் கூடுமோ? அவர் பலதலங்களிலும் விளங்கித் திருவாரூரிற் புகுந்து நிலை பெற்றுள்ளார். ஆரூர்ப் பெருமானுடைய பெயரையும் பின் அவரது வண்ணத்தினையும் பின் அவரிருக்கும் ஊரையும் கேட்டு அவருக்கே அடிமையாகி உலகத்தைவிட்டுத் தன்னையும் மறந்து அவர் தாளின் கீழ்த் தலைப்படுதல் பக்குவப்பட்ட ஆன்மாக்களின் தன்மை. குறிப்பு :—இப்பதிகம் முழுதும் சிறந்த பல ஆழ்ந்த கருத்துக்களை யுடையது.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) உயிராவணம் இருந்து - இடைகலை பிங்கலை என்ற இரண்டு வழியிலும் சென்றுவரும் மூச்சைத் தடுத்து-உயிராதபடியிருந்து. உயிர்த்தல்-மூச்சு விடுதல்: உற்றுநோக்கி - தியானத்தினால் மனத்தை ஒரு குறியில் ஊன்றி; உள்ளக் கிழியில் உருஎழுதி-உள்ளத்தில் உருவம் பதியும்படி தீட்டி."உரு எணத் தவமாமே" (தேவா). உயிர் ஆவணம் செய்திட்டு - ஆன்ம சமர்ப்பணம் செய்து; ஆவணம் செய்தல் - அடிமைச் சீட்டுஎழுதி ஒப்புவித்தல்; உணரப்படுவார் - இவ்வாறு உணரப் பெறுகின்ற சிவயோகியர். ஒட்டி வாழ்தி - பண்டைப் பரிசாகிய பிரிவறியா நிலை வெளிப்பட விளங்குவாய் என்பதாம். ஒட்டுதல் - இரண்டறக் கூடுதல். "ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்" (சீகாமரம் - மயிலை - 1); வாழ்தி - வாழ்வாய்: அயிராவணம் - இரண்டாயிரம் கொம்புடைய யானை. ஆன் ஏறு - இடபம்; அயிராவணம் ஏறாது ஆன் ஏறு ஏறி என்றது யானையாகிய ஊர்தியை விரும்பாது என்றபடி. "கடகரியும் பரிமாவும் தேருமுகந் தேறாதே, யிடபமுகந் தேறியவாறு"—(திருவாசாழல்). அமரர்நாடு ஆளாதே - ஆரூர் ஆண்ட - தேவலோக இருக்கையை விரும்பாது இந்நிலவுலகப்பதியாகிய திருவாரூர் ஆட்சியை விரும்பி எழுந்தருளிய. "அயிரா

வணமே - அயிர் - நுண்மணல்; பிருதுவி விசுவரூபமா யுள்ளவரே - வன்மீக நாதரே; இத்தலம் பிருதுவித் தலமாதல் குறிப்பு; இனி, அயிர்த்தல் - ஐயுறுதல்; தம்போன்ற பல மூர்த்திகளுள் தான் விரும்பிய மூர்த்தி எதுவோ என்று முசுகுந்தன் ஐயுறுவண்ணம் இருந்தவரே - வீதிவிடங்கரே - என்றலுமாம்" (இது வித்வான் - ந. சிவப்பிரகாச தேசிகர் எழுதிய குறிப்பு.) அல்லாதார் - ஒன்றுக்கும் பற்றுதவர். பயனற்றவர்.—(3) தேர்ஊரார் - மா ஊரார் - தேரினையும் மா (குதிரை) வினையும் ஊர்தியாகக் கொள்ளாதவர். திங்களூர்: அப்பூதிநாயனாரது தலம்.—(4) ஆவணமோ ஒற்றியோ - ஆவணம் - உரிமைச்சீட்டு. சீட்டின்படி முழு உரிமை பெற்றது. ஒற்றி - முழுஉரிமை பெறுமல் அனுபவிக்கும்உரிமைமட்டும் பெற்றது.—(5) கண்மாயம்-கண்ணேமயக்கும் வித்தை - இந்திரசாலம் என்பர். "இந்திரசாலம் போல வந்தருளி, யெவ்வெவர் தன்மையுந் தன்வயப் படுத்தித், தானேயாகிய" (திருவா).—(6) கருவாகி......உருவாகிப்புறப்பட்டு - இது தாயின் கருப்பையினுள் குழவிபுகுந்து வளர்ந்து முற்றிப் பிறக்குந்தனையும் உடற்கூற்று வளர்ச்சியை முறையில் அறிவிக்கின்றது. இக்காலத்து உடற்கூற்று விஞ்ஞான நூலாராய்ச்சியாளர் மிக முயன்றுகாணும் உண்மைகள் இவை. பனியிலோர் பாதி சிறுதுளியாகத் தாயின் கருப்பைக்குள் புகுவது; கரு அதன்பின் குழம்பாக வலுப்படுகின்றது; பின் அக்குழம்பு கடினத்தன்மை யடைகின்றது; அவ்வாறு கடினமாகி உருவாகும்போது முதலில் வலுவடைகின்ற பகுதி மூளையாம்; அது கருமையும் வெண்மையுமாகிய இருபகுப்புடையது. அவற்றை gray and white matter of the brain என்பர் நவீனர். இவை அசைவுக்கும் அறிதற்கும் கருவிகளாக உதவுகின்றன. இவ்வாறு மூளையும் கரு நரம்பும் வெள்ளெலும்பும் ஆக உருப்பட்ட பின்பு உடம்பின் ஏழு தாதுக்களாகிய "தோலி ரத்த மிறைச்சி மேதை யெலும்பு மச்சை சுவேதநீர்" ஏன்பவற்றுள் எனைத் தாதுக்களும் உண்டாகி உடல் உருவாக்கப்படுகின்றது. அவ்வாறு உரியபடி முற்றிய பின் பிரசூதவாயு என்னும் காற்றினுல் உந்தப்பட்டுக் குழவி கருப்பையினின்றும் புறப்படுத்தப்படுகின்றது: என்ற இவையெல்லாம் இங்குச் சுருக்கிக் கூறப்பட்டன. ஒருத்தி - தாய்; ஒவ்வோர் பிறவியிலும் ஒவ்வோர் தாய்; எப்பிறவியிலும் உடம்பு கொடுத்து வளர்க்கின்ற மாயை என்னும் ஒப்பற்ற இறைவனது சத்தியாகிய தாய். "கெர்ப்பமாய்ப், புல்லிற் பனிபோற் புகுந்திவலேக் குட்படுங்கா, லெல்லேபடா வுதரத் தீண்டியதீப் - பல்வகையா, லங்கே கிடந்த வநாதியுயிர் தம்பசியா, லெங்கேனு மாக வெடுக்குமென - வெங்கும்பிக், காயக் கருக்குழியிற் காத்திருந்துங் கான்மியத்துக், கேயக்கை கான்முதலா யெவ்வுறுப்பு-மாசறவே, செய்து திருத்திப்பின் பியோகிருத்தி முன்புக்க, வையவழி யேகொண் டணேகின்ற - பொய்யாத, வல்லபமே போற்றியம் மாயக்கா ரூன்மறைப்ப, நல்ல வறிவொழிந்து நன்குதீ - தெல்லேயுறு, வக்காலந் தன்னிற் பசியையறி வித்தழுவித், துக்காவி சோரத்தா யுண்ணடுங்கி - மிக்கோங்குஞ், சிந்தை யுருக முலேயுருகுந் தீஞ்சுவைப்பால், வந்துமடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப் - பந்தித்த, பாசப் பெருங்கயிற்ருற் பல்லுயிரும் பாலிப்ப, நேசத்தை வைத்த நெறி போற்றி" (போற்றிப் பஃறெடை). புறப்பட்டு - புறப்படுத்தப்பட்டு. செயப்பாட்டு வினையில் வந்தது. கடை போதல் - முற்ற நன்மை யடைதல்.—(7) சிவஞான நெறிகள். சிவனே உயிர்கள் அடைய உதவும் நிலேகளேப் படிப்படியாய் உருசிபெற அகத்துறைப் பொருள்பட அறிவிக்கின்றது. யாவரும் இதனே நன்கு பயின்று இதன் பொருளே அறிந்தனுபவிக்கக்கடவர். பதிகக் குறிப்பிற் கண்டவை பார்க்க. தலேவி முதலில் தலேவனது பெயர் கேட்டுப், பின், அவனது வண்ணம் கேட்டுப், பின், அவனுடைய ஊர் கேட்டு, அவனிடத்தில் அன்புகொண்டு தன் தாய்தந்தையரை விட்டுப்,

பின், உலகப் பற்றுக்களையும் விட்டுத், தன் தன்னிலையையும் மறந்து, தன் பேர் கெட்டு, அவனது அன்பின் நிறைவொன்றிலேயே ஈடுபட்டு அடங்கிக் கிடக்கின்றுள் என்பது உயிர்கள் படிப்படியாய் இறைவரை அடைந்து சிவானந்தத்திற் றிளைத்து நிலைக்கும் தன்மையை அறிவிக்கின்றது. கண்ணப்பநாயனூர் சரிதத்தில், காளத்திநாதர் பெயரைக் குடுமித்தேவர் என்றும், அவர் இருப்பது அந்த மலை என்றும், அவர் காட்சி நல்ல காட்சி என்றும் நாணன் சொல்லக் கேட்டுத் திண்ணனூர், சென்று கண்டு தமது முன்னைய நிலை எல்லாம் விட்டு அவரை அடைந்து கண்ணப்பரூராகி அவர் தாளிற் றலைப்பட்ட வரலாற்றை இங்கு வைத்துக் கண்டுகொள்க. தன்னை மறந்தல்-நிட்டை கூடியவர்களின் நிலை. நாமங் கெடுதல் - சீவன் என்பது சிவன் என்றுதல். கெடுதல் - முதல் குறைதல். "ஓர்மாத்திரை யளவென் பேரிற் குறுகினேன் பின்" (குமர குருபரர்). பிச்சி - பித்தி - பித்துடையவள். இப்பாட்டால் நாமம் மாத்திரம் கேட்டல் என்ற உத்தேசமும், அதன்மேல் விளையும் வண்ணங்கேட்டல் என்ற இலக்கணமும், அதன்மேல் விளையும், ஆரூர்கேட்டல் என்ற பரிட்சையும், அதன்மேல் விளையும் பித்தியாதல் என்ற தெளிதலும் என்ற நான்கு பகுதியும் உபதேசிக்கப்பட்டதென்ப. "நங்கை முதற்கண் தலைவனை உத்தேச முறைபற்றி உணர்ந்தனள்; அதனூல் அவனுக்கு உளதாய இலக்கணம் இவை என இடைவாய் உணர்ந்தாள்; அதனூனே அதனைப் பரிட்சித்துணர்ந்தனள்; அதனூனே உலகப் பற்றுப் போகலான் அவன்கட் பேரன்புடையளாயினள்; அதனூனே மாயையோடு காரணக்கடவுள் வசப்படா தொழிந்தனள்; அதனூனே சீவத்துவம் நீங்கிச் சிவத்துவமுடையளாயினள்; அதனூனே, இனி, அத்தலைவன்றூளைத் தலைப்படுதல் ஒருதலை என்பதாம்" என்றும், "இதனூல் ஓதல் கேட்டல் முதலியவற்றி னியல்பும், அவற்றினிகழும் அனுபவமாமாறும், நிட்டை மேவியாரது ஒழுக்கமும், தற்போத முளையாதவாறு உபகரித்துச் சிவானுபவம் சுவானுபூதிகமாமாறு அடங்கி நிற்கு முறையும், பாச வீடு, சிவப்பேறு என்பவற்றின் இயல்பும் கூறியவாறு" என்றும் வருவன ஸ்ரீ செப்பறைச் சுவாமிகள் எழுதிய உரைக் குறிப்புக்கள்.—(8) கூடுமே...ஏவல் - சிறுமையுடைய அடியேன் செய்யும் குற்றேவலும் சேருமோ? குறையுண்டே - உண்டோ?. ஏகாரம் வினு.—(9) ஒற்றித்து - பற்றித்தேடி.—(10) சேற்றூர் - இராப்பட்டீச்சரம் - மணற்கால் - சாத்தங்குடி - வைப்புத்தலங்கள். பழையாறு - அமர்நீதி நாயனூரது தலம். நல்லூர் - திருநல்லூர். "நல்லூரே நன்றுக நட்டமிட்டு" என்றது நாயனூருக்குத் திருவடி தீக்கை செய்த குறிப்புத்தர நின்றது. தலையாலங்காடு - பாடல் பெற்ற தலம். இங்குக் கூறியவை திருவாரூருக்கு அணிமையில் உள்ளன. புக்கார் - பொழுதும் வரும்வழியும் குறித்தபடி.—(11) கருந்துத்தி - கருமையுடைய படம். கருமை இங்குக் கரியவிடத்தை யுணர்த்திற்று. ஆகுபெயர். திருந்துருந்தி - திருப்பூந்துருத்தி. இங்குக் கூறியன சத்தத்தானத் தலங்கள். அரிப்பெருத்த - அரி - சிங்கம். அரியினும் பெருத்த. பெருத்தலாவது வீரம் முதலியவற்றூல் மிகுதல். அடரா - அடர்க்க - அடைவோரது வினைகளைப் போக்க. பிறவினை.

XII திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

பாதித்தன் றிருவுருவிற் பெண்கொண் டானைப்
பண்டொருகாற் றசமுகனை யழுவித் தானை
வாதித்துத் தடமலரான் சிரங்கொண் டானை
வன்கருப்புச் சிலைக்காம னுடலட் டானைச்

சோதிச்சந் திரன்மேனி மறுச்செய் தானைச்
சுடரங்கித் தேவனையோர் கைக்கொண் டானை
ஆதித்தன் பற்கொண்ட வம்மான் றன்னை
யாரூரிற் கண்டடியே னயர்த்த வாறே. 1

மெய்ப்பால்வெண் ணீறணிந்த மேனி யானை
வெண்பளிங்கி னுட்பதித்த சோதி யானை
யொப்பானை யொப்பிலா வொருவன் றன்னை
யுத்தமனை நித்திலத்தை யுலக மெல்லாம்
வைப்பானைக் களைவானை வருவிப் பானை
வல்வினையேன் மனத்தகத்தே மன்னி னானை
அப்பாலைக் கப்பாலைக் கப்பா லானை
யாரூரிற் கண்டடியே னயர்த்த வாறே. 4

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—தமது திருவுருவில் ஒருபாதியில் அம்மையாரை வைத்தவர்; காமனுடலட்டார்; திருவடியாற் கூற்றுவனை அட்டார்; ஊழிதோறூழி யுயர்ந்தார்; உலகமெல்லாம் வைப்பார் - களைவார் - வருவிப்பார்; அப்பாலைக் கப்பாலைக் கப்பாலார் என்றிவ்வா றெல்லாம் அறியப்படுகின்ற முழுமுதல்வராகிய இறைவரைத் திருவாரூரில் இருப்பாரைக் கண்டும் அடியேன் அடைய மறந்தவாறு தான் என்னே? "ஆரூரி லம்மான் றன்னை யறியா தடிநாயே னயர்த்த வாறே" என்ற பதிகத்தின் மகுடமும் இக்கருத்துப் பற்றியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—தசமுகன் - இராவணன். ஒருகால் - கயிலை மலையை எடுக்க முயன்றபோது. அழுவித்தான் - மலையின் கீழ்ச்சிக்க அழுத்தி அழும்படிச் செய்தமையால் அவனுக்கு அழுகின்றவன் - இராவணன் - என்ற பெயர் போந்தது. சந்திரன் மேனிச் மறுச் செய்தான் - தக்க யாகத்தில் வீரபத்திரரால் சந்திரனைத் தேய்த்தவன். ஆதித்தன்பல் கொண்டதும் அப்போது.—(2) விளக்கினொளி - மின்னொளி - முத்தின் சோதி - "சோதியே சுடரே சூழொளி விளக்கே" (திருவா) சத்து-சித்து-ஆனந்தம் என்னும் மூன்றும் நிறைந்த சோமாஸ்கந்த மூர்த்தம். நீரகத்தே அழலானான்-ஒடுக்கும் முறை. எழ்கடலையும் சுவறச் செய்யும் தீ, அக்கடலின் அகத்தே தங்கிக் கிடப்பதென்பது வரலாறு.—(3) ஒரு தேவர் - விட்டுணு. ஒருகாலத்து - ஆயிரம் மலரா லருச்சித்தபோது. ஊழி ஆயினானை - காலங் கடந்தவர்-என்றும் உள்ளவர்.—(4) வெண்பளிங்கி னுட்பதித்த சோதியான் - "பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே" (திருமந்திரம்). வெண்பளிங்கு - ஆன்மா. அதனுள் தன் தன்மையை வைத்தவன். உயிர்க்குயிராயுள்ளவன். உலகமெல்லாம் வைப்பான் - நிலைபெற வைப்பவன். களைவான் - அழிப்பவன்; வருவிப்பான் - ஒடுங்கின தன்னிடத்திலிருந்து மீள உண்டாக்குபவன், புனருற்பவம் செய்விப்பவன். "ஒடுங்கி மலத்துளதாம் அந்தமாதி" (சிவஞான போதம் 1 - சூத்).—(6) நிலனாகி என்பது முதலியன இறைவன் ஐம்பூதம் முதலிய எல்லாமாயிருக்கும் தன்மை. இவையிற்றின் நியமமாகி - இவற்றை நியமித்து நடத்துபவன். நீதி - செம்மை நெறி. பாதியாய் ஒன்றாகி - "பாதியுமாய் முற்றுமாயினார்க்கு" (திருவா-பொற்சுண்ணம்.) பாதி...மூன்றாய் - பெருகு நிலை. பரமாணுவாய் - சிறுகுநிலை. சோதியாயிருளாகி - சோதி - ஒளி; இருள் - ஒளிக்கு மறுதலை. இவ்விரு பொருள்களும் தாமச அகங்காரத்தின் தத்துவக்கூறு; தாமசக் கூறுகளிற்

ரோன்றியன. இவை தங்காரியங்களைச் செய்தல் இறைவனை யின்றியமையாத தாதலின், சோதியா யிருளாகி என்றார். "சோதியு மாயிரு ளாயினார்க்கு" (திருவா.)

குறிப்பு :—இப்பதிகத்தில் ஆறு பாட்டுக்களே கிடைத்துள்ளன!

XIII திருச்சிற்றம்பலம்  திருத்தாண்டகம்

நீற்றினையு நெற்றிமே லிட்டார் போலு
 நீங்காமே வெள்ளெலும்பு பூண்டார் போலுங்
காற்றினையுங் கடிதாக நடந்தார் போலுங்
 கண்ணின்மேற் கண்ணொன் றுடையார் போலுங்
கூற்றினையுங் குரைகழலா லுதைத்தார் போலுங்
 கொல்புலித்தோ லாடைக் குழகர் போலும்
ஆற்றினையுஞ் செஞ்சடைமேல் வைத்தார் போலும்
 அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—அணியாரூர்த் திருமூலட்டானனாரே, நீற்றினையு நெற்றிமே லிட்டார்; பிணியுடைய அடியாரைப் பிணிதீர்ப்பர்; பேசுவார்க் கெல்லாம் பெரியார்; ஞானப்பெருங் கடற்கோர் நாதர்; நாட்டகத்தே நடைபலவும் நவின்றார்; சொல்லாகிச் சொற்பொருளாய் நின்றார்; செல்கதிதான்கண்ட சிவனார்; அடியாரடிமையுகப்பார்; ஊழி பல கண்டிருந்தார்; கொன்றாகிக் கொன்றதொன் றுண்டார்; உருகாதார் உள்ளத்து நில்லார்; உகப்பார்தம் மனத்தென்றும் நீங்கார்; பிறப்பிடும்பை சாக்காடொன்றில்லார்; அருகாக வந்தேன்னை யஞ்சே லென்பார்; திசைய னைத்துமாய் அனைத்து மானார்; ஆயிரம் பேரார்; இவை முதலிய பல தன்மைகளாலறியப்படுபவர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) காற்றினையும் - எல்லாப்பொருள்பட ஐந்தனுருபாய் வந்தது; உருபு மயக்கம். நடந்தார் - நடத்துவித்தார் எனப் பிறவினையாக்கி உரைத்தலுமாம். கண்ணின்மேற் கண் ஒன்று - நெற்றிக்கண்; மேல் நோக்கியது.—(3) பிணியுடைய அடியாரைத் தீர்ப்பர் - நாயனாரது சரிதக் குறிப்பு.—(4) ஓடு - அயன் கபாலம். ஒருருவாய்த் தோன்றி உயர்ந்தது - சிவமாயிருந்து பின் சத்தி முதலிய வடிவமாய் விரிதல். நடை பலவும் நவின்றார் - உயிர்கள் பக்குவ பேதத்துக் கேற்றபடி அறிந்து ஒழுகும்படி பல சமய நெறிகளையும் அருளினர். "ஆறு சமயத் தவரவரைத் தேற்றுந் தகையன" (தேவா). ஞானப் பெருங் கடற்கோர் நாதர் - அவ்வாறு பல நெறியும் கற்பித்தாரேனும் எல்லையற்ற ஞானங்களுக்கெல்லாம் முதல்வர். காமரங்கள் - பண்களின் பொதுமை குறித்தது. ஆட்டு - திருமஞ்சனம்.—(5) கானம் - அழகு - மணம். ஆனத்து முன் எழுத்தாய் - ஆ என்னும் பசுக்களைக் குறிக்கும் எழுத்துக்கு முன் எழுத்தாகிய அகர வுயிர்போல. "அகர வுயிர்போ லறிவாகி யெங்கு, நிகரிலிறை நிற்கு நிறைந்து". ஆனத்து - ஆவின் எழுத்துக்கு ஆகுபெயர்; நான்கனுருபு தொக்கது. நின்றார் - தங்கி - பதிந்து - கிடந்தார். "நின்ற திருத்தாண்டகம்".—(6) சொல்லாகிச் சொற்பொருளாய் நின்றார் - சொல்லும் அதனாற் குறிக்கப்படும் பொருளும் என்னும் இருவகைப் பிரபஞ்சம். "உரையின் வரையும் பொருளி னளவும், இருவகைப் பட்ட எல்லை" (கோயினான் - மாலை). நாமனையும் - நாவிற் பொருந்த நவிலப்படும். "உண்ணின்ற நாவிற் குரையாடியாம்" தேவா.—(7) செல்கதி தான் கண்ட சிவனார்-உயிர்கள் செல்லும் கதிகளை வைத்தவர். உயிர்கள் காணும் பொருட்டுத் தான் கண்டவர் என்றலுமாம்.—(8) இந்திரம்-இந்திர லோகம். அந்தரத்த பொடி - திருநீறு. தூத்தூய - தூயவற்றுக் கெல்லாம் தூய்மை

யுடைய.—(9) பிண்டம் - உயிர் புகுந்த உடல். "புல்லிற் பனிபோற் புகுந்திவலைக் குட்படுங்கால்...காயக்கருக் குழியிற் காத்திருந்தும்" முண்டம் - நெற்றி.—(10) ஒரு காலத்து அதற்கேற்ப ஓருருவாகி நின்றாலும் ஊழிபலவும் கண்டு மேலும் நீண்டிருந்தவர். ஊநுகாதார்...நீங்கார் - மனமுருகி நையாதார் மனத்துள் நில்லார்; ஆயினும் தம்மை விரும்புவார் மனத்துள் நீங்காதுறைபவர். அநுகாக...என்பார் - நாயனாரை முன் ஆட்கொண்ட சரிதக் குறிப்பு. "தஞ்சே கண்டேன்...அஞ்சே லுன்னை யழைக்க வந்தேனென்றார்" (வாய்மூர்) என்பதும் கருதுக.—(11) நன்றாக நடைபலவும் - உயிர்கள் நன்மை பெறும்படி பல சமய நெறிகளையும். 4-வது பாட்டுப் பார்க்க. கோன்றாகிக் கோன்றதோன் றுண்டார் - கொன்றுண்பார்பாலும் கொல்லப்பட்டதன்பாலும் நின்றவர். கண்ணப்ப நாயனார் சரிதக் குறிப்பும் காணப்படும். அன்றாகில் - எல்லாப் பொருளும் எல்லாத் திசையும் ஆயினார் என்று சொல்வோம்; அவ்வாறு சொல்லாவிடில்.

XIV திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

திருமணியைத் தித்திக்குந் தேனைப் பாலைத்
தீங்கரும்பி னின்சுவையைத் தெளிந்த தேறற்
குருமணியைக் குழல்மொந்தை தாளம் வீணை
கொக்கரையின் சச்சரியின் பாணி யானைப்
பருமணியைப் பவளத்தைப் பசும்பொன் முத்தைப்
பருப்பதத்தி லருங்கலத்தைப் பாவந் தீர்க்கும்
அருமணியை யாரூரி லம்மான் றன்னை
யறியா தடிநாயே னயர்த்த வாறே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—திருமணி - தித்திக்கும் தேன் - தீங்கரும்பி னின்சுவை - பொன்னேபோற் றிருமேனி யுடையான் - முந்திய வல்வினைகள் தீர்ப்பான் - மறுமையும் இம்மையு மானான் என்பன முதலாக அறியப்படுகின்ற இறைவனை, ஆரூரில் அம்மானை, அறியாது அடிநாயேன் இத்தனை காலமும் மறந்தவாறு தான் என்னே!

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) (திரு)மணி - திரு - தித்திக்கும் - தேன் - தீங் கரும்பின் இன் சுவை - அடைமொழிகள் சிறப்புக் குறித்தன. பிறிதினியைபு நீக்கிய விசேடணம். குழல் - மொந்தை - தாளம் - வீணை - கொக்கரை - சச்சரி - இயங்களின் வகை. இவை இறைவனது திருக்கூத்துக் கியையப் பூதகணங்களால் முழக்கப்படுபவை. பாணியான் என்றது இலயம்படக் கைகொட்டியாடுதல் குறித்தது. அயர்த்தல் - மறத்தல் - "ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனை" (8-சூத்) என்பது சிவஞான போதம். ஆறே-ஆறுதான் என்னே! இரங்கற் குறிப்பு.—(2) பொன்னே போல் திருமேனி யுடையான் - "பொன்னார் மேனியன்" (தேவா); ஏகாரம் தேற்றம்.—(4) முந்திய வல்வினைகள் - பிராரத்த வினைகள். பழகிய வல்வினைகள் (6) என்பது மிது. மறுமையும் இம்மையும் ஆனான் - இம்மை மறுமைப்பயன்களைச் சேர்ப்பவன். அந்தரான்-தான் எல்லாவற்றையும் தாங்கித் தன்னைத் தாங்குவது பிறிதொன்று மில்லாதவன்.—(5) பிறநெறி - வேற்றுச்சமயங்கள்.—(6) பாவகன் - பாவிக்கப்படுபவன்.—(7) நாள்வாயும் - வாணாட்களைப், பேசாத நாட்களாகக் கழிக்காது, இறைவனைப் பேசுதலாற், பிறந்த நாட்களாக வாய்க்கச் செய்யும்.—(8) பரிதி - இங்கு உதிக்கும் ஒருகோடி ஞாயிற்றி னொளி குறித்தது.—(10) பெண்ணிரண்டு-உமையும் கங்கையும். ஆதி - பரை என்றலுமாம். பெண் - சத்தி. ஆண் - சத்தன். சத்தியை உடையவன். குறிப்பு:—"ஆரூரிற் கண்டடியே னயர்த்த வாறே" என்ற மகுடத்தையும்,

"அறியாதடி நாயே னயர்த்தவாறே" என்ற இதனையும் ஒப்பு நோக்குக. இத்திருப் பதிகம் முன்னர் அருளிச்செய்தது போலும்.

திருமூலட்டானம்

XV திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டான்கா
 ணேழ்கடலு மேழுலகு மாயி னான்காண்
வம்புந்து கொன்றையந்தார் மாலை யான்காண்
 வளர்மதிசேர் கண்ணியன்காண் வானோர் வேண்ட
அம்பொன்றான் மூவெயிலு மெரிசெய் தான்கா
 ணனலாடி யானஞ்சு மாடி னான்காண்
செம்பொன்செய் மணிமாடத் திருவா ரூரிற்
 றிருமூலட் டானத்தெஞ் செல்வன் றானே. 1

பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண்
 பெண்ணுருவோ டாணுருவ மாயி னான்காண்
மறப்படுமென் சிந்தைமரு ணீக்கி னான்காண்
 வானவரு மறியாத நெறிதந் தான்காண்
நறப்படுபூ மலர்தூபந் தீப நல்ல
 நறுஞ்சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்குந் திருவா ரூரிற்
 திருமூலட் டானத்தெஞ் செல்வன் றானே. 5

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—திருவாரூர்த் திருமூலட்டானத்து எம் செல்வன் தானே எமது பந்தவல்வினைநோய் தீர்த்திட்டான் - ஏழ்கடலும் ஏழ்மலையும் ஆயினான் - என்றும் பிறப்போடிறப்பில்லாதான் - என் சிந்தைமருள் நீக்கினான் - மாலுக்குச் சக்கரம் அருள் செய்தான்-நன்றருளித் தீதகற்றும் நம்பிரான் - வெள்ளேறு நின்றுலவு கொடியினான் - வஞ்சகர்பா லணுகாத மைந்தன் என்றித் திறங்களா லறியப்படுபவன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு.—(1) பந்தவல்வினைநோய் - பந்தம் செய்யும் வலிய வினையாகிய நோய்.—(2) அக்கு - எலும்பு வடம்.—(3) முகில்லனைய கண்டம் - உருவுவமம். பயனுவமுமாம்.—(4) கற்பகம் - வேண்டுவார் வேண்டுவதே ஈயும் தன்மை குறிப்பு.—(5) பிறப்போ டிறப்பென்று மில்லாதான் - பிறப்பிறப்பாதி யுயிர்க்குண மில்லாதவன் (சுலோக பஞ்). மறப்படும் - மறத்தினிற்படும். மறவியிற்பட்ட - மறந்த - அயர்த்த - என்றலுமாம். மருள் நீக்கினான் - நாயனார் சரித அகச்சான்று. வானவரும் அறியாத நெறி - முத்திநெறி. வாராவுலக நெறி. நாளும் வானோர் சிறப்போடு பூசிக்கும் - தேவருலகத்தினின்றும் இங்குப் போந்தமை கருதித் தியாகேசப் பெருமானைத் தேவர்கள் இங்குவந்து பூசித்து விழாவும் கொண்டாடும் குறிப்பு. சிறப்பு - விழா. பூசை - நித்தியம்.—(6) தருணேந்து சேகரன்-இளைய பிறையைச் சூடியவன். தருணம் - இளமை. இந்து - மதி. தருண இந்து - தருணேந்து என்றாயது வடமொழி முடிபு.—(7) தீதகற்றி நன்றருளும் என மாற்றி உரைத்துக் கொள்க.—(8) பொன் நலத்த - பொன்னிறம் வாய்ந்த.—(9) ஒளி வளர - ஒளி பொருந்த. உலகுக்கு ஒளி தருபவன். புண்டரிகக்கண்ணான்-செந்தாமரைக் கண்ணன். திருமால். பூவின்மேலைப் புத்தேள் - பிரமன். புராணன் - பழமை யுடையோன். குறிப்பு:—இத்திருப்பதிகமும், "ஆரூர்த் திருமூலட்டானனாரே" என்றதும், ஆரூர்ப் போற்றித் திருத்தாண்டகப் பதிகமும் திருவா[illegible]

XVI திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

இடர்கெடுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
வீண்டொளிசேர் கங்கைச் சடையா யென்றுஞ்
சுடரொளியா யுள்விளங்கு சோதீ யென்றுந்
தூநீறு சேர்ந்திலங்கு தோளா வென்றுங்
கடல்விட மதுண்டிருண்ட கண்டா வென்றுங்
கலைமான் மறியேந்து கையா வென்றும்
அடல்விடையா யாரமுதே யாதீ யென்று
மாரூரா வென்றென்றே யலறா நில்லே. 1

நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி ! போற்றி ! யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்றும்
ஆரூரா வென்றென்றே யலறா நில்லே. 3

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தமது நெஞ்சினை முன்னிலைப்படுத்தி நன்னெறியை உபதேசிப்பது போலக் கூறி, உலகரை நல்வழிப் படுத்தியது. நெஞ்சே! உனது துன்பங்கள் நீக்குதலை எண்ணுவாயாகில் "கங்கைச்சடையாய்! ஆரூரா! என்றென்றே அலறு !; அழியாது நிலைபெறு மாற்றை எண்ணுவாயாகில் நித்தலும் எமது பெருமானுடைய கோயில்புக்குச் சரியை நெறியில் நின்று போற்றி ஆரூரா என்றென்றே கதறு !; ஆரூரானை ஏத்துதலே புண்ணியமும் நன்னெறியுமாவது. பாவங்களைப் பாற்றிப், பரகதிக்குச் செல்லும் பரிசினை வேண்டினால் "உற்றவரும் உறுதுணையும் நீயே ; உன்னையல்லா லொருதெய்வ முள்கேன்; ஆரூரா" என்றே போற்று; "ஆரூர் எம் ஐயா! கற்பகமே!" என்றென்றே கதறு நிற்பதுவே உஞ்சுபோக வழியாவது. ஆரூரானை ஏத்தினால் பாசத்தைப் பற்றறுக்கலாகும் : அவனை நாடோறும் நவின்றேத்துவாயாக!

பதிகப் பாட்டுக் குறிப்பு—(1) இடர் - பிறவித்துன்பம் ; இம்மையில் வருவன. மேல்வரும் *பாட்டில் தீவினைகள் என்றது அவற்றுக்குக் காரணமான முன்னை வினைகளை.—(2) புரந்தரான் - இந்திரன். தோள் துணித்தது-தக்கன் வேள்வியிற் செய்தது. "இந்திரனைத் தோணெரித்து" (திருவாசகம்).—(3) இத்திருப்பாட்டுச் சிவநெறி நான்கனுள் முதலாவதாகிய சரியையினை நன்கு விளக்குவது. " ஆமாறுன் திருவடிக்கே" என்ற (சதகம் - 14) திருவாசகமும் காண்க. இதுவே தாசமார்க்கம் - அடிமைநெறி-எனவும்படும். "தாசமார்க்கம் சாற்றில்" (8 - 19) என்ற சிவஞான சித்தியாரும் பார்க்க. இப்பாட்டினை ஓதிப் பயின்று இதன்படி ஒழுகிவரின் யாவரும் சிவாநந்தப் பெரும்பேறு பெறுதல் திண்ணம்.—(4) புண்ணியம் - நன்னெறியால் வருவது. நுந்தாத - கெடுதலில்லாத. தூண்ட வேண்டாத என்றலுமாம். " நுந்தாத வொண்சுடரே " (நம்பிகள்).—(5) இழைத்த நாள் - ஒருவனுக்கு அமைக்கப்பட்ட ஆயுள். கடப்பதன்று - ஆயுள் எல்லையினை யாராலும் கடக்கமுடியாது. ஆதலின் அந்நாட்கள் செல்லுமுன் கூறு. கடப்பதென்றல் - கூறு என்று பாடங்கொண்டு காலனைக்

கடத்தல் வேண்டினுல் கூறுக என்றுரைப்பாருமுண்டு.—(6) சே - இடபம்.—(7) பாற்றுதல் - அழித்தல்.—(8) உய்ந்து என்பது உஞ்சு என வந்தது.—(9) தேசத்தொளி விளக்கு - உலகில் விளக்குகளுக் கெல்லாம் ஒளி தருபவன். நேசம் - அரனிடத்தும் அடியாரிடத்தும் அன்பு.—(10) போது போக்கி - காலத்தை வீணே கழித்து. அடி என்தலைமேல் வைத்தாய் - நாயனுருக்குத் திருநல்லூரில் இறைவர் திருவடி சூட்டிய சரிதத்தின் அகச்சான்று. குறிப்பு :—இப்பதிக முழுமையும் நாடோறும் அன்பர்கள் பாராயணஞ் செய்தல் நன்மை தரும்.

XVII திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

ஒருவனு யுலகேத்த நின்ற நாளோ
வோருருவே மூவுருவ மான நாளோ
கருவனுய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனுய் மண்ணும்விண்ணுந் தெரித்த நாளோ
மான்மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகந்
திருவினுள் சேர்வதற்கு முன்னே பின்னே
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 1

பாடகஞ்சேர் மெல்லடிநற் பாவை யாளு
நீயும்போய்ப் பார்த்தனது பலத்தைக் காண்பான்
வேடனுய் வில்வாங்கி யெய்த நாளோ
விண்ணவர்க்குங் கண்ணவனுய் நின்ற நாளோ
மாடமொடு மாளிகைகள் மல்கு தில்லை
மணிதிகழு மம்பலத்தே மன்னிக் கூத்தை
யாடுவான் புகுவதற்கு முன்னே பின்னே
வணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 3

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—திருவாரூரில் இறைவர் வெளிப்பட எழுந்தருளிய காலத்தின் தொன்மையும், சிருட்டியின் அநாதி முறைமையும் குறித்தது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஒருவன் - சிவம். ஒருருவே மூவுருவமான - உருவத் திருமேனி கொண்ட முதல்வன் பிராகிருத புவனத்திலுள்ள அரனரியயன் வடிவங்கட்கு மூலமாகிய முத்தொழிற் றிருமேனி தாங்கியிருத்தலைக் குறித்தது. "மூவிலை யொருதாட் சூல மேந்துதல், மூவரும் யானென மொழிந்த வாறே" (ஒற்றி - ஒருபா - 6). ஆளுடைய பிள்ளையாரது நட்டபாடை - திருவிராகம் - திருச்சிவபுரம் 1, 2, 3 பாட்டுக்கள் பார்க்க. கருவன் - சங்கார மூர்த்தி. மருவன் - பொருந்துபவன். சிருட்டி செய்தலைக் குறித்தது. திரு - சிற்சத்தி. முன்னே பின்னே - திருவாரூரின் பழைமை குறித்து நின்றது. அநாதி என்றபடி.—(2) வானவரை வலியமுதம் ஊட்டி அந்நாள் நிலைபேறு பெறுவித்து என்றது கற்பாந்தத்தில் தேவர்களுக்கு மூவாப்பதந் தந்தது. கடல் நஞ்சுண்ட செய்தி ஒரு காலத்து நிகழ்ந்த செய்தி. அது பின்னர், அலைசாமே அலைகடனஞ் சுண்டநாளோ என்றதனல் உணர்த்தப்பட்டது. அலைசாமே - வருந்தாமல்.—(3) மாடமோடு மாளிகைகள் மல்கு - "செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கி" (கோயில் - குறிஞ்சி - பிள்ளையார்.) மாடம் - இறைவனது பொன்னம்பல மேரு. மாளிகைகள் - ஏனைத் தில்லைவாழந்தணர்களின் இருக்கைகள். கூத்தை ஆடுவான் புகுவதற்கு - புண

ருற்பவம் நிகழ்த்தத் தொடங்குதற்கு. "வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" (திருவிருத்தம்).—(4) ஓங்கி உயர்ந்து எழுந்து நின்ற - ஓங்குதல் - உயர்தல்-எழுதல்-உலகங்களைப் படைக்கும்படி நினைத்தலும் வெளிப்படுதலும் எழுவித்தலும் குறித்தன. நின்ற - கலப்பால் நிறைந்த. நின்ற திருத்தாண்டகம் பார்க்க. ஒருகம்போல் ஏழுகமாய் - எல்லாக் காலமுமாகி. நீர் நீங்கிய - என்க. நீர் - தனது நீர்மை. இதனை நெடுமால் என்பதனோடுங் கூட்டுக.—(5) பாலனாய் வளர்ந்திலாப் பான்மை - ஒரு காலத்துத் தோன்றுமலும் மாறுமலும் நிலைத்து உள்ள தன்மை, அங்கங்கே - "உயிர்க்குயிரா யங்கங்கே நின்றான்" (பிள்ளையார் - தேவா). முற்றும்மை தொக்கது. இத்தன்மை திருவிளையாடற் புராணத்துட் பல சரிதங்களிலும் காண்க. நெருநல் - இன்று - நாளை - இறப்பு நிகழ்வு எதிர்வு என்ற முக்காலமும்.—(6) திறம்பலவும் வழிகாட்டிச் செய்கை காட்டி - "மாலுங் காட்டி நெறிகாட்டி வாரா வுலக நெறியேறக், கோலங் காட்டி யாண்டானை" (திருவா). அறம்பல - சிவதன்ம நெறிகள்.—(7) நிற்பன - நடப்பன - அசரம் சரம் ஆகிய பிறப்புக்கள். நீயே யாகிக் கலந்து - இறைவன் உலகெலாம் அவையேயாய்க் கலந்து நிற்குமியல்பு. காரணத்தால் - உலகங் காத்தற் பொருட்டு.—(8) பாதுகாத்து - உயிர்களை வாடாமற் காத்து.—(9) பொருள் காணற் கரிய திருப்பாட்டுக்களுள் ஒன்று.—(10) சண்டி - சண்டேசர்.

பரமர் திருவிருத்தம் (1492):—

XVIII திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

வேம்பினைப் பேசி விடக்கினை யோம்பி வினைபெருக்கித்
தூம்பினைத் தூர்த்தங்கோர் சுற்றந் துணையென் றிருத்திர்தொண்டீர்!
ஆம்பலம் பூம்பொய்கை யாரூ ரமர்ந்தா னடிநிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிச் சலமின்றித் தொண்டுபட் டுய்ம்மின்களே. 1

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்தரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாத னடித்தொண்ட னம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே. 2

துடிக்கின்ற பாம்பரை யார்த்துத் துளங்கா மதியணிந்து
முடித்தொண்ட ராகி முனிவர் பணிசெய்வ தேயுமன்றிப்
பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர் பாதம் பொறுத்தபொற்பால்
அடித்தொண்ட னந்தியென் பானுள னாரூ ரமுதினுக்கே. 3

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தொண்டர்களை நோக்கி நல்வழியை உபதேசித்தது. தொண்டர்களே! ஆரூர்ப்பெருமான் திருவடிக்கீழ்ச் சலமின்றித் தொண்டுபட்டுய்ம்மின்! அவரருள்பெற்றுத், தொண்டர்க் குரையாணிபோல் விளங்கி, நாடறிய நீரால் விளக்கேரித்த நமிநந்தியாரது அடிமைத் திறத்தினைப் போற்றியுய்ம்மின்! குறிப்பு:-நமிநந்தியடிகள் திருத்தொண்டின் நன்மைப் பான்மையினால் பரமரைப் போற்றும் திருப்பதிகத்தினுள் அவரை வைத்துப்பாடிய பதிகம். 1492 - ல் ஆசிரியர் இதனைத் தேற்றம்பட எடுத்துக் காட்டினர். இப்பதிகத்துள் ஏழு பாட்டுக்களே கிடைத்துள்ளன!

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வேம்பினைப்பேசி - வேம்பு - இங்கு வேம்பு போன்று கைப்புடையனவாய், அறிஞராலும் நூல்களாலும் வெறுக்கப்பட்ட சொற்களைக் குறித்தது. விடக்கினை - மாமிச பிண்டமாகிய உடலை. வினை பெருக்கி - ஆகா

மிய கன்மங்களை ஏறச்செய்து. "பொய்ம்மையே பெருக்கி" (திருவா). தூம்பு-வயிறு - "தூராக் குழியைத் தூர்த்து" (11-ம் திருமுறை. திருவிடை - மும் -) இருந்தீர்-இருக்கவேண்டா என்பது குறிப்பு. சாம்பல் - திருநீறு. சலம்-வஞ்சனை.— (2) ஆராய்ந்து - ஆராய்வோமாயின்; அடித்தொண்டர் ஆணிப்பொன் - திருத்தொண்டினீர்மையை அறியும் பொன் உரையாணி போன்றார். இவ்வாறு நமிநந்தி நாயனாரைத் திருநாவுக்கரசர் பாராட்டிய திறத்தை ஆசிரியர் "நீறு புனைவா ரடியார்க்கு நெடுநா ணியதி யாகவே, வேறு வேறு வேண்டுவன வெல்லாஞ் செய்து மேவுதலால், ஏறு சிறப்பின் மணிப்புற்றி லிருந்தார் தொண்டர்க் காணியெனும், பேறு திருநா வுக்கரசர் விளம்பப் பெற்ற பெருமையினார்" (நமிநந்தியார். புரா. 31) என்று தேற்றம்பெற விளக்கியருளினர். அகத்தடக்கி - தியாகேசரைத் தம் அகத்துள் அகலாது வைத்து. "அம்பலத், தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே" (தேவா). "சிக்கெனப் பிடித்தேன்" (திருவா). பாருர்பரிப்ப - உலகமெல்லாம் கொண்டாட. பங்குனி உத்தரம் பாற்படுத்தான் - நமிநந்தியடிகள் விளக்கிய திருவருட் பேறு கண்ட சோழ அரசர் அவர் விரும்பி யருளியவாறே அவரது திருத்தொண்டின் நன்மைபற்றிப் புற்றிடங்கொண்ட பெருமானுக்கு அமுதுபடி முதலிய நித்திய நிபந்தங்களையும், வீதி விடங்கப்பெருமானுக்குப் பங்குனி உத்தரத் திருவிழாச் சிறப்பாகிய நைமித்திக நிபந்தமும் வேதாகமநூல் விதிவிளங்க அமைத்தான் என்பது வரலாறு. (நமிநந்தியார் புராணம் 19, 20 பாட்டுக்கள்.) பாற்படுத்தல் - அரசரையும், அவ்வழியே உலகரையும் வழிப்படுத்துதல். நாருர் நறுமலர் நாதன் - திருவாரூர்ச் சிறப்புக்களுள் ஒன்றாகிய செங்கழுநீர் மலரை நாளும் அணியும் வீதிவிடங்கர். அடித்தோண்டன் நம்பி நந்தி - அடித் தொண்டன் - 4-வது பாட்டில் விளக்கப்படுவது. நம்பி நந்தி - என்பது நமிநந்தி என வழங்குவது போலும். நீரால்...நாடறியு மன்றே - வரலாறு அவர் புராணத்துக் காண்க. இவ்வருட்செயல் திருவாரூர் அரனெறித் திருக்கோயிலில் நிகழ்ந்தது. இது பூங்கோயிலினுள் தென்கீழ்த் திசையில் உள்ள மேற்கு நோக்கிய தனியாலயம். இதனுள் நமிநந்தியாரது திருவுருவம் கையில் விளக்கேந்தியபடியாக வைத்து வழிபடப் பெறுகின்றது. பல நாளும் செய்தமையால் நீணுடறியும் என்றார். அன்றே - உறுதிப் பொருள் தந்தது. ஏகாரம் தேற்றம். "நாட்டாரறிய" (நமிநந்தியார் புரா. 33) என்பது பார்க்க.— (3) படிமக்கலம் - கண்ணாடி. பெரியோர்பாற் கொண்டுசெல்லும் கையுறை என்றலுமாம். இப்பாட்டு எளிதில் பொருள் விளங்காதவற்றுளொன்று.—(4) முனிவர் - இங்குச் சிவசாரூபம் பெற்றுப் பணிசெய்யும் கணங்களைக் குறித்தது. முடித் தொண்டர் என்றது பிறரால் தொழப்படும் பெருமைத் தொண்டர் என்ற பொருளில் வந்தது. அடித்தோண்டன் - அடியார்க்கடியவன். நந்தி - நமிநந்தி. ஆரூர் அமுது - ஆரூர்ப் பெருமான்.—(5) கரும்பு பிடித்தவர் - கரும்புவில் ஏந்திய மன்மதன். கோடலியா லிரும்பு பிடித்தவர் - சண்டேசர். கரும்பு பிடித்தவர் காயப்பட்டார் என்றும், இரும்பு பிடித்தவர் இன்புறப்பட்டார் என்றும் முரண் அணிச் சுவைபடக் கூறியபடி. இன்புறப் படுதல் - நித்தியானந்தமாகிய சிவானந்தம்பெற வைத்தல்.—(6) நந்தி - நமிநந்தி. புறப்படில் - தம்முடனில்லாவிடில். தவளப் பொடியணிவார்க்கு - நீறணியும் தொண்டர்க்கு. செல்வ மெய்தினராயினும் திருவாரூரினுள் ளிருந்தேயும், இருள் கொண்டதே யொக்கும் நந்தியில்லாவிடத்து?—(10) சிறுகாலை சங்கொலிப் பித்திடுமின் - திருப்பள்ளி யெழுச்சியில் சங்கம் ஒலிக்கும் செயல் குறித்தது. சிறுகாலை - வைகறை. "இயம்பின சங்கம்" (திருவா). அழலில் குங்கிலியப் புகைக் கூட்டுக் காட்டி - தூபம் இட்டு. இருபது தோள் அந்த உலம் வைத்தவன் - உலம்-

திரண்ட கல். தோள்களைக் கல்லின் அடியில் வைத்த இராவணன். திரண்ட கல் போன்ற தோள் வைத்தவன் என்றலுமாம். அங்குலி - விரல். அடித் தாமரை என்னை ஆண்டனவே; அவற்றைப் போற்றிப் புகை காட்டிச் சிறுகாலை சங்கொலிப் பித்திடுமின் என்று கூட்டி உரைக்க.

திருவாரூர் அரனெறி

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

எத்தீ புகினு மெமக்கொரு தீதிலை, தெத்தே யெனமுரன் றெம்மு ளுழிதர்வர்
முத்தீ யனையதோர் மூவிலை வேல்பிடித், தத்தீ நிறத்தா ரரனெறி யாரே. 1
வீரமும் பூண்பர் விசயனொ டாயதொர், தாரமும் பூண்பர் தமக்கன்பு பட்டவர்
பாரமும் பூண்பர் பைங்கண் மிளிரர, வாரமும் பூண்ப ரரனெறி யாரே. 2
பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை, மாலையுங் கண்ணியு மாவன சேவடி
காலையு மாலையுங் கைதொழு வார்மன, மாலய மாரூ ரரனெறி யார்க்கே. 8

முடிவண்ணம் வானமின் வண்ணந்தம் மார்பின்,
பொடிவண்ணந் தம்புக ழூர்தியின் வண்ணம்
படிவண்ணம் பாற்கடல் வண்ணஞ் செஞ்ஞாயி
றடிவண்ண மாரூ ரரனெறி யார்க்கே. 9

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆரூர் அரனெறியார் எம்முள் உழிதர்வர்; எத்தீ புகினு மெமக்கொரு தீதிலை; அவர் அன்பு பட்டவர் பாரமும் பூண்பர்; அவரை நாட வல்லார் வினைவீட வல்லார்; தொழுவார் மனமே யாலயமாக அவர் வீற்றிருப்பர்; அவர் திருவடி செஞ்ஞாயிற்றின் வண்ணம்; அவர் அருள் மன்னர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) தீ - தீமை; உழிதர்வர் ஆகலின் தீதிலை என்க. எத்திசை - என்பதும் பாடம். உழிதருதல் - எவ்வாற்றானும் நீங்காது இருத்தல்.—(2) அன்பு பட்டவர் பாரம் - அன்பர்க்கு வரும் இன்பத் துன்பங்கள்.—(3) துஞ்சாத கண்ணார் - கண் இமைத்தலில்லாத தேவர்கள். "புத்தமிர்த போகம் புசித்து விழி யிமையாத பொன்னாட்டும்" (தாயுமானார்).—(5) துற்றவர் - ஊனுண்டவர். கோவணம் தற்றவர் - கோவணம் உடுத்தவர். ஒளி - சிவஞானவொளி.—(7) வீட் - வீட்ட.—(9) முடி - சடை. பொடி - திருநீறு. ஊர்தி-விடை.—(11) பொருள் மன்னன்- குபேரன். புட்பகம் - குபேரனது தேர். மருள் மன்னன் - இராவணன். திக்குவிசயஞ்செய்து குபேரனது புட்பகத் தேரை இராவணன் பறித்துக் கொண்டனன் என்பது வரலாறு.

XIX திருவாரூர்த் திருமூலட்டானமும் அரனெறியும்

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

பொருங்கைமத கரியுரிவைப் போர்வை யானைப்
பூவணமும் வலஞ்சுழியும் பொருந்தி னானைக்
கரும்புதரு கட்டியையின் னமிர்தைத் தேனைக்
காண்பரிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை
யிருங்கனக மதிலாரூர் மூலட் டானத்
தெழுதருளி யிருந்தானை யிமையோ ரேத்தும்
அருந்தவனை யரனெறியி லப்பன் றன்னை
யடைந்தடியே னருவினைநோ யறுத்த வாறே. 1

நந்திபணி கொண்டருளு நம்பன் றன்னை
நாகேச் சரமிடமா நண்ணி னானைச்
சந்திமல ரிட்டணிந்து வானோ ரேத்துந்
தத்துவனைச் சக்கரமாற் கீந்தான் றன்னை
யிந்துநுழை பொழிலாரூர் மூலட் டான
மிடங்கொண்ட பெருமானை யிமையோர் போற்றும்
அந்தணனை யரனெறியி லப்பன் றன்னை
யடைந்தடியே னருவினைநோ யறுத்த வாறே. 2

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கரியுரிபோர்த்தானை - பூவணம் முதலிய தலங்களில் விளங்க எழுந்தருளியவனை, திருவாரூர்த் திருமூலட்டானத்துப் பொருந்தி எழுந்தருளியிருந்த பெருமானை, அரனெறியிலப்பனை, அடியேன் அடைந்து அருவினை நோய் அறுத்தவாறு தான் என்னே!; அற்புதமாவது!. குறிப்பு :—இத்திருப்பதிகப் பாட்டுக்கள்தோறும் வெவ் வேறு ஒன்றிரண்டுதலங்களிலும் திருவாரூர்த்திருமூலட்டானத்திலும் இறைவர்விளங்க எழுந்தருளியிருக்கும் தன்மையினையும், அவரே அரனெறியில் தேற்றம்பட விளங்கு வதனையும் உடன்கூறி யருளுதல் காண்க. இதனை ஆசிரியர் "தேன்மருவுங் கொன் றையார் திருவாரூர் அரனெறியிற் றிகழுந் தன்மை, யானதிற மும்போற்றி" (1492) என்று எடுத்துக் காட்டினர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கட்டி - அமிர்து - தேன் - உவமையாகுபெயர். காண்பரிய - பசுபோதத்தாற் காண்டற்கரிய. அருவினைநோய்-பழவினையாகிய நோய். வினையும் அதனால் வந்த நோயும் என்றலுமாம்.—(2) காளத்தி கயிலாயம்-காளத்தியும் கயிலை எனப்படும். (கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி). காளத்தியிலிருந்தபடி ஆசாரி யர் பெருமக்கள் மூவரும் திருக்கயிலையை நினைந்தனர் என்பது வரலாறு. அற்புதன் - இன்னனென்று அறிய வாராதவன்.—(3) மெய்ஞ்ஞான விளக்கு - மெய் - சத்து - என்றும் உள்ளது - அழியாதது. ஞானம் - சித்து - அறிவின் நிறைவு. விளக்கு - அது கொண்டு உலகினை விளங்கத் தேற்றுவது.—(4) நந்தி - நமிநந்தி. இந்து - மதி.—(5) சோதிலிங்கம் - இயல்பாய் ஒளிவிட்டு விளங்கும் இலிங்கத் திரு மேனி. விடக்கு - மாமிசம். அதனாலாய உடல். ஆகுபெயர்.—(6) பொருள்களும் அவற்றைக் காட்டும் சொற்களும் ஆயினான். சொல், பொருள் என்ற இருவகை உலகமும். மருள்...மருந்து - மருளை மாற்றும் மருந்துபோல்பவன். மருள் - பொரு ளல்லவற்றைப் பொருள் என்று உணர்தற் கேதுவாகிய மயக்கம். இருள் - நிழல்.—(8) பாலன் - உபமன்னியு முனிவர். பவளம் ஈன்ற ஆலவன் - பவளம் போலக் காய்க்கும் ஆலின்கீழ் எழுந்தருளியவன்.—(9) இப்பாட்டில் பின் இரண்டடி கள் சிதலரித் தொழிந்தன!. மாணிக்கச் சோதி - இயல்பாகிய ஒளி.—(10) பகல வன் - ஞாயிறு. படிறன் - பல் உகுத்த செயல் குறித்து நின்றது. "பன்மையே பேசும் படிறன்" (தேவா). இருளானன் - விளங்காது நிற்பவன்; அகல்வனை என்பதை விளக்கி நின்றது.

1494. மேவுதிரு வாதிரைநாள் வீதிவிடங் கப்பெருமாள் பவனி தன்னில்
தேவருடன் முனிவர்கண்முன் சேவிக்கு மடியார்க ளுடன்சே வித்து,
மூவுலகுங் களிகூர வரும்பெருமை முறைமையெலாங்கண்டுபோற்றி,
நாவினுக்குத் தனியரசர் நயக்குநா ணம்பர்திரு வருளினாலே ௨௨ ௪

1495. திருப்புகலூ ரமர்ந்தருளுஞ் சிவபெருமான் சேவடிகள் கும்பிட் டேத்தும்
விருப்புடைய வுள்ளத்து மேவியெழுங் காதல்புரி வேட்கை கூர[துப்
வொருப்படுவார்திருவாரூ ரொருவாறு தொழுதகன்றங்குள்ளம்வைத்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் பதிபிறவும் பணிந்து போந்தார்.

1494. (இ - ள்) மேவு...தன்னில் - பொருந்தும் திருவாதிரைத் திருநாளில் வீதிவிடங்கப் பெருமான் எழுந்தருளும் திருவுலாவில்; தேவருடன்...சேவித்து- தேவர்களுடனே முனிவர்களுமாகிய கூட்டத்தில் அவர்கட்கெல்லாம் முன்னே நின்று சேவிக்கும் அடியார்களுடனே கூடிச் சேவித்து; மூவுலகும்...போற்றி - மூன்றுலகங்களும் களிமகிழ்ச்சி யெய்திட வருகின்ற பெரும் முறைகளையெல்லாம் தான் கண்ணாரக் கண்டு துதித்து; நாவினுக்குத் தனியரசர்...அருளினாலே - ஒப்பற்ற திருநாவுக்கரசர் விரும்பி வாழும் நாட்களில் இறைவரது திருவருளினாலே, ௨௨௯

1495. (இ - ள்) திருப்புகலூர்...வேட்கைகூர-திருப்புகலூரில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது சேவடிகளைக் கும்பிட்டுப் பரவுகின்ற விருப்பத்தைக் கொண்ட திருவுள்ளத்தில், பொருந்தி எழுகின்ற காதல் இடைவிடாது பெருகுகின்ற வேட்கையாக ஓங்க; ஒருப்படுவார்-அவ்வாறே செல்வதற்கு மனம் ஒருப்படுவாராய்; திருவாரூர்... வைத்து - திருவாரூரை ஒருவாறாகத் தொழுது நீங்கித் தம் கருத்தை அங்குத் திருவாரூரிலே வைத்து; பொருப்பரையன்...போந்தார் - மலையரசன் பாவையாராகிய பார்வதி யம்மையாரை இடப்பாகத்தில் வைத்த பெருமான் எழுந்தருளிய பிற பதிகளையும் பணிந்து சென்றனர். ௨௩௦

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1494. (வி - ரை) மேவு - சிறப்புக்கள் பொருந்தும். அச்சிறப்புக்களை, மேல் தேவருடன் முனிவர்கள் முன் சேவிக்கும் அடியார் என்றும், மூவுலகும் களிகூர என்றும் விரிக்கின்றார். இச்சிறப்புக்களை யெல்லாம் நாயனார் தமது திருவாக்கினால் "முத்து விதானம்" என்ற திருப்பதிகத்தினுள் விரிக்கின்றமை பின்னர்க் காணலாம். இத் துணையும்பெற மேவு என்றார்.

திருவாதிரை நாள் - மார்கழித் திருவாதிரைத் திருவிழா. பவனி - இறைவர் தமது குழாங்களுடன் திருவீதியில் போதும் திருவுலா.

தேவருடன் முனிவர்கள் முன் சேவிக்கும் அடியார்கள் - "தொண்டர்கள் பின் உம்பர்குழாம் மல்குதிருக் காளத்தி" (திருஞான - புரா.) முதலியவை பார்க்க. திருத் தொண்டர் கூட்டத்தின் சிறப்பினால் மிக்கது திருவாரூர் என்பதும் குறிப்பு.

நாவினுக்குத் தனியரசர் - "நாவுக்கரசு"என்று இறைவர் அளித்த திருப்பெயரை மேலும், தனி - தனக்கொப்பற்ற - என்று ஆசிரியர் விளக்கஞ் செய்தபடி. "மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை" என்ற ஆளுடைய பிள்ளையாரது திருவாலவாய்த் தேவாரத்தினை "மங்கையர்க்குத் தனியரசி" என்று (மங்கை - புரா - 1) மேல் விளக்கம் செய்வதும் காண்க.

நயத்தல் - பெருவிருப்பினோடு ஒழுகிடுதலும், அதனால் மகிழ்ச்சி பெருகுதலும். "நாயகன் கண்ணயப்பால்" (சித்தி - 1 - 52) என்ற விடத்து நயப்பு - மகிழ்ச்சி என்றுரைத்தது காண்க.

திரு அருளினாலே - வேட்கைகூர - என மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. 229

1495. (வி - ரை) விருப்பு - காதல் - வேட்கை - இவற்றின் விளைவுகள் பற்றி முன் உரைத்தவை நினைவுகூர்தற்பாலன. இவை திருவருளினால் விளைந்தன என்பது

குறிப்பு. என்னை ? இவற்றின் காரணமாக நாயனார் திருப்புகலூரை இறைஞ்சுதலும், அங்கு ஆளுடைய பிள்ளையாருடன் கூடி எழுந்தருளியிருந்து அதன் தொடர்பாகப் பல காலம் இவ்விரு பெரு மக்களும் ஒருங்குசென்று உலகுக்குச் சைவ நெறி பாலிப்பதும், திருவீழிமிழலையிற் சிவனடியார்களுக்குச் சோறிட்டுக் காப்பதும், திருமறைக்காட்டில் இறைவரைத் தமிழ் வேதத்தால் நேர்காணச் செய்வதும், பின்னர் அங்கு நின்றும் தொடர்ந்துகொண்டு ஆளுடைய பிள்ளையாரது திருவவதார உண்மைகளாகிய பர சமய நிராகரிப்பும் திருநீற்றின் ஆக்கமும் பாண்டி நாட்டின்கண் நிகழ்வதும், நாயனாரது திருக்கயிலாய யாத்திரை நிகழ்வதும் கூடின ஆகலான் என்க. இத்திருவருட் குறிப்பே பின்னர் இறுதியில் நாயனார் திருப்புகலூரிற் சேர்ந்து இறைவருடைய திருவடி நீழலில் சிவானந்த ஞான வடிவேயாகி அமர்ந்திருக்கப் பெறும் நிகழ்ச்சியினையும் கூட்டுவதாயிற்று என்பதும் கொள்ளப்படும்.

ஒருப்படுதல் - ஒன்றுபட்ட மன எழுச்சி சேறல்.

ஒருவாறு தொழுதகன்று - பிரியமாட்டா நிலைமையால் ஒருபடியாகத் துணிந்து.

உள்ளம் வைத்து - மனத்தைத் திருவாரூரினிடமாகப் பதித்து. நாயனாரது திருமேனி மட்டில் ஒருவாறு ஆரூரினின்றும் பிரிந்ததேயன்றித் திருஉள்ளம் அங்கு நின்றது என்னும்படி. இது "முத்து விதானம்" என்னும் பதிகத்தாலும், பிறவாற்றாலு மறியப்படும். திருவாரூர் தொழுதவர் அங்கு மனம் வைக்காமல் நீங்க வியலாது என்பதனை ஆளுடைய பிள்ளையார், நம்பிகள், சரித நிகழ்ச்சிகளாலுமறிக.

பதி பிறவும் - இவை திருப்பள்ளியின் முக்கூடல், திருவிற்குடி, திருப்பனையூர் முதலாயின. 230

திருப்பள்ளியின் முக்கூடல்

திருச்சிற்றம்பலம்  திருத்தாண்டகம்

ஆராத வின்னமுதை யம்மான் றன்னை யயனொடுமா லறியாத வாதி யானைத்
தாராரு மலர்க்கொன்றைச் சடையான் றன்னைச் சங்கரனைத் தன்னொப்பா ரில்லா தானை
நீரானைக் காற்றானைத் தீயா னானை நீள்விசும்பா யாழ்கடல்க ளேழுஞ் சூழ்ந்த
பாரானைப் பள்ளியின்முக் கூட லானைப் பயிலாதே பாழேநா னுழன்ற வாறே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆராத இன்னமுது, நினைவார் நெஞ்சிற் படிந்தான், தன்னடியே சிந்தை செய்வார் வருந்தாமைக் காப்பான், நெதியாளன் தோழன், கலந்துருகி நைவார்தந் நெஞ்சினுள்ளே பானவன் என்பன முதலாக அறியப்படுகின்ற பள்ளியின் முக்கூடலின்கண் எழுந்தருளிய இறைவரைப் பயிலாது பாழில் என் வாணாள் கழித்த வாறுதான் என்னே !

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஆர்தல் - நிறைதல். ஆராத - என்றும் நிறைவு பெறாத. பயிலுதல் - மனம் வாக்குக் காயங்களால் வழிபட்டு அவ்வொழுக்கத்துள் நிலைபெறுதல்.—(2) சாமம் - சாம கானம்.—(3) பொன்வரையே போல்வான் - "பொன்னார் மேனியன்". மேலான் - மேல் எழுந்தருள்பவன். ஆதியன் - முதல்வன். ஆதிரை நன்னாள் - சிவனுக்குகந்த நாள் ஆதலின் நன்னாள் என்றார். ஆளுடைய பிள்ளையார் அவதரித்ததும், அவரமுது ஞானப்பாலுண்டதும், பரவையார் அவதரித்ததும் இந்நாளாகும். நரசிங்க முனையரைய நாயனார் ஆதிரை நாள் தோறும் அடியாரை உபசரித்துப் பொன் கொடுத்துப் பேறுபெற்றார்.—(4) தென்றிசைக்கே செல்ல - இறக்க என்னும் பொருளில் வந்தது.—(5) மகிழ்

போற் கண்டம் - உருவும் பயனும் பற்றிவந்த உவமம். பாவம் - அல்லல் நோய் வினை-நல்குரவு - காரண காரியமாய் வருவன. அல்லல் செய்யும் நோய். படிந்தான்-வெளிப்பட நிறைந்தான்.—(6) சிரம் - இங்கு ஆகுபெயராய்க் கபாலம் குறித்து நின்றது.—(7) நேதியாளன் - குபேரன். நதி-கங்கை; நல்லம்-சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் 34 - வது தலம்.—(8) குறைந்தடைந்து-"குறைந்தடையும் நன்னெறியில்" (1310). கொண்டார் - பற்றுகக் கொண்டார்.—(9) வளவி - சிரம். கலந்து - நெஞ்சிற் கலத்தலினால். பானவன்-பரவினவன். நிறைவானவன்.—(10) பேர்-இராவணன் என்ற பெயர். படுத்தான் - படச்செய்தான் - அழித்தான்.

பதி பிறவும் என்றதில் கருதப்பட்ட திருவிற்குடி, திருப்பனையூர் முதலிய தலங்களில் நாயனார் அருளிய தேவாரங்கள் கிடைத்தில! சிதலரித் தொழிந்தன போலும்.

1496. அந்நாளி லாளுடைய பிள்ளையார் திருப்புகலி யதன்க ணின்றும்[வார்
பன்னாகப் பூணணிவார் பயின்றதிருப் பதிபலவும் பணிந்து செல்
புன்னாக மணங்கமழும் பூம்புகலூர் வந்திறைஞ்சிப்பொருவில் சீர்த்தி
மின்னாரும் புரிமுந்நூன் முருகனார் திருமடத்தின் மேவுங் காலை,

1497. ஆண்டவர செழுந்தருளி யணியாரூர் மணிப்புற்றி லமர்ந்து வாழும்
நீண்டசுடர் மாமணியைக் கும்பிட்டு நீடுதிருப் புகலூர் நோக்கி [டும்
மீண்டருளி னாரென்று கேட்டருளி யெதிர்கொள்ளும் விருப்பி னாலே
ஈண்டுபெருந் தொண்டர்குழாம் புடைசூழ வெழுந்தருளி யெதிரேசென்றார்.

1496. (இ - ள்) வெளிப்படை. அந்நாளில், ஆளுடைய பிள்ளையார் சீகாழியினின்றும் புறப்பட்டுப், பாம்புகளாகிய அணிகளை அணிந்த சிவபெருமான் விளங்கிய திருத்தலங்கள் பலவற்றையும் அடைந்து, பணிந்து, செல்வார், சுரபுன்னை மலர்களின் வாசம் வீசுகின்ற பூம்புகலூரில் வந்து தரிசித்து, ஒப்பற்ற சிறப்பினையுடைய ஒளியுடைய முப்புரிநூல் அணிந்த முருகநாயனாரது திருமடத்தில் எழுந்தருளியிருக்கும் காலத்து, உருக

1497. (இ - ள்) ஆண்ட அரசு...கேட்டருளி - (அவர்) இறைவரால் ஆட்கொள்ளப்பட்ட திருநாவுக்கரசுகள் எழுந்தருளிப் போந்து அணியுடைய திருவாரூரில் மணிப்புற்றில் விரும்பி வீற்றிருக்கும் நீண்ட சுடருடைய மாமணியைக் கும்பிட்டு, திருநீடும் புகலூரினை நோக்கி எழுந்தருளினார் என்று கேட்டருளி ; எதிர்கொள்ளும் விருப்பினாலே - அவரை எதிர்கொண்டழைக்கும் விருப்பத்தினாலே ; ஈண்டுபெரும்...எதிரே வந்தார் - நெருங்கிய தொண்டர் கூட்டம் தம்மைச் சுற்றிச் சூழ்ந்துவர எழுந்தருளி எதிரே சென்றனர். உருஉ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1496. (வி - ரை). அந்நாளில்...செல்வார்-இத்திருப்பாட்டினால் நாயனாரும் ஆளுடைய பிள்ளையாரும் சீகாழியில் கூடிப்பிரிந்த பின்னர், இதுவரை ஆளுடைய பிள்ளையாரது சரித நிகழ்ச்சியைச் சுருக்கிக் காட்டினார். "ஆண்டவர செழுந்தருளக் கோலக் காவை யவரோடுஞ் சென்றிறைஞ்சி யன்பு கொண்டு, மீண்டருளினாரவரும் விடைகொண்டு" (1454) என்று முன்னரும், "புகலிப் பிரானிசைவோடும், பின்னாக வெய்த விறைஞ்சிப் பிரியாத நண்பொடு போந்தார்" (திருஞான - புரா - 277) என்று ஆளுடைய பிள்ளையார் புராணத்தும் இவ்விரு பெருமக்களும் கூடிப்பிரிந்த நிகழ்ச்சி உரைக்கப்பட்டது. அவ்வாறு பிரிந்த நாளிலிருந்து திருப்புகலியினின்றும் ஆளுடைய பிள்ளையார் தமது அவதார உள்ளுறையாகிய பரசமய நிராகரிப்பும் திருநீற்றுச் சைவ நெறி ஆக்கமும் நிகழச் செய்தருளும் பெரும்

நிகழ்ச்சிகள் நடைபெறவுள்ள, சிறந்த, தமது ஐந்தாவது தலயாத்திரையில் புகுவாராய்ச் சீகாழியினின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் கும்பிட்டுத் திருப்புகலூரில் எழுந்தருளியிருந்தனர். அச்செய்தி அவர்தம் புராணம் "அங்க ணமர்கின்ற நாளி லருந்தமிழ் நாடெத்தி னுள்ளுந், திங்கட் சடையண்ண லார்தந் திருப்பதி யாவையுங் கும்பிட், டெங்குந் தமிழ்மாலை பாடி யேத்தியிங் கெய்துவ னென்று" (திருஞான-புரா - 279), என்று தொடங்கி, "ஓங்கிய வன்பின் முருகனார்தம் முயர்திருத் தொண்டு சிறப்பித் தோங்கும், பாங்குடை வண்டமிழ் பாடி நாளும் பரமர்தம் பாதம் பணிந்திருந்தார்" (ஷை - 491) என்பதுவரை 212 திருப்பாட்டுக்களால் உரைக்கப்படுவது காண்க. ஆளுடைய பிள்ளையாரது அப்பெருந் தனித் தலயாத்திரையினிடையேதான் அரசுகள் திருப்புகலூரில் அப்பெருந்தகையைக் கூடிப் பின்னர்த் திருமறைக் காட்டில் அவர் பாண்டி நாட்டுக்கு எழுந்தருளும் வரையில் உடனிருந்து சென்றருளுவார். அப் பெருந் தனி யாத்திரையில் ஆளுடைய பிள்ளையார் சரிதத்தினுள் சோழ நாட்டில் திருக்கண்ணார் கோயில், திருப்புள்ளிருக்குவேளூர் முதலான பல தலங்களையும் கும்பிட்டுச் சென்றதும், மழநாட்டில் கொல்லி மழவன் மகளின் முயலகனோய் தீர்த்தருளிய செயலும், கொங்கு நாட்டில் பனிநோய் தீர்த்தருளிய செயலும், திருப்பட்டீச்சரத்தில் முத்துப்பந்தர் பெற்றதும், யாழ்மூரித் திருப்பதிகம் பாடியதும், திருமருகலில் விடந்தீர்த்த அற்புதமும், பிறவும் நிகழ்ந்தன. அவை யாவும் பிள்ளையாரது சரித வரலாறுகளாயினமையாலும், அந்நிகழ்ச்சிகளின்பின் பிள்ளையாரை அரசுகள் கூடிய அம்மட்டில் இச்சரிதத்தினுள் பேசவேண்டுதல் தகுதியாமாதலாலும், அவ்வளவும் சுருக்கிக் குறிப்பிட்டு ஈண்டுப் **பணிந்து செல்வார்** என்ற தொடர்க் குறிப்பினாற் கூறியருளிய கவிநலம் காண்க. முன் சரிதத் தொடர்ச்சியை நினைவூட்டும் பொருட்டு இது தரப்பட்டது.

**திருப்புகலி அதன்கண் நின்றும்** - போந்து என்பது வருவித்துக்கொள்க. போந்து தல யாத்திரை தொடங்கியது மேற்காட்டப்பட்டது.

**பயின்ற** - விளங்க வீற்றிருந் தருள்புரிகின்ற. எங்கும் உள்ள கடவுள் ஒருவரே என்பதும் உணர்த்தப்பட்டது.

**பதி பலவும்** - இவை ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் திருக்கண்ணார் கோயில் முதலாகத் திருப்புகலூர் ஈறாக, 279-வது பாட்டு முதல் 491-வது பாட்டுவரை உள்ள பகுதியினுட் கண்டுகொள்க.

**செல்வார்** - புகலியினின்றும் யாத்திரையாகப் புறப்பட்ட பிள்ளையார் அங்கு மீண்டடையும் வரை தொடர்ந்து செல்வாராதலின் எதிர்கால வினைப்பெயராற் கூறினார்.

**புன்னாகம்** - சுரபுன்னை; மலர்களைக் குறித்தது. இங்குப் புன்னை தலமரமாம். ஆலயத்தினுள் உள்ளது. "புன்னைப் பொழிற்புக லூரண்ணல்" (திருவிருத்).

**பூம்புகலூர்** - பூ - போக மோட்சங்களுக்கு இடமாகிய அழகு. பூங்கமல வாவியி னிடையே திருக்கோயில் ஒரு தாமரை போன்றிருத்தலால் வந்த பெயர் என்றலுமாம். "பூம்புகலூர் மேவிய புண்ணியனே" (தாண்டகம்). முன் 263-ல் உரைத்தவை பார்க்க.

**போநவில் சீர்த்தி** - இறைவனைக் காலங்களுக் கேற்றபடி வெவ்வேறு திருப்பூமாலை வகைகளா லலங்கரித்து, அவரது திருவருட் குறிப்பறிந்து மகிழும் சிறப்பும், ஆளுடைய பிள்ளையார் - ஆளுடைய அரசுகள் என்ற எம்பெருமக்களிருவரையும் ஒருங்கே தமது திருமடத்தில் எழுந்தருளப்பெற்று வழிபட்ட சிறப்பம். பிள்ளையார ...

ணத்திற் சேவித்து வீடுபெறும் சிறப்பும், பிறவும் கருதி இவ்வாறு விதந்தோதினர். அவர்தம் புராணம் பார்க்க. திருமடம் - என்ற குறிப்பும் அது.

மேவும் காலை - கேட்டருளி எதிரே சென்றார் - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடித்துக்கொள்க. 231

1497. (வி - ரை) "ஆண்ட அரசு...மீண்டருளினார்" என்று கேட்டருளி - இஃது பிள்ளையார் கேட்டருளிய செய்தி. இதனால் பிள்ளையார் நாயனாரது நிகழ்ச்சிகளைக் கேட்க ஆவல் கொண்டிருந்தமையும், இவ்விரு பெருமக்களிடை வளர்ந்த அன்புப் பெருக்கினை அறிந்த அடியார்கள் அவர்கள் செய்திகளை அறிவித்து வந்தமையும் கருதப்படும். முன்னரும் "ஆண்ட வரசெழுந் தருளக் கேட்டருளி" (1446) என்றது காண்க. முன் அறியாமலேயும் உடைய மறைப்பிள்ளையார் திருவார்த்தை அடியார்கள் உரைப்பக் கேட்டார்" (1442) என்றமையால் அடியார்கள், சிவன் திருவருணிகழ்ச்சிகளையும் அடியார் பெருமைகளையுமே பேசியும் கேட்டும் வந்தார்கள் என்பதும், இந்த நாளிற்போல வீண் வார்த்தைகள் பேசி வீணாட் கழித்தலில்லை என்பதும் ஈண்டுக் கருதப்படும். "மருவியநண் புறுகேண்மை யற்றை நாள்போல் வளர்ந்தோங்க" (1452), "அன்புகொண்டு மீண்டருளினார்" (1453), "பின்னாக வெய்த விறைஞ்சிப் பிரியாத நண்பொடு போந்தார்" (திருஞான - புரா - 274) என்பவையும் கருதுக.

நீண்ட சுடர் மாமணி - நீண்ட - கால மெல்லாவற்றையும் கடந்து நீண்ட. "நீள் சுடர் மாமணிப் புற்றுகந்தார்" (1486).

அமர்ந்து வாழும் - அமர்தல் - விரும்புதல். வாழ்தல் - நிலைபெற வீற்றிருத்தல்.

மீண்டருளினார் - மீளுதல் - வருதல் என்னும் பொருளில் வந்தது. வடக்கினின்றும் திருப்பெருவேளூரிலும், திருவிளமரிலும் கும்பிட்டுத், திருவாரூருக்கு எழுந்தருளிய நாயனார், அங்கு நின்றும் நேர் கிழக்காகத், திருக்கீழ்வேளூர் - திருச்சிக்கல் - திருநாகைக்காரோணம் முதலிய தலங்களுக்குச் செல்லாது, நேர் வடக்கில் திருப்புகலூர் நோக்கி மீண்டருளினார் என்பதும் குறிப்பு. இச்செயல் இறைவரது திருவருளினால் நிகழ்வதாயிற்று என்று (1494-ல்) முன் உரைத்ததும் ஈண்டுக் கருதற்பாலது.

எதிர்கொள்ளும் விருப்பினோடும் - எழுந்தருளி எதிரே சென்றார் - முன்னர்க் "காண்டகைய பெருவிருப்புக் கைமிக்க திருவுள்ளக் கருத்தினோடும் எழுந்தருளி முன்னே வந்தார்" (1446) என்றது காண்க. பின்னர்த் திருப்பூந்துருத்தியில் பிள்ளையார் எழுந்தருளுவதைக் கேட்ட நாயனார் "எண்பெருகும் விருப்பெய்த வெழுந்தருளி எதிர்சென்றார்" (திருநா - புரா - 393) என்பதும் இங்குச் சிந்திக்க. இச்செயல்கள் இவர்களது பெருமையினையும், அடிமைத் திறத்தின் சிறப்பையும் உணர்த்துவன. 232

1498. கரண்டமலி தடம்பொய்கைக் காழியர்கோ னெதிரணையுங்காதல்கேட்டு
வரன்றுமணிப் புனற்புகலூர் நோக்கிவரும் வாகீசர் மகிழ்ந்து வந்தார்;
திரண்டபெருந் திருநீற்றுத் தொண்டர்குழா மிருதிறமுஞ் சேர்ந்த போதில்
இரண்டுநில வின்கடல்க ளொன்றாகி யணைந்தனபோ லிசைந்தவன்றே.

(இ - ள்). வெளிப்படை. நீர்க்காக்கைகள் நிரம்பிய பெரிய பொய்கைகளையுடைய சீகாழியிலவதரித்த ஆளுடைய பிள்ளையார் அவ்வாறு தம்மை எதிர்கொண்டு அணைகின்ற அன்பின் திறத்தைக் கேட்டு, மணிகளை வாரி வரும் புனல்வளமுடைய திருப்புகலூரை நோக்கி வருகின்ற நாயனார் திருவுள்ள மகிழ்ச்சியுடன் எழுந்தருளி வந்தனர்; கூடிப் பெருகி வருகின்ற திருநீற்றுத் தொண்டர் கூட்டம் இருதிறத்திலும் சேர்ந்தபோதில் நிலவின் கடல்களிரண்டு ஒன்றுகூடி அணைந்தன போலப் பொருந்தியன அப்போதே.

(வி - ரை) காண்டம் - நீர்க்காக்கை. காரண்டம் என்பதன் சிதைவு. போய் கைக் காழி என்றும், புனற்புகலூர் என்றும் அவதரித்த இடமும் சேர்ந்திருந்த இடமும் நீர்ச்சிறப்புப் பற்றிக் கூறப்பட்டன; அன்பின் நீர்மையின் தண்ணளி குறிப்பதற்கு.

காதல் - அன்பின் பெருக்கு.

மணிவரன்றும் என்க. வரன்றுதல் - வாரி வருதல் - கொழித்தல். மணி வரன்றி வருதல் நிலச்சிறப்பும் நீர்ச்சிறப்பும் குறிப்பது.

நோக்கி-அதுவே கருத்தாக. "வேட்கை கூர ஒருப்படுவார்" (1495). திருப்பைஞ் ஞீலிக்குச் செல்லும்போது பசியும் இளைப்பும் கருதாது சென்றருளும் நாயனாரது சித்த நிலை இங்குக் கருதற்பாலது.

மகிழ்ந்து-ஆளுடைய பிள்ளையாரைக் கண்டு வணங்கும் பேறும் கிடைக்கப்பெறு தற்கு மகிழ்ந்து

திரண்டு வரும் - இவ்விரு பெருமக்களும் சேர்ந்தணையும் வாழ்வு காண ஆர்வ முடன் திரண்டு.

சேர்ந்த போதில் - கூடியபோது.

நிலவின் கடல்கள் - நிலவொளிப் பிழம்பேயாகிய இரண்டு கடல்கள். "அவ ரணிந்த, சேமநிலவு திரு நீற்றின் சிறந்த வெண்மைத் திருந்தொளி" (1018), "வெண் ணீற்றொளி போற்றி" (திருஞான - புரா - 216), "வெண்ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா" (308) என்பனவற்றால் நிலவினொளி திருநீற்றினொளிக்கு உவமிக்கப்படுதல் காண்க. இனி நிலவு ஆறுபெராய் நிலவு போன்ற வெள்ளிய பாலினை உணர்த்தி நின்றதெனக் கொண்டு இரண்டு பாற்கடல்கள் ஒன்றாகி யணைந்தன போல என்றுரைத்தலுமொன்று. "பாலுந்துறு திரளாயின பரமன்" (புள்ளமங்கை - நட்டபாடை) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரம் காண்க.

இரண்டு - ஒன்றாகி - அணைந்தனபோல்-சிவானந்த அத்துவிதக் கலப்புப்போல என்றதும் குறிப்பு. ஒன்றாகி - கலப்பினால் ஒன்றுகூடி. இசைதல் - மாறின்றிப் பொருந்துதல். "அருட்பெருகு தனிக்கடலும்" (1450) என்றதும் பிறவும் பார்க்க.

அன்றே - கண்ட அப்பொழுதே. அன்று - ஏ அசை யென்பாருமுளர்.

நேர் நோக்கி—திரண்டுவரும்—என்பனவும் பாடங்கள்.　　233

1499. திருநாவுக் கரசரெதிர் சென்றிறைஞ்சச்,சிரபுரத்துத் தெய்வவாய்மைப்
பெருஞான சம்பந்தப் பிள்ளையா ரெதிர்வணங்கி, "யப்ப ரே! நீர்
வருநாளிற் றிருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீர்" என்று கூற,
வருநாமத் தஞ்செழுத்தும் பயில்வாய்மை யவருமெதி ரருளிச் செய்வார்.

வேறு

1500. "சித்த நிலாவுந் தென்றிரு வாரூர் நகராளும்
மைத்தழை கண்ட ராதிரை நாளின் மகிழ்செல்வம்
இத்தகை மைத்தென் றென்மொழிகேன்!" என் றருள்செய்தார்
"முத்து விதான மணிப்பொற் கவரி" மொழிமாலை.　　உ௩௫

1499. (இ - ள்) திருநாவுக்கரசர்...இறைஞ்ச - எதிரே சென்று திருநாவுக்கரசு நாயனார் வணங்க; சிரபுரத்து...எதிர் வணங்கி - சிரபுரத்தில் வந்தருளிய தெய்வத் தன்மையான வாய்மை பொருந்திய பெருமையுடைய திருஞானசம்பந்தப் பிள்ளையார் எதிர் வணங்கி; "அப்பரே! நீர்...வகுத்துரைப்பீர்" என்று கூற - "அப்பரே! நீர் வரும் நாளில் திருவாரூரில் நிகழும் பெருமையினை வகுத்துச் சொல்வீராக!" என்று

கேட்க; அவரும் எதிர் அருளிச் செய்வார் - அவரும் எதிரில் விடையருள் செய்வாராகி, ௨௩௪

1500. (இ - ள்) வெளிப்படை. மனத்துள் நிலவும் தென் திருவாரூர் நகரை ஆளுகின்ற, நீலகண்டராகிய பெருமானுடைய திருவாதிரைத் திருநாளின் மகிழ்வுடைய செல்வமானது இன்ன தன்மையுடையது, என்று என்ன சொல்வேன்!" என்று, "முத்து விதானம் மணிப்பொற்கவரி" என்று தொடங்கும் மொழி மாலையாகிய திருப்பதிகத்தினை அருளிச் செய்தனர். ௨௩௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1499. (வி - ரை) அரசர் எதிர் சென்று இறைஞ்சப், பிள்ளையார் எதிர் வணங்கி, "உரைப்பீர்" என்று கூற, வாய்மையவரும் எதிர் அருளிச் செய்வாராய், "என் மொழிகேன்" என்று மொழிமாலை அருள் செய்தார் என இந்த இரண்டு பாக்களையும் கூட்டி முடித்துக்கொள்க.

**எதிர் சென்றிறைஞ்ச**—பிள்ளையார், நாயனாரை "எதிர் கொள்ளும் விருப்பினோடும்...எதிரே சென்றார்" (1497); அதுகேட்டு நாயனாரும் "மகிழ்ந்து வந்தார்" (1498); இவ்வாறு ஒருவரை ஒருவர் கண்டு வணங்கும் விருப்போடுவரும் இருபெரு மக்களுள் யாவருடைய ஆர்வம் மிக்கது? யாவர் முன்னே கண்டு வணங்கினர்? எனின், நாயனாரே பிள்ளையார் தம்மைக் காண்பதற்குமுன் முதலில் எதிர்சென்று பிள்ளையாரை யிறைஞ்சினர் என்பதாம். "திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணு முன்னே, யங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்த" (753) என்றதும், "அன்பின் வந்தெதிர் கொண்டசீ ரடியா ரவர்க ளோநம்பி யாரூரர் தாமோ, முன்பி றைஞ்சின ரியாவரென் றறியா முறைமை யாலெதிர் வணங்கி மகிழ்ந்து"(244) என்றதும் ஈண்டுக் கருதத்தக்கன. பிள்ளையார், தம்மை எதிர்கொள்ள வந்தாரெனினும், தாமே முன்பு அவரை எதிர்சென்று கண்டு வணங்க வேண்டுமென்பது நாயனாரது திருவுள்ளம் என்க.

**பிள்ளையார் எதிர்வணங்கி** - நாயனார் இறைஞ்ச அதுபோலத் தாமும் எதிர் வணக்கம் செய்து. **உரைப்பீர்** - உரைப்பீராக! என வேண்டிக்கோடற் பொருளில் வந்த முன்னிலை ஏவல் வினைமுற்று.

**அருநாமத்து அஞ்செழுத்தும் பயில் வாய்மையவர்** - சிவனது நாமமாகிய அரிய திருவைந் தெழுத்தினையும் மிகப்பயின்ற வாய்மை விளங்கிய நாயனாரும். இத்தன்மை, கடலுள் கல்லிற்பிணைத்து தூக்கப்பட்டபோது "கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினு நற்றுணையாவது நமச்சிவாயவே" என்று நமச்சிவாயப்பதிகம் ஓதி அந்த வாய்மையால் கரையேறிய தன்மையாலும், "படைக்கல மாகவுன் நாமத் தெழுத்தஞ் சென் னாவிற்கொண்டேன்", "நாப்பிணை தழுவிய நமச்சிவாயப் பத்து" என்பன முதலிய திருவாக்குக்களாலும் விளங்கும். நாயனாரது திருவாக்கு எப்போதும் சிவனது திருநாமத்தையே சொல்லிக் கொண்டிருக்கும் என்பது. தெய்வவாய்மை, **அஞ்செழுத்தும் பயில்வாய்மை** என இரு பெருமக்களையும் வாய்மையாற் சிறப்பித்தமை காண்க. **எதிர்** - மறுமொழியாக.

**திருவாரூர் நிகழ்பெருமை வகுத்துரைப்பீர் என்று கூற**-ஒருவரை ஒருவர் கண்ட போது மக்களாற் கேட்கப்படுவது சிவன் பெருமையே யாம் என்பது குறிப்பு. பலநாட் பிரிந்து திரு ஆலவாயில் தம்மைக் காணவந்த சிவபாதவிருதயராகிய அந்த அப்பரைக் கண்ட போதும், ஆளுடைய பிள்ளையார் "எனையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட, பெருந்தகையெம் பெருமாட்டி யுடனிருந்ததே?" என்று, (திருஞான - புரா - 880)

பெருமானது நலம் கேட்டருளும் செயலையும் இங்கு நினைவு கூர்க. நாமும் நமது அன்பர்களைக் காணுங்கால் அழியுந்தன்மையான உலக நலங்களை வினவிப் போதுபோக்காது இவ்வாறு இறைவரது தன்மைகளை வினவி வாழ்வுபெறப் பயில்வது நலந்தரும்.

ஆரூர்தொழுது அங்குநின்றும் புகலூர் தொழும் நோக்கத்துடன் அரசுகள் எழுந்தருளினார் என்றறிந்தமையால் பிள்ளையார் அவர்பால் ஆரூர் நிகழ் பெருமை கேட்டருளினார் என்க. 234

1500. (வி - ரை) **சிந்த நிலாவும்** - உமது சித்தத்தில் பொருந்தும் எனவும், "அங்கு உள்ளம் வைத்து" (1495) என்றபடி அங்கு நின்றும் போந்தாலும் தமது மனம் அதனையே கொண்டுள்ளது எனவும், "பூதம் யாவையு முள்ளலர் போதென, வேத மூலம் வெளிப்படும்" (43) என்றபடி தேவர் முதலிய யாவருடைய சித்தத்திலும் நிலாவுவது எனவும் உரைக்க நின்ற நயம் காண்க.

**தேன் திருவாரூர் நகர்** - திருவாரூர் நகருள் இறைவர் எழுந்தருளியுள்ள பூங்கோயில் இருக்கும் பகுதி தென்திருவாரூர் எனப்படும் என்ப. "தென்றிருவாரூர் புக், கெல்லை மிதித்தடியே னென்றுகொ லெய்துவதே" (நம்பிகள் - ஆரூர் - புறநீர்மை. 1) முதலிய திருவாக்குக்களும் காண்க. 1501-லும் இவ்வாறே கூறுவதும் காண்க. விறன்மிண்டநாயனார் புராணத்திறுதியில் சுஙக, சுஙஉ பக்கங்களில் அடிக்குறிப்புப் பார்க்க.

**ஆரூர் நகர் ஆளும்** - ஆளுதல் - விளங்கவீற்றிருந்து அங்குத் தம்மை அடைந்தாரைக் காவல் பூண்டருளுதல். "அமரர்நா டாளாதே யாரூ ராண்ட" (தாண்), "காவல் கொண்டு தனியாளும் கடவுட் பெருமான்", "எல்லையிலா ஆட்சி புரிந்து" முதலிய திருவாக்குக்கள் பார்க்க.

**ஆதிரை நாளின் மகிழ் செல்வம்** - நீர் வருநாளில் திருவாரூர் நிகழ் பெருமை உரைப்பீர்! என்று கேட்ட பிள்ளையாருக்கு அப்பெருமை-அங்கு நிகழ் பெருமை-யாவது திருவாதிரைத் திருநாளே யாகும் என்று குறிப்பித்து அதனைக் கூறத்தொடங்கினர்.

**செல்வம்** - அருமைப்பாடும் சிறப்பும் குறித்தது.

**"இத்தகைமைத்து என்று என் மொழிகேன்?"** - அச்சிறப்பினை யான் எவ்வாறு சொல்வேன்?; அது சொல்ல முடியாதபடி அத்துணைச் சிறப்பினது என்றபடி. "இங்ஙனிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்?, அங்ஙனிருந்ததென் றுந்தீ பற" என்ற ஞான சாத்திரமுங் கருதுக.

**என்மொழிகேன் என்று அருள் செய்தார்** - மொழிமாலை-இது பதிகக் கருத்து ஆசிரியர் கண்டு காட்டியபடி. திருவாதிரைச் செல்வம் சொல்லுந் தரமன்று! ஆயினும் நீர் கேட்டருளியவாற்றால் சொல்லும் அளவில் இவ்வாறிருந்தது அச்செல்வம் என்றதாம்.

**"முத்துவிதானம் மணிப்பொற் கவரி"** - என்று தொடங்கும் பதிகமாகிய மொழிமாலை என்க. இது பதிகத் தொடக்கம்.

இப்பாட்டு அத்திருப்பதிக யாப்பில் அமைந்த கவிநயமும் காண்க.

**என்றுரை செய்தார்**—என்பதும் பாடம். 235

## திருவாரூர் - திருவாதிரைத் திருப்பதிகம்

XIX  *திருச்சிற்றம்பலம்*  பண் - குறிஞ்சி

*முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே*
**பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே**
**வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்**
[illegible]

நணியார் சேயார் நல்லார் தீயார் நாடோறும்
பிணிதான் றீரு மென்று பிறங்கிக் கிடப்பாரும்
மணியே! பொன்னே! மைந்தா! மணாளா! வென்பார்கட்
கணியா னூரு ராதிரை நாளா லதுவண்ணம்! 2

துன்ப நும்மைத் தொழாத நாள்க ளென்பாரும்
இன்ப நும்மை யேத்து நாள்க ளென்பாரும்
நும்பி னெம்மை நுழையப் பணியே யென்பாரும்
அன்ப னூரு ராதிரை நாளா லதுவண்ணம். 9

பாரூர் பௌவத் தானைப் பத்தர் பணிந்தேத்தச்
சீரூர் பாட லாட லறாத செம்மாப்பார்ந்
தோரூ ரொழியா துலக மெங்கு மெடுத்தேத்தும்
ஆரூ ரன்ற னாதிரை நாளா லதுவண்ணம்! 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆரூர்ப் பெருமானது திருவாதிரைத் திருநாளின் சிறப்பு முத்துவிதானம் நாற்றுதல், பத்தர்கள் சூழ்ந்தேத்துதல் முதலிய பெருமைகளை யுடையது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—இறைவனது திருவிழாப் பெருமையினையும் சிறப்பினையும் செம்மைபெற எடுத்துக் கூறும் தனிப் பெருமையுடைய பதிகம் இது! ஒரு ஆசாரியர் இன்னொரு ஆசாரியர் கேட்க அருளியதும், அதனைக் கேட்டவுடனே அவர் விழாவைக் காணுவிடினும் விழாக்கொண்ட பெருமானைக் கண்டு சேவிக்கப் பிரிந்துசென்று மீண்டருளியதும் ஆகிய பெருஞ்சிறப்பும் உடையது. ஆளுடைய பிள்ளையாரது "மட்டிட்ட புன்னை" என்னும் திருமயிலைப் பதிகத்திற் காட்டப்பட்ட மண்ணினிற் பிறந்தார் பெறும்பய னிரண்டனுள், கண்ணினால் இறைவரது திருவிழாப் பொலிவுகண் டார்தல் ஒன்றாகும் என்பதறிவோம். இப்பதிகம் அத்திருவிழாவைக் காணும் வகையை அறிவிப்பது. இதனை யாவரும் பயின்று பயன்பெறக் கடவர்! (1) முத்து விதானம் - முத்துக்கள் கட்டிய மேற்கட்டி. கவரி - வீசப்படுவது. பத்தர்களோடு பாவையர் சூழ - திருவிழாக்களில் ஆடவரும் மகளிரும் சேர்ந்து வணங்கும் முறை குறித்தது. பத்தர்கள் - ஆண் மக்களைக் குறித்தது. பலி - திருவிழாவில் எட்டுத்திசை காவலரை நோக்கி நாளிருபொழுதும் இடும் அட்டபலி. விரதிகள் - மாவிரதிகள். எலும்புமாலை முதலியன அணிதலால் வித்தகக் கோலம் என்றார். இறைவர், மானக்கஞ்சாற நாயனாருக்கு அருள்புரிய வந்த திருக்கோலம் காண்க. மாவிரதம்-சைவத்தின் அகப்புறச் சமயம் ஆறனுள் ஒன்று. நாள் - வண்ணம் அது என்று கூட்டுக. பதிக முழுமையும் இவ்வாறு வினைமுற்றுப் பயனிலையால் முடிக்காது பெயர்ப் பயனிலைபெறக் கூறியது திருவிழாக் கண்டார்க்கு வினையில்லையாகும் என்பது குறிப்பு.—(2) நணியார் சேயார் - நணியாரும் சேயாரும். நணியார்-அணிமையில் உள்ளார். சேயார் - தூரத்தே உள்ளவர்கள். உம்மைத் தொகை. நணியார்களுள் திருநாள்காணப் பெறாதார் சேயார்களாக என்றும், சேயார்கள் அன்பினாற்கூடியவர் நணியார்களாக என்றும் உரைக்க நின்றது. பிணி - உடற்பிணி. உடலாகிய - பிறவியாகிய-பிணி என்றலுமாம். பிறங்கிக் கிடத்தல் - வரங்கிடத்தல்.—(3) சாதிகள் - மணிகளுள் உயர்ந்தசாதி குறித்தது. ஒளிச்செறிவு - குற்றமின்மை - விளைவு முதலியவற்றாற் கணிக்கப்படுவது. விதானமும் வெண் கோடியும்-இவை நகருக்கு மங்கலம் செய்தல் முன்னாள் வழக்கு. "விதானமும் வெண்கொடியும் மில்லா ஊரும்...ஊரல்ல" (தேவா).—

குணங்கள் - இறைவன் உயிர்களுக்குச் செய்யும் அருட்குணங்கள். அடியார் குணங்கள் என்றலுமாம். பிணங்கி...பிதற்றுவார் - அன்பு மீதூர்ந்த நிலையின் செயல்கள். "பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவி" (சித்தி. 8. 32). இவை பத்தர் குணம். "பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும், பத்தர் சொன்னவும் பன்னப் படுபவோ?".—(5) சங்கு - மங்கல முழக்குக்களுள் ஒன்று. கல்லவடம் - ஒருவகை வாச்சியம். கல்லலகு என்றும் வழங்கும். கலவ - கலாபம் - தோகையை - உடைய கார் என்றெண்ணி - சங்கு - பறை - கல்லவடம் முதலியவற்றின் முழக்குக்குள்கூடுதலால் அது மேக ஓசைபோன்றிருத்தலின் மயில்கள் கார் என்று எண்ணின. "முழவதிர மழையென் றஞ்சி" (ஐயாறு. மேகரா - 1) என்றது பிள்ளையார் தேவாரம். களித்து வந்து - கார் காணக் களிப்பது மஞ்ஞை. அலமருதல் - துன்புறுதல். ஓசை கேட்ட போது எண்ணிய எண்ணம் வந்து பார்த்தபோது பிழைத்தமையின் அலமந்தன என்க. —(6) இப்பாட்டும் பத்தர்களது வசமிழந்த செயல்களைக் குறித்தது.—(7) (8) பத்தர் - பாவையர் (1) என்ற விடத்துரைத்தவை காண்க. திருவிழாவிற் பல பண்புடை மக்களும் ஆடவரும் ஆயிழையாரும் கூடி வழிபடுதல் கூறப்பட்டது. பொடிகள் - திருநீறு. கள் - பன்மை விகுதி சிறப்புக் குறித்தது. கற்பம் அநுகற்பம் முதலியன என்றலுமாம்.—(9) தொழாதநாள் துன்பம்-ஏத்துநாள் இன்பம்-உடன் பாட்டிலும் எதிர்மறையினும் கூறியபடி. "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே." நும்பின் எம்மை நுழையப் பணியே-உமது சிவஞான நெறியைப் பின்பற்றி ஒழுகி உம்மை அடையப் பணிப்பீர்.—(10) பௌவப் பாநூரானை என்க. சேவிக்கும் உலகராகிய பௌவம் என்றலுமாம். செம்மாப்பு - சிறப்பு.

1501. அம்மொழி மாலைச் செந்தமிழ் கேளா வணிசண்பை
மைம்மலர் கண்டத் தண்டர் பிரானூர் மகனாரும்
"கொய்ம்மலர் வாவித் தென்றிரு வாரூர் கும்பிட்டே
யும்முடன் வந்திங் குடனமர் வே"னென் றுரைசெய்தார். உருசு

(இ - ள்) அம்மொழி......கேளா - அந்த மொழிமாலைச் செந்தமிழ்ப் பதிகத்தைக் கேட்டு; அணிசண்பை......மகனாரும் - அழகிய சீகாழியில் அவதரித்த திருநீல கண்டத்தையுடைய தேவதேவருடைய மகனாராகிய ஆளுடைய பிள்ளையாரும்; கொய்ம்மலர்...உரைசெய்தார் - "அரும்புகள் மலரும் வாவிகளையுடைய தென் திருவாரூருக்குச் சென்று கும்பிட்டு அதன்பின்பே மீண்டு வந்து உம்முடன்கூடி உடனாக அமர்வேன்" என்று சொன்னார்.

(வி - ரை) மொழிமாலைச் செந்தமிழ் - முன்னரும் "மொழிமாலை" (1500) என்றது காண்க. இப்பதிக முழுதும் வினைச்சொற் பயனிலை பெருது பெயர்ச்சொற்களாக அடுக்கிய வண்ணமாக முடிந்திருக்கும் அழகு குறிக்க மொழிமாலை என்றும், இது தமிழ்க்கே உரிய சிறப்பாம் என்று குறிக்கச் செந்தமிழ் என்றும் கூறினர். முன்பாட்டில் "மைத்தழை கண்டர்" (1500) என்றதற்கேற்ப, ஈண்டும் மைம்மலர் கண்டத் தண்டர் பிரானூர் என்றும், சிவபாதவிருதயரை "அவர்சார்வு கண்டருளித் திருத்தோணி யமர்ந்தார்" நினைவுவருவது போல (திருஞான - புரா - 879), ஈண்டும் அப்பரைக் கண்டும், ஆரூர்ச் செல்வம் கேட்டும், உடன் நேரிற்காண ஆர்வம் பெருகுதற்குக் காரணம், மகனாராதலின் என்பார் அண்டர் பிரானூர் மகனாரும் என்றும் கூறினர்.

அண்டர் பிரானூர் மகனார் - பாலுண்ட திறத்தால் மகன்மை முறைமை யுடையார் என்க. இச்சொல் வழக்குப்பற்றியும், பிறவாறு பற்றியும் ஆளுடைய பிள்ளை

யாரை முருகனார் எனவே கொண்டு வழக்குரைப்பாருமுளர். அது பொருந்தாமை மேல் அவர் புராணத்துட் காட்டப்படும்.

கும்பிட்டே-ஏகாரம் உறுதியும் தேற்றமும் குறித்து நின்றது; கும்பிட்ட பின்பே. "அழைத்துக் கொடுத்தே யவிநாசி யெந்தை பெருமான் கழல்பணிவேன் என்றார்" (வெள் - சருக் - 9) என்பது காண்க.

உம்முடன் வந்து இங்கு உடன் அமர்வேன் - உம்மோடு உடன் அமர்தலை இப் போதைக்குப் பெறுவிடினும் கும்பிட்ட பின் அதனிற் றலைநிற்பேன் என்பது. அப்ப ருட னமர்தலைப் பிள்ளையார் பெரிதும் விரும்பினார் என்பதும் பெறப்படும். அமர் வேன் - விரும்புவேன் என்ற குறிப்பும் காண்க.

மைம்மலி—உறைசெய்து என்பனவும் பாடங்கள். 236

1502. மாமதி லாரூர் மன்னரை யங்கு வணங்கச்செந்
தாமரை யோடைச் சண்பையர் நாதன் றானேக
நாமரு சொல்லி னாதரு மார்வத் தொடுபுக்கார்
பூமலர் வாசத் தண்பணை சூழும் புகலூரில். ௨௩௭

(இ - ள்) மாமதில்...வணங்க - பெரியமதில் சூழ்ந்த திருவாரூர்த் தியாகராசரை அங்கு வணங்குதற்குச்; தாமரை...தானேக - செந்தாமரை ஓடையையுடைய சீகாழி நாதராகிய ஆளுடைய பிள்ளையார் சென்றருளினாராக; நாமரு சொல்லின் நாதரும்-நாவிற்பொருந்திய வாக்கினுக்கு நாதராகிய நாயனாரும்; ஆர்வத்தொடு - மிக்க ஆசை யுடனே; பூமலர்...புகலூரில் - பூக்கள் மலர்தலால் மணம்வீசும் குளிர்ந்த வயல்களாற் சூழப்பட்ட புகலூரில்; புக்கார் - புகுந்தனர்.

(வி - ரை) ஆரூர் மன்னர் - "ஆரூர் நகர் ஆளும்" என்றதற் கேற்ப மன்னர் என்றார்.

அங்கு வணங்க - மன்னர் எங்கும் உள்ளவர்; பிள்ளையார் அவரை எங்கும் கண்டு வணங்கும் வலிமை வாய்ந்தவர்; ஆயினும் அங்குப் போய்த் தென்திருவாரூரில் வணங்க என்றபடி.

செந்தாமரை ஓடை - ஓடை - நீரோடை. தாமரை ஓடைச் சண்பை என்றார் பிள்ளையாரது திருவடையாள மாலை குறித்தற்கு. "கடிகொள்செங் கமலத் தாதின், செவ்விநீ டாம மார்பர் திருவடையாள மாலை" (திருஞான - புரா - 1217).

சண்பையர் நாதன் தான் ஏக - நாயனாரை எதிர் கொண்டு சந்தித்து ஆரூர்ச் சிறப்புக்கேட்ட அந்த இடத்திலிருந்தபடியே, அப்பொழுதே, ஆரூர் நோக்கிப் புறப்பட என்க. அவ்வாறு சந்தித்த இடமாவது "திருப்புகலூர்ப் புறம்பணை யெல்லை கடந்து போந்து" (திருஞான - புரா - 493) நின்ற இடம். இது பிள்ளையாரது ஆர்வமிகுதி யைப் புலப்படுத்தி நிற்பதோடு உலகரை அறிவுறுத்தி வழிகாட்டி நிற்கும் திறமும் காண்க.

நாமரு சொல்லின் நாதர் - நாவுக்கரசர். மருவுதல் - பொருந்துதல். நாமரு - என்றது விவரணம்.

ஆர்வத்தோடு புக்கார் - புகலூரில் - புகலூர் தொழுவதனை எண்ணிக் கொண்டே திருவாரூரினின்றும் சேர்ந்தனராதலின் ஆர்வமிக்குப் புகுந்தனர். புக்கார்-புகலூரில் - தாம் பின்னர்ப் புகலாக அடைந்து திருவடி நீழலிற் சிவானந்த ஞானவடி வாகி அமரப்பெறும் அந்த ஊரில் இப்போது புகுந்தனர் என்று குறிக்கப் புக்கார் என்றார். வினைமுற்று முன்வந்தது செயல்முற்றிய விரைவும் ஆர்வமிகுதியும் குறித்தது.

சண்பையர் நாதன் - சொல்லின் நாதர் - இருவரையும் நாதர் என்று குறித்தது ஆண்டவன் திருவுள்ளத்திலும், அடியார்களது திருவுள்ளங்களிலும் இருவரும் ஒப்ப நிகழும் பெருந்தன்மை வாய்ந்தவர் என்று குறித்தற்கு. 1499-ல் வாய்மை என்றதனை இருவர்க்கும் புணர்த்தி ஓதியதும் காண்க. "அருட்பெருகு" (1450) என்ற திருப்பாட்டும், "சென்று சேர்ந்தார் தென்புகலிக் கோவு மரசுந் திருமுன்பு" (1529) என்பதும், பிறவும் காண்க. இக்கருத்தைப் "பாட்டுக்கு நீயு மவனு மொப் பீரெப் படியினுமே" என்று பாராட்டினர் சிவப்பிரகாச சுவாமிகள்.

நாமரு செஞ்சொல்—பூமலிவாவித்—என்பனவும் பாடங்கள்.　　237

1503. அத்திரு மூதூர் மேவிய நாவுக் கரசுந்தஞ்
சித்த நிறைந்தே யன்பு தெவிட்டுந் தெளிவெள்ளம்
மொய்த்திழி தாரைக் கண்பொழி நீர்மெய்ம் முழுதாரப்
பைத்தலை நாகப் பூணணி வாரைப் பணிவுற்றார்.　　உ௲௩

(இ - ள்) அத்திரு...நாவுக்கரசும் - அந்தத் திருமூதூரில் எழுந்தருளும் திருநாவுக்கரசு நாயனாரும்; தம் சித்தம்...முழுதார - தமது உள்ளத்தில் நிறைவாகித் தேக்கித் தெளிந்த வெள்ளமாகக் கூர்ந்து வழிகின்ற தாரையாகக் கண்களினின்றும் பொழிகின்ற நீர் உடம்பு முழுதும் நிறையப்பொருந்த; பைத்தலை...பணிவுற்றார் - நச்சுப் பையினைக்கொண்ட தலையினையுடைய நாகத்தைப் பூணாக அணிந்த சிவபெருமானைப் பணிவுற்றார்.

(வி - ரை) மேவிய - மேற்கூறியவாறு புக்காராகிப் பொருந்திய.

சித்த நிறைந்தே அன்பு தெவிட்டும் தெளிவெள்ளம் மொய்த்திழி தாரை - உள்ளத்தில் அன்பு நிறைந்து தெவிட்ட, அது வெள்ளமாய்ப் பெருக, அப்பெருக்கு இடங்கொள்ளாது மேல் வழிந்தது போலத் தாரையாகக் கண்ணீர் பெருகிற்று என்க. காணக்கூடாத அன்பைக் காணக் காட்டுவது கண்ணீர். "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர், புன்கணீர் பூச றரும்" (குறள்). நாயனார்க்குக் கண்ணீர் பெருகி உடம்பு முழுதும் நனைய வருதலின் உள்ளே நிறைந்த அன்பு பெருகி வழிந்தது போன்ற தென்றார். நாயனாரது திருவடிவத்தின் இத்தன்மைபற்றி முன் உரைத்தவற்றை இங்கு நினைவுகூர்க. புகலூர்ப் பெருமான் இனி இறுதியிற் றம்மைத் திருவடிக்கீழ் இருத்துவராதலின் அதன் சாயை முன்றோன்ற இவ்வாறு மெய்ப்பாடும் உள்ள நிகழ்ச்சியும் உண்டாயின வென்பது.

சித்த நிறைந்தே அன்புக் - கண்ணீர் மெய்ம்முழுதாரப் பணிவுற்றார் - இதனால் மனத்தாலும் உடம்பாலும் வழிபாடுகள் கூறினார். வாக்கின்பணி வரும்பாட்டிற் கூறுவார்.

தெவிட்டும் தெளிவெள்ளம் - தெவிட்டுதல் - நிறைந்து தேக்குதல். தெளிவெள்ளம் - நிறைந்து தேங்கிய நீர், தெளிந்து வெள்ளமாகப் பெருகும் நிலை குறித்தது. தெளி - வெள்ளத்துக்கும், உள்ளத்துணர்ச்சிக்கும் பொருந்தத், தெளி என்றது சொல்லணி. "உள்ளத்திற் றெளிகின்ற அன்பின் மெய்ம்மை யுரு" (திருஞான - புரா 1024).

மொய்த்து இழி தாரை - மொய்த்தல் - கூர்தல்; நிறைந்து ததும்புதல். இழிதல் - வழிதல். தாரை - நீர் - தாரையாகிய நீர். தாரை - இடையறாது பொழிவது "முகமெலாங் கண்ணீர் வார" (சேரிசை). மெய்ம் முழுது ஆர - உடம்பு முழுமையும் நனைக்க.

1504. தேவர் பிரானைத் தென்புக லூர்மன் னியதேனைப்
பாவியன் மாலைச் செந்தமிழ் பாடிப் பரிவோடும்
மேவிய காலந் தோறும் விருப்பிற் கும்பிட்டே
யோவுத லோவு திருப்பணி செய்தங் குறைகின்றார், ௨௩௯

1505. சீர்தரு செங்காட் டங்குடி நீடுந் திருநள்ளா
றார்தரு சோலை சூழ்தரு சாத்தை யயவந்தி
வார்திகழ் மென்முலை யாளொரு பாகன் றிருமருகல்
ஏர்தரு மன்பாற் சென்று வணங்கி யின்புற்றார். ௨௪௦

1504. (இ - ள்) வெளிப்படை. தேவர்களுக்கெல்லாம் தலைவரை, அழகிய புகலூரில் நிலைபெற்று எழுந்தருளிய தேன் போன்றவரைப், பாக்களின் தன்மை முற்றும் பொருந்திய செந்தமிழ் மாலைகளைப் பாடி, அன்புடனே, பொருந்திய காலங்களிலெல்லாம் விருப்பத்தோடு கும்பிட்டே, நீக்குதலில்லாத திருப்பணிகளைச் செய்து கொண்டு அங்குத் தங்குவாராகி, ௨௩௯

1505. (இ - ள்) வெளிப்படை. சிறப்புத் தருகின்ற திருச்செங்காட்டங்குடியும், திருநீடும் நள்ளாறும், பூமரங்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருச்சாத்தமங்கை யயவந்தியும், வாருடன் விளங்கும் மெல்லிய முலையினையுடைய அம்மையை ஒரு பாகத்துடைய பெருமானது திருமருகலும், சிறப்புடைய அன்பினாற் சென்று வணங்கி இன்பமுற்றார். ௨௪௦

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1504. (வி - ரை) தேவர்பிரானை - "தேவர்க்குந் தேவராவார்" (நேரிசை - 8) என்ற இத்தலப் பதிகக் குறிப்பு. தேன் புகலூர் - தேன் - அழகு. பூம்புகலூர் என்பது காண்க.

புகலூர் மன்னிய தேன் தேனை - என்று கூட்டித், தேன் - சுவை என்று கொண்டு புகலூரில் உள்ள சுவையுள்ள தேன் போன்றவர் என்றுரைத்தலு மொன்று. தேனினு மினியர் என்பது. "கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே" (திருமந்திரம்).

பா இயல் - பா - பாக்களின் தன்மை; இயலுதல்-முற்றும் பொருந்தி நிகழ்தல். இயற்பா மாலை என்று கூட்டி உரைத்தலுமாம். தமிழ் - தேவாரத் திருப்பதிகங்கள்.

காலம் - பூசைக்குரிய காலங்கள். "காலங்களில்" (1491). தோறும் - என்றதனால் திருப்பள்ளியெழுச்சி முதலாகத் திருவத்த யாமம் வரை பூசைகள் நிகழும் காலங்களிலெல்லாம் கும்பிடுதல் உரியதாகும் என்பதும், அன்பு சிறந்தோர் இவ்வெல்லாக் காலங்களிலும் சென்று கும்பிடுவர் என்பதும் பெறப்படும். இவையொழிந்த நேரங்களில் மற்றும் உரிய வேலைகளைச் செய்வர் என்க. "சொன்மாலை யாற்காலமெல்லாந் துதித்திறைஞ்சி" (திருஞான - புரா - 164).

ஓவுதல் ஓவு - ஓவுதல் - நீங்குதல். ஓவுதல் ஓவு - நீங்குதலை நீங்கிய - நீங்குலில்லாத; எதிர்மறை முகத்தாற் கூறினார் இடையறாத உறுதிப்பாட்டினை யுணர்த்தற்கு. "ஓவுநாள் உணர்வழியுநாள்...என்றலாற் கருதேன்" (தேவா - நம்பி - கொடுமுடி). "அரியறியா மலர்க்கழல்க ளறியாமை யறியாதார்" (875) என்றவிடத்துரைத்தவை பார்க்க.

திருப்பணி - மனம் வாக்குக்காயம் என்ற மூன்றாலும் செய்யும் பணிகள். 1490 பார்க்க. இங்கு உழவாரத் திருப்பணியாகிய கைத்திருப்பணி என்றமட்டில் கொள்வாருமுண்டு.

**உறைகின்றார்** - உறைகின்றாராகி; நிகழ்கால முற்றெச்சம். உறைகின்றாராகி - இன்புற்றார் என மேல்வரும் பாட்டுடன் கூட்டிமுடிக்க. திருப்புகலூரில் தங்கியிருந்த படியே மேற்பாட்டில் கூறும் தலங்களைச் சென்று கும்பிட்டு வந்து மீண்டும் திருப்புக லூரில் எழுந்தருளி யிருந்தனர் என்று குறிக்க இரண்டு பாட்டுக்களையும் தொடர்ந்து ஒரு முடிவுபெறவைத்தார். உறைகின்றார் - முன்பாட்டில் பணிவுற்றார் - எனவும், மேல் வரும் பாட்டில் இன்புற்றார் எனவும், உரைத்தது போல, உறைந்தார் என்று இறந்த காலத்தாற் கூறாது, நிகழ்காலத்தாற் கூறிய கருத்துமிது. இக்கருத்தறியாது முன் உரையாசிரியர்கள் வசித்திருந்தார் என்று இறந்தகால வினைமுற்றாகக் கொண்டுரைத் தனர். 1439, 1463, 1493 முதலியவற்றின் உரிய சரித நிகழ்ச்சிகள் இங்குக் கருதத் தக்கன. **அங்கு** - திருப்புகலூரில். 239

1505. (வி - ரை) **சீர்தரு** - சார்ந்து வந்தடைந்தார்க் கெல்லாம் சிறப்புத்தரும் தன்மையுடைய. தரு என எதிர்கால வினைத்தொகையாற் கூறினார்; அங்குச் சிறுத் தொண்ட நாயனாரின் பெருஞ்சிறப்பு இனி வெளிப்பட உள்ளதென்று குறித்தற்கு. "சிறுத்தொண்டர்க் கருள்செய்யும் பொருட்டாகக் - கடிநகராய் வீற்றிருந்தான்" என்ற ஆளுடைய பிள்ளையாரது அத்தலத் தேவாரக் குறிப்பும் காண்க.

**திருநீடு நள்ளாறு** - என்று கூட்டுக. அடியார் மனத்தில் நீடியிருக்கும் திருநள் ளாறு என்றலுமாம். தரு ஆர் சோலை என்க. தரு - மரம் - பூந்தருக்கள். சூழ்தரு - தரு - பகுதிப்பொருள் விகுதி.

**சாந்தை** - சாத்தமங்கை என்பது சாந்தை என மருவிவந்தது. அயவந்தி - அத்தலத்துக் கோயிலின் பெயர். சாந்தை - ஊர். அயவந்தி - கோயில்.

**வார்திகழ் மென்முலையாள்** - உமையம்மையார். இத்தலத் திருக்குறுந்தொகைப் பதிகத்தில் காணுமாறு திருமருகலிறைவரது திருவருளின் எளிமைப்பாடு குறித் தற்கு இத்தன்மையாற் கூறினார். ஆளுடைய பிள்ளையார் இத்தலத்தில் வணிகப் பெண்ணுக்கிரங்கி வணிகனை விடந்தீர்த்து மணஞ் செய்வித்தருளிய அருட்சரிதத்தை யும் இங்கு நினைவு கூர்க.

**ஏர் தரும் அன்பு** - அன்பு செய்தார்க்கு எல்லா நலனும் செய்யும் என்பதாம். அன்பே எல்லா அழகும் தருவதாம் என்க. ஏர் - இங்குப் பெரியதாகிய அருட் சிறப் புக் குறித்தது.

**இன்புற்றார்** - வணங்குதலாகிய அந்த இன்பத்தினுள் திளைத்து இருந்தனர். வணங்குதலே இன்பமாம் என்பது. "கூடுமன்பினிற் கும்பிடலே யன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" (143). 240

திருப்புகலூர்

I திருச்சிற்றம்பலம் திருநேரிசை

பகைத்திட்டார் புரங்கள் மூன்றும் பாறிநீ றாகி வீழப்
புகைத்திட்ட தேவர் கோவே பொறியிலே னுடலந் தன்னுள்
அகைத்திட்டங் கதனை நாளு மைவர்கொண் டாட்ட வாடித்
திகைத்திட்டேன் செய்வ தென்னே! திருப்புக லூர னீரே! 1

நீருமாய்த் தீயு மாகி நிலனுமாய் விசும்பு மாகி
யேருடைக் கதிர்க ளாகி யிமையவ ரிறைஞ்ச நின்றார்
ஆய்வதற் கரிய ராகி யங்கங்கே யாடு கின்ற
தேவர்க்குந் தேவ ராவார் திருப்புக லூர னாரே. 8

பதிகக் குறிப்பு :—திருப்புகலூர் இறைவரே! தொண்ணூற்ருறு என்னும் தத்துவ தாத்துவிகக் கூட்டத்தாலாகிய இவ்வுடம்பினுள் வைக்கப்பட்ட ஐம்புலனுசைகளால் ஆட்டுண்டு திகைக்கின்றேன்! திருக்கடவூர் இறைவர் பாதம் நாளும் நினைவிலேன்! உம்மை நினைந்து உய்யும் உபாயம் பற்றி உகக்கின்றேன்! உகவா வண்ணம் ஐம்புலன்கள் வலிமை செய்கின்றன! செய்வதொன் றறியேன்! என்றிரங்கியது.

குறிப்பு :—திருப்புகலூரில் நாயனுர் கும்பிட்டு முதன் முறையாகப் பலநாள் தங்கி வாழ்ந்தனர். அப்போது பற்பல தேவாரங்கள் அருளியிருத்தல் வேண்டும். பின்னர் இறுதியில் இரண்டாம் முறையாக அங்குப் பல காலம் தங்கி வாழ்ந்தனர். அக்காலத்தும் எண்ணிறந்த திருப்பதிகங்கள் அருளினர் என்று ஆசிரியர் அறிவிக்கின்றனர்.—முதல் முறை தங்கிவாழ்ந்த காலத்துப் பாடியருளியவற்றுள் இப்போது கிடைப்பன மூன்று பதிகங்களேயாம்! அவற்றுள் இரண்டு பதிகங்கள் "பாவியன் மாலைச் செந்தமிழ் பாடி" (1504) என்ற இவ்விடத்தும், "துன்னக் கோவனம்" என்ற திருக்குறுந் தொகைப்பதிகம் "பூம்புகலூர் தொழுதகன்ருர்" (1510) என்ற விடத்தும் அவற்றுட் பெறப்படும் சில குறிப்புக்களின் துணைகொண்டு குறிக்கப்படுவன.—திருப்புகலூர் என்ற தலப்பெயர்பற்றிவரும் ஐந்துபதிகங்களுள் எஞ்சிய "தன்னைச் சரணென்று" என்ற திருவிருத்தமும், "எண்ணுகேன்" என்ற திருத்தாண்டகமும் ஆகிய இரண்டும், தலப்பேராற் குறிக்கப்படாது பொதுப் பதிகங்களுள் தொகுக்கப்பட்ட நின்ற திருத்தாண்டகம், தனித்தாண்டகம், க்ஷேத்திரக் கோவை, குறைந்த திருநேரிசைப் பதிகங்களிரண்டு, தனித்திரு நேரிசைப் பதிகங்கள் மூன்று, ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணப்பதிகம், பாவநாசப் பதிகம், சரக்கறைத் திருவிருத்தம் ஆகிய பன்னிரண்டும், பின்முறையில் இத்தலத்தில் எழுந்தருளிச் சரித்த காலத்தில் அருளியவற்றுள், இப்போது நமக்குக் கிடைத்துள்ளவை. அவற்றைப் பின்னர்ப் "பெருங் காதலுடன், வைகுநா ளெண்ணிறந்த வண்டமிழ் மாலைகள் மொழிவார்" (திருநா. புரா. 413) என்னுமிடத்து ஆசிரியர் காட்டியுள்ள குறிப்புக்களின் துணைகொண்டு குறிக்கப்படும். "பொய்ம்மாயப் பெருங்கடல்" என்ற திருத்தாண்டகம் இத்தலத்தே அருளிச் செய்யப்பட்டது. இத்தலத்துத் தேவாரங்களுட் சேர்த்தற்குரியது. அதனைத் தல முறையுள் திருவாரூர்ப் பதிகங்களுள் வைத்துச் சேர்த்துள்ளார்கள். அதனை "இம்மாயப் பவத்தொடக்காம்" (திருநா. புரா. 423) என்றவிடத்திற் குறிக்கப்படும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:— (1) பாறி - அழிந்து. பாறுதல் - அழிதல். "பழவினைகள் பாறும் வண்ணம்" (திருவா). பொறி - நல் உணர்வு. "மற்றிது செய்ததென் பொறியிலாய்" (நீலநக். புரா - 12); "ஆரணமோதிலும், பொறியிலீர் மனமென் கொல் புகாததே" (தேவா). அகைத்திட்டு-செலுத்தி. நாளும் அதனை ஐவர்கொண்டு அகைத்திட்டு ஆட்ட - என்று கூட்டி உரைக்க. ஐவர்-ஐம்பொறிகள். அவா ஐந்து என்றலுமாம். அகைத்தல்-வேதனை செய்தல் என்றலுமாம்.—(2) மை-மை எழுதிய; அரி-செவ்வரிபடர்ந்த; மதர்த்த-காமநோக்கு மிகுந்த; ஒண்-ஒள்ளிய; கண்ணுக்குக் கூறிய இந்த அடைமொழிகள் அதன் வலையிற் படுதலுக்குக் காரணங்காட்டின. எரி - சூலம் கை ஏந்தும் என்க. எரியும் சூலமும் என்று உம்மைத்தொகை. எரிகின்ற சூலம் என்றுரைத்தலுமாம். ஐ-கோழை. கபம். "ஐயினுன் மிடறடைப் புண்டு" (தேவா). "ஐமேலுந்தி யலமந்த போது" (தேவா-பிள்ளையார் - திருவையாறு - மேகராக-1). நெரிந்து-மிகுந்து.—(3) முப்பதும் இருதூம்பை - தத்துவம் முப்பத்தாறும், தாத்துவிகம் அறுபதும் ஆகத் தொண்ணூற்ருறின் கூட்டமாகிய உடம்பு. அப்பர்-தலைவர்; போல்-ஏவல் வழி நிற்க வேண்டியவர், அவ்வாறன்றித் தாமே தலைவர்போல; அதுதநக-இது விடு-

என்று-தகாதவழிகளில் விருப்பு வெறுப்புக்களில் செல்லும்படி ஏவி.—(4) பொறி-நல் உணர்வு. அழுக்கு - அழுக்குடைய உடல். "அழுக்கு மெய்கொடுன் றிருவடி யடைந் தேன்" (தேவா). பொய் - பொய்வாழ்வு. அழதினை - சாதலை நீக்கி நிலைபேறு தரும் முத்தியை. மண்ணில் வைக்கும் - இவ்வுலகத்திலேயே பெற்றுவைத்தற்குரிய ; மனனில் என்பது பாடமாயின் அழது என்றதற்கு அமுதம் தரும் இறைவரை என்க. சேறிவு - ஞானத்திண்மை.—(5) அளியினார் - வண்டுகள் மொய்க்கும். குழலினார்கள் அவர்களுக்கு அன்பு அது ஆகி - பாதம் நாளும் நினைவு இலா என்றது அழிவு தரு வதனிடத்து அன்பு கொண்டும், அழிவை நீக்குவதனைச் சிறிதும் நினையாமலும் உள்ள நிலையை எடுத்துக்காட்டியபடி. அது - அதன் மயமே ; அதன் வசமே. மேயினார் கள் அவர்கள் - அவர்கள் - பகுதிப்பொருள் விகுதி. கடவூர் வீரட்டம் என்னும் தளியினார் - கூற்றுவனை உதைத்தவராதலின் அழிவில்லாமையை வேண்டினோர் அவரை நினைக்கக் கடவர் என்றபடி. வீரட்டம் என்ற குறிப்புமது. தளி - கோயில்.—(6) இலவு - இலவின் தன்மை. "இலவு காத்த கிளி"—பழமொழி. ஞானஞ் சேலவு - ஞானநெறியிற் செல்லுதல்.—(7) காத்திலேன் இரண்டும் மூன்றும் - ஐம்புலன் வழிச் செல்லாது மனத்தைக் காவல் புரிந்திலேன். இரண்டு மூன்று - ஆறு எனக் கொண்டு காமமாதி ஆறுவகைக் குற்றம் என்றலுமாம். வாய்மையால் தூயேனல்லேன் - உயிர்க்குத் தூய்மை தருவது வாய்மை. "புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை, வாய்மையாற் காணப் படும்" (குறள்). தீர்த்தம் - தூய்மை தருவது.—(8) ஏநடைக் கதிர்கள் - ஞாயிறுந் திங்களும். இனம் பற்றி வாயுவும் ஆன்மாவுங் கொள்க. சிவனது எட்டு மூர்த்தமும் கூறப்பட் டன. அங்கங்கே ஆடுகின்ற தேவர்க்கும் தேவ ராவர் - அங்கங்கும் ஆடும்-எவ்வகை அதிகாரமும் செய்யும் - தேவர் எல்லாருக்கும் தாமே ஆட்டுவிக்கும் தலைவர். இதனைத் "தேவர் பிரானை" (1504) என்று ஆசிரியர் குறித்தது காண்க. இக்குறிப்பினால் இப் பதிகம் முதலில் அருளப்பட்டது என்று கருத இடமுண்டு.—(9) மேய்யுளே - உபாயம்பற்றி உகக்கின்றேன் - விளக்கு-ஞான விளக்கு ; ஆதலின் உருவகம். "ஞான விளக்கினையேற்றி" (தேவா-பிள்ளையார்). யோகஞான முயற்சி. "உடம்பெனு மனைய கத்து ளுள்ளமே தகளி யாக, மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிம யக்கி, யிடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து நோக்கில், கடம்பர் காளை தாதை கழலடி காண லாமே" (பொது நேரிசை. 4) என்றது இதனை விளக்குதல் காண்க. பற்றி - பற்றுகக்கொண்டு. ஐவர் - ஐம்புலவாசை. சால வலியர் என்க. சால-சால்பு பொருந் தும் பொருட்டு என்றலுமாம். குறிப்பு :—இத்திருப்பதிகத்துள் 8 - 10 பாட்டுக்கள் மட்டும் திருப்புகலூரானுரே என்று படர்க்கையிடத்தும், ஏனையவை யெல்லாம் திருப் புகலூரனீரே! என்று முன்னிலை விளியிலும் மகுடம் அமைந்துள்ளன. முந்திய இரண்டும் வேறு பதிகத்தைச் சேர்ந்தனவோ என்பது ஐயம்.

திருப்புகலூர்

II    *திருச்சிற்றம்பலம்*    பண் - இந்தளம்

செய்யர்வெண் ணூலர் கருமான் மறிதுள்ளும், கையர் கனைகழல் கட்டிய காலினர் ;
மெய்யர்மெய்ந் நின்றவர்க் கல்லா தவர்க்கென்றும், பொய்யர் புகலூர்ப் புரிசடை யாரே.

பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக், கருந்தாழ் குழலியுந் தாமுங் கலந்து,
திருந்தா மனமுடை யார்திறத் தென்றும், பொருந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 3

கறுத்தார் மணிகண்டங் கால்விர லூன்றி, யிறுத்தா ரிலங்கையர் கோன்முடி பத்தும்,
அறுத்தார் புலனைந்து மாயிழை பாகம், பொறுத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—இப்பதிகம் புகலூர்ப் புரிசடையாரே என்ற மகுடமுடையது. புகலூரில் எழுந்தருளிய புரிசடை யிறைவரே, செய்யர்; மெய்ந்நின்றவர்க்கு மெய்யர்; அல்லாதவர்க் கென்றும் பொய்யர்; மேக ஊர்தியர்; கருந்தாழ் குழலியும் தாமும் கலந்து, திருந்தா மனமுடையார் திறத்து என்றும் பொருந்தார்; புலனைந்தும் அறுத்தார்; பாகம் பொறுத்தார் என்பன முதலிய தன்மைகளா லறியப்படுபவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) செய்யர்-வெண் நூலர்; மெய்யர் - பொய்யர் முரண் அணிச் சுவைபடக் கூறியது. மெய்ந்நின்றவர் - மெய்ந்நெறியில் ஒழுகுபவர். மெய்ந்நெறியாவது திருநீற்று நெறி. மெய்யினது நெறி. சன்மார்க்கம் என்ப.—(2) மேக நல் ஊர்தி - "பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த மேக நாயகனை" (திருவிசைப்பா). நாக வளை - பாம்புக் கங்கணம். நாக உடை - யானைத்தோல் உடை. நாகம் - யானை. போகர் - "போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்" (சித்தி. 1. 50) என்றபடி இறைவர் கொள்ளும் போக வடிவம்.—(3) கருந்தாழ் குழலி - தல அம்மை பெயர். திருந்தா மனம் - சிவ நன்னெறியிற் செல்லாத மனம். பொருந்தார் - விளங்கார்; வெளிப்படார்.—(4) அக்கு - உருத்திராக்கம். எலும்பு என்றலுமாம். உக்கார் தலை பிடித்து-பல்லையுக்க படுதலையாகிய கபாலத்தை ஏந்தி.—(5) ஆர்த்தார் உயிர் - வினைக்கீடாக நாள் உலந்தவர்களது உயிர்களை. உடல் பேர்த்தார் - உடலினின்றும் உயிரைப் போக்கினர். பெண்ணின் நல்லாள் - உமையம்மை. "பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே" (தேவா). கூர்த்து ஆர் மருப்பு-கூர்மைகொண்டு பொருந்திய கொம்பு. பெண்ணினல்லாள் உட்க உரி போர்த்தார் என்க. உட்குதல் - அஞ்சுதல். ஈர் உரி - உரித்த தோல்.—(6) சுறவம் துதைந்த கோடி - மீனக் கொடி. மன்மதனுடைய கொடி. கணை வலங் காய்ந்த - கணையினது பலத்தை அழித்த. தூமன் (ஆகிக்) காய்ந்த என்க. தூமன் - அனல் விழித்துப் புகைப்பவனாகி. தூமம் - புகை. சேம நெறி - உயிர்களுக்குச் சேமந்தரும் சிவநெறி. சீரை - மரவுரி. பூமன் - அழகு பொருந்தும்.—(7) வெய்யோன் - 12 சூரியர்களுள் ஒருவர். கண் புதைத்தார் - "உண்ணப் புகுந்த பகனொளித் தோடாமே, கண்ணைப் பறித்தவா றுந்தீபற" (திருவா). பதைத்தார் - பதைத்தாராகிய. அவி புண்ண விரைந்தாராகிய அங்கியும் வியாத்திரனும்.—(8) கரிந்தார் தலையர் - இறந்தவருடைய தலைமாலை பூண்டவர். கரிந்தார் - மாண்ட பிரம விட்டுணுக்கள். மதில் மூன்றுந் தழல் உண்ணக் கணைகள் தெரிந்தார் என்க. கணைகள் - மூன்று தேவர்களைக் கூறுக்கொண்டமையின் பன்மையாற் கூறினர். விரிந்து ஆர் சடை என்க. புரிந்தார் - தங்கச் செய்தார்.—(9) ஈண்டு ஆர் அழல் என்க. இருவரும் தடுமாற்ற நிலை அஞ்ச - கைதொழ - அழலின் நீண்டார் என்க. நீளுதல் - மேலும் கீழும் அறிய வாராது செல்லுதல். மாண்டார் எலும்பு பூண்டார் - எலும்பு மாலை அணிந்தார்; கங்காளர். புலனைந்தும் அறுத்தாரா யிருந்தே ஆயிழை பாகம் பொறுத்தார் என்றது போகவடிவங் கொள்வது. உயிர்களுக்குப் போகம் புரிதற்பொருட்டன்றிப் பிறர்போலத் தான் அனுபவித்தற்கன்று என்றதாம். பொறுத்தார் - (தாங்கினர்) என்ற கருத்துமிது.

திருச்செங்காட்டங்குடி

திருச்சிற்றம்பலம்

திருத்தாண்டகம்

பெருந்தகையைப் பெறற்கரிய மாணிக் கத்தைப்
பேணிநினைந் தெழுவார்தம் மனத்தே மன்னி
யிருந்தமணி விளக்கதனை நின்ற பூமே
லெழுந்தருளி யிருந்தானை யெண்டோள் வீசி

யருந்திறன்மா நடமாடு மம்மான் றன்னை
யங்கனகச் சுடர்க்குன்றை யன்று வின்கீழ்த்
திருந்துமறைப் பொருணால்வர்க் கருள்செய் தானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டே னானே. 1

கந்தமலர்க் கொன்றையணி சடையான் றன்னைக்
கதிர்விடுமா மணிபிறங்கு கனகச் சோதிச்
சந்தமலர்த் தெரிவையொரு பாகத் தானைச்
சராசரநற் றாயானை நாயேன் முன்னைப்
பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே
பன்னியநூற் றமிழ்மாலை பாடு வித்தென்
சிந்தைமயக் கறுத்ததிரு வருளி னானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டே னானே. 4

கல்லாதார் மனத்தணுகாக் கடவு டன்னைக்
கற்றார்க ளுற்றோருங் காத லானைப்
பொல்லாத நெறியுகந்தார் புரங்கண் மூன்றும்
பொன்றிவிழ வன்றுபொரு சரந்தொட் டானை
நில்லாத நிணக்குரம்பைப் பிணக்க நீங்க
நிறைதவத்தை யடியேற்கு நிறைவித் தென்றுஞ்,
செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டே னானே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பெருந்தகை, உருகுமனத் தடியவர்கட்கு ஊறுந் தேன், உண்மை நின்ற பெருகுநிலைக் குறியாளர் அறிவு, மெய்த்தவத்தோர் துணை, நாயேன் முன்னைப் பந்தமறுத்து ஆளாக்கிப் பணிகொண்டு பன்னியநூற் றமிழ்மாலை பாடுவித்து என் சிந்தை மயக்கறுத்த திருவருளினான், பாவந்தீர்த்துப் பண்டை வினைப் பயமெல்லாம் போக்கித் தித்தித் தென்மனத்துள்ளே யூறுந் தேன், நிறை தவத்தை யடியேற்கு நிறைவித் தென்றுஞ் செல்லாத செந்நெறிக்கே செல்விப்பான், உரிய பலதொழில் செய்யு மடியார் தங்கட் குலகமெலா முழுதளிக்கு முலப்பிலான் என்பன முதலாக அறியப்படும் இறைவரை நான் திருச்செங்காட்டங் குடியிற் கண்டேன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பேணி - அன்பு பூண்டு. பூ-இதய தாமரை.—(2) நகத்தால் அன்றித் தொலையா - படைக்கலங்களால் அழிக்கப்படாதபடி இரணியன் பெற்ற வரம். கனகத் திருமால் - நரசிங்க அவதாரம்.—(3) உண்மை நின்ற - மெய்ந்நெறி நின்ற. பெருகுநிலைக் குறியாளர்-பெருநிலையிற் குறிக்கோள் வைத்தவர்.—(4) நாயேன் முன்னை...திருவருளினால் - நாயனாரது முன்னை நிலைக் குறிப்பும் சரித அகச்சான்றும்.—(5) வெஞ்சினத் திரிசூலம் - உடையானது சினம் படைமேல் ஏற்றப் பட்டது.—(6) கன்னி - கங்கை. பன்னிய - தன்னையே சொல்லிய.—(7) இல்லாத் தெய்வம் - உண்டு இல்லை என்று சொல்லும் சமணர் வழக்குத் குறித்தது. வீழாமே...தேனை - நாயனாரது சரித நிகழ்ச்சியின் அகச்சான்று. தித்தித்தென் மனத்துள்ளே யூறும் தேன் - எண்ணி எண்ணி அள்ளூறும் அன்பு நிறைந்த நாயனாரது மனநிலை குறித்த அகச்சான்று. "நாயகன் சேவடி, தைவரு சிந்தையும் நைந்துருகி" (1405), "செம்பொற் றாளே சார்வான திருமனமும்" (1490) என்பன முதலாக ஆசிரியர் எடுத்துக் காட்டும் சரித நிகழ்ச்சிகள் இவ்வாறு கண்ட நாயனாரது திருவாக்குக்களின்படி போந்தன.—(8) நிறைதவத்தை யடியேற்கு நிறைவித்து - "பண்டுபுரி நற்றவத்துப் பழுதினளவு இறைவழுவுந் தொண்டர்" (1314), "உன்னுடன்

பிறந்தான் முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்" (1313) என்ற சரிதப் பகுதிகளின் அகச்சான்று. செல்லாத - மீளப் பிறவியிற் செல்லாத. செந்நெறி - செம்மை நெறி.—(9) உரிய பல தொழில் - சரியை முதலிய நெறிகளின் வழி பாடுகள். உலப்பிலான்-குறைவு இல்லாதவன். உலக முழுதும் கொடுப்பினும் மேலும் குறைவுபடாத திருவுடையவன்.

தலவிசேடம்:—திருச்செங்காட்டங்குடி-விநாயகக் கடவுள்,கயமுகாசுரனை வீட்டியபோது அவனது இரத்த வெள்ளம் பரந்த இடம் என்ற காரணத்தால் இஃது திருச்செங்காடு எனப் பெயர் பெறும். அவ்வாறு அசுரனைச் சங்கரித்தபின் அவ்விடத்து ஓர்பால் கணபதிக் கடவுள் சிவபெருமானைத் தாபித்துப் பூசித்ததலம் இதுவாகும். இக் காரணத்தால் கணபதீச்சரம் என்று இக்கோயிலுக்குப் பெயர் வழங்கும். "ஏடவிழலங்கற் றிண்டோ ளிபமுகத் தவுணன் மார்பி,னீடிய குருதிச் செந்நீர் நீத்தமா யொழுகும் வேலைப், பாடுற வருங்கா ஞென்றிற் பரத்தலி னதுவே செய்ய காடெனப் பெயர் பெற் றின்னுங் காண்டக விருந்த தம்மா" எனவும், "மீண்டுசெங் காட்டி லோர்சார் மேவிமெய் ஞானத் தும்பர், தாண்டவம் புரியுந் தாதை தன்னுருத் தாபித் தேத்திப், பூண்டபே ரன்பிற் பூசை புரிந்தனன் புவியு ளோர்க்குக், காண்டகு மனைய தானங் கணபதீச் சரம தாகும்" எனவும் வரும் கந்தபுராணங் காண்க. (கயமுகனுற்-பட-250, 264).சிறுத்தொண்ட நாயனார் அவதரித்துப் பேறுபெற்ற வரலாறும்,ஆளுடையபிள்ளையாரும் ஆளுடை அரசுகளும் எழுந்தருளி அவருடன் இருந்து உபசரிக்கப்பெற்ற வரலாறும் முதலியன அவ்வவர் புராணங்களுட் காண்க. சிறுத்தொண்ட நாயனார் அரசனுக்காகச் சேனையுடன்போய் பகைவரது வடபுலத்து வாதாவித் தொன்னகரத்து வலிய அரணை அழித்து அங்கிருந்துகொண்டுவந்து தாபித்த கணபதி இக்கோயிலில் வாதாபி கணபதி என்ற பெயரால் வழிபடப்பெற்று விளங்குகின்றார்.இசைவாணர்கள்"வாதாபி கணபதிம் பஜே" என்று தொடங்கிப் பாடும் பாட்டு இவரைப் பற்றியது என்பர். சிறுத்தொண்ட நாயனாருக்கு அருள்செய்யும் பொருட்டாக வைரவச் சைவக்கோலத்தோடு எழுந்தருளிய உத்தராபதியார் அமர்ந்திருந்த திருவாத்திமரம் இக்கோயிலில், அவரது உற்சவ மூர்த்தி சந்நிதிக் கெதிரில் உள்ளது. சந்நிதிக் கெதிரில் சிறுத்தொண்ட நாயனார், திருவெண்காட்டு நங்கை, சீராள தேவர், சந்தனத் தாதியார் எழுந்தருளியுள்ளார். தெற்கு வீதியின் மேல்கோடியில் சிறுத்தொண்டரது திருமனை இருந்த தென்பர். அங்கு உத்தராபதியாரது திருவுருவம் அமைக்கப்பட்டு அத்திருவிழாவும் ஆண்டு தோறும் கொண்டாடப் பெறுகின்றது. சிறுத்தொண்ட நாயனாருக்கும் மனைவியார்க்கும் மகனார்க்கும் முறையே அருளும் பொருட்டு வெளிப்பட்டு இறைவர் "மலைபயந்த தையலோடும் சரவணத்துத் தனயரோடு" தாமணைந்து திருவடி சேர்த்துக்கொண்ட பெருமை பெற்றது இத்திருத்தலம். சிறுத்தொண்ட நாயனாரது பெருமையும் சீராள தேவரது பெருமையும் திருப்பதிகத்துப் போற்றப் பெற்றன. "சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங்குடி" என்பதும் பிறவும் காண்க. சுவாமி-கணபதீச்சுரர்; அம்மை - திருக்குழனன்மாது; மரம் - திருவாத்தி; தீர்த்தம் - சூரிய தீர்த்தம்; பதிகம் - 3.

நன்னிலம் என்ற புகைவண்டி நிலயத்தினின்றும் கிழக்கில் 4 நாழிகை யளவில் உள்ள திருப்புகலூரையும், அங்கு நின்றும் தெற்கே ஒரு நாழிகை யளவில் உள்ள திருஇராமனதீச்சரத்தையும் கடந்து சென்றால், கிழக்கே மட்சாலைவழி இரண்டு நாழிகை யளவில் இதனை அடையலாம். (இராமனதீச்சரம் என்பது கண்ணபுரம் என வழங்கப் படும் ஊரின் கிழக்கில் உள்ளது). இது காவிரிக்குத் தென்கரையில் 79-வது தலம்.

திருநள்ளாறு

I திருச்சிற்றம்பலம்　திருக்குறுந்தொகை

உள்ளா றுதஃதோர் புண்டரி கத்திரள், தெள்ளா றுச்சிவச் சோதித் திரளினைக்
கள்ளா றுதபொற் கொன்றை கமழ்சடை, நள்ளா றுவென நம்வினை நாசமே. 1

இலங்கை மன்ன னிருபது தோளிற, மலங்க மால்வரை மேல்விரல் வைத்தவர்
நலங்கொ ணீற்றர்நள் ளாறரை நாடொறும், வலங்கொள் வார்வினை யாயின மாயுமே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருநள்ளாற்றில் எழுந்தருளிய இறைவர் சிவச்சோதித் திரள்; காரணக் கலைஞானக் கடவுள்; வஞ்ச நெஞ்சத்தவர்க்கு வழிகொடார்; நைஞ்ச நெஞ்சர்க்கருளுவர்; அவரை வணங்குவார் வினை மாயும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) உள் ஆறுதது ஓர் புண்டரிகத் திரள் - ஏனைத் தாமரைகள் போல நீர்க் கீழ்ச் சேற்றில் கிழங்கு முதலாகத் தோன்றாது வீசம் முதலாகத் தோன்றி முளைத்த ஒப்பற்ற வெண்டாமரை - "ஊறுமருவி யுயர்வரை யுச்சிமேல், ஆறின்றிப் பாயு மருங்குள மொன்றுண்டு; சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப், பூவின்றிச் சூடான் புரிசடை யானே" (8 - 414) என்பது திருமூலர் திருமந்திரம். ஆறுத - ஆறாக - வழியாகக் - கொள்ளாத என்னும் பொருளில் வந்தது. புண்டரிகத் திரள் - தாமரையின் தன்மைகள் எல்லாம் திரட்டித் தன்னுட்கொண்டது. தேள் ஆறுச் சிவச் சோதித் திரள் - தேள் - தெளிந்த ஞானம். ஞானத்தெளிவு. ஆறு வழியாகக் காணப்படும். தெளிந்த சிவஞானத்தின் வழிக்காணும் சிவமாகிய பேரொளிப் பிழம்பு.—(2) ஆரணம்-வேதங்களின் தொகுதி. காரணக் கடவுள் என்க. காரணம்-நிமித்த காரணன். கலைஞானக் கடவுள் - எல்லாக் கலைஞானங் களையும் தருபவன். கலைஞானங்களுக்குப் பொருளாயுள்ளவன். கடவுள் - கடந்த பொருள்.—(3) அழல் சோர - அழலினாற் சோர்வடைய.—(4) நலியும் - நலிவிக்கும். நலிந்த - நலிவித்த. இவையிரண்டும் பிறவினைப் பொருளில் வந்தன. வலியும் - பெரிய அருளையேயன்றிப் பெரிய வலிமையினையும் என்று உம்மை இறந்தது தழுவிற்று.—(5) உறவன் - உறவுடையவனாய் - நன்மை செய்பவனாய். நிறைந்து - உயிர்க்குயிராய் நிறைந்து. மறவனாய்ப் பன்றிப் பின்சென்ற மாயமே - ஆளுடைய நம்பிகள் "மறவனை யன்று பன்றிப் பின்சென்ற மாயனை" என்ற இத்தலப் (தக்கேசிப்பண்) பதிகத்து இதனை எடுத்தாண்டமை காண்க. நறவ நாறும் பொழிற்றிரு நள்ளாறன், "நறைவிரிவு நள்ளாறன்" என்பது நம்பிகள் தேவாரம்.—(6) செக்கர் அந்து அழி செஞ்சுடர்ச் சோதி - செவ்வான வொளியினை விஞ்சிய சிவந்த சுடர் போன்ற பேரொளி. நக்கர் - நக்க உருவுடையவர். வக்கரன் - ஒரு அசுரன். மாயன் - விட்டுணு.—(7) விஞ்சை - வித்தை. ஞானம். விஞ்சையிற் செல்வப் பாவை - ஞானத்தாயாகிய சிவ சிற்சத்தி. நஞ்ச - நைந்த. நைதல் - அன்பினால் உருகுதல். நைஞ்ச என்பது நஞ்ச என நின்றது.—(9) பாம்பு அணை - பாம்பாகிய படுக்கை. பூம் பணை - பூவாகிய இருக்கை. புராணன் :- பழமை உடையவன்.—(10) மலங்க - வருந்த.

II திருச்சிற்றம்பலம்　திருத்தாண்டகம்

ஆதிக்க ணான்முகத்தி லொன்று சென்று வல்லாத சொல்லுரைக்கத் தன்கை வாளாற்
சேதித்த திருவடியைச் செல்ல நல்ல சிவலோக நெறிவகுத்துக் காட்டு வானை
மாதிமைய மாதொருகூ றாயி னானை மாமலர்மே லயனோடு மாலுங் காணா
நாதியை நம்பியை நள்ளாற் றானை நானடியே னினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 1

குலங்கெடுத்துக் கோணீக்க வல்லான் றன்னைக்
குலவரையன் மடப்பாவை யிடப்பா லானை
மலங்கெடுத்து மாதீர்த்த மாட்டிக் கொண்ட
மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையி னானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னுந்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலங்கொடுத்த நம்பியை நள்ளாற் றானை
நானடியே னினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 6

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு**:—முழுமுதலாகிய இறைவர் திருநள்ளாற்றில் விளக்கமாக வீற்றிருந்தருள்கின்றார்; அவர் நம்பி; அவரை அடியேன் நினைக்கப்பெற்று உய்ந்த வாறு தான் என்னே! அற்புதம்!

**பதிகப் பாட்டுக் குறிப்பு**:—(1) ஆதிக்கண்ணான் - பிரமதேவன் - முதலிற் படைக்கப்பட்டவன். ஆதிக்கண்ணனது முகங்களுள் ஒன்று. "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" (எவன் முதற்கட் பிரமாவைப் படைக்கின்றானோ), "யோவை வேதாஞ்ச பிரஹிணோதிதஸ்மை" (எவன் அப்பிரமனுக்கு வேதங்களைக் கொடுக்கின் றானோ) என்பது சுவேதாசுவதரம். சங்கற்பத்தில் "அத்யப்ரஹ்மண:" ஆதிக்கட் டோன்றிய பிரமனுடைய என்பதும் காண்க. (இவை ஸ்ரீமத் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் உதவிய குறிப்புக்கள்.) அல்லாத சொல் - ஐம்முகனாகிய இறைவனோடொப்பத் தானும் ஐம்முகவன் என்ற சொல். கைவாள் - கை - ஆகு பெயர். நகமாகிய வாள். திருவடி - பெரியோன். "வாகீசத் திருவடி" (1374). செல்ல - உயிர்கள் செல்வதற்கு. சிவலோக நெறி - சிவனுலகம் புகும்நெறி. சரியை யாதி சிவநெறி நான்கு. நாதி - நாதன். இகர விகுதி ஆளி என்பது போல நாதனுந் தன்மையுடையவன் என்ற பொருள் குறித்தது. ஆறே! - ஏகாரம். என்ன அற்புதம் என்று வியப்புப் பொருளில் வந்தது.—(2) ஆ! ஆ! - இரக்கக் குறிப்பு. சங்கத்த முத்து - சங்கு ஈன்ற முத்து.—(3) அடலரவம் - ஆதிசேடன். மாணி - பிரமசாரி; மார்க்கண்டர். நடலரவம் - அன்பம்.—(4)விடு தோடு - தொங்கும் தோடு. ஒளிவிடும் தோடு எனினுமாம். "வானி, னகலா மீனி னவிர்வன விமைப்ப" (முருகு). சுட் டங்கம் - உலகம் சுட்ட ஊழியில் எஞ்சிய நீறு.—(5) சிலந்தி - திருவானைக்காவில் பூசித் துப் பின் கோச்செங்கட் சோழராக வந்தவர். கலந்தார் - தாமென்றும் அவனென்றும் பிரித்துக் காணுதபடி தியான உறைப்பினாற் கலந்தவர்.—(6) குலம் - பசுக்கள் என்ற குலம். கோள் - பாசம். பாசத்(கட்டு)தினாற் கொள்ளப்பட்ட போது உயிர்கள் பசுவா கிய குலஞ் சாரும்; கட்டுநீங்கியபோது பதியாகியகுலம் சாருமென்பது ஞானசாத்திரம். மலம் - ஆணவம். மாதீர்த்தம் - தூய்மை செய்யும் தண்ணிய அருள். ஆட்டிக்கொண்ட- ஆட்டி, அதனாற்றூய்மையாக்கித், தம்மிடத்தே கொண்ட. சலம் - கோபம். தயா மூல தன்ம மென்னும் - தன்மங்களுக் கெல்லாம் மூலமாகிய அன்பு என்னும் அறம். தாழ்ந்தோர் - தாழ்வெனுந் தன்மையுள் நின்றோர். தாழ்ந்தோர் - விரும்பியவர் என்றலுமாம்.—(7) புகலூரானை - திருப்புகலூரினின்றும் போந்து திருநள்ளாறு தரிசித்து நினைந்து மீண்ட குறிப்பு. தே இரியச் சிதைத்தானை என்று கூட்டுக. தே - தேவர்கள். இரிய - பலபுறமும் சிதைந்து ஓட. அவன் - தக்கன்.—(8) காளத்தியானைக் கயிலை மேய நல்லானை - கயிலையும் காளத்தியும் ஒப்பென்ற குறிப்பு.—(9) முனிவன் - மார்க்கண்டர். குன்றாத - நினைவு குறையாத. அன்றாக - பகைமையாக. சென்றியாது என்றது சென்றாது என நின்றது. ஒன்று - வேண்டிய அந்த ஒன்று.—சிவனே எம்பெருமான் - எமது பற்றுச் சிவனேயாம்.—(10) உறவாகி

இன்னிசை-உறவாகிய (அன்புகொண்ட) இன்னிசை. அகரம்குறைந்தது. உற்றபிணி-கயிலைமலைக்கீழ்ச் சிக்கிப் பிணிப்புண்ட தன்மை. மதி - கொன்றை - வன்னி - மத்தம் (ஊமத்தம்) - இவை இறைவர் சடையிற் சூடுபவை. "வன்னி கொன்றை மதமத்தம்" (பிள்ளையார் - திருவாஞ்சியம்).

தலவிசேடம்:—திருநள்ளாறு - இது காவிரிக்குத் தென்கரை 52-வது தலம். நளன் பூசித்த காரணத்தால் நள்ளாறு எனப் பெயர் வழங்குவது. ஆதிபுரி, தருப்பாரண்ணியம், விடங்கபுரம், நளேச்சுரம் என்று முறையே நான்கு யுகங்களிற் பெயர் பெற்றது. நளன் பூசித்துக் கலி நீங்கப்பெற்ற தலம். ஒரு வேதியனுக்குப் பசுக் கொலைப்பழியும், கலிங்க அரசனுக்குப் பிராமண சாபப்பழியும் நீங்கிய தலம். விட்டுணு, பிரமதேவன், திக்குப்பாலகர், வசுக்கள், காசிபர், அகஸ்தியர், அருச்சுனன், போசன் முதலியோர் பூசித்துப் பேறு பெற்றது. இறைவனருள் வழியே தன்னை வழிபட்டோர்க்கு வரங்கள் அளித்துச் சனி பகவான் கோயில் வாயிலில் விளக்கமாய் வீற்றிருக்கின்றனர். முசுகுந்தர் தாபித்த விடங்கத் தலங்கள் ஏழனுள் ஒன்று. இத்தலத்தில் ஆளுடைய பிள்ளையார் அருளிய "போக மார்த்த பூண்முலையாள்" என்ற பதிகம் திருவாலவாயில் சமணருடன் நிகழ்ந்த கனல் வாதத்தில் தீயில் வேவாது இருந்து சைவ சமய உண்மையை நிலைநாட்டிய பெருமை யுடையது. சுவாமியின் திருவுருவத்தில் தருப்பைக் கொழுந்து போன்ற அடையாளங்களுடைய தலம். அனல்வாதத்தில் இத்தலப்பதிகம் எழுந்தபோது அத்திருவேட்டினை வைத்து அங்கிருந்தபடியே பிள்ளையார் இத்தலத்திற்குப் பதிகம்பாடிப்போற்றினதுடன், பாண்டி நாட்டினின்றும் போதும்போது, அங்குவந்து உள்ளத்துணையாயெழுந்தருளிய அருளினை நினைந்து,மீண்டும் இத்தலத்துக் கெழுந்தருளித் "திருவாலவாயும் திருநள்ளாறும்" என்ற பதிகம் பாடிப்போற்றிய தலம். மூவர் பாடலும்பெற்ற பெருமையுடையது. இங்கு வழிபட்டோர் கலிநீங்கப் பெற்று நன்மை பெறுவது இன்றும் வெளிப்படையாகக் காணப்படுவது. அம்மை பெயர் பதிகத்துக் காணப்பெறும். சுவாமி - தர்ப்பாரண்யேசுவரர்; அம்மை - போகமார்த்த பூண் முலையாள்; தியாகர் - நகவிடங்கர்; நடனம் - உன்மத்த நடனம்; தீர்த்தம் - சிவகங்கை, பிரம தீர்த்தம், நளதீர்த்தம் முதலியன. தலமரம் - தருப்பை. பதிகம் - 6.

பேரளம் - காரைக்கால் இரயில் கிளைப்பாதையில் திருநள்ளாறு என்ற நிலயத்தினின்றும் தெற்கில் மட்சாலை வழி ½ நாழிகை யளவில் இதனை அடையலாம்.

திருச்சாத்தமங்கை

நாயனார் பதிகம் கிடைத்திலது!

திருமருகல்

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

பெருக லாந்தவம் பேதைமை தீரலாந், திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ரானந்தம், மருக லானடி வாழ்த்தி வணங்கவே. 1

ஓது பைங்கிளிக் கொண்பா லமுதூட்டிப், பாது காத்துப் பலபல கற்பித்து
மாது தான்மரு கற்பெரு மானுக்குத், தூது சொல்ல விடத்தான் றொடங்குமே. 4

நீடு நெஞ்சு ணினைந்துகண் ணீர்மல்கு, மோடு மாலினோ டொண்கொடி மாதராள்
மாட நீண்மரு கற்பெரு மான்வரிற், கூடு நீயென்று கூட லிழைக்குமே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—மருகற்பெருமான் அடிவாழ்த்தத்,தவம் பெருகலாம்; பேதைமை தீரலாம்; சிந்தைத்திருகல் திருத்தலாம்; பரமானந்தம் பருகலாம்; அவரது திருவேடங் கைதொழ வீடு எளி...

பாட்டுக்கள் மருகற்பிரானுரை நாயகராய்க்கண்டு கொண்டு பிரிந்த தலைவி வருந்தும் நிலை கண்டு நற்றாய் கவன்றுரைத்ததாக அகப்பொருட்டுறையில் அமைந்தன.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) வணங்கவே - தவம் பெருகல் ஆ(கு)ம் - சிந்தை திருந்தல் ஆ(கு)ம் - பருகல் ஆ(கு)ம் என்க.—(2) பாடங்கோள் பனுவல் - வேதம் முதலிய கலைஞானங்கள்; அபர ஞானம். அந்து உள்ளன நாடு தட்டிய - பயனிலிகளாய்த் திரிந்த. நாணிலீர் - பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும் பிரானடி பேணுது பெறுதற்கரிய பேறிழந்தமையால் நாணற்றவர்களே என்றிரங்கியது.—(3) சினம் - இங்குக் காமம் முதலிய எல்லாத் தீக்குணங்களின் தொகுதி குறித்தது. செய் தொழில் - (தீக்குணங்களால்) தூண்டப்பட்டுச் செய்யும் தொழில்கள். மிக ஆதரவாய் - மிக்க அன்புடன்.—(4) ஓது - சொன்னது கேட்டுப் பதிகங்களையும் வேதங்களையும் ஓதும். தூது - தன்னிலை யறிவித்து நாயகனை வருமாறு கேட்டு அனுப்பும் தூது.—(5) தாய் கூற்று. கைவளை சோர்தல் - கண்ணீர் மல்குதல் - காதல் நோயின் மெய்ப்பாடுகள். மேல்வரும் பாட்டில் சங்கு சோர்தல் - கலை சரிதல்- பெருமான் வரும் வீதி யணைதல் என்பவையும் இக்கருத்துப் பற்றியன.—(6) நங்கையீர் - தோழிமார்களை நோக்கிக் கூறியது.—(7) தாழ்ச்சி - விருப்பம்.—(8) கூடலிழைத்தல் - தரையில் தொடர்ந்து சுழிகள் கீறிக் கணக்கிட்ட சுழிகளில் தொடங்கிய இடைத்தைக் கூடின் காரியம் கூடும் என அறியும் ஒரு வழக்கு; குறிபார்க்கும் வகைகளுள் ஒன்று. "ஆழிதிருத்திச் சுழிக்கணக்கோதி" (கோவை - 186).—(9) குழல் கட்டிலள் - சிந்தை செய்து - திகைத்தல் - கூடலிழைத்தல் - இவை பிரிந்து வருந்தும் நாயகியின் நிலைகள். குறிப்பு:—இப்பதிகத்துள் 1, 2, 3, 4, 10 பாட்டுக்கள் ஒரு கருத்தும், 5 முதல் 9 வரை பாட்டுக்கள் ஒரு கருத்தும் பற்றியன.

தல விசேடம்:—ஒரு வணிகக் கன்னிக்கு இரங்கி, வணிகனை விடந்தீர்த்து ஆளுடைய பிள்ளையார் அருளிய அற்புதம் நிகழ்ந்த தலம். வரலாறு அவர் புராணம் 472 முதல் 483 வரை பாட்டுக்களுட் காண்க. விடந்தீர்த்த பிள்ளையார் தெற்குச்சந்நிதியில் எழுந்தருளியுள்ளார். மருகல் என்பது வாழை வகைகளுள் ஒன்று; இத்தலமரம் வாழையாதலின் இப்பெயர் பெறுவதென்பர். இஃதொரு மாடக்கோயிலாகக் காணப்படுகிறது. இத்தலப் பதிகங்கள் அகப்பொருட்டுறைச் சுவைபட அமைந்தமை குறிக்கத்தக்கது. திருச்செங்காட்டங் குடியுட் கணபதீச்சரத்தில் எழுந்தருளிய திருக்கோலத்தை இங்குக்காட்டக் கண்டு ஆளுடைய பிள்ளையார் அற்புதத்தோடு வணங்கி இருதலங்களையும் சேர்த்துத் "திருச்செங்காட்டங்குடியும் திருமருகலும்" வினுவுரையாகிய திருப்பதிகம் பாடியருளிப், பின் கணபதீச்சரம் தரிசித்தருளினர்; அத்திருப்பதிகத்தினுள் வேதமோதும் சிறப்புத் திருமருகலிலும், செந்தமிழ்ச் சிறப்புத் திருச்செங்காட்டங்குடியிலும் வைத்துப் பாராட்டிய திறம் கருதத்தக்கது. சுவாமி அவரது பெயருக் கேற்ப அழகிய திருமேனியுடன் விளங்குகின்றார். சுவாமி - மாணிக்க வண்ணர்; அம்மை - வண்டுவார் குழலி; தலமரம். வாழை; பதிகம் 3.

நன்னிலம் என்ற இருப்புப் பாதை நிலயத்தினின்றும் கிழக்கே மட்சாலை வழி 4 நாழிகை யளவில் திருப்புகலூரை யடைந்து, அங்கு நின்றும் கிழக்கே மட்சாலை வழி 3 நாழிகை யளவில் இத்தலம் அடையத்தக்கது. திருச்செங்காட்டங்குடியினின்றும் வடகிழக்கில் 2 நாழிகை யளவில் உள்ளது.

1506. அப்படி சின்னுள் சென்றபி ளுரூர் நகராளுந்
துப்புறழ் வேணிக் கண்ணுத லாரைத் தொழுதிப்பான்
மெய்ப்பொருண் ஞானம் பெற்றவர் வேணு புரத்தெங்கள்
பொற்புரி முந்நூன் மார்பரும் வந்தார் புகலூரில். உசக

(இ - ள்.) வெளிப்படை அவ்வாறு சில நாள்கள் சென்ற பின்னே, திருவாரூர்த் திருநகரை ஆட்சிபுரியும் பவளம் போன்ற சடையினையுடைய கண்ணுதலாராகிய இறைவரைத் தொழுது கொண்டு, இப்பால், மெய்ப்பொருளாகிய ஞானத்தினை உண்டருளிய சீகாழியிலவதரித்த முப்புரி நூலணிந்த மார்பினராகிய எமது ஆளுடைய பிள்ளையாரும் திருப்புகலூரில் வந்தருளினர்.

(வி - ரை) அப்படி சின்னாள் சென்ற பின் - அப்படி - முன்பாட்டிற் கூறிய வாறு திருப்புகலூரையும் பிரியாது, திருச்செங்காட்டங்குடி, திருநள்ளாறு, திருமருகல் முதலிய தலங்களையும் கும்பிட்டு, நாயனார் மீண்டும் திருப்புகலூரில் வதிந்தருளிய படி, பிள்ளையார் திருவாரூரைத் தொழுது வந்தே உம்முடன் வந்திருப்பன் என்று சென்றருளியபின், அவரது வருகையை எதிர்நோக்கி நாயனார் திருப்புகலூரிலும், அணிமையில் உள்ள ஏனைத் தலங்களிலுமாகத் தங்கிச் சிலநாள் தொழுதிருந்தனர் என்பது.

துப்பு - பவளம். வேணி - சடை. இறைவரது சடை சிவந்த நிறத்தால் பவளம் போன்றது. "செஞ்சடைவானவர்"-அருண சடேசர் முதலிய வழக்குக்கள் காண்க.

ஞானம் பெற்றவராகிய மார்பரும் - தொழுது - இப்பால் - புகலூரில் - வந்தார் என்று கூட்டுக.

மார்பரும் - நாயனார் எதிர் பார்த்திருந்த அவரும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

இப்பால் - அணிமைச் சுட்டுப் பிள்ளையார் நாயனாரிருந்த புகலூரை நோக்கி வந்தமை காட்டி நின்றது.

மெய்ப்பொருள் ஞானம் - சிவஞானம். "சிவனடியே சிந்திக்கும்" (திருஞான-புரா - 70) பார்க்க. மெய்ப்பொருளை அறியும், அறிவிக்கும், அனுபூதியாகக் கூட்டும், ஞானம் என்று எல்லா வகையாலும் உரைக்க நின்றது. மெய்ப்பொருள் ஆகிய இறைவன் தந்த ஞானம் என்றலுமாம்.

எங்கள் - எம்மை ஆளுடைய உரிமை குறித்தது.

வந்தார் புகலூரில் - நாயனார்பால் அருளியபடி அவரை நினைந்த வண்ணமாகப் பிள்ளையார் வந்த செயலின் விரைவு குறிக்கப் பயனிலையை முன் வைத்தார். "நங்கடந்திரு நாவினுக் கரசரை நயந்து" (திருஞான - புரா - 517) என்றது காண்க. 241

வேறு

1507. பிள்ளையா ரெழுந்தருளப் பெருவிருப்பால் வாகீசர்
உள்ளமகிழ்ந் தெதிர்கொண்டங் குடனுறையு நாளின்கண்
வள்ளலார் சிறுத்தொண்டர் மற்றவர்பா லெழுந்தருள
எள்ளருஞ்சீர் நீலநக்கர் தாமுமெழுந் தருளினார். ௨௪௨

(இ - ள்) வெளிப்படை. பிள்ளையார் எழுந்தருள - ஆளுடைய பிள்ளையார் அவ்வாறு எழுந்தருளினாராக; பெருவிருப்பால்...நாளின்கண் - பெருவிருப்பினாலே திருநாவுக்கரசு நாயனார் மனமகிழ்ந்து அவரை எதிர்கொண்டு அழைத்து வந்து திருப்புகலூரிலே அவரோடு உடனாக உறைந்திருக்கும் நாளில்; வள்ளலார்...எழுந்தருளினார் - வள்ளலாராகிய சிறுத்தொண்ட நாயனார் அவ்விரு பெருமக்களிடத்து எழுந்தருளக், கெடுதலில்லாத சிறப்புடைய திருநீலநக்க நாயனாரும் எழுந்தருளினார்.

(வி - ரை) உள்ளமகிழ்ந்து எதிர்கொண்டு. "ஆரூர் கும்பிட்டே உம்முடன் வந்து இங்கு உடன் அமர்வேன்" (1501) என்று பிள்ளையார் அருளிச் சென்றாராதலின், அவரது வரவையும், உடனமரும் இன்பக்கினையும் எதிர்நோக்கி...

மிக மகிழ்ச்சியுடன் ஊர்க்குப் புறம்போந்து எதிர் கொண்டனர் என்க. இனித்திருப் பூந்துருத்தியில் எதிர் கொள்ளும் வரலாறும் பின்னர்க் காண்க. (திருநா - புரா - 393).

உடன் உறையும் - "அன்பரொடு மரீஇ" என்ற சிவஞான போதப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் முடிந்த உண்மைக்கு சிறந்த இலக்கியம் இதுவே என்க. "உடன் உறைவின் பயன் பெற்றார்" (1509) என்று இப்பொருளைப் பின்னர் மேலும் சிறக்க ஆசிரியர் விளக்கியருளுதல் காண்க.

**வள்ளலார் சிறுத்தொண்டர்** - இப்புராணத்தினுள் சிறுத்தொண்ட நாயனாரைக் குறிப்பிக்கும் முதல் இடம் இதுவாதலின் அவர்தம் பெருமை, மற்று யாவராலும் கொடுக்கும் தன்மைத்தல்லாத பெருங்கொடையாம் என்பார் வள்ளலார் என்றார். அவரது சரிதக் குறிப்பாகும்.

**எழுந்தருள - எழுந்தருளினார்** - அருட் பெரியோர்களது வருகையைச் சிறக்கக் கூறும் சைவ மரபு வழக்குப் போற்றப்பட்டது.

**எள்ளரும் சீர்** - "நிறையினார் நீலநக்க னெடுமா நகரென்று தொண்ட, ரறையு மூர் சாத்தமங்கை" என்று ஆளுடைய பிள்ளையாரால் திருப்பதிகத்துச் சிறப்பிக்கப் பட்ட சிறப்பு. எள்ளரும் - குறைவில்லாத - இகழ்ச்சியொன்றும் இல்லாத.

**தாமும்** - முன் எழுந்தருளிய சிறுத்தொண்டருடன் அவரும் என உம்மை இறந்தது தழுவியது.

பிள்ளையாரும் அரசுகளும் திருப்புகலூரில் முருகநாயனாரது திருமடத்தில் ஒருசேர எழுந்தருளியிருக்கும் சிறப்புக்கேட்டு இந்த இரண்டு நாயன்மார்களும் அவர்களைக் கண்டு தொழுது போற்றி உடனிருக்கும் வாழ்வு பெறற் பொருட்டு எழுந்தருளினர். இஃது அடியார் தன்மை. "ஆசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட் டவர்கரும முன்கரும மாகச் செய்து, கூசிமொழிக் தருண்ஞானக் குறியி னின்று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே" (12 - 2) என்று இத்தன்மையைச் சிவஞானசித்தியார் பேசுவது காண்க. இவ்வாறு மற்றும் பல அடியார்களும் எழுந்தருளிச் சேர்ந்ததும் காண்க. 242

1508. ஆங்கணையு மவர்களுட னப்பதியி லந்தணராம்
ஓங்குபுகழ் முருகனார் திருமடத்தி லுடனாகப்
பாங்கில்வருஞ் சீரடியார் பலருமுடன் பயில்கேண்மை
நீங்கரிய திருத்தொண்டி னிலையுணர்ந்து நிகழ்கின்றார், உசங

*1509. திருப்பதிகச் செழுந்தமிழின் றிறம்போற்றி மகிழ்வுற்றுப்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் பொற்றாளில்
விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தங்
கொருப்படுசிந் தையினார்க ளுடனுறைவின் பயன்பெற்றார். உசச

1508. (இ - ள்) ஆங்கு அணையும் அவர்களுடன் - அவ்வாறு வந்த சிறுத்தொண்ட நாயனார், திருநீலநக்க நாயனார் என்னுமவர்களோடும்; அப்பதியில்... திருமடத்தில் - அத்திருத்தலத்தில் அந்தணராகிய ஓங்கும் புகழினையுடைய முருக நாயனார் திருமடத்திலே; உடன் ஆக - உடன் கூடியவர்களாக; பாங்கில் வரும்... நிகழ்கின்றார் - அந்தப் பாங்கில் வரும் சிறப்புடைய அடியார் பலர்களும் உடன் பயிலும் அன்பின் சிறப்பினால் நீங்குதற்கரிய திருத்தொண்டின் நிலைமையினை உணர்ச்சியிற் கைவரப்பெற்று நிகழ்கின்றாராகி, உசங

1509. (இ - ள்) திருப்பதிகம்......மகிழ்வுற்று - திருப்பதிகங்களாகிய செழுந் தமிழின் திறத்தினைத் துதித்து மகிழ்ந்து; பொருப்பு அரையன் மடப்பாவை இடப் பாகர் பொற்றாளில் விருப்புடைய - மலையரசனது மகளாராகிய உமையம்மையாரை இடப்பாகத்து வைத்த சிவபெருமானது திருவடிகளில் மிக்க அன்புடைய; திருத் தொண்டர் பெருமையினை விரித்து உரைத்து - திருத்தொண்டர்களுடைய பெருமையை விரித்துப்பேசி; அங்கு - அத்தன்மையினால்; ஒருப்படு சிந்தையினார்கள் - ஒன்றுபடும் மனமுடையவர்களாகி; உடன் உறைவின் பயன் பெற்றார் - அடியாருடன் உறைதலால் வரும் சிவானந்தமாகிய பெரும்பயனைப் பெற்றார்கள். ௨௯௪

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1508. (வி - ரை) அந்தணராம் ஓங்கு புகழ் முருகனார் - முருக நாயனாரது சிறப்பும் புகழும் பற்றி 1021 முதலிய திருப்பாட்டுக்களில் விரித்துப் பேசப்பட்டது.

உடனாக - சீர்அடியார் பலரும் உடன் பயில் - உடன் பயில் என்றது ஒருங்கு கூடித் தங்கியதனையும், உடனாக என்றது சிவஞான உணர்ச்சியிற் கலந்து ஒன்று பட்ட தன்மையினையும் குறித்தன. அவர்களுடன் - உடனாகப் - பயில் என்று கூட்டுக.

பாங்கில் வரும் - பாங்கு - செம்மை மனப் பண்பாகிய அன்பின் திறம்.

கேண்மை - கேண்மையினால்.

நீங்கரிய திருத்தொண்டின் நிலை - எக்காலத்திலும் திருவடிப்பற்றினை விடாது திருத்தொண்டில் நிலைபெற்றிருத்தல். இந்நிலையின் தன்மை "இடரினுந் தளரினும்" என்ற ஆளுடைய பிள்ளையாரது திருவாவடுதுறைப் பதிகத்துள் விரித்துக் கூறப்படுவது காண்க. இளையான் குடிமாறனார் முதலிய நாயன்மார்களது சரித வரலாறுகளையும் கருதுக.

நிலை உணர்தலாவது - மனத்தினுள் அனுபூதியில் வருதல். சிவானுபவம் சுவானுபூதிகமாய் வருதல்.

நிகழ்கின்றார் - அவ்வுணர்ச்சியிற் பிறழாது ஒழுகுகின்றாராய்; முற்றெச்சம். நிகழ்கின்ற தன்மை மேல்வரும் பாட்டில் விரிக்கப்படுவது.

நிகழ்கின்று(ராய்ப்) - போற்றி - மகிழ்வுற்று - உரைத்து - சிந்தையினார்க(ளாகி) மகிழ்வுற்றார் என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

அவர்களுடன் - உடனாகப் பாங்கில் வரும் என்றது சிறுத்தொண்டர் - திருநீலநக்கர் என்ற அவர்களுடனே வந்த அடியவர்களும், அவர்கள் வரவினையும் அரசுகள் பிள்ளையார் இவர்களது வரவினையும் கேட்டு அணைந்த ஏனைய அடியவர்களும். பாங்கு - சிவனடிமைத்திறத்தின் பாங்கு. வெறும் சோற்றின்பொருட்டும், ஏனை உலகநிலைகளின் பொருட்டும் கூடும் ஏனை வீண் கூட்டத்தினின்றும் பிரிக்கப் பாங்கில் வரும் என்றார்.

பாங்கமரும் — என்பதும் பாடம். 243

1509. (வி - ரை) திருப்பதிகச் செந்தமிழின் திறம் - ஆளுடைய பிள்ளையாரும் அரசுகளும் அருளிய தேவாரத் திருப்பதிகங்களினது செந்தமிழ் ஆகிய சொற்றிறமும், அவற்றாற் கிடைக்கப்பெறுவதாகிய சிவானந்தப் பொருட்டிறமும். போற்றுதல் - பல காலும் பயின்று சிந்தித்துப் பாராட்டுதல். இவ்வாறு அடியார்கள் பலருங்கூடித் திருப் பதிகங்களைப் பயின்றதனைக் கேட்டு இங்கு நாகணப் புட்களும் அப்பதிகங்களைத் தமது இனிய குரலில் பாடுவன என்று "சாரு மடமென் சாரிகையின், பண்ணின் கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழியுமால்" (1019) என உரைத்ததுவும், ஆண்

டுரைத்தவையும் நினைவு கூர்க. அந்நாளில் மக்கள் திருப்பதிகங்களைப் பயின்று பய னடைந்தது போல இந்நாளிலும் பயில்வாராகில் நலந்தரும்!

**விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை** - அன்பிற் சிறந்த பிள்ளையார் அரசுகள் என்ற இவர்களுடைய பெருமைகளையும் அவர்களாற் பாராட்டப்பட்ட தொண்டர்களது பெருமைகளையும்.

**உரைத்து அங்கு ஒருப்படு சிந்தையினர்கள்** - உரைத்து அதன் பயனாகச் சிந்தை யின் ஒருமைப்பாடு பெற்றவர்களாகி என்க. **உரைத்து** - காரணப் பொருளில் வந்த வினையெச்சம். தொண்டர்களது பெருமையினை உரைத்த அதனால் அவர்களை ஆளு டைய இறைவரது பெருமையும் விதந்து பேசப்பட்டதாயிற்று. தொண்டர் பெருமை பாராட்டுதலும் கேட்டலும் சாதனமாம் என்பது "ஒருப்படு சிந்தையினர்கள்" என் றதனாலும் குறிக்கப்பட்டது. "அடியார் பெருமையை விரித்துரைத்தலாவது மீண்டு நிலவுலகத்து வாராத முத்திப்பெருவாழ்வெய்தும் சிறப்புடையர் என்று அவர் பெருமையை விரித்துக்கூறல். ஏனைய பெருமைகள் அழிதன்மாலையவாய்க் கேடுடை தலின்" என்பது ஆறுமுகத் தம்பிரானார் உரைக்குறிப்பு.

**போற்றளில் விருப்பு** - தேவ தேவராயும் பெருங் கருணையாளராயும் உள்ளவ ராதலின் அவர் தாளில் விருப்பு மெய்ப்பயன்தரும் என்று விதந்து கூறினார்.

**உடனுறைவின் பயன்** - அடியார் கூட்டத்தின் பயனாவது எல்லாவற்றினும் சிறந்ததென்று முடிந்த பொருளாகச் சிவஞானபோதம் பன்னிரண்டாஞ் சூத்திரத் துள் அணைந்தோர் தன்மையில் வைத்துப் பேசப்படுவது. "தம்மைவிடுத் தாயும் பழய வடியாருடன் கூட்டி" என்று குமரகுருபர சுவாமிகள் வரங்கேட்பதனையும் இங்கு நினைவு கூர்க.

**போற்றி - உரைத்து - பயன் பெற்றார்** - என்ற வினைகளுக்கு மேலுரைத்தவா றன்றி ஆளுடையபிள்ளையாரும் அரசுகளும் என்ற எழுவாய் கூட்டி உரைத்தனர் முன் உரைகாரர்கள். அவர்கள் சிந்தையினர்கள்-என்பதே அவ்விருவரையும் குறிப்பதாகக் கொண்டுரைத்தனர். அவ்வுரை பொருந்தாமை யறிக. "சீலமெய்த் தவர்களுங் கூடவே கும்பிடுஞ் செய்கை நேர்நின்று வாய்மைச், சாலமிக் குயர்திருத் தொண்டி னுண் மைத்திறந் தன்னையே தெளிய நாடிக், காலமுய்த் தவர்களோ டளவளா விக் கலந் தருளினார் காழிநாடர்" (திருஞான - புரா - 523) என்று இதனை ஆசிரியர் மேற் கூறுவதற் கியைய இங்குப் பொருள் கொள்ளப்பட்டது. 244

1510. அந்நாளிற் றமக்கேற்ற திருத்தொண்டி னெறியாற்ற
மின்னார்செஞ் சடையண்ணல் மேவுபதி யெனைப்பலவு
முன்னாகச் சென்றேத்தி முதல்வன்று டொழுவதற்குப்
பொன்னாரு மணிமாடப் பூம்புகலூர் தொழுதகன்றார், உசரு

1511. திருநீல நக்கடிகள் சிறுத்தொண்டர் முருகனார்
பெருநீர்மை யடியார்கள் பிறரும்விடை கொண்டேக
ஒருநீர்மை மனத்துடைய பிள்ளையா ருடனரசும்
வருநீர்செஞ் சடைக்கரந்தார் திருவம்பர் வணங்கினார். உசசு

1510. (இ - ள்) வெளிப்படை. அந்நாளில், தங்களுக்கு ஏற்றதாகிய திருத் தொண்டின் கடனைச் செய்வதற்காக மின்போல விளங்கும் சிவந்த சடையினையுடைய சிவபெருமான் விளங்க வீற்றிருக்கும் தலங்கள் பலவற்றிலும் முன்னாகச் சென்று போற்றி முதல்வருடைய திருவடிகளைத் தொழுவதன் பொருட்டு அழகிய மணிகளை யுடைய மாடங்கள் நிறைந்த பூம்புகலூரைத் தொழுது புறப்பட்டார்களாகி, உசரு

திருப்புகலூர்

III திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

துன்னக் கோவணச் சுண்ணவெண் ணீறணி
பொன்னக் கன்ன சடைப்புக லூரரோ
மின்னக் கன்னவெண் டிங்களைப் பாம்புடன்
என்னுக் கோவுடன் வைத்திட் டிருப்பதே ? 1

மின்னி னேரிடை யாளுமை பங்கனைத்
தன்னை நேரொப் பிலாத தலைவனைப்
புன்னைக் கானற் பொழிற்புக லூரனை
என்னு ளாகவைத் தின்புற் றிருப்பனே. 4

விண்ணி னார்மதி சூடிய வேந்தனை
யெண்ணி நாமங்க ளேத்தி யெழுத்தஞ்சுங்
கண்ணி னாற்கழல் காண்பிட மேதெனில்
புண்ணி யன்புக லூருமென் னெஞ்சுமே. 5

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—புகலூரிறைவரைத் தலைவராகக் கொண்ட தலைவி அசதியாடிய குறிப்பு முதற்பாட்டு. தலைவரை நினைந்திரங்கல் 4 வது பாட்டுக் குறிப்பு. 2 - 3 பாட்டுக்கள் தலைவி நிலைகண்டு நற்றாயிரங்கல். புகலூரிறைவரை மனத்துள் வைத்துப் புகலூரைத் தொழுது புறப்பட்டகுறிப்புடையது இத்திருப்பதிகம். "புகலூருமென் னெஞ்சுமே" (5) ; "தொழுது மதிப்பவர் புண்டரீகத்துளார் புகலூரர்" (6) ; "புகலூரைத் தொழுமினே" (10) ; என்ற குறிப்புக்கள் பூம்புகலூர் தொழுதகன்றார் (1510) என்று ஆசிரியர் அறிவித்ததற்கு அகச்சான்றுவன.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) துன்னக் கோவணம் - தைத்த கோவணம். "கருந்துணி பல தொடுத்திசைத்த ஒரு துணி". பொன் நக்கு அன்ன - மின் நக்கு அன்ன - நகுதல் விளங்குதல் என்னும் பொருளில் வந்தது. இல்பொருளுவமை.—(2) இரைக்கும் - பெருமூச்சுவிடும். இது நற்றாயிரங்கல் என்னும் அகப்பொருள் துறை. 3 வது பாட்டு மிக்கருத்து.—(3) பூசல் - பிணக்கம்.—(4) தலைவன் - அகப்பொருட் சுவைக் குறிப்பு. புன்னைக் கானல் - புன்னை வனம் என்றது தலப்பெயர். புன்னை - தலமரம். "புன்னைப் பொழிற் புகலூரண்ணல்" "புன்னை" 9 வது பாட்டு இக்கருத்து. (திருவிருத்தம்). என்னுள் ஆக - என் மனத்துள் ஆக்கமுண்டாம்படி. "பாண்டியற்காகவே" (தேவா) ; "அஞ்சும் போதாக வந்து" (தேவா) "அலமந்த போதாக அஞ்சேல் என்று" (தேவா).—(5) எழுத்தஞ்சும் எண்ணி நாமங்கள் ஏத்தி - எண்ணி - மனத்தால் ; ஏத்தி - வாயினால் ; எழுத்தஞ்சே நாமங்களாம். கண் - அகக்கண் புறக்கண் இரண்டுங் குறித்தது.—(6) புண்டரீகம் - இதய தாமரை. "காரணபங்கய மைந்து" என்றபடி ஏனை ஆதாரத் தாமரைகளுமாம்.—(7) தலை காணல் - இயல்பறிதல். தலை நிற்றல் - நிலை அறிந்து வழிபடுதல். தத்துவன் - தத்துவங்களின் வழி அருள் புரிபவன். "பேணு தத்துவங்களென்னும் பெருகு சோபான மேறி ஆணையாஞ் சிவத்தைச் சார அணைபவர்" (752).—(8) களிறு அஞ்சு - ஐம்புலன்.—(9) பொன் - கடல் - பொன்னிறம் - கடல் நிறம் குறித்தன ஆகுபெயர்.—(10) ஊரினின்றும் புறப்பட்டு ஊரைத் தொழுது செல்லுதல் குறிப்பு. போத்தினுன் - சேமஞ் செய்தான்.

1511. (இ - ள்) வெளிப்படை. திருநீலநக்க நாயனாரும், சிறுத்தொண்ட நாயனாரும், முருக நாயனாரும், பெருநீர்மையுடைய பிற அடியார்களும், பிறரும் விடை பெற்றுக்கொண்டு ஏக, ஒன்றுபட்ட தன்மையுடைய மனத்தவர்களாகிய ஆளுடைய பிள்ளையாரும் ஆளுடைய அரசுகளும் வானினின்றும் இறங்கிவரும் கங்கைப் பெருக்கைச் செஞ்சடையினிடத்தே கரந்து வைத்த இறைவரது திருவம்பர்த் தலத்தை வணங்கினார்கள். உசசு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1510. (வி - ரை) தமக்கேற்ற திருத்தொண்டின் நெறி - இறைவரைப் பாடியும், சரியை கிரியையாதி நெறிகளிற் சரித்துக் காட்டியும் உலகரை வழிபடுத்துவது. இந்த யாத்திரையில் பரசமய நிராகரிப்பும் சைவசமயத் தாபனமும் நிகழ்வது குறிப்பு.

ஆற்றுதல் - செய்தல்: நடத்துதல்.

நெறிஆற்ற - ஏத்தி - தொழுவதற்கு - என்று கூட்டுக. பதி பலவும் சென்று ஏத்துதலும், தாள் தொழுதலும் தொண்டின் நெறி எனப்பட்டன.

தொழுவதற்குத் - தொழுது - பிறபதிகளிற் செல்வார் தாமிருந்த பதியில் அரனைத் தொழுது அருள் விடைபெற்றுப் போவது மரபு.

முன்னாக - நேர்ந்தவாறு பின்னும் போந்து வணங்குவார் என்பது குறிப்பு. "பொன்னிநா டதுவணைந்து, வாம்புனல்சூழ் வளநகர்கள் பின்னும்போய் வணங்கியே" (திருநா - புரா 412). இப்போது புகலூரினின்றும் புறப்பட்டுச் சென்று பல பதிகள் வணங்கிப் போந்த நாயனார் மீண்டு வருங்கால் போந்தவாறே பல பதியும் வணங்கிப் "பூம்புகலூர் வந்தடைந்தார்" என்பதும் கருதுக.

தொழுது அகன்றாராகிய பிள்ளையாருடன் அரசும் - வணங்கினார் - என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. அகன்றார் - பெயர். வினைமுற்றாகக் கொண்டு எழுவாய் வருவித்துரைத்தலுமாம். 245

1511. (வி - ரை) திருநீலநக்கடிகள்...ஏக - திருநீலநக்கரும் சிறுத்தொண்டரும் பிள்ளையாரையும் அரசுகளையும் கண்டு வணங்கி உடனிருக்க எழுந்தருளிய செய்தி 1507லும், ஏனை அடியார்கள் எழுந்தருளியது 1508லும் உரைக்கப் பட்டன. முருகனார் இவர்களைத் தமது திருமடத்தில் வைத்து உபசரித்தனர்.

பெருநீர்மை யடியார்கள் - "பாங்கில் வரும் சீரடியார்" (1508). பெருநீர்மையாவது அடிமைத் திறத்தின் சால்பினால் மிக்கிருத்தல்.

பிறரும் - ஏனை உலகவர்கள். இவர்கள் அடியாரின் வேறாயினார். சிறப்பின்மை பற்றிக் கடையில் வைத்துப் பிறர் என்றார்.

விடைகொண்டு ஏக - பிள்ளையாரையும் அரசுகளையும் நகர்ப்புறத்து வெகுதூரம் வழிவிட்டு அவர்களது அருள்விடை பெற்றுக்கொண்டு திரும்ப. ஏக - தத்தம் பதிகளுக்குச் செல்ல. நிற்க என்னாது ஏக என்றதனால் பிரியலாற்றாது நெடுந்தூரம் பின்பற்றி உடன் வந்தனர் என்பது கருதப்படும்.

ஒருநீர்மை மனத்து-சிவபெருமான் கழல்களில் இரண்டுபடாது ஒன்றுபட்டு நின்ற மனமுடைய. வெய்ய நீற்றறையி னுள்ளிருந்தபோது "ஈச னெந்தை யிணையடி நீழலே" எனவும், கல்லினோடு பிணைத்துக் கடலினகத்தே புக நூக்கப்பட்ட போது "நற்றுணை யாவது நமச்சி வாயவே" எனவும், கடலினின்று கரையேறிய போது "சித்த மொருக்கிச் சிவாய நமவென்று", "உன்கழலே நினையுங் கருத்துடையேன்" எனவும், கூறித், திருவடிப்பற்றில் உறைத்து ஒன்றுபட்டு நிற்பது அரசுகளது திருமனம். "ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லை" என்று [illegible]

உபதேசித்தருளினர். "கைச்சிறு மறியவன் கழலலாற் பேணுக் கருத்துடை ஞான சம்பந்தன்" (அச்சிறுபாக்கம் - குறிஞ்சி - 11), "கொன்றையா னடியலாற் பேணு வெம்பிரான் சம்பந்தன்" (திருத்தொண்டத் தொகை - 5) முதலியவை பிள்ளையாரது ஒரு நீர்மை மனத்தின் உறுதியினை விளக்குவன.

உடைய என்பதனை அரசு என்பதுடனும் கூட்டுக. உடைய - ஆளுடைய, சிவபெருமானால் ஆளாகக்கொள்ளப்பட்ட. எங்களை ஆளாக உடைய என்றலுமாம்.

**பிள்ளையாருடன் அரசும்** - உடன் என்பது எண்ணும்மைப் பொருளில் வந்தது.

**தலவிசேடம் :—திருவம்பர்** - காவிரியின் வடகரை 45-வது தலமாகிய திரு இன்னம்பர் என்ற தலத்தினின்றும் வேறு பிரித்துணரற்பாலது. அம்பர்ப் பெருந் திருக்கோயில் என வழங்கப்பெறுவது. கோச்செங்கணார் செய்த மாடக்கோயில்களுள் ஒன்று. பிள்ளையார் பதிகம் காண்க. இப்பதியில் அம்பர்மாகாளம் என்பது தனிக் கோயில். இவை காவிரிக்குத் தென்கரை 54-வது, 55-வது தலங்கள். இத்தலத் திற்கு நாயனார் பதிகம் கிடைத்திலது!

திருவாரூர் பேரளம் கிளை புகைவண்டிப் பாதையில் பூந்தோட்டம் என்னும் நிலயத்தினின்றும் கிழக்கில் மட்சாலைவழி ஒன்றரை நாழிகையளவில் அம்பர்மாகாளத் தையும், அங்குநின்றும் கிழக்கில் ஒரு நாழிகையளவில் அம்பரையும் அடையலாம்.

1512. செங்குமுத மலர்வாவித் திருக்கடவூ ரணைந்தருளிப்
பொங்கியவெங் கூற்றடர்த்த பொன்னடிக டொழுதேத்திக்
குங்குலியக் கலயனார் திருமடத்திற் குறைவறுப்ப
அங்கவர்பாற் சிவனடியா ருடனமுது செய்தார்கள். உசஎ

(இ - ள்) வெளிப்படை. செங்குமுத மலர்கள் பூக்கும் வாவிகளையுடைய திருக் கடவூரினை அணைந்தருளி, சினம் மிக்கு வந்த கூற்றுவனை உதைத்தருளிய பொன்னடி களைத் தொழுது ஏத்திக், குங்குலியக்கலய நாயனாரது திருமடத்தில் எழுந்தருள, அவர் அடியார்க்கு வேண்டுவனவற்றை எல்லாம் செய்துகொடுக்க, அத்திருமடத்தில் அவ ருடனிருந்து, கூடிய சிவனடியார்களுடன் அமுது செய்தருளினார்கள். (பிள்ளையா ரும் அரசுகளும்)

(வி - ரை) **செங்குமுதம்** - செவ்வாம்பல். **கூற்றடர்த்த பொன்னடிகள்** - தல சரிதச் சிறப்புக் குறித்தது. கூற்றடர்த்தாரது பொன்னடிகள் என்னாது அடர்த்த அடிகள் என்றது அடர்த்த செயலினைச் செய்த திருவடிச் சிறப்புக் குறித்தது. "கூற் றம் பதைப்ப வுதைத்துங்ஙனே, உருட்டிய சேவடியான்" முதலிய தேவாரங்கள் காண்க. செய்தவனது செயல் அதனைச் செய்தற்குக் கருவியான அங்கத்தின்மேல் ஏற்றப்பட்டது.

**குங்குலியக் கலயனார்...அமுது செய்தார்கள்** - அவரது புராணம் (862-863) பார்க்க.

**குறைவறுப்ப** - வேண்டுவனவாகிய உணவு, உடை, உறையுள் முதலியவற்றை யெல்லாஞ் செய்துகொடுக்க. திருமடத்தில் குங்குலியக்கலயனார் குறை வறுப்ப என்க. குறைவு அறுத்தல்-ஒன்றாலும் குறைவு இல்லாமற் செய்தல். "திருத்தொண்ட ரானார்க் கெல்லாங், கோதில்புகழ்ப் பாண்டிமா தேவி யார்மெய்க் குலச்சிறையார் குறைவ றுத்துப் போற்றிச் செல்ல" (திருஞான - புரா - 889), "இருவருக்கும், பைம்பொன் மணி மாளிகையிற் குறைவறுத்தார் பஞ்சவனார்" (கழறிற் - புரா - 95) முதலியவை பார்க்க. இதற்கு வேண்டுகோளைப் பூர்த்தி செய்ய என்றுரைத்தனர் முன் உரையாசி ரியர்கள். அது பொருந்தாமை யறிக.

அங்கு - அத்திருமடத்தில். அத்திருமடம் அவரது திருமனை. அது திருக்கடவூர்க் கோயிலுக்குக் கீழ்பால் இப்போதுள்ள திருவீதிக்கு வட கீழ்ப்பாகத்தில் இருந்த தென்பது கேள்வி. அந்த இடத்தைக் கண்டு பாதுகாவல் செய்து போற்றுவது சைவ மக்கள் கடமையும் பணியுமாகும். அவ்வாறே திருப்புகலூரில் முருகனார் திருமடத்தையும் கண்டு போற்றுதலும் கடமையாகும். 247

திருக்கடவூர் - வீரட்டம்

I திருச்சிற்றம்பலம் திருநேரிசை

பொள்ளத்த காய மாயப் பொருளினைப் போக மாதர்
வெள்ளத்தைக் கழிக்க வேண்டில் விரும்புமின் விளக்குத் தூபம்
உள்ளத்த திரியொன் றேற்றி யுணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 1

மண்ணிடைக் குரம்பை தன்னை மதித்துநீர் மைய லெய்தில்
விண்ணிடைத் தரும ராசன் விரும்பினால் விலக்கு வாரார்;
பண்ணிடைச் சுவைகள் பாடி யாடிடும் பத்தர்க் கென்றுங்
கண்ணிடை மணியர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 2

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்த ராகி
யரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை யுள்ளே வைத்து
விரும்புநல் விளக்குத் தூபம் விதியினா லிடவல் லார்க்குக்
கரும்பினுட் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்ட னாரே. 4

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இயமனது பயத்தைப் போக்கவல்லவர் திருக்கடவூர் இறைவர். அவர், விதிப்படி வழிபட்டு நினைபவர்க்கு இனியவற்றை இனிதாக அருள வல்லார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பொள்ளத்த - பொள்ளல்களை உடைய. பொள்ளல் - ஓட்டை. மாதர் வெள்ளம் - பெண் இச்சைப் பெருக்கு. உள்ளத்த- உள்ளமாகிய. உள்ளம் - இங்கு உயிர் என்னும் பொருள் குறித்தது. "உடம்பெனும்" என்ற தனித் திருநேரிசையுள் "உயிரெனுந் திரிமயக்கி" என்றது காண்க. உணருமாறு உணர்தல் - திருவடிஞானங் காட்டக் காணுதல். கள்ளம் - ஆணவம்.—(2) தருமராசன் - கூற்றுவன். விலக்குவார் ஆர்? - இவரைத் தவிர வேறு யாவர்? இவரே கூற்றினைக் குமைத்தவர் என்பது. கண்ணிடை மணியர் - கண்ணினுள் மணிபோன்றவர். கண்மணி காட்டுமுபகாரம் செய்தல்போல், வீரட்டனார் உயிர்க்கு உள் இருந்து காட்டுகின்றார்.—(3) பொருந்திய - எழுவகைத் தாதுக்களாற் பிணைத்துக் கட்டப்பட்ட. களிறு - ஐம்பொறி. உருவகம்.—(4) சரியை நெறியை விரித்துக் கூறுவது இத்திருப்பாட்டு. இத்தலத்துப் பணிசெய்து பேறடைந்த குங்குலியக்கலயர் வரலாறுங் குறிப்பு. நாயனார் இங்கு அவர் திருமடத்தில் உபசரிக்கப்பட்ட சரிதமும் நினைவுகூர்க.—(5) தலக்கம் - இழிசெயல். "விளக்கத்திற் கோழி போன்றேன்" (பழமொழி). விளக்குச்சுடரைச் சுடும்பொருள் என்றெண்ணாது, உண்ணும் பழம் என்று எண்ணிப்போய் வீழ்ந்து இறப்பது ஒரு விட்டிற்பூச்சி போல, உலகில் உழன்று இறக்கும் மக்களியல்பு குறிப்பது. "மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும்" (11 திருமுறை - கோயிநான் - 28). கோழி - விட்டில்.—

(6) பாமக்கே நீர் இறை...

நேரிசை - 7) என்றதில் "பயிர்தனைச் சுழிய விட்டுப் பாழ்க்குநீ ரிறைத்து" என்றது காண்க. இப்பதிகம் 8-வது பாட்டில் பாழுக்கே நீரிறைத்தேன் என்பதுமிது. வழியிடை - நல்வழியில். கழியிடைத் தோணி - மேல் ஏறமாட்டாது அதனுள்ளே அகப்பட்டு உழலுதல். கழியில் தோணி, ஒருபுறம் கடலினுள் போனால் அமிழ்ந்து விடுமாதலின் அங்கும் போகாது, மற்ற ஒருபுறம் கரையேறவு மாட்டாது, கழியினுள்ளே உழல்வது.—(7) பேய் - பிறரை அலைப்பது; பிறரால் அஞ்சி ஒதுக்கப் படுவது. கூகை - ஒளியின் வாராது இரவிற் சரிப்பது.—(8) "உற்றலாற் கயவர் தேறார்" (பழமொழி). கட்டுரை - பழமொழி. கீழ்கள் தாமே கட்டங்களை அனுபவித்தால் தெரிவதன்றி நல்லோர் சொற்கொண்டு தெளியார்.—(9) காலனை உதைப்பவர் - தல சரிதம். மாலினைத் தவிர நின்ற - மால் - இங்கு மயக்கந் தந்து உயிர்போக்கும் மரணம் குறித்தது.—(10) இருவர் - பிரமா - விட்டுணுக்கள். மூவர் - உருத்திரன், மகேசன், சதாசிவன். கந்திருவங்கள் - கீதங்கள்.

குறிப்பு:—இப்பதிகத்துள் 5, 6, 7, 8 பாட்டுக்கள் "கடவூர் வீரட்டனீரே" என்று முன்னிலை முடிபும், ஏனைய பாட்டுக்கள் "கடவூர் வீரட்ட னாரே" என்று படர்க்கை முடிபும் பெற்றுள்ளன. இவை வெவ்வேறு பதிகங்களைச் சேர்ந்தனவோ என்பது ஐயம்.

II திருச்சிற்றம்பலம்

திருவிருத்தம்

மருட்டுயர் தீரவன் றர்ச்சித்த மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவா ளெயிற்றெரி போலுங்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம் பதைப்ப வுதைத்துங்ஙனே
யுருட்டிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—கடவூர் இறைவர் தம்மை அடைந்த மார்க்கண்டேய முனிவர் பொருட்டுக் கூற்றைத் திருவடியால் உதைத்துருட்டினார். அவர் உத்தமர்; அருளுடையார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—"கடவூருறை உத்தமனே" என்பது இப்பதிகத்து மகுடம்.—(1) மருள் துயர்-மரணத்துன்பம். மாணி-பிரமசாரி. இருள் மேனி-வளை வாள் எயிறு - எரிக் குஞ்சி - சுருட்டிய நா-இவை கூற்றுவனின் உருவக் கூறுகள். உங்ஙனே உதைத்து உருட்டிய - அச்செயலின் எளிமை தோன்றக் கூறியது. உங்ஙனே - உகரச்சுட்டுச் சேய்மையும் ஆகாது அணிமையும் ஆகாது இடைப்பட்ட நிலை குறிப்பது. உருட்டிய - உத்தமன் - உருட்டிய செயல் அவரது அருட்பெருங் குணங் குறித்தது. மார்க்கண்டன் அருள்பெற்றதுமன்றிக் கூற்றுவனும் வரம்பெற்றுய்ந்தமையுங் குறிப்பு. தலவரலாறு காண்க. "கால னறிந்தா னறிதற் கரியான் கழலடியே" (திருவிருத்தம் - பொது.)—(2) பதத்தேழு மந்திரம் - வேதம் ஓதும்முறை. அஞ்சேழுத்து - வேதத்தினுட் பொருளாதல் குறிப்பு. "வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது" (பிள்ளையார் தேவா). கதம் - கோபம்.—(3) கரப்பு - வஞ்சனை. உரப்பிய - அச்சுறுத்திய. அழித்த என்றலுமாம்.—(4) மறி - மான் கன்று. உறுக்குதல் - அழித்தல்.—(5) உழக்குதல் - நிலை தளர்வித்தல்.—(6) பாலன் - உபமன்னியு முனிவர். ஆரணம் - ஆகமம் வேதம். முனி - மார்க்கண்டர். அருமுனிக்காய் - முனிவனைக் கொல்ல. நான்கனுருபு பகைப்பொருளில் வந்தது.—(7) பன்னகம் - பாம்பு. யாம்பைக் கயிறாகக்கொண்டு

அதில் உடைதலைகளை மாலைபோலக் கோத்து. உட்றுதல் - அழித்தல். கரோடி - முடி மாலை.—(9) ஊழியும் ஆய - ஊழிக்காலத்திலும் அழியாது நின்ற.

III　திருச்சிற்றம்பலம்　　திருக்குறுந்தொகை

மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை, நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே,
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால், கலைக்கை யானைகண் டீர்கட வூரரே. 1
அடுத்து வந்த விலங்கையர் மன்னனை, எடுத்த தோள்க ளிறநெரித் தானையார் ;
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார் ; கடுக்கை யானைகண் டீர்கட வூரரே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—மலையில் வாழும் யானை போன்றுவரும் வலிய வினைகளின் பாற்பட்டு உழலும் நெஞ்சமே; ஆணவமாகிய மதயானை உன்னைக் கொல்லும்; கடவூரராகிய ஆனையார் உன் உள் புகுந்து அந்த மதயானையினின்றும் உன்னைக் காத்து இன்பஞ் செய்வர். குறிப்பு:—பதிக முழுதும் கடவூரரை ஆனையார்-ஆனைபோல்பவர் - என்று உருவகித்தார். ஆனையார் - ஆனை - பசுவை - மேல் கொள்பவர் - பசுபதி என்ற குறிப்பும் படகிறப்து.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மலைக்கொளானை மயக்கிய வல்வினை - மலையில் வாழும் யானையினும் கொடிய வலிய வினை. வல்வினை நிலைக்கொளானை நினைப்புறும் - வினைகளுக்கே நிலைக்களமாகிய நினைப்புக்களைப் பொருந்திய. கொலைக்கை யானையும் கொன்றிடும் - வல்வினைகளாகிய யானையும், ஏனை மதயானையும். முன் சொன்ன வல்வினையே யன்றி என உம்மை இறந்தது தழுவியது. இங்குக் கடவூரிறைவர் நாயனாருக்கு யானையாகித் தோன்றுவதோர் உள்ளக்குறிப்புத் தோற்றுவித்தருளினர் என்பது.—(3) வேனல் ஆனை - சினமுடைய யானையை.—(4) நீலமேனி நெடும்பளிங்கு-ஒருபால் அம்மையாரும் திருமாலுமாகிய நீலமேனியும், ஒருபால் தமது வடிவமாகிய பளிங்கு மேனியும் கொண்ட.—(5) எளித்த - எளிதாகக் கருதிவந்த.—(7) எண்ணுளார் - ஞானிகள்.—(10) மாண்ட - தமது செருக்கு அழிந்த.—(11) கடுக்கை-கொன்றை.

தல விசேடம் :—திருக்கடவூர் - இது காவிரிக்குத் தென்கரையில் 47-வது தலம். இறைவர் செய்த வீரங்கள் எட்டனுள் மார்க்கண்டரைக் காக்கும்பொருட்டுக் கூற்றுவனை உதைத்த வீரம் நிகழ்ந்த இடம். காலசங்கார மூர்த்தி விளக்கமாய்த் தனியே எழுந்தருளியுள்ளார். இராதாந்தர கற்பத்தில் திருமால் முதலிய தேவர்கள், தூய்தான ஓரிடத்தில் வைத்து உண்ணவேண்டுமென்று கொணர்ந்து இங்கு வைத்த அமுதகடம் அமுதலிங்கமாக உருப்பட்டமையின் சுவாமி அமுதகடேசர் எனவும், இத்தலம் கடபுரி - கடவூர் எனவும் வழங்கப்பெறும் என்க. கடம் - கலயம், குடம். சுவாமிக்குக் கலயர் என்ற பெயரும் இப்பொருள்பற்றியது. சுவாமியின் இப்பெயரை இத்தலத்து அவதரித்துப் பேறுபெற்ற (குங்குலியக்) கலய நாயனாருக்கு இட்டு வழங்கினது காண்க. கடவூர் - இயம வாதனையைக் கடத்தற்குதவும் ஊர் என்றலுமாம். பாத்தும கல்பத்தில் சிவபெருமானிடம் சிவஞானம் பெறும்பொருட்டுப் பிரமதேவர் பெற்ற சிவஞான விதையை விதைத்துத் தோன்றிய வில்வ மரத்தையுடைமையால் இது வில்வாரணியத் தலம் என்றும் பெயர்பெறும். அகத்தியர் வழிபட்ட பாபவிமோசன லிங்கமும், புலத்தியர் வழிபட்ட புண்ணியவர்த்தன லிங்கமும் கோயிலினுள் வடக்குச் சுற்றினுள் சிறக்க வீற்றிருக்கின்றன. குங்குலியக்கலய நாயனாரும், காரி நாயனாரும் பேறுபெற்ற தலம். இங்குச் சத்த கன்னியர், வாசுகி, துர்க்கை முதலியோரும் பூசித்து வரம்பெற்றனர். மார்க்கண்டேயர் காசியினின்று

கங்கையைத் திருக்கடவூர்மயானத்தி னருகில் உள்ள காசித் தீர்த்தத்தில் கொணர்ந்து, பிலத்துவாரத்தின்வழி வந்து, நாடோறும் அத்தீர்த்தத்தினுல் அமுதகலயநாதரை மஞ்சனமாட்டி வழிபட்டனர் என்பது தலவரலாறு. அவர் வந்த பிலத்தின் வாயில் திருக்கோயிலின் வடக்குச் சுற்றில் இன்றும் காண உள்ளது. அந்தக் காசிக் கங்கை நீர்தான் இன்றும் அமுதகலய நாதருக்குத் திருமஞ்சனமாகும். மேற்கு நோக்கிய சந்நிதி. சுவாமி - அமிர்தகடேசர்; அம்மை - அபிராமியம்மை; பிள்ளையார் - கள்ளவாரணப் பிள்ளையார்; தீர்த்தம் - அமிர்த புஷ்கரணி, கங்கை, கால தீர்த்தம் முதலியன; மரம் - வில்வம், சாதி; பதிகம் - 5. இத்தலத்துத் தேவி உபாசகராகிய அபிராமிப் பட்டர் அபிராமியந்தாதி பாடி அமாவாசையைப் பவுர்ணமியாகக் கண்டனர் என்ப.

இத்தலம் மாயூரம் - தரங்கம்பாடி கிளை இருப்புப் பாதையில் திருக்கடவூர் நிலயத்தினின்றும் கிழக்கே மட்சாலை ½ நாழிகையளவில் அடையத்தக்கது. இது திருக்கடையூர் என உலக வழக்கில் வழங்குவது பெருந்தவறு.

1513. சீர்மன்னுந் திருக்கடவூர்த் திருமயா னமும்வணங்கி,
ஏர்மன்னு மின்னிசைப்பாப் பலபாடி யினிதமர்ந்து,
கார்மன்னுங் கறைக்கண்டர் கழலிணைக டொழுதகன்று
தேர்மன்னு மணிவீதித் திருவாக்கூர் சென்றணைந்தார். உசுஅ

(இ - ள்) வெளிப்படை. சிறப்புப் பொருந்திய திருக்கடவூர்த் திருமயானம் என்ற தலத்தினும் சென்று வணங்கி, அழகு பொருந்தும் இனிய இசையுடைய தேவாரப்பாடல்கள் பலவற்றையும் பாடித் தொழுது, இனிதாக அங்கு எழுந்தருளியிருந்து, மேகத்தின் தன்மை பொருந்திய நீலகண்டரது திருவடிகளைத் தொழுது அங்கு நின்றும் புறப்பட்டுத், தேர்மன்னும் அழகிய வீதியையுடைய திருவாக்கூரிற் சென்று அணைந்தனர் (நாயன்மாரிருவர்களும்).

(வி - ரை) சீர் மன்னும் - சீர் - சமயாசாரியர்கள் மூவராலும் சிறந்த அருமையான பாடல்பெற்ற சிறப்பு. மன்னுதல் - அச்சிறப்பும், அத்திருப்பாட்டுக்களாற் போதும் பயனும் என்றும் நிலைத்திருத்தல். பதிகங்கள் பார்க்க.

திருக்கடவூர்த் திருமயானம் - திருக்கச்சிமயானம், திருநாலூர் மயானம் என்பவற்றினின்றும் பிரித்துணரும் பொருட்டு அணிமையில் உள்ள திருக்கடவூர் என்ற தலப்பெயருடன் சேர்த்து வழங்கப்படுவது. திருக்கடவூர் - பிறிதினியைபு நீக்கிய விசேடணம். மயானம் - பேர்க் காரணம் பற்றித் தலவிசேடம் பார்க்க.

ஏர்மன்னும் இன் இசைப்பா பல - ஏர் - சொல்லும் பொருளுமென் றிரண்டின் சிறப்பு. இன் இசை - சந்தச் சிறப்பு. பா - யாப்புச் சிறப்பு. பா - பதிகம் என்ற பொருளில் வந்தது.

பல - நாயனுர் பாடிய பல பதிகங்களுள் திருக்குறுந்தொகைப் பதிகம் ஒன்றே கிடைத்துள்ளது!

கார்மன்னும் கறைக்கண்டர் - கார் - காரின் தன்மை. மன்னுதல் - பொருந்துதல். நிறமும் பயனும் பற்றிய உவமை.

தேர்மன்னு மணிவீதி - தேர்செல்லுதல் வீதிக்கு அழகு. ஒரு நகரத்தில் தேர் வீதிகள் சிறப்புடையன என்ப தின்றுங்காணலாம்.

திருக்கடவூர்த் திருமயானம்

திருச்சிற்றம்பலம்　　　　திருக்குறுந்தொகை

குழைகொள் காதினர் கோவண வாடையார்; உழையர் தாங்கட வூரின் மயானத்தார்;
பழைய தம்மடி யார்செய்த பாவமும், பிழையுந் தீர்ப்பர் பெருமா னடிகளே. 1

உன்னி வானவ ரோதிய சிந்தையிற், கன்ன றேன்கட வூரின் மயானத்தார்,
தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம், பின்னை யென்னார் பெருமா னடிகளே.

இறைவ னாரிமை யோர்தொழு பைங்கழல், மறவ னார்கட வூரின் மயானத்தார்
அறவ னாரடி யாரடி யார்தங்கள், பிறவி தீர்ப்பர் பெருமா னடிகளே. 4

அரவு கையின ராதி புராணனார், மரவு சேர்கட வூரின் மயானத்தார்,
பரவு வாரிடர் தீர்ப்பர் பணிகொள்வர், பிரமன் மாற்கும் பெருமா னடிகளே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கடவூர் மயானத்துப் பெருமானடிகள் அடியார்களது பாவமும் பிழையும் தீர்ப்பர்; பின்னையென்னார்; அடியாரடியார் பிறவி தீர்ப்பர்; ஒத்தொவ்வாதன செய்து உழலும் பித்தர் ஒப்பர்; என்றிவ்வா றெல்லாம் அறியப்படுபவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) உழையர் - மான்கன்றை உடையவர். பக்கத் திருப்பவர் என்றலுமாம். பெருமானடிகள் - இத்தலத்துச் சுவாமி பெயர். பொதுவாக இறைவர் பெயருமாம். "புக்குப் பெருமானடி சேவடியிற் பொன்மா மலர்கொண்டு புனைந்து" - (தக்கயாகப்பரணி. 323.) "இங்குப் பெருமானடி என்றது மகாதேவர் திருநாமம். இதிற் "கள்" என்பது தொக்கதென்பாரும், இல்லையென்பாரு முளர்......பெருமானும் அடிகளும் அவரே" என்ற உரையும் காண்க. மூவர் பதிகங்களிலும் இப்பெயராற் போற்றப்பட்டது காண்க.—(2) பின்னை என்னார் - பின்னை என்னாது அப்போதே அருள் ஈபவர்.—(3) ஆலம் உண்டு அமுதே மிகத் தேக்குவர் - தாம் நஞ்சு உண்டு அமரர்க்கு மிகவும் அமுதம் பெருகத்தருவர். தாம்உண்ட நஞ்சமே அமுதமாகப் பெருக்க வைப்பர் என்றலுமாம். "நஞ்செழ... ஆகந்தன்னில் வைத்தமிர்த மாக்குவித்தான்" (மறைக்காடு - பிள்ளையார் - பியந் - காந்.)—(4) மறவனார் - வலியர். மறக்கருணை செய்பவர் என்றலுமாம்; அறவர் - அறக்கருணை செய்பவர்.—(5) ஒத்து ஒவ்வாதன செய்து உழல்வார் ஒரு பித்தர் - மெய்ம்மையும் பொய்ம்மையு மாயினார் - சோதியுமா யிருளாயினார் - துன்பமுமா யின்பமாயினார் என்றிவ்வாறு பலவும் மாறுபாடாக நிற்றலின் பித்தர் போன்றவர். எல்லாமா யிருக்கும் கடவுட் டன்மைபற்றி இகழ்ச்சித் துதியாகக் கூறியது.—(7) மயக்குறும் பிணங்கொள் காடர் - எல்லா உலகங்களும் அழிந்து உயிர்கள் மயங்கித் தம்முள் ஒடுங்கும் இடம் காடு எனப்பட்டது.

குறிப்பு :— இப்பதிகத்தில் எட்டுப் பாட்டுக்களே கிடைத்துள்ளன !

தலவிசேடம் :— திருக்கடவூர் மயானம் - இது காவிரிக்குத் தென்கரையில் 48-வது தலம். ஒருகற்பத்தில் பிரமனை எரித்து மீள உயிர்ப்பித்துச் சிருட்டி வல்லமை பெற அருளிய தலமாதலின் மயானம் எனப்பெயர் வழங்குவது. பிரமதேவர் பூசித்தது. இத்தலத்திற்கு அரை நாழிகையளவில் உள்ளது காசித்தீர்த்தம்; அதன் பெருமை முன்னர்த் திருக்கடவூர்த் தலவிசேடத்துள் உரைக்கப்பட்டது. அதில் பங்குனிமதி அசுவினி நாளில் அமிர்தகடேசர் எழுந்தருளித் தீர்த்தம் கொடுப்பது சிறப்பு. சுவாமி பெரிய பெருமானடிகள்-பிரமபுரேசர்; அம்மை - அமலக்குய மின்னம்மை; தீர்த்தம் - காசித்தீர்த்தம்: பதிகம் - 3.

இது திருக்கடவூரினின்றும் கிழக்கே மணல்வழி முக்கால் நாழிகை யளவில் அடையத்தக்கது. திருப்பதிகங்களால் இத்தலம் மிகச் சிறப்புடையது எனவும், இறைவரும் பேரருளாளர் எனவு மறியப்படும்.

1514. சார்ந்தார்தம் புகலிடத்தைத் தான்றோன்றி மாடத்துக்
கூர்ந்தார்வ முறப்பணிந்து கோதிறமிழ்த் தொடைபுனைந்து
வார்ந்தாடுஞ் சடையார்தம் பதிபலவும் வணங்கியுடன்
சேர்ந்தார்க டம்பெருமான் திருவீழி மிழலையினை. உசகூ

(இ - ள்) வெளிப்படை. தம்மைவந்து சார்ந்தவர்களுக்கு அஞ்சலருளிப் புகலாக விளங்கும்சிவபெருமானை அத்தலத்துத் தான்றோன்றிமாடம் என்னும்கோயிலினுள்ளே கண்டு, மிகுந்த அன்புபொருந்தப் பணிந்து, குற்றமற்ற தமிழ்ப் பதிகத் தொடை சாத்தி அங்குநின்றும் புறப்பட்டு, அசைந்து ஆடும் சடையினையுடைய இறைவர் எழுந்தருளிய பதிகள் மற்றும் பலவற்றையும் சென்று வணங்கிப், பின்பு (நாயன்மாரிருவரும்) உடனாகத் தமது பெருமானது திருவீழிமிழலையைச் சேர்ந்தார்கள்.

(வி - ரை) சார்ந்தார் தம் புகலிடம் - யாவரேயாயினும் வந்தடைந்தால் அபயம் கொடுப்பவர் சிவபெருமான். புகலிடம் - அபயம் தரும் இடமாக உள்ளவர். "மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற், கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும்" (திருஞான - புரா - 77). புகல் - அபயம் புகுதல். புகலி என்றது காண்க.

தான்தோன்றி மாடம் - திரு ஆக்கூர்க் கோயிலின் பெயர். பதிகத்துக் காண்க. சுவாமி சுயம்புமூர்த்தி யாதலின் தான்தோன்றி எனப்படுவர். தான்தோன்றியினது மாடம் என்க. மாடக்கோயில் ஆதலின் மாடம் - எனப்பட்டது.

கூர்ந்த ஆர்வமுற என்க. கூர்தல் - மிகுதல்; கூர்ந்த ஆர்வம் என்பதில் அகரம் விகாரத்தாற் கெட்டுக், கூர்ந்தார்வமென நின்றது.

தமிழ்த் தொடை - திருப்பதிகம். தொடை என்றதற் கேற்பப் புனைந்து என்றார்.

வார்ந்து ஆடும் - வார்தல் - அசைதல். வளர்தல் - நீளுதல் என்றலுமாம்.

பதிபலவும் - ஆளுடையபிள்ளையார் புராணத்துள் "மிக்க கோயில்கள் பிறவுடன் தொழுதுபோய் மீயச்சூர் பணிந்தேத்திப், பக்கம் பாரிடம் பரவநின் றுடுவார் பாம்புர நகர்சேர்ந்தார்" (537) எனவும், திருப்பாம்புரத்தினின்றும் "இடமற்று முள்ளன போற்றி...திருவீழிமா மிழலையின் மருங்குறச் செல்கின்றார்" (538) எனவும் கூறுகின்றார். திரு ஆக்கூரினின்றும் திருமீயச்சூர் வரும்வரை வணங்கிய பதிகள் கூறப்படவில்லை. திருக்கடவூரினின்றும் வடக்கு நோக்கித் திருவாக்கூருக்கு நாயன்மார்கள் எழுந்தருளியபடியால், அங்குநின்றும் பின்னரும் மேற்குநோக்கிச் செல்லும் சாலை வழியே சென்றிருத்தல் இயல்பு. அவ்வழி சென்றிருந்தால் திருச்செம்பொன்பள்ளி, திருவிளநகர், திருமயிலாடுதுறை வணங்கித், தெற்கு நோக்கிய சாலைவழியே, திருவழுவூர் வீரட்டானம் வணங்கித் திருமீயச்சூருக்கு எழுந்தருளியிருத்தல் கூடும். ஆனால் தமது இந்த யாத்திரையில் முன் பகுதியில் திருச்செம்பொன்பள்ளி முதலியவற்றை ஆளுடைய பிள்ளையார் வணங்கியமை முன்னர் அறிந்தோம். பின்னரும் வழியில் வணங்குதலில் இழுக்கில்லை. ஆக்கூரினின்றும் மீளவும் திருக்கடவூர் போந்து பொறையாற்றின்வழி மேற்கு நோக்கிச் செல்லும் சாலை ஒன்றுளது. அதில் தலங்கள் இல்லை.

தம்பெருமான் - இறைவர், நாயன்மார்கள் இருவருக்கும் படிக்காசு வைத்துப் பின்னர் அருளும் சரித வரலாற்றுக் குறிப்பு.

உடன் என்பது ஒருங்கே என்பதன்று; இருவரும் என்ற எண்ணுப் பொருள் மட்டும் தந்து நின்றது. இந்நாயன்மார்களது யாத்திரையில் அரசுகள் முன்னர் ஒரு தலத்துக்குச் செல்வதும், பின்னர் அவரைப் பின்பற்றிச் சிவிகையில் பிள்ளையார் அத்தலத்துக்குச்சென்று சேர்வதும் வழக்கு. (திருஞான - புரா - 527 பார்க்க.)

திருவீழிமிழலையினைச் சேர்ந்தார்கள் - என்க. முன் அரசுகளும் பின்னர்ப் பிள்ளையாரும் சேர்ந்ததனால் முறை பிறழவைத்தார். மேல்வரும் பாட்டில் "வீழிமிழலை வந்தணையு மேவு நாவுக் கரசினையும்" என்று முன் வைத்த கருத்தும் இது. 249

திருவாக்கூர்த் தான்றோன்றிமாடம்

திருச்சிற்றம்பலம்  திருத்தாண்டகம்

முடித்தா மரையணிந்த மூர்த்தி போலும் மூவுலகுந் தாமாகி நின்றார் போலுங்
கடித்தா மரையேய்ந்த கண்ணார் போலும் கல்லலகு பாணி பயின்றார் போலும்
கொடித் தாமரைக்காடே நாடுந்தொண்டர் குற்றேவ றமகிழ்ந்த குழகர் போலுங்
அடித்தா மரைமலர்மேல் வைத்தார் போலும் ஆக்கூரிற் றான்றோன்றி யப்ப னாரே. 1

ஓதிற் றொருநூலு மில்லை போலும் உணரப் படாததோன் றில்லை போலுங்
காதிற் குழையிலங்கப் பெய்தார் போலுங் கவலைப் பிறப்பிடும்பை காப்பார் போலும்
வேதத்தோ டாறங்கஞ் சொன்னார் போலும் விடஞ்சூழ்ந் திருண்ட மிடற்றார் போலும்
ஆதிக் களவாகி நின்றார் போலும் ஆக்கூரிற் றான்றோன்றி யப்ப னாரே. 2

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆக்கூரிற் தான்றோன்றி யப்பனாரே, முடித் தாமரை யணிந்த மூர்த்தி; கடித்தாமரை யேய்ந்த கண்ணார்; கொடித்தாமரைக் காடே நாடுந் தொண்டர் குற்றேவல் தாமகிழ்ந்த குழகர்; தாம் ஓதிற் றொருநூலு மில்லை (ஆயினும்)-உணரப் படாததொன்றில்லை; ஆதிக் களவாகி நின்றார்; ஆதிரை நாளா வமர்ந்தார்; தீதூர நல்வினையாய் நின்றார்; எண்ணுயிரங் கோடி பேரார்; அடியார் புகலிடம தானார் என்றிவை முதலிய தன்மைகளாலறியப்படுபவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) முடித்தாமரை யணிந்த - முடிகளைத் தாமரை மலர்களாக அணிந்தவர். தலைமாலை சூடியவர். சிவன் ஒருவனே பிராமணன் என்பது வேதம். பிராமணர்களுக்கு அடையாளமாலை தாமரை. "தடங்கொண்டதோர் தாமரைப் பொன்முடி தன்மேல்" (பிள்ளையார் - திருவிடை). முடி - பல ஊழிகளில் இறந்த பிரம விட்டுணுக்களது தலைகள். மூவுலகுந் தாமாகி நின்றார் - விசுவ ரூபன். எல்லாமாய் நிற்பவர். கடித்தாமரை யேய்ந்த கண்ணார் - கண் ஏய்ந்த தாமரையினார் என்று பிரித்துக் கூட்டுக. தாமரை - திருவடித் தாமரை. கண் - சக்கரம் வேண்டித் திருமால் அருச்சித்த கண்; இவ்வாறன்றித் தாமரைபோன்ற கண்ணினராகிய அரியுருவாயிருந்து உலகங் காப்பவர் என்றலுமாம். "அரியாகிக் காப்பார்" (ஞானவுலா); "உலகுகணிலை பெறுவகைநினை வொடுமிகும்அலை கடனடு வறி துயிலமரரி யுருவியல்பரன்" (நட்டபாடை - சிவபுரம் - 2) என்பது பிள்ளையார் தேவாரம். கொடித்தாமரைக் காடே நாடுந் தொண்டர் - அடியிலிருந்து இடைவரையில் இரண்டாகவும், அதன்மேல் உச்சிவரை அவை பின்னிக்கொண்ட வகையில் ஒன்றாகவும், மின்னற் கொடிபோன்ற [illegible]

இருதயம், கண்டம், நாவினடி, புருவத்தினிடை, பிரம ரந்திரம் என்ற ஆறிடங்களில் கீழ்நோக்கிய தாமரைமொட்டுக்க ளிருப்பதாகவும், கண்டு, அவற்றை உரிய பாவனே, கிரியை, மந்திரங்களால் மேனோக்கியனவாக மலரச்செய்து, அவற்றில் இறைவனே வழிபடும் சிவாகம பூசை முறை இங்குக் குறிக்கப்பட்டது. இதனைச் சுழுமுனைத் தியானம் என்பது மரபு. விரிவு சிவாகமங்களுட் காண்க. குற்றேவல் தாமகிழ்ந்த - அத்தொண்டர் செய்யும் குற்றேவலைத் தாம் மகிழ்ந்து ஏற்றுக்கொண்ட எனவும், அத்தொண்டர்க்குத் தாம் ஏவலாளராகக் குற்றேவல் செய்வதனை மகிழ்ந்த எனவும் உரைக்க நின்றது. "கூடுமே நாயடியேன் செய்குற் றேவல்" (தாண் - ஆரூர்). பொதிசோறு இரந்தளித்தல், தூது செல்லுதல், விறகு விற்றல், மண்சுமத்தல் முதலிய வரலாறுகளின் நுட்பங்களை இங்கு வைத்துக் காண்க. அடித்தாமரை மேல் வைத்தார் - அடியாகிய தாமரையை என் முடிமேல் வைத்தார். நாயனாருக்குத் திருவடி சூட்டிய சரிதக் குறிப்பு; என் என்றது தொக்கி நின்றது.—(2) ஓதிற்று...இல்லை போலும் - தாமே ஞானங்களுக்கெல்லா மிருப்பிடமாயுள்ளார். காப்பார் - வாராமற் காப்பர். கவலையும் அதுகாரணமாய் வரும் இடும்பையும் என்க. "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான், மனக்கவலை மாற்ற லரிது" (குறள்) என்றதனை இங்கு வைத்துக் காண்க. ஆதிக்கு அளவாகி நிற்றலாவது ஆதியென்பவற்றை யெல்லாம் கடந்தவராய், அவற்றை அளப்பவரா யிருத்தல். "ஊழியளக்கவல்லான்" (தேவா). அளவு - அளக்கும் கோல்.—(3) வையார் - கூர்மை பொருந்திய. வளர் ஞாயிறு - இளஞ்சூரியன்.—(4) வடி - கூர் வடித்தல். பொடி - திருநீறு.—(5) ஏகாசம்-உத்தரீயம்; போர்வை. "மானுரிதோ லுடையாடை, யேகாச மிட்டுகந்த வெரியாடி"; "பொருபூ தாருரித் தேகாச மிட்ட புராந்தகர்க்குக் குரு" (கந்தரலங்காரம்); மேகாசங்கட்டழித்த - மேகாசு அம் கட்டு அழித்த - மேல் உள்ள தோல் - நிணம் - முதலிய குற்ற நீக்கிய. அம் - சாரியை; மா காசம் - மா - பெரிய; காசம் - பிரகாசம். (இவை ஸ்ரீமத் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகளது உரைக்குறிப்புக்கள்.)—(7) கோலான் - கோல் - அம்பு. இங்கு மலரம்பு குறித்தது. கோலான் - காமன். கோவழல் - கண் அழல். பெரிய ஆற்றல் படைத்த தீ.—(8) எண் ஆயிரங்கோடி - எண் - எண்ணத்தக்க. ஆயிரங்கோடி - அனேகம் என்னும் பொருளில் வந்தது. அண்ணு - அணுகமுடியாதது. திரு அண்ணுமலை. அடியார் புகலிடமது ஆனூர் - இது இப்பதிகத்துச் சிறந்த கருத்தாக ஆசிரியர் சார்ந்தார்தம் புகலிடத்தை (1514) என்று இங்குத் தொடக்கத்தில் எடுத்துக்காட்டியது காண்க.—(10) நேர்ந்தவர்கள்-ஆராய்ந்தவர்களாய் - முற்றெச்சம்.

தலவிசேடம் :—திருஆக்கூர்த் தான்றேன்றிமாடம் - தலப்பெயரும் கோயிலின் பெயரும் சேர்த்து வழங்கப்படுவது; "சாத்தமங்கை யயவந்தி", "ஆரூர்ப் பசுபதீச்சரம்" என்பனபோல. வள்ளன்மையால் மிக்குயர்ந்த தாளாளர்கள் வாழும் பதி என்று இதன் சிறப்பை ஆளுடைய பிள்ளையார் பதிகத்துள் அருளினர். அதனை, இத்தலத்து வாழ்ந்து சிவனடியார்களுக்கு மாகேசுவர பூசை செய்து பேறடைந்த சிறப்புலி நாயனர் புராணத்துள் எடுத்து ஆசிரியர் விதந்துகாட்டியருளியதும் காண்க. இது மாடக்கோயில்களுள் ஒன்று. சுவாமி சுயம்புவாதலின் தான்றேன்றியப்பனர் எனப்படுவார். பதிகம் காண்க. சுவாமி - சுயம்புநாதர்; அம்மை - கட்கநேத்திரி; பதிகம் - 2.

இது மாயூரம் - தரங்கம்பாடி இருப்புப்பாதைக் கிளையில் ஆக்கூர் என்ற நிலயத்தினின்றும் வடக்கில் ½ நாழிகையளவில் உள்ளது.

வேறு

1515. வீழி மிழலை வந்தணையு மேவு நாவுக் கரசினையுங்
காழி ஞானப் பிள்ளையையுங் கலந்த வுள்ளக் காதலினால்
ஆழி வலவ னறியாத வடியா ரடியா ரவர்களுடன்
வாழி மறையோ ரெதிர்கொண்டு வணங்க வணங்கி யுள்புக்கார்.

(இ - ள்) வெளிப்படை. திருவீழிமிழலையில் வந்து அணைகின்ற (முன்னர்) மேவிய திருநாவுக்கரசு நாயனாரையும், (பின்னர் மேவிய) திருஞானசம்பந்தப் பிள்ளையாரையும், அன்பு கலந்த உள்ளத்தில் எழுந்த ஆசையினால், சக்கரத்தையுடைய திருமாலும் அறியாத அடியாரடியார்களுடன் மறையோர்களும் நகர்ப்புறத்துவந்து எதிர்கொண்டு வணங்கத், தாமும் அவர்களை வணங்கித், தலத்தினுள்ளே புகுந்தார்கள் (அவ்விரு பெருமக்களும்). வாழி - அசை.

(வி - ரை) **வந்தணையும்** - முன் பாட்டின்கீழ் உரைத்தபடி முன்னர்வந்து அணைகின்ற என்க. நாவுக்கரசு - ஞானப்பிள்ளை என்ற வைப்பு முறையாலும் அவர்கள் முன்னும் பின்னுமாகப் போந்த முறையை உணர்த்தினார்.

**கலந்த உள்ளம்** - கலத்தலாவது "உணர்ச்சிதான், நட்பாங் கிழமை தரும்" (குறள்) என்றபடி அன்பினாலே முன்னரே கூடுதல். **காதல்** - அவ்வன்பு மேலும் பெருகுநிலை.

**ஆழி வலவன்** - திருமால். ஆழி - சக்கரம். **வலவன்** - வல்லவன் என்பது வலவன் என நின்றது. **வல்லமை**யாவது - அது பெறும்பொருட்டுப் பெருந் தவஞ்செய்தும் கண்ணையிடந் தப்பியும் அதனை அரனிடத்திற் பெற்றதும், அதனை அரிதின் ஏந்தித் திரித்து உலகங் காத்தலும், பிறவுமாம். **ஆழி வலவன்** - ஆழியை வலத்தில் ஏந்தியவன் என்றலுமாம். இத்தலத்தில் திருமால் ஆழிபெற்ற சரிதக்குறிப்புப் பெற இங்கு இத்தன்மையாற் கூறினார்.

**அறியாத அடியாரடியார்** - தெரிய முடியாத திருவடியினையுடையவருடைய அடியவர்கள். தெரியாத என்பதனை அடியவர்கள் என்றனுடன் கூட்டி, அப்பெருமையுடைய அடியார்க்கடியவர்கள் என்றுரைத்தலுமாம்.

**அவர்களுடன் வாழிமறையோர்** - ஏனையோர் யாவரினும் அடியார்களது சிறப்பு நோக்கி அவர்களை முன் வைத்ததுமன்றி **உடன்** உருபை அவர்களோடு சார்த்தி வைத்து ஓதினார். வீழிமிழலையுள் வாழ்வார்களுள் மிகுதிபற்றி **மறையோர்** என்று விதந்தோதினார்.

**எதிர்கொண்டு** - பெருந்திரளாய் வந்த இத்திருக்கூட்டத்தைத் திருவீழிமிழலையின் அடியார்கள் எதிர்கொண்ட சிறப்பினைத் "தெரிந்த அடியார்கள் சென்ற திசைதோறும், விரும்பி யெதிர்கொள்வார் வீழிமிழலையே" என்று பிள்ளையார் தேவாரத்துட் பாராட்டியருளியது அவர்களது அன்பின் பெருக்கை உணர்த்துவதாம். இதன் பயனாகவே அவர்களின் பொருட்டு நாயன்மார் இருவருக்கும் மிழலைநாயகனார் படிக்காசு வைத்துப் பஞ்சகாலம் முழுமையும் அவர்கள் வருந்தாமைக் காத்தருளினார் என்பது குறிப்பாகும்.

**வணங்க வணங்கி** - அடியார் வணங்கத் தாமும் எதிர் வணங்கி. அவர்கள் பின் வணங்குமாறு - வணக்கம் பின்னதாகுமாறு - தாம் முன் வணங்கி என்றலுமாம்.

**உள்** - திருநகரத்தினுள். உள் என்றதனால் எதிர் கொண்டமை நகர்ப்புறத்து நிகழ்ந்ததென்க.

முன்வந்த வாகீசரை முன்னரும், பின்வரும் பிள்ளையாரைப் பின்னரும் எதிர் கொண்டனர். 250

வந்தணைய மேவு—என்பதும் பாடம்.

1516. மாடவீதி யலங்கரித்து மறையோர் வாயின் மணிவிளக்கு
நீடுகதலி தழைப்பூகம் நிரைத்து நிறைபொற் குடமெடுத்துப்
பீடுபெருக வாகீசர் பிள்ளை யாருந் தொண்டர்களுங்
கூட மகிழ்ந்து விண்ணிழிந்த கோயில் வாயில் சென்றணைந்தார்.

(இ - ள்) வெளிப்படை. மறையோர்கள் திருநகரின் மாடவீதியை அலங்காரம் செய்து, தமது மாளிகைகளின் வாயில்களில் மணிவிளக்குக்களையும், நீடும் வாழைகளையும், இலைசெறிந்த கமுகுகளையும் வரிசைபெற வைத்தும், நீர் நிறைந்த பொற்குடங்களை ஏந்தியும், பெருமை பெருக, வாகீசர், ஆளுடைய பிள்ளையாரும் தொண்டர்களும் அங்குப் பின்னர் வந்து கூடும்படி, மகிழ்ந்து, விண்ணிழி விமானத்தையுடைய திருக்கோயிலின் வாயிலைச் சென்று அணைந்தனர்.

(வி - ரை) மாடவீதி - திருக்கோயிலைச் சூழ்ந்து மாடங்கள் நிறைந்தவீதி; தேர் வீதி. கோயிலினுள் மாடவீதி என்பாருமுண்டு. அது பொருந்தாது.

மறையோர் பீடு பெருக - என்று கூட்டுக. பீடு பெருக - சிறப்படைய - பெருமை பெருக. பெரியோர்களையும் அடியார்களையும் இவ்வாறு உபசரித்து வரவேற்றமையால் அவர்கள் பீடுற்ற பெரியோராயினர். வரும் சரிதக் குறிப்புமாம்.

பீடு பெருதும் என்ற பாடம் பிழையென்று தோன்றுகிறது.

வாகீசர் - பிள்ளையாரும் தொண்டர்களும் கூட - முன் வந்தணைந்த வாகீசர் பின்னணையும் பிள்ளையாரும் தொண்டர்களும் தம்முடன் பின் வந்து கூடும்படி.

மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து. அடியார்களும் பிள்ளையாரும் வருதல் மகிழ்ச்சிக்குக் காரணம். இது திருநாவுக்கரசரது புராணமாதலின் அவரைப்பற்றிய நிகழ்ச்சிகள் மட்டில் இங்குக் கூறினார் என்க. மேல்வரும் இரண்டு பாட்டுக்களும் பார்க்க.

விண்ணிழிந்த கோயில் - இக்கோயில் திருமால் வழிபட்டுத் தேவ லோகத்தினின்றும் கொணர்ந்து தாபித்தது என்பது வரலாறு; அதனால் விண்ணிழி விமானம் எனப்படும். "விண்ணிழி விமானமுடை விண்ணவர் பிரான்மருவு வீழி நகரே" (பிள்ளையார் - தேவா). 251

1517. சென்றுள் புகுந்து திருவீழி மிழலை யமர்ந்த செங்கனகக்
குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் வலமா வந்துதிரு
முன்றில் வணங்கி முன்னெய்தி முக்கட் செக்கர்ச் சடைமவுலி
வென்றி விடையார் சேவடிக்கீழ் விழுந்தார்; எழுந்தார்; விம்மினார்.

(இ - ள்) வெளிப்படை. சென்று திருக்கோயிலினுள்ளே புகுந்து திருவீழிமிழலையை விரும்பி வீற்றிருந்தருளிய செம்பொன் மேருமலையை வில்லாகவுடைய பெருமான் மகிழ்ந்த திருக்கோயிலினை வலம்வந்து, திருமுற்றத்தில் வணங்கி, முன்பு சேர்ந்து, மூன்று கண்களையும், செவ்வானம் போலும் சடையாகிய திருமுடியினையும், வெற்றி பொருந்திய விடையூர்தியையும் உடைய அப்பெருமானது திருவடியின் கீழே விழுந்து, எழுந்து, விம்மினார் (வாகீசர்).

(வி - ரை) இஃது திருநாவுக்கரசர் செய்கையைக் கூறிற்று. அமர்தல் - விரும்பி வீற்றிருத்தல்.

செங்கனகக்குன்ற வில்லியார்-நாடோறும் படிக்காசு நல்கிய பிற்சரித நிகழ்ச்சிக் குறிப்புப்படப் பொன்மலைத்தொடர்புபற்றிக் கூறினார். "கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கடனீர்சுருங்கிப், பன்னெடுங் கால மழைதான் மறுக்கினும் பஞ்சமுண்டேன், றென்னெடுஞ் சூளுற மஞ்சனேஞ் சேயிமை யாதமுக்கட், பொன்னெடுங் குன்ற மொன் றுண்டுகண் டீரிப் புகலிடத்தே" என்ற பொதுத் திருவிருத்தக் கருத்துக் காண்க.

கோயில் வலமா வந்து-கோயிலைப் புறத்து வலம்வந்து பின்னர் உட்புகும் முறை.

சேக்கர்ச்சடை - சிவந்தசடை. "தீமலர்ந்த சடைக்கூத்தர்"-திருத்தொண்டர் புராண வரலாறு.

சடைமவுலி - சடையாகிய முடி. "சடைமுடி சாட்டியக் குடியார்க்கு" (திருவிசைப்பா).

விழுந்தார் - எழுந்தார் - வினைமுற்றுக்கள் எச்சப்பொருளில் வந்தன. வினை முற்றாகவே கொள்ளலுமாம். இச்செயல்கள் வழிபாட்டு முறையில் தொடர்ந்து நிகழ்வனவேனும், நாயனாரது வழிபாட்டின் ஆர்வ மிகுதியால் அவை தனிச்செயல்களாகக் காணப்பட்டன என்பது குறிப்பு. இது, விம்மினார் என்றதனாலும், மேல்வரும் பாட்டிற் கூறுவனவற்றாலும் குறிப்பிக்கப் பட்டது. 252

1518. கைகள் குவித்துக் கழல்போற்றிக் கலந்த வன்பு கரைந்துருக
மெய்யில் வழியுங் கண்ணருவி விரவப் பரவுஞ் சொன்மாலை
"செய்ய சடையார் தமைச்சேரார் தீங்கு நெறிசேர் கின்று"ரென்
றுய்யு நெறித்தாண் டகமொழிந்தங் கொழியாக் காதல் சிறந்தோங்க,

1519. முன்னா ளயனுந் திருமாலு முடிவு முதலுங் காணாத
பொன்னார் மேனி மணிவெற்பைப் பூநீர் மிழலை யினிற்போற்றிப்
பன்னாள் பிரியா நிலைமையினாற் பயிலக் கும்பிட் டிருப்பாராய்,
அந்நாண் மறையோர் திருப்பதியி லிருந்தார் மெய்ம்மை யருந்தவர்கள்.

1518. (இ - ள்) கைகள்...விரவ - கைகளிரண்டையும் சிரமேற்குவித்துக் கழல்களைப்போற்றி, உள்ளமானது நிரம்பிக் கலந்த அன்பினாற் கரைந்து உருகத், திருமேனியில் வழியும் கண்ணீர் அருவி போலப் பொருந்த; பரவும் சொன்மாலை - துதிக்கின்ற சொன்மாலையாகிய திருப்பதிகம்; "செய்ய சடையார்...சேர்கின்றார்" என்று - "சிவந்த சடையினையுடைய பெருமானைச் சேராதவர்கள் தீங்கு நெறிக்கே சேர்கின்றார்" என்ற கருத்துடையதாய்; உய்யும்...மொழிந்து - உய்யும் நெறியைக் காட்டுந் திருத்தாண்டகத்தை அருளிச் செய்து; அங்கு...ஓங்க - அவ்விடத்து நின்றும் நீங்க முடியாத காதல் மேல் ஓங்கி எழ, உருங

1519. (இ - ள்) முன்னாள்...போற்றி-முற்காலத்தில் அயனும் திருமாலும் முடிவும் முதலும் அறியமுடியாது நீண்ட பொன்னார் மேனியினையுடைய மணிவெற்பாகிய இறைவரை அழகிய நீர்வளமுடைய திருமிழலையிற் போற்றி செய்து; பன்னாள்...கும்பிட்டிருப்பாராய் - பலநாளும் பிரியாதிருக்கும் பண்பினால், வாகீசர், பயிலக் கும்பிட்டுக் கொண்டிருப்பாராகி; அந்நாள்...அருந்தவர்கள் - அக்காலத்தே மறையோர் வாழும் அத்திருப்பதியில் உண்மைநிலை யருந்தவர்களாகிய அவ்விரு பெருமக்களும் அடியார்களும் தங்கி எழுந்தருளி யிருந்தார்கள். உருச

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1518. (வி - ரை) இத்திருப்பாட்டும் வாகீசர் பெருமானது செய்கை குறித்தது. கைகள் குவித்தல் - கழல் போற்றல் - அன்பு உருகுதல் - கண்ணீர் பாய்தல் - சொன்மாலை பரவுதல் – இவை அன்புமிகுதிப்பாட்டின் நிகழும் மெய்ப்பாடுகள்.

"செய்ய சடையார் தமைச் சேரார் தீங்குநெறி சேர்கின்றார்" என்று - இது பதிகக்கருத்து ஆசிரியர் காட்டியபடி. பதிகப் பாட்டுத்தோறும் வரும் "திரு வீழிமிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே" என்ற மகுடம் காண்க. "திருநாகேச் சரத்து ளானைச் சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே" என்று எதிர் மறை முகத்தாற் கூறிய நாயனார், அவ்வாறு நன்னெறியிற் சேராவிடில் எங்குச் சேர்கின்றாரென்னில், அவர் சேர்வது தீநெறிக்கேயாம் என்று உடன்பாட்டு முகத் தால் உறுதி கூறினார். "நன்றென்ப சிலவே, தீதென்ப சிலவே, ஒன்றிலும் படாதன சிலவே". (11-ம் திருமுறை. கோயிலு - 32) என்றபடி தீமையும் நன்மை யும் அல்லாதவையு முளவாகலின் அவ்வா றன்றிச், சிவநெறி சேராதார் தீநெறியே சேர்கின்றார் என்று வற்புறுத்தினார். தீங்குநெறி - தீமை பயக்கு நெறி.

உய்யு நெறி - உலகரை உய்விக்கும் நெறியைக் காட்டுகின்ற. சிவபெருமானைச் சேர்வதே உய்யுநெறியாவது; பிற எல்லாம் அதற்கு மாறுபாடாய்த் தீமையிற் செலுத்தும் நெறிகள் என்று எடுத்துக்காட்டுதல் குறிப்பு.

ஆங்கு ஒழியா - அங்குநின்றும் - அத்தலத்தினின்றும் - நீங்காத. "பிரியா நிலைமையினால்" என மேல்வரும் பாட்டிற் கூறுவதுமிது.

சிறந்து ஓங்குதல் - மிகுதல். பலகாலம் அங்குத் தங்க நேர்ந்ததன் காரணம் கூறப்பட்டது. "பலநாள் பயிலக் கும்பிட்டு இருப்பாராய்" என்பது இதனாலாகியது என்பது வரும்பாட்டின் குறிப்பு.

இருப்பாராய் - வாகீசர் என்ற எழுவாய் தொக்குநின்றது. வாகீசர் - கூட - அணைந்தார் (1516), விம்மினார் (1517); அவர், போற்றி - உருக - விரவ - என்று மொழிந்து - ஓங்கப் (1581), போற்றிக் கும்பிட்டு, இருப்பாராய், - அருந்தவர்கள் - இருந்தார் (1519) என்று இந்த நான்கு பாட்டுக்களையும் முடிபுசெய்து கொள்க.

இருபெருமக்களும் உடன் கலந்திருப்பினும் வாகீசர் புராணமாதலின் அவரது வழிபாட்டு முறைகளையும் செயல்களையும் இங்குத் தனியாக எடுத்துக்கூறிப், பிள்ளை யாரும் தொண்டர்களும் உடன் அணைந்தனர் (1516) என்றும், பதியில் இருந்தார் (1519) என்றும் முன்னும் பின்னும் கூட்டி உரைத்தனர். இவ்வாறே, ஆளுடைய பிள்ளையார் புராணத்துள், மறையோர் அவரை எதிர்கொண்டமையும், பிள்ளையார் திருக்கோயிலுட்சென்று வழிபட்ட முறைமையும், புறத்திற் சேர்ந்து ஒரு திருமடத்து எழுந்தருளியமையும் ஆகிய அவரது செயல்களையே தனியாகச் சிறப்பித்து (திருஞான-புரா - 539 - 546) எட்டுத் திருப்பாட்டுக்களாற் கூறி, அரசுகள் பிள்ளையாரெழுந் தருளுமுன் திருமிழலை சேர்ந்ததும், வழிபாட்டின் பின்னர்த் திருக்கோயில் மதிற் புறத்து ஒரு மாமடத்து அடியார்களும் தாமும் சேர்ந்தமையும் முன்னும் பின்னும் கூட்டி உரைப்பதும் காண்க. இருபெரு மக்களும் கலந்து நிகழினும் இருவர் வழிபாடு களும் வழிபாட்டு முறைகளும் தனித்தனி நிகழ்ந்தனவாதலின் தனித்தனி கூறப் பட்ட முறையும் கண்டு கொள்க.

இருபெரு மக்களும், பின்னர், அடியார்களுடன், பின் "இருவருடைய திருமடங் கள்" (1526) என்றபடி, வெவ்வேறு திருமடங்களில் எழுந்தருளியிருந்தமையும், இருவர்க்கும் இறைவர் தனித்தனி படிக்காசு அருளியமையும், அவைபற்றிய பிற் சரித நிகழ்ச்சிகளும், அத்திருமடங்களின் நினைவாக இன்றும் வடக்குத் திருமாடவீதியில்

திருவீழிமிழலை

I திருச்சிற்றம்பலம்

திருத்தாண்டகம்

போரானை யீருரிவைப் போர்வை யானைப் புலியதளே யுடையாடை போற்றி னானைப்
பாரானை மதியானைப் பகலா னானைப் பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற
நீரானைக் காற்றானைத் தீயா னானை நினையாதார் புரமெரிய நினைந்த தெய்வத்
தேரானைத் திருவீழி மிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆனை உரிவைப் போர்வையான், புலியதளுடையாப் போற்றினான், பாரான், மதியான், பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற நீரான், காற்றான், தீயானான், பாசுபத வேடத்தான், அகத்தியனை உகப்பான், நேரிழையைக் கலந்திருந்தே புலன்க ளைந்தும் வென்றான், மெல்லியலாள் தவத்தினிறை யளக்க லுற்றுச் சென்றான், சந்தோக சாமம் ஓதும் வாயான், மந்திரிப்பார் மனத்துளான், வஞ்சனையா லஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயான், வருகாலம் செல்காலம் வந்தகால முற்றவத்தை உணர்ந்தாரும் உணரலாகா ஒரு சுடர், பூதலமு மண்டலமும் பொருந்தும் வாழ்க்கை செய்வான், வெவ்வேறு யிருமூன்று சமயமாகிப் புக்கான், எப்பொருட்கும் பொதுவானான், தானன்றி வேறொன்றில்லாத் தத்துவன், தடவரையை நடுவுசெய்த திக்கான், கலந்தார்க் கென்றும் தேனவன், பத்தர்க்கு முத்தி காட்டும் வரத்தான், மாருதமா லெரிமூன்றும் வாயம் பீர்க்காஞ் சரத்தான் என்றிவை முதலான தன்மைகளா லறியப்படும் திருவீழிமிழலை யிறைவரைச் சேராதார்கள் தீநெறிக்கே சேர்கின்றார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) போர் ஆனை - போர்வல்ல யானையினுடைய. பாரானை...தீயானான் - சிவனது எட்டுமூர்த்தம். பல்லுயிர் - ஆன்மா. சேராதார்... சேர்கின்றாரே' - சிவனை அடையாமலே, நற்கருமஞ் செய்தலே நன்னெறிக்கு அமையும் என்னும் கருமயோக வாதிகள் முதலியோரை நோக்கி வற்புறுத்தி, உபதேசித்தருளியது. தீநெறிக்கே - ஏகாரம் பிரிநிலை. சேர்கின்றாரே - ஏகாரம் தேற்றம்.—(2) சவந் தாங்கு...தரித்தான் - சைவ அகப்புறச் சமயங்க ளாறனுள் ஒன்றாகிய மாவிரதியர் கோலம். 888-ம், ஆண்டுரைத்தவையும், பிறவும் பார்க்க. சுத்த சைவத்தின் வேறாதலின் பவந்தாங்கு என்றார்.—(3) நேரிழையை...வென்றானை - "பொறிவாயி லைந்தவித்தான்" (குறள்). மெல்லியலாள்...சென்றான் - கந்தபுராணம் - தவங்காண் படலம் பார்க்க.—(4) சந்தோக சாமம் - சந்தசுகளின் - சுரங்களின் - நிறைவுள்ள சாமவேதம். வஞ்சனையால் - மெய்யன்பின்றி.—(5) அமுதமுண்ட...உலவாதான் - சிவனது இறைமை. வருகாலம்...உணர்ந்தாரும் - மூன்றுகாலமு முணரும் பெருஞானிகளும். உம்மை - உயர்வுசிறப்பு. இருவிசும்பு - பெரிய வானம். ஏனையவற்றுக்கெல்லாம் இடங் கொடுத்தலின் இருவிசும்பு என்றார். ஒரு - இரு - சொல்லணி.—(6) பூதலமும்... செய்வான் - உலகைப் படைத்தும் காத்தும் நிகழ்விப்பவன்.—(7) தானன்றி - இறைவனான் தானேயன்றி. தடவரை - மேரு. உலகுக்கு அச்சுப்போன்று, அதனைச் சுற்றி உலகம் சுழல்வதனால் நடுவுசெய்த திக்கு என்றார். வரையை முன்னிட்டுத் திசைகள் வகுக்கப்படுகின்றன என்பது.—(8) கலந்தார் - உள்ளங் கலந்தவர்.—(9) பாத்தானை... பலவானானை - கடந்த அப்புறத்தே ஒன்றாகி, இப்புறத்தே பலவாகி. மாருதம்...சரத்தான்-மாருதம், மால், எரி என்ற மூன்றும், ஈர்க்கும் அம்பும் அதன் கூர்வாயும் ஆகிய, சரம் - அம்பு. எதிர்நிரனிறை. சிரம்-சிரமாலை.—(10) ஆங்கு-அந்தச்சடை நுனியில். செறித்தான் - செறிந்திருக்கச் செய்தான்.

இரண்டு தனிக்கோயில்களில் நாயன்மார்கள் எழுந்தருளியிருத்தலும், பிறவும் இங்கு வைத்துக் கண்டுகொள்க.

கரைந்துருக்க—விரவி—என்பனவும் பாடங்கள். 253

1519. (வி - ரை) முன்னாள் - முன்னொரு காலம். ஒரு கற்பம். அழற்றூணில் இறைவர் வெளிப்பட்டு அருளுவதன் முன் என்றலுமாம்.

அயனும் திருமாலும் - முடிவும் முதலும் - அடியும் முடியும் ; எதிர்நிரனிறை. முடிவு என்பதனை நீளும் முடி என்றும், முதல் என்பதனை ஆழும் வேர் என்றும் கொண்டு அயன் - மால் என்பவற்றுடன் நிரனிறையாக்கிக் கூட்டுதலுமொன்று.

பொன்னார் மேனி - "பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி" (பொன்வண் - அந் - 1), "பொன்னார் மேனியனே" (நம்பி). பொன் - செம்பொன்.

பொன்னார்மேனி மணிவேற்பு - படிக்காசு வைத்த பிற்சரித விளைவுக் குறிப்பு. "செங்கனகக் குன்ற வில்லியார்" (1517) என்ற குறிப்பும் காண்க.

பூநீர் - பூ - அழகு. நீர் - நீர்வளம். காவிரியாலாகியது. "பூந்தண் பொன்னி யெந்நாளும் பொய்யா தளிக்கும் புனல்" (1206). இதனை அடுத்து மேல்வரும் பாட்டில் "பொன்னி நதியும் பருவம் மாறுதலும்", என நீர் சுருங்கிய வறுமையைக் கூறும் ஆசிரியர், இங்கு நீர்ச்சிறப்பாற் கூறிய தென்னையோ? எனின், அவ்வாறு நீர் சுருங்க வரினும், வளஞ் சுருங்கா நிலையினை நாயன்மார்களது பெருமையாற் பெற்ற பூநீர்மை யுடையது இத்தலமாம் என்று மிழலையின் தனிச் சிறப்புக் குறிப்பதற்கென்க.

நீர் - நீர்மை - தன்மை - என்ற குறிப்பும்பட நின்றது.

பன்னாள் பிரியா நிலைமையினாற் பயிலக் கும்பிட்டிருந்தமை - "அங்கு ஒழியாக் காதல் சிறந்தோங்க" (1518) வைத்துப் பிற் சரித விளைவினை நிகழ்விக்கும் பெருமானருட் குறிப்பினாலாகியது.

பிரியாமை - ஒவ்வொரு நாளும் காசுபெற்று அடியாரை அமுது ஊட்டவேண்டியிருத்தலின், அங்கு நின்றும் வேறு தலங்களுக்கும் போய் வராமல் என்றது குறிப்பு.

பன்னாள் பிரியா நிலைமை - "காலந் தவறு தீர்ந்து" (1527) என்னும் காலம் வரையில்.

பயில் - மிகுதி குறிப்பது. காலங்கடோறும் நீங்காது. பிரியா நிலைமையும் - பயிலுதலும் இருவரையும், அடியார்களையும் உடன்கொள்க. இருப்பாராய் - தங்கும் திருவுள்ளமுடையவராகி.

அந்நாள் - அருந்தவர்கள் - இருந்தார் - என்க. அக்காலம் முழுதும் என்க. அகரச் சுட்டுப் பன்னாள் என்றதனைச் சுட்டியது.

மறையோர் திருப்பதி - அத்தலத்துள்ளோருள் மறையோர் மிகுந்திருந்தமையால் மிகுதிபற்றி மறையோர் பதி என்றார்; தென்னை மா பலா முதலிய மரங்களிருப்பினும் கமுகு மிகுதி பற்றிக் கமுகஞ்சோலை என்றாற்போல.

மெய்ம்மை அருந்தவர்கள் - நாயனாரும் பிள்ளையாரும். இறைவரது சத்தாகிய உருவம்போல, இவ்விரு பெருமக்களும் இறைவரை இடைவிடாது பற்றியதனால் அத்தன்மையே யாயினவர்கள் என்பது. மெய்ம்மை நிலையைத்தரும் - செய்யும் - அரிய தவம். சிவபூசை என்க. மெய்ம்மை யருந்தவர்களாதலின் அவர்களது திருவாக்கும் மெய்த் திருவாக்குக்களாகி-இறைவரது திருவாக்கேயாகிச்-செயல் செய்தன என்பது. ஈண்டு இவ்விரு பெருமக்களோடு அவர்களுடன் அமரும் பெருவாழ்வு பெற்றுப் பின்னர் உடன் [illegible]

1520. சீரின் விளங்குந் திருத்தொண்ட ரிருந்து சிலநாட் சென்றதற்பின்
மாரி சுருங்கி வளம்பொன்னி நதியும் பருவ மாறுதலும்
நீரி னியன்ற வுணவருகி நிலவும் பலமன் னுயிர்களெலாம்
பாரின் மலிந்த விலம்பாட்டிற் படகூர் வறுமை பரந்ததால். உடுரு

(இ - ள்) சீரின்...சென்றதற்பின் - சிறப்பினால் விளங்கும் திருத்தொண்டர்கள் அவ்வாறிருந்து சில நாள்கள் கழிந்த பின்பு; மாரி சுருங்கி - மழை சுருங்கியதனால்; வளம்பொன்னி...மாறுதலும் - நாள் பொய்யாதளிக்கும் வளமுடைய காவிரி நதியும் நீர்தரும் பருவத்தில் தராது மாறுதலடையவே, (அதனால்); நீரின் இயன்ற உணவு அருகி - நீரால் விளையத் தக்கனவாகிய உணவுப் பொருள்கள் குறைந்து; நிலவும் பல மன் உயிர்கள் எல்லாம் - உணவினால் வாழ்கின்ற பல நிலைபெற்ற உயிர்கள் எல்லாமும்; பாரின் மலிந்த இலம்பாட்டில் படர்கூர்-உலகில் மிக்க இலம்பாட்டின் காரணமாகத் துன்பமிகுதி அடையும்; வறுமை பரந்தது-தரித்திரம் பரவியது. (ஆல்-அசை-உறுதிக்குறிப்புப்பட நின்றது.)

(வி - ரை) சீரின் விளங்கும் திருத்தொண்டர் - சீர் - இறைவரது திருவருள் பெற்று உலகமுய்யும் நெறிகாட்டும் சிறப்பு. விளங்கும் - முக்காலத்துக்கும் பொது வான வினைத்தொகை. பிற்சரிதக் குறிப்புக் காண்க. இருந்து - முன்பாட்டில் இருந் தார் என்றபடி இருந்து.

மாரிசுருங்கி - சுருங்கியதனால். வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது.

வளம் பொன்னி நதியும். உம்மை உயர்வுசிறப்பு. "எந்நாளும் பொய்யா தளிக் கும் புன" லுடைய தெனவும், "வான் பொய்யினுந் தான்பொய்யாக் காவிரி" என வும் விதந்து பேசப்படும் உண்மை நீர்வளமுடைய அதுவும். பருவம் - நீர்பெரு குதற் குரியகாலம்; பயிர்க்கும் உயிர்க்கும் இன்றியமையாது பெருக நீர் வேண்டும் காலம். "நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும்" (குறள்) என்றபடி மழைக்கு ஆதார மாகிய கடலும் குன்றுமாயின், மாரியினால் ஆதரவு பெறும் ஆறும், ஊற்றும் குறை தல் ஒருதலை.

நீரின் இயன்ற உணவு அருகி - "ஏரினுழாஅ ருழவர்" என்று இதனைத் திருக் குறளுட் காரணங்காட்டி யுரைத்தமை காண்க. உணவு - இங்கு நெல் முதலிய உணவுக்குதவும் பண்டம் குறித்தது; ஆகுபெயர். நீரின் இயன்ற - நீரால் உளவாகும். இன் - விகுதி கருவிப் பொருள் தரும் ஆன் என்னும் மூன்றனுருபாய் வந்தது. இயன்ற - உளதாகும். "பசும்புற் றலைகாண் பரிது" என்றார் இதனைத் திருக்குறளா சிரியர். நிலவும் - உணவினால் வாழும்; உலகில் வாழப்பெறும்.

பல மன் உயிர்களெல்லாம் - பல என்பது உயிர்களின் வகைகளையும், எல் லாம் - என்பது அவற்றின் தொகையையும் குறித்தன. முற்றும்மை தொக்கது.

இலம்பாடு - இலம் - இல்லாமை; பாடு - படுதல் - உண்டாதல். இல்லாமை உண்டாதல். படர் - துன்பம். துயரம். கூர்தல் - மிகுதல். படர்கூர் வறுமை - துன்பம் மிகும் பஞ்சம்.

உயிர்களெலாம்-படர்கூர்-என்றதுபற்றி "வானின் றுலகம் வழங்கி வருதலால்" என்னும் திருக்குறட் கருத்துக் காண்க.

பாரின் - இன் - ஏழனுருபாகி வந்த உருபு மயக்கம். பாரில் வறுமை பரந்தது என்று கூட்டுக.

வளர் பொன்னி—நீரினியன்றி—உணர்வுருகி—உயிர்க்கெல்லாம்—படர்ந்த தால்—என்பனவும் பாடங்கள்.

1521. வைய மெங்கும் வற்கடமாய்ச் செல்ல, வுலகோர் வருத்தமுற
நையு நாளிற், பிள்ளையார் தமக்கு நாவுக் கரசருக்குங்
கையின் மானு மழுவுமுடன் காணக் கனவி லெழுந்தருளிச்
செய்ய சடையார் திருவீழி மிழலை யுடையா ரருள்செய்வார், ௨௫௬

1522. "கால நிலைமை யாலுங்கள் கருத்தில் வாட்ட முறீரெனினும்,
ஏல வும்மை வழிபடுவார்க் களிக்க வளிக்கின் றோ"மென்று
கோலங் காண வெழுந்தருளிக் குலவும் பெருமை யிருவருக்கும்
ஞால மறியப் படிக்காசு வைத்தார் மிழலை நாயகனார். ௨௫௭

1521. (இ - ள்) வையம் எங்கும் வற்கடமாய்ச் செல்ல - உலகமெங்கும் பஞ்ச காலமாய் நிகழ; உலகோர் வருத்தம் உற - உலகத்து உயிர்கள் பசியால் வருந்த; நையும் நாளில் - துன்பப்பட்டு அலையும் நாளில்; செய்ய சடையார் திருவீழிமிழலை உடையார் - சிவந்த சடையினை உடையாராகிய திருவீழிமிழலை உடைய நாயகர்; கையில் மானும் மழுவும் உடன்காண - தமது கைகளில் மானும் மழுவும் காணும்படியாக; பிள்ளையார் தமக்கும் நாவுக்கரசருக்கும் கனவில் எழுந்தருளி - ஆளுடைய பிள்ளையாருக்கும் அரசுகளுக்கும் கனவில் தோன்றியருளி; அருள்செய்வார் - அருளிச் செய்வாராய், ௨௫௬

1522. (இ - ள்) "கால நிலைமை...அளிக்கின்றோம்" என்று - "பஞ்சகாலமாகியகால வேறுபாட்டின் நிலைமையினால் உங்கள் கருத்தில் வாட்டம் அடையமாட்டீர்கள்; இருந்தாலும், பொருந்தும்படி உங்களை வழிபடும் அடியார்களுக்குக் கொடுப்பதற்காக உங்களுக்கு அளிக்கின்றோம்" என்று கூறி; கோலம் காண எழுந்தருளி-தமது திருக்கோல முழுமையும் அவர்கள் கண்டுகொண் டிருக்கவேயும் மறைந்து; மிழலை நாயகனார் - திருவீழிமிழலை இறைவர்; குலவும் பெருமை...படிக்காசு வைத்தார் - விளங்கும் பெருமையுடைய இரு பெருமக்களுக்குமாக உலகமறியும்படி நித்தம் படிக்காசு வைத்தருளினார். ௨௫௭

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1521. (வி - ரை) வற்கடம் - பஞ்சம். "அக்காலத்துப் பாண்டியனாடு பன்னிருயாண்டு வற்கடஞ் சென்றது" (இறை - அகப்பொ. உரை). வற்கடமாய்ச் செல்ல - பஞ்ச காலநிலையாய் நிகழ. நைதல் - மனங்கலங்கி வருந்துதல்.

பிள்ளையார் தமக்கும் நாவுக்கரசருக்கும் படிக்காசு வைத்த முறையில் முதலில் கிழக்குப் பீடத்தில் பிள்ளையார் பெறவும், பின்னர் மேற்குப் பீடத்தில் நாயனார் பெறவும் தந்த முறைபற்றிப் பிள்ளையாரை முன்வைத்தோதினார்.

மானும் மழுவும் உடன் காண - அடியார்க்கும் கவலை வருமோ என்று கருதி, அடிபரவித் துயின்றார்களாகத், தாமாந் தன்மையறியும்படி அக்கோலங் காணக்காட்டி,

அருள் செய்வார் - என்று - எழுந்தருளிப் - படிக்காசு வைத்தார் - என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடித்துக் கொள்க.

சடையார் - மிழலையுடையார் - இருவர் கனவிலும் தனித்தனி காண எழுந்தருளியபடியால் இருதன்மையாற் கூறினார். கனவில் இரண்டு பேருக்கும் தனித்தனி தோன்றினாலும் படிக்காசு வைத்தது தாம் ஒருவரேயாதலின் மேல்வரும் பாட்டில் காசு வைத்த செயலைக் கூறுமிடத்து "படிக்காசு வைத்தார் மிழலை நாயகனார்" என்று ஒரு தன்மையாற் கூறினார். திருஞான - புரா - 563, 564 பாட்டுக்களிலும் இவ்வாறே காண்க.

1522. (வி - ரை) கால நிலைமை - வற்கடமாய் உலகிற் பசிப்பிணி வருத்துந் தன்மை. காலதத்துவத்தின் செயலால் உலகர் அடையத்தக்க துன்பநிலை.

உங்கள் கருத்தில் வாட்டமுறீர் எனினும் - அவ்வாறு நிகழும்போதும் பசிநோய் உம்மை வருத்தாது என்றாலும் என்னும் பொருளில் வந்தது. "உலகியல்பு நிகழ்ச்சி யினி லணைந்ததீய உறுபசிநோ யுமையடையா தெனினும்" (திருஞான - புரா - 564) என்று இதனைப் பின்னர் விளக்குவார். ஏல - உள்ளக்கருத்துக் கியைய. ஏலுதல் - பொருந்துதல்.

வழிபடுவார்க் களிக்க அளிக்கின்றோம் - உங்களை வழிபடும் அடியார்க்கு நீங்கள் அளிக்கும்படி நாம் உங்களுக்கு அளிக்கின்றோம். செல்வம் பெறுவதெல்லாம் நல்வழியால் வேண்டுமவர்க்குக் கொடுக்கும்பொருட்டே என்பது இதன் குறிப்பு. "இச் செல்வம் சிவன் றந்ததென்று கொடுக்கறியா, திறக்குங் குலாமருக் கென்சொல்லுவேன்" என்று பட்டினத்து அடிகள் இரங்கிக் கூறினது காண்க. "ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார், கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" என்ற தன்மையராதலின், இறைவர் இவர்கள் மூலம் உலகங் காக்கவும் அடிமைத்திறத்தின் பெருமை விளங்கவும் திருவுள்ளங் கொண்டு, "நீங்கள் பசிநோய் வருத்தமறியாதீர்; ஆயினும், நாம் தரும் காசினை மறுது கொண்டு அடியார்க் களியுங்கள்" என்று முன் கனவில் அருளிச்செய்து, பின்னர்க் காசு வைத்தருளினர். அவ்வாறு கனவில் அருள் செய்திராவிடின் இப்பெருமக்கள் காசினை நோக்கியுமிரார் என்பது துணிபு. "ஈவ தொன்றெமக் கில்லையேல் அதுவோ வுனதின்னருள்" (திருவாவடுதுறை - காந்தார பஞ்சமம் - 1) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரத்தின் கருத்தை "நீணிதி வேண்டினார்க் கீவதொன்று மற்றிலேன்; உன்னடி யல்ல தொன்றறியேன்" (திருஞான - புரா - 424) என்று ஆசிரியர் விரித்துரைப்பதுவும் இங்குக் கருதற்பாலது. "தன்கடன்னடி யேனையுந் தாங்குதல், என்கடன்பணி செய்து கிடப்பதே" என்பது நாயன்மார்களின் மனநிலையாதலின், தம்மையே இறைவரது பரமாக ஒப்புவித்த அவர்களை வழிபடும் அடியவர்களைக் காப்பதும் இறைவரது கடனாயிற்று.

துலவும் பெருமை - சிவனையன்றி வேறுணராது அறிவாற் சிவனேயாகும் பெருமை.

ஞாலம் அறிய - உலகர் அறிந்ததனால் திருத்தொண்டின் பெருமை அறிந்து உய்யும்படி.

படிக்காசு - படியாகிய காசு. படி - நாள்தோறும் நியமிக்கும் ஒழுங்கு. படியில் என்று உரைப்பாருமுண்டு. "கிழக்கும் மேற்கும் பீடத்தில்" காசு வைத்தார் என்று மேல்வரும் பாட்டில் உரைப்பதனால் அவ்வுரை பொருந்தாதென்க. படிவேறு; பீடம் வேறு. "நாள்கடொறுங் காசுபடி வைத்தருள" (1523) என்பதும் காண்க. வேலை நாட்கூலிக்காகத் தரும் உணவுப்பொருளுக்குப் படிச்செலவு என்பதும் வழக்கு. இங்கு வேலை இறைவனடித் தொண்டு. அமுதுபடிக்கு வேண்டும் காசு என்றலுமாம். 257

1523. விண்ணின் றிழிந்த விமானத்தின் கிழக்கு மேற்கும் பீடத்தில்
அண்ணல் புகலி யாண்டகையார் தமக்கு மாண்ட வரசினுக்கும்
நண்ணு நாள்க டோறுங்காசு படிவைத் தருள, நானிலத்தில்
எண்ணி லடியா ருடனமுது செய்தங் கிருந்தா ரிருவர்களும், உருஅ

1524. "அல்லார் கண்டத் தண்டர்பிரா னருளாற் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப் பரம னடியா ரானார்கள்

எல்லா மேய்தி யுண்க "வென விரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லாற் சாற்றிச் சோறிட்டார்; துயர்கூர் வறுமை தொலைத்திட்டார்.

1523. (இ - ள்) விண் நின்று இழிந்த விமானத்தின் - ஆகாயத்தினின்றும் போந்த விமானமாகிய கோயிலினுள்; கிழக்கும் மேற்கும் பீடத்தில் - கிழக்கிலே திருமுன்பு உள்ள பீடத்திலும், மேற்கிலுள்ள பீடத்திலும்; புகலி ஆண்டகையார் தமக்கும் ஆண்ட அரசினுக்கும் - ஆளுடைய பிள்ளையாருக்கும் ஆளுடைய அரசுகளுக் குமாக; நண்ணும் நாள்கள்தொறும் - கும்பிட வரும் நாள்கள்தோறும்; அண்ணல் - பெருமையுடைய மிழலை நாயகனார்; காசுபடி வைத்தருள - படியாகக் காசினை வைத்தருள; நானிலத்தில்...இருவர்களும் - நானிலத்தில் எண்ணில் அடியார்களுடன் அமுதுசெய்து அங்குத் தங்கியிருந்தார்களாகி நாயன்மார் இருவர்களும்,　　உருஅ

1524. (இ - ள்). அல்லார்...பெருக - திருநீலகண்டமுடைய தேவதேவரது திருவருளினால் படியாகப் பெற்ற காசினால் பலவாறு பொருந்திய வளங்கள் பெருகியத னால்; "பரமன்...உண்க" - "முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானடியாராயினார் எல்லாரும் வந்து அமுது உண்க"; என்று - என்று எடுத்துக் கூறி; இரண்டு... சாற்றி - நாள் இருபோதும் பறைசாற்றுவித்துச் சொல்லாற் சாற்றுவித்து; சோறு இட்டார் - சோறு இட்டார்கள்; துயர்...தொலைத்திட்டார் - துன்பமிகும் வறுமை நோயைத் தொலைத்திட்டார்கள்.　　உருகூ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டு ஒரு பொருண்மேனின்றன.

1523. (வி - ரை) விண்ணின்று இழிந்த விமானத்தின் - "விண்ணிழிந்த கோயில்" (1516) பார்க்க. "விமானம்-இங்குக் கோயில் என்ற பொருளில் வந்தது.

கிழக்கும் மேற்கும் பீடத்தில்-பீடம்-பலிபீடம். கிழக்குப்பீடம்-சுவாமி சந்நிதிக்கு நேர் எதிரில் உள்ளபீடம். "பிள்ளையார்தாம் அபிமுகத்துப் பீடிகைமேற் காசு கண்டார்" (திருஞான-புரா-565) என்பது காண்க. கிழக்கும் மேற்கும் என்பதனைப் பிள்ளையாருக்கும் அரசுகளுக்கும் முறையே காசுவைத்தருள என்று நிரனிறையாகக் கூட்டுக.

மேற்குப்பீடம் - சுவாமிசந்நிதிக்கு நேர் பின்புறம் உள்ளது. இவை இன்றும் பாராட்டி வழிபடப்பெறுகின்றன.

அண்ணல் - பெருமையுடையார். இங்குத் திருவீழிமிழலை நாதரைக் குறித்து நின்றது.

அண்ணல் - வைத்தருள என்று கூட்டுக. இக்கருத்தையே தொடர்ந்து "அண்ணல் வைத்த படிக்காசால்" (1526) என்பது காண்க. அண்ணலாகிய புகலி யாண்டகையார் என்று கூட்டியுரைத்து, வைத்தருள என்பதற்கு மிழலைநாயகனார் என்ற எழுவாய் முன் பாட்டினின்றும் வருவித்துக் கொண்டுரைப்பாருமுண்டு.

புகலி ஆண்டகையார் தமக்கும் என்று பிள்ளையாரை முன் வைத்தது கிழக்குப் பீடத்தில் காசு முன்னர்க் கொடுப்பக் கண்டு எடுத்த அம்முறைபற்றி.

நண்ணும் - கும்பிட எழுந்தருளும். நானிலம் - குறிஞ்சியாதி நால்வகைப்படும் நில முழுதும்.

எண்ணில் அடியார் - எண் - நில் - இறைவரது திருவுள்ளத்தில் இவர்களைக் காக்கவேண்டுமென்று நிற்கும் (அடியவர்கள்). முன்பாட்டில் கூறிய கருத்துக் (1522) காண்க. எண்ணிலாத - அளவிறந்த என்றலுமாம். இவர்கள் நாயன்மார்களுடனே வழிபட்டிருந்தவர்கள்,

**இருவர்களும்** - நாயன்மார்களாகிய இருபெருமக்களும். **இருந்தார்**-இருந்தாராகி என்று வினையெச்சப் பொருள்கொண்டு, **சோறிட்டார்** - வறுமை தோலைத்திட்டார் என்று மேல்வரும் பாட்டின் வினைமுற்றுக்களுடன் கூட்டிமுடிக்க. வினைமுற்றாக வைத்து உரைப்பாருமுண்டு, வினைமுற்றாகக் கொள்ளுமிடத்து, எண்ணில் அடியாருட னமுதுசெய்து அங்கு இருந்தவகை எவ்வாறு? என்னில் மேல்வரும் பாட்டிற் கூறுவார் என்பர்.

இருவர்களும்-என்ற எழுவாய் இந்த இரண்டு பாட்டுக்களையும் தொடர்புபடுத்துவதனால் வினைச்சொல்லின் பின்னரும், இறுதியிலும் வைத்தோதினார். 258

1524. (வி - ரை) இத்திருப்பாட்டு மாகேசுவரபூசைக் காலங்களில் ஆசீர்வாதத்தின் ஓதும் பெருஞ்சிறப்புடையது. இறைவன் தந்த பொருளை அடியார்க்காக்கி நல்வழிப்படுத்திப் பயனடையும்படி உபதேசிக்கும் பெருமையுடையது. பொருள் படைத்த அன்பர்கள் எல்லாம் இதனைப் பின்பற்றி ஒழுகிப் பயனடையக் கடவர்.

**அல்லார் கண்டத்து அண்டர் பிரான்** - அமரர்கள் விடத்தால் வீந்திடாது பெருங்கருணையினாற் காத்து அமுதூட்டியவர்; அதுபோல் அடியவர்களையும் பஞ்சத்தால் வீந்திடாது அமுது அளித்துக் காப்பவர் என்பது குறிப்பு.

**படிக்காசு பல்லாறு இயன்ற வளம் பெருக** - பலவாறும் வேண்டுமாறு வளங்களாகப் பெருகும்படி படிக்காசு உதவ. **பல்லாறும்** என முற்றும்மை விரிக்க. **வளம்** - உணவுப் பொருள்களும் பிற சாதனங்களும். **பெருக**-படிக்காசு ஒன்றே பல வளங்களும் ஆக்கும் கருவியாகப் பெருக்கெடுக்க.

**பரமன் அடியார் ஆனார்கள் எல்லாம்** - அடியார்களே ஆனவர்கள்; ஏனையோர் அல்லாதார்; ஆதலின் அவர்களே அருட்காசினை வியன்ற உணவு பெறுதற்குரியார் என்பது. "உறவாவார் உருத்திரபல் கணத்தினோர்கள்", "அருட்கண்ணா னோக்காதார் அல்லாதாரே" முதலிய திருவாக்குக்கள் காண்க. **ஆனார்கள்** என்ற குறிப்பினால் நீறும் மணியும் அணிந்து அந்நாள் வந்தவர்களும் என்பதும் தொனி. பண்டு திருநீறு பாங்கிற்பயிலாத அதிசூரன், அன்று தம்மை வஞ்சனையால் வெல்ல எண்ணித் திருநீறணிந்தமை கண்டும், ஏனாதிநாதர் "வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன்; வேறினி யென்?, அண்டர்பிரான் சீரடியா ராயினார்" என்று கொண்டு "அவர் கொள்கைக் குறிவழி நிற்பேன்" என்று போந்த சரிதமும் இங்கு நினைவு கூர்தற்பாலது. "பஞ்சத்துக்கு ஆண்டி" என்ற பழமொழியும் காண்க. இங்கு **அடியார்** என்றது அங்கு வந்தவர்களை.

**எல்லாம்** - எல்லாரும். முற்றும்மை தொக்கது.

**இரண்டு பொழுதும் எய்தி உண்க என** - என்று கூட்டுக.

**பறைநிகழ்த்தி - சொல்லாற் சாற்றி** - பறைநிகழ்த்தி அதனுடன் சொல்லால் சாற்றுவித்தும். நிகழ்த்தியும் சாற்றியும் என்று உம்மைத் தொகையாகக்கொண்டு பறைநிகழ்த்தல் பொது அறிவிப்பு - சொல்லாற் சாற்றுவித்தல் சிறப்பு அறிவிப்பு என்றலுமாம்.

**சோறிட்டார் - (அதனால்) வறுமை தோலைத்திட்டார்** - என்று காரண காரியமாகப் பொருள்படக் கூறியபடி. வழிபடுவார்க்குக் காலநிலைமையால் வரும் வாட்டம் தீர்த்தளிப்பதற்காகக் காசு பெற்றபடியால் அவ்வாறே சோறிட்டு அதனால் வறுமையால் வரும் வாட்டம் தொலைத்திட்டார் என்க.

**தோலைத்து - இட்டார்** - வறுமை தொலைத்துச் சிவானந்தம் பெற இட்டார் - வைத்தார் - என்ற குறிப்பும் காண்க. **சோறிட்டார்** - என்பதனை வினையெச்சமாகக் கொண்டுரைப்பதுமாம்.

**எய்த உண்க**—என்பதும் பாடம். 257

1525. ஈசர் மிழலை யிறையவர்பா லிமையப் பாவை திருமுலைப்பால்
தேச முய்ய வுண்டவர்தாந் திருமா மகனா ராதலினாற்
காசு வாசி யுடன்பெற்றார்; கைத்தோண் டாகு மடிமையினால்
வாசி யில்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர். ௨௬௦

(இ - ள்) இமையப்பாவை...ஆதலினால் - பார்வதி யம்மையாருடைய திருமுலைப்பாலினை உலக முய்யும் பொருட்டு உண்டருளியவர் திருமகனாராவர் ஆதலினால்; ஈசர் மிழலையிறையவர் பால் - ஈசராகிய மிழலைநாதரிடத்து; வாசியுடன் காசு பெற்றார் - வாசிபடச் செல்லும் காசு பெற்றார்; வாகீசர்-திருநாவுக்கரசர்; கைத் தொண்டாகும் அடிமையினால் - கைத் திருத்தொண்டு செய்யும் அடிமையாவர் ஆதலினால்; வாசி இல்லாக் காசுபடி பெற்றுவந்தார் - வாசிபடுதலில்லாத காசு படியாகப் பெற்றுவந்தனர்.

(வி - ரை) ஈசர் மிழலை இறையவர்பால் பெற்றார் என்றும், பெற்றுவந்தார் என்றும் கூட்டுக. ஈசர் - இறைவர் என இருதன்மையாற் கூறியதும் இக்கருத்து. தந்தவர் ஒருவர் - பெற்றவர் இருவர் என்பார் வினைமுற்றுக்கள் இரண்டு வைத்தும், ஈசர் இறைவர் என்றதனை ஒருகால் கூறிவைத்தும் ஓதினார்.

திருமாமகனார் ஆதலினால் - "யாவர்க்குந் தந்தைதா யெனுமவரிப் படியளித்தார், ஆவதனா லாளுடைய பிள்ளையாராய்" (திருஞான - புரா - 69) என்பதனால் பால் ஊட்டிய முறையினால் மகன்மை முறையினராவர் என்று குறிக்கத் திருமாமகனார் என்றார்.

வாசியுடன் காசு பெற்றார் - என்க. வாசி - வட்டம். வாசியுடன் காசு பெறுதலாவது வட்டங் கொடுத்து மாற்றிப் பண்டம் தேடும் நிலையிலுள்ள காசு பெறுதல்.

கைத் தொண்டாகும் அடிமை ஆதலினால் என்க. கைத்தொண்டு - உழவாரத் திருத்தொண்டு. ஆகும் அடிமை - செய்யும் ஏவலாளர்.

மகனாராதலின் காசுவாசிபடப் பெறுதலும், தொண்டாகும் அடிமையாதலின் வாசியில்லாக் காசு பெறுதலும் என்னையோ? எனின், இறைவர் நாயன்மார்களுக்கன்றி, வழிபடுமடியார்க்களிக்கக் காசுவைத்தாராயினும், அவ்வந் நாயன்மாரை வழிபடுகின்ற அடியவர் அவ்வத் தன்மையுட்பட்டோராவர்; அந்த அடியார்கட்காகக் கொடுக்கப்பெறினும் இந்நாயன்மார்களின் பொருட்டே கொடுக்கப்படுதலால் இவர்கள் திறத்துக்கேற்ற கொடையேயாம் எனப்படும்; வாகீசர் வாக்குத் தொண்டினும் கைத்திருத் தொண்டாகிய மெய்வருத்தும் அடிமைத் திறத்தின் முன்னின்ற நிலையினர்; பிள்ளையார் தாளம் பெற்றும், சிவிகை பெற்றும், பந்தர் பெற்றும் திருமேனி வருந்தப்பெறாது ஏற்ற தொண்டுசெய்த நிலையினர்; "மெய்வருத்தக் கூலிதரும்" என்றபடி கைத்தொண்டு செய்வார் பெறும் காசு வாசிபடுமாயின் வாசியினளவுக்குக் குறைவுபடுமாதலின் அவ்வளவுக்குக் குறைந்த கூலியாகி, ஏற்ற கூலிதராது வேலை வாங்கும் தலைவர் என்ற குறை இறைவர்பாற் சாரும்; பிள்ளையார், மெய்வருத்தக் கூலியாகாது மகனாராகுந்தன்மையாற் பெறும் காசாதலின் காசின் இயல்பின்படி வாசிபடுதலில் இழுக்கில்லை என்ற இவ்வளவும் கொள்க. "இதனால் திருமேனி வருந்தக் கைத்தொண்டு செய்தலும் திருமேனி வருந்தாது மகனாரென்னும் பெருந்தன்மையோடிருத்தலுமாகிய வேறுபாடு விளக்கிய வாசியோடும் வாசியின்றியும் மிழலைநாதர் கொடுத்தனர் என்று கொள்க" என்பது ஆறுமுகத் தம்பிரானாருரைக்குறிப்பு. அவ்வாறு போந்த வாசியினைப், பிள்ளையார், மேலும் "வாசிதீரவே" என்னும் ஓர் பதிகம் பாடிப் பணிசெய்து நீங்கப் பெற்றனர் என்ற வரலாறு ...

(திருஞான - புரா - 567 - 570). அஃது ஆண்டுக் கூறப்படும் தகுதிபற்றி இங்குக் குறிப்பிற் கூறியமைத்துப் போந்தனர்.

கைத் தொண்டாகும் படிமை - என்பது பாடமாயின், படிமை முறைமை என்றுரைத்துக் கொள்க.

பெற்றுவந்தார் - காலம் தவறு தீரும்வரை ஒன்றுபோலவே பெற்றனர் என்ற தொடர்ச்சி குறிக்கப் பெற்றனர் என்னாது பெற்று வந்தார் என்றார்.

பெற்று-உவந்தார் என்று பிரித்துரைத்தலுமாம். காசுபெற்ற கால முறைபற்றிப் பிள்ளையார் பெற்ற வகையினை முன்வைத்தார். பின் பெற்றமையால் வாகீசரைப் பாட்டின் கடையில்வைத்துக் கூறினார்.

உண்டவர்தம்—என்பது பாடம். 260

1526. ஆறு சடைமே லணிந்தருளு மண்ணல் வைத்த படிக்காசால்
ஈறி லாத பொருளுடைய விருவ ருடைய திருமடங்கள்
சோறு நாளுந் தொண்டர்மகிழ்ந் துண்ண வுண்ணத் தொலையாதே
ஏறு பெருமை புவிபோற்ற வின்புற் றிருக்கு மந்நாளில், உசுக

1527. காலந் தவறு தீர்ந்தெங்குங் கலிவான் பொழிந்து புனல்கலந்து
ஞால மெல்லாங் குளிர்தூங்கி யுணவு பெருகி நலஞ்சிறப்ப
மூல வன்ப ரிருவர்களு மொழிமா லைகளும் பலசாத்தி
நீல கண்ட ருறைபதிகள் பிறவும் வணங்க நினைவுற்றார். உசுஉ

1526. (இ - ள்) ஆறு......படிக்காசால் - கங்கையாற்றினைச் சடையின்மேல் அணிந்தருளும் பெருமையுடைய இறைவர் வைத்த படிக்காசின் உதவியினால்; ஈறு இலாத...திருமடங்கள் - முடிதல் இல்லாத பொருள் பெற்றுடையார்களாகிய இரு பெருமக்களுடைய திருமடங்களின்கண்ணும், தொண்டர் மகிழ்ந்து நாளும் சோறு உண்ண உண்ண சிவனடியார்கள் மகிழ்ச்சியுடன் நாள்தோறும் வந்து சோறு உண்ண உண்ணவும், தொலையாதே ஏறு பெருமை - குறைவு படாமல் ஓங்கி வளரும் பெருமையினை; புவிபோற்ற-உலகம் ஏத்த; இன்புற்றிருக்கும் அந்நாளில் - இன்பமடைந்திருந்த அந்நாள்களில், உசுக

1527. (இ - ள்) காலந்தவறு...நலஞ்சிறப்ப - காலநிலைமையாகிய வறுமை நீங்கி, முழக்கமுடைய மேகங்கள் மழைபெய்ய அந்நீர் பெருகிப் பரந்து உலகமெங்கும் குளிர்ச்சி மிகுந்து உணவுப் பொருள்கள் பெருக விளைந்து நன்மை நிலை சிறந்தோங்கவே; மூல அன்பர்...பல சாத்தி - உலகம் நலமடைதற்கு மூலமாக நின்ற அன்பர்களாகிய இருபெருமக்களும் மொழிமாலைகளாகிய தேவாரப் பதிகங்கள் பலவற்றையும் சாத்தி; நீலகண்டர்...நினைவுற்றார் - திருநீலகண்டராகிய இறைவர் எழுந்தருளிய பிற தலங்களையும் சென்று வணங்கவேண்டுமென்று நினைந்தார்கள். உசுஉ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1526. (வி - ரை) ஆறுசடைமேல் அணிந்தருளும்-பகீரதனுக்காகக் கங்கையைச் சடையுள் வைத்து உலக மழிந்துபடாமற் காத்தும், பகீரதனது இறந்த மூதாதைகளை உயிர்ப்பித்து நல்வழிப்படுத்தியும் அருளியபடி உலகம் வறுமையால் வருந்தாது காத்தனர் என்பது குறிப்பு.

அண்ணல் வைத்த படிக்காசால் - இறைவர் நாயன்மார்களுக்குப் படிக்காசு வைத்தமை அவர்களது திருவாக்காகிய தேவார அகச்சான்றுகளாலும் பிறதிருவாக்குக்

களாலும்அறியப்படும். "வம்மின்னடியீர்நாண்மலரிட்டுத்தொழு துய்ய, வும்மன்பினொ னெம்மன்பு செய்து" (நட்டபாடை - மிழலை-3), "கலைநிலவிய புலவர்களிடர் களை தருகொடை பயில்பவர்மிகு" (திருவிராகம்-ஷெ 3), "வாசி தீரவே காசு நல்குவீர்", "கறைகொள் காசினை, முறைமை நல்குமே" (இருக்-குறிஞ்சி - ஷெ 1-2), "கரக்கை தவிர்மினே" (ஷெ - 8), "அடியவர் குழுமிட வவனியில் நிகழ்பவர்" (வியாழக் குறிஞ்சி - ஷெ-4), "மற்றுமுள மன்னுயிர்களுக், கெண்ணிழிவி லின்பநிகழ் வெய்த வெழிலார்" (திருவிராகம் - ஷெ - 3), "நண்ணிவரு நாவலர்க ளூடொறும் வளர்க்க நிகழ்கின்ற புகழ்சேர்" (ஷெ - 6) முதலியனவாய் வரும் இத்தலத்துப், பிள்ளையார் தேவாரங்களும்; "என்பொனே...நன்பொனே...செம்பொனே திருவீழி மிழலை யுள்" (குறுந்), "பாடிப்பெற்ற பரிசில் பழங்காசு, வாட வாட்டந் தவிர்ப்பா ரவரைப் போல், தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயெனு, வோடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ" (குறுந்), "பந்தமும் வீடும் பரப்புகின்றீர்" (2), "விலக்கின்றி நல்கும் மிழலை" (3) (திருவிருத்தம்) என்பன முதலிய நாயனார் தேவாரங்களும்; "பரிசினுலடி போற்று பத்தர்கள் பாடியாடப் பரிந்து நல்கினீர்" (சீகாமரம் - மிழலை - 5), "மிழலை, யிருந்துநீர் தமிழோடிசை கேட்கு மிச்சையாற் காசு நித்த னல்கினீர்" (ஷெ - 8) என்பனவாதி நம்பிகள்தேவாரங்களும்; "பாடலங் காரப் பரிசில்கா சருளிப் பழுத்தசெந் தமிழ்மலர் சூடி, நீடலங் காரத் தெம்பெரு மக்க ளெஞ்சினு ணிறைந்து நின்றுயை" (சேந்தனார் - மிழலை - 12) என்ற திருவிசைப்பா முதலியனவும் காண்க.

**ஈறிலாத பொருள்** - முடிவில்லாத செல்வம் என்க. படிக்காசால் ஈறிலாத பொருள் என்ற தொடர்புக் குறிப்பினால் உலவாச் செல்வம் - திருவருள் பெறுநிலை - என்ற பொருளும்பட நின்றது.

**திருமடங்கள்** - இப்பெரியார்கள் தங்குமிடங்களெவையும் திருமட மெனப்படும். இங்கு அவை இப்போது அவ்வவர் பேரால் தனிக்கோயில்களாக அமைக்கப்பட்டு வழிபடப்பெறுகின்றன. ஏழனுருபும் முற்றும்மையும் தொக்கன.

**தொலையாதே - ஏறும்** - குறைவுபடாமல் வளரும் என்க.

**உண்ண உண்ண** - அடுக்கு மிகுதியுணர்த்திற்று. தொண்டர் உண்ண - நாளும் உண்ண - மகிழ்ந்து உண்ண - உண்ண உண்ண - என்று கூட்டி அளவிறந்த தொண் டர் - எண்ணிறந்த நாட்கள் - மிகமகிழ்ச்சியுடன் - வயிறு நிரம்ப உண்ணவும் என்க.

**ஏறு பெருமை**-எடுக்க எடுக்கக் குறையும் இயல்புடைய பொருள், அவ்வாறின்றி, மிகுவதாகிய பெருமை. காசு ஒன்றுயிருந்தும் அதனாற் கொள்ளப்பட்டதாகிய சோறு உண்ண உண்ணக் குறையாது வளர்ந்தது; இது திருவருட் சிறப்பாலாகியது.

**புவிபோற்ற இன்புற்று இருக்கும்** - "தாமின் புறுவ துலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந் தார்" (குறள்).

**அந்நாளில் - நலஞ்சிறப்ப - சாத்தி - நினைவுற்றார்** - என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

261

1527. (வி - ரை) **தவறு** - வறுமை - பஞ்சம் - வற்கடம். பருவத்துப் பெய்யாது மழை தவறுதலினால் உளதாகும் நிலையைத் தவறு என்றார்; ஆகுபெயர்.

**கலி வான்** - முழக்கமுடைய மழை. **வான்** - மழை. வானத்திற் சஞ்சரிக்கும் மேகத்தை வான் என்றது ஆகுபெயர்.

**புனல் கலந்து** - நீர் கலத்தலால். காரணப் பொருளில் வந்தவினையெச்சம். கலந்து - குளிர் தூங்கி - உணவு பெருகி என்க.

**நலம்** - பசிப்பிணியின்றி யின்பமுறுதல்.

துளிர்தூங்கி - தூங்கி என்பது நிறைந்து என்ற பொருளில் வந்தது.

மூல அன்பர் - நலஞ்சிறத்தலுக்குத் துணைக்காரணர்களான அன்பர்கள். அன்பினை எடுத்துக் காட்டுதற்கு - விளைத்தலுக்கு - மூலமாகியவர் என்றலுமாம்.

மொழிமாலைகளும் பலசாத்தி - காலம் தவறு தீர்ந்து, மழை பெய்து, அதனால் உணவுப்பொருள்கள் விளைந்து, உலகம் நலமடையும்வரை இத்தலத்துத் தங்கி அண்ணல் அளித்த படிக்காசினால் அடியார் பசி தீர்த்துவந்தனராதலின், குறைந்தது ஓராண்டளவு இங்குத் தங்கியிருத்தல்கூடுமென்பது கருதப்படும். அந்நெடுநாள்களில் இவ்விரு பெருமக்களும் நாளும் காலங்களில் இறைவரைச் சென்று வழிபடும்போ தெல்லாம் தேவாரங்களை அருளியிருப்பர்; ஆதலின் எண்ணில்லாத பதிகங்கள் இங்கு அவர்கள் அருளினார் என்பார் மொழி மாலைகளும் பலசாத்தி என்றார். அத்தகைய பலவற்றுள் ஆளுடையபிள்ளையார் அருளிய பதிகங்கள் பதினைந்தும், நாயனாரருளியவை எட்டும் தான் இப்போது கிடைத்துள்ளன! பிள்ளையாரது பதிகங்கள் அவர்தம் புராணத்துட் குறிக்கப்படும். மாலைகள்-பல-இரண்டு பன்மைச் சொற்கள் இருவரைக் குறித்தன.

பதிகள் பிறவும் வணங்க நினைவுற்றார் - தலயாத்திரையின் பெருமையினையும் பயனையும் உலகுக் கறிவுறுத்தற்கும், திருவருட்குறிப்பின்வழி மேற் சரித விளைவுகள் நிகழ்வதற்கும் காரணமாக இவ்வாறு நினைந்தனர்.

களி தூங்கி—என்பதும் பாடம். 262

மொழி மாலைகளும் பல சாத்தி :—

II திருவீழிமிழலை

*திருச்சிற்றம்பலம்* திருநேரிசை

பூதத்தின் படையர் பாம்பின் பூணினர் பூண நூலர்
சீதத்திற் பொலிந்த திங்கட் கொழுந்தர்நஞ் சமுந்து கண்டர்
கீதத்திற் பொலிந்த வோசைக் கேள்வியர் வேள்வி யாளர்
வேதத்தின் பொருளர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 1

எண்ணகத் தில்லை யல்ல ருளரல்ல ரிமவான் பெற்ற
பெண்ணகத் தரையர் காற்றிற் பெருவலி யிருவ ராகி
மண்ணகத் தைவர் நீரி னல்வர்தீ யதனின் மூவர்
விண்ணகத் தொருவர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 2

நீற்றினை நிறையப் பூசி நித்தலா யிரம்பூக் கொண்டு
ஏற்றுழி யொருநா ளொன்று குறையக்கண் ணிறைய விட்ட
ஆற்றலுக் காழி நல்கி யவன்கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 3

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—வீழிமிழலையுள் விகிர்தனாரே வேதத்தின் பொருளர்; அடியார்க்கென்றும் அமுதர்; பொய்யர்க்கு என்றும் விருந்தினர்; விறகிடைத்தீயர்; எந்தையு மெந்தை தந்தை தந்தையுமாவர்; வெந்தழலுருவர்; வித்தினின் முளையர் என்றிவ்வாறுள்ள பல தன்மைகளாலும் மறியப்படுபவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஓசைக் கேள்வியர் - ஓசையைக் கேட்டு அருள்பவர். வேதத்தின் பொருளர் - வேதத்திற் கூறப்படும் பரம்பொருளா யுள்ளவர்.—(2) காலையில் - காலை எழும் ஞாயிறுபோல. காலையில்-கங்குலில்-இரண்டினும் இல்-

உவம உருபுகள். காலை - காலையில் முளைக்கும் செஞ்ஞாயிறு ; ஆகுபெயர். கங்குலில் - என்றதும் அவ்வாறே. கங்குல் - நடுயாமம் - இருள் குறித்து. மாலையில் - இல் - ஏழனுருபு.—(3) நெருநல்-நேற்றையநாள்; இறந்தகாலம். இன்று-நிகழ்காலம். நாளை-வருநாளர்; எதிர்காலம். மூன்றுகாலமுமாவர் என்க. இருவர்-அரிஅயன். பொருந்துதல்-உள்ளிருந்து இயக்கி அவ்வவர் தொழில்களைச் செய்வித்தல் ; விருந்தினர்-அறியப்படாதவர். புதியர்.—(4) நிலையிலா ஊர் மூன்று-பறந்துசெல்லும் திரிபுரம். அழியும் என்றலுமாம். விலையிலா-மதிப்பற்ற.—(5) மொட்டின் மலர்வழி வாசத் தேனர் - முகையில் முன்னர் மறைந்து நின்று பின்னர் மலரும்போது வெளிப்படும் மணமும் தேனும்போலப் பக்குவகாலத்தில் உயிர்களால் அறிந்து பலவாற்றாலும் அனுபவிக்கப்படுபவர். கறவிடைப் பாலின் நெய்யர் கரும்பினிற் கட்டியாளர் - பாலின் நெய்யும் கரும்பிற் சுவையும் போல்பவர். "கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போல" (திருவா). விறகிடைத் தீயர் - "விறகிற் றீயினன்" (தேவா). இவை இறைவன் உயிரோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கு நிலையும், சிவசாதனத்தால் வெளிப்படு நிலையும் குறித்தன.—(6) எண் அகத்து இல்லையல்லர்-உளரல்லர்-எண்ணுதற்குப் பொருளாக அடங்கும் தன்மையர் அல்லர் எனவும் கூடாதவர் ; எண்ணுள் அடங்குவாரென்று கூறவும் இயலாதவர் ; காற்றில் இருவர் ; மண் அகத்து ஐவர்; நீரில் நால்வர்; தீயில் மூவர்; விண் அகத்து ஒருவர் - நிலம் முதலிய பூதங்களில் முறையே ஐந்து முதலாகிய குணங்களாய் நின்றவர். "பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி, நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி, தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி, வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி, வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி" (திருவாசகம் - போற்றித் திருவகவல் 137 - 141), "மண்ணதனி லைந்தைமா நீரி னான்கை வயங்கெரியின் மூன்றைமா ருதத்தி ரண்டை, விண்ணதனி லொன்றை" (தாண்ட-கற்குடி 3).—(7) எந்தையு மெந்தை தந்தை தந்தையு மாய வீசர் - "எம்பிரா னெந்தை தந்தை தந்தை யெங் கூட்ட மெல்லாந், தம்பிரா னீரே யென்று வழிவழி சார்ந்து வாழு, மிம்பரின் மிக்க வாழ்க்கை" (ஏயர் - கோ - புரா 392). ஆன்நெய்யால் வேட்கும் வேம் தழல் உருவர் - பசுநெய்யினால் ஆகுதி செய்யும் சிவயாகத்தீயின் உருவாயிருந்து அருச்சனை யேற்று அருள்பவர். வேம்-விருப்பந்தரும்.—(8) இத்தலத்தில் திருமால் சக்கரம் பெற வேண்டிச் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து கண்ணைத்தோண்டி அருச்சித்த வரலாறு. ஆற்றல் - செய்தற்கரிய வல்லமை குறித்தது. இழிச்சும் கோயில் - விண்ணுலகினின்றும் கொணர்ந்த விமானம்.—(9) பறைத்தல் - போக்குதல். வித்தினின் முளையர் - உயிர்க்குயிராயவர்.

III திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

வான்சொட்டச் சொட்டநின் றட்டும் வளர்மதி யோடயலே
தேன்சொட்டச் சொட்டநின் றட்டுந் திருக்கொன்றை சென்னிவைத்தீர் !
மான்பெட்டை நோக்கி மணாளீர் ! மணிநீர் மிழலையுளீர் !,
நான்சட்ட நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே ! 1

கண்டியிற் பட்ட கழுத்துடை யீர் !கரி காட்டிலிட்ட
பண்டியிற் பட்ட பரிகலத் தீர் !பதி வீழிகொண்டீர் !
உண்டியிற் பட்டினி நோயி லுறக்கத்தி லும்மையைவர்
கொண்டியிற் பட்டு மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. 6

*கறுக்கொண் டரக்கன் கயிலையைப் பற்றிய கையுமெய்யும்*
*நெறுக்கென் றிறச்செற்ற சேவடி யாற்கூற்றை நீறுசெய்தீர்!*
*வெறிக்கொன் றைமாலை முடியீர்! விரிநீர் மிழலையுளீர்!*
*இறக்கின்று நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.* 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*மிழலையுளீராகிய இறைவரே! நான் நும்மை எக்காரணங் கொண்டேனும் மறக்கினும் என்னைக் குறிக்கொண் டருளுதல்வேண்டும் என்று பிரார்த்தித்தது.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சோர்ட்டுதல் - *மிகுதியும் துளித்தல்.* சட்ட - *முழுதும், "சட்ட வினியுளது சத்தேகாண்" (சிவஞா-போ-9), "சட்ட நேர்பட" (திருவா).*—(2) பந்தமும் வீடும் பரப்புகின்றீர் - *"பந்தம் வீடு தரும் பரமன்" (300) உரை பார்க்க.* பரப்புகின்றீர் - *மறைத்தல் என்ற அருட்டொழிலால் உலகுக்குக் கன்மபலனை ஊட்டுகின்ற வகையால்* பந்தம் *என்னும் வறுமைக் காலத்தை ஆக்கியும், அதனைப் போக்குகின்ற வகையால்* வீடு *என்னும் அருட்டொழிலால் படிக்காசு வைத்தும் தொழில் செய்கின்றீர் என்று சரிதக் குறிப்புப்பட உரைத்தலுமாம்.* பசு - *இடபத்தைக் குறித்தது. உயிர்கள் என்றலுமாம்.* வேந்தழல் ஓம்பும் - *மறையோர் மிகுந்த பதியாதலின் வேள்வியை விதந்து கூறினார். "அந்தணாளர்...தழலுருவர்" (நேரிசை - 7).* பத்திமையால் மேற்பட்ட அந்தணர் வீழி (5) *என்பதுமிது.* தென் திசைக்கே உந்திடும்போது - *இயமன் தமர் கொண்டுபோகும்போது. "உயிர்கொண்டு போம்பொழுது" (அங்கமாலை).* உந்திடும் - *இயமன்றூதரின் கொடுமை.* நமன்தமர் கோட்பட்டு (5); கூற்றம் கண்டு (7); நமன்றமர் கோள்ளையிற்பட்டு (9) *என்பவையும் இக்கருத்தின.*—(3) நீர்...அனல் - *ஐம்பெரும் பூதங்கள்.* கலைப்பொருள் - *கலைஞானங்கட்கெல்லாம் பொருளாவார்.* விலக்கின்றி நல்கும் - *படிக்காசு வைத்த சரிதக் குறிப்பு. எல்லாவுயிரையும் ஒப்பக் காக்கும் என்றலுமாம்.* மெய்யில்...துலைக்கின்ற - *உடலின் அங்கங்கள் பலங்கெட்டொழிகின்ற.*—(4) தீத்தொழிலான் - *தக்கன்.* பேய்த் தொழிலாட்டி - *பத்திரகாளி. "வேலார்கை வீரியைமுன் படைத்தார் போலும்" (தாண்).* வேய்த் தொழிலாளர் - *வேய்ங்குழ லூதுபவர்.* விக்கி-*மரண அவத்தை.* அஞ் செழுத்தும் ஓத்து-*திருவைந்தெழுத்தையும் ஓதுதல். மரணகாலத்துக் காக்கவல்ல-விடாமல் ஓதத்தக்க*-*அதனையும் என உம்மை உயர்வுசிறப்பு.*—(5) அந்தணர் - *வீழியந்தணரையும் என மாற்றுக.* வேறு-*தனியாக.* பத்திமையால் மேற்பட்ட அந்தணர் - *வீழியின் அந்தணர் சிறப்பு. "மறையோர் திருப்பதி" (1519).* நாட்பட்டு வந்து - *சைவத்திறத்தினின்றும் பலநாள் வழுவிப் பின்வந்து.* பிறந்தேன்-*சிவனைப் பேசியதனுற் பிறந்தவனுயினேன்.* கோட்பட்டு - *கொள்ளப்பட்டு.* கோள் - *கொள்ளல். முதனிலைத் தொழிற் பெயர். பகுதி நீண்டது.*—(6) கண்டி - *உருத்திராக்க வடம். இறைவர் உருத்திராக்கம் பூண்ட கோலத்தைக் கூறும் அரிய சில இடங்களுள் இஃது ஒன்று.* பண்டி - *உடல். "புழுப்பெய்த பண்டி தன்னை" (தேவா).* பண்டியிற் பட்ட பரிகலம் - *உடலின்றும் வெந்து எஞ்சிய மண்டையோடாகிய உண்கலம்.* உண்டி - பட்டினி - நோய் - உறக்கம் - ஐவர்கோண்டி - *இவை இறைவனை மறக்கச்செய்யும் உபாதிகள்.* கோண்டி-*கொடுஞ்செயல்; கொள்ளை. நல்லுணர்வைக் கொள்ளை கொள்ளுதலால்* ஐவர் கோண்டி *என்றார்.* ஐவர் *ஐம்புலன்கள்.*—(7) தோற்றங்கண்டான் - *பிரமன்.* சீற்றம் ...கூற்றம்கண்டு - *காலவேதனையுள் அகப்பட்டு.*—(8) பிறவிச் சுழி - *பிறவியில் வரும் பற்பல சுழல்களுள்.*—(9) நமன்தமர்தம் கோள்ளை - *இயமன் தூதராற் கொள்ளப்படு*

தல். கொள்ளை கொள்-பகுதி. ஐ-செயப்படுபொருள் விகுதி-வலிந்துகொள்ளப்படுதல் குறிக்க வழங்குவதாயிற்று.—(10) கறு - சினம். நெறுக்கு-ஒலிக்குறிப்பு. இறக்கின்று-சாகும் நாள். “அஞ்செழுத்தும் சாமன் றுரைக்க” (தேவா-நாகை-விருத்).

குறிப்பு :—உயிர்கள் சிவனை எப்போதும் மறவாமலிருத்தல் வேண்டும். மறக்கச் செய்வன நோய் - பசிப்பிணி - உண்டி - உறக்கம் - பிறவிச்சூழல் - மரணகால வேதனை முதலியன. அக்காலத்தும் சிவனை மறத்தலாகாது. “நான் அவற்றின் வசமாகி மறக்கநேரினும் நீர் மறவாது என்னைக் குறிக்கொண்டருள வேண்டும்” என்று இறைவனை எப்போதும் பிரார்த்தித்துக்கொள்ளுதல் வேண்டும் என்பது இப்பதிகத்தால் உலகர்க்கு வற்புறுத்தி உபதேசிக்கப்பட்டது.

IV திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

கரைந்து கைதொழு வாரையுங் காதலன் ; வரைந்து வைதெழு வாரையும் வாடலன்;
நிரந்த பாரிடத் தோடவர் நித்தலும், விரைந்து போவது வீழி மிழலைக்கே. 1

குழலை யாழ்மொழி யாரிசை வேட்கையால், உழலை யாக்கையை யூணு முணர்விலீர் !
தழலை நீர்மடிக் கொள்ளன்மின் சாற்றினேம், மிழலை யானடி சாரவிண் ணுள்வரே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—வீழிமிழலை இறைவர் பணிந்தார்க்கும் பணியார்க்கும் எல்லா உயிர்களுக்கும் ஒப்ப அருள்பவர் ; அவர் வினைகெடுப்பர் ; தம் பிறப்பொடு சாதலை விரியினரும் வானவரும் அந்தணரும் திருவேடத்தார்களும் வினையிலாரும் அவரைத் தொழுவர் ; அவரைச் சார்பவர் விண்ணுள்வர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கரைந்து - மனம் கரைந்து உருகி ; கரைதல் - சொல்லுதல் என்று கொண்டு, துதித்து என்றலுமாம். வரைந்து - விலக்கி; வைதெழுவார் - உலகாயதர் முதலிய புறச்சமயிகள். பாரிடம் - பூதகணம்.—(4) குருக்கேத்திரம் - குருக்ஷேத்திரம். பாடத்தார் - கூட்டத்தாராகிய. பாடத்தாராகிய வேடத்தார். பழிப்பார் பழிப்பல்லதோர் - பழிப்பவர்களாலும் பழிக்கப்படாததாகிய. மூன்றனுருபும் சிறப்பும்மையும் தொக்கன. வேடம் - சிவனடியார் திருவேடம். —(5) விடுத்து - வினைகளின் நீங்கி.—(6) குழலை யாழ் மொழியார் - குழலையும் யாழினையும் ஒத்த மொழியுடைய பெண்கள். ஐகாரம் சாரியை. உழலையாக்கையை - உழலும் உடலை. ஊணும் - பேணுகின்ற என்ற பொருளில் வந்தது. “தழலை மடிக்கொள்ளன்மின்” பழமொழி. தீயை மடியில் வைத்தால் எரித்துவிடும் என்றறியாது வைக்கும் அறிவின்மைபோல, உடலை ஓம்பி நாட்கழித்து மடிதல்.—(7) ஆடிய - மஞ்சனம் ஆடியதுபோன்று முழுதும் விரவிய. இப்பாட்டுச் சிவனது வண்ணமும் தன்மையும் கோலமும் அழகுபடக்கூறிற்று.—(8) தம் பிறப்போடு சாதலை விரியினர் - இறைவனை அடைந்து தமது பிறப்பையும் சாதலையும் நீக்கிக்கொண்டவர்.—(9) காண்டு - காணத்தக்க.—(10) பாலையாழ் - யாழ்வகை. செவ்வழி - பண். மாலை - மாலை சூடிய, மாலைக்காலம் என்றலுமாம். மாலைக்காலம் தேவர் பூசைக்காலம் என்ப. அந்தணர் ஆகுதி - வீழிமிழலை பெரும் மறையோர் வாழ்பதி.—(11) வாழ்கென விட்டதே - வாழ்க என்று போற்றியவுடன் விரல் ஊன்றுதலை விட்டனர்.

V திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

என்பொ னேயிமை யோர்தொழு பைங்கழல்,நன்பொ னேநலந் தீங்கறி வொன்றிலேன்,
செம்பொ னேதிரு வீழி மிழலையுள், அன்ப னேயடி யேனைக் குறிக்கொளே. 1

ஞால மேவிசும் பேநலந் தீமையே, கால மேகநத் தேகநத் தாற்றேழும்
சீல மேதிரு வீழி மிழலையுட், கோல மேயடி யேனைக் குறிக்கொளே. 3

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—வீழிமிழலையுள் எழுந்தருளிய என்பொனே! அன்பனே! அண்ணலே! அத்தனே! குருவனே! கூத்தனே! ஆதியே! குழகனே! அருத்தனே! அடியேனைக் குறிக்கொண்டருளுக. "குறிக்கொண்மினே" என்ற திருவிருத்தமும் இக்கருத்தது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) பொன் என்றது சொற்பொருட்பின் வருநிலை. பொற்காசு படிவைத்து உலகங்காத்த சரிதக்குறிப்புப்பட நின்றது.—(2) களிகூரக் கண்ணினாற்கண்டு, களிகூர கையாற் றொழுது, களிகூரத் தியானித்தல் - எண்ணுதல் - வேண்டும் என்பது.—(3) ஞாலமே விசும்பே - நிலம் முதல் வான் ஈறாக நின்ற ஐம்பெரும் பூதமுநீயே. "எண்ணகத் தில்லையல்லர்" (நேரிசை - 6). நலம் தீமையே - காலமே - நன்மையும் தீமையுமாய் அவ்வப்பயன் தந்து நிற்கும் கால தத்துவமுமாகி. "பந்தமும் வீடும் பரப்புகின்றீர்" (திருவிருத் - 2) என்றவிடத் துரைத்தவை பார்க்க. "கோல மேயெனை யாட்கொண்ட கூத்தனே, ஞால மேவிசும் பேயிவை வந்துபோம், காலமே" (திருவா - சத-43).—(4) முகிழும்முளை-முகிழ்த்தல்-முளைத்தல் என்ற பொருள் தந்துநின்றது. விதையினுள் முளை போன்றவர். உயிர்க் குயிராய்த் தோன்றுபவர். அந்தன் - அப்பன்; ஐயன்.—(5) கநவன் - "கருவினாலன் றியே கருவெலா மாயவன்" (தேவா).—(6) பொழில் - உலகம். ஆத்தன் - உள்ளவா றுணர்ந்துரைப்போன். வடமொழியாளர் ஆப்தன் என்ப. தலை சேர்த்தன் - தலையைப் பலிப் பாத்திரமாகக் கையில் சேர்த்தவன்.—(8) பாலன் - மார்க்கண்டர். கழகின் மேல் வைத்த - படைசெலுத்துமிடமாகக் குறித்த. அழகன் - வீழிமிழலையுள் மணக் கோலத்துடன் நின்ற பெருமான் என்பது குறிப்பு.—(10) அநத்தன் - பொருளான வன். **குறிப்பு** :—இப்பதிகம் இறைவரிடம் செய்துகொள்ளும் பிரார்த்தனையை அடியார்க்கு உபதேசித்தது.

VI   திருச்சிற்றம்பலம்          திருத்தாண்டகம்

கயிலாய மலையுள்ளார் காரோ ணத்தார்
 கந்தமா தனத்துளார் காளத் தியார்
மயிலாடு துறையுளார் மாகா ளத்தார்
 வக்கரையார் சக்கரமாற் கீந்தார் வாய்ந்த
அயில்வாய சூலமுங் காபா லமும்
 மமருந் திருக்கரத்தா ரானே றேறி
வெயிலாய சோதி விளங்கு நீற்றார்
 வீழி மிழலையே மேவி னாரே.

அஞ்சைக் களத்துள்ளா ரையாற் றுள்ளா
 ராரூரார் பேரூ ரழுந்தூ ருள்ளார்
தஞ்சைத் தளிக்குளத்தார் தக்க ளூரார்
 சாந்தை யயவந்தித் தங்கி னூர்தாம்

நஞ்சைத் தமக்கமுதா வுண்ட நம்பர்
நாகேச் சரத்துள்ளார் நாரை யூரார்
வெஞ்சோற் சமண்சிறையி லென்னை மீட்டார்
வீழி மிழலையே மேவி னாரே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கயிலாயமலை, புலியூர்ச் சிற்றம்பலம், காளத்தி, அண்ணாமலை, கச்சிமேற்றளி, ஆநூர், பேநூர் முதலாகிய தலங்களில் வெளிப்பட்டு எழுந்தருளி யிருக்கும் இறைவர், மாதுயரந் தீர்த்தென்னை யுய்யக்கொண்டு வெஞ்சொற் சமண் சிறையினின்றும் என்னை மீட்டார்; அவர் வீழிமிழலையே மேவினார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கந்தமாதனம்-ஒருமலை. நெய்தலும் குறிஞ்சியும் மயங்கிய திணைப்பகுதி. தேவார வைப்புத்தலங்களுள் ஒன்று. வீரவாகுதேவர் சூர பதுமன்பால் தூது சென்றபோது, கந்தமாதன மலையில் ஒரு பேருருவம் எடுத்து நின்று, சூரனகரையும் பிறவற்றையும் நோக்கினார் என்றும், அவ்வாறு அவர் நிற்றலை ஆற்றாது அம்மலை கீழ் ஆழ்ந்து பின் அவர் எழுக என்று வழங்கிய அருளால் மீண்டும் முன் போல் மேல் எழுந்ததென்றும் வரும் வரலாறுகள் கந்தபுராணத்துட் (வீரவாகு கந்தமா தனஞ் செல்படலம் - கடல்பாய் படலம்) காண்க. இது பாண்டி நாட்டில் உள்ளதாகக் கணிக்கப்படும். திருச்செந்தூர் - தனுக்கோடி - கடற்கரைகளில் நீர்மூழ்குவோர் இம்மலையின் சார்புபற்றிச் சங்கற்பம் செய்து மூழ்கும் வழக்குக் காண்க.—(2) கேதீ சரம் - ஈழநாட்டுப் பாடல்பெற்ற தலம். மாதுயரந் தீர்த்தென்னை யுய்யக் கொண்டார்- நாயனாரது சரித அகச்சான்று.—(3) அளப்பூர்-தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று. சோழநாட்டிலுள்ளது? "ஆரூ ரத்தா வையாற் றமுதே யளப்பூ ரம்மானே" (நம்பி - ஊர்த்தொகை). அந்தணர்கள் மாடக்கோயில் உண்ணாழிகையார்-வைப்புத்தலங்களுள் ஒன்றும் மறையோர் பதியாயும் மாடக்கோயிலாகவும் உள்ளதுபோலும்? பெண்ணா கடம் - தலம்; தூங்கானைமாடம் - அதன் கோயில். பேராவூர் - வைப்புத் தலங்களுள் ஒன்று. "பேரூர் பிரமபுரம் பேரா வூரும்" (க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்ட கம்-1).—(4) பண்காட்டும் - இசையினால் பண்களைவழிபாடிக் காட்டுதல்போல் ஊதும். வெண்கோட்டுக் கருங்களிறு - முரண்அணி.—(5) புலியூர்ச்சிற்றம்பலம்-தில்லையம்ப லம்-ஸ்ரீநடராசர்.—(6) பெரும்புலியூர்-திருவையாற்றுக்கு வடமேற்கில் $1\frac{1}{2}$ நாழிகை யளவில் உள்ளது. வியாக்கிரபாத முனிவர் பூசித்த ஐந்து தலங்களுள் ஒன்று. விரும்பினார் - சுவாமி பெயர். "பிரியாரே" (ஆளுடையபிள்ளையார் தேவா). பெரும் பற்றப்புலியூர் மூலட்டானத்தார் - தில்லைத் திருமூலநாதர்.—(7) மாகாளம் - அம்பர் மாகாளம். மாகாளேச்சரம் என்றொரு வைப்புத்தலமு முண்டு என்ப. காபாலி-மயிலைக் காபாலீச்சுவரர்.—(8) பேநூர் - மேலைச்சிதம்பரம் எனப்பெறும். மேல்கொங்குநாட்டில் உள்ளது. "மீகொங்கி லணிகாஞ்சி வாய்ப், பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்ப லத்தே பெற்றா மன்றே" (நம்பி - கோயில் - 10). [மீ - மேற்கு; காஞ்சி-நதி.] கச்சியப்ப முனிவர் இத் தலபுராணம் பாடியுள்ளார். தஞ்சைத் தளிக்குளம் - தஞ்சைப் பெரிய கோயிலின் வடபுறம் சிவகங்கை என்று வழங்கும் தீர்த்தக் குளத்தின் நடுவுள் உள்ள பழங்கோயில். இப்போது சிலமாயுள்ளது. வைப்புத்தலங்களுள் ஒன்று. பெரிய கோயி லுக்கு முற்பட்டது. தக்களூர் - வைப்புத்தலங்களுள் ஒன்று. சாந்தை - சாத்தமங்கை என்பது சாந்தை என மருவி வழங்குவது. அயவந்தி - அத்தலக்கோயில். வெஞ்சோற் சமண் சிறையில் என்னை மீட்டார் - நாயனார் சரித அகச்சான்று.—(9) கோண்டல் - வைப்புத்தலங்களுள் ஒன்று. கோவலூர் வீரட்டம் - தலப் பெயரும் கோயிற் பெயரும்

பெருங்கோயில் - மாடக்கோயில். தண்டலை-தண்டலை நீணெறி. தண்டலைச்சேரி என வழங்கும். மாடக்கோயில்; அரிவாட்டாய நாயனார் வழிபட்ட தலம். வண்டலோடு மணற்கொணரும்-நீர்ச்சிறப்பு. வைகலின் மேல்மாடம் - வைகல் - ஒரு தலம். அதனுள் மேல்புறம் உள்ளது மாடக்கோயில்.—(10) அரிச்சந்திரம்-சோழநாட்டில் உள்ள வைப்புத்தலங்களுள் ஒன்று. திருநாட்டியத்தான்குடிக்கு வடமேற்கில் ஒரு நாழிகையளவில் கற்சாலை வழியில் அரிச்சந்திரா நதியின் தென்கரையில் உள்ளது. பெண்ணையினின்றும் பிரிந்து வேதாரணியத் துறையிற் கடலொடு கலக்கும் ஒரு கிளைநதி அரிச்சந்திரா நதி என்று வழங்கப்படும். அம்பர் - திருஇன்னம்பர். ஏமகூடம் - திருஏமகூடமலை. முருகப்பெருமான் சூரனோடு போர்புரிவது கருதித் திருச்செந்திநின்றும் போந்து இலங்கையை நீங்கி வீரமகேந்திரபுரம் என்னும் சூரனூர்க்கு முன்போந்து அங்குப் பாடிவீடு ஒன்று உளதாக்கிப் போர்முகத்தராய் எழுந்தருளியிருந்த இடம் ஏமகூடம் எனப் பெயர் பெற்றதென்பது கந்தபுராணம். "ஓர் கோநக ரியற்றியே, நாடு மேம கூடமென்று நாம மொன்று நாட்டினான்" (கந்த. புரா-ஏமகூடப் படலம்-33). இதுவே கதிர்காமம் என வழங்கப்பெறுவ தென்ப. செந்திலிற் போலவே இங்கு முருகப்பெருமான் எழுந்தருளிச் சிவபெருமானை வழிபட்டமையின் சிவத்தலமாகியது என்பர்.—(11) புத்தூர் - திருப்புத்தூர். பாண்டிநாட்டுத் தலம்.

குறிப்பு :—இப்பதிகத்துள் வைப்புத்தலங்கள் பலவும் வருதல் காண்க.

VII திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

கண்ணவன்காண் கண்ணொளிசேர் காட்சி யான்காண்
  கந்திருவம் பாட்டிசையிற் காட்டு கின்ற
பண்ணவன்காண் பண்ணவற்றின் றிறலா னான்காண்
  பழமாகிச் சுவையாகிப் பயக்கின் றான்காண்
மண்ணவன்காண் டீயவன்கா ணீரா னான்காண்
  வந்தலைக்கு மாருதன்காண் மழைமே கஞ்சேர்
விண்ணவன்காண் விண்ணவர்க்கு மேலா னான்காண்
  விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 1

மெய்த்தவன்காண் மெய்த்தவத்தி னிற்பார்க் கெல்லாம்
  விருப்பிலா விருப்புமன வினையர்க் கென்றும்
பொய்த்தவன்காண் புத்தன் மறவா தோடி
  யெறிசல்லி புதுமலர்க ளாக்கி னான்காண்
உய்த்தவன்கா ணுயர்கதிக்கே யுள்கி னாரை
  யுலகனைத்து மொளித்தளித்திட் டுய்யச் செய்யும்
வித்தகன்காண் வித்தகர்தாம் விரும்பி யேத்தும்
  விண்ணிழி தண்வீழி மிழலை யானே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—விண்ணிழி தண் வீழிமிழலை யானே, கண்ணும் கண்ணொளியும் காட்சியு மானான்; பண்ணும் பண்ணின் றிறலு மானான்; பழமும் சுவையுமாகிப் பயக்கின்றான்; கரும்புச்சாறுபோல இனிக்கும் ஐந்தெழுத்தாகிய திருநாமத்தையுடையவன்; அடியார் சிந்தையான்; மெய்த்தவர்க்கு மெய்த்தவன்; விருப்பில்லார்க்குப் பொய்த்தவன்; சமணிற்றீர்த்து என்னை ஆட்கொண்டான்; சாக்கிய நாயனார் மறவாது எறிந்த கல்லையும் மலராகக் கொண்டவன்; மாலுக்கு ஆழியீந்தவன் - என்றித்திறங்களா லறியப்படுபவன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கண்ணும் ஒளியும் காட்சியும் - இறைவன் காண்பவனாகியும் காட்டுபவனுயும் காட்சிப்பொருளாயும் நிற்கும் நிலை. பண் - திறல்- இசையும் அதன் பயனும். திறல் - திறம் என்று கொண்டு ஐந்து சுரமுள்ள இசை வகையினைக் குறிப்பதென்பாருமுண்டு. பழம் - சுவை. குணியும் குணமும்போல அத்துவிதமாகக் கலந்துநிற்கும் முறைக்கு எடுத்துக்காட்டு. மண் - தீ - நீர் - மாருதம் - விண்-ஐம்பெரும்பூதங்கள். விண்ணிழி-அரியால் தேவருலகத்தினின்றும் கொணர்ந்து அமைத்துப் பூசித்த கோயில் என்பது வரலாறு. திருமால் சக்கரம் பெறவேண்டித் தவஞ்செய்து கண்ணையிடந்து அருச்சித்துப்பெற்ற இத்தல வரலாற்றை இப்பதிகத்து 6 - 7 - பாட்டுக்களில் உரைப்பதனையும் காண்க.—(2) ஆலை...நாமத்தான் - ஐந்தெழுத்து - சிவனது நாமம். அன்புடையார்க்கு அது கரும்புச்சாறு போல இனிக்கும். சீலம் - சிவநாமத்தை அவ்வாறு இனிக்கக் காணும் சீலம் ; தவ ஒழுக்கம்.—(3) தண்மை - வெம்மை - இருவேறு தன்மையும் ஆதல் எல்லாம் தாமே என்பது குறிக்கும். எண்ணில் சமண்தீர்த்து என்னை யாட்கொண்டான் - நாயனாரது சரித அகச்சான்று.—(4) மாது இசைந்த மாதவம் சோதித்தான்-கந்தபுராணம் தவங்காண்படலம் பார்க்க.—(5) நித்தல் மணவாளனென நிற்கின்றான்-இத்தலத்துச் சிறப்பாகிய மணவாள மூர்த்தி (கல்யாணசுந்தரர். நின்ற திருக்கோலம்). "நித்த மணாளர் நிரம்ப வழகியர்" (திருவாசகம்). கண்துஞ்சும்-" அலைகடனடு வறிதுயிலமரரி" (பிள் - தேவா).— (6) கண்துஞ்சும்...அருளுவான் - தல சரிதம்.—(7) கற்போலிதோட் சலந்தரனைப் பிளந்த ஆழி - இத்தல வரலாறு. "செருமேவு சலந்தரனைப் பிளந்தசுட ராழி" (நம்பி - தேவா).—(8) இருப்பு மனம் - இரும்புபோலத் திணிந்த மனம். வினையர் - தீவினையாளர். புத்தன் - சாக்கிய நாயனார். கல்லி - கல். புதுமலர்களாக்கினான் - "கல்லினா லெறிந்து கஞ்சிதா முணுஞ் சாக்கியனார்" (குறுக்கை - நேரிசை - 6) "அல்லாதார் கல்லென்ப ரரனார்க்கஃ தலராமால்" (சாக்-புரா - 14).—(9) சந்திரனை... அருள் செய்தான்காண் - தக்கயாகத்தில் வீரபத்திரரால் நிகழ்வித்த வீரங்கள்.— ஈங்கை - இண்டங்கொடி. ஓங்காரன்-ஓங்காரம் - பிரணவம். பிரணவப் பொருள்.

VIII திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

மானேறு கரமுடைய வரதர் போலு
மால்வரைகால் வளைவில்லா வளைத்தார் போலுங்
கானேறு கரிகதற வுரித்தார் போலுங்
கட்டங்கங் கொடிதுடிகைக் கொண்டார் போலுந்
தேனேறு திருவிதழித் தாரார் போலுந்
திருவீழி மிழலையமர் செல்வர் போலும்
ஆனேற தேறு மழகர் போலு
மடியேனை யாளுடைய வடிக டாமே. 1

கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலுங்
கயாசுரனை யவனாற்கொல் வித்தார் போலுஞ்
செய்வேள்வித் தக்கனைமுன் சிதைத்தார் போலுந்
திசைமுகன்றன் சிரமொன்று சிதைத்தார் போலும்
மெய்வேள்வி மூர்த்திதலை யறுத்தார் போலும்
வியன்வீழி மிழலையிடங் கொண்டார் போலும்
ஐவேள்வி யாறங்க மானார் போலு
மடியேனை யாளுடைய வடிக டாமே. 4

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—அடியேனை ஆளுடைய அடிகள் தாமே வீழிமிழலையமர் செல்வர்; அவர், மானேறுகரமுடைய வரதர்; குமரனையும் மகனாகவுடையர்; கைவேழமுகத்தவனைப் படைத்தார்; வேலார்கை வீரியை முன் படைத்தார்; அஞ்சடக்கு மடியவர்கட் கணியார்; குண்டரொடு பிரித்தெனையாட் கொண்டார்; இருநான்கு மூர்த்திகளுமானார்; மித்திரவச்சிரவணற்கு விருப்பர்; அத்தனொடு மம்மை யெனக்கானார்; என்றித் தன்மைகளாற் போற்றப்படுபவர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) போலும் - காண் - கண்டாய், முதலியன போலத் தேற்றப்பொருள் தந்து நிற்கும் ஓர் இடைச்சொல். ஆளுடைய - ஆளாகவுடைய.—(2) ஒருகால் - ஒருகாலால், ஒருகாலத்து, என்றிருவகையு முரைக்கநின்றது. குமரன் - முருகப்பெருமான். பின் அமுதுண - பின்னால் அமுதுண்ணும்பொருட்டு.—(3) நேமி அருளிச்செய்தார் - தலசரிதம்.—(4) கைவேழ முகத்தவன் - விநாயகப்பெருமான். தேவாரங்களுள் விநாயகர் வரலாறு கூறும் சிலவிடங்களுள் இஃதொன்று. விநாயக வணக்கம் பழைமையானது. வேள்வி மூர்த்தி - எச்சன்.—(5) சுடர் மூன்று - தீயும் ஞாயிறும் திங்களும். சோதி - அவற்றுள்நின்று ஒளியாய் விளக்குபவன்.—(6) வேலார் கை வீரி - வீரபத்திரை. காளி. முன் - தக்கயாக வரலாறு.—(8) குண்டரோடு பிரித்து எனை ஆட்கொண்டார் - நாயனாரது சரித அகச்சான்று. ஒடு - நீக்கப்பொருள்பட ஐந்தனுருபாய் வந்த உருபுமயக்கம். புண்டரிகப் புதுமலர் ஆதனம் - அடியவர்களது இதயவெண்டாமரை. எப்போதும் வாடாதிருத்தலின் புதுமலர் என்றார். புள் அரசு-கருடன். கருடனுக்கு வரம்தந்தமை புராணங்களுட் காண்க.—(9) எத்தனையும் - எந்தச்சிறு அளவிலேனும். எத்தனையும் இனியர் என்று கூட்டி மிகப்பெரிதாய் என்றலுமாம். இருநான்கு மூர்த்தி-அட்டமூர்த்தம். பஞ்சபூதங்களும் ஞாயிறும் திங்களும் ஆன்மாவும் என்றிவற்றைத் தன் திருமேனியாகக் கொண்டவன். மூர்த்தி-திருமேனி (சிவபூசை விதி). மித்திரவச்சிரவணன்-குபேரன். குபேரன் சிவபெருமானது தோழன் என்ப."நிதிபதி செய்த நிறைதவ நோக்கி, யதுபதி யாக அமர்ந்திருந் தானே" (திருமந்).—(10) ஒருகை எரியது தரித்த என்க.ஒருகையில் தீயை ஏந்திய. விரிகதிரோர் இருவரை முன் வேதண்டமை - தக்கயாகத்தில் சூரிய சந்திரர்களைத் தண்டித்த வரலாறு.

1528. வாய்ந்த மிழலை மாமணியை வணங்கிப் பிரியா விடைகொண்டு
பூந்தண் புனல்சூழ் வாஞ்சியத்தைப் போற்றிப் புனிதர் வாழ்பதிகள்
ஏய்ந்த வன்பி னுலிறைஞ்சி யிசைவண் டமிழ்கள் புனைந்துபோய்ச்
சேர்ந்தார் செல்வத் திருமறைக்கா டெல்லை யில்லாச் சீர்த்தியினர். ௨௬௩

(இ - ள்) வாய்ந்த...விடை கொண்டு - அரிதிற் கிடைக்கப்பெற்ற திருவீழிமிழலையின் பெருமணிபோன்ற இறைவரை வணங்கிப் பிரிய முடியாதபடி விடை பெற்றுக்கொண்டு; பூந்தண்...போற்றி - அழகிய குளிர்ந்த நீராற் சூழப்பட்ட திருவாஞ்சியத்தைச் சென்று துதித்து; புனிதர்...போய் - தூயராகிய சிவபெருமான் வெளிப்பட நிலைத்து எழுந்தருளிய பிற பதிகளையும் பொருந்திய அன்பினால் சென்று வணங்கி இசையும் வண்மையுமுடைய தமிழ்மாலைகளைச் சாத்தி மேற்சென்று; எல்லையில்லாச் சீர்த்தியினர் - அளவுற்றச் சிறப்புடைய அவ்விருபெருமக்களும்; செல்வத் திருமறைக்காடு சேர்ந்தார் - செல்வமுடைய திருமறைக்காட்டினைச் சேர்ந்தனர்;

(வி - ரை) வாய்ந்த - உலகுக்கு அருள்வாய்ந்த. பிரியாவிடை - பிரியமாட்டா நிலைமையில் பெறும்விடை.

**பூந்தண்புனல்** - பூ - அழகு. நீருக்கு அழகாவது காண இனிமையும், பேணு மினிமையும், மென்மையாய் அலைத்தோடும் இயல்பும் முதலாயின. "பூந்தண் பொன்னி" (1206) பார்க்க.

**வாழ்** - நிலைத்து வீற்றிருக்கும். அடைந்தாரை வாழ்விக்கும் என்று பிற வினையாக்கி உரைத்தலுமாம்.

**ஏய்ந்த அன்பினால்** - ஏய்தல் - நிறையப் பொருந்துதல். அன்பு ஏய்ந்த அதனால்.

**இசைவண் தமிழ்** - வண்மையாவது வேண்டிய வேண்டியாங்குதவும் தன்மை. இசை - தமிழிசை. தேவாரங்களின் வண்மை பலபடியானும் முன்சரிதங்களாலறியப் படுதலன்றி, இன்றும் அவற்றை மந்திரமாக்கொண்டு பயில்வார் பெறும்பயன்களாலு மறியப்படும்.

**தமிழ்கள்** - தமிழ்ப்பதிகங்கள்.

**பூந்தண்பொழில்—வாஞ்சியத்திற்றங்கி**—என்பனவும் பாடங்கள்.　263

**திருவாஞ்சியம்** - பதிகம் - தலவிசேடம் முதலியவை 1481-ன் கீழ் உரைக்கப் பட்டன.

**புனிதர்வாழ் பதிகள்** - (இறைஞ்சிப் போய்) - இவை திருவாஞ்சியத்திற்கும் திருமறைக்காட்டுக்கும் இடையில் உள்ளன. திருத்தலையாலங்காடு, திருப்பெருவேளூர், திருச்சாத்தங்குடி, திருக்கரவீரம், திருவிளமர், திருவாரூர், திருக்காறாயில், திருத்தேவூர், திருநெல்லிக்கா, திருக்கைச்சினம், திருத்தெங்கூர், திருக்கொள்ளிக்காடு, திருக்கோட்டூர், திருவெண்டுறை-இவையும், மற்றும் பற்பலவும், திருத்தண்டலை நீணெறியும், திருக்களரும், பிறபதிகளுமாம் என்பது திருஞானசம்பந்தநாயனார் புராணம் 573-574-575-வது திருப்பாட்டுக்களா லறியப்படும். இவற்றை விரிவாய்ப் பின்னர் ஆங்குக் கூற வேண்டி யிருத்தலானும், இவற்றுட் டலையாலங்காடு, பெருவேளூர் என்பவற்றைத் தவிர ஏனையவற்றுக்கு நாயனார் பதிகங்கள் கிடைத்தில ஆதலானும், இங்கு விரித்துக் கூறாது இறைஞ்சித் தமிழ்மாலைகளும் புனைந்து என்று பொதுப்படக்கூறிப் போந்தனர் ஆசிரியர். பிள்ளையாரும் நாயனாரும் ஒருங்குசேர்ந்தே இந்த யாத்திரைசெய்தருளினார்களாதலானும், முன்னர் நாயனார் சென்றவழியே பின்பற்றி ஆளுடைய பிள்ளையார் சென்று சேர்ந்தனராதலானும் இவற்றை நாயனாரும் சென்று வணங்கிப் பாடினர் என்பது துணிவு.

## திருத்தலையாலங்காடு

திருச்சிற்றம்பலம்　　திருத்தாண்டகம்

தொண்டர்க்குத் தூநெறியாய் நின்றான் றன்னைச்
　சூழ்நாகில் வீழாமே காப்பான் றன்னை
யண்டத்துக் கப்பாலைக் கப்பா லானை
　யாதிரைநா ளாதரித்த வம்மான் றன்னை
முண்டத்தின் முளைத்தெழுந்த தீயா னானை
　மூவுருவத் தோருருவாய் முதலாய் நின்ற
தண்டத்திற் றலையாலங் காடன் றன்னைச்
　சாராதே சாலநாள் போக்கி னேனே.　1

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—தலையாலங்காட்டில் விளங்க எழுந்தருளியுள்ள இறைவர்
தொண்டர்க்குத் தூநெறியாய் நின்...

நாள் ஆதரித்த அம்மான், குழைவார் சிந்தை புக்கிருந்து போகாத புனிதன், சிவனாகியும் பவனாகியும் நின்ற தவன், சங்கரன், கண்டளவிற் களிகூர்வார்க்கெளியான், அரக்கர் கோமானது பாடல் கேட்டுப் பரிந்து அவனுக்கு இராவணனென்றீந்த நாம தத்துவன் என்பன முதலிய தன்மைகளா லறியப்படுபவர். அவர் எய்த்து அவமே உழிதந்த ஏழையேனை யிடர்க்கடலில் வீழாமே யேற வாங்கிப், பொய்த்தவத்தார் அறியாத நெறி நின்றார்; எண்டளவில் என்னெஞ்சத்துள்ளே நின்ற எம்மான்; அவரைச் சாராதே சாலநாள் போக்கினேனே! என்றிரங்கியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) முண்டத்தில் மூளைத்தெழுந்த தீயானுன் - நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளியில் உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் சோதி யுருவினன். தீயாகிய நெற்றிக் கண்ணையுடையவன் என்றலும். சிவபூசையில் வகுத்த முண்ட பங்கி என்றலும் ஆம். மூவுருவம் - அயன் அரி அரன். ஒருருவம் - அவற்றைக் கடந்த சிவனாகிய முதலுருவம். 4-வது பாட்டுப் பார்க்க.—(2) கோக்கு - கொக் கிறகு.—சிவன் - பவன் - இறைவனது சிறந்த சிவாதி எட்டு, பவாதி எட்டு என் னும் நாமாட்டகங்களில் முதற்கணுள்ள திருநாமங்கள். "சிவனெனு நாமம்" என்ற தேவாரமும் பார்க்க.—(5) பரிதிநியமம் - தலம்.—(8) நடுதறி-கன்றாப்பூர் இறைவர் பெயர். காறை - வைப்புத்தலம்.—(9) கண்டளவிற் களிகூர்தல் - அன்பு மிகு திப்பாட்டினு லாவது. "புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோல்" (திருமந்திரம்).—(10) இராவணனென்று ஈந்த நாம தத்துவன் - கயிலைக்கீழ்ப் பலநாள் அழுது கிடந்த மையால் இராவணனுக்கு அப்பெயர் போந்தது. (இராவணன்-அழுபவன்). குறிப்பு:— 3-வது 4-வது திருப்பாட்டுக்களில் நாயனாரது சரித அகச்சான்றுகள் காண்க.

தலவிசேடம் :—திருத்தலையாலங்காடு : காவிரிக்குத் தென்கரை 93-வது தலம். தாருகாவன முனிவர் ஏவி விடுத்த முயலகன்மீது சிவபெருமான் நடனம் செய்த தலமென்பது வரலாறு. சுவாமி பெயர் அதுகாரணமாய்ப் போந்ததென்ப. கபிலர் பூசித்தது. சுவாமி - ஆடவல்லநாதர்; அம்மை - திருமடந்தை; பதிகம் 1.

திருப்பெருவேளூரினின்றும் மேற்கில் மட்சாலைவழி இரண்டு நாழிகை யளவில் இதனை அடையலாம்.

## திருப்பெருவேளூர்

திருச்சிற்றம்பலம் திருநேரிசை

மறையணி நாவி னானை மறப்பிலார் மனத்தி னானைக்
கறையணி கண்டன் றன்னைக் கனலெரி யாடி னானைப்
பிறையணி சடையி னானைப் பெருவேளூர் பேணி னானை
நறையணி மலர்க ளேி நாடொறும் வணங்கு வேனே. 1

குறவிதோள் மணந்த செல்வக் குமரவே டாதை யென்றும்
நறவிள நறுமென் கூந்த னங்கையோர் பாகத் தானைப்
பிறவியை மாற்று வானைப் பெருவேளூர் பேணி னானை
யுறவினால் வல்ல னாகி யுணருமா றுணர்த்து வேனே. 2

வீரிலா வறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்தே
யெரிவினாற் சொன்னா ரேனு மெம்பிராற் கேற்ற தாகும்;
பரிவினாற் பெரியோ ரேத்தும் பெருவேளூர் பற்றி னானை
மருவிநான் வாழ்த்தி யுய்யும் வகையது நினைக்கின் றேனே. 19

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு :—மறையணிநாவினன், மறப்பிலார் மனத்துளான், பலபல திறத்தினாலும் பேதனாய்த் தோன்றினான், குறவிதோள் மணந்த செல்வக் குமரவேள் தாதை, பிறவியை மாற்றுவான், முற்றிய ஞானத்தான், பிண்டமே யாயினான், என்றித் திறத்தனவாய்ப் பெரியோர் ஏத்தும் பெருவேளூர் பேணினானை, உரைக்குமா றுரைக்குற்றேன்; உணருமா றுணர்த்துவேன்; இறைஞ்சுமா றிறைஞ்சுவேன்; நாடொறும் வணங்குவேன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பேணினான்-இத்தலத்துச் சுவாமியின் பெயர். ஆளுடைய பிள்ளையார் பதிகத்துட் "பிரியார்" என்பது காண்க.—(2) பலபல திறத்தினாலும் பேதனாய்த் தோன்றினான் - சிருட்டியிற் காணும் பலபேதமும் தானே யாகி உள்ளவர். "அவையே தானேயாய்" (சிவஞான போதம் - 2) "உலகெலாமாகி வேறாய்" (சித்தியார் - 2). உரைக்குமாறு - உரையளவில் - என் உரையில் வரும் அளவில் - அமைவுபடா தாயினும்.—(3) குறவி - வள்ளியம்மை. உறவு - அன்பு. உணருமாறு - உணர்தற் கெட்டாதாயினும் அருள்கொண்டு உணரும் அளவு.—(4) மைஞ்நுவில்-கைஞ்ஞலில் - பொய்ஞ்ஞேக - நகரம் ஞகரமாய் வந்த எழுத்துப்போலி. பொறி-அறிவுட்கொள்ளும் தன்மை.—(6) இறைஞ்சுமாறு - விதித்தபடி வணங்க.—(7) பிறரும் - புறம் - அகப்புறம் - என்ற சமயத்தவரும். அவர்கள் ஏத்தும்வகை மேல் 9-வது பாட்டில் அருளப்பட்டது.—(8) முற்றிய ஞானத்தான்-நிறைவாகியபேரறிவுடையவன். நிறைந்த ஞானத்தில் வெளிப்படுபவன். பிண்டம் - உலகமாகிய உடல்.—(9) விரிவிலா...பரிவினால் - சைவத்தின் நிறைந்த நிலை காட்டுவது இத்திருப்பாட்டு. ஞான சாத்திரங்களுள் எடுத்தாளப்படுவது. விரிவிலா அறிவினார்கள் ஆதலின், என, வேறு ஒருசமயம் செய்ததற்குக் காரணங்கூறியபடி. செய்து - தாமாகக்கட்டி. "பொய்யே கட்டி நடத்திய" (திருத்தொண்டர் புராண வரலாறு - 20). எரிவினால் - கோபம் முதலிய தாமதகுணங்களாற் றூண்டப்பட்டு. எம்பிரானுக்கு ஏற்றதாகும் பரிவினால் - எமது பெருமான் எங்கும் நிறைந்துள்ளாராதலின் அந்தப் பக்குவத்தினும் அமைந்து ஏற்றவாறு அருள்வர் என்ற அன்பினால். பெரியோர் - விரிவிலா அறிவினார்கள் போலல்லாது முதிர்ந்த ஞானமுடையோராய்ச் செயற்கரியவற்றையும் செய்வோர்.—(10) உருகிய - அன்பினால் மனமுருகப் பெற்ற.

தலவிசேடம் :—பெருவேளூர் - காவிரிக்குத் தென்கரையில் 92-வது தலம். ஐயன்பேட்டை என வழங்கப்படும். சுவாமி - பிரியாத நாதர் - பேணினார்; அம்மை - ஏலவார்குழலி. பதிகம் 2.

குழிக்கரை என்ற புகைவண்டி நிலையத்தினின்றும் வடக்கே மட்சாலைவழி ஆற்றைப் பரிசிலாற் கடந்து நான்கு நாழிகையளவில் உள்ள திருக்கண்ணமங்கையை அடைந்து, அங்குநின்றும் மேற்கில் ஒருநாழிகை யளவில் உள்ள திருக்கரவீரத்தினின்றும் வடமேற்கில் மட்சாலைவழி $1\frac{1}{2}$ நாழிகை யளவில் அடையத்தக்கது இத்தலம்.

சாத்தங்குடி - தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று; திருக்கரவீரத்தினின்றும் தெற்கில் $\frac{1}{2}$ நாழிகையில் மட்சாலை வழி யடையத்தக்கது.

குறிப்பு :—இடைப்பட்ட தலங்களாக மேற் குறித்தவற்றுள் திருக்கரவீரம் முதலிய தலங்களுக்கு நாயனார் பதிகங்கள் கிடைத்தில; அவற்றின் குறிப்புக்கள் ஆளுடைய பிள்ளையார் புராணத்துட் காண்க.

1529. மன்றல் விரவு மலர்ப்புன்னை மணஞ்சூழ் சோலை யுப்பளத்தின்
முன்றி றோறுஞ் சிறுமடவார் முத்தங் கொழிக்கு மறைக்காட்டுக்
குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் புகுந்து வலங்கொண்டு
சென்று சேர்ந்தார் தென்புகலிக் கோவு மரசுந் திருமுன்பு. ௨கக

(இ - ள்) வெளிப்படை. மணம் பொருந்திய மலர்களையுடைய புன்னைகளின் மணம் சூழ்ந்த சோலைகளையுடைய உப்பளங்களின் முற்றங்களிலெங்கும் சிறுமியர்கள் முத்துக்களைக் கொழிக்கும் செழிப்புடைய திருமறைக்காட்டில், பொன்மலையை வில்லாகவுடைய இறைவர் மகிழ்ந்து எழுந்தருளிய கோயிலினுட் புகுந்து வலமாக வந்து, அழகிய சீகாழிக் கிறைவராகிய ஆளுடைய பிள்ளையாரும் அரசுகளும் இறைவரது திருமுன்பு சென்று சேர்ந்தார்கள்.

(வி - ரை) மன்றல்விரவு......மறைக்காடு - திருமறைக்காடு கடற்கரையில் உள்ள தலம். நெய்தற்றிணையைச் சார்ந்ததாதலின் அத்திணைக்குரிய நிலமும் கருப்பொருள்களும் செழிக்க உள்ளன. புன்னை-முத்து-நெய்தற் றிணைக்கருப்பொருள்கள். "மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலை", "புன்னைப் பொழிற்புக லூரண்ணல்", "சுரக்கும் புன்னைகள்சூழ்" (தேவா) முதலிய திருவாக்குக்களும், 1113-ம், பிறவும் காண்க. உப்பளம் - உப்பு விளைக்கும் அளம். அந்நிலமக்கள் செய்தொழில் உப்பு விளைத்தல் முதலியன. நெய்தற்கு உணு - உப்புவிலை எனப்படுவது காண்க. முத்தங் கொழித்தல் - அந்நிலச் சிறுமியர் விளையாட்டு. கழிக்கானல் சூழ்ந்த நெய்தல் முடைநாற்றமுடைமையாலும், உவர்நீருடைமையாலும், பிறவாற்றாலும் மக்கள் செல்லவும் வாழவும் விரும்பாத தொன்றும் போலும்? என்பாரை நோக்கி, அற்றன்று; அது புன்னைமலர் நறுமணங் கமழும் சோலையுடையது; உணவுக்குச் சுவை தரும் உப்புத் தருவது; மனதுக்கும் உடற்கும் இனிமைதந்து மக்களின் மனங்களை முத்திநெறியிற் கைகாட்டி யுதவும் முத்துக்களையுடையது; அங்கு மக்கள் இனிது வாழ்வர் என்று எந்தம் பெருமக்கள் சேர்ந்தருளும் சமயத்தில் மக்களின் மனங்களை இன்பமயமாக்கி உடன் ஈர்த்துச் சென்று வழிப்படுத்த அமைந்ததுபோல்வது இவ்வழகிய திருப்பாட்டு. திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்துள் நெய்தலைப்பற்றியும், நெய்தலோடு பிறதிணை மயங்கும் திணைமயக்க ஒழுக்கம் பற்றியும் வரும் பகுதிகளையும், பிறவற்றையும் இங்கு நினைவுகூர்தல் இப்பாட்டினை அறிந்தனுபவிக்க உதவும். உவகை நயப்பும் மனவெழுச்சியும் சேராத உப்பளத்தை ஒரு அழகிய சோலைசூழும் அரண்மனையாக்கி உரைப்பது தெய்வக் கவிநலமாம்.

மறைக்காட்டுக் - கோயில் என இயைக்க; மறைகளாற் பூசிக்கப்பட்டதாதலின் மறைக்காடெனப்படும்.

மகிழ்ந்த - விரும்பி வெளிப்பட வீற்றிருக்கும்.

புகுந்து - வலங்கொண்டு - சென்று - திருமுன்பு - சேர்ந்தார் - திருமுன்பு சேருமுன் செய்யத் தக்க வழிபாட்டு முறைகள்.

தேன் புகலி - தேன் - அழகுகுறித்து நின்றது.

தேன்புகலிக் கோவும் - அரசும் - இருபெருமக்களையும் அரசு என ஒப்பக்காட்டிய நயம் காண்க. துறவறமேற் கொண்டவராதலின் நாயனாரை ஊரும் நாடும் பற்றாது வாளா அரசு என்றார். 1532-லும் இவ்வாறே தோணிபுரத்தரசர் - நீடுந் திருநாவுக்கரசர் - என்பது காண்க. இங்கு இருவரும் கதவம் திறக்கவும் அடைக்கவுமாக ஒப்பச் செயல்செய்ய நின்ற சரிதக்குறிப்பு. 264

1530. பரவை யோதக் கழிக்கானற் பாங்கு நெருங்கு மப்பதியில்
அரவச் சடையந் தணனாரை யகில மறைக ளருச்சனைசெய்
துரவக் கதவந் திருக்காப்புச் செய்த வந்நாள் முதலிந்நாள்
வரையு மடைத்தே நிற்கின்ற மணிநீள் வாயில் வணங்குவார், உகூடு

1531. தொல்லை வேதந் திருக்காப்புச் செய்த வாயிற் றொடர்வகற்ற
வல்ல வன்ப ரணையாமை மருங்கோர் வாயில் வழியெய்தி
யல்ல றீர்ப்பார் தமையருச்சிப் பார்க டொழுவா ராம்படிகண்
டெல்லை யில்லாப் பெரும்புகழா ரிதனை யங்குக் கேட்டறிந்தார். உகூகூ

1530. (இ - ள்) பரவை...பதியில் - கடற்கரையின் நீர் கொண்ட கடற் கழிக்கானலின் பக்கத்தில் நெருங்கியுள்ள அந்தத்தலத்தில்; அரவச்சடை அந்தண னுரை - அரவம் மேல் ஆடுகின்ற சடையினையுடைய அந்தணராகிய இறைவரை; அகில மறைகள் அர்ச்சனை செய்து - வேதங்களெல்லாம் அருச்சித்து; உரவக்கதவம்- வலிய கதவத்தை; திருக்காப்புச் செய்த...நிற்கின்ற - அவ்வாறு திருக்காப்பிட்ட அந்த நாள் முதலாக இந்நாள்வரையிலும் திறக்கப்படாமல் அடைத்தபடியே நிற்கின்ற; மணிநீள்வாயில் வணங்குவார் - அழகிய நீண்ட திருவாயிலினை வணங்குவார் களாகிய, உகூ௫

1531. (இ - ள்) தொல்லைவேதம்...அணையாமை - பழமையாகிய வேதங்கள் திருக்காப்பிட்ட திருவாயிலின் பூட்டிய தொடர்ச்சியினை நீக்கவல்ல அன்பர்கள் வாராமையால்; மருங்கு ஓர்வாயில் வழி எய்தி - அதன்பக்கத்தில் உள்ள ஒரு வாயி லின் வழியேசென்று; அல்லல் தீர்ப்பார்தமை அருச்சிப்பார் தொழுவாராம்படி கண்டு - துயர மெல்லாவற்றையும் நீக்கும் சிவபெருமானை அன்பர்கள் பூசிப்பார்களாயும் தொழுவார்களாயும் இருக்கும் முறைமையினைக் கண்டு; எல்லை இல்லாப் பெரும் புகழார் - அளவுட்படாத பெரிய புகழினை உடைய ஆளுடை பிள்ளையாரும் அரசுக ளும்; இதனை...அறிந்தார் - மேற்சொன்ன இச்செய்தியை அங்குள்ளவர்கள் சொல்லக்கேட்டு அறிந்தார்கள். உகூகூ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருபொருள் கொண்டன.

1530. (வி - ரை) பரவை ஓதம் கழிக்கானல் - கடல் நீரானது கழியின் வழிச் சார்ந்த சோலை. கானல் - மணற் பரப்பும் அங்குள்ள தாவரமும்.

பாங்கு நெருங்கும் - பக்கத்தில் அணித்தாக உள்ள. இவ்வாறு கூறியது கழியின் பக்கத்தில் உள்ள பதியாயினும் முன்பாட்டிற் கூறியவாறு புன்னைமணங் கமழ்வது என்று குறிப்பித்தபடி. முன்னர்ப் புன்னைமணங் கூறிப் பின்னர்க் கழியினைக் குறிப்பது சேர்வோர்க்கு மனவெழுச்சி சேறற் பொருட்டும், நகரை நோக்கிவருவார் புற நகரின் கண் உள்ள உப்பள முதலியவைகளினியல்புகள் கண்டு பின்னர் நகரைச் சேரக்கடவர் என்று காட்டற் பொருட்டுமாம்.

அந்தணனுரை - மறைகள் அர்ச்சனை செய்து - அந்தணராதலின் மறைகள் அர்ச் சித்தன என்பது குறிப்பு. மறைகள் அர்ச்சனை செய்தலாவது வேத மந்திர அதி தெய்வங்கள் உருக்கொண்டுவந்து சிவக்குறியிற் பூசித்தல். அருச்சனை செய்து - திருக் காப்புச்செய்த என்று கூட்டுக.

கதவம் திருக்காப்புச் செய்தலாவது - பூசைக்காகச் சந்நிதி வாயில்களைத் திறந்து பூசித்தபின்பு, மறுபூசை செய்யும்வரை உரிய பாவனை - கிரியை - மந்திரங்க ளுடன் கதவங்களை அடைத்துத் தாழிட்டுவைத்தல். விடையிலச்சினையிட்ட திரு விளையாடல் முதலியவை காண்க.

அந்நாள் முதல் இந்நாள்வரை அடைத்தே - மறைகள் ஒருகாலம் சிவக்குறி கண்டு பூசித்துப் போயின; அந்நாள் முதல் நாயன்மார் வந்த இந்நாள் வரையும் அடைத்தபடியே. ஏகாரம் தேற்றம்.

மணிநீள் வாயில் வணங்குவார் - கோயில் வாயில்களை வணங்கி உட்புகுதல் மரபு. வணங்குவார் - வினைப்பெயர். வணங்குவார்களாகிய - பெரும்புகழார் - அறிந்தார் என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. மணி - அழகு. மணிகள் கட்டிய என்றலுமாம். நீளுதல் - புகழாலும் பெருமையாலும் மிகுதல். 265

1531. (வி - ரை) தொல்லை...அணையாமை - வாயில் அடைத்தே நிற்கின்றமைக்கும், அதனால் அன்பர் வேறு வாயில் வழிச் சென்று தொழுதமைக்கும் காரணம் கூறியபடி. இவை யிரண்டினுக்கும் இடையில் அணையாமையை வைத்துக் கூறிய கருத்துமிது.

வாயில் தொடர்வு - வாயில்கள் கூட்டி மந்திரத் தாழ் இட்ட பிணைப்பு. வல்ல அன்பர் - வன்மையாவது மறைகளின் மந்திர வலிமையின் முன் நின்று அதனை அவிழ்க்கத் தக்க (அதனை ஒத்த) மந்திரம் ஓதிச் செயல் செய்யும் ஞான வலிமை. இதனைப் பிற்சரித நிகழ்ச்சியாற் கண்டு கொள்க.

"அருமறைக டிருக்காப்புச் செய்து வைத்த வக்கதவந் திறந்திடவம் மறைகளோதும், பெருகியவன் புடையடியா ரணைந்து நீக்கப் பெருமையினுல்" (திருஞான - புரா - 580) என்று இதனை ஆசிரியர் பின்னர் விளக்குதல் காண்க. "அம்மறைகள் ஓதும்" என்றமையால் தமிழ் வேதம் திறக்கவும் அடைக்கவும் செய்யக்கண்டபடி. அ என்ற சுட்டின் திறங்கொண்டு முன் பூசித்துச் திருக்காப்புச் செய்த மறையும் தமிழ்மறையேயன்றி வடமொழியன்று என ஆராய்ச்சி செய்து முடிப்பாருமுண்டு. அகரச்சுட்டு அந்த மறையே போன்றதென்ற பொருளில் வந்ததன்றிப் பிறிதில்லை. நேற்று உண்ட அந்த அரிசி - உண்ட பழம் - கேட்ட பாட்டு என்பனபோலக் கண்டு கொள்க. "உண்டதே யுண்டும் உடுத்ததே யுடுத்தும் அடுத்தடுத் துரைத்ததே யுரைத்தும், கண்டதே கண்டும் கேட்டதே கேட்டும் கழிந்தன கடவநா ளெல்லாம்" (பட்டினத்துச் சுவாமிகள்) என்றதில் இப்பொருள் வெளிப்படவிளங்குதல் காண்க. மறைகள் அடைத்த கதவத்தை அந்த மறைபோன்றதொன்று தான் திறக்கற்பாலது. ஒருகோல்கொண்டு பிணைத்த பூட்டு அத்திறவுகோல் கிடையாதபோது அதனைஒத்த மற்றொன்றினுல் திறக்கப்படுவதுபோல, மறையாற் காப்பிட்ட கதவு அதுபோன்ற மறையினுல் திறக்கவும் அடைக்கவும் பட்டதாம் என்பது. திருஞானசம்பந்தர் புராணம் 592 வது பாட்டில் இதனை ஆசிரியர் விளக்குவது காண்க.

மருங்கு ஓர்வாயில் - அதன் தென்பால் இட்ட ஓர்வாயில் என்ப.

அருச்சிப்பார்கள் தொழுவார் ஆம்படி - அடியார்கள் என்ற எழுவாய் வருவிக்க. அருச்சிப்பார்களாகிய அடியார் தொழுவார் என்று, அருச்சிப்பார் என்றதனை எழுவாயாக்கி யுரைப்பினுமமையும். படி - படியினை - தன்மையினை. இரண்டனுருபு தொக்கது.

கண்டு இதனைக் கேட்டு - அறிந்தார் - கண்டும் கேட்டும் இவ்வரலாறுகளை அறிந்தார். கண்டது - கதவம் அடைத்தே நிற்பதனையும், மருங்கோர்வாயில் வழியெய்தித் தொழுவாராம்படியினையுமாம். கேட்டது - அவ்வாறு நிகழ்வதாய் மறை திருக்காப்பிட்ட அன்றுமுதல் இன்றுவரை அடைத்தே நிற்பதுவும், மருங்குவழியெய்தித் தொழுது வருவதுவும், அதன் காரணம் தொடர்வகற்ற வல்ல அன்பரணையாமை என்பதுவுமாம்.

இதனை - "தொல்லை...ஆம்படி" என்ற இதனை.

கேட்டறிந்தார் - கண்டது கொண்டு காணுத முன்நிகழ்ச்சி கேட்டறிதற்பாலதாதலின் கேட்டு என்றார்.

எல்லையில்லாப் பெரும் புகழார் - *நாயன்மார்களிருவரின் புகழ்கள் எல்லையில்லாதன. மறைகள் ஓதவல்ல புகழும், இறைவன் திருவாக்கினையே தமது திருவாக்காகக்கொண்டு செயல் புரியும் புகழும். சரித நிகழ்ச்சி குறித்தது. ஆளுடைய பிள்ளையார் புராணம் 591 - 592 திருப்பாட்டுக்களில் ஆசிரியர் இக்கருத்தையே விரித் தருளுவது காண்க.* 266

1532. *ஆங்கப் பரிசை யறிந்தருளி யாழித் தோணி புரத்தரசர்*
*"ஓங்கு வேத மருச்சனைசெ யும்பர் பிரானை யுள்புக்குத்*
*தேங்கா திருவோ நேரிறைஞ்சத் திருமுன் கதவந் திருக்காப்பு*
*நீங்கப் பாடு மப்பர் !;" என நீடுந் திருநா வுக்கரசர்,* ௨௬௭

1533. *உண்ணீர் மையிறுற் பிள்ளையா ருரைசெய் தருள வதனாலே*
*"பண்ணி னேரு மொழியா" ளென் றெடுத்துப் பாடப், பயன்றுய்ப்பான்*
*றெண்ணீ ரணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்கத், திருக்கடைக்காப்*
*"பெண்ணீ ரிரக்க மொன்றில்லீர்" என்று பாடி யிறைஞ்சுதலும்.*

1534. *வேத வனத்தின் மெய்ப்பொருளி னருளால் விளங்கு மணிக்கதவங்*
*காத லன்பர் முன்புதிருக் காப்பு நீங்கக், கலைமொழிக்கு*
*நாதர் ஞான முனிவருடன் றொழுது விழுந்தார்; ஞாலத்துள்*
*ஓத வொலியின் மிக்கெழுந்த தும்ப ரார்ப்பு மறையொலியும்.* ௨௬௯

1532. (இ - ள்) ஆங்கு அப்பரிசை அறிந்தருளி - *அங்கு அத்தன்மையினை அறிந்தருளி;* ஆழித் தோணிபுரத்து அரசர் - *கடல் வெள்ளத்தின் மிதந்த திருத் தோணிபுரத்து அரசராகிய ஆளுடையபிள்ளையார்;* "அப்பர் !" - *அப்பரே !;* "ஓங்கு... பாடும்" என - *ஓங்கும் வேதங்கள் அருச்சித்த தேவதேவராகிய பெருமானைக் கோயிலினுட்புகுந்து தடையில்லாமல் நாமிருவோமும் நேர்வாயிலில் வணங்குதற்பொருட்டு, திருமுன்பு உள்ள கதவம் திருக்காப்பு நீங்கும்படி பாடியருளுவீராக !" என்று கூற;* நீடும் திருநாவுக்கரசர் - *புகழால் நீடும் திருநாவுக்கரசர் பெருமானும்,* ௨௬௭

1533. (இ - ள்) உள் நீர்மையினால் பிள்ளையார் உரை செய்தருள - *ஆளுடைய பிள்ளையார் அன்பின் தன்மையினுல் இவ்வாறு உரைத்தருளினாராக;* அதனாலே - *அது பற்றி;* "பண்ணின் நேரும் மொழியாள்" என்று எடுத்துப்பாட - *"பண்ணினைப் பொருந்திய மொழியாள்" என்று தொடங்கிப் பாடவும்;* பயன் துய்ப்பான் தெண்ணீர் அணிந்தார் திருக்கதவம் நீக்கத் தாழ்க்க - *அப்பதிகப் பாடலின் பயனை அனுபவிக்கும் பொருட்டுத் திருக்கதவத்தைத் திருக்காப்பு நீக்கித் திறப்பதனைத் தாழ்க்க;* திருக்கடைக் காப்பு...இறைஞ்சுதலும் - *திருக்கடைக் காப்பிலே "எண்ணீர்! இரக்கமொன்றில்லீர் !" என்று பாடி இறைஞ்சின வளவில்,* ௨௬௮

1534. (இ - ள்) *வெளிப்படை. வேதாரணியத்தில் விளங்கும் மெய்ப்பொருளாகிய இறைவரது திருவருளினாலே, விளக்கமுடைய மணிக்கதவமானது, காதலுடைய அன்பர்களின் முன்பு திருக்காப்பு நீங்கவே, கலைமொழிக்கு வேந்தராகிய நாயனார் ஞானமுனிவராகிய பிள்ளையாருடன் தொழுது விழுந்து பணிந்தார்;உலகில் கடலோசையினும் தேவர்களது ஆரவாரிப்பும் வேதவொலியும் கூடி மிக்குமேல் எழுந்தது.* ௨௬௯

*இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.*

1532. (வி - ரை) பரிசு - தன்மை; முன்பாட்டிற் கூறியபடி கேட்டறிந்த அத் தன்மை.

தோணிபுரத்தரசர் - எனத் - திருநாவுக்கரசர் (1532) - பாட, - தாழ்க்கப் - பாடி இறைஞ்சுதலும் (1533), அருளால்-மணிக்கதவம் - காப்பு நீங்க,-நாதர்-உடன்தொழுது விழுந்தார்; ஆர்ப்பும் - ஒலியும் - மிக்கெழுந்தது (1534) என்று இந்த மூன்று பாட்டுக்களையும் கூட்டி முடிக்க.

ஓங்கு வேதம் - இறைவன் திருவாக்கு என்ற பெருமையால் ஓங்கும் வேதம். உரத்த ஒலியில் சத்திக்கும் வேதம் - முதனூலாக மேம்பட்ட வேதம் என்றலுமாம்.

தேங்குதல் - தடைபட்டு நிற்றல். நேர் - நேர்வாயிலின் வழி.

அப்பர் - அப்பரே! பெயரியல்பில் வந்த அண்மை விளி. பிள்ளையார் சீகாழியில் தாம் இட்டு அழைத்த அந்தப் பெயரையே கொண்டு(1447)இங்கும் விளிக்கின்றார். அப்பராதலின் நீர்தாம் முன்னர்க் கதவு திறக்கப் பாடவேண்டும் என்பது குறிப்பு. ஞானமுண்ட பிள்ளையார் அங்கு உடன் எழுந்தருளி யிருந்தாராதலின் நாயனார் தாமே அதனை முற்படத் துணிந்தாரலர்; அதனை அறிந்தே பிள்ளையாரும் இவ்வாறு நாயனாரை நோக்கி யருளினார் என்பது மேல்வரும் பாட்டில் "பிள்ளையார் உரை செய்தருள அதனாலே" என்று ஆசிரியர் எடுத்துக்காட்டுவதனாலும் துணியப்படும். பிள்ளையார் இவ்வாறு அருளிச்செய் திராவிடில் நாயனார் அவரையே இது செய் தருளும்படி வேண்டி விடுத்திருப்பர் என்பதும் கருத்து.

நீடும் - புகழினாலும் அடிமைத்திறமுடைய அன்பினாலும் நீடும்.

தோணிபுரத்தரசர் - திருநாவுக்கரசர் என இருவரையும் அரசர்கள் என்று ஒப்பக் குறிப்பிட்ட குறிப்புப்பற்றி முன் (1529) உரைக்கப்பட்டது. 267

1533. (வி - ரை) உள் நீர்மை - நாயனார்பால் உள்ளத்திற்கொண்ட தந்தையாக் கண்ட அன்பின் திறம். இது ஆளுடையபிள்ளையார் புராணம் - 271, 493 பாட்டுக்களாலும் பிறவற்றாலும் அறியப்படும்.

அதனாலே - பிள்ளையார் தம்பாற்கொண்ட அன்பின் திறத்தால் உரைசெய்தருளியதனை மறுக்கமாட்டாமையினாலே.

"பண்ணின் நேரும் மொழியாள்" என்று - இது பதிகத் தொடக்கம். பண் - தமிழுக்குச் சிறப்பாயுரியதோர் இசையமைதி. பெண்களின் மிடற்றொலியின் இயல்பாயமைவதென்ப. பண் அமைதிகளையும் இலக்கணங்களையும்பற்றி 221-ன்கீழ் உரைத்தவை பார்க்க. பண்ணின்நேர் மொழியாள் - என்றது அத்தல அம்மை பெயருக்கு நாயனார் விரித்த பொருள். அம்மை பெயர் யாழைப்பழித்த மொழியம்மை என்பதனை இக்கருத்தே பற்றி ஆளுடைய நம்பிகள் "யாழைப்பழித் தன்னமொழி மங்கையொரு பங்கன்" என்று தமது தேவாரத்தின் எடுத்த திருப்பாட்டில் வைத்துப் பாராட்டியிருத்தலும் காண்க.

எடுத்துப்பாட - எடுத்து - தொடங்கி; அம்மையாரின் மொழிநீர்மையைத் தேற்றமாக எடுத்து என்றதும் குறிப்பு.

பயன் துய்ப்பான் - பாட்டினால் கினைவூட்டிக் குறிக்கப்பட்ட பயனாகிய அம்மையாரின் மொழியினது பண்ணின்பத்தை அனுபவிக்க. பயன் துய்ப்பான் - தாழ்க்க, என்று கூட்டுக. யாழைப்பழித்த மொழியாள் என்ற எதிர்மறைப் பொருள் குறித்த பெயரை, யாழைப் பழித்த தாயின், எதனை நேர்வது? எதனைக் கொண்டதென்னின், ணின் நேர்வது என்று பண்ணின் நேர் - மொழியாள் என உடன்பாட்டு முகத்தால் விளக்கியது நாயனாரது திருப்பாட்டு. அதன்பயன் - அக்குறித்த பொருளை முன்

வைத்தல். பயன் துய்ப்பான் - அப்பரின் தமிழ்ச்சுவையை அருந்துதற் பொருட்டு என்றுரைப்பாருமுளர். அது நாயனாரது பாடல்களெல்லாவற்றுக்கும் பொதுவிலக்கண மாதலின் ஈண்டைக்குச் சிறப்பின் றென்க. கதவு தாழிட்டு உள்ளே உணவுண்பான், இடையில், வெளியே நின்று கதவு திறக்குமாறு ஒருவன் கூவுவானாயின், உண்ணு மிடையில் அதனை விட்டுக் கதவு திறக்கத் தாழ்க்கும் உலகியல்பு பற்றி எழுந்த உபசாரத்தால் கூறியது.

தெண்ணீர் - தெளிந்த நீரையுடைய கங்கை. "தேசுடைத் தெனினுந் தெளி வில்லதே" (58) என்றபடி ஏனை ஆறுகளில் நீர் பெருக்குக்காலத்தில் கலங்கிவருவது போலன்றி, வேனிற்காலத்தில் இமயத்தின் பனிக்கட்டிகள் உருகி வருதலினால் தெளிந்து பெருகும் கங்கையாற்றின் சிறப்பியல்பு குறித்தது.

திருக்காப்பு நீக்கத் தாழ்க்க - நீக்க - நீக்குதலைச் செய்ய; காப்பு நீக்குதல் - திறத்தல். மறைகளாற் பூசிக்கப்பட்டுக் காப்பிடப்பட்டதனை நீக்கித் தம்மை வெளிப் படுத்துதல்.

திருக்கடைக்காப்பு - இறுதிப்பாட்டு, பதிகத்தை முடித்துக் கூறுவதனால் காப்பு எனப்படுவது மரபு.

"எண்ணீர் இரக்கம் ஒன்றில்லீர்" என்று - இது திருக்கடைக்காப்பின் கருத் தும் குறிப்புமாம்.

இறைஞ்சுதலும் - இறைஞ்சினவுடன். "இரக்கமில்லீரே" என்று பாடியதுடன் "கதவம் திறப்பிம்மினே" என்று விண்ணப்பமும் செய்து பணிந்தனர் என்க.

இரக்கமில்லிரே—என்பதும் பாடம்.　　268

1534. (வி - ரை) மெய்ப்பொருள் - பூட்டிய இறைவரது வேதமும், திறப் பித்த தமிழ் வேதமும் ஒரே உண்மைப் பொருளைக் கூறுவன என்று யாவரும் கண்டுய் யும்படி காட்டுவதனால் மெய்ப்பொருளின் அருளால் என்றார்.

அன்பர் - அன்பர்களாகிய இரு பெருமக்களுடைய. காதல் - "தேங்கா திரு வோம் நேரிறைஞ்ச" என்று கொண்ட ஆர்வத்தின் மிகுதிப்பாடு.

கலைமொழிக்கு நாதர் ஞான முனிவருடன் - அரசுகள் திருப்பாடலினால் கதவம் திருக்காப்பு நீங்கப் பாடியதனாலும், முன்னின்று பாடிய அவர் அக்காட்சியை முன்னர்க் காண்ப தியல்பாதலானும், நாயனாரை முன்வைத் தோதினார். தொழுதலும் விழுதலும், பின்வரும் பாட்டிற் கூறும் எழுந்து உள்புகுதல் முதலாயினவும் இருவர் பாலும் ஒக்க நிகழ்ந்தனவாதலின் ஞானமுனிவருடன் என உடனிகழ்ச்சிப் பொருள் பற்றிவந்த உடன் உருபு புணர்த்தி ஓதினார். உடனிகழ்ச்சியாயினும் இது நாயனார் புராணமாதலின் ஞான முனிவருடன் நாதர் என்னாது நாதர் முனிவருடன் என் றருளினார்.

தொழுது விழுந்தார்-"தொழுதெழுவாள்" என்புழிப்போலத் தொழுதுகொண்டே விழுந்தார் என்ற பொருளில் வந்தது.

ஞாலத்துள் - உம்பர் ஆர்ப்பும் மறை ஒலியும் - மிக்கு எழுந்தது - என்க. புவனியில் வந்து வணங்குவார் தேவர்; அவர் ஆர்த்தனர்; மறைக்காடாதலின் அங்கு என்றுமுள்ள மறை ஒலி, எந்நாளினும் மிக்கு, அன்று எழுந்தது; ஞாலத்துள் ஓத வொலி என்றது இத்தலத்தின் அருகே கரையில் முழங்கும் கடல் ஒலி என்ற குறிப் பாகும். ஆர்ப்பும் ஒலியும்கூடிய சத்தமாதலின் எழுந்தது என ஒருமையாற் கூறினார்.

தோணிபுரத்தரசர் - நாவரசரை நோக்கிக் கூறியதும், அதனாலே, அரசுகள் "இரக்கமில்லீரே" என்று பாடி யிறைஞ்சுதலும், பதிக முற்றியபின் வேதவனநாதர்

அருளால் கதவம் திறப்பதும், தனித்தனியாகப், பிள்ளையார்- அப்பர் - இறைவர் என்ற மூவர் செயல்களாயினும், தொடர்ந்து நிகழ்ந்தமையால் இந்த மூன்று பாட்டுக் களும் அவ்வச் செயல்களைத் தனித்தனி கூறினும் தொடர்ந்து முடிக்க வைத்த தெய்வக் கவிநலம் கண்டு களிக்க. இத்தொடர்ச்சியின் வினை முடிபின் நீட்டிப்புப் பதிகம் பாடி முடியும்வரை கதவம் நீங்கத் தாழ்த்த காலநீட்டிப்புக் கியைய நிற்ப தாகிய சொல்லும் பொருளும் ஒத்தியையும் அமைதியும் கண்டுகொள்க. 269

திருமறைக்காடு

I *திருச்சிற்றம்பலம்*

திருக்குறுந்தொகை

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ, மண்ணி னூர்வலஞ் செய்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத், திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே.

வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தரோ, அந்த மில்லி யணிமறைக் காடரோ,
வெந்தை நீயடி யார்வந் திறைஞ்சிட, விந்த மாக்கத வம்பிணி நீக்குமே. 7

அரக்க னைவிர லாலடர்த் திட்டநீ, ரிரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ, சரக்க விக்கத வந்திறப் பிம்மினே. 11

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—பண்ணினேர்மொழியாள் பங்கரே! கண்ணினால் உம்மை நாங்கள் நேரே வந்து காணவும், அடியார் வந்து இறைஞ்சவும் இந்தக் கதவின் பெரும் பிணிப்பை நீக்கித் திறப்பித் தருள்செய்மின்!

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பண்ணின் நேர் மொழியாள் உமை - இதன் பயன் துய்த்ததனால் இறைவர் கதவந் திறத்தலைத் தாழ்த்தனர் என்று ஆசிரியர் அறிவிக்கின்றனர். பங்கரோ! - ஒகாரம் விளிவேற்றுமை உருபு. இப்பதிக முழுதும் இவ்வாறே காண்க. கண்ணுற் கண்டு விளிக்க இயலாதவண்ணம் கதவம் காப்பிடப்பட் டிருந்தமையின் சேய்மை விளியாக ஒகாரத்தால் விளித்தார். ஏகாரம் அண்மை விளி யுருபாய் வருவது பொதுவிதி. கண்ணினால் - அகக்கண்ணினாற் கண்டுகொண்டிருப்பி னும் புறக்கண்ணினாலும். நோக்கிக் காண (6) என்பதுமிது. காண - நேர்வாயிலிற் காண. திண்ணமாக - வலிமை பொருந்த ; திறம்பட. திறமும் வலிமையுமாவது மறைகளின் மந்திரக் காப்பினைத் திறத்தல். மேல்வரும் திருப்பாட்டுக்களில் நீண்ட மாக்கதவின் வலி (2) ; பெரிய வான் கதவம் (4) ; தொலைவிலாக் கதவம் (5) ; மாக் கதவம் (7) ; மாறிலாக் கதவம் வலி (8) என்பனவும் இக்கருத்து.—(2) முகிலின் முறிக் கண்டர் - முகிலின் கொழுந்துபோலும் அழகிய கண்டத்தை உடையவர். முறி - தளிர் - கொழுந்து. "முறிமேனி" (குறள்). "இலையே முறியே தளிரே தோடே" (தொல் - பொ - மரபி - 37) ; ஆண்டுகொண்ட நீரே - எங்களை ஆளாகக்கொண்டமை யால் நீர்தாமே. ஏகாரம் - தேற்றம். பிரிநிலையுமாம். அருள் செய்து - இடும் - அதன் வலி நீக்கும் எனப்பிரித்து முடிக்க. அருள்செய்து-இரங்கி.—(3) சுவண்டர் - சிறப்பு அடையாளமாக உடையவர். சுவண்டு - அடையாளம்.சுவடு என்பது சுவண்டு என வந்ததுபோலும் ? "சுடலைவெண் பொடியணி சுவண்டர்" (பிள்ளையார் தேவா - தெங்கூர் - 6) ; "சுந்தரராய்த் தூமதியஞ் சூடுவது சுவண்டே" (நம்பிகள் தேவா). 4-வது 9-வது திருப்பாட்டுக்களிலும் இவ்வாறே கொள்க. சட்ட - "செப்பமுணர்த்தி நிற்பதோர் அகரவீற் றிடைச்சொல் ; அது சட்டமென இழிவழக்கின் மகரவீறாய் மரீயிற்று" (சிவஞானபோதச் சிற்றுரை - 9 - 2). பட்டம் - தாமே தலைவர் என்ற அடையாளம். இறைவரது சென்னியில் வைத்திருக்கும் பிறை - கங்கை - நகுசிரம்

முதலாயின ஒவ்வொன்றும் அவரது முழுமுதற் றன்மையை விளக்குவன. பட்டம் - பட்டம்போன்ற பொருள்கள். உருவகம். பட்டம்போன்ற திரிபுண்டரமாகிய திருநீறு என்றலுமாம். ''பட்டநெற்றியர் (பிள்-தே).—(4) விரிகோள் கோவண ஆடை - இறைவரது கோவணம் மறைகள்; அவை அனந்தமாகப் பரந்துள்ளனவாதலின் விரிகோள் என்றார். "தவநி றைந்தநான் மறைப்பொரு ணூல்களாற் சமைந்த, சிவன்விரும்பிய கோவணம்" (540). பெரிய - வேதங்கள் பூசித்துக் காப்பிட்ட பெருமையுடைய.—(5) தொலைவிலா - வேறெப்பரிசினாலும் காப்பு நீக்க முடியாத. துணை - பிணிப்பு. பிணி நீக்குமே (7) என்பது காண்க.—(6) தாழை - நெய்தற் கருப்பொருள். புறணி - நெய்தற் புறவு - சுற்றிடம். ஆர்க்கும் காண்பரியீர் - உமது வேதங்களாற் காட்டும்படிக்கன்றி என்க. நோக்கி - நேர் நோக்கி.—(7) அடியார் வந்திறைஞ்சிட - மருங்கு வேறு ஒரு வாயில்வழியா னன்றி நேர்வாயிலாகிய இதன் வழியே வந்து வணங்க (1531.) நாயனார் செய்த இவ்விண்ணப்பம் தம் பொருட்டேயன்றி அடியார்களின்பொருட்டா மென்பது. இனி எக்காலத்தும் வந்து வணங்க என்க. 1538பார்க்க.இந்த-கதவின்முன்புநின்றுபாடியதால்அணிமைச் சுட்டாற் கூறினார். பிணி-பிணிப்பு-காப்பு. நேர்வழி திருக்காப்பிட்டிருப்பதனால் அடியார் உள்ளத்தில் இக்கதவின்பொருட்டு உளதாகும் பிணிபோன்ற வருத்தம் என்பதும் குறிப்பு.—(8) மாறுஇலா-ஒப்பற்ற. பெரிய வான் கதவம் என்ற கருத்து.—(10) இப்பாட்டு முன் பதிப்புக்களிலெல்லாம் "ஓதமால் கடலில்" என்று தொடங்கும் இத்தலத்துத் திருக்குறுந்தொகை மற்றொரு பதிகத்தில் 7-வது திருப்பாட்டாகப் பதிக்கப்பட்டுளது. அடிக் குறிப்புப் பார்க்க.—(11) இரக்கமொன்றிலீர் - அரக்கனை விரலாலடர்த்தமைக்கும், பதிகம் பாடிப் பத்துப்பாட்டிலும் கதவம் திறக்கும்படி விண்ணப்பம் செய்தும் அருள் செய்யாமைக்கும் பொருந்திய உட்குறிப்புடன் அருளியது. இவ்வுள்ளக் கருத்தினை ஆசிரியர் "எண்ணீர் இரக்கமொன்றில்லீர் என்றுபாடி" (1533) என்றருளினர். சுரக்கும் புன்னைகள் - வழிபோவார்க்கு நிழலும் மணமும் தருவன உமது பதியின் புன்னைகளும். ஆயின் நீர் இரங்காததென்? என்ற குறிப்பு. சுரக்கும் - அருள் சுரக்கும். "கடலோதமுன் சூழ்ந்துகொண் டணிய, வழிக் கரைப்பொதிப் பொன்ன விழ்ப் பனமலர்ப் புன்னை" (1113) என்ற கருத்தும் காண்க. சரக்க - விரைவாக. திறப்பிம்மினே-முன்னர்த் திறந்தருள் செய்ம்மின் (1) வலி நீக்குமே (2) திறவுமே (6) என்று தன்வினைச் சொல்லாற் கூறினார். இங்கு இறுதியாகத் திறப்பிம்மின் என்று பிறவினை முடிபாற் கூறுகின்றார். நீரே செய்தருளா விடினும் உமது எண்ணிறந்த கணங்களுள் ஒருவரால் இதனைச் செய்து வைப்பீர் என்ற கருத்து.

குறிப்பு:—இப்பதிகத்தில் முன்பதிப்புக்காரர்களெல்லாம் ஏடுகளிற்கண்டவாறு 10 பாட்டுக்களே பதித்தனர். "அரக்கனை விரலால்" என்றது அவற்றுள் பத்தாவதாகிய இறுதிப் பாட்டாகக்கொண்டனர். ஆனால்,இது திருக்கடைக்காப்பு என்று இங்கு ஆசிரியர் கூறியதனோடு, பதிகத்தின் பதினொன்றாவது பாட்டு என்றும் பின்னர்க் காட்டுவர். ''பாடியவப் பதிகப்பாட் டான பத்தும் பாடனிரம் பியபின்னும் பைம்பொன் வாயிற், சேடுயர்பொற் கதவுதிருக் காப்பு நீங்காச் செய்கையினான் வாகீசர் சிந்தை நொந்து, நீடுதிருக் கடைக்காப்பி லரிதுவேண்டி நின்றெடுக்கத் திருக்கதவு நீங்கிக் காட்ட" (திருஞான-புரா - 582) என்றதனால் இப்பதிகம் பதினொரு பாட்டுக்கொண்ட தென்பது துணிபு. "விண்ணுளார்" என்ற பாட்டு இப்பதிகக் கருத்தினையே கொண்டது. முன் பதிப்புக்களில் அதனை ''ஓதமால் கடல்'' (குறுந்தொகை) என்ற பதிகத்தில் 7-வது பாட்டாகக்கொண்டுவந்தனர். அதன் சொற் பொருள் இடம்முதலிய அமைதிகளாலும், ஆசிரியரது குறிப்பாலும் இப்பதிகத்துச் சேர்க்கவென்று துணிக்க [illegible]

நூற்பதிப்புக்கழகத்தார் பதிப்பில் இப்பதிகத்துள் 10-வது பாட்டாக அமைத்துள்ளனர். ஏடுகள் எழுதியோர், இப்பதிகத்துள் 11 பாட்டுக்களும், "ஓதமால் கடல்" என்றதில் 9 பாட்டுக்களுமாக இருத்தல் கண்டு இதனுள் ஒரு பாட்டை எடுத்து அதிற்சேர்த்து நாயனாரது ஏனைப் பதிகங்கள்போல இரண்டையும் பப்பத்தாக நிரவிவிட்டனர்போலும்!

தலவிசேடம் - பின்னர் 1555-வது பாட்டின் கீழ்க் காண்க.

1535. அன்ப ரீட்டங் களிசிறப்ப வாண்ட வரசுஞ் சிவக்கன்றும்
இன்ப வெள்ளத் திடைமூழ்கி யெழுந்துள் புகுந்து தம்பெருமான்
முன்பு பணிந்து போற்றிசைத்துப் பரவி மொழிமா லைகள்பாடி
யென்பு கரைய வுள்ளுருகி யிறைஞ்சி யரிதிற் புறத்தணைந்தார். உ௱௦

(இ - ள்) வெளிப்படை. அன்பர்களது கூட்டமானது பெருங்களிப்படைய, ஆளுடைய அரசுகளும் ஆளுடைய பிள்ளையாரும், பேரின்பப் பெருக்கில் திளைத்து எழுந்து உள்ளேபுகுந்து தமது பெருமானுடைய திருமுன்பு பணிந்து போற்றித் துதித்துத் திருப்பதிகங்களையும் பாடி, எலும்பும் கரைய, மனமுருகிப் பணிந்து அங்குநின்றும் அரிதாக நீங்கிக் கோயிலின் புறத்தே அணைந்தார்கள்.

(வி - ரை) ஈட்டம் - கூட்டம். ஈண்டுதல் - கூடுதல். அம் - தொழிற் பெயர் விகுதி. ஈண்டுதலால் உளதாவது கூட்டம்.

களிசிறப்ப - சிறப்ப என்பது மிகுதியாய் உளதாகும் நிலை குறித்தது.

சிவக்கன்று - ஆளுடைய பிள்ளையார். கன்று - இளமையும் மகவின் பொதுமையும் குறித்தது; உபசாரம். அரசும் சிவக்கன்றும் - என்று அரசுகளை முன் வைத்தோதினமைபற்றி "மொழிக்கு நாதர் ஞான முனிவருடன்" என்ற முன்பாட்டில் உரைக்கப்பட்டது காண்க.

இன்ப வெள்ளம் - உருவகம்; பெருக்குக் குறித்தது.

எழுந்து - முன்பாட்டிற் கூறிய "தொழுது வீழ்ந்தார்" என்ற நிலையினின்றும் எழுந்து. வெள்ளத்தில் மூழ்கி மேல் எழுந்து என்ற பொருளும் படநின்றது. தொழுது விழுந்த நிலையில் சிலநேரம் நீடித்திருந்தமையால் தொடர்ந்து கூறாது முன் பாட்டில் விழுந்தார் என வினைமுற்றாக முடித்துக் கூறி, இப்பாட்டில் மீளத் தொடங்கினர்.

முன்பு - திருமுன்பு; சந்நிதானத்தில். பணிந்து - அவ்விடத்திற் கேற்குமாறு மூன்றங்கங்களாற் பணிந்து என்க.

போற்றிசைத்துப் பரவி - போற்றுதல் - துதிகளைச் சொல்லுதல். பரவுதல் - பலவாறும் புகழ்தல்.

மொழிமாலைகள் - இரு பெருமக்களும் பாடியதனாற் பன்மையாற் கூறினர். இம்மாலைகள் இன்னவை என்று பிரித்து அறியக்கூடவில்லை. நாயனாரது தேவாரங்கள் இப்போது கிடைப்பனவற்றுள் "ஓதமால்கடல்" என்ற திருக்குறுந்தொகை அப்போது திருமுன்பு அருளப்பட்டிருத்தல் கூடுமெனக் கருத இடமிருத்தலின் இதன் கீழ்க் குறிக்கப்படுகின்றது. எழுதல் - பணிதல் - போற்றுதல் - பாடுதல் - என்பு கரைதல் - உள்ளுருதல் - இறைஞ்சுதல் - என்ற இவை எல்லாம் இரு பெருமக்களும் அப்போது செய்த வழிபாட்டின் அங்கங்கள். இறைவர் செய்த பேரருட்டிறம் நோக்கி இத்தனையும் செய்தனர் என விரித்துக் கூறினர். இறைவர் தமது திருவாக்கே இப்பெரியார்களது திருவாக்கு ஆகும் என்று உலகத்துக்குக் காட்டிய தன்மையினால் இதனை வியந்து ஆசிரியர் பின்னர் ஆளுடைய பிள்ளையார் புராண (592) த்தினுள் பாராட்டுதல் இங்குக் கருதத் தக்கது.

இறைஞ்சி - வழிபாடு முடிந்து புறம்போதும் போது பணிதல் குறித்தது.

அரிதில் புறத்து அணைந்தார் - திருமுன்பி னின்றும் நீங்கலரிய நிலைமையால் நீங்கிக் கோயிற் புறத்து எழுந்தருளினர். 270

II திருச்சிற்றம்பலம்  திருக்குறுந்தொகை

ஓத மால்கடல் பாவி யுலகெலா, மாத ரார்வலஞ் செய்மறைக் காடரோ,
காதல் செய்து கருதப் படுமவர், பாத மேத்தப் பறையுநம் பாவமே. 1

பூக்குந் தாழை புறணி யருகெலாம், ஆக்கந் தானுடை மாமறைக் காடரோ,
ஆர்க்குங் காண்பரி யீரடி யார்தம்மை, நோக்கிக் காண்பது நும்பணி செய்யிலே.

அட்ட மாமலர் சூடி யடம்பொடு, வட்டப் புன்சடை மாமறைக் காடரோ,
நட்ட மாடியு நான்மறை பாடியும், இட்ட மாக விருக்கு மிடமிதே. 3

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—மறைக்காடரோ! உம்மை அடியார் நோக்கிக் காண்பது நும் பணி செய்யிலே; பிறர் ஆர்க்கும் காண்பரியீர்; நீர் இட்டமாக இருக்கும் இடம் இது; கங்கையைச் சென்னியில் வைத்து அங்கையில் அனலேந்துதல் உமக்கு அழகிதே.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) ஓதமால் கடல் பாவி - கடற் கரையி னூற் பரந்து சூழப்பட்டு. காதல் செய்து கருதப்படுமவர் - விருப்ப மிக்க அடியார்.—(2) தம்மை - உம்மையுடனூந்தம்மை அடியார் காண்பது என்க.—(3) சின்ன வேடம் - கூறிட்ட வேடம்.—(4) அடம்பு - மலர். கொடி வகையுள் ஒன்று.—(5) பைதல் - இளையது. கவர்புன்சடை - நுனிபிளந்த சிறுசடை. பிறைபாம்புடன் வைப்பதே - பகைமையுடைய பொருள்களை உடன் வைத்தல் அழகிதா? தக்கதா?. வினு அன்று என மறுதலை குறித்தது.—(6) துஞ்சும் போதும் - உறங்கும் போதினும். உம்மை சிறப்பு. வஞ்சு - வஞ்சம். நடலை.—(7) (சைவ சித்தாந்தப் பதிப்பு). ஏனைப் பதிப்புக்களில்இஃது 8-வது பாட்டாக உள்ளது. திருவினூர் செல்வம் - திரு - முத்தித் திரு; ஆர் - பொருந்திய; திருவின் ஆர் - பிறிதி னியைபு நீக்கிய விசேடணம். மங்கை ஓர் பாகமாய் - மங்கை ஒரு பாகமாகியும். உம்மை தொக்கது. ஒரு பாகத்துத் தேவி யிருப்பவும் கங்கையைச் சென்னி வைத்தல் தக்கதோ என்பது குறிப்பு.—(8) கங்கை சேஞ்சடை வைப்பதும் - அங்கையில் அனல் ஏந்தலும் அழகிதே - ஒன்றற்கொன்று பகையாகிய நீரினையும் தீயினையும் ஒப்பத் தாங்குதல் தக்கதா? ஏகாரம் வினு. எதிர்மறைக் குறிப்பு. மங்கைக்கு மறைவாகச் சடையுள் கங்கையை வைத்தும் அவ்வொழுக்க மில்லார்போலக் கையில் தீ ஏந்துதல் என்ற குறிப்புப்பட நின்றது. 5, 6, 7, 8 திருப்பாட்டுக்கள் அகப் பொருட் சுவைபட அமைந்தன. "இரங்கல் நறு நெய்தல்" என்றபடி தனித் திருந்த தலைவி பிரிவு ஆற்ருமையின் இரங்கிக் கூறியது போலக் கூறியன. நெய்தற்குரிய உரிப்பொருள்பட நின்றன.

குறிப்பு:—மறைக்காடரோ! - நும் - இடம் இதே - முதலிய குறிப்புக்களால் இப்பதிகம் கதவந் திறந்தபின் திருமுன்பு பாடப்பட்ட தென்று கருதப்படும்.

1536. புறம்பு நின்று வாகீசர், புனித ரருளா லிக்கதவந்
திறந்து மடைத்துஞ் செல்லுநெறி திருந்த மலையா டிருமலையிற்

கறந்த ஞானங் குழைத்தமுது செய்த புகலிக் கவுணியரை,
"நிறைந்த கதவ மடைக்கும்வகை நீரும் பாடி யருளு" மென, ௨௭௧

1537. சண்பை யாளுந் தமிழ்விரகர் தாமுந், திருநா வுக்கரசர்
பண்பின் மொழிந்த வுரைகொண்டு, பதிகம் பாடு மவ்வளவிற்,
கண்போற் பமைந்த நுதற்காள கண்ட ரருளாற் கடிதுடனே
திண்பொற் கதவந் திருக்காப்புச் செய்த தெடுத்த திருப்பாட்டில்.

1536. (இ - ள்) புறம்பு நின்று - முன்பாட்டிற் கூறியபடி திருவாயிற் புறத்து அணைந்து நின்று; வாகீசர் - திருநாவுக்கரசர்; புனிதர் அருளால் இக்கதவம் திறந்தும் அடைத்தும் செல்லும் நெறி திருந்த - இறைவரது திருவருளினாலே இந்தக் கதவம் திறந்தும் அடைத்தும் வழங்கும் நெறியில் திருந்துக! என்று திருவுள்ளங் கொண்டு; மலையாள் திருமுலையில் கறந்த ஞானம் குழைத்து அமுது செய்த புகலிக் கவுணியரை- பார்வதியம்மையாரது திருமுலையிற் கறந்தருளிய பாலிற் சிவஞானங் குழைத்து அமுதுண்ட சீகாழியில் அவதரித்த கவுணியராகிய பிள்ளையாரை நோக்கி; "நிறைந்த கதவம் அடைக்கும்வகை நீரும் பாடி அருளும்" என - அருளால் நிறைந்த இக்கதவம் அடைக்கும் வகையினை நீரும் பாடியருளுக" என்று சொல்ல, ௨௭௧

1537. (இ - ள்) சண்பை...பாடுமவ்வளவில் - சீகாழித் தலைவராகிய தமிழ் விரகராகிய ஆளுடைய பிள்ளையாரும், திருநாவுக்கரசர் அப்பண்பினால் மொழிந்தருளிய உரையினால், அவ்வாறே பதிகம் பாடும் அந்த அளவில்; கண் பொற்பு ...அருளால் - கண்ணினது அழகு அமைந்த நுதலினையுடைய திருநீலகண்டருடைய திருவருளினால்; கடிது - உடனே மிக்க விரைவாக; எடுத்த திருப்பாட்டில் - பதிகம் தொடங்கிய முதற் றிருப்பாட்டிலே; திண்பொற் கதவம் திருக்காப்புச் செய்தது - திண்ணிய அழகிய கதவம் திருக்காப்பிட்டது. ௨௭௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1536. (வி - ரை) புனிதர் அருளால் இக்கதவம் திறந்தும் அடைத்தும் செல்லும் நெறி திருந்த - இது நாயனார் திருவுள்ளத்திற் கருதியது. திருந்த - திருந்துக என்று எண்ணி. என்று எண்ணி என்பது இசை எச்சம்.

திறந்தும் அடைத்தும் செல்லும் நெறி - முன்பு அடைத்தது அடைத்தபடியே இருந்தது போல, இப்போது திறந்தது திறந்தபடியே இருந்து விடாமல் வழங்கும் வழக்கம். செல்லும் - வழங்கும்.

நெறி - நெறி தருதற்பொருட்டு என்று உரைத்துக்கொண்டு, திருந்த என்பதனை அமுதுசெய்த என்பதனுடன் கூட்டி உலகு திருந்த அமுதுண்ட என்று கூட்டி உரைத்தலுமாம்.

மலையாள் - இமயமலையரசனுக்கு மகளானவர். பார்வதி.

கறந்த ஞானங் குழைத்து - பால் என்றது தொக்கிநின்றது. கறந்த - கறந்த பாலில் என்க. ஞானம் - சிவஞானம்.

ஞானம் குழைத்தமுது செய்த - சிவஞானமுண்டருளிய திறத்தால் அந்த ஞானத் திருவாக்கு இறைவரது வாக்காகிய மறைகள் திருக்காப்பிட்டமைபோலச் செயல்புரிய வல்லதாம் என்ற உட்குறிப்புப்பெற இத்தன்மையாற் கூறினார்.

கவுணியர் - கவுணியர் குலத்து உதித்தவர்.

அடைக்கும்வகை நீரும் பாடி அருளும் - நீரும் - நீர் பணிக்க அடியேன் திறக்கப் பாடியதுபோல நீரும் என உம்மை இறந்தது தழுவியது. பாடி அருளும் - வாகீசர்



திருமறைக்காடு - முன் கோபுரம்
கோயிலும், மணிகர்ணிகைத்
தீர்த்தமும்.—பாட்டு 1528.



திருவீழிமிழலை - முன் கோபுரம்.
பாட்டு - 1516





திருவீழிமிழலை.

திருஞானசம்பந்தர் திருமடம். அப்பர் சுவாமிகள் திருமடம்.



திருமறைக்காடு, மறைகள் பூசித்து

அடைத்த திருவாயில். — திறந்த திருவாயில்.

திருஞானசம்பந்தர் பதிகம் பாடி அடைத்த கோலம்,—பாட்டு - 1537.

அப்பர் சுவாமிகள் பதிகம் பாடித் திறந்த கோலம்,—பாட்டு - 1534.



திருப்பதிகம் பாடித் திறப்பதற்கு முன்
அன்பர்கள் சென்று தரிசிக்

பிள்ளையார்பாற்கொண்ட பத்தியைக் காட்டுவது. பிள்ளையார் "திருக்காப்பு நீங்கப் பாடும் அப்பர்!" (1533) என்றது உரிமையும் பெருமையும் காட்டிற்று. அருளும் - என்றதனால் திறந்தும் அடைத்தும் செல்லு நெறி திருந்தும்படி ஆசிபுரிந்து அருளுக என்பதும் குறித்தபடி.

நிறைந்த - இறைவன் திருவாய் மொழியாலும், எந்தம் பெருமக்கள் திருவாக்காலும் பயிலும் அருள் நிறைவுடைய. இதற்கு இவ்வாறன்றித் திறந்த என்று பொருள் கொள்வாருமுண்டு. அது பொருந்தாமையறிக.

"அருளும்" என - மொழிந்த உரைகொண்டு - தமிழ்விரகர் - பாடும் அவ்வளவில் - எடுத்த - திருப்பாட்டிற் - கதவம் - திருக்காப்புச் செய்தது - எனக்கூட்டி முடிக்க. இவ்வாறு இருபெருமக்கள் செயலும் திருவருட் செயலின் வைத்து முடித்த நயமும் காண்க.

நின்ற வாகீசர்—என்பதும் பாடம். 271

1537. (வி - ரை) தாமும் - அரசுகள் தம் உரை கொண்டுபாடியருளியது போலவே தாமும் என இறந்தது தழுவியது.

பண்பின் மொழிந்த உரை கொண்டு - பண்பாவது - முன்பாட்டிற் கூறியபடி திறந்தும் அடைத்தும் செல்லுநெறி திருந்துதல். அரசுகள் தம்பாற்கொண்ட பத்தியுரிமைப் பண்பு என்றலுமாம். உரை கொண்டு - உரையை மேற்கொண்டு. உரைத்த அதனாலே. "உரை செய்தருள அதனாலே" (1533) என்றது காண்க.

பாடும் அவ்வளவில் - பாடப்புகும் அந்த மட்டில். அப்போது அவ்வளவில் எடுத்த திருப்பாட்டில் என்று கூட்டியுரைத்தலுமாம்.

கண் பொற்பு அமைந்த நுதல் - காள கண்டர் - கண் அழகு பெற அமைந்த நெற்றி. "கண்ணிற் கணிகலம் கண்ணோட்டம்" (குறள்), "செற்றங் கனங்கனைத் தீவிழித் தான்றில்லைச் சிற்றம்பலவன், நெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே" (திருவிருத்) என்றபடி அனங்கனை எரித்த அதுவே, ஒப்ப அடியார்க் கருளுந் திறமுடைத்தாதலின் பொற்பு அமைந்த என்றார். நாயனார் வேண்டப் பத்துப் பாட்டளவும் கதவம் திறத்தல் தாழ்த்து, இரக்கமில்லீர் என்று அரிதின் வேண்டத்திறந்தும், பிள்ளையார் வேண்ட எடுத்த பாட்டில் எளிதின் அடைத்தும் இவ்வாறு இருவர்க்கும் வெவ்வேறு திறம்பட அருள் புரியும் இங்கு, இறைவரைக் "கண் பொற்பமைந்த" என்ற தென்னையோ? எனின் அவ்வத் திறத்துக்கேற்றவாறு அருள்புரியும் அதுதான் அவரது அருட்டிருநோக்கின் பெருமை என்பதறிக என்று எடுத்துக் காட்டியபடியாம். "பயன் துய்ப்பான்" (1533) என்று காட்டியகுறிப்பும், திருவீழிமிழலையில் பிள்ளையார்க்கு வாசிபடக் காசு வைத்த திருவருளும், பிறவும் இங்குக் கருதற்பாலன. இக்கருத்தைப் "பாட்டிற்கு நீயு மவனுமொப் பீரெப் படியினுமே" என்று சுவைபடக் கூறினர் சிவப்பிரகாச சுவாமிகள். இனித் தாம் பாடிய அருமையும் அவர்பாடிய எளிமையும் கருதி "நம்பர் திருவுள்ள மறியா தயர்த்தேன்" என நாயனார் நவிலும்போது இறைவர் செய்யும் அருட்டிறங்களையும் இங்குக் காண்க.

அவ்வளவில் - கடிது - உடனே - எடுத்த திருப்பாட்டில் - என்பன எல்லாம் இறைவர் கதவம் அடைப்பித்தருளிய விரைவு தோன்றக் கூறியபடி.

திருக்காப்புச் செய்தல் - அடைத்தல்; மரபு வழக்கு. எடுத்த - தொடங்கிய; முதலாகிய. முன்னர்க் காப்புச் செய்த அந்த மறைகளையே முதலாக வைத்துச் "சதுரம் மறை" என்று தொடர்ந்து எடுத்த என்பதும் குறிப்பு. பாட்டில் - பாட்டுப் பாடிய அளவில்.

எடுத்த திருப்பாட்டில் திருக்காப்புச் செய்தது - என்க. வினைமுற்றை முறை பிறழவைத்ததும் அவ்வருட் செயல் முன்னர் நிகழ்ந்துவிட்ட விரைவு தோன்றக் கூறியபடி.

திண் போற் கதவம் - "திண்ணமாக" - "திண்ணமாக் கதவம்" முதலியவை காண்க. போன் - அழகு. பொன்பூண்ட என்றலுமாம்.

மோழிந்தவருள்—திருக்காப்புக் கோண்டது—என்பனவும் பாடங்கள். 272

1538. அதுகண் டுடைய பிள்ளையார் தாமு மாண்ட வரசுமகிழ்ந்
"திதுநம் பெருமா னருள்செய்யப் பெற்றோ" மென்றங் கிறைஞ்சியபின்
பதிக நிரம்பப் பிள்ளையார் பாடித் தொழுது பணிவுற்றார்;
எதிர்போற் றிருவா யிலின்வழக்க மென்று நிகழ்ச்சி யெய்தியதால்.

(இ - ள்) அது கண்டு......இறைஞ்சிய பின் - அவ்வாறு திருவருளால் எடுத்த திருப்பாட்டில் கதவம் காப்புச்செய்த அதனைக் கண்டு ஆளுடைய பிள்ளையாரும் ஆளுடைய அரசுகளும் மகிழ்ந்து "நமது பெருமான் இதனை அருள்செய்யப் பெற்றோம்" என்று அங்கு வணங்கிய பின்னர்; பதிகம்...பணிவுற்றார் - ஆளுடைய பிள்ளையார் தொடங்கிய திருப்பதிகத்தை நிரம்பப் பாடித் தொழுது பணிந்தனர்; எதிர் பொன்......எய்தியது - (இறைவரது) நேர் முன்பு உள்ள அத்திருவாயிலின் வழக்கம் திறக்கவும் அடைக்கவுமாக உள்ள நிகழ்ச்சி அன்று முதலாக என்றும் நிலவுவதாயிற்று. (ஆல் - அசை.)

(வி - ரை) அதுகண்டு - முன்பாட்டிற் சொல்லிய அந்த நிகழ்ச்சியைக் கண்டு.

பிள்ளையார் தாமும் ஆண்ட அரசும் மகிழ்ந்து - இது பிள்ளையாரது அருளிச் செயலாதலின் அவரை முன்வைத் தோதினார். 1534 - 1535 பாட்டுக்களில் இவ்விரு வரையும் வைத்துக் கூறிய வைப்புமுறையினுடன் இதனை ஒப்பு நோக்குக. தாமும் - அரசுகளால் உரைசெய்தருளப் பெற்று அதன்படி வேண்டிப் பாடி வேண்டியவாறே இறைவர்பால் எடுத்த திருப்பாட்டிலே கதவம் காப்பிட்டருளப் பெற்ற பிள்ளையாரும் என உம்மை இறந்தது தழுவியது. முன்பாட்டில் "தமிழ் விரகர் தாமும்" என்றதில் தாம் அரசுகளை வேண்டியவாறே அவரால் வேண்டப்பெற்ற தாமும் என்ற அளவில் நின்றது; இங்கு அதனோடு அவ்வாறு பாடியவரும் அருள் பெற்றவரும் ஆகிய என மேலும் சென்றது.

அது (கண்டு) - இது - அது - என்றது அவர்கள் கண்ட காட்சியை; இது - அவர்கள் உள்ளத் தெண்ணியதனைத் தன்மையிற் கூறுவதனாலும், பின்னரும் என்றும் நிகழ்வதாகலானும் அண்மைச் சுட்டினாற் கூறினார்.

நம்பெருமான் - நம் - இருவர்க்கும் ஒப்ப அருளிய குறிப்பிற்கொண்டு கூறிய உளப்பாட்டுத் தன்மைப் பன்மை.

இறைஞ்சிய - என்றது இறைவரது அருள் நிகழ்ச்சி கண்டவுடன் தம்மிருவர் கருத்தும் நிறைவெய்த அருளியதன்பொருட்டு இருவரும் வணங்கியது.

பணிவுற்றார் என்றது பதிகம் நிரம்பப் பாடியபின் பிள்ளையார் தாம் வணங்கியது.

பதிகம் நிரம்பப் பாடியபின் - பாடும் அவ்வளவில் எடுத்த திருப்பாட்டிற் கதவம் திருக்காப்புக் கொண்டமையாலும், அவ்வருளிப்பாட்டினைக் கண்டு உடனே இருவரும் இறைஞ்சியமையாலும், பதிகப்பாட்டான பத்தில் ஏனை ஒன்பது பாட்டுக்களும் திருக்கடைக்காப்பும் பாட எஞ்சி நின்றனவாதலின் பதிகம் நிரம்பப் பாடினார்.

எதிர் - இறைவரது திருமுன்புக்கு நேராகவுள்ளது. "அபிமுகத்துத் திருவாயில்" (திருஞான - புரா - 589). "நேர்வழி" ஷை (583).

திருவாயிலின் வழக்கம் - திருவாயிலின் வழி அன்பர்கள் சென்றுவர வழங்கியது.

என்றும் நிகழ்ச்சி எய்தியது - அன்றுபோல் என்றும். இது நாயனார் திருவுள்ளத்துக் கருதிய பொருள். "திறந்து மடைத்துஞ் செல்லும் நெறி" (1536). இத் திருவருள் நிகழ்ச்சியினைப் பற்றி ஆசிரியர் பாராட்டுகின்றவை ஆளுடைய பிள்ளையார் புராணத்துக் காண்க. செயல் முற்றி நிறைவேறிய பின்னரே அதனைப் பாராட்ட வேண்டுவது முறையாகலானும், அது ஆளுடைய பிள்ளையாரது அருளிப்பாட்டுடன் நிறைவெய்துவதனானும் ஆண்டுக் கூறினார் என்க. 273

1539. அங்கு நிகழ்ந்த வச்செயல்கண் டடியா ரெல்லா மதிசயித்துப்
பொங்கு புளக மெய்திடமெய் பொழியுங் கண்ணீர் பரந்திழிய
வெங்கு நிகரொன் றில்லாத விருவர் பாத மிறைஞ்சினார்,
நங்கள் புகலிப் பெருந்தகையு மரசு மடத்தி னண்ணியபின். உஎச

1540. அரிதிற் றிறக்கத் தாம்பாட, வடைக்க வவர்பா டியவெளிமை
கருதி, "நம்பர் திருவுள்ள மறியா தயர்ந்தே" னெனக்கவன்று,
பெரிது மஞ்சித் திருமடத்தி லொருபா லணைந்து பேழ்கணித்து
மருவு முணர்விற் றுயில்கொண்டார் வாய்மை திறம்பா வாகீசர்.

1541. மன்னுஞ் செல்வ மறைக்காட்டு மணியின் பாத மனத்தின்கண்
உன்னித் துயிலும் பொழுதின்க ணுமையோர் பாக முடையவர்தாம்
பொன்னின் மேனி வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவினொடுந்
துன்னி யவர்க்கு "வாய்மூரி லிருப்போந் தொடர வா"வென்றார்.

1539. (இ - ள்) அங்கு...இறைஞ்சினார் - அங்கே நிகழ்ந்த அந்த அருஞ் செயலினைக் கண்டு அடியவர்கள் எல்லாரும் அதிசயமடைந்து உடல் முழுதும் மயிர்க்கூர்ச்செடுக்கக், கண்களினின்றும் அன்பு நீர் பொழிந்து வழிய, எங்கும், ஒன்றாலும் நிகரில்லாத இரு பெருமக்களின் பாதங்களையும் வணங்கினார்கள்; நங்கள்...பின் - நங்களுடைய சீகாழிப் பெருந்தகையாரும் அரசுகளும் திருமடத்திற் சேர்ந்தபின்னர், உஎச

1540. (இ - ள்) தாம் அரிதில் திறக்கப்பாட - தாம் கதவம் திறக்கும்படி மிக அரிதின் முயன்று பாடவும்; அவர் அடைக்கப்பாடிய எளிமை கருதி - கதவம் திருக்காப்புக் கொள்ள அவர் பாடியதன் எளிமையினைக் கருதி; "நம்பர்...அயர்ந்தேன்" என - "இறைவரது திருவுள்ளக்கிடையினை உணர அறியாது அயர்ந்தேன்" என்று; கவன்று - கவலை யடைந்து; பெரிதும்...பேழ்கணித்து - மிகவும் அச்சமடைந்து திருமடத்தில் ஒரு பக்கத்தில் அணைந்து கண்மூடிக்கொண்டு; மருவும்...வாகீசர் - உணர்வு பொருந்திய நிலையில் துயின்றவராகிய உண்மைநிலையின் வழுவாத வாகீசர், உஎரு

1541. (இ - ள்) மன்னும்...பொழுதின்கண் - செல்வம் பொருந்திய திருமறைக்காட்டின் மணிபோன்றவராகிய இறைவரது பாதங்களை மனத்தினிடத்துவைத்து ஊன்றி நினைத்துக்கொண்டு துயிலும்போது; அவர்க்கு - நாயனார் காண்பதற்கு; பொன்னின் பொலிவினுடன்-பொன்னார்ந்த திருமேனியில் வெண்ணீறு புனைந்த திருவேடப் பொலிவுடனே; உமையோர்...தாம் - அம்மையாரை ஒரு பாகத்தில் உடைய இறையவர்தாமே; துன்னி - எழுந்தருளி; "வாய்மூரில்...தொடரவா" என்றார் - "நாம் திருவாய்மூரில் இருப்போம் "அங்கு எம்மைத் தொடர்ந்துவா!" என்றருளிச் செய்தனர் (இறைவர்). உஎசு

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1539. (வி - ரை). அங்கு நிகழ்ந்த அச்செயல் - 1532-முதல் 1535 வரை உள்ள திருப்பாட்டுக்களிற் கூறியபடி நிகழ்ந்த அச்செய்திகளை எல்லாம். செயல் - செயல்களின் தொகுதி. திருவாயிலின் வழக்க நிகழ்ச்சி எய்திய செயல் என்றலுமாம்.

அதிசயித்து-அடியவர்கள், தாம் இஃது இன்னவாறாகும் என்று அறியவாராதபடி நிகழக்கண்டதாகலின் அதிசயித்து என்றார்.

எங்கும் ஒன்றும் நிகர் இல்லாத என்க. ஒன்று - ஒன்றானும். முற்றும்மையும் ஒப்புப்பொருளில் வந்த ஐந்தனுருபும் தொக்கன.

நிகரில்லாமை - இறைவர் திருவாக்குத் தமது திருவாக்காகும் தன்மை.

இருவர் பாதம் இறைஞ்சினார் - இதுவரை அடைத்திருந்த வாயிலைத் திறப்பித்து, இறைவரை நேரே காணும் பேற்றினைத் தமக்குச்செய்துதந்தமை பற்றி வணங்கினர்.

நங்கள் - அன்று அடியார் வணங்கியதுபோலவே, அதுபற்றி நாமும் இறைஞ்ச உள்ளமை குறிப்பு.

புகலிப் பெருந்தகையும் அரசும் - வைப்புமுறை திருக்கோயிலினின்றும் பிள்ளையாரை முன்வைத்து நாயனார் பின் சென்ற குறிப்புணர்த்திற்று. உம்மைகள் எண்ணின்கண் வந்தன.

மடத்தில் - திருவீழிமிழலையிற்போ லன்றித் திருமறைக் காட்டில் இருவரும் ஒரு மடத்திற்றங்கி யருளினர் என்பது.

நண்ணியபின் (1539) - துயில்கொண்டாராகிய வாகீசர் (1540) - துயிலும் பொழுதின்கண் - உடையவர்தாம் - அவர்க்குத் - துன்னி - வா என்றார் (1541) - என்று இந்த மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக்கொள்க.

பாய்ந்திழிய—என்பதும் பாடம். 274

1540. (வி - ரை) அரிதில்...கருதி - திறக்கத் தாம் அரிதிற்பாட - என்க. அரிதில் - அருமை - மிகவேண்டி வலிந்து செயல் முடித்தல். பாட - பாடவும். திறக்கத் தாம் பாடிய அருமையும் அடைக்க அவர் பாடிய எளிமையும் கருதி என்ப தாம். தாம்பாட அரிதிற் றிறக்க - தாம் பாடியபோது கதவம் அரிதாகத் திறக்கவும் என்று கூட்டியுரைப்பாருமுண்டு. எளிமை-இலகுவில் செயல் முடித்தல். பதினொரு பாட்டுக்கள் பாடியும், "இரக்கமில்லீரே" என்று இறைவரை வலிந்து கூறியும், தாம் கதவம் திறப்பித்த செயலை அரிதென்பதும், அவர் எடுத்த திருப்பாட்டில் அடைப்பித்த செயலை எளிதென்பதும் நாயனார் உட்கொண்ட கருத்து. கருதி-கருதல் அளவையாற் றுணிந்து.

"நம்பர் திருவுள்ளம் அறியாது அயர்ந்தேன்"-இது நாயனார் கருதல் அளவை யாற் றுணிந்த முடிபு. அயர்ந்தேன் - விரும்பினேன். அயர்தல் - விரும்புதல். "செல வயர்தும்" (புற - வெண் - 17 - வென்றி - 1). நம்பரது திருவுள்ளம் விரைவில் கதவம் திறக்கும் செயலில் இல்லை என்பதை அறியாமையின் யான் அதனை வேண்டி னேன்; "வேண்டி நீயா தருள்செய்தாய் யானு மதுவே வேண்டி னல்லால், வேண் டும் பரிசொன் றுண்டென்னி லதுவுமுன்றன் விருப்பன்றே" (திருவா - குழைத் - 6) என்றபடி உன் திருவுள்ளம் விரும்பியதனை நான் அறியாது "சரக்கவிக் கதவந் திறப் பிம்மினே", "இரக்கமொன்றில்லீர்" என்று விரும்பி வேண்டினேன் என்பது. நம்பர் திருவுள்ளம் பற்றுவது எளிதிற்கைகூடும்; அவ்வாறு பற்றாதது அரிதின்முயற்சியளவிற் கூடும்; என் விருப்பம் அரிதிற் கூடியது; ஆதலின் திருவுள்ளம் பற்றப்பெறாதது என

இவ்வாறு கருதித் துணிந்தனர். அயர்தல் - தளர்தல். என்று கொண்டுரைத்தலுமாம். "அயலார்போல அயர்வேனே" - (திருவா - பிரார் - 9) அயர்தல் - செய்தலுமாம்.

**கவன்று** - திருவுள்ளம் பற்றாச் செயலிற் றுணிந்தமையும், அதனோடு, பெருங் கருணையாளராய், அருளேயேயன்றி வேறு செய்யாதவராய் உள்ள இறைவரை இரக்கமில்லீர் என்று வலிந்து நொந்துகொண்டமையும் தாம் செய்த பிழை என்று கவன்றனர்.

**பெரிதும் அஞ்சி** - அந்தப் பிழை பெருமான்பா லபராதமாதலின் பெரிதும் அஞ்சற்பாலது என்றபடி.

**ஒருபால் அணைந்து** - பிழைபட்டமையால் ஏனை அடியார்களுடன் கூடத் தகாதென்று ஒருபுறம் ஒதுங்கி இருந்து.

**பேழ்கணித்து** - கண் மூடிக்கொண்டு. பேழ்கணித்தல் - துயிலின்றிக் கண்மூடி யிருத்தல், "பிற்பா னின்று பேழ்கணித்தாற் பெறுதற் கரியான் பெருமானே" (திருவா - யாத் - 7).

**மருவும் உணர்வில் துயில்கொண்டார்** - அறிதுயிலில் அமர்ந்தார். உணர்வு மருவும் துயில் - என்றது சாக்கிராவத்தைநிலை மாறாது, துயில் பெறாது, கண்மூடி நிற்கும் நிலை.

**வாய்மை திறம்பா வாகீசர்** - பிள்ளையார் எளிதிற்பாடி அடைப்பித்தமை கண்டு பொறாமை முதலிய தீக்குணங்களின் வயப்பட் டெழுந்ததன்று, நாயனார்பால் நிகழ்ந்த இவ்வுணர்ச்சி என்பது குறிப்பு. இங்கு இவ்வாறன்றிப் பிள்ளையார் "கதவந் திறக்கப் பாடும்" என்று தம்மைக் கேட்டபோது தாம் அதற் கிணங்காது அவரையே பாடு மாறு கேட்டிருத்தல் வேண்டுமென்றும், பிள்ளையாரே இக்கதவந் திறப்பித்தற் குரியார் என்பது இறைவர் திருவுள்ளமென்றும், பிள்ளையார் திருத்தொண்டைச் சிறப்பிக்குங் கருத்தால் பிரானார் கருத்தில் சிறிது வேற்றுமை யிருந்ததென்றும் நாயனார் கருதிக் கவன்றனர் என்றும், பிறவாறும் இங்கு நுட்பங் காண்பாருமுண்டு. அவை பொருந்தா என்க. செவ்வி - சமயம் - அறியாது திறப்பித்தமையே தமது பிழை என்பதுவே நாய னார் கருதியது என்பது "பிழைத்துச் செவ்வி யறியாதே திறப்பித்தேனுக்கு" (1545) என மேல் வரும் பாட்டினால் அறியக்கிடக்கின்றது.

**யாம்பாட**—என்பதும் பாடம். 275

1541. (வி - ரை) **செல்வம் மன்னும்** - என்க. **செல்வம்** - பொருட் செல்வம், அருட் செல்வத்தோடு பொருந்தி நிகழ்தல். "செல்வத் திருமறைக்காடு" (1528) என்று தொடங்கியதனை இக்கருத்துப் பற்றி "முத்தங் கொழிக்கு மறைக்காட்டுக் குன்ற வில்லியார்"(1529) என்று பொருள்விரித்துக் காட்டியது காண்க.

**மணி** - மணி போன்றாராகிய இறைவர். உவம ஆகுபெயர். "கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்" (ஆவடுதுறை - தாண்ட). **மணி** - கண்மணி. பொருள் களைக் காட்டும் உபகாரம் செய்தலால் கண்மணி உவமமாயிற்று. **மணி** - முத்து என்று கொண்டு இயல்பாய் ஒளி விடும் தன்மை பற்றிக் கோடலுமாம். முத்து இயல்பாகவே நிற்பது; வீடுதரும் தன்மை குறிப்பது. "முத்தங் கொழிக்கும்" (1529). 492-ல் உரைத்தவை பார்க்க. "கடற்றிரை தவழ் முத்தங், கங்கு லாரிருள் போழும் கலிமறைக் காடமர்ந்தார்" என்ற பிள்ளையார் தேவாரக் குறிப்புங் காண்க.

**பாதம் மனத்தின்கண் உன்னித் துயிலும் பொழுதின்கண்** - தாம் செய்த தாகக் கருதிய பிழையின்பொருட்டு இறைவரையே நினைந்து என்க. "மருவும் உணர்வு" என முன்பாட்டிற் கூறியது இவ்வுணர்வு. **உன்னித் துயிலுதல்** - நினைவு மாறாமற் கண்மூடிய அளவில் துயில்கொள்ளுதல், அறிதுயில் என்பு. "உன்னி

துன்னி யுறங்குகின் றேனுக்கு" (குறுந்தொகை - வாய்மூர்) என்பது நாயனார் திரு வாக்கிற் காணும் அகச்சான்று.

**துன்னி** - இங்குத் துன்னி என்றது அறிதுயிலில் அகக்காட்சிக்குப் புலனாயினமை குறித்தது. **துன்னுதல்** - பொருந்துதல். சொற்பனத்தில் வந்து என்றுரைப்பாரு முண்டு. நாயனார் சாக்கிரத்தினின்றும் நீங்காமையால் அவ்வுரை பொருந்தாமையறிக.

**அவர்க்கு** - காட்சி கொடுத்து என்பது சொல்லெச்சம்.

**தொடர வா** - நாம் முன்செல்ல நீ எம்மைத் தொடர்ந்து வருவாயாக. தொடர- நீ எம்மைத் தொடரவும், அது கேட்டுப் பிள்ளையார் தொடர, அவர்க்கு நாம் நேரே காட்சி கொடுக்க அவர் கண்டு காட்ட நீயும்காண இவ்வாறு அருளிப்பாடுகள் தொடர, அதனால் நீ பிழையென்று கவன்ற செய்தி பிழையன்றாம்படி கண்டு தொடர என்று இவ்வாறு வரும் பின்னிகழ்ச்சிக் குறிப்புக்கள் எல்லாம் பெறவைத் தமை காண்க.

பிள்ளையார் இறைவரது காட்சி முன்னர்க் கண்டு அரசும் காணக்காட்டிய (1546) அதனால் அரசுகள் தாம் கருதியபடி திறப்பித்தமை பிழையன்றாம்படி கண்டது யாங்ஙனமெனின்? இறைவர் இக்காட்சியை முன்னர்ப் பிள்ளையாருக்குக் காட்டத் தாம் கண்டனர்; அவ்வாறே இறைவர் தமது செவ்வியை முன்னர்ப் பிள்ளையாருக்கு அறிவிக்க, அவர் அறிந்து கதவம் திறக்கப் பாடுக என்று தமக்கு அருளத், தாம் அதன் படி பாடினர்; ஆதலின் தாம் பாடியதும் செவ்வியறிந்ததேயாம் என்பது.

**வாய்மூரில் இருப்போம் - இருப்போம்** - இருப்போமாகிய எம்மை என்று வினைப் பெயராகவும், நாம் இங்கு நின்றும் உன் முன்னே சென்று வாய்மூரில் இனி இருக்கச் செல்வேம் என்று எதிர்கால வினைமுற்றாகவும் உரைக்க நின்றது. "தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி, யென்னை வாவென்று போனார்" என்ற தேவார அகச்சான்று காண்க. 276

1542. போத நிகழ "வா வென்று போனா ரதென்கொ" லெனப்பாடி
"யீதெம் பெருமா னருளாகி லியானும் போவே" னென்றெழுந்து
வேத வனத்தைப் புறப்பட்டு விரைந்து போக, வவர்முன்னே,
யாதி மூர்த்தி முன்காட்டு மவ்வே டத்தா லெழுந்தருள, உஎஎ

1543. சீரார் பதியி னின்றெழுந்து செல்லுந் திருநா வுக்கரசர்,
ஆரா வன்பி லாரமுத முண்ண வெய்தா வாறேபோல்
நீரார் சடையா ரெழுந்தருள நெடிது பின்பு செல்லுமவர்
பேரா ளரைமுன் றொடர்ந்தணையப் பெறுவா ரெய்தப் பெற்றிலரால்;

1544. அன்ன வண்ண மெழுந்தருளி யணித்தே காட்சி கொடுப்பார்போற்
பொன்னின்கோயி லொன்றெதிரே காட்டி யதனுட் புக்கருளத்
துன்னுந் தொண்ட ரம்மருங்கு விரைந்து தொடரப், போந்தபடி
மன்னும் புகலி வள்ளலார் தாமுங் கேட்டு வந்தணைந்தார்; உஎகூ

1545. "அழைத்துக் கொடுபோந் தணியார்போற் காட்டி மறைந்தா" ரெனா
"பிழைத்துச் செவ்வி யறியாதே திறப்பித் தேனுக் கேயல்லால் [வயர்ந்து
உழைத்தா மொளித்தாற் கதவந்தொண் டுறைக்கப் பாடியடைப்பித்த
தழைத்த மொழியா ருப்பாலார்; தாமிங் கெப்பான் மறைவ?" தென,

1546. மாட நீடு திருப்புகலி மன்ன ரவர்க்கு மாலயனும்
நேடி யின்னங் காணாதார் நேரே காட்சி கொடுத்தருள,
ஆடல் கண்டு பணிந்தேத்தி, யரசுங் காணக் காட்டுதலும்,
"பாட வடியா" ரென்றெடுத்துப் பரமர் தம்மைப் பாடினார்; உஅக

1547. பாடுந் தமிழ்மா லைகள்கொண்டு பரமர் தாமு மெழுந்தருள,
நீடுந் திருவாய் மூரடைந்து நிலவுங் கோயில் வலஞ்செய்து,
சூடும் பிறையார் பெருந்தொண்டர் தொழுது போற்றித் துதிசெய்து
நாடுங் காதல் வளர்ந்தோங்க நயந்தந் நகரி லுடனுறைந்தார். உஅஉ

1542. (இ - ள்) போதம் நிகழ - அறிதுயில் நிலையினின்றும் சாக்கிரத்தை அடைய; "வா என்று போனார் அது என்கொல்" எனப்பாடி - "என்னை அங்கே வா என்று போனார்; அது என் கொலோ?" என்ற கருத்துடைய திருக்குறுந் தொகைப் பதிகம் பாடி; "ஈது...போவேன்" என்று எழுந்து - "இதுவே எமது பெருமானுடைய அருளிப்பா டாகுமாயின் அந்தக் கட்டளையின்படியே யானும் போவேன்" என்று துணிந்து எழுந்து; வேத வனத்தை...போக - திருமறைக்காட்டி னின்றும் புறப்பட்டு அகல விரைவாக (நாயனார்) போக; ஆதிமூர்த்தி...அவ்வேடத் தால் - ஆதி முதல்வராகிய இறைவர் தாம் முன்பு காட்டிய அந்த வேடத்துடனே; அவர் முன்னே - நாயனார் முன்பு; எழுந்தருள - எழுந்தருளிப்போக, உஎஎ

1543. (இ - ள்) சீரார்...திருநாவுக்கரசர் - சிறப்புடைய அந்தத் திருப்பதியி னின்றும் எழுந்து புறப்பட்டுச் செல்லும் திருநாவுக்கரசர்; ஆரா அன்பின்...போல் - அடங்காத அன்பினால் நிறைந்த அமுதம் கையிற் கிடைக்கப்பெற்றும் வாயின்கண் உண்ணக் கிடைக்காத வாறுபோல; நீரார் சடையார் எழுந்தருள - கங்கை பொருந் திய சடையினையுடைய பெருமான் முன்னே எழுந்தருள; நெடிது பின்பு செல்லும் அவர் - நெடுந்தூரம் பின்னே தொடர்ந்து செல்கின்றவர்; பேராளரை...அணையப் பெறுவார் - பெருமையையுடைய அவரை முன்னே தொடர்ந்து விரைந்து அணைய முயல்வாராகவும்; எய்தப் பெற்றிலர் - கிடைக்கப் பெறவில்லை; (ஆல்-அசை). உஎஅ

1544. (இ - ள்) அன்ன வண்ணம்...புக்கருள - (இறைவர்) அவ்வாறு எழுந் தருளிப் பக்கத்தில் காட்சி கொடுப்பார்போலப் பொன் மயமாகிய திருக்கோயில் ஒன்றை அவர் முன்பு தோற்றுவித்து அதனுள்ளே புகுந்தருள; துன்னும்...தொடர- அணுகவரும் அத்திருத்தொண்டராகிய நாயனார் விரைவாக அவரைத் தொடர; போந்தபடி - இவ்வாறு நாயனார் போந்தபடியினை; மன்னும்...வந்து அணைந்தார் - நிலைபெற்ற சீகாழியின் வள்ளலாராகிய பிள்ளையாரும்கேட்டு அங்குவந்து அணைந்தனர்.

1545. (இ - ள்) அழைத்துக்கொடு போந்து...அயர்ந்து - என்னை வாவென்று அழைத்துக்கொண்டு வந்து, அணிமையிற் கூட வருவார்போலக் காட்டி மறைந்தருளி னார் என்று வருந்தி; செவ்வி அறியாதே பிழைத்துக் கதவம் திறப்பித்தேனுக்கே; தேவரீரது செவ்வியை அறியாமல் பிழைசெய்து வலிந்து கதவம் திறப்பித்த எனக்கு; உழை - பக்கத்திலிருந்து; தாம் ஒளித்தாலே அல்லால் - தேவரீர் ஒளித்தருளலாமே யன்றி; தொண்டு உரைக்கப் பாடி - திருத்தொண்டின் உறைப்பு விளங்கப் பாடி; (கதவம்) அடைப்பித்த தழைத்த மொழியார் உப்பாலார் - அந்தக் கதவத்தினை அடைப்பித்த தழைத்த தன்மையுடைய மொழியினையுடைய பிள்ளையார் உப்பாலின் உள்ளார்; தாம் இங்கு மறைவது எப்பால்? - தேவரீர் இனி மறைந்தருளுவது எவ் வாறு?; என - என்று பாட:

1546. (இ - ள்) மாட நீடு...கொடுத்தருள - மாடங்கள் நீடிய சீகாழியின் மன்னவராம் பிள்ளையாருக்குத் திருமாலும் பிரமதேவனும் தேடி இன்னமும் காணப் படாதாராகிய சிவபெருமான் வெளிப்பட்டு நேரே காட்சி கொடுத்தருள; ஆடல் கண்டு பணிந்து ஏத்தி - அத் திருக்கூத்தினைப் பிள்ளையார் கண்டு பணிந்து துதித்து; அரசும் காணக் காட்டுதலும் - திருநாவுக்கரசுகளும் காணும்படி காட்டியருளுதலும்; "பாட அடியார்"...பாடினார் - (நாயனார் கண்டு) "பாட அடியார்" என்று தொடங்கிப் பரமசிவனைப் பாடினாராக; உஅக

1547. (இ - ள்) பாடும்...எழுந்தருள - அவ்வாறு அவர் பாடிய தமிழ்மாலைகளை ஏற்றுக்கொண்டருளிப் பரமசிவனும் மறைந்தருள; சூடும் பிறையார் பெருந்தொண்டர் - பிறையினைச் சூடும் சிவபெருமானது பெருந்தொண்டராகிய நாயனார்; நீடும் திருவாய்மூர் அடைந்து...வலஞ்செய்து - நீடுகின்ற திருவாய்மூரை அடைந்து நிலவும் திருக்கோயிலை வலஞ்செய்து; தொழுது போற்றித் துதிசெய்து - தொழுதும் போற்றியும் துதிசெய்தும்; நாடும் காதல்...உடனுறைந்தார்-நாடும் காதல் வளர்ந்து பெருக விரும்பி அத்திரு நகரில் உடனாக இருந்தருளினர். உஅஉ

இந்த ஆறு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபாய் முடிக்க நின்றன.

1542. (வி - ரை) போதம் நிகழ - அறிவு விளங்க. முன்னர் அறிதுயிலின் அமர்ந்திருந்தாராதலின் அதனை நீங்கிச் சாக்கிரத்தில் வந்து. முன் கண்டதும் கேட்டதும், கனவுமல்லாது நனவுமல்லாது நின்ற நிலை; இப்போது அது நீங்கிய முழு நனவு நிலை. இதற்கு இவ்வாறன்றி, நான்-போத-செல்லத்-தொடர்ந்து (வா என்று) என்றும், போத நிகழ வா என்று திருப்பதிகம் பாடி என்றும் உரைத்தனர் முன் உரையாசிரியர்கள்; அவை பொருந்தா. வா என்று போனார் என் கொல்? - பதிகக் கருத்தும், சரித அகச்சான்றுமாம். "அங்கே வாவென்று போனா தென்கொலோ?" என்பது தேவாரம். எனப்பாடி - என்று பதிகத்தைத் தொடங்கிப் பாடி.

ஈது எம்...போவேன் என்று எழுந்து - இது முன் கண்டதையும் கேட்டதையும் அந்நனவு நிலையில்கொண்டு வைத்து உணர்ந்து நாயனார் துணிந்தது. ஈது அருளாகில் - தாம் முன் கண்டதையும் கேட்டதையும் இறைவனது அருளிப்பாடு என்று துணிந்தனர் என்பதாம்.

ஈது அருள்; ஆகில் - போவேன் - என்க. ஈது அருளிப்பாடே என்று உணர்கின்றேன்; ஆதலின் நானும் அவ்வாறே செல்வேன். ஆகில் - ஆதலின் என்னும் பொருள் தந்து நின்றது. யானும் - பெருமானது அருளுக்கு ஆளாகிய யானும் என உம்மை இறந்தது தழுவியது; பெருமான் என்ற கருத்துமிது.

வேத வனத்தைப் புறப்பட்டு - இரண்டனுருபு நீக்கப்பொருளில் வந்தது. உருபு மயக்கம்.

முன் காட்டும் அவ்வேடத்தால் எழுந்தருள - முன் காட்டும் - முன் அறிதுயிலில் காட்டியருளிய. அவ்வேடமாவது - "பொன்னின் மேனி வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவு" (1541) என்றபடி அடியார் வேடத்தால் எழுந்தருளிய திருக்கோலம்.

அவர் முன்னே - எழுந்தருள - என்று கூட்டுக. முன்னே செல்ல.

வேத வனத்தைப் புறகிட்டு—என்பதும் பாடம். 277

1543. (வி - ரை) நின்று எழுந்து - நின்று - ஐந்தனுருபு. எழுந்து - நீங்கி.

அமுதம் உண்ண எய்தா ஆறேபோல் - கையில் கிட்டிய அமுதம் வாய்க்கு எட்டாத அதுவேபோல, "கைக்கெட்டியது வாய்க் கெட்டாது" என்பது பழமொழி,

ஆறே - ஏகாரம் தேற்றம்; முன்னே வேடங்காட்டி எழுந்தருளும் அவரைப் பின் தொடர்ந்து கிட்டும்படி எண்ணி நாயனார் விரைந்து சென்றும் அவர் கிடைக்கப்பெறாமல் வருந்தியது இவ்வாறு இருந்தது என்பது.

ஆரா அன்பின் இன் அமுதம் - அடைமொழிகள் நாயனார் அத்திருவேடத்தில் கொண்ட தீவிர தரமான அன்பின் பெருக்கைக் குறித்தன.

உண்ண எய்தாவாறு - கைக்குக் கிட்டியும் என்பது தொக்கு நின்றது.

எழுந்தருள - கிடைக்க ஒட்டாமல் விரைந்து முன்செல்ல. நெடிது பின்பு செல்லும் - நீண்ட தூரம் விரைவாகப் பின்பற்றிச் செல்லும். அவரும் முன் விரைந்து செல்ல, இவரும் விரைந்து பின்பற்ற. "ஒக்கவே ஓட்டந்தேன்" (தேவாரம்).

பின் செல்லும் அவர் - தொடர்ந்து முன் அணையப் பெறுவார் என்று கூட்டுக. நீண்ட தூரம் பின்னாலே சென்ற அவர் கடிது முன் அணைந்து கிட்டுமாறு முயன்றவராயும்.

பேராளர் - பெருமையுடையோர். எண்ணிலாத பேர் உடையார் என்றலுமாம். முதற்கடவுள் என்னும் பெயருடையவர் என்பாருமுண்டு.

எய்தப் பெறுதல் - கிடைக்கப் பெறுதல். தொடர்ந்து எட்டுதல். பெற்றிலர் - "அன்ன வண்ணம்" என்று மேலே தொடர்ந்து செல்லும் பொருட்டொடர்பு நோக்கிப் பெற்றிலராக என்று எச்சமாகப் பொருள் கொள்ளப்பட்டது. 278

1544. (வி - ரை) அன்ன வண்ணம் எழுந்தருளி - மேற்சொன்னவாறு முன் சென்ற தம்மை நாயனார் கிட்டமுடியாதபடியாக இறைவர் விரைந்து எழுந்தருளி. எழுந்தருளி - என்பது போய் என்ற பொருளில் வந்தது; மரபு வழக்கு.

அணித்தே காட்சி கொடுப்பார் போல் - தம்மை அணிமையில் காணத் தருபவர் போலக் காட்டி.

கொடுப்பார் போல் - புக்கருள - என்று கூட்டுக. அணிமையில் காணக் கிடைப்பவர்போலத் தோன்றினார்; ஆனால் அவ்வாறு கிடைக்காது ஒரு பொற்கோயிலைக் காட்டி அதனுட் புகுந்தருளினர் என்க.

புக்கருள - மறைய என்ற பொருளில் வந்தது.

பொன்னின் கோயில் ஒன்று எதிரே காட்டி - பொன்மயமான. அழகிய என்றலுமாம். இக்கோயில் இறைவர் நாயனாருக்குத் தோன்றும்படி செய்தது. கோயிலுட் சென்று அவர் மறைந்தனர்; பின்னர்க் கோயிலும் மறைந்தது என்பதும், இது திருவாய்மூருக்கு அணிமையில் உள்ள ஒரு இடம் என்பதும் கருதப்படும்.

துன்னும் - கிடைக்கப் பெறுதற்காக விரைந்து நெருங்கும்.

அம்மருங்கு விரைந்து தொடர - அக்கோயிலின் பக்கத்து, உட்புகுந்தருளியவரைக் கிட்டும்படி பின்னும் விரைந்து தொடர்ந்து செல்ல. திருவெண்ணெய்நல்லூரில் வேதியர்களையும் திருநாவலூரரையும், தமது மனையும் நீடு வாழ்க்கையும் காட்டுவதாக அழைத்துக்கொண்டு, கிழவேதியர் வேடத்தால் வந்த இறைவர், திருவருட்டுறைக் கோயிலினுள் புகுந்து மறைந்த வரலாறு இங்கு நினைவுகூர்தற்பாலது.

போந்தபடி - கேட்டு - என்று கூட்டுக. போந்தபடி - மேற்சொல்லியவாறு நாயனார் திருமறைக்காட்டினின்றும் எழுந்து திருவாய்மூர் வழி போந்த படியினை. படி - படியை - நிலையை. இரண்டனுருபு தொக்கது.

வள்ளலார் - வாகீசர் சென்ற நிலை கேட்டு அப்போதே தொடர்ந்துவந்த பெருந்தகைமை வள்ளன்மை எனப்பட்டது.

அணைந்தார் - அணைந்தாராக. பொருட்டொடர்பு நோக்கி முற்றெச்சமாகக் கொண்டுரைக்கப்பட்டது. வினை முற்றாகவே கொள்ளினு மிழுக்கில்லை.

வந்து அணைந்தார்-இச்சரிதப் பகுதிக்குப் பதிகத்துள் அகச்சான்று காண்க. 279

1545. (வி - ரை) "அழைத்துக்கோடு...மறைந்தார்" என அயர்ந்து - இது நாயனார் எண்ணி வருந்தியது. அழைத்துக்கோடு போந்து - நான் துயிலும் இடத்தினின்றும் "தொடர வா" என்று அழைத்துக்கொண்டு போந்து. "என்னை இருந்திடந் தேடிக்கொண்டு அங்கேவந்து", "அங்கேவா வென்று போனார்", "என்னைவா வென்று போனார்" என்ற தேவார அகச்சான்றுகள் காண்க.

அணியார்போற் காட்டி மறைந்தார் - "ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ" என்பது தேவாரம். என அயர்ந்து - என்று வருந்தி. வருந்துவதற்குக் காரணம் அணியார்போற்காட்டி மறைந்தது. "ஆரமுதம் உண்ண எய்தா வாறேபோல்" (1543) என்றதனால் இறைவரை அணிமையிற் கிட்டி அனுபவித்தலையே நாயனார் மிக விரும்பினார் என்பதும், அவ்வாறு கிடைப்பதாகக் காட்டி மறைந்ததனால் மிக வருந்தினர் என்பதும் பெறப்படும்.

"பிழைத்துச் செவ்வி...எப்பால் மறைவது" என - இது அவ்வருத்தத்தினால் நாயனார் பலவாறும் எண்ணமிட்டு ஒன்றும் துணிய முடியாது பாடிய பதிகக் கருத்து. பிழைத்துச் செவ்வியறியாதே திறப்பித்தேனுக்கு - இறைவரது செவ்வி யறியாது கடிந்து வலிந்து தாம் திறப்பித்தமையே பிழை என்று நாயனார் கருதினர். இவ்வாறன்றி இது "பிள்ளையாரைத் திறக்கச்செய்யாது தான் திறப்பித்த குற்ற முடைமை விளக்கியது" என்றும், "திருவுள்ளக் கருத்து ஆளுடைய பிள்ளையாரே திறக்கவேண்டுமென்பது. அது காரணத்தானே காட்சி கொடுப்பதுபோல் வெளிப்பட்டு மறைந்து ஆளுடைய பிள்ளையாருக்குக் காட்சி கொடுத்த பிறகு காட்சி கொடுத்ததுமென்க" என்றும் இங்கு முன் உரையாசிரியர்கள் விசேடங் காண்பர். அவை பொருந்தாமை முன் விளக்கப்பட்டது. மேலும், பிள்ளையாரே திறப்பிக்கவேண்டுமென்பது இறைவரது திருவுள்ளமாயின், பிள்ளையார் அரசுகளை நோக்கித் திறக்கப் பாடும் என்று அருளியது நம்பர் திருவுள்ளமறியாத கூற்றாகும்; நம்பர் திருவுள்ளம் பெறப் பெறாத ஒருவரை அச்செயல் செய்யும்படி பிள்ளையார் வேண்டிக்கொண்டதாகவும் முடியும்; பிள்ளையார் அரசுகளை நோக்கித் "திறக்க நீர் பாடும்" என வேண்டிடவும், அரசுகள் அதனை மறுத்து "இல்லை, இல்லை; நீரே பாடியருளும்" என்று கேட்டிருத்தல்வேண்டும் என்னின், அஃது இருதிறத்தும் வாய்மை பற்றாத புன்மாக்கள் சொல்லும் பொருளற்ற உபசார மொழிகளாய் ஒழிந்து, எந்தம் பெருமக்களது சால்புக்கு இழுக்காய் முடியும்; பிள்ளையார் திறப்பிப்பதே நம்பர் திருவுள்ளமாயின் அதற்கு மாறாக எவ்வாற்றானும் அரசுகள் திறப்பிக்க நேர்ந்த நிகழ்ச்சி நடைபெற்றது நியதிக்கு மாறுபட்டதாய் முடியும்; இவைபோன்ற பலவாற்றானும் மேற்கூறிய நுட்பங்கள் பொருந்தாமை கண்டுகொள்க.

செவ்வி - சமயம். திருவுள்ளப் பாங்கு. "செவ்வி அறியாமே திறப்பித்தேன்" என்று நாயனார் துணிந்தமையின் காரணம், தாம் அரிதில் வலிந்து பாடித் திறப்பிக்கவும், பிள்ளையார் எளிதிற் பாடி அடைப்பிக்கவும் நிகழ்ந்த அதுவே என்பது "நம்பர் திருவுள்ள மறியா தயர்ந்தேன்" (1540) என்றவிடத்து உரைக்கப்பட்டது. நாயனார் அரிதிற் பாடித் திறப்பிக்குமாறு இறைவர் அருள் தாழ்த்த காரணம் "பயன் துய்ப்பான் தெண்ணீர் அணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்க" (1533) என்றது காண்க.

திறப்பித்தேனுக்குத் தாம் உழை ஒளித்தாலே அல்லால் - என்று கூட்டுக. "பிழைசெய்த எனக்கு ஒளிக்கலாமேயன்றி, அவ்வாறு பிழை ஒன்றும் செய்யாது, தழைத்த மொழியினையுமுடைய அவருக்குக் காட்ட மறைத்தல் இயலுமோ?" என்பது நாயனார் கருத்து. இவ்வாறு தமது பிழை கண்டவிடத்தும் மற்றும் திருவருளையே பற்றி நின்று இரங்குதல் பெரியோர் இயல்பு. உழை ஒளித்தல் - பக்கத்திலிருந்து காட்சியளிப்பார்போலக் காட்டி மறைதல். உழை - பக்கம். அணிமை.

கதவம் - கதவம் திறப்பித்தேனுக்கு என்றும், கதவம் அடைப்பித்த என்றும் இரு வழியும் கூட்டியுரைக்குமாறு இடையில் வைத்த அழகு காண்க. இடைநிலைத் தீபம். கதவம் ஒன்றே, தான் நிலைபெயராது நின்று திறக்கவும் அடைக்கவுமாக இருவர் செயலுக்கும் பொருளாய் நின்றமையின் இவ்வாறு சொல்லும் பொருளும் ஒத்து இயையும்படி வைத்தது ஆசிரியரது தெய்வக் கவிநலம்.

தொண்டு உறைக்கப் பாடி அடைப்பித்த தழைத்த மொழியார் உப்பாலார் - தொண்டு உறைக்க - திருத்தொண்டின் உறைப்பு - அழுந்திய நீர்மை - விளங்க என்றபடி. "திருத்தொண்டி னுறைப்பாலே வென்றவர்" என்று இந்நாயனாரது திறத்தை அப்பூதியார் கூறுவது காண்க. (அப்பூதி - புரா - 13). "செந்தமிழ் உறைப்புப்பாடி அடைப்பித்தார்" என்ற நாயனார் திருவாக்கின் சொல்லும் பொருளும் போற்றப்பட்ட திறமும் காண்க.

தழைத்த மொழி - கருதிய பயனைக் கருதியவாறே உடன்தரும் மொழி. "மறைமொழி" என்ற திருக்குறளுக்கு "அவ்வப் பயன்களைப் பயந்தே விடும் மொழி" என்று ஆசிரியர் பரிமேலழகர் உரைத்தது இங்கு நினைவுகூர்தற்பாலது. "செந்தமிழ்" என்ற நாயனார் தேவாரத்தை ஆசிரியர் விளக்கம் செய்தபடி.

உப்பாலார் - உகரச்சுட்டுச் சேய்மைக்கும் அணிமைக்கும் இடைப்பட்ட நிலை குறிப்பது. "உங்நின்றூர்" என்றது நாயனார் தேவாரம்.

தாம் மறைவது எப்பால் இங்கு மறைவது? - "மறைக்க வல்லரோ தம்மை" என்றது தேவாரம். எப்பால் - எங்கு என்றும், எவ்வண்ணம் - எவ்வாறு - என்றும் உரைக்க நின்றது.

என - என்ற கருத்துடைய திருக்குறுந்தொகைப் பதிகம் பாட. அப்பதிகப் பாடற் கருத்துக்களே இச்சரித நிகழ்ச்சியை அறிவிப்பன என்பது பதிகக் குறிப்புக்களுட் கண்டுகொள்க.

மொழியாநம்பாலார்—மறைப்ப—மறைத்த—என்பனவும் பாடங்கள். 280

திருவாய்மூர்

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தோகை

எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாள மருளினார்,
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்,
"அங்கே வா"வென்று போனா ரதென்கொலோ? 1

மன்னு மாமறைக் காட்டு மணாளனார்,
உன்னி யுன்னி யுறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனு மாசொல்லி,
யென்னை வாவென்று போனா ரதென்கொலோ? 2

பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு,
வாட வாட்டந் தவிர்ப்பா ரவரைப்போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயெ,
ஓடிப் போந்திங் கொளித்தவா *றென்கொலோ?* 7

திறக்கப் பாடிய வென்னினுஞ் செந்தமிழ்,
உறைப்புப் பாடி யடைப்பித்தா ருந்நின்றர்,
மறைக்க வல்லரோ தம்மைத் *திருவாய்மூர்ப்*
*பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே.* 8

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—1540 *முதல்* 1545 *வரை விரித்த சரிதக் குறிப்பு.*

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) எங்கே - *எங்கே என்று;* இருந்த இடம் *என்பது இருந்திடம் என வந்தது. "*இருக்கு *மிடந்தேடி யென்பசிக்கே யன்னம்" (பட்டினத்தார்).* அடையாளம். *வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவு. "பொலிவினொடுந் துன்னி"* (1541).—(2) உன்னி உன்னி உறங்குகின்றேனுக்கு. *"உன்னித்துயிலும் பொழுதின்கண்"* (1541); *" மருவும் உணர்விற்றுயில் கொண்டார் "* (1540). உன்னி யுன்னி - *அடுக்குப் பலமுறையும் நினைத்துக்கொண்டே யிருந்தமை குறித்தது. தேவாரத்தினுள்* உன்னி யுன்னி *என்று இருமுறை அடுக்கியருளியமையின் அதுபற்றி விரிநூலினும் மேற்காட்டியவாறு இருமுறை " மருவும் உணர்விற்றுயில் ", "உன்னித் துயில்"* என்று *விரித்தார். "* உள்கி உள்கி " (5) *என்றதுமது.* தன்னை வாய்மூர்த் தலைவனு மா சொல்லி என்னை வாவென்று-இதனை *"வாய்மூரி லிருப்போம் தொடர வா " என்று என விரித்தனர் ஆசிரியர்.*—(3) தஞ்சே - *தஞ்சமாக - அடைக்கலமாக- அடைய ;* ஓட்டந்தேன் - *ஓடினேன்.*—(4) ஒக்கவே ஓட்டந்தேன் - *அவரோடொப்ப நானும் விரைவாக ஓடினேன்.*—(5) - உள்கி உள்கி - *உன்னி உன்னி* - (2). கள்ளி யார் - *கள்ளர்.*—(6) யாதே செய்து மியாமலோ நீ யெனில், ஆதே யேயும் - யாதே செய்தும் - *பாதகத்தைச் செய்திடினும் ;* யாமலோம் நீ எனில் - " *உலகினி லென் செயலெல்லா முன்விதியே நீயே புண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்று யென்றும், நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்று நினை "யின் என்றபடி.* ஆதே - *அதே என்ற சுட்டு முதனீண்டது.* பாடிப்பெற்ற...போல்-*பிள்ளையாருக்குத் திருவீழிமிழலையில் வாசிபெறும் காசளித்த வரலாறு குறிப்பது போலும்.* பழங்காசு- *பழமையானதால் வாசிபடும் காசு* - பழங்காசு - *தந்தமையால் உண்டாயின* வாட்டத் *தைத் தவிர்ப்பார்போல. " பாடலங் காரப் பரிசில் காசருளி "* (திருவிசைப்பா). ஓடிப் போந்து - *"விரைந்துபோக அவர்முன்னே...எழுந்தருள "* (1542) - *" எழுந்தருள நெடிது பின்பு செல்லுமவர் "* (1543), ஒளித்தவாறு-*" அதனுட்புக்கருள "* (1544).—(8) இப்பாட்டு *முழுதும்* - 1545-ல் *விரித்த சரிதத்திற்கு அகச்சான்று.* என்னினும் - *திறப்பித்தேனுக்கே யல்லால்.* உறைக்கச் செந்தமிழ் பாடி - *என்க.* உறைக்க- *திருத்தொண்டின் உறைப்பு விளங்க.* செந்தமிழ் - *" தழைத்த மொழியார்."* (1545). உந்நின்றர் - *உங்கு நிற்கின்றூர். பக்கம்.* மறைக்க வல்லரோ-*" எப்பால்மறைவது?"* (1545). பித்தரே ! - *மறைத்தல் இயலாத காரியம். அதனில் முயல்வதனுல் இவர் பித்தர் என்றபடி. இயல்பாலும் பித்தர் என்றதும் குறிப்பு.*—(9) பொய்க்கு - *பொய்யுடையேனுகிய எனக்கும். பொய்யினேன் என்றதனைப் பொய் என்ற துபசாரம். இழிவு சிறப்பு உம்மை தொக்கது.* பொற்கோயில் புக்கதும்- *" பொன்னின் கோயில் லொன்றெதிரே காட்டி "* (1544).—(10) மீண்டற்கும் - *மீளுதற்கும். முன்னர்ப் பிழை*

செய்து பின்னர்த் தெரிந்து துதித்து அடைந்து மீண்டும் மிதித்தனர். தூண்டிக் கோள்வன்-எனக்கு ஒளியும், வழியும் காட்டி வழிப்படுத்தும் பொருளாகக் கொள்வன்.

குறிப்பு:—இப்பதிக முழுமையும் நாயனூரது சரிதத்தில் இப்பகுதியை விளக்கும் பேராதரவாகிய அகச்சான்ருகும்.

தலவிசேடம்:—சூரியன் பூசித்த தலம்; முசுகுந்தர் தாபித்த ஏழு விடங்கத் தலங்களுள் ஒன்று. இது தென் திருவாய்மூர் என்று வழங்கப்படும். தொண்டை நாட்டில் உள்ள திருவான்மியூரும், நடுநாட்டில் திருநாவுக்கரசு நாயனூர் அவதரித்த திருவாமூரும் இதனுடன் பெயரொற்றுமைபற்றி மயங்கி அறியற்பாலனவல்ல. இத் தலத்தைப்பற்றி வாகீசர் ஆளுடைய பிள்ளையார் சரித நிகழ்ச்சிகள் முன் (1541- முதல் 1548 வரை) உரைக்கப்பட்டன. வாகீசர் புராணமும், ஆளுடைய பிள்ளையார் புராணம் 593-597 பாட்டுக்களும் பார்க்க. சுவாமி - வாய்மூர்நாதர்; அம்மை - பாலினு நன்மொழியாள்; தீர்த்தம் - சூரிய தீர்த்தம்; மூலத்தானத்துக்குப் பக்கத்தில் வேதாரண்யேசுவரர் எழுந்தருளியுள்ளார்; தியாகர் - நீலவிடங்கர்; நடனம் - கமல நடனம். பதிகம் - 3.

இது திருக்கோளிலியினின்றும் தென்கிழக்கே மட்சாலைவழி 3 நாழிகையில் அடையத்தக்கது. திருமறைக் காட்டினின்றும் வடக்கே 15 நாழிகையில் மட்சாலை வழியில் உள்ளது. இதற்கு அணிமையில் தெற்கில் இறைவர் அற்புதப் பொற்கோயில் காட்டி மறைந்த தலம் உள்ளது.

1546. (வி - ரை) மன்னரவர்க்குக் - காட்சிகொடுத்தருள என்று கூட்டுக; மன்னருக்கு. அவர் - பகுதிப் பொருள் விகுதி.

காணுதார் - காட்சி கொடுத்தருள - முரண் அணிச் சுவைபட வந்தது.

மாலயனும் காணுதார் - மாலும் அயனும் முயன்றும் காண முடியாத அவர் காழி மன்னருக்குத் தாமே காட்சி கொடுக்க என்றது அடியார்க்கருளும் அருளின் எளிமை குறித்தது. உம்மை உயர்வு சிறப்பு. நேரே - விளங்க - தாமாந் தன்மை விளங்க.

ஆடல் - அருட்கூத்து. அருளினியல்பு. திருவிளையாடல் என்றலுமாம்.

கண்டு காணக் காட்டுதலும் - பிள்ளையார் திறக்கப்பாடுக என்றருளிப் பாடியது போலவே, காண்க என்றபோது கண்டனர் என்ற குறிப்பும் காண்க.

அரசும் காண - இறைவர் மறைந்தருளியமையால் முன்னர்க் காணுத அரசுகளும் காணும்படி என உம்மை இறந்தது தழுவியது.

கண்டு - தழைத்த மொழியார் உப்பாலார்; எப்பால் தாம் மறைவது? என்று நாயனூர் அருளியமையால், அதன் பயனுக, இறைவர் பிள்ளையாருக்குக் காட்சி கொடுத்தருளினர் என்ற உள்ளுறையும் காண்க.

"இவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே" என்ற பதிகத்தினுல் பிள்ளையார் அரசுகளுக்குக் காணக்காட்டிய செய்தி யறியப்படும்.

"பாட அடியார்" என்று எடுத்து - பதிகத் தொடக்கம்.

பரமர் - முதன்மையுடையார். "இன்ன தன்மைய ரென்றறி யொண்ணு"தார். அரசுகளும் தாம் அறியமுடியாத திருவுள்ளமுடையார் என்று அயர்ந்த தன்மை குறிப்பு. வரும் பாட்டிலும் இத்தன்மைபற்றியே பரமர் தாழும் என்முர். 281

திருவாய்மூர்

II　திருச்சிற்றம்பலம்　திருத்தாண்டகம்

பாட வடியார் பரவக் கண்டேன் பத்தர் கணங்கண்டேன் மொய்த்த பூதம்
ஆடன் முழவ மதிரக் கண்டேன் அங்கை யனல்கண்டேன் கங்கை யானைக்

கோட லரவார் சடையிற் கண்டேன் கொக்கி னிதழ்கண்டேன் கொன்றை கண்டேன்
வாடற் றலையொன்று கையிற் கண்டேன் வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 1

விளைந்த பெரும்பத்தி கூர நின்று மெய்யடியார் தம்மை விரும்பக் கண்டேன்
இளைக்குங் கதநாக மேனி கண்டே னென்பின் கலந்திகழ்ந்து தோன்றக் கண்டேன்
திளைக்குந் திருமார்பி னீறு கண்டேன் சேணார் மதின்மூன்றும் பொன்ற வன்று
வளைத்த வரிசிலையுங் கையிற் கண்டேன் வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 4

பொருந்தாத செய்கை பொலியக் கண்டேன்
போற்றிசைத்து விண்ணோர் புகழக் கண்டேன்
பரிந்தார்க் கருளும் பரிசுங் கண்டேன்
பாராகிப் புனலாகி நிற்கை கண்டேன்
விருந்தாய்ப் பரந்த தொகுதி கண்டேன்
மெல்லியலும் விநாயகனுந் தோன்றக் கண்டேன்
மருந்தாய்ப் பிணிதீர்க்கு மாறு கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 8

திருச்சிற்றம்பலம்

**பதிகக்குறிப்பு:**—வாய்மூர் அடிகளை நான் கண்டவாறு என்? என்னில், அடியார் பாடக் கண்டேன்; பத்தர்கணங் கண்டேன்; விளைத்த பத்திகூர நின்று மெய்யடியார்களை விரும்பும் பரிசு கண்டேன்; உள்க மனம் வைத்த வுணர்வும் கண்டேன் - என்றிவையிவை நான் கண்ட பரிசுகள்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு:**—(3) **நண்ணிப் பிரியா மழு** - இறைவர் கையில் ஏந்திய மழு; தாருகாவனத்து இருடிகள் ஏவியதில் வந்தது; அதனை ஏந்தியபின் பிரிக்காமற் கையில் ஏந்தியுள்ளார். "எறிமழு வோடிள மான்கை யின்றியிருந்த பிரான்" (புகலியும் வீழிமிழலையும்) என்ற பிள்ளையார் தேவாரம், மழு இறைவர் கையில் நண்ணுதற்கு முன் உள்ள கோலங் கூறுதல் காண்க.—(4) **விளைத்த... விரும்பக்கண்டேன்** - நாயனாரது சரிதத்தில் இப்பகுதி குறிப்பது; அகச்சான்று.—(5) **கான்மறையும்** - உரல்போன்ற - அகன்ற கூறுடைய. **உள்க மனம் வைத்த** - நாயனாரது சரிதக்குறிப்பு.—(6) **அடி ஆர்** - அடியிற் பொலியும்.—(8) **பொருந்தாத** - ஒன்றற்கொன்று பொருந்தாத. எல்லாமா யல்லதுமாதலும், உண்மையுமாயின்மையுமாதலும், பிறவும் பிறர் யாவர்பாலும் பொருந்தாத என்றலுமாம். **விநாயகனும்** - விநாயகமூர்த்தியைச் சொன்ன சில இடங்களுள் இஃது ஒன்று.—(9) **மெய் அன்பரானூர்க்கு அருள்** - இச்சரிதப் பகுதியின் அகச்சான்று.

**குறிப்பு:**—திருவாய்மூர்ப் பதிகங்கள் இரண்டும் திருவாய்மூரில் அருளிச் செய்யப்படவில்லை. திருவாய்மூருக்கு அணிமையில் இறைவர் அற்புதப் பொற்கோயில் காட்டி மறைந்தருளிய இடத்தில் அவை பாடப்பெற்றன. பின்னர்த் திருவாய்மூரிற் சென்று "போற்றித் துதிசெய்து" என்ற பதிகங்கள் கிடைத்தில!

பாடி - எழுந்து - போக; - எழுந்தருள (1542) - திருநாவுக்கரசர் - எய்தப் பெற்றிலரால்; (1543) - புக்கருள - தொடர - வள்ளலார் தாமும் - வந்தணைந்தார்; (1544) - என வயர்ந்து - என (1545), காணுதார் - புகலி மன்னருக்குக் கொடுத்தருளக் - கண்டு காணக் காட்டுதலும் - பாடினார்; (1546) - பரமர் - கொண்டு - எழுந்தருள, - அடைந்து - வலஞ் செய்து - தொழுது போற்றித் துதிசெய்து - ஓங்க - உடனுறைந்தார் (1547) என்று இந்த அறு பாட்டுக்களை

1547. (வி - ரை) பாடும் தமிழ் மாலைகள் கொண்டு - தொடர வந்து மறைந்த போது நாயனர் பாடியருளிய "எங்கே யென்னை" என்ற திருக்குறுந்தொகைப் பதிகமும், காட்சி கண்டு பிள்ளையார் பாடியருளிய "தளிரிள வளரென வுமை பாட" என்ற பண் - நட்டராகப் பதிகமும், அவர் காட்டக் காட்சி கண்டு நாயனர் பாடியருளிய "பாட அடியார் பரவக் கண்டேன்" என்ற திருத்தாண்டகப் பதிகமும் என்ற மூன்று பதிகங்களையும் கொண்டு என்க. பாடும் தமிழ் மாலைகள் என்று பன்மையாற் கூறிய கருத்தும் இது. பாடும் - இரு பெருமக்களும் பாடிய. கொண்டு-கொள்ளுதல்-ஏற்று அணிந்துகொண் டருளுதல்.

நீடும் திருவாய்மூர் - திருவாய்மூர் என்ற நகர் எல்லைக்குள் அடங்காது, திருமறைக்காட்டில் நாயனர் உன்னித் துயின்ற துயிலினும், பின்னர் அவர் முன்பு வழி முழுவதினும், அணித்தே காட்சி கொடுப்பார்போலக் காட்டிப் புகுந்த பொற்கோயிலினும், பின்னர்க் காட்டிய காட்சியினும், அதன்பின் திருவாய்மூரினுமாக இத்துணையும் நீடிய தன்மை குறிப்பு. இச்சரிதப் பெருமையால் அடியார்களுள்ளத்தில் என்றும் நீடிய என்றதும் குறிப்பு.

நிலவும் கோயில் - முன்னே கூட்டிவந்த வழியில் அணித்தே காட்சிகொடுப்பார் போலக் காட்டி மறைந்த பொற்கோயில்போலல்லாது, அடியவர்கள் என்றுங் கண்டுய்யும்படி விளங்கும் கோயில் என்பது குறிப்பு. நிலவுதல் - நிலைபெற்றிருத்தல்.

போற்றித் துதிசெய்து - இரு பெருமக்களும் பாடித் துதித்து. இத்தலத்துப் பாடிய பதிகங்கள் கிடைத்தில! முன்னர் அருளியவை வழியில் காட்டி மறைந்த பொற்கோயிற் காட்சியிற் பாடியவை.

நாடும் காதல் வளர்ந்தோங்க நயந்து உடன் உறைந்தார் - நாடும் காதல் - சிவபெருமானருளையே சிந்தித்துத் திளைக்கும் பேரன்பு. நயந்து - விரும்பி. உடன் உறைந்தார் - முன்னர்த் திருமறைக்காட்டில் திருமடத்தில், இறைவரது திருவுளச் செவ்வியறியாது பிழைத்துத் திருவருட்கு அயலானவர் என்று தம்மை எண்ணி, அதனுல் அடியார்களுடன் உறையத் தகாதவர் என்று அஞ்சி, ஒருபுறம் ஒதுங்கி அணைந்த நாயனர், இப்போது திருவருட் குறிப்புக்களைப் பெற்று அருட்காட்சியும் பெறப் பெற்றமையால், தாம் கொண்ட பிழைபட்ட அச்சத்தினீங்கிக், காதல் சிறந்தோங்கப் பிள்ளையாரோடு உடன் உறைந்தனர் என்க. அருட்குறிப்புக்களாவன : திருவாய்மூர் நிகழ்ச்சிகளால் தாமும் பிள்ளையாரும் ஒப்பவே இறைவரது திருவருளால் ஆட்கொள்ளப் பெற்றவர்கள் என்று தெளிதல். உடன் உறைந்தார் - திருவாய்மூர் நோக்கி இரவில் தொடர்ந்து போந்த இருபெருமக்களும் திருமறைக்காட்டுக்கு மீண்டு சென்றருளும்வரை சிலகாலம் திருவாய்மூரில் உடனுக எழுந்தருளியிருந்தனர். 282

*1548. ஆண்ட வரசும் பிள்ளையா ருடனே யங்க ணினிதமர்ந்து,
பூண்ட காதல் பொங்கியெழ வாய்மூ ரடிக ளடிபோற்றி,
மூண்ட வன்பின் மொழிமாலை சாத்தி ஞான முனிவரொடு
மீண்டு வந்து திருமறைக்காட் டெய்தி விமலர் தாள்பணிந்தார்.

(இ - ள்) வெளிப்படை. ஆளுடைய அரசுகள் ஆளுடைய பிள்ளையாருடனே அந்நகரில் இனிதாக எழுந்தருளியிருந்து, பொருந்திய காதல் மேன்மேற் பொங்கி எழத், திருவாய்மூர்ப் பெருமானது பாதங்களைத் துதித்து, மிகுந்த அன்பினுலே திருப் பதிகத் தமிழ் மாலைகளையும் சாத்தி, ஞான முனிவராகிய பிள்ளையாரோடும் மீண்டருளிவந்து திருமறைக்காட்டினை அணைந்து விமலரது திருவடிகளைப் பணிந்தனர்.

(வி - ரை) அரசும் பிள்ளையாருடனே - வைப்புமுறைபற்றி 1534, 1535-ல் உரைத்தவை பார்க்க. திருமறைக்காட்டினின்றும் பிள்ளையாரைப் பிரிந்து நாயனார் போந்தனராதலின் அவ்வாறு போந்த அரசுகளும் என்பதும் குறிப்பு. முன்பாட்டில் உடனுறைந்தார் என்ற அதனையே தொடர்ந்து இனிதமர்ந்து என்றும், நாடுங்காதல் வளர்ந்தோங்க என்று முன் கூறிய அதனையே தொடர்ந்து பூண்ட காதல் பொங்கி எழ என்றும் கூறிய திறம் காண்க. முன்பாட்டிற் கூறியது கருத்தும் சாதனமும் ஆம். இங்குக் கூறியவை அவை முற்றிய நிலை. ஆதலின் கூறியது கூறலன்மை யுணர்க.

வாய்மூர் அடிகள் - திருவாய்மூர் இறைவர் பெயர். "வாய்மூ ரடிகளை நான் கண்டவாறே" (தாண்) என்ற நாயனார் திருவாக்கும், "வாய்மூ ரடிகள் வருவாரே" (தேவா) என்ற பிள்ளையார் திருவாக்கும் கருதுக.

மூண்ட - மூளுதல் - உள்ளிருந்து பொங்கி மேற்கிளம்புதல்.

மொழி மாலை - நாயனார் இத்தலத்தே ஆளுடைய பிள்ளையாருடன் எழுந்தருளி யிருந்த காலத்து இருவர் பாடியவைகளும் கிடைத்தில!

மீண்டு வந்து - திருமறைக் காட்டினின்று இரவு துயிலும்போது எழுந்து சென்றாராதலின் அங்கிகழ்ச்சி முற்றிய பின், மீண்டு வந்தனர் என்க. 283

1549. ஆதி முதல்வர் தமைப்பணிந்தங் கான பணிசெய் தமருநாட்
சீத மதிவெண் குடைவளவர் மகளார் தென்னன் தேவியார்
கோதில் குணத்துப் பாண்டிமா தேவி யார்முன் குலச்சிறையார்
போத விட்டார் சிலர்வந்தார் புகலி வேந்தர் தமைக்காண. உஅச

(இ - ள்) ஆதி...அமருநாள் - ஆதிமுதல்வராகிய திருமறைக்காட்டிறைவரைப் பணிந்து இயன்ற திருப்பணிகளைச் செய்துகொண்டு, அங்கு நாயனார் அமர்ந்திருக்கும் நாளில்; சீதமதி...போதவிட்டார் சிலர் - குளிர்ந்த சந்திரன் மேலே கவிந்தது போன்ற வெண்கொற்றக் குடையினையுடைய சோழர்க்கு மகளாரும், பாண்டிய மன்னருக்குத் தேவியாரும் ஆகிய குற்றமற்ற குணத்திற் சிறந்த பாண்டிமா தேவியாராலும், அவர் திருமுன்பு பணிசெய்யும் குலச்சிறையாராலும் செல்லவிடுத்தவர்களாகிய சிலர்; புகலி வேந்தர்தமைக் காண வந்தார் - சீகாழித்தலைவராகிய ஆளுடைய பிள்ளையாரைக் காணும்பொருட்டு வந்தார்கள்.

(வி - ரை) ஆதிமுதல்வர் - புண்ணியம் நண்ணலாலே தத்தம் எல்லையளவும் முதல்வராதலுக்கு அதிகார சக்தி பெற்றவர்க்கெல்லாம் மூல முதல்வராகிய முழு முதல்வர். "முழுமுதலே யைம்புலனுக்கு மூவர்க்கும்" என்பது திருவாசகம். ஆனபணி - நியதியாய்த் தாம் மனம் வாக்கு காயம் மூன்றுனும் செய்யும் பணிகள்.

செய்து - திருநாவுக்கரசர் செய்து என்று எழுவாய் வருவிக்க.

சீதமதி வெண் குடை வளவர் - உலகத்தைப் பயம்நீக்கிக் குளிர்விக்கும் ஆணையாகிய வெண்குடையினையுடைய சோழர். அரசாது நீதிதவறுத, அளியுடைய ஆணையே, குடை என்று உபசரிக்கப்படும். வளவர் - (பிற நாட்டை எதிர்பார்க்க வேண்டாத) நாட்டு வளத்தை உடையவர்.

வளவர்மகளார் - தென்னன் தேவியார் - கோதில் குணத்துப் பாண்டிமா தேவியார் - பிறந்த இடம், புகுந்த இடம் - தம் தன்மை என்ற மூன்றன் பெருமையும் புலப்படக் கூறினார். இப்புராணத்தினுள் சரிதம்பற்றி மங்கையர்க்கரசியம்மையாரைக் கூறநேர்ந்த முதலிடம் இதுவாதலின் இவ்வாறு விதந்து எடுத்தனர். "மங்கையர்க் கரசி

வளவர்கோன் பாவை...பாண்டிமாதேவி" என்ற பிள்ளையார் தேவாரம் இங்கு நினைவு கூர்தற்பாலது.

பாண்டிமா தேவியார் முன் குலச்சிறையார் - மாதேவி - பட்டத்தரசி. முன் - திருமுன்பு பணிசெய்யும் என்ற பொருள்தந்து நின்றது. மாதேவியாராலும் குலச்சிறையாராலும் என்க. எண்ணும்மைகளும் மூன்றனுருபுகளும் தொக்கன. "அமைச்சனாரு மங்கையர்க்கரசியாரும் (திருஞான - புரா - 606), "பரிசனமாக்கட்டம்மை...மாமறைக் காட்டில் விட்டார்". (ஷெ - 607), "கொற்றவன் றேவியாரும் குலச்சிறை யாரு மேவ" (ஷெ - 610) என்பவை காண்க.

போதவிட்டார் சிலர் - போதவிட்டாராகிய சிலர். போதவிட்டார்-செயப்பாட்டு வினை செய்வினையாக வந்த இறந்தகால வினைப்பெயர். விடப்பட்டார் என்க.

சிலர் - அறிவுடைமக்கள். தூது செல்லும் புலவாணர். புகலிவேந்தரைச் சிலர் காணவந்தார் என்க. சிலர் - "பரிசன மாக்கள்" (திருஞான - புரா - 607), "போந்த வறிவுடை மாந்தர்" (ஷெ 608). என்பவை காண்க. "நூலாரு ணூல்வல்ல னாகுதல்", "அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன், செறிவு" (குறள் - தூது) என்று தூதினிலக்கணம் வகுத்தவாறு அமைந்த திட்பமுடையோர் என்க. இவர்களது தன்மை, சொல், செயல்களைப்பற்றி ஆளுடைய பிள்ளையாரது புராணத்துட் காண்க. நாயனார் சரிதத்தினுள் பேச வேண்டிய அளவே ஈண்டுக் கூறினர் என்பது கண்டுகொள்க.

காணவந்தார் என்பதனை வந்தார்காண என்று செய்யுளாகலின் முறை பிறழ வைத்தார். வந்தவர்களின் அன்பின் தீவிரம் குறித்ததென்றுரைக்கினுமமையும்.

புகலி வேந்தர் தமைக்காண - இருபெருமக்களும் உடன் எழுந்தருளி யிருப்பினும், அம்மையாரும் மந்திரியாரும் ஏவி விடுத்தவாறே புகலி வேந்தரைக் காண வந்தனர் என்க.

வளவன்—தேவியாம்—என்பனவும் பாடங்கள்.　　284

1550. வந்து சிவனார் திருமறைக்கா டெய்தி, மன்னு வேணுபுரி
யந்த ணாளர் தமக்கறிவித், தவர்பா லெய்தி யடிவணங்கச்,
சிந்தை மகிழ்ந்து தீதின்மை வினவத், "தீங்கு முளவாமோ
விந்த வுலக முயவந்தீ ரிருதா ணினைவார்க்" கென வுரைப்பார் ;

1551. "சைவ நெறிவை திகநிற்கச் சழக்கு நெறியைத் தவமென்னும்
பொய்வல் லமணர் செயறன்னைப் பொறுக்க கில்லோ" மெனக்,கேட்
யவ்வன் றேழிலோர் செயன்மாற்றி யாதி சைவ நெறிவிளங்கத் [டே
தெய்வ நீறு நினைந்தெழுந்தார் சீர்கொள் சண்பைத் திருமறையோர் ;

1552. ஆய பொழுது திருநாவுக் கரசு, புகலி யாண்டகைக்குக்
"காய மாசு பெருக்கியுழல் கலதி யமணர் கடுவினைசெய்
மாயை சால மிகவல்லார் ; அவர்மற் றென்னை முன்செய்த
தீய தொழிலும் பல ; கேட்டேன்; செல்ல விசையேன் யா" னென்றார்;

1553. என்று கூற "வெல்லையிலா நீறு போற்று மிருவரையுஞ்
சென்று காணுங் கருத்துடையேன் ; னங்குத் தீங்கு புரியமணர்
நின்ற நிலைமை யழிவித்துச் சைவ நெறிபா ரித்தன்றி
யொன்றுஞ் செய்யே ; னுணையும" தென்று ருடைய பிள்ளையார் ;

1554.*"போமா றணிந்து நீரங்குப் போதப் போதா வவ்வமணர்
தீமா யையினை யானேபோய்ச் சிதைத்து வருகின்றே"னென்ன
வாமா றெல்லா முரைத்தவரை மறுக்க மாட்டா தரசிருப்பத்,
தாமா தரவாற் றமிழ்நாட்டிற் போனார் ஞானத் தலைவனார். உஅகூ

1550. (இ - ள்) வந்து...எய்தி - (அவ்வாறு போதவிட்டார்) வந்து சிவ பெருமானது திருமறைக்காட்டிற் பிள்ளையாரது திருமடத்திற் சேர்ந்து; மன்னு... அறிவித்து - நிலைபெற்ற சீகாழி அந்தணர் பெருமானாகிய பிள்ளையாருக்குத் தாம் வந்த செய்தியை அறிவித்து (விடுக்கப்பெற்று); அவர்...வணங்க - அவர் திருமுன்பு சேர்ந்து அவரது திருவடிகளை வணங்க; சிந்தை...வினவ - அவர் திருவுள்ள மகிழ்ந்து தீதில்லாமையை விசாரிக்க; "தீங்கும் உள ஆமோ...நினைவார்க்கு" என உரைப்பார் - இந்த உலகம் உய்யத் திருவவதாரம் செய்த "தேவரீருடைய திருவடிகளை நினைபவர்களுக்குத் தீங்கும் உண்டாகுமோ?" என்று தொடங்கிச் சொல்வார்களாகி,

1551. (இ - ள்) சைவ நெறி......கேட்டே - "வேதங்களிற் கூறப்பட்ட சைவ நெறியானது உலகில் அழியாது விளங்கி நிற்கவும், (அதனை யடையாமல்), குற்றம் பொருந்திய அவநெறியினைத் தவநெறியென்று எடுத்துக்கூறும் பொய்ம்மையில் வல்ல அமணர்களுடைய கொடுஞ் செய்கைகளைப் பொறுக்கலாற்றாதவர்களாயினோம்" என்று சொல்லக் கேட்டே; "அவ் வன் தொழிலோர்......திருமறையோர் - அந்த வன்றொழிலோர்களுடைய கொடுஞ் செயல்களைமாற்றி ஆதிசைவநெறி விளங்க வேண்டுமென்று தெய்வ நீற்றின் துணையை நினைந்துகொண்டு சிறப்புடைய சீகாழித் திருமறையோராகிய பிள்ளையார் அங்குச் செல்லத் துணிந்தாராக, உஅசு

1552. (இ - ள்) ஆயபொழுது - ஆகிய அப்போது; திருநாவுக்கரசு - வாகீசர்; புகலி ஆண் தகைக்கு - சீகாழியின் ஆண்டகையாராகிய பிள்ளையாரிடம்; "காயம் மாசு......யான்" என்றார் - உடம்பில் அழுக்கைக் கழுவாமல் பெருக்கிக்கொண்டே திரியும் தீயோராகிய அமணர்கள் கொடுமை செய்யும் வஞ்சனைகளில் மிகவும் வல்லவர்கள்; அவர்கள் எனக்கு முன்னாளிற் செய்த தீய தொழில்களும் பலவாகும்; ஐயோ! பிள்ளாய்! தேவரீர் அங்குச் செல்ல அடியேன் இசைய மாட்டேன்" என்று அருளிச் செய்தார்; உஅஎ

1553. (இ - ள்) என்றுகூற - திருநாவுக்கரசர் இவ்வாறு சொல்ல; உடைய பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையார்; எல்லையிலா நீறு...கருத்துடையேன் - அளவில்லாத திருநீற்றினைப் போற்றுகின்ற அவ்விரு பெருமக்களையும் அங்குச் சென்று காண வேண்டுமென்னும் கருத்தைக் கொண்டிருக்கிறேன்; அங்குத் தீங்கு...அழிவித்து - அங்குத் தீமைகளைச் செய்கின்ற சமணர்களது பொருந்திய நிலைமையை அழிவித்து; சைவநெறி பாரித்து அன்றி - சைவநெறியை வளர்த்தலாமல்; ஒன்றும் செய்யேன் - வேறு ஒரு கருமமும் செய்யமாட்டேன்; ஆணை உமது! - உம்முடைய ஆணை!; என்றார் - என்றருளிச் செய்தாராய்; உஅஅ

1554. (இ - ள்) போம் ஆறு அணிந்து - பிள்ளையார் அங்குச் செல்லும் நிலையினைத் துணிந்து; "நீர் அங்குப் போதப் போதா" - நீரும் அங்கு உடன்வருதல் வேண்டா; "அவ்வமணர்...வருகின்றேன்" - அந்த அமணர்களுடைய தீய வஞ்சனைகளையெல்லாம் யானேபோய் அழிவித்து வருகின்றேன்; என்ன ஆம் ஆறு எல்லாம் உரைத்தவரை - என்று கூறி, மேல் ஆவனவாகிய செயல்களையெல்லாம் துணிந்துகூறிய அந்தப் பிள்ளையாரை; மறுக்கமாட்டாது - மறுக்கமாட்டாதவராகி; அரசு இருப்ப - திருநாவுக்கரசு நாயனார் அங்குத்தங்க; ஞானத் தலைவனார் - சிவஞானத் தலைவராகிய ஆளுடைய

பிள்ளையார்; தாம்...போனார் - அவரைப் பிரிந்து தாம்மட்டும் மிகுந்த அன்புடன் தமிழ் நாடாகிய பாண்டிநாட்டுக்கு எழுந்தருளினார். உ௮கூ

இந்த ஐந்து பாட்டுக்களும் சொல்லாலும் பொருளாலும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1550. (வி - ரை) வந்து-அவ்வாறு போதவிட்டார் சிலர் என்ற எழுவாய் முன் பாட்டிலிருந்து வருவிக்க.

(போதவிட்டார் சிலர்) வந்து - எய்தி - அறிவித்து - வணங்க - வினவ - என்றுரைப்பார் (1550) - எனத், - திருமறையோர் கேட்டே - நினைந்தெழுந்தார் (1551)- ஆயபொழுது, - புகலி ஆண்டகைக்குத் - திருநாவுக்கரசு - "இசையேன் யான்" என்று(ராக), (1552) - உடைய பிள்ளையார் - என்றார் (1553) - என்ன-உரைத்தவரை-மறுக்கமாட்டாது - அரசு இருப்ப - ஞானத் தலைவனார் - தமிழ் நாட்டில் ஆதரவாற் - போனார் (1554) - என்று இந்த ஐந்து பாட்டுக்களையும் தொடர்ந்து கூட்டி முடித்துக் கொள்க.

வேணுபுரி - வேணுபுரம்; சீகாழி. வேணுபுரி அந்தணாளர் - ஆளுடைய பிள்ளையார். அறிவித்து - அவரது பெருமடத்தில் சேர்ந்து வாயிற் காவலர்கள் மூலம், தாங்கள் வந்த செய்திகளின் வரலாற்றை யெல்லாம் சொல்லிப், பிள்ளையாருக்கு அறிவித்தார்கள். "பெருமடத் தணைய வந்து பெருகிய விருப்பிற் றாங்கள், வருமுறைத் தன்மை யெல்லாம் வாயில்கா வலர்க்குச் சொன்னார்" (திருஞான - புரா - 609).

அவர்பால் எய்தி - வாயிற் காவலர் உட்சென்று பிள்ளையாருக்கு அறிவிக்கப், பிள்ளையார் கேட்டு அருள் கூர்ந்து அகமலர்ந்து அழையுமென் றருளிச் செய்ய, அவ்வாறே அவர்கள்வந்து அழைக்கச், சென்று எய்தி என்க. (திருஞான-புரா 610-611) இவ்வரலாறுகளும், பின் நிகழ்ச்சிகளும் ஆளுடைய பிள்ளையார் புராணத்தினுள் விரிக்கத் தகுவன ஆதலின் இங்குச் சுருக்கிக் கூறினார்.

தீதின்மை வினவ - அந்தணாளர் வினவ. தீதின்மை - தீங்குகளினீங்கிய நிலைமை. தீதின்மை வேறு; நலமுண்மை வேறு. தீதின்மை நலமுண்மைக்கு இன்றியமையாது வேண்டப்படும் முதற்படியாம். ஆதலின் நலமா? என்று வினவுவார் தீதிலாரா யுள்ளாரோ? என்று வினவினார். "தீங்குளவோ" (1321) என்றதும், ஆண்டுரைத்தவையும் இங்குச் சிந்திக்கற்பாலன.

"தீங்கும் உள ஆமோ இந்த உலகம் உயவந்தீர் இருதாள் நினைவார்க்கு" என உரைப்பார் - "நினைவார்க்குத் - தீய உளவாமோ?" என்று கூட்டுக. நினைத்தல் சாதனம்; தீங்கு சாராமை பயன். உறுதியும் விரைவும் குறித்தற்குப் பயனை முன் வைத்துக் கூறினார். ஆளுடைய பிள்ளையாரது திருவடிகளை நினைவார்க்கு எவ்விடத்தும் எஞ்ஞான்றும் எத்தீமையும் சாரா என்பது. 'பிறவியெனும் பொல்லாப் பெருங் கடலை நீந்தத், துறவியெனுந் தோற்றோணி கண்டீர்" (மும்மணிக்கோவை 11), "ஒண்கலியைப், பொன்றுங் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே" (ஷை. 3) என்ற நம்பியாண்டார் நம்பிகளது திருவாக்குக்கள் காண்க.

இந்த உலகம் உயவந்தீர் - பரசமய நிராகரிப்பும் சைவத்தின் ஆக்கமும் ஆளுடைய பிள்ளையாரது திருவவதார உள்ளுறை. அவர் புராணம் 19—26 பாட்டுக்கள் பார்க்க.

உளஆமோ - வருவீர் - தாள் - நினைவார்க்கு - இதுவரை தீமை சார்ந்து இருப்பினும் இனி அவை உள்ளன ஆகுமா? தேவரீர் அந்நாட்டுக்கு எழுந்தருளி வருவீர்; அதனை யாங்கள் வேண்டுகின்றோம்; அரசியாரும் அமைச்சனாரும் தேவரீரது திருவடிகளை நினைத்த வண்ணமாக உள்ளார்கள் என்ற குறிப்புக்கள்பட உரைத்தனர்; வந்தவர் அறிவுடைமாந்தர்களாதலின். (திருஞான - புரா. 607)

உரைப்பார் - உரைப்பாராகி, முற்றெச்சம். உரைப்பார் - என என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

உயவநவீர்—தாள் அணைவார்க்கு—என்பனவும் பாடங்கள். 285

1551. (வி - ரை) "சைவநெறி......போறுக்ககில்லோம்" என - இது அம் மாந்தர் பின்னும் தொடர்ந்து சொல்லியது. தீதின்மை வினவிய பிள்ளையார்க்கு விடையாகத் தமக்குற்ற தீமையை முதற்கட் கூறுதல் மங்கலமாக அமைவுடைத்தாகா மையின், உமது இருதாள் நினைப்பார்க்கும் தீது உளவாமோ? என்று தொடங்கிப், பின்னர்த் தமக்கு உள்ள தீங்கினைக் கூறினமை "அறிவுடை மாந்தர்" செய்கை என்க. பின்னர்ப் பிள்ளையாரைக் குலச்சிறைநாயனார் வணங்கி எதிர்கொண்டபோதும், அரசி யார்க்கும் அவர்க்கும் "திருவருள் பெருகு நன்மைதான் வாலிதே?" என்று பிள்ளை யார் வினவியதற்குத், "தேவரீர் இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனு லெற்றைக்குந் திருவருளுடையோம்" (திருஞான - புரா - 659) என்று மந்திரியார் விடைகூறும் அமைதியினையும் இங்கு நினைவுகூர்க.

வைதிக சைவ நெறி - என்று கூட்டுக. நிற்க - நிற்கவும்; இருக்கவும். சழக்கு நெறியைத் தவம் என்னும் - சழக்கு - குற்றம். சமணம் சழக்கு நெறி என்றதனால் வைதிக சைவ நெறி குற்றமற்றது என்பது பெறப்படும்.

சழக்கு நெறியைத் தவம் என்னும் - என்றது மயிர் பறித்தல், உடலை வாட்டிச் சுடுபாறையிற் கிடத்தல், கொல்லாமையுள் மறைந்து கொலைதுணிதல் முதலிய குற்றங் களையே உயர்ந்த தவம் என்று கொள்கின்ற.

செயல் - சமணர் சைவ நெறிக்குச் செய்த கேடுகள். இவை "நீற்று மேனிய ராயினர் மேலுற்ற, காற்றுக் கொள்ளவு நில்லா வமணர்" (ஆலவாய் - பழம்பஞ்சரம்-8) என்பது முதலிய திருவாக்குகளாலும், கண்டு முட்டு, கேட்டு முட்டு என்பன முதலிய அவர்களது கொடிய வழக்குக்களாலும், சைவத்திற்கு அவர்கள் செய்த இடையூறு களாலும் அறியப்படும்.

வன் தொழிலோர் அச் செயல் என்க. மாற்றுதல் - போக்குதல். அழித்தல். அவர்களது கொடுமைகளை மாற்றும் அவ்வளவே பிள்ளையார் கருதியதன்றி, அவர்களை அழித்தல் பிள்ளையார் கருத்தன்று. கழுவேறுதலால் அவர்களுள் அடிகண்மார் அழி வெய்தியமை அரசரது ஆணையாமென்க. அதுவும் இறைவர் திருவுளப் பாங்கின்படி நடந்த தென்பது "வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே" என்ற பதிகத்தால் பிள்ளை யார் இறைவரது திருவுள்ளம் வினவிய வரலாற்றினு லறியப்படும். அழிக்க என்பதற்குச் சமயச் சார்பினை அழிக்க என்பது பொருள். இவைபற்றிய விரிவுகள் ஆளுடைய பிள்ளையார் புராணத்துட் காண்க.

ஆதி சைவ நெறி-ஆதியாகிய சைவ நெறி என்றும், ஆதியினது சிவநெறி என்றும் உரைக்க நின்றது. பிறநெறிகள் யாவும் இடையே தோன்றியன என்பதும் குறிப்பு.

சைவநெறி விளங்க - "மிகுசைவத் துறைவிளங்க", "அடியார்பால் பூதி சாதன விளக்கம் போற்றல்பெரு தொழிய" முதலியவை காண்க. ஒளிகுன்றி நின்ற சைவத்துறையினை விளங்கச்செய்ய.

தெய்வ நீறு நினைந்து எழுந்தார். நீறு - நீற்றின் வலிமையாகிய துணை; சமண் மாறவும் சைவம் விளங்கவும் திருநீறு செய்விக்கும் என்று நினைந்து என்க. இஃது பிள்ளையாரது மனத்துணி பென்பது அரசுகளுக்கு அவர் அருளிய விடையாகிய "வேயுறு தோளி" என்ற பதிகத்தினுள், "புத்தரொ டமணை வாதி லழிவிக்கு மண் ணல் திருநீறு செம்மை திடமே" என்றதனு லறியப்படும். அவர் திருவுள்ளந் துணிந்த

வாறே திருநீற்றுப் பதிகத்தினால் அமண் தோற்றழிந்தமையும் கருதுக. நீறுபுனைந் தெழுந்தார் - என்ற பாடம் தவறு. அது கருத்தறியார் செய்த பிழை என்க. எழுந் தார் - பாண்டி நாட்டுக்கு எழுந்தருளத் துணிந்தார்.

கேட்டே எழுந்தார் திருமறையோர் - ஏகாரமும், வினைமுற்றின் பின் எழுவாய் வந்தமையும், பிள்ளையாரது செயல் தொடங்கிய விரைவுகுறித்தன. அச்செயலின் ஏனை விவரங்களை அவர்தம் புராணம் 612 - 615 பாட்டுக்களுட் கண்டுகொள்க.

எழுந்தார் - (ஆய)பொழுது - என வரும்பாட்டுடன் தொடர்ந்துகொள்க.

திருமறையோர் - நீறு நினைந்து எழுந்தார் - என்றது வேதங்களிற் றுணிந்தபடி திருநீற்றிற்கொண்ட உண்மைத் துணிபினால் எழுந்தார் என்பது குறிப்பு. "வேதத்தி லுள்ளது நீறு" முதலிய தேவாரங்கள் காண்க. 286

1552. (வி - ரை) காயம் மாசு பெருக்கி என்றது அமணர்களுட் குருமார் உடல் கழுவாது வேர்வை வர வெயினின்றுழலும் நிலையும், புழுக்கள் சாம் எனப் பல்துலக் காத நிலையும் முதலிய வழக்குக்களால் உடலில் பலவாறும் அழுக்குப் பெருக்கித் திரி வதைக் குறித்தது. "வேர்வந்துற மாசூர்தர வெயினின்றுழல் வாரும்" (அண்ணாமலை - 10-நட்டபாடை - பிள்ளையார்), "பறிதலைக் குண்டர் தங்கள், கழுவா வுடலங் கழுவின வாக்கிய கற்பகமே" (ஆளுடைய பிள்ளையார் - அந் - 28. நம்பியாண்டார் நம்பி) முத லிய திருவாக்குக்கள் காண்க.

கலதி - தீக்குணமுடையோர். "கள்வன் கடியன் கலதியிவ னென்னாதே" (திருவா - கோத் - 19). "கலதிவா யமணர்காண் கிலார்க ளாயினும்" (திருஞான - புரா - 820). கலதி - மூதேவிகளான என்பாருமுண்டு.

கடுவினைசேய் மாயை சால மிக வல்லார் - கடுவினை - கொலையளவும் செய்யும் கொடுமை. மாயை - வஞ்சனை ; வஞ்சனையாவது பொய்யை மெய்யாகக் காட்டியும், அவச்செயலைத் தவச்செயலாகக் காட்டியும் ஒழுகுதல். முன்பாட்டிற் "பொய்வல் லமணர்" என்றதுமிது. "வஞ்சனை தெரிந்து சித்திரிப்பார்" (1347), "பொய்யினான் மெய்ம்மை யாக்கப் புகுந்தீர் போமின்" (திருஞான - புரா - 792).

சால மிக - ஒரு பொருட் பன்மொழி மிகுதிப் பொருள் குறித்தது. மாயசாலம் என்று பாடங்கொண்டு வஞ்சம் என்றுரைப்பாருமுண்டு.

அவர் மற்று எனை முன்செய்த தீய தொழிலும் பல - இங்கு நாயனார் சமணர் கள் தமக்குச் செய்த தீமைகளை நினைவுகூர்ந்து சொல்லியது அவர்கள் பால் கொண்ட செற்றம் மாச்சரியம் முதலிய தீக்குணம்பற்றி யெழுந்ததன்று. "நன்றல்ல தன்றே மறப்பது நன்று" (குறள்) என்னும் நீதிக் கிலக்கியமாயும், தீமைகள் செய்த அக்காலத் திலும் அவர்கள்பால் சிறிதும் வெகுளிகொள்ளாத அருண்மூர்த்தியாயும் விளங்கியவர் நாயனார். ஆனால் இங்கு அத்தீமைகளை நினைந்து சுட்டியதென்னையோ? எனின், ஆளுடைய பிள்ளையார் பால் அத்தீமைகள் நிகழாதிருத்தல் வேண்டுமென்னும் பரிவு மிகுதிபற்றிய அவ்வளவே நினைந்து கூறினர் என்க.

கேட்டேன் - இரக்கக் குறிப்பு. (645) முதலியவை பார்க்க. இங்கு நாளும் கோளும் பற்றிய தீமையும் குறிப்பு.

செல்ல இசையேன் யான் - நீர் செல்வதற்கு நான் இசையமாட்டேன் என் றது தமக்கு அவர்தந்த அப்பர் என்ற உரிமைபற்றி எழுந்த அருளாணை வாக்கு. "அரசருளிச் செய்கின்றார் பிள்ளாய்! அந்த வமண்கையர் வஞ்சனைக்கோ ரவதி யில்லை; யுரைசெய்வ துளதுறுகோ டானுந் தீய வெழுந்தருள வுடன்படுவ தொண்ணா தென்ன" (திருஞான - புரா - 616) என்று இதனை உரிய வகையாற் பின்னர் ஆசிரியர்

விளக்கம் செய்தல் காண்க. பிள்ளையாரைப் பிள்ளை என்று கொண்ட அன்பினுல் அரசுகள் அஞ்சி இவ்வாறு கூறினும், அவர் ஆண்டாகையாரே யாம் என்பதும் குறிப்பு.

என்றார் - அரசு ஆண்டகைக்கு இவ்வாறு எடுத்துக் கூறினர். இது திருமறைக் காட்டில் பெரிய திருக்கோபுரத்துள்ளிருந்து பிள்ளையார் அரசுகளிடத்துப் பாண்டி நாட்டவர் விடுத்த செய்தியினையும், தாம் அங்குச் செல்லத்துணிந்ததையும் சொல்லி விடைபெற்று எழுந்தருளுதற்கு துணிந்தபோது அரசுகள் சொல்லியது. திருஞான - புராணம் - 615 பார்க்க. இதனை இடம்நோக்கி விரித்துக் கூறும் தகுதிபற்றி ஆண்டு ஆசிரியர் விரித்தருளினர் என்க.

திருநாவுக்கரசும்—தீயவினையும்—என்பனவும் பாடங்கள். 287

1553. (வி - ரை) எல்லையிலா நீறு-அருட்டன்மையால் அளவுபடாத. "தெய்வ நீறு" (1551) என்றது காண்க.

போற்றும் - பேணி வளர்க்கும். சமணத்தால் நேர்ந்த அளவுகடந்த இடையூறுகளினிடையேயும் பற்றுவிடாது துதித்து அணிகின்ற என்றலுமாம்.

சென்று காணும்-இங்கு நின்றபடியே அன்பின் கண்ணினுற் காணப்பெறுயினும், அங்குச்சென்று நேரிற்காணும் என்பது குறிப்பு.

தீங்குபுரி அமணர் நின்ற நிலைமை அழிவித்து - தீங்கு புரிதலால் அவர் நிலைமை அழிக்கத்தக்கது என்பார் உடம்பொடு புணர்த்தி ஓதினர். நிலைமை அழிவித்து - என்றதனல் சமணர்களை அழித்தல் பிள்ளையார் கருத்தன்று என்பது அறியப்படும். தீங்கு - சைவத்திற்குச் செய்யும் கெடுதி ; அழிவித்து - பிறவினை. திருநீற்றின் துணையால் அரசனைக் கொண்டு அழித்து என்க.

அழிவித்து - பாரித்து - "பரசமய நிராகரித்து - நீறு ஆக்கும்" படி அவதரித்தாராதலின் அவ்விரண்டினையுமே செய்து என்றார். பாரித்து - பரவச்செய்து.

ஒன்றும் - வேறு ஒரு கருமமும். பிற எல்லாவற்றுக்கும் முன்பாக அவையே முதற் கருமமாய் மேற்கொள்வேன் என்பது.

ஆணை உமது - உமது ஆணையின்படி. "ஆனசொன் மாலை யோது மடியார்கள் வானி லரசாள்வ ராணை நமதே" (கோளறு பதிகம்-11), "நனிபள்ளி யுள்க வினை கெடுத லாணை நமதே" (11) என்ற பிள்ளையார் திருவாக்குக்களும், அவற்றைப் போற்றி, "முதல்வன் திருவடியை, யத்திக்கும் பத்தரெதி ராணைநம தென்னவலான்" (ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை), "பேரிடர் கெடுதற் காணை நமதேனும் பெருமை வைத்தார்" (திருஞான - புரா 115) என்பனவாதி திருவாக்குக்களும் காண்க. இவ்வாறு தமது ஆணையினையிட்டு அருளிச்செய்யும் பிள்ளையார், இங்கு "ஆணை உமது" என்ற தென்கருதி? எனின் "பிள்ளாய்! நீர்செல்ல இசையேன் யான்" என்று நாயனுர் ஆணையிட்டாராதலின், அதற்குட்பட்டே நின்று, "உம்மை மறுத்துச் செல்லாது உமது ஆணைவழியே அமைந்து செல்கின்றேன் ; யான் செல்வது இத் திருப்பணியைக் கருதியதாகலின் உமது ஆணை துணை நிற்பதாக!" என்றது கருத்து.

உடைய பிள்ளையார் - அப்பர் என்ற நிலைமையில் நின்றாராய் "இசையேன்" என்ற நாயனருக்குத், தாமும், பிள்ளை என்ற நிலையில் நின்றே விடையருளினர் என்ற குறிப்புப்படப் பிள்ளையார் என்றார்.

என்றார் - என்றாராய் ; முற்றெச்சம். என்றாராகி, மேலும் தொடர்ந்து, வரும் பாட்டிற் கூறும் செய்தி உரைக்கின்றார். என்றார் - என்ன எல்லாம் உரைத்த அவரை என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

காணக்கருத்து—தீமைபுரி—என்பனவும் பாடங்கள். 288

1554. (வி - ரை) நீர் அங்கு......வருகின்றேன் - இதுவும் ஆளுடைய பிள்ளையார் மேலும் தொடர்ந்து கூறும் கூற்று. போமா துணிந்து - ஆறு - என்பது ஈறு குறைந்து ஆ - என்று நின்றது. போமா - போமாறு. துணிந்து - பிள்ளையார் துணிந்துகொண்டு என்க. நான் போமாறுபற்றி நீரும் அவ்வாறே துணிந்து என்றுரைப்பினுமமையும்.

நீர் - நீரும். உம்மை தொக்கது. போதப் போதா - போதுதல் வேண்டா.

தீ மாயை - தீய வஞ்சனை. தீயிடுதலும், மற்றும் செய்யும் வஞ்சனைகளும் என்று எண்ணும்மை விரித்தலுமாம். பின் சரித விளைவுக் குறிப்பு.

யானே போய் - நீர் உடன் வருதலின்றி நானே என ஏகாரம் பிரிநிலை.

தீ மாயையினைச் சிதைத்து - தீமையை அழித்து. முன்னர் "நிலைமை அழிவித்து" என்றதுபோலவே, ஈண்டு அமணரைச் சிதைத்து என்னாது, தீமாயையினைச் சிதைத்து என்ற அதனாலும், பிள்ளையார் கருதியது வஞ்சத் தீமைகளைப் போக்குதலேயன்றி அமணர்களை அழித்தல் அன்று என்பது விளங்கும்.

சிதைத்து வருகின்றேன் - சிதைத்த பின்னர் மீண்டு இந்நாட்டுக்கு வந்து உம்மைக் காண்பேன் என்ற குறிப்பும், விடைபெற்றுக் கொள்ளும் குறிப்பும் படநின்றது.

யானே போய்ச் சிதைத்து வருகின்றேன் - என்ன ஆமாறெல்லாம் - திருப்புகலூரினின்றும் தொடங்கி இதுவரைப் பல காலம் பல தலங்களிலும் நீண்ட யாத்திரையாகத் தம்முடன் எழுந்தருளி வந்து இருவருமாக உலகமுய்யத் தரிசித்து வந்தனர். அதனையே தொடர்ந்து, இனிப் பாண்டி நாட்டு யாத்திரைக்கு எழுந்தருளும் பிள்ளையார் அரசுகள் தம்முடன் எழுந்தருளுதல் வேண்டா என்றும், அவர்கள் திருமறைக்காட்டில் தங்கிவிடத், தாம்மட்டும் பாண்டி நாட்டுக்குச் சென்று சமணர்களின் தீமையை அகற்றிச் சைவத்தை விளங்க ஆக்கி வருவது துணிபு என்றும் கூறியருளினர். இதன் திருவுளக் கருத்து என்னையோ? எனின்,

(1) பாண்டிமா தேவியாரும் குலச்சிறையாரும் பிள்ளையாரை அங்கு வருமாறு அவரிடமே தூது அனுப்பினார்கள். ஆதலின் அவர்கள் அவர்பால் வேண்டிக்கொண்ட அச்செய்தியை அவரே எழுந்தருளி நிறைவாக்குதல் தகுதி.

(2) பரசமயத் தருக்கொழியச் சைவ முதல் வைதிகமுந் தழைத்தோங்கும்படி திருஅவதாரம்செய்து, பவம் பெருக்கும் புரை நெறிகள் பாழ்பட்டொழியச் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் அவரது அவதார உள்ளுறையாகிய அச்செயலை அவர் தாமே செய்தல் அமைவுடைத்தாகும்.

(3) ஒரு தீமை வருங்காலத்து அதனை உளப்படுத்தி அமைந்து கொண்டு மாறாக ஒன்றுஞ் செய்யாமனின்றே எதிர்த்து அதன் வலியின்மை காட்டி நீக்குதல் ஒருவழி; எதிர்த்து மேற்சென்று அடர்த்துப் போக்குதல் மற்றொருவழி. அவற்றை முறையே Passive resistance என்றும், Active resistance என்றும் கூறுவர் நவீனர். சமணம் புத்தம் முதலிய பரசமயப் பீடைகள் அந்நாளில் தமிழ் நாட்டுப் பரப்பு முழுமையும் பரவிச் சைவ விளக்கத்தைப் பீடித்து நின்றன என்பது நாட்டு நடப்பாகிய சரிதத்தா லறிகின்றோம். அத்தீமையை இந்த இருவழியாலும் நீக்கி உலகுக்குக் காட்டி அருளுதல் இறைவரது திருவுள்ளம். அமைந்து நின்ற எதிர்ப்பினால் அழிப்பது அரசுகள் மூலமும், எதிர்த்து அடர்த்தழிப்பது பிள்ளையார் மூலமுமாகத் திருவருள் விளங்கிற்று. நடுநாட்டில் சமணர் செய்த "வெந்தபொடி - விடம் - வேழம்-வேலை" என்ற தீய மிறைகளுக்கெல்லாம் உடன்பட்டு நின்றும், சோழநாட்டில்

இனி நிகழ இருக்கும் பழையாறை வடதளி வரலாற்றில் உண்ணாவிரதங் கிடந்தும், பரசமயங்களின் வலியின்மை காட்டிச் சைவத்தை ஆக்கியருளியது, அருந்தவத்தோர் நெறிவாழ அவதரித்த நாயனாரது சரித உள்ளுறை. பிள்ளையார் சரிதத்தினுள், பாண்டி நாட்டில் நிகழும் சமண வாதத்தாலும், தெளிச்சேரியில் நிகழும் பௌத்த சமய வாதத்தினாலும், தொண்டைநாட்டில் திருமயிலையில் நிகழும் அங்கம்பூம்பாவை யாக்கிய அற்புத வரலாற்றினாலும், சோழநாட்டில் தண்டியடிகள் நாயனார், நமிநந்தி யடிகளுயனார் சரித வரலாறுகளினாலும் எதிர்த்தடர்த்துப் பரசமயப் பீடைகளை ஒழித்துச் சைவத்திறத்தை விளங்க வைத்தல் இறைவரது திருவுள்ளம்.

(4) நாயனாரும் உடன்சென்றருளின் பாண்டி நாட்டில் சமணர் செய்த ஒரு தீமையினைச் சிதைத்தற்குச் சைவ சமயத்தின் இரண்டு ஆசாரியன்மார்கள் எழுந்தருளிச் செயல் செய்ய வேண்டுவதாயிற்று என்ன வேண்டிவரும். அஃது அவர் பெருமைக்கு இழுக்காகும்.

(5) இரண்டு பெருமக்களும் ஒருங்கே எழுந்தருளியிருப்பின் அங்குச் சமணத் தீங்கை ஒழிக்கும் செயல் இன்னாரால் நிகழ்ந்த தென்றறிந்து பின்பற்றி உலகம் உய்யாது மயங்கவரும்.

(6) சமணர்களது மாய வஞ்சனைகளையும் தீமைகளையும்பற்றிக் கூறிப், பிள்ளையாரை அங்குச் செல்லலாகாது என்று மறுத்த நாயனார், "தீயாரைக் காண்பதுவும் தீதே" என்ற நியதிப்படி அத்தீயார் உள்ள இடத்துத் தாம் அணுகாது ஒதுங்கியிருத்தலையே விரும்புவர் என்பது.

(7) அவ்வாறு அணுகாது ஒதுங்க விரும்பினும் பிள்ளையார் செல்லும்போது அவர்க்காக உடன்வர, நாயனார் துணிதல் கூடுமாதலின், அதனை விலக்குதலும் பிள்ளையார் திருவுள்ளக் கருத்தாகும்.

இவ்வாறுள்ள பலவும் இங்குக் கருதவைத்து **ஆமாறெல்லாம் உரைத்தவரை** என்றார்.

**உரைத்தவரை** - உரைத்தாராகிய பிள்ளையாரை. வினைப் பெயர். உடைய பிள்ளையார் "ஆணையும தென்றாராகி"ச் "சிதைத்து வருகின்றேன்" என்ன ஆமாறெல்லாம் உரைத்தாராகிய அவரை என்க.

இப்பாட்டுக்கு இவ்வாறன்றிப் "போமா துணிந்து......வருகின்றேன்" என்பதனை அரசுகளின் திருவாக்காகக் கொண்டும், என்று உரைத்தும், (இணங்காது செல்லத் துணிந்த) **அவரை மறுக்க மாட்டாது** என்று பிரித்துக் கூட்டியும் உரைகொண்டனர் முன் உரையாசிரியர்கள். அஃது உரையன் றென்பது "திருப்பதிகங் கேட்டதற்பின் றிருந்து நாவுக், கரசுமதற் குடன்பாடு செய்து தாமு மவர்முன்னே யெழுந்தருள வமைந்த போது, புரமெரித்தார் திருமகனு "ரப்ப! ரிந்தப் புனனாட்டி லெழுந்தருளி யிருப்பீ ரென்று, கரகமலங் குவித்திறைஞ்சித் தவிர்ப்ப வாக்கின் காவலருந் தொழுதரிதாங் கருத்தி னேர்ந்தார்" (திருஞான - புரா - 617) என்ற திருப்பாட்டாலறிக. அதனோடு இயைபுபடுமாறு இங்குப் பொருள் கொள்ளப்பட்டது. இவ்வொரு நிகழ்ச்சியில் அரசுகள் சரிதத்துக்கு வேண்டிய அளவு இங்குத் தொகுத்தும், பிள்ளையார் சரிதத்துப் பேசத் தக்கனவற்றை அங்கு விரித்தும் கூறுவது ஆசிரியரது தெய்வக் கவிநலம்.

**மறுக்க மாட்டாது** - முன்னர் "செல்ல இசையேன் யான்" என மறுத்தார்; (1552); பின்னர் ஆணை உமது; திருநீறு துணையாகச் சமணநிலை அழிவித்துச் சைவ நெறி வளர்த்து வருகின்றேன் என்று அவர் கோளறு பதிகம் அருளியது கேட்டுத் தாமும் அதற்கு உடன்பட்டு உடனே செல்லுதற் கமைந்தனர்; அதற்குப் பிள்ளை

யார்மறுத்துத், தாம்மட்டில் சென்றுவர, நாயனார் இங்கு இருக்க, என்று அருளியது கேட்டு மறுக்கமாட்டாத மன நிலையுடன் பிரிவாற்றாது அருமையாங் கருத்துடன் ஒருவாறு நேர்ந்தருளினர் என்ற இக்குறிப்பெல்லாம்பெற மறுக்க மாட்டாது அரசு இருப்ப என்றார்.

அரசு இருப்ப - பிள்ளையாரை விடுத்துத் தாம் தனித்திருப்ப ; இருந்தாராக.

ஆதரவால் - 1552-ல் சொல்லிய செயல் நிறைவேற்றும் அன்பு காரணமாக.

தமிழ் நாடு - பாண்டிநாடு. ஏனைத் தொண்டை நாடு, நடு நாடு, சோழ நாடு, கொங்கு நாடு முதலியனவும் தமிழ் வழங்கு நாடுகளேயாயினும் சிறப்புப்பற்றிக் காரண இடுகுறியாகப் பாண்டி நாடே தமிழ்நாடு என்று வழங்கப்படும். முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானே தலைவராக இருந்து சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்தமையாலும், தமிழ் முனிவர் என்னும் அகத்தியர் இன்றும் நிலைபெறத் தங்கும் பொதிகையை உடைமையாலும், பிறவாற்றாலும், இவ்வாறு வழங்குதல் மரபாயிற்று. மூர்த்திநாயனார் புராணம் (968 - 974) பார்க்க.

ஞானத்தலைவனார் - ஆளுடைய பிள்ளையார். ஞானத்தலைவனாராதலின் அவ்வாறு துணிந்து போயினார் என்பது கருத்து. சிவஞானம் எல்லாம் செய்யவல்லது என்றதும் குறிப்பு. "நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்லர்" (திருஞான - புரா - 807)

போகப் போதா—என்பதும் பாடம். 289

1555. வேணு புரக்கோ னெழுந்தருள விடைகொண் டிருந்த வாகீசர்
பூணு மன்பான் மறைக்காட்டிற் புனிதர் தம்மைப் போற்றிசைத்துப்
பேணி யிருந்தங் குறைபுநாட் பெயர்வார், வீழி மிழலையமர்
தாணு வின்றன் செய்யகழல் மீண்டுஞ் சார நினைக்கின்றார், உகூ0

1556. சோலை மறைக்காட் டமர்ந்தருளுஞ் சோதி யருள்பெற் றகன்றுபோய்
"வேலை விடமுண் டவர்வீழி மிழலை மீண்டுஞ் செல்வ"னென
ஞால நிகழ்ந்த நாகைக்கா ரோணம் பிறவும் தாம்பணிந்து
சாலு மொழிவண் டமிழ்பாடித் தலைவர் மிழலை வந்தடைந்தார்.

1555. (இ - ள்) வேணுபுரக்கோன்......வாகீசர்-சீகாழித் தலைவராகிய பிள்ளையார் அவ்வாறு பாண்டி நாட்டில் எழுந்தருளவே, அவர்பால் விடைபெற்றுக் கொண்டு அங்கு எழுந்தருளியிருந்த திருநாவுக்கரசு நாயனார் ; பூணும் அன்பால்...உறையும் நாள் - மேற்கொண்ட பேரன்பினாலே திருமறைக்காட்டில் வீற்றிருக்கும் பெருமானைப் போற்றித் துதிசெய்துகொண்டு திருப்பணி செய்து அங்குத் தங்கியிருந்த காலத்தில் ; பெயர்வார் - அங்கு நின்றும் புறப்பட்டுச் செல்வாராகி ; வீழிமிழலை...... நினைக்கின்றார் - திருவீழிமிழலையில் எழுந்தருளிய சிவபெருமானுடைய சிவந்த திருப்பாதங்களை மீளவும் சார்ந்து பணிவதற்கு நினைக்கின்றாராய், உகூ0

1556. (இ - ள்) சோலை...போய் - சோலைகள் சூழ்ந்த திருமறைக்காட்டில் விரும்பி எழுந்தருளும் சோதியாகிய பெருமானது திருவருளைப்பெற்று அங்கு நின்றும் நீங்கிப்போய் ; "வேலை...செல்வன்" என - கடலில் எழுந்த விடத்தையுண்டருளிய சிவபெருமானது திருவீழிமிழலையை மீண்டும் சென்று சேர்வேன் என்று உட்கொண்டு ; ஞாலம்...தமிழ்பாடி-உலகத்தில் விளங்கிய திருநாகைக்காரோணத்தையும், அது முதலாகிய பிற பதிகளையும் பணிந்து சால்புடைத்தாகிய மொழிவண்மையையுடைய திருப்பதிகங்களைப் பாடியருளி ; தலைவர் வீழிமிழலையை வந்து அடைந்தார்-தலைவரது திருவீழிமிழலையை வந்து அடைந்தனர். உகூக

இந்த இரண்டுபாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1555. (வி - ரை) விடைகொண்டு - விடைபெற்றுக்கொண்டு.

போற்றிசைத்து - திருப்பதிகங்கள் பாடி. பேணுதல் - இயன்ற திருப்பணிகள் எல்லாம் செய்து விரும்பி வீற்றிருத்தல். பெயர்வார் - அங்குநின்றும் பெயர்ந்து செல்வாராகி. அமர் - விரும்பி வெளிப்பட வீற்றிருக்கும்; தாணு - சிவபெருமான்.

பெயர்வார் - நினைக்கின்றார். (1555), அருள்பெற்று - அகன்று போய். என - பணிந்து - பாடி - வந்து அடைந்தார் (1556) என்று முடிக்க.

நினைக்கின்றார் - நினைத்து. முற்றெச்சம்.

போற்றிசைத்தல் - ஒரு சொன்னீர்மைத்தாய்ப் போற்றுதல் என்ற பொருளில் வந்தது.

மீண்டுஞ் சார நினைக்கின்றார் - முன் பலகாலம் பிள்ளையாருடனே தங்கி அருள் பெற்ற தன்மையால் இங்கு அவரைப் பிரிந்த உடனே அங்குச்சென்று தொழ நினைந்தார் என்க. மீண்டும் - என்ற குறிப்புமது. மேல்வரும் பாட்டில் "மீண்டும் செல்வன்" என்றதும் இக்கருத்து. 290

1556. (வி - ரை) சோலை - நெய்த னிலத்துக்குரிய புன்னை கைதை முதலிய சோலைகள். "மன்றல் விரவு மலர்ப்புன்னை மணஞ்சூழ் சோலை" (1529).

சோதி - இயல்பாய் ஒளி விடுவதாயும், ஏனை ஒளிகட்கெல்லாம் ஒளிதருவதாயும் உள்ள பேரொளி. "சோதியுட்சோதி", "சோதியே சுடரே சூழொளி விளக்கே".

அருள் பெற்று - அருள்விடை பெற்றுக்கொண்டு.

"வேலைவிடம்...செல்வன்" என - காரோணம் - பிறவும் பணிந்து - பாடி - வந்து - என்றது அணியனவாகிய அத்தலங்களிற் சென்று பணிந்த காலத்தெல்லாம் வீழிமிழலை செல்வேன் என்பது மனத்துட்கொண்டே சென்றருளினர் என்றதாம். திருவாரூரினின்றும் திருப்புகலூர் தொழ நினைந்து சென்றவர் பிற பதியும் பணிந்து போந்ததும் (1495), பிறவும் காண்க. என - என்று நினைந்த வண்ணமே.

ஞாலம் நிகழ்ந்த - உலகத்தில் விளங்கிய. நிகழ்தல் - பெருமை பிறங்குதல்.

நாகைக்காரோணமும் - பிறவும் என்க. உம்மை தொக்கது. பிறவும் - முன் அணைந்தனவும் பிறவும் என்க. முன் அணையாத தலமாதலின் நாகைக்காரோணத்தைப் பெயராற் சுட்டி, அது முதலிய பிறவும் என்றார்.

பிற - திருநெல்லிக்காவல், திருநாட்டியத்தான்குடி, திருவாரூர், நன்னிலம், முதலியன. நாயனாரது கருத்துத் திருவீழிமிழலை மீண்டு சென்று கும்பிடுதலாதலின் இடையில் நேர்ந்த தலங்களை வழிபட்டுச் சென்றமை தொகுத்துக் கூறினார்.

சாலும்மொழி வண் தமிழ்பாடி - அங்கங்கும் திருப்பதிகங்களை அருளிச்செய்து துதித்து.

திருமறைக்காடு

III திருச்சிற்றம்பலம் திருநேரிசை

இந்திர னோடு தேவ ரிருடிக ளேத்து கின்ற
சுந்தர மானார் போலுந் துதிக்கலாஞ் சோதி போலுஞ்
சந்திர னோடு கங்கை யரவையுஞ் சடையுள் வைத்து
மந்திர மானார் போலு மாமறைக் காட னாரே. 1

கால்கொடுத் திருகை யேற்றிக் கழிகிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற் சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத் தாவ மைத்தங் கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார் மாமறைக் காட னாரே. 4

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—மாமறைக்காடனார், தேவர் இருடிகள் ஏத்துகின்ற சுந்தரமானார்; அதிக்கலாம் சோதி ; மந்திரமானார் ; மக்களுக்கு இவ்வுடலைப் பண்ணிக் கொடுத்து அதனுள் மால் கொடுத்து ஆவி வைத்தார்; அவ்வாறு தாம் கொடுத்த காயன நாடு கண்டு அங்கு அதனுளுள்ளார்;அதனுள் நின்று உயிர்க்குயிராகிக் கண்ணின் சோதியாய் நின்று காட்டுகின்றார் ; அவ்வாறு காட்ட, உண்மை கண்டு உயிர்கள் தம்மை அடைய அறுவகைச் சமயம் வைத்தார் ; கீதம் கேட்டார் ; அடிபரவுவார்க்கு மனத்தினுள் மாசு தீர்ப்பார் ; மறுமையும் இம்மையாவார் ; பிறப்பறுத்துய்ய வேண்டில் பாயன நாடறுக்கும் பத்தர்காள் !, வினைகளால் நலிவுண்ணாது பணியுடைத் தொழில்கள் பூண்டு பணிய வம்மின்; வைகலும் வணங்குமின்கள்: மங்கையைப் பாகம் வைத்த வவர் மாசு தீர்ப்பர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சுந்தரம் - சுந்தரமுடையவர்.—(2) தேயன நாடர் - பேரொளியாகிய பிழம்பு. தேசு - தேயு என நின்றது. பாயன நாடு - பரந்த பிறவியாகிய கட்டு ; பரந்த உலக வாழ்வை வெறுக்கும் என்றலுமாம் ; காயன நாடு - உடலாகிய கோயில். "காயமே கோயிலாக" (நேரிசை) ; மாயன நாடர் - காயத்தைக் கோயிலாக் கொண்டுள்ளாரேனும், அதனுள் தோய்வுறாது தாம் சுத்த மாயா புவனத்தினுள்ளார் ; மாயையிற் றோன்றிய உலகங்கட்கெல்லாம் நிமித்தகாரணர் என்றலுமாம்.—(3) அறுமை - அழியுந் தன்மை ; ஆமென - நிலையுள்ளதென்று ; நன்மையுடையதென்று. வெறுமை - வீண். சிறுமதி - பிறை. மறுமையும் இம்மையும் ஆவார் - இம்மையிலும் மறுமையிலும் உடனின்று வினை போக்கி வீடளிக்குந் துணையாவார்.—கால்கொடுத்து......பண்ணி - உடல்களைத் தருவதனை ஒரு வீடுகட்டுதல்போல உருவகம்பண்ணினார். மால்-திரோதானசத்தியாகிய மறைப்பு. பாசநீக்கத்தின் பொருட்டு வினைகளை உயிர்கள் அனுபவித்துக் கழிக்கவேண்டி இறைவன் செய்யும் மறைப்பும் அருளேயாகும் என்பது ஞானசாத்திரம். ஆவி வைத்தல் - உடலுக்குள் உயிரை நிறுத்தல். (இத்திருப்பாட்டு மிக அரிய கருத்துக்கள்கொண்டது. யாவரும் பயிலத்தக்கது).—(5) கண்ணினர் கண்ணி னுள்ளே சோதியாய் நின்ற- "கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்" (தாண் - ஆவடுதுறை). கண்ணினுள் நின்று உயிர் காண, உயிர்க்குள் நின்று காட்டுகின்றவர்.—(6) அறுவகைச்சமயம் வைத்தார் - உயிர்களின் பக்குவபேதம் நோக்கிப் படிப்படியாய்க் கண்டு ஈடேறப் பல சமயங்களையும் வைத்தார். "ஆறு சமயத் தவரவரைத் தேற்றுந் தகையன" (இன்னம்பர்-திருவிருத்).—(7) ஏதர் - மூலகாரணர். "ஏதனை யேதமிலா விமையோர் தொழும் வேதனை" (தேவா).—(8) சினத்தினுட் சினமாய் நின்று-அவ்வசுரர் கொண்ட சினத்தினுள் விரவி நின்று.—(9) தேசன் - ஒளியுரு வானவன் ; வாசனை செய்து நின்று - அகத்தும் புறத்தும் செய்யும் பூசையில் இறைவரை நிறுவி வசிக்கச்செய்து. வாசனை - வசிக்கச் செய்தல். வாசித்தல் என்று கொள்வதுமாம். வாசனை-மணம் என்றுகொண்டு புகை காட்டி வாசனை செய்து என்றலுமொன்று. இப்பொருட்கு இனம்பற்றி விளக்கு, மஞ்சனம் முதலியனவும் உடன் கொள்க.—(10) பத்தர்கள் - பத்தர்களே ! விளி. பற்றினாலே உய்யலாம் என்று வினைமுற்று வருவிக்க. பணியுடைத் தொழில்கள் சரியை முதலாயின.

IV திருச்சிற்றம்பலம் திருநேரிசை

தேரையு மேல்க டாவித் திண்ணமாத் தெழித்து நோக்கி
யாரையு மேலு ணரா வாண்மையான் மிக்கான் றன்னைப்
பாரையும் விண்ணு மஞ்சப் பரந்ததோள் முடிய டர்த்துக்
காரிகை யஞ்ச லென்பார் கலிமறைக் காட னாரே. 1

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு :**—மறைக்காடனாரே, அஞ்சாது கயிலைமலையினை எடுக்கப்புக்க இராவணனை ஒரு விரலால் ஊன்றி அடர்த்தார்; அதுகண்டு பூதம் எல்லாம் நக்கன; அவன் முன்கை மா நரம்பு வெட்டி முன்னிருக் கிசைகள் பாட அங்கை வாள் அருளினார். குறிப்பு :—இப்பதிக முழுமையும் இராவணன் கயிலை எடுத்த தொரு வரலாறு பற்றியே அருளப்பட்டது. "கூற்றாயின வாறு" என்ற பதிகப்பாட்டுக் குறிப்புக்கள் (10 பாட்டு - பக்கம் கூ0) பார்க்க. இங்குத் தரிசித்தபோது கயிலாயக் குறிப்பு நாயனார் திருவுள்ளத்துத் தோன்றியிருத்தல் வேண்டுமென்பது கருதப்படும்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) **தெழித்து** - அதட்டி. **யாரையும் மேல் உணரா ஆண்மை** - தனக்குமேல் எவரும் இருப்பதாக எண்ணாத வீரம். **மிக்கான்** - மிக்கு எழுந்த இராவணன். **காரிகை** - உமையே! விளி. "அரக்கனுணரா, தொருத்தியை வெருக்குற வெருட்டலும் நெருக்கென நிருத்த விரலாற், கருத்தில வொருத்தனை யெருத்திற நெரித்த கயிலாய மலையே" (பிள்-தேவா).—(2) **தெக்குதல்** - மிகுதல்.—(5) **பண்டம்** - கையாற் றூக்கக்கூடிய சிறு பொருள். **அடுக்க** - அழிக்க.—(6) **நாள் முடிக்கின்ற** - தனது வாழ்நாளுக்கு முடிவு எல்லை கட்டுகின்ற. **நடுங்கியே** - அஞ்சியே. **போகான்** - போகானாகி.—(8) **பக்க மேலிட்ட கையான்** - பக்கங்களில் முளைத்த அனேகங் கைகளையுடையவன். **போதுமாறு** - வணங்கிச் செல்லுமாறு. **பூதம்** - கயிலையிற் சூழ்ந்துள்ள சிவபூதகணங்கள். "கோடி கோடி குறட்சிறு பூதங்கள், பாடி யாடும் பரப்பது பாங்கெலாம்" (திருமலைச்சிறப்பு).—(9) **நாணஞ்சு** - நாலஞ்சு என்பது நாணஞ்சு என மருவி நின்றது. **பாணஞ்சு - பாண் - தாழ்ச்சி.** "சிறகாற் புல்லிப் பணிந்து பாண் செய்ததன்றே" (சீவக - 1624). **அஞ்சு** - அச்சம். அஞ்சுதல் முதனிலைப்பெயர். பாணும் அஞ்சும் என்க. தாழ்வும் அச்சமும் இழந்தவனாய். **நீள் அஞ்சு** என்பது நீணஞ்சு என மரீஇயிற்று. "நீணுல கெலாம்" (கோயில் - குறுந் - 4). **நீள் அஞ்சு** - வேண்டுமாறு நீண்டு சென்று வீழ்த்துவனவாகிய ஐம்பொறிகளின் சேட்டை. பொறிகளுக்கு மூலமான ஆணவத்தால் என்பாருமுண்டு. **ஏண் - அஞ்சு கைகள் - ஏண்** - கர்வப்பேச்சு. "ஏண் பலபகர்ந்தனை" (கந்த பு. அவைபுகு. 153). **அஞ்சுகைகள்** - அஞ்சிய பேச்சுக்கள். கர்வப்பேச்சுப் பேசியவனான்றே அஞ்சிப் பேசச் செய்தார். "ஆர்த்தவா யலற வைத்தார்" (நேரிசை-அதிகை). **ஏண் - நஞ்சுகை** - என்று பிரித்து, கர்வம் நைந்து போதலை என்றலுமாம்.

V திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

தூண்டு சுடரனைய சோதி கண்டாய் தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற வெளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய் மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லா
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய் மறைக்காட் டுறையு மணாளன் றானே. 1

கள்ளி முதுகாட்டி லாடி கண்டாய் காலனையுங் காலாற் கடந்தான் கண்டாய்
புள்ளி யுழைமானின் றோலான் கண்டாய் புலியூரிசே ராடைப் புனிதன் கண்டாய்

வெள்ளி மிளிர்பிறைமேற் சூடி கண்டாய் வெண்ணீற்றான் கண்டாய்நஞ்சேந்தின்மேய
வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய் மறைக்காட் டுறையு மணாளன் றானே.　　4

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—மறைக்காட் டுறையும் மணாளன் றானே, தூண்டு சுடரனைய சோதி; காண்டற்கரிய கடவுள் ; ஆயினும் கருதுவார்க்கு ஆற்ற எளியான் ; வேண்டு வார் வேண்டுவதே ஈவான் ; மெய்கிளரும் ஞானவிளக்கு ; மெய்யடியா ருள்ளத்து வித்து ; நம் சேந்தின் மேய வள்ளி மணாளற்குத் தாதை; ஏரி நிறைந்தனைய செல்வன்; ஆரியன் ; தமிழன் ; மம்மர றுக்கு மருந்து ; மூலநோய் தீர்க்கும் முதல்வன் ; முத்தமிழு நான்மறையு மானான் ; என்றிவை முதலிய தன்மைகளா லறியப்படுபவன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) தூண்டு சுடரனைய சோதி. "தூண்டா விளக்கனைய சோதிமுன்" (1488) என்றிவிடத் துரைத்தவை பார்க்க. சூளா மணி - முடிமணி. காண்டற்கு அரிய - ஏனைய மக்களால் அறிதற் கரியவன் ; (ஆனால்) கருதுவார்க்கு எளிமையாய் அருள் புரிபவர். ஆற்ற - மிகவும் ; வேண்டுவார் - தம்மை அடைந்தோர் - அடைய விரும்புவார். மாண்ட - மாண்புடைய.—(2) ஞான விளக்கு - ஞானமாகிய விளக்கு. ஞானத்தைக் காட்டும் விளக்கு என்றலுமாம். மெய் கிளரும் - மெய் வெளிப்படும். வித்து - முளைத்து எழுந்து சிவஞான மாகிய பலன் தருவதனால் வித்தென்றார். —(3) சிலந்திக்கு அருள் செய்தது - திருவானைக் காவிலோர் சிலந்திக் கந்நாட் கோச்சோழர் குலத்தரசு கொடுத்தார்" (தாண்). சீகாளத்தி வரலாறும் ஆம். நிருபி - உருவமில்லாதவர் ; நிருபி-உருவமுள்ளவர். சலம் துக்க - கங்கையைக் கொண்ட. தாமரையான் - பிரமன்.—(4) நம் சேந்தில் மேய வள்ளி மணாளற்குத் தாதை - நம் என்றதனைச் செந்தில் - வள்ளி - மணாளன் - தாதை என்பவற்றோடு தனித்தனி கூட்டி உரைத்துக்கொள்க. வள்ளி மணாளன் - "ஒருமுகம், குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின், மடவரல் வள்ளியொடு நகை யமர்ந் தன்றே" (முருகு).—(5) ஏரி நிறைந்தனைய செல்வன் - செல்வம் போல்பவனை செல்வன் என்றது ஆகுபெயர். பல்லாற்றாலும் நிறைவாம் தன்மை - பல்லுயிர்க்கும் உதவுதல் - தானுகச் சென்று உதவுதல் முதலியவாற்றால் ஏரிக்கு உவமித்தார். வினைபற்றி வந்த உவமை. ஆரியன் - தமிழன் - "ஆரியமுந் தமிழும் உடனே சொல்லிக், காரிகை யார்க்குக் கருணைசெய் தானே" (திருமூலர்). வடமொழி தென் மொழி என்பது பற்றி இற்றைநாள் எழும் பூசல்கள் பொருளற்றன என்பது இதன் றுணிபு.—(6) கோடியான்-குழகன் - கோடி - தலமும், குழகன் - சுவாமி பெயருமாம். கோடிக்குழகர் என்பது.—(7) ஆலை-சாலை. பரவை மேனி - கடல் வண்ணமுடைய. பரவை - நிறத்துக்கு ஆகுபெயர்.—(8) மம்மர் - துக்கம் ; மயக்கம் என்றலுமாம்.—(9) மூல நோய் - நோய்கட்கெல்லாம் மூலமாகிய ஆணவமலம். முத்தமிழும் நான்மறை யும் - தமிழ்களும் வடமொழி மறைகளும். பால விருத்தனுமானான் - விருத்த குமார பாலரான திருவிளையாடல் குறித்தது போலும் என்பர். எல்லாப் பருவமும் தானே சார்வானுன் என்றல் பொருந்தும். மாலை சேர் - மாலை போன்ற.—(10) பேரும் - இராவண (அழுபவன்) னென்ற பெயர். "இராவணனென் றீந்த நாம தத்துவன்" (தேவா - தாண்). மயர் உறு வல்வினை நோய் - மயக்கத்தால் வரும் பிறவிநோய். "மருளானு மாணுப் பிறப்பு" (குறள்)

தலவிசேடம் :—திருமறைக்காடு - வேதங்கள் பூசித்ததலம். அக்காரணத்தால் வேதாரணியம் என்று பெரும்பான்மையாக வழங்கப்படுவது. மாவலி முன்பிறப்பில்

எலியாயிருந்தது ; அது இங்குத் திருவிளக்கில் நெய்யுண்ணப் புக்கபோது மூக்கைச் சுடர் சுட்டிடக் கனன்று தூண்ட,மங்கியிருந்த விளக்கைத் தூண்டிவிட்டது;இனையாமற் செய்ததாயினும் அச்சிவபுண்ணியப்பலனால் மறுபிறவியில் மூவுலகாளும் மாவலிச்சக்கர வர்த்தியாய்ப் பிறந்தது என்ற வரலாறு அப்பர் சுவாமிகளது திருக்குறுக்கைத் திரு நேரிசையுட் போற்றப்பட்ட பெருமையுடைய தலம். இமயமலையில் பார்வதியம்மை யார் திருமணத்தின்போது வடபால் தாழ்ந்து தென்பால் உயர, அதனைச் சமன் செய் வதற்காகத் தெற்கில்போந்த அகத்தியமுனிவருக்குச் சிவபெருமான் தந்த வரத்தின்படி மணவாளக் கோலங்காட்டிய பழம்பதி. மணவாளக்கோலம் திருமூலத்தானத்துள் இலிங்க மூர்த்திக்குப் பின்புறம் காணலாம். ஆதிராமர் இங்குச் சேர்ந்து பின் சேதுக் கரைகட்டி இராவணனை வதைத்துப்பின் அப்பழிநீங்கப்பூசித்த தலமாதலின் இது ஆதி சேது என்றும் கோடிக்கரை என்றும் சொல்லப் பெறும். பிந்திய இராமர் வழிபட்டு இராவணனை வதைத்த வீரகத்திப்பழி நீங்கப்பெற்ற தலம் என்பர். பிரமதேவர் இங்குப் பூசித்து வேதோபதேசம் பெற்றதுடன் சிருட்டி வல்லமையும் பெற்றனர். விசுவாமித் திரர் பூசித்துப் பிரமஇருடித் தன்மை பெற்றனர். இத்தலத்துள்ள மணிகர்ணிகைத் தீர்த் தத்தினுள் மூழ்கிக் கங்கை புனிதமாயினள் ; அவ்வாறே இங்குத் தேவ பூடணத் தீர்த் தத்தினுள் மூழ்கிக் காவிரி புனிதம் பெற்றனள். வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்ட படி அடைத்தேயிருந்த கதவினைத் திருநாவுக்கரசு நாயனார் தேவாரம் பாடித் திறப் பித்தனர் ; திருஞானசம்பந்த நாயனார் தேவாரம் அருளிச்செய்து அதனை அடைக்கச் செய்தருளினர் ; அதுமுதல் திறக்கவும் அடைக்கவும் வழங்கி வருகிற நிகழ்ச்சியினால் நாயன்மார்களது தேவாரங்களும் தமிழ் வேதங்கள் எனப்பட்டு இறைவன் வாக்காகிய வேதங்களோடொத்த சிறப்புடையன என்று விளக்கிய தலம். இவ்வரலாறுகள் அவ் வந் நாயன்மார் புராணங்களுட் காண்க. சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமான்பெருமா ணாயனாரும் ஒருங்கே எழுந்தருளித் தரிசித்தனர். அம்மை பெயருடன் சுந்தரமூர்த்தி களது தேவாரம் தொடங்குதல் குறிப்பிடத்தக்கது. முசுகுந்தர் தாபித்த விடங்கத்தலம் ஏழனுள் இதுவும் ஒன்று. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது.

*சுவாமி* - மறைக்காட்டு மணாளர் ; வேதாரண்யேசுவரர் ; *அம்மை* - யாழைப் பழித்த மொழியம்மை ; *தீர்த்தம்* - வேத தீர்த்தம் - கடற்றுறை - *முதலியன* ; *மரம்* - வன்னி ; *விடங்கர்* - புவனவிடங்கர் ; *நடனம்* - அம்ச நடனம். *பதிகம்* 10

*திருத்துறைப்பூண்டி-வேதாரணியம் இருப்புப்பாதைத் தொடர்ச்சியில் வேதாரண் யம் என்ற நிலயத்தினின்றும் ½ நாழிகை அளவில் அடையத்தக்கது.*

### நாகைக்காரோணம் - பிறவும்

*இதிற் குறித்த பிறவும் என்றதனாற் கருதப்பட்ட இடைப்பட்ட திருநெல்லிக் காவல் - திருநாட்டியத்தான்குடி - திருநன்னிலம் முதலியவைகட்கு நாயனார் பதிகங் கள் கிடைத்தில! திருவாரூர்ப் பதிகங்கள் முன்னரே குறிக்கப்பட்டன.*

### திருநாகைக்காரோணம்

[ *திருச்சிற்றம்பலம்* திருநேரிசை

மனைவிதாய் தந்தை மக்கண் மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி வேதனைக் கிட்மா காதே
கனையுமா கடல்சூழ் நாகை மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகி லுய்யலா நெஞ்சி னீரே. 1

*தெற்றினர் புரங்கள் மூன்றுந் தீயினில் விழவோ ரம்பாற்*
*செற்றவெஞ் சிலையர் வஞ்சர் சிந்தையுட் சேர்வி லாதார்*
*கற்றவர் பயிலு நாகைக் காரோணங் கருதி யேத்தப்*
பெற்றவர் பிறந்தார் மற்றுப் பிறந்தவர் பிறந்தி லாரே. 9

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*நாகைக்காரோணத் திறைவரை நினைந்தால் உய்யலாம்; நினைபவரே பிறந்தவர்; ஏனையோர் பிறந்தும் பிறவாதவர்; அதாவது இறந்தவரோ டொப்பர்.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கனையும் - *கனைக்கும்*; ஒலிக்கும். நினையுமா - *நினைக்கும் ஆறு-வழி.* நெஞ்சினீரே - *இகழ்ச்சிக் குறிப்பாகிய பன்மை. உலகரை நோக்கி உரைத்தல் கருதி நெஞ்சினை முன்னிலைப்படுத்தியது.*—(2) நினைந்த - *நினைந்த தனல்.* (3) வேத வித்து - *வேதமூலம்; சிவன்.*—உணர்தல் - *அவரது இறைமைத் தன்மையினையும் கருணையினையும் அனுபூதிகமாகக் கைவரப்பெறுதல்.*—(4) மண் தனை இரந்து - *மாவலியினிடத்து திருமால் மண் கேட்டது.*—(5) இடும்பை - *துன்பிற்குக் காரணமான பாசம்.*—(6) வெம்பனை - *கொடிய பனைபோன்ற. "பனைக்கை மும்மத வேழம்"* (தேவா).—(7) கங்குலும் பகலும் காணப்பெற்று - *இரவு பகல் இடைய றுது நினைத்தலால் மனத்துட் கண்டு கொண்டு.*—(9) தெற்றினர் - *பகைவர்.* கருதி ஏத்த...பிறந்திலார் - *"பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"* (தேவா). பிறந்திலார்- *செத்தவர் என்ற பொருள்தரக் கூறும் மங்கலவழக்கு.*—(10) *இறைவரது ஒருவிரல் நுனிக்கு ஆற்றமாட்டாது அழியாவரம் பெற்ற இராவணன் அழிந்தனன்; அவர் இரு* தேவிமாருடன் *திருமேனி முழுமையும் திருவடியும் மனத்தினுள் தாங்கியதனுல், (அழி யும் உடல் பெற்ற) அடியாராகிய நாம் அழியாமை பெற்று உய்ந்தோம். இஃது என்ன அற்புதம் ! இறைவரது தன்மையை நகைச்சுவைபட எடுத்துக் கூறியது.*

II *திருச்சிற்றம்பலம்* திருவிருத்தம்

*வடிவுடை மாமலை மங்கைபங் கா! கங்கை வார்சடையாய் !*
*கடிகமழ் சோலை சுலவு கடனுகைக் காரோணனே !*
*பிடிமத வாரணம் பேணுந் துரகநிற் கப்பெரிய*
*விடிகுரல் வெள்ளெரு தேறுமி தென்னைகொ லெம்மிறையே !* 1

*தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த*
*காமன் பொடிபடக் காய்ந்த கடனுகைக் காரோண!* நின்
நாமம் பரவி நமச்சிவா யவென்னு மஞ்சேழுத்துஞ்
சாமன் றுரைக்கத் தருதிகண் டாயெங்கள் சங்கரனே ! 3

*பழிவழி யோடிய பாவிப் பறிதலைக் குண்டர்தங்கள்*
*மொழிவழி யோடி முடிவேன் முடியாமைக் காத்துக்கொண்டாய்*
*கழிவழி யோத முலவு கடனுகைக் காரோண !* வேன்
வழிவழி யாளாக்கும் வண்ண மருளெங்கள் வானவனே ! 4

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு:—*கடல்சூழ் நாகைக்காரோணத்தில் எழுந்தருளிய* இறைவரே! *நான் இறக்கும் காலத்தில் உமது திருநாமங்களைச் சொல்லி உமது மகா மந்திரமாகிய சீ பஞ்சாக்கரத்தை உரைக்கும் வரத்தைக் கொடுப்பீராக!* என் வழிவழி ஆளாக்கும் வண்ணம் *அருளுவீராக! நாகைக்காரோணத்தை* என்றும் *சிந்தை செய்வாரைத்*

திருமங்கை பிரியாதிருக்கும். சமண் குழியில் வீழ்ந்த என்னையும் நினைந்து எடுத்து ஆட்கொண்டு காத்தீர்! உமக்கு நான் செய்யும் கைமாறு என்ன உள்ளது?

குறிப்பு :—இப்பதிகத்தில் அகப்பொருட்சுவைபட இறைவருடன் நாயகி அசதி யாடும் முறையில் பல பாட்டுக்கள் காணத்தக்கன. யானை குதிரை இருக்க எருது ஏறுவதென்? (1). வில் தாங்கியகை அம்மையாருடையது; நாண்வலித்து அம்பு கோத்த கை உம்முடையது; இவ்வாறாக வில் எய்து புரம் எரித்த தெவ்வாறு? (2)—மெல் லியலார் வந்து பலி இடப் பிச்சைகொள்வது மாதிமையோ? (7)—கங்கையைச் சடை யுள்ளே கரந்து வைத்தாய்; அக்கள்ளத்தை மெள்ள வுமைநங்கை அறியிற் பொல் லாது (9).

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) "கடகரியும் பரிமாவும்" (சாழல்).—(2) சேவ கம் - ஆண்மை; வீரம் செய்தல்.—(3) தீ வேள்வி தொழிற்படுத்த - தீயுடன் செய் யும் திருமணத்தினை நீர் செய்யும்படி தூண்டிய. சாம் அன்று உரைக்கத் தருதி - நாய னார் தமக்காகக் கேட்கும் வரங்கள் மிகச் சில. இது அவற்றுள் ஒன்று. (பிறரும் இவ் வாறு கேட்கப் பயிலுதல் நலந்தரும்.)—(4) முடியாமை-கேடுறாமல். வழிவழி ஆளாக் கும் வண்ணம் - இப்பிறவியின் வழியே இனியும் தொடர்ந்து வரும் பிறவிகளிலும். "புழுவாய்ப் பிறக்கினும்" என்ற திருவிருத்தக் கருத்து. இதுவும் நாயனார் இறைவர் பாற் கேட்கும் மிகச்சில வரங்களுள் ஒன்று. உலகர்க்குக் காட்டிய உபதேசமுமாம். வழிவழி - வம்ச பரம்பரை என்று கொள்வாருமுண்டு, நாயனார் துறவறத்து நின்ற ராதலின் அது கருத்தன்றென்க.—(5) செந்துவர்வாய் - கருங்கண் - வெண்ணகை - முரண்அணி. திருமங்கை - அருட்சத்தி - இலக்குமி என்பாருமுண்டு.—(6) மனை துறந்து - அல் உண்ணு - சமணர் வழக்குக்கள். எனைநினைந்து ஆட்கொண்டு - நாய னார் சரித அகச்சான்று. இச்சை - கைமாறு என்ற பொருளில் வந்தது—(7) சீர் மலி செல்வம் - அருட்டிரு. சுலவு - சூழ்ந்த. மாதிமை - பெருமை.—(9) தலைவர் பால் மனங்கொண்ட நாயகி அவருடன் அசதியாடிய கூற்றாகச் சொல்லியது. நாய கன் - மணவாளன்.—(10) மற்றுச் செய்திலன் - நகைச்சுவைபடக் கூறியது.

III திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

பாணத் தான்மதில் மூன்று மெரித்தவன், பூணத் தானர வாமை பொறுத்தவன்,
காணத் தானினி யான்கட லுகைக்கா, ரோணத் தானென நம்வினை யோயுமே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—நாகைக்காரோணத்திறைவரைத் தொழ வினைகள் தீரும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பாணம் - அம்பு. காணத்தான் இனியான் - அழகன் - இனிமை செய்பவன். காண - தரிசித்துப் பெருமைகளைக் காண. என - என்று சொல்ல.—(2) அலம்பிய - சத்தித்த. காண்டலும் என்பது எதுகை நோக்கிக் கண்டலும் என நின்றது.—(4) எல்லி - இரவு.—(5) அனுக்கிய - வருத்திய. மை - விடம். மையைத் துன்புறுத்திய - மாற்றிய-நீலகண்டன். (6) விலங்கல் மெல்லியல்- மலைமகள். விலங்கல் - மலை.—(7) ஏறு - சிங்க ஏறு. இனங்கோள் - கூட்டமாகிய. சிவனோடொப்ப இனம் என்று தம்மை எண்ணித் தருக்கிய என்றலுமாம். இப்பொருட்கு வானவரும் எனச் சிறப்பும்மை தொக்கதென்க.—(8) அந்தமில்புக ழாயிழையார்-மலை மகள். காரைக்காலம்மை, மங்கையர்க் கரசியம்மையார் முதலினோர் என்றலுமாம் "கௌரி நாயக, நின்னை வணங்கிப் பொன்னடி புகழ்ந்து, பெரும்பதம் பிழையா வரம் புல பெற்றோர், இமையா நெடுங்கண்ணுமையா ணங்கையும்......தாருகற் செற்ற வீரக்

கன்னியும், நாவின் கிழத்தியும் பூவின் மடந்தையும்" (திருவிடை - மும்-கோவை - 30) என்ற பட்டினத்து அடிகள் திருவாக்குக் காண்க.—(9) சேநவன் - போர் வீரன்.—10) தழீ - தழுவுதலையுடையது. இகரம் வினைமுதற்பொருள் விகுதி.

IV　திருச்சிற்றம்பலம்　　திருத்தாண்டகம்

பாரார் பரவும் பழனத் தானைப் பருப்பதத் தானைப்பைஞ் ஞீலி யானைச்
சீரார் செழும்பவளக் குன்றொப் பானைத் திகழுந் திருமுடிமேற் றிங்கள் சூடிப்
பேரா யிரமுடைய பெம்மான் றன்னைப் பிறர்தன்னைக் காட்சிக் கரியான் றன்னைக்
காரார் கடல்புடைசூ ழந்த ணாகைக் காரோணத் தென்ஞான்றுங் காண லாமே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பருப்பதம், பைஞ்ஞீலி, முதலிய பல தலங்களிலும் வீற்றிருப்பவரும், பேராயிர முடைய பெம்மான், பெண்ணான் ஆணான் பேடியான், ஞானப் பெருங்கடல், பன்மை பேசும் படிறன், தொல் நரகம் நன்னெறியால் தூர்ப்பான் முதலியனவாகிய பெருமைகளால் அறியப்படுபவரும் ஆகிய இறைவரைக் கடல் நாகைக் காரோணத்தில் எஞ்ஞான்றும் காணலாம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பருப்பதம் - சீபர்வதம்.—(2) வீரட்டத்தானை என்பது வீரட்டானை என நின்றது ; பெண் - ஆண் - பேடு - உயிர் வருக்கம்.—(3) தேன் - வண்டின் சாதி. தேன்போல என்றலுமாம். கறை - நிறம்.—(4) ஆச்சிராமம் - திருப்பாச்சிலாச்சிராமம் ; சின்னமாம் பன்மலர்கள் - ஊமத்தம், கொக்கிறகு, கொன்றை, தாமரை முதலியவை ; புன்னை - நெய்தற் கருப்பொருள்.—(5) ஞானப் பெருங்கடல் - உருவகம் ; ஞான நிறைவுடையவன். பன்மையே பேசும் படிறன் - நிந்தைத்துதி. பன்மையே பேசுதல் - உயிர்களின் பக்குவபேதம் நோக்கி அவ்வவர்க் கேற்றவாறு உண்மை அருளி அறிவுறுத்துதல்.—(6) புகார் - காவிரிப்பூம் பட்டினம். ஏகாசம் - உத்தரீயம் - போர்வை. கலங்கல் - திரைகள் தரையில் மோதுதலாற் கலங்கிய புனலுடையது கடற்கரை.—(9) தோல் நரகம் நல் நெறியால் தூர்ப்பான் - நன்னெறி காட்டி யருளுதலால் உயிர்கள் நரகத்திற் போகாமற் செய்வான்.—(10) இப்பாட்டு ஐயப்பாடு. குறிப்பு :—இப்பதிகத்துப் பாட்டுத் தோறும் வெவ்வேறு பல தலங்களைக் கூறுகின்றார். 10-வது பாட்டில் அவ்வாறில்லை. அதனுள், "அவன் பற்றே பற்றாகக் காணினல்லால்" என்பது பொருந்துமாறில்லை.

தல விசேடம் :—நாகைக்காரோணம் - இது நாகப்பட்டினம் என வழங்கப் படும். ஆதிசேடன் பூசித்தமையால் நாகை எனவும், புண்டரீக மகா முனிவரை இறைவர் தமது திருமேனியினுள் ஏற்றுக்கொண் டருளியமையால் காயாரோகணம் (காயம் - உடம்பு ; ஆரோகணம் - ஏற்றுக்கொள்ளுதல்) எனவும் பெற்று, நாகைக் காயாரோகணம் எனப்பட்டு, அது நாகைக்காரோணம் எனமருவி வழங்குவதாயிற்று. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. முசுகுந்தர் கொண்டுவந்து தாபித்த ஏழு விடங்கத் தலங்களுள் ஒன்று. ஆளுடைய நம்பிகள் திருப்பதிகம் பாடிப் பொன் முதலியவை பெற்றனர். பரதவர் குலத்தில் அதிபத்த நாயனார் இங்கு அவதரித்து அன்பு பூண்டு நாடோறும் வலைவீசிப் படுத்த மீன்களில் முதலில் படும் மீனைச் சிவனுக் கெனக் கடலில் விட்டுவரப், பலநாளும் ஒரு மீனே பட விட்டுவந்து, ஒருநாள் நவமணிகளால் உறுப்பமைந்த ஒரு அரிய மீன்பட, அதனையும் சிவனுக்கென விடுக்க, இறைவர் வெளிப்பட்டு ஆட்கொண்டருளினர். அவர்தம் புராணம் பார்க்க. "பொன்னிநாடெனுங் கற்பகப் பூங்கொடி மலர்போ, னன்மை சான்றது நாகபட் டினத்திரு

நகரம்'' என்று இதன் சிறப்பை ஆசிரியர் விதந்தோதி யுள்ளார். மகா வித்வான் மீனுட்சிசுந்தரப் பிள்ளை தலபுராணம் பாடியுள்ளார்.

சுவாமி - காயாரோகணேசுவரர்; அம்மை - நீலாயதாட்சியம்மை; தியாகர் - சுந்தரவிடங்கர்; நடனம் - தரங்க நடனம்; (தியாகராசருக்கு முன் நம்பிகள் எழுந் தருளியுள்ளார்). தீர்த்தம் கோயிலுக்குத் தெற்கில், தேவதீர்த்தம்; மேற்கில் - புண் டரீக தீர்த்தம். மரம் - மா. பதிகம் 7.

இது நாகபட்டினம் புகை வண்டி நிலயத்தினின்றும் வடமேற்கே ¾ நாழிகையில் அடையத்தக்கது.

1557. வீழி மிழலை தனைப்பணிந்து, வேத முதல்வர் தாமிருப்ப
ஆழி வலமேர் தியவரியா லாகா சத்தி னின்றிழிந்த
வாழி மலர்ந்த கோயிறனின் மன்னும் பொருளைப் போற்றிசைத்துத்
தாழு நாளிற் பிறபதியும் பணியுங் காத றலைநிற்பார், உகூஉ

1558. பூவிற் பொலியும் புனற்பொன்னிக் கரைபோய்ப் பணிவார் பொற்பமைந்த
ஆவுக் கருளு மாவடுதண் டுறையார் பாத மணைந்திறைஞ்சி
நாவுக் கரசர் ஞானபோ னகர்க்குச் சேம்போ னுயிரமும்
பாவுக் களித்த திறம்போற்றிப், போந்து, பிறவும் பணிகின்றார்; உகூங

1559. செய்ய சடையார் பழையாறை யெய்த வதனிற் செல்பொழுதின்
மைய லமணர் மறைத்தவட தளியின் மன்னுஞ் சிவனாரைக்
கைகள் கூப்பித் தொழுதருளக், கண்ட வாற்று லமணர்கடம்
பொய்கொள் விமான மெனக், கேட்டுப், பொறுதவுள்ள மிகப்புழுங்கி,

1560. அந்த விமானந் தனக்கருகா வாங்கோ ரிடத்தின் பாங்கெய்திக்
கந்த மலருங் கடிக்கொன்றை முடியார் செய்ய கழலுன்னி
"மந்த வமணர் வஞ்சனையான் மறைத்த வஞ்ச மொழித்தருளிப்
பந்தங் கொண்ட வமணர்திறம் பாற்று" மென்று பணிந்திருப்பார்,

1561."வண்ணங் கண்டு நானும்மை வணங்கி யன்றிப் போகே"னென்
றெண்ண முடிக்கும் வாகீச ரிருந்தா ரமுது செய்யாதே;
அண்ண லாரு மதுவுணர்ந்தங் கரசு தம்மைப் பணிவதற்குத்
திண்ண மாக மன்னனுக்குக் கனவி லருளிச் செய்கின்றார், உகூகூ

1562."அறிவி லமணர் நமைமறைப்ப விருந்தோ" மென்றங் கடையாளக்
குறிக ளருளிச் செய்தருளி, "நம்மை யரசு கும்பிடுவான்
நெறியி லமணர் தமையழித்து நீக்கிப் போக்"கென் றருள்புரியச்
செறிவி லறிவுற் றெழுந்தவனுஞ் செங்கை தலைமேற் குவித்திறைஞ்சி,

1563. கண்ட வியப்பு மந்திரிகட் கியம்பிக் கூடக் கடிதெய்தி,
யண்டர் பெருமா னருள்செய்த வடையா ளத்தின் வழிகண்டு,
குண்டர் செய்த வஞ்சனையைக் குறித்து வேந்தன் குலவுபெருந்
தொண்டர் தம்மை யடிவணங்கித், தொக்க வமணர் தூரறுத்தான்;

1564. ஆனை யினத்திற் றுகைப்புண்ட வமணு யிரமு மாய்ந்ததற்பின்
மேன்மை யரச ரீசர்க்கு விமான மாக்கி விளக்கியபின்

ஆன வழிபாட் டர்ச்சனைக்கு நிபந்த மெல்லா மமைத்திறைஞ்ச
ஞான வரசும் புக்கிறைஞ்சி நாதர் முன்பு போற்றுவார். உசுகூ

1565. "தலையின் மயிரைப் பறித்துண்ணுஞ் சாதி யமணர் மறைத்தாலுண்
ணிலையி லாதார் நிலைமையினுன் மறைக்க வொண்ணு மோ?" வென்னும்
விலையில் வாய்மைக் குறுந்தொகைகள் விளம்பிப் புறம்போந் தங்கமர்ந்தே
யிலைகொள் சூலப் படையார்சே ரிடங்கள் பிறவுந் தொழவணைவார்,

1566. பொங்கு புனலார் பொன்னியினி லிரண்டு கரையும் பொருவிடையார்
தங்கு மிடங்கள் புக்கிறைஞ்சித், தமிழ்மா லைகளுஞ் சாத்திப்போ,
யெங்கு நிறைந்த புகழாள ரீறி ஞுண்ட ரெதிர்கொள்ளச்
செங்கண் விடையார் திருவானைக் காவின் மருங்கு சென்றணைந்தார்.

1557. (இ - ள்) வீழிமிழலைதனைப் பணிந்து - அவ்வாறு திருவீழிமிழலையை வந்தடைந்த நாயனார் அத்தலத்தைப் புறத்தே பணிந்து போய்; வேதமுதல்வர்...போற்றிசைத்து - வேத முதல்வராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுவதற்காகச், சக்கரப் படையை வலக்கையில் ஏந்திய திருமாலினால் விண்ணுலகத்தினின்றும் கீழே இவ்வுலகத்துக் கொண்டுவரப்பட்டு, நிலைபெற விளங்கிய, திருக்கோயிலின்கண் நிலைபெறுகப் பொருந்திய பெருமானைத் துதித்து; தாழும் நாளில்...தலை நிற்பார் - விரும்பியிருக்கும் காலத்தில் பிற தலங்களையும் பணியவேண்டுமென்னும் ஆசையின் மிகுந்தவராகி, உகூஉ

1558. (இ - ள்) பூவில்...பணிவார் - உலகில் விளங்கும் நீரையுடைய காவிரியின் கரைவழியே போய்த் தலங்களைப் பணிந்து செல்வார்; பொற்பமைந்த...இறைஞ்சி - அழகமைந்த பசு வுருவுடன் அமைந்த அம்மையாருக்கு அருள் செய்யும் திருவாவடுதுறை யிறைவரது பாதங்களைச் சேர்ந்து வணங்கி; நாவுக்கரசர் - திருநாவுக்கரசர்; ஞானபோனகர்க்கு...போற்றி - திருஞானமுண்டருளிய ஆளுடைய பிள்ளையாருக்கு அவரது பாடலுக்காக அங்கு இறைவர் ஆயிரம் பொன்னும் அளித்த திறத்தினை வைத்துத் துதித்து; போந்து - அங்குநின்றும் புறப்பட்டுச் சென்று; பிறவும் பணிகின்றார் - பிற பதிகளையும் பணிந்து செல்கின்றாராய், உசுரு

1559. (இ - ள்) செய்ய...செல் பொழுதில் - சிவந்த சடையினையுடைய சிவபெருமான் எழுந்தருளிய திருப்பழையாறை சார அத்தலத்துள் செல்கின்றபொழுதில்; மையல் அமணர்...தொழுதருள - மயக்கமுடைய அமணர்கள் மறைத்த திருப்பழையாறை வடதளிக் கோயிலில் எழுந்தருளிய சிவபெருமானை நாயனார் கைகூப்பித் தொழுதருளிய அளவில்; கண்டவாற்றால் - திருவுள்ளத்துள் அறிந்தபடியினால்; (வினவி), அமணர்கள்தம் பொய்கொள் விமானம் எனக்கேட்டு - அது அமணர்களுடைய வஞ்சனையாற் செய்த விமானம் என்று அங்குள்ளாரால் கேட்டு; பொறுத உள்ளம் மிகப் புழுங்கி - பொறுக்கலாற்றாத திருவுள்ளத்து மிகப்புழுக்கத்தை யடைந்து, உகூச

1560. (இ - ள்) அந்த விமானம்...கழல் உன்னி - அவ்வாறறிந்த அந்தப் பொய்கொள் விமானத்தின் அணிமையில் அங்கு ஓரிடத்தின் பக்கமாகச் சேர்ந்து, மணமுடைய இதழ்கள் விரிகின்ற கொன்றை மாலை சூடிய முடியினையுடைய சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளை நினைத்து; "மந்த அமணர்...பாற்றும்" என்று - அறிவிலிகளாகிய அமணர்கள் வஞ்சனையினால் மறைத்த வஞ்சத்தினை ஒழித்தருளிச், சைவத்திறம் விளங்காது மறைத்த அமணர்களின் திறத்தினை அழிப்பீராக" என்று வேண்டிக்கொண்டு; பணிந்திருப்பார் - பணிந்திருப்பாராகி, உகூடு

1561. (இ - ள்) "நான் வண்ணம் கண்டு உம்மை வணங்கியன்றிப் போகேன்" என்று - "நான் உமது திருமேனியைக் கண்ணாற் கண்டு வணங்கினாலன்றி இங்கு நின்றும் மேற்செல்லமாட்டேன்" என்று இறைவரிடம் முறையிட்டு உறுதிகொண்டு; எண்ணம் முடிக்கும் வாகீசர் - தம் எண்ணத்தை எண்ணியபடி முடிக்கும் திருநாவுக்கரசர்; அமுது செய்யாதே இருந்தார் - அமுதுசெய்யாமல் பட்டினி கிடந்தருளினர்; அண்ணலாரும் அது உணர்ந்து - சிவபெருமானும் அதனைத் தமது திருவுள்ளத்துக் கொண்டு; அங்கு அரசு தம்மைப் பணிவதற்கு-அத்தலத்தே திருநாவுக்கரசுகள் தம்மைக் கும்பிடுவதற்காக; மன்னனுக்குக் கனவில் திண்ணமாக அருளிச்செய்கின்றார் - அரசனுக்குக் கனவில் தோன்றி உறுதியாக அருளிச் செய்கின்றாராய்; உகசு

1562. (இ - ள்) "அறிவில் அமணர்......இருந்தோம்" என்று - "அறிவில்லாத அமணர்கள் நம்முடைய கோயிலை மறைக்க நாம் உள் இருந்தோம்" என்று கூறி; அங்கு அடையாளக்குறிகள் அருளிச் செய்தருளி - அவ்விடத்தைக் காணக் கூடிய அடையாளக்குறிகளையும் அருளிச்செய்து; "நம்மை......போக்கு" என்று அருள் புரிய - நம்மைத் திருநாவுக்கரசு கும்பிடுவதற்காக, நன்னெறியில்லாத அமணர்களை அழித்து அவ்விடத்துநின்றும் நீங்கச் செய்து போக்குவாயாக!" என்று அருள்புரிய; செறிவில்......இறைஞ்சி - துயில் நீங்கி அதனை நனவிலறிவுற்று எழுந்த அவ்வரசனும் செங்கையினைத் தலைமேற் கூப்பி வணங்கி, உகஎ

1563. (இ - ள்) கண்ட......இயம்பி - தான் கனவிற் கண்ட வியப்பான காட்சித் திறத்தை மந்திரிகளுக்கு எடுத்துச் சொல்லி; கூடக் கடிது எய்தி - அவர்களுடன் தானும் விரைவாக அவ்விடத்துக்குச் சென்று சேர்ந்து; அண்டர்......கண்டு - தேவ தேவராகிய சிவபெருமான் அருளிச்செய்த அடையாளங்களின் வழியே சிவ னுருவினைக் கண்டு; வேந்தன் - அரசன்; குண்டர் செய்த வஞ்சனையைக் குறித்து - சமணராகிய கீழ் மக்கள் செய்த வஞ்சனையின் பொருட்டு; தொண்டர் தம்மை அடி வணங்கி - அவ்வஞ்சனையை வெளிப்படுத்தியருளிய திருத்தொண்டராகிய வாகீசரது திருவடிகளை வணங்கி(ப்பின்); தொக்க அமணர் தூர் அறுத்தான் - கூடிய அமணர்களாகிய தூரை அழித்தானாக; உகஅ

1564. (இ - ள்) ஆனை இனத்தில் - யானையால் அழிக்கப்பட்ட குறுந்தூறு போல்; துகைப்புண்ட-அரசனது ஏவலாளர்களால் சாடப்பட்ட; அமண் ஆயிரமும் மாய்ந்ததற் பின் - அந்தச் சமண்பள்ளியிற் றங்கிய ஆயிரம் சமண குருமார்களும் ஒழிந்த பின்பு; அரசன் ஈசர்க்கு மேன்மை விமானம் ஆக்கி விளக்கியபின் - அரசன் அந்தச் சினகரத்தை ஈசர்க்குரிய மேன்மையான விமானமாக ஆக்கி உரியபடி விளங்கச் செய்த பின்னர்; ஆன...இறைஞ்ச - சிவாகமமுறையில் விதித்த வழிபாடாகிய பூசனைக்கு வேண்டிய நிபந்தங்களையெல்லாம் அமைப்பித்து அரசுகளை வணங்க; ஞான... போற்றுவார் - ஞான அரசுகளாகிய நாயனாரும் புகுந்து வணங்கி இறைவர் திருமுன்பு போற்றுவாராகி, உகக

1565. (இ - ள்) "தலையின்......ஒண்ணுமோ?" என்னும் - "தலைமயிரையெல்லாம் பறித்து, உண்ணுகின்ற கூட்டத்தாராகிய அமணர்கள் மறைத்தாலும் உண்மைநிலை யில்லாராகிய அவர்கள் தமது சிற்றறிவின் நிலைமையினால் மறைத்து வைத்தல் இயலுமோ?" என்னும் கருத்துடைய; விலையில்...விளம்பி - விலை மதித்தற்கரிய வாய்மையுடைய திருக்குறுந்தொகைகளைக் கட்டளையிட்டருளி; புறம் போந்து-வெளியே வந்து; அங்கு அமர்ந்தே - அங்குத்தங்கிப் பின்னர்; இலைகொள்... தொழ அணைவார் - மூவிலை வடிவாகிய சூலப்படை யேந்திய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பிற தலங்களையும் தொழச் செல்வாராய், ௬௦௦

1566. (இ - ள்) பொங்கி வருகின்ற நீர் நிறைந்த காவிரியின் இரண்டு கரைகளிலும், போர்வல்ல விடையினையுடைய சிவபெருமான் நிலைத்து விளங்கி வீற்றிருக்கும் பல தலங்களிலும் புகுந்து, வணங்கித், தமிழ் மாலைகளையும் சாத்தி, மேற்சென்று, எங்கும் நிறைந்த புகழாளராகிய நாயனுர், முடிவில்லாத தொண்டர்கள் பலரும் வந்து எதிர்கொள்ளச், செங்கண் விடையினையுடைய இறைவரது திருவானைக்காவின் மருங்கே சென்று அணைந்தனர்.

இந்தப் பத்துப் பாட்டுக்களும் சொற்றொடர்பும் பொருட்டொடர்பும் பெற்று ஒரு முடிவு கொண்டன. ௬௦௧

1557. (வி - ரை) முதல்வர் - இருப்ப - அரியால் - ஆகாயத்தினின்றும் இழிந்த - கோயில் என்று கூட்டுக.

இழிந்த - இழிச்சிய என்ற பொருளில் வந்தது. "தன்றவம் பெரிய சலந்தர னுடலந் தடிந்தசக் கரமெனக் கருளென், றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத் திறையவன்" (புறநீர்மை - பிள்ளையார் - தேவா - 7), "அவன்கொணர்ந் திழிச்சும் கோயில்" (நேரிசை) என்றபடி, இழிச்சிய - கீழே கொண்டு வரப்பட்ட - எனப் பிறவினையாகக் கொள்க. கோயில் கொணர்ந்து அரி பூசித்தது தல வரலாறு.

வாழ மலர்ந்த - வாழ்வாக விளங்கிய.

பொருள் - இறைவர். தாழும் - விரும்பும். தாழ்தல் - விரும்புதல். தங்குதல் என்றலுமாம்.

தலைநிற்பார் - நிற்பாராகி - மிகவும் மேற்கொள்வாராகி. எதிர்கால முற்றெச்சம். நாவுக்கரசர் - வாகீசர் (1561) - தலைநிற்பார் - கரைபோய்-அணைந்து இறைஞ்சிப் - போற்றிப் போந்து - பணிகின்றார் (1558) - எய்தச் - செல்பொழுதில் - தொழுதருளக் - கேட்டுப் - புழுங்கி (1559) - எய்தி - உன்னி - என்று - பணிந்திருப்பார் (1560) - அமுதுசெய்யாதே - இருந்தார்; அண்ணலாரும் - உணர்ந்து - அருளிச் செய்கின்றார் (1561) - என்று - அறியச் செய்தருளி - என்று அருள்புரிய - அரசனவனும் - அறிவுற்று - எழுந்து - குவித்திறைஞ்சி (1562), இயம்பி - கூட - எய்தி - கண்டு - குறித்து - வணங்கி - அறுத்தான்; (1563) மாய்ந்ததற்பின் - ஆக்கி - விளக்கியபின் - அமைத்து - இறைஞ்ச - அரசும் - புக்கு - இறைஞ்சிப் - போற்றுவார் (1564) - (என்னும் - குறுந்தொகைகள்-1565) விளம்பிப் - புறம் போந்து - அமர்ந்தே - தொழ அணைவார் - புக்கு இறைஞ்சிச் - சாத்திப் - போய் - எதிர்கொள்ளச் - சென்று - அணைந்தார் (1566) என்று இந்தப் பத்துப் பாட்டுக்களையும் தொடர்ந்து முடிக்க.

1558. (வி - ரை) பூவிற் பொலியும் புனல் பொன்னி - பூ - உலகம். உலகில் விளக்கமுடைய பெருந் தீர்த்தமாகிய என்க. புனல் - பொய்யா தளிக்கும் புனலுடைய. பூ - மலர்கள் என்று கொண்டு, மலர்களை வாரிக்கொண்டு விளங்கும் எனவும், பூ - அழகு என்று கொண்டு அழகுடன் விளங்கும் என்றும் உரைக்க நின்றது. "பூந்தண் பொன்னி யெந்நாளும் பொய்யா தளிக்கும் புனனாட்டு" (1206) என்றதும், பிறவும் காண்க. 292

கரைபோய் - தென்கரை வழியாகவே மேற்கு நோக்கிப் போய்.

பணிவார் - பிற பதியும் பணியும் காதலிற் றலைநிற்பாராய்ப் போன அவர் அவ்வாறு பல பதிகளிலும் இறைவரைப் பணிவாராகி.

ஆவுக்கு அருளும் - இத்தலத்தில் பசு வடிவத்துடன் அம்மையார் பூசித்து அவ்வடிவம் நீங்கப்பெற்ற வரலாறு குறித்தது.

ஆவடு தண்துறையார் பாதம் அணைந்து - இது நாயனுர் இங்கு இரண்டாவது முறையாகத் தரிசித்தது.

ஞானபோனகர்க்குப் பாவுக்கு ஆயிரம் செம்பொன்னும் அளித்த திறம் - *சிவபாதவிருதயர் யாகம் செய்வதற்காக ஆளுடைய பிள்ளையார்க்கு ஆயிரம் பொன் கொண்ட உலவாக்கிழி தந்த வரலாறு. "காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன், ஆயிரங் கொடுப்பர் போலும்" என்ற திருநேரிசைக் குறிப்பு.* 1455-1456 *பாட்டுக்களிற் கூறியபடி முதல்முறை நாயனார் இத்தலத்துப் பணிந்து சென்றதன் பின்னரும், இப்போது இரண்டாவது முறையாக இங்கு எழுந்தருளும் முன்னரும், உள்ள இடைப்பட்ட காலத்தில் ஆளுடைய பிள்ளையார் இங்கு வந்து பொன் உலவாக் கிழி பெற்றனர். ஆதலின் இம்முறையில் அருளிய பதிகத்தினுள் அவ்வருட்செயலை நாயனார் குறித்துப் போற்றினர். திருஞான - புரா -* 417 *முதல்* 420 *வரை பாட்டுக்கள் பார்க்க.*

பணிகின்றார் - *நிகழ்கால முற்றெச்சம்.* பணிகின்றார் - செல்பொழுதின் *என்று வரும் பாட்டுடன் கூட்டுக.*

பிறவும் - *திருவிடைமருதூர் - திருநாகேச்சரம் - திருக்குடந்தை-திருவலஞ்சுழி முதலாயின.*

திருவாவடுதுறை

V *திருச்சிற்றம்பலம்* திருநேரிசை

*மாயிரு ஞால மெல்லா மலரடி வணங்கும் போலும்*
*பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலுங்*
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
னுயிரங் கொடுப்பர் போலு மாவடு துறைய னாரே. 1

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*ஆவடுதுறையிறைவர் அருட்பெருமைகளாவன : ஞாலமெல்லாம் அவர் மலரடி வணங்கும் ; கழுமலவூரர்க்கு ஆயிரம் பொன் கொடுப்பர் ; அடைந்தவர்க்கன்பர்; கலந் தலந்தலந்து பாடும் அற்றவர்க் கன்பர்; தொழுதெழுந் தாடிப்பாடித் தோத்திரம் பலவும் சொல்லி அழும் அவர்க் கன்பர் ; வேட்கையாற் பரவும் தொண்டர் அடிமையை அளப்பர் ; துக்கமா மூடர்தம்மைத் துயரினில் வீழ்ப்பார் ; அடைபவர் இடர்கள் தீர்த்து இன்பங்கள் கொடுப்பர் ; என்பனவாதியா யறியப்படுவன.*

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) மா - இரு - *ஒருபொருட் பன்மொழி. யகர வுடம்படுமெய் ஆகார முன்னும் சிறுபான்மை வரும் என்பது "மாயிருள் துமிய" (சிவஞானபோதம் - பாயிரம்) என்றவிடத்துக் காண்க.* மாய் - *அழியுந்தன்மையுடைய என்றலுமாம்.* கழுமலவூரர் - *ஆளுடைய பிள்ளையார்.* அம்பொன் ஆயிரம் - *ஆயிரம் பொன் கொண்டதொரு உலவாக்கிழி.*—(3) அற்றவர்-*பிற பற்றுக்களெல்லாம் அறத் தம்மையே அடைந்தவர். "அற்றவர்க் கற்ற சிவன்"* (தேவா).—(5) பொடி - *திருநீறு.* அடிமையை அளப்பர் - *அளப்பார்போன்று, பொருள் முதலியவை முட்டுப் படினும் செல்லும் அளவினை உலகுக்குக் காட்டுமாறு அருட்செயல்களைச் செய்தல். நாயன்மார் சரிதம் பலவும் காண்க.*—(6) வக்கரன் - *ஓர் அசுரன். திருமாலால் வதைக்கப்பட்டவன்.*—(8) நந்தி - மாகாளர் - என்பார் - நடுவுடையார்கள் - *சிவாகம விதிப்படிச் சிவபூசையமைப்பில் மேற்குத் துவாரக் காவலர்கள் நந்திமுதல் மகாகாளர் வரை உள்ள எழுவர்.* நடுவுடையார்கள் - *நந்திக்கும் மகாகாளர்க்கும் இடையில் உள்ளார். இவர்கள் யமுனை, இலக்குமி, சரச்சுவதி, கணபதி, கங்கை என்பார் ;* நிற்பச் சிந்தியாதே யொழிந்தார்-*இவர்களது காவலை எண்ணுதார் என்றும், இவர்கள் காவலாக வைத்து நினைத்துப் பூசை செய்யாதொழிந்தார் என்றும் உரைக்க நின்*

றது.—(9) தீனர் - இரங்கி வழிபடுவோர்.—(10) ஆர்த்த - மதியாது கொதித்து அடாது சொல்லி ஆரவாரித்த. அலறுவித்தார் - அப்போதே அலறும்படி செய்தவர்.

1559. (வி - ரை) பழையாறை எய்த அதனிற் செல்பொழுதில் - பழையாறைத் தலத்தருகு வந்து சார அதனுள் செல்லும்போது; எய்த - எய்தி என்று செய என்னும் எச்சத்தைச் செய்து என்ற எச்சமாக்கி உரைப்பதுமொன்று.

மையல் - அழியும் தன்மையுள்ள தெய்வத்தைக் கடவுளென்று கொள்ளும் மயக்கம். "செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று, பத்தி செய்மனப் பாறை கட்கு" (அப் - தேவா); "அழியும் பொருளை வட்டித்திங் கழிந்தோம் என்பார்" (தண்டி - புரா - 22). தம்மாற்றலால் மறைக்க முடியாத பொருளை மறைப்போ மென்ற மையல் என்பதுமாம்.

வட்தளி - பழையாறை வடதளி - தனித் தலம். பழையாறை இதற்குத் தென் மேற்குப் பாகத்தில் 1½ நாழிகை யளவிலும், பழையாறை மேற்றளி அதினின்று வடமேற்காக 2 நாழிகையளவிலும் அடையத்தக்கன. அமர்நீதிநாயனார் புராணத் திறுதியில் பக்கம் ௬௮௮-ல் தலவிசேடக் குறிப்புக்கள் பார்க்க.

கண்ட ஆற்றல்...எனக் கேட்டு - கண்ட ஆற்றல் - தமது திருவுள்ளக் குறிப்பி னிற் கண்டபடியே. எனக் கேட்டு - என்று அருகு நின்றார்களும் சொல்லக் கேட்டு. நாயனார் தொழுதருளக் கண்டு பக்கத்திருந்தவர்கள் சொல்லக் கேட்டு என்றுரைப்பாரு முண்டு.

சிவனாரைக் கைகள் கூப்பித் தொழுதருள - தூலலிங்கமாகிய விமானத்தைச் சிவனாகவே கண்டு நாயனார் கைகூப்பித் தொழுதனர் என்க. சிவனாரை - விமானமாகிய தூலலிங்கத்தை.

அமணர்கள் தம் பொய்கோள் விமானம் என - அமணர்கள் உண்மையை மறைத்து அதனைத் தம் பள்ளியாகக் காட்டிய பொய்ம்மையை மேற்கொண்டு காட்டும் விமானம் இது என்று அங்கிருந்தோர் சொல்ல.

பொறாத - சமணர் செய்த தீமையைப் பொறுக்கலாற்றாத. புழுங்குதல் - மனம் வெதும்புதல். 294

1560. (வி - ரை) அந்த விமானம் தனக்கு அருகா - அந்த - அவ்வாறு அமணர் தம் பொய்கொண்ட.

அருகா - அருகாக. கடைக்குறை - அகலவும் இயலாது அணுகவும் இயலாது அருகே இருந்தனர். சிவனாரது இடமாதலின் உட்புகுந்து நேர் தொழாது அகல மாட்டார்; அமணர் பள்ளியாகப் புனைந்திருத்தலின் அணுகி உட்புகவும் மாட்டார்; ஆதலின் அருகாக ஆங்கே ஓரிடத்திருந்தனர் என்க.

இடத்தின் பாங்கு எய்தி - பாங்கு - பக்கம். செம்மை பெற என்ற குறிப்பும்பட நின்றது.

கழல் உன்னி - அமணர் திறத்தினை அழிக்கவேண்டிக் கழலை உன்னிய திறத்தினை மேற்கூறுவார். "திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்" என்றபடி திருவடியை நினைத்துத் தாம் வேண்டுவதனைக் கேட்டுக்கொண்டனர்.

"மந்த அமணர்...பாற்றும்" என்று - இது திருவடியினை எண்ணி நாயனார் செய்துகொண்ட வேண்டுகோள். "வஞ்சம் ஒழித்தருளி - அமணர் திறம்பாற்றும்" - வஞ்சனையை ஒழிப்பதற்காக அமணர் திறத்தை அழிக்க வேண்டினாரே யன்றி மற் றில்லை. அமணர்கள் வஞ்சித்துச் சிவன் கோயிலை மறைத்தல் செய்யாதிருந்தாராயின் நாயனார்க்கு அமணர்களைப்பற்றிய சிந்தனை யெழுந்திராது. இது சைவத்தின் சிறப்பு,

" அளவில் சமயமும் வகுத்து " என்றபடி சைவம் எல்லாச் சமயங்களையும் படிமுறையில் வைத்து அமைவுபடுத்திக் கொள்வதாதலின் எந்தச் சமயத்தினையும் பூசலிட்டு அழிக்காது. பின்னை இங்கு நாயனாரும், ஆளுடைய பிள்ளையார் திருவாலவாயிலிலும், பிறாண்டும், நிகழ்த்தியவை என்னையோ ? எனின், புறச்சமயிகள் சைவத்திற்குக் கேடிழைத்துச் சைவத்திறத்தினின்றுங் கொள்ளைகொண்ட பொருள்களை மீட்டுத் தூய்மை செய்யும் அவ்வளவே என்க. அமணர்களைப் பாற்றும் என்னாது " அமணர் திறம் பாற்றும் " என்ற கருத்துமிது. அதன்மேற் செயல்கள் யாவையும் அரசர்கள் உலகில் நீதிமுறை செய்யும்வகை என்க.

**மந்த அமணர்** - மந்தம் - அறிவில்லாமை. மறைக்க முடியாத தொன்றை மறைப்போம் என்று கொண்டது " மந்தவுணர்வு ". " உண்ணிலையினான் மறைத்தால் மறைக்கொண்ணுமோ " (தேவா).

**ஒழித்தருளி** - அந்த அமணர்களையும் மறக்கருணையினால் தூயராகச் செய்யவேண்டுமென்ற குறிப்புப்பட அருளி என்றார். உலகுக்கு அருளி என்றலுமாம்.

**பந்தங்கொண்ட** - மறைத்த. பாவச் செயலை மேற்கொண்ட என்றதும் குறிப்பு.

**பணிந்திருப்பார்** - எதிர்கால முற்றெச்சம். இருப்பா(ராகி) - என்று இருந்தார் - (1561) என வரும் பாட்டுடன் முடிக்க. இப்போதுள்ள பதிப்புக்களில் காணும் பணிந்திருந்தார் என்ற பாடத்தினும், சில ஏட்டுப்பிரதிகளிற் கண்ட இருப்பார் என்ற பாடம் சிறந்ததாகக் காணப்பட்டமையின் மேற்கொள்ளப்பட்டது.

**மறைத்த வஞ்சம் ஒழித்து** - அமணர் மறைத்த வஞ்சனையை அதுகாறும் இறைவர் உடன்பட்டு இருக்கவும், அவ்வாறிருந்தபடியேயும் நாயனார் தமது மனக்கண்ணாற் கண்டு கும்பிட வல்லராயிருப்பவும், மறைத்த வஞ்சத்தை ஒழிக்க வேண்டியது என்னையோ ? எனின், உலகர் அறியாராதலின் உலகில் சைவநெறி குன்றாது விளக்கமுறும் பொருட்டும், தாம் தமது முகக்கண் கொண்டும் காணும் பொருட்டுமாம் என்பதாம். இதனை வரும்பாட்டானும் உணர்க. 295

1561. (வி - ரை) " வண்ணம்...போகேன் " என்று - வண்ணம் - அமணர் மறைத்த நிலையினின்று வெளிப்பட்ட வண்ணம். வண்ணம் - " முடிவண்ணம் வானமின் வண்ணம் " (ஆரூர் அரனெறி - இந்தளம், என்ற நாயனார் திருவாக்கானும், " பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி " (பொன்-வண் - அந் - 1) முதலிய திருவாக்குக்களானும் அறியப்படும் அவரது திருமேனியின் வண்ணம் என்றதும் குறிப்பு.

**வணங்கியன்றிப் போகேன்** - எதிர்மறை முகத்தாற் கூறினார், மிக்க உறுதி குறித்தற்கு.

**எண்ணம்...அமுது செய்யாதே** - கருதிய எண்ணம் முடித்தற்காக, அமுது செய்யாதிருத்தல் பண்டை நாள் முதல் வழிவந்த உரியதோர் வழியாம். இதனால், ஒரு பொருள் வேண்டி உண்ணாவிரதங் கிடத்தல், சிலர் கருதுமாறு இந்நாள் புதிதாய்க் கண்டதொரு வழி யன்றென்பது விளங்கும். குறித்தபொருள் பெறுதபோது உண்ண மறுக்கும் குழவிகளின் இயல்பில் இதன் மூலை காணப்படும். கடவுளிடம் வரங் கிடப்போர் பட்டினிகிடந்து நோற்கும் விரதங்களும் இக்கருத்தும் பற்றியன. விரதங் கிடப்போரது வருத்தங் காணலாற்றாது கருணையாளனாகிய முதல்வன் குறித்த பொருள் கூடச் செய்வன் என்பது இதன் நுட்பம். அண்ணலாரும் அதுவுணர்ந்து என்பது காண்க. உயிர்க்குயிராக உள்ள இறைவர் அவரது செய்கையை உள்ளிருந்து உணர்ந்தனர். " உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி " (ஆரூர் - தாண்).

பணிவதற்கு - பணியும் செயலைக் கூடச்செய்தற் பொருட்டு. நான்கனுருபு பொருட்டுப் பொருளில் வந்தது. பணிவதற்கு - அருளிச் செய்கின்றார் என்று கூட்டுக.

அரசு - திருநாவுக்கரசுகள். தம்மை அரசு அங்குப் பணிவதற்கு என்க. அங்கு - அமணர் மறைக்க இருந்த அத்தலத்தில்.

திண்ணமாக - ஐயமும் திரிபுமின்றி உறுதி பெறும்படி. இது கனவுதானோ என்று ஐயப்படாதவாறு.

செய்கின்றார் - செய்கின்றாராய்; முற்றெச்சம். செய்கின்றார் - என்று அருளி - அருள்புரிய என மேல்வரும் பாட்டுடன் கூட்டுக. 296

1562. (வி - ரை) அறிவில் அமணர் - உண்மை யறிவில்லாதவர்கள். "மந்த அமணர்" (1560) என்ற விடத்துரைத்தவை பார்க்க. "விரிவிலா அறிவினார்கள்" (தேவா). மறைப்ப இருந்தோம் - மறைத்த அதனையும் நாம் ஏற்று இருந்தோம்; மறைப்பும் நமது நிலையே யாதலின். "பெருகியும் சேணிடை நின்றோ யல்லை; தேர் வோர்க்குத் தம்மினு மணியை நீயே; நண்ணியு மிடையொன்றின் மறைந்தோ யல்லை; யிடையிட்டு நின்னை மறைப்பது மில்லை; மறைப்பினு மதுவும், நீயே யாகி நின்ற தோர் நிலையே" (கோயினான் - 32) என்ற பட்டினத்துச் சுவாமிகள் திருவாக்கின் கருத்துக் காண்க.

அங்கு அடையாளக் குறிகள் - அவ்விடத்துத் தமது திருவுருவம் வெளிப்படக் காண உள்ள அடையாளங்களும் அடையாளத்தின்வழிக் காணின் மேற் காணப்படும் குறிகளும். "குறிகளும் மடையாளமும் கோயிலும்" (அரசுகள் - தேவா).

அறியச் செய்தருளி - அரசன் உளங் கொள்ளுமாறு மனத்தின் உள்ளே புலப் படுத்தி.

கும்பிடுவான் - கும்பிடும்பொருட்டு. அரசு - உண்மையில் அரசு அவரே. "உன் போன்ற ஏனைப்பே ரரசர்கள் யாவரும் அவர் பணித்தவழி நின்று ஏவல்வழி ஆவன செய்யத்தக்கார். நாமும் தொண்டனாகிய அவன் வழியே நிற்போம்" என்ற குறிப் புப்பட அரசு என்றார்.

"நெறியில் அமணர் தமை அழித்து நீக்கிப் போக்கு" என்று - இது கனவில் இறைவர் அரசனுக்கு அருளிய கட்டளை. நெறியில் - தம்நெறியின் வரம்பினுள் அமை யாது மேற்சென்ற. அழித்து - நீக்கி - போக்கு - நீக்குதலால் அழித்து என்க. போக்கு - இடையூறு விளைக்காவண்ணம் இந்நாட்டை விட்டு அகலச் செய்க. கும்பிடுவான் - போக்கு என்றது நாவுக்கரசு கும்பிடும்பொருட்டே இவ்வாறு செய்க. அரசுகள் கண்டு கும்பிடுதற்காக உண்ணா விரதங் கிடக்காவிடில் அமணரைப் போக்கும்படி இறைவர் அருளியிருக்கமாட்டார் என்பது. "வேறொரு சமயம் செய்தே, எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்" என்றது அரசுகள் திருவாக்கன்றோ?

செறிவில் அறிவுற்று - கனவிற் கண்டது நனவில் வாராது மறந்துபடுவதியல் பாதலின், அவ்வாறு ஆகாது, நனவிலும் நிறைந்த அறிவில் வர. 297

1563. (வி - ரை) வியப்பு - அறிவில் அமையாத இந்த அதிசயச் செய்தி.

மந்திரிகட்கு இயம்பி - மேற்கொண்டு இனிச் செய்யப் புகுவது அரசன் நீதிவழி முறைசெய்யும் காரியமாதலின் அமைச்சர்களிடம் அரசன் இயம்பினான்.

கூடக் கடிது எய்தி - கூட எய்துதல் - அமைச்சர்கள் செயலால் நீதி கோடி விடாதபடி காக்க.

கடிது - இறைவரது ஆணையாதலின் விரைந்து சென்றனன்.

வழி - வழியே. கண்டு - குறிகள் இருக்கக்கண்டு.

குறித்து - குறிக்கொண்டு - காரணத்தினால்.

குலவு......வணங்கி - இறைவர் மன்னனுக்குக் கனவில் அருள, அவன் அதனை அவ்வாறே அறியலுற்று எழுந்தான்; அதன் உண்மையை அடையாளத்தின் வழி சென்று கண்டு கொண்டான்; உண்மை கண்டானாதலின் வணங்கினான் என்க. எவ்வாற்ற லறியினும், உண்மை கண்டு அறிந்த பின்னரே முறை செய்தல் அரச நீதி. தண்டியடிகள் புராண முதலியவை பார்க்க. அரசுகள் "குலவு பெருந் தொண்டர்" என்பதறிந்தானாதலின் கண்டவுடன் அவரை வணங்கி மேலே முறை செய்தல் நீதி என்பார் அதனை உடம்பொடு புணர்த்தி, வணங்கித் தூராறுத்தான் என்று அம்முறையில் வைத்தோதினார். அன்றியும், குடிகள் (இங்கு, அமணர்) செய்த தீங்கு அரசனைச் சாருமாதலால் அதன்பொருட்டு வணங்கினான் என்றலுமாம். திருவாலவாயில் சைவரிருந்து வாழ் மடத்தில் அமணர் தீ வைத்தபோது ஆளுடைய பிள்ளையார் "மன் புரக்குமெய் முறைவழு வெனமனங் கொண்டார்" (திருஞான-புரா-703), "வெய்ய தீங்கிது வேந்தன்மேற் றெனும்விதி முறையால்" (ஷை 704) என்று துணிந்த வரலாறும் இங்கு நினைவு கூர்தற்பாலது.

தோக்க அமணர் - அமண் பள்ளியாகிய வடதளிக் கோயிலில் ஆயிரவர் ஒரு கூட்டமாகக் கூடிய அமண குருமார்.

தூராறுத்தான் - தூராறுத்தல்போல அழித்துச் சிதைவாக்கினானாக. அறுத்தானாக என்று முற்று எச்சமாக உரைக்கப்பட்டது மேல்வரும் செய்யுள் தொடக்கத்தின் பொருட்டொடர்பு நோக்கி.

தூர் - ஒன்றிற் பல கற்றைகளாகக் கிளைப்பது. 298

1564. (வி - ரை) ஆனை இனத்தின் துகைப்புண்ட - இனத்தின் - இனத்தால் தூர் துகைப்புண்ணல்போல. இனம் - அதனாற்றுகைப்புண்ணலுக்கு வந்தது ஆகுபெயர். இன் - உவம உருபு.

துகைப்புண்ணல் - அழிதல். "ஆனை வெம்போரிற் குறுந்தூ றென" (திருவா - நீத் - விண்). இதற்கு இவ்வாறன்றி, அரசன் யானைகளை ஏவி அமணரை அழிக்க, அவ்வாறு ஏவப்பட்ட யானைகளால் அழிக்கப்பட்ட அமணர் என்று உரைத்தனர் முன் உரை ஆசிரியர்கள். அதன் பொருத்தம் ஆராயத் தக்கது.

அமண் ஆயிரம் - அமண குருமார்கள் ஆயிரம்பேர். ஒவ்வோர் பள்ளியில் ஆயிர மாயிரம் பேராகக் கூடுவது அமணர் வழக்கு. "எண்பெருங் குன்றத் தெண்ணாயிரவரும் ஏறினார்கள்" (திருஞான - புரா - 855) என்றது காண்க. வடதளிக் கோயிலை வஞ்சனையால் மறைத்து ஆக்கிய அமண் பள்ளியில் அவ்வாறே ஓராயிரம் அமண குருமார் குழுமினர் என்பதாம். இதனை "வாயி ருந்தமி ழேபடித் தாளுறா, ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினான்" என்று நாயனார் இத்தலத் தேவாரத்தினுள் உணர்த்தியருளுவது காண்க.

மேன்மை. - இறைவர் நேரே கனவிற் காட்சி கொடுத்து உண்மை தெருட்டியிடப்பெறும் மேன்மையும், அரசுகளை வணங்கிப் பணிசெய்து ஆசி பெற்றுத் தேவாரத்திற் குறிக்கப்பெறும் தவமேன்மையும்.

ஈசர்க்கு விமானம் ஆக்கி விளக்கியபின் - அமணர்கள் தம் பொய்கொள் விமானமாக ஆக்கி யிருந்த அதனை, முன்னை நிலையின்படி ஈசரது மெய்யாகிய விமானமாக ஆக்கி, வஞ்சனை மறைப்புக்களை யெல்லாம் போக்கி விளக்கஞ் செய்தபின்.

விளக்குதல் - அதுவரை மறைக்கப்பட்டு வழிபாடுகள் முட்டுப்பாடுற்ற நிலைக்குள்ள தீர்வு முறைகளைச் செய்தல்.

ஆன - சிவாகமங்களில் விதிக்கலான. வழிபாட்டு அர்ச்சனை - உலகம் நல்வழிப் படுதற்காகச் செய்யும் பூசை. பரார்த்த பூசை என்ப.

நிபந்தம் - திருமஞ்சனம் திருவமுது முதலிய கட்டளைப் படித்தரங்கள்.

அமைத்து இறைஞ்ச - "நம்மை அரசு கும்பிடுவான் - அமணர் தம்மை நீக்கிப் போக்கு" (1562) என்று இறைவர் அருளினாராதலின், அரசுகள் கும்பிடுவதன் பொருட்டு அவ்வாறே அமணர்களைப் போக்கியும், ஈசர்க்கு விமானம் ஆக்கியும், வழி பாட் டர்ச்சனைக்கு நிபந்தம் அமைத்தும் அரசன் அதனை அரசுகளுக்கு அறிவிக்கு மாற்றால் அவரை இறைஞ்ச என்பதாம். முன் பாட்டில் "தொண்டர் தம்மை அடி வணங்கி" (1563) என்றது அரசுகளது பெருமை அறிந்தவுடன் அரசன் அபராதத் தீர்வின் பொருட்டுச் செய்த உரிமை வணக்கம். இப்போது இறைஞ்சியது கும்பிட எழுந்தருள்க என்று விண்ணப்பிக்குமாற்றாற் செய்த சிறப்பு வணக்கம்.

ஞான அரசு - ஞானநிறைந்த - ஞானத்தின் - ஞானம் காட்டும் - என்று பலவா றும் உரைக்க நின்றது.

புக்கு - முன்னரும் சிவாலயமேயாயினும் அமணர் தமது பள்ளியாக்கித் தொக் கிருந்தபடியால் புக்கு வணங்கத்தகாமை என்பது குறிப்பு. "நன்றறியா ரமண்பள்ளி நண்ணுகிலேன்" (1323) என்று திலகவதியம்மையார் கூறியது இங்கு நினைவுகூர்தற் பாலது.

இறைஞ்சி - தாம் எண்ணியிருந்தவாறே இறைவரது வண்ணமும் வடிவும் நேரிற் கண்களாற் கண்டு வணங்கி.

போற்றுவார் - போற்றுவாராகி; முற்றெச்சம்; போற்றுவார் - விளம்பி என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

நிரம்ப எல்லாம்—என்பதும் பாடம்.    299

1565. (வி - ரை) "தலையின்...ஒண்ணுமோ" - இது பதிகத்தின் முதற் குறிப்பும் கருத்துமாம் என்பதனை ஆசிரியர் என்னும் - வாய்மைக் குறுந்தோகைகள் என்றறிவிக்கிறார்.

தலையின் மயிரைப் பறித்து உண்ணும் சாதி - தலைமயிர் பறித்தல் - நின் றுண்ணுதல் முதலியவை அமண குருமார் வழக்கு. சாதி என்பது இங்கு, அவ்வாறு செய்யும் செய்கையுடைய தொகுதி - குருமார் - என்ற பொருளில் வந்தது. "அமண் சாதியை" - என்ற இத்தலத் தேவாரங் காண்க. சாதி - குலம் - என்று கொண்டு முற் காலச் சமணரிடம் சாதிவேற்றுமை யில்லை என்றும், இடைக்காலச் சமணரிடம் அது புகுந்துகொண்டதென்றும் இங்கு விசேட வுரை காண்பாரு முண்டு. அது பொருந் தாமை அறிக. சாதி என்ற சொல் கேட்டமாத்திரையில் அதை வெறுப்பதும், அதனுள் சாதிவேற்றுமையும் தீமையுமே காண்பதும் சில ஆராய்ச்சியாளரின் இயல்பாயிற்று.

மயிரைப் பறித்துண்ணும் சாதி யமணர் - என்றது "பறிக்கும் சமண் கையர்" என்ற தேவாரத்திற்கு இங்கு ஆசிரியர் கண்ட வுரை.

மறைத்தாலும் நிலையிலாதார் நிலைமையினல் மறைக்க ஒண்ணுமோ? என்றது "உள் நிலையினன் மறைத்தால் மறைக்கொண்ணுமே" என்ற தேவாரத்திற்கு விரிவுரை யாம். தேவாரத்துக்கேற்ப, "மறைத்தாலுண் ணிலையிலாதார் நிலைமையினல்" என்று பாடமிருக்கலாமென்று தோன்றுகின்றது.

நிலையிலாதார் - உண்மை நிலையில்லாத வஞ்சகர் - பொய்யர். நிலைமையினல் - தமது பொய்ந் நிலைமையின் துணைகொண்டு. என்னும் - என்ற கருத்துடைய.

குறுந்தோகைகள் - பதிகப்பாட்டுக்கள் ஒவ்வொன்றும் குறுந்தொகைப் பாட்டுக் கள். குறுந்தொகை என்பது யாப்பமைதி.

இடங்கள் பிற - மேல்வரும் பாட்டில் கூறும் தலங்கள் முதலாயினவை.

அணைவார்-புக்கு இறைஞ்சி - என மேல்வரும் பாட்டுடன் முடிக்க. அணைவார்-அணைவாராகி ; முற்றெச்சம். 300

திருப்பழையாறை வடதளி

*திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருண், ணிலையி னுன்மறைத் தான்மறைக் கோ
*அலையி னார்பொழி லாறை வடதளி, நிலையி னானடி யேநினைந் துய்ம்மினே.*[ண்ணுமோ?

*மூக்கி னுன்முரன் றோதியக் குண்டிகை, தூக்கி னார்*குலந் தூரறுத் தேதனக்
*காக்கி னனணி யாறை வடதளி, நோக்கி னார்க்கில்லை யாலரு நோய்களே.* 2

*நீதி யைக்கெட நின்றம* ணேயுணுஞ், சாதி யைக்கெடு மாசெய்த *சங்கரன்,*
*ஆதி யைப்பழை யாறை வடதளிச், சோதி யைத்தொழு வார்துயர் தீருமே.* 6

வாயி நந்தமி ழேபடித் தாளுற, வாயி ரஞ்சம ணும்மழி வாக்கினன்,
*பாயி ரும்புன லாறை வடதளி, மேய வன்னென வல்வினை வீடுமே.* 9

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—மெய்ம்மையுள் நில்லாத *பொய்யராகிய அமணர் தமது நிலையினுல் மறைத்தாலும் மறைக்க முடியுமா ? ஆறை வடதளி இறைவர் அரசனுக்குத் தந்த தமது ஆணையினுல் சமணர் குலம் தூரறுத்தார் ; அவரைத் தொழ அருநோய்களும் இல்லையாம் ; தீவினை தீரும் ; அவரைத்தொழுது எனது கைகள் உய்ந்தன.*

குறிப்பு :—*இப்பதிக முழுமையும் நாயனுரது சரிதப்பகுதிக்குப் பெருத்த அகச்சான்றுகளுடன் விளங்குகின்றது. சமணர்களது பழிப்பாகிய பல கொள்கைகளும், அவைகளை அழித்துத் தூரறுக்க நேர்ந்ததற்கும் தாம் சமணை நீத்ததற்குமுரிய உள்ளுறைகளும் பிறவும் நாயனுர் இதனுட் சுவைபடப் பேசியருளினுர். இச்சரிதப் பகுதியுள் நாயனுரது திருமனத்தெழுந்த பல வேறு வகையான எண்ணங்களும் இதனுள் விளங்குகின்றன. சரித ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுவது இத்திருப்பதிகம்.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) தலை எலாம் பறிக்கும் - *தலையின் மயிரைப் பறித்தல் சமணர் இழிவழக்குக்களுள் ஒன்று.* உள்நிலை - *தங்கள் பொய்ம்மைநிலை. "இத்தகைய செயற்கிவரைத் தடிதல் செய்யா திதுபொறுக்கிற் றங்கணிலை யேற்பர்"* (*திருஞான - புரா* - 907). ஒண்ணுமே - *ஏகாரவினு எதிர்மறை குறித்தது.*—(2) மூக்கினல் முரன்று ஓதி அக்குண்டிகை தூக்கினர் குலம்-மூக்கினல் முரன்று ஓதுதல் - *சமணர்களது மந்திரங்கள் மெல்லெழுத்துக்கள் மிகுந்து மூக்கின்வழி முரலுதல் போல ஓதத்தக்கன. "ஞமண ஞாஞண ஞாண ஞோணமென் றோதி யாரையு நாணிலா, வமணர்"* (*நம்பிகள்-கொல்லி-நமக்* - 9). குண்டிகை தூக்கல் - *நீர்க் குண்டிகைகள் மூன்றை ஒரு சிறு உறியிற் றூக்கித்திரிதல் அமண குருமார் வழக்கு.* தூரறுந்தே - *"தொக்க அமணர் தூரறுத்தான்"* (1563). தனக்கு ஆக்கினன் - *அமணர் மறைத்துத் தன்னதன்று எனக் காட்டிய விமானத்தைத் தன்னதாகக் காட்டியவன்.*—(3) கூறையில் மிண்டர் - *உடையின்றித் திரிவதும் அமண குருமார்களது இழிவழக்குக்களுள் ஒன்று.* துரந்த - *ஒழித்த ; அரசனைக் கொண்டு போக்கிய.*—(4) முடையர் - *உடல் கழுவாமை, பல் விளக்காமை முதலியவாற்ருல் முடைநாற்றமுடையவர்.* தலைமுண்டித்தல்-*மயிர்பறித்துத் தலை மழுங்கலாக நிற்றல்.* கடிந்தார் - *அழித்தார்.*—(5) ஒள்...

கள்ளர் - பெண்கள் முன்பு உடையின்றி நின்று கையில் இடுசோறு உண்ணுதலும் அமண குருமார்களின் இழிவழக்குக்களுளொன்று. கள்ளர் - காமமாதிகளை உள்வைத்துப் புறம்பொழுகுவோர். கடிந்த - சினந்து நீக்கிய. அமணே - நக்க உருவத்துடன். கருப்பு ஊறல் - கரும்புச்சாறு.—(6) சாதி - தொழில்பற்றிய குறிப்பு. முன் துலம் (2) என்றதுமிது. இதனையே "சாதி யமணர்" (1565) என்று எடுத்தாண்டனர் ஆசிரியர். கெடுமா செய்த - கெடுத்த - அழித்த. ஆ - ஆறு என்பதன் கடைக்குறை.—(7) திரள் - திரை கவளம் - திணிக்கும் - திரளாக உருட்டி அலை போல ஒன்றன்மே லொன்றாகக் கொள்ளும் உணவுக் கவளங்களை வாயினுள் வலியப் பெய்து கொள்ளும். சமண குருமார் இழிவழக்கு. பிரட்டர் - வஞ்சகர். பிரித்த - வஞ்சனையாற் குழுமிய அவரை அகலப் போக்கிய. தெருட்டர் - தம் உண்மையை உலகுக்கு அறிவித்தவர்.—(8) ஓது இனத்து எழுத்து அஞ்சு - ஓத வேண்டியதாகிய திருவைந்தெழுத்து. வேது - பேதம் செய்வது. பிணங்குவது.—(9) வாய் - வாய்த்த. இருந்தமிழ் - பெருமையுடைய தமிழ். பெருமையாவது வேறெம் மொழிக்கு மில்லாத சிறப்புத் தன்மை. "ஞால மளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்" (970) என்றதும், ஆண்டுரைத்தவையும், பிறவும் காண்க. தமிழே - ஏகாரம் தேற்றம். ஆயிரம் சமணும் அழிவாக்கினான் - ஆளுற - என்றதனால் ஆட்படு நெறியில் வாராமையால் என்று அழிவாக்கினமைக்குக் காரணங் காட்டும் வகையால் உடம்பொடு புணர்த்தி ஓதினார். தமிழை நாயனார் சிவனுக்கு ஆளுறும் தமிழ் என்றும், அவ்வாறு ஆளுறாத் தமிழ் என்றும் இரண்டு கூறாகப்படுத்தி, ஆட்படு நெறியில் வாராத தமிழ் அழிந்துபடுதற்பாலதே யன்றிப் பேணற்பாலதன்று என்ற குறிப்புப்பட அருளினார். சமணர்கள் தமிழ்க்கலை வல்லவர்களே யாயினும், ஆட்படு நெறியின் வாராமை மட்டுமன்றி, அந்நன்னெறியி னின்றும் பிணங்கி மாறுபட்டு அதனை அடைக்கும் வழியினின்ற தோடு, அந்நெறி நிற்பார்க்கு இடையூறும் செய்தனர்; ஆதலின் வெறும் இருந்தமிழர் என்ற அம்மட்டே கொண்டு அவர் பேணத்தக்கவரல்லர் என்றதெல்லாம் இங்குக் கருதத் தக்கன. தமிழ் மொழி என்ற அம்மட்டிற் பெருமை பேணும் ஆராய்ச்சியாளர் இதனைத் தெளிதல் நலந்தரும். ஆயிரம் சமண் - அந்தப் பள்ளியில் அமைந்த ஆயிரவராகிய சமணக் குருமார் கூட்டம்.—(10) திருந்தன் - திருத்தம் செய்வோன். இங்கு இறைவர் திருத்திச் செய்த திரு அருளின் குறிப்பு.

தல விசேடம் :—பழையாறை வடதளி - பழையாறை - பழையாறையினின்றும் வடகிழக்காக $1\frac{1}{2}$ நாழிகையளவில் உள்ள தனித் தலம். இதன் வடமேற்கே 2 நாழிகையளவில் உள்ள ஆறைமேற்றளி என்பது மற்றொரு தனித்தலம். அமர்நீதி நாயனார் புராணத்திறுதியில் தலவிசேடம் பார்க்க.

1566. (வி - ரை) பொன்னியினில் இரண்டு கரையும்...இடங்கள் பழையாறை வடதளியினின்றும் காவிரியாறு வரும்வழியே திருவானைக்காவல் வரையும் மேற்கு நோக்கிச் சென்றால் அதன் இருகரையிலும் பல சிவதலங்கள் உள்ளன. அவை யெல்லாம் ஈண்டுக் கருதத் தக்கன. அவையாவன - திருப்பட்டீச்சரம், ஆறைமேற்றளி, திருவலஞ்சுழி, திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, தென்குடித்திட்டை, திருப்புள்ளமங்கை, திருச்சக்கரப்பள்ளி, திருவையாறு, திருநெய்த்தானம் திருஆலம்பொழில், திருப்பெரும்புலியூர், திருமழபாடி, திருப்பழுவூர், திருக்கானூர், திருஅன்பிலாலந்துறை, திருமாந்துறை, திருப்பாற்றுறை முதலியன.

இரண்டுகரையும் - இடங்கள் - மேற்கு நோக்கி ஒரேமுகமாகச் சென்றால் காவிரியின் கரையில் தெற்கும் வடக்குமாக எதிர் எதிர் தோன்றும் தலங்களைக் கலந்து தரிசித்தனர். கலந்து (1454) என்றவிடத் துரைத்தவை பார்க்க.

தமிழ் மாலைகளும் சாத்தி - திருப்பதிகங்கள் பாடித் துதித்து.

எங்கும் நிறைந்த புகழாளர் - வாகீசர். அவரது புகழ் எங்கும் நிறைந்ததொன் றாதலின் அங்கங்கும் அடியார்கள் தெரிந்து எதிர்கொண்டமைக்குக் காரணமாயிற்று என்பார் இத்தன்மைபற்றிக் கூறினர்.

ஈறில் - குணத்தால் அளவு படாதவர். " அளவிலாத பெருமையர்...அளவிலா அடியார். " 301

தலத் தேவாரக் குறிப்புக்கள் :—இங்கு " இரண்டு கரையும் பொருவிடையார் தங்குமிடங்கள் " என்றவற்றுட் கருதப்படும் தலங்கள் பல. அவற்றுட் பலவற்றுக்கு நாயனர் பதிகங்கள் கிடைத்தில. கிடைத்தவற்றுள்ளும் சில தலங்களின் தேவாரக் குறிப்புக்கள் மட்டும் இதன்கீழ்த் தரப்படுவன. ஏனையவை வந்துழிக் காண்க. திருவையாறு - திருப்பூந்துருத்தி என்ற தலங்களின் பதிகக்குறிப்புக்கள் பின்னர் நாயனரது சரித நிகழ்ச்சியில் வரும் உரிய இடங்களிற் றரப்படுவன.

## திருவாலம்பொழில்

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

கருவாகிக் கண்ணுதலாய் நின்றான் றன்னைக்
கமலத்தோன் றலையரிந்த காபா லியை
உருவார்ந்த மலைமகளோர் பாகத் தானை
யுணர்வெலா மானானை யோசை யாகி
வருவானை வலஞ்சுழியெம் பெருமான் றன்னை
மறைக்காடு மாவடுதண் டுறையு மேய
திருவானைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 1

உருமூன்றா யுணர்வின்க ணொன்றா னானை
யோங்கார மெய்ப்பொருளை யுடம்பி னுள்ளாற்
கருவீன்ற வெங்களவை யறிவான் றன்னைக்
காலனைத்தன் கழலடியாற் காய்ந்து மாணிக்
கருளீன்ற வாரமுதை யமரர் கோனை
யள்ளூறி யெம்பெருமா னென்பார்க் கென்றுந்
திருவீன்ற தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 3

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கருவாகிக் கண்ணுதலாய் வருவான், உணர்வெலா மானான், ஓசையாகி வருவான், உருமூன்றாயுணர்வின்க ணொன்றானான், ஓங்கார மெய்ப்பொருள், உடம்பினுள்ளாற் கருவீன்ற வெங்களவை யறிவான்,விரிந்தான், குவிந்தான்,பிறப்போ டிறப்பாகி நின்றான், பொல்லாத என்னழுக்கிற் புகுவான் - என்றிவை முதலிய தன்மை களாலறியப்படுகின்ற திருவாலம்பொழில் இறைவரை நெஞ்சே சிந்திப்பாயாக.

பதிகப்பாட்டுக்குறிப்பு :—(1) கருவாகி-உலகுக்குக் காரணமாய் நிற்கும் மாயை யைத் தன் பரிக்கிரக சத்தியாக உடையவன். "கருவினு லன்றியே கருவெலா மாயவன்"

(பிள்-தேவா-தென்குடித்திட்டை-3). ஓசையாகி வருவான்-நாதமாய்விரிந்து வெளிப்படு பவன். பரம்பைக்குடி-ஊரும், ஆலம் பொழில் கோயிலும் போலும்.—(3) உருமூன்று-சிவன் சதாசிவன் மகேசன்; தடத்த வடிவு மூன்று. உணர்வின் கண் ஒன்று-தத்துவ நிலை எண்ணும்போது முதற் கடவுளாகிய ஒருவன். ஓங்காரப் மெய்ப்பொருள் - பிரணவத்தால் குறிக்கப்படுபவன். கரு ஈன்ற எம் களவு - பிறவிக்குக் காரண மாகிய உயிர்களது ஆணவ வலிமை. அள்ளூறுதல் - உள்ளிருந்து மிக ஊறி வெளிப் படுதல். திரு - முத்தித்திரு.—(4) வாரம் - அன்பு.—(6) விரிந்தான் - குவிந்தான் - உலகத் தோற்றமும் ஒடுக்கமும். "விரிந்தனை; குவிந்தனை; விழுங்குயி ருமிழ்ந்தனை" (பிள் - தேவா - புறம்பயம் - இந்தளம் - 3). பிறப்போடு இறப்பாகி-பிறப்பும் இறப்பும் அருளும் தலைவனாகி. பலவாய்ப் பெருகுதலாலும், இறப்புக்குக் காரணமாய் வருதலா லும் வியன் பிறப்பு என்றார். "தோற்ற முண்டேல் மரண முண்டு" (நம்பி-தேவா).—(7) அழுக்கின் - அழுக்கினின்றும்; புகுவான் - (தன்பாற்) புகும்பொருட்டு; புகு வான் - வானீற்று வினையெச்சம்; அழுக்கு - மலம். சோதித்தல் - தூய்மை செய்தல். "அத்துவா சோதனை", "புறம்புறந் திரிந்த செல்வமே" (திருவா). சொல்லாதான் - அருளாதவன், "வஞ்சன்" (4); செல்லாத நெறி - அருள்பெறாத ஏனையோர் செல்ல மாட்டாச் சிவநெறி. "செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானை".—(9) பொய் யிலான் - பொய்யாது உறுதியாக அருள்பவன்.

தலவிசேடம்:—திருவாலம்பொழில் - காவிரிக்குத் தென்கரை 10-வது தலம். வசுக்கள் பூசித்து வழிபட்ட தலம். மேற்கு நோக்கிய சந்நிதி. சுவாமி - ஆத்மநாதர்; அம்மை - ஞானம்பிகை; தீர்த்தம் - காவிரி; மரம் - ஆல்; பதிகம் - 1.

தஞ்சாவூர் நிலையத்தினின்றும் வடக்கே கற்சாலைவழி 6 நாழிகை யளவில் உள்ளது திருக்கண்டியூர் வீரட்டம்; அதினின்றும் மேற்கே மட்சாலைவழி இரண்டு நாழிகையளவில் திருப்பூந்துருத்தியை யடைந்து, அங்கிருந்து மேற்கே ஒரு நாழிகை யளவில் இதனை அடையலாம்.*

### திருக்கானூர்

*திருச்சிற்றம்பலம்* **திருக்குறுந்தொகை**

திருவி னாதனுஞ் செம்மலர் மேலுறை, யுருவ னாயுல கத்தி னுயிர்க்கெலாங்,
கருவ னாகி முளைத்தவன் கானூரிற், பரம னாய பரஞ்சுடர் காண்மினே. 1

தாயத் தார்தமர் நன்னிதி யென்னுமிம், மாயத் தேகிடந் திட்டு மயங்கிடேல்;
காயத் தேயுளன் கானூர் முளையினை, வாயத் தால்வணங் கீர்வினை மாயுமே. 3

குறியி னின்றுண்டு கூறையி லாச்சமண், நெறியை விட்டு நிறைகழல் பற்றினேன்;
அறிய லுற்றிரேற் கானூர் முளையவன், செறிவு செய்திட் டிருப்பதென் சிந்தையே. 4

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு:**—கானூரிறைவர் உலகத்தினுயிர்க்கெலாங் கருவனாகி முளைத்த வர்; சமணைவிட்டு அவர் கழல் பற்றினேன்; அவர் இருப்பது என் சிந்தை; பொத்த லாக்கையாகிய உடலையும், பெண்டிர் மக்கள் முதலிய உயிர்ச்சார்புகளையும் நன்னிதி முதலிய பொருட்சார்புகளையும் பொருளெனக் கண்டு மயங்காது அவரை வணங்கிட

* இத்தலத்தருகில் இருந்த வைணவதலத்துக் குழுமிய வைணவர்கள் இங்கு வாகீசரது உழவாரப்பணிக் கிடையூறுகத் தமது பரிகலங்களையிட்டு வந்தனர் என்றும், காவிரி பெருகி அவ்வைணவத்தலத்தைப் பெயர்த்து இப்போது சுந்தரப்பெருமாள் கோயில் உள்ள இடத்தில் இட்டது என்றும் ஒரு கர்ண பரம்பரை வழக்கு உண்டு.

வினை மாயும்; துயரம் தீரும். அவரை அடைதலே கருமமாவது. அவர் கல்வியும் ஞானமும் கலைப்பொருளும் ஆவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கருவனுகி முளைத்தவன் - இத்தலத்துச் சுவாமி பெயர் முளை; (கன்றாப்பூர் நடுதறி என்பதுபோல); அதன் பொருள் விரித்தவாறு. உலகங்கள் யாவும் முளைத்தற்குக் காரணமானவர். "கானூர் முளை" (2, 3, 4); "கானூர் முளைத்தவன்" (7-8); "கானூர் முளைத்த கரும்பினை" (பாபநாசப்பதிகம் 2); "முளைத்த கரும்பு" என்ற கருத்தை நம்பிகள் "கானூர்க் கட்டியே" என்றருளினர். (ஊர்த் தொகை - 5).—(2) புண்டரீகப் போதும்பில் ஒதுங்கியே - புண்டரீகம் - சிவன் பாதமலர். "முக்கணன் பாத நீழல் உள்ளிடை மறைந்து நின்று" (பொது - நேரிசை). போதும்பு - நிழற்காடு.—(3) வாயம் - அன்பு.—(4) நாயனுர் சரித அகச்சான்று.—(5) அடைதலே கருமம் என்று பிரிநிலை ஏகாரம் பிரித்துக் கூட்டுக.

தலவிசேடம்:—திருக்கானூர் - காவிரிக்கு வடகரையில் 56-வது தலம். அம்மை இங்குச் சிவயோகத்தில் அமர்ந்தபோது இறைவர் அழற்பிழம்பாகக் காட்சிதந்தருளினர் என்பர். சுவாமி-செம்மேனிநாதர்; முளைநாதர்; அம்மை-சிவயோகநாயகி; பதிகம் - 2.

இது பூதலூர் என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும் வடக்கே கற்சாலை வழி 5 நாழிகை யளவில் உள்ள திருக்காட்டுப்பள்ளியினின்றும் வடக்கே விஷ்ணுபேட்டை மட்சாலை வழியில் 2 நாழிகை யளவில் அடையத்தக்கது.

## திருஅன்பிலாலந்துறை

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தோகை

வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை, நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
யானஞ் சாடியை யன்பிலா லந்துறைக், கோனெஞ் செல்வனைக் கூறிட கிற்றியே. 1

வெள்ள முள்ள விரிசடை நந்தியைக், கள்ள முள்ள மனத்தவர் காண்கிலார்;
அள்ள லார்வய லன்பிலா லந்துறை, யுள்ள வாறறி யார்சில ரூமரே. 6

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—நெஞ்சே! அன்பிலாலந்துறை இறைவரைக் கூறு; அவரை நினைந்தார் அறிந்தார்களே; அறியார் சிலர் ஊமர்; அவரை ஏத்துவார் மெய்யர்; அவர் நம்மை அறிவர்; அவரை வலங்கொள்வாரை வானோர் வலங்கொள்வர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(3) அள்ளூறிய அன்பு-உள்நிறைந்து மிசை ஊற்றெடுத்து வழியும் அன்பு.—(6) வெள்ளம் - கங்கை.—(8) நுணங்கு நூல்-முப்புரிநூல்; நுண்ணிய உண்மையைக் கொண்ட வேதம் என்றலுமாம்.—(10) மலங்க - வருந்த. வலங் கோள்வாரை வானோர் வலங்கொள்வர் - "தொழுத பின்னைத், தொழப் படுந் தேவர்தம் மாற்றொழு விக்குந்தன் றொண்டரையே" (திருவா).

தலவிசேடம்:—திருஅன்பிலாலந்துறை - காவிரிக்கு வடகரையில் 57-வது தலம். அன்பில் என்று வழங்கப்படும். பிரமதேவர், வாகீசமுனிவர் முதலியோர் பூசித்த தலம். சுவாமி - சத்தியவாகீசர்; அம்மை - சௌந்தரிய நாயகி; பதிகம் - 2.

பூதலூர் என்ற இருப்புப்பாதை நிலயத்தின் வழி திருக்காட்டுப் பள்ளியிலிருந்து மேற்கே காவிரியின் வடகரை மட்சாலை வழி 5 நாழிகை யளவில் உள்ள கோயிலடியினின்றும் கொள்ளிடத்தைப் பரிசிலூற் கடந்து வடகரையில் மட்சாலையில் 2 நாழிகையில் இதனை அடைவது ஒருவழி; லால்குடி நிலயத்தினின்றும் வடக்கில் கற்சாலை வழி 5 நாழிகையளவில் அடைவது மற்றொரு வழி.

திருவேதிகுடி

திருச்சிற்றம்பலம்  திருவிருத்தம்

கையது காலெரி நாகங் கனல்விடு சூலமது
வெய்யது வேலைநஞ் சுண்ட விரிசடை விண்ணவர்கோன்
செய்யினி னீல மணங்கம ழுந்திரு வேதிகுடி
யையனை யாரா வமுதினை நாமடைந் தாடுதுமே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருவேதிகுடி யிறைவர் ஆரா அமுது; அவரை நாம் அடைந்து ஆடுதும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கையது...சூலமது - எரி - நாகம் - சூலம் - இவை கையில் ஏந்தியவர். ஆரா அமுது - உண்ணத் தெவிட்டாத அமுது போல்பவர். அமுது - உவமையாகுபெயர். இறைவர் இத்தலத்தில் ஆரா அமுது நாதர் எனப் பெயர் பெறுவர். ஆளுடைய பிள்ளையாரது இத்தலப் பதிகத்துள் "துற்பரிய நஞ்சமுத மாகமுனயின்றவர்" (2) என்றது இக்குறிப்புணர்த்துவது. இப்பெயரால் இப்பதிக முழுமையும் போற்றுதல் குறிக்க.—(2) பொய்த்தலை - இறந்துபட்ட பிரமன் தலை. பொய் - பொய்த்த; அழிந்துபட்ட என்ற பொருளில் வந்தது.—(6) எண்ணும் எழுத்தும் குறிப்பும் அறிபவர் தாம் மொழிய - எண் - மனம் நினைத்தல்; எழுத்து - வாய் துதித்தல்; குறி - கை தொழுதல் என்ற குறிப்புடன் நின்றன. "குறிக ளும்மடை யாளமும் கோயிலும்" (தேவா).—(8) அன்பர்களோடு அடைந்து - "அன்பரொடு மரீஇ" (அணைந்தோர் தன்மை - சிவஞான போதம் - 12), "மேவினோ மவனடியா ரடியாரோடு மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே" (திருவா-சத-24).—(9) மறைவிரி - மறைகளைத் தோற்றுவித்த.

தலவிசேடம்:—திருவேதிகுடி - காவிரிக்குத் தென்கரையில் 14-வது தலம். வேதங்கள் பூசித்த தலங்களுள் ஒன்று என்ப. இங்கு விநாயகர் வேத விநாயகர் எனப் பெறுவர். வேதங்களைத் தோற்றுவித்தலால் வேதி எனப்படும் இறைவரது இடம் என்பதும் பொருளாம். மறைவிரி நாவன் என்றது நாயனார் பதிகம். வேதங்களைத் தோற்றுவித்து ஆன்மாக்களது பிறவி யறுத்தலால் இறைவர் ஆரா அமுதுநாதர் எனப் பெறுவர் என்பது நாயனார் பதிகக் கருத்து. திருவையாறுள்ளிட்ட ஏழு தலங்களுள் ஒன்று.

சுவாமி - வேத புரீசுவரர்; ஆராவமுது நாதர்; அம்மை - மங்கையர்க்கரசி; அம்மை பெயர் ஆளுடைய பிள்ளையார் பதிகத்து (2), (6) பாட்டுக்களுட் குறிக்கப் பட்டது. பதிகம் - 2.

இது திருக்கண்டியூரினின்றும் கிழக்கே மட்சாலை வழி 1½ நாழிகை யளவில் அடையத்தக்கது.

திருக்கண்டியூர்

திருச்சிற்றம்பலம்  திருவிருத்தம்

வானவர் தானவர் வைகன் மலர்கொணர்ந் திட்டிறைஞ்சித்
தானவர் மால்பிர மன்னறி யாத தகைமையினன்
ஆனவ னாதி புராணனன் றேடிய பன்றியெய்த
கானவ னைக்கண்டி யூரண்ட வானவர் தொழுகின்றதே. 1

*பண்டங் கறுத்ததொர் கையுடை யான்படைத் தான்றலையை*
*யுண்டங் கறுத்தது மூரோடு நாடவை தானறியும்*
*கண்டங் கறுத்த மிடறுடை யான்கண்டி யூரிருந்த*
*தொண்டர் பிரானைக்கண் டீரண்ட வாணர் தொழுகின்றதே.* 3

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு:**—*மால் பிரமன் அறியாத தகைமையினன், ஆதிபுராணன், தழல் போலுருவன்,* **படைத்தான் றலையை யறுத்தவன்,** *யானையுரித்த பிரான், காலனை அட்டவன், காமனைச் சுட்டவன், புரமெரித்தவன் என்றித் தகைமைகளா லறியப்படும் இறைவர் கண்டியூரில் எழுந்தருளியுள்ளார்; அவரை அண்டவாணர் தொழுகின்றனர். அவர் அடியேனை ஆட்கொண்டவர்; (ஆதலின்) தீவினை மாய்ந்தன; நோய்கள் மங்கின; பாவம் தேய்ந்தன.*

**பதிகப் பாட்டுக் குறிப்பு :**—(1) **கானவன்** - *வேட உருவத்தோடு வந்தவன்.*—(3) *இத்தலம் பிரமன் தலையைக் கிள்ளிய வீரம் நிகழ்ந்த இடம். சிவபெருமானது வீரங்கள் நிகழ்ந்த தலங்கள் எட்டனுள் ஒன்று. கண்டியூர் வீரட்டம் என்பது இக்கோயில். "பூமன் சிரங் கண்டி".* **படைத்தான்** - *உலகு படைக்கும் பிரமன்;* **ஊரோடு நாடவை தான் அறியும்** - *உலகறிந்த செய்தி.* **தான்** - *அசை.*—(4) **கொடியுமூற்று அவ் விடையேறி** - *கொடியாக ஏந்திய அந்த விடையினையே ஏறி.* **கடிய மூற்று அவ்வினை** - *என்க.* **தொண்டர் இல்லை** - *தொண்டர்க்கு இணையில்லை.*—(6) **போர்** - *போர்வல்ல.* **பனை** - *பனைபோன்ற கையுடைய.*—(7) **கட்டு அவை** - *கட்டப்பட்ட மூன்று மதில் சூழ் நகரங்களாகிய புரங்கள்.*—(8) **போதியும்** - *முடிக்கும்.*

**தலவிசேடம் :**—**திருக்கண்டியூர்** - *காவிரிக்குத் தென்கரையில் 12-வது தலம். அட்டவீரட்டங்களுள் ஒன்று. திருவையாறுள்ளிட்ட சத்தத் தானங்களுள் ஒன்று. பிரமன் சிரந்தடிந்த வீரம் நிகழ்ந்த இடம். ஆளுடைய பிள்ளையார் பதிகம் 6-வது பாட்டும், மேற் குறித்தபடி நாயனார் பதிகத்து 3ம் பாட்டும் இதனை எடுத்துப் போற்றுவன. சதாநந்தர் பூசித்த தலம். அடியார்களை நோக்கிச் சிவனருளின் வண்ணங்கள் கேட்டு மகிழ்ந்த வினாவுரையாகப் ("அருந்த வைத்திற மடியர் பான்மிகக் கேட்டுகந்த வினாவுரை") பதிகம்பாடி ஆளுடைய பிள்ளையார் சிவபரத்துவத்தை உலகுக்கு அறிவுறுத்திய தலம். மேற்கு நோக்கிய சந்நிதி. சூரிய பூசை நிகழும் தலங்களுள் ஒன்று.* *சுவாமி* - **வீரட்டேசுவரர்**; *அம்மை* - **மங்களநாயகி**; *பதிகம்* - 2.

*இது தஞ்சாவூர் நிலயத்தினின்றும் திருவையாற்றுப் பாதையில் கற்சாலை வழி 6 நாழிகையளவில் அடையத் தக்கது.*

## மேலைத்திருக்காட்டுப்பள்ளி

*திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

*மாட்டுப் பள்ளி மகிழ்ந்துறை வீர்க்கெலாங், கேட்டுப் பள்ளிகண் டீர்கெடு வீரிது*
*வோட்டுப் பள்ளிவிட் டோட லுறுமுனங், காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே.*

**மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே, நாட்டுப் பொய்யெலாம் பேசிடு நாணிலீர்!**
**கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே, காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே.**

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு :**—*செல்வம் - மனை - வாழ்க்கை - யாக்கை - முதலிய எவையும் அழிந்துபடும்; அழியும் பொருள்களைத் தேடிப் பொய்யெலாம் பேசி அலைவதை விட்டு,*

உலகீர்! நம்உயிர் போகும் முன்னமே காட்டுப்பள்ளியுளான் கழல் சேர்மின்! அவர் உறுதுணையாவர்; அவரை அடைந்தார் வினை நாசமே; ஆதலின் அவரைக் கண்டு உய்ம்மின்!

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) மாட்டுப்பள்ளி - செல்வமுடைய இருக்கைகள். ஓட்டுப்பள்ளி - உடல்.—(2) மாடு - செல்வம்.—(4) அருத்தம் - செல்வம்.—(6) துடும்பல் - இருத்தல். கடம்பன் - முருகப் பெருமான்.—உடம்பினார் - இகழ்ச்சி குறித்த பன்மை.—(7) மெய்யின்......மூடுவார் - பெண்கள்.—(8) காலையே - உடலில் உயிர் உள்ளபோதே.—(9) இன்றுளார் நாளையில்லை எனும் பொருள் - யாக்கை நிலையாதெனும் பழமொழியின் உண்மை.—(10) கண்ணுளார் - அறிவுடையோர்; கற்றோர். "கற்றவர்கள்" (5).

தலவிசேடம்:—மேலைத்திருக்காட்டுப்பள்ளி - காவிரிக்குத் தென்கரை 9-வது தலம். உறையூரில் அரசாண்ட பராந்தக சோழன் சிவபெருமானுக்குரிய செவ்வந்திப் பூவைத் தனது மனைவிக்கு ஆக்கக் கவர்ந்து வரச்செய்து கொடுக்க, அது சிவாபராதமென்று அஞ்சி மனைவி அதனை அனுபவியாது விடுத்தனள். அரசன் செய்த சிவாபராதத்தினால் மண்மாரி பெய்து நகரம் அழிந்தது. சிவாபராதத்துக் கஞ்சிய மனைவி அதினின்றும் தப்பி வந்தனளாக அவளுக்கு அருளிய தலம். நாயனாரது பதிகத்துட் குறிப்பித்த செல்வம் - மனைவாழ்க்கை - ஆக்கை முதலியவற்றின் நிலையாமை இச்சரிதக் குறிப்புத் தருவன. சுவாமி - தீயாடியப்பர்; அம்மை - வார்கொண்ட முலையாள்; பதிகம் - 2.

பூதலூர் என்னும் இருப்புப்பாதை நிலயத்தனின்றும் வடக்கே கற்சாலைவழி 5 நாழிகையளவில் காவிரியிலிருந்து குடமுருட்டியாறு பிரியும் இடத்தில், குடமுருட்டியாற்றுக்குத் தென்கரையில் உள்ளது. குறிப்பு:—காவிரிக்கு வடகரையில் 12-வது தலமாகத் திருவெண்காட்டின் மேற்கில் 1 நாழிகையில் உள்ள கீழைத் திருக்காட்டுப் பள்ளியினின்றும் இது பிரித்தறியத் தக்கது.

1567. சிலந்திக் கருளுங் கழல்வணங்கிச் செஞ்சொன் மாலை பலபாடி
யிலங்கு சடையா ரெறும்பியூர் மலையு மிறைஞ்சிப் பாடியபின்
மலர்ந்த சோதித் திருச்சிராப் பள்ளி மலையுங், கற்குடியும்
நலங்கொள் செல்வத் திருப்பராய்த் துறையுந் தொழுவா னண்ணினார்;

1568. மற்றப் பதிகண் முதலான மருங்குள் ளனவுங் கைதொழுது,
பொற்புற் றமைந்த திருப்பணிகள் செய்து பதிகங் கொடுபோற்றி,
யுற்ற வருளாற் காவிரியை யேறி, யொன்னார் புரமெரியச்
செற்ற சிலையார் திருப்பைஞ்ஞீ லியினைச் சென்று சேர்கின்றார்,

1569. வழிபோம் பொழுது மிகவிளைத்து வருத்த முற,நீர் வேட்கையோடும்
அழிவாம் பசிவந் தணைந்திடவு மதற்குச் சித்த மலையாதே
மொழிவேந் தருமுன் னெழுந்தருள, முருகார் சோலைப் பைஞ்ஞீலி
விழியேந் தியநெற் றியினார்தந் தொண்டர் வருத்த மீட்பாராய்; ௬௦௪

1570. காவுங் குளமு முன்சமைத்துக் காட்டி வழிபோங் கருத்தினால்
மேவுந் திருநீற் றந்தணராய் விரும்பும் பொதிசோ றுங்கொண்டு
நாவின் றனிமன் னவர்க்கெதிரே நண்ணி யிருந்தார், விண்ணின்மேற்
றாவும் புள்ளு மண்கிழிக்குந் தனியே னமுங்காண் பரியவர்தாம்,

1571. அங்க ணிருந்த மறையவர்பா லாண்ட வரசு மெழுந்தருள
வெங்கண் விடைவே தியர்நோக்கி, "மிகவும் வழிவந் திளைத்திருந்தீ
ரிங்கேன் பாலே பொதிசோறுண் ; டிதனை யுண்டு, தண்ணீரிப்
பொங்குகுளத்திற்குடித்திளைப்புப்போக்கிப்போவீர்" எனப்புகன்றார்;

*1572. நண்ணுந் திருநா வுக்கரசர் நம்ப ரருளென், றறிந்தார்போல்
'உண்ணு'மென்று திருமறையோருரைத்துப்பொதிசோறளித்தலுமே,
எண்ண நினையா தெதிர்வாங்கி, யினிதா வமுது செய், தினிய
தண்ணீரமுது செய்தருளித், தூய்மை செய்து, தளர்வொழிந்தார்.

1567. (இ - ள்) சிலந்திக்கு...பலபாடி - திருவானைக்காவில் சிலந்திக்கு அருள் செய்த பெருமானுடைய திருவடிகளை வணங்கிச் செஞ்சொன்மாலைத் திருப்பதிகங்கள் பலவற்றையும் பாடி ; இலங்கு...பின் - விளங்கும் சடையினையுடைய சிவபெருமான் எழுந்தருளிய திருவெறும்பியூர் மலையினையும் பணிந்து திருப்பதிகம் பாடிய பின்னர் ; மலர்ந்த...நண்ணினார் - விரிந்த சோதியையுடைய திருச்சிராப்பள்ளி மலையினையும், திருக்கற்குடி மலையினையும், நலம் கொள்ளும் செல்வத் திருப்பராய்த்துறையினையும் தொழும்பொருட்டுச் சேர்ந்தாராகி, ௩0௨

1568. (இ - ள்) வெளிப்படை. மற்று அந்தத்தலங்கள் முதலாக அருகாக உள்ள பிற தலங்களையும் தொழுது, அழகு பொருந்த அமைந்த கைத்திருப்பணிகளைச்செய்து, திருப்பதிகம் கொண்டு துதித்துப், பொருந்திய திருவருளினால் காவிரியாற்றைக் கடந்து ஏறிச்சென்று, திரிபுரங்கள் எரியும்படி அழித்த சிவபெருமான் எழுந்தருளிய திருப்பைஞ்ஞீலியைச் சென்று சேர்கின்ற நாயனார், ௩0௩

1569. (இ - ள்) வெளிப்படை. வழியிலே செல்லும்போது மிகவும் இளைப்பையடைந்து, வருத்தமுற நீர்வேட்கையுடனே அழிவு செய்யும் பசிவந்து சேர்ந்தும் அதற்கு மனம் அலையாமலே, வாகீசரும் முன்னேக்கி எழுந்தருள, மணமுடைய சோலைகளையுடைய திருப்பைஞ்ஞீலியில் எழுந்தருளிய நெற்றியில் பொருந்திய கண்ணினையுடைய பெருமானார் தமது தொண்டருடைய வருத்தத்தை நீக்குவாராய், ௩0௪

1570. (இ - ள்) விண்ணின்மேல்...தாம் - ஆகாயத்தில் பறக்கும் அன்னமும், மண்கிளைக்கும் ஒப்பற்ற பன்றியுமாகிய பிரம விட்டுணுக்களால் காண அரியவராகிய அப்பெருமான்தாமே ; காவும்...சமைத்து - ஒரு சோலையையும் ஒரு குளத்தினையும் உண்டாக்கி; காட்டி வழி...அந்தணராய் - வழிகாட்டிப் போகும் கருத்துடையராகிப் பொருந்தும் திருநீற்றினையுடைய ஓர் அந்தணராகி ; விரும்பும்...இருந்தார் - விரும்பும் பொதி சோற்றையும் உடன்கொண்டு, திருநாவுக்கரசர் வரும்வழி எதிரில் பொருந்தி வீற்றிருந்தனராக, ௩0௫

1571. (இ - ள்) அங்கண்...எழுந்தருள - அவ்வாறு அங்கு இருந்த அந்தணரிடத்து ஆளுடைய அரசுகளும் எழுந்தருள ; வெங்கண் விடை வேதியர் நோக்கி - வெவ்விய கண்ணையுடைய விடையினை மேல்கொண்ட வேதியர் அவரை நோக்கி ; "வழிவந்து மிகவும் இளைத்திருந்தீர் !" - "வழிவந்த வருத்தத்தினால் நீர் மிகவும் இளைப்படைந்தீர்" ; "இங்கு...போவீர்" எனப் புகன்றார் - "இங்கு என்னிடத்தில் பொதி சோறுண்டு ; இதனை உண்டும், இந்தப் பொங்கு குளத்தில் தண்ணீர் குடித்தும் இளைப்பை மாற்றிக்கொண்டு போவீராக" என்று சொன்னாராகவே, ௩0௬

1572. (இ - ள்) நண்ணும் திருநாவுக்கரசர் - வந்துசேர்ந்த திருநாவுக்கரசரும் ; நம்பர் அருள் என்று-அது இறைவரது திருவருள் என்று கொண்டு ; அறிந்தார்போல்

உண்ணும் என்று...அளித்தலுமே - முன்னர் அறிமுகமுடையாரைப்போலக் காட்டி "உண்பீராக" என்று சொல்லி வேதியர் பொதி சோற்றினை அளித்தவுடனே; எண்ண நினையாது - மேல் ஏதும் எண்ணமிட்டறிய நினையாதவராகி; எதிர்வாங்கி ...தளர்வு ஒழிந்தார் - முன்னே ஏற்றுக்கொண்டு இனிமையாக அமுது செய்து இனிய நீரையும் அமுது செய்தருளித் தூய்மையும் செய்து தமது தளர்வினை நீங்கினர். ௩0௭

இந்த ஆறுபாட்டுக்களும் ஒரு பொருண்மேலனவாய்த் தொடர்ந்து ஒரு முடிபிற் பொருள் உரைக்க நின்றன.

1567. (வி - ரை) சிலந்திக்கு அருளும் கழல் - "ஆனைக்காவின் மருங்கு" (1566) என்று இத்தலத்தின் பெயர் குறித்த ஆசிரியர், அங்கு எழுந்தருளிய இறைவர் சிலந்திக்கும் அருள்பவர் என்றார். யானையும் சிலந்தியும் வழிபட்டமையின் இரண்டற்கும் இங்கு இறைவர் பேறளித்தனர். கோச்செங்கட்சோழ நாயனூர் புராணம் பார்க்க. "அரணிலா வெளிய நாவல்" (நேரிசை - சாய்க்காடு - 3), "புலர்ந்ததால் பூவு நீரும்" (ஷெ - நனிபள்ளி - 2), முதலிய பல தேவாரங்களில் சிலந்தி வழிபட்ட சிறப்பை நாயனூர், போற்றி யிருத்தலால் சிலந்திக்கருளும் கழல் என்றார். "போற்ற மாட்டாச் சிலந்திக்கும்" என உம்மை தொக்கது.

சேஞ்சோன்மாலை பல பாடி - இவை பலவற்றுள் திருக்குறுந்தொகைப் பதிகம் ஒன்றும், திருத்தாண்டகப் பதிகங்களிரண்டுமே கிடைத்துள்ளன.

இலங்கு சடையார் - சடை சிவனது சிறப்படையாளமாதலின் இலங்கு என்றார்.

எறும்பியூர்மலை - எறும்புகள் பூசித்த காரணத்தாற் போந்த பெயர்.

மலர்ந்த சோதித் திருச்சிராப்பள்ளி மலை - சோதி மலர்தலாவது எவ்வுலகும் தனது சிவவொளி பரப்பி நலஞ்செய்தல். சிரா - சிரம். சிரம் - தலைமை என்றதும் குறிப்பு.

கற்குடி - திருகற்குடி மலை.

நலம்கொள் செல்வத் திருப்பாராய்த்துறை - இம்மை அம்மை உலகங்களிற் காணும் ஏனைச் செல்வங்கள்போல் அழிந்துபடாததும், 'தீமை கலவாத நன்மையினையே பயப்பிப்பதும் ஆகிய செல்வம்; சிவநெறியாகிய பெருஞ் செல்வம். நாயனூர் பதிகப் பாட்டுக் குறிப்புப் பார்க்க.

தொழுவான் - தொழும் பொருட்டு. நண்ணினூர் - நண்ணினூராகி; முற்றெச்சம். நண்ணினூர் - கைதொழுது - திருப்பணிகள் செய்து - போற்றி - ஏறி - சென்று - சேர்கின்றாராய் (1568) - எழுந்தருள (1569) என்று மேல்வரும் பாட்டுக்களுடன் கூட்டி முடிக்க. 302

திருவானைக்கா

I திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

கோனைக் காவிக் குளிர்ந்த மனத்தராய்த், தேனைக் காவியுண் ணூர்சில தெண்ணர்கள்,
ஆனைக் காவிலம் மானை யணைகிலார், ஊனைக் காவி யுழிதர்வ ரூமரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—உடல் முதலிய பற்றுக்களுட் பட்டுச் சிலர் ஆனைக்காவில் அண்ணலை அணைகிலார்; உருகி, நைந்து, உள்கி, கைதொழுது, நைஞ்சு உள் குளிர்ந்து, தன்னை அடைந்து தூமலர் தூவிநின்று, அழுது "ஈசன்" என்பார்க்கெலாம் அவர் அருள் கொடுத்திடுவர்; நெஞ்சமே! குலநலம் சுற்றங்கள் நாசமாவன; ஆதலின் அவற்றை விட்டு அவரை நேசமாகி நினை.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) காவி - மேலிட்டு, விரும்பி ; தேண்ணர் - அறிவிலிகள் ; —(2) ஊறல் - சிவானந்த அனுபவம் ; பதம் அறிந்து பற்றி என்க.—(3) துன்பம் - உடலாலும், துயர் - மனத்தாலும் நுகரப்படுவன.—(4) வினை காவாய் - தீவினைகள் வாராமலும் வரினும் துன்பஞ் செயயாமலும் காப்பாய் ; ஆ! ஆ! - இரக்கச் சொல்.—(5) நைஞ்சு நைஞ்சு - மனம் மிக நைந்து. அடுக்கு மிகுதி குறித்தது. உருகி உள் குளிர்தலாவது சிவனை நினைந்து உண் மகிழ்தல்.—(6) நடையை மெய் யென்று நாத்திகம் பேசாதே - யாகாதி கன்மங்களே பலன் தரும் ; இறைவன் வேண்டா என்று சயமுனி கூறும் கொள்கையுட் படாமல்.—(7) ஒழுகு...முன்னம் - இறந்துபட்டு உடல் அழியா முன். ஒழுகு மாடம் - எங்கும் ஓட்டைகளையுடைய உடம்பு. அழுதல் - அன்பு மீக்கூர்தலின் மெய்ப்பாடு.—(8) உருளும்போது - சாகும் காலம்;இருள் - பந்தபாசம்.—(10) பாதம் வாங்கி-ஊன்றி யழுத்திய பாதத்தை எடுத்து.

II திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

எத்தாய ரெத்தந்தை யெச்சுற் றத்தா ரெம்மாடு சும்மாடா மேவர் நல்லார்
செத்தால்வந் துதவுவா ரொருவ ரில்லை ; சிறுவிறகாற் றீமூட்டிச் செல்லா நிற்பர் ;
சித்தாய வேடத்தாய்! நீடு பொன்னித் திருவானைக் காவுடைய செல்வா! வென்ற [னே.
னத்தா!வுன் பொற்பாத மடையப் பெற்றா லல்லகண்டங் கொண்டடியே னென்செய்கே

ஊனாகி யுயிராகி யதனு ணின்ற வுணர்வாகிப் பிறவனைத்து நீயாய் நின்றாய் ;
நானேது மறியாமே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய் ;
தேனாருங் கொன்றையனே! நின்றியூராய்! தென்னானைக் காவிலுறை சிவனே! ஞானம்
ஆனா!யுன்பொற்பாத மடையப்பெற்றா லல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தாய் தந்தை முதலிய உயிர்ச்சார்புகளும், ஏனைப் பொருட் சார்புகளும் முடிவில் உதவி செய்யமாட்டா ; திருவானைக்காவில் இறைவன் பாதம் அடையப்பெற்றால் துன்பங்கள் வரினும் என்ன செய்யவல்லன ?

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) எத்தாயர் - எத்தந்தை - எச்சுற்றத்தார் - ஏவர் - நல்லார் ? ; எம்மாடு சும்மாடாம் ? என்று இரு முடிபாக்கிக்கொள்க. மாடு - செல்வம். சு(ம்)மாடு-நல்ல செல்வம். அல்லகண்டம்-துன்பம்.—(2) என்னுள் வந்து நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய் - இறைவன் உயிர்களுக்குக் காட்டு முபகாரம் செய்தல் குறிப்பு. நான் ஏதும் அறியாமே - உயிர்கள் அறியாதபடி மறைந்து நிற்றல். உள் வருதல் - உயுர்க்குயிரா நிற்றல்.—(3) ஒன்றலாத் தவத்தார் - ஒன்றுக்கும் - ஒரு நன்மைக்கும் ; அலா - அல்லாத - உதவாத - பற்றாத ; தவத்தை மேற்கொண்ட அமணர். முற்றும்மை தொக்கது. துப்பாரும் குறையடிசில் - உணவுக் கவளம். நற்று - நன்று ; —(4) உன்பால் முனித்தவர்கள் - உன்னை முனிந்தவர்கள். வலித்தல் விகாரம்.—(9) எப்பொழுதும் நாவினில் சொல்லி ; மனத்தால் உன்னி என்று விரித்துக்கொள்க.

III திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

முன்னானைத் தோல்போர்த்த மூர்த்தி தன்னை மூவாத சிந்தையே மனமே வாக்கே
தன்னானை யாப்பண்ணி யேறி னானைச் சார்தற் கரியானைத் தாதை தன்னை
யென்னானைக் கன்றினையென் னீசன் றன்னை யெறிநீர்த் திரையுகளுங் காவி ரிசூழ்
தென்னானைக் காவானைத் தேனைப் பாலைச் செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—முன் - ஆனைத்தோல் போர்த்த மூர்த்தி, மூவாத சிந்தை - மனம் - வாக்கு என்றிவற்றைத் தன்னுனேயாக்கி ஏறினன், இறப்பிலான், பிறப்பிலான், ஓங்காரத்துட்பொருள் என்பன முதலாகிய தன்மைகளா லறியப்படுகின்ற செழுநீர்த்திரளாகிய திருவானைக்காவுள் இறைவனை நான் தினைத்து ஆடினேன்.

பதிகப் பாட்டுக்குறிப்பு:—(1) மூவாத - மாறுபடாத. ஆனை-ஊர்தி. தன்னுனை - மனவாக்கினுள்ளானை ; ஆப்பண்ணி - எருதைக் காவல்வைத்து என்பாருமுண்டு. செழுநீர்த்திரள்-நீர் இலிங்கம்.—(3) ஓங்காரம்-பிரணவம். காரம் சாரியை.—(6) பரசுதரபாணி - பரசு - மழு - வைப் பிடித்த கை. மயானம் மன்னும் நிலையான் - உலகமழிந்தபோதும் தான் அழியாது நிலைத்தவன்.—(7) எறிமணியின் ஓசையான் - நாதத்தைத் தோற்றுவிப்பவன்.

தல விசேடம் :—திருவானைக்கா - காவிரிக்கு வடகரையில் 60-வது தலம். திருவானைக்காவல் என்று வழங்கப்படும். யானை பூசித்துப் பேறுபெற்ற இடமாதலின் இப்பெயர் பெற்றது. இதன் தலமரம் வெண்ணாவல். அதன் கீழ் இறைவர் வெளிப்பட்டு எழுந்தருளியிருத்தலால் இது சம்புகேச்சுரம் (சம்பு - வெண்ணாவல்) எனப்படும். ஐம்பூதத் தலங்களுள் இது அப்புத்தலம். திருத்தாண்டகத்தில் சுவாமியின் பெயர் செழுநீர்த்திரள் என்று இக்காரணம்பற்றிக் கூறியருளியது காண்க. இலிங்கமூலத்தினின்றும் நீர் பெருகி வருவது இன்றுங் காணத்தக்கது. முன்பிறவியில் சிலந்தியாயிருந்த நிலையில், இங்கு, இறைவர் திருமேனியில் சருகு விழாதபடி மேற்கட்டிபோல வாய்நூல் வலயமிட்டு வழிபட்டுழி, அதனை யானை அழிக்க, அதனால் யானையின்மேற் பகைமைபூண்டு இறந்தபின், அதுவே கோச்செங்கட் சோழராக முன்பிறவிநினைவுடன் வந்து அவதரித்து, இங்குச் சுவாமிக்கு, யானை உட்புகாதபடி மாடக்கோயில் அமைத்து வழிபட்ட வரலாறு அவர் புராணத்துக்காண்க. அவர் இறைவருக்கு அமைத்த எழுபத்தெட்டுக் கோயில்களையும் அக்காரணத்தால் யானை உட்புகாதபடி மாடக்கோயில்களாகவே எடுப்பித்தனர். இது வைணவ ஆழ்வார்கள் பாசுரங்களிலும் போற்றப்பட்டது. உறையூர்ச்சோழர் காவிரியில் நீராடும்போது வீழ்த்திய மணியாரம் இறைவர்க்கு ஆகுக என்று அவர் வேண்ட, அது திருமஞ்சனக் குடத்துட்புக, அதனை இறைவர் அவ்வழியே தமக்கு ஆரமாக ஏற்று அணிந்தருளினர். "தார மாகிய பொன்னித் தண்டுறையாடி விழுத்து, நீரி னின்றடி போற்றி நின்மலா கொள்ளென வாங்கே, ஆரங்கொண்டவெம்மானைக் காவுடை யாதி" என்று இதனைப் போற்றினர் ஆளுடைய நம்பிகள். பாதலம்வரை மிக ஆழ்ந்தும் விண்ணுற வோங்கியுயர்ந்தும் உள்ள இத்தலத்து வெளித்திருமதில், இறைவர் சித்தமூர்த்திகளாக வந்து, கூலியாகத் திருநீற்றைக் கொடுத்து எடுப்பித்த காரணத்தால் திருநீறிட்டான் திருமதில் என்று வழங்கப்பெறும். மதுரையிலும் இதுபோலவே திருமதில் கபாலி மதில் எனப்படுவதும், அதனை ஆளுடைய பிள்ளையார் "கபாலிநீள் கடிம்மதிற் கூடலால வாயிலாய்" என்று போற்றுவதும் இங்கு நினைவுகூர்க. திருக்கயிலாயத்தினின்றும் எழுந்தருளி அம்பிகை இங்குத் தவம்செய்து ஞானோபதேசம் பெற்றனர் ; ஆதலின் இது ஞானத்தலம் எனவும் வழங்கப்படும். அம்பிகைக்கு உபதேசம் செய்தபோது சம்புமுனிவரும் நந்திதேவரும் உடனிருந்து கேட்டனர். சம்புமுனிவர் வரலாறு தலபுராணத்துள்ளது. தலமரமாகிய வெண்ணாவல் ஞானத்தின் குறியாகும். "ஞானச் சார்வாம் வெண்ணாவ லுடனே" (கோச்-சோழர்-புரா - 13). இன்றும் அம்பிகை பூசித்ததனை விளக்குதற்பொருட்டுத் தினமும் அம்பிகை கோயில் அருச்சகர் அம்மைபோல வேடந் தரித்துவந்து நண்பகலில் பெருமானைப் பூசிக்கும் காட்சி தரிசிக்க உள்ளது. சம்பு முனிவர், பிரமதேவர், விட்டுணுமூர்த்தி முதலியோர் பூசித்துப் பேறுபெற்ற பெருந்தலம். சுவாமி - நீர்த்திரள்நாதர் - சம்புகேசு

வரர்; அம்மையார் - அகிலாண்டநாயகி; தீர்த்தம் - இந்திரதீர்த்தம், சந்திரதீர்த்தம், (கோச்-சோழர்-புரா-1), காவிரி - முதலியன; தலமரம் - வெண்ணாவல்; பதிகம் - 7

குறிப்பு:—மேற்குப்பார்த்த சந்நிதி. பெருமக்கள் மூவராலும் பாடப்பெற்ற திருத்தலம். கோச்செங்கட் சோழர் எடுப்பித்த கல் திருப்பணி விமானம் அருமையாகிய சிற்பங்களமைந்தது; இன்றுங் காணவுள்ளது. அம்பிகை சந்நிதி மிகவிளக்கம். பஞ்சப்பிரகார உற்சவம் மிகச்சிறந்த திருவிழா. கச்சியப்ப முனிவர் பாடிய இத்தலபுராணம் சிறந்த நூல்.

இது திருச்சிராப்பள்ளிக் கோட்டை என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும் வடக்கே கற்சாலைவழி 3½ நாழிகையளவில் அடையத்தக்கது.

திருஎறும்பியூர்

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

விரும்பி யூறு விடேன்மட நெஞ்சமே!; கரும்பி னூறல்கண் டாய்கலந் தார்க்கவன்;
இரும்பி னூற லறாததோர் வெண்டலை, யெறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 1

கறும்பி யூர்வன வைந்துள காயத்திற்; திறம்பி யூர்வன மற்றும் பலவுள;
குறும்பி யூர்வதோர் கூட்டகத் திட்டெனை, யெறும்பி யூரரன் செய்த வியற்கையே. 6

இன்ப மும்பிறப் பும்மிறப் பின்னொடு, துன்பமும் முடனே வைத்த சோதியான்,
அன்ப னேயர னேயென் றரற்றுவார்க், கின்பனுகு மெறும்பியூ ரீசனே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—எறும்பியூர் இறைவர் தம்மைக் கலந்தார்க்குக் கரும்பின் ஊறல் போல்பவர்; இவ்வுடலினுள் என்னை இயற்கையில் இட்டு வைத்து இன்பத்துன்பமும் பிறப் பிறப்பும் உடன் வைத்தார்; உயிர்க்குயிராயவர்; அன்பனே! அரனே! என்று அரற்றுவார்க்கு இன்பஞ் செய்குவர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு.—(1) ஊறு விரும்பிவிடேல் - என்க. கேடுகளை விரும்பி வாணாளை வீணாகவிடாதீர். கரும்பின் ஊறல் - கரும்புச் சாறு. கலந்தார் - உள்கலந்தவர். குறிப்பு:—எறும்பியூர்மலை - இந்த எதுகையிற் பல பாசுரங்கள் அருளியமையாலும், இத்தலத் திருத்தாண்டகத்தின் மகுடச் சிறப்பமைதியாலும் இத்தலத்தில் நாயனார் திருவுள்ளத்திற் பதிந்து மேலெழுந்த சிவானந்தானுபவமாகிய குறிப்பு ஒன்று நிகழ்ந்திருக்க வேண்டும் என்று கருத இடமுண்டு.—(2) நறுங்குழன்மடவாள் - இத்தல அம்மை பெயர். 10-வது பாட்டும் பார்க்க.—(3) இன்சுவைமருந்து புரிந்த என்க.—(6) கறும்பி-துன்புறுத்தி; கறுவஞ்செய்து. திறம்பி-பிறழ்ந்து.—(8) இன்பமும்...உடனே வைத்த - இவ்வுலகில் பிறப்பிறப்பும் இன்பத் துன்பமும் ஆகிய இரு வினைப்பயனும் உடனேவைத்தவர். வேறுலகங்களில் இன்பமாத்திரமும் துன்பமாத்திரமும் வைத்தவர். இரு வினைப்பயனும் இவ்வுலகில் ஒருங்கு எய்தும் என்றபடி. இன்பமும் துன்பமும், இறப்பும் பிறப்பும் உடன் வைத்தல் உயிர்கள் தத்தங் கன்மங்களை நுகர்ந்து கழிக்க வேண்டி இறைவன் செய்யும் விளையாடல். இன்பன் - துன்பங்கலவாத இன்பம் - சிவானந்தானுபவம் - தருபவன்.

II திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

பன்னியசெந் தமிழறியேன் கவியேன் மாட்டே
னெண்ணோடு பண்ணிறைந்த கலைக ளாய
தன்னையுந்தன் றிறத்தறியாப் பொறியி லேனைத்
தன்றிறமு மறிவித்து நெறியுங் காட்டி.

யன்னையையு மத்தனையும் போல வன்பா
　　யடைந்தேனைத் தொடர்ந்தென்னை யாளாக் கொண்ட
தென்னெறும்பி யூர்மலைமேன் மாணிக் கத்தைச்
　　செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றே னானே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—பன்னிய செந்தமிழ் அறியேன்; பொறியிலேன்; என்னையும் தொடர்ந்து ஆளாக்கொண்டவர்; பளிங்கினிழலுட் பதித்த சோதி; என்றன் மனத் திருந்த கருத்து; கார்முகிலாய்ப் பொழிவார்; பொழிந்த மூந்நீர் கரப்பார்; என்றிவ் வாறு பலவுமாய் அறியப்படுகின்ற எறும்பியூர் மலைமேல் மாணிக்கநாதரை நான் சென் றடையப் பெற்றேன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—பன்னிய - இறைவர் முதல்வராயிருந் தருளிய. கவியேல் மாட்டேன் - கவி என்னால் இயற்றவல்ல னல்லன். அடைந்தேனை அன்னையையும் அத்தனையும்போலத் தொடர்ந்து ஆளாக்கொண்ட என்க. அன்பா யடைந்தேனை என்றும், அன்பாய் ஆளாக்கொண்ட என்றும் இருவழியும் கூட்டி உரைக்கநின்றது. அன்னையையும் அத்தனையும்போல என்பதும் அவ்வாறே இருவழியும் கூட்டநின்றது. தன்திறமும் அறிவித்து - நெறியும் காட்டி - என்னை ஆளாக்கொண்ட - அறிவித்தல் - தான்தலைவன் - உயிர்கள் அடிமை - உயிர்களைக் கட்டியது பாசம் - என் றவை எல்லாம் அறிவித்தலாம். தன்திறமும் - தலைவனாகிய தனது இயல்பையும். உம்மையினால் ஆன்மா - பாசங்கள் - என்றவற்றி னியல்பையும். நெறி காட்டு தல் - உயிர்கள் பாச நீங்கித் தன்னை அடைய வழிகாட்டுதல். ஞானந் தருதல். ஆளாக்குதல் - பயன். மாணிக்கம் - தலத்துச் சுவாமி பெயர். எறும்பியூர் - மலை - ஊரில் உள்ள சிறுமலை. ஊரும் மலையுமா யுள்ளது.—(2) பளிங்கின்......சோதி - "பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே" (திருமந்). பளிங்கு - உயிர்களின் தன்மை. சோதி பதித்தல் - இறைவன் செயல். பளிங்கில் வைத்த சோதி தன்னிறமே காட்டு தல் போல உயிர் பசுத்தன்மை நீங்கிப் பதித்தன்மை பெறச் செய்தல்.—(3) மயானம் - ஊழி முடிந்தவிடம்.—(4) உமிழும் - "விழுங்குயி ருமிழ்ந்தனை" (பிள் - தேவா - புறம் பயம்). "ஒடுங்கி மலத்துளதாம்" (சிவஞான போதம் 1.). உமிழ்தல் - தன்னிடத் தொடுக்கிய உலகுயிர்களை மீளவரும்படி செய்தல்.—(6) பேரெழுத்தொன்று - சிகா ரம். பிரணவமுமாம்.—(7) பவளத்திரள் - இறைவன் பாகம். அஞ்சனமா மலை - இறைவி பாகம். திருமால் பாக மெனினுமாம்.—(8) மறந்தும் நினையமாட்டா - முரண் அணி. நாயனார் சரித அகச்சான்று. வாளா பிறந்த......நாளல்ல - "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.—(10) சிவநெறித் தவத்தில் நின்று சிவபோத நிலையில் மட்டும் இறைவர் அறிய வருபவர். "உலகெலா முணர்ந் தோதற் கரியவன்".

குறிப்பு:—தென் னெறும்பியூர் - தெளிந் தெறும்பியூர் - திரு வெறும்பியூர் என எதுகையின்பொருட்டு வரும் முதல் அசை ஒன்று தவிர, ஏனை ஈற்றடி முழுதும் மகுடமாய் வரும் சிறப்புடையது இத்திருப்பதிகம் ஒன்றுமேயாம்.

தலவிசேடம்:—திருவெறும்பியூர்மலை - காவிரிக்குத் தென்கரையில் 7 - வது தலம். தேவர்கள் எறும்பு உருவம் எடுத்துப் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற் றது. மலைக்கோயில். நைமிசாரணிய முனிவர்கள் பிரமதேவர் முதலியவர்கள் பூசித் தமை பற்றிப் பதிகம் பார்க்க. சுவாமி - மாணிக்க வண்ணர்; எறும்பீசர்; அம்மை - நறுங்குழலாயகி; பதிகம் - 2.

இது திருவெறும்பியூர் என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும் வடமேற்கே கற்சாலை வழி ½ நாழிகை யளவில் அடையத் தக்கது.

## திருச்சிராப்பள்ளிமலை

*திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

மட்டு வார்குழ லாளொடு மால்விடை, யிட்ட மாவுகந் தேறு மிறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னரு ளேசெயுஞ், சிட்டர் போலுஞ் சிராப்பள்ளிச் செல்வரே.

தாயுமா யெனக் கேதலை கண்ணுமாய்ப், பேய னேனையு மாண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய, நாய னாரென நம்வினை நாசமே. 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*திருச்சிராப்பள்ளி இறைவர் கட்டு நீத்தவர்க்கு இனிய அருளே செய்வர் ; அவரது ஊரைச் சொன்ன அளவில் தீவினை நரிச்சிருக்கமாட்டாது நடக்கும் ; அவர் எனக்குத் தாயுமாகித் தலையும் கண்ணுமாவார் ; அவரைச் சொல்லவே வினை நாசமாம்.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மட்டுவார் குழலாள் - *தல அம்மை பெயர்.* கட்டு - *பாசம் ; உலக ஆசை ; பற்று.* இன் அருளே - *இனிய அருளையே. நீத்தவர்க்குத் துன்பமன்றி* இன்பமே. *ஏகாரம் பிரித்துக் கூட்டி,* நீத்தவர்க்கே யருள்செயும் *என்றலு மாம்.*—(2) வட்டாடினார்-*செண்டாடினார்.*—(3) அரிச்சு - *அரித்து.* சுரிச்சு - *சுழித்து-சுழன்று.* நரிச்சும் - *ஒளிக்கும்.* நரிச்சு-*துன்பஞ் செய்து என்றலுமாம். உம்மை தொக்கது.*—(4) தாயுமாய் - *தலச்சுவாமி பெயர் தாயுமானார் என்பது.* நாயனார் - *தலைவர்.*

குறிப்பு :—*இப்பதிகத்துள் கிடைத்துள்ள 4 பாசுரங்கள் தவிர ஏனையவை ஆறும் சிதலரித்தொழிந்தன !. இப்பதிகம் சில பிரதிகளில் இல்லை.*

தலவிசேடம்:—திருச்சிராப்பள்ளி - *இது உலக வழக்கில்* திருச்சினாப்பள்ளி *என வழங்குகின்றது.* திரிசிரன் *பூசித்தகாரணத்தால் இப்பெயர் போந்தது. ஆதிசேடனுக்கும் வாயுவுக்கும் நேர்ந்த போரில், வாயுவினால் தகர்க்கப்பட்ட, மகாமேருவின் மூன்று சிகரங்களுள் ஒன்று. (ஏனை இரண்டு - திரிகோணமலையும் திருக்காளத்தியும் என்ப.) தட்சிண கயிலாயம் என்பர். பிரமதேவர், இராமன், நாக கன்னியர், இந்திரன் முதலியோர் பூசித்த தலம். அநுமான் பூசித்த அநும முத்திரை மலையிற் பொறிக்கப்பட்டுள்ளது. அகத்தியர் தாம் பூசித்த இதனோடு ஒப்ப உயர்ந்த மற்றொரு மலையைப் பாதலத்தழுத்தினர் என்பதும் வரலாறு. ஒரு வணிகப் பெண்ணின் தாய்போல் வந்து இறைவர் பிரசவம் பார்த்ததனால்* தாயுமானார் *என்று தேற்றமாக வழங்கப்பெறுவர். "தாயுமாய்" என்ற தேவாரம் இக்குறிப்புடையது. சாரமாமுனிவர் சுவாமிக்காக நாகலோகத்திலிருந்து கொணர்ந்த செவ்வந்தி மலரை உறையூர்ப் பராந்தகச் சோழன் தன் மனைவிக்குக் கொடுக்கக் கவர்ந்த சிவாபராதத்திற்காக, இறைவர் மேற்கு நோக்கித் திரும்பி உறையூரில் மண் மழை பெய்யச் செய்தனர் ; திருநந்தி தேவர் துவார மூர்த்திகள், ஏனைய பரிவார மூர்த்திகள் எல்லாம் ஆலயத்தின் கிழக்கே உள்ளன ; சுவாமி அது முதல் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மலைச் சிகரத்தில் உச்சிப் பிள்ளையார் கோயில் பிரசித்தம். மலைவாயிலும் படிகளும் கோயிற் கற்றிருப்பணிகளும் பல அருமைகளை யுடையன. இத்தலத்தில் பெரியாராய் விளங்கிய மௌன சுவாமிகளிடம் தாயுமான சுவாமிகள் அருளுபதேசம் பெற்றனர். மௌனமடாலய விசாரணைகள் இன்றும் சிறக்கத் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதினகர்த்தர் அவர்களால் நடைபெற்றுவருவது. பூர்வச்சோழர் காலமுதல் கோயிலும் குடியும் சிறக்க விளங்குவது. சுவாமி* - தாயுமானவர் ; *அம்மை* - மட்டுவார் குழலி ; *தீர்த்தம்* - நன்றுடையான் குளம், தீயதில்லான் குளம் *முதலியவை ; பதிகம் - 2.*

*இது திருச்சிராப்பள்ளிக் கோட்டை யென்ற இருப்புப்பாதை நிலையத்தினின்றும் கிழக்கே ½ நாழியளவில் உள்ளது.*

திருக்கற்குடி

*திருச்சிற்றம்பலம்*　திருத்தாண்டகம்

மண்ணதனி லைந்தைமா நீரி னான்கை வயங்கெரியின் மூன்றைமா ருதத்தி ரண்டை
விண்ணதனி லொன்றை விரிக திரைத் தண்மதியைத் தாரகைக டம்மின் மிக்க [றிக்
வெண்ணதனிலெழுத்தையேழிசையைக்காம னெழிலழியவெரியுமிழ்ந்தவிமையாநெற்
கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னானே. 3
*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*வானவர்க்கும் மூத்தவன் ; மூவாமேனி முதல்வன் ; செய்யான் ; வெளியான் ; கரியான் ; மண்ணதனி லைந்து ; மாநீரி னான்கு ; வயங்கு எரியின் மூன்று ; மாருதத் திரண்டு ; விண்ணதனி லொன்று ; விரிகதிர் ; தண்மதி ; சங்கை தனைத் தவிர்த்தாண்ட தலைவன் ; பரந்தான்; குவிந்தான்; இவ்வுலக மெல்லாமுண்டான்; உமிழ்ந்தான் ; திரிபுரத்தோர் மூவர்க்குச் செம்மைசெய்த தலையான் ; என்றிவை முதலிய தன்மைகளாலறியப்படுகின்ற விழுமியானைக் கற்பகத்தைக் கற்குடியில் கண்ணாரக் கண்டேனானே.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வானவர்க்கும் - மூத்தவன் என்க. அக்கரவம் - *அக்கும் அரவமும்.* காத்தவன் - *வாராது காத்தவன்.* (4 - *வது பாட்டும் பார்க்க.*) —(2) செய்யான் - வெளியான் - கரியான் - செம்மை - *தமது நிறம்*; வெண்மை - *அதன் மேற்பூசிய திருநீற்றின் நிறம்;* கருமை - *பாகமுடைய* - அம்மை - திருமால் - *இவர்களது நிறம்.* ஐயான் - *அழகியான்.* ஐ - தெய்வம் என்றலுமாம்.—(3) மண்ணதனில் ஐந்தை...ஒன்றை - "*மின்னுருவை*" (*தாண் - புள்ளி* - வேளூர் - 5) பார்க்க. *இறைவன் ஐம்பூத குணங்களில் விளங்கும் நிலையும், எட்டு மூர்த்தியாய் நிற்கும் நிலையும் போற்றப்பட்டன.*—(4) சங்கை - *மயக்கம். ஐயத்தால் நிகழும் தடை.* "*சங்கோத்தர விருத்தி*". மதி - மாசுணம் - *பகைப்பொருள்கள்.*—(6) கண்ணவன் - *காட்டுமுபகாரம் செய்பவன்.*—(7) உண்டான் - உண்ணுதல் - *ஊழியில் தன்னுள் ஒடுக்கும் செயல்;* உமிழ்ந்தான் - உமிழ்தல் - *அவற்றை மீளவும் தன்னிடத்தினின்றும் உளவாக்கும்செயல்; உபசாரம்.* "*ஒடுங்கி மலத்துளதாம்*" (சிவஞான போதம் - 1 - சூத்) .—(9) மூவர் - *திரிபுரங்களில் இருந்த அன்பர் மூவர். முப்புரமெரித்தபோது இவர்கள் எரியாமல் உய்ந்தவர்கள்.* தலையான் - *தலைமையுடையோன்.* "*மூவ ருயிர்வாழ முப்புரமு நீறாக, எவர் பொருதா ரிமையோரில்*" என்றபடி கண்ட இறைமை. கலை - மான் *கன்று.*—(10) பொழிலான் - பொழில் - *உலகங்கள்.* "*ஏழுடையான் பொழில்*"

தலவிசேடம்:—கற்குடி-*காவிரிக்குத் தென்கரையின் 4-வது தலம். மலைக்கோயில். உய்யக் கொண்டான்மலை என வழங்குவர். ஈழத்தரசன் பூசித்துப் பேறுபெற்ற தலம். குடமுருட்டி யாற்றுக்கு மேற்கில் உள்ளது. (திருக்காட்டுப் பள்ளியில் பிரியும் குடமுருட்டி வேறு). சுவாமி-* விழுமியநாதர் ; உச்சிநாதர் ; கற்பகநாதர் ; *அம்மை* - அஞ்சனாட்சி ; *அம்மை சந்நிதிகள்* - 2. பதிகம் - 2.)

*இது திருச்சி சந்திப்பு நிலையத்தினின்று வடமேற்கில்* $1\frac{1}{2}$ *நாழிகையில் உள்ளது. திருச்சி கோட்டை நிலையத்தினின்று மேற்கே 3 நாழிகையளவில் அடையலாம். (கற்சாலை வழி)*

## திருப்பராய்த்துறை

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

கரப்பர் கால மடைந்தவர் தம்வினை, சுருக்கு மாறுவல் லார்கங்கை செஞ்சடைப்
பரக்கு நீர்வரு காவிரித் தென்கரைத், திருப்ப ராய்த்துறை மேவிய செல்வரே. 1

தொண்டு பாடியுந் தூமலர் தூவியும், இண்டை கட்டி யிணையடி யேத்தியும்,
பண்ட ரங்கர் பாராய்த்துறைப் பாங்கரைக், கண்டு கொண்டடி யேனுய்ந்து போவனே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பரப்பு நீர்வரு காவிரித் தென்கரைத் திருப்பராய்த்துறைச் செல்வனார், அன்பரா யிருப்பாரை அறிவர்; அவரை அடியேன் சென்று கண்டு கொண்டு உய்ந்து போவன்; அவரைத் தொழுதெழுந் துய்ம்மின் ; அவரை அடையில் வினைபோயறும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) காலமடைந்தவர் - காலத்தால் வந்தடைந்தவர் கள். " காலமுண்டாகவே காதல் செய்துய்ம்மின் " (திருவா). வினை-கரப்பர்; சுருக்கு மாறு வல்லார் - என்க. பரப்பு நீர்வரு - இங்குக் காவிரி மிக அகலமாகப் பரவிச் செல்வது குறிப்பு. " அகன்ற காவேரி " என வழங்குவர் : " பரக்கு நீர்ப் பொன்னி " (11) என்பதுமிது. செல்வர் - சுவாமி பெயர் - 2, 3, 4, 6, 9 பாட்டுக்களிலும் இப் பெயர் போற்றப்பட்டது காண்க. " செல்வர் பாராய்த்துறை " (பிள்ளையார்-தேவா). " நலங்கொள் செல்வப் பராய்த்துறை " (1567) என்று ஆசிரியர் காட்டிய குறிப்பு மிது. தென்கரை - காவிரிக்குத் தென் கரையிலும் வடகரையிலுமாகத் தலங்களை வரிசைப் படுத்திப் பகுக்கும் வழக்குக் குறிப்பு. பராய்த்துறை - பராய்மரம் தலமர மாதலின் இப்பெய ரெய்திய தென்பர். " வன்ப ராய்முரு டொக்குமென் சிந்தை " (திருவா). (2) தென் - காவிரிக்குத் தென் கரை. இயற்கை யடைமொழி. அழ குடைய என்றலுமாம்.—(3) பட்ட நெற்றியர் பான்மதிக் கீற்றினர் - பட்டங் கட்டிய நெற்றியர் போலப் பிறையை வைத்தவர் ; இட்டமா யிருப்பார் - அன்பு பூண்டொழு குபவர்—(4) " அன்பரா யிருப்பார் " - (9) " விருப்பரா யிருப்பார் " என்றவையு மிக்கருத்து. அறிவரே - அறிவர். அருளுவர் என்ற பொருளில் வந்தது.—(5) தாதோடுபோது - புதுமலர். வாதை - பாசத்தால் வரும் நலிவு.—(7) மார்பின்நூல் பொருப்பு அராவி இழிபுனல் போன்றது - மார்பில் பூணுநூல் விளங்கு மேல் கீழா கத் தங்கிய தோற்றம் மலையில் விளங்கு தவழும் அருவி நீர் போன்றது.—(8) எக்கர் - திடல். இடுமணல் - வெள்ளத்தால் சேர்த்திடப்பட்ட மணல்.—(9) மருப்பு அராய் - கொம்பை அராவி.—(10) பண்டரங்கம் - இறைவன் கூத்து. " பண்டரங்க வேடத் தான் " (தேவா.)கலித்தொகைக் கடவுள் வாழ்த்து, நச்சினார்க்கினியர் உரை பார்க்க.

தலவிசேடம்:—திருப் பராய்த்துறை - காவிரிக்குத் தென்கரையில் 3-வது தலம், இந்திரன், ஏழு இருடிகள், குபேரன் பூசித்த தலம். அகன்ற காவேரித் துறை என்பது பதிகத்துப் போற்றப் பட்டது. சுவாமி - பராய்த்துறை நாதர், செல்வர் ; அம்மை யார் - பொன்மயிலம்மையார் ; தீர்த்தம் - அகன்ற காவிரித்துறை; மரம் - பராய்; பதிகம் 2.

எலமனூர் என்ற புகைவண்டி நிலயத்தினின்றும் வடமேற்தே கற்சாலைவழி ஒரு நாழிகை யளவில் இதனை அடையலாம். இதன் அணிமையில் இப்போது திருப்பராய்த் துறை வண்டி நிற்குமிடம் (Train Halt) ஒன்று புதியதாய் அமைத்துள்ளார்கள். (திருப்பளாத்துறை என்று வழங்குவது பிழை.)

1568. (வி - ரை) மருங்கு உள்ளன - இவை திருப்பராய்த்துறையினின்றும் கிழக்கே காவிரிக்குத் தென்கரையில் உள்ள திரு ஆலந்துறை, திருச்செந்துறை முதலியன. இவற்றுக்கு நாயனார் பதிகங்கள் கிடைத்தில!

உற்ற அருளால் காவிரியை ஏறி - மேல்வரும் திருவருள் வெளிப்பாடு பெற நிற்றலின் அத்திருவருட் குறிப்பினால் காவிரியை இங்குக் கடந்து மேல் வடகரை அடைந்து.

மற்று அப்பதிகள்-மற்று-அசை. அப்பதிகள்-முன்பாட்டிற் சுட்டிய அத்தலங்கள்.

போற்று உற்று அமைந்த திருப்பணிகள் - போற்று - முத்தி நெறிகாட்டும் அழகு. திருப்பணிகள்-கைத் திருத்தொண்டும், பாடற் றிருத்தொண்டும். "நிலை பெறுமாறு" என்ற திருத்தாண்டகத்துட் கூறியவையும் அனைய பிறவும்.

சேர்கின்றார் - முற்றெச்சம். சேர்கின்றார் - மொழி வேந்தரும் எழுந்தருள - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. 303

1569. (வி - ரை) நீர் வேட்கை - தாகம். அழிவு ஆம் பசி - உடல் முயற்சி, மன்முயற்சிகளை அழிவு ஆக்கும் பசி. "பசிவந்திடப் - பறந்து போம்" என்பது நீதி மொழி. ஆம் - ஆதற்கேதுவாகிய. பெயரெச்சம் ஏதுப் பெயர் கொண்டது.

அதற்கு - வருத்தம் உறத் தாகமும் பசியும் வந்த அதற்கு.

சித்தம் அலையாதே - மனம் சிறிதும் சலியாமலே. ஏகாரம் தேற்றம்.

விழி ஏந்திய நெற்றியினார் - தொண்டர் துயரங்கள் கண்டு நீக்குதற் கென்றே விழித்த விழியினை யுடையார் என்பது குறிப்பு. "நெற்றியிற் கண்கண்ட கண் கொண்டு மற்றினிக் காண்பதென்னே?" என்பது நாயனார் திருவாக்கு.

வருத்தம் மீட்பாராய் - வருத்தத்தை நீக்குவாராய். மீட்டல் - போக்குதல்.

மீட்பாராய் - நண்ணி யிருந்தார் என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

இளைத்த - என்பதும் பாடம். 304

1570. (வி - ரை) காவும் குளமும் முன் சமைத்து - வழியில் முன்னே சோலையினையும் குளத்தினையும் சமைத்தல் வருத்தம் மீட்டற்குரிய சாதனங்களாகச் செய்த தாம். நீர் வேட்கை நீக்கக் குளமும், வழிவரும் இளைப்புப் போக்கச் சோலையும் ஆவன.

முன் - தொண்டர் அங்கு வரும் முன் என்று காலத்தையும், வரும் வழியின் முன்பு என்று இடத்தையும் குறித்து நின்றது.

காட்டி வழிபோம் கருத்து - இளைப்பும் பசியும் நீர் வேட்கையும் நீக்கும் வழியும், அப்பால் மேற்கடந்து செல்லும் வழியும் காட்டித் தாமும் உடன் போகும் கருத்து. 1573ல் வரும் நிகழ்ச்சியின் குறிப்பு.

மேவும் திருநீறு - அடியார்களது உள்ளங்களிலும் மேனிகளிலும் நீங்காது பொருந்தும் நீறு.

திருநீற்று அந்தணராய் - வழிவரும் இளைப்புக்கும் தாகம் பசி யிவற்றுக்கும் சித்தம் அலையாது திருப்பைஞ்ஞீலியைச் சேரவரும் மொழிவேந்தரது சிந்தையை மயக்கித் தம் வயப்படுத்தத் தக்க மருந்தாகத் திருநீறு பூசிய வேதியராய் வந்தனர் இறைவர். "சேலும் கயலுந் திளைக்கும் கண்ணா ரிளங்கொங்கையிற் செங்குங்குமம், போலும் பொடியணி மார்பிலங்கு மென்று புண்ணியர் போற்றிசைப்ப" (திருவிசைப்பா - திருப்பல்லாண்டு.)

விரும்பும் - நாயனார் அதனை உண்டு தளர்வொழிய வேண்டுமென்று தாம் விரும்புதற்கேற்ற என்க. அன்புடையோர் யாவராலும் விரும்பத்தக்க என்றலுமாம். விரும்பி யுண்ணத்தக்க என்றலுமாம்.

போதி சோறும் கொண்டு - காவும் குளமும் முன் சமைத்ததோடு சோறும் கொண்டு என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. இளைப்பு நீக்கச் சோலையி னிழலும், தாப நீக்கக் குளமும் சமைத்தபடியே, பசிநீக்கப் பொதிசோறும் கொண்டு என்று எண்ணும்மையாக்கி உரைப்பதுமாம்.

பொதி சோறு - சோற்றுடன் கூட்டி உண்ணுதற் குதவும் பண்டங்களும் சமைத் துப் பொதிதலால் பொதி சோறு எனப்படும். பொதிந்து கட்டப்படும் வழக்குப்பற்றி இப்பெயர் பெரும்பான்மை வழங்கப்படும்.

ஆளுடைய நம்பிகள், சீகாழியினின்று போதுமவர், "உண்ணீரின் வேட்கையுட னுறுபசியான் மிகவருந்தி" வழிவரும்போது, திருக்குருகாவூரின் அணிமையிற் பந்தர் சமைத்துப் பொதிசோறுடன் வழிபார்த்து இருந்து, இறைவர் அவர்க்குப் பொதிசோ றளிக்குஞ் சரிதவரலாறும் இங்கு நினைவுகூர்தற்பாலது. "விழியேந்திய நெற்றியினார்" (1569) என்று இங்குக்குறிப்பிற் கூறியதுபோலவே ஆண்டும், "கண்ணீடு திருநுதலார் ...தண்ணீரும் பொதிசோறுங் கொண்டுவழிச் சார்கின்றார்" (ஏயர்கோ - புரா - 156) என்ற குறிப்பும் இங்குக் கருதத் தக்கது.

நாவின் தனி மன்னவர் - "நாவுக்கரசு" என்பது நாயனாருக்கு இறைவர் தந்த பெயர் (1339). ஆசிரியரது ஆர்வம் அதன்மட்டில் அமைவுபடாது "நாவின் தனி மன்னர்" என்றார். "மங்கையர்க்கரசி" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரத் தினையும் இவ்வாறே "மங்கையர்க்குத் தனி யரசி" என்று ஆசிரியர் அமைப்பதனை இங்கு நினைவுகூர்க.

காண்பரியவர் தாம் நண்ணியிருந்தார் என்க. திருவருட் செயல் முற்றிய விரைவுபற்றி வினைமுற்று முன்வந்தது. இருந்தார் - வீற்றிருந்தருளினர் என்க.

விண்ணின்மேல் தாவும் புள் - அன்னம். ஏனம் - பன்றி. விண்ணின்மேல் தாவும் - மண் கிழிக்கும் - என்ற அடைமொழிகள், இறைவரைக் காணுதற்காகச் செய்த அச்செயல்களைக் குறிக்க உடம்பொடு புணர்த்தி ஓதப்பட்டன.

காண்பு அரியவர் - காண்பு - புவ் வீற்றுத் தொழிற்பெயர். காண அரியவர். நான்கனுருபு தொக்கது. தாம் - தாமே.

காட்ட—என்பதும் பாடம். 305

1571. (வி - ரை) அங்கண் - அவ்விடம் என்றும், அங்கண்மை - அருளு டைமை - என்றும் உரைக்க நின்றது.

மறையவர் - தமது உண்மை நிலையை மறைத்து வந்தவர் என்ற குறிப்பு.

வேதியர் - நாயனாரது கருத்தை "எண்ண நினையா"மற் செய்து வேதிப்பவர் என்பது குறிப்பு.

நோக்கி - தம் கருத்தின்படி அவரை வயமாக்கும் வண்ணம் அருள் நோக்கம் செய்து என்பது குறிப்பு.

சோறு - முத்தி என்ற உண்மைக் குறிப்பும் தந்து நின்றது. "பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்" (திருவா).

பொங்கு குளம் - பொங்குதல் - ஊறும் நீருடைத்தாதல்: புதிதாய்ச் சமைக்கப் பட்ட தென்பதும் குறிப்பு.

போவீர் - வழியின் மேற் செல்வீர்.

புகன்றார் - சொல்ல; புகன்றாராக. பொருள் செல்லும் தொடர்பு நோக்கி முற்றெச்சமாக உரைக்கப் பட்டது. முற்றாகக் கொள்ளினு மிழுக்கில்லை. இவ்வாறே ஆளுடைய நம்பிகளை நோக்கித் திருக்குருகாவூர் இறைவர் அருளுவதும் இங்குச் சிந் திக்க. (ஏயர் கோ. புரா. 159). 306

1572. (வி - ரை) நண்ணும் - வேதியரது எதிரில் நண்ணிய - வந்த - என்றும், அவர் நோக்கியவாறு அந்த அருணோக்கம் நண்ணிய என்றும் உரைக்க நின்றது.

திருநாவுக்கரசர் - "மொழி வேந்தர்" (1569), "நாவின்றனி மன்னவர்" (1570), "ஆண்ட அரசு" (1571), அரசு (1573) என இப்பகுதி முழுதினும் வாக்கின் வேந்தர் என்ற இவ்வொரு தன்மையே பற்றி ஆசிரியர் குறித்தருளிய கருத்து அவரது திருவாக்கின் வளங் கருதியே இறைவர் இவ்வாறு தாமே எழுந்தருளி வந்து அருள் செய்தனர் என்ற குறிப்பாகும்.

நம்பர் அருள் என்று அறிந்தார் போல் - எண்ண நினையாது - வாங்கி - "இது சிவபிரான் திருவருள் என்று பொதுமையாலுணர்ந்த தன்றிச் சிறப்பு வகையாலுணராமையின் அறிந்தார் போல் என்றார்" என்பது ஆறுமுகத் தம்பிரானார் உரைக் குறிப்பு. "இப் பொதிசோறு சிவபெருமான் திருவருள் கூட்டுவிக்கக் கிடைத்த தென்று பொது வகையா லுணர்ந்தாரே யன்றி, அப்பெருமானே பிராமணத் திருவுருவங் கொண்டெழுந்தருளித் திருவருள் புரிந்தாரென்று சிறப்பு வகையா லுணராமையின் எண்ணி நினையாது என்று கூறினார்" என்பது சுப்பராய நாயகர் உரைக் குறிப்பு. "மறையோர் சோறு அளித்தலும், திருப்பைஞ்ஞீலியை யடைந்து சுவாமியைத் தரிசித்து உண்ணுவோமென்ற எண்ணத்தை நினையாமல், இது நம்பருடைய திருவருள்தான் என்றறிந்தவரைப் போல் அவர் எதிரே வாங்கி இனிமையாக உண்டு; நினையாமல் உண்ணும்படி செய்தது அருள் என்க" என்பது இராமநாதச் செட்டியார் உரைக்குறிப்பு. இக்குறிப்புக்களின் பொருத்தங்கள் ஆராயத்தக்கன.

மறையவர் அறிந்தார்போல, "உண்ணும் என்று பொதிசோறளித்தலும், அருள் என்று (கொண்டு), (மேல் மேலும்) எண்ண நினையாது நாவுக்கரசர், வாங்கி அமுது செய்து" என்று கூட்டியுரைத்துக் கொள்க.

அறிந்தார் - முன்னர் அறிமுகம் - பழக்கம் - உடையவர். போல் - போலக் காட்டி. போல்-அளித்தலும்-என்க. அருள் என்று நினைத்து, அதனால், மேல் ஊன்றி எண்ண நினையாது என்க. அருள் என்று நினைத்தலும், மேல் எண்ணமிட்டறிய நினையாமையுமாகிய நினைப்பும் மறப்புமாகிய இருநிலைகளும் திருவருணோக்கத்தாலாகியன. "நின்னை யெப்போது நினையவொட் டாய்நீ நினையப்புகின், பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்றை நாடுவித்தி" (பொது - தனித்திரு - விருத்தம் - 4) என்ற நாயனார் திருவாக்கின் கருத்தினை இங்கு வைத்துக்காண்க. "நின்வயின், நினைக்குமா நினைக்கப் பெறாத லனைத்தொன்று, நீயே யருளல் வேண்டும்" (கோயிலுன் - 32) என்ற திருவாக்கும் இங்குக் கருதற்பாலது.

எண்ண - ஊன்றியறிய என்னும் பொருளில் வந்தது. அவ்வாறு ஊன்றியறியப் புகுந்திருப்பின், அவரது ஞான நாட்டத்தில், நின்றவர் இறைவர்தாம் என்ற உண்மை நிலையைக்கண்டிருப்பர் என்பது. "செவ்விய திருவுள்ளத்தோர் தடுமாற்றம்சேரநோக்கி" (அப்பூதி - புரா - 33), "திருத்தொண்ட ருள்ளத்திற் றடுமாற்ற நம்பர்திரு வருளாலே யறிந்தருளி" (1472), "திருஞான சம்பந்தர், புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திட" (திருஞான - புரா-934), "தீதணை வில்லை யேனு மென்மனந் தெருளா தின்ன, மாதலா லவரைக் காண வேண்டும்" (ஏயர்கோன் - புரா - 402) என்று காணும் வரலாறுகள் இங்குச் சிந்திக்கற்பாலன.

அருள் என்று - எதிர் வாங்கி - எல்லாம் திருவருள் விளைவேயாகக் கண்டார்; திருவருளாற்கிடைத்த இதனை மறுக்கலாகாதென்று எதிர் வாங்கினார் என்பது. எதிர் வாங்குதலாவது கொடுத்தமைக் கேற்றவாறே வாங்குதல். "மறைமுனிவர் தரும் பொதிசோ, றின்றுநமக் கெதிர்விலக்க லாகாதென் றிசைந்தருளிய" ஆளுடைய

நம்பிகளது செய்கையினையும் இங்கு வைத்துக்காண்க. அறிந்தார்போல அளித்தமையும், அருளென்று கொண்டமையுமே எதிர்வாங்கக் காரணமாயின என்பதாம்.

உரைத்து - இன்னுரைகூறி. சோறளித்தல் - இன்னுரையுடன் கூடிய செய்கை.

இனிதா - இனிமையாக; மனமகிழ்ச்சி குறித்தது.

இனிய தண்ணீர் - பொங்கு குளமாதலின், புதிய நீர் இனியதாயிற்று.

தூய்மை செய்தல் - கைகால் சுத்தியும் வாய்ச் சுத்தியும் முதலியவை செய்தல்.

தளர்வு - இளைப்பும் பசியும் தாகமும்.

எண்ணி நினையாது—என்பதும் பாடம். 307

1573. எய்ப்பு நீங்கி நின்றவரை நோக்கி யிருந்த மறையவனார்
"அப்பா லெங்கு நீர்போவ?" தென்று; ரரசு மவர்க்கெதிரே
"செப்ப வரியான் திருப்பைஞ்ஞீ லிக்குப் போவ" தென்றுரைப்ப,
ஒப்பி லாரு "மியானங்குப் போகின் றே"னென் றுடன்போந்தார்.

(இ - ள்) எய்ப்பு...என்றார் - இளைப்பு நீங்கி நின்ற அரசுகளை இருந்த மறையவனார் நோக்கி, "இனி அப்பால் நீர் எங்குப் போகின்றீர்?" என்று கேட்டார்; அரசு...என்றுரைப்ப - அரசுகளும் அவர்க்கு எதிர் மொழியாக "செப்புதற் கரியவராகிய சிவபெருமானது திருப்பைஞ்ஞீலிக்குப் போகின்றேன்" என்று சொல்ல; ஒப்பிலாரும்...போந்தார் - ஒப்பற்றவராகிய மறையவனாரும், "நான் அங்குப் போகின்றேன்" என்று சொல்லி உடன் போந்தனர்.

(வி - ரை) நின்றவரை - இருந்த மறையவனார் - பொதி சோறுண்டு நீரும் அருந்தித் தளர்வொழிந்த நாயனார் மேற் சிறிது போதும் அங்குத் தங்கி வீற்றிராது நின்றபடியே திருப்பைஞ்ஞீலி நோக்கி மேற் செல்ல நின்றனர் என்பதும், மறையவனார் தாம் அரசுகளுக்குச் சோறு தந்து வீற்றிருந்தபடியே இருந்தனர் என்பதும் கொள்க. "நண்ணியிருந்தார்" (1570) என்றதனையே தொடர்ந்து இருந்த என்றார்.

அவர்க் கெதிரே - செப்ப அரியான் - எதிரே - அவர் முன்னிலையில் நின்றும் உமது என்று கூறாது செப்ப அரியான் என்று படர்க்கை யிடத்துக் கூறினார் என்ற குறிப்புப்பட எதிரே என்றார். செப்ப அரியான் என்ற குறிப்புமது.

செப்ப அரியான் - சொல்லில் அடங்காதவர். "உலகெலா முணர்ந் தோதற் கரியவன்" (புரா). "சொற்கழிவு பாதமலர்" (திருவா - திருவெம் - 10.)

ஒப்பிலார் - "தனக்குவமையில்லாதான்" (குறள்) "ஓர் உவமனில்லி" (தாண் - தேவா.)

யான் அங்குப் போகின்றேன் - யானும் என்னாது, யான் என்று கூறியதன் கருத்துத் தம்முடன் சிறிது தூரம் உடன் வருவதுபோலக் காட்டிப், பின்னர் மறைய நிற்கும் பின் நிகழ்ச்சியின் குறிப்பு. போகின்றேன் - இங்கு வெளிப்பட்டு இவ்வாறு தோன்றிய உருவத்தினின்றும் மறைந்து எங்கும் செறிந்த அருவநிலையில் புகுவேன் என்ற குறிப்பு. அங்கு - அந்த நிலையில்; அங்கு நீ என்னைக் கண்டுகொள்க என்றதாம்.

உடன் போந்தார் - நாயனார் செல்ல அவருடனே மறையவனாரும் போந்தனர். "திருப்பைஞ்ஞீலியினைச் சென்று சேர்கின்றார்" (1568) என்று கூறியபடி நாயனார் வழிச் செலவில் இங்குச் சிறிதும் தங்காமல் பொதி சோறுண்டு தூய்மை செய்தவுடன் மேற் செல்கின்றாராதலின் அவர் சென்றார் என்பதைக் கூறாமல் மறையவனார் அவருடன் சென்றதைமட்டும் எடுத்துக் கூறினார்.

உடன் - எக்காலத்தும் எவ்வுயிர்க்கும் உடனாகியிருந்து நிகழ்பவர் என்றதும் குறிப்பு.

மறையவனார் - வேதியராகிய உருவத்தினுள் மறைந்து நின்றவர் என்பதும், சிறிது தூரத்தில் மறைய நிற்பவர் என்பதும் குறிப்பு. மேல் வரும் பாட்டிலும் மறையவனார் என்றே குறிப்பது காண்க.

செப்புவார் யான்—என்றுரைத்தார்—என்பனவும் பாடங்கள். 308

1574. கூட வந்து மறையனார் திருப்பைஞ் ஞீலி குறுகியிட
வேட மவர்முன் மறைத்தலுமே மெய்ம்மைத் தவத்து மேலவர்தாம்
"ஆடல் புரிந்தா ரடியேனைப் பொருளா வளித்த கருணை"யெனப்
பாடல் புரிந்து விழுந்தெழுந்து கண்ணீர் மாரி பயில்வித்தார். ௩0௯

(இ - ள்). வெளிப்படை. உடனே கூடவந்து மறையவனார், திருப்பைஞ்ஞீலியினை அணுக, அதுவரையிற் காட்டிவந்த உருவத்தினை அவர் முன்பு நின்றும் மறைத்தலும், மெய்த்தவத்தின் விளங்கும் மேன்மையுடைய நாயனார், "கூத்தனார் அடியேனையும் ஒரு பொருளாக வைத்து இவ்வாறு எனக்கு அளித்த பெருங்கருணை யிருந்தவாறுதான் என்னே!" என்று பாடிக் கீழே விழுந்து, எழுந்து, கண்ணீர் மழை பொழிந்து, சிவானந்தத்தினுள் திளைத்தனர்.

(வி - ரை) கூட - கூடவே; உடனே. தேற்றேகாரம் தொக்கது.

மறையவனார் - மறையவனார் மறைத்தலுமே எனவும், மறையவனாரது திருப்பைஞ்ஞீலி எனவும் கூட்டி உரைக்க நின்றது.

குறுகியிட - அணுக; சார. இருவருமாகத் திருப்பைஞ்ஞீலித் தலத்தைச் சார்ந்தனர் என்பது.

வேடம் - அதுவரை நாயனார் முன்பு காட்டி வந்த, மேவும் திருநீற்றந்தணராகிய உருவம்.

ஆடல் புரிந்தார் - உலகமும் பல்லுயிரு மொன்றி நிறைந்தோங்கி யிலகும் சிவனாகி ஐந்தொழிற் பெருங் கூத்தியற்றும் எமது இறைவனார். புரிந்தார் - வினைப்பெயர். புரிந்தாராகிய இறைவர். அளித்த கருணையினால் ஆடல் புரிந்தார் என்று, புரிந்தார் என்பதனை வினைமுற்றாகவே கொண்டு, என்னையும் ஒரு பொருட்படுத்தி ஒரு திருவிளையாட்டு நிகழ்த்தினார் இறைவர் என்று எழுவாய் வருவித்துரைத்தலு மொன்று.

அடியேனை - அடியேனாகிய என்னையும். இழிவு சிறப்பும்மை தொக்கது. அடியேன் என்பது ஒன்றுக்கும் பற்றாதவனாய்க் கடைத்தொண்டு செய்து திரியும் என்னையும் என்ற குறிப்புடன் நின்றது. திருநெல்வாயிலரத்துறை யிறைவர் தமக்கு முத்துச் சிவிகை முதலியவற்றை யருளியமை கண்டபோது, ஆளுடையபிள்ளையார், இவ்வாறே "என்னை யும்பொரு ளாகவின் னருள்புரிந்,தருளும் பொன்ன டித்தலத் தாமரை போற்றி யென் றெழுந்தார்" (திருஞான - புரா - 226) என்பதும் இங்குக் கருதத்தக்கது.

அளித்த - அளியுடன் செய்த. "ஆடல் புரிந்தார்......கருணை" யெனா - இது நாயனார் அப்போது அருளிய பதிகக் குறிப்பும் கருத்துமாம். பாடல்புரிந்து - திருப்பதிகம்பாடி. இது தலத்துக்குப் புறம்பு அருகில், மறையவனாகி உடன் வந்த இறைவர் மறைந்த உடன் பாடியது. இப்பதிகம் கிடைத்திலது. இப்போது கிடைக்கும் "உடையர் கோவணம்" என்ற திருக்குறுந்தொகை பின்னர்த் திருக்கோயிலுக்குச் சென்று வணங்கித் திருமுன்னர்ப் பாடிய "விரும்புந்தமிழ் மாலைகள்பாடி" (1575)

என்று மேல் வரும்பாட்டிற் கூறும் பதிகங்களுள் ஒன்று என்று கருதத்தக்கது. பதிகக் குறிப்புப் பார்க்க.

பாடல் புரிதல் - வீழ்தல் - எழுதல் - கண்ணீர் பயிலுதல் - இவை இறைவனார் தம்பாற் செய்த கருணையினை அறிந்தபோது நிகழும் மெய்ப்பாடுகள். இவை சிவானந் தப் பெருவாழ்விற் றிளைக்கும் மெய்த்தவத்தார்பாலே நிகழ்வன.

ஆடல் புரிந்தார் - வெளிப்பட வேடங்காட்டி நின்றபோது அறிய வாராது, மறைந்தபோது அறிய வருவது திருக்கூத்தின் பெருமை என்பதும் குறிப்பு.

மெய்ம்மைத் தவத்து மேலவனூர் ஆதலின் இறைவர் இவ்வாறு வெளிப்படவந்து கருணை அளித்தனர் என அதற்குக் காரணம் குறிப்பிட்டவாறு. 309

*1575. பைஞ்ஞீ லியினி லமர்ந்தருளும் பரமர் கோயில் சென்றெய்தி
மைஞ்ஞீ லத்து மணிகண்டர் தம்மை வணங்கி மகிழ்சிறந்து
மெய்ஞ்ஞீர் மையினி லன்புருக விரும்புந் தமிழ்மா லைகள்பாடிக்
கைஞ்ஞீ டியதந் திருத்தொண்டு செய்து காத லுடனிருந்தார். ௬௪௦

(இ - ள்) வெளிப்படை. திருப்பைஞ்ஞீலியில் விரும்பி எழுந்தருளியிருக்கும் சிவபெருமானது திருக்கோயிலினைச் சென்றடைந்து, கரிய அழகிய திருநீலகண்டரா கிய இறைவரை வணங்கி, மிகக் களிப்படைந்து, உண்மைப் பண்பின் நீடிய அன்பு உள்ளுருக, விரும்பும் தமிழ்மாலைகளாகிய தேவாரத் திருப்பதிகங்களைப் பாடி, நீடிய கைத்திருத் தொண்டுசெய்து காதலோடும் (நாயனார்) அங்கு எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) கோயில் சென்று எய்தி - தலம் குறுகியிட நகர்ப்புறத்தே மறையவ னார் மறைந்திட்ட அங்குநின்றும் திருக்கோயிலினை வந்தடைந்து. ஞீலம் - ஞீர்மை - ஞீடிய - எதுகை நோக்கி நகரம் ஞகரமாக வந்த எழுத்துப்போலி. விரும்பும் - தாம் விரும்பும், இறைவர் மகிழும், அடியார்கள் விரும்பும் என்று பலவும் உரைக்க நின்றது.

நீடிய கைத் திருத்தொண்டு என்க - நீடுதல் என்றும் விடாதுபற்றிச் செய்தல். அன்பின் நீடுதலுமாம். தம் - நாயனார்க்குச் சிறப்பாய் உரிய என்றபடி.

தமிழ்மாலைகள் பாடி - இவற்றுள் ஒருபதிகமே கிடைத்துள்ளது. அதனிற் காணும் சில குறிப்புக்களால், அது இத்தலத்தினின்றும் நாயனார் புறப்படும்போது அருளப்பட்டதென்று கருதவும் இடமுண்டு. 310

திருப்பைஞ்ஞீலி

திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

உடையர் கோவண மொன்றுங் குறைவிலார், படைகொள் பாரிடஞ் சூழ்ந்தபைஞ்ஞீலி
சடையிற் கங்கை தரித்த சதுரரை, அடைய வல்லவர்க் கில்லை யவலமே. [யார்
தருக்கிச் சென்று தடவரை பற்றலு, நெருக்கி யூன்ற நினைந்து சிவனையே,
அரக்கன் பாட வருளுமெம் மானிடம், இருக்கை ஞீலியென் பார்க்கிட ரில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருப்பைஞ்ஞீலி யிறைவர் கோவண உடையர் ; ஆயினும் ஒன்றுங் குறைவிலர் ; சித்தராய்த்திரிவார் வினைதீர்ப்பர் ; யாழின் பாட்டை உகந்த அடி கள் ; அவரை அடைய வல்லவர்க்கு அல்லலில்லை ; அவரைத் தொழவல்லவர் நல்லர் ; அவரைத் தொழுது செல்பவர் வினை தூளியே; ஆதலின் அவரைத் தொழுது உய்ம்மின்; தொழுவார்கள் போய் வானவரோடினிதாக இருப்பர் ; நான் சமண்மிண்டரினின்றும் போந்து அவர் அடியடைந்துய்ந்தேன்.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) கோவணம் உடையர் என்க. ஒன்றும்-ஒன்றானும்; கோவண உடையராயினும் ஒன்றாலும் குறைவிலார். "ஓரிடம் குறைவில ருடையர் கோவணம்" என்று ஆளுடைய பிள்ளையாரும் தொடங்குதல் குறிக்க. பாரிடம்-பூதகணம். "பாரிடம் பணிசெய்யும்" (பிள் - தேவா). சதுரர் - வல்லவர். உலகமெல்லாம் பரவி மூடி அழிக்க வல்ல பெருவெள்ளமாகிய கங்கையைப் பனித்துளிபோலாக்கிச் சடைநுனியிற் றரித்தமை சதுரப்பாடு. "பரந்திழியும் புனற்கங்கை பனிபோலாங் குச், செறுத்தானை" (தாண் - மிழலை-10). அடைய வல்லவர் - அடைதலின் அருமைப்பாடு குறித்தது.—(2) சித்தராய்-சித்தத்தில் வைத்தவர்களாய். சித்தராய்த் திரிவார் என்றும், வினைதீர்ப்பர் என்றும் பிரித்து இறைவர்க்கு ஆக்கி உரைத்தலுமாம்.—(3) விழுதுகிணம். கழுது துஞ்சு இருள்-பேயும் உறங்கும் நடுயாமம்; இங்கு ஊழி குறித்தது. பழுது-விதித்தவறு.—(4) தம்மிலே-இகலிநின்ற தமது நடுவில்.—(5) யாழ் - வீணை; யாழின் பாட்டை உகந்தலாவது - ஊழிமுடிவில் உலகங்களை ஒடுக்கியபின் அவைமீளவரும்படி இறைவர் செய்யும் நாதமுழக்கு. "வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" (பொது - திருவிருத்).—(6) நாயனார் சரித அகச்சான்று. குண்டரோடு படுத்து - குண்டரினின்றும் வேறுபடுத்து.—(7) வரிப்பை - மேல் வரிகளையுடைய நாகத்தின் நச்சுப்பை. உரிப்பு - உரிவை - தோல். திசை - இருக்கும் திசையை நோக்கி.—(8) பேடும் ஆணும் - பேடென்றும் ஆண் என்றும். இனம்பற்றிப் பெண்ணும் உடன்கொள்க.—(9) காருலாம் - கார்காலத்திற் பூக்கும்?.—(10) சிவனையே நினைந்து என்க. நினைந்து - தனது பிழையை நினைந்து. சிவனையே - ஏகாரம் பிரிநிலை. இராவணன் பாடிய சாமவேதப்பொருள் சிவன்; வேதத்தின் இருதயத்தில் விளங்குபவன் சிவன் என்பது குறிப்பு. இருக்கை ஞீலி - பைஞ்ஞீலியாகிய தலம். இருக்கை - இருக்கும் தலம். ஞீலி - பைஞ்ஞீலி என்பது ஞீலி என நின்றது. தொழுது செல்பவர் (3), திசை தொழுவார்கள் (7), இருக்கை ஞீலி (10) என்றிவை முதலிய குறிப்புக்களால் இப்பதிகம் நாயனார் இத்தலத்தினின்றும் புறப்படும்போது அதன் புறத்தே தொழுது போற்றியது என்றும் கருதப்படும்.

தலவிசேடம்:—திருப்பைஞ்ஞீலி - இது காவிரிக்கு வடகரையில் 62-வது தலம். ஞீலி - ஓர் வகை வாழை. பசிய ஞீலி இங்குத் தலமரமாதலின் இப்பெயர் பெற்றது. திருநீற்றந்தணராய் வந்து, இறைவர், திருநாவுக்கரசு நாயனாருக்குப் பொதிசோறு தந்தருளின வரலாறு மேற்கூறப்பட்டது. இறைவர் அப்போது சமைத்த சோலையும் குளமும் தலத்துப் புறத்தே அணிமையில் உள்ளன. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. இங்கு இறைவரது திருவடிவு கண்டு காதல் சிறக்க, ஆளுடைய நம்பிகள், பெருமான் பலிக்கு வரும் வடிவுகண்டு மயல்கொள்ளும் மங்கையர் கூற்றாக, "ஆரணீய விடங்கர்" என்ற அருந்தமிழ்ப் பதிகம் பாடியருளிய பெருமையுடையது. சுவாமி பெயர் நீலகண்டர் என்பதையே "காருலாவிய நஞ்சை யுண்டிருள் கண்டர்" என்று வைத்து நம்பிகள் தொடங்கிப் பாடியருளியது காண்க. ஞீலி என்ற வாழை கோயிற் சுற்றில் இன்றும் தூறுகளாகக் காண உள்ளது. அதன் இலை - காய் - கனி முதலியவற்றை இறைவருக்கே பயன் படுத்தலல்லது வேறு எவரேனும் தமக்குப் பயன்படுத்துவரேல் நோயுறுவது இன்றுங் காணப்படும் அதிசயம்.

சுவாமி - நீலகண்டர். ஆரணீய விடங்கர்; அம்மை - விசாலாட்சி, நீணெடுங் கண்ணி; தலமரம் - பைஞ்ஞீலி - வாழை; பதிகம் 3.

குறிப்பு:—காவிரிக்கு வடகரையில் சோழநாட்டுத் தலங்கள், கோயில் என்னும் சிதம்பரத்திலிருந்து தொடங்கி வடகரை வழியே மேற்கு நோக்கிவந்து இத்தலமும் (பைஞ்ஞீலி), திருவீங்கோய் மலையும் என்றிவற்றோடு முடிகின்றன. இவற்றை

அடைந்து வழிபட்டபின் ஆளுடைய பிள்ளையார் காவிரி கடந்து கொங்கு நாட்டில் திருக்கொடிமாடச் செங்குன்றூரையும், ஆளுடையநம்பிகள் திருப்பாண்டிக் கொடுமுடியையும் அடைந்த வரலாறுகளை அவ்வவர் புராணங்களுட் காண்க (திருஞான - புரா - 324; ஏயர்கோன் - புரா - 85).

திருவானைக்காவினின்றும் வடமேற்கே மட்சாலை வழி எழு நாழிகையளவில் மணச்ச நல்லூரினின்றும் மேற்கே ஒன்றரை நாழிகையளவில் இதனை அடைவது ஒரு வழி; திருச்சி-விழுப்புரம் கிளை இருப்புப்பாதையில் பிட்சாண்டார் கோயிலினின்றும் மேற்கே மட்சாலை வழி ஒன்றரை நாழிகையளவில் திருப்பாச்சிலாச் சிராமத்தையடைந்து அங்கு நின்றும் மட்சாலை வழி வடமேற்கே நான்கு நாழிகை யளவில் அடைவது மற்றொரு வழி. திருவானைக்காவலிலிருந்து பாலத்தின் வழி காவிரி கடக்கப்படுவதனால் இருவழியும் சிரமமில்லை.

1576. நாதர் மருவுந் திருமலைக ணாடும் பதிகள் பலமிகவுங்
காதல் கூரச் சென்றிறைஞ்சிக், கலந்த விசைவண் டமிழ்பாடித்,
மாதொர் பாக ரருளாலே வடபா னோக்கி வாகீசர்
ஆதி தேவ ரமர்ந்ததிரு வண்ணா மலையை நண்ணினார். ௬௧௧

(இ - ள்) வெளிப்படை. நாதர் பொருந்த எழுந்தருளியிருக்கும் திருமலைகளும் நாடுகின்ற மிகப் பல பதிகளும் மிக்க அன்பு பொருந்தப்போய் வணங்கி, இசைகலந்த வளப்ப மிகுந்த தமிழ்ப் பதிகங்களைப் பாடி, உமைபாகரது திருவருளாலே வடக்குத் திசைநோக்கிச் சென்று, வாகீசர், முதற்றேவராகிய சிவபெருமான் விரும்பி எழுந்தருளியிருக்கும் திருவண்ணாமலையைச் சேர்ந்தார்.

(வி - ரை) திருமலைகளும், பல பதிகளும், சென்று, காதல் கூர, இறைஞ்சிப், பாடிப்போய் என்று கூட்டி உரைத்துக் கொள்க.

நாடும் மிகப் பல பதிகளும் என்று கூட்டுக. நாடும் - நாடப்படும். வழிபடுவோர் கருதித் தேடி யடையும் என்பதாம். நாடும் - நாடுகளும் என்றுரைத்தலுமாம்.

இசை கலந்த - என்க. உளங்கலந்த - சிவம் கலந்த - என்றும் உரைக்க நின்றது.

திருமலைகள் - மலைகள் பலவுள்ள நாடாதலின் அங்கங்கும் மலைமேல் இறைவரை வணங்கினர். மலைக்கோயில்களாவன - திருஈங்கோய்மலை, கொல்லி மலையில் அறப்பள்ளி, நயினார்மலை, கஞ்சமலை, பச்சைமலையில் இருக்குவேளூர், தீர்த்தமலை முதலியன.

நாடும் - என்றதனால் நாடுகள் என்ற பொருளில் நடுநாட்டில் உள் நாடுகளும் கொள்ளப்படும். இவை கொங்குநாடு, திருமுனைப்பாடி நாடு முதலியன.

பதிகள் பல மிக - இவை புலிவலம், திருத்தலையூர், நெற்குன்றம், தோழூர், ஏழூர், முதலானவை என்று கருதப்படும்.

காதல் கூர - மேன்மேற் செல்லச் செல்ல அன்புமிக்கூர்தர. கயிலைக்காட்சி காணும் ஆர்வம் முளைக்க என்பதும் குறிப்பு.

கலந்த விசை வண் தமிழ் - சிவங்கலந்த - சிவத்துடன் ஒன்றுபட்ட - இசையினையுடைய வண்தமிழ்ப் பதிகங்கள். இவை வைப்புத்தலங்களாதலின் ஏனைத்தலங்களின் துதிகளுடன் கலந்த என்றதும் குறிப்பு.

அருளாலே - இந்த யாத்திரையின் தொடர்ச்சியாய்த் திருத்தொண்டை நன்னாட்டு யாத்திரையும், அதன் தொடர்பில் திருக்கயிலாய யாத்திரையும், கயிலாயத் திருக்காட்சியும் திருவருளால் மேல் நிகழவுள்ளனவாதலின் அருளாலே என்றார்.

வடபால் நோக்கி - வடக்குத் திசையில் உள்ள நாடுகள் - பதிகளை நோக்கிச் சென்று என்க.

நோக்கிச் (சென்று) - நண்ணினூர் என்று கூட்டுக. சென்று என்பது விரிக்க.

ஆதிதேவர் - ஆதி - மூலமுதல்வர். தம்முள் இகலிய பெருந்தேவர்களான பிரம விட்டுணுக்களுக்கு ஆதியான-மூல முதல்வராகிய. தேவர் - சிவபெருமான். இத்தலத்தில் பிரம விட்டுணுக்கள் முறையே மேலும் கீழும் தேட அவர்களறியாத வண்ணம் நீண்டு சென்ற வரலாற்றுக் குறிப்பு. அமர்தல் - விரும்பி வீற்றிருத்தல்.

திருவண்ணுமலையை நாடிப் பதிபலவும்—என்பதும் பாடம். 311

1577. செங்கண் விடையார் திருவண்ணு மலையைத் தொழுது வலங்கொண்டு
துங்க வரையின் மிசையேறித் தொண்டர் தொழும்புக் கெதிர்நிற்கும்
அங்க ணரசைத் தொழுதெழுந்து திளைத்துத் திருநா வுக்கரசர்
தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார். ௩௧௨

(இ - ள்) திருநாவுக்கரசர் - வாகீசர்; செங்கண்...தொழுது - சிவந்த கண்களையுடைய விடையினை உடைய பெருமானது இடமாகிய திருவண்ணுமலையினை வணங்கி; துங்க...மிசை ஏறி - பெரிய மலையின்மீதேறி; தொண்டர்...திளைத்து - தொண்டர்கள் அன்பு கூர்ந்து செய்யும் அடிமைத்திறத்திற்கு முன்னின்றருளும் அங்கண்மையுடைய அரசராகிய சிவபெருமானைத் தொழுது எழுந்து ஆனந்தத்தில் மூழ்கி; தங்கு...சாதித்தார் - இவ்வாறு வழிபட்டுத் திளைத்து உலகில் தங்கும் பிறவியே இவ்வுலகை நீங்கித் தங்கும் வீட்டுலகத்துக்கு மேலானது என்ற பெருமையை அனுபூதியாகக் கொண்டார்.

(வி - ரை) அண்ணுமலையைத் தொழுது - வலங்கொண்டு - அண்ணுமலையினைத் தூரத்தே தொழுதலும் அதனை வலங்கொள்ளுதலும் முறை. இவை இன்றும் பற்பலாயிர மக்களாற் செய்யப்படுதல் இதன் சிறப்புக் காட்டுவது. பிரம விட்டுணுக்களின் இகல் தீர்க்கும்பொருட்டுப் பேரழற் றூணேயாக நின்ற சிவபெருமான், பின்னர் அவர்கள் வேண்டுதலுக்கிரங்கி, மன்னுயிர்களின்மேல் வைத்த கருணையினூல் மலையுருவாய் நின்றூர் என்பதும், பின்னர் அதன்மேல் இலிங்க உருவாய் நின்றூர் என்பதும் வரலாறுகளாதலின் இவ்வழிபாடுகள் இத்தலத்துச் சிறப்பாகச் செய்யப்படுவன. மலையைத் தொழுதல் பதிகத்துக் காண்க.

துங்கவரை - துங்கம் - பெருமை. பெருமையாவது பெருந்தேவர்களாலும் முன் அறியப்படாமையும், பின்னர் இப்போது மக்களாலும் அறியப்பட்டு அருள் பெருகத் தந்து நிற்பதுமாம். "தொண்டர் தொழும்புக் கெதிர் நிற்கும்" என்ற கருத்துமிது. இதனையே "அங்கண்மை" என்று பின்னும் கூறினூர்.

தொழும்பு - அடிமைத்திறம். எதிர்நிற்றலாவது - வெளிப்பட இருந்து அருள் புரிதல். தொண்டர் தொழும்புக்கு எதிர்நிற்கும் - நாயனூரது அடிமைத்திறத்தின் பொருட்டு எதிர் தோன்றியருளும் என்ற குறிப்புமாம்.

அங்கணரசு - சிவபெருமான். அங்கண்மையாவது - சிற்றுயிர்களின் மேல் வைத்த பேரருள். "அங்கணரசை யடியோங்கட் காரமுதை" (திருவெம்பாவை - 17.) என்று இத்தலத்தே அருளிச் செய்யப்பட்ட மணிவாசகப் பெருமானூரது திருவாசகச் சொல்லும் பொருளுமாகிய ஆட்சி போற்றப்பட்டது காண்க. மேற்சொல்லிய கருத்துரைகள் "செங்கணவன்பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பா, லெங்குமிலாததோ ரின்பநம் பாலதா" என்ற அத்திருப்பாட்டின் கருத்துக்களின் துணைகொண்டு எழுதப்பட்டன. மேல் வரும்பாட்டில் "அண்ணுமலைமேல்...கண்ணூரமுதை" என்ற சிறப்பும், திருவெம்பாவை, "அண்ணுமலையான்...கண்ணூரமுதமுமாய் (18)

என்ற திருவாக்கினை நினைவூட்டுவதாம். இங்கு ஆசிரியரது அருணினைவில் இத் திருவெம்பாவைகள் வந்திருக்கலாம் என்பது கருதப்படும்.

தொழுதல் - எழுதல் - திளைத்தல் - அன்பின் மெய்ப்பாடுகள். சாதித்தார் என்பது அனுபூதிநிலை.

துங்குபிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார் - வீடு என்பது எல்லாப் பொருள்களுக்கும் மேலாய் அடையப்படுவது என்பதும், பிறவி தீது என்பதும் ஞான நூல்களின் முடிபு. ஆயின், இங்கு, அப்பேரின்ப வீட்டின்பத்துக்கு மேலாகிய இன்பம், ஐம்புலனுகர்ச்சிக்கும் உட்படுவதாய், அடியார் கூட்டத்துடன் கலந்து அனுபவிக்கப் படுதலால் "தொழுது எழுந்து திளைத்த" போது திருநாவுக்கரசர் அவ்வின்ப நுகர்ச்சி கைகூடப்பெற்ற இப்பிறவியே அவ்வீட்டுக்கு மேலாவதென்ற உண்மையை அனுபூதிநிலையிற் கைவரப்பெற்றனர் என்பது கருத்து. சாதித்தார்-சாதனத்தாலடையும் பொருளாகிய-சாத்தியமாகிய-வீட்டின் மேலாம் பெருமையைச் சாதனமாகிய தொழுவதின்கண்ணே கூடப்பெற்றனர். "உணர்வி னேர்பெற வருஞ்சிவ போகத்தை யொழிவின்றி யுருவின்க,ணணையு மைம்பொறி யளவினு மெளிவர வருளினை"(திருஞான-புரா-161), "உன்றன் றிருநடங் கும்பிடப் பெற்று, மண்ணிலே வந்த பிறவியே யெனக்கு வாலிதா மின்பமாம் (253), "திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன், வாச மலர்மென் கழல்வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்" (1265) முதலியவை காண்க. "நடமாடுந் திருவாளன் திருவடிகண், டிறந்தார்கள் பிறவாத விதிலேன்ன பயன்? வந்து, பிறந்தாலு மிறவாத பேரின்பம் பெறலாமால்" (கோயிற்புரா - பாயிரம். 15) என்று உமாபதிசிவாசாரியர் இக்கருத்தைச் சுவைபெற விரித்தமை காண்க.

அருணையை நினைக்க முத்தி என்பர். இங்கு நினைத்தும், வந்தும், கண்டும், பாடியும், தொழுதும் எழுந்து திளைத்த நாயனார் முத்தியாகிய அவ்வீட்டினுக்கு மேலாம் பெருமையை அடைந்தனர் என்பதுமாம். "நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே" என்ற பதிகம் காண்க. "கூடு மன்பினிற் கும்பிடலே யன்றி, வீடும் வேண்டா விறலின் விளங்கினர்" (143) என்ற கருத்து இங்கு வைத்துக் காணத்தக்கது. "வீட்டினும் இவ்வாறாகிய பிறப்பில் மிக ஆனந்த மிருத்தலால் என்க" என்பது இராமநாதச் செட்டியார் உரை. இவ்வாறன்றி, சாதித்தார் - விளக்கினர் - உணர்த்தினர் என்று கொண்டு "இம்மானுடப் பிறவியே வீடடைதற்குக் காரணமாகிய சிறந்த பெருமையுடையதென்று நிச்சயஞ்செய்தார்" என்றும், "வீடு பேறு காதலித்தலும், அதனை நிறைவேற்ற முயலுதலும், அம்முயற்சியான் பேறெய்தலும் மனிதப் பிறப்புக் கிருத்தலான்" என்றும் பலவாறுமுரைத்தனர் முன் உரைகாரர்கள். அவையெல்லாம் ஈண்டைக்குப் பொருத்தமின்றென்க.

துங்க விடையின்—மேலாம் பரிசு சாற்றினர்—என்பனவும் பாடங்கள். 312

திருவண்ணுமலை - (மலையைத் தொழுது அருளியது.)

திருக்குறுந்தொகை

I திருச்சிற்றம்பலம்

பட்டி யேறுகந் தேறிப் பலவிலம், இட்ட மாக விரந்துண் டுழிதரும்
அட்ட மூர்த்தியண் ணுமலை கைதொழக், கெட்டுப் போம்வினை கேடில்லை காண்மினே.

பெற்ற மேறுவர் பெய்பலிக் கென்றவர், சுற்ற மாமிகு தொல்புக ழாளொடும்,
அற்றந் தீர்க்குமண் ணுமலை கைதொழ, நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே. 2

மறையி னுனொடு மாலவன் காண்கிலா, நிறையு நீர்மையுள் நின்றருள் செய்தவன்,
உறையு மாண்பினண் ணுமலை கைதொழப், பறையு நாஞ்செய்த பாவங்க ளானவே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—அட்டமூர்த்தி, வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார், பாணி நட்டங்களாடும் பரமனார், காலனாருயிர் கால்கொடு பாய்ந்தவர், அந்திவா யொளியார் என்றிவை முதலிய தன்மைகளாலறியப்படும் இறைவர் தொல்புகழாளொடும் வீற்றிருக்கும் அண்ணாமலை கைதொழுவார் வினை கெடும்; நல்ல வாயின அடையும்; நற்றவத்தொடு ஞானத்திருப்பர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) இலம்-இல்லம்; வீடுகள்.—(2) தொல்புகழாள்-சிவனுடனே இருக்கும் தொன்மைப் புகழுடையவள்; உண்ணாமுலையம்மை. 'தொன்மைக் கோலமே' (திருவா). அற்றம் - கேடு.—(3) உணங்கல்-சோறு-பலி.—(4) தலைவி கூற்றாகிய அகத்துறை—(6) கரும்பினிடைக் கட்டி யொக்கும் - என்க. துணிவெட்டி வீணைகள் பாடும் - வீணைத்தந்திகளைத் தெறித்துப் பாடும் முறை.—(7) கோணிக் கொண்டை - முன்புறம் ஒருபாற் கோணலாக முடித்த கொண்டை; பாணி - கையினால் இடும் தாளத்துக்கிசைய. ஆணி - உரை ஆணி; பேணி - விடாது பற்றி என்ற பொருளில் வந்தது.—(8) விண்டு - தொடர்ச்சியற்று; பற்றுவிட்டு.—(10) மறையினானொடு மாலவன் காண்கிலா - தல சரிதம். பறையும் - நீங்கும்.

1578. அண்ணா மலைமே லணிமலையை, யாரா வன்பி னடியவர்தங்
கண்ணா ரமுதை, விண்ணோரைக் காக்கக் கடலில் வந்தெழுந்த
உண்ணா நஞ்ச முண்டானைக், கும்பிட் டுருகுஞ் சிந்தையுடன்
பண்ணார் பதிகத் தமிழ்பாடிப் பணிந்து பரவிப் பணிசெய்தார். ருகரு

(இ - ள்) அண்ணாமலைமேல் அணிமலையை - அண்ணாமலையின்மேல் விளங்கும் அணிமலையினை; ஆரா...கண்ணாரமுதை - அடங்காத அன்பினையுடைய அடியவர்கள் கண்ணால் நுகரும் அமுதுபோல்பவரை; விண்ணோரை...உண்டானை - தேவர்களைக் காக்கும்பொருட்டுப், பாற்கடலில்வந்து எழுந்த,யாவராலும் உண்ணத்தகாத, விடத்தை அமுதுசெய்த பெருமானை; கும்பிட்டு...பணி செய்தார் - கும்பிட்டு உருகுகின்ற சிந்தையோடும், பண்ணிறைந்த தமிழ்த் திருப்பதிகத்தைப் பாடிப் பணிந்து துதிசெய்து திருப்பணிகள் செய்தனர்.

(வி - ரை) அண்ணாமலைமேல் அணி மலையை - அண்ணா மலைமேல் அணிமலை என்று முரண் அணிச் சுவைபடக் கூறிய வகையால் "அணியணா மலையுளான்" என்ற தேவாரத்தை விரித்துரைத்தவாறு. அண்ணா - தேவர்களுக்கும் மனத்தாலும் அணுக முடியாத; அணி - அடியவர்க்கு அண்ணிய. "தொண்டர் தொழும்புக் கெதிர் நிற்கும்". மலைமேல்-மலை என்றதும் ஒரு சுவை. மலையை - உவமை யாகுபெயர்.

அடியவர்...அமுதை - அடியவர் தமது கண்களால் முகந்து நிறைய உண்ணும் அமுது போல்பவரை என்றதும், அமுது என்றதும் "கண்ணா ரமுதமுமாய் நின்றான்" (திருவெம் - 18) என்ற திருவாசகத்தை விரித்தபடி. அமுதுபோல்பவரை அமுது என்ற உபசாரம். பார்வையால் விடம் தரும் நச்சுப்பிராணிகள் (திருஷ்டிவிடம் என்பர் வடவர்) போல, இது, பார்த்தால் சாவு போக்கும் அமுதம் என்பது கண்ணாரமுது என்றதன் குறிப்பு. அன்பு மிக்க அடிமைத்திற முள்ளபோதே இவ்வாறு பயனும் என்பார் ஆரா அன்பின் என்று உடம்பொடு புணர்த்தி ஓதினார்.

உண்ணா - பிறர் எவர்க்கும் உண்ணலாகாத.

உண்ணா நஞ்சமுண்டான் - சிவனது இறைமைத் தன்மை குறித்தது.

பண்ணார் பதிகத் தமிழ் - இத்தலத் திருநேரிசைத் திருப்பதிகம்.

பரவி - மற்றும் பலவகையாலும் தோத்திரம் செய்து. பணி - கைத் திருப்பணி.

மணிமலையை—என்பதும் பாடம்.

II திருச்சிற்றம்பலம் திருநேரிசை

ஓதிமா மலர்க டூவி யுமையவள் பங்கா மிக்க
சோதியே துளங்கு மெண்டோட் சுடர்மழுப் படையி னானே
ஆதியே யமரர் கோவே யணியணு மலையு ளானே
நீதியா னின்னை யல்லா னினையுமா நினைவி லேனே. 1

உருவமு முயிரு மாகி யோதிய வுலகுக் கெல்லாம்
பெருவினைப் பிறப்பு வீடாய் நின்றவெம் பெருமான் மிக்க
வருவிபொன் சொரியு மண்ணு மலையுளா யண்டர் கோவே
மருவிநின் பாத மல்லான் மற்றொரு மாடி லேனே. 3

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—உமையவள் பங்கா! அமரர்கோவே! கொன்றைக் கடவுளே!, உலகுக்கெல்லாம் பெருவினைப் பிறப்பு வீடாய் நின்ற எம்பெருமான்! வாமதேவா !, கால காலா !, எட்டுத்திசை யொளி யுருவமானாய் !, அணி அண்ணுமலையுளானே ! உன் பாதத் திறமல்லால் வேறு பற்றும், நினைவும், திறமும் இல்லேன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—நின்னை யல்லால் ஓதி மாமலர்கள் தூவி நினையுமா நினைவிலேன் - என்று கூட்டுக. ஓதி - என்பது வாயினாலும், மலர்கள் தூவி-என்பது உடலாலும், நினைவு - மனத்தாலும் செய்யும் பணிகள். முக்கரணங்களாலும் உன் பணியே செய்வேன். அமரர்கோ - மாலயற் கரிதாய் நீண்ட தலசரிதக் குறிப்பு. "அமரர்கோவே" - (2); "அண்டர்கோவே"—(3); "அமரர் ஏத்தும்" (5, 10) "மாலு நான்முகனுங் கூடிக் காண்கிலா வகையுள் நின்றாய்" (9); என்றவையும் காண்க. நினையுமா - நினையும் ஆறு. ஆறு - கடை குறைந்து ஆ என நின்றது. நினைவிலேனே - வேறு நினைவில்லேன். மேல் (4) - (5) பாட்டுக்கள் பார்க்க. அணி அண்ணு மலையுளாய் - தொழும்பர்க்கு அணியையாயும், தொண்டு செய்யாத தேவர் முதலிய ஏனையோர்க்கு அண்ணுதாராயும் உள்ள மலையே. "அண்ணுமலைமேல் அணிமலையை" (1578) என்று ஆசிரியர் இதனை விளக்கினர். இவ்வாறன்றி இப்பதிகத்தை இத்திருமலையில் மேற்கில் உள்ள "அணி அண்ணுமலையார்" என்ற தலத்துக் குரியதாகக் கொள்வாருமுண்டு.—(2) கொன்றைக் கடவுள் - கொன்றையைச் சிறப்படையாளமாகவுடைய கடவுள். சொல்லுமா சொல்லிலேனே - சொல்லுமாறு சொல் இல்லேன் - —(3) உருவமும்......நின்ற - இறைவர் உலகெலாமாகி நின்ற நிலை. நின்ற - நின்ற திருத்தாண்டகமும், திருவுருத்திரமும் காண்க. "உலகெலா மாகி வேறாய் உடனுமாய்" (சித்தியார் - 2. 1) என்ற ஞானசாத்திரம் இக்கருத்தை விளக்குதல் காண்க. உருவமும்......ஓதிய உலகு - உருவப் பொருள்களாகிய சடமாகவும், உருவமில்லாத உயிராகவும் பாகுபாடுபடுத்திச் சொல்லப்பட்டுச் சடசித்துக்களின் சமூகமாகிய உலகம். வினைப் பிறப்பு - வினைக்கீடாகிய பிறப்பு. இறைவர், பிறப்பு வீடாய் நிற்றலாவது வினைக்கேற்றபடி உயிர்களுக்குப் பிறவியும் வீடும் தந்து உடனே நிற்பவர். "பந்தமும் வீடும் பரப்புகின்றீர்" (விருத்தம் - வீழி); "பந்தம் வீடு தரும் பரமன்" (300) என்றதும், உரையும் பார்க்க. மாடு - செல்வம்—(5) வாம தேவா - இறைவரது ஐம் முகங்களுள் வடக்கு நோக்கியிருக்கும் திருமுகம் பற்றி விளித்த. அரிய சில இடங்களுள் ஒன்று. "வாமதேவன் வளநகர்." (கால பாரா குறுந் - 6).—(6) அரிதலம் - சிங்கம் முதலியன, "அட்ட மாளித் திரள் வந் தணையு மண்ணு மலையாரே" (பிள் - தக்கேசி-10).—(7). இரவியும்......ஒளி உருவமானாய் - இறைவனது அட்ட மூர்த்தம். இங்கு அழற்றாணாய் நின்ற தன்மை

நோக்கி இத்தன்மைபற்றி விதந்து கூறினர். "அட்டமூர்த்தி யண்ணாமலை" என்று குறுந்தொகைப் பதிகத்தினுள் வற்புறுத்தி ஓதியதும் காண்க. ஒளி யுருவம் - சத்தி யுருவம். "ஒளியா யோங்கி" (சித்தியார். 2. 1) என்றது காண்க. இத்தலத்துப் பேரொளி யுருவமாய் மிக்கு நின்றமை குறிப்பு. அரவு உமிழ் மணி கோள் சோதி - அரவின் மணியின் சோதிபோல ஒளி வீசும் திருமேனி என்பது. உமிழ் - நாகங்கள் இரவில் தமது மணிகளை உமிழ்ந்து அவற்றின் ஒளியில் உலாவி இரைதேடி வந்து மீளவும் அந்த மணிகளை உட்கொள்வன என்பது கொள்கை. "ஊருமர வம்மொளி கொண் மாமணி யுமிழ்ந்தவை யுலாவிவரலாற், காரிருள் கடிந்துகன கம்மென விளங்கு காளத்திமலையே"—(பிள். சாதாரி - 7). அரவின் மணியின் சோதியுடன் அணியண்ணா மலையின் இலிங்கத்திருமேனி விளங்குதல் கண்கூடு.—(8) அருச்சுனன் பாசுபதம் பெற்றது. மாபாரத வரலாறு.—(9) மாலும்......நின்றாய் - தலவரலாறு. வால் உடை விடை - வால் - வெண்மை. வெள்ளிய இடபம். "நரைவெள்ளே றொன்றுடை யானை" (பிள். குறிஞ்சி. சிராப் - 1).

III திருச்சிற்றம்பலம்  இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை

புக்க ணைந்து புரிந்தல ரிட்டிலர்; நக்க ணைந்து நறுமலர் கொய்திலர்;
சொக்க ணைந்த சுடரொளி வண்ணனை, மிக்குக் காணலுற் றாரங் கிருவரே. 1

இளவெ ழுந்த விருங்குவ ளைம்மலர், பிளவு செய்து பிணைத்தடி யிட்டிலர்;
களவு செய்தொழிற் காமனைக் காய்ந்தவன், அளவு காணலுற் றாரங் கிருவரே. 9

செங்க ணானும் பிரமனுந் தம்முளே, எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்; [த்தியே.
இங்குற் றேனென் றிலிங்கத்தே தோன்றினான், பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சிவனைக் காணுதல் வேண்டினால் சரியையாதி சிவநெறியி னின்றாலல்லது இயலாது; அவ்வாறு, ஆப்பி நீரோ டலகுகைக் கொண்டிலர் - பூப் பெய் கூடை புனைந்து சுமந்திலர் - நிரம்ப நீர்சுமந்து நெய்யும் பாலும் கொண்டாட்டி நினைந்திலர் - மலர் இண்டை புனைந்திலர் - அட்டாங்கமாக அடி வீழ்ந்திலர் - கண்டி பூண்டிலர் - சங்கம் வாய்விம்ம ஊதிலராகிப் பிரமனும் மாலும் சிவனை மேலும் கீழும் அளவு காணலுற்றுக் காண்கிலார்; இறுதியில் அவர்தம் வணக்கம் கண்டு புண்ணிய மூர்த்தி, தாமே, "இங்குற்றேன்" என்று இலிங்கத்தில் தோன்றினார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நக்கணைந்து - மகிழ்வுடன். சொக்கு - அழகு. சுடரொளி வண்ணன் - அழற்பிழம் புருவாகிய சிவன். "அழனிற வண்ணன்" (410); "எரிவண்ணன்" (8). மிக்கு - மேற் சென்று; தருக்கி. "தருக்கினார் சென்று" (5). இருவர் - அயனும் மாலும்.—(2) அலரு நீரும் கொண்டு ஆட்டி - புதிய நீரில் மலர்களை இட்டு அது கொண்டு திருமஞ்சனமாட்டி. திலக மண்ட லம் - வட்டமாகிய பொட்டு. செலவு - மேலும் கீழும் செல்லும் அளவு. —(3) ஆப்பி நீரோடு அலகு - திருமெழுக்கும் திருவலகும். காப்புக் கொள்ளி - உலகங்களைக் காவல் கொள்பவனாகிய. கொள்ளி - கொள்பவன். "இடுபலி கொள் ளியை" (நம்பி - தேவா.) ஓம்பி என்பது எதுகை நோக்கி ஒப்பி என நின்றது.— (4) பொய்யும் பொக்கமும் போக்கல் - அகத்தூய்மை. சிவநெறியினுள் அகத்தூய்மை யோடு புகல் வேண்டுமென்பது. பொக்கம் - வஞ்சகம். "அகந்தூய்மை வாய்மையாற் காணப் படும்" குறள்.—(5) எருக்கு - வெள்ளெருக்கு மலர். "நீரோடு கூவிளமும் வெள்ளெருக்கும்". (பிள் - தேவா.) இண்டை - மாலை.—(6) மரங்களேறி மலர்

பறித்து இட்டிலர் - பூசைக்காகும் பூக்கள் தாமே பறித்துக் கொணர்தற்பாலன. பறித்துத் திருவடியில் இட்டு. மரங்கள் ஏறி - கடினமாகப் பறிக்கத் தக்க கோட்டுப் பூக்களைச் சொல்லியபடியால் இனம்பற்றி ஏனைய கொடிப்பூ முதலிய மூன்றும் உடன் கொள்க (240). நிரம்ப நீர் சுமந்து ஆட்டி - குறைவில்லாது நிரம்பிய நீரினால் திரு மஞ்சனம் ஆட்டுதல் வேண்டும். "நிறையநீ ரமைய வாட்டி" (தேவா) "யதேஸ்ட ஜலம் அபிஷிச்ய" (பத்ததி). —(7) அட்டமாங்கங் கிடந்து அடி வீழ்தல் - எட்டு அங்கங் களும் நிலம்தோய வீழ்ந்து வணங்குதல். அட்டாங்க நமக்காரம் என்பர். (272) —(8) வெந்த நீறு - திருநீறும் - கண்டிகையும் சிவசாதனங்கள் சரியையாதி சிவ நெறி நிற்பார்க்கு இன்றியமையாது வேண்டப்படுவன. "கண்டி பூண்டு" - (10) - அந்தம் - மேலும் கீழும் முடியுமிடம். "அளவு" (9) என்பதுமிது. இளவேழுந்த...... பிணைத்து - குவளை மாலை புனையும்வகை. சரியைப் பணியாளர் இதனைக் குறிக் கொள்வாராக.—(10) சங்கம் விம்ம வாய் வைத்திலர் - விம்ம - ஓசை மிக. வாய் வைத்தல் - ஊதுதல் - "கோடுவாய் வைத்து" (முருகு); "விருப்போடு வெண்சங்க மூதா வூரும்" (தேவா - தாண்). கெண்டி - வலிந்து தேடி.—(11) செங்கணனும்... காண்கிலார் - தல வரலாறு. "இங்குற்றேன்" என்று - தேடிக் கண்டிலா இறைவர் தமதருளாற் றாமே வெளிப்படுதல் குறிப்பு. இலிங்கம் - சிவக்குறி. அருவுருவத் திருமேனி.

குறிப்பு :—திருவல கிடுதல் - திருமெழுக் கிடுதல் - நீர் சுமந்து ஆட்டுதல் - மலர் பறித்துப் புனைதல் - அடி வீழ்ந்து புகழ்தல் முதலிய சரியைத் தொழில்களையே இங்கு எடுத்துக் கூறினார், சிவனைக் காணும் நெறி நிற்பார் புகும் முதற்படி அதுவே யாதலின். "சுத்த சைவத்துக் குயிரதே" என்பது திருமூலர் திருமந்திரம் (5. 25). இதனைத் தாசமார்க்கம் என்றும் கூறுவர். இதனைத் "தாதமார்க்கஞ் சாற்றில்" (சித்தி - 8. 19) என்ற திருவிருத்தத்தால் ஞான சாத்திரம் விரிப்பது காண்க. இந்நெறியில் முற்படாதார் சிவநெறி புகுதல் இயலாதென்க. இப்பதிகம் பொதுப்பதிக மென்று வகுத்திருப்பினும் இத்தலத்தில் அருளப்பட்டதென்று கருத இடமிருத்தலின் இங்குத் தரப்பட்டது.

1579. பணியார் வேணிச் சிவபெருமான் பாதம் போற்றிப் பணிசெயுநாண்
மணியார் கண்டத் தெம்பெருமான் மண்மேன் மகிழு மிடமெங்குந்
தணியாக் காத லுடன்சென்று வணங்கித் தக்க பணிசெய்வார்
அணியார் தொண்டைத் திருநாட்டி லருளா லணைவா ராயினார், ௩௧௪

1580. காதல் செய்யுங் கருத்தினுடன் காடு மலையுங் கான்யாறுஞ்
சூத மலிதண் பணைப்பதிகள் பலவுங் கடந்து, சொல்லினுக்கு
நாதர் போந்து, பெருந்தொண்டை நன்னா டெய்தி, முன்னாகச்
சீத மலர்மென் சோலைசூழ் திருவோத் தூரிற் சென்றடைந்தார். ௩௧௫

1579. (இ - ள்) வெளிப்படை. பாம்புகளை அணிந்த சடையினையுடைய சிவ பெருமானது பாதங்களைப் போற்றித் திருப்பணிகள் செய்து இருக்கும் நாளில், திரு நீலகண்டராகிய எமது இறைவர் இப்பூவுலகில் மகிழ்ந்து எழுந்தருளியிருக்கும் தலங் கள் எங்கும் தணியாத காதலுடனே சென்று வணங்கி ஏற்ற திருப்பணிகளைச் செய்வா ராகிய நாயனார், அழகிய திருத்தொண்டை நாட்டில் திருவருள் செலுத்த அணைவாராகி, ௩௧௪

1580. (இ - ள்) வெளிப்படை. அன்பு மிகுந்த பணிகள் செய்யும் கருத்தினோடு, காடுகளையும் மலைகளையும் கான்யாறுகளையும் மாஞ்சோலைகள் நிறைந்த குளிர்ந்த வயல்களையுடைய நகரங்கள் பலவற்றையும் கடந்து, திருநாவுக்கரசு நாயனார், சென்று, பெரிய தொண்டை நன்னாட்டினைச் சேர்ந்து, முன்னைக், குளிர்ந்த மென் மலர்கள் நிறைந்த சோலைகளாற் சூழப்பட்ட திருவோத்தூரினைச் சென்று அடைந்தனர். ௩௧௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண் டுரைக்க நின்றன.

1579. (வி - ரை) பணியார் - பணி - பாம்பு; பணிசெய்யும் - பணி - திருப்பணிகள்; சொற்பின் வருநிலை. பணிசெய்யும் நாள் - திருவண்ணாமலையில் நாயனார் பலநாள் தங்கிப் பணிகள் செய்தெழுந்தருளியிருந்தனர்.

இடமெங்கும்...சென்று வணங்கி - பணிசெய்வார் - செய்வார் - வினைப்பெயர். செய்வாராகிய நாயனார். இடமெங்கும் - என்றதனால் நடுநாட்டில் அணிமையில் உள்ள பல தலங்களிலும் நாயனார் சென்று வணங்கி வந்தருளினர் என்பதும், இவை திருக்கோவலூர் வீரட்டம், திருமுண்டீச்சுரம், திருவாமாத்தூர் முதலாயின என்பதும் ஈண்டுக் கருதப்படும். ஆளுடைய பிள்ளையார் இங்குச் சிலநாள் வைகியருளியமையும் காண்க. (திருஞான - புரா. 972.)

பணி செய்வார் - அணைவாராயினாராகிச் சென்றடைந்தார் - என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. அணைவாராயினர் - முற்றெச்சம்.

தக்க - அங்கங்கும் அன்பின் நிறைவுக்கேற்றவாறு.

அணி ஆர் - "தாரணிக்கு, மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு" என்றபடி அவ்வணியாவது உலகங்களெல்லாமுய்யும்படி அம்மையார் சிவபிரானைப் பூசித்த பெருஞ் செயலின் விளைவாம்.

அருளால் - தமது செயல் என்பதின்றிச் சிவனருள் செலுத்த. தொண்டை நாட்டிற் காளத்தி கண்டு, "தாணுவினை யம்மலைமேற் றாள்பணிந்த குறிப்பினால், பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலங், காணுமது காதலித்து"ச் செல்லும் சிவானந்த விளைவுபெறும் அருட் சரிதக் குறிப்பு.

தொண்டைத் திருநாடு - மேல்வரும் பாட்டில் "பெருந் தொண்டை நன்னாடு" என்பதும் காண்க. 1078 - 1082 பாட்டுக்கள் பார்க்க.

தணியாக் காதல் - அடிமை நெறியிற் செல்லச் செல்லக் குறையாமலும் சலியாமலும் மேன்மேல் வளர்ந்து ஓங்கும் ஆசை. 314

IV திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

வட்ட னைமதி சூடியை வானவர், சிட்ட னைத்திரு வண்ணா மலையனை,
யிட்ட னையிகழ்ந் தார்புர மூன்றையு, மட்ட னையடி யேன்மறந் துய்வனோ? 1

அரக்க னையல றவ்விர லூன்றிய, திருத்த னைத்திரு வண்ணா மலையனை,
யிரக்க மாயென் னுடலுறு நோய்களைத், துரக்க னைத்தொண்ட னேன்மறந் துய்வனோ?

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—திருஅண்ணாமலையனை அடியேன் மறந்து உய்வனோ? "திருவடி மறப்பிலேன்" என்ற திருநேரிசைக் கருத்தைத் தொடர்ந்து சொல்லியருளியது. திருவண்ணாமலையினின்றும் பல தலங்களையும் சென்று வணங்கி மீண்டருளும்போது அருளிய கருத்து. "தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ?" என்ற கோயிற் குறுந்தொகைத் திருப்பதிகக் கருத்தினை ஆசிரியர் உரைத்தவாறு நினைவுகூர்க. (1439).

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வட்டன் - அன்பு வட்டத்துள் விளங்குபவன். வட்டம் - வளைவு ; சிட்டன் - தலைவன்.—(2) ஏனன் - பன்றி வடிவம் கொண்டவன், "கேழலாய்ப் பால் கொடுத்த கிடப்பறிவார்" (திருவா - 43 - 6). ஆனன் - ஆனையுடையவன். பொன்னன் என்பதுபோல. "ஆனலாதூர்வதில்லை" (தேவா). அன்னன்- அத்தன்மையன். எய்த அத்தன்மையன்.—(7) ஆரன் - ஆர் சூடியவன். ஆர் - சரக் கொன்றை ; ஆத்தி என்றலுமாம். அரன் என்றது எதுகை நோக்கி ஆரன் என நீண்டது என்பதுமாம். ஹாரணி ஆரணி என்றுதல்போல, சம்ஹாரன் என்பதில், சம் - இன்றி, ஹாரன் (அழிப்பவன்) ஆரன் என்றுயது எனினுமாம்.—(8) எய்த அரு - புரமெய்தவாறு பிறரறியலாகாமையின் அரு எனப்பட்டது. அருவினை - அருவ வடிவுடையனை என்றலுமாம்.—(9) திருத்தன் - விளங்க - திருத்தமாக - அணிந்தவன்.— (10) திருத்தன் - திருத்தம் செய்தவன். என் உடல் உறுநோய்களைத் துரக்கன் - உடல் - பிறவி - உறுதற்குக் காரணமாகிய மலங்களைப் போக்குபவன். துரக்கன் - துரக்கச் (போக்க) செய்பவன். துரத்தல் - போக்குதல். "இருளைத் துரந்திட்டு" (திருவா).

தலவிசேடம் :—திருவண்ணாமலை - நடு நாட்டின் 22-வது தலமாயும், இறுதித் தலமாயும், அதன் வடகோடியில் தொண்டை நாட்டெல்லைக்கு அணிமையில் உள்ளது. சிவந்த நெருப்புருவமானது என்றும், அடைந்தார்களது (ருணம்) கன்மங்களை ஒழிப்பது என்றும் பொருள் தருவதாகி அருணசலம் என்றும் தேற்றமாய் வழங்கப்படுவது. அண்ணாமலை என்பது அணுக முடியாத, அல்லது, அணவ - தெரிய - முடியாத மலை என்று பொருள் தந்து பிரம விட்டுணுக்கள் முடியும் அடியும் அறியமுடியாது நின்ற தல வரலாறு குறிப்பது. பிரம விட்டுணுக்கள் முடியும் அடியும் தேடிய வரலாறு முன் 1578 கீழ்க் குறிக்கப்பட்டது. அவ்வரலாறும் அதன் பொருட்டு ஆண்டுதோறும் நிகழும் திருக்கார்த்திகைப் பெருவிழாவும் உலக மறிந்தன. ஐம்பூதத் தலங்களுள் தேயுத் தலம். நினைக்க முத்தி தருவது. இறைவனூரது திருக்கண் புதைத்த காலத்தில் பெருமான் அருளியபடி அம்மை இங்குத் தவம்செய்து வலப்பாகம் பெற்றனர் என்பது தலமான்மியம். வல்லாள மன்னருக்கு அவர் அன்பின் பொருட்டு இறைவர் மகனாக வந்து அருள் செய்தது திருவிழாவாக நடைபெறுகிறது. முருகப்பெருமானது பேரடியாராகிய அருணகிரிநாதர் இங்கு அவதரித்துப் பேறு பெற்றனர். கொடிக் கம்பத்தின் முன் உள்ள கம்பத்திளையனார் என்னும் மூர்த்தி அவருக்கு அருளிய பெருமான். குகை நமச்சிவாயர், குருநமச்சிவாயர் முதலிய பெரியோர் பலரும் இங்குப் பேறுபெற்றனர். இன்றும் அடியார் கூட்டம் பெருக்கச் சிறக்கத் திகழ்வது இத் திருத்தலமேயாம். மாலயன் அடிமுடி தேடியறியாத தலவரலாறு பிள்ளையாரது "விளவார்கனி" (9) என்ற நட்டபாடைப் பதிகத் திருப்பாட்டிலும், அடைந்தார்களது (ருணம்) வினை தீர்க்கும் மலை என்பது அப்பர் சுவாமிகளது "பட்டியே றுகந்து" என்ற குறுந் தொகைப் பதிக முழுமையினும், "இரக்கமாயென் உடலுறு நோய்களைத் துரக்கனை" என்னும் திருக்குறுந்தொகையினும் போற்றப்பட்டன. மலை சிவனுருவமா யுள்ளது (திருஞான - புரா. 971). சுவாமி - அண்ணாமலையார் - அருணசலேசுவரர் ; அம்மை - உண்ணாமுலையம்மை ; தீர்த்தங்கள் - இந்திர தீர்த்தம் முதலிய அனேக தீர்த்தங்கள் மலையைச் சுற்றிலும் உள்ளன ; மரம் - மகிழ். பதிகம் - 5.

இது விழுப்புரம் - காட்டுப்பாடி கிளை இருப்புப்பாதையில் இப்பெயர் கொண்ட நிலையத்தினின்றும் மேற்கே கற்சாலை வழி ½ நாழிகை யளவில் அடையத் தக்கது.

1580. (வி - ரை) காதல் செய்யும் கருத்து - காதலாற் பணிகள் செய்யும் கருத்து. காதல் அதனுல் தூண்டப்பட்ட பணிகளுக்கு ஆயிற்று ; ஆகு பெயர்.

**காடும் மலையும் கான்யாறும்** - காடு - நடுநாட்டின் வடபாகத்திலும், அதனை அடுத்துத் தொண்டை நாட்டுத் தென்மேற்குப் பாகத்திலும் உள்ள சிறு காடுகள். மலைகள் - செஞ்சி மலை, நெடுங் குன்றம், வெண் குன்றம். இவை தொடர்ச்சியாய் இராமல் அங்கங்கும் சிறு குன்றுகளாயுள்ளன. நாயனார் சென்றருளிய இந்நாட்டுப் பகுதி கிழக்குத் தொடர்ச்சி மலை - மேற்குத் தொடர்ச்சி மலைகளுக் கிடைப்பட்ட வெளி என்பதறியப்படும். **கான்யாறுகள்** - துரிஞ்சிலாறு, வராக நதி, சேயாறு முதலியன.

**சூதமலி தண் பணைப் பதிகள்** - சூதம் - மா; திண்டிவனம், ஆரணி, வேலூர் முதலிய ஊர்களும் அவற்றைச் சூழ்ந்த நாடுகளும் அந்நாளிலும் மாஞ் சோலைகளாற் சிறப்புற்றிருந்தன என்பது ஈண்டுக் கருதப்படும்.

**முன்னாக** - ஆளுடைய பிள்ளையார் பின்னாக இங்கு எய்தி ஆண்பனைகளைப் பெண் பனையாக்கும் அற்புதம் நிகழ்வது உலகறியுமாதலால் அதற்கு முன்னாக அரசுகள் அங்கு எய்தும் அருட்செயல் நிகழ்ந்த தென்பது. **முன்னாக** - தொண்டை நன்னாட்டில் முதலாவதாக என்றலுமாம்.

**அணியார் தொண்டைத் திருநாடு** (1575) என்று முன்னரும், **பெருந் தொண்டை நன்னாடு** - என்று இப்பாட்டினும் கூறிய வகையால் நாட்டுச் சிறப்பும், **சீதமலர் மேன் சோலைசூழ் திருவோத்தூர்** - என்றதனால் நகரச் சிறப்பும் கூறி, நாயனாரது தொண்டை நாட்டு யாத்திரை வரலாற்றை ஆசிரியர் தொடங்கும் நயம் காண்க. 315

1581. சேக்கர்ச் சடையார் திருவோத்தூர்த் தேவர் பிரானார் தங்கோயில்
புக்கு வலங்கொண் டெதிரிறைஞ்சிப் போற்றிக் கண்கள் புனல்பொழிய
முக்கட் பிரானை விரும்புமொழித் திருத்தாண் டகங்கள் முதலாகத்
தக்கமொழிமா லைகள்சாத்திச் சார்ந்து பணிசெய் தொழுகுவார். ௩கசு

1582. செய்ய வையர் திருவோத்து ரேத்திப் போந்து செழும்புவனம்
உய்ய நஞ்சுண் டருளுமவ ருறையும் பதிகள் பலவணங்கித்,
தைய றழுவக் குழந்தைபிரான் றங்குந் தெய்வப் பதியென்று
வைய முழுதுந் தொழுதேத்து மதில்சூழ் காஞ்சி மருங்கணைந்தார்.

1581. (இ - ள்). வெளிப்படை. அந்திவானச் செக்கர் போன்று ஒளி வீசும் சடையுடையாராகிய, திருவோத்தூரில் வீற்றிருக்கும் தேவர் தலைவருடைய திருக்கோயிலின் உட்புகுந்து, வலமாக வந்து, திருமுன் வணங்கித், தோத்திரங்கள் செய்து, கண்கள் ஆனந்தக் கண்ணீர் பொழிய நின்று, மூன்று கண்ணுடைய அப்பெருமானை விரும்பிப் பாடும் திருத்தாண்டகங்கள் முதலாகிய தக்க மொழிமாலைகளைச் சாத்திச் சிவபெருமானது திருப்பணிகளையும் செய்து ஒழுகுவாராய், ௩கசு

1582. (இ - ள்) செய்ய......பதிகள் பல வணங்கி - சிவந்த சடையினையுடைய சிவபெருமானது திருவோத்தூரினைத் துதித்து அங்கு நின்றும் புறப்பட்டுச் சென்று, செழும் புவனங்கள் எல்லாம் உய்யும்படி விடத்தை அமுது செய்தருளிய அந்தப் பெருமான் இனிதமரும் பல பதிகளையும் வணங்கிச் சென்று; தையல்......அணைந் தார் - அம்மையார் தழுவத் திருமேனி குழைந்து காட்டிய பெருமான் எழுந்தருளும் தெய்வத் தலம் என்று உலகங்கள் எல்லாம் தொழுது துதிக்கின்ற மதில் சூழ்ந்த காஞ்சிபுரத்தின் அணிமையில் அணைந்தனர். ௩கஎ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1581. (வி - ரை) சேக்கர்ச்சடை-சிவந்த சடைக் கற்றையின் செறிவும் விரிவும். சேக்கர் - செவ்வான் ஒளி போலுள்ள. உருவம் பற்றிய உவமம். "மாலையின் றங்குருவே போலுஞ் சடைக்கற்றை" (அற் - அந்). எதிர் இறைஞ்சுதல் - திருமுன் வணங்குதல். போற்றுதல் - துதித்தல். போற்றி - மொழி மாலைகள் சாத்தி என்று கூட்டுக. முக்கட்பிரானை விரும்பும் மொழி - இது திருத்தாண்டகத்தின் கருத்துப் போலும்.

திருத்தாண்டகங்கள் முதலாகத் தக்க மொழிமாலைகள் - முதலாக என்றதனால் ஆசிரியர் காலத்தில் இத்தலத்துக்கு முன்கூறிய கருத்தமைந்த திருத்தாண்டகப் பதிகம் ஒன்றேனும் வழங்கியிருத்தல் கூடுமென்று கருத இடமுண்டு. இப்போது இத்தலத்துக்கு நாயனாரது மொழி மாலைகள் என்ற பதிகங்களுள் ஒன்றும் கிடைத்திலது!

சார்ந்து - சார்தலாவது "சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின்" (குறள்) என்றபடி சார்ந்து ஒழுகுதல். மொழிமாலைகள் சாத்துதல் - வாக்கினாலும், சார்தல் - மனத்தினாலும், பணி செய்தல் - மெய்யினாலும் செய்யப்படுவன.

ஒழுகுவார் - முற்றெச்சம். ஒழுகுவாராய். ஒழுகுவார் - போந்து - வணங்கி - அணைந்தார் என்று மேல்வரும் பாட்டுடன் முடிக்க. 316

1582. (வி - ரை) ஐயர்-பெருமையுடையார். இத்தலத்தில் இறைவர் வேதங்களை அளித்தனர் என்ற தல வரலாற்றின் குறிப்புப்போலும்.

திருவோத்தூர் ஏத்தி - அங்கு நின்றும் மேற் செல்பவர் நகர்ப்புறத்தே நின்று தலத்தைத் துதித்துச் சென்றனர். ஆளுடைய பிள்ளையார் திருவாரூர், திருக்காளத்தி முதலியவற்றைப் புறத்து வணங்கி மேற்சென்ற வரலாறுகளை இங்கு நினைவு கூர்க.

செழும்புவனம் உய்ய நஞ்சுண்டு - புவனங்களைப் படைத்தல் காத்தல் முதலிய தொழில்களைச் செய்யும் அதிகாரிகளாகிய தேவர்கள் உய்ய நஞ்சுண்டாராதலின் அதனால் உலகங்கள் உய்ந்தன என்பார் புவனம் உய்ய என்றார்.

உறைதல் - வெளிப்பட்டு வீற்றிருந்தருளுதல்.

பதிகள் பல - இளையனார் வேலூர், திருவன்பார்த்தான் பனங்காட்டூர், திருமாகறல், திருக்குரங்கணின் முட்டம் முதலியன. இவைகட்கு நாயனார் பதிகங்கள் கிடைத்திலவாதலின் பதிகள் பல வணங்கி என்று பொதுவகையாற் கூறினார்

தையல் தழுவக்குழைந்த பிரான் - திரு ஏகம்பநாதர். இந்த வரலாறு முன்னர்த் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துள் (1140 - 1141) விரித்தோதப்பட்டது. காஞ்சிப்புராணம் தழுவக்குழைந்த படலம் பார்க்க.

தங்கும் - நிலைபெற வெளிப்பட்டு வீற்றிருக்கும்.

தெய்வப்பதி-தெய்வத் தன்மைவாய்ந்த தலம். தெய்வத்தன்மையாவது அந்நாட் போலவே இந்நாளிலும் நற்பயன்தந்து நிலவுதல். மக்களை மலநீக்கம் செய்து தேவு செய்தல் தெய்வத்தன்மையாம். "வானலைக் குந்தவத் தேவுசெய் வானிடம்" (பிள் - கொல்லி - தென்குடித்திட்டை). திருக்குறிப்பு - புரா - தலவிசேடம் பார்க்க.

வையமுழுதும் தொழுது ஏத்தும் - உலகில் விளங்க அறியப்படும் முத்தித்தலங்கள் ஏழனுள் ஒன்றாயும், உலகமுய்ய அம்மை தவஞ்செய்யப் பெற்று அறம் வளர்க்கின்றமையாலும் உலகமெல்லாம் தொழுந்தன்மை பெற்றது.

மதில்சூழ் - காஞ்சி, மாநகரமும் சோழர்களது தலைநகரமுமாதலின் மதிற் பெருமை பெற்றது. மதில் கொண்டணிந்த (1586); "மதிற்கச்சி" (தேவா).

காஞ்சி - காஞ்சி மரத்தை யுடைமையால் காஞ்சி நகரம் என்ற காரணப் பெயர் பெற்றது என்பர். 130-1152ல் உரைத்தவை பார்க்க.

திருவோத்தூர்

தேவாரக் குறிப்பு - இத்தலத்துக்கு நாயனார் பதிகங்கள் கிடைத்தில! நாயனார் இத்தலத்தே திருத்தாண்டகங்கள் முதலாக மொழி மாலைகள் சாத்தினார் (1582) என்று ஆசிரியர் அறிவிக்கின்றார். ஆசிரியர் காலத்தில் இத்தலத் திருத்தாண்டகப் பதிகத்துள் சில பாசுரங்களேனும் வழங்கி யிருத்தல் கூடுமென்பது கருதப்படும். பின்னால் அவையும் வழக்காறொழிந்தன போலும்.

தலவிசேடம் :—திருவோத்தூர் - தொண்டை நாட்டில் 8 - வது தலம். சிவ பெருமான் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மறைகளை ஓதுவித்தருளிய தலமென்ற காரணத்தால் இப்பெயரெய்தியது. ஓத்து என்பது வேதம். ஆளுடைய பிள்ளையார் இத்தலத்தில் ஒரு அடியவர் பொருட்டு 1000 ஆண் பனைகளை யெல்லாம் "குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்" என்ற திருவாக்கினால் பெண் பனைகளாக்கிய அற்புதம் நிகழ்த்தியருளினர். அவர் தம் புராணம் 974 - 982 பாட்டுக்கள் பார்க்க. அப் பனைகளும் பிள்ளையாரது திருவாக்கிற் பட்ட புண்ணியப் பேற்றினால் காலக்கிர மத்தில் சிவத்தை அடைந்தன. கோயிலிற் பனை தாபிக்கப்பட்டு வழிபடப் பெறுகின் றது. சுவாமி - வேதநாதர் ; அம்மை - இளமுலைநாயகி ; தீர்த்தம் - சேயாறு ; பதிகம் 1.

இது திருமாகறலினின்றும் தென் மேற்கே மட்சாலை வழி 15 நாழிகையளவில் சேயாற்றிற்கு வடக்கிலுள்ளது. திரு அச்சிறுபாக்கம் என்னும் புகைவண்டி நிலயத்தி னின்று வடமேற்கே 18 நாழிகையிலும், காஞ்சிபுரத்துக்கு மேற்கே 18 நாழிகையிலும் உள்ளது.

1583. "ஞால முய்யத் திருவதிகை நம்பர் தம்பே ரருளினாற்
சூலை மடுத்து முன்னாண்ட தொண்டர் வரப்பெற் றோ"மென்று
காலை மலருங் கமலம்போற் காஞ்சி வாணர் முகமெல்லாஞ்
சால மலர்ந்து களிசிறப்பத் தழைத்த மனங்க டாங்குவார், ருகஅ

1584. மாட வீதிமருங் கெல்லா மணிவா யில்களிற் றோரணங்கள்
நீடு கதலி யுடன்கமுகு நிறைத்து நிறைபொற் குடந்தீபம்
தோடு குலவு மலர்மாலை சூழ்ந்த வாசப் பந்தர்களும்
ஆடு கொடியு முடனெடுத்தங் கணிநீள் காஞ்சி யலங்கரித்தார். ருகக

1583. (இ - ள்) வெளிப்படை. "உலகமுய்யும் பொருட்டுத் திருவதிகைப் பெருமான் தமது பேரருளினாலே சூலைநோயைக் கொடுத்து நேரே ஆட்கொண் டருளிய திருத்தொண்டராகிய திருநாவுக்கரசர் இங்கு எழுந்தருளிவரும் பேறுபெற் றோம்" என்று கொண்டு, காஞ்சியிலுள்ளார் தங்களது முகங்களெல்லாம் காலையில் மலரும் தாமரைபோல மிக மலர்ச்சியடைந்து மகிழ்ச்சி கூரத் தழைத்த மனமுடைய வர்களாகி, ருகஅ

1584. (இ - ள்) வெளிப்படை. மாடவீதிகளின் பக்கங்களிலெல்லாம் அழகிய வாயில்களிலெங்கும், தோரணங்களும் நீடும் வாழைகளுடனே கமுகுகளையும் வரிசை பெறக் கட்டி, நிறைகுடமும், தீபங்களும், இதழ்கள் பொருந்திய மலர்மாலைகளும் சூழ்ந்த வாசனையுடைய பந்தர்களும், ஆடும் கொடிகளும் ஆக இவ்வகையான அலங்கா ரங்களை எல்லாம் எடுப்பித்து, அவ்விடத்தே, அழகிய நீண்ட காஞ்சி நகரத்தை மேலும் அலங்கரித்தார்கள். ருகக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1583. (வி - ரை) "ஞாலம்...வரப்பெற்றேம்" என்று - இது காஞ்சி வாழும் அன்பர்கள் மனத்தில் எண்ணியது. "விரைந்தாளும் நல்குரவே" (தேவா) என்றும், "ஒறுத்தா லொன்றும் போதுமே" (திருவாசகம்) என்றும் வரும் திருவாக்குக்களா லறியப்படுகின்றபடி, காஞ்சிவாணர், நாயனாரைச் சூலைதந்து இறைவர் ஈர்த்து ஆட்கொண்டதனைப் பேரருளாகக் கருதினார்கள் என்பது.

வரப் பெற்றேம் - நாயனார் தம்மிடை எழுந்தருளுவதனைப் பெரும் பேறாகக் கருதினர் என்க.

காலை மலரும் கமலம் போல் - வினைபற்றி எழுந்த உவமம். காலை - ஆகு பெயராய் இங்குக் காலையில் எழும் ஞாயிற்றினையும் உணர்த்தி நின்றது. நாயனாரை ஞாயிறாகவும், காஞ்சிவாணர் முகங்கள் அந்த ஞாயிற்றின் முன்பு மலரும் கமலங்க ளாகவும் கொள்ள நின்றது.

தழைத்த - எழுச்சி பெற்ற. தழைத்தலாவது ஆனந்த மேலீட்டினாற் கிளர்ச்சி பெறுதல்.

தாங்குவார் - எதிர்கால முற்றெச்சம். தாங்குவாராகி. தாங்குவார் - அலங்கரித் தார் என மேல்வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க.

ஞாலம் உய்ய - பேர் அருளினால் என்றும், ஞாலம் உய்ய - ஆண்ட என்றும், கூட்டி உரைக்க நின்றது.

காலை மருவும்—சால மகிழ்ந்து—என்பனவும் பாடங்கள். 318

1584. (விரை) மாட வீதி - இருபுறமும் மாடங்கள் நிறைந்த. திருவிழா நடை பெறும் வீதி மாடவீதியை என்று வழங்குவதும் மரபு மாடம்-கோயில் என்றுகொண்டு, கோயிலைச் சுற்றிய வீதி என்பதுமாம். காஞ்சிவாணர் நாயனாரது வரவைப் பெரு விழாவாகக் கொண்டு மாடவீதிகளின் வழி எதிர்கொள்ள அணிசெய்தனர் என்க.

தோரணங்கள் - கதலி, கமுகு, நிரைத்தல் - இவை நாட்டும் அலங்கார வகை. நிறைகுடம் - தீபம் - மாலை சூழ்ந்த பந்தர் - கொடி இவை எடுக்கும் உபசார வகை.

நிரைத்து - வரிசைபெற அமைத்து.

நிரைத்து - எடுத்து - நிரைத்தல் அங்கங்கும் நிலைபெறும்படி கட்டி அணிசெய்தல்; எடுத்தல் - கூடவே எடுத்துச் செல்லுதல். பந்தர் - காம்புகளால் எடுத்துச் செல்லும் கவிகைப் பந்தர். ஆளுடைய பிள்ளையாருக்கு இறைவர் அருளிய முத்துப்பந்தரின் செய்தி இங்கு நினைவுகூரத் தக்கது.

ஆடு - மேல் அசைகின்ற. கோடி - வெண் கொடிகள்.

அலங்கரித்தார் - நிலைபெறுத்தவையும் எடுத்தவையுமாக இவ்வாறு அலங்கரித் தனர்.

அணிநீள் காஞ்சி அலங்கரித்தார் - அணி - முன்னமே அழகு பொருந்தச் செய் யப்பட்டதனை மேலும் நாயனாரது வருகையின் பொருட்டு இவ்வாறு சிறப்பாக அலங்க ரித்தனர். நீள் - என்றுமுள்ளது (1162).

இப்பாட்டினாற் காஞ்சிவாணர்கள் எல்லாம் மனங்களிப்பச் செய்த நகர் அணி கள் கூறப்பட்டன. நகரமாந்தர் எல்லாரும் இவ்வாறு களித்து அணிசெய்தார்களாக, அவர்களுக்குள்ளே, தொண்டர்கள் மட்டும் கூடி எதிர்கொள்ளச் சென்றனர், அத் தகுதி வாய்ந்தவர்கள் அவர்களேயாகலான். அது மேற்பாட்டிற் கூறுவார்.

மறுகெல்லாம்—நெருங்கு—நிறை—என்பனவும் பாடங்கள். 319

1585. தொண்ட ரீண்டி யெதிர்கொள்ள வெழுந்து சொல்லுக் கரசர்பால்
கொண்ட வேடப் பொலிவினொடுங் குலவும் வீதிப் பணிசெய்யும்

அண்ட ரறிதற் கரியதிரு வலகு முதலா மவையேந்தி
யிண்டை புனைந்த சடைமுடியார்க் கன்பர் தம்மை யெதிர்கொண்டார்.

(இ - ள்) கொண்டவேடப் பொலிவினொடும் - இதற்கென்று மேற்கொண்ட திருவேடப் பொலிவுடனே; எதிர்கொள்ள - எதிர் கொள்வதற்காக; சொல்லுக்கரசர் பால் தொண்டர் ஈண்டி எழுந்து - திருநாவுக்கரசர் வரும் வழியில் தொண்டர்கள்கூடி எழுந்து சென்று; குலவும்...அவை ஏந்தி - விளங்கும் திருவீதிப் பணிசெய்யும், தேவரு மறிவதற்கரிய, திருவலகு முதலியவற்றை எடுத்து ஏந்திக்கொண்டு; இண்டை...கொண்டார் - இண்டைமாலை சூடிய சடைமுடியினையுடைய பெருமானார்க்கு அன்பராகிய அவரை எதிர்கொண்டனர். ௯௨௦

(வி - ரை) தொண்டர் - சைவத் திருநெறி நான்கிலும் நின்று தொண்டுசெய்யும் அடியார்கள். சைவத் திருநெறித் தொண்டர்கள்.

ஈண்டி - எழுந்து - ஏந்தி - எதிர்கொண்டார் என்று முடிக்க.

ஏந்தி - ஏந்திச் சென்று. ஈண்டி - தொண்டர் பெருமானாகிய வாகீசர் எழுந்தருளுதலால் அதற்கு ஏற்றவாறு பற்பல தொண்டர்களும் கூடிச் சென்றனர்.

கொண்டவேடப் பொலிவினொடும் - தொண்டர்கள் என்றும் நீறும் கண்டிகையும் பூணும் திருவேடத்துடனிருப்பினும் நாயனாரை எதிர் கொள்வதற்காகச் சிறப்பாக மேற்கொண்ட திருவேடப் பொலிவுடன் சென்றனர் என்க.

குலவும் - குலவுதல் - விளங்குதல். "குலாத்தில்லை" (திருவா), "குலாவு பாதம் விளக்கியே" (443). திருவேகம்பர் திருவுலா வரும் பெருவிழா வீதியாதலின் இவ்வாறு சிறப்பித்தார். இதுபற்றியே இத்திருவீதியிற் பணிசெய்யும் திருவலகும் சிறப்புடையதாய் அண்டரும் அறிதற்கரியதென்று விதந்து எடுத்தோதப்பட்டது மன்றி, நாயனார் எழுந்தருளும்போது வழியெதிர்கொள்ளும் தொண்டர் ஏந்திச் செல்லும் மங்கலப் பொருள்களுள் ஒன்றாயிற்று என்றும் கூறப்பட்டது.

வீதிப்பணி செய்யும் - திருவலகு என்க. திருவலகு முதலா எடுத்து ஏந்தி - பெருமானது விழாப்பொருள்களான குடை கொடி ஆலவட்டம் முதலியவற்றை ஏந்துதல்போலத் திருவலகினையும் ஒக்க எடுத்தேந்துதல் அந்நாள் வழக்கும் மரபுமாம். இந்நாளில் மக்கள் சிவநெறி ஒழுக்கங் குன்றியபடியால் பிழைபட்ட மனநிலைகொண்டவர்களாய் வேறுவகையாகக் கருதுவரேல் அஃது அவர்தம் இழுக்கேயாம்; சிவாபராதமுமாம். அன்றியும், "பார்வாழத் திருவீதிப் பணிசெய்து" (1490) ஒழுகுதலே தமது நியமமாகக் கொண்டொழுகிய நாயனார்க்கு அத்திருப்பணிக்குரிய திருவலகு, எதிர் கொள்ளத்தக்கதும், அவரது விருப்பங் கவரத்தக்கதுமாகிய உயர்ந்த மங்கலப்பொருளாமென்பதுமொரு குறிப்பு. "திரு வென்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம் என்ற அழகு. ...யாவனொருவன் யாதொரு பொருளைக் கண்டானே அக் கண்டவற்கு அப்பொருள்மேற் சென்ற விருப்பத்தோடே கூடிய அழகு" என்று உரைத்து, "அலகைத் திருவலகு என்றும் - வரும் இத்தொடக்கத்தன" என்று உதாரணமும் தந்த (திருக்கோவையார் - 1) பேராசிரியர் உரை ஈண்டுக் கருதத்தக்கது.

அண்டர் அறிதற்கரிய - தேவர்கள் யாகாதி பசு புண்ணியப் பலன்களாகிய சுவர்க்காதிபோகங்களை நுகர்ந்து பிறவிக்கே வழிதேடி அலைபவர்களாயும், சரியை முதலிய சிவநெறியொழுகி முத்தியடைதல் வேண்டின் அவர்கள் இந்நிலவுலகத்தில் வந்து அடியார்களை அடைந்து சிவவொழுக்கந் தெரிந்துகொள்ளத் தக்கவர்களாயும், அதுபற்றியே, "மாவா ழகலத்து மான்முதல் வானவர், ஓவா தென்று நிறைந்து" தேவாசிரியன் முன்பினும் சிவபெருமான் திருக்கோயில் வாயிலினும் குழுமி நிற்பவர்

களரியும் உள்ளவர்களாதலின் திருவீதிப்பணி செய்யும் திருவலகு அவர்களறிதற் கரிது எனப்பட்டது. திரு வலகு என்றது அதன் தன்மையும் பெருமையும் குறித்தது. அண்டரும் எனச் சிறப்பும்மை தொக்கது.

முதலாம் அவை ஏந்தி - திருப்பணி செய்தற்குரிய உழவாரம் முதலிய ஏனைப் பொருள்கள். எதிர்கொள்ளச் சென்ற தொண்டர்கள் சரியை முதலிய பல நெறியினும் நிற்பவர்களாதலின் அவ்வவரும் திருவேடப் பொலிவினுடன் தாந்தாம் செய்யும் திருத்தொண்டின் சாதனங்களை ஏந்திச் செல்லுதலும் தகுதி.

இண்டை....அன்பர் - திருநாவுக்கரசர். தாம் எதிர்கொள்ளச் சென்ற சொல்லுக் கரசராகிய - அந்த - அன்பர் என்று சுட்டுவிரித்துக் கூட்டிக்கொள்க.

துல்வும் வேட்கை—என்பதும் பாடம். 320

1586. எதிர்கொண் டிறைஞ்சுஞ் சீரடியார் தம்மை யிறைஞ்சி யெழுந்தருளி,
மதில்கொண் டணிந்த காஞ்சிநகர் மறுகுட் போந்து வானநதி;
குதிகொண் டிழிந்த சடைக்கம்பர் செம்பொற் கோயில் குறுகினார்,
அதிர்கொண் டலைநேர் மணிமிடற்று ராண்ட திருநாவுக்கரசர், ௩உக

1587. திருவா யிலினைப் பணிந்தெழுந்து செல்வத் திருமுன் றிலையணைந்து
கருவார் கச்சி யேகம்பர் கனக மணிமா ளிகைசூழ்ந்து
வருவார் செம்பொன் மலைவல்லி தழுவக் குழைந்த மணிமேனிப்
பெருவாழ் வினைமுன் கண்டிறைஞ்சிப் பேரா வன்பு பெருகினார் ;

1588. வார்ந்து சொரியுங் கண்ணருவி மயிர்க்கா றூறும் வரும்புளகம்
ஆர்ந்த மேனிப் புறம்பலைப்ப, வன்பு கரைந்தென் புள்ளலைப்பச்,
சேர்ந்த நயனம் பயன்பெற்றுத் திளைப்பத், திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தி லுறவைத்து நீடும் பதிகம் பாடுவார், ௩உ௩

வேறு

1589. "கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" யென்றெடுத்துப்
பரவாய சொன்மாலைத் திருப்பதிகம் பாடியபின்
விரவார்தம் புரமெரித்த விடையவனார் வெள்ளையெயிற்
றரவாரம் புனைந்தவர்தந் திருமுன்றிற் புறத்தணைந்தார். ௩உச

குறிப்பு :—திருநாவுக்கரசர் என்ற எழுவாயைப் பாட்டி னிறுதியில் வைத்தது மன்றி, மேல்வரும் பாட்டுக்களின் வினைகளும் அந்த எழுவாயினையே தழுவி முடிக்க வைத்தமை பற்றி இந்நான்கு திருப்பாட்டுக்களும் ஒரு முடிபாகக் கொள்ளப்பட்டன.

1586. (இ - ள்) அதிர்...திருநாவுக்கரசர் - அதிரும் மேகம்போன்ற மணிகண்டராகிய பெருமானால் ஆட்கொள்ளப்பட்ட திருநாவுக்கரசர்; எதிர்கொண்டிறைஞ்சும்... எழுந்தருளி - தம்மை எதிர்கொண்டு வணங்கிய சிறப்புடைய அடியார்களைத் தாமும் வணங்கி மேலே எழுந்தருளி ; மதில்......போந்து - மதில் சூழ்ந்த அழகிய காஞ்சிமா நகரத்தின் திருவீதியினுள் போந்து ; வானநதி.....குறுகினார் - ஆகாய கங்கை குதித்து வழியும் சடையினையுடைய திருவேகம்பருடைய செம்பொற் கோயிலை வந் தடைந்தனராகி ;

1587. (இ - ள்) திருவாயிலினைப் பணிந்து எழுந்து - கோபுரத் திருவாயிலைக் கீழ் வீழ்ந்து வணங்கி எழுந்து; செல்வம்...அணைந்து - (உட்புகுந்து) செல்வ நிறைந்த திருமுற்றத்தினைச் சேர்ந்து; கருவார்...சூழ்ந்து - கருவாரும் கச்சிமாநகர்த் திருவேகம்பநாதருடைய அழகிய பொன் மாளிகையை வலமாகச் சூழ்ந்து; வருவார் - வலம் வருவாராகிய நாயனூர்; செம்பொன்...கண்டிறைஞ்சி - செம்பொன் மலை வல்லியாராகிய காமாட்சியம்மையார் தழுவக் குழைந்து காட்டிய அழகிய திருமேனியையுடைய பெருவாழ்வாகிய திருவேகம்ப வாணரை முன்பு கண்டு வணங்கி; பேரா அன்பு பெருகினூர் - பேராத அன்பு பெருகினூராய்; ௬௨௨

1588. (இ - ள்) வார்ந்து......புறம்பு அலைப்ப - பெருகிச் சொரியும் கண்ணீர் மழையானது மயிர்க்கால் எங்கும் வருகின்ற புளகம் நிறைந்த திருமேனியின் புறத்தை அலைப்பவும்; அன்பு...உள் அலைப்ப - அன்பு மேலீட்டினூல் மனமானது கரைந்து எலும்பினுள்ளும் அலைப்பவும்; சேர்ந்த......திளைப்ப - பெறும் பயனைப் பெற்றுக் கண்கள் திளைக்கவும்; திரு ஏகம்பர்தமை......வைத்து - திரு ஏகம்பநாதரை நேர்ந்த மனத்தினுள்ளே பொருந்தும்படி வைத்து; நீடும்...பாடுவார் - நீடும் திருப்பதிகம் பாடுவாராகி,

1589. (இ - ள்) கரவாடும்...பாடியபின் - "கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" என்று தொடங்கிப் போற்றுதலாகிய சொன்மாலைத் திருப்பதிகம் பாடிய பின்பு; விரவார்தம்...புறத்தணைந்தார் - பகைவருடைய முப்புரங்களை எரித்தவரும், வெள்ளெயிறுடைய பாம்பாகிய ஆரம் புனைந்தவரும் ஆகிய இறைவர் கோயிலின் திருமுற்றத்தின் புறத்தே அணைந்தனர். ௬௨௪

இந்த நான்கு பாட்டுக்களும் பொருட்டொடர்பும் சொற்றொடர்பும் பெற்று ஒரு முடிபு கொள்ளும்படி உரைக்க நின்றன.

1586. (வி - ரை) இறைஞ்சும் - அடியார் தம்மை - இறைஞ்சி - அடியார்கள் தம்மை வணங்க, அவர்களைத் தாமும் வணங்கி என்பது அடியார்கள் எதிர்கொண்ட முறையினையும், அதனை நாயனூர் ஏற்றுக்கொண்ட முறையினையும் உணர்த்தியதாம். அடியார் வணக்கம் ஆண்டவன் வணக்கத்தினும் முன்வைக்கப்பட்ட சிறப்பும் காண்க.

இறைஞ்சி - எழுந்தருளி - போந்து - துறுகினூர் என முடிக்க.

மதில் கொண்டணிந்த - நகர் - மறுகுட்போந்து - அடியார்கள் நகர்ப்புறத்து மதிலின் புறத்தே நகர் வாயிலின் வந்து எதிர்கொண்டனர் என்பதும் உணர்த்தியபடி.

மறுகு - முன் 1584-ல் கூறியபடி அலங்கரித்த மாடவீதி.

வானநதி துதிகொண்டு இழிந்த - வானநதி - சடையில் வருதற்குமுன், கங்கை, துதிகொண்டு ஆரவாரித்தது என்றும், வந்தபின் பனிபோலாகச் சிறுத்து இழிந்து போந்ததென்றும் குறித்தபடி.

செம்பொன் கோயில் - பலவிடங்களிலும் பொன்னூலியன்ற பணிகள் செய்யப்பட்ட கோயில். பொன்போன்ற அழகிய கோயில் என்றலுமாம்.

அதிர் கொண்டல் - நீர் நிறைதலால் கறுத்து இடியுடன்கூடி அதிரும் மேகம். மிக்க கருமையுடைய நிறத்தினூலும் மழைதரும் பயனூலும் போந்த உவமம். உருவும் பயனும் பற்றி வந்தது.

மிடற்றூர் ஆண்ட - ஆளுடைய அரசு என்ற வழக்கினை விரித்தபடி. 321

1587. (வி - ரை) திருவாயிலினை நிலமுறப் பணிந்தெழுதல், திருமுன்றிலை அணைந்து திருமாளிகையைச் சூழ்ந்து வலம் வருதல் முதலிய இவை, திருமுன்பு அணைந்திறைஞ்சுமுன் இன்றியமையாது செய்யத்தக்க வழிபாட்டு முறைகளாம்.

திருவாயில் - முன் கோபுரத்துள்ளது; முதற்றிருவாயில்.

கருவார் கச்சி ஏகம்பர் - ஆளுடையபிள்ளையாரது (குறிஞ்சிப்பண் - திருவிருக்குக்குறள் தேவாரம்) "கருவார்கச்சித், திருவேகம்பன்" என்ற சொற்பொருளாட்சி போற்றப்பட்டது. கருவார் - அருட்கருவை எல்லாவுயிர்களிடத்தும் வைத்திருக்கும் அம்மையார்க்கிடமாகப் பொருந்திய; "அங்கு மண்ணுல கத்துயிர் தழைப்ப வளவி லின் பத்தி னருட்கரு விருத்தி" (1133) என்ற கருத்து. உலகங்கள் தோன்றி முளைக்கக் காரணமாகிய பிருதுவித் தலமாகிய என்ற குறிப்புமாம். கருவினுள் நிறைந்த என்றுரைப்பினுமமையும்.

சூழ்ந்து வருவார் - வலம் வருவாராகிய வாகீசர்.

செம்பொன்மலை வல்லி......பெருவாழ்வு - தழுவக் குழைந்த திருவேகம்பர். 1582 பார்க்க.

பேரா - நிலைபெயராத. பேரா அன்பு - மனத்துள் ஊன்றி நிலைத்தெழுந்த அன்பு. பெருகினர் - அன்பின் பெருக்கத்துக் குள்ளானர்.

பெருக்கினர்—என்பதும் பாடம். 322

1588. (வி - ரை) கண்ணருவி மேனிப் புறம்பு அலைப்பவும் - அன்பு என்பு உள் அலைப்பவும் - நயனம் திளைப்பவும் என்க.

அலைத்தல் - நிலைகெடச் செய்தல்.

வார்ந்து சோரியும் - மழைபோல இடையறாது மிக்கு வழியும், கண் அருவி - கண்ணீர். அருவிபோல்வதனை அருவி என்றது ஆகுபெயர்.

மயிர்க்கால்தோறும் வரும் புளகம் ஆர்ந்த மேனி - எங்கும் மயிர்க்கால்களில் புளகம் உண்டாகின்ற திருமேனி. புளகம் - மயிர்கள் நேரே நிற்றல்.

அன்பு கரைந்து - அன்பினால் மனங் கரைந்து. என்பு உள் - எலும்பினுள்ளும். "அமுத மயிர்க்கா றோறுந், தேக்கிடச் செய்தனன்......அமுத தாரைகள் எற்புத் துளை தொறு மேற்றினன் உருகுவ, துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக், கள்ளூ றாக்கை யமைத்தனன்" (திருவா - திருவண்டப் பகுதி - 170 - 176); "என தென் பின்புரை யுருக்கி" (ஷெ. உயிருண் - 4).

சேர்ந்த - கிடைத்த. பிறவியிற் சேரப்பெற்ற.

நயனம் - திளைப்ப என்க. கண்கள் தமது பயன் பெற்று. "கண்காள் காண்மின்களோ" (திருவங்கமாலை) என்றபடி கண் பெறுதற்குரிய பயன் இறைவனைக் காண்பதேயாம் என்பது. "கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே" (தக்கேசி) என்று ஆளுடையநம்பிகள் இக்கருத்தை இங்கு அனுபவத்திற் காட்டியருளுவதும் நினைவுகூர்க. கண்ணின் பயன் - கண்டு களிகூர்ந்து கண்ணீர் வார்தல் என்பது.

திளைத்தல் - ஆனந்தத்தினுள் அழுந்திநிற்றல். புறம்பும் உள்ளும் அலைப்ப அன்பு கரைந்து திளைத்தல் - மெய்ப்பாடு.

திருவேகம்பர்தமை நேர்ந்த மனத்தில் உறவைத்து நீடும் பதிகம் - இது பதிகக் கருத்தும் குறிப்புமாம். "ஏகம்ப மேயானை யேன்மனத்தே வைத்தேனே" என்ற பதிக மகுடம் காண்க.

நேர்ந்த - நேர்மை பெற்ற. உற - நீங்காது பொருந்த. "ஏகம்பன் காணவ னென் னெண்ணத் தானே" என்ற கருத்துடைய திருத்தாண்டகப் பதிகங்களிரண்டினும் இவ்வாறு மனத்துள் அழுந்திய அன்பு நீடிய தன்மையால் போற்றப்படுவதும் காண்க (1592 - 1593).

அன்பு கரைந்து என்றதனால் மனத்தின் தொண்டும், நயனம் பயன் பெற்று என்றதனால் மெய்யின் தொண்டும், பாடுவார் என்றதனால் வாக்கின்றொண்டும் கூறப் பட்டன.

பாடுவார் - எடுத்துப் பாடியபின் என்று வரும்பாட்டுடன் கூட்டுக.

சோர்ந்த—நயனப்பயன்—என்பனவும் பாடம். 323

1589. (வி - ரை) கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை - பதிகத் தொடக்கம். பதிகக்குறிப்பு - பதிகப் பாட்டுக்குறிப்புப் பார்க்க.

பரவாய சொன்மாலை - பரவு - பரவுதல் - துதித்தல். விரவார் - பகைவராகிய முப்புரவாணர். வெள் எயிறு - பாம்பின் பற்கள் கூரியனவாய் வெள்ளையாய் உள்ளன. திருமுன்றிற்புறம் - திருமாளிகையின் புறமுன்றில்.

விரவார்தம் புரமெரித்த என்பது "கரவாடும் வன்னெஞ்சர்க் கரியான்" என்ற தேவாரக் கருத்தினையும், விடையவனூர் என்பது "விடையேறும் வித்தகனை" என்ற கருத்தினையும், வெள்ளையெயிற் றரவாரம் புனைந்தவர் என்பது "அரவாட" என்றதனையும், விரித்தன.

வெள்ளையெயிற்றின்—என்பதும் பாடம். 324

1590. கையார்ந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலொடுஞ்
செய்யாநின் றேயெல்லாச் செந்தமிழ்மா லையும்பாடி,
மையார்ந்த மிடற்றார்திரு மயானத்தை வலங்கொண்டு,
மெய்யார்வ முறத்தொழுது விருப்பினொடு மேவுநாள், ருஉரு

1591. சீர்வளரு மதிற்கச்சி நகர்த்திருமேற் றளிமுதலா
நீர்மருவுஞ் சடைமுடியார் நிலவியுறை யாலயங்கள்
ஆர்வமுறப் பணிந்தேத்தி யாய்ந்ததமிழ்ச் சொன்மலராற்
சார்வுறுமா லைகள்சாத்தித் தகுந்தொண்டு செய்திருந்தார். ருஉசு

1590. (இ - ள்) கையார்ந்த......செய்யாநின்றே - கைநிறைந்த உழவாரத்திருத் தொண்டினை மிகப்பெரும் காதலுடனே செய்துகொண்டே; எல்லாச் செந்தமிழ் மாலைகளும் பாடி - பற்பல வகையாலாகிய எல்லாச் செந்தமிழ்ப் பதிகங்களையும் பாடி; மையார்ந்த......தொழுது - திருநீலகண்டரது கச்சித்திருமயானத்தினையும் வலங் கொண்டு உண்மை நிறைவுடைய பேரார்வம் பொருந்தத் தொழுது; விருப்பினொடு மேவுநாள் - விருப்பத்துடன் அங்குப் பொருந்தியிருக்கும் நாளில், ருஉரு

1591. (இ - ள்) சீர்வளரும்......ஏத்தி - சிறப்புப் பெருகும் மதிலுடைய திருக் கச்சிமேற்றளி முதலாகக் கங்கை தங்கிய சடைமுடியார் நிலைபெற எழுந்தருளிய கோயில்களை ஆர்வம் பொருந்தப் பணிந்து துதித்து; ஆய்ந்த......சாத்தி - ஆய்ந்த தமிழ்ச் சொல் மலர்களால் சார்பு பொருந்தும் மாலைகளாகிய திருப்பதிகங்களைச் சாத்தி; தகுந்தொண்டு செய்து இருந்தார் - தக்க திருத்தொண்டுகளைச் செய்து அங்குத் தங்கியிருந்தருளினர். ருஉசு

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1590. (வி - ரை) கையார்ந்த திருத்தொண்டு - திருவுழவாரப்பணி, "கையாரக் கூப்பியும்" என்றபடி, கைபெற்ற பய னிதுவே யென்று, மனம் அமைவுபடும் வரை செய்யத்தக்கதாதலின் கையார்ந்த என்றார்.

கழியமிகு - மிகப் பெரிய. செய்யா நின்றே - தொடர்ந்து செய்தலின் ஆநின்று என்ற நிகழ்கால இடைநிலையாற் கூறினர்.

எல்லாச் செந்தமிழ் மாலையும்பாடி - இவை குறுந்தொகை, நேரிசை, விருத்தம், தாண்டகம் என்பன. நாயனர் அருளிய பதிகங்களுள் பண்வகைக்குக் காந்தாரப் பண்ணிலமைந்த "கரவாடும்" என்ற பதிகம் நிற்க, ஏனையவை யாவும் இந்நான்கு யாப்பினுள் அடங்குவனவாதலின் எல்லாச் செந்தமிழ் மாலையும் என்று முற்றும்மையுந் தந்து ஓதினர். இவ்வாறு நாயனரது எல்லாத் தமிழும் பெற்றுள்ளது கச்சிக்கு ஒரு சிறப்பாகும். இவ்வாற்றால், நாயனரது மூன்று திருமுறைகளின் பதிகங்களும் பெற்ற சிறப்புடனே ஆளுடைய பிள்ளையாரது மூன்று திருமுறைகளுள் வகுக்கப்பட்ட பதிகங்களையும், ஆளுடைய நம்பிகள் திருப்பதிகமும் பெற்றுடைமையால் தேவாரத் திருமுறைகள் ஏழனுள்ளும் போற்றப்பட்டது கச்சிமா நகரமாம்.

திருமயானம் - திருக்கச்சிமயானம். தலவிசேடம் பார்க்க.

மெய் ஆர்வம் - உண்மை பொருந்தும் ஆர்வம். மெய் - உடல் என்று கொண்டு ஆர்வமுற உடம்பினலும் தொழுது என்றலுமாம்.

கையார—மேவுவார்—என்பனவும் பாடங்கள். 325

1591. (வி - ரை) கச்சிநகர்த் திருமேற்றளி - இது காஞ்சி நகர எல்லைக்குள் உள்ள தனித்தலம். தலவிசேடம் பார்க்க.

நிலவியுறை ஆலயங்கள் - பிரியாது பொருந்தி எழுந்தருளும் கோயில்கள். இவை காஞ்சிபுரத்தின் எல்லைக்குள் அனந்தமுள்ளன. "பதிக ளெண்ணி றந்தவத் திரு நகரெல்லை" (1153) பார்க்க. இவற்றினைப் பணிந்து நாயனரருளிய பதிகங்கள் கிடைத்தில ஆதலின், பதிகங் கிடைத்துள்ள "திருமேற்றளி"யைச் சொல்லி, "முதலாம் ஆலயங்கள்" என்று பிரித்துக் கூறினர்.

சொன்மலராற் சார்வுறு மாலைகள் சாத்தி - இவை கிடைத்திலவேனும் மனம் வாக்குக் காயம் என்ற மூன்றானும் பணிசெய்யும் நாயனரது நியமம் பற்றி எடுத்துக் கூறினர். ஆர்வமுறப் பணிந்து என மனத்தானும், சாத்தி என வாக்கானும், தொண்டு செய்து என மெய்யானும் கூடிய பணிகள் குறித்தவாறு காண்க.

சார்வுறும் - இறைவரது சார்பினைப் பொருந்தச்செய்யும். உறும் - உறுவிக்கும் எனப் பிறவினைப் பொருளில் வந்தது. சார்வுறும் - சாத்தத்தகுந்த என்றலுமாம்.

தரும்தொண்டு - தம்மாற் செய்யத்தக்க எல்லாத் திருத்தொண்டும். இவை சரியையாதி நான்கு நெறியாலும் செய்யத்தக்கன. தரும் - ஏனை அடியார்களும் உலகமும் கண்டு பின்பற்றத் தரும் என்பதும் குறிப்பு.

நீர்வளருஞ் சடையவர்தாம்—தந்தொண்டு—என்பனவும் பாடங்கள். 326

"கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" யென்றெடுத்து-(1589)—
எல்லாச் செந்தமிழ் மாலையும் பாடி-(1590)—

## கச்சித்திருவேகம்பம்

I திருச்சிற்றம்பலம் பண் - காந்தாரம்

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
யரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
யிரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. 1

*ஆகம்பத் தரவணையா னயனறிதற் கரியானைப்*
*பாகம்பெண் ணுண்பாக மாய்நின்ற பசுபதியை*
*மாகம்ப மறையோது மிறையானை மதிற்கச்சி*
யேகம்ப மேயானை யென்மனத்தே வைத்தேனே. 9

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*கரவாடும் வன்னெஞ்சர்க் கரியான், விடையேறும் வித்தகன், சங்கரன், வானோர்க்கும் ஏனோர்க்கும் பெருமான், எப்போது மினியான், ஐம்பூதப் பிண்டமாய் உலகுக்கோர் பெய்பொருளாம் பிஞ்ஞகன், ஆயிரம்பே ரம்மான், திரு* மாலால் பூசன், நில நீர் தீ வளி ஆகாசமாம் ஈசன், *வல்லார்கள் மனத்துறையும் மைந்தன்,* சொல்லார்ந்த பொருளான், *துகளேது மில்லான்,* பதம் சந்திப் பொருளுரு வாம் புண்ணியன் *என்றிவை முதலிய பெருமைகளா லறியப்படுகின்ற மதிற்கச்சி யேகம்ப மேவிய இறைவரை அப்போது மலர்தூவி ஐம்புலனுமகத் தடக்கி* என் மனத்தே வைத்தேன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கரவாடும் வன்னெஞ்சர் - கரவு - *கள்ளம். இறைவர்பாலதாக வைக்கத்தக்க மன மொழி மெய்களைப் பிறவற்றிற்காக்குதல் கள்ள மெனப்பட்டது.* வன்னெஞ்சமாவது *அன்பிற் கிடமாகாமை.* விரவாடும் - *விரவும்.* என் மனத்தே வைத்தேனே - *இது பதிகக் கருத்து என "நேர்ந்த மனத்தி லுற வைத்து"* (1588) *என்று ஆசிரியர் அறிவித்தமை காண்க.*—(2) தேன் நோக்கும் - பவளம்தான் நோக்கும் - நோக்குதல் - *தன்மைபெற அவாவுதல்.* கிளிமழலை - *கிளிச் சொற் போன்ற மழலை ;* நோக்கும் - *போலும் என்ற பொருளில் வந்த உவமவுருபு என்றலு மொன்று.* ஏனோர் - *ஏனை மக்கள் முதலாயினோர்.*—(3) கை - *கையிற் கொண்ட ;* அப்போது மலர்தூவி - *புதிதலர்ந்த பூக்கொண்டு புறப்பூசை செய்து.* ஐம்புலனு மகத்தடக்கி - *புலனடக்கி அகப்பூசை செய்து. தூவியும் - அடக்கியும் - என் மனத்து வைத்தேன் என்று கூட்டுக. இது நாயனார் சிவாகம விதிப்படி ஆன் மார்த்த பூசை செய்தமைக்குச் சான்று.* எப்போது மினியான் - *சிவன்.*—(4) ஐம் பூதப் பிண்டமாய் நிற்கு முலகு *என்க.* பெய்பொருள் - *அடையப்படு பொருள்.*—(5) ஆயிரம்பேர் அம்மான் - "*பேராயிரம் பரவி*" (தேவா). ஆயிரம் - *அனேகம் என்பதுமாம். "எண்ணுயிரங் கோடி பேரார் போலும்"* (தேவா). பாறு - *கழுகு.* நெடுந்தூவி - *பெரிய திமில்.*—(6) பூசன் - *பூசிக்கப்படுபவன். பூஜ்யன் என்பது பூசன் என வந்தது. மலை......ஈசன் - ஐம்பூதமும் தன் திருமேனியாகக் கொண்ட இறைவன்.*—(7) வல்லவர்கள் - "*பொது நீக்கித் தனை நினைய வல்லார்*"; *வல்லார் என்றது நினைய வல்லார் என அதன் அருமை குறித்தது.* சொல்லான் - பொரு ளான் - *சொல்லும் அதன் பொருளுமாவான்.* "பதஞ் சந்திப் பொருளுருவாம்" (8) *என்பதுமிக்கருத்து.*—(8) வேதங்கள் புரிந்தான் - *வேதஞ் சொன்னவன்.* பதம்-சந்தி - *வேதம் சொல்லு முறை.*—(9) ஆகம் பத்து - *பத்துப் பிறவியுடைய.* மாகம்ப - *உரத்த சுரத்தில் ஓதப்பட்ட.* மதிற்கச்சி - *மதிற் சிறப்பும் அரசர் தலைநகராதலும் குறிப்பு.* இதனையே மதில்சூழ் (1582) "*மதில்கொண்டணிந்த*" (1586), என்றெடுத் *தாண்டனர் ஆசிரியர்.* இப்பதிகத்தினுள் இவ்வொருபாட்டு இத்தலப் பெயர் *தாங்கி இது இத்தலப் பதிகமாதலை யறிவிக்கின்றது.*—(10) *யானை உரித்தான்* - பாசுபதம் கொடுத்தான் - புரமெரித்தான் - *கயிலை எடுத்தானைத் தடுத்தான் என்ற நான்கு தன்மை கள்பற்றிப் போற்றப்பட்டது.* பாசுபதம் - *பசுபதி சம்பந்தமுடையது.* புரமெரியு அம்பு தொடுத்தானை *என்க.* எடுத்தான் - *எடுக்க முயன்றவன் - இராவணன்.*

II திருச்சிற்றம்பலம் திருநேரிசை

நம்பனை நகர மூன்று மெரியுண வெருவ நோக்கும்
அம்பனை யமுதை யாற்றை யணிபொழிற் கச்சி யுள்ளே
கம்பனைக் கதிர்வெண் டிங்கட் செஞ்சடைக் கடவு டன்னைச்
செம்பொனைப் பவளத் தூணைச் சிந்தியா வெழுகின் றேனே. 1

பொன்றிகழ் கொன்றை மாலை பொருந்திய நெடுந்தண் மார்பர்
நன்றியில் புகுந்தென் னுள்ள மெள்ளவே நவில நின்று
குன்றியி லடுத்த மேனிக் குவளையங் கண்ட ரெம்மை
யின்றுயில் போது கண்டா ரினியரே கம்ப னாரே. 9

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கச்சியேகம்பரைச் சிந்தியா எழுகின்றேன் ; வாழ்த்துமா றறியமாட்டேன் மால்கொடு மயங்கினேன் ; நான் பிதற்றுகின்றேன் ; அவரது உருவினை உள்ளத்தால் உள்கி உகக்கின்றேன் ; கண்டு அடிமை செய்யக்கருதியே திரிகின்றேன் ; அவரைத் தொழவல்லார்க்குக் கடுவினை களையலாம் ; தொழுவார் தலைவர்க்குந் தலைவர் ; அவரைக்காண ஞாலம் உய்ந்தது ; அவர் எம்மை இன்றுயில் போது கண்டார் ; அவர் இனியர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நகர மூன்று - திரிபுரம். கம்பன் - ஏகம்பர். சிந்தியா - சிந்தியா நின்று ; "தொழுதெழுவாள்" (குறள்) என்பதுபோல.—(2) உரு வகம். ஒரு முழமுள்ள குட்டம் - குட்டம்-ஆழம். அகலம் - அரைமுழம். முதலை ஐந்து - ஐம்பொறி. பெருமுழை வாய்தல் - முதலையின் பகுவாய் - "மாறி நின்றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழி" (திருவா). ஒன்பது துறை - உடலின் ஒன்பது வாசல்.—(6) உரு - உருவமில்லாத கடவுள் ஓருருக்கொண்டு இங்கு வீற்றிருக்கின் றான் என்பது.—(7) நஞ்சமுண்டது உலகமுய்யும்பொருட்டு.—(8) காண - கண்டு.—(9) தலைவி கூற்றாகிய அகப்பொருட்டுறைச் சுவைபடக் கூறியது. குன்றியில் அடுத்த மேனிக் குவளையங் கண்டர் - உருவம்பற்றி எழுந்த உவமம். சிவப்புப் பிழம்பில் கருமைப் பொட்டுக் காணும் குன்றிமணிபோலச் சிவந்த திருமேனிப் பிழம்பில் நீல விடமாகிய கண்டம் காண உள்ளவர். உவமநயம் போற்றத்தக்கது.—(10) அவ ரவர்க்கு - ஏற்றபடி என்க.

III திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

ஓதுவித் தாய்முன் னறவுரை காட்டி யமணரோடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி வாய்கச்சி யேகம்பனே. 1

உந்திநின் றுருண்ட ஞேலக்கச் சூளைகள் ; வாய்தல்பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவ ரீட்டம் ; பணியறிவான்
வந்துநின் றாரய னுந்திரு மாலு ; மதிற்கச்சியாய் !
இந்தநின் றோமினி யெங்ஙன மோவந் திறைஞ்சுவதே ? 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருவேகம்பர், விட்டுணு, பிரமர், ஆதித்தர், சந்திரன், இந்திரன், வசுக்கள் எண்மர், உருத்திரர் பதினொருவர், அமிர்தர் முதலிய தேவர்கள் யாவராலும் அறியவொண்ணாதவர் ; தேவர்களும் அவரது வாய்தல் பற்றித்

துன்றி நின்று உணங்காக் கிடந்தார்; அவர் திருமாலின் கண் கொண்டவர்; அவர், முன் அறவுரை காட்டிப், பின், அமணரோடே இசைவித்து, நோய் தந்து தீர்த்துத் தன்பாற் போதுவித்து என்னை ஆட்கொண்டருளினார்; அவர் உரைக்கவும் உணரவும் அரியவர்; கருவுற்ற நாள்முதலாக அவர் பாதமே காண்பதற்கு என் உள்ளம் உருகிற்று; திருவேகம்பரே! தேவர்கள் நும் வாய்தல்பற்றி நிற்றலில் நாங்கள் நெடுந்தூரத்தில் நின்றோம்; எங்ஙனம் வந்திறைஞ்சுவோம்? உம்மையன்றி வேறு ஒரு பற்றும் இல்லாததைக் கண்டு எனக்கு இரங்குவீராக! அவ்வாறே உமது தாள்களே சரண் என்று ஏம்பலிப்பார்க்கு இரங்குவீராக!

**பதிகப் பாட்டுக் குறிப்பு**:—(1) **முன் அறவுரை காட்டி ஒதுவித்தாய்** - நாயனார் இளமையில் "தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்த" (1300) சரிதப்பகுதிக்கு அகச்சான்று. முதலில் அறங்களே சிறந்தனவென்று காட்டுவித்தவர் நீரே என்பது. **அறவுரை காட்டி அமணரோடே காதுவித்தாய்** என்று பின்னுங் கூட்டிச், சமணர் சார்பு புகுந்த சரிதப் பகுதிக்கு அகச்சான்றுதலும் காண்க. சமணத்தில் முகப்பிற் காண்கின்ற கொல்லாமை முதலிய அறவுரைகளே நாயனாரை வஞ்சித்து அகப்படுத்தின. "கொல்லாமை மறைந்துறையும்...குறுகுவார்" (1302). **காதுவித்தாய்** - அலமரச் செய்தாரும் நீரே. **கட்டநோய் பிணி** - சூலை; சூலையைத் தந்தவரும் தீர்த்தவரும் நீரே. **போதுவித்தாய்** - உமது திருவடிச் சார்பிற் புகுவித்தீரும் நீரே. "நின்பணி... மோதுவிப்பாய்; உகப்பாய் முனிவாய்" - சூலை தந்த செயல் பணி பிழைத்தமைக்காக இறைவர் தந்த கழுவாய் என்பது நாயனார் கொள்கை. உமது முனிவே உகப்பின் வருவது. "எக்கிர மத்தி னுலு மிறைசெய லருளே யென்றும்" (சித்தி - 2 - 15). **புளியம் வளார்** - புளியின் சிறுகொம்பு. "வளாரினா லடித்துத் தீய பந்தமு மிடுவர்"- "பார்த்திடிற் பரிவே யாகும், இந்தநீர் முறைமை யன்றோ வீசனார் முனிவு மென்றும்" (சித்தி - 2 - 16).—(2) **அமணொ டிசைவித்தேனை** - சரிதச் சான்று. "கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டுதல்" பழமொழி. **கோத்தை** - குருடன். "என்கண் கொத்தை யாக்கினீர்" (தேவா. நம்பி). **மூங்கர்** - மூகர்; ஊமை. **கோது**-கபடம். **ஏய்க்கும்**-நிகர்க்கும். **படி** - வண்ணம்; நிறம்.—(3) **ஆவம்-ஆவம்** அம்பு பொய் எய்து என்று கூட்டி அருச்சுனன் மெய்யாக அம்பு எய்யத் தாம் பொய்யம்பு எய்து என்க. **துய்யம்** - வஞ்சகம். வஞ்சமாவது நிறைந்திருந்தும் மறைந்து நிற்றல்.—(4) **தூல்வித்தல்** - தோண்டுவித்தல்.—(5) **உரைக்கும் கழிந்து இங்கு உணர்வரியான்** - "உலகெலாம் உணர்ந் தோதற்கரியவன்". **உள்குவார்...எனக் கைதொழுவதல்லால்...அறியவொண்ணான்** - நினைப்பவர் வினைதீர்ப்பர் என்று எண்ணித் தொழுதல் அல்லது சொல்லவும் அறியவும் படான்.—(6) **கருவுற்ற** - தாயின் கருவில் வந்த. இப்பாட்டு நாயனார் தம்பொருட்டுச் செய்த விண்ணப்பம். 8-வது பாட்டு அடியார்பொருட்டுக் கேட்ட வரம். **கருவுற்ற நாள்முதல்...உள்ள முருகிற்று** - கருவுற்ற உயிர்கள் கரணங்களால் உணர்வு தோன்றிய போது இறைவனையே நினைக்கும். "கருவாய்க் கிடந்துன் கழலே நினையும்" (தேவா). "பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல், சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்" (அம்மையார்). இவ்வாறு துணிபுடன் சொல்லுதல் பிறர் எவர்க்குமரிதாகும். "ஆறுங் கருவி லமைப்பு" என்றபடி பின்னர் உள்ள நிலைமைபற்றிக் கருவினிலமைந்ததென்பது துணியப்பட்டது. இடையில் சமணத்துட்பட்டு "ஏழையேன் நான்பண்டு இகழ்ந்த வாறே" என்றபடி கழிந்த நாட்களின் தன்மை இக்கருத்துடன் அமைவுபடுதல் எவ்வாறெனின்? இதுபற்றிக் "கூற்றாயினவாறு" என்ற பதிகக் குறிப்பில் "நெஞ்சம்" (2) என்ற பாட்டின் குறிப்புப் (பக் - அஎ) பார்க்க. **ஒருபற்று** - மற்றும் ஒருபற்றும். முற்றும்மைதொக்கது. "மற்றுப் பற்றெனக் கின்றி" (நம்பிகள்).—(7) **அரி...எல்லாம்** -

5-வது பாட்டுப் பார்க்க. கடைத்தலை - *திருவாயிற்புறம்.* உணங்காக் கிடந்தார்-*காலம் பார்த்து வருந்தித் தவங்கிடந்தார்.* உணங்குதல் - *வருந்தி வாடுதல்.* போக முனிவர் - *இந்திராதி போகங்களை விரும்பித் தவஞ்செய்யும் முனிவர்கள்.* போக - *தடையின்றி உள்ளே புக என்று கொண்டு முனிவர் போக அமரர் கிடந்து புலம்புகின்றார் என்று கூட்டி உரைப்பதுமொன்று.* எரிநுரு - *நுரு - உவம உருபு.*—(8) கூம்பல் - *கூப்புதல்; குவித்தல் - சாம்பல் பூசுதல் - தரையில் படுத்தல் - தாள் சரண் என்று ஏம்பலித்தல் - இவை தவங்கிடக்கு முறை.* ஏம்பலிப்பார் - *இரங்கி நிற்பார்; வருந்துவார்; அவாக் கொள்வார்.*—(9) ஏன்றுகொண்டாய் - *ஏற்று ஆட்கொண்டாய்.* இனி அல்லம் எனில் - *இனி ஆட்கொண்டிலோம் என்று சொல்லப்புகின்.* உலகமெல்லாம் சான்று - *ஆட்கொண்டமை உலகறியும்.* ஒற்றிவைத்தாய் - *ஒற்றியாக வைத்தாய்.* சோன்றுகொண்டாய் - *ஒற்றிவைத்த பொருளை ஒற்றி நீக்கித் தன் வசமாக்கிக்கொண்டாய்.* ஒற்றி வைத்தல் - சோன்றுகோள்ளுதல் - *உடைமைகளை ஆளும் முறை.* "*ஒற்றிவை - விற்றுக்கொள்*".—(10) ஓலக்கச் சூளைகள் - *திருவோலக்கத்தில் முறை செய்யும் காவலாளர். அரம்பையர் என்பாருமுண்டு.* இந்த - *இப்பக்கம்.* விலகிய *நெடுந்தூரம்.* இந்த - *இதோ என்றலுமாம்.*

IV *திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

*பண்டு செய்த பழவினை யின்பயன், கண்டுங் கண்டுங் களித்திகா ணெஞ்சமே!*
*வண்டு லாமலர்ச் செஞ்சடை யேகம்பன், றொண்ட னாய்த்திரி யாய்துயர் தீரவே.* 1

*மருந்தி னோடுநற் சுற்றமு மக்களும், பொருந்தி நின்றெனக் காயவெம் புண்ணியன்*
*கருந்த டங்கண்ணி னாளுமை கைதொழ, விருந்த வன்கச்சி யேகம்பத் தெந்தையே.* 5

*மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந், தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள்,*
*நோக்கு வானமை நோய்வினை வாராமே, காக்கு நாயகன் கச்சி யேகம்பனே.* 7

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*கானிலாடுவர்; இமையா முக்கண்ணர்; என்னெஞ்சத் துள்ளார்; தமை யாரும் அறிவொண்ணுத் தகைமையர்; எனக்கு மருந்தும், சுற்றமும் மக்களும் ஆயவர்; பற்றிலார்க்குப் பொருளும் சுற்றமும் நன்மையும் தருபவர்; ஐவர் தம் ஆப்பை அவிழ்த்தருள் நோக்குவார்; பண்ணில் ஓசை; பழத்திற் சுவை; கண்ணினுள் மணி; கருவுள் நாயகர்; என்றிவ்வா றறியப்படும் கச்சி யேகம்பர்க்கு நெஞ்சமே தொண்டனாய்த் திரியாய்; அவரது திருவேகம்பந் தொழுதேத்துமின்; அவர் நோய்வினை வாராமே காக்கு நாயகர்; அருந்துயர் தீர்ப்பர்.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கண்டுங் கண்டும் களித்திகாண் - *அடுக்கு உறுதியும் மிகுதியும் குறித்தது.* களித்தி - *களிப்பாய்த் திரிவாய்.*—(2) நச்சி - *விரும்பி.* இச்சையால் - "*நீமொழிந்த வாகமத்தி, னியல்பி னாலுனை யருச்சனை புரியப், பொங்கு கின்றதென் னாசை*" (1129) *என்ற விருப்பம்.* உமைநங்கை - *காமாட்சியம்மை.* கோச்சையார் - *கீழ்மக்கள்.*—(3) ஊன்நிலாவி - *உயிர்களின் உடல்களினுள் பொருந்தி.*—(5) கருந்தடங் கண்ணி னாளுமை கைதொழ - *2-வது பாட்டின் கருத்து.*—(6) பற்றிலர் - *பொருள், சுற்றம் முதலிய பற்றற்றவர்.* இருள் - *ஆணவ இருள்.*—(7) ஐவர் - *ஐம்பொறி.* ஐவர்தம் ஆப்பு - *ஐம்புல ஆசையாகிய கட்டு.* அவிழ்த்தல் - *பந்திக்காமற் செய்தல்.*—(8) இறைவன் *உயிர்களுள் அத்துவிதமாகக் (உடனாக) கலந்து நிற்கும் நிலையும், காட்டுவிக்கும் நிலையும்.*—(9) உணர்வாய்...கருவுள் நாயகன் - *இறைவன் மக்களுணர்வினுள் நின்றும், அவ்வுணர்விற்றோயாமலும் நிற்கு*

நிலை. ஆன்மாக்கள் பலவுமாய்த் தானேயாய் என்ற கருத்தாகக் கொள்வதுமொன்று.—(11) நலங்கோள் செல்வு - நன்றாய்ச் செல்லும் செலவு.

V திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

பூமே லானும் பூமகள் கேள்வனு, நாமே தேவ ரெனுமை நடுக்குறத்,
தீமே வும்முரு வா! திரு வேகம்பா!, ஆமோ வல்லற் படவடி யோங்களே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—திருவேகம்பரே! அடியோங்கள் அல்லற் படலாமோ? பொறி புலன்களைப் போக்கறுத்து உள்ளத்தை நெறிப்படுத்துக் குறிப்பினாற்சென்று ஏகம்பம் தொழுவோம்; திருவேகம்பர் சிந்தையுட் சிவமாய் நின்ற எந்தை; அவரை அடைந்து கும்பிட்டு உய்தும்; அவரைத் தொழுவார்க்கு அல்லலில்லை.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நாமே தேவர் எனுமை - தாந்தாம் கடவுள் என்று கூறுமல்.—(2) புடைபட்டு - நெருங்கி.—(3) முறைமை - ஆளாகும்முறை. ஆகம விதிமுறை.—(4) பொறிப் புலன்களை - பொறிகளின் வழியே புலன்களை நோக்கிச் செல்லும் ஆசையை. போக்கு - அவற்றின் வழியே சேர்தல். அறிப்பு - அறிதல் - உணர்தல். குறிப்பு - குறி; குறிக்கோள்.—(5) சிந்தையுள் ஒளித்து நிறைந்த சிவம்.—(6) பாக்கியம் - சிவநெறிப்பேறு. பாடு - பக்கம். துன்பம் என்றலுமாம்.—(7) அமரர்க்கிறை காப்பு அது ஆய - பிரமனாற் படைக்கப்படாது சிவனது படைப்பும் காவலும் பொருந்திய. "காப்புத் திருத்தாண்டகம்" (1130). சேர்ப்பது - சேர்வது. பிறவினை தன்வினைப்பொருளில் வந்தது. நன்னெறிச் செலுத்துவது என்றலுமாம்.—(9) மெய்யன் - உண்மையாய் விளங்குபவன்.—(10) தருக்கு. "சிந்தையார்க் குள்ள செருக்கு"; "இறுமாந் திருப்பன் கொலோ" (தேவா). அடியோம் என்ற பெருமித நினைவு.

தலவிசேடம் :—திருக்கச்சிமயானம். (1590). தேவார வைப்புத் தலம். திருஏகம்பக் கோயிலின் முன்புறம் கொடிமரத்தின் முன்புறம் தென் கீழ்த் திசையில் உள்ள தனிக் கோயில். "மைப் படிந்த கண்ணாளுந் தானும் கச்சி மயானத்தான்" (பொது - வினாவிடைத் தாண் - 10). திருக்குறிப்புத் தொண்டர் புராணத்திறுதியில் (பக்கம் கஞ௲எ) தலவிசேடம் பார்க்க.

திருக்கச்சித்திருமேற்றளி

திருச்சிற்றம்பலம் திருநேரிசை

மறையது பாடிப் பிச்சைக் கென்றகந் திரிந்து வாழ்வார்
பிறையது சடைமு டிமேற் பெய்வளை யாடன் னோடுங்
கறையது கண்டங் கொண்டார் காஞ்சிமா நகர்த னுள்ளால்
இறையவர் பாட லாட லிலங்குமேற் றளிய னாரே. 1

செல்வியைப் பாகங் கொண்டார் சேந்தனை மகனாக் கொண்டார்
மல்லிகைக் கண்ணி யோடு மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியைக் கரையி லாத காஞ்சிமா நகர்த னுள்ளால்
எல்லியை விளங்க நின்றா ரிலங்குமேற் றளிய னாரே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—காஞ்சிமாநகர் தன்னுள்ளால் இலங்கும் மேற்றளியிறைவனார் மறை பாடிப் பிச்சைக்கென் றகந்திரிவர்; விருத்தராகும் பாலனார்; கண்

ணிடை மணியி னொப்பார்; எண்ணிடை எழுத்துமானார்; மாயன்றன்னையோர் பாகங் கொண்டார்; சேந்தனை மகனுக் கொண்டார்; இன்னும் இத்தகைய பல பெருமைகளையுடையவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) பிச்சைக்கென்று - பிச்சை நிமித்தமாக. வாழ்வார் - இருப்பார் என்ற பொருளில் வந்தது. வாழ வைப்பர் என்றலுமாம். அது என்ற மூன்றும் பகுதிப் பொருள் விகுதி. காஞ்சிமாநகர் தன்னுள்ளால் - இலங்கும் மேற்றளி; நகர எல்லைக்குள் மேற்கில் உள்ள. தளி - கோயில்.—(2) விருத்தர் ஆகும் பாலர் - விருத்த குமார பாலரான திருவிளையாடற் குறிப்பு. கடம்பன் - முருகன்.—(3) கண்ணிடை மணி - காணுமுபகாரம் செய்தல். வினைபற்றி வந்த உவமம். எண்ணிடை எழுத்தும் - "எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்". உயிர் அறிவை விளங்க வைப்பர் என்பது.—(4) வாமன் - வாமதேவன். ஏமம் - நடுயாமம். ஊழி குறித்தது.—(6) மாயன் - மாயையினை இயக்குபவன். உடைப்பொருளாக உடையவன்.—(7) மாலினை ஓர் பாகம் கொண்டார் - "மாயன்றன்னை மகிழ்ந்தனர்"—(2) காஞ்சியில் திருமால், பாகம் பெற்று (வரத ராசராய்) இருப்பது குறிப்பு.—(8) செல்வி - உமை. செல்வ மெல்லாவற்றுக்கும் தலைவி. கல்வியைக் கரையிலாத காஞ்சி - அளவுபடாத கல்வி கற்றோர் வாழுமிடம். எல்லி - இரவு; ஊழி. ஆற்றினை - ஏற்றினை என்பன எதுகை நோக்கி ஆறினை - ஏறினை என வந்தன. புறனடையாற் கொள்க.—(10) கன்னலின் - கரும்புபோன்ற இனிய.

தலவிசேடம்:—திருக்கச்சிமேற்றளி - திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத் திறுதியில் தலவிசேடம் பார்க்க. (பக் - கடு௬எ)

முதலாம் ஆலயங்கள் - ஓணகாந்தன்றளி முதலியன. இவற்றின் பதிகங்கள் கிடைத்தில!

1592. அந்நகரி லவ்வண்ண மமர்ந்துறையு நாளின்கண்
மன்னுதிரு மாற்பேறு வந்தணைந்து தமிழ்பாடிச்
சென்னிமிசை மதிபுனைவார் பதிபலவுஞ் சென்றிறைஞ்சித்
துன்னினார் காஞ்சியினைத் தொடர்ந்தபெருங் காதலினால். ௬௨எ

(இ - ள்) அந்நகரில்......நாளின்கண் - அத்திருநகரில் முன் சொன்னவாறு விரும்பி எழுந்தருளியிருக்கும் நாளில்; மன்னு......பாடி - நிலைபெற்ற திருமாற்பேற்றுக்குச் சென்றணைந்து திருப்பதிகம் பாடி; சென்னி......இறைஞ்சி - தலையின்மேல் பிறைச்சந்திரனை அணிந்த பெருமானது திருத்தலங்கள் பலவற்றையும் சென்று வணங்கி; தொடர்ந்த பெருங்காதலினால் - முன் தொடர்ச்சியாகிய பெரும் காதல் காரணமாக; காஞ்சியினைத் துன்னினார் - காஞ்சிபுரத்தை வந்தணைந்தனர். ௬௨எ

(வி - ரை) அவ்வண்ணம் - முன் 1590 - 1591 பாட்டுக்களிற் சொல்லியவாறு. அமர்தல் - விரும்புதல்.

திருமாற்பேறு - திருமால் பூசித்துப் பேறுபெற்றதனாற் போந்த பெயர். தலவிசேடம் பார்க்க.

பதி பலவும் - திருவூறல், திருவிற்கோலம் (கூவம்), இலம்பையங்கோட்டூர் முதலாயின. இவற்றுக்கு நாயனார் பதிகங்கள் கிடைத்தில. இவை திருமாற்பேற்றின் அணிமையில் உள்ளன.

துன்னினார்......காதலினால் - வினைமுற்று முன் வைத்தோதப்பட்டது; காதல் மிகுதியும், அதனால் செயல் நிகழ்ந்து முற்றிய விரைவும் குறித்தற்கு.

தொடர்ந்த - முன் தொடர்பால் வந்த; விடாது தொடர்ந்த என்றலுமாம். காஞ்சியினின்றும் திருமாற்பேறு முதலிய பிற தலங்களைச் சேர்ந்த நாயனார் மீண்டும் காஞ்சிபுரத்தைச் சேர்ந்ததற்கு அதனிடத்துத் தம் மனத்துள் வைத்த பெருங்காதல் காரணம் என்பது. இவ்வாறே திருத்தில்லையில் மீண்டு மெழுந்தருளிய வரலாறும் (1439), திருவாரூரில் மீண்டும் அணைந்தருளியமையும் (1439), பிறவும் இங்கு நினைவு கூர்க. இச்சரிதப்பகுதிக்கு அகச்சான்று உளதோ என வினவுவாராயின் அஃதுணர்த்து தற்கு எழுந்தது மேல்வரும் பாட்டு என்க. 327

திருமாற்பேறு

I *திருச்சிற்றம்பலம்* திருவிருத்தம்

*மாணிக் குயிர்பெறக் கூற்றை யுதைத்தன ; மாவலிபாற்*
*காணிக் கிரந்தவன் காண்டற் கரியன ; கண்டதொண்டர்*
*பேணிக் கிடந்து பரவப் படுவன ; பேர்த்துமஃதே*
*மாணிக்க மாவன ;* மாற்பே றுடையான் மலரடியே. 1

*கருடத் தனிப்பாகன் காண்டற் கரியன ; காதல்செய்யிற்*
குருடர்க்கு முன்னே குடிகொண் டிருப்பன : கோலமல்கு
செருடக் கடிமலர்ச் செல்விதன் செங்கம லக்கரத்தால்
வருடச் சிவப்பன ; மாற்பே றுடையான் மலரடியே. 2

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*மாற்பேறுடையான் மலரடியே கூற்றை யுதைத்தன ; காதல் செய்யிற் குருடர்க்கு முன்னே குடிகொண்டிருப்பன ; மலர்ச் செல்வி செங் கமலக் கரத்தால் வருடச் சிவப்பன ; என் றித்தன்மைகளால் அறியப்படுவன.*

*இப்பதிகத்தில் இரண்டு பாட்டுக்களே கிடைத்துள்ளன.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மாணி - *பிரமசாரி ; மார்க்கண்டேயர்* மாவலி......இரந்தவன் - *திருமால்.* காணி - *மூவடி மண்.* கண்ட - *அனுபூதி கைவரப் பெற்ற.* பேர்த்துமஃதே மாணிக்கமாவன - *முன்னர் அனுபூதியில் கைவர அருள் செய்து பரவச் செய்த அவையே அவ்வாறு பரவுதற்கீடாகச் சிவா னந்த வாழ்வு தருவன என்பது.* மாணிக்கம் - *பெறற்கரிய சிவப்பேறு குறித்தது. "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றபடி வணங்க அருள் செய்வதும், வணங் கினால் அதற்குப் பேறாக நிற்பதும் இரண்டும் அவனருளேயாம்.* அடி - *திருவருள் நிறைவு.*—(2) கருடத் தனிப் பாகன் - *திருமால்.* பாகன் - *ஊர்தியாகக் கொண்டு செலுத்துபவன்.* காண்டற் கரியன - *தல வரலாற்றுக் குறிப்புமாம்.* குருடர் - *முன் னர் உண்மை காணாதார்.* முன்னே குடிகொண்டிருத்தல் - *வழி காட்டுதல். அருளு தல் குறித்தது.* செல்வி - *உமையம்மை.*

II *திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

*பொருமாற் றின்படை வேண்டிநற் பூம்புனல், வருமாற் றின்மலர் கொண்டு வழிபடுங், கருமாற் கின்னருள் செய்தவன் காண்டகு, திருமாற் பேறு தொழவினை தேயுமே.* 1

மழுவ லான்றிரு நாம மகிழ்ந்துரைத், தழுவ லார்களுக் கன்புசெய் தின்பொடும், வழுவி லாவருள் செய்தவன் *மாற்பேறு, தொழுவ லார்தமக் கில்லைத் துயரமே.* 7

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—ஆழி பெறவேண்டித் திருமால் தவஞ் செய்து பெற்ற திருமாற்பேற்றினைத் தொழ வினை தேயும்; கவலை தீரும்; துயரம் இல்லை; கை தொழுவார் பரலோகம் பெறுவர்; அவர் எம்மையாளுடையார்களே; மாற்பேறுடைய நாயகர் தமது திருநாமத்தை மகிழ்ந்துரைத்து அழவல்லார்களுக்கு அன்புசெய்து இன்பொடும் வழுவிலா அருள் செய்பவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) போரும் ஆற்றின் படை - போர் செய்யும் வழியால் உறும் படை. சக்கரம். ஆற்றின் வரும் பூம்புனல் மலர் - நதியின் நீரும் மலரும் என்க. உம்மைத்தொகை. ஆறு - இங்கு இத்தலத்தினை அடுத்து வடக்கில் உள்ள பழைய பாலாறு. கருமாற்கு - கரிய திருமாலுக்கு. வழிபடும் - திருமால் வழிபட்ட தலவரலாறு. 2, 3-லும் இவ்வரலாறு போற்றப்படுதல் காண்க.—(2) கோலத்தால் உரை செய்தவன் - வாக்கினாற் சொல்லாது தாம் வீற்றிருந்த நிலையும், காட்டிய ஞானமுத்திரையும் ஆகிய கோலத்தினால் உணர்த்தியவர். ஏல - மிகவும்.—(3) மணிவண்ணன் - திருமால். மணி - நீலமணி.—(7) திருநாமம் - திருவைந்தெழுத்து. அழவல்லார் - அன்பு மேலீட்டினால் அழுபவர். வழுவிலா - பொய்யாத.—(10) வருத்தி ஆரருள் செய்தவன் - முன்னர் வருத்தம் செய்து, பின்னர் இரங்கி நிறைந்த அருள் செய்தவர். அருந்தி - ஆசை.

III திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

ஏது மொன்று மறிவிலா ராயினும், ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி யவரவ ருள்ளத்தே, மாதுந் தாமு மகிழ்வர்மாற் பேறரே. 1
ஈட்டு மாநிதி சால விழக்கினும், வீட்டுங் காலன் விரைய வழைக்கினுங்
காட்டின் மாநட மாடுவாய் காவெனில், வாட்டந் தீர்க்கவும் வல்லர்மாற் பேறரே.

பதிகக் குறிப்பு :—மாற் பேற்றின் இறைவர், அஞ்செழுத்தும் ஓதி உணர்வார்களது உள்ளத்தே மாதும் தாமும் மகிழ்வர்; அவர் நாமங்கள் நித்தலும் நினையின் வைச்ச மாநிதி யாவர்; பணிதிரேல் மாத்திரைக்குள் அருள்வர்; மருந்து மாகுவர்; வாட்டந் தீர்த்து வையமாளவும் வைப்பர்; அந்தமில்லா இன்பம் வந்து அணுகும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(2) வைச்ச - சேமித்து வைத்த—(3) சிவனது நினைவின்றிச் சாத்திரமும் கோத்திரமும் குலமும் பயன்றரா என்பது கருத்து. இது கொண்டு, குலம் கோத்திரம் சாத்திரம் முதலியவை பயனில்லாதன என்றும், அவை விட்டுவிடத் தக்கன என்றும் நாயனார் கருதியதாகக் கொள்வார் சிலர்; அது தவறு; அவை தம்மை மறந்த நிலையில் தாங்கினவன் கைப்பொருள்போலத் தாமாய் நழுவத்தக்கன வன்றி நாமே விடத்தக்கன வல்லவென்பது.—(6) இந்நாட் கொடிய போர் காரணமாக வரும் கேடுகளைத் தவிர்க்க நல்லுபதேசமா மித் திருப்பாட்டு.—(10) அந்தமில்லதோர் இன்பம் - பேரின்பம்.

IV திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

பாரானைப் பாரினது பயனா னானைப் படைப்பாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் றன்னை
யாராத வின்னமுதை யடியார் தங்கட் கனைத்துலகு மானானை யமரர் கோனைக்
காராருங் கண்டனைக் கயிலை வேந்தைக் கருதுவார் மனத்தானைக் காலற் செற்ற[னானே.
சீரானைச் செல்வனைத் திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தே

நீருகி நீறுமிழு நெருப்பு மாகி நினைவாகி நினைவினிய மலையான் மங்கை
கூறாகிக் கூற்றாகிக் கோளு மாகிக் குணமாகிக் குறையாத உவகைக் கண்ணீர்

ஆறாத வானந்தத் தடியார் செய்த வநாசாரம் பொறுத்தருளி யவர்மே லென்றுந்
தீறாதபெருமானைத்திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தேனுனே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பாரான், பாரினது பயனுன், பல்லுயிர்க்கும் பரிவோன், கருதுவார் மனத்தான், மெய்யடியார் வேண்டுவதே வேண்டுவான், ஓங்காரத்தொருவன், கற்றுன், கற்பனவும் தானேயானுன், குறையாத உவகைக் கண்ணீர் ஆறாத வானந்தத் தடியார் செய்த வனுசாரம் பொறுத்தருளி அவர்மே லென்றும் சீருத பெருமான், பிறப்பான், பிறவாத பெருமையான், நினையாதாரை நினையான், நினைவோரை நினைவோன், சங்கரன், சம்பு என்றிவை முதலிய பெருமைகளா லறியப்படும் திருமாற்பேற்றின் இறைவனை நான் சென்றடைந்தேன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—திருமாற் பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச் சென்றடைந்தே னுனே என்பது மகுடம்.—(1) கருதுவார் மனத்தான் - கருதும் மனத்துள் விளங்குபவன். 6, 8-லும் காண்க.—(3) முத்து - முழுமணிச்சோதி. 492 பார்க்க. மரகதம் - அம்மைபாகம். மாமணி - இறைவன் பாகம். விலை பெரிய வெண்ணீறு - திருநீற்றுப்பதிகம் பார்க்க. மெய்யடியார் வேண்டுவதே வேண்டுவான் - "வேண்டத் தக்க தறிவோய்நீ" (திருவாசகம்).—(4) ஓங்காரம் - பிரணவம். பிரணவ வாச்சியன் சிவன் என்பது வேதம்.—(5) நீறுமிழு நெருப்பு-நீற்றை விளைக்கும் நெருப்பு. குறையாத...பெருமான் - கண்ணப்பதேவ நாயனுர் முதலியோரது சரிதங்கள் காண்க.—(7) பிறப்பானை - பிறவாத பெருமையானை - பிறவிகளில்வரும் எல்லா உயிர்களுள்ளும் நிறைந்தும் தான் பிறவியில் வாராதவன், "கருவினு லன்றியே கருவெலா மாயவன்" (தேவா). பிறப்பானை - பிறக்கச் செய்வானை என்றலுமாம்.—(8) "இன்பஞ் செய்தலிற் சங்கரனெம் பிரான் இன்ப மாக்கலிற் சம்பு விடும்பைநோய், என்ப தோட்டு மியல்பி னுருத்திரன்" (காஞ்சிப்புரா - பரசிரா-44) காளத்தி - இறைவர் பெயர்.—(9) பற்றிப் பல்லுயிர்க்கும் பரிவோன் - (1) பார்க்க. உயிர்கள்மேல் வைத்த பரிவு காரணமாகவே, மாறு அருட்கூத் தியற்றுபவன். நோக்கம் - பார்வை. சங்கரன் - இன்பஞ் செய்பவன். சம்பு - இன்பத்துக்குப் பிறப்பிடமானவன்.

தல விசேடம் :—திருமாற்பேறு - தொண்டை நாட்டின் 11-வது தலம். இங்குச் சக்கரம் பெறவேண்டித் திருமால் தமது ஒரு கண்ணைத் தோண்டி அருச்சித்துப் பேறு பெற்றனர் என்பது வரலாறு. தலப் பெயர் இதனை விளக்கும். அருச்சித்த தாமரைக் கீடாகத் தமது கண்ணை எண்ணித் தோண்டிப் பூசித்த காரணத்தால் மாலுக்குப் பத்மாட்சன் என்ற பெயரும் வழங்கும். ஆளுடைய பிள்ளையார் பதிகத்துள், "மன்னிய மாலோடு சோமன் பணிசெய" என்றது இவ்வரலாறு குறிப்பது. அரசுகளது திருக்குறுந்தொகைப் பதிகங்களும் பார்க்க. இறைவர் திருமுன்பு மேற்கு நோக்கி அவரைக் கைகூப்பித் தரிசித்துக்கொண்டு திருமால் எழுந்துள்ள கோலம் காண்க. சுவாமி - மால்வணங்கீசர்; மணிகண்டீசர்; அம்மை - கருணைநாயகி: அஞ்சனாட்சியம்மை; பதிகம் - 6.

இது காஞ்சிபுரம் - அரக்கோணம் கிளைப்பாதையில் பளுர் என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும் தென்மேற்கில் வட்சாலை வழி இரண்டு நாழிகை யளவில் அடையத் தக்கது.

1593. "ஏகம்பன் காணவனென் னெண்ணத்தா" னெனப் போற்றிப்,
பாகம்பெண் ணுருவானைப், பைங்கண்விடை யுயர்த்தானை,

*நாகம்பூ ணுகந்தானை, நலம்பெருகுந் திருநீற்றின்*
*ஆகந்தோ யணியானை யணைந்துபணிந் தின்புற்றார்.* ௩௨௮

(இ - ள்) வெளிப்படை. *கச்சி ஏகம்பன் காணவனென் னெண்ணத் தானே"* என்று துதித்து, ஒரு பாகத்தில் அம்மையைக் கொண்ட திருவுருவுடையவரை, பசிய கண்ணுடைய இடபத்தைக் கொடியாகக் கொண்டவரை, பாம்புகளை அணியாகக் கொண்டவரை, நலம் பெருகும் திருநீற்றினை நிறையப் பூசிய திருமேனியின் அழகுடையவரை, அணைந்து பணிந்து இன்ப மடைந்தார்.

(வி - ரை) **ஏகம்பன் காணவனேன் எண்ணத்தான்"** இது தாண்டகத் திருப்பதிகங்களின் குறிப்பும் கருத்துமாம். **எனப் போற்றி** - என்ற கருத்துடைய மகுடமுடைய, திருப்பதிகங்களாற் றுதித்து. முன்பாட்டிற் கூறியபடி பிற தலங்களைச் சென்று இறைஞ்சிய நாயனார் காஞ்சியின்மேல் வைத்த தொடர்ந்த பெருங்காதலினால் அங்கு மீண்டும் "துன்னினார்" ஆதலின் அக்காதலானது கச்சி ஏகம்பன் தம் எண்ணத்தில் நின்று அகலாமை காரணமாக உளதாயிற்று என்பது இப்பதிகங்களாற் பெறப்பட்டது.

**பாகம் பெண் உருவான்** - *"அருந்தவத்தா ளாயிழையா ளுமையாள் பாக மமர்ந்தவன்காண்"* (5) என்ற இத்தலத் திருத்தாண்டகக் ("உரித்தவன்காண்" என்ற பதிகம்) கருத்து. **பெண்பாக உருவான்** என்க.

**திருநீற்றின் அணிதோய் ஆகத்தானை** என்க. **நலம் பெருகும்** - திருநீற்றினால் விளையும் நலங்களைத் திருநீற்றுப் பதிகத்தாலும், உபநிடதங்களாலும் அறிக. *"கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை, நீற்றவன் காண்"* என்ற இத்தலத் திருத்தாண்டகக் கருத்து.

**பாகம் பெண்** - அருட்கோலமும், **விடை யுயர்த்தல்** - அறக்கோலமும், **நாகம் பூண்** - அன்புக் கோலமும், **திருநீற்றின் அணி** - இன்பக் கோலமும் குறித்தன. 328

V *திருச்சிற்றம்பலம்* **திருச்சிற்றம்பலம்**

*கூற்றுவன்காண் கூற்றுவனைக் குமைத்த கோன்காண்*
*குவலயன்காண் குவலயத்தி னீரா னுன்காண்*
*காற்றவன்காண் கனலவன்காண் கலிக்கு மின்காண்*
**கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை**
**நீற்றவன்காண்** *நிலாவூருஞ் சென்னி யான்காண்*
*நிறையார்ந்த புனற்கங்கை நிமிர்ச டைமேல்*
*ஏற்றவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி*
*யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே.* 1

*அறுத்தான்கா ணயன்சிரத்தை யமரர் வேண்ட*
*வாழ்கடலி னஞ்சுண்டங் கணிநீர்க் கங்கை*
*செறுத்தான்காண் டேவர்க்குந் தேவன் றான்காண்*
*டிசையனைத்துந் தொழுதேத்தக் கலைமான் கையிற்*
*பொறுத்தான்காண் புகலிடத்தை நலிய வந்து*
*பொருகயிலை யெடுத்தவன்றன் முடிதோ ளிலைஞ்*
*சிறுத்தான்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி*
*யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே.* 10

*திருச்சிற்றம்பலம்*

**பதிகக் குறிப்பு :**—*"எழிலாரும் பொழிலார் கச்சி யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே"* என்பது பதிகக் கருத்தும் மகுடமுமாம். இரண்டு பதிகங்களும்

இவ்வொரு மகுடமே கொண்டன. இவ்வாறு ஒரே மகுடம் பூண்ட இரண்டு பதிகங்கள் கொண்டது காஞ்சிபுரத்திற்குத் தனிச் சிறப்பு. கயிலைத் திருத்தாண்டகப் பதிகங்கள் மூன்றும் "கயிலை மலையானே போற்றி போற்றி" என்ற மகுடந் தாங்கி நிற்பது அத்திருமலையின் தனிச் சிறப்புணர்த்துதலும் இங்கு உடன் நினைவு கூர்தற்பாலது. கூற்றுவன் - கூற்றுவனைக் குமைத்தகோன், கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை நீற்றவன், பல்லுயிர்களாகியெங்கும் பரந்தவன், தோற்ற நிலை யிறுதிப்பொருளாய் வந்த மருந்தவன், துணையிலி, மலைமங்கை பங்கா என்பார் வாயவன், சொற்பதமுங் கடந்து நின்ற எம்மான் என்றிவை முதலியவற்றால் அறியப்படுகின்ற கச்சி ஏகம்பன் என் எண்ணத்தான்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கூற்றுவன் - மறைகளைச் சொன்னவன். இறுதி பயப்பவன். கூற்றுவனை - காலனை. குமைத்தல் - அழித்தல். கனபவள......நீற்றவன் - இதனை "நலம்பெருகுந் திருநீற்றின் ஆகந்தோ யணியான்" (1593) என்று பொருள் விரித்தருளினார் ஆசிரியர். நிலா ஊரும் - ஊர்தல் - அசைதல்.—(2) தோற்றம் நிலை இறுதிப் பொருளாய் வந்த மருந்து - படைக்கப்பட்டும், நிலைபெறுத்தப் பட்டும், அழிக்கப்பட்டும் வரும் பொருளாகிய உடல் - கரணம் - உலக முதலியவை மாயையால் ஆக்கப்படுவன ; மாயை இறைவனது பரிக்கிரக சத்தியாதலானும் உயிர்களைக் கட்டிய பாசம் போக்க உதவுவ தாதலானும் மருந்தவன் - என்றார். மருந்தவன் - மருந்தையுடையவன். "மருளுலா மலங்க டர்க்கு மருந்திவை வைத்திய நாதன்" (சித்தி - 233). படைத்தல் முதலிய முத்தொழிலும் மலங்களைத் அடைத்தலின் மருந்து என்றார் என்றலுமாம். பொறை தீர்ப்பான் - தாங்குபவன். அழிப்பவன் என்றலுமாம்.—(3) துணையிலி - "தாயுமிலி தந்தையிலி தான்றனியன்" (திருவா). உவமன் இல்லாதவன் - ஒப்பற்றவன் - என்றலுமாம். துணை - ஒப்பு.—(4) வாயவன் - வாக்கில் விளங்குபவன். வாய் - ஏழனுருபாகக்கொண்டு பங்கா என்பாரிடத்தில் விளங்குபவன் என்றலுமாம்.—(8) வேல் - ஆயுதப் பொது. வெல்வது வேல். உரும் - இடி. முழங்கி உருமெனத்தோன்று மழை - மழையின் அடையாளங்கள். மின்னி இடித்தவன் - மின்னும் இடியும் ஓரிடத்தில் ஒரு காலத்தில் விளைவனவாயினும், ஒளி, வேகத்தால் முன்னும், இடியாகிய ஒலி, வேகக்குறைவினால் பின்னும் புலனாவன ; ஆதலின் மின்னி இடித்தவன் என்ற அம்முறை வைத்தோதினார். இவை வானநூல் பௌதிகநூல் நுட்பங்கள்.—(9) வஞ்சகன் - நிறைந்திருந்தும் வெளிப்படாது மறைந்து இருத்தல் வஞ்சகமெனப்பட்டது. மருந்து - பிறவி நோய் தீர்த்தலால் மருந்தென்றார். உருவகம். நினைவார்க்கு என்றும் வான் பிணிகள் தீரும் வண்ணம் மருந்து என்க. "மருந்து மாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்" (தேவா) படர் சடை எட்டு - எட்டுத்திசையும் படரும் சடை. அவரது சடை ஒன்பதென்ப. "ஒன்பது போலவர் கோலக் குழற்சடை" (தேவா).—(10) வேம் மான உழுவை - வெவ்விய - கொடிய - பெரிய - புலி. மானம் - பெரிது. உழுவை - புலி.

VI திருச்சிற்றம்பலம்

திருத்தாண்டகம்

உரித்தவன்கா ணுரக்களிற்றை யுமையா ளொல்க
 வோங்காரத் தொருவன்கா ணுணர்மெய்ஞ் ஞானம்
விரித்தவன்காண் விரித்தநால் வேதத் தான்காண்
 வியனுலகிற் பல்லுயிரை விதியி னாலே

தெரித்தவன்காண் சில்லுருவாய்த் தோன்றி யெங்குந்
திரண்டவன்காண் டிரிபுரத்தை வேவ வில்லால்
எரித்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. 1

பெருந்தவத்தெம் பிஞ்ஞகன்காண் பிறைசூ டிகாண்
பேதையேன் வாதையுறு பிணியைத் தீர்க்கும்
மருந்தவன்காண் மந்திரங்க ளாயி னன்காண்
வானவர்கள் தாம்வணங்கு மாதே வன்காண்
அருந்தவத்தா ளாயிழையா ளுமையாள் பாக
மமர்ந்தவன்கா ணமரர்கடா மர்ச்சித் தேத்த
விருந்தவன்கா ணெழிலாரும் பொழிலார் கச்சி
யேகம்பன் காணவனென் னெண்ணத் தானே. 5

முந்தைகாண் மூவரினு முதலா னன்காண் மூவிலைவேல் மூர்த்திகாண் முருக வேட்குத்
தந்தைகாண் டண்கடமா முகத்தினுற்குத் தாதைகாண்டாழ்ந்தடியேவணங்குவார்க்குச்
சிந்தைகாண்சிந்தாதசித்தத்தார்க்குச் சிவனவன்காண்செங்கண்மால்விடையொன்றேறு
மெந்தைகாணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—முன் பதிகக் குறிப்புப் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) உரம் - வலிமை. ஒல்க - அஞ்ச. உணர்-மெய்ஞ் ஞானம் - உணரவேண்டிய மெய்ஞ்ஞானம். "அறிவறிந்த" என்புழிப்போலக் கொள்க. விரித்தவன் - உபதேசித்தவன். விரித்த - அவ்வாறு விரித்த. வியனுலகில்...தெரித்த வன் - "பரந்தவன்காண் பல்லுயிர்க ளாகியெங்கும்" (முன் பதிகம் - 2). உயிர்களு க்குள் நிறைந்து உலகிற் றோற்றுவித்தல் கருத்து. சில்லுருவாய் - அதி நுண்ணிய நிலை யின் உருவ முதலாக.—(2) நேசன்...குழகன்காண் - "வருந்தான்காண்...வண்ணம்" (முன் பதிகம் - 9). மங்கை பங்கன் - பாகமமர்ந்தவன் (5). பாகம் சேர்த்தினன் (7). இக்கருத்தை ஆசிரியர், "பாகம்பெண் ணுருவானை" (1593) என்று விதந்து எடுத்துக் காட்டினர்.—(3) பொறையவன்...ஓங்கும் - ஏழ்பூமி தாங்கி ஓங்கும் பொறை என்க. "பொறை தீர்ப்பான்" (முன் பதிகம் - 3) என்ற கருத்து. புண்டரீகப் போது - அன்பர்க ளது இதயதாமரை. மறையவனை - பிரமனை. மாசுணம் - பாம்பு. எல்லி - ஊழி.—(5) பேதையேன்...மந்திரங்க ளாயினன்காண் - நாயனாரது சரித அகச்சான்று. அருந்தவத்தா ளாயிழையாள் - காமாட்சியம்மையார். தல சரிதக் குறிப்பு (1134).—(6) சிலந்தி - திருவானைக்காவின் சரிதக் குறிப்பு. பார் ஆள் செல்வம் - கோச் செங்கட் சோழராகி உலகாண்ட சிறப்பு.—(7) சமயம்...தலைவன் - "ஆறு சமயத் தவரவரைத், தேற்றுந் தகையன" என்றபடி ஆறு சமயங்களிலும் அவ் வவர் பக்குவ பேதத்துக்கேற்ப விளங்குபவன்.—(8) தொண்டு படுதல் - தொண்ட ராகிப் பணிசெய்தல். உண்டுபடு - உண்டாடல்படச் செய்யும். உண்ணப்பட்ட என் றலுமாம். வண்டுபடு - வண்டுகள் படியும்.—(9) முந்தை - எல்லார்க்கும் முன்னவன். "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" (ஆலவாய் - தாண்). தண்கடமா முகத்தினன்-விநாயகர். விநாயகரைப் பாராட்டிய சில்லிடங்களுள் இஃதொன்று. இப் பாட்டுக் கணபதியையும் முருகவேளையும் ஒருங்கு போற்றிய சிறப்புடையது. சிவன் - முதல்வன். இன்பஞ் செய்வோன்.—(10) மின்னிசையும் வெள்ளெயிற்றோன் - வெள் ளிய கோரப்பற்களையுடைய அரக்கன் - இராவணன். இன்னிசை - சாமவேதம். அடி அடர்ப்ப - அடியால் அடர்த்து.

தல விசேடம் :—திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்திறுதியில் உரைத்தவை பார்க்க.

1594. திருக்கச்சி யேகம்பம் பணிந்தேத்தித் திங்களார்
நெருக்கச்செஞ் சடைக்கணிந்தார் நீடுபதி தொழநினைவார்
வருக்கைச்செஞ் சுளைபொழிதேன் வயல்விளைக்கு நாட்டிடைப்போய்ப்
பருக்கைத்திண் களிற்றுரியார் கழுக்குன்றின் பாங்கணைந்தார். ௩௨௯

(இ - ள்) திருக்கச்சி...ஏத்தி - திருக்கச்சியினையும் திருவேகம்பத்தினையும் இறைஞ்சித் துதித்து; திங்களார்...நினைவார் - பிறைச்சந்திரனைத் தமது செறிந்த செஞ்சடைக் கற்றையில் அணிந்த இறைவர் நீடி எழுந்தருளிய பிற தலங்களைச் சென்று தொழுவதற்கு நினைந்தவராகி; வருக்கை...போய் - பலாப்பழங்களின் செவ்விய சுளைகள் பொழிந்த தேன் பெருகி வயற்பயிரை விளையச்செய்யும் அத்திருநாட்டினிற் சென்று; பருக்கை...பாங்கணைந்தார் - பருத்த கையினையுடைய வலிய யானையின் உரிவையை யுடையவரது திருக்கழுக்குன்றின் பக்கத்தில் அணைந்தனர்.

(வி - ரை) திருகச்சி ஏகம்பம் - கச்சியினின்றும் புறப்படுகின்ற நாயனார் திருக்கோயிலினையும் திருநகரத்தினையும் வணங்கி மேற்சென்றனர் என்க. ஆளுடைய பிள்ளையார் புராணம். 518, 1029 பார்க்க. "என் எண்ணத்தான்" என்று காஞ்சியினை நினைந்துகொண்டு பிறபதிகளினின்றும் மீண்டருளிய நாயனார், அவ்வாறே திருஏகம்பத்தை இறைஞ்சிச் செல்வார், "ஏகம்பன் என் எண்ணத்தான்" என்று நினைந்து ஏத்தி மேற்செல்வாராயினர் என்பது. ஆளுடையபிள்ளையார் திருக்காளத்தியினின்றும் புறப்படுவார் அத்திருமலையைத் தொழுது "எந்தையா ரிணையடி என்மனத் துள்ளவே" என்று ஏத்திச்சென்றது இங்கு நினைவு கூர்தற்பாலது. இரண்டு பதிகங்கள் காண்பது மிக்கருத்துப் போலும்.

திங்களார் - ஆர்விகுதி பெருமை குறித்த பன்மை விகுதி. ஆர் - ஆத்தி(மலர்) என்று கொண்டு, ஆர் நெருக்க - ஆத்தியினை அணுக; திங்கள் சடைக்கணிந்தார் - பிறையைச் சடையில் அணிந்தவர் என்று கூட்டி உரைத்தலுமாம். ஆத்தியின் சிறப்பு "ஆத்திசூடி யமர்ந்த தேவன்" என்று ஔவையார் தொடங்கி ஏத்தியதனாலுமறிக. சடைக்கு - சடையில்; நான்கனுருபு ஏழனுருபின் பொருளில் வந்த உருபு மயக்கம்.

நீடுபதி - நீடியெழுந்தருளிய பல பதிகள். பதி - சாதியொருமை. நினைவார் - அணைந்தார் - என்க. நினைவார் - எதிர்கால முற்றெச்சம்.

வருக்கை - பலாவின் வகை. தேன் - பலாப்பழச் சுளைகளின் வரும் சாறு. வயல் விளைக்கும் - பெருக்கினால் வயல் விளைதற்குக் காரணமாகும். வருக்கை, வேரினின்றும் கனிகள் வெடித்து மேல் மண்ணை நனைத்து ஈரம்செய்தல் காணத்தக்கது. இதனால் நாட்டு வளமும் கூறியபடி.

பருக்கைக் களிறு - திண்களிறு என்று தனித்தனி கூட்டுக. பருங்கை என்பது பருக்கை என நின்றது. "பருக்கையானை" (தேவா); "பனைக்கை மும்மத வேழம்" (தேவா - குறுந்) என்றவை காண்க.

உரியார் - உரி - தோல். உரிக்கப்படுதலால் உரி எனப்பட்டது. "உடுக்கை" என்பதுபோல. உரியார் - உரியினை அணிந்தவர்.

பாங்கு - அணிமை. பக்கம்.



1595. நீடுதிருக் கழுக்குன்றி னிருத்தனார் கழல்வணங்கிப்
பாடுதமிழ்த் தொடைபுனைந்து பாங்குபல பதிகளிலுஞ்

சூடுமிளம் பிறைமுடியார் தமைத்தொழுது போற்றிப்போய்
மாடுபெருங் கடலுடுத்த வான்மியூர் வந்தணைந்தார். ௩௩௦

(இ - ள்) நீடு...புனைந்து - நீடும் திருவுடைய கழுக்குன்றில் எழுந்தருளிய அருட் கூத்தரானது கழல்களை வணங்கிப், பாடும் தமிழ்த் தொடையாகிய தேவாரங்களினால் இறைவரைப் புனைந்து; பாங்கு...போய் - அப்பக்கத்திலுள்ள பல தலங்களிலும் சென்று இளம்பிறையினைச் சூடும் முடியவராகிய சிவபெருமானைத் தொழுது துதித்து மேற் சென்று; மாடு......மருங்கணைந்தார்-பக்கத்தில் பெருங்கடலாற் சூழப்பட்ட திருவான் மியூர் என்னும் தலத்தை வந்தடைந்தனர் (நாயனார்).

(வி - ரை) திரு நீடு கழுக்குன்று - என்க. இது வேதகிரி எனப்படுதலால் நீடுதிரு என்றார். நீடு - என்றுமுள்ள. திரு - இறைவர் வாக்காகிய திரு.

கழுக்குன்று - கழுகுகள் பூசித்தலால் இப்பெயரால் வழங்கப்படும். தலவிசேடம் பார்க்க.

நிருத்தனார் - அருட் கூத்தியற்றுபவர்.

பாடு தமிழ்த்தொடை - பாடும் தமிழாலாகிய மாலை. பாடு - பெருமையுமாம்.

பாங்கு பல பதிகள் - திரு வன்பார்த்தான் பனங்காட்டூர், திருமாகறல், திரு விடைச்சுரம், திருக்கச்சூராலக்கோயில் முதலியன. இவற்றுக்கு நாயனார் பதிகங்கள் கிடைத்தில!

மாடுபெருங் கடலுடுத்த - கடற் கரையில் உள்ள என்றலுமாம். 330

திருக்கழுக்குன்றம்

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

மூவிலைவேற் கையானை மூர்த்தி தன்னை
    முதுபிணக்கா டுடையானை முதலா னானை
யாவினிலைந் துகந்தானை யமரர் கோனை
    யாலால முண்டுகந்த வையன் றன்னைப்
பூவினின்மே னான்முகனு மாலும் போற்றப்
    புணர்வரிய பெருமானைப் புனிதன் றன்னைக்
காவலனைக் கழுக்குன்ற மமர்ந்தான் றன்னைக்
    கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னானே. 1

பல்லாடு தலைசடைமே லுடையான் றன்னைப்
    பாய்புலித்தோ லுடையானைப் பகவன் றன்னைச்
சொல்லோடு பொருளனைத்து மானான் றன்னைச்
    சுடருருவி லென்பறாக் கோலத் தானை
யல்லாத காலனைமுன் னடர்த்தான் றன்னை
    யாவின்கீ ழிருந்தானை யமுதா னானைக்
கல்லாடை புனைந்தருளுங் காபா லியைக்
    கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னானே. 2—10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—மூவிலைவேற் கையான், சொல்லோடு பொருளனைத்து மானான், கல்லாடை புனைந்தருளுங் காபாலி என்றிவை முதலிய தன்மைகளா லறியப் படுகின்ற கற்பகத்தைத் திருக்கழுக்குன்றிற் கண்ணார நான் கண்டேன்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—இத்திருப்பதிகத்தில் இரண்டு பாட்டுக்களே கிடைத்துள்ளன!—(1) வேல் - ஆயுதப் பொதுமையை உணர்த்திச் சூலம் என்ற பொருள் தந்து நின்றது. முது பிணக் காடு - ஊழி முடிவின் உலகம். கற்பகம் - வேண்டின எல்லாம் எளிதில் நல்குதலால் இவ்வாறு அருமைப்பாடுபெறக் கூறினார். கண்ணாரக் கண்டேன் - கண்களின் காட்சி அமைவு படும்படி காண என்ற இதுவும் அருமைப் பாடு குறித்தது. மணிவாசகப் பெருமானார் "கணக்கி லாத்திருக் கோல நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே" என்று போற்றி யருளியதும் நினைவு கூர்க.—(2) பல்லாடு-பற்கள் வீழ்ந்த. அடு - உக்க - வீழ்ந்த. பல் அடு என்பது பல் ஆடு என முதனீண்டு வந்தது செய்யுள் விகாரம். "பல்லடைந்த வெண்டலையில்" (சிரபுரம்-பிள்-தேவா.) சொல்லோடு பொருள் அனைத்தும் - சொல்லும் அதனால் உணர்த்தப்படும் பொருளும் என்ற இருவகையில் அடங்கும் எல்லா வுலகமும். அல்லாத - பகைத்த. நன்கல்லாத. கல்லாடை - காவியுடை - இறைவர் காவியுடை தரித்த வரலாற்றுக்குத் தமிழ் மறையிற் கண்ட ஆதரவு; இது துறவுக் கோலத்துக்குரியது. "காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக் கவின்றகல் லாடைமேற் புனைந்து, யாமெலாம் வழுத்தும் துறவி" (காஞ்சிப் புரா.) கல்லாடையின் செவ்வெளி உள்ளே விளங்கும் ஞானத்தீயின் உருவைக்காட்டுவது என்பர்.

தலவிசேடம் :—திருக்கழுக்குன்றம்-கழுகுகள் பூசிக்கும் மலை என்பதுபொருள். வடநாட்டார் பட்சி தீர்த்தம் என்று தேற்றமாய் வழங்குவர். கழுகுகள் நாளும் வந்து பூசித்து உணவுண்டு செல்லும் அதிசயம் இன்றும் கண்கூடாகக் காணத்தக்கது. சண்டன் பிரசண்டன் என்றும், சம்பாதி சடாயு என்றும், சம்புகுத்தன் மாகுத்தன் என்றும், சம்பு ஆதி என்றும் பெயர்களையுடைய கழுகுகள் முறையே முதலாவது இரண்டாவது மூன்றாவது நான்காவது யுகங்களிற் பூசிப்பாராயினர் என்பதும், இவர்கள் சாபத்தாற் கழுகுகளாயினர் என்பதும் வரலாறு. வேதங்கள் மலையுருவெடுத்து இறைவரைத் தாங்குவதால் வேதகிரி எனப்படும். நந்திதேவர், இந்திரன், கோடியுருத்திரர் முதலியோரும் பூசித்துப் பேறு பெற்றனர். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நீரிடி விழுந்து இறைவருக்குத் திருமஞ்சனமாட்டும் செய்தியால் இந்திரன் பூசிப்பது இன்றும் அறியவுள்ளது. மலையடிவாரத்தில் உள்ள சங்கு தீர்த்தத்தில் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை வலம்புரிச் சங்கு தோன்றி வெளிப்படுவதும் கண்கூடு. சங்கு தீர்த்தத்திற்குத் தென்கீழ்த் திசையில் கோடியுருத்திரர் பூசித்த உருத்திரகோடி என்ற தலம் (தேவார வைபபுத்தலம்) உள்ளது. மணிவாசகப் பெருமான் குருதரிசனம் கண்டு திருக்கழுக்குன்றப்பதிகம் பாடியருளினர். சைவசமய பரமாசாரியர்கள் நால்வராலும் பாடப் பெற்ற பெருமையுடையது. நியமமாகத் தீர்த்தத்தில் தோய்ந்து மலையை வலம் வருவோர் எல்லா நோய்களினின்றும் நீங்கி யின்பம் பெறுதல் இன்றும் தேற்றமாக அறியப் படும் உண்மை. மலை, பாடல் பெற்ற தலம். அடிவாரத்தில் உள்ளது வேதபுரி. சுவாமி - வேதகிரீசுவரர்; அம்மை - பெண்ணினல்லாளம்மை; தீர்த்தம் - சங்க தீர்த்தம்; (அடிவாரத்தில் - சுவாமி - பக்தவத்சலர்; அம்மை -திரிபுரசுந்தரி). பதிகம் 3.

இது செங்கற்பட்டு என்ற இருப்புப்பாதை நிலயத்தினின்றும் தென் கிழக்கில் கற்சாலை வழி 9 நாழிகை யளவில் உள்ளது.

1597. திருவான்மி யூர்மருந்தைச் சேர்ந்துபணிந் தன்பினொடும்
பெருவாய்மைத் தமிழ்பாடி, யம்மருங்கு பிறப்பறுத்துத்
தருவார்தங் கோயில்பல சார்ந்திறைஞ்சித் தமிழ்வேந்தர்
மருவாரு மலர்ச்சோலை மயிலாப்பூர் வந்தடைந்தார். ருருக

(இ - ள்) *திருவான்மியூர்......தமிழ்பாடி - திருவான்மியூர் மருந்து நாதரைச் சேர்ந்து பணிந்து அன்புடனே பெருவாய்மையுடைய தமிழ்ப் பதிகம் பாடி; அம் மருங்கு* - அப்பக்கத்தில்; *பிறப்பறுத்துத் தருவார்-பிறவியை அறுத்து முத்தி அருள்வாராகிய இறைவருடைய; கோயில்......இறைஞ்சி - பல தலங்களையும் சார்ந்து வணங்கி; தமிழ் வேந்தர் - தமிழ் அரசராகிய நாயனார்; மருவாரும்......வந்தடைந்தார் - வாசனை நிறைந்த மலர்ச் சோலைகள் சூழ்ந்த திருமயிலாப்பூரினில் வந்து சேர்ந்தனர்.*

(வி - ரை) மருந்து - *திருவான்மியூர்ச் சுவாமியினது மருந்தீசர் என்ற பெயர் போற்றப்பட்டது; "கோட்டூர்க் கொழுந்தே" (தேவா - நம்பி) என்றதுபோல.*

பெருவாய்மைத் தமிழ் - பெருவாய்மையாவது, *ஞானத்தின் முடிந்த உண்மை. சிவனை அடைந்து உயிர்கள் பாசம் நீங்கி யின்பம் பெறுதல். இத்தலத்துத் திருக்குறுந்தொகைப் பதிகம் முழுமையும் இக்கருத்தையே வற்புறுத்துகின்றது.* பிறப் பறுத்துத் தருவார் *என்ற குறிப்புமது.*

அம்மருங்கு - கோயில் பல - *என்றுகூட்டுக. இவை நெடுங்குன்றம், குன்றத்தூர், திருநின்றவூர், திருவேற்காடு, நெற்குன்றம், திருவலிதாயம் முதலாயின. இவற்றுக்கு நாயனார் பதிகங்கள் கிடைத்தில!.*

பிறப்பறுத்துத் தருவார் - *பிறவி நோய் போக்கி இன்ப வீடு தருவாராகிய சிவபெருமான்.* தருவார் *என்றதற்குப் பேரின்ப முத்தி எனச் செயப்படு பொருள் வருவிக்க. மேல்வரும் பாட்டில்* "கருநாமந் தவிர்ப்பார்" *என்றும் கருத்துமிது.*

தமிழ் வேந்தர் - *திருநாவுக்கரசர். இத்திருப்பாட்டின் ஈற்றடி முற்று மோனை. தமிழ்வேந்தர் என்ற இடத்துத் தமிழ் அணிபெற வைத்தது கவிநயம். வரும் பாட்டின் முதலடியும் இவ்வாறே முற்றுமோனையாதலும் குறிக்க.*

மருங்கெங்கும்—பிறப்பறுத்தல்—*என்பனவும் பாடங்கள்.* 331

### திருவான்மியூர்

*திருச்சிற்றம்பலம்* திருக்குறுந்தொகை

*விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர், அண்ட நாயகன் றன்னடி சூழ்மின்கள்,*
*பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும், வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே.* 1

உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலாற், கள்ள முள்ள வழிக்கசி வானலன்
*வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை, வள்ள லாகிய வான்மியூ ரீசனே.* 4

ஓட்டை மாடத்தி லொன்பது வாசலுங், காட்டின் வேவதன் முன்னங் *கழலடி*
*நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்,* வாட்டந் தீர்த்திடும் *வான்மியூ ரீசனே.* 9

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*ஓட்டை மாடத்தில் ஒன்பது வாசலும் காட்டில் வேவதன் முன், விரைந்து, விண்ட நாண்மலர் கொண்டு, பொருளும் சுற்றமும் பொய்ம்மையும் விட்டுச், சிந்தை மயக்கறுத்து, உள்ள முள்கலந்து, பாதி பெண்ணுருவாய பரமன்! ஆதி! எந்தை! ஈசன்! என்று குணங்கள் பரவி, உள்குழைந்து அழுதிரேல் வந்து நின்று வான்மியூ ரீசன் வாட்டந் தீர்த்து மருளறுத்திடும்.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) விண்ட - *வாய்விண்ட; முகையவிழ்ந்து புதிதின் மலர்ந்த.* பண்டுசெய்த பாவம் - *பிறவிக்குக் காரணமான பழவினை.*—(2) மருளுமாந்தரை...அருளுமாவல்ல ஆதியாய்! - "*மயங்குவோரை மயக்க நீக்கியருளும் ஆதியே!*" *என்பது போற்றும் வகை.* மருள் - *பொருளல்லவற்றைப் பொருள் என் றுணரும் மயக்கம்.*—(4) உள்ளம் உள்கலந்து - *உள்ள முழுமையும் அவனுக்கே யிட*

மாகக்கொண்டு. கள்ளம் - வஞ்சகம்; ஆன்ம உணர்வு.—(6) வஞ்சம் - நினைக்கவொட்டாது தடுத்து இடுக்கண் செய்யும் புலனுசை. "மாறி நின்றெனை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழி" (திருவா). ஐவர் நினைக்குறர் என்று தீமைதீர்க்க வழி கூறியவாறு. அந்த ஐவரின் வஞ்சம் என்க.—(7) குறைந்து உக்கவர் - குறைசொல்லிப் பணிந்து அடைந்தவர். "நாளுமிகும் பணிசெய்து குறைந்தடையு நன்ஞளில்" (1310) "பற்பாவும் வாயாரப் பாடி யாடிப் பணிந்தெழுந்து குறைந்தடைந்தார் பாவம் போக்க; கிற்பானை" (கீழ்வேளூர். தாண் - 2). உக்கவரும், மொழியாரவரும் வணங்க என்று எண்ணும்மை தொக்கன.—(8) வாதை - பிறவிநோய்.—(9) உருவகம். ஓட்டை மாடம் - எண்ணிறந்த ஓட்டைகளுள்ள உடல். காட்டில் வேவதன் முன் - சாவு வந்து உடலைச் சுடு காட்டில் எரிப்பதன்முன். இறத்தல் உறுதியாதலின் அதன்முன் என்க.—(10) சீரம்- சிரமம் என்றது சீரம் என வந்தது மரூஉ. சீரமாக - சீரணிக்க - அழிய - என்றலுமாம். வாரம் - அன்பு - அருள். " வாரமாகித் திருவடிக்குப் பணிசெய் தொண்டர்" (தேவா).

தலவிசேடம்:—திருவான்மியூர் - தொண்டைநாட்டின் 25-வது தலம். வான்மீக மகா இருடிக்கு அருள்செய்த தலமாதலின் இப்பெயர் பெற்றது. தேவர்கள் கடல் கடைந்து பெற்ற அமுதத்தால் சிவலிங்கந் தாபித்து பூசித்த தலமாதலின் இறைவர் மருந்தீசர் எனவும் வழங்கப்படுவர். மருந்து, நோயும் மயக்கமும் தீர்ப்பது; சாவாமை தருவது; ஆதலின் அமுதம் மருந்தெனப்படும். "வாட்டந் தீர்த்திடும்"-"வாதை தீர்த்திடும்" - என்ற அப்பர் சுவாமிகள் பதிகக் குறிப்பும், "சென்றூர் தம்மிடர்தீர்" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரக் குறிப்பும் காண்க. திருமூலத்தான மகாலிங்க மூர்த்தியின் திருவுருவம் பால் நிறமுடையது; சுயம்புலிங்கம்; மேற்கு நோக்கிய சந்நிதி. சுவாமி - மருந்தீசர், பால்வண்ணநாதர்; அம்மை - சொக்கநாயகி; பதிகம் - 3.

இது திருமயிலாப்பூரினின்றும் தென் கிழக்கில் கற்சாலை வழி நான்கு நாழிகை யளவில் அடையத்தக்கது. மோட்டார் பஸ் வசதிகள் உண்டு. கடற்கரைத் தலம். சென்னையினின்றும் எட்டு நாழிகை யளவுண்டு.

1597. வரைவளர்மா மயிலென்ன மாடமிசை மஞ்சாடுந்
தரைவளர்சீர்த் திருமயிலைச் சங்கரனூர் தாள்வணங்கி,
யுரைவளர்மா லைகளணிவித் துழவாரப் படையாளி
திரைவளர்வே லைக்கரைபோய்த் திருவொற்றி யூர்சேர்ந்தார். ௬௧௨

(இ - ள்) வரைவளர் மாமயில் என்ன - மலைமேல் வளர்கின்ற பெரிய மயில் போல; மாடம் மிசை மஞ்சு ஆடும் - மாடங்களின்மேல் மேகம் தவழ்கின்ற; தரைவளர்...வணங்கி - உலகில் வளரும் சிறப்பினை உடைய திருமயிலாப்பூரில் எழுந்தருளியுள்ள சங்கரனுருடைய பாதங்களை வணங்கி; உரைவளர்...அணிவித்து - உரை பெருகும் தமிழ் மாலைகளைச் சாத்தி; உழவாரப் படையாளி...சேர்ந்தார் - திரு உழவாரப் படையினை ஏந்திய நாயனார் அலைகள் தவழ்கின்ற கடற்கரையின் வழியே சென்று திருவொற்றியூரினைச் சேர்ந்தருளினார்.

(வி - ரை) வரைவளர்......மஞ்சு ஆடும் - மலையின்மேல் மயில் ஆடுவதுபோல மாடங்களின் மேல் மேகந் தவழ்கின்றன என்பது உருவும் மெய்யும் தொழிலும்பற்றி வந்த உவமம். வரை - மாடத்துக்கும், மயில் - மஞ்சுக்கும், வளர்தல் - ஆடுதலுக்கும் உவமையாயின. வரை - மாடம் - உருவுவமம்; மயில்-மஞ்சு-மெய்யுவமம்; வளர்தல் - ஆடுதல் - தொழிலுவமம். அம்பிகை மயிலுருவம் கொண்டு இத்தலத்திற் சிவபெருமானைப் பூசித்தனராதலின் மயிலாப்பூர் எனப்பெயர் வந்ததென்பர். அவ்வரலாற்றுக் குறிப்பும் பெறக் கூறிய வுவமைநயம் கண்டுகொள்க.

**மாமயில் வளர்வரை என்னத் தரைவளர் சீர்த் திருமயிலை** என்று கூட்டி, **மாமயில்** - *மயில்போன்ற உருவும் சாயலுமுடைய அம்மையார்*; **வளர் வரையென்ன** - *முன்னே வளர்ந்த இமயமலையிற்போல*; *தரைவளர் சீர்* - *இந்நிலவுலகத்திலும் வந்து தவம் செய்து சிவபெருமானைப் பூசித்த சிறப்புடைய*; *திருமயிலை* - *திருமயிலாபுரி என்று கூட்டியுரைப்பதுமொன்று.*

**மாடமிசை மஞ்சு ஆடும்** - *மேகந் தவழும்படி மேக மண்டலம் அளாவ ஓங்கிய மாடங்களின் உயர்ச்சி குறித்தது.*

**தரை வளர் சீர்** - *உலகில் பெருகி வளரும் சிறப்பு. ஆசிரியரது இந்த ஆசியுரையின் பயனாக இன்றும் திருமயிலையின் சிறப்புப் பல்லாற்றானும் இவ்வுலகில் வளர்ந்து வருதலும், மாடங்கள் ஓங்கி வருதலும் கண்கூடு.*

**சங்கரனார்** - *இங்குக் கபாலீசர் என்று பெயர் பெறுவர்.* **சங்கரன்** - *சுகத்தைச் செய்பவன். காபாலியாய் இரந்துண்பதும் அடியார் இரந்துண்டு தன்னடி எட்டச் செய்தற்காகவே என்பர் திருமூலர். "இரந்துணி யென்பர்க ளெற்றுக் கிரக்கும்?, நிரந்தர மாக நினையு மடியார், இரந்துண்டு தன்னடி யெட்டச்செய் தானே" - (திருமந்திரம்).*

**உரைவளர் மாலைகள்** - *திருப்பதிகப் பாசுரங்கள் ஒவ்வொன்றும் மாலை எனப்படும்.* **மாலைகள்** - *பல பதிகங்கள் என்றும், ஒரு பதிகத்தின் பாசுரங்கள் என்றும் உரைக்க நின்றது.*

**உழவாரப் படையாளி** - *திருநாவுக்கரசுநாயனாரது சிறப்புப் பெயர். ஆளி - ஆள்பவர். உழவாரப் பணி செய்பவர்.*

**திரைவளர் வேலைக்கரை போய்** - *திருமயிலையினின்றும் நாயனார் கடற்கரை வழி அலை விளிம்பு மணல் வீதி வழியே சென்று திருவொற்றியூர் சேர்ந்தனர் என்பது. இந்நாளினும் உடல் நலம் பெறும் பொருட்டுச் சென்னையிலிருந்து அலை விளிம்பு மணல் வீதி வழியே மயிலைக்கு நடந்து செல்லும் உலகோரைக் காணலாம். உலக நலத்துக்காக நாயனார் மயிலையினின்று திருவொற்றியூர்வரை அவ்வழியே சென்றனர் என்க. இது 10 நாழிகை யளவு வழி உள்ளது. சென்னை இந்நாளிற் போலன்றி, 1500 ஆண்டுகளின் முன் அக்காலத்து வெறும் நெய்தற் கானலாகிய மணற் பரப்பாயும் சிற்றூராயும் இருந்ததாம் என்பது ஈண்டு நினைவிற் கொள்ளத் தக்கது.*

*திருமயிலை - நாயனார் பதிகம் கிடைத்திலது! தலவிசேடம் ஆளுடைய பிள்ளையார் புராணத்துக் காண்க.*

**வரைதவழ்மா மஞ்சேன்ன மாடமிசை மயிலாடும்—தரைபுகழ்—**என்பனவும் பாடங்கள். 332

1598. ஒற்றியூர் வளநகரத் தொளிமணிவீ திகள்விளக்கி
*நற்கொடிமா லைகள்பூக நறுங்கதலி நிரைநாட்டிப்*
*பொற்குடங்க டூபங்க டீபங்கள் பொலிவித்து*
*மற்றவரை* யெதிர்கொண்டு கொடுபுக்கார் வழித்தொண்டர். ௩௩௩

(இ - ள்) *வெளிப்படை. வளமை பொருந்திய திருவொற்றியூர் நகரத்தின் ஒளியுடைய அழகிய வீதிகளை விளக்கி, நல்ல கொடிகளையும் மாலைகளையும் கமுகும் நறிய வாழைகளுமாகிய இவற்றையும் வரிசை பெற நாட்டி, பொன்னாலாய நிறை குடங்களையும் தூபங்களையும் விளக்குக்களையும் அழகுபெற அமைத்து, அவ்வாகீசரை வழித்தொண்டர்கள் எதிர்கொண்டு வரவேற்று நகரத்தின் உள்ளே அழைத்துச் சென்றார்கள்.*

(வி - ரை) ஒற்றியூர் வளநகரத்து ஒளி மணி வீதிகள் - அந்நாளில் திருவொற்றியூர் அரசர்களது தலை நகரங்களுள் ஒன்றாயும் பெரு நகரமாயும் இருந்தது என்பர் சரித ஆராய்ச்சியாளர்.

ஒளி மணி வீதிகள் விளக்கி - முன்னமே ஒளியுடனும் அழகுடனும் இருந்த அவற்றை, மேலும் புதுக்கி விளக்கம் செய்து என்பதை ஒளி - மணி - என்ற அடைகளாற் குறித்தார்.

வீதிகள் விளக்குதலும், கொடி - மாலை - பூகம் - கதலி நாட்டுதலும், குடம் தூபம் தீபம் வைத்தலும் பெரியோர்களை எதிர்கொள்ளச் செய்யும் மங்கல வகைகள்.

வழித்தொண்டர் - திருத்தொண்டின் வழியிலே வந்த பெரியோர். அவர்களே பெருந் திருத்தொண்டராகிய நாயனாரது சிறப்பை யறிந்தவர்களும் எதிர்கொள்ளத் தக்கவர்களுமாம். வழிவழியடியார்கள் என்றலுமாம்.

கோடி மாலை - கொடிகளாகிய மாலை - வரிசைகள்-என்றலுமாம். மற்று - அசை. நிரை நாட்டி - நிரைகளை நாட்டுவித்து. நிரையாக - வரிசைபெற - நாட்டுவித்து என்றலுமாம்.

பொற்குடங்கள் - மங்கல நீர் நிறைந்த பொற்குடங்கள்.

கொடுபுக்கார் - வினைமுற்று முன்னாக வைத்தோதினார், அன்பர்களின் ஆர்வத்தையும், வரவேற்ற தொழில் முற்றிய விரைவையும் குறித்தற்கு. 333

1599. திருநாவுக் கரசருமத் திருவொற்றி யூரமர்ந்த
பொருநாகத் திண்சிலையார் கோபுரத்தை யிறைஞ்சிப்புக்
கொருஞானத் தொண்டருட னுருகிவலங் கொண்டடியார்
கருநாமந் தவிர்ப்பாரைக் கைதொழுது முன்வீழ்ந்தார் ; ௩௩௪

1600. எழுதாத மறையளித்த வெழுத்தறியும் பெருமானைத்
தொழுதார்வ முறநிலத்திற் றோய்ந்தெழுந்தே யங்கமெலா
முழுதாய பரவசத்தின் முகிழ்த்தமயிர்க் கான்மூழ்க
விழுதாரை கண்பொழிய விதிர்ப்புற்று விம்மினார் ; ௩௩௫

1601. "வண்டோங்கு செங்கமல" மெனவெடுத்து மனமுருகப்
பண்டோய்ந்த சொற்றிருத்தாண் டகம்பாடிப் பரவுவார்
விண்டோய்ந்த புனற்கங்கை வேணியார் திருவுருவங்
கண்டோங்கு களிசிறப்பக் கைதொழுது புறத்தணைந்தார் ; ௩௩௬

1602. விளங்குபெருந் திருமுன்றின் மேவுதிருப் பணிசெய்தே
உளங்கொடிரு விருத்தங்க ளோங்குதிருக் குறுந்தொகைகள்
களங்கொடிரு நேரிசைகள் பலபாடிக் கைதொழுது
வளங்கொடிருப் பதியதனிற் பலநாள்கள் வைகினார். ௩௩௭

1599. (இ - ள்) வெளிப்படை. திருநாவுக்கரசு நாயனாரும் அந்தத் திருவொற்றியூரில் விரும்பி எழுந்தருளிய, பொருதற்குரிய மலையாகிய திண்ணிய வில்லையுடைய பெருமானது திருக்கோபுரத்தினை வணங்கி உள்ளே புகுந்து, ஒருமைப்பட்ட ஞானத்தையுடைய அத்திருத்தொண்டர்களுடன் மனமுருகி வலமாக வந்து, அடியவர்களுடைய பிறவி என்ற நாமத்தைத் தவிர்க்கும் பெருமானைக் கைதொழுது திருமுன்பு வீழ்ந்து வணங்கினாராய் ; ௩௩௪

1600. (இ - ள்) வெளிப்படை. எழுதாத மறைகளைச் சொன்னவராகிய எழுத்தறியும் பெருமானாராகிய திருவொற்றியூர் இறைவரைத் தொழுது, அன்புமீதூரப் பெற்று, நிலந்தோய்ந்து வணங்கி எழுந்து, உடல் முழுதும் பரவசமாய் மயிர்ப்புளகம் கொள்ளத் திளைத்துக், கண்கள் தாரையாகக் கண்ணீர் சொரிய உடல் விதிர்த்து, விம்மினாராகி ; ௫௫௫

1601. (இ - ள்) வண்டோங்கு......எடுத்து - "வண்டோங்கு செங்கமலம்" என்று தொடங்கி ; மனமுருக...பரவுவார் - மனமுருகப் பண் பொருந்திய சொற்களாலாகிய திருத்தாண்டகப் பதிகத்தைப் பாடித் துதிப்பவர்; விண்தோய்ந்த...கண்டு - ஆகாய நதியாகிய கங்கையைச் சடையில் வைத்த பெருமானது திருவுருவத்தைக் கண்டுகொண்டு; ஓங்கு......அணைந்தார் - மிக்க ஆனந்தம் பெருகக் கைதொழுது திருக்கோயிற் புறத்தே அணைந்தவராய் ; ௫௫௬

1602. (இ - ள்) விளங்கு...செய்தே - விளங்குகின்ற பெருமையுடைய திருமுற்றத்தில் பொருந்திய திருப்பணிகள் செய்தே; உளங்கொள் திருவிருத்தங்கள் - உள்ளத்திற் கொள்ளும் திருவிருத்தங்களும்; ஓங்கு திருக்குறுந்தொகைகள் - ஓங்கும் திருக்குறுந்தொகைகளும்; களங்கொள் திருநேரிசைகள்-கண்டத்தையிடமாகக்கொண்டு பாடப்படும் திருநேரிசைகளும்; பலபாடி...வைகினார் - ஆகிய பலவற்றையும் பாடிக் கைதொழுது வளம்பொருந்திய அந்தத் திருத்தலத்திற் பல நாள்கள் தங்கியருளினர்.

இந்த நான்கு பாட்டுக்களும் பொருளால் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டுரைக்க நின்றன.

1599. (வி - ரை) அமர்ந்த - விரும்பி எழுந்தருளிய. பொருசிலையார் - நாகச் சிலையார் - திண்சிலையார் என்று அடைமொழிகளைத் தனித் தனி கூட்டி உரைத்துக் கொள்க. பொருசிலை - பொருதற்கு உதவும் வில். சிலை - வில். நாகம் - மலை. இங்கு மேருவைக் குறித்தது. திண்மை - கல்லாயிருந்தும் பிளந்திறுதலின்றி வளைந்தமையும், அம்பு எய்யப்படாமலே பகையை வென்றமையும், உலகிற்கு நடுவாதலும் முதலிய தன்மைகள்.

கோபுரத்தை இறைஞ்சிப் புக்கு - தூல லிங்கமாகிய கோபுரத்தை முன்னர் இறைஞ்சிப் பின் உள் புகுதல் முறை. புக்கு - கோயிலினுள்ளே புகுந்து.

ஒருஞானம் - சிவனிடத்திலே மனம் ஒன்றிய சிவஞானம். "ஒன்றி யிருந்து நினைமின்கள்" (தேவா), "ஒருநெறிய மனம்வைத் துணர் ஞானசம்பந்தன்" (தேவா).

ஒரு ஞானம் - ஒப்பற்ற ஞானம் - சிவஞானம் என்றலுமாம்.

தொண்டர் - தம்மை எதிர்கொண்ட வழித்தொண்டர்.

தொண்டருடன் உருகி - தொண்டர்களுடனுருகி இறைவரை வழிபடுதல் ஒரு தனிச் சிறப்புடையது. இங்கு உருகி என்றது நாயனாரது உள்ள நெகிழ்ச்சியாகிய மனநிலையினையும், 1601-ல் மனமுருக என்றது அவ்வாறு உருகியதனால் விளைந்த பாடலாகிய பயனையும் கூறியபடி. கேட்ட அடியவரும் உலகமும் உருக என்றலுமாம்.

கரு நாமம் - கரு - பிறவி. நாமம் - (பிறவியின்) அச்சம். நாமம் - பெயர் என்று கொண்டு கருவினாலாகிய பெயர் தவிர்ப்பார் என்றலுமாம். கருவினால் வரும் பெயராவது சீவன் என்பது. அதைத் தவிர்த்தலாவது சீவன் என்ற தன்மையைக் கெடுத்துச் சிவ தத்துவதத்தை அருளுதல். "ஓர்மாத்திரை யளவென், பேரிற் குறுகினேன்" என்று இக்கருத்தைப் பிற்காலப் பெரியார் சுவைபட விளக்குதல் காண்க.

முன் வீழ்ந்தார் - முன் - சந்நிதியின் முன்பு. வீழ்ந்தார் - உடல் முழுதும் நிலந் தோயுமாறு விழுந்து இறைஞ்சினார். விழுந்த செயலை இதனாலும், உடல் அங்கங்கள்

முழுதும் நிலந்தோய நமக்கரித்ததும் எழுந்ததுமாகிய செயல்களை மேல்வரும் பாட்டா லும் ("நிலத்தில் தோய்ந்தெழுந்தே") அறிக.

பெரு நாகத்தின்—என்பதும் பாடம். 334

1600. (வி - ரை) எழுதாத மறை - வேதம். அளித்த - சொன்ன. எழுத்தறியும் பெருமான் - திருவொற்றியூர் இறைவர். தலசரிதக் குறிப்பு. "திருவொற்றியூர் நீங்க லென் றெழுதும்" (1116) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

நிலத்தில் தோய்ந்து - எட்டங்கங்களும் நிலந்தோய வணங்கி; எழுந்தே - "வீழ்ந் தார்" (1599) என்றபடி வீழ்ந்த நிலையினின்றும் எழுந்தே.

அங்கமெலாம் மூழ்க என்க. முகிழ்த்த மயிர்க்கால் - மயிர்க்கால்கள் தோறும் உடல் முழுதும் புளகம் கொள்ள - மயிர்க் கூச்செறிய. முகிழ்த்தல் - நேர் நிற்றல்.

விழு தாரை - வீழ்கின்ற தாரையாகிய - மழைபோல - நீரை. தாரை-இங்கு இடை யறாது பொழியும் நீருக்கு வந்தது.

விதிர்ப்புறுதல் - அன்பின் மிகுதியால் அசைதல். நடுக்குறுதல்.

மெய்ம்மயிர் முகிழ்த்தல் - கண்ணீர் பொழிதல் - விதிர்ப்புறுதல் - விம்முதல் இவை அன்பின் மிகுதியாலாகிய மெய்ப்பாடுகள்.

விம்மினராகிப் பாடிப் பரவுவார் என்று வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க. 335

1601. (வி - ரை) "வண்டோங்கு செங்கமலம்"-இது திருத்தாண்டகப் பதிகத் தின் தொடக்கம். எடுத்து - தொடங்கி.

பண் தோய்ந்த சொல் திருத்தாண்டகம் - பண் - இசையமைதியினையும், சொல் - சொல்லமைதியினையும், தாண்டகம் - யாப்பமைதியினையும் குறித்தன.

திருவுருவம் - கண்டு ஒங்கு களி சிறப்ப - பதிகத்தின் பொருளமைதிக் குறிப்பு. பதிகக் குறிப்பும் பாட்டுக் குறிப்பும் பார்க்க. 336

1602. (வி - ரை) விளங்கு......பணி செய்தே - திருமுன்றிலில் நாயனார் தம் நியதிப்படி திரு உழவாரப் பணிசெய்து. ஏகாரம் - தேற்றம். கைத்திருப்பணி செய்தலை நாயனார் எங்கும் விடாது செய்து வந்தனர் என்பது ஆசிரியரால் நமக்கு நினைவூட்டும் வகையால் அங்கங்கும் குறிக்கப்படுதல் காண்க. சைவ சமயாசாரியராகிய பெருமக்கள் நால்வருள், நாயனார் ஒருவர்தாம் இவ்வாறு கைத்திருப்பணியும் செய்தனர்.

உளங்கொள் திருவிருத்தங்கள் - நாயனாரது திருவிருத்தப் பதிகம் ஒன்றே கிடைத்துள்ளது. விருத்தங்கள் - என்றது பதிகப் பாட்டுக்களைக் குறிப்பது போலும்.

உளங்கொள் - இறைவரது உருவும் திருவும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ள அருளினவென்பது. பதிகக் குறிப்பும் பாட்டுக் குறிப்பும் பார்க்க. பயின்று உள்ளத் தில் கொள்ளத்தக்க என்றலுமாம்.

ஓங்கு திருக்குறுந்தொகைகள் - ஓங்குதலாவது - அடியளவாற் சிறியதேனும் பொருளாழத்தானும், உபதேச முறைமையின் அமைதலானும் பெருமைகொண் டிருத் தல். குறுந்தொகை - யாப்பமைதி. குறுந்தொகைகள் - பதிகம் ஒன்றே கிடைத்துள் ளமையின் பதிகப் பாட்டுக்கள் என்க.

களங்கொள் திருநேரிசைகள் - திருநேரிசைகள் - கிடைத்துள்ள இரண்டு பதிகங் களையும் குறித்தது. நேரிசை - யாப்பமைதியும் பண்ணமைதியும் குறித்தது. களங் கொள் - திருநேரிசை பாடும்போது ஒலியானது மிடற்றை இடமாகக்கொண்டு பிறத் தல் குறிப்பு.

களங்கொள் - எப்போதும் சொல்வதற்குரிய என்றலுமாம்.

பல - இவ்வாறாகிய பல திருப்பாட்டுக்களையும்.

வளங்கோள் திருப்பதி - "ஒற்றியூர் வள நகரத்து" (1599) என்றமையும் பிற வும் காண்க. வளம் - தெய்வவளம். உலக வளமுமாம். 337

திருவொற்றியூர்

I திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

வண்டோங்கு செங்கமலக் கழுநீர் மல்கு மதமத்தஞ் செஞ்சடைமேல் மதியஞ் சூடித்
திண்டோள்க ளாயிரமும் வீசிநின்று திசைநேர நடமாடிச் சிவலோ கனார்
உண்டார்நஞ் சுலகுக்கோ றுதிவேண்டி யொற்றியூர் மேயவொளிவண் ணனார் [டவே.
கண்டேனுன் கனவகத்திற்கண்டேற்கென்றன் கடும்பிணியுஞ்சுடுந்தொழிலுங்கைவிட்

மத்தமா களியானை யுரிவை போர்த்து வானகத்தார் தானகத்தா ராகி நின்று,
பித்தர்தாம் போலங்கோர் பெருமை பேசிப் பேதையரை யச்சுறுத்திப் பெயரக் கண்டு,
பத்தர்தாம் பலருடனே கூடிப் பாடிப் பயின்றிருக்கு மூரேதோ பணியீ ரென்ன,
வொத்தமைந்த வுத்திரநா ளீர்த்த மாக வொளிதிகழு மொற்றியூ ரென்கின் றாரே. 5

மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை மலையல்லை கடலல்லை வாயு வல்லை,
யெண்ணல்லை யெழுத்தல்லை யெரியு மல்லை யிரவல்லை பகலல்லை யாவு மல்லை,
பெண்ணல்லை யாணல்லை பேடு மல்லை பிறிதல்லை யானுயும் பெரியாய் நீயே,
யுண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை யுணர்வரிய வொற்றியூ ருடைய கோவே. 9

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தலைவரைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாது வருந்தி யிருப்பவள், தலைவரைக் கனவிற் கண்டு மயல்மிக்க நிலையுற்று, விழித்துக், கனவுமிழந்த நிலையில் கூறும் அகப்பொருட் டுறையில் அருளப்பட்டது இத்திருப் பதிகம். உயிர் இறைவ னிடம் ஈடுபட்டுச் செய்யும் முறைப்பாடு உட்குறிப்பு. 9-வது பாட்டு இறைவர் உல கிறந்து நிற்கு நிலைபற்றி எழுந்தது. கனவிழந்திரங்கல் என்பது நெய்தற்றிணைக்குரிய இரங்கல் என்னும் உரிப் பொருள் பற்றியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கமலம் - கழுநீர் - மத்தம் - இறைவர் சடையிற் சூடுபவை. தோள்களாயிரமும் - இறைவரது எங்கு நிறைந்த திருமேனி. ஆயிரம் - அனேகம். "ஆயிரம் பொன்வரை போலு மாயிரந் தோளுடை யானும்" (ஆரூர் - நேரிசை.) உண்டார்...வேண்டி - நஞ்சுண்ட கருத்து உலக முறுதி கண்டு உய்யும் பொருட்டு. கண்டேன்...கைவிட்டவே - கனவிற்கண்ட அகப்பொருள். கடும்பிணி- காமமிக்க நிலை. சுடுந்தொழில் - தலைவரைப் பிரிந்த நிலையில் நிலா முதலிய தண் ணிய பொருள்களும் சுடும் தன்மை பூண்டு உடற்றுதல். இனிக், கனவகத்திலும் நன வித் போலக் காணும் நிலை கைகூடவே, கடும்பிணி-பிறவி நோயும், சுடும்தொழிலும்- இறந்துபட உடலைச்சுடும் தொழிலும், கைவிட்ட-இல்லையாயின ; என்று பிறிதோருண் மைப் பொருளும் காண்க.—(2) பாகமது ஓர் பெண்ணுடையார்; ஆயினும் பரமயோகி என்க. காமத்தால்...கண் மூன்றினர் - காமனை முனிந்த செயல்பற்றிக் கூறியது தலை வனைப் பிரிந்தாருக்கு அவனால் வரும் வேதனை நோக்கித் தலைவி எரிந்து கூறியதென்க. "காமனை முன்செற்ற தென்று ளவளிவள் காலனென்னுந், தாமநன் மார்பனை முன்செற்ற தென் றுதன் கையெறிந்தாள்" (பொன்-அங்-45). காமத்தால்-காமன்கொண்ட காமங்கார ணமாக. ஓமத்தால்-வேதமந்திர வேள்விகள் செய்யுமாற்றால்.—(3) கள்ளம். "உள்ளங் கவர்கள்வன்", "உள்ளத்தை நீர் கொண்டீர்" என்று இக்கருத்தை விளக்கப்பட்டது.—(4) கலங்கள் - மரக்கலங்கள். நாவாய் - கப்பல் என்ப. நின்று தோன்றும் - திரு வொற்றியூரின் அணிமையில் கலங்கள் கரைசேருந் துறை அந்நாளிலும் இருந்தன

போலும். நின்று தோன்றும் என்றது-உலகமாகிய அண்டம் உருண்டை வடிவினதாத லின் கலங்கள் வரும்போது அவற்றின் உச்சிமட்டும் முன்னர்த் தோன்றி, வரவரப் பின் னர்ச் சிறிது சிறிதாக முழுமையும் தோன்றும் நிலை குறித்தது.—(5) ஒத்து அமைந்த உத்திரநாள் தீர்த்தமாக - ஒத்து - பல நலங்களும் கூடி. உத்திரம் - பங்குனி உத்திரம். தீர்த்தம் - திருப்பெரு விழாவின் தீர்த்த நாள். இறுதி நாள். "தீர்த்தமா மட்ட மீமுன் சீருடை யேழு நாளும், கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே" (நேரிசை).—(6) இடியபலி - இடித்த மாவினால் இயன்ற பலிப்பிண்டம். இடிய - இடு தற்குரிய என்பருமுண்டு. வடிவுடையமங்கை - தல அம்மை பெயர். மயிலாப்பு - திருமயிலாபுரி. தீயவாறே என்றது பிரிவாற்றாத காதலைய் மீதூர்தல் குறிப்பு.—(7) எல்லே - பகலே. திரையேறி ஓதம் மீளும் - கடல் அலைகள் தரையில் ஏறி வரு தலும், பின், நீர் மட்டும் மீளுதலும் காண்க.—(8) கலைப்பாடும் கண்மலரும் கலக்க- நிலை கலங்கி. கலந்து - அன்பு கலந்து. தன் ஆகத்து என் ஆகம் ஒடுங்கும் வண் ணம் - தழுவும் வகை. உயிர்கள் இறைவன்பால் ஒடுங்குதலும் குறிப்பு. போக லொட் டேன் - "சிக்கெனப் பிடித்தே னெங்கெழுந் தருளுவ தினியே" (திருவா).—(9) இறை வன் உலகில் கலந்து நின்றும் வேறாகி உலகப் பொருள்களல்லா திருக்கும் நிலை குறிக் கப்பட்டது. "ஆனும் பெரியாய் நீயே - "ஆயினும், பெரியரா ரறிவாரவர் பெற் றியே" (திருப்பாசுரம். 2); "பிறவா யாக்கைப் பெரியோன்"—(10) சேறிவளைக ளொன்றேன்றச் சென்ற வாறே - காமநோயால் உடல் மெலிய வளை கழல்வன என்றது.

II திருச்சிற்றம்பலம்   திருநேரிசை

வெள்ளத்தைச் சடையில் வைத்த வேதகீ தன்றன் பாத
மெள்ளத்தா னடைய வேண்டின் மெய்தரு ஞானத் தீயாற்
கள்ளத்தைக் கழிய நின்றார் காயத்துக் கலந்து நின்று
உள்ளத்து ளொளியு மாகு மொற்றியூ ருடைய கோவே.   1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஒற்றியூருடைய கோவே, கள்ளத்தைக் கழிய நின்றார் காயத் துக் கலந்து நின்று உள்ளத்துள் ஒளியுமாகும்; ஆன்மாவினிடமதாகி உசிர்ப்பெனும் உணர்வின் உள்ளார்; ஞானத்தை விளக்கை ஏற்றி நாடியுள் விரவ வல்லார் ஊனத்தை ஒழிப்பர்; ஏகாந்த மியம்பி நினையுமா நினைக்கின்றார்க்கு உணர்விலோ டிருப்பர்; உள்குவா ருள்ளத் துள்ளார் என்றிவை முதலிய தன்மைகளாலறியப்படுபவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) வேத கீதன் - வேதங்களிலும் கீதங்களிலும் பேசப்படுபவன். மெய்......நின்றார் - உண்மை ஞானத்தால் ஆணவ இருளை அகற்றி னோர். கலந்து - அத்துவிதக் கலப்பு. உள்ளத்துள் ஒளி - காட்டு முபகாரம் செய் பவன். உணர்விலோடிருப்பர் (7); உன்னுவார் உள்ளத்துள்ளார் - (8); உள்குவார் உள்ளத்துள்ளார் (9) என்பவையும் இக்கருத்து.—(2) வசிப்பு - வசித்தல். உலகில் இருத்தல். வானவர்...வேண்டில் - இறைவன் இவ்வுடலிடமாக நின்று அதன் அனுபவங்களைத் தானே மேற்கொண்டு தாங்கும் நிலை பெறவேண்டினால். அசிர்ப்பு - அயர்ப்பு என்பது அசிர்ப்பு என வந்தது. வருத்துதல். உசிர்ப்பு - உயிர்ப்பு. "என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக், கென்னு ளேநிற்கும்" (தேவா). ஆன்மாவின்......உள்ளார் - உயிரை இடமாகக்கொண்டு அதனை இயங்க வைத்து உணரச் செய்கின்றார்.—(3) தானத்தை - இவ்வுடலும் உலகமும் இடமாகப் பல கருமங்களையும். வணங்க - வானத்தை - வேண்டில் - வானமும் உங்களைப் பணி

யும் நிலை வேண்டினால். உள் விரவ - உயிரினுள் ஒளித்த இறைவனை நாடி அவனோடு பொருந்த. ஊனம் - மலம்.—(4) காமம் - இச்சை. ஏமம் - இடை யிரா வொழிந்த ஏனை எல்லாக் காலமும் குறித்தது. ஓமம் - அந்தரியாகம்.—(5) கமை - பொறுமை. உமை ஒருபாகர் - அருள்பவர் என்ற குறிப்பு.—(6) ஒருத்தி நுன் தலைச்சென்றாள் - கங்கை. ஒருத்திக்கு - அந்த அம்மைக்கு. ஒருத்தி - உமை. ஒருத்திக்கும் - இருவருள் ஒருவருக்கும்.—(7) பிணம் உடை - சாகும் தன்மையுடைய.—(8) மனத்தினுள் விளக்கொன்று ஏற்றி - முன்னம் ஆணவ இருள் மூடினபடியால் விளக்கு வேண்டப் பட்டது. விளக்கு - சிவனை உணரும் ஞானத்தீயாகிய விளக்கு.—(9) மூள்குவார் - முயங்குவார். பெண்கள். பள்குதல் - பதுங்குதல். இடர் வந்தால் பதுங்குவர் என்க.

குறிப்பு :—இப்பதிகம் ஒற்றியூர் உடையகோவே இன்ன தன்மையுடையர் என்று படர்க்கைமுகத்தாற் போற்றிற்று. கோவே - ஏகாரம் தேற்றம். மேல்வரும் பதிகம் எதிர்நின்று விண்ணப்பஞ் செய்து வரங்கேட்கும் வகையால் கோவே ! என்று முன்னிலைப்படுத்திப் போற்றிற்று. ஆண்டுக் கோவே ! - ஏகாரம் விளியுருபு.

III திருச்சிற்றம்பலம் திருநேரிசை

ஓம்பினேன் கூட்டை வாளா உள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழை போலக் கருதிற்றே முகக்க மாட்டேன்
பாம்பின்வாய்த் தேரை போலப் பலபல நினைக்கின் றேனை
யோம்பிநீ யுய்யக் கொள்ளாய் ! ஒற்றியூ ருடைய கோவே ! 1

மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லோடும் போது
மதனெனும் பாறை தாக்கி மறியும்போ தறிய வொண்ணா
துனையுனு முணர்வை நல்காய் ! ஒற்றியூ ருடைய கோவே ! 2

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஒற்றியூர் உடைய கோவே ! நீ ஓம்பி என்னை உய்யக்கொள்க ! மறியும்போது உனை உன்னும் உணர்வை நல்குக. இப்பதிகத்தில் இரண்டு பாட்டுக் களே கிடைத்துள்ளன !

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கூடு - உடல். உள்ளத்தோர் கொடுமை வைத்து முகக்கமாட்டேன் - வைத்ததனால் என்று முகக்கமாட்டாமைக்குக் காரணம் கூறியபடி. மூழை - அகப்பை ; கரண்டி. மூழைபோல - பயன்பற்றி வந்த உவமம். பாம்பின்வாய்த் தேரைபோல - வினைபற்றிவந்த உவமம். தேரையை வாயிற்பற்றிய பாம்பு அதனைச் சிறிது சிறிதாக விழுங்கும் ; அவ்வாறு முழுதும் விழுங்குவதற்குச் செல்லும் காலமெல்லாம், தேரை, தான் மரணத்துள் அகப்பட்டதனையும் மீளமாட்டா நிலையையும் எண்ணிக் கத்தும்; அதுபோல மக்களும் இவ்வுடம்பினுள்ளே பட்டு இறத்தல் உறுதியென்று அறிந்து பலபலவும் எண்ணுவர் என்பது.—(2) இப்பாட்டு உருவகம். மனம் - தோணி ; மதி - தோணி செலுத்தும் கோல் ; சினம் - தோணியில் ஏற்றிச் செல்லும் வியாபாரச் சரக்கு ; மதன் - ஐம்புல இன்ப ஆசைகள் - தோணியைத் தாக்கி உடைத்து அழிவு செய்யும் பாறை என்றிவ்வாறு வைத்துக்காண்க. மறியும்போது அறியவொண்ணாது - ஆசைகட்குள்ளாகி உலகில் அழிந்து அலைந்து அழியும்போது சிவனினைவு நினைத்தல் உயிர்க்கு அரிது ; உணர்வை நல்காய் - உன்னை நினைக்கும் உணர்வை நீ கொடுத்தருளினாலன்றி என்னால் தேடிக்கொள்ளலாகாது. “ அஞ்சும் போதுநின் னாமத் திருவெழுத், தஞ்சுந் தோன்ற வருளுமை யாறரே ”, “ அஞ்சும்போ தாக வந்து துணையெனக் காகி நின்று, அஞ்சலென் றருள வேண்டும்.”

"அஞ்செழுத்தும் சாமன் றுரைக்கத் தருநி", "அலமந்த போதாக வஞ்சேலென் றருள்செய்வான்" (தேவா) முதலியவை காண்க.

IV　திருச்சிற்றம்பலம்　　　　திருவிருத்தம்

செற்றுக் களிற்றுரி கொள்கின்ற ஞான்று செருவெண்கொம்பொன்
றிற்றுக் கிடந்தது போலு மிளம்பிறை ; பாம்பதனைச்
சுற்றிக் கிடந்தது கிம்புரி போலச் ; சுடரிமைக்கு
நெற்றிக்கண் மற்றதன் முத்தொக்கு மாலொற்றி யூரனுக்கே. 1

சொல்லக் கருதிய தொன்றுண்டு கேட்கிற்றெண் டாயடைந்தா
ரல்லற் படக்கண்டு பின்னென் கொடுத்தி யலைகொண்முந்நீர்
மல்லற் றிரைச்சங்க நித்திலங் கொண்டுவம் பக்கரைக்கே
யொல்லைத் திரைகொணர்ந் தெற்றேற்றி யூருறை யுத்தமனே. 2

இன்றரைக் கண்ணுடை யாரெங்கு மில்லை யிமயமென்னுங்
குன்றரைக் கண்ணன் குலமகட் பாவைக்குக் கூறிட்டநா
ளன்றரைக் கண்ணுங் கொடுத்துமை யாளையும் பாகம்வைத்த
வொன்றரைக் கண்ணன்கண் டீரொற்றி யூருறை யுத்தமனே. 7

அங்கட் கடுக்கைக்கு முல்லைப்புறவ ; முறுவல் செய்யும்
பைங்கட் டலைக்குச் சுடலைக் களரி ; பருமணிசேர்
கங்கைக்கு வேலை ; யரவுக்குப் புற்றுக், கலைநிரம்பாத்
திங்கட்கு வானந் திருவொற்றி யூரர் திருமுடியே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—பிரிவாற்று திரங்கிய தலைவி நாயகனுடைய குணநலன் வடிவம் முதலியவற்றைச் சிந்தித்துச்சிந்தித்துப் பல்லாற்றானும் அவற்றில் ஈடுபட்டுத் தனக்குள் அசதியாடி நயந்த குறிப்பு.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) செற்று - அடர்த்து - கொன்று. இறைவர் அணிந்த இளம்பிறை அவர் உரித்த களிற்றின் ஒரு கொம்பு போலவும், பிறையினை வளைந்து கிடந்த பாம்பு அந்த யானைக் கொம்பின் பூணாகி வளைந்த கிம்புரி போலவும், இவற்றின் கீழே காணும் இறைவரது நெற்றிக்கண் யானைக் கொம்பினின்றும் உதிர்ந்த முத்துப்போலவும் உள்ளன என்றது தற்குறிப்பேற்றந் தழுவிய தொடர்நிலையுவமம். யானை உரித்தபோது அதன் ஒரு கொம்பு ஒடிய, அதினின்றும் முத்துதிர, நின்றமை போல என்பது உவமை நயம். தலைவன் புகழ் நயந்து கூறியதுமாம்.—(2) துயராற்றாது கூறியது. பின் என் கொடுத்தி - பின்பு என்ன கொடுப்பாய் ; கொடுப்பதென்னை ? உமது கடல் அலைகளால் உந்தப்படும் சங்கு முத்துக்களை வலியக் கரையில் கொணர்ந்து எற்றுகிறபோது, நீர் உத்தமராயிருந்தும் வாளா எமது துன்பத்தினைப் பார்த்துக் கொண்டிருத்தல் தகாது என்பது பின் இரண்டடிகளின் குறிப்பு.—(6) பேற்று - பெற்றம் - இடபம். பேரும் பேச்சு - மகா வாக்கியம். உடையான் - அதனாற் பேசப் படும் பெருமையுடையவன். "பெரும் பெயர்க் கடவுள்." விரிசடை அரவுக்கும், திங்கட்கும், கங்கைக்கும், கண்ணிக்கும் சேர்விடமாம் என்க. கண்ணி - தலை மாலை. விற்றுடையான் - விற்றற்குரிய பொருளாக உடையவன்.—(7) குன்றரைக் கண்ணன் - குன்றுடைய அரசன். அரைக்கண்ணும் கொடுத்து-அரைப்பாகம் கொடுத்து. குலமகட்பாவை - பார்வதி. ஒன்றரைக் கண்ணன் - மூன்று கண்களில் ஒரு பாதி அம்மையார்க்குக் கூறிட்டுக் கொடுத்தமையால் இறைவர் பாகத்துக்குள்ளது ஒன்றரைக்

கண்களே யாம் என்பது. இன்றரை...இல்லை - அரைக்கண்ணுடையோர் எங்கும் இல்லை; திருவொற்றியூரர்பால் இவ்வதிசயம் கண்டோம் என்பது. நிந்தைத்துதி. கண்ணைப்பற்றிக் கூறியது தலைவர் கண்ணோட்ட மின்றிப் பிரிந்து உள்ளமை குறிப்பு.—(8) ஒற்றியூர் - ஒற்றி - (அடைவு வைத்துக்கொண்டு கடன் வாங்குதல்) என்ற சொற்சிலேடை பற்றி எழுந்த கருத்து. ஒற்றியூர் - ஒற்றிவைத்த ஊர். "ஒற்றி யூர் என்ற வூனத்தினால்", "ஒற்றி யூரே லும்ம தன்று" (நம்பி). வண்டு யாழ் செய்யும் - வண்டுகள் யாழ்போலப் பண் பாடுதற்கிடமாகிய. பெற்றி - தன்மை. உறும் என்று - விலைப்பணம் கிடைக்குமென்று. விலைப்படுத்தல் செய்யத் தக்கதென்று. விற்றி கண்டாய் - விற்று விடாதே. இடம் இது ஒப்பது இல் - விற்றல் வேண்டா வென்று மறுத்துக் கூறுதற்குக் காரணம். மற்றி யாவரும் கொள்வர் - இதன் சோலை - கா முதலிய செழிப்புக்களைக் கண்டால், யாரும் ஆசைப்பட்டு இதனைப் பெற முயல்வர்.—(9) பிரிவாற்றுது தன் தீவினையை நோக்கித் தலைவி கூறியது. ஒற்றியூரன் எனது சிந்தை பிரியாதிருக்கின்றபடியால், இத்தீவினை உலகமெல்லாந் திரியும்படி வருத்தினும் என்ன செய்ய வல்லது?—(10) திருமுடி - கடுக்கைக்கும், தலைக்கும், கங்கைக்கும், அரவுக்கும், திங்கட்கும் இருப்பிடமாக இருத்தலின் அவ்வவற்றின் இயல்புக்குத் தக்க வெவ்வேறு தன்மை பெற்ற இடமாக அமைந்து உள்ளது. கடுக்கை - கொன்றை. கொன்றை முல்லைநிலத்துக் குரியது. முறுவல்...தலை - நகுதலை - நகுசிரம் என்ப. இது இருடிகள் வேள்வியில் பெற்று அழிவு செய்ய ஏவியது. சுடலைக்களரி - சுடுகாட்டின் புறம். மண்டையோடுகள் கிடக்குமிடம்; வேலை - கடல்; கங்கை சேர்ந்து தங்குமிடம். புற்று - அரவு தங்கு மிருப்பிடம். வானம் - நிலாத் தங்குமிடம்; முல்லை - பாலை (சுடலை)-நெய்தல் (வேலை)-குறிஞ்சி(புற்று)-என் றித்திறத்த நாற்றிணைக் குறிப்பும் பெற வைத்தலால் இறைவர் எல்லா உலகும் காலமும் ஆகித், தம்மிற் பொருந்த உள்ளவர் என்ற குறிப்புப்படக் கூறியதுமாம். கலை நிரம்பாத் திங்கள் - பிறை. (11) பருகின - என்பது எதுகை நோக்கிப் பருக்கின என விகாரப்பட்டு நின்றது. என் செய்கேன் - இரங்கற் குறிப்பு. பண்டங்கன் - பண்டரங்கன் - பண்டரங்கம் என்ற கூத்தாடுவோன்.

V திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

ஒற்றி யூரு மொளிமதி பாம்பினை, யொற்றி யூருமப் பாம்பு மதனையே,
ஒற்றி யூர வொருசடை வைத்தவன், ஒற்றி யூர்தொழ நம்வினை யோயுமே. 1
வரையி னுயர் தோளுடை மன்னனை, வரையி னல்வலி செற்றவர் வாழ்விடம்
திரையி னற்புடை சூழ்திரு வொற்றியூர்,உரையி னற்பொலிந் தாருயர்ந்தார்களே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—(1) ஒற்றியூரிறைவர் நீற்றுத் தண்டத்தராய், வினைவார்க் கெலாம் ஊற்றுத் தண்டொப்பர்; நெஞ்சே அவரடியே யடை; அவரை அடையும் உள்ளத்தவர் வினை அல்கும்; அவரை உரைப்பவர் உயர்ந்தவர்கள்.

பதிகப் பாட்டுக் குறிப்பு.—(1) ஒற்றி......ஒற்றியூர - பாம்பும் மதியும் தம்மிற் பகைப் பொருள்களாயினும், ஒன்றை யொன்று ஒற்றி யூரும்படி: மதியை மறைக்கும் அரவை அது செய்யாமற் செய்து பகை தீர்ப்பவன் உயிரறிவை மறைக்கும் ஆணவப் பகையின் வலிமை போக்குவன்; ஆதலின் தொழ வினை ஓயும் என்பது குறிப்பு.—(2) ஈட்டவே - அணுகி உடனுயிருக்கவே. ஈண்ட என்பது ஈட்ட என வந்தது.—(3) கூற்றுத்தண்டம் - இயமதண்டனை. ஆற்றுத்தண்டத்து அடக்கும் - ஆற்றும் தண்டனையினால் - உதையினால் - அக்கூற்றுவனை அடக்கும், நீற்றுத்தண்டத்தராய் - தண்டம் -

உடல். நீறணிந்து தண்டம்போல் அசைவின்றியிருந்து என்றலுமாம். நீறுபூசியமேனிய ராய். தாமும் நீறுபூசிக்கொண்டு அவரையும் நீறு சேர்வதோர் மேனியராக எண்ணி. ஆன்மார்த்த பூசையில் தண்டபங்கி என்ற பகுதிக் குறிப்புமாம். நீற்றும் - இருளைப் போக்கும். ஊற்றுத்தண்டு - ஊன்றுகோல். ஊன்று - என்பது ஊற்று என எதுகை நோக்கி வலிந்தது. தண்டோத்தலாவது தாங்குதல்.—(6) போதுதாழ்ந்து - காலந் தோறும் வணங்கி.—(8) ஒன்று ஏறிற்று - ஒன்று - இடபம். "நரை வெள்ளே றொன் றுடை யானை" (தேவா). ஒன்று...களைந்தது - ஒன்று - கூற்றுவன். ஒன்று...சூடிற்று - ஒன்று - பிறை ; நகுதலை என்றலுமாம். ஒன்று - உகந்தார் - ஒன்று - ஊர். போலும் என்பன அசைகள்.—(10) வரையின் ஆர் உயர் - மலையைப் போல நிறைந்து உயர்ந்த ; வரையினால் - மலையினால் ; உரையினால் - பேராற்றலினால்.

தலவிசேடம் :—திருவொற்றியூர் - பிரமதேவரது தவத்தில் அவரது யோகத் தீயின் நடுவுள் இறைவர் தோன்றி அந்தத் தீயையே கோயிலாக்கொண்டு எழுந்தருளி, ஊழிவெள்ளத்தை மேல் வராது தடுத்தமையின் ஒற்றியூர் எனப்பட்டது என்பது புராண வரலாறு. இது "திரையினார் புடைசூழ்" என்று குறுந்தொகைப் பதிகத் துக் குறிப்பிடப்பட்டது. நந்திதேவர் கயிலாயத்தில் பிரதோட நடங் கண்டமை போலவே, அமர்ந்திருந்தவாறு புரியும் நித்திய நடமுங் காணுதல் வேண்டிக்கொள்ள, இறைவர் அருளிய தலம். அந்நடனத்தைத் திருமால் - பிரமதேவர் - உரோமச முனி வர் என்ற இவர்களும் கண்டுய்ந்தனர். இன்னும், வாசுகி, சேடன், வான்மீகி முனிவர், சந்திரன், இலவன், தொண்டைமான், ஐந் தருக்கள் முதலியோரும் இங்குப் பூசித்துப் பேறுபெற்றனர். அகத்தியர் திருமணக்கோலங் கண்டனர். அது திருப்பெரு விழாவில் 9-வது நாளில் விழாக் கொண்டாடப்படுகிறது. இறைவர் வாசுகியைத் தமது திருவுருவத்தில் ஏற்பித்துக் கொண்டபடியால் இன்றும் யாவரும் காணும் உருவ அடை யாளங் காட்டிப் படம்பக்கநாதர் எனப்படுவர். மாந்தாதாவின் பொருட்டு இறைவர் எழுத்தறியும் பெருமானாயின சரிதத்தை 1600-ம் பாட்டின் கீழ்க் காண்க. ஏலேலசிங்க ருக்கு மாணிக்கங்கள் ஈந்தமையால் இறைவர் தியாகேசர் எனப் பெற்றார். ஆளுடைய நம்பிகள் இங்குச் சங்கிலியம்மையாரை மணந்துகொண்ட வரலாறு ஏயர்கோன் புரா ணத்துள்ளும், அறுபான் மும்மை மெய்யடியார்களுள் ஒருவராகிய கலியநாயனார் இங்கு அவதரித்துத் திருவிளக்குப் பணிசெய்து பேறுபெற்ற வரலாறு அவர்தம் புரா ணத்துள்ளும் காண்க. பட்டினத்து அடிகளார் பேறுபெற்ற தலம். அவர் எழுந் தருளியுள்ள திருக்கோயில், படம்பக்க நாதர் கோயிலுக்குக் கிழக்கே கடற்கரையில் உள்ளது. ஆதிபுரீசுவரரது தனியாலயம் அணிமையில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. சுவாமி - படம்பக்கநாதர் - புற்றிடங்கொண்டார் - ஆதிபுரீசுவரர் ; தியாகேசர் ; அம்மை - வடிவுடையம்மை ; மரம் - அத்தி ; சங்கிலியார் பொருட்டு ஆளுடைய நம்பி கள் சபதம் செய்த மகிழமரம் சிறப்பு. தீர்த்தம் - பிரமதீர்த்தம் முதலியவை. பதி கம் - 8. சுவாமியின் கருப்பக்கிருகக் கோட்டத்தில் துர்க்கை - வட்டப் பாறையம்மை - சிறப்பாக வழிபடப்படுவார்.

இது M. S. M. புகைவண்டிப் பாதையில் திருவொற்றியூர் என்ற நிலையத்தினின் றும் கிழக்கே கற்சாலைவழி $\frac{1}{8}$ நாழிகையளவில் உள்ளது.

1603. அங்குறையு நாளின்க ணருகுளவாஞ் சிவாலயங்கள்
எங்குஞ்சென் றினிதிறைஞ்சி யேத்துமவ ரிறையருளாற்
பொங்குபுனற் றிருவொற்றி யூர்தொழுது போந்துமையாள்
பங்குடையா ரமர்ந்ததிருப் பாசூராம் பதியணைந்தார். ௫௫அ

(இ - ள்) வெளிப்படை. அத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் நாள்களில் பக்கத்தில் உள்ளனவாகிய சிவாலயங்களெங்கும்போய், இனிதாக வணங்கித் துதித்து வந்தவராகிய நாயனர், நீர்வளமிக்க திருவொற்றியூரினைத் தொழுது சென்று, உமையம்மையாரை ஒரு பாகத்தில் வைத்த பெருமான் விரும்பி யெழுந்தருளியிருக்கும் திருப்பாசூர் என்னும் தலத்தினை அணைந்தனர்.

(வி - ரை) உறையும் நாளின் கண் - "பல நாள்கள் வைகினர்" என்று முன் பாட்டிற் கூறியபடி வைகும் நாள்களில்.

அருகுளவாம் சிவாலயங்கள்-இவை வடதிருமுல்லைவாயில், திருக்கள்ளில், புண்ணியகோடீசுவரர் கோயில், ஞாயிறு முதலியன. திருவொற்றியூரி லிருந்தபடியே நாயனர் இவற்றுக்குச் சென்று சென்று வணங்கி மீண்டருளியிருந்தனர் என்பதாம்.

இறையருளால் - பின்னர் அவ்வழியே திருக்காளத்தி செல்வதும், அங்கு நின்றும் திருக்கயிலைப் பெரிய யாத்திரை செய்து காட்சி காண்பதும் குறிப்பு.

பொங்கு புனல் - நீர்வளம் குறித்தது. கடல் வளத்தோடு ஏனை நீர்ச்சிறப்புமுடைமை குறிப்பு. "சுற்றிவண் டியாழ்செயுஞ் சோலையுங் காவுந் துதைந்திலங்கு, பெற்றி......மற்றிது வொப்பதில் விடம்" (திருவிருத்தம்) என்ற தேவாரம் காண்க.

திருவொற்றியூர் தொழுது - ஊர்க்குப்புறம்பே நின்று தலத்தைத் தொழுது. 1594 - ம், பிறவும் பார்க்க.

அருகுளவாம் ஆலயங்கள்—என்பதும் பாடம். 338

1604. திருப்பாசூர் நகரெய்திச் சிந்தையினில் வந்தூறும்
விருப்பார்வ மேற்கொள்ள வேயிடங்கோண் டுலகுய்ய
விருப்பாரைப், புரமூன்று மெரித்தருள வெடுத்ததனிப்
பொருப்பார்வெஞ் சிலையாரைத் தொழுதெழுந்து போற்றுவார்,

1605. "முந்திமூ வெயிலெய்த முதல்வனை" ரெனவெடுத்துச்
சிந்தைகரைந் துருகுதிருக் குறுந்தொகையுந் தாண்டகமுஞ்
சந்தநிறை நேரிசையு முதலான தமிழ்பாடி
யெந்தையார் திருவருள்பெற் றேகுவார் வாகீசர், ௩௪௦

1606. அம்மலர்ச்சீர்ப் பதியையகன் றயலுளவாம் பதியனைத்தின்
மைம்மலருங் களத்தாரை வணங்கி,மகிழ் வொடும்போற்றி,
மெய்ம்மைநிலை வழுவாத மேன்மைநெறி விழுக்குடிமைச்
செம்மையினர் பழையனூர்த் திருவால வனம்பணிந்தார்; ௩௪௧

1607. "திருவாலங் காடுறையுஞ் செல்வர்தா" மெனச் சிறப்பி
னொருவாத பெருந்திருத்தாண் டகமுதலா மோங்குதமிழ்ப்
பெருவாய்மைத் தொடைமாலை பலபாடிப் பிறபதியு
மருவார்வம் பெறவணங்கி வடதிசைமேல் வழிக்கொள்வார், ௩௪௨

1608. பல்பதியு நெடுங்கிரியும் படர்வனமுஞ் சென்றடைவார்
செல்கதிமுன் னளிப்பவர்தந் திருக்காரி கரைபணிந்து,
தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்கள்பின் னும்பர்குழாம்
மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினர். ௩௪௩



ருக்காரிகரை முகப்பு (இராமகிரி) - பாட்டு - 1608.



திருநனிபள்ளி - சுவாமி கோவில் விமானம்-
பாட்டு - 1454.



பழையனூர்க்கோவில் - முன்பார்வை பா



திருவாலங்காடு - பாட்டு - 1606.



திருநின்றியூர் - பாட்டு - 1454.



திருவையாறு - அப்பர் வந்தெழுந்த வா
(உப்பன் குட்டைக்குளம்) - பாட்டு - ]



திருமுண்டீச்சுரம். பாட்டு 1413.



திரு இராமேச்சுரம் - பாட்டு - 1674.



திருக்கழுக்குன்றம் - மலைஅடிவாரத்திலிருந்து பாட்டு - 1595.



திருக் கச்சிமயானம். பாட்டு 1590.



திருவாய்மூர் - பசுபதீஸ்வரர் கோவில். பாட்டு - 1547.



திருக்கழுக்குன்றம் - விமானங்கள் - பாட்டு -

1604. (இ - ள்) திருப்பாசூர் நகர் எய்தி - திருப்பாசூர்த் தலத்தில்வந்து சேர்ந்து; சிந்தையினில்......மேற்கொள்ள - மனத்தினுள் வந்து ஊறுகின்ற விருப்பம் ஆர்வமாக மேலே பொங்க; உலகுய்ய வேய் இடங்கொண்டு இருப்பாரை - உலகம் கண்டு உய்யும் பொருட்டு அங்கு மூங்கிலை இடமாகக் கொண்டு வெளிப்பட்டு எழுந்தருளி யிருப்பவ ராகிய இறைவரை; புரம் மூன்றும்......சிலையாரை - மூன்று புரங்களையும் எரிக்கவும், அதில் அன்பர் மூவர்களுக்கும் அருளவும் எடுத்த ஒப்பற்ற மேருவாகிய வெவ்விய வில்லினையுடையவரை; தொழுதெழுந்து போற்றுவார் - நிலமுறத் தொழுது எழுந்து துதிப்பாராய், ௩௩௯

1605. (இ - ள்) வெளிப்படை. "முந்தி மூவெயிலெய்த முதல்வனார்" என்று தொடங்கி, மனம் கரைந்துருகும் தன்மை வாய்ந்த திருக்குறுந்தொகைப் பதிகத்தை யும், திருத்தாண்டகப் பதிகத்தையும், சந்தம் நிறைந்த திருநேரிசை முதலான தமிழ்த் திருப்பதிகங்களையும் பாடி, வாகீசத் திருவடிகள், எமது பெருமானுடைய திருவருளைப் பெற்றுச் செல்வாராய், ௩௪௦

1606. (இ - ள்) வெளிப்படை. அந்த அழகிய சிறப்புடைய திருத்தலத்தை நீங்கிப், பக்கத்தே உள்ளனவாகிய தலங்களெல்லாவற்றினும் சென்று, விடம் விளங்கும் கண்ட முடைய பெருமானை வணங்கி மகிழ்ச்சியோடும் துதித்துப், பின்பு, மெய்ம்மை நிலையி னின்றும் சிறிதும் பிறழாத மேன்மையும், நெறியினின்வாழும் தூயகுடிமையும், செம் மையும் உடையவர்களாகிய வேளாண் பெருமக்கள் வாழும் பழையனூர்த் திருவாலங் காட்டினைப் பணிந்தாராகி, ௩௪௧

1607. (இ - ள்) திரு......பல பாடி - "திருவாலங்காடுறையும் செல்வர்தாமே" என்ற மகுடமுள்ள, என்றும் நீங்காத சிறப்பினையுடைய பெருந் திருத்தாண்டகப் பதிகம் முதலாக ஓங்கும் பெருவாய்மைத் தொடையாகிய தமிழ்மாலைகள் பலவற்றை யும் பாடி; பிறபதியும்......வணங்கி - ஏனைத் தலங்களையும் பொருந்தும் ஆசை கொள்ள வணங்கி; வடதிசைமேல் வழிச் செல்வார் - அங்கு நின்றும் வடதிசையை நோக்கிச் செல்வாராகி, ௩௪௨

1608. (இ - ள்) பல்பதியும்......சென்றடைவார்-பல தலங்களிலும், நெடிய மலை களிலும், படர்ந்த காடுகளிலும் சென்று அடைவாராகி; செல்கதி......பணிந்து - உயிர் செல்லும் கதியினை முன் அளிப்பவராகிய இறைவர் எழுந்தருளிய திருக்காரிகரை யினைப் பணிந்து; தொல்கலையின் பெரு வேந்தர் - பழமையாகிய கலை ஞானங்களின் வேந்தராகிய நாயனார்; உம்பர் குழாம் தொண்டர்கள் பின் மல்கு - தேவர் கூட்டங் கள் தொண்டர்கள் பின்னே பொருந்தி நிறைந்துள்ள; திருக்காளத்தி மாமலை வந்து எய்தினார் - திருக்காளத்தி மாமலையினைச் சென்று சேர்ந்தருளினர். ௩௪௩

இவை ஐந்து பாட்டுக்களும் பொருட்டொடர்பும் சொற்றொடர்பும் பெற்று ஒரு முடிபாக உரைக்க நின்றன.

1604. (வி - ரை) சிந்தையினில்...மேற்கொள்ள - "சிந்திப் பார்வினை தீர்த் திடும் செல்வனார்" என்ற திருக்குறுந்தொகைப் பதிகத்தின் எடுத்த திருப்பாட்டின் குறிப்பு. விருப்பு ஆர்வம் மேற்கொள்ள - விருப்பு முதற்கண் வந்தெழுந்து, ஊற ஊற ஆர்வமாக விளைந்து, அது பின்னும் மேற்கொள்ள மேற்கொள்ளத் - தொழுது - எழுந்து - பாடினார் என்று கூட்டிமுடிக்க.

வேய் இடங்கொண்டு உலகுய்ய இருப்பார் - இத்தலத்தில் மூங்கிலினிடமாக இறைவர் வெளிப்பட்டு எழுந்தருளியுள்ளார் என்பது தலவரலாறு. தலவிசேடம் பார்க்க. வேய் - மூங்கில்போன்ற தோளுடைய உமையம்மையாரை - (ஆகு பெயர்)

என்றுரைப்பாருமுண்டு. அஃதுரையன்மை காண்க. "வேயிடங்கொண்ட புனிதர்" (திருஞான - புரா - 1013.)

உலகுய்ய இருப்பார்-தமது எங்கும் நிறைந்த அகண்ட உருவை உலகம்கண்டு வழி பட்டுய்ய இயலாதாதலின் உலகம் கண்டு தொழுது உய்யும்பொருட்டு கண்டித உரு வத்தில் சிவக்குறியினிடமாக வெளிப்பட்டு நிலையாக விளங்க வீற்றிருப்பார்.

புரமூன்றும்......சிலையார் "முந்தி மூவெயி லெய்த முதல்வனார்" என்ற திருக் குறுந்தொகைப்பதிகத் தொடக்கக்குறிப்பு. எடுத்த - சிலையார் - சிலையினை எடுத்ததே யன்றிக் கணைதொட்டாரலர்; ஆனால் புரங்கள் வெந்தன என்பது குறிப்பு.

போற்றுவார் - எடுத்துப் - பாடி என மேல்வரும் பாட்டுடன் கூட்டிமுடிக்க. போற்றுவார் - எதிர்காலவினைப் பெயர். 339

1605. (வி - ரை) "முந்தி மூவெயில் எய்த முதல்வனார்" என எடுத்து - இது பதிகத் தொடக்கம். இதன்விளக்கம் பதிகப்பாட்டுக் குறிப்பிற்பார்க்க.

சிந்தை கரைந்து உருகு - பொருளழுத்தம் சிந்திக்கச் சிந்திக்க மனத்தை உருகச் செய்வதாம் என்பது. "ஓங்குதிருக் குறுந்தொகை" (1602) என்றது காண்க.

சந்தநிறை நேரிசை - "களங்கொள் திருநேரிசை" (1602) என்றபடி கழுத்தை யிடமாகக் கொண்டு பிறக்கும் ஒலியால் பாடப்படுவதாதலின் சந்தநிறை என்றார். சந்தம் - இங்கு இசைக் கூறுபாட்டின் அளவு குறித்தது. நாயனார் இத்தலத்துப் பாடி அருளிய திருநேரிசைப்பதிகம் கிடைத்திலது! முதலானதமிழ் - என்றதனாலறியப்படு கின்றபடி நாயனார் அருளியிருக்கக்கூடிய ஏனைய திருப்பதிகங்களும் கிடைத்தில! ஆசி ரியர் காலத்தில் திருநேரிசைப் பாட்டுக்கள் சிலவேனும் வழக்கில் இருந்தன போலும்.

ஏகுவார் - எதிர்கால முற்றெச்சம். ஏகுவாராகி - அகன்று என மேல்வரும் பாட் டின் வினையெச்சத்துடன் கூட்டி முடிவுகொள்க.

வாகீசர் - திருப்பாசூரை வழிபட்ட வரலாற்றுப் பகுதி (1603 - 1606) குறிக்க வைத்த எழுவாய். இவ்வாறே முன் திருவொற்றியூரினை வழிபட்ட வரலாற்றுப்பகுதி (1698 - 1602) யைத் "திருநாவுக்கரசர்" (1599) என்ற ஓர் எழுவாய் வைத்தோதிக் குறிப்பிட்டதும், பின் ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் "வாழ்க வந்தணர்" என்ற திருப்பாசுரத்தின் விரிவுரை அருளிய பகுதியில் ஒவ்வொரு பாசுரவுரை முடிவு காட்ட ஒவ்வோர் எழுவாய் வைத்தோதிய மரபும், பிறவும் ஆசிரியரது தெய்வக்கவி நலங்களாகக் கண்டுகொள்க. 340

திருப்பாசூர்

I திருச்சிற்றம்பலம்

திருக்குறுந்தொகை

முந்தி மூவெயி லெய்த முதல்வனார், சிந்திப் பார்வினை தீர்த்திடுஞ் செல்வனார்,
அந்திக் கோன்றனக் கேயருள் செய்தவர், பந்திச் செஞ்சடைப் பாசூ ரடிகளே. 1

வெற்றி யூருறை வேதிய ராவர்நல், லொற்றி யேறுகந் தேறு மொருவனார்,
நெற்றிக் கண்ணினர் நீளர வந்தனைப், பற்றி யாட்டுவர் பாசூ ரடிகளே. 4

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—முந்தி மூவெயில் எய்த முதல்வனார் என்றிவ்வாறு பல வகை யாலும் அறியப்படுகின்ற பாசூரடிகள் சிந்திப்பார் வினை தீர்த்திடும் செல்வனார்; அந் திக்கோன் றனக்கேயருள் செய்தவர்; நீளர வந்தனைப் பற்றி யாட்டுவார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) முந்தி - தேவர்கள் முறையிட்ட ஒலியின் எதிர் ஒலி அடங்குமுன், "மணியைக் கையால் நாவா யசைத்த வொலியொலி மாறிய

தில்லையப்பாற், றீயா யெரிந்து பொடியாய்க் கழிந்த திரிபுரமே" என்ற திருவிருத்தக் கருத்து. முன்காலத்தில் என்றலுமாம். கணை எய்யுமுன் என்றதும் குறிப்பு. இவையெல் லாம் உட்கொண்டு "புரமூன்று மெரித்தருள வெடுத்ததனிப் பொருப்பார்வெஞ் சிலை யார்" (1604) என்றது காண்க. முந்தி என்றதற் கேற்பச் சிந்திப்பார்...செல்வனார் - நினைப்பார்க்கு நினைக்கும் முன்னே வினை தீர்ப்பர் என்றதும் விரைவுக் குறிப்பு. அந்திக் கோன் - சந்திரன். சந்திரனுக்கு அருளியது தலவரலாறு. பந்தி - கற்றையாகிய ; பின் னல் கொண்ட; வரிசைபெற விரிந்த.—(2) படர்ந்த நாகத்தூர் - நீளர வந்தனைப் பற்றி ஆட்டுவர் (4) - தீயதோர் பாம்பு மாட்டுவர் (9); படவரவொன் றதுவாட்டி - (தாண் - 3). தலவரலாறு, தலவிசேடம் பார்க்க.—(3) காறு - கரிய. கொடிய, கொல் லும் விடமுடைய.—(4) வெற்றியூர் - தேவார வைப்புத்தலங்களுள் ஒன்று; ஊற்றி - ஊர்ந்து. உகந்து என்றலுமாம்.—(5) மட்டவிழ்ந்த......வேட்கையார் - கண்ணி - தலைவி. மலர் நெடுங்கண்ணி - பூப்போன்ற கண்களையுடையவள். மட்டு - தேன். மணம் என்றலுமாம். இப்பாட்டுத் தாய் கூற்றாகிய அகப்பொருளில் அமைந்தது. தோழி கூற்றுமாம். துட்டர் - துட்டுத் தன்மையுடையவர்.—(6) எல்லி - வெயில். தோழி கூற்றாகிய அகப்பொருள். மேல் வரும் இரண்டு பாட்டுக்களும் இக்கருத் தின.—(10) பரியர் - நுண்ணியர் - அணுவோர் அண்டமாம்படி நேரிய னுதலால் உயிர்க்குயிராதலும், அண்டமோர் அணுவாம்படி பரியனுமாதலால் எங்குமாய் நிற்ற லும் பெறப்படும். பாசூரடிகளே - பதிகத்தின் மகுடம்.

II திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

விண்ணாகி நிலனாகி விசும்பு மாகி, வேலைசூழ் ஞாலத்தார் விரும்பு கின்ற
வெண்ணாகி யெழுத்தாகி யியல்பு மாகி யேழுலகுந் தொழுதேத்திக் காண நின்ற
கண்ணாகி மணியாகிக் காட்சி யாகிக் காதலித்தங் கடியார்கள் பரவ நின்ற
பண்ணாகி யின்னமுதாம் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்த வாறே. 1

புத்தியினாற்சிலந்தியுந்தன்வாயினூலாற்பொதுப்பந்தலதுவிழைத்துச்சருகான்மேய்ந்
சித்தியினாலரசாண்டுசிறப்புச்செய்யச்சிவகணத்துப்புகப்பெய்தார்திறலான்மிக்க[து
வித்தகத்தால் வெள்ளானை விள்ளா வன்பு விரவியவா கண்டதற்கு வீடு காட்டிப்
பத்தர்களுக் கின்னமுதாம் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்த வாறே. 6

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—விண் முதலிய பூதங்களும், எண்ணும் எழுத்தும், கண்ணும் மணியும் காட்சியும் ஆவார்; வேதமும் ஆறங்கமுமாகி விரியும் பொருட்கெல்லாம் வித்துமாவர்; அனல்கையேந்திக் காளிகாணக் குடமுழவச் சதிவழியே கூத்தாட வல்ல குழகர்; வேடனாய் ஏனத்தின் பின் கூடினார்; சிலந்திக்கும் ஆனைக்கும் அருளி னார்; அருமந்த நன்மையெல்லாம் அடியார்க்கீவர்; விடமுண்ட கண்டர்; கூற்றுவனை உதைத்து அந்தணனைக் கைக்கொண்டருளியவர் என்றிவ்வாறு பல பெருமைகளால் அறியப்படும் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டு அடியேன் உய்ந்தவாறு.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) இயல்பு - விரும்புகின்ற - இயல்பு - வேதம் என்க. இயல்புடையதனை இயல்பென்றது உபசாரம். எண் - கணிதமுடைய சோதி டம். தருக்கமுமாம். எழுத்து - இலக்கணம். "எண்ணெண்ப" (குறள்). கண் - மணி - காட்சி - இறைவன் காட்டுமுபகாரம் செய்தல் குறிப்பு.—(2) வித்து - விந்து - சுத்த மாயை. கூதல் - குளிர். சாரல்.—(3) வரைகள் ஏழு - கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், கந்தமாதனம். "ஏழ்கடலு மேழ்மலையு மானான்" (தாண்). விசும்பின் உச்சி - ஐம்பூதங்கடந்த நிலை. குட முழவச் சதி - நந்தி முதலிய கணங்கள்

குடமுழாமுழக்க அதற்கிசைந்த. சதி - தாளம்; இசை ஒத்து கூத்து - " ஆடினார் பெருங்கூத்துக் காளி காண" (5). இஃது திருவாசகத்துட் போற்றப்பட்டபடி, "தாணி யெல்லாம் ஊன்புக்க வேற்காளிக் கூட் "டாகாமல் அம்பலவர் தாம்புக்குப் பயிலும் நட்டம். "புகைந் தெழுந்த சண்டத்தீப், போலேபூசீர் தீகான்மீப் புணர்தரு முயிர் கள்திறஞ், சொர்க்கத்தே கிர்த்தத்தே தொடர்ந்தமங்கை செங்கதத் தோடாயாமே மாலோகத் துயர்களை பவனதிடம்" - (பிள்ளையார் - தேவா - கழுமலம் - தாளச்சதி - வியாழக்குறிஞ்சி - 5.) அரவு ஒன்று ஆட்டி - தலசரிதம்.—(4) ஒற்றி - திருவொற்றி யூர்.—(5) வேடனாய்...கூடினார் - வேடனாய்ச் சென்று விசயற்கருளிய வரலாறு. உமையவளும் கோலங்கொள்ள என்றதனை, முன், கூடினார் என்ற பொருளுடனும், பின்வரும் ஆடினார் என்ற பொருளுடனும் ஆக இருவழியும் கூட்டி உரைக்க வைத் தோதினார்.—(6) புத்தி - இறைவரது இலிங்கத்திருமேனியின் மேல் இலை உதிர் சருகு முதலியவை விழாமல் இந்த நூல் வலயம் காப்பதாக என்ற எண்ணம். பொதுப் பந் தர் - மேற்கட்டி. சிறப்புச் செய்ய - மாடக் கோயில்களையமைத்து நித்திய நைமித்திக வழிபாடுகள் இயற்றச் செய்ய. திறலான்மிக்க - தனது பலங்கருதிய அறிவு. மிகுந்த சிலந்திக்கும் வெள்ளானைக்கும் அருளிய திருவானைக்காவின் வரலாறு; கோச் செங்கட் சோழ நயனார் புராணம் பார்க்க. பத்தர்களுக்கு இன்னமுதாம் - இவ் வாறு அடியார்களுக்கு இறவாத இன்பவீடு தருவர் என்றது குறிப்பு.—(7) அருமந்த - அருமருந்தன்ன என்பதன் மரூஉ. தணல் முழுது பொடி - ஊழியில் உலகம் எரிந்து எஞ்சிய நீறு. "நீறு பூத்த நெருப்பு" (பழமொழி). பொடி முழுது தணல் என்று கூட்டி, ஆடும் என்றதனை உவம உருபாகக்கொண்டு, பொடி முழுதும் நெருப்புப் போன்று நீறு கொண்டுவிளங்கும் மேனி என்றுரைப்பது மொன்று. " செவ்வான் வண்ணர் பாலொத்த வெண்ணீற்றர்" (9).—(8) பண்டரங்க வேடன்—பண்டரங்கக் கூத்துக் கிசைந்த வேடத்தர்.—(9) அந்தகன் - அந்தகாசுரன். கைக்கொண்ட - காத்த.—(10) நீறணிந்தான் கயிலைவெற்பு - நீறணிந்த இறைவரது கயிலைமலை.

தலவிசேடம்:—திருப்பாசூர் - தொண்டை நாட்டின் 17-வது தலம். தலமரம் மூங்கில். இறைவர் அதனடியில்முளைத்தெழுந்தனர்; இக்காரணத்தால் தலப்பெயர்போந் தது (பாசு - மூங்கில்). "வேயிடங் கொண்டுலகுய்ய விருப்பார்" (1604) என்று இதனை ஆசிரியர் எடுத்தோதினர். சந்திரனுக்கு அருள்புரிந்த தலம். (பதிகம் பார்க்க). குறும் பர் மன்னன் சார்பாகச் சமணர் கரிகாற் சோழன்மீது ஏவிய பாம்பை இறைவர் எடுத்து ஆட்டியருளினர் என்பது தல வரலாறு. அம்மை வலப்பாகம். சோடச கணபதி விசேடம். சுவாமி - பாசூர் நாதர்; அம்மையார் - பசுபதிநாயகி; பதிகம் - 3. இத்தலக் கோயில் மிக நன்றாயும் சுத்தமாயும் வைத்துப் பாதுகாக்கப்படுகின்றது.

இது திருவள்ளூர் என்ற புகைவண்டி நிலயத்தினின்றும் வடக்கே கற்சாலைவழி $2\frac{1}{2}$ நாழிகையளவில் உள்ள திருவள்ளூரை அடைந்து அங்கு நின்றும் மேற்கே கற்சாலைவழி 2 நாழிகையில் அடையத்தக்கது.

1606. (வி - ரை) மலர்ச்சீர் - மலர் - மலர்போன்ற; பண்புத்தொகை. மலர் - அழகு என்ற பொருள்தந்து நின்றது. அழகாவது சிவனது அருளணி. பதியை - ஐ - உருபு நீக்கப்பொருளில் வந்தது. நோயை நீங்கினான் என்புழிப்போல. " உருபினும் பொருளினு மெய்தடுமாறி, யிருவயி னிலையும் வேற்றுமை யெல்லாம், திரிபிட னிலவே" (தொல் - சொல் - 101.)

அயல் உளவாம் பதி அனைத்தின்...போற்றி - அயலின் உளவான எல்லாத்தலங் களினும் வழிபட்டனர். இவை திருவள்ளூர், திருவெண்பாக்கம் முதலியன.

மெய்ம்மை நிலை......செம்மையினோர் - பழையனூர் வேளாளர் எழுபதுபேர் சொற்பிழையாது தீப்பாய்ந்து உண்மைகாத்த சரிதம் குறித்தது. 1080-ம் ஆண்டுரைத் தவையும் பார்க்க. திருவாலங்காட்டினை எண்ணும்போது முன்னிற்பது அவ்வேளா ளர்களது விழுக்குடிமைச் செம்மை; அச்செம்மையினை எண்ணும்போது முன்னிற் பது அவர்களது வாய்மை; ஆதலின் இந்த இரண்டு திறங்களாலும் ஆசிரியர் ஈண்டுக் குறித்தருளினர். வேளாளர் விழுக்குடிமைச் செம்மையினோர் என்பது பாடமாயின் அதற்குத்தக உரைத்துக்கொள்க.

விழுக்குடிமைச் செம்மையாவது தாய் தந்தை வழி இருமரபுந் தூயராகச் சுட்டத் தக்க நியதியில் வழிவழி வருதலும், அதற்குத்தக்க ஒழுக்கமுடைமையுமாம். "இரு வர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி" (முருகு).

பழையனூர்த் திருவாலவனம்-பழையனூர் திருவாலங்காட்டினை அடுத்துள்ளது; இரண்டும் சேர்ந்து ஒருதலமாக வழங்கப்படும். ஆலவனம் காடாகவும், அதற்கு அடுத்த பழையனூர் ஊராகவும் உள்ளபடியாலும் இவ்வாறு வழங்கப்படும். "பழையனூ ராலங் காட்டெம் மடிகளே" (பிள்ளையார்); "பழனை மேய ஆலங்காட் டடிக ளாரே" (அரசு கள்); "பழையனூர் மேய அத்தா வாலங் காடா" (நம்பிகள்) என்ற மூவர் பதிகங்களின் ஆட்சிகளும் காண்க. "பழனை பதியா வுடையார்...திருவாலங்காடுறையும் செல்வர்" என்ற தேவாரக்கருத்தும் காண்க.

மைம்மருவும்—என்பதும் பாடம். 341

1607. (வி - ரை) "திருவாலங்காடுறையும் செல்வர்தாமே" என்பது பதிகத் தின் மகுடம்.

சிறப்பின் ஒருவாத - சிறப்பினின்றும் நீங்காத என்பது கருத்து. உறுதிஉணர்த்து தற்கு ஒருவாத என எதிர்மறையாற் கூறினர். "ஒன்றா வுலகனைத்து மானார் தாமே யூழிதோ றூழி யுயர்ந்தார் தாமே...திருவாலங்காடுறையும் செல்வர் தாமே" என்று சிவபெருமானுக்குத் தாமே எனச் சிறப்பாயுரிய தன்மைகளை எடுத்தோதித் தேற்றமும் பிரிநிலையுமாகிய ஏகாரத்தாலுணர்த்தும் சிறப்புக் குறித்தது.

பெருந் திருத் தாண்டகம் - "அரியானை" என்ற தில்லைத் திருத்தாண்டகப் பதி கத்துக்குப் "பெரியதிருத்தாண்டகம்" (1440) என்றது இங்குக் கருதத்தக்கது. இந்த இரண்டு திருத்தாண்டகப் பதிகங்களையுமே ஆசிரியர் இவ்வாறு விதந்தெடுத் தோதினமையும் குறிக்கத்தக்கது.

முதலாம் ஓங்குதமிழ்த் தொடைமாலை பல - திருநேரிசை முதலியன. பல என் றதனால் நாயனாரருளியனவா யறியப்படுகின்ற பலபதிகங்களுள் திருநேரிசைப் பதிகம் ஒன்றே கிடைத்துள்ளது!

பெருவாய்மை - "பெருந் திருத்தாண்டகம்" என்றதிற்போந்த கருத்து.

பிறபதியும் - இவை வளைகுளம், திருத்தணிகை முதலாயின.

வடதிசைமேல் வழிக்கொள்வார் - திருப்பாசூரினின்றும் வடக்கே திருக்காளத் தியை நோக்கி வழிச்செல்வார். வழிக் கொள்ளுதல் - வழி நடத்தல். மலைகள் நிறைந்த இடமாதலின் சுற்றிச் செல்லும் மலைவழி பலவும் கண்டு என்பது குறிப்பு.

வழிக் கொள்வார் - எதிர்கால வினைப்பெயர்; அடைவார் - பணிந்து - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

மருவு ஆர்வம்பெற-ஆசை மேலும் வளரப்பெற்றமையினாலே. பெறும்பொருட்டு என்றலுமாம். பின்னர்த் திருக்கயிலை காணுமது காதலிக்கும் சரிதக்குறிப்பு. வடதிசை மேல் என்ற குறிப்புமது. 342

திருவாலங்காடு

I திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

ஒன்ற வுலகனைத்து மானார் தாமே யூழிதோ றூழி யுயர்ந்தார் தாமே
நின்றாகி யெங்கு நிமிர்ந்தார் தாமே நீர்வளிதீ யாகாச மானார் தாமே
கொன்றாடுங் கூற்றை யுதைத்தார் தாமே கோலப் பழனை யுடையார் தாமே
சென்றாடு தீர்த்தங்க ளானார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 1

அல்லும் பகலுமாய் நின்றார் தாமே யந்தியுஞ் சந்தியு மானார் தாமே
சொல்லும் பொருளெலா மானார் தாமே தோத்திரமுஞ் சாத்திரமு மானார் தாமே
பல்லுரைக்கும் பாவெலா மானார் தாமே பழனை பதியா வுடையார் தாமே
செல்லு நெறிகாட்ட வல்லார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 5

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பழனை பதியாவுடையார் திருவாலங்காடுறையுஞ் செல்வர் தாமே, ஒன்று வுலகனைத்துமானார், ஊழிதோறூழி யுயர்ந்தார், சென்றாடு தீர்த்தங்களானார், சரணென்றிருப்பார்கட் கன்பர், பூவுற்ற நாற்றமாய் நின்றார், பாவுற்றபாடலுகப்பார், சொல்லும் பொருளெலா மானார், தோத்திரமுஞ் சாத்திரமு மானார், ஐயாறு மாறூரு மானைக்காவு மம்பலமுங் கோயிலாக் கொண்டார், செய்யாள் வழிபட நின்றார், தீராத வல்வினை நோய் தீர்ப்பார் என்றிவை முதலிய அளவில் பெருமையுடையார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஒன்ற உலகனைத்தும் ஆனார் - ஊழியில் உலகமெல்லாவற்றையும் தம்முள் ஒடுக்கித், தாமொருவரேயாய் நின்று, பின், அவை மீள வருமாறு ஆக்குபவர். மாயையொன்றி நின்று உலகனைத்து மாக்குபவர் என்றலுமாம். ஒன்ற-தோய்ந்தும் தோயாத என்றலுமாம். ஊழிதோ றூழி உயர்ந்தார் - காலங் கடந்தவர். நின்றாகி எங்கும் நிமிர்ந்தார்-எங்கும் நிறைந்தும் கடந்தும் நின்றவர். "நின்ற திருத்தாண்டகம்". தீர்த்தங்கள் ஆனார் - தீர்த்தம்-தூய்மை செய்வது. "கோதா விரியாகி..." (தாண்). "கங்கை யாடிலென்" (குறுந்).—(3) பூவுற்ற நாற்றமாய் - "பூக்குளால் வாசமாய் மன்னி நின்ற" (தாண்). உலகெலாம் அவையேயாய் நிற்றல்.—(4) அல்லும்...ஆனார் - கால தத்துவமாய் நிற்றல் - சொல்லும் அதன் பொருளும் ஆகிய வண்ணம். தோத்திரமும் சாத்திரமும் - தேவார முதலிய அருட் பாட்டுக்களும் ஞானசாத்திரங்களும்; வேதங்களும் - ஆகமங்களும்; இவற்றால் செல்லு நெறிகாட்ட வல்லார் என்பது குறிப்பு.—(7) அம்பலம் - கோயில்; தில்லை மன்று. செய்யாள் - திருமகள், இலக்குமி வழிபட்டது தலவரலாறு போலும்.—(8) மிக்கோர்கள் - குணமென்னுங் குன்றேறி நின்ற ஞானிகள். காலங்கள் ஊழி கடந்தார் - இப்பதிகத்துட் பலவிடத்தும் (1—5) இக்கருத்தினைப் போற்றியது இறைவரது ஆடல் தத்துவாதீதமாய் என்றுமுள்ளது என்று குறித்தற்கு.—(9) கயிலை மலையையுடையார் - கயிலையிற்சென்று வழிபட்ட காரைக்காலம்மையார், வரங்கேட்டுத், திருவருள் வழியே இங்குப்போந்து, நடங்கண்டு, ஆனந்தமுற் றெழுந்தருளியிருத்தல் குறிப்புப் போலும். தீராத......தீர்ப்பர் - நோய் - ஆணவம். தீராத - வேறெவ்வாற்றாலும் தீர்க்க முடியாத; வலிகெடுதலன்றி அழிவில்லாத என்றலுமாம். சீலத்தார் - முனிவர்கள். "மிக்கோர்" (8).

II திருச்சிற்றம்பலம் திருநேரிசை

வெள்ளநீர்ச் சடையர் போலும் விரும்புவார்க் கெளியர் போலும்
உள்ளுளே யுருகி நின்றங் ், ப்பவர்க் கன்பர் போலுங்

கள்ளமே வினைக ளெல்லாங் கரிசறுத் திடுவர் போலும்
அள்ளலம் பழனை மேய வாலங்காட் டடிக ளாரே. 1

கூடினா ருமைதன் னோடே குறிப்புடை வேடங் கொண்டு
சூடினார் கங்கை யாளைச் சுவறிடு சடையர் போலும்
பாடினார் சாம வேதம் பைம்பொழிற் பழனை மேயார்
ஆடினார் காளி காண வாலங்காட் டடிக ளாரே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—தீர்த்தமாம் பழனைமேய ஆலங்காட் டடிகளாரே, வெள்ளநீர்ச் சடையார்; விரும்புவார்க் கெளியர்; உருகுவார்க் கன்பர்; கள்ளமெல்லாங் கரிசறுத் திடுவார்; பிறவி தீர்ப்பர்; காளிகாண ஆடினார் என்றிவை முதலிய பல பெருமைகளாலும் போற்றப்படுபவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) வெள்ளநீர் - கங்கை; கள்ளம் - ஆணவம்; கரிசு - துன்பம்; குற்றம்.—(4) காறிடு - கொல்லும். சுடலை - ஊழியில் உலகழிந்த நிலை.—(5) வேடராய் வந்து அருச்சுனருக்குப் பாசுபதம் அருளிய சரிதம் குறித்தது இப்பாட்டு. ஆவநாழி-அம்பறுத்தூணி. அம்பு - பாசுபதாத்திரம்.—(6) வீட்டினார் - அழிக்கப்பட்ட உலகங்களின்.—(7) கோள்-பாசக்கட்டு.—(8) உமை - கங்கை - காளி என்ற மூன்று சத்திகளையுங் குறித்தது காண்க. ஆடினார்...அடிகளாரே - தலசரிதம். இத்தலச் சிறப்பாகிய ஊர்த்துவ நடனம் காளியின் பொருட்டு ஆடப்பட்டது என்பது வரலாறு.—(9) ஒற்றரைச் சொற்கள் - வெறுஞ் சொற்கள். பயனில்லாத சொற்கள்.

தலவிசேடம்:—பழையனூர்த் திருவாலங்காடு-தொண்டைநாட்டின் 16-வது தலம். ஆலமரக் காடாயிருந்து அதில் இறைவர் வெளிப்பட்டருளி நடஞ்செய்தமையால் இப்பெயர் பெற்றது. வடாரணியம் என்பர் வடவர். கூத்தப் பெருமான் நடஞ்செய்யும் ஐம்பெருமன்றங்களுள் இஃது இரத்தினசபை எனப்படும். காளியின்பொருட்டு இறைவர் ஊர்த்துவ தாண்டவம் என்னும் திருவடி மேற்றூக்கிய அருட்கூத்துச் செய்த தலம். பதிகங்கள் பார்க்க. கார்க்கோடகன் - முஞ்சிகேசர் என்ற பெயருடன் முறையே பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்கள் திருநடனங்கண்ட தலம். திருக்கயிலையில் இறைவர் அருளியவாறே,காரைக்காலம்மையார் இங்குத் தலையால்நடந்து போந்து, திருநடனங்கண்டு, திருவடிக்கீழ் நின்று ஆடியும் பாடியும் ஆனந்தம் சேர்ந் தெப்போதும் எழுந்தருளியிருப்பர். அவர்தம் புராணம் பார்க்க. அம்மையார் தலையாலே நடந்த தலமென்று,ஆளுடைய பிள்ளையார் இதனைமிதித்தற்கஞ்சிப்,புறத்திற்றங்கித்,துயிலும்போது இறைவர் நினைப்பிக்க எழுந்து "துஞ்ச வருவாரும்" எனத் திருப்பதிகம் பாடியருளிய தலம். ஆளுடைய நம்பிகளும் தூரத்தேயிருந்து பாடியருளினர். நீலியின்வஞ்சனையால் உயிர் துறந்த வணிகனுக்குத் தாங்கள் கூறியசொற்பிழையாது பழையனூர் வேளாளர் எழுபது பேரும் தீயில் மூழ்கித் தமது சொல்லின் உண்மை தம் உயிரினும் சிறந்தது எனக் காட்டிய தலம். இப்பெருமை ஆளுடைய பிள்ளையார் பதிகத்துப் பாராட்டப் பட்டது. திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணமும் (1080), பிறவும் பார்க்க. பழையனூரோடு சேர்த்து இத்தலம் வழங்கப்படும். பதிகக்குறிப்புப் பார்க்க. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. சுவாமி - ஊர்த்துவ தாண்டவர்; அம்மை - வண்டார் குழலியம்மை; தீர்த்தம் - முத்தி தீர்த்தம்; மரம் - ஆல் - பலா; மன்றம் - இரத்தின சபை. பதிகம் 4.

இது M. S. M. பாதையில் திருவாலங்காடு என்ற நிலையத்தினின்றும் வடகிழக்கே கற்சாலை வழி மூன்று நாழிகையளவில் அடையத் தக்கது.

1608.(வி - ரை) பல்பதியும் நெடுங்கிரியும் படர் வனமும்-பல்பதி-திருத்தணிகை வளைகுளம் முதலியன; நெடுங்கிரி - நகரி மலை, குன்றவர்த்தனம், இராஜிகுண்டாமலை முதலியன; படர் வனம் - மலைகளினிடையே பரந்த காடுகள். இந்நாடு முழுமையும் இந்நாளிலும் மலைகளும் வனங்களுமாயுள்ளது காண்க.

திருக்காரிகரை - தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று. "கடங்களூர் திருக்காரி கரை கயிலாயம்" (நம்பி - கொல்லி - இடையாற்றுத் தொகை - 3). திருவாலங்காடு திருப்பாசூர் முதலிய தலங்களை வணங்கி, ஆளுடையபிள்ளையாரும் இவ்வாறே இங்குப் போந்து வணங்கித், திருக்காளத்தி சென்றருளிய வரலாற்றை "மென்புனனாட் டினை யகன்று வேற்புங் கானுந், தொக்கபெரு வன்புலக்கா னடைந்து போகிச் சூலகபா லக் கரத்துச் சுடரு மேனி, முக்கண்முதற் றலைவனிட மாகி யுள்ள முகினெருங்கு காரிகரை முன்னர்ச் சென்று, புக்கிறைஞ்சிப் போற்றிசைத்துப் பதியில் வைகிப் பூதியரோ டுடன் மகிழ்ந்தார் புகலி வேந்தர்" (1015), "இறைவர்திருக் காரிகரை யிறைஞ்சி யப்பா லெண் ணில்பெரு வரைகளிரு மருங்கு மெங்கும்......" (1016) என்று ஆசிரியர் அவர்தம் புராணத்து விரித்தருளல் காண்க. இஃது மலையுங் காடுமடர்ந்த நாட்டினிடையில் உள்ளது. M. S. M. இருப்புப் பாதையில் அரக்கோணம் - ரேணுகுண்டா வழியில், புத்தூர் என்ற நிலயத்தில் இறங்கி, அங்கு நின்றும் கிழக்கு நோக்கி ஊத்துக்கோட்டை செல்லும் வண்டிப் பாதையில் 5 நாழிகை யளவில், ஆரணிய நதியைத்தாண்டி, அதன் வடகரையில் உள்ளது. பதிகங்கள் கிடைத்தில. இருநாயன்மார்களும் இவ்வழியே போந்தருளியமையால் இஃது அந்நாளில் பெருந்தலமாயிருந்திருத்தலும், திருவாலங் காட்டினின்றும் செல்வோர், திருப்புத்தூரின்றும் ஊத்துக்கோட்டை சேர்ந்து அங்கு நின்று வடக்கே செல்லும் வண்டிப்பாதை வழியே திருக்காளத்தி செல்வது பெரும் வழக்காகிய வழியா யிருந்திருத்தலும் கூடும் என்று கருதப்படும். அடைவார்-பணிந்து - எய்தினர் - என்று முடிக்க வைத் தோதிய கருத்துமிது.

செல்கதி முன் அளிப்பவர் - செல்கதி - உயிர்கள் செல்லவேண்டிய கதி; சிவ நெறி. முன் - வந்து வணங்காமுன். விரைவு குறித்தது.

தோல்கலையின் பெருவேந்தர் - கலைஞானங்கள் எல்லாம் கைவரப்பெற்று இணை யின்றி விளங்கியவர்; கலை ஞானங்கள் எனப்படும் அபரஞானங்களின் அரிய பெரிய உண்மைகள் பலவும் நாயனர் திருவாக்கில் அங்கங்கு ஒவ்வோர் சிறிய உவமை முதலிய துணுக்குக்களாக எளிமைப்பாடு பெற அமைந்து கிடந்து விளங்கும் பெருமை குறிக்க இவ்வாறு விதந்தோதினர். "சென்றுருளும் கதிரிரண்டும் விசும்பில் வைத்தார்"; "கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை கருநரம்பும் வெள்ளெலும்பும் சேர்ந்தொன் றாகி, யுருவாகிப் புறப்பட்டு"; "பூத்தானும் பூவினிறத்தானும் பூக்குளால் வாசமாய் மன்னி நின்ற, கோத்தானும்"; "வித்தா முளையாகும் வேரே தானும்"; "ஒன்ப தொத்துநின் றெண்ணு ளொடுங்குமே"; "கலையாகிக் கலைஞானந் தானே யாகி" முத லிய எண்ணிறந்த திருவாக்குக்களின் கலைஞான நுட்பங்களையும், பதி பசு பாச விலக் கண முதலியவற்றைக் கூறும் திருவாக்கு நுட்பங்களையும் காண்க. சிவக் கலையாகிய பரஞானம் பெறச் சாதகமாதலின் தோல்கலை என்று சிறப்பித்தார்.

தொண்டர்கள் பின் உம்பர்குழாம் மல்கு - தேவர்கள் தொண்டர்களின் பின்னே அவர்களது ஆணைவழி நிற்கக்கடவர் என்ற கருத்து. "காலநேர் படுதல் பார்த்தய னிற்பக், காத லன்பர்கண நாதர் புகும்பொற், கோலநீடு திருவாயில்" (தில்லை; 249). "வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள் வாயில் மருங்கிறைஞ்சி யுட் புகுந்து" (திருக்காளத்தி ; திருஞான - புரா - 1022) முதலியவை காண்க.

மாமலை - திருமலை ; திருக்கயிலை என்ற குறிப்பு. 1612-ம் இவ்வாறே வரும் ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய நம்பிகள் சரித வரலாறுகளும் நினைவு கூர்க.

வந்து - திருக்காரிகரையி னின்றும் மலையும் கானும் பல நடந்து நெடுந்தூரம் வந்தமை குறிப்பு. 343

1609. பொன்முகலித் திருநதியின் புனிதநெடுந் தீர்த்தத்தின்
முன்முழுகிக் காளத்தி மொய்வரையின் றாழ்வரையிற்
சென்னியுறப் பணிந்தெழுந்து செங்கண்விடைத் தனிப்பாகர்
மன்னுமலை மிசையேறி வலங்கொண்டு வணங்குவார், ருசச

1610. காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி யெழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
நாதனை" யென் கண்ணுளா" னெனுந்திருத்தாண் டகநவின்றார்,

1611. மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதஞ் சேர்ந்திறைஞ்சி,
யலைத்துவிழுங் கண்ணருவி யாகத்துப் பாய்ந்திழியத்
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம் போந்தணைந்தார். ருசசு

1609. (இ - ள்). வெளிப்படை. பொன்முகலி என்னும் திருநதியினுடைய தூய நெடுந் தீர்த்தத்தில் முன்னே முழுகித், திருக்காளத்தித் தொடர்மலைகளின் தாழ் வரையில் தலை நிலம்பொருந்த பணிந்து எழுந்து, சிவந்த கண்ணுடைய விடையினை ஊர்தியாக உடைய ஒப்பற்ற பெருமான் நிலைத்து எழுந்தருளிய அந்த மலையின்மேல் ஏறி, வலமாகவந்து வணங்குவாராய், ருசச

1610. (இ - ள்) வெளிப்படை. காதில் அணிந்த வெள்ளிய சங்குக்குழையினை யுடையவரைத், திருக்காளத்தி மலையின் கொழுந்து போல்பவரை, வேதமொழியின் மூல மானவரைக் கீழே விழுந்துவணங்கி, எழுந்து பெரிய ஆசை மேற்கொண்ட மனங்களிப் பவும், கண்கள் களிப்பவும் பரவச மடைந்து, இறைவரைப் போற்றி, "என் கண்ணு ளான்" என்றமகுடம் பொருந்திய திருத்தாண்டகப் பதிகத்தினை அருளிச்செய்தாராய்,

1611. (இ - ள்) வெளிப்படை. மலைச் சிகரத்தில் சிகாமணியாய் முளைத்து எழுந்தருளிய இறைவரது பக்கத்திற் பொருந்த முன்பு நிற்கும் வில்லேந்திய கையினை யுடைய திருக்கண்ணப்ப தேவரது திருப்பாதங்களைச் சேர்ந்து வணங்கிப், பெருகி விழுகின்ற கண்ணீர் அருவி போலத் திருமேனியில் பாய்ந்து வழியத், தலையின் மேலே கூப்பிய கைகளோடும் வணங்கி வெளியே போந்து அணைந்தனர். ருசசு

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபாக்கி உரைக்க நின்றன.

1609. (வி - ரை) பொன்முகலித் திருநதி - 743 - ல் உரைத்தவை பார்க்க.

புனித நெடுந் தீர்த்தம் - கண்ணப்ப நாயனாரது (கங்கையினும் புனிதமாகிய) திரு வாய்க் கலசத்தின் வழி இறைவரது திருமுடிமேல் ஆட்டப்பட்ட தூய திருமஞ்சன மாயினமையின் இவ்வாறு விதந்தோதினர்.

முன் முழுகி - நீர்மூழ்கி வழிபாடு தொடங்குதல் யாண்டும் விதிக்கப்பட்ட இயல் பேயாயினும்,இங்குச் சிறப்பாக இத்திருநதித் தீர்த்தத்தினை வழிபட்டு அதனுள் முழுகு தலே வழிபாட்டின் ஒரு பகுதியாக அமைந்த தென்பார் விதந்து எடுத்தோதினர்.

காளத்தி மொய்வரை - காளத்தியைத் தொடர்ந்த மலைத்தொகுதி. நீண்ட மலைத் தொடர்களின் ஒரு பகுதி திருக்காளத்தி. தனி-விடை-என்று கூட்டியுரைத்தலுமாம்.

தாழ்வரை - மலையின் அடிவாரம். வரைத்தாழ் என்பது தாழ்வரை என நின்றது முன்றில் என்பதுபோல. தாழ்வரையில்......பணிந்து - மலையை வணங்கி.

வலங் கொண்டு - மலையின்மேல் திருக்கோயிலை வலம் வந்து.

வணங்குவார் - இறைஞ்சி - என வரும்பாட்டுடன் கூட்டுக. 344

1610. (வி - ரை) வெண் குழையான் - மலைக்கொழுந்து - மொழிமூலம் - என மூன்று தன்மைகளாற் கூறியதனால் உருவம், அருவுருவம், அருவம் என்ற மூன்று திரு மேனிகளையும் குறித்தபடி. "மாகமார் திருக்காளத்தி மலையெழு கொழுந்தா யுள்ள ஏகநாயகர்" (754).

காதல்புரி மனம் களிப்பக் கண் களிப்ப - "என் கண்ணுளான்" என்ற தேவாரத்துக்கு ஆசிரியர் கண்ட விரிவுரை. காதல் மிக, எண்ணிய மனம் களித்தது; மனங் களிப்பக் கண்ட கண்கள் களித்தன; ஆதலின் என் கண்ணுளான் என்ற கருத் துடன் பதிகம் பாடினார் என்பது. கண் - கண்ட கண்ணும் மனமாகிய உள்ளகமும் குறித்தல் காண்க. "கண்ணாரக் காண்பார்க்கோர் காட்சியான்", "காணப்பட்ட" என்ற தேவாரக் குறிப்புக்களும் கருதுக.

விழுந்து -இறைஞ்சி - எழுந்து - பரவசமாய் - நவின்றார் - அன்பு மேலீட்டின் மெய்ப்பாடுகள்.

நாதனை - நவின்றார் - என்க. நவிலுதல் - போற்றுதல்.

என் கண்ணுளான்; திருத்தாண்டகப் பதிகத்தின் கருத்தும் மகுடமுமாம்.

நவின்றார் - நவின்றாராகி; முற்றெச்சம். நவின்றார் - இறைஞ்சித் - தாழ்ந்து - போந்து - அணைந்தார் - என்று வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. ஆளுடைய பிள்ளையார் இங்கு வழிபட்ட வரலாறு கூறும் பகுதிக்கேற்ப, இவ்வாறு நவின்றார் என்பதனை முற்றெச்சமாகக் கொண்டு உரைத்து மேலும் கூட்டி முடிக்கப்பட்டது. (திருஞான - புரா - பார்க்க). வினைமுற்றாகவே கொண்டுரைப்பினுமிழுக்காது. 345

திருக்காளத்தி

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

விற்றூணொன் றில்லாத நல்கூர்ந் தான்காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை யல்லான்
மற்றூணொன் றில்லாத மாசது ரன்காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப்
பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண்
பொய்யாது பொழிலேழுந் தாங்கி நின்ற
கற்றூண்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காணவனென் கண்ணு ளானே. 1

மனத்தகத்தான் றலைமேலான் வாக்கி னுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தகத்தா னிமையவர்தஞ் சிரத்தின் மேலா
னேழண்டத் தப்பாலா னிப்பாற் செம்பொன்
புனத்தகத்தா னறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையா னெருப்பிடையான் காற்றி னுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 5

தேனப்பூ வண்டுண்ட கொன்றை யான்காண்
டிருவேகம் பத்தான்காண் டேனூர்ந் துக்க
ஞானப்பூங் கோதையாள் பாகத் தான்கா
ணம்பன்காண் ஞானத் தோளியா னுன்காண்
வானப்பே ரூரு மறிய வோடி
மட்டித்து நின்றான்காண் வண்டார் சோலைக்
கானப்பே ரூரான்காண் கறைக்கண் டன்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 9

திருச்சிற்றம்பலம்

**பதிகக்குறிப்பு :**—விற்றூணொன் றில்லாத நல் கூர்ந்தான், பொய்யாது பொழி லேழுந் தாங்கி நின்ற பொற்றூண், ஞானப் பெருங்கடற்கோர் நாவாயன்ன பூரணன், மனத்தகத்தான், தலைமேலான், வாக்கினுள்ளான், தொண்ட ரினத்தகத்தான், எல்லா முன் தோன்றாமே தோன்றினான், கல்லாடை மேற்கொண்ட காபாலி, தேனூர்ந்துக்க ஞானப் பூங்கோதையாள் பாகத்தான், குறையுடையார் குற்றேவல் கொள்வான், கண்ணாரக் காண்பார்க்கோர் காட்சியான், என்வினையை இடிப்பான், தீவினைக டீர்த் திடுமென் சிந்தையான் என்றிவ்வாறு பல தன்மைகளாலு மறியப்படும் காளத்திகாணப் பட்ட கணநாதன் என்கண்ணுளான்.

**பதிகப் பாட்டுக் குறிப்பு.**—(1) **விற்றூண்......நல்கூர்ந்தான்** - விற்றுண்ணுதற் குரிய உடைமை ஒன்று மில்லாத தரித்திரமுடையான். **கச்சிக்கம்பன்** - கச்சித்திருவேகம்பன் என்ற தன்மைபற்றி இப்பதிகத்துப் பல பாட்டுக்களிலும் (2 - 4 - 6 - 7 - 9) போற்றினர். தொண்டை நாட்டு யாத்திரையில் திருவேகம் பத்தை வழிபட்ட காட்சியின் சிறப்பு நாயனர் திருமனத்தினுள் ஊன்றியிருந்த நிலைக் குறிப்பு. **பிச்சை......சதுரன்** - நல்கூர்ந்தான் என்றதனைத் தொடர்ந்து கூறிய படி. **சதுரன்** - வல்லமையுடையான். **கற்றூண்** - உலகமனைத்தும் தாங்கும் சத்தி இவ்வா றுபசரிக்கப்பட்டது. **கணநாதன்** - காளத்திநாதர் பெயர். "கணநாதனெங் காளத்தியாய்" (நம்பி - தேவா).—(2) **இடிப்பான்** - அழிப்பவன். வலிமை போக்கு பவன். **ஐம்புரியும்......படிப்பான்** - பிரமன். **ஐம்புரி** - பஞ்சாங்கம். திதி - வாரம் - நட்சத்திரம் - யோகம், கரணம் என்ற ஐந்து அங்கங்களைக் காட்டுவது. "ஐந்திய லங்கஞ் சூறற் கயன்புகன் றுழல்வான்" (கந்தபு - அமரர்சிறைபுகுபட - 133). **ஐம்புரியும் வழுவா வண்ணம் படித்தான்**-என்றது உலகத்தை நாள் முதலியவாற்றால் நடைபெறுமாறு படைத்தல்.—(3) **ஞான......நாவாய்** - ஞானமாகிய கடலின் கரை காணச் செய்பவன். **நாவாய்** - தோணி; கப்பல்.—(4) **சுறவேந்தன்**-மீனக்கொடியுடைய மன்மதன். **ஏவலம்** - அம்பின் வன்மை. ஏ - அம்பு.—(5) இத்திருப்பாட்டு மிக உயர்ந்த தத்துவ உண்மைகளை எடுத்து ஓதுவது. **கயிலாயத்துச்சி உள்ளான்** - **காளத் யான்**-காளத்தி கயிலாயமே என்ற உண்மைகுறிப்பது.—(6)**பூரித்தான்**-நிறைவித்தான். **எல்லாம்......தோன்றினன்** - அநாதியா யுள்ளவன்; **கல்லாடை** - காவியுடை. துறவிகள் உடுப்பது. **காபாலி** - கபாலமேந்திப் பலி கொள்பவன். "காபாலி" (8), (10)—(9) **தேனூர்ந்துக்க......பாகத்தான்** - தல அம்மையார் பெயர். அம்மையார் கூந்தல் தேன் மொய்க்கும்படி இயற்கை மணமுடையது என்பது குறிப்பு. திரு விளையாடற் புராணத்துள், தருமிக்குப்பொற்கிழி யளித்தது, கீரனை மடுவில் வீட்டியது முதலிய வரலாறுகள் இங்கு நினைவு கூர்தற்பாலன.—(10) **குறையுடையார்** - குறைந்து வந்தடைந்தவர்கள். (11) **கண்ணார......காட்சியான்** - கண்ணப்ப நாயனர் சரிதக்

குறிப்பு. "நேர் பெற நோக்கி நின்றார்" (777), "ஏகநாயகரைக் கண்டார்" (754). "கண்டார் காதலிக்கும்" (நம்பி தேவா).

தலவிசேடம் :—கண்ணப்ப நாயனார் புராணத்திறுதியில் உரைக்கப்பட்டது. பக்கம் கOசுO - கOசுக).

1611. (வி - ரை) மலைச் சிகரச் சிகாமணி - மலையுச்சியில் சிகாமணிபோல வெளிப்பட விளங்குபவர். "மலையெழு கொழுந்தா யுள்ள, வேக நாயகர்" (754). மலைச் சிகரம் - மலையின்மேல் சிகார வாச்சியராகிய என்றதும் குறிப்பு. "திருத் தோணிச் சிகரம்பார்த், தம்மேயப் பாவென்றென் றழுதருளி யழைத்தருள" (திரு ஞான - புரா - 63) என்னும் குறிப்பும் இங்கு நினைவு கூர்க.

மருங்கு உற முன்னே நிற்கும் - "என் வலத்தில் மாறிலாய் நிற்க" என்று இறை வர் ஆணையிட்டபடி அன்று முதல் இறைவரது பக்கத்துப் பொருந்த முன்பு நின்றருள் வர் கண்ணப்ப நாயனார்.

சிலைத் தடக்கை - வில் ஏந்திய அந்தக் கோலத்துடன். அருச்சுனராகிய முன் பிறவியில் இறைவர் தந்த பாசுபதமே இப்பிறவியில் அவர் கையில் நீங்காது நின்று அமுத மூட்டியது; அது அவர் திருவருணிலை பெற்ற ஞான்றும் அவர் கையில் இருந் தது; அதனைக் கொண்ட அந்நிலையே அவர் எழுந்தருளியுள்ளார் என்பதெல்லாம் குறிக்க இவ்வாறு கூறினார். 681 - பார்க்க.

கண்ணப்பர் திருப்பாதம் சேர்ந்து இறைஞ்சி - இறைவர் திருமுன்பு இறைஞ்சி எழுந்து போற்றித் தாண்டக நவின்ற நாயனார் அவ்வழிபாடு முற்றிய நிலையில் செய் யும் வணக்கத்தைக் கண்ணப்ப நாயனார் திருமுன்பு செய்து, வழிபாட்டை, நிறை வாக்கினார் என்பது காணத்தக்கது. விழுந்திறைஞ்சி - (1610) என்றது இறைவர் திருமுன்பு நிகழ்ந்ததனையும், இங்குச் சேர்ந்திறைஞ்சி (1611) என்றது கண்ணப்பர் திருமுன்பு நிகழ்ந்ததனையும் குறித்தன. "வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன் காண்பார் போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்" (திருஞான - புரா - 1023) என்று ஆளுடைய பிள்ளையார் இங்கு வழிப்பட்டது இவ்வாறே நிகழ்வதும் கருதுக.

அலைத்து விழும் - அலைபோல மேன்மேற் பெருகி விழும்.

புறம் போந்து அணைந்தார் - திருக்கோயிற் புறத்தே சேர்ந்து திருமடத்தில் அணைந்தனர்.

பரந்திழிய—என்பதும் பாடம். 346

1612. சேணிலவு திருமலையிற் றிருப்பணியா யினசெய்து
தாணுவினை யம்மலைமேற் றாள்பணிந்த குறிப்பினாற்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலங்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார். ௩சஎ

(இ - ள்) வெளிப்படை. மிகவுயர்ந்த அத்திருமலையில் திருப்பணிகளைச் செய்து இறைவரை அம்மலையின் மேல் வழிபட்ட குறிப்பின் காரணமாகப், பேணும் திருக் கயிலை மலையில் இறைவர் எழுந்தருளிய பெருங் கோலத்தைக் காணும் அதனைக் கலை வாய்மை வேந்தராகிய நாயனார் காதலித்தனர்.

(வி - ரை) சேண் நிலவு திருமலை - உயர்ந்து நீண்டு விளங்கும் திருமலை. சேணும் - என்று சிறப்பும்மை தொக்கதாகக் கொண்டு, நெடுந்தூரத்தினும், நிலவு - விளங்கும் என்றுரைப்பது மொன்று.

திருமலை - இது கயிலையே யாதலின், அதனைப் போலவே திருமலை என்று அடை மொழி கொடாது கூறினார். "திருமலைச் சிறப்பு" என்றது காண்க.

**திருப்பணியாயின** - *வாக்குத் தொண்டும் கைத் திருத்தொண்டும் முதலாயின.* **ஆயின** - *அமைந்தவை - ஏற்றவை என்றலுமாம்.*

**தாணுவினை...குறிப்பினுல்** - *தாணு - சிவபிரான். "பொழிலேழுந் தாங்கிநின்ற கற்றூண்காண்" என்ற திருத்தாண்டகத்தின்படி இங்கு இறைவர் உலகமெல்லாந் தாங்கும் தூண் போன்றிருக்கும் நிலையும் குறிப்பிடத்தக்கது.* (தாணு - தூண்).

**அம்மலைமேற் பணிந்த குறிப்பினுல்** - *அந்த மலை தென்கயிலாய மாதலின் அது திருக்கயிலை மலையினை நினைவூட்டிற்று என்க. இது கயிலையே என்று திருமனத்துட் டோன்றும் அருட் குறிப்பு. ஆளுடைய பிள்ளையாரும், ஆளுடைய நம்பிகளும் இவ் வருட் குறிப்புக் கொண்டே இங்கு நின்ற வண்ணமே திருக்கேதாரம் முதலிய வட கயிலைத் தலங்களைப் பாடியருளிய வரலாறுகளும் இங்கு நினைவு கூர்தற்பாலன.* (திரு ஞான - புரா - 1027); (ஏயர்கோன் புரா - 198).

**குறிப்பினுல்** - *காளத்தி தென்கயிலை என்ற மரபுடனே, நக்கீரனுர் கயிலை பாதி காளத்தி பாதி யந்தாதி பாடியமையும், கண்ணப்பர், முன்னை நிலையில் அருச்சுனராகிக் கயிலையில் தவஞ்செய்து கேட்ட வரத்தின் தொடர்ச்சி பற்றிக் காளத்தியிற்போந்து முத்திபெற்றமையும், பிறவும் திருவுள்ளக் குறிப்பில் நிகழ்ந்த அதனுல். நாயனுரது சரிதப் பின் னிகழ்ச்சிகள் நிகழ்விக்கவுள்ள அருட்குறிப்பு.* 751 *முதலியவையும் பார்க்க.*

**பேணு** - *இறைவர் விரும்பி வீற்றிருக்கும். மெய்யடியார்கள் எல்லாரும் பேணுகின்ற என்றலுமாம்.*

**பெருங்கோலம்** - 1638 *முதல்* 1644 *வரை கூறப்படும் கோலம். உலகம் எங்கும் காணப்படுவது இதுவேயாதலின்* **பெருங்கோலம்** *எனப்பட்டது.*

**காணுமது...காவலனுர்** - *இவ்வடி முற்றுமோனை. இவ்வாறு எழுந்த காதல் பின்னர் முற்றும் வகையைக் குறிப்பில் உணர வைத்த திறம் காண்க. கயிலையிற்* **காணுமது** *என்னுது* **கோலம் காணுமது** *என்றதனுல், அதனையே ஐயாற்றிற் கண்டனர் என்பதும் குறிப்பு. "வைதெழுவார் காமம்பொய் போகாவடி...கைதொழுது நாமேத்திக் காணும்படி" (திருவடித்தாண் - 3) என்றபடி நாயனுர் கொண்ட திண்ணிய காதல் பொய்போகாது நிறைவெய்தப்பெற்ற திறமும் காண்க. மயிலையின் குறிப்பில் மகர முற்றுமோனை பெறவைத்தது போலக்* (1596 - 1567), *இங்குக் கயிலையின் குறிப்பில் ககர முற்றுமோனைபெற வைத்த நயம் காண்க.*

**கலைவாய்மைக் காவலனுர்** - *ஏனை ஆசாரியன்மார்களும் திருக்கயிலையினை இங்கு நின்றுபோற்றினுர்கள். அவர்கள் காணுமது காதலிக்காது நின்று துதித்து அவ்வளவில் உலகை வழிப்படுத்தியருளினர்; ஆனுல் நாயனுர் தாம் பேணு மதுமட்டோடமையாது,* **காணுமதுவும்** *காதலித்து அவ்வழியே உலகையும் ஊக்கினர். அதுபற்றி யன்றே அடியவர் பரம்பரையில் இந்நாள் வரையில் திருக்கயிலாய மகாயாத்திரையும் வழிவழி நிகழ்ந்து வருவதாயிற்று !.* **கலைவாய்மைக் காவலனுராதலின் காதலித்தார்** *என உடம்பொடு புணர்த்தி யோதியருளிய திறமும் சிந்திக்க. "தொல்கலையின் பெருவேந்தர்"* (1608) *பார்க்க. சரியை முதலிய சாதனங்களைக் கூறும் அரஞானமாகிய சிவக் கலையும், அதன் வாய்மையாகிய சாத்தியச் சிவயோக போக விளைவுகளும் உலகில்நின்று நிலவும்படி காவல் செய்பவர் என்பார்* **கலைவாய்மைக் காவலனுர்** *என்றுர். "கற்றதனு லாயபயன்" (குறள்), "அலகில்கலைத் துறைதழைப்ப"* (1283) *என்றவையும் கருதுக.*

**அம்மலைமேல் தாள்பணிந்த** - *அகரச்சுட்டாகிய சேய்மைச் சுட்டினுற் கூறிய ஆற்றலினுலும், சேணிலவு திருமலை என்ற குறிப்பினுலும் அம்மலை என்றது திருக்கயிலாயமலை என்றே கொண்டு, தாம் முன்னை நிலையில் வாகீச முனிவராகத் திருக் கயிலையில் பணிசெய்திருந்த குறிப்பு என்றுரைக்கவும் நின்றது.*

வேறு

1613, அங்கண் மாமலை மேன்ம ருந்தை வணங்கி யாரரு ளான்மிகப்
பொங்கு காதலி னுத்த ரத்திசை மேல்வி ருப்பொடு போதுவார்
துங்க மால்வரை கானி யாறு தொடர்ந்த நாடு கடந்தபின்
செங்கண் மால்விடை யண்ணன் மேவு திருப்ப ருப்பத மெய்தினார்.

(இ - ள்) அங்கண்...வணங்கி - அங்கண்மையுடைய, அத்திருமலையின்மேல் மருந்தாகிய இறைவரை வணங்கி; ஆர் அருளால் - அவருடைய நிறைந்த திருவருள் பெற்றமையினாலே; மிக...போதுவார் - மேன்மேல் மிகவும் பொங்குகின்ற காதலினால் வடதிசையை நோக்கி விருப்பத்தோடும் போவாராய்; துங்க...பின் - பெரியனவாகிய பெருமலைகளையும், கான்யாறுகளைகளையும், தொடர்ந்துள்ள நாடுகளையுங் கடந்து சென்ற பின்பு; செங்கண்...எய்தினார் - சிவந்த கண்ணையுடைய மால்விடையினை உடைய சிவபெருமான் பொருந்தி எழுந்தருளியிருக்கும் திருப்பருப்பதத்தைச் சேர்ந்தனர்.

(வி - ரை) அங்கண் - மருந்து என்று கூட்டுக. அங்கண்மையாவது அருணோக்கம் அறக்கருணை மறக்கருணை என்ற இரண்டு வகையிலும் எல்லா உயிர்கள் மாட்டும் வைத்தல். "காமனையு முடல்கொண்டார் கண்ணுனோக்கிக் கண்ணப்பர் பணியுங் கொள் கபாலி யாரே" (பொது - தாண்) என்ற இடத்துக் கண்ணுனோக்கி என்று சிங்க நோக்காக இடையில் வைத்துக்கூறிய நாயனாரது திருவாக்கின் கருத்துச் சிந்திக்க. "அங்கணர் கருணைகூர்ந்த அருட்டிரு நோக்க மெய்த" (753). அங்கண் - அவ்விடத்து என்றுரைத்தலுமாம்.

மேன் மருந்தை - மேலாகிய மருந்து. மருந்து எல்லாவற்றினும் சிறந்த மருந்து. மருந்து போல்பவரை மருந்தென்றது உபசாரம். "மலைமருந்தை" (784) என்றவிடத்துரைத்தவை பார்க்க.

ஆர் அருளால் - பொங்கு என்றும், அருளால் - போதுவார் என்றும் கூட்டி ஏற்றபடி உரைக்க நின்றது. அருளால் - வணங்கி அருள் விடை பெற்று அத்துணை கொண்டு.

மிகப் பொங்கு காதல் - அமைவுபடாது மேன் மேலும் ஊற்றெடுக்கும் ஆசையின் மிகுதி.

உத்தரத் திசை மேல் - வடக்கில் திருக்கயிலாயத்தின் திசையை நோக்கி.

துங்கம் - பெரிது. இதனை, வரை - யாறு - நாடு - என்ற மூன்றுடனும் தனித்தனி கூட்டுக. வடதிசை செல்லச் செல்ல மலைகளும் யாறுகளும் அவை தொடர்ந்த நாடுகளும் மிகப் பரந்தும் நீண்டும் பெரிய அளவுள்ளவை. இது குடிவளம் குறைந்த மலைகளும், காட்டாறுகளும் பெருவெளியான நாடுகளும் ஆக உள்ள பரந்த தரைப் பகுதி. இவை இப்போது தெலுங்கு தேசமாக உள்ளன. மலைகளும் ஆறுகளும் தெலுங்குப் பெயர்களா லறியப்படுகின்றன.

செங்கண்...திருப்பருப்பதம் - செங்கண்மால் விடை - நந்திதேவர். அண்ணல் விடைமேவு திருப்பருப்பதம் - என்று கூட்டுக. நந்திதேவர் தவஞ்செய்து இந்த மலையுருவமாயிருந்து இறைவரைத் தாங்குகின்றார் என்னும் தலவரலாறு குறிக்க இவ்வாறு கூறினார். இன்றும் நந்தியால் - (Nandyal) என்ற ஊரினின்றும் இத்தலத்தை யடையும் வழியும், நந்தியால் என்ற பெயரின் வழக்கும், கருதுக. "செங்கண் மால் பரவி யேத்திச் சிவனென நின்ற செல்வர்" "அடல்விடை யூர்தி யாகி" (10) என்ற இத்தலத் திருநேரிசைகளும் காண்க.

மேவு - தவத்துக்கு இரங்கி வெளிப்பட்டு எழுந்தருளி யமர்ந்த.

திருப்பருப்பதம் - வடமொழியில் ஸ்ரீபர்வதம் என்றும், ஸ்ரீசைலம் என்றும் வழங்கும்.

இந்த வடநாட்டுக் கயிலை யாத்திரை வழியின் ஏற்ற விழிவுகளும், வழிச்செலவின் அங்கங்குத் தங்கிச்செல்லவும் முடுகிச் செல்லவும் உள்ள சிரமங்களும், தீவிர உணர்ச்சிகளும் குறிக்கச், சொல்லும் பொருளும் ஒத்தியலும்படி இப்பகுதியைத் தங்குதல் நீளுதல்இசை பொருந்திய சந்த யாப்பினால் யாத்த ஆசிரியரது தமிழ்க் கவிநலம் காண்க. திண்ணனாரது வேட்டை வினை கூறும் பகுதி (717 - 740) யும், புகழ்ச்சோழ நாயனார் புராணத்துள் போர்வினை கூறும் பகுதியும் (ஷெ-புரா. 20 - 30), ஏனாதி நாத நாயனார் புராணத்துட் போர் கூறும் பகுதியும் (622 - 631), பிறவும் இங்குக் கருதுக.

கான்யாறு—காடுயாறு—என்பனவும் பாடங்கள். 348

*1614. மான விஞ்சையர் வான நாடர்கள் வானி யக்கர்கள் சித்தர்கள்
கான கின்னரர் பன்ன காதிபர் காம சாரிக ளேமுதல்
ஞான மோனிக ணாளு நம்பரை வந்தி றைஞ்சி நலம்பெறுந்
தான மான திருச்சி லம்பை வணங்கி வண்டமிழ் சாற்றினார். ருசக

(இ - ள்). மான விஞ்சையர் - வலிமை பொருந்திய வித்தியாதரர்களும்; வானநாடர்கள் - விண்ணுலகத்திலுள்ள தேவர்களும்; வான் இயக்கர்கள் - ஆகாயத்தில் இயங்குகின்ற இயக்கர்களும்; சித்தர்கள் - சித்தர்களும்; கான கின்னரர் - கானத்தில் வல்லவர்களாகிய கின்னரர்களும்; பன்னகாதிபர் - நாகவுலகத்தார்களும்; காமசாரிகளே முதல் - தம் இச்சைப்படி சஞ்சரிக்கின்ற தேவச்சாதியார்களும் என்றிவர்கள் முதலாக; ஞான மோனிகள் - சிவஞானிகளாயுள்ள மௌனிகளும்; நாளும் வந்து நம்பரை இறைஞ்சி நலம் பெறும் தானமான திருச்சிலம்பை - நாடோறும் வந்து இறைவரை வணங்கி நன்மையடைகின்ற இடமாகிய திருப்பருப்பதத்தை; வணங்கி வண்தமிழ் சாற்றினார்-வணங்கி வளப்பமுடைய தமிழ்ப்பதிகம் பாடியருளினார். ருசக

(வி - ரை) விஞ்சையர் - விஞ்சை-வித்தை; வித்தைகள் பலவும் பயின்றவர்களாதலின் வித்தியாதரர்கள் எனப்படுவர்.

இயக்கர்கள் - யக்ஷர் என்பது வடமொழி. வானில் இயங்குகின்றதும், மக்கள் முதலிய உயிர்களைப் பீடித்து இயக்குவதும் உடையார். "சிற்றம்பலத்தான், சேயின தாட்சியிற் பட்டன ளாமித் திருந்திழையே" (மெலிவுகண்டு செவிலிகூறல் - திருக்கோவை - 282), அணங்குற்ற நோயறி வுற்றுரை யாடுமி னன்னையரே" (கட்டுவைப் பித்தல் - ஷெ 283), "பெண்ணினைப் பிறங்கற் சாரற், சூர்கொலாந் தீண்டிற் றென்றார்" (கந்தபு - வள்ளி - திருமண - 154) முதலியவை காண்க.

சித்தர்கள் - அணிமா முதலிய சித்துக்கள் பலவும் வல்லவர்கள். "திண்டிறற் சித்தர்களே கடைக் கூழைச் சென்மின்கள்" (திருவா-படைஎ - 2) என்று மணிவாசகனார் இவர்களது திறனை எடுத்துக்கூறுவதும், தாயுமானார், "வித்தகச் சித்தர்கணமே" என்று சித்தர்கணம் என்ற பகுதியில் இவர்களது வலிமைகளைப்பலவாறு எடுத்துக்காட்டுவதும் கருதுக. திருவாலவாயில் எல்லாம் வல்ல சித்தராகிய திருவிளையாடலும், சித்த மூர்த்திகளாகி வந்து இறைவர் அங்கங்கும் பல திருவிளையாடல்கள் செய்தருளியனவும் கருதுக. சித்தர்கள் என்று அடைமொழியின்றிக் கூறியதும் இவர்களது பெருவலிமையைக் காட்டுவது.

**கானகின்னரர்** - கின்னரர்கள் இசையில் வல்லதோர் தேவச்சாதியார். கானம் என்றது இவர்களது இயல்பை விளக்கவந்த இயற்கை யடைமொழி. இத்தன்மை பற்றிக் கின்னரம் என்பது இசையைக் குறிக்க வழங்கும் மரபும் காண்க.

**காமசாரிகள்**-தம் இச்சைப்படி எங்கும் சஞ்சரிக்க வல்ல வோர் தேவச்சாதியார். "வேறொருவர் காணும லுலகத் துலாவு"தல் முதலிய தன்மைகள் பெற்றுடையவர்கள், இவர்கள் சம்புத்தீவுக்கப்பால் கிம்புருட வர்க்கத்தில் உள்ள ஒருகூட்டத்தார். சில சித்துக்கள் வல்லவர். (கந்தபுரா - அண்டகோசப்படலம்).

**ஞான மோனிகள்** - சிவஞானிகளே மோனமாகிய சைவப் பெருநிலையில் விளங்குபவர்கள். "மௌன மோலி யயர்வறச் சென்னியில் வைத்து இராசாங்கத்திலமர்ந்தது வைதிக சைவ மழகிதந்தோ" (தாயுமானூர்). "ஞானிகளா யுள்ளார்க ணுன்மறையை முழுதுணர்ந்தைம் புலன்கள் செற்று, மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து தவஞ்செய்யு முதுகுன் றமே" (பிள்ளையார் - தேவா). ஞானிகளும் மோனிகளும் என்று பிரித்துரைத்தலுமாம். ஞானமோனிகள் தவஞ்செய்து வழிபட ஏற்ற இடம் இப்பெருமலையாமென்பது இன்றும் கண்கூடாகக் காணத்தக்கது.

**மான...திருச்சிலம்பு**-விஞ்சையர், வானநாடர், இயக்கர்கள், சித்தர்கள், கின்னரர், பன்னகாதிபர், காமசாரிகள் என்ற இவர்கள் பலவகைத் தேவக் கூட்டத்தார்கள். **இவர்களே முதல்** - ஞான மோனிகள் என்றது தேவக் கூட்டத்தார் முதலிய யாவரினும் சிறந்தவர்கள் ஞானமோனிகளாவர் என்று இறுதியில் வைத்துமுடித்துக் காட்டிய படியாம்.

**நாளும் வந்து வழிபடும்**-தேவர்கள் வந்து வழிபடும் திருச்சிலம்பு இது என்பதனை "இமையவர் பரவியேத்த" (நேரிசை - 7) என்றும், "துறைபல சுனைமூழ்கித் தூமலர் சுமந்தோடி, மறையொலி வாய்மொழியான் வானவர் மகிழ்ந்தேத்த" (பிள் - தேவா - வியாழக்குறிஞ்சி - 5) என்றும் வரும் இத்தலத் தேவாரங்களாலறிக. "தோடவிழ்ந்த கொன்றை யந்தார்த் தொல்லோன் கோலம், அமரர்தொழும் விழவுநோக்கப் பருப்பதத்தை யடைத லுற்றுன்" (சுமதி...பட - 5) என்ற பேரூர்ப்புராணமும் காண்க. இவ்வாறு தேவச்சாதியார்களும், பெரியோர்களும் வழிபடும்போது முழக்கும் துந்துபி முதலிய ஓசைகள் பக்குவமுடைய மக்களும் கேட்கநிகழும் என்பது துணிபு. "கதிரவனுச்சி நண்ணக் கடவுண்மால் வரையி னுச்சி, யதிர்தரு மோசை யைந்துமார்கலி முழக்கங் காட்ட" (750) என்றவிடத் துரைத்தவையும், "நாரணர்நான் முகரைங்கைப் புத்தேளிர் வடிவே னவின்றவலக் கரத்திறைவர் முதலோ ரநேகர், காரணியு மிடத்திறைவர் கழறொழுதங் கிருப்பர், காலங்க டோறுமாங்குக் கறங்கிசைத் துந்துபியின், சீரணிநல் லொலிமுத்தி யருக்கருகல் லாது செவியி னுறுது" (விம்மிதப் படலம் - 13) என்ற பேரூர்ப்புராணமும், பிறவும் கருதுக.

**திருச்சிலம்பு** - கயிலாயத்தை அடைமொழியின்றித் திருமலை என்றாற்போல இத்தலமும் திருச்சிலம்பு - திருப்பருப்பதம் - ஸ்ரீபர்வதம் - ஸ்ரீசைலம் என வழங்குவது இது கயிலாயத்திற் கொப்புடையது என்று காட்டுவதாம். அங்கும் தேவர் வழிபாடு உள்ளது. இது பற்றித் திருமலைச் சிறப்புப் பார்க்க.

**திருச்சிலம்பை வணங்கி வண்டமிழ் பாடினர்** - மலையினையே வணங்கி அவ்வாறே பதிகம் பாடியருளினர். "பருப்பத நோக்கி னுரே" என்ற மகுடம் காண்க. கயிலைசெல்லும் காதல் நோக்கத்திற் சென்றாராதலின் மலையை வணங்கி அம்மட்டில் மேற்சென்றனர். "எம்ம ருங்குமோர் காத லின்றி" (349) என வரும்பாட்டிற் கூறுதல் காண்க.

திருப்பருப்பதம்

திருச்சிற்றம்பலம் திருநேரிசை

கன்றினார் புரங்கண் மூன்றுங் கனலெரி யாகச் சீறி
நின்றதோ ருருவந் தன்னா னீர்மையு நிறையுங் கொண்டு
ஒன்றியாங் குமையுந் தாமு மூர்பலி தேர்ந்து பின்னும்
பன்றிப்பின் வேட ராகிப் பருப்பத நோக்கி னாரே. 1

அடல்விடை யூர்தி யாகி யரக்கன்றோ ளடர வூன்றிக்
கடலிடை நஞ்ச முண்ட கறையணி கண்ட னார்தாஞ்
சுடர்விடு மேனி தன்மேற் சுண்ணவெண் ணீறு பூசிப்
படர்சடை மதியஞ் சேர்த்திப் பருப்பத நோக்கி னாரே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—புரங்கள் மூன்றும் எரியாகச் சீறியும், உமையும் தாமும் ஊர் பலி தேர்ந்தும், பன்றிப்பின் வேடராயும், பற்றினார்க் கருள்கள் செய்தும் இவ்வாறு பலவும் அருளும் இறைவனார், பாரிடம் பாணிசெய்ய, அடல்விடையூர்தியாகிப் பருப் பதம் நோக்கினார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கன்றினார் - பகைத்தவர். நின்றதோர் உரு வம் - பிட்சாடன உருவம். நீர்மையும் நிறையுங்கொண்டு - தாருகாவனத்து இருடி களின் நீர்மையினையும், அவர்தம் மனைவியர்களது நிறையினையும் அழித்து.—(2) பற்றி னார் - பிற பற்றுக்களையெல்லாம் விட்டுத் தம்மையே பற்றினவர். "மற்றுப் பற்றெனக் கின்றி" (தேவா). "பற்றுக பற்றற்றான் பற்றினை" (குறள்).—(3) கரவு - வஞ்சம். "கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" (தேவா). வேட்கை விட்டிட்டார் என்க. "வென்றவைம் புலனான் மிக்கீர்" (401).—(6) ஓடர் - தலை ஓட்டினை ஏந்தியவராய். பாடர் - பாடுபவர் - பாட்டினை உடையவர்.—(7) இமையவர் பரவியேத்த - பல வகைத் தேவச்சாதியர்களும் இங்கு வந்து வழிபடுதல் கருத்து. (1614).—(8) காருடை - கார் - கருநிறமுடைய விடம். ஆகுபெயர். பாரிடம் பாணி செய்ய - பாரிடம் - பூதகணம். பாணி செய்ய - கைகளால் தாளம்போட.—(9) மாலுடையர் - மயக்கம் செய்பவர். ஐவர் - ஐம்பொறி. பைங்கண் வேள் ஏறு அது ஏறி - நந்திதேவர் தவங் கிடந்து இறைவரைத் தாங்கும் இம் மலையுருவமாயினமை குறிப்பு.—(10) அடல்விடை யூர்தி யாகி. என்ற கருத்துமிது.

தலவிசேடம்:—திருப்பருப்பதம் - இது வடமொழியில் ஸ்ரீசைலம், ஸ்ரீபர்வதம், மல்லிகார்ச்சுனம் என்று வழங்கப்படும். (அர்ச்சுனம் - மருது.) மருது மூன்றனுள் முதல் மருது இத்தலமாம். இடைமருது (சோழ நாடு), புடைமருது (பாண்டி நாடு) என்பவை ஏனை யிரண்டாம். சிலாதர் என்ற முனிவர் தவஞ் செய்த காரணத்தால் இது சைலம் என வழங்குவ தென்றும், சிலாதருடைய திருமகனார் திருநந்திதேவர் தவஞ் செய்து இறைவரைத் தாங்குவதற்கு இம்மலையுருவா யுள்ளாராதலின் இப் பெயர் பெற்ற தென்றும் கூறுப. "பருப்பதப் பெயர்ச் சிலாதனற் பாலகன் பரம, னிருப்ப வோர்வரை யாவனென் றருந்தவ மியற்றிப், பொருப்ப தாகியே யீசனை முடி யின்மேற் புனைந்த, திருப்பருப்பதத் தற்புத மியாவையுந் தெரிந்தான்" (வழிநடை - 5) என்றது கந்த புராணம். இதன் அளவிறந்த பெருமைகளைச் சிவ ரகசியப் பேரிதி காசம் எடுத்துப் பேசும். இங்கு எழுந்தருளிய இறைவரது திருமேனி பன்னிரண்டு சோதிலிங்கங்களுள் ஒன்று. சத்தி பீடங்கள் பதினெட்டனுள் ஒன்றாகிய பிரமராம் பாள் பீடம் இங்கு உள்ள அம்மை சந்நிதி யென்பர். சந்திராவதி என்ற அரசி இறை

வரை மல்லிகை மலரால் அருச்சித்துப் பேறு பெற்றதனால் மல்லிகார்ச்சுனர் எனப் பெயர் வழங்குவதாயிற்று என்பதும் தல வரலாறு. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. இதற்குச் சென்று சேவிக்கும் அருமை பற்றிச் "செல்லல்லுற வரிய சிவன் சீபர்ப்பத மலையே" என்று ஆளுடைய நம்பிகள் விதந்து போற்றியருளினர். இது திருக்கயிலையினை ஒத்த தலமாதலின் மகாசிவராத்திரி இங்குச் சிறப்பு. காளத்தியிலும் அவ்வாறே காண்க. சுவாமி - பருப்பத நாயகர்; அம்மை - பருப்பத நாயகி - பிரமராம்பாள்; மரம் - மருது; பதிகம் 3.

இது கர்னூல் ஜில்லாவில் M. S. M. இருப்புப் பாதையில் நந்தியால் என்ற நிலயத்தினின்றும் வட கிழக்கில் கற்சாலை வழி 32 நாழிகையளவில் உள்ள ஆத்மகூர் வரையில் மோடார் பஸ் வழி சென்று, அங்கு நின்றும் நாகலூட்டி - பெட்சேருவு - என்ற இடங்களின் வழியாய்க் கால் நடையில் மலை ஏறி 32 நாழிகை யளவில் அடையத் தக்கது. ஆத்ம கூரினின்றும் மலையேற்றம் 32 நாழிகை யளவு உள்ளது. இடையில் தங்கு மிடங்களும், பிற வசதிகளும் உண்டு.

பல நாடுகளும் பலர் சூழ்ந்து வர நடந்தது - (பருப்பதம் முதல் வாரணாசி வரை.)

1615. அம்ம ருங்கு கடந்து போமவ ரார்கொள் சூல வயிற்படைச்
தெலுங்கு- செம்மல் வெண்கயிலைப்பொருப்பைநினைந்தெழுந்ததோர்சிந்தையால்
கருநடம் எம்ம ருங்குமோர் காத லின்றி யிரண்டு பாலும் வியந்துளோர்
கைம்ம ருங்கணை யுந்தெ லுங்கு கடந்து கன்னட மெய்தினார்; ௬௨௦

1616. கருந டங்கழி வாக வெய்திய பின்க லந்தவ னங்களுந்
திருநதி - திருநதித் துறை யாவை யும்பயில் சேணெ டுங்கிரி வட்டையும்
மாளவம் பெருந லங்கிளர் நாடு மெண்ணில பிறப டச்செறி பொற்பினால்
வருநெ டுங்கதிர் கோலு சோலைய மாள வத்தினை நண்ணினார்; ௬௨௧

1617. அங்கு முற்றி யகன்று போகி
யருஞ்சு ரங்கள் கடந்துசென்
இலாடம் - றெங்கு மிக்க வறங்க ணீடு
வேற்பு - மிலாட பூமி யிகந்து போய்
வனங் மங்குல் சுற்றிய வெற்பி னோடு
கள்-ஆறு- வனங்க ளாறு கடந்தயற்
மத்திம பங்க யப்பழ னத்து மத்திம
பைதிரம் பைதி ரத்தினை யெய்தினார்; ௬௨௨

1618. அன்ன நாடு கடந்து கங்கை
யணைந்து சென்று வலங்கொள்ளும்
மின்னு வேணியர் வார ணாசி
வாரணாசி. விருப்பி னோடு பணிந்துடன்
கற்சுரம் பின்ன ணைந்தவர் தம்மை யங்க
தனி ணொழிந்து கங்கை பெயர்ந்துபோய்
சென்றது மன்னு காதல்செய் நாவின் மன்னவர்
வந்து கற்சுர முந்தினார். ௬௨௩

1615. (இ - ள்) அம்மருங்கு...அவர் - அதன் பக்கம் நின்றும் கடந்து செல்கின்றவர்; ஆர்கொள்...சிந்தையால் - திரிசூலமாகிய கூரிய படையை ஏந்திய, ஆத்தி மாலையை அணிந்த சிவபெருமானது வெள்ளிய திருக்கயிலாய மலையை நினைந்து எழுந்த ஒரு சிந்தையினால்; எம்மருங்கும் ஓர் காதல் இன்றி - எவ்விடத்திலும் வேறு எந்த ஆசையும் இல்லாமல்; இரண்டு...அணையும் - இரண்டு பக்கத்திலும் தமது ஆர்வங் கண்டு வியப்படைந்த அடியார்கள் பக்கத்தில் வந்து கூட; தெலுங்கு...எய்தினார் - தெலுங்கு நாட்டைக் கடந்து கருநட நாட்டை அடைந்தவராய்; ௩௫0

1616. (இ - ள்) கருநடம் கழிவு ஆக எய்தியபின் - கருநட நாட்டின் எல்லை தீர்ந்த இடத்தைச் சேர்ந்த பின்பு; கலந்த...பிற்பட - கலந்துள்ள காடுகளும், திருநதிகளின் துறைகள் எல்லாமும், பயின்று நெடுந்தூரம் நீண்டு செல்கின்ற மலைவழிகளும், பெரு நலங்களைத் தரும் நாடுகளும் ஆகிய இவைகள் எண்ணில்லாதவை பிற்பட்டொழியும்படி; செறி பொறப்பினால்...சோலைய - மரங்கள் செறிந்து அழகுபட வளர்ந்த தன்மையினால் மேல்வரும் ஞாயிறு வலமாகச் செல்கின்ற சோலைகளையுடைய; மாளவத்தினை நண்ணினார் - மாளவதேயத்தை அடைந்தவராய்; ௩௫௧

1617. (இ - ள்) அங்கு...போகி - அவ்விடம் முழுதும் கடந்து நீங்கிச்சென்று; அருஞ்சுரங்கள் கடந்து சென்று - அரிய காடுகளைக் கடந்துபோய்; எங்கும்...போய் - எங்கெங்கும் மிகுதியாகிய அறச்சாலைகள் நீடியுள்ள இலாட தேசத்தையும் தாண்டிச் சென்று; மங்குல்...கடந்து - மேகங்கள் சூழ்ந்த உயர்ந்த மலைகளுடனே வனங்களையும் ஆறுகளையும் கடந்து; அயல்...எய்தினார் - அருகே தாமரைகள் மலரும் வயல்களையுடைய மத்திம பைதிரம் என்னும் நாட்டினை யடைந்தவராய்; ௩௫௨

1618. (இ - ள்) அன்ன நாடு கடந்து - அந்த நாட்டினைக் கடந்து; கங்கை அணைந்துசென்று வலம்கொளும் - கங்கையாறு வந்து சென்று வலமாக வருகின்ற மின்னுவேணியர் வாரணாசி விருப்பினோடு பணிந்து - ஒளி பொருந்திய சடையுடைய பெருமான் எழுந்தருளிய வாரணாசியை விருப்பத்துடன் வணங்கி வழிபட்டு; உடன் பின் அணைந்தவர் தம்மை அங்கண் ஒழிந்து - தம்முடனே பின்பற்றி வந்த அடியவர்களை அவ்விடத்தில் விடுத்து; கங்கை பெயர்ந்துபோய் - கங்கைக் கரையைவிட்டு மேற் சென்று; மன்னு...முந்தினார் - பொருந்திய காதல் புரிகின்ற திருநாவுக்கரசர் வந்து கல் நிரம்பிய மலைக் கானல்களை யடைந்தனர். ௩௫௩

இந்த நான்கு பாட்டுக்களும் பொருட்டொடர்பு கொண்டு ஒரு முடிபாக்கி உரைக்க நின்றன.

1615. (வி - ரை) ஆர்கொள் - சேம்மல் என்று கூட்டுக.

ஆர் - ஆத்தி. ஆர்கோள் - நிறைந்த - கூரிய என்றுரைப்பாருமுண்டு.

சூல அயிற்படைச் சேம்மல் - சூலம் சிவபெருமானுக்குச் சிறப்பாயுரிய படை. "சூலபாணி" என்பது சிவன் பெயர்களுள் ஒன்று. சூலப்படைச் சேம்மல் - கயிலை - என்றது நொடித்தான் மலை என்னும் பொருள் தந்து நின்றது. சூல மேந்துதல் மூவருக்கும் முதல்வன் என்று காட்டும் என்ப ஆகலான் இங்கு இச்சிறப்பாற் கூறினார். "ஒடுங்கி" என்ற சிவஞானபோதக் கருத்தும் காண்க.

வேண்கயிலைப் பொருப்பு - பனிமூடியிருத்தலால் வெண்மலை என்றார். "பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப், பன்னு நீள்பனி மால்வரைப் பாலது" (11) என்ற திருமலைச் சிறப்பை இங்கு நினைவு கூர்க.

ஓர் சிந்தையால் - நிலைபிறழாது ஒருவழியே செல்லும் சிந்தை செலுத்துதலால்,

எம்மருங்கும் ஓர் காதல் இன்றி - எவ்விடத்தும் எவ்வகையானும் எந்தக்காதலும் இல்லாமல். காதலும் என முற்றும்மை தொக்கது. அவ்வாறு வேறு எக்காதலுமில்லாமைக்குக் காரணம், கயிலைப் பொருப்பை நினைந்த ஓர் சிந்தை கொண்டதாம். "இனியுறு பயனாதல் இரண்டுற மனம் வையேல்......பருப்பதம் பரவுதுமே" (தேவா- பிள்ளையார்) என்ற கருத்துக்காண்க. வேறு தலங்கள், புனிதயாறுகள், மலைகள் முதலியவற்றுக்குச் செல்லும் காதலுமின்றி என்க.

வியந்துளோர் - இரண்டுபாலும் - அணையும் என்று கூட்டுக. வியப்பாவது வேறொன்றும் காணாது ஒரே சிந்தையாய்ச் சென்று கொண்டிருக்கக் காண்போரது மன நிகழ்ச்சி. கைம்மருங்கு - நாயனாரது பக்கத்தில் தொடர்ந்து பின்பற்றி. இவ்வாறு அணைந்தவர்களையும் நாயனார் வாரணாசியில் விடுத்துச் சென்றமை பின் உரைக்கப்படும் (1618). அணைய என்பது அணையும் எனத் திரிந்தது.

தெலுங்கு - மொழியின் பெயர் அது வழங்கும் நிலத்துக்கு வந்தது; ஆகு பெயர்.

கருநடம் - கருமண் பரப்புள்ளநாடு என்றகாரணத்தால் கருநாடு எனப்பட்டது. கருநாடு கருநடம் என மருவிற்று, இங்குக் கன்னடம் என்றபாடம் பிழை எனத் தோன்றுகின்றது. மேல்வரும் பாட்டில் கருநடங் கழிவாக என்று வருவது காண்க. Karnatics என்பர் நவீனர். கன்னடம் என்பது வேறு; அது கன்னட (canarese) மொழி வழங்கு நாடு.

விரைந்துளோர்—என்பதும் பாடம். 350

1616. (வி - ரை) கழி வகை - பின்னாகக் கழிய.

கலந்த வனங்கள் - நாட்டின் இடையிடையே கலந்து பரவிய காட்டின்பகுதிகள். இது அந்நாட்டியல்பு.

திருநதித் துறை யாவையும்-இவை கிருட்டிணாநதி, கோதாவிரி, மகாநதி முதலிய புண்ணிய நதிகள்; ஆதலின் திருநதித்துறை என்றார். ஒவ்வொன்றும் பல பிரிவுகளையும் துறைகளையும் உடையனவாதலின் யாவையும் எனப்பட்டது. வடநாடு தீர்த்தச் சிறப்பு அளவில் மிக்கிருப்பதும் குறிப்பு.

பயில் சேண் நெடும் கிரிவட்டை - பயில் - எண்ணில்லாத மக்கள் செல்லும். சேண் - உயர்ந்து செல்லும். நெடும் - நீண்டதூரம் செல்லும். வட்டை - வழி.

பெருநலம் கிளர்நாடு - அந்தப் பெரு மலைப்பாதைகளின் இயல்பு குறித்தது. பெரு நீர்நிலைகளையுடைமையால் மிக்க வளங்கள் பலவும் தந்து விளங்கும் நாடுகள்.

செறி பொற்பினல்...சோலைய - செறி பொற்பினல் - இலைகள் செறிதலும், மரங்கள் அடர்தலும், வானளவோங்குதலும், மிக்க பரப்புடையனவாலும் என்றிவற்றால். வருநெடுங்கதிர் - மேலெழுந்துவரும் ஞாயிறு. கோலும் - ஊடுருவிச் செல்ல மாட்டாது புறத்திற் செல்லும். கதிர் கோலும் - கதிரை மறைக்கும் என்பாருமுண்டு. இது சோலைகளின் சிறப்புக் குறித்தது.

மாளவம் - Malwa என்பர் நவீனர். 56 தேசங்களுள் ஒன்று.

ஏகியபின் - சோலை வேலியம் மாளவ - என்பனவும் பாடங்கள். 351

1617. (வி - ரை) அங்கு முற்றி - அத்தேசமுழுதும் நடந்து.

எங்கும்...இலாடபூமி - இலாடம் - 56 தேசங்களுள் ஒன்று. வங்காளதேசத்தின் ஒருபகுதி. தருமச்சாலைகளும், வழிச் செல்வார்க்கு உணவு, உறையுள், மருந்து முதலிய வசதிகளை உதவும் பிற அறநிலையங்களும் அங்கங்கும் காண உள்ள சிறப்புங் குறிக்கப்பட்டன. நீடும் என்ற ஆசியின் பயனாக அவை இன்றும் பெருக நிகழ்ந்து

வருவன என்பதும் காண்க. இகந்து - கடந்து மேற்சென்று. இகந்து என்ற இகழ்ச்சி குறித்த இலேசினால் அறங்கள் மிக்கனவாயினும் அவை பசு புண்ணியங்களேயாவன வாதலின் அவை யொன்றும் நாயனாரது மேற் செலவைப் பிணித்தில என்பதும் குறிக்கப் பட்டது.

மங்குல் சுற்றிய வெற்பு - சுற்றிய - சூழ்ந்து தலையில் முடிப்பதுபோல மேகங்கள் இம்மலைச் சிகரங்களைச் சூழ்ந்தன என்பதும் குறிப்பு. மலைகளின் உயர்ச்சி குறித்தது.

மந்திம பைதிரம் - பைதிரம் - நாடு. Central Provinces என்பர் நவீனர். பரதகண்டத்தின் மத்தியப்பிரதேசம் என்பதுமாம். பிரயாகைக்கு மேற்கும் விநசத்துக்குக் கிழக்குமாகிய தேசம் என்பர் ஆறுமுகத் தம்பிரானார்.

மத்திய—என்பதும் பாடம். 352

1618. (வி - ரை) அன்ன நாடு - மத்திம பைதிரம், உட்பிரிவுகளாகிய பல நாடுகளைக் கொண்டமை குறிப்பு. தெய்வக் கங்கை முதலிய நீர்ச் சிறப்பினால் அன்னங்கள் மலியும் நாடு என்ற குறிப்பும் பெறவைத்த கவிநலமும் காண்க. இந்நாடுகளில் ஒன்றாகிய நிடத நாட்டரசனாகிய நளன் கதையில் அன்னத்தைத் தூதுவிட்ட வரலாறும், இராமன் கதையில் "அன்னப் பேடை சிறையில தாய்க்கரை, துன்னிற் றென்னவும்" என்று உவமை கூறும் கம்பர் பாட்டும் கருதுக.

கங்கை அணைந்து சென்று வலங்கொளும் - வாரணாசி என்று கூட்டுக. அணைந்து என்றது ஆகாயத்தினின்று போந்தமையும், சென்று என்றது இமயமலையிற் போந்து நிலத்தில் அதுவரை பெருகி ஓடியமையும், வலங்கொளும் என்றது அதுவரை மேற்கினின்றும் கிழக்குநோக்கிப் பெருகிவரும் செலவைமாற்றி வாரணாசியை நோக்கி வடக்கு முகமாக ஓடி வாரணாசியைச் சூழ்வந்து மீளக் கிழக்குப் பார்த்து ஓடுகின்றமையும் குறித்தன. வலங்கொளும் - தற்குறிப்பேற்ற அணி. "வம்புலாமலர் நீரால் வழிபட்டுச், செம்பொன் வார்கரை யெண்ணில் சிவாலயத், தெம்பிரானை யிறைஞ்சலி னீர்ம்பொன்னி, யும்பர் நாயகற் கன்பரு மொக்குமால்" (57) என்று காவிரியைச் சிறப்பித்த கருத்து இங்குக் கருதற்பாலது. காவிரிபோல அத்துணையும் வழிபாடின்றி "வாரணாசி வலங்கொளும்" சிறப்பொன்றுமே குறித்தமையும் கருதுக. இக் குறிப்புப்படக் "காவிரி நாடன்ன கழனி நாடொரீஇ" என்று கூறும் கம்பர் பாட்டும் காண்க.

மின்னு வேணியர் - சிவந்து நீண்டு ஒளிவிடும் தன்மைபற்றி மின்னு என்றார். "மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை" (பொன்வண் - அந் - 1.)

தலவிசேடம்:—வாரணாசி - காசி - எனத் தேற்றமாய் வழங்கப்படுவது. இதன் பெருமை காசிகண்ட முதலியவற்றுட் காண்க. விசுவநாதர், விசாலாட்சி யம்மையாருடன் விளக்கமாய் எழுந்தருளியுள்ள சிறப்புடைய பெருந் தலம். தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று. "மதிலுஞ்சை மாகாளம் வாரணாசி" (காப்புத் திருத்தாண்டகம் - 11) முதலியவை பார்க்க. வரணை - அசி - என்ற இரண்டு நதிகள் இத்தலத்தைத் தெற்கும் வடக்குமாக அந்தர் வேதியாகச் சூழ்ந்து இருப்பதனால் இது வாரணாசி எனப் படும் என்பது காசிகண்டம். "காசியி லிறக்க முத்தி" என்று விளங்க அறியப்படும் முத்தித்தலம்.

விருப்பினோடு - பணிந்து - தாம் காதலித்துச் சென்ற கயிலாய நாதரே விசுவநாதர் என்ற பெயருடன் அவரது கங்கை சூழ வீற்றிருக்கும் சிறப்புப்பற்றி, "வேறு எம் மருங்குமோர் காதலின்றிச்" சென்ற நாயனார், இங்கு விருப்பினோடு பணிந்தனர் என்பதாம். அன்றி, வடகயிலை கண்டுதொழச் சென்ற நாயனார் வடநாட்டில் வடக்கில் இறைவரைப் பணிந்து வழிபட்ட தலம் இதுவேயா மென்பதும் குறிப்பு. இனிக், கயிலை

மலையிற் பணிந்ததும் பாடுவதும் அருவமாய் எண்ணிய வழிபாடென்பதும், பின்னர்க் கயிலைக் காட்சி கண்டு வழிபட்டமை திருவையாற்றில் நிகழ்வதாம் என்பதும் கருதுக.

**பின் அணைந்தவர் தம்மை அங்கண் ஒழிந்து** - வியந்தும், பின் பற்றியும் போந்த அடியவர்களும், பிறரும் வாரணாசியில் தங்க விடப்பட்டனர். ஒழித்து என்னாது ஒழிந்து என்றமையால் அவர்கள் தாமே பின்பற்றி மேற்செல்ல மாட்டாமையின் ஒழிந்தனர் என்றதும் குறிப்பு. அன்பர்கள் அங்கங்குப் பின் பற்றுவதும், நின்றொழிவது மாயின ரன்றி, நாயனார் யாண்டும் பரிசனங்களை உடன் கொள்ளாத துறவு நிலையினர் என்பதும் இங்குக் கருதற்பாலது.

**கங்கை பெயர்ந்து போய்** - கங்கை பெயர்தலாவது கங்கைக்கரை சூழ்ந்த நாட்டின் பகுதியைக் கடந்து செல்லுதல்.

**நாவின் மன்னவர்** என்ற எழுவாய் இங்கு வினைமுடிபு கொள்ள வைத்தமையாலும், இதுவரை மக்கள் நெருங்கும் நாட்டின் பகுதியிற் பலர் உடன் அணையப்போந்த நாயனார், இனி மக்கள் வாசமில்லாத காடும் மலையும் தனிச்செல்லத் தொடங்குகின்றமையாலும், இதுவரையும் போந்த நான்கு பாட்டுக்களையும் அவரது கயிலை வழிச் செலவில் ஒரு பகுதியாக வைத்து ஒரு முடிபாக்கி உரைக்கப்பட்டது. மேல்வரும் பகுதிகளின் பல முடிபுகளும் இவ்வாறே வகுத்துக் கண்டுகொள்க.

கங்கை கடந்து—காதலின்—என்பனவும் பாடங்கள். 353

கங்கைக் கரையினின்று கற்சுரம் தனியாக நடந்து சென்றது

1619. மாக மீது வளர்ந்த கானக மாகி யெங்கு மனித்தராற்
(கற்சுரம் தனி நடத்தல்) போக லாநெறி யன்றி யும்புரி கின்ற காதல் பொலிந்தெழச்
சாக மூலப லங்க டுய்ப்பன வுந்த விர்ந்து தனித்துநேர்
ஏகி னாரிர வும்பெ ருங்கயி லைக்கு லக்கிரி யெய்துவார்; ௩௫௪

1620. ஆய வாரிரு ளின்க ணேகுமவ் வன்பர் தம்மை யணைந்துமுன்
றீய வாய விலங்கு வன்றொழில் செய்ய வஞ்சின; நஞ்சுகால்
(இரவு) வாய நாக மணிப்ப ணங்கொள் விளக்கெ டுத்தன; வந்துகால்
தோய வானவ ராயி னுந்தனி துன்ன ருஞ்சுர முன்னினார்; ௩௫௫

1621. வெங்க திர்ப்பக லக்க டத்திடை வெய்ய வன்கதிர் கைபரந்
தெங்கு மிக்க பிளப்பி னுகர்த மென்மை புக்கெரி கின்றன
(பகல்) பொங்க முற்றெறு பாலை வெந்நிழல் புக்க சூழல் புகும்பகல்
செங்க திர்க்கனல் போலு மத்திசை திண்மை மெய்த்தவர் நண்ணினார்;

1619. (இ - ள்) மாகம் மீது வளர்ந்த கானகம் ஆகி-ஆகாயத்தினை அளாவும்படி மேல் உயர வளர்ந்த பெருங் காடாகி; எங்கும் மனித்தரால் போகலாநெறி அன்றியும் - எவ்விடத்திலும் மனிதர்களாற் போகக் கூடிய வழியல்லா திருந்தபோதிலும்; புரிகின்ற காதல் பொலிந்து எழ - இடைவிடாது உண்டாகின்ற காதல் சிறந்து மேலோங்குதலினால்; சாகம் மூல பலங்கள் துய்ப்பனவும் தவிர்ந்து - இலை சருகுகளும் கிழங்குகளும், பழங்களும் என்றிவற்றை உண்ணுதலையும் விடுத்து; தனித்துநேர்-தனியாக நேரே; பெருங் கயிலைக் குலக்கிரி எய்துவார் - பெரிய கயிலையாகிய ஒப்பற்ற மலையினை அடையும் பொருட்டு; இரவும் ஏகினார் - இராக்காலத்திலும் தங்காமல் செல்வாராகி;

௩௫௪

1620. (இ - ள்) ஆய...அன்பர் தம்மை - அவ்வாறாகிய அச் செறிந்த இருளில் மேற்செல்லும் அந்த அன்பரை; அணைந்து...அஞ்சின - தீய விலங்குகள் நெருங்கிக் கொடுந் தொழிலைச் செய்ய அஞ்சின; நஞ்சு...எடுத்தன - விடத்தை உமிழும் வாயினை யுடைய நாகங்கள் தமது படங்களில் உள்ள மணிகளை ஏந்தி விளக்கெடுத்தன; வந்து... முன்னினார் - தேவர்களே யாயினும் இங்குவந்து காலடி வைத்துப் பெயர்க்கும்படி தனியே சேர்வதற்கரிய சுரங்களை முன் அடைந்தனராகவே; ௬௫௫

1621. (இ - ள்) அக்கடத்திடை - அந்தக் காட்டினிடத்தே; வெம்கதிர்ப் பகல் - வெவ்விய நண்பகலில்; வெய்யவன் கதிர் - சூரியனது கதிர்கள்; கைபரந்து - மிக எப் பக்கமும் பரவுதலினால்; எங்கும் மிக்க பிளப்பின் - எங்கும் மிகுதியாக உளவாகிய பிளவுகளினூடு; நாகர் தம் எல்லை புக்கு எரிகின்றன - கீழே நாகவுலக எல்லைவரை புகுந்து எரிகின்றன; பொங்கு அழல் தெறு பாலை வெந்நிழல் புக்க சூழல் - பொங்கும் தீயின் வெப்பத்தினால் அழிவு செய்யும் பாலையினது வெவ்விய நிழல் புகுந்த இடத்தில்; புகும் பகல் செங்கதிர்க்கனல் போலும் - புகுகின்ற பகலோனது செவ்விய கதிர்களின் வெப்பத்தை ஒத்திருக்கின்ற; அத்திசை - அந்தத் திசையில்; திண்மை மெய்த்தவர் நண்ணினார் - திண்மையுடைய மெய்த்தவராகிய நாயனார் சென்றடைந்தனர். ௬௫௬

இந்த மூன்று பாட்டுக்களும் பொருட்டொடர்பு பெற்று ஒரு முடிபு கொண்டு உரைக்க நின்றன.

1619. (வி - ரை) மாகமீது வளர்ந்த - ஆகாயத்தின்மேல் வளர்ந்த என்றது கானகத்தின் உயர்ச்சி குறித்தது.

மனித்தரால் போகலா நெறி - மனிதர்கள் செல்லமுடியாத வழிகள். மனிதர் என்பது மனித்தர் என வந்தது மக்களுள் வல்லவராலும் கூட்டமாயும் என்பது குறிப்பு. "மனித்தப் பிறவியும் வேண்டுவதே" (தேவா).

போகல்...அன்றியும் - போகுதல் ஆகும் - கூடும் - வழி அல்லாமலிருந்த போதிலும். கூட்டமாயும் மனிதர் எவரும் போகக்கூடாத வழியாயிருந்தும் ஆசை மிகுதியினால் உந்தப்பட்டு நாயனார் தனித்து ஏகினார் என அவரது அன்பின் திண்மை குறிப்பிடப்பட்டது. "வானவ ராயினும் தனி துன்னரும்" (1620) என மேல்வரும் பாட்டில் இதனை மேலும் வற்புறுத்தியதும், அதற்குக் காரணமாவது திண்மை மெய்த் தவமேயாம் (1621) என எடுத்துக் காட்டியதும் காண்க.

புரிகின்ற - அன்பு புரிகின்ற எனச் செயப்படுபொருள் வருவிக்க.

சாகம் - மூலம் - பலங்கள் துய்ப்பனவும் தவிர்ந்து - சிவயோகிகள் - சிவ ஞானிகளின் உணவு வகைகள் இங்குக் குறிக்கப்பட்டன. சாகம் - இலை; உதிர் சருகு; மூலம் - வேர் - கிழங்கு; பலங்கள் - கனிகள். ஓரறிவுயிர்களாகிய தாவரங்களுக்கும் துன்பம் செய்யலாகாதென்ற அருளுடைய அறவோர், இவ்வாறு தாவரங்களுக்கும் இனிப் பயன்படாத அவற்றின் பண்டங்களைக் கைக்கொள்வர் என்பது முன்னோர் வழக்கு. "கனியேனும், வறியசெங் காயேனு முதிர்சருகு கந்தமூ லங்களேனும், கனல் வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான் கண்மூடி மௌனியாகித், தனியே யிருப்பதற் கெண்ணினேன்" என்ற தாயுமானவர் பாடலின் கருத்து, ஈண்டு வைத்துக் கருதத் தக்கது. யோக மோன ஞானிகளும் ஒரோவழிப் பசியால் வருந்துவர் எனவும், அப்போது அவர்கள் சாக மூல பலங்களைத் தேடி உட்கொள்வர் எனவும், மூலக் கனலைக் காலால் எழுப்பி விரித்து தானத் தமிழ்தத்தை உண்பர் எனவும், நாயனார் அவ்வாறு மன்றிப் பசியென்பதனையே யறியாதவராய்க் கடுஞ்சுரத்தில் இரவும் பகலும் விரைந்து சென்றனர் எனவும், அது கயிலை காணப் பொங்கிய காதலின் வலிமையால் ஆயது எனவும் தெளிதற்பாலது.

**தனித்து** - வேறு எவரும் துணையின்றி. **நேர்** - திருக்கயிலையின் திசையினை நோக்கி நேரே.

**எய்துவார் - ஏகினார்** - எனக் கூட்டுக. செல்லுதலின் தீவிரத்தையும் விரைவையும் குறிக்கப் பயனிலையை முன் வைத்தார். **ஏகினார்** - ஏகினாராக ; முற்றெச்சம்.

**இரவும்** - பகலிற் சென்றதுடன் இரவிலும் என உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.

**குலக்கிரி** - பெருமையுடைய மலை.

**துய்ப்பனவுந் தவிர்ந்து** - என்றதனால் பசி தோன்றாமல் என்பதும், **இரவும்** - என்றதனால் துயில் தோன்றாமல் என்பதும், **எய்துவார் நேர் ஏகினார்** - என்றதனால் உடல் வருத்தம் தோன்றாமல் என்பதும் கூறப்பட்டன. "மெய் வருத்தம் பாரார் பசி நோக்கார் கண்துஞ்சார்...கருமமே கண்ணாயினார்" என்ற நீதி, நாயனார் செயலில் தேற்றமாக விளங்குதல் காண்க. அழியுந் தன்மையான உலக கருமங்களில் இவ்வாறு உழல்வோர் பலர்; ஆனால் "**கயிலைக்கிரி எய்துவதாகிய**" உறுதிப் பயன்பெற இத் தன்மை செய்வது செயற்கருஞ் செய்கையாகிய நாயனாரது சிறந்த பெருமையை விளக்குவதாம். 354

1620. (வி - ரை) **ஆய** - அவ்வாறாகிய. இரவும் ஏகும்போது உளதாகிய. **ஆர் இருள்** - செறிந்த இருள்; நடுயாம இருள்.

**இருளின்கண்** - கண்ணும் எனச் சிறப்பும்மை தொக்கது.

இமயமலைச் சாரலாகிய வட துருவப் பக்கத்துப் பகலும் இரவும் செறிவும் நீட்டிப்புமுடையன. அவற்றுள் இரவின் செறிவு இப்பாட்டினும், பகலின் செறிவு மேற்பாட்டினும் கூறப்படுதல் காண்க.

**அணைந்து...அஞ்சின - நஞ்சுகால் விளக் கெடுத்தன** - இரவில், திரியும் புலி முதலிய கொடு விலங்குச் சாதிகளும், நாகங்களும் நாயனாருக்குத் தீங்கு செய்தில; கொடு விலங்குகள் தீமை செய்ய அஞ்சி ஒதுங்கி நின்றன ; நாகங்கள் தீங்கு செய்யா தொழிந்தது மட்டுமன்றி, மணி விளக்கு எடுத்து நாயனாருக்கு வழி விளக்கிப் பணி விடையும் செய்தன. passive and active help என்பர் நவீனர். புலி செந்நாய் முதலியன பாலைக் கருப்பொருள்களாகிய மாக்கள்.

**முன் தீய ஆய** - முன் எல்லாம் தீய இயல்பேயுடைய. **முன்** என்றதனால் இப்போது மட்டில் தம் இயல்பு மாறி நின்றன என்று குறித்தார். **வாய** - வாய்த்த என்றலுமாம். **முன் அணைந்து** - என்று கூட்டி அதற்குத்தக்கபடி யுரைத்தலுமாம்.

**நஞ்சு - கால் - வாய** - விடத்தைக் காலும் - உமிழும் - வாயினை உடைய. **வாய** - வாயினை உடைய.

**பணங்கொள் மணிவிளக்கு எடுத்தன** - என்க. **விளக்கு எடுத்தல்** - விளக்கினை வழிகாட்டும்படி ஏந்துதல். அரவங்கள் தமது படத்தில் உள்ள மணிகளை உமிழ்ந்து அந்த ஒளியின் உதவியால் இரவில் இரைதேடும் வழக்கமுடையன என்ற உண்மை தென் கயிலாயமாகிய திருக்காளத்தித் தேவாரத்தினுள் "ஊருமர வம்மொளிகொள் மாமணி யுமிழ்ந்தவை யுலாவி வரலாற், காரிருள் கடிந்து கனகம்மென விளங்கு காளத்தி மலையே" (சாதாரி - 7) என்று ஆளுடைய பிள்ளையார் விளக்குதல் காண்க.

**கால் தோய** - கால் நிலம்பட அடிபெயர்த்து நடக்க. தேவர்கள் காலினைத் தோயாது மேற் செல்லும் இயல்புடையவர் ; அவர்கள் கயிலைச்சார்புப்பற்றி உலவுகின்றபோது தம்மியல்பால் இங்கும் அவ்வாறே கால் நிலந்தோயாது செல்வதற்கு ஒரு காரணங் கற்பித்தவாறு.

**வானவராயினும்** - எங்கும் செல்லும் வல்லமையுடைய தேவர்களும் என்று உம்மை உயர்வு சிறப்பு. **துனி துன்னரும்** - வானவர்கள் கூட்டமாய் வருதற்கு ஒரு காரணங் கற்பித்தவாறு. தேவக்கூட்டங்கள் கயிலைக்கு வழிபடச் சென்று நிற்கும் முறைமைபற்றித் திருமலைச்சிறப்பு 14 - 15 பாட்டுக்கள் பார்க்க. **வானவரும் துன்னரும் தனிச் (ஒப்பற்ற - பெரிய) சுரம்** - என்று கூட்டியுரைப்பதுமாம்

**முன்னினார்**-விரைவுடன் முன்னேறிச்சென்றனர். **மன்னினார்**-என்றபாடம் பிழை.

**இருளின்** - இரவும் பகலும் விடாது செல்லும் (1619) நாயனாரது செலவில் இரவில் நிகழ்ந்தமை இப்பாட்டாற் கூறிப், பகலில் நிகழ்ந்தமை மேல்வரும் பாட்டாற் கூறும் அமைதி காண்க. பகலில் கற்சுரம் (1618) செல்லத் தொடங்கியவர்க்கு அடுத்துவருவது இரவேயாதலின் அதனை முற்கூறினார். **இரவும்** (1619) என்றகுறிப்புமது. பகலில் கற்சுரம் செல்லப் போந்த நாயனார் "சிற்றம் பலவர்க், கடலையுற் றுரினெறிப்பொழிந் தாங்கருக் கன்சுருங்கிக், கடலையுற் றுன்கடப் பாரில்லை யின்றிக் கடுஞ் சுரமே" (கோவை 218), "மீள்வது செல்வதன் றன்னையிவ் வெங்கடத்து" (ஷை-247) என்றபடி அக் கடுங் கற்சுரத்து இரவில் எங்கேனும் தங்கிச் செல்வரோ? என்று ஐயம் நிகழுமாதலின் அதனை ஒழிப்பார், அற்றன்று! ஏகினார் இரவும்! என்று கூறியவாறுமாம். ஏதம் பெரிது நோக்கி இரவினை முற்கூறியதுமாம்.

**அன்பர் பாதம்**—என்பதும் பாடம்.　355

1621. (வி - ரை) **கடம்** - கடுஞ்சுரம்; காடு. பாலை நிலம். **வெய்யவன்** - சூரியன். பாலைக்குத் தெய்வம் ஞாயிறு. (ஐயை என்பதும் வழக்கு.) **கைபரந்து** - கை - பக்கம். கை - கரம் - கதிர் என்றலுமாம். **பரந்து** - பரத்தலினால் எனக் காரணப்பொருளில் வந்த வினையெச்சம். **பரந்து மிக்க பிளப்பு** - பரந்ததனால் உண்டாகிய நிலப்பிளவுகள்

**நாகர்தம் எல்லை** - நாகருலகத்தின் அளவும். உம்மை தொக்கது. **நாகர்** - கீழுலகத்தவர்.

**கதிர்-எரிகின்றன-செங்கதிர்க்கனல் போலும்** - என்று கூட்டுக. **எரிகின்றன**-எரிகின்றவை; பெயர்.

**பொங்கு அழல் தேறு பாலை வெம் நிழல் புக்கசூழல்**-நிலவெடிப்புக்கள் தீயை வீசி அழிக்கும் பாலையினது கொடியநிழல் புகுந்த இடம் போன்றுள்ளன என்பது கருத்து. **வெந்நிழல்** - பாலையின் நிழலும் வெப்பமுடையது என்பது.

**நிழல்புகும் கதிர் போலும்** - நிலப்பிளப்புக்களில் கதிர் நுழையும் தோற்றம், பாலை சுடுகின்றதாதலின் அதன் நிழலிலேனும் புகுந்து ஒதுங்குவோமென்று கருதிப் புகுந்தது போன்றிருந்தது என்பதாம். இது தற்குறிப்பேற்ற அணி. **நிழல்** - பிளப்புக்களைப் பாலையின் வெந்நிழல் என்றது உருவம்பற்றி எழுந்த உவமம்.

**புக்கு எரிகின்றன புதும்கதிர் போலும்** - என்றது தொழில் பற்றி வந்த உவமம்.

இப்பாட்டினால் பாலையாகிய கடுஞ்சுரத்தின் கடும்பகல் வெம்மைமிகுதி உணர்த்தப்பட்டது. கடும்பகல் பாலைக்குரிய சிறுபொழுது. வெம்மை மிகுதியால் அங்கு முற்றும் நிலம் பிளந்த வெடிப்புக்கள் உள்ளன என்பதும், மேலும் கடியவெயிலும் எறித்தது என்பதும், இவை யொன்றுனும் தயங்காது நாயனார் மேற்சென்றனர் என்பதும் கூறப்பட்டன.

**திண்மை மெய்த்தவர்** - அவ்வாறு வேனிலிற் கடுஞ்சுரஞ் சென்றதற்குத் திண்ணிய மெய்த்தவமே காரணமாம் என்று குறிக்க, உடம்பொடு புணர்த்தி யோதினார். தவத்தின் இயல்புகளுள் உடற்சுகந் தேற்றுது வேனிலிற் கனலிடை நின்று செய்யப்படும் தன்மையும் ஒன்று என்க. " உற்ற நோய் நோன்றல்...தவத்திற் குரு " (குறள்).

வேல் நிழல் - என்ற பாடங்கொண்டு அக்கடுஞ் சுரத்தின் உள்ள வேல்மரங்களின் நிழலில் பகற்கதிர் புகுந்தது போலும் என்றுரைப்பர் இராமநாதச் செட்டியார்.
புக்கழல் சூழலான புதும்—என்பதும் பாடம். 356

கையினாற் றாவியும், மார்பினால் உந்தியும், உடலினாற் புரண்டும் செல்லுதல்.

1622. (கைகளால் தாவிச் செல்லல்)
இங்ங னம்மிர வும்ப கற்பொழு துமம ருஞ்சுர மெய்துவார்
பங்க யம்புரை தாள்ப ரட்டள வும்ப சைத்தசை தேயவும்
மங்கை பங்கர்தம் வெள்ளி மால்வரை வைத்த சிந்தை மறப்பரோ?
தங்க ரங்க ளிரண்டு மேகொடு தாவி யேகுதல் மேவினார்; ௩௫௭

1623. (மார்பின் உந்திச் செல்லல்)
கைக ளும்மணி பந்த சைந்துற வேக ரைந்து சிதைந்தபின்
மெய்க லந்தெழு சிந்தை யன்பின் விருப்பு மீமிசை பொங்கிட
மொய்க டுங்கனல் வெம்ப ரற்புகை மூளு மத்த முயங்கியே
மைகொள் கண்டர்த மன்பர் செல்ல வருந்தி யுந்தினர் மார்பினால்;

1624. (புரண்டு செல்லல்)
மார்ப முந்தசை நைந்து சிந்தி வரிந்த வென்பு முரிந்திட
நேர்வ ருங்குறி நின்ற சிந்தையி னேச மீசனை நேடுநீ
டார்வ மங்குயிர் கொண்டு கைக்கு முடம்ப டங்கவு மூன்கெடச்
சேர்வ ரும்பழு வம்புரண்டு புரண்டு சென்றனர் செம்மையோர்;

1625. (செயலின்றித் தங்குதல்)
அப்பு றம்புரள் கின்ற நீளிடை யங்க மெங்கு மரைந்திடச்
செப்ப ருங்கயி லைச்சி லம்படி சிந்தை சென்றுறு மாதலான்
மெய்ப்பு றத்தி லுறுப்ப ழிந்தபின் மெல்ல வுந்து முயற்சியுந்
தப்பு றச்செய லின்றி யந்நெறி தங்கி னார்தமி ழாளியார். ௩௬௦

1622. (இ - ள்) இங்ஙனம்...எய்துவார் - மேற் கூறிய இவ்வண்ணமாக இரவிலும் பகற் பொழுதிலும் கடத்தற்கரிய பெருஞ் சுரத்திற் செல்கின்றவராகிய நாயனார்; பங்கயம்...தேயவும் - தாமரைபோன்ற திருப்பாதங்கள் பரடுவரையும் தசை தேய்ந்து போயினவாகவும்; மங்கை...மறப்பரோ? - உமையொரு பாகரது பெரிய வெள்ளி மலையின்மேல் ஊன்றவைத்த நினைவை மறந்து விடுவரோ?; (மறக்காதவராய்த்) தம் கரங்கள்...மேவினார் - தமது இரண்டு கைகளையுமே கொண்டு தாவிச் செல்வாராகி;

1623. (இ - ள்) கைகளும்...சிதைந்தபின் - கைகளும் மணிக்கட்டுகள் அசைந்து போகும்படி தேய்ந்து சிதைவுற்ற பின்பு; மெய்...பொங்கிட - மெய்யுடன் கலந்து எழும் சிந்தையில் அன்பினாலாகிய பெரிய விருப்பம் மேலும் மேலும் அதிகரிக்க - மொய்கடும் கனல்வெம் பரல்புகை மூளும் - நெருங்கிய கடிய தீப்போலும் பரற்களின் புகையானது எழுகின்ற; அத்தம் முயங்கியே - வழியைச் சார்ந்து; மைகொள் ...அன்பர் - திருநீலகண்டராகிய சிவபெருமானது அடியவராகிய நாயனார்; செல்ல மார்பினால் வருந்தி உந்தினர் - மேற்செல்வதற்காக மார்பினால் வருத்தத்துடன் உந்திச் சென்றனராகி; ௩௫௮

1624. (இ - ள்) மார்பமும்...முரிந்திட - மார்பும் தசைகள் தேய்ந்து சிதறி, ஒன்றோடொன்று வரிந்து கட்டப்பட்ட மார்பு எலும்புகளும் முரிந்தனவாக; நேர் வரும் குறிநின்ற சிந்தையின் நேசம் - அடைதற்கரிய குறிக்கோள் நிலைபெற்று நின்ற திருவுள்ளத்திற் கொண்ட அன்பு; ஈசனை நேடும் நீடு ஆர்வம் - சிவபெருமானை நாடிக் காணவேண்டுமென்னும் நிலைத்த ஆர்வமானது; அங்கு உயிர்கொண்டு உகைக்கும் -

அவ்விடத்தில் உயிரால் உகைக்கின்ற; உடம்பு அடங்கவும் ஊன்கெட - உடம்பு முழுதும் உள்ள தசைகள் கெடும்படியாக; சேர்வரும்...செம்மையோர் - சேர்தற் கரிய அக்காட்டினில் புரண்டு புரண்டு சென்றனர் செம்மை நெறி நிற்பாராகிய திரு நாவுக்கரசர்; ௬ருக

1625. (இ - ள்) அப்புறம் புரள்கின்ற நீளிடை - அதற்கு மேல் புரண்டு செல்கின்ற நீண்ட வழியின் இடையில்; அங்கம் எங்கும் அரைந்திட - உடல் முழுவதும் தேய்ந்து போகவே; செப்பரும்...ஆதலால் - சொல்லுதற்கரிய கயிலாய மலையினிடத்தில் திரு உள்ளம் சென்று சேருமாதலால்; மெய்ப்புறத்தில்...தப்புற-திருமேனியினது புறத்துறுப்புக்கள் அழிந்த பின்னர் மெல்ல மெல்ல உந்திச் செல்கின்ற முயற்சியும் நீங்க; செயலின்றி - வேறு செயலில்லாதவராய்; அந்நெறி - அந்த நெறியினிடை; தமிழ் ஆளியார் தங்கினார் - தமிழ் வல்லவராகிய நாயனார் தங்கிக் கிடந்தனர். ௬௬௦

இந்த நான்கு பாடல்களும் பொருட்டொடர்பு பெற்று ஒரு முடிபு கொண்டு உரைக்க நின்றன.

1622. (வி - ரை) இங்ஙனம் - முன் 1619 - 1620 - 1621 பாட்டுக்களிலும் கூறியபடி.

இரவும் பகற்பொழுதும் - இரவை முன் வைத்துக் கூறியதுபற்றி முன் 1620-ல் உரைக்கப்பட்டது.

பங்கயம் புரை தாள் - அத்திருத்தாள்கள் அடைந்தோரை உய்விக்க வல்லனவாதலின் அவை தேய்ந்து வருந்தினமை கூறலாற்றாது ஆசிரியர் போற்றியருளும் திறம் காண்க. திருவரத்துறை நோக்கி நடந்து சென்ற ஆளுடைய பிள்ளையாரது திருப்பாதங்கள் சிறிது நொந்த செய்தி கூறுமிடத்துப், "பாத தாமரை நொந்தன பைப்பைய" (திருஞான - புரா - 187) என்பதும் இங்குக் கருதத் தக்கது.

மங்கை பங்கர்...மறப்பரோ - பரட்டளவும் தாள்கள் தசை தேயவும் மேலும் கைகளால் தாவியும், மார்பினா லுந்தியும், உடலாற் புரண்டு மெல்ல உந்தியும் செல்ல முயல்வதற்குரிய காரணங் கூறத்தொடங்கிக், கைகளால் தாவிச்செல்வதற்கு மனந் தூண்டியதனை இங்கு அறிவிக்கின்றார். மேல் "மெய்கலந்தெழு...பொங்கிட" (1623) எனவும், "நேர் வருங்குறி...ஆர்வம்" (1624) எனவும், "செப்பரும்...ஆதலால்" (1625) எனவும் மேன்மேல் நிகழும் அவ்வச்செயல்களைத் தூண்டிய காரணங் களை அங்கங்கும் உரைத்துச் செல்லுதல் காண்க.

காலினாற் செல்லுதல் கூடாதபோது கைகளால் தாவிச் செல்வதற்குச் சிந்தை மறவாமையே போதியதாயிற்று (1622); பின்னர்க் கைகள் கரைந்து சிதைந்தபின் மார்பினால் உந்திச் செல்வதற்கு சிந்தை அன்பும் விருப்பும் மீமிசை பொங்கிட வருவதாய் அதனினும் வலிய மனவெழுச்சியின் தூண்டுதல் வேண்டப்பட்டது (1623); அதன்பின் மார்பு தசை கரைந்து வரிந்த என்பு முரிந்திட, உடல் முழுதாலும் புரண்டு புரண்டு செல்வதற்கு, மேற்சொன்ன இரண்டினும் வலியதாய்க் குறித்து நின்ற சிந்தையின் நேசமும் நீடார்வமும், உயிரைப்பற்றச் சிந்தை முயற்சியேயன்றி அந்த உயிர் முயற்சியால் உடல் அடங்கவும் பற்றி அரைக்கத்தக்க மிக்க வலிய தூண்டுதல்வேண்டுவதாயிற்று (1624); அதன்பின் உடல் எங்கும் அரைந்திடப் புறத்துறுப்பு எல்லாம் அழிந்தமையின் சிந்தை கயிலைச் சிலம்படி சென்றுற, மெல்ல உந்து முயற்சியும் தப்ப, உடல் அந்நெறி தங்கியது என்றிவ்வாறு படிப்படியாய் வைத்துக் கண்டுகொள்க.

மறப்பரோ-ஓகார வினா மறவார் என எதிர்மறை குறித்தது, ஆதலின் ஏதுவாராக எனக் காரணக் குறிப்புத் தந்து நின்றது.

தாவி - கைகளைக் கீழ் ஊன்றிப் பெயர்த்து வைத்தலின் தாவி என்றார்.

இரண்டுமே - தாள்களின் உதவியின்றி என ஏகாரம் பிரிநிலை.

மங்கைபாகர்—மறிப்பரோ?—மறைப்பரோ?—என்பனவும் பாடங்கள். 357

1623. (வி - ரை) மணிபந்து - மணிக்கட்டு. அசைந்து - கட்டு விட்டு.

மெய்கலந்து எழுசிந்தை அன்பு-சிந்தையொரு வழியும் உடல்முயற்சி பிறிதொரு வழியுமன்றி உடம்பின் முயற்சியினை ஏவி அதனுடன் கலந்து எழுகின்ற அன்பு என்றுரைத்தலுமாம்.

அன்பின் விருப்பு மீமிசை பொங்கிட - முன்பாட்டில் மறவாது வைத்த சிந்தை என்று அன்பின் முதிர்ச்சி மட்டில் அமைந்த நிலை கூறப்பட்டது. இங்கு அந்த அன்பு பெரு விருப்பமாகி, அதுவே மேலும் மேலும் அதிகரிக்க, அது பின்னும் உள்ளூறி மேல் வழிய என்று முதிர்ந்த நிலையும் அதனால் ஏவப்பட்ட மேன் முதிர்ந்த செயலும் கூறப்பட்டன.

கனல்வெம் பாற்புகை மூளும் - பரல் - பருக்கைக் கற்கள். பரல்கள் கனல் போலப் புகை உமிழ்ந்தன. வினை பற்றிய உவமம். கனலாகிய பரல் என்று கொண்டு உருவகமாக உரைப்பினு மமையும். புகை மூளும் - கொடிய வெப்பம் குறித்தது.

அத்தம் - அருநெறி; பாலைநில வழி; மலைமேல் செல்லும் பாதை.

முயங்குதல் - முயற்றுதல். மார்பினால் உந்துதலினால் அந்த வழியினை உடல்தழுவுதல் போன்றது என்றதும் குறிப்பு.

வருந்தி - முயன்று என்ற பொருளில் வந்தது. 358

1624. (வி - ரை) வரிந்த என்பு - மார்பின் இருபுறமும் உள்ள பழு எலும்புகள் ஒன்றோடொன்று தசை நாரினால் வரிந்து கட்டப்பட்டவை போலப் பிணைக்கப்பட்டிருத்தலின் வரிந்த என்றார்.

நேர்வரும் குறி - அடைதற்கரிய நேரே செல்லும் குறிக்கோள்; குறிப்பு; குறியாவது - ஈசனை நேடு நீடு ஆர்வம் எனப்பட்டது. "பெருகுநிலைக் குறியாளர்" (தாண்).

துறை நின்ற என்பது பாடமாயின், நேர்தல் இயலாமையா லாகிய குறைபாடு நின்ற சிந்தை என்று உரைத்துக்கொள்க.

உயிர் கொண்டு உகைக்கும் - இங்குச் சிந்தையின் தூண்டுதல் மட்டில் அமைதலின்றி, உயிரின் பெருமுயற்சி முழுதும் உடலை உகைத்தது என்பது. கொண்டு - மூன்றும் வேற்றுமையில் வரும் சொல்லுருபு. ஆர்வம் உயிர் கொள்ளுதலாவது ஆர்வமிகுதிப்பாட்டினால் உடம்பின் சிறுமுயற்சி உள்ளபோதே உயிர் தனக்குறுதி தேடிக் கொள்ளுதல் வேண்டுமென்று உடல் வலிமை முழுதினும் பெருமுயற்சி செய்தல். உடம்பு அடங்கவும் என்ற முற்றும்மையின் கருத்துமிது. ஊன்கெட - மேற்புறமுள்ள தசை முற்றும் அசைந்து தேய.

பழுவம் - மலைக்காட்டில். எலும்பாகிய பழுக்கள் என்றுரைப்பாருமுண்டு.

புரண்டு புரண்டு - அடுக்குப் பல முறையும் எனப் பன்மையுணர்த்தியதுடன் புரண்டு வழிபடும் புண்ணியப் பேறுபற்றி மனவெழுச்சியுடன் செய்ய நிகழ்ந்தமையும் குறித்தது. "திருவீதி புரண்டுவலங்கொண்டு" (1444) என்றதும் இங்குக் கருதுக.

செம்மையோர் - செம்மையோராதலின் சென்றனர்; ஏனை எவர்க்கும் இது அரிதாம் என்றபடி. செம்மையோர் - சிவமாகி நிற்பவர். "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரசு" என்று இத்தன்மைபற்றியே திருத்தொண்டத் தொகை நாயனாரைத் தேற்றேகாரம் தந்து போற்றுதல் இங்குச் சிந்திக்கற்பாலது.

நேந நீடார்வம்—அடங்கவு மூன்கோடச்—என்பனவும் பாடங்கள். 359

1625. (வி - ரை) அப்புறம் - ஊன்கெடும்வரை புரண்டதன் அப்புறம்.

புரள்கின்ற நீள் இடை - புரள முயலும் நீண்ட அவ்வேளை - அவ்விடத்து.

அரைந்திட - உறுப்பு அழிந்தபின் - என்று கூட்டுக. அறைந்திடலால் என்க.

சிந்தை சென்று உறும் ஆதலால் - மெல்ல உந்தும் - என்று கூட்டுக. அரைந்த நிலையினும் முயல்வதற்குக் காரணம் கூறியபடி.

உறுப்பு அழிந்தபின் - முயற்சியும் தப்புற என்று கூட்டுக. முயற்சியும் செய்ய மாட்டாது நின்றுவிடுதற்குப் புற உறுப்பு எல்லாம் அழிந்தமை காரணம்.

முயற்சியும் - உம்மை சிறப்பு.

புறத்து உறுப்பழிந்தபின் - புற உறுப்பு அழியினும் அக உறுப்பாகிய மன மழியாது கயிலைச்சிலம்படி சென்றுறும் என்பது குறிப்பு.

செயலின்றி - புற உடற்செயல் செய்யும் நிலையின்றி.

நெறி தங்கினார் - நெறியில் தங்கிக் கிடந்தனர். நெறி - கயிலை செல்லும் கற்சுர வழி என்றும், உடல் தங்கினும் சிந்தை சென்றுறுதலின் சிவநெறி தங்கினார் என்றும் உரைக்க நின்றது.

தமிழ் ஆளியார் - உடல் சோர்வுபெற்று முயற்சியின்றிக் கிடப்பினும் மனத்திற் கொண்ட தமிழ்ப் பொலிவு சோராது நின்றமை, மேல், முனிவராம்படியால் வரும் இறைவருடன் பேசுந் திறத்தானும் போற்றுந் திறத்தானும் உணரப்படும் குறிப்பு. மேல் வரும் பாட்டின் குறிப்பும் காண்க. - 360

வேறு

1626. அன்ன தன்மையர் கயிலையை யணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த
நன்னெ டும்புனற் றடமுமோன் றுடன்கொடு நடந்தார்
பன்ன கம்புனை பரமரோர் முனிவராம் படியால்; ௩௬௧

1627. வந்து மற்றவர் மருங்குற வணைந்து,நேர் நின்று,
நொந்து நோக்கி,மற் றவரெதிர் நோக்கிட, நுவல்வார்,
"சிந்தி யிவ்வுறுப் பழிந்திட வருந்திய திறத்தால்
இந்த வெங்கடத் தெய்திய தென்?"னென விசைத்தார். ௩௬௨

1626. (இ - ள்) அன்னதன்மையர் - அத்தன்மையினராகிய நாயனார்; மன்னு... வழுத்த - நிலைபெற்ற இனிய தமிழ்ப் பாசுரங்களால் உலகில் மேலும் துதிக்கும் பொருட்டு; கயிலையை...அருளார் - கயிலையைச் சென்று அணைவதற்கு அருள் செய்யாதவராகி; நன்னெடும்...உடன்கொடு - நல்ல நீண்ட புனல் நிறைந்த ஒரு தடாகத்தினையும் தம் உடனே கொண்டு; ஓர் முனிவராம்படியால் - ஒரு முனிவராகிய திருவுருவத்துடன்; பன்னகம்புனை பரமர் - நாகத்தை அணிந்த பரமனார்; நடந்தார் - நடந்து வந்தனராகி; ௩௬௧

1627. (இ - ள்) வந்து...நோக்கி - வந்து அவரது பக்கத்திற் பொருந்த அணைந்து நேரே நின்று வருந்தி, அவரை நோக்கி; மற்று அவர் எதிர் நோக்கிட - அவரும் தம்மை எதிர் நோக்க; நுவல்வார் - நுவல்வாராகி; "சிந்தி...என்" என - உமது உறுப்புக்கள் எல்லாம் சிந்தி அழிந்திடும்படி வருந்திய திறத்தினால் இந்த வெவ்விய பாலையில் வந்தது என்ன கருதி?" என்று; இசைத்தார் - வினவினார். ௩௬௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1626. (வி - ரை) பின்னையும் தீந்தமிழ் புவியின்மேல் வழுத்த அணைவதற்கு அருளார் - முனிவராம்படியால் - புனல் தடமும் ஒன்று உடன் கொடு - பரமர் - நடந்தாராய் - (1626) - வந்து - அணைந்து - நேர்நின்று நோக்கி - நுவல்வார் - என - இசைத்தார் - என்று இந்த இரண்டு பாட்டுக்களையும் தொடர்புபடுத்தி முடிக்க.

**அன்ன தன்மையார்** - மேல் 1618 முதல் 1625 வரை சொல்லியபடி உணவும் உறக்கமுமின்றிக் கயிலைகாணும் ஒரே நினைவுடன் சேர்ந்து உடற் செயலின்றி நெறியில் தங்கிக்கிடக்கும் அத்தன்மையினர் என்க.

**வழுத்த** - **அருளார்** என்று கூட்டுக. **வழுத்த** - வழுத்தும் பொருட்டு. புவியில் தமிழ்வழுத்தக் கயிலை அணைவதற்கு அருளார். **அருளார்** - அருளாதவராகி. வினையெச்சம். **அருளார் - நடந்தார்** - என்று முடிக்க.

**மன்னு தீந்தமிழ் புவியின்மேல் பின்னையும் வழுத்த** - இத்தொடரின் சொற்கள் ஒவ்வொன்றும் பொருட் செறிவாகிய காரணக் குறியுடன் நிற்கும் திறம் காண்க. **மன்னுதல்** - அடியார் மனத்தினுள் எக்காலமும் நீங்காதிருக்கும் தன்மை. **தீந்தமிழ்** - பொருளினிமையும் அதற்கேற்ற சொல்லெளிமையும் குறித்தது. இவை அருவத்திரு மேனியிற் கண்ட கயிலைப்போற்றித் திருத்தாண்டகங்கள், உருவ வெளிப்பாட்டிற் கயிலைக்காட்சி கண்ட திருவையாற்றுத் திருப்பதிகங்கள், திருமடங் கட்டித் தவஞ்செய்து தங்கிய திருப்பூந்துருத்தித் திருப்பதிகங்கள், பலவகைத் - தனி - அடைவு - நின்ற - முதலிய பொதுத் திருத்தாண்டகங்கள், முதலாக, 1679 - 1680-ல் சிறப்பாய் எடுத்தோதப்பட்ட திருப்பதிகங்கள், திருவங்கமாலை, தமது சிவபூசையின் ஆன்மார்த்தநாயகராகிய திருவாலவாயுடையாரைக் கண்டு கும்பிட்ட பதிகங்கள், இறைவர் நேர் தோன்றக்கண்ட வண்ணங்களைத் துதித்த திருப்பூவணத் திருத்தாண்டகம் " மாயையினுட் புலம்பும் இருவினைகளுக்கு யானல்லேன்'' என்ற திருவாரூர்த்தாண்டகம், இறைவரைச் சரண்புகும் திருவிருத்தம், திருவடியமர்ந்த திருத்தாண்டகம் முதலாயின.

**புவியின் மேல்** - திருக்கயிலை கண்டு சேரப்பெற்று அங்கு அமர்ந்தாலும் தீந்தமிழால் வழுத்தலாமாயினும், புவியின் மேல் வழுத்த வைப்பது ஏனை ஆன்மாக்களின் பொருட்டு இறைவர் வைத்த பெருங்கருணை.

**தமிழ் வழுத்த** - தமிழால் நாயனார் வழுத்தக் கேட்க என்றும், புவியின் மேல்பின் வரும் உயிர்கள் தமிழ்களைத் துணைகொண்டு வழுத்த என்றும் உரைக்க நின்றது.

**மேல்** - மேல்வரும் நிலையுள்ளார் என்ற குறிப்பும் தந்து நின்றது.

**பின்னையும்** - முன் வழுத்தியவை போல என்று உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. " தித்திக்கு மணிவார்த்தை யின்னுஞ் சின்னாட் டிருச்செவியி லருத்திடவும் " (திருவிளை - புரா - பார்க்க.) என்ற திருவாதவூரர் சரிதவரலாறும் இங்கு நினைவு கூர்தற்பாலது.

**நன்னெடும் புனல் தடமும் ஒன்று உடன்கொடு** - **நன்மையாவது** - தோய்ந்தார்க்குக் கயிலைகண்டு உய்யும் வழிகாட்டுதல்.

**நெடும் புனல்** - அளவால் நீளுதலும் வடபாற் கயிலைமலைச் சாரலினின்றும் தென்பால் திருவையாற்று ஓர் வாவியி (1636 - 1637) னளவும் நீளுதலும், பெருமையால் நீளுதலும் கருதி யிவ்வாறு கூறினர். **தடம்** - இத்தடம் கயிலைமலைச் சாரலில் 15000 அடி அளவு உயரத்தில் இப்போது காணும் மானச சரோவரம் என்னும் பெரிய ஏரியாயுள்ளதென்பர். **தடமும்** - தாம் வந்ததே யன்றித் தடமும் என உம்மை இறந்தது தழுவிற்று.

**தடமும் ஒன்று உடன் கொடு** - நாயனார் திருப்பைஞ்ஞீலிக்கு வரும் வழியில் காவுங் குளமும் முன் சமைத்துக்காட்டி (1570), இறைவர் எழுந்தருளியிருந்தமையும்,

ஆளுடைய நம்பிகள் திருக்குருகாவூர்க்கு வரும் வழியில் "தண்ணீரும் பொதி சோறுங் கொண்டு வழிச்சார்ந்து" "பந்தரொருபாலமைத்து" (ஏயர் கோன் - புரா- 156 - 157) இறைவர் எழுந்தருளியிருந்தமையும் இங்கு நினைவு கூர்தற்பாலன.

உடன் கோடு - தடமும் அங்கு இருக்கத்தக்கதாகச் சமைத்து என்ற பொருளில் வந்தது.

ஒன்று - ஒன்றுவிக்கும் தன்மை பொருந்திய என்ற குறிப்புமாம்.

பரமர் ஓர் முனிவர் ஆம் படியால் - பரமர் தாமாந் தன்மையால் அறியவாராது ஒரு முனிவர் என்னலாம்படி. ஆம் - எண்ணலாகும். ஓர் - ஓர்கின்ற. தியானிக்கின்ற என்றலுமாம். பன்னகம் புனை என்பதனை முனிவர் என்றதனுடனும் கூட்டி, பாம்புகளை மேற்றுறங்கிய ஒருமுனிவராகி என்றுரைக்கவும் நின்றது.

கச்சிமா நகரினின்றும் காளத்திவரை வழிபட்டு வந்த, சிவநெறி நான்கனுள் ஞானச் சரியையுள் சரித்த நாயனாரது சரிதப்பகுதியை நான்கு சீர் கொண்ட கொச்சகக்கலிப்பாவினாலும், அதன்மேல் அச்சரியையின் மேலே, திருக்கயிலை மேல் எழுந்து செல்லும் சரிதப்பகுதியை எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தாலும், அதன் மேல் ஐந்தெழுத்தருணிலை கைவரப் பெற்று ஐயன் திருக்கயிலைக் காட்சியை ஐயாற்றிற் கண்ட சரிதப்பகுதியை அதற்குரிய ஐந்து சீருடைய கலிநிலைத் துறையாலும் யாத்த ஆசிரியரது தெய்வக் கவிநலம் காண்க.

நடந்தார் - வந்தார் என்ற பொருளில் வந்தது. 361

1627. (வி - ரை) வந்து - அவர்காணும்படி நடந்து வந்து.

மற்றவர் - தாம் குறித்து வந்த அவர் - நாயனார்.

நேர்நின்று - எதிரில் அவர் நேரே காணும்படி நின்று.

நொந்து நோக்கி - அவரது வருத்தத்தைக் கண்டு ஆற்றாமைக் குறிப்புத் தோன்ற நோக்கி. ஆற்றாமை கண்ணோக்கத்தில் வெளிப்படும்படி இரக்கக் குறிப்புடன் பார்த்து.

மற்றவர் எதிர் நோக்கிட - வந்தவர், தம்மை அவர் (நாயனார்) காணுமுன்னம் தாம் அவரை நோக்கி, அதன் பின் அவரும் தம்மை எதிர் நோக்கம் செய்ய - பார்க்க. "திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணு முன்னே, யங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்தி" (753) என்றதும் ஆண்டுரைத்தவையும் இங்குக் கருதுக.

நுவல்வார் - இசைத்தார் என்று கூட்டி முடிக்க. நுவல்வார் - நுவல்வாராகி; முற்றெச்சம்.

இவ்வுறுப்புச் சிந்தி அழிந்திட என்க. இவ்வாறு உறுப்புக்கள் சிந்தி அழிய - அழியும்படி.

வேம் கடம் - வெவ்விய காடு. கடத்து - காட்டினிடத்து. 362

1628. மாசில் வற்கலை யாடையு மார்பின்முந் நூலுந்
தேசு டைச்சடை மவுலியு நீறுமெய் திகழ
ஆசின் மேய்த்தவ ராகிநின் றவர்தமை நோக்கிப்,
பேச வுற்றதோ ருணர்வுற விளம்புவார் பெரியோர், ௩௬௩

1629. "வண்டு லாங்குழன் மலைமக ளுடன்வட கயிலை
யண்டர் நாயக ரிருக்குமப் பரிசவ ரடியேன்
கண்டு கும்பிட விருப்பொடுங் காதலி னடைந்தேன்;
கொண்ட வென்குறிப் பிதுமுனிவ!" யெனக் கூற, ௩௬௪

1630. "கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலு மானுடப் பான்மையோ ரடைவதற் கெளிதோ?;
வயில்கொள் வேற்படை யமரரு மணுகுதற் கரிதால்;
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர் வந்!" தென விளம்பி,

1631. "மீளு மத்தனை யுமக்கினிக் கட" னென்ன விளங்குந்
தோளு மாகமுந் துவளுமுந் நூன்முனி சொல்ல,
வாளு நாயகன் கயிலையி லிருக்கைகண் டல்லான்
மாளு மிவ்வுடல் கொண்டுமீ ளே" னென மறுத்தார்; ௩௬௬

1632. ஆங்கு மற்றவர் துணிவறிந் தவர்தமை யறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக் கரந்துநீண் மொழியா
"லோங்கு நாவினுக் கரசனே! யெழுந்தி" ரென் றுரைப்பத்,
தீங்கு நீங்கிய யாக்கைகொண் டெழுந்தொளி திகழ்வார், ௩௬௭

1633. "அண்ண லே! யெனை யாண்டுகொண் டருளிய வமுதே!
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே!
கண்ணி னுற்றிருக் கயிலையி லிருந்தநின் கோலம்
நண்ணி நான்றொழ நயந்தருள் புரி" யெனப் பணிந்தார்; ௩௬௮

1634. தொழுதெ ழுந்தநற் றொண்டரை நோக்கிவிண் டலத்தி
லெழுபெ ருந்திரு வாக்கினா லிறைவ "ரிப் பொய்கை
முழுகி நம்மைநீ கயிலையி லிருந்தவம் முறைமை
பழுதில் சீர்த்திரு வையாற்றிற் கா" ணெனப் பணித்தார். ௩௬௯

1628. (இ - ள்) மாசு இல் வற்கலை ஆடையும் - அழுக்கு இல்லாத மரவுரி உடையும்; மார்பில் முந்நூலும் - திருமார்பிற் பூணும் முப்புரி நூலும்; தேசு உடை சடை மவுலியும் - ஒளியுடைய சடை முடியும்; மெய் நீறும் - உடம்பினிடத்து விளங்கும் திருநீறும்; திகழ - (ஆக இவ்வண்ணமாக) விளங்க; ஆசு இல்...நோக்கி - குற்றமற்ற மெய்ம் முனிவராக நின்ற இறைவரை நோக்கி; பெரியோர் - பெரியவராகிய நாயனார்; பேச உற்றது ஓர் உணர்வு உற விளம்புவார் - பேசுதற்குப் பொருந்திய ஓர் உணர்ச்சி பொருந்த உரைப்பாராகி; ௩௬௩

1629. (இ - ள்) வண்டு......அப்பரிசு - வண்டுகள் உலாவும் கூந்தலையுடைய பார்வதி யம்மையாரோடு வட கயிலாயத்தில் தேவதேவ ராகிய சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் அத்தன்மையினை; அவர் அடியேன்...அடைந்தேன் - அவரது அடியனேன் கண்டு கும்பிட வேண்டுமென்ற விருப்பத்தோடு காதல் மிக அடைந்தேன்; கொண்ட...முனியே! - முனிவரே! மனத்தில் நான் கொண்ட குறிப்பு இதுவாகும்; எனக்கூற - என்று சொல்ல; ௩௬௪

1630. (இ - ள்) கயிலை...எளிதோ? - பெருங்கயிலைத் திருமலையானது இப் பூமியிடத்துப் பயிலும் மனிதத்தன்மையுள்ளோர் சென்றடைவதற் கெளிதானதா?; அயில் கொள்...அரிதால் - கூரிய வேற்படை முதலியவற்றை ஏந்திய தேவர்களும் சென்றணுகுதற் கரியது; "வெயில்...வந்து?" என - "வெப்பமிக்க கொடிய இச் சுரத்தினிடை வந்து என்ன அறியாமை செய்துவிட்டீர்!" என்று சொல்லி; ௩௬௫

1631. (இ - ள்) "மீளும்...கடன்" என - "இங்கு நின்றும் மீண்டு செல்லும் அவ்வளவே இனி உமக்குக் கடனாவது" என்று; விளங்கும்...சொல்ல - விளங்குகின்ற தோளிலும் திருமேனியிலும் கிடந்து அவலுகின்ற முப்புரி நூலினையுடைய முனிவர் சொல்ல; "ஆளும் நாயகன்...மீளேன்" என - "என்னை ஆளும் நாயகரது திருக்கயிலையில் இருக்கும் கோலத்தைக் கண்டபின் பல்லது, அழியும் தன்மையுள்ள இந்த உடலைக்கொண்டு மீளமாட்டேன்" என்று; மறுத்தார் - (நாயனார்) மறுத்துரைத்தனராக; ௩௬௬

1632. (இ - ள்) ஆங்கு மற்றவர் துணிவு அறிந்து - அவ்விடத்தில் அவருடைய துணிவை உலகம் அறிந்து உய்யுமாறு தாம் அறிந்து; அவர் தமை அறிய - அவர் தம்மை அறிந்து கொள்ளும்படி; நீங்கும் மாதவர் - நீங்குகின்ற முனிவர்; விசும்பிடைக் கரந்து - ஆகாயத்தில் மறைந்து; நீண் மொழியால் - நீண்ட தம் வாக்காகிய அசரீரியால்; ஓங்கு...உரைப்ப - "ஓங்கும் நாவுக்கரசனே! எழுந்திரு" என்று சொல்ல; நீங்கு...ஒளி திகழ்வார் - ஊறுகள் எல்லாம் நீங்கிய உடம்புடனே எழுந்து ஒளியில் விளங்குவாராகி; ௩௬௭

1633. (இ - ள்) அண்ணலே! - பெருமையுடையவரே!; எனை...அமுதே! - என்னையும் ஆட்கொண்டருளிய அமுதாகியவரே!; விண்ணிலே...நாயகனே! - ஆகாயத்தினிடமாக மறைந்து அருள் செய்யும் வேதநாயகரே!; கண்ணினால்...புரி - திருக்கயிலையில் வீற்றிருந்தருளும் உமது திருக்கோலத்தை, அடைந்து, நான் கண்ணினாற் கண்டு தொழும்படியாக விரும்பி யருள்புரிவீராக!; எனப் பணிந்தார் - என்று சொல்லி வேண்டிக்கொண்டு கீழ் வீழ்ந்து பணிந்தனராக; ௩௬௮

1634. (இ - ள்) தொழுதெழுந்த...நோக்கி - அவ்வாறு தொழுதெழுந்து நின்ற நற்றொண்டராகிய நாயனாரை நோக்கி; விண்தலத்தில்...வாக்கினால் - ஆகாயத்தினின்றும் எழுகின்ற தமது அசரீரியாகிய பெருந்திருவாக்கினாலே; "இப்பொய்கை...காண்" என - "இந்தப் பொய்கையில் முழுகி, நாம் திருக்கயிலையில் வீற்றிருக்கும் அம்முறைமையினையே நம்மைக், குற்றமற்ற சிறப்புடைய திருவையாற்றிலே காண்பாயாக" என்று; இறைவர் - முதல்வராகிய சிவபெருமான்; பணித்தார் - ஆணையிட்டருளினார். ௩௬௯

இவ்வேழு பாட்டுக்களும் சொற்றொடர்பும், பொருட்டொடர்பும் பெற்று ஒரு முடிபாக்கி உரைக்க நின்றன.

1628. (வி - ரை) இப்பாட்டு, இறைவர் முனிவராய் வந்த திருக்கோலத்தை நம் கண்முன் கொண்டுவர ஓவியம்போல வரைந்து காட்டும் திறம் காண்க. இஃது ஆசிரியருக்குரிய சிறப்பு. நாயனாரது திருவடிவத்தை 1405 - 1490 பாட்டுக்களிலும், "சிந்தை யிடையறா வன்பும்" (திருஞான - புரா - 270) என்ற திருப்பாட்டினும் எழுதிக்காட்டிய ஆசிரியர், நாயனார் கண்ட இறைவரது திருக்கோலத்தை இவ்வொரு பாட்டால் கூறும் முறைமையும், "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றபடி அருள் வழியே அவரைக் கயிலையிலிருந்த அம்முறையில் நேர்காணும் திருக்கோலத்தை 1640 முதல் 1644 வரை ஐந்து திருப்பாட்டுக்களாலும் அறிவிக்கும் முறைமையும் கருதுக.

மெய்த்தவராகி நின்றவர் தமைநோக்கி - உணர்வுறப் - பெரியோர் - விளம்புவாராய் (1628), "முனியே! வடகயிலை - அண்டர் நாயகர் மலைமகளுடனிருக்கும் பரிசு கண்டு - கும்பிட அடைந்தேன்; என்குறிப்பு இது" எனக்கூற (1629), முனி, "கயிலை வரை - மானுடப்பான்மையோர் அடைவதற்கு எளிதோ?; அமரரும் அணுகுதற்கு அரிது! - வெஞ்சுரத்து வந்து என் செய்தீர்! (1630)-இனி மீளும் அத்தனையே

உமக்குக்கடன்" என்று சொல்ல, (அவர்) "கயிலையிலிருக்கை கண்டு அல்லால் மீளேன்" என மறுத்தாராக (1631), மாதவர்-அவர் துணிவு அறிந்து-அவர் தமை அறிய - விசும் பிடைக் கரந்து - "நாவினுக்கரசனே! எழுந்திரு" என்று நீண்மொழியால் உரைப்ப; (அவர்) தீங்கு நீங்கிய யாக்கைகொடு எழுந்து திகழ்வாராய் (1632), "அண்ணலே! அமுதே! நாயகனே! நின் கயிலைக்கோலம் கண்ணினுற் கண்டு தொழ அருள்புரி" எனப் பணிந்தா(ராக) (1633), அத்தொண்டரைநோக்கி விண்ணில் எழும் திருவாக்கினால் "இப்பொய்கை முழுகித்-திருவையாற்றிற் கயிலையில் நாம் இருந்த முறைமை-காண்" என - இறைவர் - பணித்தார் - (1634) என்று இந்த ஏழு பாட்டுக்களையும் தொடர்ந்து கூட்டி முடித்துக் கொள்க.

வற்கலை - ஆடை-மரவுரி உடை. சடை மவுலி - சடையாகிய முடி. மவுலி - மணி முடிபோல முடித்ததனால் மவுலி என்றார். சடைமவுலி - உருவகம்.

மெய்யில் நீறும் - என்று மாற்றிக் கொள்க.

ஆசு இல் மெய்த்தவராகி - ஆசு - குற்றம். உயிர்களின் குற்றத்தை இல்லை யாகச் செய்யும் பொருட்டுத் தாம் மெய்த்தவராக உள்ளவர். மெய்த்தவர்-"நேரிழை யைக் கலந்திருந்தே புலன்க ளைந்தும், வென்றானை" (தாண் - வீழி. 3), "யோகியா யிருந்துயிர்க்கு யோகத்தைப் புரித லோரார்" (சித்தி), "பொறிவாயி லைந்தவித்தான்" (குறள்) முதலியவை காண்க.

நின்றவர் - எங்கும் நிறைந்து நின்றவர் என்பதும் குறிப்பு.

பேச உற்றது ஓர் உணர்வு உற - முன்னர் எச்செயலுமின்றி (1625) தங்கிக் கிடந்தனராகவும், முனிவர் நொந்து நோக்கிடத் தாமும் எதிர்நோக்கிட வல்லவராயி னர்; அவர் பேசிட அவரை நோக்கிப் பேசும் உணர்ச்சி சிறிது கூடவே பேசவும் வல்லராயினர். உடலின் ஏனைச்சத்திகளைப் பெறுதல் பின்னர்க் காணப்படும் (1632). ஓர் - ஒரும் - நினைக்கும் என்றதும் குறிப்பு.

பெரியோர் - செயற்கரும் செய்கை செய்தமையாற் பெரியோர் என்றார். 363

1629. (வி - ரை) வண்டுலாங் குழல் மலைமகள் - "தேனார்ந் துக்க, ஞானப்பூங் கோதையாள் பாகத்தான்" (தாண்) என்று திருக்காளத்தியில் அம்மையப்பரைப் பணிந்த குறிப்பினால் வடகயிலைக்குப் போந்தனராதலின் அத்தன்மையே நினைவில் ஊன்றி நிற்க இவ்வாறு கூறினார். வண்டுகள் உலாவி மொய்த்தல் அம்மையார் கூந்த லின் இயற்கை மணங்கருதி. திருவிளையாடற்புராண வரலாறுங் கருதுக.

வடகயிலை - தென்கயிலை (காளத்தி) கண்ட அக்குறிப்பினால் வடகயிலை வணங்கக் காதல் போந்தது என்பது குறிப்பு.

இருக்கும் அப்பரிசு - வீற்றிருந்தருளும் அந்த என அகரம் பண்டறி சுட்டு. திருக்கோலம்.

விருப்பொடும் காதலின் - விருப்பந்தூண்ட, அதனால் ஆசை அதிகரிக்க, அக் காரணத்தால். "கூடு மன்பினிற் கும்பிடலே யன்றி" (143).

கொண்ட என் - குறிப்பு - கொண்ட - உட்கொண்ட. இப்பயணத்தை மேற் கொண்ட என்றலுமாம்.

குறிப்பு - குறிக்கோள்; குறிவைத்த பொருள். "உண்மை நின்ற பெருகுநிலைக் குறியாளர் அறிவு" (செங்காட்டங்குடி - தாண்); "அண்ணல் பாதங் கொண்ட வன் குறிப்பி னாலே கூப்பினான் றபரத்தை" (நேரிசை - ஆப்பாடி - 4); "தங்கள் குறி வாராமைக் கைவிட்டார்" (802). குறிப்பு - கருத்து என்பாருமுண்டு.

கண்டு கும்பிடும் - புறக் கண்ணாலும் கண்டு வழிபடும். அகக் கண்ணாற் கண்டு கும்பிட்டிருப்பே னாயினும், புறக் கண்ணாலும் கண்டு என்க. புறக் கண்ணாலும்

என்பது வருவிக்க. சிவபூசையில் அந்தரியாகம் என்னும் அகப்பூசை நிலையினின்றும் புறப் பூசைக்குட் புகும்போது இவ்வாறு செய்து கொள்ளும் பிரார்த்தனையை இங்கு நினைவு கூர்க.

விருப்போடும் காதலின் - விருப்பம் இந்த யாத்திரையைத் தொடங்கச் செய்தது; காதல் அதனை மேன்மேல் இதுவரை ஊக்கிச் செலுத்தியது.

இப்பாட்டு முனிவரை நோக்கி நாயனார் விளம்பிய விடை. 364

1630. (வி - ரை) இப்பாட்டு நாயனார் கூறிய விடையைக் கேட்ட முனிவர் மேற்சொல்லியது.

காசினி மருங்கு பயிலும் மானிடப் பான்மையோர் - காசினி - "பொறிகட்கிடரீயு ஞாலம்" (புறப். வெ. மா. 9. 42) என்றபடி மயக்கஞ் செய்யும் பூமி. நல்வினைப் பயனும் தீவினைப் பயனும் கலந்து அனுபவிக்கப்படும் கன்ம பூமியாகிய நிலவுலகத்துப் பயிலும் மனிதத் தன்மையினர். மானிடர் என்னாது மானிடப் பான்மையோர் என்றதனால் மக்கட் பிறப்பில் வந்தாராயினும் மனிதத் தன்மை நீங்கி, ஆளுடைய அரசுகள் - ஆளுடைய நம்பிகள் முதலிய சிவத்தன்மையுடைய எந்தம் பெருமக்கள் போல்வார் அடைகுவர்; ஏனைய மனிதப் பான்மையினர் அடைதலரிது என்றபடி. "ஞானவாரூரரைச் சேரரை யல்லது நாமறியோ, மானவ வாக்கை யொடும் புக்கவரை" (திருத்தொண் - அந் -. 86) எனவும், "ஊனுயிர் வேறு செய்தான்" (நொடித்தான் மலை - தேவா) எனவும் வரும் திருவாக்குக்கள் காண்க.

வேற்படை யமரர் - பலவகைப் படையும் ஏந்திய விஞ்சையர் முதலிய தேவச் சாதியர்.

வந்து என் செய்தீர்? - என்று மாற்றுக. வினா இரக்கக் குறிப்புப்பட நின்றது. வந்தது மிக்க அறியாமையாம் என்றபடி.

விளம்பி - எனச் - சொல்ல - என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க. முனிவர் மேலும் தொடர்ந்து கூறுவாராய், இனி மீள்வதே உமது கடன் என்று தமது முடிபை மேல்வரும் பாட்டிற் கூற வைத்து, அம்முடிபுக்குரிய காரணத்தை மட்டும் இப்பாட்டிற் கூறிய கவிநயம் காண்க.

விளம்பீர்!—என்பதும் பாடம். 365

1631. (வி - ரை) அத்தனை - அவ்வளவே. பிரிநிலை ஏகாரம் தொக்கது.

கடன் - கடமை. செய்யத் தக்கது என்ற பொருளில் வந்தது.

விளங்கும்...முந்நூன் முனி - இங்கு வந்து "என்ன காரியம் செய்துவிட்டீர்? மீளும் அத்தனையே இனி உமக்குக் கடன்" என்று சொல்லும்போது, முனிவரது திருமேனியில் கண்ட மெய்ப்பாடு குறித்தது. நாயனார் தங்கிக் கிடந்த நிலைகண்டு நொந்து நோக்கிப் பரிந்து கூறும் மிக்க ஆர்வ நிலையும், பரிவு நிலையும் சொல்லான் மட்டுமன்றிப் புறத்திலும் தோன்றும்படி முனிவர் திருமேனியில் அசைவு தோன்ற அதனால் அவர் அணிந்த முந்நூல் ஆகத்திலும் தோளிலும் துவள்வுற்றது என்பது குறிப்பு.

ஆளும் நாயகன் - முக்காலத்துக்கும் பொதுவாகிய நிகழ்காலப் பெயரெச்சத்தாற் கூறினார், எக்காலமும் காப்பதற்கு நாயகன் உளன்; நான் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை என்ற குறிப்புணர்த்துதற்கு. நாயகன் - என்றமையால் நாயகத் தன்மையாலும் தம்மையடையும் உயிர்களுடைய காதன்மையை நிறைவேற்றக் கட்டுப்பட்டவன் என்பது குறிப்பு. நாயகன் - நடத்துபவன். "காதலின் அடைந்தேன்" (1629) என்ற குறிப்பும் கருதுக.

இருக்கை - வீற்றிருக்கும் திருக்கோலம், "இருந்த நின் கோலம்" (1633).

கண்டு அல்லால் - கண்டால் என்பது கண்டு எனத் திரிந்து நின்றது.

மாளும் இவ்வுடல் - என்றைக்கிருப்பினும் ஒரு நாள் அழியுந் தன்மையுடைய தாதலின் இப்போது உமது சொல்வழி மீளினும் பின் ஒருநாள் அழிவெய்துவது உறுதி ; அந்நாளி லிறந்துபடுவதினும் கயிலைகாணும் இந்த நன்முயற்சியிற் படுவது நன்றுகும் என்பது குறிப்பு. மாளும் - இப்போது அழிவெய்திக் கொண்டிருக்கும் என்பதும் தொனி. 366

1632. (வி - ரை) ஆங்கு - அவ்வாறு மறுத்து உரை செய்த வழியால். அவ்விடத்து - அப்பொழுது - என்றலுமாம்.

துணிவு அறிந்து - இறைவர் எக்காலத்தும் வரும் எல்லாமும் ஒருங்கே தாமே அறிய வல்லவராதலின் நாயனர் மறுத்துரைத்தது கொண்டு அவரது துணிவை அறிந்தனர் என்பது பொருந்தாது. அறிந்து-உலகுயிர்கள் அறியும் பொருட்டுத் தாம் அறிந்து என்க. பதிநிலையில் எல்லாம் அறியும் நிலைவேறு; உயிர்கள் அறியும்படி எண்ணித் தாம் அறியும் நிலைவேறு. " நுகருமா நுகரே " முதலிய திருவிசைப்பாக்கள் கருதுக. " மூவுலகு நின்னிலைமை யறிவித்தோம் " என்றதும், " காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின் " (சிவஞானபோதம் - 11. சூத்) என்ற ஞான சாத்திரமும் காண்க. அவர்தமை அறிய நீங்கும் என்ற குறிப்பும் காண்க.

அவர் தம்மை அறிய நீங்கும் - எதிரில் நேர் நின்றபோது அறிய வைக்காது, நீங்கினபோது அறியவைத்தல் இறைமைத் தன்மைகளுள் ஒன்று. எம்பெருமக்களின் சரிதங்களுட் பலபகுதிகளிலும் பலதிருவிளையாடல்களினும் வரும் வரலாறுகளை ஈண்டுச் சிந்திக்க.

அறிய நீங்கும் மாதவர் - கரந்து - அறியும்படி சிறிது தூரம் சென்று பின்னர் மறைந்து.

நீண்மொழி - நீளுதல் - அசரீரியாக ஆகாயத்தில் நிறைந்து வெளிப்படுதல். " விண்டலத்தி லெழுபெருந் திருவாக்கு " (1634) என்று பின்னர் இதனை விளக்குதல் காண்க.

ஓங்கும் நாவினுக் கரசனே எழுந்து இரு - இது இறைவரது அசரிரீவாக்கு. நா-ஓங்குதல் - உண்மையால் உயர்தல், " அன்ன மெய்த்திரு வாக்கெனு மமுதம் " (திருஞான - புரா - 1088) ஓங்கும் - என்றதனை அரசனே என்பதனுடன் கூட்டி உயர்ச்சி பெறும் என்றுரைத்தலுமாம். நாவினுக்கரசனே ! ஓங்கு - என்று வாழ்த்தாகிய வியங்கோள் வினைமுற்றாகக் கொண்டுரைத்தலு மொன்று. எழுந்து இரு - எழுதல் - உடல் தேய்ந்துசெயலின்றி வீழ்ந்து கிடக்கும் நிலையினின்றும் எழுதல் ; இருத்தல்-பின்னர்ப் பல காலம் நிலவுலகிற் சிவநெறி பயின்றிருத்தலும், இறுதியில் சிவானந்த ஞான வடிவே யாகித் திருவடிக்கீழ் இருத்தலுமாம்.

தீங்கு நீங்கிய - 1622 முதல் 1625 வரை கூறியபடி உடலில் தேய்ந்த ஊறுகள் யாவையும் நீங்கி முன்போல நலம் பெற்ற.

யாக்கை - கட்டுவிட்ட நிலையினின்றும் நீங்கி முன்புபோற் கட்டப்பட்டதென்று குறிக்க யாக்கை (யாத்தல் - கட்டுதல்) என்ற பெயராற் கூறினர்.

எழுந்து - எழுந்திரு - என்றபடி எழுந்து.

ஒளி திகழ்வார் - ஒளி - சிவவொளியில்; முன்தேய்ந்து சிதைந்த உடம்பு சிவனருளால் தீங்கு நீங்கியதாதலின் சிவனருள் ஒளிபெற்று விளங்கியது என்க. " அங்கண் மாயை யாக்கையின்மே லளவின் றுயர்ந்த சிவமயமாய் " என்றவிடத் துரைத்தவை நினைவுகூர்க. "பொங்கிய வொளியி னீழற் பொருவிலன் புருவ மானார்" (கண் - புரா) " வென்றிகொ டிருநீற் றொளியினில் விளங்கும் " (திருஞான - புரா) - முதலியவை காண்க.

திகழ்வார் - எதிர்கால வினையெச்சமுற்று. திகழ்வராகிப்-பணிந்தார் - என மேல் வரும் பாட்டுடன் முடிக்க. 367

1633. (வி - ரை) இது நாயனுர் வேண்டிய வேண்டுகோள். அண்ணலே! - அமுதே! - வேதநாயகனே! என-நாயனுர் இந்த மூன்று வகையால் இறைவரை அழைக்கின்ருர். ஈனே "யாண்டு கொண்டு அருளிய" என்பதனை அண்ணலே! என்றதனுடனும், அமுதே! என்பதனுடனுமாகத் தனித்தனி முன்னும் பின்னும் கூட்டியுரைக்கும் படி இடையில் வைத்தோதினுர். அண்ணல் - பெருமையுடையவர். பெருமையாவது தகுதியில்லாத தம்மையும் இதுவரை ஆட்கொண்டு சிவநெறியிற் புகுத்தியருளியது. அமுதே - மரணம் போக்குவது; இங்குத் திருக்கயிலை வழிச்செல்லுகையில் தீங்கு நீக்கி ஒளிதிகழச் செய்த அருள் குறித்து நின்றது. வேதநாயகன் - வேதம் - மறை. சிவனைத் தன் இருதயத்துட் கொண்டு பொதிந்து மறைத்து வைத்துள்ளது. வேதத்தினுள்ளே நின்று மறைந்தும் விளங்கியருள்வதுபோல இங்கு விண்ணிலே மறைந்தும் அருள்பவர் என்ற குறிப்புப்படக் கூறினுர்.

மறைந்து அருள்புரி - மறைந்தும்; உம்மை தொக்கது. அருள்புரியும் தன்மை ஓங்கு நாவினுக்கரசனே! எழுந்திரு என்றுரைத்ததும், அதனுல் யாக்கையின் தீங்கு நீங்கி ஒளிதிகழ்ந் தெழச் செய்ததும் என்றிவற்ருல் விளங்குவது. அண்ணலே என்றது முன்னர் இறந்தகாலத்துச் செய்ததும், அமுதே என்றது இந்நாள் நிகழ்காலத்துச் செய்ததும், வேதநாயகனே என்றது இனி எதிர்காலத்துச் செய்வதும் என்று மூன்று காலத்தும் இறைவரது பேரருள் குறித்துப் போற்றியதாம். அருள்புரி - வேதநாயகனே - நயந்து அருள்புரி என்றதனுல் எதிர்காலக் குறிப்புத் தந்து நின்றது.

இக்குறிப்புக்கள் நாயனுர் அங்கு அருளிய கயிலைத் திருத்தாண்டகப் பதிகங்கள் மூன்றினும், மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி, பேராதென் சிந்தை புகுந்தாய் போற்றி, போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி, என் சிந்தை நீங்கா இறைவா போற்றி, கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி, நீங்கா தென்னுள்ளத் திருந்தாய் போற்றி, மன்னியென் சிந்தைமகிழ்ந்தாய் போற்றி, என்றும்; உடலின் வினைக ளறுப்பாய் போற்றி, ஊனத்தை நீக்கும் உடலே போற்றி என்றும்; பிறவியறுக்கும் பிரானே போற்றி, மேலை வினைக ளறுப்பாய் போற்றி என்றும், இவ்வாறு வருவனவற்ருற் குறிக்கப்படும் துணைகொண்டு எழுதப்பட்டன.

கண்ணினுல் - அகக்கண்ணிற் காண்பதுபோலப் புறக்கண்ணினுலும். நண்ணி - உடல் சிதைந்து தங்கிவிட்டதுபோலத் தங்கவிடாமல் அங்கு நண்ணி.

நின் கோலம் - "கயிலையி லிருக்கை" (1631); "இருந்த அம்முறைமை" (1634); கயிலையிலிருந்த கோலம் தொழ என்று வேண்டியதற் கேற்ப, அவ்வாறே திருவையாற்றிற் காட்டுகின்ருர் என்க. கண்ணினுல், முனியாகிய நின்கோலங் கண்டவாறே கயிலையிலிருந்த நின்கோலத்தைக்காண என்றபடி

பணிந்தார் - எழுந்து "ஒளிதிகழ" நின்று வரங்கேட்ட அதன் பொருட்டுக் கீழ் வீழ்ந்து வணங்கினுர் என்பது "தொழுதெழுந்த" - (1634) என மேற் கூறுதலால் விளங்கும். 368

1634. (வி - ரை) தொழுது எழுந்த - முன் பாட்டிற் பணிந்தார் என்றபடி கீழ் வீழ்ந்த நிலையினின்றும் எழுந்த. தொழுதலால் எழுச்சிபெற்ற என்றலுமாம்.

விண் தலத்தில் எழுபெரும் திருவாக்கு - அசரீரி வாக்கு. இஃது ஆகாயத்தினின்றும் செவிப் பொறிக்கு மட்டும் புலப்படுவது. "நீண் மொழி" (1632).

இப்பொய்கை. முனிவராகத் தாம் வரும்போது இறைவர் அமைத்து உடன் கொடு நடந்த நன்னெடும் புனற் றடம் (1626). இகரச் சுட்டு அஃது அணிமையிற்

காணப்பட்ட தென்பது குறிக்கும். பொய்கை - மாணிடராக்காத நீர் நிலை என்ற பண்டையாசிரியர் கூற்று ஈண்டுச் சிந்திக்கற்பாலது. பின்னரும் இப்பெயரால் ஆசிரியர் கூறுதலும் (1636) காண்க.

கயிலையில் இருந்த அம்முறைமை(யில்) நம்மைத் திருவையாற்றில் நீ காண் - என்க.

அம்முறைமை - அக்கோலத்தில் ; அவ்வாறே.

பழுதில் சீர்த் திருவையாறு - பழுது இல் சீர் - பழுதினை இல்லையாகச் செய்யும் சிறப்பு. இது திருநந்தி தேவர் இங்குத் தவஞ்செய்து பேறுபெற்றுச் சிவகணங்களுக்கு நாதராம் தன்மையும், சிவ குருமரபுக்கு முதல்வராம் தன்மையும் பெற்றதனாலாகிய சிறப்பு.

பழுது - உயிர்களது சகச மலம் என்னும் ஆணவம். திருமலைச் சிறப்பில் ஆசிரியர் இத்தன்மை பற்றித் திருவையாற்றினை அறிவித்தல் இங்குக் கருதத் தக்கது (45). இறைவர் திருக்கயிலைக் காட்சியினை நாயனாருக்குக் காட்டுதற்கு இத்தலத்தினை விளங்கக் கொண்டமைக்கும் இது திருவருட் குறிப்பென்பதும் கருதப்படும். 369

1635. ஏற்றி னாரரு டலைமிசைக் கொண்டெழுந் திறைஞ்சி,
"வேற்று மாகிவிண் ணாகிநின் றார்"மொழி விரும்பி,
ஆற்றல் பெற்றவ ரண்ணலா ரஞ்செழுத் தோதிப்,
பாற்ற டம்புனற் பொய்கையின் மூழ்கினார் பணியால்; ௩எ௦

1636. ஆதி தேவர்தந் திருவருட் பெருமையா ரறிவார்?
போத மாதவர் பனிவரைப் பொய்கையின் மூழ்கி,
மாதொர் பாகனார் மகிழுமை யாற்றிலோர் வாவி
மீது தோன்றிவந் தெழுந்தன ருலகெலாம் வியப்ப. ௩எக

1635. (இ - ள்) ஏற்றினார்......இறைஞ்சி-மேற்கண்டவாறு வெளிப்பட்ட ஏற்றினாருடைய திருவருளை முடிமேற் கொண்டு, மேல் எழுந்து வணங்கி ; வேற்றுமாகி... விரும்பி - "வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி" என்று தொடங்கும் திருப்பதிகத்தினால் விருப்பத்துடன் துதித்து ; ஆற்றல்...ஓதி - திருவருள் வலிமை பெற்ற நாயனார் இறைவருடைய திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டு; பாற்றடம்...பணியால்- பான்மை பெற்ற பெரிய நறுநீர்ப் பொய்கையில் ஆணையினால் மூழ்கினாராக ; ௩எ௦

1636. (இ - ள்) ஆதி......யார் அறிவார் ? - ஆதிதேவராகிய சிவபெருமானது திருவருட் பெருமையினை யாவர் அறியவல்லவர் ? ; உலகெலாம் வியப்ப - உலகமெல்லாம் வியப்படையும்படி ; போதமாதவர் - ஞானத் தவமுனிவராகிய நாயனார் ; பனிவரைப் பொய்கையின் மூழ்கி - பனிமலையின் அந்த வாவியில் முழுகி; மாது ஓர் பாகனார் மகிழும் ஐயாற்றில் - உமையம்மையாரை ஒரு பாகத்தில் உடைய சிவபெருமான் மகிழ்ந்து எழுந்தருளியிருக்கும் திருவையாற்றில்; ஓர் வாவிமீது தோன்றி வந்து - ஒரு வாவியின் மேல் தோன்றி வந்து ; எழுந்தனர் - எழுந்தார். ௩எக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1635. (வி - ரை) ஏற்றினார் - ஏறு - இடபவாகனமும் இடபக்கொடியும் குறித்தது. துன்பத்துட் கிடந்தவரை மேற்கூறியபடி அருட்கை கொடுத்து மேல் ஏற்றினவர் என்ற குறிப்பும் காண்க. பொய்கையுள் மூழ்கி வாவியின் மேல் கரை ஏற்றினார் என்ற குறிப்பும் கருதுக ; துணிவுபற்றி ஏற்றுவார் என்பது ஏற்றினார் என இறந்த காலத்திற் கூறினார் என்க.

தலைமிசைக் கோள்ளுதல் - பெரிதும் உடன்பட்டு மேற்கொள்ளுதல். தலை - உபசாரம். எழுந்து - கீழ் விழுந்து பணிந்தார் (1633) என்ற நிலையினின்றும் எழுந்து. இறைஞ்சி - முன் பணிந்தமை அருள்பெறும் பொருட்டு; இப்போது இறைஞ்சியது அருள் தந்தமையின் பொருட்டு.

வேற்றுமாகி விண்ணாகி நின்றார் மொழி - "வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி" என்று தொடங்குவதாதியாகத் திருத்தாண்டகப் பதிகங்கள் மூன்றும். விரும்பி - ஏனைய தலங்களிற்போல ஒரு பதிகத்தாற் போற்ற, அதனில் அமையாது மேலும் ஒரு ஒரு பதிகத்தாற் போற்ற, அதனிலும் அமைவுபடாது மேலும் இன்னொரு பதிகத்தாலும் போற்றும்படி மேன்மேலும் விருப்பம் நிகழ்ந்து என்றபடி. "மதுரமிக வாய்ந்தகனி, தனை நுகர்ந்த வினியசுவை யாராமை" (காரைக் - புரா - 24) என்ற கருத்து இதற்கும் பொருந்தும். இவ்வாறு திருக்கயிலாயத்தை மூன்று திருத்தாண்டகங்களாற் றுதித்தமையும், அதுவும் "அருச்சனை பாட்டேயாகும்" ( ) என்றபடி அருச்சனை யுருவமாகப் போற்றித் திருத்தாண்டகங்களால் துதித்த சிறப்பும் குறிக்க. "விண்மேலு மேலு நிமிர்ந்தாய் போற்றி மேலார்கள் மேலார்கள் மேலாய் போற்றி" (7) என்று துதித்த குறிப்பின்படி ஒருமுறை, இருமுறை, மும்முறையும் விருப்பம் நிகழ்ந்தமையால், மொழி விரும்பி என்றார். பதிகங்களின் குறிப்புப் பார்க்க. இன்றியமன்றி "வேற்றுமாகி விண்ணாகி நின்றா"ராகிய சிவபெருமானது மொழி விரும்பி - அசரீரியால் கூறிய ஆணையை மேற்கொண்டு என்றுரைப்பாரு முண்டு.

வேற்றுமாகி - விண்ணாகி - விண்ணாகி அதனின் வேறுமாகி என்க. வேற்றும் - வெவ்வேறு பூதங்கள் என்றலுமாம். வேற்றுமாகி - இறைவர் உயிர்களின் வேறாகி நிற்குநிலை. வேற்றுமாகி - முனிவராகி; விண்ணாகி - விண்ணில் மறைந்து என்ற குறிப்பும் காண்க.

ஆற்றல் பெற்றவர் - செயலின்றித் தங்கிக் கிடந்த நிலையினின்று இறைவரது திருவருளால் எழுந்து போற்றிச் செயல்புரியும் ஆற்றலைப் பெற்ற நாயனார். ஆற்றல் பெற்ற அவ் - என்பது பாடமாயின் அவ்வண்ணலாருடைய அஞ்செழுத்தின் ஆற்றல் குறிப்பதாகக் கூட்டி உரைக்க. அஞ்செழுத்தின் ஆற்றலாவது அடைந்தாரை ஆழாது காத்துக் கரைசேர்க்கும் வலிமை. "அஞ்செழுத்தின் புணை" (திருவா).

அஞ்செழுத்தோதி - வடகயிலைச் சாரலில் புனற்றடத்துள் மூழ்கித் திருவையாற்றிற் சிவக்காட்சி காணப்புகும் பெருஞ்செயலிற் புகுகின்றாராதலின் இங்குத் திருவைந்தெழுத்தினை ஓதி மூழ்கினார். "தழைத்த வஞ்செழுத் தோதினா ரேறினார் தட்டில்" (514) என்றபடி அமர்நீதி நாயனார் துலைத்தட்டில் ஏறியபோது இவ்வாறே செய்தமையும், "அஞ்செழுத்தை வாய்ந்த தொண்ட ரெடுத்தோதி மணிநீர் வாவி மூழ்கினார்" (தண்டி - புரா - 19) என்றபடி திருவருள் வழியே தாம் கண் பெறவும் அமணர் கண்ணிழக்கவும் செய்த சூளுறவின் மெய்த்தன்மை காட்டுதற்குத் திருவாரூரில் குளத்தில் மூழ்கப் புகும்போது தண்டியடிகணாயனார் இவ்வாறே திருவைந்தெழுத்தோதி மூழ்கியமையும், "எரிவலங் கொள்வார், அண்டர்பிரான் றிருநாமத் தஞ்செழுத்து மெடுத்தோதி, மண்டுதழற் பிழம்பினிடை மகிழ்ந்தருளி யுள்புக்கார்" (புகழ்ச் சோழர் - புரா - 31) என்றபடி சடைமுடிச் சிரத்தினைப் பொற்கலத்தேந்தித் தீயிடைப் புகும்போது புகழ்ச்சோழ நாயனார் இவ்வாறே புரிந்தமையும், பிறவும் இங்கு நினைவு கூர்தற்பாலன.

பால் தடம்புனல் பொய்கையில் - பால் - பான்மை; விதி. இறைவர் தாம் விதித்த நியதி உருவாய் அமைத்து உடன் கொண்டுவந்தமை (1626) குறிப்பு

தடம் புனல். "நெடும்புனல்" (1626). தடம் - பெரியதாகிய; இல் - ஏழனுருபு. பால் - பால் போன்ற பயனுடைய என்றலுமாம்.

பணியால் - "இப்பொய்கை முழுகிக் காண்" (1634) என்று இறைவர் பணித்தாராதலின் அந்தப் பணியால் எனக. கயிலைசென்று "கண்டு கும்பிடும்...குறிப்பிது" என்றது நாயனர் திருவுள்ளக் கருத்து; பொய்கையில் மூழ்குதலன்று; ஆயினும் இறைபணி நிற்றலே கடனென அமைந்து மூழ்கினர் என்பார் பணியால் என்று விதந்து கூறினர். 370

திருக்கயிலைமலை - (திருநொடித்தான்மலை)

I திருச்சிற்றம்பலம் போற்றித் திருத்தாண்டகம்

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி மீளாமே யாளென்னைக் கொண்டாய் போற்றி
யூற்றாகி யுள்ளே யொளித்தாய் போற்றி யோவாத சத்தத் தொலியே போற்றி
யாற்றாகி யங்கே யமர்ந்தாய் போற்றி யாறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 1

உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி யோதாதே வேத முணர்ந்தாய் போற்றி
யெண்ணா விலங்கைக்கோன் றன்னைப் போற்றி யிறைவிரலால் வைத்துகந்த வீசா போற்றி
பண்ணா ரிசையின்சொற் கேட்டாய்போற்றி பண்டேயென் சிந்தைபுகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு.—வேற்றாகி விண்ணாகி நின்றாய்! ஓவாத சத்தத்து ஒலியே! கருவாகி ஓடும் முகிலே! ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் !, நீராவியான நிழலே !; சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் !; பல்லுயிராய்ப் பார்தோறுநின்றாய் !, கல்லுயிராய் நின்ற கனல் !, பண்ணின் இசை ! எண்ணும் எழுத்தும் சொல்லானாய் !, கண்ணின்மணி !, இமையாதுயிரா திருந்தாய் !, மூவாய் பிறவா யிறவாய் !, நெடிய விசும்பொடு கண்ணே !, நீள வகல முடையாய் !, கடிய உருமொடு மின்னே !, உண்ணா துறங்கா திருந்தாய் !, என்று பூமிமுதலாக எட்டு மூர்த்தமே திருமேனியாகக் கொண்டு அறியப்படும் நிலையினுள் மறைந்து விளங்கும் இறைவராகிய கயிலை மலையானே போற்றி போற்றி என்று துதிப்பது.

குறிப்பு:—விண்ணளவு ஓங்கி உயர்ந்தும், அளவுபடாது அகன்று பரந்தும் காணப்பட்ட பெரும் பனிமலைச்சாரற் கடுங்கடத்துத் தனியே நிற்கின்றார் நாயனர்; முன்னே தோன்றிய பெருமுனிவர் மறைந்தனர்; அசரீரியால் கேட்ட அவர் வாக்கின்படி உடலின் ஊறு நீங்கிய ஒளியுடைய உடல் பெற்று எழுந்து தனிநின்ற நாயனர் வானும் மலையும் காற்றும் இடியும் மின்னும் முதலிய பூத பௌதிகங்களின் பெருந்தோற்றத்தினுள்ளும் அவற்றின் குணங்களுள்ளும் இறைவரை அருவுருவாகக் கண்டு உணர்கின்றார்; அத்திருமுன் தாம் நிற்பதை அனுபவத்தில் உணர்ந்து அவற்றையே இறைவரது வடிவாகக்கண்டு "வேற்றாகி விண்ணாகி நின்றாய்!" என்பது முதலாகிய அத்தன்மைகளாலேயே துதிக்கின்றமை காண்க. இக்காட்சியினையே தொடர்ந்து பின்னர்த் திருவையாற்றில் கயிலைக் காட்சியினையும் இக்கருத்தே தொடர்ந்த இரண்டு திருத்தாண்டகப் பதிகங்களாலும் இத்தன்மைபற்றிப் போற்றியருளுவது காண்க. 1646ன் கீழ்த் தரப்படும் பதிகக்குறிப்புப் பார்க்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு.—I வேற்றாகி - வேறுமாகி. விண்ணினின்றும் வேறு; மீளாமே - "மீளுமத்தனையுமக்கினிக் கடன்" (1631) என்று முனிவராய் வந்த இறைவர் பணித்தவாறு மீளாதேயும் என்றதும் குறிப்பு. மீளாமே - "மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே", "மீண்டு வாரா வழி" (திருவா); ஓவாத சத்தத்தொலி - நாதம். சத்தம் - விண்ணாகி என்ற விண்ணின்குணம். ஆறங்க நால்வேத மானாய் - "வேத நாயகனே" (1633). கயிலை மலையானே போற்றி போற்றி - இது இந்த மூன்று பதிகங்களுக்கும் மகுடம். இவ்வாறு ஒரு முடியில் மூன்று பதிகங்களுள்ள சிறப்புத் திருக்கயிலாயத்துக்கே உரியது.—(2) பொய்ச்சார் - பொய்த் தார் என்பது எதுகை நோக்கி இவ்வாறு நின்றது.—(5) நேர்வார் - நிகர்ப்பார்; ஒப் பார்.—(6) பூட்சி - உணவு - இருப்பு. குறிக்கோள் என்றலுமாம். பார்தோறும் - அண்டங்கள் தோறும்.—(7) இமையாது உயிராது இருந்தாய் - கயிலை மலையை இறைவராகக் கண்ட தோற்றம். "நெடிய...உடையாய்" (10) உண்ணாதுறங்கா திருந்தாய்" (11) III (3) "செய்யாய்" முதலியவையும் இக்கருத்து.—(8) ஊழி ஏழு - இங்கு ஊழி என்றது ஊழியில் மீளத் தோன்றும் உலகங்களை.—(9) ஆவா கனகத் திரளே - அடியு முடியும்...நின்றாய் என்க.—(10) II எண்ணு இலங்கைக்கோன்... கேட்டாய் - இப்பகுதிகளைத் தனித்தனி ஒவ்வோர் தொடராக்கி உரைத்துக்கொள்க. ஓதாதே வேதமுணர்ந்தாய்..." வேத நாயகனே" (1633).

1636. (வி - ரை) ஆதி...யாரறிவார்? - வடபாற் கயிலைமலைச் சாரலில் தடத் தின் மூழ்கிய அவர், தென்பால் திருவையாற்றில் ஒரு வாவியில் வந்து எழுந்த செய் தியை உரைக்கப் புகும் ஆசிரியர் அவ்வுரைக்கு "அருட் பெருமையை யார் அறிவார்?" என்று முகவுரை செய்து தொடங்குகின்றார். ஆதி தேவர் - ஏனைத் தேவர்களது செயல்கள் ஆதி தேவரது ஆணைக்குட்பட்டு ஒரு வரம்பினுள் நிகழத்தக்கன. ஆதி தேவர் எல்லாம் வல்லவராதலின் அவரது அருட் செயல் எல்லை கடந்து வரம்பின்றி நிகழ வல்லது என்றது குறிப்பு. "கருணைக் கிணங்காத வன்மையையும் நான்முகன் கற்பிக்க வொரு கடவுளோ?" (தாயுமானார்) என்றபடி, இங்கு வடக்குந் தெற்கும் தடமும் வாவியும் பொருந்தும்படி செய்யவல்லது ஆதிதேவரது அருட் பெருமை; ஏனையோர் எவர்க்கும் அது அரிது என்றபடியாம். "எழுந்தனர் - அருட் பெருமை யாரறிவார்" என்று இக்கருத்தைப் பின்னர் வைத்துரைத்தலினும், இவ்வாறு முன் வைத்துரைத்துத் தொடங்கிக் கூறுவது படிப்போர் மனத்தை மேற்கூறும் செய்தியை உணர்ந்து உட்கொள்ளுதற் கேற்றபடி பண்படுத்தும் தகுதிபற்றி. "முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ?" (132), "அவரலாற் புரங்கள் செற்ற, ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார்?" (190) முதலியனவாக இறுதியில் முடித்துக் கூறும் கூற்றுக்களின் வைப்பு முறை இங்கு ஒப்பிட்டுக் காணத் தக்கது.

யார் அறிவார்? - அனுபவித்து அறியும் நாயனாரே யன்றி வேறு யாவர் அறிய வல்லார் என்பதும் குறிப்பு.

போத மாதவர் - "ஞானத் தவமுனிவர்" (1266), "பெருமையை உணர்வார்" (1637) என்பதுங் காண்க.

ஓர் வாவி - இது, திருவையாற்றில் கோயிலுக்கு வடமேற்கே சமுத்திர தீர்த்தம் என்றும், உப்பங் கொட்டைப் பிள்ளையார் கோவிற் குளம் என்றும் வழங்கும் ஒரு குளம் என்று அறியப்பட்டு, அதில் ஒவ்வோர் ஆண்டிலும் ஆடி - அமாவாசை நாளில் அப்பர் காட்சி என்று இவ்வரலாற்று விழாக் கொண்டாடப்படுகிறது.

வாவி மீது தோன்றி வந்து - எழுந்தனர் - கயிலைச்சாரற் பொய்கையினுள் கீழ் நோக்கி முழுகிய நாயனார், ஐயாற்றுவாவியில் மேல்நோக்கி எழுந்தனர் என்பார் மீது என்றும், அவ்வாறு எழும்போது அவர்தந் திருமேனி தலை முதல் சிறிது சிறிதாக வெளிவருதல் கருதித் தோன்றி என்றும், திருமேனி முற்றிலும் வெளிப்பட வந்த தனைக் கருதி வந்து என்றும், இவ்வாறு படிப்படியாக நீர்க் கீழிருந்து மேல் வந்தன ராதலின் எழுந்தனர் என்றும் கூறினார்.

உலகெலாம் வியப்ப - எழுந்தனர் - என்று கூட்டுக. எழுந்தது கண்ட பின்னரே உலகம் வியப்படையுமாதலின் அம்முறையே உலகெலாம் வியப்ப என்றதனைப் பின் வைத்துக் கூறின தகுதி காண்க. "உலகெலாம்" என்ற இப்புராண முதன் மங்கல மொழிபுணர்த்தி ஓதினமை இஃதோர் அரும்பெருஞ் செயலாகிய திருவருள் வெளிப் பாடு என்று அறிவுறுத்தற் பொருட்டாம். யாரறிவார்? என்று முன்பே வினவிக் கூறி முடித்த கருத்துமிது. அறிவார் ஒருவருமிலர் என்று, வினா இன்மை குறித்து நின்றது. 371

யாரறிந்தார்—பனிமலர்—மணிவரைப்—என்பனவும் பாடங்கள்.

1637. வம்பு லாமலர் வாவியின் கரையில்வந் தேறி
உம்பர் நாயகர் திருவருட் பெருமையை யுணர்வார்
தம்பி ரான்றருங் கருணைகொ லிது?வென விருகண்
பம்பு தாரைநீர் வாவியிற் படிந்தெழும் படியார், ௩எ௨

1638. மிடையு நீள்கொடி வீதிகள் விளங்கிய வையா
றுடைய நாயகர் சேவடி பணியவந் துறுவார்,
அடைய வப்பதி நிற்பவுஞ் சரிப்பவு மான
புடைய மர்ந்ததந் துணையொடும் பொலிவன கண்டார்; ௩எ௩

1639. பொன்ம லைக்கொடி யுடனமர் வெள்ளியம் பொருப்பின்
றன்மை யாம்படி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதைப்
பன்மை யோனிக ளியாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயின்முன் வந்தார். ௩எ௪

1637. (இ - ள்) வம்புலாமலர்...ஏறி - மணம் வீசுகின்ற மலர்கள் பொருந்திய வாவியின் கரையில் வந்து மேல் ஏறி; உம்பர்...உணர்வார் - தேவதேவருடைய திரு வருளின் பெருமையை அனுபூதியில் உணர்பவராகி; "தம்பிரான்...இது" என - "எமது பெருமான் தருகின்ற பெருங் கருணையோ? இது" என்று துணிந்து; இருகண்...படியார் - இரண்டு கண்களினின்றும் ததும்பிப் பொங்கித் தாரையாக வழி கின்ற கண்ணீரின் வாவியில் மூழ்கி எழும் தன்மையுடையவர் போன்றாராகி; ௩எ௨

1638. (இ - ள்) மிடையும்...உறுவார் - நெருங்கிய நீண்ட கொடிகள்கட்டிய வீதிகளால் விளங்குகின்ற திருவையாற்றில் எழுந்தருளிய இறைவரது திருவடிகளை வணங்கும்படி வருவாராகிய நாயனார்; அப்பதி நிற்பவும் சரிப்பவும் ஆன அடைய - அத்தலத்தில் நிற்பனவும் சரிப்பனவுமாகிய சரம் அசரங்கள் எல்லாம்; புடை அமர்ந்த ...கண்டார் - அருகில் விரும்பிய தத்தம் பெண்ணோடும் கூடி விளங்கும் தோற்றத்தைக் கண்டனராகி; ௩எ௩

1639. (இ - ள்) வெள்ளியம்பொருப்பில் - அழகிய திருக்கயிலைமலையில்; பொன் மலைக் கொடியுடன் அமர் தன்மை ஆம்படி - பார்வதியம்மையாருடன் விரும்பி

வீற்றிருக்கும் தன்மை இங்கும் ஆகும்படியாக; சத்தியும் சிவமும் ஆம் சரிதை - சத்தியும் சிவமுமாகும் தன்மையில்; பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே - பற்பல யோனிகள் எல்லாம் விளங்கும் முறைமையைக் கண்டு வணங்கிக் கொண்டே; மன்னும்...வந்தார் - நிலைபெற்ற பெருமுனிவராகிய நாயனுர் தமது பெருமானது திருக்கோயிலின் முன் வந்தருளினுர். ௩௭௪

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

1637. (வி - ரை) வம்புலாம் மலர்வாவி - கயிலைமலைச் சாரலில் நாயனுர் மூழ்கியது "நன்னெடும் புனற்றடம்" (1626), "பாற்றடம் புனற்பொய்கை" (1635) எனப்பட்டதுடன் இதனை ஒப்புநோக்குக. மூழ்கியது புனற்பொய்கையாக, எழுந்தது வம்புலா மலர்வாவி யாயிற்று. நாயனுர் வந்தெழும் பெருமை நாம் இன்றுங் காணவுள்ளது என்பது குறிப்பு. வம்பு - புதுமையுமாம். "வம்பார் குன்றம்"

வந்து - வடகயிலை மலைச்சாரற் பொய்கையுள் மூழ்கியவர் தென்றிசை ஐயாற்று வாவியின் கரையில் வந்த நீளமாகிய அளவுக்குறிப்பு. கயிலை வழியேறிச் சென்று நின்ற நிலை 1613 முதல் 1625 வரை 13 திருப்பாட்டுக்களாலும், அங்கு நின்று அவ்வளவும் மீண்டு வந்தது, வந்து என்ற ஒருமொழியாலும் உரைக்கப்பட்ட அமைதி குறிக்கத் தக்கது. ஒன்று, ஏறிச் செல்லும் நிலையும், மற்றொன்று இறங்கிவரும் நிலையுமாம்; ஒன்று நடந்து நிலத்தின் வழி நிகழ்ந்தது; மற்றொன்று நீரின் வழிச்சார்ந்தது; ஒன்று வெளிமுகமாகவும் மற்றையது உள்முகமாகவும் கூடிற்று. இரண்டும் திருவருள் வழியே நிகழ்ந்தனவாயினும், மீண்டு வந்த இச்செயல் இறைவர் அருள் மொழியாற் பணித்த (1630) அவ்வழியே தலைநின்று தமது ஆன்மபோத முயற்சி என்பது சிறிதுமின்றி நிகழ்ந்த செயலால் அதி சூக்குமத் தன்மையில் உளதாயிற்று; ஆதலின் ஆசிரியர் அதனை வந்து என ஒரு மொழியால் அதி நுட்பமாகிய வழியாலுரைத்தனர். ஆதலின் இஃதெவ்வாறு கூடிற்று என்ற ஆராய்ச்சியில் மக்களின் மனது புகுதலாகாது என்பது துணிக. "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதிமாண்பும், கேட்பான்புகி லளவில்லை கிளக்க வேண்டா" என்ற ஆளுடைய பிள்ளையார் திருப்பாசுரத் திருவாக்கும், "நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கால், ஓது மெல்லை யுலப்பில வாதலின், யாது மாராய்ச்சி யில்லையாம்" (திருஞான - புரா - 833) என்று ஆசிரியர் அதனை விரிவுரை செய்ததும் இங்கு நினைவு கூர்தற் பாலன. இதுபற்றியே "திருவருட் பெருமை யாரறிவார்" (1636) என்று முன் பாட்டில் எடுத்துக் காட்டியருளினர்."

ஏறி - "ஏற்றினுர். (1635) திருவருளின் வழி ஏறி." "யாதும் சுவடுபடாமல் ஐயாறடைகின்றபோது" என்ற இத்தலத் தேவாரமும் இக்குறிப்பு.

உம்பர்...உணர்வார் - "திரு அருட்பெருமை யாரறிவார்" (1636) என்று வினவிஞற் கூறிய ஆசிரியர் அதனையே தொடர்ந்து கொண்டு, அத்திருவருள் உணர்த்த அதனை அனுபவத்தில் உணர்ந்த நாயனுரையன்றி வேறு யாவரும் உணரும் வலியிலர்; நாயனுர் உணர்வாராகி என்றதாம். உணர்வார் எதிர்கால வினையெச்சமுற்று. உணர்வார் - படிந்து எழும்படியார் (1637) வந்து-உறுவார் - கண்டார் (1638), பணிந்தே - வந்தார் (1639) என்று இம்மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக் கொள்க.

"எம்பிரான் தருங் கருணைகொல் இது" என-அடியேனையும் பொருட்படுத்திப் பெருமான் செய்யும் திருவருளே இது என்று நாயனுர் மனத்து எண்ணி ஆராமை மிக்கனர் என்க. இந்த ஆராமையாற் கண்ணீர் பெருகிப் பொழிந்தது என்பது "இரு கண் பம்பு தாரை நீர் வாவியிற் படிந்து" என்பதனுல் உணர்த்தப்பட்டது.

இருகண்...படியார் - மலர் வாவியில் வந்தேறும் நாயனுர் கண்ணீரின் பெருந் தாரை தமது திருமேனியினை நனைக்க நின்றமையால் அந்த நீர் வாவியிலன்றிக் கண்

ணீர் வாயிற்படிந் தெழுவார் போன்றனர் என்பது. "பொழியுந் தெய்வப் பூவின்மா மழையின் மீள மூழ்குவார் போன்று தோன்ற" (398) என்ற கருத்துக் காண்க. படி - தன்மை. படியார் - தன்மையினை உடையாராகி. இஃதுருவகம்.

உணர்ந்தார்—திநக்கருணையோ விது—தருங்கருணை போலிது—என்பனவும் பாடங்கள். 372

1638. (வி - ரை) மிடையும் நீள்கோடி வீதிகள் - "வீதிகடோறும் வெண் கொடி யோடு விதானங்கள்" (திருவாரூர் - குறிஞ்சி - அப்பர்) என்றவாறு கொடிகள் நெருங்கத் தூக்கிக் கட்டி விளங்குதல் வீதிகளை அணி செய்யுமுறை. இஃது இந்நாளி னும் இவ்வாறு நிகழ்வது காண்க.

சேவடி பணிய வந்து உறுவார் - வாவியில் வந்து கரையேறிய நாயனர் இறை வரைப் பணியத் திருக்கோயிலை நோக்கி வருகின்றவர். உறுவார் - கண்டார் எனக் கூட்டி முடிக்க. உறுவார் - எதிர்கால வினைப் பெயர்.

அடைய - முழுதும் - முற்றும்-எல்லாம். அடையப் போலிவன என்று கூட்டுக.

நிற்பவும் சரிப்பவும் ஆன - அசரம் சரம் என்பன. தோற்றுமுறைமை பற்றி அசரத்தை முன்வைத் தோதினர். "அசர சர பேதமான யாவையும் வகுத்து" (தாயுமா னர்). ஆன - ஆயினவை. பெயர். ஆன - பொலிவன என்று முடிக்க.

புடை அமர்ந்த தம் துணையோடும் போலிவன - புடை அமர்ந்த - உடனிருந்த; துணை - பெண்ணும் ஆணும் ஒன்றற் கொன்று துணை யெனப்பட்டன; பொலிவன - பொலிவனவற்றை; இரண்டனுருபு தொக்கது.

நிற்பவும் சரிப்பவும் - தம் துணையோடும் பொலிவனகண்டார் - இது நாயனர் ஐயாற்றில் வாவியில் வந்து கரையேறிக் கோயிலை அடையும்போது முதலில் கண்ட காட்சி, "ஐயா றடைகின்ற போது, - காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண் டேன்" என்ற தேவாரப் பகுதியின் பொருள் ஆசிரியர் விரித்தபடி. அசர சரமாகிய உலகத்தைப் பெண் ஆண் எனப் பிரித்துக் காணுதல். "அவனவ ளதுவெ னுமவை" என்பது சிவஞானபோதம். நாயனர் உலகத்தை முன் பலகாலும் பார்த்திருப்பா ரேனும் அன்று இறைவர் தம் காட்சி காட்டுதற் பொருட்டு முதலில் இவ்வாறு பகுத்துக் காட்டிப் பின்னர், அவை "சத்தியும் சிவமுமாம் சரிதை" நிலையைக் காட்டிப் பின், தமது திருப்பாதங் காட்டுகின்றார். தேவாரத்தினுள், பின்னர்க், "கண்டே னவர்திருப் பாதம்;" என்றும், "கண்டறி யாதன கண்டேன்" என்றும் வரும் பகுதிகள் படிப் படியாகத் தத்துவரூப தரிசன முதலியவற்றினின்று சிவதரிசனத்துக்கு வரும் அனுபவ நிலைகளை உணர்த்துவதும் காண்க. முதலிற் றுணையுடன் பொலியும் காட்சி கண்டு, பின், அவை சத்தியுஞ் சிவமுமாம் சரிதையாகக் காண்பதனைத், தேவாரக் கருத்தை விளக்கும் வகையால் மேல்வரும் பாட்டில் ஆசிரியர் விரித்துரைப்பது காண்க.

நிற்பவும் - துணையோடு - அசரங்களிலும் பெண் ஆண் பகுப்பு உண்டென்பதும், அவை கூடு முறையும், அவை பல்கு முறையும் தாவர நூலோர் வகுத்துரைப்பர். ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் "ஏற்றுப் பனையெல்லாம்" (திருஞான - புரா - 980.) என்றவிடத்து, ஆண்பனை பெண்பனையாயின நிகழ்ச்சி இங்கு நினைவு கூர்தற் பாலது. (ஷை - புரா - 976 - 981). தேவாரத்தினுள் "நாகு தழுவி ஏறு வருவன" என்றதனுள் ஏறு என்றதனல் அசரமும் குறிக்கப்பட்டது. 373

1639. (வி - ரை) பொன்மலைக் கோடி - பார்வதி. உடன் அமர் - ஒன்றாயு மன்றி வேறாயுமன்றிப் பொருந்திய. அமர்தல் - விரும்பி யிருத்தல்,

அவ்வெள்ளிப் பொருப்பில் அமர்தன்மை ஆம்படி - என்க. வெள்ளிப் பொருப்பு - திருக்கயிலாயமலை. தன்மை ஆம்படி - அத்தன்மை பொருந்தும்படியினால்; விளங்கும்படியினால்; "தன்னுள்ளே இருவேறு வகைப்பட்ட தன்மைகள் வருத்தலான்" என்றபடி; சத்தியும்...பயில்வன - சரிதை - நிலைமை; தன்மை. சரிதையின்கண் பயில்வன - என ஏழனுருபு விரிக்க.

பன்மை யோனிகள் - 84 இலக்கம் என்று வகுக்கப்பட்ட பற்பலவாகிய யோனி பேதங்களாய் வரும் உயிர்கள். யோனிகள் பயில்வன - சத்தியும் சிவமுமாம் சரிதைக்கண்ணே யோனிகள்எல்லாம் பயிலுதலாவது, இறைவன் "சத்தியும் சிவமுமெனத் தன்னுள்ளே இருவேறு வகைப்பட்ட தன்மைகள் வைத்தலான் - பலவேறு வகைப் பட்ட உயிர் வடிவங்களனைத்தும் குறியானுங் குணத்தானும் ஆண்பெண்ணென அவ் வியோனிக்குள் இருவேறு வகையா யடங்கித் தம்முட்கூடிக் களித்து வாழாநிற்கு மியல்பு." (சித்தி - 1 - 69 - மாதவச் சிவஞான முனிவ ருரை).

சத்தியும் சிவமும் ஆம் சரிதை(க்கண்) யோனிகள் பயில்வன - "பீட லிங்கத்தி னியல்பு" (சித்தி 1 - 69) என்று இதனை ஞானசாத்திரம் பேசும். "தாமே உலகுக்கு முதல் என்பதனைக் கண்கூடாக விளக்கு முகத்தால் தனது இலச்சினையை உலகெங்கும் பொறித்து அறியவைத்தாங்கு உயிர்கள் பெண் ஆண் என வகுக்கப்படுவன." "சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம், ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முணர்குண குணியு மாகி, வைத்தனன்" (சித்தி - 1 - 69) என்ற உண்மையை இங்குக் காண்க.

யோனிகள் பயில்வன பணிந்தே - "அவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கையெல்லாம்" (சித்தி-1-69) என்றபடிப், "பிறப்புக் கியைய வடிவங்கள் எல்லாம் ஒத்தும் குறிகுணங்கள் ஒவ்வாது பெண்ணென ஆணென இருவேறுவகைப்பட்டு நிற்றலானும், அவயவப் பகுப்புடைமை, தோன்றி நின் றழியும் முத்தொழிலுட்படுதல், கருத்தாவையுடைமை, சங்காரக்கடவுளினின்றும் தோன்றுதல், அவனையே முதற் கடவுளாக உடைமை, என்னும் இத்தன்மைகள் புலப்பட நிற்றலானும்," நிற்பனவும் சரிப்பனவுமாகிய உயிர்கள் தத்தம் துணையொடும் பொலிந்து நிற்றலால் சத்தியும் சிவமாஞ் சரிதையிற் பயில்வன வென்பதும், அது கயிலையில் அம்மையோடுடனாகி இறைவர் விளங்கும் நிலையைப் புலப்படுத்துவதென்பதும் திரு அருள் காட்டக் கண்டாராதலின் பணிந்தனர் என்பதாம். இவ்வாறன்றிச், சராசரமுழுதும் பெண் ஆணுகச் சத்தியும் சிவமுமாய்த் தோன்றும் இதுவே அப்பர் பெருமானுக்கு இறைவர் வழங்கிய கயிலாயக் காட்சி என்றும், சராசர முழுதும் சத்தி சிவமாக வழங்கப்படும் நிலையே கயிலாயக் காட்சியாம் என்றும் இங்கு விசேட உரை காண்பாருமுண்டு. இக்காட்சி காணப்பட்ட வுலகாற் காணப்படாத கடவுளைக் காணும் காட்சி. அக்கடவுள் உலகினோடுடனாகி நிற்பதன்றி, வேறாயும் நிற்பானாதலால் அக்காட்சியே பின்னர்த் திருக்கோயிலில் வழங்கப்படுவதாம். அதனை மேல்வரும் (1640 - 1644) ஐந்து பாட்டுக்களால் தனி விரித்துரைப்பது காண்க. யோனிகளுட் சத்தி சிவமாம் சரிதை காணும் இதுவே கயிலைக் காட்சியா யமைந்ததுபடு மாயின் பின்னர்க் காணும் வேறு தனிக் காட்சி காட்டுதல் வேண்டப்படாதென்க.

1638 - 1739 இந்த இரண்டு பாட்டுக்களாலும் உலகுயிர்களின்மேற் காணும் இறைவரது காட்சி கூறப்பட்டது. சிவஞானபோதம் முதற் சூத்திரக் கருத்தை இங்கு வைத்துக் காண்க. ஆயின் சாத்திரத்தின் வழி ஏனையோர் இவ்வாறு காணும் உலகக் காட்சிக்கும் இங்கு நாயனார் கண்ட காட்சிக்கும் வேறுபா டென்னையோ? எனின், ஏனையோர் இவ்வுலகத்தனுபவமுடைய தேசிகராலேயே நூல் வழி காணும் காட்சி கருதலளவையாற் காண்பது: நாயனார் கண்டது அவ்வாறன்றிச் "சிந்தை நேர்

நோக்கப் பவமின்றாங் கண்வா சகத்திற் - சிவமுண்டாம்" என்றபடி இறைவர் தேவ குருவாய் முன்னின்று செய்யும் பார்வை, வாக்கு முதலிய தீக்கை வகையால் நேரே காட்சி யளவையால் அனுபவத்திற் கண்டதாம் என்க. "பெண்டிர் பிடிபோல வாண் மக்கள் பேய்போலக், கண்டாரே கண்டாரென் றுந்தீபற; காணுதார் காணுரென் றுந் தீபற" (உந்தி. 35) என்ற ஞானசாத்திரக் கருத்தும் கருதுக.

மன்னு மாதவர் - திருநாவுக்கரசர். இவ்வாறு காண்பதற்குப் பெருந்தவஞ் செய்திருந்தாராலின் கண்டாரென்பது குறிப்பு.

இக்காட்சி மலர்வாவிக் கரையேறிக் கோயிலைநோக்கி வரும்போது வழியிடை நாயனுர் கண்டது. "புகுவா ரவர்பின் புகுவேன்...ஐயா றடைகின்ற போது...கண் டேன்" என்ற தேவாரக் கருத்து. இவ்வாறு கண்டது காலத்தால் முன்னுயினும் அது பற்றிப் பாடியது தனிக் கயிலைக் காட்சி கண்டபின் என்பது 1649-ம் பாட்டால் அறியப்படும். 374

கயிலைக் காட்சி

1640. காணு மப்பெருங் கோயிலுங் கயிலைமால் வரையாய்
பேணு மாலய னிந்திரன் முதற்பெருந் தேவர்
பூணு மன்பொடு போற்றிசைத் தெழுமொலி பொங்கத்,
தாணு மாமறை யாவையுந் தனித்தனி முழங்க, ௩எரு

1641. தேவர் தானவர் சித்தர்விச் சாதர ரியக்கர்
மேவு மாதவர் முனிவர்கள் புடையெலா மிடையக்,
காவி வாள்விழி யரம்பையர் கானமு முழவுந்
தாவி லேழ்கடன் முழக்கினும் பெருகொலி தழைப்ப, ௩எசு

1642. கங்கை யேமுதற் றீர்த்தமாங் கடவுண்மா நதிகள்
மங்க லம்பொலி புனற்பெருந் தடங்கொடு வணங்க,
எங்கு நீடிய பெருங்கண நாதர்க ளிறைஞ்சப்
பொங்கி யங்களாற் பூதவே தாளங்கள் போற்ற, ௩எஎ

1643. அந்தண் வெள்ளிமால் வரையிரண் டாமென வணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால் விடையெதிர் நிற்ப,
முந்தை மாதவப் பயன்பெறு முதன்மையான் மகிழ்ந்தே
நந்தி யெம்பிரா னடுவிடை யாடிமுன் னணுக, ௩எஅ

1644. வெள்ளி வெற்பின்மேன் மரகதக் கொடியுடன் விளங்குந்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனவிடப் பாகங்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனுர். ௩எசு

1640. (இ - ள்) காணும்...வரையாய் - காணப்படும் அந்தப் பெரிய கோயிலே பெரிய கயிலாய மலையாக; பேணும்...பொங்க - இறைவரது சேவைக்கு எதிர்பார்த் திருக்கும் திருமால் - பிரமன் - இந்திரன் முதலாகிய பெருந் தேவர்கள் உள்ளத்து நிலைபெறப் பொருந்திய அன்பினேடு துதிக்கும் அதனுலெழுகின்ற ஒலி எங்கும் நிறைய வும்; தாணு...முழங்க - அழிவில்லாத பெரிய வேதங்கள் யாவையும் தனித்தனியே முழங்கவும்;

௩எரு

1641. (இ - ள்) தேவர்...மிடைய - தேவர்களும், அசுரர்களும், சித்தர்களும் வித்தியாதரர்களும், இயக்கர்களும், பொருந்தும் மாதவர்களும், மாமுனிவர்களும் ஆகிய இவர்கள், பக்கங்களில் எங்கும் நெருங்கி யிருக்கவும்; காவி...தழைப்ப - நீல மலரையும் வாளையும் ஒத்த கண்களையுடைய தெய்வ அரம்பையர்களுடைய கீதமும் மத்தளங்களின் ஓசையும் கெடுதலில்லாத எழுகடல்களின் ஒலியினும் அதிகமாகிய பேரொலியாகத் தழைக்கவும்; கூஎசு

1642. (இ - ள்) கங்கையே...வணங்க - கங்கையே முதலாகிய புனிதம் செய்யும் தெய்வத் தன்மையுடைய பெரு நதிகள் மங்கல நீர் நிறைந்த பெருந் தடங்களாக வந்து வணங்கவும்; எங்கும்...இறைஞ்ச - எங்கும் பரவிய பெரிய சிவகணத் தலைவர்கள் வணங்கவும்; பொங்கு இயங்களாற்...போற்ற - ஒலியாற் பொங்கும் பலவகை வாத்தியங்களை முழக்கிப் பூத வேதாளங்களும் போற்றவும்; கூஎஎ

1643. (இ - ள்) அந்தண்...சிந்தை செய்திட - அழகும் குளிர்ச்சியும் உடைய பெரிய வெள்ளிமலைகளிரண்டாம் என்று அங்கு அணைந்தவர்கள் நினைத்திடும்படி; செங்கண்...நிற்ப - சிவந்த கண்ணையுடைய திருமாலாகிய இடபம் முன்னே நிற்கவும்; முந்தை மாதவப் பயன்பெறும் முதன்மையால் மகிழ்ந்தே - முன்னுளில் அத்தலத்திற் செய்த பெருந்தவப் பயனுகப் பெறும் முதன்மையினுல் மகிழ்ந்து; நந்தி எம்பிரான்... நணுக - எமது நந்தி பெருமான் சிவபெருமானுக்கும் அவரை வழிபடவரும் ஏனையோர்க்கும் நடுவில் நடந்து முன்னுக அணுகி நிற்கவும்; கூஎஅ

1644. (இ - ள்) வெள்ளி வெற்பின் மேல் - வெள்ளிமலையின் மேல்; மரகதக் கொடியுடன் விளங்கும் - மரகதக் கொடியுடனே விளங்குகின்ற; தெள்ளு...வெற்பு என - தெளிந்த பேரொளியினையுடைய பவளமலை என்று சொல்லும்படி; இடப் பாகம்......வள்ளலாரை - இடது பாகத்தைக் கைக்கொண்ட பார்வதியம்மையாருடனே கூடி வீற்றிருந்தருளுகின்ற வள்ளலாராகிய சிவபெருமானை; வாக்கின் மன்னவனுர் - திருநாவுக்கரசு நாயனுர்; முன் கண்டனர் - தமது முன்னே கண்டனர். கூஎகூ

இந்த ஐந்து பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

1640. (வி - ரை) காணும் - கோயின் முன்வந்தார் என்ற முன்பாட்டிற் கூறிய படி வந்து தாம் காணும். யாவரும் பெருங் கோயிலாகக் காணும் அது அஞ்ஞான்று கயிலை மால் வரையாய்க் காணலுற்றது என்ற குறிப்புமாம்.

வரையாய் - ஆய் என்றது ஆக என்ற பொருள் தந்து நின்றது.

மால் அயன்...போற்றிசைத்து எழும் ஒலி - கயிலை மலையாகக் காணும் அதன்புறத்தினின்று உள்ளே காண்கின்ருராதலின் முதலிற் புலப்பட்டது புறத்துள்ள நிகழ்ச்சி. மால் முதலிய பெருந்தேவர்கள் மலைப்புறத்து நின்று துதித்துக் கொண்டிருக்கின்றனர் என்க. இவ்வாறே மேற்பாட்டில் வருமவையும் படிப்படியாக மேல் நிகழக் கண்டார் என்பதாம். திருமலைச்சருக்கத்துக் கூறியவை (14—15) இங்கு வைத்துக் காணற்பாலன.

தாணு - நிலைபெற்ற. தாணு - சிவன் என்று கொண்டு சிவன் மொழியாகிய - சிவனைக்காட்டுவனவாகிய என்றலுமாம், "தாணுவான புராணநூல்" (திருத்தொண்டர் புராண வரலாறு - 25)

தனித்தனி-மறைகள் பலவாதலின் அவை தனித்தனி முழங்கின. "வேதமொழியர்லொலி விளங்கியெழு மெங்கும்" (திருஞான - புரா - 31) என்றவாறு. வேதங்கள் பிறந்த இடமாதலின் தாமே முழங்கின என்றலுமாம்.

வரையாய் - ஒலிபொங்க - முழங்க (1640), - மிடைய - ஒலிதழைப்ப (1641), - வணங்க - இறைஞ்சப் - போற்ற (1642), - எதிர்நிற்ப - நணுக, (1643), -

மலையாளுடன் கூட வீற்றிருந்த வள்ளலாரை - வாக்கின் மன்னவனூர் - முன் கண்ட னர் (1644) என இந்த ஐந்து பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக் கொள்க.

திருக்கயிலாய பதியினை நேரே காணும் இப்பெருங்காட்சியை ஐஞ்சீர் கொண்ட கலிநிலைத் துறைகளாகிய ஐந்து விருத்தங்களாற் கூறிமுடித்த அமைதி மகா சதாசிவ மூர்த்தியின் தரிசனக் குறிப்புக் காட்டிநிற்றல் காண்க. 375

1641. (வி - ரை) தேவர் தானவர் சித்தர் விச்சாதரர் இயக்கர் - இவர்கள் பல வகைத் தேவச் சாதியார். தானவர் - அசுரர். தேவர்களுக்குப் பகைவராயினும் அவர் தம் இனத்தவர்களாய்த், தவவலிமை யுள்ளவராய்ப், பலர் இறைவரை வழிபட்டிருக் கின்றமையின் அவர்களும் கயிலையில் இங்கு இடம் பெற்றனர். விச்சாதரர் - வித்யாதரர்.

புடையேலாம் - வெளிப்பக்கங்களில் எல்லாம். உட்பக்கங்கள் பூதகணங்களால் நிறையு மிடமென்பது (16 - 19 பார்க்க) மேல் வரும் பாட்டால் உணரப்படும்.

அரம்பையர் கானமும் முழவும் - உபசரிப்பின் பொருட்டு நிகழ்வன. கானமும் அதற்கிசைய முழக்கப்படும் முழாவும்.

ஏழ்கடல் முழக்கினும் பெருகு ஒலி - அனேகர் சேர்ந்திசைத்தலிற் பேரொலி யாயிற்று.

பெருகு ஒலி - பொருளுள்ள சத்தமாகிய கானம் கலந்தமையால் ஒலி என்றார். தழைப்ப - ஒலி வீண்கழியாது அவர்களுக்கு ஆக்கஞ் செய்தது என்றது குறிப்பு. 376

1642. (வி - ரை) கங்கையே முதல் - ஏகாரம் தேற்றம். முதல் - கங்கையை முதலாக வைத்தெண்ணப்பட்ட. தீர்த்தம் ஆம் - தூய்மை ஆகச் செய்யும். ஆம் - ஆக்குவிக்கும் எனப் பிறவினைப் பொருளில் வந்தது. தீர்த்தம் - புனிதம்.

கடவுள் மா நதிகள் - கயிலாயத்தில் உள்ள தெய்வத்தன்மைவாய்ந்த ஏழு பெருந் தீர்த்தமாதாக்கள். இவை சிவபெருமான் பவனியில் கவரி வீசுவன என்பது "கங்கா நதி யமுனை யுள்ளுறுத்த தீர்த்தங்கள், பொங்கு கவிரி புடையிரட்ட" என்ற ஞான உலாவி னுல் விளங்கும்.

மங்கலம் பொலி புனல் பெரும் தடம் கொடு - மங்கலம் விளங்கும் நீர் கொண்ட தடாக உருவாய் நதிகள் வந்தன என்பதாம்.

எங்கு நீடிய பெரும் கணநாதர்கள் - எவ்விடத்தும் தமது காவலும் அதிகாரமும் செலுத்தும் சிவகணங்கள். "நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின், நாடு மைம்பெரும் பூதமு நாட்டுவ" (16) என்றது காண்க.

பூத வேதாளங்கள் - சிவ பூதங்களும், வேதாளங்களும். பூதர்களின் வகையுள் ஒன்றாகிய வேதாளங்களும் என்றலுமாம். வேதாளம் பேய்க்கணமாகிய சிவகணங் களுள் ஒரு வகை. பூத வேதாளங்கள் பலவகை இயங்களை முழக்கிப் போற்றிக்கொண் டிருந்தன என்பது. "பாரிடம் பாணி செய்ய" (தேவா), "பறைபோல் விழிகட் பேய் கொட்ட முழவம்" (அம்மை மூத்த திருப்பதிகம் - 1.)

பொங்கு இயங்கள் - பலவகை ஓசைகளை விளைக்கும் இயங்கள். இயங்களாற் போற்ற - கைகளால் இயங்களை முழக்கியும், வாயாற் பாடிப் போற்றியும். "குடமுழ வம் வீணை தாளங் குறுநடைய சிறுபூத முழக்க மாக்கூத் தாடுமே" (அடையாளத் தாண் - அதிகை - 5), "துத்தங் கைக்கிளை விளரி தார முழையிளி யோசைபண் கெழுமப் பாடிச், சச்சரி கொக்கரை தக்கை யோடு தகுணிதந் துந்துபி தாளம் வீணை, மத்தளங் கரடிகை வன்கை மென்றோற் றமருகங் குடமுழா மொந்தை வாசித், தத்தனை விரவினோ டாடு மெங்க ளப்ப னிடந்திரு வாலங் காடே" (அம்மை மூத்த திருப்பதிகம் - 9) முதலியவை காண்க. 377

1643. (வி - ரை) அந்தண்...எதிர் நிற்ப - வெள்ளிமலை இரண்டு காணப் படுநின்றனவே என்று அங்கு அணைந்தவர்கள் சிந்தை செய்திட என்றது, அப்பெருங் கோயிலே கயிலை மால்வரையாக அது ஒரு வெள்ளிமலையாகவும், அங்கு முன் நிற்கும் வெள்ளை மால்விடைத் தேவர் (இடப தேவர்) மற்றும் ஒரு வெள்ளிமலையாகவும் நினைக்கும்படி என்றதாம்.

அணைந்தோர் - "அணைந்தோர் தன்மை" (சிவஞான - போதம் - 12 சூத்.) என்றபடி சிவத்தன்மை அணைந்து சிவனை நேர்காணும் தகுதி வாய்ந்து வந்து அணைந்த வர்கள். அணைந்தோர் - வந்து ஐயாறடைந்தவராகிய நாயனார் என்ற குறிப்புமாம்.

விடை எதிர் நிற்ப - எதிர் - இறைவருக்கு எதிரில்.

முந்தை மாதவப் பயன் பெறும் முதன்மை - நந்திதேவர் இத்தலத்தில் மாதவம் செய்து அருள் பெற்ற செய்திக் குறிப்பு.

நந்தி பெருமான் தவஞ்செய்து பேறு பெற்றது இத்தலத்துக்குரிய சிறப்பு. இது திருக்கயிலையையும் இத்தலத்தையும் தொடர்புபடுத்தும் சிறப்பு. திருமலைச் சிறப்பு (45) பார்க்க. ஆதலின் இங்கு அது குறிக்க முந்தை மாதவப் பயன் என்றார்.

முதன்மை - சிவகணங்களுக் கெல்லாம் முதல்வராம் தன்மை. "நங்கள் நாத னும் நந்தி" (46); "நங்குரு மரபுக் கெல்லா முதற்குரு நாத னாகி" (திருவிளை - புரா - பாயி) முதலியவை பார்க்க. "முதற்பெரு நாயகமாகி" (திருமூலர் - புரா - 1), "ஆதிதேவனார் கோயினாயகன்" (20).

நடு இடை யாடி - நடுவில் நின்று, இறைவருக்கும், சேவிக்க வந்தவர் கூட்டத்துக் கும் இடையே போய்.

இடை யாடுதல் - இருதிறத்தார்க்கும் இடையில் சேவகம் செய்தல். "தம்பி ரானார்தாம் இடையாடிச் செய்த..." (ஏயர்கோன் - புரா - 381). இறைவர் நந்தி பெரு மானுக்கு ஆணையிடுதலும், அந்த ஆணை வழியே தேவர் முனிவர் முதலியோர் உள் விடுக்கப்பெறுதலும் முதலியவை இங்கு நினைவு கூர்தற்பாலன. நடு இடை ஆடி முன் - நடுவின்கண் உள்ள கண்ணாடியின்முன் என்பது ஆறுமுகத் தம்பிரானுரை. இப்பொரு ளில் ஆடி - கண்ணாடி; இறைவர் திருமுன் வைக்கப்பெறும் கண்ணாடி; அதன் முன் என்றது அதற்கும் இறைவர் திருமுன்புக்கும் இடை என்றதாம். நடு இடை ஆடி முன் - ஆடி-ஆடுபவன் என்றும், நடு - சபை-அம்பலம் - என்றும், கொண்டு, அம்பலத் தில் நடம் புரியும் சிவபிரான் முன்பு என்றுரைப்பாருமுண்டு. நடுவிடத்தினின் றங்கு மிங்கும் போய் என்பதும் ஒருரை. "வேத்திரப் படையாற்குக்கி" (திருவிளை - புரா).

முன் நணுக - ஏனை யாவர்க்கும் முன்பு இறைவரை அடுத்து இடம் பெற்று நணுக. நணுகுதல் - இறைவர் பணி கேட்ப அடுத்திருத்தல்.

விடைத் தேவர் வேறு; இடப தேவர் வேறு; இருவரும் இப்பாட்டிற் குறிக்கப் பட்டனர்.

முறைமையால்—என்பதும் பாடம். 378

1644. (வி - ரை) வெள்ளி வெற்பின்மேல் - பவள வெற்பு என - வெள்ளி மால்வரை" (1643) என்ற கருத்தையே தொடர்ந்துகொண்டு இடப தேவராகிய அந்த வெள்ளி மலையினையும் வெள்ளி மலையாகிய கயிலையையும் குறித்து நின்றது.

பவள வெற்பு - "செம்மேனி யெம்மா"னாகிய சிவபெருமானைப் பவளமலை என்றார். உருவம் பற்றி எழுந்த உவமம்.

மரகதக் கோடி - பச்சை நிறமுள்ள கொடிபோல என்றது உமையம்மையாரை. உருவும் மெய்யும் பற்றிவந்த உவமம். மரகதம் - மலைபடு மணிகளுள் ஒன்று என்க.

தெள்ளு பேர் ஒளி - தெள்ளு - தெளிந்த.

தெள்ளும் ஒளி - பளிங்கின் ஒளி. திருநீற்றின் ஒளியுமாம்.

பவள வெற்பு - "கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலம் காணுமது" (1612) என்றபடி மலையின் கோலம் ஆதலின் எல்லாம் பெருமலை வடிவாய் காட்டக் கண்டனர். பெருங்கோயில் பெருமலையாயிற்று; அதன்கண் இடப தேவர் மற்றொரு வெள்ளிமாமலை யாயினர்; அவர்மேல் எழுந்தருளிய இறைவர் பவளமலை போன்றனர்; என மூன்றும் மலைகளாகக் கூறினர்.

பவளம் - கடல்படு மணிகளுள் ஒன்று. இக்குறிப்பினையே தொடர்ந்து "கண்ட ஆனந்தக் கடலினை" (1645) என்று மேல்வரும் பாட்டில் கடலின் குறிப்புப் படக் கூறுதல் காண்க.

என - போல; உவமவுருபு.

மாமலையாள் - பிறப்பிடமாகப் பனிமலையினை உடையவள்; ஆதலின் ஐமவதி என்ற காரணப் பேருடையவள். இனிப் புகுமிடமாகிய கயிலையாகிய பெருமலைக்கும் உடையவள் என்றதனாலும் மாமலையாள் எனப் பெறுவர்; அன்றியும், பவள வெற்பு - பெருமான்-என்ற அந்த மாமலையினையும் உடையவள் என்ற குறிப்பும் பெற நின்றனர்; ஆதலினாலும் மாமலையாள் என்றார்.

வள்ளலார் - "இத்தனையும் எம்பரமோ...எம்பெருமான் றிருக்கருணை யிருந்த வாறே!" (தாண்) என்றபடி தமது கருணைப் பெருவெள்ளத்தை வரையாது வழங்கி, "வான நாடரு மறியொ ணாதநீ மறையி லீறுமுன் றொடரொ ணாதநீ, யேனை நாடருந் தெரியொ ணாதநீ" (திருவா - சத - 95) என்ற பெருங் கோலத்தை இவ்வுலகத்திலே கண்ணாரக் காண வருள்புரிந்த வள்ளன்மை யுடையார் என்றது குறிப்பு.

முன் கண்டனர் வாக்கின் மன்னவனார் - முன்-தம் முன்பு என்றும், வெளிப்பட என்றும் உரைக்க நின்றது. முன் - திருவடிசேரும் செயல் பின்னர்த் திருப்புகலூரில் நிகழ இருக்க, அதன் முன் என்ற குறிப்புமாம். கண்டனர் - வினை முற்று முன்வந்தது தேற்றக்குறிப்பு. வாக்கின் மன்னவனார் - இறைவர் தாமே தந்தருளிய இப்பெயராற் கூறியது "பாவுற் றலர்செந் தமிழின் சொல்வளப் பதிகத் தொடைபா டியபான்மை யினால்" (1339) இப்பெயர் தந்த இறைவர், "மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னை யும் வழுத்த" (1626) என்றபடி வாக்கின் றிறமாகிய அக்காரணம் பற்றியே கயிலையை அணைய அருளாராகி, இங்குக் காட்சி தந்தனர் என்ற குறிப்புத் தருதற்கு, வாக்கின் மன்னவனாராதலின் முன் கண்டனர் என்றதாம்.

வெள்ளி வெற்பு - மரகதக்கொடி - கயிலை என்ற வடவெள்ளிமலை போலவே தெற்கில் கோவைச்சில்லா திருப்பேரூரை அடுத்து வெள்ளிமலை என்றபெயரால் தேற்ற மாக வழங்கப்படும் ஒரு பெருமலையுண்டு; அது தென்னாட்டில் மேற்குத் தொடர்மலை களுள் ஒரு சிகரமாம்; வடகயிலையும் இமயமும், கடலினடுவெளிருந்து மேற்கிளம்பியன என்றும், அதற்கு முற்பட்ட காலத்திருந்து மலையாக விளங்கிய பழமையுடையது அவ்வெள்ளிமலை என்றும் பௌதிக நூலோர் கொள்கின்றனர். இத்திருமலையும் கயிலையேயாம் என்று பேரூர்ப் புராணம் எடுத்துரைக்கும்; இம்மலைத் தொடர்புடைய பேரூரில் அம்மையார் மரகதவல்லி யம்மை என்று வழங்கப் பெறுவர்.

வெள்ளி...கண்டனர் - இடபதேவர்மேல் இறைவியுடன் எழுந்தருளிய இறை வரைக் கண்டனர் என்றதாம். அதுவே எங்கும் அடியார்க்கருளும் பெருங்காட்சியாம் என்றதும் நினைவுகூர்க. "துன்னிய விசும்பி னூடு துணையுடன் விடைமேற் கண்டார்" (3997) "தன்றுணை யுடனே வானிற் றலைவனை விடைமேற் கண்டார்" (434);

" ஏலவார் குழலா ளுன்றே டிடபவா கனனாய்த் தோன்றி " (464) முதலியவை காண்க. 379

1645. கண்ட வானந்தக் கடலினைக் கண்களான் முகந்து
கொண்டு கைகுவித் தெதிர்விழுந் தெழுந்துமெய் குலைய
அண்டர் முன்புநின் றாடினார் பாடினா ரழுதார்;
தொண்ட னார்க்கங்கு நிகழ்ந்தன யார்சொல வல்லார்; ருஅ௦

1646. முன்பு கண்டுகொண் டருளினா ரமுதுண்ண மூவா
வன்பு பெற்றவ ரளவிலா வார்வமுன் பொங்கப்
பொன்பி றங்கிய சடையரைப் போற்றுதாண் டகங்கள்
இன்ப மோங்கிட வேத்தினா ரெல்லையி றவத்தோர். ருஅக

1645. (இ - ள்) கண்ட...முகந்துகொண்டு - இவ்வாறு கண்ட ஆனந்தக் கடலைத் தமது கண்களாலும் முகந்து கொண்டவராய்; கைகுவித்து......குலைய - கைகளைச்சிரமேற் கூப்பித் திருமுன்பு வீழ்ந்து பின் எழுந்து உடலெல்லாம் அசையும்படி; அண்டர் முன்பு நின்று - உலகநாயகராகிய சிவபெருமான் திருமுன்பு நின்றுகொண்டு; ஆடினார் பாடினார் அழுதார் - நாயனார் - ஆடினாரும் - பாடினாரும் - அழுதாரற்றினாருமாக; தொண்டனார்க்கு...வல்லார்? - அத்தொண்டனாருக்கு அவ்விடத்தில் அப்பொழுது நிகழ்ந்தனவாகிய அற்புதமாகிய அனுபவ நிலைகளைச் சொல்லவல்லவர் யார்? (ஒருவருமிலர்). ருஅ௦

1646. (இ - ள்) முன்பு கண்டுகொண்டு - தமது முன் நேரே கண்டுகொண்டு; அருளின் ஆர் அமுதுண்ண மூவா அன்பு பெற்றவர் - திருவருளாகிய அப்பெரிய அமுதத்தினை உண்ணும்படி கெடுதலில்லாத அன்பினைப் பெற்றவரும்; எல்லையில் தவத்தோர் - அளவில்லாத தவத்தினை உடையோரும் ஆகிய நாயனார்; அளவிலா... பொங்க - அளவற்ற ஆசை முன்னே ததும்ப; பொன்...ஏத்தினார் - பொன் வண்ணமாக விளங்கிய சடையினையுடைய சிவபெருமானைப் போற்றும் திருத்தாண்டகப் பதிகங்களை இன்பம் பெருகும்படிப் பாடித் துதித்தனர். ருஅக

இந்த இரண்டு பாட்டுக்களும் பொருளால் தொடர்பு பெற்று ஒரு முடிபாக உரைக்க நின்றன.

1645. (வி - ரை) கண்ட - "முன் கண்டனர்" (1644) என்று முன்பாட்டிற் கூறியவாறு கண்ட.

ஆனந்தக் கடல் - சிவபெருமானை ஆனந்த நிறைவாகியதொரு கடலாக உருவகித்தார். ஆனந்தம் - இன்ப விளைவுக்குக் காரணமாம் தன்மை. கடல் - நிறைவினாலும் எடுக்கக் குறையாமையினாலும் கடல் எனப்பட்டது. "கயிலை மாமலை மேவிய கடலே" (திருவாசகம் - 23 - 10).

கண்களால் முகந்து கொண்டு - கடல் என்றதற்கேற்ப முகந்து கொண்டு என்றார். குறிப்புருவகம். கொண்டு - உட்கொண்டு என்ற குறிப்புமாம்.

அண்டர் - உலகங்களை எல்லாம் உடையவர். அண்டம் - உலகங்களின் தொகுதி. தேவதேவர் - பெருந்தேவர் - என்றலுமாம்.

கண்களால் முகந்து கொண்டு - என்றதனால் கடலமுதத்தை உட்கொண்டவாயிலும், மனத்துள் நிகழ்ச்சியும், கை குவித்து...மெய் குலைய - என்றதனால் அவ்வமுத முட்புகுதலால் உளவாகும் புற நிகழ்ச்சிகளாகிய மெய்ப்பாடுகளும், ஆடினார் பாடினார் அழுதார் - என்றதனால் மெய்ப்பாடுகளினைத் தொடர்ந்து நிகழ்ந்த செயல்

களும் கூறப்பட்டன. கண்களால் முகந்து - கண்கள் முகத்தலளவைக்குரிய கைகளின் தன்மை கொள்ள.

ஆடினார் - பாடினார் - அழுதார் - வினை முற்றுக்கள் வினையெச்சப்பொருள் தந்து, ஏத்தினார் என மேல்வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க நின்றன. இச்செயல்கள் ஆனந்த நிறைவாகிய ஒரு காரணத்தால் நிகழ்வனவாயினும், பித்தர் செயல்போல, ஒன்றற்கொன்று புறத்தொடர்பின்றி நிகழ்வனபோலக் காணப்படுதலின், வினையெச்சங்களை முற்றுகக் கூறினார். வினைமுற்றுக்களாகக் கொள்ளினு மிழுக்கில்லை. "நெக்கு நெக்குள் ளுருகி யுருகி நின்று மிருந்துங் கிடந்து மெழுந்து, நக்கு மழுதுந் தொழுதும் வாழ்த்தி நாளு விதத்தாற் கூத்து நவிற்றிச், செக்கர் போலுந் திருமேனி திகழ நோக்கிச் சிலிர்சிலிர்த்துப், புக்கு நிற்ப தென்றுகொல் லோவென் பொல்லா மணியைப் புணர்ந்தே" (புண - பத் - 8) என்ற திருவாசகம் இங்கு நினைவு கூர்தற்பாலது. பாடினார் - என்றது கீதங்களையும், இசைகளையும். பண்ணுென்ற விசைபாடு மடியார்கள்" "கீதத்தை மிகப்பாடும் அடியார்கள்" (பிள் - தேவா - புள்ளிருக்கு வேளூர்) தேவாரப்பதிகம் பாடுதலை மேல்வரும் பாட்டில் உரைப்பது காண்க.

தொண்டனார்க்கு...வல்லார்? - இப்பாட்டிற் கூறிய நிகழ்ச்சிகளாகிய மெய்ப்பாடுகளுக்கும் செயல்களுக்கும், அவற்றைத் தொடர்ந்து மேல்வரும் பாட்டிற் கூறும் தேவாரம் பாடுதலாகிய செயலுக்கும் இடையே இந்த வினு நிகழ்த்திவைத்தமை, நாயனார் அங்கு அடைந்த அனுபூதி நிலையின் நிகழ்ச்சிகள் உரையினுள் அடங்காதன என்ற அச்சத்துடன் அவற்றை உளங்கொள்ள வேண்டுமென்று குறித்தற்கு. சொல்ல வொண்ணுத தொன்றைச் சொல்லப் புகுகின்றேம் என்று ஆசிரியர் திரு வுள்ளத்தில் எழும் உணர்ச்சி மிகுதியினால் இவ்வாறு இடையில் கூறியதுமாம். இவ்வாறே 1647-ல் தொண்டனார் என்பதும், 1648-ல் அடித் தொண்டர் என்பதும் காண்க. "தொண்டனேனை" என்ற திருவிருத்தமுங் குறிக்க. யார் வல்லார்? என்ற வினு ஒருவருமிலர் என்று எதிர்மறை குறித்தது. என்னல் சொல்ல இயலாமை மட்டுமன்றி வேறுயாராலும் இயலாதென்பது குறிப்பு. தொண்டராகிய தம்மையும் ஒரு பொருட்படுத்தித் தலைவர் செய்த கருணை என்று நாயனார் எண்ணி நைந்தாராதலின் தொண்டனார் என்ற தன்மையாற் கூறினார். 380

1646. (வி - ரை) கண்டு கொண்டு - கண்டு, அவ்வாறு கண்ட காட்சியின் மூலம் உள் நிறையக் கொண்டு. அருளின் ஆர் அமுது உண்ண - "ஆனந்தக் கடல்" (1645) என முன்பாட்டிற் கூறியதற்கேற்ப அக்கடலின் விளைந்த அமுது என்றார். "அன்பினில் விளைந்தவா ரமுதே" (திருவா) - அன்பும் அருளும் பெருகிய நிலையிற் கடலாகக் கூறப்படுவன. "அருட்பெருகு தனிக்கடலும்" (1450) என்றது காண்க.

அமுது உண்ண மூவா அன்பு பெற்றவர் - உண்ண - உண்ணுதற்குத் தகுதி பெற. மூவா அன்பு - என்ஞான்றும் எந்நிலையினும் குறையாத அன்பு. மூவா அன்பாதலின் அருளின் ஆர் அமுதை உண்ணும் நிலையைத் தேடித் தந்தது என்பதாம். "அருளென்னும் அன்பீன் குழவி" என்றது காண்க.

ஆரமுது - சிவபிரான் கொடுத்த பொதிசோறு என்றுரைப்பர் இராமநாதச் செட்டியார்.

அன்பு பெற்றவர் - நாயனார். அன்பினைத் தமது உடைமையாகப் பெற்றவர்.

போற்று தாண்டகங்கள் - திருக்கயிலைப் போற்றித் திருத்தாண்டகப் பதிகங்கள் மூன்றனுள், 1635-ல் குறித்த "வேற்றாகி" என்றது நீங்கலாக, ஏனைய இரண்டு பதிகங்களும் இங்குக் கருதத்தக்கன. முந்திய பதிகம் கயிலைச் சாரலில் முனிவராம் படியால்

வந்து மறைந்து அசரீரியால் உணர்த்திய இறைவரை அருவத்திருமேனியிற் கண்டு போற்றியது. இங்குப்பாடிய இந்த இரண்டு பதிகங்களும் அவ்விறைவரது கோலத்தை நேரேகண்டு உருவத் திருமேனியிலும், அதற்குக் காரணமாகிய அருவுருவத் திருமேனியிலும் கண்டு போற்றியன.

இன்பம் ஓங்கிட - மேலே கூறியவாறு உளவாகிய இன்ப உணர்ச்சிகளும் செயல்களும், போற்றுதலினால் மேலும் மேலும் இன்பத்தைப் பெருக உளதாக்க. இப் பதிகங்களினால் போற்றி உலகம் இன்பத்தில் ஓங்கும் பொருட்டு என்றலுமாம்.

எல்லையில் தவத்தோர் - நாயனார். மூவா அன்பு பெற்றவர் ஆகிய எல்லையில் தவத்தோர் என இரண்டும் ஒரு பொருள்மேனின்றன. 381

II　திருச்சிற்றம்பலம்　　போற்றித் திருத்தாண்டகம்

பொறையுடைய பூமிநீ ரானாய் போற்றி பூதப் படையாள் புனிதா போற்றி
நிறையுடைய நெஞ்சி னிடையாய் போற்றி நீங்காதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி வானோர் வணங்கப் படுவாய் போற்றி
கறையுடைய கண்ட முடையாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 1

மேல்வைத்த வானோர் பெருமான் போற்றி மேலாடு புரமூன்று மெய்தாய் போற்றி
சீலத்தான் றென்னிலங்கை மன்னன் போற்றி சிலையெடுக்க வாயலற வைத்தாய் போற்றி
கோலத்தாற் குறைவில்லான் றன்னை யன்று கொடிதாகக் காய்ந்த குழகா போற்றி
காலத்தாற் காலனையுங் காய்ந்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

III　திருச்சிற்றம்பலம்　　போற்றித் திருத்தாண்டகம்

பாட்டான நல்ல தொடையாய் போற்றி பரிசை யறியாமை நின்றாய் போற்றி
சூட்டான திங்கண் முடியாய் போற்றி தூமாலை மத்த மணிந்தாய் போற்றி
யாட்டான வஞ்சு மமர்ந்தாய் போற்றி யடங்கார் புரமெரிய நக்காய் போற்றி
காட்டானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி கயிலை மலையானே போற்றி போற்றி.1

போற்றிசைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி புண்ணியனே நண்ண லரியாய் போற்றி
யேற்றிசைக்கும் வான்மே லிருந்தாய் போற்றி யெண்ணா யிரநூறு பெயராய் போற்றி
நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி நான்முகற்கு மாற்கு மரியாய் போற்றி [றி.
காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே போற்றி கயிலை மலையானே போற்றி போற்

திருச்சிற்றம்பலம்

பதிகங்களின் குறிப்பு:—II. பொறையுடைய பூமி நீ ரானாய்!, முன்பாகி நின்ற முதலே!, மாலையெழுந்த மதியே!, காலை முளைத்த கதிரே!, கடலில் ஒளியாய முதலே!, கொள்ளுங் கிழமை யேழானாய்!, பெருகி யலைக்கின்ற வாறே!, கருகிப் பொழிந்தோடு நீரே!,

III. பாட்டான நல்ல தொடையாய்!, கதிரார் கதிருக்கோர் கண்ணே!, செய்யாய்!, கரியாய்!, வெளியாய்!, ஐயாய்!, பெரியாய்!, சிறியாய்!, ஆகாய வண்ண முடையாய்!, வெய்யாய்!, தணியாய்!, அணியாய்!, சூட்சி சிறிது மிலாதாய்!, மாட்சி பெரிதுமுடையாய்!, காட்சி பெரிது மரியாய்!, உணர்வென்னு மூர்வதுடையாய்!, எரியாய தெய்வச் சுடரே!, விண்மேலு மேலு நிமிர்ந்தாய்!, மேலார்கண் மேலார்கண் மேலாய்!, காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே! - என்று இறைவர் உலகமாய்

நிறைந்து நிற்குமாறு பலவும் துதித்துக் கயிலை மலையானே போற்றி போற்றி என்று முடித்தது. கைலாயம் - பதியின் (ஐந்தொழில்) விளையாட்டுக்கு இடம். "காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" (திருவா).

பதிகங்களின் பாட்டுக் குறிப்பு :—II.—(1) பொறையுடைய பூமி - "அகழ் வாரைத் தாங்கு நிலம்" (குறள்). மறையுடைய வேதம் - வேதம் இறைவரை இருதயத் துள் பொதிந்து வைத்திருத்தல் குறிப்பு. "அருமறைப் பயன்" (1037). "வேத நாயகன்" (1633).—(3) மாலை எழுந்த மதி - முழுமதி; காலை மூளைத்த கதிர் - இள ஞாயிறு. ஞாயிறும் திங்களும் இறைவரது எட்டுத் திருமேனிகளுள் ஆவன.—(5) மிக்கார்கள் - அன்பினால் மிகுந்தோர்.—(6) கிழமை ஏழு - நாட் கூறுபாடு. காலமும் அதன் கூறுகளும் என்பது கருத்து.—(7) பாரோர் விண் - பாரோரும் விண் ணோரும். உம்மைத் தொகை. தொண்டர் பரவு மிடத்தாய் - "ஆண்டாண் டாயினு மாக" (முருகு). தொழில் நோக்கி ஆளும் - அவ்வவர் வினைக்கேற்ப ஆண்டு அரு ளும்.—(8) பெருகி அலைகின்ற ஆறு - பனி மலையினின்றும் பெருகிவரும் கங்கையின் குறிப்பு.—(9) செய்ய...நின்றாய்.—(10) சீலத்தான்...வைத்தாய், - இவற்றைத் தனித் தனி ஒரு தொடராக்கி உரைக்க. கோலத்தாற் குறைவில்லான் - மன்மதன். கோலம்- அழகு. இப்பாட்டிற் புரமெரித்ததும் இராவணனை அடக்கியதும், காமனை எரித்ததும், காலனை உதைத்ததுமாகிய நான்கு வீரங்களையும் ஒருங்கே கூறியருளினர்.

III. (1) பாட்டான நல்ல தொடை-புனருற்பவத்தில் நாத விந்து வடிவாக அரு ளிய முதல் நூல்களைப் பஞ்சமந்திர ரூபியாகிய சதாசிவமூர்த்தியாய் நின்று செய்யு ளாக்கி உபதேசிப்பார் என்பது ஆகமம். (ஸ்ரீ முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமி கள் குறிப்பு.) ஊழி முடிவில் புனருற்பவத்தின் பொருட்டு இறைவர் செய்யும் நாத கீத முழக்கு. "வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" (தேவா - விருத்). பரிசை யறியாமை நின்றாய் - "இன்ன தன்மைய னென் றறி யொண்ணு வெம்மான்" (தேவா - நம்பி). சூட்டு - சூடும்பொருள். ஆட்டு - திருமஞ்சனம்.—(2) மீளாவருள் - மீண்டும் பிறவாநெறி; முத்தி. கதிரார் கதிருக் கோர் கண் - விளக்கும் கதிர்களையுடைய ஒளிப் பொருளுக்கு ஒளி தருபவர். சுடர் களைச் செலுத்துபவர். "ஒளியா யொளியத னொளியா யொளியத னொளியுந் தணிதரு மொளியாகி" (பேரூர்ப்புரா - திருத் - பட - 63).—(3) செய்யாய் கரியாய் வெளி யாய் - செம்மை - இறைவர் பாகம். கருமை - அம்மை பாகம். வெளி - இரண்டுங் கடந்தது. செல்லாத செல்வம் - "சென்றடையாத் திரு" (தேவா). ஐ - தேவு.—(4) சூட்சி - வஞ்சம்; பொய்.—(5) முன்னி-முன்னிற்பவர். என்னி - எனது உடைமை யானவர். எனக்குரியவர். "நானுடை மாடு" (தேவா). கன்னியார் - கன்னியாம் தன்மை பொருந்திய.—(6) உணர்வென்னும் ஊர்வது உடையாய் - உணர்வைத் தம் ஊர்தியாக்கொண்டு செலுத்துபவர். ஊர்வது - ஊர்தி. கரியான் - திருமால்.—(7) எண் மேலும் எண்ணம் - எண்ணங்களையெல்லாம் கடந்த எண்ணம். மேலார் கள்......மேலாய் - தேவதேவர்.—(9-10) எண் ஆயிரம் நூறு - எண்ணப்படும் நூறாயிரம் - இலக்கம்; அனேகம் என்றலுமாம்.

தலவிசேடம்:—திருக்கயிலாயமலை-(திருநோடித்தான்மலை) - சங்காரகருத்தா வாகிய உருத்திரருடைய மலையாதலின் இது நொடித்தான்மலை எனவும் வழங்கப்படும். ஆளுடைய நம்பிகளது இத்தலத் தேவாரங் காண்க. (நொடித்தல் - அழித்தல்). சிவ பெருமானது இருப்பிடமாய் எங்கும் பரவியுள்ள அருவமாகிய கயிலாயம் வேறு. இங்குக் குறித்தது பூ கயிலாயம். தேவர்கள் முதலியோராலும் சென்று சேர்தற்கரி

யது. இராவணன் இதனைப் பெயர்க்க முயன்று இறைவனாணையால் மலைக்கீழ்ச் சிக்கிப் பல காலம் அழுது இராவணனென்ற நாமமும், வழிபட்டு வரங்களும் பெற்றான். திருநாவுக்கரசு நாயனார் இங்குச் சென்று, ஆணையின்படி ஒரு வாவியில் முழுகித், திருவையாற்றில் வந்து எழுந்து, இறைவர் கயிலைக் காட்சியைக் காட்டக் கண்ட செய்தி மேலே கூறியவாறு அவர்தம் சரித்திரத்திற் காண்க. ஆளுடைய பிள்ளையார் திருக்காளத்தி தொழுது அங்கு நின்று இதனை நோக்கி நின்று பதிகம் பாடியருளினர். ஆளுடையநம்பிகளும் சேரமான் பெருமாணாயனாரும் முறையே யானை - குதிரைகள் மீது இங்குவந்து வழிபட்டுக் கணநாதர்களாய் எழுந்தருளியுள்ளார்கள். சேரமான் பெருமாள் நாயனார் ஞானவுலாவை இங்கு அரங்கேற்றினர். சிவபெருமான் எழுந்தருளியுள்ள எல்லாத் தலங்கட்கும் நாயகமாய் உள்ளது. திருமலைச் சிறப்புப் பார்க்க. "நிலவு மெண்ணில் தலங்களு நீடொளி, யிலகு தண்டளி ராக வெழுந்ததோர், உலக மென்னு மொளிமணி வல்லிமேன், மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை" (13). சுவாமி - பரமசிவன்; அம்மை - பார்வதியம்மை; தீர்த்தங்கள் - கங்கை முதலிய ஏழ பெருந் தீர்த்தங்கள்; பதிகம் - 7. இத்தலம் இமயமலைச் சிகரத்தில் உள்ளது.

1647. ஆய வாறுமற் றவர்மனங் களிப்புறக் கயிலை
மேய நாதர்தந் துணையோடும் வீற்றிருந் தருளித்
தூய தொண்டனார் தொழுதெதிர் நிற்க,வக் கோலஞ்
சேய தாக்கினார் திருவையா றமர்ந்தமை திகழ.　　௬௮௨

(இ - ள்) ஆயவாறு...வீற்றிருந்தருளி - அவ்வாறாகியபடி நாயனாரது மனம் மகிழும்படி கயிலாயத்தில் பொருந்திய இறைவர் தமது துணைவியாருடனே வீற்றிருந்தருளிச் செய்து; தூய...நிற்க - தூயவராகிய திருத்தொண்டனார் தொழுது கொண்டு எதிரில் நின்றுகொண்டிருக்க; திரு ஐயாறு அமர்ந்தமை திகழ - திருவையாற்றில் எழுந்தருளி யிருக்கும் தன்மை வெளிப்பட விளங்கும்படியாக; அக் கோலம் சேயது ஆக்கினார் - முன்பு காட்டியருளிய அந்தக் கயிலாயத் திருக்கோலத்தைச் சேய்மையாம்படி மறைத்தருளினார்.

(வி - ரை) ஆயவாறு - முன் 1645 - 1646-ல் விரித்தபடி.

கயிலை மேய நாதர் - கயிலை என்பது ஈண்டு, இங்குக் காட்டிய இந்தக் கயிலையினையும், என்றும் உள்ள அந்தக் கயிலையினையும் குறித்து நின்றது. வடகயிலைக் காட்சியினை இங்குக் காணத் தந்ததாதலின் இவ்வாறு கூறினார்.

துணை - துணைவியாராகிய அம்மையார். துணைவி என்னாது துணை யெனப் பொதுப்படக் கூறியவதனால் "சத்தியும் சிவமுமாம் சரிதைப் பன்மை யோனிகள் யாவையும்", "புடையமர்ந்த தம் துணையொடும் பொலி" வுறும்படி காணச் செய்து நின்ற அத்தன்மையும் குறித்தது.

தூய தொண்டனார் - "தொண்டனார்க்கு" (1645) என்றவிடத் துரைத்தவை பார்க்க.

தொழுது - தொழுதபடியே; எதிர்நிற்க - நிற்கும்போது, நின்று கொண்டிருப்பவும். எதிர் நிற்கச் சேயதாக்கினார் - என்று கூட்டுக. கண்டு நிற்பதும் காணாது நிற்பதும் உயிர்களின் செயலில் அடங்காது காட்டியும் மறைத்தும் நிற்கும் இறைவரது செயலினால் ஆவது என்று குறிக்க நிற்க - என்றார். "காட்டுவித்தாலாரொருவர் காணா தாரே காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" என்ற நாயனார் திருவாக்கின் உள்ளுறையும், "காண் எனப் பணித்தார்" (1634) என்றதும் இங்குக் கருதத்தக்கன.

அக்கோலம் - காண் எனப் பணித்துக்காட்ட அவர் கண்டு தொழுது நின்ற அந்த என அகரம் முன்னறி சுட்டு. கோலம் - காட்சி; "கயிலையி லிருந்தநின் கோலம்" (1633.)

செய்து ஆக்கினர் - மறைத்தனர் என்பதாம். செய்தாக்குதல் ஒரு பொருளை எட்டாதபடி செய்தல்; தூரிப்பதாக்குதல்.

திரு ஐயா றமர்ந்தமை திகழ - திருவையாற்றில் தாம் உலகங் காண முன் எழுந் தருளிய கோலம் வெளிப்பட. நாயனாருக்குக் கயிலைக் கோலம் காட்டியபோதும் ஐயா றமர்ந்தமை உள்ளதாயினும் அப்போது அது கயிலைக் கோலத்தினுள் மறைந்து நின் றது; பின்னர் இப்போது அது திகழ நின்றது என்பதாம்.

அருளிச் - செய்தாக்கினர் - முன் 1640 முதல் 1644 வரை ஐந்து பாட்டுக்களும் மகா சதாசிவ மூர்த்தி தரிசனக் குறிப்புத்தருவனவாயின், இத்திருப்பாட்டு அதோ முக தரிசனக் குறிப்புத் தருவதெனக் கூறலாம்.

ஆயகாலையி லவர்மனங் களியுற—மேயநாயகர்—என்பனவும் பாடங்கள். 382

1648. ஐயர் வேடமங் களித்தகன் றிடவடித் தொண்டர்
மையல் கொண்டுள மகிழ்ந்திட வருந்தி, "மற் றிங்குச்
செய்ய வேணிய ரருளிது வோ?"வெனத் தெளிந்து
வைய முய்ந்திடக் கண்டமை பாடுவார் மகிழ்ந்து, ௩௮௩

வேறு

1649. "மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடு" மென்னுங்
கோதறு தண்டமிழ்ச் சொல்லாற் குலவு திருப்பதி கங்கள்
"வேத முதல்வரை யாற்றில் விரவுஞ் சராசர மெல்லாம்
காதற் றுணையொடுங் கூடக் கண்டே"னெனப்பாடி நின்றார்; ௩௮௪

1650. கண்டு தொழுது வணங்கிக் கண்ணுத லார்தமைப் போற்றிக்
கொண்ட திருத்தாண் டகங்கள் குறுந்தொகை நேரிசை யன்பின்
மண்டு விருத்தங்கள் பாடி வணங்கித் திருத்தொண்டு செய்தே
அண்டர் பிரான்றிரு வையா றமர்ந்தனர் நாவுக் கரசர். ௩௮௫

1648. (இ - ள்) ஐயர்...அகன்றிட - பெருமான் தாம் இவ்வாறு திருக்கயி லாயத்திருந்த கோலத்தை அங்குக் காணக்கொடுத்து மறைத்தருளினாராக; அடித் தொண்டர்...வருந்தி - திருவடித் தொண்டு பூண்ட நாயனார் மயங்கி, உள்ளத் தில் முன்போலவே இன்னும் மகிழ்ச்சி பெற்றிருக்கும் வண்ணம் வேண்டி வருந்தி; மற்று...எனத் தெளிந்து - "இனி, இங்குச் சிவந்த சடையினை யுடையாராகிய இறை வரது திருவருள் இவ்வளவு தானோ?" என்று தெளிவு கொண்டு; வையம் உய்ந்திட- உலகம் உய்யும் பொருட்டு; கண்டமை - தாம் கண்ட செய்தியினை; மகிழ்ந்து பாடு வார் - மகிழ்ச்சியோடும் பாடுவாராகி, ௩௮௩

1649. (இ - ள்) மாதர்ப் பிறை...என்னும் - "மாதர்ப் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும்" என்று தொடங்குகின்ற; கோதறு...திருப்பதிகங்கள் - குற்ற மறும் தண்ணிய தமிழின் சொல்லினாற் குலவும் திருப்பதிகங்களை; "வேத முதல்வர்... கண்டேன்" எனப் பாடி நின்றார் - "வேத முதல்வராகிய சிவபெருமானுடைய திரு வையாற்றிலே, பொருந்தும் சரிப்பனவும் நிற்பனவுமாகிய உயிர்கள் யாவையும், காதல் பொருந்திய தமது துணைகளுடனே கூடக் கண்டேன்" என்ற கருத்துப் புலப் படப் பாடி நின்றனராகி, ௩௮௪

1650. (இ - ள்) வெளிப்படை. (இவ்வாறாகக்) கண்டும், தொழுதும், வணங்கியும், நுதலிற் கண்ணுடைய சிவபெருமானைப் போற்றியும், கொண்ட திருத்தாண்டகங்களும், குறுந்தொகையும் திருநேரிசையும், அன்பு நிறைந்த திருவிருத்தங்களும் முதலிய பதிகங்களைப் பாடியும், வணங்கித் திருத்தொண்டுகள் செய்து கொண்டபடியே, திருநாவுக்கரசு நாயனார், தேவர்கள் பெருமானாகிய சிவபெருமானுடைய திருவையாற்றில் எழுந்தருளியிருந்தனர். ௩௮௫

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண் டுரைக்க நின்றன.

1648. (வி - ரை) ஐயர் - சிவபெருமான்; வேடம் - திருக்கயிலையி லிருந்த கோலம். திருவையாற்றிற் கோயிலின் கண்ணே இருந்தபடி அக்கோலம் மேற்கொள்ளப்பட்டமையின் வேடம் என்றார்.

அங்கு அளித்து - ஐயாற்றில் அவர்முன்பு கொடுத்து.

அடித் தொண்டர் - "தொண்டனார்" (1645); "தொண்டர்" (1647); என்றமை காண்க. கயிலையில் தலைவன் கோலங்காணத் தொண்டர் செல்லவும், தலைவர் தாமே தொண்டர் இடத்து வந்து கோலங்காட்டிய கருணைத் திறத்தினை எண்ணிய குறிப்பு. "கண்டே னவர்திருப் பாதம்" என்று திருவடியினையே கண்டு துதிப்பதனால் இங்கு "அடித் தொண்டர்" என்றார்.

மையல் கொண்டு - மயங்கி. கண்டு மகிழ்ந்து அனுபவித்துக் கொண்டிருந்த பெருங் கோலம் சேயதாக்கினமையால் காணாது மயங்கி.

உளம் மகிழ்ந்திட வருந்தி - முன்னர் மகிழ்ந்தவாறே, பின்னும் மனமகிழ்ச்சி பெற்றிருக்கும் பொருட்டு வருந்த. மகிழ்ந்திட - மகிழும் பொருட்டு-மகிழ்ந்திடற்காக. "யான்மிக வருந்து கின்றே னேயர்கோ னார்தா முற்ற, வூனவெஞ் சூலைநீக்கி யுடனிருப் பதனுக்கு" (ஏயர்கோ - புரா - 401) "வருத்தமிகு காதல்" (1056) என்பன காண்க. இதற்கு இவ்வாறன்றி, "மனமகிழ்வடைதலால் பரவசப்பட்டு வருந்தி" என்பர் சுப்பராய நாயகர். அடித்தொண்டர் உளம் மகிழ்ந்திட ஐயர் கோலம் அளித்து என்று கூட்டியும், மையல் கொண்டு வருந்தி என்று சேர்த்தும் உரைப்பர் இராமநாதச் செட்டியார்.

அருள் இங்கு மற்று இதுவோ? - என்க. இதுவோ? - இதுமட்டோ. இது என்றது காட்டியதும் அவ்வளவில் சேயதாக்கியதும் இக்குறுகிய கால அளவு என்றபடி. ஐயர் கோலங்காட்டி நின்ற காலம் எத்துணைப் பெரிதாயினும் அதன் ஆராமையால் சிறு கணமாகவே நாயனாருக்குத் தோன்றியது. "மிகுபுலவிப் புணர்ச்சிக்கண், ஊழியா மொருகணந்தா னவ்வூழியோரு கணமாம்" (ஏயர்கோ - புரா. 268) என்றோதியது பேரின்ப அனுபவத்துக்கும் ஒக்குமாதலின் இறைவர் கயிலைக்காட்சி காட்டிநின்றது நெடுநேரமாயினும் அது நாயனாருக்கு ஒரு கணமாகப் புலப்பட, அருள் இதுவோ? (இம்மட்டோ?) என்றமைந்து கொண்டனர் என்க.

தெளிந்து - மையல் கொண்டநிலையினின்றும் தேறி. இவ்வாறு தெளிந்தமையால் தாம் அவ்வளவில் மகிழ்ந்து பாடுவாராயினர் என்க.

வையம் உய்ந்திடக் கண்டமை என்றும், வையமுய்ந்திடப் பாடுவார் என்றும் கூட்டியுரைக்க நின்றது. வையம் உய்ந்திடக் கண்டமையாவது நாயனார் கண்டதனால் அவரது அத்திருவாக்கைப் பயின்று உலகமும் உய்தியை யடைதல். கண்டமை - கயிலைக்காட்சியின் முன்னும் பின்னும் கண்ட கோலங்கள். முன்கண்ட கோலம் "மாதர்ப்பிறை" என்ற பதிகத்தானும், பின்கண்ட கோலம் திருத்தாண்டக முதலிய பதிகங்களாலும் பெறப்படுவன. ஐயாற்றிற் கயிலை கண்ட காட்சி திருக்கயிலாயப்

போற்றித் திருத்தாண்டகப் பதிகங்களாலறியப்படுவது. பாடுவார் (1648) - எனப் பாடி (1649) - என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டுக.

பாடுவார் (1648) - பாடி நின்று(ராய்க்) (1649) - கண்டு தொழுது - வணங்கிப் - போற்றிப் - பாடி - வணங்கிச் - செய்தே - திருநாவுக்கரசர் - திருஐயாறு அமர்ந்தனர் (1650) என்று இந்த மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக் கொள்க. 383

1649. (வி - ரை) மாதர்ப்பிறை......என்னும் - இது பதிகத் தொடக்கம். இதுவே பதிகக்குறிப்பும் கருத்துமாதலை இப்பாட்டின் மூன்றாவது நான்காவது அடிக ளால் விரித்தருளினர் ஆசிரியர்.

மாதர்ப்பிறை - அழகியபிறை ; மாதர் - அழகு.

கோதறு - குற்றத்தை அறுவிக்கும் எனப் பிறவினைப் பொருள் கொள்க. இங்குக் கோது என்றது உயிர்களின் மலமாசு. கோதற்ற தமிழ்ச் சொல் என்று தன்வினை யாகவே கொண்டுரைப்பாருமுண்டு ; அவர் கோது என்பது சொற்பொருட்குற்றம்.

திருப்பதிகங்கள் - பதிகத்துள் ஒவ்வொருபாட்டும் ஒவ்வொரு பதிகம் எனப்பட் டது. பதிகப்பெயர் அதன் பாட்டுக்கு வந்தது சினையாகு பெயர். ஒவ்வோர் பாட்டும் மேலே கூறும் பதிகத்தின் முடிந்த கருத்தினையே கொண்டு விளங்குதலாற் பதிகங்கள் எனப்பட்டதென்பதுமாம்.

"வேத முதல்வர்...கண்டேன்" என்று - இது பதிகக்கருத்தும் பாட்டுக் கருத்து மாம். பதிகக் குறிப்புப் பார்க்க.

சராசரம் எல்லாம் - நிற்பவும் சரிப்பவுமான - பன்மை யோனிகள் எவையும். (1638 - 1639) பார்க்க.

சரம் அசரம் - சராசரம் என வந்தது வடசொல் முடிபு. துணையோடும் கூட - பெண்ணொடும் கூடிவர.

பிறைக் கண்ணி - பிறையாகிய மாலை. கண்ணி - கொண்டை மாலை.

நின்றார் - நின்றாராகி ; முற்றெச்சம். நின்றாராகிக் - கண்டு என்று மேல் வரும் பாட்டுடன் கூட்டுக. வினைமுற்றாகக் கொள்ளினு மிழுக்கில்லை. பாடி நின்றார் - பாடுந் தொழிலின் கண் நின்றனராய். 384

1650. (வி - ரை) கண்டு தொழுது வணங்கி - போற்றி - முன் 1745-ல் காண் டல் தொழுதல் முதலியனவும் திருவையாற்றில் அவ்விடத்தே நிகழ்ந்தனவாயினும், அது கயிலைக் காட்சியைக் கண்டு நிகழ்ந்தன ; இங்குக் கூறியவை அவ்விடத்தே திரு வையாற்றுக் கோயில் காட்சியினைத் திகழக் கண்டு நிகழ்ந்தவை.

கண்ணுதலார் - திருவையாறப்பர் ; கயிலைக் காட்சியளித்த அருட் கண்ணினை யுடையார் என்பது குறிப்பு.

போற்றிக் கொண்ட - துதிப்பதனை உட்கொண்ட. பிரானும் அடி யென்மேல் வைத்தாய்; அடியாளென் றடியென்மேல் வைத்தாய் ; மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய் ; என்ற கருத்துத் தோன்றப் போற்றிய.

திருத்தாண்டகங்கள் - இப்போது இரண்டு பதிகங்கள் கிடைத்துள்ளன.

தொழுது வணங்கி - பாடி வணங்கி - தொழுது வணங்கி என்றது திருவையா றப்பர் காட்சி கண்டதன் பொருட்டு வணங்கியதும், பாடி வணங்கி என்றது பாடியதன் முடிவிற் புறம்புகும்போதும் வணங்கியதுமாம்.

அன்பின் மண்டு விருத்தங்கள் - "ஐயாறர் பொன் அடிக் கீழெனைத், தொண்ட னேனைச் செறிவித்தவா !" "ஐயாறனடித் தலமே" என்றும் வரும் திருவிருத்தப் பதிகங்கள், என்றும் இறைவரது திருவடிகளில் நாயனார் கொண்டுவைத்த அன்பின் உறைப்பினையும் செறிவினையும் உணர்த்துவன. இதுபற்றியே முன்னர் (1648)

அடித்தொண்டர் என்றதும் குறிக்க. அன்பின் மண்டு - பதிகம் பத்துப் பாட்டில் முடியாது இருபது பாட்டளவும் அருளிய ஆர்வமும் குறிப்பு.

திருத்தொண்டு - திருவுழவாரத் திருத்தொண்டு. செய்தே - ஏகாரம் தேற்றம்.

அண்டர்பிரான் திருவையாறு - எல்லா அண்டங்களினும் இறைவாகிய கயிலைக் காட்சியினை இங்குக் காட்டுவித்தலின் இவ்வாற்றாற் கூறினார்.

அமர்ந்தனர் - விரும்பிச் சில காலம் எழுந்தருளி யிருந்தனர். 385

திருவையாறு

I *திருச்சிற்றம்பலம்* பண் - காந்தாரம்

*மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்*
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடுப டாம லையா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்;
*கண்டே னவர்திருப் பாதம்; கண்டறி யாதன கண்டேன்.* 1

*வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்*
*களவு படாததோர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றேன்*
*அளவு படாததோ ரன்போ டையா றடைகின்ற போது*
*இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்;*
*கண்டே னவர்திருப் பாதம்; கண்டறி யாதன கண்டேன்.* 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*திருக்கயிலைச் சாரலினின்றும் யாதும் சுவடுபடாமல் திருவையாறு அடைகின்றபோது சராசரங்களெல்லாம் தத்தம் துணையுடனே, சத்தி சிவமாம் பரிசுதோன்றக் கண்டேன்; ஆதலின் அங்கிலையிலே இறைவரது திருப்பாதங் களையும் கண்டேன்.* குறிப்பு - *இப்பதிகம் திருக்கயிலைக்காட்சி கண்டு அது சேய தாகிய பின் பாடியருளியது. ஆனால் இதிற் குறித்த காட்சி அக்காட்சிக்கு முன் கண்டது.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மாதர் - *அழகிய.* பிறைக் கண்ணி - *பிறை யாகிய கொண்டைமாலை. இப்பதிக முழுதும் பிறைக்கண்ணியினையும் அம்மை உடனா தலையும் கூறியது, முதலிற் காட்சிப்பட்டது பிறை என்றும், பின்னர் மனத்துள் ஊன்றி யது இறைவரது அருளாகிய அம்மையுடனும் தன்மை என்றும் குறித்தவாறு. "தெண்ணிலா மலர்ந்த வேணியாய்" (253) என்றதும், ஆண்டுரைத்தவையும் நினைவு கூர்க. "செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா வெறிக்குஞ் சென்னி" என்ற திருநேரி சைப் பதிக முழுமையும் இக்குறிப்புப்பட அருளியதும் கருதுக.* போதொடு நீர் சுமந் தேத்திப் புகுவார் - *நாயனார் ஐயாற்றில் வாவியின் கரையில் வந்து ஏறிக் கோயிலை நோக்கி வரும்போது முன் சென்ற அடியார்கள்.* யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைகின்ற போது - *கயிலைக்குச் சென்றபோது நாயனாரது கால்கள்-கைகள்-மார்பு - உடல் இவை தேய்ந்து ஊறுபட்டன; ஆனால் அங்கிருந்து இறைவரது ஆணைவழி யே அங்குப் பொய்கையில் மூழ்கி இங்கு வாவியில் வந்தெழுந்தபோது அவ்வாறு ஏதும் சுவடுபடாமல் வந்தடைந்தனர் என்க.*—(2) வட்டமிட்டு - *வலம் வந்து சுற்றி;* ஆடா - *ஆனந்த மேலீட்டினால் ஆடி;* ஆழி வலவன் நின்றேத்தும் - ஆழி வலவன் - *கடலரசன்; கடலரசன் இங்குப் பூசித்துக் காவிரியைத் தன்பா லடையப் பெற்றனன் என்பது தல சரிதம். தலவிசேடம் பார்க்க.* ஆழி - வலவன் - *ஆழி சக்கரம் என்று கொண்டு, திருமால் என்றலுமாம்.*—(3) பூரித்த இலயங்கள் - *இடைவிட்டு இசைக்கும்*

தாள வொத்து.—(4) தோளைக் குளிர - "கையாரக் கூப்பியும்" (அற் - அந்).—(5) காடொடு நாடு மலையும் கை தொழுது - இவை முன்னர்க் கயிலைக்குச் சென்ற போது தொழுது சென்றவை. கை தொழுது ஆடா - அந்நினைவு கொண்டு தொழுது கொண்டே ஆடி. ஆடல் - ஐந்தொழிற் பெருங்கூத்தும், ஆனந்தக் கூத்தும்.—(6) உண்மெலி...உருகா - இவை நாயனாரின் மனநிலை. பகன்றில் - பகா அன்றில் என்பது பகன்றில் என நின்றது. இணைபிரியாத அன்றிற் பறவை. ஓடு - உடனாகி.—(7) வடிவோடு வண்ணம்...வாழ்வேன் - இறைவரது வடிவையும் வண்ணங்களையும் மனத்துக்கிசையப் பாடி. "வண்ணமும் வடிவும் கண்டு" (திருக்கழிப்பாலை - குறுந்.) வாழ்வேன் - அவரை வாயார வாழ்த்துவதனால் நான் வாழ்வடைந்தேன். "வாழ்த்துவதும் வானவர்க டாம்வாழ்வான்" (திருவா.) இடி குரல் - இடி போன்ற குரல்.—(8) பெரும்புலர் காலை - வைகறை. விடியல். பெறுமலர் - பெறும் - கிடைக்கப்பெற்ற. விரிக்கப்பெற்ற.—(9) கயிறு அறுக்ககில்லேன்-கயிறு - பாசம். பாசம் போக்கமாட்டாது. அற்றநுள் பெற்று (என்போலன்றிப்) பாசம் அற்று, அதனால் அருள்பெற்று.—(10) எங்கருள்...இனி - இது நாயனார் அப்போது கொண்ட மனநிலை.—(11) களவுபடாததோர்...கடைக் கணிக்கின்றேன் - களவுபாடததோர் காலம் - களவில்லாத - பாசமறும் - ஒரு காலத்தை; காண்பான் - காணும் பொருட்டு. பெறவேண்டி; கடைக் கணித்தல் - முயற்சித்தல். நாகு - ஏறு - சரம் அசரம் இரு வகையுள்ளும் பெண் ஆண் குறிப்பன. இப்பதிகத்தினுள் ஏனைப் பத்துப் பாசுரங்களினும் சரவருக்க உயிர்களையே கூறிய நாயனார் இவ்வொருபாசுரத்தில் சராசரங்கட்குப் பொதுவாகக் கூறியதன் துணையால் "நிற்பவும் சரிப்பவுமான" (1638) என்றும், "விரவுஞ் சராசர மெல்லாம்" (1649) என்றும் உரை விரித்தனர் ஆசிரியர்.

II திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

ஆரார் திரிபுரங்க ணீறு நோக்கு மனலாடி யாரமுதே யென்றே னானே!
கூரார் மழுவாட் படையொன் றேந்திக் குறட்பூதப் பல்படையா யென்றே னானே!
பேரா யிரமுடையா யென்றே னானே! பிறைசூடும் பிஞ்ஞகனே யென்றே னானே!
ஆராவ முதேயென் னையா றனே! யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—திரிபுரங்கள் நீறாக நோக்கும் அனலாடி! ஆரமுதே! பூதப்படையாய்! என்று பலவாறும் பரவி ஏத்தித் திருவையாறனே! என்றென்றே நானரற்றி நைகின்றேனே.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) ஆரார் - பகைவர்; அனலாடி - ஆரமுது-முரண் அணி. புரங்களில் வாழ்ந்த பகைவர்க்கு அனலாடியாகவும், அடியார் மூவர்க்கு அமுதாகவும் ஒரேகாலத்தில் இருதன்மைப்பட நின்றவர். ஆரமுதே-பொதுவாய் அன்புடையார்க்கு அமுதாவார் என்றலுமாம். (2, 6-ம் பார்க்க). பூதப் பல்படை - பலவகைப் பட்ட பூதகணங்களைப் படையாக வுடையவர். என் ஆராஅமுதே - என்க. கயிலைச்சாரலில் இறந்து படாமற் காத்துக் காட்சி தந்து ஆட்கொண்டவர் என்ற குறிப்பு. என்றென்றே - என்று இனைய பலவும்; நைகின்றேன் - அன்பினால் மனமுருகி வருந்துகின்றேன். "நையுமனப் பரிவோடும்" (1678).—(2) நீறுநோக்கும் தீர்த்தா - புரமெரித்தமையும் அவர்களைப் புனிதமாக்குதற்கு என்பார் தீர்த்தா என்றார். ஏவார் சிலை - ஏ - அம்பு பொருத்திய என்றது அம்பு எய்யப்படாமலே நின்று செயல் நிகழ்ந்தமைகுறிப்பு. இடும்பைக் கடல் - கயிலைக்குச் சென்று காண இயலாது இடையிற் செயலின்றித் தங்கிய குறிப்பு. (4) பார்க்க. ஆவா என்று - இறைவர்

முனிவராய் வந்தருளிய குறிப்பு. "நொந்து நோக்கி" (1627).—(3) சுண்ண வண்ணன் - சுண்ணமாடிய வண்ணத்தையுடையவர். நஞ்சணி - பிறரைக் கொல்லும் நஞ்சினை அணிகலமாகவுடைய. நெஞ்சு......அமுதம் - எண்ணார எண்ணும் போதும் உள்ளே நிறைபவர்.—(4) எல்லை நிறைந்தான் - சொல் - பொருள் - என்ற எல்லை - அளவு - நிறைந்தவன். "உரையின் வரையும் பொருளின் அளவும், இருவகைப்பட்ட எல்லையும் கடந்து"(கோயினான்). எல்லையாம் ஐயாறு-"கலையின் பொருட்கெல்லை ஆடும் கழலே" (1220).—(5) கனலாகும் கண் - நெருப்புக்கண்; (6) அற்றார் - பற்றற்றார்.—(8) அவன் - மகா வாக்கியங்களில் தத் பதப்பொருள். முழுமுதல்வனும் அவன். சிவன் - பவன் - இறைவனது திருநாமங்களுள் மிகச்சிறந்த நாமங்கள். "சிவனெனு நாமம் தனக்கே...பவனெனு நாமம் பிடித்து" (தேவா.)

III திருச்சிற்றம்பலம்     திருத்தாண்டகம்

ஓசை ஒலியெலா மானாய் நீயே யுலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலா மானாய் நீயே மலையான் மருகனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிது மினியாய் நீயே பிரானா யடியென்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலா மானாய் நீயே திருவையா றகலாத செம்பொற் சோதீ.     1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருவையாறு அகலாத செம்பொற் சோதியே; நீ ஓசை ஒலியெலாமானாய்; பேசப் பெரிது மினியாய்; பிரானாய் அடியென்மேல் வைத்தாய்; நோவாமே நோக்கருள வல்லாய்; தீர்ப்பரிய வல்வினை நோய் தீர்ப்பாய்; சார்ந்தாரைத் தகைந்தாள வல்லாய்; மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய்; ஊழி முதல்வனாய் நின்றாய்; கற்றிருந்த கலைஞான மானாய்; பெற்றிருந்த தாயவளி னல்லாய்; நல்லாரை நன்மையறிவாய்; செல்வாய செல்வந் தருவாய்; கண்டாரைக் கொல்லு நஞ்சுண்டாய்; ஆரு மறியா விடத்தாய்; என்றிவை முதலாகக் குறிக்கப்படும் தன்மைகளா லறியப்படுவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஓசை ஒலி - ஓசை - அநர்த்த சத்தம். ஒலி - அர்த்த சத்தம். பிரானாய் அடி என்மேல் வைத்தாய் - திருவடி தீக்கை செய்த குறிப்பு. இப்பதிக முழுமையும் இக்குறிப்பேபடப் போற்றுதல் காண்க. தேச விளக்கு - உலக விளக்காகிய சுடர்; ஞாயிறு - திங்கள் - தீ.—(2) நோக்கு அருள - அருட்பார்வை செய்ய.—(3) தனத்தகத்து - தன்னகத்து. தனக்கு. மனத்திருந்த கருத்து - கயிலைக் காட்சி காண நாயனார் கொண்ட கருத்து. அறிந்து முடித்தல் என்றது உடனிருந்து உணர்ந்து ஏற்றவாறு கூட்டுவித்தல். பொதுவாய் எல்லா உயிர்களுடைய கருத்து முடிக்கும் தன்மையும் குறிப்பது. "மனத்தானை - மனத்திருந்த கருத்தானைக் - கருத்தறிந்து முடிப்பான்றன்னை" (தாண்). சினத்திருந்த - பொங்கி வந்த.—(4) தேவர்களை அடர்த்த. வடகயிலை மன்னி யிருந்தாய் - வடகயிலைக் காட்சியே இங்கு அருளிய குறிப்பு.—(6) செற்றிருந்த - தேவர்களை அடர்த்த.—(7) செல்வாய செல்வம் - திருவருளிற் செலுத்தும் செல்வம்-அன்பு.—(9) திண்சிலை... வல்லாய் - திண்சிலை - மேருமலையாகிய வில். திண்மை - வளையாத தன்மை. வல்லாய் என்றது மலையை வளைத்த பிறர்க்கரிய திறல் குறித்தது. (10) கண்டாரைக் கொல்லு நஞ்சு - தீண்டாமலே, பார்த்த மாத்திரத்தில் அடர்த்துக் கொல்லும் தன்மையுடைய விடம். திருஷ்டி விடம் என்பர் வடவர். பாற்கடலில் எழுந்து பரந்த விடம் காட்சி மாத்திரையால் தேவர்களை அடர்த்தமையால் இவ்வாறு கூறினார். நஞ்சு - நஞ்சினையும்; இரண்டனுருபும் சிறப்பும்மையும் தொக்கன.—

(11) ஆரு மறியாவிடம் - உணர்ச்சிக்கு எட்டாத அளவு நீண்ட நீளம். ஊரும்-பறக்கும் கருவியாக ஊர்ந்து செல்லும்.

குறிப்பு :—திருக்கயிலையில் ஐம்பூதங்களாகவும், அவற்றின் பேருருவங்களாகவும் இறைவன் திருமேனியைக் கண்டு வழிபட்ட நினைவுடன் இங்குக் காட்சி காண்கின்றாராதலின் ஓசை ஒலியெலாமானாய், கடல்வரை வானாகாயமானாய், எண்டிசைக்கு மொண்சுடராய் நின்றாய், என்றிவ்வாற்றாற் கண்டு வணங்குதலுடன், அம்மையப்பராய்க் கண்ட உருவக் காட்சியும் ஒருங்கே இங்குப் போற்றியது காண்க.

IV திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

சிந்தை வண்ணத்த ராய்த்திறம் பாவண, முந்தி வண்ணத்த ராய்முழு நீறணி
சந்தி வண்ணத்த ராய்த்தழல் போல்வதோர், அந்தி வண்ணமு மாவரை யாறரே. 1

விரும்பும்வண்ணமும்வேதத்தின்வண்ணமுங், கரும்பினின்மொழிக்காரிகைவண்ணமும்
விரும்பு வார்வினை தீர்த்திடும் வண்ணமும், அரும்பின் வண்ணமு மாவரை யாறரே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—தம் சிந்தையி னிலைபெற்றுத் திறம்பா வண்ணம் இறைவர் எழுந்தருளிய வண்ணங்களை, முழு நீறணி சந்தி வண்ணம், அந்தி வண்ணம், வேதத்தின் வண்ணம், காரிகை வண்ணம் என்றின்ன பல படியாக நினைந்து போற்றிய கருத்து. பதிக முழுதும் வண்ணங்களைத் துதித்தமை காண்க.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சந்தி - காலை மாலைகளிற் காணும் செவ்வானம். அந்தி - மாலை.—(2) மூல வண்ணம் - உலக காரணர்; முதலாகிய கோலம் - ஒடுக்கிய உலக முதலியவற்றைத் தம்மிடத்திலிருந்து தோற்றுவிப்பவர். நீல வண்ணத்தர் - திருமால் பாகமுடையவர். கரிய அகோர முகத்தையுடையவர் என்றலுமாம். பளிங்கு - திருமேனி நிறம்.—(3) அந்திப்போது - அந்திமாலை போன்ற. அந்தி - அழகிய தீ நிறம். தீ என்பது தி என நின்றது. செய்யுள் விகாரம்.—(4) இருளின் வண்ணம் - அகோர முகத்தின் நிறம். மருளும் - அளவு காண முடியாது மயங்கும்.—(5) இழுக்கின்...வெவ்வழல் - ஆணவ மலத்தின் பலவேறு உருவங்களாகிய கொடுமைகள். கூடியும் - உடனிருந்தும். "பொல்லாத வென்னழுக்கிற் புகுவா னென்னைப் புறம்புறமே சோதித்த புனிதன்" (தாண் - திருவாலம்பொழில் - 7). "யான் செய்யுந் துரிசுகளுக் குடனாகி" (நம்பி. ஆரூர்). குழைத்தல் - கரைத்து வலியிலதாகச் செய்தல். மழைக்கண் மாமுகில் - மழையைத் தன்னிடத்துக் கொண்ட கருமுகில். இங்கு மழை என்றது நீர் என்ற பொருளில் வந்தது. அழைக்கும் வண்ணம் - "அருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும்" (திருமந்). இறைவரது அபய கரத்தைக் குறித்தது.—(7) வேதத்தின் - வேதங்களை வெளிப்படுக்கும். வேதங்களாற் சொல்லப் படும் என்றலுமாம். வினை தீர்த்திடும் வண்ணம் - காரிகை வண்ணம் கொண்டிருப்பது வினைதீர்த்தற் பொருட்டு என்றதாம்.—(8) ஆழித்தீ - ஆழியினின்றும் - கடல் அகத்திலிருந்து - ஊழியில் பெருகி உலகை அழிக்கும் வடவைத்தீ. ஊழி வண்ணம் - ஆழி வண்ணமும் என்றவையும் இக்கருத்தைத் தொடர்ந்தன.—(9) கைது - கைப்பற்றாக; அனுபவமாக. ஐது - அழகுடைய.—(10) இப்பாட்டில் வண்ணமும் என்ற நான்கும் தொடர்ந்து ஒருபொருள் பற்றி வந்தன.

V திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

சிந்தை வாய்தலு ளான்வந்து சீரியன், பொந்து வார்புலால் வெண்டலைக் கையினன்;
முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித், தந்தி வாயதோர் பாம்பரை யாறரே. 1

நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே, வஞ்ச மென்பதோர் வான்சுழிப்பட்டுநான்,
துஞ்சும் போதுநின் ஞமைத் திருவெழுத், தஞ்சுந் தோன்ற வருளுமை யாறரே.　　3

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஐயாறர் - அந்திவாயதோர் பாம்பர்; பரியர்; நுண்ணியர்; பிறர்க்கெலாம் அரியர்; தொண்டர்க் கெளியர்; என்றிவை முதலிய தன்மைகளாலறியப்படுபவர். அவரது ஐயாறு தொழத் தவம் ஆகும். ஐயாறரே! நான் துஞ்சும்போது நும்நாமத் திருவெழுத் தஞ்சுந் தோன்ற அருளும்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) வாய்தல் - தமது ஆட்சிசெலுத்தும் வழி. அந்திவாயது - மாலையில் வெளிப்போந்து உலாவுவது. அம் - தீ - தீமைபயக்கும் விடம்; வாயது - வாயில் உடையது என்றலுமாம்.—(3) நாயனுர் கேட்கும் மிகச் சில வரங்களுள் ஒன்று இப்பாட்டாற் பெறப்படும். திருவெழுத்தஞ்சும் தோன்றுதலாவது சிவனுக்கடைக்கலம் புகுதல்.—(9) தேனே ஆறு - தேன் ஆறுபோல இன்பம் பெருக.

VI　திருச்சிற்றம்பலம்　　திருநேரிசை

கங்கையைச் சடையுள் வைத்தார் கதிர்ப்பொறி யரவும் வைத்தார்
திங்களைத் திகழ வைத்தார் திசைதிசை தொழவும் வைத்தார்
மங்கையைப் பாகம் வைத்தார் மான்மறி மழுவும் வைத்தார்
அங்கையு ளனலும் வைத்தா ரையனை யாற ஞரே.　　1

இரப்பவர்க் கீய வைத்தா ரீபவர்க் கருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட் கெல்லாங் கடுநர கங்கள் வைத்தார்
பரப்புநீர்க் கங்கை தன்னைப் படர்சடைப் பாகம் வைத்தார்
அரக்கனுக் கருளும் வைத்தா ரையனை யாற ஞரே.　　10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஐயன் ஐயாறஞரே கங்கையைச் சடையுள் வைத்தார்; திசைதிசை தொழவும் வைத்தார்; பொடிதனைப் பூச வைத்தார்; அடியிணை தொழவும் வைத்தார்; உலகங்களனைத்தும் வைத்தார்; அடைதர அருளும் வைத்தார்; எமக்கென்றுமின்பம் வைத்தார்; கடுவினை களைய வைத்தார்; பத்தர்கட் கருளும் வைத்தார்; சித்தத்தை ஒன்ற - சிவமதே நினைய - முத்தியை முற்ற - முறைமுறை நெறிகள் வைத்தார்; கீதங்கள் பாடக் - கின்னரந் தன்னை வைத்தார்; இரப்பவர்க் கீய வைத்தார்; ஈபவர்க்கருளும் - கரப்பவர்க்கெல்லாம் கடுநரகங்களும் வைத்தார்; என்றிவை முதலாகப் பேசப்படுகின்ற அருளிப்பாடுகளைச் செய்வார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சடையுள் - கங்கையையும் அரவையும் திங்களையும் வைத்தார் என்று கூட்டிக்கொள்க. திகழ - கங்கையோடு அரவும் என்க. அரவும் வைத்தமையால் மறைந்து தேயாது திகழ என்றும், முனி சாபத்தால் தேய்ந்தொழியாது திகழ என்றும் உரைக்கநின்றது. திசைதிசை தொழவும் - "எந்நாட்டவர்க்கும் இறைவா" (திருவாசகம்).—(2) பொடி - திருநீறு. சாம்பல் (6) என்றதுமிது. "பொங்கு வெண்ணீறு" (9).—(3) உலகங்களனைத்தும் வைத்தார் - உலகங்களைத் தோற்றுவித்து உயிர்கள் அனுபவித்து வினையைக் கழிக்கச்செய்து நிறுவினர்; "விரிபொழி லனைத்தும் வைத்தார்" (6).—(4) எமக்கென்று மின்பம் வைத்தார் - "இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை" (தாண்).—(5) வல்வினை மாய - கொடிய வினைகளும் கழிய; "கடுவினை களைய" (6). கனலா வைத்தார் - முதலிற் கனன்று

எரித்துப், பின்னர் உளனாகச் செய்தார்; ஆட்டுவார் - ஆனைந்தினால் திருமஞ்சனம் ஆட்டுவார்.—(6) அங்கமது - அங்கத்தை உடையது; அதாவது வேதம்.—(7) பத்தர் கட்கு அருளும் வைத்த முறையாவது, சித்தத்தை ஒன்றுவித்தலும், அதனால் சிவமதே நினைய வைத்தலும், அதனால் முத்தியை முற்ற வைத்தலும், அதன் பொருட்டு முறை முறை நெறிகள் வைத்தலும் ஆம் என இப்பாட்டில் வினை முற்றுக்களை எச்சங்களாக்கித் தொடர்ந்து முடித்துக் கொள்க. ஒன்ற - பலதிறத்தும் செல்லாது ஒரு வழிச் செலுத்த; சிவம் அதே - ஏகாரம் பிரிநிலை. "பொதுநீக்கித் தனைநினைய வல்லார்க் கென்றும், பெருந்துணையை" (தாண்). முற்ற - படிப்படியாய் மேலோங்கி வர. முத்தி என்றது முத்தி நெறியேறுந் தகுதியை. "மாலுங் காட்டி வழிகாட்டி வாரா வுலக நெறியேற" (திருவா). முறைமுறை - பக்குவத்துக்கு ஏற்றவாறு படிப்படியாக.—(9) பூதங்கள் - ஐம்பூதங்கள். பூதகணங்கள் என்றலுமாம். கீதங்கள் பாடக் கின்னரம் - என்று கூட்டுக. கின்னரம் - இசை.—(10) இரப்பவர்க்கு ஈதல் - என்பது அன்பின் தன்மை. தம்மிடம் சார்ந்து வேண்டுவார்க்கு என்றலுமாம். ஈபவர் - ஈதலைச் செய்பவர்; இது அன்பினால் நிகழ்வது; ஆதலின் அந்த அன்பு அருளைப்பெற வைத்தார். "அருளென்னு மன்பீன் குழவி" (குறள்). கரப்பவர் - வஞ்சகர்.

VII திருச்சிற்றம்பலம் திருநேரிசை

குண்டனாய்ச் சமண ரோடே கூடிநான் கொண்ட மாலைத்
துண்டனே சுடர்கொள் சோதீ தூநெறி யாகி நின்ற
அண்டனே யமர ரேறே திருவையா றமர்ந்த தேனே
தொண்டனேன் தொழுதுன் பாதஞ் சொல்லிநான் றிரிகின் றேனே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சமணரோடு கூடித் திரிந்த மயக்கத்தை அறுத்துத் தம்மை வந்தடைய அருளிய திருவையாறமர்ந்தருளும் தேன்போன்ற இறைவரை அடைந்து உய்ந்தேன்; அவரை வணங்கவல்லார் வல்வினை மாயும்.

குறிப்பு - பதிக முழுமையும் அமணரினின்று போந்த சரிதக்குறிப்பு. திருவாரூர்த் திருநேரிசைப் பதிகம் பார்க்க.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) துண்டன் - துண்டிப்பவன்; அறுப்பவன்.—(2) வாலிய - பெரிய. ஆலியா - ஆலித்து - அடைந்து-பொருந்தி.—(3) மனத்தினீரே - மனமே. பன்மை இகழ்ச்சி குறித்தது. உள்ளத்தீரே - உள்ளமே. பன்மை பெருமையும் புகழ்ச்சியும் குறித்தது. சமணரோடே - ஒட்டிடும் மனமே! உன்னை இகழ்ந்து பழிப்பதல்லால்வேறு என்செய்வேன். செய்வதென்னே - பழிப்புச்சொல்லைப் பெரியோர் வாக்கினாலும் சொல்லா மரபுடையர்; ஆதலின் செய்வதென்னே என்றார். தேனோடு ஒட்டிடும் உள்ளத்தீரே உம்மை உகந்திட்டேன் என்றது நற்சொல் குறித்தது. நற்சொல்லாதலின் முன் சொன்னதுபோலக் குறிப்பிற் சாற்றாது உகந்திட்டேன் என்று வெளிப்படக் கூறினார். இரண்டிடத்தும் ஒட்டிடும் என்று கூறியது காண்க. ஒட்டுதல்-இரண்டும் ஒரு தன்மைப்படக் கூடுதல்; கலத்தல். "ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்" (பிள் - மயிலை.); "உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி" (தாண்.) சார்ந்ததன் வண்ணமாய் நிற்பது உயிரின் இயல்பு என்ற ஞானசாத்திர உண்மை புலப்படக் கூறியது. "ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத், தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ?" (தாயுமானார்) என்றதும் இக்கருத்து.—(4) பாசிப்பல் - துலக்காமையால் பாசி - மாசு - பிடித்த பல். வாசம் - அன்பு குறித்தது.—(5) வடுக்கள் - கீழ்மக்கள். மதியிலி - மதியில்லாது. மதியிலியாய் —

(6) சோலவு - சொல்லப்பட்டது.—(10) மூதறிவாளன் - ஞான நிறைவுடையவன். அறிவினால் - பிழையும் கழுவாயும் அறிந்து துதித்தமையால்.

VIII திருச்சிற்றம்பலம் திருநேரிசை

தானலா துலக மில்லை சகமலா தடிமை யில்லை
கானலா தாட லில்லை கருதுவார் தங்க ளுக்கு
வானலா தருளு மில்லை வார்குழன் மங்கை யோடும்
ஆனலா தூர்வ தில்லை யையனை யாற னார்க்கே. 1

சகமலா தடிமை யில்லை தானலாற் றுணையு மில்லை
நகமெலாந் தேயக் கையா னுண்மலர் கொய்து நாளும்
முகமெலாங் கண்ணீர் வார முன்பணிந் தேத்துந் தொண்டர்
அகமலாற் கோயி லில்லை யையனை யாற னார்க்கே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஐயன் ஐயாறனார்க்குத் தானலாது உலகமில்லை; சகமலாது அடிமையில்லை; தெரிபுரி சிந்தையார்க்குத் தெளிவலால் அருளுமில்லை; தொண்டலாற் றுணையுமில்லை; எரியலால் உருவமில்லை; அரியலால் தேவியில்லை; அன்பலாற் பொருளுமில்லை; மீளா ஆளலாற் கைமாறில்லை; தொண்டர் அகமலாற் கோயில் இல்லை; என்றிவ்வாறு உறுதிப் பொருள்படப் பல தன்மைகளையும் எடுத்துரைத்தது.

பதிகபாட்டுக் குறிப்பு:—(1) அலாது - இல்லை என்று எதிர்மறை முகத்தாற் கூறியவை உறுதிப் பொருள்பட நின்று இன்றியமையாமையை விளக்கின. தானலாது உலகம் இல்லை - உலகம் தன்னிடத்தில் ஒடுங்கி மீள உளதாகும். விசுவவுருவினன் என்றலுமாம். சகமலாது அடிமை இல்லை - அவ்வாறு தன்பால் மீள உளதாகிய அவ்வுலகம் தமக்கு அடிமையாயுள்ளது என்க.—(2) நொடிவது - கையாற் காட்டியுணர்த்துவது; ஆல். முன்னையது, மரம். கல்லாலினடியில் இருந்து, மாமுனிவர்க்கு ஞானமுணர்த்தியது. (வேலை) ஆல் - பின்னையது, விடம் - ஆலாலம்.—(3) குழலியோடு துணையலால் இருக்கையில்லை என்றது எஞ்ஞான்றும் அருளுடன் கூடியவர் என்றதாம். தெரிபுரி - தெரி - தெரிதல். புரி - இடைவிடாது சொல்லுதல் - நினைத்தல்.—(4) கலந்தபின் பிரிவதில்லை. மீளா நெறியாகிய முத்தியிற் கலந்த உயிர்கள் பின்னர்ப் பிரிந்து வருவதில்லை என்று ஆன்ம நிலையிலும், இறைவர் உயிர்களுடன் அநாதியே கலந்து நிற்பதால் பின் எப்போதும் பிரிவதில்லை என்று இறை நிலையிலும் வைத்துரைக்க நின்றது.—(5) எரியுருவம் - நிறமும் செயலும் குறித்தது. அமரர்...ஏத்தும் அரி - தேவர்களும் பிறரும் தமக்கு மேற்பட்ட அரியையே தெய்வமாக ஏத்துகின்றமை குறிப்பு. "தேசங்க டொழநின்ற திருமாலாற், பூசனை" (காந்தாரம் - காஞ்சி - 6). அரியலால் தேவி யில்லை - சங்கரநாராயணரான திருமேனி.—(6) பொடி - திருநீறு. "சாந்தமுந் திருநீறு" (திருவிசைப்). பொருள் - இறைவர் கொள்ளும் பொருள்.—(7) ஆளலாற் கைம்மாறு இல்லை - இறைவர் உயிர்களுக்கு நித்தமும் நீங்காது செய்யும் அருளுக்குக் கைம்மாறு அவருக்கு நித்தமும் நீங்காது ஆட்செய்வதையன்றி வேறு இல்லை. அடிமை செய்யும் வகையும் அதனால் வரும் பயனும் மேல்வரும் பாசுரத்திற் கூறப்படுவன.—(8) சகம் - உலகத்துயிர்கள். தாள் - ஸ்ரீபாதம். நகமெலாம்...ஏத்தும் - அடிமை செய்யும் வகை. தொண்டர் அகமலாற் கோயிலில்லை என்றது அவர் விரும்பி வீற்றிருக்கும் இடம் என்ற கருத்து. ஏனைத் தாவரங்களைத் திருமேனியாகக் கொண்டு இறைவர் வீற்றிருப்பதனை விலக்குதல்

கருத்தன்று. "ஏந்தெழி லிதயங் கோயில் மாளிகை" (திருவிசைப்பா).—(9) கமை - க்ஷமை என்பது வடமொழி. பொறுமை; யோகசாதனம் குறித்து நின்றது. அமைவிலா - அளவுபடாத.

IX திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

சிந்திப் பரியன; சிந்திப் பவர்க்குச் சிறந்துசெந்தேன்
முந்திப் பொழிவன; முத்தி கொடுப்பன; மொய்த்திருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன; பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந் தாடுமை யாற னடித்தலமே. 1

இருடரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருடரு கண்ணிழந் துண்பொரு ளுடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்
றருடரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே. 4

எழுவா யிறுவா யிலாதன; வெங்கட் பிணிதவிர்த்து
வழுவா மருத்துவ மாவன; மாநர கக்குழிவாய்
விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன; மீட்பன; மிக்கவன்போ
டழுவார்க் கமுதங்கள் காண்கவை யாற னடித்தலமே. 5

நின்போ லமரர்க ணீண்முடி சாய்த்து நிமிர்ந்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன; பாங்கறியா
என்போ லிகள்பறித் திட்ட விலையு முகையுமெல்லாம்
அம்போ தெனக்கொள்ளு மையனை யாற னடித்தலமே. 10

மலையான் மடந்தை மனத்தன; வானோர் மகுடமன்னி
நிலையா யிருப்பன; நின்றோர் மதிப்பன; நீணிலத்துப்
புலையாடு புன்மை தவிர்ப்பன; பொன்னுல கம்மளிக்கும்
அலையார் புனற்பொன்னி சூழ்ந்தவை யாற னடித்தலமே. 11

உற்றா ரிலாதார்க் குறுதுணை யாவன; வோதிநன்னூல்
கற்றார் பரவப் பெருமை யுடையன; காதல்செய்ய
கிற்பார் தமக்குக் கிளரொளி வானகந் தான்கொடுக்கும்
அற்றார்க் கரும்பொருள் காண்கவை யாற னடித்தலமே. 13

சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர்துன்னு
நிழலா வன;வென்று நீங்காப் பிறவி நிலைகெடுத்துக்
கழலா வினைகள் கழற்றுவ; கால வனங்கடந்த
அழலா ரொளியன காண்கவை யாற னடித்தலமே. 19

வலியான் றலைபத்தும் வாய்விட் டலற வரையடர்த்து
மெலியா வலியுடைக் கூற்றை யுதைத்துவிண் ணோர்கள்முன்னே
பலிசேர் படுகடைப் பார்த்துப்பன் னாளும் பலிகழ
வலியா நிலைநிற்கு மையனை யாற னடித்தலமே. 20

திருச்சிற்றம்பலம்

குறிப்பு:—இத்திருப்பதிகம் இருபது திருப்பாட்டுக்களை யுடையது. புறனடை யாற் கொள்க. ஐயாறனடிலத்தலமே என்ற மகுடம் புனைந்ததாய் இறைவரது திருவடித் தலங்களையே பற்றி அவற்றின் அருட்டன்மைகளைப் புகழ்வது கருத்து.

சில பிரதிகளில் 11—20 வரை திருப்பாட்டுக்களைத் தனிப்பதிகமாக எழுதியுள்ளார். பதிகம் பத்துப்பாட்டுடையதா யிருத்தல் வேண்டுமென்னும் கருத்துடன் சுவடி எழுதுவோர் அவ்வாறு பிரித்து எழுதியிருத்தல் கூடும். திருமறைக்காட்டுத் திருக் குறுந்தொகை "பண்ணினேர் மொழியாள்" என்ற பதிகப்பாட்டுக் குறிப்பின் கீழ் எழுதியவை பார்க்க. (பக்கம் சுருடு.)

குறிப்பு :—பத்துப்பாட்டுக் கொண்டுள்ளமையாற் பெற்ற, பதிகம் என்னும் காரணப் பெயர் பொது விதியையுணர்த்தும். பெரும்பான்மையும் அதுவே. ஆனால் 11 - பாட்டுக்கள் கொண்ட திருத்தொண்டத் தொகை முதலியனவும், 12 பாட்டுக் கள் கொண்ட ஆளுடைய பிள்ளையாரது வழிமொழித் திருவிராகம், பல்பெயர்ப்பத்து, திரு ஏகபாதம் முதலியனவும், ஆளுடைய அரசுகளது திருவங்கமாலை முதலியவையும், ஆளுடைய நம்பிகளது திருப்பாச்சிலாச்சிராமப் பதிகம் முதலியனவும், ஏழு பாட்டுக் கொண்ட திருவாசகம் திருக்கழுக்குன்றப் பதிகமும், பிறவும் இவ்விதிக்குப் புறனடை யாய்ப் பத்தின் மிக்கும் குறைந்தும் வருவனவும் பதிகம் என்று வழங்கப்படுதலை வலி யுறுத்துவன. சித்தத் தொகைக் குறுந்தொகைப் பதிகம் முப்பது பாட்டுக் கொண் டமையும் இங்கு நினைவு கூர்தற்பாலது.

ஐயாறன் அடித்தலமே, சிந்திப்பவர்க்குச் செந்தேன் பொழிவன ; பழவினை தீர்ப் பன - ஏழேழ் பிறப்பு மறுந்தன ; விடாத தொண்டர்க் கணியன ; பிணி தவிர்த்து வழுவா மருத்துவமாவன ; மாநரகக்குழிவாய் விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன - மீட்பன ; நீணிலத்துப் புலையாடு புன்மை தவிர்ப்பன ; போற்றி யென்பார் புலம்பும் பொழுதும் புணர்துணையாவன ; உற்றரிலாதார்க் குறுதுணை யாவன ; கற்றார் பரவப் பெருமையுடையன ; அற்றார்க் கரும்பொருள் ; மந்திரிப்பார் ஊனைக்கழித் துய்யக் கொண்டருள் செய்வன ; உத்தமர்க்கு ஞானச்சுடராய் நடுவே யுதிப்பன ; தொண்டு பட்டார்க் காதரமவன ; ஞானமு ஞானப்பொருளும் ஆவன ; துயர்வெயிற் சுட்டிடும் போது அடித்தொண்டர் துன்னு நிழலாவன ; என்றிவ்வாறு பலதிறத்தனவாகிய அருளிப்பாடுகளால் அறியப்படுவன.

இப்பதிக முழுமையும் திருவடித் தோத்திரமாகப் பாடஞ்செய்து பயின்றோதத் தக்கது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) சிந்திப்பவர் - சிந்திப்பு அரியனவாயினும், திரு வருளின் பரமாகி வல்லவா நினைவோர் ; செந் தேன் - இன்பம். பழவினை தீர்ப்பன (வாகி) முத்திகொடுப்பன என்க. மொய்த்திருண்டு - பந்தித்து - நின்ற - பழவினை - ஈண்டுச் சஞ்சித கன்மம். ஆணவமலச் சார்பால் மாயை கன்மங்களையும் இருளாகக் கூறுதலுண்டென்பது "இருள் சேரிருவினை", "இருள்புரி யாக்கை" என்பவற்றுள் அறியப்படும்.—(2) இழிந்தன - பெயர். இழித்தனவாகிய. ஏழ் ஏழ் - மூண்டு எழு கின்ற ஏழு.—(3) சீலம் - சிவநெறி நிற்றல். விடாத - எஞ்ஞான்றும் பற்றுவிடாத. "கற்பகமே யானுன்னை விடுவே னல்லேன்" (தாண்).—(4) துன்பப் படலம் - துன் பம் செய்யும் ஆணவமறைப்பு. படலம் - திரை - திரையிட்டது போன்று கண்மணி யின் பார்வையை மறைப்பதால் இப்பெயர் பெற்ற நோய். புறநோக்கை மறைக்கும் படலம்போல, அறிவை மறைப்பது இருள்தரு துன்பப்படலமாகிய ஆணவம். இருடரு துன்பப் படலம் - உவமையாகு பெயர். இருடரு படலம் - துன்பப்படலம் எனத் தனித்தனி கூட்டி, இருள் தருதல் கேவலத்தில் அறியாமையைச் செய்தல் எனவும், துன்பந் தருதல் - சகலத்தில் விபரீத உணர்வால் துன்பம் தருதல் எனவும் கொள்க. கண் - உயிரறிவு. "ஞானத்தின், கண்ணை மறைத்த கடியதொழி லாணவத் தால்" (போற்றிப் பஃறொடை). உண் பொருள் - உலக அனுபவப் பொருள். புகல்-

சார்விடமாகிய திருவடி. அகக் கண்ணிழந்ததனால், புறக்கண்ணிருந்தும், குருடர் எனப் பட்டார்; குழி என்றதற்கேற்பக் கைகொடுத்து ஏற்றும் என்றார்.—(5) எழுவாய்-இறுவாய் - தொடக்கம் - ஈறு; ஆதி - அந்தம்; வெங்கண்பிணி - பிறவிப்பிணி - பிணிக்கெல்லா மிருப்பிடமாதலின் வெங்கண் என்றார். பிறவிப்பிணி என்றதற்கேற்ப மருத்துவமெனப்பட்டது. நரகக்குழிவாய்......மீட்பன - நரகத்து வீழும் செயலுடையோரை அச்செயலுக்குத் தக்கவாறு அங்கு விழுத்தி அனுபவிக்கச் செய்து, பின் அங்கு நின்றும் மீட்பன. வீழ்ப்பன - என்றதும் கருமம் அனுபவித்துக் கழிக்கச் செய்யும் அருள் ஆதலின் திருவடியின் செயலாயிற்று. அன்போடு அழுவார்க்கு அமுதங்கள் - "அன்புள் ளுருகி யழுவ னரற்றுவன்" என்றபடி ஆனந்தக் கண்ணீர் பெருக்குவோர்க்குத் தரும் இன்பம் அமுது எனப்பட்டது. அமுதம் - வீடு என்றலுமாம்.—(6) தோணித்தொழில் - கடலில் அழுந்தாது சரக்குக்களை மட்டும் இங்குமங்கும் செலுத்துதல்.—(7) இப்பத்தரை - நாயனாரையும், "போதொடு நீர்சுமந்தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்" என்றபடி அவர் முன் செல்லக்கண்ட அடியார்களையும் உடன் குறித்தது. இ - அண்மைச் சுட்டு. அவர்களை மிக அணுகி நாயனார் இருந்தமை குறித்தது. பெருஞ்செல்வம் - அருட்செல்வம்.—(8) திருந்தி - நிறுத்தி - செறுத்து - வருந்தி - ஓச்சி - சென்று - உழக்க என்பன சிவனை அடையும் யோகம் முதலிய சாதனம் குறித்தன. வல்லோர் - அவற்றினருமை குறித்தது. பட்டிகை - சிங்காதனம் போல அலங்கரித்தலாம். அருந்தி - அன்பு; அருத்தித்து - அரும்தவர் - அருத்தித்து - அருத்தி என்னும் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம். விரும்பி என்பது பொருள்.—(9) பறண்டை-கூகைவகை? வாத்திய வகை என்பாருமுண்டு. பிணக்காடு - ஊழிமுடிவில் உலகமழிந்தநிலை.—(10) நின்போல் - நின்னைப்போல யாமும் தேவர்கள் என்று எண்ணும். "மூவரென்றே யெம்பிரா னொடுமெண்ணி...தேவரென்றே யென்னபாவம் திரிதவரே" (திருவா.) நிமிர்த்து - மனத்தை வணங்கச் செய்யாது நிமிரச்செய்து. "பொய்யும் பொக்கமும் போக்கிப் புகழ்ந்திலராகி" என்க. பைம்போது - கற்பகம் - மந்தாரம் முதலிய தேவமரப் பூக்கள்; விதிப்படி கொய்து கொணரப்பட்டவை. உழக்கிப் பவளந் தழைப்பன - உழக்கி - உழக்குதலால். உழக்குதலாவது அன்பின்மைபற்றி ஏற்றுக்கொள்ளாது ஒதுக்குதல். திருவடி பவளம் போன்றிருத்தலுக்குக் காரணம் கற்பித்தவாறு; தற்குறிப்பேற்ற அணி. பாங்கு - அடிமை செய்யும் நெறி. என்போலிகள் - பறித்து இட்ட - போலி - என்னைப் போன்றவர்கள். அடிமைத்திறம் இல்லாது அடியாரைப் போன்றிருத்தலால் போலி என்ற குறிப்புமாம். "நாடகத்தா லுன்னடியார் போனடித்து" (திருவாசகம்). இலை - முகை - விதியறியாமை குறிப்பு. அம்போது - விதிப்படி கொண்ட புதுமலர்கள். கொள்ளும் - ஏற்றுக்கொள்ளும். கொள்ளுதல்-உழக்குதலுக்குமறுதலை. இப்பாட்டினால் நாயனார் ஆன்மார்த்த பூசை சிவாகம விதிப்படி செய்த நியமமுடையார் என்பது விளங்கும். "தொண்டனேன்" என்ற திருநேரிசையும் பிறவும் காண்க. இஃது பூசை முடிவிற் பிரார்த்திக்கப் பயிலத்தக்க சிறப்புடைய பாசுரம்.—(11) நிலையாயிருப்பன - நிலைபெற்ற தலைவராம் தன்மை குறித்தது. புலையாடு புன்மை-பிறவி. புலை ஆடு - புலால் கமழும் உடம்பினை எடுத்தல்.—(13) உற்றார் - இலாதார் - சிவனைத்தவிர வேறு உற்றார் இல்லாதார். "உறவாவா ருருத்திரபல் கணத்தி னோர்கள்" (தேவா - தாண்); "மற்றுப் பற்றெனக் கின்றி" (தேவா-நம்பி); "தந்தைதாய் குரவ னாசான் சங்கரன்"-(திருவிளை - புரா - வாத - உப); நன்னூல் ஓதிக் கற்றார் - நன்னூல் - ஞானநூல். ஓதி - பயின்று-கற்றார் - அதன்படி ஒழுகியவர். "கற்றபின் னிற்க வதற்குத் தக" (குறள்); "கற்றுங் கெரியோம்பி" (தேவா).—(14) வானை...மதிப்பன - "அண்ட மாரிரு ளூடு கடந்

தும்பர், உண்டு போலுமோ ரொண்சுடர்" (தேவா). மந்திரிப்பார் - சிவநாமமந்திரம் பயில்பவர். நடுவே - புருவத்திடையில். யோகசாதனையில் - அழிந்தியறியு மிடத்தில். "நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி, யுற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்". ஞானச்சுடர் - ஞான ஒளி.—(15) மாதிரம் - திசை. முகடு - தலை.—(16) ஏணிப்படிநெறி - உயிர்களின் பக்குவ பேதப்படி வகுத்த முத்திப் படிமுறை.—(17) ஓதிய ஞானம் - இறைவர் திருவாய்மலர்ந்த சிவாகமம். ஞானப்பொருள் - ஞானத்தினால் அறியப்படும் பொருள். "ஞேயம்" என்பர். செஞ்சுடர் ஞாயிறு - காலை மாலைகளின் ஞாயிறு வெப்பமின்றிச் சிவந்திருத்தல் குறிப்பு. சோதி - தீ. தூ மதி - அருள்பெற்று வளர்ந்த சந்திரன்.—(18) உமை அம்மையார் செய்த தவத்தின் வரலாறு குறிப்பது. தலசரிதக் குறிப்புமாம்.—*(19) சுழலார் துயர் வெயில் - பிறவிச் சுழலாகிய கொடுந் துன்பம் வெப்பமாக உருவகிக்கப்பட்டது. "வன்பிறவி வேதனை" (தாயுமா). வெயில் என்றதற்கேற்பத் திருவடியை நிழல் என்றார். நிழல் - உவம ஆகுபெயர். கழலா வினைகள் - சஞ்சித கன்மங்கள். பழவினை - (1) என்ற கருத்து. கழற்றுதல் - தீக்கையின் அத்துவ சுத்தியால் ஒழித்தல். "என் வல் வினைக் காட்டைநின் மன்னருட் டீக்கொளுவும் விடங்க" (திருவா). காலவனம் - தேவர் முதலிய எல்லாவுயிர்களையும் அளக்கும் காலதத்துவம். காலவனங் கடந்த - காலங்கடந்த - காலதத்துவத்துக்கு அப்பாற்பட்ட. காலவனம் - சுடுகாடு என்றலும், இருள் என்றலுமாம்.—(20) வலியான் - இராவணன். மெலியா - வேறு யாவ ரிடையிலும் மெலிதலில்லாத.

X　திருச்சிற்றம்பலம்　　திருவிருத்தம்

குறுவித்த வாகுற்ற நோய்வினை காட்டிக் குறுவித்தநோ
யுறுவித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
யறிவித்த வாறடி யேனையை யாற னடிமைக்கண்ணே
செறிவித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 1

*இத்திருப்பாட்டின் அனுபவமாகக் கண்டதோர் உண்மை :—பலஆண்டுகளின் முன் ஆச்சாள்புரம் என வழங்கும் நல்லூர்ப் பெருமணத் தலத்திற்கு ஆளுடைய பிள்ளையாரது திருநாள் தரிசிக்கச் சென்றிருந்தேன். கடும் வெயிலில் பகல் 16, 17 நாழிகையளவில் நாயனார் திருவீதிப்புறப்பாடு செய்து திருவீதி யெழுந்தருளினர். வைகாசிமாத மாதலால் வெயிலின் கொடுமையால் பவனியில் முன் செல்லும் இசை வாணர்களும், குடைகொடி சின்னம் பிடிப்போர்களும், பின் செல்லும் வேதபாராயண மறையவர்களும் உடன் வரலாற்றாது, அங்கங்கும் பக்கங்களில் வீடுகளில் அமைத்த பந் தர்களிடை ஒதுங்கி வருவாராயினர். திருவீதியில் சிபாதந் தாங்குவோரும் அருச்சகரும் தாம் விடாது போவதாயினர். பின்பற்றிவந்த தேவார பாராயணத் திருக்கூட்டத் தாரும் விடாது பின்பற்றலானார் ; ஆயினும் வெயிலின் கொடுமையினால் நிற்கவு மாட் டாது, அன்புநிலையின் நியதியினால் விட்டு நீங்கவுமாட்டாது வருந்தினர். அடியேனும் உடன் நின்றேன். அதுபோழ்து தேவார ஐயா அவர்கள் இத்திருப்பாட்டினை மன முருகி ஓதினர். 5 கணங்களுக்குள் மேகஞ்சூழ்ந்து ஞாயிற்றை மறைத்தது. பின் அந் நாள் முழுதும் ஞாயிறு காணப்படவில்லை. இஃது அடியேன் உடனிருந்து கண்ட காட்சி. இதனைச் சில அன்பர்களிடத்துப் பேசிப் போற்றிக்கொண்டிருந்தேன். கேட்டு மகிழ்ந்த அன்பர்கள், சில ஆண்டுகள் கழித்துத் திருப்புக்கொளியூர் அவிநாசியில் நாய னாரது திருநாளின்போது இவ்வாறு கொடிய வெயில் பொறுக்கலாற்றாது அந்நிகழ்ச் சியை நினைந்து இத்திருப்பாட்டினை ஓதினர். அதுபோலவே பயனையும் பெற்றதனை மகிழ்ந்து எனக்கறிவித்தனர்.

தருக்கின நான்றக வின்றியு மோடச் சலமதனால்
நெருக்கின வாநெடு நீரினின் றேற நினைந்தருளி
யுருக்கின வாறடி யேனையை யாற னடிமைக்களே
பெருக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 4

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—எனது வினைக்கீடாக மறக்கவும் செய்து, அவ்வாறு மறந்த தன் பயனாகச் சூலைநோய் வினைகாட்டி, அந்நோய் வினையையும் தீர்ப்பானாகத்தருளி, ஐயாறன் அடியேனைத் தன் அடிமைக்கண்ணே அறிவித்துச் செலுத்தித், தன் பொன்னடிக்கீழ் என்னைச் செறிவித்தவாறுதான் என்னே அற்புதம் !

குறிப்பு :—இப்பதிக முழுமையும் சூலைதந்து சமண் தீர்த்து ஆட்கொண்டருளிய சரிதக் குறிப்புடையது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) குறுவித்த - குறுகுவித்த. குறுகுதல் - கூடுதல். நோய் உறுவித்தல் - சூலை தந்து தண்டித்து அதனால் வினையை அனுபவிக்கச் செய்து கழித்தல் கருத்து. அடிமைக்குளே என்பதும் பாடம். அடிமைக்கள் - பன்மை உயர்வு குறித்தது. பலதிறப்பட்ட அடிமைத்தொண்டு என்றலுமாம். "மாலுங் காட்டி நெறிகாட்டி வாரா வுலக நெறியேறக், கோலங் காட்டி யாண்டானை" (திருவா). ஆறு என்பது கடை குறைந்து ஆ என நின்றது. ஆ - ஆறுதான் என்னே! அற்புதம். அடியேனை என்றும், அடிமைக்களே என்றும், அடிக்கீழ் என்றும் இப்பதிகத்திலும், "அடித்தலமே" என்று முன் குறித்த திருப்பதிகத்திலும், "ஆடகக்கால்" என்று மேற் குறிக்கும் பதிகத்தினும் திருவடி சம்பந்தமாகவே போற்றியமை குறிக்கத்தக்கன. இக்குறிப்புப்பற்றித் "தொண்டனார்" (1645) என்றதும் இங்குக் கருதுக. அடிக்கீழ்ச் சேர்வித்தவா என்க.—(2) கூர்வித்தல் - மிகுதிப்படுத்துதல். ஊர்வித்தல் - அனுபவிக்கச் செய்தல். அடிமைக்களே - ஆர்வித்தவா என்று கூட்டுக. ஆர்வித்தல் - அன்பு நிறைவித்தல். எனையே அடிக்கீழ்ச் சேர்வித்தவா என்று கூட்டுக. இவ்வாறே மேல் வரும் பாட்டுக்களிலும் கொள்க.—(3) சலமே தாக்கினவா - சலம் - மாறுபாடு. சைவத்திறத்தினின்றும் திறம்பிய தன்மை சலம் எனப்பட்டது. சலம் - துன்பம் என்றலுமாம். "ஏழையே னான்பண் டிகழ்ந்த வாறே" என்ற ஏழைத் திருத்தாண்டகத்தில் இகழ்ந்த என்றது சலத்தின் காரணத்தாலாகியது என்பதாம். தண்டித்த நோய் - தண்டிப்பதற்காகத் (கழுவாயாகத்) தந்த நோய்; சூலை. "இறை வழுவுந் தொண்டரையா ளத்தொடங்குஞ் சூலைவே தனைதன்னைக், கண்டருநெற் றியரருள" (1314) என்றது காண்க. நோய் நீக்கினவா - "மறப்பிணிதான், அங்நின்ற நிலைக்கணகன் றிடலும்" (1336) என்றபடி பதிகம் பாடிய உடனே நோய் நீங்க அருள் பெற்றமை குறிப்பு. நெடு நீரினின் றேற - கயிலைச்சாரற் பொய்கையின் மூழ்கி நின்று ஐயாற்றில் வாவியில் வந்து ஏறும்படி என்ற சரிதக் குறிப்பு. மேல் வரும் பாசுரத்திலும் இவ்வாறே கூறுதல் காண்க. அடிமைக்களே ஆக்கினவா-ஆக்குதல்-ஆகச் செய்தல். நோக்கின - இருக்க அருள் செய்த.—(4) சலம் - முன்பாட்டில் சலமே என்ற கருத்து. நெருக்கின - நோய் தந்து நல் உணர்வு வரச்செய்த. உருக்கின - அன்பினால் உருகச்செய்த. பெருக்கின - அன்பு பெருக இருக்க.—(5) இடர்ப் படுத்துக் கழிவித்தவா - கன்மத்தை அனுபவிக்கச்செய்து கழிக்கச் செய்தபடி. அழிவித்த - நோய் நீக்கிய.—(7) படக்கின - படச்செய்த ?. தொடக்குதல் - உள்ளாக்குதல்,—(8) இறப்பித்தல் - தன் வசமிழக்கச் செய்தல்.

XI திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

அந்திவட்டத் திங்கட் கண்ணிய னையா றமர்ந்துவந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. 1

பாடகக் கால்கழற் கால்பரி திக்கதி ருக்கவந்தி
நாடகக் கானங்கை முன்செங்க ணேனத்தின் பின்னடந்த
காடகக் கால்கணங் கைதொழுங் காலெங்க ணாய்நின்றகால்
ஆடகக் காலரி மான்றேர் வலவனை யாற்றனவே. 2

திருச்சிற்றம்பலம்

**பதிகக்குறிப்பு** :—இப்பதிகத்தில் இரண்டு பாசுரங்களே கிடைத்துள்ளன. எனது புந்தியினுள் தானேவந்து புகுந்தருளி நின்ற இறைவனையும் நான் பொய் யென்னல் இயலுமோ? அவரது பொற்பாதம் என்னிடத்ததாய் நின்றது.

**பதிகப்பாட்டுக் குறிப்பு** :—(1) அந்தி - மாலைப்பொழுது. புந்திவட்டம் - புத்தி. சிந்தி - பல திசையும் பரவி. நந்திவட்டம் - நந்தியாவர்த்த மலர். "நந்தி கரவீரம்" (240). வளாவிய - சூடிய.—(2) இப்பாட்டு இறைவரது திருப்பாதத்தையே பலதிறப் படப் போற்றியது. பாடகம் - அம்மையின் காலணி. "பொன்னனையாள் சிலம்புஞ் செறி பாடகமும்" (திருவி - ஐயா - 12). பரிதிக்கதிர் உக்க அந்தி நாடகம் - மாலைப் போதில் கூத்தாடுகின்ற. அந்தி - இங்கு ஊழி முடிந்த இடைகுறித்தது. காடகம் - காட்டகம் என்பதில் டகரவொற்று இரட்டிக்காது வந்தது; "வீடகத்தே புகுந்திடு வான்" (திருவா.) என்புழிப்போல. எதுகை நோக்கிக் காடகம் என வந்தது செய்யுள் விகாரம் என்றலுமாம். ஆடகம் - பொன். கணாய்-கண்ணாய்; களைகணாய் என்றலுமாம்.

**குறிப்பு** :—இப்பதிகம் ஐயப்பாடு. ஆசிரியர் குறிப்பிடாமையும் கருதுக.

**தலவிசேடம்** :—திருவையாறு - ஐந்து ஆறுகள் சேர்ந்த தலமாதலின் இப் பெயர் பெற்றது. இக்காரணத்தால் இதனைப் பஞ்சநதமென்பதும், பஞ்சாக்கர செபச் சிறப்பினால் செப்யேசம் என்பதும் வடவர் வழக்கு. இத்தலத்தை விரும்பித் தங்கி விட்ட காவிரியைப் பெறுவதற்குக் கடலரசன் இங்குவந்து பூசித்ததன் பயனாகக் காவிரி ஒரு கலையோடும் கிழக்கே சென்று, கடலடைந்தனள் என்பது தலவரலாறு. "ஆழி வலவனின் றேத்தும்" என்ற தேவாரம் இக்குறிப்புப் பற்றியதென்ப. சிலாத முனிவர் தவத்தால் அவர்க்கு மகனாக அவதரித்த திருநந்திதேவர் பூசித்துச் சிவசாரூப மும், கணநாயகமும் பெற்றுச் சுயசா தேவியை மணம் செய்விக்கப்பெற்று அபிடேகிக் கப்பெற்ற சிறப்பினை "நங்க ணாதனை நந்தி தவஞ்செய்து, பொங்கு நீடரு ளெய்திய் பொற்பது" (45) என்று திருமலைச் சிறப்பில் ஆசிரியர் எடுத்துக் காட்டுவதும், ஆண் டுரைத்தவையும் பார்க்க. தம்மை வழிபட்ட ஒரு மறைச்சிறுவரின் பொருட்டு இறைவர் இயமனைத் தண்டித்து, அவரை ஆட்கொண்டமைபற்றி, "ஆட்கொண் டார்" என்ற திருப்பெயருடன் தெற்குக் கோபுர வாயிலில் விளங்க வீற்றிருந் தருளுகின்றார். சத்தத்தானம் என்னும் ஏழு தலங்களுள் முதன்மை பெற்றது. இலக்குமி பூசித்துப் பேறுபெற்ற தலம். திருக்கோயில் இரண்டாவது சுற்றில் இலக்குமி தவஞ்செய்து கொண்டிருக்கின்றாள் என்றலால், இன்றும் அங்கு ஒருவரும் போவதில்லை. தம்மைப் பூசிக்கும் சைவர் ஒருவர் காசிக்குச் சென்று குறித்த காலத்தில் வராமையால் பூசைமுறை தவறநேர்ந்தபோது அவரது வடிவோடு இறைவர்

தாமே எழுந்தருளித் தம்மைத்தாமே பூசித்த சிறப்பு திருவாசகத்துள் "ஐயா றதனிற் சைவ ளாகியும்" என்று போற்றப்பட்டதென்ப. அதன் நினைவாக இன்றும் திருவிழா வில், இறைவர், சைவராக இருந்து மாகேசுர பூசை கொண்டருளும் சிறப்பு ஒரு திரு நாளாகக் கொண்டாடப் பெறுகின்றது. அதன் பயனாக இன்றளவும் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனகருத்தர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டு வருகின்றது. இந்திரன் - வாலி முதலியோர் பூசித்தமை திருப்பதிகங்களுட் காண்க. திருநாவுக் கரசு நாயனார் இங்குத் திருக்கயிலைக் காட்சி கண்டருளிய வரலாறு புராணத்தினுள் முன்னர் (1634 - 1650) விரிக்கப்பட்டது. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடை யது. ஆளுடைய நம்பிகளும் சேரமான் பெருமாளநாயனாரும் திருக்கண்டியூரை வணங் கியபோது திருவையாறு எதிரே தோன்றியதனால் தரிசிக்க விரும்ப, அக்காலம் காவிரி கரைபுரள வெள்ளம் பெருகியதால் வருந்தி நின்று, அக்கரையில் நின்றபடியே "ஐயா றுடைய அடிகளோ' என்று நம்பிகள் திருப்பதிகம் பாடிய அளவில், ஐயாறப்பர் "ஓலம்; ஓலம்" என்று அழைத்து, அவர்கள் வந்து மீளுமளவும் காவிரியை வழி விலகி நிற்கும்படி செய்தருளி, அவ்விரு பெருமக்களையும் வந்து தரிசிக்கச் செய் தருளிய பெருமையுடையது. (கழறிற் - புரா - 131 - 140). சுவாமி - செம்பொற் சோதி நாதர்; ஐயாறப்பர்; (பஞ்சநதீசுவரர்). அம்மை-அறம் வளர்த்த நாயகி; (தர்ம சம்வர்த்தனி). விநாயகர் - ஆதி விநாயகர். தீர்த்தம் - சூரிய புட்கரணி - காவிரி முதலியன; பதிகம் 18.

இது, தஞ்சாவூர்ப் புகை வண்டி நிலயத்தினின்றும் வடக்கே கற்சாலை வழி 6 நாழிகை யளவில் திருக்கண்டியூரை யடைந்து, அங்கு நின்றும் வடக்கே கற்சாலை வழிப் பாலத்தின் மூலம் காவிரியைக் கடந்து $1\frac{1}{2}$ நாழிகை யளவில் அடையத்தக்கது. மோடார் பஸ் முதலிய வசதிகள் பலவும் உண்டு.

1651. நீடிய வப்பதி நின்று நெய்த்தான மேமுத லாக
மாடுயர் தானம் பணிந்து மழபாடி யாரை வணங்கிப்
பாடிய செந்தமிழ் மாலை பகர்ந்து பணிசெய்து போற்றித்
தேடிய மாலுக் கரியார் திருப்பூந் துருத்தியைச் சேர்ந்தார். ௩௮௬

(இ - ள்) வெளிப்படை. நீடிய அத்தலத்தினின்றும் திருநெய்த்தானம் முத லாகப் பக்கத்தில் உள்ள தலங்களைப் பணிந்து, திருமழபாடிக்குச் சென்று இறைவரை வணங்கிப் பாடிய செந்தமிழ் மாலையாகிய திருப்பதிகம் அருளிச்செய்து திருப் பணிகள்செய்து துதித்துப், பின்னர்த், திருவடி காணத் தேடிய திருமாலுக்கு அறி வரியவராய் நீண்ட சிவபெருமான் எழுந்தருளிய திருப்பூந்துருத்தியை அடைந்தனர்.

(வி - ரை) நீடிய - அருளால் நீடிய. நெய்த்தானமே - ஏழு தலங்களுள் ஒன்றாய்த் திருவையாற்றை அடுத்துள்ள சிறப்புப்பற்றி ஏகாரம் தந்தோதியதுமன்றி முதலாக என்றும் கூறினார்.

முதலாக மாடு உயர் தானம் - இவை திருப்பெரும்புலியூர் முதலாயின. மாடு - பக்கம்; மாடுயர் - மாடு - செல்வம் என்று கொண்டு, சிவனருட் செல்வத்தால் ஓங்கும் என்றுரைத்தலுமாம்.

மழபாடியாரை வணங்கி - தானம்-பணிந்து - என்றதனால் மழபாடித் தலத்தை வணங்கி உட்புகுந்தமை பெறவைத்து மழபாடியாரை வணங்கியமை மட்டிற் கூறினார்.

தேடிய - எங்குமிருப்பவரை ஓரிடத்தில் இல்லாதவர்போல் எண்ணித் தேடினர் என்பது குறிப்பு. "எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார், இங்குற் றேனென் றிலிங்கத்தே தோன்றினன்" (இலிங்க புரா - குறுந் - 10). 386

திருநெய்த்தானம்

I திருச்சிற்றம்பலம் திருநேரிசை

காலனை வீழச் செற்ற கழலடி யிரண்டும் வந்தென்
மேலவா யிருக்கப் பெற்றேன் மேதகத் தோன்றுகின்ற
கோலநெய்த் தான மென்னுங் குளிர்பொழிற் கோயின் மேய
நீலம்வைத் தனைய கண்ட னினைக்குமா நினைக்கின் றேனே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திரு நெய்த்தானத் திறைவர் வாழ்த்துவார் வாயினுள்ளார்; சிந்திப்பார் சிந்தையுள்ளார்; நீதியாய் நியமமாகி நின்றார்; அவரைக் கூடுமாறு அறிகிலேன்; நான் வாழ்வுற அவரை நினைக்குமா நினைக்கின்றேன்; நெய்த்தானமென்று குறைதரு மடியவர்க்குக் குழகனைக் கூடலாமே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மேதக - மேன்மை பெற.—(3) குறை தரும் - குறைந்தடையும். அபயம் புகும்.—(7) மேலவர் முகடு - விண்ணின் முகடு. நட்டமதாடுகின்ற மேலவர் என்று முடிப்பதுமாம்.—(8) பந்தித்த - சுற்றிக்கட்டிய.

II திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

பாரிடஞ் சாடிய பல்லுயிர் வானம ரர்க்கருளிக்
காரடைந் தகடல் வாயுமிழ் நஞ்சமு தாகவுண்டான்
ஊரடைந் திவ்வுல கிற்பலி கொள்வது நாமறியோம்
நீரடைந் தகரை நின்றநெய்த் தானத் திருந்தவனே. 1

தூங்கான் றுளங்கான் றுழாய்கொன்றை துன்னிய செஞ்சடைமேல்
வாங்கா மதியமும் வாளர வுங்கங்கை தான்புனைந்தான்
தேங்கார் திரிபுரந் தீயெழ வெய்து தியக்கறுத்து
நீங்கா னுமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 9

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—உமையவளோடு நெய்த்தானத் திருந்தவரே நஞ்சமமுதாக வுண்டான் - திரிபுரந் தீயெழச் செற்ற சிலை யுடையான்; என்றிவை முதலிய தன்மைகளா லறியப்படுபவர்; ஈடழியா தென்னை யாண்டு கொண்டார்; நந்தீவினை தீர்ப்பர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) காரடைந்த கடல் - நீரடைந்த கரை - த-கடல் = த-கரை - இரண்டிடத்திலும் த என்பதனை அளவு ஒரு மாத்திரை நீட்டிக் கூவிளச் சீராகக்கொள்க.—(2) வேல் - ஆயுதப் பொதுமையை உணர்த்திச், சூலம் என்ற பொருளில் வந்தது. மங்கையும் நீயும் - இருந்ததுவே - "இட்டம் உமையொடு நின்ற" (4), "கண்ணியோர்பான் மகிழ்ந்தான்" (5); "சேர்ந்தார் உமையவளோடு" (6) "உமையவளோடு" (8); "நீங்கான் உமையவளோடு" (9) இவை யெல்லாம் இத்தலத்து அம்மையாரின் சந்நிதிச் சிறப்பு உணர்த்தி நின்றன.—(5) கொன்றை துழாய் - துழாய் திருமால் பாகமும், கொன்றை இறைவர் பாகமும் குறித்தன. அன்றித் துழாய் சிவபூசைக் குரியதுமாம். "துழாய் கொன்றை" (9).—(9) தூங்கான் துளங்கான் - தூங்குதல் துளங்குதலின்றி யிருத்தல். தேங்கார் - பகைவர்.—(10) ஊட்டி நின்றான் - வினைப் பயன்களை அனுபவிக்கச் செய்து தாம் சாட்சி மாத்திரையாய் நிற்பவர். வான் - நிலம் - வானிலும் நிலத்தும்

வாழும் உயிர்கள். ஆகு பெயர். இனம் பற்றிக் கீழுலகத்தவர்களையும் கொள்க. அன்றினர் - பகைவர்.

III திருச்சிற்றம்பலம் திருக்குறுந்தொகை

*கொல்லி யான்குளிர் தூங்குகுற் றாலத்தான், புல்லி யார்புர மூன்றெரி செய்தவன்,*
*நெல்லி யானிலை யானநெய்த் தானனைச், சொல்லி மெய்தொழு வார்சுடர் வாணரே.* 1

*முன்கை நோவக் கடைந்தவர் நிற்கவே, சங்கியாது சமுத்திர நஞ்சுண்டான்*
*நங்கை யோடு நவின்றநெய்த் தானனைத், தங்கை யாற்றொழு வார்தலை வாணரே.* 5

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கொல்லியான், குற்றாலத்தான், குரவன், முதலியவாற்றால் அறியப்படும் திருநெய்த்தானத்தின் இறைவரைத் தொழுவார் சுடர் வாணர் - வலி வாணர் - இன்ப வாணர் ; அவரது வினை பாறும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) கொல்லி - கொல்லிமலை ; தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று ; குளிர்தூங்கு - இடைநிலைத் தீபமாய் கொல்லியுடனும், குற்றாலத் துடனும் கூட்டியுரைக்க நின்றது. புல்லியார் - புன்மையுடையோர். கீழ்மையோர். நெல்லி - நெல்வேலியை யுடையவன். நெல்லிக்காவையுடையவன் என்றலுமாம். வாணர் - வாழ்நர். வாழ்வை யுடையவர். சுடர்வாணர் - சுடர் - ஒளி. ஞான ஒளி குறித்தது. ஒளியுடன் வாழ்பவர். (4)ம் (9)ம் இவ்வாறு.—(2) இரவன் - இரப்பவன். நிரவன் - அழித்தவன். நிரவுதல் - தரைமட்ட மாக்குதல். கோடி வாணர் - கொடி சூழ்தல்போலப் புகழாற் சூழப்படுவோர்.—(3) மலரிடைத் தேன் பாயும் - என்க.—(4) விண்டவர் - பகைவர்.—(5) முன்கை...நிற்க. நகைச் சுவைபடக் கூறியது. சங்கியாது - ஐயமின்றி. உறுதியாக.—(7) கொள்ளி - சுடுகாட்டுக் குறைக் கொள்ளி.—(8) நெற்றி ஆர் அழல் கண்ட - நெற்றியில் தீக்கண்ணினையுடைய.—(9) மாலோடு - நான்முகன்—காலொடு முடி என்று நிரனிரையாகக் கூட்டுக. சேலோடும் செருச் செய்யும் - சேல்மீன்கள் ஒன்றோடொன்று தாக்குதல் செருச் செய்வது போலும் என்றதாம். தற்குறிப்பேற்றம். செரு - போர். "போர்த் தொழில் புரியும் பொரு காவிரியும்" (திருவிடை - மும் - 7). மால் - மயக்கம். அன்பு மேலீட்டினால் தன்வச மிழத்தல் மால் எனப்பட்டது.—(10) புரிந்து - இடை விடாது சொல்லி. அன்பு செய்து என்றலுமாம். பரிந்தன் - பரிவு செய்தவன். இரங்கியவன். பாறும் - அழியும்.

IV திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

*வகையெலா முடையாயு நீயே யென்றும் வான்கயிலை மேவினாய் நீயே யென்றும்*
*மிகையெலா மிக்காயு நீயே யென்றும் வெண்காடு மேவினாய் நீயே யென்றும்*
*பகையெலாந் தீர்த்தாண்டாய் நீயே யென்றும் பாசூ ரமர்ந்தாயு நீயே யென்றுந்*
*திகையெலாந்தொழச்செய்வாய்நீயேயென்றுநின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே.* 1

திருசிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—வகையெலா முடையாயும் நீயேயென்றும், ஆர்த்த வேணக்கன் பன் நீயே யென்றும் இவ்வாறு பலவாறும் நின்ற நெய்த்தானத்திறைவரே! நீர் எனது நெஞ்சினுள்ளீர்.

பதிகப்பாட்டுக்குறிப்பு.—(1) வகை எலாம் உடையாய் - ஆன்மாக்களின் பாசத்தைப் போக்கி இன்பமளிக்கும் வகைகள். மிகை எலாம் மிக்காயும் - மிக்கவற்

*றுக்கெல்லாம் மிக்கவராயும். பகை-சகச மலம் என்னும் ஆணவப் பகை.*—(2) ஆர்த்த-*கட்டிய. "சித்த மெனுந் திண்கயிற்றாற் றிருப்பாதங் கட்டுவித்த, வித்தகனார்" (திருவா) என்றபடி என் அன்பினுற் பிணைக்கப்பட்ட. கட்டுவித்த - என்று பிறவினையாகக் கொண்டுரைத்தலுமாம். "அத்தாவுன் னடியேனை அன்பால் ஆர்த்தாய்" (தாண்).*–3 செல்வாய்த்திருவானாய் - செல்வு - *பொருள்* : *திரு - அருட்டிரு.*—(4) வெண்கயிலை-*வெள்ளிய பனிக்கட்டியால் மூடப்பட்ட கயிலைமலை. "பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தென"*; இப்பதிக *முழுமையும் கயிலைமலையிறைவர் என்ற தன்மைபற்றிக் குறிப்பது காண்க.* வான்கயிலை மேவினாய் - *ஆதிக்கயிலாயன் - முன்கயிலை மேவினாய் - தலையார் கயிலாயன் - பூங்கயிலை மேவினாய் - வானக்கயிலாயன் என்ற பலவும் காண்க.*—(6) அக்கு ஆரம் - *உருத்திராக்கமணி.* தேக்காரமாகோணம் - *திருநாகைக் காரோணம் ? - திரிகோணமலை ?*—(7) இகழும் தலை - *இகழ்தற்குரிய தலையோடு.* ஏந்தி - *பெயர். ஏந்துபவன்.* அகழும் மதில் - *சகரர்களால் அகழப்பட்ட - தோண்டப் பட்ட - கடலாகிய மதில். இராமேச்சரம் கடலாற் சூழப்பட்டதென்பது.*—(8) மூத்து இளையாய் - *முன்னும் பின்னும் உள்ளவர்.*—(9) தந்தைதாய் இல்லாதாய் - *பிறப்பு இல்லாதவர்.*—(10) மறித்தான் - *மறித்தானாகிய அரக்கன்.* மறித்தல் - *குறுக்கிட்டு அசைத்தல்.*

V *திருச்சிற்றம்பலம்* திருத்தாண்டகம்

*மெய்த்தானத் தகம்படியு ளைவர் நின்று*
வேண்டிற்றுக் குறைமுடித்து வினைக்குக் கூடாம்
இத்தானத் திருந்திங்க னுய்வா னெண்ணு
மிதனையொழி யியம்பக்கே ளேழை நெஞ்சே!
*மைத்தான நீணயனி பங்கன் வங்கம்*
*வருதிரைநீர் நஞ்சுண்ட கண்டன் மேய*
*நெய்த்தான நன்னகரென் றேத்தி நின்று*
*நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.* 1

*தினைத்தனையோர் பொறையிலா வுயிர்போங் கூட்டைப்*
பொருளென்று மிகவுன்னி மதியா லிந்த
வனைத்துலகு மாளலா மென்று பேசு
மாங்காரந் தவிர்நெஞ்சே! யமரர்க் காக
*முனைத்துவரு மதின்மூன்றும் பொன்ற வன்று*
*முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீ மூழ்க*
*நினைத்தபெருங் கருணையனெய்த் தான மென்று*
*நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.* 5

*திருச்சிற்றம்பலம்*

பதிகக்குறிப்பு:—*ஏழை நெஞ்சே ! வினைக்குக் கூடாம் இவ்வுடலின் நின்று இங்ஙன் உய்யலாம் என்று எண்ணும் இதனை ஒழி !; குடிவாழ்க்கை வாழ்வு எண்ணிக் குலைகை தவிர் ; தளர்ந்து அஞ்சவேண்டா ; மதியாலிந்த அனைத்துலகமாளலாமென்று பேசும் ஆங்காரந் தவிர் ; இவ்வுடல் வாழ்வை மெய்யென்றெண்ணி வினையிலே கிடந் தழுந்தி வியவேல் ! போகமென்னும் வலைப்பட்டு வீழாதே வருக ; புலைவாழ்வுன்னி யிருந்தாங் கிடர்ப்பட வேண்டா ; உனக்கு இவ்வுடலின் தன்மை உரித்தன்று ; இறைவரது திருநெய்த்தானம் என்று நினையுமா நினைந்தக்கா லுய்யலாமே.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மெய்த்தானத்து - உடம்பினிடத்து. மெய் - உடல். ஐவர் - ஐம்புலவாசை. வேண்டிற்றுக் குறை முடித்து - தாம் வேண்டிய படியே நுகர்வித்து. மைத்தானம் - மை பூசுதற்கிடமாகிய. நினையுமா - நினைக்கும் வகையால். ஆ - ஆறு. கடைக்குறை.—(2) துறவா ஆக்கை - "துறக்கப்படாத உடல்" (திருவிருத்தம்). துறவா - நீக்க முடியாத. எந்த வகையாலும் பெறுதலைத் தடுக்கலாகாத என்றலுமாம்.—(3) பாழாம் குரம்பை - பாழ்படுக்கும் உடல். இரவித் குலம் - பன்னிரண்டு ஞாயிறுகள் என்பர்.—(4) தலையாய்க் கடையாதும் வாழ்வு - உயர்வாகியது மானுட வாழ்வாயினும் கடைபட்டொழிவது என்ற குறிப்பு.—(5) தினைத்தனை - தினையளவும். இழிவு சிறப்பும்மை தொக்கது. பொறை - தாங்கும் தகுதி. கூடு - உடல். மூனைத்து வரும்......நினைத்த பெருங் கருணையன் - ஆங்காரந் தவிர் என்றதற்குக் காரணங் காட்டிய குறிப்பு. தீ மூழ்க நினைத்தல் பெருங்கருணை எனப்பட்டது அவர்களுக்கும் பிறர்க்கும் நற்பயன் தருதலால்.—(6) மிறைபடும் - அழியும். குறைவுடையார் - குறைந்து வந்தடைவோர். வேல் - ஆயுதப் பொதுமை குறித்துச் சூலம் என்ற பொருள் தந்து நின்றது.—(7) பேச - பேசவும். தூசு - உடை; தூசு அக்கரி என்க. தூசாக. தொடரகில்லா - தொடரமாட்டாத. கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை.—(8) தாழ - விரும்ப.—(9) நிரந்தரமா - என்றும். அமராடி - அழித்து.

தலவிசேடம் :—திருநெய்த்தானம் - காவிரிக்கு வடகரையில் 52 வது தலம். வடவர் இதனைக் கிருதஸ்தானம் என்று மொழிபெயர்த்து வழங்கிக் கொள்வர். ஆனால் நெய்யாடுதல் என்பது ஒருவகை விழாக் கொண்டாட்டம். "திருமலிநெய் யாடல் விழாச் செங்காட்டங் குடியெடுப்ப" (சிறுத் - புரா - 18), "மீதணியு நெய்யணி விழா வொடு தினைப்பார்" (திருஞான - புரா - 35) முதலியன காண்க. அவ்விழாச் சிறப்பினாற் போந்த பெயர். "நெய்யாடிய பெருமானிடம்" என்பது ஆளுடைய பிள்ளையார் தேவாரம். திருவையாறுள்ளிட்ட ஏழு தலங்களுள் ஒன்று; சரசுவதி வழிபட்ட தலம். சுவாமி - நெய்யாடியப்பர்; அம்மை - வாலாம்பிகை. பதிகம் - 6.

திருவையாற்றுக்கு மேற்கே மட்சாலை வழி ஒரு நாழிகையில் உள்ளது.

திருமழபாடி

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

நீறேறு திருமேனி யுடையான் கண்டாய்
நெற்றிமே லொற்றைக்கண் ணிறைந்தான் கண்டாய்
கூறாக வுமைபாகங் கொண்டான் கண்டாய்
கொடியவிட முண்டிருண்ட கண்டன் கண்டாய்
ஏறேறி யெங்குந் திரிவான் கண்டா
யேழுலகு மேழ்மலையு மானான் கண்டாய்
மாறானார் தம்மரண மட்டான் கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—மழபாடி மன்னும் மணாளன்றானே, நீறேறு திருமேனியுடையான், தகவுடையார் நெஞ்சிருக்கை கொண்டான், புணர்ச்சிப் பொருளாகி நின்றான் ஆரேனுந் தன்னடியார்க் கன்பன், தன்னியல்வார் மற்றொருவரில்லான், தாங்கரிய சிவந் தானாய் நின்றான், கண்ணப்பர்க் கருள்செய்த காளை, ஓங்காரத்துட் பொருளாய் நின்றான் என்றிவை முதலிய தன்மைகளா லறியப்படுவர்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நீறு ஏறு திருமேனி - ஊழிக் காலத்தில் ஒருவராய் எஞ்சி நிற்கும் தமது திருமேனிமேல் அக்காலத்து உலகம் அழிந்து எஞ்சிய சாம்பல் கிடக்கப்பெற்றவர் என்க. ஏழுலகு - மேல் ஏழு, கீழ் ஏழு உலகங்கள். ஏழ்மலை - ஏழு பெருமலைகள் எனப்படும், கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம் என்பன. (4) படிறன் - படிற்று வேடம் மேற்கொண்டவன். செற்றார் - பகைவர்.—(5) உலந்தார் - இறந்தவர்.—(6) தாமரையான் - பிரமன். தகவுடையார் - அடிமைப் பண்புடையவர். இருக்கை - விரும்பி வாழுமிடம். "ஏந்தெழில் இதயம் கோயில் மாளிகை" (திருவிசை-சாட்டிய); கலை - மான்.—(8) தன்னியல்வார்-தன்னையொத்த இயல்பினை யுடையவர்; "மற்றொருந் தன்னொப்பா ரில்லா தான்" (தேவா - தாண்). தாங்கரிய சிவம் - தாம் எல்லாவற்றையும் தாங்கியும் தம்மைத் தாங்குவார் பிறர் எவர்க்குமரிதாகிய முழுமுதல்.—(9) அக்காலன் - பிறர் எல்லாருடைய காலங்களும் அளப்பவனாகிய அந்த என்று அகரம் உலகறி சுட்டு.—(10) ஓங்காரத் துட்பொருள் - பிரணவ மந்திரத்தாற் குறிக்கப்படும் பொருள். வேள்வொலி - வேள்வியொலி. இருசுடர் மீதோடா - இலங்கையினுள் சூரிய சந்திரர்கள் தம் வழிச் செல்லாது இராவணனது ஆணை வழியே இயங்கினர் என்ற வரலாறு குறித்தது.

தல விசேடம் :—திருமழபாடி - மழு ஆடிய இடம் ஆதலின் மழுவாடி எனப்படும் என்றும், மழுவாடி என்பது மழபாடி என மருவி வழங்குவதாயிற்று என்றும் கூறுப. மழவரால் ஆளப்பட்டது என்றும் பொருள் கூறுவர். புருடாமிருகம், பிரமனுலகத்திருந்த சிவலிங்கத்தை இங்குக் கொணர்ந்து தாபித்த காலத்தில் பிரமதேவர் அதனைத் தம் வல்லமை கொண்டு பெயர்த்தெடுக்க முயன்றபோது அது வாராமை கண்டு, இது "வயிரத் தூணோ?" என்று வியந்தமையால், சுவாமி வயிரத்தூணநாதர் எனப்படுவர். திருநந்தி தேவர் சுயசையம்மையை மணஞ் செய்துகொண்ட தலம். இந்திரன், திருமால் முதலியோர் பூசித்துப் பேறு பெற்றனர். ஆளுடைய நம்பிகள் இங்கு வாராமல் திருவாலம்பொழிலில் எழுந்தருளி யிருந்தபோது, இரவில் அவர் கனவில் இறைவர் போந்து, "மழபாடிக்கு வர மறந்தனையோ?" என்று நினைப்பிக்க, நம்பிகள் "பொன்னார் மேனியனே" என்ற பதிகம் பாடி "உன்னை யல்லால் இனி யாரை நினைக்கேன்?" என்று துதித்துப் போந்து வழிபட்டருளிய தலம். மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. சுவாமி - வயிரத்தூணநாதர். வடமொழியில் வஜ்ர ஸ்தம்பேசுவரர் என்பர்; அம்மை - அழகம்மை; பதிகம் 6.

இது கொள்ளிடத் திருநதியின் வடகரையில் உள்ளது. தென் கரையில் உள்ள திருப்பெரும்புலியூரினின்றும் கொள்ளிடத்தைப் பரிசினாற் கடந்து கரை வழி இரண்டு நாழிகை யளவில் அடையத் தக்கது. கொள்ளிடம் இங்கு வடக்கு நோக்கிச் செல்கின்றது.

1652. சேர்ந்து விருப்பொடும் புக்குத் திருநட மாளிகை முன்னர்ச்
சார்ந்து வலங்கொண் டிறைஞ்சித் தம்பெரு மான்றிரு முன்பு
நேர்ந்த பரிவொடுந் தாழ்ந்து நிறைந்தொழி யாவன்பு பொங்க
ஆர்ந்தகண் ணீர்மழை தூங்க வயர்வுறுந் தன்மைய ரானார்; ௩அ௭

1653. "திருப்பூந் துருத்தி யமர்ந்த செஞ்சடை யானையா னேற்றுப்
பொருப்பூர்ந் தருளும் பிரானைப் பொய்யிலி யைக்கண்டே" னென்று
விருப்புறு தாண்டகத் தோடு மேவிய காதல் விளைப்ப
"இருப்போந் திருவடிக் கீழ்நா" மென்னுங் குறுந்தொகை பாடி, ௩அ௮

1654. அங்குறை யுந்தன்மை வேண்டி "நாமடி போற்றுவ" தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னாரருள் பெற்றுத்
திங்களு ஞாயிறுந் தோயுந் திருமட மங்கொன் றுசெய்தார். ௩அ௯

1652. (இ - ள்) சேர்ந்து...புக்கு - அத்தலத்தைச் சேர்ந்து விருப்பத்தோடும் அதனுட் புகுந்து; திருநட மாளிகை...இறைஞ்சி - இறைவர் அருட்கூத்தியற்றி வெளிப்பட எழுந்தருளிய திருக்கோயிலினைச் சார்ந்து வலம் வந்து வணங்கி; தம் பெருமான்...தாழ்ந்து - தமது பெருமானது திருமுன்னர்ப் பொருந்திய அன்பினோடும் தாழ்ந்து; நிறைந்து...ஆனார் - உள் நிறைந்து நீங்காத அன்பு மேன்மேற் பெருக அதனால் மேல் நிறைந்து வெளிப்படும் கண்ணீராகிய மழை பொழியத் தம் வசமிழந்த நிலை பெறும் தன்மையை யடைந்தனராகி; ௩அ௭

1653. (இ - ள்) "திருப்பூந்துருத்தி...கண்டேன்" என்று - திருப்பூந்துருத்தியில் விரும்பி எழுந்தருளிய சிவந்த சடையுடையவரை, இடபமாகிய பெருமலையின் மேல் எழுந்தருளி வரும் பெருமானைப், பொய்யிலியைக் கண்டேன்" என்று; விருப்புறு தாண்டகத்தோடு - விருப்பம் பொருந்தும் திருத்தாண்டகத்துடனே; மேவிய காதல் விளைப்ப - பொருந்திய அன்பு மேன்மேல் விளையச் செய்ய; "இருப்போம்... பாடி" - "சேவடிக்கீழ் நாம் இருப்பதே" என்ற மகுடமும் கருத்தும் கொண்டு போற்றும் திருக்குறுந்தொகைப் பதிகத்தைப் பாடி, ௩அ௮

1654. (இ - ள்) அங்கு...வேண்டி-அத்தலத்தில் சிலகாலம் தங்கியிருக்க வேண்டும் என்னும் நிலைமையைப் பெறும் உட்குறிப்புடனே, நாமடி போற்றுவதென்று - நாமடிபோற்றுவதே என்ற கருத்துடன்; பொங்கு...புரிந்து - பொங்கும் தமிழ்ச் சொற்களாலியன்ற திருவிருத்தம் என்கின்ற தோத்திரப் பாடல் புரிந்து; தங்கி... பெற்று - அத்தலத்தில் தங்கித் திருத்தொண்டு செய்வாராகித், தமது பெருமானது நிறைந்த திருவருளினைப்பெற்று; திங்களும்...செய்தார் - சந்திரனும் சூரியனும் தோயும் தன்மையுடையதொரு திருமடத்தினை அங்குச் செய்தருளினார். ௩அ௯

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டுரைக்க நின்றன.

1652. (வி - ரை) திருநடமாளிகை - அருட்கூத்து வெளிப்படக் கண்டருளுதற்கிடமாகிய திருக்கோயில். நடத்திரு மாளிகை - என்க. மாளிகை - கோயில்.

திருமுன்பு - சந்நிதியில். பரிவு - அன்பினால் உளதாகும் மனநெகிழ்ச்சி.

அன்பு போங்குதலினால் ஆர்ந்த என்பது கண்ணீர் மழை பொழிவதற்குக் காரணங் கூறியவாறு. ஆர்தல் - நிறைதல். போங்க - பொங்குதலினால். காரணப் பொருட்டாய்வந்த வினையெச்சம்.

தூங்க - இடையறாது பெய்ய. அயர்வுறும் - தம்மை மறக்கும்; தம் வசமிழக்கும். அயர்தல் - ஓய்தல் என்றலுமாம். ஓய்தலாவது பொறிபுலன் வழிச் செல்லும் மனம் அதினின்றும் ஓய்வுறுதல்.

ஆனார் - ஆனாராய் - முற்றெச்சம். ஆக்கச் சொல் சிவானந்தானுபவமாகிய ஆக்கம் குறித்தது.



1653. (வி - ரை) "திருப்பூந்துருத்தி......கண்டேன்" என்று - இது திருத்தாண்டகப் பதிகக்கருத்து. பதிகக்குறிப்புப் பார்க்க.

பொய்யிலி - திருப்பூந்துருத்தியின் இறைவர் பெயர்.

"இருப்போம் திருவடிக்கீழ் நாம்" - திருக்குறுந்தொகைப் பதிகக் கருத்து. "சேவடிக்கீழ் நாமிருப்பதே" என்பது பதிகத்தின் மகுடம். பதிகக் குறிப்புப் பார்க்க.

ஆன் ஏற்றுப் பொருப்பு - இடப ஏறுகிய மலை. பொருப்பு - மலை. மலைபோன்றது என உருகவும்.

விருப்புறு தாண்டகம் - நினையா என் நெஞ்சை நினைவித்தானைக், கல்லாதன வெல்லாங் கற்பித்தானைக், காணாதனவெல்லாங் காட்டினானைச், சொல்லாதனவெல்லாஞ் சொல்லி யென்னைத் தொடர்ந்திங் கடியேனை யாளாக்கொண்டு பொல்லாவென் னோய் தீர்த்த புனிதன்றன்னை, உணராவென் னெஞ்சை யுணர்வித்தானை, எனக்கென்று மினியானை, நெறிதா னிதுவென்று காட்டினானை என்பன முதலாகத் தமது மனத்துள் நிறைந்தெழுந்த விருப்ப முழுதும் பொருந்தி வெளிப்பட அருளிய திருத்தாண்டகப் பதிகம். பயில்வார்க்கு இறைவர்பால் விருப்பத்தை உளதாக்கும் பதிகம் என்றலுமாம். அத்தலத்திற் பலகாலம் தங்கும் விருப்பத்தை உறுவிக்கும் என்பதுமாம்.

மேவிய காதல் விளைப்ப - முன் கூறிய விருப்பமானது காதலை விளைக்க. திருத்தாண்டகத்தை முன்னர் அருளிப், பின்னர், அதன் பயனாய் எழுந்த காதலினாற் குறுந்தொகைப் பதிகமருளி, அதன் பயனாய்ப் பின்னர் பலநாள் தங்கிய சரித விளைவை உணர்த்தியருளும் ஆசிரியரது தெய்வக் கவிமாண்பு காண்க. 388

1654. (வி - ரை) அங்கு உறையும் தன்மை வேண்டி - இஃது இத்திருவிருத்தப் பதிகக் கருத்து ஆசிரியர் எடுத்துக் காட்டியபடி. உறையும் தன்மை - பலநாள் தங்கி வீற்றிருக்கும் தன்மை.

நாம் அடி போற்றுவது என்று - இது "நாமடி போற்றுவதே" என்ற பதிகத்தின் மகுடம். என்று என்பதனால் இது பதிகத்தின் கருத்தும் மகுடமுமாதல் குறிக்கப்பட்டது. பதிகக்குறிப்புப் பார்க்க. போற்றுவது தன்மை வேண்டி - என்று - எனக் கூட்டி உரைத்துக் கொள்க.

பொங்கு தமிழ்ச் சொல் விருத்தம் - மலைமகள் தன்னுடைய பாலனை - மதி சூடியை - உணரார் மதின்மேற் போலனை - விடையேறியை - ஆலனை - ஆதி புராணனை - அறுத்தனை - பொறுத்தனை - நீலமிடற்றனை - உருவினை - திருவினை - கருவினை - நக்கனை - தேசமதியனை - அந்தியை - அறிவினை - நந்தியை - வேத விகிர்தனை என்று பலப்பலவும் சிறந்த பொருள் பொங்கும் தமிழ்ச் சொற்களால் இறைவரைப் போற்றுகின்றமையால் பொங்கு தமிழ்ச் சொல் என்றார். போற்றிய பாடல் புரிந்து - என்ற கருத்துமிது. விருத்தம் - பதிகத்தின் யாப்பமைதி.

புரிந்து - இடைவிடாது சொல்லி - "இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார்" (குறள்) என்றவிடத்துப் பரிமேலழகர் உரை பார்க்க.

தங்கி - அங்கு உறையும் தன்மை வேண்டினாராதலின் அதன்படியே அங்குப் பலநாள் தங்கி. தங்கித் திருத்தொண்டு செய்வார் - ஏனைத் தலங்களிற்போலத் தமது யாத்திரை வழிச் செலவில் சிற்சில நாள்களே இருந்து பணிசெய்து போவதுபோலன்றி, இங்குப் பலகாலம் தங்கிப் பணிசெய்வாராகி. செய்யும் பொருட்டு என்றலுமாம். செய்வார் - எதிர்கால முற்றெச்சம். செய்வார் - செய்தார் - என்று கூட்டி முடிக்க. ஆளுடைய பிள்ளை எழுந்தருளி வரும்வரை தங்கி என்றதும் குறிப்பு.

தம்பிரானாருள் பெற்றுப் பலநாள் அங்குத் தங்கி உறையும் தன்மை வேண்டித் திருப்பதிகம் "நாமடி போற்றுவதே" என்று போற்றினாராதலின் அதன்படியே இறைவரும் அருள்செய்யப் பெற்றாராகி. அருள் பெறுதல் அங்குறைந் தமர்தற்காகத் திருமடம் அமைத்தற்கு என்க. பற்றற்ற முழுத்துறவுடைய மூர்த்திகளாகிய நாயனார் அங்குத் திருமடம் அமைத்துத் தங்கும் தன்மை வேண்டினாராதலின் அதன் வழித்தாகிய அளவில் வரும் பற்றும் தம்மைப் பற்றாதபடி திருவருள் செய்யப்பெற்ற பின்னரே திருமடம் செய்தனர் என்பதாம். அன்றியும், " வேண்டும் பரிசொன் றுண்

டென்னி லதுவு முன்றன் விருப்பன்றே" (திருவா.) என்பதனுல் திருமடம் அமைக்க எண்ணியதும் திருவருளாலேயாம் என்க. நாயனுர் இறைவன்றிருவருள் வழி நிற்போ ராதலின் மடமமைத்தும் திருவருளின் வழி நிகழ்வதென்பதுமாம்.

**திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம்** - இஃது அத்திருமடத்தின் உயர்வு குறித் தது. **தோயும்** - நிலம் தோயும்படி நாயனுரைவந்து வணங்கும் என்ற குறிப்பும்பட நின்றது. அத்திருமடத்தின் அகன்ற திருமுற்றத்தில் இரவில் திங்களும், பகலில் ஞாயிறும் நிலவொளியும் வெயிலும் பரப்பிச் சேவகம் செய்கின்றனர் என்பது அத்திருமடத்தின் அமைப்பினைப்பற்றி இப்போது உள்ள அதன் பகுதிகளின் துணை கொண்டு அறிந்து கொள்ளலாம். படங்கள் பார்க்க.

**திருமடம்** - ஆசாரியரது இடம். திருமூலர் திருமந்திரத்தினுள் - "குருமட தரிசனம்" என்ற 9-ம் தந்திரம் காண்க. நாயன்மார்களும் அடியார்களும் தங்கிய இடங்கள் **திருமடம்** என வழங்கப்படுதலும் கருதுக. 229, 230, 231, 505, 506, 1512, திருஞான - புரா - 676, 698, 700, 701, 702, 707, 725, 737, 854, 855, 868, 877, 878 முதலியவையுங் காண்க.

**திருமடம் ஒன்று** : **ஒன்று** - ஒப்பற்றது என்ற குறிப்புப்பட நின்றது. இத் திருமடம் நமது சைவ சமய பரமாசாரியராலே செய்யப்பட்ட தனிப் பெருமை யுடையது. இதுபோல வேறெச் சமயத்திலும் சமய ஆசாரியர்கள் தாம் அமைத்து அமர்ந்த மடங்கள் கேட்கப்படவில்லை. அவ்வவர் பெயரால் வழங்குவனவாகிய மடங்கள் பின் வந்தவர்களால் அந்நினைவுபற்றி அமைக்கப்பட்டனவாகவே காண்கின் ரேம். இத்திருமடத்தில் நமது ஆசாரியமூர்த்திகள் பலகாலம் எழுந்தருளியமர்ந்து சிவபூசை சிவஞானயோகம் முதலிய தவங்களைச் செய்திருந்தருளினுர்கள். அவ்வாறு பூசித்த இடமும், யோகத்தமர்ந்த இடமும், அடையாளங்காண இன்றும் உள்ளன. இத்திருமடத்திலேதான் நமது மற்றொரு பரமாசாரியராகிய ஆளுடைய பிள்ளையாரும் நாயனுருடனே பலநாள் தங்கி உடனமர்ந் தளவளாவி யிருந்தருளினுர்கள். பிள்ளையார் தென்னுடாகிய தமிழ் நாட்டில் எழுந்தருளிச் சைவத் தாபனம்செய்த சிறப்பும், நாயனுர் வட நாடாகிய தொண்டை நன்னுட்டிலும் அப்பால் உள்ள வடதேயத்தி லும் போந்து பின் திருக்கயிலைக் காட்சி கண்டருளிய சிறப்பும் ஒருவர்க்கொருவர் இத் திருமடத்தில் பேசி அளவளாவிக் களித்தனர். அது காரணமாக நாயனுர், பின்னர்த் தென்னன் நாடு சென்றருளவும், பிள்ளையார் திருத்தொண்டை நன்னுடு சென்று அங்கம் பூம்பாவையாக்கிய பின்னர்த் திருமணத்திற் கெழுந்தருளவும் உள்ள தெய்வ நிகழ்ச்சிகள் உளவாயின. இத்தகைய தனிச்சிறப்பு வாய்ந்த இத்திருமடம் இந்நாளில் இடிந்து சுவர்கள்மட்டும் காண உள்ள காட்சி மிக வருந்தத்தக்கது. இத்திருமடத்தின் சுவர் - பூசைமேடை முதலிய திரு அடையாளங்களைப் பொன்னேபோற் பாதுகாத்து, வழிபடுதற்குரிய சிறந்த இடமாக அமைத்து வைக்க வேண்டியது சைவ நன்மக்க ளுடைய பெருங்கடமை. அது பெருஞ் சிவபுண்ணியமுமாம். இத்திருமடத்திற் சிதைந்து கிடக்கக் காணும் ஒவ்வொரு சிறிய செங்கற் றுண்டுகளும் பலப்பல கோடி பொன்விலை பெறும் சிறந்த தெய்வமதிப்புடையவை என்று சொல்லலாம்.

**செய்தார்** - செய்வித்தார் - அமைப்பித்தார் - எனப் பிறவினைப் பொருளில் வந்தது. நாயனுர் என்ற ஏவுதற் கருத்தா தொக்கு நின்றது. தன்மையரானுர் (ஆகி) (1652) - என்று - தாண்டகத்தோடு - என்னும் - குறுந்தொகை பாடி (1653) - என்று - பாடல்புரிந்து - அருள் பெற்றுத் - திருமடம் - செய்தார் - (1654), (நாய னுர்) - என்று இந்த மூன்று பாட்டுக்களையும் தொடர்பு படுத்திக்கொள்க.

**ஆங்கொன்று**—என்பதும் பாடம்.

1655. பல்வகைத் தாண்டகத் தோடு பரவும் தனித்தாண் டகமும்
அல்ல லறுப்பவர் தானத் தடைவு திருத்தாண் டகமுஞ்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருவங்க மாலையு முள்ளிட்
டெல்லையில் பன்மைத் தொகையு மியம்பின ரேத்தி யிருந்தார். ௩௯௦

(இ - ள்) வெளிப்படை. பல்வகைத் தாண்டகத்துடனே, இறைவரைப் போற்றி செய்கின்ற தனித்தாண்டகமும், பிறவித்துன்பத்தை அறுக்கின்ற சிவபெருமான் விளக்கமாக எழுந்தருளும் தானங்களைக்கூறும் அடைவுள்ள திருத்தாண்டகமும், உயிர்கள் செல்லவேண்டிய கதியைக் காட்டுவதற்காகத் துதிக்கின்ற திருவங்கமாலையும், என்றிவையுள்ளிட்டு, அளவில்லாத பல தொகைப் பதிகங்களையும் அருளிச்செய்தனராய்ப் போற்றி அங்கு எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) இப்பாட்டினால் நாயனார் அத்தலத்துத் தங்கும் தன்மைவேண்டி அருள் பெற்றுத் திருமடம் செய்து, எழுந்தருளியிருந்த காலங்களில் உலக முய்ய அருளிய தொகைப் பதிகங்களையும், அவற்றின் அருட் குறிப்புக்களையும் எடுத்துக் கூறுகின்றனர் ஆசிரியர்.

**பல்வகைத் திருத்தாண்டகம் - தனித்திருத்தாண்டகம் - அடைவு திருத்தாண்டகம் - திருவங்கமாலை** - இவை பதிகங்களின் பெயர்கள். இப்பெயர்களின் பொருள் பற்றி அவ்வப்பதிகக்குறிப்புப் பார்க்க.

**தானம்** - திருத்தலங்கள். **அல்லல்** - எல்லாத்துன்பங்கட்கும் காரணமாகிய பிறவித்துன்பம்.

**செல்கதி காட்டிடப் போற்றும்** - உயிர்கள் சென்று சேரவேண்டிய கதியைக் காட்டும் பொருட்டுப் போற்றப்படும். **கதி** - ஞானம் என்றலுமாம்.

**பன்மைத் தொகை** - ஒவ்வொரு பதிகமும் ஒரு கருத்துடைய பலபொருள்களைத் தொகுத்துக் கூறும் தன்மை யுடையன என்பது. **தொகை** - குறுந்தொகை என்ற குறிப்புமாம்

**இயம்பினர் - ஏத்தி** - இயம்பினராகி ஏத்தி. **இயம்பினர்** - வினைமுற்றெச்சம்.

**இருந்தார்** - அத்திருமடத்தில் தங்கி எழுந்தருளி யிருந்தார். இறைவரைத் தியானித்திருந்தார் என்ற குறிப்புமாம். அத்திருமடத்தில் நாயனார் சிவயோகத்தமர்ந்து எழுந்தருளி யிருந்த சிறு அறையின் அடையாளங்கள் இன்றும் காணப்படும். இனிப் பலகாலம் அங்குச் சிவயோகத்தி லமர்ந்து எழுந்தருளியிருக்கும் திரு உள்ளக் குறிப்பு. 390

போது

I　திருச்சிற்றம்பலம்　　　　பலவகைத் திருத்தாண்டகம்

நேர்ந்தொருத்தி யொருபாகத் தடங்கக் கண்டு நிலைதளர வாயிரமா முகத்தி னோடு
பாய்ந்தொருத்தி படர்சடைமேற் பயிலக்கண்டு படவரவும்பனிமதியும் வைத்தசெல்வர்
தாந்திருத்தித் தம்மனத்தையொருக்காத்தொண்டர்தனித்தொருதண்டேன்றிமெய்தளரா
பூந்துருத்திபூந்துருத்தியென்பீராகிற்பொல்லாப்புலாற்றுருத்திபோக்கலாமே. [முன்னம்

தந்தையார் தாயா ருடன்பி றந்தார் தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ மாயமா மிதற்கேது மகிழ வேண்டாம் [ன்னி
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின் றிகழ்மதியும் வாளரவுந் திளைக்குஞ் செ
யெந்தையார் திருநாம நமச்சி வாய வென்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க லாமே. 10
திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—திருவையாறுள்ளிட்ட ஏழு பெருந்தலங்களையும் இன்னும் சில தலங்களையும் சிறப்பித்து, அவற்றைச் சிந்தித்து, அத்தலங்களின் திருப்பெயர்களை மந்திரமாக்கொண்டு சொல்லவே பிறவித் துன்ப நீங்கி முத்திப்பேறு வரும் என்றும், மகா மந்திரமாய் எந்தையார் திருநாமமாகிய திருவைந்தெழுத்தை விதிப்படி எண்ணுவோர் அவ்வாறே சிவலோகம் பெறுவர் என்றும் எடுத்து உரைப்பது இத்திருப்பதிகக் கருத்து. சிறப்பாய் ஒரு தலத்தையும் பற்றாமல் நிற்பதாலும், பொதுவகையாற் பல கருத்துக்களை எடுத்து உபதேசிப்பதாலும் இத்திருப்பதிகம் போது(ப் பதிகம்) என்றும், பல வகைத் திருத்தாண்டகம் என்றும் பெயர் பெறும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஒருத்தி - முன்னையது, உமாதேவியையும், பின்னையது, கங்கையையும் குறித்தன. அடங்க என்றும், பயில என்றும், வருவன தாழ்வு - ஏற்றக் குறிப்புள்ளிட்டுச் சுவைபட நின்றன. நிலை - பாகத்தடங்கிய நிலை. தளர என்றது தளர்வுறும்படி - கீழ்த் தாழும்படி. ஆயிரமாமுகம் - பல ஆறுகள். அடங்கக் கண்டும் - பயிலக் கண்டும் அதனால் வைத்த என்க. அதனால் வைத்தலாவது அரவும் மதியும் பகையின்றி வைக்க இருத்தல் போல ஒருத்தியும் ஒருத்தியும் இகலின்றி இருக்கும்படி வைத்த என்பது குறிப்பு. ஒருக்கா - ஒருமைப்படச் செய்யாத. தோண்டர் - தொண்டாந் தன்மையில் வருவோர். தனித்தண்டு - ஒரு தண்டு - என்று கூட்டுக. தண்டு - ஊன்றுகோல். தனித்து - துணையின்றி என்றலுமாம். பூந்துருத்தி பூந்துருத்தி - திருத்தலப் பெயரினைப் பல்காலும் எண்ணிச் சொல்லுதல் குறிக்க அடுக்கி வைத்தார். 2 முதல் 9 வரை திருப்பாட்டுக்களிலும் இவ்வாறே வருதல் காண்க. இறைவர் விளக்கம்பெற எழுந்தருளிய புண்ணிய தலங்களின் பெயர்களை உரைப்பதுவே தீமைகளைப் போக்கி நன்மைதரும் என்பது. துருத்தி - உடம்பு. கொல்லனது உலைத்துருத்தி போன்று தோலால் மூடப்பட்டு உயிர்த்தலும் பொருந்துதலால் உடலைத் துருத்தி என்றார். உருவகம். போக்கல் ஆம் - என்க. ஆம் - உளதாகும். ஏகாரம் தேற்றம். பின்வரும் திருப்பாட்டுக்களினும் இவ்வாறே கொள்க.—(2) ஐத்தானத்து - அகம் - மிடறு - ஐ - சுற்றி - என்க. தனது தானமாகிய உள் மிடற்றினை ஐ சுற்றி. ஐ - கோழை; கபம் என்பர் வடவர். அகத்து அடைந்தால் - உயிர்ப்பு உள்ளே அடங்கினால். யாதோன்று மிடுவார் - உணவு முதலியவை தருவார்.—(3) போய் ஆறு ஆறே - பொய்யின் வழியே மனம் அமைந்து அதன்படியே; போருளே - அழியும் தன்மையான உலகப் பொருள்களையே; கையாறக்கரணம் - மதுகை - வல்லமை - மாறாத முயற்சி. கரணம் - பொருள்; கையில் நீங்காத பொருள் என்றலுமாம்.—(4) இழவு ஒன்று - இழந்து போகக்கூடிய ஒன்றையும். இழிவு சிறப்பும்மை தொக்கது. ஒன்று ஈயார் - ஒன்றினையும் ஈயமாட்டார். இங்கும் உம்மை தொக்கது. கழனங் கோவை - அற்றபோது நெகிழ்ந்து கழியும் கோவை. நம் கழல் கோவை என்று கூட்டிக் காலிவிடும் விலங்கு என்றலுமாம். அழல் - சுடு பிறவி. பயின்று எழுந்த - பல பிறவிகளிலும் தொடர்ந்து வருதலால் மேன்மேல் எழுந்த. பயின்று - பயின்றதனால். காரணப் பொருளில்வந்த வினையெச்சம். பழவினை - என்ற குறிப்புமது.—(5) ஊற்றுத்துறை ஒன்பது - மலம் நீர் ஊறும் துறைகள் போன்ற உடலின் ஒன்பதுவாயில். நின்று ஓரீர் - நின்றபோது அவற்றின் உண்மையியல்பை நினைந்து பார்க்கமாட்டீர். மாற்றுத்துறை - இப்பிறவியிற் றீர்ந்து இறந்துபடுதல். வேற்றுத் தோழில் - அறத்தின் வேறுபட்ட மறத்தொழில்.—(6) நலஞ்சுழியா - நன்மையினின்றும் பிறழாது. அலம் சுழிக்கும் - துன்பத்திடைப்பட்டுச் சுழலும். அலம் - துன்பம்.—(7) தண்டி குண்டோதரன் - பிங்கிருடி - நந்தி - சங்கு கன்னன் - இவர்கள் சிவகணத் தலைவர்கள். உலகம் படைத்தான் - பிரமன்; பாரை அளந்தான் - நெடுமால்;

பல்லாண்டு இசைத்தல் - வாழ்த்துதல்; பூதம் - சிவகணம்.—(8) விடமூக்கப் பாம்பு - மூக்கில் விடமுடைய பாம்பு. மூர்க்க - என்பதும் பாடம். தமர் - அடியார். வடமூக்க மாமுனிவர் - முத்தி விரும்பி வடக்கு நோக்கித் தவஞ்செய்யும் அறவோர்.—(9) தழை அணுகும் - பூக்கள் நிறைந்து தழைகள் சிலவாய் அணுகிய. கண்காட்டா - கண்ணுற் காணமுடியாத; கலந்து - ஆடவரும் பெண்டிரும் கூடி வழிபடுதல் குறிப்பு. எண் காட்டா - மனத்தாலும் எட்ட முடியாத.—(10) வந்தவாறு - பிறப்பின் முதல். போமாறு - சாதலும் அதன் வழிவரும் பிற்றை நிலையும். திருநாமம் - திருநாம மாகிய. இருவிசும்பு - ஈண்டு மீளா நெறியாகிய சிவனுலகம் குறித்தது.

போது

II　திருச்சிற்றம்பலம்　　　தனித் திருத்தாண்டகம்

அப்பனீ யம்மைநீ யைய னுநீ யன்புடைய மாமனு மாமி யுநீ
யொப்புடைய மாதரு மொண்பொ ருளுநீ ஒருகுலமுஞ் சுற்றமு மோரூ ருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்று வாய்நீ துணையாயென் னெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொனீ யிம்மணிநீ யிம்முத் துநீ யிறைவனீ யேறூர்ந்த செல்வ னீயே.　　1

ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தாலாரொருவர் காணு தாரே காண்பாரார்கண்ணுதலாய் காட்டாக் காலே.

திருக்கோயி லில்லாத திருவி லூருந் திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும் பாங்கினொடு பலதளிக ளில்லா வூரும்
விருப்போடு வெண்சங்க மூதா வூரும் விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணு வூரு மவையெல்லா மூரல்ல வடவி காடே.　　5

திருநாம மஞ்செழுத்துஞ் செப்பா ராகிற் றீவண்ணர் திறமொருகாற் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகி லுண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணு ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகி லளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற்
பெருநோய்கண்மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப் பிறப்பதற்கேதொழிலாகி
யிறக்கின் றரே.　　6

அத்தாவுன் னடியேனை யன்பா லார்த்தா யருளுேக்கிற் றீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையு மரியநீ யெளியை யானு யெனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயே னுயேன் பிழைத்தனக ளெத்தனையும்
பொறுத்தா யன்றே
இத்தனையுமெம்பரமோவைய! வையோ! வெம்பெருமான்றிருக்கருணை யிருந்தவாறே.

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லே னுன்பொல்லேன் ஞானி யல்லே
னல்லாரோ டிணங்கிலே னடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லே னிரப்பதே யீய மாட்டே
னென்செய்வான் றோன்றினே னேழை யேனே.　　9

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ மாதேவர்க் கேகாந்த ரல்ல ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யரா யாவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனுங்
கங்கைவார்சடைக்கரந்தார்க்கன்பராகி லவர்கண்டீர்யாம்வணங்குங் கடவு ளாரே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—உலகுயிர்கள் யாவும் சிவனது வயப்பட்டு அவரால் இயக்கப் படுபவை. திருவெண்ணீறணிந்து பத்திமையாற் சிவனைப்பாடிப் பயிலாதார் வாழும் ஊர்கள் சுடுகாடுகளேயாம். திருவெண்ணீறணிந்து சிவனைப் பணிந்து பூசியாதார் ஏன் பிறந்தார் என்னில், பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி யிறப்பதற்கே பிறந்தார். சிவனடியாராகிய நல்லாரோ டிணங்காமலும் சிவ நன்மொழிகள் பேசாமலும் நிற்பார் என் செயப் பிறந்தார்? எத்துணைப் பெருஞ்செல்வத்தராயினும் சிவனடியா ரல்லாராகில் அவர்களை ஒரு பொருளென நாம் மதியோம் : சிவனுக்கன்பராகில் அவர்களைக் கடவுளாக வணங்கு வோம். சிவபெருமானே! தேவரீரே எனக்கு அப்பன் - அம்மை - மாமன் - மாமி முதலிய அரிய பொருள்களெல்லா மாவீர்!; கற்பகமே! நான் உம்மை விடுவேனல் லேன்!; தேவரீர் என் சிந்தையீர்!; பூமிமேற் புகழ்தக்க பொருளே! நீர் எனக்குப் பொன், மணி, மன் முதலிய எல்லாமானீர் என்று பலவாற்றாலும் புகழ்வதன்றி ஏழை யேன் என் சொல்லி ஏத்துகேன்? அடிநாயேனைத் தேவரீர் அன்பால் ஆர்த்து அருட் கண்ணிற் நீர்த்தநீ ராட்டி எளியீராகி வந்து இரங்கி ஏன்று கொண்டீர்; நாயேன் பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தீர்; இத்தனையும் எம்பரமோ? ஐயோ! தேவரீ ரது திருக்கருணை யிருந்தவாறுதான் என்னே?

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) அன்புடைய என்ற அடைமொழியை மாமன் மாமியுடன் புணர்த்தி யோதியது அவர் தம்மகள் பொருட்டு மேற்கொள்ளும் அன்பு கூர்தலால் என்க. இதுபற்றியே "மாமனு மருகனும் போலு மன்பின" என்றார் பிறரும் (சிந் - 43). அன்புடைய என்பதனை அப்பன் அம்மை ஐயன் என்றவற் றுடன் மூன்றும் கூட்டி உரைக்கும்படி இடையில் வைத்தார் என்றலுமாம். ஐயன் - குரு. "தங்க ளையனும் வியாழப் புத்தேள்" (திருவிளை.) ஐயன் - பெருமையுடை யோன் என்றலுமாம். ஒப்பு - காதற்கருத்தொற்றுமை. ஒண்பொருள் - மக்கள்; துய்ப்பன - தாந்தாம் நுகர்வன; உய்ப்பன - பிறர் நுகர்தற்கு உதவப்படுவன; துணை யாய்த் துறப்பித்தலாவது தாமே உற்ற துணையென்பதனைத் தேற்றுவித்து முன்னர்த் துணையென்று கருதியிருந்த ஏனையவற்றை விடச்செய்தல். இப்பொன் - இம்மணி - இம்முத்து - இகர அணிமைச் சுட்டுக்கள் முன் பெரிதாய்க் கொண்டிருந்த இந்த என்ற கருத்துப் புலப்படுப்பன.—(2) வெம்ப - வருத்தம் செய்ய. வெய்ய வினைப்பகை - பண்டைப் பழவினை. பரிவு - துன்பம்; எங்கெழிலென் ஞாயிறு - (திருவெம்பாவை - 19) திருவாசக ஆட்சி போற்றப்பட்டது. உலக நிலைபற்றிய எந்தக் கவலையும் இல் லோம் என்பது கருத்து. எளியோம் அல்லோம் - "இறுமாந் திருப்பன் கொலோ" (திருவங்கமாலை); "சிந்தையார்க் குள்ள செருக்கு" (அற் - அங் - 79) முதலியனவும், மறு மாற்றத் திருத்தாண்டகக் கருத்தும் காண்க. செம்பவள வண்ணர் என்பது மேனி யையும், செங்குன்ற வண்ணர் என்பது உருவையும், செவ்வான வண்ணர் என்பது நிறத்தையும் குறிப்பன.—(3) இப்பாட்டு இறைவர் ஆன்மாக்களை உண்ணின்று இயக்கி யும் காட்டியும் உபகரித்து நிற்கும் அருட்டன்மையை விளங்க உபதேசிக்கும் அரும் பாட்டு. ஆட்டுவித்தல் - அடக்குவித்தல் - இவை உலக நிலைபற்றிய உயிரின் முயற்சியை

எழுவித்தலும் அடக்குதலும் குறித்தன; ஓட்டுவித்தல் - உந்துவித்தல் - இவை அவ்வாறு அடங்கியபின் அதன் பயனாக, ஆணவமல இருளின் வலிமையை மெலியச் செய்தலும், சிவத்துவம் விளங்கச் செய்வித்தலும் குறித்தன; ஓட்டுவித்தல் - ஒற்றிரட்டித்தலாற் பெற்ற பிறவினைப் பொருள், வ்விகுதியால் மேலும் வலிமை பெற்றது; ஆணவ வலிமையை நீக்கும் அருமை குறித்தது; பாட்டுவித்தல் - பணிவித்தல் - என்பன அவ்வாறு சிவன்பாலன்பு விளங்கப் பெற்றதனால் அவனைப் பாடுதல் - பணிதல் என்ற சாதனங்களிற் புகுவிக்கப் பெறுதல் குறித்தன; "அவனருளாலே அவன்றாள் வணங்கி" (திருவாசகம்). காட்டுவித்தல் - அருள் கைகூடச் செய்து விளக்குதல். ஆரொருவர் ஆடாதாரே - என்பது முதலிய எதிர்மறை வினாக்கள் ஒருவருமிலர் என்ற உறுதிப் பொருள் குறித்தன. காட்டாக்கால் காண்பாரார் என்ற எதிர்மறை வினா அவ்வுறுதியை மேலும் வலியுறுத்திற்று.—(4) நற்பதத்தார் - சிவநெறி நிற்போர்; நற்பதம் - அடையப்படும் நிலை. சொற்பதம் - வேதாந்தம்; கற்பகம்-உருவகம்.—(5) பருக்கு - மிக; திருக்கோயில்-சிவபெருமான் கோயில்; பல தளிகள் - சிவனாணையிலமர்ந்து தொழிலியற்றும் பிற தெய்வங்களின் கோட்டங்கள். "நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப், பதிவாழ் சதுக்கத்துப் பூத மீறாக, வேறு வேறு சிறப்பின் வேறு வேறு செய்வினை, யாறறி மரபி னறிந்தோர் செய்யுமின்" (மணிமேகலை - கா - 54 - 57); "பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும், அறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும், வால்வளை மேனி வாலியோன் கோயிலும், நீல மேனி நெடியோன் கோயிலும், மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்" (சிலப் - ௫ - 169 - 174); வெண் சங்க மூதுதல் - வழிபாட்டு முறைகளுள் ஒன்று. "விண்ட வான்சங்கம் விம்மவாய் வைத்திலர்" (இலிங் - குறுந் - 10). வெண்கொடி - நகரச் சிறப்பாகிய மங்கலப் பொருள்; புண்ணியமும் புகழும் குறிக்கும். "மீது, சோதி வெண் கொடிக ளாடுஞ் சுடர்நெடு மறுகு" (474); அரும்போது மலர் பறித்திட்டு உண்ணுதல்-புதிதின் மலர்ந்த பூக்களை எடுத்துச் சிவனடியில் இட்டுப் பூசித்த பின்பு உணவு கொள்ளல் வேண்டுமென்ற நியதி. "உண்பதன்முன் மலர்பறித்திட்டு உண்ணு ராகில்" (6) என்பதும் இது. அரும்போது மலர் - அரும்பின் தன்மையுடைய பூவையும் மலர்ந்த பூவையும். ஊர் - மக்கள் வாழுமிடம் என்பதும், அடவிகாடு - சுடுகாடு என்பதும் குறிப்பு.—(6) அருநோய்கள் கெட வெண்ணீறணிதல் - "ஏல வுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு" (பிள் - தேவா). அருநோய் - பிறவி. அளி - சிவனிடத் தன்பு. இறத்தலும் பிறத்தலும் சாதலும் என்றிதுவே தொழிலாகி என்பது. "இவர் போ யவராய் அவர்போ யிவராய் இதுவே தொழிலாய்" (திருப்புகழ்).—(7) நின்னுவார் - நின்போலாவார் - ஒப்பார். நீயேயானாய் - "ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றேபதி" (சிவஞானபோதம்).—(8) ஆர்த்தல் - கட்டுதல். தீர்த்தம் - தூய்மை. இப்பாட்டு, எப்போதும் தமது சிறுமையினையும் தம் பிழை பொறுத்து ஆண்ட இறைவரது பெருமையினையும் எண்ணி எண்ணி நாயனார் பலகாலும் பரிவு கூர்ந்த கருத்து.—(9) நல்லார் - அடியார். "நல்லாரை நன்மை யறிவாய் நீயே" (தாண்). இலம் - வறுமை.—(10) மங்குவார் - அழிந்துபோகும் தன்மையுடையோர். சங்கநிதி - பதுமநிதி - குபேரனிடம் உள்ள ஒன்பது நிதிகளுள் சிறந்தவை; முறையே சங்க வடிவமாயும் தாமரை வடிவமாயும் அமைந்து, எடுக்க எடுக்கக் குறையாதபடி தனம் கொடுப்பவை. மாதேவர்க் கேகாந்த ரல்லராகில் - என்று, மதியாமைக்குக் காரணம் பின் வைத்தது உறுதிப்பொருட்டு. ஏகாந்தர் - ஒன்றுபட்ட அன்புடையோர். தொழு நோய் - பெருநோய் - குறை நோய். ஆவுரித்தல் - தின்னல் - உழலுதல் - மாபாதகங்களில் ஒன்றாகிய புலைமையின் பகுதிகள். வணங்குதல் - சிவனடிக்கன்புக் காரணம் என்பார்

ஆகில் என்றார். அன்பர் ஆகில் என்றது அன்பர் ஆவதன் அருமை குறித்தது. (இப் பாட்டு இந்நாளில் சமூகசீர்திருத்தம் என்ற பேரால் பலராலும் உண்மை திறம்பிய நெறியில் தவறாகப் பொருள் செய்யப்பட்டுக் கையாளப்படுகின்றது.)

போது

III திருச்சிற்றம்பலம் தனித் திருத்தாண்டகம்

ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டா
ரதிகைவீ ரட்டான மாட்சி கொண்டார்
தாமரையோன் சிரமரிந்து கையிற் கொண்டார்
தலையதனிற்பலி கொண்டார் நிறைவாந் தன்மை
வாமனனார் மாகாயத் துதிரங் கொண்டார்
மானிடங்கொண் டார்வலங்கை மழுவாட் கொண்டார்
காமனையு முடல்கொண்டார் கண்ணா லேக்கிக்
கண்ணப்பர் பணியுங்கொள் கபாலி யாரே. 1

குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனாக் கொண்டார்
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றனெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங் கைக்கொண்டார் பயங்கள் பண்ணி
இராவணனென் றவனைப்பே ரியம்பக் கொண்டா
ரிடநறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—அதிகை வீரட்டானம் ஆட்சிகொண்டார், வாமனனார் மாகாயத்துதிரங் கொண்டார், கண்ணப்பர் பணியுங்கொள் கபாலியார், சுந்தரனைத் துணைக்கவரி வீசக்கொண்டார், மாகாளன் வாசல் காப்பாகக்கொண்டார் என்பன முதலிய பெருமைகளாறியப்படும் இறைவர் சமண்தீர்த்தும் சூலை தீர்த்தும் ஆமயந் தீர்த்துஞ் செடியேனையும் ஆளாக்கொண்ட சிவனார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஆமயம் - பசுத்தன்மை. நோயுமாம். அதிகை வீரட்டானம்-நாயனாரை இறைவர் ஆட்கொண்டருளிய தலம். தாமரையோன் - பிரமன் ; வாமனனார் - வாமனாவதாரங்கொண்ட விட்டுணு. கண்ணாலேக்கி - முன்னும் பின்னும் சென்றியைந்து கண்ணாலேக்கிக் காமனை உடல்கொண்டார் எனவும், கண்ணாலேக்கிக் கண்ணப்பர் பணியுங்கொள் எனவும் உரைக்கும்படி வைத்த இடைநிலைத் தீபம்.—(4) போக்கணம் - பூதிப்பை. கோடியான் - சலந்தராசுரன் ; செடியேன்- அழுகுடையவன். செடி - முடைநாற்ற முடைய அழுக்கு. "செடி தலை" "செடியாய வுடறீர்ப்பான்" என்ற ஆட்சிகள் காண்க.—(5) அந்தகன் - அந்தகாசுரன் ; சுந்தரனை...வீசக்கொண்டார் - ஆலாலசுந்தரர் என்ற நம்பியாரூரரின் முன்னைநிலை வரலாறு. மாகாளன் - மகாகாளர் ; மேற்குவாயிற் காவலர்கள் எழுவருள் இவர் சிவபூசையில் வைத்து வழிபடப்படுபவர். ஆகமவிதிகள் பார்க்க. தந்திர மந்திரத்தராய் - சிவபூசையில் எண்ணப்படும் மந்திரவுருவினுள் நின்று. தந்திரம் - சிவபூசை செய்யும் முறை. தந்திரம் ஆகமத்தையும், மந்திரம் வேதத்தையும் குறிக்குமென்றலுமாம்.—(6) பளிங்கு - சுத்த ஸ்படிக சங்காசம் என்ற திருமேனி நிலை. மேன்முகமாகிய ஈசான முகத்தின் வடிவம் ; திருநீற்றின் ஒளி என்றலுமாம்.—(7) கோடி - கோடிக் குழகர்,

கோடிகா என்றும், கோடீச்சுரம் என்றும், உருத்திரகோடி என்றும் உரைப்பினுமமையும். கோடி-எண்ணிறந்தன என்ற பொருளில் வைத்து எண்ணிலாத கோயில் என்றலுமாம்.—(8) நெடுமுக்கு - திக்கை. பண்டே இடைமருது இடமாக்கிக்கொண்டார் என்றும், பண்டேபோல இந்நாள் என்னை ஆட்கொண்ட என்றும் இருவழியும் கூட்டி உரைக்க நின்றது.—(9) பகன் - 12 சூரியர்களுள் ஒருவர். இரவிகளில் ஒருவன் - என்பதும் காண்க. வியாத்திரன் - தொழினடத்துவோன். வேள்வியெல்லாம்... அருளும் செய்தார் - மேலே கூறியவை வேள்வியழித்தருளிய வகைகள். அருளும் - அழித்ததன்றிப் பின் அருளும் என்று உம்மை இறந்தது தழுவியது. அருள் - அழித்த பின்னர்ச் செய்தது. தக்கனை மீள உயிர்ப்பித்து ஆட்டுத்தலையருளியதும் பிறவுமாம். எமது இறைவர் காய்தலும் அருளுதலும் இரண்டும் செய்யவல்லவர் என்ற குறிப்புமாம். "கோபப்பிரசாதம்" (11-ம் திருமுறை) பார்க்க. அடியேனை ஆட்கொண்டருளியதும் அவ்வாறே என்பதும் குறிப்பு.—(10) சாமத்தின்...தடவி - வீணை தடவுதல் என்பதுமரபு. வார்தல், வடித்தல், உந்துதல், உறழ்தல் என்னும் நால்வகை வினைகளுள் ஒன்று. "மிகநல்ல வீணை தடவி" (பிள். தேவா). வீணை தடவும் இசை என்பது புனருற்பவத்தின் பொருட்டு இறைவர் செய்யும் நாதமுழக்கு. "வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே" (திருவிருத்). அதுவே மறையொலியாம் என்பார் சாமத்தின் இசை என்றார். ஒருக்கி - ஒருமுகமாய்த் தன்வயமாக்கி.—(11) குடமுழ நந்தீசனை வாசகனுக் கொண்டார், இறைவரது திருக்கூத்துக்கியையக் குடமுழா முழக்கும் நந்தி பெருமானை மாணிக்கவாசகராக வரும்படியாக அருளிக் கொண்டவர். பௌத்தசமயம் அதிகரித்ததனால் சைவசமய விளக்கம் குறைய அதனை நீக்கியருளும்படி தேவர்கள் வேண்ட இறைவரது ஆணையால் திருநந்தி தேவரே திருவாதவூரராக அவதரித்தருளினர் என்ற வரலாறு திருப்பெருந்துறையின் வடமொழிப் புராணமாகிய ஸ்ரீ ஆதிகைலாய மான்மியத்தாலும், மாணிக்கவாசகரின் வடமொழிச் சரிதமாகிய ஸ்ரீமணிவாக்கிய சரித்திரத்தாலும் அறியப்படும் என்பது மகாமகோபாத்தியாயர் ஸ்ரீ உ. வே. சாமிநாதையர் அவர்கள் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராண முன்னுரையில் எழுதிய குறிப்பு. குரா - இறைவர் பூசைக்குகந்த கோட்டுப்பூ வகையுள் ஒன்று. "திருக்குரா நீழற்கீழ் நின்ற" (திருவிசைப்பா). தென்றல் நெடுந்தேரோன் - மன்மதன். பராபரன் - பரத்துக்குப் பரன். முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருள். பரைக்குப் - உமையம்மைக்குப் - பரன் என்றலுமாம். பருப்பதம் - மேருமலை. கைக்கொண்டார் - வில்லாக வளைத்துக் கையிற் கொண்டார். இராவணன் என்ற பேர் - இராவணன் என்பது அனேக காலம் கயிலைக்கீழ் அமுக்குண்டு அழுததனாற் போந்தபெயர். இராவணன் - அழுபவன்.

போது

IV திருச்சிற்றம்பலம்  அடைவு திருத்தாண்டகம்

பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து
புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்
கரப்பள்ளி திருக்காட்டுப் பள்ளி கள்ளார்
கமழ்கொல்லி யறப்பள்ளி கலவஞ் சாரற்
சிரப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி
செழுநனி பள்ளிதவப் பள்ளி சீரார்
பரப்பள்ளி யென்றென்று பகர்வோ ரெல்லாம்
பரலோகத் தினிதாகப் பாலிப் பாரே. 1

நள்ளாறும் பழையாறுங் கோட்டாற் றோடு
நலந்திகழு நாலாறுந் திருவை யாறும்
தெள்ளாறும் வளைகுளமுந் தளிக்கு ளமுநல்
லிடைக்குளமுந் திருக்குளத்தோ டஞ்சைக் களம்
விள்ளாத நெடுங்களம் வேட்கள நெல்லிக்கா
கோலக்கா வானைக்கா வியன்கோ டிகா
கள்ளார்ந்த கொன்றையா னின்ற வாறுங்
குளங் - களங் - கா வெனவனைத்துங் கூறு வோமே. 10

கயிலாய மலையெடுத்தான் கரங்க ளோடு
சிரங்களுர நெரியக்கால் விரலாற் செற்றோன்
பயில்வாய பராய்த்துறைதென் பாலைத் துறை
பண்டெழுவர் தவத்துறைவெண் டுறைபைம் பொழிற்
குயிலாலந் துறைசோற்றுத் துறைபூந் துறை
பெருந்துறையுங் குரங்காடு துறையி னோடு
மயிலாடு துறைகடம்பந் துறையாவடு
துறைமற்றுந் துறையனைத்தும் வணங்கு வோமே. 11

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—அடைவு - புகலாக அடையத் தகுமிடம். பிறவி வேதனைக்கு அஞ்சிய உயிர்கள் வந்தடையு மிடங்கள் சிவபெருமான் வெளிப்பட்டெழுந்தருளி யிருக்கும் திருத்தலங்களேயாம். "நின்னை யடைவாக வுடன்போந்தேன்" (திருஞான - புரா - 475). அத்திருத்தலங்களைத் தொகுத்து வகைப்படுத்தி எடுத்துக் கூறுதலால் இப்பதிகம் இப்பெயர் பெற்றது. வீரட்டான மிவைகூறி நாவி னவின் றுரைப்பார்க்கு நணுகச் சென்றால் நமன்றமரும் சிவன்தமரென் றகல்வர்; போற்ற இடர் போகும்; மலைகள் மற்றும் இடர்கெட நின்றேத்துவோம்; பகல்வோரெல்லாம் பரலோகத்தினிதாகப் பாலிப்பார்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) இப்பாட்டுப் பள்ளி என்ற பெயருடைய தலங்களைத் தொகுத்துக் கூறுவது. பள்ளி - தங்குமிடம். கொல்லி அறப்பள்ளி - கொல்லிமலையில் உள்ள அறப்பள்ளி என்ற தலம். "கொல்லி குளிர் அறப்பள்ளி" (க்ஷேத் - கோ - தாண் - 1). இறைவர்-அறப்பளீசர். இது கொங்கு நாட்டில் தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று. பாலிப்பாரே - பாலிக்கப்படுவார்.—(2) இப்பாட்டு வீரட்டானத் தலங்களைத் தொகுத்துக் கூறுவது. கோத்திட்டை - திருப்பரங்குன்றம். இது வீரட்டானங்களுள் ஒன்றன்றாயினும், "கோத்திட்டையும் கோவலும் கோயில் கொண்டீர்" (நம்பி - தேவா) என்று இணைத்துப் போற்றப்படுதலால் இத் தொகுதியில் சேர்த்தருளுதற்குரியது. "குடி வீரட்டானம்" என்ற கருத்துமிது. வீரட்டானம்-வீரஞ்செய்த எட்டுத்தலம் என்பதுபொருள்.—(3) இப்பாட்டுக் குடி என்றபேருடைய தலங்களைத் தொகுத்துக் கூறுவது. விடைவாய்க் குடி - இத்தலத்து ஆளுடைய பிள்ளையார் தேவாரப் பதிக முழுமையும் கோயிற் சுவரில் கல்வெட்டினின்றும் எடுத்தெழுதப்பட்டுக் கிடைத்தது. (11-ம் திருமுறையினுள்) ஐயடிகள் அருளிய க்ஷேத்திர வெண்பா - 7-ல் போற்றப்பட்டது.—(4) இப்பாட்டு ஊர் என்று பெயர் வழங்கும் தலங்களைத் தொகுத்துக் கூறுவது. தோழூர் - கொங்கு நாட்டில் உள்ளது.—(5) இப்பாட்டுக் கோயில் என்ற பெயரால் வழங்கப்படும் தலங்களைத் தொகுத்துக் கூறுகின்றது. பெருங்கோயில் - மாடக்கோயில், நன்னிலத்துப் பெருங்கோயில் முதலியவை. இவை 78 என்ப; கோச்செங்கட்சோழ நாயனார் முன்பிறவி நினைவினால் யானை புகாதபடி இறைவனுக்கு அமைத்தவை. இச்செய்தியை வைணவ ஆழ்வார்களும் போற்றியுள்

ளார்கள். கோதுடிக் கோயில்-கோதுடி - ஒருவகை முல்லை. இளங்கோயில்-கோயில் திருப்பணி செய்யும் காலத்தில் அது முடியும் வரை இறைவர் எழுந்தருளியுள்ள இடம் என்ப. பாலத்தாபனம் என்பது வடமொழி ; ஆகமம்-"இருக்கு ஓதி...ஏத்தும் - என்பது அக்காலத்தில் மந்திர உருவத்தில் இறைவர் அமர்ந்து வீற்றிருக்கும் தன்மையும் அந்நாள்களில் வேதங்கள் மிகுதியும் ஓதப்படுதலும் குறித்தது. "மீயச்சூர் இளங்கோயில்".—(6) இப்பாட்டில் காடு என்ற பெயர்பெற்ற தலங்கள் தொகுக்கப்பட்டன. ஆலங்காடு - பனங்காடு - முதலியவை மரங்களாற் போந்த பெயர். பாவையர்கள்... பொய்கை - "பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை வாயினவே வரம்பெறுவர்" (பிள் - தேவா) என்றபடி பெண்கள் வரம்பெற மூழ்கும் முக்குளம். விலையாம் வளை திளைக்க - "கையார் வளை சிலம்ப" (திருவா). வேறும் - மாறும். வினை வேறுதல் - துன்பம் தருதல் மாறி இன்பம் பயக்கும் தன்மையுடையனவாதல். (7) இப்பாட்டில் வாயில் என்ற பேருடையதலங்கள் தொகுக்கப்பட்டன. கடுவாயர்- "இடுதுவர்க்காயொடு சுக்குத்தின்னும்" என்றபடி மருந்து உண்ணும் வாயினை உடையார் - சமணர். நெய்தல் வாயில் - முல்லை வாயில் - ஞாழல் வாயில் - முதலியவை செடி - கொடி - என்றிவற்றாற் போந்தபெயர். குடவாயில் - குணவாயில். திசைகாரணமாக வந்தபெயர்.—(8) ஈச்சுரம் - என்ற பெயருடைய தலங்கள் இப்பாட்டிற் றொகுக்கப்பட்டன. நந்திகேச்சுரம் - மாகாளேச்சுரம், அகத்தீச்சுரம், அயனீச்சுரம், இராமேச்சுரம்-முதலியவை அவ்வத்தலங்களில் பூசித்துப் பேறுபெற்றவர்களின் பேரால் வழங்கப்படுவன. சுரம்பலவும் - சுரம் - ஈச்சுரம் என்பது சுரம் என்று முதற்குறைந்து வழங்கப்பட்டதென்பர்.—(9) இறைவன் எழுந்தருளிய திருமலைகளை வகுத்துரைப்பது இத்திருப்பாட்டு. கேதாரம் - இமயச்சாரலில் உள்ள மலை. அண்ணு - திருவண்ணுமலை. மகேந்திரமாமலை - கயிலாயம் என்ப. "மன்னு மாமலை மகேந்திர மதனிற், சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்", "மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந், துற்றவைம் முகங்களாற் பணித்தருளியும்" (திருவா). ஏமகூடம் - இலங்கையில் உள்ளது ; முருகப்பெருமான் போர்முகத் தெழுந்தருளியபோது தங்கும் பாசறை வீடு வகுத்த மலை. கந்தபுராணம் ஏமகூடப்படலம் பார்க்க. கதிர்காமம் என்ப. விந்தமாமலை - வழிமறித்துத் தருக்கி எழுந்த இதனை அகத்தியர் பிலத்தில் அழுத்திப் பின் எழுவித்தனர் என்பது வரலாறு. விந்தம் பிலம்புகுபடலம் (கந்தபுரா) முதலியவை பார்க்க. வேதமலை - திருக்கழுக்குன்றம். சையம் - காவிரி பிறக்கும் மலை. குடகு நாட்டில் உள்ளது. பொதியின்மலை - பொதிகை. உதயம் - உதயகிரி. அத்தம் - அத்தமனகிரி.—(10) ஆறு என்றும், குளம் என்றும், களம் என்றும், கா என்றும் பெயர் வழங்கும் சிவதலங்கள் இத்திருப்பாட்டில் தொகுதிப்படுத்தப்பட்டன. தெள்ளாறு - "நள்ளாறு தெள்ளாறு." (நம்பி - புக்கொளியூர் அவிநாசி). தளிக்குளம் - "தஞ்சைத் தளிக்குளத்தார்" (தாண் - வீழி - 8) தஞ்சைப் பெரிய கோயில் என்ற இராசராசேச்சரத்தின் வடபுறம் சிவகங்கை என்ற தீர்த்தக் குளத்தி னடுவுள் உள்ள தளி.—(11) துறை என்ற பெயருடைய தலங்கள் இத்திருப்பாட்டிற் றொகுக்கப்படுவன. எழுவர் தவத்துறை - இது இப்போது லாலுகுடி (திருச்சிராப்பள்ளி சில்லா) என வழங்கப்படுவது.

திருவங்கமாலை

V　திருச்சிற்றம்பலம்　　பண் - சாதாரி

தலையே நீவணங்காய் - தலை - மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத் - தலையே நீவணங்காய்　　1

தேடிக் கண்டுகொண்டேன் - திரு - மாலொடு நான்முகனுந்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுள்ளே-தேடிக் கண்டுகொண்டேன்.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—மனித உடலின் புற உறுப்புக்களும் அக உறுப்புக்களும் எல்லாம் சிவபெருமானை வழிபட்டு நலமடைவதற்காகவே படைக்கப்பட்டன. ஆதலின் அந்தந்த உறுப்புக்களும் எவ்வாறு வழிபட்டு உறுதி பெறுதல் வேண்டும் என்பதனையும், அதுவே உயிர்கள் மேனிலை அடையும் வழி என்பதனையும் காட்டி மக்களை வழிப்படுத்துகின்றது இப்பதிகக் கருத்து. இதனை ஆசிரியர் "செல்கதி காட்டிடப் போற்றும் திருவங்கமாலை" என்று குறிப்பிடுதல் காண்க. இப்பதிகம் 12 பாட்டுக்களையுடையது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—தலைமாலை - ஒவ்வோர் ஊழி முடிவிலும் அழிந்த பிரம விட்டுணுக்களுடைய தலைகளாலாகிய மாலை. "தலைக்குத் தலைமாலை யணிந்ததென்னே" (நம்பி - அஞ்சைக்களம்). தலையாலே - பிரமன் தலையோட்டிலே.—(3) செம்பவளம்போல் மேனி - எரிபோல் மேனி என்று தனித்தனி கூட்டுக.—(4) முரலுதல் - மூக்கின்வழி வரும் மெல்லொலியால் போற்றுதல். "மூக்கினுன் முரன்றோதி" - "ஞமண ஞாஞண ஞாண ஞோணமென் றோதி" (தேவா). முரலுதல் - மூக்கின்றொழிலாகிய முகர்தல் என்றலுமாம்.—(5) பேய் - சிவகணப் பேய்கள்.—(8) ஆக்கை - யாக்கை - உடம்பு. (எலும்பு நரம்புகளாற் கட்டப்பட்டது). கையாலட்டுதல் - கையால் தூவுதல் —(9) கோகரணம் - சிவலிங்க வுருவம் பசுவின் காது போல் அமைந்ததாதலின் இப்பெயர் பெற்றது. துளுவ நாட்டில் பாடல் பெற்ற தலம்.—(10) குற்றலத்துறை கூத்தன் - "குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தா" (திருவா). இக்கோயில் குற்றால நகரின் உள்ளே உள்ள தனிச் சிறு பழங் கோயில். அருவியின் பக்கத்துள்ள குறும்பலா எனப்பட்ட தனிக்கோயில் வேறு.—(11) இறுமாந்து......எண்ணப்பட்டு - சிவகணத்துள் ஒருவன் என்பது பெருமை செய்யும் பெருமித உணர்ச்சி. கீழ்மைக் குணங்களுள் வைத்து எண்ணப்படும் இறுமாப்பன்று. "சிந்தையார்க் குள்ள செருக்கு" (அற்பு - அங் - 79); "யானே தவமுடையேன்... ஆளாயினேன்" (ஷை - 7); "உண்டே யெனக்கரிய தொன்று" (ஷை - 10).—(12) என்னுள்ளே தேடிக் கண்டு கொண்டேன் - "என்னெஞ்சத் தானென்பன் யான்" (அற் - அங் - 6).

பன்மைத் தொகை - இவை தனிக் குறுந்தொகை—காலபாசக் குறுந்தொகை—"மறக்கிற்பனே" என்ற குறுந்தொகை—"தொழற்பாலதே" என்ற குறுந்தொகை—இலிங்க புராணக் குறுந்தொகை — மனத்தொகை — சித்தத்தொகை — உள்ளத் தொகை—ஆதிபுராணத் தொகை முதலிய பொதுக் குறுந்தொகைத் திருப்பதிகங்கள். தொகை - குறுந்தொகை என்றும், பல கருத்துக்களைத் தொகுக்கும் பதிகம் என்றும், ஒரே சொன் முடிபும் கருத்து முடிபும் கொண்ட பல பாட்டுக்களின் தொகுதி என்றும் பல பொருளும்பட நின்றது.

## தனிக் குறுந்தொகை

I திருச்சிற்றம்பலம்

குறுந்தொகை

ஒன்று வெண்பிறைக் கண்ணியோர் கோவணம், ஒன்று கீளுமை யோடு முடுத்தது,
ஒன்று வெண்டலை யேந்தியெம் முள்ளத்தே, ஒன்றி நின்றங் குறையு மொருவனே. 1

பத்து நூறவன் வெங்கண்வெள் ளேற்றண்ணல், பத்து நூறவன்பல்சடைதோண்மிசை
பத்தி யாமில மாதலின் ஞானத்தால், பத்தி யாளிடங் கொண்டது பள்ளியே. 10

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—ஒன்று என்ற எண்ணில் தொடங்கிப் பத்து வரையும் எண்ணலங்காரமாகப் பெருக வரும்படி ஒன்றுமுதல் பத்துப் பாட்டுவரை தொகுத்தார். "ஒன்று கொலாம்" என்ற விடந்தீர்த்த பதிகம் போன்ற அமைப்புடையது இப்பதிகம். இறைவரது இறைமைக் குணங்களை எண் வரிசைப்படத் தொகுத்துக் கூறுவது. மேலும் பெரியோர்கள்பாற் கேட்டுணர்ந்து பயிலத் தக்கது.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) **ஒன்றி** - கலந்து.—(2) **இரண்டு - செய்தொழில்** - கோபப் பிரசாதங்கள். **இரண்டு - கோலம்** - சிவம் சத்தி. **இரண்டு போது** - நினைப்பு-மறப்பு ; பெத்தம் - முத்தி ; இரவு-பகல்.—(3) **மூன்று மூர்த்தி** - அரன் - அரி - அயன். **மூவிலைச் சூலம்** - மூவர் தொழிலும் தமது என்று குறிப்பது. "மூவிலையொருதாட் சூல மேந்துதல், மூவரும் யானென மொழிந்த வாறே" (ஒற்றி - ஒருபாவொருபஃது - 6 - 11ம் திருமுறை). **தீத்தொழில்** - வேள்வி. "தொலையா நிதியமெய்தித், தந்தையைத் தீத்தொழில் மூட்டிய கோன்" (ஆளு - பிள் - அந் - 85). **தீத்தொழில் மூன்றினன்** - ஆகவனீயம் - காருக பத்தியம் - தட்சிணாக்கினி என்ற மூவேள்விகளிலும் வந்தருள்பவன். **மூன்று போது** - முற்பகல் - நண்பகல் - பிற்பகல். "முட்டாத முச்சந்தி", "சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்திச் சகளி செய்திறைஞ்சு" (தேவா).—(4) **நாலின் மேன்முகம்** - பிரமதேவனுக்கு ஓர் காலத்தில் நான்குக்கு மேற்பட இருந்த ஐந்தாவது முகம். **செற்றது** - கிள்ளியது. **நாலும்** - அறம் பொரு ளின்பம் வீடு உணர்த்தும் அறநூல் வேதம். உணர்ந்தது நாலு வேதம் எனவும் சரித்தது நாலு நன்னெறி எனவும் கூட்டுக. **நாலு நன்னெறி** - சரியை முதலிய சிவநெறி நான்கு.—(5) **அஞ்சும் அஞ்சும் ஓர் ஆடி** - அஞ்சும் - முன்னையது, ஆனைந்து ; அஞ்சும் - பின்னையது, ஐந்தொழில். **ஓர்** - ஒப்பற்ற. **ஓர் அஞ்சும் ஆடி** - ஆனைந்தும் மஞ்சனமாடி ; **ஓர் அஞ்சும் ஆடி** - ஒப்பற்ற ஐந்தொழிற்கூத்து இயற்றி ; "அஞ்சு கொலாமவ ராடின தாமே" (தேவா). **அஞ்சுபோல் அரையார்த்ததன்** - அரையிற் கட்டியது ஐந்தலை அரவு என்றபடி ; "அஞ்சு கொலாமவ ராடர வின்படம்". **அஞ்சும் அஞ்சும் ஓர் ஓர் அஞ்சும்** - ஐம்பூதங்கள் ; ஐந்து தன்மாத்திரைகள் ; ஞானேந்திரியம் ஐந்து ; கன்மேந்திரியம் ஐந்து ; **அஞ்சுமாம்** - ஐம்புலன்களுமாம்.—(6) **ஆறு கூர்மையர்க்கு** - கூர்மை - அறிவு கூர்ந்து செல்லும் நிலை. **ஆறு (போல்)** - அறு சமயத் தவ்வவர் பொருள்.—(7) **பொழில்** - புவனம். "ஏழுடையான் பொருள்" (கோவை). **ஏழுபோற்றும்** - மேல் ஏழு சுரத்திற்பாடிப் புகழும். **நரம்பு ஏழு** - யாழின் ஏழிசை ; **ஏழும் சூழ்** - ஏழ் பிறப்பிலும்.—(8) **எட்டு மூர்த்தி** - இறைவரது அட்டமூர்த்தம் = (ஐம்பூதம் - சூரியன் - சந்திரன் - ஆன்மா). **எட்டு வான்குணம்** - தன்வயத்தனாதல் முதலிய இறைமைக் குணங்கள் எட்டு. "எண்குணத்தான்" (குறள்).—(9) **ஒன்ப தோன்பதியான்** - ஒன்பதொன்பதாகிய எண்பத்தொரு பதங்களிற் பேசப்படுபவன். எண்பத்தொரு பதங்களையும் தன்னையடையும் வழியாகவுடையவன் ; **ஒளி களி** - (ஞான) ஒளியும், (சிவ) ஆனந்தமுமுடைய. **ஒளி களிறு** என்பது பாடமாயின் ஞானத்தையே ஆனையாகவுடைய என்று கொள்க. **ஒன்பதோன்பது பல்கணம்** - சிவகணங்களாகிய பதினெண் கணங்கள். **ஒன்பதாம் தீத்தொழில்** - "ஒன்பது போலவர் வாசல் வகுத்தன" என்றபடி ஒன்பது வாயிலும் தீமையினிற் செல்வன. **உரை ஒன்பதோத்து நின்று என்னுள் ஒடுங்கும்** - என் பேச்சுக்கள் முதலிய எல்லாம் எவ்வளவு விரிந்து சூழினும் முடிவில் "நான்" என்ற அகங்கார நிலையினவாய் வந்து

என்னையேசுற்றி என்னகத் தடங்கும்; அது ஒன்பது என்னும் எண்ணினைப்போல; இஃ தெவ்வாறெனின், ஒன்பதை எதனால் எத்தனை பெருக்கினும், பெருக்கி வந்த எண்ணின் உள்ள இலக்கங்களைக் கூட்டினால் ஒன்பதே வருவதுபோல. $9\times2=18=1+8=9$; $9\times3=27=2+7=9$; $9\times4=36=3+6=9$; $9\times5=45=4+5=9$; $9\times6=54=5+4=9$; $9\times7=63=6+3=9$; $9\times8=72=7+2=9$; $9\times9=81=8+1=9$; மேலும், $9\times144=1296=1+2+9\times6=18=1+8=9$ என்றிவ்வாறு கண்டுகொள்க. ஒன்பது என்ற எண், ஒன்று - இரண்டு - முதலிய ஏனை எண்களைப்போலத் தனக்கென்று ஒரு தனிப் பெயரில்லாமல் பின்வரும் பத்து என்பதில் ஒன்று குறைந்தால் எதுவோ அது என்றறியப்படுமாறு பெயர் கொண்டிருத்தல் பின் வரும் பாசமாகிய உலகமும், முன் நிற்கும் பதியும் அல்லாதது என்றறியப்பட்டும் தனித்து நில்லாது, பதியினையோ அன்றிப் பாசத்தையோ சார்ந்து நிற்றலும் ஆன நிலையின் உள்ள உயிரை ஒத்திருக்கின்றதென்பதும், கடிகா யந்திரங்களிலும் ஒன்பதைக் குறிக்க IX என்ற (X-ல் I குறைக்க என்றது பொருள்பட) குறியீடு கொள்வதும், பிறவும் இங்குக் காணத்தக்கன.—(10) பத்து நூறு - அளவில்லாத. பத்தியான் - பத்துக் குணங்களையுடைய அடியவர். "பத்துடையீர்" (திருவா). பள்ளி - தங்குமிடம்.

போது - தனித் திருக்குறுந்தொகை

II திருச்சிற்றம்பலம் குறுந்தொகை

ஏயி லானையெ னிச்சை யகம்படிக், கோயி லானைக் குணப்பெருங் குன்றினை
வாயி லானை மனோன்மணி யைப்பெற்ற, தாயி லானைத் தழுவுமென் சிந்தையே. 1

மலையே வந்து விழினு மனிதர்காள், நிலையி னின்று கலங்கப் பெறுதிரேற்
றலைவ னாகிய வீசன் றமர்களைக், கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே. 5

கற்றுக் கொள்வன வாயுள நாவுள, இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுள னாமுளோம், எற்றுக் கோநம னான்முனி வுண்பதே. 6

என்னை யேது மறிந்தில னெம்பிரான், றன்னை நானுமு னேது மறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலுந், தன்னை நானும் பிரானென் றறிந்தேனே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—மனோன்மணியைப் பெற்ற தாயிலானை என் ஆவி தழுவும்; அவனை நான் ஞானத்தாலே யிட்டுவைப்பன்; ஆனால் ஞானிகள் தொழுவதுபோல் நான் ஞானத்தாற் றொழ வல்லனல்லேன்; புழுவினும் கடையேன் உயர்ந்த அடியார் கூட்டத்திற்கூட என்ன தகுதியுடையேன்?; மலையே வந்து விழினும் நிலையினின்று கலங்காமனின்றால் அவ்வடியரைக் கொலை யானையும் கொன்றிடவல்லதன்று; சிவனைப் பூசித்து வாழ்த்தினால் நமன் பயமில்லை; ஈசன் ஏசற்றவர்க்கு இனியன்; ஈசன் என்னை அறியாதபோது நான் அவரை ஏதும் அறிந்திலேன்; அவன் அருளிய போது நான் அறிந்து ஆட்செயவல்லனாயினேன்; அவன் அருள் கள்ளத்தேனுக்கு எவ்வாறு விளைந்ததோ அறியேன்.

குறிப்பு :—இப்பதிகம் மிக அருமைப்பாடு பெற அடிமைத் திறத்தை அனுபவித்துக் கூறுவது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஏ இலான் - தமக்குமேல் தலைவனில்லாதவர். இச்சை அகம்படிக் கோயில்-உள்ளக்கோயில்; (குணக்குன்றினை). வாயிலான் - வாயிலாதவுடையான்; மனோன்மணியை பெற்ற - "இமவான் மகட்குத், தன்னுடைக்,

கேள்வன் மகன்றகப்பன் தமையன்" (திருவா - பொற்சு - 13); "அரனுக்குத் தாயு மகளுநற் றாரமு மாவளே" (திருமந் - 4 - 295).—(2) ஞான - வித்து - ஞானம் முளைத்தற் கிடமாயுள்ளவர்; ஞானத்து - ஞானத்தினால்: அறிவு கொடுத்து; ஞானத் துளையிடுதல் - அறிவினுள்ளே முழுதும் கொண்டுவைத்தல்.—(4) தமர் சூழ-அடியார் கூட்டம்.—(5) கலங்கப் பெறுதிரேல் - கலங்காமல் நிற்கப் பெற்றீராயின். கோளீ றிடுகிற்குமே. கொல்லவல்லதா? (அன்று). ஏகார வினு எதிர்மறைப் பொருளில் வந்தது. நாயனாரின் சரிதக் குறிப்புப்படகின்றது:—(6) பூசைகொள்ளும் இறைவரை யும், பூசை செய்யும் உயிரையும், பூசைக் கரணங்களையும், சாதனங்களை யும் உருசி பெற உறுதிப் பொருள்பட வினு முகத்தால் உரைப்பது. "செய்வினையுஞ் செய்வானு மதன்பயனுஞ் சேர்ப்பானு, மெய்வகையா னன் காகும் விதித்த பொருள்" (சாக் - புரா - 5).—(7) உலகினரைநோக்கி எளிதாகிய நல்லுபதேசம்.—(8) "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்ற திருவாசகக் கருத்து.—(9) முன்னிரண்டு அடிகளில் சிவானந்தானுபவத்தையும், பின்னிரண்டடி களில் முன்னர்ப் பாசத்தழுந்திய இருண்மல நிலைமையும் கூறினார்.

போது- காலபாசத் திருக்குறுந்தொகை

III திருச்சிற்றம்பலம்  குறுந்தொகை

கண்டு கொள்ளரி யானைக் கனிவித்துப்
பண்டுநான் செய்த பாழிமை கேட்டிரேற்
கொண்ட பாணி கொடுகொட்டி தாளங்கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலுஞ் சூழலே. 1

படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்னம தீச னடியரை
விடைகொ ளூர்தியி னானடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே. 7

இன்னங் கேண்மி னிளம்பிறை சூடிய
மன்னன் பாத மனத்துட னேத்துவார்
மன்னு மஞ்செழுத் தாகிய மந்திரந்
தன்னி லொன்றுவல் லாரையுஞ் சாரலே. 9

அரக்க னீரைந் தலையுமோர் தாளினா
னெருக்கி யூன்றியிட் டான்றமர் நிற்கினுஞ்
சுருக்கெ னுதங்குப் பேர்மின்கண் மற்றுநீர்
சுருக்கெ னிற்சுட ரான்கழல் சூடுமே. 11

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—சிவனடியார் பக்கஞ் செல்லாதீர் என்று இயமன் தூதுவருக்கு ஆணையிட்டது. இப்பதிகப் பாராயணம் எவ்வித சங்கடங்களையும் நீக்கவல்லது. சில பிரதிகளில் இது காலபாராயணத் திருக்குறுந்தொகை என்றேகாணப்படுகின்றது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கொள்ளரியான் - கொள்ள அரியான். பாழிமை - அடிமைத்திறத்தின் உறைப்பு. கேட்டிரேல் - சூழலே - கேட்பீராகில் சூழற்க - சூழாதேயுங்கள். மேற்பாட்டுக்களிலும் இவ்வாறே கூட்டிமுடிக்க. சூழற்க - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. இப்பதிக முழுமையும் ஆணையாகவரும் இவை

இயமன் றூதுவரை நோக்கிக் கூறப்பட்டன. "நமன் தூதுவீர்! (5); "படையும் பாசமும் பற்றிய கையினீர்!" (7) கொடுகொட்டி - இயங்களின் ஒருவகை.—(2) கல்லவடம் - ஒருவகைப்பறை. "கல்லவடமிட்டுத் திசைதொழுதாடியும்" (தேவா).—(5) இறை - சிறிதும். உம்மைதொக்கது.—(6) வாமதேவன் - சிவன். வாமதேவம் - சதாசிவ மூர்த்தியின் ஐம்முகங்களுள் வடக்கு நோக்கிய முகம். காமம் - சிவனடியன்றி வேறொன்றிற் செல்லும் இச்சை. ஒன்று - ஒன்றும். உம்மை தொக்கது. ஏமம் - திருநீறு.—(8) விச்சை - அறிவு - ஞானம். வேட்கைமை - விருப்பம்; நிச்சல் - நித்தம். எதுகை நோக்கி நிச்சல் என நின்றது.—(9) ஒன்று - ஒரு முறை சொல்லுதல். உம்மை இழிவு சிறப்பு. பொருந்துதல் என்றலுமாம். இப்பொருளில் உம்மை எண்ணும்மை.—(10) மனப் பரிப்பு ஒன்று - மனத்தில் வைத்தல் வேறொன்றும். இல்லிகள் - இல்லாதவர்கள்.—(11) தமர் - அடியார். "தமர் ஒருவர்" (அப்பூதி - புரா - 9). "தமரேயோ" (318); அங்கு - அங்கு நின்றும். சுருக்கேனில் - உமது தொழில் மற்றும் செய்ய முயன்றால். சூடுமே - சுடுமே. ஏகாரம் தேற்றம்.

போது "மறக்கிற்பனே" யென்னுந் திருக்குறுந்தொகை

IV திருச்சிற்றம்பலம் குறுந்தொகை

*காசனைக்கன லைக்கதிர் மாமணித், தேசனைப்புக ழார்சிலர் தெண்ணர்கள்;*
*மாசினைக்கழித் தாட்கொள வல்லவெம், மீசனையினி நான்மறக் கிற்பனே.* 1

துஞ்சும் போதுஞ் சுடர்விடு சோதியை, நெஞ்சு ணின்று நினைப்பிக்கு நீதியை,
*நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை, வஞ்ச னேனினி நான்மறக் கிற்பனே.* 8

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு:—ஈசனைப் புகழார் சிலர் தெண்ணர்கள்; ஈசன் வந்தென் உள்ளங் குடி கொண்டான்; அவர், புந்திக்கு விளக்காய புராணன்; ஞானமூர்த்தி; துஞ்சும்போதுஞ் சுடர்விடு சோதி; நெஞ்சுள் நின்று நினைப்பிக்கு நீதி; பருகு பாலன்; என்றிவை முதலிய தன்மைகளா லறியப்படுபவர்; அவரை நான் இனி மறக்கிற்பனோ? (மறக்க கில்லேன்).

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) காசன் - பொற் காசு போல்பவர். தெண்ணர் - கீழோர். மறக்கிற்பனே - கில் - ஆற்ற லுணர்த்தும் இடைநிலை; ஏகாரம். மறக்கும் ஆற்றல் உளனுவனோ? மறக்கேன்; என்று வினு எதிர்மறை யுணர்த்திற்று.—(2) புந்திக்கு விளக்கு - புந்திக்கு வழி காட்டுவது. சந்தி - நினைப்புப் பொருந்துமிடம்; மன்றம் என்றலுமாம்.—(4) இனி - இதற்குமுன் மறந்ததுபோல இனி; "இனி நான்" (1)—(5) வேனிலான் - மன்மதன்;—(8) துஞ்சும் போதுநின் னுமத் திருவெழுத், தஞ்சுந் தோன்ற வருளுமை யாறரே", "நெஞ்சுளே புகுந்து நின்று நினைதரு நிகழ்வி னனே, துஞ்சும்போ தாக வந்து துணையெனக் காகி நின்று, அஞ்சலென் றருள வேண்டும் ஆவடு துறையு ளானே", "மரணங் கைகூட்டுவ தஞ்செழுத்துமே" முதலிய திருவாக்குக்களும், "அவிகின்ற விளக்குச் சுடர்விட் டெரிவதுபோல" என்ற பழமொழியும் காண்க.—(10) உருவ நோக்கி - உலகம் உருப்பெறும்படி - உண்டாம்படி - நோக்குபவன்.

குறிப்பு:—"மறக்கிற்பனே" என்று பாட்டுக்கள் முடிவு பெறுவதால் இப்பதிகம் "மறக்கிற்பனே" என்னும் திருக்குறுந்தொகை-எனப்பெயர் பெற்றது. இவ்வாறே மேல்வரும் பதிகமும் "தொழற்பாலதே என்னும் பதிகம்" எனப் பெயர்பெறும்.

போது - "தொழற்பாலதே" என்னும் திருக்குறுந்தொகை

V திருச்சிற்றம்பலம்

குறுந்தொகை

அண்டத் தானை யமரர் தொழப்படும், பண்டத் தானைப் பவித்திர மாந்திரு
முண்டத் தானைமுற் றுத விளம்பிறைத், தண்டத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 1

பருதி யானைப் பல்வேறு சமயங்கள், கருதி யானைக் கண்டார் மனமேவிய
பிரிதி யானைப் பிறரறி யாததோர், சுருதி யானைக்கண் டீர்தொழற் பாலதே.

ஆதிப் பாலட்ட மூர்த்தியை யானஞ்சும், வேதிப் பானைநம் மேல்வினை வெந்தறச்
சாதிப் பானைத் தவத்திடை மாற்றங்கள், சோதிப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—அண்டத்தான், அமரர்தொழப்படும் பண்டத்தான், பவித்திர மாந் திருமுண்டத்தான், பல்வேறு சமயங்கள் கருதியான், நியம நெறிகளை ஓதியான், நம்மேல் வினைவெந்தறச் சாதிப்பான், தவத்திடைமாற்றங்கள் சோதிப்பான், என் றின்ன பலவாற்றானும் அறியப்படுகின்ற சிவபெருமானையே நாம் தொழற்பாலது; வேறு எவரையுமன்று; உலகரே காண்மின்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பண்டம் - உறுதிப்பொருள் - முத்தி. "பாதம் பணி வார்கள்பெறு பண்டம்மது பணியாய்" (நம்பி - தேவா). பவித்திரம்-தூய்மை; திருமுண்டம்-திருநீறு. கண்டீர்-உலகினரை நோக்கி வற்புறுத்தியது.—(3) சுண்ணம்-திருநீறு.—(4) விடலையான் - பெருமையிற் சிறந்தோன்; படலை - பச்சிலையும் மலர்களும் விரவத் தொடுக்கும் மாலைவகை. நடலை - நடிப்பு.—(5) பல்வேறு சமயங் கள் கருதியான் - பல சமயங்களை வகுத்தவன்; சமயங்களாலும் கருதப்படுபவன்; "ஆறுசமயத் தவரவரைத் தேற்றுந் தகையன" (தேவா). பிரிதி - பிரீதி - விருப்பம்.—(6) ஓதியான் - வகுத்துரைத்தவன்.—(8) வேதிப்பான் - விரும்புபவன்; சாதிப் பான் - உறுதிபுரிபவன்; சோதிப்பான் - தூய்மைசெய்பவன்.—(9) தோற்றினான் - தன்னுள் ஒடுக்கி மீளத்தோற்றுவிப்பவன். அமரர்கள் நஞ்சினால் இறந்துபடா வண்ணம் உளதாம்படி செய்தவன் என்றலுமாம்.—(10) விட்டிட்டான் - வெளிப் படுத்தான்.

போது - இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை

VI திருச்சிற்றம்பலம்

குறுந்தொகை

புக்க ணைந்து புரிந்தல ரிட்டிலர், நக்க ணைந்து நறுமலர் கொய்திலர்;
சொக்க ணைந்த சுடரொளி வண்ணனை, மிக்குக் காணலுற் றாரங் கிருவரே. 1

செங்க ணானும் பிரமனுந் தம்முளே, யெங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்;
இங்குற்றேனென் றிலிங்கத்தேதோன் றினான்,பொங்குசெஞ்சடைப்புண்ணியமூர்த்தியே

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பொய்யும் பொக்கமும் போக்கித் திருவலகு திருமெழுக்கு இடாமலும், மலர் கொய்து சுமந்து இண்டை புனைந்து சூட்டாமலும், நீர்சுமந் தாட்டி அட்டமாங்கம் அடிவீழ்ந்து நினையாமலும், கண்டி பூண்டு கபாலங் கைக்கொள்ளாம லும், சங்கமூதாமலும் பிரம விட்டுணுக்களாகிய இருவரும் தம்மாற்றலாற் சிவனைக் காணலுற்றுக் காண்கிலராகச், சிவபிரான், அருளினால் தாமாகவே இங்குற்றேன் என்று இலிங்கத்தே தோன்றினான்.

குறிப்பு :—இப்பதிகம் சிவனைச் சாரலுறும் நெறி நான்கனுள் சரியையின் இன்றியமையாச் சிறப்பை வற்புறுத்தி எடுத்துக் கூறுவதுடன் சிவலிங்க தத்துவத்தையும் கூறுவதனால் இப்பெயர் பெற்றது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நக்கு - மகிழ்ந்து; சோக்கு - அழகு. மிக்கு - தம்மறிவி னாற்றலாற் காண்பேம் என்று மேற்சென்று; இருவர் - பிரமாவும் விட்டுணுவும் என்பது 10-வது பாட்டிற் கூறுதல் காண்க.—(2) திலக மண்டலம் - வட்டமாகிய திலகம். பொட்டு. சேலவு - மேலும் கீழும் செல்லும் அளவு.—(3) ஆப்பி - பசுவின் சாணம். "திருவலகுந் திருமெழுக்கும் தோண்டியும் கொண்டு" (1333). சுமந்திலர் - குடையிற் பூ நிறைந்த அளவு காட்டச் சுமந்து என்றார். "நிரம்ப நீர் சுமந்து" (6) என்றது காண்க. "ஸதேஷ்ட ஜலம் அபிஷிச்ய" என்னும் விதியும் காண்க. "பொன்னடியே பரவி நாளும் பூவோடு நீர் சுமக்கும், நின்னடியார்" (நெடுங்களம் - 3).—(7) காணிய - காணும்பொருட்டு.—(9) துவளை மலர் பிளவு செய்து பிணைத்து - குவளை மலர் தொடுக்கும் ஒருவகை.—(10) சங்கம் விம்ம வாய் வைத்திலர் - "விருப்போடு வெண் சங்க மூதா" (தேவா).—(11) புண்ணிய மூர்த்தியே - புண்ணிய மூர்த்தியாதலின் தாமே அருளினாற்றோன்றினார் என்பது குறிப்பு.

போது - மனத்தொகை

VII திருச்சிற்றம்பலம் குறுந்தொகை

பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புறம், மின்னுள் ளத்திரள் வெண்பிறை யாயிழை,
நின்னுள்ளத்தருள் கொண்டிரு ணீங்குதல், என்னுள் ளத்துள தெந்தை பிரானிரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—எந்தை பிரானீரே! நின் திருவுள்ளத்தருள் கொண்டு இருள் நீங்குதல் என் உள்ளத்து உள்ளது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) உள்ளத்துள்ளது - எனது உள்ளக்கிடக்கை இது ஒன்றே. இதனால் இப்பதிகம் மனத்தொகை எனப்பட்டது. எந்தை பிரானிரே - இப்பதிகத்தின் மகுடம்.—(6) அம்மால் - அந்த ஆர்வம் - ஆசை. மால் - ஈண்டு அழுந்திய நல்லார்வத்தின்மேல் நின்றது.—(7) வேப்பத்தின் - தீமையுடைய. சேப்பம் - நேர்மை; சேப்பத்தாற் சிவன் என்பவர் - சிவன் என்று நேர்மையினாற் கூறுபவர். சிவன் - சித்து என்னும் பொருள் தருதலின் ஆணவத்தை நீங்கி அறிவை விளக்குதலால் சிவன் எனப் பெயர் போந்த தென்பாருமுண்டு. ஒப்ப - முற்றும்.—(10) எந்தை எம்பிரான் - "எந்தை பிரானிரே" என்ற மகுடத்தை விளக்கியவாறு. எமது தந்தையும் தலைவரும். "எந்தையே எம்பிரானே" (சித்தத்தொகை - 8).

போது - சித்தத்தொகை

VIII திருச்சிற்றம்பலம் குறுந்தொகை

சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர், அந்தி வானிறத் தானணி யார்மதி,
முந்திச் சூடிய முக்கண்ணி னானடி, வந்திப் பாரவர் வானுல காள்வரே. 1

அண்ட மாரிரு ளூடு கடந்தும்பர், உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்,
கண்டிங் காரறி வாரறி வாரெலாம், வெண்டிங் கட்கண்ணி வேதிய னென்பரே. 2

ஊரி லாயென்றொன் றாக வுரைப்பதோர், பேரி லாய்பிறை சூடிய பிஞ்ஞகா,
காரு லாங்கண்ட னேயுன் கழலடி, சேர்வி லார்கட்குத் தீயவை தீயவே. 7

அக்கு மாமையும் பூண்டன லேந்தியில், புக்குப் பல்பலி தேரும் புராணனே,
நக்து நீர்கள் நரகம் புகேன்மினோ !, தொக்க வானவ ராற்றொழு வானையே. 14

தருமந் தான்றவந் தான்றவத் தால்வருங், கருமந் தான்கரு மான்மறிக் கையினன்,
அருமந் தன்ன வதிர்கழல் சேர்மினோ, சிரமஞ் சேரழற் றீவினை யாளரே. 21

நமச்சி வாயவேன் பாருள ரேலவர், தமச்ச நீங்கத் தவநெறி சார்தலால்,
அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கைய னாகிலும், இமைத்து நிற்பது சால வரியதே.

பற்பல் காலம் பயிற்றிப் பரமனைச், சொற்பல் காலநின் றேத்துமின் றொல்வினை,
வெற்பிற் றோன்றிய வெங்கதிர் கண்டவப், புற்ப னிக்கெடு மாறது போலுமே. 23

இலங்கை மன்னனை யீரைந்து பத்துமன், றலங்க லோடட னேசெல வூன்றிய,
நலங்கொள் சேவடி நாடொறு நாடொறும், வலங்கொண் டேத்துவர் வானுலகாள்வரே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—சித்தத்துள்ளே சிவனைச் சிந்திக்குந் திறங்களைக் கூறியது. "சிந்திப்பார் மனத்தான்" என்று தொடங்குதலால் இப்பதிகம் சித்தத்தொகை எனப் பெயர் பெற்றது. முப்பது பாட்டுக் கொண்டமைந்த சிறப்புடையது ; ஆயினும் பெரும் பான்மை பற்றிப் பதிகம் எனப்படும். தேவாரத் திருமுறைகளுள் பேரெண்ணாகிய 30 பாட்டுப் பதிகம் இது ஒன்றேயாம். இதனுள் அகரமுதல் ஔகாரம் வரைப் பன்னிரண்டு உயிர் எழுத்துக்களையும், ஃ என்னும் ஆய்த எழுத்தையும், ககரமுதலாக வரும் மெய் யெழுத்துக்களில் ஏற்றபடி அமைந்த பதினான்கு மெய் எழுத்துக்களையும் குறியீடு பெறும்படி 2 முதல் 28 வரை உள்ள பாட்டுக்களில் முறையே முதலெழுத் தாய் வரும்படி யாக்கப்பட்ட தமிழ்ப்பெருஞ் சிறப்புடையது இத்திருப்பதிகம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(3) சோதியுட் சோதியாய் நின்ற சோதியே - "சோதியே சுடரே சூழொளி விளக்கே" (திருவா). "ஒளியா யொளியத னொளியா யொளியத னொளியுந் தணிதரு மொளியாகி" (பேரூர்ப் புரா - திருத் - பட - 163).—(5) ஈறில் கூறை - திக்குக்கள் ஆகிய ஆடை. "திகம்பரன்". வீறு - பெருமை. ஊறலாய் - அருளூற்றை உடையவரே.—(7) ஊரிலாய் - பேரிலாய் - "ஊரிலான்... பேரிலான்" (கந்த - புரா - மாயைப் - 1) ; சேர்விலார்கட்குத் தீயவை தீயவே என்றதனால் அடி சேர்ந்தார்க்குத் தீயவும் நன்மையாம் என்றபடி.—(11) அரு அரா - அரு - பெரிய ; கொடிய. அரா - பாம்பு.—(12) ஓத வண்ணன் - திருமால்; ஓதம் - கடல். கருதப்படுமவர் - பாதம் - தியானிக்கப்படுபவருடைய - தியேயப் பொருளா யுள்ளவருடைய - திருவடி - "சி ஏகோத் தியேய:" என்பது வேதம். (சிவன் ஒருவனே தியானிக்கப்படுபவர்).—(14) அக்கும் - அக்கமணி: எலும்பு என்றலுமாம். அஃ என்ற ஆய்த எழுத்தின் குறியீடாக வைத்தோதப்பட்டது. நீர்கள் - வணங்கா தாரை நோக்கி இரங்கிக் கூறியது.—(15) இங்கணர் - இங்கு எளிதில் வருபவர்.—(16) ஙகர வெல் கொடி - இடபக்கொடி. வெல் கொடி - யாவரையும் வெல்லும் கொடி. படுத்திருக்கும் நிலையில் இடபத்தின் வடிவம் ஙகரம் போன்றிருத்தலின் இவ் வாறு கூறினர். மகர வெல் கொடி மைந்தன் - மன்மதன். வெல் கொடி - சிவனை யன்றிப் பிறரை வெல்லும்.—(17) சரணமாம் படியார் - புகலடையத் தக்கவர்.—(19) இட்பம் - டகரத்தின் குறியீடாக வைத்தோதியது.—(20) இணர்ந்து - ணகரத் தின் குறியீடாக வைத்தோதியது. இணர் என்னும் பெயரடியாகப் பிறந்த பெய ரெச்சம். கொத்தாகப் பூத்து.—(21) சிரமஞ்சேர் - துன்பப்படுத்தும். அழல் - கொடிய.—(23) சொற் பல் காலம் - சொல்லப்பட்ட பல காலமும் ; வெற்பு -

உதயமலை.—(24) யாவர் - எவரோ அவர்; பேயர் - சிவ கணத்தார். " பாலருன் மத்தர் பசாசர் குணமருவி " என்றபடி பேய்க்குணமுடைய அடியவர் என்றலுமாம். —(25) நயக்க - விரும்ப. இயக்கர் - யகரத்தின் குறியீடாக வைத்தோதியது.—(26) அரவம் - ரகத்தின் குறியீடு. துரவை கோத்தவன் - குரவைக் கூத்தாடும் திருமால். அல்லரே - அல்லரோ ?; ஏகாரம் வினா. கரி - சான்று.—(27) அழல் - ழகரத்தின் குறியீடு. தழலும் - தழல்போல் மலரும்.—(28) இளமை - ளகரத்தின் குறியீடு. மூப்பினர் - இகழ்ச்சி குறித்த பன்மை.—(30) ஈரைந்து - பத்தும் - இருபது தோள்களும். நாடோறும் நாடோறும் - அடுக்குத் தினந்தோறும் வணங்குதலின் இன்றியமையாமை குறித்தது.

போது - உள்ளத்தோகை

IX திருச்சிற்றம்பலம் குறுந்தோகை

நீற லைத்ததோர் மேனி நிமிர்சடை, யாற லைக்கநின் றுடு மழுதினைத்,
தேற லைத்தெளி யைத்தெளி வாய்த்ததோர், ஊறலைக் கண்டு கொண்டதே னுள்ளமே.

மருவி னைமட நெஞ்ச மனம்புகுங், குருவி னைக்குணத் தாலே வணங்கிடுந்
திருவி னைச்சிந்தை யுட்சிவ னய்நின்ற, உருவி னைக்கண்டு கொண்டதேன் னுள்ளமே.

வெறுத்தா னைம்புல னும்பிர மன்றலை, யறுத்தா னையரக் கன்கயி லாயத்தைக்
கறுத்தானைக்காலினில்விரலொன்றினல்,ஒறுத்தானைக்கண்டுகொண்டதென் னுள்ளமே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—அழுதினைத், தெளிவாய்த்ததோர் ஊறலை, உள்ளத்தில் ஒளியை, ஞானமாம் ஒன்றனைச், சிந்தையுட் சிவனாய் நின்ற உருவினை, என் உள்ளம் கண்டு கொண்டது. பதிகப் பெயரும் இதனானே விளங்கும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நீறு அலைத்தது - நீறு நிரம்பக் கிடந்தது.—(2) போந்தை - பொத்தல் உடம்பு ; மேனி - மேனி யுடையவர் ; ஆகு பெயர்.—(3) வெள்ளத்தார் - அருள் வெள்ளத்தார். கள்ளம் - ஆணவம்.—(6) மூன் நெஞ்சம் - இறைவரை நினைக்கும் நெஞ்சம். முன்னுதல் - நினைத்தல் ;—(7) ஞானமாம் ஒன்றன் - ஞானமாகிய ஒன்றினன் அறியப்படுபவன் .—(8) சிந்தையுட் சிவன் - நினைப்பினில் வெளிப்படுபவன். "சிந்தையுட் சிவம தானார் திருச்செம்பொன் பள்ளி யாரே". (தேவா). உரு-முன்னர் மறைந்து நின்று பின்னர் நினைப்பில் உருவெளிப்பாடு பெற்ற நிலை. நெஞ்சினுள் நிறைவாய் நின்ற ஈசன் (9)".

போது - ஆதிபுராணத் திருக்குறுந்தோகை

X திருச்சிற்றம்பலம் குறுந்தோகை

வேத நாயகன் வேதியர் நாயகன் ; மாதி னாயகன் மாதவர் நாயகன் ;
ஆதி நாயக னாதிரை நாயகன் ; பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே. 1

சேத்துச் சேத்துப் பிறப்பதே தேவேன்று, பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ?
அத்த னென்றரி யோடு பிரமனுந், துத்தி யஞ்செய நின்றநற் சோதியே. 2

நூறு கோடி பிரமர்க ளொங்கினர் ; ஆறு கோடிநா ராயண ரங்ஙனே ;
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர் ; ஈறி லாதவ னீச னேருவனே. 3

வாது செய்து மயங்கு மனத்தராய், ஏது சொல்லுவீ ராகிலு மேழைகாள் !
யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலா, மாதே வன்னலாற் றேவர்மற் றில்லையே. 4

கூவ லாமை குரைகட லாமையைக், கூவலோ டொக்கு மோகட லென்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால், தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே. 5

எரிபெ ருக்குவ ரவ்வெரி யீசன, துருவ ருக்கம தாவ துணர்கிலார்,
அரிய யற்கரி யானை யயர்த்துப்போய், நரிவி ருத்தம தாகுவர் நாடரே. 7

அருக்கன் பாதம் வணங்குவ ரந்தியி, லருக்க னாவா னரனுரு வல்லனோ ?
இருக்கு நான்மறை யீசனை யேதொழுங், கருத்தி னைநினை யார்கன் மனவரே. 8

தாயினு நல்ல சங்கர னுக்கன்ப, ராய வுள்ளத் தமுதருந் தப்பெறார்,
பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய, மாயன் மாயத்துட் பட்ட மனத்தரே. 9

அரக்கன் வல்லரட் டாங்கொழித் தாரருள், பெருக்கச் செய்த பிரான்பெருந் தன்மையை
அருத்தி செய்தறி யப்பெறு கின்றிலர், கருத்தி லாக்கய வக்கணத் தோர்களே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—ஆதி நாயகன், தேவ தேவன் என்பன முதலாகச் சிவபெருமானது முதன்மைத் தன்மையை விரித்தெடுத் துரைப்பது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஆதி நாயகன் - எல்லாருக்கும் முன்னவன். பதிகப் பெயர் இதனால் போந்தது.—(2) பாறை - கல்போன்ற மனதுடையவர். கன்மனவர் (8) ; துத்தியம் - துதிக்கும் பாட்டு. "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள !" (குமரகுருபரர்); இவ்வகையுள் எல்லாச் சமய பேதங்களும் அடங்கும்.—(3) நோந்துதல் - அழிதல்.—(4) ஏழைகாள் - அறிவினால் ஏழைகள். அறிவுச் செல்வமிலாதவர். இரங்கிக் கூறியது.—(5) பழமொழியை உவமானமாகக் கூறியது. கூவல் - கிணறு. பாவ காரிகள் - பாவம் செய்தவர்கள்.—(6) அடிச்சாய்வன் - அடியிற் சாயப்பெற்றவன் ; சலவார்கள் - சலமிலாது தொண்டு செய்பவர்கள் ; உடற்சீவன் - உடலைச் சீவன் உண்ணின்று இயக்குதல்போல அவர்களுக்குள் நின்று ஆட்கொள்பவன்.—(7) எரி பெருக்குவர் - வேள்விகளில் தீ வளர்ப்பர். எரி ஈசனது உருவருக்கம் - சிவனது திருமேனியாகிய எட்டு மூர்த்தங்களுள் தீ ஒன்று என்பது. "வனமுலை யிணையவை குலவலின் - எரி யிடிவிவை பழுதிலை" என்ற பிள்ளையார் தேவாரக் கருத்துமிது. நரிவிருத்தம தாகுதல் - நரியின் சூழ்ச்சிபோன்று பயனற்றதாதல். "நரிவரால் கௌவச் சென்று நற்றசை யிழந்த தொக்கும்" (தேவா).—(8) அருக்கன்...அந்தியில் - மேற்கு நோக்கி நின்று சூரியனை வழிபடும் அந்தணர் நியதி. அந்தி - காலை என்று கொண்டு, "கிழக்கேசல மிடுவார்தொழு கேதாரமெனீரே" (நம்பி - தேவா) என்றபடி, காலையில் கிழக்கு நோக்கிச் செய்யும் வழிபாடு என்பாரு முண்டு.—(9) பேய்முலை யுண்டுயிர் போக்கிய மாயன் - திருமால்.—(10) அரட்டு - துட்டச் செயல் ; அருத்தி - அன்பு. கயவக் கணம் - கீழ்களின் கூட்டம்.

வேறு

1656. பொன்னிவலங் கொண்டதிருப் பூந்துருத்தி யவரிருப்பக்
கன்மனத்து வல்லமணர் தமைவாதிற் கட்டழித்துத்
தென்னவன்கூ னிமிர்த்தருளித் திருநீற்றி னொளிகண்டு
மன்னியசீர்ச் சண்பைநகர் மறையவனார் வருகின்றார் ; ௩௬௧

1657. தீந்தமிழ்நாட் டிடைநின்று மெழுந்தருளிச் செழும்பொன்னி
வாய்ந்தவளந் தருநாட்டு வந்தணைந்தார் வாக்கினுக்கு

வேந்தரிருந் தமைகேட்டு "விரைந்தவர்பாற் செல்வ"னெனப்
பூந்துருத்தி வளம்பதியின் புறம்பணையில் வந்தணைந்தார். ௩௬௨

1656. (இ - ள்) பொன்னி...இருப்ப - காவிரியாறு வலமாகச் சூழ்ந்து செல்லும் திருப்பூந்துருத்தியில் வாகீச முனிவர் இவ்வாறு எழுந்தருளி யிருந்தாராக; கன்மனத்து...கட்டழித்து - கல்போன்ற கடிய மனத்தினையுடைய வலிய அமணர்களை வாதில் வென்று அவர்களது பொய்க் கட்டுக்களைக் குலைத்து; தென்னவன்... அருளி - பாண்டியனது கூனை நிமிரச்செய்து அவனுக்கு ஞானோபதேசம் செய்து; திருநீற்றின் ஒளிகண்டு - திருநீற்றின் விளக்கம் ஓங்கச் செய்து; மன்னிய...வருகின்றார் - நிலைபெற்ற சிறப்பையுடைய சீகாழியில் அவதரித்த மறையவராகிய ஆளுடைய பிள்ளையார் வருகின்றவராகி, ௩௬௧

1657. (இ - ள்) தீந்தமிழ்...வந்து அணைந்தார் - இனிமை பொருந்திய தமிழ் நாடாகிய பாண்டிநாட்டினின்றும் போந்து எழுந்தருளிச் செழிப்பைத்தரும் காவிரியானது வாய்ப்புடைய வளங்களையெல்லாம் தருகின்ற சோழநாட்டில் வந்து சேர்ந்தவராகிய ஆளுடைய பிள்ளையார்; வாக்கினுக்கு...என-திருநாவுக்கரசு நாயனார் அங்குத் தங்கியிருந்தருளும் செய்தியைக் கேட்டு, "விரைவாய் அவரிடம் சென்று சேர்வேன்" என்று உறுதி பண்ணி; பூந்துருத்தி......அணைந்தார் - திருப்பூந்துருத்தியாகிய வள நகரின் புறம்பு உள்ள வயல்கள் சூழ்ந்த இடத்தில் வந்து அணைந்தருளினர். ௩௬௨

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டுரைக்க நின்றன.

1656. (வி - ரை) **பொன்னிவலங்கொண்ட** - காவிரி, வலமாகச் சுற்றி வந்தது போன்ற அமைப்புடைய. வலங்கொள்ளுதல் - வலமாகச் சுற்றி வழிபடுதல். தற்குறிப்பேற்ற அணி. "மலர்நீரால் வழிபட்டுச், செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத், தெம்பிரானை இறைஞ்சலின்" (57) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க. தலம் காவிரிக்குத் தென்கரையில் உள்ளதாதலின் காவிரி வலம் சுற்றிச் செல்வது என்றார். "துருத்தி என்றது ஆற்றிடைக்குறை. காவிரி வலமாய் வருதலால் பூந்துருத்தி யென்றாயிற்று" என்பர் ஆறுமுகத் தம்பிரானார்.

**அவர் பூந்துருத்தி(க்கண்) இருப்ப** - என்க. ஏழனுருபு தொக்கது. **இருப்ப** - "இருந்தார்" (1655) என்று மேற்பாட்டிற் கூறியபடி இருக்க.

**கல்மனத்து வல் அமணர்** - கன்(மனம்) என்றும், வல் - என்றும் இருவகையாலும் கூறியது, நாயனாரைத் தமது ஆசாரியராகக் கொண்டு நலம் பெற்றதெல்லாம் மறந்து, அவரைக் கொல்லும் சூழ்ச்சியினை ஒருமுறையன்றி நான்கு முறையும் செய்து அபசாரப் பட்டமை கருதியும், ஒரு முறை தோல்வியுற்றும் மும்முறையும் வாதம் செய்த கேடான வன்மை கருதியும் ஆம். இருவர்பாலும்செய்த அபசாரம் கருதி இருவகை கூறியதென்பதுமாம்.

**கட்டழித்தல்** - பொய்யே கட்டிய செயல்களை எல்லாம் குலைத்தல் - "கையர் பொய்யே கட்டி நடாத்திய" (புராண - வர - 10).

**தென்னவன் கூன்** - பிள்ளையார் திருவருள் பெறுமுன் கூன் நிமிராது நின்ற நிலை குறிக்கத் தென்னவன் என்று இலேசினாற் சுட்டினார்.

**அருளி** - "வேந்தனு மோங்குக" (திருஞான-புரா-847) என்று பாடிய அளவினால் கூன் நிமிர்ந்ததாகவும், சிரபுரச் சிறுவர் தீண்டித் திருநீறு பூசப்பெற்று முன்னை வல்வினையாகிய சஞ்சிதம் நீங்கி இருவினை ஒப்புப்பெற்று முதல்வனை அறியுந்தன்மை பெற்றமையால் பாண்டியனுக்கு ஞானோபதேசம் செய்தருளி ஆட்கொண்டமையினாலே **அருளி** என்று சிறப்பிற் பிரித்துக் கூறினார். அருளி - வைகைக் கரையாகிய தீக்கை

மண்டபத்திலே மெய்ஞ்ஞானேபதேசம் செய்தருளி. "மன்ற பாண்டியன் கேட்பக் கிளக்கு மெய்ஞ்ஞானத்தின்" (இருபா இருபஃது). திருபாசுரத்தால் உண்மை ஞானத்தைப் பாண்டியனுக்கு உபதேசித்து, அதனுல் உலகுக்கும் அறிவுறுத்தியருளி என்பதும் குறிப்பு. "பலர்புகழ் தென்னவ னறியும் பான்மையால்", "உள்ள வண்ணம் பலருமுணர்ந்துய்யப் பகர்ந்து" (திருஞான - புரா - 820 - 821) என்பவை காண்க. பாசநீக்கமும் சிவப்பேறும் என அருள் செய்தல் இரண்டு திறப்படுதலின் கூனிமிர்த்து என்றும், அருளி என்றும் கூறினர். கூன் - உடற்கூனும், "ஏழு பிறப்பின் முடங்கு கூ"னுமாம். நிமிர்த்தருளி என்று சேர்த்து ஒரு செயலாக்கி உரைப்பாருமுண்டு.

திருநீற்றின் ஒளி கண்டு - திருநீற்றின் ஒளி எங்கும் விளங்கச்செய்து. "தொண்டரை விளக்கங் காண", "நன்னெறி காட்டு மாற்றுல்" (369) முதலியவை காண்க.

காணல் - விளக்கம் செய்தல். பிறர் காணும்படி தாம் காண. "அரனடியார்பாற் பூதிசாதன விளக்கம் போற்றல் பெறு தொழியக் கண்டு" (திருஞான-புரா-18) என்ற நிலையை நீக்கி, அதனை விளக்கஞ் செய்வதற்காகவே அவதரித்தவர் ஆளுடைய பிள்ளையார் என்றும், அச்செயல் பாண்டி நாட்டில் நிகழ்ந்தது என்றும் குறிப்பதற்கு அமணர் கட்டழித்து - அருளி - ஒளி கண்டு - என்று இவ்வாறு கூறினர்.

கன்மனத்து......வருகின்றூர் - திருமறைக்காட்டி னின்றும் நாயனுரை அரிதிற் பிரிந்த பிள்ளையார், பாண்டி நாடு சென்று, மீண்டு, நாயனுரைச் சந்திக்கும் அவ்வளவும் பிள்ளையாரது சரித நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூறுமாற்றுல் "அமணர்தமை வாதிற் கட்டழித்துக் - கூனிமிர்த் தருளித் - திருநீற்றின் ஒளி கண்டு - மறையவனுர் வருகின்றூர்" என்று சுருங்கக்கூறிய அமைதி கண்டு களிக்க. அதன் பெருக்கம் பிள்ளையாரது சரித நிகழ்ச்சியாகலான் அவர்தம் புராணத்துள் 617 முதல் 930 வரை உள்ள பாட்டுக்களால் விரித்துக்கூற வைத்ததும் கண்டு கொள்க. "தமிழ் நாட்டிற் போனுர் ஞானத் தலைவனுர்" (1554) என்று விடுத்த அங்கிலையினின்றும், "மறையவனுர் வருகின்றூர்" என்று ஈண்டு எடுத்துத் தொடங்கிக் கொள்க. அவர் சரிதத்தின் நீண்ட நிகழ்ச்சிகள் எல்லாம் வருகின்றூர் என்ற நிகழ்கால வினைமுற்றெச்சத்தாற் பெற வைத்த அமைதியும் கருதுக.

சண்பைநகர் மறையவனுர் - ஆளுடைய பிள்ளையார். நாயனுர் தம்முடன் வருதலை மறுத்துத் தங்க வைத்துச் சென்றவர் என்ற குறிப்புப்பட மறையவனுர் என்றூர்.

வருகின்றூர் - பாண்டி நாட்டினின்றும் வருவாராகிய என்று முற்றெச்சம்.

அவர் இருப்ப - மறையவனுர் - வருகின்றூர் (1656), - நாட்டு வந்தணைந்தார் - கேட்டுப்புறம்பணையில் வந்தணைந்தார் - (1657) என்று இந்த இரண்டு பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக் கொள்க.

391

1657. (வி - ரை) தீந்தமிழ் நாடு - பாண்டி நாடு - "தமிழ்நாட்டில் போனுர்" (1554) என்றதனையே தொடர்ந்து கூறியதும்; முன்னர்ச் சமணர் சார்பு பெற்றுத் தமிழ் நாடாகிய அளவில் மட்டும் நின்றது, இப்போது பிள்ளையாரது திருவருளும் ஞானத் தமிழும் பெற்றதனுல் தீந்தமிழ் நாடு ஆகி விளங்கியது என்ற குறிப்பும் பெற வைத்த நயமும் கண்டுகொள்க. "தெய்வத் தமிழ்" (970), "மும்மைத் தமிழ்" (972), "மெய்ம்மைப் பொருளாந் தமிழ் நூல்" (974) என்றவிடங்களிலுரைத்தவற்றையும் இங்கு நினைவுகூர்க.

நாட்டு இடை நின்றும் - நாட்டினின்றும் என்றது இடை நின்றும் என்றது பிள்ளையார் சைவத் தாபனத்தின் பின், பாண்டி நாட்டிற் பலதலங்களையும் வழிபட்டுத்

தங்கிய செயல் குறித்தது. அவர்தம் புராணம் 884 முதல் 895 வரை பாட்டுக்கள் பார்க்க.

செழும்பொன்னி வாய்ந்த வளந்தரு நாட்டு வந்தணைந்தார்-சோழ நாட்டில்வந்து சேர்ந்தாராகி. வருகின்றார் - (1656) - அணைந்தார் - வந்தணைந்தார் என்று கூட்டுக. அணைந்தார் - அணைந்தாராகி ; முற்றெச்சம்.

பொன்னி நாட்டு வந்தணைந்தார் - கேட்டுப் - புறம்பணையில் வந்தணைந்தார் - பாண்டி நாட்டினின்றும் சோழ நாட்டில் எழுந்தருளி ஆளுடைய பிள்ளையார் திருப்பூந்துருத்தி யருகு சேரும் வரை உள்ள அவர்தம் சரிதப்பகுதி குறித்தது. (திருஞான - புரா - 896 - 927 வரை பார்க்க). இருந்தமை கேட்டு - திருக்கடவூர் தொழுது வருகின்றபோது அடியார்பால் வினவி அவர்கள் மொழியக்கேட்டு. திருஞான - புரா - 927 - 928 - 929 பார்க்க.

"விரைந்தவர்பாற் செல்வன்" என - இது பிள்ளையாரது மனநிலை. "ஆண்டவரசினைக் காணும், ஒப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க" (திருஞா - புரா - 929). நாயனாரை நெடுநாட் பிரிந்த பிரிவாற்றாமையைக் கருதி விரைந்து செல்வன் என்றார்.

வாக்கினுக்கு வேந்தர் - "வாகீச மாமுனிவர்" (திருஞான - புரா - 927) என்றும், "நாவரசர்" (ஷை - 930) என்றும் பின்னர் ஆளுடைய பிள்ளையார் புராணத்துள் இச்செய்தி கூறுமிடத்து இத் தன்மையாலே குறிப்பது காண்க. இறைவர் ஆட்கொண்டு கொடுத்த பெயராற் கூறுதலும், முன்னர்ப் பிரிந்த பிள்ளையார் அத்தன்மை நினைந்தே பின்னரும் காணக் காதல் கொண்டனர் என்று குறிப்பிற் பெறவைக்க "ஆண்டவரசு" (928 - 929) என்று கூறுதலும் காண்க.

**புறம்பணை** - நகர்ப்புறத்து வயல்கள் சூழ்ந்த மருதநிலப் பரப்பு. இதனுள் நாயனாரும் பிள்ளையாரும் சந்தித்த இடம் இப்பொழுதும் சம்பந்தர் மேடு (சம்பந்திமேடு என்று தவறாய் வழங்குவது) என்ற பெயரால் வழங்கப்படுகின்றது. அது சுற்றிலுமுள்ள வயல்களுக்கிடையே சிறிது மேடாய் உள்ளது ; தென்மேற்கே 2 நாழிகையளவில் உள்ள வெள்ளாம் பரம்பூரி (திருவாலம் பொழிலி)னின்றும் திருப்பூந்துருத்திக்கு வரும் வழியில் வெள்ளாம் பரம்பையினின்றும் ¼ நாழிகை யளவில் உள்ளது. "தென் பரம்பைக் குடியின் மேய திருவாலம் பொழிலானை" (திருத்தாண்) என்பது காண்க. இத் திருவாலம் பொழிலில் நாயனார் செய்த திருவுழவாரப் பணிவிடைக்கு அத்தலத்து வைணவர்கள் இடையூறு செய்தமை யறிந்த ஆளுடைய பிள்ளையாரது அருணினைவினால் காவிரி (குடமுருட்டி) பெருகி அவ் வைணவர்களுடைய வீடுகளையும் விட்டுணு கோயிலையும் பெயர்த்துச் சேந்தலைப்பெருமாள் என்னும் சுந்தரப் பெருமாள் கோயில் உள்ள இடத்தில் சேர்த்தது என்றும், அது முதல் இன்றும் வைணவக் குடிகள் அங்கு இரவில் தங்கக் கூடாது என்றும், ஒரு கர்ணபரம்பரை வரலாறும் வழங்குகின்றது. (இவ்வரலாறு திருப்பூந்துருத்தியிலிருந்து அன்பர் ஒருவர் எழுதியனுப்பி உதவியது). புறம்பணையில் - புறம்பு அணைந்த இடத்தில் என்பர் இராமநாதச் செட்டியார்.

செம்பொன்னி என்று பாடங்கொண்டு செந்நிறமுடைய நீரையுடைய காவிரி என்றுரைப்பர் ஆறுமுகத்தம்பிரானார். 392

1658. சண்பைவருந் தமிழ்விரக ரெழுந்தருளத் தாங்கேட்டு
மண்பரவும் பெருங்கீர்த்தி வாகீசர் மனமகிழ்ந்து
கண்பெருகுங் களிகொள்ளக் கண்டிறைஞ்சுங் காதலினால்
எண்பெருகும் விருப்பெய்த வெழுந்தருளி யெதிர்சென்றார். ௩௯௩

(இ - ள்) வெளிப்படை. சீகாழியில் அவதரித்த தமிழ் விரகராகிய் ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளி வர, அதனை உலகம் போற்றும் பெரிய கீர்த்தியினை யுடைய திருநாவுக்கரசர் தாம் கேட்டு மனமகிழ்ச்சி யடைந்து, கண்களால் பெருகுகின்ற களிப்புப் பொருந்த நேரே கண்டு கும்பிட வேண்டுமென்னும் காதலினாலே, மனத்திற் பெருகுகின்ற விருப்பம் பொருந்த எழுந்தருளி எதிரே சென்றனர்.

(வி - ரை) மண் பரவும் பெருங்கீர்த்தி - முன்னர் நிகழ்ந்தவற்றோடு, இப்போது செய்தருள உள்ள அருள் நிகழ்ச்சியினால் உலகம் பரவும் பெருங் கீர்த்தியாயிற்று என்பது.

கண் பெருகும்...காதலினால் - மனத்தினுள் பெற்ற மகிழ்ச்சியுடன் அமையாது கண்களால் நேரே கண்டு களிப்படைய வேண்டுமென்னும் ஆசை மேலோங்கியதனால். இவ்வடி முற்றுமோனை.

எண் - மனம். மகிழ்ச்சி - காதல் - விருப்பு - என்பன ஒரு பொருளவாயினும் ஒன்றன்மே லொன்றாக அதிகரிக்கும் ஆர்வங்குறித்தன.

எதிர் சென்றார் - வரவு எதிர்கொண்டு அழைப்பதற்காகவன்றிக், கண்குளிரக் கண்டு கும்பிடும் ஆசையே மிக்குச் சென்றனர் என்பது பின்னிகழ்ச்சியால் விளங்கும். "நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது, முந்தை வினைப் பயன் என்று" (திருஞான - புரா - 931) என்பது காண்க.

விருப்பெய்தி—என்பதும் பாடம். 393

1659. காழியர்கோன் வருமெல்லை கலந்தெய்திக் காதலித்தார்
சூழுமிடைந் திடுநெருக்கிற் காணுமே தொழுதருளி
"வாழியவர் தமைத்தாங்கு மணிமுத்தின் சிவிகையினைத்
தாழுமுட லிதுகொண்டு தாங்குவன்யா" னெனத்தரித்தார், ௩௯௪

1660. வந்தொருவ ரறியாமே மறைந்தவடி வொடும்புகலி
யந்தணனா ரேறியெழுந் தருளிவரு மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடனாங்கிச்
சிந்தைகளிப் புறவருவார் தமையாருந் தெளிந்திலரால். ௩௯௫

1659. (இ - ள்) காழியர்கோன் வரும் எல்லை - சீகாழித் தலைவர் வருகின்ற அவ்விடத்து; கலந்து எய்தி - திருக்கூட்டத்தினுள்ளே கூடிச் சேர்ந்து; காதலித்தார் - காதல் உடையவராகி; சூழும் மிடைந்திடு நெருக்கில் காணுமே தொழுதருளி - சூழ்ந்து நெருங்கியுள்ள கூட்டத்தின் நெருக்கத்தினுள்ளே பிள்ளையார், தம்மைக் காணாத வகையினால் அவரைத் தொழுது கொண்டு; "வாழியவர்...தாங்குவன்யான்" என - "வாழ்வு தரவந்த பிள்ளையாரைத் தாங்கும் அழகிய முத்துச் சிவிகையைத் தாங்கி வருபவர்களோடு தாழ்ந்த இவ்வுடம்பைக் கொண்டு யானும் சுமப்பேன்" என்று மனத்துட் கொண்டவராய்; ௩௯௪

1660. (இ - ள்) வெளிப்படை. வந்து வேறு ஒருவரும் தம்மை அறிந்து கொள்ளாதபடி மறைவாகிய திருவடிவத்தோடும், சீகாழி அந்தணர் பெருமானார் ஏறி எழுந்தருளி வருகின்ற அழகிய மணிச்சிவிகையினைத் தாங்குபவர்களோடு தாமும் ஒருவராகத் தாங்கித், தமது மனம் மிக மகிழ்ச்சி பொருந்த வருவாராகிய நாயனாரை ஒருவரும் அறிந்து கொண்டாரிலர். ௩௯௫

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டுரைக்க நின்றன.

1659. (வி - ரை) வரும் எல்லை - வருகின்ற இடம். எல்லை - ஊர் எல்லை என்பாருமுண்டு. எல்லை கலந்து எனக்கூட்டி எல்லையை அணுகி அடைந்து என்பாருமுண்டு.

காதலித்தார் சூழும் - உடன் வந்த திருக்கூட்டத்தார்களும் திருச்சின்னத்தின் ஓசையைக் கேட்டுத் தரிசிக்கும் விருப்புடன் வந்து சூழ்ந்த அடியார்களுமாகச் சூழ்கின்ற. காதலித்தாராகிய நாயனார் என்றலுமொன்று. முன்பாட்டிற் "காதலினால்" என்றதும் கருதுக.

நெருக்கில் - நெருங்கிக்கூடிய கூட்டத்தினுள்.

காணாமே தொழுதருளி - தம்மைப் பிள்ளையார் காணாத வகையினாற்றொழுதல், கண்டால் அவர் சிவிகையில் எழுந்தருளாது கீழ் இறங்கியருள்வர் என்றதும், அவ்வாறு இறங்கியருளின் அவர் ஏறி வரும்போது சிவிகை தாங்கும் பேறு தமக்கு வாய்க்காது என்றதும் கருத்தாம்.

வாழியவர் - உலகத்தவரை வாழ்விக்க அவதரித்த அவர். "எழிசையும் பல கலையு மெவ்வுயிருந் தனித்தனியே, வாழவரு மவர்தம்மை" (திருஞான - புரா - 48).

தாழும் உடல் இது கொண்டு தாங்குவன் - பிணி முதலியவற்றால் ஒறுப்புண்டு அழியுந்தன்மையுடைமையாலும், புன்னெறியா மமண்சமயத் தொடக்குண்டு போந்து இறைவன் கருணையால் ஆட்கொண்டு தூய்மை செய்ய நின்றமையாலும், தாழும் உடல் இது என்றார். அத்தாழ்வு தீரத் தாங்குவன் என்றது - ஏனை நல்லடியார்கள் நற்பேறு பெற்ற நல்லுடல் கொண்டு தாங்க, நான், அவர் போலல்லாது எனது உடலின் தாழ்வு தீரத் தாங்குவன் என்ற கருத்தாம்.

தரித்தார் - மனத்தில் எண்ணியவராய்; முற்றெச்சம். தரித்தல் - மனத்துள் எண்ணம் வைத்தல். தரித்தார் - சிவிகையைத் தாங்கினார் என்ற வுரை பிழை. "வந்து ஒருவரறியாமே...தாங்கி" - என்று வேறு ஒருவரும் அறியாமல் வருதலும் தாங்குதலும் மேல்வரும் பாட்டிற் கூறுதல் காண்க. 394

1660. (வி - ரை) ஒருவர் அறியாமே மறைந்த வடிவோடும் - மறைந்தவடிவு - மறைத்துக் கொண்டவடிவு. பிறர் அறிந்தால் தாம் எண்ணிய திருப்பணிக்கு முட்டுப்பாடு நேரும் என்று கருதி வடிவை மறைத்தனர்.

ஏறி எழுந்தருளிவரும் - ஏறிவரும் காலத்தில் சிவிகை தாங்குவதனைப் பெரும் பேறாக நாயனார் கருதினார். இதனை "உம்மடிகள் தாங்கிவரும் பெருவாழ்வு" (1661) என்பது காண்க.

சந்தமணி - சந்தம் - நிறம். அழகு என்றலுமாம். மணி - முத்து.

தாங்குவார் - சுமப்பவர். முன்தாங்கும் பேறு பெற்ற நல்லோர் என்ற குறிப்புப் பெறத், தாங்குவாருடன் - என்று உடன் உருபை அவர் பெயரோடு சார்த்தி ஓதினார்.

சிந்தைகளிப்புற-இப்பெரும் பேறு பெற்றதனால் மனமிக மகிழ்ச்சியடைய. பின் எக்காலத்தும் இத்திறத்தைச் சிந்திக்கும் அன்பர் சிந்தைகள் எல்லாம் களிப்படையும்படி என்ற குறிப்புமாம்.

யாரும் - பெரிய அத்திருக்கூட்டத்தில் எவரும். உம்மை முற்றும்மை. முன் பல காலம் திருவீழிமிழலையில் உடன் அமர்ந்து பயின்றவரும் என்று சிறப்பும்மையும் எச்சவும்மையுமாம்.

தெளிந்திலர் - இன்னார் என்று அறிந்திலர். அவரது வடிவுகண்டாரன்றி அவ்வடிவுக்குள் மறைந்தவர் நாயனார் என்று தெளிய இயலாதாராயினர். 395

1661. திருஞான மாமுனிவ ரரசிருந்த பூந்துருத்திக்
கருகாக வெழுந்தருளி "யெங்குற்றா ரப்ப"ரென
வுருகாநின் "றும்மடியே னும்மடிக டாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற் றே" னென்றார். ௩௯௬

(இ - ள்) வெளிப்படை. திருஞானப் பெருமுனிவராகிய பிள்ளையார், திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளியிருந்த திருப்பூந்துருத்திக்கு அருகாக எழுந்தருளிச், (சிவிகையின் மேலிருந்தபடியே) "அப்பர் எங்குற்றார்?" என்று வினவ, மன மிக வுருகி, "உம்முடைய அடியேன் உமது திருவடிகளைத் தாங்கும் பெருவாழ்வு வந்து கிடைக்கப்பெற்று இங்கு உற்றேன்" என்று (சிவிகையைத் தாங்கிவரும் அந்நிலையினின்று) மொழிந்தருளினார்.

(வி - ரை) திருஞான மாமுனிவர் - "மறை ஞான ஞான முனிவன்" ("வேயுறுதோளி" - 11) என்ற திருப்பதிகத்தின் ஆட்சிபோற்றப்பட்டது. திருமறைக்காட்டினின்றும் நாயனாரிடத்து விடைகொண்டு பிள்ளையார் பிரிந்து போந்த போது அருளிய பதிகத்திற் றம்மைக் கூறிய குறிப்பினையே, அதன்பின் அவரைச் சந்தித்தபோது தொடர்ந்து நினைவுபெறும் பொருட்டு இத்தன்மையாற் கூறினார்.

மறைஞான ஞானமுனிவன் - என்ற தேவாரக் கருத்தினைத் திருஞானமாமுனிவர் என்று உரைகூறிய திறமும் காண்க. பிள்ளையார், ஞானமா முனிவராம் தன்மை பற்றி "வம்பறுவரிவண்டு" என்ற திருத்தொண்டத்தொகைப் பாட்டின்கீழ் எடுத்துக் காட்டிய திருவாக்குக்களால் அறிக.

அரசு - ஆளுடை அரசுகள்; நாயனார்.

எங்குற்றார் அப்பர் - வினவாகிய வினைமுற்று முன் வந்தது ஆர்வமிகுதி குறித்தது. அப்பர் - பிள்ளையார் தாமே முதலில் அழைத்த அப்பெயர்.

உருகா நின்று - பிள்ளையார் திருவுள்ளத்திற் றம்மைக்கொண்ட அன்பின் மிகுதியைக் கண்டு, நாயனாரது உள்ளம் உருகிற்று.

"உம்மடியேன்......எய்தப் பெற்று" - நாயனாரது மனநிலை.

திருஞானசம்பந்தர்—திருஞான முனிவரா சிருந்ததிருப் பூந்துருத்திக்--வந்தேனப் பெற்றுயர்ந்தேன்—என்பனவும் பாடங்கள். 396

1662. பிள்ளையா ரதுகேளாப் பெருகுவிரை வுடனிழிந்தே
யுள்ளமிகு பதைப்பெய்தி யுடையவர சினைவணங்க,
வள்ளலார் வாகீச ரவர்வணங்கா முன்வணங்கத்,
துள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாந் தொழுதார்த்தார்.

(இ - ள்) வெளிப்படை. ஆளுடைய பிள்ளையார் அம்மொழிகளைக் கேட்டவுடனே, மிகுந்த விரைவோடு கீழே இழிந்தருளித், திருவுள்ளத்தில் அச்சத்துடன் மிகுந்த பதைப்பினை அடைந்து ஆளுடைய அரசுகளை வணங்க, வள்ளலாராகிய வாகீசத் திருவடிகளும் அவர் வணங்குமுன் தாம் அவரை வணங்க, அவ்வருள் நிகழ்ச்சியைக் காணும் பேறுபெற்ற, துள்ளும் மானேந்திய கையினையுடைய சிவபெருமானது அடியவர்கள் எல்லாரும் தொழுது அரவோசை முழக்கி ஆர்த்தனர்.

(வி - ரை) பெருகு விரைவுடன் - அப்பர் சிவிகை தாங்கி வரத், தாம் ஒரு கணமும் மேலெழுந்தருளி யிருத்தல் பிழையாமென்று கருதியதே மிக விரைவுடன் இழிந்தமைக்குக் காரணம்.

இழிந்தே - இழிதல் - கதுமெனக் கீழிறங்குதல். அப்பர் சிவிகை தாங்கத் தாம் மேலிருந்தமை இழிவென்று கருதிய குறிப்பும் காண்க.

பதைப்பு - தகுதியல்லாக் காரிய நிகழ்வாயினமையால் அச்சம்வர அதனால் மனம் பதைத்தது. "அவ்வார்த்தை கேட்டஞ்சி யவனியின்மே விழிந்தருளி" (திரு ஞான - புரா. 936.)

அரசினை - முன், தம்மைப் பிள்ளையாகவும் அரசை அப்பராகவும் கருதிய பிள்ளையார், இங்கு அப்பரை அரசராகவும் தம்மை அவர்கீழ் உள்ள குடியாகவும் கருதிப் பணிந்தனர் என்பது தொனி.

வள்ளலார் - அவர் வணங்கா முன் வணங்கும்படி தம்மையே அவருக்கு ஒப்பு வித்த செயலும், அவரது சிவிகை தாங்கும் நிலையில் தம்மை வைத்து ஒழுகிய பணிவும் கருதி வள்ளலார் என்றார். திருஞான - புரா - 937 பார்க்க.

தொண்டர் எலாம் தொழுது ஆர்த்தார் - அடிமைத் திறங்களின் வெளிப்பாடு கண்டுய்ந்தமையால் இருவரையும் தொழுதனர். (திருஞான - புரா - 937).

அது கொளா—என்பதும் பாடம். 397

*1663. கழுமலக்கோன் றிருநாவுக் கரசருடன் கலந்தளிருச்
செழுமதியந் தவழ்சோலைப் பூந்துருத்தித் திருப்பதியின்
மழுவினொடு மானேந்துந் திருக்கரத்தார் மலர்த்தாள்கள்
தொழுதுருகி யின்புற்றுத் துதிசெய்தங் குடனிருந்தார். ௩கூஅ

(இ - ள்) வெளிப்படை. சீகாழித் தலைவராகிய ஆளுடைய பிள்ளையார் திரு நாவுக்கரசு நாயனாருடன் கலந்தருளிச், சந்திரன் தவழும் செழிப்புடைய சோலைகள் சூழ்ந்த திருப்பூந்துருத்தித் தலத்தில் எழுந்தருளிய மழுவினொடு மானை ஏந்தும் திருக் கைகளையுடைய சிவபெருமானுடைய மலர்ப் பாதங்களைத் தொழுது மனமுருகி யின்பமடைந்து தோத்திரங்கள் செய்து அத்திருத்தலத்தில் உடனெழுந்தருளி யிருந்தார்.

(வி - ரை) உடன் கலந்தருளி - ஆளுடைய பிள்ளையார் அப்பரை நோக்கி வந் தாரும், அப்பர் அங்கு இருந்தாரு மாதலின், உடன் என்ற உருபைத் திருநாவுக்கரசர் என்பதுடன் சார்த்தி ஓதினார். அன்றியும் ஆளுடைய பிள்ளையார் திருவுள்ளக் கருத்து அதுவாதலும் காண்க. கழுமலக்கோன் - அரசருடன் - கலந்தருளி - அங்கு - உட னிருந்தார் - என்று முடித்த கருத்துமிது.

தொழுது - உருகி - இன்புற்று - துதிசெய்து - உடனிருந்தார் - தொழுதலால் உருகுதலும், அதனால் இன்ப முறுதலும், அதன் பயனாகத் துதிசெய்தலும், அவ்வாறு இறைவரை வழிபடுதலின் முடிபாக அடியரோடிருத்தலும் கூடும் வகை குறிப்பதாக முடித்து வைத்த நயம் காண்க. "கும்பிட்ட பயன்" (திருஞான - புரா - 1022) என்ற கருத்தும், சிவஞான போதம் பன்னிரண்டாஞ் சூத்திரக் கருத்தும் ஈண்டுக் கருதுக.

உடனிருந்தார் - இப்பாட்டின் கருத்தைத் திருஞானசம்பந்த நாயனார் புராணம் 938 - 939 - 940 - பாட்டுக்களில் விரித்துரைப்பார். அவற்றை ஈண்டு வைத்துக் கண்டுகொள்க. "உடன்மகிழ்ந்தங் குடனிருந்தார்" (ஷை 940). 398

1664. வல்லமணர் தமைவாதில் வென்றதுவும், வழுதிபாற்
புல்லியகூ னிமிர்த்ததுவுந், தண்பொருந்தப் புனனாட்டில்

எல்லையிலாத் திருநீறு வளர்த்ததுவு, மிருந்தவத்தோர்
சொல்லவது கேட்டுவந்தார் தூயபுகழ் வாகீசர். ௩௬௬

(இ - ள்) வெளிப்படை. கொடிய மன வலிமையினையுடைய சமணர்களை வாதில் வென்றதனையும், பாண்டியனிடத்து முன்பு பொருந்தியிருந்த கூனை நிமிர்த்தருளியதனையும், குளிர்ந்த தாம்பிரபன்னி யாற்றின் நீர் பாயும் பாண்டி நாட்டில் அளவில்லாத சிறப்புடைய திருநீற்றினைப் பெருகச் செய்ததனையும், பெருந் தவத்தினையுடைய ஆளுடைய பிள்ளையார் எடுத்துச் சொல்ல அதனைத் தூய புகழினையுடைய வாகீச மூர்த்திகள் கேட்டுத் திருவுள்ள மகிழ்ந்தனர்.

(வி - ரை) வல் அமணர் - வலிமை - மன வலிமை இங்குத் தீய தன்மை பற்றி நின்றது. தீமையாவது பாண்டியனை மயக்கியமையும், கொல்லாமை என்ற நன்மையைக் கரவாக வெளியிற் காட்டிக்கொண்டும் அடியார்களிருந்த திருமடத்தில் தீ வைத்துக் கொலை சூழ்ந்தமையும் பிறவுமாம்.

வென்றதுவும் - நிமிர்த்ததுவும் - வளர்த்ததுவும் - என்ற வினைகளுக்குத் தாம் என்ற எழுவாய் தொக்கு நின்றது. இம்மூன்று செயலாலும் பாண்டி நாட்டில் ஆளுடைய பிள்ளையார் செய்தருளிய அருள் நிகழ்ச்சிகள் எல்லாம் தொகுத்துக் கூறப்பட்ட நயம் காண்க. "புகுந்த தெல்லாம்" என்று இதனைப் பின்னர்ப் பின்னுந் தொகுத்துக் கூறுதலும் காண்க. (திருஞான - புரா - 941).

இருந் தவத்தோர் - ஆளுடைய பிள்ளையார். அவர் முன்னைப் பெருந்தவமுடையராதலின் இப்பெருஞ் செயல்கள் நிகழ்த்த ஏதுவாயிற்று என்பது குறிப்பு. பிள்ளையார் இதற்கென்றே அவதரித்த குறிப்பும்பெற வைத்தார். "முற்செய் தவத்தான்"; "மேற் செய்தழி" என்ற சிவஞான போதம் (8-1) காண்க. வென்றது - நிமிர்த்தது - வளர்த்தது என்ற செயல்களுக்கு வினைமுதலாகித் தோன்றாத் துணையாயும் உடனிருந்தும் இயற்றுவித்தது இறைவரது திருவருளேயாம் என்ற குறிப்புப் படத் தாம் என்ற எழுவாய் தோன்றாது தொக வைத்தார்.

பொருநந்தம் - தாமிரபன்னியாறு. பொருநந்தம் என்பது பொருநை என மருவி வழங்கும். "தண்பொருந்தம்" (969).

தண்பொருநந்தம் புனல் நாட்டில் - வேறு நாட்டில் உதித்துச் சோழ நாட்டிற் பாய்ந்து வளப்படுத்தும் காவிரி போலன்றிப், பொருநை யாறு, பாண்டி நாட்டிலே பிறந்து அந்நாட்டையே வளம்செய்வது என்பது குறிப்பு. "நீள்கரை மண்பொருந் தண்பொருந்தம், பாயுங் கடலும்படு நீர்மை பணித்த முத்தம்" (969) என்றவிடத்தும் இக்கருத்தே உய்த்துணர வைத்தமை காண்க.

எல்லையிலாத் திருநீறு - இறைவரது பெருமை போலத் திருநீற்றின் பெருமையும் அளக்கலாகாதது என்பது

இருந்தவத்தோர் சொல்ல - திருஞானமுனிவர் சொல்ல. "போக்கும் வரவும் வினவப் புகுந்ததெல்லாந், தூக்கின் றமிழ்விரகர் சொல்லிறந்த தெய்வமறை, தேக்குந் திருவாயாற் செப்பி யருள்செய்தார்" (திருஞான - புரா - 941)

கேட்டு உவந்தார் - சமணர்களது மாயைகளையும் தீமைகளையும் எண்ணிப் பிள்ளையாரைப் பாண்டி நாட்டுக் கெழுந்தருளத் தகாதென்று (1552) தாம் அஞ்சி விலக்கிய செயலை நினைந்தனர்; அவ்வஞ்சங்களை எல்லாம் வென்று மீண்டமை கேட்டனர்; அதனுடன் அரசனை நன்னெறிப்படுத்தி நீறிடுவித்தமையும், பாண்டி நாட்டில் அமண் ஆசு அறுத்து நீறு பெருக்கியமையும் கேட்டனர்; இவ்வாறு பிள்ளையார் தீங்கின்றி மீண்டமையும் சைவம் பெருகியமையுமாம் உவகைக்குக் காரணம் என்க.

தூயபுகழ் வாகீசர் - தூய புகழினராதலின் உவந்தனர் என்பது.
வழுதியுடல் - சொல்லுவது - என்பனவும் பாடங்கள். 399

*1665. பண்புடைய பாண்டிமா தேவியார் தம்பரிவும்
நண்புடைய குலச்சிறையார் பெருமையுஞா னத்தலைவர்
எண்பெருக வுரைத்தருள வெல்லையில்சீர் வாகீசர்
மண்குலவு தமிழ்நாடு காண்பதற்கு மனங்கொண்டார். ௪00

(இ - ள்) பண்புடைய...பரிவும் - கற்பின் பண்பும், சிவன்பாலன்பின் பண்பும் உடைய மங்கையர்க்கரசி யம்மையாருடைய அன்பின் திறத்தையும்; நண்புடைய... பெருமையும் - அடியார்களிடம் அன்பினையுடைய குலச்சிறை நாயனாரது பெருமையினையும்; ஞானத்தலைவர் - ஞானத்தலைவராகிய பிள்ளையார்; எண் பெருக உரைத்தருள - விருப்பம் மிகும்படி சொல்லியருள; எல்லையில்...மனங்கொண்டார் - அளவற்ற சிறப்புடைய திருநாவுக்கரசர் உலகில் விளக்கம் பொருந்திய தமிழ்நாடு என்று சொல்லப்படும் பாண்டிய நாட்டைச் சென்று காண்பதற்கு விருப்பமுடையவராயினர்.

(வி - ரை) பண்பு - உலக மக்கட்பண்பும், தெய்வப் பண்பும். இவை கற்பு நிலையும் அன்பின்றிறமுமாம்.

பரிவு - சைவத்தினைவிட்டுச் சமணத்திற்றாழ்ந்த பாண்டி நாட்டின் மேலும், தமது நாயகன் மேலும் வைத்த இரக்கமுடைய அன்பு. "யானுமென் பதியும் செய்த தவமென்கொல்" (திருஞான - புரா - 672) என்றதனாலும், "மங்கையர்க்கரசி" என்று தொடங்கும் திருவாலவாய்த் திருப்பதிகத்தில் பிள்ளையார் அருளியவாற்றாலும் இதன்றிறம் உணரப்படும்.

நண்பு - அடியார்களிடம் வைத்த அன்பின் அழுத்தம். பெருமை - இதுவும் பிள்ளையாரது அத்திருப்பதிகத்தாலறியப்படும்.

எண் பெருக உரைத்தருள - எண் பெருகுதலாவது விருப்பமிகுதல். விருப்ப பெருகுதலால் என்றும், விருப்பம் பெருகும்படி என்றும் இரு வழியும்கொண்டு உரைக்க நின்றது. நினைவுப் பெருக்கால் விரித்துக்கூற என்று கூறுவாருமுண்டு. சைவம் வளர அருளிய ஆலவாயுடையார் அருளினைக்கேட்டு உவந்த நாயனார், பாண்டிமாதேவியார் - குலச்சிறையார் எனும் இவர்களுடைய அன்பினைக் கேட்டவுடன் பாண்டிநாடு சென்று அவர்களைக் காண மனங்கொள்ளுமாறு இருந்தது ஞானத்தலைவரது உரை என்க. "உமைக்காண வந்தனம்"—(திருஞான - புரா - 673) என்ற கருத்தும் காண்க.

தமிழ் நாடு - ஏனைத் தொண்டை நாடு, சோழநாடு, சேரநாடு முதலியனவும் தமிழ்நாடுகளாயிருப்பவும் பாண்டி நாடே தமிழ் நாடு என்ற சிறப்புப் பெயரால் வழங்கப்படும். இறைவர் சங்கமிருந்து, தலைவராகித், தமிழாராய்ந்து இலக்கணமும் செய்த சிறப்புப்பற்றி இவ்வாறு வழங்கப்படுமென்க. மூர்த்திநாயனார் புராணத்துள் உரைத்தனவும், "திருந்திய நூற் சங்கத்துள், அன்றிருந்து தமிழாராய்ந் தருளிய வங்கணர்" (1668), "சாலு மேன்மையிற் றலைச்சங்கப் புலவனார் திருமுன்" (கழறிற்-புரா - 667), "சங்கப்புலவர் திருமுகம்" (கழறிற் - புரா - 29), முதலியவையும் காண்க.

மண்குலவு தமிழ் என்றும், மண்குலவு நாடு என்றும் கூட்டி உரைக்க நின்றது. மண்குலவு தமிழ் - உலகை விளங்க வைப்பதும், பயில்வோரைப் பிறவிப் பயன்பெற

வைப்பதும் ஈடேற்றுவதும் தமிழ்மொழியேயாம் என்பது கருத்து. "தென்றமிழ்ப் பயனாயுள்ள திருத்தொண்டத் தொகை" (358), "ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்" (1970) முதலியவையும், "வாயிருந் தமிழே படித் தாளுறு, ஆயிரஞ் சமணும் மழிவாக்கினான்" (பழையாறை வடதளி - தேவா) என்ற கருத்தும் கருதுக.

காண்பதற்கு - முன்னர் மனத்துட் கண்டு கொண்டே இருந்தாரேனும், இப்போது நேரே கண்களாற் காணுதற்கு. "சந்தித்தே யிந்தப்பார் சனங்க ணின்று தங்கணாற் றாமே காணு வாழ்வார" (பிள் - தேவா - கழுமலம்).

மனங் கொண்டார் - திருவுளங் கொண்டருளினர்; கருதினர். 400

1666. பிரமபுரத் திருமுனிவர் பெருந்தொண்டை நன்னாட்டில்
அரன்மகிழுந் தானங்க ளணைந்திறைஞ்சிப் பாடுதற்கங்
குரனுடைய திருநாவுக் கரசருரை செய்தருளப்
புரமெரித்தார் திருமகனார் பூந்துருத்தி தொழுதகன்றார். ௪௦௬

(இ - ள்) வெளிப்படை. சீகாழியில் வந்தருளிய திருஞானசம்பந்த நாயனாரைப், பெரிய தொண்டை நன்னாட்டில் சிவபெருமான் விரும்பி எழுந்தருளும் திருத்தலங்களை அணைந்து வணங்கித் தேவாரப் பதிகங்களைப் பாடியருளும்படி வலிமையுடைய திருநாவுக்கரசு நாயனார் சொல்லியருள, அதன்படி இசைந்து, திரிபுரமெரித்த பெருமானுடைய திருமகனாராகிய ஆளுடையபிள்ளையாரும் திருப்பூந்துருத்தியைத் தொழுது புறப்பட்டருளினர்.

(வி - ரை) தொண்டை நன்னாட்டுக்கு எழுந்தருளித் தேவாரப் பதிகங்கள் அருளிச்செய்து வரவேண்டுமென்று நாயனார் ஆளுடையபிள்ளையாருக்குச் சொல்லியருள, அதன்படி அவர் எழுந்தருளினர் என்பது இப்பாட்டின் கருத்து.

தம்மைப் பிரிந்து பாண்டியநாடு சென்ற பின்னர் உள்ள, போக்கும் வரவும் பிள்ளையாரை நாயனார் கேட்க, அதற்குப் பிள்ளையார் பாண்டிநாட்டு நிகழ்ச்சிகளையும் அரசியார் மந்திரியார் இவர்களது அன்பின் திறங்களையும் சொல்ல, அன்பர்களைக் காணும் விருப்பமுற்று நாயனார் தமிழ்நாடு காண மனங்கொண்டார்; அவ்வாறே, தாம் பிரிந்த பின், நாயனார் சிவத்தலங்கள் சென்று வணங்கியவற்றைப் பிள்ளையார் வினவ, நாயனார் தாம் தொண்டை நன்னாடு சென்று மீண்டு திருப்பூந்துருத்தியில் எழுந்தருளியிருந்த அளவும் சொல்லித் தொண்டை நாட்டில் பிள்ளையார் சென்று பாடும்படி சொல்லியருள அவரும் அது மனங்கொண்டனர். இவ்விரு பெருமக்களும் இவ்வாறு வழிப்படுத்திக்கொண்டு அமைந்தமை ஏனையடியார்களுக்கும் உலகத்திற்கும் வழிகாட்டும்படியாம் என்க.

பிரமபுரத் திருமுனிவர் - "திருஞான மாமுனிவர்" (1661) என்றவிடத்துரைத் தவை பார்க்க. திருமறைக் காட்டில் கடைசியாய்த் தாம் கேட்ட "வேயுறு தோளி" என்ற பதிகத் திருக்கடைக்காப்பில் பிள்ளையார், தம்மை "முனிவன்" என்றறிவித் ததனையே தொடர்ந்து, நாயனாரும், அவரை "முனிவர்" என்ற அத்தன்மைபற்றியே எண்ணியருளினார் என்ற குறிப்புப்படத் திருமுனிவர் என்றார்.

பாடுதற்கு - பாடும்படி; முனிவர் - அணைந்து - பாடியருளுதல் வேண்டுமென்று.

உரை செய்தருள - உலகமுய்யக் காட்டும் வகையால் எடுத்துச் சொல்ல. அவ்வாறு பிள்ளையார்பால் உரைக்கும் தன்மை அவரால் "அப்பர்" என்று போற்றப்பட்ட நாயனாருக்கே உண்டு என்பார் உரனுடைய என்றார். உரன் - ஞானத்தின் திண்மை. உரை செய்த அவ்வாறே நாயனாரிடம் விடை கொண்டருளிப் பிள்ளையார் சென்றமை

"நாவினுக்கு வேந்தர் திருவுள்ள மேவவிடை கொண்டருளி" (திருஞான - புரா - 948) என்று அவர்தம் புராணத்துக்கூறும் தகுதியும், நாயனாரைச் சந்தித்துப் பிரிவது இதுவே இறுதி முறையாதலின் "திருவுள்ள மேவவிடை கொண்டருளி" என்று உறுதிக் குறிப்புப்படக் கூறும் தகைமையும் காண்க.

திருமகனார் - பால் உண்ட உரிமையால் மகனார் என்றதுபசாரம். "அப்பர்" பணிக்க, "மகனா"ராதலின் அதன்வழி ஒழுகும் கடப்பாடுடைமைபற்றி இசைந்தனர் என்பதும் குறிப்பு. "செப்புதலும், புல்குநூன் மார்பரும்போய்ப் போற்ற மனம் புரிந்தார்" (திருஞான - புரா - 945). "மகனார்" என்ற இத்துணை கொண்டு பிள்ளையாரை முருகப்பெருமான் அவதாரம் என்பாருமுண்டு. அவர் கூற்றுப் பொருந்தாமை பின்னர்ப் பிள்ளையாரது புராணத்துள் விளக்கப்படும். "அடுத்த தாதை இனியுனக்கு நாம்" (54), "அரனார் மகனா ராயினார்" (59) என்ற சண்டீசர் புராணத் திருவாக்குக்களும் இங்கு வைத்துக் கருதத்தக்கன.

அரனமரும்—அரனுறையும்—பாடுவதற்கு—என்பனவும் பாடங்கள். 401

1667\. ஆண்டவர சங்கணர்சீ ரருள்பெற்றப் பதிநின்றும்
பாண்டிநாட் டெழுந்தருளும் பான்மையராய்த் தென்றிசைபோய்க்
காண்டகைய திருப்புத்தூர் பணிந்தேத்திக் கதிர்மதியந்
தீண்டுகோடி மதின்மதுரைத் திருவால வாய்சேர்ந்தார். ௪0௨

(இ - ள்) அங்கணர் சீர் அருள் பெற்று - சிவபெருமானுடைய சிறந்த அருளைப் பெற்றுக்கொண்டு; ஆண்ட அரசு - ஆளுடைய அரசுகள்; அப்பதி நின்றும்... பான்மையராய் - அந்தத் திருப்பூந்துருத்தித் தலத்தினின்றும் பாண்டி நாட்டில் எழுந்தருளும் திருவுள்ளமுடையவராகி; தென்றிசை...பணிந்தேத்தி - தெற்குத் திசை நோக்கிச் சென்று, காணும் தகைமைத்தாகிய திருப்புத்தூரினைப் பணிந்து துதித்து; கதிர் மதியம்...சேர்ந்தார் - சந்திரனுடைய கதிர்கள் தவழ்தற்கிடமாகிக் கொடிகள் கட்டி விளங்கும் மதிலையுடைய மதுரைத் திருவாலவாயினை அடைந்தனர்.

(வி - ரை) அங்கணர் சீர் அருள் பெற்று - பிள்ளையார் முன்பே நாயனாரிடம் விடைகொண்டு புறப்பட்டமையால், பின் தங்கிய நாயனார் இறைவரிடம் அருள்விடை பெற்றுப் புறப்பட்டனர் என்பதும், "அங்குறையும் நன்மை வேண்டித் தங்கித் திருத்தொண்டு செய்வார்-அருள் பெற்றுத் - திருமடம் செய்தா" ராதலின் அங்கு நின்றும் அகலும்போதும் அவ்வாறே அருள்பெற்றுப் புறப்பட்டனர் என்பதும் குறிப்பு.

பாண்டிநாட்டு எழுந்தருளும் பான்மையராய் - நாட்டின்கண் என ஏழனுருபு தொக்கது.

பான்மையராய் - மிக்க விருப்பமுடையவராகி என்ற குறிப்புப்பட நின்றது. மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் அன்பினை "என் பெருக உரைத் தருளி" (1665) யமையாலும், முன்னர்ப் பிள்ளையாருடன் தாமும் பாண்டி நாட்டுக்கு எழுந்தருளப் புறப்பட்டபோது பிள்ளையாரால் தவிர்க்கப்பட்டுத் தங்கி விட்டமையாலும், தமது ஆன்மார்த்த நாயகராகிய திருவாலவாயுடையாரைச் சென்று காணும் ஆவல் மிகுதிப்பட்டமையாலும், "சிறைபெறு நீர்போற் சிந்தைவாய்ப் பாயும் செல்வமே" (திருவா) என்றபடி மிக்க விருப்பத்துடன் போந்தருளினர் என்பதாம். "போமா றணிந்து நீரங்குப் போதப் போதா" (1553) என்றவிடத்துரைத்தவையும் பார்க்க.

தென்றிசை போய் - அங்கு நின்றும் தெற்கில் உள்ள பாண்டி நாட்டை நோக்கிச் சென்று. தென் மேற்காகச் செல்ல வேண்டியிருத்தலின் தெற்கென்னாது தென்திசை என்றார்.

நாயனார் சென்ற வழி, இந்நாட் காணப்படும் தஞ்சை - புதுக்கோட்டை - திருமயம் - திருப்புத்தூர் செல்லும் கற்சாலை வழி போலும் என்பது கருதப்படும்.

காண்டகைய திருப்புத்தூர் பணிந்தேத்தி - "பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு, தென்காட்டுஞ் செழும்புறவிற் றிருப்புத்தூர்"; "திருந்துவயல் புடைதழுவு"; "தேராரு நெடுவீதி"; "திருமருவு பொழில்புடைசூழ்" என்பன முதலாக அழகுபெற நாயனார் கண்டுபோற்றி நின்ற குறிப்புப்படக் காண் தகைய என்றார்.

பணிந்தேத்தி - விருப்பமிக்குச் செல்கின்றாராதலின் திருப்பூந்துருத்திக்கும் திருப்புத்தூருக்கும் இடையில் வேறெங்கும் தங்கிச் சென்றமை கூறாராயினர். ஏத்தி - திருத்தாண்டகப் பதிகத்தாற் போற்றி. பதிகக்குறிப்புப் பார்க்க.

மதியக்கதிர் தீண்டு மதில் என்று கூட்டுக. "மதி, தொடுங்குன்ற மதின்மதுரைத் தொன்னகர்வந் தணைகின்றார்" (திருஞான - புரா - 630) என்று இக்கருத்தை ஆசிரியர் பின்னர் விளக்குவது காண்க. பாண்டியர் மரபு மதிக்குலமாதலின் குலமுதல்வனாற் கண்காணிக்கப் படுவதென்பது குறிப்பு. மதிலின் உயர்ச்சியும் அதில் அமைந்த கற்களின் குளிர்ச்சியும் குறித்தது. இவ்வாறன்றிக் கதிரும் மதியும் என்று உம்மைத் தொகையாகக் கொண்டு சூரியனும் சந்திரனும் தீண்டு என்று உரை கொண்டனர் முன் உரைகாரர்கள்.

மதில் - "நீள் கடிம்மதில்" என்று ஆளுடைய பிள்ளையாரது திருவாக்கினாற் போற்றப்பட்ட சிறப்புக் குறிக்கவும் மதிலை விதந்து கூறினார்.

மதுரைத் திருவாலவாய் - மதுரை என்கின்ற திருவாலவாய்த் திருநகரம். மதுரையின் கண் உள்ள திருவாலவாய் என்னும் கோயில் என்று உரைத்தனர் ஆறுமுகத்தம்பிரானார். "அங்கணர் கோயில்" என்று மேல்வரும் பாட்டில் உரைப்பதனால் இங்கு நகரம் என்பதே பொருத்தமுடையதாகும். 402

திருப்புத்தூர்

திருச்சிற்றம்பலம்  திருத்தாண்டகம்

மின்காட்டுங் கொடிமருங்கு லுமையாட் கென்றும்
    விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி
    நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்
பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
    புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டுஞ் செழும்புறவிற் றிருப்புத் தூரிற்
    றிருத்தளியான் காணவனென் சிந்தை யானே. 3

திருச்சிற்றம்பலம்

பதிகக்குறிப்பு:—புரிந்து அமரர் தொழுது ஏத்தும் புகழ்த்தக்கோன்; புவனமேழும் விரிந்து பல வுயிராகி விளங்கினான்; புலவனாய்ச் சங்கம் ஏறித் தருமிக்குக் கனகக்கிழி யருளினான்; பெரும்பற்றப்புலியூர் மன்றாடி; அறிவரிய நுண்பொருள்க ளாயினான்; ஆயிரம் பேருடையான்; கொடுஞ்சினத்தை யடங்கச்செற்று ஞானத்தை மேன்மிகுத்தல் கோளாக்கொண்ட பெற்றியன் என்றிவ்வாறு பலவாற்றாலும் அறியப்படுகின்ற திருப்புத்தூரில் திருத்தளியான் என் சிந்தையான்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) புரிந்து - இடைவிடாது சொல்லி. "புகழ்புரிந்தார்" (குறள்). தவம்புரிந்து என்றலுமாம். புவனமேழும் விரிந்து - தனது மாயை

என்ற பரிக்கிரக சத்தியினின்றும் புவனங்களை உளவாக்கி; விரிந்துபல உயிராகி - உயிர்களைத் தன்னுள் ஊழியில் ஒடுக்கி மீளப் பிறப்பித்து. "விரிந்தனை குவிந்தனை விழுங்குயி ருமிழ்ந்தனை" (பின் - தேவா - புறம்பயம் - 3) - திருத்தளி - திருப்புத்தூர்க் கோயிலின் பெயர். சுவாமி பெயர் திருத்தளிநாதர்.—(3) இப்பாட்டுத் தருமிக்குப் பொற்கிழியளித்த திருவிளையாடல் குறித்தது. கொன்றை - தலமரம். தேன்காட்டும்- தேன் - இசை.—(5) மன்றுடி-மன்றில் ஆடுபவன். சங்காத்தி - தோழன்.—(6) காம்பாடு - மூங்கில் போன்ற. ஆடு - உவமவுருபு.—(8) வேதியன் - மார்க்கண்டேயர். அக்கு அரும்பு - அக்கு - சங்குமணி. அரும்புபோல - அரும்புகின்ற. உருவும் மெய்யும் பற்றிவந்த உவமம்.—(9) கோள் - கொள்கை. கொடுஞ்சினம் - இங்கு ஆணவமலம்.

தலவிசேடம்:—திருப்புத்தூர் - பாண்டி நாட்டில் 6 - வது தலம். கோயில் திருத்தளி - (ஸ்ரீதளி) என வழங்கப்பெறும். திருத்தாண்டகம் பார்க்க. உமையம்மையார் - இலக்குமி முதலியோர் பூசித்த தலம். சுவாமி அம்மை கோயில்களுக்கு இடையில் வயிரவர் கோயில் விளக்கமாக வுள்ளது. நடராசருக்குச் சிலை உருவமாகிய மூலத்தானம் அமைந்துள்ளது இத்தலச்சிறப்பு. ஆலவாய்ப் பெருமான் தருமிக்குப் பொற்கிழி யளித்த திருவிளையாடலை அப்பர் சுவாமிகள் திருத்தாண்டகப் பதிகத்துள் எடுத்துப் போற்றியருளினர். பாண்டிநாட்டில் ஆளுடைய பிள்ளையார் சமணழித்துச் சைவம் பெருக்கிய பின்பு, தமது பிரிவாற்றுது உடன்வர ஒருப்பட்ட மங்கையர்க்கரசியார் நின்றசீர்நெடுமாறர் குலச்சிறையார் இவர்களைத் தேற்றி, அந்நாட்டின் தலங்களைச் சென்று வணங்கி எழுந்தருளி யிருந்தபோது இத்தலத்தையும் வணங்கிப் பதிகம் பாடியருளினர். சுவாமி-புத்தூரீசர் - திருத்தளி நாதர். (ஸ்ரீதளி நாதர் என்பர் வடவர்); அம்மை - சிவகாமியம்மை; தீர்த்தம் - ஸ்ரீதளிதீர்த்தம்; சிவகங்கை; மரம் - கொன்றை; கோயிலினுள் உள்ளது. பதிகம் 2.

இது பிரான்மலை என்னும் திருக் கொடுங்குன்றத்தினின்றும் தென் கிழக்கே மட்சாலை வழி 15 நாழிகையளவில் உள்ளது. நாயனர் வந்தவழி (புதுக்கோட்டை) திருமயத்தினின்றும் 15 நாழிகையளவில் கற்சாலைவழி வரும் பாதை. இங்கு நின்றும் மீளவும் 40 நாழிகையளவில் கற்சாலை வழி மதுரை அடையத்தக்கது. பஸ் வசதி உண்டு.

1668. சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்துள்
அன்றிருந்து தமிழாராய்ந் தருளியவங் கணர்கோயில்
முன்றிலினை வலங்கொண்டு முன்னிறைஞ்சி யுள்புக்கு
வன்றனிமால் விடையானை வணங்கிமகிழ் வொடுந்திளைத்தார். சoரு

(இ - ள்) சென்று அணைந்து - மதுரை நகரத்தினுட் சென்று சேர்ந்து; திருந்திய நூல்...வலங்கொண்டு - திருத்தமடைந்த நூல்களையுடைய புலவர் கூடிய சங்கத்தினுள் முன்னாளில் வீற்றிருந்து தமிழ் ஆராய்ந்தருளிய இறையனாரது திருக்கோயிலின் திருமுற்றத்தினை வலமாகச் சூழ்ந்து; முன் இறைஞ்சி - வெளியே திருமுன்பு வீழ்ந்து வணங்கி; உள்புக்கு - திருக்கோயிலினுள்ளே புகுந்து; வன்றனி... திளைத்தார் - வலிய ஒப்பற்ற பெரிய இடபத்தையுடைய சொக்கலிங்கப் பெருமானை வணங்கி மகிழ்ச்சியினுள் மூழ்கி ஆனந்த அனுபவத்தை அடைந்தனர்.

(வி - ரை) மதுரையினில்...தமிழ் ஆராய்ந்தருளிய அங்கணர்-ஆலவாய்ப் பெருமான் தலைச் சங்கப்புலவராயிருந்து தமிழ் வளர்த்த வரலாறு குறித்தது. இது பற்றி மூர்த்தி நாயனர் புராணத்துள் 968 - 974 பாட்டுக்களின்கீழ் உரைத்தவையும்,

பிறவும் பார்க்க. ஆலவாய்ப் பெருமானைத் தமிழ்ச்சங்கப் புலவராகவே கொண்டு ஆசிரியர் உணர்த்தும் முறைமையினைக் கருதுக.

திருந்திய நூற் சங்கம் - திருந்திய - இறைவர் புலவராக எழுந்தருளியிருந்து உணர்த்தித் திருத்தியருளியமையால் திருந்திய என்பது குறிப்பு. இவற்றால் உலகம் திருந்திய என்றலுமாம். நூல் - இங்கு நூற்புலவரைக் குறித்தது. ஆகு பெயர். அன்று - தலைச்சங்க காலத்து. நக்கீரர் சரிதமும் காண்க.

முன் இறைஞ்சி - முன் - திருக்கோயிலின் முன்பு. மால்விடையான் - மால் - விட்டுணுவாகிய என்றலுமாம். மகிழ்வோடு - ஓடு - உருபு மயக்கம்.

திளைத்தல் - ஆனந்த அனுபவத்தில் மூழ்குதல். 403

1669. எய்திய பேரானந்த வின்பத்தி னிடையழுந்தி
மொய்திகழுஞ் சடையானை "முளைத்தானை" யென்றெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந் தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித் திருவுள்ளங் களிசிறந்தார். ௪0௪

(இ - ள்) வெளிப்படை. அவ்வாறு தாம் பொருந்திய ஆனந்த அனுபவமாகிய இன்பத்தினுள்ளே மூழ்கிக், கற்றையாக மொய்த்து விளங்கும் சடையினை உடைய பெருமானை, "முளைத்தானை" என்று தொடங்கும் திருத்தாண்டகச் செந்தமிழ்த் திருப்பதிகத்தினாற் றுதித்துப் புறத்தில் அணைவாராகிச், செய்யும் தவத்தினையுடையோராகிய நாயனார், கைகளால் தொழுது வணங்கித் துதித்துத் திருவுள்ளத்தில் பெரு மகிழ்ச்சியிற் சிறந்தனர்.

(வி - ரை) பேரானந்த இன்பத்தினிடை அழுந்தலாவது - சிவானந்தமாகிய பேரின்ப வெள்ளத்துள் அதுவாகி யறிந்து நுகர்ந்து நிற்றல். இதனைத் திளைத்தார் என முன்பாட்டிற் கூறினார்.

மொய்திகழும் சடை - கற்றையாகக்கூடிய சடை. "மாலையின் றங்குருவே போலுஞ் சடைக்கற்றை" (அற் - அந்). மொய் - அரும்பு என்று கொண்டு, கொன்றை - தும்பை - எருக்கு - ஆத்தி முதலிய பூக்கள் விளங்கும் என்றலுமாம்.

முளைத்தானை - இது திருத்தாண்டகப் பதிகத்தின் தொடக்கம். பதிகம் பார்க்க. எடுத்தல் - தொடங்குதல்.

செய்தவத்தோர் - தவம் - சிவபூசை. "தவமுயல்வோர் மலர் பறிப்ப" (பிள்ளை - தேவா - கழுமலம் - மேகரா.) திருவாலவாயுடையாரை நாயனார் தினமும் ஆன்மார்த்தமாகப் பூசித்த குறிப்புப் போலும். திளைத்தார் - என முன் பாட்டிலும், ஆனந்த இன்பத்தினிடை மூழ்கித் - திருவுள்ளங் களிசிறந்தார் - என இப்பாட்டிலும் விதந்தோதிய மனநிலைகள் இக்குறிப்புப்பட நின்றன.

ஆனந்தம் - இன்பம் - களி - என்பன ஒரு பொருள் மேனின்று மிகுதிப் பொருள் தந்தன. "சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே" என்ற தேவார மகுடமும் இக்குறிப்பு. களி சிறத்தல் - பெருமகிழ்ச்சி கூர்தல்; மிகுதல்.

அழுந்தி - களி சிறந்தார் என்பனவும் இன்பானுபவ முதிர்ச்சி குறித்தன. 404

திருவாலவாய்

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணாக் கோத்துத்

துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீறுத்
 தூழத்த வெண்மறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
 சிவனடியே சிந்திக்கப் பெற்றே னனே. 1

வாயானை மனத்தானை மனத்து ணின்ற
 கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் றன்னைச்
 சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றேன்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
 தலையாய தேவாதி தேவர்க் கென்றுஞ்
சேயானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
 சிவனடியே சிந்திக்கப் பெற்றே னனே. 8

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—எல்லார்க்கும் முன்னேதோன்றி முளைத்தான், உமையோடாடித் திளைத்தான், உமையோடுடனாகியிருந்தான், கடைக்கண்ணால் மங்கையுமை நோக்கா வென்மேல் ஊனம்து வெல்லாம் ஒழித்தான், உணர்வாகி யடியேன துள்ளே நின்ற தேனமுது, படியெழுதலாகாத மங்கையோடு மேவன், மற்றொருபற் றில்லா அடியேற் கென்றுஞ் சிறந்தான், வாயான், மனத்தான், மனத்துள் நின்ற கருத்தான், கருத்தறிந்து முடிப்பான், என்தலையினுச்சி யென்றுந் தாபித்திருந்தான், அடியேனுக்கன்பன், அளவிலாப் பல்லூழி கண்டு நின்ற தீர்த்தன் என்றிவை முதலிய தன்மைகளால் அறியப்படுகின்ற தென்கூடற் றிருவாலவாய்ச் சிவனடியே நான் சிந்திக்கப் பெற்றேன்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) முளைத்தானை எல்லார்க்கு முன்னே தோன்றி- உலகந் தோன்றுவதற்கு முன் விளங்கியவர். "முன்னர்த் தோன்றிய முறையால்" (திருவிளை - புரா - வெள் - பட). வளைத்தான் - மூன்றும் பிறையினது வளைவுக் கேற்ப அணிபெறச் சூடினன். நீறுத் - துளைத்தான் என்க. உமை - மீனாட்சியம்மை யார். இத்தலத்தில் மீனாட்சியம்மையார் பொருட்டு வந்து வீற்றிருந்தருளும் சிறப்பும், இங்கு அம்மையாரின் பெருஞ் சிறப்பும் குறித்தது—(2) (4) (5)-ம் பார்க்க. சிந்திக்கப்பெற்றேன் - நித்திய பூசைசெய்யும் குறிப்பு.—(2) மேலார்கள்- பெருந்தேவர்கள். பொன்மை - திருமேனி நிறம். "பீதம் தற்புருஷாநநம்" என்பது ஆகமம்; ஆதலின் தற்புருடமுகம் குறித்த தென்றலுமாம். நீறு - சத்யோசாத முகத் தின் நிறம். நீறு - விபூதி - திருநீறு - என்றலுமாம். ஊழிக்காலத்து எஞ்சியிருந்த நீறும், ஆளுடையபிள்ளையாருக்கு அருளிய நீறும் குறிப்பு.—(3) நீர்த்திரளை நீள் சடைமேல் நிறைவித்தலும், நிலமருவி நீரோடக்காண்டலும் மாறுபட்ட தன்மைகள். சிவனது எல்லாம் வல்ல தன்மை குறிப்பு. நீரோட - கங்கையை உலகில் சிறிதாக ஓடி வரச்செய்த என்றதும் குறிப்பு.—(4) கடைக்கண்ணால் மங்கையுமை நோக்கா - ஆன்மாக்களின் பொருட்டுப் புனருற்பவத்தின் முன் செய்யும் அருட்பார்வை. என் மேல்......தேனமுது - நாயனாரது பூசைக்குகந்த நாயகன் என்ற குறிப்பு. மங்கை - மீனாட்சியம்மையார்.—(5) உமை - மீனாட்சியம்மை.—(6) மூவன் - அயன் அரி அரன் என்ற மூவரும் தாமேயாயவர். தானேயாய் நின்று மூவராய் விரிந்தான் என்ற தன்மை குறித்தலால் இச்சொல் பொதுப்பிரி பாற்சொல் லாகாமையும், "ஒருமைக் கல்ல தெண்ணுமுறை நில்லாது" (தொல் - சொல் - கிளவி - 44) என்ற விதியுடன் மாறுபடாமையும் காண்க. பாவன் - நிறைந்தவன்.

பாவுதல் - நிறைதல். மங்கையோடு மேவனை - மீனாட்சியம்மையார் பொருட்டு எழுந்தருளி வந்து மணஞ்செய்து அரசு வீற்றிருந்த வரலாற்றின் குறிப்பு.—(7) துறந்தார் - ஏனைய எல்லாப் பற்றுக்களையும் விட்டுத் தம்மையே பற்றினவர். மற்றொரு...சிறந்தான் - நாயனாரது பூசாமூர்த்தி.—(8) இப்பாட்டு யாவரும் பாடஞ் செய்து பயின்று ஓதத்தக்கது.—(9) வனை விலி - வேறு எதனாலும் வளைக்கப்பட மாட்டாதவன்.—(10) என்தலை...தாபித்திருந்தான் - நாயனாரது அகப்பூசையில் துவாத சாந்தத்தினின்று எடுத்துவைத்து தியானிக்கும் மூர்த்திமான். "உச்சிமேலுறைபவர்" (பிள் - அச்சிறுபாக்கம்) இத்தலம் துவாத சாந்தத்தலமாதலின் அதன் மூர்த்தியாதலும் குறிப்பு.—(11) தூர்த்தன் - தீயவன் - பிறன் மனை விரும்புபவன்; இராவணன். அடியேனுக் கன்பன் - பூசைக்கிரங்கும் மூர்த்தி. அளவிலா...தீர்த்தன் - காலங்கடந்தவன்

தலவிசேடம் :—முன்னர் மூர்த்தி நாயனார் புராணத்திறுதியி லுரைக்கப் பட்டது. (பக்கம் - கரு௧௦).

*1670. சீர்திகழும் பாண்டிமா தேவியார் திருநீற்றின்
சார்வடையக் கூனிமிர்ந்த தென்னவனார் தம்முடனே
பார்பரவுங் குலச்சிறையார் வாகீசர் தமைப்பணிவுற்
றாரகிலாக் காதன்மிக வடிபோற்ற வங்கிருந்தார். ௪௦௫

(இ - ள்) சீர்திகழும் பாண்டிமா தேவியார் - சிறப்புடன் விளங்கும் மங்கையர்க்கரசியம்மையாரும்; திருநீற்றின்...தென்னவனார் - திருநீற்றின் சார்பு அடைதலினால் கூன் நிமிர்ந்த நின்றசீர்நெடுமாறப் பாண்டியனாரும்; தம்முடனே - இவர்களுடனே; பார்பரவும் குலச்சிறையார் - உலகம் போற்றும் குலச்சிறையாரும்; தமைப் பணிவுற்று...அடிபோற்ற - தம்மை வந்து பணிந்து, நிரம்புதல் பெறாது பெருகிய காதல் மிகும்படி தமது திருவடிகளைப் போற்றி நிற்க; வாகீசர் அங்கு இருந்தார் - வாகீச மாமுனிவர் அத்தலத்தே எழுந்தருளியிருந்தனர்.

(வி - ரை) சீர் திகழும்-சீர் - தாம் அவதரித்த சோழநாட்டைப் போலவே பாண்டியநாடும் திருநீற்றின் ஒளியில் விளங்கும்படி செய்த சிறப்பு. "தங்கள் திருநாடு போற் செழியர் தென்னாடு விளக்கும் சீர்விளக்கு" (மங்கை - புரா - 3). சீர்திகழும் என்றது அச்சிறப்பினால் புகழ் விளங்கும். என்றும் மாறாது சைவச் சிறப்பில் விளங்கும் என்றலுமாம்.

பாண்டிமா தேவியார்-முன்னர் "வளவர் மகளார் தென்னன் றேவியாங் கோதில் குணத்துப் பாண்டிமா தேவியார்" (1549) என்று புராணத்திலும், "வளவர் கோன் பாவை...பாண்டிமா தேவி" என்று ஆளுடையபிள்ளையார் தேவாரத்திலும் கண்டது போலன்றி, இங்குப், பாண்டிமாதேவி என்ற நிலையாற்கூறியது, பிள்ளையாரது திருவருளினாலே பாண்டியரும் சைவத்திறஞ் சார்ந்துயர்ந்திருந்த பிற்றைநிலைக் குறிப்பு. ஆயினும் சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டார் என்று குறிக்கவும் சீர்திகழும் என்றார்.

திருநீற்றின் சார்வு அடையக் கூன் நிமிர்ந்த - "வேந்தனு மோங்குக" என்ற (திருஞான - புரா - 847) திருவாக்கின் பயனாகக் கூன் நிமிர்ந்ததனை நீற்றின் சார்வினால் நிகழ்ந்ததாகக் கூறினார். நீற்றின் சார்பாவது சைவச் சார்பு. திருநீற்றுப்பதிகப் பயன் என்ற குறிப்புமாம். "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச், சார்தரா சார்தரு நோய்" (குறள்) என்ற உண்மை இங்கு முற்றும் பொருந்துதல் காண்க.

தம்முடனே - உடன் உருபைச் சிறப்புப் பற்றித் தேவியார் - தென்னவனார் இவர்களுடன் புணர்த்தி ஓதினார்.

பார் பரவும் - உலகம் போற்றும் சிறப்புக் குலச்சிறையார் புராணத்து விரிக்கப் படுவது. "மங்கையர்க்கரசி" என்ற திருப்பதிகமும் பார்க்க.

சீர்திகழும் - திருநீற்றின்... கூனிமிர்ந்த - பார் பரவும் - இம்மூன்று சிறப்புக் களையும் ஆளுடையபிள்ளையார் எழுந்தருளிய அருளிப்பாடுகளின் பிற்குறிப்புப்படக் கூறிய அமைதியும் காண்க.

பணிவுற்று - அடிபோற்ற - "எல்லையிலா நீறு போற்று மிருவரையுஞ் சென்று காணுங் கருத்துடையேன்" (1553) என்று ஆளுடையபிள்ளையார் எழுந்தருளிய படியே, அவர் "பாண்டிமா தேவியார் பரிவும், குலச்சிறையார் பெருமையும்" உரைத் தருளக்கேட்டு நாயனாரும் போந்தருளினார்; நாயனாரது நல்வரவு கேட்ட மாதேவி யார் முதலிய மூவர்களும் எதிர்கொண்டு போற்றினர்; இது நாயனார் திருவாலவா யிறைவரைப் பணிந்த பின்பு திரு ஆலவாயில் நிகழ்ந்தது என்ற இவ்வளவும் உய்த் துணர வைத்தனர். பின்னர் ஆளுடையபிள்ளையார் புராணத்து விரித்துரைக்கக் கிடத்தலின் அதுபோல ஈண்டும் கொள்க என்பதாம்.

ஆரகிலா - அமைதிப்படாத - நிரம்பாத. சார்வு அடைய - அடைதலினால். சார்வுடைய—திருமேனி சேரவருளுடையதனாற் கூனிமிர்ந்த தென்னவனார்—என் பனவும் பாடங்கள். 405

1671. திருவால வாயமர்ந்த செஞ்சுடரைச் செழும்பொருணூல்
தருவானை நேரிசையுந் தாண்டகமு முதலான
பெருவாய்மைத் தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம் புரமெரித்தார் பூவணத்தை வந்தடைந்தார், ௪0௬

1672. கோடிமாட நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக் கறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
"வடிவேறு திரிசூலத்" தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்
பொடிநீடு திருமேனிப் புனிதர்பதி பிறபணிவார், ௪0௭

1673. தென்னிலங்கை யிராவணன்றன் சிரமீரைந் துந்துணித்த
மன்னவனு மிராமனுக்கு வரும்பெரும்பா தகந்தீர்த்த
பின்னுகனைத் தொழுவதற்கு நினைந்துபோய்ப் பெருமகிழ்ச்சி
துன்னிமனங் கரைந்துருகத் தொழுதெழுந்தார் சொல்லரசர்; ௪0அ

1674. தேவர்தொழுந் தனிமுதலைத் திருவிரா மீச்சரத்து
மேவியசங் கரனையெதிர் நின்றுவிருப் புறுமொழியால்
பாவுதிரு நேரிசைகண் முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு நலம்பெருகச் செய்தமர்ந்தார். ௪0௯

1671. (இ - ள்) வெளிப்படை. திருவாலவாயில் விரும்பி வீற்றிருந்தருளும் செஞ்சுடர் போன்றவரை, செழும் அகப்பொருள் நூலைத் தந்தவரைத் திருநேரிசையும் திருத்தாண்டகமும் முதலாகிய பெரிய வாய்மையுடைய தமிழ்ப் பதிகங்களைப் பாடி, விரும்பும் திருப்பணிகளைச் செய்து, அதன் பின்னர்ப், பகைவர்களுடைய திரிபுரங் களை எரித்த சிவபெருமானது திருப்பூவணத்தை வாகீசர் வந்தடைந்தனராகி, ௪0௬

1672. (இ - ள்) வெளிப்படை. கொடிகள் கட்டிய மாடங்கள் நிறைந்த திருப் பூவணத்தில் திருக்கோயிலினுள்ளே, திருமாலுக்கும் அறிவரியாராகிய சிவபெருமான்

நேரே வெளிப்பட்டருளக் கண்டு வணங்கி, "வடிவேறு திரிசூலம்" என்று தொடங்கும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தினால் துதித்துப் போய்த், திருநீறு நிறைந்த திருமேனியினையுடைய புனிதராகிய சிவபெருமானது திருத்தலங்கள் பிறவற்றையும் போய்ப் பணிவாராகி, சுஎ

1673. (இ-ள்) வெளிப்படை. தென்னிலங்கையின் இராவணனுடைய பத்துத் தலைகளையும் தண்டித்து வீழ்த்திய அரசனுக்கும் இராமனுக்கு அதனால் வரும் பெரும் பாதகத்தைத் தீர்த்த சிவபெருமானைச் சென்று வணங்க எண்ணிப்போய் மிகுந்த மகிழ்ச்சி பொருந்தவும் மனம் கரைந்து உருகவும் வாகீசர் தொழுது எழுந்தனராகி,

1674. (இ-ள்) வெளிப்படை. தேவர்கள் தொழுகின்ற ஒப்பற்ற முதல்வரைத், திருவிராமேச்சுரத்தில் பொருந்திய சங்கரனைத், திருமுன்பு நின்று, விருப்பம் மிக்க மொழிகளால் நிறைந்த திருநேரிசைகள் முதலாகிய தமிழ்ப் பதிகங்களைப் பாடித் திருநாவுக்கரசு நாயனார் நன்மை பெருகும்படி திருத்தொண்டுகளைச் செய்து அங்கு விரும்பி எழுந்தருளி யிருந்தனர். சுஎகூ

இந்த நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1671. (வி-ரை) செஞ்சுடரை - சுடர்போல் ஒளி தருபவரை. "சோதியே சுடரே" (திருவா).

செழும் பொருள் நூல் - இறையனாரகப்பொருள் என்னும் தமிழ் நூல். மறை என்பாருமுண்டு. இதுபற்றி மூர்த்தி நாயனார் புராணத்தில் "செம்மைப் பொருளும் தருவார்" (974) என்றவிடத்து உரைத்தவை பார்க்க.

நேரிசையும் தாண்டகமும் முதலான தமிழ் - தமிழ் - தமிழ்ப் பதிகங்கள். நேரிசை - "வேதியா வேத கீதா" என்ற ஒரு பதிகம் மட்டும் இப்போது கிடைத்துள்ளது. இப்பாட்டிற் குறித்த தாண்டகப் பதிகம் கிடைத்திலது!.

பேணு - தாம் நியதியாய்ப் பேணும். இறைவர் விரும்பும் என்றலுமாம்.

மருவார் - பகைவர். 406

திருவாலவாய்

II திருச்சிற்றம்பலம் திருநேரிசை

வேதியா வேத கீதா விண்ணவ ரண்ணா வென்றென்
றோதியே மலர்க டூவி யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 1

நறுமலர் நீருங் கொண்டு நாடோறு மேத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பாகா மாமறை யங்க மாறும்
அறிவனே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 8

பொடிக்கொடு பூசிப் பொல்லாக் குரம்பையிற் புந்தி யொன்றிப்
பிடித்துநின் றாள்க ளென்றும் பிதற்றிநா னிருக்க மாட்டேன்
எடுப்பனென் றிலங்கைக் கோன்வந் தெடுத்தலு மிருப தோள்
அடர்த்தனே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—வேதியா, வேதகீதா, நம்பனே, ஆளும் வல்வினைகள் தீர்க்கும் அருமருந்து, சிலந்தியை அரசாள அருளினாய், என்று பலவும் ஓதியே, வழுவிலாது உன்னை வாழ்த்தி, நறுமலர் நீருங்கொண்டு நாடோறும் ஏத்திப் பிதற்றி நான் இருக்க மாட்டேன் ; நின்தாள் கருதி நான் காண்பதாக அலந்தனன் ; ஆலவாயிலப்பனே ! நாயேன் பேர்த்தினிப் பிறவா வண்ணம், வஞ்சக மொன்றுமின்றி மலரடி காணும் வண்ணம் அருள் செய்யாயே.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) வேத கீதா - வேத கீதங்களாற் பேசப்படுபவரே ; கீதமாக வேதங்களைச் சொன்னவரே ; அண்ணா - மூத்தவரே ; அணுகப்படாதவரே என்றலுமாம். ஒருங்கி - ஒன்றியிருந்து. ஓதியே மலர்கள் தூவி - பூசித்து. (2) பேர்த்தினிப் பிறவா வண்ணம்...அருள் செய்யாயே - "பிறவாமை வேண்டும்" என்று அம்மை வரங் கேட்டமைபோல் அப்பரும் கேட்டனர் என்க.—(3) மருந்து - பிறவியாகிய மூலநோய் தீர்ப்பவனாதலின் மருந்தென் றுபசரித்தார். ஆளும் - அடிமைப்படுத்தும்.—(4) சைவனே - சிவத்துவமுடைய தலைவன்—(5) பாவகனேன் - குற்றமுடையவன்.—(6) எஞ்சலில் புகல் - தவிர்க்க முடியாது சென்று அடையுமிடம்.—(7) வழுவிலாது உன்னை வாழ்த்தி வழிபடும் - ஆன்மார்த்தமாக நித்திய பூசை செய்யும் என்பது குறிப்பு. "நறுமலர் நீருங்கொண்டு நாடோறும் ஏத்தி வாழ்த்திச் சேறிவன சித்தம் வைத்து (8) என்றதுமிது.—(9) சிலந்தியை அரசு அது ஆள - கோச்செங்கட் சோழர் சரிதம்.

1672. (வி - ரை) கோயிலினுள்-நேர் தோன்ற - நாயனாருக்கு இறைவர் இங்குத் திருக்கோயிலினுள் நேரே முன்னின்று திருவுருவம்காட்டிக் காட்சிகொடுத்தருளினர்; அக்காட்சியினையே ஒவ்வோர் பகுதியாகத் தனித்தனி கண்டு தனித்தனி வணங்கித் "தோன்றும் தோன்றும்" என்ற அடுக்கினால் உறுதிபடப் போற்றினார் என்பது திருத்தாண்டகப் பதிகத்தாற் றேற்றமாக விளங்கும். தாண்டகத்தால் வழுத்தி என்றதும் இக்குறிப்புத்தருவதாம்.

தோன்ற - தேவாரச் சொல்லாட்சி போற்றப்பட்டது.

பொடி நீடு திருமேனி - பொடி - திருநீறு. "பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்" என்ற தேவார நினைவுக்குறிப்பு.

நெடியானுக்கு அறிவு அரியாராயினும் அடியாருக்குத்தாமே எளியாராய் நேரே காட்சிதந்து தோன்ற என்பது குறிப்பு. நெடியானுக்கும் என்று உயர்வு சிறப்பும், பிரமனுக்கேயன்றி நெடியானுக்கும் என்று எச்சமுமாகப் பொருள் தரும் உம்மை தொக்கது. 407

திருப்பூவணம்

திருச்சிற்றம்பலம் — திருத்தாண்டகம்

வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியந் தோன்றுந் தோன்றுங்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழிறிகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 1

படைமலிந்த மழுவாளு மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்று
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும்
நான்மறையி னொலிதோன்று நயனந் தோன்றும்
உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்று
மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 4

அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்று
மணிகிளரு முருமென்ன வடர்க்குங் கேழல்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்றும்
மணமலிந்த நடந்தோன்று மணியார் வைகைத்
திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றுஞ்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 9

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பொழில்கள் திகழும் திருப்பூவணத்தில் கோயிலினுள் இறைவர் தமது திருவுருவம் நேர் தோன்றக் காட்சியளித் தருளுகின்றார் ; அத்தோற்றத்தில், வடிவேறு திரிசூலம், சடைமேல் இளமதியம், கொன்றைக்கண்ணி முதலியன எல்லாம் தோன்றும்; ஆணாகிப் பெண்ணாய வடிவுதோன்றும்; மின்னிடையாள் பாகமும் பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளையும் தோன்றும் ; மயலாகும் தன் அடியார்க்கருளி மறுபிறவி யறுத்தருளும் வகையும், ஆரொருவ ருள்குவா ருள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும் ; வைகைத் திருக்கோட்டினின்ற திறமும் தோன்றும்; சண்டிக்கருளித் தன் முடிமேல் அலர்மாலை அளித்தல் தோன்றும் என்றிவ்வாறு பலவும் அத்திருக்காட்சியைப் பாராட்டிப் போற்றியது.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) வடிவு-ஒளி ; அழகு. "மருள்பொழி மும்மலஞ் சிதைக்கும் வடிச்சூலம் வெயிலெறிப்ப" (சிறுத்-புரா-35). வடிவு - வடிவம். மூர்த்தம் என்று கொண்டு, இச்சாஞானக்கிரியை-ஆரணி ஜனனி ரோதயித்ரி-அயன் அரி அரன் என்னும் இவர்கள் மூர்த்தமாய் விளங்கும் என்றலுமாம். வடியேறு என்று பாடங் கொண்டு, வடி-கூர்மை என்பாருமுண்டு. குழை தோடு கலந்து - இடப்பால் தோடும் வலப்பால் குழையுமாகக்கூடி. கலந்து - வெவ்வேறாகிய ஆண்பெண் வடிவம் ஒன்றாகக் கூடி. இதனையே "ஆணாகிப் பெண்ணாய வடிவு" (2) என்பார்.—(2) ஊண் ஆகி - பலி தேர்வாராகி. பற்றார் - பகைவர் ; முப்புரவாணர்.—(3) ஐவகையால் நினைவார் - ஐந்து சாதாக்கியங்களாக. சிவனை ஐந்து முகங்களையுடைய சதாசிவ மூர்த்தியாக நினைந்து பூசிப்போர் என்றலுமாம். ஐந்தெழுத்தாகிய மந்திர உருவினராகவும், ஐந்தொழிற் பெருங்கூத்துடையவராகவும் நினைவோர் என்றலும் பொருந்தும். திருவங்கமாலையிற் கூறியவாறு ஐம்பொறிகளாலும் என்றலுமாம்.—(4) படை மலிந்த - படைகளுட் சிறந்த. பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை - முருகப்பெருமான். இங்கு நாயனார்க்கு எதிர் தோன்றிக் காட்சி தந்தருளிய திருவுருவம், இத்தலத் தெழுந்தருளியுள்ள சோமாஸ்கந்த மூர்த்தம் என்பது குறிப்பு. இங்கு இரசவாதஞ் செய்த திருவிளையாடல் வரலாறும், "பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்" (7) என்னும் குறிப்பும் கருதுக.—(5) மயல் - வேறு ஒன்றும் தோற்றாத அன்பின் உறைப்பு. வானிற்றேன்றும் புயல் - கங்கை வானில் ஆரவாரித்து முழங்கும் வீறு. தோன்றும் -

பெயரெச்சம். பாய - விரித்த - பாய்ந்து ஓடுங்க என்ற பொருளில் வந்தது.—(7) பொன்னனைய திருமேனி - இரசவாதம்செய்த திருவிளையாடற்குறிப்பு.—(8) திருவருள் கூட்டி, மும்மலநீக்கி, ஆணவத்தை எரித்துப் பசுத்தன்மை போக்கிப் பிறவியறுத்து உயிர்களிடத்து இறைவர் செய்யும் உபகாரங்களின் குறிப்புடன் விளங்குவது இத்திருப்பாட்டு.—(9) அருப்பு ஓட்டு - (கோங்கு) அரும்பினைவென்ற. வைகைத் திருக்கோட்டில் நின்றதோர் திறம் - வைகைக்கரையில் நின்று மண் சுமந்த திருவிளையாடல் குறிப்பதென்பர். கோடு - கரை.—(10) சண்டீச நாயனார் சரிதம் குறித்தது.—(11) ஆர் ஒருவர்...அருள் - யாவர் யாவர் எவ்வெவ்வாறு நினைக்கின்றார்களோ, அவ்வவர்க்கும் அவ்வத்திறமாய் வந்து அருள்புரிபவர். "யாதொரு தெய்வம்" (சித்தியார்).

தலவிசேடம் :—திருப்பூவணம் - பாண்டி நாட்டிற் றேவாரப் பாடல்பெற்ற தலங்களுள் 11-வது தலம். வைகையாற்றின் தென்கரையில் உள்ளது. மூவர் பாடலும் பெற்ற பெருமையுடையது. காசிக்குச் சமானமான தலம் என்பர். இத்தலத்தில் பொன்னனையாள் என்ற அம்மையாருக்கு இரங்கிச் சொக்கலிங்கேசர் இரசவாதம் செய்தருளிய வரலாறு திருவிளையாடற் புராணத்திற் பேசப்படுகின்றது. இங்குத் தமிழ் மூவேந்தர்களும் வழிபட்ட சிறப்பு ஆளுடையபிள்ளையார் தேவாரத்தால் அறியப்படும். ஆளுடைய நம்பிகள் இங்கு மூவேந்தர்களுடனிருந்து வழிபட்டனர். சுவாமி - பூவணநாதர்; அம்மை - மின்னம்மை; மரம் - பலா; தீர்த்தம் - வைகை; திருப்பதிகங்கள் நான்கும் திருவிசைப்பாவும் உண்டு.

இது மதுரைக்குக் கிழக்கே 12 நாழிகை யளவில் திருப்பூவணம் என்ற நிலயத்தினின்றும் கிழக்கே கற்சாலையில் அரை நாழிகை யளவில் அடையத்தக்கது.

1673. (வி - ரை) தென் இலங்கை - தமிழ்நாடு கடந்து அதன் தெற்கில் கடற்புறத்தே இருக்கும் தீவு என்ற குறிப்புப்படக் கூறினார். தென்-அழகிய என்றலுமாம். சிரம் ஈரைந்தும் - முற்றும்மை தந்தோதியது அவனது வலிமையும் செயலின் அருமையும் குறித்தற்கு.

மன்னவனும் இராமன் - அப்போது மன்னவனல்லாது, இனி, மன்னவனாகும் நிலையில் நின்றவன் என்ற குறிப்புப்பட மன்னவனும் என்றார்.

இராவணன்றன் சிரம் ஈரைந்தும் துணித்தது - இராமன் கதை. இராமாயணத்துப் பேசப்படும் வரலாறு. துணித்த - இராமனுக்கு - துணித்ததனால் வரும் என்று, பாதகம் வருதற்குக் காரணப் பொருள்படும்படி உடம்பொடு புணர்த்தி ஓதினார்.

வரும் பெரும் பாதகம் - வேதம் பயின்றவன், தவமுடையவன், சிவபூசை செய்பவன், பெருவீரன் என்பன முதலிய குணங்களுடைமை பற்றி அத்தகைய இராவணனைக் கொன்றது பெரும் பாதகம் என்னப்பட்டது. அன்றியும், இராவணன் பிறன் மனைவியை விரும்பிய குற்றத்துட் பட்டான் ஆயினும், அக்குற்றத்துக்காகச் சிரம் துணித்த தண்டனை மிகையாகலானும், ஏனை ஆண், பெண், மகவு முதலிய அரக்கர்களும் பட்டமையும், இலங்கை முழுதும் அழிந்துபட்டமையும் பொருந்தா ஆகலானும், அச்செயல் பெரும் பாதகம் எனப்பட்டது. மேலும் எக்காரணத்தாலும் ஓர் உயிரைக் கொல்வது அது செய்தானுக்குக் கொலைப்பழி தந்தேவிடும் என்பதொரு முறையும் உண்டு. ஆனல், கொலைக் குற்றத்திற்குக் கொலைத்தண்டனை விதிக்கும் நீதிபதியிடத்தும், அந்த ஏவல்வழி நின்று உயிர்போகச் செய்யும் ஏவலாளர்களிடத்தும் கொலைப்பழி வந்து சாருமோ எனின்; சாராது; குற்றத்துக்கு ஏற்ற தண்டம் விதித்தல் இறைவன் விதித்த நீதி நூல் முறைப்படி அரசு செய்யும் மன்னவன் கடமையாதலால் என்பது. "துணிபொருடா ளுற்றவுமற் றவற்கொல்லு மதுவேயாம்" 126) என்று துணிந்து தன் மகனைத் தேர்ச்சக்கரத்தில் வைத்து ஊர்ந்த மனுச்

சோழருக்கு எப்பழியும் வாராது இறைவர் தந்த அருளின் வண்ணம் காண்க. இராவண வதம் இராமனால் அரசன் என்ற நிலையிற் செய்யப்படாமையும் கருதுக. இனிச், சிவதருமங்களின் பொருட்டும், சிவதருமங்களுக்கு வரும் இடையூறுகளை நீக்கும் பொருட்டும் செய்யப்படும் கொலைகள் பாதகச் செயல்களாகா; அவை செய்தாருக்குப் பழி சாராதது மட்டுமேயன்றிச், சிவபுண்ணியப் பெரு வாழ்வும் வரும் என்பது எறிபத்த நாயனார் வரலாற்றாலும், அதுபோல வரும் எண்ணிறந்த வரலாறுகளாலும் துணியப்படும். "பிரானுக் கானபணி, ஆசி லாநல் லறமாவ தறிய வருமோ வுமக் கென்பார்" (தண்டி - புரா - 7) முதலியவை காண்க.

**இராவணன்றன்...தீர்த்த பிஞ்ஞகன்** - இதனால் இராமேச்சுரத்தின் வரலாறு கூறப்பட்டது. இத்தலத் திருநேரிசைப் பதிக முழுமையினும் இவ்வரலாறு பற்றியே நாயனார் போற்றியிருத்தல் குறிக்க இவ்வாற்றால் எடுத்துக்காட்டினார். ஆளுடைய பிள்ளையார் தேவாரமும் காண்க. பதிகக் குறிப்புப் பார்க்க.

**நினைந்துபோய்** - திருப்பூவணத்தை வணங்கிய பின் கிழக்கில் அடுத்துச்செல்ல நினைவுக்குவரும் தலம் இராமேச்சுரம் என்பதாம்.

**போய்** - இராமேச்சுரத்திற் சேர்ந்து. நினையாமலே சென்று வந்த வந்த தலங்களை வணங்கிச்செல்லு மதுபோ லன்றி, இராமேச்சுரம் செல்வதனையே குறித்து நினைந்து சென்று சேர்ந்தனர் என்பதாம்.

**எழுந்தார்** - எழுந்தாராகிய. முற்றெச்சம். எழுந்தார் (1673) - பாடித்-தொண்டு செய்தமர்ந்தார் - (1674) என்று மேல்வரும் பாட்டுடன் கூட்டிமுடிக்க. வினைமுற்றாகக் கொள்ளினு மிழுக்கில்லை. இப்பாட்டில் சொல்லரசர் என்று இறுதியில் வைத்ததனையே தொடர்ந்துகொண்டு நாவரசர்-அமர்ந்தார் - என மேல்வரும் பாட்டில் முடிக்கும் குறிப்புக்கொண்டு எச்சமாக்கி உரைக்கப்பட்டது. 408

1674. (வி - ரை) **தேவர் தொழும் தனி முதல்** - தேவருட் பெருந் தேவராகிய திருமாலினாற் றாபிக்கப்பட்டு வழிபட்டமையும், அதனால் அவருள்ளிட்ட ஏனைத் தேவர்களும் வந்து வணங்கி நலம் பெறும் நிலையும் பற்றித் தேவர் தொழும் என்றார்.

**இராமேச்சுரம்** - இராமனாற் றாபிக்கப்பட்டுப் பூசிக்கப்பட்டமையால் இப்பெயர் எய்தியது; "திருப்பனந்தாள் தாடகையீச்சரம்", என்பதுபோல. "தக்க வாசமிக் கலர்கள் கொண்டு மதியினன் மால்செய் கோயில்" என்பது முதலிய பதிகப்பாட்டுக்கள் பார்க்க.

**சங்கரன்** - இராமனுக்கு வரும் பெரும்பாதகம் தீர்த்து இன்பம் செய்தாராதலானும், இன்றும் வணங்குவார் எல்லார்க்கும் நலம் செய்கின்றாராதலானும் இங்குச் சங்கரன் என்ற பெயராற் கூறினார். "இன்பஞ் செய்தலிற் சங்கரன்" (காஞ்சிப் புரா).

**விருப்புறு மொழி** - அன்புப் பெருக்கினால் தாமே வரும் மொழிகள்.

**முதலான தமிழ்** - இவற்றுள் திருநேரிசைப் பதிகம் ஒன்றே கிடைத்துள்ளது!

**நலம் பெருக** - உலகம் உண்மைநெறி யிதுதானென்று கண்டு பின்பற்றிப் பெருநன்மையடைய. ஆளுடைய பிள்ளையாரும் "நளிர்வேலைக் கரையினயந் திருந்தார்" (ஷை - புரா - 889) என்பது காண்க.

**அமர்ந்தார்** - விருப்புடன் எழுந்தருளி யிருந்தார். 409

திருவிராமேச்சுரம்

திருச்சிற்றம்பலம் திருநேரிசை

பாசமுங் கழிக்க கில்லா வரக்கரைப் படுத்துத் தக்க
**வாசமிக் கலர்கள் கொண்டு மதியினன் மால்செய் கோயில்**

நேசமிக் கன்பி னாலே நினைமினீர் சென்று நாளுந்
தேசமிக் கானி ருந்த திருவிரா மேச்சு ரமே. 1

கடலிடை மலைக டம்மா லடைத்துமால் கரும முற்றித்
திடலிடைச் செய்த கோயி றிருவிரா மேச்சு ரத்தைத்
தொடலிடை வைத்து நாவிற் சுழல்கின்றேன் றூய்மை யின்றி
யுடலிடை நின்றும் பேரா வைவராட் டுண்டு நானே. 3

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—வன்கண்ணராய்க் கோடி மாதவங்கள் செய்து குன்றினாராகிய அரக்கர்களை யெல்லாம், கடலிடை மலைகளால் அடைத்து, வீடவே சக்கரத்தா லெறிந்து, கருமம் முற்றி, வாசமிக்கலர்கள் கொண்டு, மதியினால், தேடி, மால் செய்த கோயிலாகிய திருவிராமேச்சரத்தைப் பற்றி, நெஞ்சே படர்சடை ஈசன்பாலே பரவு; அது நன்னெறியாகும்.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) பாசமும் கழிக்ககில்லா அரக்கர் - "கோடி மாதவங்கள் செய்"தா ராயினும் அவையெல்லாம் வினைகளைப் பெருக்க ஏதுவாயினவே யன்றி, வினை கழிக்க ஏதுவாகாமற் கழிந்தன; அலர்கள் கொண்டு நினைமின் - எனக் கூட்டுக. மதி - சிவபூசை செய்தலே பாதகங்களைத் தீர்க்க வல்லது என்று சிவாகமங்களிற் கண்ட உண்மையிற் செலுத்திய அறிவு. தேசம் - தேசு - சிவவொளி. அம் - சாரியை.—(2) முற்றின நாள்கள் - ஆயுளின் எல்லை முடியும் அளவு கூடிற்று. பற்றி - இத்தலத்தைப்பற்றி நின்று. கடவுள் எங்குநிறைந்துள்ளவராயினும் அவரைக் குறிவைத்த ஓரிடத்திற்கொண்டு பரவுதல் வேண்டுமென்பது. ஈசன் பாலே பரவு - தலத்தைக் குறிவைத்து அங்கு இறைவனைப் போற்றுக என்பது.—(3) கடலிடை மலைகள் தம்மால் அடைத்து-சேதுக்கரை கட்டிய வரலாறு. கருமம் - அரக்கர்வதை. திடல் - தீவு. கட்டிய கரை என்றலுமாம். தொடல்-மனத்தால் எண்ணுதல். ஐவர் - ஐம்பொறி. ஐவரால்.—(4) வேட்கை - அன்பின் மிகுதி.—(7) இன்பு உரைத்து - இன்சொற்கூறி. நோக்கினால் - அகத்துள் குறிவைத்த உணர்வினால்.—(8) வணங்குவார்க்குத் தாழ்வர் என்று ஆகின்ற தவம் அது ஆம். தாழ்தல் - விரும்புதல். சிவனை விரும்புதலே பெருந்தவம் எனப்படும். தாழ்தல் - தங்குதல் என்று கொண்டு தவத்தில் தங்குவர் என்றலுமாம்.—(9) கோடி மாதவங்கள் - பெருவரங்களாகிய ஆற்றல், ஆயுள், ஆயுதம் முதலியவற்றைப் பெறுவதற்காக இராவணன் சிவபெருமானை நோக்கிப் பலகோடி காலம் செய்த அருந்தவங்கள். தேடி - தான் தாபித்துப் பூசிக்க ஏற்ற சிவக்குறியைக் குறித்த காலத்தில் அனுமன் கொணரத் தாழ்த்தமையால் வேறு திருவுருவைத் தேடி அமைத்து.—(10) மாட்டி - அழித்து—(11) திரைகள் முத்தால் வணங்கும் - திருவிராமேச்சுரத்தைக் கடலரசன் அலையாகிய கைகளால் முத்துக்களைத் தூவி வணங்குகின்றான் என்பது; தற்குறிப்பேற்றம். உரைகள் பத்து - பதிகப் பாடல் பத்து. குறிப்பு :—இராமனைத் திருமாலின் அவதாரங்களுள் வைத்துப் பேசியது இத்திருப்பதிகம். இராமாயணச் சரித வரலாறுகளும் குறிக்கப்பட்டன.

தல விசேடம் :—திருஇராமேச்சுரம்—பாண்டிநாட்டின் எட்டாவது தலம். இராமனால் தாபித்து வழிபடப் பெற்ற தலமாதலின் இப்பெயரெய்தியது. இராவணனாதி அரக்கர் குலத்தை அழித்த பழி போகும்படி இராமன் இங்கு மணலாற் சிவக்குறி நிறுவிப்பூசித்த வரலாறும், அதன் காரணமாய் நின்ற இராமாயண வரலாறுகளும் திருப்பதிகங்களுட் கூறப்பட்டன. இராமனது விருப்பின்படி அனுமன் கொணர்ந்த

அனுமலிங்கம், இராமநாதரின் கோயிலை அடுத்துத் தாபிக்கப் பட்டுள்ளது. அனுமனுடைய அன்பின் சிறப்புக்காக அதற்கு முதலில் பூசை நிகழும்படி இராமன் பணித்தனன் என்றும், அதன்படியே இன்றும் நிகழ்வது என்றும் வரலாறுகள் கேட்கப்படுகின்றன. பன்னிரண்டு சோதிலிங்கங்களுள் ஒன்று. தம்மைப்பிரிந்து போந்து குணநிதி பாண்டியனிடம் வளர்ந்த இலக்குமியை வேதியனுருவங் கொண்டுவந்து மணந்து, சேதுமாதவர் என்னும் பெயருடன் விட்டுணு வீற்றிருக்கின்றனர். அவரை வணங்காதவர் இராமநாதரை வழிபட்ட பலனை அடையார் என்பது சேதுபுராணம். இங்கு அனேகம் சிறந்த தீர்த்தங்கள் உண்டு. அவற்றின் வரலாறும் சிறப்பும் சேதுபுராணத்துட் பேசப்படும். இத் தீர்த்தங்களுட் குளித்தல் சேது தீர்த்த யாத்திரை எனப்பட்டுச் சிறந்த பலன்களைத் தரும் என்ப. இலங்கையுட் சென்று இராவணனை வெல்லும் பொருட்டு இராமன் அணைகட்டியதனால் சேது என்று பெயர் பெறும். சே - கரை. இராமனது தனுவின் முனையாற்கீறி உண்டாக்கப் பட்டமையின் தனுக்கோடி எனப்படும். தலத்தின் வடக்கில் உள்ளது கந்தமாதனமலை. அதன் மீது இராமன் பாதம் பொறிக்கப் பட்டுள்ளது. எவ்வித பாவங்களும் தீரும் பொருட்டும் இன்றும் எண்ணிறந்த அன்பர்கள் சென்று தரிசிக்கவுள்ளது இராமேசுரம். காசி - இராமேசுரம் என்று முத்தித் தலமாகிய காசியுடன் இணைத்துப் பேச உள்ளதும், நாடோறும் கங்கையின் தூய நீர் மிகுதியாய்த் திருமஞ்சன மாட்ட வுள்ளதும் ஆகிய பெருஞ் சிறப்புக்கள் இன்றும் காண உள்ளன. தை-ஆடி-அமாவாசைகள் சிறப்பு. சுவாமி - இராமநாதர் - அனுமேசர்; அம்மையார் - மலைவளர் காதலி; (பர்வதவர்த்தனி என்பர் வடவர்); விசாலாட்சி. தீர்த்தம்-அக்கினி தீர்த்தம் - இராம தீர்த்தம் - இலக்குமண தீர்த்தம் - தனுக்கோடி - முதலிய பல.

இராமேசுவரம் என்ற புகைவண்டி நிலையம் ஊரினுள்ளே உள்ளது.

1675. அங்குறைந்து கண்ணுதலா ரருள்சூடி யகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி
செங்கண்விடை யார்மன்னுந் திருக்கானப் பேர்முதலா
வெங்குநிகழ் தானங்க ளெல்லாம்புக் கிறைஞ்சுவார்; சுசுய

*1676. தொழுதுபல வகையாலுஞ் சொற்றொடைவண் டமிழ்பாடி
வழுவிறிருப் பணிசெய்து மனங்கசிவுற் றெப்பொழுதும்
ஒழுகியகண் பொழிபுனலு மோவாது சிவன்றாள்கள்
தழுவியசிந் தையிலுணர்வுந் தங்கியநீர் மையிற்சரித்தார். சுசுக

1675. (இ - ள்) வெளிப்படை. அத்திருத்தலத்தில் (திரு இராமேச்சுரத்தில்) பலநாள்கள் தங்கியிருந்து, சிவபெருமானுடைய திருவருள் விடைபெற்று, அத்தலத்தினின்றும் நீங்கிச்சென்று, பொங்கும் தமிழ்த் திருநாட்டில் புறம்பணையினாற் சூழப்பட்ட திருநெல்வேலியும், சிவந்த கண்ணையுடைய இடபத்தையுடைய பெருமானார் நிலைபெற்று எழுந்தருளியுள்ள திருக்கானப்பேரும் முதலாக, அங்நாட்டில் எங்கும் பொருந்திய தலங்கள் எல்லாவற்றிலும் சென்று வணங்குவாராகி, சுசுய

1676. (இ - ள்) தொழுது - பல தலங்களிலும் சென்று வணங்கி; பல...பாடி - பலவகைகளாலும் அமைந்த சொற்றொடைகளாகிய வளப்பமுடைய தமிழ்ப் பதிகங்களைப்பாடி; வழுவில் திருப்பணி செய்து - குற்றமில்லாத திருப்பணிகளைச் செய்து; மனம் கசிவுற்று - மனம் மிக உருகி; எப்பொழுதும் பொழி புனல் ஒழுகிய கண்ணும் - எக்காலத்திலும் பொழிகின்ற நீர் ஒழுகும் கண்களையும்; ஓவாது சிவன் தாள்கள் உணர்வு தழுவிய சிந்தையும் - நீங்காமல் சிவபெருமானுடைய திருவடிகளை உணர்ச்சி

யிற் றழுவிக்கொண்ட சிந்தையும் ஆக இவ்வாறுள்ள நீர்மையில் சரித்து ஒழுகியருளினர். ௪௧௧

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1675. (வி - ரை) அங்குறைந்து - பல நாட்கள் நாயனார் திருவிராமேச்சுரத்திற் றங்கி இருந்தருளினர் என்பது. இவ்வாறே ஆளுடைய பிள்ளையாரும் "நாதர்தமை நாடோறும் வணங்கி யேத்தி நளிர்வேலைக் கரையினயந் திருந்தா ரன்றே" (திருஞான - புரா - 889); "அந்நகரி லமர்ந்தங்க ணினிது மேவி" (ஷை 890) என்பவை காண்க.

அருள் சூடி - திருவருள் விடைபெற்று என்ற பொருளில் வந்தது. அடிசூடி - என்ற பாடமும் பொருந்தும்.

தமிழ் நாட்டுப் புறம்பணை சூழ் - தமிழ்நாட்டிலே, வயல்களால் எப்புறமும் சூழப்பட்ட. பணை - பண்ணை; மருத நிலம். நெல்வேலி என்ற பெயரின் காரணத்தை விளக்கும் வகையால் உடம்பொடு புணர்த்தி ஓதினர்.

நெல்வேலி - கானப்பேர் முதலா - எண்ணும்மைகள் தொக்கன.

செங்கண் விடையார் மன்னும் திருக்கானப்பேர் - காளை வடிவத்தோடு இறைவர் எழுந்தருளியிருக்கும் தலம் என்பது குறிக்க விடையார் என்றார். சுவாமி பெயர் காளீசுவரர் என்பதும், இத்தலம் காளையார் கோயில் என வழங்கப்படுவதும் கருதுக. "காளையாந் திருவடிவாற், செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுடன், எங்குமிலாத் திருவேட"த்தைக் (கழறிற்-புரா-112) கனவில் ஆளுடைய நம்பிகளுக்குக் காட்டியருளிய வரலாறும் இங்கு நினைவு கூர்தற்பாலது.

விடையார் - விடையின் வடிவோடு வீற்றிருப்பவர் என்ற குறிப்பும் தந்து நின்றது.

கானப்பேர் - காளையார் கோயில் எனவழங்கும் தலம்.

எங்கும் - நாடு எங்கும். நிகழ் - விளங்கும்.

இறைஞ்சுவார் - இறைஞ்சுவாராகித் - தொழுது என மேல்வரும் பாட்டில் வினையெச்சங்களுடன் கூட்டிமுடிக்க.

திருநெல்வேலி - திருக்கானப்பேர் - இத்தலப்பதிகங்களும், பாண்டிநாட்டில் நாயனார், தானங்கள் எல்லாம் புக்கிறைஞ்சுவார் என்றதனாற் கருதப்படும் ஏனைய தலங்களின் பதிகங்களும் கிடைத்தில! 410

1676. (வி - ரை) பலவகையாலும் - யாப்பின் வகையும், பண்ணின்வகையும் குறித்தது.

வழுவில் திருப்பணி - கைத்தொண்டாகிய திருவுழவாரப்பணி, திருவலகு முதலாயின; வழுவில் - குற்றமில்லாத. இதனால் அவ்வத்திருப்பணிகளுக்கு ஆகமங்களின் விதித்தவகையில் சிறிதும் வழுவில்லாது பணிசெய்யும் நியதி குறிக்கப்பட்டது.

வழு - இல் - வழுவினை இல்லையாகச் செய்யும் என்றலுமாம். வழு வாவது ஆணவ மலத்தின் விளைவாகிய பிறவிக் குற்றம்.

மனம் கசிவு உற்று - கசிவு உறுதல்; உள்ளே ஊற்றுப்போல எப்போதும் பெருக உருகி நிற்றல்.

எப்பொழுதும் - கசிவுற்று என்றும், எப்பொழுதும் - பொழி புனல் என்றும் இருவழியும் கூட்டியுரைக்க இடையில் வைக்கப்பட்டது. மனம் கசிய அதனால் புனல் பொழியும் என்று காரணமுணர்த்தும் முறையில் வைக்கப்பட்டதும் காண்க.

ஒழுகிய கண் பொழிபுனல் என்றது முன்பே ஒழுகிக் கொண்டிருந்த கண்; அது மேலும் பொழியும் புனல் என்க.

தாள்கள் உணர்வில் தழுவிய சிந்தை என்று கூட்டி உரைத்துக் கொள்க. சிந்தை - உயிர். "சிந்தை நாடி" (9 - சூத்.). தழுவுதல் - பிறிவறக் கலத்தல்.

நீர்மை - ஒழுக்கம். சரித்தல் - நிகழ்தல் ; ஒழுகுதல்.

"தூய வெண்ணீறு" (1405); "மார்பாரப் பொழிகண்ணீர்" (1490) என்ற திருப்பாட்டுக்களையும், ஆண்டுரைத்தவற்றையும் இங்கு நினைவு கூர்க. ஆனால் இத் திருப்பாட்டிற் குறித்தது திருவடி சாரும் பருவத்தைத் தீவிரமாய் நோக்கி நின்று அன்புள்ளுருகிய மனநிலையின் குறிப்பும், மேல்வரும் பாட்டிற் சரித நிகழ்ச்சியைக் கூறும் விரைவும், "பூம்புகலூர் வந்தடைந்தார் பொய்ப்பாசம் போக்குவார்" என்ற குறிப்பும் காண்க. 411

1677. தேம்பொழியுஞ் செந்தமிழ்நாட் டினிலெங்குஞ் சென்றிறைஞ்சிப்
பாம்பணிவார் தமைப்பணிவார் பொன்னிநா டதுவணைந்து
வாம்புனல்சூழ் வளநகர்கள் பின்னும்போய் வணங்கியே
பூம்புகலூர் வந்தணைந்தார் பொய்ப்பாசம் போக்குவார். சகஉ

(இ - ள்) தேம்பொழியும் - நாடு என்றும், தேம்பொழியும் - தமிழ் என்றும் கூட்டி உரைக்க நின்றது. தமிழுடன் கூட்டும்போது தேம் என்றது சொல்லின்பமும், சேம்(மை) என்றது பொருளினிமையும் குறிப்பன என்க. தேம்பொழில் சூழ் என்பது பாடமாயின் நாட்டின் சிறப்பாக உரைத்துக் கொள்க. இப்பொருளில் பொழில் சூழ்தல் பொருநை முதலிய ஆறுகளின் வளத்தாலாவதென்க. பொதிகை - குற்றாலம் முதலியவற்றின் பொழில் வளச் சிறப்புக்களை இங்கு நினைவுகூர்க. இப்பகுதி பாண்டிநாட்டின் தென்புறப் பகுதியாமென்பது குறிக்க முன் "தமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி" (1675) என்றதும் காண்க.

செந்தமிழ் நாட்டினில் எங்கும் சென்று - இவை பாண்டிநாட்டின் ஏனைத் தலங்கள். இவற்றின் பதிகங்கள் கிடைத்தில.

பாம்பணிவார் - தமைப் பணிவார் - சொல்லணி. பணிவார் - வணங்கியே - வந்தடைந்தார் - என்று முடிக்க. பணிவார் - பணிவாராகி.

இறைஞ்சி - வணங்கி - என்பன சிவநெறிச் சாதனங்களும், வந்தடைந்தார் - என்பது அவற்றாற் பெற்ற பயனுமாம் என்பது குறிப்பு.

புகலூர் - பிறவிப் புகலாக அடையும் இடம் என்பது பொருள். புகலூர் - அடைந்தார் - என்றது நாயனாரது பிற்சரித விளைவு குறிப்பது.

பொய்ப்பாசம் போக்குவார் - அடைந்தார் - என்க. போக்குவார் - போக்க. பொய்ப்பாசம் - உலகநிலைத் தொடர்ச்சி. அடைதல் - புகலாகச் சார்தல்.

வளநகர்கள் பின்னும் போய் - வரும் வழியில் முன் அணைந்த சோழநாட்டுத் திருத்தலங்களை மீண்டும் சென்று வணங்கி. இவை நாயனார் திரும்பும் வழியில் உள்ளனவாதலின், முறைப்படி அவற்றைப் பின்னும் வணங்கிச் சென்றார் என்பதாம். முன் சென்ற தலக்குறிப்புக்கள் பார்க்க.

சேர்ந்திறைஞ்சி—போக்குதற்கு—என்பனவும் பாடங்கள். 412

1678. பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
நையுமனப் பரிவினொடு நாடோறுந் திருமுன்றிற்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலுடன்
வைகுநா ளெண்ணிறந்த வண்டமிழ்மா லைகண்மொழிவார் ; சகங

1679. நின்றதிருத் தாண்டகமு நீடுதனித் தாண்டகமும்
மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்துதிருத் தாண்டகமும்
கொன்றைமலர்ச் சடையார்பாற் குறைந்தடைந்த நேரிசையுந்
தூன்றுதனி நேரிசையு முதலான தொடுத்தமைத்தார்; ௪௰௪

1680. ஆருயிரின் றிருவிருத்தந் தசபுரா ணத்தடைவும்
பார்பரவும் பாவநா சப்பதிகம் பன்முறையும்
நேர்படநின் றறைகூவுந் திருப்பதிக முதற்பிறவும்
பேரருளின் கடலளிக்கும் பெருமானைப் பாடினார். ௪௰௫

1678. (இ - ள்) வெளிப்படை. பொய்கையினாற் சூழப்பட்ட பூம்புகலூர்த் திருக்கோயிலினுள் எழுந்தருளிய தூயராகிய சிவபெருமானது மலர்போன்ற திருவடிகளை வணங்கி, நைந்து கரையும் மனத்தின் எழும் அன்பினோடு, நாடோறும், திருமுன்றிலிலே அன்பு கலந்த கைத்திருத்தொண்டு செய்து மிகுந்த காதலுடன் தங்கியிருந்த நாள்களில் எண்ணில்லாத வளப்பமிக்க தமிழ் மாலைகளை அருளிச் செய்வாராகி, ௪௰௩

1679. (இ - ள்) வெளிப்படை. நின்ற திருத்தாண்டகமும், நீடியுள்ள தனித் திருத்தாண்டகப் பதிகங்களும், அம்பலத்தாடும் இறைவர் எழுந்தருளியுள்ள திருத்தலங்களைப் போற்றுகின்ற க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகமும், கொன்றை மலர் சூடிய சடையினையுடைய சிவபெருமானிடம் குறைந்து அடையும் கருத்தினை உட்கொண்ட குறைந்த திருநேரிசைப் பதிகங்களையும், பொருந்திய தனித் திருநேரிசைப் பதிகங்களையும், இவை முதலாகிய பலவற்றையும் சேர்த்து அமைத்தருளியதுடன், ௪௰௪

1680. (இ - ள்) வெளிப்படை. ஆருயிர்த் திருவிருத்தமும், தசபுராணத் திருப்பதிகமும், உலகம் போற்றியுய்யும் பாவநாசத் திருப்பதிகமும், பலமுறையும் நேர்படும்படி நின்று இறைவரைக் கருதி "சரக்கறையோ" என்று அறை கூவும் சரக்கறைத் திருப்பதிகமும், என்று இவை முதலாகிய பிற பதிகங்களையும் பேரருட் கடலை அடியார்களுக்கு அளிக்கும் சிவபெருமானைப் பாடியருளினார். ௪௰௫

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண் டுரைக்கநின்றன.

1678. (வி - ரை) பொய்கைசூழ் பூம் புகலூர் - பொய்கையினடுவுள் பூத்த தாமரைபோலப் பொய்கை சூழ்ந்து அமைந்த திருக்கோயில் என்பது குறிப்பு. பொய்கை - தெய்வத் தீர்த்தம்.

**புனிதர்** - புனிதஞ் செய்பவர். **புனிதம்** - தூய்மை. உயிர்களை ஆணவக் கறை போக்கித் தூய்மையாக்குபவர். திருவடி சேரும் சரிதக் குறிப்பு.

**நையும் மனப்பரிவு** - 1676-ல் கூறிய மனநிலை. "மெய்ப்பொருள்தான் எய்த வரும் அந்நிலைமை அணித்தாக" (1690) எனவரும் நிலையின் முன்னர்ச் சார்ந்து நிற்கும் உள்ளங் கசிந்தூறும் அன்பு.

**திருமுன்றில்......திருத்தொண்டு** - உழவாரத் திருப்பணியும் அவ்வாறுள்ள பிறவும்.

**வண் தமிழ் மாலைகள்** - தேவாரத் திருப்பதிகங்கள். இத்திருப்பதிகங்கள் வேதங்களின் பொருட்டுணிபுகளாய், முடிந்த முடிபுகளாகிய சைவ சித்தாந்த உண்மைகளையும், மறை முடிபாகிய துணிவுகளையும் எடுத்து அறிவுறுத்தும் உறைப்பினைக் காட்ட வண்தமிழ் என்றார். பதிகக் குறிப்புக்கள் பார்க்க. இவை மேல் வரும் இரண்டு பாட்டுக்களிலும் எடுத்துக் காட்டப்பட்டன.

எண்ணிறந்த-காட்டப்பட்ட இவையும்,இவைபோல்வன கிடைத்துள்ளன பிறவும், கிடைக்காத பலவும். எண் - எண்ணம் - சிந்தை எனக்கொண்டு, எண்ணத்தில் அடங்காத என்றலுமாம். மொழிவார் (1678) - தொடுத் தமைத்தாராகிப் (1679) - பாடினார் (1680) என்று இம் மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக்கொள்க. 413

1679. (வி - ரை) நின்ற - இறைவர் எப்பொருள்களுமாய் நின்ற.

நீடு - உண்மைப் பொருட்டுணிபுகளால் நீடும்.

தனித்தாண்டகம் - இப்பெயரால் இரண்டு பதிகங்கள் கிடைத்துள்ளன.

மன்று உறைவார் - சிவபெருமான். மன்று - ஐந்தொழிலாகிய அருட்கூத்து நிகழும் இடம்.

பதிகள் வழுத்து திருத்தாண்டகம் - சிவபெருமானது திருத்தலங்களைத் தொகுத்துப் போற்றும் பதிகம். இது க்ஷேத்திரக் கோவை என வழங்கப்படும்.

மன்று உறைவார் வாழ்பதிகள் வழுத்து - இன்னின்ன தலங்களிலும், இன்னும் எத்தானங்களிலும், கயிலாய நாதனையே காணலாமே என்ற கருத்துட் கொண்ட மகுடம் புனைந்திருத்தலின் பதிகள் வழுத்தும் என்றார்.

குறைந்தடைந்த நேரிசை - வேறு புகலின்றி வருந்தும் உயிர், குறைந்து வந்து, இறைவரை அடைந்த கருத்துப்பட, "என் செய்வான் தோன்றினேன் ஏழை யேனே' என்ற கருத்துடன் விளங்குவது. இவை குறைந்த திருநேரிசை என வழங்கப்படும். இப்பெயருடன் இரண்டு பதிகங்கள் கிடைத்துள்ளன. துன்று - உண்மைப் பொருள்கள் பலவும் விரவிச் செறிதல் குறிப்பு.

தனித் திருநேரிசை - இத் தலைப்பில் மூன்று பதிகங்கள் கிடைத்துள்ளன.

முதலான - மேல்வரும் பாட்டில் விரிக்கப்படுவன.

தொடுத்து அமைத்தார் - "தமிழ் மாலைகள்" (1678) என்றதற்கேற்ப இவ்வாறு கூறினார்.

குறைந்த திரு—என்பதும் பாடம். 414

1680. (வி - ரை) ஆருயிரின் திருவிருத்தம். இஃது ஆருயிர்த் திருவிருத்தம் என வழங்கும் பதிகம். "அடிநிழற் கீழதன்றே என்ற னாருயிரே" என்ற மகுடத்துடன் விளங்குதலின் இப்பெயர் பெற்றது.

தசபுராணத்து அடைவு - சிவ மகா புராணங்கள் பத்தின் ஒவ்வொரு புராணக் கருத்து ஒவ்வொரு பாட்டின் கருத்தாகச் செறித்து விளக்குதலின் இப்பெயர் பெற்றது.

பார் பரவும் பாவநாசப் பதிகம் - "என்னெம்மான் என்பார் பாவநாசமே" என்று முடித்தருளிய, இப்பதிகப் பயன் பெறும்பொருட்டு, உலகம் பயிலத்தக்க பதிகம் என்பது கருத்து.

நேர்பட நின்று பன் முறையும் அறை கூவும் திருப்பதிகம் - இது "சரக்கறைத் திருவிருத்தம்" என வழங்கும் பதிகம் என்பர். என் விண்ணப்பம்! - என் தனி நெஞ்சம் சரக்கறையோ? என்று பாட்டுத்தோறும் கூவியதாக வருதலால் அறை கூவும் என்றார். பன்முறையும் - பதினொரு பாட்டுக்களிலும் வருதல் குறித்தது. நேர்பட நின்று - விடைப் பெரும்பாகா!, வெற்பா!, ஏந்தீ!, உரியாய்!, தாராய்!, விகிர்தா! என்பனவாகப் பாட்டுத்தோறும் இறைவரை முன்னிலைப்படுத்திக் கூவுதலால் இவ்வாறு கூறினார்.

முதற் பிறவும் - இவை "சிவனெனு மோசை"ப் பதிகம் (பியந்தைக் காந்தாரம்), "நினைந்த" திருநேரிசை, தனித் திருவிருத்தப் பதிகங்களிரண்டு, பசுபதித் திருவிருத்தம், வினவிடைத் திருத்தாண்டகம் முதலாயின என்று கருதப்படும்.

பேரருளின் கடல் அளிக்கும் பெருமான் - அணிமையில் தமது திருவடிக்கீழ் அமரவைக்கும் பேரருள் குறிப்பு. 415

"நின்ற" திருத்தாண்டகம்

I திருச்சிற்றம்பலம் தாண்டகம்

இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி யியமான னாயெறியுங் காற்று மாகி
யருநிலைய திங்களாய் ஞாயி றாகி யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும் பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே. 1

மண்ணாகி விண்ணாகி மலையு மாகி வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக் கலையாகிக் கலைஞானந் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப் பிரளயத்துக் கப்பாலோ ரண்ட மாகி
யெண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்து மாகி யெழுஞ்சுட ரா யெம்மடிக ணின்றவாறே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—உயிர்ப்பொருள் உயிரில் பொருள் என்ற பகுப்பின்றிச் சிவன் எல்லாவற்றிலும் எக்காலத்தும் நீங்காது நிற்கும் நிலை குறித்தது. அருமறைப் பயனாகிய திருவுருத்திரத்தின் கருத்தாய் அமைந்தது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) நிலன் - தீ - நீர் - இயமானன் - காற்று - திங்கள் - ஞாயிறு - ஆகாயம் என்ற எட்டும் சிவனது எட்டுத் திருமேனிகள். அட்ட மூர்த்தங்கள் எனப்படும். "நிலனீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்" (திருவா-தோணோக்-5); இயமானன் - ஆன்மா. "இருசுடரோ டியமான பூதமென்று" (மணிமே. 27, 89). நலமும் குற்றமும் - நன்மையும் தீமையும். நெருநல் - நேற்று. நெருநல், இன்று, நாளை - இறப்பு - நிகழ்வு - எதிர்வு என்ற மூன்று காலங்கள்.—(2) கண் - மணி - கருவியும் காட்டுபவனும் என்பது குறிப்பு. கலை - கலைஞானம் - கலைகளும் அவற்றால் அறியப்படும் அறிவும். எண் - எழுத்து. "எண்ணு மெழுத்தும் கண்ணெனத் தகும்". கலை ஞானங்களுட் சிறந்தவை.—(3) களறு - புல்லும் முளைக்காத களர்நிலம். கால் - நீர்க்கால் ; வாய்க்கால். பொருள் - சொல்லாற் குறிக்கப்படுவது. சுலா - காற்று.—(4) களிறு - கூற்றுதைத்தவர்; சிவன். உருவகம்.—(5) பழமாகி......நுகர்வானும் தானே - "செய்வானும் செய்வினையும்" (சாக்கியர் - புரா); நீ - நான் - முன்னிலை - தன்மை.—(6) அங்கம் - வேதத்தின் ஆறு அங்கம். அருமறை - வேதாந்தம் - உபநிடதம்.—(7) யாதானுமெனை நினைந்தார் - போதாய மலர் கொண்டு போற்றி நில்லாவிடினும் நினைந்தார் என்பது குறிப்பு.—(8) அழல் - வேள்வித் தீ.—(9) விசும்பினுச்சி - விசும்பிற்கும் அப்பாற்பட்டது.—(10) அருக்கம் - சுருங்கிய நிலை. பூலோகம் புவலோகம் சுவலோகம் - பூமியும் அதன்மேல் உள்ள ஏழுலகங்களும்; காயத்திரியிற் குறிக்கப்படுவன. ஏலாதன - இயலாதவை - பொருந்த மாட்டாதவை.

குறிப்பு :—இத்திருப்பதிகம் அருமறைப் பயனாகிய திருவுருத்திரத்தின் கருத்தாயமைந்தது. "மெய்யுணர் வுடையார்க்குப் பகுப்பின்றி எங்கணும் பரமேசுரனைக் காண்டலே பொருத்தமுடைமையானும், நின்ற திருத்தாண்டக முதலியவற்றுள் அவ்வாறே ஓதலானும், திருவுருத்திரத்துட் பகுப்பின்றி உயிர்ப்பொருள் உயிரில் பொருள் எல்லாவற்றையும் தனித்தனி யெடுத்தோதி வழிபாடு கூறுதலானும்" என்றுவரும் சிவஞானபோதச் சிற்றுரை (12-ம் - சூத்) ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

"தனித்" திருத்தாண்டகம்

II திருச்சிற்றம்பலம்

தாண்டகம்

அப்பனீ யம்மைநீ யைய னுநீ யன்புடைய மாமனு மாமி யுநீ
ஒப்புடைய மாதரு மொண்பொ ருளுநீ யொருகுலமுஞ் சுற்றமு மோரூ ருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்று வாய்நீ துணையாயென் னெஞ்சந் துறப்பிப் பாய்நீ
யிப்பொனீ யிம்மணிநீ யிம்முத் துநீ யிறைவனீ யேறூர்ந்த செல்வ னீயே. 1

ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே கண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே.

திருக்கோயி லில்லாத திருவி லூருந் திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும் பாங்கினொடு பலதளிக ளில்லா வூரும்
விருப்போடு வெண்சங்க மூதா வூரும் விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரு மவையெல்லா மூரல்ல வடவி காடே. 5

திருநாம மஞ்செழுத்துஞ் செப்பா ராகிற் றீவண்ணர் திறமொருகாற் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகி லுண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகி லளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற்
பெருநோய்கள்மிகநலியப்பெயர்த்துஞ்செத்துப்பிறப்பதற்கேதொழிலாகியிறக்கின்றாரே.

அத்தாவுன் னடியேனை யன்பா லார்த்தா
யருநோக்கிற் றீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையு மரியநீ யெளியை யானா
யெனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயே னாயேன்
பிழைத்தனக ளெத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையு மெம்பரமோ வைய! வையோ!
வெம்பெருமான் றிருக்கருணை யிருந்த வாறே. 8

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லே னான்பொல்லேன் ஞானி யல்லே
னல்லாரோ டிணங்கிலே னடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவே மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லே னிரப்பதே யீய மாட்டே
னென்செய்வான் றோன்றினே னேழை யேனே. 9

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ மாதேவர்க் கேகாந்த ரல்ல ராகில்;
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோய ரா யாவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனுங்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகி லவர்கண்டீர் யாம் வணங்கும் கடவு ளாரே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—இறைவரது இன்னருள் விளையாட்டிற் பலவகையாலும் ஈடுபட்டருந்தியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) ஐயன் - முன்னோன். ஒப்புடைய மாதர் - மனத்திறத்தால் இல்லறத்தில் ஒத்த உரிமையுடைய மனைவி. மாதர் - பன்மை இல்லற நிலையில் மனைவியர்க்குரிய கடமைகளின் ஏற்றங் குறித்தது. "பெருகுதிரு மனையறத்தின், வேராகி விளங்குதிரு வெண்காட்டு நங்கை" (சிறுத் - புரா - 17). ஒண்பொருள் - மக்கள். "தம்பொரு ளென்பதம் மக்கள்" (குறள்). துய்ப்பன - தாம் அனுபவிப்பவை; உய்ப்பன - அடியார்க் குதவுவன. "அளவிலா மரபின் வாழ்க்கை மட்கல மமுதுக் காக்கி...அடியார்க்கென்று முளமகிழ் சிறப்பின் மல்க வோடளித்து" (362). துணையாய்த் துறப்பித்தல் - உள்ளத்துள் நின்று துணையாவார் தாமே என்று காட்டுதலால், முன்னர்த் துணையென்று கண்ட பொருள்களைத் துணையன்றெ‌ன விடச் செய்தல். "துணையென்று நான்றொழப் பட்டவொண் சுடரை" (நம்பி - தேவா). பொன்-மணி-முத்து-முன்னர் அரியன என்று விரும்பியவை, இப்போது இறைவரை நோக்க, அரியவை யன்றெனக் கண்டநிலை. முத்து - மணிகளுள் ஒன்றுயினும் வேறு பிரித்தோதியது சிறப்பு நோக்கி. 492 - பார்க்க. இப்பாட்டால் உலகர் விரும்பும் உயிர்ச் சார்பு - பொருட்சார்புகள் யாவும் இறைவரே யாகும் தன்மையும், ஏனையவை யாவும் பொருளன்றும்படியும் எடுத்துக் கூறப்பட்டன.—(2) இப்பாட்டால் முன் பாட்டிற் கூறியவாறு இறைவரையே எல்லாச் சார்புமாகக் கொள்வோர் பெறும் தன்மை கூறப்பட்டது. "எங்கெழிலென் ஞாயிறு" (திருவா - திருவெம்பாவை - 19); செம்பவள வண்ணர் - மெய் பற்றியும், செங்குன்ற வண்ணர் - உருவம் பற்றியும் நின்றன. செவ்வான வண்ணர் - "மாலையின் தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை" (அற் - அந் - 65). சிந்தையாரே - ஆதலால் கூற்றம் வெம்ப வருகிற்பதன்று என்பது முதலாக முன் சொல்லிய நிலைகளுக்குக் காரணங் கூறியபடி. பரிவு - துன்பம்.—(3) இப்பாட்டால் இறைவர் உயிர்க்குயிராய் நின்று உயிர்களை இயக்கும் தன்மை கூறப்பட்டது. ஆட்டுவித்தல் - உலகில் இயங்கச் செய்தல். அடக்குவித்தல் - அவ்வாறியங்குதலை நிறுத்துதல். ஆட்டுவித்தல் கன்மம் புசிப்பதற்கும், அடக்குவித்தல் ஆணவம் நசிப்பதற்குமாம். ஓட்டுவித்தல் - பாசப் பற்றினின்றும் இறைவனை நோக்கி இயக்குவித்தல். உருகுவித்தல் - அதன்கண் உறைப்புப் பெறுவித்தல். பாட்டுவித்தல் - பணிவித்தல் - அதன்மேல் நிகழ்வன. காட்டுவித்தல் - பாசநிலை - பசுநிலை - பதிநிலைகளின் உண்மைகளைத் தெளியக் காட்டுதல். "தன்றிறமு மறிவித்து நெறியுங் காட்டி" (எறும்பியூர் - தாண்டகம் - 1); "மாலுங்காட்டி நெறிகாட்டி வாரா வுலக நெறியேறக், கோலங் காட்டி" (திருவா.) "காண்பா ளொளியிருளிற் காட்டிடவும்" (திருவருட்பயன் - 63.); காண்பாரார் - காட்டாக்காலே - எதிர்மறையானும் உடன்பாட்டானும் கூறியதன்றி வினுவானும் கூறியது உறுதிப்பொருள் பயப்ப முடித்துக் காட்டியவாறு. இப்பாட்டில் ஏனையவற்றில் வரும் வினுவும் எதிர்மறையும் உறுதிப்பொருள் தந்தன.—(4) நற்பதத்தார் - ஞானிகள். அப்பால் நின்ற சொற்பதம் - வேதசிரம். விடுவேனல்லேன் - "சிக்கெனப் பிடித்தேன்" (திருவா.) நிற்பதொத்து நிலையிலா நெஞ்சம் - சிறிதும் ஒன்றில் தங்காது அலையும் மனம். உடலும் நிலவாதது; அதனுள் நெஞ்சமும் நிலையிலாதது; ஆயின் இதனுள் நீ புகுந்து நிலைபெற நின்றது வியப்பும் உன் அருட்பெருமையுமாம் என்றபடி. கற்பகமே என்றதும் இக்கருத்து.—(5) ஊருக்கு இன்றியமையாது வேண்டப்படுவன திருக்கோயில் - திருநீறு - தளிகள் - பத்திமையாற் பாடுதல் - சங்கம் ஊதுதல் - விதானமும் வெண்கொடியும் அமைத்தல் - மலர் பறித்து இட்டு உண்ணுதல் என்ற இவை என்பது.

இவை இல்லாதன ஊரல்ல என்று எதிர்மறையாற் கூறினார் உறுதிப்பொருள் தருதற்கு. ஊரல்லாவிடின் பின் அவை எவையோ? எனின், அவை மனிதர் வாழுமிடமாயினும் கொடு விலங்குகள் வாழும் அடவி காடே என்றார். ஊர் - இப்பாட்டில் ஊரில் வாழ்வாரை ஆகு பெயராற் குறித்தன. அடவி காடே - விலங்குகள் வாழும் காட்டை மக்கள் வாழுமிடமாக்க, அதை எறிந்து சுட்டுப் பண்படுத்துதல்போல, இத்தன்மைகள் இல்லா ஊர்களையும் ஊராரையும் உரிய கழுவாயுள் திருத்தும் பண்பு செய்ய வேண்டுமென்பது. அடவிகாடு என்பது சுடுகாட்டையும் குறிப்பாலுணர்த்தும். "திருநீறு இடாத நெற்றியைச் சுடு" என்பது முதலாக உபநிடதம் கூறும்; "நீறில்லா நெற்றி பாழ்" என்பது நீதி நூல். அருப்பு ஒடு மலர் - அரும்பின் தன்மை நீங்கி அலரும் பருவத்து மலர். பறித்து - பறித்தலை விதிப்படி தாமே செய்து. இடுதல் - அருச்சித்தல். முன் பறித்திட்டுப் பின் உண்ணுதலின் இன்றிமையாமையை வற்புறுத்துதற்கு "உண்பதன்முன் மலர் பறித்திட் டுண்ணாராகில்" என்று மேல்வரும் பாட்டிலும் கூறினார். இப்பாட்டிற் கூறும் நெறி நில்லார் என்னுவர் என்பதுணர்த்துதற் கெழுந்தது மேல்வரும் பாட்டு.—(6) திருநாமமாகிய ஐந்தெழுத்து என்க. ஒருகாலும் - நாளுக்கு ஒரு காலாகிலும். அருநோய்கள் கெட வெண்ணீறணிதல் - திருநீற்றுப் பதிகத்தினுளறிக. அளி - இங்கு உய்யும் வகை என்ற பொருள் குறித்தது.—(7) பூமிமேற் புகழ்தக்க பொருளே - முதற் பாட்டிலும் இப்பாட்டிலும் இறைவரைப் பொன் மணி எனக் கூறியதன் கருத்துக் காட்டியபடி.—(8) பிழைத்தனகள் - பன்மை விகுதிகள் இரண்டும், "அறியாமலேனு மறிந்தேனும் செய்து, செறிகின்ற தீவினைகள்" இரு வகை என்று குறித்தன. எத்தனையும்-எல்லாமும். எத்துணைக் கொடுமையாயினவையும். இத்தனையும் எம்பரமோ! - ஐயோ! - இறைவரது கருணைப் பெருக்கினையும் தமது தரத்தின் சிறுமையினையும் எண்ணி எண்ணி இரங்கியது. "நைந்துருகிப் பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும்" என்ற நிலைக்குக் காரணம் இவ்விரக்கப் பெருக்கு என்க.—(9) நடுவே - ஐயறிவிற் குறைந்த வுயிர்கட்கும் மக்களுக்கும் இடைப்பட்ட நிலையில். உருவத்தால் விலங்கல்லேன்; தன்மையால் விலங்கல்லா தொழிந்தே னல்லேன் - கொடிய விலங்கேயானேன். எதிர்மறைகள் தேற்றமும் உறுதியும் பயந்தன. இலம் - வறுமை. இலம் போல்லேன் - வறுமையாற் பொல்லாதேன். இரப்பதே யன்றி என்க.—(10) ஏகாந்தர் அல்லாராகில் மதிப்போமல்லோம். ஏகாந்தம் - அநேகாந்தத்துக்கு எதிரானது;மறுதலையான முடிவுடையது. ஏகாந்தரல்லாராகில்-நாம் சிவனுக்கடிமையே என்று ஒரு தலையாகத் துணிந் தன்பு செய்யாராகில். அன்பராகில்- கடவுளார் என்க. ஏகாந்தரல்லார் எமது உள்ளத்தில் கடையில் வரத் தக்கார்; அன்பர் முதலில் வரத் தக்கார் என்ற குறிப்புத் தர, அல்லாராகில் என்பதை வாக்கியத்தின் இறுதியிலும், அன்பர் என்பதை வாக்கிய முதலிலும், வைத்துக் கூறினார்.

தனித் திருத்தாண்டகம்

III திருச்சிற்றம்பலம்  தாண்டகம்

ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டா
ரதிகைவீ ரட்டான மாட்சி கொண்டார்
தாமரையோன் சிரமரிந்து கையிற் கொண்டார்
தலையதனிற் பலிகொண்டார் நிறைவாந் தன்மை
வாமனனார் மாகாயத் துதிரங் கொண்டார்
மானிடங்கொண் டார்வலங்கை மழுவாட் கொண்டார்
காமனையு முடல்கொண்டார் கண்ணு லேக்கிக்
கண்ணப்பர் பணியுங்கொள் கபாலி யாரே. 1

குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனை வாசகனுக் கொண்டார்
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றனெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங்கைக் கொண்டார் பயங்கள் பண்ணி
இராவணனென் றவனைப்பே ரியம்பக் கொண்டா
ரிடநறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டார், சூலை தீர்த் தடியேனை யாட்கொண்டாரே என்று பலவாறும் தம்மை இறைவர் ஆளாக்கிக் கொண்ட அருளைப் பாராட்டியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) ஆமயம் - பசுத்தன்மை. ஆணவமலத்தாற் கட்டுப்பட்ட உயிர்த்தன்மை. தலை - அவ்வாறு அரிந்துகொண்ட அந்தத் தலை. (அத்தலையின்) நிறைவாம் - என்று பின்னும் கூட்டியுரைக்க வைத்தார். "பிரமன் பெருந்தலை நிறைய தாகக், கருமன் செந்நீர் கபால நிறைத்தனை" (பெருந்தேவபாணி - 11-ம் திருமுறை). இடம் - இடது கை. மான் - உவம ஆகுபெயராய் மான் போன்ற உமாதேவியை உணர்த்துவதாகக் கொண்டு. இடம் - இடப்பாகம் என்றலுமாம். கண்ணுனோக்கி - காமனைக் கண்ணுனோக்கி உடல் கொண்டார் எனவும், கண்ணுனோக்கிக் கண்ணப்பர் பணிகொள் எனவும் முன்னும் பின்னுங்கூட்டி உரைக்க வைத்த இடைநிலைத் தீபம். கண்ணப்பரைக் கண்ணுனோக்கிப் பணி கொண்டமை "அங்கணர் கருணைகூர்ந்த வருட்டிரு நோக்க மெய்த" (753), "முன்பு திருக் காளத்தி முதல்வனு ரருணோக்கால்" (803) முதலிய திருவாக்குக்களாலறியப் படும். அடியேனை ஆளாக்கொண்டார் - இது இப்பதிகக் கருத்து. இப்பதிக முழுமையும் வரும் எல்லாப் பாட்டுக்களின் முடிபும் நோக்குக.—(2) மயங்க - சேர; துப்புரவு - தூய்மை. அழகு என்றலுமாம். அப்பலி - தாம் வேண்டி வந்த அந்த என்று முன்னறிசுட்டு.—(3) முடி - முடியாக. சூடும் பொருளாக; அடி கொண்டார் - அடித் தலைக் கொண்டதனால் ஆர்க்கின்ற; வடி - கூர்மை; "கங்காளந் தோண்மேலே காதலித்தான்" (திருவாசகம்). கங்காளம் எலும்புக்கூடு. ஊழியில் முடிந்த பிரம விட்டுணுக்களுடைய எலும்புகள். "கங்காள நாதர்". சூலை தீர்த்து - நாயனாரது சரிதக் குறிப்பு. சமண் தீர்த்து (5); உடலுறு நோய் தீர்த்து (6); வெந்துயரந் தீர்த்து (10); இடநறு நோய் தீர்த்து (11).—(4) பொக்கணம் - திருநீற்றுப்பை. அக்கு - எலும்புக் கோவை. உருத்திராக்கமுமாம். அடங்க - ஊழியில் தம்முள் ஒடுங்க; கோடியான் - சலந்தராசுரன். ஆழி - இதனைத் தவஞ்செய்து பின்னர்த் திருமால் பெற்றனர். செடியேன் - குற்றமுடையேன்.—(5) அந்தகன் - அந்தகாசுரன். சுந்தரன் - ஆலாலசுந்தரர். பின்னர் ஆளுடைய நம்பிகளாக அவதரிக்க உள்ளவர் என்ப. மாகாளன் வாசல் காப்பாக - துவாரபாலகர்களுள் ஒருவராக மாகாளர் என்பவர் அமர்த்தப்பட்டவர் என்பது ஆகமம். சிவபூசையில் துவாரபாலகர்களுள் வைத்து மாகாளர் பூசிக்கப்படுதல் காண்க. "நந்தி மாகாள ரென்பார் நடுவுடையார்க ணிற்க" (தேவா).—(6) பாரிடம் - பேயாகிய சிவகணம். பல கருவி - பலவகை இயங்கள்; பயில - முழக்க. பவள நிறம் - திருமேனி. பளிங்கு - "உச்சி முக மீசான மொளிதெளிய பளிங்கே" ஊரடங்க-ஊர்களெல்லாம் தம்மவாயிருக்க;—(7) கோடி - திருமறைக் காட்டினருகுக் கடற்கோடி. தென்கோடிக் கரையுமாம்.—

(8) வேதியன் - மார்க்கண்டர்; நெடுமுக்கு - துதிக்கை;—(9) இப்பாட்டுத் தக்க யாக அழிவுபற்றி இறைவரது வீரங்களை எடுத்துக் கூறுவது. எச்சன் - யாகதேவதை- யாகஞ்செய்வோன். பகன் - 12 சூரியர்களுள் ஒருவன்; இரவி - அவர்களுள் மற்று மொருவனாகிய பூஷன். "பகநேத்ரபிதே நம: பூஷதந்தபிதே நம:" சிவாஷ்டோத்திர சதம். வியாத்திரன் - தொழினடத்துவோன். மெச்சன் - விரும்பி வைக்கப் பட்டவனாகிய; அங்கி - தீக்கடவுள். அருளும்-அழித்ததனுடன் அருளும் என உம்மை இறந்தது தழுவியது. அருளாவது யாகத்தை அழித்தபின் அவ்வவர்க்கும் செய்த அருளிப் பாடுகள்.—(10) ஒருக்கி - தம்பால் ஒருமுகப்படுத்தி;—(11) அராவும் மதிய மும்; குடமுழ நந்தீசனை வாசகனாக் கொண்டார் - வாசகன் - மாணிக்கவாசகர். நந்தி பெருமான் பின்னர் மணிவாசகராக அவதரித்தார் என்ற வரலாறு குறித்தது.* திருந்த - முன்னர்க் கிழக்கு நோக்கியிருந்தவர் சோழனும் உலகமும் கண்டு திருந்தும் பொருட்டு மேற்கு நோக்கி என்பது. சிராமலைத் தலவரலாற்றுக் குறிப்பு. தென்றல் நெடுந்தேரோன் - மன்மதன். பொன்றக் கொண்டார் - முன்னர்ப் பொன்றவும் பின் னர் உயிர் பெறவும் வைத்தார். "முடிநெரிதர, விருவகை விரனிறுவியவர்" (வியாழக்குறி - இடைமருது - 8). பேர் இயம்பக் கொண்டார்; அதனோடு, அதன் பொருட்டுத் தமக்குக் கிடைத்த பிறவியாகிய இடரும் சூலை நோயும் என்ற நாயனாரது முன் வரலாற்றுக் குறிப்பும்பட நின்றது. கூற்றாயினவாறு என்ற பதிகப் பாட்டுத் குறிப்புப் பார்க்க. (பக் - அஎ).

போது - க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம்

IV திருச்சிற்றம்பலம் தாண்டகம்

தில்லைச்சிற் றம்பலமுஞ் செம்பொன் பள்ளி தேவன்குடி சிராப்பள்ளி தெங்கூர்
கொல்லிக் குளிரறப் பள்ளி கோவல் வீரட்டங் கோகரணங் கோடி காவும்
முல்லைப் புறவ முருகன் பூண்டி முளையூர் பழையாறை சத்தி முற்றங்
கல்லிற் றிகழ்சீரார் காளத்தியுங் கயிலாய நாதனையே காண லாமே. 1

ஆரூர்மூ லட்டான மானைக் காவு மாக்கூரிற் றுன்றோன்றி மாட மாவூர்
பேரூர் பிரமபுரம் பேரா வூரும் பெருந்துறை காம்பீலி பிடவூர் பேணுங்
கூரார் குறுக்கைவீ ரட்டா னமுங் கோட்டூர் குடமூக்குக் கோழம் பமுங்
காரார் கழுக்குன்றுங் கானப் பேருங் கயிலாய நாதனையே காண லாமே. 2

புலிவலம் புத்தூர் புகலூர் புன்கூர் புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர்
வலிவல மாற்பேறு வாய்மூர் வைகல் வலஞ்சுழி வாஞ்சிய மருகல் வன்னி [டூர்
நிலமலிநெய்த் தானத்தோ டெத்தா னத்து நிலவுபெருங் கோயில்பல கண்டாற் றொண்
கலிவலி மிக்கோனைக் கால்விரலாற் செற்ற கயிலாய நாதனையே காண லாமே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—சிவபெருமான் வெளிப்பட எழுந்தருளியுள்ள தலங்களை வாழ்த்தியது. தலங்களை வாழ்த்துதலாவது அத்தலங்களின் கோயில்களையே சிவ னெனக்கண்டு வணங்குதல். "ஆலயந் தானு மரனெனத் தொழுமே" (சிவஞானபோதம் - 12 - சூத்). "எத்தானத்தும் நிலவுபல கோயில் கண்டால் - கயிலாய நாதனையே காணலாமே" என்று பதிகத்தை முடித்துக் காட்டியருளியது இக்கருத்து. "மன் றுறைவார் வாழ்பதிகள் வழுத்து திருத்தாண்டகமும்" என்று இப்பதிகக் கருத்தினை ஆசிரியர் காட்டியருளியதும் காண்க. "ஆலயந் தொழு" (ஔவை).

* இதனை மகாமகோபாத்யாயர் சாமிநாதையர் திருப்பெருந்துறைப் புராண முகவுரையில் எடுத்துக் குறித்திருக்கின்றனர்.

பதிகப்பாட்டுக் குறிப்பு - (1) கோல்லிக் குளிர் அறப்பள்ளி - "கொல்லியறப் பள்ளி" (அடைவு - தாண பார்க்க). "கொல்லியான் குளிர்தூங்கு குற்றாலத்தான்" (தேவா.) (சேலம் - நாமக்கல் தாலூகா). "குடக்கொல்லி" (ஏகம்ப - அந். 57. முல்லைப் புறவம் முருகன் பூண்டி - முல்லைத் திணை நிலத்தின் புறவத்து உள்ளது என்பது. முல்லை - தலவிசேடத்துக்குரியது. "முல்லைத்தாது மணங்கமழ் முருகன் பூண்டி" (நம்பி - தேவா). முளையூர் - தேவார வைப்புத்தலம். திருச்சத்தி முற்றத்திலிருந்து பழையாறைக்குப் போகும் இடையில் உள்ளது. இப்பதிகத்துள் வைப்புத் தலங்கள் பலவும் வருகின்றன. கல்லில் - மலைகளுள்ளே. கல் - மலைக்கு வந்தது; ஆகுபெயர்.—(2) பேநூர் - கொங்கு நாட்டு வைப்புத்தலம். பேராவூர்- வைப்பு. பெருந்துறை-மணிவாசகர்க் கருள்புரிந்த தலமாகிய திருப்பெருந்துறை என்று கருதப்படும். காம்பீலி - வைப்பு. நேச நாயனாரது தலம். பிடவூர்-திருச்சியிலிருந்து துறையூர் போகும் வழியில் 10 நாழிகையளவில் உள்ளது. சாத்தனார் தலம் சிறப்பு. (வெள் - சருக்கம் - 52).—(3) ஏர் - வைப்புத்தலம். கும்பகோணத்துக்கு வடக்கில் 2 நாழிகையில் உள்ளது. ஏரகரம் - ஏராரம்-ஏராவரம் என மருவி வழங்கும். "ஏராகிய மும்முடிச் சோழ மங்கலம்" என்பது கல்வெட்டுக்களிற் கண்டது. இடவை - இதுவும் வைப்புத்தலமென்று கருதப்படும். ஏமப்பேறூர் - நமிநந்தியடிகளுயனாரது தலம். தேவார வைப்பு. சடைமுடி - சாலைக்குடி - தக்களூர் - கோட்டுக்காடு என்பவையும் இவ் வாறே; தக்களூர் - திருநள்ளாற்றுக்கு அணிமையில் உள்ளது. கோத்திட்டை - திருப் பரங்குன்றம். (கோ - பரம். திட்டை - மேடு; மலை).—(4) எச்சில் - இளமர்-ஏமநல்லூர்- இறையான்சேரி - அளப்பூர் - இவை தேவார வைப்புத் தலங்கள். (எச்சிலிளமர் - மணச்ச நல்லூர் என்பாருமுண்டு). அளப்பூர் - தரங்கம்பாடி என்பர். கச்சிப் பலதளி - காஞ்சிபுரத்தில் உள்ள கச்சபாலயம் முதலிய பல கோயில்கள்.—(5) கொடுங்கோளூர் - அஞ்சைக்களம் - கொடுங்கோளூர் - சேரர் தலைநகரம். சேரமான் பெருமாள் அரசாண்ட தலைநகரம். தேவார வைப்புத் தலம். இப்போது பகவதி கோயில் விளக்கம். செங்குன்றூர் - விறன்மிண்ட நாயனாரது தலம். பக் - கூஉ - தலச்சிறப்புப் பார்க்க. மலைநாட்டுப்பதி. கொங்கணம்-நியமநல்லூர் - தேவார வைப் புத் தலங்கள். எழூர் - எழும்பூர் (Egmore) என்ப. ஏழூர் - தோழூர் - இவையும் வைப்பு. ஏழூர் - கொங்கு நாட்டில் திருச்செங்கோட்டினின்றும் வட கிழக்கில் 15 நாழிகையில் உள்ளது. தோழூர் - (கொங்கு நாடு) நாமக்கல்லினின்றும் மோகனூர் வழியில் 6 நாழிகையில் உள்ளது. ஏமகூடம் - கதிர்காமம் என்ப. கடம்பை இளங் கோயில் - கடம்பூர்த் தலத்தில் உள்ள தனிக்கோயில்.—(6) மந்தாரம் - வைப்பு. வாரணசி - காசி; இதுவும் வைப்பு. விளத்தொட்டி - விராடபுரம் - திருச்சி - பெரம் பலூர் தாலுகாவில் உள்ளது. பிரம்பில் - (திருச்சி) பிரம்பலூர். கண்ணை - களர்க் காறை - இவையும் வைப்பு.—(7) வேங்கூர் - வைப்பு. "வேங்கூருறைவாய்" - (நம்பி - ஊர்த்தொகை).—(8) உஞ்சேனைமாகாளம் - உருத்திரகோடி - திருக்கழுக்குன்றத்தி னருகில் உள்ளது. தஞ்சை (தளிக்குளம்?) - சிவகங்கைக் குளத்தினடுவுள்ள கோயில். பொதியின் மலை - மாதானம் - வேதீச்சரம் - வீவிசுரம் - வெற்றியூர் - கஞ்சாறு - பஞ்சாக்கை - இவை வைப்புத் தலங்கள். தஞ்சை - தளிக்குளம். கஞ்சாறு - மானக்கஞ்சாற நாயனாரது தலம்; தலவிசேடம் பார்க்க. திண்டீச்சுரம் - திண்டுக்கல் என்றும் திண்டிவனம் என்றும் வழங்குவதாய் மகா மகோபாத்தியாயர் உ. வே. சாமி நாதய்யர் அவர்கள் கூறுவர்.—(9) திண்டீச்சுரம் - கூந்தலூர் - கூழையூர் - குமரி கொங்கு - இவை வைப்புத் தலங்கள். குமரி கொங்கு - கொங்கு நாட்டில் காவிரியின் பல துறைகளுள் குமரித்துறை என வழங்கும் தலம். நாமக்கல்லினின்றும் 16

நாழிகையளவில் உள்ள மோகனூர் என்ப. சுவாமி குமரீசுவரர். "கொங்கு தண் குமரித் துறை யாடிலென்" (குறுந்). குமரி - தென்குமரி என்பாருமுண்டு. அண்டர் தொழும்- தேவர்களைக்காக்கத் திரிபுர மெரித்த வீரம் நிகழ்ந்த தலமாதல் குறிப்பு. அசோகந்தி - வைப்பு.—(10) சூலமங்கை - பசுபதி கோயில் என்னும் நிலயத்தின் அருகாமையில் சூலமங்கலம். சோமீச்சரம் - வடநாட்டில் சோமீசம் என்றும், குடந்தைச் சோமீச் சரம் என்றும் கருதுவர் (திருப்புகழ்). ஊற்றத்தூர் - கறையூர் - (மீனாட்சிசுந்தரம் பிள்ளை - ஊற்றத்தூர்-பதிற்று - அந்தாதி) திருச்சியின் வடக்குப் பிரம்பலூர் தாலுக்கா. ஊட்டத்தூர் என வழங்கும். இவை வைப்பு. கறையூர் - பாண்டிக்கொடுமுடி என் பாருமுண்டு.—(11) புலிவலம் - (திருச்சி - முசிரி தாலூகா, பொய்கை நல்லூர் - இவை வைப்பு. வன்னி - வன்னியூர். கோயில் பல கண்டாற் - கயிலாய நாதனையே காணலாமே - இக்கருத்தால் இறைவரது எங்கும் நிறைந்த தன்மை போற்றப்பட்டது.

குறைந்த திருநேரிசை

V-1. திருச்சிற்றம்பலம்  நேரிசை

வென்றிலேன் புலன்க ளைந்தும் வென்றவர் வளாகந் தன்னுட்
சென்றிலே னாத லாலே செந்நெறி யதற்குச் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றே னீசனே யீச னேயோ!
இன்றுளே னாளை யில்லே னென்செய்வான் றோன்றி னேனே. 1

பேச்சொடு பேச்சுக் கெல்லாம் பிறர்தமைப் புறமே பேசக்
கூச்சிலே னாத லாலே கொடுமையை விடுமா றோரேன்
நாச்சொலி நாளு மூர்த்தி நன்மையை யுணர மாட்டேன்
ஏச்சுளே நின்று மெய்யே யென்செய்வான் றோன்றி னேனே! 6

திருச்சிற்றம்பலம்

குறைந்த திருநேரிசை

2. திருச்சிற்றம்பலம்  நேரிசை

தம்மானங் காப்பதாகித் தையலார் வலையு ளாழ்ந்து
அம்மானை யமுதன் றன்னை யாதியை யந்த மாய
செம்மான வொளிகொண் மேனிச் சிந்தையு ளொன்றி நின்ற
எம்மானை நினைய மாட்டே னென்செய்வான் றோன்றி னேனே! 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—இந்த இரண்டுபதிகங்களும் "ஏழையேன் என்செய்வான் தோன்றி னேனே" என்ற கருத்துக் கொண்டு முடிதலின் இப்பெயர் பெற்றன. குறைந்த என்பதற்கு குறைந்தடைந்த என்று ஆசிரியர் பொருள் விரித்தனர். குறைந் தடைதலாவது தன் குறைபாட்டினை நினைந்து உருகிப்பணிந்து நிற்றல். தம் குறை கூறி அடைகின்ற தன்மை.

V-1. பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) வளாகம் - இருக்கும் இடத்தின் அணிமை யாகிய சுற்று; வளைக்கப்படுவது. ஆதலாலே - ஐம்புலன் வெல்வதும், அது தன்னாற் கூடாதபோது வென்றவர்பாற் செல்வதும் என்ற இரண்டுமே செந்நெறிக்குக் காரண மாவன என்பது. துளும்புதல் - அகலப்படுதல். இன்றுளேன் நாளையில்லேன் - நிலை யாமை குறித்தது.—(2) ஆதலாலே - முன்பாட்டிற்போல,உணர்வுடைமைக்குத் தான் கற்றலும், அது கூடாதபோது கற்றவரோடு உறுதலுமே காரணமாம் என்பது.

பேதைமார் தமக்கும் போல்லேன் - ஞான நெறியிற் சேறலால் பேதைமார்க்குப் பொல்லேன். தமக்கும் - உறைப்பின்மையால் ஞான நெறியிற் பிழைத்ததும் அன்றி என உம்மை இறந்தது தழுவியது. இளையனுமல்லேன் (9) என்பதும், வரும்பதிகத்துள் "மடந்தைமார் தமக்கும் போல்லேன்" (3) என்பதும் இக்கருத்து.—(3) பாட்டினுய் போல ? பாடு - பெருமை; அஃதில்லாத நாய்போல. எதுகை நோக்கிப் பாட்டு என நின்றது. பின், "நாயினுங் கடைப்பட் டேனை" என்பது காண்க.—(4) உரைக்கடந்து - உரையின் மட்டிலடங்காது மேற்சென்று, "ஓதற் கரியவன்", "உரை யுணர்விறந்து நின்று". இரைக் கடைந்து - முதலை போன்ற ஐம்புலன்களுக்கு இரையாக அடைந்து. இன்ப வாழ்க்கைக்கும் இரைக்கும் எனவும் கொள்ளலாம்; இன்பம் - பொருந்தலின்பம். இரை - பேருண்டி. "கழிபே ரிறையான்க ணோய்" (குறள்). உருகுதல்-ஆழ்ந்துபடுதல்.—(5) செம்மை - செந்நெறி தரும். அம்மை நின்று - அத்தன்மையுள் நின்று. முடிவில் வாழ்க்கைக்கு - நலத்தில் முற்றுமாறு செல்லாக் குறையுடைய பொக்க வாழ்க்கையின் கண்; உருபு மயக்கம். ஆதலாலே - காரணம் உணர்த்திற்று.—(6) பேச்சோடு......கூச்சிலேன் - உலகர், தம் குற்றம் ஓராது, பிறர் குற்றமே தெரிந்து புறம் பேசும் இயல்பு குறித்தது. ஆதலாலே - கொடுமையை விடாமைக்குக் காரணங் கூறிற்று. நாச்சோலி - நாவினால் வாழ்த்தி.—(7) தேசனைத் தேசமாதும் திருமால் - விசுவம் நாராயணன் எனவும், விசுவநாதன் சிவன் எனவும் கூறும் வேதக் கருத்து. பூசன் - பூஜ்யன் என்றது பூசன் என நின்றது. பூசனைப் புனிதன் - பூசிக்கத்தக்க புனிதன்; பூசனை-பூசை என்றலுமாம். நிவஞ்சகம் - பொய்மை.—(8) விளைக்கின்ற வினையை நோக்கி - மேலும் முளைக்கின்ற வினையைப் போக - முன் செய்த வினை காரணமாக வரும் இத்துன்பங்களைக் கண்டபின்பேனும், இனிவரும் வினைகளுக்கு இடந்தரா தொழிதலின்றி; முன் வினைப் பயனைக்கண்டு வைத்தும் மேல்வினை செய்தலை ஒழியாது. விளைவறிவு (9) என்று மேற்கூறுவதுமிது. வெண்மயிர் விரவி - மூப்புக் குறித்தது. இத்தனை காலம் கண்டும் என்பது குறிப்பு. வெள்ளம் - கங்கை. இருமி ஊன்றி - வெண்மயிர் விரவி என்ற மூப்பின் பின்வரும் பிணியைக் குறித்தது. நாயனாது கழிபெரு மூப்புப் பருவக் குறிப்புமாம். இளையனு மல்லேன் என்ற மேல்வரும் பாட்டுக் குறிப்பும் காண்க.—(9) விளை வறிவு - இத்துன்ப விளைவு முன்செய்த அக்கன்மத்தின் விளைவு என்ற அறிவு. களைகண் - பற்றுக்கோடு. காமரம் - இசை. சீகாமரம்; பண் குறித்தது.—(10) வெட்டன - வெடு வெடுத்த சொற்கள். "வெட்டெனப் பேசன்மின்" (நம்பி - தேவா). எட்டனர் - எண் குணத்தான். அணிமையில் உள்ளவன் என்ற குறிப்புமாம்.

V - 2. (1) தம் மானம்—தமது பெருமையாகிய செருக்கு. காப்பு அது ஆகி - அதனையே தனக்குக் காவலாகக் கொண்டு. இறைவரது நீதியாகிய காவலை வேண்டாராகி என்பது. செம்மான ஒளி - செவ்வான ஒளி.—(2) கோப்புள் - நீர்க்குமிழி. களேபரம் - உடம்பு.—(3) கூழையேன் - தொண்டர்கள் பின் செல்பவன். கூழை - அணி வகுப்பில் பின்னிடம். "கடைக் கூழைச் சென்மின்கள்" (படை யெழுச்சி - திருவா).—(5) காமரம் - சீகாமரம்; சிவனுடைய இசைப்பாட்டு. அல்லேன் - மேல் போல்லேன் (3) என்ற கருத்து. இறை - சிறிதுபோது.—(10) தளைத்து வைத்து - அகப்படுத்தி. உலையை...ஆமை - போல - பழமொழி. அடுப்பின்மேல் வைத்து எரிமூட்டி ஏற்றிய பாண்டத்துள் நீரில் விளையாடும் ஆமை போல என்பது துன்பங்களுக்குள் நின்றும் உணர்வில்லாமை குறித்து. இளைத்து - அழி சுகங்களுக்கு எளியனாய் அடிமைப்பட்டு.

போது - தனித் திருநேரிசை

VI - 1. *திருச்சிற்றம்பலம்*

தொண்டனேன் பட்ட தென்னே? தூயகா விரியி னன்னீர்
கொண்டிருக் கோதி யாட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி
யிண்டைகொண் டேற நோக்கி யீசனை யெம்பி ரானைக்
கண்டனைக் கண்டி ராதே *காலத்தைக் கழித்த வாறே.* 1

உடம்பெனு மனைய கத்துள் ளுள்ளமே தகளி யாக
மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
யிடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து நோக்கிற்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே. 4

*அங்கத்தை மண்ணுக் காக்கி யார்வத்தை யுனக்கே தந்து*
*பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்*
*சங்கொத்த மேனிச் செல்வா* சாதநா ளுயே னுன்னை
யெங்குற்றா யென்ற போதா லிங்குற்றே னென்கண் டாயே. 8

*பெருவிர லிறைதா ளூன்றப் பிறையெயி றிலங்க வங்காந்*
*தருவரை யனைய தோளா னரக்கனன் றலறி வீழ்ந்தான்;*
இருவரு *மொருவ னுய வுருவமங் குடைய வள்ளல்*
திருவடி சுமந்து கொண்டு காண்கநான் றிரியு மாறே. 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—VI - 1, 2, 3 *பதிகங்களி னிறுதியிற் காண்க.*

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) *இப்பாட்டு நாயனுர் செய்த ஆன்மார்த்த சிவ பூசையின் திட்பநுட்பங்களை அறிவிக்கின்ற அருமையும் பெருமையு முடையது.* இருக்கு - *வேதமந்திரங்கள். சிவாகம தீக்கையுடையோருக்கு வேதமந்திராதிகாரம் உண்டென்பதறியப்படும்.* இருக்கு - *மந்திரப் பொருளை யுணர்த்திய தென்றலுமாம்.* ஏறநோக்கி - "*குறிப்பறி முருகன்*" (*பிள் - தேவா*). 1026-*ம் பார்க்க.* கண்டன் - *பாசத்தைத் துண்டிப்பவன்.* கண்டு - *அகத்தும் புறத்தும் ஒரு தன்மையாகக் கண்டு.* இராதே - *அவ்வனுபவத்தில் அழுந்தியிராமல்.*—(2) பின்னிலேன் முன்னிலேன் - *பிற்றைக்கு வேண்டப்படும் நற்செயலும், இதன் முன்காரணமாய் நிற்கும் நற்செயலும்* இல்லாதவன். சில்நிலா - *இளங்கதிர்.*—(3) சிரிப்பின் *காரணம், கள்ளமாய்ப் புறம்பு தரித்த தொண்டர் வேடத்துள் உடனே நின்று அரன் அறிவானே என்ற உணர்வு வருதல். "உள்குவா ருள்கிற்றை, யுள்ளத்தாற் காணுறு வுற்று"* (11 சூத்). *என்று சொற்பொரு ளெடுத்தாளப்பட்டது காண்க.*—(4) *தியானத்தின் தன்மை விளக்கின் உருவகத்தினுல் விளக்கப்பட்டது.* உடம்பு - வீடு; உள்ளம் - *தகளி - அகல்;* உணர்(வு) - *நெய்;* உயிர் - *திரி;* ஞானம் - தீ. மடம்படும் உணர் - *சிந்தனை ஞானம்.* உயிர் - *ஆன்மா.* திரி மயக்குதல் - *திரியை முறுக்கி நெய் நின்றெரியத்தக்க இடமாக்குதல்.* மயக்குதல் - *சேர்த்தல்; கலத்தல்.* இடம்படும் ஞானத்தீ - *நிறைவாகிய இறைஞானம்.*—(5) வஞ்சப் பெண் (1) - *தூர்க்கை?* திருமால்? வஞ்சப் பெண், *எனையவை நாயகனை வஞ்சித் தொழுகும் பெண்?* திரோதான சக்தி? "*கள்ளக் காதல னிடத்தன்பு கலந்துவைத் தொழுகும், உள்ளக் காரிகை மடந்தை*" (*திருவிளை - வாதவூ*).—(6) "இருதலை *மின்னுகின்ற கொள்ளிமேல் எறும்பு" பழமொழி.* "இருதலைக் *கொள்ளியி னுள்ளெறும் பொத்து நினைப்பிரிந்த*

விரிதலையேன்" (திருவா - நீத் - 9) "செஞ்சடை முக்கண னர்க்கன்றி யிங்குமன்றிக் கிடங்கினிற் பட்ட கராவனை யார்பலர் கேவலரே" (பொன்வண் - அந் - 64). இந்நிலை- இவ்வுலகப் பற்றிலும் முற்றிலும் தோய்ந்துபடாது, இறைவனையும் முற்றும் பற்றாது நிற்கும் நிலை. இருவழியும் சுடுதலின் கொள்ளி என்றார்.—(7) மோத்தை...காக்கை - பழமொழி. மோத்தை - ஆட்டுக்கடா. காக்கை ஆட்டின் தசை தின்ன மொய்த்தல் போல மாயப் பவக்கடலை அரித்துத் தின்ன வினைகள் மொய்க்கின்றன.சீத்தை-அழுகிய பண்டம். சிதம்பு - அழிவுடையது. ஊத்தை - முடைநாற்ற முடையது; அழுக்கு; இவை உடலினிழிவு குறித்தன.—(8) நாயனாரது உள்ளக் கிடையாகிய பிரார்த்தனை குறித்தது.—(9) அகப்பொருட்சுவை படநின்ற கருத்து. வெள்ளரோம் - கள்ள ருக்கு மறுதலை. வெள்ளத்தை உடையவர் என்ற குறிப்பும் காண்க. "கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில், வெள்ள வெளியாமென் றுந்தீபற" (திருவுந்தி).—(10) அடி மைத் திறத்தின் வீறு தோன்ற நகைச்சுவையும் பெருமிதமும்படக் கூறிய கருத்து. ஒரு சிறு விரலூன்றத் தாங்கமாட்டாது வலிய அரக்கன் அலறிடவும், எளிய அடிமை அவரது திருவடி யிரண்டும் சுமந்து திரிகின்ற வலிமைதான் என்னே !; நான் - வரை போன்ற தோளும் வலிமையுமுடைய அரக்கன்போ லன்றி எளிமையுடைய நான்.

போது - தனித் திருநேரிசை

VI - 2. திருச்சிற்றம்பலம்

மருளவா மனத்த னாகி மயங்கினேன் மதியி லாதேன்
இருளவா வறுக்கு மெந்தை யிணையடி நீழ லென்னும்
அருளவாப் பெறுத லின்றி யஞ்சினா னலமந் தேற்குப்
பொருளவாத் தந்த வாறே போதுபோய்ப் புலர்ந்த தன்றே. 1

மெய்ம்மையா முழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப் பாய்ச்சித்
தம்மையு நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையு ணிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே. 2

காயமே கோயி லாகக் கடிமன மடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை யீச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே. 4

நடுவிலாக் காலன் வந்து நணுகும்போ தறிய வொண்ணா
அடுவன வஞ்சு பூத மவைதமக் காற்ற லாகேன்
படுவன பலவுங் குற்றம் பாங்கிலா மனிதர் வாழ்க்கை ;
கெடுவதிப் பிறவி சீ ! சீ ! கிளரொளிச் சடையி னீரே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) மருள் அவா - பொய்யை மெய் என்ற மருளி னால் வரும் அவா. "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும் மருள்" (குறள்). பொருள் அவா - மெய்ப் பொருளின்கண் விருப்பம். போது போய்ப் புலர்ந்தது - கெடுங்காலத்துக்கு விடிவு வந்தது.—(2) இப்பாட்டு உழவுபற்றிய உருவகம். சிவகதி யாகிய விளைவுக்கு உபாயங்கூறியது.—(3) கரக்கும் - அடக்கித் தோன்றாதபடி செய் யும்.—(4) இப்பாட்டு அகப்பூசை அருச்சனை வழிபாட்டுமுறை கூறிற்று. கடிமனம் - தூய அந்தக்கரணம். மனம் அணி இலிங்கம் - மனம் - ஆன்மா; இறைவன் எழுந்

தருளியிருக்கும் இடமாக - திருமேனியாகக் - கொண்டு.—(6) ஆயிரம்...அமுதன் - நஞ்சுடைய பெரும் பாம்புகள் பலவும் மேற் பூண்டும் (நஞ்சுண்டும்) தனது அமுதத் தன்மையால் சாவாதிருக்கும் தன்மை வாய்ந்தவன். ஆயிரம் - அனேகம். நோய் - மல வாசனைகள்.—(7) விள்ள - சொல்ல. வள்ளம் - வாயகன்ற பெரும் பாண்டமாகிய அளவு. உள்ளம் - மனம். உயிர்ப்பு - பிராணவாயுத் தொழில். "என்னுளே யுயிர்ப் பாய்ப் புறம்போந்து புக்கு" (தேவா). கள்ளத்தே - மறைந்தபடி ; ஒளிந்து. "உள் ளங்கவர் கள்வன்" (தேவா). "ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்" (திருவா).—(8) அங்கு - இங்கு - இறைவன் றிருவடியும் உலகமும். "அங்கு மிங்கு மாகி யல மருவோர்" (சித். சூத். 8 - 39). "ஈசனே நீயல்ல தில்லை யிங்கு மங்கும்" (திருவா).—(9) புறப்பட்டு - வெளிப்பட்டு விலகி.—(10) நடு - கண்ணோட்டம். "தரியா னொருகணந் தறுக ணாளன்"—(10) படுவன...சீ! சீ! - மனித வாழ்க்கையின் இழிவு நோக்கி யிரங்கியது.

பொது - தனித் திருநேரிசை

VI - 3. திருச்சிற்றம்பலம்

கடும்பக னட்ட மாடிக் கையிலோர் கபால மேந்தி
யிடும்பலிக் கில்லந் தோறு முழிதரு மிறைவ னீரே
நெடும்பொறை மலையர் பாவை நேரிழை நெறிமென் கூந்தற்
கொடுங்குழை புகுந்த வன்றுங் கோவண மரைய தேயோ. 1

கோவண முடுத்த வாறுங் கோளர வசைத்த வாறுந்
தீவணச் சாம்பற் பூசித் திருவுரு விருந்த வாறும்
பூவணக் கிழவ னாரைப் புலியுரி யரையி னாரை
யேவணச் சிலையி னாரை யாவரே யெழுது வாரே. 2

விளக்கினூர் பெற்ற வின்ப மெழுக்கினாற் பதிற்றி யாகும்;
துளக்கினன் மலர்தொ டுத்தாற் றூயவிண் ணேற லாகும்;
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்;
அளப்பில கீதஞ் சொன்னூர்க் கடிகடா மருளு மாறே. 3

சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாம வேதி
யந்தரத் தமரர் பெம்மா னனல்வெள் ளூர்தி யான்றன்
மந்திர நமச்சி வாய வாகநீ றணியப் பெற்றால்
வெந்தறும் வினையு நோயும் வெவ்வழல் விறகிட் டன்றே. 4

புள்ளுவ ரைவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளைய வொட்டார்
முள்ளுடை யவர்க டம்மை முக்கணான் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங் குணர்வினு லெய்ய லாமே. 1

உய்த்தகா லுதயத் தும்ப ருமையவ ணடுக்கந் தீர
வைத்தகா லரக்க னேதன் வான்முடி தனக்கு நொந்தான்;
மொய்த்தகான் முகிழ்வெண் டிங்கள் மூர்த்தியென் னுச்சி தன்மேல்
வைத்தகால் வருந்து மென்று வாடினா னொடுங்கி னேனே. 10

திருச்சிற்றம்பலம்

VI-1, 2, 3 பதிகக் குறிப்பு :—இத்திருப்பதிகங்கள் சிவானந்தானுபவ உண்மை தள் தனித்தனி நேர்வன பலவற்றையும் கூறுவன. ஒரு தலத்தையேனும், ஒரு ஈற்றடி

முடிபையேனும், ஒரு கருத்து முடிபையேனும் பற்றாது பலவாறும் எழும் அரிய அனுபவநிலைக் கருத்துக்களைப் பதிகமாக ஆக்கி அருளப்பட்டன. இவ்வாறு வரும் தனித்திருக்குறுந்தொகை, தனித் திருவிருத்தம், தனித் திருத்தாண்டகங்கள் பார்க்க. இவ்வாறுள்ள தனிப் பதிகங்கள் நாயனாரது திருவுள்ளத்தில் அழுந்தி அவ்வப்போது மேற்பொங்கி வழியும் ஞான ஊற்றுக்களாதலின் மிகப் பயின்று அழுந்தி யறிந்து அனுபவிக்கத்தக்கன.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) இப்பாட்டு இறைவரை, அடிமைத் திறத்தின் அமைதியினுட்பட்டே நகைச்சுவைபடப் போற்றியதும் சத்தியைப் போற்றுவது மாகிய கருத்து. புதுந்த அன்று - சத்தியோடு வெளிப்படநின்ற அன்று. திருமணம் புணர்ந்த ஞான்று.—(2) முன் பாட்டைத் தொடர்ந்துகொண்டு பாராட்டிய கருத்து. ஏவணச் சிலையினானை யாவரே யெழுதுவாரே - "ஏவணச் சிலையி னானை யார் தொடர்ந் தெட்ட வல்லார்?" (190) என ஆசிரியர் இதனை எடுத்தாண்டனர்.—(3) இப்பாட்டினால் திருவலகு, திருமெழுக்கு, திருமாலை, திருவிளக்கு, திருப்பாட்டு எனபனவாதி சரியை நெறிகளின் பலன் எடுத்துக்காட்டி வற்புறுத்தப்பட்டது. விளக்கினார் - திருவலகிட்டுத் திருமுற்றத்தை விளக்கினவர். விளக்கிட்டார்......ஞானம் - திருவிளக்குத் திருப்பணி செய்து பேறடைந்த நமிநந்தியடிகள் "திருவாரூர் மன்னர் பாத நீழல்மிகுவளர்பொற் சோதி மன்னினார்" (ஷெ புரா - 32) என்ற குறிப்புக் காண்க. கீதம் - வேதப் பொருள்களை அடக்கிச் சிவன் புகழ்களைப் பாடி முழக்கும் இசைப் பாட்டு. "வேதவொலி...கீதவொலி யறுத்தில்லை" (237); "கீதத்தை மிகப்பாடு மடியார்கள்", "பண்ணொன்ற விசைபாடு மடியார்கள்" (பிள் - தேவா - புள் - வேளூர்).—(4) மந்திர...நீறணிய - திருவைந் தெழுத்தாகிய மந்திரத்தை விதிப் படி எண்ணித் திருநீறிடுதல் வேண்டும். பெற்றல் - பெறுதலின் அருமை குறித்தது. வினையும் நோயும் - வினையும் அது காரணமாக வரும் நோயும். விறகிட்டன்றே - விறகில் அழல்புக்கது போன்றதாகும். "விண்ணுற வடுக்கிய" என்ற நாயனாரது நமச்சி வாயப் பதிகப் பாட்டுப் பார்க்க.—(6) ஐம்புலன்களை வேடர்களாக்கி முற்றுருவகப் படுத்தியமைந்த பாட்டு. புள்ளுவர் - வேடர்.—(6) பிண்டம் - உடல்.—(7) பன்றி போல்-சேற்றில் உழன்று மலம் உண்ணும் தன்மையாற்போந்த உவமம். வினைபற்றி வந்த உவமம். பின்னிரண்டடிகள் மக்கள் அபிமானம் செய்யும் யாக்கையினிழிபு கூறின.—(10) திருவடிபட அரக்கனும் (இராவணன்) வருந்தினான்; நானும் வருந்தி னேன். அவன் தன் தலை நொந்தமைக்கு வருந்தினான். நான் என் தலையில் வைத்த மையால் திருவடி நோகுமே என்று திருவடிக்கு வருந்தினேன். திருவடி தீக்கை பெற்ற அருமையைப் பாராட்டியது. மோய்த்தகால் - கால் - கதிர்.

போது - ஆருயிர்த் திருவிருத்தம்

VII திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

எட்டாந் திசைக்கும் மிருதிசைக் கும்மிறை வா! முறை!யென்
றிட்டா ரமரர்வெம் பூச லெனக்கேட் டெரிவிழியா
லொட்டாக் கயவர் திரிபுர மூன்றையு மோரம்பினா
லட்டா னடிநிழற் கீழதன் றேவென்ற னாருயிரே. 1

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—புரமூன்றும் அட்டான் - மூவான் - இளகான் - இமையாத முக்கட் பெரியான். பெரியார் பிறப்பறுப்பான் - என்றுந் தன்பிறப்பை அரியான்-

உலகேழும் விளங்க விழுமிய நூலாய்ந்தான் - என்றிவை முதலிய தன்மைகளாலறியப் படும் சிவபெருமானது திருவடிக் கீழதன்றோ என்றனுருயிர் ?.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) எட்டாம் திசை - நேர்திசை நான்கும், கோணத் திசை நான்கும்; இருதிசை - மேல் - கீழ். "இறைவா ! வெம்பூசல் !" என்று அமரர் முறையிட்டார் என்று கூட்டுக. எரி விழியா - எரி மூள விழித்து. என் ஆருயிர் அடிக்கீழது அன்றோ ? என்றது இனித் திருவடிக்கீழ் நிலைபெற்று இருப் பன் என்ற குறிப்பு.—(2) மூவான் - மூப்பதுமில்லை. இளகான் - இளமையாவது மில்லை. விண்ணு மற்றும் ஆவான் - விண் முதலிய புவனங்களைத் தனது மாயை என்னும் சத்தியினுற் படைப்பவன்.—(3) தரியா வெகுளியனாய் - பிறரால் தாங்க லாற்றாத வெகுளியை யுடையவனாகி. வேண்டுதல் வேண்டாமை யிலனாதலின் வெகுளி தரியாதவனாகி என்றலுமாம். பெரியார் - உலகை நீத்துத் தன்னையே பற்றிய ஞானிகள். என்றும் தன் பிறப்பை அரியான் - பிறப்பில்லாதவன்.—(4) பொடி - திருநீறு. அகலம் - மார்பு.—(5) கறுப்பு அழகாவுடையான் - விடத்தினால் மேவிய கறுப்புப் பிறரை விகாரப்படுத்தி விடும்; ஆனால் சிவனை அது அழகிய மணிகண்ட னாக அழகுபடுத்திற்று.—(6) வியன் உலகு ஏழும் விளங்க விழுமிய நூல் ஆய்ந் தான் - விழுமிய நூல் வேதம். அறமுதல் நான்கு. ஆய்ந்தான் - ஓதி அறிவித்த தான். உலகு உய்ய மறை சொன்னான். "மறையாதி நூலையும் வகுத்து" (தாயு மானார்).—(7) செறுநற் கரியான் - பிரமன்.—(8) முன்னாள் எதிலராற் சூழப்பட்டுத் துன்பப் படுத்தப்பட்டமைபோல் இன்னும் முடிவேந்த ராணையுட்பட்டுத் துன்பமுற நேரும் என்றஞ்சியோ என் உயிர் ஒளியானடிச் சேர்ந்தது ? அன்று-என்பது கருத்து. நாயனாரது சரிதக் குறிப்புப் போலும். முந்தி வட்டம் - முன்னைச் சூழல். பந்தி வட்டம் - சேனை முதலியவற்றினால் வளைத்துக் கொள்ளப்படுதல். நந்தி வட்டம் - மலர். அந்தி வட்டத்து ஒளி - செவ்வான ஒளி.

போது - தசபுராணத் திருப்பதிகம்

VIII　திருச்சிற்றம்பலம்　　　பண் - பழம் பஞ்சுரம்

பருவரை யொன்று சுற்றி யரவங்கை விட்ட விமையோ ரிரிந்து பயமாய்த்
திருநெடு மானி றத்தை யடுவான் விசும்பு சுடுவா னெழுந்து விசைபோய்ப்
பெருகிட மற்றி தற்கோர் பிதிகார மொன்றை யருளாய் பிரானே யெனலும்
அருள்கொடு மாவி டத்தை யெரியாம லுண்ட வவனண்ட ரண்ட ரரசே.

"கடுகிய தேர்செ லாது ; கயிலாய மீது கருதேலுன் வீர ; மொழிநீ ;
முடுகுவ தன்று தன்ம" மெனநின்று பாகன் மொழிவானை நன்று முனியா
"விடுவிடு" வென்று சென்று விரைவுற் றரக்கன் வரையுற் றெடுக்க முடிதோள்
நெடுநெடு விற்று வீழ விரலுற்ற பாத நினைவுற்ற தென்றன் மனனே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—கடல் கடைந்த விடம் கண்டத்தில் அடக்கியவர், அழற் றூணாய் நின்றவர், தாரகனைச் சங்கரித்தவர், திரிபுரங்களை எரித்தவர், மார்க்கண்டருக் கருளியவர், தக்க யாக சங்காரம் செய்தவர், மன்மதனை எரித்தவர், மாலுக்குச் சக்க ரங் கொடுத்தவர் என்றிவ்வாறு தனித்தனி சிவமகா புராணங்களால் போற்றப்படு கின்ற பெருமானது பாதங்களே நமக்குப் புகலாவன.

குறிப்பு :—பதிகம் ஒவ்வொரு பாட்டினும் ஒவ்வொரு மாபுராணச் சரிதத்தை விரித்துப் போற்றுதலால் இது தசபுராணத் திருப்பதிகம் எனப்பட்டது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) இது சிவபெருமான் கடல் விடத்தைக் கண்டத் தடக்கித் தேவரைக் காத்த சரிதம் கூறுவது. பருவரை - மாமேரு. அரவம் - ஆதிசேடன்; மால் நிறத்தை அடுவான் - அஞ்ஞான்று வெள்ளை நிறத்துடன் இருந்த விட்டுணுவின் நிறம் கறுப்பாகுமாறு வெதுப்பும்படி. "கடல் கடைந்திடச் செல்லுறூஉம் வெள்ளைமால் கடுப்ப" (காஞ்சிப்புரா). பிதிகாரம்-மாற்றுப் பரிகாரம். எரியாமல் - வெறுக்காமல். அண்டர் அரசே - தேவதேவன். ஏகாரம் தேற்றத்தோடு பிரிநிலை. அவனே அரசு என்று கூட்டுக. இவ்வரலாறு எல்லா மாபுராணங்களாலும் பேசப்பட்டது.—(2) இது சிவபெருமான் பிரமவிட்டுணுக்களின் போரினிடை அவர்களறியாத வண்ணம் அழற்பெருந் தூணாய் அடிமுடிதேட நின்ற இலிங்கபுராண வரலாறு குறித்தது. இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை பார்க்க. பரமொரு தெய்வம்-தங்களுக்குப் பரமாகிய அப்பாற்பட்டவொரு கடவுள். நிரவொலி...தம்பம் - அழற்பெருந்தூணின் அளவு கடந்த பெருநிலை.—(3) இது கண்ணனுக்கு அருளிய வரலாறும், சிவன் எல்லாமாய் நிற்குநிலையும் குறித்தது. ஏக உருவாகி - முழுமுதல்வன் "ஒருரு வாயினை" (தேவா). மூவர் - அயன் - அரி - அரன். குறள் - வாமனன். ஆலிலைமேற் பாலன் - ஊழிவெள்ளத்தில் ஆலிலைமேற்கிடந்த திருமால். பரமாய - எட்டாத - அப்பாற்பட்ட.—(4) இது தாரகாசுர சங்கார வரலாறு குறித்தது. தாரகன் - தாரகாசுரன். கந்தபுராணத்தினுள் முருகப்பெருமானால் வதைக்கப்பட்ட தாரகன் வேறு.—(5) இது திரிபுர சங்கார வரலாறு குறித்தது. நிதனம் - நாசம்; அழிவு. அரணம் - காவிடம் - அபயம். அரவம் கைஞாண் - ஆதிசேடனாகிய (வில்) நாண். அனல்பாய - தீயாகிய அம்புசெல்ல. மலை சிலை - மேருமலையாகிய வில்.—(6) நீலநன்...எரிகேசன் - இயமன். இருண்டமேனியும், வளைந்த பற்களும், எரிபோன்ற மயிரும் உடையவன். எரிகேசன் - எரிபோன்ற சிவந்த மயிரையுடையவன். கேசம் - தலைமயிர். மாலை - பூமாலை. பாலன் - மார்க்கண்டேய முனிவர்; உயிர் வவ்வு பாசம் - கால பாசம்; காலன் - காலத்தை அளந்து வருபவன். தொழுதோது கழல் - சூடு கழல் என்று தனித்தனி கூட்டுக.—(7) இது தக்கயாக சங்கார வரலாறு குறித்தது. உயர்தவம் - தக்கன் முன் செய்த தவம். உயர்வேள்வி - வேதங்களின் விதித்தலால் வேள்விப் பொதுவின் உயர்ச்சி குறித்தது. கமி - பொறுக்க. க்ஷமி என்னும் வடமொழியின் திரிபு.—(8) இது ஒருகால் உலகிருணீங்க நெற்றிக் கண் விழித்த வரலாறு குறித்தது. மங்கை நங்கை - உமையம்மை. இருளோட - அம்மை ஒருகாலத்து விளையாட்டாக இறைவரது கண்களைக் கையினால் மூட அதனால் அக் கண்களாகிய சூரிய சந்திரர் மறைபட்டு உலகில் எங்கும் இருள்மூட, அந்த இருள் நீங்கி உலகம் ஒளிபெற்றுய்யும்படி. இருள் மூட மூட - இருள் மூடும்படி (கண்களைக் கையினால்) மூட. அலர்தர - விழிக்க. மதிபோல்...அலர்வித்த - நெற்றிக் கண் நெருப்பாயினும் அதனை உலகுய்யுமாறு மதிபோலக் குளிர்ந்து ஒளிவீசும்படி விழித்த. "மலைமடந்தை விளையாடி" (கலயநல்லூர் - 4) என்ற நம்பிகள் தேவாரம் காண்க.—(9) இது காமனை எரித்த வரலாறு குறித்தது. அஞ்சுகணையோன் - மன்மதன். நெற்றி ஒற்றை நயனம் சிவந்த - முன் பாட்டில் மதிபோல அலர்வித்தமைக்கு மாறாக அதனையே சிவக்க விழித்த என்க. சிவந்த - சினந்து விழித்த.—(10) இது மாலுக்குச் சக்கரமளித்த வரலாறு குறித்தது. அரக்கன் - சலந்தரன். ஆழி - சக்கரம்; ஆழியவன்-பாற்கடலில் பள்ளி கொள்பவன். சுடரடியான் முயன்று சுழல்வித்து - அடியினால் சக்கரமாகக் கீறி அதனையே சுழலச் செய்து. "செருமேவு சலந்தரனைப் பிளந்தசுட ராழி" (நம்பி - தேவா - கலயநல் - 2).—(11) இது இராவணன் கயிலையெடுத்துப் பட்ட வரலாறு குறித்தது. இவ்வரலாறு எல்லாப் பதிகத்தும் எட்டிப் பாட்டிற் போற்றப் படுவதும். இதனை நேரிற் கண்டோர்

கூறுமா போல விரித்துக் கூறப்படுதல் காண்க. "கடுகிய...தன்மம்" இது பாகன் இராவணனை நோக்கிக் கூறியது. "விடு விடு" இது இராவணன் பாகனை நோக்கி ஏவியது. நேடு நேடு - நெடுமுடி - நெடுந்தோள் - என, நெடிய ஆயினும் இற்று வீழ.

போது - பாவநாசப் பதிகம்

VIII　திருச்சிற்றம்பலம்　பண் - பழம்பஞ்சுரம்

பற்றற் றார்சேர் பழம்பதியைப் பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெந் திகழ்கனியைத் தீண்டற் கரிய திருவுருவை
வெற்றி யூரில் விரிசுடரை விமலர் கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூரெம் முத்தமனை யுள்ளத் துள்ளே வைத்தேனே.　1

முந்தித் தானே முளைத்தானை மூரி வெள்ளே றூர்ந்தானை
யந்திச் செவ்வான் படியானை யரக்க னாற்ற லழித்தானைச்
சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன் மாலை யடிச்சேர்த்தி
யெந்தை பெம்மா னென்னெம்மா னென்பார் பாவ நாசமே.　11

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—பற்றற்றார்சேர் பழம்பதி என்பது முதலாகப் பல தலங்களிலும் வைத்துப் பாராட்டப்படுகின்ற இறைவரை என் உள்ளத்துள்ளே வைத்தேன்; தோளைக் குளிரத் தொழுதேன்; அவரை மறவேன். அவரை நினைந்தேனுக்கு உள்ளம் நிறைந்தது; அவரை அன்பி லணைத்து வைத்தேன்; விருப்பால் விழுங்கியிட்டேன். அம்முதல்வரைச் சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன்மாலை அடிசேர்த்தி "எந்தை பெம்மான்" என்று ஏத்துவார் பாவம் நாசமாம்.

குறிப்பு - பாவநாசமே என முடித்துப் பாவங்கள் நாசமாவதற்குரிய வழிகளை, "நான் இவ்வாறு வழிபட்டேன்; யாவரும் வழிபடின் பாவம் நாசமாம்" என உபதேசித்தருளுகின்றமையால் இது பாவநாசத் திருப்பதிகம் எனப்படும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) பழம்பதி - திருப்புனவாயில் இப்பெயர் பெறும். இறைவர் பெயர் பழம்பதி நாதர்; "பத்தர் தாம் பலர் பாடி நின்றாடும் பழம் பதி" (நம்பி - தேவா). ஊரும் இறைவர் பெயரால் வழங்கப்படுவது; "அவிநாசி" என்பதுபோல. தீண்டற் கரிய திருவுரு - இறைவரது பொது இயல்பு. திருப்பாசூரில் இறைவர் தீண்டாத் திருமேனி நாதராய் விளங்கும் சிறப்பும் குறிப்பு. வெற்றியூர் - வைப்புத் தலம்.—(2) அணங்கு - தெய்வம். அணங்கு - பெண் எனக்கொண்டு பெண்ணினல்லாளாகிய அகிலாண்ட நாயகியாற் பூசிக்கப்பட்டவர் என்ற குறிப்புமாம். முளைத்த - இறைவர் முளைநாதர் எனப்படுவதும் குறிப்பு. மானக் கயிலை - மானம் - பெருமை. மதியைச் சுடரை - சுடர்-ஆகுபெயர். சூரியன்.—(3) மதியங் கண்ணி - மதியை மாலையாகச் சூடிய. "மாதர்ப் பிறைக்கண்ணி யானை." ஞாயிறு - ஒருகோடி இளஞாயிறு போன்ற திருமேனியுடையவன். மருந்து - ஆகுபெயர். நெதி - செல்வம்.—(4) உறந்தை - உறையூர். காண்பார் காணுங் கண்ணுளை - காணும் பக்குவமுடையார்க்குக் கண்ணுள்ளே நின்று கண்டு காட்டுபவன். "காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்" (சிவஞானபோதம் - 11 - சூத்.); "கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே" (கழுக் - பதி.) என்ற திருவாசகக் குறிப்பும் காண்க.—(5) தோளைக் குளிர - தோள் குளிர; (9).—(6) மாணிக்கம் - மருகலின் இறைவர் மாணிக்க வண்ணர் என்பதும் குறிப்பு.—(7) இராச சிங்கம் - "அரிமானேறு" (4).—(8) மணாளன் - "மறைக்காட் டுறையு மணாளன்"

(தாண்).—(10) போதியில் - பொதிகை; வைப்புத் தலம். மாத்தூர் - ஆமாத்தூர்.—(11) முந்தித்தானே முளைத்தான் - "முளைத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி" (ஆலவாய் - தாண்). சிந்தை...என்பார் - மனம் வாக்குக் காயம் என்ற மூக்கரணங்களாலும் ஒன்றுபட வழிபடுவோர். சிந்தை வெள்ளப் புனலாட்டி - "ஆனந்தமெனுஞ் திருமஞ்சன மாட்டி" (வாயிலார் - புரா - 8). "விளைத்தவன் புமிழ்வார் போல" (772); சொன்மாலை - சொல்லாகிய மாலையும், சிறப்பாய் எடுத்துச் சொல்லப்படும் பூமாலையுமாம். என்பார் - துதிப்போர். பாவநாசமே - பாவங்கள் நாசமாகும். ஏகாரம் தேற்றம். "பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்...... போற்றூ நில்லே" (ஆரூர் - தாண் - 7). என்பார் பாவநாசமே - என்று உலகரை அறிவுறுத்துதலின் அதனை மேற்கொண்டு உலகர் பரவ நின்றது இப்பதிகம் என்பார் ஆசிரியர் இதனைப் பார் பரவும் பாவநாசப் பதிகம் என்றருளினர்.

## பொது - சரக்கரைத் திருவிருத்தம்

IX *திருச்சிற்றம்பலம்* திருவிருத்தம்

*விடையும் விடைப்பெரும் பாகா !வென் விண்ணப்பம் வெம்மழுவாட்*
*படையும் படையாய் நிறைத்தபல் பூதமும் பாய்புலித்தோல்*
*உடையு முடைதலை மாலையு மாலைப் பிறையொதுங்குஞ்*
*சடையு மிருக்குஞ் சரக்கறை யோ !வென் றனிநெஞ்சமே.* 1

*விவந்தா டியகழ லெந்தாயென் விண்ணப்ப மேவிலங்கு*
*தவந்தா னெடுக்கத் தலைபத் திறுத்தனை தாழ்புலித்தோல்*
*சிவந்தா டியபொடி நீறுஞ் சிரமாலை சூடிநின்று*
*தவந்தா னிருக்குஞ் சரக்கறை யோவென் றனிநெஞ்சமே,* 11

*திருச்சிற்றம்பலம்*

பதிகக்குறிப்பு :—இறைவரை நோக்கி நேர்பட நின்று பன்முறையும் அறைகூவும் திருப்பதிகம் என்பது ஆசிரியர் அறிவிக்கின்றவாறு.

பதிகப் பாட்டுக் குறிப்பு :— (1) விடையும் - கோபமுடைய. "சின விடையேறு"; படையாய் நிரைத்த - படைகளை நிரையாக ஏந்திய. படைகளாக என்றலுமாம். முடைதலை - முடைநாற்றமுடைய மண்டை ஓடு. என் தனி நெஞ்சம் படையும் பூதமும் உடையும் மாலையும் சடையும் கொண்டு இருக்கும் சரக்கறையாமோ? விடைப்பாகா? இது என் விண்ணப்பம் என்று முடிக்க. பாகா! - வெற்பா! - ஏந்தி! - உரியாய்! - உண்டாய்! - தாராய்! - எய்தாய்! - ஏறீ! - விகிர்தா! - ஆளீ! - எந்தாய்! - இது என் விண்ணப்பம் என்று பலமுறையும் நேரே அழைத்துக் கூவுதலின் பன்முறையும் நேர்படநின்று அறைகூவும் திருப்பதிகம் என்றூர் ஆசிரியர்.—(3) தகுணிச்சம் - இயங்களின் ஒருவகை.—(6) வீழ் இட்ட - வீழ்துபோலச் சரமாகத் தொங்கும். ஏழ் இட்டு - எழுச்சி தந்து. தாழ் இட்டு - தங்க வைத்து.—(8) கொடு கொட்டி - கொக்கரை - தக்கை - குழல் - தாளம் - வீணை - மொந்தை - இயங்களின் வகை. வடு விட்ட - குற்றமில்லாத. நடு நட்டம் - இறைவனடனத்தால் தலைத்தலை மயங்கிக் கலத்தல்; குணலைக் கூத்துப்போல.—(9) தண்டி - சேர்த்து.—(10) வேதித்த - தண்டித்த. சாதித்து - விளங்கி·—(11) விவந்து - வெளிப்பட்டு.

குறிப்பு.—இப்பதிகம் தம் பொருட்டு அறைகூவி விண்ணப்பித்த கருத்து.

போது - பசுபதித் திருவிருத்தம்

X *திருச்சிற்றம்பலம்* திருவிருத்தம்

சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் றாள்பரவி
யேம்பலிப் பார்கட் கிரங்குகண் டாயிருங் கங்கையெனுங்
*காம்பலைக் கும்பணைத் தோளி கதிர்ப்பூண் வனமுலைமேற்*
*பாம்பலைக் குஞ்சடை யாயெம்மை* யாளும் பசுபதியே. 1

சித்தத் துருகிச் சிவனேம் பிரானென்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்பிணி தீர்த்தருளாய்
*மத்தத் தரக்க னிருபது தோளு முடியுமெல்லாம்*
*பத்துற் றுறநெரித் தாயெம்மை யாளும் பசுபதியே.* 10

*திருச்சிற்றம்பலம்*

பதிகக் குறிப்பு :—*எம்மை ஆளும் பசுபதியே! நின்தாள் பரவி ஏம்பலிப்பார் கட் கிரங்கு; உன் பாதந் தலைவைத்த உத்தமர்கள் இடும்பைப் படாமை இரங்கு; அடியார் தடுமாற்றம் நீக்கு; உன்பாத மிறைஞ்சுகின்ற ரருவினை யகற்று; நோயை விலக்கு; அவர் நடலைப்படாமை விலக்கு; மறவித் தொழில் மாற்று; பிணிதீர்த் தருள் என்று பலவாறும் விண்ணப்பித்தது.*

குறிப்பு :—*இப்பதிகம் அடியார்களின் பொருட்டு அறைகூவிச் செய்துகொண்ட விண்ணப்பம்.*

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) சாம்பல் - *திருநீறு.* தரையிற் புரண்டு - *அடியார் படுக்கைச் சுகம் வேண்டாது தரையிற் படுக்கும் மரபு குறித்தது.* "பூமி தேவி யுடன்கிடந்தாற் புரட்டாள்" (*மறுமாற் - தாண்*) ஏம்பலித்தல் - *அவாவுதல்.*—(2) உடம்பை உடம்பின்கண்; தோலைவித்து - *பற்றுவிட்டு.* அடும்பு - ஒருவகை *மரம். சிவந்தபூவுடையது.*—(3) தூரித்து - *மேற்பூண்டு.* பாரித்த - *தாங்கிய.*—(4) அரு வினைச் சுற்றம் - *வினையாகிய சூழல்.* சுற்றம் - *சுற்றிச் சூழ்வது.* வரைக்குன்றம் - *யானை. இருபெயரொட்டு. குன்றம் போல்வது என உவமையாகு பெயர்.* பருவரை - *பெரிய; பரிய.* அடலை - *துன்பம்.*—(7) மறவி - *மறத்தல்.* அறவைத் தொழில் - *தீத்தொழில். அழிவு.* பறவை - *பறக்குந் தொழிலுடைய.*—(10) பித்து - *அன்பின் பெருக்குப் பித்துப்போன்ற தென்பது.* பிதற்றுகின்றார் - *என்றதுமிது.* பிணி - *மூல நோயாகிய ஆணவ மலம்.* பத்துற - *பற்றுவிட்டு.*

போது - தனித் திருவிருத்தம்

XI *திருச்சிற்றம்பலம்* திருவிருத்தம்

*வெள்ளிக் குழைத்துணி போலுங் கபாலத்தன் வீழ்ந்திலங்கு*
*வெள்ளிப் புரியன்ன வெண்புரி நூலன் விரிசடைமேல்*
*வெள்ளித் தகடன்ன வெண்பிறை சூடிவெள் ளென்பணிந்து*
*வெள்ளிப் பொடிப்பவ ளப்புறம் பூசிய வேதியனே.* 1

*முன்னே யுரைத்தான் முகமனே யொக்குமிம் மூவுலகுக்*
*கன்னையு மத்தனு மாவா யழல்வண்ணா நீயலையோ ?*
உன்னை நினைந்தே கழியுமென் னாவி கழிந்ததற்பின்
*என்னை மறக்கப் பெறுமெம் பிரானுன்னை வேண்டியதே.* 3

நின்னையெப் போது நினையவொட் டாய்நீ நினையப்புகிற்
பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி
உன்னையெப் போது மறந்திட் டுனக்கினி தாவிருக்கும்
என்னையொப் பாருள ரோ ? சொல்லு வாழி யிறையவனே. 4

பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடன் மூடி யிறக்கு ; மிறந்தான் களேபரமுங்
கருங்கடல் வண்ணன் களேபர முங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே. 7

வானந் துளங்கிலென் ? மண்கம்ப மாகிலென் ? மால்வரையுந்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் ? தண்கடலும்
மீனம் படிலென் ? விரிசுடர் வீழிலென் ? வேலைநஞ்சுண்
டுனமொன் றில்லா வொருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே. 8

சிவனெனு நாமந் தனக்கே யுடையசெம் மேனியெம்மான்
அவனென்னை யாட்கொண் டளித்திடு மாகி லவன்றனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னா ளழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே. 9

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—வெண்பிறை - வெண்ணீறு முதலாகிய எல்லாம் வெண்மையாய் விளங்குபவர் சிவபெருமான். நெஞ்சே! அவரது அடிமைக் கண்ணே துணிந்து நில். அவர் ஊழி முடிவில் பிரம விட்டுணுக்களும் இறந்தபின் கங்காள வேடத்துடன் உலகப் புனருற்பவத்தின் பொருட்டு வீணை வாசிப்பதாகிய நாதம் முழக்குவர். அவருக்கு ஆட்பட்ட வுத்தமர் மலையும், வானமும், மண்ணும் துளங்கினாலும் அஞ்சார். பலகாலம் அழைத்தால் ஒருநாள் அவர்வெளிப்பட்டருளுவர். அவரைத்தொழு மவரைத் தேவராற்றொழுவிப்பர். இறையவரே! உம்மை நினைந்தே என் ஆவி கழியும்; அதன் பின் என்னை மறக்ககப் பெறுய்! நான் உம்மை வேண்டுவது இதுவே. உம்மை மறந்திட்டும் உம்மால் மறக்கப்படாமல் உமக்கு எப்போதும் இனியனாய் இருக்கும் என்னை ஒப்பார் யாவர்? என்றிவ்வாறு இறைவரது அருளின் பெருமைகளையும் அடிமைப் பண்புகளையும் பலதிறப்பட எண்ணிப் போற்றியது.

பதிகப் பாட்டுக் குறிப்பு :—(1) இப்பாட்டு முழுதும் இறைவரை வெண்மை பற்றிப் போற்றியது. வெண்மை - புகழ், தூய்மை முதலியவற்றுக் குறிகுறியாம். வெள்ளிப் பொடி - திருநீறு. பவளப் புறம் - பவளநிறமுடைய திரு திருமேனியின் மேல். இப்பவளம் போன்ற செம்மை நிறம் பற்றியே மேல்வரும் பதிக முதற் பாட்டிற் போற்றியது காண்க. வேதியனே கபாலத்தன் - நூலன் என்று கூட்டி முடிக்க.—(2) உடலைத் துறந்து - பிறவியில் வாராது. உலகேழும் கடந்து - "உலகேழின் வருந்துயரும்" (1335). நெஞ்சே அடிமைக் கண்ணே துணி; உய்யப் போயிட லாகும்.—(3) இது நாயனாரது பிரார்த்தனை. உலகங்கண்டுய்யும் பொருட்டு உபதேசித்தது. உன்னை நினைந்தே கழியுமென் ஆவி - உயிர்விடும் போது சிவனை நினைத்தல் வேண்டும்; அது கைகூட வேண்டுமாயின் எப்போதும் மறவாமல் நினைந்து பயில வேண்டும். இக்கருத்துப்பற்றித் தொடர்ச்சியா யெழுந்தது மேல்வரும் திருப் பாட்டு. மறக்கப்பெறுய்! - மறவாதே! - மறவாதே! என்று கூறிய நாயனார் இறைவர் என்ஞான்றும் மறவாமல் உயிர்களுக்கு அருள்புரியும் தன்மைபற்றி மேல்வரும் பாட்

டிற் பாராட்டுகின்றனர்.—(4) மறந்தாரையும் நினைந்தருளும் சிவனது அருளின் பெருமையை வியந்தது.—(5) தவளப் பொடி - திருநீறு. இகழ்தீர் - இகழ்வீரோ? இகழாதீர். தொழப்படும் தேவர் - பிறர் யாவராலும் தொழப்படும் பெரு நிலையுள்ள பெருந் தேவர்களால். தொழுவிக்கும் - தேவர்கள் வணங்கும்படி செய்வன். "வணக்குறீரரனை யென்றும் வானவர் வணங்க வைப்பன்" (சித்தி - 2 - 96).— (6) "சிந்தையினுள்ளுமென் சென்னியி னுஞ்சேர வந்தவர்" (உந்தி). கண்ணகத்தான் முதலியன அவர் எப்போதும் என்னுள்ளே தங்கக் கண்டுகொண்டும், நினைத்துக்கொண்டும், வணங்கிக்கொண்டும் இருப்பேன் என்ற குறிப்பாம்.—(7) சிவனது முழுமுதற்றன்மையும் அநாதியாந்தன்மையும் குறித்தது. வருங்கடன் மீள - உலகம் புனருற்பவமாகும் பொருட்டு. வீணை வாசிக்கும் - உலக காரணமாகிய மாயையை எழுப்பும் பொருட்டு நாத முழக்குச் செய்வர். "மிக நல்ல வீணை தடவி" (பிள். தேவா); "ஓதத்தொலி மடங்கி யூருண் டேறி யொத்துலக மெல்லா மொடுங்கியபின், வேதத் தொலி கொண்டு வீணை கேட்பர் வெண்காடு மேவிய விகிர்த னாரே" (தாண்). கங்காளம் - உடம்பு; காயாரோகணர். காலாந்தரத்தில் பிரம விட்டுணுக்கள் அழிந்துபடுவர் என்பது. "நூறு கோடி பிரமர்க ளொழிந்தனர், ஆறு கோடி நாராய ணரங்ஙனே" (குறுந்.) கங்காள மூர்த்தத்தின் உள்ளுறை விளக்கியது.—(8) சிவனடியாரது தன்மையும் பெருமையும் விளக்கியது.வானந் துளங்குதல்-மலை நிலைபெயர்தல்-மண் கம்பமாகுதல் - விண்மீன் வீழ்தல் முதலியவை உலகத்தார் யாவரும் அஞ்சும் அழிவு காட்டும் உற்பாதங்கள் என்பர். இவைகட்கும் அடியவர் ஒரு சிறிதும் அஞ்சார். "உடையார் ஒருவர் தமர்நாம்; அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை" (தேவா); 1381 பார்க்க. வேலை நஞ்சுண்டு ஊனமொன்றில்லா - அத்தன்மையாராதலின் அவரடியார்க்கும் அத்தன்மை செய்வார் எனக் காரணக் குறிப்பு.—(9) பல காலமும் விடாதுபற்றி அழைத்தால் அதன் உபத்திரவம் பொறுக்கலாற்றாது வெளிப்பட்டருளுவர் என்று உலகியல்புபற்றி நகைச்சுவைபடக் கூறியது. சிவன் எனும் நாமம் தனக்கே உடைய - சிவன் - எண்குணமுடைமை - மங்கலம் - நிறைவு - கலப்பு முதலிய இறைமைக் குணங்களை உணர்த்தும் பெயர். சிவன் என்ற சொல்லுக்குப் பேரின்பத்துக்குக் காரணன் என்றும், முற்றுணர்வினன் என்றும், தூய தன்மையன் என்னும் மூன்று பொருள்கள் கண்டு சிவஞானபோத 5-ம் சூத்திர உரையில் "மன்னு சிவன்" என்னும் வெண்பாவின் கீழ் எமது மாதவச் சிவஞான முனிவர் உரைத்தவை ஈண்டுச் சிந்திக்கற்பாலன. தனக்கே - ஏகாரம் பிரிநிலை. வேறெத்தெய்வத்துக்கும் இது பொருந்தாதென்பது. தேற்றமுமாம். பவன் எனும் நாமம் பிடித்து- சிவாதி எட்டு - பவாதி எட்டு என்று; சிவன் - பவன் என்ற இரண்டுமே சிவனது எண்ணாயிரங்கோடி பேர்களுள்ளும் சிறந்தனவாக எடுத்து ஓதப்படுவன; ஆதலின் அவ்விரண்டும்பற்றிக் கூறினார். பிடித்து - இடைவிடாது பற்றிக்கொண்டு.—(10) நின்னை ஒப்பார் - உன்னை ஒப்பார் என்று தம்மை எண்ணும் தேவர். "மூவரென்றே யெம்பிரா னொடுமெண்ணி" (திருவா). நின் பெருமை நின்னை யொப்பாரென் றெண்ணுந் தேவருங் காண்பரிதாகலின் என்னை ஒப்பார் எங்ஙனம் காண்பர் என்க.

போது - தனித் திருவிருத்தம்

XII திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

பவளத் தடவரை போலுந்திண் டோள்களத் தோண்மிசையே
பவளக் குழைதழைத் தாலொக்கும் பல்சடை; யச்சடைமேற்

பவளக் கொழுந்தன்ன பைம்முக நாகமந் நாகத்தொடும்
பவளக்கண் வால மதியெந்தை சூடும் பனிமலரே. 1

முருகார் நறுமல ரிண்டை தழுவிவண் டேமுரலும்
பெருகா றடைசடைக் கற்றையி னுய்பிணி மேய்ந்திருந்த
விருகாற் குரம்பை யிதுநா னுடைய திதுபிரிந்தாற்
றருவா யெனக்குன் றிருவடிக் கீழோர் தலைமறைவே. 2

"மூவா வுருவத்து முக்கண் முதல்வ!மீக் கூரிடும்பை
காவா" யெனக்கடை தூங்கு மணியைக்கை யாலமரர்
நாவா யசைத்த வொலியொலி மாறிய தில்லையப்பாற்
றீயா யெரிந்து பொடியாய்க் கழிந்த திரிபுரமே. 3

துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந் தூதுவரோ
டிறப்ப னிறந்தா லிருவிசும் பேறுவ னேறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொ லோவென்றென் னுள்ளங் கிடந்து மறுகிடுமே. 8

கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கட னீர்சுருங்கிப்
பன்னெடுங் கால மழைதான் மறுக்கினும் பஞ்சமுண்டென்
றென்னெடுஞ் சூளுறு மஞ்சனெஞ் சேயிமை யாதமுக்கட்
பொன்னெடுங் குன்றமொன் றுண்டுகண் டீர்இப் புகலிடத்தே. 10

திருச்சிற்றம்பலம்

**பதிகக் குறிப்பு** :—முன் பதிகத்துக் குரைத்தபடி யுரைத்துக் கொள்க.

**பதிகப் பாட்டுக் குறிப்பு** :—(1) பவள நிறம்பற்றி இறைவரை எண்ணியது.—(2) **பிணி...நானுடையது** - உடலை வீடாக உருவகம் பண்ணிக் கூறியது. **நானுடையது** - எனது உடைமை என்றும், நான் என்றும் ஆணவ மலத்தைச் சகசமாகவுடையது என்றும் உரைக்க நின்ற நயமும்; **இது பிரிந்தால்** - என்றது ஆணவ மலச் சத்தி மெலிந்தால் என்றும் இக்குடில் நீங்கி உயிர் துறந்தாலென்றும் உரைக்க நின்றதும், **பிரிந்தால் திருவடிக்கீழோர் தலைமறைவு தருவாய்** என்றது இவ் உடலாகிய வீடு விட்டால் உன் திருவடிக் கீழே ஒரு தலை மறையும் இடம் தா என்றும், ஆணவம் மெலிந்த விட்டபோதே நீ தருபவன் என்றும், தாள் - தலைபோல உயிர்த்தன்மை மறைய என்றும் உரைக்க நின்றதுமாகிய தொடர்நிலை உருவகமும் உள்ளுறைச் சுவையும் காண்க. **திருவடிக்கீழ் தலைமறைவு**-தாளிற்றலையடங்கி நிற்றல் குறிப்பு.—(3) அடைந்தார்க்கு இறைவரது அருளிப்பாட்டின் விரைவினைச் சுவைபட எடுத்துக்காட்டியது. **ஓர்** - அநுபவம். **ஒலி, ஒலி மாறியதில்லை** - மணியெரிந்த ஒலியின் எதிரொலி அடங்கவில்லை.—(4) முன்னாள் ஆட் செய்கிலாது விட்ட பாவம் இப்போது வந்து பிறவியில் மூண்டு வருத்துகின்றது. அதன்பொருட்டு வருந்துதல் மடமை. **சமழ்ப்பது** - வருந்துதல். **என்னே** - ஏன்! என்ன மடமை. **நந்தி** - சிவபெருமான்.—(5) **புந்தி வட்டம்** - நினைவின் சூழல். **நந்தி வட்டம்** - மலர்.—(6) **உன் மத்தக மலர்** - ஊமத்தம். **பல் மத்தகம்** - பல்லையுடைய மண்டை ஓடு. **என் மத்தகத்தே** - எனது. **தன் மத்தகம்**-தனது சடைத்தலை.—(7) கோவணம் உடுத்துப் பலிதிரியும் நீர் எக்குடி வாழ்க்கை கருதிப் பாவையை மணந்தீர் ? நகைச்சுவைபட வந்த இலேசவணி. **உத்தமனே** என்ற குறிப்புமது.—(8) **துறக்கப்படாத** - துறக்க இசையாத. **வெந்தூதுவர்** - இயமன் றூதர். **விசும்பேறுவன் - பிறப்பன்**. புண்ணியத்துக்கீடாக விசும்பேறினும், அதன்

கழிவில் ; மீள வந்து பிறப்பது உறுதி. பிறந்தால் மறப்பன் கொலோ ? - மறு பிறப்பில் மறந்து விடுவேனே என்ற அச்சக் குறிப்பு. "புழுவாய்ப் பிறக்கினும்" என்று வரங்கேட்டமை காண்க. இதில் பஞ்சாக்கினி வித்தை கூறப்பட்டுள்ளது —(9) அனகன் - கடவுள்.—(10) கல் நெடுங் காலம் வெதும்பி - மலைகள் மழை பெயலில்லாமையால் சூடுபட்டு வெதும்பியதனல். கல் - மலை குறித்தது. கல்லில் மழை மறுத்தமையால் மழையின்றிக் கடலும் சுருங்கிற்று. "நெடுங்கடலுந் தன் னீர்மை குன்றும்" (குறள்). சுருங்கி - சுருங்க. எச்சத்திரிபு. சுருங்கும்படி - மழை மறுக்கினும். சூளறும் - சூளறுத்துச் சொல்லுகின்ற நெஞ்சே அஞ்சல் என்க. அஞ்சாமைக்குக் காரணம் போற்குன்ற மூண்டு என்றவாறு.—(11) காலன், உதை பட்டாலும், பிரம விட்டுணுக்கள் அறியாத திருவடியை அறிந்து பயன்பெற் றிருமாந் தனன் என்று சுவைபடப் புகழ்ந்த இலேசவணி. பாலன் - மார்க்கண்டேயர்.

போது - "சிவனெனுமோசை"

XIII  திருச்சிற்றம்பலம்  பண் - பியந்தைக்காந்தாரம்

சிவனெனு மோசை யல்ல தறையோ வுலகிற் றிருநின்ற செம்மை யுளதே
யவனுமோ ரைய முண்ணி யதளாடை யாவ ததன்மேலொ ராட லரவம்
கவணள வுள்ள வுள்கு கரிகாடு கோயில் கலனாவ தோடு கருதில்
அவனது பெற்றி கண்டு மவனீர்மை கண்டு மகனேர்வர் தேவ ரவரே. 1

விரிகதிர் ஞாயி றல்லர் மதியல்லர் வேத விதியல்லர் விண்ணு நிலனுந்
திரிதரு வாயு வல்லர் செறுதீயு மல்லர் தெளிநீரு மல்லர் தெரியில்
அரிதரு கண்ணி யாளை யொருபாக மாக வருள்கா ரணத்தில் வருவார்
எரியர வார மார்ப ரிமையாரு மல்ல ரிமைப்பாரு மல்ல ரிவரே. 2

புதுவிரி பொன்செ யோலை யொருகாதொர் காது சுரிசங்க நின்று புரள
விதிவிதி வேத கீத மொருபாடு மோத மொருபாடு மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்று சடைபாக மாதர் குழல்பாக மாக வருவர் [மியல்பே 10
இதுவிவர் வண்ண வண்ண மிவள்வண்ண வண்ண மெழில்வண்ண வண்ண
திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—இறைவரது சிவன் என்ற பெயரின் இயல்பினையும், இறைவர தியல்பினையும், இறைவியா ரியல்பினையும் பல பல திறம்படக்கண்டு போற்றியது.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) சிவனெனு மோசை யல்லாது உலகில் செம்மை யுளது உண்டோ?. உளதே - ஏகார வினு இன்மை குறித்தது. அல்ல துளதே - எதிர்மறை வினு உறுதி குறித்தது. ஒலி என்னது ஓசை என்றது அச் சத்தமே பயன் தருமென்ற குறிப்பு. அறையோ ! - அறைகூவி அழைத்துக் கேட்டவாறு. சொல் வதற்குண்டோ ? என்றுரைப்பாருமுண்டு. திரு - முத்தித் திரு. திருநின்ற செம்மை - செம்மை - செம்பொருள். முத்திதரும் செம்பொருள் என்க. நாயனர் சிவனெனு மோசையில் அழுந்தியதுபற்றியே நமச்சிவாயப் பதிகம் எழுந்ததும், "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரயன்" என்று திருத்தொண்டத் தொகையுட் போற்றப்பட்டதும் காண்க. உண்ணி - உண்பவன். கரிகாடுகோயில் - "கோயில் சுடுகாடு" (திருவாசகம்). ஓடு கலனாவது - என்க. கலன் - உண்கலம். பெற்றி - வேடம். நீர்மை - அருட்டன்மை. கண்டும் - கண்டவதனல். அகன் நேர் வர் - மனம் பற்றுவர்.—(2) இதில் அல்லர் என்ற பலவும் இறைவர் உலகெல்லாவற் றுக்கும் வேருந்தன்மை பற்றிப் போற்றப்பட்டது. விரிகதிர் - மதி - முதலியன என்று

வகை மூர்த்தங்கள். இவை சிவனது திருமேனியாவன. சிவன் இவற்றின் வேறுமாவன் என்பது. "வேறாய்"; "வேறு மானான்"; (பிள் - தேவா). திரிதரு - சேறு - தேளி என்ற அடை மொழிகள் அதனதன் தன்மை குறித்தன. இமையார்-தேவர். இமைப் பார் - மனிதர். இமையார் - இமைப்பார்-உடன்பாடு மெதிர்மறையுமல்லாத தன்மை யினையும் சொற்சிலேடை வகையாற்குறிப்பது.—(3) இவரே - தேற்றம். தேய்பொடி ...திங்கள் திலகம் பதித்த நுதல் - "அருகுதிரு முடிச்செருகு மந்தியிளம் பிறை தன்னைப், பெருகுசிறு மதியாக்கிப் பெயர்த்துச் சாத்தியதென்ன,...திருநுதன் மேற் றிருநீற்றுத் தனிப்பொட்டு" (சிறுத் - புரா - 38). தேய்பொடி-திருநீறு. நீலவொளி - விடத்தின் கருமை. இவர் ஆடுமாறும் - இவள் காணுமாறும் - இவர்க்கு இயல்பு. ஐயனது அருட்கூத்தை அம்மை கண்டு உலகுக்கருள்கின்றாள் என்ற சாத்திரக் கருத்து. இயல்பே - அருட்குணம். ஏகாரம் தேற்றம்.—(4) காடு நாடு - காட்டினை நாடாக.— (5) அடிநீழலாணை கடவாது அமரா நலகே-சிவனது முழுமுதற் றன்மை.—(6) அவள் வண்ணம் அன்ன வண்ணம்; அவர் வண்ணம் அழலே என்க. அவள் அன்னம்போல் பவள்; அவர் அழகிய எரிபோல் உருவினர். வண்ண(அழகிய)வண்ண அழல்-எரிக்காமல் அழகு பொருந்திய நெருப்பு.—(10) ஓலை ஒருகாது-சுரி சங்கு ஒருகாது - சங்கு - சங்கக் குழை. விதி விதி - விதிகளை விதிக்கின்ற. சடை பாகம் - இறைவர் பாகம்; குழல் பாகம் - அம்மை பாகம். இவர் வண்ணம் - இவள் வண்ணம் - நிரனிறை.

"நினைந்த" திருநேரிசை

XIV திருச்சிற்றம்பலம் நேரிசை

முத்தினை மணியைப் பொன்னை முழுமுதற் பவள மேய்க்குங்
கொத்தினை வயிர மாலைக் கொழுந்தினை யமரர் சூடும்
வித்தினை வேத வேள்விக் கேள்வியை விளங்க நின்ற
அத்தனை நினைந்த நெஞ்ச மழகிதா நினைந்த வாறே. 1

விண்ணிடை மின்னொப் பானை மெய்ப்பெரும் பொருளொப் பானைக்
கண்ணிடை மணியொப் பானைக் கடுவிருட் சுடரொப் பானை
எண்ணிடை யெண்ண லாகா விருவரை வெருவ நீண்ட
அண்ணலை நினைந்த நெஞ்ச மழகிதா நினைந்த வாறே. 9

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—முத்து - வேத வேள்விக் கேள்வி - முன்பன் - எங்கள் அன்பன் - கரும்பினுமினியான் - பெரும்பொருட் கிளவியான் - இறப்பொடு பிறப் பிலான் - நிருத்தன் - அங்கையேற்ற நெருப்பன்-நீதியால். நினைப்புளான் - நினைப்ப வர் மனத்துளான் - மெய்ப்பெரும் பொருளொப்பான் - கண்ணிடை மணியொப் பான் - கடுவிருட் சுடரொப்பான் - என்றிவ்வாறெல்லாம் எண்ணிப் போற்ற நின்ற இறைவனை நினைந்த நெஞ்சம் அழகிதாகவும் நேர்படவும் நினைந்தவாறு. நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்தது என்று நினைப்பினைப்பற்றிக் கூறுவதால் இப்பதிகம் நினைந்த திருநேரிசை எனப்பட்டது.

பதிகப்பாட்டுக் குறிப்பு:—(1) முத்து - நவமணிகளுட் சிறப்புப்பற்றி முதலில் வைத்தார். 492 - 663 - பார்க்க. மணி - முத்து, பவளம், வயிரம் ஒழிந்த ஏனை மணி கள். முழுமுதற் பவளம் - தீட்டப்படுதல் வேண்டாது முழுமையாய்க் கொடியாய் விளை வது பவளத்தின் சிறப்பு. வேதவேள்விக் கேள்வி - வேதங்களிலும், வேத விதிப்படி செய்யப்படும் சிவவேள்விகளிலும் முதல்வகைக் கேட்கப்படும் பொருள். அத்தனை

நினைந்த நெஞ்சம் அழுகிநா நினைந்தவாறு - அத்தனை நினைந்த அளவே நெஞ்சத்தின் தொழில் அழகிதாம்; ஏனைய நினைப்புக்களை நினைந்தபோது அழகிற்கும் நேர்பாட்டிற்கும் மாறுபட்டது என்பதும் குறிப்பு. ஏகாரம் பிரிநிலை. தேற்றமுமாம்.—(2) மூன் பன் - முதல்வன். அநாதியே யுள்ளவன். மூர்த்தி - தலைவன். வன் பனைத் தடக்கை- வலிய பனை போன்ற பெரிய கை. துதிக்கை. கருப்பனைத் தடக்கை வேழம் (6) என்றதுமிது. "பனைக்கை மும்மத வேழம்" (தேவா). வேழக் களிறு - இருபெயர் ஒட்டு.—(3) பெரும்பொருட் கிளவியான் - பெரும் பொருளை எடுத்துக்கூறும் சொல்லுக்குடையவன். "பெரும் பெயர்க் கடவுள்" (சிவஞானபோதம் - பாயிரம்). பெரும் பெயர் முருக!; பெரும் பெயரியவுள்! (திருமுருகு) பெரும் பெயர் - மகா வாக்கியம்).—(4) ஊர் - முப்புரம்.—(5) அமுத யோக நீற்றன் - அமுதம் - வீடு. வீட்டினைத் தரும் திருநீறு. யோகம் - கூடுதல்.—(9) விண்ணிடை மின் - மேகத்திற் றோன்றும் மின். மின் ஒப்பான் - அந்தரியாகப் பூசையில் மின்னின் ஒளியுடையவராய்த் தியானித்துத் தலையுச்சியினின்றும் எடுத்து இதயத் தாமரைப் பீடத்தில் வைத்துப் பூசிக்கும் ஆகம விதி காண்க. மெய்ப்பெரும் பொருள் ஒப்பான் - மெய்ப்பொருளாவானை. இருட் சுடர் - மும்மலமாகிய இருளினடுவு விளக்கஞ் செய்யும் ஒளி. எண்ணிடை - எண்ணத்தினுள். எண்ணலாகா - எண்ணாத. இருவர் - பிரம விட்டுணுக்கள்.—(10) உரவன் - அறிஞன். வலியன் என்றலுமாம். நிரவன் - அழிப்பவன்.

போது - வினாவிடைத் திருத்தாண்டகம்

XV திருச்சிற்றம்பலம் தாண்டகம்

அண்டங் கடந்த சுவடு முண்டோ? வனலங்கை யேந்திய வாட லுண்டோ?
பண்டை யெழுவர் படியு முண்டோ? பாரிடங்கள் பலசூழப் போந்த துண்டோ?
கண்ட மிறையே கறுத்த துண்டோ? கண்ணின்மேற் கண்ணொன்று கண்ட துண்டோ?
தொண்டர்கள் சூழத் தொடர்ச்சி யுண்டோ? சொல்லீரெம் பிரானாரைக்கண்டவாறே.

விரையுண்டவெண்ணீறு தானுமுண்டு; வெண்டலைகை யுண்டொருகைவீணையுண்டு;
சுரையுண்டு சூடும் பிறையொன் றுண்டு; சூலமுந் தண்டுஞ் சுமந்த துண்டு;
அரையுண்ட கோவண வாடை யுண்டு; வலிக்கோலுந் தோலு மழகா வுண்டு;
இரையுண் டறியாத பாம்பு முண்டு; இமையோர் பெருமா னிலாத தென்னே! 9

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்ல னொருவ னல்ல னோரூர னல்லனோ ருவம னில்லி
யப்படியு மந்நிறமு மவ்வண் ணமு மவனருளே கண்ணகக் காணி னல்லால் [தே. 10
இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே

பொன்னொத்த மேனிமேற் பொடியுங் கண்டேன்; புலித்தோ லுடைகண்டேன்; புணரத் தன்மேல்
மின்னொத்த நுண்ணிடையாள் பாகங் கண்டேன்; மிளிர்வதொரு பாம்பு மரைமேற் கண்டேன்;
அன்னத்தே ரூர்ந்த வரக்கன் றன்னை யலற வடர்த்திட்ட வடியுங் கண்டேன்;
சின்ன மலர்க்கொன்றைக் கண்ணி கண்டேன்; சிவனைநான் சிந்தையுட்கண்டவாறே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு:—அண்டங் கடந்த சுவடும் உண்டோ? ஏறுடைய கொடி யுண்டோ? என்பன முதலாக இறைவரது திருவடையாளங்கள் பலவற்றையுங் கூறி

இவை யிவை உண்டோ? நீவிர் எம்பெருமானைக் கண்டவாறு என்னே? என்று அடியாரிடம் வினவ, அவர்; விரையுண்ட வெண்ணீறு தானுமுண்டு - கோவண ஆடையுண்டு; பெருமான் இலாதது என்னே?; அவரை மேனிமேற் பொடியும், புலித் தோலுடையும், நுண்ணிடையாள் பாகமும். என்றிவ்வாறு பலபல வண்ணங்களாக நான் சிந்தை யுள்ளேயும் கருவிலும் கண்டவாறு இவ்வண்ணமாம்; ஆனால், அவனது படிவமும், வண்ணமும், திறமும் முதலாகக் காட்டி இவன்தான் இறைவன் என்று அவனருளே கண்ணாகக் காட்டக் காண்பதன்றி எழுதிக் காட்டொண்ணாது. முதலைந்து பாட்டுக்கள் "எவ்வகை யெம்பிரா னுரைக் கண்டவாறே" என்ற வினவும், 6 முதல் 11 வரை அவ்வினவுக்கு விடையுமாக அமைந்திருத்தலின் இது வினவிடைத் திருத்தாண்டகம் எனப்படும்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) அண்டம் கடந்த என்றும், அண்டங்கள் தந்த என்றும் உரைக்க நின்றது. சுவடு - அடையாளம். எழுவர் படி - முனிவர் தொழுதல். —(2) எரிகின்ற - தீப்போல ஒளி செய்கின்ற; சோரிகின்ற - புனல் - சிறு துளியாகச் செய்யப்பட்டு உலகில் வந்து வழிகின்ற கங்கை.—(3) நிலா மாலை - கண்ணிபோல. —(5) இலயம் - சுருதி ஒத்திக்கைபடுதல். கூத்து என்றலுமாம்—(6) பட்டம் - நெற்றி யணி. "ஏர்மதியி னும்பட்டஞ் சேர்ந்த நுதலானை" (ஆரூரர் - சீகாமரம்.); குழை காதினும், பிறை சென்னியினும் என்க.—(7) வலித்து - இறுக்கி.—(9); இதன்முன் (11)-வது பாடலை வைத்துப் பொருந்த உரைத் தமைவுகொள்ள நின்றது. இவை இவை உண்டோ? உண்டோ? என்ற வினாக்களுக்கு இவை இவை உண்டு, உண்டு என்று விடை கூறுமுகத்தால் அமைந்தது இத்திருப்பாட்டு. சுமந்தது-இவை செலுத் தப்படாமல் நின்றன என்பது குறிப்பு. இரையுண் டறியாத - இறைவன்றிருமேனி யில் தங்கும் அரவுகள் ஏனையரவுகள்போலப் பசிதீர்க்க வேண்டாதன.—(10) இறை வரை அவரருள் காட்டக் காணுதலன்றி வேறு எவ்வாற்றானும் காணவியலாது என் பதை அழகாக வலியுறுத்தியபடி.

1681. அந்நிலைமை தனிலாண்ட வரசுபணி செய்ய,வவர்
நன்னிலைமை காட்டுவார் நம்பர்திரு மணிமுன்றில்
தன்னில்வரு முழவார நுழைந்தவிடந் தானெங்கும்
பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்க வருள்செய்தார். சககூ

(இ - ள்) வெளிப்படை. அந்த நிலைமையினில் ஆண்ட அரசுகள் திருப்பணி செய்ய, அவருடைய நன்னிலைமையினை உலகறியக் காட்டுவாராகிச், சிவபெருமான் அழகிய திருமுற்றத்தில், திருப்பணிக்காக உழவாரம் நுழைந்தவிடமெல்லாம் பொன்னி னோடு நவமணிகள் வெளிப்பட்டு விளங்கும்படி அருள் செய்தனர்.

(வி - ரை) அந்நிலைமை தனில் - 1676ல் சொல்லிய அந்த நிலைமை.

பணி - முக்கரணங்களாலும் செய்யும் திருப்பணிகள்.

நன்னிலைமை - இறைவரது திருவடியிற் பொருந்த வைத்த மனம், பொன் முத லிய உலக போகப் பொருள்களில் ஒரு சிறிதும் பற்றாது நிற்கும், நல்ல நிலைமை.

நம்பர் - அருள் செய்தார் - என்று கூட்டுக.

வரும் உழவாரம் நுழைந்த - திருப்பணியின் பொருட்டு உழவாரம் சென்ற. நுழைவித்த என்றது நுழைந்த என்று பிறவினை தன் வினையாக வந்தது; முயற்சி யின்றிக் கைகள் தம்மியல்பிற் பணிசெய்த நிலை குறித்தது. "எண்ணுதலாஞ் செல் வத்தை யியல்பாக அறிந்தோமே" (பிள் - சீகா - சாய்க்காடு - 5)

பொன்னினோடு நவமணிகள் - பொன் பூண்ட வழியே மணிகள் கோவையாகிப் பயன் பெறவேண்டிய சிறப்பு நோக்கி ஓடு உருவைப் பொன்னினுடன் சேர்த்து ஓதினார். ஓடுவுருபு மணிகளினின்றும் பொன்னை வேறு பிரித்தது என்றலுமாம். பொன் மண்ணுடன் கலந்து பொற்சுன்னமாக நிற்பதும், மணிகள், அவ்வாறன்றி மண்ணின் வேறாய் நிற்றலும் ஆகிய இயல்பும் குறிப்பு. நவமணிகளையும் ஒன்றாக்கிக் கூறியதும் காண்க.

பொலிந்து இலங்க - பொலிதல் - ஒளி வீசுதலும், இலங்குதல் - வேறு பிரித்துக் காணப்படுதலும் குறித்து நின்றன. ஒருபொருட் பன்மொழி சிறப்புக் குறித்தது என்றலுமாம். பொன் - பொலிந்து என்றும், மணிகள் - இலங்க என்றும் பிரித்துக் கூட்டியுரைத்தலுமாம். இப்பொருளில் பொலிந்து - பொலியஎனச் செய்து என்பது செய என்ற வினையெச்சமாக வந்ததென்க.

காட்டுவார் - காட்டுவாராகி, எதிர்கால முற்றெச்சம். காட்டுவார் - அருள் செய்தார் என்று கூட்டுக.

அந்நிலைமையினில்—என்பதும் பாடம். 416

1682. செம்பொன்னு நவமணியுஞ் சேணிளங்க வாங்கெவையு
மும்பர்பிரான் றிருமுன்றி லுருள்பருக்கை யுடனொக்க
வெம்பெருமான் வாகீச ருழவாரத் தினிலேந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினிற் புகவெறிந்தார். சகஉ

(இ - ள்) வெளிப்படை. செம்பொன்னும் நவமணிகளும் நெடுந்தூரத்திலும் ஒளி வீச, எமது பெருமானாகிய திருநாவுக்கரசு நாயனார், தேவர் நாயகராகிய சிவபெருமானது திருமுன்றிலினுள் உருள்கின்ற ஏனைப் பருக்கைக் கற்களோடு ஒத்தலால் அவ்விடத்தில் விளங்கிய அவை யெல்லாவற்றையும் திருவுழவாரத்தினில் ஏந்திச்சென்று, மணம் வீச அலரும் பூக்களாகிய தாமரைகள் மலர்கின்ற வாவியினிற் புகும்படி வீசி எறிந்தருளினர்.

(வி - ரை) செம்பொன்னும் நவமணியும் - மேல் பொன்னினொடு நவமணிகள் என்றது காண்க. சேண் விளங்க - சேணிடத்திலும் ஒளிவீச. ஒளி நெடுந்தூரம்வீச. சேணில் என ஏழனுருபு விரிக்க. ஆங்கு - அவ்விடத்தில்; திருமுன்றிலினுள். எவையும் - ஆங்குப் - பருக்கையுடன் ஒக்க - ஏந்தி - எறிந்தார் என்று கூட்டி முடிக்க.

எவையும் - பொன்னும் மணிகளும். உம்மை முற்றும்மை. இவையேயன்றி வேறு எவையாயினும் அவையும் என்றதும் குறிப்பு.

பருக்கை - பருக்கைக் கற்கள்

பருக்கையுடன் ஒக்க ஏந்தி - ஒக்க - ஒத்தலால் என்று காரணப் பொருட்டாய் வந்த வினையெச்சம். பருக்கையுடன் - பொன்னையும் மணிகளையும் ஏந்தி எறிதற்குக் காரணங் கூறியவாறு. ஒத்தலாவது ஏனைப் பருக்கைகள் போலவே இவையும் வலம் வந்து வணங்கும் அடியார் திருவடிகளை ஊறுபடுத்துவதன்கண் ஒத்த தன்மையுடைமை. பருக்கைகளுடன் இவற்றையும் ஒக்க - ஒன்று போலவே - ஏந்தி என்றலுமாம். இங்கு "ஓட்டில் தமனியத்திற் சமபுத்தி பண்ணி" (சித்தி) என்ற மனநிலை குறிப்பிப்பதாகக் கொண்டு, அந்நிலையினால் உழவாரத்தில் ஒக்க ஏந்தினார் என்று விசேடவுரை காண்பாருமுண்டு. அந்நிலை வேறு. அங்கு ஓடும் பொன்னும் பிரித்துணரப்படாது இரண்டும் மாயை காரியம் என்ற ஒரு நிலைபற்றி உணரப்படும். "ஓடும் செம்பொனு மொக்கவே நோக்குவார்" (143) காண்க. ஈண்டு, இவை, பொன்னென்றும், மணி யென்றும், பருக்கை என்றும் பிரித்துணரப்பட்டனவாயினும் திருமுன்றி-

லிற் கிடக்கத்தகாமையும், அடியார்க்கிடையூறு செய்வதும் ஆகிய தன்மையில் ஒக்க எண்ணப்பட்டன என்க.

**பூங்கமல வாவி** - இது திருக்கோயிலைச்சுற்றி உள்ளது. "பொய்கை சூழும் பூம்புகலூர்" (1017)

**வாவியினிற் புக** - அடியார் அடிகளிற் படாமை கருதி நீரினுள் எறிந்தார். உலகிற் கலாம் விளையக் காரணமாகும் தன்மை கருதியும், உலக நன்மையின் பொருட்டு, நீரினுள் மறைந்து கிடக்க எறிந்தார் என்பதும் குறிப்பு.

**எறிந்தார்** - தீமை தரும் பண்டமாதலின் தீண்டாது எவையும் எறியப்பட்டன என்பதும் குறிப்பு.

**பதுக்கையுடன் - ஒக்க - ஏந்தி - எறிந்தார்** - "நவமின் சுடர்மணி...மணிபோகட்டி"-(1428) என்ற விடத்தும் மணிகளைத் திருவலகிட்டு மாற்றுதல் கூறப்பட்டது. ஆயின், அவை, தேவர் முடிகளினின்று வீழ்ந்த சிறுமணிகள். அடியார் அடிகளை ஊறுபடுத்தாவாயினும் குப்பை என மாற்றப்பட்டன. "அந்தியும் பகலும் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கும்" என்ற திருவிளையாடற்புராணம் காண்க. அவை சிலர் முடித்து வீழ்த்த தூய்மையற்ற பொருள்களாய் நாயனார் வரும் வழியிற் கிடக்கத் தகாதனவாதலும் காணப்படும். ஆனால் இங்கு நாயனார் ஏந்தி எறிந்தவை, உலகர் மிக விலை பெறக் கொள்ளும் புதிய மணிகளாய், ஏனையோர்க்குப் பயன்படத் தக்கவையாதல் காண்க. உலகப்பொருளில் அறவே பற்றுவிட்டோரே இவற்றை ஒதுக்குவர் என்பதறிக.

ஆங்கவையும்—என்பதும் பாடம். 417

1683. புல்லோடுங் கல்லோடும் பொன்னோடு மணியோடுஞ்
சொல்லோடும் வேறுபா டிலாநிலைமை துணிந்திருந்த
நல்லோர்முன் றிருப்புகலூர் நாயகனார் திருவருளால்
வில்லோடு நுதன்மடவார் விசும்பூடு வந்திழிந்தார். சகஅ

(இ - ள்) வெளிப்படை. புல்லுடனும், கல்லுடனும், பொன்னுடனும், மணிகளுடனும் சொல் ஓடும் வேறுபாடு இல்லை என்னும் நிலையைத் துணிந்து மனம் சிறிதும் மாறுதலின்றி இருந்த நல்லோராகிய நாயனாரது முன்பு, திருப்புகலூர் இறைவரது திருவருளினாலே வில்லைத் தோற்கடிக்கும் புருவங்கள் வளைந்தசைதற் கிடமாகிய நெற்றியையுடைய பெண்கள் விண்ணுலகத்தினின்றும் ஆகாய வழியாக வந்து இழிந்தனர்.

(வி - ரை) புல் - கல் - திருமுன்றிலில் இருந்தவை ; இவை என்றும் களைந்து பணி செய்தற்குரியன ; பொன் மணி - இவை அன்று வந்து தோன்றியவை. ஓடும் என்ற உருபை புல் - கல் - பொன் - மணி என்பவற்றுடன் தனித்தனி புணர்த்தியது, அவற்றினியல்பைத் தனித்தனி கண்டு வேறுபாடில்லாத தன்மை கண்ட குறிப்பாம்.

சொல் ஓடும் வேறுபாடு இலா நிலைமை - சொல்லாற் செல்கின்ற வேறுபாடு உண்மையில் இல்லாத தன்மை. ஓடும் - செல்லுகின்ற; பெயரெச்சம். ஓடும் என்றவை முன்னைய நான்கும் மூன்றனுருபுகள். உம்மைகள் நான்கும் எண்ணும்மைகள். சொல்லோடும் - என்றதனையும் சொல்லுடனும் என்றும், பொருளால் வேறுபாடிலாமையன்றி என்றும் உரைப்பாருமுண்டு. இது ஆசிரியரது சுவைபடும் சொற்பின் வருநிலை என்ற சொல்லணிகளுள் ஒன்று. 65-ம் ஆண்டுரைத்தவையும் பார்க்க. புல் - கல் - பொன், மணி என்ற இப்பெயர் வேறுபாடு சொல்லால் வருவன. உண்மை நிலையில் இப்பொருள்கள் யாவும் மாயையின் காரியங்கள் என்று காணும் தன்மைகொண்டு

முன்னையவை போலவே கொண்டுரைப்பர் இராமநாதச் செட்டியார். ஓடும் - எண்ணின்கண் வந்தன என்பர். இங்குச் "சொல்லால் வேறுபாடு உணர்ந்தாரே யல்லா மல்" என்றுரைப்பாருமுண்டு. துணிந்து இருந்த - இவ்வறிவினிடை ஊன்றி நிற்றல் ஏனையோர்க்கரிது என்பார் துணிந்து என்றார். இருந்த - அத்துணிபில் ஊன்றியிருத்தல்.

ஓடும் - இணையாக மாட்டாது தோல்வியுற்று ஓடும் என்றது குறிப்பு.

வில் ஓடும் நுதல் - புருவங்கள் வில்போன் றிருத்தலானும் வில் ஓடும் எனப்பட்டது. "செருவெழும் தனுவதொன்றும் சேமவில் ஒன்றுமாக" (திருஞான - புரா - 1097) உருவகம். வில் ஓடும் - என்றது புருவங்கள் வளைந்தும் நிமிர்ந்தும் அசைவு காட்டுதலை. "பொருகயற் கண்புடை பெயர" (1685) ஆடுவாராதலின் கண் பெயர்தலுக் கேற்பப் புருவங்கள் ஓடும் தன்மை படைத்தன என்க. ஓடும் - உவம உருபு:

விசும்பூடு - விசும்பினின்றும்; விண்ணுலகினின்றும். இவர்கள் தெய்வ அரம்பையர்.

இழிந்தார் - இறங்கி வந்தனர். தஞ்செயல் நாயனார்பாற் செலுத்தமாட்டாது "யாது மொரு செயலில்லாமையி னிறைஞ்சி" (1618) அகல்வார் என்றதும் குறிப்பு.

1684. வானகமின் னுக்கொடிகள் வந்திழிந்தா லெனவந்து
தானநிறை சுருதிகளிற் றருமலங்கா ரத்தன்மை
கானவமு தம்பரக்குங் கனிவாயி லொளிபரப்பப்
பானனெடுங் கண்கள்வெளி பரப்பியிசை பாடுவார்; சகக

1685. கற்பகப்பூந் தளிரடிபோங் காமருசா ரிகைசெய்ய
வுற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடுங் கைபெயரப்
பொற்புறுமக் கையின்வழி பொருகயற்கண் புடைபெயர
வற்புதப்பொற் கொடிநுடங்கி யாடுவபோ லாடுவார்; சஉ0

1686. ஆடுவார்; பாடுவா; ரலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போன்றணைவார்; குழல்அவிழ விடைநுடங்க
வோடுவார்; மாரவேளுடன்மீள்வ; ரொளிபெருக
நீடுவார் துகிலசைய நிற்பாரு மாயினார். சஉக

1684. (இ - ள்) வானகம்...என வந்து - ஆகாயத்தினின்றும் மின்னற் கொடிகள் வந்து கீழிறங்கியனபோல வந்து; தானநிறை...தன்மை - உரிய தானங்களினின்று நிறைந்து வரும் சுருதிகளினால் உண்டாகும் தக்க இனிமையுடனே; கான அமுதம்......பரப்ப - இசையமுதத்தினைப் பரவச் செய்கின்ற கொவ்வைக் கனி போன்ற வாயினிடத்து ஒளி விளங்க; பானல்...பரப்பி - நீலமலர் போன்ற நெடிய கண்களை வெளியிற் பரப்பி; இசை பாடுவார் - இவ்வாறு இசையினைப் பாடுவாராகி, சகக

1685. (இ - ள்) கற்பகம்...செய்ய - கற்பக மரத்தின் இளந்தளிர்கள் போன்ற அடிகள், செல்கின்ற அழகிய சாரிகை செய்யவும்; உற்பலம்...பெயர - செங்கழுநீர் மலரரும்புபோல மெல்லியனவாய விரல்களினால் வர்த்தனையோடு சுழற்றிக் கைகள் பெயரவும்; பொற்புறும் அக் கையின்வழி - அழகு பொருந்தும் அக் கைகளின் வழியே; பொரு...பெயர - பொருகின்ற கயல் மீன் போலும் கண்கள் புடை பெயர்ந்து செல்லவும்; அற்புதம்...போல் - அற்புதமுடைய பொன்னாலாகிய கொடிகள் அசைந்து ஆடுகின்றவைபோல; ஆடுவார் - ஆடுவார்களாகி, சஉ0

1686. (இ - ள்) ஆடுவார் - ஆடுவார்களும்; பாடுவார் - பாடுவார்களும் அலர்......பொழிவார் - பூக்களை மழைபோல மேலே பொழிவார்களும்; கூடுவார் போன்று அணைவார் - தழுவுபவர்போல வந்து பக்கத்திற் சேர்வார்களும்; குழல்... ஓடுவார் - கூந்தல் அவிழவும் இடை துவளவும் ஓடுவார்களும்; மார வேளுடன் மீள்வர் - காமனோடும் மீள்வார்களும்; ஒளி பெருக...நிற்பாரும் - காம வொளி பெருகக் காணும்படி நீண்ட உடை நழுவ நிற்பார்களும்; ஆயினர் - இவ்வாறு பல திறப்படச் செயல்களைச் செய்வாராயினர். சஉக

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1684. (வி - ரை) வானகம் - வானிடை நின்றும். ஐந்தனுருபு தொக்கது.

மின்னுக் கோடிகள் - உகரம் சாரியை. வந்து - முன்னையது மின் கொடிக்கும், பின்னையது மடவார்க்கும் கூட்டுக.

இழிந்தால் என - இறங்கியது போல; என - உவமவுருபு. உருவும் தொழிலும் பற்றிவந்த உவமம்.

தானம் - இசை பிறக்கும் இடம். "முறைத் தானம்" (949), "கிழமை கொள விடுந்தானம்" (950) "தானநிலைக் கோல்வடித்து" (திருஞான - புரா - 135). உரம், கண்டம், உச்சி முதலிய தானங்கள் என்பர் ஆறுமுகத் தம்பிரானார்; இவை எழுத்தொலி பிறக்குமிடங்கள்.

சுருதி - சுதி என்று வழங்கப்படும். மெட்டு என்பது கிராமியம்.

தரும் அலங்காரத் தன்மை - இசைகளிற் பொருந்தும் இனிமைத் தன்மை. தான நிறை சுருதி - இசை பிறக்கு மியல்பும், அலங்காரம் - அவ்வாறு பிறந்த இசையை அழகுபடப் பாகுபாடு படுத்து மியல்பும் ஆம். தரும் - அவ்வப் பாட்டுக்கும் பொருளுக்கும் ஏற்றபடி அமைதல் தகுதி எனப்படும்.

கான அமுதம் பரக்கும் - "அமுத இசைக் குழலொலி" (945). அமுதம் என்றது செவிப் புலனிற் சுவைக்கும் இனிமையை. அமுதம் உருவகம். பரக்கும் கனி வாய் - அமுதம் என்றதற் கேற்பக் கனி என்றும், செவி வாயாகத் துய்க்கப்படினும் கருவிகளின் மூலமன்றி இங்கு வாயினின்றும் வழங்கப்படுதலின் வாயின் என்றும் குறிப்பித்து விதந்து ஓதினார். ஒளி - பற்களின் ஒளி என்பாருமுண்டு.

வாயின் ஒளி பரப்ப - ஆடுங் காலத்து, இசைக்கும் பாட்டு மிக ஓசைபடாது மெல்லிதாய் வாயசைவி னளவில் இசைக்கப்படுதலின், வாயின் அசைவு காணப்படும் அளவில் விளக்கமாதலும், வாயின் புன்முறுவலொளியும் குறிக்க வாயின் ஒளி என்றார். ஒலி பரப்ப என்னாது ஒளி பரப்ப என்ற கருத்துமிது. கானம் - செவிப் புலனால் நுகரப்படுவதனை, அமுதம் என்று வாய்ப் புலனுகர்ச்சி பற்றியும், ஒளி என்று கட்புலனுகர்ச்சி பற்றியும் உரைத்த குறிப்புமிது.

பானல் நெடும் கண்கள் வெளி பரப்பி - பானல் - நீல மலர். நீல மலரின் தன்மை பற்றி நீண்ட என்றது, காமனது ஐந்து மலரம்புகளில் "மலர் நீலங் கொல்லு மதனம்பின் குணம்" என்றபடி, கொல்லுந் தன்மையுடையது நீல மலரம்பு என்பவாதலின், அத்தன்மை குறிப்பதற்கு. நாயனாரையன்றி ஏனையோர் எவரும் இவ்வரம்பையர் கண் வெளி பரப்புதலுக் காளாயினால் இறந்தே பட்டிருப்பர் என்பது குறிப்பு. வெளி பரப்பி - ஒளி பரப்ப - வெளி பரப்பி என்க. கான அமுதம் பரப்பும் வாயின் செயலுக்கேற்பக் கண்களும் வெளி பரப்பின என்க.

வெளி பரப்புதலாவது - கண் பார்வையை வலைபோல வெளியே வீசி அதனுளகப்பட்டாரை வயப்படுத்தும் செயன்முயற்சி. "கண் வலையை வீசியே" (தாயுமானார்).

இசைபாடுவார் - இப்பாட்டினுல் அரம்பையரது பாடலின் இயல்பு கூறப்பட்டது. ஆடலின் தன்மை மேல்வரும் பாட்டிற் கூறுவார்.

கானவழ திசைபரக்கும்—என்பதும் பாடம். 419

1685. (வி - ரை) கற்பகப்பூந் தளிர் அடி - பூந்தளிர் - மெல்லிய தளிர். அழகிய தளிர் என்றலுமாம். தெய்வ அரம்பையராதலின் கற்பகத் தளிரிற் பழகிய அடிகள் என்ற குறிப்புமாம்.

போம் - செல்கின்ற. நூலிற்குறித்த அளவுக்கொத்தபடி பெயர்த்து வைக்கப் படுகின்ற. முன் பயின்ற - பழகிய - என்றுரைத்தனர் முன் உரைகாரர்கள்.

சாரிகை - ஆடல் வகையுள் ஒன்று. இது புறக்கூத்திற் குரியது. வட்டமாய்த் திரிந்து வருதல் என்பர். சாரிகை செய்தல் என்பது மரபு. சாரிகை திரிதல் என்றும் கூறுப.

உற்பல மேன் முகிழ்விரல் - உற்பலம் - இங்குச் செங்காந்தள் குறித்தது. மேன்முகிழ் - மெல்லிய அரும்பு. முகிழ் விரல் - முகிழ்போலும் விரல். தளிர் அடி என்றும், முகிழ் விரல் என்றும், கூறியதற்கேற்பக் கயற்கண் என்றதும் காண்க. பண்பு பற்றி வந்த உவம உருபுகள் தொக்கன. பூந்தளிர் என்றும், மேன்முகிழ் என்றும், போருகயல் என்றும் மூன்றிடத்தும் உவமைப் பொருள்களுக்கு ஏற்ற அடைமொழிகள் புணர்த்தி ஓதினமை அவ்வுவமைகளின் பொதுத்தன்மையை விளக்குவன.

விரல் வட்டணையோடும் கை - பெயர - விரல்களாற் காட்டப்படும் வட்டணை என்ற அவிநயத்துடனே கை பெயர. பெயர்தல் - அசைதல். வட்டணை - வர்த்தனை என்ப. இதனைப் "பிண்டியும் பிணையலும் எழிற்கையுந் தொழிற்கையும்" என்பதாதியாகச் சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதையில் (12-25) விரித்துரைத்தவாற்றுலறிந்து கொள்க. விரல் வட்டணை - விரல்களின் சேர்க்கை. குவித்தல் - விரித்தல் - சுழற்றுதல் முதலியவாற்றுல் குறித்த பொருளை எடுத்துக் காட்டுதல். இவ்வாறு கையாற் செய்வது அவிநயம் எனப்படும்.

போற்பு உறும் அக் கையின் வழி - கையினுற் காட்டும் அந்த அவிநயத்தின் வழியே ஒத்து அமைந்து. பொற்பு - இங்குப் பொருளமைதி குறித்தது. அதாவது அவிநயம்.

கண் புடைபெயர்தலாவது சுழலுதல்-விழித்தல் - இமைத்தல் முதலியவாற்றுல் உட்கோள் புலப்பட அசைதல். காமப்போரில் முந்து நின்று தொழில் செய்வன கண்களே யாதலின் போருகயல் என்று உவமை கூறினர். "செரு எழுந் தனு" (திருஞான - புரா 1097) என்பது காண்க.

அடி - சாரிகை செய்ய—கை-வட்டணையோடும் பெயர—கண் - கையின் வழி பெயர - என்று இம்மூன்றுனும் ஆடலின் இயல்பெல்லாம் வடித்து எடுத்துக் காட்டிய வாறு கண்டுகொள்க. கால் - கை - கண் என்றிம்மூன்றுனும் ஒன்றித்த அகப்பொருளைக் காட்டுவதே ஆடலின் நுட்பமு மமைதியுமாம். மிடற்றுப் பாடலின் இயல்பை 221-ம் பாட்டிலும், கருவிப்பாடலுட் சிறந்த குழலின் இயல்பை ஆனயநாயனுர் புராணத்துள்ளும் (947 - 953), பாடலுடன் இயைந்த ஆடல் இயல்பை இங்கும் வைத்துக் காட்டியது ஆசிரியரது கவிமாண்பு.

அற்புதப் பொற்கொடி - பொற்கொடி ஆடாது; ஆனல் பொற்கொடி போன்ற இவர்கள் ஆடுதலின் அற்புதம் என்ருர். ஆடுவபோல் - இல்பொருளுவமை. நுடங்குதல் - துவளுதல்.

இவ்விரண்டு பாட்டானும், பாடலையும் ஆடலையும் கூறிய ஆசிரியர், ஆடல் பாடல்களின் மேல், அவற்றுடன் கூடிய காமச்செயன் முயற்சிகளை எல்லாம் தொகுத்து மேல்வரும் பாட்டிற் கூறுவார்.

கை பெயர்ப்பார்—ஆடினர்—என்பனவும் பாடங்கள். 420

1686. (வி - ரை) நிற்பாரும் என்ற விடத்திற்போல, ஆடுவார் - பாடுவார் - பொழிவார் - அணைவார் - ஓடுவார் - மீள்வர் - என்ற ஒவ்வொன்றுடனும் எண்ணும் மைகள் விரித்துக் கொள்க.

அலர்மாரிமேற் பொழிதல் - கூடுவார் போன்று அணைதல் - குழல் அவிழவும் இடை நுடங்கவும் ஓடுதல் - மீளுதல் - துகிலசைய நிற்றல் - என்ற இவை காம விகாரத்தைப் புலப்படுத்தவும் தூண்டவும் மேற்கொள்ளும் செயல்கள்.

மாரவேள் உடன் மீள்வர் - தமது சத்தி போதாமையால் காமனையும் துணை சேர்த்துக்கொண்டு வருவார்போல என்றது குறிப்பு. இங்கு மாரவேள் என்றது காமம் மீதூர்தற்கு அந்நூலின் வகுத்த பிற செயல்களையும் கொண்டு என்றதாம். இதற்குக் காம மயக்கத்துடன் என்றுரர் முன் உரைகாரர்கள். அது பொருந்தாமை யறிக.

வார் துகில் ஒளி பெருகுதல்-அசைய - என்றது துகில் அசைதலால் காம மயக்கத்தை மீதூரச் செய்தல். இங்கு ஒளி - என்றது காம இச்சையை. இவ்வாறன்றி ஒளியுடைய துகில் என்று துகிலுக்கு அடைமொழியாக்கி யுரைத்தலுமாம்.

நீடு - வார் - துகில் - நீடுதலும் வார்தலும் கொண்ட உடை. நீடுதல் - நீளமுடைமையும், வார்தல் - நேர்மையும் குறித்தன. இப்பாட்டில் ஆடுவார் - பாடுவார் - என்ற பிறவற்றிலெல்லாம் ஆர் - என்பவை வினைப்பெயரின் விகுதிகளாக, வகர உடம்படுமெய் பெற்று வார் - என நிற்கவும், நீடு - வார் - என்ற இதனில் வார் - என்பது பண்பு குறிக்கும் உரிச் சொல்லாக நிற்கவும் வைத்தது ஆசிரியரது கவி நயம். 553 - 554 - முதலியவை பார்க்க. வார் - நேர்மையும் நெடுமையுமாகிய பண்புணர்த்தும் உரிச்சொல் என்பது. "வார்தல் போகலொழுகல் மூன்று, நேர்பு நெடுமையுஞ் செய்யும் பொருள" (தொல் - சொல் - உரி 23).

ஆயினபின்—என்பதும் பாடம். 421

1687. இத்தன்மை யரம்பையர்க ளெவ்விதமுஞ் செயல்புரிய
அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா வன்புருகு
மெய்த்தன்மை யுணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தஞ்
சித்தநிலை திரியாது செய்பணியின் றலைநின்றார்; ௪௨௨

1688. இம்மாயப் பவத்தொடக்கா மிருவினைக டமைநோக்கி,
"யும்மாலிங் கென்னகுறை யுடையேன்யான்?; றிருவாரூர்
அம்மானுக் காளானே; னலையேன்மி னீ"ரென்று
"பொய்ம்மாயப் பெருங்கடலு" ளெனுந்திருத்தாண் டகம்புகன்றார்.

1687. (இ - ள்) இத்தன்மை...புரிய - இவ்வாறு அரம்பையர்கள் எல்லா விதத்தாலும் காமச் செய்கைகள் செய்யவும்; அத்தனார்...மேலோர் - அத்தனுடைய திருவடியின்கீழ்ப் பதியவைத்த நினைவு நீங்காத அன்பினால் உருகுகின்ற மெய்த்தன்மை பெற்ற உணர்ச்சியுடைய தூய தவத்தினிற்கும் மேலோராகிய நாயனார்; தம் சித்த நிலை திரியாது - தமது உள்ள நிலையினின்றும் ஒரு சிறிதும் மாறுபடாமல்; செய் பணியின் தலை நின்றார் - தாம் செய்யும் திருப்பணியில் உறைத்து நின்றனராகி, . ௪௨௨

1688. (இ - ள்) இம்மாயம்...நோக்கி - இந்த மாயா சம்பந்தமாகிய பிறவியின் தொடக்கில் விழுத்தும் இருவினைகளின் உருவமாய் வந்த அந்த அரமங்கையரைப் பார்த்து; "உம்மால்...நீர்" என்று - உம்மால் இங்கு எனக்கு ஆக வேண்டிய குறை யாது உளது? நான் திருவாரூர் அம்மானுக்கு ஆளாயினேன்; நீவிர் வீணே அலைதல் வேண்டா!" என்ற கருத்துக்கொண்டு; பொய்ம்மாயம்...புகன்றார் - "பொய்ம்மாயப் பெருங்கடலுள்" என்று தொடங்கும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தைப் பாடியருளினார். சஉங

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1687. (வி - ரை) இத்தன்மை - மேலே மூன்று பாட்டுக்களிலும் சொல்லிய ஆடலும் பாடலும் பிறவுமாகிய செய்தொழிற் றன்மை.

எவ்விதமும் - எல்லா விதங்களாலும். முற்றும்மை மேற் சொல்லாதனவாகிய அவ்வகைப் பிறவும் கூட்டி எல்லாமும் என்றுணர்த்திற்று.

அத்தனார்...விழுத்தவத்து மேலோர் - இச்செயல்களால் சித்த நிலை திரியாமைக்குக் காரணங் கூறுமுகத்தால் விழுத்தவமுடையாராதலின், என்று உடம்பொடு புணர்த்தி ஓதினார். நினைவகலாமையால் அன்பினால் உருகுதலும், அதனால் மெய்யுணர்வும், அவ்வுணர்வு மிகுதியினால் விழுத்தவமும் அதனால் மேன்மையுமாக ஒன்றற்கொன்று காரணமாய் வருதல் குறிக்க இவ்வாறு வைத்தோதினார்.

திருவடிக்கீழ் நினைவு அகலா அன்பு - "நாயகன் சேவடி தைவரு சிந்தை" (1405), "செம்பொற் றாளே, சார்வான திருமனமும்" (1490) "ஓவாது சிவன் றாள்கள் தழுவிய சிந்தை" (1676) முதலியவையும், "மாற்பே றுடையான் மலரடியே", "இன்னம்ப ரான்ற னிணையடியே" "ஐயாற னடித்தலமே" "திருவடியென் றலைமேல் வைத்தார்" என்பன முதலிய தேவாரத் திருவாக்குக்களும் காண்க. மேல் வரும் திருப்பதிகத்திலும் "அம்மான்ற னடித்தொடர்வா னுழிதர்கின்றேன்"; என்பதும் குறிக்க. "சிவபெருமான் றிருவடிக்கே பதிந்த நெஞ்சும்" (காஞ்சிப்புரா).

அன்பு உருகும் - அன்பினால் உருகுகின்ற. உள்ள முருகுதற்கு அன்பே காரணமாம். "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ்" (குறள்).

மெய்த்தன்மை உணர்வு-மெய்யுணர்வு. அஃதாவது அழியாத் தன்மையுடைய சத்து என்னும் சிவத்தன்மையி னிலைத்த உணர்வு. "மெய்த்தன்மை விளங்குதிருச் செவி" (திருஞான - புரா - 478), "நாவின் வாய்மையால்" (ஷை 1078), "வாய்மை குலவுதலால்" (ஷை 980), "அருளின் வாய்மை" (ஷை 983) முதலியவை காண்க.

விழுத்தவம் - சிவஞானச் செயல். சிவபூசையே தவமெனப்படும்.

சித்தநிலை திரியாது - நிலை - நிலைபெற்றதன்மை. திரிதல் - வைத்த நிலையினின்றும் பிறழ்தல்; வேறுபடுதல். திரியாது - ஒருசிறிதும் அலங்காமல்.

செய்பணி - மனம் வாக்குக் காயம் என்ற மூன்றாலும் இறைவனைப் பூசித்தல். இவை மேல் விளக்கப்பட்டன.

தலைநிற்றலாவது - சிறந்து நிற்றல்; முயலுதல் என்பதுமாம். தலை-ஏழனுருபாகக் கொண்டு பணியில் பிறழாது நின்றனர் என்றலுமாம். நின்றார் - (1687)- நோக்கி - என்று - எனும் - தாண்டகம் புகன்றார்-(1688) என மேல்வரும் பாட்டுடன் முடிக்க.

தலைநின்றார் - தலைநின்றாராகி; முற்றெச்சம். முற்றாகக் கொள்ளினு மிழுக்கில்லை. பணியிற் றலைநின்றமை திருத்தாண்டகத்தாற் பெறப்படும். 422

1688. (வி-ரை) இம்மாயப் பவத்தொடக்கு ஆம்-இகரச்சுட்டு இவ்வாறு அணிமையில் வந்து செயல்புரிந்த என்ற பொருளில் வந்தது. மாயம் - மாயாகாரியமாகிய.

**பவத் தொடக்கு ஆம்** - பவம் - பிறவி; தொடக்கு ஆம் - (பிறவியில் உயிரைப்) பிணித்தற்கு உதவும்; தொடக்குண்ணச் செய்யும். முன் பிறவி காரணமாகவரும் என்றுரைப்பாரு முண்டு.

**இருவினைகள் தமைநோக்கி**-செயல்புரிந்த அந்த உருவங்களைத் தேவ அரம்பையர் என்றாவது, பெண்கள் என்றாவது, காணாது இருவினைகளின் உருவமாகவே கண்டார் நாயனார் என்பது "புண்ணியங்காள்! தீவினைகாள்!" என்ற தேவாரத்தால் அறியப் படும். இருவினை - புண்ணிய பாவங்களைப் பயக்கும் நல்வினை தீவினைகள். தீவினை போலவே நல்வினையும் பிறவிக்குக் காரணமாதலின், பொன் விலங்கும் இரும்பு விலங் கும் போல, இருவினைகளையும் ஒன்றாகவே கடிவர் நல்லோர். உலக அனுபவங் களையும் உலகங்களையும், நல்லோர், காரிய உருவமாகிய அவ்வாறே கண்டு வைக்காது அவற்றின் காரண உருவமாகிய மாயையாகவே காண்பர். அவ்வாறு காணாது மாயை யிற் பட்டுழல மனம் வைக்கும் உயிர் பிறவியிற் சேரும் என்றும், அதன் பயனாய பிறவியிற் சேர்ந்து இருவினையின்பயன் பெற்று உழலும் என்றும் காண்பர். ஆதலின் நல்லோர் உலகின் மேன் மனம் வைக்காது ஒதுங்குவர் என்பார் "மாயப் பவத் தொடக்கா மிருவினைகள் தமைநோக்கி" என்றார்.

**குறை** - உபகாரம்; வேண்டுங்காரியம் என்ற பொருளில் வந்தது.

**திருவாரூர் அம்மானுக்கு ஆளானேன்** - திருப்புகலூரிற் பாடிய இப்பதிகத்தில் புகலூரைக்கூறாது "திருவாரூர் அம்மானுக்கு ஆளானேன்" என்ற தென்னையோ? எனில், அவ்வரம்பையர்களை நோக்கி, "நீவிர் தேவ அரம்பையர்; தேவ அரசனாகிய இந்திரனுக்குக் கீழ் ஏவல் செய்வோர். அவ்விந்திரன்றானும் திருவாரூரிறைவரது அடியார்களிடம் வந்து ஏவல் செய்யக் காலம் பார்த்திருப்பவன்; நானோ, உமது தலைவ னுக்குத் தலைவராகிய ஆரூர்ப் பெருமானிடம் நேரே ஆட் செய்யப்பெற்று, உமது தலை வன் வாயில்காத்திருக்கும் தேவாசிரியனில் கூடியிருக்குந் திருக்கூட்டத்துள் ஒரு வன். உமது செயல் என்னிடம் செய்தல் வேண்டா" என்று தமது தலைவரின் பெருமை பற்றிக் குறிப்பிட்டவாறு. மேலும் அவ்விந்திரனாற் தேவருலகத்திலும் பூவுலகத்திலும் பூசிக்கப்பட்டவர் தியாகேசர் என்பதும் குறிப்பு.

**அலையேன்மின் நீர்** - வீணே நீவிர் அலைதல் வேண்டா. உம்மால் இடர்ப்பட மாட்டேன். "இடறேன் மின்" "அலையேன்மின் - நீவிர் என்னை அலைத்தல் - வருத் தல் - வேண்டா என்றுரைப்பாரு முண்டு". "நம்மாலாட் டுணேன், ஒட்டந்தீங் கலை யேன் மின்னே" "பகட்டன் மின்னே" என்ற தேவாரங்கள் காண்க.

**என்று** - என்ற கருத்துக் கொண்டு. 423

திருவாரூர்

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்கா டீவினைகா டிருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர் கின்றே
னிடையிலேன் கெடுவீர்கா ளிடறேன் மின்னே. 1

மூள்வாய தொழிற்பஞ்சேந் திரிய வஞ்ச முகரிகாண் முழுதுமிவ் வுலகை யோடி
நாள்வாயு நும்முடைய மம்ம ராணை நடாத்துகின்றீர்க் கமையாதே யானேல் வானோர்
நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற நெடுந்தூணைப் பாதாளக் கருவை யாரூர் [னே. 9
ஆள்வானைக் கடுகச்சென் றடைவே னும்மா லாட்டுணே னோட்டந்தீங் கலையேன் மின்

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—மாயப் பவத் தொடக்காம் இருவினையின் உருவமாகிய அரம்பையர்களை நோக்கி "உம்மால் ஆகும் குறை எனக்கு ஒன்றுமில்லை. நான் திருவாரூர் அம்மானுக்கு ஆள். நீவிர் அலையேன்மின்" என்று கூறிய வகையால் உலகர்க்கு உபதேசித்தது. ஆசிரியர் 1688ல் காட்டியபடி. புண்ணியங்காள்! தீவினைகாள்! ஐம்பெருமா பூதங்காள்! சுவையொளியூ றோசைநாற்றத் துறுப்பினது குறிப்பாகுமைவீர்! விறலே! மிக்க சோர்வுபடு சூட்சியமே! சுகமே! மதமானமே! யார்வச் செற்றக் குரோதமே! உலோபமே! பொறையே! இடர்பாவ மெனமிக்க வேட்கை வெறுப்பே! நல்குரவே! செல்வே! வெகுட்சியே! மகிழ்ச்சியே! பஞ்சேந்திரிய முகரிகாள்! என்று இவ்வாறு உலகுயிர்களைக் குண உருவங்களாகப் பகுத்துக் காணும்படி ஆணையிட்டருளியது.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) பொய்ம் மாயப் பெருங்கடலில் - புண்ணியங்காள்! தீவினைகாள்! திருவே - இதனை இம்மாயப் பவத் தொடக்கா மிருவினைகள் என்று பொருள் விரித்தனர் ஆசிரியர். மாயப் பெருங்கடல் - உலக பாச பந்தங்கள். புலம்பா நிற்றலாவது - பிதற்றப் பட வருதல். மாயப் பெருங்கடல் - புவன போகங்கள். அரித்துத் தின்னுதலாவது - நோய் கொண்டவாறு சிறிது சிறிதாக நுகர்தல். அடங்க - அலையாது நிலைபெற. உழிதருதல் - சஞ்சரித்தல். இடை - வேறு குறை. இடறேல் - அலையேல்.—(2) ஐம்பெருமா பூதங்காள் - ஐம்பூதக் கூட்டினாலாகிய உடலும், கரணங்களும், குண முதலியனவும். ஒருவீர் வேண்டிற் றொருவீர் வேண்டீர் - "மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழி" (திருவா). "ஒரு புல னுகரும் போதங் கொன்றிலை யொன்றின் பாலும், வருபயன் மாறி மாறி வந்திடு மெல்லா மாறு" (சித்தி - 2 - 94); தருக்கேல் - தருக்கித் திரிதல் வேண்டா. தடைப்படுவேனுக் கருதி - எனது இறை பணியினின்று விலக்கப் படுவேனாக எண்ணி.—(3) சில்லுருவிற் குறி நிறுத்தி - சிற்றுருவைக் குறிக்கோளாகக் கொண்டு. சில்லுரு - அழிவுபடும் சிறுமையுடைய உரு. பல்லுருவில் தொழில்பூண்ட - பலப்பல மாயாவிகார உருவங்களை எடுத்துத் தொழில் செய்தலை மேற்கொண்ட; பளகீர் - பளகு - குற்றம். "பளகறுத் துடையான் கழல் பணிந்திலை" (திருவா - சத - 35). சுடர் மூன்று - ஞாயிறு - திங்கள் - தீ என்ற இவற்றின் சூக்குமப் பிழம்பு; உருவம் மூன்று - இவற்றின் உருவம்; தூ நயனம் - இவையே தமது கண்களாகக் கொண்ட நிலை; நமைப்புண்ணல் - வருத்தப் படுதல். கமைத்து - மன்னித்து. இழித்தற்கண் வந்த குறிப்பு மொழி. இந்நாள் ஆங்கில மரபிலும் Excuse me என்னும் வழக்கும் காண்க. நடமின் - அகன்று போமின்.—(4) உன்உரு - தன்மாத்திரைகள். உறுப்பினது - பொறிகளினது; குறிப்பு - வெளிப்படுக்கும் குறியீடு பெறக் காட்டும் இலட்சியம். என் சிந்தை புகுந்து தன் உருவைத் தந்தவன் - என்க. தன்உரு - சிவத்துவம். தலைப்படுவேன் - அடைவேன். "எல்லையினைத் தலைப்பட்டார்" (1075). துலைப்படுப்பான் - தூரமாக்குதற்கு. பான் - பொருட்டு என்ற பொருளில்வரும் வினையெச்ச விகுதி.—(5) துப்பு - அறிவு; அனுபவிக்கப்படும் பொருள் என்றலுமாம். சூட்சியம் - பலக் குறைவு. ஒப்பனையைப்

பாவித்தல் - தம் போலாக்குதலைக் கருதுதல். உழலுதல் - அலைதல். வைப்பு - சேமநிதி. வைகல் - சோழநாட்டுத் தலம். மாடக் கோயிலுமாம். ஒட்டந்து - ஓட்டந்தந்து என்றது ஒட்டந்து என மருவிற்று. இது பற்றியே "குழலவிழ விடை நடங்க ஓடுவார்" (1686) என்றார். 7, 8, 9-ம் பார்க்க.—(6) மதம் - மானம். ஆர்வம் - செற்றம் - குரோதம் - உலோபம். இவை காம முதலாகச் சொல்லப்பட்ட அறுவகைக் குற்றங்கள். பொறை - அவற்றின் மாறுபட்ட குணம். தீமையும் நன்மையும் கூறியவாறு; அவற்றுள் தீமையின் மிகுதிப்பாடும் குறித்தபடி. பொங்கும் - உள்ளம் கவர்ந்தோங்கி மேலெழும். செலுத்துண்ணேன் - கொண்டு செலுத்தப்பட மாட்டேன்.—(7) இடர் - பாவம் என மிக்க துக்கம் - இடரென்றும் அது பற்றி வரும் பாவமென்றும், அதன் விளைவாக வரும் மிக்க துக்கமென்றும் வருவன. இடர் - தீமை செய்தல். வேட்கை - விருப்பு. துடைகின்றீர் - அமைதியாக நிற்க வொட்டாமல் உள்ளிருந்து அலைக்கின்றீர். அமையாதே - போதாதோ.—(8) விரைந்தாளும் நல்குரவு-விரைந்து ஆட்படுத்தும் நல்குரவு என்றது அதன் வலிமை குறித்தது. நல்குரவு வந்தோர் விரைந்து நலப்படுவதும் காணப்படும். நல்குரவு - செல்வம் (செல்வ நிலை) - வேதுட்சி - மகிழ்ச்சி. வெறுப்பு - மாறுபட்ட குணநிலைகள். ஒட்டந்து பகட்டேன்மின்-"ஓடுவர்-மார வேளுடன் மீள்வர்" (1686)—(9) முள்வாய தொழில் - ஒன்றன்பின் ஒன்றாகக் காரண காரியமாய்த் தொடர்ந்து வரும் தொழில் உடைய. முகரி - ஆரவாரஞ் செய்வோன். மம்மர் - மயக்கம். நீள்வானம்...தூண் - வானத்து அண்டகோளகைகளை யெல்லாம் ஒருவழிப்படுத்தி நிறுத்தும் சத்தி நெடுந் தூண் எனப்பட்டது. வானநூல் நுட்பம். பாதாளக் கரு - மேலே வானந் தாங்கியதுபோலக் கீழே உலகங்களைத் தாங்கும் சத்தி.—(10) துப்பறை - அனுபவிக்கப்படு பொருள். மிகை செலுத்துதல் - செருக்குப் பற்றிய ஆணை செலுத்துதல், தருக்கி மிக...அடி எடுத்து - உமது செருக்குச் செயலையும் அடக்குவான் என்பது குறிப்பு. இடையிலேன் - இடைவிடாது பற்றினேன்.

குறிப்பு:—புவன போகங்களை நன்மை தீமையாகிய குண உருவங்களாகக் கண்டு, நீவிர் உலகங்களை எல்லாம் அலைத்து ஆணை செய்கின்றீர். உமக்கு உலகமெல்லாம் போதாதோ? அம்மட்டில் அமையாதோ? அவ்வாறே என்னிடம் வந்து ஆணை செலுத்த முயல்கின்றீர்!; யானோ திருவாரூர் அம்மானுக்கு ஆளாகி அவன் பணியில் இடையறாது நிற்பேன்; உம்மால் ஆட்டுண்ணேன். நீவிர் அலையாதீர். போமின்! என்று உலகருக்கு எடுத்துக் காட்டிய நல் உபதேசம் இத்திருப்பதிகம். "பெண்ணாகி வந்தொரு மாயப் பிசாசம்" (பட்டினத்தார்) என்பது முதலிய திருவாக்குக்கள் காண்க. இவை மகளிரிழிபு கூறுந் துணையன்றி எல்லாப் புவன போகங்களாகிய மாயைத் தொடக்கினின்றும் தப்பும் வழி கூறிய படியாம்.

1689. மாதரவர் மருங்கணைய வந்தெய்தி மதனவசக்
காதலவர் புரிந்தொழுகுங் கைதவங்கள் செய்திடவும்
பேதமிலா வோருணர்விற் பெரியவரைப் பெயர்விக்க
யாதுமொரு செயலில்லா மையிலிறைஞ்சி யெதிரகன்றார். சஉச

(இ-ள்) மாதர் அவர்...எய்தி - தேவ அரம்பையர்கள் அந் நாயனாரது பக்கலில் வந்து; மதன வசம்......செய்திடவும் - காம வயப்பட்ட காதலையுடையார்கள் செய்யும் வஞ்சனைகளை யெல்லாம் செய்திடவும்; பேதமிலா...பெயர்விக்க - தம் நிலையினின்றும் பிறழாத ஒருமைப்பட்ட உணர்வினையுடைய பெரியோராகிய நாயனாரை அந்நிலையினின்றும் சித்த நிலையை மாற்றுதற்கு; யாதும் ஒரு செயல் இல்லாமை

யில் - வேறு எவ்விதமானசெயலும் செய்ய இயலாமையால் இறைஞ்சி எதிர் அகன்ருர் - வணங்கி அங்கு நின்றும் நீங்கி விட்டனர்.

(வி - ரை) அவர் - "உம்மாலிங் கென்னகுறை யுடையேன் - நீர் அலையேன்மின்" என்று தாண்டகம் புகன்ற அவர் என முன்னறிசுட்டு. மருங்கு அணைய வந்து எய்தி - முன்னர்க் "கூடுவார் போன்றணைவார்" என்றது பக்கத்து வருவார்போல வந்தது. இங்குக் கூறியது உண்மையிற் பக்கத்திலே வந்த செயலாம்.

மதனவசக் காதலவர் - காம விகாரமாகிய மயக்கினுட்பட்ட பிறர் எல்லாம். இதற்கு இவ்வாறன்றி அந்த அரம்பையர் என்பாருமுண்டு. மதன் அவசக் காதல் - என்று பிரித்துரைத்தலுமாம். காதலவர் - காதலினுட் பட்டோர்.

புரிந்தொழுகும் கைதவங்கள் - (காமத்தின் வயப்பட்டோர்) செய்யும் தீயொழுக்கத்துட்பட்ட கீழ்மைச் செயல்கள். இவை மேல் 1686-ல் உரைத்தவற்றின் வேறுயினவை. மேற்கூறியவை சற்றுத் தூரத்தின் விலகி நின்று காம இச்சையைத் தூண்டச் செய்யப்படுவன; இங்குக் கூறியவை பக்கத்தில் அணுகிச் செய்யப்படும் காமச் சாகசச் செய்கைகள். இவை சொல்லவுந் தகாதன என்பார் முன்னவற்றினின்றும் வேறு பிரித்தும், "மதனவசக் காதலவர் புரிந்தொழுகுங் கைதவங்கள்" என்று பொதுப் படவும் கூறினார். இதற்கு இவ்வாறன்றி அவர் என்பதற்கு வாகீசர் என்று கொண்டு, "மன்மதனால் தந் நிலைமையிழக்கும் விகாரத்தை அவ்வாகீச மாமுனிவர் விரும்பினும் மயக்க வழியிற் செல்லுவதற் கேதுவான வஞ்சனைகள்" என்றுரைத்தனர் முன் உரைகாரர்கள்.

செய்திடவும் - உம்மை உயர்வு சிறப்பு.

பேதமிலா ஓர்உணர்விற் பெரியவர் - பேதமிலாமை - நிலைபிறழாத தன்மை. "சித்த நிலை திரியாது" என்ற நிலை. ஓர் வைத்த குறியினின்றும் மாறுதிருத்தல். "ஒன்றி உணர்வு - பிறிதெங்கும் செல்லாது திருவடியிற் ஒன்றுபட்ட உணர்வு. "ஒன்றியிருந்து நினைமின்கள்" (தேவா). ஓர்-நினைக்கின்ற என்றலுமாம். பேதமிலா உணர்வு-ஓர் உணர்வு என்று தனித்தனி கூட்டுக. பேதமிலா - என்பதற்கு அரம்பையர் செயல்களினாற் பேதிக்கப்படாத என்றுரைப்பாருமுண்டு.

பெரியவர் - பேதமிலா ஒருணர்வுடைமையாற் பெரியவர் என்பது குறிக்க. உடம்பொடு புணர்த்திச் சிறப்பித்தார். "செயற்கரிய செய்வார் பெரியர்" (குறள்) என்ற கருத்து இங்குச் சிறப்பிற் காணத் தக்கது.

பெயர்வித்தலாவது தந் நிலையினின்றும் மாறச் செய்தல்.

யாதும் ஒரு செயல் இல்லாமையில் - எதுவும் செய்ய மாட்டாமையால். செயலும் என்று முற்றும்மை விரிக்க. யாதும் - எவ்வகையானும்.

எதிர் - எதிரினின்றும் - திருமுன்பு நின்றும்.

எதிர் நின்றார் - என்ற பாடம் பிழை.

பேதமிலா ஒருணர்விற் பெரியவர் என்ற இடத்து நாயனார் எல்லாவற்றையும்
சிவமாகக் காணும்பேறு பெற்றமையால் அவருக்கு மண் - பெண் - பொன் எல்லாம்
பேதமின்றிச் சிவமாகத் தோன்றுதல் இயல்பு என்று விசேடவுரை காண்பாரு
முண்டு. அவர் பேதமிலா என்றதற்கு உலகப்பொருள் எல்லாம் பேதமின்றிச்
சிவமாகக் காணும் என்று கொண்டனர். அப்பர் இங்கு அரம்பையரைச் சிவமாகத்
காணாது மயக்குமியல்புடைய ஐம்பூத விகாரங்களாகவும் குணவுருவங்களாகவும் கண் 424
டார் என்பதறியப்படுதலின் இதன் பொருத்தம் ஆராயத்தக்கது.

1690. இந்நிலைமை யுலகேழு மெய்தவறிந் தியல்பேத்த
மன்னியவன் புறுபத்தி வடிவான வாகீசர்
மின்னிலவுஞ் சடையார்த மெய்ப்பொருடா னெய்தவரு
மந்நிலைமை யணித்தாகச் சிலநாளங் கமர்ந்திருந்தார். ௪௨௫

(இ - ள்) இந்நிலைமை...ஏத்த - இந்த நிலைமையினை ஏழுலகங்களும் பொருந்த அறிந்து இவ்வியல்பினைத் துதிக்க; மன்னிய......வாகீசர் - நிலைபெற்ற அன்பு பொருந்திய பத்தியினது வடிவமேயாகி நின்ற திருநாவுக்கரசு நாயனார்; மின் நிலவும்... அணித்தாக - ஒளியுடைய சடையினையுடையராகிய சிவபெருமானது மெய்ப்பொருளினையே பொருந்த வருகின்ற அந்நிலைமை அணிமையுடையதாக; சில நாள் அங்கு அமர்ந்திருந்தார் - சில நாள்கள் அத்திருத்தலத்தில் விரும்பி எழுந்தருளி யிருந்தனர்.

(வி - ரை) இந்நிலைமை - கல்லும் பொன்னும் வேறுபாடில்லாமை கண்டும், அரம்பையர்களை மாயப் பவத் தொடக்கா மிருவினைகளின் உருவமாகக் கண்டும், தமது சித்த நிலை திரியாது செய்பணியின் றலைநின்ற இந்த நிலைமை. இகரச் சுட்டு அணிமையில் நிகழ்ந்த இவ்விரு செயல்களையும் குறித்தது.

உலகு ஏழும் எய்த அறிந்து - ஏழுலகத்தவர்களும் இந்நிலைமையின் பெருமையை அறிந்து அதனைத் தாமும் குறிக்கோளாகக் கொண்டு அடைய. எய்த - எய்தும் பொருட்டு.

இயல்பு ஏத்த - அதன் இயல்பினைத் துதிக்க. தத்தம் இயல்பினாற் றுதிக்க என்றலுமாம்.

மன்னிய அன்பு உறு பத்தி வடிவான - இடையறாது நிலைபெற்ற அன்பினால் விளைந்த பத்தி. "பத்தி முதல் அன்பு நீரிற் பணைத்தோங்கி" (வெள் - சருக் - 2) பத்தி வடிவு ஆன - பத்தி என்ற குணமே ஒரு வடிவம் எடுத்தாற்போன்ற. "இந்தக் கருணை கண்டால்" (1406) என்ற நிலையின்மேல், அது முதிர்ந்து பத்தி உருவாயினது போல. இங்குப் பத்தி என்பது திருத்தொண்டு என்றதன் முழுமை நிலையின் உருவம் குறித்தது.

மெய்ப் பொருள்தான் - சிவத்துவ விளைவாகிய சிவபோகம். திருவருள் நிறைவில் ஒடுங்கி நிற்கும் மீளாத பேரின்ப நிலை. தான் - தன்னையே என்று உறுதிப் பொருள் தந்து நின்றது. மெய்யருள்தான் என்ற பாடம் சிறப்பின்று.

எய்தவரும் அந்நிலைமை - அடையும் அந்தத் தன்மையாவது சிவனடிக்கீழ் அமர்ந்து மீளா நிலையை அடையும் பருவம். "பாதமெய்ந் நீழல் சேரும் பருவமீது" (திருஞான - புரா - 1245).

அணித்தாக - நெருங்க; பருவம் அடையும் காலம் நெருங்கியதாக அது வரை. அமர்ந்து - விரும்பி. 425

1691. மன்னியவந் தக்கரண மருவுதலைப் பாட்டினாற்
"தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன்
என்னையினிச் சேவடிக்கீ ழிருத்திடு" மென் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினாற் றிருவிருத்தம் பலமொழிந்தார்.

(இ - ள்) மன்னிய...தலைப் பாட்டினால் - சிவபெருமானுடைய திருவடிகளில் நிலைபெற்ற அறிவு இச்சை செயல்கள் பொருந்திய சேர்வினாலே; "தன்னுடைய இருத்திடும்" என்று - தன்னைப் புகலாக அடைந்த தமியேனாகிய என்னைப் புகலூர் இறைவர் இனித் தமது சேவடியின் கீழே இருக்கச் செய்வார்" என்ற கருத்துடன்;

முன்னுணர்வின் முயற்சியினால் - முன்னைப் பிறவியின் உணர்வு சார அந்த மன எழுச்சியினாலே; திருவிருத்தம் பல மொழிந்தார் - பல திருவிருத்தங்களைப் பாடியருளினர்.

(வி - ரை) மன்னிய அந்தக்கரணம் மருவு தலைப்பாட்டினால் - இதுகாறும் புறம்பேயும் இறைபணியினின்று பத்தராது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுவரனெனக்கண்டு வியாபரித்து நின்ற அறிவு இச்சை செயல்கள் உண்முகமாக மடங்கிச் சிவானந்த மொன்றையே விடயீகரித்து நின்றமையால்.

தலைப்படல் - விடயீகரித்தல். " தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே " என்புழிப்போலக் கொள்க.

அந்தக்கரணம் - அந்தக்கரணங்களை அதிட்டித்து நிற்கும் அறிவு இச்சை செயல்களை அந்தக்கரணமென் றுபசரித்தார்.

தன்னுடைய சரணான தமியேனை - பாசங்களின் வாசனையினும் நீங்கித் திருவடியொன்றையே விடயீகரித்து நிற்றலின் இவ்வாறு கூறினார். "அறுகயி றூசலானேன்" (தேவா) என்றதுங் காண்க. " தமியே னுளம்புகுதல் " என்ற சிவஞானபோத உதாரண வெண்பாப் பகுதியுரை காண்க.

தன்னுடைய...இருத்திடும் - இது திருவிருத்தப் பதிகத்தின் கருத்தும் உட்குறிப்புமாம். பதிகக் குறிப்பும் பதிகப் பாட்டுக் குறிப்பும் பார்க்க. பதிக முதற் பாட்டின் குறிப்பினை நாயனாரது திருவுள்ள நிலையை புலப்படுக்கும்படி ஆசிரியர் எடுத்துக் காட்டியவாறு.

திருவிருத்தம் பல - பதிகப் பாட்டுக்கள் பல. பதிக முழுதும் கிடைத்திலது!

இனிச் சேவடிக்கீழ் இருத்திடும் - இனி - இவ்வுலகில் வந்த குறை யாவும் தீர்ந்து விட்டபடியால் இனி வேறு இங்குத் தங்கும் செயலில்லை என்றது குறிப்பு.

சரண் ஆன - சரணமாக - புகலாக - வந்தடைந்த. தமியேன் - வேறு துணையில்லாதவன். உலகச்சார்பு - உடற்சார்பு - உயிர்ச்சார்பு முற்றும் நீங்கிய நிலையில் உன்னையன்றி வேறு சார்பில்லாதவன். "உன்பற் றொழிய ஒருபற்று மில்லே னுடையவனே."

இருத்துதல் - நல்லதவத்தில் குறைகண்டு முன்னர் உலகிற் செல்ல விட்டது போல விடாமல் நிலையாய் வைத்தல் என்றது குறிப்பு.

முன்னுணர்வின் முயற்சி - முன்னைப் பிறவியின் உணர்வுவந்து மூள, அந்த மன எழுச்சியினால் வந்த முயற்சி. மனத்தூண்டுதல் வாக்குக்குக் காரணமாய்நிற்பது. "முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்" (1313), "பண்டுபுரி நற்றவத்துப் பழுதினள விறைவழுவுந், தொண்டர்" (1314) என்றவையும் ஆண்டுரைத்தவையும் காண்க.

426

திருப்புகலூர்

திருச்சிற்றம்பலம் திருவிருத்தம்

தன்னைச் சரணென்று தாளடைந் தேன்ற னடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ!
என்னைப் பிறப்பறுத் தேன்வினைக் கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான்சிவ லோகத் திருத்திடுமே.

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—புகலூர் இறைவர் என்னை இவ்வுலகத்துத் தங்க வைக்காது தனது திருவடியின் கீழ் நிலையாக இருக்கச் செய்யும் என்று முன்னுணர்வினால் மொழிந்தது.

பதிகப்பாட்டுக் குறிப்பு :—(1) சரண் - அடைக்கலம். புன்னைப் பொழில் - புன்னை-தலமரம்.—(2) பார்க்க, என்னை...இருத்திடும் - நாயனாரது உட்குறிப்பாகிய முத்தி விண்ணப்பம். (திருஞான - புரா - 1244, 1245); (வெள் - சரு - 30) முதலியவை இங்கு வைத்துக் கருதத்தக்கன. கிடக்கலோட்டான் - கிடப்பதைச் சகிக்கலாற்றுதவராகிய. சிவலோகம் - திருவடி-அருள் நிறைவு.—(2-4) "என்னை... யாது?" - இடும்பை என்பவை யாவும் என்பாற்கூடி நின்றன. என்னை அதற்கென்று தேவரீர் நியதிப்படுத்தி யிராவிடில் அவற்றுக்குத் தங்குமிடம்தான் யாது? என்று இறைவரை வினவியது. இடும்பை - துன்பம். இங்கு அவற்றுட் பெரிய பிறவித் துன்பம் குறித்தது. துன்பங்களின்பா லிரங்கிக் கூறியதுபோன்ற இகழ்ச்சிக் குறிப்பு.—(4 - 9) என்னளவே...கிடப்பார் - இடைக்கலத்தே - இங்கு உலகிலுமின்றி, அங்குச் சிவனிடத்துமின்றி இடையில் தடுமாறி; "இடைக்கல மல்லேன்" (தேவா); கிடப்பார் என்னளவே என்று கூட்டுக, கிடப்பார் நிலை என்னளவேயாகும், என்னிடத்ததேயாம். "என்னுெப்பில் என்னையும்" (திருவா). நானே அந்நிலைக்குச் சிறந்த உதாரணமாவேன். ஆட்பட்டு - ஆட்பட்டும். சிறப்பும்மை தொக்கது. எனக்கு ஒன்றும் இரங்காத உத்தமனே உன்னளவே என்க. இரங்காத உத்தமன் - இகழ்ச்சிக் குறிப்புச் சொல். முரண் அணிச் சுவைபடக் கூறியதுமாம். இரங்காத உத்தமன் என்ற நிலைக்கு நீயே உதாரணம், ஒன்றும் சிறிதும்; எவ்வாற்றானும்.—(10) ஓணப்பிரான் - விட்டுணு. திருவோணத்தைத் தனது நாளாக உடையவன். தோள் நற்பிரான் - இராவணன். இகழ்ச்சிக் குறிப்பு. ந - நல்ல; கோணப்பிரான் - அடியாரின் பொருட்டுச் சாய்ந்த திருக்கோலமுடைய பெருமான். திருப்புகலூர் இறைவரது திருமேனி ஒருபாற் சாய்ந்திருக்கும் நிலையாற் போந்த பெயர். தலச் சரிதக்குறிப்பு. இப்பதிகத்துச் சில பாடல்களே கிடைத்துள்ளன !.

1692. மண்முதலா முலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
"புண்ணியா! வுன்னடிக்கே போதுகின்றே" னெனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
யண்ணலார் சேவடிக்கீ ழாண்டவர சமர்ந்திருந்தார். ௪௨௭

(இ - ள்) மண் முதலாம் உலகு ஏத்த - இந்தப் பூவுலக முதலாகிய எல்லா உலகங்களும் எடுத்துத் துதிக்கும்படி; மன்னு திருத்தாண்டகத்தை - நிலைபெற்ற திருத்தாண்டகப் பதிகத்தை; "புண்ணியா!...போதுகின்றேன்" எனப்புகன்று - "புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்" என்ற முடிபுடையதாக எடுத்துப் பாடியருளி; நண்ணரிய - சென்று சேர்வதற்கரிய; சிவ ஆனந்த ஞான வடிவேயாகி - சிவானந்தத்துடன் ஒன்றுபட்ட பரம ஞான வடிவமேயாகி ; அண்ணலார்...அமர்ந்திருந்தார்- பெருமை பொருந்திய சிவபெருமானது சேவடியின்கீழே ஆண்ட அரசுகள் எழுந்தருளி மீளாது அமர்ந்திருந்தனர்.

(வி - ரை) மண் முதலாம் உலகு - என்றது ஏனை மேல் கீழ் உலகங்கள் இருவினைப் பயன்களாகிய இன்பத் துன்பங்களை அனுபவித்துக் கழித்து மீளப் பிறவிக்கேதுவாதலல்லது, சிவ தருமங்களைச் செய்தற்கிடனாய் முத்திக்கேதுவாத லில்லாமையின், சிறப்புப்பயன் நோக்கி மண்ணுலகை எடுத்துக்கூறி மண்முதலாம் என்றுவிதந்துகூறியு

துடன், ஏனையவற்றைத் தொக வைத்தார். "மண்ணிலிரு வினைக்குடலாய் வானிர யத் துயர்க்குடலாய்" என்ற கோயிற்புராணக் கருத்தை ஈண்டு வைத்துக் காண்க.

**உலகு ஏத்த மன்னும்** - உலகுயிர்கள் ஏத்தி நலம்பெற் றுய்யும் பொருட்டே நிலைபெற்று விளங்கும் திருப்பதிகம் என்றபடி.

**"புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்" என** - இது திருப்பதிகத்தின் மகுடமும் உட்குறிப்புமாம். முன் பாட்டின் கருத்தினையே தொடர்ந்து நாயனாரது திருவுள்ளக்கிடையை எடுத்துக் காட்டியபடி.

**நண்ணரிய** - சென்று சேர்தலரிதாகிய. "சென்றடையாத திரு" என்ற கருத்து. இடப்பெயர்ச்சி யின்றி உள்ளே நிறைந்து விரிந்த அருள் நிறைவு குறித்தது. போக்கும் வரவும் இரவு பகலும் என்ற நிலைகள் இல்லாத நிறைவினுள் வியாபக வியாப்பியமாய் அடைதலன்றி, **நண்ணுதல்** என்று கூறும், நிலையில்லாத, முடிந்த இடமாதல் குறிப்பு. ஏனையோர்க்கு நண்ணுதல் அரிய என்று உரைப்பாருமுண்டு.

**சிவானந்த ஞானவடிவே ஆகி** - **சிவம்** - சத்து; **ஞானம்** - சித்து. எனவே **சச்சிதானந்தமாகிய** இறைவனது நிறைந்த அருள் வடிவேயாகி என்றவாறு. **ஏகாரம்** - பிரிநிலை. என்னை? முன் இருந்தது சேவடிக் கீழிருக்கு நிலையேயாயினும் அது மாயிகமாகிய தேக முதலியவற்றுடன் கூடியிருந்த சீவன்முத்தி நிலையாகலின் அந் நிலையில் அறிவிச்சை தொழில்களின் விருத்தி புறத்தும் வியாபித்தலின்; இங்கு **ஆகிய** இந்நிலை அவ்வாறன்றிச் சிவானந் தானுபவம் ஒன்றுமே தோன்ற நிற்கும் நிலையாம். அளவும் குறைவுமாகிய எல்லாம் வேறு பிரிக்கப்பட்டன என்க. **ஆகி** - ஆக்கச் சொல் அருளின் நிறைவாகிய உண்மை குறித்தது, "அங்நின்ற நிலை பெயர்ப்பா ரையர்திரு மருங்கணைந்தார்" (965) "அடிநீழற் றலையா நிலைமை" (1029) என்பன முதலியவை காண்க. அற்றாயின், அஞ்ஞான்று, "தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனி" முதலியனவாக உலகர் கண்டு கொண்டிருந்தபடி நாயனாரது திருவுருவம் என்னவாயிற்று? எனின், கருப்பூரச் சோதிபோலக் கரைந்து இறைவரது அருள் ஒளி நிறைவினுக்குள் கலந்ததென்க. நந்தனார் "உலகுய்ய நடமாடு, மெல்லை யினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால்" (1075) என்றதும், மணிவாசகனார் "இத் திருவாசகத்துக்குப் பொருளாவார் இவரே" என்று ஆனந்தப் பெருங்கூத்த ரைக் "கைகாட்டித் தம்முருவங் காட்டாமல் மறைந்தார்" என்றதும் இங்கு வைத்துக் காணத்தக்கன. "பூம்புகலூர் மேவிய புண்ணியனே உன்னடிக்கே போதுகின்றேன்" என்று சொல்லிக்கொண்டு புகலூர்ப் பெருமானது அருள் நிறைவினுக்குள் உலகர் காணுவகை உருக்கரந்து கலந்தனர் என்பதாம்.

இறைவர் ஒரு சிங்கத்தின் உருவெடுத்து வந்து நாயனாரைத் தின்று விழுங்கி விட்டனர் என்று ஒரு கற்பனைக் கதை கேட்கப் படுகின்றது. திருப்புகலூரில் அத்தகையதொரு உருவமும் செதுக்கப்பட்டுக் கோயிலினுள் வழிபடுமாறு வெளிச்சுற்று மதிற்சுவரில் வைக்கப்பட்டுள்ளது. தலபுராணமும், "சிங்கமே உன்னடிக்கே போதுகின்றேன்" என்ற திருவாக்கும் இதற்கு ஆதரவென்று சொல்லவும் படுகின்றது. ஆனால் திருத்தொண்டர் புராணமாகிய அருள் வாக்கு இதற்கு இடந்தரவில்லை. உயர்சைவத் திருவாளரும், பேரறிஞரும், பேரன்பருமாகிய கயப்பாக்கம் சதாசிவ செட்டியார், சுவாமிநாத பண்டிதர் முதலிய பெரியோர் கள் இவ்வரலாற்றைக் கண்டித்தொதுக்கினர். "சிங்கமே" என்றதனாற் சிங்க உருவ மாக வந்தாரெனின், "போரேறே" (5) என்றதனாற் போரேறாகவும், "புரிசடையாய்" (6) என்றதனால் சடையாராகவும் வந்தார் என்ன வேண்டிவந்து பலவாறும் அசம்பா

விதமாய் முடியும். மேலும் உடலின் அபிமான நினைவு முற்றும் மறந்து இறைவனது நினைவில் நீயினடுவுள் ஏழுநாள் இருந்த நாயனாரது பெருமைக் கிழுக்காகப், பலவாறும் இவ்வரலாற்றில் சிங்கமாய் இறைவர் உண்டபோது நாயனார் "வலிக்குதே" என்றதாகவும், இறைவர் "இனிக்குதே" என்றதாகவும் பலபட அசம்பாவிதங்களும் கேட்கப்படுகின்றன. இதுவுமொரு பொருளாகக் கொண்டு நாயனாரது திருநாளன்று திருப்புகலூரில் நாயனாரது திருநாளில் இறைவரது அருட்குறியைச் சிங்க உருவமாகச் சித்திரித்து வைத்தலும், அவ்விடத்து விளக்குகளை யெல்லாம் அவித்து முழு இருளில் நாயனாரை எழுந்தருளுவித்துத் திருக்காப் பிடுதலுமாகிய தவறான முறைகளும் வழக்கமாகக் கொண்டாடப் படுகின்ற நிலை பெரிதும் வருந்தத் தக்கதாம்!. பேரொளி உருவாய்ச் சிவானந்த ஞான வடிவேயாகி அமர்ந்ததனை இருளில் அமர்ந்ததாகக் காட்டுவது சிறிதும் பொருந்தாது. ஞானம் எஞ்ஞான்றும் எவ்வாற்றானும் இருளுருவமாகாது; அதன் மறுதலையேயா மென்க. அன்பர்களும் அதிகாரிகளும் இவற்றைச் சிந்திப்பார்களாக.

சேவடிக்கீழ் அமர்ந்திருந்தார் - "உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்து" என்றதனால் சிவானந்த ஞானவடிவு பெற்றநிலை ஆண்ட அரசுகளுக்கும், அதனைத் தரும் நிலை இறைவருக்கும் சார்ந்தனவாதலின் சேவடிக்கீழ் என்றார்.

அமர்ந்திருந்தலாவது - மீளாத நிலையை அடைதல்

அரசெய்தினார்—என்பதும் பாடம். 427

திருப்புகலூர்

திருச்சிற்றம்பலம் திருத்தாண்டகம்

எண்ணுகே னென்சொல்லி யெண்ணு கேனோ
வெம்பெருமான் றிருவடியே யெண்ணி னல்லாற்
கண்ணிலேன் மற்றோர் களைக ணில்லேன்
கழலடியே கைதொழுது காணி னல்லால்
ஒண்ணுளே யொன்பது வாசல் வைத்தா
யொக்க வடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா வுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 1

அங்கமே பூண்டா யனலா டினா யாதிரையா யானிழலா யானே றூர்ந்தாய்
பங்கமொன் றில்லாத படர்சடையினாய் பாம்போடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்
சங்கையொன் றின்றியே தேவர் வேண்டச் சமுத்திரத்தி னஞ்சுண்டு சாவா மூவாச்
சிங்கமே யுன்னடிக்கே போது கின்றேன் திருப்புகலூர் மேவிய தேவ தேவே. 2

ஒருவனையு மல்லா துணரா துள்ள முணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையு மூவரையு மென்மே லேவி யில்லாத தரவறுத்தாய்க் கில்லே னேலக்
கருவரைசூழ் கான விலங்கை வேந்தன் கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையா யுன்னடிக்கே போது கின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 10

திருச்சிற்றம்பலம்

பதிகக் குறிப்பு :—புண்ணியா - சிங்கமே - பொருளாவாய் - போரேறே - புரிசடையாய் - பொருவரையாய் - பூம்புகலூர் மேவிய புண்ணியனே! உன் திருவடியே

யெண்ணி னல்லாற் கண்ணிலேன்; மற்றோர் களைகண் இல்லேன்; வஞ்சக்கள்வர் ஐவரையும் என்மேற் றரவறுத்தாய்; அவர் வேண்டுங் காரிய மிங்காவதில்லை; ஒண்ணுளே வைத்த ஒன்பது வாசல் ஒக்க வடைக்கும்போது உணரமாட்டேன்; பொய்யுரையாது, உன், பூவார்ந்த - பொய்யாத - பொன்னங் கழலடிக்கே போதுகின்றேன் என்று செய்துகொண்ட முத்தி விண்ணப்பம்.

பதிகப் பாட்டுக் குறிப்பு:—(1) கண்ணிலேன் - வேறு யாரையும் எதனையும் எண்ணேன். களைகண் - துணை. ஒண்ணுளே - ஓர் உடலினுள்ளே. ஒன்றினுள்ளே என்பதன் மரூஉ. ஒன்பது வாசல் - கண் 2. காது 2. மூக்கு ஒட்டை 2. வாய் 1. மலவாயில் 1. சலவாயில் 1. என்ற ஒன்பது வாயில்கள். நவத்துவார மென்பர் வடவர். ஒக்க அடைக்கும்போது - சாவு வந்த காலத்தில். போது - போதின்கண். ஏழனுருபு விரிக்க. உணர மாட்டேன் - உன்னை உணரலாகாது நிற்பேன். ஒழிவேன். சாகுந் தறுவாயில் நினைக்கும் வரம் தரவேண்டு மென்பது நாயனார் வேண்டும் வரங்களுள் ஒன்று. "சாமன் றுரைக்கத் தருதி கண்டாய்", "அஞ்சும்போது நின் னுமைத் திருவெழுத் தஞ்சுந் தோன்ற வருளும்", புண்ணியம் என்பது ஈண்டுச் சிவதருமங்களின் பயன் குறித்தது.—(2) சிங்கமே - என்ற இது கொண்டு இறைவர் சிங்க உருவமாய் எழுந்தருளி நாயனாரை விழுங்கினர் என்றதோர் ஒவ்வாத வரலாறு கேட்கப்படுவதுபற்றி முன் உரைத்தவை பார்க்க. உன் வாயினுக்கே என்னுது உன் அடிக்கே என்றதும், தேவதேவே என்றதும், நஞ்சுண்டு சாவா மூவா என்றதுமாகிய இவையும் அவ்வரலாற்றின் பொருந்தாமையை மேலும் புலம்படுத்தும்.—(3) பை - நச்சுப்பை. பளிக்குக் குழை - பளிங்குபோல் ஒளிவிடும் சங்கக்குழை. வஞ்சக் கள்வர் ஐவர் - ஐம் புலன்கள். என்மேற் றரவறுத்தாய் - என்னை ஏவல் கொள்ளும்படி வைத்தாய். அவர் வேண்டும் காரியம் இங்கு ஆவதில்லை - இனி ஐம்புலன்களுக்கு ஆட்பட்டு இருக்க இசையமாட்டேன். நவமணிகள் தோற்றியதும் அரம்பையர் வந்ததுமாகிய வரலாறுகளின் குறிப்பும், இனி இவ்வுலகி லிருக்க லாற்றாத மன நிலையின் குறிப்புமாம்.—(4) தேருளாதார் - உனது பெருமை உணராதார் - முப்புரவாணர். மருளாதார் - உலக மயக்கிற் படாத உத்தமர். அலர்மேலான்-பிரமன்; நீர்மேலான் - விட்டுணு; பாற்கடலில் பள்ளி கொள்வோன். ஐம்பூதங்களுள் நீரின் அதிதெய்வ மாவோன் என்றலுமாம்.—(7) தேவார்ந்த - தெய்வத் தன்மை முற்றும் உடைய.—(8) கொய் - தளிர் - இலை.—(9) துன்னஞ்சேர் - தைத்த துன்னம் - தையல். "துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது" (திருவா-சாழல்). தன் - நனை தனக்குரிய அரும்பு. தன் அடையாளமாகிய கொன்றை யரும்பை உணர்த்திற்று. அக்காரம் - அக்கு - சங்கு மணி. சங்குமணி கோத்த ஆரம்; உருத்திராக்க வடம் - எலும்புமாலை - என்றலுமாம்.—(10) ஒருவனையும் அல்லாது - உன்னை ஒருவனையே யன்றி மற்று ஒன்றும்; இருவரையும் மூவரையும் - வஞ்சக் கள்வர் ஐவரையும் (3).

தலவிசேடம்:—திருப்புகலூர்-(16) முருக நாயனார் புராணத்திறுதியில் உரைக்கப்பட்டது.

1693. வானவர்கண் மலர்மாரி மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த வைந்துபே ரியவொலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினவெல்லா முண்ணிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையிற் சதயமாந் திருநாளில்.　சஉஅ

(இ - ள்) சித்திரையிற் சதயமாந் திருநாளில் - அவ்வாறு நாயனார் அமர்ந்திருந்த சித்திரை மாதத்துச் சதயமாகிய திருநாளிலே; வானவர்கள் மலர்மாரி மண்ணிறைய - தேவர்கள் பொழிந்த பூமழை மண்ணுலகின் வந்து நிறைய; விண்ணுலகின் மேல் - வானுலகத்தின்மேல் எங்கும்; ஐந்து பேரிய ஒலியும் - ஐவகைத் துந்துபிகளின் முழக்கமும்; மேல் நிறைந்த - மேலே நிறைந்தன; விரிஞ்சன் முதல்...தானிறைந்த - பிரமன் முதலாகிய எல்லாவித யோனி பேதங்களில் வந்த எல்லாவுயிர்களும் தமக்குள்ளே முன்னர் உயிர்க்குயிராய் நிறைவாகப் பெற்றதனால் பெருமகிழ்ச்சியே வெளிப்பட நிறையப் பெற்றன.

(வி - ரை) சித்திரையிற் சதயமாந் திருநாளில் - மேலே சொல்லியவாறு நாயனார் இறைவரது திருவடிக்கீழ்ச் சிவானந்த ஞானவடிவேயாகி அமர்ந்திருந்த நாளாகிய சித்திரை மாதத்துச் சதய நாளிலே. அவர் திருவடிக் கீழே யமர்ந்த என்பது சொல்லெச்சம். சித்திரை - மாதமும், சதயம் - நாளுமாம்.

வானவர்கள் மலர்மாரி மண்ணிறைய - தேவர்கள் இவ்வற்புத நிகழ்ச்சி கண்டு அதன் பொருட்டுப் பூமழை பொழிந்தனர். அங்கு நின்றபடியே அருச்சித்தனர் என்ற குறிப்புமாம். நிறைய - மிகுதிப்பாடு குறித்தது.

விண்ணுலகில் ஐந்து பேரிய ஒலியும் மேல் நிறைந்த(ன) என்க. பேரிய ஒலி - தேவதுந்துபி முழக்கு. இவை தேவர்கள் முழக்குவனவும், அற்புத நிகழ்ச்சியில் தாமே முழங்குவனவும் ஆம். "இயற்றுபவ ரின்றியு மியம்பு, மங்கல முழக்கொலி மலிந்த" (திருஞான - புரா - 33). மலரும் ஒலியும் விண்ணாகிய ஒரே இடத்தினின்று, போந்தனவாயினும் மலர்கள் சொரிந்தபோது கீழ் விழுமியல்பை யுடையனவாதலின் மண்ணிறைந்தன என்றும், ஒலிகள் - ஆகாயத்தின் குணமாகி அலையுருவமாகி மேற்பரவு மியல்புடையன வாதலின் மேல் நிறைந்த என்றும் கூறிய குறிப்பும் காண்க. ஒலி - சாதி ஒருமையாதலின் நிறைந்த என - அகரவீற்றுப் பலவின்பாற் பன்மைவினை கொண்டது. மலர்மாரி மண்நிறைய, ஐந்து ஒலியும்மேல் நிறைந்த(ன).

விரிஞ்சன் என்பது பிரமனை உணர்த்தி, அந்தத் தானத்துக்குரிய தேவ யோனியை உணர்த்திற்று. ஆகு பெயர். விரிஞ்சன் முதல் யோனிகளாயின - என்றதற்கு இவ்வாறன்றி, விரிஞ்சனது படைப்புக்குட்பட்ட எவ்வகை யோனிபேதங்களும் என்றுரைத்தலுமாம்.

யோனிகளாயின எல்லாம் - யோனிகள் என்றது எண்பத்து நான்கு இலக்கம் என்று வகுக்கப்பட்ட யோனி பேதங்களை. எல்லாம் என்றது அவ்வகுப்புக்களுள் வரும் உயிர்களை. ஆயின என்பது அவற்றுட்படும் என்ற பொருளில் வந்தது. ஆக்கச் சொல் அவை பொருந்தப் படைக்கப்படும் என்பது குறித்தது. யோனிகள் என்றது வகைகளையும், எல்லாம் என்றது தொகைகளையும் குறித்தன.

உண்ணிறைந்த பெருமகிழ்ச்சி தான் நிறைந்த - முன்னரும் உள்ளே நிறைவாகிய தாயினும் வெளிப்பட்ட அனுபவ முறையால் தெரியாலாகா வகையினின்றது; இப்போது அந்நிறைவு வெளிப்பட்டு அனுபவித்தறியப்படுமாறு நிறைவாகி விளக்கம் பெற்றது; முன்னிருந்தது "அண்டப் பரப்பெங்கு மண்டிப் பரந்தபே ரானந்த வெள்ள" மாகிய சிவானந்தத்தின் நுண்ணிய நிலை; இஞ்ஞான்று நிறைந்தது அதன்வெளிப்பாடாகிய பரிய நிலை; நிறைந்த-நிறைந்தன என அகரவீற்றுப் பலர்பால் வினைமுற்று. இதனை இவ்வாறன்றிப் பெயரெச்சமாகக் கொண்டு நிறைந்த திருநாளில் - என்று கூட்டி அந்நாளில் ஆண்டவரசு அமர்ந்திருந்தார் என்று முடித்தனர் முன் உரைகாரர்கள். அது பொருந்தாமை அறிந்துகொள்க. நாளில் - அமர்ந்திருந்த அந்த என அகர முன்னறி சுட்டு வருவிக்க.

யோனிகள் எல்லாம் உள்நிறைந்த பெருமகிழ்ச்சி தான் நிறைந்த(ன) என்றது, நீர் நிறைந்த வாவிக்குள் பல உயிர்களும் வாழ்வனவாக, அந்நீர் நிலையினுள் ஒரு முட்டை வெடிக்குமாயின், அதனால் நீர் அசைவுபெற, அந்த அசைவு கலந்து, அலை உருவமாக நீர்பரப்பு முழுமையும் உழக்க, அதனால் அங்குத் தங்கும் ஏனை உயிர்கள் யாவும் தாக்கப்படுதல் போல, நாயனர் சிவ நிறைவுக்குள் எய்த, அதனால் அந்நிறைவி னுட் கிடந்த எல்லா யோனிகளும் தாக்கப்பட்டு ஆனந்தமடைந்தன என்பதாம்.

சித்திரையில் சதயமாம் திருநாள் - நாயனர் இறைவரது திருவடியடைந்த மாத மும் நாளும் குறித்தார். இவ்வாறு நாட்குறித்து நாயனரை யன்றி வேருெருவருக் கும் ஆசிரியர் கூருமை காண்க. இதுபோன்று, "புண்ணியப் பதினு ருண்டு பேர் பெறும் புகலி வேந்தர்" என்று வயது குறித்து ஆளுடைய பிள்ளையார்க்குக் கூறிய சிறப்பும் கருதுக. 428

1694. அடியனே னுதரவா லாண்டவர சின்சரிதப்
படியையா னறிந்தபடி பகர்ந்தேனப் பரமுனிவன்
கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது குலச்சிறையார்
முடிவில்புகழ்த் திருத்தொண்டின் முயற்சியினை மொழிகின்றேன்.

(இ - ள்) ஆண்ட அரசின் சரிதப் படியை - ஆண்ட அரசுகளுடைய சரித வரலாற்றினை; அப் பரமுனிவன்...கைதொழுது - அந்த பரமுனிவருடைய மண முடைய மலர்போன்ற மெல்லிய சிவந்த திருவடிகளைக் கையாரத் தொழுது; ஆதர வால் - அத்துணையினல்; அடியனேன் - அவரது அடியேன்; அறிந்தபடி பகர்ந்தேன்- அறிந்த வகையி னளவுட்படச் சொன்னேன்; அப்பர முனிவன்...கைதொழுது-அந்தப் பரமுனிவருடைய மணமுடைய மலர்போன்ற மெல்லிய சிவந்த திருவடிகளைக் கையா ரத் தொழுது; அடியனேன் ஆதரவால் அடியேன் அத்துணையானே; குலச்சிறையார் ...மொழிகின்றேன் - குலச்சிறையாரது முடிவில்லாத புகழுடைய திருத்தொண்டின் முயற்சித் திறத்தினைச் சொல்லப் புகுகின்றேன்.

(வி - ரை) ஆதரவு - துணை - பற்றுக்கோடு.

அப்பர முனிவன் கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது-என்றதை முன்னர்ப் பகர்ந்தேன் என்றதுடனும், பின்னர் மொழிகின்றேன் என்றதுடனும் இருவழியும் கூட்டியுரைக்க இடைநிலைத் தீபமாக நடுவில் வைத்தார்.

அவ்வாறே அடியனேன் ஆதரவால் என்றதனை அந்த இரண்டு வினைமுற்றுக் களுடனும் கூட்டி ஆதரவால் பகர்ந்தேன் - ஆதரவால் மொழிகின்றேன் என் றுரைக்க முதனிலைத் தீபமாக முதலில் வைத்தோதினர். ஆளுடைய பிள்ளையார் புராண முடிவில் இவ்வாறே "அருந்தமிழா கரர்சரிதை யடியேனுக் கவர்பாதந் தரும் பரிசா லுரைசெய்தேன்" என்று கூறுவதும் இங்கு வைத்துக் கருதத்தக்கது.

சரிதப்படி - சரிதம் போந்தபடி. படி - வகை.

பரமுனிவன் - பரம் - அப்பாற்பட்டது - கடந்தது; நமது நினைவுக்கும் சொல் லுக்கும் எட்டாது அப்பாற்பட்டவர். முன்னரும் முனியாகி யிருந்தவர் என்ற முற் சரிதக் குறிப்புமாம். "முன்னமே முனியாகி" (1313). இக்குறிப்பே கொண்டு "வரு ஞானத் தவமுனிவர் வாகீசர்" (1266) என்று தொடங்கிக் காட்டிய அக் கருத் தினையே பற்றி முடித்துக் காட்டியவாறும் கண்டுகொள்க. பரனுக் குகந்த முனிவன் என்றும், "இருநிலனய்" என்பது முதலாகப் பதார்த்தங்கள் பாராது பரமே பார்த் திருக்கும் முனிவன் என்றும் உரைத்தலுமாம்.

யான் அறிந்தபடி - என் அறிவின் அளவினுட் படுவதன்றாதலின் அறிந்த அவ்வளவேயன்றி முற்றிலுமன்று என்பதாம்.

கடி - மலர் - மென் - சே - அடிகள் - அடைமொழிகள் அருமைப்பாடு பெறப் பாராட்டிய திறங்காட்டுவன. மணமும், மென்மையும், செம்மைப் பண்பும் பொதுத் தன்மையாக கொண்ட உவமம் பற்றிய உருவகம்.

கைதொழுது - தொழுது என்றலே அமையுமாயினும் கைதொழுது என்றது கையார - கைபொருந்தி நிறைவாக - என்ற குறிப்புத் தருவது. முயற்சியினை - என்றதனுல் மனத்தாலும், மொழிகின்றேன் என்றதனுல் வாக்காலும் தொழுதல்கூறப்பட்டன.

முடிவில் புகழ்த் திருத்தொண்டு - முடிவில் புகழாவது ஆளுடைய பிள்ளையாரது திருவாக்கினுற் போற்றப்படும் அளவில்லாத புகழ். "மங்கையர்க்கரசி" என்ற திருப்பதிகம் 2, 4, 6, 8, 10, 11 திருப்பாட்டுக்கள் பார்க்க.

"பிள்ளை யார்தந் திருவாக்கிற் பிறந்த லாலே தாலமுமுன்
புள்ள பாசம் விட்டகல வொழியாப் பிறவி தனையொழித்துக்
கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவால்;
வள்ள லார்மற் றவரருளின் வாய்மை கூறின் வரம்பென்னும்?"
(திருஞான - புரா - 983)

என்றபடி, ஆளுடைய பிள்ளையாரது திருவாக்கில் ஒருமுறை பிறந்தால் முத்திப்பயன் பெற வுளதாகுமாயின், இவ்வாறு பெருமை பிறங்கப் பலமுறையும் பாராட்டப்படின் அப்புகழின் பெருமை அளவும்படுமோ? என்பார் முடிவில் புகழ் என்றார்.

திருத் தொண்டின் முயற்சியினை - அவர் செய்த திருத்தொண்டின் திறத்தாற் கூறாது, முயற்சித்திறம் பற்றியே மேல் சரிதங் கூறுகின்றமை குறிப்பு. திருத்தொண்டின் நிகழ்ச்சி ஒவ்வோர் காலம் பற்றி நிற்க, முயற்சியானது அவ்வாறன்றி எஞ்ஞான்றும் இடைவிடாது நிகழும் பெருமை குறித்தவாறுமாம். தேவாரப் பதிகக் கருத்தும் காண்க. "பூசலார்த நினைவினை யுரைக்க லுற்றும்" (பூச - புரா - 1) "நினைப்பினுற் கோயிலாக்கி" (ஷை 1618) முதலியவையும் காண்க.

அடியேனென்—பான் முனிவன்—முயற்சியினி—என்பனவும் பாடங்கள் 429

---

சரிதச் சுருக்கம்:—நல்லொழுக்க நிறைந்த குடிகள் நிறைந்து விளங்கியது திருமுனைப்பாடி நாடு; அது கடலூர் சில்லாவின் ஒரு பகுதியாகும். அந்நாட்டினிற் பெண்ணையாறு பாய்ந்து வளஞ் செய்யும் வயல்கள் சிறந்து விளங்குவன; வாழை - கமுகு - நெல் முதலிய வளங்களும் வாவிகளும் சோலைகளும் அணிபெற வோங்குவன. சைவ சமய பரமாசாரியர்களான திருநாவுக்கரசு நாயனாரும் சுந்தரமூர்த்தி நாயனாரும் பிறந்தருள உள்ளதாகிய பேறுபெற்றது அந்நாடு என்னில் அதன் பெருமை நம்மாற் சொல்லும் தன்மையுடையதாமோ?—இத்

**நாடு**

திருநாட்டில் பலவூர்களும் மேன்மையுடையன; அவற்றுள்ளே தெய்வச் சைவத் திருவினைப் பெருக்கச் செய்யும் என்ற காரணக் குறிப்புப்பட வழங்கப்படுவது திருவாமூர் என்ற நகரம். அதனுள் பெருமாடங்கள் ஓங்குவன; குற்றமற்ற அறவொழுக்கங்களே நிகழத், தீங்கு நெறிகள் நீங்குவன.—

**நகரம்**

அத் திருநகரத்தில் எல்லாவிதமான நலங்களினும் வழுவாத நல்லொழுக்க முடைய குடிகளுள்ளே மேன்மையுடைய வேளாளர் குலத்திலே, பெருமையுடைய குறுக்கையர்குடி விளங்குவதாகும். அக்குடியில் தோன்றி இல்லறம் புரிந்து, விருந்தும் சுற்றமும் சூழ அளிக்கும் பெருஞ்

**திரு அவதாரமும் வளர்வும்**

சிறப்பிலே எல்லாத் திசைகளிலும் புகழ் பரவும் பெருமை திகழும்படி வரும் புகழனூர் என்ற பெரியார் ஒருவர் உளராயினர். அவருக்கு ஒத்த உரிமைக் குடியில் வந்து மணம்புரிந்த மனைவியார் மாதினியார் எனக் காரணக் குறியீடு பெறக் கொண்ட பெயருடைய அம்மையார். மாதினியார் மணிவயிற்றினிடைச் செம்மலர் மேல் திருவனைய திலகவதியார் முன்னர்ப் பிறந்தனர். அதன்பின் சில ஆண்டுகளுக் கப்பால் அளவில்லாத கலைத்துறைகள் தழைக்கவும் தவநெறி வாழவும் உலகிருள் நீக்கி ஒளி தரும் சூரியன்போல மருணீக்கியார் அவதாரம் செய்தார். உரிய பருவங்களில் உரிய எல்லாச் சடங்குகளும் செய்யப் பெற்றுக், கலைகளின் திறம் பயின்று, மருணீக்கியார் மறுவொழித்த இளம் பிறைபோல் வளர்ந்து வந்தனர். திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயதாயிற்று. ஒத்த குடித் தலைவராய், சிவனடிமை விருப்புடையராய், அரசரது சேனைக் கடன் பூண்ட வீரராய் விளங்கிய கலிப்பகையார் என்பவருக்குத் திலகவதியாரை மணம் பேசப், புகழனூரும் இசைந்தனர். ஆனல் மணம் நிகழ்வதன்முன் வேந்தற்குற்றுழி வினைமேல் வடபுலத்துப் பகைவரை எதிர்த்துப் போர் புரியும்படி அரச னேவியபடிக் கலிப்பகையார் சென்று விட்டனர். இப்பால், நிலையாமை வயப்பட்டுப் புகழனூர் விண்ணுலகடையவே,உடன் பிரியா நிலைமையினூல் கற்புநெறி வழுவாது மாதினியாரும் அவருடனே சென்று விட்டனர். இருமுது குரவரையும் ஒருங்கே யிழந்த இளஞ்சிறுர் இருவரும் வருந்தினர். கிளைஞர் தேற்ற ஒருவாறு மனம் தேறி, வானமடைந்தார்க்குச் செய்யும் கடன்களை முடித்து இருந்தனர். அங்குப் போரின்மேற் சென்ற கலிப்பகையார் நெடுநாள் அமர்விளைத்துப், போரில் உயிர் கொடுத்துப் புகழ்கொண்டு, தமது கடன் கழித்தனர். அது கேட்ட திலகவதியார் "என் அன்னையும் அத்தனும் என்னை அவருக்குக் கொடுக்க இசைந்தார்கள் ; அந்த முறையால் அவருக்கு இவ்வுயிர் உரியது; அவருடனே என் உயிரைச் சேர்ப்பேன்" என்று உயிர் நீக்கத் துணிந்தனர். மருணீக்கியார் அவர் திருவடிகளில் வீழ்ந்து, "தாய் தந்தையரைப் பிரிந்தும் உம்மை வணங்கப் பெற்று உயிர் தரித்தேன் ; என்னைத் தனியே கைவிட்டு நீர் போவதாயின் நானு முன்னம் உயிர் நீப்பன்" என்று சொல்லி வருந்தினூர். தம்பியார் உளராக வேண்டுமென்று கொண்ட கருணையினூல், உயிர் நீத்து வானமடையும் நிலையினைத் தவிர்ந்து, மணமிசையாத கைம்மை நிலையினை மேற்கொண்டு, எல்லா வுயிர்களுக்கும் கருணையினைப் பூண்டு, மனைத்தவம் பூண்டு திலகவதியார் இருந்தனர். மருணீக்கியார் இளம் பருவத்தே இல்லத்தில் இவ்வாறு வாழ்கின்ற இந்நாட்களில் உலக நிலையாமையை உணர்ந்து அறச் சாலைகளையும் தண்ணீர் பந்தர்களையும்-சோலைகளையுமமைத்தல், குளங்கள் வெட்டுதல், விருந்தளித்தல் முதலிய அறங்களை யியற்றியும், நாவலர்க்கும் பிறர்க்கும் வளம் பெருக ஈந்தும் இவ்வாறு அறங்களைச் செய்தனர். அதன்பின் உலகநெறி நிலையாமை கண்டாராகி மருணீக்கியார் துறவு பூண்டு சமய விசாரம் புரியத் தொடங்கினர். அப்போது சமய கோடிகளின் நல்வழி

**சமணம் சார்ந்து "தருமசேன" ராகுதல்**

களைத் தெரிந்துணர இறைவ ரருளாமையினூலே, அக்காலத்தில் நாடெங்கும் பரவிக், கொல்லாமை என்ற மேற் பகட்டினூலே உண்மை காண வொட்டாது உலகை மயக்கிச் சைவ விளக்கத்தை மறைத்து நின்ற சமண சமயத்துட் புகுவாராயினர். அணிமையில் இருந்த பாடலிபுத்திரம் என்னும் நகரத்தை அடைந்து அங்குச் சமணப் பள்ளியை அடைந்து சமண குருமார்களைச் சார்ந்தனர். அவர்களும் மெய்போலக் காட்டித் தமது சமய நெறிகளை மருணீக்கியாருக்குப் போதித்தனர் ; அவற்றில் அவரும் சிறந்து விளங்கினர். அது கண்டு அவர்கள் தங்களுள் மேலாம் தருமசேனர் என்னும் பெயர் கொடுத்து அவரைத் தமது தலைவராக்கிக் கொண்டார்கள்,

இப்பால், திலகவதியார் பெருங் கவலையடைந்து திருவதிகைத் தலத்தையடைந்து சிவபெருமானுக்குரிய பணிவிடைகளைச் செய்து கொண்டிருந்தார். அவர் தமது தம்பியார் பரசமயக் குழி வீழ்ந்ததற்கு வருந்தி, அவரை அக்குழியினின்று மெடுத்தருள வேண்டுமென்று பலமுறை தமது பெருமானிடம் விண்ணப்பம் செய்துகொண்டனர். இறைவர் அவரது கனவிற்றோன்றி "உன் மனக்கவலை ஒழிக. உன் உடன் பிறந்தான் முன்னே ஒரு முனிவனாக நம்மை யடையத் தவஞ் செய்தனன். அவனை இனிச் சூலைநோய் தந்து ஆட்கொள்வோம்" என்று அருளினார். அவ்வாறே கொடிய சூலை நோய் தருமசேனர் வயிற்றினிடைப்புக்குக் குடைந்து மிகவருத்தி மயக்கியது. அது

**இறைவர் சூலைதந் தாட்கொள்ளச் சைவத்திற் சேர்ந்தது**

சமணர்கள் செய்த மணி மந்திர மருந்துகளாற் றீராதாக அனைவரும் கைவிட்டனர். தருமசேனர் தமக்கையாரது நினைவுவர அவர்பால் தமது சமையல் ஏவலாளனை அனுப்பினர். அவன் போய் அறிவிக்கத் திலகவதியார், "உன்னுடனே, நன்றறியா ரமண்பள்ளி நண்ணுகிலேன் என்று அவனிடம் சொல்க" என்னவே, அவனும் அவ்வாறே வந்தறிவித்தனன். அதன்மேல் அவர் ஈசர் அருள் கூடுதலால், தாமே சென்று திலகவதியாரையடையும் துணிவுகொண்டு சிறிது ஊக்கம்பெற்றுப், பாயும் குண்டிகையும் பீலியும் ஒழிய, வெண்புடவை சுற்றிக் கொண்டு, பிறர் காணாத வகையால், இரவில் சென்று திருவதிகையை அடைந்தனர். திலகவதியம்மையாரது திருமடத்தில் சேர்ந்து அவருடைய திருவடிகளில் நிலமுற வீழ்ந்து வணங்கி, "நமது குலஞ்செய்த நற்றவப் பயன்போன்றவரே! கொடுஞ் சூலையினால் வருந்தியடைந்தேன்; நான் உய்ந்து கரையேறும் வழி உரைத்தருள்வீராக" என்று வேண்டிக் கிடந்தனர். அவரை நோக்கி அம்மையார், இறைவரது திருவடிகளை எண்ணி, "உட்கோளில்லாத பரசமயக் குழியில் விழுந்து அறியாது அயருழந்தீர்; எழுந்திரீர்" என்று மொழிந்து, "இது சிவபெருமான் றிருவருளேயாகும்; அடி அடைந்தார்களைப் பாசம்போக்கிக் காக்கும் அவரை யடைந்து பணி செய்வீராக!" என்றருளிச் செய்தனர். அவரும் அதனை ஏற்று இசைந்து நிற்க, இறைவரது பேரருளை நினைந்து, திருநீற்றைத் திருவைந்தெழுத்தினை ஓதிக் கொடுத்தருளினர். அவரும் வணங்கிப் பெருவாழ்வு வந்தது என ஏற்றுத் திருமேனி நிறைய அணிந்துகொண்டு, அம்மையாரின் பின் போதருவாராயினர். அப்போது திருப்பள்ளியெழுச்சியாகிய நேரமாதலின் அம்மையார் அதற்குரிய திருமெழுக்கும் தோண்டியும் கொண்டு, தம்பியாரையும் உடன்கொண்டு, திருவீரட்டானேசுவரர் திருமுன்புகொண்டு சென்று புகுதவிட்டனர். அங்கே திருவருளினாலே தமிழ்மாலைகள் சாத்தும் உணர்வு வர, அவர் "கூற்றாயின வாறு விலக்ககிலீர்" என்று தொடங்கும் திருப்பதிகத்தினைப் பாடி இறைவரைத் துதித்தருளினர். சூலையும் அங்நின்ற நிலையே நீங்கியது கண்டு அவர் சிவபெருமானது பெருங் கருணைத் திறத்தினை வாழ்த்தி வணங்கி நின்றனர். அவரது வாக்கின் வளங்கொண்டு அவருக்குத் திருநாவுக்கரசு என்ற பெயர் எங்கும் என்றும் வழங்குவதாக

**"திருநாவுக்கரசர்" ஆயினமை**

என்று அசரீரி மொழியால் இறைவர் அருள் புரிந்தனர். திருநாவுக்கரசர் தம்மைப் பிழை நீக்கி ஆட்கொண்ட இறைவரது பெருங் கருணைக் கடலுள் மூழ்கித் திளைத்தனர். அது முதல் அவர், மனம் வாக்கு உடல் என்ற மூக்கரணங்களாலும் உள்ளமுருகிச் சிவபெருமானது பணி செய்து வருவாராயினர். தமது இச்சை நிரம்ப வரம்பெற்ற தாபதியாராகிய திலகவதியாரும் இறைவரது பெருங் கருணையை வியந்து துதித்து வாழ்ந்தனர்.

இதனைத் தெரிந்த பாடலிபுத்திர நகரத்து அமணர், பொறாமை மேற்கொண்டு, "சூலை நீங்கப் பெறுது, சைவராகித் தருமசேனர் உய்ந்தனர். நமது பெரும் சமயம்

வீழ்ந்தது" என மருள்வாராய், "இதனை அரசன் அறிந்தால் வெகுண்டு நமது விருத்தியினையும் தவிர்க்கும்; நாம் இனிச் செய்வதென்ன?" என்று வஞ்சனை தெரிந்து சித்திரிப்பாராகித், தமக்கையார் சைவத்தில் நிற்றலால் அவரிடம் சென்று சேர்வதற்காகப் பொய்ப் பிணி கொண்டு தரும சேனர் போய், நமது தெய்வ நிந்தையும் சமய லங்கனமும் செய்தனர் என்று முறைப்படுவோமென்று துணிந்தனர்; அவ்வாறே பல்லவனகரில் வந்து *அரசனிடம் முறையிட்டனர். அது கேட்ட அரசன் வெகுண்டு, "அவ்வாறு செய்த தீயோனை என்ன செய்வது?" என்று வினவ, "அவனை அலை புரிவாய்!" என்று அஞ்சாது கூறினர் கொலை புரியா நிலைகொண்டு பொய்யொழுகு மமண்குண்டர். அரசன் மந்திரிகளையும் சேனையையும் அனுப்பி நாவுக்கரசரைத் தன்பாற் கொண்டுவர ஏவினன். அவ்வாறே அவர்கள் திருவதிகையிற் சேர்ந்து நாயனாரைச் சூழ்ந்துகொண்டு, "மன்னவன் உம்மை அழைக்க எம்மை விடுத்தான்; வாரும்!" என்று நாயனாரிடம் அறிவித்தனர். அவர் "நாமார்க்கும் குடியல்லோம்!; சிவனுக்கே மீளா ஆளாயினோம்; நீர் அழைக்கும் அடைவில்லோம்" என்று "நாமார்க்குங் குடியல்லோம்" என்று தொடங்கும் மறுமாற்றத் திருத்தாண்டகத்தை அருளிச் செய்து, மறுத்தனர். அவர்கள் அவரை அடி வணங்கி வேண்டிக்கொள்ள, இங்கு வரும் வினைகளுக்கு எம்பெருமான் உளன் என்று இசைந்து இருக்க, அவரை அவர்களும் அரசன்முன் கொண்டு சேர்த்தனர்.

சமணர் வஞ்சம்

மறுமாற்றத் திருத்தாண்டகம்

அரசன் அமணரைப் பார்த்து "இவனை இனிச் செய்வதென்ன?" என்று கேட்க, அறநெறி துறந்த அவர்கள் "நீற்றறையிலிடுக" என்று அஞ்சாது கூறினார்கள். அரசன் ஆணையிட, அவ்வாறே நீற்றறையினுள் வைத்துக், கருந்தாள் கோத்துச் சேமஞ் செய்தனர். ஆண்ட அரசுகள் அந்நீற்றறையினுள் அணைந்தபோது இறைவரது திருவடி நீழலைத் தலைக்கொண்டே, ஈசனடியார்க்கு ஈண்டுவரும் துன்பமுமுண்டோ? என்று தொழுதிருந்தனர். நீற்றறையானது, இளவேனிலின் தண்ணிலவலர்ந்து, தென்றல் வீச, வண்டுகள் முரலும் நீர்த்தடம்போற் குளிர்ந்தது. "மாசில் வீணையும்" என்று தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகம்பாடி இறைவரைத் துதித்து, ஆண்ட அரசுகள், அங்கு இனிது அமர்ந்திருந்தனர். ஏழுநாட்கள் கழித்து அமணர் நீற்றறையைத் திறந்தார்கள். ஒரு தீங்குமின்றி ஆனந்த வெள்ளத்தி னழுந்தி, அம்பலவர் திருவடியமுதுண்டு, இருந்த அவரைக்கண்டு, "இது என்ன அதிசயம்" என்று வியந்தனர்.

சமணர் செய்வித்த தீமைகள் :—
-1. நீற்றறையிலிட்டது

ஆயினும், அவ்வமணர் "இது அதிசயமன்று; நமது சமண சமயச் சாதகத்தால் இது செய்து பிழைத்திருந்தான்; இனிச் செய்யத்தக்கது இவனை வலிய விடத்தை ஊட்டுவதே யாகும்" என்று அரசனுக்குச் சொன்னார்கள். அவனும் அவர்களது பெரிய மயக்கத்துட் பட்டவனாதலினால், "அவ்வாறே செய்யும்" என்று சொல்ல, அவ்வாறே அவர்களும் நஞ்சு கலந்த பாற்சோற்றை நாயனாருக்கு ஊட்டினர். நாயனாரும், அது அமணர் வஞ்சனையாற் சமைத்த நஞ்சு கலந்த பாற்சோறு என்று உணர்ந்தே, "எங்கள் நாத ரடியார்க்கு நஞ்சு மமுதாகும்" என்று துணிந்து, அதனை உண்டு, ஊனமின்றி யிருந்தனர். புவன முழுதும் பொடியாக்கும் விடம் நாதருக்கு அமுதமாயிற்று என்றால், அவர்தம் மடியார்க்கு இச் சிறு நஞ்சம் அமுதாவது அற்புதமாமோ?

-2. விடம் ஊட்டியது

*இந்த அரசன் மகேந்திரவர்மப் பல்லவன். குணபரன் என்ற பட்டப் பெயர் பூண்டவன். சரித்திர ஆராய்ச்சிக் குறிப்புப் பார்க்க.

அதுகண்டு அமணர் வெருக்கொண்டு, "இவன் பிழைக்கில் எமக்கெல்லாம் இறுதி வருதல் உறுதி" என்று துணிந்து, "நமது சமயத்திற் கற்ற, விடந்தீர்க்கும் மந்திரங்களினால் நஞ்சு தன்னை இடர் செய்யாது தடுத்துக் கொண்டான்; இவன் தொலையாவிட்டால் எமது உயிரும் உனது அரசும் தொலைவது உறுதி" என்று அரசனிடம் சொன்னார்கள். அது கேட்ட அரசனும் "இனி என்ன செய்வது?" எனக் கேட்க, "மந்திர சாதகங்களை வராமல் நாங்கள் தடுக்கிறோம்; இவனை உனது யானையின் முன் விட்டு இடறச் செய்க" என்றார். அவனும் அவ்வாறே ஏவினான். கடுஞ்சினத்தோடு கடுவிசையில் கைவீசி முடுகி வந்தது அவ் விறல்வேழம். நாயனார் சிறிதும் வெருளாமல் யானை யுரிவை போர்த்த இறைவரது திருவடிகளையே தெளிவுற்றனர். "உரிவை யுடையார் ஒருவர் தமர்நாம்; ஆதலின் அஞ்சுவதியா தொன்று மில்லை; அஞ்ச வருவது மில்லை" என்ற துணிவுடன், "சுண்ணவெண் சந்தனச் சாந்தும்" என்ற திருப்பதிகத்தை அருளிச் செய்தனர். யானை அவரை வணங்கி எழுந்து அகன்றது. பாகர் மீண்டும் அதனைத் தொடக்கி அடர்த்துத் திரித்து அவர்மேல் மிறைசெய்து காட்டினர்; அது அப்பாகர்களையே கொன்று அமணர்கள்மேல் ஓடி உழறிப் பலரையும் மிதித்துக்கொன்று நகரம் கலங்கச் செய்தது.

**-3. யானையினால் இடர் செய்தல்**

அதினின்றும் பிழைத்த அமண்கையர், மானமழிந்து மனம் வருந்தி மன்னவன் காலில் வீழ்ந்து புலம்பினர். "நமது சமயத்தினின்றே நாடிய முட்டி நிலையால் இவ்வாறு உனது சிறப்பை அழித்தவன் போயினால் உனக்குப் பரிபவம் தீரும்" என்றனர். அவனும் "இனிச் செய்யக் கடவதனைச் சொல்லும்" என்று கேட்கக், "கல்லுடன் சேர்த்துக் கட்டிக் கடலிற் பாய்ச்சுக" என்றார்கள். அரசனும் அவ்வினை மாக்களை "அவ்வாறே செய்க" என்று ஏவி விட, அவர்களும் அமணர்களுடன் போய் அவ்வாறே செய்து முடித்தனர். நாயனார் "எவ்வாறாயினு மாகுக. எந்தை பெருமானை நான் ஏத்துவன்" என்று கொண்டு, அற்றங்காக்கும் இறைவரது திருவைந்தெழுத்தையும் துதிப்பாராகிச் "சொற்றுணை வேதியன்" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தினை அன்போடு பற்றிய வுணர்வினால் பாடியருளினர். கடலினுள்ளே கல் மிதந்தது; கட்டிய பாசக்கயிறுகள் அறுபட்டன; நாயனார் கல்லாகிய தெப்பத்தின்மீது விளங்கினார். இருவினைப் பாசமும் மலக்கல்லில் கட்டிட வரும் பிறவிப் பெருங்கடலில் வீழும் எல்லா மாக்களையும் அங்கு நின்றும் ஏறும்படி அருளவல்ல திருவைந்தெழுத்து நாவுக்கரசர் பெருமானை இந்தக் கடலினுள் ஒரு கல்லின்மேல் ஏற்றியிட்டது அரியதென்று உரைக்கவும் படுமோ?. கல்லே சிவிகையாயிற்று. வருணன் முன்பு மாதவஞ் செய்தானாதலின் அதனைத் தன் அலைகளாகிய கைகளாற் சிரத்திற் றாங்கித் திருப்பாதிரிப்புலியூர்ப் பாங்கரில் கரையில் சேர்த்து எழுந்தருளுவித்தனன்.

**-4. கல்லிற் பூட்டிக் கடலிற் பாய்ச்சுதல்**

அங்கு நாயனார் இறைவரை வணங்கித் "தன் அடியோங்களுக்கு இறைவர் தோன்றாத் துணையா யிருந்தனர்" என்ற கருத்துடன் "ஈன்றாளுமாகி" என்ற திருப்பதிகம் பாடித் துதித்தருளினர். அதன்பின் திருவீரட்டானேசுவரர் பாதங்களை மிகவும் நினைந்து கொண்டு, திருவதிகையினை அடைவாராகித், திருமாணிகுழியினையும், திருத் தினைநகரினையும் வணங்கிக், கெடிலத் திருநதியினைக் கடந்து சென்று அணைந்தனர். தொண்டர்கள் நகரை அலங்கரித்து நாயனாரை எதிர்கொண்டனர். வெண்ணீறு துதைந்த திருமேனியும், தாழ்வடமும், இறைவரது திருவடிகளைத் தடவிய மனமும், அன்புநீர் வழியும் கண்ணிணைகளுமாக நாயனார் நகருட் புகுந்தனர். அவரது திருவேடத்தைக் கண்ட அடியார்கள், இந்தத் திருவேடத்தையும் இந்தக் கருணையையும்

கண்டால் அமணர் தீமை விளக்கச் சினம் உண்டாயவாறு தான் என்னே!" என்று இரங்கித் தீமைவாராது காத்துத் தொண்டரை ஆண்டுகொண்ட பெருமானைத் தொழுது துதித்தனர். நாயனார் திருவீரட்டானத்துட் சென்று இறைவரை வணங்கி அன்பு மீதூரத் திளைத்து, "இவரை ஏழையேன் நான் பண்டு இகழ்ந்தவாறு தான் என்னே!" என்ற கருத்துக்கொண்ட ஏழைத் திருத்தாண்டகம் பாடியருளிப், பின்னர்ப், பல பதிகங்களையும் பாடியருளி உழவாரத் திருத்தொண்டு செய்து பணி செய்திருந்தருளினர்.

**அரசன், சைவனாகிக் "குணபரவீச்சரம்" எடுப்பித்தது**

இப்பால், சமணர் சார்பினால் தீங்கு புரிந்தொழுகிய மகேந்திர வருமப் பல்லவ அரசனும் தனது பழவினைப் பாசம் ஒழிந்தமையினாலே அத் தீய தொடக்கினின்றும் நீங்கி, வந்து, நாயனாரைப் பணிந்து அமணர்களை நீத்துச் சிவபிரானது நெறியைச் சார்ந்தனன். உண்மை உணர்ந்தமையினாலே அவன் பாடலிபுத்திரத்தில் சமண்பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துக்கொணர்ந்து திருவதிகையில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கக் குணபரவீச்சரம் என்னும் திருக்கோயிலை எடுப்பித்துச் சைவனாகி விளங்கினான்.

**நாயனார்சிவத்தல யாத்திரை மேற்கொண்டது**

இந்நாளில், நாயனார் சிவபெருமானது திருத்தலங்கள் பலவற்றையும் சென்று வணங்கித் தமிழ் பாடித் தொண்டு செய்யத் திருவுளங்கொண்டு புறப்பட்டனர். திருவெண்ணெய் நல்லூர் - திருவாமாத்தூர் - திருக்கோவலூர் முதலிய பல பதிகளையும் வணங்கிக் கொண்டு திருப்பெண்ணாகடத்தினை அணைந்தனர். அங்குத் திருத்தூங்கானை மாடத்தில் எழுந்தருளிய இறைவரைவணங்கிச், "சமணரது தொடக்குண்டு போந்த இவ்வுடனோடு உயிர்வாழ நான் தரியேன். இவ்வுடலைத் தரித்து வாழும் பொருட்டு, எனது நாயகரே! உமது குறிகளாகிய இலச்சினையை என் உடலிற் பொறித்தருளுதல் வேண்டும்" என்று விண்ணப்பித்துப், "பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்" என்று தொடங்கும் திருவிருத்தத் திருப்பதிகம் பாடியருளினார். அவ்வளவில் சிவபெருமானருளினாலே வேறொருவரு மறியாதபடி ஒரு சிவபூதம் வந்து நாயனாரது திருத்தோள்களில் சூலக்குறியையும் இடபக் குறியையும் பொறித்தது.

**சூலமும் இடபமும் பொறிக்கப் பெற்றது**

அதனைக் கண்டு நாயனார் மகிழ்ந்து சிவபெருமான் திருவருளைப் போற்றி வணங்கி "நான் உய்ந்தொழிந்தேன்" என்றெழுந்தனர். பின், பலநாள் அங்குத் தங்கித் திருப்பணிசெய்து, அங்கு நின்றும் புறப்பட்டுத் திருநெல்வாயிலரத்துறையையும், திருமுதுகுன்றத்தையும், மருங்குள்ள பல பதிகளையும் பணிந்துகொண்டு, கிழக்கு நோக்கி நிவாநதிக் கரை வழியே போய், ஊனாலும் உயிராலும் உள்ள பயன் கொளநினைந்து திருத்தில்லை மருங்கு அணைந்தனர். திருவெல்லையினைக் கடந்தனர்; இடையில் மருதப்பணைகளையும் திருநந்த வனங்களையும் கண்டு தொழுது சென்றனர்; திருநகர்ப் புறமதிலின் மேலைவாயின் வழியே போந்தனர். அடியார்கள் எதிர்கொண்டு தொழத், தாமும் எதிர் தொழுது, சிவமே நிலவிய திருவீதியினை அணைந்தனர். நாயனாரது வருகையை முன் வைத்து, அடியார்கள் திருவீதிகளை விளக்கி அலங்கரித்தனர்: நாயனார் திருவீதியினைத் தொழுது ஏழ்நிலைக் கோபுரத்தின்கீழ் வீழ்ந்து பணிந்து, திருமாளிகையை வலம் வந்து, கனக சபையினைக்கண்டு, ஆனந்தக் கூத்தப்பெருமானது திருநடங்கண்டு தொழுதனர். கைகள் தலைமிசை யேறின. கண்கள் கண்ணீர் மழை பொழிந்தன. கரணங்கள் உருகின. மெய் பல முறையும் வீழ்ந்தெழுந்தது. இவ்வாறு அவரது ஆர்வம் அளவின்றிப் பெருகியது. அத்தனாரது திருவருட் குறிப்பு "என்று வந்தாய்" என்றிருந்த தன்மையினைக்கண்டு அவ்வுண்மைக் குறிப்பினைத் திருவிருத்தப் பதிகத்தாற் றுதித்தருளினர்.

அதன் பின்பு "பத்தனாய்ப் பாடமாட்டேன்" என்ற திருநேரிசைப் பதிகமும் பாடிக், கைத்திருத் தொண்டும்செய்து பணிந்து போந்தனர். "அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்" என்னும் திருப்பதிகம் பாடியருளித், திருமேனி வெண்ணீற்று வண்ணாடப், பல பணிகளும் செய்தருளியிருந்தனர். அந்நாளில் திருவேட்களமும், திருக்கழிப்பாலையும் வணங்கி, "அம்பலவரைத் தினைத்தனையும் மறந்துய்வனோ" என்று நினைந்து பாடி, மீண்டு அணைந்து "அரியானை" என்று தொடங்கும் அடியவர் சிந்தை பிரியாத பெரிய திருத்தாண்டகமும் "செஞ்சடைக் கற்றை" என்னும் திருநேரிசையும் பாடிப் பணிகள் செய் தமர்ந்தருளினர்.

**ஆளுடைய பிள்ளையாரிடம் அணைந்தது:—I முதல் முறை சந்திப்பு**

அந்நாளில், சீகாழியில் ஆளுடையபிள்ளையார் திருவவதரித்து, மூன்றாண்டில் அம்மையாரது திருமுலைப்பாலுண்டருளித், திருஞானசம்பந்தராகி விளங்கிய செயலை அடியார்கள் சொல்ல நாயனார் கேட்டருளினர். அதிசயமாம் காதல்கூர அவரைக்கண்டு வணங்கவேண்டி அப்பொழுதே அம்பலவர் திருவருள் விடைபெற்றுத் திருவீதியினைப் புரண்டு வலங்கொண்டு போந்து, திருவெல்லை பணிந்து, திருநாரையூர் பணிந்து சென்று, சீகாழியினைச் சேர்ந்தருளினர். நாயனார் எழுந்தருளியது கேட்ட ஆளுடையபிள்ளையாரும் அவரைக் காணும் பெரு விருப்பு மேலோங்க அன்பர்கள்சூழ எதிர்கொண்டு எழுந்தருளி வந்தனர். தொழுதுகொண்ட படியே அணைந்து, தொண்டர்திருக்கூட்டத்தினிடையே சென்று பெருங்காதலுடன் பிள்ளையாரது திருவடிகளை நாயனார் பணிய, அவரது திருக்கரங்களைத் தமது எழுதரிய திருக்கைகளாற் பற்றி எடுத்துப், பிள்ளையார் தாமும் எதிரிறைஞ்சி, "நீவிர் எமது அப்பரே" என்றுகூற, அவரும் "அடியேன்" என்றனர். அப்பெரு நிகழ்ச்சி கண்ட அன்பர்கள் பேரின்பமெய்தி அர! அர! என்று முழக்கம் செய்தனர். பிள்ளையார் கழல் வணங்கப் பெற்றதற்கு அரசுகள் உவந்தனர்; வாகீசரைக் காணப் பெற்றதற்குப் பிள்ளையார் மகிழ்ச்சி பொங்கினர். இவ்வாறு ஒருவர் ஒருவரிற் கலந்த உண்மையோடும் இருவருங்கூடித் திருத்தோணியுடையவர் கழல் வணங்கும் விருப்பின்மிக்கனர். அருட்கடலும் அன்புக்கடலும் போலவும், சைவ நெறி பெற்ற புண்ணியக் கண்க ளிரண்டும் போலவும், அப்பனார் அருளும் அம்மையாரருளும் போலவும் கூடி, ஞானக்கன்றும் அரசும் சென்று திருக்கோயில் சேர்ந்தருளினர். உரிய முறையால் வணங்கித் திருமுன்பு விழுந்தெழுந்தபோது, பிள்ளையார் நாயனாரை நோக்கி, "அப்பரே! உங்கள் தம்பிரானாரை நீர் பாடுவீராக" என்றருளப், "பார்கொண்டு மூடி" என்ற திருவிருத்தப் பதிகத்தினாற் போற்றியருளிப் புறம்போந்து, பிள்ளையாரது திருமடத்தில் நாயனார் எழுந்தருளி அமுதுசெய்து நண்புறு கேண்மை அந்நாள் போல எந்நாளும் வளர்ந்தோங்க, உடன் பல நாள்கள் அங்கு வைகியருளினர்.

**பிள்ளையார் "அப்பரே!" என்றது**

**திருநல்லூரில் திருவடி தீக்கை பெற்றது**

அவ்வாறு இருபெரு மக்களும் அளவளாவி, அளவிலா மகிழ்ச்சியினோடு செல்லு நாளில், நாயனாரது திருவுள்ளத்தில் சிவபெருமான் எழுந்தருளிய பிற தலங்களையும் சென்று வணங்கும் விருப்பம் வாய்க்க, அதனைப் பிள்ளையாரிடம் விளம்புதலும், அவரும் அதனை உடன்பட்டு, இருவருமாகக் கூடிச் சென்று திருக்கோலக்காவை வணங்கி அங்கு நின்றும் பிள்ளையார் மீண்டருளினர். அவரிடம் விடைகொண்டு நாயனார் எழுந்தருளித் திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், திருக்குறுக்கை, திருநின்றியூர், திருநனிபள்ளி முதலாகிய தலங்களைக் காவிரியினிருகரையிலுமாகக்

கலந்து சென்று வணங்கினர். திருச்செம்பொன்பள்ளி - திருமயிலாடுதுறை - திருத்துருத்தி - திருவேள்விக்குடி - திருஎதிர்கொள்பாடி முதலிய தலங்களைப் பணிந்து பதிகம் பாடித் துதித்துப் பணிசெய்து திருவாவடுதுறையினை அடைந்தனர். "ஆவடு தண் டுறையாரை யடைந்துய்ந்தேன்" என்ற திருத்தாண்டகத்தை அருளிச்செய்து, திருக்குறுந்தொகை திருநேரிசை திருவிருத்தம் முதலிய பதிகங்களையும் பாடிக் கைத் திருத்தொண்டும் செய்து தங்கியருளினர். பின்னர்த் திருஇடைமருதூரைச் சென்று வணங்கித் திருச்சத்திமுற்றத்தினை அடைந்தனர். "கூற்றம்வந்து குமைப்பதன்முன் உனது திருவடிகளை என்தலைமேற் பொறித்து வைப்பாய்" என்ற கருத்துடன் அங்குக் "கோவாய் முடுகி" என்னும் பதிகம் பாடியருள, நாயகனர் "திருநல்லூருக்கு வா" என்றருள, அவ் வருட்குறியின் வழியே திருநல்லூருக்குச் சென்று வணங்கினர். அவ்வாறு வணங்கி மகிழ்ந்து எழும்பொழுதில் "உன்னுடைய நினைப்பை முடிக்கின்ரும்" என்று இறைவர் திருவடி மலர்களை நாயனரது திருமுடியிற் சூட்டியருளினர். நாயனர் "நனைந்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார்" என்ற திருத்தாண்டகத்தாற் போற்றி, நினைந்து, உருகி, விழுந்து, எழுந்து, நிறைந்து, மலர்ந்து, உலவாக் கிழி பெற்ற வறியோன்போல மனம் தழைத்தனர். இவ்வாறு நாயனர் அங்குத் தங்கிப் பணிசெய்யும் நாட்களில் அருகில் உள்ள திருக்கருகாவூர், திருவாவூர்ப்பசுபதீச்சரம், திருப்பாலைத்துறை முதலாகிய தலங்களிற் சென்று சென்று வணங்கித் தொண்டு செய்துகொண்டு திருநல்லூரை யொருகாலும் பிரியாதே உள்ளுருகிப் பணிந்து வந்தனர்.

சிவபெருமானது திருப்பழனத்தைப் பணிந்து கொண்டு அதன் பக்கத்திலுள்ள பதிகளையும் வணங்கி நாவுக்கரசர் அப்பூதியடிகளுடைய தலமாகிய திங்களூரை வந்தடைந்தனர்.

**அப்பூதியடிகள் மகனை விடம் மாற்றியது**

அந்தணர்களுட் சிறந்த அப்பூதியடிகள் தமது மக்களுடன் சாலைகள் - குளம் - கூவல் - தண்ணீர்ப் பந்தல் முதலிய பலவற்றையும் திருநாவுக்கரசர் பெயரால் பண்ணிய செய்தியைக் கேட்டு, அவர் திருமனையை நண்ணினர். முன் காணுமலே பெருங்கேண்மை கொண்ட, தமது தியானப் பொருளாயுள்ள திருநாவுக்கரசர்பெருமான், தாமே நேரே வந்தது கண்டு, அப்பூதியடிகள் மனமிக மகிழ்ந்து மனைவியார் மைந்தர் பெருஞ் சுற்றத்தார்களுடனே களிகூர நாயனரைத் தொழுது அவரைத் திருமனையில் அமுது செய்தருள வேண்டினர். அவரும் இசையவே பெருவிருப்புடன் போனகமும் கறியமுது முதலாயினவும் வெவ்வேறு விதங்கள் பெற அமைத்தனர். நாயனரை ஊட்டுவித்தற் பொருட்டுப் பரிகலமாக வாழைக் குருத்துக் கொண்டு வரத் திருநாவுக்கரசரது பெயர் பூண்ட தமது மூத்த மகனை ஏவினர். அவன் வாழைக் குருத்தை அரியும்போது அவனை ஒருதழல் நாகம் தீண்டிவிட்டது. அவன் அதனை வெளிப்படுத்தாது விரைந்து வந்து வாழைக் குருத்தினைத் தாயாரிடம் கொடுத்து, விடம் தலைக்கேறியதனல் மயங்கி வீழ்ந்தனன். பெற்றவர்கள் அது கண்டு, விடத்தினுல் வீந்தான் என்பதைக் குறிகளால் அறிந்து கொண்டனர்; பெரியவர் அமுது செய்ய இது இடையூருகும் என்று துணிந்து, யாதொரு தடுமாற்றமுமில்லாராகி, அவனது உடலைப் பாயினின் மூடிப் புறத்துவைத்துப், பரிகலமிட்டு, நாயனரை அமுது செய்ய அழைத்தனர். அவரும் ஆசனத் தமர்ந்தபோது திருவருளால் உண்மை யறிந்து, அளவிறந்த கருணைகொண்டு, அந்த உடலைக் கோயிலின் முன் கொணர்வித்து, "ஒன்றுகொலாம்" என்ற பதிகத்தைப் பாடி யருளினர். விடம் நீங்கிப் பிள்ளை எழுந்தனன். நாயனர் அப்பூதியார் திருமனையில் அமுது செய்தருளி, மீண்டும் திருப்பழனத்தை யடைந்து அப்பூதியாரைச் "சொன்மாலைப்" பதிகத்துள்

வைத்துச் சிறப்பித்துப் பாடியருளினர். அணிமையில் உள்ள திருச்சோற்றுத் துறை முதலாகிய பல தலங்களையும் சென்று வணங்கித் திருப்பழனத்தில் பலநாள்கள் நாயனர் தங்கித் திருத்தொண்டு செய்தமர்ந்தருளினர். தமது தலைமேல் திருவடி வைத்தருளிய திருநல்லூரிறைவரது திருவடிகளை நினைந்துகொண்டு காவிரியின் தென்கரையேறிச் சென்று திருநல்லூரை அடைந்து பணிந்து பணி செய்திருந்தனர்.

**திருவாரூர்த் திருவாதிரைத் திருநாள் தரிசித்தது**

அந்நாளில் திருவாரூரைச் சென்று வணங்குதற்குத் திருவுள்ளங் கொண்டு அருள் விடை பெற்றுப் புறப்பட்டுத் திருப்பழையாறைப் பல தளிகளையும், திருவலஞ்சுழி, திருக்குடமூக்கு, திருநாலூர், திருச்சேறை, திருக்குடவாயில், திருவாஞ்சியம், திருக்கீழ்வேளூர், திருவிளமர் முதலிய பல பதிகளையும் தொழுது திருவாரூரை வந்தணைந்தருளினர். ஆண்ட அரசுகள் அணைந்த பெருஞ் செய்தி கேட்ட ஆரூரில் அடியார்கள் ஆரூர் அணிநக ரலங்கரித்து வீதிகள் விளங்கத் திருமலி மங்கலஞ்செய்து திருமதில் வாயிற்புறத்து வந்து நாயனரை எதிர்கொண்டனர். நாயனர் அவர்களை வணங்கித் "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் அமண் குண்டரிற்பட்டுப் பிணியொழிந் துய்யப்போந்தேனுக்கு முண்டாமோ?" என்று "**குலம்பலம் பாவரு குண்டர்**" என்ற திருப்பதிகம் பாடித் துதித்து, அற்ற உணர்வொடும், அவர்களுடனே திருவீதியுட்புகுந்து திருக்கோயிலை யணைந்து, வணங்கித், தேவாசிரியனை இறைஞ்சிப், புற்றிடங்கொண்டாரை நேர்கண்டு தொழுதனர். கண்டு தொழுது கீழே வீழ்ந்து உடம்பெங்கும் மயிர்க்கூச் செறியக் கண்கள் நீர்மழை பெய்யத், திருமூலட்டானரைப் "போற்றித் திருத்தாண்டகத்"தினுல் துதித்தனர். "**காண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன்**" என்ற பதிகத்தாற் றிருமுன்பு நின்று துதித்துக், கோயில் வலம் வந்து வணங்கினர். திருமுன்றில் முன் சார்ந்து "**ஆருரைக் கையினுற் றெழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேன்**" என்னும் திருப்பதிகத்தாற் போற்றி அங்குத் தங்கியிருந்தனர். மார்பு நிறைய வழியும் கண்ணீருடைய திருவடிவும், வாக்கில் திருப்பதிகத் தமிழ் மாலைகளும், திருவடிகளையே சார்வாகும் திருமனமும், திருஉழவாரப் படையும், தாமுமாகப் பணி செய்து ஒழுகினர். புற்றிடங்கொண்ட பெருமானைக் காலங்கள்தோறும் கும்பிட்டுப், "**பாடிளம் பூதத்தினுனும்**" என்பது முதலிய பதிகங்களைப் பாடியருளி ஆர்வம் பெருக இவ்வாறு நிகழ்வாராயினர். நமிநந்தியடிகள் திருத்தொண்டினைச் சிறப்பித்துத் திருவிருத்தப் பதிகம் பாடித் திருவாரூரரனெறி யிறைவரைப் போற்றினர். அந்நாள்களில் திருவலிவலம், கீழ்வேளூர், கன்றாப்பூர் முதலிய தலங்களைக் கலந்து பாடித் திருவாரூரில் மீண்டும் அணைந்திருந்தருளினர். அப்போது வீதிவிடங்கப் பெருமானது திருவாதிரைத் திருவிழாவை அடியார்களுடன் சேவித்துப் போற்றியிருந்து திருப்புகலூரை வணங்கவிரும்பி விடைபெற்றுப் போந்தனர்.

அந்நாட்களில் ஆளுடையபிள்ளையார் சீகாழியினின்றும் புறப்பட்டுச் சிவ தலங்கள் பலவும் வழிபட்டுத் திருப்புகலூரில் வந்து முருகநாயனர் திருமடத்தில் எழுந்தருளியிருந்தனர். அப்பர் பெருமான் திருவாரூரை வணங்கித் திருப்புகலூரை நோக்கி மீண்டருளினர் என்று கேட்டு அவரை எதிர்கொள்ளும் விருப்பினோடு அடியார் கூட்டம் புடைசூழ எழுந்தருளி ஆளுடையபிள்ளையார் நகர்ப்புறத்தே எதிரே வந்தருளினர். அவர் அவ்வாறு வருகின்றதை அப்பர் பெருமான் கேட்டு மகிழ்ச்சியோடும் வந்தருளினர். இருதிறத்து அடியார் கூட்டங்களும் இரண்டு நிலவின் கடல்கள் ஒன்ருகி யிசைந்தன

போலக் கூடிக் கலந்தன. அப்பர் சுவாமிகள் பிள்ளையாரை இறைஞ்ச, அவரும் எதிர் வணங்கி, "அப்பரே! நீர் வரும் நாளில் திருவாரூர் நிகழ் பெருமையினை வகுத்துரைப்பீர்" என்று கூறினர். அப்பர் பெருமான் "அதனை என்னென்று சொல்வேன்?" என்று சொல்வாராகி, "முத்துவிதானம்" என்னும் திருப்பதிகம்பாடி அச்சிறப்பினை எடுத்துக் கூறியருளினர். அதுகேட்ட பிள்ளையார் "யான் திருவாரூர் சென்று கும்பிட்டே மீண்டுவந்து உம்முடனமர்வேன்" என்று அங்கிருந்தபடியே திருவாரூருக்கு எழுந்தருளினர். அப்பர் சுவாமிகள் உள்ள நிறைந்த அன்பு பெருகிக் கண்பொழி நீர் உடலை நனைப்பச் சென்று திருப்புகலூர் இறைவரைத் தொழுது பணிசெய்து இன்புற்று அங்கு அமர்ந்திருந்தனர். சிலநாள் சென்றபின் ஆளுடைய பிள்ளையாரும் திருவாரூர் தொழுது மீண்டு புகலூரில் வந்தருளினர். பெருவிருப்போடு நாயனுர் அவரை எதிர்கொண்டு அங்கு இருவரும் உடன் எழுந்தருளி யிருந்தனர்.

ஆளுடைய பிள்ளையார்பாற் கூடியது :—

II-இரண்டாவது முறை சந்திப்பு

அது கேட்டுச் சிறுத்தொண்ட நாயனுரும், திருநீலநக்க நாயனுரும் அங்கு எழுந்தருளச், சீரடியார் பலரும் வந்துகூடி, அனைவரும் முருக நாயனுரது திருமடத்தில் உடன் பயில் கேண்மையில் அமர்ந்து, திருத்தொண்டின் நிலையுணர்ந்தும், திருப்பதிகச் செந்தமிழின்றிறம் போற்றியும், திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தும் இவ்வாறு ஒருப்படு சிந்தையினுர்களாய், உடன் உறைவின் பயன்பெற் றமர்ந்திருந்தனர். அந்நாளில் சிவதலங்கள் பலவற்றையுஞ் சென்று தொழுவதற்கு நினைந்து பிள்ளையாரும் நாயனுரும் திருப்புகலூர்தொழுது புறப்பட, ஏனை அடியார்கள் விடைகொண் டேகினுர்கள். நாயனுர் முன்னுகச் செல்லவும், அவரைப் பின்பற்றித் தொடர்ந்து, பிள்ளையார் சிவிகையில் எழுந்தருளவும் இவ்வாறு செல்வார்களாய்த், திருவம்பர்சென்று வணங்கித், திருக்கடவூர் சேர்ந்து இறைவரை வணங்கிக் குங்குலியக்கலய நாயனுரது திருமடத்தில் எழுந்தருளியிருந்தனர். திருக்கடவூர் மயானத்தையும், திருவாக்கூரையும் வணங்கிக்கொண்டு திருவீழிமிழலையில் சென்று வணங்கி, நாயனுர் "திருவீழி மிழலையானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின் றரே" என்ற திருத்தாண்டகத்தாற் போற்றிக், காதல் சிறந்தோங்க அங்குத் தங்கிக், கும்பிட்டுத், திருத்தொண்டு செய்துகொண்டு அப்பதியில் அந்த மெய்ம்மை யருந்தவர்க ளிருவர்களும் அடியார்களும் தங்கி இருந்தார்கள்.

பிள்ளையார், நாயனுர், திருநீலநக்கர், சிறுத்தொண்டர், முருகனுர்.

உடனுறைவின் பயன்

சில நாள்கள் செல்ல, மாரி சுருங்கிற்று; வளம்பொன்னி நதியும் பருவம் மாறிற்று; நீர் வளத்தால் வரும் உணவு அருகிற்று; உலகில் இலம்பாடு சேர்ந்து வறுமையினுல் நாடு எங்கும் வற்கடமாய் உலகோர் பட்டினியால் கண் சாம்பி வருந்தினர். வீழிமிழலையுடைய பெருமான் இருபெரு மக்களின் கனவிலும் தோன்றினர். "கால நிலைமையினுல் உங்கள் கருத்தில் வாட்டமுறீர்; ஆயினும் உங்களை வழிபட்டுச் சாரும் அடியார்களுக்கு நீங்கள் அளிக்கும் பொருட்டு நாம் உங்களுக்கு நித்தம் ஓரோர் காசு அளிக்கின்ரேம்" என்று அருளிச்செய்தனர். பிற்றைநாள், இருபெரு மக்களும் திருக்கோயிலில் வணங்கும்போது, கிழக்குப் பீடத்தில் பிள்ளையாரும், மேற்குப் பீடத்தில் நாயனுரும் காணுமாறு மிழலை நாயகர் பொற்காசு படியாக வைத்தருளினர். அதனைக் கொண்டு, நாளும், "அடியார்கள் வந்து இருபொழுதும் உண்க" என்று பறை

விழிமிழலையிற் படிக்காசு பெற்றது

சாற்றுவித்து இருவரும் தங்கள் தங்களுடைய திருமடங்களில் அடியார்கள் எல்லாருக்கும் வளம்பெருகச் சோறிட்டு, அளித்து, உலகங் காத்தனர்.

திருமகனாராதலின் பிள்ளையார் வாசியுடன் காசும், கைத்தொண்டாகும் அடிமையினால் நாயனார் வாசியில்லாக் காசும் பெற்றனர். வாசிதீரப் பாடி பிள்ளையார் வாசியில்லாக் காசு பெற்றனர். இவ்வாறு திருவருளின் பெருமையினால் உலகம் போற்றியிருக்கும் நாளில், மழைபெய்ய உலகம் செழித்தது; வறுமை மாறிற்று. பிற தலங்களை வணங்க எண்ணித் திருமிழலை மணியை வணங்கித் திருமறைக்காட்டில் இருவரும் சென்று சேர்ந்தனர்.

திருக்கோயிலினை முறைப்படி வணங்கி உட்புகுந்தனர். வேதங்களாற் பூசிக்கப்பட்டு இலச்சினையிட்டுத் திருக்காப்பிடப்பட்ட அந்நாள் முதல் இதுவரை அடைத்தே நிற்கின்ற நேர் திருவாயிலின் முன் சேர்ந்தனர்; அக் கதவினைத் திறக்க வல்ல அம்மறைகளோதும் அடியார்கள் அணையாமையினால், அன்பர்கள், பக்கத்தில் வேறு வாயில் வழியாக உள்ளே சென்று இறைவரை வணங்கி வருவதை அங்குக் கேட்டறிந்தனர்.

**மறைக்காடு-கதவம் திறக்கப் பாடியது**

பிள்ளையார் அரசுகளை நோக்கி "அப்பரே! நாம் இருவரும் நேரே உட்சென்று இறைஞ்சும்படி இக் கதவம் திறக்கப் பாடும்" என்றருள, அதனாலே நாயனாரும் "பண்ணினேர் மொழியாள்" என்ற பதிகம் பாடியருளினர். அதன் பயனைத் தூய்ப்பாராகி, இறைவர் பதிகப் பத்துப் பாட்டு அளவும் கதவம் திறக்கத் தாழ்த்தனர். திருக்கடைக் காப்பில் நாயனார் "இரக்கமொன்றிலீர் எம்பெருமானீரே!" என்று பாடி இறைஞ்சினர். திருவருளாற் கதவம் அன்பர்கள் முன்பு காப்பு நீங்கித் திறந்தது. இருபெரு மக்களும் வீழ்ந்திறைஞ்சி உட்புகுந்து வணங்கினர். அடியார்கள் அரவோசை முழக்கி ஆர்த்தனர். பெருமக்கள் இருவரும் புறம்போந்த போது, நாயனார், பிள்ளையாரை நோக்கிக், "கதவம் அடைக்க நீரும் பாடியருளும்" என்றருளப், பிள்ளையார் "சதுரம் மறை" என்ற பதிகம் பாடியருளவே, எடுத்த திருப்பாட்டிற் கதவம் திருக்காப்புக் கொண்டது. அது கண்டு மகிழ்ந்து வணங்கி இருவரும் புறம்போந்து திருமடங்களிற் றங்கியருளினர். அது முதல் அக்கதவம் திறக்கவும் அடைக்கவுமாக நிகழ்ந்தது. அன்றிரவு, தாம் அரிதில் திறக்கப் பாடியமையினையும், பிள்ளையார் அடைக்கப் பாடிய எளிமையினையும் எண்ணி "நம்பர் திருவுள்ள மறியா தயர்ந்தேன்" என்று பெரிதும் அஞ்சி, இறைவர் திருவடிகளை நினைந்து, திருமடத்தில் ஒரு பக்கத்தில் அணைந்து பொருந்திய அவ்வுணர்வுடன் வாகீசர் துயில் கொண்டருளினர். இறைவர் அவரது கனவிற் றோன்றி "வாய்மூரில் இருப்போம்; தொடரவா" என்று அருளி மறைந்தனர். நாயனார் உடனே துயிலுணர்ந்து "வா என்று போனார்; அது என்கொல்" என்று பாடி, "இது எம்பெருமா னருளாகில் யான் அங்குச் செல்வேன்" என்று எழுந்து, திருவாய்மூரை நோக்கிப் புறப்பட்டனர்.

**திருவாய்மூர்**

இறைவனார் முன் காட்டும் அந்தத் திருவேடத்துடன் முன்னே சென்றனர். நாயனார் பின் செல்லச் செல்ல அவர் அணுக முடியாதபடி முன்னே சென்று பொற்கோயில் ஒன்று காட்டி அதனுட் புகுந்து மறைந்தனர். இந்த அளவில் நாயனார் சென்ற செய்திகேட்டு ஆளுடைய பிள்ளையாரும் அங்கு எழுந்தருளினர். "பிழைத்துச் செவ்வியறியாதே திறப்பித்தேனுக்கே ஒளிக்கலாமேயன்றித், தமிழ் உறைப்புப் பாடி அடைப்பித்த பிள்ளையார் ஈண்டு வந்துளர்; அவருக்கு ஒளிக்கலாமோ?" என்று நாயனார் பாடியருள, இறைவர் பிள்ளையார் காணக் காட்சிதர, அவர் பாடித் தொழுது அரசுகளுக்குக் காட்டக், கண்டு, "பாட வடியார் பரவக் கண்டேன்" என்று பாடித் தொழுதனர். இருவரும் திருவாய்மூர் தொழுது திருமறைக்காட்டிற் கெழுந்தருளி யிருந்தனர்.

அந்நாளில் பாண்டிநாடு சமணத்தில் மூழ்கிச் சைவம் பொலிவழிந்து நின்றது. மன்னவனும் சமணனாயினன். சிவ வழிபாடு குறைந்தது. அது கண்டு வருந்திய மங்கையர்க்கரசி யம்மையாரும் குலச்சிறை மந்திரியாரும், அங்கு எழுந்தருளிச் சைவத்தாபனம் செய்து வளர்க்க வேண்டுமென்று, ஆளுடைய பிள்ளையார்பால் விண்ணப்பித்துப் பரிசனங்களை விடுத்தனர். அதுகேட்ட பிள்ளையார் சமணர்களது வன்செயலை மாற்றிச் சைவநெறி விளங்கும்படி தெய்வத் திருநீற்றினை எண்ணிக்கொண்டு, பாண்டிநாடு செல்ல எழுந்து நாயனாருக்கு அறிவித்தருளினர். நாயனார் "அமணர் வஞ்சனையில் மிக வல்லவர்; நாளும் கோளும் தீயன; நீர் அங்குச் செல்லலாகாது;" என்று விலக்கினர். பிள்ளையார் அதை மறுத்துப், "புத்தரையும் சமணரையும் திருநீறு அழிவிக்கும்; இது திடம்; இறைவர் துணை நிற்க, நாளும் கோளும் நல்லவாகும்; பாண்டிநாட்டில் யானே போய்ச் சமணத்தைச் சிதைத்து வருகின்றேன்; நீர் இங்குக் கும்பிட்டு இருப்பீர்" என்று உரைத்துப், புறப்பட்டு எழுந்தருளினர். நாயனார் அங்கு நின்றும் மீண்டும் திருவீழிமிழலையிற் சென்று பணிந்து திருவாவடுதுறையிற் கும்பிட்டு, அங்குப் பிள்ளையாருக்கு ஆயிரம் பொன் அளித்த பெருமையைப் போற்றிப்பாடிப், பிற பதிகளிலும் வணங்கிப் பழையாறை வடதளியிற் சேர்ந்து திருக்கோயிலைக் கைகூப்பித் தொழுதனர். அக்கோயிலை மறைத்துச் சமணர் பாழியாகவாக்கினர் என்றுகேட்டு வருந்தி, அங்கு இறைவரது வண்ணங்கண்டு கும்பிட்டாலன்றி மேற் செல்வதில்லை என்று துணிந்து, "அமணர் திறம் அழித்து உம்மைக் காணக் காட்டும்" என்று இறைவர் பாதம் நினைந்துகொண்டு, அருகு ஓரிடத்தில் அமுது செய்யாது நாயனார் அமர்ந்தனர். இறைவர் அரசனது கனவில் எழுந்தருளி, அமணர் வஞ்சனையால் மறைக்கத் தாம் இருந்த அடையாளங்களைக் காட்டி, அவற்றைப் போக்கி அரசுகள் தம்மைக் கண்டு கும்பிடுமாறு செய்யும்படி அறிவித்தருளினர். அரசனும் உணர்ந்து அடையாளத்தின் வழி கண்டு, அமணரைத் தூரறுத்துப் போக்கித், தூய்மை செய்து, விமானமாக்கி, அரசுகளை அடி பணிந்து அறிவித்தான். அரசுகள் சென்று வழிபட்டு "அமணர் மறைத்தாலும் மறைக்க வொண்ணுமோ" என்ற பதிகம் பாடி இறைஞ்சினர்.

**பிள்ளையார் பாண்டி நாடு சென்றது**

**பழையாறை வடதளி-அமணர்வஞ்சனை அகற்றியது**

அங்கு நின்றும் காவிரியி னிருகரையிலும் உள்ள தலங்களைப் பணிந்து பாடிச் சென்றனர். திருவானைக்கா, திருவெறும்பியூர், திருச்சிராப்பள்ளி, திருக்கற்குடி, திருப்பராய்த்துறை முதலிய தலங்களை வணங்கினர். திருப்பைஞ்ஞீலியைச் சார வருகின்ற அப்போது, வழிவரும் இளைப்பினாலும், பசியினாலும், நீர் வேட்கையினாலும் மிக வருந்தினர். ஆயினும் அதனால் மனம் சிறிதும் அலைவுபடாமல் நாயனார் அத்தலத்தை நோக்கி எழுந்தருள, இறைவர் அவரது வருத்தம் நீக்குதற்கு, அவ்வழியில் ஒரு சோலையும் குளமும் அமைத்து அந்தணர் வேடத்துடன் வழி போவார்போலப் பொதிசோறுடன் எழுந்தருளி யிருந்தனர். நாயனார் அங்கு எழுந்தருள, வேதியர் அவரை நோக்கி, "இந்தப் பொதி சோற்றினை உண்டு இளைப்பு நீக்கி மேற் செல்வீர்" என்று கூறினர். நாயனார் அது ஈசர் அருள் என்று அறிந்தார்போல, வேதியர் சொல்லைப்பற்றி மேலும் எண்ண நினையாது, பொதி சோற்றினை வாங்கி அமுது செய்து இளைப்பாறினர். பின்னர்த் திருப்பைஞ்ஞீலிக்குச் செல்வாராகிப் புறப்பட, வேதியர், தாமும் அங்குப் போவதாய் உடன் வந்து நகரத்தின் பக்கத்தில் மறைந்தனர். நாயனார் "இறைவர் அடியேனையும் பொருளாக அளித்த கருணை இருந்தபடி இதுவோ?" என்று பாடிக், கண்

**திருப்பைஞ்ஞீலியில் பொதிசோறு பெற்றது**

ணீர் பெருக்கி வீழ்ந்து எழுந்து பரவசமாகிப் பரவினர். அவ்வாறே பைஞ்ஞீலியிற் றிருக்கோயிலிற் சென்று வழிபட்டுத் தங்கினர். பின்னர் இறைவர் எழுந்தருளியுள்ள பல மலைகளையும் நாடுகளையும் ஊர்களையும் சென்று வணங்கித் திருவண்ணாமலையை அணைந்து வழிபட்டுத் திருவருள் வழியே தொண்டை நன்னாட்டை அடைந்து முதலிற் றிருவோத்தூரிற் சேர்ந்து வழிபட்டு, மேற் சென்று காஞ்சிபுரத்தை அடைந்தருளினார். அடியார்கள் நகரையலங்கரித்து எதிர்கொள்ளப் புகுந்து, திருவேகம்பரது கோயிலை யடைந்து வணங்கி அம்மை தழுவக் குழைந்த மணி மேனிப் பெருவாழ்வை முன் கண்டு இறைஞ்சிக் கண்ணீர் பெருகப் பேரன்பு வெள்ளத்தில் மூழ்கித் திளைத்தனர். "கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியானை" என்ற திருப்பதிகம் பாடித் துதித்தனர். கச்சித் திருமயானத்தையும் வணங்கினர். கச்சியில் உள்ள திருமேற்றளி முதலாகிய பல தலங்களையும் வணங்கினர். அங்குத் தொண்டு செய்து பலநாள் எழுந்தருளி யிருந்தனர். அங்கிருந்தபடியே திருமாற்பேறு முதலிய தலங்களைச் சென்று கும்பிட்டு "ஏகம்பன் காணவனேன் னெண்ணத் தானே" என்று நினைந்து மீண்டும் வந்து கச்சியில் கும்பிட்டிருந்தனர். பின்னர்த் திருக்கழுக்குன்றம், திருவான்மியூர், திருமயிலாப்பூர் முதலிய தலங்களை வணங்கித் திருவொற்றியூர் சேர்ந்தருளினர். அங்கு எழுத்தறியும்பெருமானாகிய இறைவரைக் கண்ணீர்த் தாரை பெருக, மேனியிற்பொங்கி மயிர்ப்புளக மரும்ப, விதிர்விதிர்ப் புற்று விம்மி மனமுருக நின்று "வண்டோங்கு செங்கமலம்" என்ற திருத்தாண்டகம்பாடியருளி, வணங்கினர். அத்தலத்திற் சிலநாள் தங்கித் திருக்குறுந்தொகை, திருநேரிசை, திருவிருத்தம் முதலாகிய பதிகங்களைப்பாடியும் தொண்டு செய்தும், அணிமையில் உள்ள ஆலயங்களைப் பணிந்தும் வைகியருளினர். அங்கு நின்றும் திருப்பாசூரை வணங்கி "முந்தி மூவெயில்" என்னும் பதிகம்பாடிப் பழயனூர்த் திருவாலங்காட்டையடைந்து பணிந்து, வடதிசை மேற் சென்றருளிப் பல பதியும் நெடுங்கிரியும் படர்வனமும் சென்று, திருக்காரிகரை பணிந்து, திருக்காளத்தியை அணைந்தனர்.

**தொண்டை நன்னாடு சேர்ந்தது**

பொன்முகலித் தீர்த்தத்தில் மூழ்கித், திருமலையை வணங்கி, மேல் ஏறிக், காளத்தி மலை யெழு கொழுந்தாயுள்ள இறைவரை வீழ்ந்திறைஞ்சி, மனமும் கண்ணுங் களிப்பப் பரவசமாய்க் "காளத்தி யானவனென் கண்ணு ளானே" என்னும் திருத்தாண்டகத்தாற் போற்றி, வழிபட்டு, அரிதிற் புறம்போந்து அத்திருமலையிற் றிருப்பணிகள் செய்தமர்ந்தனர். அங்குப் பணிந்த குறிப்பினாலே திருக்கயிலையில் இறைவர் எழுந்தருளியுள்ள பெருங்கோலத்தைச் சென்று நேரே காண வேண்டுமென்னும் காதல் கொண்டனர்.

**திருக்கயிலை யாத்திரை**

காளத்தி நாதரைத்தொழுது வடதிசை மேல் மிக்க விருப்போடும் செல்வாராய்ப் பெருமலைகளையும், கான்யாறுகளையும், அவை தொடர்ந்த நாடுகளையும் கடந்தபின் இறைவரது திருப்பருப்பதத்தை அடைந்தனர். விஞ்சையர், இயக்கர், கின்னரர், நாகர், காமசாரிகள் முதலிய தேவச்சாதியர்கள் நாளும் வந்து வணங்கும் அம்மலையைவணங்கிப் பதிகம்பாடி வழிபட்டனர்; அதன்பின் தெலுங்க நாட்டையும் கடந்து, கன்னட நாட்டையும் கடந்தனர். அதன்மேல் செறிந்த வனங்களையும், மலைப்பாதைகளையும், நாடுகளையும் கடந்து, மாளவ நாட்டையடைந்து கடந்து, அரியசுரங்களையும் தாண்டிச் சென்று, எங்கும் அறங்கள் நீடும் இலாட பூமியையும், கடந்து, பின், பெரிய மலைகள், ஆறுகள் காடுகள் முதலியவற்றைக் கடந்து மத்திம பைதிரத்தினைச் சேர்ந்தனர். கங்கையாற்றைக் கடந்து காசித்தலத்தை விருப்பினோடு பணிந்தனர். தம்முடன் வந்தவர்களை அங்கு விட்டுத். தாம் தனித்துக் கயிலைமலை செல்வாராய்க் கங்கையைக் கடந்

தனர்; கற்சுரங்களும் வானமளாவ வுயர்ந்த காடுகளும் முதலியவற்றை மனிதர் செல்லலாகாத வழிகளாகியும் ஆசை மிகுதியால் நடந்து கடந்து சென்றனர். கிழங்கு இலை கனி முதலியவற்றை உண்ணுதலையும் விட்டு, இரவும் பகலுமாக நடந்தனர்; கால்கள் பரட்டளவும் தேய்ந்தன. கயிலையில் வைத்த ஆசையினால் கைகளினால் தாவித் தாவிச் சென்றனர்; கைகள் மணிக்கட்டு அளவும் தேய்ந்தன. தேயவும் நில்லாது அந்த வெம்பரற் புகை மூளும் கடுங்கானகத்துள் மார்பினால் வருந்தி உந்திச் சென்றனர் மார்பமும் தசை நைந்து எலும்புகள் முறிந்தன. அதன்மேல் உடம்பு முழுதும் தேயும் படி புரண்டு சென்றனர். உடம்பு முற்றும் தேயவே மேற்செல்லும் புறச்செயலின்றி; அவ்வழியில் தமிழாளியார் தங்கினர். நிலைபெற்ற தீந்தமிழாற் பின்னும் இவ்வுலகத்து நின்று அவர் போற்றிடவேண்டுமென்னும் திருவுள்ளங்கொண்டு, சிவபெருமான் அப்போது அவர் கயிலையை அணைவதற்கு அருள் செய்யாது, அங்கு ஒரு தடாகத்தையும் உண்டாக்கி தாமே முனிவர் வேடத்தால் எழுந்தருளி வந்து நாயனாரின் நேர் நின்று நொந்து நோக்கினர். அவரும் எதிர்நோக்க, "உடம்பு அழியும்படி நீர் இந்தக் கொடிய காட்டில் வந்ததென்னை?" என்று கேட்டனர். அதற்கு "வடகயிலையிற் சிவபெருமான் உமையம்மையாருடன் இருக்கும் பெருங் கோலத்தைக் காணவந்தேன். முனிவரே! இது என் குறிப்பு" என்று நாயனார் கூறக், "கயிலைமாமலையாவது மனிதர் காணுதற் கெளிதோ? தேவர்களும் காணற் கரியதாம். இங்கு வந்து என்ன காரியஞ் செய்து விட்டீர்? இனி இம்மட்டில் மீள்வதே கடன்" என்று முனிவர் அருளினர். "இறைவருடைய கயிலைக் காட்சி கண்டாலன்றி, அழியும் இவ்வுடல்கொண்டு மீளேன்" என்று நாயனார் மறுத்துக் கூற, அவர் துணிபு கண்டு முனிவர் வானில் மறைந்து, அசரீரி மொழியாலே "ஓங்கு நாவினுக்கரசனே! எழுந்திரு" என்று கூறியருளினர். நாயனாரும் ஊறுபாடுகள் முற்றும் நீங்கிய திருமேனியுடன் எழுந்தனர் "அண்ணலே! உனது கயிலைத் திருக்கோலத்தைக் கண்ணுற் காண அருள் புரிவாயாக?" என்று பணிந்தனர்; "இந்தப் பொய்கையுள் மூழ்கித் திருவையாற்றில் அத் திருக்கோலத்தைக் காண்பாயாக!" என்று இறைவர் அசரீரி மொழியால் அருளினர். நாயனார் "வேற்றாகி விண்ணாகி" என்னும் திருத்தாண்டகங்களாற் றுதித்து அருள் ஆணையின்படி பொய்கையுள் மூழ்கினார்.

ஆதிதேவர் திருவருட் பெருமையை எவரே அறிவார்? திருவையாற்றில் ஓர் வாவியின்மேல் வந்தெழுந்தனர். ஐயாற்றில் சர அசரமாயின எல்லாம் சிவமும் சத்தியுமாகப் பொலியக் கண்டு, பணிந்துகொண்டே திருக்கோயிலின்முன் வந்தனர். அக்கோயிலே கயிலைமலை யாயிற்று; மால் அயன் இந்திரன் முதலிய தேவர்கள் போற்றினர்; மறைகள் முழங்கின; சித்தர் வித்தியாதரர் முதலியோர் நெருங்கினர்; அரம்பையர் கானமும் முழவும் தழைத்தன; கங்கை முதலிய புனித தீர்த்தங்கள் வணங்கின; கணநாதர்களும் பூத வேதாளங்களும் போற்றினர்; மற்றுமொரு வெள்ளிமலை போல இடபதேவர் எதிர் நின்றனர்; நந்திபெருமான் திருமுன்னர்ச் சேவகம் செய்தனர்; வெள்ளி மலையின்மேன் மரகதக் கொடியுடன் விளங்கும் பவளமலை போலச் சிவபெருமான் விளங்கினர்; இத்திருப்பெருங் கோலத்தைக் கண்டனர் வாக்கின் மன்னவனார். அக்காட்சியமுதத்தைக் கண்களாற் பருகினர்; கைகுவித்து விழுந்து எழுந்து மெய்குலையத் திருமுன்பு நின்று ஆடினார்; பாடினார்; அழுதார்; திருத்தாண்டகங்களாற் போற்றினார். இவ்வாறு சிலநேரம் அவர் கண்டுகொண்டிருக்க இறைவர் அக்கோலத்தை மறைத்தருளினர். நாயனார் வருந்தினர். தாம் கண்ட காட்சித் திறத்தினை "மாதர்ப் பிறைக்கண்ணி யானை" என்ற திருப்பதிகத்தாற் போற்றினார். பின்னர் அத்திருத்தலத்திற் றங்கித் திருத்தாண்டகங்கள் - திருக்குறுந்

தொகைகள் - திருநேரிசைகள் - திருவிருத்தங்கள் முதலிய பதிகங்களாற் போற்றிக் கைத்திருத்தொண்டும் செய்து அமர்ந்தருளினர்.

அங்கு நின்றும் திருநெய்த்தானத்தையும் திருமழபாடியையும் வணங்கித் திருப்பூந்திருத்தியை அடைந்தனர். "பொய்யிலியைக் கண்டேன்" என்னும் திருத்தாண்டகமும், "திருவடிக்கீழ் நாமிருப்பது" என்னும் திருக்குறுந்தொகையும்பாடி, "அங்குறையும் தன்மைவேண்டி நாம் அடி போற்றுவதே" என்ற குறிப்புக்கொண்ட திருவிருத்தமும்பாடிப், பணி செய்தமர்ந்தனர். அங்கு இறைவனு ரருள்பெற்று உயர்ந்த திருமடம் ஒன்று செய்தமர்ந்தருளினர். அந்நாள்களில் பல்வகைத் தாண்டகம், தனித் தாண்டகம், அடைவுதாண்டகம், திருவங்கமாலை, முதலிய பதிகங்களைப் பாடியருளினர்.

**திருப்பூந்துருத்தி திருமடம் செய்தது**

அவ்வாறிருப்ப, நாயனாரைத் திருமறைக்காட்டிற் பிரிந்தருளிய ஆளுடைய பிள்ளையார், சமணர்களை வாதில் வென்று, திருநீற்றின் ஒளி விளங்கச்செய்து, பாண்டியரது கூன் நிமிர்த்துச், சோழ நாட்டுக்கு எழுந்தருளி, நாயனார் திருப்பூந்துருத்தியி லிருந்ததைக் கேட்டு அவர்பால் அணைதற்கு வருகின்றார். அதனை வாகீசர் கேட்டு எதிர் சென்றார். நகரின் புறம்பணையிற் சேர்ந்து திருக்கூட்டத்தின் நெருக்கினிடையே, ஒருவரும் காணு வகையால் நிலமுறப் பணிந்து, மறைந்த வடிவொடும் உட்புகுந்து, பிள்ளையார் ஏறிவரும் மணிமுத்தின் சிவிகையினைத் தாங்குவாரோடும் தாமும் தாங்கிப் பெரும்பேறு பெறும்படி நாயனார் தாங்கி வருவாராயினார். எவரும் அதனை அறியவில்லை. உடனே பிள்ளையாரது திருவுள்ளத்தில் வேறொன்று நிகழ, அவர் "அப்பர் எங்குற்றார் ?" என்று வினவ, "அடியேன் முன் ஒப்பற்ற தவஞ் செய்ததனால் இப்பொழுது உமது சிவிகைதாங்கும் பேறு பெற்று இங்குற்றேன்" என்றருளினர். அது கேட்டுப் பிள்ளையார் பெரிதும் விரைந்து அஞ்சி இழிந்து, "இவ்வாறு செய்தருளிற்று என்னும் ?" என்று அரசுகளை இறைஞ்சினர். "திருஞானசம்பந்தர்க்கு வேறு எவ்வாறு செயத்தகுவது ?" என்று நாயனார் எதிர் இறைஞ்சினார். இவ்வாறு இருவரும் கலந்தருளிப்போந்து,பொய்யிலியாரைப் பணிந்து, நாயனாரது திருமடத்தில் அளவளாவி அவரவருடைய போக்கும் வரவும் வினவிக்கேட்டு மகிழ்ந்தெழுந்தருளினர்.

**ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளியது - III மூன்றாவது முறை சந்திப்பு**

பாண்டிமாதேவியாரது அன்பின் திறத்தினையும், குலச்சிறையாரது பெருமையினையும் பிள்ளையார் உரைத்தருளப், பாண்டி நாட்டுக் கெழுந்தருள நாயனார் திருவுளங்கொண்டருளினர். பெருந் தொண்டை நன்னாட்டிற் றலங்களுக்கு எழுந்தருளும்படி அரசுகள் உரைத்தருள அவ்வாறே பிள்ளையாரும் பூந்துருத்தி தொழுது புறப்பட்டருளினர். நாயனாரும் இறைவரிடம் அருள் விடைகொண்டு புறப்பட்டுத், தென் திசை போய்த் திருப்புகலூர் பணிந்து, மதுரைத் திருவாலவாய் சேர்ந்தனர். திருந்தியநூற் சங்கத்துள் இருந்து தமிழாராய்ந்தருளிய பெருமானது திருமுன்பு சேர்ந்து மகிழ்ந்து பேரானந்த இன்பத்தில் மூழ்கி, "முளைத்தானை" என்ற திருத்தாண்டகம் பாடிப் போற்றிக் களிசிறந்தார். மங்கையர்க்கரசியாரும், அவராற் பேறுபெற்ற பாண்டியனாரும், குலச்சிறையாரும் வந்து நாயனாரை அடிபோற்ற, அங்கு எழுந்தருளி, நேரிசை-தாண்டக முதலிய தமிழ்களைப் பாடியருளியிருந்தனர். அங்கிருந்து சென்று திருப்பூவணத்தை வழிபட்டு "வடிவேறு திரிசூலம்" என்ற திருத்தாண்டகத்தால் துதித்துப் போய்த், திருவிராமேச்சுரத்தை அடைந்து வழிபட்டுத் திருநேரிசை முதலான பதிகங்களைப் பாடியமர்ந்தனர். பின்னர் அங்கு நின்றும் திருநெல்வேலி, திருக்கானப்பேர் முதலாகிய தலங்களை வணங்கினார். எப்போதும் மனம் கசியக், கண்ணீர் வழிய, இடைவிடாது சிவனடி

**பாண்டி நாடு சென்றது**

தழுவிய சிந்தையினையுடைய நிலையில் ஒழுகினர். இவ்வாறு பாண்டிய நாடெங்கும் போய்ப் பரவியே, சோழநாட்டை யணைந்து, வழியில் முன் சென்ற தலங்களை மறுபடியும் வணங்கிக்கொண்டு, பொய்ப்பாசம் போக்குவார் பூம்புகலூர் வந்தடைந்தனர்.

**திருப்புகலூர்**

இறைவரது திருவடிகளை வணங்கித் திரு முன்றிலிற் பணி செய்து பேரன்புடன் வைகினார். அந்நாளில், நின்ற திருத்தாண்டகம், தனித் திருத்தாண்டகம், க்ஷேத்திரக் கோவை, குறைந்த திருநேரிசை, தனிநேரிசை, ஆருயிர்த் திருவிருத்தம், தசபுராணம், பாவநாசப்பதிகம், சரக்கறைத் திருவிருத்தம் முதலிய எண்ணிறந்த திருப்பதிகங்களைப் பாடியருளினார்.

**பொன்னும் மணிகளும் வருதல்**

அவ்வாறு அரசுகள் பணி செய்யு நாளில் அவரது நன்னிலைமையினை உலகுக்குக் காட்டும் பொருட்டு, இறைவர் அருளினாலே உழவாரம் நுழைந்த விடமெல்லாம் பொன்னினொடு நவமணிகள் பொலிந்தன. அவற்றை அங்குப் பருக்கைக் கற்களோ டொன்வைத்து எண்ணி உழவாரத்தில் ஏந்தி வாவியினிற் புக எறிந்தார்.

**அரம்பையர் வருதல்**

அவ்வாறு பொன்னோடும், மணியோடும், புல்லோடும், கல்லோடும் வேறுபாடிலா நிலை துணிந்த நாயனாரது முன்பு தேவ அரம்பையர்கள் விண்ணுலகத்தினின்றும் வந்திழிந்தனர். மின்னற் கொடிகள் இறங்குவனபோல வந்து, தான நிறை சுருதிகளிற் றருமலங்காரத் தன்மையிற் கான அமுதம் பரப்பக் கண்கள் வெளி பரப்பி இசை பாடினார்கள்; கற்பகத் தளிர்போன்ற அடிகள் சாரிகை செய்யவும், விரல்களின் வட்டணையோடு கை பெயரவும், கையின் வழியே கண்கள் புடைபெயரவுமாகக், கொடிபோல் நுடங்கி ஆடினார்கள். மேலும் அவர்கள் பாடுதலும், ஆடுதலும், அலர்மாரி பொழிதலும், கூடுவார் போன்றணைதலும், குழலவிழவோடுதலும், மீளுதலு மாகிய பற்பல காமச் செயல்களையும் செய்யவும், இறைவன்றிருவடியில் நினைவு நீங்காத உணர்வுடைய மெய்த் தவமுடைய மேலோராகிய நாயனார் தமது சித்தநிலை சிறிதும் திரியாமல் தாம் செய்பணியின் றலைநின்றனராய், அவர்களை நோக்கி "உம்மாற் குறையுடையே னல்லேன்; திருவாரூர் அம்மானுக்காளானேன்; உமது பண்பிற்படேன்; நீவிர் அலையேன்மின்" என்று, "பொய்ம் மாயப் பெருங் கடலில்" என்னும் திருத்தாண்டகம் பாடி யருளினார். ஒரு செயலும் செய்ய மாட்டாது அரம்பையர் இறைஞ்சி அகன்றனர்.

**திருவடிப்பேறு**

இந்நிலையை எல்லா வுலகும் அறிந்து போற்ற, அன்புடைய பத்தியே வடிவாகிய வாகீசர் இறைவரது மெய்யருளினை எய்தும் காலம் அணித்தாகச், சில நாள்கள் அங்கு அமர்ந்திருந்தார். அந்தக்கரணங்கள் இறைவனையே பொருந்திய தலைப்பாட்டினாலே "தமது புகலாகிய என்னைப் புகலூர்ப் பெருமான் இனிச் சேவடிக்கீழ் இருத்திடும்" என்ற முன்னுணர்ச்சியினால் திருவிருத்தங்கள் பலவும் பாடினார். "புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்" என்னும் திருத்தாண்டகத்தை அருளிச் செய்து சிவானந்த ஞானவடிவேயாகி, இறைவரது திருவடிக்கீழ் எல்லா வுலகங்களும் ஏத்த, நாயனார் அமர்ந்தருளினார். வானவர்கள் மலர் மழை பொழிந்தனர்; ஐந்து துந்துபிகளும் முழங்கின; எல்லா யோனிபேதங்களிலும் தங்கும் எல்லா வுயிர்களும் நாயனார் திருவடிப் பேறடைந்த சித்திரை மாதத்துச் சதயமாகிய அத்திருநாளில் உண்ணிறைந்த பெரு மகிழ்ச்சி நிறைந்தன.

## கற்பனை

1. நல்லொழுக்கத்துள் நிற்கும் குடிகள் நிறைந்திருப்பது நாட்டுக்குச் சிறப்பு (1267).

2. உலகுக்குச் சிவநெறி காட்டும் ஆசாரியர்கள் அவதரிக்கும் பேறு பெறுவது நாட்டுக்குப் பெரும் பேறாகும் (1277).

3. சிவம் பெருக உள்ள ஊர் சிறந்த ஊர் (1177).

4. வேளாளர்க்கு விருந்தோம்பலும் சுற்றந்தழுவுதலும் சிறப்பாயுரியன (1281).

5. சில ஆண்டுகள் இடையீடுள்ளனவாய் மகப்பேறுகள் பெறுதல் நல்வாழ்க்கைக்குரியது (1283).

6. ஆண்மக்களுக்குச் சென்னிமயிர் நீக்கும் சடங்கு, கலை பயில்வித்தல் முதலிய சடங்குகள் செய்வித்தல் முந்தையோர் மரபு (1285).

7. பெண்மக்களுக்கு மண வயது பன்னிரண்டென வகுத்தது தமிழர் மரபு (1287).

8. பெண்ணை மணம் பேசிப் பெற்றோரிசைவு கொண்டு மணமுடித்தல் தமிழர்களுள் வழங்கிய வழக்கு (1288).

9. மணம் பேசுங்காலத்து மணமகனிடத்துச் சிவன்பாலன்பும், அரசனிடத் தருளும், வீரமும், வனப்பும் முதலிய குணங்களுடைமை கண்ட பின்பே பெண் பெற்றோர் மணமிசைவது வழக்கு (1289).

10. மேலாகிய உழவுத் தொழிலேயன்றி, வேந்தற்குற்றுழி வினைமேற் சென்று போர் புரிந்து நாடு காவலுக்குத் துணைசெய்வதும் வேளாளர்க்குரிய தொழில்களுளொன்று (1291).

11. யாக்கை நிலையாமை என்பது தொன்றுதொட்டு வரும் உண்மை (1292).

12. கணவனிறந்தபோது தானும் உயிர்நீத்து அவனுடனே சேர்வது கற்புநெறி வழுவாத கடமையாகிய ஒழுக்கமாய்க் கொண்டனர் தமிழ் மாதர்கள் (1293).

13. அரசனுக்காக நாடு காவலின்பொருட்டுப் போர்செய்து உயிர் துறத்தல் புகழ் தருவதெனக் கொண்டது தமிழர் வழக்கு (1295).

14. மணம்பற்றிய புறச்சடங்கு நிகழாவிடினும், பெற்றோர் இசைவுதந்த வளவில் மணம் முடிந்ததாகவே முடித்துத், திலகவதியம்மையார், மணமகன் இறந்தமை கேட்டவுடன் கற்புநிலை வழுவாது தாமும் உயிர்நீத்து அவருடன் சேரத் துணிந்த செய்தி உலகுக்குப் பெரிய எடுத்துக்காட்டாகிய நல்லொழுக்கமாம் (1297).

15. உடனே, உயிர் நீத்தல் நிகழாதபோது கணவனை யிழந்தோர் கைம்மை நோன்பு கிடந்து தவஞ் செய்து உயிர்களுக்கு அருள்தாங்கி மனையின்க ணிருத்தலும் தமிழ் மக்களின் மரபு (1299).

16. பெற்றோரும் மற்றோரும் இறக்கக் கண்டபோது, தேச நெறி நிலையாமை கண்டு அதனை மனங்கொண்டு ஒழுகுதல் அறிவுடையோர் தன்மை (1300).

17. தேச நெறி நிலையாமை கண்டபோது அறங்கள் செய்தல் மதியுடையவர் செயல் (1300).

18. சோலைகளை வளர்த்தல், குளம் வெட்டுதல், வந்தடைந்தார்க்கு வேண்டுவன அளித்தல், விருந்தளித்தல், நாவலர்க்குக் கொடுத்தல் முதலியவை உலக அறங்கள். இவை பசு புண்ணியச் செயல்களாம் (1301).

19. உலகியல்பின் நிலையாமையைக் கண்டு துறவு பூணுதலும் அறிவுடையார் செய்கையாம் (1302).

20. சமய விசாரணை மக்களுக்கு இன்றியமையாதது (1302).

21. சமயங்களின் நல்வழியைத் தெரிந்துணர்வது அவ்வவர் பக்குவத்துக்கேற்ப இறைவன் திருவருள் கூட்டுவிக்க வருவதொன்றாகும். சிவனருள் கூடாதபோது உண்மை யுணர்வு வருதல் கூடாதாகும் (1302).

22. சுற்றத் தொடர் பொழிந்தபோது சிவன் சார்பே பற்றாகக்கொண்டு திருப் பணி செய்து வாழ்ந்த திலகவதி யம்மையாரது செயல் உலகுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாவதொன்று (1306).

23. மனக் கவலைகளெவையும் சிவனிடம் விண்ணப்பிக்கத் தீர்வுபெறும். மனக் கவலையை மாற்றுவதற்கு அது தவிர வேறு வழியில்லை. "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்ற லரிது" - குறள் (1311 - 1312).

24. தவத்திற் குறைபாடு நேர்ந்தபோது தீர்வு தந்து நிறைவாக்கித் தருதல் சிவ னருள்வகை (1314).

25. நோயானது மணிமந்திர மருந்துகளாற் றீராதபோது இது போக்கரிதா மென்று கைவிட்டு விடுதலன்றி மக்கள் வேறென் செய்யவல்லார்? "புலனைந்தும் பொறிகலங்கி நெறி மயங்கி யறிவழிந்திட் டைமேலுந்தி யலமந்தபோதும்", "அஞ் சும்போதும்" ஆக வந்து, துணையாகி நின்று "அஞ்சல்!" என் றருளவல்லவன் சிவனேயாம். அவனினைவு மாறாமலிருக்கவேண்டித் தம்மைப் பழக்கிக்கொள்வது மக்க ளின் கடமை (1320).

26. தாம் பற்றாக எண்ணிய புதிய சார்புகள் கைவிட்டபோது தமது முன்னைப் பற்றாகிய உண்மை உயிர்ச்சார்புகளின் நினைவு வருதல் உலகியல்பு (1320).

27. தீயோர்கள் சார்ந்துள்ள இடத்தினும் செல்ல ஒருப்படார் நல்லோர் (1323).

28. பெரியோர்களால் "எழுக!" என்ற ஆசிபெற் றுய்யவேண்டுமாகில் தமது பிழையைப் பொறுத்து ஈடேற்றுமாறு அவர்களை யடிபணிந்து குறையிரத்தல் வேண்டும் (1328).

29. திருவாளனாகிய சிவபெருமான் திருநீறும் அஞ்செழுத்தும் குருவருளாற் கிடைத்தபோது உடற்பிணியும் உயிர்ப்பிணியும் ஒருங்கே மாறும். அவ்வாறு கிடைக் கப்பெறின் அத்திருநீற்றைச் சிறிதும் சிதறவிடாது உள்ளன்போடு போற்றி உருவார அணிந்துகொள்ளுதல் வேண்டும் (1332).

30. திருப்பள்ளியெழுச்சியானது அகவிருளும் புறவிருளும் மாறவருகின்ற வழிபாட்டுக்குரிய சிறந்த காலம் (1333).

31. தேவாரப் பாசுரங்கள் சிவனருள் நிறைவுள் நின்று கருவி கரணங்கள் சிவ மயமாகப் பெற்ற நிலையில் அருளப்பெற்றவை (1334).

32. தேவாரங்கள் உயிர்களுக்கு ஏழுலகங்களின் வருந்துயரும் போக்கத் தக்கவை (1335).

33. துன்பங்கள் சிவனையடைதற்குத் துணைசெய்யுமாயின் அவை நமது நன்றி பாராட்டுதற்குரியன (1338).

34. தமக்குச் சிவனருள் கிடைத்தபோது - இதுவும் எமக்குத் தகுமோ - என்று தமது சிறுமையினையும் சிவனருட் பெருமையினையுமே எண்ணி யெண்ணி யிரங்குவது பெரியோர் தன்மை (1337).

35. சிவத் தொண்டு மனம் - வாக்கு - காயம் என்ற மூன்றும் ஒன்றித்து நிகழும் படி செய்யத் தகுந்தது (1342).

36. பொறுமைகொண்டு தன்னலமும் சூழ்வோர் பொய்மையும் கொலையும் முதலிய இழிதொழிலிற் றலைப்படுவர் (1344 - 1348).

37. சிவனுக்காட்பட்டோர் வேறு யார்க்கும் குடியல்லா வீரர் ஆவார்கள், அவரே "அஞ்சுவதி யாதொன்று மில்லை; அஞ்ச வருவது மில்லை" என்று துணிந்து கூறவல்லவர் (1358).

38. சிவனடியார்களுக்கு வரும் இடையூறுகளையும் துன்பங்களையும் சிவனே உடனின்று தீர்ப்பான் (1359).

39. சிவனடி நீழலில் அழுந்திநிற்கும் அடியவர்க்குத் தீயும் குளிர்ந்து நிற்கும் (1362 - 1363).

40. நஞ்சமுது செய்தருளிய நாதன் என்று அமையும் உறைப்புடைய அடியவர்க்கு நஞ்சும் அமுதாகும் (1369).

41. களிற்றுரி போர்த்த கடவுள் என்று கடைப்பிடித்த அன்பரைக் களிறு துன்புறுத்தாது அகலும் (1381).

42. சிவனடியார்களைத் துன்புறுத்தும் வகைகளைச் செய்வோர் அவைகளாற் றாமே துன்புறுத்தப்படுவர் (1383 - 1384).

43. கல்லிற் பிணித்துக் கடலிற் புகவிட்டாலும் காக்க வல்லது திருவைந்தெழுத்தாகிய சிவநாமம் (1391).

44. மலக் கல்லில் வினைப் பாசத்தாற் கட்டப்பட்டுப் பிறவிக் கடலில் வீழ் மாக்கள் ஏறிட அருளுவதும் ஐந்தெழுத்தேயாம் (1394).

45. சிவனடியார்களுக்குப் பணி செய்யும் பேற்றினைத் தேவர்களும் முன்னைத் தவஞ் செய்தே பெறுவர் (1395 - 1396).

46. இறைவர், அடியார்களுக்கு எஞ்ஞான்றும் எவ்விடத்தும் தோன்றாத் துணையாய் உடனிருந்து அருள் புரிவர் (1399).

47. இறைவர் அடியார்களுக்குத் தாயும் தந்தையும் ஆகி உடனிருந்து அருள் புரிவர் (1399).

48. கடவுளருளாற் பகை கடந்தேறிய பெரியோரை உலகம் போற்றும் (1402).

49. இறைவரது திருவடியையே நினைந்து உள்ளன்பினால் உருகிக் கண்ணீர் வார நிற்பதும், தாழ்வடமும் திருநீறும் மெய்யார அணிதலும், இடைவிடாது வாயார வாழ்த்துதலும் என்ற இவை தம்மை மறந்த மெய்யன்பர் நிலை (1405).

50. இறைவரருள் பெற்று மெய்யுணர்வு வந்தபோது முன்னம் அவரை இகழ்ந்து மறந்திருந்தமைபற்றி இரங்குதல் பெரியோர் செயல் (1408).

51. அட்டரது சொற் கேட்டுத் தீங்கு புரிந்த மன்னவரும் பின்னர் உண்மை தெரிந்து தமது தவற்றை உணர்ந்தபோது இரங்கி அதற்குக் கழுவாய் விதித்துக் கொள்வர் (1410 - 1411).

52. சிவத் தல யாத்திரை செய்து வழிபடுதல் மக்கட் பிறவிப் பயன்றருவதாம் (1412).

53. புறச் சமயச் சார்புபற்றித் தொடக்குண்ட உடலைத் தரிப்பதானால் அது சிவனது இலச்சினையினாற் புனிதம் செய்யப்படுதல் வேண்டும் (1415).

54. மக்களொழிந்த ஏனைப் பறவை முதலியவையும் பழக்கத்தால் சிவவோசை முழக்கிச் சிவானுபவத்தில் ஈடுபடுதலும் இயல்பு (1424 - 1426.)

55. இறைவன் திருமுன் வழிபடுதல் மன முதலாயின மூன்றும் ஒன்றித்து நிகழத் தக்கது (1432).

56. திருத்தில்லைக் கூத்தனைத் தினைத்தனைப் பொழுதும் மறந்தால் மக்களுக்கு உய்தியில்லை (2439).

57. சிவனருள் வெளிப்படக் கேட்ட பெரியோர்களைக் கண்டு வழிபட விரும்புவது மெய்யடியாரிலக்கணம்.

58. ஆளுடைய பிள்ளையாரும் ஆளுடைய அரசுகளும் கூடிக் கோயில் சேர்ந்ததனுக்கு அருட் கடலும் அன்புக் கடலும் எனவும், சைவத்தின் கண்களிரண்டெனவும், இறைவனருளும் இறைவியருளும் எனவும் உவமிப்பதையல்லது வேறு சொல்லத் தக்கதன்று (1450).

59. கூற்றுவன் வந்து உயிர்கொண்டு போவதன்முன் இறைவரது திருவடிகளைத் தம் முடி சூட்டிக்கொள்ள வேண்டுமென்று குறையிரந்து விண்ணப்பித்துக் கொள்ளுதல் பெரியோரியல்பு (1459).

60. பெரியோர்களைக் காணப் பெறுதலின்றியும் அவர்களது தன்மைகளைக் கேட்ட மாத்திரத்தே அவரிடத்து அன்பு பூண்டொழுகுதல் உண்மையன்பர்களியல்பு (1468).

61. தாம் செய்யும் தருமங்களையும் தமது உயிர்ச்சார்பு பொருட்சார்புகளையும் தமது உயிர்ப் பற்றுகிய பெரியோர் பெயரால் வழங்கும்படி செய்தல் அன்பரியல்பு (1466).

62. இறைவரது சீர்பாடத் தீவிடமும் நீங்கும் (1473).

63. நாயனாரது திருவாக்கினால் தமது மகன் விடம்நீங்கி உயிர் பெற்றெழுந்தது கண்டும் அதற்கு மகிழாது, நாயனார் திருவமுது செய்வதற்குச் சிறிது இடையூறாக இவன் நின்றான் என்பதுபற்றி வருந்தி வாடினார் அப்பூதி நாயனாரும் அவர்தம் மனைவியாரும். இது பேரன்புடையோரியல்பு (1474).

64. அப்பூதியடிகள் நமிநந்தியடிகள் இவர்களது அன்பின்றிறம் இறைவனைப் பாடும் திருப்பதிகத்துள் வைத்துப் போற்றத் தகுந்தது (1476 - 1492).

65. அடியவர்வணக்கத்தின் பெருமையை இயல்பாகப் பெற்றுடையது திருவாரூர் (1493 - 1485).

66. சிவபெருமானைத் தொழாதொழிந்து வேறு செய்வதெல்லாம் கனியிருக்கக் காய் கவர்தல் முதலியனபோல வாகும். இவ்வாறெண்ணி யெண்ணித் தமது பிழைக்கஞ்சி யிரங்குவது பெரியோர் தன்மை (1489).

67. திருவாரூர்ப் பெருமானது திருவாதிரைத் திருவிழா பரமாசாரிய மூர்த்திகளால் விரும்பிக் கண்டு போற்றப்பட்ட பெருஞ் சிறப்புடையது (1500 - 1501).

68. திருப்புகலூரில் ஆளுடைய அரசுகளும் ஆளுடைய பிள்ளையாரும் முருக நாயனாரது திருமடத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில், சிறுத்தொண்ட நாயனாரும் திருநீலநக்க நாயனாரும் சீரடியார் பலரும் எழுந்தருளி உடனாக உறைந்து, திருத்தொண்டினிலையுணர்ந்து நிகழ்ந்தும், திருப்பதிகச் செந்தமிழின்றிறம் போற்றியும், திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தும் ஒருப்படு சிந்தையினர்களாய் உடனுறைவின் பயன் பெற்ற சிறப்பு அடியார்கள் மனத்துட்கொண்டு வழிபடற்பாலது (1508 - 1509).

69. சிவபெருமானைச் சேராதார் தீங்கு நெறிக்கே சேர்கின்றார் என்பது உய்வு நெறி (1518).

70. பரமனார் அளித்த படிக்காசு பரமனடியாரானார்க் கமுதூட்டப் பயன் படுத்தத் தக்கது (1524).

71. கைத்தொண்டாகு மடிமையினாற் பெறுங்காசு வாசிபடாது பெறத் தகுந்தது (1525).

72. இறைவரது மறைகளாற் பூசிக்கப்பட்டுத் திருக்காப்பிடப்பட்ட திருவாயில் அம்மறைகளோதவல்ல அன்பர்களாலே திறக்கப்படற்குரியது (1531).

73. "பண்ணினேர்மொழி யாளுமை" என்ற பாடலின் பயனைத் துய்ப்பதற் காக, "எண்ணீர் இரக்க மொன்றிலீர்" என்று நாயனார் வருந்திப் பாடுமளவும் கதவந் திறத்தலைத் தாழ்த்தனர் இறைவர். இது தெய்வப்பாடற்றிறம் (1533).

74. தாம் பதினொரு பாட்டுப் பாடி அரிதில் இரக்க மில்லீர் தம் பெருமானை வலிந்து பாடிக் கதவம் திறப்பிக்கவும், எடுத்த பாட்டில் பிள்ளையார் எளிதில் அடைப் பித்தது கருதி "நம்பர் திருவுள்ளமறியாது அயர்த்தேன்" என்று அஞ்சிக் கவின்றனர் அப்பர் பெருமான். சிவபெருமான் திறத்தில் தாம் சிறிதும் பிழைபாடில்லாத போதும் இவ்வாறஞ்சுவது எந்தம் பெருமக்களது சால்பு (1540).

75. அடியார்கள் பிழையஞ்சியபோது வெளிப்பட்டுவந்து வரவேற் றழைத்துக் கொண்டு காட்சி கொடுத்தருளுவது சிவபெருமானது பெருங்கருணைத் திறம் (1541 - 1546).

76. வன்றொழிலோர் செயலை மாற்றிச் சைவ நெறி விளங்கச் செய்யவல்லது தெய்வத் திருநீறு (1551).

77. "அப்பரே!" என்றழைத்ததற்கேற்பப், பிள்ளையார்பால் தந்தையின் அன்பு பூண்டொழுகிய நாயனாரது பேரன்பின்றிறம் கண்டு போற்றத் தகுந்தது (1552 - 1554).

78. பழையாறை வடதளியில் இறைவர் தமது திருவுருவங்களை அமணர் மறைத் துத் தமது பாழியாக்கிக் கொண்டபோது எல்லாம் தாமேயாகும் தன்மையால் அவ் வாறே அமர்ந்திருந்தருளினர்; அப்பர் பெருமான் வண்ணங்கண்டு வணங்க வரங்கிடந்த போது அவர் வேண்டியவாறே வெளிப்பட்டனர். சைவத் திறத்தின் முற்றிய முழு நிலைகள் இங்கு காணத்தக்கன (1519 - 1565).

79. தாம் கருதியபடி திருவருள் பெறும்பொருட்டுத் திருமுன்பு உண்ணாவிரதம் கிடத்தலும் தொன்றுதொட்டு நிகழும் நமது ஆன்றோர் வழக்கு (1561).

80. தலயாத்திரையில் சிவதலங்களை இறைஞ்சும் விருப்போடு செல்லும்போது வழிச்செல் வருத்தமும் பசியும் நீர் வேட்கையும் முதலியவற்றிற்குச் சித்தம் அலை யாது செல்லுதல் பேரன்புடைப் பெருமக்களியல்பு (1569).

81. அன்பர் வருத்தந் தணித்தாற்றி அருள்புரிதல் ஆண்டவரது கருணைத்திறன் (1570 - 1574).

82. அடியார் வணக்கம் என்ற பெருஞ் சிறப்புத் திருவாரூரிற்போலவே காஞ்சி புரத்துக்குமுரிய இயல்பாகும் (1533 - 1586).

83. வேளாளர்களினியல்பு மெய்ம்மைநிலை வழுவாத விழுக்குடிமைச் செம்மை யுடைமை (1606).

84. உம்பர் குழாம், தொண்டர்களின் பின் நின்று வழிபாடியற்றத் தக்கார் (1608).

85. திருக்கயிலைப் பெருங்கோலத்தின் குறிப்பை நினைப்பிப்பது திருக்காளத்தியின் சிறப்பு (1612).

86. இறைவரது திருக்கயிலைக் காட்சி விருப்பம், பசி துயில் முதலிய எல்லாவற்றையும் வென்று மேனூக்கவல்லது (1619 - 1622). கண்ணப்ப நாயனாரது சரித நிகழ்ச்சியும் இங்கு கருதத்தக்கது.

87. அன்பர்களைக் கொடுவிலங்குகளும் ஊறு செய்யமாட்டா (1620).

88. தம் உடம்படங்க ஊறுபடினும் கயிலை காணும் ஊக்கமுடையோர் பொருட்படுத்தாது மேற்செல்ல முயல்வர் (1622 - 1624).

89. கயிலை மால்வரை மானுடப் பான்மையோர் அடைவதற்கரிது (1630).

90. என்றைக் கிருக்கினும் ஒருநாள் மாளும் இவ்வுடல், கயிலை காணும் நேர்மை பெற்றிலதேனும், அம்முயற்சியில் மாள நேரின் நன்றே என்று துணிவது பெரியோர் தன்மை (1631).

91. யோனிகள் யாவையும் சத்தியும் சிவமுமாம் சரிதையிற் பயில்வனவாகக் காணுதல் சிவனருளாலாவது (1639).

92. கயிலை நாயகன் காட்சியும் கண்ட சிவானந்தானுபவமும் உரைக்குள் அடங்கும் தரத்தனவல்ல (1640 - 1645).

93. உலகில் மண் முதலிய பற்று நீத்த பெரியோரும் ஓரிடத்தமர்ந்திருந்து இறைவரைப் பணியும் அருள்பெற்றுத் திருமடம் அமைத்து வசித்தல் திருவருள் வழி நிகழுமாயின் துறவுநிலைக் கிழுக்கில்லை (1654).

94. தம்மைக் காணும் பொருட்டு ஆளுடையபிள்ளையார் திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளுவது கேட்ட ஆளுடைய அரசுகள் எதிர்சென்று, காணுவகை தூரத்தே தொழுது, திருக்கூட்டத்துட் புகுந்து, அவர் ஏறிவரும் அணி முத்தின் சிவிகையினைத் "தாழுமுடல் இதுகொண்டு தாங்க ஒப்பரிய தவஞ்சேய்தேன்" என்று கொண்டு, தாங்கி வந்த பெருநிகழ்ச்சி இவ்விரு பெருமக்களின் பெருமைகளை நன்கு விளக்குவதாகும் (1659 - 1661).

95. பாண்டிமாதேவியார் - குலச்சிறையார் இவர்களது பெருமைகளைப் பிள்ளையார் உரைத்தருளக்கேட்ட வாகீசர் அவ்விரு பெருமக்களையும் காணும்படி தமிழ்நாடு காண்பதற்கும் மனங் கொண்டருளினது அடியார் பெருமையினை விளக்குவதாகும். (1664 - 1665).

96. தொண்டை நாட்டில் தாம் வணங்கிய பெருமைகளைச் சொல்லி அங்கு அணைந்து இறைஞ்சிப் பாடும்படி அரசுகள் பிள்ளையாருக்கருள அதன்படி அவர் எழுந்தருளியது பின் நிகழும் பெருநிகழ்ச்சிகளின் பொருட்டுத் திருவருளால் உளதாயிற்று (1666).

97. திருவாலவா யிறைவர் திருந்தியநூற் சங்கத்தில் இருந்து தமிழாராய்ந்தருளிய அங்கணராய்ச் செழும்பொருணூல் தருவார் (1668 - 1670).

98. பலவகையாலும் இறைவரைப் பாடியும், வழுவில்லாது மெய்ம்முயற்சியால் திருப்பணிசெய்தும், மனங்கசிந்து கண்ணீர் பெருக்கியும் இடைவிடாது சிந்தை சிவன் தாள்களைத் தழுவியும் வரும் இவை எப்போதும் நிகழப்பெறுதல் சிவனருளின் முழு விளைவு உளதாகும் அணிமையைக் காட்டும் அறிகுறியான நிலைகளாம் (1676).

99. இறைவரது திருமுன்றிலில் வரும் பொன்னும் மணியும் புல்லும் கல்லும் வேறுபாடிலா நிலைமையிற் காணுதல் பெரியோர்க்கே அமைவதாகும் (1683).

100. மின்கொடிகள்போல அசைந்து ஆடியும் பாடியும் அலர்மாரிமேற் பொழிந்தும் கூடுவர் போன்றணைந்தும் மதனவசக் கைதவங்கள் செய்யும் தேவ அரம்பையர்களை மாயப்பவத் தொடக்கா மிருவினைகளே என்று நோக்குதலும், அவர் செயல்களால் சிறிதும் சித்த நிலைதிரியாது செய்பணியின் றலைநிற்பதும் அத்தனார் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகு மெய்த்தன்மையுணர்வுடைய விழுத்தவத்து மேலோர்க்கே இயல்வதாகும் (1687).

101. அந்தக்கரணங்கள் சிவனருள் தன்மைகளிலேயன்றி வேறெங்கும் வியாபரிக்காத தலைப்பாடு நேர்ந்தபோது என்னைச் சிவன் இனித் தன் அடிக்கீழ் வைக்கும் என்ற உணர்வு எழும் (1691). அவ்வாறு சிவனருள் நிறைவு உளதாகப்பெற்ற பெரியோர் சிவானந்த ஞானவடிவேயாகித் திருவடிக்கீழெய்துவர் (1692).

பிற்சேர்க்கை

உ

# அப்பர் சுவாமிகளது சரித்திர ஆராய்ச்சிக் குறிப்புக்கள்

[சென்னை இந்துமத சொத்துப் பரிபாலன சபை கனம் அங்கத்தினர் சைவத் திருவாளர் - இராவ்பகதூர் - C. M. இராமசந்திரஞ் செட்டியார், B. A., B. L., F. R. G. S. அவர்கள் எழுதி அன்புடனுதவியது.]

**காலக் குறிப்பு**

திருத்தொண்டர் புராணத்தில் அப்பர் சுவாமிகளுடைய வயது குறிக்கப்படாமலிருந்த போதிலும் அவர் முதிர்ந்த வயதினரென அறிகிறோம். சமயாசாரியார்களின் வயதை அறிவிக்கும் ஒரு வெண்பாவின்படி அவருக்கு எண்பத்தொரு ஆண்டுகள் உலக வாழ்வாகும். திருஞானசம்பந்தருக்கோ பதினாறு வயது எனக் குறிக்கப்பட்டிருக்கின்றது. இருவரும் ஒரு காலத்தவர்கள் என்பது உறுதியாகின்றபடியால் அப்பர் சுவாமிகளின் இறுதிக் காலத்தில் சம்பந்தர் இருந்திருக்க வேண்டும். இவ்விரு பெருமக்களுடைய வாக்குக்களில் இருந்தாவது, இவர்களுடைய சரித்திரங்களைக் கூறும் சேக்கிழார் பெருமான் வாக்கிலிருந்தாவது, இவர்கள் காலத்திலிருந்த அரசர்களது வழங்கிய பேர்களோ, அவர்களது கால வரையறையோ கண்டுபிடிக்க இயலாது. திருஞானசம்பந்தர் காலத்துப் பாண்டியன் கூன் பாண்டியனெனவும், பின்னர் அவரே, நின்றசீர் நெடுமாறர் என்ற பெயரைக் கொண்டார் எனவும் அறிகின்றோம். இதைத் தவிர வேறு அரசர்களுடைய பெயர்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆகவே கல்வெட்டுக்கள் முதலிய புறச்சான்றுகளைக் கொண்டு தான் இவர்களது காலத்தை யறியவேண்டி யிருக்கிறது.

கால ஆராய்ச்சியில் முதன் முதலில் ஈடுபட்ட ஆசிரியர் P. சுந்தரம் பிள்ளையவர்கள் திருஞானசம்பந்தரைத் திராவிட சிசு என்று சங்கரர் தமது சௌந்தரிய லகரியில் குறிப்பிட்டதாலும், காஞ்சியில் கி. பி. 550-ல் இராஜசிம்மப் பல்லவன் கட்டிய கைலாசநாதர் ஆலயத்தைப்பற்றி அப்பர் பாடியிருத்தலாலும், சளுக்கிய அரசன் புலிகேசியினுடைய தலைநகராகிய வாதாபி நகரத்தைப் பல்லவ அரசனது படைத்தலைவரான பரஞ்சோதியார் என்ற சிறுத்தொண்டர் அகளாக்கியதைச் சேக்கிழார் எடுத்துக் கூறியதாலும் இவ்விரு பெருமக்களுடைய காலம் ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியும் ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியுமென ஆராய்ந்திருக்கிறார்கள். இவ்வாராய்ச்சியையும் பின்னர்ப் பல புலவர்கள் செய்த ஆராய்ச்சியினையும் துணைக்கொண்டு அப்பர் சுவாமிகள் கி. பி. 574க்கும் 655க்குமிடையில் வாழ்ந்திருக்க வேண்டுமென்று கருதப்படுகிறது.

**சமண ஆதிக்கம்**

பல்லவர்களுடைய வம்சாவளியிலிருந்து மகேந்திரவர்ம அரசன் 600 முதல் 625 வரை அரசாண்டான் என்பதும், அவன் மகன் நரசிம்ம வர்மன் 625 முதல் 660-க்குப் பிந்தியும் ஆண்டான் என்பதும் அறியப்படுகின்றன. 640-ல் இந்தியாவுக்கு வந்த யுவான் சுவாங் என்ற சீன யாத்திரிகன், தான் பல்லவர்களது தலைநகரான காஞ்சியில் சில நாள் தங்கியிருந்தான் என்றும், அங்கே புத்தர்களுடைய பள்ளிகள் நூற்றுக்குமேல் இருந்தனவென்றும், பௌத்த

சமண சன்னியாசிகள் ஆயிரக்கணக்கில் இருந்தார்களென்றும் எழுதியிருக்கிறான். அவன் காஞ்சிக்கு வருவதற்குமுன் கானோஜ் நகரத்தில் அரசாண்ட ஸ்ரீஹர்ஷனிட மிருந்து வந்தான். அதற்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் வந்த பாஹியான் என்ற சீன யாத்திரிகன் காலத்தில் பௌத்த சமண மதங்கள் மேலும் சிறந்திருந்தன. அப்பர், திருஞானசம்பந்தர் இவர்களது பிரசாரத்தினால் அம்மதங்களின் செல்வாக்குக் குறைந்துவிட்டது என்பது சரித்திரங்களால் அறியப்படும் உண்மை.

அப்பரால் சைவ சமயத்திற்குத் திருப்பிக் கொண்டுவரப்பட்ட அரசன் திருவதி கையில் குணபரவீச்சரம் என்னும் சிவாலயத்தைக் கட்டினதாகப் பெரிய புராணம் கூறுகிறது. அவ்வாலயத்தின் பெயர் குணபரேசுரம். குணபரேச் சரம் என்பதுமாம். குணபரன் என்ற பெயர் மகேந்திரவர்மப் பல்லவனுடைய ஒருசிறப்புப்பெயர். இவ்வரசனே திருச்சிராப்பள்ளி மலைக்குகை மண்டபத்தை குடைந்தெடுப்பித்தவன். இவன்காலத்துக் கல்வெட்டு ஒன்று அந்தக் குகை மண்டபத்தில் ஒருதூணில் அடியிற்கண்டபடி (திருச்சிராப்பள்ளி கோயி லில்) காணப்படுகிறது.

**பல்லவர்; குணபர வீச்சரம்**

குணபர நாமாணி ராஜன்யனேன லிங்கேன லிங்கினிக் ஞானம்
ப்ரததாஞ் சிராய லோகே விபக்ஷந்ருத்தே பரர்வருத்தம்

இவ்வடமொழி சுலோகத்தின் பொருளாவது “இலிங்கத்தை வழிபடும் குண பரன் என்னும் பெயரோடு கூடிய அரசன் இந்த இலிங்கத்தினால் (பெற்ற) விபக்ஷ விருத்தியிலிருந்து திரும்பிய ஞானம் உலகத்தில் நீண்டகாலம் நிலை நிற்பதாக” என்ப தாம். இதில் கண்ட விபக்ஷ விருத்தி என்பது சமண மதமாகும். ஆகவே குணபரன் என்ற அரசன் சமணனாயிருந்து அதை விட்டுச் சைவனானதை இது குறிக்கிறது. இந்த, மதமாற்றமானது அப்பர் சுவாமிகள் காரணமாக அவ்வரசனுக்குக் கிடைத்தது. இந்தக் கல்வெட்டு அப்பரது ஜீவ காலத்திலேயே ஏற்பட்டதென்பதைக் கவனிக்க வேண்டும். மற்றொரு தூணிலும் ஒரு கல்வெட்டு அதே குணபரனைக் குறிக்கிறது. இவை இரண்டும் தென்னிந்திய சாசனங்கள் என்ற அரசாங்க வெளியீடு புஸ்தகம் பக் கம் 29-30-ல் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்த சுலோகங்களினால் இவ்வரசன் திருச் சிக் கோட்டையில் ஒரு சிவாலயம் கட்டி அதில் ஒரு இலிங்கமும் தன் உருவச்சிலையும் வைத்திருந்ததாகக் கண்டிருக்கிறது. மேலும் அந்தக் குணபரன்தான் மகேந்திரவர்மன் என்னும் பல்லவ அரசன் என்று செங்கற்பட்டுச்சில்லா வல்லத்தில் உள்ள ஒரு குகைக் கோயில் சாசனத்தினால் தெரிகிறது. அக்கல்வெட்டு இது :—

“ பகாப்பிடுகு லளிதாங்குரன் சத்துருமல்லன் குணபரன்
மயேந்திரப் போத்தரசரு அடியான்
வயந்தப்பிரி அரசரு மகன் கந்தசேனன்
செய்வித்த தேவகுலம். ”

இதனால் மகேந்திரப் போத்தரசனுடைய பட்டப் பிருதுகள் :—பகாப்பிடுகு, லலிதாங்குரன், சத்துருமல்லன், குணபரன் என்பவை என்று தெரிகின்றது. இக் காரணங்களைக்கொண்டுதான் அப்பரது பெருமை கண்டு மகேந்திரவர்மன் சைவனாகிக் குணபரேச்சரம் என்ற ஆலயத்தைத் திருவதிகையில் கட்டி யிருக்கலாமென்று ஊகிக் கிறார்கள்.

மகேந்திரவர்மப் பல்லவனுக்குப் பின் இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் பல்லவ ருடைய ஆட்சியின் செல்வாக்குக் குறையச், சோழர்கள் தலைநிமிர ஆரம்பித்தனர்.

அவர்களால் தமிழரது நாகரிகமும், சைவ சமயமும் முன்னேற்றம் அடைந்தன. பிற நாட்டார் வியக்கும்படியான பெரிய ஆலயங்களை எடுப்பித்தார்கள்; சிற்ப வேலை முதிர்ச்சி யடைந்தது; தமிழர் செல்வாக்கு கடல் கடந்தும் சென்றது. பல்லவர் காலத்தில் குகைக் கோயில்களும் அவைகளின் ஓவியங்களுமே சிறந்திருந்தன. அதற்குக் காரணம் சமணர் ஆதிக்கமாகும். சோழர்களது காலத்தில், செங்கல்லால் கல்லால் எடுப்பித்த கோயில்களும் கற் சிற்பங்களும் மேம்பாடடைந்தன. இவை சைவக் கலையின் முதிர்ச்சியாகும். சோழர்கள் சைவ சமயாசாரியர்களுடைய பதிகங்களைச் சேகரித்து ஆலயங்களில் ஓதும்படி செய்தார்கள். நாயன்மார்களின் திருவுருவங்களை ஆலயங்களில் தாபித்தார்கள். அவற்றின் வழிபாட்டிற்கு வேண்டிய தான தருமங்களையும் செய்தார்கள். இவ்விதத் திருப்பணிகளில் சிறப்பு வாய்ந்தது தஞ்சை இராசராசேச்சுவரத்தில் காண்பதேயாகும். இவ்வற்புதமான ஆலயத்தை எடுப்பித்தவர் முதல் இராசராச சோழ அரசர் (கி. பி. 985 - 1013) என்ற மன்னர் பெருமான். இம்பெரும் மன்னருக்குச் சிவபாதசேகரர் என்ற பெயரும் உண்டு. அப்பெரிய ஆலயத்தில் இவர் ஆடவல்லான்மூர்த்தியைத் தாபித்து, நாயன்மார்களின் உருவங்களையும் நிலை நிறுத்தினார். இவ்வரசரது ஆணைப்படி இவ்வரிய திருப்பணிகளைச் செய்தவர் இவ்வாலயத்து மேற்பார்வை பார்த்து வந்த பொய்கை நாட்டுத் தலைவரான ஆதித்தசூரியன் என்ற தென்னவன் மூவேந்த வேளான் என்ற பிரபு. இவர் கி. பி. 1013—14-ல் திருஞானசம்பந்தடிகள், திருநாவுக்கரையர், நம்பிஆரூரனார், நங்கைபரவையார் முதலான அடியார்களின் திருவுருவங்களை இக்கோயிலில் பிரதிட்டை செய்தார். அக்கல்வெட்டானது (S. I. I Vol. II No. 38) "ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார், ஸ்ரீ ராஜராஜீசுரம், உடையார்க்கு ஸ்ரீ கார்யம் செய்கின்ற பொய்கை நாடு, கிழவன் ஆதித்தன் சூரியனான, தென்னவன் மூவேந்த வேளான் ஸ்ரீராஜ ராஜீசுரம் உடையர் கோவிலில் யாண்டு இருபத்தொன்பதாவதுவரை எழுந்தருளுவித்த செப்புப் பிரதிமங்கள்......

**சோழர்கள்**

உடையார் கோயிலில் முழத்தால் அளந்தும் ரத்னங்கள் சரடுநீக்கி தக்ஷிணமேரு விடங்கள் என்னும் கல்லால் நிறை எடுத்தும் பொன் ஆடவல்லான் என்னும் கல்லால் நிறை எடுத்தும் கல்லால் வெட்டினபடி

*   *   *   *

பாதாதிகேசம் இருபத்து இருவிரலே இரண்டு தொரை உசரத்து இரண்டு திருக்கை உடையராகக் கனமாக எழுந்தருளுவித்த திருநாவுக்கரையர் ப்ரதிமம் ஒன்று - இவர் எழுந்தருளி நின்ற இருவிரலே ஆறுதொரை உசரத்து பத்மம் ஒன்று, இதனோடுங் கூடச் செய்த எண்விரலே ஆறுதொரைச் சமசதுரத்து நால் விரல் உசரத்து ஒன்று.

1014-ம் ஆண்டில் சமயாசாரியார் மூவர்க்கும் பெரிய பெருமானுக்கும் பல தானங்களைச் செய்தது (Vol. II No. 41 இல்) அடியிற்கண்ட கல் வெட்டில் கண்டிருக்கிறது.

"ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீ ராஜ ராஜீஸ்வர முடையார்க்கு ஸ்ரீ கார்யம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனான தென்னவன் மூவேந்த வேளான் தான் எழுந்தருளுவித்த நம்பியாரூரனார்க்கும், திருஞான சம்பந்தடிகளுக்கும், திருநாவுக்கரைய தேவர்க்கும் உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்குயாண்டு மூன்றாவதுவரை குடுத்த தாரநிலைவிளக்கு ஒன்று இருப்பு நாராசம் உட்பட நிறை நாற்பத்தெட்டுவரை வெண்ணெ தான் எழுந்தருளுவித்த பெரியபெருமானுக்குக் குடுக்க

தாரநிலை விளக்கு ஒன்று இருப்பு நாராசம் உட்பட நிறை நூற்றிருபதின் பலம் வெண் கல மடல் ஒன்று நிறை நாற்பலம் "*

மேலும் இராசராசேச்சுரர் ஆலயத்தில் திருப்பதிகம் (திருப்பதியம்) பாடுவதற்கு 48 பேருக்கு ஏற்பாடுகள் செய்த ஒரு திருப்பணியைக் (Vol. II N. 65) கல்வெட்டில் காண்கிறோம். ஆகவே இராசராசர் காலத்தில் திருமுறைகள் சேகரிக்கப்பட்டு (நம்பியாண்டார் நம்பிகளால்) கோயில்களில் அவை வழங்கப்பெற்றுவந்தன என அறிகிறோம். அப்பதிகங்களில் அப்பர் பதிகங்களும் உண்டு என அறியவேண்டும். அது " இராசகேசரி வர்மரான இராசராச தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது வரை உடையார் ஸ்ரீ ராஜராஜேசுவரர் உடையார்க்கு திருப்பதியம் விண்ணப்பம் செய்ய உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும் இவர்களிலே நிலையாக உடுக்கை வாசிப்பான் ஒருவனும்......" என அக்கல்வெட்டுக் கூறுகிறது. இக்கல்வெட்டுக்கள் இராசராசன் I, இராஜேந்திரன் காலத்தன. இவை இவர்கள் காலத்தில் அப்பருடைய பெருமை எதுகாறும் விளங்கியிருந்தது என்பதைக் காட்டும்.

**தலங்களிற் கண்டவை**

இனி, அப்பர் சுவாமிகளுடைய வாழ்நாளிலே அவருடைய திருவடி பட்டுச் சிறந்து விளங்குகின்ற புனிதத்தலங்களில் எத்தலங்களில் அவரைப் பற்றிய கல்வெட்டுச் சான்றுகள் கிடைத்திருக்கின்றன என எடுத்துக் கூறுவோம்.

அவர் திருவவதாரம் செய்த தலமாகிய திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் பசுபதீசுவரர்கோயிலில் மேற்குச் சுவரிலும் தெற்குச் சுவரிலுமுள்ள இராசகேசரி வர்மன் குலோத்துங்க சோழன் 31-வது ஆண்டு கல்வெட்டு (137-1933-34) ஒன்றில் இரவீசுரமுடையார் கோயிலில் தாபித்திருக்கும் திருநாவுக்கரைய தேவர்க்கு படித்தரத்திற்கும் நுந்தாவிளக்குக்குமாக ஒரு வேலி நிலத்தைக் கங்கைகொண்ட சோழ வளநாட்டுத் திருமுனைப்பாடி நாட்டுக் கீழாமூர் நாட்டுத் திருவாமூர் ஊரார் விற்று அத்திருப்பணிகளுக்கு வேண்டிய நெல் முதலியவைகளைத் தருவதாக ஒப்புக்கொண்ட அவ்வாலயத்து இரு சிவப்பிராமணர்கள் வசம் அந்நிலத்தை விட்டதாகக் கண்டிருக்கிறது. இக்கல்வெட்டு "புகழ்மாது" என்ற தொடக்கத்து மெய்க்கீர்த்தியுடையதாகையால் இது குலோத்துங்கன் I காலத்தது என்றும், தானம்விட்ட ஆண்டு கி. பி. 1101 எனவும் அறியலாம்.

மேலும் திருவாமூருக்கு அருகில் இரண்டு பர்லாங்கு தூரத்திலுள்ள ஒரு இலுப்பைத் தோப்பில் உள்ள ஒரு பலகைக் கல்வெட்டில் (139/1933-34) முத்து ரெட்டியார் என்பவர் சிறு மாமரங்கள் கொண்ட 3 காணித் தோப்பு ஒன்றை அவ்வாலயத்துச் சுவாமிக்கும் அப்பர் சுவாமிகளுக்குமாக விளக்குகள் வைப்பதற்காக விட்ட செய்தி கூறப்பட்டுள்ளது. அதன் எழுத்துத் தற்கால எழுத்து.

தமது தமக்கையாரால் சைவ சமயத்திற்கு மீட்கப் பெற்றுச் சூலை நோய் நீங்கத் திருவருள் பெற்ற புனிதத் தலமாகிய திருவதிகை வீரட்டானத்தில் அப்பருக்குத் தனி ஆலயம் இருக்கிறது. அதில் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் "புகழ்மாது விளங்க" என்ற தொடக்கத்துக் குலோத்துங்கன் I காலத்துக் கல்வெட்டும் இருப்பதால் அவ்வாலயம் அக்காலத்திற்கு முந்தியே ஏற்பட்டிருக்கவேண்டும். மேலும் அவ்வரசன் 44 ஆண்டில் வாகீசர் மடத்திற்கு நிலதானம் செய்ததாகக் (49/1903) கல்

---

*இக்கல்வெட்டில் பெரிய பெருமாள் என்றது இராசராசனையே குறிக்கின்றது. உரோமானிய சக்கரவர்த்திகளைப் போலவே சோழ மன்னர்களும் தங்கள் பிரதிபிம்பங்களை ஆலயங்களில் வைத்துப் பூஜை செய்ய ஏற்பாடு செய்தனராம்.

வெட்டுக் கூறுகிறது. அதே அரசனது 48 ஆண்டில் (382/1925) 'புகழ்மாது விளங்க' என்னும் தொடக்கத்துக் கல்வெட்டில் (கி. பி. 1118) அரும்பாக்கத்து பொன்னம்பலக் கூத்தனது 4800 குழி புன்செய் நிலத்தை நன்செய் ஆக்கி அதிராச மாங்கலிய புரத்துக் குடிகள் திருவதிகை ஆலயத்தைச் சேர்ந்த திருநாவுக்கரசர்தேவர் மடத்தில் அன்னதானம் செய்வதற்காத் தந்தார்கள் என்று கூறப்பட்டுள்ளது. மேலும் மற்ருெரு கல்வெட்டில் (403/21) திருவீரட்டானருக்குச் சேர்ந்த நிலத்தில் பிடாரி கோயிலுக்கு வடக்கில் இருந்த காட்டை அழித்துத் திருநாவுக்கரசன் திருவீதி என்ற பெயரிட்டு அதில் கைக்கோளர், வாணியர், அங்காடியர் முதலியவர்களைக் குடியேற்றி அவர்கள் செலுத்தவேண்டிய வரியை நிர்ணயித்ததாகத் தெரிகிறது. இக் கல்வெட்டின் எழுத்து பிற்காலத்தது. மற்றும் திரிபுர சங்கார மூர்த்தியின் எதிரில் உள்ள இரு தூண்களில் காலிங்கன், நரலோக வீரன், கருணைகரத் தொண்டைமான் முதலிய பெயர்களைக் கொண்ட ஒரு போர்த் தலைவன் ஆலயத்திற்குச் செய்த திருப்பணிகள் 25 வெண்பாக்களில் அழகாக விவரிக்கப்பட்டுள்ளன. (369/1921) அவற்றில் 22-வது வெண்பா,

> " ஈசன் அதிகையில்வா கீசன் எழுந்தருள
> மாசில் பெருங்கோயில் வந்தமைத்தான் - பூசல்
> விளைவித்த வேணுடும் வெற்பனைத்தும் செந்தீ
> வளைவித்தான் தொண்டையர் மன்.

அப்பருடைய கோயிலைக் கருணைகரத் தொண்டைமான் கட்டினதாகக் கூறுகிறது. இவனே கலிங்கத்தை வென்ற தளபதி போலும். ஆகவே குலோத்துங்கன் I (1070 - 1148) காலம் எனலாம். (கலிங்கத்துப்பரணி காண்க.)

திருவாரூர்த் தியாகராயர் சந்நிதியில் உள்ள ஒரு கல்வெட்டில் (73/90) அநபாயன் (குலோத்துங்கன் II) 7-ம் ஆண்டில் மூவர்களுடைய உருவங்களையும் தாபித்து அவைகளுக்குத் தானம் செய்ததாகக் கண்டிருக்கிறது. அப்பருடைய பெயரை வடமொழியில் வாக்கதிபதி என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இவ்வரசரே சேக்கிழார் பெருமானைத் திருத்தொண்டர் புராணம் பாடச் சொன்னவர்.

அப்பர்சுவாமிகள் இறைவரது திருவடிப்பேறு எய்திய தலமாகிய திருப்புகலூரில் அப்பருடைய திருக்கோயில் ஒன்று சுற்றுப்பிரகாரத்தில் இருக்கிறது. இம்மூர்த்திக்கு முதல் இராசராசன் (985—1052) காலத்திலே நித்திய பூசைக்கு நிபந்தம் ஏற்பட்ட செய்தியை ஒரு கல்வெட்டுத் தெரிவிக்கிறது. மற்ருெரு கல்வெட்டில் "குளிச் செழுந்த நாயனுர்" என்ற குறிப்புக் காணப்படுகிறது. இந்நாயனுர் திருநாவுக்கரசராக இருக்க வேண்டும். கயிலையில் ஒரு தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றில் ஒரு திருக்குளத்தில் இந்நாயனுர் எழுந்த ஒரு அற்புதத்தை இக்கல்வெட்டு இவ்வாறு குறிக்கிறது. மேலும் இத்தலத்தில் அவதரித்த முருக நாயனுர் அப்பர் காலத்திலேயே புட்பத் திருத்தொண்டுசெய்து முத்தி பெற்றவர். இவர் பேரால் "நம்பி முருகன் திருமடம்" என்ற ஒரு மடம் இருந்ததாக ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. இன்னும் அக்காலத்திலே இருந்த திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுரைத் "தருமபுரத்து நாயனுர்", "யாழ்மூரி நாயனுர்" எனவும், திருநீலநக்க நாயனுரை "நக்க நாயனு"ரெனவும் இத்தலத்துக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. இவ்வூர் ஆலயத்தில் அப்பர் சுவாமிகளுக்குச் சித்திரைச் சதயத்தை ஒட்டிப் பத்து நாட்களும், வைகாசி மாதத்திலும், திருவிழாக்கள் நடந்து வருகின்றன. இவ்விரண்டு திருவிழாக்களும் இம்மாதங்களில் நடைபெற்றதை ஒரு கல்வெட்டுக் குறிக்கிறது. மற்ருெரு கல்வெட்டில் திருப்பதியம் விண்ணப்பம் செய்

வார்க்கு (ஓதுவார்க்கு) காணி கொடுத்த நிபந்த விபரம் காணப்படுகிறது. இக்கோயிலில் திருநாவுக்கரைய தேவருக்கு நிவேதனம் செய்யப்படும் பிரசாதத்தை சிவயோகிகளும் அபூர்விகளுமே பெற வேண்டுமென்றும் இவர்களுக்கென குளக்கரையில் ஒரு மடம் ஏற்பட்டிருந்ததென்றும் ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

**தொகுப்பு** — அப்பர் சுவாமிகளைப்பற்றிய கல்வெட்டுக்களிற் காணும் விவரங்களைப் பாகுபடுத்தி எழுதினால் அடியிற்கண்ட செய்திகளை அறியலாம்.

**I நாயனாரது பெயர்கள்**

(1) திருநாவுக்கரசர் - 402/08 திருவீழிமிழலை
(2) திருநாவுக்கரையன் - 330/10 திருமயானம்
(3) திருநாவுக்கரசுதேவர் - 121/04 தீர்த்த நகரி
,, 316/09 திருக்கச்சூர்
,, 556/06 அகத்திய கொண்ட
,, 117/08 திருப்பத்தூர்
(4) திருநாவுக்கரசு நாயனார் - 186/08 கோவிலூர்
(5) திருநாவுடையபிள்ளையார் 294/1911 சூலமங்கலம்
(6) வாகீசர் 586/93 கீரனூர்
,, 49/03 திருவதிகை

ஆகவே சோழர் காலத்திலே திருநாவுக்கரசு, வாகீசர் என்ற இரு பெயர்களே வழிவழி வந்தன. பிள்ளைத் திருநாமமாகிய மருணீக்கியார் என்பதும், அதிகமா யழைக்கும் பெயராகிய அப்பர் என்பதும் சோழர் காலத்தில் வழங்கவில்லை போலும்.

**II நாயனாரது கோயில்களும், அவைகளைத் தாபித்த காலமும், தானங்களும்**

(1) தஞ்சை ராசராசேச்சுரம் உடையார்; கி. பி. 1014. இராசராசர் 29ம் ஆண்டு அப்பர் முதலியவர்களின் உருவங்களைத் தாபித்ததும் - தானம் செய்ததும் (98/1888.)

(2) தஞ்சை ஷை; கி. பி. 1017 இராஜேந்திரன் 3ம் ஆண்டு அப்பர் முதலிய 4 உருவங்களும் - இரண்டு திருவிளக்குகளும் பெரிய மடல் ஒன்றும்

(3) திருவலஞ்சுழி; 115 மார்ச்சு 21-2 ராஜராஜன் II 12 ஆண்டு. திருநாவுக்கரசுதேவர் கண்ணப்பர் வரதநார் உருவத்தாபனம் - பூதானம் 528/02

(4) திருக்கச்சூர்; அஞ்சனாக்ஷியம்மை ஆலயம் 11780 - 216 குலோத்துங்கன் III திருநாவுக்கரசுதேவர் உருவத்தாபனம் 316/1909

(5) சித்தூர்; அகத்தியர் கொண்டா 1192 வீரராஜேந்திரன் (குலோத்துங்கன் III) இராச உத்தம சோழ கங்கை என்ற செல்வ கங்கை; திருநாவுக்கரசு தேவரைத் தாபித்தது. (559/1906)

(6) கோவிலூர்; (திருவுசாத்தானம்) மந்திரபுரீசர் 1255 கி. பி. இராஜேந்திரன் III 10 ஆ. பிள்ளையார் நாயனார் (சம்பந்தர்), திருநாவுக்கரசு நாயனார் இவர்கள் கோயில்களுக்கு பூதானம் (186/1908)

(7) சேர்மாதேவி; அப்பர் ஆலயம் 1267 - ஜடாவர்மன் வீரபாண்டியன் 14 ஆண்டு (185, 186, 187,/95)

(8) தீர்த்தநகிரி; (திருத்தினை நகர்) 1271 மாதவர்மன் வீரபாண்டியன்; திருநாவுக்கரசுதேவர் திருவிழா முதல் 12 திருவிழாக்களுக்கு வரி தானம். இங்கே நால்வர் உருவங்களும் சிறந்தவை. (121/04)

(9) திருப்பத்தூர்; 1295 விக்கிரம பாண்டியன் 12 ஆண்டு; திருநாவுக்கரசு தேவர் உருவத்தை ஒரு தேவரையன் தாபித்தது.

(10) சூலமங்கலம்; இருந்தீவனகேசர் 1396; ஜடாவர்மன் பராக்கிரம பாண்டியன் 12 ஆ. தானவிநோதநல்லூர் திருநாவுடையான் என்பவன் கரியுதிர்த்த நாயனர் ஆலயத்தில் திருநாவுடைய பிள்ளையார் உருவைத் தாபித்தது. (294/11)

**அப்பர் சுவாமிகளுடைய உருவச்சிலை நாட்டின அரசர்களின் விவரமும், காலமும்**

| அரசர் | காலம் | கல்வெட்டு |
|---|---|---|
| ராஜராசர் I | 985 - 1013 | 1 |
| ராஜேந்திரர் | 1013 - 1045 | 1 |
| ராஜராஜர் II | 1146 - 1178 | 1 |
| குலோத்துங்கர் III | 1178 - 1216 | 2 |
| ராஜேந்திரன் III | 1245 - 1267 | 1 |
| ஜடாவீரபாண்டியன் | 1253 - | 1 |
| மாற-வீரபாண்டியன் | 1262 - | 1 |
| விக்கிரமபாண்டியன் | 1283 - | 1 |
| ஜடாபராக்கிரமன் | 1184 | 1 |

ஆக சோழர் 5
பாண்டியர் 4

அப்பருக்குப் பிறகு (600) இராசராசர் வரை ஆறு நூற்றாண்டுகள் கல்வெட்டுக்கள் இல்லை. பிறகு, 1300 பிறகு, 6 நூற்றாண்டுகள் இல்லை. அதாவது விஜய நகரத்தின் நாயக்கர்கள் முகம்மதியர்கள் இவர்கள் காலத்தில் தாபிதம் இல்லை.

**III நாயனரது திருமடங்கள்**

(1) திருச்சி - திருப்பராய்த்துறை ஆதிமூலேசுவரர். முன்மண்டபச்சுவர் - கி. பி. 1007 - இராசராச சோழர் I 22 ஆண்டு. ஆலயத்திற்கருகில் அமைக்கப்பெற்ற திருநாவுக்கரசுதேவன் மடத்தில் மாகேசுரர்களுக்கு அன்னமிட நிலதானம். (644 திருச்சி)

(2) தஞ்சை - திருவீழிமிழலை. வீழிநாதசுவாமி முதல்பிரகாரம் - வடசுவர் கி. பி. 1017 இராஜேந்திர சோழன் 2ம் ஆண்டு - திருநாவுக்கரசு மடத்துக்குச் சொந்தமான நில அட்டவணை (தஞ்சை 843)

(3) தென் ஆற்காடு-திருவதிகை வீரட்டானம். முதல்பிரகாரம் தென்சுவர் கி.பி. 1114 குலோத்துங்கன் I - 6ம் ஆண்டு - வாகீசர் மடத்துக்குத்தானம் (தெ.ஆ. 311)

(4) செங்கற்பட்டு - *வேளச்சேரி......கர்ப்பக்கிரகம் வடசுவர். 1200 கி. பி குலோத்துங்கன் III - திருவான்மியூர்த் திருநாவுக்கரசு மடத்திற்குச் சேதிநாயனர் பூதானம். (செங் 1131)

(5) தஞ்சை - குறக்கை வீரட்டானர் முன் மண்டபத்துத் தென்சுவர் கி. பி. 1207. குலோத்துங்கன் III 29 ஆண்டு - திருநாவுக்கரசு திருக்குகை கட்டுவதற்கும் அக்குகை மூலமும்......உணவளிக்க வைகாசித் திருநாளுக்குவரும் மாகேசுரர்களுக்கு உணவளிக்கவும் ஆகாயத்தில் திருத்தாண்டகம் ஓதுதற்கும் நெல் தானம் (தஞ் - 219/17).

(6) மதுரை - பூதக்குடி : அப்பர் சத்திரத்தில் ஒரு தாமிரசாசனம். இங்கு ஒரு மடம் இருந்தது குறிக்கும் (மது - 1413).*

பெரிய புராணத்தில் கண்ட மடங்கள் இருந்த திங்களூர் அப்பர் மடம், திருப்பூந்துருத்தி, புகலூர், திருநல்லூர் மடங்கள் : இவை என்ன ஆயின? திருப்பூந்துருத்தியில் அப்பர் மடத்தைச் (இடிந்தது) செவ்வாய்க்கிழமை மடம் என்கிறார்கள்!

---

*4-ல் சொன்ன வேளச்சேரிக்கு ஜீன சிந்தாமணி சதுர்வேதி மங்கலம் என்றது பழைய பெயர். ஆகவே அங்கே முன் காலத்தில் சமணர் இருந்திருக்க வேண்டும்.

**IV நாயனரது பெயர்களை மக்கள் இட்டு வழங்கியது** (1) **திருநாவுக்கரசு தேவன்** : 1025 கி. பி. ராஜேந்திரன் 12 ஆண்டு. திருச்சி காமரச வல்லி கார்க்கோடக ஈசர் ஆலயம் - குன்றக்கிழான் திருநாவுக்கரசு தேவன். சம்பந்தர் மடத்திற்குப் பூதானம் (திரு - 854).

(2) **வாகீசுர பண்டிதர்** : கி. பி. 1181 இராஜராஜதேவன் II 9 ஆண்டு திருவொற்றியூர் ஆதிபுரீசர் ஆளுடைய நம்பிகள் புராணம் வாசிக்க வாகீசுர பண்டிதர் கேட்டது (செங். 965).

(3) **திருநாவுக்கரையன் ராஜகேசரி** : 15 ஆண்டு திருமயானம் ஞானபரமேசுர ஆலயம், நல்லூர் வியாபாரி நாராயணன் சோழர்சன் என்ற திருநாவுக்கரையன் (தஞ் - 128)

(4) **வாகீசுரதேவ முதலியார்** : 13 நூற்றுண்டு - ராஜ நாராயண சம்புவராயன் 12 ஆண்டு திருவொற்றியூர் கீழை மடத்து வாகீசுரதேவ முதலியார் (செங் 1076).

(5) **வாகீசுரதேவர்** : 13 நூ. ராஜ நாராயண சம்புவராயன் 8 ஆ. செங்கற்பட்டு புழலி திருமூலத்தான முடையார் கோயில் பெரும்பற்றப்புலியூரில் வசிக்கும் செல்வத் திருவாரூரின் கீழைமட சந்தானத்திற்குச் சேர்ந்த வாகீசுர தேவர்க்குப் புழல் கிராமத்தை குடிதானம் செய்தது (செங் - 483/1920).

(6) **திருநாவுடையார்**: கி.பி. 1396 ஜடாபராக்கிரம பாண்டியன் 12 ஆ. தஞ்சை சூலமங்கலம் கிருத்திராசர் ஆலயம் திருநாவுடையார் பிள்ளையார் உருவினைத் தான விநோத நல்லூர் திருநாவுடையார் தாபித்து நிலதானம் செய்தது (தஞ்சை 1240).

(7) **திருநாவுக்கரசன் திருவீதி** : திருவதிகை வீரட்டானேசுரர் : காடழித்து ஊருண்டாக்கி திருநாவுக்கரசன் திருவீதி என்ற பெயரிட்டுக் குடியேற்றினது. 403/21 மேற்கண்ட விவரங்களால் நாயனர் பெயர்களை மக்கள் இட்டுக்கொண்டது மாத்திரமன்றி ஒரு வீதிக்குமிடப்பட்டது. இது அப்பூதி அடிகள் சரிதத்தை நினைவூட்டுகிறது.*

**V சரித்திர பாகங்கள்** அப்பரால், சைவத்திற்குத் திருத்தப்பட்ட மகேந்திரவர்மப் பல்லவன் - இவர் சரித்திர பாகத்தைக் கூறும் கல்வெட்டுக்கள் வல்லம் குகை (185/52) யிலும், திருச்சிமலைக் குகையிலும் (511 Vol. III 278) இருக்கின்றன. இவைகளே அப்பர் காலத்தை உறுதியாக்குகின்றன.

(2) திருத்தாண்டகம் ஓதுதல் - குறுக்கை வீரட்டானம் 1267 ஆண்டுக் கல்வெட்டுத் திருக்குகை கட்டுவதற்குத் தானம் செய்து அங்கே திருத்தாண்டகம் ஓதும்படி உத்தரவிட்டது. அப்பருக்குத் தாண்டக வேந்து என்ற பெயர் உண்டன்றே!

(3) அப்பர் உற்சவம்-கி. பி. 1271-ல் மாறவர்மன் வீரபாண்டியன் காலத்தில் திருநாவுக்கரசு திருவிழா முதற்கொண்டு 12 திருவிழாக்கள் நடத்துவதற்குத் தானம் செய்யப்பட்டது.

(4) குளிச்செழுந்த நாயனர்-திருப்புகலூர்-இப்பெயர் குளித்து எழுந்த செய்தியைக் குறிக்கிறது.

(5) ஏறவிட்ட குப்பம் - திருப்பாதிரிப்புலியூருக்கு அருகில் இப்பெயர்கொண்ட ஊர். அப்பர் கடலிற் கட்டி போகவிட்ட கல்தூணிலிருந்து தப்பி மிதந்துவந்த செய்தியைக் குறிக்கிறது.

---

*வாகீசர் என்ற பெயர் சிவபெருமானுக்கும் ஆகமங்களில் வழங்கப்படுகிறது.

# அருஞ்சொற்பொருள் அகர வரிசை

அணியார் 1545 - அணிமையில் உள்ளவர்
அடையாளக் குறிகள் 1562
அதிகரித்தல் 1316 - மிகப் பயிலுதல்
அத்தம் 1623 - காடு
அமுத ஞானம் 1448 - இறப்பைத் தவிர்க்கும் ஞானம் - சிவஞானம்
அம்பர தலம் 1429 - வானவெளி
அல்லாகும் பொழுது 1322 - இரவு
அவம் புரிதல் 1338 - தகாதவை செய்தல்
அற்றவுணர்வு 1485 - வேறொன்றிற் செல்லுதல் தவிர்ந்த உணர்ச்சி - தன் உணர்வு அற்றநிலை என்றலுமாம்
ஆடி 1274 - கண்ணாடி
ஆதரவு 1554 - அன்பு
ஆழிவலவன் 1515-ஆழி-சக்கரம் ; சக்கரமேந்திய திருமால். ஆழி - கடல் என்று கொண்டு கடலரசன் என்றலுமாம்
இக்கு 1423 - கரும்பு
இடருழத்தல் 1474 - மனம் வருந்துதல்
இலச்சினை 1415 - 1418 - முத்திரை - குறி - அடையாளம்
இலம்பாடு 1520 - பொருள்கள் இல்லாமை
இளமிலா 1441 - பிறை
இறை வழுவுதல் 1314 - சிறிது தவறுதல்
இறைகொள்ளப் பெற்ற 1467 - விடை தரப் பெற்ற ; இறை - பெரியோரிடமிருந்துவரும் விடை. "இறை நல்குமின்" (திருஞான-தேவாரம் கொல்லி-கண்டியூர்)
உடனுகுதல் 1508 - வேறுமன்றி - ஒன்றுமன்றி - உடனுயிருக்கும் கலப்பு
உரன் 1666 - மனத் திண்மை
உறைப்பு 1390 - உறுதி
ஊட்டுவான் 1320 - சமயல் செய்தளிக்கும் ஏவலாளன்
எண் பெருகுதல் 1653 - 1665 - மனமூறிப் பொங்குதல்
எதிர்செய் குறை 1338 - கைம்மாறு
ஒக்கல் 1281 - சுற்றம்
ஒருப்படுதல் 1495 - மனமொன்றித் துணி...

கடன் கழித்தல் 1296 - கடமையைச் செலுத்துதல்
கடற்கொழுந்து 1439 - கடலலையின் நுனி
கடை காவலுடையார் 1352 - வாயில் காப்போர்
கட்டழித்தல் 1656 - நிலை குலையச் செய்தல்
கரண்டம் 1498 - நீர்க் காக்கை
கருநாமம் 1599-பிறவியில் வரும் பெயர் - பிறவியச்சம் என்றலுமாம்
களங்கொள் 1602 - கழுத்தினடியாகப் பிறக்கும்
காலங்கள் 1491 - 1504 - இறைவரது பாரார்த்த பூசைக்குரிய காலங்கள்
காலம் தவறு 1527 - காலத்தால் நேரும் வறுமை
குமைத்தல் 1459 - அழித்தல்
குறி 1303 - கொள்கை
குறி 1624 - குறிக்கோள் - இலட்சியம்
குறிப்பு 1629 - கருத்து ஊன்றிய பொருள்
குறைகொள்ளுதல் 1467 - விண்ணப்பித்தல்
குறைந்தடைதல் 1310
குறைவறுத்தல் 1512 - வேண்டுவன எல்லாம் செய்து தருதல் - எதனாலும் குறையிலதாகச் செய்தல்
கூவல் 1466 - கிணறு
கைக்குலவரை 1378 - யானை
கைதவம் 1689 - கீழ்மைச் செயல்
கோள் 1329 - நற்கொள்கை
சமய லங்கனம் 1348 - சமய நீக்கம்
சழக்கு 1551 - குற்றம்
சாரிகை 1685
சிவம் 1427 - 1442 - 1448 - சிவத்தன்மை - செம்மை; மங்கலம் என்றலுமாம்
சீர்ப்பாடு 1276 - சிறப்பு
சுருதி 1684 - சுதி என்ப. நூல் என்றலுமாம்
செந்நெறி 1306 - சிவநெறி
செவ்வி 1545 - சமயம் - உரியகாலம்
சிசிர 1271 - வண்டு

தடுமாற்றம் 1472, 1473 - நடுக்கம், வருத்தம்
தண்டலை 1469 - சோலை
தபோதனி 1331 - தவம்செய்யும் பெண்
தவ்வை 1348 -தமக்கை
தழும்பு 1477 - அழுந்தப் படிந்த சுவடு
தயா 1299 - இரக்கம்
தாபதி 1343 - பெண் தவசி
திருப்பள்ளியெழுச்சி 1333
திருமலிமங்கலம் 1483 - சிவத்தன்மை பொலியும் மங்கலக் கோலம்
திருமெழுக்கு 1333 - பசுச் சாணம்
திருவாளன் 1332 - முத்தித் திருவை ஆள்பவன் - சிவன்
திருவாயிலின் வழக்கம் 1538 - வாயிலிற் செல்ல வழங்குதல்
துகள் 1267 - 1293
துணை 1638 - பெட்டை, பெண்துணை
துரவம் 1530 - காவல்
தூரறுத்தல் 1563 - வேரோடு களைதல்
தேருமந்து 1471 - வருந்தி அலைந்து
தேங்காதார் 1368 - பகைவர்
தோன்றுத் துணை 1399
நயனப் பயன் 1588 - கண் பெற்றதனால் ஆய பயன்
நிகளம் 1376 - யானைச் சங்கிலி
நீர்க்கொழுந்து 1272
நீர்வேட்கை 1569 - தாகம்
நீற்றறை 1361 - சுண்ணம்புசுடும் அறை
படிக்காசு 1522-23 - 24-25 - 26 - படியாக அளித்த காசு; படி - நாள் ஒன்றுக்காகும் உணவுப்பண்டம்
பணிமாறி 1309 - பணிசெய்து
பந்தம்கொண்ட 1560 - கட்டுப்படுத்திய
பரடு 1622 - கணைக்கால்
பருக்கை 1682 - சல்லிக் கற்கள்
பருவம் 1520 - நீர் வரவேண்டிய காலம்
பவநெறி 1424 - பிறவிக்கேதுவாகிய நெறி; பவம் - பிறவி (உற்பவம்)
பவனி 1494 - இறைவர் திருவீதி எழுந்தருளிவரும் திருவுலா
பழவினைப்பாசம் 1410 - முன்வினை
பழுவம் 1624 - காடு
பள்ளி 1411 - சமண குருமார் தங்குமிடம்
பாசப்பிணி 1307 - மலக்கட்டு
பாதகம் 1673 - தீவினைப்பயன் - பாவம்
பாழி 1411 - சமணர் தொழுமிடம்
பாற்றுதல் 1560 - அழித்தல்
புகலிடம் 1514 - அபயம் அருளுபவர்
புறம்பணை 1657 - 1675-நகர்ப்புறவிடம்-நகரின் வெளியில் வயலிடம்
பேழ்கணித்தல் 1540 - துயிலுதற்குக் கண்மூடியிருத்தல் - துயில் கொள்ளுதல்; பிழையை எண்ணுதல் என் பாருமுண்டு.
பொதிசோறு 1570 - கட்டமுது
பொறித்துவைத்தல் 1459 - சுவடுபட அழுத்தல்
மனமுகிழ்த்த சுருள் 1285
மணிபந்து 1623 - கைகளின் மணிக்கட்டு
மந்திரசாதகம் 1373 - மந்திரத்தினால் உளதாகும் காவல்
மாலை 1476 - தன்மை - " அடைமாலைச் சீலம் " " அழிதன் மாலையவாகிய"
மாயை 1552 - வஞ்சம், தீமை
மிடைந்திடு நெருக்கு 1659 - மக்கள் கூடுதலின் செறிவு
மிண்டாய செய்கை 1406 - தகாத செய்கை
மிறை 1402 - தகாத செயல்
மிறைசெய்து காட்டுதல் 1383 - கொடிய வழியில் ஏவுதல்
முட்டிநிலை 1386 - மந்திர சாதகம்
முயங்குதல் 1623 - சார்தல்
முறைப்படுதல் 1349 - முறையிடுதல்
வச்சிரம் 1315 வயிரம்
வட்டை 1616 - வழி
வட்டணை - 1685
வண்ணம் 1561 - வடிவம்
வதுவை வினை 1290 - மணச்சடங்கு
வற்கடம் 1521-வறுமைக்காலம்-பஞ்சம்
வன்றெறிலோர் 1551 - தூர்சனவர்
வாசி 1525 - வட்டம்
வாய்மை யெழுந்தது 1339 - தெய்வ ஒலி பிறந்தது
விச்சை 1316 - விஞ்சை, மந்திரம்
விருத்தி 1347 - பொருளீட்டும் தொழில்; செய்தொழில் முயற்சி
வினைப்பயம் 1292 - வினையின் விளைவு.
வேய் 1604 - மூங்கில்
வேந்தற்குற்றுழி வினை 1291 - போர்

உ

### இப்பகுதியில் வந்துள்ள

## திருநாவுக்கரசு நாயனர் தேவாரப் பாட்டுக்களின்

# முதற்குறிப் பகராதி

(எண்கள் பக்க எண்கள்)


| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| அக்குமா | ௬௬௯ | ஆராதவி | ௩௮௭ | ஊனுடுத்தி | ௨௪௭ | கடலிடை | ௬௯௫ |
| அங்கட்க | ௫௬௯ | ஆராய்ந்த | ௩௮௨ | ஊன்கருவி | ௨௧௬ | கடவுந்திகி | ௨௧௦ |
| அங்கத்தை | ௭௦௯ | ஆரார்திரி | ௬௩௨ | எங்கேயென் | ௪௬௯ | கடவுளைக்க | ௨௧௫ |
| அங்கமே | ௭௪௦ | ஆரூர்மூ | ௭௦௫ | எட்டாந் | ௭௧௨ | கடுகிய | ௭௧௩ |
| அஞ்சுகொ | ௩௨௫ | ஆவாசிறு | ௨௧௦ | எட்டுநாண் | ௧௯௨ | கடும்பகல் | ௭௧௧ |
| அஞ்சைக்க | ௪௪௦ | ஆறுசடை | ௩௦௦ | எண்ணகத் | ௪௩௬ | கண்டலஞ் | ௨௯௦ |
| அடல்விடை | ௫௮௯ | இடர்கெடு | ௩௮௦ | எண்ணு | ௭௪௦ | கண்டியிற் | ௪௩௭ |
| அடுத்துவந் | ௪௧௭ | இடுக்கண் | ௧௬௩ | எத்தாயரெ | ௫௧௨ | கண்டுகொள் | ௬௬௫ |
| அட்டமாம | ௪௫௭ | இந்திரனோடு | ௪௮௪ | எத்தீபுகினு | ௩௮௪ | கண்ணவன் | ௪௪௨ |
| அட்டுமினில் | ௩௩௭ | இம்மைவா | ௨௯௮ | எந்தமாதவ | ௩௭௦ | கந்தமலர் | ௪௦௩ |
| அண்டந் | ௭௨௩ | இரப்பவர் | ௬௩௫ | எப்போதும் | ௩௬௯ | கயிலாயம | ௪௪௦ |
| அண்டத்தா | ௬௬௭ | இருட்டரு | ௬௩௮ | எம்பந்தவல் | ௩௭௯ | கயிலாயமலை | ௬௬௦ |
| அண்டமா | ௬௬௮ | இருநில | ௭௦௦ | எம்மையா | ௩௭௦ | கரப்பார்கா | ௫௧௮ |
| அண்டர்வா | ௨௮௭ | இரும்புகொ | ௧௯௨ | எரிபெருக் | ௬௭௧ | கரவாடும் | ௫௪௪ |
| அத்தா | ௬௫௫ | இலங்கை | ௪௦௫ | எல்லாஞ்சிவ | ௧௯௭ | கருடத்தனி | ௫௫௧ |
| அந்திவட்ட | ௬௪௩ | இலங்கைம | ௬௬௯ | எழுவாயிறு | ௬௩௮ | கருமணிபோ | ௩௪௧ |
| அப்பனீ | ௬௫௫ | இல்லகவி | ௧௬௩ | என்பிருத்தி | ௩௬௧ | கருமணியை | ௨௧௬ |
| அரக்கனீ | ௬௬௫ | இளவெழு | ௫௩௧ | என்பொனே | ௪௩௯ | கருவாகிக் | ௫௦௪ |
| அரக்கனைய | ௫௩௩ | இறைவனு | ௪௧௯ | என்னையே | ௬௬௪ | கருவாய்க் | ௧௭௪ |
| அரக்கனைவி | ௪௫௪ | இன்னங் | ௬௬௫ | ஏதுமொன் | ௫௫௨ | கரைந்து | ௪௩௯ |
| அரக்கன் | ௬௭௧ | இன்பமும் | ௫௧௪ | ஏயிலானை | ௬௬௪ | கலையொப் | ௨௧௫ |
| அரவணை | ௧௯௮ | இன்றரை | ௫௬௯ | ஏவியிடர்க் | ௩௪௪ | கல்லாதார் | ௪௦௩ |
| அரவத்தா | ௨௮௩ | ஈட்டுமாநிதி | ௫௫௨ | ஒருவனுயு | ௩௮௧ | கல்லினுலெ | ௨௮௦ |
| அரவுகையி | ௪௧௯ | ஈன்றாளுமா | ௧௭௪ | ஒருவனையு | ௭௪௦ | கள்ளிமுது | ௪௮௬ |
| அரியானை | ௨௫௦ | உடம்பெனு | ௭௦௯ | ஒற்றியூரும் | ௫௭௦ | கறுக்கொண் | ௪௩௮ |
| அருக்கன | ௩௪௯ | உடையர்கோ | ௫௨௪ | ஒன்றாவுலக | ௫௭௮ | கறுத்தார் | ௪௦௧ |
| அருக்கன்பா | ௬௭௧ | உண்ணுதி | ௬௧௨ | ஒன்றியிருந் | ௨௩௫ | கறும்பியூர் | ௫௧௪ |
| அருப்போ | ௬௯௧ | உந்திநின்ற | ௫௪௬ | ஒன்றுகொ | ௩௨௫ | கற்றவர்க | ௩௫௬ |
| அலையார்பு | ௩௪௦ | உயிராவண | ௩௭௩ | ஒன்றுவெ | ௬௬௨ | கற்றுக் | ௬௬௪ |
| அல்லும்ப | ௫௭௮ | உயிர்நிலை | ௩௭௧ | ஓசையொலி | ௬௩௩ | கனியினும் | ௨௯௮ |
| அறுத்தா | ௫௫௪ | உய்த்தகா | ௭௧௧ | ஓட்டைமாட | ௫௬௦ | கன்றினூர் | ௫௮௯ |
| அன்னம் | ௨௪௦ | உரித்தவன்கா | ௫௫௫ | ஓதமார்கட | ௩௪௦ | கன்னெடு | ௭௨௦ |
| ஆகம்பத் | ௫௪௫ | உருமூன்றாய் | ௫௦௪ | ஓதமால்கட | ௪௫௭ | காசனை | ௬௬௬ |
| ஆட்டுவித் | ௬௫௫ | உருவமுமுயி | ௫௩௦ | ஓதிமாமலர் | ௫௩௦ | காடுடைச்சு | ௨௯௮ |
| ஆதிக்கணு | ௪௦௫ | உள்ளமுள்க | ௫௬௦ | ஓதிற்றொரு | ௪௨௧ | காண்டலே | ௩௫௮ |
| ஆதிப்பா | ௬௬௭ | உள்ளாறுத | ௪௦௫ | ஓதுபைங் | ௪௦௭ | காமியஞ்செ | ௩௪௩ |
| ஆத்தமாம் | ௨௮௨ | உன்னிவான | ௪௧௯ | ஓதுவித்தா | ௫௪௬ | காயமே | ௭௧௦ |
| ஆமயம் | ௬௪௮ | ஊரிலா | ௬௬௮ | ஓம்பினேன் | ௫௬௮ | காரொளிய | ௨௫௧ |
| ஆயிரந்தா | ௩௬௬ | ஊனுகியுயி | ௫௧௨ | கங்கையை | ௬௩௫ | காலனை | ௬௪௫ |
| ஆயிரந்தி | ௩௭௨ | ஊனினுள் | ௨௮௫ | கச்சைசே | ௩௦௧ | காலையெழு | ௩௩௩ |

காலகொடு ௪௮௫
கானருதக ௨௮௬
குண்டனுய் ௬௩௬
குராமல ௬௫௮
குருகாம்வயி ௩௧௨
குலங்கெடு ௪௦௬
குலம்பலம் ௩௫௨
குலம்பொல் ௬௫௫
குழலையாழ் ௪௩௯
குழல்வலங் ௩௭௧
குழைகொள் ௪௧௯
குறவிதோள் ௪௪௬
குறியினின் ௫௦௫
குறுவித்தவா ௬௪௧
குற்றமுடை ௩௫௩
கூடிஞருமை ௫௭௯
கூவலாமை ௬௭௧
கூற்ருயின ௮௬
கூற்றுவ ௫௫௪
கைகொள் ௨௮௬
கையதுகா ௫௦௭
கைவேழமு ௪௪௩
கோக்கரை ௩௭௦
கொடுங்க ௨௮௨
கொல்லியான் ௬௪௬
கொல்லையே ௩௩௩
கொள்ளுங் ௮௭
கோணன் ௧௯௧
கோவண ௭௧௧
கோவாய் ௩௦௭
கோனைக்கா ௫௧௧
சகமலாத ௬௩௭
சங்கநிதி ௬௫௬
சங்குலாமு ௨௯௦
சந்திரனை ௧௯௬
சந்திரற்ச ௭௧௧
சந்திரன்றெ ௩௦௨
சலமிலன்சங் ௧௬௩
சாம்பலை ௭௧௭
சித்தத் ௭௧௭
சிந்திப்பரிய ௬௩௮
சிந்திப்பார் ௬௬௮
சிந்தைவண் ௬௩௪
சிலந்தியுமா ௨௮௦
சிவனெனு ௭௧௮
சிவ-மோசை ௭௨௧
சுண்ணவெ ௧௫௧
சுழலார்து ௬௩௮
சூலப்படையு ௨௧௯
சூலப்படை ௩௬௮
செங்கண் ௫௩௧
செங்கணு ௬௬௭
செஞ்சடை ௨௫௨
செத்துச் ௬௭௦
செத்தையே ௨௦௫
செய்யர்வெ ௪௦௧
செல்வப்புன ௧௯௮
செல்வியைப் ௫௪௯
செற்றுக்களி ௫௬௯
சொல்லக்கரு ௫௬௯
சோற்றுணை ௧௬௩
சொன்மலி ௩௪௪
சொன்மாலை ௩௨௯
ஞாலமேவி ௪௪௦
தந்தையார் ௬௫௩
தம்மானை ௭௦௭
தப்பிவான ௩௪௭
தருக்கின ௬௪௨
தருமங் ௬௬௯
தன்னைச் ௭௩௭
தலையெலா ௫௦௫
தலையேநீ ௬௬௧
தாயத்தார் ௫௦௫
தாயவனைவா ௩௦௨
தாயுமாயெ ௫௧௬
தானலாது ௬௩௭
தீருக்கோயி ௬௫௫
திருநாம ௬௫௫
திருந்தாவ ௧௭௪
திருமணியை ௩௭௮
திருவிஞத ௫௦௫
திருவேயெ ௨௯௫
தில்லைச்சிற் ௭௦௫
திறக்கப்பா ௪௭௯
தினைத்தனை ௬௪௭
துஞ்சும் ௬௬௬
துடிக்கின்ற ௩௮௨
துணையிலா ௨௯௯
துறக்கப் ௭௨௦
துன்பநும் ௩௯௪
தூங்கான் ௬௪௫
தூண்டுசுட ௪௮௬
தூமென்ம ௪௮௯
தேற்றினர் ௪௮௯
தேடிக் ௬௬௨
தேரையிம் ௪௮௬
தேனப்பூவ ௫௮௩
தோடரும் ௩௧௪
தொண்டனே ௭௦௯
தொண்டர் ௪௪௫
தொண்டு ௪௧௮
நங்கையை ௨௪௬
நடுவிலா ௭௧௦
நணியார்சே ௩௫௪
நந்திபணி ௨௮௫
நமச்சி ௬௬௯
நம்பனேன் ௧௯௪
நம்பனைநக ௫௪௬
நம்பனைநால் ௨௯௩
நரம்பெழு ௧௫௧
நல்லர்நல்ல ௩௦௧
நள்ளாறும் ௬௬௦
நறுமலர் ௬௮௯
நன்றுநாடொ ௨௪௧
நாகத்தைந ௩௭௩
நாடிநாரணன் ௨௯௦
நாடிஞர்கம ௩௫௮
நாட்கொண்ட ௩௩௭
நாமார்க்குங் ௧௧௯
நாவாரநம்ப ௧௧௯
நிலைபெறுமா ௩௮௦
நிலைமைசொ ௨௮௭
நிறைக்கவா ௨௯௬
நினைந்துரு ௩௦௮
நின்போல ௬௩௮
நின்னையெப் ௭௧௮
நீடுநெஞ்சு ௪௦௭
நீதியைக்கெ ௫௦௨
நீருமாய்த்தீ ௩௯௯
நீலமாமணி ௩௧௪
நீறலைத்த ௬௬௯
நீருகிநீறுமி ௫௫௨
நீறேறு ௬௪௮
நீற்றினைநி ௪௩௬
நீற்றினையும் ௩௭௭
நூறுகோடி ௬௭௦
நெஞ்சமென் ௬௩௫
நெய்தற்குரு ௨௪௬
நெற்றிமேற் ௨௮௯
நேர்ந்தொ ௬௫௩
பகைத்திட் ௩௯௯
பக்கம்பூத ௨௯௬
பச்சைநிற ௩௦௦
பஞ்சின்மெ ௨௯௬
படவேரரவ ௩௩௭
படுகுழிப் ௩௭௧
படைமலி ௬௯௧
படையார்ம ௨௭௫
படையும்பா ௬௬௫
படையும்பூ ௩௪௯
பட்டியேறு ௫௨௮
பண்டங்க ௫௦௮
பண்டுசெய் ௫௪௮
பண்ணினேர் ௪௫௪
பத்தனுய்ப் ௨௩௭
பத்துக்கொ ௩௨௫
பத்துறு ௬௬௩
பல்லார்தலை ௫௫௮
பருதியா ௬௬௭
பருவரை ௭௧௨
பவளத் ௭௧௩
பழிவழியோ ௪௮௯
பறையின் ௨௯௯
பற்பல்கா ௬௬௯
பற்றற்று ௭௧௫
பற்றுய்நினை ௧௭௪
பனைக்கை ௨௪௮
பன்னியசெ ௫௧௪
பாசமொன் ௨௯௮
பாசமுங் ௬௯௩
பாடகக்கால் ௬௪௩
பாடகஞ்சேர் ௩௮௧
பாடவடியா ௪௭௧
பாடிப்பெற் ௪௭௦
பாடிளம்பூ ௩௬௬
பாட்டானந ௯௨௫
பாணத்தான் ௪௯௦
பாதித்தன் ௩௭௫
பாரார்பரவு ௪௯௧
பாரானைப் ௫௫௨
பாரிடம் ௬௪௫
பாரூர்பௌவ ௩௯௪
பார்கொண்டு ௨௭௪
பாலனுய்வி ௨௫௨
பாலைநகுப ௩௮௪
பிரமன்றன் ௩௫௬
பிறப்போ ௩௭௯
பிறவாதே ௨௭௮
புக்கணைந்து ௫௩௧
புக்கணைந்துபு ௬௬௭
புதுவிரி ௭௨௧
புத்தியினற் ௫௭௫
புலிவலம் ௭௦௫
புழுவாய்ப் ௧௭௪
புள்ளுவ ௭௧௧
பூக்குந்தா ௪௫௭
பூதத்தின்ப ௪௩௬
பூமேலானும் ௫௪௯
பூரியாவரு ௩௪௭
பூவணத்தவ ௩௪௩

| | |
|---|---|
| பூவினுக்கரு | ௧௬௩ |
| பெருகலாந் | ௪௦௭ |
| பெருங்கடல் | ௭௧௮ |
| பெருந்தவ | ௫௫௬ |
| பெருந்தகை | ௪௦௨ |
| பெருந்தாழ்ச | ௪௦௧ |
| பெருந்திருவி | ௩௪௬ |
| பெரும்புலர் | ௪௧௫ |
| பெருவிர | ௭௦௯ |
| பெற்றமேறு | ௫௨௮ |
| பேச்சொடு | ௭௦௭ |
| பையஞ்சுடர் | ௩௬௭ |
| போடிக்கொ | ௬௮௯ |
| பொய்ம்மாய | ௭௩௨ |
| பொய்விரா | ௩௩௨ |
| பொருங்கை | ௩௮௪ |
| பொருந்திய | ௨௮௮ |
| பொருந்தாத | ௪௭௨ |
| பொருப்பள்ளி | ௬௫௯ |
| பொருமாற்றி | ௫௫௧ |
| பொள்ளத்த | ௪௧௫ |
| பொறையு | ௬௧௫ |
| பொன்றிகழ் | ௫௪௬ |
| பொன்னார் | ௨௧௦ |
| பொன்னுள் | ௬௬௮ |
| பொன்னைத் | ௭௨௩ |
| போரானை | ௪௨௭ |
| போர்த்தாய | ௮௬ |
| போற்றிசை | ௬௨௫ |
| மங்கைகாண | ௨௯௧ |
| மஞ்சனே | ௨௯௭ |
| மஞ்சாடுகு | ௩௬௮ |
| மடக்கினார் | ௧௯௫ |
| மட்டுவார்குழ | ௫௧௬ |
| மண்ணதனி | ௫௧௭ |
| மண்ணல்லை | ௫௬௬ |
| மண்ணாகி | ௭௦௦ |
| மண்ணிடை | ௪௧௫ |
| மண்பாதலம் | ௧௭௪ |
| மண்பொருந் | ௩௨௯ |
| மதியிலாவ | ௨௫௩ |
| மதுரவாய் | ௨௪௦ |
| மத்தமாக | ௫௬௬ |
| மருட்டுயர்தீ | ௪௧௯ |
| மருந்தினொடு | ௫௪௮ |
| மருளவா | ௭௧௦ |
| மருவினை | ௬௭௦ |
| மலைக்கொளா | ௪௧௭ |
| மலையான்மட | ௪௩௮ |
| மலையேவந்து | ௬௬௪ |
| மழுவலான் | ௫௫௧ |
| மறையணி | ௪௪௬ |
| மறையதுபா | ௫௪௯ |
| மறையினை | ௫௨௮ |
| மனத்தகத் | ௫௮௨ |
| மனமெனு | ௫௬௮ |
| மனைவிதா | ௪௮௮ |
| மன்னுமா | ௪௬௯ |
| மாசிலொள் | ௧௯௬ |
| மாசில்வீணை | ௧௨௯ |
| மாட்டுப்பள் | ௫௦௮ |
| மாட்டைத் | ௫௦௮ |
| மாணிக்குயி | ௫௫௧ |
| மாதர்ப்பி | ௬௩௧ |
| மாப்பிணை | ௧௬௩ |
| மாமாத்தா | ௨௦௨ |
| மாயிருஞா | ௪௯௬ |
| மானேருக | ௪௪௩ |
| மின்காட்டும் | ௬௮௩ |
| முடித்தாமரை | ௪௨௧ |
| முடிவண்ண | ௩௮௪ |
| முத்தினை | ௭௨௨ |
| முத்துவிதா | ௩௯௩ |
| முந்தித்தா | ௭௧௫ |
| முருகார் | ௭௨௦ |
| முந்திமூவெ | ௫௭௪ |
| முலைமறை | ௧௮௭ |
| முளைக்கதிர் | ௧௯௦ |
| மூளைத்தானை | ௬௮௫ |
| முன்கை | ௬௪௬ |
| முற்றுணை | ௨௮௩ |
| முன்பெலா | ௧௯௫ |
| முன்னமவ | ௩௭௩ |
| முன்னைத் | ௫௧௨ |
| முன்னெறி | ௧௬௩ |
| முன்னேயு | ௭௧௭ |
| மூக்கினன் | ௫௦௨ |
| மூக்குவாய் | ௫௪௮ |
| மூத்தவனாய் | ௩௩௪ |
| மூள்வாய | ௭௧௨ |
| மூவாவுரு | ௭௨௦ |
| மூவிலைவேற் | ௫௫௮ |
| மெய்த்தவன் | ௪௪௨ |
| மெய்த்தான | ௬௪௭ |
| மெய்ப்பால் | ௩௭௬ |
| மெய்ம்மையா | ௭௧௦ |
| மெய்யெலா | ௩௬௧ |
| மேல்வைத் | ௬௨௫ |
| மைப்படிந் | ௭௨௩ |
| மையுலாவி | ௩௭௦ |
| வகையெலாம் | ௬௪௬ |
| வஞ்சனையா | ௩௬௮ |
| வஞ்சித்தென் | ௩௨௯ |
| வடிவுடைமா | ௪௮௯ |
| வடிவேறு | ௬௯௦ |
| வட்டனைமதி | ௫௩௩ |
| வண்டோங் | ௫௬௬ |
| வண்ணங்க | ௨௦௩ |
| வண்ணமும் | ௨௪௫ |
| வலியான்ற | ௬௩௮ |
| வளர்மதிக் | ௬௩௧ |
| வனபவள | ௨௪௪ |
| வாதுசெய்து | ௬௭௦ |
| வாயானை | ௬௮௬ |
| வாயிருந்தமி | ௫௦௨ |
| வானஞ்சேர் | ௫௦௯ |
| வானந்து | ௭௧௮ |
| வானவர்தா | ௫௦௭ |
| வான்சொட் | ௪௩௭ |
| விடையான் | ௧௭௪ |
| விடையும் | ௭௧௬ |
| விண்டமா | ௫௬௦ |
| விண்ணாகிநில | ௫௭௫ |
| விண்ணிடை | ௭௨௨ |
| விண்ணினார் | ௩௧௪ |
| விண்ணுறவ | ௧௬௩ |
| விரிகதிர் | ௭௨௧ |
| விரித்தபல் | ௩௪௬ |
| விரிவிலாவ | ௪௪௬ |
| விரும்பியூறு | ௫௧௪ |
| விரும்பும் | ௯௩௪ |
| விரையுண்ட | ௭௨௩ |
| விவந்தாடி | ௭௧௬ |
| விளக்கினார் | ௭௧௧ |
| விறகிற்றீயி | ௧௨௯ |
| விற்றூனொ | ௫௮௨ |
| வீடினாருல | ௧௬௩ |
| வீரமும்பூண் | ௩௮௪ |
| வெண்ணிலா | ௧௯௨ |
| வெந்தநீறரு | ௧௬௩ |
| வெந்தவெ | ௪௫௪ |
| வெம்மைநம | ௩௦௭ |
| வெள்ளத்தை | ௫௬௬ |
| வெள்ளநீர்ச் | ௫௭௮ |
| வெள்ளமுள் | ௫௦௬ |
| வெள்ளிக்கு | ௭௧௭ |
| வெறிவிரவு | ௧௮௭ |
| வெறுத்தா | ௬௭௦ |
| வென்றிலேன் | ௭௦௭ |
| வெற்றியூரு | ௫௭௪ |
| வேதநாயக | ௬௭௦ |
| வேதியா | ௬௮௯ |
| வேம்பினைப் | ௩௮௨ |
| வேற்றாகிவி | ௬௧௨ |
| வைத்தபொ | ௧௭௪ |

உ

# பாட்டு முதற்குறிப் பகராதி


| | பாட்டு வரிசை எண் | பக்க எண் |
|---|---|---|
| அக்குடியின் | 1281 | ௨௪ |
| அங்கங்கள் | 1337 | ௯௨ |
| அங்கண்மா | 1613 | ௫௮௬ |
| அங்கணிருந் | 1571 | ௫௧௦ |
| அங்கணைந்து | 1479 | ௩௩௬ |
| அங்கவரும் | 1304 | ௫௧ |
| அங்குநிகழ் | 1539 | ௪௬௧ |
| அங்குமுற்றி | 1617 | ௫௯௦ |
| அங்குறைந்து | 1675 | ௬௯௫ |
| அங்குறையும் | 1654 | ௬௫௦ |
| அங்குறையுநா | 1603 | ௫௭௧ |
| அச்சமய | 1316 | ௬௪ |
| அஞ்சொற் | 1426 | ௨௨௪ |
| அடிகண்மார் | 1351 | ௧௧௦ |
| அடியனேன் | 1694 | ௭௪௩ |
| அடைவிலம | 1315 | ௬௩ |
| அண்ணலரு | 1380 | ௧௪௮ |
| அண்ணலே | 1639 | ௬௦௪ |
| அண்ணுமலை | 1578 | ௫௨௯ |
| அணங்கனைய | 1289 | ௩௩ |
| அத்தன்மை | 1453 | ௨௭௦ |
| அத்திருப்பதி | 1397 | ௧௭௧ |
| அத்திருமூதூர் | 1503 | ௩௯௭ |
| அத்துறையின் | 1305 | ௫௨ |
| அதிசயம் | 1367 | ௧௩௬ |
| அதுகண்டு | 1538 | ௪௬௦ |
| அந்தண்வெள் | 1643 | ௬௧௮ |
| அந்தணரின் | 1466 | ௩௧௬ |
| அந்தவிமான | 1560 | ௪௯௨ |
| அந்நகரில் | 1592 | ௫௫௦ |
| அந்நாளில் | 1496 | ௩௮௮ |
| அந்நாளிற்றம | 1510 | ௪௧௨ |
| அந்நாளிற்றில | 1287 | ௩௧ |
| அந்நிலையின் | 1298 | ௪௦ |
| அந்நிலைமை | 1681 | ௭௨௪ |
| அந்நெறியின் | 1306 | ௫௩ |
| அப்படி | 1506 | ௪௦௮ |
| அப்பதியை | 1465 | ௩௧௫ |
| அப்பரிசு | 1390 | ௧௬௦ |
| அப்புறம் | 1625 | ௫௯௮ |
| அப்பெருங் | 1393 | ௧௬௬ |
| அப்பொழுதே | 1444 | ௨௫௫ |
| அம்பிகை | 1448 | ௨௬௨ |
| அம்மருங் | 1615 | ௫௯௦ |
| அம்மலர் | 1606 | ௫௭௨ |
| அம்மொழிமா | 1501 | ௩௯௫ |
| அரசனது | 1356 | ௧௧௬ |
| அரிதிற் | 1540 | ௪௬௧ |
| அரியய | 1409 | ௧௮௮ |
| அரியானை | 1440 | ௨௪௯ |
| அருகணைந்தா | 1361 | ௧௨௪ |
| அருட்பெருகு | 1450 | ௨௬௫ |
| அருட்பெரு | 1436 | ௨௩௮ |
| அருந்தனைய | 1474 | ௩௨௬ |
| அருள்கொண் | 1355 | ௧௧௫ |
| அருணயந் | 1395 | ௧௬௯ |
| அல்லற்பவ | 1427 | ௨௨௬ |
| அல்லார் | 1524 | ௪௩௦ |
| அல்லிருள் | 1387 | ௧௫௭ |
| அவ்வார்த்தை | 1324 | ௭௨ |
| அவ்விடத்தை | 1371 | ௧௪௦ |
| அவ்வினை | 1389 | ௧௫௯ |
| அவர்நிலைமை | 1317 | ௬௫ |
| அவர்முன் | 1425 | ௨௨௩ |
| அழைத்து | 1545 | ௪௬௪ |
| அறிவிலம | 1562 | ௪௯௨ |
| அறிவிற்பெரி | 1424 | ௨௨௧ |
| அன்பரீட்ட | 1535 | ௪௫௬ |
| அன்றவர்கள் | 1473 | ௩௨௧ |
| அன்னதன்மை | 1626 | ௬௦௧ |
| அன்னநாடு | 1618 | ௫௯௦ |
| அன்னவண்ண | 1544 | ௪௬௪ |
| ஆங்கணை | 1508 | ௪௧௦ |
| ஆங்கதுகேட் | 1388 | ௧௫௮ |
| ஆங்கதுகேட்ட | 1368 | ௧௩௬ |
| ஆங்கப்பரிசை | 1532 | ௪௫௧ |
| ஆங்கவர்தம் | 1418 | ௨௦௭ |
| ஆங்கவன்போ | 1321 | ௬௯ |
| ஆங்கவனும் | 1470 | ௩௨௦ |
| ஆங்குமற்றவர் | 1632 | ௬௦௪ |
| ஆங்குவன | 1278 | ௨௧ |
| ஆடுவார் | 1686 | ௭௨௭ |
| ஆண்டவரசங் | 1667 | ௬௮௨ |
| ஆண்டவரசத | 1362 | ௧௨௪ |
| ஆண்டவரசரு | 1359 | ௧௨௨ |
| ஆண்டவரசும் | 1548 | ௪௭௩ |
| ஆண்டவரசெழுந் தருளவாரு | 1483 | ௩௫௦ |
| ஆண்டவரசெழுந் தருளிக்கோ | 1454 | ௨௭௦ |
| ஆண்டவரசெழுந் தருளி | 1497 | ௩௩௮ |
| ஆண்டவரசை | 1383 | ௧௫௪ |
| ஆண்டகைமை | 1288 | ௩௧ |
| ஆதிதேவர் | 1636 | ௬௧௦ |
| ஆதிமுதல் | 1549 | ௪௭௪ |
| ஆயநாளிடை | 1292 | ௩௫ |
| ஆயபொழுது | 1552 | ௪௭௫ |
| ஆயவாரிருளி | 1620 | ௫௯௪ |
| ஆயவாறு | 1647 | ௬௨௭ |
| ஆருயிரின் | 1680 | ௬௯௮ |
| ஆவடுதண் | 1456 | ௨௯௧ |
| ஆழிவிடம் | 1443 | ௨௫௫ |
| ஆளுடைய | 1464 | ௩௧௦ |
| ஆறுசடை | 1526 | ௪௩௪ |
| ஆனந்த | 1366 | ௧௩௫ |
| ஆனதசீர் | 1426 | ௨௧௩ |
| ஆனையினத் | 1564 | ௪௯௨ |
| இங்ஙனம் | 1622 | ௫௯௮ |
| இடியுற்றெழு | 1377 | ௧௪௫ |
| இத்தன்மையர | 1687 | ௭௩௦ |
| இத்தன்மைநிக | 1340 | ௯௬ |
| இத்தன்மையர் | 1433 | ௨௩௪ |
| இந்நாளில் | 1412 | ௨௦௦ |
| இந்நிலைமை | 1690 | ௭௩௬ |
| இம்மாயப்பவ | 1688 | ௭௩௦ |
| இருவினை | 1394 | ௧௬௭ |
| இவ்வகைப்பல | 1347 | ௧௦௭ |
| இவ்வகைய | 1277 | ௨௦ |
| இவ்வண்ணம் | 1407 | ௧௮௫ |
| இன்னதன்மை | 1344 | ௧௦௪ |
| ஈசர்மிழலை | 1525 | ௪௩௩ |
| ஈன்றுளு | 1399 | ௧௭௨ |
| உடையொழி | 1350 | ௧௧௦ |
| உண்ணீர்மை | 1533 | ௪௫௧ |
| உம்பர்தங் | 1408 | ௧௮௬ |
| எடுத்தமன | 1325 | ௭௨ |
| எதிர்கொண் | 1586 | ௫௪௦ |
| எந்தையுமெம் | 1297 | ௪௦ |
| எயிற்குலவும் | 1275 | ௧௭ |

